"தியாகு"

# விவிலியக் களஞ்சியம்

# V

விவிலிய அறிமுகம்

தியான ஆசிரமம்
சென்னை -28

# விவிலியக் களஞ்சியம்

## V

ம, மா, மி, மீ, மு, மூ, மெ, மே, மை,
மொ, மோ, ய, யா, யு, யூ, யோ, ர, ரா,
ரி, ரூ, ரெ, ரே, ரோ, ல, லா, லி, லீ,
லூ, லெ, லே, லோ, வ, வா, வி, வீ,
வெ, வே, வை, வோ, வௌ, ண


பதிப்பாசிரியர்

*"தியாகு"*



**விவிலிய அறிமுகம்**

தியான ஆசிரமம்

சென்னை-28.

முதல் பதிப்பு : திசம்பர், 1995
மறு பதிப்பு : மார்ச், 2000
மறு பதிப்பு : ஏப்ரல், 2005
மறு பதிப்பு : ஏப்ரல், 2010

**Nihil Obstat**
P.C. Thomas.

**Imprimatur**
+ M. Arockiasamy,
Archbishop of Madurai.

**விலை : ரூ 250/-**

**நூல் கிடைக்கும் இடங்கள்**

தியான ஆசிரமம்

சென்னை-28.

மற்றும் மறைமாவட்ட மேய்ப்புப் பணி நிலையங்கள்.

*Type Setting* : Savithri Laser Printing,
Chennai - 600 028.

Printed at : **Hitech Offset (P) Ltd.,**
# 11, Srinivasa Nagar Main Road, Koyambedu,
Chennai - 600 107. Phone : 2479 3339 / 2479 7245.
E-mail : hitechoffset@gmail.com

# அர்ப்பணம்

இறைவனின் வார்த்தையைத் தன் இதயத்தில் ஏற்று, வார்த்தையாம் இறைவனைத் தன் உதரத்தில் வளர்த்து, மனுவுருவான வார்த்தையை உலகிற்கு அளித்த இறைவனின் அன்னையாம் மரியாளுக்கு, அன்பு கலந்த அர்ப்பணம்.

## முன்னுரை

விவிலியக் களஞ்சியம் தொகுப்பின் ஐந்தாம் பாகத்தைத் தமிழ்கூர் நல்லுலகிற்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறேன். தமிழ்க் கிறிஸ்தவர்கள் முதல் நான்கு பாகங்களுக்கு அளித்த ஆர்வமிக்க வரவேற்பு, இம்முயற்சியைத் தொடர்ந்து செய்து இந்த ஐந்தாம் பாகத்தை வெளிக் கொணரப் பெரிதும் உற்சாக மூட்டியது. இவ்வரவேற்பு அளித்த அனைவருக்கும் எனது மனமுவந்த நன்றி.

ஆள், இடம் ஆகியவற்றின் பெயர்களின் மூல எபிரேய, கிரேக்க உச்சரிப்புகள் தமிழ் இலக்கண மரபுக்கேற்ப மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. அத்துடன் இப்பெயர்கள் புதிய பொதுமொழிபெயர்ப்பில் அமைந்த வடிவில் கொடுக்கப்பட்டுள்ளன. சங்கீதங்களின் எண்கள் எபிரேய முறையில் தரப்பட்டுள்ளன. இறையியல் கட்டுரைகளில் பெரும்பகுதிகள் Xavier Leon-Dufour-இன் Dictionary of Biblical Theology என்ற நூலைத் தழுவி எழுதப் பட்டுள்ளன.

இனி நன்றி நவில்தல் என்ற இனிய கடமைக்கு வருகிறேன். தமிழ்க் கத்தோலிக்கப் பாரம்பரியத்தில் முதல் முயற்சியான இத்தொகுப்பு பலர் சேர்ந்த கூட்டு முயற்சியாகும். இவர்கள் பல கட்டுரைகளின் பொருட்களையும் செய்திகளையும் தொகுத்துத் தருவதில் பெரிதும் உதவியுள்ளனர். இவர்கள் அனைவரின் பெயர்ப் பட்டியல் பின்பு தரப்படுகிறது. இவர்கள் அனைவருக்கும் என் நன்றி உரித்தாகுக.

இத்தொகுப்பைத் திட்டம் செய்த காலத்தில், அறிவுரை கூறியும் உற்சாகப்படுத்தியும் பொருள் உதவி நல்கியும் ஊக்கமளித்த மேதகு கர்தினால் சைமன் D. லூர்துசாமி ஆண்டகை அவர்களுக்கு எனது உளம்கனிந்த நன்றி உரியதாகும். தயாரிப்புக் காலத்தில் பொருள் உதவிசெய்த Adam Sehall von Bell E.V., Koln, பதிப்பித்தலுக்குப் பொருள் உதவி செய்த MISSIO, Munchen ஆகிய இரு நிறுவனத்தார்க்கும் எனது மனமார்ந்த நன்றி. இவர்களின் உதவியின்றி இந்நூலை இவ்வளவு மலிவாகக் கொணர்ந்திருக்க முடியாது.

முதல் நான்கு பாகங்களுக்கு அணிந்துரை வழங்கிய, தமிழ்நாடு கத்தோலிக்க ஆயர்கள் குழுத் தலைவர், மதுரைப் பேராயர் மேதகு M. ஆரோக்கியசாமி ஆண்டகையே இப்பகுதிக்கும் அணிந்துரை வழங்கியுள்ளார். அவருக்கும், Nihil Obstat அளித்துள்ள அருட் தந்தை P.C. தாமஸ் அடிகளார்க்கும், இப்பாகத்தின் தயாரிப்பில் நெடுகலும் பிரதிகளைத் திருத்தியும் பலவாறு உதவிகள் செய்தும் வந்துள்ள தமிழாசிரியர் ப. மீனாட்சி சுந்தரம் அவர்களுக்கும் சிறப்பான முறையில் நன்றி கூறுகிறேன். இம்முயற்சியில் எனக்கு ஊக்கமளித்த இயேசு சபை மதுரை மாநில முன்னாள் தலைவர் அருட்தந்தை மைக்கில் செயராசு அடிகளார்க்கும், தயாரிப்புக் காலத்தில் எங்கள் குழு தங்குவதற்கு இடமளித்து, விருந்தோம்பி நல்லுதவிகள் செய்த திருச்சிராப்பள்ளி, புனித சின்னப்பர் குருத்துவக் கல்லூரியினருக்கும், அன்போடு பராமரித்து உதவிசெய்த எனது இல்லங்களாகிய லோயோலாக் கல்லூரி, தியான ஆசிரமம் ஆகியவற்றின் இயேசுசபைச் சகோதரர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. வரைபடங்கள் கொடுத்துதவிய திண்டிவனம், தமிழ்நாடு முப்பணி நிலையத்தாருக்கும் எனது மனமுவந்த நன்றி. அச்சு அமைத்த Savithri Laser Printing மற்றும் பதிப்பித்த Hi-Tech Offset Private Ltd, சென்னை, ஆகியோருக்கும் எனது உளங்கனிந்த நன்றி.

இறைவார்த்தையை நன்குணர்ந்து, அன்பு செய்து, அதன்படி வாழ்வதற்கு இந்த விவிலியக் களஞ்சியம் பெரிதும் துணை செய்யும் என்று நம்புகிறேன். இக்களஞ்சியத்தைத் தயாரிப்பதில் நெடுகலும் ஊக்கமும் உரமும் அளித்து வழிநடத்தி வரும் இறைவன் திருவருள் துணைக்குச் சிரம்தாழ்த்தி நன்றியுடன் வணக்கம் செலுத்துகிறேன். இப்பாகமும் முழுத்தொகுப்பும் விவிலிய அன்பர்களுக்குப் பெரிதும் பயன்படும் நம்பிக்கையில் இப்பகுதியை வெளியிடுகிறேன்.

''தியாகு''

# விவிலியக் களஞ்சியம்
## அணிந்துரை

''தியாகு' அவர்களின் 'விவிலியக் களஞ்சியம்' இப்போது தமிழ் விவிலிய உலகத்தில் - ஆசிரியர்களிடமும், மாணவர்களிடமும், போதகர்களிடமும் - அறிமுகமாகிவிட்டது.

இதோ, அதன் இறுதிப் பகுதி வெளிவருகிறது. ஒரு சோற்றுப் பானைக்கு ஒரு சோறு பதம். இக்களஞ்சியத்தின் அருமையை உணர, மகரத்தில் வரும் பகுதிமட்டும் இங்கு நோக்கத்தக்கது.

இப்பகுதியில் மத்தேயு, மரியாள் போன்ற நமக்கு அறிமுகமான சொற்கள் விரிவாக விளக்கப்படுகின்றன. மக்கபேயர் பற்றிய கட்டுரை (16-37) 22 பக்கங்களாக விரிந்து செல்கிறது. இதைப் படித்ததும் இந்நூலின் மேல் நமக்குத் தனிப்பற்று உண்டாகும்.

நமக்கு மிகவும் அறிமுகமாகாத மகனயிம், மக்பேலா, மம்ரே போன்ற பெயர்களும் சுருக்கமான, தெளிவான விளக்கம் பெறுகின்றன.

மேலும், மகிமை, மகிழ்ச்சி, மதித்து நடத்தல் போன்ற பண்புகள் விளக்கப்படும்போது அவற்றிற்குரிய விவிலியச் செய்திகள் தரப்படுவதோடு நம் ஆன்ம வாழ்வுக்கும், பொது வாழ்வுக்கும் பயன்படும் கருத்துகளும் இடம் பெறுகின்றன.

சான்றாக, 'மகிழ்ச்சி' என்ற தலைப்பில் ஆவியில் மகிழ்ச்சி, புதுவாழ்வின் மகிழ்ச்சி, ஆன்மீக மகிழ்ச்சி, சோதனை வேளையில் மகிழ்ச்சி, முடிவில்லா மகிழ்ச்சி என்ற சிறு தலைப்புகள் மலர்வது நமக்கு மகிழ்ச்சி தருகின்றது.

'மக்கள்' என்ற சொல்லில் மொழி பற்றிய விழுமிய கருத்து மணக்கின்றது: ''மக்களின் மொழியானது ஒற்றுமையின் ஒரு கூறாகும். அது சிந்திப்பதில் ஒரு பொதுவான முறையை உறுதிப்படுத்துகிறது. அது கலாச்சாரம் மற்றும் உலகம் பற்றிய சிந்தனையை அறிவிக்கிறது. அஃது ஓர் உண்மையான ஆன்மீகத் தாய் நாடாகும்'' *(பக்.41)*.

இந்த விவிலியக் களஞ்சியம் மணங்கமழ் மலர்கள், மரங்கள், செடி கொடிகள் கொண்ட ஒரு பூங்கா. இதைப் பயன்படுத்துவோர் மதுவுண்ட வண்டுபோல் மகிழ்வு பெறுவர்.

எகிப்தில் பஞ்சம் உண்டான போது, யோசேப்பு களஞ்சியங்களைத் திறந்து எகிப்தியருக்குத் தானியங்களை விற்குமாறு செய்தார் (தொநூ.41:56). இதோ, 'தியாகு' என்ற அருள்தந்தை சந்தியாகு தம் விவிலியக் களஞ்சியங்களைத் திறந்துவைத்து வாழ்வுதரும் இனிய தானியங்களைத் தருகின்றார்.

இவர் இத்தனை ஆண்டுகளாக மேற்கொண்ட இம்முயற்சி, எத்தனை இன்னல்களை, இடையூறுகளை, எதிர்ப்புகளைச் சந்தித்திருக்கும்! 'தியாகு' செய்த தியாகங்களுக்காக இறைவன் அவரை ஆசீர்வதிப்பாராக!

விவிலியத்தில் மோசே கூறும் ஆசீர் தந்தை சந்தியாகுக்குப் பொருந்தும்: ''உன் களஞ்சியங்களிலும் நீ மேற்கொள்ளும் செயல்கள் அனைத்திலும், நீ ஆசிபெறும்படி ஆண்டவர் ஆணையிடுவார்'' *(இணைச்சட்டம் 28:8)*.

இந்த விழுமிய விவிலிய ஆசியை அருள்தந்தை சந்தியாகு அடைவாராக.

**+ ம. ஆரோக்கியசாமி,**
**மதுரைப் பேராயர்,**
தமிழ்நாடு கத்தோலிக்க ஆயர்கள் குழுத் தலைவர்.

A

## இந்நூலைத் தயாரிப்பதில் உடன் உழைத்தவர்கள்

1. அந்தோனிசாமி A.
2. அமலராசு M.
3. அமல்ராஜ் P.T.
4. அருள்சாமி S.I.
5. ஆரோக்கியசாமி C.
6. ஆரோக்கிய நாதன் P.
7. ஆன்ட்ரு டிரோஸ்
8. இருதயம் A.
9. இருதயராஜ் A.
10. உபால்டு M.
11. சந்தனசாமி
12. சந்தியாகு M.
13. சார்லஸ் குமார் N.A.
14. சுந்தரம் U.
15. சூசை ஆரோக்கியசாமி
16. சூசை செபஸ்டியன்
17. சேவியர் இளங்கோ
18. சேவியர் இருதயராஜ்
19. ஜான் ஆரோக்கியராஜ் J
20. ஜான்சன் ராஜ் S.
21. ஜெரால்டு S.
22. ஜேம்ஸ் ரொசாரியோ B.
23. ஜோ லாரன்ஸ்
24. ஜோசப் I.M.
25. ஜோசப் லயனல் S
26. ஜோனாஸ் N.
27. ஞானப்பிரகாசம் F.
28. தீஸ்மஸ் P.
29. பால்தோமினிக்
30. பால்ராஜ் B.
31. பீட்டர் சகாயராஜ்
32. பிரான்கோ M
33. பிரான்சீஸ் M.
34. மரிய அருள்ராஜ் A
35. மரியதாஸ் I.
36. ரொசரியோ கோமஸ்
37. லூர்துசாமி A
38. லூர்து ராஜ் G.G.
39. விக்டர் M
40. வின்சென்ட் G

## விவிலியத் திருமுறைப் பட்டியலும் சுருக்கக் குறிப்பும்

I. பழைய ஏற்பாடு

| நூல் | சுருக்கம் |
|---|---|
| 1. ஆதி ஆகமம் (தொடக்கநூல்) | ஆதி |
| 2. யாத்திராகமம் (விடுதலைப் பயணநூல்) | யாத் |
| 3. லேவியராகமம் (திருப்பணியாளர் நூல்) | லேவி |
| 4. எண்ணாகமம் (எண்ணிக்கை நூல்) | எண் |
| 5. உப ஆகமம் (துணைச்சட்டநூல்) | உப |
| 6. யோசுவா ஆகமம் | யோசு |
| 7. நீதிபதிகள் ஆகமம் (விடுதலைத் தலைவர்கள் நூல்) | நீதி |
| 8. ரூத்து ஆகமம் | ரூத் |
| 9. 1 சாமுவேல் ஆகமம் | 1 சாமு |
| 10. 2 சாமுவேல் ஆகமம் | 2 சாமு |
| 11. 1 அரசர்கள் ஆகமம் | 1 அர |
| 12. 2 அரசர்கள் ஆகமம் | 2 அர |
| 13. 1 நாள் ஆகமம் (ஆட்சிக் குறிப்பேடு) | 1 நாள் |
| 14. 2 நாள் ஆகமம் (2 ஆட்சிக் குறிப்பேடு) | 2 நாள் |
| 15. எஸ்ரா ஆகமம் | எஸ் |
| 16. நெகேமியா ஆகமம் | நெகே |
| 17. தோபியா ஆகமம் | தோபி |
| 18. யூதித்து ஆகமம் | யூதி |
| 19. எஸ்தர் ஆகமம் | எஸ்த |
| 20. யோபு ஆகமம் | யோபு |
| 21. சங்கீதங்கள் (திருப்பாடல்கள்) | சங் |
| 22. பழமொழி ஆகமம் (நீதி மொழிகள்) | பழ |
| 23. திருவுரையாளர் ஆகமம் | திருவுரை |
| 24. உன்னத சங்கீதம் (பேரின்பப் பாடல்) | உ.ச. |
| 25. ஞான ஆகமம் | ஞான |
| 26. சீராக்கு ஆகமம் | சீரா |
| 27. எசாயா ஆகமம் | எசா |
| 28. எரேமியா ஆகமம் | எரே |
| 29. புலம்பல் ஆகமம் | புல |
| 30. பாரூக்கு ஆகமம் | பாரூ |
| 31. எசேக்கியேல் ஆகமம் | எசே |
| 32. தானியேல் ஆகமம் | தானி |
| 33. ஓசேயா ஆகமம் | ஓசே |
| 34. யோவேல் ஆகமம் | யோவே |
| 35. ஆமோஸ் ஆகமம் | ஆமோ |
| 36. ஒபதியா ஆகமம் | ஒப |
| 37. யோனா ஆகமம் | யோனா |
| 38. மீக்கா ஆகமம் | மீக் |
| 39. நாகூம் ஆகமம் | நாகூ |
| 40. அபக்கூக் ஆகமம் | அப |
| 41. செப்பானியா ஆகமம் | செப் |
| 42. ஆகாய் ஆகமம் | ஆகா |
| 43. செக்கரியா ஆகமம் | செக் |
| 44. மலாக்கி ஆகமம் | மலா |
| 45. 1 மக்கபேயர் ஆகமம் | 1 மக் |
| 46. 2 மக்கபேயர் ஆகமம் | 2 மக் |

II. புதிய ஏற்பாடு

| நூல் | சுருக்கம் |
|---|---|
| 47. மத்தேயு நற்செய்தி | மத் |
| 48. மாற்கு நற்செய்தி | மாற் |
| 49. லூக்கா நற்செய்தி | லூக் |
| 50. யோவான் நற்செய்தி | யோவா |
| 51. அப்போஸ்தலர் பணிநூல் (திருத்தூதுவர் நூல்) | அ.ப. |
| 52. உரோமையர் | உரோ |
| 53. 1 கொரிந்தியர் | 1 கொரி |
| 54. 2 கொரிந்தியர் | 2 கொரி |
| 55. கலாத்தியர் | கலா |
| 56. எபேசியர் | எபே |
| 57. பிலிப்பியர் | பிலி |
| 58. கொலோசியர் | கொலோ |
| 59. 1 தெசலோனிக்கர் | 1 தெச |
| 60. 2 தெசலோனிக்கர் | 2 தெச |
| 61. 1 திமொத்தேயு | 1 திமொ |
| 62. 2 திமொத்தேயு | 2 திமொ |
| 63. தீத்து | தீத் |
| 64. பிலமோன் | பில |
| 65. எபிரேயர் | எபி |
| 66. யாக்கோபு | யாக் |
| 67. 1 பேதுரு | 1 பேதுரு |
| 68. 2 பேதுரு | 2 பேதுரு |
| 69. 1 யோவான் | 1 யோவா |
| 70. 2 யோவான் | 2 யோவா |
| 71. 3 யோவான் | 3 யோவா |
| 72. யூதா | யூதா |
| 73. திருவெளிப்பாடு | திருவெளி |

## துணை நின்ற நூல்கள்

Anderson G.N. : A Critical Introduction to the O.T.
A History and Religion of Israel
The living World of the O.T.

A New Catholic Commentary on Holy Scripture

Bright J : A History of Israel.

Claus Schedl : History of the O.T.

Danielou J : The Lord of History

Daniel-Rops : Sacred History

Edman Jacob : God, the Lord of History

Elis P.F : The Men and Message of the O.T.

Grelot P : Introduction to the Bible

Harry Thomas Frank : Discovering the Biblical World

Helmer Ringgren : Israelite Religion

James Hastings : Dictionary of the Bible

Leon-Dufour X : Dictionary of the Biblical Theology

Louis Hartman : Encyclopedic Dictionary of the Bible

Mc Kenzie J.L : Dictionary of the Bible

Moriarty F.L : Introducing the O.T.

Osmund Lewry O.P. : Introducing the O.T.

Robert A & Feuillet A : Introduction to the Bible

Robert A & Tricot A : Guide to the Bible

The Eerdmans Bible Dictionary

The Harper's Dictionary of the Bible

The Interpreter's Dictionary of the Bible 5 Vols

The Jerome Biblical Commentary

The Jerusalem Bible

Weather Head : A Guide to the Bible

William P. Baber : Everyone in the Bible

''தியாகு'' : *விவிலிய அறிமுகம் (10 பாகங்கள்)*

# ம

**மகசியோத்து** *(MAHAZIOTH - காட்சிகள்)*

இசைக்கருவிகள் இசைத்து இறைவாக்குரைக்க தாவீது மன்னனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர். ஏமானின் புதல்வர். ஆலயத்தில் லேவிய இசைக்கலைஞர்களில் இருபத்து மூன்றாம் பிரிவுக்குத் தலைவர் *(1 நாள் 25: 4-6.30).*

**மகதலா** *(MAGDALA - கோபுரம்)*

இது கலிலேயாக்கடலின் மேற்குக்கரையில் உள்ள ஒரு நகரம். மத்தேயு இவ்வூரை மகதா என்றும் *(மத் 15:39)*, மாற்கு இவ்வூரைத் தல்மனுத்தா என்றும் *(மாற் 8:10)* எழுதியுள்ளனர். மகதலா மரியா இவ்வூரைச் சார்ந்தவள். புதிய ஏற்பாட்டுக் காலத்திலே இந்நகரின் பெயரானது தரிக்கேயா என்று இருந்திருக்கலாம். வளமிக்க இந்த ஊர் மீன்பிடித்துறையில் சிறப்புப் பெற்றிருந்தது.

தற்போதைய மெச்தெல், இந்த மகதலாவாக இருக்கலாமென நம்பப்படுகிறது. இந்நகர் திபேரியு சாலையில் மிக முக்கியமான இடத்தில் அமைந்துள்ளது. இந்த நகர் திபேரியாவுக்கு அருகில் இருந்ததாகத் தால்மூது கூறுகிறது.

**மகதலா மரியா** *(MARY MAGDALENE)*

இறைமகன் இயேசுவின் கலிலேயப் பெண் சீடர்களுள் முக்கியமானவர் *(மத் 27:56.61; 28:1; மாற் 15:40. 47; 16:1; லூக் 8:2; 24:10; யோவா 19:25; 20:1.18).*

மகதலா நகர் திபேரியுவுக்கு அருகில் இருந்ததாக தால்மூது கூறுகிறது. இது கெனசரத்துச் சமவெளியின் தெற்குக் கோடியில் அமைந்துள்ளது.

**மகதான்** *(MAGADAN)*

இது கலிலேயாக் கரையிலுள்ள ஓரிடம். அப்பம் பலுகி நாலாயிரம் பேர் உட்கொண்ட புதுமைக்குப்பின் இறைமகன் இயேசு கூட்டத்தை அனுப்பிவிட்டு மகதா நாட்டுக்கு வந்தார் *(மத் 15:39).*

**மகராய்** *(MAHARAI - தூண்கள் உள்ள)*

தாவீதோடு இருந்த வலிமையுள்ள முப்பது பேரில் இவரும் ஒருவர் *(2 சாமு 23:28; 1 நாள் 11:30).*

இவர் யூதாவிலுள்ள நெற்றோபா என்ற ஊரைச் சேர்ந்தவர். மேலும், இவர் தாவீதின் படையில் பத்தாம் மாதத்திற்கான பத்தாம் பிரிவிற்குத் தலைவராக இருந்தார். இவர் ஒரு செரகியர் *(1 நாள் 27:13).*

**மகலலேல்** *(MAHALALEL - இறைவன் ஒளிர்கின்றார்)*

1. இவர் கேனானின் மகனும், சேத்தின் வழிவந்தவரும், ஏரேத்து (யாரேத்து)வின் தந்தையுமாவார் *(ஆதி 5:12-17; 1 நாள் 1:2; லூக் 3:37).*

2. அடிமைத்தனத்திற்குப்பின் வாழ்ந்த யூதா இனத்தையும் பெரேட்சுவின் குடும்பத்தையும் சேர்ந்தவர் *(நெகே 11:4).*

**மகலாத்து** *(MAHALATH)*

1. இவள் இசுமயேலின் புதல்வியும், நெபயோத்துவின் சகோதரியும், ஏசாவின் மூன்றாவது மனைவியும் ஆவாள் *(ஆதி 28.9). 36:3*-இல் இவள் பாசமத்து என்றழைக்கப்படுகிறாள்.

2. இவள் தாவீதின் பேத்தியும், எரிமோத்து மற்றும் அபிகயில் ஆகியோரின் புதல்வியும், ரெகபயாமின் மனைவிகளுள் ஒருத்தியும் ஆவாள் *(2 நாள் 11:18).*

3. சங் 53 மற்றும் 88-இல் வரும் மேற்குறிப்பு ஓர் இசைக்குறிப்பாகும். இச்சொல்லின் பொருள் தெளிவாக இல்லை. ஒருவேளை ''நோயுற்று'' என்று பொருள்படலாம். சங் 88-இல் மகலாத்து, ''லெயநோத்து'' என்று ஓர் இசைக்குறிப்பாக வருகிறது. இது ''நோயின் துயரில்'' என்ற மெட்டைக் குறிக்கலாம்.

**மகலாபு** (MAHALAB)

இஃது ஆசேர் புதல்வரின் கோத்திரத்திற்குக் கொடுக்கப்பட்ட ஓர் ஊர் (யோசு 19:29). இதுவும் அகிலாபும் (நீதி 1:31) ஒன்றே என்று கருதப்படுகின்றன. கி.மு. 701-இல் சனகெரிபின் மூன்றாம் படையெடுப்பில் கைப்பற்றப்பட்ட நகரங்களில் இதுவும் ஒன்று. இது தீர் நகருக்கு வடகிழக்கில் 6 கி.மீ. தொலைவில் லித்தானி ஆற்றின் கரையிலுள்ள கிர்பெத் ஏல்-மகலிபு என்ற இடமாக அடையாளம் காணப்படலாம்.

**மகவியர்** (MAHAVITE, THE)

எலியேலைக் குறிக்கும் ஓர் இனப்பெயர். இவர் தாவீதின் வலிமை வாய்ந்த முப்பது பேரில் ஒருவர் (1 நாள் 11:46). வாசகம் தெளிவாக இல்லை. இப்பெயர் மகனயிமியர் என்று திருத்தப்படலாம்.

**மகள், புதல்வி** (DAUGHTER)

இஸ்ராயேலர் இச்சொல்லைப் பல பொருளில் பயன்படுத்தினர். 1) முதன்மையாக, இச்சொல் ஒரு பெற்றோரின் பெண் குழந்தையைக் குறித்தது. இப்புதல்வியர்களின் பட்டியல் விவிலியத்தில் பல உள்ளன (எ.கா.ஆதி 11:29). 2) விரிவான பொருளில், எந்தப் பெண் வழித்தோன்றலையும், பேத்தியையோ (2 அர 8:26; 2 நாள் 22:2), தூர உறவுப் பெண்ணையோ குறிக்கலாம். 3) அடிக்கடி ஒரு நகரின், ஒரு பகுதியின் அல்லது ஒரு நாட்டின் பெண்கள் அதன் புதல்வியர் என்றழைக்கப்படுகின்றனர் (ஆதி 24:3). 4) இச்சொல் ஒரு நகரையோ (எசா 1:8; எரே 4:31), நாட்டையோ (எரே 46:11) உருவகமாகக் குறிக்கலாம். 5) மரபுமுறை பற்றிய பகுதிகள், நகரங்கள் அல்லது கிராமங்கள் புதல்வியர் என்று குறிக்கப்படுகின்றன. இஃது அவை நாட்டோடு கொண்டுள்ள உறவைச் சுட்டிக்காட்டுகிறது (சங் 48:11; 1 நாள் 1:50; 2:3.21.35.49; காண்க. யோசு 15:45; எரே 49:2-3).

புதிய ஏற்பாட்டில் ஒரு பெற்றோரின் உடனடியான பெண் குழந்தையையும் (லூக் 2:36), தூரத்து உறவுப்பெண்ணையும் (1:5; 13:16) இச்சொல் குறிக்கும். ஒரு நகரத்தை அல்லது அதன் குடிமக்களை இச்சொல் குறிக்கலாம் (மத் 21:5; யோவா 12:15; காண்க. லூக் 23:28). மத் 9:22-இல் தன் உதவியை நாடிய ஒரு பெண்ணை இயேசு ''மகளே'' என்று பரிவோடு அழைக்கிறார்.

சமூக வாழ்வில், மகளுக்கு மகனுடையதைவிடத் தாழ்ந்த நிலையே அளிக்கப்பட்டாலும், சமூகத்தில் மகளுக்குச் சில குறிப்பிட்ட சலுகைகளும் உரிமைகளும் உண்டு. குறிப்பிட்ட சூழ்நிலையில் அவள் உரிமைச் சொத்தையும் கோரலாம் (காண்க. எண் 27:1-7).

**மகனயிம்** (MAHANAIM இரண்டு பாளையம்)

இந்த நகர் கிலயாதுவில், மனாசேயின் பகுதிக்கு அருகில் உள்ளது. காதின் கோத்திரத்தாருக்குக் கொடுக்கப்பட்டது (யோசு 13:26. 30; 21:38). இது மெராரிக்குரிய ஒரு லேவிய அடைக்கல நகரமாகும் (1 நாள் 6:80). இந்நகருக்கு இப்பெயர் இரு காரணங்களால் வந்திருக்கலாம்.

1. யாக்கோபு கானானுக்குத் திரும்பி வரும் வழியில் யாபோக்கு ஆற்றுக்கு அருகிலுள்ள இந்த இடத்தில் கடவுளின் தூதர்கள் எதிர்கொண்டு வந்தார்கள். யாக்கோபு அவர்களைக் கண்டபோது ''இது தான் கடவுளின் படை'' என்று கூறி அவ்விடத்திற்கு மகனயிம் அதாவது பாளையம் என்று பெயரிட்டார் (ஆதி 32:2-3).

2. யாக்கோபின் சந்ததியை இரு பிரிவுகளாகப் பிரிக்குமளவுக்கு இறைவன் பலுகச் செய்ததால் அவ்விடத்திற்கு அப்பெயர் வழங்கப்பட்டது (32:11).

இந்நகர் வலிமை மிகுந்ததாக இருந்ததால் விவிலிய வரலாற்றில் இருமுறை அரசர்களுக்கு அடைக்கலம் தந்தது.

1. சவுல் கில்போவா மலையில் தோற்கடிக்கப்பட்டபின், சிதறிப்போன படை மகனாயிமுக்கு ஓடிப்போயிற்று. இங்குச்

சவுலின் மகன் இசுபொசேத்து தன் அரசை ஏற்படுத்திக் காலப்போக்கில் இஸ்ராயேலின் பெரும்பகுதியைக் கைப்பற்றினான் (2 சாமு 2:8.12.29). அவனை இரேக்காபும், பாநாவும் கொன்ற பிறகு, தாவீது நாடு முழுவதற்கும் அரசனானார் (4:5-7).

2. தாவீதின் மகன் அப்சலோம் தாவீதிற்கு எதிராகச் செய்த கிளர்ச்சியின்போது எருசலேமை விட்டு ஓடிய தாவீது மகனயிமில் தம் படைகளோடு ஓய்வு எடுத்தார் (17:24-27). அவரது படைகள் அப்சலோமுக்கு எதிராக எப்பிராயிம் காடுகளில் போரிடச் சென்றபோது, இங்குதான் தாவீது காத்திருந்தார் (2 சாமு 18).

மேலும், சாலமோன் அரசர் காலத்தில் மகனயிம் அவரது ஏழாம் மாவட்டத்தின் தலைநகராக விளங்கியது (1 அர 4:1). கி.மு. 925-இல் எகிப்தியர்கள் பாலஸ்தீனத்தின் மேல் படையெடுத்து வரும்போது இந்நகர் தரைமட்டமாக்கப்பட்டது.

இந்த இடம் எங்கிருந்தது என்று கூறமுடியாது. ஆனாலும், அய்லூக்கு அருகிலுள்ள கிர்பெத் மகனே மற்றும் இரட்டை இடங்களான தூலூல் எத்-தகாபு (பழங்காலப் பெனுவேல்) மற்றும் தூலூல் ஏல்-கர்பியே போன்ற பல இடங்கள் அடையாளம் காட்டப்படுகின்றன.

**மகனேதாண்** (MAHANEH-DAN - தாணின் பாளையம்)

இது கிரியத்து எயாரிமுக்கு மேற்கில் சோராவுக்கும் எசுத்தாவோலுக்கும் இடையில் உள்ள ஓர் இடம். இங்குதான் ''ஆண்டவரின் ஆவி சிம்சோனைத் தூண்டத்தொடங்கியது (நீதி 13:25). தாண் கோத்திரத்தைச் சேர்ந்த போர்க்கோலம் தாங்கிய அறுநூறுபேர், எப்பிராயிம் மலை நாட்டிற்குச் செல்லும் வழியில் இங்குப் பாளையம் இறங்கினர் (18:12).

**மகன், புதல்வன்** (SON)

இச்சொல் முதன்மைப்பொருளில், ஒரு குறிப்பிட்ட பெற்றோரின் ஆண்குழந்தையைக் குறிக்கும். விவிலிய வழக்கில், முதல் தலைமுறைக்கு அடுத்த ஆண் குழந்தையையும் குறிக்கலாம் (எ.கா. ஆதி 31:28; யாத் 12:24; லூக் 20:41; காண்க. 20:5). ஒரு நாடு முழுவதுமே குலப்பெயர் மூதாதையரின் புதல்வர்கள் என்று அழைக்கப்படும். எ.கா. இஸ்ராயேலரின் புதல்வர்கள் (எ.கா. ஆதி 32:33, இஸ்ராயேலர்); ஏத்தின் புதல்வர்கள் (23:3, ஏத்தியர்). ஓர் இனத்தைக் குறிக்கவும் இச்சொல் பயன்படும் (23:11). புவியியலும் மக்களைக் குறிக்க அடிப்படையாகலாம். அன்னியர் குழந்தைகள், ''அன்னிய நாட்டுப் புதல்வர்கள்'' என்று குறிக்கப்படுவர் (எ.கா. ஆதி 17:12; 2 சாமு 22:45). கீழ்த்திசை மக்கள் கீழ்த்திசைப் புதல்வர்கள் என்றழைக்கப்படுவர் (ஆதி 29:1). குறிப்பிட்ட நகரங்களின் மற்றும் நாடுகளின் மக்கள் அந்நகரங்களின் மற்றும் நாடுகளின் புதல்வர்கள் எனப்படுவர் (எஸ் 2:25-26.29-33; காண்க. 2:16).

''...உடைய மகன்'' என்பது''... உடைய குணங்களைக் காட்டும் ஆள்'' என்ற பொருளைக் குறிக்கும் செமித்தியச் சொற்றொடராகும். எ.கா. கிளர்ச்சியின் புதல்வர்கள் (எண். 17:25); பேலியாலின் மக்கள் (உப 13:13); வலிமையின் மகன் (1 சாமு 14:52, வலியவன்); அடிமைத்தனத்தின் மக்கள் (எஸ் 4:1); துன்பங்களின் மகன் (பழ 31:5); அரசின் மக்கள் (மத் 8:12); கீழ்ப்படியாத மக்கள் (எபே 2:2); ஒளியின் மக்கள் (5:8); அழிவின் மகன் (2 தெச 2:3). ஒரே தொழிலைக் கொண்டிருப்பவர்கள் அவர்கள் குலப்பெயர் மூதாதையரால் அடையாளம் காட்டப்பட்டனர் (2 நாள் 35:14-15; சங் 42:44-இன் மேல் குறிப்பு; நெகே 3:8; காண்க. 1 அர 20:35; எஸ் 2:61).

''மனிதர்களின் மக்கள்'' (ஆதி 11:5, மானிடர்; பழ 8:4.31; திருவுரை 1:13) மனுகுலம் முழுவதையும் குறிக்கும் ஒரு சொற்றொடராகும். ''மனுமகன்''என்பது மூலத்தில் எந்த மனிதனையும், அவனுடைய மனிதத்தைச் சிறப்பித்துக் காட்டவோ, பெரிய குழுவிருந்து பிரித்துக் காட்டவோ பயன்பட்டது (சங் 8:4; எசே

26:2). இப்பெயர் சிறப்பான முறையில் இயேசுவைக் குறிப்பது பற்றி மனுமகன் என்ற தலைப்பின்கீழ்க் காண்க.

விண்ணக உயிர்கள் ''தெய்வப்புதல்வர்கள்'' என்றழைக்கப்படுகின்றனர் (யோபு 1:6; 38:7; சங் 29:1; 82:1;89:5-7; ஆதி 6:2.4: தானி 3:25). இறைவன் இஸ்ராயேலை ''என் மகன்'' என்றும் (யாத் 4:22-23; ஓசே 11:1), இஸ்ராயேலரை ''என் புதல்வர்கள்... என் புதல்வியர்'' என்றும் (எசா 43:6), ''என் மக்கள்'' என்றும் (45:11), இஸ்ராயேலின் அரசனை ''என் மகன்'' என்றும் (2 சாமு 7:14; சங் 2:7; காண்க. 89:26-27) அழைக்கிறார். இவை இறைவன் இஸ்ராயேலரோடு கொண்டிருக்கும் தனிச்சிறப்பான உடன்படிக்கை உறவைச் சுட்டுகின்றன. இறைமக்கள் பற்றிய இக்கருத்து புதிய ஏற்பாட்டிலும் காணப்படுகிறது (உரோ 8:15-17.19; 9:26; கலா 4:5-7; காண்க. மத் 5:45; யோவா 1:2). ''தெய்வப் புதல்வர்'' அல்லது ''இறைமகன்'' என்ற பெயர் இயேசுவுக்கே சிறப்பான முறையில் உரியது என்பது பற்றி ''இறைமகன்'' என்ற தலைப்பின் கீழ்க் காண்க.

## மகிமை, மாட்சி (GLORY)

I. **பொதுவான நிலையில் மகிமை:** எபிரேய விவிலியத்தில் மகிமையைக் குறிக்கும் சொல்லானது பளுவினுடைய கருத்தைக் கொண்டுள்ளது. வாழும் உயிரின் பளுவானது அதனுடைய முக்கியத்துவத்தையும், அது தூண்டுகின்ற மரியாதையினையும், அதனுடைய மகிமையையும் வரையறை செய்கிறது. எனவே, எபிரேயரைப் பொறுத்த மட்டில் மகிமையானது, அதனுடைய பளுவிற்கு ஏற்பக் கணிக்கப்பட்ட புகழினை உண்மையான மதிப்பாகக் குறிப்பிடவில்லை.

மகிமையின் அடிப்படையானது செல்வங்களாக இருக்கலாம். ஆபிரகாம் ''கால்நடைகளும், வெள்ளியும், தங்கமும்'' கொண்டிருந்த காரணத்தினால் (ஆதி 13:2), ''மிகவும் மகிமைக்குரியவர்'' என்று கூறப்பட்டார். மகிமையானது மனிதன் பெற்றிருந்த உயர்ந்த சமூக நிலையினையும், அது அவனுக்கு அளித்த அதிகாரத்தையும் கூட குறிப்பிடுகிறது. ''நான் எகிப்திலே அடைந்துள்ள மாட்சி (சிறப்பு) அனைத்தையும் என் தந்தைக்குச் சொல்லுங்கள்'' என்று யோசேப்பு தனது சகோதரர்களிடம் கூறுகிறார் (45:13). நொறுக்குண்டு தாழ்த்தப்பட்ட யோபு ''என்னிடமிருந்து என் மகிமையைப் பறித்துக் கொண்டார்'' என்று கூக்குரலிடுகிறார் (யோபு 19:9; 29:1-25). மகிமையானது வல்லமையுடன் (எசா 8:7; 16:14; 17:3-4; 21:16; எரே 48:18) சுடரொளியைச் சுட்டுகிறது. அழகின் ஒளிக்கீற்றை அது குறிப்பிடுகிறது. ஆரோனுடைய உடைகள் (யாத் 28:2.40), ஆலயம் (ஆகா 2:3.7.9), எருசலேம் (எசா 62:2), லெபனோன் (எசா 35:1-2; 60:13) ஆகியவற்றின் மகிமை பற்றியும் பேசப்படுகிறது.

தனிச்சிறப்பான முறையில் மகிமையானது அரசனுடைய உடைமையாகும். செல்வங்கள் மற்றும் ஆற்றலுடன் சேர்த்து அவரது ஆட்சியின் மேன்மையை அஃது எடுத்துக்கூறுகிறது (1 நாள் 29:28; 2 நாள் 17:5). ''அரசர்களில் வெறெவரும் பெற்றிராத செல்வங்களையும் மேன்மையையும், புகழையும்'' சாலமோன் இறைவனிடமிருந்து பெறுகிறார் (1 அர 3:9-14; மத் 6:29). படைப்பின் அரசனாகிய இறைவன் மனிதனுக்கு ''மாட்சியையும் மேன்மையையும் முடியாகச் சூட்டினார்'' (சங் 8:5).

II. **மனித மகிமை பற்றிய திறனாய்வு:** மனித மகிமையினுடைய வலுவற்ற இயல்பினைப் பழைய ஏற்பாடு கண்டுள்ளது: ''சிலர் செல்வர் ஆனாலோ, அவர்களின் குடும்பச்செல்வம் பெருகினாலோ, அவர்களைக் கண்டு நிலைகுலையாதே! ஏனெனில், சாகும்போது அவர்கள் எதையும் எடுத்துப்போவதில்லை; அவர்களது செல்வமும் (மகிமையும்) அவர்கள் பின் செல்வதில்லை'' (சங் 48:16-17). ஒழுக்க மற்றும் சமய மதிப்பீடுகளுடன் மகிமையை எவ்வாறு இணைப்பதென்பதை விவிலியம் அறிந்திருந்தது (பழ 3:35; 20:3; 29:23). இறைவனுக்குக் கீழ்ப்படிதலானது

அனைத்து மனித மகிமையையும் விஞ்சியது (எண் 22:17-18). மகிமையினுடைய ஒரே உறுதியான அடித்தளமானது இறைவனில் உள்ளது (சங் 61:6.8). இறைப் பற்றற்றவருடைய நிலையற்ற மகிமையைப் பற்றித் தியானித்த ஞானி, தனது மகிமைக்கென இறைவனைவிட அதிகமாக எதையும் கொண்டிருக்க விரும்பவில்லை: ''முடிவில் மாட்சியோடு எம்மை எடுத்துக்கொள்வீர்'' (சங் 72:24). இந்த மனப்பான்மையானது அதனுடைய முழுமையில் கிறிஸ்துவினுடையதாக இருக்கும். ''உலக அரசுகள் அனைத்தையும், அவற்றின் மேன்மையையும்'' சாத்தான் அளிக்கும்போது இயேசு, ''உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி, அவர் ஒருவருக்கே பணி செய்வாயாக'' என்று பதிலளிக்கிறார் (மத் 4:8-10).

III. **யாவேயின் மகிமை:** யாவேயின் மகிமை என்ற சொற்றொடரானது, இறைவன் தனது சிறப்பான மாட்சிமைத் தோற்றத்திலும், வல்லமையிலும், தூய்மையின் ஒளியிலும், அவரது உயிரின் இயல் ஆற்றலிலும் வெளிப்படுத்தப்படும் அளவிற்கு இறைவனையே உணர்த்துகிறது. எனவே, யாவேயின் மகிமையானது இறை ஆற்றல் தோற்றமுடையது. பழைய ஏற்பாடு இறை மகிமையினுடைய இரு விதமான வெளிப்பாடுகளை அல்லது இறையாற்றல் தோற்றங்களை அறிந்துள்ளது. அவை இறைவனுடைய உயர்ந்த செயல்களும், அவரது வெளிப்பாடுகளும் ஆகும்.

**1. இறைவனுடைய உயரிய செயல்கள்:** தன்னுடைய ஆற்றல் மிக்க தலையீடுகள், தீர்ப்புகள் ''அருங்குறிகள்'' (எண் 14:22) ஆகியவற்றின் மூலமாக இறைவன் தனது மகிமையை வெளிப்படுத்துகின்றார். செங்கடல் புதுமை மிகச்சிறப்பான முறையில் இத்தகைய சிறப்பு மிக்கதே (14:18). மன்னா மற்றும் காடைகளின் புதுமையும் இத்தகையதே: ''காலையில் நீங்கள், ஆண்டவரின் மாட்சியைக் காண்பீர்கள்'' (16:7). இறைவன் தன்னுடையவர்களின் உதவிக்கு வருகிறார். அப்போது மகிமையானது கிட்டத்தட்ட மீட்புடன் ஒத்ததாக உள்ளது (எசா 35:1-4; 44:23; எசா 40:5 மற்றும் லூக் 3:6-ஐ ஒப்பிடுக). உடன்படிக்கையின் இறைவன் தனது மக்களைக் காத்துத் துயர் தணிக்க, தனது மகிமையைப் பயன்படுத்துகிறார். அவரது மகிமையானது அவரது அன்பு மற்றும் பற்றுறுதியினுடைய ஊழியத்திற்கான அவரது வல்லமையாகும்: ''ஆண்டவர் சீயோனைக் கட்டி எழுப்புவார்; அங்கு அவர் தம் மாட்சியுடன் திகழ்வார்'' (சங் 102:16; காண்க. எசே 39:21-29). அவரது படைப்புச்செயலும் இறைவனுடைய மகிமையை வெளிப்படுத்துகிறது. ''பூவுலகனைத்தும் ஆண்டவருடைய மகிமையினால் நிறைந்திருக்கும்'' (எண் 14:21). இயற்கை நிகழ்ச்சிகளில், அவரது மகிமையை அதிகமாக வெளிப்படுத்துவதில் புயலும் ஒன்று (சங் 20:3-9; காண்க. 97:1-6).

**2. ''யாவேயின் மகிமையினுடைய'' காட்சிகள்:** இறை வெளிப்பாடுகளின் இரண்டாம் வகையில் காணக்கூடிய உண்மையாகிற மகிமையே (யாத் 16:10) இறை உயிரின் பளிச்சிடும் சுடரொளியாக உள்ளது. எனவே, ''உம்முடைய மாட்சிமையை எனக்குக் காண்பித்தருளும்'' என மோசே செபிக்கிறார் (33:18). சீனாய் மலையில், மலையினை நெருப்புச் சூழ்கின்ற ஒரு தோற்றத்தினை யாவேயின் மகிமை எடுத்தது (யாத் 24:15-17; உப 5:22-24). மேகத்தின் அருகில் இழுக்கப்பட்டவராய் மோசே ''ஒளிமயமான முகத்தோற்றத்தோடு'' திரும்புகிறார் (யாத் 34:29). ''இஸ்ராயேல் மக்கள் அவரது முகத்தை உற்றுப் பார்க்கவும் இயலாத அளவிற்கு அந்த மாட்சிமை மோசேயின் முகத்தைச் சூழ்ந்திருந்தது'' என்று பவுல் கூறுகிறார் (2 கொரி 3:7). சீனாய்க்குப் பிறகு மாட்சிமையானது புனித இடத்தை ஆடையாக உடுத்துகிறது: ''அவ்விடம் என் மாட்சிமையால் புனிதம் பெறும்'' (யாத் 29:43; 40:34). ஆண்டவருடைய மகிமையானது உடன்படிக்கைப் பேழையில் அரியணையில் அமர்ந்துள்ளது. அது முதல் இஸ்ராயேலானது இம்மாட்சிமைக்குப் பணிசெய்யும் (லேவி 9:6.23-24). அதனுடைய சுடரொளியின்கீழ் அது

வாழ்ந்து, இயங்கி, வெற்றி கொள்கிறது (எண் 16:1-17:15; 20:1-13; 40:36-38). பேழையும் மகிமையும் நெருக்கமாக இணைக்கப்பட்டுள்ளன. இஸ்ராயேலைப் பொறுத்தவரை ஒன்றை இழப்பதென்பது, மற்றதையும் இழப்பதாகும் (1 சாமு 4:21-22). பிற்காலத்தில் இந்த மாட்சியானது ஆலயத்தை நிரப்பும் (1 அர 8:10-12). மேலும், நாடு கடத்தப்படும் காலத்தில், கண்டனத்தின் அறிகுறியாக இங்கிருந்தே அது விட்டு விலகும் (எசே 9-11). மாட்சிமை பற்றிய இந்த இடம் மற்றும் சடங்குமுறை சார்ந்த கருத்திற்கும், செயல் திறமும் இயக்காற்றலுமுள்ள கருத்திற்கும் இடையிலுள்ள உறவானது நெருங்கியதாக உள்ளது. இரண்டு நிலைகளிலும் தனது மக்களைக் காக்க, புனிதப்படுத்த, ஆட்சிசெய்ய அவர்களிடையே பிரசன்னமாய் இருப்பவராக இறைவன் வெளிப்படுத்தப்படுகிறார். புனிதத் தலத்தைத் திருநிலைப்படுத்தும்போது இரண்டு கருத்துகளுக்கு' இடையிலான பிணைப்பு தெளிவாக உள்ளது. ''அவர்களிடையே குடியிருப்பதற்காக எகிப்து நாட்டினின்று அவர்களை நடத்தி வந்த அவர்களின் கடவுளாகிய ஆண்டவர் நாமே என்பதை அவர்கள் உணர்ந்து கொள்வர். ஆம்! நாமே அவர்களின் கடவுளாகிய ஆண்டவர்'' என்று இறைவன் கூறுகிறார் (யாத் 29:46).

அரச மகிமை என்ற கோணத்தில் யாவேயின் மகிமையை, யாவேயின் மாட்சியை எசாயா சிந்திக்கிறார். மிகவும் உயரமானதோர் அரியணையில் ஆண்டவர் அமர்ந்திருப்பதையும், அவரது தொங்கலாடை புனித இடத்தை நிரப்பி நிற்பதையும், அவரது செராபியக் குழுவினர் அவரது மகிமையை உரத்தகுரலில் கூறிக்கொண்டிருப்பதையும் இறைவாக்கினர் காண்கிறார் (எசா 6:1-3). படைப்பினுடைய தீட்டுகளையும், அதனுடைய ஒன்றுமின்மையையும், அடிப்படை வலுவின்மையையும், திறந்து காட்டும் எரியும் நெருப்பாகவும், புனிதமாகவும் அஃது உள்ளது. ஆயினும், அழிப்பதற்காக இல்லாமல், தூய்மைப்படுத்தி மீண்டும் உயிரளிக்க அது வெற்றி பெறுகிறது. உலகனைத்தையும் ஆட்கொள்ள அது விரும்புகிறது. ஆலயத்தை விட்டு விலகி (எசே 11:22-23), ஆவியால் புதுப்பிக்கப்பட்ட சமுதாயத்தின் மீது சுடர் வீசிப் பரவுகின்ற (36:23-25; 39:21-29) மகிமையின் எல்லை கடந்த விடுதலையைப் பற்றி எசேக்கியேலின் காட்சிகள் கூறுகின்றன.

எசாயா நூலின் இறுதிப்பகுதியானது மகிமையின் இரண்டு கூறுகளையும் ஒன்றிணைக்கிறது: அவரது ஆற்றலால் புது வாழ்வு அளிக்கப்பட்டு, அவரது பிரசன்னத்தால் ஒளிர்விக்கப்படும் புனித நகரத்தில் ஆட்சிசெய்கிறார். ''எருசலேமே, எழு! ஒளிவீசு! உன் ஒளி தோன்றியுள்ளது! ஆண்டவரின் மாட்சிமை உன்மேல் உதித்துள்ளது!'' (எசா 60:1). ''பூவுலகில் நிலைநாட்டப்பட்டுப் புகழ் பெறுவதாக'' எருசலேம் காட்சியளிக்கிறது (62:7; காண்க. பாரூ 5:3). திகைத்து அதனை நோக்கிவரும் அனைத்து நாடுகள் மீதும் இறைவனுடைய மகிமையானது அதனின்றே ஒளிவீசும் (எசா 60:3). நாடு கடத்தப்பட்ட காலத்து இறைவாக்கினரிலும், அரசினுடைய சங்கீதங்களிலும், வெளிப்பாடு நூல்களிலும் மகிமையானது இறுதிக்காலப் பண்பின் ஒரு குறிப்பிட்ட உலகளாவிய பருமானத்தை அடைகிறது: ''வேற்று மொழியினர் அனைவரையும் கூட்டிச்சேர்க்க நாமே வருகிறோம்; அவர்களும் கூடி வந்து நம்முடைய மகிமையைக் காண்பார்கள்'' (66:18; காண்க. சங் 97:6; அப 2:14).

இத்தகைய மின்னுகின்ற பின்னணிக்கு எதிராக, உலகின் கடையெல்லை வரையில் இறைமகிமையை ஒளிரச் செய்யும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட ஒருவருடைய ''அழகும் மாட்சியுமற்ற'' உருவமானது (எசா 52:14) பிரித்துக்காட்டப்படுகிறது: ''நீயே நம் ஊழியன், உன் வழியாய் நாம் மாட்சியுறுவோம்'' (49:3).

IV. **கிறிஸ்துவின் மகிமை:** புதிய ஏற்பாட்டு வெளிப்பாட்டின் இன்றிமையாத

கூறு இயேசுவுடனான மகிமையின் தொடர் பாகும். இறைவனின் மகிமை அவரில் முழுமையாகப் பிரசன்னமாகியுள்ளது. இறைமகனாகிய அவரே ''கடவுளுடைய மாட்சிமையின் சுடரொளியாகவும், அவருடைய உள்ளியல்பின் சாயலாகவும் விளங்குகிறார்'' (எபி *1:3*). இறைவனுடைய மாட்சிமை ''அவரது முகத்தில் வீசியது'' (*2* கொரி*4:6*). அவரினின்று அது மனிதர் மேல் ஒளிவீசுகிறது (*3:18*). அவரே ''மாட்சிமைமிக்க ஆண்டவர்'' (*1* கொரி *2:8*). எசாயா ஏற்கெனவே சிந்தித்து வந்தது அவரது மகிமையைப் பற்றியே. 'எசாயா பேசியதும் அவரைப் பற்றியே'' (யோவா *12:41*).

**1. இறுதிக்கால மாட்சிமை:** இயேசுவிலான இறைமாட்சியின் முழு வெளிப்பாடானது இறுதி வருகையில் நிகழும். ''மனுமகன் தம் தந்தையின் மாட்சியோடு தூய வான தூதருடன் வந்து'' (மாற் *8:38*;காண்க. மத் *24:30; 25:31*), ஒரே நேரத்தில் தீர்ப்பாகவும் மீட்பராகவும் தனது பணியை நிறைவுசெய்வதன் மூலம், தனது மாட்சியை வெளிப்படுத்துவார். இறைவன் நம்மை அழைத்திருப்பதும் (*1* தெச *2:12*), வெளிப்படுத்தப்படவிருப்பதும் (*1* பேதுரு *5:1*), ''நமது இறைவனும் மீட்பருமாகிய கிறிஸ்து இயேசுவினுடைய மாட்சிமை மிக்க காட்சியை நோக்கியும்'' (தீத் *2:13-14*), ''கிறிஸ்துவிலான முடிவில்லா வாழ்வை நோக்கியும்'' (*1* பேதுரு *5:10*) புதிய ஏற்பாட்டால் பேணி வரப்பட்டுள்ளது. ''ஏனெனில், நொடிப்பொழுதே நீடிக்கக்கூடிய அது நம்மில், அளவிட முடியாத நித்திய மாட்சிமையை ஒப்புயர்வற்ற வகையில் விளைவிக்கிறது'' (*2* கொரி *4:17*). படைப்பனைத்தும் இம்மகிமையின் வெளிப்பாட்டிற்காக ஏங்குகிறது (உரோ *8:19*). ஒளி வீசியவாறு வானின்று இறங்குகின்ற புதிய எருசலேமினை யோவான் காண்கிறார்: ''கடவுளுடைய மாட்சிமை அதற்கு ஒளிவீசியது; செம்மறியே அதன் விளக்கு'' (திருவெளி *21:23*).

**2. பாஸ்கா மகிமை:** உயிர்ப்பினாலும் விண்ணேற்றத்தினாலும் கிறிஸ்து ஏற்கெனவே இறைமகிமைக்குள் நுழைந்துள்ளார் (லூக் *24:26*). உலகம் படைக்கப்படுவதற்கு முன்னரே தனது அன்பில், தந்தை அவருக்கு அதனை அளித்துள்ளார் (யோவா *17:24*). தந்தைக்குச் சமமான மகன் என்ற அளவில் அஃது அவருக்கு உரியதாக உள்ளது. மனிதனும் இறைவனுமானவர் விண்ணக மேகத்திற்குள் எடுத்துக்கொள்ளப்பட்டார்; ''மேலே எடுத்துக்கொள்ளப்பட்டார்'' (அ.ப. *1:9.11*); ''மகிமையில் எடுத்துக் கொள்ளப்பட்டார்'' (*1* திமொ *3:16*). ''இறைவன் அவரை உயிர்ப்பித்து மகிமைப் படுத்தினார்'' (அ.ப. *3:13*). பழைய ஏற்பாட்டில் யாவேயின் மகிமையைப் போன்ற இந்த மகிமையானது எல்லை கடந்த தூய்மை, புனிதத்துவம், ஒளி, வல்லமை மற்றும் வாழ்வினுடைய சூழலாக உள்ளது. உயிர்த்த இயேசு தனது முழுமையில் இந்த மகிமையை ஒளிர்விக்கிறார். இறக்கின்ற நிலையில் ஸ்தேவான் ''கடவுளின் மாட்சிமையையும், அவரது வலப்பக்கத்தில் இயேசு நிற்பதையும் கண்டார்'' (*7:55*). அவரது ''மாட்சியினுடைய ஒளியின் மிகுதியால்'' பவுல் பார்வை இழந்தார் (*22:11*). இஃதோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, சீனாயின் மாட்சிமை ஒன்றுமற்றதாகும் (*2* கொரி*3:10*). உயிர்த்த இயேசுவின் மகிமையானது, புதிய படைப்பினுடைய ஒளியாக பவுலைக் குருடாக்குகிறது: ''ஏனெனில், 'இருளினின்று ஒளி சுடர்க' என்று சொன்ன கடவுள் தாமே கிறிஸ்துவின் முகத்தில் வீசிய இறைமாட்சிமையின் அறிவொளி மிளிரும்படி, எங்கள் உள்ளங்களிலும் ஒளி சுடரச் செய்தார்'' (*4:6*).

**3. கிறிஸ்துவின் மண்ணகப் பணியிலும் பாடுகளிலும் மாட்சிமை:** இறைவனுடைய மாட்சியானது உயிர்ப்பில் மட்டுமின்றி, இயேசுவினுடைய வாழ்விலும், பணியிலும், சாவிலுங்கூட வெளிப்படுத்தப்படுகிறது. நற்செய்தி நூல்கள், சிறப்பாக ஒத்தமை நற்செய்திகளில் லூக்கா, இறைபுகழ் காட்சியாக உள்ளன. இயேசுவினுடைய பிறப்பின்

அறிவிப்புக் காட்சியில், மரியாளின் மீதான தூய ஆவியின் வருகையானது, பழைய ஏற்பாட்டினுடைய புனிதத் தலத்தில் மகிமை இறங்குவதை வெளிக்கொணர் கிறது (லூக் 1:35). பிறப்பின்போது ''ஆண் டவருடைய மகிமையானது தனது ஒளி யால் இடையர்களைச் சூழ்ந்து கொள்கிறது'' (2:9-10). இயேசுவினுடைய திருமுழுக்கின் போதும், உருமாற்றத்தின்போதும் இந்த மகிமையானது காணப்படுகிறது (9:32.35; 2 பேதுரு 1:17-18). அவரது புதுமைகளிலும், வார்த்தையிலும், அவரது வாழ்வின் உன்னத மான புனிதத்துவத்திலும், அவரது சாவி லுங்கூட இது தெரிகிறது. இது, மெசி யாவை அவரது மாட்சிமைக்கு அறிமுகப் படுத்துகின்ற வழிமுறை மட்டுமன்று (லூக் 24:26). அதனுடன் இணைந்துள்ள அருங் குறிகள் சிலுவையில் அறையப்பட்டவரில் ''மகிமையின் ஆண்டவரை'' வெளிப் படுத்துகின்றன (1 கொரி 2:8).

யோவானில், இயேசுவினுடைய வாழ் விலும் சாவிலுமான மகிமையின் வெளிப் பாடானது இன்னும் தெளிவாகத் தோன்று கிறது. மனுவுருவான வார்த்தை இயேசுவே. இறைவனின் ஒரே மகனுடைய மகிமையானது அவரது ஊனுடலில் தங்கி, வெளிப்படுத்தப்படுகிறது (யோவா 1:4.18). முதலாவதான அருங்குறியிலிருந்தே அது தன்னை வெளிப்படுத்துகிறது (2:11). அவரை அனுப்பிய தந்தையுடனான இயேசு வின் இணைப்பில், மேலும் சிறப்பாக அவர்களது ஒன்றிப்பில் அது தோன்றுகிறது (10:30). இயேசுவின் செயல்கள் தந்தையி னுடைய செயல்களே. அவர் அவற்றை மகனில் நிறைவேற்றி (14:10), அங்கே தனது மகிமையையும் (11:40) ஒளியையும், வாழ்வையும் உலகிற்கு வெளிப்படுத்து கிறார். எல்லாவற்றிற்கும் மேலாக இந்த மகிமையானது பாடுகள் முழுவதும் ஒளி வீசுகிறது. அதுவே இறைக்காட்சிகளில் மிக மேன்மையானது, இயேசுவின் நேரமாகும். தந்தைக்குக் கீழ்ப்படிவதன் மூலமாக (14:31), மிகத் தெளிவாகத் (13:1.3; 18:4; 19:28) தனது சாவிற்கும் (17:19) தந்தையின் பெயரின் மகிமைக்காக (12:28) இயேசு தன்னையே அர்ப்பணிக்கிறார். தன்னுடைய வர்கள் மீது கொண்ட அன்பினால் (13:1) இயேசு தனது வாழ்வையே ஓர் இலவசக் கொடையாக அளிக்கிறார் (10:18). உருமாற் றப்பட்ட சிலுவையானது மனுமகனுடைய ''உயிர்த்தலின்'' அருங்குறியாக உருவா கிறது (12:23.31). கல்வாரியானது அனைவ ருடைய பார்வைக்கும் (19:37), இயேசுவி னுடைய இறைத் தன்னிலையின் மறை பொருளை அளிக்கிறது (8:27). கிறிஸ்து வின் விலாவினின்று வழிந்த இரத்தமும் நீரும் வாழ்வின் ஊற்றாகிய அவரது சாவின் பலனை அடையாளப்படுத்துகின்றன. அவ ருடைய மகிமை இத்தகையதே (7:37.39; 19:34.36).

**4. திருச்சபை மகிமை:** கிறிஸ்து மகிமைப் படுத்துதலானது கிறிஸ்தவர்களில் முழுமை யடைகிறது (யோவா 17:10). தந்தை மற்றும் மகனுடைய மகிமைக்கென இயேசுவின் பலியானது அவர்களில் தனது பலனைக் கொண்டுள்ளது (12:24; 15:8). தந்தை மற்றும் மகனால் அனுப்பப்பட்ட தூய ஆவியானவர், அருட்சாதன இரத்தம் மற் றும் நீருடன் (1 யோவா 5:7) மகிமைப்படுத் துதலின் கைவினைஞராக உள்ளார். அவர் மூலமாகக் கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவி னுடைய செல்வங்களை அறியவும், பெற வும் செய்கின்றனர் (யோவா 16:14-15;2 கொரி1:22; 5:5). உயிர்த்த கிறிஸ்துவின் மகிமை ஏற்கெனவே அவர்களில் பிரதி பலிக்கிறது; ''மாட்சிமை பெறுவதற்கான மாட்சிமையினுடைய'' அவரது சாயலாக அவர்களை மாற்றுகிறது (3:18; கொலோ 1:10-11; 2 தெச 1:12). ஆவியின் மூலமாக, துன்புறுதலும் உருமாற்றப்படுகிறது (1 பேதுரு 4:14).

**5. கிறிஸ்தவ மேன்மை:** இந்த மாட்சிமை பற்றிய சுய உணர்வானது கிறிஸ்தவத் தகுதி மற்றும் கிறிஸ்தவ மேன்மை பற்றிய உணர்வை அளிக்கிறது. ஏற்கெனவே பழைய ஏற்பாட்டில், இறைவன் தனது மகிமையை வெளிப்படுத்திய மக்களாக இருப்பது இஸ்ராயேலின் பெருமையாகும்.

மாட்சியானது இஸ்ராயேலுக்கு உரியதாகும் (உரோ 9:4). இறைவனே அதனுடைய மாட்சிமை (சங் 106:20). ஏற்கெனவே இறைவனுக்கான பற்றுறுதியானது இஸ்ராயேலில், மேன்மை பற்றிய சமய உணர்வினால் வண்ணம் பெறுகிறது. இறைக் கட்டளையானது இஸ்ராயேலின் மாட்சிமையாகும் (சங் 119:5-6). சிலைவழிபாடு மிகப்பெரிய பாவம்; ஆகவே, இஸ்ராயேலானது சிலை வழிபாட்டிற்காக இறைவனது மகிமையைப் பரிமாற்றம் செய்கிறது (106:20). இறைவனுக்குரிய மகிமையை அளிக்க விரும்பாததினால் கதிகெட்டுப் போன உலகினில் (உரோ 1:21-22), கிறிஸ்தவர்கள் காப்பாற்றப்பட்ட விண்ணகக் குடிமக்களாக உள்ளனர் (பிலி 3:20). ''கிறிஸ்துவுடன் உயிர்த்து'' (கொலோ 3:1), ''உலகில் சுடர்விடும் விண்மீன்கள் எனத் துலங்குகின்றனர்'' (பிலி 2:15-16). ''மனிதர் அவர்களின் நற்செயல்களைக் கண்டு, வானகத்திலுள்ள அவர்களுடைய தந்தையை மகிமைப்படுத்துவதென்பது'' அவர்களுக்குரிய மேன்மையாகும் (மத் 5:16). கிறிஸ்தவப் பெயரினுடைய மகிமைக்கு முன்னால், சமூகத் தாழ்நிலையின் அனைத்து உணர்வும் மறைந்து விடுகிறது: ''தாழ்நிலையிலுள்ள சகோதரன், தன் உயர்வு எண்ணிப் பெருமை கொள்வானாக! செல்வம் உள்ளவனோ தாழ் நிலையுற்றாலும் பெருமை கொள்வானாக!'' (யாக் 1:9). ஏனெனில், ''மக்களின் தோற்றத்திற்கு'' அங்கே இனி இடமில்லை (2:1-3). கிறிஸ்தவர்கள் இறைவனை மகிமைப்படுத்த வேண்டிய உடலிற்குங் கூட, கிறிஸ்தவப் பெருமையின் உணர்வானது பரவுகிறது (1 கொரி 6:15.19-20). இறுதியாக, கிறிஸ்தவப் பெயருக்காகத் துன்புறுவதும் ஒரு மகிமையே (1 பேதுரு 4:15-16). உலக மதிப்பை நாடுதலே, யோவானின் கருத்துப்படி, ஒருவர்க்கு மேற்பட்டோருக்கு விசுவாசத்திற்கான உரிமையை மறுத்துள்ளது (யோவா 5:44; 12:43). மேன்மையைக் கிறிஸ்தவ முறையில் புரிந்து கொள்ளுதலுக்கு இயேசுவே வழியைத் திறந்து விட்டார். மனிதரிடையிலான மாட்சிமை பற்றி அக்கறையற்றவராய் (5:41), ''சிலுவையின் நிந்தையை அவர் தாங்கினார்'' (எபி 12:2). அவரது தனித்துவமிக்க மேன்மை ''தனது மாட்சியை நாடாமல்'', ''தன்னை அனுப்பினவருடைய மாட்சியை நாடி'' (யோவா 7:18), தனது தந்தையின் கரங்களில் மட்டுமே ஒப்படைத்துத் (8:50.54) தன் பணியை நிறைவேற்றுவதில் அடங்கியிருக்கிறது.

V. **மாட்சிமையின் புகழ்ச்சி:** மனிதனுடைய கடமையானது இறை மாட்சிமையைக் கண்டுணர்ந்து அதைப் போற்றுவதாகும். பழைய ஏற்பாடானது படைத்தவர், அரசர், மீட்பர், மற்றும் இஸ்ராயேலின் புனிதருடைய மாட்சிமையைப் பாடுகின்றது (சங் 147:1). இறைமாட்சிமையின் முன்னால் திரையிடுகின்ற பாவத்தை அது வெறுத்துப் புலம்புகிறது (எசா 52:5; எசே 36:20-22; உரோ 2:24). மொத்த உலகினாலும் அங்கீகரிக்கப்பட்ட இறை மகிமையைக் காணும் ஆசையால் அது பற்றியெரிகிறது (சங் 145:10-11; 56:6.12).

புதிய ஏற்பாட்டில் போற்றுரை கிறிஸ்துவைத் தனது மையமாகக் கொண்டுள்ளது. ''அவர் வழியாகவே இறைவனுடைய மகிமைக்கு 'ஆமென்' என்கிறோம்'' (2 கொரி 1:20). அவர் மூலமாக ஞானமே உருவான கடவுளுக்கு என்றென்றும் மகிமை எழுகின்றது (உரோ 16:27; எபி 13:15). இயேசுவின் பிறப்பிற்காகவும் (லூக் 2:20), புதுமைகளுக்காகவும் (மாற் 2:12...), அவரது மரணத்திற்காகவும் (லூக் 23:47) இறைவனுக்கு மகிமை அளிக்கப்படுகிறது. பவுலின் கோட்பாட்டு விளக்கங்களை வலியுறுத்தும்போது (கலா 1:3-4), போற்றுரைகள் அவரது செய்தியின் வளர்ச்சியை அளவிடுகின்றன (அ.ப. 11:18; 13:48; 21:20). திருவெளிப்பாட்டு நூலினுடைய போற்றுரைகள் மீட்பினுடைய முழு நிகழ்வினையும் ஆடம்பர வழிபாட்டில் சுருக்கியமைக்கின்றன (திருவெளி 15:3-4). இறுதியாக, திருச்சபையானது ''தமது மாட்சிமைக்குப் புகழ்ச்சியாய் இருப்பதற்காக இறைவன் அடைந்த மக்களாக இருப்பதால்'' (எபே 1:12), தந்தைக்கே ''திருச்சபையிலும் கிறிஸ்து இயேசுவிலும்,

தலைமுறை தலைமுறையாக என்றென்றைக்கும் மகிமை'' கொடுக்கப்படுகிறது *(3:21)*.

திருவழிபாட்டின் போற்றுரையோடு மறைசாட்சியர் இரத்தத்தின் போற்றுரையைச் சேர்க்கிறார். ''சாவதற்கும் தயங்காமல் தங்கள் உயிரைப் பொருட்படுத்தாமல்'' *(திருவெளி 12:11)*, இறைவனுக்கான பற்றுறுதியானது, அனைத்து, மனித மாட்சிமையிலும், தகுதியிலும் மேம்பட்டது என்று விசுவாசி அறிக்கையிடுகிறார். பேதுருவைப் போன்று, தனது இரத்தத்தின் விலையினால் அவர் இறைவனை மகிமைப்படுத்துகிறார் *(யோவா 21:18)*.

வரலாற்றின் முடிவிலான இறுதிப் போற்றுரையானது ''செம்மறியினுடைய திருமணத்தின்'' பாடலாகும் *(திருவெளி 19:7)*. ''பகட்டானதும், தூயதுமான விலைமிக்க ஆடையை அணிந்தவளாய்'' மணமகள் தோன்றுகிறாள் *(19:8)*. பெரும் துயரினுடைய நெருப்பில், தனது மணமகனுக்குத் தகுதியுடைய ஒரே மாட்சிமையாகிய நற்குணங்கள், காணிக்கைகள், புனிதரின் பலிகள் ஆகியவற்றால், முடிவில்லாத் திருமணத்திற்குத் திருச்சபையானது ஆடை அணிந்து கொள்கிறது.

ஆயினும், மணமகளினுடைய மாட்சிமையானது, முழுவதுமே அவளது கணவரிடமிருந்தே வருகிறது. தேர்ந்தெடுக்கப்பட்டோரின் உடைகள் அவரது இரத்தத்தில் தான் வெண்மையாக்கப்படுகின்றன *(7:14; 15:2)*. மணமகள் இத்தகைய கவரும் ஆடையை அணிகிறாளெனில், அவ்வாறு செய்யுமாறு அஃது அவளுக்கு அளிக்கப்பட்டதே அதற்கான காரணமாகும் *(19:8)*. நாம் நடந்து செல்வதற்கென இறைவன் முன்னதாகவே தயாரித்து வைத்த ''நற்செயல்களால்'' தினமும் தன்னை உடுத்திக் கொள்வதற்கென அவள் விடப்பட்டுள்ளாள் *(எபே 2:10)*. கிறிஸ்துவினுடைய அன்பு இந்த மாட்சிமையின் தொடக்கத்திலுள்ளது. ஏனெனில், ''கிறிஸ்து திருச்சபைக்கு அன்பு செய்து அதற்காகத் தம்மையே கையளித்தார். அத்திருச்சபையைக் கறையோ வேறு எக்குறையோ இன்றி, பரிசுத்தமும் மாசற்றதுமாய்த் தம் திருமுன் மகிமையோடு துலங்கச் செய்ய வேண்டுமென்று அவர் விரும்பினார்'' *(5:25.27)*. அன்பு மற்றும் புனிதத்தின் இந்த மறை உண்மையில் இறைவனுடைய மாட்சிமையின் வெளிப்பாடனது நிறைவு செய்யப்படுகிறது.

## மகிழ்ச்சி (JOY)

படைத்தவராகவும் மீட்பராகவும் இறைவன் தன்னையே வெளிப்படுத்துவதானது மனிதனில் ஒப்பற்ற மகிழ்ச்சியை எழுப்புகிறது. ''நான் ஆண்டவரில் மகிழ்ச்சி கொள்வேன்'' என்று பறைசாற்றாமலும் *(சங் 104:34)*, ''ஆண்டவர் தாம் செய்தவற்றைக் குறித்து மகிழ்வாராக'' *(104:31)* என்று விருப்பப்படாமலும் எவ்வாறு ஒருவன் படைப்பைப்பற்றிச் சிந்திக்க முடியும்? மனித வரலாற்றில் இறைவன் மற்றும் அவரது செயல்களின் முன்னிலையில், உணர்வுடைய ஒவ்வொரு மனிதனையும் மகிழ்ச்சியானது மேற்கொண்டு *(92:5-7)* தன்னையே அறியச்செய்கிறது: ''வாருங்கள், ஆண்டவரைப் புகழ்ந்து பாடுங்கள்; நமது மீட்பின் பாறையைப் போற்றி ஆர்ப்பரியுங்கள்'' *(95:1)*. ''வானங்கள் மகிழட்டும், பூவுலகம் களிகூறட்டும்... ஆண்டவர் திருமுன் அவை பாடும்; ஏனெனில், அவர் வருகின்றார்'' *(96:11-13)*. அவர் வருகிறாரெனில், அது தனது மகிழ்ச்சியில் பங்கு கொள்ளுமாறு தனது விசுவாசமிக்க ஊழியரை வரவேற்கவும், அவர்களுக்கான வழியைத் தயாரிப்பதற்குமேயாகும் *(மத் 25:21)*.

### பழைய ஏற்பாடு:

I. **வாழ்வின் மகிழ்ச்சிகள்:** மனித வாழ்வினுடைய மகிழ்ச்சிகள், மனிதருக்கான இறைவனுடைய உறுதிமொழிகளில் ஒரு பகுதியாகும் *(உப 28:3-8; எரே 33:11)*. இவையில்லாமல் இருப்பது பிரமாணிக்கமின்மைக்கு ஒரு தண்டனையாகும் *(உப 28:30-33.47-48; எரே 7:34; 25:10-11)*. தான் அன்பு செய்யும் பெண்ணிலும் *(திருவுரை 9:9)*, தனது உழைப்பின் பலனிலும் *(3:22)*,

நல்ல வேளைகளில் உண்பதிலும், பங்கு பெறுதலிலுமான (2:24; 3:12-13) மனித னுடைய தாழ்மையான மகிழ்ச்சியானது திருவுரையாளரின் இரக்கமற்ற குறை காணு தலிலிருந்து தப்புகிறது. மனிதன் இவ்வாழ் வினுடைய துன்பங்களை மறக்கச்செய்யும் மகிழ்ச்சியை அவர் புகழ்கிறார் (8:15). இஃது இறைவனே அளிக்கின்ற மகிழ்ச்சி யாகும் (5:17-19). திராட்சைரசத்தின் நோக்க மானது அதனை மிதமாகப் பயன்படுத்து வோருக்கு (சீரா 31:27) மகிழ்ச்சியைக் கொண்டு வருவதாகும் (நீதி 9:13; சங் 104:15). மேலும், அறுவடைக் காலத்தைப் போலவே (சங் 126:5-6), கொடி முந்திரிப் பழம் கொய்யும் காலமும் மகிழ்ச்சிக்குரிய ஒன்றாகும் (எசா 16:10). தனது அழகி னாலும், நற்குணத்தினாலும் ஒரு பெண் தனது கணவனுக்குக் கொண்டு வருகின்ற பெரும் மகிழ்ச்சியானது (பழ 5:18; சீரா 26:2.13), இயலக்கூடிய மிக உயரிய மகிழ்ச் சியின் சாயலாகச் சித்தரிக்கப்படுகிறது (எசா 62:5). குழந்தைப் பேறானது, சிறப்பாக மகன் ஞானமுள்ளவனாக இருப்பது (பழ 10:1), கணவன் மனைவியின் மகிழ்ச்சிக்குக் காரணமாகும் (1 சாமு 2:1.5; சங் 113:9; காண்க. யோவா 16:21).

அரசனுடைய முடிசூட்டுவிழா (1 அர 1:40), வெற்றி (1 சாமு 18:6), கைதிகள் திரும்புதல் (சங் 126:2-3) முதலிய ஆரவார மிக்க மகிழ்ச்சியின் விழாக்காலங்களோடு, அன்னியர்களோடு பகிர்ந்துகொள்ள முடி யாத நெருக்கமான மற்ற மகிழ்ச்சிகளும் உள்ளன (பழ 14:10). நற்சுகத்தைக் கொண்டு வருகின்ற இதய மகிழ்ச்சியின் மதிப்பை (17:22) ஞானி நன்கறிவார். இந்த மகிழ்ச்சிக்கு அன்பான சொல்லும் (12:25), நட்பான பார்வையும் (15:30) பெருமளவு உதவுகின்றன என்பதையும் ஞானி அறிந் துள்ளார். தீயோனுடைய விபரீதமான மகிழ்ச்சிகளை மட்டுமே (2:14), குறிப்பாக, நீதிமானுடைய விரோதிகள் அவனுடைய தீங்கைப் பார்த்துக் கொள்கின்ற தீய மகிழ்ச்சி யினை மட்டுமே, இறைவன் கண்டனம் செய்கிறார் (சங் 13:5; 35:26).

**II. உடன்படிக்கையின் மகிழ்ச்சிகள்:** இவ் வாழ்வின் நலம் தரும் மகிழ்ச்சியின் ஊற் றாகிய இறைவன், இயலக்கூடிய மிக உயரிய மகிழ்ச்சியைத் தனது மக்களுக்கு அளிக்கிறார். இம்மகிழ்ச்சிகள் உடன்படிக் கைக்கான பிரமாணிக்கத்தில் கண்டடையப் படுகின்றன.

***1. சமுதாய வழிபாட்டின் மகிழ்ச்சிகள்:*** இஸ்ராயேலின் அரசராக இருக்கத் தயை கூர்ந்தவரும் (சங்149:2), தனது பிரசன்னத் தில் மகிழ்ச்சியடையுமாறு அதனை அழைப் பவருமாகிய (உப 12:18) இறைவனைப் போற்றுவதின் மகிழ்ச்சியை இஸ்ராயேல் அதன் வழிபாட்டில் கண்டடைகிறது (சங் 33:1). இவ்வழியாக, சகோதர ஒன்றிப்பின் இனிமையையும் அஃது அனுபவிக்கிறது (சங் 133). இவ்வாறாக, இறைவனுக்கு அருவருப்பாக உள்ள புலன் சார்ந்த சடங்கு களைக் கொண்ட கானானிய வழிபாடு களின் சோதனையை எதிர்ப்பதற்கு இஸ்ரா யேலானது ஒரு திறனுள்ள சாதனத்தைக் காண்கிறது (உப 12:30-31;23:18-19). ஆர்வம் மற்றும் மகிழ்ச்சியின் சூழலில் கொண்டா டப்படுகின்ற விழாக்கள் (சங் 42:5; 68:4-5; 100:2), அக்களிப்பதற்கும் மகிழ்வதற்கும் ஆண்டவர் குறித்த நாளை (சங் 119:24) மக்களுக்கு நினைவூட்டுகிறது. இந்தக் கொண்டாட்டங்களில் ஒரு சில வரலாற்றி லும் குறிக்கப்பட்டுள்ளன: எ.கா. எசேக்கி யாவின் பாஸ்கா (2 நாள் 30:21-26), அடிமைத்தனத்தினின்று திரும்பியதன் கொண்டாட்டம் (எஸ் 6:22), மற்றும் சிறப்பாகக் கூடாரவிழாவும் ஆகும். இவ் விழாவில் சட்ட நூல் வாசிக்கப்பட்ட பின்னர், ''ஆண்டவரின் புனித நாள் இதுவே! எனவே, வருந்த வேண்டாம். ஆண்டவரின் மகிழ்வே உங்களது பலம்'' என்று எஸ்ரா பறைசாற்றுகின்றார் (நெகே 8:10). மகிழ்ச்சியின் இந்த நிறைவைக் காப்பதற்காகவே, இறை ஆசிகளைப் பெறு வதற்காக மக்கள் செல்ல வேண்டிய எருச லேமில் நடைபெறும் மூன்று வருடாந்தரப் பெருவிழாக்களில், தன்னுடைய ஊற்றுகளி னின்று அவர்களுடைய மகிழ்ச்சியை எடுத்

துக்கொள்ளுமாறு, சட்டமானது கட்டளை யிடுகிறது (லேவி 23:40; உப 16:11.14-15). இந்த ஊற்றினின்றே அனைத்து மக்களும் தங்களுடைய மகிழ்ச்சியைப் பெற வேண்டு மென இறைவன் விரும்புகிறார் (எசா 56:6-7).

**2. தனிமனிதப் பிரமாணிக்கத்தின் மகிழ்ச் சிகள்:** எல்லா மனிதருக்கும் அளிக்கப்படும் இந்த மகிழ்ச்சியானது, இறைவனுடைய உண்மையான மக்களாய் அமைகின்ற எளி யோருடைய சிறப்பான பகுதியாகும் (சங் 149:4-5). எரேமியாவைப் போன்று அவர் களும் தங்களுடைய இதயங்களின் மகிழ்ச்சி யாகிய இறைவனுடைய வார்த்தையால் ஊட்டப்படுகின்றனர் (எரே 15:16). அவர் கள் தங்களுடைய மகிழ்ச்சியை இறைவனி லும் (சங் 33:21; 37:4; யோவே 2:23), அவரது சட்டத்திலும் (சங் 19:9) கண்டடை கின்றனர். அதுவே அவர்களுடைய செல்வ மாகவும் (119:14.111.162), கசப்பான துயரி லும் அவர்களது மகிழ்ச்சியாகவும் உள்ளது (119:143). இறைவனை நாடும் எளியோர் மகிழ்வடைவர் (34:3; 69:33; 70:5; 105:3). ஏனெனில், அவர்கள் இறைவனுடைய அருளினாலும் (32:10-11), இரக்கத்தினாலும் எண்பிக்கப்படுகின்றனர் (51:10.14). அவர் களது ஒரே நன்மையாகிய ஆண்டவருட னான அவர்களின் நம்பிக்கை மிக்க ஒன்றிப் பானது (16:2; 73:25.28) முடிவில்லா மகிழ்ச் சியின் கணநேரத்தோற்றத்தை அவர்களுக்கு அளிக்கிறது (16:9-11). இறை ஞானத்துட னான அவர்களது நெருங்கிய ஒன்றிப் பானது முடிவில்லா மகிழ்ச்சியின் முன் சுவையாகும் (ஞான 8:16).

**3. இறுதிக்கால மகிழ்ச்சிகள்:** இஸ்ரா யேல் உண்மையிலேயே நம்பிக்கையின் சூழ்நிலையில் வாழ்ந்தது. அவர்களுடைய வழிபாடானது இறைவனுடைய உயரிய செயல்களையும், எல்லாவற்றிற்கும் மேலாக யாத்திரையையும் நினைவுபடுத்து கிறதெனில் அதனுடைய நோக்கமானது, ஒப்பற்ற அளவில் அனைத்து மனிதருக்கு மான மீட்பராக இறைவன் தன்னையே வெளிப்படுத்துகின்ற புதிய யாத்திரைக்கான ஆசையை அவர்களில் தூண்டுவதற்காகவே ஆகும் (எசா 45:5-8. 21-22). அது மெசியா பற்றிய மகிழ்ச்சியின் காலமாக இருக்கும். அதனுடைய மிகு நிறைவளத்தை எசாயா பறைசாற்றியுள்ளார் (9:2): பாலைவெளியும் மகிழ்ச்சியுறும் (35:1); இறைவன் செயல் படும்போது வானங்கள் மகிழ்ந்து பாடும்; மற்றும் பூவுலகம் களிகூறும் (44:23; 49:13). சிறைப்பட்டோர் விடுவிக்கப்பட்டு, மீட்பு மற்றும் நீதியின் ஆடைகளால் உடுத்தப் பட்டு (61:10), அவர்களது நம்பிக்கைகள் அனைத்தையும் நிறைவேற்றக்கூடிய (25:9) முடிவில்லா மகிழ்ச்சியைச் சுவைப்பதற் கென (61:7) மகிழ்ச்சியுடன் பாடிக் கொண்டே சீயோனுக்கு வருவர் (35:9-10;51:11). பின்னர், புதுப்பிக்கப்பட்ட படைப்பின் மத்தியில் இறைவனுடைய ஊழியர்கள் உளம் நிறைந்த மகிழ்ச்சியின் பாடல்களில் தங்களது குரல்களை எழுப்பு வர். ஏனெனில், தான் அவர்களில் மகிழ் வுற்று முடிவில்லா மகிழ்ச்சியை அவர் களுக்கு அளிப்பதற்கென இறைவன், எருச லேமை மகிழ்ச்சியாகவும், அதன் மக்களை அக்களிப்பாகவும் அமைப்பார் (65:14. 17-19; 66:10). பரிசுத்தரும் முடிவில்லாதவரு மான இறைவனிடமிருந்து இஸ்ராயேல் எதிர்பார்ப்பது இத்தகைய மகிழ்ச்சியே; அவருடைய இரக்கம் அதனைக் காப்பாற்ற உள்ளது (பாரூ 4:22-23.36-37; 5:9). இந்த மீட்புச்செயலின் தலைமைக் கைவினைஞ ராக எருசலேமின் அரசன் இருப்பார். தாழ்ச்சியுடன் அதனை நோக்கி வருகின்ற அவரை, எருசலேமானது பெருமகிழ்ச்சி யுடன் வரவேற்கும் (செக் 9:9).

### புதிய ஏற்பாடு

#### I. நற்செய்தி நூலின் மகிழ்ச்சி:

இந்த எளிமையுள்ள அரசர் இயேசு கிறிஸ்துவே. அவர் எளியோருக்கு மீட்பின் மகிழ்ச்சியைப் போதித்து, தனது பலியின் வழியாக அவர்களுக்கு அதை அளிக்கிறார்.

**1. மீட்பின் மகிழ்ச்சியானது எளியோருக் குப் போதிக்கப்படுகிறது:** மீட்பரின் வருகை யானது மகிழ்ச்சியின் சூழலை உருவாக்கு கிறது. மற்ற நற்செய்தியாளர்களைவிட

அதிக அளவில் லூக்கா இதனைக் கோடிட்டுக் காட்டுகிறார். இயேசுவி னுடைய பிறப்பின் மகிழ்ச்சிக்கு முன்னரே (லூக் 1:14), மரியாள் வந்தபோது முன் னோடித் தனது தாயின் உதரத்தில் அக்களிப் பால் துள்ளினார் (1:41.44). வானதூதரின் வாழ்த்தினை மகிழ்ச்சிக்கான அழைப்பாகக் கொண்ட கன்னிகை (1:25), தாழ்ச்சியின் அளவிற்கேற்ற மகிழ்ச்சியுடன், எளி யோரைக் காப்பதற்கென, தனது மகனாக உருவான ஆண்டவரைப் போற்றுகிறாள் (1:42.46-55). இயேசுவினுடைய பிறப் பானது அதனை அறிவிக்கின்ற வான தூதருக்கும் அவர் மீட்க வந்த மக்களுக்கும் பெருமகிழ்ச்சியின் காரணமாக உள்ளது (2:10.13-14; காண்க. மத் 1:21). நீதிமான் களுடைய எதிர்பார்ப்பை இது நிறைவு படுத்துகிறது (மத் 13:17). ஆபிரகாமைப் போன்று, அதைப் பற்றிய சிந்தனை யிலேயே அவர்கள் ஏற்கெனவே மகிழ்ச்சி யுற்றனர் (யோவா 8:56).

இறைவனுடைய அரசு ஏற்கெனவே இயேசுவில் பிரசன்னமாகியுள்ளது (மாற் 1:15; லூக் 17:21). திருமுழுக்காளருக்கு ஆனந்தப் பரவசம் அளிக்கும் குரலையும் (யோவா 3:29), தனது சீடர்களை நோன் பிருப்பதினின்று தடுக்கின்ற பிரசன்னத்தை யும் உடைய மணமகன் இவரே (லூக் 5:34). தங்களுடைய பெயர்கள் விண்ணில் பொறிக்கப்பட்டுள்ளன என்பதை அறி தலின் மகிழ்ச்சியை அவர்கள் கொண்டுள்ள னர் (10:20). ஏனெனில், ஒருவன் அனைத் தையும் விடக்கூடிய செல்வமாகிய (மத் 13:44) இறைவனுடைய அரசுக்கு உரியவ ராக உள்ள எளியவர்களைச் சேர்ந்தவர்கள் அவர்கள் (லூக் 6:20 இணை). இறையரசைக் கொண்டிருப்பதை உறுதிப்படுத்துவதன் மூலம் துன்பப்படுதலானது அவர்களது மகிழ்ச்சியைத் தீவிரமாக்க வேண்டும் என இயேசு அவர்களுக்குக் கற்பித்துள்ளார் (மத் 5:10-12).

இயேசுவின் பணிக்குச் சான்று பகர்கின்ற அவருடைய சீடர்கள் சரியாகவே அக்களிக் கின்றனர் (லூக் 19:37-39). ஆனால், இயேசு அவர்களுக்கு அளித்த அதிசய வல்லமை யில் மகிழ்ச்சியுறுவதில் அவர்கள் தவறு புரிகின்றனர் (10:17-20). இந்த வல்லமை யானது ஒரு சாதனம் மட்டுமே. அத னுடைய நோக்கமானது வெறுமையான இன்பத்துடன் கூடிய ஏரோது முதலிய அதிசயம் நாடுவோருக்குப் புதுமைகள் செய்வதைவிட (23:8), நீதிமான்களை இறைவனைப் போற்றுவதற்குக் கொண்டு வருவதும் (13:17), பாவிகளை மீட்பரை நோக்கி ஈர்த்து, மகிழ்ச்சியுடன் அவரை ஏற்கவும், மனம் மாறவும் அவர்களை மாற்றுவதுமாகும் (19:6,9). இந்த மனமாற்ற மானது, விண்ணிலுள்ள தந்தைக்கும், வான தூதருக்கும் (15:7.10.24), தனது சிதறிய மந்தையைக் காக்கின்ற அன்பினையுடைய நல்மேய்ப்பனுக்கும் உள்ளது போன்று (15:6; மத் 18:13), சீடர்களுக்கும் உண்மை யான சகோதரரைப் போன்று மகிழ்ச்சியின் காரணமாக உள்ளது (லூக் 15:32). ஆனால், அவரது மகிழ்ச்சியில் பங்குபெற, அவர் அன்பு செய்தது போலவே நாமும் அன்பு செய்ய வேண்டும்.

**2. ஆவியின் மகிழ்ச்சி, சிலுவையின் பலன்:** தன் மூலமாகத் தந்தை எளியோருக்குத் தம்மையே வெளிப்படுத்தினார் என மகிழ் வுறும் இயேசு (லூக் 10:21-22), தனது அன்பையே ஊற்றாகக் கொண்டுள்ள மகிழ்ச்சியைச் சிறியோராகிய தன் நண்பர் களுக்குக் கொண்டு வருவதற்கென, தனது வாழ்வையே அவர்களுக்கு அளிக்கிறார் (யோவா 15:9-15). அதே சமயம் அவ ருடைய பகைவர்கள் சிலுவையினடியில் தங்களுடைய நெறிகோணிய மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்றனர் (லூக் 23:35-37). இயேசு சிலுவையின் வழியாகத் தந்தை யிடம் செல்கிறார். சீடர்கள் அவரை அன்பு செய்தால், மகிழ்வுற்று (யோவா 14:28), ஆவியை அனுப்புவதற்கென அவர் செல் லும் நோக்கத்தினைப் புரிந்து கொள்ள வேண்டும் (16:7). ஆவியினுடைய கொடை யின் மூலமாக, இயேசுவினுடைய வாழ்வு டன் அவர்கள் வாழ்வர் (14:16-20). அவரது பெயரால் கேட்பதன் காரணமாக, அனைத்

தையும் அவர்கள் தந்தையிடமிருந்து பெறுவர். அப்போது, அவர்களது துயரம் மகிழ்ச்சியாக மாறும். அவர்களது மகிழ்ச்சி நிறைவானதாக இருக்கும்; எதுவும் அதனை அவர்களிடமிருந்து எடுத்துவிட முடியாது *(14:13-14; 16:20-24)*.

பாடுகள் உயிர்ப்பிற்கு இட்டுச் செல்கின்றன என்பதைச் சீடர்கள் புரிந்து கொள்ளவில்லை. பாடுகள் அவர்களுடைய நம்பிக்கையை எந்த அளவிற்கு நாசமாக்கியதெனில் (லூக் 24:21), உயிர்ப்பின் மகிழ்ச்சியானது நம்ப முடியாததாகத் தெரிந்தது *(24:41)*. இறைவாக்குகளின் நிறைவேறுதலைச் சுட்டிக்காட்டி, ஆவியின் வலிமையை வாக்களித்தபின் உயிர்த்தவர் விண்ணகம் சென்றவுடனே *(24:44.49; அ.ப. 1:8)*, அவர்கள் மகிழ்ச்சியால் நிரப்பப்பட்டனர் *(லூக் 24:52-53)*. ஆவியின் வருகையானது பேசுவதற்கும் *(அ.ப. 2:4,11)*, நிலையாக இருப்பதற்கும் அவர்களுக்கு வலிமை அளித்தது; தாங்கள் சான்று பகர்ந்த மீட்பருடைய ''பெயருக்காகத் தாங்கள் இழிவு படத் தக்கவர்களாய்க் கருதப்பட்டது பற்றி மனமகிழ்ந்தனர்'' *(5:41; 4:21; லூக் 24:46-48)*.

II. **புது வாழ்வின் மகிழ்ச்சி:** இயேசுவின் வார்த்தையானது அதனுடைய பலனை அளித்து விட்டது. அவரில் விசுவசிப்போர் அவரது மகிழ்ச்சியின் முழுமையைக் கொண்டிருப்பர் (யோவா 17:13). சமுதாயத்தின் வாழ்வானது எளிமையானதும் மகிழ்ச்சியானதுமாயிருக்கும் *(அ.ப. 2:46)*. நற்செய்தியின் போதனையானது எங்கும் மகிழ்ச்சியின் சிறப்பான ஊற்றாக இருக்கும் *(8:8)*. திருமுழுக்கானது விசுவாசிகளை ஆவியின் மகிழ்ச்சியால் நிரப்புகிறது *(13:52; காண்க. 8:39; 13:48; 16:34)*. அது, மோசமான துன்பங்களையும் மகிழ்ச்சியுடன் அப்போஸ்தலர்கள் ஏற்குமாறு செய்கிறது *(16:23-25)*.

**1. ஆன்மீக மகிழ்ச்சியின் ஊற்றுகள்:** மகிழ்ச்சியானது உண்மையில் ஆவியினுடைய கனியும் *(கலா 5:22)*, இறையரசினுடைய சிறப்பு மிக்க பண்பும் ஆகும் *(உரோ 14:17)*. இது வார்த்தையால் தூண்டப்பட்டு, கலாபனையால் விரைவில் அழிக்கப்படுகின்ற கடந்து செல்லும் ஆர்வமன்று *(மாற் 4:16)*. இது சோதனை நேரத்தில் பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்ற விசுவாசிகளினுடைய ஆன்மீக மகிழ்ச்சியாகும் *(1 தெச 1:6-7)*. இவர்கள் தங்களுடைய தயாள குணத்தின் மகிழ்ச்சியான ஆர்வம் *(2 கொரி 8:2; 9:7)*, நிறைவு *(13:9)*, ஒன்றிப்பு *(பிலி 2:2)*, பணிவிணக்கம் *(எபி 13:17)*, உண்மைக்கான பற்றுறுதி *(2 யோவா 4; 3 யோவா 3-4)* ஆகியவற்றினால் இப்போதும், ஆண்டவருடைய நாள் வரையிலும் தங்களுடைய அப்போஸ்தலரின் மகிழ்ச்சியாக இருப்பர் *(1 தெச 2:19-20)*.

உண்மையில் விசுவாசிகளை ஒன்றிணைக்கிற அந்த அன்பானது *(1 கொரி13:6)*, அவர்களுடைய செபத்திற்கும் இடைவிடா நன்றி செலுத்துதலுக்கும் ஊட்டமளிக்கின்ற முடிவில்லா மகிழ்ச்சியை அவர்களுக்குக் கொண்டு வருகிறது *(1 தெச 5:16; பிலி 3:1; 4:4-6)*. அவரது அன்பு மகனுடைய அரசிற்குள் கொண்டு வரப்பட்டும் மகிழ்ச்சியால் முழுமைப்படுத்தப்படாமலிருப்பதற்கு எவ்வாறு தந்தைக்கு நன்றி செலுத்த இயலும் *(கொலோ 1:11-13)*? ஊக்கந்தளராத செபமானது மகிழ்ச்சியின் ஊற்றாக உள்ளது. ஏனெனில், அது நம்பிக்கையால் உயிரூட்டப்படுகிறது; மேலும், விசுவாசியை மகிழ்ச்சியால் நிரப்புவதன் மூலம் நம்பிக்கையின் இறைவன் அதற்குப் பதிலளிக்கிறார் *(உரோ 12:12; 15:13)*. இவ்வாறு, ஆரவாரத்துடன் இறைவனைப் போற்றுமாறு பேதுரு விசுவாசிக்குக் கட்டளையிடுகிறார். ஏனெனில், சோதனையால் நிரூபிக்கப்பட்டு, மீட்பை அடைவதில் உறுதியாக உள்ள அவருடைய விசுவாசமானது, மகிமையின் முன்சுவையாகிய சொல்லுதற்கரிய மகிழ்ச்சியை அவருக்குக் கொண்டு வருகிறது *(1 பேதுரு 1:3-9)*.

**2. சோதனை வேளையில் மகிழ்ச்சியின் சான்று:** இந்த மகிழ்ச்சியானது நிரூபிக்கப்

பட்ட விசுவாசத்திற்கு மட்டுமே உரியது. கிறிஸ்துவின் மகிமை வெளிப்படுத்தப் படும் போது சீடன் மகிழ்ச்சியடைய வேண்டுமெனில், கிறிஸ்துவின் துன்பங் களில் அவன் பங்கெடுப்பதனுடைய அள விற்கேற்ப அவனுடைய மகிழ்ச்சி இருக்க வேண்டும் *(1 பேதுரு 4:13)*. தனது தலைவரைப் போலவே அவரும் இவ்வாழ் வில் மகிழ்ச்சியைவிட, சிலுவையையே தேர்ந்து கொள்வார் *(எபி 12:2)*. தன் னுடைய உடைமைகள் எடுத்துக் கொள்ளப் படுவதை அவர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வார் *(10:34)*. எல்லாவிதச் சோதனை களுக்கும் உட்படுத்தப்படுவதை உயரிய மகிழ்ச்சியாக அவர் கருதுவார் *(யாக் 1:2)*. கிறிஸ்துவைப்போலவே அப்போஸ்தலருக் கும், வறுமையும் கலாபனையும் நிறை வான மகிழ்ச்சிக்கு நடத்திச் செல்பவையாக இருக்கும்.

தன்னுடைய அப்போஸ்தலிக்கப் பணி களின்போது, சிலுவையின் மகிழ்ச்சியைப் பவுல் அனுபவித்தார். உண்மையில் அஃது அவரது சாட்சியத்தின் ஒரு கூறாகும்: துயரமிக்கவராயினும், இறைவனுடைய ஊழியர்கள் என்றுமே மகிழ்ச்சியானவர்கள் *(2 கொரி 6:10)*. தனது சோதனைகளின் போது அப்போஸ்தலர் அளவற்ற மகிழ்ச்சி யால் நிரப்பப்படுகிறார் *(2 கொரி 7:41)*. தன்னைப்பற்றிய அக்கறை சிறிதும் அற்றவ ராய், கிறிஸ்து போதிக்கப்படுமளவும் அவர் மகிழ்கிறார் *(சங் 1:17-18)*. மேலும், அவரது மகிழ்ச்சியானது விசுவாசிகளுக்காகவும், திருச்சபைக்காகவும் துன்புறுவதாகும் *(கொலோ 1:24)*. விசுவாசத்திற்கான இறுதிச் சாட்சியத்தில் சிந்தப்போகின்ற தனது இரத் தத்தில் இருக்கப்போகும் தன்னுடைய மகிழ்ச்சியில் பங்கேற்குமாறு அவர் பிலிப் பியரையும் அழைக்கிறார் *(பிலி 2:17-18)*.

III. **முடிவில்லா மகிழ்ச்சியில் ஒன்றிப்பு:** எவ்வாறாயினும் சோதனையானது ஒரு முடிவுக்கு வரும். தனது ஊழியர்களின் இரத்தத்தைக் குடித்து மயங்கிய பாபிலோ னின் மீது தண்டனை விதிப்பதன் மூலம் இறைவன் பழிவாங்குவார். பின்னர், விண் ணகத்தில் மகிழ்ச்சி உண்டாகும் (திருவெளி *18:20; 19:1-4)*. செம்மறியின் திருமணம் அங்கே கொண்டாடப்படும். அதில் பங்கு பெறுவோர் இறைவனுக்கு மகிமையளிப் பதில் மகிழ்ச்சி கொள்வர் *(19:7-9)*. இப் போதுமுதல் இறைவனுடைய பிள்ளை களுக்கு உரியதாக இருக்கின்ற நிறைவான மகிழ்ச்சியின் முழுமையான வெளிப்பாடு இதுவே. ஏனெனில், அவர்களுக்கு அளிக் கப்பட்ட ஆவியானவர், தந்தையுடனும் அவருடைய மகன் இயேசு கிறிஸ்துவுடனு மான ஒன்றிப்பிற்குள் அவர்களைக் கொண்டு வருவார் *(1 யோவா 1:2-4; 3:1-2.24)*.

## மகுடம் (DIADEM)

மலர் வளையம் போன்ற முடி. துணியி னாலோ, உலோகத் தகட்டினாலோ தலை யோடு சேர்த்துக் கட்டப்பட்ட ஒரு தலைப் பாகை பழங்கால உலகில் முடியாக இருந் தது; ஆகவே, பழைய ஏற்பாட்டில் அரச தலையணியைத் 'தலைப்பாகை' என்று அழைப்பது மிகவும் பொருளுள்ளதாகும். பாரசீக நாட்டு முடியில் நீலப்பட்டையைக் கிரேக்கர்கள் மகுடம் என்று அழைத்தார் கள்; கிரேக்க அரசர்கள் மலர்வளையம் போன்ற முடியைத் தங்களுடைய அரச அடையாளமாக எடுத்துக் கொண்ட பொழுது, அது மகுடம் என்று அழைக்கப் பட்டது. ஆகவே, மகுடம் என்பது தனிப் பட்ட திறமைக்காகவோ, வெற்றிக்காகவோ அளிக்கப்படும் வெற்றிவாகையிலிருந்து *(1 கொரி 9:25; 2 திமொ 4:8; யாக் 1:2;...)* வேறுபட்ட ஓர் அரசமுடியாகும். இருப் பினும் இந்த வேறுபாடு எப்பொழுதும் பின்பற்றப்படவில்லை.

மகுடம் உருவகமாக இரண்டு வழிகளில் பயன்படுத்தப்படுகிறது. புதிய யுகத்தில் ஆண்டவர் தம் மக்களுள் எஞ்சியோருக்கு எழில்மிகு மணிமுடியாகவும், மாண்புமிகு மகுடமாகவும் இருப்பார் *(எசா 28:5)*. சீயோன் தன் கடவுளின் கரத்தில் அரச மகுடமாய் விளங்கும் *(62:3)*.

யோவானின் காட்சியில் சிவப்புப் பறவை நாகமானது தன்னுடைய ஏழு தலைகளிலும் ஏழு மகுடங்களை (முடி களை)க் கொண்டிருந்தது (திருவெளி 12:3). கடலிலிருந்து வெளிவந்த விலங்கு தனது பத்துக்கொம்புகள் ஒவ்வொன்றிலும் ஒரு மகுடம் கொண்டிருந்தது (13:1). வெண் குதிரை மீது ஏறிவந்தவர் (வெற்றி கொள் ளும் கிறிஸ்து) தன் தலையில் மகுடங்கள் பல கொண்டிருந்தார் (19:12).

**மகேர்-சலால்-கசுபாசு** (MAHER-SHALAL-HASH-BAZ)

எசாயா இறைவாக்கினரின் இரண்டாம் மகனுக்கு இடப்பட்ட அடையாளப்பெயர் (எசா 8:1.3; காண்க. 8:28). இதன் பொருள் 'கொள்ளைப் பொருள் வேகமாகச் செல் கிறது, இரை வேகமாகச் செல்கிறது' என்பதாகும்.

இது சீரியாவும், இஸ்ராயேலும் வீழ்த்தப் படும் என்பதைக் குறிக்கிறது. இந்த வீழ்ச் சியைப் பற்றிய இறைவாக்கு முதலில் கல்லில், சாட்சிகள் முன்னிலையில் எழுதப் பட்டது. பின்பு, எசாயா தம் மகனுக்கு இட்ட பெயரினால் உறுதியாகக் கூறப் பட்டது.

**மக்கபேயர்களும் அவர்களின் கிளர்ச்சி யும்** (MACCABEES AND THEIR REVOLT)

கிறிஸ்து பிறப்பதற்குமுன் கடைசி இரண்டு நூற்றாண்டுகளில், குறிப்பாக கி.மு. 175-135-க்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த யூதேயாவின் தலைவர்கள் மக்க பேயர்கள் என்றழைக்கப்பட்டனர்.

பிலிப்புவின் மகன் அலக்சாந்தர் மா மன்னன் கிரேக்கப் பேரரசை மிக விரை வாக விரிவுபடுத்தினார். தான் கைப்பற்றிய நாடுகளில் கிரேக்கக் கலாச்சாரத்தைப் புகுத் தினார். பலநாடுகள் தங்கள் கலாச்சாரத்தை விடுத்துப் புதிய கிரேக்கக் கலாச்சாரத்தை விரும்பிப் பின்பற்றின. ஆனால், யூதர்கள் மட்டும் தங்கள் கலாச்சாரத்தைத் தனித்தன் மையுடன் காத்து வந்தனர். அலக்சாந்தரும் இம்மக்களையும் அவர்கள் மதத்தையும் மதித்துப் போற்றியதாகவும் அவர்களுக்குப் பல சலுகைகள் அளித்ததாகவும் தெரிகிறது. அலக்சாந்தர் இறந்த பிறகு அரசுக்கு வந்த திறமையற்றவர் பலர், அவர் அமைத்த பேரரசைக் கட்டிக்காக்க முடியவில்லை. பேரரசு நான்கு பகுதிகளாக உடைந்தது. இந்நான்கில் இரண்டு பாகங்களில் நடந்து வந்த அரசுகள்தான் விவிலியத்தோடு தொடர்புடையன. தோலமி என்ற அலக் சாந்தரின் தளபதி எகிப்து நாட்டிற்கும், செலூக்கு என்ற மற்றொரு தளபதி ஆசிய நாடுகளுக்கும் அரசர்கள் என்று அறிவித்துக் கொண்டனர். இரண்டுக்கும் இடைப்பட்ட பாலஸ்தீனம் இரு அரசுகளிடமும் பல தடவை கைமாறியது; பலவாறு அல்லல் உற்றது. கி.மு. 312-11-இல் தொடங்கிய செலூக்கிய அரசு மரபில் கி.பி. 175-இல் அரசுக்கு வந்த நான்காம் அந்தியோக்கு எப்பிபானால் யூதர்களின் இன்னல்கள் பெருகின. இவன் இரண்டு கொள்கை களைத் தீவிரமாகச் செயலாக்க விரும்பி னான். ஒன்று தனது ஆட்சிக்குட்பட்ட மக்களை ஒன்றுபடுத்துவது. இரண்டாவது தன் அரசை விரிவுபடுத்துவது. தன் ஆட்சி யின்கீழ் உள்ள மக்கள் ஒற்றுமையுடன் வாழவேண்டுமென்றால், அவர்கள் தங்கள் பாரம்பரியக் கலாச்சாரத்தைக் கைவிட்டு, கிரேக்கக் கலாச்சாரத்தையே பின்பற்ற வேண்டும். அதுவே நாட்டில் ஒற்றுமையை ஏற்படுத்தும் என்று வலியுறுத்தினான். அதுவே வளர்ந்து வரும் உரோமையரின் ஆதிக்கத்தைத் தடுத்து நிறுத்தும் என்று நம்பினான். இந்தக் கிரேக்கக் கலாச்சாரத் திணிப்பே மக்கபேயர்கள் நடத்திய யூதக் கிளர்ச்சிக்கு வழிகோலியது.

அந்தியோக்கு எப்பிபானின் பேராசை மிக்க திட்டங்களுக்கு யூதேயா நாட்டில் நிலவிய சிக்கல்களும் உதவின. எகிப்துக்குச் சார்பான கட்சியினரும் சீரியாவுக்குச் சார் பான கட்சியினரும் போட்டி போட்டுக் கொண்டிருந்தனர். யூதர்களில் பலர் கிரேக்கக் கலாச்சாரத்தில் மோகம் கொள்ள ஆரம்பித்தனர். அரசனின் அனுமதியுடன் இவர்கள் எருசலேமில் உடற்பயிற்சிக்கூடம்

ஒன்றும் இளைஞர் குழு ஒன்றும் அமைத் தனர் (2 மக் 4:9). நான்காம் அந்தியோக்கு எப்பிபான் எருசலேமைக் கொள்ளை யிட்டுத் தீட்டுப்படுத்தினான். இந்தக் கிரேக்க மயமாக்குதலை யூதேயாவில் இருந்த உயர்மட்ட மக்கள் எதிர்க்கவில்லை. ஆனால், சாதாரண மக்கள் அடியோடு வெறுத்தனர். இவர்கள் தங்கள் சமயத்தை யும் கலாச்சாரத்தையும் கைவிட்டுவிட விரும்பவில்லை. தங்கள் உயிரையும் கொடுக்கத் தயாராக இருந்தனர் (2 மக் 6:18-7:42). கிரேக்கக் கலாச்சாரத்தை எதிர்த்த வர்களில் முதன்மையானவர் குருகுலத்தைச் சேர்ந்த மத்தத்தியா ஆவார். இவரும் இவரது ஐந்து புதல்வர்களும் அந்தியோக்கு வின் கொடுமைகளைக் கண்டு ''தங்கள் ஆடைகளைக் கிழித்துக் கொண்டு தவச் சட்டைகள் அணிந்து மிகவும் புலம்பினர்'' (1 மக் 2:14). எருசலேமிலிருந்து மோதேயி னுக்கு ஓடிப்போயினர். அங்கு அரசனது கொடுமைகளை நிறைவேற்ற வந்த அதி காரிகளையும் அவர்களுக்குப் பணிந்த யூதர் களையும் மத்தத்தியா கொன்று விட்டு, ''உடன்படிக்கைக் கட்டளைக்குப் பிர மாணிக்கமுள்ளவன் எவனோ அவன் என் பின்னால் வரட்டும்'' (2:27) என்று அறை கூவல் விடுத்தார். இஃதோடு மக்கபேயர் கிளர்ச்சி தொடங்கியது. மத்தத்தியா மற்றும் அவரது புதல்வர்களோடு பலரும் சேர்ந்து கொண்டனர். இவர்களில் குறிப்பிடத்தக்க வர்கள் தங்கள் பாரம்பரியங்களைக் கடைப் பிடித்து வாழ்வதில் தீவிரம் காட்டிய கசிதிமியர்கள் ஆவர் (2:42; 7:13). முதலில் இவர்கள் அந்தியோக்கு அரசனின் கட் டளைக்கு எதிர்ப்பின்றிப் பணிந்த யூதர் களைத் தாக்கினர். பிறசமய பீடங்களை அழித்தனர். விருத்தசேதனம் செய்யப்படாத யூதக்குழந்தைகளுக்கு விருத்தசேதனம் செய் தனர். கிளர்ச்சியில் பங்கெடுக்க மக்களைத் தூண்டினர் (2:45-49). புரட்சியைத் தொடங்கி வைத்த மத்தத்தியா கி.மு. 166-இல் இறந்தார். மரிக்குமுன் இவர் தன் புதல்வர் களைப் பார்த்து ''உங்கள் சகோதரன் சீமோன் மிகவும் முன்மதியுள்ளவன். அவன் சொல்வதை எப்போதும் கேளுங் கள். அவன் உங்களுக்குத் தந்தைபோல் இருப்பானாக. இளமை முதல் வலிமை மிக்க படைத்தலைவனாகிய யூதா மக்க பேயு உங்கள் படைத்தலைவனாக இருந்து சண்டைகளை நடத்துவான்'' (2:65-6) என்று கூறிச்சென்றார். யூதா மக்கபேயுவின் பெயரி லிருந்தே இப்புரட்சி தன் பெயரைப் பெறுகிறது.

யூதப் புரட்சிக்குத் தலைமை தாங்கிய யூதா மக்கபேயுவை ஒழித்துக் கட்டு வதற்குக் கிரேக்க அரசன் பெரிதும் முயன் றான். ஆனால், யூதா மறைந்திருந்து தாக்கும் கொரில்லாப் போர் முறையைப் பின்பற்றிக் கிரேக்கப் படையினரோடு போர் புரிந்தார். யூதா பலமிக்க கிரேக்கப் படையைப் பல இடங்களில் தோற்கடித் தார். அப்பொல்லோனியு மற்றும் சேரோன் தலைமையில் வந்த கிரேக்கப் படைகளை வென்றார். இவ்வாறு கிரேக்கர்களைத் தகர்க்கின்ற வலிமை கொண்ட யூதாவைச் சுற்றி யூத இளைஞர்கள் பலர் ஒன்றிணைந் தனர். தலைமையேற்று நடத்தும் அரிய பண்பினை நிறைவாகப் பெற்றிருந்தார் யூதா (3:4).

கிழக்கில் பார்த்தியர்களுடன் போரிட வேண்டிய அந்தியோக்கு யூதப்புரட்சியை அடக்குவதற்கென லீசியாவை ஆளுநனாக நியமித்தான். லீசியாவோ தோலமி, நிக்கா னோர் மற்றும் கோரிக்கியா என்னும் மூன்று தளபதிகளை அனுப்பினான். இவர் களையெல்லாம் யூதா வென்றார். இறுதி யாக, பெத்-சூரில் லீசியாவையும் வென் றார். லீசியா அந்தியோக்கியாவிற்கே திரும் பிச் செல்ல வேண்டியிருந்தது.

இஃதோடு யூத விடுதலைப் போரின் முதல் கட்டம் முடிவடைந்தது. யூதா அடுத்த கட்டத்தை ஆரம்பித்தார். ''சட்டத் திற்குப் பிரமாணிக்கமுள்ள குற்றமற்ற குருக் களைத் தேர்ந்தெடுத்தார். அவர்கள் ஆலயத் தைச் சுத்தி செய்தனர். எருசலேமிருந்த உட்கோட்டையில் கிரேக்க வீரர்கள் பார்த்துக் கொண்டிருக்க, கி.மு. 164-இல் ஆலயத்தின் ''பாழாக்கும் அருவருப்பை''

அகற்றி, ஆலயத்தைத் தூய்மைப்படுத்தி அதை அர்ப்பணம் செய்தார். இந்த விழா (கனுக்கா) ஏழு நாட்களுக்குக் கொண்டாடப்பட்டது. இதுவரை அடைந்த வெற்றிகள் யூதாவை மேலும் சுதந்தரமடையத் தூண்டியது. பாலஸ்தீனம் மற்றும் யோர்தானுக்கு அப்பாற்பட்ட பகுதிகள் முழுவதும், சிறப்பாகக் கிரேக்க நகரங்களிலும், யூதச் சிறுபான்மைக் குழுக்கள் எஞ்சியிருந்தன. இதுமேயா, அம்மோன், கிலயாது, கலிலேயா மற்றும் பெலிஸ்தியச் சமவெளி முதலிய இடங்களில் பிறமதத்தினருடன் நடத்திய தொடர்ச்சியான போராட்டங்களால் சக யூதர்களுக்கு யூதா உதவினார். அவர்களில் பலரை எருசலேமுக்கு மீட்டுக் கொண்டு வந்தார். அதே சமயத்தில் அவரது சகோதரர் சீமோன் கலிலேயாவில் அவ்வாறே செயலாற்றினார். இதன் நோக்கமானது மக்கபேய வல்லமையைப் பலப்படுத்திப் பரவச்செய்வதாகும்.

இதற்கிடையில் கி.பி. 164-இல் நான்காம் அந்தியோக்கு எப்பிபான் இறந்தான். அவன் மகன் ஐந்தாம் அந்தியோக்கு என்ற பெயரில் அரசனான். லீசியா அவனது பகர ஆளுநனாக ஆட்சி செய்தான். தனது பதவியைத் தக்க வைத்துக்கொள்ள லீசியா யூதர்களுக்குச் சமயச்சுதந்தரம் அளிக்க வேண்டியிருந்தது *(6:58-59)*. இஃதோடு மக்கபேயருடைய புரட்சியின் நோக்கம் நிறைவேறிவிட்டது. ஏனெனில், நான்காம் அந்தியோக்குவால் தொடங்கப்பட்ட அடக்குமுறை முடிந்துவிட்டது. ஆனால், அதிக சுதந்தரம் மற்றும் அரசியல் வலிமை பெற வேண்டிய முன்னோக்கு மக்கபேயரைத் தூண்டிக் கொண்டே இருந்தது.

இதற்கிடையில் அந்தியோக்கியாவில் நடந்த அரசியல் போராட்டத்தின் விளைவாக முதலாம் தெமேத்திரியு புது அரசன் ஆனான். கிரேக்க மரபைச் சார்ந்த யூதர்கள் யூதாவை எதிர்த்தனர். இவர்கள் முதலாம் தெமேத்திரியுவிடம் புகலிடம் தேடினர். அவர்களது பிரதிநிதியான ஆல்கிமுவைத் தலைமைக்குருவாக அரசன் நியமித்தான். ஆல்கிமு குருத்துவச் சந்ததியைச் சேர்ந்தவராய் இருந்ததால் கசிதேயரும், சட்ட வல்லுநரும் கூட அவருக்கு ஆதரவு அளித்தனர். ஆனால், யூதா அவரை எதிர்த்தார். கசிதேயரை ஆல்கிமு கொலை செய்தது யூதாவின் நிலையைச் சரியென நிரூபித்தது. யூதாவை அடக்க நிக்கானோர் ஒரு பெரும் படையுடன் அனுப்பப்பட்டான். அவனைக் கபர்ச்சலாமிலும் பெத்-கோரோனிலும் யூதா தோற்கடித்தார்.

இதன் விளைவாக ''நிக்கானோரின் நாள்'' அடிக்கடி நிகழும் விழாவாயிற்று *(7:49)*. ஆனால், இந்த வெற்றியைத் தனக்கு ஆதாயமாக்கிக் கொள்ள யூதாவால் இயலவில்லை. ஏனெனில், அதற்குப் பதிலடியாகப் பாக்கிதுவின் தலைமையில் தெமேத்திரியு ஒரு பெரிய படையை அனுப்பினான். எருசலேமிற்கு வடக்கிலுள்ள பெரோயா மற்றும் எலசா பரப்பில் இப்படை யூதர்களைத் தோற்கடித்தது *(9:4-5)*. இப்போரில் யூதா கொல்லப்பட்டார். மக்கபேயர் குழுவிற்கு எதிரான பழிவாங்கும் நடவடிக்கைகள் தொடங்கின.

யூதாவின் இடத்தை அவரது சகோதரர் யோனத்தான் (கி.மு. *160-143*) ஏற்றார். அந்தியோக்கியாவில் அலக்சாந்தர் பாலாவுக்கும் முதலாம் தெமேத்திரியுவுக்கும் நடந்த அரசியல் போட்டியில், யோனத்தான் அலக்சாந்தரை ஆதரித்தார். அலக்சாந்தர் தெமேத்திரியுவை வென்று கி.பி. *150*-இல் அரசனானான். இவன் யோனத்தானை அரச உடை உடுத்தி யூதேயாவிற்குத் தளபதியாகவும் ஆளுநராகவும் நியமித்தான் *(10:65)*.

மக்கபேயருடைய ஆதிக்க வளர்ச்சியில் ஒரு புதிய காலம் தொடங்கிற்று. செலூக்கிய அரசர்களை ஒருவருக்கொருவர் எதிராகத் தூண்டிவிட யூதத்தலைவரால் முடிந்தது. *148*-இல் இரண்டாம் தெமேத்திரியு அரியணையை அடைய முயன்றான். கூலே-சீரியாவின் ஆளுநராகிய அப்பொல்லோனியு அவனுக்கு ஆதரவு அளித்தான். அலக்சாந்தருக்குப் பிரமாணிக்கமாய் இருந்த யோனத்தான் அப்பொல்லோனியுவைத் தோற்கடித்தார். அதற்கு வெகுமதியாக எக்

ரோன் நகரம் யூதர்களுக்கு அளிக்கப்பட்டது. *145*-இல் அலக்சாந்தரைக் கொன்று தெமேத்திரியு அரியணைக்கு வந்த பிறகும், வரிவிலக்குக் கோரும் அளவிற்கு வலிமையுள்ளவராக இருந்தார் யோனத்தான். தெமேத்திரியுவுக்கும் திரிபோ என்பவனால் ஆதரிக்கப்பட்ட ஆறாம் அந்தியோக்குவிற்கும் நடந்த அரசியல் போட்டியில், யோனத்தான் அந்தியோக்குவிற்குத் தனது ஆதரவை அளித்து, பல போர்களில் ஈடுபட்டார். இவற்றின் விளைவாக அவர் வலிமை மிக்கவரானார். மேலும், உரோமை மற்றும் ஸ்பார்த்தாவுடன் அவர் அரசியல் தொடர்பும் கொண்டார் *(12:1-23)*. இவற்றையெல்லாம் கவனித்த திரிபோ யோனத்தான் மிகவும் அபாயமானவர் என்று தீர்மானித்து, தந்திரமாய் யோனத்தானைத் தாலமாயில் சிறைப்படுத்தினான் (கி.பி. *143*).

யூதர்கள் உடனடியாகச் செயல்பட்டனர். யோப்பா நகரைக் கைப்பற்றியதன் மூலம் மூன்றாவது மக்கபேய சகோதரரான சீமோன் (கி.மு. *143-134*) தாக்குதலுக்குத் தயாரானார். ஆனால், யோனத்தானுடைய மரணத்தை அவரால் தடுக்க முடியவில்லை. யோனத்தான் மக்கபேயரின் சொந்த நகரமாகிய மோதேயினில் அடக்கம் செய்யப்பட்டார். யூத சுதந்தரத்தின் அங்கீகாரத்திற்கு ஈடாக, இப்போது சீமோன் இரண்டாம் தெமேத்திரியுவை ஆதரிக்கலானார். *142*-இல் சீமோன் தலைமைக்குருவாகவும், ஆளுநராகவும், தளபதியாகவும் அங்கீகரிக்கப்பட்ட பின்னர், ''இஸ்ராயேல் மக்கள் புறவினத் தாரின் அடிமைத்தளையினின்று நீங்கினார்கள்'' *(13:41)*. உண்மையானதொரு இறைவாக்கினர் தோன்றும்வரை ஆட்சியாளர் மற்றும் தலைமைக் குருத்துவத்திற்கான மக்கபேயர் உரிமைகள் யூதராலேயே சட்ட நெறிப்படுத்தப்பட்டன *(14:4)*.

சீமோனின் ஆட்சியில் மக்கள் சில ஆண்டுகள் அமைதியாகக் கழித்தனர். செலூக்கிய அரியணைக்கு அந்தியோக்கு சிதெத்தெசு என்னும் புதிய வாரிசு தோன்றினான். அவனது கோரிக்கைகளை மதிக்கச் சீமோன் மறுத்து விட்டார். அதனைத் தொடர்ந்த பேரில் அந்தியோக்குவின் தளபதி கெந்தபேயுவை *138*-இல் சீமோனின் புதல்வர்கள் வென்றனர் *(1 மக் 16)*. ஆனால், எரிகோவிற்கு அருகிலுள்ள தோக்குக் கோட்டையில் சீமோன் தன் மருமகன் தோலமியால் தந்திரமாக வெட்டிக் கொல்லப்பட்டார். சீமோனின் மகன் யோவான் இரிக்கானு அவரைத் தொடர்ந்து பதவியேற்றார். இங்கே *1* மக்கபேயர் நூலின் வரலாறு முடிவடைகிறது.

இவ்வாறு செலூக்கியர்களுக்கு எதிரான மக்கபேயர்களின் கிளர்ச்சி ஏற்றத்தாழ்வுகள் மிக்கதொன்றாக அமைந்தது. அதன் விளைவாக யூதர்களுக்குச் சமயச்சுதந்தரமும், அரசியல் சுதந்தரமும் கிடைத்தன. சீமோன் தலைமையில் யூதேயா நாடு முழு விடுதலை பெற்றது. மக்கபேயர் நூல்களின் ஆசிரியர்களின் நோக்கம் தெளிவாக உள்ளது. பிறமதத்தினருடன் கொண்ட நேர்மையான போராட்டத்தில் இறைவன் மக்கபேயர்களுடன் இருந்தார் என்பது உறுதி. ஆனால், மக்கபேயர்களின் வீரதீரச் செயல்களும், சீரியாவுக்கும் எகிப்துக்கும் இடையே நடந்த போராட்டங்களையும், இந்நாடுகளில் நடந்த உள்நாட்டுப் போராட்டங்களையும் விவேகத்தோடு பயன்படுத்தியதும் யூதேயாவுக்குச் சுதந்தரம் அளித்தன. உரோமையரும் இச்சிறிய நாட்டை ஏற்று மதிப்புக்கொடுத்தனர்.

சீமோனுக்குப் பின் வந்த யூதேயாவின் வரலாற்றுக்குக் காண்க: *கசமோனியர்கள், அசமோனியர்கள்.*

**மக்கபேயர் நூல்கள்** I, II *(*MACCABEES - I, II, BOOKS OF*)*

*1.* இவ்விரு நூல்களும் கத்தோலிக்க விவிலியத்தின் பழைய ஏற்பாட்டு நூல்களில் இறுதியானவை. கி.மு. *175*-இலிருந்து *134*-வரையுள்ள இடையிட்ட காலத்திய யூத வரலாற்றைக் கொடுக்கின்றன.

*2.* **பெயர்:** செலூக்கிய அரச மரபுக்கு எதிராகப் புரட்சி தொடங்கிய மத்தத்தியா

வின் மூன்றாம் மகன் யூதா மக்கபேயுவின் பட்டப்பெயரிலிருந்து இந்நூல்கள் தங்கள் பெயரைப் பெறுகின்றன. இப்பெயருக்குப் பல பொருள் அளிப்பர். 'இறைவனால் நியமிக்கப்பட்டவர்' என்ற பொருளுடைய 'மக்கபியஹு' (Magqubyahu) என்ற எபிரேயச் சொல்லிலிருந்து 'மக்கபேயோஸ்' (Makka-baois) என்ற சொல் வந்திருக்க வேண்டும். இதுதான் உண்மையான பொருளாக இருக்கக்கூடும். ஏனெனில், யூதாவின் தலைமைப் பதவியும் *(1 மக் 2:66)*, அவர் மக்களிடையே கொண்டிருந்த மேன்மையும் *(15:63-64)* இறைவனது அங்கீகாரம் பெற வேண்டும் (எசா 62:2). இச்சொல்லுக்கு யூதாவின் செயல்களை முன்னிட்டு எதிரிகளை அடிக்கும் 'சம்மட்டி' என்னும் பொருள் கொடுப்பர் *(1 மக் 2:48)*. அல்லது அவரது தலையின் தோற்றத்தைக் கொண்டு 'சம்மட்டி போன்ற தலையை உடையவன்' என்ற பொருளையும் கொடுப்பர். இவற்றில் முதலாவதுதான் உண்மைப் பொருளாக இருக்கக்கூடும். இப்பொருளில்தான் ஓரிசன் இந்நூலைக் குறிக்கிறார். அவர் பயன்படுத்தும் வாசகத் தவறுடைய 'சர் பேத் சபானியேல்' (Sarbethsabaniel) என்ற எபிரேயச் சொல்லை ''சேபேர்-பெத்-சர்-பெனெயேல்', (Seper-bet-sar-bene'el) என்று திருத்தினால் இச்சொல்லுக்கு இந்நூல்கள் 'இறை மக்களின் தலைவர் வீடு பற்றிய நூல்' என்று குறிப்பிடப்படுகின்றன என்று கூறலாம். இது சீமோன் ''இறை மக்கள் தலைவர்'' என்று விவரிக்கப்படுவதோடு *(1 மக் 14:35)* ஒத்துப்போகிறது.

**3. எத்தனை நூல்கள்:** கி.பி. 5-ஆம் நூற்றாண்டடைச் சேர்ந்த அலக்சாந்திரியா கிரேக்க வாசகம் நான்கு மக்கபேயர் நூல்களைக் கொண்டுள்ளது. கி.பி. 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சீனாயிட்டிகுஸ் கிரேக்க வாசகம் முதலாவது, நான்காவது மக்கபேயர் நூல்களை மட்டும் கொண்டுள்ளது. அதே நூற்றாண்டைச் சேர்ந்த வத்திகானுஸ் விவிலியக் கிரேக்கப் பதிப்பு இவற்றில் எதையும் கொண்டிருக்கவில்லை. மிகப் பழங்காலத்து இலத்தீன் பதிப்பு முதல் இரண்டு மக்கபேயர் நூல்களை மட்டும் கொண்டுள்ளது. இவை இரண்டை மட்டும்தான் திருச்சபை தனது விவிலியப் பட்டியலில் சேர்த்துக் கொண்டுள்ளது. வுல்காத்தா பதிப்பு இதைப் பின்பற்றுகிறது. இந்த மரபைப் புனித எரோனிமு மாற்ற விரும்பவில்லை.

இந்நூல்களைப் பற்றிய, காலத்தால் முந்திய, கிறிஸ்தவக் குறிப்பு மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த அலக்சாந்திரியா கிளெமெந்து என்பவருடைய நூலில் காணப்படுகிறது. அவர் இந்நூல்களை 'மக்கபேயர் காரியங்களைப் பற்றிய நூல்' என்று குறிப்பிடுகிறார். ஒருவேளை சிரேனே ஊரானான யாசோனால் எழுதப்பட்ட நூல்களில் சுருக்கமான இரண்டாம் மக்கபேயர் நூலுக்கு இப்பெயர் கொடுக்கப்பட்டிருக்கலாம். பிற்காலத்தில் இத்தலைப்பு முதல் மக்கபேயர் நூலுக்கும் அளிக்கப்பட்டது. பின் இரு நூல்களுக்கும் இப்பெயர் தலைப்பாயிற்று. கிளெமெந்து காலத்திற்குப்பின் கிரேக்க, இலத்தீன் வாசகங்கள் இவ்விரு நூல்களையும் மக்கபேயர் நூல்கள் என்று அழைத்தன.

**4. விவிலியப் பட்டியலில் மக்கபேயர் நூல்கள்:** மக்கபேயர்களின் வழித்தோன்றல்களான அசமோனிய அரச மரபினர் யூதச் சட்டத்திற்கும் மரபுக்கும் பற்றுறுதியாக இருக்கவில்லை. ஆகவே, மக்கபேயர்களின் பெருமையையும் அருஞ்செயல்களையும் பற்றி எடுத்துக்கூறும் மக்கபேயர் நூல்களைக் கசிதிமியர்களின் பாரம்பரியத்தில் வந்த பரிசேயர்களும், கும்ரான் குழுவினரும் விரும்பவில்லை; போற்றி ஏற்கவில்லை. இதில் வியப்பில்லை. கும்ரான் குகைகளில் இதுவரை இந்நூல்களின் ஒரு பிரதியும் கண்டுபிடிக்கப்படவில்லை. பரிசேயர் பாரம்பரியத்தில் வரும் ராபிகளின் பாரம்பரியத்திலும் 1 மக்கபேயர் நூலின் எபிரேய வாசகங்கள் பாதுகாக்கப்படவில்லை. வரலாற்று ஆசிரியன் யோசிப்பசு பரிசேயரைச் சேர்ந்தவர். இவர் பரிசேயர் பாரம்பரியத்தைப் பின்பற்றி இந்நூல்களைப் புனித மிக்கதாக ஏற்றுக்கொள்ளவில்லை.

ஆனால், கிறிஸ்துவப் பாரம்பரியம் இந்நூல்களை மேன்மையோடு ஏற்றுக்கொண்டுள்ளது. உரோமைக் கத்தோலிக்கத் திருச்சபை தன் விவிலிய அட்டவணையில் இந்நூல்களையும் சேர்த்துள்ளது. இதில் ஒரு பழம் பெரும் பாரம்பரியத்தையே பின்பற்றுகிறது. இந்நூல்களை எடுத்துப் பயன்படுத்தியவர்களில் அலக்சாந்திரியா கிளமெந்துதான் முதலானவர். அவருக்குப்பின் வந்த இப்போலித்து தேர்துல்லியன், ஓரிசன், சிப்பிரியன், யுசேபியு அஃரேட்டஸ், எரோனிமு, அகுஸ்தீன், தியேடொரெட் போன்ற திருச்சபைத் தந்தையர் இந்நூல்களை எடுத்துக்காட்டுகின்றனர். இப்போ *(393)*, கார்த்தேசு *(397.414)* ஆகிய இடங்களின் திருச்சபைச் சங்கங்கள் இந்நூல்களின் புனிதத்தை ஏற்றுக்கொண்டன. ஃபலரன்ஸ் *(1441)*, திரிதெந்தீன் *(1546)*, முதலாம் வத்திக்கான் *(1870)* பொதுச் சங்கங்கள் இந்நூல்களை இறையூக்கம் பெற்ற நூல்கள் என்று ஏற்றுக்கொண்டன.

பதித பிரிவினைக் கிறிஸ்துவ சபைகள் இந்நூல்களைத் தங்கள் விவிலியப் பட்டியலில் சேர்த்துக் கொள்வதில்லை. ஆனால், இவற்றிற்கு ஒரு சிறப்பிடம் அளிக்கின்றன.

**5. இரு நூல்களுக்குமுள்ள தொடர்பு:** மக்கபேயர் நூல்கள் சாமுவேல், அரசர் நூல்கள் போன்ற ஒரு தொடர்ச்சியான வரலாற்றின் இருபாகங்கள் அல்ல; மாறாக, ஒரே வரலாற்றைப்பற்றிய இரு தனித்தனி நூல்கள். இரு நூல்களும் ஒரே காலத்திய வரலாற்றைப் பற்றிக் கூறுகின்றன என்பதைத் தவிர இரு நூல்களுக்கும் தொடர்பில்லை. ஆகையால், இரு நூல்களுக்கும் தனித்தனி அறிமுகங்கள் அளிக்கிறோம்.

**6. முதல் மக்கபேயர் ஆகமம்:** கி.மு. 175 முதல் 134 வரையுள்ள பாலஸ்தீன யூத வரலாற்று நிகழ்ச்சிகளைப் பற்றியதாகும் இந்நூல். ஒரு புறம் செலூக்கிய அரச மரபைச் சேர்ந்த கொடுமைப்படுத்தியோரும், யூதர்களிடையேயான கிரேக்கக் கலாச்சாரப் பித்தர்களும், மறுபுறம் யூத சமயப் பற்றுறுதியுடையோரும் ஆகிய இருசாராருக்குமிடையே நிகழும் சமய, அரசியல் போராட்டங்களையும் அதன் விளைவுகளையும் எடுத்துக்கூறுகிறது.

**7. ஆசிரியர்:** இவரைப் பற்றி அதிகம் ஒன்றும் கூற முடியாது. நூலிலிருந்து இவற்றைப்பற்றி சில கூறலாம். இவர் ஒரு யூதன். அதுவும் நாட்டு, சமயப்பற்று மிகுந்த யூதன். இவர் கசிதிமியரை ஆதரித்தவராவர். இவர் பரிசேயரைச் சேர்ந்தவர் என்பர் சிலர். ஆனால், பரிசேயருக்கு விருப்பமான வருங்கால வாழ்வு பற்றி ஒன்றும் கூறவில்லை. மேலும், ஓய்வுநாள் அனுசரிப்பில் விட்டுக்கொடுக்கும் தன்மை காட்டுகிறார். ஆகையால், இவர் சதுசேயர் குழுவைச் சார்ந்தவராக இருக்கக்கூடும். ஏனெனில், இப்பிரிவினர் தெளிவாகத் தோன்றுமுன்னே இவர் இந்நூலை எழுதியிருக்கக்கூடும். இந்நூலில் காணப்படும் பாலஸ்தீன புவியியல் இவர் எருசலேமின் குடிமகனாக இருந்திருக்க வேண்டும் என்று காட்டுகிறது. அக்கால அரசியல் போர்கள், அரசவைச் சூழ்ச்சிகள், மக்கபேய சகோதரர்கள் ஆகியவை பற்றிய நெருங்கிய அறிவு, விடுதலைப் போராட்டத்தில் பங்கு எடுத்தாரோடு இவர் தொடர்புடையவராகக் காட்டுகிறது. இவர் இந்நிகழ்ச்சிகள் நிகழ்ந்த காலத்தவராகத் தெரிகிறது.

**8. காலம்:** கி.மு. 134-இல் சீமோன் மக்கபேயரது மரணத்துக்குப்பின் இந்த நூல் எழுதப்பட்டது எனக் கருதலாம். இந்நூலின் கடைசிப்பகுதி *(16:23-24)* மூல நூலைச் சேர்ந்தது என்றால் யோவான் கிரிக்கான் மரித்த கி.மு. 104-க்குப்பின் எழுதப்பட்டிருக்க வேண்டும். உரோமைத்தளபதி பாம்பே கி.மு. 63-இல் எருசலேமுக்குள் புகுந்து ஆலயத்தின் திருத்தூயகத்துள் நுழைந்து யூதர்களின் சமய உணர்வுக்குப் பங்கம் விளைவித்தான். ஆயினும், ஆசிரியர் 1 மக் 8-இல் உரோமையரைப் போற்றி எழுதுவதால் கி.மு. 63-க்கு முன்னே எழுதியிருக்க வேண்டும். இவ்வாறு இந்நூல் கி.மு. 104-63-க்கு இடையிட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

**9. மொழி:** முதலாம் மக்கபேயர் நூல் எபிரேய மொழியில் எழுதப்பட்டது. அதனுடைய இலக்கியநடை இதைத் தெளிவு படுத்துகிறது. இது பற்றி இப்போது எந்த விவிலிய அறிஞரும் ஐயுறார். இந்த எபிரேய வாசகத்தை ஓரிசனும் எரோனிமுவும் அறிந்திருந்ததாகத் தெரிகிறது. ஆயினும், இந்நூலின் கிரேக்க மொழி பெயர்ப்புதான் நமக்குக் கிடைத்துள்ளது. இந்தக் கிரேக்க மொழிபெயர்ப்பு எபிரேய மூலத்தைப் பெருமளவுக்கு எதிரொலிக்கின்றது என்பர். ஆனால், எப்போது இம்மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது என்று ஒன்றும் கூறுவதற்கில்லை. வுல்காத்தாப் பதிப்பு பழைய இலத்தீன் வாசகத்தைக் கொண்டுள்ளது. இந்த வாசகம் நாம் கொண்டிருக்கும் கிரேக்க வாசகத்தை விட பழமையான கிரேக்க வாசகத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆகவே, அதன் பதிப்பும் உயர்ந்ததாகும்.

**10. மூலங்கள்:** இந்நூல் ஆசிரியர் யூதாவின் வீரச்செயல்களை நேரடியாகக் கண்டவர்களின் நினைவேடுகளை ஓரளவு சார்ந்து எழுதுவதாகத் தெரிகிறது. *1 மக் 9:22* யூதாவின் வாழ்க்கை வரலாறு என்ற நூலைப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. இவ்வாசகம் பொருள் மயக்கமுடையது. பலரும் பலவாறு விளக்கம் அளிப்பர். யோனத்தான், சீமோன் ஆகியவரது வரலாற்றுக்கு ஆலயப் பதிவேடுகளை ஆசிரியர் பயன்படுத்தியிருக்க வேண்டும். இத்தகைய நூல் நிலையம் ஆலயத்தில் நெகேமியா காலத்திலேயே நிறுவப்பட்டிருக்க வேண்டும் (*1 மக் 14:19; 2 மக் 2:13*). பெரிய குருக்களின் நாளேடுகளையும் இவர் பயன்படுத்தியிருக்கலாம் (*1 மக் 10:21; 14:41; 16:24*). மேலும், ஆசிரியர் பல மடல்களையும், அரச ஏடுகளையும் பயன்படுத்துகிறார். இவற்றை அறிஞர்கள் சிலர் இலக்கியப் படைப்புகள் என்று கருதினாலும் பெரும்பாலான நவீனகால அறிஞர்கள் இவற்றின் உண்மைத் தன்மையை ஏற்றுக் கொள்வர். *1 மக் 1:45-5*-இல் நாலாம் அந்தியோக்கு தன் மக்களுக்கு விடுத்த ஓலை குறிப்பிடப்படுகிறது.

மற்ற மடல்கள் பின் வருமாறு:

| | மடல்கள் | காலம் | வாசகம் |
|---|---|---|---|
| 1. | கிலயாது யூதர்கள் யூதாவுக்கு எழுதிய மடல் | — | 1 மக் 5:10-13 |
| 2. | உரோமை மேலோர் மன்றம் யூதாவுக்கு எழுதிய மடல் | 161 | 8:23-32 |
| 3. | முதலாம் தெமேத்திரியு யோனத்தானுக்கு எழுதிய மடல் | 152 | 10:3-6 |
| 4. | அலக்சாந்தர் பாலாசு யோனத்தானுக்கு எழுதிய மடல் | 152 | 10:18-20 |
| 5. | முதலாம் தெமேத்திரியு யோனத்தானுக்கு எழுதிய மடல் | 152 | 10:25-45 |
| 6. | இரண்டாம் தெமேத்திரியு யோனத்தானுக்கு எழுதிய மடல் | 145 | 11:30-37 |
| 7. | நாலாம் அந்தியோக்கு யோனத்தானுக்கு எழுதிய மடல் | 145 | 11:57 |
| 8. | யோனத்தான் ஸ்பார்த்தா மக்களுக்கு எழுதிய மடல் | 144 | 12:6-18 |
| 9 | ஸ்பார்த்தா மன்னன் ஆரியு ஒனியாவுக்கு எழுதிய மடல் | — | 12:20-23 |
| 10. | 2-ஆம் தெமேத்திரியு சீமோனுக்கு எழுதிய மடல் | 142 | 13:36-40 |
| 11. | ஸ்பார்த்தர் சீமோனுக்கு எழுதிய மடல் | 142 | 14:20-23 |

| | | | |
|---|---|---|---|
| 12. | சீமோனைப் போற்றும் யூதர்களின் சட்டம் | 140 | 14:27-45 |
| 13. | 7-ஆம் அந்தியோக்கு சீமோனுக்கு எழுதிய மடல் | 139 | 15:2-9 |
| 14. | 8-ஆம் தோலமி தூதன் லூசியனுக்கு எழுதிய மடல் | 142 | 15:16-21 |

ஆய்வாளர்கள் சிலர் அதி. 14-16 என்ற பகுதி பிற்காலச் சேர்க்கை என்று கருதுவர். ஏனெனில், வரலாற்று ஆசிரியன் யோசிப்பசு இந்நூலின் முதற்பகுதியைப் (அதி. 1-13) படிப்படியாகப் பயன்படுத்தியபின் இப்பகுதியைப் பயன்படுத்தவேயில்லை. ஆகவே, ஆய்வாளர்கள் முன்பகுதி சீமோன் இறந்தவுடன் கி.மு. 135-ஐ ஒட்டி எழுதப் பட்டிருக்க வேண்டும் என்பர். இக்காலத்தில் இக்கருத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. யோசிப்பசு இப்பகுதியைப் பயன்படுத்தவில்லை என்பது இதை இந்நூலிலிருந்து பிரித்து விடுவதற்குப் போதிய காரணமன்று. இப்பகுதி கருத்திலும் இலக்கிய நடையிலும் இந்நூலின் மற்றப்பகுதியோடும் ஒத்துப் போகிறது. இறையூக்கம் பெற்ற மற்ற ஆசிரியர்கள் 16:18-24 என்ற பின் பகுதியைச் சேர்த்து நிறைவு செய்திருக்கலாம் என்று கூறலாம்.

மேற்கூறிய மூலங்களோடு, ஆசிரியருக்குச் செலூக்கிய அரச மரபு மூலங்களும் கிடைத்தன. இவை இந்நூலுக்குக் காலக்கணிப்பைக் கொடுக்க உதவின எனலாம்.

**11. நூலின் நோக்கம்:** இந்நூல் வரலாற்று நூலானாலும் ஒரு போதகத்தையும் கொண்டுள்ளது. இது நாளாகமப் பாரம்பரியத்தில் வரும் நூலாகும். செலூக்கியப் பேரரசில் யூத வரலாற்றில் இறைவனது செயல்களை ஆசிரியர் கண்டவாறு எடுத்துக்கூறுகிறார். இந்நூல் ஒவ்வொரு யூதனுக்கும் எழுதப்படுகிறது. யூதர்கள் மத்தத்தியாவையும் அவரது புதல்வர்களையும் பின்பற்ற வேண்டும். சட்டத்திற்குப் பற்றுறுதியும் இறைவனில் கொண்டுள்ள விசுவாசமும் ஒருவனுடைய சொந்தப் பலத்தினாலோ, சேனையாலோ செய்யக்கடியதை விட, அதிகமாகச் சாதிக்க முடியும் *(2:61-64)*. யூதாவும் அவருடைய சகோதரரும் இரக்கமிக்க அருள்பாலிப்பின் தூதர்களாவர். இவர்களின் வழியாகப் புற இனக்கொடுமையிலிருந்து யூதத்திற்கு விடுதலை கிடைத்தது *(2:48; 4:24-25; 9:21.73;14:26.29)*. இவர்களின் முயற்சி விடுதலை அளித்தது; ஓர் அரசையும் கொடுத்தது; இறைவனது வருங்கால இடையீட்டுக்குத் தயார் செய்தது *(4:46; 14:41)*. ஆகவே, எல்லா யூதர்களும் இவர்களது மாதிரியைப் பின்பற்ற வேண்டும்.

**12. திட்டமும் பொருளடக்கமும்:** இதன் திட்டம் தெளிவாக உள்ளது. இதில் இரு பகுதியுடைய முன்னுரையும், யூதா, யோனத்தான், சீமோன் ஆகியோரின் செயல்களும் அடங்கியுள்ளன.

**I முன்னுரை - அந்தியோக்குவின் எழுச்சி *(1:1-64)*.**

1. அலக்சாந்தரும் அவன் தளபதிகளும் *(1:1-10)*.
2. கிரேக்க மயமாக்குதல் *(1:11-15)*.
3. எகிப்தின் மேல் அந்தியோக்குவின் முதல் படையெடுப்பு *(1:16-19)*.
4. அந்தியோக்கு ஆலயத்தைக் கொள்ளையடித்தல் *(1:20-24)*.
5. அழுகைப் புலம்பல் *(1:25-29)*.
6. எருசலேமைத் தாக்குதலும் விளைவும் *(1:30-42)*.
7. யூத மதத்தைத் தடை செய்து, புறவின முறைகளைப் புகுத்தல் *(1:43-64)*.

**II. யூதர்களின் எதிர்ப்பு எழுச்சி *(2:1-70)*.**

1. மத்தத்தியாவின் புலம்பல் *(2:1-14)*.
2. எதிர்ப்பு சீற்றம் எடுத்தல் *(2:15-28)*.
3. ஓய்வு நாளில் கொலை செய்யப்படுதலும் அதன் விளைவும் *(2:29-41)*.

4. கசிதிமியர்கள் (2:42-48).

5. மத்தத்தியாவின் இறுதி விருப்பப் பத்திரம் (2:49-70).

III. **யூதா மக்கபேயுவின் வீரச்செயல்கள் (3:1-9:22).**

1. யூதாவுக்குப் புகழ் அஞ்சலி (3:1-9).

2. யூதா அப்பொல்லோனியுவையும் செரோனையும் தோற்கடிக்கிறார் (3:10-26).

3. அந்தியோக்கு பாரசீகத்திற்கு வருதல் (3:27-37).

4. யூதா கோரிக்கியாவையும் நிக்கானோரையும் தோற்கடிக்கிறார் (3:38-4:25).

5. யூதா லீசியாவைத் தோற்கடித்தல் (4:26-35).

6. ஆலயத்தைச் சுத்தி செய்து திரு நிலைப்படுத்துதல் (4:36-61).

7. சுற்றியுள்ள இனத்தவரோடு யூதா போரிடுதல் (5:1-68).

8. நான்காம் அந்தியோக்கு எப்பிப்பான் மரித்தல் (6:1-17).

9. உட்கோட்டையை முற்றுகையிடுதல் (6:18-27).

10. யூதாவின் மேல் லீசியா இரண்டாம் முறைபடை எடுத்தல் (6:28-63).

11. பாக்கிதும் ஆல்கிமுவும் படையெடுத்தல் (7:1-25).

12. நிக்கானோர் தோல்வியுறுதல் (7:26-50).

13. உரோமையரோடு யூதா செய்த உடன்படிக்கை (8:1-31).

14. யூதாவின் தோல்வியும் மரணமும் (9:1-22).

IV. **யோனத்தானின் வீரச் செயல்கள் (9:23-12:54).**

1. யோனத்தான் தலைமை ஏற்றல் (9:23-34).

2. பழி தீர்த்தல் (9:35-42).

3. பாக்கிது யோனத்தானைப் பதுங்கியிருந்து தாக்குதல் (9:43-49).

4. பாக்கிது யூதேயாவில் கோட்டை கட்டிப் பலப்படுத்துதலும் ஆல்கிமுவின் மரணமும் (9:50-57).

5. யோனத்தான் பாக்கிதின் சூழ்ச்சியிலிருந்து தப்பித்தல் (9:58-73).

6. அலக்சாந்தர் பாலாசு அரச உரிமையைக் கொண்டாடுதல் (10:1-14).

7. யோனத்தான் அலக்சாந்தரை ஆதரித்துப் பெரிய குருவாதல் (10:15-50).

8. யோனத்தான் மகிமைப்படுத்தப்படுதல் (10:51-66).

9. 2-ஆம் தெமேத்திரியுவின் தளபதி அப்பொல்லோனியுவைத் தோற்கடித்தல் (10:67-89).

10. தெமேத்திரியுவுக்கும் தோலமிக்கும் இடையே உடன்படிக்கை (11:1-13).

11. அலக்சாந்தரும் தோலமியும் மரித்தல் (11:14-18).

12. தெமேத்திரியுவுடன் யோனத்தானின் உடன்படிக்கை (11:19-37).

13. திரிபோவின் சூழ்ச்சியும் யோனத்தான் தெமேத்திரியுவை ஆதரித்தலும் (11:38-53).

14. திரிபோவோடு யோனத்தானின் உடன்படிக்கை (11:54-62).

15. யோனத்தான், தெமேத்திரியு ஆகியோரிடையே போர் (11:63-74).

16. உரோமையர், ஸ்பார்த்தர்களோடு நட்பு உடன்படிக்கை (12:1-23).

17. யோனத்தான் சீமோன் ஆகியோரின் போர்ச்செயல்கள் (12:24-38).

18. யோனத்தான் சிறைப் படுதல் (12:39-54).

V. **சீமோன் யூதர்களின் தலைவராதல் (13:1-16:24).**

1. சீமோன் தலைமை ஏற்றல் *(13:1-11)*.
2. சீமோன் திரிபோவைத் தடுத்து நிறுத்துதல் *(13:12-24)*.
3. மோதயின் நகரத்தில் மக்கபேயர் குடும்பச் சின்னம் *(13:25-30)*.
4. சீமோன் தெமேத்திரியுவோடுகூட்டு *(13:31-42)*.
5. கசராவையும் உட்கோட்டையையும் கைப்பற்றுதல் *(13:43-54)*.
6. தெமேத்திரியு பார்த்தியர்களால் கைது செய்யப்படுதல் *(14:1-3)*.
7. சீமோனின் மகிமை *(14:4-15)*.
8. உரோமையரோடும் ஸ்பார்த்தர்களோடும் உடன்படிக்கையைப் புதுப்பித்தல் *(14:16-24)*.
9. சீமோனை மகிமைப்படுத்தும் யூதச் சட்டம் *(14:25-49)*.
10. 7-ஆம் அந்தியோக்கு சீமோனுக்குச் சலுகை காட்டி திரிபோவை முற்று கையிடுதல் *(15:1-14)*.
11. உரோமைக்குச் சென்று தூது திரும்புதல் *(15:15-24)*
12. அந்தியோக்கு உடன்படிக்கை தவறுதல் *(15:25-36)*.
13. யூதாவும் அவரது மகனும் கெந்தபேயுவைத் தோற்கடித்தல் *(15:37-16:10)*.
14. சீமோனும் அவரது இரு புதல்வர்களும் கொலை செய்யப்படுதல் *(16:11-22)*.
15. முடிவுரை: யோவான் கிரிக்கான் பெரிய குருவாதல் *(16:23-24)*.

**13. இலக்கியச்சிறப்பு:** இது வரலாற்று நூலானாலும் இலக்கிய யுக்திகளை அதிகம் பயன்படுத்துவதாகத் தெரியவில்லை. நிகழ்ச்சிகளைக் காலவரைப்படி ஒன்றோடு ஒன்றாக முடித்துப் போடுவதாகத் தெரிகிறது. பொதுமக்கள் மொழியாகிய அரமேயிக்கிலோ, அக்காலப் பண்பாட்டு மொழியாகிய கிரேக்க மொழியிலோ அல்லாது ஆசிரியர் பாலஸ்தீனத்தில் வாழ்ந்து கொண்டு தம் புனித மொழியாகிய எபிரேய மொழியில் எழுதியவராதலால் நீதிபதிகள், சாமுவேல், அரசர் ஆகமங்கள் போன்ற தங்கள் பழங்கால வரலாற்று நூல்களின் இலக்கிய வடிவங்களைப் பின்பற்ற முயல்கிறார். இது கிரேக்க ஆதிக்கம் குறைவான நடையில் எழுத அவருக்கு உதவியது எனலாம். அவரது நடை எளியது; நேரடியானது; ஆனால், உயிர்ச்சித்திரமானது *(6:39)*. அவரது நடையில் அமைதியுண்டு; ஆனால், உற்சாகப் போக்கும் உண்டு *(2:48; 4:24; 5:63)*. சில இடங்களில் தனது உணர்ச்சிகளைக் காவியமாகக் கொட்ட வல்லவர். சிறப்பாக அவரது செபங்கள், நன்றிப் பாடல்கள், தலைவர்களின் சொற்பொழிவுகள் வீரர்கள் பற்றிய போற்றுரைகள் ஆகியவை உணர்ச்சி மிக்கவை *(1:26-28. 36-40; 2:7-13; 3:3-9.45; 14:16-25)*. இவற்றில் ஆசிரியர் பழைய விவிலியக் காவியங்களில் காணப்படும் சொற்றொடர்களைப் பின்பற்ற முயல்கிறார். ஆனால், பெரும்பாலும் அவரது விவரிப்புகள் அமைதியான வரலாற்று ஆசிரியனை எடுத்துக் காட்டுகின்றன.

**14. வரலாற்று மதிப்பீடு:** இந்நூல் கி.மு. 175-இல் அந்தியோக்கு மன்னனானதிலிருந்து 135-இல் சீமோன் மரித்தது வரையுள்ள காலத்தைப்பற்றிய ஒரே வரலாற்று நூலாகும். இஃது ஒன்றே இதன் சிறப்பையும் முக்கியத்துவத்தையும் எடுத்துக்காட்ட வல்லது. இந்நூல் கூறும் வரலாறு நம்பத் தகுந்ததா என்பது பற்றி பல பிரச்சனைகள் உண்டு.

பாலஸ்தீனத்தைப் பொருத்தமட்டும் ஆசிரியர் கொடுக்கும் புவியியல் காலவரை விவரிப்புகள் துல்லியமானவை. இஃது அவர் பாலஸ்தீனத்தை நன்கு அறிந்திருந்தார் என்பதைக் காட்டுகிறது. ஆனால், பிற நாடுகள் பற்றிய புவியியல், மக்கள் இனங்

கள், நிறுவனங்கள், வரலாறு ஆகியவை பற்றிய ஆசிரியரது அறிவு அவ்வளவு சிறந்தது அன்று. சான்றாக உரோமையர், ஸ்பார்த்தர்கள் பற்றி இவரது அறிவு மிகக் குறைவானதாகும். *4-ஆம்* அந்தியோக்கு வின் மரணத்தை, அது நடந்ததுக்கும் பின் அதாவது ஆலயம் திருநிலைப்படுத்தப் பட்ட பின் நிகழ்ந்ததாகக் கூறுகிறார். ''யாரும் அழிவுறாமல்'' *(5:54)*, ''எல்லோ ரையும் கொன்றார்கள்'' *(7:46)* என்ற சொற் றொடர்கள் உண்மைக்கு நெருங்கியவை அல்ல. இவர் நாட்டுப்பற்று மிக்கவர். யூதேயாவின் நிகழ்ச்சிகளுக்கு மிகைப் படுத்தி முக்கியத்துவம் கொடுக்கிறார் *(1:4-43; 3:27-31; 6:5-13)*. இவர் செலூக்கிய அரச மரபுக்கு எதிரியானவர் *(1:9-10)*. இவை எல்லாம் இவ்வாசிரியரது வரலாற்று உண்மைத் தன்மையை ஐயுறச் செய்கின்றன.

ஆயினும், நவீன கால வரலாற்றியலும் ஆய்வும் இந்நூல் மிகவும் நம்பிக்கைக்குரிய வரலாற்று மூலமாகும் என்று காட்டுகின் றன. யூதர்களின் தோல்வியும், அவர்களின் துரோகமிக்க சூழ்ச்சிகளும் மறைக்கப்பட வில்லை; மாற்றிக் கூறப்படவில்லை. செலூக்கிய ஆட்சியின் விளைவாக யூதர் சுதந்தரம் அடைந்தனர் என்று இவரிடமி ருந்து அறிகிறோம். ஆசிரியர் தம் காலத்துக் குரியவர்; முழுவதும் சார்பு அற்றவர் அல்லர். அவருடைய நூலில் முழுவதும் புறப்பொருள் தன்மையை எதிர்பார்க்க முடியாது. ஆயினும், தனது காலத்தில் நிலவிய கலாச்சாரச் சூழ்நிலை, வரலாற்று இயல் விதிகளுக்கு ஏற்றவாறு எழுதுகிறார். அக்கால மனிதர்கள், நிகழ்ச்சிகள் ஆகி யவை பற்றி நம்பிக்கையுள்ள சாட்சியா வார். இடங்கள் பற்றியும் *(7:19; 9:2.3.33)* யூதகாலவரை பற்றியும் *(1:54; 4:52;....)* அவர் காட்டும் கவனம் அவர் தம் ஆற்றலுக்கும் நோக்கத்திற்கும் உரிய வரை யறைகளைத் துல்லியமாக எடுத்துக் காட்டு வதற்குச் சான்றாக உள்ளது. அவர் அந்தி யோக்கு மரித்த ஆண்டு பற்றிக் கூறும் போது தவறியிருக்கலாம். ஆனால் அவரது விவரிப்பு மெகலாப்பொலியைச் சேர்ந்த போலிபியஸ் என்ற வரலாற்று ஆசிரிய ருடையதற்கு ஒத்ததாக உள்ளது.

இஸ்ராயேலுக்கு மீட்பைக் கொண்டு வந்தவர்களாக மக்கபேயர்களைப் போற்றி ஆசிரியர் எழுதுவதால் அவர் வரலாறு எழுதினாலும், ஒரு பிரச்சாரம் செய்பவர் போல் வரலாறு எழுதுகிறார். பழங்காலத்து வரலாற்று ஆசிரியர்களைப்போல இவர் மிகைப்படுத்திக் கூறத் தயங்கவில்லை. தனது வீரர்களின் வெற்றியையும் தோல்வி யையும் எடுத்துக் கூறினாலும் அவர்களின் தோல்வியைக் குறைத்துக் கூறும் போக்கு இவரிடம் உண்டு. மக்கபேயர் புரட்சியை உலகுக்கு அதிர்ச்சி அளிக்கும் நிகழ்ச்சியாக வும், உரோமையர்களுக்கும் ஸ்பார்த்தர் களுக்கும் முக்கியம் வாய்ந்ததாகவும், செலூக்கிய அரசியலின் சுழல் அச்சாகவும் இவர் கருதுகிறார். இக்காலத்துக் கருத்துப் படி இந்நூல் வரலாற்றுப் புறப்பொருள் தன்மையில்லாமல் இருக்கலாம். இந்நூல் அடிப்படை வரலாற்றுத் தன்மையுடையது என்பதை ஐயுற இடமில்லை. அறிஞர்கள் கருத்துப்படி, எந்த விவிலிய வரலாற்று நூல்களோடும், ஆசிரியரது காலத்துக் கிரேக்க வரலாற்று நூல்களோடும், வர லாற்றுத் தன்மையில் இந்நூல் ஒப்பிடத் தக்கதாகும்.

**15. சமய போதகம்:** இந்நூலில் சமயமும் நாட்டுப்பற்றும் இரண்டறக் கலந்துள்ளன. ஒரே இறைவன் மேலுள்ள விசுவாசம் தொடர்ந்து இருக்க வேண்டுமென்றால் யூத சமூகமும் தொடர்ந்து இருக்க வேண்டும். சமயத்திற்காக உயிரை நீத்தவர்களை இந் நூலாசிரியர் போற்றினாலும் இந்நூலின் வீரர்கள் இவர்கள் அல்லர். மாறாக, சமயத் திற்காக உயிர் நீத்தலை அவசியமற்றதாகச் செய்த போர் வீரர்களும், அரசியல்வாதி களும்தான் இந்நூலின் காவியத் தலைவர் கள்.

இந்நூலின் ஆசிரியர் உபாகம இறையி யலைப் பின்பற்றுகிறார். 'சட்டத்தை அனு சரி. பூமியை உடைமையாக்கிக் கொள்

வாய்'. சட்டமே எல்லாம். சட்டத்தை அனுசரிப்பதுதான் மக்களை இரு கட்சிகளாகப் பிரிக்கிறது. இந்நூலில் வரும் போராட்டம் செலூக்கியர்களுக்கும் மக்கபேயர்களுக்குமன்று; புற இனத்தவர்களுக்கும், யூதர்களுக்குமன்று; மாறாக, இப்போராட்டம் சட்டத்தை அனுசரிப்பவர்களுக்கும் அனுசரியாதவர்களுக்குமிடையே நடைபெறுகிறது. கிரேக்கர் தாங்கள் செய்ய வேண்டுமென்று நினைப்பதையே செய்கின்றனர். இவர்களோடு தொடர்பு கொள்ள மக்கபேயர்கள் தயங்கவில்லை. ஆனால், சட்டத்தை அனுசரியாத யூதர்கள்தான் இறைவனுக்கும் இஸ்ராயேலுக்கும் எதிரான துரோகிகள். இவர்களோடு மக்கபேயர் எத்தொடர்பும் கொள்ளார். யூதர்கள் சட்டத்திற்குப் பற்றுறுதியாக இருப்பது இப்போராட்டத்தின் உயிர் நிலையானதாகும் *(1:11-2:68; 3:47-53;13:3-8)*. யூதத்துவமும் சட்டத்தை அனுசரிப்பதும் ஒன்றாகக் கருதப்படுகிறது. சீயோனுக்கும் ஆலயத்திற்கும் காட்டும் பற்றுறுதி சட்டத்தை அனுசரிப்பதோடு ஒன்றானதாகும் *(3:43.45-49; 4:36-60; 7:33-38. 41-42)*. ஆசிரியர் சிதறிக் கிடந்த யூதர்களின் சமயத்தை நிராகரிக்கவில்லை. பாலஸ்தீன யூதத்துவமும் சிதறிக் கிடந்த யூதர்களின் யூதத்துவமும் சீயோனையும் ஆலயத்தையும் மையமாகக் கொண்டிருந்தால்தான் தொடர்ந்து இருக்க முடியும் என்று ஆசிரியர் உறுதியாகக் கருதுவதாகத் தெரிகிறது.

மக்கபேயர்கள் உடன்படிக்கையின் வாக்குறுதிகளை உறுதியாக நம்பினாலும், எல்லாம் விதி என்று அமைதியாக இருக்கவில்லை. ஓய்வு நாள் அனுசரிப்புக்காக தங்களைக் கொலை செய்ய அனுமதிப்பவர்களை ஆசிரியர் போற்றுவதாகத் தெரியவில்லை. சட்டத்தை அனுசரிக்கும் சூழ்நிலை ஏற்படுவதற்காகப் போரிடுவது மேல். சட்டத்தின் பாதுகாப்புக்காக கையில் போர்க்கருவிகளோடு மரிப்பதுதான் மிகப் பெரிய மகிமையாகும். இவ்வாறு இந்நூல் மனித மதிப்பீடுகளையும் போற்றுகிறது. அதே சமயம் இயற்கை கடந்த ஆன்மீக மதிப்பீடுகளையும் போற்றுகிறது. விசுவாசம் தீரச்செயல்களுக்கு இட்டுச் செல்கிறது. நாட்டுச் சேவை இறை சேவையோடு இரண்டறக் கலந்ததாகிறது.

இந்நூலில் காணப்படும் வீரர்களின் செபம், சொற்பொழிவுகளின் வழியாகவும், சிந்தனைப் பகுதிகளாலும் நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் அளிக்கிறார் ஆசிரியர் *(1:37-40; 2:7-12. 19-22. 49-68; 3:18-22. 45. 58-60; 4:9-11. 30-33; 6:11-13; 7:17. 41-42; 9:10; 13:3-6; 16:2-3)*. பாவத்தின் விளைவாகத் தான் இஸ்ராயேலுக்குத் துன்பம் வருகிறது. சட்டத்தை அனுசரித்தால் இத்துன்பங்கள் நீங்கிவிடும் என்று ஆசிரியர் போதிக்கிறார். இறைவன் தனது தீர்ப்பால் உலகின் நிகழ்ச்சிகளைக் கட்டுப்படுத்துகிறார். ஆனால், ஆசிரியர் இறைவனின் அருஞ்செயல்கள் எதையும் எடுத்துக் கூறவில்லை. இதில் இந்நூல் 2-ஆம் மக்கபேயரிலிருந்து வேறுபடுகிறது.

இந்நூலில் கடவுளின் பெயரே காணப்படவில்லை. வுல்காத்தாப் பதிப்பில் சில இடங்களில் 'கடவுள்', 'ஆண்டவர்' என்ற சொற்கள் காணப்படுகின்றன. ஆனால், கிரேக்கப்பதிப்பில் காணப்படவில்லை. கடவுளின் பெயர் காணப்படாதது, இந்நூல் இறையூக்கம் பெற்றதா என்ற ஐயத்தை எழுப்பியது. பலர் இதை ஒரு சமயச் சார்பற்ற நூலாகவே கருதுவர். இறைவன்பால் கொண்டுள்ள மரியாதையும் பற்றும் எவ்வளவு தூரம் மிகைப்படுத்தலாமென்றால் அவரது யாவும் கடந்த தன்மையை எடுத்துக் காட்டுவதற்காக அவரது பெயரையே சொல்லுவது தடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய யூதர்களிடையே இப்பண்பு மிகுந்திருந்ததாகத் தெரிகிறது. ஆனால், இந்நூல் இறைவனை மற்ற விதத்தில் குறிப்பிடுகின்றது. சான்று: 'வானம்' *(3:18-19; 4:10. 40; 9:46;12:15; 16:3)*; அவரைக் குறிக்கும், சுட்டுமுன்னிலைப் பெயர்ச் சொற்களாகிய ''அவர்'' ''நீர்'' *(2:61; 3:22; 7:37. 40; 16:3)*.

இந்நூலின் வீரர்கள் போருக்குச் செல்லுமுன் செபம் செய்கின்றனர் *(3:46-54; 4:10-11; 7:37-38; 9:49; 11:71)*. ஆசிரியர் இறைவனை இஸ்ராயேலின் மீட்பர் என்று

குறிக்கிறார் *(2:61; 3:19; 4:30;12:15; 16:3)*. தமது படைப்பிலிருந்து இறைவன் தூரத்தி லிருந்தாலும் அவரைச் செபத்திலும் *(3:50-53; 4:30-33)*, சட்டத்திலும் *(3:48)* கண்டடையலாம். இவற்றில், முன்பு இறை வாக்கினரின் சொற்களில் கேட்கப்பட்டது போல (எரே *1:9*) இப்போதும் இறைவனது குரலைக் கேட்கலாம்.

'மெசியா' என்ற கருத்து இந்நூலில் இல்லை. சுதந்தர இஸ்ராயேல் நாடு நிறு வப்படுவது இறையரசு நிறுவப்படுவதற்குச் சமம் அன்று. தாவீது அரச மரபு என்ற கருத்துக்கு இந்நூலில் இடமேயில்லை. மறு உலக வாழ்வு பற்றிய கருத்தும் இல்லை. இறைவாக்கினர் இந்நூலிலிருந்து முழு வதும் மறைந்து விட்டதாகத் தெரிகிறது. சட்டத்தை மிகைப்படுத்திக் கூறுவதும் இறைவாக்கினர் இல்லாதிருத்தலும் சில ஆபத்துக்களை விளைவித்தன. புவியை உடைமையாகக் கொண்டிருத்தல் நம்பிக் கையை வரையறுத்தது. சிமியோனைப் பற்றிய போற்றுரை இதைச் சுட்டுகிறது. பிற்காலத்தில் பதவி ஆசை தலைவிரித்தாடு வதற்கு இது வழி கோலும். தொடக்கத்தில் எவ்வளவோ மேன்மையான மக்கபேயர் புரட்சியின் விளைவாக வந்த அரச மரபு இதுமேயனான ஏரோதை அரசனாக்கும். இது விநோதமானதே.

இந்நூலில் ஆசிரியர் இறை செயலைவிட மனித செயலையே அழுத்திக் கூறுவதாகத் தோன்றினாலும் ஓர் ஆழ்ந்த சமயக் கருத்து நூல் முழுவதும் பரவியிருக்கிறது. இறை வனே வரலாற்றை நடத்துகிறார். தமது தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் நிலையை நிர்ணயிப்பவரும் அவரே. ஆசிரியர் மக்க பேயப் புரட்சி வீரர்களின் பண்புகளை வாசகர்களுக்கு எடுத்துக் கூற பெரிதும் விழைகிறார். அவை : இறைவன்பால் அன்பு, நாட்டுப்பற்று, சட்டத்திற்குப் பற் றுறுதி, எப்படியும் மனிதனை விட இறைவ னுக்கு மட்டுமே ஊழியம் செய்ய உறுதி. சட்டம் உடன்படிக்கையைத் தொடர்கிறது *(1:15; 2:20-21.50)*. சட்டத்தை அனுசரிப்பது மேன்மை தரும் *(2:49.64; 3:3; 9:10)*. பழங்கால வாக்குறுதிகளைச் செயல்படுத் தும் (எரே *31:31*: பாரூ *2:35*). சட்டத்திற்குப் பற்றுறுதியின்மை சாவையும் தண்டனை யையும் கொண்டு வரும் *(1 மக் 3:21-22; 3:49)*. யூதாவும் அவரது சகோதரர்களும் மீட்பைக் கொண்டு வந்தனர் *(9:21; 14:29)*; நீதிபதிகளாக விளங்கினர் *(9:72)*. இஸ்ரா யேலை விடுவித்து அவர்களது பழம் பெரும் உரிமையை மீட்டுத் தந்தனர் *(15:33-34)*. இறைவனுக்கும் மக்களுக்கும் இணைப்பான சட்டத்தின் மேல் ஆர்வம் கொண்டு அவர்கள் தங்களைக் கொடுமைப் படுத்திய புற இனத்தாரோடும், அவர்களின் கூட்டாளிகளான யூதத் துரோகிகளோடும் போரிட்டனர். இந்த மக்கபேயரின் சமய ஆர்வத்தையும் தாராளப் பண்பையும், வாச கர்கள் பின்பற்ற வேண்டும் என்பதே ஆசிரியரது மறைமுகமான அழைப்பாகும். இதையே நிலையான அறைகூவலாக இந் நூல் கொண்டுள்ளது.

**16. இரண்டாம் மக்கபேயர் ஆகமம்:** இந்நூல் முதலாம் மக்கபேயர் ஆகமத்தின் தொடர்ச்சி அன்று. ஓரளவு அதே காலத்திய வரலாற்றை இந்நூல் கொடுக்கிறது. ஆனால் பல நிலைகளில் முதல் நூலிலிருந்து வேறு படுகிறது. இந்நூல் கி.மு. *176* முதல் *160* வரையுள்ள யூத வரலாற்றை எடுத்துக் கூறுகிறது. அதாவது வேத கலாபனைத் தொடக்கத்திலிருந்து நிக்கானோரை வெற்றி கொண்டது வரையுள்ள வரலாற்றைக் கூறு கிறது.

**17. ஆசிரியர்:** இந்நூல் ஆசிரியரைப் பற்றி ஒன்றும் தெரியாது. அறிஞரது கருத் துப்படி, இவர் அலக்சாந்திரியாவைச் சேர்ந்த யூதராய் இருக்க வேண்டும். இவர் ஏற்கெனவேயிருந்த ஐந்து பாக நூலைச் சுருக்கித் தருவதாகக் கூறுகிறார். இந்நூ லுக்கு மூல நூலை எழுதியவர் சிரேனான யாசோன் என்பவராவார். இவர் யூத சமயத் திலும் பாரம்பரியத்திலும் ஊறிப்போனவர். அதே சமயம் சொற்றிறம் வாய்ந்த விவரிப்பு டைய கிரேக்கக்கலையில் ஆற்றல் மிக்கவர். இவரது நூலைச் சுருக்கி எழுதிய இறையூக் கம் பெற்ற ஆசிரியரை விட இவரது

ஆட்தன்மைதான் இந்நூலில் காணப்படுகிறது. இந்நூலில் காணப்படும் பரிசேய மனப்போக்கு எந்த அளவுக்கு யாசோனுடையது, எந்த அளவுக்குப் பெயர் தெரியாத ஆசிரியருடையது என்று கூறுவது கடினம். இந்நூலைச் சுருக்கி எழுதியவரது முதல் இரண்டு மடல்களும் உண்மையானவையென்று கருதப்படுவதால் இவரைத் தவிர வேறு ஓர் ஆசிரியர் இருந்திருக்கக்கூடும் என்று கருத வேண்டியதில்லை.

***18. காலம்:*** தெமேத்திரியு என்ற அரசனின் தலையான பிரபுக்களில் ஒருவனும், யூதர்களை அடக்க அரசனால் அனுப்பப்பட்டவனுமான நிக்கானோரின் இறப்புத்தான் இந்நூலில் குறிக்கப்படும் இறுதி நிகழ்ச்சியாகும். இது கி.மு. *160*-இல் நடைபெற்றது. இதற்குச் சிறிது காலத்திற்குப்பின் நிகழ்ந்த யூதாவின் மரணம் குறிக்கப்படாததால் யாசோனின் ஐந்து பாக நூல் *160*-இன் முன் பகுதியில் முடிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. ஆனால், நிக்கானோரின் இறப்புக்குப்பின் நடந்த நிகழ்ச்சிகள் அவரது நோக்கத்திற்கு அவ்வளவு முக்கியம் வாய்ந்தவை என்று ஆசிரியர் கருதாமலிருந்திருக்கலாம்.

இந்நூலோடு சேர்ந்த எகிப்திலுள்ள யூதர்களுக்கு எழுதப்பட்ட முதல் மடல் *(1:1-9)*, இந்நூல் முதலில் பதிப்பிக்கப்பட்ட போது அனுப்பப்பட்டது என்றால், இந்நூல் கி.மு. *124*-இல், அல்லது அதற்குச் சிறிது முன், எழுதி முடிக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில், இக்கடிதம் தெளிவாக தேதி குறிக்கப்பட்டிருக்கிறது *(1:9)*. ஆனால் பலர், இந்நூல் முதலாம் மக்கபேயருக்குப் பின்தான் எழுதி முடிக்கப்பட்டது என்பர்.

***19. மொழி:*** யாசோனுடைய ஐந்துபாக நூலும் அதன் சுருக்கமாகிய 2-ஆம் மக்கபேயரும் கிரேக்க மொழியில் எழுதப்பட்டன. சுருக்கி எழுதியவர், யாசோனின் பெரிய நூலிலிருந்து பொறுக்கியெடுத்துத் தொகுத்ததால், இந்நூலில் காணப்படும் கிரேக்க நடை யாருடையது, யாருடைய செல்வாக்கு அதிகமானது என்று கூறுவது கடினம். இந்நூல் பல விவிலியத் தொகுப்பில் காணப்படவில்லையாதலால் பழைய இலத்தீன் வாசகத்திலிருந்து வரும் வுல்காத்தாப் பதிப்பு பெரும் மதிப்புள்ளதாகும்.

***20. மூலங்கள்:*** ஆசிரியரின் முதன்மையான மூலம் யாசோன் எழுதிய ஐந்து பாகங்களைக் கொண்ட நூலாகும். இதை ஆசிரியர், தனது சமயபோதகத்திற்கேற்பச் சுருக்கி எழுதுகிறார். யாசோன் தனது நூலை எழுத முதல் மக்கபேயர் மூலங்களையே, அதாவது யூதாவின் வரலாற்றுப் பாரம்பரியம், செலூக்கிய வரலாற்று ஏடுகள், ஆலயப்பதிவேட்டு நிலையத்திலிருந்த ஏடுகள் ஆகியவற்றையே பயன்படுத்தியிருக்க வேண்டும்.

கி.மு. *124*-இல் எழுதப்பட்டதாகக் கருதப்படும் முதல் மடல் *(1:1-9)*,*143*-இல் எழுதப்பட்ட மற்றொரு மடலைச் சுட்டிக் காட்டுகிறது *(1:7-8)*. நாள் குறிக்கப்படாத *2*-ஆம் மடலில் *(1:10-2:9)* உண்மைத்தன்மை பற்றிய பிரச்சனை உண்டு. அதே சமயம் பொருளடக்கத்தில் இம்மடல் நம்பத் தகுந்தது என்று சாதிப்பாரும் உளர். இம்மடல் கி.மு. *164*-இல் எழுதப்பட்டதாக சிலர் கருதுவர்.

இந்நூலில் காணப்படும் பிற மடல்கள்:

| மடல்கள் | காலம் | வாசகம் |
|---|---|---|
| 1. யூதர்களுக்கு *4*-ஆம் அந்தியோக்கு எழுதிய மடல். | *164* | 2மக் *9:19-27* |
| 2. யூதர்களுக்கு லீசியா எழுதிய மடல். | *164* | 2மக் *11-16-21* |
| 3. லீசியாவுக்கு *4*-ஆம் அந்தியோக்கு எழுதிய மடல். | *163* | 2மக் *11:22-26* |
| 4. யூதர்களுக்கு அந்தியோக்கு எழுதிய மடல். | *164* | 2மக் *11:27-33* |
| 5. யூதர்களுக்கு உரோமைத் தூதுக்குழு எழுதிய மடல். | *164* | 2மக் *11:34-38* |

இம்மடல்களை மக்கபேயர் ஆய்வேடுகள் நிலையத்திலிருந்து யாசோன் பெற்றிருக்க வேண்டும். அறிஞர்கள் பலர் இம்மடல்கள் வெறும் கற்பனைப் படைப்புகளே என்று கருதுவர். பெரும்பாலோர் பொருளடக்கத்தில் இம்மடல்கள் உண்மைத் தன்மையுடையன என்று ஏற்றுக் கொள்வர். யூதர்கள் தங்கள் சட்டத்தைப் பின்பற்ற இம்மடல்கள் சுதந்தரம் அளிப்பதால் இவை முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். *11:27-33*-இல் காணப்படும் மடல் வரிசை மாற்றிக் காணப்படுவதாகக் கருதப் படுகிறது.

**21. நூலின் நோக்கம்:** இந்நூல் யூத மக்களுக்குப் போதகம் அளிக்கவும் அவர்களது விசுவாசத்தை வளர்க்கவும் எழுதப்பட்டதாகும். இதில் அவ்வளவு அரசியலைக் காண முடியாது. அதற்கு மாறாக ஆலயத்துக்கும், சமயக் கருத்துகளுக்கும் சிறப்பிடம் அளிக்கப்படுகின்றது. புற மதத்தைச் சேர்ந்த கொடுமைப்படுத்துபவர்களுக்கு எதிராக பாலஸ்தீன யூதர்கள் அடைந்த வெற்றிகளை எடுத்துக்காட்டி, துன்புற்ற அவர்கள் சகோதரரின் வீரமிக்க முன்மாதிரிகளைக் கொண்டு எங்கும் உள்ள, சிறப்பாக எகிப்திலுள்ள யூதர்களின் விசுவாசத்தைப் பலப்படுத்த ஆசிரியர் விழைகிறார். இதற்காக மூன்றாம் ஓனியா, எலயாசர், உயிரை அளித்த ஏழு சகோதரரும் அவர்களுடைய தாயும், யூதா மக்கபேயர் ஆகியோருடைய வாழ்க்கையைப் பெரிதும் போற்றுகிறார். அதே சமயம் கெலியோதோர், 4-ஆம் அந்தியோக்கு, நிக்கானோர் புறவினத் தளபதிகள், யாசோன், மெனலாவு போன்ற தீய பெரிய குருக்கள் போன்றவர்களைக் கண்டனம் செய்கிறார். நீதிமான்களின் உயிர்த்தெழுதல் போன்ற பரிசேயர்களுக்கு மிக விருப்பமான கொள்கைகளையும் பரப்ப முயற்சிப்பதாகத் தெரிகிறது.

**22. திட்டமும் பொருளடக்கமும்:**

I. **முற் சேர்க்கை (*1:1–2:18*).**

எகிப்து யூதர்களுக்கு எழுதப்பட்ட இரு மடல்களைக் கொண்டுள்ளது.

1. முதல் மடல். (*1:1-9*).
2. இரண்டாவது மடல் (*1:10-2:18*).

இந்நூல் எழுதப்பட்டபின் இறையூக்கம் பெற்ற ஒரு பதிப்பாசிரியரால் இம்மடல்கள் இந்நூலின் தொடக்கத்தில் சேர்க்கப்பட்டன என்று அறிஞர் பலர் கருதுவர். மக்கபேயர் காலத்தில் பாலஸ்தீன யூதர் பட்ட இடுக்கண்களைப் பற்றிய விவரங்களை இம்மடல்கள் கொடுக்கின்றன. இம்மடல்கள் எகிப்திலுள்ள அலக்சாந்திரியா யூதர்களுக்குப் பாலஸ்தீன யூதர்களால் எழுதப்பட்டது. எருசலேம் ஆலயம் திருநிலைப் படுத்தப்பட்ட விழாவில் எருசலேமுக்கு வந்து, விழாவைக் கொண்டாடும்படி எகிப்திய யூதர்களை இம்மடல்கள் அழைக்கின்றன. இவை எபிரேய மொழியிலிருந்து கிரேக்க மொழிக்கு மொழி பெயர்க்கப்பட்டனவாகும்.

II. **சுருக்கி எழுதிய ஆசிரியரது முன்னுரை (*2:19–32*).**

இது இவரது நோக்கத்தையும் முறையையும் எடுத்துக்கூறுகிறது.

III. **யூதர் கொடுமைப் படுத்தப்படுதலும் யூத எழுச்சியும் (*3:1–10:9*).**

அ. பெரிய குரு பதவியின் வீழ்ச்சி (*3:1-4:50*).

1. கெலியோதோர் நிகழ்ச்சி (*3:1-40*).
2. ஓனியாவுக்கு எதிராக சீமோனின் சூழ்ச்சி (*4:1-6*).
3. பெரிய குரு யாசோனால் கிரேக்கமயமாக்கும் முயற்சி (*4:7-20*).
4. அந்தியோக்கு யாசோனால் வரவேற்கப்படுதல் (*4:21-22*).
5. பெரிய குரு மெனலாவு (*4:23-50*).

ஆலயம் மீறக்கூடாததாகும் என்று கெலியோதோர் கண்டுணருகிறான். பெரிய குரு பதவி சூழ்ச்சிக்காரரின் பிணையாகிறது.

ஆ. நான்காம் அந்தியோக்கும் கிரேக்கப் பித்தரும் (*5:1-7:42*).

*1.* அந்தியோக்கு எருசலேமைப் பாழாக்குதல் *(5:1-14).*

*2.* அந்தியோக்கு ஆலயத்தைக் கொள்ளையடித்தல் *(5:15-23).*

*3.* அப்பொல்லோனியு எருசலேமைத் தாக்குதல் *(5:24-27).*

*4.* அந்தியோக்கு கிரேக்கத் தன்மையை மக்கள் மேல் புகுத்துதல் *(6:1-11).*

*5.* ஆசிரியரின் மதிப்பீடு *(6:12-17).*

*6.* எலயாசரின் சாட்சி மரணம் *(6:18-31).*

*7.* தாய் மற்றும் ஏழு சகோதரரின் சாட்சி மரணம் *(7:1-42).*

மக்களின் பாவம் இறைவனின் கோபத்தைக் கொண்டு வருகிறது. ஆலயம் கொள்ளையடிக்கப்படுகிறது; தீட்டுப்படுத்தப்படுகிறது. பற்றுறுதியிலுள்ள யூதர்கள் தங்கள் உயிரையே பரிகாரமாக ஒப்புக் கொடுக்கிறார்கள். இஃது இறைவனின் கோபத்தை மட்டுப்படுத்துகிறது.

**இ. யூதா மக்கபேயுவின் தலைமையில் யூதத்துவம் வெற்றி பெறுகிறது *(8:1-10:9).***

*1.* கொடுமைகளுக்கு எதிராக எதிர்ப்பை எழுப்புகிறார் யூதா *(8:1-7).*

*2.* நிக்கானோரையும் கோரிக்கியாவையும் தோற்கடித்தல் *(8:8-29. 34-36).*

*3.* யூதாவின் மற்ற வெற்றிகள் *(8:30-33).*

*4.* அந்தியோக்குவின் மரணம் *(9:2-29).*

*5.* யூதா ஆலயத்தைத் தூய்மைப்படுத்துதல் *(10:1-9).*

இறைவனின் கோபம் இரக்கமாக மாறுகிறது. யூதா பிற இனத்தவரைத் தோற்கடிக்கிறார் என்ற உணர்வோடு அந்தியோக்கு இறக்கிறான். யூதா ஆலயத்தைச் சுத்தி செய்கிறார்.

**IV. யூதாவின் வெற்றிப் போர்கள் *(10:10-15:39).***

*1.* தோலமி மக்கரோன் தற்கொலை *(10:10-13).*

*2.* இதுமேயாவில் யூதாவின் போர்கள் *(10:14-23).*

*3.* திமொத்தேயுவை யூதா தோற்கடித்தல் *(10:24-38).*

*4.* லீசியாவின் மேல் வெற்றி *(11:1-15; 12:1).*

*5.* மடல்கள் *(11:16-38).*

*6.* அயலாரோடு சண்டைகள் *(12:2-45).*

*7.* யூதாவின் மேல் லீசியா இரண்டாம் முறை படையெடுத்தல் *(13:1-20).*

*8.* தெமேத்திரியு அரசனாதல் *(14:1-2).*

*9.* ஆல்கிமுவின் பகைமை *(14:3-11).*

*10.* யூதாவும் நிக்கானோரும் *(14:12-36).*

*11.* இராசியின் மறைவு *(14:37-46).*

*12.* நிக்கானோரின் தோல்வி *(15:1-37).*

*13.* ஆசிரியரின் முடிவுரை *(15:38-40).*

யூதா எல்லாப் பக்கத்திலும் போரிடுகிறார். அரச சேனைகள், கிரேக்க மோகம் பிடித்த நகர்கள், சுற்றியிருந்த புற இனத்தவர் ஆகியவர்களோடு போராடுகிறார். அதன் விளைவாக வழிபாட்டுச் சுதந்தரம் பெறுகிறார். யூப்பாத்தோர் என்னும் அரசனின் உறவினனும் செயலனுமான லீசியா ஆலயத்தில் பலிகள் நடக்கும்படி செய்கிறார். பிறர் யூதர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது என்று கட்டளை இடுகிறார்.

சூழ்ச்சிக்காரர் மெனலாவு கொல்லப்படுகிறார். தெமேத்திரியுவின் ஆட்சியின் கீழ் ஆல்கிமு பெரிய குருவாக முயல்கிறார். நிக்கானோர் ஆலயத்துக்கு எதிராக இறைநிந்தனை செய்கிறான். யூதா அவனை வென்று கொல்கிறார். அவ்வெற்றியைக் கொண்டாட ஆண்டுதோறும் விழா நிறுவப்படுகிறது. இறுதியாக ஆசிரியர் விடை பெறுகிறார்.

**23. இலக்கியச் சிறப்பு:** விவிலியத்திலேயே இந்நூல் ஆசிரியர்தான் தான் பயன்படுத்தும் இலக்கிய வடிவைப்பற்றி தானே

வெளிப்படையாகக் கூறுகிறார் *(2 மக் 2:20-33)*. அவர் வேறு ஒரு வரலாற்று நூலைச் சுருக்கித் தருகிறார். வரலாறு எழுதுகிறவனுடைய கடமை நிகழ்ச்சி களைச் சேர்ப்பதும், ஒழுங்காய்ச் சொல் வதும், ஒவ்வொரு நிகழ்ச்சியையும் தீர ஆராய்வதும் ஆகும். வாக்கியத்தைச் சுருக்கிச் சொல்வதும் நீண்டபேச்சுக்களை நீக்குவதும் போன்ற செயல்களைச் சுருக்கி எழுதுபவர் செய்ய வேண்டும். வாசிக்க விருப்பம் உள்ளவர்களுக்கு மன நிறைவு உண்டாகும்படியும், கவனிப்பவர்களின் மனதில் எளிதாய்ப் பதியும்படியும், வாசிப் போர் அனைவருக்கும் பயன் உண்டாகும் படியும், ஆசிரியர் சன ரஞ்சகமான நடையைப் பயன்படுத்துகிறார்.

இந்நூல் நிகழ்ச்சியுரை முறையிலன்றி, சொற்பொழிவு முறையில் அமைக்கப்பட்டி ருக்கிறது. நூலைச் சொற்பொழிவுகளின் தொகுப்பாகக் கருதலாம். இச்சொற்பொழி வுகள் உள்ளத்தை உருக்கவும், செயல்படத் தூண்டவும் பயன்படுத்தப்படுகின்றன. ஒவ் வொரு சொற்பொழிவும் தனக்குரிய முறை யில் எல்லாம் வல்ல இறைவனின் மகி மையைப் பறைசாற்றுகின்றது. அவர் ஆல யத்தில் தம்மை வெளிப்படுத்துகிறார். எருச லேமில் தம் உறைவிடத்தைக் கொண்டுள்ள இறைவனின் மகிமைக்காக எல்லாம் செயல்படுகின்றன *(2 மக் 3:38; 7:37; 10:7; 13:23; 15:34)*.

இந்நூலின் ஆசிரியர் ஒரு சட்ட வல்லுநரைப் போல் வாதாடுவதைப் பார்க் கிறோம். நிகழ்ச்சிகளைக் கலைப் பண்போடு தேர்ந்தெடுக்கிறார். உணர்ச்சி வசத்தோடு எடுத்துரைக்கிறார். எதிரொலிக் கும் அடைமொழிகள், கடுமையான சொற் கள் முதலியவற்றை அவரது சொற்பொழிவு களில் காணலாம்.

கிரேக்க இலக்கியத்தில் பரவலாக இருந்த ஓர் இலக்கிய வடிவை இந்த நூலில் காண்கிறோம். இஃது ''இரங்கல் வரலாறு'' (Pathetic History) என்று பொதுவாகக் கூறப் படும். இந்த இலக்கிய வடிவு வாசகர்களின் கற்பனையையும் உணர்ச்சிகளையும் தூண்ட எல்லாச் சாதனங்களையும் பயன்படுத்தும். இவற்றில் சில வண்ணமிக்க விவரிப்புகள், சொற்பொழிவான அறை கூவல்கள், வேண்டுகோள்கள், மிகைப்படுத்தப்பட்ட எண்ணிக்கைகள், விண்ணக வெளிப்பாடு களோடு கூடிய வியப்புக்குரிய அருஞ் செயல்கள், நிகழ்ச்சிகளை நேரடியாக விவ ரிப்பதற்குப் பதிலாக நாடகப்பாணியில் எடுத்துக்கூறுவது, எடுத்துக்காட்டாக உள்ள வற்றை எடுத்துக் கூறுவதும் ஆகும்.

நாளாகம ஆசிரியரைப் போன்று இவர் தன் கதைகளை மிகச் சிறந்த கருத்தியலாக்கு கிறார். காலவரையைத் தன் நோக்கிற்கு ஏற்றவாறு அமைத்துக் கொள்கிறார். பல வற்றை நீக்கிவிட்டு, சிலவற்றில் மட்டும் தமது கவனத்தை ஒருங்குவிக்கிறார். எடுத்துக் கூறப்படும் நிகழ்ச்சிகளின் பொருளையும் சமய நோக்கத்தையும் தெளிவு படுத்துவதில் கவனம் செலுத்துகிறார். தான் தேர்ந்தெடுப்பவைகளை மிகைப்படுத்திக் கூறுவார். 'வானகத்திலிருந்து வரும் உதவி' *(1 மக் 16:3)* இந்நூலில் விண்ணக அடை யாளங்களாக மாறுகிறது *(2 மக் 3:24-26; 10:29-30; 11:8; 12:22; 15:11-16)*. சிரேனான யாசோன் பின்பற்றும் 'இரங்கல் வரலாறாகிய' கிரேக்க இலக்கிய வடிவில் காணப்படு பவைகளோடு இத்தகைய விண்ணக அடை யாளங்கள் ஒத்துப்போகின்றன. இந்நூலின் யூத ஆசிரியர் வானகத் தூதர்கள் வழியாக உலகை ஆளும் இறை அருள்பாலிப்பில் தான் கொண்ட விசுவாசத்திற்கு ஒத்தவாறு இவற்றிற்கு உருவமாற்றம் அளிக்கிறார். இறையூக்கம் பெற்ற ஆசிரியர் இக்கதை களை யாசோனின் நூலிலிருந்து எடுத்துப் பயன்படுத்துகிறார்.

**24. வரலாற்று மதிப்பீடு:** மேற்கூறப்பட்ட இலக்கியப் பண்புகளைக் கொண்டிருந் தாலும், இந்நூல் ஒரு வரலாற்று நூலாகும். அதில் காணப்படும் நிகழ்ச்சிகள் நடந்த காலத்துக்கு அண்மையிலேயே எழுதப் பட்டதாகும். இந்நூலை முதல் மக்கபேய ரோடு ஒப்பிட்டால் இது தெளிவாகும். 2 மக் 3:4 இல் விவரிக்கப்படும் நிகழ்ச்சி

களுக்கு இப்பகுதியைத் தவிர வேறு மூல மேயில்லை. பெரிய குருபதவிக்கு 3-ஆம் ஓனியா, யாசோன், தெய்வ பக்தியற்ற மெனலாவு ஆகியோரிடையே போராட்டம் பற்றியும், 4-ஆம் அந்தியோக்கு அரியணை ஏறுமுன் நடந்த நிகழ்ச்சிகள் பற்றியும் இந்நூலிலிருந்துதான் அறிகிறோம். 2 மக் *8:15*-இல் இந்நூல் 1 மக்கபேயருக்கு இணை யாகவுள்ளது. 1 மக்கபேயரில் காணப்படாத நிகழ்ச்சிகள் சிலவற்றை மட்டுமே இந்நூல் கொண்டுள்ளது. முதலாம் மக்கபேயர் *4:26-7:50*-இல் லீசியாவின் மேல் வெற்றி, ஆலயம் திருநிலைப்படுத்தப்படுதல், அய லாரோடுபோர், அந்தியோக்குவின் மரணம் என்ற வரிசையைக் கொடுக்கிறது. இது தவறானது என்று ஏற்கெனவே சுட்டியுள் ளோம். 2-ஆம் மக்கபேயர் *9:12*-இல் அந்தியோக்குவின் மரணம், ஆலயம் திரு நிலைப்படுத்தப்படுதல், லீசியாவின் மேல் வெற்றி, அயலாரோடு போர் என்ற வரிசை யைக் கொடுக்கிறது. 2-ஆம் மக்கபேயர், செலூக்கிய அரசர் பட்டியலோடு ஒத்துப் போகிறது. இதன்படி 4-ஆம் அந்தியோக்கு *164*-இல் இறந்தான். லீசியாவின் மேல் வெற்றி பற்றி இந்நூல் தவறுகிறது. சில இடங்களில் சமயச் சார்பற்ற வரலாறு 2-ஆம் மக்கபேயருக்குச் சிறு விவரங்களில் கூட ஆதரவு அளிக்கிறது. யோசிப்பசு இந்நூலை அறிந்திருந்ததாகத் தெரிய வில்லை. எனவே இந்நூலை அவர் பயன் படுத்தவில்லை எனலாம். இந்நூலில் காணப்படும் மடல்களும் ஆணைகளும் கற்பனைப் படைப்புகள் ஆகும் என்று கருதப்பட்டது. ஆனால், இவற்றின் உண்மைத் தன்மையை ஐயுற இடமில்லை என அறிஞர் உணரத் தொடங்கியுள்ளனர். இவை முக்கியத்துவம் வாய்ந்தவையும் ஆகும். இவை இந்நூல் வரலாற்றுத் தகுதி யுடையது என்று காட்டும். இந்நூலில் காணப்படும் மிகைப்படுத்தப்படும் எண் ணிக்கைகள், அசாதாரண நிகழ்ச்சிகள், நிகழ்ச்சிகளை மாற்றி வரிசைப்படுத்துதல் ஆகியவை ஆசிரியரது இறையியல் நோக்க ஒளியில் மதிப்பீடு செய்யப்பட வேண்டும்.

***25. சமய போதகம்:*** இந்நூலின் சமய போதகம் முதலாம் மக்கபேயருடையதை விட மேம்பாடு உடையதாகவும், வளமிகுந் ததாகவும் உள்ளது. கிரேக்கக் கலாச்சாரப் புகுத்துதலுக்கும் யூதத்துவத்திற்கும் (யூத நெறி, யூத மறை) இடையே நடக்கும் உயிர்ப் போராட்டமாக வரலாற்றை இந் நூல் போதிக்கிறது (*4:13*). (யூத மதத்தையும் கலாச்சாரத்தையும் குறிக்கும் யூதத்துவம், யூத நெறி அல்லது யூத மறை என்ற சொல் முதன் முதலில் இந்நூலில் காணப்படுகிறது *8:1; 14:38*). இரண்டும் முற்றிலும் எதிராக நிற்கின்றன. விட்டுக் கொடுத்தல் பேரழி வில் முடியும் (*4:7-17*). புறவின அரசர்களின் தயவில் பெரிய குரு பதவியைப் பெறு தலுக்கு இடமேயில்லை (*11:2-3*). சிதறிக் கிடந்த யூத சமூகத்தைச் சேர்ந்தவராதலால் ஆசிரியர் சமயப்பற்றையும் நாட்டுப்பற்றை யும் ஒன்றாகக் கருதவில்லை. ஒருவேளை அதே காரணத்திற்காகப் போரிட்டு நாட்டைக் காத்தவர்களுக்கு முதன்மை அளிக்காமல் மறைக்குச் சாட்சியாக மரித்த வர்களுக்கு மேன்மை அளித்து முதலிடம் அளிக்கிறார்.

இச்சமயத்தின் விட்டுக்கொடுக்காத தன் மையும் அதன் பரிசுத்தத்திலிருந்து வரு கிறது. இறைவனது பெயர் அடிக்கடி கூறப் படுகிறது. செமித்தியப் பாணியில் யோனத் தான் இறைவனது பண்புகளை விவரித்து, அவரது மகிமையை *1:24-25*-இல் எடுத்துக் கூறுகிறார். இறைவன் ஒருவரே அரசர்; அன்பானவர்; அருளிரக்கம் உடையவர்; நேர்மையானவர்; எல்லாம் வல்லவர். அவர் ஒருவரே நித்தியமானவர். அவர் எவ்வளவு ஆற்றல் மிக்கவர் என்றால் ஏற்கெனவே இருக்கும் பொருட்களிலிருந்து அவர் தம் படைப்புக்களைப் படைக்க வில்லை (*7:28*). ஒன்றுமின்மையிலிருந்து அவற்றை உண்டாக்குகிறார். தம் மக்களைத் தேர்ந்தெடுத்து அவர்களைப் பாதுகாப்பதில் அவரது அருள்பாலிப்பு தெரிகிறது (*1:25*). அவர் தமது ஆலயத்தில் உறைகிறார் (*14:35-36*). உலகிலேயே இந்த ஆலயம்தான் மிகப்பெரியது; மிகப்பரிசுத்தமானது; மிகப்

பெயர் பெற்றது *(2:19-22; 5:15; 14:31; 15:41)*. ஆசிரியர் ஆலயத்தின் புனிதத்தை வலியுறுத்திக் கூறுகிறார். இந்நூலின் பெரும் பகுதி ஆலயம் தீட்டுப்பட்டு, சுத்தி செய்யப்பட்டு, திருநிலைப்படுத்தப் படுதலைச் சுற்றி அமைகிறது. ஆலயத்தைத் திருநிலைப்படுத்துதல், நிக்கானோர் நாள் *(1 மக் 7:48-49;2 மக் 15:36)* என்ற அண்மையில் நிறுவப்பட்ட இரு விழாக் களை விளக்கும் நூலாக அமைந்துள்ளது இந்நூல் என்றால் ஓர் அளவுக்கு இது பொருந்தும். யூதத்துவம் தொடர்ந்து இருத் தல் இந்த இரு நிகழ்ச்சிகளைப் பொருத்த தாகும். மக்கபேயர் புரட்சியில் போற்றப் படக்கூடியவற்றில் இவை இரண்டும்தான் சிறப்பானவை என்று ஆசிரியர் கருதுவ தாகத் தெரிகிறது.

யூதர்களுக்கு இறைவனின் சட்டம் இருக் கிறது. அதை அனுசரித்தால், சிறப்பாக ஓய்வு நாள் சட்டத்தை அவர்கள் அனுசரித் தால் *(8:27; 15:1-4)*, இறைவன் அவர்கள் மீது இரக்கம் காட்டுவார். இறைப்பற்றற்ற வர்களுக்கு அவர் நேர்மை மிக்க நீதிபதி யாக இருப்பார் *(12:6)*. அவர்களிடையே பேரழிவு ஏற்படும்போது அவர்களே அதற்குப் பொறுப்பு *(4:10-17; 6:12-16; 7:18; 10:4; 12:40-41)*. பரிகாரம் செய்தால், தபசு செய்தால் இறைவனோடு கொண்ட நட்பை யும் ஒற்றுமையையும் திரும்ப அடையலாம் *(7:32-33.37-38; 8:5; 12:42-45)*. நேர்மையான சுயபாதுகாப்புக்குக் கூட சட்டத்தை மீறக் கூடாது *(5:25; 6:23.28; 15:3)*. எல்லாம் தூய்மையான இறைவன் பரிசுத்த நாட்டின் மீதோ, தம் பரிசுத்த மக்கள் மீதோ கறைபடிய அனுமதியார் *(14:36)*. யூதாவின் வாளும், இறைவனிடமிருந்து வருவதால் பரிசுத்தமானதாகும் *(15:16)*. ஆகவே, போரில் விண்ணக சேனைகளும், பங் கெடுத்தால் அதில் வியப்பில்லை.

இறைவன் தமது நீதிமான்களை உதவி யின்றி விட்டு விடுவதில்லை. அவர்களுக்கு எப்போதும் பாதுகாப்பு அளிப்பார் *(7:6; 8:36; 12:11)*. அவருடைய உதவியைச் செபத்திலும், பலியிலும் நாடலாம் *(3:22)*. தம் மக்களுக்காகப் போரிட விண்ணக சேனைகளை அனுப்புகிறார் *(3:23-30; 10:29-31; 11:6-10)*. நேர்மையாகப் போரிட் டும் *(12:45)*, மறைக்குச் சாட்சியாகவும் *(அதி 6-7)* மரிக்கிறவர்கள் எல்லாரும் நிறைவாழ்வுக்கு *(7:11; 14:46)* உயிர்த்தெழுப் பப்படுவர் *(7:9.28; 14:46)*. இதற்கு மாறாக இறைப்பற்றற்றவர்கள் தண்டிக்கப்பட்டு வேதனை அடைவர் *(5:9-10; 6:13-14.17.19.35; 9:18; 13:7-8)*. மன்றாட்டுச் செபங்கள் விண்ணகத்திற்கும் புவிக்கு மிடையேயுள்ள உறவை அதிகப்படுத்துகின் றன. ஏனெனில், வானதூதர்கள் மட்டு மல்லர், கடந்த காலப் புனிதர்களும், இஸ்ரா யேலுக்காக இறைவனை மன்றாடுகின்றனர் *(15:12-16)*. உலகிலுள்ளோர் தங்கள் செபத் தாலும் பலிகளாலும் மரித்தவர்களுக்கு உதவி செய்ய முடியும் *(12:44-45)*.

இந்நூலில் காணப்படும் போராட்டங் களின் பயணம் உண்மையிலேயே இவ் வுலகைக் கடந்ததாகும். தானியேல் குறிக் கும் புனிதர்களின் அரசின் வருகைக்காக யூதா போராடுகிறார் என்று கூடச் சொல்ல லாம். உயிர்ப்பில் கொண்டிருந்த விசுவாசம் வாக்களிக்கப்பட்ட நன்மைகளைத் துய்த் தலை மற்றொரு உலகிற்கு மாற்றுகிறது *(7:14-16)*. இந்நல்விளைவிற்காகக் காத்திருக் கும்போது அரசின் வருகைக்காக எல்லாப் புனிதர்களும் ஒரே சீராய் உழைக்க வேண் டும். செபங்கள், சடங்குப்பலிகள், தங்கள் உயிரையே அளிக்கும் சுயபலிகள் ஆகியவற் றின் பலன்கள் இவ்வுலகிற்கு மட்டும் உரியதல்ல *(7:32-38; 12:39-45; 15:11-16)*. இத்தகைய யூதத்துவம் உலக மதிப்பீடு களைக் கடந்து செல்வதால் அரசியல் இலக்கியங்களில் கவனத்தைத் திருப்பி ஏமாறக்கூடாது.

இரண்டு மக்கபேயர் ஆகமங்களையும் பிரித்துக்காட்டும் ஒரு கூறு உண்டென்றால், அது மறைக்காக உயிரைத் தியாகம் செய்ப வர்களைப் பற்றி இரு நூல்களும் காட்டும் கருத்து வேறுபாடு ஆகும். முதல் மக்க பேயரின்படி இஸ்ராயேலின்மேல் வந்த மறைசாட்சிகளின் மரணம் இறைக் கோபத்

தின் விளைவாகும். போர்க் கருவிகள் தாங்கிய எதிர்ப்புதான் இக்கோபத்தை நீக்க வல்லது. அதை யூதா செயல்படுத்துவார் *(1 மக் 3:8)*. 2-ஆம் மக்கபேயரின்படி இப்பாடுகள் தண்டனைதான் என்றாலும் அதை விரும்பி ஏற்றல் ஒரு பரிகாரமாக அமைந்து இறைவனது கோபத்தை மாற்று கிறது. யூதாவின் பலி ஏற்கப்பட்டதால்தான் அவர் வெற்றி பெறுகிறார் *(2 மக் 7:36; 8:5)*.

ஆசிரியரின் இத்தகைய சமயக்கருத்துக் கள் அவரது நூலின் அமைப்பையும் பாதித் துள்ளன. அதன் விளைவாக சில பகுதி களில் வரலாற்றுத் தன்மையை விட கற் பனைத் தன்மையே மிகுந்து காணப்படு கிறது. எலயாசர், ஏழு சகோதரர் போன்ற வரின் பாடுகள் (அதி 6-7) ஐயமுற மிகைப்படுத்திக் கூறப்படுகின்றன. இந்த மறை சாட்சிகளின் அறவுரை அவர்களின் விசுவாச அறிக்கையாக அமைகிறது. வர லாறு பற்றிய ஆசிரியரது கருத்துபடி, வரலாறு மனிதர்களுடைய செயலைவிட இறைவனது செயலாகும். இதில் முதலாம் மக்கபேயரிலிருந்து இந்நூல் சிறப்பான விதத்தில் வேறுபடுகிறது. முதலாம் மக்க பேயரில் அருஞ்செயல்களைக் காண வில்லை. ஆனால், இந்நூலின் பல இடங் களில் அவை காணப்படுகின்றன. இவ் வருஞ் செயல்கள் பல இடுக்கண்களில் யூதர்களுக்கு உதவியாய் அமைகின்றன *(2 மக் 3:24-30; 10:29-30; 11:8; 15:12-16)*. போர்களின் விளைவுகள் போர்கருவிகளால் உறுதி செய்யப்படவில்லை; மாறாக, செபத் தால் உறுதி செய்யப்படுகின்றன. செபத் தால் எதிரி பலமற்றவனாக்கப்படுகிறான். இறைவனது அருள்பாலிப்பைப் பற்றியும் ஆசிரியர் கண்டிப்பான கருத்தைக் கொண் டுள்ளார்.

சமய போதகத்தில் இவ்வாசிரியர் பரிசே யர்களைச் சேர்ந்தவராகத் தெரிகிறது. இக் காலத்திய யூதத்துவத்தின் விசுவாசத்தை இந்நூல் எடுத்துக்கூறுகிறது. அதற்கு வர லாற்றை ஒரு சாதனமாகப் பயன்படுத்து கிறது. ஆசிரியர் தனது நோக்கத்திற்காக வரலாற்றை முழுச்சுதந்தரத்துடன் பயன் படுத்துகிறார்.

**26. இரு மக்கபேயர்களிடையே ஒப்பி யல்:** கீழே கொடுக்கப்படும் பட்டியல் இரு ஆகமங்களுக்கிடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக்காட்டும். அஃ தோடு காலவரையறையில் 2-ஆம் மக்க பேயர் எடுத்துக்கொண்ட சுதந்தரத்தைக் காட்டும். காலக்குறிப்பு சமயச் சார்பற்ற மூலங்களிலிருந்து எடுக்கப் பட்டது. அடைப்புக் குறிகளுக்குள் தரப்படும் நிகழ்ச்சிகளின் காலத்தைக் கணிக்க முடி யாது. அவை வரிசைக் கிரமத்திற்குப் புறம்பானவை.

| **நிகழ்ச்சிகள்** | *1* **மக்கபேயர்** | *2* **மக்கபேயர்** |
|---|---|---|
| 4-ஆம் அந்தியோக்கு அரியணை ஏறுதல் (செப்டம்பர் 175). எருசலேமில் கிரேக்கம். | *1:10-15* | *4:* |
| ஆலயத்தைக் கொள்ளையிடுதல் *(169)*. | *1:16-28* | *5:1-20* |
| ஆளுநர்களின் தீச் செயல்கள். | *1:29-32* | *5:21-26* |
| கிரேக்கத்தின் பலமிக்க உட்கோட்டை. | *1:33-40* | |
| கிரேக்கம் புகுத்தப் படுதல். | *1:41-55* | *6:1-9* |
| பீடம் பாழ்படுத்தப் படுதல். | *1:54-55* | |
| விசுவாசிகள் கொல்லப் படுதல். | *1:56-63* | *6:10-11* |
| இறைக்கோபம். | *1:64* | *6:12-17* |
| எலயாசர், ஏழு சகோத ர்கள் மறைசாட்சி மரணம். | | *6:18-7:42* |
| மத்தத்தியாவும் அவரது புதல்வர்களும் எதிர்க்கிறார்கள். | *2:1-28* | *5:27* |

| | | |
|---|---|---|
| ஓய்வுநாளை அனுசரித்தவர்கள் கொல்லப்படுதல். | *2:29-38* | *5:25; 6:1* |
| எதிர்ப்பு உருவெடுக்கிறது. | *2:39-48* | |
| மத்தத்தியாவின் மரணமும் அவரது இறுதி விருப்பமும். | *2:49-70* | |
| யூதா தனது போராட்டத்தைத் தொடங்குகிறார். | *3:1-26* | *8:1-7* |
| 4-ஆம் அந்தியோக்குவுக்குப் பதிலாக லீசியா ஆட்சி செய்கிறான். | *3:27-37* | *10:10-13* |
| யூதா நிக்கானோரையும் கோரிக்கியாவையும் எம்மாவுவில் தோற்கடிக்கிறார். | *3:38-4:25* | *8:8-29. 34-36* |
| (மற்றப் போர்கள்) | | *8:30-33* |
| லீசியாவின் முதல் படையெடுப்பு. | *4:26-35* | *11:1-12* |
| உடன்படிக்கையும் சமரசமும். | | *11:13-21. 27-38* |
| ஆலயத்தைச் சுத்தி செய்தலும் திருநிலைப்படுத்துதலும். | *4:36-61* | *10:1-8* |
| அயலாரோடு போராட்டம். | *5:1-67* | *10:14-23; 12:1-45* |
| (கசாராவில் திமொத்தேயு கொல்லப்படுதல்). | | *10:24-32* |
| 4-ஆம் அந்தியோக்கு மரித்தல். (திசம்பர் 164) | *6:1-16* | *9;1.13-17* |
| யூப்பாத்தோரின் அமைதிச்சட்டம். | | *11-22-26* |
| லீசியா அரசனுக்குப் பதிலாக ஆளுகிறான். | *6:17* | *10:9-11* |
| உட்கோட்டைக்கு எதிராக யூதா போராடுதல். | *6:18-27* | |
| லீசியாவின் 2-ஆம் படையெடுப்பு. | *6:28-54* | *13:1-22* |
| அமைதி ஏற்படுகிறது; லீசியா ஓய்வு எடுக்கிறான். | *6:55-63* | *13:23-26* |
| தெமேத்திரியு, அரியணை ஏறுகிறான் (நவம்பர் 162) | *7:1-4* | *14: 1-2* |
| ஆல்கிமு, பாக்கிது ஆகியோரின் சூழ்ச்சிகள். | *7:5-25* | *14:3-4* |
| ஆல்கிமு, நிக்கானோரின் புதுத்தாக்குதல். | *7:26-32* | *14:5-30* |
| நிக்கானோர் ஆலயத்துக்கு எதிராகச் சிந்தனை செய்கிறான். | *7:33-38* | *14:31-36* |
| (இராசியின் வீரச் செயல்கள்) | | *14:37-40* |
| நிக்கானோரின் நாள் | *7:39:49* | *15* |

இரண்டு நூல்களிலும் லீசியாவின் முதற் படையெடுப்புக் கடிதங்கள், 4-ஆம் அந்தியோக்குவின் மரணம் ஆகியவைகளின் வரிசை ஒரு பிரச்சனைக்குரியதாகும். இதை வேறுபட்ட காலவறைக் கணிப்புகளைக் கொண்டு விடுவிக்க அறிஞர் முயல்வர். இப்படிச் செலூக்கிய மரபினர் சில சமயங்களில் வசந்த காலத்திலிருந்தும், சில சமயம் இலையுதிர் காலத்திலிருந்தும் ஆண்டைக் கணித்தார்கள். முதலாம் மக்கபேயர் இலையுதிர் காலத்திலிருந்து ஆண்டைக் கணிப்பதாகவும் தெரிகிறது. 2-ஆம் மக்கபேயர் லீசியாவின் முதல் படையெடுப்பை யூப்பாத்தோரின் ஆட்சிக் காலத்தில் தருகிறது. இது தவறாகும். ஆகையால் லீசியாவின் முதல் படையெடுப்பு 4-ஆம் அந்தியோக்குவின் காலத்தில் வைக்கப்பட வேண்டும். ஆகவே, 2 மக் 11, 2 மக் 8-ஐ அடுத்துவர வேண்டும். 4-ஆம் அந்தியோக்குவின் மர

ணம் *1* மக்கபேயரில் வரும் வரிசை, அதாவது ஆலயம் திருநிலைப்படுத்தலுக் குப்பின் வருவது தவறாகும். ஆலயம் திருநிலைப்படுத்தலுக்கு முன் 4-ஆம் அந்தி யோக்குவின் மரணத்தை வைத்துச் சரியான வரிசையை 2-ஆம் மக்கபேயர் கொடுக் கிறது. இதன்படி நிகழ்ச்சிகளின் சரியான வரிசை:-எம்மாவு சண்டை *(165)*; லீசியா வின் முதல் படையெடுப்பு; 4-ஆம் அந்தி யோக்குவின் இறப்பு; 5-ஆம் அந்தியோக்கு யூப்பாத்தோர் அரியணை ஏறுதல் *(164)*; ஆலயம் மீட்கப்பட்டு திருநிலைப்படுத்தப் படுதல் *(164)*; யூதா அயலாரோடு போராடு தல் *(163)*.

இரு நூல்களுக்குமிடையே உள்ள சமயக் கருத்துக்களின் ஒற்றுமை வேற்றுமைகளை ஏற்கெனவே சுட்டியுள்ளோம்.

***27. மக்கபேயரும் திருச்சபையும்:*** புதிய ஏற்பாட்டில் எபி *11:35* என்ற பகுதி 2 மக் 6-7-ஐச் சுட்டுவதாகத் தெரிகிறது. திருச்சபையின் தந்தையர்கள் கி.பி. மூன் றாம் நூற்றாண்டிலிருந்து இந்நூல்களிலி ருந்து எடுத்துக்காட்டு கொடுக்கின்றனர். இலத்தீன் வழிபாட்டு முறை கொண்டாடும் ஒரே பழைய ஏற்பாட்டுப் புனிதர்கள் மறை சாட்சிகளான ஏழு சகோதரர்கள் ஆவர் (2 மக் 7). இப்பக்தி 4-ஆம் நூற்றாண்டில் அந்தியோக்கியாவில் தொடங்கியிருக்க வேண்டும். ஏனெனில், இவர்களைப் பற்றி புனித கிறிசோஸ்தம் யோவான் இரு அறவுரைகள் வழங்கியுள்ளார். மக்கபேயர் களின் குடும்பக் கல்லறை பாலஸ்தீனத் திலுள்ள மோதயினில் இருந்தாலும் *(1 மக் 9:19; 13:25)*, மறைசாட்சிகளான ஏழு மக்கபேயச் சகோதரர்களின் திருப்பண்டம் அந்தியோக்கியாவில் மரியாதை செய்யப் பட்டதாக பாரம்பரியம் உள்ளது. திருச்சபை யின் வழிபாட்டில் முதலாம் மக்கபேயரை விட 2-ஆம் மக்கபேயர் அதிகமாகப் பயன் படுத்தப்படுகிறது.

**மக்கபேயு** (MACCABEUS)

இது மத்தத்தியாவின் மகனான யூதாவின் பட்டப்பெயர். இவரும் இவருக்குப்பின் வந்தவரும் சீரியா அரசர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர். இப்பெயரின் பொருள் பற்றி மக்கபேயர் நூல்கள் I,II என்ற தலைப்பின் கீழ், பெயர் என்ற உப தலைப்பைக் காண்க.

**மக்கலோத்து** (MAKHELOTH - கூடி வருதல்)

மக்கலோத்து இஸ்ராயேலர்கள் பாலை வனத்தில் தங்கிச்சென்ற ஓரிடம். இஃது அராதாவுக்கும், தாகத்துக்கும் இடையில் இருந்தது (எண் *33:25-26*). எண் *33:22-23*-இல் குறிக்கப்படும் கெகேலாத்து வுக்கும் இதற்குமிடையே ஒற்றுமை காண் கின்றனர் அறிஞர் சிலர். இஃது இருந்த இடம் தெரியவில்லை.

**மக்கள்** (PEOPLE)

I. இஸ்ராயேலினுடைய வாழ்க்கையின் அனைத்துப் பண்புக்கூறுகளும் ஒன்றாக்கப் படுகின்ற இறைமக்கள் என்ற கருத்தானது பழைய ஏற்பாட்டில் மையமாக இருப்பது போன்று, புதிய ஏற்பாட்டிலும் இறைவ னுடைய புதிய மக்கள் மற்றும் கிறிஸ்து வின் உடலான திருச்சபை என்ற கருத்து மையக்கருத்தாக இருக்கிறது. இந்த இறை வாக்கு இறுதிக்கால இயலானது இவை யிரண்டிற்கும் இடையே ஒரு தொடர்பு நிலையாகச் செயல்படுகிறது. பழைய உடன்படிக்கையின் பணித்திட்டத்தினுள், ''காலத்தின் முடிவில்'' எதிர்பார்க்கப்படும் புதிய உடன்படிக்கையின் மக்களைப்பற்றி முன்னதாகவே அறிவித்து, காலத்திற்கு முன்னரே விவரிக்கிறது.

II. ***பழைய உடன்படிக்கையின் மக்கள்:*** குறிப்பிட்ட அளவிலான மனிதக் குழுக் களைக் குறிக்க இரண்டு அடிப்படைக் கூறுகளை எபிரேயச் சொற்கள் ('அம்' -'am, கோய் - Goy) வலியுறுத்தின. அவை இரத்த சமுதாயம் மற்றும் நிலையான சமூக அமைப்பு என்பன. ஆனால், படிப்படியாக அவை பழைய ஏற்பாட்டில் மொழியில் சிறப்புற்றவையாக உருவாகின. ஒருமை யில் அச்சொல்லானது ('am) இறைவ னுடைய மக்களாகிய இஸ்ராயேலை அடை

யாளப்படுத்தினாலும், பன்மையில் அச் சொல் (Goyim) அன்னிய நாடுகளுக்கும், புறவினத்தாருக்கும் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது (எண் 23:9). ஆயினும், இந்த உபயோகமானது சில விதிவிலக்குகளை அனுமதித்தது. எபிரேய மொழி வழக்கத்திற்கு இணையாக கிரேக்க விவிலியத்தில் ஒருமைச் சொல்லானது (laos) இறைவனுடைய மக்களையும், பன்மைச்சொல்லானது (ethne) புறவின நாடுகளையும் அடையாளங்காட்டின; ஆனால், மீண்டும் அங்கே விதிவிலக்குகள் உள்ளன. இந்த மொழி சார்ந்த உண்மையானது, இஸ்ராயேலின் இயல்பை வெளிப்படுத்த ஒரு சிறப்பான சொல் தேவை என்பதை மக்கள் உணர்ந்ததைக் காட்டுகிறது. அதனுடைய அழைப்பின் மறைபொருளின் காரணமாக இம்மக்கள் மற்றவரினின்று வேறுபட்டு இருந்தனர். அதனால் அதனுடைய தேசிய அனுபவமானது ஒரு சமயப்பொருளை பெற்றது, மற்றும் மீட்புத் திட்டத்தினுடைய ஓர் இன்றியமையாத் தன்மையானது தன்னையே அங்கு வெளிப்படுத்தத் தொடங்கிற்று.

**1. இறைமக்களின் அளவு கடந்த நிலை**

**அ. தேர்வு, அழைப்பு, உடன்படிக்கை:** மற்ற அனைத்து நாடுகளைப் போன்று இஸ்ராயேலும் மனித வரலாற்றைச் சேர்ந்தது. ஆனால், அதனுடைய தொடக்கங்களி னின்றே, வரலாற்று அமைப்பினைக் கடந்து செல்வதாக வெளிப்பாடு அதனைக் காட்டுகிறது. அஃது இருக்கின்றதெனில் அதற்குக் காரணம், இறைவன் அதனைத் தேர்ந்தெடுத்ததும் *(உப 7:7; எசா 41:8)*, அழைத்ததுமேயாகும் *(எசா 48:12)*. அதனுடைய மக்கள் தொகைக்காகவோ, வலிமைக்காகவோ, தகுதிகளுக்காகவோ இல்லாமல் *(உப 7:7;8:17; 9:7)*, அன்பினால் அதனை அழைத்தார் *(உப 7:8; ஓசே 11:1)*. இவ்வாறு அதனை மற்றவற்றினின்று வேறுபடுத்திய பின்னர், அவர் இஸ்ராயேலை மீட்டு யாத்திரையில் அதற்கு விடுதலை அளித்தார் *(உப 6:12; 7:8; 8:14;...; 9:26)*. சுதந்தரமான நாடு என்ற அளவில் அதனை அமைத்த பின்னர், ஒரு பொருளில் அதைப் படைத்து *(காண்க. எசா 48:15)*, தாயின் உதரத்தில் உள்ள சிசுவைப்போன்று *(44:2.24)*, அதனை உருவாக்கினார். முற்றிலும் இறைவனைச் சார்ந்த நிலை பற்றிய ஒரு நாட்டினுடைய உயிருள்ள உணர்விலிருந்து, தானும் ஒரு நாடு என்ற உணர்வை இஸ்ராயேல் பெற்றிருந்தது. அதன்பின் உடன்படிக்கை வந்தது. அதுமுதல் இந்த அடிப்படைச் செயலானது, இஸ்ராயேலுக்கு வரலாறு மற்றும் விசுவாசம் என்னும் இருவிதத் திட்டத்தில் அனைத்தும் தீர்மானிக்கப்படும் என்பதை வலியுறுத்தியது. பன்னிரண்டு கோத்திரங்களைப் பங்காளிகளாகக் கொண்ட ஒரு புனித உடன்பாடானது ஒரு பலியின் இரத்தத்தில் முத்திரையிடப்படுகிறது *(யாத் 24:8)*. இந்நிலையில் யாவே இஸ்ராயேலின் இறைவனாகவும், இஸ்ராயேல் யாவேயின் மக்களாகவும் உருவாகின்றனர் *(உப 29:12; லேவி 26:12; எரே 7:23; எசே 11:20)*. இம்முறையில் இறைவனுக்கும் ஒரு மனித சமூகத்திற்கும் இடையில் ஒரு தனிச்சிறப்பு மிக்க பிணைப்பு ஏற்படுத்தப்பட்டது. விருத்த சேதனத்தின் மூலமாக இந்தச் சமூகத்தில் சேர்கின்ற அனைவரும் இந்தப் பிணைப்பிலும் பங்கேற்பர் *(காண்க. ஆதி 17:10;..)*.

**ஆ) இறைமக்களின் பட்டங்களும் பணிகளும்:** இஸ்ராயேலானது யாவேக்கென அர்ப்பணிக்கப்பட்ட, அவருக்கென ஒதுக்கப்பட்ட புனித மக்கள் *(உப 7:6; 14:2)*; அவருக்கேயுரிய உடைமை *(யாத் 19:5; எரே 2:3)*, அவரது உரிமைச்சொத்து *(உப 9:26)*. அஃது அவருடைய மந்தை *(சங் 80:2; 94:7)*, அவரது திராட்சைக்கொடி *(எசா 5:1; சங் 80:9)*, அவரது மகன் *(யாத் 4:22; ஓசே 11:1)*, அவரது மணமகள் *(ஓசே 2:4; எரே 2:2; எசே 16:8)*. அது ''குருக்களின் அரசு'' *(யாத் 19:6)*. அதில் தனது பணிக்கென உறுதி மொழி எடுத்துக்கொண்ட மக்கள் மீது இறைவன் ஆட்சி புரிகிறார். உடன்படிக்கையில் அடங்கியுள்ள வழிபாட்டின் இறுதிநிலையானது அதே சமயத்தில், மற்ற நாடுகளைப் பொறுத்தமட்டில் இஸ்ராயேல் என்ன பணியை நிறைவேற்றுகிறது என்பதையும் காட்டுகிறது. மற்ற அனைத்தை

யும் கடந்த இறைவனின் சாட்சி என்ற அளவில் (எசா 44:8), இறைவனுக்கும் அனைத்து மனித சமூகத்திற்கும் இடையில் பிணைப்பினை மீண்டும் உருவாக்கக்கூடிய இடைப்பட்ட மக்களாக அஃது உள்ளது. உலகமனைத்தினுடைய போற்றுரையும் (எசா 45:14-15. 23-24) இறைவனை நோக்கி எழும்புகிறது, மற்றும் அனைத்து நாடுகளும் இறைவனுடைய ஆசியில் ஒரு பங்கினைக் கொண்டுள்ளன என்ற உணர்வில் இது செயல்படுகிறது (ஆதி 12:3; எரே 4:2; சீரா 44:21).

**2. தேசிய அனுபவத்தின் சமயச்சிறப்பு:** உடன்படிக்கையின் பலனாக இஸ்ராயேலானது மனித வரலாற்றின் மையத்தில் ஒரு முரண்பாட்டினை நிறைவேற்றுகிறது. இயல்பாகவே கடந்த நிலையுடைய, இறை மக்களாகிய ஒரு குறிப்பிட்ட சமய சமூகமானாலும், அதே நேரத்தில் இவ்வுலகைச் சேர்ந்த மெய்ம்மையாகவும் உள்ளது. கீழுலக மக்களின் வாழ்வை அமைக்கின்ற அனைத்துத் தற்காலிகக் கூறுகளையும் அது தன்னுள் கொண்டுள்ளது. இதன் விளைவாக, மற்ற அனைவரும் தங்களை அறிந்து கொள்ளக்கூடிய அதனுடைய தேசிய அனுபவமானது, விசுவாசத்தின்மேல் ஒளிவீசக் கூடிய சமயப்பொருளை ஏற்க உள்ளது.

**அ) இனச் சமூகம்:** இஸ்ராயேலின் மக்களினமானது, அதனுடைய தொடக்கத்தின் ஒற்றுமையினின்று பெறப்பட்டதாக, தனக்கேயுரிய உள்ளார்ந்த ஒற்றுமையினைக் கருதுகிறது. எபிரேய மூதாதையரே இனத்தின் தந்தையாவார். யாத்திரைக்கு முற்பட்ட வரலாற்று நினைவுகள், ஆபிரகாம் முதல் ஈசாக்கு வழியாக, பன்னிரு கோத்திரங்களுக்குத் தங்களுடைய பெயர்களை அளித்தவர்களின் தந்தையாகிய யாக்கோபு - இஸ்ராயேல் வரை நடத்திச் செல்கின்ற தலைமுறையின் வரைமுறைக்குள் தெளிவாகக் காட்டப்படுகின்றன. காலப்போக்கில் இந்த இனமானது எகிப்திலிருந்து வெளியேறியது முதல் (யாத் 12:38), பாலை நிலம் வரை (எண் 11:4; நீதி 4:11), கானானின் வெற்றிக்குப் பின்னர் ஆகிய காலங்களில் (யோசு 9; நீதி 3:1...) எண்ணற்ற முரண்பட்ட கூறுகளை ஏற்றுக் கொண்டது. ஆனால் பிற்காலங்களில், யூத இரத்தத்தினுடைய தூய்மையின் மீதான அக்கறையினைக் காண்கிறோம். தங்களுடைய இரத்தத்தில் சிலை வழிபாட்டினைக் கொண்டுள்ள புறவின மக்களுக்கு எதிராக ''புனித இனத்தை''க் காப்பதற்கென (எஸ் 9:2) அன்னிய திருமணங்களை அவர்கள் தடை செய்தனர். காலேபிய குலத்தவர் போன்ற சில குறிப்பிட்ட அன்னியரை, அவர்கள் இஸ்ராயேலுக்குள் ஏற்றுக்கொள்வதற்கு வெகுமுன்னரே, மூதாதையரின் தலைமுறைப்பட்டியலில் எண்ணிக்கையிடுவதன் மூலம் அவர்கள் மாதிரிப்படுத்தினர் (1 நாள் 2:18; காண்க. எண் 32:12; ஆதி 15:19). இஸ்ரோயேலினுடைய தேர்வானது அதனுடைய தந்தையரின் வழியாக வருவதே இதற்குக் காரணமாகும். தங்களுடைய தலைமுறைப்பட்டியலின் ஒவ்வொரு படியிலும், அன்னிய மக்கள் மீட்புத்திட்டத்தினின்று தங்களுடைய மூதாதையர் மரபில் பிரிக்கப்படுவதை எவரும் காண்பதில்லையா (ஆதி 19:30; 21:8...; 25:1...; 36)? இறை உடன்படிக்கையிலும் வாக்குறுதிகளிலும் பங்கு பெறுவதற்கு இறைவனுடைய நண்பராகிய ஆபிரகாமின் இனத்தவராக இருக்க வேண்டியது அவசியமாகும் (எசா 41:8; 51:2; காண்க. 63:16; எரே 33:26; சங் 105:6; 2 நாள் 20:7). ஆபிரகாம் ''எண்ணற்ற மக்களின் தந்தையாக'' (ஆதி 17:5-6) உருவாக வேண்டியதன் காரணமாக, சிந்தனையளவில் ஒரு குறிப்பிட்ட உலகளாவிய தன்மை நிலவுகிறது. ஆனால் செயலளவிலோ, யூத இனத்திற்கு மாற்றப்பட்ட அன்னியர், ''ஏனையோர்'' (எசா 56:8) முதலியோர், உண்மையில் சமயச் சலுகைகளில் பங்கேற்பதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட இனத்திற்குள் ஒன்று சேர்கின்றனர். இறைவனுடைய மக்களாவதற்கு, இன்னும் பொதுவான விசுவாசம் போதியதாகவில்லை. செயல்முறையான அடிப்படையாக, பிறமக்களிடையேயிருந்து இறைவன் தேர்ந்துகொண்ட இனத்தை அது கொண்டுள்ளது.

**ஆ) நிறுவனங்களைக் கொண்ட சமூகம்:** மூதாதையரின் இனமானது ஒரு வடிவமற்ற தொகுப்பாக இல்லாமல், ஒருங்கமைக்கப் பட்ட சமூகமாக உள்ளது. அதனுடைய அடிப்படை அங்கங்கள் இரத்தத்தின் சமுதாயம் காணக்கூடிய குடும்பமும் குலமும் ஆகும். இவை பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து இருந்தன. சிதறிப்போதலையும் கடந்து நிலைத்து நின்றன (எஸ் 2; நெகே 7). ஆனால் பொருளாதார விவகாரங்களில் ஆட்டு மந்தை, நிலம், பயிரிடும் உரிமை ஆகியவற்றின் உரிமம் மீது இவை ஆதிக்கம் செலுத்தின. இரத்தப்பழி (எண் 35:19), உடன் பிறந்தார் மணக்கும் உரிமை (உப 25:5...), மீட்கும் உரிமை (ரூத் 4:3) முதலிய வழக்கங்களை இவை கட்டுப்படுத்தின. இவைகளின் மூலமாகவே ஒவ்வொரு தனி நபரும் பாதுகாத்து அதேசமயம் பொறுப் புடையவனாக்குகின்ற சமூக உரிமையினை உணர்கின்றனர். அடிப்படை அரசியல் ஒன் றிப்புகளான கோத்திரங்களாகக் குலங்கள் தாமாகவே இணைகின்றன; ஒன்றிக்கின் றன. ஒழுங்கமைக்கப்பட்ட நாடானது ஏற் கின்ற முதல் வடிவமானது, உடன்படிக்கை யின் உடன்பாட்டினால் ஒன்றாகப் பிணைக் கப்பட்ட பன்னிரு கோத்திரங்களின் கூட் டமைப்பாகும் (யாத் 24:4; யோசு 24). இஸ்ராயேல் நாடானது அதிக நிலையான வடிவத்தை ஏற்கும்போது, கூட்டமைப்பை விலக்கி விடாமல், மையப்படுத்தப்பட்ட முடியாட்சியானது அதன்மேல் சுமத்தப் படும் (2 சாமு 2:4; 5:3). அதனால் முடியாட்சியின் வீழ்ச்சிக்குப்பின், நாடு சிதறுண்டு போன நிலையில் கோத்திரங் களின் கூட்டமைப்பு யூத மீட்சியாளர் களுக்கு உகந்த மாதிரியாக இருந்தது (எஸ் 48). அமைப்புகளின் உருவாக்கமானது பல தரப்பட்ட வரலாற்று நிலைகளால் தூண்டப் பட்டாலும், அது எல்லாவற்றிற்கும் மேலாக, இந்த நிலைகளின் தாக்கத்தைக் கடந்து உள்ள ஒரு கோட்பாட்டைச் சார்ந் திருக்கும். அது சட்டமே ஆகும். சட்டத்தின் முக்கிய அடிப்படைகளை மோசே பெற்ற ளித்தார். அது, காலப்போக்கில் தனது வளர்ச்சியில், வழிகளிலும் பழக்கங்களிலும் அதே போக்கு நிலைத்திருப்பதை உறுதிப் படுத்துகிறது (காண்க. நெகே 8). இதன் வழியாக இஸ்ராயேலின் அனைத்து அமைப்புகளும், இறைவனுடைய திட்டத் தின் செயல்பாட்டில் ஒரு பொருளையும், மதிப்பையும் ஏற்கின்றன. உடன்படிக்கை மக்களுக்கான நற்பேறான வழித்துணை இதுவே (கலா 3:24).

**இ) ஊழ் கொண்ட சமூகம்:** நாட்டை உருவாக்குகின்ற அமைப்புகளுக்கு ஒத்த அளவில், ஊழ்கொண்ட சமூகமானது தனது உறுப்பினர்களுக்கு ஒரு பொது ஆன்மா வினை அளிக்கின்றது. நாடோடி வாழ்வு, அடக்குமுறை மற்றும் விடுதலை, பாலை வனத்தின் அலைச்சல், தாய்நாட்டை அடை வதற்கான போர்கள், அதிக விலை கொடுத்துப் பெற்ற தேசீய ஒற்றுமை மற்றும் நாட்டை இரண்டாகப் பிரித்து அழிவை முன் குறித்துக் காட்டும் அரசியல் பிளவு, பேரழிவு மற்றும் சிதறிப்போதல், ஆகியவற்றின் அனுபவமாக இந்த ஆன்மா உள்ளது. ஆனால், இந்த அனுபவங்கள் ஒரு சமய உட்பொருளையும் கொண்டுள்ளன. இவை தமக்கேயுரிய வழியில் இறைவ னுடைய வழிகளின் செயல்முறையான அனுபவமாக உள்ளன. அவற்றினுடைய ஒளிரும் தோற்றமானது இறைவனுடைய கொடைகளை அவரது மக்களுக்குத் தெளி வாகக்காட்டி, அவரது இரகசிய எண்ணங் களை முன்னோக்குமாறு செய்கிறது. அவற் றினுடைய துயரமிகுந்த பகுதியானது எடுத்துக்காட்டான தீர்ப்புகளில் வெளிப் படுத்தப்படும் இறைசினத்தை அவர்கள் உணரச்செய்கிறது. அதற்குப்பிறகு, வெளிப் பாடாக உருவாகிறது. அவர்கள் சமயம் சாராத அனுபவங்களிலிருந்து, அவர்கள் பிற்காலத்தில் பெற்ற அனுபவங்களை வடி வமைக்கின்ற சிந்தனையின் அடிப்படை முறைகளை இறைமக்கள் பெறுகின்றனர் (1 மக் 2:51..; 2 மக் 8:19). அது, தன்னுடைய வருங்காலத்தைத் தனக்கே காட்டவும், தனது நம்பிக்கைகளின் புறப்பொருளை வெளிப்படுத்தவும் வேண்டிய ஆய்வுக்குரிய செய்திகளின் வரையறையைத் தன் கடந்த காலத்திலேயே காண்கிறது (எசா 63:8...).

***ஈ) தாய் நாட்டில் வேரூன்றுதல்:*** மூலக் குடியிருப்பாகிய பாலைவனத்திலிருந்து இறைவனின் மக்கள் கானானுக்குள் நடத்திச்செல்லப்பட்டனர். அவர்களுடைய மூதாதையர் வாழ்ந்த இடமும், அவர்கள் தங்களுடைய கல்லறைகளைக் கொண்டுள்ள இடமும் இதுவே (ஆதி 23;25:9...). பிற்காலத்தில் உரிமைச்சொத்தாக இறைவனால் அளிக்கப்பட்ட (யாத் 23:27...; உப 9:1...; எரே 2:7; சங் 78:54-55). வாக்களிக்கப்பட்ட நாடு இதுவே (ஆதி 12:7; 13:15). இறைவனுடைய திட்டத்தை நிறைவேற்றிய மனிதத் துணிவு வினையால் வெல்லப்பட்ட நாடு இதுவே (யோசு 1:13.... 24:11..). ஆகவே, இஃது இனியும் ஒரு புறவின நாடான கானான் அன்று. இஃது இனி இஸ்ராயேலின் நாடு; தனது மக்களிடையே பிரசன்னமாகியுள்ள இறைவனே தனது உறைவிடத்தைக் கொண்டுள்ள புனித நாடாகும் (1அர 8:15). யாவேயின் உறைவிடமாகவும், அரசியல் தலைநகராகவும் உள்ள எருசலேமானது, ஒட்டுமொத்தமான தேசிய சமய ஒற்றுமையின் காணக்கூடிய அடையாளமாகும் (சங் 122). இவ்வாறு, நாட்டின் பேரழிவுக்குப்பின் வந்த சிதறிப்போதல், தனது நாட்டின் மீதான இறைவனுடைய மக்களின் நெருக்கத்தை வலுப்படுத்துகிறது. சைரசினுடைய கட்டளையின்போது தோன்றிய சீயோன் மறைபொருளானது (எஸ் 1:2) தொடரும் நூற்றாண்டுகளில் உயிர்ச்சித்திரமாக இருக்கும் (எஸ் 7). அன்னியர்களிடையே தங்கியிருந்த காலத்திலும், வேரோடு நீக்கப்பட்டதாக யூதர்கள் எப்போதுமே நினைக்கவில்லை. ஏனெனில், அவர்களுடைய மூதாதையரின் (நெகே 2:3), அவர்கள் நோக்கிச் செபிக்கக்கூடிய (தானி 6:11) தாய்நாட்டை அங்கே இன்னும் கொண்டிருந்தனர்.

***உ) மொழியின் சமூகம்:*** புனித நாட்டை வென்றதன் மூலம் இஸ்ராயேலானது ''கானான் மொழி''யிலிருந்து (எசா 19:18), தனக்கென ஒரு மொழியை உருவாக்கியது. மக்களின் மொழியானது ஒற்றுமையின் ஒரு கூறாகும். அது சிந்திப்பதில் ஒரு பொதுவான முறையை உறுதிப்படுத்துகிறது. அது கலாச்சாரம் மற்றும் உலகம் பற்றிய சிந்தனையை அறிவிக்கிறது. அஃது ஓர் உண்மையான ஆன்மீகத் தாய் நாடாகும். ஆனால், இஸ்ராயேலில் எபிரேயத்தில், இறைவெளிப்பாடே வெளிப்படுத்தப்படுகிறது. அது செமித்தியக் கலாச்சாரத்தினால் அமைக்கப்பெற்ற சிந்தனை வகைகளோடு தன்னைப் பிணைத்து எபிரேயத்தினுடைய வலிமையான, செயல்திறம் மிக்க பண்புகளிலிருந்து பலன் பெறுவதாக உள்ளது. ஒவ்வொரு நூற்றாண்டிலும் ஓர் உண்மையான தேசிய கலாச்சாரம் உருவெடுக்கிறது. அதில் வேறுபட்ட மனிதப் பங்கீடுகள் அடையாளம் காணப்படுகின்றன (கானானிய, அசீரிய-பாபிலோனிய, ஈரானிய மற்றும் கிரேக்கப் பங்கீடுகள்). ஆனால், வெளிப்பாடானது ஒரு வடிகட்டுதலை எப்போதுமே செயல்படுத்துகிறது. இறைவனுடைய திட்டத்துடன் இணைந்த முறையில் மனதினுடைய சொற்களுக்கும் கருத்துகளுக்கும் ஒரு புதிய உட்பொருளை அளித்து, தன்னியலாக்க முடியாத கூறுகளை விலக்குகிறது. இறுதியாக, யூதர்கள் அரமேயிக்கு அல்லது கிரேக்க மொழிகளைப் பேசும்போதும், எபிரேயமானது புனித மொழியாகவே உள்ளது. ஆயினும் தார்கூம்கள் மற்றும் எழுபது நூல் மொழிபெயர்ப்பு ஆகியவற்றின் மரபுகள் வெளிப்படுத்தப்பட்ட கோட்பாட்டினைப் பிழையின்றி அறிவிக்க அரமேயிக்கு மற்றும் கிரேக்க மொழிகளைப் பயன்படுத்துகின்றன. இவ்வாறு இஸ்ராயேலின் கலாச்சார வளர்ச்சியானது புனித மறைநூல்களில் நிலைப்படுத்தப்பட்ட இறைவனுடைய வார்த்தையால் ஆதிக்கம் செலுத்தப்படுகிறது. ஆனால், தன்னையே அறிவுபூர்வமானதாக ஆக்கிக்கொள்ள இறைவனுடைய வார்த்தையானது யூத அச்சுக்குள் பொழியப்பட்டு வடிவெடுக்கிறது.

***ஊ) வழிபாட்டு சமூகம்:*** பண்டைய மேற்காசியச் சமூகங்களில், வழிபாடானது நகர வாழ்வினுடைய இன்றியமையாத கூறாக இருந்தது. இஸ்ராயேலில் ஒரே இறை

வனை வழிபடுவதென்பது, உடன் படிக்கைக் காலத்திலிருந்தே நாட்டின் ஒப் பற்ற மேலான பணியாக இருந்தது. வழி பாட்டுச் செயலில் குழுமியிருந்தவர்களாக மக்களை விவரிப்பதற்கென எபிரேய மொழியானது கலைச் சொற்களைக் கொண் டுள்ளது. சமுதாயத்தையும் (ëdāh), புனிதக் கூட்டத்தையும் (migerä), சபையையும் (qāhāl) அது வடிவமைக்கிறது. இச்சொற்கள் கிரேக்க மொழியில் கூட்டம் (Synagōgō), சபை (ekklēsia) என்ற சொற்களை உருவாக் கின. ஐந்நூல் விவரிப்பது போன்று பாலை வன புனித சமூகத்தில் இதனுடைய புனித மாதிரியைத் தேடுவதில், யூத மதமானது, அச்சொல்லின் முழுப் பொருளில் ஒரு திருச்சபையாக இன்னமும் உருவாக வில்லை. ஏனெனில், அஃது ஒரு தனிப் பட்ட நாட்டினுடைய தற்காலிக அமைப்பு டன் கட்டுப்பட்டதாக உள்ளது. ஆனால், திருச்சபையினுடைய தனிக்கூறுகளை அஃது ஏற்கெனவே தன்னில் கோடிட்டுக் காட்டுகிறது. ஏனெனில், இஸ்ராயேல் மக்க ளுடைய சிறப்பான பண்புகள் வழிபாட்டுச் சமூகத்தின் (qlāhal, ekklesia) பண்புகளில் மிகத்தெளிவாகச் சுட்டிக்காட்டப்படுகின்றன.

**3. பழைய உடன்படிக்கை: மதிப்பும் வரை யறைகளும்:** பழைய உடன்படிக்கையின் காலத்திலிருந்தே, இறைவனுடைய திட்டத் தின் சமூக அமைப்பானது ஏற்கெனவே வெளிப்படுத்தப்பட்டுள்ளது. வரலாற்றின் இடர்களிலிருந்து தன்னையே விடுவித்துக் கொள்வதால் மனிதன் இறைவனால் மீட் கப்பட முடியாது. உலகினின்று துண்டிக்கப் பட்ட சமய வாழ்வின் தனிமையில் அவன் இறைவனைக் காணமாட்டான். தமது மக்க ளென இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட சமுதாயத்தினுடைய வாழ்விலும் ஊழிலும் பங்கேற்பதன் மூலம் அவன் இறைவனுடன் ஒன்றிக்கப்படுவான். இந்த இறைத்திட்டமா னது அதனுடைய நிறைவேற்றத்தின் தொடக்கத்தை இஸ்ராயேலில் கொண்டிருக் கிறது. ஏனெனில், இந்த உடன்படிக்கையின் மக்கள் ஏற்கெனவே செயலளவில் விசுவாச வாழ்வைக் கொண்டுள்ளனர். இந்த விசு வாச வாழ்வு தன்னுடைய துணையாக, நாட்டின் அமைப்புகள் மற்றும் நாட்டின் வரலாறு ஆகியவற்றுடன் இறைவனுடைய வார்த்தையையும், வழிபாட்டின் குழுக் களையும் கொண்டுள்ளது. ஆயினும், இந் தத் தயாரிப்பு மற்றும் தற்காலிக நிறைவேற் றத்தின் நிறைவற்ற இயல்பு இங்குதான் தோன்றுகிறது. இறைவனுடனான உடன் படிக்கையின் உறவினுடைய ஓர் அனுபவம் என்ற அளவில் விசுவாச வாழ்வானது, இறுதி மீட்பினுடைய வாக்குறுதியைத் தன்னுள் கொண்டுள்ள ஓர் உடன்பாட்டு மெய்ம்மையை இங்கு ஏற்கெனவே கொண் டுள்ளது. ஆனால், இரு கோணங்களில் இதனைக் கட்டுப்படுத்துகின்ற நிலை களுக்குக் கட்டுப்பட்டதாக இஃது இன்னும் உள்ளது. உலகப் பொருட்களின் அமைப் பிற்கோ, ஒரே நாட்டினுடைய எல் லைக்கோ அப்பால் இது நோக்குவதில்லை. மேலும், தொட்டுணரத்தக்க ஆதரவைக் கண்டடையக்கூடிய தேசிய மற்றும் தற் காலிக மெய்ம்மையுடன் இந்த யாவும் கடந்த மெய்ம்மையை (''இறை மக்கள்'') இணைப்பதன் மூலம், ஓர் ஆழமான மறை பொருளானது மனிதருக்கு அறியப்படக் கூடியதாகிறது. இவ்வுலகின் மக்கள் என்ற அளவிலான இஸ்ராயேலின் அனுபவங்களி னின்று தொடங்கி, மீட்புத்திட்டம் நிறை வேற்றப்படக்கூடிய புனித சமூகத்தின் பல் வேறுபட்ட கூறுகள், சிறிது சிறிதாக உருவங்களின் மறைவில் கோடிட்டுக் காட்டப்படுகின்றன.

**III. புதிய மக்களின் வாக்குறுதி:** பழைய உடன்படிக்கையின்மீது அமைக்கப்பட்ட அமைப்பு மேலே கூறப்பட்ட வரையறை களை மட்டும் கொண்டிருக்கவில்லை. எதையும் நிறைவுள்ளதாக்க சக்தியற்றதும் ஆகும் *(எபி 7:19; 9:9; 10:1)*. ''புனித மக்களாக'' இஸ்ராயேல் பெற்ற அழைப்பைச் செயல்படுத்த சக்தியற்றதும் ஆகும். இஸ்ராயேலின் பாவங்களே, தம்மீது நாடு கடத்தப்படல் மற்றும் சிதறிப்போதல் ஆகிய அடிப்படைத் தண்டனைகளை வரு வித்துக் கொண்ட நிகழ்ச்சிகளே, இதை

மெய்ப்பித்துள்ளன. இறைவனுடைய திட்டமானது இவற்றிற்காக மடிந்து போகவில்லை. இறைவாக்கு இறுதிக்கால இயலானது இறுதிக்காலங்களுக்கென ஒரு புதிய திட்டத்தின் வருகையை அறிவித்தது. அதில் பண்டைய நிலையை, ஒரு வரைபடமாகக் கொண்ட நிறைவுடைய மக்களை இறைவன் காண்பார்.

***1. புதிய உடன்படிக்கையின் மக்கள்***

***அ) புதிய உடன்படிக்கையின் மேன்மை:*** பழைய இஸ்ராயேலைப் போன்று புதிய மக்களும் இறைவனுடைய முன் முயற்சியால் பிறக்க வேண்டும். ஆனால், இம்முறை இறைவன், தனது திட்டத்திற்கு எதிராகச் செயல்பட்ட பாவத்தின்மீது வெற்றிகொள்வார். அவர் தனது மக்களைத் தூய்மைப்படுத்தி, அவர்களது இதயத்தை மாற்றி, தனது ஆவியை அவர்கள் மீது பொழிவார் (எசே 36:26...). தாழ்ச்சி மிக்க நீதியுள்ள எஞ்சியோரைப் பாதுகாப்பதற்கென அவர் பாவிகளை அதனின்று பிரிப்பார் (எசா 10:20-21; செப் 3:13; யோபு 3:5). தன்னால் படைக்கப்பட்ட இம்மக்களுடன் (எசா 65:18), அவர் ஒரு புதிய உடன்படிக்கை செய்வார் (எரே 31:31..; எசே 37:26). இம்மக்களே யாவேயினுடைய ''புனித மக்களாகவும்'' (எசா 62:12), மந்தையாகவும் (எரே 31:10), மணப்பெண்ணாகவும் (ஓசே 2:21) இருப்பர். இவ்வாறு விவரிக்கப்பட்ட உள்ளார்ந்த நீதியானது, பாவமக்களாகிய இஸ்ராயேலின் ஆன்மீக நிலையோடு ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகிறது. மனித இனத்தினுடைய முதல் தந்தையின் பாவத்திற்கு முற்பட்ட நிலையை இது நினைவூட்டுகிறது (ஆதி 2).

***ஆ) புதிய மக்களின் உலகளாவிய தன்மை:*** அதே நேரத்தில், இறைவனுடைய திட்டத்தின் எல்லைகள் விரிவுபடுத்தப்படுகின்றன. ஏனெனில், நாடுகள் தங்களை இஸ்ராயேலுடன் சேர்த்துக் கொள்ளப்போகின்றன (எசா 2:2). அவர்கள் அதனுடன் ஆபிரகாமுக்கு வாக்களிக்கப்பட்ட ஆசீரையும் (எரே 4:2; காண்க. ஆதி 12:3), யாவேயின் மறைபொருளான ஊழியனை இணைப்பாளராகக் கொண்ட உடன்படிக்கையையும் (எசா 42:6) பங்கிடுவர். இவ்வாறு இஸ்ராயேலை ஒதுக்கி வைப்பதென்பது இறைத்திட்டத்தை வெளிப்படுத்துவதில் ஒரு தற்காலிக நிலையாகத் தோன்றுகிறது. காலத்தின் முடிவில் பண்டைய உலகளாவிய நிலையானது மீண்டும் எடுத்துக்கொள்ளப்படும்.

***2. புதிய மக்களின் அடையாள உருவம்:*** செயல்முறை வடிவில் புதிய மக்களைக் கருத்தியலாய் அமைப்பதற்கு இஸ்ராயேல் மக்களுடைய கடந்தகால அனுபவங்களைத் தேடவேண்டியவர்களாக மட்டுமே இறைவாக்கினர்கள் உள்ளனர். அவர்கள் அதனின்று குறைபாடுகளையும் நிழல்களையும் நீக்கிவிட்டால், இறுதிக்காலங்களை எதிர்பார்த்தலின் உருவத்தில் உள்ளவாறு அது தோன்றுகிறது.

***அ) புதிய இனம்:*** ஆபிரகாமின் இனமாக இருப்பதன் காரணமாக, இஸ்ராயேலானது புதிய மக்களாக மாறும் (எசா 41:8). தங்களுடைய முறையில் தாங்களும் பிதாப்பிதாக்களின் ஆன்மீகச் சந்ததியாக உருவாவதற்கென நாடுகளும், ஆபிரகாமினுடைய இறைவனின் மக்களுடன் ஒன்று சேர்க்கப்படும் (சங் 47:10). புனித மக்களின் அடையாளத் தாயாகிய சீயோனை நோக்கி அனைவரும் ''அம்மா'' என்று கூறுவர் (சங் 87). இவ்வாறாக, பாபேல் ஊழாற்றல் முதல் சிதறிப்போன நாடுகளின் எஞ்சியோர் அனைவரும் ஒன்று சேர்க்கப்படும் போது, மனித இனம் முழுவதும் தனது மூல ஒன்றிப்பினை மீண்டும் கண்டடையும் (எசா 66:18-20; காண்க: ஆதி 10-11; செக் 14:17).

***ஆ) சில புதிய அமைப்புகள்:*** புதிய மக்களை ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்பு என முன்கூட்டியே விவரிப்பதற்கு, உருவகமான அமைப்புகளே தேவையாக உள்ளன: இதயத்தில் எழுதப்பட்ட சட்டம் (எரே 31:33; எசே 36:27); பன்னிரு கோத்திரங்களின் மறு ஒன்றிப்பு (எசே 48) மற்றும் இஸ்ராயேலுக்கும் யூதாவிற்கும் இடையிலான வெறுப்

புணர்வின் முடிவு (37:15..); தாவீதினுடைய வித்தின் அரசுரிமை (எசா 9:11; எரே 23:5; எசே 34:23; செக் 9:9) ஆகியவை இந்த உருவக அமைப்புகளாகும். மீண்டும் இங்கு உலகளாவிய நிலையானது பழைய அமைப்புகளின் எல்லைகளைக் கடந்து செல்கிறது. தாவீதின் மகனாகிய அரசர் அனைத்து நாடுகளின்மீதும் அரசாள்கிறார் (சங் 2:72); சிறப்பாக, அவை அனைத்தும் ஒரே இறைவனை அரசனாக ஏற்றுக்கொள்ளும் (செக் 14:16; சங் 95:10); அவைகளை ஒளிக்குக் கொணர்வதற்கென அவரது சட்டம் அவைகளுக்குக் கற்பிக்கப்படுகிறது (எசா 2:2...; 42:1.4). இவ்வாறு, தங்களுடைய ஆட்தன்மையை இழந்துவிடாமல், அவை இறைவனுடைய மக்களுடன் உறுப்பாண்மை முறையில் ஒன்றிக்கப்படுகின்றன.

**இ) மீட்பின் நிகழ்ச்சிகள்:** அவ்வாறே இஸ்ராயேலின் வரலாற்று அனுபவங்களும் மீட்பின் நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டும் சாதனங்களை அளிக்கின்றன. அவை முதல் மீட்பு மற்றும் விடுதலையைப் போன்ற புதிய யாத்திரை (எரே 31:11; எசா 41:16...; 44:23); பழையதின் வியத்தகு செயல்களைப் புதுப்பிக்கின்ற, பாலைவனத்தின் மீதான புதிய பவனி (ஓசே 2:16; எரே 31:2; எசா 40:3; 43:14; 48:21; 49:10); வாக்களிக்கப்பட்ட நாட்டிற்குத் திரும்புதல் (ஓசே 2:17; எரே 31:12; எசே 37:21); சமாதானத்தின் ஆட்சியைத் தொடங்குவதற்கென அண்டைய பகைவர்கள் மீதான அரசனுடைய வெற்றி (எசா 9) முதலியனவாகும். ஆனால், எல்லைகள் மீண்டும் ஒருமுறை விரிவாக்கப்படுகின்றன. சமாரியா மட்டுமின்றி பாவத்தினுடைய நகரின் உருவமாகிய சோதோமும் வாக்களிக்கப்பட்ட மீட்சியில் பங்கேற்கும் (எசே 16:53...). இவ்வாறாக, மீட்பின் வரலாற்றின் முடிவில் மீண்டும் நிறுவப்படும் உலகளாவிய சமாதானமானது (எசா 2), காயினுடைய பாவத்திற்குப்பின் அறிந்திராத ஒரு நிலைக்கு மனித இனத்தை இட்டுச்செல்லும் (காண்க. ஆதி 4:8).

**ஈ) புதிய புனித நாடு:** இயல்பாகவே புனித நாடானது புதிய இஸ்ராயேல் ஒன்று சேரும் இடமாக இருக்கும் (எசே 34:14; எரே 31:10...). ஆனால், அஃது உப ஆகமத்தினுடைய மிக ஆர்வமுள்ள வர்ணனைகளை விஞ்சக்கூடிய வியத்தகு வளத்தைக் கொண்டிருக்கும் (எசே 47:12; யோவே 4:18). உண்மையில் இது மீண்டும் பெறப்பட்ட இன்பவனமாக இருக்கும் (எசே 36:35; எசா 51:3). அதன் தலைநகராகிய எருசலேம், உலக முழுமைக்கும் மையமாகும் (எசா 2). இவ்வாறு மீண்டும் படைக்கப்பட்ட உலகில் (65:17), தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு இன்பவன சமாதானத்தையும் மகிழ்ச்சியையும் உறுதிப்படுத்துவதற்கென, இறைவன் அனைத்து நாடுகளின் ஒன்றிப்பை வலியுறுத்துவார் (ஓசே 2:20; எசா 65:17-25).

**உ) எல்லா மொழிகளின் ஒன்றிப்பு:** கானானினுடைய மொழியினின்று இறைவன் புனித மொழியினை உருவாக்கியது வீணானதன்று. இறுதிக்காலங்களில் எகிப்து மனமாற்றப்படும்போது அது புனித மொழியில் இறைவனை மன்றாடும் (எசா 19:18...). ஆனால், இறைவாக்கு இறுதிக்கால இயலானது மேலும் தொடர்ந்து செல்கிறது. ஒவ்வொருவரும் தன்னுடைய மொழியிலேயே அவரைப் போற்றுவதற்கென, இறைவன் எல்லா மக்களுடைய உதடுகளையும் தூய்மையாக்குவார் (செப் 3:9). இவ்வாறாக, மீண்டும் ஒன்றிக்கப்பட்ட வழிபாட்டில், நாடுகளையும் மொழிகளையும் ஒன்று சேர்ப்பது நிறைவேற்றப்படும் (எசா 66:18). மனித இனத்தின் முறிவிற்கு இஃது ஒரு முற்றுப்புள்ளி வைக்கும். மேலும், இறைத் திட்டத்தின் தொடக்கத்தில் இருந்தது போல மீண்டும் கண்டடையப்பட்ட ஆன்மீக ஒன்றிப்பிற்கு அறிகுறியாகவும் இருக்கும் (ஆதி 11:1).

**ஊ) இறைவனுக்குப் புதிய வழிபாடு:** இறுதிக்கால வழிபாடானது இஸ்ராயேல் வழிபாட்டினுடைய பண்புகளில் தெளிவாக விவரிக்கப்படுகிறது (காண்க. எசே 40-48). ஆனால், உலகளாவிய தன்மையானது

அடிக்கடி உறுதிப்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். ஒரே இறைவனுடைய பொதுவான பணியின் மூலமாக மனுகுலமானது தனது ஒன்றிப்பைக் கண்டடையும் (எசா *2:2;...; 55:6* தொ; *66:20* தொ). அதனுடைய இறுதியான ஒருங்கு கூடுதலானது, கூடார விழாவிற்கென இறைமக்கள் அனைவரும் மீண்டும் ஒன்று சேர்கின்ற, திருப்பயணங்களின் வடிவை ஏற்கும் (செக் *14:16*). வழிபாட்டு உணவிற்கென மக்கள் ஒன்று சேர்வர். அதன் மூலமாக இறைவனில் ஒன்றிப்பர் (எசா *25:6*). இப்பகுதியில் இந்தச் சொல் தோன்றாவிடினும், பாலைவன சபைக்கு (q.āhāl elkktesia) ஒத்த ஒரு புதிய ''புனித சபை'' எதிர்நோக்கப்படுகிறது; அதனில் நாடுகள் அனைத்தும் இஸ்ராயேலில் எஞ்சியோருடன் மீண்டும் ஒன்று சேரும்.

**3. இறுதிக்கால மக்களும் வரலாற்று இஸ்ராயேலும்:** எனவே, இஸ்ராயேலின் வரலாற்று அனுபவத்தில் பங்கேற்பதாகப் புதிய உடன்படிக்கையின் மக்கள் முன்னதாகவே கற்பனை செய்யப்படுகின்றனர். இந்த முன்னடையாளத்தின் மதிப்பை நாம் தெளிவாகக் காண்கிறோம். ஆயினும், அனுபவத்தினுடைய உண்மைகள் இருமுனைகளில் எல்லை கடந்து செல்கின்றன; நாட்டுப் பணித்திட்டம் கடந்து செல்லப்படுகிறது; புனித மக்கள் அனைத்து மனுகுலத்திற்கும் திறந்தவர்களாக உள்ளனர்; மனித இனமும் உலகமும், மனித பாவத்தினால் இழந்து விட்ட, தங்களுடைய மூல நிறைவினை மீண்டும் கண்டடைகின்றன.

ஆனால் இந்த அடையாளச் சித்திரத்தில், இஸ்ராயேலின் அனுபவம் ஓரளவு காரணமாக உள்ள சில குறிப்பிட்ட தெளிவற்ற நிலைகளும் உள்ளன. பண்டைய உடன்படிக்கையின் மக்கள், அதன் அரசன், அதன் புனித நகரம் ஆகியவற்றைச் சூழ்ந்துள்ள மனுகுலத்தினுடைய ஒன்றிப்பு மீண்டும் அமைக்கப்படுதலானது சில நேரங்களில் குறுகிய தன்மையையும் (காண்க. எசா *52:1*), சில தேசியத் தொனியையும் (*60:12*), போர்த்தன்மையுடைய கூறுகளையும் கூட கொண்டிருக்கின்றது (சங் *2; 72*). இவை இறுதிக்காலப் போரின் உருவில் வளர முயலும் (எசே *38-39*). எல்லாவற்றிற்கும் மேலாக, புதிய மக்களுக்கு வாக்களிக்கப்பட்ட மகிழ்ச்சியானது அனைத்து ஒழுக்க மற்றும் உடல் சார்ந்த தீமைகளை விலக்குவதை வெளிப்படுத்தினாலும் (துன்பம்: எசா *65:19*; மரணம்: எசா *25:8*), வரையறைகள் உலக மகிழ்ச்சியின்மீது நிலையாய்த் திருப்பப்பட்டதாய், பெரும்பாலும் தற்காலிகமானதாய் உள்ளன. இந்த எல்லைகளைக் கடந்துசென்று எல்லை கடந்த தோற்றத்தை ஏற்க முயல்கின்ற ''மிக உன்னதருடைய புனிதர்கள் அடங்கிய மக்களும்'' (தானி *7:22.27*), இவ்வுலகின் வல்லமைகளைப் பிரதிபலிக்கின்ற ஆதிக்கம் அளிக்கப்பட்டவர்களாகத் தெரிகின்றனர் (தானி *7:27*; காண்க. *14*).

இந்தத் தெளிவின்மையை நீக்குவதற்கு, இறுதிக்கால மக்கள் தங்களுடைய முறையில் கிறிஸ்துவுடனும் அவருடைய திருச்சபையுடனும் மனித அனுபவத்திற்குள் நுழைவது அவசியமாகும்.

IV. **புதிய உடன்படிக்கையின் மக்கள்:** எழுபதுநூல் மொழிபெயர்ப்பைவிட, புதிய ஏற்பாட்டுக் கிரேக்க மொழிபெயர்ப்பில் இறைமக்கள் (laos), புறவின நாடுகள் (ethnē), என்னும் சொற்கள் சிறப்பான முறையில் பயன்படுத்தப்படுவதை நாம் காண்கிறோம். ஆனால், புதிய உடன்படிக்கையால் இறைவனோடு பிணைக்கப்பட்ட மீட்பின் சமுதாயத்தை விளக்குவதற்கு மற்றச் சொற்களைவிட ''வழிபாட்டுச் சபை'' (ekklesia) என்ற சொல் தனிச்சிறப்பான முறையில் பொருத்தமாக உள்ளது. ஆயினும், கிறிஸ்துவின் திருச்சபைக்குள் நுழைய பழைய உடன்படிக்கையின் மக்களும் அவர்களைப் பின்பற்றி பிறநாடுகளும் அழைக்கப்படுகின்றன. மக்கள் என்ற சொல்லின் முழுப்பொருளில், கிறிஸ்துவின் திருச்சபை ஓர் உண்மையான மக்களினமாக இருக்கிறது. தன்னுடைய முன்னடையாளங்களை நிறைவேற்றுவதில் இறுதிக்கால மெய்ம்மையானது அவற்றினுடைய பொருளை

அழித்து விடாமல், அவற்றை முழுமைப் படுத்துகிறது.

**1. புதிய மக்கள்:** எனவே, இயேசுவின் இரத்தத்தினால் முத்திரையிடப்பட்ட புதிய உடன்படிக்கையால் இறைவன் புதிய மக்களைப் படைத்தார். இவர்களைப் பொருத்த மட்டும், ''அவர்களுக்கு நான் கடவுளாய் இருப்பேன்; அவர்கள் என் மக்களாய் இருப்பர்'' என்ற இறைவாக்கு (2 கொரி 6:16; காண்க.லேவி 26:12; எரே 31:33; எபி 8:10; திருவெளி 21:3) முழுமையாக நிறைவேறுகிறது. இவர்களுடைய பாவங்களுக்காகவே இயேசு பரிகாரம் செய்தார் (எபி 2:17), தனது இரத்தத்தினால் இவர்களைப் புனிதப்படுத்தினார் (13:12), விசுவாசத்தினால் நாம் இவர்களில் ஒருவராகிறோம் (கலா 3:7; உரோ 4:3...). இவ்வாறாக, இறைவனுடைய சிறப்பான மக்கள் (தீத் 2:14; காண்க. உப 7:6), தேர்ந்தெடுக்கப்பட்ட இனம், புனித நாடு, விலைக்கு வாங்கப்பட்ட மக்கள் (1 பேதுரு 2:9; காண்க: யாத் 19:5 மற்றும் எசா 43:20-21), மந்தை (அ.ப. 20:28; 1 பேதுரு 5:2; யோவா 10:16), ஆண்டவரின் மணமகள் (எபே 5:25; திருவெளி 19:7; 21:2) என்னும் இஸ்ராயேலின் பெயர்கள் இப்போது இந்தப் புதிய மக்களுக்கு மாற்றப்படுகின்றன. மேலும், பழைய உடன்படிக்கையின் மக்கள் தம்முடைய வரலாற்றின் நிகழ்ச்சிகளிலேயே இறைவனுடைய வழிகளை அனுபவித்ததன் காரணமாக, புதிய மக்களுக்கு அளிக்கப்பட்ட மீட்பின் அனுபவமானது இந்த உருவக நிகழ்ச்சிகளை நினைவு கூர்கின்ற சிந்தனைக் கூறுகளில் வடிவமேற்கிறது. வாக்களிக்கப்பட்ட நாடு முன்குறித்துக்காட்டுகின்ற இறை அமைதிக்குள் மக்கள் நுழைய வேண்டும் (எபி 4:9); அது தீமையின் நகரமாகிய பாபிலோனை விட்டு விட்டு (திருவெளி 18:4), இறைவனது உறைவிடமாகிய எருசலேமில் ஒன்று சேர வேண்டும் (திருவெளி 21:3).

ஆனால் இம்முறை, நாடுகள் இயங்குகின்ற தற்காலிக வாழ்வின் மட்டம் கடந்து செல்லப்பயன்படுகிறது. இறைவனுடைய மக்களின் அளவுகடந்த நிலையானது முழுமையாக உள்ளது: ''குருத்துவ அரசானது'' (1 பேதுரு 2:9), இவ்வுலகைச் சேர்ந்ததன்று (யோவா 18:36); அதனுடைய தாயகம் விண்ணிலுள்ளது (எபி 11:13...); அதனுடைய குடிமக்கள் குடியுரிமையை அங்கே கொண்டுள்ளனர் (பிலி 3:20); ஏனெனில், அவர்கள் விண்ணிலுள்ள எருசலேமின் மக்கள் (கலா 4:26). அதே எருசலேம் காலத்தின் இறுதியில் விண்ணிலிருந்து மண்ணிற்கு இறங்கி வரும் (திருவெளி 21:1 தொ). ஆயினும், இம்மக்கள் கீழுலகில் தொடர்ந்து இருப்பர். இதன் மூலமாக, ஆன்மீக மற்றும் இறுதிக்கால மக்கள் தற்காலிக மற்றும் வரலாற்று மக்களுடன் இணைவர். இஸ்ராயேலின் முரண்பாட்டுக்குப் பின்னர், திருச்சபையின் முரண்பாட்டை நாம் கொண்டுள்ளோம். அதனுடைய மண்ணுலக நிலையில், காலப் போக்கில் தன்னையே வளர்க்க அழைக்கப்பட்ட காணக்கூடிய மக்களாக திருச்சபை இருக்கும்.

**2. புதிய மக்களில் இஸ்ராயேலும் நாடுகளும்:** புதிய மக்களின் ஒரு பகுதியாக அமையுமாறு முதலாவதாக அழைக்கப்பட்டதாக இஸ்ராயேல் இருப்பது இயல்பானதே. இது முதல் உடன்படிக்கையிலிருந்து வரும் அழைப்பாகும். ''மோசேயைப் பிரதிபலிக்கும் இறைவாக்கினராக'' (அ.ப. 3:23) தனது மக்களைக் காக்கவும் (மத் 1:21), அதற்கு ஒளி (மத் 4:15 தொ), மீட்பு (லூக் 1:68), மீட்பின் அறிவு (லூக் 1:77), மகிழ்ச்சி (லூக் 2:10) மற்றும் மகிமை (லூக் 2:32) ஆகியவற்றைக் கொணரவும் இயேசு அனுப்பப்பட்டார். அவர் அதனை ஆளும் தலைவராக இருந்து (மத் 2:6), இறுதியில் அதற்காக மரிப்பார் (யோவா 11:50). ஆனால், இயேசுவைச் சுற்றியும் பின்னர் நற்செய்தியின் அறிவிப்பைச் சுற்றியும் ''வணங்காக் கழுத்துடைய மக்களின்'' நாடகம் புதுப்பிக்கப்படுகிறது. இவர்களைப்பற்றி பழைய ஏற்பாடு ஏற்கெனவே வியப்பூட்டும் எடுத்துக்காட்டுகளை அளித்துள்ளது (மத் 13:15; 15:8; அ.ப. 13:45; 28:26; உரோ 10:21; 11:1 தொ).

இவ்வாறு மீட்புத்திட்டமானது தனது முழுமையான குறிக்கோளை அடையும். இதன் விளைவாக, தனது மரணத்தின் முழுமையில் பழைய உடன்படிக்கையின் மக்களுடைய பாவத்தைச் சுமந்த இயேசு வின் மரணமானது *(மத் 23:32-36; காண்க. அ.ப. 7:51 தொ)* இந்த முதல் திட்டத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கிறது. இஸ்ரா யேலை மற்ற நாடுகளுக்கு அப்பாற்படுத்தி வைக்கின்ற தடையினை இஃது உடைக்கின் றது *(எபே 2:14)*. இயேசு இறந்தது ''தம் இனத்தினருக்காக மட்டுமன்று, சிதறி வாழ்ந்த கடவுளின் பிள்ளைகளை ஒன்றாய்ச் சேர்க்கும் நோக்கத்திற்காகவே'' *(யோவா 11:52)*. இறைவனுடைய முதல் மக்களில் எஞ்சியோரில் ஒரு பகுதியினர் மனமாற்றப் பட்டு, புதிய மக்களுக்குள் சேர்வர்; ஆனால், ''புறவினத்தாரிடையே தமக்கென மக்களைத் தேர்ந்து கொள்ளவும்'' இறை வன் தீர்மானித்துள்ளார் *(அ.ப. 15:14)*. ''அனைவரும் அர்ச்சிக்கப்பட்டவர்களோடு பங்கு அடைவதற்கென'' *(அ.ப. 26:18)*, தன்னுடையவரல்லாதோரினின்றும் தன் னுடைய மக்களை உருவாக்க அவர் இப் போது விரும்புகிறார் *(உரோ 9:25 தொ; 1 பேதுரு 2:10)*.

இஸ்ராயேல் மற்றும் நாடுகளுக்கிடையி லான இந்த ஒன்றிப்பின் மூலம் புதிய மனுகுலத்தின் இறுதிக்கால மறுஒன்றிப்பு நிறைவேற்றப்படுகிறது *(எபே 2:15)*. தேர்ந் தெடுக்கப்பட்ட இனம் *(1 பேதுரு 2:9)* இன்னும் ஆன்மீக அளவில் ஆபிரகாமின் இனமாகவே உள்ளது *(உரோ 4:11 தொ)*; ஆனால் உண்மையில், இப்போது புதிய ஆதாமாகிய கிறிஸ்து, முதல் ஆதாமி னுடைய அனைத்து வாரிசுகளையும் தன் னில் ஒன்றுபடுத்துவதால் *(1 கொரி 15:45; உரோ 5:12..)*, மனித இனம் முழுவதையும் தன்னுள் கொண்டுள்ளது. இதுமுதல் புனித மக்கள் ''அனைத்துக் கோத்திரங்கள், மக் கள், நாடுகள் மற்றும் மொழிகளின்'' *(திருவெளி 5:9; 7:9; 11:9; 13:7; 14:6)* மனிதர்களைக் கொண்டு உருவாக்கப்பட் டுள்ளனர். இவர்களுள் பழைய இஸ்ராயே லும் அடங்கும். திருவெளிப்பாட்டுக் காட்சி யாளர் விண்ணகத்தில் தியானிக்கின்ற திருச் சபையினுடைய முடிவில்லாத் தோற்றம் இத்தகையதே. மண்ணுலக மெய்ம்மையும் இத்தகையதே. ஏனெனில், முதல் நூற்றாண் டின் கிறிஸ்துவர்கள் கூறுவது போல அஃது இனிக் கிரேக்கரென்றோ, யூதரென்றோ குறிப்பிடப்படுவதில்லை *(கலா 3:28)*.

**3. முழுநிறைவை நோக்கி இயங்கும் புதிய மக்கள்:** இவ்வாறு திருச்சபையானது வர லாற்றில் வேரூன்றிய மக்களினமாக உள் ளது. இஸ்ராயேலின் பிள்ளைகளைப் போன்று இதனுடைய உறுப்பினர்களும் தோற்றம், அமைப்புகள் மற்றும் ஊழிய னுடைய சமுதாயம், பயணம் செய்கின்ற எல்லையாகிய தாயகத்தின் சமுதாயம் *(எபி 11:16)*, இறைவனுடைய வாக்கினால் உறுதி யளிக்கப்பட்ட மொழிச்சமுதாயம், திருச் சபையினுடைய உயரிய நோக்கமாகிய வழிபாட்டுச் சமுதாயம் ஆகியவற்றையும் கொண்டுள்ளனர் *(காண்க. 1 பேதுரு 2:9; திருவெளி 5:10)*. தனித்து வைக்கப்பட்ட இம்மக்களினுடைய மண்ணுலக ஊழ் இஸ் ராயேலுடனான குறிப்பிடத்தக்க ஒப்புமை களை இன்னும் கொண்டுள்ளது. அவை அதனுடைய பாவ உறுப்பினர்களுடைய அதே பற்றுறுதியின்மை *(காண்க. எபி 3:7...)*; கொடிய விலங்கினை உருவாக்கு கின்ற உலக சக்திகளினின்று வருகின்ற அதே அடக்குமுறைகள் *(திருவெளி 13:1-7; காண்க. தானி 7)*; அச்சுறுத்துகின்ற அழிவி னின்று தப்பிப்பதற்கென பாபிலோனை விட்டு விலக வேண்டியதன் அதே அவசி யம் *(திருவெளி 18:4...; காண்க. எசா 48:20)* ஆகியவையாகும். தங்களுடைய விண்ணக நிறைவை நோக்கியுள்ள வரையில் புனித வரலாறும், பழைய ஏற்பாட்டினுடைய இறைவாக்கு நூல்களும் புதிய மக்களுக்குப் பொருள் பொதிந்ததாக உள்ளன.

## மக்கள் தொகைக் கணக்கெடுப்பு
*(CENSUS)*

எபிரேயர்கள் மற்றப் பழங்கால மேற் காசிய மக்களைப்போல் கோத்திரம், குடும் பம் மற்றும் வழிமரபு வாரியாக மக்கள்

தொகைக் கணக்கெடுத்தனர் (*யாத் 30:12-14; எண் 1; 3; 4; 26; 2 சாமு 24; 1 நாள் 21; 27; 2 நாள் 2; எஸ் 2; நெகே 7; லூக் 2:1-5*). போர் வீரர்களின் தொகையைக் கணிப்பதற்கும் (*எண் 1:3; 26:2; 2 சாமு 24:9*), லேவியர்களுக்கு வழிபாட்டுப் பணிகளைக் குறிப்பதற்கும் (*எண் 3:4*) இக்கணக்கெடுப்புகள் செய்யப்பட்டன.

**முதல் கணக்கெடுப்பு:** இஃது எகிப்திலிருந்து விடுதலைப் பயணம் தொடங்கிய இரண்டாம் ஆண்டு இரண்டாம் மாதத்தில் சீனாய் மலையில் நடந்தது. இதன்படி, இஸ்ராயேலில் மூதாதையர் வீடுகள் வாரியாக இருபது வயதுக்கும் அதற்கு மேலும் போருக்குப் போகத்தக்கவர்களாக 6,03,550 பேர் இருந்தனர் (*எண் 1:46; 11:21*). இவர்களில் லேவியர் எண்ணப்படவில்லை (*1:47-45*). இவர்கள் தனியாக எண்ணப்பட்டனர். இதன்படி, ஒரு மாதமும் அதற்கு மேலுமான லேவிய ஆண்கள் 22,000 பேர் இருந்தனர் (*3:15.39*). இவர்கள் இஸ்ராயேலின் தலைப் பேற்றாண்களுக்குப் பதிலாக ஆண்டவர் முன் பணி செய்ய வேண்டியவர்களாவர் (*1:50-51; 3:5-13. 25-26*). அப்போது, இஸ்ராயேலில் இருந்த தலைப்பேற்றாண்கள் 22,273 பேர் ஆவர் (*3:43*). கோகாத்தியர், கெர்சோமியர், மெராரியர் ஆகியவர்களும், முப்பது வயது முதல் ஐம்பது வயதுவரையிருந்த ஆண்கள், சந்திப்புக் கூடாரப் பணிக்கெனக் கணக்கெடுக்கப்பட்டனர். இவர்களின் தொகை 8,580 ஆகும் (*4:34-39*).

**இரண்டாம் கணக்கெடுப்பு:** இது பாலைவனப் பயணத்தின் முடிவில் மோவாபிலுள்ள சித்திமில் நடந்தது (*எண் 26:2-51*). இதன்படி இருபது வயதும் அதற்கு மேலும் உள்ள போருக்குச் செல்லத்தக்க இஸ்ராயேலர் 6,01,730 பேர் இருந்தனர் (*26:2.51*). இந்தக் கணக்கெடுப்பு, கானானில் உரிமைச் சொத்து வழங்க அடிப்படையாக அமையும் (*26:54*). இப்போதும் லேவியர் தனித்து எண்ணப்பட்டனர். லேவியருள் ஒரு மாதமும் அதற்கு மேலும் வயதுடைய ஆண்கள் 23,000 பேர் இருந்தனர் (*26:62*).

இந்த விவரிப்புகளில் வரும் எண்ணிக்கைகள் மிகவும் மிகைப்படுத்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. பாலைவன வாழ்க்கையைக் கருத்தில் கொண்டால், மிக உயர்ந்த இனப்பெருக்க வீதத்தின்படியும் இவை மிகைப்படுத்தப்பட்டவையாகும். இதற்கு, அறிஞர்கள் பல்வேறு விளக்கங்கள் அளிக்க முயன்றுள்ளனர். இஸ்ராயேலுக்கு இறைவன் காட்டிய தனிச்சிறப்பான ஆதரவை எடுத்துரைக்க இந்த எண்ணிக்கைகள் மிகைப்படுத்தப்பட்டுள்ளன என்பர் சிலர். வேறு சிலர் அரசர்கள் காலத்தில் இருந்த மக்கள் தொகை, காலமயக்கமாக, இந்த விவரிப்புகளில் புகுத்தப்பட்டிருக்கலாம் என்பர். இவற்றைவிட நம்பத்தகுந்த விளக்கமாக, ஆயிரம் என்று மொழிபெயர்க்கப்படும் ''ஏலபு'' என்ற சொல்லைத் ''தலைக்கட்டு'' என்று மொழி பெயர்த்தலாகும்.

**தாவீது காலத்துக் கணக்கெடுப்பு:** தனது ஆட்சி முடிவில், தாவீது, தாண் முதல் பெயேர்செபா வரை வீரர்களைக் கணக்கெடுக்கும்படி, யோவாபுக்கும் மற்ற படைத்தலைவர்களுக்கும் கட்டளையிட்டார் (*2 சாமு 24:1-9; 1 நாள் 21:1-7*). *2 சாமு 24:9*-இன்படி, இக்கணக்கெடுப்பில் இஸ்ராயேலில் 800,000 வீரர்களும், யூதாவில் 500,000 வீரர்களும் இருந்தனர். *1 நாள் 2:5*-இன்படி, இஸ்ராயேலில் 1,100,000 வீரர்களும் யூதாவில் 470,000 வீரர்களும் இருந்தனர்.

சாமுவேல்நூல் விவரிப்பில், இறைவனே இந்தக் கணக்கெடுப்பை எடுக்கத் தூண்டினார் என்று வாசிக்கிறோம் (*2 சாமு 24:1*). நாளாகம விவரிப்பில், சாத்தான் தூண்டியதாக வாசிக்கிறோம் (*1 நாள் 21:1*). இரண்டு விவரிப்புகளிலும், இந்தக் கணக்கெடுப்பை எடுக்க வேண்டாம் என்று தாவீதைத் தடுக்க யோவாபு முயல்கிறார். ஆனால் வெற்றி அடையவில்லை. இரண்டிலும் இறைவன் ஒரு கொள்ளை நோயை அனுப்பித் தண்டிக்கிறார். கணக்கெடுப்பது பற்றி *யாத் 30:11-16*-இல் கொடுக்கப்பட்டிருக்கும் முறையைத் தாவீது புறக்கணித்ததால் அவர் தவறு செய்தார் என்று யோசிப்பசு விளக்

கம் அளிக்கிறார். இரண்டு விவரிப்புகளி லும், யோவாபு அளிக்கும் அறிக்கையில் உள்ள எண்ணிக்கை வேறுபாடுகளும் கவனிக்கத்தக்கது. இந்தக் கணக்கெடுப் பிலும் லேவியர் தனித்து எண்ணப்படுகின்ற னர். இவர்கள் 38,000 பேர் இருந்தனர் *(1 நாள் 23:3)*.

**மற்றக் கணக்கெடுப்புகள்:** சாலமோன் காலத்தில், இஸ்ராயேலரிடையே வாழ்ந்த அன்னியர்கள், ஆலய வேலைக்காக, கணக் கெடுக்கப்பட்டனர் *(2 நாள் 2:17-18; காண்க. 1 அர 5:13; 9:21)*. எஸ் 2; நெகே 7-இலும் குறிக்கப்படும் கணக்கெடுப்புகள், நாடு கடத்தலிலிருந்து திரும்பியவர்களுள் உண் மையான இஸ்ராயேல் வழித்தோன்றல் களைப் பதிவு செய்யும் நோக்கம் கொண்டவை.

புதிய ஏற்பாட்டில், அகுஸ்து பேரரசனின் கட்டளைப்படி, கிரேனியு என்பவன் சீரியா வில் ஆளுநனாக இருந்தபோது எடுத்த கணக்கெடுப்பைக் கொடுக்கிறார் லூக்கா *(லூக் 2:1-5; காண்க. அ.ப. 5:37)*. இஃது இயேசுவின் பிறப்பிடம் மற்றும் காலத் தோடு தொடர்புடையது.

**மக்கேதா** *(MAKKEDAH - ஆடு மேய்ப்பவர் களின் இடம்)*

மக்கேதா ஒரு கானானிய அரச நகரமா கும். இந்நகரத்திற்கு அருகேயுள்ள குகை யில்தான் யோசுவா தம்மை எதிர்த்து ஒன்று சேர்ந்து வந்த ஐந்து கானானிய அரசர்களை அடைத்து வைத்தார். பின் தம் எதிரி களோடு தொடர்ந்து போரிட்டார். போரின் இரண்டாவது கட்டம் முடிந்தபின் இந்த ஐந்து அரசர்களையும் வெளிக்கொணர்ந்து, அவர்கட்கு மரண தண்டனையிட்டு, சூரி யன் உதயமாகும் வரை அவர்களின் உடல் மரத்தில் தொங்குமாறு செய்து, பின்பு அதே குகையில் அவர்களைப் புதைக்கச் செய்தார். மக்கேதா நகரத்தின் மக்கள் வாள்முனைக் குப் பலியாக்கப்பட்டனர் *(யோசு 10:16-30)*.

யூதாவின் செபேலா மாவட்டத்தோடு பின்னர் மக்கேதாவும் இணைக்கப்பட்டது. இம்மாவட்டத்தின் தலைநகரம் 'இலாக்கிசு' ஆகும் *(யோசு 15:41)*. மக்கேதா இருந்த இடம் எதுவென்று தெரியவில்லை. யுசே பியு எலுதெராப்பொலிக்குக் (பெயித்து இப்பிரின்) கிழக்கில் 12 கி.மீ. தொலைவில் இதற்கு இடம் சுட்டுகிறார். ஆனால், அண்மைக்கால அறிஞர் சிலர் தெல்எஸ்-சாபி அல்லது பெயித்து இப்பிரினுக்கு வடக்கில் இடம் குறிக்கின்றனர்.

**மக்கேரு** *(MACHAERUS)*

இஃது அக்காலத்தில் எருசலேமிற்கு அடுத்தபடியாக இருந்த வலிமையான கோட்டையாகும். இந்த மக்கேரு சாக் கடலுக்குக் கிழக்கில் மோவாபு மலைப்பகு தியில் உள்ளது. இக்கோட்டையின் அரண் கள் அலக்சாந்தர் யன்னேயு அரசனால் கட்டப்பட்டு, பின்பு உரோமையரால் இடிக் கப்பட்டன. ஏரோது மன்னன் மறுபடியும் இதற்கு அரண்கள் எழுப்பி இங்குத் தங்கி னான். இவனுக்குப்பின் ஏரோது அந்திப்பா இதைத் தனக்குச் சொந்தமாக்கினான். திரு முழுக்கு யோவான் இங்கேதான் சிறையில் அடைக்கப்பட்டுக் கொல்லப்பட்டார் என யோசிப்பசு கூறுகிறார் (காண்க. மாற் *6:14-29)*. கி.பி. 66-இல் யூதர்கள் உரோமை யர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தபோது எருசலேம் வீழ்ந்தபின்னும் உரோமையர் களை எதிர்க்கப் பயன்பட்ட மூன்று கோட் டைகளில் இதுவும் ஒன்றாகும். கி.பி. 71-இல் இங்கிருந்த யூதர்கள் உரோமைய ரிடம் சரண் அடைந்தனர்.

இஃது இக்கால முக்கவேர் என்ற இட மாக அடையாளம் காட்டப்படுகிறது.

**மக்சேயா** *(MAHSEIAH - யாவே என் தஞ்சமாவார்)*

இவர் எரேமியாவின் செயலர் பாரூக்குக் கும் *(எரே 32:12)* அரச பயணவிடுதிப் பொறுப்பாளருமான செராயாவுக்கும் *(51:59)* தாத்தா ஆவார்.

**மக்தியேல்** (MAGDIEL - இறைவன் தேர்ந்தெடுத்த கொடை)

இவர் ஏதோமிய இனத்தலைவரும் ஏசாவின் வழித்தோன்றலும் ஆவார் (*ஆதி 36:43; 1 நாள் 1:45*).

**மக்பன்னாய்** (MACHBANNAI - ஆடை அணிந்திருத்தல்)

இவர் தாவீது சவுலிடமிருந்து தப்பித் தலைமறைவாய்ச் சிக்லாகு என்னுமிடத்தில் இருந்தபோது அவருடன் சேர்ந்து கொண்ட காது கோத்திரத்தைச் சேர்ந்தவர்; காதின் புதல்வன் ஆவார் (*1 நாள் 12:13*). திறமை மிக்க போர் வீரனான இவர் தாவீது மன்னனின் படையில் அதிகாரியாக நியமிக்கப்பட்டார்.

**மக்பியாசு** (MAGPIASH - பூச்சிக்கொல்லி)

இவர் நெகேமியாவின் தலைமையில் எஸ்ராவின் புதிய உடன்படிக்கையில் கையொப்பமிட்ட மக்கள் தலைவர்களுள் ஒருவர் (*நெகே 10:20*).

**மக்பீசு** (MAGBISH - தடித்த)

நாடு கடத்தலிலிருந்து செருபாபேலோடு திரும்பி வந்தவர்களில் சிலர் குடியேறிய யூதாவைச் சேர்ந்த ஓர் இடம் (*எஸ் 2:30*). இஃது இருந்த இடமாக அதுல்லாமுக்குத் தென்மேற்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலக் கிர்பெத் ஏல்-மக்பியே கருதப் படுகிறது.

**மக்பேலா** (MACHPHELAH - இரட்டைக்குகை)

மம்பிறேய்க்கு எதிரேயுள்ள இரட்டைக் குகைகளையுடைய இந்நிலத்தை ஆபிரகாம் தம் குடும்பத்தின் கல்லறை நிலமாக இத்தியனான எப்ரோனிடமிருந்து வாங்கினார் (*ஆதி 23*). ஆபிரகாம் (*25:8-9*), சாரா (*23:19*), ஈசாக்கு, ரபேக்கா, லேயா (*49:31*), யாக்கோபு (*50:13*) ஆகியோர் இங்கே புதைக்கப்பட்டனர். இவ்விடத்தை வாங்கியதன் மூலம் ஆபிரகாம் சொந்த நிலமுடையவராகவும், எபிரோனைச் சார்ந்தவராகவும் மாறினார்.

இப்பெயர் முதலில் இந்த இரட்டைக் குகையையும், பின்னர் அதைச் சுற்றியிருந்த நிலத்தையும் (*ஆதி 23:19; 50:13*), பகுதியையும் (*23:17; 49:30*) குறித்தது. இதுதான் பாலஸ்தீனத்தில் ஆபிரகாம் உரிமையாகக் கொண்ட முதல் இடம். இறைவனின் வாக்குறுதிகள் நிறைவேறுதலின் (காண்க. *12:7*) தனிச்சிறப்பான முன் உருவமாகும். பிற்கால யூதப்பாரம்பரியப்படி, ஏதேன் தோட்டப்பாதை இக்குகைக்குள்தான் தொடங்கியது.

இஃது இருந்த இடமாகப் பாரம்பரியமாகச் சுட்டிக்காட்டப்படும் இடம் ஏரோது கட்டிய சுற்றுச் சுவரைக் கொண்டுள்ளது. எபிரோனில் இஃது இருந்த இடத்தில் முதலில் ஒரு பைசாந்தியக் கோவில் கட்டப் பட்டது. அதன் அழிவின்மேல் இப்போது ஒரு மாஸ்கு உள்ளது.

**மக்பேனா** (MACHBENAH)

இது யூதாவிலுள்ள ஒரு நகரம் (*1 நாள் 2:49*). இஃது இருந்த இடத்தை அறிவதற்கில்லை. இது கபோனாகவோ (*யோசு 15:40*), மெக்கோனாகவோ (*நெகே 11:28*) அடையாளம் காட்டப்படும்.

**மக்ரோன்** (MACRON - நீண்ட தலையையுடையவன்)

தோலமியின் ஒரு பெயர். *2 மக் 10:12*-இன்படி இவர் ஆறாம் தோலமி பிலோமேத்தோர் காலத்தில் சைப்ரஸ் நாட்டின் ஆற்றல் மிக்க ஆளுநராகத் திகழ்ந்தார். இவர் பிலோமேத்தேரைக் கைவிட்டு, நான்காம் அந்தியோக்கு எப்பிபானுக்குத் தன் ஆதரவை அளித்தார். இவர் யூதருக்குச் செய்யப்பட்ட அநியாயத்தை முன்னிட்டு அவர்களை நீதியாய் நடத்தும் போக்கைக் கொண்டிருந்தார் (*2 மக் 10:12*). இதைப் பற்றி அந்தியோக்கு யூபாத்தோரிடம் அரசனின் நண்பர்களால் ஒருவேளை வீசியாவால், குற்றம் சாட்டப்பட்டார். தன்னுடைய பதவியைத் தக்க வைத்துக் கொள்ள முடியாமையால், இவர் நஞ்சுண்டு தன்னுயிரை மாய்த்துக் கொண்டார்.

சிலர் இந்த மக்ரோன் தோரிமேனின் மகனாக (1 மக் 3:38) இருக்கலாம் எனக் கருதுகின்றனர். ஆனால், இவன் யூதர்கள் மேல் பாதகமாக நடந்து கொண்டதால், இக்கருத்து ஏற்றுக்கொள்ள முடியாத ஒன் றாக உள்ளது. இவன், யூதர்கள் கிரேக்க வழிபாட்டை மேற்கொள்ள வேண்டுமென ஆணை பிறப்பித்தான் (2 மக் 6:8).

**மக்லா** (MAHLAH - பலவீனமான, நோயுற்ற)

1. இவள் செலோபுகாது என்பவரின் ஐந்து புதல்விகளுள் ஒருத்தி. இவர்கள் மோசே வாயிலாக மேற்கு மனாசேயில் தங்கள் உரிமைச் சொத்தைப் பெற்றனர். ஏனெனில், செலோபுகாதுக்கு ஆண் குழந்தை இல்லை (எண் 26:33; 27:1; 36:11;யோசு 17:3). இவர்களின் பெயர்கள் மூலத்தில் கானானிய நகர்களின் பெயர் களாக இருந்ததாகத் தெரிகிறது. மக்லா இருந்த இடம் தெரியவில்லை.

2. இப்பெயர் மனாசே வழிவந்த அம் மோலக்கேத்துவின் புதல்வன் அல்லது புதல்வியைக் குறிக்கிறது (1 நாள் 7:18).

**மக்லி** (MAHLI - புத்திக்கூர்மையுள்ள, தந்திரமுள்ள)

1. லேவியரான இவர், மெராரியின் மகன். இவர் சகோதரர் மூசியாவார். மேலும், இப்பெயர் மக்லியர் குரு வம் சத்தைக் குறிக்கும் இனப்பெயரும் ஆகும் (யாத் 6:19; எண் 3:20.33; 26:58; 1 நாள் 6:19.29; 23:21; 24:26.28; எஸ் 8:18).

2. மூசியின் மகனான இந்த லேவியர் மெராரியின் பேரன் ஆவார் (1 நாள் 6:47; 23:23; 24:30).

**மக்லோன்** (MAHLON - நோயுள்ளவன்)

இவர் எலிமெலக்கு, நகோமி ஆகியவர் களின் இரண்டு புதல்வரில் ஒருவர். இவர் கள் குடும்பத்தோடு மோவாபு நாட்டிற்குச் சென்றனர். ஆங்கே மக்லோன்,ரூத்து என்ற மோவாபியப் பெண்ணை மணந்தார். வாரிசு இல்லாமல் இறந்தார் (ரூத் 1:2.5; 4:9-10).

**மக்னதபாய்** (MACHNADEBAI)

இவர் அன்னிய மனைவியை விலக்கி விட வேண்டிய ஓர் இஸ்ராயேலர் ஆவார் (எஸ் 10:40).

**மசாதா** (MASADA - மலை அரண்)

சாக்கடலின் மேற்குக்கரையில் ஏன்-கேதிக்குத் தெற்கே 16 கி.மீ. தொலைவில் யாரும் எளிதில் நுழைய முடியாத குன்றின் மேலமைந்த கோட்டையே இந்த மசாதா. இஃது உரோமைக்கு எதிராகச் செய்த கிளர்ச்சியில் யூதர்களுக்கு மிகவும் பாதுகாப் பான கடைசி இடமாக கி.பி. 66 வரை இருந்தது. மிகவும் கடின முயற்சிக்குப் பிறகு கி.பி. 73-இல் உரோமையர்களால் பிடிக்கப்பட்டது. இக்கோட்டை, சுற்றி யுள்ள தரைமட்டத்திலிருந்து 180 முதல் 250 மீட்டர் அளவுக்குச் செங்குத்தாக எழுந்த பாறையின்மேல் கட்டப்பட்டிருந்தது.

புதிய ஏற்பாட்டில் இக்கோட்டை எந்த வித முக்கியப்பங்கு வகிக்கவில்லையெனி னும், வரலாற்று அறிஞரான யோசிப்பசு இதற்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கி றார். யூதா மக்கபேயுவின் சகோதரனும், தலைமைக் குருவுமாகிய யோனத்தானால் இக்கோட்டை அரண் செய்யப்பட்டது. கி.மு. 42-இல் கிரிக்கானு ஆட்சிபுரிந்த போது, ஏலிக்ஸ் என்பவன் இதனைக் கைப்பற்றினான். இச்சமயம் ஏரோது சீரியா வில் இருந்தான். ஆனால், விரைவில் திரும்பி வந்த ஏரோது மீண்டும் அதைக் கைப்பற்றி தனது உறவினர்கள் தங்கும் மிகச் சிறந்த இடமாக்கினான். பின் தனது அரசுரிமையைத் தருமாறு வேண்டி உரோமை சென்று திரும்பினான். பிறகு இக்கோட்டையை மிகச் சிறந்த நினைவுச் சின்னமாகவும், தன் உறவினர்கள் குடும்பம் தங்க வசதி மிக்கதாகவும் மாற்றி அமைத்தான்.

இது கி.பி. 6-66-இல் உரோமை ஆளு நனின் கீழ் இருந்தது. கி.பி. 66-இல் ''சிக்காரி'' எனும் புரட்சி இயக்கத்தினர் இதைக் கைப்பற்றினர். கி.பி. 68-க்குள், வெஸ்பாசியனின் படை நான்கு இடங்

களில் உள்ள கோட்டைகளைத் தவிர பாலஸ்தீனத்திலுள்ள மற்றக் கோட்டை களை எல்லாம் அழித்து விட்டது. இந்த நான்கு கோட்டைகளில் ஒன்று மசாதா வாகும். கி.பி. 73-இல்தான் பிலேவியு சில்வா என்ற படைத்தலைவன் பெரும் முயற்சிக் குப்பின் மசாதாவைக் கைப்பற்றினான். ஆனால் அங்கு அவன் கண்ட காட்சி உரோமையரைத் திகைக்க வைத்தது. அங் கிருந்த 960 பேரும், (7 பெண்களும் ஆறு குழந்தைகளும் தவிர), அனைவரும் தற் கொலை செய்து கொண்டு இறந்து கிடந்தனர்.

இவ்விடத்தில் நடந்த தொல்பொருள் ஆய்வில் ஏரோது கட்டிய கட்டடங்களின் சிதைவுகள் காணப்பட்டன. இக்கோட்டை யில் பின்னர் பல கட்டடங்கள் எழுப்பப் பட்டாலும், ஒரு பைசாந்தியன் கோவிலின் சிதைவுகளும், மற்றொரு துறவற மடத்தின் சிதைவுகளுமே காணப்படுகின்றன. யோசிப்பசு கூறும் பல உண்மைகள் மிகைப்படுத்தப்பட்டதாகத் தோன்றினா லும், மசாதா ஏரோதின் மிக உறுதியான கோட்டை என்பதை யாரும் மறுக்க முடியாது.

**மசு** (MASH - விரிவாக்கப்பட்ட)

இவர் ஆராமின் மகன் (ஆதி 10:23). இவர் ஓர் அரமேயிக்கு இனத்தின் குலப் பெயர் மூதாதையர். இப்பெயர் ஒரு மலை யைக்கூட சுட்டலாம். அக்காதிய ''மாசு'' என இதைக் கொண்டால், இது லெப னோன் - எதிர்- லெபனோன் ஆக இருக்க லாம். ஆதி 10:23-க்கு இணையான 1 நாள் 1:17-இல் இது மெசேக்கு என்றுள்ளது.

**மசுரேக்கா** (MASREKAH - திராட்சைத் தோட்டம்)

ஏதோம் நாட்டின் அரசனான சம்லா என்பவனின் சொந்த ஊராகும் (ஆதி 36:36; 1 நாள் 1:47). இஃது, இஸ்மே பள்ளத்தாக் கின் அருகில் ''மாகான்'' என்ற இடத் துக்குத் தெற்கு - தென்மேற்கில் 32 கி.மீ. தொலைவில், நபத்தேய இடமான கிர்பெத் எத்-தெலாயே என்ற இடத்துக்கு அருகி லுள்ள இக்கால எபெல் ஏல்-முஸ்ராகுவாக இருக்கலாம். யூசேபியு ஏதோம் நாட்டின் வட பகுதியிலுள்ள கெபலேனேயில் இதற்கு இடம் குறிக்கிறார்.

**மஸ்கில்** (MASKIL)

சங்கீதங்களின் வகையைக் குறிக்கும் ஒரு சொல்லாகத் தெரிகிறது. இச்சொல் சங் 32; 42; 44-45; 52-55; 74; 78; 88-89; 142 ஆகியவற்றின் தலைப்பில் வருகிறது. இச் சொல்லுக்கு ''ஆற்றல் மிக்க பாடல்'', ''போதகப்பாடல்'', ''தியானம்'' போன்ற பல பொருள்கள் கூறப்படுகின்றன.

**மஞ்சள்** (SAFFRON)

சமையலுக்கும் மருந்துகளுக்கும் பயன் படும், காரத்தன்மையுடைய ஒரு செடியும் அதன் காய்ந்த கிழங்கும் ஆகும். உ.ச. 4:12-14-இல் மணப்பெண் ஒரு பூங்கா அல்லது தோட்டத்துக்கு ஒப்பாவாள் என்று சித்தரிக்கப்படுகிறாள். இப்பூங்காவில் மணங்கமழ் மரங்களும், செடி கொடிகளும் உண்டு. அவற்றுள் மஞ்சள் செடியும் ஒன்றாகும். ஊதா நிறப்பூவுடைய இச்செடி இப்போது பாலஸ்தீனத்தில் வளர் வதில்லை. விவிலியக் காலங்களில் வளர்ந் திருக்கலாம்.

**மடமை, மூடத்தனம்** (FOLLY)

ஞானத்திற்கு எதிரானதாக மடமையை விவிலியம் கருதுகிறது (எ.கா. பழ 10:1.14). ஞானத்தைப்போல் மடமையும், வாழ்க்கை முறை மற்றும் அறிவு ஆகியவற்றுடன் கொண்டுள்ள தொடர்பை அடிப்படை யாகக் கொண்டு விளக்கப்படுகிறது. ஆகவே, மடையன் ஒரு மூடன், விவேகமற்ற வன், இறைப்பற்றில்லாதவன் ஆவான் (பழ 1:22-32; சீரா 22:9-18). இவன் சட்டத் தையோ, கிறிஸ்துவையோ ஏற்றுக்கொள்வ தில்லை.

1. ஞானிகள், வாழ்க்கை அனுபவம் குறைந்த இளைஞனுக்குப் பல காரியங் களைப் பற்றி எச்சரிக்கின்றனர். வேசியின் சோதனைக்கு இடங்கொடேல் (பழ 7:5-27). இறைப்பற்றின்மை ஆட்தன்மைப்படுத்தப்

பட்ட அறிவில்லாத பெண்ணின் சொற்களில் மயங்கிவிடாதே *(9:13-18)*. ஏனெனில், இவை இளைஞனை மதியீனச் செயல்களுக்கு இட்டுச்செல்லும். கட்டுப்பாடு, ஒழுங்கு முறைகளைப் புறக்கணிக்கும்போது என்ன நேரிடும் என்பதைத் தங்கள் சீடர்களுக்குக் காட்ட, ஞானிகள் அறிவிலியின் பண்புகளை எடுத்துக் கூறுகின்றனர் *(சீரா 21:14-20)*. இறைவன் நீதியோடு செயலாற்றவில்லை அல்லது அவர் எதையும் கண்டு கொள்வதில்லை என்று மூடன் கருதுகிறான் *(16:17-23)*. இதன் விளைவாக நீதிமானின் வாழ்க்கை மடமையானது என்றும் *(ஞான 5:4)*, அவர்களுடைய மரணம் சரி செய்ய முடியாத பெருந்துன்பம் *(3:2)* மற்றும் இழிவானது *(5:4)* என்றும் மூடன் கருதுவான்.

2. கிறிஸ்துவில் பிரசன்னமாக உள்ள இறையரசை எதிர்கொள்ளும்போது, மடமை என்பது இறைவனது சட்டத்தை நிராகரிக்கும் இறைப்பற்றின்மையில் மட்டும் அன்றி, இறை அருளிலிருந்தே தன்னைப் புறம்பாக்கிக் கொள்ளும் ஒரு போலி ஞானத்திலும் அடங்கியுள்ளது. கிறிஸ்துவின் சொற்களைக் கேட்கவும், அவற்றைக் கடைப்பிடிக்கவும் அடிப்படையான மனமாற்றம் எல்லாருக்கும் அவசியமாகும். அப்படிச் செய்யத் தவறுவது ஒருவனை அறிவிலியாக்குகிறது *(மத் 7:26)*. ஒருவன் தன் செல்வங்களில் ஆதரவு தேடுவது மடமையாகும் *(லூக் 12:20)*. மணப்பெண்ணின் அறிவிலித் தோழியர்களைப் போன்று *(மத் 25:1-13)* இறைவனுடைய கோரிக்கைகளுக்குப் பதில் அளிக்காமையும் பரிசேயர்களைப் போன்று இறைவனது கட்டளைகளைத் திரித்துக் கூறுவதும் *(23:17)* மடமையாகும். நோய், பாவம் மற்றும் தீய ஆவிகளுக்கிடையேயுள்ள தொடர்பை ஏற்றுக்கொள்ளும் எவரும், கெரசேனர் என்ற இடத்துப் பைத்தியக்காரன் நிகழ்ச்சியுரையில் அன்பாக மாறும் மடமையின் அடையாளத்தைக் காண்போம். சுற்று வட்டாரத்தையெல்லாம் நடுநடுங்கச் செய்து கொண்டிருந்த அவன், தன்னையும் கூட்டிச் செல்லும்படி இயேசுவிடம் மன்றாடினான் *(மத் 8:28-33 இணை)*. பவுலைப் பொருத்தமட்டும், சிலுவையில் அறையுண்ட கிறிஸ்துவில் தம்மையே வெளிப்படுத்தும் இறைவனின் ஞானத்தையும், கிறிஸ்துவின் போதனையின் மடமையையும் விசுவசியாதிருப்பதே உண்மையான மடமையாகும் *(1 கொரி 1:18-29)*. கிறிஸ்துவைப் பின்பற்றி *(மாற் 3:21)*, இவ்வுலகின் நோக்கில் மடையனாகக் கருதப்படுவதற்கு விசுவாசி தன்னைக் கையளிக்க வேண்டும் *(1 கொரி 3:18 தொ)*. பவுலும் இவ்வாறே மடையனாகக் கருதப்பட்டார் *(1 கொரி 4:10; அ.ப. 26:24)*. சிலுவையில் அறையுண்ட கிறிஸ்துவைப் போதிக்கும் ஒவ்வொரு அப்போஸ்தலருக்கும் இதே கதிதான் கிடைக்கும். ஏனெனில், அவர் போதிக்கும் மீட்பு, இறைவனுடைய மடமையில் விளைந்த கனியாகும்; இறைவனுடைய அன்பின் மடமையாகும். ஆனால், இதுவே மேலான ஞானமாகும் *(1 கொரி 1:25)*.

**மண ஒப்பந்தம்** (BETROTHAL)

காண்க. திருமணம்.

**மணங்கொள்ளா நோன்பு** (CELIBACY)

இஃது ஒருவன் சுயமாக விரும்பி, சமயப்பொருத்தனையாகத் திருமணம் செய்து கொள்ளாமையாகும். பழங்கால இஸ்ராயேலில் இப்பழக்கம் மிகவும் அரிதாகவே இருந்து. காண்க. எஸ்ஸேனியர்கள்.

புதிய ஏற்பாட்டில், இயேசு, இந்நிலை ஒரு சிறப்பான கொடை என்கிறார். ஏனெனில், இது விண்ணரசை முன்னிட்டு ஏற்றுக்கொள்ளும் நிலையாகும். அருள் பெற்றவர் மட்டுமே இதை ஏற்றுக்கொள்ளலாம் *(மத் 19:11-12)*. இந்நிலையைச் சுயமாக விரும்பி ஏற்கும் அர்ப்பணமாகக் கருதுகிறார் பவுல் *(1 கொரி 7:6-7)*. பவுலும் இந்நிலையைக் கடைப்பிடித்தார்.

கீழையத்திருச்சபையில், நீசேயாப் பொதுச்சங்கம் *(கி.பி. 325)*, குருக்களும் தியாக்கோன்களும் திருநிலைப்படுத்தப்படு

முன் திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால், அதற்குப்பின் திருமணம் செய்யக் கூடாது என்றும், ஆயர்கள் திருணமாகாத வர்களாகவே இருக்க வேண்டும் என்றும் கட்டளையிட்டது. மேற்கத்திய திருச்சபை யில் எல்வீராச் சங்கம் (கி.பி. *306*) குருக்கள் திருமணமாகாதவர்களாய் இருக்க வேண் டும் என்று கட்டளையிட்டது. ஆனால், பெரிய லியோ என்ற பாப்பு *(440-461)*, திருநிலைப்படுத்தலுக்குப்பின் குருக்களின் திருமண முறிவைத் தடை செய்தார். பதினொன்றாம் நூற்றாண்டிலிருந்துதான், திருச்சபையில் குருக்களிடமிருந்து இந்தத் திருமணம் கொள்ளா நிறைவான கற் புடைமை நோன்பு கோரப்பட்டது.

**மணமகள்** *(BRIDE)*

இச்சொல், மண ஒப்பந்தம் செய்யப்பட்ட பெண்ணையோ, அண்மையில் திருமணம் செய்து கொண்ட பெண்ணையோ குறிக்கும்.

கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்கும் இடையி லுள்ள உறவை விளக்க மணப்பெண் என்ற உருவகம் பயன்பட்டுள்ளது. பழைய ஏற் பாட்டில், யூதா (எசா *54:5*; காண்க. ஓசே *2:19*) அல்லது எருசலேம் (எசே *16:8*தொ) இறைவனோடு கொண்டுள்ள உறவு திரு மண அன்பு மொழிச் சொற்களில் விவரிக் கப்படுகிறது. புதிய ஏற்பாட்டில்தான் இந்த உருவகம் அதன் நிறைவான பொருளைப் பெறுகிறது. கிறிஸ்து மணமகனாவர். திருச் சபை மணமகள் ஆவாள். சிறப்பான முறையில் பவுல்,திருச்சபை கிறிஸ்துவோடு கொண்டுள்ள உறவை 2 கொரி *11:2*-இலும் கணவன்-மனைவியரிடையேயுள்ள மனித அன்பின் பின்னணியில் எபே *5:25*-இலும் விவரிக்கிறார். யோவானின் கருத்துப்படி விசுவாசிகள் வெட்டப்பட்ட செம்மறியான கிறிஸ்துவுக்குத் திருமணம் செய்யப்பட் டுள்ளனர் (திருவெளி *19:7-9*). வரவிருக்கும் மறுவாழ்வில் புதிய எருசலேம் மண மகளுக்கு ஒப்பிடப்படுகிறது *(21:2; 22:17)*.

**மணமாகா ஆண் பெண் கலவி** *(FORNICA-TION)*

இது திருமணமாகா ஆண்-பெண் கலவி யாகும்; திருமணப் பந்தத்திற்குப் புறம்பே செய்யப்படுவது. ஊனைச்சார்ந்த ஒழுக்கக் கேடாகக் கருதப்பட்டது. தமிழில் இது பரத்தமை, கெட்ட நடத்தை என்ற சொற் களால் மொழி பெயர்க்கப்படுகிறது (மத் *15:19*; மாற் *7:21*; காண்க. கலா *5:19*; எபே *5:3*; கொலோ *3:5*). பழைய ஏற்பாட்டில் வேசித்தனத்தைக் குறிக்கவல்லது (ஆதி *38:24*; உப *22:21*). ஆகவே, சிலை வழி பாட்டைக் குறிக்கவும், இஸ்ராயேல், உடன் படிக்கையைக் கைவிடுவதை விவரிக்கவும் இக்கருத்து பயன்பட்டுள்ளது (எசா *23:17*; எசே *16:26*; காண்க. திருவெளி *17:2.4*; *18:3*; *19:2*). புதிய ஏற்பாட்டில், திருமணத்துக்குப் புறம்பான எல்லாவிதமான பாலின உறவைக் குறிக்கவும் இச்சொல் பயன் பட்டுள்ளது.

**மணல், சிறுகற்கள்** *(GRAVEL)*

வஞ்சகத்தின் விளைவுகளைக் குறிக்க, இச்சொல் உருவகமாகப் பயன்படுகிறது (பழ *20:17*). ஆண்டவரிடமிருந்து சீயோன் அடைந்த துன்பங்களை விவரிக்கவும் இச் சொல் பயன்படுகிறது (புல *3:16*). இறைமக் களின் எண்ணிக்கையைக் குறிக்கவும் இச் சொல் பயன்படுகிறது (எசா *48:19*).

**மணவிலக்கு, விவாகரத்து** *(DIVORCE)*

I. **பழைய ஏற்பாடு:** மணவிலக்கைப் பற்றிய பழைய ஏற்பாட்டுப் போதனை யைத் திருமண நிறுவனப் பின்னணியில் புரிந்து கொள்ள வேண்டும். ஆதி *2:18-24*-இன்படி, மனிதனிடமிருந்தே படைத்த பெண்ணை அவனுக்குத் துணை யாக இறைவன் அளித்தார். அதன்பின் ஆதியாகம ஆசிரியர் அவர்களுடைய அன் புறவை ஒருவன் - ஒருத்தி என்ற மண ஒருமைக்கு அடிப்படையாக அமைக்கிறார். இருவருக்குமிடையே முழு ஒன்றிப்பு வேண்டும்: ''இருவரும் ஒரே உடலாய் இருப்பர்'' *(2:24)*.

மெசபொத்தாமியச் சட்டங்களோடு ஒப்பிடும்போது, எபிரேயச் சட்டம் மணவிலக்கைப்பற்றி தெளிவான சட்டங்களைக் கொண்டிருக்கவில்லை. ஆதியாகம நிகழ்ச்சியுரை மணவிலக்கு பற்றிய பகுதியைக் கொண்டிருக்கவில்லையாயினும், எபிரேயர்கள், மணவிலக்கு செய்து வந்தனர். இது, சட்டம் மணவிலக்கைக் கட்டுப்படுத்துவதிலிருந்து தெரிகிறது. ஒருவன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து அவளோடு கூடியபின், ''அவளது அருவருக்கத்தக்க செயலைக்கண்டு அவள் மேல் அவனுக்கு விருப்பமில்லாமல் போனால், அவன் முறிவுச்சீட்டு எழுதி, அவள் கையில் கொடுத்து, அவளைத் தன் வீட்டிலிருந்து அனுப்பி விடுவான்'' (உப *24:1*). மெசபொத்தாமியாவோடு கொண்டுள்ள ஒப்புமை மற்றும் பழைய ஏற்பாட்டுப் பொதுச்சூழ்நிலை ஆகியவற்றிலிருந்து மணவிலக்கு உரிமை கணவனுக்கு மட்டுமே உரியதாகத் தெரிகிறது. ஆனால், தன் மனைவி திருமணத்துக்குமுன் பாலின உறவு கொண்டிருந்ததாக, பொய்க்குற்றம் சாட்டியவனுக்கும் (*22:13-19*) திருமணத்துக்குமுன் அவளைக் கற்பளித்த கணவனுக்கும் இந்த மணவிலக்கு உரிமையில்லை (*22:28-29*). மணவிலக்கு பெற்ற பெண் வேறொருவனை மணந்து கொள்ளலாம். ஆனால், இந்த இரண்டாம் திருமணம், கணவனது மரணத்தாலோ மணவிலக்காலோ முடிவுக்கு வந்தால், அவள் தன் முதல் கணவனை மணம் செய்ய முடியாது (*24:104*). மணவிலக்கு பெற்ற பெண் ஒரு குருவைத் திருமணம் செய்ய முடியாது (லேவி *21:4*).

மோசே சட்டம் மணவிலக்கை அனுமதித்தாலும், ''அருவருக்கத்தக்க செயல்'' என்ற சொற்றொடரின் பொருள் யூத பிரிவுகளுக்குள் வேறுபட்டது. சம்மாயின் இராபிகளின் குழுவினர் இச்சொற்றொடர் கற்பின்மை அல்லது விபசாரத்தைக் குறிப்பதாகப் பொருள் கொண்டனர். இவர்கள் மனைவி பாலின முறையில் தன் கணவனுக்குப் பிரமாணிக்கமாய் இல்லாதபோது மட்டும் தான் மணவிலக்கை அனுமதித்தனர். இதற்கு மாறாக, இல்லேலின் குழுவினர், இச்சொற்றொடர் கணவனுக்கு விருப்பமில்லாத எந்தவொரு குறை அல்லது தவறைக் குறிப்பதாகக் கருதினர். இவர்கள், மனைவி சரியாகச் சமைக்கவில்லை போன்ற சிறிய குற்றங்களுக்காகவும் மனைவியை விலக்கிவிட அனுமதித்தனர். ஆகவே, ''அருவருக்கத்தக்க செயல்'' என்ற சொற்றொடரின் பொருள் தெளிவாக இல்லை. இது விபசாரத்தைக் குறிக்க முடியாது. ஏனெனில், இக்குற்றம் மரணத்தால் தண்டிக்கப்பட வேண்டியது (உப *22:22*). ஆகவே, விபசாரம் மணவிலக்குக்கு ஒரு காரணமாய் இருக்க முடியாது.

எரே *3:1-8* மோசே சட்டத்தை எதிரொலிக்கிறது. இது, மக்களிடையே பரவலாக இருந்த ஒரு பழக்கத்தைக் கண்டனம் செய்து அதைக்கட்டுப்படுத்துகிறது. இந்தப் பழக்கம் இரண்டாம் கணவனால் விலக்கி வைக்கப்பட்ட பெண்ணை முதல் கணவன் மணம் செய்து கொள்வதாகும். கானானியத் தேவதைகளோடு இஸ்ராயேலர் கொண்ட ஆன்மீக விபசாரத்திற்கு மணவிலக்கு என்ற உருவகத்தைச் சாற்றிக்கூறி, இறைவன் தமது தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுக்கு ஆன்மீக முறிவுச்சீட்டு கொடுத்துவிட்டதாக எரேமியா குறிப்பிடுகிறார் (ஆனால் பிரமாணிக்கமற்ற இஸ்ராயேலுக்கு இறைவன் முறிவுச்சீட்டு கொடுக்கவில்லை என்று எசா *50:1* கூறுவதை நோக்குக). மனித சட்டத்திற்கு மாறாக, இஸ்ராயேலின் ஆன்மீக மணவிலக்கு மற்றும் கானானுடன் செய்து கொண்ட இரண்டாம் மணத்தின் விளைவுகளை அழித்து விட விரும்பினால், இஸ்ராயேல் உண்மையாக மனம்வருந்தி அதன் உடன்படிக்கை இறைவனிடம் திரும்பி வரவேண்டும் (எரே *3:11-14*).

மணவிலக்கு வாய்பாடு ஓசே *2:4*-இல் கொடுக்கப்படுகிறது: ''அவள் எனக்கு மனைவியுமல்லள், நான் அவளுக்குக் கணவனுமல்லன்''. மோசே சட்டம் மணவிலக்கு உரிமையைக் கணவனுக்கு மட்டும் அளித்தது. ஆனால் இராபிகளின் விளக்கங்கள், கணவன் தொழுநோயால் பீடிக்கப்பட்

டிருப்பது போன்ற சில குறிப்பிட்ட சூழ் நிலையில் மனைவிக்கும் மணவிலக்கு உரிமை அளித்தன. ஆயினும் பிற்காலத்தி லும், மணவிலக்கு கணவனுக்கு மட்டும் உரிய சலுகையாக இருந்தது.

நாடு கடத்தப்பட்டபின், மணவிலக்குக்கு எதிர்ப்பு இன்னும் வலுவாயிற்று. ஒருவன் தன் இளமையில் மணந்த மனவியை விலக்கி வைப்பதை மலாக்கி கண்டிக்கிறார் (மலா 2:14-16). அவ்விதமே சீராக்கும் கண்டனம் செய்கிறார் (சீரா 7:26). ஆனால், இவர் தீய பெண்ணை மணவிலக்கு செய்யு மாறு ஆலோசனை கூறுகிறார் (25:26). மணவிலக்கை மலாக்கி கண்டனம் செய் வது யூதர்களுக்கும் பிற மதத்தினருக்கும் இடையிலான திருமணம் பற்றிய நெகேமி யாவின் சீர்திருத்தத்தையும் (நெகே 13:23-27), யூதர்கள் அன்னிய மனைவியரை விலக்கிவிட வேண்டும் என்று எஸ்ரா வலியுறுத்தியதையும் (எஸ் 9-10) பிரதி பலிக்கிறது.

II. **புதிய ஏற்பாடு**

**1. நற்செய்திகள்:** ஒத்தமை நற்செய்திகள் மூன்றும் மணவிலக்கு பற்றிய இயேசுவின் கூற்றைக் கொண்டிருந்தாலும் ஒவ்வொரு நற்செய்தியாளரும் இயேசுவின் சொற் களைத் தனக்கே உரிய வடிவில் கொண்டுள்ளனர்.

**அ). மாற்கு** *(10:3-12)*: காலத்தால் முந்திய இந்த நற்செய்தியிலிருந்து, இயேசு திரு மணம் மற்றும் மணவிலக்கு பற்றி கடுமை யான கருத்துக் கொண்டிருந்ததாகத் தெரி கிறது. அவர் மணவிலக்கையும், மண விலக்குச் சான்றிதழைக் கொடுப்பதையும் ஏற்றுக்கொள்கிறார். ஏனெனில், இஸ்ராயே லின் ''கடின உள்ளத்தின் பொருட்டே'' சட்டம் எழுதி வைக்கப்பட்டது என்பதை உணர்ந்திருந்தார் (ஆனால் படைப்புச் சட் டம் இதை அனுமதிக்கவில்லை). ஆயினும் குற்றத்தைப் பொருட்படுத்தாது, மணவிலக் கும் மறுமணமும் விபசாரத்திற்கு ஒப்பாய் இருப்பதால், மணவிலக்கை உற்சாகப் படுத்த முடியாது என்று இயேசு உறுதி யாகக் கூறுகிறார் (10:11-12). இவ்வாறு இயேசு, ஏரோது தன் சகோதரனின் மனை வியை மணந்து கொண்டதைக் கண்டனம் செய்கிறார். திருமுழுக்கு யோவான் ஏரோதைத் துணிவாக எதிர்த்ததை மறைமுக மாக ஆதரிக்கிறார்.

**ஆ. லூக்கா:** இந்நற்செய்தி மத்தேயு வோடு கொண்டிருப்பதைவிட மாற்கோடு நெருங்கிய ஒற்றுமை கொண்டுள்ளது. லூக்கா, திருமணம் மற்றும் மணவிலக்கு பற்றிய இயேசுவின் கூற்றை வெறுமனே தருகிறது. இங்கு, எந்த மணவிலக்கும், அது சட்டத்தால் அனுமதிக்கப்பட்டாலும், விப சாரமாகும் என்று கூறி இயேசு மோசே சட்டத்தைக் கூர்மைப்படுத்துகிறார் (லூக் 16:18).

**இ) மத்தேயு(5:31-32; 19:3-9):** இதில் மணவிலக்கு பற்றி இயேசு ஓரளவு எளிதில் இசைவிணக்கமுடையவராகத் தோன்று கிறார். மத்தேயு இயேசுவின் மூன்று கூற்றுக் களைத் தருகிறார். 1) திருமணம் ஒரு படைப்புக் கட்டளையாகும். இச்சட்டம் முறிப்பை அனுமதிக்கவில்லை (மத் 19:4-6). 2) இஸ்ராயேலரின் ''கடின உள்ளத் தின் பொருட்டே'' மோசே சட்டம் மண விலக்கை அனுமதித்தது (19:8). 3) மண விலக்குக்குப் பரத்தமை காரணமாயிருந் தால் அன்றி, மணவிலக்கு விபசாரத்திற்குச் சமமானதாகும் (19:9). இந்த மூன்று கூற்று களுக்கிடையேயுள்ள இணைப்பு பற்றி அறிஞர்களுக்கிடையே கருத்தொற்றுமை யில்லை. இயேசு எவ்வகை மணவிலக்கை யும் அனுமதிக்கவில்லை என்று கூறுவர் சிலர் (ஏனெனில் முதல் கூற்று மூன்றாவது கூற்றை வெறுமையாக்குகிறது). வேறு சிலர், சம்மாயின் குழுவினரைப் போன்று, மத்தேயுவின் விவரிப்பு விதிவிலக்குக்கு இடமளிக்கிறது என்பர் (இந்த விதி விலக்கு, திருமணத்திற்குப்பின் செய்யப் பட்ட பாலினப் பிரமாணிக்கமின்மை அல் லது பரத்தமையாகும்). ஆகவே, மத்தேயு வின் விவரிப்பு மணவிலக்கை நேர்மை யெனக் காட்டுகிறது என்பர் (காண்க. 5:31-32).

மத்தேயுவில் வரும் இரு பகுதிகளும் (5:31-32; 19:3-9) சமமாகவும் தெளிவாகவும் இல்லை. விளக்கவுரையாளர்களால் பெரிதும் தர்க்கிக்கப்பட்டுள்ளன. மத் 5:32-இல், மாற்கு மற்றும் லூக்காவில் வரும் கூற்று, ''எவரும் தம் மனைவியைப் பரத்தமைக்காக அன்றி வேறு எந்தக் காரணத்திற்காகவும் விலக்கிவிடக்கூடாது'' என்று வரையறை செய்யப்படுகிறது. மாற் 10:3-12-க்கு இணையான மத் 19:3-9 என்ற பகுதியும் இதே வரையறையைக் கொண்டுள்ளது.

மத்தேயுவில் பரிசேயர் கேட்ட ''எக்காரணத்திற்காகவாவது ஒருவன் தன் மனைவியை விலக்கிவிடுவது முறையா?'' என்ற கேள்வி, முன் கூறப்பட்ட இல்லேல் மற்றும் சம்மாயைச் சேர்ந்த இராபிகளின் குழுக்களிடையே நிலவிய தர்க்கத்தைச் சுட்டுவதாக அமைகிறது. தமது போதகத்தின் விவிலிய அடிப்படையாக இயேசு ஆதி 1:27; 2:24-ஐ எடுத்துக் கூறுகிறார்.

மத்தேயுவில் வரும் வாசகம் தொடக்கத் திருச்சபைச் சமூகத்தில் நிலவிய வேறுபட்ட பாரம்பரியத்தைக் கொடுக்கிறது என்று விளக்கவுரையாளர் பலர் கருதுவர். தொடக்கக்காலத்திலிருந்து இந்தப் பாரம்பரியம் கிரேக்கத் திருச்சபையில் இருந்து வந்துள்ளது. மத்தேயுவின் வாசகத்தைவிட மாற்கு மற்றும் லூக்காவின் வாசகம் மூலப்படிவமாகும் என்பதைச் சிலரே ஐயுறுவர். போன் சிர்வென் என்ற அறிஞர் ஒன்றைக் கவனத்திற்குக் கொண்டு வருகிறார். ''கெட்ட நடத்தைகள்'' என்று மொழிபெயர்க்கப்படும் ''போர்னேயா'' (Porneia) என்ற கிரேக்கச் சொல் சாதாரணமாய்ப் பரத்தமையைக் குறிக்கப் பயன்படுவதில்லை. இச்சொல் வைப்பாட்டியோடு கொள்ளும் தகாத உறவைக் குறிப்பதாகும். இதைத் தர்க்கத்திலிருந்து இயேசு நீக்குகிறார். இது தோற்றத்திற்குத்தான் திருமணமாகும்; உண்மையான திருமணமன்று. மாற்கு மற்றும் லூக்காவில் வரும் வாசக வடிவு, அறியக் கூடிய எந்த யூத விளக்கத்திற்கும் முரணாக உள்ளது. இஃது இயேசுவின் ஒழுக்க போதனையின் மிகப் புரட்சிகரமான கூறுகளில் ஒன்றாகும்.

**2. பவுல்:** 1 கொரி 7-இல், பவுல் மணமாகாத தனிமை வாழ்வை விரும்பினாலும், திருமணத்தையும் அதன் முறிவுபடாத் தன்மையையும் ஏற்றுக் கொள்கிறார். உரோமைச் சட்டத்தின்கீழ் மனைவியரும் மணவிலக்கு செய்ய அனுமதிக்கப்பட்டாலும் கணவனோ மனைவியோ மணவிலக்குச் செய்யலாகாது (7:10-11). மனைவி கணவனை மணவிலக்குச் செய்தாலும், அவள் தன் கணவனுடன் ஒப்புரவாக முடியவில்லையென்றால், அவள் தனித்து வாழவேண்டும் (7:11). இவ்வாறு பவுலும் மணவிலக்கு விபசாரத்திற்குச் சமமானது என்று கருதுகிறார். இப்போதகம் பவுலினுடையதன்று, ஆண்டவருடையதே ஆகும்.

கொரிந்திய விசுவாசிகளான பெண்களுக்கும், விசுவசியாதவர்களுக்குமிடையிலான திருமணம் ஒரு சிறப்பான பிரச்சனையாகும். விசுவசியாத கணவன் அவளோடு கூடிவாழ உடன்பட்டால், அவள் கணவனைக் கைவிடலாகாது. அவள் தன் நன்மாதிரியால் அவனை மீட்கும் நம்பிக்கை உள்ளது. விசுவாசியல்லாதவர் பிரிந்துபோனால் போகட்டும். அப்போது விசுவாசி திருமணப்பிணைப்பால் கட்டுப்பட்டவர் அல்லர் (7:12-16). இப்போதகம் பவுலின் பரிந்துரையாகும், ஆண்டவருடையதன்று.

### மணி (BELL)

1. இதைக் குறிக்கும் எபிரேயச் சொல்லின் பொருள், 'முழக்குவது', 'பறையடிப்பது' ஆகும். தலைமைக் குருவின் ஆடையில் பொருத்தப்பட்டிருந்த ஒரு பொருள் (யாத் 28:33-34; 39:25-26; சீரா 45:9). இதற்காகச் செய்யப்பட்ட மணிகள் பொன்னால் ஆனவை. இவையும், மாதுளங்கனிகளும் ஒன்றுவிட்டு ஒன்றாக தலைமைக் குருவின் ஆடையில் பொருத்தப்பட்டன. ''ஒரு பொன்மணியும், ஒரு மாதுளம்பழமும், மறுபடி ஒரு பொன்மணியும் ஒரு மாதுளம் பழமுமாக இருக்க வேண்டும்'' (யாத் 28:34). இந்த மணிகளுடைய குறிப்பிட்ட நோக்கம் வேறுபடுகின்றது (யாத்

*28:35; சீரா 45:9).* மணிகள் இடியையும் மாதுளங்கனிகள் மின்னலையும் குறித்தன என்று யோசிப்பசு கூறுகிறார்.

2. குதிரைகளுக்கு அணிவிக்கப்பட்ட ஒரு அழகு ஆபரணம். இதைக்குறிக்கும் எபிரேயச் சொல்லின் சொற் பொருள், 'கிலுகிலுப்பது' என்பதாகும் *(செக் 14:20).*

**மணி, நேரம்** *(HOUR)*

இரவைக் ''காவல் நேரங்கள்'' என்று பிரிப்பதுபோல், சூரிய உதயமுதல் அது மறையும் வரையுள்ள பகலைப் பிரிக்கும் முறையாகும். நாடு கடத்தப்பட்டு, திரும்பிய காலத்தில் நிழற்கடிகையின் உதவியால் எபிரேயர் பகலைப் பன்னிரண்டு சம பாகமாகப் பிரித்தனர் *(யோவா 11:9).* இச்சம பாகத்தின் நீளமும் பருவ காலத்திற்கேற்ப வேறுபடும். ஒரு குறிப்பிட்ட மணிநேரம் பற்றிய குறிப்புகளைத் தோராயமாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். சான்றாக, மூன்றாம் மணி (காலை 9-ஆம் மணி) *(மத் 20:3; மாற் 15:25; அ.ப. 2:15);* 6-ஆம் மணி (மதியம்) *(மத் 20:5; 27:45; மாற் 15:33);* 9-ஆம் மணி (பிற்பகல் 3-ஆம் மணி) *(மத் 20:5; 27:45-46; மாற் 15:33-34; அ.ப. 3:1; 10:30).* பதினோராவது மணி பகலின் கடைசிப்பகுதியையம், மறைந்து போகும் வாய்ப்பையும் குறிக்கிறது *(மத் 20:6.9; காண்க. 1 யோவா 2:18).*

மேலும் நேரம் என்ற சொல் ஒரு முக்கிய பொழுதையோ, குறிப்பிட்ட காலத்தையோ குறிக்கலாம் *(தானி 3:6.15; மத் 8:13; காண்க. எரே 46:17; லூக் 22:53; யோவா 5:28; உரோ 13:11; திருவெளி 3:10).* நற்செய்திகளில், இவ்விதம் குறிக்கும் வழக்கு பெரும்பாலும் இயேசுவின் இறப்பு, உயிர்ப்பு ஆகிய நிகழ்ச்சிகளைக் குறிக்கிறது *(மத் 25:13; மாற் 14:35.41; யோவா 2:4; 7:30;17:1).*

**மணிக்கல், கடல் வண்ணக்கல்** *(JASPER)*

இது பச்சைநிற அல்லது பழுப்பு நிறமுடைய மணிக்கல்லாகும். இது மூன்று எபிரேய, கிரேக்கச் சொற்களை விவரிக்கிறது.

இது தலைமைக்குருவின் தீர்ப்பு கூறும் மார்புப் பட்டையில் பதிக்கப்பட்ட கற்களில் ஒன்று *(யாத் 28:20).* தீர்நாட்டு அரசனின் ஆடையை அழகுபடுத்திய கற்களில் ஒன்று *(எசே 28:13).* மேலும், இஃது, அரியணை விவரிப்பிலும் *(திருவெளி 4:3),* கடவுளுடைய மாட்சிமை விவரிப்பிலும் *(21:11),* நகரின் மதில் விவரிப்பிலும் *(21:18)* பயன்பட்டுள்ளது. புதிய எருசலேமின் அடிக்கற்களில் இது முதலாவதாகும் *(21:19).*

**மணிமுடி** *(CROWN)*

உயர்பதவியில் உள்ளவர்களுக்கும் விளையாட்டு வீரர்களுக்கும் அவர்களுடைய உயர்வைக் குறிக்க அளிக்கப்படும் தலை அணியாகும்.

*யாத் 29:6*-இன்படி தலைமைக்குரு திருநிலைப்படுத்தும் சடங்கில், அவர் தலைமேல் தலைப்பாகையை வைத்து, அதன் மேல் புனித முடியையும் வைக்க வேண்டும். இந்த மணிமுடி பசும்பொன்னால் செய்யப்பட்டு அதன்மேல் ''ஆண்டவருக்கு அர்ப்பணம்'' என்று முத்திரைபோல் பொறிக்கப்பட்டிருக்கும். அஃது ஒரு நீல நாடாவால் தலைப்பாகை மேல் இணைத்துக் கட்டப்பட்டு, தலைப்பாகையின் முன்புறம் நிற்கும் *(28:37).* இந்தப் புனித மணிமுடி, தலைமைக் குருவை மக்களின் புனிதப் பிரதிநிதியாக அடையாளம் காட்டியது. மக்களின் புனிதப் படையல்கள் ஆகியவற்றிலுள்ள குறைபாடுகளைத் தலைமைக் குரு சுமந்து கொள்ளவும், இதனால் யாவும் ஆண்டவர் திருமுன் ஏற்கப்பெறவும், மணிமுடி எப்போதும் தலைமைக் குருவின் நெற்றியின் மேல் நிற்கும் *(28:38).*

அரசர்கள் அணியும் முடி தங்கத்தால் ஆனது *(சங் 21:3; எசே 2:26).* இந்த முடியிலே விலையுயர்ந்த கற்கள் பதிக்கப்பட்டிருந்தன *(செக் 9:16; 2 சாமு 12:30; திருவெளி 21:1).* இந்த முடி அரசனின் அதிகாரம் மற்றும் மதிப்பின் அடையாளமாகும். அரசன் தன் அரச அரியணையில்

அமரும்போதும் போர் புரியச் செல்லும் போதும் இதை அணிந்திருப்பான் (2 சாமு 1:10). சங் 21:3-இல் இறைவன் அரசன் தலையில் பசும்பொன் முடி சூட்டுகிறார். சங் 132:18-இல், தாவீதின் மீது அவரது மணிமுடி ஒளிவீசும்போது, அவருடைய எதிரிகள் இகழ்ச்சி எனும் உடையை உடுத்திக்கொள்வர்.

முதுமை மணிமுடிக்கு ஒப்பிடப்படு கிறது. அது மதிப்பிற்குரியதும் நேர்மை யான வாழ்வின் பயனும் ஆகும் (பழ 16:31). சாலமோனின் திருமணத்தில், அவ ரது அன்னை அவருக்கு அணிவித்த மணி முடி (உ.ச. 3:11), மேன்மையின் மாலை யாகவும், பதவியைக் குறிக்கும் மகுடமாக வும் இருக்கலாம் (காண்க. எசே 23:42). தலைமைக் குரு யோசுவாவின் தலையிலே சூட்டப்படும் முடி அவரது அதிகாரத்தை அடையாளமாக உணர்த்துகிறது (செக் 6:11).

பொதுவாக மணிமுடி அரசிகளாலும் (எரே 13:18),பெருங்குடி மக்களாலும் (எஸ் 8:16), மணமகனாலும் (உ.ச. 3:11) அணியப் பட்டது.

புதிய ஏற்பாட்டில் ''ஸ்தேவானோஸ்'' என்ற கிரேக்கச் சொல் விளையாட்டு வெற்றி வீரனுக்கு அளிக்கப்படும் வெற்றி வாகையையோ, மணிமுடியையோ குறிக்க லாம். 1 கொரி 9:25-இல் பவுல் முன்னதைக் குறிக்கிறார். பந்தயத்தில் போட்டியிடுபவர் கள் எல்லாரும் தங்களை எல்லாவகை யிலும் ஒடுக்குகிறார்கள். அவர்கள் அழி வுறும் வெற்றி வாகையைப் பெறுவதற்காக இப்படிச் செய்கிறார்கள். விசுவாசிகளோ அழியாத வெற்றி வாகையை அடைவதற் காக இப்படிச் செய்கிறார்கள். தான் எதிர் பார்க்கும், நல்வாழ்வின் பரிசான வெற்றி வாகையைப் பற்றி பவுல் பேசுகிறார். இதை அவருக்கு மட்டுமன்று, ஆண்டவரது பிரசன்னத்தை ஆர்வத்தோடு எதிர்பார்க்கும் அனைவருக்கும் ஆண்டவர் இறுதி நாளிலே அருள்வார் (2 திமொ 4:8). ஆண்டவரது வருகையின்போது, தெசலோனிக்கேயர்கள் பவுலுக்கு வெற்றிவாகையாக இருப்பர் (1 தெச 2:19). தலைமை ஆயர் தோன்றும் போது, பிரமாணிக்கமுள்ள மூப்பர்கள். மகி மையின் வாடாத வெற்றிவாகை சூட்டப் பெறுவர் (1 பேதுரு 5:4). சோதனைகளை மனவுறுதியோடு தாங்குபவன், இறைவன் வாக்களித்த வாழ்வை வெற்றிவாகையாகப் பெறுவான் (யாக் 1:12; திருவெளி 2:10). பிலதெல்பியாத் திருச்சபை, அதன் அதி காரத்தின் அடையாளமான வெற்றி வாகையை எவனும் பறித்துக் கொள்ளாத படிக்கு உண்மையான போதகத்தில் நிலைத் திருக்கும்படி எச்சரிக்கப்படுகிறது. ஏனெ னில், அது பெருந்துன்பம் வந்து விழும் நேரத்தில் அதைக் காப்பாற்றும் (திருவெளி 3:11).

இறைவனுடைய அரியணையைச் சூழ்ந் திருக்கும் மூப்பர்கள் தங்கள் தலையில் சூடியிருக்கும் பொன்முடியை (4:4), அரி யணை முன் வைத்தனர் (4:10). விண்ணகத் தில் அரியதோர் அறிகுறியாகத் தோன்றிய பெண் தன் தலைமீது பன்னிரு விண்மீன் களை முடியாகச் சூடியிருந்தாள் (12:1). இதற்கு மாறான வேறொரு அறிகுறியான பறவை நாகம் தன் ஏழு தலைகளிலே ஏழு முடிகளைக் கொண்டிருந்தது (12:3). கடலி லிருந்து வெளிவந்த ஏழு தலைகளையும், பத்துக்கொம்புகளையும் கொண்ட விலங்கு தன் கொம்புகளில் பத்து முடிகளைக் கொண்டிருந்தது (13:1). வெண் குதிரையில் ஏறி வந்தவர் தலையில் மகுடங்கள் பல சூடியிருந்தார் (19:1-2). ஏனெனில், அவர் எல்லா அரசர்கள் மேலும் அதிகாரம் கொண்டிருந்தார்.

**மண்கல உடைசல்** (POTSHERD)

இது மட்கலத்தின் உடைந்த ஒரு துண்டா கும் (யோபு 41:30). மண்கல உடைசல் அல்லது ஓட்டாஞ்சில் என்பது உலர்ந்த, வெறுமையான, காய்ந்த நிலைக்கு ஓர் அடையாளமாகும் (சங் 22:15). இஃது எதற்குமே பயன்படாத ஒரு நிலைக்கு அடையாளமாகும் (எசா 45:9).

இஸ்ராயேல் மக்கள் மீது கடவுள் வழங்கப் போகும் நியாயத்தீர்ப்பு, எதற்கும் பயன்படாத அளவுக்குக் கொடுமையாக உடைக்கப்படும் மட்பாண்டத்திற்கு ஒப் பிடப்படுகிறது *(எசா 30:14)*.

எருசலேமில் இன்னோம் பள்ளத்தாக் கிற்கு அருகில் ஒரு நகர வாயில் உள்ளது. இதன் பெயர் மண்கல உடைசல் வாயில் என்பதாகும் *(எரே 19:2)*. இங்கிருந்துதான் குயவர்கள் தங்களின் வீணான மண் கலங் களை நகர மதில்களுக்கு அப்பால் தூக்கி எறிவர்.

யோபு சாம்பல் மேட்டில் அமர்ந்து தன் புண்களைச் சொறிந்து கொள்ள இந்த ஓட்டாஞ்சில்லையே பயன்படுத்தினார் *(யோபு 2:8)*.

எசே *23:34*-இல் எருசலேம் குடிக்கவிருக் கும் சமாரியாவின் கிண்ணத்தின் உடைந்த சில் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. ஆனால், வாசகம் தெளிவாக இல்லை.

புராணத்தில் வரும் கவசமிடப்பட்ட வேதாளத்தின் கீழ்ப்பகுதி ஓட்டாஞ்சில் போலக் கூர்மையாக இருப்பதாகக் கூறப் பட்டுள்ளது *(யோபு 41:30)*.

**மண்கல உடைசல் வாயில்** *(POTSHERD GATE)*

எருசலேமின் தென்கிழக்குப் பகுதியில் அமைந்த ஒரு வாயில் இது. இந்த வாயில் இன்னோம் பள்ளத்தாக்குக்கும், அங்கிருந்து குயவன் நிலத்துக்கும் இட்டுச்செல்கிறது *(எரே 19:2)*. சிலர் இதைக் ''குப்பைமேட்டு'' வாயிலாக அடையாளம் காட்டுகின்றனர்.

**மண்கலத் தொழில்** *(POTTERY)*

மண்பாண்டம்தான் மனிதன் முதன் முத லில் பல பொருட்களைச் சேர்த்துத் தயா ரித்த முதல் பொருளாகும். இது குயவன் சக்கரத்தில் அமைப்புக் கொடுக்கப்பட்டு, இக்களிமண் அமைப்பு தீயில் ஓர் குறிப் பிட்ட வெப்பநிலையில் சுடப்படுகிறது. இவ்வாறு சுடப்படும்போது அதன் வேதி யல் கூறுகள் அதன் இயல்புகள் முதலியன மாறுபடுகின்றன. இன்றும் இத்தொழில் வளர்ந்த நாடுகளின் ஓர் முக்கிய தொழிலாகும்.

விவிலியத்தில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சி கள் நடந்த காலத்தில் மண்பாண்டங்கள் நல்ல தரமான சிவப்புக் களிமண்ணால் செய்யப்பட்டன. இவ்வாறு உருவாக்கப் பட்ட கலங்கள் குயவன் வெளியில் உலர்த் தப்பட்டு, பின் கழுவப்படும். இக்குயவன் நிலத்திலிருந்துதான் கலங்கள் செய்ய களி மண்ணை எடுப்பர். குயவன் நல்ல தரமான களிமண்ணைத் தேடிக் கண்டுபிடிக்க வேண் டும். பின், அதைக் கழுவி, தேவையான அளவு நீரைச் சேர்க்க வேண்டும். இதற்குத் தனித் திறமை வேண்டும் *(எசா 41:25)*. ஆனால், செங்கல் செய்வது யார் வேண்டு மானாலும் செய்யலாம் *(நாகூ 3:14)*.

குயவன் ஒரு களிமண் உருண்டையை எடுத்துச் சக்கரத்தின் மேல் வைத்து வேக மாகச் சுற்றுவான். சில நேரங்களில் சுற்று வதற்கு ஓர் உதவியாளன் இருப்பான். அச் சமயத்தில் குயவன் தன் கையால் பானையை உருவாக்குகிறான் *(எரே 18:3; சீரா 38:29-30)*. நன்றாகப் பதப்பட்ட களி மண்ணாக இருந்தால் நல்ல சீரான அமைப்பு கிடைக்கும். உலர்த்திய பின், இது சூளையில் இடப்பட்டுச் சுடப்படும்.

மண்பாண்டம் தயாரிக்கும் மற்றொரு முறையின்படி முன்பே செய்யப்பட்ட அச் சின்மேல் களிமண் பூசப்படும். இவ்வாறு அந்த அச்சின் உருவத்தை அக்களிமண் உருண்டை பெற்றவுடன் அதைச் சுட்டு பானையாக்குவர் *(யோபு 38:14)*. கானானி யர்கள் இம்முறையையே கையாண்டனர். இவ்வாறுதான் புதிய ஏற்பாட்டுக் காலத்து விளக்குகள் செய்யப்பட்டன.

மூன்றாவது முறைப்படி குயவன் தன் விருப்பத்தின்படி கையால் உருவத்தைக் களிமண் கொண்டு அமைப்பான். ஆனால், இஃது அதிகமாக இஸ்ராயேலில் பயன் படுத்தப்படவில்லை. சில உருவங்கள், பொம்மைகள், அடுப்புகள், பழமையான பாத்திரங்கள் போன்றவை இவ்வாறு கையால் குயவன் விருப்பப்படி செய்யப் பட்டன.

இவ்வாறு செய்யப்பட்ட கலங்களைச் சூளையில் இட்டு எரிப்பதற்குத் தனித் திறமை தேவை. ஏனெனில், வெவ்வேறு வகைக் களிமண்ணுக்கு வெவ்வேறு நிலை வெப்பமும், அதன் தரத்திற்குத் தக்கவாறு தகுந்த வெப்பமும் தேவைப்படுகிறது. எந்த நிலை வெப்பத்தில் எரிப்பது என்பது குயவனின் தொழில் இரகசியம். இதிலும் சில வேளைகளில் மண்பாண்டங்கள் சரி யாக வருவதில்லை. இவ்வாறு வீணான மண்பாண்டங்கள் விற்கப்படும் அல்லது தூக்கி எறியப்படும்.

இஸ்ராயேல் மக்கள் தங்கள் அலங்காரங் களுக்குத் தோல் போன்றவற்றைப் பயன் படுத்தவில்லை. மாறாக, தங்கள் அரச இருக்கையை அலங்கரிக்க வர்ணங்களைப் பயன்படுத்தினர். அரசு இஸ்ராயேல், யூதா எனப் பிரிந்தபின் இத்தகைய அலங்காரங் கள் வளர்க்கப்பட்டன.

முதன் முதலில் மண்பாண்டங்கள் புதிய கற்காலத்திய எரிகோ கண்டுபிடிப்புகளில் தான் காணப்பட்டன. பொதுவாக, தானி யம் போன்றவற்றைச் சேமித்து வைக்கவே இது பயன்படுத்தப்பட்டது. ஏனெனில், உலோக, சாக்கு, மரக் கொள்கலன்கள் அக்காலத்தில் மிக விலை உயர்ந்தவை. குயவன் வீடு என்பது அவன் மண்பாண்டம் செய்யும் இடத்தைக் குறிக்கும். இம்மண் பாண்டங்கள் பொற்கொல்லனுக்கும் மற்றத் தொழிலாளிகளுக்கும் பயன்பட்டன. ஏனெ னில், மண்பாண்டங்கள் அதிக வெப்பத் தைத் தாங்கும் தன்மையுடையன.

கானானியக் கலாச்சாரத்தில் அஸ்தார்தே எனப்படும் தேவதையின் உருவம் இத்த கைய களிமண்ணால்தான் செய்யப்பட்டது *(ஆதி 31:19-55)*. ஆனால் பாகாலின் உருவம் உலோகத்தால் ஆனது. கானானியர்களின் பலிபீடங்கள் பாம்பு போன்ற உருவங் களால் அணி செய்யப்பட்டிருந்தன.

கண்ணாடி கிடைக்கும் முக்கிய இடங் களில் பாலஸ்தீனமும் ஒன்று *(யோபு 28:17)*. இது தங்கத்தைபோல் விலையுயர்ந்தது. நவீன கண்ணாடிகளை விட அவை சற்று மாறுபட்டவை. புதிய ஏற்பாட்டுக் காலத் தில் கண்ணாடி செய்யும் தொழில் சற்று முன்னேற்றமடைந்தது *(திருவெளி 4:6; 21:21; காண்க. பழ 26;23)*.

வழிபாட்டிலே பயன்படுத்தப்பட்ட பல பாத்திரங்களில் பெரும்பாலானவை உலோகப் பாத்திரங்கள். இதில் சில மண்பாண்டங் களும் பயன்படுத்தப்பட்டன. தொழுநோ யாளியைக் கழுவுவதற்கும் *(லேவி 14:5)*, பொறாமைச்சட்டத்திலும் *(எண் 5:17)* மண் கலங்கள் பயன்பட்டன. பானையின் மேல் அசுத்தமான ஊர்வன ஏறினால் அஃது அசுத்த மாகிறது. எனவே, உடைக்கப்பட வேண் டும். ஆனால், விலையுயர்ந்த பாத்திரங்கள் கழுவியபின் பயன்படுத்தப்பட்டன *(லேவி 11:32; செக் 14:20-21)*.

ஆதி *2:7*-இல் கடவுள் களிமண்ணால் மனிதனை உருவாக்கினார் என எழுதப்பட் டுள்ளது. குயவன் பொம்மை செய்வதற் கும், கடவுள் மனிதனைச் செய்ததாகக் கூறப்படுவதற்கும் வேற்றுமை என்னவென் றால், கடவுள் தம் உயிரின் ஆவியை அதனுள் ஊதினார்.

கடவுளைக் குயவனாக உருவகப்படுத்தி யிருப்பதை நாம் பார்க்கிறோம் *(எரே 18:1-6; எசா 29:16; 4:8; உரோ 9:20-24; புல 4:2; எசா 45:9; லேவி 26:26)*. உருவகமாக பல நிகழ்ச்சிகளைக் கூறுவ தற்கு இம்மண்பாண்டங்கள் பயன்படுத்தப் பட்டன *(யோபு 29:3; 2 நாள் 21:7; திருவெளி 21:23; பழ 20:20; சங் 119:105)*.

**மண்டி** *(LEES)*

இது திராட்சை ரசம் வைத்திருக்கும் தோல்துருத்தி அல்லது சித்தையில் தங்கி யிருக்கும் மண்டியாகும். விவிலியக் காலங் களில் திராட்சை ரசத்தை மண்டியோடு சேர்த்து வைத்தல் பழக்கமாகும். இப்படிச் செய்வது இரசத்தின் திடத்தையும் வாசத்தை யும் அதிகப்படுத்தும். வருங்காலத்தில், யாவே மக்களினங்கள் அனைவருக்கும் ஏற்பாடு செய்யும் விருந்தில், மண்டி வடிகட்டப்பட்டு பக்குவப் படுத்திய திராட்சை ரசம் பரிமாறப்படும் (எசா

28:6). அமைதி குலைவுற்ற மக்களைக் குறிக்க உருவகமாக இச்சொல் எபிரேய மொழியில் பயன்பட்டுள்ளது. இவ்வாறு ''ஆண்டவர் நன்மையும் செய்யார், தீமையும் செய்யார்'' என்று தங்கள் உள்ளங்களில் சொல்லிக்கொண்டு கொழுத்திருப்போரை (செப் 1:12), இச்சொல் குறிக்கிறது. மோவாபு மண்டியை அடியில் கொண்ட பழந்திராட்சைரசத்திற்கு ஒப்பாகும். அது கலத்தினின்று கலத்திற்கு மாற்றப்படவில்லை; அதாவது, நாடு கடத்தப்படவில்லை (எரே 48:11).

**மண்டை ஓடு** (SKULL)

காண்க. கொல்கொதா.

**மண்ணின் மைந்தர்கள்** (PEOPLE OF THE LAND)

காண்க. ''அம்கா அரேசு''

**மண்ணைச்சார்ந்த உடல்கள்** (TERRESTRIAL BODIES)

பவுல், 1 கொரி 15:40-இல் விண்ணைச் சார்ந்த உடலையும், மண்ணைச் சார்ந்த உடலையும் ஒப்பிடுகின்றார். மண்ணைச் சார்ந்த உடல்கள் மண்ணில் இவ்வுலகத்தில் இருப்பவை ஆகும். விண்ணைச் சார்ந்த உடல்கள் விண்ணுலகில் உள்ளன. இவை வேறு பொருளால் ஆனவை. பல வகையான உடல்கள் இருக்கின்றன என்றும், உயிர்ப்பிக்கப்பட்ட உடல் தனித்தன்மை வாய்ந்தது என்பதையும் எடுத்து இயல்புகிறார் பவுல்.

**மண் தகடு** (CLAY TABLETS)

மெசபொத்தாமியாவில் எழுதுவதற்குச் சாதாரணமாய்ப் பயன்பட்ட பொருள். எகிப்தில் கிடைத்த புல்தாள் ஏட்டைப் போலன்றி, மண் நிறையக் கிடைத்தது; மலிவானதும் கூட. மெதுவாக இருக்கும் போது மண், தகடாகச் செய்யப்பட்டு, அதில் ஆப்பு எழுத்துக்கள் பொறிக்கப்படும். பின், இது காய வைக்கப்படும் அல்லது சூளையில் சூடு படுத்தப்படும். தகடு கடினமாகும்; எளிதில் அதை அழிக்க முடியாது. இவ்விதம் எழுதும் முறை சுமேரியர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது. பின்பு, இதைச் செமித்திய, அக்காதியர்கள் பயன்படுத்தினார்கள். பின்பு கூரியர்கள், இத்தியர்கள், எலாமியர்கள் மற்றும் கானானியர்கள் போன்ற மேற்காசிய மக்கள் இம்முறையில் எழுதுவதை ஏற்றுக் கொண்டனர்.

**மண்பாண்ட ஏட்டுத்துணுக்குகள்** (OSTRACA)

இவை எழுதுவதற்குப் பயன்பட்ட மண் பாண்டத் துணுக்குகளாகும். புல்தாளைவிட மலிவானதால், இவை பயன்பட்டன. இவற்றின்மேல் மையால் எழுதப்பட்டது. இவை வரவுசெலவுக் கடிதங்கள், கணக்குகள், பள்ளி நூல்கள் ஆகியவை எழுதுவதற்குப் பரவலாகப் பயன்பட்டன. இவ்வகை முக்கியமான ஏடுகள் சமாரியாவிலும் இலாக்கீசிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

**மண்வெட்டி** (HOE, MATTOCK)

இஃது ஒரு மண்ணைக் கொத்தவும் பண்படுத்தவும் பயன்படும் கருவி. இதன் ஒரு முனை பட்டையாகவும், அகன்றும், கூராகவும் இருக்கும். மறுமுனையில் நீண்ட கைப்பிடி பொருத்தப்பட்டிருக்கும். இஃது அதிகம் பயன்படுத்தப்பட்டால் அடிக்கடி கூர்மையாக்கப்பட வேண்டும் (1 சாமு 13:20-21; 2 நாள் 34:6; எசா 6:25). களைகளை வெட்டி நிலத்தைப் பண்படுத்தவும் பயன்பட்டது (எசா 5:6).

**மதகுரு யோவானின் உரை** (DISCOURSE OF SAINT JOHN THE DIVINE)

இது மரியாளின் விண்ணேற்பு என்ற நூலின் கிரேக்க மொழிபெயர்ப்பு.

**மதித்து நடத்தல், மரியாதை அளித்தல்** (RESPECT OF PERSONS)

பிறருக்குரிய வலிமை, உரிமை, சிறப்பு இவற்றை நினைவு கூர்ந்து ஏற்றுக்கொள்ளுதலே பிறருக்கு மரியாதை அளித்தலாகும் (லேவி 19:32; புல 5:12; காண்க. மாற் 12:6; 19:43; உரோ 13:7; 1 தெச 4:12; 5:12; 1 திமொ 3:4; 1 பேதுரு 2:18).

பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும் எந்தெந்த இடத்தில் ஒருவரின் மரியா

தையைப் பொருட்படுத்தத் தேவையில்லை என்பதைக் குறிப்பிடுகின்றன. தூய்மையைப் பற்றிய சட்டங்களில் ஒருவனைத் தீர்ப்பிடும்போது ('ஒருவனின் முகத்தைப் பார்த்தோ, மரியாதைக்காகவோ) பாகுபாடு எதுவுமின்றி இருக்க வேண்டும் (லேவி *19:15*). ஒருவனை ஏற்றுக்கொள்ளும்போது அது தனிச்சலுகை அளிப்பதாகவும் இருக்கலாம். அதுவே பாகுபாடு காண்பிப்பதாகவும் ஆகிறது. ''நீர் சொல்வதும், கற்பிப்பதும் சரியே. நீர் ஆள் பார்த்துச் செயல்படாதவர்'' (லூக் *20:21*) என்று இயேசுவைப் பற்றிக் கூறப்பட்டது. கடவுள் மனிதர்களிடம் எந்த முகதாட்சண்யமும் காண்பிப்பது இல்லை; ஏனெனில், அவர் மனிதர்களைத் தனித்தனியே வேற்றுமை பாராட்டி நோக்குபவரல்லர் (அ.ப. *10:34*; உரோ *2:11*; கலா *2:6*; எபே *6:9*; கொலோ *3:25*). யாக்கோபு ''சகோதரர்களே, மக்களின் தோற்றத்தைப் பார்த்து அவர்களை நடத்தாதீர்கள்'' என்று அறிவுறுத்துகிறார் (யாக் *2:1*).

**மதிப்பீடு செய்பவர்** (ASSAYER)

கனி உலோகக் கலவையைத் தங்கத்திற்காகவோ, வெள்ளிக்காகவோ சோதித்துப் பார்ப்பவராவர் இவர். மக்களை ஆய்வு செய்து மதிப்பீடு செய்வதே எரேமியாவின் இறைவாக்குப் பணியாகும் (எரே *6:27*). எரேமியா மக்களைத் தாழ்ந்த உலோகத்துக் கொப்பானவர்களாகக் கண்டார்.

**மதி மயங்கியோர்** (LUNATICK)

இதன் மூல கிரேக்கச் சொல் தருகின்ற வினைச்சொல், 'சந்திரனால் பாதிக்கப்படல் அல்லது சந்திரனின் ஆதிக்கத்தினால்' என்ற பொருளை அளிக்கின்றது.

இதேபோல இலத்தீன் சொல்லும் பொருள்தர வல்லது. இது பொதுவாக வலிப்பு நோயுள்ளோரைக் குறிக்கப்பயன்பட்டது.

மத் *4:24* ''பேய் பிடித்தோர், மதி மயங்கியோர்'' என்று வரிசைப்படுத்தி இரண்டிற்கும் வேறுபாடு இருப்பதாகச் சுட்டுகிறது. ஆனால் *17:15*-இல் அசுத்த ஆவி விரட்டப்பட்டபோது வலிப்பு நோய் குணம் அடைந்ததாக எழுதப்பட்டுள்ளது. எனவே *4:24* வாக்கு, அசுத்த ஆவியின் சக்தியைக் குறிப்பிடாமல் இல்லை என்பது தெளிவாகிறது. மாறாக, சந்திரனின் ஆதிக்கத்தினால்தான் அசுத்த ஆவி உள்ளே நுழைகின்றது என்ற பொதுவான நம்பிக்கை இருந்திருக்க வேண்டும்.

மத் *17:15*, மாற் *9:17*-இல் வரும் விவரிப்போடு ஒப்பிடப்பட வேண்டும். ஏனென்றால், மாற் *9:17*-இல் குறிப்பிடப்படும் சிறுவனுக்கு 'உமை பேய்' பிடித்திருந்ததாக எழுதப்பட்டுள்ளது. லூக் *9:39*-இல் குழந்தைக்குப் பேய் பிடித்திருந்ததாக எழுதப்பட்டுள்ளது. இவை பற்றிய கிரேக்கர்களின் பொதுக் கருத்துக்களைப் பற்றிய விளக்கத்தை இப்போகிரத்தசு என்பவர் தந்துள்ளார்.

**மதிரி** (MATRITES - *மழையான*)

இது பெஞ்சமின் கோத்திரத்தில் ஒரு குடும்பம். அரசனைத் தேர்ந்தெடுக்கும்போது இவர்கள் பெயருக்குச் சீட்டு விழுந்தது. அவர்களில் ஒருவரான சவுல் இஸ்ராயேல் மக்களின் முதல் அரசராக முடி சூட்டப்பட்டார் (1 சாமு *10:21*).

**மதிரேது** (MATRED - *ஈட்டி, வெளியேற்றுதல்*)

இவள் மேசகாபுவின் மகளும், மெகேற்றபேலின் தாயும், ஏதோம் நாட்டு அரசன் அதாதின் மனைவியும் ஆவாள் (ஆதி *36:39*; 1 நாள் *1:50*). எழுபது நூலும், சீரியக்கு வாசகமும் இவரை மெகேற்றபேலின் தந்தை எனக் குறிப்பிடுகின்றன.

**மதில் அரண்** (BULWARK)

இதைக் குறிக்கும் மூல எபிரேயச் சொல், சீயோனின் மதில் சுவர்கள் என்றும் (சங் *48:13*), கோட்டைகளின் மூலைகள் என்றும் (2 நாள் *26:15*), கொத்தளங்கள் என்றும் (எரே *50:15*; *51:32*) தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. உப *20:20*; திருவுரை *9:14*-இல், இச்சொல் முற்றுகையிடுவோர் அமைக்கும் கொத்தளங்களைக் குறிக்கிறது.

உருவகமாக, இறைவன் தம் மக்களைக் காக்கும் கொத்தளமாக விவரிக்கப்படுகிறார் (எசா 26:1). 1 திமொ 3:15-இல் திருச்சபை உண்மைக்குத் ''தூணும் அரணும் (அடிப் படையும்)'' ஆகும் என்று கூறப்படுகிறது.

**மது பரிமாறுவோன்** (BUTLER)

அரச உணவு மேசையில் திராட்சைரசம் பரிமாறும் பொறுப்புடைய ஓர் அலுவலன் ஆவான். எனவே, அரசனுக்கு அருகில் இருந்த உயர்ந்த பதவியில் உள்ளவன் இரசம் கொடுப்பது ஒரு வெளியடை யாளமே. யோசேப்போடு சிறையிருந்த ஒரு சிறைக்கைதியை மட்டும் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது (ஆதி 40:1தொ). இவன் தலைமை மதுபரிமாறுபவன். இவன் இன்னும், அரசனுக்குரிய இரசத்தைச் சுவைத்து, அதற்குப் பொறுப்பாய் இருப்ப தாகக் கனவு காண்கிறான் (40:11.13.21). இவன் யோசேப்பைப் பற்றி பார்வோ னிடம் நல்லதைச் சொன்னதால்தான், யோசேப்பு விடுதலை செய்யப்பட்டு, நாட் டின் மேற்பார்வையாளனாக்கப்பட்டார் (41:9.40-41).

**மதுபானம்** (STRONG DRINK)

இச்சொல் எல்லாச் செமித்திய மொழிகளி லும் பயன்படுத்தப்படுகிறது. இது பழங் காலத்தில் பார்லியிலிருந்து தயாரிக்கப் பட்ட பீர் என்னும் பானத்தைக் குறித்தா லும், பிற்காலத்தில் தானியங்களிலிருந்தோ, பழங்களிலிருந்தோ தயாரிக்கப்பட்ட எல் லாப் பானங்களையும் குறிக்கும் சொல் லாகப் பயன்படுத்தப்பட்டது. இது குருக் களுக்கும் (லேவி 10:9), நசரேயர்களுக்கும் (எண் 6:3; காண்க. நீதி13:4.7.14; லூக் 1:15) விலக்கப்பட்ட பானமாகும். இஃது, ஒரே ஓர் இடத்தில் மட்டுமே பானபலியின் ஒரு பகுதியாகக் குறிப்பிடப்படுகின்றது (எண் 28::7).

'மதுபானம்', திராட்சைரசத்துடன் இணையாகக் கூறப்பட்டு எல்லாப் போதைப் பொருட்களையும் குறிக்கின்றது. எனவே எசாயா, ''விடியற்காலையிலேயே விழித்தெழுந்து, போதை தரும் மதுவை நாடி அலைந்து இரவுவரை குடித்துப் பொழுதைப் போக்குகிறவர்களுக்கோ ஐயோ கேடு!'' என்று சபிக்கின்றார் (எசா 5:11). இதைப்போலவே, தான் எந்த வகை யான மதுபானமும் அருந்தவில்லை என்று அன்னா குருவிடம், சீலோவில் கூறினாள் (1 சாமு 1:15). ஞானி, ''திராட்சைரசம் ஏளனம் செய்யும் அரக்கன்; போதை தரும் குடி அமளி செய்யும் கலகக்காரன்; அதில் நாட்டங் கொள்பவன் மடையனே!'' என்று கூறுகின்றார் (பழ 20:1; காண்க. 31:4.6).

**மத்தத்தியா** (MATTATHIAS - ஆண்டவரின் கொடை)

1. முதலாம் மத்தத்தியா எருசலேமைச் சார்ந்தவர்; மோதயின் மலைநாட்டில் வாழ்ந்தவர்; யூதா மக்கபேயுவின் தந்தை (1 மக் 2:4). அந்தியோக்கு எப்பிபானின் அதிகாரிகள் மோதயினுக்கு வந்து அங்கு வாழ்ந்தவர்களை யூத சட்டத்திற்கு எதிராக, பலியிடத் தூண்டியபோது, மத்தத்தியா அதிகாரிகளையும், அவ்வாறு பலியிட்ட ஒரு யூதனையும் கொன்றார். அவரோடு சேர்ந்து யூதர் பலர் யோர்தானுக்கு அருகி லுள்ள பாலைவனத்திற்கு ஓடிப்போயினர். அவர்கள் ஓய்வுநாளில் போரிட மறுத்த போது கொலை செய்யப்பட்டனர். ஆகவே, ஓய்வுநாளிலும் போரிடத்தயாராக இருக்க வேண்டும் என்று கட்டளையிட்டார். இவர் கி.மு. 168 - 167-இல், தம் 146-ஆம் வயதில் இறந்து மோதயினில் அடக்கம் செய்யப்பட் டார் (1 மக் 2). இவர் முடிவில்லா வாழ்வைப் பற்றிப் பேசியதாக யோசிப்பசு கூறுகிறார். மத்தத்தியா கசமோனியர் ஆட் சியைத் தொடங்கி வைத்தார் எனலாம்.

2. இரண்டாம் மத்தத்தியா சீமோன் மக்க பேயுவின் மூன்றாம் மகனாவார். தோலமி சீமோனையும் அவன் புதல்வர்களையும் கொன்றபோது, மத்தத்தியாவும் அவனால் கொலை செய்யப்பட்டார் (1 மக் 16:14-16).

3. மத்தத்தியா அப்சலோமின் மகன் ஆவார். இவர் யோனத்தானின் படைத் தலைவர்களுள் ஒருவர். தெமேத்திரியு வின் தலைமையில் சீரியாவின் படை

கள் கசமோனியர்களைத் தாக்கியபோது அவர்கள் ஆட்சோர் நகரத்துக்கு ஓடினார் கள். ஆனால், யோனத்தான் சீரியர்களை மீண்டும் தோற்கடித்தார் *(1 மக் 11:70).*

*4.* யூதா மக்கபேயுவிடம் நிக்கானோர் அனுப்பிய ஒரு தூதன் *(2 மக் 14:19).*

*5.* இயேசுவின் முன்னோர்களில் ஒருவர். ஆமோசின் மகனும் யோசேப்பின் தந்தை யும் ஆவார் *(லூக் 3:25).*

*6.* இயேசுவின் முன்னோர்களில் ஒருவர். செமேயின் மகனும் மாத்தின் தந்தையும் ஆவார் *(லூக் 3:26).*

**மத்தனாய்** (MATENAI - இறைவனின் கொடை)

*1.* ஆசமின் புதல்வர்களில் ஒருவர். இவர் தன் அன்னிய மனைவியை விலக்கிவிட வேண்டியிருந்தது *(எஸ் 10:33).*

*2.* அன்னிய மனைவியை விலக்கிவிட வேண்டிய மற்றொரு இஸ்ராயேலர். இவர் பானியின் மகன் ஆவார் *(எஸ் 10:37).*

*3.* யோயாக்கிம் தலைமைக் குருவாக இருந்த காலத்தில் யோயாரிபு வீட்டைச் சேர்ந்த ஒரு குருக்கள் குடும்பத்தைச் சேர்ந்த வர் *(நெகே 12:19).*

**மத்தனியா** (MATTANIAH - யாவேயின் கொடை)

*1.* மத்தனியா என்பது செதேக்கியா அரச னின் (2) முந்தையப்பெயர். இப்பெயர் பாபிலோனிய அரசன் நெபுகத்னேசரால் கொடுக்கப்பட்டது *(2 அர 24:17).* இவர் யோசியா அரசனின் மகனும், யோயாகி னின் சிற்றப்பனும், யூதாவின் கடைசி அரசனும் ஆவார்.

*2.* இவர் ஆசாபு குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் வாழ்ந்தவர் *(1 நாள் 9:15).* செருபாபேலோடு நாடு திரும்பிய பாடற் குழுவின் தலைவர் *(நெகே 11:17; 12:8.35).*

*3.* ஏமானின் மகன். இவர் ஆலய பாடற் குழுவின் ஒன்பதாவது பிரிவின் தலைவர். தாவீது காலத்தைச் சேர்ந்தவர் *(1 நாள் 25:4.16).*

*4.* இவர் ஒரு லேவியர். இவர் ஆசாபின் குலத்தைச் சேர்ந்தவர். யாகசியேலின் முன் னோர் *(2 நாள் 20:14).*

*5.* இவர் ஒரு லேவியர். ஆசாபின் மகனா வார். இவர் யூதாவின் மன்னன் எசேக்கியா வின் காலத்தில் ஆலய வழிபாட்டுச் சீர் திருத்தங்களில் பங்கு கொண்டவர் *(2 நாள் 29:3).*

*6.* இவர் செருபாபேலின் காலத்தில் ஆலய பாடற்குழுவின் தலைவராக இருந்த வர் *(நெகே 11:17.22; 12:8).*

*7.* லேவியர் குலத்தவரான இவர் எருச லேமில் ஆலய வாயில்களையும், கருவூலங் களையம் காத்து வந்தவர் *(நெகே 12:25).*

*8.* லேவியரான இவர் செமாயாவின் தந்தை. குரு செக்கரியாவின் முன்னோர் *(நெகே 12:35).*

*9.* இவர் நெகேமியாவின் காலத்தில், லேவியரின் கருவூலக் காப்பாளரான அனா னின் தாத்தாவும், சக்கூரின் தந்தையும் ஆவார் *(நெகே 13:13).*

*10.* பாபிலோனிய அடிமைத்தனத்தி லிருந்து திரும்பிய நால்வருக்கு இப்பெயர் கொடுக்கப்படுகிறது. இவர்கள் அயல் நாட்டு மனைவியரை மணந்ததால் கட வுளின் உடன்படிக்கையை மீறியதாகக் கரு தப்பட்டவர்கள் *(எஸ் 10:26.27.30.37).* ஆகவே, அன்னிய மனைவியரை இவர்கள் நீக்க வேண்டியிருந்தது. இவர்களில் ஒருவர் ஏலாமின் புதல்வர்களில் ஒருவர் *(10:26).* இரண்டாம் நபர் சத்துவின் புதல்வர்களில் ஒருவர் *(10:27).* மூன்றாவது நபர் பகத் - மோவாபின் புதல்வர்களில் ஒருவர் *(10:30).* நான்காம் நபர் பானியின் புதல்வர் ஆவார் *(10:37).*

*11.* ஊசியின் முன்னோர். இவர் நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் லேவியர் களை மேற்பார்த்து வந்தவர்களில் ஒருவர் *(நெகே 11:22).*

**மத்தாத்தா** (MATTATTAH - *ஆண்டவரின் கொடை)*

மத்தாத்தா, எஸ்ராவால், அவருடைய அன்னிய மனைவியை விவாகரத்து செய்யும்படி கூறப்பட்டவர்களுள் ஒருவர் (எஸ் 10:33).

**மத்தாத்தா** (MATTATHA - *ஆண்டவரின் கொடை)*

தாவீது குலத்தைச் சேர்ந்த மத்தாத்தா இயேசுவின் மூதாதையர்களில் ஒருவர். தாவீதின் ஒரு புதல்வரான நாத்தான் இவருடைய தந்தையாவார் (லூக் 3:31).

**மத்தாத்து** (MATTHAT)

1. இயேசுவின் முன்னோர்களில் ஒருவர். யோசேப்பின் தாத்தா (லூக் 3:24). இவர் மத் 1:15-இல் மத்தான் என்று அழைக்கப்படுகிறார்.

2. நாடு கடத்தலுக்குப்பின் வந்த காலத்தைச் சேர்ந்த இயேசுவின் முன்னோர்களில் ஒருவர் (லூக் 3:29).

**மத்தானா** (MATTANAH - *கொடை)*

மத்தானா, இஸ்ராயேல் மக்கள் அர்னோனிலிருந்து புறப்பட்டுச் சென்று எமோரியர்களின் அரசனான சீகோனின் நாட்டினுள் நுழையுமுன் தங்கி இருந்த இடமாகும் (எண் 21:18-19). கிர்பெத் ஏல்-மெதெயினே இவ்விடம் இருந்த இடமாகக் கருதப்படுகிறது. இவ்விடம் மதபாவின் தென்கிழக்கில் 20 கி.மீ. தொலைவில் இருந்ததாக யுசேபியு கூறுகிறார். இக்குன்றைச் சுற்றிலும் பாதிச் சரிவில் சிறு அகழி இருந்தது. இம்மேட்டின் உச்சியில் நகரச் சுவர்கள் இருந்தன. அங்குக் கண்டுபிடிக்கப்பட்ட மட்பாண்டங்களிலிருந்து கி.மு. 1200 முதல் 800 வரை மக்கள் இங்கு வாழ்ந்தார்கள் என்பது தெளிவாகிறது.

**மத்தான்** (MATTAN - *கட்வுளின் கொடை)*

1. இவர் புரட்சியாளர்களால் பீடத்தின் முன் கொலை செய்யப்பட்ட பாகாலின் குருக்களில் ஒருவர். இவர்கள் அரசி அத்தாலியாவைக் கொன்று, யோவாசை யூதாவின் அரியணையில் அமர்த்தினார்கள் (2 அர 11:18).

2. இவர், இறைவாக்கினர் எரேமியாவின் காலத்தில் அரசனாக இருந்த செதேக்கியாவிடம் சிற்றரசனாக இருந்த செபற்றியாவின் தந்தையாவார் (எரே 38:1).

**மத்தான்** (MATTHAN - *கொடை)*

இயேசுவின் மூதாதையர்களுள் ஒருவர். யோசேப்பின் தாத்தா (மத் 1:15). இவர் லூக் 3:24-இல் மத்தாத்து என்று அழைக்கப்படுகிறார்.

**மத்தித்தியா** (MATTITHIAH - *யாவேயின் கொடை)*

1. கோராகிய லேவியரும், சல்லூமின் மகனுமான இவர் ஆலயத்திற்குத் தேவைப்படும் அப்பங்களைத் தயாரிப்பவராக இருந்தார் (1 நாள் 9:31).

2. இவர் லேவியரும், எதுத்தூனின் மகனும் ஆவார் (1 நாள் 25:3). உடன்படிக்கைப் பெட்டகத்தின் முன் பணிபுரியும் பாடகர்களில் ஒருவராக நியமிக்கப்பட்டவர் (1 நாள் 15:18.21; 16:5; 25:21). ஆலயப்பாடற் குழுவின் பதினான்காம் பிரிவின் தலைவர் (25:3.21).

3. இவர் எஸ்ராவின் காலத்தில் அன்னிய மனைவியை விலக்கிவிட வேண்டியவர் (எஸ் 10:43).

4. எஸ்ரா சட்டங்களை மக்களுக்கு வாசித்தபோது அவருக்கு உதவி செய்தவர்களுள் ஒருவர் (நெகே 8:4).

**மத்தியா** (MATTHIAS - *யாவேயின் கொடை)*

மத்தியா பன்னிரு அப்போஸ்தலர்களில் ஒருவரான யூதாஸ் இஸ்காரியோத்தின் இடத்தை நிரப்பத் தேர்ந்தெடுக்கப்பட்ட அப்போஸ்தலர். யூதாசின் துரோகத்தைப் பற்றிக் கூறப்பட்ட இறைவாக்குச் சங் 69:25, அவனுடைய இடம் வேறு ஒருவரால் நிரப்பப்படும் என்றும் கூறுகிறது (அ.ப. 1:20) என்று பேதுரு போதித்தார். எனவே, பதினொருவருடன் இன்னும் ஒருவர் சேர்க்கப்பட வேண்டும்.

இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் அப்போஸ்தலர் திருமுழுக்கு யோவான் திரு

முழுக்கு கொடுத்ததிலிருந்து, இயேசுவின் உயிர்ப்புவரை, இயேசுவுடன் இருந்தவராகவும், இயேசுவின் உயிர்ப்புக்குச் சான்று பகரக்கூடியவராகவும் இருக்க வேண்டும். இருவர் தகுதியுள்ளவர்களாகக் கூறப்பட்டனர். அவர்களுள் ஒருவர் பர்சபா என்ற யோசேப்பு. இவர் யுஸ்து என்றும் அழைக்கப்பட்டார். மற்றவர் 'மத்தியா' *(அ.ப. 1:23)*. சீட்டைப்போடுமுன், அப்போஸ்தலர்கள் தங்களை வழிநடத்தும்படி ஆண்டவரை மன்றாடினர். இதன்பின் யூதர்களின் வழக்கப்படி *(காண்க. லேவி 16:8; பழ 16:3)* சீட்டுப்போட்டார்கள். பொதுவாக, அவர்கள் கற்களில் பெயர்களை எழுதி, அவற்றை ஒரு பாத்திரத்தில் இட்டு, ஒரு கல் வெளியில் வந்து விழும்வரை நன்கு குலுக்குவார்கள்.

யுசேபியுவும், எப்பிபானியுவும் மத்தியா 72 சீடர்களில் ஒருவர் என்று கூறுகின்றனர். அவர் யூதேயாவில் நற்செய்தியைப் போதித்தார் என்றும், யூதர்களால் கல்லால் எறிந்து கொலை செய்யப்பட்டார் என்றும் ஒரு பாரம்பரியம் கூறுகிறது.

**மத்தியாவின் பாரம்பரியங்கள்** *(*MATHIAS, TRADITIONS OF*)*

அலக்சாந்திரிய கிளமந்துவின் நூலிலிருந்து அறியப்படும் நூல். இந்நூலிலிருந்து அவர் கருத்துக்களை மும்முறை சுட்டிக்காட்டுகிறார். உடலைத் தவறாகப் பயன்படுத்துவது பற்றிய ஞானவாத போதகத்தை இந்நூல் கொண்டிருக்கலாம் என்று கிளமந்து கூறுகிறார். கூறப்படும் கருத்துக்களை வழங்கிய 'ஓரிசன்' மத்தியா எழுதிய பிரிவினைவாத நற்செய்தி என்னும் நூலைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அப்புரோசும், எரோனிமுவும் இந்நூலைக் குறிப்பிடுகின்றனர். செலாசியன் கட்டளையில் இத்தலைப்புடன் கூடிய நூல் கண்டனம் செய்யப்பட்டுள்ளது. பெரும்பாலும், பாரம்பரியங்களும், நற்செய்தியும் ஒரே நூலையே குறிக்கலாம். இக்கருத்து உறுதியானது என்று கூறுவதற்கோ, நூல்களின் அமைப்பைப் பற்றிக் கூறுவதற்கோ, நமக்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை.

**மத்தேயு** *(*MATTHEW - யாவேயின் கொடை*)*

காண்க. மத்தேயு எழுதிய நற்செய்தி: 2. ஆசிரியர்.

**மத்தேயு எழுதிய நற்செய்தி** *(*MATTHEW, GOSPEL OF*)*

***1. எப்படித் தோன்றின?*** ''நற் செய்தியின் தோற்றம்'' என்ற தலைப்பின்கீழ் நமது நான்கு வடிவ நற்செய்தி தோன்றிய வரலாற்றைப் பற்றிச் சிறிது ஆராய்ந்தோம். அதையே பிறிதொரு கோணத்திலிருந்து நோக்குவது சாலச்சிறந்தது. ''ஐம்பதாம் நாள்'' விழாவில், பரிசுத்த ஆவியர் அப்போஸ்தலர்கள் மேல் எழுந்தருளிய அந் நாளில், என்ன நடந்தது என்றும், எவ்விதம் முதல் நற்செய்தி வடிவெடுத்தது என்றும் சிறிதுநோக்குவோம். தங்களது தலைவர் இயேசுவின் ஆணைக்கு இணங்கி, மேலறையில் அப்போஸ்தலர்கள் கூடி, இயேசுவின் அன்னை மரியாளோடு ஒன்றித்து, செபத்தில் செலவழித்தனர் சில நாட்களை. பரிசுத்த ஆவியரால் நிரப்பப்பட்டு, தேவ ஆற்றலால் ஏவப்பட்டு அப் பெருநாளில் போதிக்கத் தொடங்கினர். ஒரு மாபெரும் செய்தியை, நற்செய்தியைப் பறை சாற்றினர். யூதர்களைப் பார்த்து, ''தீயோர்களைக் கொண்டு, நீங்கள் கொலை செய்த அதே இயேசு மரித்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்துள்ளார். அதற்கு நாங்கள் யாவரும் சாட்சிகள். அவரே மெசியா, இறைவனின் மகன்'' என்று முழங்கினர். கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலுக்குச் சாட்சி கூறினர். அதைத் தங்களின் தலையாய கடமையாகக் கருதினர். கிறிஸ்தவத்தின் இத்தொடக்கத்தையே அப்போஸ்தலர் பணியில் இரண்டாம் மூன்றாம் அதிகாரங்களில் காண்கிறோம்.

இந்த முதல் பறைசாற்றலுக்குப்பின், கிறிஸ்தவச் சமூகம் பெருகியது. கிறிஸ்துவின் உயிர்ப்போடு அவரது இறப்பைப் பற்றியும் பேசினர். அவ்விறப்பின் சூழ்நிலைகளைப் பற்றி விரிவாக எடுத்துக்கூறினர். இவ்விறப்பிற்குப் பொருள்தரக்கூடிய விவிலிய வாசகங்களைத் தேடி, பொருத்தமான விளக்கம் அளித்தனர். கிறிஸ்துவின்

கட்டளைப்படி அப்பத்தைப் பிட்கவும், இரசக்கிண்ணத்தை ஆசீர்வதிக்கவும் செய்த னர். அப்படிச் செய்தபோது, கிறிஸ்து தமது இறுதி இரவுணவின்போது செய்த, எளிதில் மறக்கமுடியாத செயல்களையும், கூறிய வார்த்தைகளையும் நினைவு கூர்ந்தனர். அவரது பாடுகளையும் உயிர்ப்பையும் கொண்டாடினர். இறந்து உயிர்த்து விண் ணெழுந்த கிறிஸ்து, மீண்டும் வரவிருக்கின் றார் என்ற உண்மையையும் எடுத்துக் கூறினர். இதையொட்டி, உலக முடிவைப் பற்றிக் கிறிஸ்து உரைத்தவற்றையும் ஞாப கத்திற் கொண்டனர்.

சில மாதங்கள் கடந்தன. சில ஆண்டுகள் உருண்டன. கிறிஸ்துவின் போதகத்தைப் பின்பற்றுவோர் குழு பெருகியது, பரவி யது. ஆனால், கிறிஸ்துவின் வருகையைத் தான் காணவில்லை. அவரது வருகை சமீபத்தில் அன்று ஏதோ தூரகாலத்தில் வரவிருப்பதாகத் தோன்றியது. அதுவரை, கிறிஸ்தவக் குழு இவ்வுலகிலேயே வாழ்ந் தாக வேண்டும். அதற்கு ஓர் ஒழுங்குமுறை, ஒரு சட்டம் அவசியமாயிற்று. ஆண்டவர் மீண்டும் மீண்டும் போதித்தவைகள் அப் போஸ்தலர்களின் மனதில் ஆழமாய்ப் பதிந் திருந்தன. அவர்கள் அப்போதகங்களைக் கிறிஸ்தவர்களுக்குப் போதித்தனர். அவை எழுத்து வடிவம் எடுத்தன.

விசுவாசிகளின் தேவைகள், வழிபாட்டுச் சடங்குகள், ஒரு சிலரது தீங்கு விளைக்கும் போக்குகளை நீக்குதல், விரோதிகளின் தாக்குதல்களை எதிர்த்தல், கிறிஸ்தவர் களின் விசுவாசத்தை உறுதிப்படுத்துதல் முதலியவற்றிற்கு ஏற்ப ஆண்டவருடைய போதகங்கள் எடுத்துக் கூறப்பட்டன. சிறிது சிறிதாக ஆண்டவரது போதகம், அவ ருடைய புதுமைகள், பயண விவரங்கள், அவரது வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகள் ஆகியவற்றோடு சேர்த்து எழுதப்பட்டது. இப்படி எழுதியபோது, எழுதியோரும் கிறிஸ்தவச் சமூகமும், உண்மைத்தன்மைக் கும் அதிகார பூர்வத் தன்மைக்கும் மரி யாதை கொடுத்தனர் (லூக் *1:1-4*). இவ் விதம் எழுதப்பட்ட நூல்கள், கிறிஸ்தவச் சமூகங்களிடையே பரவின. இவற்றில் வெகு சில அரமேயிக்கு மொழியில் எழுதப் பெற்றவை. மற்றவை கிரேக்க மொழியில் எழுதப்பெற்றவை. அரமேயிக்கு மொழி யில் எழுதப்பெற்றவை கிரேக்க மொழியில் மொழிபெயர்க்கப்பட்டதும் உண்டு. இந்த மூல நூல்களைச் சிலர் தொகுத்து எழுதினர். இவர்கள் அப்போஸ்தலர்களாகவோ, அவர் களை நன்கு அறிந்த சீடர்களாகவோ இருந்தனர். இப்படித் தொகுக்கப் பெற்ற வைகளில் சிலவற்றைக் கிறிஸ்தவச் சமூகம் உண்மையானவை என்று ஏற்றுக்கொண் டது. அப்படி ஏற்கப்பெற்றவைதான், நாம் கொண்டிருக்கும் நற்செய்தியின் நான்கு வடிவங்கள். இவை, நற்செய்தியாளர்கள், தாங்கள் கிறிஸ்துவின் வாழ்வில் நேரே கண்டவைகளையும், பிறரிடமிருந்து கேட்ட றிந்ததையும், மூலநூல்களையும் அக் காலத்து முறைப்படி ஆராய்ந்து எழுதி யவை.

நற்செய்தியாளர், இப்படித் தொகுத்து வரைந்தபோது, கிறிஸ்துவின் வாழ்வு, போதகம் ஆகியவற்றைப் பிரமாணிக்க மாகக் கூறினர். இப்பெரும் கடமையைச் செய்ய, பரிசுத்த ஆவியரின் ஏவுதலும், உதவியும், ஆசீரும் உறுதுணையாக இருந் தன. இப்படி எழுதியபோது, ஒவ்வொரு நற்செய்தியாளரும் தமது சிறப்பு நோக்கத் திற்கும், தமது வாசகர்களின் தேவைக்கும் ஏற்ப எழுதினர். கிறிஸ்து பயணம் செய்து கொண்டே போதித்தார். ஆகையால், ஒவ் வொரு சமயமும் கேட்பவர்கள் புதியவர் கள். ஆகையால் அவர் ஓர் இடத்தில் கூறியவற்றை மற்றோர் இடத்திலும் கூறி யிருக்கக்கூடும். அதனோடு, அவரது போத கம் ஏறக்குறைய இரண்டரை ஆண்டுகள் நீடித்தது. கிறிஸ்து, நாடு முழுவதும் இங்குமங்கும் போவதற்கும், தமது புதுமை களையும் இரக்கமிக்க செயல்களையும் நிறையச் செய்வதற்கும், தமக்குச் செவி மடுப்போருக்கும் தமது போதகத்தை மிகுந்த அளவில் பொழிவதற்கும் போதிய காலம் இருந்தது. இவற்றையெல்லாம், தங்களுடைய குறிக்கோளுக்கு ஏற்ப, நற்

செய்தியாளர்கள் தொகுத்து வரைந்தனர். ஒருவர் யூத கிறிஸ்தவர்களுக்கு நற்செய்தி வரைந்தார். மற்றொருவர் யூதரல்லாத கிறிஸ்தவர்களுக்கு எழுதினார். இன்னும் ஒருவர் காலவரைப்படி எழுதினார். ஒருவர் ஒரு நிகழ்ச்சியை அழுத்திக் கூறினால், மற்றவர் மற்றொரு நிகழ்ச்சியைச் சிறப் பித்துக் காட்டுவார். ஒருவர் தப்பறைகளைத் தகர்ப்பதற்கு வேண்டிய போதகங்களையும் நிகழ்ச்சிகளையும் தொகுத்துத் தருவார். மற்றவரோ, புறமதத்தினர் கிறிஸ்துவை விசுவசிப்பதற்கு வேண்டியவைகளைத் தொகுத்துத் தருவார். ஒருவர் ஒரு சூழ் நிலையில் கூறியவற்றை, மற்றொருவர் பிறிதொரு சூழ்நிலையில் முழுவதையும் அல்லது அதில் ஒரு பகுதியைக் கூறுவார். இவை யாவும் நம்மை வியப்பில் ஆழ்த்தக் கூடாது. இவை கண்டு நாம் வெட்கப்பட வும் வேண்டியதில்லை. அதற்கு மாறாக, நாம் மகிழ்ச்சியடைய வேண்டும். ஏனெ னில், இவ்விதம் எழுதப்பட்டதால், இந் நூல்களில் கிறிஸ்துவைப் பல கோணங் களில் இருந்து அறிகிறோம். பெரிதும் பயன்பெற இவை ஏதுவாகின்றன.

மேற்கூறப்பட்டவாறு தொகுக்கப்பட்ட பலவற்றில் நமது தாயாகிய திருச்சபை நான்கு நூல்களை உண்மையானவைகளாக வும், அதிகார பூர்வமானவைகளாகவும் ஏற்றுக்கொண்டது. அவை மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகியோர் எழுதிய நற்செய்திகளாகும். நாம் கொண்டி ருக்கும் வடிவில் காலத்தால் முந்தியது மாற்கு எழுதிய நற்செய்தியாகும் என அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் பாரம் பரிய நற்செய்தியாளர் பட்டியல் மத்தே யுவை முதல்வராகக் கொண்டுள்ளது.

**2. ஆசிரியர்:** முதல் நற்செய்தியின் ஆசிரி யர் தாம் எழுதியதாகவோ, தமது பெயர் இதுதான் என்றோ ஓர் இடத்திலும் கூற வில்லை. ஆனால் பாம்பரியம், நாம் கொண்டிருக்கும் நற்செய்தியின் முதல் வடி வத்தின் ஆசிரியர் மத்தேயு என்று ஒருமுக மாகக் கூறுகிறது. பாப்பியஸ், இரனேயு, தேர்த்துல்லியன், ஓரிசன் ஆகிய திருச்சபைத் தந்தையரது இச்சான்றை நாம் எளிதில் தள்ளிவிட முடியாது.

''மத்தானியா'' அல்லது ''மத்தத்தியா'' என்ற எபிரேய வார்த்தையின் சுருக்கம் 'மத்தாய்' என்ற அரமேயிக்குச் சொல். இச்சொல்லின் கிரேக்க வடிவமே ''மத்தா யோஸ்'' என்ற சொல். ''மத்தாயோஸ்'' என்றால் ''இறைவனின் (யாவேயின்) கொடை'' என்று பொருள்படும்; சிலர் ''பிரமாணிக்கமுள்ளவர்'' என்றும் பொருள் கொள்வர். இப்பெயர், அப்போஸ்தலர் பட்டியலில், மாற்கிலும் *(3:18)*, லூக்காவி லும் *(6:15)* ஏழாவதாகவும், மத்தேயுவிலும் *(10:3)*, அப்போஸ்தலர் பணியிலும் *(1:13)* எட்டாவதாகவும் காணப்படுகிறது. மத்தேயு வின் அழைப்பு பற்றிய நிகழ்ச்சியுரையில், மாற்கும் *(2:13-17)*, லூக்காவும் *(5:27-32)* சுங்கவரி நிலையத்திலுள்ள அதிகாரியான லேவி என்பவரைக் குறிக்கின்றன. முதல் நற்செய்தி வடிவம் இந்த அதிகாரியை மத்தேயு எனக்குறிக்கிறது *(மத் 9:9-13)*. இந்நிகழ்ச்சியுரைகள் மற்ற விவரங்களில் ஒத்துள்ளமையால் லேவி என்பவரே மத் தேயு என்று நாம் உய்த்துணரலாம். இவரது தந்தை ஆல்பேயு ஆவார் *(மாற்கு 2:14)*. இவர் எங்கு தமது அப்போஸ்தலத்துவத்தை நடத்தினார் என்று நாம் ஒன்றையும் உறுதி யாய் அறிவதற்கில்லை. முதலில் யூதேயா விலும், பின் எத்தியோப்பியா, பெர்சியா, பார்த்தியா முதலிய நாடுகளிலும் நற்செய் தியைப் போதித்ததாகச் சில குறிப்புகள் உள்ளன. அவற்றின் உண்மையை நாம் ஆராய்ந்து கூறுவதற்கில்லை. அவர் எப் போது இறந்தார் என்பதற்கும் சான்று ஒன்றுமில்லை. இவ்விதம் புகழ் பெறாத, நன்கு அறியப்படாத மத்தேயுதான் நற்செய் தியின் முதல் வடிவத்திற்கு ஆசிரியர் என்று ஆதியிலிருந்து ஒருமுகமாகப் பாரம்பரியம் கூறுகிறது. மேற்கூறியவை மத்தேயுதான் இந்நூலுக்கு ஆசிரியர் என்ற கருத்தை வலியுறுத்தும்.

மத்தேயு தமது தொழிலின் காரணமாக இயேசுவின் வாழ்வையும், செயல்களை யும், வாக்குகளையும் தொகுத்து எழுதுவ

தற்குத் தகுதிவாய்ந்தவராகத் தோன்றுகிறார். அவர் சுங்க வரித்துறையில் அலுவல் புரிந்ததால் அவருக்கு அரமேயிக்கிலும், கிரேக்க மொழியிலும் போதிய அறிவும் எழுத்து வன்மையும் இருந்திருக்க வேண்டும். சிறிது இலத்தீன் மொழிகூட அவர் அறிந்திருக்க வேண்டும். அவர் எண்ணிக்கைகளில் காட்டும் ஆர்வமும், அவரது நற்செய்தியில் காணப்படும் ஒழுங்கும் திட்டமும், வேண்டாத சிறு காரியங்களை நீக்கிச் சுருக்கி எழுதுவதும், ஒரு கணக்கனது மனப்போக்கைக் காட்டுகின்றன. இயேசுவின் வரலாற்றைப் படிப்படியாக எழுதும் விதம், ஆசிரியரது பதிவு செய்யும் வழக்கத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது. எசாயாவின் சீடர்கள் அவருடைய வார்த்தைகளைப் பின்வரும் மரபினர்க்குப் பயன்படும்படி பதிவு செய்தனராம் (எசா 8:16). அதுபோலவே இயேசுவின் வாழ்வையும், வார்த்தைகளையும் பதிவு செய்ய தாம் அழைக்கப்பட்டிருப்பதாக மத்தேயு உணர்ந்திருக்கலாம். அதனால்தானோ என்னவோ, எசாயா இறைவாக்கிலிருந்து அடிக்கடி எடுத்துக்காட்டு கொடுக்கின்றார். இந்நூலை எழுதுபவர் ''விண்ணரசுக்காகப் பயிற்சி பெற்ற மறைநூலறிஞன்'' (மத் 13:52) என்பது இந்நூலிலிருந்து தெரிகிறது.

இவரை ஒரு வேதசாட்சியாகத் திருச்சபை கொண்டாடுகிறது. இவரது திருநாளை இலத்தீன் திருச்சபை செப்டம்பர் மாதம் 21-ஆம் நாளன்றும், கிழக்கத்தியத் திருச்சபை நவம்பர் மாதம் 16-ஆம் நாளன்றும் கொண்டாடுகின்றன. ஓவியத்திலே மத்தேயு ஓர் ஈட்டியைக் கையிலேந்தித் தோன்றுவார். இஃது அவரது வேதசாட்சியத்தைக் குறிப்பதாக இருக்கலாம். அவரது நற்செய்தியின் அடையாளம் இறக்கையுள்ள மனிதனாகும். அவரது அருளிக்கம் 1080-இல் சலெர்னோ என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

**3. அரமேயிக்கு மத்தேயுவும், கிரேக்க மத்தேயுவும்:** முதல் நற்செய்தியை மத்தேயுதான் எழுதினார் என்றும் அவர் அரமேயிக்கு மொழியில் எழுதினார் என்றும் பாரம்பரியம் ஆதியிலிருந்து ஒருமுகமாகச் சான்று கூறுகிறது. இச்சான்று மிகத் தெளிவாக உள்ளது. ஆனால், மத்தேயு அரமேயிக்கில் எழுதிய நற்செய்தி நமக்குக் கிடைக்கவில்லை. நாம் கொண்டிருக்கும் வடிவில், மத்தேயு எழுதிய நற்செய்தி கிரேக்க மொழியில் எழுதப்பெற்றுள்ளது. அரமேயிக்கு மொழி நற்செய்திக்கும், கிரேக்க மொழி நற்செய்திக்கும் உள்ள தொடர்பு என்ன என்று அறிவது அவசியம். அதற்குமுன் பாரம்பரியம் கூறுவது என்ன என்று பார்ப்போம்.

பாப்பியஸ் (கி.பி. 130 இறப்பு): ''மத்தேயுவும் (ஆண்டவருடைய) சொற்பொழிவுகளை (அல்லது வார்த்தைகளை) அரமேயிக்கு மொழியில் ஒழுங்கு முறையோடு சேகரித்தார்..... அதை மற்றவர்கள் தங்களால் முடிந்த மட்டும் மொழிபெயர்த்தனர்''.

இரனேயஸ் (கி.பி. 203 இறப்பு): ''பேதுருவும் பவுலும் உரோமையில் போதித்து, அங்குத் திருச்சபையை நிறுவிய காலத்தில், மத்தேயு, எபிரேய (அரமேயிக்கு) மொழியில் நற்செய்தியை எழுதினர்''.

ஓரிசன் (கி.பி. 185-254): ''சுங்கவரி வசூலிப்பவரும் இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலருமான மத்தேயுவால், மனந்திரும்பிய யூதர்களுக்கென அரமேயிக்கு மொழியில் முதல் நற்செய்தி எழுதப்பெற்றது''.

யுசேபியு (கி.பி. 263-340): ''மத்தேயு, எபிரேய மொழியில் (அதாவது அரமேயிக்கில்) ஒரு நற்செய்தியை எழுதினார்''.

''அப்போஸ்தலரான மத்தேயு, பாலஸ்தீனத்தில் மனந்திரும்பிய யூதர்களுக்காக, அரமேயிக்கு மொழியில் ஒரு நற்செய்தி எழுதினார்'' என்று திருச்சபையின் பாரம்பரியம் தீர்ப்பு கூறுகிறது.

மேற்கூறியவற்றுள், பாப்பியசின் கூற்று பல ஆராய்ச்சிக்கும் தர்க்கங்களுக்கும், இடமளித்துள்ளது. ''மத்தேயு ஆண்டவருடைய வாக்குகளைச் சேகரித்தார்'' என்று கூறும்போது பாப்பியஸ் என்ன பொருள் கொண்

டார் என்பது நாம் அறிய வேண்டியதொன்றாகும்.மேலும், மாற்கைப் போலல்லாமல், மத்தேயு ஒழுங்கு முறையுடன் எழுதியதாக அவர் கூறுகிறார். ஒருவேளை, ''ஒழுங்கு முறை'' என்பது கால வரைமுறையைக் குறித்திருக்கலாம். ஆனால், மத்தேயுவில் காணப்படுவதுபோல் காலவரை ஒழுங்கு மாற்கிலும், லூக்காவிலும் காணப்படுவதால் பாப்பியஸ் இவ்விதம் பொருள் கொண்டிருக்க முடியாது. ஆகையால், புதுமைகள், நிகழ்ச்சியுரைகள், வாதங்கள், பிற நிகழ்ச்சியுரைகள் ஆகியவற்றைக் கொண்ட, நாம் அறியும் மத்தேயுவின் நற்செய்தியையன்று, இயேசுவின் வாக்குகளின் தொகுப்பை மட்டுமே பாப்பியஸ் குறிக்கின்றார் என்றும், அதைப் பயன்படுத்தி முதல் மூன்று நற்செய்தியாளர்களும் தங்களது நற்செய்திகளை எழுதினர் என்றும் அறிஞர் பலர் கருதுகின்றனர்.

ஆனால் சந்தர்ப்பத்தைப் பொருத்திப் பார்த்தால், பாப்பியஸ் ஆண்டவருடைய வாக்குகளை மட்டுமல்ல, அவருடைய செயல்களையும் குறிப்பிடுகிறார் என்று கொள்ளவேண்டும். ஏனெனில், அவர் ''ஆண்டவருடைய வாக்குகளுக்கு விளக்கவுரை'' எழுதும்போது, ஆண்டவருடைய வாக்குகளையும் செயல்களையும் பற்றி எழுதுகிறார். பாரம்பரிய விளக்கப்படி, பாப்பியஸ் அரமேயிக்கில் எழுதப்பெற்ற மத்தேயுவைக் குறிக்கிறார் எனலாம். வேறு சிலர் பாப்பியசின் கிரேக்கமொழி அமைப்பையும் நடையையும் ஆராய்ந்து, ''மத்தேயு ஆண்டவருடைய வாக்குகளை அரமேயிக்கு மொழியில் சேகரித்தார்'' என்பதற்குப் பதிலாக ''அரமேயிக்கு மொழிநடையில் எழுதினார்'' என்று கொள்கின்றனர். இதன்படி மத்தேயு கிரேக்க மொழியில்தான் எழுதினார். ஆனால், அவரது கிரேக்க மொழி அரமேயிக்கு மொழிநடையையும் அமைப்பையும் கொண்டிருந்தது. ஆகையால், பாப்பியஸ் கிரேக்க மத்தேயுவைத்தான் குறிக்கிறார் என்பர். இந்த அரமேயிக்கு நடை கொண்ட கிரேக்க மொழி நற்செய்தியைத்தான், அரமேயிக்கு மொழியில் எழுதப்பட்டதாகப் பாப்பியஸ், இரனேயு ஆகியோர் கருதினர் என்பர் சிலர். ஆனால், ஓரிசன் ஒரு கடுமையான நுண்ணாய்வாளர். வெறுமனே பாப்பியசின் கூற்றை ஏற்று அதை மீண்டும் அவர் கூறவில்லை. பாரம்பரியம் முழுவதுமே மத்தேயு அரமேயிக்கு மொழியில் ஒரு நற்செய்தியை எழுதியதாகக் கருதுவதைத், தாமும் கருதுவதாகக் கூறுகிறார். யுசேபியு, வழக்கமாக, பாப்பியசின் சான்றை எளிதில் ஏற்றுக்கொள்பவர் அல்லர். ஆனால், இப்பிரச்சனையில் மட்டும் பாப்பியசின் சான்றை ஏற்றுக்கொள்வதாகத் தெரிகிறது.

மேற்கூறியவற்றிலிருந்து, மத்தேயு எந்த மொழியில் தமது நற்செய்தியை எழுதினார் என்று முடிவு காண்பது அரிதென்பது தெளிவு. மத்தேயு அரமேயிக்கு மொழியில் எழுதிய நற்செய்தியை ஒருவரும் பார்த்ததில்லை. ஆயினும், ஆதிப் பாரம்பரியம் அவர் அரமேயிக்கு மொழியில்தான் எழுதினார் என்று ஒருமுகமாக உறுதியாகக் கூறுகின்றது. இஃது உண்மையென்றால் இந்நூல் அப்போஸ்தலர்களின் போதகத்தின் சுருக்கமாக இருந்திருக்க வேண்டும்.

இனி, மத்தேயுவின் கிரேக்க நற்செய்திக்கு வருவோம். இந்நூல் முதல் நூற்றாண்டு முடிவிலே வழக்கில் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், ''திதாகே'' (கி.பி. 70-90 இடையில் எழுதப்பட்டது) என்று அழைக்கப்படும் வேதவிளக்க நூலிலும், உரோமையில் வாழ்ந்த கிளமந்து (கி.பி. 101, இறப்பு), அந்தியோக்கிய இஞ்ஞாசியார் (கி.பி. 117, இறப்பு) ஆகியோருடைய திருமுகங்களிலும் இந்நூலிலிருந்து மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன. அலக்சாந்திரியா கிளமந்தும், தேர்த்துல்லியனும், இந்நூலை மத்தேயுதான் எழுதினார் என்று கூறுகின்றனர்.

இக்கூற்று எவ்வளவு உண்மையானது? மத்தேயு எழுதிய அரமேயிக்கு நற்செய்தியை, ''ஒவ்வொருவரும் தங்களால் இயன்றமட்டும் மொழிபெயர்த்தனர்'' என்று கூறுகிறார் பாப்பியஸ். இப்படிப்

பட்ட மொழிபெயர்ப்புகளில் ஒன்றாக இருக்கக்கூடுமோ கிரேக்க மத்தேயு? ஆரா யுங்கால், அப்படி இருப்பதாகத் தோன்ற வில்லை. ஏனெனில், மத்தேயுவின் கிரேக்க மொழிச் சொல்லோட்டம் ஒரு மொழி பெயர்ப்பாகத் தோன்றவில்லை. மாறாக, கிரேக்க மொழியில் நேரடியாக எழுதப் பட்ட மாற்கைவிட மத்தேயுவின் கிரேக்க மொழிநடை மேலானது. சொற்களின் அமைப்பும் தொகுப்பும் கிரேக்க மொழிக்கே உரியனவாகும். இந்நூல் ஒரு மொழிபெயர்ப்பாக இருக்க முடியாது. இதில் எடுத்துக்காட்டாகக் கூறப்படும் பழைய ஏற்பாட்டு வசனங்கள் பல ''எழு பது நூல்'' என்ற கிரேக்கப் பழைய ஏற்பாட்டிலிருந்து எடுக்கப்பெற்றவை அல் லது அதைச் சார்ந்தவை. இவற்றிலிருந்து, இந்நூல் கிரேக்க மொழியிலேயே நேரடி யாக எழுதப்பட்டது, மொழிபெயர்ப்பன்று எனக் கொள்ளலாம். ஆனால், அரமேயிக்கு மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட ஒரு நூலை அடிப்படையாகக் கொண்டது எனலாம். ஏனெனில், இந்நூலில் மற்ற நற்செய்திகளை விட அதிகமாகச் செமித் திக்கு மரபும் சொற்களும் காணப்படுகின் றன (செமித்தியர் யூதர், பெனிசியர், அராபி யர், அசீரியர் ஆகியோரைக் கொண்ட பேரினம்). மத்தேயுவுக்கே உரிய பழைய ஏற்பாட்டு வசனங்கள் எபிரேயப் பழைய ஏற்பாட்டைச் சார்ந்தவையாகத் தோன்று கின்றன. ஆராயுங்கால், கிரேக்க மத்தேயு பல மூலங்களைச் சார்ந்துள்ளது. இவை: 1) அரமேயிக்கு மத்தேயுவிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட நூல், 2) மாற்கு எழுதிய நற்செய்தி, 3) மத்தேயுவுக்கும் லூக்காவுக் கும் பொதுவான மூலம் ஆகியவையாகும். இவை யாவும் கிரேக்க மூலங்கள் (நற்செய் தியின் மூல நூல்கள் பற்றியும், முதல் மூன்று வடிவ நற்செய்திகளின் ஒத்தமை இயல்பு பற்றியும் ஒத்தமை நற்செய்திகள் என்ற தலைப்பின் கீழ்க் காண்க). ஆகை யால் கிரேக்க மத்தேயு அரமேயிக்கின் நேரடி மொழிபெயர்ப்பு என்று கொள்ள முடியாது. ஆனால், மத்தேயு எழுதிய அரமேயிக்கு நூலை முழுவதும் தன்னுள் கொண்டது; அதனோடு ஒத்தது. ஆகையால் தான் இந்நூலை மத்தேயு எழுதியதாகப் பாரம்பரியம் ஏற்றுக்கொண்டுள்ளது.

அரமேயிக்கு மூல நற்செய்தியைப் புனித மத்தேயு எழுதினார் என்று பாரம்பரியம் கூறுகிறது. ஆனால், நாம் கொண்டிருக்கும் மத்தேயுவின் நற்செய்திக்கும் அப்போஸ் தலர் மத்தேயுதான் ஆசிரியரா? உறுதியாக ஒன்றும் கூற முடியாது. தொடக்கத்தில் சிறிது குழப்பத்தையும் ஐயத்தையும் உண் டாக்கலாம். இப்படி உறுதியாகக் கூற முடியாமை இன்றியமையாத ஒன்றன்று. அவ்வளவு முக்கியம் வாய்ந்ததுமன்று. இது பற்றி நாம் கவலைப்பட வேண்டுவ தில்லை. தாயாகிய திருச்சபை, இந்நற்செய் தியை அதிகார பூர்வமானதாகவும், அதன் ஆசிரியர் தேவ ஏவுதல் பெற்றவர் என்றும் ஏற்றுக்கொண்டுள்ளது. இந்நூலுக்கு ஆசிரி யர் யார் என்று தெரியாவிட்டாலும், மேற்கூறிய காரணத்தின் பொருட்டும் (வச திக்காகவும்), இந்நூலை மத்தேயு எழுதிய தாகக் கூறுவோம். பாரம்பரியமும் இவ் விதமே கூறிவந்துள்ளது அல்லவா?

**4. ஆசிரியர் ஒரு யூதர், யூதர்களுக்கு எழுதுகிறார்; அவரது நோக்கம்:** அரமே யிக்கு மத்தேயு அம்மொழி பேசிய யூதர் களுக்காக எழுதப்பட்டது என்றால், கிரேக்க மத்தேயு அம்மொழி பேசிய யூதர்களுக்காக எழுதப்பட்டது எனலாம். பாலஸ்தீன யூதர் களுக்காக மத்தேயு எழுதப்பட்டது என்றால் அதில் பாலஸ்தீன இயல்பும் சுவடுகளும் மற்ற நற்செய்திகளைவிட அதிகமாகக் காணப்பட வேண்டும். சிறிது ஆராய்ந்தால் இஃது உண்மையே என்று அறிகிறோம். மத்தேயு, மற்ற நற்செய்தியாளர்களைவிட, யூதர்களையும் பாலஸ்தீனத்தையும் சார்ந்து தம் நற்செய்தியை எழுதியுள்ளார். மறை நூல் அறிஞர்கள், பரிசேயர்கள் ஆகியோரு டன் இயேசு கொண்ட தொடர்பை அவர் அதிகமாக விவரித்துள்ளார். மத்தேயுதான் இயேசு சட்டத்தோடு கொண்ட தொடர்பைப் பற்றி அதிக சிரத்தை காட்டு கிறார். மாற்கிலும், லூக்காவிலும் கூறப் படாத யூதப் பழக்க வழக்கங்களை இவர்

கூறுகிறார் (மத் 5:19-31; 6:1-6. 16-18;12:5; 15:2-5;23:5. 23. 27). இப்பழக்க வழக்கங்களை அவருடைய வாசகர்களாகிய யூதர்கள் ஏற்கெனவே அறிந்திருந்ததால் அவர் இவற்றிற்கு விளக்கம் தராது கூறுகின்றார். இலக்கிய இயல்பை ஆராயுங்கால், பரிசேயர்களிடையே பழக்கத்தில் உள்ள சொற்களும் (6:1; 11:29; 16:17-19; 18:18) பாரம்பரியமான சொற்களும் (5:22; 10:25) செமித்திக்கு நடையும் இந்நூலில் அதிகமாகக் காணப்படுகின்றன. இவை யாவும் இந்நூலை ஒரு யூதர், யூதர்களுக்காக எழுதுகிறார் என்று காட்டுகின்றன. இந்நூலைப் படிக்கும் போது இவ்வுண்மையை மனதில் கொள்ளுதல் மிக அவசியம்.

ஆசிரியரது நோக்கம் என்ன? இயேசுவே முன் அறிவிக்கப்பட்டவர் என்று யூதர்களுக்குக் காட்ட ஆசிரியர் விழைகிறார். இதை எண்பிக்கப் பல பழைய ஏற்பாட்டு வசனங்களைச் சான்றாக எடுத்துக் கூறுகிறார். இயேசுவை ஏற்க மறுத்ததால், யூதர்கள் மெசியாவினால் ஏற்பட்டுள்ள மீட்பிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றனர். இந்நோக்குடன் இந்நூலை ஆராய்ந்தால், இது யூதக் கிறிஸ்தவர்களுக்காகவும் யூதர்களுக்காகவும் எழுதப்பட்டது எனத் தெரிகிறது. இவர்கள் பாலஸ்தீனத்தில் வாழ்ந்தனர். ஆகையால், இந்நூல் எழுத்து வடிவம் எடுத்த இடமும் பரிசுத்த நாடான பாலஸ்தீனமாயிருத்தல் வேண்டும் என்று சிலர் கருதுகின்றனர்.

இந்நூலில் காணப்படும் பூகோள அறிவு, இட விவரங்கள், அரசியல் நிறுவனங்கள், கட்சிகள், சமய சமூகப் பழக்க வழக்கங்கள் ஆகியவை பற்றிய அறிவு முதலியவைகளை நோக்கும்போது இந்நூலின் ஆசிரியர் ஒரு பாலஸ்தீன யூதராய் இருக்க வேண்டும் எனத் தெரிகிறது. இந்நூலாசிரியரிடம், பொருளாதாரக் காரியங்களில் வரி வசூலிப்போருக்கு இருக்க வேண்டிய அறிவைக் காணலாம். பணம், நாணயம் பற்றிய செய்திகள், மற்ற நற்செய்திகளில் காணப்படுவதைவிட, இந்நூலில் அதிகமாகக் காணப்படுகின்றன. இந்நூலில் மட்டும் தான், மாற்கும் லூக்காவும் லேவி என்று குறிக்கும் ஆயக்காரர்தான் மத்தேயு என்று குறிக்கப்படுகிறது (9:9). இந்நூலின் அப்போஸ்தலர் பட்டியலில் மத்தேயு ஆயக்காரர் என்று அழைக்கப்படுகிறார் (10:3). அதனோடு, இந்நூலாசிரியர், பரிசேயருக்கு மாறான இயேசுவின் கொள்கைகளையும் நிகழ்ச்சிகளையும் கூறுவதுடன், பாவிகளிடமும் ஆயக்காரரிடமும் இயேசு காட்டிய பரிவையும், இரக்கத்தையும், மிகுந்த சிரத்தையுடன் எடுத்துக்கூறுகிறார் (9:13; 9:2; 11:19; 21:31).

இவற்றையெல்லாம் நோக்கின், மத்தேயு, ஒரு யூதக்கிறிஸ்தவரால், யூதக் கிறிஸ்தவர்களுக்காக எழுதப்பட்ட நூல் என்று ஐயமின்றிக் கூறலாம். ஆசிரியர் பாலஸ்தீனத்தைச் சார்ந்தவர்; அவர் பாலஸ்தீனத்தைச் சார்ந்தவர்களுக்கே எழுதினார்.

**5. எப்போது எழுதப்பட்டது?:** மத்தேயுவின் நற்செய்தி எப்போது எழுதப்பட்டது என்பது பற்றி பாரம்பரியம் ஒன்றுமில்லை. நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளும் பரிசீலனைக்கு உகந்தவைகளாகவும் இல்லை. இயேசு ஏறக்குறைய கி.பி. 30-இல் மரித்தார் என்றால், வாய்மொழிப் பாரம்பரியத்தின் வளர்ச்சியை மனதில் கொண்டால், அரமேயிக்கு மத்தேயு கி.பி. 40-50-இல் எழுதப்பட்டிருக்கலாம். அதன் கிரேக்க வாசகம் அதற்குப்பின் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

திருச்சபைத் தந்தையர்களுள் ஒருவரான யுசேபியு, மத்தேயு அப்போஸ்தல அலுவல் பொருட்டு பாலஸ்தீனத்தை விட்டுச் செல்லுமுன், அரமேயிக்கு நற்செய்தியை எழுதியதாகக் கூறுகிறார். இந்தப் பாரம்பரியம் எப்போது யாரால் தொடங்கப்பட்டது, இதன் உண்மை என்ன என்பனவற்றுள் ஒன்றையும் அறுதியிட்டுக் கூற முடியாது. இப்பாரம்பரியம் உண்மையானால், அரமேயிக்கு நற்செய்தி ஏறக்குறைய கி.பி. 42-இல் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

இரனேயு வழியாக வரும் மற்றொரு பாரம்பரியச் செய்தியுள்ளது. இதன்படி, பேதுரு, பவுல் ஆகியோர் உரோமையில்

திருச்சபையை நிறுவியபோது, அதாவது ஏறக்குறைய கி.பி. 60-ஐ ஒட்டி, மத்தேயு தமது நற்செய்தியை எழுதியதாகக் கொள்ள வேண்டும். இந்தப் பாரம்பரியம் யுசேபியு வின் பாரம்பரியத்தைவிடக் காலத்தால் முந்தியது. இஃது ஒருவேளை, கிரேக்க மத்தேயுவைக் குறிக்கலாம். நாம் முன்பு கூறியபடி, கிரேக்க மத்தேயு மாற்கைச் சார்ந்து எழுதப்பட்டிருந்தால், அது கி.பி. 65-க்கு முன் எழுதப்பட்டிருக்க முடியாது. ஏனெனில், ஆராய்ச்சியாளர் கருத்துப்படி, இவ்வாண்டை ஒட்டி, மாற்கு தமது நற்செய் தியை எழுதியிருக்க வேண்டும். மத் *22:7* தொ; *24:15-20* ஆகிய வசனங்களை மனதில் கொண்டு, நமது விவிலிய அறிஞர் சிலர், கி.பி. 70-க்கு முன்னும், மற்றும் சிலர் அதற்குப் பின்னும், மத்தேயு எழுதப்பட்ட காலத்தைக் கணிக்கின்றனர். இந்தக் காலப் பிரச்சனையை நன்கு ஆராய்ந்த அறிஞர்கள், கிரேக்க மத்தேயு கி.பி. 65-க்கு முன்னும் கி.பி. 80-க்குப் பின்னும் எழுதப்பட்டிருக்க முடியாது என்று கூறுகின்றனர். இடை யிட்ட காலத்தில் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

இக்காலப் பிரச்சனையை நாம் தெளிவாக வும் உறுதியாகவும் தீர்க்க முடியாது. இப்பிரச்சனை அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததுமன்று. யார் எழுதினாலும், எப் போது எழுதினாலும் என்ன? நமது நற் செய்தியின் நான்கு வடிவங்களும் அப் போஸ்தலர் காலத்தியத் திருச்சபையின் போதனையைக் கொண்டிருக்கின்றன. அக் காலத் திருச்சபையால் ஏற்று அங்கீகரிக்கப் பட்டு, பிற்காலத்தில் திருச்சபையால் போற் றப்பெறுகின்றன.

யார் எழுதியது, எப்போது எழுதப்பட் டது என்ற பிரச்சனைகளை எழுப்பி, ஓர் அறுதியற்ற நிலையோடு முடிக்கிறோம். இதைக் கண்டு சிலர் மனத்தளர்ச்சி அடை யக்கூடும். இப்பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பது அவ்வளவு எளிதன்று; இவை நமக்கு அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த வையுமன்று. இனி வரும் பகுதிகளில் மத்தேயுவின் நற்செய்தியைச் சிறிது ஆராய் வோம். இந்நூலின் பிரிவுகள், பொருளடக் கம், இலக்கிய அமைப்பு, சிறப்பியல்புகள், இறையியல் கொள்கைகள், சிறப்புப்போத கங்கள் ஆகியவை பற்றிப் பார்ப்போம். இவை இந்நூலை உய்த்துணரப் பெரிதும் பயன்படும்.

**6. பிரிவுகளும் பொருளடக்கமும்:** இந் நற்செய்தியின் பிரிவுகளைப் பலர் பல கோணங்களில் நோக்குவர். நாம் இதை விண்ணரசின் வருகையைப் பற்றிய ஏழு காட்சி கொண்ட ஒரு மாபெரும் நாடகமாக நோக்குவோம்.

I. **இயேசுவின் பிறப்பும் குழந்தைப் பருவ மும் (அதி. *1-2*).**

மீட்பரின் பகிரங்கப் பணியாகிய வரலாற் றிற்கு முன்னுரையாக அமைந்துள்ளது.

*1:1-17* சட்ட முறைப்படி இயேசுவின் தந்தையான யோசேப்பின் மரபு முறை செயற்கை முறையில் அமைக்கப்பட்டுள்ளது. ஒவ் வொன்றிலும் *14* பேர்களைக் கொண்ட மூன்று பட்டியலைக் கொண்டுள்ளது.

*1:18-25* கன்னியிடம் வியத்தகு முறையில் இயேசு பிறந்தது.

*2:1-12* ஞானிகளின் வருகை.

*2:13-18* எகிப்திற்குச் சென்றதும் குழந்தை கள் கொலையுண்டதும்,

*2:19-23* எகிப்திலிருந்து திரும்பியது.

II. **விண்ணரசு அறிவிக்கப்படல்** (அதி. *3-7*).

அ) இயேசுவின் திருப்பணிக்கு ஆயத்தம்.

*3:1-12* திருமுழுக்கு யோவானின் போத கம்.

*3:13-17* இயேசுவின் திருமுழுக்கு.

*4:1-11* இயேசு சோதிக்கப்படுதல்.

ஆ) கலிலேயாவில் பணி தொடங்கல்.

**1. முதல் நிகழ்ச்சியுரை:**

*4:12-17* பணியின் தொடக்கம்.

*4:18-22* முதல் சீடரை அழைத்தல்.

*4:23-25* அருஞ்செயல்கள்.

**2. முதல் அறவுரை - மலைப்பொழிவு; விண்ணரசின் உரிமைப்பத்திரம், பேரறிக்கை:**

*5:1-12* பேறுபெற்றோர்.

*5:13-16* சீடர்களின் அழைத்தலின் தன்மை.

*5:17-48* இயேசுவும் சட்டமும்; ஆறு எதிர் நிலைகள்; நீதி.

*6:1-18* பிச்சையிடுதல், செபித்தல், நோன்பு இருத்தல்.

*6:19-34* உண்மைச் செல்வம்; விண் ணரசைத் தேடுதல்.

*7:1-5* தீர்ப்பிடல்.

*7:6-11* நம்பிக்கையோடு செபித்தல்.

*7:12* பொன்விதி.

*7:13-14* இருவழிகள்.

*7:15-20* போலி இறைவாக்கினர்.

*7:21-29* தன்னையே ஏமாற்றிக் கொள்ளல்; உவமை.

**III. விண்ணரசு போதிக்கப்படுகிறது (அதி. 8-10)**

**1. இரண்டாவது நிகழ்ச்சியுரை:**

*8:1-15* மூன்று புதுமைகள் : தொழுநோயாளி, நூற்றுவர் தலைவனது ஊழியன், பேதுருவின் மாமியார் ஆகியோர் குணமடைதல்.

*8:16-22* இரு நிகழ்ச்சிகள் : இயேசுவைப் பின்பற்றுதல்.

*8:23-9* மூன்று புதுமைகள்: புயலை அடக்குதல்; பேய் பிடித்தவர்களையும், திமிர்வாதக்காரனையும் குணமாக்குதல்.

*9:9-17* இரு நிகழ்ச்சிகள் : மத்தேயுவை அழைத்தல்; நோன்பு பற்றிய தர்க்கம்.

*9:18-34* நான்கு புதுமைகள் : சிறுமி உயிர்த்தது; பெரும்பாடுள்ளவள், இரு குருடர், ஊமையன் ஆகியோர் குணமடைதல்.

இந்நிகழ்ச்சியுரைப் பகுதி முதல் அறவுரையையும், இரண்டாம் அறவுரையையும் இணைக்கிறது. நற்செய்தியாளர் பத்து அருஞ்செயல்களை விவரிக்கின்றார். இவை, எதிர்பார்த்த அரசு, கிறிஸ்துவால் உரிமைப்பத்திரம் அளிக்கப்பட்ட அரசே என்று நிரூபிக்கின்றன. இவை கிறிஸ்து அருஞ்செயல் செய்ய வல்லவர் என்று காட்டுகின்றன. இவற்றால் மக்களிடையே எழும்பிய ஆர்வத்தைக் காண்கிறோம். ஆயினும், இவர்கள் ஆயனில்லா ஆடுகள். மக்களின் இந்த அவல நிலையில், அப்போஸ்தலத்துவத்தின் அவசியத்தை வாசகர்கள் கண்டுணரும்படி *9:35-38* என்ற பகுதி அமைகிறது.

**2. இரண்டாம் அறவுரை:**

அதிகாரத்துடனும் வல்லமையுடனும் அப்போஸ்தலர்களை வேதபோதக அலுவலுக்கு இயேசு அனுப்புகிறார். அவ்வமயம் வேதபோதகத்தைப் பற்றி அவர்களுக்கு இயேசு அளித்த அறவுரைகள்.

*10:1-16* பன்னிருவரை அனுப்பியதும் அறவுரையும்.

*10:17-25* அப்போஸ்தலர் துன்புறுவர்.

*10:26-39* அஞ்சாது கிறிஸ்துவுக்குச் சாட்சி கூறுதல்.

*10:40-11:1* முடிவுரை.

**IV. விண்ணரசுக்கு எதிர்ப்பு: அரசின் தன்மை** (அதி. 11-18:52).

**1. மூன்றாம் நிகழ்ச்சியுரைப் பகுதி:**

*11:2-19* திருமுழுக்கு யோவானின் கேள்வியும் இயேசுவின் பதிலும்; இயேசு யோவானைப் போற்றுதல்.

11:20-24 கலிலேயா நகரங்களுக்குச் சாபம்.

11:25-30 இயேசுவும் அவரது தந்தையும்; மீட்பிற்கு அழைத்தல்.

12:1-14 ஓய்வுநாள் பற்றிய இரு தர்க்கங்கள்.

12:15-21 இயேசு விலகிச் செல்லல்.

12:22-37 இயேசுவும் பெயல்செபூலும்; பரிசேயருடன் தர்க்கம்.

12:38-42 அருங்குறி அளிக்க மறுத்தல்.

12:43-45 பின்னைய நிலை முன்னைய நிலையினும் மோசமானது. எச்சரிக்கை.

12:46-50 இயேசுவின் உண்மையான உறவினர்.

இப்பகுதி மூன்றாவது அறவுரைக்கு இட்டுச் செல்லுகிறது. மூன்றாவது அறவுரையிலே, தாழ்ச்சியுடையோர், இதயத் துக்கமுள்ளோர், நேர்மையுடையோர், பக்திமான்கள் ஆகியோர் கடைப்பிடித்து வாழும் தெய்வீகமறை உண்மையே விண்ணரசு என்று காண்கிறோம். அவ்விண்ணரசிலே அகந்தையுடையோர்க்கும், போலிப் பக்தியுடையோர்க்கும் இடமில்லை. இவர்களால் தெய்வீக மறை உண்மைப்படி வாழமுடியாது. ஆகையால் இத்தன்மைத் தோர் கிறிஸ்துவுக்கும் அவரது போதகத்திற்கும் எதிராக எழுவது இயல்பு. விண்ணரசைச் சார்ந்தவர்களுக்கும், அதன் எதிரிகளுக்கும் உவமை வாயிலாகவே போதிக்கக் காரணமாகிறது பரிசேயரது எதிர்ப்பு. கிறிஸ்து தம்மையே மெதுவாக வெளிப்படுத்துவது கண்டு திருமுழுக்கு யோவான் கூட வியப்பில் ஆழ்கிறார்; ஐயம் கொள்கிறார். இப்பகுதியில் பரிசேயர் காட்சியில் நுழைகின்றனர். அவர்களுக்கு எதிரான நிலையைக் கிறிஸ்து தெளிவாகக் கையாள்கிறார். இறுதியாக இயேசுவின் உறவினர் கூட அவர்மேல் நம்பிக்கையற்றவர்களாகக் காட்சி அளிக்கின்றனர்.

**2. மூன்றாம் அறவுரை - உவமைகள்:**

13:1-3 முன்னுரை.

13:4-9 விதைப்பவன் உவமை.

13:10-17 உவமை மூலம் போதிப்பது ஏன்?

13:18-23 விதைப்பவன் உவமையின் விளக்கம்.

13:24-30 கோதுமையிடையே களைகள்.

13:31-33 கடுகு விதை, புளித்தமாவு - உவமைகள்.

13:34-43 கோதுமையிடையே களைகள் என்ற உவமைக்கு விளக்கம்.

13:44-50 புதையல், முத்துக்கள், மீன்வலை ஆகிய உவமைகள்.

13:51-52 முடிவுரை.

இவ்வுவமைகள் விண்ணரசின் தன்மையை விவரிக்கின்றன. அதன் எளிமையையும் மறைந்த தன்மையையும் எடுத்துக் காட்டுகின்றன. அரசைச் சேர்ந்தவர்களை அதனோடு சேராதவர்களிடமிருந்து பிரித்துக் காட்டுகின்றன. தேசியப்பற்றுடைய மெசியாத் தன்மையை ஏற்க மறுத்து அதற்கு மாறான தன்மையை விளக்குகின்றன. பின் விசுவாசிகள் மட்டுமே அறிந்து கொள்ளும் விதத்தில் போதகம் அளிக்கப்படுகிறது.

V. **விண்ணரசின் தொடக்கம்** (அதி. 13:53 -18:35)

**1. நான்காம் நிகழ்ச்சியுரைப் பகுதி:**

13:53-58 நசரேத்தூரார் இயேசுவை ஏற்க மறுக்கின்றனர்.

14:1-12 திருமுழுக்கு யோவான் கொல்லப்பட்டது.

14:13-15:20 ஐயாயிரம் பேருக்கு உண்டியளித்தல், ஏரியின் மீது நடத்தல், புதுமைகள், தர்க்கங்கள்.

15:21-16:12 வட பாலஸ்தீனத்தில் இயேசு, புதுமைகள், நாலாயிரம் பேருக்கு உணவு அளித்தல், தர்க்கம், எச்சரிக்கை.

16:13-20 பேதுருவின் விசுவாச அறிக்கை.

16:21, 17:27 பாடுகளை முதன்முறையாக முன்னறிவித்தல், ஒளியுருவாதல், பேயோட்டல், இரண்டாம் முறையாகப் பாடுகளை முன்னறிவித்தல், கோவில் வரி செலுத்துதல்.

இப்பகுதி மூன்றாம் அறவுரையின் முடிவுரையாகவும், நான்காம் அறவுரைக்குத் தயாரிப்பாகவும் அமைந்துள்ளது. உவமைகளின் வழியாய் விண்ணரசின் தன்மை உணர்ந்த சிலர், இயேசுவோடு கொண்டிருந்த தொடர்பை அறுத்துக் கொண்டனர். இதுவரை இயேசுவைப் போற்றியவர்கள் இப்போது பிரிந்து சென்றனர். அவரிடம் மக்கள் முன்போல் உற்சாகமும் ஆர்வமும் கொள்ளவில்லை. கிறிஸ்துவே பின் வாங்குபவர் போலத் தோன்றுகிறார் (13:53). மக்கள் சலுகையிலிருந்து வீழ்ந்து விட்டவரைப் போன்று ஒதுங்கி வாழ்கிறார். தமது அப்போஸ்தலர்களுக்குப் பயிற்சி அளிப்பதிலும், அவர்களுக்குப் போதிப்பதிலும், திருச்சபை அமைப்பதிலும் தமது கவனத்தைச் செலுத்துகிறார். இருமுறை உணவுப் பொருளைப் பெருக்கிப் பலருக்கு உண்டியளிக்கிறார். பிலிப்புச் செசரியாவில் அப்போஸ்தலர் பெயரால் சீமோன் பேதுரு விசுவாச அறிக்கையிடுகிறார். திருச்சபைக்கு அடிக்கல் இடப்படுகிறது. பேதுருவின் முதன்மையை எடுத்துக்காட்டும் பொருட்டு நீரின்மேல் நடத்தல், ஆலய வரி செலுத்துதல் ஆகிய புதுமைகள் நடைபெறுகின்றன. இருமுறை தமக்கு வரவிருக்கும் தாழ்வு, இகழ்ச்சி, பாடுகள், உயிர்ப்பு, சிறப்பு ஆகியவற்றைப் பற்றி தமது சீடர்களுடன் இயேசு பேசுகிறார். அவர்களது விசுவாசத்தை உறுதிப்படுத்தவும், தம்மைப்பற்றியவைகளை அவர்கள் அறியும்படிக்கும், சிறப்புச் சலுகை பெற்ற மூன்று அப்போஸ்தலர்களுக்கு மட்டும், ஒளியுருவாகித் தமது மகிமையோடு தம்மையே வெளிப்படுத்துகிறார். இப்பகுதியானது பேதுரு விசுவாச அறிக்கை, பாடுகளை முன்னறிவித்தல், இயேசு ஒளியுருவாதல் ஆகியவற்றில் உச்ச நிலை அடைகிறது.

**2. நான்காம் அறவுரை - திருச்சபை பற்றிய பொழிவு:**

18:1-4- முதன்மை பற்றி அப்போஸ்தலர்களுக்குள் தர்க்கம்.

18:5-11 இடறலாய் இருப்போர்க்கு ஓர் எச்சரிக்கை.

18:12-14 உவமை - காணாமற்போன ஆடு.

18:15-18 சகோதரனைத் திருத்தல்.

18:19-22 பொதுச் செபமும் குற்றங்களை மன்னித்தலும்.

18:23-35 இரக்கமற்ற ஊழியன் உவமை.

இப்பகுதி இயேசுவைப் பின்பற்றுவோருக்கு அளிக்கப்படும் அறவுரையாகும். தாம் அடிக்கல் இட்ட சமூகத்திற்குக் கிறிஸ்து சட்டம் அளிக்கின்றார். அதன் அங்கத்தினரிடையே இருக்க வேண்டிய உறவு பற்றியும் விவரிக்கின்றார். அப்போஸ்தலர்களுக்கு, தாழ்ச்சி, அன்பு, ஒருவர்க்கொருவர் உதவி செய்தல் ஆகியவை பற்றிப் போதிக்கின்றார். அப்போஸ்தலர்களாகிய இச்சிறு மந்தைவழியாக விண்ணரசு வளரும். இயேசு மரித்தோரிடமிருந்து உயிர்த்தபின் இவர்கள் வழியாக விண்ணரசு உலகெங்கும் பரவும்.

**VI. விண்ணரசின் இறுதித் தோற்றத்திற்கு முன் வரவேண்டிய நெருக்கடி நிலை (அதி. 19-25).**

**1. ஐந்தாம் நிகழ்ச்சியுரைப் பகுதி:**

19:1-2 கலிலேயாவில் பணி முடிந்து யூதேயாவில் பணி தொடங்குகிறது.

19:3-12 மணமுறிவும் கன்னிமையும்.

19:13-15 இயேசுவும் குழந்தைகளும்.

19:16-26 பணக்கார வாலிபன்.

19:27-30 இயேசுவைப் பின்பற்றுவோர்க்குப் பரிசு.

20:1-16 திராட்சைத் தோட்ட ஊழியர்கள் - உவமை.

*20:17-19* மூன்றாம் முறையாகப் பாடுகளை முன்னறிவித்தல்.

*20-20-35* செபதேயுவின் மக்கள்; இரு குருடர் குணமாதல்.

*21:1-11* எருசலேமில் பணி தொடங்குகிறது; குருத்து ஞாயிறு.

*21:12-17* ஆலயத்தைச் சுத்தி செய்தலும், சிறுவர்களின் ஆரவாரிப்பும்.

*21:18-22* காய்க்காத அத்திமரம்.

*21:23-27* தர்க்கம் - இயேசுவின் அதிகாரம்.

*21:28-22:14* மூன்று உவமைகள்: இரு மக்கள், கொடிய குத்தகைக்காரர்கள், திருமண விருந்து.

*22:15-46* தர்க்கங்கள் : சீசருக்கு வரி செலுத்தலாமா? உயிர்த்தெழுதல் உண்டா? சட்டத்தில் பெரிய கட்டளை யாது? மெசியா தாவீதின் மகனும் ஆண்டவருமாய் இருப்பது எப்படி?

*23:1-36* பரிசேயரின் வெளிவேடத்தைக் கண்டித்தல்.

*23:37-39* எருசலேமைக் கண்டித்தல்.

இப்பகுதி ஐந்தாம் அறவுரைக்கு இட்டுச் செல்கிறது. இயேசு தமது எருசலேம் பயணத்தின்போது மணமுறிவு, கன்னிமை, செல்வம் ஆகியவை பற்றி தமது கருத்தைத் தெரிவிக்கின்றார். பாடுகளை மூன்றாம் முறையாக முன்னறிவித்துத் தமது பயணத்தின் நோக்கம் என்ன என்று எடுத்துக்காட்டுகிறார். இரு குருடர்களைக் குணமாக்குகிறார். எருசலேமில் நுழைந்து, ஆலயத்தைச் சுத்தி செய்கிறார். கனிகொடாத அத்திமரத்தைச் சபிக்கிறார். பரிசேயருக்கும் அவருக்குமிடையே தர்க்கங்களும் வாதங்களும் வலுக்கின்றன. இயேசு, யாவரும் அறிய பரிசேயர்களைக் கண்டிக்கிறார். இருவருக்குமிடையே நெருக்கடி நிலை மிகுகின்றது. ஓர் உச்சநிலையை நோக்கி இவ்வாழ்க்கைச் சித்திரம் இயங்குகிறது. இயேசு பரிசேயர்களைக் கண்டித்துச் சபித்தல், அவரே தமது சாவுத்தீர்ப்பிற்கு வழி கோலுகிற மாதிரி அமைகிறது.

**2. ஐந்தாம் அறவுரை - இறுதிக்காலம் பற்றிய பொழிவு**

*24:1-3* அறவுரையின் சந்தர்ப்பம்.

*24:4-14* முடிவின்முன் அடையாளங்கள்.

*24:15-22* துன்பங்களின் உச்சநிலை; எருசலேமின் அழிவு.

*24:23-31* போலி இறைவாக்கினரும், மனுமகனின் வல்லமை மிகுந்த வருகையும்.

*24:32-36* இவை எப்போது நிகழும்?

*24:37-25:30* விழிப்பாயிருங்கள்; உவமைகள் : இரவில் திருடன்; பிரமாணிக்கமற்ற மேற்பார்வையாளன்; பத்துக் கன்னியர்; தாலந்து (பணம்).

*25:31-46* பொதுத்தீர்வை.

தாம் பரிசேயர்களைக் கண்டித்ததால் வரக்கூடிய விளைவுகளிலிருந்து அப்போஸ்தலர்களின் கவனத்தை அகற்றி, விண்ணரசு இறுதியில் எவ்வாறு பெறப்படுகிறது என்பது பற்றிப் பேசுகிறார் இயேசு. புதிய ஏற்பாட்டிலே மறை பொருள் மிகுந்த இறுதிக்காலம் பற்றிப் பேசுகிறார். பழைய சட்டத்தின் மக்கள் இயேசுவை ஏற்க மறுத்ததும், கிறிஸ்துவை விசுவசிக்கும் மக்களைத் தேர்ந்தெடுத்தலும், எருசலேமின் அழிவும், இறுதித் தீர்ப்பும் ஆகிய இரட்டைக் கருத்துக்கள் பின்னிப் பிணைந்து விவரிக்கப்படுதலும் இப்பகுதியில் காண்கிறோம். யாவரும் விழிப்பாய் இருக்க வேண்டியதன் அவசியம் அழுத்திக் கூறப்படுகிறது.

VII. **விண்ணரசின் வருகை - முடிவுரை** *(அதி. 26-28)*

*அ) 26:1-5* இயேசுவைக் கொல்ல யூத நீதிமன்றம் முடிவு செய்கிறது.

*26:6-16* பரிமளத்தைலம் பூசுதலும், யூதாசின் சதியும்.

26:17-35 இயேசுவின் இறுதிப் பாஸ்கு விழா; இறுதி இரவுணவு; பேதுருவுக்கு எச்சரிக்கை.

26:36-46 கெத்சமனித் தோட்டத்தில்.

ஆ) 26:47-75 இயேசு பிடிபடல், நீதிமன்றம் இயேசுவை விசாரணை செய்தல், தலைமைச் சங்கம் விசாரித்தல், பேதுரு மறுதலித்தல்.

**இ) உரோமையர் நீதிமன்றம் இயேசுவை விசாரணை செய்தது.**

27:1-2 இயேசு பிலாத்துவிடம் கையளிக்கப்படுகிறார்.

27:3-10 யூதாசின் சாவு.

27:11-26 விசாரணையும் மரணத் தீர்ப்பும்.

27:27-31 வீரர்கள் இயேசுவை எள்ளி நகையாடுதல்.

27:32-56 சிலுவைப்பாதை, சிலுவையில் அறைதல், இயேசு உயிர் நீத்தல்.

27:57-66 இயேசுவின் அடக்கமும், கல்லறைக்குக் காவல் இட்டதும்.

**ஈ) இயேசுவின் உயிர்ப்பும் முடிவுரையும்.**

28:1-8 வானதூதர் பெண்களுக்கு உயிர்ப்பை வெளியிடுதல்.

28:9-11 இயேசு பெண்களுக்குத் தோன்றுதல்.

28:11-15 யூதர்களது சூழ்ச்சி.

28:15-20 இயேசு அப்போஸ்தலர்களுக்குத் தோன்றலும், யாவருக்கும் போதிக்கப் பணித்தலும்.

கிறிஸ்துவின் பாடுகள், மரணம், வெற்றி உயிர்ப்பு முதலியவைகளின் வழியாக விண்ணரசு உலகிற்கு வருகிறது. அங்கு நிலவுகிறது, வளருகிறது, விண்ணக எருசலேமாக வளர்ந்து கொண்டே இருக்கிறது.

மேற்கூறப்பட்ட பிரிவுகளில் பால பருவமாகிய முதற் பகுதியையும், பாடுகள், மரணம், உயிர்ப்பு ஆகிய இறுதிப் பகுதியையும் நீக்கிவிட்டு, மத்தேயு எழுதிய நற்செய்தியை நோக்கின், அஃது ஐந்து பாகங்களைக் கொண்டதாகத் தோன்றுகிறது. ஒவ்வொரு பாகமும் ஒரு நிகழ்ச்சியுரைப் பகுதியையும் ஓர் அறவுரைப் பகுதியையும் கொண்டுள்ளது. ஒவ்வொரு அறவுரைக்கும் சுருக்கமான முன்னுரை ஒன்றுளது; மத் *5:12; 10:1-5; 13:1-3; 18:1-2; 24:1-3.* ஒவ்வொரு அறவுரையும், ''இயேசு இவ்வார்த்தைகளைச் சொல்லி முடித்ததும்....'' என்று ஏறக்குறைய ஒரே விதமாய் முடிகின்றது (மத் *7:28; 11:1; 13:53; 19:1; 26:1*). பரிசேயர், மறைநூலறிஞர் ஆகியோரைப்பற்றிய கண்டனத்தைக் கொண்டுள்ள 23-ஆம் அதிகாரம் இத்திட்டத்தில் சரியாகப் பொருந்துவதாகத் தெரியவில்லை. 24-25-ஆம் அதிகாரங்களில் வரும் அறவுரையும் 19-22-ஆம் அதிகாரங்களில் வரும் நிகழ்ச்சியுரையும் சேர்ந்ததாக இருக்கிறது. 23-ஆம் அதிகாரத்தை நற்செய்தியாளர், தாம் வகுத்த முதல் திட்டத்துள் வேண்டுமென்றே புகுத்தியுள்ளதாகக் கருதுகின்றனர் அறிஞர்கள். விவிலியத்தின் முதல் ஐந்து புத்தகங்களாகிய ''ஐந்நூலைப்'' பின்பற்றி, நற்செய்தியாளர் தமது நற்செய்தியை இவ்வாறு ஐந்து பெரும் பிரிவுகளாக எழுதியுள்ளனர் என்றும் சிலர் கருதுகின்றனர். இவ்வைந்து பிரிவுகளும் தொடர்பற்ற பகுதிகள் அல்ல. இவற்றிடையே நெருங்கிய தொடர்புள்ளது. நிகழ்ச்சியுரைப் பகுதிகள், கிறிஸ்துவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை முறையாக எடுத்துக் கூறுகின்றன. அறவுரைப் பகுதிகளோ விண்ணரசைப் பற்றிய மெசியாக் கொள்கையைத் தெளிவாக விளக்குகின்றன. நிகழ்ச்சியுரைப் பகுதிகள் அறவுரைப் பகுதிகளை இணைக்கும் பகுதிகளாகவும், அவற்றிற்கு விளக்கமாகவும் அமைந்துள்ளன. மத்தேயு எழுதிய இயேசுவின் நற்செய்தியைக் கவனத்துடன் வாசித்தால் இதனை நன்கு உணரலாம். மேற்கூறிய ஐந்து பகுதிகளையும் கருத்தில் கொண்டால், இதற்கு ''விண்ணரசு பற்றிய போதகமும் அதன்

வெளிப்பாடும்'' என்ற தலைப்பைக் கொடுக்கலாம். அறவுரைகளுக்குச் சிறப்பு அளித்திருப்பது, மற்றப் போதகர்களை விட இயேசு மேலானவர் என்று காட்ட மத்தேயு விழைகிறார் என்பதைக் காட்டுகிறது.

**7. இலக்கிய நயமும் சிறப்பியல்புகளும்:** மத்தேயுவின் கிரேக்கநடை, மாற்கின் கிரேக்க நடையைவிடச் சிறந்தது. நிகழ்ச்சியுரைப் பகுதியில், அறவுரைப் பகுதியை விட, ஆசிரியரது கிரேக்கநடை சிறந்து விளங்குகிறது. நிகழ்ச்சியுரைப் பகுதிகளை விட, அறவுரைப் பகுதிகளில் அரமேயிக்கு நடையும், அரமேயிக்குப் போக்கும் அதிகமாயுள்ளன. இஃது அரமேயிக்கு மூலத்தைச் சுட்டிக்காட்டுவதாகத் தெரிகிறது. மாற்கு அரமேயிக்கு வார்த்தைகளுக்கு விளக்கம் தருவார். ஆனால், மத்தேயு யூதர்களுக்கு நற்செய்தியை எழுதினார். ஆகையால், அரமேயிக்கு சொற்களுக்கு விளக்கம் தருவதில்லை.

மத்தேயு எழுதிய நற்செய்தியில் ''செமித்திக்கு'' நடை பரவிக் கிடக்கிறது. அதற்குச் சான்றுகள்: *1)* தூண்டுசொல் பயன்படுத்துதல் (*சிறார்கள் 18:4-6; ஒளி-விளக்கு 5:14;* போன்றவை). *2)* எண் தொகுப்புகள்: இயேசுவின் மரபு முறை கூறுங்கால் *14* பேர் கொண்ட மூன்று தொகுப்புகள். இந்நூலை ஏழு பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்; ஆண்டவரது செபத்தில் ஏழு மன்றாட்டுகள்; உவமைப் பொழிவில் ஏழு உவமைகள்; பரிசேயருக்கு மாறாக ஏழு கேடுகள்; எழுபதுதடவை ஏழுமுறை பாவங்களை மன்னிக்க வேண்டும்; இயேசுவின் சோதனைகள் மூன்று; இவை போன்றவையாகும் (*மத் 1:1-17; 6:9-13; 13:1-50; 23:13-32; 18:22; 4:3-10; 23:23; 7:17-19; 8:28; 9:27; 26:61*). *3)* உட்சேர்க்கை அல்லது உள்ளமைவு: ஒரே வாக்கியத்தை அல்லது சொல்லை ஒரு பகுதியின் முன்னும் பின்னுமாகக் கூறுதல் (*5:3-10; 6:19-21; 7:16-20; 12:39-42; 15:2-20; 16:6-12; 18:1-4; 18:10-14*). *4)* நேர் நிலை இணைநடை, எதிர்நிலை இணைநடை (*7:24-27; 10:41; 7:16; 6:25*). *5)* ''இறைவாக்கினர் கூறியது நிறைவேறிற்று'' என்ற எடுத்துக்காட்டு வாய்பாடுகளை மத்தேயு மற்ற நற்செய்தியாளர்களைவிட அதிகமாகப் பயன்படுத்துகிறார். இதுபற்றி, பின்னர்ச் சிறிது விரிவாகப் பார்ப்போம். இச்செய்திக்கு நடையின் நயத்தை நாம் தமிழ் மொழி பெயர்ப்பில் உணர்வது கடினம். அக்கால இலக்கியத்தில் இவை சிறப்புபெற்று விளங்கின. மத்தேயு எழுதிய நற்செய்தியில் அரமேயிக்கு நடை கிரேக்க மொழியில் பயன்படுத்தப்பட்டாலும், மொழிநடை நன்முறையில் அமைந்துள்ளது.

மத்தேயுவின் நற்செய்தி கலையமைப்புடன் அமைக்கப்பட்டிருக்கிறது எனலாம். தமக்குக் கிடைத்த மூல நூல்களிலிருந்து தேவைக்கு ஏற்றவாறு தேர்வு செய்து நமக்கு அளிக்கிறார். சில சமயங்களில் பொருள் ஒற்றுமையின் அடிப்படையிலும், மற்றச் சமயங்களில் முக்கிய சொற்களின் அடிப்படையிலும் ஒரு தனிப்பட்ட முறையில் நிகழ்ச்சிகளையும் அறவுரைகளையும் தொகுத்து வரைகிறார். சிறப்பாக அறவுரைப்பகுதிகளில், மலைப்பொழிவு (*அதி. 5-7*), அப்போஸ்தலர்களுக்குப் புகட்டிய போதனை (*அதி. 10*), விண்ணரசு பற்றிய உவமைகள் (*அதி. 13*) ஆகிய பகுதிகளில் இவ்வாறு திட்டமிட்டுத் தொகுத்துத் தரலைக் கணலாம். இவற்றில் சிந்தனைத் தொடர்ச்சி ஒரு சில சிறப்பான சொற்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதில் முக்கியமாக அடங்கியிருக்கிறது. இவ்விதம் செபத்தைப்பற்றிய இயேசுவின் போதனைகள் யாவற்றையும் ஒரே இடத்தில் ஒன்று சேர்த்துத் தருகிறார் மத்தேயு. இதில் ஆண்டவரது செபமும் அடங்கியிருக்கிறது. ஆனால், லூக்கா இச்செபத்தைப் பிறிதொரு இடத்திலும், இயற்கையான பிறிதொரு சூழ்நிலையிலும் தருகிறார் (*லூக் 11:24*). இவ்விதமே வேதகலாபனையைப் பற்றிய எச்சரிக்கைகள் தொகுக்கப்பட்டு (*மத் 10:16-39*), அப்போஸ்தலர்களுக்குப் போதகம் அளிக்கும் சூழ்நிலையில் (*மத் 10:1-42*) கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால், இவை லூக்காவில் பல இடங்களில் சிதறிக் கிடக்

கின்றன (லூக் *6:40; 8:17; 9:24-26; 12:2-9. 51* தொ;*14:26* தொ). மத்தேயுவில் அருஞ் செயல்களும் ஒரு திட்டமான முறையில் தொகுக்கப்பட்டுள்ளன.

இவ்விதம் செயற்கை முறையில் தொகுக் கப்பட்டிருப்பதால், மத்தேயுவில் காணப் படும் ஒழுங்குமுறை காலவரைப்படி அமைக்கப்பட்டது என்று கூற முடியாது. மத்தேயுவில் அடிக்கடி காணப்படும் ''அப் போது'' (ஏறக்குறைய 90 தடவை) கால வரைத் தொடர்பைக் குறிப்பதாக நாம் எடுத்துக்கொள்ளக் கூடாது. அப்படி எடுத் துக்கொண்டால் பல முரண்பாடுகளைக் காண்போம். இச்சொல் ஓர் இணைக்கும் சொல்லேயன்றி வேறன்று. ''மலையின் மேல்'', ''கடற்கரையிலே'' போன்ற சொற் றொடர்களும் பல நிகழ்ச்சிகளைச் செயற்கை முறையில் இணைக்கவே பயன் படுத்தப்பட்டுள்ளன.

மத்தேயுவின் கலையமைப்புத் தன் மையை, கதை சொல்பவனைப் போன்று ஒரே விதமாய்த் தொடங்குவதிலும் (மத் *4:23; 5:21.27.33.38.43; 13:24. 31.33.44.45.47*), ஒரே விதமாய் முடிப்ப திலும் (*24:42; 25:13; 24:51; 25:30*) காண லாம். ஐந்து அறவுரைகளும் ஒரே சொற் றொடருடன் முடிவதை ஏற்கெனவே சுட் டிக்காட்டியுள்ளோம். ஒவ்வொரு அறவுரை யும், சிறப்பாக மலைப்பொழிவு, ஒரு திட்டத்துடன் அமைக்கப்பட்டிருக்கிறது. இத்திட்டத்திலும் கலையமைப்புத் தன்மை யைக் காணலாம்.

மற்ற நற்செய்திகளில் காணப்படுவது போல், மத்தேயுவில் சிறு விவரங்கள் காணப்படுவதில்லை; கால, இடச் சூழ் நிலைகள் சுட்டப் படுவதில்லை. இவற்றைப் பற்றி நற்செய்தியாளர் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. இக்குறை இந்நற்செய்தியைப் புரிந்து கொள்ளுவதற்குச் சில சமயங்களில் தடை யாக இருக்கிறது. மற்ற நற்செய்திகள் இல்லையெனில் மத்தேயு சிலவற்றை ஏன் கூறுகிறார் என்று அறிவது கடினம். சான் றாக, ''மாலை வேளையில்'' (*8:16*) குண மடைவதற்காக நோயாளிகள் இயேசுவிடம் வந்தனர் என்று மத்தேயுவில் காண்கிறோம். ஏன் மாலையில் மட்டும் வந்தனர் என்று கூறப்படவில்லை. இதற்கு மாற்கும், லூக் காவும் விளக்கம் அளிக்கின்றனர் (மாற் *1:21-32;* லூக் *4:31-40*). அன்று ஓய்வுநாள். ஆகையால், மாலையில்தான் பயணம் செய்ய முடியும். இச்சூழ்நிலையில் குண மாக்கும் பேரன்பலுவல் நடைபெறுகிறது. மற்றோர் இடத்தில், கூட்டம் அதிகமாக இருந்ததால் கூரை வழியாகத் திமிர்வாதக் காரனை இயேசுமுன் இறக்குவதைத் தவிர வேறு வழியில்லை என்று மாற்கும் (*2:1-12*), லூக்காவும் (*5:19-26*) கூறுகின்ற னர். இச்சிறு விவரத்தை அறியாது போனால், கப்பர்நாகுமில் திமிர்வாதக் காரனைக் கொண்டு வந்தவர்களின் விசுவா சத்தை ஏன் ஆண்டவர் வியந்தார் (மத் *9:1-8*) என்பதை நாம் எளிதில் அறிய முடியாது.

இப்படிச் சிறு விவரங்களைக் கூறாது விட்டுவிடுதல், அல்லது செயற்கை முறை யில் ''மலையின் மேல்'', ''கடற்கரையிலே'' போன்ற சொற்றொடர்களைச் சேர்த்தல் ஆகியவை, நற்செய்தியாளரால் வேண்டு மென்றே கையாளப்படுகின்றன என்று ஓர் அறிஞர் கருதுகின்றார். இம்முறையைக் கையாளுவதன் நோக்கம் என்ன? அருஞ் செயல்களின், பொதுவாக ஒரு நிகழ்ச்சி யின், உண்மையான அடையாளப் பொருள் தெளிவாகத் தோன்ற வேண்டும்; கால, இடச்சூழ்நிலைகளிலிருந்து பிரிக்கப்பட்டு, அருஞ்செயல்கள் விண்ணக உண்மைகளின் மண்ணகத் தோற்றங்களாகத் தோன்ற வேண்டும். இதுவே ஆசிரியரது நோக்கம். இதன் விளைவாக, மத்தேயுவின் விவரிப்பு, மாற்கின் விவரிப்பைப் போன்று அவ்வளவு உயிருள்ள சித்திரமாக அமைவதில்லை. ஆயினும், ஆசிரியர் தாம் கூறக் கருதியதைத் தெளிவாகவும், விளக்கமாகவும் கூறுகிறார்.

இந்நற்செய்தியில், நிகழ்ச்சியுரைகளும் அறவுரைகளும் தொகுத்து வரையப்பட் டாலும் ஒன்றிற்கொன்று விளக்கமாக

அமைந்துள்ளன. திருச்சபையிலே, இந்நற்செய்திக்குத் தனிச்சிறப்பையும் முக்கியத்துவத்தையும் அளிப்பது இதில் காணப்படும் மாபெரும் அறவுரைத் தொகுப்புகளே. இந்நற்செய்தியின் பெரும்பகுதி, கிறிஸ்துவின் வாழ்க்கை, போதனை பற்றிய திருச்சபையின் போதகத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ளது. நமது வழிபாட்டுக் கொண்டாட்டங்களில் பெரிதும் இந்நூல் பயன்படுகிறது. ஆண்டவரது செபம், பெரும்பேறுகள், இந்நூலில் உள்ளபடியே வழக்கில் இருந்து வந்திருக்கின்றன. பேதுருவின் தலைமைக்கும், பிற்காலத்தில் பாப்புவின் தலைமைக்கும் அடிப்படையான, ''உன் பெயர் பாறை...'' *(மத் 16:17-18)* என்ற பகுதி இந்நூலில் மட்டுமே காணப்படுகிறது. இப்பகுதியின் சிறப்பையும் முக்கியத்துவத்தையும் திருச்சபை வரலாற்று ஆசிரியர் நன்குணர்வர். பண்டைய இலக்கியங்களிலும், இக்கால இலக்கியங்களிலும், திருச்சபையின் போதனைகளிலும், மற்ற நற்செய்தி நூல்களைவிட அதிகமாக எடுத்தாளப் படுவது இந்நற்செய்தியே. இதனைத் திருச்சபையின் நற்செய்தி என்பர் பலர்.

ஆகவேதான், ஓர் அறிஞர் பின்வருமாறு கூறுகிறார்: ''மாற்கில் காணப்படுவது போல், மத்தேயுவில் காணப்படும் கிறிஸ்து அவ்வளவு எளியவர் அல்லர். லூக்காவில் காட்டப்படுவதுபோல், கிறிஸ்து உலகின் மீட்பர் என்று மத்தேயுவில் தெளிவாகக் காட்டப்படவில்லை. யோவானில் அழைக்கப்படுவதுபோல், இந்நற்செய்தியில் கிறிஸ்து வார்த்தையானவர் என்று அழைக்கப்படவில்லை. மத்தேயுவில் நாம் காணும் கிறிஸ்து தன்மையாலே ஆன்மீகமானவர்; சாந்தமும் தாழ்ச்சியுமுடைய இதயத்தவர்; புகையும் திரியை அணையார்; போலித்தனத்திற்குச் சவால்விட்டு, அதன் வேடத்தைக் கலைத்து உண்மையை வெளிப்படுத்துபவர்; வாழ்வளிக்கும் அரும் போதகங்களை வழங்குபவர். அவர் மெசியா. அவர் சட்டம் அளிப்பவர். மோசேயைப்போல் மற்றொருவர் பெயரால் அன்று; தாம் கடவுள் என்ற காரணத்தால் சட்டம் அளிப்பவர். அவரே இறைவனின் ஒரே மகன்; பேதுருவின் மேல் கிறிஸ்தவ சபையை நிறுவினவர். அவரை இஸ்ராயேலர் ஏற்க மறுத்தனர்; திருச்சபை ஏற்றிப் போற்றுகின்றது. மாற்கில் காணப்படும் இயல்வாய்மை, மத்தேயுவின் நிகழ்ச்சியுரையில் நாம் காணாது போகலாம். லூக்காவில் காணப்படும் கனிவுடைக் கவர்ச்சி இந்நூலில் அவ்வளவு இல்லாதிருக்கலாம். யோவானைப்போல், மத்தேயுவின் நோக்கு இறைக் காரியங்களில் நிலைத்திராமலிருப்பதாகத் தோன்றலாம். ஆனால், மற்றவர்களுடைய நூலைவிட இந்நற்செய்தியில் கிறிஸ்துவின் வாக்குகள் அதிகமாக உள்ளன. இவ்வார்த்தைகள் எளியவை, ஒழிவு மறைவு அற்றவை. இவை எவ்வளவு ஊடுருவிச் செல்லும் தன்மையுடையவை என்றால், கிறிஸ்துவின் உதடுகளிலிருந்து வந்த அதே உச்சரிப்பு, அதே ஒலி கேட்பது போல் தோன்றும்! ஆகவேதான், திருச்சபைப் பாரம்பரியத்தின் மிகப்பழைய சான்றாளரான பாப்பியஸ், மத்தேயுவில் மற்றவை எல்லாவற்றையும்விட இறை வார்த்தைகளையே மிகுதியாகக் காண்கிறார். இதுவே ஆசிரியரின் தனிச்சிறப்பாகும். ஆசிரியரின் சுருங்கச் சொல்லும் திறனும், நடையும் கிறிஸ்துவின் வார்த்தைகளுக்கு மிகுந்த வலிமையையும் ஆற்றலையும் அளிக்கின்றன. ஆகவேதான், திருச்சபைக்கும், போதகர்களுக்கும், புனிதர்களுக்கும் அன்புக்குரியதொன்றாக விளங்கி வந்துள்ளது இந்நூல். ஆகையால், மத்தேயுவை வாசிக்கும்போது அங்கு உயிரளிக்கும், உய்வளிக்கும், உயிர்ப்பு அளிக்கும் கிறிஸ்துவின் வார்த்தைகளை நாம் தேட வேண்டும்; அறிய வேண்டும்; அதற்குத்தக நடக்க வேண்டும்''.

**8. மத்தேயுவில் பழைய ஏற்பாட்டு வாசகங்கள்:** நற்செய்தியாளர் நால்வரும், பழைய ஏற்பாடு கிறிஸ்துவில் நிறைவு பெறுகிறது, முழுமையடைகிறது என்று காட்ட விழைகின்றனர். இந்த முயற்சியில் யாவரையும் மிஞ்சியவர் மத்தேயுதான். மற்றவர்களைவிட, மத்தேயுதான் அதிக

மாகப் பழைய ஏற்பாட்டு வாசகங்களைக் கையாள்கிறார். மாற்கு இருபத்து மூன்று முறையும், லூக்கா இருபத்தைந்து முறையும் பழைய ஏற்பாட்டு வாசகங்களை எடுத்துக்காட்டுகின்றனர். மத்தேயுவோ அறுபது முறை பழைய ஏற்பாட்டு வாசகங்களை நேரடியாக எடுத்துக்கூறுகிறார். மேலும், பல இடங்களில் மறைமுகமாகவும் எதிரொலிப்பாகவும் பழைய ஏற்பாட்டு வாசகங்களைச் சுட்டுகின்றார். இவற்றில் இருபத்தொரு வசனங்கள் முதல் மூன்று நற்செய்திகளுக்கும் பொதுவானவை. மத்தேயுவுக்கு மட்டும் உரிய எடுத்துக்காட்டு வசனங்களில் பதினொரு வசனங்கள், கிறிஸ்து பழைய ஏற்பாட்டு வசனங்களை நிறைவேற்றினார் என்று காட்டுகின்றன. இவை ஆசிரியரது சிந்தனையோடு கூடிய எடுத்துக்காட்டுகள். இவை பாலபருவ நிகழ்ச்சியுரையில் ஐந்தும் (மத் *1:22-23; 2:5-6. 15. 17-18. 23*), மத்திய பகுதியில் ஐந்தும் (மத் *4:14-16; 8:17; 12:17-21;13:35; 21:4-5*), பாடுகளின் நிகழ்ச்சியுரையில் ஒன்றுமாக எடுத்தாளப்பட்டுள்ளன. இவை யாவும் மேற்கூறியது போல் மத்தேயுவுக்கு மட்டும் உரியவை. மேலும், இவை ஆசிரியரது சொந்தச் சிந்தனைகளாகும். இவ்விதம் கூறுவது மத்தேயுவுக்குரிய சிறப்பாகும். இதில் யூத ராபிகளின் நடையைப் பின்பற்றுகிறார் ஆசிரியர். மற்ற எடுத்துக்காட்டுகள் இயேசுவின் வழியாகவோ, மற்றவர்களின் வழியாகவோ கூறப்படுகின்றன. இவை யாவும் ''ஆண்டவர்... இறைவாக்குரைஞர் எசாயாவின் வாக்கு நிறைவேறும் பொருட்டு...'', அல்லது ''ஆண்டவர்... இறைவாக்குரைஞர் எசாயாவின் வாக்கு நிறைவேறிற்று'' என்ற ஒரே விதமான முன்னுரையுடன் தொடங்குகின்றன. மத்தேயுவில் மட்டும் முப்பத்தேழு பழைய ஏற்பாட்டு வசனங்கள் ''நிறைவேறும்படியாக...'' என்ற சொற்றொடருடன் காணப்படுகின்றன. இந்த வாக்கியங்களை இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் பொருத்திக்காட்டும் விதம் செயற்கை முறையாகக் காணப்படுகிறது. செயற்கை முறையில் ஆசிரியரால் சேர்க்கப்பட்டமையால் இவைகளை எளிதாய் இவற்றின் சூழ்நிலையினின்று எடுத்துவிடலாம்.

பழைய ஏற்பாட்டு எடுத்துக்காட்டுகள் ''எழுபது நூலிலிருந்து'' எடுக்கப்பட்டுள்ளன. ஓர் இடத்தில், பழைய ஏற்பாட்டில் காணப்படாத ஒரு வாக்கியத்தைப் பழைய ஏற்பாட்டு வாசகமாக எடுத்துக்காட்டுகிறார்: ''நசரேயன் எனப்படுவார்'' *(2:23)*. இது கண்டு ஆராய்ச்சியாளர் சிலர் தயக்கமுறுவர். சில இடங்களில் வேறுபட்ட பழைய ஏற்பாட்டு வசனங்களைத் தமது நோக்கத்திற்கு ஏற்ப இணைத்துக் கூறுவார். சில இடங்களில் தமது சொந்தச் சிந்தனையாகப் பழைய ஏற்பாட்டு வசனங்களை எடுத்துக் கூறுவார். இவை செயற்கை முறையாக நமக்குத் தோன்றலாம். ஆனால், இம்முறையைக் கையாள்வதன் மூலம் தாம் ராபிகள் முறையில் நல்ல தேர்ச்சியுடையவர் என்று காட்டுகிறார் ஆசிரியர். இம்முறைகள் யூத வாசகர்களுக்குச் சிறிதும் வியப்பை அளித்திருக்கா.

பழைய ஏற்பாட்டு வசனங்களை ஆசிரியர் பயன்படுத்திய முறைக்குச் சில சான்றுகள் ஈண்டுத் தருவோம். மத் *1:23*-இல் எபிரேய வாசகத்திற்குப் பதிலாக, கிரேக்க ''எழுபது நூலின்படி'' எடுத்துக்காட்டு தருகிறார். ''இதோ! கன்னி கரு தாங்கி மகனைப் பெற்றெடுப்பாள், அவருக்கு எம்மானுவேல் என்று பெயரிடுவர்'' (எசா *7:14*). எபிரேய வாசகத்தில், ''கன்னி''க்குப் பதிலாக, ''இளமங்கை'' என்றும், ''பெயரிடுவர்'' என்பதற்குப் பதிலாக ''அவள் பெயரிடுவாள்'' என்றும் கூறப்பட்டுள்ளன.

மத் *2:15*-இல், யூதர்கள் எகிப்திலிருந்து விடுதலை பெற்ற ''கடத்தல்'' நிகழ்ச்சியைக் குறிக்கும் ''எகிப்திலிருந்து என் மகனை அழைத்தேன்'' (ஓசே *11:1*) என்ற வசனத்திற்குப் பிறிதொரு பொருள் கொடுத்து, அது மெசியாவைப் பற்றியதாக எடுத்துக் கூறுகிறார்.

மத் *4:15-16*-இல் ''செபுலோன் நாடே! நப்தலி நாடே! பெருங்கடல் வழிப் பகுதியே! யோர்தானுக்கு அப்பாலுள்ள

நிலப்பரப்பே! பிற இனத்தவர் வாழும் கலிலேய நாடே! காரிருளில் இருந்த மக்கள் பேரொளியைக் கண்டார்கள். சாவின் நிழல் சூழ்ந்துள்ள நாட்டில் குடியிருப்போர் மேல் சுடர் ஒளி உதித்துள்ளது'' (எசா *9:1-2*) என்று எசாயா நூலிலிருந்து எடுத்துக்காட்டு கிறார். மத்தியதரைக் கடற்பகுதிகளையும், அசீரியர்களையும் மனதில் கொண்டு இறை வாக்குரைஞர் எசாயா இதைக் கூறுகிறார். இதே வசனங்களை மத்தேயு, தமது நோக் கத்திற்கேற்ப பொருள் கொடுத்து எடுத்துக் காட்டுகிறார். நாசரேத்திலிருந்து கலிலே யாக் கடற்கரையிலுள்ள கலிலேயாவுக்குத் தமது உறைவிடத்தை இயேசு ஏன் மாற்றி னார் என்பதற்கு இறையியல் காரணம் காட்டும் நோக்கோடு, இதைத் தமது சிந்தனையோடு கூடிய எடுத்துக்காட்டாகத் தருகிறார்.

மத் *11:10*-இல் ''வழியில் உன்னைப் பாதுகாக்கவும், நான் ஏற்பாடு செய்துள்ள இடத்தில் உன்னைக் கொண்டு சேர்க்கவும், இதோ நான் உனக்கு முன் ஒரு தூதரை அனுப்புவேன்'' என்ற பகுதியையும் (யாத் *23:20*), ''இதோ நான் என் தூதரை அனுப்பு கிறேன். அவர் எனக்கு முன் வழியைத் தயாரிப்பார்'' (மலா *3:1*) என்ற பகுதியை யும் இணைத்துச் சிறிது மாற்றி, திரு முழுக்கு யோவானைக் குறிக்கும்படியாக, ''இதோ, என் தூதரை உமக்கு முன் அனுப்புகிறேன். அவர் உமக்கு முன் உம் வழியைத் தயார் செய்வார்'' என்று எடுத்துக் கூறுகிறார் நற்செய்தியாளர். இதே போன்று மத் *21:4-5*-இல் ''சீயோனிடம் சொல்லுங்கள்; இதோ, உன் மீட்பு வருகின் றது'' (எசா *62:11*) என்ற பகுதியையும், ''மகளே சீயோன்... இதோ உன் அரசர் உன்னிடம் வருகிறார்.... கழுதையின் மேல், கழுதைக் குட்டியாகிய மறியின் மேல் ஏறி வருகிறார்'' (செக் *9:9*) என்ற பகுதியையும் இணைத்து, ''இதோ உன் அரசர் கழுதை யின் மேலும், கழுதைக்குட்டியாகிய மறி யின் மேலும் அமர்ந்து சாந்தமாக உன்னி டம் வருகிறார் எனச் சீயோன் மகளுக்குச் சொல்லுங்கள்'' என்று கூறுகிறார்.

மத் *27:9-10*-இல் யூதத் தலைவர்களின் செயலால் எவ்வாறு எரேமியாவின் இறை வாக்கு நிறைவேறியது என்று கூறுங்கால், எரே *32: 6-15*; *18:2-3*; செக் *11:12-13* ஆகிய பகுதிகளைச் சேர்த்துச் சுருக்கி, ''இஸ்ரா யேல் மக்களால் விலைமதிக்கப் பெற்றவ ருடைய விலையாகிய முப்பது வெள்ளிக் காசுகளை எடுத்து ஆண்டவர் எனக்குக் குறித்தபடியே குயவன் நிலத்திற்குக் கொடுத்தார்கள் என்று இறைவாக்குரைஞர் எரேமியா கூறியது அப்போது நிறைவே றிற்று'' என்று கூறுகிறார் ஆசிரியர்.

எசாயாவிலிருந்து எடுத்துக்காட்ட, ஆசிரி யர் பெரிதும் விரும்பியதாகத் தெரிகிறது. தமது நோக்கத்திற்கு ஒத்த பழைய ஏற் பாட்டு வசனங்களை மட்டுமே எடுத்துக் காட்டுகிறார். இதில் அவரது நோக்கம் யாது என்பது பற்றி அடுத்த பகுதியில் பார்ப்போம்.

**9. இறையியல் போதனைகள்:** மத்தேயு இந்நூலை ஓர் ஆதார அல்லது காப்புரை யாக எழுதினார். இந்நோக்கு இந்நற்செய்தி யின் பொருளடக்கத்தைப் பெரிதும் வரை யறை செய்கிறது. மனந்திரும்பாத யூதர்கள் அளித்த எதிர்ப்புகளுக்கும் அவதூறுகளுக் கும் யூதக்கிறிஸ்தவர்கள் பதில் அளிக்க ஏதுவாகும்படி இந்நூலில் நிகழ்ச்சிகளும், கருத்துகளும், தலைப்புகளும் அமைந்துள் ளன. இயேசு யூதர்கள் ஏக்கத்துடன் எதிர் பார்த்த மெசியா; அவரே தாவீதின் தவப் புதல்வன்; கடவுளின் ஒரே மகன்; அவர் நிறுவிய விண்ணரசே திருச்சபை என்பவை மத்தேயுவில் காணப்படும் சிறப்புமிக்க கொள்கைகளாகும். இவை பற்றிச் சிறிது காண்போம்.

**அ) இயேசுவே மெசியா அல்லது கிறிஸ்து:** ''மெசியா'' என்ற எபிரேயச் சொல்லும், ''கிறிஸ்து'' என்ற கிரேக்கச் சொல்லும் ''அபிடேகநாதன்'' அல்லது ''தைலத்தால் திருநிலைப் படுத்தப்பட்டவர்'' எனப் பொருள்படுவன. இப்பெயர் குருக்க ளுக்கும், இறைவனது மீட்புத்திட்டத்தில் சிறப்பு அலுவல் பெற்றவர்களுக்கும், யூத

அரசர்களுக்கும் பழைய ஏற்பாட்டில் வழங்கப்பட்டது. சிறப்பாக, தாவீதின் குலத்தில் வழி வழியாக வந்த அரசர்களுக்கு இப் பெயர் வழங்கப்பட்டது. இப்பெயர், இறைவன் இவ்வரசர்களுக்கு அளித்த வல்மையையும், தேவ ஆவியின் ஆற்றலையும் குறித்தது. ஆனால், இவ்வரசர்கள் எப்போதும் இறைவனுக்குப் பிரமாணிக்கமாய் இருக்கவில்லை; நாட்டை இழந்தனர்; நாடு கடத்தப்பட்டனர். இந்நிலையில், வரவிருக்கும் ஒரு மாபெரும் மன்னனைப் பற்றிப் பேசினர் இறைவாக்குரைஞர்கள். யூதர்கள் நாடு கடத்தப்பட்டுத் தொல்லையுற்ற காலத்தில் வரவிருக்கும் மெசியாவைப் பற்றிய கருத்து வளர்ச்சியடைகிறது. சிலர் அரசுத் தன்மையுடைய மெசியாவை எதிர்பார்த்தனர். வேறு சிலர் குருத்துவத் தன்மையையுடைய மெசியாவை எதிர்பார்த்தனர். மற்றும் சிலர் இவ்விரு தன்மைகளையும் உடைய மெசியாவை எதிர்பார்த்தனர். அவர் அடையும் இன்னல்களையும் வெற்றிகளையும் பாடி மகிழ்ந்தனர். ஆனால் அவர்கள் எதிர்பார்த்ததெல்லாம் உலகைச் சார்ந்த அரசரையே. ஆயினும் சில இடங்களில், மெசியாவின் உண்மைத்தன்மை தரப்படுகிறது. அவர் இறையாட்சியை நிறுவுவார் என்றும், யாவேயின் ஊழியன், மனுமகன் என்ற பெயரில் மீட்பின் திட்டத்தை நிறைவேற்றுவார் என்றும் கூறப்படுகிறது. ஆனால் மெசியாவைப் பற்றி ஒரு கருத்தும் தெளிவாக இல்லை. ஐயமும், மயக்கமுமே நிறைந்துள்ளன. இவை, இயேசுவின் வருகையாலும், அவரது போதகத்தாலும், வாழ்க்கையாலும், நீங்குகின்றன. தெளிவும் பிறக்கிறது.

மெசியா என்ற கருத்து நற்செய்தியின் முதல் வடிவத்தில் முதன்மை பெற்று விளங்குகிறது. பழைய ஏற்பாட்டில் முன்னறிவிக்கப்பட்டு, வாக்குத்தத்தம் செய்யப்பட்டவர் இயேசுவே. இவரது வருகைக்காகவே யூதர்கள் காத்திருந்தனர். ஆயினும், அவர் வந்தபோது அவருடைய மக்களே அவரை ஏற்க மறுத்தனர். இக்கருத்துக்கள் இந்நூல் முழுவதிலும் பரவிக் கிடக்கின்றன.

இயேசுவே வாக்குறுதி செய்யப்பட்ட மெசியா என்பது பழைய ஏற்பாட்டிலிருந்து, சிறப்பாக இறைவாக்குகளிலிருந்து, எடுத்துக்காட்டப்படும் சான்றுகளால் நிரூபிக்கப்படுகிறது. மாற்கையும், லூக்காவையும் விட அதிகமாக மத்தேயு பழைய ஏற்பாட்டு வாசகங்களைக் கையாள்கிறார் என்பதையும், அவர் கையாளும் முறையையும் பற்றி ஏற்கெனவே பார்த்துள்ளோம். இவ்விறை வாக்குகளுக்குச் சொந்த முறையில் விளக்கம் அளித்து, இயேசு அபிடேக நாதன் எனப் பொருள்படும் கிறிஸ்து அல்லது மெசியா என்று திருச்சபை பறைசாற்றுதல் சரியே என்று ஆசிரியர் நிரூபிக்கின்றார். இவ்விதம் செயற்கை முறையில், சிந்தனையோடு கூடிய எடுத்துக்காட்டுகளைக் கையாண்டாலும், தனிப்பட்ட அறிவொளி பெற்று, அவற்றைப் பயன்படுத்துகிறார். இவற்றில் திருச்சபையின் சிந்தனைகளையும் விசுவாசத்தையுமே எதிரொலிக்கின்றார்.

இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கும், அவரது நடத்தைக்கும், பழைய ஏற்பாட்டிலிருந்து மேற்கோள் காட்டி விளக்கம் அளிக்கிறார் ஆசிரியர். பழைய ஏற்பாட்டு எடுத்துக்காட்டுகள் இயேசுவின் ஒவ்வொரு வாழ்க்கை நிகழ்ச்சிக்கும் புதிய ஒளி தருகின்றன. இயேசு கன்னியிடம் பிறந்தவர் (*மத் 1:22-24*); பெத்லகேமில் பிறந்தவர் (*2:5-6*); எகிப்தில் அடைக்கலம் புகுந்தவர் (*2:15*). பெத்லகேமில் சிறு குழந்தைகள் கொல்லப்பட அவரே காரணம் (*2:7-10*). அவர் நாசரேத்தூரில் வாழச் சென்றார் (*2:13*). அவரது பணியின் பெரும் பகுதி, எருசலேமில் அன்றி, கப்பர்நாகுமிலும், புற இனத்தவரது கலிலேயாவிலும் நடைபெற்றது (*4:14-16*). அவர் யாவேயின் ஊழியனைப்போல் நமது பிணிகளையெல்லாம் சுமந்து கொண்டார்; நமது நோய்களைக் குணப்படுத்தினார் (*8:17*); அறத்தை அறிவித்தார் (*12:17-21*); உவமைகள் மூலம் போதித்தார் (*13:3*); முப்பது வெள்ளிக்காசுகளுக்கு விற்கப்பட்டார். ஆகையால், இயேசுவே பழைய ஏற்பாட்டில் முன்னறி

விக்கப்பட்ட கிறிஸ்து அல்லது மெசியா. ஆனால், யூதர்களோ மெசியாவைப் பற்றித் தவறான கருத்துக்களைக் கொண்டிருந்தனர்; ஆகையால், உண்மை மெசியாவை ஏற்க மறுத்தனர்; அவரது செய்திக்குச் செவி மடுக்க மறுத்தனர். திருமுழுக்கு யோவான், வரவிருப்பவர் நீர் தாமோ என்று தமது சீடர் வாயிலாகக் கேட்டபோது, இயேசு தமது செயல்களைச் சுட்டிக்காட்டுகிறார் *(11:2-6)*. இச்செயல்கள் யாவும் மெசியாவின் செயல்களாகும் (எசா *26:19; 29:18* தொ; *35:5* தொ; *61:1*). இதைக் கேள்வியுற்ற திருமுழுக்கு யோவான், இயேசுதான் வரவிருக்கும் மெசியா என்று கண்டு பிடித்திருக்கக்கூடும், கண்டுணர்ந்திருக்க வேண்டும். இயேசுவின் போதகத்திலிருந்தும் அருஞ் செயல்களிலிருந்தும், அவர்தான் மெசியா என்று அறிய வாய்ப்பிருந்தும், அவரை ஏற்க மறுத்தனர் யூதர்களும் அவர்களுடைய தலைவர்களும். மெசியாவின் விண்ணரசிலிருந்து தங்களைத் தாங்களே பிரித்துக் கொண்டனர்.

சட்டத்தை அழிக்கவன்று, நிறைவேற்றவே இயேசு இவ்வுலகிற்கு வந்தார் (மத் *5:17-19*). சட்டத்தையும் அதைச் சார்ந்தவைகளையும் பற்றி கிறிஸ்து மரியாதையுடன் பேசுகிறார் *(5:31* தொ; *7:12; 8:4; 12:5-7; 15:5)*. இயேசு இஸ்ராயேலருக்குத் தனிப்பட்ட விதத்தில் அனுப்பப்பட்டவர் *(15:24-26)* என்பதையும் மத்தேயு சுட்டிக்காட்டுகிறார். ஆனால், இயேசுவை ஏற்க இஸ்ராயேலர் மறுத்ததால், அவரது அரசு புற இனத்தவருக்கு அளிக்கப்படுகிறது *(3:8* தொ; *21:43-46)*. ஞானிகளின் வருகை நிகழ்ச்சி *(2:1-12)*, இயேசுவை முதலில் வணங்க வந்தவர்கள் புற இனத்தவர் என்று காட்டுகிறது. மத்தேயு மட்டும் குறிக்கும் பிலாத்து கைகழுவும் நிகழ்ச்சி *(27:24-25)*, யூதர்கள் இயேசுவை ஏற்க மறுத்ததை அழுத்திக் காட்டுகிறது.

சட்டத்தின் நிறைவும் இயேசுவே; ஆகையால், அதற்கும் மேலானவர். அவர் ஓய்வு நாளின் ஆண்டவர் *(12:8)*; ஆலயத்தைவிடப் பெரியவர் *(12:6)*. மலைப் பொழிவில் வரும் ஆறு எதிர்நிலை வாக்கியங்கள் *(5:21-48)*, இயேசு மோசேயை விடப் பெரியவர் என்றும், பழைய ஏற்பாட்டுச் சட்டத்திற்கும் மேலான புதுச் சட்டத்தை அளிக்கும் புதிய மோசே என்றும் காட்டுகின்றன. லூக்கா, ''தரைமட்டமான இடத்தில்'' (லூக் *6:17*) என்று கூறும்போது, மத்தேயு ''மலையின் மேல்'' *(5:1)* என்று கூறுவது, கிறிஸ்து அளித்த புதிய சட்டம் சீனாயீ-ஓரேபு மலையில் அளிக்கப்பட்ட முதல் சட்டத்தோடு கொண்டுள்ள தொடர்பைச் சுட்டிக்காட்டுகிறது; அதன் நிறைவு என்றும் காட்டுகிறது.

இவ்வாறு பலவாறாக, இயேசுவை வாக்குறுதி செய்யப்பட்ட மீட்பர், மெசியா என்று மத்தேயு காட்டுகிறார்.

**ஆ) தாவீதின் குமாரன்:** இப்பெயர் மெசியாவின் பெயர்களுள் ஒன்று. மெசியா தாவீதின் குலத்தில் தோன்றுவார் என்று மக்கள் எதிர்பார்த்தனர். இதைக் கருத்தில் கொண்டு, மெசியாவான இயேசு, உண்மையாகவே தாவீதின் வழித்தோன்றல் என நிரூபிக்க முயல்கிறார் மத்தேயு. தமது நற்செய்தியின் முதல் வரியிலேயே, மரபு முறை கூறுங்கால், இயேசு தாவீதின் வழித்தோன்றல் என்று காட்டுகிறார் (மத் *1:1*). மீக்காவின் இறைவாக்குப்படி (மீக் *5:1*) இயேசு தாவீதின் நகரான பெத்லகேமில் பிறந்தார் (மத் *2:5*). தாவீதின் மகனானால், அவர் யூதர்களின் அரசரல்லவா? ஆகையால்தான், அவரைக் கொல்ல பெரிய ஏரோதன் பெரிதும் முயன்றான் *(2:3-13)*. குருடனும் ஊமையுமானவனை இயேசு குணப்படுத்தியதைக் கண்ட மக்கள், இவர்தான் தாவீதின் மகனோ என்று வினவுகின்றனர் *(12:23)*. இரு குருடர்களும் *(9:27)*, புற இனப்பெண்ணும் *(15:22)* அவரைத் ''தாவீதின் மகனே'' என்றழைக்கின்றனர். அவர் எருசலேமில் நுழைந்தபோது, மக்கள் அவர்தான் தாவீதின் மகன் என்று ஆர்ப்பரித்து எதிர்கொண்டழைத்தனர் *(21:9)*. சிறுவர்கள்கூட இப்பட்டத்தைப் பறைசாற்றி அவருக்கு அஞ்சலி செய்கின்றனர் *(21:15)*. ஆனால் இதே

மக்கள், அவரைச் சிலுவையில் அறைந்து கொல்லும் என்று கூக்குரலிடுவர் (27:22-25). இந்த நிராகரிப்பு ஒரு துன்பமிக்க வரலாறு ஆகும். இச்செயல் பவுலைப் பெரிதும் பாதித்தது எனலாம் (உரோ 11).

பிறர் தம்மை மெசியா என்றழைக்க இயேசு அனுமதித்ததில்லை. ஆனால், மெசியாவின் மற்றொரு பெயரான ''தாவீதின் மகன்'' என்று மக்கள் தம்மை அழைத்ததை அவர் தடுக்கவில்லை. ஆயினும், இப்பட்டம் அவரது தன்மையை முழுமையாக விவரிக்கவல்லதன்று. தாவீது அரசனுக்கு அளிக்கப்பட்ட வாக்குத்தத்தங்களை நிறைவேற்ற இயேசு வந்தார். அதன் பயனாக அவர் தாவீதை விடப் பெரியவர். அவர் தாவீதின் ஆண்டவர் (மத் 22:42-45). இயேசு யூத மக்கள் எதிர்பார்த்த மெசியா; அவரே மக்கள் எதிர்நோக்கிய ''தாவீதின் மகன்''. இவற்றிற்கு மேலாக, அவரே இறைமகன்.

***இ) இறைமகன் இயேசு:*** மற்ற நற்செய்தியாளர்களைப்போல் மத்தேயுவும் இயேசுவைக் ''கடவுளின் மகன்'' என்று பன்முறை குறிப்பிடுகிறார். இச்சொற்றொடர் தன்னிலேயே தெய்வீகத் தன்மையைக் குறித்துக் காட்டுகிறது என்று சொல்ல முடியாது. கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவருக்குப் பணி செய்யும் அல்லது அவரோடு தனிப்பட்ட தொடர்பு கொள்ளும் யாரையும் குறிக்க இச்சொற்றொடரைப் பயன்படுத்தலாம். சான்றாக பழைய ஏற்பாட்டில், ''கடவுளின் மகன்'' என்ற சொற்றொடர் வானதூதர்களுக்கும் (உப 32:8; யோபு 1:6), தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுக்கும் (யாத் 4:2; ஞான 18:13), இஸ்ராயேலருக்கும் (உப 14:1; ஓசே 2:1), அவர்களுடைய தலைவர்களுக்கும் (சங் 83:6), அரசர்களுக்கும் (2 அர 7:14; சங். 89:27) பொருத்திக் கூறப்படுகிறது. பிற்காலத்தில் பக்தியுள்ள எந்த மனிதனும் இறைமகன் என்றழைக்கப்பட்டான் (திருவுரை 4:10; 23:1; ஞான 2:16). இச்சொற்றொடர் மெசியா என்ற பட்டத்தோடு கூடியதாயிருக்கலாமா? யூத இலக்கியங்களை ஆராயுங்கால் இவ்வனுமானத்திற்கும் இடமில்லை.

பேதுரு தமது விசுவாச அறிக்கையில், ''நீர் மெசியா, உயிருள்ள கடவுளின் மகன்'' (மத் 16:16) என்று கூறுகிறார். இதே நிகழ்ச்சியில் மாற்கு, ''நீர் கிறிஸ்து'' (மாற் 8:29) என்றும், லூக்கா, ''நீர் கடவுளின் கிறிஸ்து'' (லூக் 9:20) என்றும் கூறுகின்றனர். கிறிஸ்து என்பது மெசியா என்பதன் கிரேக்கச் சொல்லாகும். சிலர், மத்தேயு தமது கூற்றில், இயேசுவின் தெய்வீக மகன் தன்மையைக் குறிக்கிறார் என்பர். மாற்கு, லூக்கா ஆகியோரின் வாசகங்களைக் கவனிக்கும்போதும் சாதாரணமாய் அப்போஸ்தலர்கள் காட்டிய அறிவுக்கூர்மையின்மையை எண்ணும்போதும், இயேசுவின் மெசியாத் தன்மையையே குறிக்கிறார் மத்தேயு என்பர் சிலர். இவ்விதம் இல்லையெனில், தமது விசுவாச அறிக்கைக்குப் பின், பேதுரு இயேசுவைக் கண்டிப்பதை ஏற்பது நமக்குக் கடினமாயிருக்கும். இயேசுவின் உலகச் சார்பற்ற ஆன்மீக மெசியாத் தன்மையைப் புரிந்துகொள்ள வெகுவாய்ச் சிரமப்பட்ட அப்போஸ்தலர்கள் ''கடவுளின் மகன்'' என்பதில் அடங்கியுள்ள தெய்வீகத்தை எப்படிப் புரிந்து கொள்வர்? அப்படிப் பேதுரு ஏற்றுக்கொண்டிருந்தால் உண்மையிலேயே இறைவெளிப்பாடு அவசியமானதாயிருக்கும் (மத் 16:17). சாத்தானும் (4:3-6), பேய்களும் (8:29) இயேசுவைக் கடவுளின் மகன் என்றழைத்ததில் அச்சொற்றொடரின் முழுப்பொருளும் பதிந்துள்ளதா? கடவுள் மகன் என்றால், மாபெரிய ஆற்றலையும், பிறர் கெடுதல் செய்ய முடியாத கடவுளின் பாதுகாப்பையும் கொண்டிருக்க வேண்டும் எனச் சாத்தான் கருதியதாகத் தெரிகிறது. இயேசுவோ, கடவுளின் மகன் என்றால் கடவுளின் சித்தத்தில் தனது உணவையும் ஆதரவையும் காணவேண்டும் என்று கூறுவதாகத் தெரிகிறது (4:4-7). இயேசு திருமுழுக்குப் பெற்றபோதும் (3:17), ஒளியுருவானபோதும் (17:5), ''இவர் என் அன்பார்ந்த மகன்'' என்ற குரலொலியைக் கேட்டோருக்கு அதன் பொருள் புரிந்திருக்கக் கூடுமா? உறுதியாக ஒன்றும் நம்மால் கூறுவதற்கில்லை.

ஆனால், நற்செய்தியாளர் எப்போது இவ்விதம் எழுதுகிறார்? கிறிஸ்து உயிர்த்து, விண்ணிற்கு எழுந்தபின், திருச்சபையின் விசுவாசம் வளர்ந்தபின் எழுதுகிறார். இயேசுவே மெசியா, கிறிஸ்து, அபிடேக நாதன், அவரே கடவுளின் மகன் என்ற விசுவாசம் கிறிஸ்தவ மக்களிடையே ஆழப் பதிந்தபின், கிறிஸ்தவர்களுக்காக இவ்விதம் நற்செய்தியாளர் தமது நற்செய்தியை வரைகிறார். ஆசிரியருடையவும் கிறிஸ்தவர்களுடையவும் விசுவாசக்கண்ணோடு ''கடவுளின் மகன்'' என்ற சொற்றொடரை நோக்க வேண்டும். இச்சொற்றொடர் இயேசுவின் காலத்தில், மெசியாத் தன்மையைத் தவிர வேறு பொருள் காட்டியிராவிட்டாலும், நற்செய்தியாளர் மத்தேயு தமது நூலை எழுதியபோது, இதில் பொதிந்துள்ள தெய்வீகத்தன்மையைக் காட்டியது என்றும், இதனை மனதில் கொண்டே மத்தேயு இச்சொற்றொடரைப் பயன்படுத்தினார் என்றும் கூறலாம்.

இனிமேல், கிறிஸ்துவின் வார்த்தைகளைப் பார்ப்போம். தம்மையே மகன் எனக்குறிக்கிறார் இயேசு *(17:25-27; 21:37-39)*. மத் 7:21-இல் கடவுளை ''என் தந்தை'' என்றழைக்கிறார். அவர் கற்பித்த செபத்தில் தவிர, மற்ற நேரங்களில் அவர் ஒருபோதும் ''நம் தந்தை'' என்று கடவுளைக் குறிப்பதில்லை. அதற்கு மாறாக, ''என் தந்தை'', ''உங்கள் தந்தை'' என வேறுபடுத்திக் குறிப்பிடுகிறார். இயேசுவின் பாடுகளின்போது ''தலைமைக் குரு அவரை நோக்கி, 'உயிருள்ள கடவுளின் பெயரால் ஆணையிட்டுச் சொல்லுமாறு உம்மைக் கேட்கிறேன், 'நீர் கடவுளின் மகனான மெசியாவோ?' என்றார். இயேசு 'நீரே சொன்னீர்...'' என்றார் *(26: 63-64)*. இக்கூற்றில் வரும் கடவுளின் மகன் என்ற சொற்றொடரில் தெய்வீகத்தன்மை குறிக்கப் படவில்லையெனில் தலைமைக்குரு ஆடை கிழித்து ஆரவாரம் செய்து, ''இவன் கடவுளைப் பழித்துரைத்தான்'' என்று கூற வேண்டியதில்லை. ''என் தந்தை எல்லாவற்றையும் எனக்குக் கையளித்துள்ளார். தந்தையன்றி வேறெவனும் மகனை அறியான். மகனும், மகன் எவனுக்கு வெளிப்படுத்துவாரோ அவனுமன்றி வேறெவனும் தந்தையை அறியான்'' *(11:27)* என்ற கிறிஸ்துவின் கூற்று, நற்செய்தியாளர் எந்தப் பொருளில் ''கடவுளின் மகன்'' என்ற சொற்றொடரைப் பயன்படுத்துகிறார் என்று ஐயமறக் காட்டுகிறது. இதையே ஆதிக் கிறிஸ்தவர்களின் விசுவாசமும் உறுதிப்படுத்துகிறது. இச்சொற்றொடரில், இயேசுவின் தெய்வீகத் தன்மை எடுத்துக் கூறப்படுகிறது. இக் கருத்து நற்செய்தியின் நெடுகிலும் காணக் கிடக்கிறது.

இறைமகன் இயேசு ''நம்மோடு உறையும் கடவுளான,'' ''எம்மானுவேல்'' ஆவார் *(மத் 1:23)*. இக்கருத்தும் இந் நற்செய்தியின் பின்னணியாக அமைந்துள்ளது. இக்கருத்தை நற்செய்தியின் தொடக்கத்திலேயே கூறும் மத்தேயு, தன் முடிவிலும் ஞாபகப்படுத்துகின்றார். மகிமைப் படுத்தப்பட்ட கிறிஸ்து திருச்சபை வழியாக என்றென்றும் நமது எம்மானுவேலாக இருப்பார். ''நான் உலக முடிவுவரை எந்நாளும் உங்களோடு இருக்கிறேன்'' *(28:20)* என்று இறுதி உறுதியளிக்கின்றார் இறைமகன் இயேசு கிறிஸ்து.

**ஈ) விண்ணரசு:** நாம் மத்தேயு எழுதிய நற்செய்தியின் பிரிவுகளைப் பற்றி எழுதியபோது, விண்ணரசை அடிப்படையாகக் கொண்டு இந்நூலைப் பல பிரிவுகளாகப் பிரித்தோம். அஃதொன்றே, இக்கருத்தின் முக்கியத்துவத்தைக் காட்டும். மாற்கும், லூக்காவும் ''கடவுளின் அரசு'' என்று கூறும்போது, மத்தேயு மட்டும் ''விண்ணரசு'' என்று கூறுகிறார். இதில் பொருள் வேறுபாடுண்டோ? அப்படி இருப்பதாகத் தெரியவில்லை. மத்தேயு யூதக் கிறிஸ்துவர்களுக்காக எழுதுகிறார். அவர்களில் பலர் கடவுளின் பெயரை, மரியாதையின் காரணமாக உச்சரியார். சிலர் உச்சரிக்க அஞ்சுவர். ஆகையால் மத்தேயு, ''கடவுள்'' என்பதற்குப் பதிலாக ''விண்'' என்பதைப் பயன்படுத்துகிறார். இப்படிக் கையாளுதல் ராபிகளின் மரபுமாகும். அவர்களிடையே

''விண்ணரசு'' என்பதுதான் வழக்கிலிருந்தது. ஆகவே, இச்சொற்றொடரையே இயேசுவும் பயன்படுத்தியிருக்கக் கூடும்.

''விண்ணரசு'' என்ற சொற்றொடர் ''கடவுளது ஆட்சி'', ''கடவுளது ஆதிக்கம்'' என்ற பொருள்களைக் குறிக்கிறது. இப்பொருள்களைக் குறிக்க இயேசு பயன்படுத்திய அரமேயிக்கு சொல்லுக்கு அரசுரிமை, அரசாட்சி, பேரரசாட்சி எனப் பல பொருள்கள் உண்டு. ஆட்சியைக் குறித்தாலும் ஆளப்படுபவைகளைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டும். இச்சொற்றொடர் பழைய ஏற்பாட்டில் அரிதாக வழங்கினாலும், இயேசு இதற்கு விளக்கம் தரவில்லை. தமக்குச் செவிமடுத்தோருக்கு ஏற்கெனவே தெரிந்த ஒன்றாகக் கருதி அதைப் பற்றிப் போதிக்கிறார்.

இயேசுவின் போதகப்படி, விண்ணரசு என்பதற்கு முதன்மையானதும் தலை சிறந்ததுமான பொருள், வரலாற்றில் கடவுள் உட்புகுந்தார், குறுக்கிட்டார், தலையிட்டார் என்பதாகும். இறைவன் வரலாற்றில் தலையீடு செய்தலைப் பழைய ஏற்பாட்டின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் காணலாம். இது புதிய ஏற்பாட்டில் சிறந்த முறையில் நடைபெறுகிறது. இத்தெய்வீகத் தலையீடு கடவுளுடைய மகனின் வருகையில் வெளிப்படுகிறது. வரலாற்றில் கடவுள் தன் மகன் வழியாகத் தலையிடுகிறார். அரசை நிறுவுபவர் அவரே. அஃது அவரது செயல். அவர் விதை விதைப்பவனைப் போன்றவர். திராட்சைத் தோட்டச் சொந்தக்காரனைப் போன்றவர். விருந்தளிக்கும் அரசனைப் போன்றவர். விதை முளைத்துத் தளிர்த்து வளர்ந்து பெருஞ் செடியாவது போல் விண்ணரசு தோன்றி வளர்ந்து பெருகுகிறது. இதனைத் தோற்றி வளர்த்துப் பெருக்குபவரும் அவரே. நொதி (காடி) மாவு முழுவதையும் புளிக்க வைப்பது போல் உலகம் முழுவதையும் விண்ணரசாக மாற்றுபவரும் அவரே. அரசுக்கு உயிர் அளிப்பவரும் அவரே. அது தடுக்க முடியாத விதத்தில் பரவச் செய்பவரும் அவரே. விண்ணரசு கடவுளது செயலானாலும், வரலாற்றிலே அஃது இயேசு கிறிஸ்துவின் செயலாகும்.

இவ்வரசு ஏற்கெனவே உள்ளதா? அல்லது முழுவதும் இனிமேல் வரவிருப்பதா? இயேசுவின் போதகத்தை ஆராயுங்கால், இவ்விரு கூறுகளையும் காண்கின்றோம். பல நிகழ்ச்சிகளில் விண்ணரசு வரவிருக்கும் ஒரு நிகழ்ச்சியாகத் தோன்றுகிறது (மத் *5:1-10.19*தொ; *7:21*; *8:11*தொ; *13:43*; *18:3*; *19:23*தொ; *24:14*). பல உவமைகள் விண்ணரசு ஏற்கெனவே உளது என்பதை உணர்த்துகின்றன. ஆனால், அது முழுமை அடைய வேண்டும்; நிறைவு பெற வேண்டும் (*3:2*; *4:7.23*; *9:35*; *10:7*; *12:28*; *13:24-32. 36-43. 47-50*). கடுகு விதை முளைத்து வளர்வது போல், கோதுமை முதிர்வதுபோல், எவ்வளவு தடை ஏற்படினும் இவ்வரசு முழுமை பெறும், நிறைவு பெறும். கிறிஸ்துவில் இவ்வரசு தொடங்குகிறது; தனது முழுமையை, நிறைவை நோக்கி இயங்குகிறது. தொடக்கத்திற்கும் நிறைவிற்கும் இடையில் திருச்சபை அமைந்திருக்கிறது. விண்ணரசு தனது வளர்ச்சியில் திருச்சபையாகத் திகழ்கிறது. திருச்சபை உலகிலுள்ள இயேசுவின் சமூகமாகும். சீடர்கள் அதன் நிகழ்கால உறுப்பினர்களும், வருங்கால ஆளுநர்களும் ஆவர். இதில் பல குறைகள் இருக்கலாம். அதன் வளர்ச்சிக்குப் பல தடைகள் நேரிடலாம். ஆயினும், விண்ணரசின் நிறைவு நோக்கி எதிர்க்க முடியாத விதத்தில் திருச்சபை இயங்குகிறது. திருச்சபை என்ற சொல்லை நற்செய்தியாளர்களுள் மத்தேயு மட்டுமே பயன்படுத்துகிறார் (*16:18*; *18:17*). இவ்வரசின் இறைவாக்குரைஞர்கள் அப்போஸ்தலர்களே என்று கருதுகிறார் ஆசிரியர் (*15:12*; *10:41*; *28:34*). ஆகையால், அவர்களுடைய குறைபாடுகளையும் நுண்ணறிவின்மையையும் மறைத்து அவர்களைப் பற்றி மரியாதையுடன் பேசுகிறார்.

மக்களிடையே தமது ஆட்சியை நிறுவுகிறார் கடவுள். உலகிலே அரசை நிறுவுகிறார். இதிலே அவர் அரசர் என ஏற்றுக் கொள்ளப்படுவார். அவரது ஆட்சிக்கு முடி

விராது. இவ்வாட்சியில் உட்பட விரும்புவோர், இதனுள் புக வேண்டும் *(5:20; 7:21; 18:3)*. இவ்வரசு ஒரு விருந்துக்கு ஒப்பானது. இதிலே அரசைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் இடமுண்டு. ஆனால், இதனுள் புக தகுதி வேண்டும். விண்ணரசு கடவுள் தாமாக அளிக்கும் கொடையானாலும், ஒவ்வொருவரும் விரும்பி அதை ஏற்க வேண்டும். தீவினைகளில் நிலைத்து நிற்கும் பாவிகளுக்கு அங்கே இடமில்லை. விண்ணரசுக்குள் புக விரும்புவோர் எளிய மனத்தோராய் இருத்தல் வேண்டும் *(5:3)*; குழந்தைகளாக மாற வேண்டும் *(18:1-4)*; கடவுளின் அரசையும் அவருடைய நீதியையும் முதலில் தேடவேண்டும் *(6:33)*; நீதியினிமித்தம் துன்பப்பட வேண்டும் *(5:10)*; விண்ணரசிற்காக யாவற்றையும் துறக்கத் தயாராக இருத்தல் வேண்டும், துறக்க வேண்டும் *(13:44தொ; 19:23)*. மறைநூல் அறிஞர், பரிசேயர் நீதியைவிட அவர்களது நீதி மிகுந்திருத்தல் அவசியம் *(5:20)*. சுருங்கச் சொல்லின், பிதாவின் விருப்பப்படி நடத்தல் வேண்டும், அதைப் பிறர் அன்பில் காட்ட வேண்டும் *(7:21; 25:34)*. இவ்வரசுக்குள் புக, யூதனாய் இருக்க வேண்டுவதில்லை. தகுதியுடைய யாவரும் உட்புகலாம் *(8:11தொ)*. அழைக்கப் பெற்றவர் பலராயினும் தெரிந்து கொள்ளப்பட்டவர் சிலரே. ஏனெனில், திருமண உடை அணியாத விருந்தாளி ஒவ்வொருவனும் வெளி இருளில் தள்ளப்படுவான் *(22:11-14)*.

விண்ணரசு தனது தொடக்கத்தில் எளிமை மிக்கது. அதன் உறுப்பினராவது எப்படி யென்றும், அதற்கு வேண்டிய பண்புகளாகிய முன்பு கூறப்பட்ட மன உறுதி, பற்றற்ற தன்மை, தாழ்ச்சி, அன்பு, கடவுட்பற்று ஆகியவை பற்றியும் மலைப்பொழிவில் காண்கிறோம். கிறிஸ்து தமது அருஞ்செயல்கள், இறப்பு-உயிர்ப்பு ஆகியவற்றால் எவ்விதம் இவ்வரசை நிறுவினார் என்று காட்டுகிறார் மத்தேயு. உலக முடிவிலே கிறிஸ்து எவ்விதம் இவ்வரசை நிலையாக நிறுவுவார், முழுமைப்படுத்துவார் என்றும் இறுதிக்காலம் பற்றிய அறவுரையில் காண்கிறோம். ஆனால், இவ்வரசு எப்போது முழுமைபெறும்? மண்ணிலே யாருக்கும் தெரியாது. ஆனால், நிச்சயமாய் வரும்; நாம் எதிர்பார்க்காத விதத்தில் வரும்; மனிதர் யாவருக்கும் தோன்றும் விதத்தில் வரும். கடவுளின் சித்தப்படி அவரது ஆற்றல் மிக்க செயலால் அது நிகழும். ''மனுமகன்'' வானதூதர் புடைசூழ வல்லமையோடு மேகங்களின் மீது வரும்போது நிகழும். இந்த மனுமகன் இயேசுவே. உலகில் வாழ்ந்த போது இகழப்பட்டவராகவும், தாழ்த்தப்பட்டவராகவும் தோன்றியிருக்கலாம். ஆனால், விண்ணரசு நிறைவுறும்போது, தமது அரசத் தன்மையையும், தெய்விக வல்லமையையும் வெளிப்படுத்துவார்.

கிறிஸ்துவின் உயிர்ப்பு, பரிசுத்த ஆவியரின் வருகை ஆகியவற்றிற்குப்பின், இயேசுவினுடைய மீட்பின் சமூகமான திருச்சபை தோன்றியது. மகிமைப்படுத்தப்பட்ட ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து பிதாவாகிய கடவுளின் வலப்பக்கத்தில் *(அ.ப. 2:30-35)* அமர்ந்து தமது ஆவியின் வழியாகத் திருச்சபையை நடத்துகிறார். பிதாவாகிய இறைவன், இயேசுவை ''அரசர்களுக்கெல்லாம் அரசராகவும், ஆண்டவர்க்கெல்லாம் ஆண்டவராகவும்'' ஏற்படுத்தியுள்ளார் (திருவெளி *19:16)*. உலகில் இறையாட்சி திருச்சபை வழியாக நடைபெறுகிறது. அகத்திலே அருள் வளர்ச்சியிலும், புறத்திலே வேத போதக அலுவலிலும் இவ்வாட்சி நடைபெறுகிறது. திருச்சபை மேலும், திருச்சபை வழியாக உலகின் மேலும், கிறிஸ்து செய்துவரும் ஆட்சியின் மூலம் தற்போது கடவுளின் அரசு அதாவது, விண்ணரசு நிறைவெய்தி வருகிறது. கால முடிவிலே கிறிஸ்து தமது பகைவர்கள் யாவரையும் வென்று பிதாவாகிய இறைவனிடம் அரசை ஒப்புவிப்பார் *(1 கொரி 15:24)*. அப்போது இவ்வரசு ''நமது ஆண்டவருக்கும் அவருடைய கிறிஸ்துவுக்கும் சொந்தமாயிருக்கும்'' (திருவெளி *11:15*). விசுவாசிகள் ''கிறிஸ்துவினுடையவும் கடவுளுடையவும் அரசிலே'' தங்களது பிறப்புரிமை பெறுவர்

(எபே 5:5). அப்போது விண்ணரசு முழுமை பெறும், நிறைவு அடையும். அப்போது ''யாவும் வல்ல நமது ஆண்டவராகிய கடவுள் ஆட்சி செலுத்துவார்'' (திருவெளி 19:6).

10. **வரலாற்று நோக்கம்:** மேற்கூறிய அமைப்பு, பிரிவுகள், பொருளடக்கம் ஆகியவற்றிலிருந்து, மத்தேயு நமது காலத்தில் மக்கள் கருதுவது போன்ற வரலாற்றையோ, வாழ்க்கைச் சித்திரத்தையோ எழுதவில்லை என்பது தெளிவு; அவரது நோக்கம் அஃதன்று. அவரது நடையில் நேரடிச் சான்றுத் தன்மை தோன்றவில்லை. அவர் மாற்கையும், பிற மூலங்களையும் சார்ந்து எழுதுவதாகத் தோன்றுகிறது. இவ்வாறு பிற நூல்களைச் சார்ந்து எழுதியமையோ, வரலாறு எழுத வேண்டும் என்ற நோக்கமின்மையோ, இந் நற்செய்தியை வரலாற்று மூலமாகயிருக்கத் தகுதியற்றதாக ஆக்கி விடவில்லை. நற்செய்தியின் பிரிவுகளிலோ, தலைப்புக்களைப் பொறுக்கி எடுப்பதிலோ, அழுத்திக் கூறும் விதத்திலோ, தம்முடைய வாசகர்களுக்கு ஏற்ற முறையில் கூறுவதிலோ ஆசிரியர் தமது விருப்பம் போல் செய்தாலும், அவர் வரலாற்று உண்மையிலிருந்து வழுவவில்லை என்று கூறலாம். ஆசிரியர் கருத்து முறைப்படி தமது நூலை அமைத்திருப்பதால், காலவரையைப் பற்றி அக்கறை கொண்டதாகத் தெரியவில்லை. இயேசுவின் வாழ்வின் காலவரை அமைப்பை அறிய விரும்பினால், நாம் லூக்கா எழுதிய நற்செய்தியை வாசித்தல் நலம். மாற்கு, லூக்கா ஆகியோருடன் ஒப்பிடக் கூடிய பகுதிகளில் இயேசுவைப் பற்றிய நிகழ்ச்சிகளையோ, பிற நிகழ்ச்சிகளையே உரு மாறாது கூறுகிறார் மத்தேயு. இந்நூல் பொதுமக்களுக்குச் சொல்லப்படும் வரலாற்றுத் தன்மையைக் கொண்டது. ஆனால், தமது மூலங்களுக்கு முரணாக ஒன்றும் கூறவில்லை ஆசிரியர். நற்செய்திகளை வரலாற்று நூல்களாகக் கருதும் போது, நாம் நோக்க வேண்டிய விதத்தைப் பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம். மத்தேயுவின் நற்செய்தி வரலாற்றை அடிப்படையாகக் கொண்டது; வரலாற்று மூலமும் ஆகும் என்று கூறினோம். மேலும், அது வரலாறு பற்றிய ஒருவித இறை நூலும் ஆகும். இறைவன், கிறிஸ்துவின் வழியாக உலகக் காரியங்களில் புகுத்தியுள்ள நிலையான, ஊடுருவிச் செல்ல வல்ல இறை ஆற்றலின் தோற்றம், தன்மை, அன்றாட நிலை, அதன் இறுதிநிலை ஆகியவை பற்றிய தொடர் சிந்தனையாகும்.

முடிவாக, மத்தேயு எழுதிய நற்செய்தி திட்டமுறை கொண்டது என்று கூறினோம். இதில் சமநிலையும், அமைதியும் நிறைந்துள்ளன. இதிலே படிமரபு வாய்ந்த மிடுக்கு உண்டு. இதிலே ஆழ்ந்த மத உணர்ச்சியும், போதகத் தெளிவும் உண்டு. மத வழிபாட்டிற்கும், மறைக்கல்விக்கும் உகந்தது. ''அப்போது...'' என்று தொடங்கும் பகுதிகள், மதவழிபாட்டிற்குப் பெரிதும் உதவுகின்றன. இந்நூலிலே கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்குமுள்ள ஒற்றுமையை உணர்கிறோம். இவ்வுலகில் நிலவி இறுதியில் நிறைவு பெறும் இறையரசைப் பற்றி இந்நற்செய்தி பேசுகிறது. இச்சிறப்புகளால், திருச்சபை இந்நற்செய்தியை மற்றவற்றை விட அடிக்கடி பயன்படுத்துகிறது. இதற்குத் தனிச்சிறப்பு அளிக்கிறது. இது ''திருச்சபையின் நற்செய்தியாகும்''. இஃது ஒன்றே இந்நற்செய்தியின் சிறப்பைக் காட்டுகிறது.

## மத்தேயுவில் கீழ்த்திசை ஞானிகள் (MAGI, WISEMEN FROM THE EAST IN MATHEW)

பெத்லகேமில் இயேசு பிறந்ததை விவரிக்கும்போது, மத்தேயு கிழக்கிலிருந்து ஞானிகள் வந்து குழந்தை இயேசுவைக் கண்டதை எடுத்துக்கூறுகிறார். இவர்கள் பொன், சாம்பிராணி, வெள்ளைப்போளம் ஆகிய விலையுயர்ந்த கொடைகளைக் கொண்டு வந்தனர் (மத் 2:1-12). இவர்கள் கிறிஸ்துவின் விண்மீனைக் கிழக்கில் கண்டனர்; குழந்தையைத் தேடி யூதேயாவுக்கு வந்தனர் (2:2). இவர்கள் ஏரோதின் ஆலோசனையைக் கேட்டனர். இவர்களின் தேடுதல் பெத்லகேமுக்கு இட்டுச் சென்றது. இது, மத்தேயுவின் கூற்றுப்படி, மெசியாவின் பிறப்பிடம்

பற்றிய மீக்காவின் இறைவாக்கை நிறை வேற்றியது (*மீக் 5:2; மத் 2:5-6*). விரைவில், இவர்கள் குழந்தையையும் அதன் குடும்பத் தையும் கண்டுபிடித்துக் குழந்தையை வணங்கினர். அரசனுக்குரிய கொடை களைக் குழந்தைக்கு அளித்தனர். இவர் களது வருகை, இடையர்கள் பற்றிய லூக்காவின் விவரிப்புக்குப்பின் (*லூக் 2:8 தொ*) நிகழ்ந்திருக்க வேண்டும். இதற்குப் பின் ஏரோது இரண்டு வயதும் அதற்கு உட்பட்டவையுமான எல்லா ஆண் குழந் தைகளையும் கொன்றான் (*மத் 2:16*). இது, ஞானிகள் வந்தபோது, இயேசு புதிதாகப் பிறந்த குழந்தை அல்லர், சிறிது வய துடையவர் என்று காட்டுகிறது.

இந்த ஞானிகளை அடையாளம் காட்ட அறிஞர் சிலர் முயன்றுள்ளனர். மாய வித்தை, கனவுகளுக்கும் காட்சிகளுக்கும் விளக்கம் அளித்தல், சோதிடம் ஆகியவற் றில் புலமை பெற்றிருந்தவர்களையும் இறைவாக்கினர்களையும் பழங்கால மேற் காசிய மக்கள் அறிந்திருந்தனர். இவர்களை ஞானிகள் என்றழைத்தனர். இப்படிப்பட்ட வர்களின் ஆதிக்கத்திற்குத் தானியேல் நூல் (*தானி 1:20; 2:2*), யோசிபஸ் மற்றும் பல உரோமையரின் நூல்கள் சான்று கூறுகின் றன. பெரும்பாலும் இவர்கள் மோசமாக விவரிக்கப்படுகின்றனர் (*காண்க. அ.ப. 8:9-13; 13:6-12*). ஆனால், மத்தேயுவின் விவரிப்பில் இந்த ஞானிகள் உயர்ந்த மேன்மை மிக்கவர்களாகத் தோன்று கின்றனர்.

மத் 2:2-இலிருந்து இவர்கள் விண்மீன்கள் பற்றிய ஆய்வைப் பின்வரும் நிகழ்ச்சிகளை முன்னறிவிப்பதற்குப் பயன்படுத்திய சோதி டர்களாகத் தோன்றுகின்றனர். இவ்விதச் செயல்கள் பாரசீகத்தில் (அல்லது பார்த்தி யாவில்) வெகுவாகப் பயன்பட்டதாகத் தெரிகின்றன. இதிலிருந்து இந்த ஞானிகள் எங்கிருந்து வந்திருக்கக்கூடும் என்று ஊகிக்க வாய்ப்புள்ளது. இவர்கள் அளித்த கொடைகள் இவர்கள் அரேபியாவிலிருந்து வந்திருக்கக்கூடும் என்று சுட்டவல்லன. இவர்கள் பாபிலோனியாவிலிருந்து வந்தி ருக்கக்கூடும் என்று கருத இடமுண்டு. இங்கு யூதர்களின் பெரும் குழுக்கள் வாழ்ந்து வந்தன. அவர்களிடமிருந்து இந்த ஞானிகள் மெசியாவின் பிறப்பைப் பற்றி அறிந்திருக்கக்கூடும்.

ஞானிகளின் வருகையில், புற இன நாடுகளிலிருந்து இஸ்ராயேலின் புதிதாகப் பிறந்துள்ள அரசனுக்கு வணக்கம் செலுத்த அரச தூது வந்தது என்று விவரிப்பதிலேயே மத்தேயு அக்கறை கொள்கிறார். இதில்தான் இஸ்ராயேலின் அக்கால அரசனான ஏரோது அக்கறை காட்டுகிறான். இதுவே அவனைக் கடும் சினம் கொள்ளச் செய்கிறது (*மத் 2:1-2*). இலக்கிய அளவில், ஏரோதும் இயேசுவும் போட்டியாளர்கள் ஆவர். ஞானிகளின் வருகை, அன்னிய ஆட்சி யாளர்களிடமிருந்து கூட மதிப்பும் மேன்மை ஏற்பும் பெறத்தகுதியுள்ளவர் யார் என்று முனைப்பாக வெளிப்படுத்துகிறது.

காலப்போக்கில் ஞானிகள் அளித்த காணிக்கைகளின் எண்ணிக்கை (*மத் 2:11*), இவர்களை மூன்று பேராகவும், *எசா 60:3*-இன் பின்னணியில், அரசர்களாகவும், கருதத்தூண்டியது. பொதுப்பாணிப் பாரம் பரியம் இவர்களுக்குப் பல்தசார், மெல்கி யோர், காஸ்பார் என்ற பெயர்களையும் கொடுத்தது. மேலும், இவர்களின் திருப் பண்டங்களின் பெரும்பகுதி பெரிதும் மதிக் கப்பட்டு, கொலோன் பேராலயத்தில் காப் பாற்றப்படுகிறது.

இந்த ஞானிகளின் வருகை நிகழ்ச்சி சனவரி 6-ஆம் நாள் வழிபாட்டில் ஆண்ட வரின் திருக்காட்சி விழாவாகக் கொண் டாடப்படுகிறது. இவ்விழாவில் புற இனத் தவருக்கு இயேசு வெளிப்படுத்தப்படுவது நினைவுகூரப்படுகிறது. இந்தப் புறவினத் தாருள் இந்த ஞானிகளே முதன்முதல் இயேசுவுக்கு வணக்கம் செலுத்தியவர் களாகக் கருதப்படுகின்றனர்.

## மத்தேயுவின் மறைசாட்சி மரணம் (MATTHEW, MARTYRDOM OF)

இது பிற்காலத்தில் தோன்றிய மத்தேயு மறைசாட்சியாக மரித்த நிகழ்ச்சியைப் பற்

றிய ஒரு நூல். கிறிஸ்து கட்டளையிட்ட ஓர் ஊருக்கு மத்தேயு செல்கிறார். அங்கு நரமாமிசம் உண்ணுபவர்களின் அரசன் அவரைக் கொன்று விடுகிறான். இந்நூல் அந்திரேயா மற்றும் மத்தியா ஆகியோரின் பணிகள் என்ற நூலைச் சார்ந்து அமைந் துள்ளது.

ஆயக்காரனாய் இருந்த மத்தேயு இயேசு வால் அழைக்கப்பட்டதால் அவரின் 12 அப்போஸ்தலர்களுள் ஒருவர் ஆகிறார். மத்தேயு ஓர் ஊருக்கு வருகிறார். கிறிஸ்து அவருக்கு அளித்த குச்சி ஒன்றைத் தரையில் ஊன்றி வைக்கிறார். அது பெருமரமாக வளர்ந்து பல அற்புதங்களைச்செய்கிறது. எனவே, இவர் அரசனால் நெருப்பில் இடப்பட்டார். ஆனால், அஃது அவருக்குப் பனிபோல் இருந்தது. அந்த நெருப்பு சிலைகளை எரித்தது; அரசனை அவன் அரண்மனை வரை துரத்திச் சென்றது. பின், அந்த அரசன் மத்தேயுவிடம் மன்றாட அவன் காப்பாற்றப்படுகிறான். மற்றொரு நாள் மத்தேயு கொல்லப்பட்டபின் அவர் உடல் இரும்புப் பெட்டியில் வைக்கப்பட்டு ஈயத்தால் முத்திரையிடப்பட்டு, கடலில் எறியப்பட்டது. ஆனால், மறுநாள் ஒளிரும் ஆடையணிந்த இருவர் இயேசு குழந்தை வழிநடத்த அந்தப் பெட்டியைக் கடலிலி ருந்து தூக்கி வந்தனர். அதன்பின் அந்த அரசன் மனம் மாறினான் என்றும், பின்பு இவர் அந்நகரத்தின் ஆயராகத் திருநிலைப் படுத்தப்பட்டார் என்றும் இந்நூலில் கூறப் பட்டுள்ளது.

இத்தகைய பழங்காலப் போலி நூல்களில் பல கட்டுக் கதைகளைக் காணலாம். அவர்கள் சமயத்தையோ உண்மை நிகழ்ச்சி யையோ, இறையியலையோ கருத்தில் கொள்ளாமல் ஏதோ ஓர் புதுமையான கதை சொல்ல வேண்டுமென்ற எண்ணத்தோடு இதை எழுதினார்கள்.

இது கிரேக்கத்திலும், இலத்தீனிலும் எழுதப்பட்டுள்ளது. இவைகளில் கூட பல வேறுபாடுகள் அந்த நூல்களிலேயே காணப் படுகின்றன.

**மத்மன்னா** (MADMANNAH - *சாணிக்குன்று)*

இவர், யூதாவின் தலைமுறைப் பட்டிய லின்படி *(1 நாள் 2:49)* காலேபுக்கு மாக்காவின் வழியாகப் பிறந்த வழித்தோன் றல்களில் ஒருவரான சாபுவின் மகன் ஆவார்.

சிக்லாகுக்கு அருகில் உள்ள ஒரு நகரத் தையும் இப்பெயர் குறிக்கிறது. இந்த நகரானது யூதா புதல்வருக்குக் கொடுக்கப் பட்டது *(யோசு 15:31)*. சிமியோனுக்குத் தரப்பட்ட நகர்களின் இணைப்பட்டியலில் இது பெத்மர்க்காபோத்து என அழைக்கப் படுகிறது *(யோசு 19:5)*. இவ்விரு பெயர் களும் ஒரே நகரைக் குறிக்கலாம். *1 நாள் 2:49*-இன்படி இந்நகரானது, காலேபின் மகனாகிய சாபினால் நிறுவப்பட்டதாகக் கருதலாம். இந்தச் சாபு மத்மன்னாவின் தந்தை. எனவே, இந்நகருக்கு இப்பெயர் சூட்டப்பட்டது. ஆனால், இப்பெயர் சால மோன் மன்னனால் மாற்றப்பட்டது. இவ் விடத்தைச் சாலமோன் தேர்களைச் செய்ய வும், நிறுத்தி வைக்கவும் பயன்படுத்தினார் *(காண்க. 2 நாள் 7:25)*.

அறிஞர் சிலர் இதை மெக்கோனாகவும் *(நெகே 11:28)*, மக்பேனாகவும் *(1 நாள் 2:49)* அடையாளம் காட்ட முயன்றுள்ளனர். மத்மன்னா, பெத்-மர்க்காபோது, மெக் கோனா, மக்பேனா ஆகிய நான்கு பெயர் களும் ஒரே இடத்தைக் குறிக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். இஃது இருந்த இட மாக, பெயேர் செபாவுக்கு வடகிழக்கில் 16 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலக் கிர்பெத் உம் எத்-தேயிம்னேயும், அதன் அருகிலுள்ள கிர்பெத் தத்ரீத்தாவும் அடை யாளம் காட்டப்படுகின்றன.

**மத்மேனா** (MADMENAH - *எருக்குவியல்)*

இஃது எருசலேமின் வடக்கில் உள்ளது. இதன் வழியாக அசீரியர்கள் படையெடுத்து வருவார்கள் என்று எசாயா முன்னுரைத்தார் *(எசா 10:31)*. கி.மு. 701-இல் சனகெரிபு எருசலேமை நோக்கிப் படையெடுத்து வரு கையில் இவ்வழியே வந்ததாகக் கூறப் படுகிறது. இஃது எருசலேமுக்கு வடக்கில்

3 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலச் சுபாத்து என்ற இடமாக அடையாளம் காட்டப்படுகிறது.

**மத்மேன்** (MADMEN - எருக்குழி)

எரேமியா இறைவாக்கினர், மோவாபின் அழிவு பற்றி எழுதிய புலம்பற் பாடலில் மத்மேன் என்ற இந்த நகரையும் குறிப்பிட்டுள்ளார் (எரே 48:2). இதுவும் தீமோனும் ஒரே இடத்தைக் குறிக்கலாம். இது ராபாவிற்கு வடமேற்கில் 5 கி.மீ. தொலைவிலும், சாக்கடலுக்குக் கிழக்கில் 13 கி.மீ. தொலைவிலும், அர்னோன் ஓடைக்குத் தெற்கிலும் உள்ள கிர்பெத் திம்னே என்ற இடமாக அடையாளம் காட்டப்படுகிறது.

**மந்திர உச்சரிப்புகள்** (INCANTATIONS)

மந்திரவாதிகளால், பேய்களை ஓட்டவும் நோய்களைக் குணமாக்கவும் பயன்படுத்தப் பட்டவை இந்த மந்திர உச்சரிப்புகள். பேய்களை ஓட்டும் இம்முறையில் இரு பிரிவுகள் உண்டு. 1. சக்திமிக்க மந்திர உச்சரிப்புகளைச் சொல்வது, 2. மாந்திரீக சக்தியுள்ள சில பொருள்களைக் கொண்டு சில செய்கைகளைச் செய்வது. பேய்களை ஓட்டுவது மட்டுமல்லாமல், நோய்களைக் குணப்படுத்தவும் மருத்துவர்கள் மந்திர உச்சரிப்புகளைப் பயன்படுத்தினர். இந்தப் பழக்கம் உலகெங்கிலும் காணப்படுகிறது. குறிப்பாக, பாபிலோனியர்களிடம் இப்பழக்கம் ஒரு காலத்தில் பிரசித்தி பெற்றிருந்தது. இந்த முறையில் கடவுள்களின் பெயர்கள் வரவழைக்கப்படும். கடவுள்களின் பெயர்கள் சக்தி மிக்கவையாகக் கருதப்பட்டன. மேலும், கடவுளின் இருப்பிடமும் மந்திர உச்சரிப்பில் பயன்படுத்தப்பட்டது. உதாரணமாக, பேய்களை ஓட்ட ''வானின் பெயரால் சொல்கிறேன்; இவனை விட்டு விடு! மண்ணின் பெயரால் சொல்கிறேன்; இவனை விட்டுவிடு'' என்ற வாக்கியங்கள் பயன்படுத்தப்பட்டன. பாலஸ்தீனத்திலும் மந்திர உச்சரிப்புகள் பயன்படுத்தப்பட்டன (சங் 58:53). இயேசுவின் பெயரால் பேய்கள் ஓட்டப்பட்டன (அ.ப. 19:13). பேயோட்டுதல்.... காண்க.

**மந்திரக்காப்புக் கயிறுகள்** (MAGIC BANDS)

இவை குறி கூறுவதுடன் தொடர்புடையதாகத் தெரிகின்றன (எசே 13:18.20). ஆனால், எவ்வாறு இவை பயன்பட்டன என்பது தெளிவாக இல்லை. பிற்கால அரமேயிக்கு வாசகங்கள், மனிதர்கள் மாய வித்தையால் தீமையைத் தடுத்து நிறுத்திய தாகக் கூறுகின்றன.

**மந்தை மேய்ப்பவர்** (HERDSMAN)

மந்தையாக இருக்கும் வீட்டு விலங்குகளைப் பாதுகாப்பவர். இதன் எபிரேயச் சொல் ''இடையன்'' அல்லது ''மேய்ப்பவர்'' என்று மொழி பெயர்க்கப்படுகின்றது (ஆதி 13:7-8; 26:20; 1 சாமு 21:7). ஆமோ 7:14-இல் 'ஆடுமாடு மேய்ப்பவன்' என்ற சொல் 'எருமை' என்று பொருள்படும் எபிரேயச் சொல் ஒன்றிலிருந்து வந்தது என்று சிலரும், அஃது 'இடையர்' (ஆமோ 1:1; 2 அர 3:4) என்ற சொல்லின் எழுத்துப் பிழையாகும் என்று சிலரும் கருதுகிறார்கள். ஆமோஸ் தான் குருகுலத்தைச் சாராதவன் என்பதை வலியுறுத்துவதற்காகவே தன்னை 'ஆடுமாடு மேய்ப்பவர்' என்று கூறுகிறார். உகாரித்து மொழியிலும், அக்காதிய மொழியிலும் உள்ள இது போன்ற சொற்களை ஆராய்ந்த வல்லுநர்கள் சிலர் 'இடையன்', 'மேய்ப்பவர்' என்ற சொற்கள் பணிபுரியும் குருக்களுக்குக் கொடுக்கப் பட்ட வழிபாட்டுப் பதவியைக் குறிக்கும் சிறப்புப் பெயர்களாக இருக்கலாம் என்று கருதுகிறார்கள்.

**மந்தை வாயில், ஆட்டு வாயில்** (SHEEP GATE)

எருசலேமுக்கு வடக்குப் பக்கத்திலுள்ள நகரின் ஒரு வாயில், நெகமியாவால் புதுப்பிக்கப்பட்டது (நெகே 3:1.32; 12:39). இது யோவா 5:2-இல் மறைமுகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**மம்மோன்** (MAMMON - செல்வம்)

செமித்திய மரபுச் சொல்லான இஃது எப்படித் தோன்றியது என்பது அவ்வளவு தெளிவாக இல்லை. இச்சொல்லுக்குச் 'செல்வம்', 'பணம்', 'சொத்து', 'வரவு'

எனப் பல பொருள்கள் உண்டு. இச்சொல் விளக்கவேண்டிய அவசியமில்லாத அளவுக்கு நன்கு அறியப்பட்டிருந்தது. இந்தச் சொல் புதிய ஏற்பாட்டில் மட்டுமே இயேசுவின் பேச்சில் வருகின்றது (*மத் 6:24; லூக் 16:9.11.13*). இச்சொல் *சீரா 31:8*-இலும், ஏனோக்கு நூலிலும், தர்கூமிலும் காணப்படுகிறது.

*1) மத் 6:24; லூக் 16:13*-இல் இறைவனுக்கு ஊழியம் செய்தல் செல்வத்துக்கு ஊழியம் செய்தலைத் தடுக்கிறது. எவனும் இரண்டு தலைவர்கட்கு ஊழியம் செய்ய முடியாது. செல்வம் வைத்திருப்பதாலன்று, ஒருவன் செல்வத்தினால் தான் கடவுளுக்கு ஆற்ற வேண்டிய முழுமையான கடமையிலிருந்து தவறுகிறான். எனவே, ஒருவன் முடிவாகக் கடவுளுக்கு மட்டுமே உண்மையுள்ளவனாக இருக்க வேண்டும்.

*2) லூக் 16:9.11*-இல் செல்வம் மேலே கூறப்பட்ட ஊழியனைப் போலவே நீதியற்றதாகவும் வருணிக்கப்படுகிறது. ஏனெனில் ஒருவன் செல்வம் சேர்க்க நினைக்கும் போது 'அநீதி', 'கெட்ட வழி'களில் அதனை அடைய முயல்வதால் அது கறைபட்ட செல்வமாகிறது. ஆனால், அநீத செல்வத்தைக் கொண்டு விண்ணுலகில் செல்வத்தைச் சேருங்கள். உலகச் செல்வத்துக்கு நம்பத்தக்கவனாய் இருப்பவனிடம் ''உண்மையான செல்வம்'' ஒப்படைக்கப்படும்.

**மம்ரே** (MAMRE - *பலம்*) - ஆள்

இவர் ஓர் எமோரியர். ஆனேர், எசுக்கோல் என்பவர்கள் இவரது சகோதரர்கள். இவர்கள் மூவரும் கெதர்லகோமரை முறியடிப்பதில் ஆபிரகாமின் கூட்டாளிகள் ஆவர் (*ஆதி 14:13.24*).

**மம்ரே** (MAMRE - *பலம்*) - இடம்

எபிரோனுக்கு வடக்கே 2 கி.மீ. தொலைவில் உள்ள ஓர் இடமாகும். ஆபிரகாம் வாழ்ந்த முக்கிய இடம் இதுதான். இது மம்ரே எனப்பட்ட எமோரியரின் பெயரை வைத்து அழைக்கப்பட்டது (*ஆதி 14:13*). ஆபிரகாம் இங்கே ஒரு பலிபீடத்தை எழுப்பினார் (*13:18*); பின்பு சோதோம், கொமோராவைக் காப்பாற்றும்படி கடவுளிடம் வேண்டியதும் இந்த இடத்தில் தான் (*18:1தொ*). மம்ரேக்குக் கிழக்கே 'மக்பேலா' நிலத்தில் உள்ள குகையை ஆபிரகாம் விலைக்கு வாங்கினார். அதில் தான் சாராவும், அவரும், முதுபெரும் தந்தையரும், அவர்கள் மனைவியரும் அடக்கம் செய்யப்பட்டனர் (*23:17 தொ; 25:9; 35:27; 49:30; 50:13*).

தங்கள் மூதாதையர் அடக்கம் செய்யப்பட்டதால் யூதர்களுக்கு இது மிகவும் புனிதமான இடமாகும். கி.மு. எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டின் தளம் ஒன்று இங்கு அகழ்ந்தெடுக்கப்பட்டதிலிருந்து அவர்கள் கூறுவது உண்மையென்பது தெரிகிறது. ஆபிரகாமின் கிணற்றுக்கு வடகிழக்கேயுள்ள இத்தளத்தின் பிளவு இங்கு ஆபிரகாமின் 'ஓக்' மரம் இருந்ததைக் காட்டுகிறது.

மக்பேலா குகையைச் சுற்றி எழுப்பப்பட்ட சுற்றுச் சுவருக்கும், ஏரோது எருசலேம் கோவிலில் எழுப்பிய சுற்றுச் சுவருக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. தென்பாலஸ்தீன மக்கள் இதன் சுற்றுச் சுவர், பீடம், கிணறு ஆகியவற்றை மூட நம்பிக்கைக்குரிய பல வழிபாடுகளுக்குப் பயன்படுத்துகின்றனர். இவ்விடம் பல ஆயிரம் ஆண்டுகளாக மக்கள் கூடுமிடமாக இருந்திருக்கிறது. புதிய எபிரோன் நகரம் இதனை மறைத்தாலும் அதன் புனிதத்துவத்தால் இன்றும் இது சிறப்பாகப் போற்றப்படுகிறது.

**மயக்குதல்** (BEWITCH)

இச்சொல் உருவகமாக, கலா *3:1*-இல் பயன்பட்டுள்ளது. அறிவுத்திறனை இழக்கும் அளவுக்கு வாதத்திறமையால் வயப்படுதலைக் குறிக்கிறது.

**மயில்** (PEACOCK)

இது நெடுவால் பகட்டு வண்ணக் கோழிவகையில் ஒரு பெரிய பறவை. இந்திய, இலங்கைக் காடுகளிலும் மலைகளிலும் அதிகம் காணப்படும் பறவை.

பெண் பறவை அவ்வளவு அழகியதன்று. ஆண் பறவை, நீலம் மற்றும் பச்சை நிற இறகுகளுடன் தலையில் கொண்டையும் கண்கள் போன்ற புள்ளிகள் நிறைந்த நீண்ட வாலையும் கொண்டு, பார்ப்பதற்கு அழகு மிக்கதாகும்.

இந்தியாவைச் சேர்ந்த மயில், சாலமோன் காலத்திலேயே பாலஸ்தீன நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டதா என்பது ஐயத்திற்குரியது *(1 அர 10:22; 2 நாள் 9:21)*. கிரேக்க இலக்கியத்தில் கி.மு. 5-ஆம் நூறாண்டில் தான் இப்பறவை அறிமுகப்படுத்தப்படுகிறது. உரோமையர் மயிலின் இறைச்சியை, குறிப்பாக அதன் மூளையையும், நாக்கையும் விரும்பி உண்டதாகத் தெரிகிறது. இஸ்ராயேலில் இப்பறவையின் உருவம் அழகு சாதனமாகப் பயன்பட்டிருக்கலாம்.

*1 அர 10:22* மற்றும் *2 நாள் 9:21* ஆகிய குறிப்புகளில் மயிலுக்குப் பதிலாகக் 'குரங்கு' எனும் சொல்லை மொழி பெயர்ப்பாளர்கள் சிலர் பயன்படுத்துகின்றனர். இந்த விலங்கு ஆப்ரிக்காவிலிருக்கும் பழங் காலக் குரங்கு வகையாகும்.

**மரகதம்** (EMERALD)

ஒளிமிக்க பச்சை இரத்தின வகை. வட எகிப்தில் சபாராவில் குறிப்பாக கிளியோப் பத்திரா காலத்தில் அரிதாகக் காணப்பட்ட மணிக்கல். இதைக் குறிக்கும் எபிரேயச் சொல் பொதுவாகப் பச்சைக் கனிமம் ஆகும். இது பெரிய குருவின் தீர்ப்பைக் கூறும் மார்புப் பட்டையில் முதல்வரிசையில் பதிக்கப்பட்ட கற்களில் மூன்றாவதாகும் *(யாத் 28:18; 39:11)*. தீர் அரசனை அழகுபடுத்திய விலையுயர்ந்த கற்களில் இதுவும் ஒன்று *(எசே 28:13)*. ஏதோமுக்கும் தீருக்குமிடையே நடந்த வாணிபத்தில் இதுவும் இடம் பெற்றது *(எசே 27:16)*. அரியணையில் அமர்ந்திருந்தவரைப் பற்றிய விவரிப்பில் மரகதம் குறிக்கப்பட்டுள்ளது *(திருவெளி 4:3)*. புதிய எருசலேம் மதிலின் அடிக்கற்களுள் மரகதம் நான்காவதாகக் குறிக்கப்படுகிறது *(21:19)*.

**மரக்கட்டை** (LOG)

மரக்கட்டை என்ற தலைப்பு கொடுக்கப் பட்டாலும், இந்தச்சொல் பல பொருட் களைக் கொண்டதாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது.

அடிமரத்தின் ஒரு பகுதியைக் குறிப்பிடுவதற்காகவும் இந்தச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதன் அடிப்படையில்தான் சில எபிரேய, கிரேக்கச் சொற்களின் மொழி பெயர்ப்பு அமைந்துள்ளது *(2 அர 6:2.5; திருவுரை 10:9; எசே 24:1.10; மத் 7:3-5; லூக் 6:41-42)*.

தீரின் மன்னரான ஈராம், சாலமோன் கோயில் கட்டுவதற்குத் தேவையான கேதுரு மரங்களையும், நூக்கு மரங்களையும், தெப்பங்களாகக் கட்டி கடல் வழியாய்ச் சாலமோனுக்கு அனுப்பினார் *(1 அர 5:8-9; 2 நாள் 2:8.16)*.

*மத் 7:3-5; லூக் 6:41-42* ஆகியவற்றில் காணப்படும் இயேசுவின் சொற்கள், பாபிலோனியத் தால்மூதிலும் காணப்படுகின்றன.

**மரக்கால்** (BUSHEL)

மாவு போன்ற வறண்ட பொருட்களை அளக்கும் கருவி. இது *மத் 5:15; மாற் 4:21; லூக் 11:33*-இல் விளக்கை மறைக்கப் பயன்படும் பாத்திரத்தைக் குறிக்கிறது.

**மரபு, பாரம்பரியம்** (TRADITION)

I. எல்லா மனித சமூகங்களுக்கும் மரபு என்பது பொதுவானது. எண்ணங்கள், கருத்துக்கள், பழக்கவழக்கங்கள் போன்றவை ஒரு தலைமுறையிலிருந்து அடுத்ததிற்கு மாறாத வடிவில் கையளிக்கப்படுவது அவற்றின் ஆன்மீகத் தொடர்ச்சியை உறுதிப்படுத்துகிறது. மத சம்பந்தமானவைகள் குறிப்பாக நம்பிக்கைகள், ஆசார முறைகள், செப, வழிபாட்டு முறைகள் போன்றவைகள் தனிப்பட்ட கவனத்துடன் மரபுவழி கை அளிக்கப்படுகின்றன. விவிலிய உலகைச் சூழ்ந்துள்ள சமுதாயங்களில் சமய மரபு, நாகரிகத்தை அமைக்கும் மனித மரபுகளில் இணைந்தே உள்ளது.

மரபு என்பதை இக்கால வழக்கு இரு வகையாகக் காண்கிறது. ஒன்று, காலம் காலமாய்த் தொடர்ந்து வரும் கையளிக்கப் படும் காரியங்களைப் (எ.கா. எகிப்திய வழிபாட்டு மரபு) பற்றியதாகும். மற் றொன்று கையளிக்கப்படும் முறை பற்றி யது. முக்கியமாக இதில் நிலைத்தன்மை உண்டு. இதில் நாடகம் எழுதுவது இரண் டாந்தர முக்கியமானது. அல்லது இடமே பெறுவதில்லை (இதன்படி சுமேரியப் பண் பாடு, வாய்மொழி நாகரிகமானாலும் மரபு வகையைச் சார்ந்ததேயாகும்). விவிலிய வெளிப்பாட்டிற்குரிய மரபில் மேற்கண்ட இரண்டின் சாயல்களும், மூலச் சிறப்பு களும் இடம் பெறுகின்றன.

II. **பழைய ஏற்பாடு:**

***1. புனிதசேமிப்பு கையளிக்கப்படுதல்:*** பழைய சட்டத்தின் கீழ் இஸ்ராயேலில் புனித சேமிப்பு கையளிக்கப்படுதல். ஆகவே, ஒரு மரபு ஏற்படுகிறது என்பது பற்றி ஐய மில்லை. இறைமக்களின் தனித்துவத்திற்கு ஏற்றவாறு இந்தப் புனித சேமிப்பு வாழ் வின் எல்லா அம்சங்களையும் தழுவுகிறது. சரித்திர நினைவலைகள் மற்றும் அவற்றில் ஊன்றியுள்ள கோட்பாடுகள், செபமுறை கள் மற்றும் வாழ்க்கை மாலுமியாகும் ஞானம், வழிபாட்டுச் சடங்குகள், சைகைகள், பழக்கவழக்கங்கள் மற்றும் சட்டம் ஆகிய அனைத்தையும் தழுவுகிறது. இந்தச் சேமிப்பு கையளிக்கப்படுவதுதான் இஸ்ராயேலுக்குத் தனித்தன்மை அளிக் கிறது. குல முதுதந்தையர் முதல் புதிய ஏற்பாட்டு நுழைவாயில் வரை அதன் ஆன்மீகத் தொடர்ச்சியை உறுதிப்படுத்து கிறது.

இந்தச் சேமிப்பு புனிதமானது என்றால் மற்ற மனித மரபுகளைப்போல் கடந்த தலைமுறைகளிலிருந்து வருவதால் மட்டும் அன்று. மாறாக, இது தெய்வீகத் தொடக்கம் கொண்டது என்பதால்தான். இந்த விசுவா சத்தின் அடிப்படையில், கடவுளின் தூதர் கள் இஸ்ராயேலுக்கு அளித்த, வெளிப்பாடு உண்டு. சட்டம், சட்டம் கட்டுப்படுத்தும் பழக்கவழக்கங்களின் அடிப்படையில் கட வுளின் சித்தத்தை அறிந்து காப்பவர்களால் கடவுளின் பெயரால் அறிவித்த நேரடிக் கட்டளைகள் உள்ளன. வெளிப்பாட்டிலி ருந்து பெற்ற இந்த நேரடிக் கூறுகள், மேற்காசியச் சூழ்நிலையிலிருந்து கடன் வாங்கப்பட்டு வெளிப்பாட்டிலேயே ஏற் றுக்கொள்ளப்பட்ட காலத்தால் பழமை வாய்ந்த கூறுகளை விலக்குவதில்லை.

வெளிப்பாட்டோடு இணைக்கப்பெற்று, தனித்தன்மை பெற்று விளங்க இறைமக் களின் மரபில் ஒன்றையொன்று நிறைவு செய்யும் இரு பண்புகள் இழையோடுகின் றன. அதற்கு நிலையான தன்மை உண்டு. அதனுடைய அடிப்படைக் கூறுகளான விசுவாசக்கோட்பாடுகள், சட்டம், வழி பாடு (இறையொருமை உடன்படிக்கைக் கோட்பாடு, குலமுது தந்தையரிடமிருந்தும் மோசேயின் சட்டத்திலிருந்தும் வரும் பழக் கங்கள்) போன்றவை நிலையான வடிவம் பெற்றவையாகும். அத்துடன் ஒரு முன் னேற்றமும் உண்டு. தங்களின் காலத்திற் கேற்ற செயல்முறையான தேவைகளை நிறைவு செய்யும் முறையில், முன்னோரின் அலுவலைப் புதிய இறைதூதர்கள் நிறைவு செய்யும் நேர் விகிதத்தில் வெளிப்பாடு வளர்கிறது. சரித்திர அலையையொட்டி இந்த வளர்ச்சியும் இயற்கையான நடை போடுகிறது. ஆனால், கலப்புத்தன்மையை ஒழுங்காகக்கொண்ட மற்ற மறை மரபு களில் இருப்பதுபோல் பண்பாட்டுப் படி முறை வளர்ச்சிக்கு இஃது அடங்கவில்லை. மாறாக, இங்கும் இஸ்ராயேலின் மரபின் தனித்துவம் ஓங்குகிறது.

***2. கையளிக்கப்படும் முறை:***

***அ. இலக்கிய அமைப்புகளும் வாழ்க்கைச் சூழலும்:*** இப்புனித சேமிப்பு, தன்னையே கையளிக்க இலக்கிய வடிவு எடுப்பது அவசியமாகிறது. நிகழ்ச்சி உரைகள், சட் டங்கள், அறவுரைகள், பாடல்கள், வழிபடு முறைகள் போன்றவைகள்தாம் இதை வெளிப்படுத்தும் முறைகளாகும். இந்த வடிவங்களே பழக்கத்தால் நிர்ணயிக்கப்படு வதால் இவை பாரம்பரியங்களாகும். அருகி லிருந்த நாடுகளின் (கானான், மெசபொத்

தாமியா, எகிப்து) இலக்கிய அமைப்புக் களைப் பெரும்பாலும் ஒத்தே உள்ளன. இருந்தாலும் இஸ்ராயேலின் கோட்பாட்டு மரபு தனித்தன்மை பெற்று ஒளிர்கிறது. சட்டங்கள் அல்லது இறைவாக்கு மொழி கள் போன்ற பொதுவானவற்றைக் கையாள் வதில் விவிலிய மரபு தனிப்பாங்கு கொண் டதாகும். தனக்கென்றே உரிய தனிமொழி கள், சொற்றொடர்கள் கொண்டுள்ளதால் வேண்டிய அளவிற்கு அதிகமாகவோ, குறைவாகவோ அதன் ஆசிரியர்கள் அவற்றைக் கையாள்கின்றனர். தான் கை யளிக்கும் செய்திக்குப் பொருத்தமான வடி வங்களைக் கொண்டுள்ளது. மரபு பற்றித் தெரியவேண்டுமென்றால் இந்த அமைப்பு கள் பற்றியும் அறிவது அவசியமாகிறது. இதனால்தான் மரபு அமைந்த வரலாற்றைக் கண்டுபிடிக்க ஏதுவாகிறது.

ஆண்டாண்டாக இந்த மரபு எவ்வாறு கையளிக்கப்படுகிறது என்பதைக் காணவும் இந்த ஆய்வு வழி அமைக்கிறது. இறை மக்களின் வாழ்க்கையில் உள்ள அதன் செயல்முறைகளையும், மரபை ஏற்றுள்ள வாழ்க்கைச் சூழ்நிலையையும் நேரிடையாக அனுசரித்தே மரபு ஏற்கும் அமைப்புகள் உள்ளன. இந்த அலுவல்கள் சட்டத்திற்கும், வழிபாட்டிற்கும் காவலர்களான குருக் களின் போதனையும், இறைவாக்கினரின் போதனையும், சட்டஅறிஞரின் செயல் முறையான ஞானமும் ஆகும். வாழ்க்கைச் சூழ்நிலையைப் பொறுத்தமட்டில், ஒவ் வொன்றும் தனிப்பட்ட மரபுகளையும் விரும்பி ஏற்றுக்கொண்ட அமைப்புகளை யும் (வடிவங்களையும்) கொண்டுள்ளது. பல்வேறுபட்ட சூழ்நிலைகள் மற்றும் இஸ் ராயேல் மரபில் அடிப்படையான ஒற்றுமை ஆகியவற்றின் தொடர்பால் அடிக்கடி நிக ழும் குறுக்கீடுகளையும் காண்கிறோம்.

வாய்மொழி மரபுக்கு ஏதுவான வடிவங் களில் மரபுப்பொருள் வாய்மொழி மூலம் கையளிக்கப்படுவதைத் தொடக்கத்தில் காண்கிறோம். தூயகம் அல்லது திருவிழாக் கள் சார்ந்து மறை நிகழ்ச்சியுரைகள், நீதி மொழிகள், வழிபாட்டு முறைகள், பாடல் கள், செப அமைப்புக்கள், குருக்கள் அல் லது இறைவாக்கினரின் விளக்கவுரைகள், ஞான மொழிகள் போன்றவை இத்தகைய வடிவங்களாகும். இறுதியாக, எழுத்து வடி வம் வாய்மொழி மரபுச் சூழ்நிலையில் பிறக்கிறது. அதனால் பெருமளவுக்குக் காப் பாற்றப்படுகிறது. இவ்வாறு விவிலிய மரபு படிப்படியாக நூல் வடிவம் எடுக்கிறது. காலப்போக்கில் நூல்வடிவம் முக்கியத்து வத்தில் வளர்கிறது. தூய ஆவியானவரின் தூண்டுதலால் இயற்றப்பட்டு, அவை இறைமக்களின் விசுவாசத்திற்கும் வாழ்க் கைக்கும் ஒரு தெய்வீக ஒழுங்காக அமை கின்றன.

**ஆ. நூலும் மரபும்:** யூதத்துவத்தில் பழங் கால மரபுச்சொத்து, கிறிஸ்து காலத்தருகில், எழுத்து வடிவில்தான் பாதுகாக்கப்பட்டது. இருந்தபோதிலும், இறைமக்கள் ஒரு புத்த கத்தை மட்டும் கைக்கொள்ளும் கூட்டம் அல்லர். அவர்கள் ஒழுங்குபட்ட ஒரு நிறுவனம் ஆவர். இதன் காரணமாக, அதற்குள்ளேயே திருநூலுக்குச் சமமான உயிருள்ள மரபு மறைந்தோடுகிறது. திரு நூல் கொண்டுள்ள சட்டத்தின் அதிகாரம் அதற்கு இல்லை என்றாலும், அதற்குரிய பாணியில் கடந்த காலங்களை மரபு தொடரச் செய்கிறது. குருத்துவ வாழ்க்கைச் சூழலிலும், மறைநூல் அறிஞர்களிடையே யும், யூதமறையில் பிளவுண்டான குழுக்களி லும் இந்த மரபைக் காண்கிறோம். அதில் ஆசானுக்கும், சீடனுக்கும் இடையே உள்ள அந்தரங்கத் தொடர்பால் கையளிக்கப்படும் உண்மையான வழிமுறை தெளிவாகிறது. ஆசான் மரபைக் கையளித்துத் தொடர் நிலை உண்டாக்குகிறார். அதைச் சீடன் பெற்று, தன் தவணை வரும்போது, அதைப் பிறருக்குக் கையளிக்க வேண்டும். இதுதான் கண்டிப்பான பொருளில் மரபு என்றழைக்கப்படுவதாகும். புதிய ஏற்பாடு இதை அறிந்திருக்கிறது. ''மூதாதையர் மரபுப்படி'' *(7:5)*, ''பெற்றுக்கொண்ட மரபு'' *(7:13)* என்று மாற்கு சுட்டிக்காட்டுகிறார். ''முன்னோர் மரபில் ஆர்வம் மிக்கவனாய்'' *(கலா 1:14)* என்று பவுல் மொழிகிறார்.

''மோசே... காட்டிய முறைமைகளை'' (அ.ப. 6:14) ஏற்படுத்த இந்த வழிமுறைச் சொத்து திருநூலோடு சேர்கிறது. ஏனென்றால், தங்கள் அதிகாரத்தை வலுப்படுத்த, சட்ட அறிஞர்கள் இந்த மரபுகள் வெகு காலத்திற்கு முன்பே தோன்றியதாகக் கூறுவர். மேலும், அவர்கள் வாய்மொழியாகக் கையளித்தவை, விவிலியத்தைச் சுற்றி வளர்ந்த புதிய இலக்கியங்களை உருவாக்கின. கிரேக்க (எழுபதுநூல்) மற்றும் அரமேயிக்கு (தார்கும்) மொழிபெயர்ப்புகள், இராபிகளின் நூல்கள், பிரிவினைக் குழுக்களின் (கும்ரான்) இலக்கியப்படைப்புகள், போலி நூல்கள் ஆகியவை இந்தப் புதிய இலக்கியங்களில் அடங்கும். இந்த நூல்கள் சான்று கூறும் பிற்கால மரபைத் திருமுறைநூல்கள் தோன்றக்காரணமான முந்தைய மூல வாய்மொழி மரபுடன் குழப்பிவிடக்கூடாது.

**III. புதிய ஏற்பாடு:**

***1. கிறிஸ்தவத் தொடக்கங்களில் மரபு.***

**அ. இயேசுவும் ''மூதாதையர் மரபும்'':** அவர் காலத்திய யூத மரபிலிருந்து அவருக்கு இருக்கும் சுதந்தரத்தை இயேசு தொடக்கத்தில் இருந்தே சுட்டிக்காட்டுகிறார். திருநூலில் பொதிந்துள்ள அத்தியாவசியமான மரபுச் சொத்து பற்றிக் கேள்வி இல்லை. திருச்சட்டமோ, இறைவாக்குகளோ அழியாமல் நிறைவேற வேண்டும் (மத் 5:17). ஆனால் ''மூதாதையர் மரபு'' இந்தச் சலுகை பெறவில்லை. இந்த மரபு மனிதர்களுடையது. சட்டத்தையே அகற்றிவிட அச்சுறுத்துகிறது (7:8-13). அதைப் புறக்கணிக்கவும் தன் சீடர்களை இயேசு அனுமதிக்கிறார். அதனுடைய சரிவையும் பறைசாற்றுகிறார்.

அதே சமயத்தில் இயேசுவோ தனிப்பட்ட தலைவர்போல் செயல்படுகிறார்; மறைநூல் அறிஞர்போல் பெற்ற மரபைக் கிளிப்பிள்ளை போல் திரும்பச் சொல்லாமல் அதிகாரமுள்ளவராகப் போதிக்கிறார் (காண். மாற் 1:22.27). அவருடைய சீடரும் அவருடைய போதனையைத் திரும்பச் சொல்லப் பணிப்பொறுப்பு பெறுகிறார்கள் (மத் 28:19 தொ). மேலும், அவரின் செயல்களிலும் புதுமை புகுத்துகின்றவர் அவர். அவர் பாவங்களை மன்னிக்கிறார் (மத் 9:1-8); மீட்பின் அருளை மனிதர்க்கு வழங்குகிறார்; புதிய அடையாளங்களைத் தொடங்கி வைக்கிறார்; அவரைப் பின்பற்றி அவைகளைத் திரும்பவும் செய்யச் சொல்கிறார் (1 கொரி 11:23 தொ); தமது சொற்களாலும் செயல்களாலும் புதிய மரபைத் தோற்றுவிக்கிறார். திருநூலின் விளக்கமாகப் பழையவைகள் என்பதை இஃது அறவே அகற்றுகிறது.

**ஆ. அப்போஸ்தல மரபு:** யூதத்துவத்திலிருந்து கடன் வாங்கப்பட்ட சொற்றொகுதியில் எடுத்துக்கூறப்படும் இந்த மரபு இருத்தலைத் திருச்சபைக்குள்ளேதான் உண்மையிலேயே நிரூபிக்க முடிகிறது. முக்கியமாக, இது பவுலில் துலங்குவது கண்கூடாகும். அவரின் பயிற்சி முறை யூதக் கல்வி முறையில்தான் அமைந்திருந்தது. ஆண்டவராகிய இயேசுவின் பெயரால் தெசலோனிக்கேயருக்கு அவர் கட்டளை கொடுத்தார் (1 தெச 4:2). அதையும் அவர்கள் பெற்றுக்கொண்டனர் (4:1). ''வாய்மொழியாகவோ, கடிதத்தின் வழியாகவோ அவரிடமிருந்து கற்றறிந்த மரபுப் படிப்பினைகளை''க் (2 தெச 2:15) கடைப்பிடிக்க வலியுறுத்துகிறார். ''நீங்கள் என்னிடம் கற்றுக்கொண்ட போதனைகள், பெற்றுக்கொண்ட படிப்பினைகள், என்னிடம் கேட்டறிந்தவை, என் வாழ்க்கையில் நீங்கள் பார்த்தவை அனைத்தையும் கடைப்பிடியுங்கள்'' (பிலி 4:9) என்று பிலிப்பியருக்கு உரைக்கிறார். ''நான் பெற்றுக்கொண்டதும் முதன்மையானதாக உங்களுக்குக் கையளித்ததும்'' (1 கொரி 15:3) என்று குறிப்பிட்டுக் கொரிந்தியருக்குப் பேசுகிறார். ''நான் ஆண்டவரிடமிருந்து பெற்றுக்கொண்டது இதுவே -அதையே நான் உங்களுக்குக் கையளித்தேன்'' (11:23). கிறிஸ்துவின் சாவு, உயிர்ப்பு பற்றிய மறையுண்மைச் சுருக்கம் பற்றி முதலாவது மேற்கோள் குறிக்கிறது. இறுதி இரவுணவின் வழிபாட்டு நிகழ்ச்சி பற்றி இரண்டாவது சுட்டுகிறது. எனவே, செயல்களிலும் சொற்களிலும் அப்போஸ்தல மரபு அடங்கியுள்ளது.

பவுலுக்கு முன்பும் அவரின் போதனை அமைப்பிலும், மரபின் முக்கியமானவை கள், யூத மரபை ஒத்த கையளிக்கும் நுணுக்கத்தைத் தழுவியே சென்ற நிலையைக் காண்கிறோம். ஆனால், திருச் சபையின் வாழ்க்கைச் சாரத்தையும், நற் செய்தியின் உட்பொருளையும், கிறிஸ்தவ விசவாசம் மற்றும் ஒழுக்கத்தின் ஒழுங் கினையும் இவைகள் அக்கப்படுத்தி உள்ளன. ''நம்மிடையே நிறைவேறிய (நற்செய்தி) நிகழ்ச்சிகளை முறைப்படுத்தி ஒரு வரலாறு எழுத பலர் முயன்றுள்ளனர். தொடக்க முதல் நேரில் கண்டும் இறைவார்த்தையை அறிவித்தும் வந்த ஊழியர் நம்மிடம் ஒப்படைத்தவாறே எழுத முயன்றுள்ளனர்'' (லூக் *1:1-2*) என்று லூக்கா தமது முன்னுரை யில் எழுதுகிறார். ஆகவே, ஏற்கெனவே பழக்கத்திலிருந்த மரபின் எழுத்து வடிவே நற்செய்தித் தொகுப்புகளாகும். இத்தொகுப் புகளுக்கு இணையாக, கிறிஸ்து விட்டுச் சென்ற, அப்போஸ்தலர்கள் பயன்படுத்திய செயல்களையும் பழக்கங்களையும் திருச் சபையின் வாழ்க்கை பாதுகாக்கிறது.

**இ. மரபிலிருந்து திருநூலுக்கு:** தொடர்பு நிலை பரவ அப்போஸ்தலிக்க மரபு இவற்றைக் கையளிக்கும் அமைப்புகளைக் கொண்டுள்ளது. கிறிஸ்துவிடமிருந்தே மரபைப் ''பெற்றுக்கொண்ட'' அப்போஸ் தலர்களே முதன்மையானோர். தமஸ்கு வழியில் கிடைத்த வெளிப்பாட்டினால் பவுலும் இவர்களில் ஒருவர் (கலா *1:1.6*). அடுத்தபடியாக அப்போஸ்தலர்கள் நிய மித்து, அந்தந்தக் கிறிஸ்தவ சபையின்மேல் அதிகாரம் செலுத்தும் தலைவர்கள் (*1* திமொ *1:3* தொ; *4:11; 2* திமொ *4:2;* தீத் *1:9; 2:1; 3:1.8*). கிறிஸ்தவக் கூட்டமைப் புகளின் இயலோடும், பற்பல பங்குகளோ டும் இணைந்தே இந்த மரபு நடைபோடு கிறது. இயேசு பற்றிய நிகழ்ச்சி வருணணை களிலிருந்து விசுவாச அறிக்கைக்கும் (*1* கொரி *15:1* தொ), வழிபாட்டு அமைப்புகளி லிருந்து (*11:23* தொ; *28:19*) பொதுச் செபங்களுக்கும் (மத் *6:9-13*), கிறிஸ்து பற்றிய பாடல்களுக்கும் (பிலி *2:6-11;* எபே *5:14; 1* திமொ *3:16;* திருவெளி *7:12* போன்றவை), இயேசுவிடமிருந்து வெளி யாகும் வாழ்க்கை நெறிகளிலிருந்து திரு முழுக்கு மறையுரைகளுக்கும் (*1* பேதுரு *1:13...*) உள்ள இது போன்றவற்றில் இந்த மரபு அடங்கும். புதிய ஏற்பாட்டில் புலப் படும் இலக்கிய வடிவங்களை அப்போஸ் தல மரபு பற்றி அறிய விழையும்போது எப்போதும் கருத்தில் கொள்ள வேண்டும். துணை நிற்கும் அருட்கொடையின் கீழ்தான் இந்த ஏற்பாட்டில் உள்ள மரபின் பல்வேறு உரு அமைப்பானது உறுதியான முறையில் வெளிப்படுத்தப்படுகிறது. கிறிஸ்துவிட மிருந்து புறப்படும் மரபு, அப்போஸ்தலர் வழியாய் வந்து இறுதியில் பழைய ஏற்பாட் டில் உள்ளதுபோல் திருநூலாக வடிவெடுக் கிறது.

### 2. கிறிஸ்தவ மரபின் பண்பு.

**அ. மரபின் மூலம்; கிறிஸ்துவின் அதிகா ரம்:** பழைய ஏற்பாட்டில் பொதிந்துள்ள மரபு கடவுளின் தூதர்களின் அதிகாரத்தால் அமையப்பெற்றது. புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவின் அதிகாரத்தால் அமையப் பெறுவதால் மரபானது ''மூதாதையர் மரபி லிருந்தும்'' (மத் *15:2*), ''மனித மரபிலிருந் தும்'' (கொலோ *2:8*) வேறுபடுகிறது. கிறிஸ்து போதித்தார்; செயல் புரிந்தார் (அ.ப. *1:1*). சீடருக்கு முந்தையத் திருநூல் களின் சட்ட ரீதியான விளக்கத்தையும் கொடுத்தார் (மத் *5:20-48*). அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று தமது வாழ்க்கை மூலமே எடுத்துக்காட்டிய அவர் (யோவா *13:15;* பிலி *2:5; 1* கொரி *11:1*), தம் பெயரால் (மத் *28:20*) என்ன போதிக்க வேண்டும் என்றும் அவர்களுக்குக் கற்பித் தார். அவருடைய போதனை அவருடைய தன்று, அவரை அனுப்பியவருடையதேயா கும் (யோவா *7:16*). இதேபோல் அப் போஸ்தல மரபும் கிறிஸ்து மீட்பரின் உள்ளம், கட்டளைகள், செயல்முறை அனைத்தையுமே அப்படியே பாதுகாக் கிறது. குறிப்பிட்ட பிரச்சனை பற்றி கிறிஸ்து குறிப்பிட்டுச் சொல்லாத நிலை யில் (காண். *1* கொரி *7:25*) ஓர் அப்போஸ்

தலர் தனிப்பட்ட அறிவுரை கூறி அப் பிரச்சனையைத் தீர்க்க முன்வரும்போது அதே அதிகாரத்தாலேயே செயல்படுகிறார். ஏனெனில், அவருக்கும் ''கிறிஸ்துவின் மனம்'' *(1 கொரி 2:16)* இல்லையா? அவருக்குரியவருக்கு உயிர்த்த கிறிஸ்துவின் ஆவி ''அனைத்தையும் கற்றுத்தரவும்'' *(யோவா 145,26)*, ''முழு உண்மையை நோக்கி அவர்களை வழிநடத்தவும்'' *(16:13)* அவர்களிடையே செயலாற்றி வாழ்கின்றார். எனவே, அப்போஸ்தலர்களின் அதிகாரத்திற்கும், அவர்களின் ஆண்டவரின் அதிகாரத்திற்கும் வேறுபாடே இல்லை. ''உங்களுக்குச் செவிசாய்ப்பவன் எனக்குச் செவிசாய்க்கிறான். உங்களைப் புறக்கணிப்பவன் என்னைப் புறக்கணிக்கிறான். என்னைப் புறக்கணிப்பவனோ என்னை அனுப்பினவரையே புறக்கணிக்கிறான்'' *(லூக் 10:16)*.

**ஆ. அப்போஸ்தல மரபும் திருச்சபையின் மரபும்:** தனிச்சிறப்பான அதிகாரம் கொண்டது அப்போஸ்தல மரபு. இதே போக்கில் தான் திருநூலிலும் இது பொதிந்துள்ளது. ஆனால், இது மனித பரம்பரையாகி, கிறிஸ்து அழித்த யூத பரம்பரைக்கு இணையாக, திருச்சபையின் அதிகாரத்தை எதிர்க்கும் அளவிற்கு அதை முழுவதும் மனித மரபாக ஆக்கிவிடக் கூடாது. அப்போஸ்தல மரபிலிருந்து திருச்சபை மரபுக்கு உண்மையான தொடர்பு இருக்கிறது.

**1) கையளிக்கப்படும் பொருளில் தொடர்ச்சி:** இயேசுவின் போதனைகளையும் செயல்களையும் விளக்க முயன்ற அளவிற்கு, அப்போஸ்தலர் காலத்தில் ஒரு மரபு ஏற்பட்டது. இஃது அப்பட்டமாய்ப் புதிதில்லை என்றாலும் திருவெளிப்பாடு இதில் வளர்ந்து வந்த விதம் கண்கூடானது. ''ஒப்படைத்துள்ளதைப் பாதுகாப்பதே'' *(1 திமொ 6:20; 2 திமொ 1:13 தொ)* புதிய ஏற்பாட்டில் காணும் நிலைத்த கொள்கையாகும். இதைப் பாதுகாப்பதே திருச்சபையின் மரபாகும் என்பது தெளிவாகும். இந்த ஒப்படைக்கப்பட்டுள்ளவையே அப்போஸ்தல மரபாகும். இனிமேல் புதிய அம்சங்களை அது பெற இயலாது. வெளிப்பாடு முடிந்துவிட்டது. திருச்சபை வரலாற்றில் அதன் வளர்ச்சி வேறொரு அமைப்பைச் சேர்ந்ததாகும். அப்போஸ்தலர் ஒப்படைத்தவற்றில் மறைந்துள்ளதைத் தெளிவாக்குவதே இந்த வளர்ச்சியாகும். ஒப்படைத்ததை விசுவாசத்தோடு பாதுகாப்பதில் அப்போஸ்தல மரபுக்கு இறையூக்கம் பெற்ற சாட்சியாக அமையும் திருநூலே முதலிடம் வகிக்கிறது. திருநூல்தான் அவசியமான உறைகல்லாகும். ஆயினும், மூலத்தில் ஒப்படைக்கப்பட்ட அத்தனையும் அதிலே வெளிப்படையாகவே அப்படியே பதிவாகியுள்ளன என்பது நமக்கு நிச்சயமில்லை. மேலும், இறையூக்கம் பெற்ற பகுதிகளை ஆழ்ந்துணரும் உயிருள்ள மரபுதான் திருநூல் அளிக்காதவைகளைக் காப்பாற்றுகிறது. திருச்சபையில் செயல்புரியும் ஆவியானவரின் பணி இதுதான். இதனால் அன்றோ திருநூலில் நிலைபெற்ற வார்த்தை ஆண்டவராகிய கிறிஸ்துவின் எப்போதும் உயிருள்ள வார்த்தையாக உள்ளது!

**2) கையளிக்கும் அமைப்புகளின் தொடர்ச்சி:** பெயரில்லாக் கூட்டத்தினால் அல்லாமல் படிமரபுடைய சமூக அமைப்பால் திருச்சபையின் மரபு கையளிக்கப்படுகிறது. இது வெறும் மனித அமைப்பன்று; ஆவியால் நடத்தப்பெறும் கிறிஸ்துவின் உடலேதான். அப்போஸ்தலர்களின் அதிகாரத்தைக்கொண்டு, ஆளுகையின் பணிகள் காலந்தோறும் நிலைபெறுகின்றன. இதிலும் மேய்ப்புப்பணித் திருமுகங்கள் வழிமுறைகளை அமைக்கின்றன (எ.கா. *1 திமொ 4:6தொ.16; 5:17தொ; 6:2-14; 2 திமொ 1:13தொ; 2:14 தொ; 3:14-4:5; தீத் 1:9 தொ; 2:1.7தொ*). இந்தப் பகுதிகள் காட்டுவது இரண்டு. திருச்சபையின் மரபில் உள்ள அப்போஸ்தலர் ஒப்படைத்தவை உண்மையானதா என்று காண திருநூல் மட்டும் போதாது; இஃதோடு சேர்ந்து, அதைக் கண்காணிக்கவும் நிறைவேற்றவும் அருள் பெற்றுள்ளவர்களின் உத்தரவாதமும் தேவையாகும். திருநூலைத் தூண்டியுள்ள அதே ஆவி இவர்களுக்கும் துணையாகத் தொடர்ந்து வருகிறார் *(1 திமொ 4:14; 2 திமொ 1:6)*.

***3). அடிப்படையானதும் நிலைபெற்றது மான மரபின் இலக்கிய வடிவங்களில் தொடர்ச்சி:*** திருச்சபையில் பணிகள் மற்றும் வாழ்க்கைச் சூழ்நிலைகள் ஆகியவற்றின் நிலைத்த தன்மையைப் பொருளுள்ள விதத்தில் இலக்கிய வடிவங்களின் நிலைத்த தன்மை எடுத்தியம்புகிறது. காலப்போக்கில், பண்பாடுகளில் இலக்கிய வடிவங்கள் திருச்சபையின் இலக்கியத்தில் உருவாகி, வளர்ச்சிபெறும் என்பதற்கு ஐயமேயில்லை. இந்த வளர்ச்சிக்கு அப்பால், புதிய ஏற்பாட்டில் வடிவங்களால் நிலைபுகுந்துள்ள அப்போஸ்தல மரபின் வடிவங்களால் பல்வகைப்பட்ட நூல்களும் முத்திரையிடப்படும். திருநூலின் அதிகாரத்திற்கு இணையான அதிகாரத்தைக் கொள்ளாவிட்டாலும், சில முந்தைய ஆவணங்கள் (அப்போஸ்தலர்களுக்குப் பிந்திய காலத்திய, விசுவாச சம்பந்தமான வழிபாடு சம்பந்தமான வாய்பாடுகள்), அதிக நேரிடையாக அப்போஸ்தல மரபையே எதிரொலிக்கின்றன.

இவ்வளவு சொன்னபின் இரண்டு குறிப்புகள் அவசியமாகும்:

அ) ஒப்படைக்கப்பெற்றவை கையளிக்கப்படும் காலத்திற்கும், பெறுகின்ற மனிதருக்கும் ஏற்றபடி அப்போஸ்தலர் ஒப்படைத்தவற்றைக் காப்பாற்ற, திருச்சபை மரபானது நிகழ்கால வடிவங்களை உருவாக்கி வளர்க்க வேண்டும்.

ஆ) எல்லா நிகழ்கால வடிவங்களையும் திருச்சபையின் மரபுக்குச் சாற்றிக் கூறாதிருப்பது முக்கியமானதாகும். பல்வேறு நிகழ்கால மரபுகளையும், பிற்காலத்தில் எழுந்த ஒவ்வொரு மரபையும் அவ்வாறு செய்யக்கூடாது. இத்தகைய மரபுகள் மிகவும் வேறுபட்ட மதிப்பீடு உடையவையாகும். திருச்சபை மரபு எழுப்பும் எல்லா மறையியல் பிரச்சனைகளுக்கும் புதிய ஏற்பாட்டில் நேரிடையான தீர்வு காண முடியாது என்பதும் தெளிவாகும். ஏனெனில், இறையூக்கம் பெற்ற நூல்கள் பட்டியல் முடிவு செய்யப்பட்டுவிட்டன என்று திருச்சபைச் சட்டம் வந்தபின்தான் இந்த மரபு தோன்றியது. இதுதான் மரபின் விளக்கமும் ஆகும்.

## மரபுச் சின்ன முறைமை (TOTEMISM)

இது தொடக்ககால சமூக முறை. இதன்படி மக்கள் தங்கள் விலங்குகளுடனோ, தாவரங்களுடனோ குருதித் தொடர்பு கொண்டிருந்ததாக நம்பினர். இவற்றிலிருந்து மறைபொருளான முறையிலே தோன்றியவர்கள் எனக் கருதினர். இந்தக் குலம் அந்தத் தாவர அல்லது விலங்கின் பெயரைத் தாங்கி நிற்கும். இதைக் குல அடையாளமாகக் கொள்வர். அதை உடலில் பதித்துக் கொள்வர். அந்த விலங்கைப் புனிதமானதாகக் கருதினர். ஆகவே, அதைச் சாதாரணமாக உண்ண மாட்டார்கள். ஆனால், அது பலிப்பொருளாகப் பயன்படுத்தப்படும். குருதித் தொடர்பு தாயின் வழியாகக் கணிக்கப்பட்டது. திருமணம் ஒருவனது இனத்திற்குப் புறம்பே நடைபெற்றது.

இந்த இனமரபுச் சின்ன முறை செமித்திய இனத்தவர் மத்தியிலும், தொடக்க கால எபிரேயர் மத்தியிலும் இருந்ததாக அறிஞர்கள் கருதுவர்.

***1. விலங்கு மற்றும் தாவரப்பெயர்கள்:*** பல குலத்திற்கு விலங்கின் பெயர்கள் இடப்பட்டுள்ளன. ஏதோமியர் சந்ததியிலே பல குலப்பெயர்கள் விலங்கின் பெயர்களேயாகும் (ஆதி 36). சில இஸ்ராயேலர் குலங்கள் தாவர, விலங்கின் பெயர்களைக் கொண்டிருந்தன: எ.கா. அரோத்திய குலம் (*கழுதைக்குலம்: எண் 26:17*); தோலாயர் குலம் (*புழுக்குலம்: எண் 26:23*). எலோனியர் குலம் (*கருவாலி: எண் 26:26*); பெக்கரியர் (*ஒட்டகம்: 26:35*); சூபாமியர் (*விரியன்: 26:39*). காலேபியர் (*நாய்: 1 சாமு 25:3*). இவை மரபுச்சின்ன முறைமையின் சுவடாக இருக்கலாம்.

***2. விலங்குகள் வழிபாடு:*** விலங்கு வழிபாடு இன மரபுச்சின்ன முறையோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. எகிப்தியர் நடுவிலே இப்பழக்கம் பரவியிருந்தாலும், செமித்தியர் நடுவே இஃது அவ்வளவாக

இல்லை. பழைய ஏற்பாட்டிலே எசேக்கியேல் ஆகமம் இதை எதிரொலிக்கிறது *(எசே 8:7-11).*

**3. இனத்திற்குப் புறம்பாகத் திருமணமும், தாயின் வழியாகக் குருதி வழித்தொடர்பும்:-** பழைய ஏற்பாட்டிலே பிற மக்களிடையே திருமணங்கள் குலத்திற்குப் புறம்பாக நடந்தாலும், பொதுவாக எபிரேயர் மணங்கள் ஒரே குலத்திற்குள் நடந்தன. நீதிபதிகள் ஆகமம் புறக்குல மணத்தைக் குறிப்பிடுகிறது *(நீதி 12:9).* தாயின் வழியாகக் குருதித் தொடர்பைப் பெறுவதைப் பற்றி பழைய ஏற்பாடு பல இடங்களில் குறிக்கிறது *(ஆதி 22:22; நீதி 8:19; ரூத் 1:8; 2 சாமு 17:25; உ.ச. 1:6).*

**4. உணவுத்தடைகள்:** இஃது இனமரபுச் சின்ன முறைமையிலே முக்கியமானது. பழைய ஏற்பாட்டு உணவுத்தடைகள் இதிலிருந்தே தோன்றியிருக்க வேண்டும். *(லேவி 11; உப 15).*

**5. குல முத்திரைகள்:** உடலில் முத்திரையிடுவது அல்லது பச்சை குத்திக்கொள்ளல் தடை செய்யப்பட்டுள்ளது *(லேவி 19:28).* இருப்பினும் இத்தகைய பழக்கம் இஸ்ராயேலர் நடுவில் இருந்தது *(ஆதி 4:55; எசா 44:5; எசே 9:4; செக் 13:6).* ஆனால், இந்த முத்திரை குத்துதலுக்கும் இனமரபுச் சின்ன முறைக்கும் தொடர்பு இருந்ததாகச் சொல்ல சான்றுகள் இல்லை. விலங்கு ஆராதனையை விலக்கியவர்களை அடையாளம் கண்டு கொள்ள முத்திரை பயன்பட்டது *(எரே 9:4).* திருவெளிப்பாட்டில் இறைவனை வழிபடுபவர்களையும் *(திருவெளி 14:1; 22:4),* விலங்கை வழிபட்டவர்களையும் *(13:16-17; 17:5)* வேறுபடுத்த இந்த அடையாளங்கள் முத்திரையிடப்பட்டுள்ளன. இஃது அடிமைகளை முத்திரையிடுவதோடு தொடர்புடையதாகத் தெரிகிறது *(7:3).*

இஸ்ராயேலர் இனக் கொடிகளைக் கொண்டிருந்தனர் *(எண் 1:52; 2:2).* இவற்றில் பல விலங்கு அடையாளங்களைக் கொண்டிருந்தன. இவை தங்கள் அடையாளப்பொருளை யாக்கோபு *(ஆதி 49)* மற்றும் மோசேயின் *(உப 33)* ஆசீர்களிலிருந்து பெறுகின்றன என்று கருத இடமிருக்கிறது.

## மரபுவழிக் கதை *(LEGEND)*

இது பலவகை நிகழ்ச்சியுரை வடிவங்களுக்கு அளிக்கப்படும் பொதுப்பெயராகும். இந்த வடிவங்களில் காணப்படும் நிகழ்ச்சியுரைகளின் வரலாற்று மதிப்பைக் குறைத்துக் கூறுவதாக இதைப் புரிந்து கொள்ள அவசியமில்லை. மரபுவழிக் கதை என்பது பரந்த பொருளில் பயன்படுவதால் இப்பெயர் மரபுவழிக்கதைகள், குல மூதாதையரின் வீரகாவியங்கள், வழிபாட்டுக் காரண காரியக் கதைகள், மற்றக் காரண காரியக் கதைகள் முதலியவற்றை உள்ளடக்கும். இந்த வடிவங்கள் ஒவ்வொன்றும், பெரிய நிகழ்ச்சியுரைகளில் இடம் பெறும் முன், ஒரு காலத்திற்கு வாய்மொழியாகக் கையளிக்கப்பட்ட கதைகளைக் கொண்டிருந்தன.

மரபுவழிக் கதைகள் ஊக்குவிப்பதற்கும், பக்தி, நற்பண்புகளை எடுத்துக்கூறவும் அல்லது வீரர்களின் வலிமையைச் சிறப்பித்துக்காட்டவும், வியத்தகு மற்றும் புதுமையான செயல்கள் பற்றிய நிகழ்ச்சியுரையாக அமைக்கப்பட்டன.

இக்கதைகளின் வீரர்களாக பினகாசு *(எண் 25:6-18),* சிம்சேன் *(நீதி 16),* மற்ற விடுதலை வீரர்கள் *(3:31; 9:26-49),* எலியா *(2 அர 2:33-34),* எலிசா *(6:1-7.8-10),* மற்ற இறைவாக்கினர்கள் *(1 அர 14:1018),* தாவீது *(2 சாமு 8:1-14),* சாலமோன் *(1 அர 3:16-28),* இயேசு *(மாற் 11:12-14.20; லூக் 2:41-51; 7:36-50)* மற்றும் பவுல் *(அ.ப. 19:12-13; 28:3-6)* ஆகியோர் தோன்றுகின்றனர்.

குலமூதாதையரின் வீர காவியங்கள் இனம், குலம் மற்றும் நாடுகளால் பாதுகாக்கப்பட்டன. இவை தாங்கள் ஒரு மக்களினம் என்ற அளவில் அவர்களின் பழமை, வழிமரபு, நேர்மை மற்றும் தன்மை ஆகிவற்றைப் பற்றிய அறிக்கையாகும். லாமேக்கு *(ஆதி 4:19-24),* யூதா மற்றும் தாமார் *(ஆதி 38),* மற்றக் குலமூதாதையர்

ஆகியோர் பற்றிய கதைகள் இத்தகைய மரபு வழிக்கதைகளுக்கு எடுத்துக்காட்டாகும்.

பெத்தேல் போன்ற இடங்களின் புனிதத்தை விளக்கும் கதைகள் (ஆதி 28:11-22), ஓய்வுநாள் போன்ற நிறுவனத்தோற்றத்தை விளக்கும் கதைகள் (1:1-2:3), லேவியர் திருநிலைப்படுத்தப்பட்ட நிகழ்ச்சியுரைகள் போன்றவை வழிபாட்டுக் காரண காரியக் கதைகளுக்கு எடுத்துக்காட்டாகும். மற்றக் காரண காரியக் கதைகள், இடப்பெயர்கள் (ஆதி 11:1-9; யாத் 17:7), உடைமை உரிமை ஒழுங்குகள் (யோசு 15:16-19), தொடைச் சந்து தசை நாரை உண்ணாமை (ஆதி 32:25-33) போன்றவற்றை விளக்குகின்றன.

### மரப்பின்னல் வேலைப்பாடு (TRELLIS)

சங் 75:5-இல் வரும் இச்சொல், ஆலயத்தின் புனித இடத்திற்குச் செல்லும் முக்கிய வாயிலில் விரிவாகச் செதுக்கப்பட்ட மர வேலைப்பாட்டைக் குறிக்கிறது. இதன் மேல் வேயப்பட்டிருந்த தங்கத்திற்காக, படையெடுப்பவர்கள் இந்த மரப்பின்னல் வேலைப்பாடுகளை வெட்டி எடுத்தனர்.

### மரம் (TREE)

படைப்பவர் இயற்கை முழுவதும் நிறைத்து வைத்துள்ள, உயிர் சார்ந்த சக்தியின் காணக்கூடிய அடையாளமாக மரத்தைப் பார்க்கிறான் மனிதன் (காண்க. ஆதி 1:11). ஒவ்வொரு வசந்த காலத்திலும் இயற்கையின் மறுபிறப்பை மரம் அறிவிக்கின்றது (மத் 24:32). வெட்டி எறிந்தாலும், அதன் கிளைகள் மீண்டும் தளிர்க்கின்றன (யோபு 14:7 தொ). வறண்ட பாலைவனங்களில் எங்கே நீரும், அதன் வழியாக வாழ்வும் முடியும் என்பதைக் காட்டுகிறது (யாத் 15:27; எசா 41:19). அதன் கனிகளால் மனிதனை வளப்படுத்துகிறது (காண்க. தானி 4:9). இறைவன் ஆசீர்வதித்துள்ள நீதிமானையோ (சங் 1:3; எரே 17:7 தொ), அவர் சலுகைகளால் நிறைத்துள்ள மக்களையோ (ஓசே 14:6தொ) ஒரு பசுமையான மரத்திற்கு ஒப்பிடப் போதுமான ஒத்த தன்மையுடைமை இங்கு உள்ளது. நல்ல தீய மரங்களை அவற்றின் கனிகளைக் கொண்டு தீர்ப்பிட்டு, தீய மரங்கள் வெட்டப்பட்டு தீயிலே போடப்படுவது போல மனிதர்களும் ஆண்டவர் தீர்ப்பிடும் நாளில் தீயோர் வெட்டப்பட்டு நெருப்பிலே போடப்பட வேண்டியவர்களாகின்றனர் (மத் 7:16-20 இணை; காண்க. 3:10; லூக் 23:31). இதைத் தவிரவும் விவிலியத்தில் மரம் பற்றிய அடையாள முறை, பொருள் என்பன மூன்று வகைகளில் புரிந்து கொள்ளப்படுகின்றன.

**1. வாழ்வின் மரம்:** மெசப்பத்தோமியா புராணங்களில் வெகுவாகப் பேசப்படும் ஓர் அடையாளமாகிய **'வாழ்வின் மரத்தை'** இன்பவனத்தில் வைத்து அதன் கனிகள் சாகாமையைத் தரக்கூடியது என்று ஆதியாகமம் பேசுகிறது (ஆதி 2:9; 3:22). இந்த முதல் அடையாளத்தை ஒட்டியே விலக்கப்பட்ட மரத்தின் கனியை உண்டால்தான் நல்லது எது, கெட்டது எது என்பதைப் புரிந்து கொள்வேன் எனத் தவறாக நினைக்கிறான் மனிதன் (ஆதி 2:16 தொ). இம்மரத்தின் ஏமாற்றும் தோற்றத்தால் வழிதவறி நடத்தப்பட்ட மனிதன் இந்த மரத்தின் கனியை உண்கிறான் (ஆதி 3:2-6). அதன் விளைவாக வாழ்வின் மரத்திற்கான பாதை அடைபட்டுவிட்டது (ஆதி 3:22 தொ). ஆனால், மீட்பின் வரலாறு எவ்வாறு மனிதனுக்கு வாழ்வின் மரத்தை அடையும் வழி மீண்டும் கடவுளால் திறந்துவிடப்பட்டது என்பதைக் கூறுகிறது. இறுதிக்காலத்தில் புனிதநாடு மீண்டும் அடையப்பட்ட இன்பவனமாக இறுதிக்கால இறைவாக்கு இலக்கியங்களில் பேசப்படுகிறது (எசே 47:12). இன்றிலிருந்து ஞானத்தைப் புரிந்து கொள்பவனுக்கு அஃது அவனுக்கு மகிழ்ச்சி தரும் ஒரு மரமாகிறது (பழ 3:18; 11:30; காண்க. சீரா 24:12-22). இறுதியாக, புதிய ஏற்பாட்டிலே தன்னிடம் பிரமாணிக்க முள்ளவன் இறைவனின் இன்பவனத்தில் இருக்கும் வாழ்வு தரும் மரத்தின் கனியை உண்பான் என்று கிறிஸ்து உறுதியளிக்கிறார் (திருவெளி 2:7).

**2. இறையரசின் மரம்:** அகிலத்தையே ஒரு மரமாகப் பார்க்கும் தன்மை மேற்

காசியப் புராணப் பார்வை ஆகும். இந்த அடையாளம் அப்படியே விவிலியத்தில் எடுத்தாளப்படவில்லை. ஆனால், வானத்தைத் தன் கிளைகளால் எட்டிப்பிடிக்கும் ஓர் அசாதாரணமான மரத்தைப் பற்றிப் பேசுகிறது. அதன் நிழலில் அளவற்ற மனிதர்கள், பறவைகள், விலங்குகள் வந்து தங்குவதாகக் கூறி இந்த மரம் போன்றது மனித அரசுகள் என ஒப்பிடுகிறது (எசே 31:1-9 தானி 4:7 தொ). இஃது ஒரு போலியான பெருமைதான். ஏனெனில், இஃது அகந்தையின்மேல் நிறுவப்பட்டுள்ளது. ஆண்டவரின் தீர்ப்பு இந்த மரத்தை வீழ்த்தும் (எசே 31:10-18; தானி 4:10-14). ஆனால், இறையரசு சாதாரண ஓர் எளிய சிறு விதையினின்று தோன்றி, மிகப்பெரிய மரமாகி எல்லாப் பறவைகளும் வந்து தங்கும் இடமாகும் (மத் 13:31).

**3. சிலுவை மரம்:** மரம் இழிவின் சின்னமாகிறது. அதாவது சாவிற்குத் தீர்ப்பிட்டவர்களைத் தூக்கிலிடப் பயன்படுத்தப்படும் பொழுது அவமானத்தின் சின்னமாகிறது மரம் (ஆதி 40:19; யோசு 8:29; 10:26; எஸ்த 2:23; 5:14). அது சுமக்கும் பாரம் இந்த மண்ணைப் பாழாக்குவதால் அது கடவுளின் சாபமாகிறது (உப 21:22 தொ). இயேசு இதே சாபத்தைத்தான் வேண்டுமென்றே தன்மீது ஏற்றுக்கொள்கிறார் (ஆதி 3:13). அவர் சிலுவை மரத்திமேல் நமது பாவங்களைத் தன் உடலில் சுமந்தார் (1 பேதுரு 2:24). நம்மீது சுமத்தப்பட்ட சாவின் தண்டனையை அவர் சிலுவையில் அறைந்து விட்டார் (கொலோ 2:14). ஆனால், சிலுவையின் மரம் ''நீதியை உருவாக்கும்'' மரமாகிவிட்டது (காண்க. ஞான 14:7). விண்ணகத்தில் உள்ள பலன் தரும் மரம் உள்ள மீண்டும் அடையப்பட்ட இன்பவனத்தை அடைய நமக்கு வழி திறக்கப்பட்டுள்ளது (திருவெளி 22:2.14). பழங்கால அவமானத்தின் சின்னம் வாழ்வின் மரமாகிவிட்டது.

## மரம், செடி, கொடிகள் (FLORA)

விவிலிய நாடுகளில் காணப்படும் தாவரங்களின் எண்ணிக்கை 2300-க்கு மேற்பட்டதானாலும், விவிலியத்தில் குறிக்கப்படும் தாவரங்கள் நூற்றுக்கு மேல் இல்லையென்றால், அது வியப்பளிக்கலாம். விவிலியம் வரலாறு, சட்டங்கள், இலக்கியங்கள் அடங்கிய ஒரு தொகுப்பு என்ற அளவில், அது மனிதர்களுக்கும் தாவரச்சூழ்நிலைக்குமிடையேயுள்ள உறவை முழுவதும் பிரதிபலிக்க வேண்டியதில்லை என்பதை நாம் நினைவில் கொள்வது அவசியமாகும். ஆகவே, மிகவும் சாதாரண மரஞ், செடி கொடிகள்கூடச் சிறப்பிடம் பெறவில்லை என்பதை நாம் புரிந்து கொள்ளலாம்.

தாவரங்களின் எண்ணிக்கை அவ்வளவு முக்கியத்துவமுடையதன்று. தாவர உலகோடு தொடர்புடைய வாழ்வின் பல கூறுகளைப் பற்றி ஆழ்ந்த உட்கருத்துக்களை விவிலியம் அளிக்கிறது. உழவுத் தொழில் மட்டுமன்று; சமயம், பழக்கவழக்கங்கள், சட்டம், வணிகம், உற்பத்தி செய்தல், கட்டடக்கலை, மருத்துவம், உடல் நலம், நறுமணப்பொருட்கள், மற்றும் அன்பும் கூட தாவர வாழ்வோடு தொடர்பு கொண்டுள்ளன; அதனால் ஒளியூட்டப்படுகின்றன.

தாவரங்களைப் பாகுபடுத்தி அடையாளம் காட்டுவது அவ்வளவு எளிதான வேலையன்று. அடையாளம் காட்ட முடியாத தாவரங்களின் எண்ணிக்கை மிகப்பெரிதாகும். இவை பற்றி விவிலிய ஆய்வாளர்களிடையே கருத்தொற்றுமை இல்லை. இதற்குக் காரணம் தாவரங்கள் பற்றிய விவரிப்பு தெளிவில்லாமல் இருப்பதும், ஒரே வகையான விவரிப்பு பல தாவரங்களுக்குப் பொருந்தக் கூடியதாக இருப்பதும் ஆகும். பல பெயர்கள் தாவரத்தொகுப்புகளைக் குறிப்பதாக அமைந்துள்ளன; எ.கா. முட்புதர்கள், நாணல். இவை தனிப்பட்ட வகைகளைக் குறிக்கவில்லை. சில பெயர்கள் பல மொழிகளிலும், சொற்றொடர்களிலும் இடம் பெற்று வாழையடி வாழையாகப் பயன்பட்டுள்ளன. ஆனால், அவற்றின் பொருள் காலப்போக்கில் மறைந்து போயிற்று. பல தாவரங்களின் பெயர்கள் மொழி பெயர்க்கப்படும்போது

ஒரே சீராக மொழி பெயர்க்கப்படுவதும் இல்லை. ஆகவே, தாவரங்கள் பற்றிய விரிவான கட்டுரை அளிப்பது இங்கு நமது நோக்கமன்று. பல தாவரங்களின் தொகுப்பை மட்டும் கொடுக்கிறோம். சில வற்றிற்கு அப்பெயரின் தலைப்பிலுள்ள கட்டுரைகளைக் காண்க.

**1. தானிய வகைகள்:** கோதுமை; சாமை *(எசே 4:9)*; தினை *(4:9)*; மாக்கோதுமை *(யாத் 9:32)*; வாற்கோதுமை *(யாத் 9:31; எண் 5:15; யோபு 31:40)*.

**2. பயறு வகைகள்:** அவரை *(2 சாமு 17:28)*; சிறு பயறு *(எசே 4:9)*; பயறு *(ஆதி 25:34; 2 சாமு 17:28)*; பெரும் பயறு *(எசே 4:9)*; மொச்சை *(2 சாமு 17:28)*.

**3. பழ மரங்கள்:**

**அத்தி:** *(ஆதி 3:8; எண் 13:23; நீதி 9:11; 1 சாமு 30:12; 1 அர 5:15; 2 அர 18:31; 20:7; உ.ச. 2:13; எசா 28:4; 36:16; 38:21; எரே 5:17; 24:1-2; ஒசே 2:12; யோவே 1:7.12; ஆமோ 4:9; மீக் 4:4; 7:1; நாகூ 3:12; செக் 3:19; மத் 21:18-21; 24:32; மாற் 11:13-14; லூக் 13:6-9; யோவா 1:48.50; திருவெளி 6:13)*.

**ஒலிவ மரம்:** *(ஆதி 8:11; உப 6:11; 8:8; 28:40; நீதி 9:8-9; 1 அர 6:23. 31-33; நெகே 8:15; யோபு 15:33; சங் 128:3; எசா 32:10; எரே 11:16; உரோ 11:17.24)*.

**காட்டு அத்தி:** *(1 அர 10:27; 1 நாள் 27:28; 2 நாள் 1:15; 9:27; ஆமோ 7:14)*.

**கிச்சிலி:** *(உ.ச. 2:3; 7:9; 8:5)*.

**திராட்சை:** *(உப 6:11; எண் 13:23; நீதி 9:13.26-27: 14:5; 1 அர 5:5; 21:1; 2 அர 18:31; சங் 128:3; உ.ச. 1:14; 7:13; 8:2; சீரா 39:26-27; எசா 16:8-9; 36:16; எரே 31:5; 48:32; யோவே 1:12; மீக் 4:4. 7:1; செக் 3:10...)*.

**பேரீச்சை:** *(லேவி 10:9; 23:40; எண் 6:3; உப 14:26; 29:6; நீதி 13:4; நெகே 8:15; யோவே 1:12)*.

**பேரிலந்தை:** *(யோவே 1:12)*.

**மாதுளை:** *(யாத் 28:33-34; எண் 13:23; 20:5; உப 8:8; யோசு 15:32; 19:45; 21:28; 1 அர 7:18.20.42; 2 அர 25:17; உ.ச. 4:3; 7:13; 8:2; யோவே 1:12; ஆகா 2:19;....)*.

**முசுக்கொட்டை:** *(2 சாமு 5:23-24; 1 மக் 6:34; லூக் 17:6; 19:4)*.

**வாதுமை:** *(ஆதி 30:37; 43:11; யாத் 25:33-34; 37:19-20; எண் 17:8; எரே 1:11-12; திருவெளி 12:5;...)*.

**4. காய்கறிகள்:** கீரை *(எண் 11:5)*;
கொம்மட்டிக்காய் *(எண் 11:5)*;
வெங்காயம் *(எண் 11:5)*;
வெள்ளரிக்காய் *(எண் 11:5)*;
வெள்ளைப்பூண்டு *(எண் 11:5)*.

**5. சுவையூட்டும் நறுமணப்பொருள்கள்:**
உளுந்து *(எசா 28:25.27)*;
கடுகு *(மத் 13:31-32 இணை; 17:20 இணை)*;
கறியிலை *(லூக் 11:42)*;
கொத்துமல்லி *(யாத் 16:31; எண் 11:7)*;
சீரகம் *(எசா 28:25.27; மத் 23:23)*;
சோம்பு *(மத் 23:23)*;
புதினா *(மத் 23:23; லூக் 11:42)*;
மஞ்சள் *(உ.ச. 4:14)*.

**6. தைல, மருத்துவ, நறுமணச்செடிகள்:** அகில் *(சங் 45:8; பழ 7:17; உ.ச. 4:14; யோவா 19:39)*; இலவங்கம் *(யாத் 30:23; பழ 7:17; உ.ச. 4:14; திருவெளி 18:13)*; கருவப்பட்டை *(யாத் 30:23)*; குங்கிலியம் *(யாத் 30:34)*; கெல்பான் *(யாத் 30:34)*; தைலவகை (பொன்மெழுகு) *(ஆதி 37:25; 43:11; எரே 8:12; 46:11)*; நரந்தம் *(உ.ச. 1:12; 4:14; மாற் 14:3; யோவா 12:13)*; நறுமண நாணல் *(எசா 43:24; எரே 6:20)*; நறுமண வகைகள் *(ஆதி 2:12; யாத் 25:6; 30:23; 35:8; எண் 11:7; 1 அர 10:10)*; மருதோன்றி *(உ.ச. 1:14; 4:13; 7:12)*; வசம்பு *(யாத் 30:23; உ.ச. 4:14; எசே 27:19)*; வெள்ளைப்போளம் *(ஆதி 37:25; உ.ச. 5:13; மாற் 15:23; யோவா 19:39)*.

**7. மலர்ச் செடிகள்:**
ரோசா *(சீரா 24:14; 39:13; 50:8)*;

லீலி (உ.ச. 2:1-2.16; 4:5; 6:2-4; சீரா 39:14; 50:8).

**8. நச்சுச்செடிகள்:** எட்டிக்காய் (எரே 28:15); கசப்புக்கீரை (யாத் 12:8; எண் 9:11); நச்சுத்திராட்சை (உப 32:32); நச்சுப்பூண்டு (உப 29:18; ஓசே 10:4); பாலுணர்வுக்கனி (ஆதி 30:14-16); பேய்க்குமட்டி (2 அர 4:39).

**9. புல், முள், களை வகைகள்:** களை (யோபு 31:40; மத் 13:24-30); காஞ்சொறி (செப் 2:9); கோரைப்புல் (ஆதி 41:2; யாத் 2:3; யோபு 8:11; எசா 19:6; 35:7); நாணல் (1 அர 14:15; 2 அர 18:21; யோபு 8:11; 9:26; 40:21; சங் 68:30; எசா 9:13; 19:6.15; 35:7; 36:6; 42:3; 58:5; மத் 11:7); முட்செடி (யோபு 30:7; 31:40; சங் 58:9; ஓசே 10:8; மீக் 7:4; மத் 27:29; யோவா 19:2); முட்புதர் (ஆதி 3:18; யாத் 3:2-4; நீதி 9:14-15; எசா 34:13; ஓசே 10:8).

**10. மரங்கள்:** அசோகா (எசா 44:14); அர்மோன் (ஆதி 30:37; எசே 31:8); அலரி (லேவி 23:40; நெகே 8:13-18; யோபு 40:22; சங் 137:2; எசா 44:4); ஈசோப்பு (யாத் 12:22; லேவி 14:4.6.49-52; எண் 19:6.18; 1 அர 4:33; சங் 51:7; யோவா 19:29; எபி 9:19); ஊசி இலை (எசா 41:19; 60:13); ஏசல் (தாமாரிஸ்கு) (ஆதி 21:23; 1 சாமு 22:6; 31:13); ஒலிவா (ஆதி 8:11; யாத் 23:11; லேவி 24:2; உப 6:11; 8:8; 20:19-20; 24:20; 28:40; நீதி 9:8-9; 1 அர 6:23.31-33; 2 அர 3:25; நெகே 8:15; யோபு 15:33; சங் 128:3; எசா 17:6; 24:13; 32:10; 41:19; எரே 11:16; ஓசே 14:6; ஆமோ 4:9; மீக் 6:15; செக் 4:3.11-12; உரோ 11: 17-24; திருவெளி 11:4); கருங்காலி (எசே 27:15); கருவாலி (ஆதி 35:4-8; யோசு 24:26; எசா 2:13; 6:13; 44:14-17; எசே 27:6; ஓசே 4:13; ஆமோ 2:9; 4:18); காட்டு ஒலிவா (நெகே 8:15); கேதுரு (லேவி 14:4.6. 49-52; எண் 19:6; 2 சாமு 5:11; 1 அர 4:33; 5:10-11; 6:8; 7:1-8; 2 அர 14:9; 2 நாள் 14:1; 2:16; எஸ் 3:7; சங் 29:5; 37:35; 80:10; 92:12; 104:17; 148:9; உ.ச. 1:17; எசா 41:19; 44:14; எசே 27:24; 31:1-18); கோபெர் (ஆதி 6:14); சித்தீம் (யாத் 25:5-27; 7:30; 35:7-38:6; உப 10:3; எசா 41:19); தேவதாரு (சீரா 24:16; எசா 6:13; 41:19; 60:13; எசே 27:6; ஓசே 4:13; 14:8); நூக்கு (1 அர 5:8); புன்னை (எசா 41:19; 60:13); மருதமரம் (எசா 44:14); மிருது (நெகே 8:15; எசா 41:19; 55:13; செக் 1:8.19-11); வாசனை மரம் (1 அர 10:11-12; 2 நாள் 2:8; 9:10-12).

**11. பிற செடி கொடிகள்:** ஆமணக்கு (யோனா 4:6-7); உப்புக்கீரை (யோபு 30:4); சணல் (யாத் 9:31; 26:1.31.36; 28:39; லேவி 6:10; 16:4.23; 19:19; உப 22:11; நீதி 14:12; 15:14; 16:9; பழ 7:16; 31:13.34; எசா 19:9; 42:3; 43:17; எசே 27:7; 44:17); சூரைச்செடி (1 அர 19:4; யோபு 30:4; சங் 120:4; எசா 14:23). பஞ்சு (2 சாமு 6:14; எசா 19:9; மத் 27:59; மாற் 15:46; லூக் 16:19).

**மரம் வெட்டுபவர்கள்** (HEWERS OF WOOD)

அடிமையின் தாழ்ந்த வகுப்புகளிலே ஒன்று. கிபயோனியர் சாவதற்குப் பதிலாக இத்தகைய ஓர் அடிமைத்தனத்தைத் தேர்ந்தெடுத்தார்கள் (யோசு 9:21.23.27). இவ்வூழியர்கள் கட்டடங்கள் கட்ட தச்சனால் பயன்படுத்தப்படும் மரங்களை வெட்டும் ஊழியர்களிடமிருந்து வேறுபட்டவர்கள் (2 நாள் 2:9-10; எரே 46:22). முடிவற்ற அயர்ச்சி தரும் கடின வேலையான அடுப்பெரிக்கும் விறகு வெட்டிகள் இவர்கள். உப 29:11-இல் உடன்படிக்கை மக்கள் வரிசையில் இவர்கள் கடைசியாகக் குறிக்கப்படுவதிலிருந்து, இவர்களின் தாழ்நிலை தெளிவாகிறது.

**மரிசா** (MARISA)

மாரேசா என்ற இடப்பெயரின் கிரேக்க வடிவம் (1 மக் 5:66; 2 மக் 12:35). காண்க. மாரேசா (இடம்).

**மரியலா** (MAREAL - நடுகின்றன)

செபுலோன் நாட்டின் எல்லையிலுள்ள ஒரு நகரம். மெகிதோவுக்கு வடக்கே இஸ்ரியேல் பள்ளத்தாக்கில் நாசரேத்துக்குத் தென்மேற்கில் 10 கி.மீ. தொலைவில் அமைந்த தெல் கல்தா என்ற இடமாக அடையாளம் காட்டப்பட்டாலும் இந்நகரத்

தின் நிச்சயமான இடம் எதுவென்று தெளிவாகத் தெரியவில்லை.

**மரியா** (MARY)

இயேசுவின் தாயும், மற்றும் பெண்கள் பலரும் புதிய ஏற்பாட்டில் மரியா எனும் பெயருடன் வருகின்றனர். மோசேயின் சகோதரி மிரியாமின் பெயரால் இஃது எல்லோரும் அறிந்த ஒன்றாகியது (*யாத் 15:20; எண் 26:59*).

***1. மகதலா மரியா:*** இயேசுவைப் பின்பற்றிக் கலிலேயாவிலிருந்து வந்த பெண்களுள் ஒருத்தி.

கெனசரேத்துச் சமவெளியின் தெற்கு எல்லையில் அமைந்த மகதலா நகரம் விவசாயம், மீன்பிடித் தொழில், கப்பல் கட்டுதல், வியாபாரம் எனப் பல வழிகளில் சிறந்து விளங்கி செல்வமிக்கதாய் விளங்கியது. இங்குப் பெரும்பாலும் பிற மதத்தினரே வாழ்ந்தனர். இந்நகரம் தனது மோசமான வாழ்க்கையால் சீரழிந்தது என ராபிகள் கூறுகின்றனர்.

இயேசு மகதலா மரியாவை அவளது ஊரில் சந்தித்தாரா அல்லது எப்பொழுது சந்தித்தார் என்பது தெரியவில்லை. அவர் இந்நகரத்திற்குச் சென்றார் என்று கூறப்படவில்லை. ஆனால், அதன் சூழ்நிலைகள் கூறப்படுகின்றன (*மாற் 6:53; மத் 14:34*).

இயேசு இவளிடமிருந்து ஏழு பேய்களை ஓட்டியதாகக் கூறுகிறார் லூக்கா (*8:2; மாற் 16:9*). ஆனால், அன்று உடலில் உள்ள நோய்கள் அனைத்திற்கும் பேய்பிடித்தலையே காரணமெனக் கூறியதால் அவளது மோசமான நிலையைக் குறிப்பதற்காக இவ்வாறு கூறப்பட்டதா (*லூக் 8:30*), அல்லது மீண்டும் மீண்டும் வரும் அதன் தன்மையைக் குறிக்க இப்படிக் கூறினாரா எனத் தெரியவில்லை (*லூக் 11:26*).

லூக் *7:36-50* கூறும் விபசார பெண்தான் மகதலா மரியா என்று கூற எந்த உறுதியான காரணமும் இல்லை. லூக் 8:2-இல் இவளை அறிமுகப்படுத்தும்போது அந்த எண்ணத்தோடு செய்யவில்லை என்றும் தெரிகிறது.

மேலும், மகதலா மரியாவைப் பெத்தானியாவில் வாழ்ந்த மரியாவோடு குழப்பிக் கொள்ளக்கூடாது. ஏனெனில், மகதலா மரியா கலிலேயாவினள் (*மாற் 15:40-41; காண்க. லூக் 8:1-3*). பெத்தானியாவின் மரியாளோ யூதாவின் பெத்தானியாவைச் சேர்ந்தவள் (*யோவா 11:1-12:8; லூக் 10:38-42*). இவள் மார்த்த இலாசரோடு எருசலேமுக்குக் கிழக்கிலுள்ள பெத்தானியாவில் வாழ்ந்து வந்தாள். மேலும் மகதலா மரியாவின் தீவிரமான பங்குக்கும், மரியாளின் அமைதியான தன்மைக்கும் அதிக வேறுபாடு காணலாம் (*யோவா 11: லூக் 10:38-42*).

மேலைத் திருச்சபையில் மகதலா மரியாவும், பெத்தானியா மரியாவும் ஒருவரே என ஏற்றுக் கொள்கின்றனர். ஒருவேளை இருவரும் இயேசுவைப் பரிமள தைலத்தால் அபிடேகம் செய்ததை வைத்து இப்படி ஏற்றுக்கொள்ள வாய்ப்புண்டு (*லூக் 7:36-50; யோவா 12:1-8*). அதே நேரத்தில் மகதலா மரியாவைப் பிடித்திருந்த ஏழு பேய்களும் கற்புக்கு எதிரானவையெனக் கொண்டனர். மகதலா நகரத்தின் மோசமான பெயரும் இக்கருத்தை வலியுறுத்தும் ஒரு வாய்ப்பாக அமைந்தது. ஆனால், கீழைத்திருச்சபை இப்படி ஒன்றாகக் கருதப்படுவதை ஏற்பதில்லை.

இயேசுவின் கலிலேயப் பணிக்கு இவள் செய்த உதவிகளும், ஒத்துழைப்பும் யாராலும் குறைத்து மதிப்பிடப்பட முடியாது (*லூக் 8:1-3; மாற் 15:40-41*). இவள் இயேசுவின் அப்போஸ்தலர்களுடன் எருசலேமுக்கு அவரின் இறுதிப் பயணத்தில் பங்கு பெற்றாள் (*மாற் 15:41*). இவள் இயேசு சிலுவையில் அறையப்பட்டபோது அங்கு இருந்தாள் (*மாற் 15:40; யோவா 19:25*); இயேசுவின் உடலில் தைலங்கள் பூச வந்தாள் (*மாற் 16:1; லூக் 23:55-24:1*); காலியான கல்லறை பற்றிய வானதூதர்களின் செய்தியைப் பதினொருவருக்கும் அறிவித்தாள் (*லூக் 24:1-11*). இயேசு உயிர்த்த பின் முதன் முதலில் இவளுக்கே தனிப்பட்ட முறையில் காட்சியளித்தார் (*யோவா 20:11-18*).

2. பெத்தானியாவின் மரியாவை லூக் 7:36-50-இல் கூறும் பாவியான பெண்ணோடோ, மகதலா மரியாவோடோ தொடர்புபடுத்திப் பார்க்கக்கூடாது. இவள் பெத்தானியாவில் மார்த்தா, இலாசர் என்பவர்களின் சகோதரியாக வாழ்ந்தவள் (லூக் 10:38-42; யோவா 11:1-12:8). இவ்விரு சகோதரிகளுமே இயேசுவை மிகவும் அன்பு செய்தவர்கள் என்பதும் உண்மை. இவர்கள் வாழ்ந்த ஊராகிய பெத்தானியா தென் கலிலேயாவில் உள்ளதெனவும், எருசலேமுக்குத் தெற்கே உள்ளதெனவும் கூறப்படுவதும் சிறிது சந்தேகத்துக்குரியதாக இருந்தாலும், லூக்கா நற்செய்தியில் இப்பகுதியின் காலம், இடம் பற்றிய கணிப்பு சரியாக இல்லாததால் இதைப் பற்றிப் பொருட்படுத்த வேண்டியதில்லை.

உலக காரியங்களைப் பற்றி அதிகமான கவலையற்றவளாகவும், இறை அரசு பற்றிய உண்மையில் முழுமையான ஈடுபாடு கொண்டவளாகவும், தனது சகோதரனின் மரணத்தினால் அளவுக்கதிகமான துயரம் கொண்டவளாகவும் (யோவா 11:20.31), இயேசுவின் சக்தியில் நம்பிக்கை கொண்டு, பின் அவர் செய்த அரிய செயலுக்காக அவர் மேல் அளவு கடந்த நன்றி செலுத்திய வளாகவும் (யோவா 12:1-3) மரியா சித்தரிக்கப்படுகிறாள்.

மரியா இயேசுவை அபிடேகம் செய்தது காலிலா, தலையிலா எனும் கேள்வியெழுந்தாலும், மாற் 14:8-இல் கூறுவது போல் அவரது இறப்பை நினைந்து முன்னரே செய்யப்பட்ட அபிடேகமே இது. எனவே இந்த ஒரே நிகழ்ச்சி பல வகைகளிலும் கூறப்படுகிறது. ஆனால், நற்செய்தி முழங்கப்படும் இடங்களில் எல்லாம் மரியாவின் இச்செயல் எடுத்துக்கூறப்படும்; நினைவுகூரப்படும் (14:9).

3. சின்ன யாக்கோபு, யோசே ஆகியோரின் தாயாவாள் இந்த மரியா. இயேசுவைப் பின்பற்றிய கலிலேயப்பெண்களில் ஒருத்தியான இவள், பணிக்குப் பண உதவியும் செய்தாள் (மாற் 15:40; லூக் 8:3). இவள் இயேசுவுடன் எருசலேம் சென்றாள் (மாற் 15:41; மத் 27:55); சிலுவையினடியில் நின்றாள் (மாற் 15:40; மத் 27:55-56; லூக் 23:49); இயேசு அடக்கம் செய்யப்பட்டதைக் கண்டாள் (மாற் 15:47; மத் 27:61; லூக் 23:55); நறுமணத் தைலங்களால் இயேசுவை அபிடேகம் செய்யச் சென்றவர்களில் இவளும் ஒருத்தி (மாற் 16:1; லூக் 23:56); வான தூதர் அறிவித்த உயிர்ப்புச் செய்தியைக் கேட்டவள் (மாற் 16:2-7; மத் 28:1-7; லூக் 24:1-7); தான் கண்டதையும், கேட்டதையும் அப்போஸ்தலர்களுக்கு அறிவித்தாள் (மத் 28:8; லூக் 24:9-11); உயிர்த்த இயேசுவையும் கண்டாள் (மத் 28:9-10).

கிளயோப்பாவின் மனைவியான மரியாள், இவளெனக் கொள்ளவும் வாய்ப்புண்டு.

4. சிலுவையினடியில் நின்ற பெண்கள் பலருள் கிளயோப்பாவின் மனைவியான மரியா ஒருத்தி (யோவா 19:25).

கிளயோப்பாவை, மாற்கு 2:14; 3:18-இல் கூறப்படும் அல்பேயுவாகக் கொள்ளலாம். யோவா 19:25-இல் கூறுவதின்படி, மரியாளைக் கிளயோப்பாவின் மகளெனவும் கொள்ளலாம்.

5. மாற்கு யோவானின் தாயான இவளது வீட்டில் தான் ஆதிக்கிறிஸ்தவர்கள் கூடிச் செபித்தனர் (அ.ப. 12:12).

6. பவுல் ஏற்படுத்திய திருச்சபைகளில் பணியாற்றி, பவுலால் பாராட்டப் பெற்றவள் (உரோ 16:6). இவள் யூத வழிவந்தவளாக இருக்க வேண்டும்.

**மரியாவின் நற்செய்தி** (MARY, GOSPEL OF)

இது கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஞானவாதப் போலி நூல். இது மகதலா மரியாவோடு தொடர்புபடுத்தப்படுகிறது. இஃது இரு தனிப்பட்ட நூல்களின் தொகுப்பாகத் தோன்றுகிறது. இதன் முதல் பகுதி படைப்பின் வருங்காலம், மற்றும் பாவத்தின் தன்மை ஆகியவை பற்றிக் கிறிஸ்துவுக்கும் அவருடைய சீடர்களுக்கும் இடையில் நடந்த உரையாடலை எடுத்துக் கூறுகிறது.

இரண்டாவது பகுதியில், கோள்களிடையே ஆன்மாவின் பயணத்தோடு தொடர்புடைய இயேசுவின் காட்சிகளைப் பற்றி மரியா பேதுருவுக்கும் சீடருக்கும் விவரிக்கின்றாள்.

**மரியாவின் வெளிப்பாடு** (MARY, REVELATION OF)

இஃது எப்பிபானியு நூலில் எடுத்துக் கூறப்படும் ஞானவாதப் போலி நூலாகும். இதில் பெரிய கேள்விகள், சிறிய கேள்விகள் என்ற இரு பகுதிகள் உள்ளன. பெரிய கேள்விகள் என்ற பகுதி ஞானவாதப் பிரிவினரிடையே நற்கருணையோடு தொடர்புடைய பாலினச் செயல்களைப் பற்றி மகதலா மரியாவுக்குக் கிறிஸ்து இரகசிய போதகம் அளிப்பதாக அமைந்துள்ளது. எப்பிபானியு எடுத்துக் கூறும் மரியாவின் சிறிய கேள்விகள் பிஸ்திஸ் சோபியா என்ற நூலைப் போன்றுள்ளன.

**மரியாளின் பாடல்** (MAGNIFICAT)

லூக் *1:46-55* என்ற பகுதி மரியாளின் பாடல் என்றழைக்கப்படுகிறது. லூக்கா நற்செய்தியில் இயேசுவின் குழந்தைப் பருவம் பற்றிய நிகழ்ச்சியுரையில் வரும் மூன்று பாடல்களில் இது முதலாவதாகும். இப்பாடலின் கருத்தும், தொனியும், சொற்றொகுதியும் அன்னாவின் பாடலை (*1 சாமு 2:1-10*) ஒத்திருக்கின்றன. மரியாளின் பாடல் சங்கீதங்களையும், பழைய ஏற்பாட்டுப் பாடல்கள் பலவற்றையும் எதிரொலிக்கிறது. அன்னாவின் பாடலைப்போன்று, இப்பாடல் இறைவன் ஏழை எளியவர்களுக்குக் காட்டும் சலுகைகளுக்காக அவரைப் போற்றுவதாகவும், வறியவர்களை உயர்த்தி, அதாவது இஸ்ராயேலை உயர்த்தி, செல்வந்தர்களைத் தீர்ப்பிடுவதற்காக நன்றி கூறுவதாகவும் அமைந்துள்ளது. இப்பாடலின் வடிவத்தையும் நடையையும் கவனிக்கும்போது, இது தனிப்பட்டவரின் நன்றிக் கீதமாகத் தோன்றுகிறது. இப்பாடல் உண்மையிலேயே பழைய ஏற்பாட்டின் தொகுப்பு என்று கூறலாம். இறைவனின் மீட்பு, எளிய கன்னி மரியாளின் வயிற்றில் உதித்த இயேசுவின் வழியாக, நிறைவேறும்.

நற்செய்தியாளர் மரியாளின் சொற்களை அப்படியே கூறுகிறார் என்று கொள்ள வேண்டியதில்லை. சூழ்நிலைக்குப் பொருத்தமாக மரியாள் கூறுவதாக அமைக்கப்பட்ட பாடலாகும். வாசகச் சூழ்நிலை ஆசிரியரின் கைவேலையாகும். ஆசிரியர் இயேசுவின் குழந்தைப்பருவம் பற்றித் தனக்குக் கிடைத்த மூலங்களிலிருந்து எடுத்து இப்பாடலைப் பயன்படுத்துகிறார். ஏற்கெனவே இருந்த ஒரு பாடலையோ, பாரம்பரியக் கருத்துகளைக் கொண்டு தாமே அமைத்த பாடலையோ ஆசிரியர் இங்கே பயன்படுத்துகிறார். ஒருவேளை யூதர்களிடையே இருந்த ஒரு பாடலை எடுத்துத் தொடக்க காலக் கிறிஸ்தவர்கள் அதை மாற்றியமைத்துப் பயன்படுத்தியிருக்கலாம். பாடலைக் கூறுபவர் இஸ்ராயேலே. தொடக்ககாலக் கிறிஸ்தவர்கள் தங்களை ஒரு புதிய, உண்மையான இஸ்ராயேலாகக் கருதினர். இந்தப் புதிய இஸ்ராயேலில் மிக உன்னத அங்கத்தினரான மரியாளின் வாயிலிருந்து இப்பாடல் வருவதாக அவர்கள் கருதியிருந்தால் அதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை.

சில பழைய இலத்தீன் கையெழுத்துப் பிரதிகளும், இரனேயு போன்ற திருச்சபைத் தந்தையருள் சிலரும், இப்பாடலை எலிசபெத்துக்குச் சாற்றிக் கூறுகின்றனர். அன்னாவுக்கும் எலிசபெத்துக்கும் இடையிலுள்ள வாழ்க்கைச் சூழ்நிலை ஒற்றுமையைக் கருத்தில் கொண்டு தற்கால ஆய்வாளர்களில் சிலர் இக்கருத்துக்கு ஆதரவு அளிப்பர். ஆனால், லூக் *1:48*-இல் வரும் கருத்தையும் எண்ணற்ற கையெழுத்து ஏட்டுச் சான்றுகளையும் கவனத்தில் கொண்டு, *1:46*-இல் வருவதுபோல், மரியாளுக்கே இப்பாடலைச் சாற்றிக் கூறுவதே மேலானதாகும். மேலும், இப்பாடலை மரியாளே பாடியிருக்கக்கூடும் என்பதை மறுக்க அறிவுக்குப் பொருத்தமான காரணங்கள் எதுவுமில்லை.

கீழையத் திருச்சபை வழிபாட்டில் இப்பாடல் காலை வழிபாட்டில் பயன்படுகிறது. மேலையத் திருச்சபை வழிபாட்டில்

மாலை வழிபாட்டில் இப்பாடல் பயன் படுத்தப்படுகிறது.

**மரியாளின் பிறப்பு** (MARY, BIRTH OF)

இஃசீது எப்பிபானியுவின் நூலில் வரும் ஒரு குறிப்பின் மூலம் அறியப்படும் ஞான வாதப்போலி நூலாகும். இது யூதருக்கு எதிரான போக்கு உடையதாகும். செக்கரியா தூபக் காணிக்கையைச் செலுத்தும் போது யூதர்களின் கடவுளைக் கழுதை வடிவத்தில் பார்த்தமையே, அவர் முதலில் ஊமையாக்கப்பட்டுப் பின்னர்க் கொல்லப் பட்டதன் காரணமாகக் கூறப்படுகிறது. தலைமைக் குரு தனது உடையின்மேல் எப்போதும் மணிகளை அணியுமாறு மோசே கட்டளையிட்டதன் காரணம், இறைத்தன்மையின் வடிவம் காணப்படாத வாறு அது மறைக்கப்பட வேண்டும் என்று எச்சரிக்கை செய்வதற்கே என்றும் கூறப்படு கிறது. இது கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

**மரியாளின் பிறப்பு நற்செய்தி** (MARY, GOSPEL OF THE BIRTH OF)

மரியாளின் பிறப்பு, வாழ்க்கை முதல் இயேசுவின் பிறப்பு வரை விவரிக்கும் போலி மத்தேயு நற்செய்தியைப் பெரு மளவு திரும்பவும் எடுத்துரைக்கும் இலத்தீன் மொழி நற்செய்தி நூல்.

மரியாள் நாசரேத்தில், தாவீதின் குலத்திலே பிறந்தாள். தூதரின் கட்டளைப்படி மரியாள் என்னும் பெயர் அவளுக்கு அளிக்கப்பட்டது. மூன்று வயதில் அவளது பெற்றோர் அவளை ஆலயத்துக்கு அழைத்துச் சென்றபோது, முழுவயதினை அடைந்த பெண்ணைப்போல, அவள் பீடத்தின் படிகளை ஏறிச் சென்றாள். தாவீதின் குலத்திலும், குடும்பம் முழுவதிலும் திருமணம் ஆகாமல் திருமணத்திற்குத் தகுதி யானவராய் இருந்தவர் யோசேப்பு மட்டுமே.

மரியாளுக்கு மங்கல வார்த்தை சொன்ன பிறகு, ஆசிரியர் கீழ்க்கண்ட வார்த்தை களுடன் விலகிக்கொள்கிறார். ''இறைவனின் பிறப்பிற்கு முன்னும், பின்னும் நடந்தவற்றை இச்சிறு நூலில் எழுதுவது, சிலருக்கு நீண்டதாகவும், சலிப்பூட்டுவதாக வும் இருக்கும்; எனவே, நற்செய்தியில் கூறப்பட்டுள்ளவற்றை விட்டுவிட்டு, முக்கியமற்றவை என விடப்பட்டவற்றை இங்கு நோக்குவோம்''. முக்கியமற்ற பகுதிகள் எனப்பட்டவை, மூன்று மாத இடை வெளிக்குப்பின் மரியாளை மணக்க யோசேப்பு திரும்பி வருவதைப் பற்றியன. அவர் அவளைக் கர்ப்பிணியாகக் கண்டார்; கெட்டுப்போனவள் எனச் சந்தேகப்பட்டார்; கனவில் இறைனின் தூதரால் உண்மை அறியப்பெற்றார்; மனைவியாக ஏற்றுக்கொண்டு, கன்னியாகவே அவளை இருக்கச் செய்தார். அவளது நாட்கள் நிறைவுற்றபின், தூய நற்செய்தியாளர்கள் கூறுவது போலத் தனது முதல் மகனை ஈன்றெடுத்தாள்.

இந்நூலை எரோனிமு எழுதினார் என்ற பாரம்பரியத்திற்கு அடிப்படையே இல்லை. அங்கீகரிக்கப்பட்ட நற்செய்தி நூல்களைத் தவிர்த்து, இந்தச் சிறிய இலத்தீன் நூலுக்கு அடிப்படை நூலாக உள்ளது போலி-மத்தேயு நற்செய்தி ஆகும். இதனுடைய தகுதியின்படி நோக்கும்போது, மத்திய காலத்தின் மீது இதனுடைய தாக்கம் மிகைப்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது. ஏனெனில், இது யாக்கோபு தேவோரகின் என்பவரது பொன்னான கதை என்னும் நூலில் 13-ஆம் நூற்றாண்டிலேயே இணைக் கப்பட்டது.

'மரியாளின் பிறப்பு' என்னும் ஞானவாத நூலிலிருந்து இது முற்றிலும் வேறுபட்ட ஒன்று.

**மரியாளின் விண்ணேற்பு** (MARY, ASSUMPTION OF)

காண்க. கன்னியின் விண்ணேற்பு.

**மரியாளின் வெளிப்பாடுகள்** (MARY, REVELATIONS OF)

காண்க. கன்னியின் வெளிப்பாடுகள்.

இத்தொகுப்பில் கிரேக்கப்பகுதிகள் கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையும்

பேதுரு மற்றும் பவுலின் வெளிப்பாடுகள் என்ற நூலைத் தழுவியனவுமாகும். எத்தியோப்பிய மொழியில் உள்ள பகுதி கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது; பவுலின் வெளிப்பாடுகள் என்ற நூலைத் தழுவியது.

**மரியாள், இயேசுவின் தாய்** *(*MARY, MOTHER OF JESUS*)*

I. கிறிஸ்துவப் பாரம்பரியத்தில் இயேசுவின் தாய் வகிக்கும் முக்கிய இடத்தை வேதாகமம அடிப்படையில் காணலாம். ஆனால், தொடக்கத்திலேயே இது தெளிவாக இருந்தது என்று கூற முடியாது. அப்போஸ்தலர் பன்னிருவரும் முதலில் திருமுழுக்கிலிருந்து உயிர்த்தெழுதல் வரையுள்ள இயேசுவின் திருப்பணியை மட்டும் பறைசாற்றி வந்தனர் (அ.ப. *1:22; 10:37*தொ; *13:24*தொ). தங்கள் அனுபவத்தில் காண முடியாததை அவர்கள் பேசுவத்: எங்ஙனம்? அவர்கள் இயேசுவின் பொதுவாழ்க்கையிலும், உயிர்த்த வாழ்க்கையிலுமே பங்கு பெற்றிருந்தனர். எனவே, அதைப் பற்றி மட்டுமே ஆரம்பத்தில் பேசி வந்தனர். அஃதொன்றே அவர்களுடைய மறைப்பணியில் எழுந்த பிரச்சனைகளையும் தீர்க்க உதவியது. சிறிது காலம் கழிந்த பின்னரே, இயேசுவின் குழந்தைப் பருவம் பற்றியும் மக்கள் பேசத் தொடங்கினர் என்பதில் வியப்பில்லை. மாற்கு இயேசுவின் பிறப்பு, வளர்ப்பினைப் பற்றிப் பெரிதும் பொருட்படுத்தவில்லை; எனினும், இயேசுவின் தாயைப் பற்றி இரு முறை குறிப்பிட்டுள்ளார் (மாற் *3:31-35; 6:3*). மத்தேயு குழந்தை இயேசுவின் தோற்றம் பற்றி அறிந்துள்ளார். தான் அறிந்த செய்தியை யோசேப்பை மையமாக வைத்துக் கூறியுள்ளார். தாவீதின் வாரிசான யோசேப்புதான் மரியாளின் குழந்தை பற்றிய வானுலகச் செய்தியைப் பெறுகிறார் (மத் *1:20* தொ; *2:13.20.22*). அவரே கன்னியின் மகனுக்கு இயேசுவென்று பெயர் சூட்டுகிறார் (*1:18-25*). லூக்காவினுடைய ஏடுகளில் மரியாளுக்கென்று தனிச்சிறப்பான இடமுண்டு. அவரெழுதிய நற்செய்தியின் தொடக்கம் மரியாளின் கதையாகவே அமைந்துள்ளது. இங்கு அவளுடைய தோற்றமும் செயலும் தெற்றெனப் புலனாகின்றன. திருச்சபையின் தொடக்கத்திலும் மரியாள் இடம் பெறுகிறாள். இயேசுவின் சீடர்களோடு அவளும் கூடி இறையருளை வேண்டுகிறாள் (அ.ப. *1,14*). யோவான் எழுதிய நற்செய்தியில், மரியாள் பற்றிய இரு காட்சிகளுக்கிடையில் இயேசுவின் பொதுவாழ்வு அமைகிறது (யோவா *2:1-12; 19:25* தொ). இயேசுவின் பொது வாழ்க்கை கானாவில் மரியாள் முன்னிலையில் தொடங்கி, கல்வாரியில் அவள் கண்முன் முடிவுறுகிறது. இவ்விரு தருணங்களிலும் இயேசு மரியாளின் பணியைத் தெளிவாக்கியுள்ளார். முதல் நிகழ்ச்சியில் மரியாளின் பணிவும், இரண்டாம் நிகழ்ச்சியில் அவளின் பொதுத் தாய்மையும் வெளிப்படுகின்றன. இவ்வாறு மரியாளின் முக்கியத்துவம் படிப்படியாக வளர்ந்தது. இவ்வளர்ச்சிக்குக் காரணம் மனித உளவியல் மனப்பாங்கு என்று மட்டும் கூறி விடலாகாது. உண்மையில் மரியாளின் வாழ்க்கைப்பணி இயேசுவின் மறையுண்மையைத் தெளிவுறுத்துகிறது. ஏனெனில், எவளின் மகனாகப் பிறக்க இயேசு விரும்பினாரோ (கலா *4:4*) அப் ''பெண்ணோடு'' இயேசுவின் மறைபொருள் பின்னிப் பிணைந்துள்ளது. புதிய ஏற்பாட்டில் மரியினைப்பற்றி ஆங்காங்கே காணப்படும் குறிப்புக்களனைத்தையும் சில தலைப்புகளில் தொகுத்துக் காண்போம்.

II. **மரியாளைப் பற்றிய புதிய ஏற்பாட்டுக் குறிப்புகள்:** மரியாள் நாசரேத்தில் வாழ்ந்து வந்தாள். அவளது பெற்றோரின் பெயர்கள் புதிய ஏற்பாட்டில் தரப்படவில்லை. அவள் தச்சராகிய யோசேப்புக்குத் திருமண ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தாள். அவர்கள் கூடி வாழுமுன், வானதூதர் கபிரியேல் மரியாளுக்குத் தோன்றி, கடவுளின் சொந்த மகனாக இருக்கும் ஒரு மகவை அவள் பெற்றெடுப்பாள் என்று அறிவிக்கிறார் (லூக் *1:26-28*; காண்க. மத் *1:18*). இதற்குப் பின் மரியாள் யூதேயா மலைப்பகுதியிலுள்ள அவளுடைய உறவினளான எலிசபெத்து வீட்டுக்குப் பயணம் செய்கிறாள்

(லூக் 1:39-40). அங்கு எலிசபெத்து வான தூதரின் செய்தியை உறுதிப்படுத்துகிறாள் (1:41-45). அவளது மகன் பிறக்கும் முன், அகுஸ்து சீசர் கட்டளையிட்ட கணக்கெடுப் பின் பொருட்டு, மரியாள் யோசேப்போடு சேர்ந்து யூதேயாவுக்கு மீண்டும் பயணம் செய்கிறாள்; அங்குப் பெத்லகேமில், அசா தாரணச் சூழ்நிலையில், ஒரு தொழுவத் தில், தன் மகன் இயேசுவைப் பெற்றெடுத் தாள். ஏனெனில், விடுதியில் அவர்களுக்கு இடம் கிடைக்கவில்லை (2:1-7). இயேசு கருத்தரிக்கப்பட்டது பற்றிய நிகழ்ச்சியுரை கள் (மத் 1:18-25; லூக் 1:26-28), மனிதத் தந்தையின் உதவியோடு இயேசு கருத்தரிக் கப்படவில்லை என்று தெளிவாக உறுதி செய்கின்றன. இவ்வுரைகளிலும், மரியாள் எலிசபெத்தைச் சந்திக்கச் சென்றது பற்றிய உரையிலும் (லூக் 1:36-56), இயேசுவின் மெசியாத் தன்மை அறிவிக்கப்படுகிறது.

குழந்தை பிறந்த செய்தி அறிந்த இடை யர்கள் ''விரைந்து சென்று மரியாளையும், யோசேப்பையும், தீவனத்தொட்டியில் கிடத்தியிருந்த குழந்தையையும் கண்டனர்'' (2:16). எட்டாம் நாளில் குழந்தைக்கு விருத்தசேதனம் செய்து அதற்கு இயேசு என்று பெயரிட்டனர் (2:21). நாற்பது நாள்களுக்குப்பின் குழந்தையை ஆண்டவ ருக்கு அர்ப்பணிக்கவும், மரியாளுக்குத் தூய்மைச் சடங்கை நிறைவேற்றவும் குழந் தையை எருசலேம் ஆலயத்திற்குக் கொண்டு சென்றனர் (2:22-39). இதற்குப் பின், ஞானிகளின் வருகையும் (மத் 2:1-12), யோசேப்பு குழந்தையையும் அதன் தாயை யும் கூட்டிக்கொண்டு எகிப்துக்கு ஓடிப் போனதும் (2:13-15), பெத்லகேமைச் சுற்றி யுள்ள பகுதிகளில் ஏரோது குழந்தைகளைப் படுகொலை செய்ததும் (2:16-18) நடந் திருக்க வேண்டும். சிறிது காலத்திற்குப்பின் இக்குடும்பம் எகிப்திலிருந்து திரும்பி வந்து, நாசரேத்தில் குடியேறியது. இவ் விடமே இனி இயேசுவின் வீடும் ஊரும் ஆயிற்று (மத் 2:19-23; காண்க. 2:39). இயேசுவுக்குப் பன்னிரண்டு வயது நடக் கும்போது, மரியாளும் யோசேப்பும் பாஸ்கு விழாவைக் கொண்டாட, சிறுவன் இயேசுவை எருசலேமுக்குக் கூட்டிச் சென்ற னர். அவர்கள் திரும்புகையில் இயேசு அவர்களோடு திரும்பாததைக் கண்டுபிடித்த போது, பெற்றோர் கவலையுற்று, எருசலே முக்குத் திரும்பித் தேடினர். மூன்று நாள் களுக்குப்பின் சிறுவனைக் கோவிலில் கண் டனர். அங்கே அவர் போதகர்கள் நடுவில் அமர்ந்து, அவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டும், அவர்களிடம் கேள்விகளை எழுப்பிக் கொண்டுமிருப்பதைக் கண்ட பெற்றோர் வியப்பில் ஆழ்ந்து போயினர் (லூக் 2:41-47). சிறுவன் இயேசுவை மரி யாள் கடிந்து கொண்டபோது, அவர் அளித்த பதில், தான் கடவுளின் மகன் என்பதைப் போதிய மட்டும் உணர்ந்திருந் தார் என்று காட்டுகிறது. ஆனால், பெற் றோர் புரிந்து கொள்ளவில்லை (2:49-50). இந்த நிகழ்ச்சிகளையும் கூற்றுகளையும் எல்லாம் மரியாள் தன் உள்ளத்தில் இருத்திச் சிந்தித்துப் பதித்து வைத்திருந்தாள் என் பதை லூக்கா சிறப்பான முறையில் அழுத் திக் கூறுகிறார் (2:19.51). ஆலய நிகழ்ச்சிக் குப்பின் யோசேப்பு நற்செய்திகளில் தோன்ற வில்லை. ஒருவேளை, இயேசு தன் பொதுப்பணியைத் தொடங்கும் முன்பே, மரியாள் கைம்பெண்ணாகி இருக்கலாம்.

அடுத்து, இயேசுவோடும் அவருடைய சீடர்களோடும், மரியாளைக் கானாவில் நடந்த ஒரு திருமணத்தில் காண்கிறோம். அங்கு, இயேசு தன் முதல் அரும் பெரும் அடையாளம் செய்ய, மரியாள் தூண்டுதலா கிறாள் (யோவா 2:1-11). அதன் பிறகு இயேசுவோடு மரியாள் கப்பர்நாகும் செல் கிறாள். இஃது அவள் இனி நாசரேத்தில் வாழவில்லை என்று சுட்டலாம் (2:12). இதற்குப்பின் ஒத்தமை நற்செய்திகளில் இருமுறைதான் மரியாள் குறிக்கப்பெறு கிறாள். மத் 12:46-50; மாற் 3:31-35; லூக் 8:19-21-இல் மரியாளும் இயேசுவின் உற வினர்களும் இயேசுவைக் காண வருகின்ற னர். இவர்கள் இயேசுவை மக்கள் கூட்டத் திலிருந்து விடுவிக்க வந்ததாகத் தெரிகிறது. ஏனெனில், அவர் மதிமயங்கி இருக்கிறார்

என்று மக்கள் பேசிக்கொண்டனர் (*மாற் 3:21*). இந்நிகழ்ச்சி, ''என் தந்தையின் திருவுளத்தை நிறைவேற்றுபவரே என் சகோதரர், சகோதரி, தாய்'' என்று இயேசு கூற வாய்ப்பாயிற்று. *மத் 13:55; மற் 6:3* (காண்க. *யோவா 6:42*)-இல் நாசரேத்தூர் மக்கள் மரியாளை நன்கு அறிந்திருந்தனர் என்று தெரிகிறது.

*யோவா 19:25-27*-இல் சிலுவை அருகில், இயேசுவின் தாய் நிற்பதைக் காண்கிறோம். இயேசு, தான் இறக்குமுன், தன் தாயைத் தன் அன்புச் சீடரிடம் ஒப்படைக்கிறார். அந்நேரம் முதல், அச்சீடர் அவளைத் தன் வீட்டில் ஏற்றுக்கொண்டார். *அ.ப. 1:14*-இல் அப்போஸ்தலர்கள் பெண்களோடும், இயேசு வின் தாயோடும், அவர் சகோதரரோடும் ஒரே மனதாய்ச் செபத்தில் ஈடுபட்டிருப் பதைக் காண்கிறோம். புதிய ஏற்பாடோ, வேறு எந்த மூலமுமோ, மரியாளின் பிற் கால வாழ்க்கை மற்றும் மரணம் பற்றிய நம்பத் தகுந்த செய்திகளைக் கொடுக்க வில்லை.

2. புதிய ஏற்பாட்டில் வரும் இந்தச் சில செய்திகளை வைத்து இயேசுவின் தாய் மரியாளின் வாழ்க்கை வரலாற்றை எழுத முடியாது. ஆனால், இவை யூத வாழ்க்கை முறைக்கும் விவிலிய வரலாற்றுத் தன்மைக் கும் ஒத்தவையாகவே உள்ளன. இவற்றில் பெண்கள் பொதுவாக சிறிய பங்கே கொள் கின்றனர். பெண்களின் பங்கு, தாய் மற்றும் மனைவி என்ற அளவில் வரையறை செய்யப்பட்டதாகவே உள்ளது. மரியாள் பேசிய சொற்கள் சிலவே; அவையும் விளக்குவதற்குக் கடினமானவையாகும். இவ்வாறு யோசேப்புக்கும், மரியாளுக்கு மிடையே உள்ள திருமணநிலை பற்றிய *மத் 1:18* தொ என்ற பகுதியை விளக்குவது கடினம். அதைத் திருமணம் என்பதை விட, திருமண ஒப்பந்தம் என்று விளக்குவதே சாலச் சிறந்தது. *லூக் 1-2*-இல் அடிக்கடி வரும் மெசியா பற்றிய வாசகங்களை மரியாள் கொள்ளும் வியப்போடும் (*2:33.48*), புரிந்து கொள்ளாமையோடும் (*2:50*) ஒத்துப்போகச் செய்வது கடினம். மரியாள் பற்றிய இரு வேறுபட்ட மூலங் களை லூக்கா பயன்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. ஒன்றில், மரியாள் தன் மகனின் மெசியாத் தன்மையை ஓரளவு அறிந்திருந் தாள்; மற்றதில், அவள் அதை அறிந்திருக்க வில்லை. இயேசுவின் குழந்தைப் பருவ நிகழ்ச்சியுரைகளைத் தொடக்ககாலக் கிறிஸ் தவப் போதகர்கள் விரிவாக்கியபோது மெசியா பற்றிய வாசகங்கள் இடம் பெற்றி ருக்கலாம். லூக்கா தனது முன்னுரையில், ''தான் யாவற்றையும் தொடக்கத்திலிருந்து கருத்தாய் ஆய்ந்து'' எழுதுவதாகக் கூறினா லும், இயேசுவின் குழந்தைப் பருவம் பற்றி அவர் அளிக்கும் செய்திகளுக்கு மரியாள் தான் மூலம் என்று காட்ட நேரடிச் சான்றுகள் இல்லை.

நற்செய்திகளில், இயேசு மரியாளிடம் கூறுபவைகள் விளக்குவதற்கு ஓரளவு கடின மாக உள்ளன. பொதுவாக இவ்விருவருக் கும் இடையேயுள்ள உறவு எந்தத் தாய்க் கும் மகனுக்கும் இடையேயுள்ள உறவிலி ருந்து வேறுபட்டதன்று. ஆனால், *மத் 12:49*தொ; *மாற் 3:34*தொ; *லூக் 2:49; 8:21; யோவா 2:4*-இல் இயேசு மரியாளிடம் பேசுவது அல்லது அவளைக் குறித்துச் சொல்வது, வயது வந்த மகனுக்கும் தாய்க் கும் இடையே சாதாரணமாய் இருக்கக் கூடிய ஒதுங்கிய நிலையை விட அதிகமான தாகத் தோன்றுகிறது. இயேசு தன் தாயைப் ''பெண்ணே'' என்று விளிப்பது (*யோவா 2:4; 19:25*) கிரேக்க இலக்கியத்தில் ஒப்புமை யற்றது. இரண்டிலும் கண்டிக்கும் போக்கு இல்லை என்பதைக் கவனிப்பது முக்கியமா னதாகும். ஏனெனில், அவற்றைப் பற்றி எக்குற்றமும் கூறப்படவில்லை. இயேசு வில் கொள்ள வேண்டிய விசுவாசத்திற்கு மாற்றுப் பொருளாகக் கூடிய அவரோடு கொண்ட எந்த ஊன் உறவையும் விலக்கு வதை நோக்கமாகக் கொண்ட தொடக்க காலப்போதனையின் ஒரு பகுதியாக இக் கூற்றுக்கள் அமையலாம் என்ற கருது கோளைச் சுட்டலாம். கலிலேயாவைச் சேர்ந்த யூதனும், புதிய ஏற்பாட்டில் கூறப் படும் ''சகோதரர்களுடன்'' உறவு கொண்ட

வருமான இயேசு, அவரில் விசுவாசம் கொண்டவர்களுக்கு மெசியா - மீட்பராக இருப்பது போலவே, யூதர்களுக்கும் அவரது உறவினர்களுக்கும் மெசியா - மீட்பர் ஆவார். ஆதித்திருச்சபையில் இயேசுவின் உறவினர் பலர் இருந்திருக்கலாம். இவர்கள் இந்த ஊன் உறவு தங்களுக்குத் தனிச்சலுகை அளிப்பதாகக் கருதியிருக்கலாம்.. பவுல் ''கிறிஸ்துவைச் சேர்ந்தவர்கள்'' என்று கூறிக் கொண்ட ஒரு கட்சியினரைக் குறிப்பிடுகிறார் (*1 கொரி 1:12*). இயேசுவின் சகோதராகளைப் பற்றி ''ஆண்டவரின் சகோதரர்கள்'' என்ற தலைப்பின் கீழ்க் காண்க.

மரியாளைப் பற்றி மட்டுமன்று, இயேசு திருமுழுக்குப் பெறுவதற்கு முந்திய அவரது வாழ்க்கை, அவரது குடும்பம் மற்றும் அவர் தன் ஊரில் கொண்டிருந்த தொடர்புகள் ஆகியவை பற்றி தொடக்கப் போதகத்தில் காணப்படும் இந்த மௌனப்போக்கு, ஊன் உறவு அடிப்படையில் கோரக்கூடிய எந்தச் சலுகைக்கும் எதிராக அமைந்துள்ளது. இந்த மௌனப்போக்கின் விளைவாக, மரியாளையும் அவளது வாழ்க்கையையும் பற்றிய எந்த உண்மையான செய்தியும் கிடைக்காமல் போயிற்று எனலாம்.

III. **கத்தோலிக்க விசுவாசம்:** மரியாள் பற்றிய இரு அடிப்படையான கிறிஸ்தவ விசுவாச உண்மைகள் அவள் இறைவனின் தாய் என்பதும், கன்னிமை நிலையில் இயேசுவைக் கருவுற்றாள் என்பதுமாகும். இந்த இரு உண்மைகள் நற்செய்திகளில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து மரியாளைப் பற்றிய பிற உண்மைகள் வளர்ச்சியடைந்துள்ளன. அல்லது திருச்சபையின் உயிருள்ள விசுவாசப் பாரம்பரியத்திலும் வழிபாட்டிலும் காணப்படுகின்றன. நற்செய்திகளில் வருபவற்றைச் சொற்பொருளில் அப்படியே ஏற்றுக்கொண்டு, கீழ்த்திசை நாடுகளில் உறவுமுறை பற்றிய வழக்குகளையும், திருச்சபையின் உயிருள்ள விசுவாச வளர்ச்சியையும், கோட்பாட்டு வளர்ச்சியையும் புறக்கணிக்கும் பிரிவினைக் கிறிஸ்தவர்களுக்கு மரியாளைப் பற்றிய உண்மைகளைப் புரிந்து கொள்வதும் ஏற்றுக்கொள்வதும் மிக மிகக் கடினமானதாகும்.

இயேசுவைக் கருத்தரித்தபோது மரியாள் கன்னியாக இருந்தாள் என்ற உண்மை புதிய ஏற்பாட்டில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது (*மத் 1:18-23; லூக் 1:31-35*). ''ஆண்டவரின் அடிமையான'' (*லூக் 1:38*) மரியாள் தன் வாழ்வு முழுவதும் கன்னியாகவே இருந்தாள் என்ற விசுவாசம் ஆதித்திருச்சபையிலேயே தொடங்கியது எனலாம். கத்தோலிக்கத் திருச்சபை இவ்வுண்மையைத் தொடர்ந்து விசுவசித்து வந்துள்ளது. இதற்கேற்ப, இயேசுவின் ''சகோதரர்கள்'' (*மத் 12:46 இணை; 13:5 இணை; யோவா 2:12; 7:3-5.10; அ.ப. 1:14; 1 கொரி 9:5; கலா 1:19*), மரியாள், தன் ''தலை மகனுக்குப்'' பிறகு (*லூக் 2:8; காண்க. மத் 1:25*) பெற்ற புதல்வர்கள் அல்லர். அவர்கள் யோசேப்பின் முந்தைய திருமணத்தில் பிறந்தவர்களாகவோ, உறவினர்களாகவோ இருக்கலாம். காண்க. ஆண்டவரின் சகோதரர்கள்.

பாவமற்ற இயேசுவின் தாய் என்ற அளவில், மரியாள் தன் மகனுக்கு மரபுரிமையாகப் பெறும் பாவத்தை அளிப்பவளாக இருக்க முடியாது. ஆகவே, அவளும் தனிச்சிறப்பான இறையருளால் பாவமற்றவளாகக் கர்ப்பந்தரிக்கப் பட்டிருக்க வேண்டும். கத்தோலிக்க விசுவாசத்தில் இந்த உண்மை கி.பி. *1439*-இல் எடுத்துக் கூறப்படுகிறது. *1483*-இல் பாப்புவின் ஒப்புதல் பெற்றது. *1854*-இல் விசுவாச உண்மையாக அறிவிக்கப்பட்டது. மேலும், மரியாள் சாவின் அழிவிலிருந்து பாதுகாக்கப்பட்டாள். ஆன்ம உடலோடு விண்ணகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டாள். இந்த உண்மை திருச்சபையின் போதகத்தில் கி.பி. *4*-ஆம் நூற்றாண்டிலேயே காணப்படுகிறது. *1950*-இல் இது விசுவாச உண்மை என்று பாப்புவால் அறிவிக்கப்பட்டது.

மேலும், இறைவனுடைய திருவுளத்துக்கு மரியாள் அளித்த ஒத்துழைப்பு, அத்திருவுளம் நிறைவேறுவதற்கு வழிவகுத்

தது. ஆகவே, மீட்பின் வருகையில் அவள் தனிச் சிறப்பான, இன்றியமையாத இடத்தைக் கொண்டுள்ளாள் என்று கத்தோலிக்க விசுவாசம் கற்பிக்கிறது. மீட்பு வரலாற்றில் மரியாள் அளித்த ஒத்துழைப்பு *(லூக் 1:38)*, திருச்சபையின் கீழ்ப்படிதலுக்கு ஒரு மாதிரி ஆகிறது. கிறிஸ்துவில் எல்லாக் கிறிஸ்தவர்களும் இருக்கின்றனர் என்பதற்காகவும் இந்தப் பொருளில், மரியாள் ''எல்லாக் கிறிஸ்தவர்களின் தாய்'', ''திருச்சபையின் தாய்'' ஆவாள் என்று விசுவசிக்கப்படுகிறாள். தாய்க்கும் மகனுக்கும் உள்ள உறவினால், மனுகுலத்திற்கான இணைப்பாளரும், பரிந்துரைப்பவரும் என்ற அளவில், மரியாள் தனிச்சிறப்பான பங்கைக் கொண்டுள்ளாள். இந்த விசுவாசம், கடவுளுக்கும் மனிதருக்கும் இடையில் இணையற்ற ஒரே இணைப்பாளர் மனிதனான இயேசுவே என்ற விசுவாசத்தை மறைப்பதுமில்லை; குறைப்பதுமில்லை. கிறிஸ்துவின் இணையற்ற இணைப்பாளர் பணி மரியாள் கொண்டுள்ள தாய்மைக்குரிய பணி வழியாக வெளிப்படுகிறது. மரியாளின் இந்தப் பணி அவளது மகனின் இணைப்பாளர் பணியை அடித்தளம் கொண்டுள்ளது; முற்றிலும் மகனின் பணியைச் சார்ந்தே உள்ளது; அதிலிருந்தே தன் ஆற்றல் அனைத்தையும் பெறுகின்றது. கிறிஸ்துவுடன் விசுவாசிகள் கொண்டுள்ள நேர்முக ஒன்றிப்பை இச்செல்வாக்கு எவ்வகையிலும் தடுப்பதில்லை; மாறாக, அதைப்போற்றி வளர்க்கின்றது.

IV. **இறையியல் சிந்தனை.**

***1. சீயோன் மகள்:***

***அ.*** முதற்கண், மரியாள் தன் காலத்து மக்களை ஒத்தவள்; அவர்களுக்கு வெளிப்படையாக வேறுபட்டவளன்று. அவளுடைய பெயர் மோசேயின் தங்கை கொண்டிருந்த பழம்பெயர் *(யாத் 15:20)*; இயேசுவின் காலத்தில் வழக்கிலிருந்த மிகச் சாதாரணப் பெயர். புதிய ஏற்பாட்டில் எத்தனையோ பெண்டிர் மரியாள் என்ற பெயருடன் தோன்றுகின்றனர். அன்றைய கல்வெட்டுக்களும் இதனை எண்பிக்கின்றன. 'மரியாள்' என்ற பெயரின் அரமேயிக்கு மூலம் 'மிரியாம்'; இதன் பொருள் 'இளவரசி', 'பேரிடத்துப் பெண்மணி' அல்லது தேவி என்று கூற இடமுண்டு. பாலஸ்தீனப் பாரம்பரியத்தின் அடிப்படையில் மரியாளைப் புண்ணியமுள்ள யூதப் பெண்ணாகக் காண்கிறார் லூக்கா. இறைச்சட்டத்திற்கு அமைந்து ஒழுகிய மரியாள் *(லூக் 2:22.27.39)* இறைத்தூதருடன் பேசும் பொழுது பழைய ஏற்பாட்டு மொழிகளையே தங்கு தடையின்றி எடுத்தாள்வது *(1:38)* நோக்கற்பாலது. சங்கீத மொழிகள் எதிரொலிக்கும் அவளது பாடல் அன்னாளின் பாடலால் முதன்மைத் தூண்டுதல் பெற்றதாகத் தெரிகிறது *(1:46-55;* காண்க. *1 சாமு 2:1-10)*.

**ஆ.** மரியாள் எளிய பெண்ணாயினும் ஏற்றமுற்றவள் என்று லூக்கா உணர்த்துகிறார். அவள் மங்களச் செய்தியைப் பெறும் காட்சியிலும், பின்னர் எலிசபெத்தைக் காணும் நிகழ்ச்சியிலும் *(லூக் 1:26-56)* சீயோன் மகளாகக் காட்டப் பெறுகிறாள். பழைய ஏற்பாட்டில் சீயோன் மகள் என்ற தொடர் இறைமக்களைக் குறிக்கும் உருவகப் பெயராக அமைந்திருந்தது. வானதூதர் ''மகிழ்ந்திடுக'' என்று மொழிந்து *(1:28)* மரியாளை வாழ்த்துவதில் மறைபொருளுண்டு. இந்த வாழ்த்து மொழி இறைமீட்பர் புனித நகரத்தினுள் எழுந்தருள்வார் என்ற உறுதிமொழியினையும் *(செப் 3:14-17; செக் 9:9)* சுட்டிக் காண்பிக்கிறது. மரியாள் ''அருட்பேறு பெற்றவரே'' -இறையன்பிற்கு இணையற்ற முறையில் உகந்தவள் - என்ற புகழ்மொழி உன்னத கீதத்தின் தலைவியை மனத்தில் எழுப்புகிறது. இத்தலைவியும் கடவுள் தேர்ந்தெடுத்த மக்களின் உருவகமாகக் கருதப்பட்டாள். இத்தகைய வேதாகமக் குறிப்புக்கள் மரியாளின் தலைமைப் பணியைத் தெற்றெனப் புலப்படுத்துகின்றன. அவள்தான் யாக்கோபின் குலச் சார்பில் மீட்பின் நற்செய்தியை மனமுவந்து ஏற்றாள். அவளுடைய ஒத்துழைப்பினால்தான் நற்செய்தி நற்செயலாக நிறைவுற முடிந்தது. எனவே

தான் தன்னுடைய நன்றிப்பாடலில் தன் பெயரில் மட்டுமின்றி *(1:46-49)* ஆபிரகாம் வழிவந்த தன் குலப்பெயரிலும் *(1:50-55)* இறைவனுக்கு நன்றியையும் மகிழ்ச்சியை யும் நவில்கிறாள்.

**2. கன்னிப்பெண்:**

**அ.** மரியாள் கன்னிமையில் கருவுற்றாள் என்று மத் *1:18-23*; லூக் *1:26-38* குறிப்பிடு கின்றன. ''இவர்கள் இரத்தத்தினாலோ, உடல் இச்சையினாலோ, ஆண் மகன் விருப்பத்தினாலோ பிறந்தவர்கள் அல்லர்; மாறாகக் கடவுளால் பிறந்தவர்கள்'' என்ற யோவா *1:13*-இலும் இக்கருத்தினைக் காண லாம். மத்தேயுவின் நற்செய்தியும், லூக்கா வின் நற்செய்தியும் இந்த விவரிப்பில் ஒன்றையொன்று சாராத பாரம்பரியங்களி லிருந்து எழுந்துள்ளதை மறுக்க முடியாது. இவ்விரண்டும் மரியாளின் கன்னிமையைக் குறிப்பிடுவதால் இச்செய்தி மத்தேயுவுக்கும் லூக்காவுக்கும் மூலமாக அமைந்த மிகப் பண்டைய பாரம்பரியத்திலேயே வழக்கிலி ருந்தது என்று கூற வேண்டும்.

**ஆ.** மெசியாவின் வருகையோடு கன்னி மையை, இணைத்துக் கூறும் வழக்கு பாலஸ்தீன மக்கள் மத்தியில் புதிதாகத் தோன்றியதொன்றாகும். இதுகாறும் விவி லிய நூலில் கன்னிமைக்குச் சமய மதிப்பு அளிக்கவில்லை எனலாம் (நீதி *11:37* தொ). யூதர் மத்தியில் முதன் முதலாக விரதத் துவத்தைப் பூண்டவர் எஸ்ஸேனியர் ஆவர். இஃது அவர்களுடைய புது ஒழுக்கக் குறிக்கோளின் சட்டத் தூய்மையன்றி வேறன்று.

**இ.** மரியாள் கன்னிமையில் கருவுற்றது எசாயா *(7:14)* கூறிய இறைவாக்கினை (கிரேக்க வாசகத்தைப் பின்பற்றி அமைந் துள்ள இறைவாக்கினை) நிறைவேற்று கிறது என்று குறிப்பிடுவதுடன் அமைந்து விடுகிறார் மத்தேயு.

**ஈ.** லூக்காவோ மரியாளின் கன்னிமைக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார். இஃதோடு, பொதுவாகத் தனது நூல்களில் விரதத்துவத் திலும் (லூக் *2:36; 14:26; 18:29*), கன்னிமை யிலும் (அ.ப. *21:9*) ஈடுபாடு காட்டுகிறார். இருப்பினும், மரியாள் யோசேப்பின் மணப் பெண் என்று குறிப்பிட்டுள்ளார் (லூக் *1:27; 2:5*). யோசேப்பின் வழியாகவே இயேசு மெசியாவாக உரிமை பாராட்ட முடியும் என்று லூக்கா இவ்வாறு குறிப்பாக உணர்த் தியுள்ளார் *(3:23.* தொ). இந்த இளம் மணப்பெண்ணைப் பற்றி அவர் கூறும் முதல் செய்தி அவள் ஒரு கன்னியாவாள் என்பதாகும் *(1:27)*. பாலஸ்தீன வழக்குப் படி மரியாள் தன் கணவன் வீட்டிற்குப் புகுமுன்பே மணம் நடந்தேறியிருக்க வேண் டும் (காண்க. மத் *25:1-13*).

மங்களச் செய்தியைப் பெறும்பொழுது, மரியாள் கன்னியாக இருந்தனள் என்பது நற்செய்தியில் நன்கு வலியுறுத்தப்படுகிறது. ஏனெனில், தான் மெசியாவின் தாயாகப் போவதைப் பற்றி வானதூதரிடமிருந்து அறிந்தவுடன், ''இஃது எப்படி நிகழும்? நான் கணவரோடு உறவு கொள்ள வில்லையே'', (லூக் *2:34*) என்று மரியாள் மறுப்புத் தெரிவிக்கிறாள். விவிலிய மொழி யில் 'கணவனை அறிவது' பாலினத் தொடர்பைக் குறிக்கும் (ஆதி *4:1.17.25; 19:8; 24:16*). எனவே, மரியாள் இயேசுவைக் கருவுறும் நிலையில் கன்னியாக இருந்தாள் என்பதையே லூக்கா இவ்வாறு அழுத்திக் கூறுகிறார்.

மங்களச் செய்தியைப் பெறுமுன்னரே மரியாள் என்றும் கன்னியாக வாழ விரும்பி னாள் என்று கூற லூக்கா முயல்கிறாரா? ஆம், என்று கருதினார் புனித அகுஸ்தீனார். அவருக்குப்பின் பலர் அதே கருத்தை ஏற்று வந்துள்ளனர். மரியாள் தாவீதின் மகனான யோசேப்பின் துணைவியானதால், அவள் மெசியாவின் தாயாவதற்குத் தன் கணவ னோடு பாலினத் தொடர்பு கொள்ள வேண்டும்; மரியாள் இதற்கு இணங்காத தற்குக் காரணம் அவள் கன்னியாக வாழ விரும்பினாள் என்று அவர்கள் விளக்கி வந்துள்ளனர். இக்கருத்திற்குச் சாதகமாக அவர்கள் மரியாளின் வினாவினைப் பின் வருமாறு அமைக்கின்றனர்: **''நான் ஆண் மகனை அறிய விரும்பாததால், இது நிறை வேறுவது எங்ஙனம்?''**

இவ்விளக்கத்தின் அடிப்படையில் ஓர் இடைஞ்சல் எழுகிறது. மரியாள் தனது விருப்பத்திற்கு மாறாக யோசேப்பை மணந்தாளா என்ற கேள்வி எழுகிறது. மேலும், மரியாளின் மறுப்பு அவள் கடந்த காலத்தில் யோசேப்புடன் பாலினத்தொடர்பு கொள்ளாததையே குறிப்பிடுகிறது. உண்மையில் லூக்கா கருத்து பின்வருமாறு அமைகிறது. மரியாள் தான் உடனடியாகத் தாயாகப் போவதை உணர்கிறாள். ஆனால், தான் இதுகாறும் கணவனைத் தொடாத நிலையில், எவ்வாறு கருவுறக் கூடும் என்று புரியாது தவிக்கிறாள். இந்நிலையில்தான் அவள் தான் கன்னியாக இருந்தவாறே கருவுறப் போவதை வானதூதர் கூறக் கேட்கிறாள். அஃதோடு தான் பெறப் போகும் மகவு இறை மகவு என்றும் அறிந்து கொள்கிறாள். அவள் கன்னிமை அவள் பெறும் குழந்தையின் இறைத் தன்மையைப் புலப்படுத்தும் அடையாளமாகும். படைப்பின் தொடக்கத்தில் உலவிய இறையாவி (ஆதி 1:2), இப்பொழுது இயேசுவின் கர்ப்பத்தோடு புதுப் படைப்பைத் தோற்றுவிக்கிறது.

இவ்வாறு இயேசுவின் இறைத்தன்மை தான் மரியாள் கன்னிமையில் கருத்தரிப்பதற்கு மூல காரணமாகும். தனது வியப்புக்குரிய தாய்மையைப் பற்றி அறியும் நிலையில்தான் இறைவன் தன்னை நிரந்தரக் கன்னியாகக் காண விரும்புகிறார் என்று மரியாள் அறிந்து கொண்டாள்.

**உ.** புதிய ஏற்பாட்டில் சில பகுதிகள் இயேசுவின் சகோதரர் பற்றிக் குறிப்பிடுகின்றன (மாற் 3:31 இணை; 6:3 இணை; யோவா 7:3; அ.ப. 1:14; 1 கொரி 9:5; கலா 1:19). இதன் அடிப்படையில் இயேசு பிறந்த பின்னர், மரியாள் தன் கன்னிமையைப் போற்றிப் பேணவில்லை என்று ஆய்வாளர் சிலர் கருதி வந்துள்ளனர். ஆனால், இக்கருத்தினைத் தொன்மையான மறைப்பாரம்பரியத்தில் எங்கும் காண்பதற்கில்லை. இன்னும், மத் 13:55-இல் இயேசுவின் சகோதரராகத் தோன்றும் யாக்கோபும், யோசேப்பும் (மத் 27:56 இணை) வேறொரு மரியாளின் மக்களாகக் கருதப்படுகின்றனர். இயேசு இறக்கும் நிலையில் தன் தாயைச் சீடரொருவர் கையில் ஒப்படைப்பதிலிருந்தும், அவளுக்கு வேறு மக்கள் இல்லை என்று கூறத் தோன்றுகிறது. மேலும், 'சகோதரர்' என்ற சொல் செமித்திய நாடுகளில் உறவினரையும், பங்காளிகளையும் குறிக்கலாம் என்று நாம் அறிந்திருக்க வேண்டும். காண்க. ஆண்டவரின் சகோதரர்கள்.

**3. தாய்:**

நற்செய்தி பற்றிய பாரம்பரியம் அனைத்தும் மரியாளை எல்லாவற்றிற்கும் மேலாக இயேசுவின் தாய் என்று நோக்குகிறது. புதிய ஏற்பாட்டின் பல பகுதிகள் அவளை 'இயேசுவின் தாய்' என்றுதான் அழைக்கின்றன (மாற் 3:31 தொ; லூக் 2:48; யோவா 2:1-12; 19:25 தொ). இக்காரணப் பெயர் மீட்புப்பணியில் மரியாளுடைய பங்கினை விளக்கமாகச் சித்தரிக்கிறது.

**அ.** மரியாள் தானே விரும்பி தாய்ப் பணியை ஏற்றாள். மங்கல மொழியைக் கூறும் பகுதி (லூக் 1:26-38) இதனைத் தெளிவாக உணர்த்துகிறது. வானதூதர் கொணர்ந்த வியத்தகு அழைப்பைக் கேட்டவுடன் மரியாள் உடனடியாக இசையவில்லை. இதனை லூக்கா நன்கு வலியுறுத்துகிறார். இறைவன் தனக்கு உணர்த்தும் புது அழைப்பு அவர் முன்னரே விடுத்த அழைப்போடு எவ்வாறு ஒவ்வும் என்று மரியாள் சிந்தித்தாள். தான் கன்னி நிலை வழுவாது கருவுற்று இறைவனின் ஈரழைப்பையும் நிறைவேற்றக் கூடும் என்று தூதரிடமிருந்து அறிந்து கொண்டாள். இவ்வாறு இறையழைப்பினைத் தவறாது உணர்ந்த பின்னரே மரியாள் அதனை மனமுவந்து ஏற்று இறையடிமையானாள். முன்னாள் ஆபிரகாம், மோசே, இன்னும் இறைவாக்கினர் பலருடைய அடிச்சுவட்டில் மரியாளும் வழிநடந்தாள். இறைப்பணி தம் சொந்த இயல்பிற்கு உறுதுணையாக அமைவதை அவர்கள் உணர்ந்தனரெனின், அவர்களைப்போல, அவர்களைவிட அதிகமாகவும் மரியாள் தன் வாழ்வில் அவை

இரண்டையும் ஒன்றெனக் கண்டாள்: 'பணியே சுதந்தரமாகும்.'

**ஆ.** தாயாரின் பணி தம் சேயின் பிறப்போடு தொடங்குகிறது. மரியாளும் தன் மகவை ஈன்ற தருணத்திலே தனது தாய்மைப் பணியைத் தொடங்கினாள். இயேசுவைப் பெற்ற அவள் அவரை வளர்க்கக் கடமைப்பட்டவள். அவளுடைய பிள்ளையை வளர்க்கும் பொறுப்பில் யோசேப்புக்கும் பங்குண்டுதான். இருவரும் குழந்தை இயேசுவைக் கோவிலுக்குத் தூக்கிச் சென்றனர். அங்கு குழந்தையைக் கடவுள் முன்னிலையில் கிடத்தி அதன் சொந்த அர்ப்பணத்தை - ஆனால் அந்நிலையில் தன் குழந்தையால் ஆற்ற முடியாத அர்ப்பணத்தை - மரியாள்தானே நிறைவேற்றினாள். சிமியோன் இயேசுவின் வாழ்க்கைப் பணியை முன்னறிவித்த பொழுது அதனைத் தன் குழந்தை பெயரில் தானே ஏற்றுக்கொண்டாள் (லூக் *2:29-32.34*தொ). குழந்தை இயேசு வளர்பிராயம் முழுதும் காண்பித்த பற்று மற்றும் கனிந்த பணிவைப் பெறவும் மரியாள் பாக்கியம் பெற்றாள். எனவே, தனது தாய்மைக்குரிய அதிகாரத்துடன் (லூக் *2:48*) தனது தமையனுக்குப் பாடம் புகட்ட அவள் தவறவில்லை. இயேசு மரியாளுக்கும் யோசேப்புக்கும் பணிந்து நடந்தார் (*2:51*).

**இ.** இயேசு வயது வந்த பருவத்தைக் கடந்த பின்னரும் மரியாள் அவருடைய தாயாராக விளங்கினாள். அவருடைய வாழ்க்கையின் சோகக் கட்டங்களில், மரியாள் தன் மகனருகே நிற்கத் தயங்கவில்லை (மாற் *3:21.31*; யோவா *19:25* தொ). மரியாளின் தாயுணர்வு ஒரு பொழுதும் மாறவில்லையெனினும் அவள் தாயுறவு சிறது மாற வேண்டியிருந்தது; புது வடிவம் எடுத்தது. இம்மாற்றத்திற்குக் காரணம் தன்னுணர்வில் முதிர்ச்சியுறும் இயேசுதான். இவ்வளர்ச்சியின் இரு பெரும் நிகழ்ச்சிகளை லூக்காவும், யோவானும் குறிப்பிடுகின்றனர். பன்னிரண்டு வயதடைந்த இளைஞர் இயேசு, ஒருமுறை இஸ்ராயேல் குல மகனுக்குரிய புது உரிமையில், தான் எல்லாவற்றிற்கும் மேலாக, பரமதந்தைக்கு மட்டுமே சொந்தம் என்று தன் பூவுலகப் பெற்றோரிடம் தயங்காது கூறினார் (லூக் *2:49*). கானாவில் தன் பணியைத் தொடங்கிய பொழுதும் அங்கிருந்த மரியாள் திகைக்கும் வண்ணம், பரம தந்தையின் சொந்தத் தூதர் என்ற முறையில் தனது நடத்தை வேறுபட்டிருக்கும் என்று உணர்த்துகிறார். ''அம்மா, நீர் ஏன் குறுக்கிடுகிறீர்?'' என்ற மொழிகள் மகன் தாய்க்குக் கூறுபவை அல்ல; இறையாட்சி பற்றிய பொறுப்புடைய இறைவனின் தூதுவர் என்ற முறையில் சுதந்தரம் கோரினார். நாளடைவில் மரியாளும் தனது தாய்மையை மறைத்து, கிறிஸ்துவைப் பின்பற்றிய விசுவாசமிக்க தோழனின் தோற்றத்தில் காட்சியளித்தாள் (காண்க. மாற் *3:32-35* இணை; லூக் *11:27*தொ).

**ஈ.** மரியாளின் இம்மறைவான வாழ்க்கை சிலுவையடியில் முற்றுப்பெறுகிறது. அவள் மகனுக்கு வரப்போவதை முன்பு ஒருமுறை அவளிடம் கூறிய சிமியோன், அவளுக்கு நேரிடப் போவதையும் குறிப்பிட்டார். தன் குல மக்களிடையே இயேசுவின் காரணமாக ஏற்படும் பிளவு தன் ஆன்மாவையும் தாக்கும் (லூக் *2:34* தொ) என்று அவள் அறிந்திருந்தாள். கல்வாரியில் தான் மரியாளின் தாய்மை எதிர்பாராத முறையில் நிறைவுபெறுகிறது. யோவான் பொருள் பொதிந்த விவரங்களுடன் வரைந்துள்ள காட்சி ஒன்று இவ்வுண்மையைச் சித்தரிக்கின்றது (யோவா *19:25* தொ..). சிலுவையருகில் நிற்கும் மரியாளை மீண்டும் ஒருமுறை ''பெண்ணே'' என்று இயேசு வீறார்ந்த முறையில் அழைக்கிறார். வினோதமான இவ்வழைப்பு விண்ணரசில் அவருக்குரிய அதிகாரத்தைக் குறிக்கிறது. மேலும், அங்கு நிற்கும் தன் சீடரைத் தன் தாயிடம் ஒப்படைத்து, ''இதோ உன் மகன்'' என்று அவளுக்குப் பணித்த இயேசு, தன் தாய்க்குப் புதியதொரு தாய்மையினை வழங்குகிறார். இப்புதிய தாய்மையே அவள் இறைமக்களின் மத்தியில்

ஆற்றி வரும் திருப்பணியாகும். மரியாள் சீடரோடு கூடி தூய ஆவியின் வருகைக்கு இறைஞ்சி நிற்பதை லூக்கா விவரிக்கும் காட்சியிலும் (*அ.ப. 1:14*), மரியாளின் புது முறைத் தாய்மை அடிப்படைக் கருத்தாக அமைந்திருக்கலாம். மரியாளை இறை மக்களின் உருவமாகவும், சீயோனின் நங் கையாவும் கண்ட லூக்காவின் கருத்தோடு மரியாளின் இந்த உலகளாவிய தாய்மை ஒத்துப்போகிறது (*லூக் 1:26-55*).

**4. முதல் விசுவாசி:**

மரியாளின் மேன்மை அவளுடைய தனிச் சிறந்த ஒளிமயக் கொடைகளில் அமைய வில்லை. நற்செய்தியாளர் அவளுடைய பெருமையை விசுவாசத்தில் காண்கின்ற னர். மரியாள் மற்ற எளிய விசுவாசிகளைப் போன்று தன் வினாக்களுக்கு விடை காணாமலே இறைவனை நம்பினாள். நமது தெளிவற்ற நம்பிக்கை வளர்வது போன்று அவளுடைய நம்பிக்கையும் வளர்ச்சி யுற்றது.

**அ. மரியாள் பெற்ற வெளிப்பாடு:** மங்களச் செய்தியைக் கேட்ட நொடியி லிருந்து மரியாளின் விசுவாசப் பொருளாக இயேசு அவளுக்கு அளிக்கப்படுகிறார். அவ்விசுவாசத்தைச் சிறிது தெளிவாக்கும் வண்ணம் வானதூதருடைய மொழிகள் பழைய ஏற்பாட்டு வாக்குகளை எதிரொ லித்தன. எடுத்துக்காட்டாகக் குறிப்பிடத் தக்கவை பின்வருமாறு: குழந்தைக்கு இயேசு என்று பெயரிட வேண்டும்; அவர் இறைமகன் எனப்படுவார்; அவரே தாவீ தின் மகனும், இஸ்ராயேலின் அரசனும் ஆவார்; இறுதியாக, இறைவன் வாக்களித்த மெசியாவும் அவரே. ஆலயத்தில் குழந்தை யோடு இறைவன் முன்னிலையில் தோன் றிய பொழுது, யாவேயின் ஊழியனைப் பற்றிய வேத வாக்குகள் இயேசுவுக்குப் பொருந்துவனவென்று சிமியோனிட மிருந்து மரியாள் அறிந்து கொண்டாள். இயேசுவே மக்கள் அனைவரின் ஒளியா வார்; இருப்பினும் அவரைக் குறித்து மக்கள் பிளவுபட்டு நிற்பர்; எதிர்க்கப்படும் அடையாளமாகவும் இருப்பார் என்று மரி யாளுக்குக் கூறப்படுகிறது. இவ்வாறு தெளிந்த சில விவிலிய வாக்குகளால் மரியாளின் விசுவாசம் வளர்ந்தாலும் மரி யாளைப் பற்றி நற்செய்தி கூறாத செய்திகள் பல உண்டு. அவள் தன் வயிற்றில் கருவுற்ற குழந்தையான மெசியாவின் ஏழ்மையை, அவருடைய துன்பமிக்க மௌனமான வாழ்வில் கண்டு கற்றுக்கொள்ள வேண்டி யிருந்தது. அவள் தன் மெசியா மகனுடன் கொண்ட ஒன்றிப்பினால் அமைதியுடனும் எளிமையுடனும் விளங்கினாள். இயேசு தன் தாயிடம் பேசும்பொழுது அவர் மொழிந்த சொற்களில் இறைவாக்கினரின் முரடான தொனி கேட்கிறது. அவற்றி லிருந்து தன் மகனுடைய சுதந்தரத்தையும் அதிகாரத்தையும் மரியாள் உணர்ந்திருக்க வேண்டும். தன் உடல் தாய்மையை விட, தனது உள்ள விசுவாசத்தின் மேன்மையை உணர்ந்து பெரிதும் போற்றியிருந்திருக்க வேண்டும்.

**ஆ. மரியாளின் பிரமாணிக்கம்:** இறை வன் மரியாளுக்குத் தம்மை வெளிப்படுத் தும் சூழ்நிலை ஒவ்வொன்றிலும் அவளி டம் தோன்றும் உணர்ச்சியினை லூக்கா கூர்ந்து கவனித்துள்ளார். வானகத் தூதினைக் கேட்டவுடன் அஞ்சித் தவித்து நிற்கிறாள் (*லூக் 1:29*); ஐயமொன்றினைக் களைய விரும்புகிறாள் (*1:34*); சிமியோன் வாக்கினைக் கேட்டு வியப்படைகிறாள் (*2:33*); ஆலயத்தில் இயேசு மகனின் வினா வினைக் கேட்டுத் திகிலடைகிறாள்; அவ ளால் புரிந்து கொள்ள முடியவில்லை (*2,50*). தனது அறிவிற்கு எட்டாத மறை நிகழ்ச்சியை எதிர்கொள்ளும்போது, அவள் அதன் உட்பொருளை உன்னிப் பார்க்கிறாள் (*1:29; 2:33*); கடந்த நிகழ்ச்சியை மனத்தி லிருத்தித் தொடர்ந்து சிந்திக்கிறாள்; புதிரா கத் தென்பட்ட பழைய அனுபவங்களை மீண்டும் மீண்டும் ஆய்ந்து பார்க்கிறாள்; அவற்றைத் தன் உள்ளத்தில் பதித்து வைக் கிறாள் (*2:19.51*).

இறைவார்த்தைக்குக் கவனம் கொடுக்கும் மரியாள், அதனை என்றும் மனமுவந்து

ஏற்கிறாள். தனது திட்டத்தைச் சிதைத்து, யோசேப்பின் மனத்தை வதைக்கும் இறை வார்த்தையினையும் அவள் ஏற்கிறாள் (மத் 1:19 தொ). இறையழைப்பிற்கு அவள் செவிமடுக்கும் சூழ்நிலை ஒவ்வொன்றிலும் இயேசுவே தன் தாய் மூலம் செயற்படு கிறார். மரியாள் எலிசபெத்தம்மாளைக் காணச்செல்லும் பொழுது, இயேசு தனது முன்னோடியைப் புனிதப்படுத்துகிறார். மரி யாள் தன் மகனை இறைவன் முன்னிலையில் அர்ப்பணித்தபோது, இயேசு தம்மை இறைத்தந்தைக்குக் கையளிக்கிறார். பிர மாணிக்கமுள்ளவளாய் மரியாள் தன் மகன் பொது வாழ்க்கையை மேற்கொள்ளும் போது மௌனம் காத்து புனித நெறிப்படி ஒழுகினாள். சிலுவையடியிலும்கூட அவள் தான் மௌனம் காப்பதில் பிறழ்வில்லை.

**இ. மரியாளின் பாடல்:** இப்பாடலில், மரியாளின் சொற்களை எடுத்துக்கூறுவதை விட சமூகத்தின் நன்றியறிதலை எடுத்துக் கூறுவதில் அக்கறை கொண்டு பாலஸ்தீனப் பாரம்பரியத்தையே லூக்கா பாடலாக வடி வமைக்கிறார். ஆனால், லூக்கா அதை (குறிப்பாக 1:48-ஐ) மரியாளின் செபமாக மாற்றுகிறார். நன்றிப்பாடல் வடிவினில் அமைந்துள்ள இப்பாவினில் மரியாள் தனக்கு நேர்ந்த நேர்த்தியான புது நிகழ்ச்சி யினைச் சங்கீத நூல்களில் காணப்படும் கருத்துக்களைக் கொண்டு விளக்குகிறாள். இறையரசு பிரசன்னமாகியுள்ளது. மரியாள் இறைமக்களுக்குப் பணி செய்து கிடப்ப தற்கு முழுமையும் தயாராக உள்ளாள். அவளிலும் அவள் வழியாகவும் மீட்பு அறிவிக்கப்படுகிறது; வாக்குறுதி நிறை வேறுகிறது. அவளுடைய ஏழ்மையில் பேறுகள் பற்றிய மறைபொருள் நனவா கிறது. இவ்வனைத்திற்கும் அடிப்படை யான மரியாளின் விசுவாசம் இறைமக்க ளுடைய விசுவாசத்தினை ஒத்தது. இருட் சோதனைகளின் அனுபவத்தினாலும், மீட்பு பற்றிய சிந்தனையினாலும், தாராள உணர்வு படிந்த சேவைப் பயிற்சியினாலும் நம்மைப் போன்று அவளும் விசவாசத்தில் மேன்மேலும் வளர்ந்தாள் (யோவா 3:21; 7:17; 8:31தொ). இறைவார்த்தையினைப் போற்றிக் காத்த அவளுடைய விசுவாசத் தினைப் புகழும் வண்ணம், இயேசு தம்மை (வயிற்றில்) உதரத்தில் தாங்கிய மரி யாளைப் பெரும் பேறு பெற்றவள் என்று புகழ்ந்துரைத்தார் (லூக் 11:27 தொ).

**5. மரியாளும் திருச்சபையும்:**

இதுகாறும் நாம் தொட்டுணர்ந்தவற்றை ஒன்று கூட்டினால் விவிலிய இறையிய லையே ஒரு முறையில் தொகுத்துக் காண லாம்.

**அ. கன்னி:** விசுவாசிகளனைவருடைய உயர் மாதிரியாக மரியாள் விளங்குகிறாள். பிறரைப் போன்று அவளும் கடவுளின் அருளால் விசுவாச வழியில் நின்று தன் மீட்பை அடைய அழைக்கப்பட்டாள். அவ ளுடைய திருமகனின் பலியினால் மனித இனத்தைச் சேர்ந்த பிறரைப் போன்று அவளும் மீட்கப்பட்டாள். இருப்பினும் திருச்சபையில் அவளுக்குத் தனிச்சிறந்த இடமுண்டு. இறைவார்த்தையை அவள் நிறைவிசுவாசத்துடன் ஏற்பதனால், அவ ளிடம் திருச்சபையின் மறைபொருள் நிறை வுறுவதை நாம் காணலாம். திருச்சபை கிறிஸ்துவின் மணப்பெண்ணாகும் (எபே 5:32); கன்னிமை குறையா மணப்பெண்ணா கும் (திருவெளி 21:2). அவளைக் கிறிஸ்துவே தூய்மைப்படுத்திப் புனிதப் படுத்தினார் (எபே 5:25 தொ). இறைவனிட மிருந்து திருச்சபை பெறுகின்ற அழைப் பினில் பங்கு பெறுகின்ற ஒவ்வொரு கிறிஸ்தவ ஆன்மாவும் கிறிஸ்துவோடு நிறை கன்னிகையாக மண ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது (2 கொரி 11:2). இந்த இறையழைப்பிற்குப் பிரமாணிக்கமாய் இருக்கும் திருச்சபையின் பண்பு முதன் முதல் மரியாளிடமே தோன்றுகிறது; அது வும் அவளிடமே மிகவும் நிறைவான முறையில் தென்படுகிறது. இறைவன் மரி யாளைக் கன்னிமைக்கு அழைத்ததின் நிறை பொருள் இதுவேயாகும். இக் கன்னிமையைத் தாய்மை குறைக்கவில்லை. மாறாக, அர்ப்பணம் செய்து புனிதப்படுத்து கிறது. எனவே, மரியாளின் மூலம் கன்னித்

திருச்சபை வரலாற்றினில் புகுந்து வெளிப் படுகிறாள். இக்கன்னித் திருச்சபை ஏவா ளின் இயல்பிற்கு எதிர்முகமாக அமைந்துள் ளாள் *(2 கொரி 11:3).*

**ஆ. தாய்:** இயேசுவோடு தான் கொண்ட உறவின் உரிமையில் மரியாள் தனி இடம் வகிக்க முடிகிறது. இப்பெருமைக்குத் திருச் சபையில் வேறெவருக்கும் உரிமை கிடை யாது. அவள் ஒரு தாய். இறைமகன் மனுமகனாகத் தோன்றுவதற்கு மனித குலம் ஈந்த ஊனிடமே மரியாள். அவளுக்கு மட்டும் உரித்தான இப்பெருமைப் பணியைக் கருதி, அவளைச் சீயோன் மகளோடும் *(செப் 3:14; காண்க. லூக் 1:28),* புதிய எருசலேமோடும் ஒப்பிடலாம். தலை யாகிய கிறிஸ்துவை முதல் மகவாகக் கொண்ட புதிய மனித குலத்தை ஒரு மாதுக்கு ஒப்பிடும்பொழுது *(திருவெளி 12:5)* இதையொத்த மறை நிகழ்ச்சி செயல் முறையான விதத்தில் மரியாளிடம் நிறை வுறுவதை நாம் மறக்க முடியாது. ''திரு வெளிப்பாட்டில்'' தோன்றும் மாதும் தாயும் மனித குலத்தின் உருவகச் சின்னம் என்று மட்டும் கொள்ளலாகாது; உண்மை யில் அவள் மரியாளின் வாழ்க்கையில் ஊனும் உயிரும் பெற்றவள். எனவே, பறவை நாகத்தின் சீற்றத்தினின்று இறை யருளால் தப்பியோடும் அவ்வியத்தகு மங்கை *(திருவெளி 12:13-16)* ஆதியில் அதே மாற்றானால் ஏமாற்றப்பட்ட ஏவாளுக்கு மாறுபட்ட மங்கை *(2 கொரி 11:3; ஆதி 3:13)*-திருச்சபையுமாவாள், தாயான மரியா ளும் ஆவாள். இவ்வாறு திருச்சபைக்கும் மரியாளுக்குமுள்ள நெருங்கிய தொடர்பு வலியுறுத்தப்படுகிறது. உண்மையில் இதுவே மீட்புத்திட்டத்தில் மரியாளின் பங்கு. எனவேதான் இயேசுவைப் 'புதுமை ஆதாமாகக்' கொண்ட மறைப் பாரம்பரியம் மரியாளையும், திருச்சபையையும் ஒன்று சேர்த்துப் 'புதுமை ஏவாளாக' நோக்குகிறது.

**இ. மரியாள் எனும் மறைபொருள்:** திருச் சபையின் மறைபொருளுடன் மரியாள் கொண்ட இந்தத் தொடர்பினால், மரியா ளின் மறைபொருளே விவிலிய நூலின் துணையால் மிகவும் தெளிவுறுகிறது. மரி யாளிடம் மறைந்த முறையில் நடைபெற்ற தைத் திருச்சபை தெற்றென வெளிப்படுத்து கிறது. திருச்சபையிலும் மரியாளிடமும் கன்னிமை மறைபொருளும், இறைவனை மணமகனாகக் கொண்ட மறைபொருளான விவாகமும் வெளிப்படுகின்றன. மேலும், தாய்மை வளமும் திருச்சபைக்கும், மரியா ளுக்குமுரிய பொது வளமாகும். தூய ஆவியின் துணையால் *(லூக் 1:35; மத் 1:20; உரோ 8:15)* அவர்கள் பெறும் மகப்பேறு முதற்கண் கிறிஸ்துவையும் *(லூக் 1:31; திருவெளி 12:5),* இரண்டாவதாக அவரது உடலின் உறுப்புக்களையும் *(யோவா 19:26 தொ; திருவெளி 12:17)* கொண்டுள்ளது. கன்னிமையின் மறைபொருள் தூய்மையின் முழுமையை உள்ளடக்குகிறது. இதனைச் செயற்படுத்துவது கிறிஸ்துவின் அருளா கும். இவ்வருள் ஆன்மாவை அதன் அடித் தளத்திலேயே தொட்டு அதைப் ''பரிசுத்த மும் மாசற்றதுமாக்குகிறது'' *(எபே 5:27).* இதுவே மரியாளின் மாசற்ற உற்பவத் திற்குப் பொருள் அளிக்கிறது. மரியாளின் தாய்மையில் இலங்கும் மறைபொருள், அனைத்திற்கும் மேலான மறைபொருளா கிய இயேசுவோடு அவளை முற்றிலும் இணைக்கிறது. சோதனை சூழ்ந்த உலக வாழ்வினில் இயேசுவோடு கல்வாரி வரைக் கும் *(லூக் 2:35; யோவா 19:25தொ; காண்க.திருவெளி 12:13)* ஒன்றித்து வாழ்ந்த மரியாள், அவருடைய மகிமையிலும் உயிர்ப்பிலும் கூட தொடர்ந்து ஒருமித்து நின்றாள் *(திருவெளி 21).* இதுவே அவ ளுடைய விண்ணேற்பின் பொருளாகும். மரியாளின் மாசற்ற உற்பவம் பற்றியோ, விண்ணேற்பைப் பற்றியோ விவிலியம் வெளிப்படையாகக் கூறுவதில்லை. ஆனால், திருச்சபையின் மறைபொருளைப் பற்றி விவிலியம் கூறுவதில் மரியாளின் நலன்களும் பேறுகளும் அடங்கியுள்ளன. எனவேதான் திருச்சபையின் விசுவாசம் அவற்றைக் காண முடிந்தது. இங்கு மரி யாளை இயேசுவின் உன்னத நிலைக்கு அவரருகில் நின்று அவரோடு கூடப்

பரிந்து பேசும் தரத்திற்கு - நாம் உயர்த்துவ தில்லை. கடவுள் முன் மரியாள் ''அருட் பேறுபெற்றவள்'' (லூக் *1:28*); திருச்சபை யின் அங்கத்தினர்களின் முன்னோக்கில் ''அன்பு மகனுக்குள் அருளின் மாட்சிமை'' நிறைந்தவளாகவே உள்ளாள். இருப்பினும், அவள் துணையால்தான் இறைமகனும் தனிச் சிறப்பான இணைப்பாளருமான இயேசு மாந்தரின் சகோதரராகி அவர் களுடன் ஒன்றுபட்டு இணைய முடிந்தது. இதே போன்று, மக்கள் கிறிஸ்துவின் உடலாகிய திருச்சபையின்றி (கொலோ *1:18*) அவரோடு தொடர்பு கொள்ள முடி யாது. இவ்வடிப்படை உண்மைதான் கிறிஸ்தவ மக்களிடம் மரியின்பால் பற்று தலைத் தூண்டுகிறது. எனவேதான் கிறிஸ் தவ மக்கள் அன்னைத் திருச்சபையோடும், அன்னை மரியாளோடும் கொண்டுள்ள உறவு ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந் துள்ளது (காண்க.சங் *87:5*; யோவா *19:27*).

## மருத மரம் (HOLM TREE)

விறகுக்காகவும், சிலைகள் செய்வதற்காக வும் பயன்படும் ஒருவகை மரம். இஃது எப்போதும் பசுமையாக உள்ள சிறிய கருவாலி மர இனத்தைச் சேர்ந்தது என்று சில தாவரயியல் வல்லுநர்கள் கூறுகிறார் கள்.

எசா *44:14*-இல் ''மருத மரம்'' என்று மொழி பெயர்க்கப்பட்டிருப்பது குழப் பத்தைத் தருகிறது. ஏனெனில், உண்மை யான மருதமரம் என்பது இலையுதிர்க்காத புதர்ச்செடி வகையைச் சேர்ந்தது. இதைக் குறிக்கும் எபிரேயச் சொல்லின் கருப் பொருள் ''மெலிதாக இருத்தல்'' என்பதால் இது கெட்டியான கட்டையும், திண்பச்சை இலைகளுமுள்ள ஒல்லியான தேவதாரு மரமாக இருக்கலாம். விவிலிய நாட்டில் இம்மரம் அதிகமாகக் காணப்படுகிறது.

## மருதோன்றி (HENNA)

மேற்காசியாவில் சாதாரணமாகக் காணப் படும் நறுமணப் பூக்கள் பூக்கும் பூண்டு அல்லது மரமாகும்.

உ.ச. *1:14*-இல், காதலர் ''ஏங்கேதி தோட்டங்களில் உள்ள மருதோன்றி'' மலர்க் கொத்துக்கு ஒப்பிடப்படுகிறார். உ.ச. *4:13-14*-இல், மருதோன்றி பிற நறு மணச்செடிகள், மரங்களோடு மணமகளைப் போற்ற உருவகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது.

## மருத்துவக்கலை (MEDICINE)

நோயாளிகள் கவனிக்கப்பட்ட விதத்தைப் பற்றிய குறிப்புகள், ஆரம்பகாலத்திய விவி லிய நூல்களில் மிகக்குறைவாகவே காணப் படுகின்றன. பண்டைய மேற்காசியப் பாரம்பரியத்தில், பலவிதமான நோய் களைக் கண்டறிந்து தீர்த்து வைப்பதற்காகக் குருக்கள் பயிற்றுவிக்கப்பட்டு, அதற்கான வசதிகளும் அளிக்கப்பட்டன. இதே முறை யைத்தான் எபிரேயர்களும் பின்பற்றினர். முதல் ஐந்து விவிலிய நூல்களின் விளக்கத் தின்படி, குருக்கள், மருத்துவப்பெண் ஆகி யோர் சமூக நலத்தினைக் கவனிக்க வேண் டிய கடமையைப் பெற்றிருந்தனர். முடி யாட்சிக் காலம் தொடங்கும்வரை மருத்து வர்கள் தனிப்பட்ட பிரிவினராக ஓர் அமைப்பு ஏற்படவேயில்லை.

### 1. தொல்பழமைக் காலத்தில் குரு-மருத்துவர்.

**அ. மெசபொத்தாமியா:** பண்டைய மெச பொத்தாமியாவில் நோயினைத் தடுத்தல் நோயிலிருந்து காத்தல் ஆகியவற்றிற்கான பொறுப்பு இரு வேறுபட்ட வகுப்பைச் சார்ந்த பேயோட்டும் குருக்களிடம் இருந் தது. அதிக மூட நம்பிக்கை கொண்ட மெசபொத்தாமிய மக்கள், வலிமையான பேய்களின் தாக்குதலால்தான் வியாதி வரு கின்றது என்று எண்ணி வந்ததால், திறமை மிக்க பேயோட்டிகளின் பணி அதிகம் தேவைப்பட்டது. பண்டைய காலத்தில், கல்வியும், மருத்துவத்துறையும் குருக் களுக்கு மட்டுமே உரிமையானதாகக் கருதப் பட்டது.

நோயாளிகள், கோவில்களின் சூழிடங் களில் கவனிக்கப்பட்டனர். மந்திரித்தல் போன்ற பலவகையான மருத்துவ முறை

கள் பயன்படுத்தப்பட்டன. ''கேப்பர்'' என்னும் ஒருவகை முட்செடி, வெள்ளைப் பூண்டு, கறியிலை மற்றும் உறக்க மருந்துப் பூண்டு வகை போன்ற கீரைகள் மந்திரத் தன்மை கொண்டவையாகக் கருதப்பட்டன. பாபிலோனிய மருத்துவத்தில் விளக்கெண் ணெய் அதிகம் பயன்படுத்தப்பட்டது. கமுராபி சட்டத்தொகுப்பேட்டில், மருத்துவருக் குரிய பதவித் தகுதியும், அவருடைய பதவி கொடுக்கப்பட்டதற்கான கட்டுப்பாடுகளும் தரப்பட்டுள்ளன. மெசபொத்தாமியாவில் காணப்பட்ட பலவிதமான நோய்களைப் பற்றியும், அவற்றைக் குணப்படுத்துவதற் காகப் பயன்படுத்தப்பட்ட மருத்துவத்தின் சிறந்த வளர்ச்சி பற்றியும் எழுதப்பட்ட விளக்கமான குறிப்புகள் ஆப்பு எழுத்து ஏடுகளில் காணப்படுகின்றன.

**ஆ. எகிப்து:** பண்டைய எகிப்திய குரு குலத்தில் மருத்துவத் துறைக்கேற்ற ஒரு பிரிவு ஆரம்ப காலத்திலிருந்து இருந்து வந்தது. எகிப்தின் மருத்துவப் பாரம்பரியங் கள், மருத்துவ மற்றும் அறுவைச் சிகிச்சை சார்ந்த புள்தாள் ஏடுகளின் சில பகுதி களைக் காத்து வந்துள்ளன. இத்தகைய ஆதார மூலங்களின் வழியாக, மெசபொத் தாமியாவிலிருந்ததைப் போலவே எகிப் திலும் நோயின் தன்மையைக் கண்டுபிடிக் கும் முயற்சியில் மந்திர - சமயப் (Magico -religious) பங்கு மிக உயர்ந்த இடத்தை வகித்தது என்று தெரிகிறது. அசுத்த ஆவி களின் செயலால்தான் நோய் உருவாகிறது என்ற நம்பிக்கை இருந்து வந்ததால், நோயினைப் போக்குவதற்கு மந்திரக்கலை அதிகம் பயன்படுத்தப்பட்டது. இதன் விளைவாக, எகிப்திய குரு - மருத்துவர் கள், கண்நோய், பெண் நோய்கள், சுடு புண், காயங்கள் போன்ற பல நோய்களை அகற்றுவதற்காக மந்திரக்கலையைப் பயன் படுத்தினர்.

கீரைகளும், விலங்குகளின் பொருட் களும் வெளிப்படையாகப் பயன்படுத்தப் பட்டாலும், பொதுவாக மந்திரிப்புச் செயலின் உதவிதான் அதிக வலிமையுடை யதாகக் கருதப்பட்டு பயன்படுத்தப்பட்டது. அறுவைச் சிகிச்சை சார்ந்த ஒரு புள்தாள் மட்டும் இத்தகைய மந்திரக்கலையின் ஆதிக்கம் இல்லாமல் உள்ளது. ஆனால், மந்திரிப்பு வார்த்தைகள் எழுதப்பட்டுள் ளன. ஆதி ஆகமத்தில் *(50:2)* குறிப்பிடப் பட்டிருக்கும் மருத்துவர்கள், பிணத்தை நறுமணமூட்டிப் பேணி வைப்பவர்களாக இருந்தனர். அவர்களின் செயல்கள் மிக முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருந்தன. இவர்கள் பின்பற்றிய சடங்குமுறைகள், நுணுக்கங்கள் ஆகியவற்றை எரோதோத்தசு என்பவர் குறித்து வைத்துள்ளார். பண்டைய எகிப்தில் இருந்த மற்ற மருத் துவ நிபுணர்களைப் போலவே இவர்களும் ஒரு தனிக் குருத்துவக் கிளையாகச் செயல் பட்டனர்.

**இ. இஸ்ராயேல்:** முதல் ஐந்து விவிலிய நூல்களில் குறிப்பிடப்பட்டிருப்பதுபோல, ஆரம்பகால எபிரேயர்களின் மருத்துவத் தத்துவங்கள், மிகுந்த முன்னேற்றத்தை அடைந்திருந்தன. மந்திரக்கலையின் உத வியை அகற்றிவிட்டு, செயலறிவின் மூல மும், கடவுளுக்கும் துன்புறுவோனுக்கும் இடையே நிலவும் ஆன்மீக உறவின் மூலமும், நோயினைக் கண்டுபிடித்துத் தீர்க்க முயன்றனர். லேவியர் ஆகமத்தி லுள்ள மருத்துவப் பகுதியில் விளக்கப் பட்டிருக்கும் தனிமனித மற்றும் சமூக சுகாதாரம் பற்றிய தத்துவங்கள் பழங்காலத் தில் மிகவும் தனித்தன்மையுடையன. இந்தத் தத்துவங்களைப் பரப்பவும், செயல் படுத்தவும் வேண்டிய கடமையும், பொறுப் பும் குருக்களுக்கு அளிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு நோயும் எந்த வகையில் கை யாளப்பட வேண்டுமென்றும், குறிப்பாகத் தொழுநோயினைப் பற்றிய விளக்கங்களும் லேவியர் ஆகமத்தில் தெளிவாகக் கொடுக் கப்பட்டுள்ளன.

நாளாகமத்திலும் மருத்துவர்களைப் பற்றிய குறிப்பு உள்ளது *(2 நாள் 16:12)*. இதுதான் ஐந்நூலுக்குப் புறம்பே மருத்துவர் பற்றிய முதல் குறிப்பாகும். மருத்துவரைக் குறிக்கும் எபிரேயச் சொல் ''பழுதுபார்ப் பவர்'', ''ஒன்றாகச் சேர்த்துத் தைப்பவர்''

என்ற பொருள் கொண்டதாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆகவே, இது புண்கள், காயங்களைக் குணப்படுத்துவதையும் குறிப்பிடுவதாகத் தெரிகிறது. கடவுள் ஒருவரே குணமளிப்பவராகக் *(யாத் 15:26)* கருதப்பட்டதால், மனித மருத்துவர்களெல்லாம் வெறும் மருந்து கொடுப்பவர்களாகவும், மருத்துவ, கீரையியல் வல்லுநர்களாகவும் விளங்கினர். எரே *8:22*-இல் மருத்துவர்கள், மருத்துவப் பொருட்களுடன் தொடர்பு படுத்தப்பட்டு, பேசப்படுகிறார்கள். ஒரு மருத்துவனின் பிரசன்னம், நோய் குணமாவதற்கான ஒரு நம்பிக்கையை அளித்தது. களிம்பு போன்ற மணம் கமழும் மருந்து வகைகள் பயன்படுத்தப்பட்டன.

கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் மருத்துவரின் பெருமையும், முக்கியத்துவமும் அதிகம் உயர்ந்துவிட்டன. இந்தக் காலக் கட்டத்தில் எழுதப்பட்ட சீராக்கு ஆகமத்தில் மருத்துவர்களைப் பற்றிய குறிப்புக்கள் பல இடங்களில் காணப்படுகின்றன. கடவுள்தான் குணமளிப்பவர் என்பது உண்மையானாலும், குணமளிக்கும் அருளையும், மருந்துகளையும் கடவுள் மனிதர்களுக்கு அளித்துள்ளார். ஆனால், இறைவனுக்கு எதிராகச் செயல்படும் ஒரு மனிதன், மருத்துவருக்கு முன்னரும் அரக்கத்தனமாகவே நடந்து கொள்வான் என்று எதிர்பார்க்கப்படுகிறது *(சீரா 38:1-15)*.

இயேசு தனது போதனையிலும் மருத்துவர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் *(மத் 9;12; லூக் 4:23)*. பொதுவாக இந்த மருத்துவர்கள் நல்ல திறமையுடையவர்களாகவே விளங்கினார்கள். சிலசமயங்களில் அவர்களால் குணப்படுத்த இயலாத நிலையும் ஏற்பட்டதுண்டு *(மாற் 5:26)*. ''அன்புமிக்க மருத்துவர்'' என்று அழைக்கப்பட்ட புனித லூக்கா இயேசுவின் மருத்துவப் பணியைப் பற்றிய தெளிவான விவரங்களை அளித்துள்ளார். மற்ற ஆசிரியர்கள் பயன்படுத்தாத சில மருத்துவச் சொற்களை இவர் பயன்படுத்தியிருப்பதால், இவர் கிரேக்க மருத்துவப் பாரம்பரியத்தில் பயிற்சி பெற்றிருப்பார் என்று எண்ணப்படுகிறது.

***2. குருக்கள், இறைவாக்கினர் ஆகியோரின் மருத்துவப்பணி:*** ஆரம்பகால எபிரேயக் குருக்களின் மருத்துவப் பொறுப்புகள், அவர்களின் சமயக் கடமைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவையாக இருந்தன. லேவியர் ஆகமத்தில் ஏழு வகையான தூய்மைப்படுத்தும் வடிவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றில் மருத்துவ, சமயக் கூறுகள் இடம் பெற்றுள்ளன. லேவியர் ஆகமத்திலுள்ள சுத்திகரச் சடங்குகள், பேறுகாலப் பெண்களைத் தூய்மைப் படுத்துதல் *(அதி 12)*, தொழுநோய் *(அதி 13)*, உடலில் ஏற்படும் தூய்மையற்ற ஒழுக்கு *(15:2-15)*, விந்து கழிதல் *(15:16-18)*, கணவன் -மனைவி உடல் உறவு *(15:18)*, மாதவிலக்கு *(15:19-30)* மற்றும் இறந்த உடலைத் தொடுதல் ஆகியவற்றைத் தூய்மைப்படுத்துதல் ஆகும். சடங்கு முறைகள், கி.மு. இரண்டாம் ஆயிரம் ஆண்டுகளில் பாபிலோனிய குரு-மருத்துவர்கள் மேற்கொண்ட சடங்குகளை ஞாபகப்படுத்துவதாக அமைகின்றன. பானங்கள் அல்லது மருந்துகளின் வாய்வழி நிர்வாகத்திற்கான ஒரே விவிலியக் குறிப்பு எண் *5:11-31*-இல் வரும் வெஞ்சினத்தின் உணவுப் படையலாகும்.

அன்று மருந்துகளில், நாட்டுப்புற மருத்துவத்தில், வெள்ளைப்போளம், சாம்பிராணி, நறுமணப்பிசின், சோத்துக் கற்றாழை, கருவாய்ப்பட்டை, இலவங்கப்பட்டை, தாவர வாசனைப்பொருட்கள் போன்றவை பரவலாகப் பயன்படுத்தப்பட்டாலும், பரிமளத் தயாரிப்பாளர்களின் கலை இவற்றை மருத்துவத்திற்காக மட்டும் பயன்படுத்தவில்லை *(யாத் 30:35)*. மேற்காசிய நாடுகளில் காணப்பட்ட, மயக்கும் தன்மை கொண்ட பொருட்களைப் பற்றிய எந்தக் குறிப்பும் பழைய ஏற்பாட்டில் இல்லை. இவ்வகைப் பொருட்கள் மற்றப் பொருட்களுடன் இறக்குமதி செய்யப்பட்டிருக்கலாம்.

இறைவாக்குப் பணியில், நோயினை முன்னறிவித்தலானது ஒரு பகுதியாகக் கருதப்பட்டது என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன: நாத்தான் *(2 சாமு 13:14)*, எலியா

*(1 அர 17:17; 2 அர 1:4)*, அகியா *(1 அர 14:4)* மற்றும் எலிசா *(2 அர 5:3; 8:7)*. எலிசா, நச்சுத்தன்மை கொண்ட கீரைகளின் விளைவுகளை அகற்றுதல் *(2 அர 4:41)*, எரிகோ தண்ணீரைச் சுத்தம் செய்தல் *(2 அர 2:20-21)*, நாமான் *(5:3-14)*, சுனாமியளின் மகன் *(4:18-37)* ஆகியோரைக் குணப்படுத்துதல் ஆகியவற்றில் அசாதாரண மருத்துவ முறைகளைக் கையாண்டுள்ளார்.

இத்தகைய பணியில் மிக முக்கியமானதாகக் கருதப்படுவது, எசேக்கியாவின் கொப்புளம் குணமாக்கப்பட்டதாகும் *(2 அர 20:1-7)*. புண், அழுகிப் போன காயங்கள் ஆகியவற்றிற்குத் தைலம், எண்ணெய் போன்ற பலவிதமான மருத்துவ உதவிகள் செய்யப்பட்டன *(எசா 1:6)*. ஆரம்ப காலத்தில் எலும்பு முறிவுகளுக்கு மருத்துவ உதவி செய்யப்படவில்லை என்ற எண்ணம் இருந்துவந்தாலும் *(லேவி 21:19)* பிற்காலத்தில் இத்தகைய முறையிலும் முயற்சிகள் செய்யப்பட்டன என்பதற்கு விவிலிய ஆதாரம் உள்ளது *(எசே 30:21)*. எசேக்கியேல், சிம்பு *(அண்டை)* வைத்துக் கட்டும் முறை பொதுவானதாக நடைமுறைப்படுத்தப்பட்டதாகக் குறிப்பிடவில்லை. ஆனால், சுற்றிக் கட்டுப்போடும் போது இம்முறை பின்பற்றப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

கிறிஸ்துவுக்கு முந்தைய இரு நூற்றாண்டுகளில் மருத்துவனின் உயர்வைப் பொருத்தே, வியாதிக்குப் பயன்படுத்தப்பட்ட மருந்துகளின் பங்கும் பெருமைப் படுத்தப்பட்டது. மருந்துகள், இயற்கையான உற்பத்திப் பொருட்களாகக் கருதப் பட்டதால், மனிதனுக்கு மிகுந்த நன்மை பயக்கக்கூடியனவாக எண்ணப்பட்டன. விவேகமுள்ள அறிவாளி, தன்னை மருத்துவரிடம் காட்டி, தன் நோய்க்குத் தேவையான மருந்தினைப் பெற்று, குணம் பெற்றான் *(சீரா 38:1-15)*. தால்மூதிலிருந்து, நோயாளிகள் மந்திரத் தாயத்துக்களை அணிந்து, பலவிதமான மந்திரக்கலை பழக்கங்களைச் செய்து, மூடநம்பிக்கையின் அடிப்படையிலான பல மருத்துவ முறைகளையும் பின்பற்றினர் என்ற விளக்கத்தைப் பெறுகின்றோம். இத்தகைய நிலை தான், 12 ஆண்டுகளாய்ப் பெரும்பாட்டினால் வருந்திய பெண்ணுக்கும் ஏற்பட்டிருக்கலாம் *(மாற் 5:25)* என்று கருதப் படுகிறது.

**3. புதிய ஏற்பாட்டில் மருத்துவ முறைகள்:** புதிய ஏற்பாட்டில், மருத்துவ முறை பற்றி மிகக் குறைந்த அளவிலான குறிப்புக்களே உள்ளன. அவையும் தற்செயலானவையே. நல்ல சமாரியன், அடிபட்டுக் கிடந்த வழிப்போக்கனின் காயங்களுக்கு எண்ணெய் பூசி, கட்டுப் போட்டு மிகச் சிறந்த முதலுதவி செய்தான் *(லூக் 10:34)*. லூக்கா நற்செய்தியில் *(7:37-38)* கூறப்பட்டிருக்கும் நிகழ்ச்சி, நறுமணப் பொருட்களைப் பூசுவதற்கு அடையாளமாக இருந்ததேயன்றி, மருத்துவ முறையாகக் கருதப்பட முடியாது. இயேசுவின் இறந்த உடலை அடக்கம் செய்வதற்கு முன்பாக அதனடையாளமாகச் செய்யப்பட்ட பல செயல்களில் இதுவும் ஒன்று *(லூக் 23:56)*. எச்சில் பூசிய நிகழ்ச்சி, அடையாளத் தன்மை கொண்டதாகவே *(யோவா 9:6)* கருதப்படுகிறது. இதை மருத்துவ முறையாக எண்ணக் கூடாது.

சிலுவைத் தண்டனையைப் பெற்றவர்களின் துன்பம் மிகக் கொடியதாக இருந்தமையால் அவர்களின் துன்பத்தைக் குறைக்க வேண்டுமென்ற அன்பு ஆர்வம் கொண்டவர்கள், வெள்ளைப்போளம் கலந்த இரசத்தைக் குடிக்கக் கொடுத்தனர் *(மாற் 15:23)*. இந்தப் பானத்தில் மதுவைப் போன்ற மயக்க சக்தி இல்லாமல் இருந்தால் இதைத் துன்புறுபவர்களுக்குக் கொடுப்பதில் பயனில்லாமல் போய்விடும்.

பவுல் திமொத்தேயுவுக்கு அளித்த அன்பு அறிவுரை நாட்டுப்புற மருத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது *(1 திமொ 5:23)*. வயிற்றுப்பொருமலுள்ள, உணவு செரியாமல் துன்பப்பட்டுக்கொண்டிருந்த திமொத்தேயு அதிலிருந்து தற்காலிகமாக விடுபடுவதற்காக, சிறிது திராட்சைரசத்தை

அருந்த வேண்டுமென்று பவுல் உரைத் துள்ளார். இத்தகைய வயிற்றுப் பிரச்சனை யானது, நோய்க்குறி அமைப்பின் பெரிய பிரச்சனையின் ஒரு பகுதியாகக் கருதப் பட்டது. கடவுளின் பெயரால் நோயாளி யின்மீது எண்ணெய் தடவும் செயல் ஓர் அடையாளச் செயலாகவே செய்யப் பட்டது. விசுவாசத்தின் அடிப்படையிலான செபத்துடன் ஒன்றான செயலாக விளங்கி யது. எனவே, இதை மருத்துவ முறையாகக் கருதுவதில்லை.

**4. அறுவைச் சிகிச்சை:** விவிலியத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரே அறுவைச் சிகிச்சை விருத்தசேதனமேயாகும். இத் தகைய பழக்கம், யூதரல்லாத மற்ற மக் களிடையே, குறிப்பாக எகிப்தில், நாகரிக மான வாழ்க்கையின் அடையாளமாகப் பின்பற்றப்பட்டு வந்தது. ஆனால், யூதர் களிடையே இருந்ததுபோல் சமயப் பொருளைக் கொண்டிருக்கவில்லை. ஆபிர காமுக்குத்தான் முதன் முதலில் இந்தச் சிகிச்சை செய்யப்பட்டதாக பழைய ஏற் பாடு கூறுகின்றது. ஆனால், இந்தச் சிகிச்சை முறை மிகப்பழமையானதாக விளங்கியது எனலாம். வெண்கல மற்றும் இரும்புக் காலங்களில் வாழ்ந்த செமித்தியர் கள் அறுவைச் சிகிச்சைக்காக சிக்கிமுக்கிக் கல்லால் ஆன கத்திகளைப் பயன்படுத்தி னர். இஃது அவர்கள் செய்துவந்த சடங்கின் பழமைக்கு ஆதாரமானதாக அமைகின்றது. இஸ்ராயேல் குழந்தைகள் அனைத்திற்கும் பிறந்த எட்டாம் நாளில் நுனித்தோல் அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டது (லேவி *12:3*). இதே போன்ற சிகிச்சை ஆபிரகாம் வீட்டின் அடிமைகளுக்குச் செய் யப்பட்டது (ஆதி*17:11*). எபிரேயர் களிடையே சமயப் பொருளே முதன்மை யான இடத்தைப் பெற்றிருந்தது. அவர்கள் இதை ஒரு சுகாதாரப் பழக்கமாகவோ, வருநோய்க்குக் காவலாகவோ செய்ய வில்லை.

ஊழியக்காரனின் காதில், தோல் தைக்கப் பயன்படுத்தப்பட்ட பெரிய ஊசியைக் கொண்டு போடப்படும் ஓட்டையே சிறிய அறுவைச் சிகிச்சையாகக் கருதப்பட்டது (யாத் *21:6*). இந்தச் சடங்கின் மூலம் ஊழியக்காரன் தலைவனுக்குத் தன் வாழ் நாள் முழுவதும் பணிவிடை புரிவதாக உடன்படிக்கை செய்துகொண்டு உறவினை உறுதிப்படுத்திக் கொண்டான். இது சமய-சமூகத் தன்மையுடையதாகச் செய்யப் பட்டது; மருத்துவத்தன்மையில் அன்று.

**5. அறுவைச் சிகிச்சைக்கடுத்த நோயும், விபத்தும்:** அறுவைச் சிகிச்சை வேண்டிய நோய் பற்றிய விவிலியக் குறிப்புக்கள் மிகக் குறைவாகவே உள்ளன. இருவ ரிடையே ஏற்படும் சண்டையில் ஒருவன் மற்றவனைக் காயப்படுத்திவிட்டானாகில், காயப்பட்டவனின் முழுச் சுகத்தையும் பெற்றுத் தர வேண்டியது காயப்படுத்திய வனின் கடமை. அஃதோடுகூட, அவனுக்கு ஏற்பட்ட வேலை நேர இழப்பிற்கான ஈடும் செய்யப்பட வேண்டும் (யாத் *21:18-19*). இத்தகைய காயங்களை அகற்றுவதற்காக குருக்கள் எந்த முறையில் செயல்பட்டனர் என்பது தெரியவில்லை. ஆனால் பிற்காலத் தில், எலும்பு முறிவுகளைக் குணப்படுத் தும் முயற்சியில் ஈடுபட்டனர் என்பது தெரிகிறது (எசே *30;21*).

கூனல் முதுகைக் கொண்டவர்களும், குள்ளமானவர்களும் குருத்துவத்திலிருந்து விலக்கப்பட்டனர். குள்ளமானவனுக்கு உடல் குறைபாடு இருக்க வேண்டுமென்று அவசியமில்லை. ஆனால் கூனல் முதுகு என்னும் குறைபாடு, முதுகெலும்புத் தண் டில் ஏற்படும் பாதிப்புகளின் காரண மாகவே உருவாகின்றது.

பதினெட்டு ஆண்டுகளாகப் பேயால் நோயுற்றிருந்த பெண் ஒருத்தி, நிமிர்ந்து பார்க்கவும் முடியாத ஒரு கூனி. அவளின் முதுகெலும்புத்தண்டில் ஏற்பட்ட பாதிப் பின் காரணமாகவே இந்த நோய் உருவாகி யிருக்க வேண்டும் (லூக் *13:11*).

மற்றொரு விவிலிய எடுத்துக்காட்டை யும் இங்குக் குறிப்பிடலாம். இயேசு பிடிபட்டபோது பேதுரு, மால்கு என்ற வீரனின் வலக் காதை வெட்டினார்

(யோவா 18:10). பேதுரு தலைமைக் குருவின் ஊழியனது தலைக்குக் குறி வைத்துத் தாக்க முயன்றார் என்பதில் ஐயமில்லை. ஆனால், குறி தவறி காது மட்டுமே துண்டிக்கப்பட்டது. காதின் பகுதி முற்றிலுமே துண்டிக்கப்பட்டிருந்தால் அதைக் குணமாக்கியது ஓர் அருஞ்செயலாகவே கருதப்பட வேண்டும். இத்தகைய சூழ்நிலைகளில் அறுவைச் சிகிச்சை பயன்படுத்தப்பட்டிருக்க இயலாது.

**6. தாய்மை மருத்துவம்:** பண்டைய குறிப்புகளில் சில இத்தகைய மருத்துவத்திற்கு ஆதாரமாக உள்ளன. பேறுகால மருத்துவப் பெண்ணின் பங்கு அன்றைய சமுதாயத்தில் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. இத்தகைய மருத்துவப்பெண்ணே, விவிலியத்தில் முதன்முதலாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் மருத்துவப் பணியாளர் ஆவார். பொதுவாக மேற்காசியப் பெண்கள், பொதுப்பணியில் ஈடுபடுவதிலிருந்து தடுக்கப்பட்டார்கள். பேறுகால மருத்துவப் பெண்கள் ஒன்றிணைந்து முறையாகச் சங்கம் அமைத்து ஒரே வகுப்பினராகச் செயல்பட்டனர். இரண்டு தலைமை மருத்துவப் பெண்களின் பெயர்கள் மிகவும் புகழ் பெற்றதாக எகிப்தில் குறிப்பிடப்பட்டுள்ளன (யாத் 1:15).

பார்வோ.ன் வெளியிட்ட சட்டம் இந்த மருத்துவப்பெண்களின் சிறப்பான சேவைகளுக்கு எதிராகவும், மனிதாபிமானமற்ற வகையிலும் அமைந்தது (யாத் 1:16). ஆயினும், இந்த மகளிர், தாங்கள் செல்வதற்கு முன்பே குழந்தை பிறந்து விட்டது என்ற ஒரு காரணத்தைச் சொல்லி சட்டத்திலிருந்து தப்பித்து வந்தனர். எபிரேய மருத்துவப்பெண்கள், எகிப்தியப் பெண்களுக்கும் இத்தகைய பணியினைச் செய்தனர். இந்த மருத்துவத்தின்போது தாய் ஒரு தாழ்ந்த இருக்கையில் அமர்த்தப்படுவாள். இத்தகைய பொருட்கள் இன்றும் எகிப்திய உழவர்களிடையே பயன்படுத்தப்படுகின்றன.

இத்தகைய மருத்துவத்தின்போது தாய் இறந்துவிடுவதும் உண்டு என்பதற்கு இரண்டு விவிலியச் சான்றுகள் உள்ளன. இறக்குமுன் அடையாளப் பெயர்களையும் அவர்கள் வெளிப்படுத்தினர். 1. ராகேல் பேறுகால வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்த போது தன் உயிர் பிரியப் போகும் வேளையில் தன் பிள்ளைக்குப் பெனோனி அதாவது ‘என் வேதனைப் புதல்வன்’ என்று பெயரிட்டாள் (ஆதி 35:16-19). 2) பினகாசின் மனைவி பேறுகால வேதனையைப் பெற்றிருந்தபோது, கடவுளின் பேழை பிடிபட்டதையும், தன் மாமனாரும், கணவனும் இறந்துபட்டதையும் கேள்விப்பட்டுத் துன்பம் அதிகரித்த நிலையில் குனிந்து ஒரு மகவை ஈன்றெடுத்தாள். இஸ்ராயேலரை விட்டுப் புகழ் நீங்கினது என்று சொல்லி, தன் குழந்தைக்கு இக்கபோத்து என்று பெயரிட்டாள் (1 சாமு 4:19-22).

இரட்டைக் குழந்தைகள் பிறந்ததற்கான சான்றுகள் இரண்டு ஆதி ஆகமத்தில் இடம் பெற்றுள்ளன. 1. ரபேக்காளுக்கு ஏசா, யாக்கோபு என்ற இரு குழந்தைகள் பிறந்தன (ஆதி 25:21-26). 2. தாமாருக்கும் இதே போன்று இரட்டைக் குழந்தைகள் பிறந்தன (ஆதி 38:27-30). பிரசவச் சூழ்நிலையின் இக்கட்டான நிலையும் இதில் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய சூழ்நிலைகளில் மருத்துவப்பெண்ணின் திறமை மிக்க பணி மிகவும் பாராட்டப்படும் வகையில் அமைந்தது.

முதிர்ந்த வயதிலும் கடவுளின் ஆசீரால் கருவுற்றுக் குழந்தைகளைப் பெற்றெடுத்தவர்களைப் பற்றிய சான்றுகளும் உள்ளன: சாரா (ஆதி 21:2), மனோவாவின் மனைவி (நீதி 13:24), எல்கானாவின் மனைவி அன்னா (1 சாமு 1:20) மற்றும் எலிசபெத்து (லூக் 1:36).

குழந்தை பிறந்த பின்னர் (எசே 16:4-5), கொப்பூழ்க்கொடியை அறுத்தல், குழந்தையைத் தண்ணீரால் கழுவுதல், உப்பால் கருப்பை சம்பந்தமானவற்றை அகற்றுதல், துணிகளால் சுற்றப்படுதல் போன்ற பணிகள் செய்யப்பட்டன. குழந்தை ஆறு

மாதங்களை அடையும்வரை துணிகளால் சுற்றப்படுதல் தொடர்ந்து செய்யப்படும். குழந்தைக்கு அடிக்கடி எண்ணெயும், மாவும் தடவப்பட்டன.

**7. விவிலியத்தில் மருத்துவம் பற்றிய நாட்டுப்புறப் பாடல்கள்:** இத்தகைய மருத்துவ முறைக்குச் சில எடுத்துக்காட்டுகள் உள்ளன. யாக்கோபு தன் சொந்தக் குடும்பத்திற்குப் பொருள் ஈட்ட எண்ணி (*ஆதி 30:31*) மந்தையில் மிகப்பழைய முறையைப் பின்பற்றினார். கறுப்பு நிறம் கொண்ட மற்றும் புள்ளியோ, கலப்பு நிறமோ கொண்ட ஆட்டுக்குட்டிகளை யாக்கோபுக்குத் தருவதாக உறுதி அளித்த லாபான், அவற்றின் இனப்பெருக்கத்தைத் தடை செய்யும் எண்ணத்தில் இவ்வகையைச் சேர்ந்த ஆண் ஆடுகளை அகற்றிவிட்டார். எனவே யாக்கோபு புன்னை, வாதுமை, அர்மோன் என்னும் மரங்களின் பசிய கொப்புகளை வெட்டி, அவற்றின் இடையிடையே பட்டையைச் சீவி உரித்து அவற்றில் வெள்ளை, பச்சை நிறங்களை உருவாக்கினான். மேலும், தன் மந்தைகள் நீர் குடிக்க வரும்போது, ஆடுகள் மேற்படி வரியுள்ள கொப்புகளை எதிரில் கண்டு பொலிந்து சினைப்படும் பொருட்டு, அவன், நீர் வார்க்கப்படும் தொட்டிகளில் அக்கொப்புகளைப் போட்டு வைத்தான். இதன் பயனாக, புள்ளியும், வரியும், கலப்பு நிறமுமுள்ள குட்டிகளை ஈன்று வந்தன. இன்று கூட சிலர், சில குழந்தைகளுக்கு ஏற்படும் பிளவுபட்ட உதடுகளுக்குக் காரணம், பேறு காலத்திற்கு முன்னர் எலி அல்லது முயலுடன் தாய் கொள்ளும் தொடர்புதான் என்ற எண்ணம் கொண்டுள்ளனர். உண்மையில், இத்தகைய குறைபாடுகள் ஏற்படுவதற்குக் காரணம் உயிர் அணுக்களில் ஏற்படும் பாதிப்புதானே அல்லாமல் வெறும் பார்வையினால் ஆகாது.

சிறிது காலம் மலடியாக இருந்த லேயா, ராக்கேல் இருவருமே, ரூபன் கொண்டு வந்த தூதாயிக் கனிகளை உண்டனர் (*ஆதி 30:14-16*). ஏனென்றால், இவற்றின் மந்திர சக்தியால் மலடிகளும் கர்ப்பம் அடைவர் என்ற தவறான நம்பிக்கை இருந்தது. உண்மையில் இவற்றை உண்பதால் கர்ப்பம் அடைவதில்லை. மாறாக, மனோதத்துவ நிலையில் ஏற்படும் பாதிப்புகளின் பயனாகவே நன்மை உருவாகியது.

தாவீது அரசர் முதிய வயதை அடைந்த போது, அவர் முன் நிற்கவும், அவருக்குச் சூடு உண்டாகும்படி அவரது மார்பின்மீது படுத்துறங்கவும் ஓர் இளங்கன்னியைக் கூட்டிவந்தனர் (*1 அர 1:1-4*). ஏனென்றால், அப்பெண்ணின் உடல் சூட்டையும், மூச்சையும் பெற்று, தனது வாழ்வை மன்னர் நீண்டதாக்கிக் கொள்ள முடியும் என்று மக்கள் நம்பினார்கள். மன்னரின் ஆற்றலை மந்திரச் சடங்குகளின் மூலமாகச் சோதித்துப் பார்ப்பதற்குக்கூட இப்படிச் செய்யப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

சந்திரனால் தீய விளைவுகள் மனிதனில் ஏற்படுத்தப்படுகின்றன என்ற பரவலான கருத்து மக்களிடையே இருந்து வந்தது. *சங் 121:6*-இல் ''இரவில் நிலாவும் உம்மைத் தீண்டாது'' என்று எழுதப்பட்டுள்ளது. மத் *4:24; 17:15*-இல் வரும் கிரேக்கச் சொற்கள் மனிதனின் மூளை சந்திரனின் ஆதிக்கத்தால் பாதிக்கப்படுகின்றது என்ற பாரம்பரியக் கருத்தை வலுப்படுத்தியுள்ளன.

பெத்சாயிதா குளத்தின் தண்ணீரைக் கலக்கிவிடும் செயல்பற்றிய (*யோவா 5:4*) விளக்கம் சில மொழிபெயர்ப்புகளில் காணப்படுகின்றது. இந்தக் குளத்தின் குணப்படுத்தும் தன்மை தெய்வீக சக்தியினாலானது. இதைப் போன்ற புனித கிணறுகளும், ஊற்றுகளும் பல இருந்திருக்கின்றன. பெத்சாயிதா குளத்தின் அடியில் இருந்த இயற்கை வாயுவைக் கலக்கிவிடுவதன் மூலம் நோயாளிகள் குணம் பெற்றனர் என்று விளக்கம் தரப்படுகின்றது. உண்மையில் இங்கு வந்து குணம் பெற்றவர்கள் பலர் மனநோய் கொண்டவர்களாக இருந்திருக்கலாம்.

## மருத்துவப்பெண், தாதியர் (MIDWIFE)

இவள் பிள்ளைப்பேற்றுக் காலத்தில் உதவி செய்பவள் (*ஆதி 35:17; 38:27-30*).

இவர்களைப் பற்றிய குறிப்புகள் யாத்திரை ஆகமத்தில் தரப்பட்டுள்ளன. சிப்ரா, பூகா என்ற இரு எபிரேயப் பெண்கள் பேறு காலத்தில் எபிரேயப் பெண்களுக்கு உதவி செய்து வந்தனர். இவர்கள் பிறக்கும் ஆண் குழந்தைகளை மட்டும் கொன்று விடும்படி கட்டளையிடப்பட்டிருந்தனர். இவர்கள் இக்கட்டளையை நிறைவேற்றாமல் இருந்த தால் கடவுள் அவர்களை ஆசீர்வதித்தார் (*யாத் 1:15-21*). பிள்ளைப்பேறு இல்லாத மலடிகள் மருத்துவச்சிகளாக இருந்தனர் என்ற கருத்தும் நிலவி வந்தது. பினகாசின் மனைவி பேறுகால வேதனையால் துடித்துக் கொண்டிருக்கையில் அருகிலிருந்த பெண் கள் ''அஞ்சாதே, நீ ஒரு மகனைப் பெற்றெடுத்துள்ளாய்'' என்றார்கள் (*1 சாமு 4:20; காண்க. ஆதி 35:17*). இவர்கள் இவ்வாறு உதவி செய்கையில், குழந்தை ஆணா, பெண்ணா என்பதை உடனே முடிவு செய்துவிடுவர்.

**மருத்துவர்** (PHYSICIAN)

தொடக்கத்தில் காயங்களைக் கவனித்துப் பழுதுபார்ப்பவர்; எனவே, கட்டுப்போடு பவர் மற்றும் குணமாக்குபவர் என்று இச்சொல்லுக்குப் பொருள் அளிக்கலாம்.

அரசர்கள் ஆட்சிக்காலம் வரை மருத்து வத்தைச் சிறப்புத் தொழிலாகக் கொண்ட வர்கள் காணப்படவில்லை (*எ.கா. 2 நாள் 16:12*). மருத்துவரின் முக்கிய கடமைகள் புண்களுக்குக் கட்டுப்போடுதல் (*எ.கா. எசா 1:6; ஓசே 6:1*), தைலம் பூசுதல் (*எரே 8:22*), முறிந்த எலும்புகளுக்குக் கட்டுப் போடுதல் (*காண்க. எசே 30:21; 34:4*) ஆகியவையாகும். காலப்போக்கில் மருத்து வர் மற்றத் தொழில் செய்பவர்களிடமிருந்து வேறுபடுத்தப்பட்டனர், அவரது மதிப்பும் சிறப்பும் வளர்ந்தன (*சீரா 38:1-15*). ஆயி னும், அவர்களது மருத்துவ முறை பற்றிய நம்பிக்கையுறுதியற்ற மனப்போக்கும் மக்க ளிடையே காணப்படுகிறது. இதை, இயேசு குணப்படுத்திய பெண் பற்றிய நிகழ்ச்சி யுரையும் (*மாற் 5:26*), இயேசு எடுத்துக் கூறிய பழமொழியும் (*லூக் 4:23*) பிரதிபலிக் கின்றன. மருத்துவர் உதவியின்றியே, மிகச் சாதாரணமான மருத்துவமுறைகள் மக்க ளிடையே பழக்கத்தில் இருந்தன (*எ.கா. மாற் 15:23; லூக் 10:34; 1 திமொ 5:23*).

**மருந்து, கண் மருந்து** (SALVE)

பசையாக்கப்பட்டு, கண்ணுக்கு இடப் படும் மருந்துப்பொடி (*திருவெளி 3:18*). இலவோதிக்கேயா மருத்துவ நிலையங் களுக்குப் புகழ் பெற்றது. அங்கு இவ் வகைப் பொடிகள் செய்யப்பட்டன. ஆகவே, இலவோதிக்கேயக் கிறிஸ்தவர்கள் தங்கள் ஆன்மீகக் குருட்டுத் தன்மையைப் போக்கிக் கொள்ள கண் மருந்து வாங்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆலோசனை வஞ்சப் புகழ்ச்சி மிக்கதாகும்.

**மருமகள்** (DAUGHTER-IN-LAW)

மகனின் மனைவி. ஒரு மனிதன் தன் னுடைய மருமகளுடன் உடலுறவு கொள்ளக் கூடாதென லேவியர் ஆகமம் கூறுகிறது (*லேவி 18:15*). இந்தக் கட்டளையை மீறினால் அவர்கள் இருவருக் கும் சாவே தண்டனையாகும்.

மருமகள் தன் கணவரோடு சேர்ந்து அவருடைய வீட்டிலேயே வாழவும், அஃதோடு சேர்ந்து புதிய நாட்டிற்குக் குடியேறவும் கடமைப்பட்டுள்ளாள் (*ஆதி 11:31*). இச்சொல் மணமகள் என்ற பொரு ளைப் பெறும்போது, அது திருமணம் ஒப்பந்தம் செய்யப்படும் காலம், மணக் காலம் ஆகியவற்றில் அவளது நிலையைக் குறிக்கிறது.

**மரை, பெண்மான்** (HIND)

செந்நிற மான் பிணை. இந்த மானைப் பற்றிய பழைய ஏற்பாட்டுக் குறிப்புகள் அது குட்டி போடுவதைப் பற்றியும் (*யோபு 39:1; எரே 14:5; ஆதி 49:21; சங் 29:9*), அதன் தடுமாறாத் தன்மையைப் பற்றியும் (*2 சாமு 22:34; சங் 18:33; அப 3:19*) கூறுகின்றன. இவைகள் காடுகளும், புல் வெளிகளும் நிறைந்த இடத்தில் வாழும். இதன் அழகு, மிருதுவுமான தன்மைக்கு மனைவி ஒப்பிடப்படுகிறாள் (*பழ 5:19*). 22-ஆம் சங்கீதத்தின் தலைப்பில் ''காலைப்

பெண்மான்'' என்று கூறப்பட்டிருப்பது, அனேகமாக ஒரு புகழ்வாய்ந்த இசை மெட்டைக் குறிப்பதாகும். உன்னத சங்கீதத்தில் *(2:7; 3:5)* மரைகள் மேல் ஆணையிடுவதில் இறைப்பெயருக்குப் பதிலாக மரைகள் பயன்பட்டிருக்கலாம்; அல்லது இதன் இனப்பெருக்க ஆற்றல் குறிக்கப்படலாம்.

**மர்கேசவன்** *(MARCHESHVAN)*

இஃது 'அரசம்னா' எனும் அக்காதிய பாபிலோனியப் பெயரின் எபிரேய வடிவமாகும். இதற்கு 'எட்டாவது மாதம்' என்பது பொருள். யூதர்களின் அரமேய நாணல் தாள் சுருளில், கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் எகிப்தில் இச்சொல் முதன் முதலில் வருகிறது. இஃது அக்டோபர் - நவம்பர், ஐப்பசி மாதங்களுக்கு இணையானது.

**மர்செனா** *(MARSENA - தகுதியுள்ள)*

இவர் அகசவேர் மன்னனின் ஆட்சியில் பாரசீகம், மேதிய நாடுகளில் சிற்றரசர்களாய் விளங்கிய எழுவருள் ஒருவர். இவர் அகசவேருக்கு அடுத்து அவரது நாட்டில் அதிக அதிகாரம் உள்ளவர்களில் ஒருவர் *(எஸ்த 1:14)*.

**மலட்டுத்தன்மை** *(STERILITY)*

இறைவனின் மக்கள் பிள்ளைப் பேற்றுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கிறார்கள். இதில்தான், படைத்தவர் தொடக்கத்தில் விடுத்த அழைப்பு முழுமையாக நிறைவேறுகிறது. இதன் வழியாகத்தான் ஆபிரகாமின் சந்ததி கடற்கரை மணலைப் போல் பெருகியது. ஆனால், மலட்டுத் தன்மை படைத்தவரின் திட்டத்திற்கு முரண்பாடாக இருக்கிறது; இஸ்ராயேல் மக்கள் மலட்டுத் தன்மை எனும் தீமைக்கு எதிராக இடைவிடாது போராடுகிறார்கள். இதன் பொருளைச் சிறிது சிறிதாகக் கடவுள் வெளிப்படுத்துகிறார்.

I. **மலட்டுத்தன்மைக்கு எதிரான போராட்டம்:**

***1. மலட்டுத்தன்மை ஒரு தீமை:*** சாவு, துன்பம் போல் மலட்டுத் தன்மையும் ஒரு தீமையாகும். உண்மையிலே படைத்தவரின் கட்டளையான பலுகிப் பெருகி, பலன் தாருங்கள் என்பதற்கு முரணாகச் செல்வது போலத் தோன்றுகிறது மலட்டுத்தன்மை. ஒருவனின் பெயர் நிலைக்க வாரிசு இல்லையேல் அஃது இழிவுக்குரியதாகக் கருதப்பட்டது. நான் குழந்தையின்றி இறந்தால் தத்தெடுத்த ஊழியக்காரன் இருந்து என்ன பயன்? என ஆபிரகாம் கேட்கிறார் *(ஆதி 15:2)*. சாரா தனது கணவன் வழியாகப் பிள்ளை பெற்ற ஊழியக்காரியால் இழிவுபடுத்தப்படுகிறாள் *(16:4தொ)*. ராகேல் தன் கணவனிடம் எனக்குக் குழந்தை கொடு. இல்லையேல் நான் இறப்பேன் என்கிறாள் *(30:1)*. அதற்கு யாக்கோபு ''நான் என்ன கடவுளா? அவரல்லவா உனக்குத் தாய்மைப் பேறு தராதிருக்கிறார்'' என்றார் *(30:2)*. கடவுள் ஒருவரே மலட்டு வயிற்றைத் திறந்து வளமுள்ளதாக்க முடியும் *(29:31; 30:22)*.

***2. இத்தீமைக்கெதிராகப் போராடுவது அவசியம்:*** ராகேல் தன் மாமியார் சாரா போலவே தன் வேலைக்காரிகளில் ஒருத்தியைத் தன் கணவனுக்குத் தருவதன் மூலம் *(ஆதி 30:3-6)* கமுராபியின் சட்டமுறைப்படி குழந்தையைப் பெற்றுக்கொள்கிறாள். லேயா, நான்கு குழந்தைகளைப் பெற்றபின், தற்காலிக மலட்டுத்தன்மையை வெல்ல முயற்சி செய்கிறாள் *(30:9-13)*. இவ்வாறு மலட்டுத்தன்மையின் தீமையை மனிதன் வெற்றிகொள்ள முயல்வதைப் பார்க்கிறோம்.

***3. கடவுள், மலட்டுத்தன்மையை வென்றவர்:*** வாழ்வு மரபு மரபாகத் தொடர்வதைத் தடுக்கும் தடைகளைச் சட்டபூர்வமாகவோ, அதற்குப் புறம்பாகவோ வெற்றிகொள்ள முயன்ற வழிகளே இவை. முற்றிலும் மலட்டுத் தன்மையை வெற்றி கொள்வது கடவுளுடைய கரங்களிலேதான் இருக்கின்றது. அவரும் தான் வாக்களித்தபடி பிரமாணிக்கமாய் இருந்து அதனை நிறைவேற்றி *(யாத் 23:26; உப 7:14)*, ஒரு மாபெரும் மறைபொருளை அறிவிக்கிறார். மறைநூலின் திரு ஆசிரியர்கள் வேண்டுமென்றே முதுபெரும் தந்தையர்களில் முதல் மூவரின்

மனைவியரை மலட்டுத்தன்மை கொண்ட வர்களாகக் காட்டுகிறார்கள்: சாரா (ஆதி 11:30), ரபேக்கா (25:21), ராகேல் (29:31). பிறகே, அவர்கள் குழந்தைப் பேறு அடைகின்றனர் (காண்க. 13:2-5). ஈசாக்கின் பிறப்பைப் பற்றி வரும் நீண்ட விவரிப்பு இறைவன் தாமாகவே முன்வந்து தேர்ந்து கொள்ளுதலையும் அவரது அருளின் பலனையும் காட்டுகிறது. பவுல், ஒருவன் தன்னை மலடு என அறிக்கையிட்டு, கடவுள் பாலை நிலத்திலிருந்தும் உயிரை எழுப்ப முடியும் என விசுவாசத்தை எடுத்துச் சொல்லும்போது இறைவன் பலனளிக்கிறார் என, மேலே கூறிய கருத்திற்குப் பொருளளிக்கிறார். ஒருவன் மலடாகவே இறந்தாலும், விசுவாசம் அதையும் வென்று அங்கு வாழ்வைத் தரக்கூடியது (உரோ 4:18-24). மலடியான அன்னா இந்த இறைவனே முன்வந்து தேர்ந்து கொள்ளும் தன்மையினைப் புகழ்கிறாள் (1 சாமு 2:1-11). ''மலடி எழுவரைப் பெற்றெடுத்தாள், புதல்வர் பலரைப் பெற்றவளோ தனியள் ஆனாள்'' (2:5; காண்க. சங் 113:9).

II. **மலட்டுத்தன்மை ஏற்றுக்கொள்ளப்படல்:** கடவுள், மலட்டுப் பெண்களைச் சந்தித்து மனிதர் நினைப்பது போல மலட்டுத் தன்மை ஒரு தண்டனை அன்று என்று காட்டுகிறார். எரேமியா கன்னிமையைக் காக்க கடவுள் ஆணையிட்டு தன் வழியாக பாவநிலையில் உள்ள மக்களின் மலட்டுத் தன்மையைச் சுட்டிக்காட்ட விரும்புகிறார் (எரே 16). கைவிடப்பட்ட மணப்பெண் திரும்ப வரும்போது, ''பிள்ளைபெறா மலடியே மகிழ்ந்து பாடு; ஏனெனில், கைவிடப்பட்டவளின் பிள்ளைகள் கணவனோடு வாழ்பவளின் பிள்ளைகளைவிட ஏராளமானவர்கள்'' (எசா 54:1) என்று ஆண்டவர் பெயரால் அவளுக்கு இறைவாக்கினர் ஆறுதல் கூறுகிறார். தன் பாவத்தை அறிக்கையிட்டபோது எருசலேம் தான் கடவுளிடமிருந்து பிரிந்து நிற்பதையும் அதனால் மலட்டுத்தன்மையில் வாழ்வதையும் உணர்ந்து வியக்கும் முறையில் அதிகப் பலன் கொடுக்க தன்னையே தயாரிக்கின்றது. எனவே, நாடுகளைத் தனது குழந்தையாகக் கருதுகின்றது (காண். கலா 4:27).

சமூகத்திற்கு மலட்டுத் தன்மை என்ன பொருள் தந்ததோ, அது தனி மனிதர்கட்கும் பொருந்துவதாக அமைகிறது. இது மெதுவாகத்தான் புரிந்து கொள்ளப்படும். சட்டம், அதிகம் அன்பு செய்யப்படாத பெண்கள் சார்பாக இருந்தாலும் (உப 21:15 தொ), அண்ணகர்கள் பலி செலுத்துவதை அனுமதிக்கவில்லை (லேவி 21:20). அவர்களை வேசிக்குப் பிறந்தவர்களாகக் கருதுகிறது (உப 23:3தொ). அவர்களை மக்களிடமிருந்து முழுவதும் விலக்கி வைக்கிறது (23:2). நாடு கடத்தப்பட்ட பிறகுதான் உடல் சார்ந்த பலனளித்தலே உயர்ந்தது என்ற கருத்து மாற்றம் அடைகின்றது. ஒரு புதிய கொள்கை மலர்கிறது. ஓர் அண்ணகன் 'நான் வெறும் பட்ட மரம்' என்று கூறாதிருக்கக்கூடும். ஆண்டவர் கூறுவது இதுவே; என் உடன்படிக்கையை உறுதியாகப் பற்றிக்கொள்ளும் அண்ணகர்களுக்கு என் இல்லத்தில், என் சுற்றுச்சுவர்களுக்குள் நினைவுச்சின்னம் எழுப்புவேன். புதல்வர் புதல்வியரைவிடச் சிறந்ததொரு பெயரை வழங்குவேன். ஒருபோதும் அழியாத என்றுமுள பெயரை அவர்களுக்குச் சூட்டுவேன் (எசா 56:3 தொ). இவ்வாறு உடலளவில் பலன் தருவது தொடர்ந்து ஒருவனுக்கு அத்தியாவசியமானது அன்று என்பதை மனிதர் உணர்ந்து கொண்டனர்.

ஞானிகள் மத்தியிலும் இக்கருத்து தொடர்ந்து வளர்ந்தது. ''ஓராயிரம் பிள்ளைகளைவிட ஒரே பிள்ளை சிறந்ததாய் இருக்கலாம்; இறைப்பற்றில்லாத பிள்ளைகளைப் பெறுவதைவிட, பிள்ளையின்றி இறப்பது நலம்'' (சீரா 16:1-4). உண்மையான ஆன்மீகப் பலனுடைமையைக் கண்டுணர்ந்து அறிக்கையிடுகிறார்: ''தூய்மை இழக்காத, தவறான உடலுறவு கொள்ளாத மலடி பேறு பெற்றவள்; மனிதரைக் கடவுள் சந்திக்க வரும்போது அவள் கனி தருவாள். நெறி கெட்ட செயல்களைச் செய்யாத... அண்ணகனும் பேறு பெற்றோன்... ஒருவனுக்கு மகப்பேறு இல்லாவிடினும், நற்

பண்பு இருந்தால் அதுவே சிறந்தது. அதன் நினைவு என்றும் அழியாது'' (ஞான 3:13 தொ; 4:1). இவ்வாறு விசுவாசியின் பார்வை மண்ணின் பலனுடைமையில் மட்டும் பதிக்கப்படுவதில்லை. மாறாக, மனிதனைச் சாகாதவனாக்கும் நற்பண்புகள் விளைவிக்கும் பலன்களின் மேலும் அவனது பார்வை திரும்பியது. இது நிகழ மலட்டுத்தன்மை எனும் தீமை ஏற்றுக் கொள்ளப்பட்டு மாற்றி அமைக்கப்பட வேண்டியது அவசியமாயிற்று.

III. **பிள்ளைப்பேறற்றிருக்க அல்லது மலடாக இருக்க வலிய முன்வருதல்:** இப்தகுவின் மகள் தான் பிள்ளைப் பேறின்றி இறக்க நேரிடும் அவலத்தை நினைத்துத் தனது கன்னிமைக்காக அழுகிறாள் (நீதி 11:37 தொ). இறைப்பணிக்காக தான் இறுதிவரை கன்னிமையோடு வாழ்தலை எரேமியா வரவேற்கிறார் (எரே 16:1தொ). ஆனால், இது மக்களின் குற்றத்துக்குரிய மலட்டுத் தன்மையின் எதிர்மறைக்கூற்றினை அடையாளமாகவே உணர்த்துகிறது (காண்க. லூக் 23:29). அதே நேரத்தில் பழைய ஏற்பாடு பலன் தரும் கன்னிமை பற்றியும் பேசுகிறது. மரியாள் தனக்கு இயேசுவின் பிறப்பு முன்னறிவிக்கப்பட்டபோது பெற்ற அடையாளம், அவளது உறவினள் எலிசபெத்து வியத்தகு முறையில் கர்ப்பம் அடைந்ததே. ஏனெனில், மலடியாக இருந்து கடவுள் அவர்களைச் சந்தித்ததால் பிள்ளைப் பேறுடையவர்களாக மாறிய பெண்களின் வரிசையில் எலிசபெத்தம்மாளும் சேர்கிறார் (லூக் 1:7.25). அது மரியாளின் கன்னிமை கெடாத தாய்மையைச் சிறப்பாக அவளுக்குச் சுட்டிக் காட்டுகிறது. இவ்வாறு மரியாளோடு புதிய காலம் தொடங்கப்படுகிறது. அவள் தந்த கனியாகிய இயேசு கடவுளின் மகனாவார். அவரே பலனுடைமையின் நிறைவாவார்.

இந்தப் புதிய காலத்தில் ''இறையரசுக்காகத் தங்களையே அண்ணகராக்கிக் கொள்வதில்'' தன்னையே பின்பற்றுமாறு இயேசு பலரை அழைக்கிறார் (மத் 19:12). எது ஒரு காலத்தில் சாபமாக, இழிவாக, தீமையாக எண்ணப்பட்டதோ அதுவே பவுலால் ஓர் அருங்கொடையாகக் கருதப்படுகிறது (1 கொரி 7:7). ஆதியாகமம், ''மனிதன் தனிமையாய் இருப்பது நல்லதன்று'' என்கிறது (ஆதி 2:18). ஆனால், பவுலே ''மணமாகாத ஒருவன் தான் இருக்கும் நிலையில் இருந்து விடுவதே நல்லது (1 கொரி 7:26) என்று சில எச்சரிக்கைகளுக்கு உட்பட்டு, துணிவோடு அறிக்கையிடுகிறார். அதாவது திருமணமாகாமல், குழந்தைகளின்றி தனியாக இருப்பது நல்லது. இத்தகைய நிலை அடையும்போது தானே விரும்பி ஏற்றுக் கொள்ளும் மலட்டுத்தன்மை கன்னிமையில் நிறைவடையக்கூடும்.

**மலாக்கி** (MALACHI - எனது தூதர்)

இறைவாக்கு நூல்களுக்கு ஆசிரியர்களாகக் கருதப்படும் இறைவாக்கினர் இவர்களுள் கடைசியானவர். இவரைப் பற்றி எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை (மலா 1:1). இவரது பெயரே உறுதியானதன்று. அறிஞர் பலர் இப்பெயர் ஒரு பட்டம் அல்லது அடையாளப் பெயர் என்று கருதுகின்றனர் (காண்க. 3:1). பிற்கால ராபிகளின் பாரம்பரியம் இவர் எஸ்ரா அல்லது மொர்தக்காய் ஆக இருக்கலாம் என்று சுட்டுகிறது. காண்க. மலாக்கி திருநூல்.

**மலாக்கி திருநூல்**(MALACHI, BOOK OF)

**1. நூலின் பெயரும் ஆசிரியரும்:** இந்நூலின் ஆசிரியரது பெயர் தெரியவில்லை. மலாக்கி என்பது அவரது சொந்தப் பெயர் அன்று. 3:1-இலிருந்து இருசொற்கள் ஆசிரியரது பெயராகின்றன. இந்த எபிரேயச் சொல்லுக்கு ''என் தூதன்'' என்று பொருள் கூறலாம்.

சிறிய இறைவாக்கினர் தொகுப்பின் முடிவில் ''ஓர் இறைவாக்கு'' (செக் 9:1; 12:1; மலா 1:1) என்ற தலைப்போடு கூடிய மூன்று இறைவாக்குத் தொகுப்புகள் வருகின்றன. இக்கால விவிலிய அறிஞர்களின் பொதுவான கருத்துப்படி, இந்த மூன்று இறைவாக்குத் தொகுப்புகளும் பெயர் தெரியாத இறைவாக்கினர்களால் எழுதப்பட்ட

வையாகும். பிற்காலத்தில் இவை சிறிய இறைவாக்கினர் நூல்களின் தொகுப்புக்கு முடிவுரையாக அமைந்தன. காலப்போக்கில் சிறிய இறைவாக்கினரின் நூல்களைப் பன்னிரண்டாக அமைக்கும்போது, முதல் இரண்டு பகுதிகள் செக்கரியாத் திரு நூலோடு சேர்க்கப்பட்டன. இதை நாம் இரண்டாம் செக்கரியா என்றழைப்போம். மூன்றாவது பகுதி பன்னிரண்டாவது நூலாகப் பிரிக்கப்பட்டு, முன்னுரை விரிவாக்கப் பட்டு, மலாக்கியின் நூலாகக் கருதப்பட்டது *(1:1; 3:1)*. பிற்காலத்தில், இந்நூல் கிரேக்க மொழியில் மொழி பெயர்க்கப்பட்டபின், இப்பகுதியின் பெயர் தெரியாத ஆசிரியர் ''மலாக்கி'' என்று அழைக்கப்பட்டார்.

இந்த இறைவாக்கைத் தவிர, இந்த ஆசிரியரைப் பற்றி ஒன்றும் தெரிய வில்லை. மலாக்கி, தனது மூதாதையரின் பாரம்பரியங்களை (உபாகமம், எசேக்கி யேல்) நன்கு அறிந்தவர் என்று நூலின் வாயிலாக உணர்கிறோம். இவர் பெரும் நாட்டுப்பற்றுடையவர். பிற இனத்தவ ரிடையே நிலவிய ''அருவருக்கத்தக்க'' பாலின வழிபாட்டு முறைகள், கலப்பு மணம் போன்றவை யூத மக்களைக் கெடுத் துத் ''தீட்டுடையவர்''களாக்குவதால், அவற்றைப் பொறுத்துக் கொள்ளார், இடம் கொடார்; தனது சமயத்தின்பால் உறுதியான பற்றுறுதி கொண்டிருந்ததால் குருக்களின் அறியாமையையும், அவர்கள் சலுகை தேடு வதையும், பேராசை கொள்வதையும் கண்டு வாளா இரார்; வன்மையாகக் கண்டிப்பார். இவர் இறைவாக்கினர் செயல் முறையான ஆர்வமிக்கவராகத் தோன்றுகிறார்; மக்களது வாழ்க்கைப் பிரச்சனைகளை இறைவன் பெயரால் தீர்த்து வைக்கிறார். சமய காரி யங்களில் ஆர்வமற்ற மக்களை அவர்களது உறக்கத்திலிருந்து இவர் தமது போதனை யால் எழுப்புகிறார்; ''மரித்துக் கொண்டி ருந்த'' யூத சமூகத்தைத் தீர்ப்பு நாள் பற்றிய எக்காள ஒலியால் எழுப்புகிறார்.

**2. நூல் எழுதப்பட்ட காலம்:** மலாக்கி பணி செய்த காலத்தையும், நூல் எழுதப் பட்ட காலத்தையும் துல்லியமாகக் கணிக்க முடியாது; ஆனால், நூலில் காணப்படும் குறிப்புகளிலிருந்து ஓரளவு ஊகிக்கலாம். யூத சமூகம் ஏழ்மையும் பலவீனமும் மிக்கதாக விவரிக்கப்படுகிறது. ஒரு பாரசீக ஆளுநன் யூதாவை ஆண்டு வந்தான் *(1:8)*. இக்குறிப்பு நாடு கடத்தலுக்குப் பின் யூதாவில் பாரசீக ஆட்சி நிலவியதைச் சுட்டுகிறது. ஆலயங் கட்டி முடிக்கப்பட்டு (கி.மு. 516) வழிபாடு திரும்ப அமைக்கப் பட்டுள்ளதாகத் தெரிகிறது. அஃதோடு அர்ச்சகர்கள் வழிபாட்டில் சலிப்படையும் அளவுக்கு நீண்ட காலம் கடந்து விட்டது. ஆகவே, வழிபாட்டில் தவறுகளும் முறை யற்ற போக்கும் புகுந்திருந்தன. யூதர்கள் சிலர் தங்களது இளமைக்கால மனைவி யரை நீக்கி விட்டு *(2:14)*, அழகிய அன்னியப் பெண்களை மணந்தனர் (எஸ் *9-10*). பணத்தாசை பிடித்து ஏழைகளையும், எளியவர்களையும் அடிமைகளாக விற்றனர் (நெகே 5). பற்றுறுதியான விசுவாசிகளை விட, சமயப்பற்றற்றவர்களே நலம் பெறு கின்றனர் என்ற இடறலான முறைப்பாடு எழுந்தது (மலா *3:14-15*). ஆலய வழிபாட் டில் புறச்சடங்குகள் கூட சரியாக இல்லை. பலியிடப்பட்ட விலங்குகள் மாசுமறுவுடை யனவாய் இருந்தன போல், வழிபாடும் சீர்கெட்டிருந்தது *(1:7-8:1;* நெகே *13:15-25)*. சமயப்பற்று குறைந்தது; அமைதியின்மை யும் அநீதியும் நாட்டில் பரவியிருந்தன. இவற்றிற்கெல்லாம் தலைவர்களே சிறப் பாக, குருக்களே பொறுப்பாயிருந்தனர் (மலா *2:1-3—8:9;* எசே *10:15-16.18-25;* நெகே *13:4-13.22.28-31*). மக்களிடையே நிலவிய இந்தச் சமய, சமூகத் தீமைகளுக்கு எதிராக எஸ்ரா, நெகேமியா ஆகியோர் போராடினர். நூலில் காணப்படும் இந்தப் பிரச்சனைகள் கி.மு. 5-ஆம் நூற்றாண்டின் மத்தியில் யூதாவில் நிலவிய நிலையை விவரிக்கின்றன. இதனால் இந்நூல் ஓரளவு வரலாற்று முக்கியத்துவம் உடையதாகும். இந்த விவரங்கள் எஸ்ரா, நெகேமியா திருநூல்களிலிருந்து நாம் அறிவதை உறுதிப் படுத்துகின்றன, நிறைவு செய்கின்றன. எஸ்ரா, நெகேமியா ஆகியோரின் சீர்திருத்

தங்களுக்கு மக்களை மலாக்கி தனது போதனையால் தயாரித்தார் எனலாம்.

மலாக்கி உபாகமத்தைத் தழுவிய குருத்து வத்தைப் பற்றிப் பேசுகிறார். குருக்கள் லேவியர்கள் என்று குறிக்கப்படுகின்றனர். ஆனால், ஆரோனின் மரபு பற்றி எக்குறிப் பும் இல்லை. ஆகவே, குருக்கள் பற்றிய எஸ்ராவின் சட்டத்துக்கு முன் (நெகே 8) இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு கி.மு. *460-430*-க்கு இடைப்பட்ட காலத்தில் குறிப்பாக நெகேமியாவின் இரு தூதுகளுக் கிடையில், கி.மு. *430*-ஐ ஒட்டி மலாக்கி தனது இறைவாக்குப் பணியைச் செய்தி ருக்க வேண்டும்; இந்நூலும் எழுதப்பட்டி ருக்க வேண்டும்.

**3. இலக்கிய அமைப்பு:** இந்நூலில் காணப்படும் ஆறு இறைவாக்குகளும் கேள்வி-பதில் என்ற அமைப்பில் உள்ளன. ஒவ்வொரு இறைவாக்கிலும் இறைவாக்கி னர் முதலில் ஒரு செய்தியை அறிவிக்கிறார். இது செவிமடுப்பவர்களிடையே முறைப் பாட்டையும் கேள்வியையும் எழுப்புகின் றது. அவர்கள் சவால் விடுகின்றனர். அதற்கு இறைவாக்கினர் விடை அளிக்கி றார்; விவாதம் செய்கிறார்; தெளிவு அளிக்கி றார். இந்த விவாத முறை அமைப்பு இறைவாக்கினரது இலக்கிய யுக்தியுமாகும். இஃது அவர் காலத்து மக்களிடையே நிலவிய ஆர்வமற்ற, பகுத்தறிவுவாத சமயப் பற்றற்ற போக்கைப் பிரதிபலிக்கிறது. இஃது இறைவாக்கினர் தனது செய்தியை நேரடியாக எடுத்துக்கூற ஒரு வாய்ப்பு அளிக்கிறது. பொதுவாக இந்நூலின் எபி ரேய வாசகம் நன்கு பாதுகாக்கப்பட்டுள் ளது.

**4. நூலின் மூலம்:** குருவும் இறைவாக்கி னருமான எசேக்கியேலின் நூலுக்கும் ஐந்நூ லில் காணப்படும் குருக்கள் பாரம்பரியத் தின் இறுதிப் பதிப்புக்கும் இடையில் தொகுக்கப்பட்டுள்ள இறைவாக்கு நூலாக மலாக்கி அமைகிறது. மலாக்கியில் ஆலயம் சமய வாழ்வின் மையமாக அமைந்துள்ளது. இது நாடுகடத்தலுக்கு முன்வந்த இறைவாக் கினர்களின் போதனையிலிருந்து பெரிதும் வேறுபடுகிறது (எசா 1;எரே 7). மேலும், மலாக்கி எசேக்கியேலைத் தழுவி எழுதுகி றார் (*1:7-12*-ஐ எசே *44:16*-ஓடும், *1:11*-ஐ எசே *30:23*-ஓடும், *2:3*-ஐ எசே *5:10; 6:5; 12:15; 30:36*-ஓடும், *3:2*-ஐ எசே *44:27*-ஓடும் ஒப்பிடுக). குருக்களின் சட்டம் (லேவியர் திருநூல்) இன்னும் முழுமையுற்று அமுல் படுத்தப்படவில்லை. பிற்காலத்தில்தான் எஸ்ரா குருக்களின் சட்டத்தை (P) நாட்டின் சட்டமாக்கினார். ஆகவே, இதற்குமுன் பணிசெய்த மலாக்கி உபாகமச்சட்டத் தொகுப்பைத் தழுவி எழுதுகிறார். நாடு கடத்தப்பட்ட காலத்தில் இந்தச் சட்டம் யூத சமூக சமய வாழ்வில் ஆதிக்கம் செலுத்தியது (*1:9*-ஐ உப *10:7*-ஓடும், *1:12*-ஐ உப *7:8*-ஓடும், *2:1-4*-ஐ உப *18:1*-ஓடும், *2:6*-ஐ உப *33:10*-ஓடும், *3:22*-ஐ உப *4:10*-ஓடும் ஒப்பிடுக). நாடு கடத்தலுக்குப் பின், எஸ்ராவின் வலிய முயற்சியால் உபாகமச் சட்டம் முக்கியம் குறைந்து, குருக்கள் சட்டம் மக்களின் வாழ்வில் சிறப்புப் பெற்றது.

**5. நூலின் திட்ட அமைப்பு**

I. **தலைப்பு (*1:1*).**

II. இறைவாக்குகள் (*1:2-3-21*).

அ. *1:2-5*:-முதலாவது வாக்கு - ஏதோமி யரைப் புறக்கணித்து இஸ்ராயேல ரைத் தேர்ந்தெடுத்தலில் இறைவனது அன்பு.

ஆ. *1:6-2:9*:-இரண்டாவது வாக்கு - குருக் களின் பாவம்.

இ. *2:10-16*:-மூன்றாவது வாக்கு - மக்க ளின் பாவங்கள் கலப்பு மணமும், திருமண முறிவும்.

ஈ. *2:17-3:5*:-நான்காவது வாக்கு - யாவே நீதியின் தேவன்.

உ. *3:6-12*:-ஐந்தாவது வாக்கு - சடங்குக் குற்றங்கள்.

ஊ. *3:13-21:*-ஆறாவது வாக்கு - யாவே யின் நாள்; நீதிமான்களின் வெற்றி.

III. இரு பிற்சேர்க்கைகள் *(3:22-23)*

### 6. சிறப்புக் கருத்துக்கள்

***அ. இஸ்ராயேலின்பால் இறைவன் கொண்ட அன்பு:-*** தாயகம் திரும்பிய இஸ் ராயேலர் சிலரே. அவர்கள் எருசலேமைச் சுற்றிக் குடியேறினர். நிலம் நல்ல பலனை அளிக்கவில்லை. மழை உரியகாலத்தில் போதுமான அளவு பெய்யவில்லை. வெட் டுக்கிளிக் கொடுமை, வாடச்செய்யும் நோய், வறட்சி, பஞ்சம் ஆகியவற்றோடும், அண்டை நாட்டாரின் எதிர்ப்போடும் போராட வேண்டியிருந்தது. நாடுகடத்தப் பட்டுத் திரும்பிய காலத்து உற்சாகம் மறைந்து போயிற்று.

மக்கள் ஊக்கம் இழந்தனர், நம்பிக்கை இழந்தனர். பலர் சமயப்பற்று அற்றவர்களா கவும், குறைகூறுபவர்களாகவும் ஆயினர். பக்தியுள்ளவர்கள் கூட தங்கள் நிலை கண்டு திகைத்துப்போய் ஐயுறத் தொடங்கி னர். பகுத்தறிவு வாதம் வளர்ந்தது. பரம்ப ரையாக ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மைக ளைப் பற்றி மக்கள் கேள்வி எழுப்பினர்; 'எங்களுக்கு நீர் எவ்வாறு அன்பு காட்டி னீர்?'' *(1:2)*; ''நீதியின் இறைவன் எங்கே?'' *(2:17)*; ''ஆண்டவர் திருமுன் மனம் வருந்தி நடந்துகொள்வதால் நமக்கு என்ன பயன்?'' என்பன போன்ற கேள்விகளை எழுப்பினர்.

இஸ்ராயேலின்பால் இறைவன் காட்டிய அன்பு பற்றி ஐயுற்றவர்களுக்குச் சான்றோடு மலாக்கி பதில் அளிக்கிறார் *(1:2-5)*. இஸ்ரா யேலை இறைவன் தேர்ந்தெடுத்து, தனிச் சிறப்பான முறையில் அன்பு செய்கிறார் என்ற இறைவாக்குப் போதகம் உண்மையா னது அன்று என்று, அவர்களது அவல நிலை காட்டவில்லையா? இல்லை என்கி றார் மலாக்கி. இதற்குச் சான்றாக, யூதாவுக் குத் தென்கிழக்கிலுள்ள அண்டை நாடாகிய ஏதோமின் கேட்டைச் சுட்டிக் காட்டுகிறார். இஸ்ராயேல், ஏதோமியரின் மூதாதையரான யாக்கோபும், ஏசாவும் இரட்டைச் சகோதரர் கள். ஆகவே, இரு இனத்தவரும் நெருங் கிய இரத்த உறவுடையவர்கள். ஆயினும், கி.மு. 587-இல் பாபிலோனியர் எருச லேமை அழித்தபோது ஏதோமியர் அக்க ளித்தனர். யூதாவின் அழிவைப் பயன் படுத்தி அதன் ஒரு பகுதியைத் தங்கள் நாட்டோடு சேர்த்துக் கொண்டனர். யூதா வுக்கு இன்னும் பல கொடுமைகள் செய்த னர். இது சகோதரத் துரோகம் ஆகும். பிற்காலத்தில் நபத்தேய அராபியர்கள் ஏதோமின்மேல் படையெடுத்து அதைக் கைப்பற்றி அடிமைப்படுத்தினர்; மலை நாட்டிலிருந்து ஏதோமியரை விரட்டியடித்த னர். இவற்றை யாவேயே அனுமதித்தார்; ஏனெனில், ஏதோமியரை அவர் வெறுத் தார்; ஒபதியாவைப்போல் மலாக்கியும் நபத்தேயப் படையெடுப்பை, ஏதோமின் சகோதரத் துரோகத்திற்கும் மனிதத்தன்மை யின்மைக்கும் அளிக்கப்பட்ட இறைத்தீர்ப் பாகக் காண்கிறார். இதற்கு மாறாக, யாக் கோபுவை ஏசாவைவிட விரும்பித் தேர்ந்தெ டுத்து இறைவன் அன்பு செய்தது போல், இஸ்ராயேலரை, ஏதோமியரை விட விரும் பித் தேர்ந்தெடுத்து அன்பு செய்கிறார் இறைவன். நாடு கடத்தலுக்குப்பின்னும், இஸ்ராயேலரது நாட்டைத் திரும்ப அமைத் துத் தந்துள்ளார். இஃது இஸ்ராயேலர்பால் அவர் கொண்டுள்ள அன்பை எடுத்துக் காட்டுகிறது என்கிறார் மலாக்கி.

**6. ஆ. குருக்களும் - ஏற்கப்படாத பலிகளும்:** நாம் காணும் நிகழ்ச்சிகளிலும், வரலாற்று ஏடுகளிலும், மக்களின் வாழ்வி லும், நாடுகளின் வரலாற்றிலும் முறைமைக் கைம்மாறு நியதி (Law of Retribution) செயல்படுவதைப் பார்க்கறோம். காலப் போக்கில் தீய நாடுகள் (ஏதோம்) தீர்ப்பிலி ருந்து தப்புவதில்லை. ''தீச்செயல் புரிவோர் அனைவரும் ஆண்டவர் கண்ணோக்கில் நல்லவரே; அவரும் அவர்கள் மட்டில் பூரிப்படைகின்றனர்'' *(2:17)* என்பது உண்மை அன்று என்று நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஒரு சிலர் தங்கள் நடத் தைக்கு ஏற்ற கைம்மாறு பெறுவதில்லை என்பது, மனிதர் பெரும்பாலும் தங்கள்

நடத்தைத் தகுதிக்கு ஏற்றவாறே பெறுகின்றனர் என்ற உண்மையை இல்லையென்றாக்குவதில்லை. இதை மலாக்கி பலவாறு எடுத்துக்கூறுகிறார். சில துன்பங்கள் சமூகத்தினது பாவத்தால் விளைவதாகும் என்பது தெளிவான உண்மையாகும். நாம் முறையிடும் ஏமாற்றங்களுக்கும், செயல் குறைவுக்கும் பெரும்பாலும் நம்மையே நாம் குற்றம் கூறவேண்டும். தாங்கள் அனுபவித்த துன்பங்கள், ஏமாற்றங்கள் ஆகியவற்றை, இறைவனது நீதியைக் குறைகூறக் காரணமாக்கிய இஸ்ராயேலரைப் பார்த்து, குருக்களும் மக்களும் தங்கள் நடத்தைத் தகுதிக்கு ஏற்றவாறே பெறுகின்றனர் என்று மலாக்கி உறுதியாக அறிவிக்கிறார்.

இந்நூலின் நீண்ட பகுதி *(1:6-2:9)* குருக்களைக் கண்டனம் செய்கிறது. குருக்கள் பலி ஒப்புக்கொடுக்கவும் இறைவனது சித்தத்தை மக்களுக்கு விளக்கிக்காட்டவும் இறைவனால் நியமிக்கப்பட்ட பணியாளர்கள் ஆவர். மகன் தந்தைக்கு மதிப்புத்தர வேண்டும்; ஊழியன் தலைவனுக்கு மரியாதை செலுத்த வேண்டும். ஆனால், இவ்விரண்டையும் இறைவனுக்கு அளிக்க, குருக்கள் தவறினர். இறைவனுக்கு அளிக்கப்படும் பலிப்பொருட்கள் மாசு மறுவற்றதாக இருக்க வேண்டும் என்று சட்டம் கூறியது *(லேவி 22:20-22; உப 15:21; 17:1)*. மிக முதல்தரமானதையே இறைவனுக்கு ஒப்புக்கொடுக்க வேண்டும். ஆனால், அற்பப்புத்தியுடைய மக்கள் குறையுடைய பலிப்பொருட்களையே ஒப்புக்கொடுக்கக் கொண்டு வந்தனர். குருக்கள் இவற்றை நிராகரிக்காது, குருடான, முடமான, நோயுள்ள விலங்குகளை மக்களிடமிருந்து ஏற்று இறைவனுக்கு ஒப்புக்கொடுத்தனர். சடங்குகளை மனம்போன போக்கில் கவனமற்ற முறையில் செய்து, பீடத்தை இழிவாகக் கருதினர். இறைவனை அவமதித்தனர். இத்தகைய கீழ்த்தரமான இரண்டாம் தரப் பொருட்களை அளித்துப் பாரசீக ஆளுநனை அவமதிக்கத் துணிய மாட்டார்கள். இப்படிப்பட்ட காணிக்கைகளை அளித்து இறைவனிடமிருந்து சலுகை பெற எப்படித் துணிந்தனர்? இத்தகைய அருவருக்கத்தக்க காணிக்கைகளை அளித்து இறைவனை அவமதிப்பதைவிட, ஆலயத்தையே மூடி விடுவது எவ்வளவோ மேல்! எருசலேமின் குருக்கள் அளிக்கும் இந்த அவமதிப்புமிக்க ஏளனச் செய்கையை விட, உலகின் எல்லாப் பாகங்களிலும் பிற இனத்தவர் அளிக்கும் நேர்மைமிக்க வழிபாடு, மிகுந்த மேன்மை மிக்கதாகும். இந்தக் குருக்கள் ஆலயப்பணியை எழுச்சியற்ற, அயர்ச்சி தரும் வழக்கமாக மாற்றி வெறுத்து, குறையுள்ள பலிகளால் இறைவனை அவமதித்தனர். மாசு மறுவுள்ள பலிப்பொருட்களை ஒப்புக்கொடுத்து நேர்ச்சிக் கடனை நிறைவேற்றும் மனிதன் மேலும், இத்தகைய பழக்கத்தை ஊக்குவிக்கும் குருக்கள் மேலும் இறைவனது சாபம் விழும். குருக்கள் தங்கள் வழிமுறைகளைச் சீர்திருத்தினால் ஒழிய, இறைவன் அவர்களுக்குத் தமது ஆசிர்களையும், நன்மைகளையும் வழங்கார். அவர்கள் இழிவடைவர்; நிராகரிக்கப்படுவர்.

குருக்களின் மூதாதையரான லேவியரோடும் அவரது இனத்தவரோடும் செய்து கொண்ட உடன்படிக்கையின் அடிப்படையில் மலாக்கி எச்சரிக்கிறார். சிறப்பு மிக்க இந்த உடன்படிக்கையின்படி, லேவியர்களுக்கு இறைவன் அமைதியும் வாழ்வும் அளித்தார். அதற்குப்பதிலாக, அவர்கள் அச்சத்தோடும் பக்தியோடும் இறைவனுக்குப் பணிசெய்யக் கடமைப்பட்டிருந்தனர். கடந்த காலங்களில் குருக்கள் இந்தக் கடமையைப் பிரமாணிக்கமாய் நிறைவேற்றினர்; நேர்மையோடு வாழ்ந்தனர். தீமை அவர்கள் உதடுகளில் காணப்படவில்லை. இறைவனுக்கு அஞ்சி, மக்களுக்கு உண்மையான போதகத்தை அளித்தனர்; வழிகாட்டினர். அதனால் பலரைத் தீநெறியிலிருந்து மனம் திருப்பினர். குருக்கள் மெய்யறிவைக் காத்தனர். அவர்களிடமிருந்து திருச்சட்டத்தைக் கேட்க மக்கள் அவர்களை நாடினர். ஏனெனில், மக்களுக்கு ஆசிரியராய் இருக்கவும், ஆண்டவரது தூதராய் இருக்கவும் குருக்கள் அழைக்கப்பட்டிருந்தனர். இவ்

வாறு ஒழுகிய முந்தைய தலைமுறைகளைச் சேர்ந்த குருக்களைப் போல் அல்லாமல், மலாக்கி காலத்துக் குருக்கள் சட்டத்தைப் புறக்கணித்தனர்; மக்களுக்கு அறிவு புகட்டவும், அவர்களை நல்வழிப்படுத்தவும் தவறினர்; தங்களது தவறான போதகத்தால் பலரை நெறிதவறச் செய்தனர்; இறைவன் லேவியரோடு செய்த உடன்படிக்கையைத் தகர்த்தனர்; தங்களது ஓரவஞ்சனையால் அனைவரின் வெறுப்புக்கும் ஆளாகினர்.

லேவிய குருத்துவத்தைப் பற்றி மலாக்கி கூறுவது யாவும் கிறிஸ்தவத் திருச்சபையாகிய ''அரச குருத்துவத்திற்கும்,'' அதன் பரிசுத்த பணிக்கென அபிடேகம் பெற்ற எல்லாருக்கும் பொருந்தும். இறைவன் நம்மிடமிருந்து மாசுமறுவற்ற காணிக்கைகளைக் கோருகிறார். முதல் தரமானவற்றையே அவருக்கு நாம் அளிக்க வேண்டும்; அதற்கு அவர் தகுதியுடையவரே. நாம் ''ஞான இல்லமாக'' அமைக்கப்பட்டிருக்கிறோம்; அதில் ''இயேசு கிறிஸ்துவின் வழியாக இறைவனுக்குகந்த ஞானப்பலி நிறைவேற்றும் குருத்துவத் திருக்கூட்டமாக'' *(1 பேதுரு 2:5)* அமைந்திருக்கிறோம். ஆனால் நாம் செய்வது என்ன? மனப்போக்கில், தான்தோன்றித்தனமாக அமைக்கப்பட்டு, கருத்தாழமில்லாமல் வெறும் உணர்ச்சிகளுக்கு மட்டுமே முதன்மையளிக்கும் பாடல்கள், கவனமில்லாது அரைமனதோடு செய்யப்படும் போற்றுரைகள், பக்தியில்லாமல் அவசர அவசரமாக உளறப்படும் செபங்கள், எழுச்சியற்ற மறையுரைகள், குறைமிகுந்த காணிக்கைப் பொருட்கள், புறச்சடங்குகளை மட்டும் நுணுக்கமாக அனுசரிக்கும் சமய உணர்வற்ற, உள்ளார்வமற்ற சடங்குகள், அருட்சாதனங்கள், பொதுச் செபக்கூடங்கள், மனதை ஒருங்கே செலுத்தாது கவனத்தைச் சிதறடிக்கும் சமயச்செயல்கள், திருச்சபை நிர்ணயித்துள்ள சடங்கு முறைகளில் சலிப்பு அடைந்த தான்தோன்றித்தனமான செபங்கள், சடங்கு முறைகள்... இவற்றைப் பற்றியெல்லாம் நாம் என்ன கூறலாம்? நமது குற்றங்களுக்காக மட்டுமன்று, நமது குறையுள்ள ஞானப்பலிகளுக்காகவும் நாம் மனத்துக்கம் கொள்ள வேண்டும். இறைவனுக்கு நாம் அளிப்பவை முதல் தரமானதாயிருந்தாலும், அவை அவர் திருமுன் குறையுள்ளதாகவே இருக்கும். ஆனால், நாம் அளிப்பவை, நமக்கு முடிந்த அளவு முதல்தரமானவையாக இருந்தால், அவை இயேசுகிறிஸ்துவின் ஒரே ஒரு நிறைவான பலியால் இறைவனுக்கு ஏற்புடையதாகும்.

மலாக்கியின் கருத்துப்படி குருவின் முதன்மையான கடமை ''படைத்திரள் ஆண்டவரின் தூதராக'' இருப்பதாகும். இது குறிப்பிடத்தக்கதொன்றாகும். லேவியின் குருத்துவத்தின் இரட்டைக் கடமை பற்றிய பழங்கால விவரிப்பு, பலி ஒப்புக்கொடுத்தலுக்கு முன் இறை வார்த்தையைப் போதிப்பதற்கு முதன்மை அளிக்கிறது. ''அவர்கள் யாக்கோபுவுக்கு உமது நீதிச்சட்ட்த்தையும், இஸ்ராயேலுக்கு உமது கட்டளையையும் போதிப்பார்கள்; ஆண்டவரே! அவர்கள் உமக்குத் தூபம் காட்டி உம்முடைய பலிபீடத்தில் முழுத்தகனப் பலியை இடுவார்கள்'' *(உப 33:10)*. ஆகவே, இறைவாக்கினருக்கும் குருவுக்குமிடையே போலியான முரண்பாட்டை உண்டாக்குவது தவறாகும் என்பதை இதைவிடத் தெளிவாக எடுத்துக் காட்ட முடியாது. ஏனெனில், இருவரும் வெவ்வேறு விதத்தில் இறைவார்த்தைக்கு ஊழியம் புரிகின்றனர். புதிய உடன்படிக்கையில் இறைமக்களை வழிநடத்தவும், போற்றுரை, மன்றாட்டு ஆகிய ஞானப் பலிகளை ஒப்புக் கொடுக்கவும், நியமிக்கப்பட்டவர்கள் வார்த்தையின் பணிக்கு முதன்மை அளிக்க வேண்டும். ''ஏனெனில் அவர்கள் படைத்திரள் ஆண்டவரின் தூதர்கள்''.

**6. இ. உடன்படிக்கை உறவும் மணமுறிவும்:** யூதாவில் சிலர் உடன்படிக்கையை முறித்தனர்; அதன் முக்கிய கடமைகளைப் புறக்கணித்தனர். நாடு கடத்தப்பட்ட போதும், அதற்குப்பின்னும் அன்னியர் பலர் பாலஸ்தீனத்தில் குடியேறினர்; இஸ்ராயேலரோடு திருமண உறவு கொண்டனர். அதன் விளைவாகத் தோன்றிய கலப்பு

இனம் யூதசமூகத்தின் தூய்மைக்கு ஆபத்தாயிற்று. யூதர்கள் சிலர் தங்களது யூத மனைவியரைத் தள்ளிவிட்டு அன்னியப் பெண்களை மணந்தனர். இதில் இவர்கள் இஸ்ராயேலை இறைவனோடு பிணைத்த உடன்படிக்கையை மீறினர். ''நம் அனைவருக்கும் தந்தை ஒருவரன்றோ? நம்மைப் படைத்தவர் ஒரே இறைவனன்றோ? பின்னர் ஏன் நாம் ஒருவருக்கொருவர் நம்பிக்கைத் துரோகம் செய்கிறோம்? நம் மூதாதையரின் உடன்படிக்கையை ஏன் களங்கப் படுத்துகிறோம்?'' *(2:10)*. இறைவனைத் தங்கள் தந்தையாகவும், படைத்தவராகவும் கொண்டிருப்பதால், உடன்படிக்கைச் சமூகத்தின் அங்கத்தினர்கள் ஒரே குடும்பத்தின் சகோதர சகோதரிகளாவர். யூத விசுவாசத்தைச் சேர்ந்த ஆண்கள், அன்னியக் கடவுள்களை வணங்கும் பெண்களை மணப்பது, உடன்படிக்கை உறவைத் துரோகமாக முறிப்பதாகும். எருசலேமைச் சுற்றிப் பிற இனப் பெண்கள் இருப்பது, புனிதத் தலத்தைத் தீட்டுப்படுத்துவதாகும்.

''நம் அனைவருக்கும் தந்தை ஒருவரன்றோ?'' என்று இறைவாக்கினர் கேட்கும் போது, யூத சமூகத்தை மட்டுமே கருத்தில் கொண்டு கேட்கிறார். ''இறைவன் யாவர்க்கும் தந்தை; ஆகவே, மனிதர் அனைவரும் சகோதரர்கள்'' என்று மலாக்கி அறிவிப்பதாகக் கூற முடியாது. ஆயினும், இஸ்ராயேலர்களை மட்டுமே வரையறுக்கும் குறுகிய நோக்கிலிருந்து இயேசுவால் விடுவிக்கப்பட்டு மலாக்கியின் இந்த உட்கருத்து மனிதர்களையும், நாடுகளையும் மன உறவு கொள்ளச் செய்து தொடர்ந்து இயங்குகிறது. எல்லா மனிதரும் ஒரே இறைவனால் படைக்கப்பட்டவர்கள். இயேசுவில் கொள்ளும் விசுவாசத்தால் எல்லோரும் ஒரே தந்தையின் பிள்ளைகளாக முடியும். இக்காரணத்திற்காக எல்லா மனிதரோடும் பிரமாணிக்கமுள்ள அன்போடு வாழவும் நடக்கவும் நம் அனைவருக்கும் கடமையுண்டு.

ஆண்டவரோடு செய்த உடன்படிக்கையையும் அதன் விளைவான சகோதர உறவையும் முறித்த யூதர்கள் திருமண உடன்படிக்கையையும் முறித்தனர் என்று மலாக்கி தொடர்ந்து குற்றம் சாட்டுகிறார். மணமுறிவு, தள்ளிவைக்கப்பட்ட மனைவிக்குச் செய்யும் துரோகமாகும்; சுதந்தரமாக, மனமுவந்து ஏற்றுக்கொண்ட கடமையை மரத்துப்போன விதத்தில் புறக்கணிப்பதாகும்; பற்றுறுதியற்ற செயலாகும். இறைவனால் சாட்சி கூறப்பட்டு, ஒரு மனிதனுக்கும் அவன் இளம் வயது மனைவிக்கும் இடையேயுள்ள திருமண உடன்படிக்கையை, இன்ப நாட்டத்திற்காகவோ, சுய நலத்திற்காகவோ தள்ளிவைக்கலாகாது. பிற இனப் பெண்களால் கவரப்பட்டு, ஒருவன் தான் இளமையில் மணந்து கொண்டவளை, பிள்ளைகளைப் பெற்றளித்து இறைவனது நோக்கை நிறைவேற்றிய மனைவியை, அவள் முதியவள் ஆகிவிட்டாள் - என்பதற்காகத் தள்ளி விடக்கூடாது. மணமுறிவையும் அதனால் விளையும் கொடுமைகளையும் இறைவன் வெறுக்கிறார். மணமுறிவு செய்து அன்னியப் பெண்களை மணப்பவன், ஆலயத்தையே தீட்டுப்படுத்துகிறான்; ஆண்டவரது பீடத்தைக் கண்ணீராலும், அழுகையாலும், பெருமூச்சுகளாலும் நிரப்புகிறான். ஆகவே, ''மணமுறிவை நான் வெறுக்கிறேன்'' என்று யாவே அறிவிக்கிறார். இவ்வாறு திருமணத்தின் புனிதத்தை மீண்டும் நிலை நாட்ட முனைகிறார் மலாக்கி. இதில் அவர், திருமணம், அதன் முறிவு பற்றிய இயேசுவின் போதனைக்கு முன்னோடியாக அமைகிறார். மோசே சட்டம் மணமுறிவை அனுமதித்தது *(உப 24:1-4)*. அது மனித பலவீனத்திற்கு அளிக்கப்பட்ட சலுகையாகும் என்று இயேசு போதித்தார். திருமணத்தை நிறுவிய இறைவன், படைப்பின் தொடக்கத்திலிருந்தே, திருமணத்தில் ஆணுக்கும் பெண்ணுக்குமுள்ள உறவை நிலையானதாகவும், முறிக்கமுடியாததாகவும் அமைத்தார். ''ஆகவே இறைவன் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருக்கட்டும்'' *(மாற் 10:9)* என்ற இயேசுவின் கூற்றில் திருமணம் பற்றிய இறைவாக்கினரது போதகம் நிறைவுபெறுகிறது.

**6. ஈ ''எந்த அளவையால் அளப்பீர்களோ....'':** மக்களின் அற்பத்தனத்தைக் கண்டனம் செய்யும்போது, மலாக்கி அடிப்படை முக்கியத்துவமுடைய ஓர் உண்மையையும் எடுத்துக் கூறுகிறார். ஐந்தாவது இறைவாக்கில் *(3:6-12)*, இறைவனது பிரமாணிக்கத்தை யூதர்களுடைய பிரமாணிக்கத்தோடு ஒப்பிட்டு வேறுபடுத்துகிறார். இஸ்ராயேல் எப்போதும் பிரமாணிக்கம் தவறியிருக்கின்றது. ஆலயப்பணியைப் பராமரிக்கச் சட்டம் கோரிய தசம பாக வரியை *(எண் 18:21)* முழுமையாகவோ, ஒரு பகுதியையோ கட்டாது இறைவனைக் கொள்ளையிட்டுள்ளனர் யூதமக்கள். இப்பாவத்திற்காக மனம் வருந்தும்படி மலாக்கி மக்களை அழைக்கிறார். தசமபாகவரியைக் கட்டாததற்கு, மக்கள் தங்கள் வறுமை நிலையை ஒரு சாக்காகக் காட்டலாம். ஆனால், அதை இறைவனுக்கு அளிக்கும் உள்ளார்ந்த அவமதிப்பாக மலாக்கி விளக்குகிறார். ஆகாயைப்போல், இறைவனது காரியங்களுக்கு முதன்மை அளிக்காமைக்கும் சமூகத்தின் பொருளாதார அவலநிலைக்கும் தொடர்பு இருப்பதாக மலாக்கி கருதுகிறார். சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து இறைவனுக்குச் செய்ய வேண்டிய கடமையை முழுமையாக நிறைவேற்றினால் இறைவன் அபரிமிதமாக மழை பொழியச் செய்வார்; பயிரை அழிக்கும் வெட்டுக் கிளிகளை அழிப்பார்; நிலத்தை மிகுதியாகப் பலன் கொடுக்கச் செய்வார். நாம் எவ்விதம் விதைக்கிறோமோ அவ்விதமே அறுப்போம். அற்பத்தனமாய், நாம் கொடுக்க வேண்டியதைக் கொடுக்காமல் இருப்பதால், நாமே வறுமையில் உழல்வோம். தாராளமாய்க் கொடுப்பவர்கள் அதனால் தவிர்க்க முடியாதபடி பெரும் செல்வந்தர்கள் ஆவர். இது போன்ற கருத்துக்கள் எபிரேய ஞானநூல்களில் அடிக்கடி எடுத்துக் கூறப்படுகின்றன *(பழ 11:24-25)*. இவை இயேசுவின் போதகத்திலும் *(மத் 7:2)*, பவுலின் போதகத்திலும் *(2 கொரி 9:6)* இடம் பெறுகின்றன. கிறிஸ்தவர்கள் என்ற முறையில் இறைவனுக்குக் காணிக்கை கொடுப்பது பற்றி எந்தச் சட்டமும் இல்லை; வழிகாட்டும் ஆலோசனைகள் உண்டு. ஆண்டவருடைய நாளிலும், அதாவது, ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும் நமது வருவாய்க்கு ஏற்பக் கொடுக்க வேண்டும். இந்தக் காணிக்கை கிறிஸ்துவப் பணியைத் தொடர்ந்து நடத்தவும், பிறரது தேவைகளை நிறைவு செய்யவும், உலகில் கிறிஸ்துவத் தூதை வளரச் செய்யவும் பயன்படும். விவரிப்புக்கு அப்பாற்பட்ட கொடையாக கிறிஸ்துவைப் பெற்றதற்கு நன்றியாகவே இக்காணிக்கைகளைக் கொடுக்க வேண்டும்.

**6. உ. எவ்விடத்திலும் தூய பலி:** குருக்களைக் கண்டனம் செய்யும் இரண்டாம் இறைவாக்கில், மனிதஇனம் முழுவதும் மீட்படையும் என்ற கோட்பாட்டைப் பழைய ஏற்பாட்டிலேயே இதுவரை கண்டிராத முறையில் தெளிவாக மலாக்கி எடுத்துக்கூறுகிறார். எருசலேமில் யூதசமூகம் ஒப்புக்கொடுத்த வழிபாட்டில் அக்கறையற்ற குருக்கள் குறையுள்ள பொருட்களை ஒப்புக்கொடுத்தனர். இந்த வழிபாடு இறைவனுக்கு ஏற்புடையதாக இருக்கவில்லை. இதற்கு மாறாக, ''கதிரவன் தோன்றும் திசை தொடங்கி மறையும் திசைவரை, பிறஇனத்தாரிடையே என் திருப்பெயர் புகழ்மிக்கது. எவ்விடத்திலும் என் திருப்பெயருக்குத் தூபமும், காணிக்கையும் செலுத்தப்படுகின்றன. ஏனெனில், பிற இனத்தாரிடையே என் திருப்பெயர் புகழ் மிக்கதே'' *(மலா 1:11)*. இந்தக் கூற்று, உலகெங்கும் நிறைவேறும் கிறிஸ்துவ வழிபாட்டை, சிறப்பாக நற்கருணை வழிபாட்டை, முன்னறிவிப்பதாக விளக்கவுரையாளர்கள் பலர் கூறுவர்.

மலாக்கி தனது காலத்து நிலையையே விவரிக்கிறார் என்றும், சிதறிக்கிடந்த யூதர்களிடையே நிலவிய வழிபாட்டையே இக்கூற்று குறிக்கிறது என்றும் சிலர் கூறுவர். ஆனால், இவ்வழிபாடு உலகெல்லாம் பரவியதன்று; பலிவழிபாடும் அன்று. மலாக்கியின் காலத்தில் எல்லாம் வல்ல ''விண்ணக இறைவனின்'' வழிபாடு பாரசீகப் பேரரசு முழுவதும் பரவியிருந்தது.

இக்கூற்றில், இறைவாக்கினர், உலகெல்லாம் பிற இனத்தவர் ஒப்புக் கொடுத்த பலி வழிபாட்டைக் குறிக்கிறார். எல்லா நேர்மையான, மேன்மை மிக்க வழிபாடும் எந்தப் பெயரிலும் எந்தக் கடவுளுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டாலும், அஃது உண்மையில் உண்மையான ஒரே இறைவனுக்கே ஒப்புக்கொடுக்கப்படுகிறது. அவ்விதமே இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது *(அ.ப. 10:34-35)*. இறைவனது பெயரை அறியாதபோதும் மனிதர் ஒரே ஓர் இறைவனையே வழிபடக்கூடும் என்ற உண்மை வாழ்வில் பரந்த விளைவுகளை உண்டாக்க வல்லது. இது கிறிஸ்து வழியாகத்தான், எந்த வழிபாடும் இறைவனுக்கு ஏற்புடையதாகும் என்ற உண்மைக்கு எதிரானது என்று கருதக்கூடாது. ஏனெனில், கிறிஸ்துவத்திற்குப் புறம்பான அமைப்புகளில் மேன்மையானதெல்லாம், - சிந்தனையோ, நடத்தையோ, வழிபாடோ -எதுவானாலும் அஃது அவர்கள் மேலும், அவர்களிடையேயும் கிறிஸ்து ஆற்றும் செயலின் விளைவாகும். எந்த வழிபாடும், அது கிறிஸ்துவுக்கு முன்னோ, பிறகோ ஒப்புக்கொடுக்கப்பட்டாலும், உலகின் மீட்பராகிய கிறிஸ்துவின் பலியின் நிமித்தம் இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

**6. ஊ. ஆண்டவரின் நாள்:** மலாக்கி, ஆறாவது இறைவாக்கில் அளிக்கும் ஆண்டவரது நாள் பற்றிய போதகத்தில் இறைவனது நீதியை மறுக்கும் சமயப்பற்று அற்றவர்களுக்கும், அவரது அன்பை ஐயுறும் விசுவாசிகளுக்கும் பதில் அளிக்கிறார். அந்தக் காலத் தவறுகளைச் சரி செய்ய இறைவன் வந்து கொண்டிருக்கிறார். ஆலயத்தையும், குருத்துவத்தையும் தூய்மைப் படுத்தி அவரது வழியைத் தயாரிக்க தமது தூதரை முன்னதாகவே அனுப்புவார். இறைமக்கள் குடும்பம் சரி செய்யப்பட்டபின், அவர்களிடையே யாவே மகிமையோடு தங்குவார். நடுவராகிய இறைவன் திடீரென்றுதோன்றி தீமை செய்பவர்களையெல்லாம் அழிப்பார். இங்கு இறைவாக்கினர் குறிப்பிடும் பாவங்கள் பெரும்பாலும் சமூகப்பாவங்களாகும். அவற்றில் எளியவர்களையும், உதவியற்றவர்களையும் கொடுமைப்படுத்துதலும் அடங்கும். மலாக்கி, சமயச் சடங்குக் குற்றங்களில் மட்டுமன்று, மனிதன் மனிதனுக்குக் காட்டும் மனிதத்தன்மையின்மையிலும், சமூகக் குற்றங்களிலும் அக்கறை காட்டினார். தீயவர்கள் தழைத்தோங்குவது போலும், நல்லவர்களின் மன்றாட்டுகள் கேட்கப்படவில்லை போலும், பக்திக்குரிய சன்மானம் கிடைக்கவில்லை போலும் தோன்றினாலும், இறைவன் தமக்கு அஞ்சுவோரை மறப்பதில்லை. அவர் வானகத்தில் ஒரு நினைவுநூல் வைத்துள்ளார். அதில் நேர்மையானவர்களின் பெயரும் செயல்களும் எழுதப்பட்டிருக்கும். அவர் வரும் நாளில் நேர்மையுள்ளவர்களைத் தீயவர்களிடமிருந்து பிரித்து, தமது உரிமைச் சொத்தாக எடுத்துக்கொள்வார். தீயவர்களுக்கு அந்நாள் சுட்டெரிக்கும் நெருப்பாக இருக்கும். விசுவாசிகளுக்கு அந்நாள் குணமளிக்கும், உயிர் அளிக்கும் சூரிய உதயம் போல் இருக்கும். இந்தக் கதிரவன் எழுச்சி, கிறிஸ்தவர்களுக்கு உண்மையான ''நேர்மையின் சூரியன்'' ஆன கிறிஸ்துவுக்கு ஓர் அடையாளமாகும். அவர் தமது வருகையாலும், வெளிப்பாட்டாலும் அஞ்சி, தம்மை வழிபடுபவர்களுக்குக் குணமளிப்பார்; ஒளி கொண்டு வருவார். இந்த உலக வாழ்வைக் கடந்து வரவிருக்கும் உலகின் வாழ்வை நாம் நோக்காவிடில், இந்த வாழ்வுக்குப் பொருளே இல்லை. இந்த உலகிலேயே ஆண்டவரின் நாள் உதயமாவதையும், மெசியாக் காலத்தையும் மலாக்கி எதிர்பார்த்தாலும், விசுவாசிகளின் பெயரும் செயல்களும் எழுதப்பட்டிருக்கும் ''நினைவு நூல்'' என்ற அவரது கருத்து, நித்திய வாழ்வு பற்றிய கிறிஸ்துவ நம்பிக்கையின் முன்னோடியாக உள்ளது.

ஆண்டவரது நாள் பற்றிய மலாக்கியாவின் விவரிப்பு, பிற இறைவாக்கினர்களில் காணப்படாத கூறு ஒன்றைக் கொண்டுள்ளது. ஆண்டவரது வருகைக்கு மக்களைத் தயாரிக்க, ஆண்டவர் ஒரு தூதனை முன்ன

தாகவே அனுப்புவார். மலாக்கியாவுக்கு இந்த முன்னோடி ஆண்டவரின் தூதராவார். ஆனால், பன்னிரு சிறிய இறைவாக்கினர் களைச் சேர்த்துப் பதிப்பித்த பிற்காலப் பதிப்பாசிரியர்கள் இத்தூதர் எலியா என்று அடையாளம் குறிப்பிட்டனர் *(3:23)*. இந்த எலியா மக்களை இறைவன்பால் திருப்பு வார். சில நூற்றாண்டுகளுக்குப்பின் வாக் களிக்கப்பட்ட இறைவாக்கினர் திருமுழுக்கு யோவான் ''எலியாவின் ஆவியோடும், வல்லமையோடும்'' *(லூக் 1:17)* யூதாவின் பாலைப்பகுதியில் தோன்றினார்; எல்லா வகை மக்களையும் உண்மையான மனத்துக் கம் கொள்ளத்தூண்டினார் *(மத் 3:1-10; 11:14; 17:7-15)*. உலகின் பாவங்களைப் போக்குபவராக இயேசுவை அடையாளம் காட்டுவதில் யோவானது வாழ்வும் தூதும் உச்சநிலை அடைகின்றன. யோவான் ஒரு முன்னோடி; மக்களைத் தூண்டும் குரலாக இருப்பதில் மன நிறைவு அடைந்தார் *(யோவா 1:6-8; 3:27-28)*. அவரது முன் னோடியான இறைவாக்கினர் மலாக்கியைப் போல், இறைவனால் ''எனது ஊழியன்'' என்று ஏற்றுக் கொள்ளப்படுவதே அவருக் குப் போதுமானதாகும். மலா *3:23* என்ற வாசகம் திருமுழுக்கு யோவானில் நிறை வேறுகிறது என்று இயேசுவே தெளிவாகக் கூறியுள்ளார் *(மத் 11:14; 17:9-13; லூக் 1:17-76; 7:27; மாற் 1:2)*.

**7. இக்காலத்திற்கு:** மலாக்கி இறைவாக் கினரும், குருவும் ஆவார். இறைவாக்கை யும் வழிபாட்டு மரபையும் முரணானவை களாக வேறுபடுத்துவது ஒரு காலத்தில் வழக்கமாக இருந்தது. ஆமோஸ், ஓசேயா, மீக்கா, எசாயா, எரேமியா போன்ற இறை வாக்கினர்களை வழிபாட்டை எதிர்ப்பவர் களாகக் காட்டுவது மரபு. பாரசீகப் பேரர சின் காலத்து இறைவாக்கினர்கள் தங்கள் முன்னோரின் செய்தியை இவ்வாறு புரிந்து கொள்ளவில்லை; இவ்வாறு விளக்கவும் இல்லை. ஆகாயும், செக்கரியாவும் ஆலயத்தை மீண்டும் கட்டுவதில் ஆர்வம் காட்டினர். மலாக்கி ஆலயத்தில் குற்றமற்ற பலியை ஒப்புக்கொடுப்பதில் அக்கறை காட்டினார். முந்தைய இறைவாக்கினர் களில் சிறப்புப் பெறும் ஒழுக்க வாழ்வு பற்றிய போதகம், பிற்கால இறைவாக்கினர் களில் இல்லாமல் இல்லை. மலாக்கி ஆலயத்தையும், அதன் வழிபாட்டில் கடைப்பிடிக்க வேண்டிய முறையையும், தரத்தையும் பற்றி முதன்மையான அக்கறை கொண்டார். அவர் ஆலயப்பணியின் இறை வாக்கினர் ஆவார். ஆலயம், பலி ஆகியவை பற்றிய அவரது போதகம் இக்காலக் குருக்களுக்கும், மக்களுக்கும் பொருந்தும். இதை ஏற்கெனவே சுட்டிக் காட்டியுள்ளோம்.

## மலை (MOUNTAIN)

I. பெரும்பான்மையான மதங்களில் மலைகள், அவற்றினுடைய உயரம் மற்றும் அவற்றைச் சூழ்ந்துள்ள மறைபொருளான தன்மை ஆகியவற்றின் காரணமாக, விண் ணுலகும் மண்ணுலகும் சந்திக்கின்ற இடமாகக் கருதப்படுகின்றன. உலகம் படைக்கப்பட்ட, தெய்வங்கள் உறைகின்ற, அல்லது மீட்பு வருகின்ற புனித மலை யினைத் தாங்கள் கொண்டுள்ளதாகக் கரு தும் நாடுகள் பல உள்ளன. விவிலிய மானது இந்த நம்பிக்கைகளைக் கொண் டிருந்தாலும் அவற்றைத் தூய்மைப்படுத்து கிறது. பழைய ஏற்பாட்டில் படைக்கப் பட்ட பொருள்கள் பலவற்றில் ஒன்றாக மட்டுமே மலைகள் உள்ளன. இவ்வாறாக யாவே, சந்தேகத்திற்கிடமின்றி, ''மலைக ளுடைய இறைவனாகவும்'' (ஏல்-சத்தாய் என்பதன் பொருள்), பள்ளத்தாக்குகளின் இறைவனாகவும் உள்ளார் *(1 அர 20:23.28)*. கிறிஸ்துவின் வருகையோடு சீயோன் உலக மையமாக இருப்பது முடிவுறுகிறது *(எசே 38:12)*. ஏனெனில், இந்த மலை யிலோ, அந்த மலையிலோ தொழப் படுவதை இறைவன் இனி விரும்ப வில்லை; மாறாக, ஆவியிலும் உண்மையி லும் வழிபட விரும்புகிறார் *(யோவா 4:20-24)*.

II. **இறைவனுடைய படைப்பு:**

**1. நிலைத்தன்மை:** மனிதர்கள் கடந்து செல்கின்றனர்; ஆனால், மலைகள் நிலைத்

திருக்கின்றன. இந்த அனுபவம், மலைகள் ஏன் இறைவனுடைய பிரமாணிக்கமுள்ள நீதியின் அடையாளமாக உள்ளன என் பதைக் கண்டுணர்வதை எளிதாக்குகிறது (சங் 36:7). மூதாதையருக்கு நன்கு அறிமுக மாகியிருந்தவை ''என்றுமுள மலைகள்'' என்று அழைக்கப்பட்டன (ஆதி 49:26; உப 33:15). ஆனால், போற்றத்தக்கவையாயி னும், இக்காரணத்திற்காக இந்த எளிய படைப்புகள் இறைத்தன்மை உடையன வாக மாற்றப்படக் கூடாது. ''மலைகள் தோன்றுமுன்பே... ஊழி, ஊழிக்காலமாக உள்ள இறைவன் நீரே!'' (சங் 90:2; காண்க. பழ 8:25). ''மலைகளை நிறைகோலாலும், குன்றுகளைத் தராசாலும் நிறுத்தவரே'' (எசா 40:12) படைத்தவர். அவரே ''தமது ஆற்றலால் மலைகளை உறுதிப்படுத்துகின் றார்'' (சங் 65:6). தனது விருப்பத்திற்கேற்ப அவர் அவற்றை அகற்றுவார் (யோபு 9:5). இந்த வல்லமையினை மிகவும் தன்னடக்க முள்ள விசுவாசிக்கு அளிக்கிறார் (மத் 17:20; காண்க. 1 கொரி 13:2). ''மலைகளே, குன்றுகளே, ஆண்டவரைப் போற்றுங்கள்'' என்று அனைத்து மனிதரும் பறைசாற்றட் டும் (தானி 3:75; சங் 148:9).

**2. ஆற்றல்:** பேரிடர்களால் சூறையாடப் பெற்ற சமவெளிகளினின்று உயர்த்தப்பெற் றுள்ள நிலையில் மலையானது துன்ப வேளையில் லோத்திற்கு அடைக்கலம் அளித்தது (ஆதி 19:17). பறவையைப் போலத் தப்பிப்பறந்தோட விரும்பிய துன் புறுத்தப்பட்ட நீதிமான்களை மீண்டும் அது கவர்ந்தது (சங் 11:1; காண்க. எசே 7:16; மத் 24:16). ஆனால், நீதிமான் தனது கண்களை மலைகளை நோக்கி உயர்த்து வதில் கவனமாயிருக்க வேண்டும். ஏனெ னில், விண்ணையும், மண்ணையும் படைத்த யாவேயிடமிருந்து மட்டுமே, அவர் உதவியை அடைவார் (சங் 12:1-2; காண்க. எரே 3:23). இல்லாவிடில், ஒரு படைக்கப்பட்ட பொருளின்மீது நம்பிக்கை வைப்பார்; ஏனெனில், ஆற்றலின் அடை யாளமாக மட்டுமே இருக்கின்ற அஃது (தானி 2:35.45) உலகை ஆள்கின்ற இறு மாப்பு மிக்க பாபிலோனைப்போன்று அடையாளமாகிவிடும். இறுமாப்பின் அனைத்துப் பெருமையும் தாழ்த்தப்பட வேண்டும். இறைவன் மட்டுமே உயர்த்தப் பட வேண்டும் (எசா 2:12-15).

**3. இறைவன் முன்னிலையில்:** ''தாபோர் மலையும் எர்மோன் மலையும் உம் பெய ரைக் களிப்புடன் புகழ்கின்றன'' (சங் 89:12). ஆண்டவர் உலகைச் சந்திக்கும் போது, ''மலைகளே.. களிப்புற்று முழங் குங்கள்'' (எசா 44:23); அவரது ஆற்றல் மிக்க செயல்களின் முன் மகிழ்ச்சியால் துள்ளட்டும் (சங் 29:6); குன்றுகளிலெல் லாம் புதிய இரசம் வழிந்தோடட்டும் (ஆமோ 9:13); மலைகளின் உச்சிகளில் கதிர்கள் அசைந்தாடட்டும் (சங் 72:16). ஆனால், சமப்படுத்தப்படுவதையும் அவை எதிர்நோக்கியிருக்கட்டும் (எசா 45:2; 49:11; பாரூ 5:7; லூக் 3:5). பின்னர், சினத்தின் நாளில் அடைக்கலம் தரும் பாதுகாப்பான இடமாகத் தங்களை அளிக்க அவைகளால் இயலுமா (ஓசே 10:8; லூக் 21:21; 23:30; திருவெளி 6:14-16)? ''நான் மலைகளைப் பார்த்தேன், இதோ அவை அதிர்ந்தன; குன்றுகள் அனைத்தும் அசைந்தன'' (எரே 4:24). மலைகளை அவர் தொட அவை புகை கக்கும் (சங் 104:32; உப 32:22). அவரது பாதங்களின்கீழ் (மீக் 1:4), அவரது திருமுன் (எசா 63:19), அவை மெழுகு போல உருகின (சங் 97:5), அவை நடுங்கின (நீதி 5:5); ''என்றுமுள மலைகள் பிள வுண்டு போயின'' (அப 3:6), சரிந்தன (எசே 38:20), மற்றும் காலத்தின் இறுதியில் இருந்த இடம் தெரியாமல் போய்விடும் (திருவெளி 6:14; 16:20).

III. **சலுகை பெற்ற மலைகள்:** மற்றப் படைப் புக்களைப் போல முழுமாற்றத்திற்கெனக் குறிக்கப்பட்டிருந்தாலும், சில குறிப்பிட்ட மலைகள் நிலையான மகிமைக்குரிய பங்கிற்கென ஒதுக்கப்பட்டுள்ளன.

**1. மற்றவற்றிற்கு அப்பாற்பட்ட வெளிப் பாட்டின் இடம்:** சீனாயில் இறைவனுடைய மலையாகிய ஓரேபானது மோசே அழைக்

கப்பட்ட புனித நிலமாகும் (யாத் 3:1.5). தமது சட்டத்தின் கொடையினாலும் (24:12-18), தனது மகிமையின் பிரசன்னத்தினாலும் (24:16) இறைவன் அதனைப் புனிதப்படுத்தினார். எலியா சென்றதும் அதே இடமே (1 அர 19:8); இறைவன் தன்னுடன் பேசுவதற்குச் செவி மடுக்க அவர் விரும்பினார்; மலை உச்சியில் இளைப்பாறிச் செபிக்க விரும்பிய இறைவாக்கினர்களால் சந்தேகத்திற்கிடமின்றி எதிர்பார்க்கப்பட்ட முடிவு இது. சீனாய் மலையில் மோசேயும் (யாத் 17:9-10), கர்மேல் மலையில் எலியாவும், எலிசாவும் (1 அர 18:42; 2 அர 1:9; 4:25) இவ்வாறே செயல்பட்டனர்.

**2. வழிபாட்டினுடைய சிறப்பிடம்:** தரைக்கு மேலாக உயர்த்தப்பெற்றுள்ள மலையானது ஆண்டவருடனான சந்திப்பை அனுமதித்தது. பலியானது நிறைவேற்றப்பட வேண்டியது சிறிய, உயர்த்தப்பட்ட இடம் (பீடம்) அல்லவா (யாத் 24:4-5)? கெரிசிம் மற்றும் எபால் மலைகளின் மீதிருந்து ஆசிகளும், சாபங்களும் உரைக்கப்பட வேண்டும் (உப 11:29; யோசு 8:30-35). அவ்வாறே, பெலிஸ்தியரிடமிருந்து திரும்பப்பெற்ற பேழையும் ஒரு மலையின்மேல் வைக்கப்பட்டது (1 சாமு 7:1). வணக்கத்திற்குரிய மரபின் உரிமையாளர்கள் என்ற அளவில் கிதியோன் (நீதி 6:26), சாமுவேல் (1 சாமு 9:12), சாலமோன் (1 அர 3:4), மற்றும் எலியா (18:19-20) ஆகிய அனைவரும் மக்களுடன் உயர்ந்த இடங்களில் பலி நிறைவேற்றினர் (1 அர 3:2).

இவ்வாறாக ஏற்றுக்கொள்ளப்பட்ட கானானியச் சடங்குகள் ஒரே உண்மையான இறைவானகிய யாவேக்கு ஈடுபடுத்தப்பட்டன. ஆனால், இந்த உயர்ந்த இடங்களின் எண்ணிக்கை பெருகியபோது அது சிலை வழிபாட்டின் அபாயத்தையும் கொணர்ந்தது (எரே 2:20; 3:23). இதைத் தடுக்க ஓரிடத்திலான வழிபாட்டு மையம் உருவாயிற்று (உப 12:2-9). இது வானங்களை அளப்பதற்கென மனிதனால் கட்டப்படாத ஒரு மலை (ஆதி 11); கரடுமுரடான மலைகளினின்று இறைவன் தேர்ந்தெடுத்த விண்ணோக்கி பெருமையோடு உயரும் ஒரு மலை (சங் 43:2-3; 68:17) இங்குள்ளது. இப்போது அனைத்து மலைகளும் கடலுக்குள் கவிழ்ந்தாலும் (சங் 45:3), சீயோனானது அடைக்கலத்தின் உறுதியான இடமாகவும் (யோவே 3:5), எளிதில் அசைக்க முடியாததாகவும் உள்ளது (சங் 125:1).

''நான் விண்ணுலகிற்கு ஏறிச்செல்வேன்; இறைவனின் விண்மீன்களுக்கும் மேலாக, உயரத்தில் என் அரியணையை ஏற்படுத்துவேன்; மேகத்திரள் மேல் ஏறி உன்னதமானவருக்கு ஒப்பாவேன்'' என்று மனிதன் கூறக்கூடாது (எச 14:13-14). ஏனெனில், பாதாளத்தின் ஆழத்திற்குள் அவன் விழுவான். ''சீயோனில் தன் திருமலையில் இறைவனே தனது அரசை ஏற்படுத்தினார்'' (சங் 2:6), மோரியா மலையில் ஆபிரகாம் தனது மகனைப் பலியிடத் துணிந்த, அதே இடத்தில் ஏற்படுத்தினார் (2 நாள் 3:1; காண்க. ஆதி 22:2). எண்ணற்ற இறை உதவிகளின் நினைவுகளில் ஆழ்ந்து தோய்வுற்றவர்களாக, மலைகளின் புகழ்ப்பாடல்களைப் பாடியவர்களாக (சங் 120-134) மக்கள் ஏற வேண்டிய புனித மலையாகும் இது (சங் 24:3). ஆண்டவருடன் தனது எஞ்சிய நாட்களில் வாழ வேண்டிய நம்பிக்கையுடன் (சங் 15:1;74:2), விசுவாசிகள் இம்மலைக்குத் தொடர்ந்து திரும்பி வரவேண்டும் (சங் 43:3).

**3. காலத்தின் முடிவில்:** அப்போது இறைவனாலேயே திருநிலைப்படுத்தப்பட்ட இந்த இடங்களுக்கு என்ன நேரும்? இறுதிக்கால இலக்கியத்தில் இனி, சீனாய்க்கு இடமில்லை. முன்னர் மனிதருக்கு வாழ்வின் வார்த்தைகள் அளிக்கப்பட்டதும் (அ.ப. 7:38), தனது உண்மையான புனித இடமாகிய சீயோனை அடைவதற்கென இறைவன் புறப்பட்டதுமாக (சங் 68:16-18) இருந்த நிலையில் இவ்விடம் இனி இல்லை.

கடந்த காலத்தில் இழந்துபோன சீயோனுக்கு முரண்பட்ட நிலையில், சீயோன் மலையானது இறுதிக்கால மதிப்பை மீண்டும் பெற்றுள்ளது. ''இறுதி நாள்களில் ஆண்டவரின் திருக்கோயில் அமைந்துள்ள மலை எல்லா மலைகளுக்கும் உயர்ந்ததாய் நிலை நிறுத்தப்படும்; எல்லாக் குன்றுகளுக்கும் மேலாய் உயர்த்தப்படும். மக்களினங்கள் யாவும் அதை நோக்கி, சாரை சாரையாய் வருவார்கள். 'புறப்படுங்கள், ஆண்டவரின் மலைக்குச் செல்வோம்' (எசா 2:2-3). அதுவே புனித மலையாகும் (11:9; தானி 9:16). அங்கு யாவே அரசனாவார் (எசா 24:23). இறுதியாக ஒன்று சேர்ந்த சிதறிப்போன மக்களுக்காகவும் (27:13; 66:20), அன்னியருக்கும் கூட (56:6-7) அங்கு அவர் பெரிய விருந்தொன்றைத் தயாரிப்பார் (25:6-10). நிலமானது சமவெளியாக மாற்றப்படும். எருசலேம் உயர்த்தப்பட்டு தன்னுடைய முதன்மையின் இடத்தை மீண்டும் அடையும் (செப் 14:10). அனைத்து மக்களும் எப்போதும் சீயோனை நோக்கிச் செல்ல வேண்டியிருக்கும் (14:16-18).

IV. **கிறிஸ்துவும் மலைகளும்:**

***1. இயேசுவின் வாழ்வில் மலைகள்:*** ஒத்த நற்செய்திகளால் இவை பல்வேறுபட்ட விதங்களில் கருதப்படுகின்றன. செபம் செய்ய இயேசு மலைகளை நோக்கி விலகிச் சென்றார் என்றும் (மத் 14:23 இணை; லூக் 6:12; 9:28), பாலைவனம் போன்ற தனிமையை நாடியும் அங்குச் சென்றார் என்றும் (லூக் 15:4-ஐ, மத் 18:12-ஒடு ஒப்பிடுக) காட்டுவதில் அவர்கள் கருத்தொற்றுமை கொண்டுள்ளனர். இவற்றில் வசைக்குரிய சப்தம் மற்றும் ஆரவாரம் ஆகியவற்றிலிருந்தான இடைக்கால ஓய்வைத் தேடினார் என்பதில் சந்தேகமில்லை (யோவா 6:15). மேலும், சீயோன் மலையை ஒதுக்குவதிலும், ஒலிவ மலைக்கும் உருமாற்ற மலைக்கும் தனிமைச் சிறப்பளிப்பதிலும் ஒத்த நற்செய்தியாளர்கள் ஒத்திருக்கின்றனர். ஆனால், பின் குறிப்பிடப்பட்ட இரண்டிற்கும் வேறுபட்ட முன்னோக்கு அளிக்கப்படுகின்றது.

மத்தேயுவைப் பொறுத்த மட்டில் மீட்பருடைய வெளிப்பாடுகளைக் காணுவதற்கான சலுகை பெற்றவை கலிலேயாவின் மலைகளே. இயேசுவினுடைய வாழ்வானது இரு மலைக்காட்சிகளுக்கிடையில் அமைக்கப்பட்டுள்ளது. மலையில்தான், தொடக்கத்தில் உலகம் முழுவதன் மீதான வல்லமையைச் சாத்தான் இயேசுவிற்கு அளிக்க முன் வருகிறான் (மத் 4:8). வாழ்வின் முடிவில் இயேசு தந்தையிடமிருந்து தான் பெற்ற வல்லமையைத் தனது சீடருக்கு அளிக்கின்றார் (28:16). இந்த இரண்டு காட்சிகளுக்கும் இடையில் மக்களுக்குப் போதிப்பதிலும் (5:1), அவர்களது துயரங்களைக் குணமாக்குவதிலும், வியத்தகு அப்பத்தை அவர்களுக்கு அளிப்பதிலும் (15:29...), இறுதியாக உருமாறித் தோன்றுவதிலும் (17:1-2) ''ஒரு மலையில்'' இயேசுவை நாம் மீண்டும் காண்கிறோம். ஆனால், இம்மலைகளில் ஒன்றும் ஒரு குறிப்பிட்ட பெயரைக் கொண்டிருக்கவில்லை. இம்மலைகளில் ஏதாவதொன்றில் தனது கூடாரத்தை நிறுவுகின்ற சோதனைக்கு எதிராக சீடனுக்கு முன்னெச்சரிக்கை விடுக்கப்படுவதாக இஃது உள்ளது. அவரது மாட்சிமையின் கண்கூடான சாட்சிகளிடையில் நினைவு மட்டுமே உயிருள்ளதாக எஞ்சியிருக்க வேண்டும். இறைவாக்குகள் புனித மலையில் நிறைவேற்றப்படுகின்றன (2 பேதுரு 1:16-19). இயேசு தனது செய்தியை இவ்வுலகிலுள்ள எந்த ஓரிடத்துடனும் இணைக்காமல் தன் ஆட்தன்மையிலேயே வெளிப்படுத்துகிறார்.

லூக்காவைப் பொறுத்தமட்டில், எருசலேமை நோக்கிச் செல்வதானது, சிலுவையின் மூலமாக மகிமையை நோக்கிச் செல்லும் பாதையினைக் குறித்துக்காட்டுகிறது. அஃது இனியும் பக்தியுள்ள ஓர் இஸ்ராயேலன் மேற்கொள்கிற ஒரு திருப்பயணம் மட்டுமன்று (லூக் 2:42); மாறாக, இயேசு வாழ்வின் ஒரு காலப்பகுதியை உள்ளடக்கும் உன்னதமான ''முன்னோக்கிச் செல்லுதலாகும்'' (9:51-21:38; காண்க.

18:31). இயேசுவின் போதனைகளைக் கேட்டு, அவருடைய புதுமைகளைக் கண்ட கலிலேய மலைகளை ஒதுக்கியவராய் லூக்கா ஒலிவ மலையின் மேல் தனது கவனத்தை நிலைப்படுத்துகிறார். தன்னுடைய இறுதிக்கால உரையை இயேசு அங்கே அறிவித்தார் என்ற உண்மையை அவர் சுட்டிக்காட்டவில்லை (மத் 24:3=மாற் 13:3). ஆனால், அவரைப் பொறுத்த மட்டில் எருசலேமை நோக்கிச் செல்வதானது அங்கேயே முடிவடைகிறது (லூக் 19:29). வெளிப்பாட்டு மரபின்படி (செக் 14:3-4), அங்கிருந்து உலகை வெல்ல ஆண்டவர் புறப்பட வேண்டியுள்ளது. அங்கு அவர் மகிமையுடன் போற்றப்பட்டாலும் (லூக் 19:37), அங்குதான் அவர் வேதனையால் துன்புற்றார் (22:39); இறுதியாக அங்கிருந்து தான் விண்ணிற்கு எழுந்தருள்கிறார் (அ.ப. 1:12). ஒரு குறிப்பிட்ட மலையானது மீண்டும் குறிப்பிடப்படுகிறதெனின், அது விண்ணகத்தை நோக்கி நமது கண்களை உயர்த்துவதற்காகவும், அல்லது சற்று மேம்பட்ட விதத்தில் யோவானின் இறையியல் படி மண்ணுலகிற்கு மேலாக உயர்த்தப்பட்டவரை நோக்க கண்களை உயர்த்துவதற்கும் (யோவா 3:13-14; 19:37) என்று தெரிகிறது (19:37).

*2. புதிய ஏற்பாட்டின் பிறநூல்கள்:* இவை பழைய ஏற்பாட்டினுடைய சலுகைக்குரிய மலைகளைப்பற்றிய ஒருமித்த போதனை எதையும் அளிக்கவில்லை. பவுலின் தர்க்க வாதங்களில் சீனாய் மலையானது அடிமைத்தனத்தின் வீட்டிற்கு ஒப்பிடப்படுகிறது (கலா 4:24-26). மனிதன் இப்போது நெருங்கக்கூடிய சீயோனை நோக்கிய இயக்கமானது அது முதல் தொடர்கிறது (எபி 12:18.22). அதே பொருளில் திருவெளிப்பாடானது, காலத்தின் இறுதியில் சீயோன் மலையில் அமைக்கப்பட்டிருப்பதாக செம்மறியைக் காட்டுகிறது (திருவெளி 14:1). ஆயினும், ஒரு வேறுபாடு உள்ளது. வெளிப்பாட்டு ஆசிரியர் இப்புனித இடத்தைப் பற்றி உரியதொரு திறனாய்வினை மேற்கொள்கிறார். மலையானது எசக்கியேலின் காட்சியில் உள்ளது போன்று, நகரானது கட்டப்படுவது போல் தோன்றுகின்ற இடமாக இனியும் உருவகிக்கப்படவில்லை (எசே 40:2). விண்ணக எருசலேமானது விண்ணிலிருந்து இறங்கி வருவதை எதிர்பார்க்கும் ஒரு வாயில் காவலாகவே இஃது உள்ளது (திருவெளி 21:10).

## மலை ஆடு (MOUNTAIN SHEEP)

காட்டு வெள்ளாடு என்பது ஆட்டின் இயல்புடைய ஒரு வகையான ஐரோப்பிய வரைமான் (CHAMOIS). இது சற்று வெறித் தன்மை கொண்டதாக இருக்கும். இக் காட்டு வெள்ளாடு இன்னும் மத்தியதரைக் கடல் பகுதியில் வாழ்ந்து வருவதாகச் சொல்லப்படுகிறது. நற்செய்தித் தொடர்புடைய பாலஸ்தீன நாட்டிலோ, அதன் அருகிலுள்ள நாட்டிலோ இக்காட்டு வெள்ளாடு வாழ்ந்ததாக நம்பப்படுகிறது. இஃது உண்ண அனுமதிக்கப்பட்ட விலங்குகளில் ஒன்று (உப14:5).

## மலை நாடு (HILL COUNTRY)

மலை, குன்று என்பனவற்றைக் குறிக்க எபிரேயச் சொற்கள் பல பயன்பட்டுள்ளன. இவை பொதுவாக உயரிய திணை நிலத்தைக் குறிப்பதற்கும் (ஆதி 49:26), குறிப்பிட்டு மேட்டு நிலத்தைக் குறிப்பதற்கும் (யாத் 17:9), கானானியர் வழிபாடு நடத்திய இயற்கையாக அமைந்த குன்றுகளைக் குறிப்பதற்கும் (உப12:2; 1 அர 14:23) பயன் படுத்தப்பட்டுள்ளன. மலையைக் குறிக்கும் எபிரேயச் சொல் மலை என்றே மொழி பெயர்க்கப்பட்டாலும் (ஆதி 31:54; யாத் 3:11), குன்று என்ற பொருளிலும் பயன்படுத்தப்படலாம் (நீதி 16:3; சங் 2:6; 121:1). குன்று என்ற சொல் 2 அர 5:24; எசா 32:14; மீக் 4:8 ஆகியவற்றில் கையாளப்பட்டுள்ளது. புதிய ஏற்பாட்டில் மத் 5:14; லூக் 3:5; 4:29; 9:37; 23:30-இல் வரும் கிரேக்கச் சொற்கள் குன்று என்றே மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

விவிலியத்தில் மலைநாடு என்பது, பாலஸ்தீனத்தின் மையத்தில் படிப்படியாக உயர்ந்து மேடுபள்ளங்கள் மிகுந்த மலைத் தொடர்ப் பகுதியாகும். இது கடற்கரைச் சமவெளிக்கும் யோர்தான் பள்ளத்தாக்கிற்கும் இடையில் அமைந்துள்ளது. இதன் தென் எல்லையாக நெகேபின் பாலைவனமும், வட எல்லையாகக் கலிலேயா நிலப் பரப்பும் அமைந்துள்ளன.

கானானைக் கைப்பற்றிய வரலாற்றில் இந்த மலைநாடு முக்கிய பங்கு பெறுகிறது. மோசே, யோசுவாவின் தலைமைக் காலத்தில் கானானை வேவு பார்க்கச் சென்ற இஸ்ராயேலர்கள் இந்த மலைத்தொடர் வழியாகத்தான் சென்றனர். மோசேயின் ஆலோசனைக்கு எதிராக இம்மலை நாடு வழியாக வடக்கு நோக்கி நடந்த மடத் துணிச்சலான தாக்குதல், கானானியர் மற்றும் அமலேக்கியரால் ஓர்மாவில் படு தோல்வி அடைந்தது *(எண் 14:44-45)*. கானானைக் கைப்பற்றிய வரலாற்றின் பல கட்டங்களில் இந்த மலைநாடு குறிக்கப் படுகின்றது. ஆயி மற்றும் எரிகோ போர் களுக்குமுன், யோசுவாவும் இஸ்ராயேலரும் இந்த மலை நாட்டிலிருந்து இறங்கி வந்துதான் யோர்தான் ஆற்றைக் கடந்தனர் *(யோசு 3:14-17)*. பிற்பாடு, எருசலேமைச் சேர்ந்த அதோனிசெதேக்கு என்ற அரசனின் தலைமையில் ஐந்து கானானிய அரசர்களின் கூட்டணியின் தாக்குதலிலிருந்து கிபயோனியர்களைப் பாதுகாக்க யோசுவாவின் தலைமையில் இம்மலைப்பகுதி வழியாக இஸ்ராயேலர் தெற்கு நோக்கி முன்னேறித்தாக்க வழிவகுத்தது. எலிசபெத்து அவளது மூத்த வயதில் கருவுற்று இருப்பதை அறிந்த மரியாள், யூதேயா மலைநாட்டிலுள்ள ஓர் ஊருக்கு விரைந்து சென்று எலிசபெத்தை வாழ்த்தினாள் *(லூக் 1:39)*.

**மலைப்பொழிவு** *(SERMON ON THE MOUNT)*

**மத்தேயுவும் லூக்காவும்:** மத்தேயுவின் நற்செய்தியில் இயேசுவின் ஐந்து அறவுரைகள் உள்ளன *(மத் 5-7; 10; 13; 18; 24-25)*. இவற்றில் மிக நீண்டதான மத் 5-7 என்ற பகுதி மலைப்பொழிவு என்றழைக்கப் படும். ஏனெனில், இவ்வுரையின் பின்னணியாக ஒரு மலை அமைந்துள்ளது. ''இயேசு மக்கள் திரளைக் கண்டு மலைமீது ஏறி அமர, அவருடைய சீடர் அவரருகே வந்தனர். அவர் திருவாய் மலர்ந்தருளிக் கற்பித்தவை'' *(5:1-2)*. இதற்கொத்த உரை லூக்காவிலும் உண்டு *(லூக் 6:20-49)*. ஆனால், மிகக் குறுகியது. இது சமவெளிப் பொழிவு என்றழைக்கப்படும். ஏனெனில் ''இயேசு (அப்போஸ்தலர் மற்றும் சீடர்களுடன் மலையிலிருந்து) இறங்கி வந்து சமவெளியான ஓரிடத்தில் நின்றார் (மக்கள் கூட்டம் பெருந்திரளாய் இருந்தது). இயேசு சீடர்மீது தம் பார்வையைப் பதித்துக் கூறியவை'' *(லூக் 6:17.20)*. மத்தேயுவின் மலைப்பொழிவு நீண்டதாகவும், மூன்று அதிகாரங்களையும் 111 வாக்குகளையும் கொண்டதாகவும் உள்ளது. லூக்காவின் சமவெளிப் பொழிவு குறுகியது; ஓர் அதிகாரம் கூட இல்லை; 30 வாக்குகளை மட்டுமே கொண்டது.

நீளம், இடம் ஆகியவற்றைப் பொறுத்த மட்டும் வேறுபாடுகள் இருந்தாலும் இரண்டிற்குமிடையே அதிக ஒற்றுமையுண்டு. இரண்டும் பேறுகளோடு தொடங்குகின்றன; இருவகை அடித்தளங்கள் பற்றிய உவமையோடு முடிகின்றன. லூக்கா கொண்டிருக்கும் அனைத்தும், கேடுகள் பற்றிய பகுதியைத் தவிர *(லூக் 6:24-26)*, மத்தேயுவில் காணப்படும். இரண்டிலும் இயேசு தம் சீடர்களின் வாழ்க்கை முறை பற்றிப் பேசுகிறார். அயலாருக்கு, பகைவர்களுக்கும் கூட அன்பு காட்டுதலை வலியுறுத்துகிறார். இரண்டும் இயேசுவின் பொதுப்பணி வாழ்வின் தொடக்கத்தில் இடம் பெறுகின்றன. இரண்டின் முடிவிலும் செந்தூரியன் அல்லது நூற்றுவர் தலைவனின் ஊழியன் குணமடைதல் குறிக்கப்படுகின்றது.

***2. மத்தேயுவும் மாற்கும்:*** மாற்கு எழுதிய நற்செய்தியில் காணப்படும் இடவரிசை மற்றும் காலவரிசையை மத்தேயு பெருமளவில் பயன்படுத்துகிறார். மாற்கின் திட்ட

அமைப்பை மத்தேயு தனது நூலின் அடிப் படையாகப் பயன்படுத்துகிறார்; ஆனால், தனது நூலின் முதல் பகுதியில் வரும் பகுதிகளை அமைப்பதில் சுதந்தரத்துடன் செயல்படுகிறார்; சில பகுதிகளை விரி வாக்குகிறார்; சில புதிய பகுதிகளைச் சேர்க்கிறார்; சில பகுதிகளைத் தொகுத்துத் தருகிறார்.

மத் *4:12-11:1* என்ற பகுதியில், மாற்கில் காணப்படும் வரிசை முறையில் மத்தேயு அடிப்படை மாற்றம் செய்கிறார். மாற்கின் வரிசை முறையில், மத்தேயு மலைப் பொழிவை எங்குப் புகுத்தினார் என்று கூற முடியுமா? இதுபற்றி ஆய்வாளர்களிடையே கருத்தொற்றுமை இல்லை. இதுபற்றி மாற் *1:16-20*-ஐ மத் *4:18-22*-ஓடும், மாற் *1:21*-ஐ மத் *5:2*-ஓடும், மாற் *1:22*-ஐ மத் *7:28-29*-ஓடும், மாற் *1:40-45*-ஐ மத் *8:1-4*-ஓடும் ஒப்பிட்டு, மத்தேயு மலைப் பொழிவை மாற் *1:21* (மத் *5:2*)-க்கும் மாற் *1:22* (மத் *7:28-29*)-க்கும் இடையில் புகுத்தி னார் என்பது பொருத்தமுடைய கருத்தா கும். இதனால் மலைப்பொழிவுக்கு முன் வரும் பகுதியில் மாற்கில் பின் வருவன வற்றை மத்தேயு கையாளவில்லை என்று கூறமுடியாது (காண்க. மாற் *3:7-13*; மத் *4:23-25*). மாற் 1-இல் நிகழ்ச்சியுரைப் பகுதிகளை (கலிலேயாவுக்குத் திரும்புதல், போதிக்கத் தொடங்குதல், முதல் நான்கு சீடர்களை அழைத்தல், கலிலேயாவில் பணி) மத்தேயு திருத்தி அமைத்து, இயேசு சோதிக்கப்பட்ட நிகழ்ச்சியுரைக்குப்பின் (மத் *4:1-11*) மலைப்பொழிவுக்கு நீண்ட அறிமுகம் அளிக்கிறார் (*4:12-25*).

**3. மூலங்கள்:** நற்செய்திகள் இறுதி வடி வம் எடுக்குமுன், அவை வாய்மொழிப் பாரம்பரியங்களாகவும், பின் சிறுசிறு தொகுப்புகளாகவும் வளர்ந்து, இறுதி வடி வம் எடுத்தன. இந்த வளர்ச்சி ஒத்தமை நற்செய்திகளில் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கவல்லன. மத்தேயு மற்றும் லூக்கா நற்செய்திகளுக்கு மாற்கின் நற்செய்தி ஒரு மூலமாக அமைந்தது என்று ஏற்றுக்கொள்ளப்படும். நற்செய்திகளின் வளர்ச்சியில், மத்தேயுவுக்கும் லூக்காவுக் கும் பொதுவான, குறிப்பாக இயேசுவின் வாக்குகள் அடங்கிய ஒரு தொகுப்பு இருந்திருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுவர். இதன் கிரேக்க வடிவம் கிறிஸ்து உயிர்த்தபின் இருபது ஆண்டுகளுக்குப்பின் தோன்றியிருக்கலாம். இதன் அரமேயிக்கு வடிவம் இதற்கு முன்னே தொகுக்கப்பட் டிருக்கலாம். இந்தத் தொகுப்பு Q-என்ற எழுத்தால் குறிக்கப்படும். மத்தேயுவுக்கே உரிய பகுதிகள் M-தொகுப்பு என்றும், லூக்காவுக்கே உரிய பகுதிகள் L-தொகுப்பு என்றும் குறிக்கப்படும்.

இவற்றில் மத்தேயு தனது மலைப்பொழி வுப் பகுதியைத் திட்டமிட்டுத் தொகுத்த போது Q-தொகுப்பையும், M-தொகுப்பை யும் பயன்படுத்தியிருக்கிறார் எனலாம்.

**4. மலைப்பொழிவின் திட்டம்:** இறையர சையும், இறையரசில் புகும் தம் சீடர்கள் கொண்டிருக்க வேண்டிய தகுதிகளையும் இயேசு இம்மலைப்பொழிவில் அறிவிக்கி றார். ''மறைநூல் அறிஞர், பரிசேயர் ஆகியோரின் நெறியைவிட உங்கள் நெறி சிறந்திருக்கட்டும்'' (*5:20*). இப்பொழிவைப் பலரும் பலவாறு திட்டம் செய்ய முயன் றுள்ளனர். அவற்றுள் பின்வருவது பொருத் தமாக உள்ளது எனலாம். மத்தேயுவின் மலைப்பொழிவின் திட்டம் லூக்காவின் சமவெளிப்பொழிவோடு ஒத்தமைத்துக் காட்டப்படுகிறது. மத்தேயுவில் காணப் படும் பல கருத்துக்கள் லூக்காவில் பிற இடங்களில் காணப்படுகின்றன.

| தலைப்புகள் | மத்தேயு | லூக்கா | லூக்கா |
|---|---|---|---|
| I. நிகழ்ச்சியுரைத் தொடக்கம் | *5:1-2* | *6:20அ* | |
| II. மலைப்பொழிவு | *(5:3-7:27)* | | |
| 1. முன்னுரை | *(5:3-16)* | | |
| பேறுகள் | *5:3-12* | *6:20ஆ-23* | |
| (கேடுகள்) | | | *6:24-26* |

| | | | |
|---|---|---|---|
| உப்பும் ஒளியும் | 5:13.14-16 | | 14:34-35; 11:13; |
| 2. மத்திய பகுதி | (5:17-7:12) | | |
| அ) எதிர்நிலைகள் (5:17-48) | | | |
| சட்டத்தின் நிலையான மதிப்பீடு | 5:17-20 | | 16:17 |
| அயலார்பால் நெறி, கொலை, சினம் கொள்ளுதல் | 5:21-26 | | |
| நடுவரிடம் போதல் | 5:25-26 | | 12:57-59 |
| விபசாரம் | 5:27-30 | | |
| திருமண முறிவு | 5:31-32 | | 16:18 |
| ஆணையிடுதல் | 5:33-37 | | |
| பழிவாங்குதல் | 5:38-42 | 6:29-30 | |
| பகைவருக்கு அன்பு | 5:43-45 46.48 | 6:27-28. 32-36 | |
| ஆ) இறைவன்பால் நெறி | (6:1-18) | | |
| தருமம் செய்தல் | 6:1-4 | | |
| இறை வேண்டல் | 6:5-15 | | |
| கர்த்தர் கற்பித்த செபம் | 6:9-13 | | 11:2-4 |
| நோன்பு இருத்தல் | 6:16-18. | | |
| இ) கவலையின்மையும் அர்ப்பணமும் | (6:19-7:12) | | |
| உண்மையான செல்வம் | 6:19-21 | | |
| கண்-விளக்கு | 6:22-23 | | 11:33-36 |
| இரு தலைவர்கள் | 6:24 | | 16:13 |
| கவலை வேண்டாம் | 6:25-34 | | 12:22-34 |
| தீர்ப்பிடாதீர் | 7:1-2 | 6:37-38 | |
| (குருட்டு வழிகாட்டி) | | 6:39 | மத் 15:14 |
| (குருவும் சீடனும்) | | 6:40 | மத் 10:24-25. |
| துரும்பும் மரக்கட்டையும் | 7:3-5 | 6:41-42 | |
| தூய்மையானதும் நாய்களும் | 7:6 | | |
| வேண்டுதலின் விளைவு | 7:7-11 | | லூக் 11:9-13 |
| பொன் விதி | 7:12 | 6:31 | |
| III. முடிவுரை | 7:13-27 | | |
| இடுக்கமான | 7:13-14 | | 13:24 |
| வாயில் போலி | 7:15-20 | 6:43-45 | |
| இறைவாக்கினர் மரமும் கனியும் சொல்லும் செயலும் | 7:21-23 | 6;46 | |
| உங்களை அறியேன் | 7:22-23 | | 13:26-27 |
| இருவகை அடித்தளங்கள் - வீடும்-புயலும் | 7:24-27 | 6:47-49 | |
| IV. நிகழ்ச்சியுரை முடிவு | 7:28-29 | | 7:1 |

**5. போதகச் சுருக்கம்:** இயேசு உரையை இறைமகன் (மத் 3:16-17) என்ற முறையில் அறிவிக்கிறார். அவரது அதிகாரம், மறை நூல் அறிஞருடையதைவிட (7:29), ஏன் மோசேயினுடையதைவிடவும் (5:21-48) பெரியது. இவ்வுரை, அவரது போதகத்தின் ஒப்புயர்வற்ற தன்மைக்கு எடுத்துக்காட்டாகும் (4:23; 5:2; 7:28-29; 9:35; 11:1). இதன் பின்னணி பெயர் குறிக்கப்படாத ஒரு மலையாகும். மக்கள் திரளுக்கும் சீடர்களுக்கும் இவ்வுரை அளிக்கப்படுகிறது (5:1-2; 7:28-29).

பேறுகள் *(5:3-12)*, இறைவனின் இறுதிக் கால அரசு வருங்காலத்தில் செயல்படுத்தப் பட்ட உண்மையாகும்போது ஏற்படும் நிலைகளின் மாற்றத்தை விவரிக்கிறது. இந்த இறைவனது இறுதிக்கால அரசு மறைமுகமாக இருந்தாலும் ஏற்கெனவே இயேசுவில் பிரசன்னமாய் இருப்பதால், முன்னறிவிக்கப்பட்ட நிகழ்ச்சிகள் நிறை வேறிக் கொண்டிருக்கின்றன என்ற உறுதி யின் விளைவாக எழும் மிக உயர்ந்த மகிழ்ச்சியை எடுத்துக் கூறும் அறிவிப்பாக பேறுகள் அமைந்துள்ளன.

பேறுகள் முன்னோக்கும் ஆட்கள் கிறிஸ் துவின் சீடர்களைக் கொண்ட புதிய சமூக மாகும். இவர்கள் ''மண்ணுலகிற்கு உப்பா யும்'', ''உலகிற்கு ஒளியாயும்'' இருப்பர் *(15:13-16)*. இவர்கள், தங்கள் வாழ்க்கை முறையின் வழியாக இறைவனைப்போற்ற, அதாவது இயேசுவின் சீடர்களாகி இறுதிக் கால அரசுச் சூழலில் வாழ, பிறரை அழைக்கின்றனர்.

சட்டத்திற்கு நிலையான மதிப்பீடு உண்டு என்று இயேசு போதிக்கிறார். சீடர்களின் வாழ்வை வேறுபடுத்திக் காட்டு வது அவர்களது நெறி பிறரது நெறியைவிட சிறந்திருப்பதேயாகும் *(5:17-20)*. இந்த நெறி சிறந்திருத்தல் இருபடிக் குவிமையம் கொண்டுள்ளது. ஒன்று அயலர்பாலும் *(5:41-48)*, மற்றது இறைவன்பாலும் *(6:1-7:12)* காட்டும் செயல்முறையான நடத் தையாகும். இந்நடத்தையின் சிறப்பு அடை யாளம் அன்பாகும் *(5:44-45; 7:12)*. உண்மை யில் இறைவன் அன்பு செய்வதுபோல் அன்பு செய்வது சீடர்களுக்கு நிறைவுள்ள வர்களாக இருப்பதாகும் *(5:48)*. அதாவது, இயேசு விளக்கிக் காட்டும் முறையில் இறைவனது திருவுளத்தைச் செய்வதில் முழுமனதினராய் இருப்பதாகும் *(7:21)*. இயேசு போதிப்பதைக் கேட்டு அதன்படி நடப்பவனே ஞானமிக்க சீடனாவான் *(7:24-27)*.

***6. யாருக்குப் போதிக்கப்பட்டது?:*** மத் *5:1-2*-ஐ மட்டும் கருத்தில் கொண்டால், மலைப்பொழிவு சீடர்களுக்கு மட்டுமே அளிக்கப்பட்டதாகத் தோன்றலாம். *5:13-16* சீடர்களுக்கு மட்டுமே கூறப்பட்டதாகத் தெரிகிறது. அவர்கள்தான் மக்களுக்குச் சாட்சியாக விளங்கக் கடமைப்பட்டவர்கள் என்பது தெளிவு. ஆனால், இதை மிகைப் படுத்தி விடக்கூடாது. மக்கள் மத் *7:28-29*-இல் குறிக்கப்படுகின்றனர். பாடு களுக்கு முன்பு வரை *(27:55)*, மக்கள் பொதுவாக இயேசுவின்பால் நல்லெண் ணம் கொண்டுள்ளனர் *(9:33; 12:23)*. ஆகவே, மலைப்பொழிவு அளிக்கப்பட்ட வர்களில் சீடர்கள் உள் வட்டத்தைச் சேர்ந்த வர்களாகவும் மக்கள் புறவட்டத்தைச் சேர்ந் தவர்களாகவும் வருங்காலச் சீடர்களாகவும் உள்ளனர் என்று கொள்வது மேல்.

**7. விளக்கமுறைகள்:** மலைப்பொழிவின் உயர்ந்த, சிலரது கருத்துப்படி செயல்படுத்த முடியாத, ஒழுக்கக் கோரிக்கைகளின் விளைவாக, இந்த உரை பலவாறு விளக்கப் பட்டுள்ளது. லூக்காவின் உரையைவிட, இது காலந்தோறும் கிறிஸ்தவச் சிந்தனை யால் விளக்கங்களும் மறு விளக்கங்களும் பெற்றுள்ளது. காலத்திற்கு ஏற்றவாறு விளக்கங்களும் வேறுபட்டுள்ளன.

***அ) ஒழுக்கவியல் விளக்கமுறை:*** இது காலத்தால் முந்தியது. இதன்படி மலைப் பொழிவு கிறிஸ்துவின் சீடர்களுக்குரிய புதிய சட்டமாகும். இது கிறிஸ்தவ ஒழுக்க வியலின் சுருக்கத்தைத் தருகிறது. இயேசு தம் சீடர்களிடமிருந்து என்ன எதிர்பார்க் கிறார். அவர்கள் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக்கூடாது, எவ்வாறு அவர்கள் வாழ வேண்டும் என்பனவற்றைத் தெளி வாகக் கூறுகிறார். இவ்விளக்கமுறை மலைப்பொழிவின் கட்டளைகள் செயல் முறைப்படுத்தக் கூடியவை என்று கருதி யது. இந்த உரையில் இயேசு சட்டம் அளிப்பதில் ஒப்பற்றவராகத் தோன்று கிறார். இயேசு ஒழுக்கவியலின் முழு நிறைவுப் பண்பின் மேல்வரிச் சட்டத்தை விரும்பி எடுத்துக் கூறுகிறார். இந்த ஒழுக்க வியல் விளக்க முறை திருச்சபையின் தொடக்க காலமுதலே, குறிப்பாக யுஸ்தீன்,

யோவான் சிறிசோஸ்தம் போன்ற திருச் சபைத் தந்தையர்களால் எடுத்துக் கூறப் பட்டுள்ளது.

**ஆ) மத்தியகால விளக்கமுறை:** இக்காலத் தில் சாதாரணக் கிறிஸ்தவர்களுக்கு ஒன்றும், துறவிகளுக்கு ஒன்றுமாக இருவகை ஒழுக்க வியல் இருப்பதாகக் கருதப்பட்டது. சாதா ரணக் கிறிஸ்தவர்கள் மீட்படைய கட்டளை களைக் கடைப்பிடித்து வாழ வேண்டும். துறவிகள் முழுநிறைப் பண்பை அடை வதற்கான ஏழ்மை, கற்புடைமை, கீழ்ப்படி தல் ஆகிய நற்செய்தியின் அறநெறிக் கட்டளைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இப்பாகுபாட்டிற்கு ஆதாரமாக, நற்செய்தி யில் மக்களும் சீடர்களும் வேறுபடுத்தப்பட் டிருப்பது எடுத்துக்கூறப்பட்டது. மலைப் பொழிவு கோருபவைகளில் பெரும்பா லானவை சாதாரணக் கிறிஸ்தவர்களால் அடைய முடியாததாகத் தோன்றின. அவை முழுநிறைவு நிலையில் வாழ விரும்புபவர் களுக்கே உரியன என்று கருதப்பட்டன. இவர்கள்தான் மலைப்பொழிவை வினைத் திட்பமுடன் ஏற்று அதைச் செயல்படுத்தி வாழவேண்டும்.

**இ) பயிற்சிநிலை விளக்கமுறை:** இது லூத்தரோடும், அவரைப் பின்பற்றும் பிரி வினைச் சகோதரர்களோடும் தொடர்புடை யது. லூத்தர் தனது நூல்கள் சிலவற்றில், மலைப்பொழிவு எல்லார்க்கும் அளிக்கப் பட்டது என்றும், ஆனால் அதன் கோரிக்கை கள் செயல்முறையில் வாழ முடியாதவை என்றும் கருதினார். ஆகவே, மலைப்பொழி வின் கோரிக்கைகள் துறவிகளுக்குரிய அற நெறிமுறையாகும் என்ற விளக்கத்தை லூத் தர் நிராகரித்தார். இவரின் கருத்துப்படி, இயேசு தனது அடிப்படைப் போதகம் மற்றும் கட்டளைகளை அளிப்பதில் மிக வும் குறிப்பிட்டதோர் நோக்கத்தைக் கொண்டிருந்தார். இவற்றைக் கடைப் பிடிக்க முடியாமையால், நாம் நமது முழுப் பாவத்தன்மையை ஏற்றுக்கொள்ளக் கட்டாயப்படுத்தப்படுகிறோம். மலைப் பொழிவை எதிர்கொள்ளும்போது, நாம் பாவிகள் என்றும், பாவிகளாகவே இருக்கி றோம் என்றும் உணர்கிறோம். நாம் முழு அவநம்பிக்கை அடையக்கூடும். இது மீட் புத் தன்மையுடையதாகும். அப்போது, நமது அகந்தையையும் இயலாமையையும் கண்டுணர்ந்து, உண்மையான விசுவாசத்தில் இறைவனது அருளுக்கு நம்மையே திறக்கக் கூடும். நெறிமுறையும், ஆகவே கட்டளை களை நிறைவேற்றும் ஆற்றலும் இலவச மாக அளிக்கப்பட வேண்டும். பவுலின் போதகப் பின்னணியில், மலைப் பொழிவை லூத்தர் விளக்கினார். கலா *3:23-24*-இல் சட்டம் விளக்கப்படுவதுபோல் மலைப் பொழிவும் விளக்கப்பட்டது. அடைய முடியாத குறிக்கோளை அளிப் பதன்மூலம், மக்கள் தங்கள் சொந்தச் செயல்களையன்று கிறிஸ்துவையே நம்ப வேண்டும். பழைய ஏற்பாட்டில் சட்டம் கொண்டிருப்பதுபோல், புதிய ஏற்பாட்டுச் சட்டமும் உண்மையான அதிகாரபூர்வமான நற்செய்திக்கு ஒரு தயாரிப்பாக மட்டுமே அமைந்துள்ளது. இயேசு மனத்துக்கத்தைப் போதிக்கும் பெரும் போதகர் ஆவார். மக்களைத் தயாரிக்க ஒரு வழியாகவே மலைப்பொழிவை அழித்தார். அஃது, அறிவு பெறுதலையும் மன மாற்றத்தையும் முன் னோக்குகிறது. இது பயிற்சிநிலை விளக்க முறையாகும். மலைப்பொழிவைச் செயல் படுத்த முடியாமை அருளுக்கு இட்டுச் செல்கிறது.

**ஈ) இறுதிக்கால இயல் விளக்கமுறை:** இதன்படி, இயேசு இறையரசு அண்மை வருங்காலத்தில் வரவிருப்பதாகப் போதித் தார். இறையரசு அருகில் உள்ளது; வெகு விரைவில் தோன்றும். குறுகிய கால இடைவெளியே இருந்தது. ஆகவே, மலைப்பொழிவு இந்த இடைக்காலத்திற் குரிய ஒழுக்க முறையைக் கொண்டுள்ளது. அதன் அடிப்படைக் கோரிக்கைகள் தனிச் சிறப்புடையவை; இறுதி இடுக்கண் கால மாகிய துன்பக் காலத்திற்குரியவை. ஒவ் வொருவரது இந்தச் சூழ்நிலையின் உள் ளார்ந்த சிறப்புத்தன்மையை உணர வேண் டும். இறுதிக்காலம் வருமுன், கடைசி வாய்ப்பைப் பற்றிக்கொண்டு மனந்திரும்ப

வேண்டும். இறைவனது உறுதியான இடை யீட்டின் முன் உடனடியாக அமையும் தபசு இயக்கத்தில் நாம் சேர்ந்து கொள்ள வேண் டும். இந்த விளக்க முறையில் இயேசு முழுவதும் வெளிப்பாட்டு இலக்கிய உரு வாகத் தோன்றுகிறார். இதன்படி மலைப் பொழிவு ஓர் இடைக்கால ஒழுக்கமுறையா கும். தொடர்ந்து இருக்கும் சமூகத்திற்கு உரியதன்று. ஓர் இடுக்கண் நிலையில் அசாதாரணமானவை கோரப்படலாம்.

**உ. மற்றும் சில விளக்கமுறைகள்:** மலைப்பொழிவு இக்காலத்திற்குரியதன்று. இயேசுவின் மறுவருகைக்குப் பின்வரும் ஆயிரமாண்டுக் காலத்திற்குரியதாகும் என் பது ஒரு விளக்கம்.

மற்றொரு விளக்கப்படி, மலைப்பொழி வின் முகப்பு மதிப்பில், அஃது, இக்காலத்திற் குரியதான எல்லாக் கிறிஸ்தவர்களுக்கு முரிய மேல்வரிச் சட்டத்தை எடுத்துக்கூறு கிறது. ஆனால், அதன் கோரிக்கைகளை அவற்றின் சொற்பொருளில் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. இயேசு, குறிப் பிட்ட ஒழுங்கு முறைகளை அளிக்க வில்லை; மாறாக, பொதுக் கோட்பாடு களையே அளிக்கிறார். மலைப்பொழிவு ஒரு மனப்போக்கைக் கோருகிறது; ஒரு குறிக்கோளை அளிக்கிறது. அதை அடைய முயற்சித்தால் போதும். ஆனால், அஃது ஓர் அடிப்படை மனமாற்றத்தைக் கோரு கிறது. அதில், எக்காலத்திற்கும் எல்லாருக் கும் உரிய கட்டளைகளைக் காண முயல் வது தவறாகும் என்று இந்த விளக்கம் கருதும். கட்டளை வடிவில் கொடுக்கப்பட் டுள்ளவை விரும்பப்படும் முயற்சியின் முன்னோக்கையே சுட்டிக்காட்டுகிறது.

இவ்வாறு, மலைப்பொழிவு பற்றிய பல விளக்க முறைகளைக் கூறிக்கொண்டே போகலாம். அவற்றின் விளைவாகப் பின் பற்றப்பட்ட செயல்முறைகளும் உண்டு. சான்றாக, கால்வின் இயேசுவை ஒரு புதிய சட்டம் அளிப்பவராகக் கருதவில்லை. இவரது கருத்துப்படி, இயேசு பழைய ஏற்பாட்டுச் சட்டத்தைத் தவறான பரிசேயர் விளக்கத்திலிருந்து தூய்மைப்படுத்தி, அதன் மேன்மையை மீண்டும் அமைத்தார். ஆகவே, சட்டத்திற்கும் நற்செய்திக்கும் தொடர்ச்சியுண்டு. லூத்தரும், சீர்திருத்த வாதிகள் என்று கோரிக்கொண்டவர்களைப் போன்று கால்வினும், வெளிப்பாட்டு இலக்கியத் தீவிரக் கருத்துடைய அனாபாப் டிஸ்டுகளின் அரசியல் குழப்பத்தையும் ஒழுக்க அடிப்படை வாதத்தையும் எதிர்த் தனர். மலைப்பொழிவை அடிப்படையாகக் கொண்டு, அனாபாப்டிஸ்களைப் போன்ற வர்கள் படைகளில் பணிபுரியவும், ஆணை யிடவும், நீதித்துறை அலுவல்களைச் செய்ய வும் மறுத்தனர். இவர்கள் அரசுக்கும் திருச்சபைக்கும் இடையே கடுமையான பிரிவைக் கோரினர். உண்மையான கிறிஸ்த வர்கள் என்ற முறையில், அரசோடு எதுவும் செய்ய மறுத்தனர். இவர்கள் தங்களுக்காகச் சிறு குழுக்களை அமைத்துக் கொண்டனர். காலந்தோறும் பிரிவினைக் குழுக்கள் மலைப்பொழிவின் கட்டளைகளை, அவற் றில் சிலவற்றையாவது, அவற்றின் சொற் பொருளில் கடைப்பிடிக்க முயன்றுள்ளனர்.

லூத்தரும், இறைவனது அரசு, உலக அரசு என்று இருவகை அரசுகளை வேறு படுத்தினார். மலைப்பொழிவு இறைவனது அரசுக்கு மட்டுமே உரியது என்று கருதி னார். இறைவனே, சமயசார்பற்ற அரசு தனது சட்டங்களுக்கு ஏற்றவாறு தனது அதிகாரத்தைச் செயல்படுத்த விரும்புகிறார். தனி நபரின் மீட்பைப்பற்றி அக்கறை கொள்ளும் லூத்தர், கிறிஸ்தவர்கள் சமயசார் பற்ற அமைப்புகளில் பங்கெடுக்கலாம் என்றும், பதவி வகிக்கலாம் என்றும், ஆனால் உள்ளத்தில் மலைப்பொழிவுக்கு உண்மையுள்ளவர்களாக இருக்க வேண்டும் என்றும் கூறினார்.

ஆய்வாளர்களில் சிலர் மலைப்பொழி வில் மிக ஆழ்ந்த மனித மதிப்பீடுகளைக் கண்டு அவற்றை வலியுறுத்தினர். வேறு சில சமூகத்தை ஆய்வுக்கண்ணோடு நோக் கும் பகுதிகளை வலியுறுத்தினர். இன்னும் சில சமூகப்புரட்சிக்கு ஏதுவான கருத்துக் களை மலைப்பொழிவில் காண முயன்றுள்

ளனர். இவ்வாறு மலைப்பொழிவை விளக்கும் பல முறைகள் உண்டு.

**3. இக்காலத்திற்கு மலைப்பொழிவு:** போன்கோப்பேர் தனது நூலில் கூறுவது போல், வேறுபட்ட ஆயிரமுறைகளில் நாம் மலைப்பொழிவைப் புரிந்து விளக்கம் அளிக்கலாம். இயேசு ஒரே ஒரு சாத்தியத்தைத்தான் அறிவார். எளிய சரண் அடைதலும், கீழ்ப்படிதலுமே அது. விளக்கிக் காட்டுவதும், பொருத்திக் கூறுவதுமன்று; செயல்படுத்துவதும் கீழ்ப்படிதலுமே ஆகும். அவரது வாக்குக்குச் செவிமடுப்பதற்கு இஃது ஒன்றே வழியாகும். அதை ஒரு குறிக்கோளாகத் தர்க்கிப்பது அன்று; மாறாக, அதைச் செயல்படுத்துவதில் முனைந்திருப்பதேயாகும்.

நற்செய்தியாளர் அளிக்கும் எடுத்துக் காட்டுகள் கிறிஸ்தவர்களுக்கும், அவர்களுக்குப் பணிசெய்யும் திருத்தொண்டர்களுக்கும் வழிகாட்டுகின்றன. மறைநூலால் வழிநடத்தப்படுபவர்கள், அவர் ஆணோ பெண்ணோ, தழுவி அமைப்பர், மாற்றி அமைப்பர், செயல்படுத்துவர். அஃது, இக்கால நபர் தன்னைச் சூழ்ந்துள்ள செயல்முறையான சூழ்நிலையைப் பெரிதும் பொருத்தது. கொள்கை அளவில், காலத்தாலும் தேவைகளாலும் வேறுபடும் பரந்துள்ள தேர்வு வாய்ப்புகள் உள்ளன. இறைவனைப் பற்றிய இயேசுவின் செய்திக்குச் செவிமடுத்து, அந்த மெசியாத் தன்மையுடைய நற்செய்தியையே நாமும் மேலும் பறைசாற்றலாம். நாம் எதையும் செய்து முடிக்குமுன் இறைவனே நம்மிடம் திரும்புகிறார். நாம் எதையும் உழைத்துப் பெறாமலே, இறைவன் இலவசமாக அளிக்கிறார். மற்றொரு காலத்தில், பிறிதொரு சூழ்நிலையில் அதே கிறிஸ்தவன் இறையியல் கருத்துக்கு ஓய்வு அளித்து மனிதவியல் கூறுகளை வலியுறுத்தலாம். இறைவனின் கொடை மனிதப்பதிலைக் கோருகிறது. இந்தப் பதில் தெளிவாக மலைப்பொழிவில் எடுத்துக் கூறப்படுகிறது.

இறைவனின் உறுதியான இடையீட்டின் காலத்தில் உள்ளோம். நாம் ஏற்கெனவே பேறுபெற்றவர்கள். வாக்குறுதிகளின் காலத்தில் நாம் வாழவில்லை. நிறைவேற்றத்தின் மெசியாக் காலத்தில் வாழ்கின்றோம். ஆனால், லூக்காவோடு சேர்ந்து நாமும் துன்பங்கள், கொடுமைகள், போலி உறுதிப்பாடுகள் மற்றும் வலிமையுள்ள சுய நிறைவுடைமை ஆகியவற்றோடு கூடிய நிலையற்ற, கடந்து போகும் ''இப்பொழுதைப்'' பற்றிப் பேசலாம். இந்த ''இப்பொழுதை'' முடிவில்லா வாழ்வின் எதிர்காலத்தால் எதிர்கொள்ளலாம்.

இவையெல்லாம் உண்மையான கிறிஸ்தவ, பாரம்பரிய உண்மைகள். இவை இயேசுவின் செய்தியோடு பொருந்தியுள்ளன. எல்லாவற்றையும் எப்போதும் ஒரே சமயத்திலும் கருத்தில் கொள்ள முடியாது அல்லது எடுத்துக்கூற முடியாது. அவற்றை அப்போஸ்தல முறையிலும், தங்களுக்காகவும், சுதந்தரமாகவும் தகுவழி காணும் திறனுடனும் பொருத்தமுடையதாக்கிச் செயல்படுத்தும் கிறிஸ்தவர்கள் பேறு பெற்றோர். இத்தகைய கிறிஸ்தவர்களைக் கொண்ட திருச்சபையும் பேறுபெற்றது.

மலைப்பொழிவைக் கவனமாய் வாசித்தால், அதன் அடிப்படை மாற்றத் தன்மை நம்மைப் பாதிக்காது போகாது. இரு கூற்றுகள் நமது கவனத்தை ஈர்க்கலாம்; மனதை உறுத்தலாம். ''மறைநூல் அறிஞர், பரிசேயர் ஆகியோரின் நெறியைவிட உங்கள் நெறி சிறந்திருக்கட்டும். இல்லையெனில் நீங்கள் விண்ணரசுக்குள் புக முடியாது என்பதை உங்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்'' *(5:20)*. ''என்னை நோக்கி 'ஆண்டவரே ஆண்டவரே' எனச் சொல்பவரெல்லாம் விண்ணரசுக்குள் செல்வதில்லை; மாறாக, விண்ணுலகத்திலுள்ள என் தந்தையின் திருவுளத்தின்படி செயல்படுபவரே செல்வர்'' *(7:21)*. இதே அடிப்படை மாற்றம் வீடு பற்றிய இறுதியான உவமையிலும் காணப்படுகிறது. காலமுடிவில் மக்கள்

பிரிக்கப்படுவர். அதற்குப் பயன்படும் ஒரே ஒப்பளவு சாதனம் இயேசுவின் வார்த்தை களைக் கடைப்பிடிப்பதாகும்; அதாவது சிறந்த நெறியை வாழ்க்கையில் செயல் படுத்துவதாகும். இதுவே வாழ்வுக்கு ஒரே வழியாகும். செயல்படுத்தாமல் வெறுமனே செவிமடுப்பது அழிவிற்கு இட்டுச்செல் லும். இஃது ஆசீர்கள் மற்றும் சாபங்கள் மற்றும் உடன்படிக்கை வாய்பாடுகளின் முடிவுகளை (உப 27-30) நமக்கு நினைவு படுத்தும்.

நற்செய்தியாளர், அவரது காலம் மற்றும் உயிர்ப்புக்குப் பின்னுள்ள திருச்சபையின் சூழ்நிலைக்கு ஏற்றவாறு இயேசுவின் வாக் குகளை மாற்றியமைத்துக் கூறுகிறார். நாம் இப்போது அனுபவிக்கும் மற்றும் காண் பனவற்றிலிருந்து வேறுபட்டவை அந்தச் சமூகத்திலும், கலாச்சாரத்திலும் உண்டு. மத்தேயு எடுத்துக்கூறும் முறை, இயேசு வின் வாக்குகளை மாற்றியமைத்து, நமக்குப் பொருந்தியதாக்கும் நமது சுதந் தரத்துக்கு வழிகாட்டுகிறது; அதை உறுதிப் படுத்துகிறது. மலைப்பொழிவின் அடிப் படைக்கூறுகள் எக்காலத்திற்கும் தூண்ட வல்லன என்பதை யாரும் மறுக்க முடி யுமா? ''சிறந்த நெறியை'' இயேசு வலி யுறுத்துவது எக்காலத்திற்கும் உரியதாகும். சட்டத்தின் சொற்களுக்குப்பின் தங்களையே மறைத்துக் கொண்டு இறைவனது கட் டளையைக் குறைத்துக்கூறும், அதை உருத் திரித்துக் கூறும் மக்கள் இன்றும் உள்ளனர். பிறர் பார்க்க வேண்டுமென்று வெளி வேடம் போடுதலுக்கு எதிரான இயேசுவின் எச்சரிக்கைகள், நலந்தரும் கவலையற்ற நிலையைப் பரிந்துரைத்தல், அதே சமயத் தில் இறையரசையும் ''சிறந்த நெறியையும்'' தேடுதலுக்கு முதன்மை அளித்தலை வலி யுறுத்துதல், பெயரளவுக்குக் கிறிஸ்தவர் களாக இருக்கும் நேர்மையற்ற கிறிஸ்தவர் களைத் தாக்குதல் ஆகியவை இன்றும் பொருந்தும். உள்ளார்ந்த நிலையும் புறச் செயலும் சேர்ந்து போக வேண்டும். ஒவ்வொருவனும் இறைவன்பால் முழு நேர்மை காட்ட வேண்டும். அதுபோலவே தன் அயலானுக்கும், சமூகத்திற்கும் கவனம் செலுத்த வேண்டும். இரண்டிற்கும் அளிக் கப்படும் அழுத்தங்கள் சேர்ந்து அமைய வேண்டும்.

இயேசு தீர்ப்பின் முன்னோக்கையும் எடுத்துக் கூறத் தவறவில்லை. அப்போது ஈடு செய்வதற்குக் காலந்தவறிவிடும். செயல்பட உறுதி எடுப்பதைத் தள்ளிப் போடுவது தவறானதும் ஆபத்தானது மாகும் என்று வாசகர்கள் நன்கு உணர்வர். இந்த உலகில் வாழும் இப்போதே தேர்வு செய்யப்பட வேண்டும். அதைச் செயல் படுத்த வேண்டும். கிறிஸ்தவனாய் இருப் பது கிறிஸ்தவனாக வாழ்வதாகும்.

இப்பகுதியைப் போன்கேப்பரின் கருத் தோடு தொடங்கினோம்; அவரது கருத் தோடு முடிக்கலாம். அவர் மலிவான அருள் மற்றும் விலைமிக்க அருள் பற்றிக் கூறுவது இங்குச் சாலப் பொருந்தும். ''மலிவான அருள் நமது திருச்சபையின் கொடிய எதிரியாகும். பாவி பாவத்தி லிருந்து அகல வேண்டும். பாவம் அவனிட மிருந்து அகல வேண்டும். இவ்வாறு பாவி ஏற்புடையவனாவது இல்லாது பாவத்தை நியாயப்படுத்துவது மலிவான அருளாகும். அது மனத்துக்கம் கோராமல் மன்னிப்பைப் போதித்தலாகும். திருச்சபையின் ஒழுங்கு முறையில்லாது திருமுழுக்காகும்; பாவ அறிக்கையில்லாது நற்கருணையில் பங்கு பெறுவதாகும்; சொந்தப் பாவ அறிக்கை யில்லாது மன்னிப்புப் பெறுவதாகும். அது சீடர் தன்மையில்லாத அருளாகும்; சிலு வையை உள்ளடக்காத அருளாகும்; மனித னான உயிருள்ள இயேசு கிறிஸ்து இல்லாத அருளாகும். விலைமிக்க அருள் இயேசு வின் அழைப்பாகும். அதன் விளைவாக சீடர் தன் வலைகளையும் விட்டுவிட்டு அவரைப்பின் செல்வர். அது விலைமிக்கது; ஏனெனில், அஃது ஒருவருடைய உயி ரையே விலையாகக் கோருகிறது. அது மனிதனுக்கு ஒரே உண்மையான வாழ்வை அளிப்பதால் அஃது அருளாகும்.''

**மல்கிசுவா** (MALCHISHVA - என் அரசன் காப்பாற்றுகிறார்)

இவர் அபினோவாம் வழியாக, சவுலுக்குப் பிறந்த மூன்று புதல்வர்களில் கடைசியானவர். கில்போவா மலையில் நடந்த போரில் இவர் பெலிஸ்தியரால் கொல்லப்பட்டார் *(1 சாமு 14:49; 31:2; 1 நாள் 8:3; 9:39; 10:2).*

**மல்கியா** (MALCHIAH, MALCHIJAA - யாவே அரசனாவார்)

1. இவர் ஒரு கேர்சோமிய லேவியர் ஆவார். ஆலயத்தின் இசையாளராக இருந்த ஆசாபின் மூதாதையர் ஆவார் *(1 நாள் 6:40).*

2. இவர் தாவீது அரசன் காலத்தில் வாழ்ந்த ஒரு குருவாகவோ, குருவின் குடும்பமாகவோ இருக்க வேண்டும். ஆலயத்தில் குருக்களின் ஐந்தாவது பிரிவிற்குத் தலைவர் *(1 நாள் 24:9).* குரு அதாயாவின் முன்னோர். இவரது குடும்பத்தினர் பாபிலோனிய நாடு கடத்தலுக்குப்பின் உள்ள எருசலேமின் குடிகளாக இருந்தனர் *(1 நாள் 9:12; எஸ் 2:38; நெகே 11:12).*

3. இவர் ஓர் இளவரசன். இவரது சிறையில்தான் எரேமியா அடைத்து வைக்கப்பட்டிருந்தார் *(எரே 38:6).* எரே *21:1;38: 1*-இல் கூறப்படும் குருவும் ஆலய முக்கிய அதிகாரியுமான பஸ்கூரின் தந்தையாக இருக்கலாம்.

4. எஸ்ராவின் காலத்தில் அன்னிய நாட்டு மனைவியை விலக்கிவிட வேண்டியிருந்த யூதர்களில் இவரும் ஒருவர்; பரோசுவின் புதல்வர்களில் ஒருவர் *(எஸ் 10:25).*

5. எருசலேமின் சுவர்களைக் கட்டியெழுப்ப நெகேமியாவுக்கு உதவியவர்களில் ஒருவர். இவர் ஆரிமின் மகன் *(நெகே 3:11).* இவர் எஸ்ரா *10:31*-இல் கூறப்படும் அன்னிய மனைவியை விலக்கிவிட்டவர்களில் ஒருவராக இருக்கலாம்.

6. நெகேமியா கட்டிய சுவருக்கு உதவியவர்களில் இவரும் ஒருவர். இவர் இரேக்கபுவின் மகன் *(நெகே 3:14).*

7. நெகேமியாவின் காலத்தில் எருசலேம் சுவரில் வேலைப்பாடுகள் செய்த ஒரு பொற்கொல்லர் இவர் *(நெகே 3:31).*

8. நெகேமியா ஆளுநராக இருந்த போது மீண்டும் எழுப்பப்பட்ட எருசலேம் சுவர் புனிதப்படுத்திய சடங்கில் பங்கு பெற்ற குரு இவர் *(நெகே 12:42).*

9. எஸ்ரா மக்கள் முன்னிலையில் சட்டங்களை வாசித்தபோது அவர் அருகில் நின்றவர்களில் இவரும் ஒருவர் *(நெகே 8:4).* அவர்களனைவரும் பொது நிலையினராக இருந்திருக்க வேண்டும்.

10. எஸ்ராவின் உடன்படிக்கையில் கையெழுத்திட்ட ஒருவர், அல்லது குரு குலத்தின் பிரதிநிதிகளில் ஒருவர் *(நெகே 10:3).*

**மல்கியேல்** (MALCHIEL)

இவர் பெரியாவின் மகனும், ஆசேரின் பேரனுமாவார் *(ஆதி 46:17; 1 நாள் 7:31).* மல்கியேலியரின் முன்னோராவார் *(எண் 26:45).*

**மல்கிராம்** (MALCHIRAM - எனது அரசர் உயர்த்தப்பட்டார்)

இவர் எக்கோனியாவின் மகன் *(1 நாள் 3:18).*

**மல்க்காம்** (MALCAM)

இவர் பென்யமின் இனத்தைச் சேர்ந்தவர். சகரயிம், ஓதேசு ஆகியோரின் புதல்வன் *(1 நாள் 8:9).*

**மல்யுத்தம்** (WRESTLING)

போர்களில் ஆயுதங்கள் வளர்ச்சியுள்ள விதத்தில் பயன்படுத்தப்பட்ட காலத்திலும் கூட, முன்பு நடந்த சண்டைகளைப்போல, கைகளே பெருமளவில் பயன்படுத்தப்பட்டன. நேருக்குநேர் கை கலந்து போராடி வீரர்கள் வெற்றிவாகை சூடினர் அல்லது தோல்வியுற்றனர். கைகளால் செய்த இப்போர் முறை பிற்கால மக்களால் வீர விளையாட்டாக நடத்திக் காட்டப்பட்டது. யாக்கோபு வானகத் தூதர் ஒருவருடன் மல்யுத்தம் செய்கிறார் *(ஆதி 32:25-33).*

மல்யுத்தத்திற்கென ஆண்கள் சிறப்பான தொரு இடைவாரை அணிந்திருந்தனர் *(ஆதி 38:18)*. இந்த இடைவாரே மல்யுத்தத்தில் பிடிபோடும் இடமாகக் கருதப்பட்டது. இந்த இடைவார் நேரிய வழிக்கு ஒப்பிடப் படுகிறது *(எசா 11:5)*.

**மல்லூக்கி** (MALLUCHI)

யோயாக்கிம் காலத்தில் யோனத்தான் தலைமையில் இருந்த குருக்களின் ஒரு குடும்பமாகும். ஒருவேளை இப்பெயரை நெகே 12:2-இல் உள்ளபடி 'மல்லூக்கு' (6) என வாசிக்க வேண்டும்.

**மல்லூக்கு** (MALLUCH - ஆலோசகர், ஆளுநர்)

1. சாலமோனின் ஆலயத்தில் உள்ள ஒரு பாடகரின் மூதாதையர். இவர் ஒரு மெராரி லேவியர்; ஏத்தானின் முன்னோர் *(1 நாள் 6:44)*.

2. இவர் பானியின் மகன். அன்னிய மனைவியை நீக்கிவிடக் கோரப்பட்டவர் *(எஸ் 10:29)*.

3. இவர் ஆரிமின் மகன். அன்னிய மனைவியை விலக்கிவிடக் கோரப்பட்டவர் *(எஸ் 10:32)*.

4. எஸ்ரா உடன்படிக்கையைப் புதுப்பித்தபோது கையொப்பமிட்டவர்களில் ஒருவர் *(நெகே 10:4)*.

5. இவர் மக்களின் தலைவராக இருந்தவர். இவர் செருபாபேலோடு பாபிலோனிலிருந்து திரும்பியவர் *(நெகே 10:27)*. இவர் 2 அல்லது 3-இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

6. பாபிலோனிலிருந்து செருபாபேலோடு திரும்பிய ஒரு குரு *(நெகே 12:2)*. இவர் 4-இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

**மல்லூசு** (MALLUS)

இது 'பிராமு' ஆற்றின் முகத்துவாரத்தில், சிலிசியாவின் தென்கிழக்குப் பகுதியில் அமைந்த ஒரு நகரம். அந்தியோக்கு எப்பிபான் மல்லூசு மற்றும் தர்சு நகர்களையும் தனது வைப்பாட்டிகளுக்கு அன்பளிப்பாகக் கொடுப்பதை எதிர்த்து, இவ்விரு நகரங்களும் கிளர்ச்சி செய்தன *(2 மக் 4:30)*.

**மல்லோத்தி** (MALLOTHI)

ஏமானின் மகன்களில் ஒருவராகிய இவர் ஆலயத்தில் குருக்களோடு, இசையுடன் இறைவாக்குரைக்க நியமிக்கப்பட்டவர். ஆலயப்பாடகர்களின் பத்தொன்பதாவது பிரிவின் தலைவர் *(1 நாள் 25:4.26)*. ஆனால் இந்த வரியில் உள்ள பெயர்கள் வழிபாட்டுச் செபத்திற்குரியவை போல் தெரிவதால் ஆட்களைக் குறிப்பதாக இல்லாமலும் இருக்கலாம்.

**மழித்தல்** (SHAVING)

முகத்தையும், தலையையும் மழிக்கும் வழக்கம் எகிப்தியர்களிடையேயும், உரோமையர்களிடையேயும் இருந்ததைவிட எபிரேயர்களிடையே குறைவாக இருந்தது. மேலும், மழித்தல் பழக்கம் எபிரேயர்களிடையே, குறிப்பாக ஒருசில சூழ்நிலைகளில் இருந்தது. துக்கத்தின் அடையாளமாக யோபு தன் தலையை மழித்துக் கொண்டார் *(யோபு 1:20)*. ஆனால் இதைக் குறிக்கும் எபிரேய, கிரேக்கச்சொற்கள் முடி வெட்டுதலையும் குறிக்கும் *(ஆதி31:19; உப 15:19; எரே 7:29; மீக் 1:16; அ.ப. 21:24; 1 கொரி 11:5-6)*. ''உடல் முழுவதும் சிரைத்துக்''கொள்ளும்படியாக லேவியர்கள் அறிவுறுத்தப்பட்டிருந்தனர் *(எண் 8:7)*. யோசேப்பு, பாரவோனின் அவையில் தோன்றுமுன், முடி திருத்திக் கொண்டு வருவது பொறுத்தமானதாகக் கருதப்பட்டது *(ஆதி 41:14)*. தலையில் தொழுநோய் அடையாளம் உள்ளவன், நோயுள்ள பகுதியை விட்டுவிட்டு, முடியை மழித்தல் வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது *(லேவி 13:33; 14: 8-9)*. குருக்கள் தங்களுடைய தாடியினுடைய விளிம்புகளை மழித்தலுக்கு எதிராக எச்சரிக்கப்பட்டனர் *(லேவி 21:5)*. நசரேய விரதத்தை எடுத்துள்ளவர் தங்களுடைய முடியை வளரவிட வேண்டும்; ஆனால், இறந்த உடலைத் தொட்டுவிட்டாலோ நசரேய நோன்பு முடிவதற்கு வந்தவுடனேயோ அவனுடைய

தலை முடி சிரைக்கப்பட வேண்டும் (எண் 6:9.18) போரில் பிடிபட்ட பெண்கள் இஸ்ராயேலர்களை மணம் செய்து கொள்வதற்கு முன் தங்களுடைய பெற்றோர்களுக்குக் காட்டும் வருத்தத்தின் அடையாளமாக, தங்களுடைய தலைகளைச் சவரம் செய்து கொள்ள வேண்டும் (உப 21:12-13). சிம்சோனுடைய தலைமுடியை மழித்தல் அவனை இழிவுபடுத்தும் அடையாளமாக ஆகும் (நீதி16:17. 19.22). அதேபோல தாவீதின் பணியாளனின் ஒருபக்கத் தாடியை அம்மோனியர்கள் சிரைத்தனர் (2 சாமு 10:4-5; 1 நாள் 19:4). இறைவாக்கினர்கள் சவரம் செய்த தலைகளை உடனடியாக வரவிருக்கும் பேரழிவின் அடையாளமாகக் கருதினர் (எசா 6:10; எரே 41:5; 48:37). லேவிய குருக்கள் தங்களுடைய முடியை மழிக்கவும் கூடாது; நீண்ட முடி வளர்க்கவும் கூடாது (எசே 44:20).

### மழை (RAIN)

(காற்றுடன் கூடிய மழை என லூக்கா நற்செய்தியில் கூறப்படுகிறது).

ஒவ்வொரு வருடமும் பாலஸ்தீனத்தில் மழை திசம்பர்த் தொடக்கத்திலிருந்து மார்ச்சு மாதத் தொடக்கம் வரை பெய்யும். இந்த மழைக் காலத்திற்கு முன்னும் பின்னும், மழை பெய்வதுண்டு. இவை முன்மாரி, பின்மாரி அல்லது வசந்தகால மழை என்று அழைக்கப்படும். கோடை காலம் பெரும்பாலும் மழையற்றதாகவே இருக்கும். பாலஸ்தீனத்தில் மேற்கிலிருந்து மேகம் எழும்புவது மழை வருவதற்கு அடையாளமாகும் (லூக் 12:54).

### மறதி நிலவும் உலகு (FORGETFULNESS, LAND OF)

மனிதகுலம் போல (சங் 31:12; திருவுரை 9:5-6) கடவுள் இறந்தவர்களை மறந்துவிடுகிறார் (சங் 88:5); இறந்தவர்கள் புறக்கணிக்கப்படுவார்கள் என்று கூறும் மறதி நிலவும் உலகு என்ற காவியச் சொற்றொடர் செயோலை அல்லது இறந்தோர் உலகைக் குறிக்கிறது. இதற்கு மாறாக யோபு 14:21-22-இன்படி, இறந்தவர்கள் அவர்களுடைய வழித்தோன்றல்களால் மறக்கப்பட்டாலும் இறந்தவர்கள் ஒருவித உளவியல் உணர்வைக் கொண்டிருப்பர்; தங்கள் விதியை நினைத்துக் கடுந் துயர் அனுபவிப்பர்.

### மறுத்தல், மறுதலித்தல் (DENY)

பொதுவான பொருளைத் தவிர்த்து (காண். அ.ப.4:16), இச்சொல் இரு சிறப்பான முறையில் பயன்பட்டுள்ளது. 1) கிறிஸ்துவை அறிக்கையிடுவதற்குப் பதிலாக அவரை மறுதலித்தல் (மத் 10:32-33). எருசலேமைச் சேர்ந்தவர்கள், பிலாத்துவின் முன் ''புனிதமும் நீதியுமுள்ளவரை'' மறுதலித்தனர் (அ.ப. 3:13-14). அவரைத் தெரியாது என்று கூறியதன் மூலம், பேதுரு உதட்டளவில் மறுத்த குற்றத்திற்கு ஆளாகிறார் (மாற் 14:16). ஆனால், அவரது இதயம் மாற்றமில்லாததாயும், அவரது நிலை மீட்பை மீண்டும் அடையக்கூடியதுமாயும் இருந்தது; ஆனால், கிறிஸ்துவை மறுதலிப்பவர்கள் மனுமகனால் அவரது தந்தையின் முன் மறுதலிக்கப்படுவர் (மத் 10:33; லூக் 12:9; 2 திமொ 2:12; தீத் 1:16; யூதா 4; 2 பேதுரு 2:1). தன்னை நம்பியுள்ளவர்களைக் காக்காத கிறிஸ்தவன் விசுவாசத்தையே மறுதலிக்கிறான் (1 திமொ 5:8). திருவெளி 2:13-இல் இதே சொற்றொடர், துன்பத்தின் கீழ், தடுமாறுவதைக் குறிப்பிடுகிறது (காண். திருவெளி 3:8). இறைப்பற்றின் ஆற்றலை மறுப்பது (2 திமொ 3:5) பக்தியின் வெளித்தோற்றத்தைக் கொண்டிருப்பதாகும். உண்மைக்கு ஒத்துப்போவதில் 1 யோவா 2:22-23-இன்படி தந்தையையும் மகனையும் மறுதலிப்பது, கிறிஸ்துவினுடைய உண்மையான மனிதத்துவத்தையே மறுப்பதாகும் (காண். 1 யோவா 4:2-3).

2. தன்னையே மறுப்பது (மத் 16:24; மாற் 8:24; லூக் 9:23) என்பது கிறிஸ்து தனது பிறப்பிலும், சிலுவை மரணத்திலும் தன்னையே வெறுமையாக்கியது போல் (பிலி 2:7-8), ஒருவர் தன்னலத்தையும், தனிப்பட்ட விருப்பங்களையும், கிறிஸ்துவின் மீது கொண்ட தங்குதடையற்ற பற்றுறுதி

யில் விட்டுவிடுவதாகும். ஆனால், கடவுள் தன்னையே மறுதலிக்க முடியாது (2 திமொ 2:13); அதாவது அவர் தமது பண்புக்கும் வாக்குறுதிக்கும் என்றும் உண்மையுள்ள வராய் இருக்கிறார்.

**மறை சாட்சியர்** (MARTYR)

*1.* மறைசாட்சி என்பது, சரித்திர வாயிலா கட்டும், நீதியின்படியாகட்டும் அல்லது மறை அர்ப்பணிப்பாகட்டும் வாழ்க்கை யினை எவ்வகையேனும் தியாகம் செய்யும் போது, இது சொல்லிலக்கணப்படி சாட்சி பகர்தல் என்றாகிறது. ஆனால், கிறிஸ்துவ மரபில் மறைசாட்சியர் என்னும் பெயர் இரத்தம் சிந்திச் சாட்சி பகர்ந்தவர்களுக்கு மட்டுமே கூறப்பட்டு வந்துள்ளது. புதிய ஏற்பாடு இந்தப் பொருளுக்கே சான்று பகர்கிறது (அ.ப. *22:20*;திருவெளி *2:13; 6:9; 17:6*). இயேசுவுக்கெனச் சான்று பகர்ந்து, அதில் பிரமாணிக்கத்தோடு ஊன்றி நின்று அதற்காக உயிரையும் அளிப்பவரே மறை சாட்சியர் (காண்க. அ.ப. *6:56*) ஆவார்.

***2. கிறிஸ்து ஒரு மறைசாட்சியர்:*** இயேசு வும், மிகவும் மேலான முறையில் கட வுளின் மறைாட்சியர் ஆவார். அதன் விளைவாக மறைசாட்சியர்களுக்கெல்லாம் மூல மாதிரி ஆவார். தந்தையால் தனக்கு அளிக்கப்பட்ட திருப்பணிக்கு உண்மை யான அளவிடற்கரிய சாட்சியாகத் தம் மையே உவந்தளித்துப் பலியாக்குகிறார். புனித யோவான் கூறுவதுபோல, இயேசு தம் மரணத்தை ஏற்கெனவே அறிந்தவர் மட்டுமல்லர். தந்தைக்கு அளிக்கும் ஓர் உன்னத வணக்கமாக அதை அவராகவே ஏற்றுக்கொண்டார் (யோவா *10:18*); தனக்கு மரணத்தீர்ப்பு அளிக்கப்பட்டபோது, ''உண் மையை எடுத்துரைப்பதே என் பணி; இதற்காகவே பிறந்தேன்; இதற்காகவே உலகிற்கு வந்தேன்'' (*18:37*; காண். திரு வெளி *1:5; 3:14*) என்று அறிவிக்கிறார்.

லூக்கா இயேசுவின் பாடுகளைக் கூறும் போது, மறைசாட்சியர் என்பதை விளக்கும் பண்புகளைச் சிறப்பித்துக் கூறுகிறார்: ஆழாத் துயறுற்றபோது கடவுளின் அரு ளால் வலுப்படுத்தப்படுதல் (லூக் *22:43*); பொல்லாப்புக்களுக்கும் குற்றச்சாட்டுகளுக் குமிடையே மௌனமாக, பொறுமையாக இருத்தல் (*23:9*); பிலாத்தும் ஏரோதும் அவருடைய மாசற்ற தன்மையை ஏற்றுக் கொள்ளுதல் (*23:4.14*தொ.*22*); தம்முடைய துன்பங்களைக்கூட பெரிதுபடுத்தாத தன்மை (*23:28*); மனம் திரும்பிய பாவியை ஏற்றுக்கொள்ளுதல் (*23:43*); பேதுருவுக்கும் (*22:61*), ஏன் தம்மைக் கொடுமைப்படுத்தும் கொலையாளிகளுக்குமே (*22:51; 23:34*) மன்னிப்பு வழங்கல் இவையனைத்தும் மறைசாட்சியரின் பண்புகளாக அமை கின்றன.

இன்னும் ஒரு படி ஆழ்ந்து நோக்கும் போது, புதிய ஏற்பாடு முழுவதுமே இயேசுவை முன்னர் எசாயா முன்னுரைத்த துன்புறும் ஊழியனாகக் காண்கிறது. இந்த முன்னோக்கில், இயேசுவின் பாடுகள் அவ ருடைய பணிக்கு அவசியமாகிவிடுகின்றன. அந்த ஊழியன் துன்புற்று மரணமடைந்து அதனால் 'பலரை நீதிமான்களாக்குவது' போல் (எசா *53:11*), இயேசுவும் இறப்பின் வழிநின்று 'மக்களுக்குப் பாவத்தின் விடு தலையாக மீட்பினைக் கொணர' வேண்டியி ருந்தது (மத் *20:28*). 'நான் இதற்காகவே வந்தேன்' என்று பல தருணங்களில் கூறும் இயேசு இதையே விளக்குகிறார். கடவு ளுடைய மீட்புத்திட்டம் அவருடைய சாட் சியின் பாடுகளினாலும், மரணத்தினாலும் நிறைவேறுகிறது (மத் *16:21*; காண். *26:54.56*; லூக் *17:25; 22:37; 24:7.26.44*). மேலும், இறைவாக்கினர்கள் எல்லாரும் கொடுமைப்படுத்தப்பட்டு, கொலை செய் யப்படவில்லையா (மத் *5:12* இணை; காண். *23:30*தொ; இணை; அ.ப. *7:52; 1* தெச *2:15*; எபி *11.36*தொ)? இஃது ஏதோ தற்செயலாக நடந்த ஒன்றாகக் கருத வாய்ப் பில்லை. இயேசு இதைக் கடவுளின் திட்டத் தின் பகுதியாகவும், இத்திட்டம் தம்மில் முழுமை அடைவதாகவும், காண்கிறார் (மத் *23:31*தொ). எனவேதான் அவர் ஒரு 'மனத்துணிவோடு' எருசலேம் நோக்கிச் செல்கிறார் (லூக் *9:51*); ஏனெனில், 'எருச

லேமுக்கு வெளியே ஓர் இறைவாக்கினரும் மடிவதில்லை' *(13:33)*.

இயேசுவின் பாடுகள், பழைய பலிப் பொருள்கள் அனைத்திற்கும் பதிலாக, இயேசுவையே பாவத்தின் பரிகாரப் பலிப் பொருளாக்கின (எபி *9:12* தொ) ''இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பு என்பது இல்லை'' (எபி *9:22*) எனும் மறைசாட்சிக் கான விதியினை அவரில் விசுவசிப்பவர் ஒவ்வொருவரும் அறிவதொன்றாகும். கிறிஸ்துவ மறைசாட்சியருக்கெல்லாம் அர சியாக மரியாள் பின்னர்ப் போற்றப்பட் டாள் என்றால், அஃது இயேசுவின்பாடு களில் அவளுக்கிருந்த மிகவும் நெருங்கிய தொடர்புதான் (யோவா *19: 25-27*; காண். லூக் *2:35*) காரணம் என்று அறிகிறோம்.

**3. கிறிஸ்துவ மறைசாட்சி:** கிறிஸ்துவி னுடைய மாட்சிமை மிக்க மறைசாட்சி திருச்சபையை நிறுவியது. இயேசுவே ''நான் மண்ணிலிருந்து உயர்த்தப்படும்போது அனைவரையும் என்பால் ஈர்த்துக்கொள் வேன்'' (யோவா *12:32*) என்று கூறியிருக்கி றார். கிறிஸ்துவின் உடலாகும் திருச்சபை தன்னுடைய பங்காக மனித மீட்பின் தேவைக்கு இறைவனுக்கு முன் இரத்தம் சிந்தி சாட்சி பகர அழைக்கப்பட்டுள்ளது. முன்னர் யூதகுலத்தில், முக்கியமாக மக்க பேயர் காலத்தில் பலர் வேதசாட்சியினர் இருந்தனர் (*2* மக் *6-7*). ஆனால், கிறிஸ்துவ திருச்சபையில் மறைசாட்சிக்குப் புதிய பொருள் தோன்றியது. இயேசுவே வெளிப் படுத்தியது போல, மறைசாட்சியென்பது கிறிஸ்துவை முழுவதுமே பின்பற்றி, அவ ருடைய சாட்சிக்குச் சான்று பகர்ந்து அவ ருடைய மீட்புப் பணியில் பங்குகொள்வதா கும். ''பணியாளர் தலைவரை விடப் பெரியவர் அல்லர்... என்னை அவர்கள் துன்புறுத்தினார்கள் என்றால் உங்களையும் துன்புறுத்துவார்கள்'' (யோவா *15:20*). அவ ரோடு நெருங்கிப் பழகிய மூன்று தோழர் களிடம், அவர்கள் தம்முடைய பாடுகளின் வழியைப் பின்பற்றப் போவதாக முன் னுரைத்தார் (மாற் *10:39* இணை; காண். யோவா *21:18* தொ). விதை விழுந்து மடிந்தால் மட்டுமே மிகுந்த பலனளிக்க வல்லதாயிருக்கிறது (யோவா *12:24*) என்று எல்லோருக்குமே விளக்கம் கூறினார். பாடு களைத் திரும்பவும் உயிர்ச்சித்திரமாகச் செயல்படுத்திய முதல் மறைசாட்சியான ஸ்தேவான் தம் மரணத்தினால் முதன்முதல் திருச்சபையைப் பரவச்செய்தார் (அ.ப. *8:4*தொ; *11:9*), பவுலை மனந்திருப்பினார் *(22:20)*. புதிய ஏற்பாட்டின் கடைசியில் காணப்படும் திருவெளிப்பாடு நூல் முழு மையும் மறைசாட்சியர்களின் புத்தகமாக அமைந்துள்ளது. உண்மையானதும் உயரிய துமான ஒரே சாட்சியின் வழிநின்று (திரு வெளி *3:14*), தம் உயிரையும் ஈந்து திருச்சபைக்கும் உலகுக்கும் சான்று பகர்ந்த வர்கள் இவர்கள். ஆண்டவரின் சாட்சி களான இருவரைப் பற்றியதாக அவர்கள் படும் துயர்களையும் அடையும் மகிமை யையும் எடுத்துக்கூறுவதில் (திருவெளி *6:9*தொ; *7:14-17*; *11:11*தொ; *20:4*தொ) மறைசாட்சிகள் அனைவருடைய துன்பங் களையும், அவர்கள் அதனால் அடைந்த மாட்சியையும் பற்றிப் புகழ்பாடும் ஒரு நூலாக அமைந்துள்ளது.

## மறைநூல் வாசகப்பட்டை (PHYLACTERIES)

மறைநூலின் வசனங்கள் வைக்கப்பட்டு, செபிக்கப்படும்பொழுது முன்நெற்றியிலும், கைகளிலும் கட்டிக்கொள்ளும் ஒருவித சிறிய கூடு. இதைக் குறிக்கும் கிரேக்கச் சொல், புதிய ஏற்பாட்டுக் காலத்திலும், அதற்கு முன்னும் ஒரு பாதுகாப்புப் பொருளை, தாயத்தைக் குறித்தது. மறை நூல் அறிஞரும் பரிசேயரும் ''தாங்கள் செய்வதெல்லாம் மக்கள் பார்க்கவேண்டும் என்றே செய்கிறார்கள். அவர்கள் தங்கள் மறைநூல் வாசகப் பட்டைகளை அகல மாக்குகின்றார்கள்; அங்கியின் குஞ்சங் களைப் பெரிதாக்குகின்றார்கள்'' (மத் *23:5*) என்று இயேசு குற்றஞ் சாட்டுகிறார். வீண் ஆடம்பரத்திற்காகவே அவர்கள் தேவையில் லாமல் மறைநூல் வாசகப்பட்டைகளையும், குஞ்சங்களையும் பெரிதாகக் கட்டுகிறார்கள் என்று இயேசு குறிப்பிடுகிறார். மறைநூல் வாசகப்பட்டைகளைக் கட்டும் பழக்கத்தை

அவர் கண்டிக்கவில்லை; மாறாக, அப்பழக் கத்தைக் கெடுக்கும் தீய எண்ணத்தையே கண்டிக்கிறார்.

மறைநூல் வாசகப்பட்டைகள் என்பதன் மூலம் மத்தேயு, சிறிய தோல் செபக் கூட்டைக் குறிக்கும் எபிரேயச் சொல்லின் அரமேயப் பன்மைச் சொல்லையே குறிப்பிடு கிறார். பதின்மூன்று வயதுக்கு மேற்பட்ட யூத ஆண்கள் அனைவரும் காலைச் செபத் தின்பொழுது செபத் தாயத்தினை அணிய வேண்டுமென மிஷ்னா கூறுகிறது. இவை தோலால் செய்யப்பட்டவையாகும். இவை தலையிலும், இடக்கையிலும் அணியப் பட்டன.

தலையில் அணியும் பட்டை யாத் *13:1-10.11-16;* உப *6:4-9; 11:13-21* எனும் நான்கு விவிலியப் பகுதிகளை வைப்பதற் காக, நான்கு பிரிவுகளைக் கொண்டிருந்தது. அவை வைக்கப்படும் வரிசைக் கிரமம் குறித்துச் சந்தேகம் நிலவுகிறது. இந்த நான்கு வாசகப்பகுதிகளில், இப்பட்டையை அணியவேண்டியதன் கட்டளைகளை யூதர் கள் கண்டு பிடித்தனர். உறுதியுடைய கெட்டியான தோலுடன், இந்தப் பட்டை, பன்னிரு இஸ்ராயேல் கோத்திரங்களைக் குறிக்கும் பொருட்டு, பன்னிரு தையல் களால் தைக்கப்பட்டிருந்தது.

கையில் அணியும் பட்டை, ஒரேயொரு பிரிவுடன் ஒரு தோல் கூட்டில் சில விவிலியப் பகுதிகள் எழுதப்பெற்று, அதனில் கொண்டிருந்தது.

இப்பட்டைகளில் உள்ள வாசகங்கள் தோரா முழுவதையும் நினைவுபடுத்துவதா கக் கருதப்பட்டது. புதிய ஏற்பாட்டுக் காலத்தில் யூதர்கள் சிலர் இப்பட்டை களைத் தீமையிலிருந்து காக்கும் தாயத் தாகக் கருதியதாகத் தெரிகிறது.

**மறைந்திருந்த புதையல்** (HIDDEN TREASURE)

விண்ணரசு நிலத்தில் மறைந்துள்ள புதை யலுக்கு ஒப்பாகும் (மத் *13:44-45*). இறைய ரசு மனித எதிர்பார்ப்புகளுக்கெல்லாம் அப் பாற்பட்ட இறைவனது அருட்கொடை. இந்த இறையரசு இயேசுவிலே வந்து விட்டது. இருப்பினும் இறுதி நாளிலே அது முழுமையாக வெளிப்படும். அந்நாளை நினைத்து நாம் ஆவலோடு காத்திருக்க வேண்டும். இறையரசை இயேசு புதைய லுக்கு ஒப்பிட்டு அதன் மூலம் நமக்குக் கிடைக்கும் அளவற்ற பலனை நினைவு படுத்துகிறார். அதனை அடைய எத்தகைய தியாகத்தையும் செய்ய நாம் தயாராக இருக்க வேண்டும் எனவும் விரும்புகிறார்.

**மறையுண்மை** (MYSTERY)

I. கிரேக்கமொழியில் எழுதப்பட்ட வேதாகமத்தில் மறையுண்மையைக் குறிக் கும் 'மிஸ்டேரியோன்' என்ற கிரேக்கச் சொல் காலத்தால் பிந்திய சில நூல்களில் தான் காணப்படுகின்றது (தோபி, யூதித்து, ஞானம், சீராக்கு, தானியேல், 2 மக்கபே யர்). இதன் அடிப்படையான பொருள் ''இரகசியம்''. புதிய ஏற்பாட்டில் ஏற் கெனவே இஃதோர் இறையியல் கலைச் சொல்லாகக் கையாளப்படுகின்றது. ஆனால், கிரேக்கப் பண்பாட்டில் இச்சொல் பரவலாக ஆளப்படுகின்றது. ஆனால், கிரேக்கப் பண்பாட்டில் இச்சொல் பரவ லாகப் பயன்படுத்தப்படுவதால் (தத்துவம், மறைவழிபாடு, அறிவுநெறி, மாயவித்தை) இதன் சரியான பொருளைக் கருத்தில் கொண்டு தவறான விளக்கங்களைத் தவிர்க்க வேண்டும்.

II. **இறை இரகசியங்களின் வெளிப்பாடு:** இறைவாக்கினர் காலத்திலிருந்து இறை இரகசியங்களைப் பற்றி இஸ்ராயேலர் அறிந்திருக்கின்றார்கள். இவை பெரும்பா லும் மனித வரலாற்றில் இறைவன் செயல் படுத்தும் மீட்புத்திட்டத்தைப் பற்றியன. இறைவெளிப்பாடும் இந்த இரகசியங் களைப் பற்றியதே. ''தம் ஊழியர்களாகிய இறைவாக்கினர்களுக்குத் தம் மறை பொருளை (இரகசியத்தை) வெளிப்படுத்தா மல், இறைவனாகிய ஆண்டவர் ஏதும் செய்வதில்லை'' (ஆமோ *3:7;* காண். எண் *24:4.16*). இக்கருத்து சிறப்பாக இரண்டாம் எசாயா நூலில் காணப்படுகின்றது. இஸ்ரா

யேலரின் வரலாற்றின் ஊழ் இறைவாக்கின ரால் முன்னறிவிக்கப்பட்ட இறைத்திட் டத்தை ஒட்டியே இருக்கும். இதுவே காலத்தின் இறுதியில் மீட்பு வருவதை உறுதிப்படுத்துகிறது (எசா 41:21-28). தானி யேல், ஞானாகமம் என்ற நூற்களிலே காணப்படும் மறையுண்மை என்பதின் கலைச்சொல்லியல் மற்றும் சமயக்கருத்தின் முன்வரலாறு இத்தகையதாகும்.

**2. தானியேலும் ஞானாகமும்:**

**அ) தானியேல் ஆகமம்:** இறை இரகசி யங்களை வெளிப்படுத்தும் ஒரு வெளிப் பாட்டு நூலாகும் (தானி 2:18 தொ. 27 தொ. 47; 4:6). மற்றப் போலிநூல்களுக்கு மாறாக, இந்த இரகசியங்கள் உலகின் தோற்றத்தைப் பற்றியன அல்ல; மாறாக ஒரு திட்டமான முடிவை நோக்கிச் செல் லும் வரலாற்றுப் போக்கிலே நிகழப் போவதைப் பற்றியன; அதாவது, மீட்புத் திட்டத்தின் மறையுண்மைகளாகும். இந்த இரகசியங்கள் வானுலகில் எழுதப்பட்டிருக் கின்றன. இவை தப்பாமல் நிறைவேறும். இறைவன் அவற்றைக் கனவுகளிலோ, காட் சிகளிலோ, தேவதூதர்கள் வழியாகவோ வெளியிடலாம் (காண் 2; 4; 5; 7; 8; 10-12). மனித அறிவினால் எதிர்காலத்தைப் பற்றி இந்த அளவில் தெரிந்து கொள்ள முடியாது; இறைவனே ''மறையுண்மை களை வெளிப்படுத்துபவர்'' (2:28. 47). இறுதி நாட்களில் நிகழப்போவது என்ன என்று அவர் முன்கூட்டியே அறிவிக்கின் றார் (2:28). வெளிப்பாட்டிலே பொதுவாக மனிதருக்குப் புரியாத புதிர்கள் பல இருந் தாலும், குறிப்பிட்ட சிலருக்கு ஞானமும் (காண். 5:11), தனிப்பட்ட திறனும் தருகின் றார். இவர்களை எந்த இரகசியமும் குழப்ப மடையச் செய்வதில்லை (4:6). மீட்பிற்கு முன்னோடியாக இருக்கும் தன் தீர்ப்புக் களையே அவர் இவ்வாறு வெளிப்படுத்து கின்றார். இவைகூட இறைவாக்கினரின் நூல்களில் வெகுகாலமாக மறைந்திருக்கின் றன. எரேமியாவின் நூலைப் படித்துக் கொண்டிருக்கும் தானியேலுக்குக் கபிரி யேல் என்ற தலைத்தூதுவர் எண் குறிகளின் அடிப்படையில் அமைந்த எழுபது வாரங் களைப் பற்றிய இரகசியத்தை (தானி 9) வெளிப்படுத்துகின்றார். ஆகவே, இறை வனது இரகசியத் திட்டங்களைப் புதிரான அடையாளங்களாக மாற்றும் கனவுகள் அல்லது காட்சிகள்போல மறைநூலும் சோதித்தறியப்படுகிறது.

**ஆ) ஞானாகமம்:** இது மற்ற சமயத் தினரின் வழிபாட்டில் ''மறையுண்மைகள்'' (ஞான 14:15.23) இருப்பதை அறிந்திருக்கின் றது. ஆனால், தானியேல் ஆகமத்தைப் போலவே ஞானாகமமும் இறைவனால் வெளிப்படுத்தப்படும் இவ்வுலகைக் கடந்த உண்மைகளையே, அதாவது நல்லோர் களுக்குக் கைம்மாறு அளிப்பதில் இறை இரகசியங்கள் (2:22), இறைஞானத்தின் தோற்றத்திற்கு உறவான இரகசியங்கள் ஆகியவற்றையே மறையுண்மை என்று குறிக்கிறது. இம்மறையுண்மைகள் மீட்பி யலையும் (மீட்புத்திட்டத்தின் நிறைவான ''மறு உலகு''), இறையியலையும் (இறை வனின் உட்பொருள்) சார்ந்தன. போலி நூல்களும் இவற்றைப் பற்றியே பேசு கின்றன.

**3. வேதாகமத்திற்குப் புறம்பான யூத மரபு:**

**அ) போலி வெளிப்பாட்டு நூல்கள்:** தானியேல் ஆகமத்தைப் போல, போலி நூலாகிய ஏனோக்கு ஆகமமும் ''புனிதர்க ளின் இரகசியங்களை அறிந்திருந்ததாய்'' எண்ணப்படுகின்றது. வருங்கால நிகழ்ச்சி களையெல்லாம் வர்ணித்த வானக ஏடுகளை அவர் வாசித்திருந்தார். அதன் மூலமாக, நல்லோர்க்கும் தீயோர்க்கும் என்ன முடிவு என்ற மறையுண்மையை அவர் அறிந் திருந்தார். மறையுண்மை என்பது இந்நூலில் இறைத்திட்டத்தின் இறுதிக்காலச் செயற் பாட்டைக் குறிக்கின்றது. எஸ்ரா, பாரூக்கு ஆகியோரின் வெளிப்பாட்டு நூல்கள் இச் சொல்லை அதே பொருளிலேயே எடுத்தாள் கின்றன.

**ஆ) கும்ரான் ஏடுகள்:** நல்லோர் தீயோர் இவர்களின் முடிவைத் தீர்மானிக்கும் வகை

யில் இறைவனின் வருகையின்போது நிகழக்கூடிய மறையுண்மைகளை அறிவதில் கும்ரான் வாசகங்களும் பேரார்வம் காட்டுகின்றன. நீதியின் போதகர் அவர்களுக்குத் தந்துள்ள விளக்கத்தின்படி அவற்றின் வர்ணனையை இறைவாக்கு நூல்களில் தேடுகின்றனர். ஏனெனில், இறைவன் தன்னுடைய ஊழியர்களாகிய இறைவாக்கினரின் மொழிகளில் பொதிந்துள்ள மறையுண்மைகள் எல்லாவற்றையும் அவருக்குக் கற்பித்திருக்கின்றார். இறையூக்கம் பெற்ற இந்த விளக்கவுரையானது ஒரு புதிய வெளிப்பாட்டிற்கு ஒத்ததாகும். ''இறைவனின் மறையுண்மைகள் பெரும் வியப்புக்குரியவை; ஆகவே, இறுதி நாட்கள் இறைவாக்கினர் முன்னறிவித்ததைவிட நீண்டிருக்கும்''. ஆனால், ''நேர்வழி நடப்பவர்கள்'' மட்டுமே இவ்வுண்மைகளைத் தெரிந்து கொள்ளலாம். இது தீயோருக்கும் குழுவைச் சேராதவர்களுக்கும் அறிவிக்கக் கூடாத மறைபொருளான வெளிப்பாடாகும்.

## III. புதிய ஏற்பாடு

**1. இயேசுவின் படிப்பினை:** ஒத்தமை நற்செய்தி நூல்களில் 'மறையுண்மை' என்ற சொல் ஒரே ஒரு முறைதான் பயன்பட்டிருக்கின்றது; யோவான் நற்செய்தி நூலில் அதுகூட இல்லை. ''இறையாட்சியின் மறைபொருளை அறிய உங்களுக்குக் கொடுத்து வைத்திருக்கிறது. புறத்தே இருப்பவர்களுக்கோ எல்லாம் உவமைகளாய் இருக்கின்றன'' *(மாற் 4:11)* என்று விதைப்போனின் உவமையைப் பற்றி விளக்கம் கேட்ட சீடர்களுக்கு இயேசு மறுமொழி கூறுகிறார். அவர் தனக்குச் செவிமடுப்போரிடையே இரு சாராரைக் காண்கின்றார். மறையுண்மையைப் புரிந்து கொள்பவர்கள்; எசாயா கூற்றுப்படி *(6:9 தொ; காண். மாற் 4:12)* தங்களுடைய கடின மனத்தால் புரிந்து கொள்ள இயலாது ''புறத்தே இருப்பவர்கள்.'' இவ்விரண்டாம் சாராருக்கு இறையரசின் வருகை ஒரு புதிராகவே இருக்கின்றது. உவமைகளால் கூட அவர்களுக்கு உதவி இல்லை. ஆனால், அவருடைய சீடர்களுக்கு மறையுண்மை அறிவிக்கப்படுகின்றது; உவமைகள் விளக்கப்படுகின்றன. இம்மறையுண்மை யாது? முன்னாள் இறைவாக்கினர் அறிவித்த இறைத்திட்டத்தின்படி இறையரசின் வருகைதான் இம்மறையுண்மை ஆகும். இங்கு யூதரின் வெளிப்பாட்டு நூல்களில் உள்ள ஓர் அடிப்படையான கருத்தை எடுத்தாள்கின்றார் இயேசு: இவ்வுலகிலே இறை அரசை நிறுவி, ''உலகத்தோற்ற முதல் மறைந்திருந்த'' *(மத் 13:35)* அதையடுத்த இறை இரகசியங்களை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்துவதுதான் இயேசுவின் பணி. அவர் வாக்குறுதிகளை நிறைவேற்றுகிறார். அவரோடு இறைவெளிப்பாடு நிறைவடைகிறது. இறையரசின் மறையுண்மை இவ்வுலகில், இயேசுவில் பிரசன்னமாகின்றது. ஆனால், அதே சமயத்தில் மனுகுலம் இரண்டு பகுதியாகப் பிரிகின்றது. சீடர்கள் அவரை ஏற்றுக்கொள்கின்றனர்; ''புறத்தே உள்ளவர்'' ஏற்றுக்கொள்ளவில்லை. மறையுண்மை மறைவானதன்று; அனைவருக்குமே அறிவிக்கப்படுகின்றது *(காண். மாற் 1:15 இணை; 4:15 இணை)*. ஆனால், உவமைகளின் உட்பொருள், புரிந்து கொள்ள முடிந்தவர்களுக்கு மட்டுமே விளக்கப்படுகின்றது *(காண். மத் 13:9.43)*. இவர்கள் கூட தங்கள் அறிவினால் அன்று, இறைவனின் அருட்கொடையினாலேயே மறை உண்மைகளைப் புரிந்துகொள்கின்றார்கள்.

**2. பவுலின் படிப்பினை:** யூதர் வெளிப்பாட்டு இலக்கியத்தின் பின்னணியில்தான் பவுலும் 'மறையுண்மை' என்ற சொல்லை எடுத்தாள்கின்றார். இச்சொல் கரைகாணாக் கடல்போன்ற ஓர் ஆழ்ந்த, எடுத்துரைக்க முடியாத உண்மையைக் குறிக்கின்றது. இதன் உட்பொருளும் நற்செய்தியின் உட்பொருளும் ஒன்றுதான்: அதாவது, இயேசுவின் இறப்பாலும் உயிர்ப்பாலும் மீட்புப் பணி நிறைவேறி, வார்த்தையின் அறிவிப்பால் வரலாற்றில் நிலைபெறுதல். இஃது இறைவெளிப்பாட்டின் துணையின்றி மனிதரால் அறியமுடியாத இறை இரகசியமாகும்

(காண். 1 கொரி 14:2). அறிவிக்கப்பட்ட மீட்பின் இறுதி நிலையை மட்டுமன்று, அது சிறிது சிறிதாக நிறைவேறும் பல படிகளையும் இது குறிக்கின்றது. இப்படிகள் இவ்வுலகில், இயேசுவின் வருகை, திருச்சபையின் காலம், காலத்தின் நிறைவு ஆகியவையாகும். ஒவ்வொரு கிறிஸ்துவனும் அறியவும், தியானிக்கவும் விரும்பும் மறையுண்மை இதுதான் (கொலோ 2:2; எபே 1:15தொ; 3:18 தொ).

**அ) காலத்தில் மறையுண்மை மலர்தல்:** தான் எழுதிய முதற் கடிதங்களில் மறையுண்மையின் பல அம்சங்களை ஒவ்வொன்றாக பவுல் கூறுகிறார் (2 தெச; 1 கொரி; உரோ). பவுலுக்கு, இறைவனின் மறையுண்மையை எடுத்தியம்புதலும் (1 கொரி 2:1), சிலுவையில் அறையப்பட்ட (காண். 1:23; 2:2) இயேசுவின் நற்செய்தியை (1:17) அறிவித்தலும் ஒன்றே. யூதருக்கு இடையூறாகவும், கிரேக்கர்களுக்கு மடமையாகவும், விசுவசிப்போருக்கு ஞானமாகவும் தோன்ற, அவர் கொரிந்தியருக்கு அறிவித்த நற்செய்தி இதுதான் (1:23 தொ). மறையுண்மையாகும் இத்தெய்வீக ஞானம் (2:7) அதுவரை மறைத்து வைக்கப்பட்டு இருந்தது. இவ்வுலகில் ஆதிக்கம் செலுத்துவோர் யாரும் அதைக் கண்டுகொள்ளவில்லை (2:8தொ). இறையின் உள்ளாழத்தையும் உய்த்துணரும் ஆவியால் நமக்கு வெளிப்படுத்தப்பட்டது (2:10தொ). தமது ஆற்றலை மட்டும் நம்பியிருக்கும் உடல் சார்ந்த மனிதருக்கு எட்டாத அஃது, ஆவியால் கற்பிக்கப்பெறும் ஆன்மீக மனிதருக்குப் புலப்படும் (2:15). ''கடவுளுடைய மறைபொருள்களின் கண்காணிப்பாளராகிய'' (4:1) பவுல் விசுவாசத்தில் முதல்நிலையைக் கடந்தவர்களுக்கன்று (3:1தொ), நிறைவு பெற்றவர்களிடையே (காண். 2:6) ''தேவ ஆவியைப் பெற்றுக்கொண்டவர்களுக்கு ஆவிக்குரியவற்றை விளக்கி உரைக்கிறார்'' (2:13). அவர்கள் இம்மறையுண்மையிலே புதைந்திருக்கும் அருட்கொடைகள் (2:12) அனைத்தையும் தெரிந்துகொள்கிறார்கள். நற்செய்தி அனைவருக்கும் அறிவிக்கப்படுகின்றது. ஆனால், அதன் உட்பொருளைப் படிப்படியாக ஆழ்ந்து உணர கிறிஸ்துவர்கள் அழைக்கப்படுகின்றனர்.

விசுவசிப்போரின் மீட்புக்காகச் செயலாகும் இம்மறைத்திட்டம் ''அக்கிரமத்தின் மறைந்த ஆற்றலோடு'' (2 தெச 2:7) போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறது. இந்த ஆற்றல் சாத்தானோடு தொடங்கி எதிர்க்கிறிஸ்துவின் வெளிப்பாட்டிலே முடிவுறும். மீட்புத்திட்டம் வரலாற்றில் பல புதிரான வழிகளில் செயல்படுகின்றது. யூதரல்லாதார் ஈடேற்றமடைய யூதரில் ஒரு பகுதியினருடைய உள்ளங்கள் கடினமாக வேண்டியிருந்தது (உரோ 11:25). ஆனால், தெரிந்தெடுக்கப்பட்ட மக்களின் வீழ்ச்சியை நல்லதொரு விளைவுக்குப் பயன்படுத்தியது அறிவுக்கு எட்டாத இறைஞானம் (11:33). திட்டத்தின் முடிவில் கிறிஸ்து வெற்றி பெறுவார்; இறந்தோர் உயிர்ப்பர்; வாழ்வோர் அவரது விண்ணக வாழ்வில் பங்கு பெறும் வகையில் புத்துருப் பெறுவர் (1 கொரி 15:51 தொ). கிறிஸ்துவின் வருகையிலிருந்து அவருடைய இறுதி வெற்றிவரையுள்ள புனித வரலாறுதான் ''இறைவனின் மறைத்திட்டமாகும்''. ''ஊழி ஊழிக்காலமாக மறைவாயிருந்து இப்பொழுது வெளியாக்கப்பட்டு முடிவில்லாக் கடவுளின் திட்டத்திற்கொப்ப, புறவினத்தார் அனைவரும் கீழ்ப்படிந்து விசுவசிக்குமாறு இறைவாக்குகளின் மூலமாய் அறிவிக்கப்பட்ட மறைபொருளை வெளிப்படுத்துவதே'' நற்செய்தியாகும் (உரோ 16:25தொ).

**ஆ) கிறிஸ்துவினுடையவும் திருச்சபையினுடையவும் மறையுண்மை:** சிறைக்கூடமடல்களில் (கொலோ; எபே) பவுல் இறைமறையுண்மையின் (கொலோ 2:2) தற்கால நிலைபற்றியே அதிகம் எண்ணுகின்றார். அதாவது, ''கிறிஸ்துவின் மறையுண்மை'' (கொலோ 4:3; எபே 3:4) திருச்சபையின் வழியாக, தன் மீட்புப் பணியை நிறைவேற்றுகிறது. ஊழியமிக்க காலமாக இறைவனில் மறைந்திருந்த இத்திட்டத்தை (கொலோ 1:27; எபே 3:9; காண். 3:5) அப்போஸ்தலருக்கும் இறைவாக்கினருக்

கும், சிறப்பாக பவுலுக்கும் *(எபே 3:4 தொ)* இறைவன் வெளிப்படுத்துகின்றார் *(கொலோ 1:26)*, அறிவிக்கின்றார் *(எபே 1:9)*, தெளிவாக்குகின்றார் *(3:9)*. நற்செய்தி அறிவிப்பதும் இதுதான் *(3:6; 6:19)*. வர லாற்றின் இறுதியில் நிறைவேறுவதற்கென முன்கூட்டியே உருவாக்கப்பட்ட இறைத் திட்டத்தின் இறுதிமொழி இதுதான். ''விண் ணிலுள்ளவை, மண்ணிலுள்ளவை அனைத் தையுமே கிறிஸ்துவுக்குள் ஒன்று சேர்க்க வேண்டும்'' *(1:9தொ)*. யூதரின் வெளிப் பாட்டிலக்கியம் படைப்பின் வியப்புகளை ஆராய்ந்தது; கிறிஸ்தவத் திருவெளிப்பாடு அதன் ஆழ்ந்த உட்பொருளை விளக்கு கின்றது. படைப்பின் முதற்பிறப்பாகிய கிறிஸ்துவில் எல்லாப்பொருட்களும் தங் கள் தங்கள் நிலையை உணர்ந்து *(கொலோ 1:15 தொ)* ஒப்புரவு அடைகின்றன *(1:20)*. வெளிப்பாட்டிலக்கியங்கள் மனித வரலாற் றில் இறைவனின் வழிகளை ஆராய்ந்தன. இவையெல்லாம் கிறிஸ்துவில் இணை வதைக் கிறிஸ்தவத் திருவெளிப்பாடு காட்டு கின்றது. கிறிஸ்துவால் அவரது திருச்சபை யின் மூலம் வரலாற்றிலே மீட்பு பிரசன்ன மாகின்றது. இனி யூதரும் பிறரும் அதே உரிமைகளைப் பெறுகின்றார்கள், ஒரே உடலின் அங்கங்கள் ஆகின்றனர்; அதே வாக்குறுதியின் பலனை அடைகின்றார்கள் *(3:6)*. இம்மறையுண்மையின் ஊழியனாகத் தான் பவுல் தேர்ந்தெடுக்கப்படுகின்றார் *(3:7தொ)*. இம்மறையுண்மையில் எல் லாமே ஒரு மறைபொருளைப் பெறுகின் றன. ஆண் பெண் இணைப்பு கிறிஸ்து திருச்சபையின் இணைப்பின் அடையாளமா கிறது *(5:32)*. யூதரும் மற்றவரும் தங்கள் நம்பிக்கைக்கு அவரில் ஓர் ஆதாரத்தைக் காண்கின்றனர் *(கொலோ 1:27)*. நமது ''விசுவாசத்தின் மறைபொருள்'' *(1 திமொ 3:9)* எவ்வளவு பெரியது! ''ஊன் உருவிலே அவர் தோன்றினார். தேவ ஆவியின் செய லாலே அவர் இறைவனுக்கு ஏற்புடையவ ரென விளங்கினார்; வானதூதர்க்குத் தம்மைக் காண்பித்தார்; புறவினத்தார்க்கு அறிவிக்கப்பெற்றார்; விசுவாசத்தோடு உல கில் ஏற்கப்பெற்றார்; மாட்சிமையிலே அவர் விண்ணேற்பு அடைந்தார்'' *(1 திமொ 3:16)*.

இவ்வாறு யூத வெளிப்பாட்டிலக்கியம் எதிர்நோக்கிய மறையுண்மையிலிருந்து, இயேசு வெளிப்படுத்திய ''இறையரசு'' வழியாக, பவுல் அறிவித்த ''கிறிஸ்துவின் மறையுண்மை'' வரை ஒரே இறைத்திட்டம் படிப்படியாகத் தெளிவு பெறுகின்றது. கிரேக்கர் மற்றும் கீழ்நாட்டு மறை வழி பாட்டிற்கும், கிறிஸ்தவ மறையுண்மைக் கும் ஒரு தொடர்பும் இல்லை. அக்கிரமத் தின் மறைபொருளை எதிர்ப்பதற்காகச் சொல்லாட்சியின் சில அம்சங்கள் ஒத்திருந் தாலும், உட்பொருள் வேறுபட்டது *(காண். 2 தெச 2:7)*. இதேபோலக் கிறிஸ்துவின் சிலுவையில் வெளிப்பட்ட இறைஞானம் மனிதரின் ஞானத்திற்கு மாறானது *(காண். 1கொரி 1:17-25)*.

IV. **யோவானின் திருவெளிப்பாடு:** திரு வெளிப்பாட்டில் இருமுறை ''மறை யுண்மை'' என்ற சொல் அருங்குறிகளின் உட்பொருளைக் குறிக்கின்றது. இதைக் காட்சியாளரோ *(திருவெளி 1:20)* அவரோடு பேசும் தேவதூதரோ *(17:7)* விளக்குகின்ற னர். வேறு இரண்டு இடங்களில் அதன் பொருள் பவுல் அதற்குத் தந்த பொருளுக்கு நெருங்கியிருக்கின்றது. உரோமை நகரைக் குறிக்கும் பெரிய பாபிலோன் நகரின் முன் ஒரு பெயர், ஒரு மறைபொருளால் எழுதப் பட்டிருக்கின்றது *(17:5)*. அதனுடைய வர லாற்றில் பவுல் பழித்துக் கூறிய ''தீமையின் மறைத்திட்டம்'' *(காண். 2 தெச 2:7)* செயல்படுவதே இதன் காரணம். இறுதி நாளில் ஏழாவது தேவதூதர் இறுதித் தீர் வையை எக்காளத் தொனியால் அறிவிக் கும்போது ''கடவுளின் மறைவான திட்டம் நிறைவேறியிருக்கும். இறைவாக்கினரான தம் ஊழியர்களுக்குக் கடவுள் அறிவித்த நற்செய்தியின்படியே அவை நிறைவேறும்'' *(திருவெளி 10:7; காண். 1 கொரி 15:20-28)*.

இந்த நிறைவைத்தான் திருச்சபை எதிர் நோக்கியிருக்கின்றது. இம்மறையுண்மை யைத்தான் அஃது ஏற்கெனவே வாழ்ந்து

வருகின்றது. ஆனால், இவ்வுலகில் உள்ள வரை இறையாற்றலுக்கும் தீயசக்திகளுக்கும் இடையே அது மாட்டிக்கொண்டிருக்கும். தீய சக்திகள் அறவே ஒடுக்கப்படும் நாள் ஒன்றுவரும் (காண். திருவெளி 20; 1 கொரி 15:26தொ); அன்று திருச்சபை ''வரவிருக்கும் உலகிலே'' நுழையும். அப்பொழுது இறைவனின் மறையுண்மை புத்துயிர்பெற்ற உலகிலே தனித்திருக்கும் (திருவெளி 21; காண். 1 கொரி 15:28தொ). கிறிஸ்தவ வெளிப்பாட்டின் நிறைவு இது தான்.

**மனச்சான்று, மனச்சாட்சி** (CONSCIENCE)

I. மனச்சான்று என்ற சொல் உள்ளுணர்வாலறியப்படும் மனத்திறனைக் குறிக்கும். இதைக் கொண்டு ஏற்கெனவே செய்யப்பட்டு விட்ட அல்லது செய்யப்படப்போகிற ஒரு செயலைத் தீர்ப்பிடுகிறோம். இது நன்மை தீமை பற்றிய கருத்தியலான அறிவைவிட அதிகமானது. ஒன்று எனக்கு நல்லதாய் அல்லது கெட்டதாய் இருக்கிறது (இருந்தது) என்று நாம் கூறும் செயல்முறையான தீர்ப்பாகும். இந்த உணர்வு ஒருவனை அவனது செயல்களுக்குப் பதில் கூறச் செய்கிறது. அவனையும், அவன் அயலானையும் சமூகம் முழுவதையும் கட்டுப்படுத்தும் சட்ட திட்டங்களுக்கேற்ப கணக்குக் கொடுக்கும்படி அவனை அழைக்கிறது.

இக்கருத்துக்கேற்ற துல்லியமான சொல் எபிரேய மொழியில் இல்லை. கிரேக்க உலகோடு தொடர்புகொள்ளும்வரை விவிலியத்திலும் காணப்படவில்லை. ஆனால், இந்த உணர்வை விளக்கும் சொற்றொடர்கள் உள்ளன. இக்கருத்தைக் குறிக்கும் ''சினேய்தேசிஸ்'' என்ற கிரேக்கச்சொல் நற்செய்திகளில் காணப்படவில்லை. ஆனால், பவுலால் சிறப்பாகக் கையாளப்படுகிறது. புதிய ஏற்பாட்டில் மனச்சான்று என்ற சொல் முப்பத்தாறு தடவை காணப்படுகிறது. இவற்றில் கொரிந்தியருக்கு எழுதப்பட்ட முதலாம், இரண்டாம் திருமுகங்களில் மட்டும் பன்னிரண்டு தடவை வருகிறது. இச்சொல் குறிக்கும் உண்மை விவிலியம் முழுவதும் காணப்படுகிறது. இதுதான் இந்த உண்மை பற்றிய பவுலின் சிந்தனைக்கும், கிரேக்க மனப்போக்கிற்கும் இடையேயுள்ள வேறுபாட்டைச் சுட்டிக் காட்ட இடமளிக்கிறது.

II. **என் உள்ளம் உறுத்தவேயில்லை:** இக் கருத்து தெளிவாகக் கூறப்படும்போது, மனச்சான்றின் செயல், இதயம், உளம், மனம் அல்லது இடுப்புக்குச் சாற்றிக் கூறப்படுகிறது. ஆண்டவர் அபிடேகம் செய்த சவுலின் மேலங்கியின் தொங்கலை அறுத்தபின் அதற்காக தாவீது மனம் வருந்தினார் (1 சாமு 24:6). நாபலும் அவனுடைய ஊழியர்களும் கொல்லப்பட்டால், தாவீதுக்கு மனவருத்தம் உண்டாகும் (25:31). மக்கள் தொகையைக் கணக்கெடுத்த பிறகு தாவீது மனம் வருந்தினார் (2 சாமு 24:10). முதலில் மனவருத்தம் ஆண்டவரோடு செய்து கொண்ட உடன்படிக்கையோடு தொடர்புபடுத்தப்படுகிறது. ஏனெனில், யாவேயின் முன்னிலையில்தான் அரசர்களின் செயல்கள் தீர்ப்பிடப்படுகின்றன (1 அர 16:7). இந்த யாவேதான் ''உள்ளுணர்வுகளையும் இதயச் சிந்தனைகளையும் சோதித்தறிகிறார்'' (எரே 11:20; 17:10; சங் 7:10). அவருக்கு மனிதர்களின் செயல்கள் எல்லாம் தெரிந்திருக்கின்றன (சங் 139:3).

ஆனால் மனச்சான்றின் தீர்ப்பு, இறைவனுக்கு அருகில் இருப்பது என்ற கருத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டதா? இல்லையென்று யோபுவின் வரலாறு சுட்டிக்காட்டுகிறது. தன்னைக் குற்றம் சாட்டுபவர்களுக்கும், இறைவனுக்கும்கூட, யோபு தனது உள்ளம் தூய்மையாக உள்ளது என்று உரத்து முழங்குகிறார்: ''என் நேர்மையை நான் பற்றிக்கொண்டேன்; விடவே மாட்டேன்; என் வாழ்நாளில் எதைக்குறித்தும் என் உள்ளம் உறுத்தவில்லை'' (யோபு 27:6). அதாவது அவரது மனச்சான்று அவரைக் குற்றம் சாட்டவேயில்லை. இருப்பினும், அவர் புழுதியிலும் சாம்பலிலும் இருந்து மனம் வருந்தவேண்டும் (42:6). மனச்சான்று ஒரு மனிதனுள் எவ்வளவு ஆழமாய் இருந்தாலும், சட்டத்தில் எடுத்துக்

கூறப்படும் இறைவனுடைய சித்தத்தைப் பற்றி அறிவுக்கேற்ப இறைமறை யுண்மையை அஃது அளவிட முடியாது.

நீதி, நேர்மைபற்றி இயேசு கடிந்துரைக்கும் பரிசேயர்கள், யோபுவிடமிருந்து வேறுபட்ட கருத்தைக் கொண்டிருந்தனர். அவர்கள் நீதி பற்றிய உணர்வைச் சட்டத்தின் புறக்கடைப்பிடிப்பாக மாற்றிவிட்டனர். இயேசு சட்டத்தை அகற்றவில்லை. ஆனால், அதைக் கடைப்பிடிப்பதில் எண்ணத்தூய்மை இருக்க வேண்டும் என்று கற்பிக்கிறார். நலமுடன் இருக்கும் கண்ணின் உதவியுடன் (லூக் *11:34*), மறைவாய் உள்ளதைக் காணும் தந்தையின் முன் (மத் *6:4. 6.18*), உள்ளத்திலிருந்து தீர்ப்பிடுமாறு மக்களுக்கு இயேசு கற்பிக்கிறார் *(15:1-20)*. இப்படிச் செய்யும்போது இயேசு சுதந்தர மனச்சான்றுக்கு வழியைத் தயாரிக்கிறார். சட்டம் மனிதனுக்குப் புறம்பானதன்று, மாறாக, மனிதர் உள்ளத்தில் பொழியப்படும் ஆவியின் துணையால், சட்டத்தின் உண்மையான பொருளும் ஆற்றலும் கண்டுணரப்படும் பவுலின் காலத்திற்கு இயேசு தயாரிக்கிறார்.

III. **பவுலின் கருத்துப்படி மனச்சான்று:**

***1.*** பவுல் ''சினேய்தேசிஸ்'' என்ற சொல்லை எந்த இலக்கிய மூலங்களில் இருந்தோ, ஸ்தோயிக்கு தத்துவத்திலிருந்து அல்லாமல், அக்காலத்திய சமய மொழி மரபிலிருந்து எடுத்துக் கையாள்கிறார். உள்ளம் பற்றிய விவிலியக் கருத்தைச் சேர்ந்த கருதாத் தன்னியல்புத் தீர்ப்பை எடுத்துக் கூற இச்சொல் பயன்பட்டது. ஒரு கருத்திலிருந்து மற்றதற்குச் செல்லும் வழி, திமொத்தேயுவுக்குக் கூறப்படும் ஆலோசனையில் தெளிவாகக் காணப்படுகிறது. ''தூய உள்ளம், குற்றமற்ற மனச்சாட்சி, நேர்மையான விசுவாசம் இவற்றினின்று பிறக்கும் அன்பைத் தூண்டுவதே அக்கட்டளையின் (போதகத்தின்) நோக்கமாய் இருக்கட்டும்'' *(1 திமொ 1:5)*. உள்ளம், மனச்சான்று, விசுவாசம் ஆகியவை வெவ்வேறு வழிகளில் ஒவ்வொரு அன்புச் செயலின் பிறப்பிடமாக அமைகின்றன. கருத்து நேர்மையாக இருந்தால், விசுவாசம் நிலையான உறுதிப்பாட்டை அளித்தால், அப்போது மனச்சான்று திருப்தி அடையும். இவ்வாறு, கிறிஸ்தவன் ''தண்டனையை நினைத்தது மட்டுமின்றி, மனச்சாட்சியின் பொருட்டும்'' ஆளும் அதிகாரம் கொண்டவர்களுக்கு அடங்கியிருத்தல் வேண்டும் *(உரோ 13:5)*. ஏனெனில், அவனது விசுவாசம் எப்படி இந்த அதிகாரம் இறைவனின் பணியில் உள்ளது என்று அவனுக்குக் காட்டும். ஆகவே, தனது மனச்சான்று நேர்மையாக உள்ளது என்று அடிக்கடி பவுல் கூறுகிறார் *(2 கொரி 1:12; காண். அ.ப. 23:1; 24:16)*.

ஸ்தோயிக்குகள் கருதியதுபோல், இந்த மனச்சான்று தன்னாட்சியானது என்று இயல்பான முடிவாய் அமையவில்லை. இயற்கையின் விதிகள் பற்றிய அறிவின் காரணமாக மனச்சான்று சுதந்தரமானது என்று அவர்கள் கருதினார்கள். பவுலைப் பொருத்தமட்டும், மனச்சான்றின் தீர்ப்பு எப்போதும் இறைவனது தீர்ப்புக்குக் கட்டுப்பட்டதாகும். ''என் மனச்சாட்சி என்னை எதிலும் குற்றம் சாட்டவில்லை. ஆயினும், இதனால் நான் குற்றமற்றவன் என்று சொல்ல முடியாது. எனக்குத் தீர்ப்புக் கூறுகிறவர் ஆண்டவர்தாம்'' *(1 கொரி 4:4)*. நேர்மையான மனச்சான்றுக்கு அவர் கோரும் உரிமை, பொதுவாக, இறைவனை *(2 கொரி 4:2)* அல்லது பரிசுத்த ஆவியின் சாட்சியைப் பற்றிய *(உரோ 9:1)* குறிப்பைத் தொடர்ச்சியாகக் கொண்டுள்ளது. மனச்சான்று இறையாட்சியுடையதாகும். அது, நேர்மையானது, தூய்மையானது என்று விவரிக்கப்படும்போது, உண்மையான விசுவாசத்தால் அடிப்படையிலேயே ஒளியூட்டப்படுகிறது *(1 திமொ 1:5.19; 3:9; 4:1தொ; 2 திமொ 1:3; காண். எபி 13:18; 1 பேதுரு 3:16)*.

**2. விசுவாசி நிறைவான விடுதலை அடைகிறான்:** உணவுகளுக்கிடையேயும், விழாக்களுக்கிடையேயும் தேர்ந்தெடுத்தலைச் சட்டம் யூதர்கள் மேல் சுமத்தியது. கிறிஸ்தவனுக்கு ''யாவும் தூயவைதான்'' (உரோ *14:20*; தீத் *1:15*). தடை செய்யப்பட்டது

எதுவுமில்லை *(1 கொரி 6:12;. 10:23).* விசுவாசம் அளிக்கும் அறிவால் *(8:1)* மனிதன் ஒவ்வொரு படைப்பின் நன்மைத் தன்மையைக் கண்டுணர்கிறான் *(3:21-23; 8:6; 10:25 தொ).* ஒளியூட்டப்பட்ட மனச் சான்றைக் கொண்டிருக்கும் கிறிஸ்தவன், மோசே சட்டத்தின் சடங்கு விதிகளிலிருந்து தான் விடுதலையடைந்துள்ளதைக் காண் கிறான்; ''ஆண்டவரின் ஆவியானவர் எங் கிருக்கிறாரோ, அங்கு விடுதலையுண்டு'' *(2 கொரி 3:17).* ஆனால் இந்த விடுதலை மற்றொருவருடைய மனச்சான்றைத் தழுவி யதன்று *(1 கொரி 10:29).* ஸ்தோயிக்கு களைப் போல் அவன் சுதந்தரமுடையவன். ஆனால் வேறுபட்ட விதத்தில், வரையறைக் குள் சுதந்தரமுடையவன். இந்த வரையறை கள் விளக்கப்பட வேண்டும்.

தடை செய்யப்பட்டது எதுவுமில்லை (எதையும் செய்ய உரிமையுண்டு என்பது உண்மைதான்) என்று கூறும் பவுல், உடனே ''ஆனால் எல்லாமே ஞானவளர்ச்சி தராது'' என்றும் கூறுகிறார் *(10:23).* உண் மையில், அதே அளவு அல்லது தரத்தில் வளர்ச்சியடையாத மனச்சான்றுகளுக் கிடையே போராட்டம் எழலாம். விசுவாசி களில் சிலருக்குச் சிலைகளுக்குப் படைக் கப்பட்ட புலால் மாசுபட்டதாகும்; இத னால், அவர்கள் அதை உண்ணக்கூடாது. இதுவே, அவர்கள் மனச்சாட்சியின் தீர்ப்பு. இப்படிப்பட்ட வலிமையற்றவர்களை அதிர்ச்சிக்குள்ளாக்காமல் இருக்க மன வலிமையுள்ளவர்கள் *(உரோ 15:1)* பெரி தும் முயற்சி எடுக்க வேண்டும். ''நீ உண்ணும் உணவு உன் சகோதரன் மனதைப் புண்படுத்தினால், நீ அன்பு நெறியில் நடப்பவன் அல்லன் அற்ப உணவை முன்னிட்டு அவனை அழிவுறச் செய்யாதே. அவனுக்காக கிறிஸ்து உயிர் துறக்க வில்லையா?'' *(14:15).* ''உணவின் பொருட்டுக் கடவுளின் வேலையைத் தகர்க்கத் துணியாதே; யாவும் தூயவைதான்; ஆனால், இடைஞ்சலுக்கு இடம் தருமானால், உண்ப வனுக்கு யாவும் தீயவையே;.... இது போன்ற வேறெதையும் செய்வதைச் செய் யாமல் விடுவது நல்லது'' *(14:20; 1 கொரி 8:9-13).* ஆகவே, அறிவு பிறர் அன்புக்கு வழிவகுக்க வேண்டும்.

மனச்சான்று, அதற்குப் பொருள் அளிக் கும் இறைப்பிரசன்னத்தின் பொருட்டும், அதன் சுதந்தரத்தைக் கட்டுப்படுத்த வேண் டும். ''எதையும் செய்ய உரிமையுண்டு என்பது உண்மைதான்'' என்று கூறிய பவுல், ''எதற்கும் நான் அடிமையாக மாட்டேன்'' *(1 கொரி 6:12)* என்றும் கூறுகிறார். விபசாரியுடன் உறவு வைத்துக் கொள்ள எனக்கு அனுமதியில்லை. எனது உடல் எனக்குச் சொந்தமன்று. இங்கும் அறிவும் சுதந்தரமும் வேறொருவரால் கட்டுப்படுத்தப்படுகிறது. இவர் முதலில் எனக்குப் புறம்பானவராகத் தோன்றுகிறார். ஆனால், எனது உண்மையான நிறைவாக தன்னையே விசுவாசத்தில் படிப்படியாக வெளிப்படுத்துகிறார்.

இவ்வாறு, பவுல் எழுதப்பட்ட மற்றும் மாற்ற முடியாத விதிகளின் ஆட்சிக்குட் பட்டவரல்லர். அவரது மனச்சான்றைக் கட்டுப்படுத்துபவை அவர் ஆண்டவரோ டும், சகோதரர்களோடும் கொண்டுள்ள உறவுகளே ஆகும். அவர் கண்டுணர்வது, எழுதப்பட்ட சட்டத்தால் சுமத்தப்படும் வளைவு நெளிவற்ற பணிச்சட்டமன்று, இறைவார்த்தையோடும் மற்ற மக்களோ டும் கொண்டுள்ள இசைவிணக்கமும், அதிக மாகக் கட்டாயப்படுத்தும் உறவுமேயாகும். மேலும், இஃது எழுதப்பட்ட சட்டங்களின் பயனுடைமையைப் பாதிக்கவில்லை; வலு வற்றவர்களின் கண்முன் அவை கொண்டி ருக்கும் விட்டுக்கொடாப் பண்பை அவற்றி லிருந்து நீக்குகிறது.

*3.* கிறிஸ்துவில் பெறப்பட்ட புதிய சுதந்த ரத்தைப் பற்றி பவுல் நெடுங்காலம் சிந்தித் திருக்க வேண்டும் என்பது தெளிவு. இது வும் பிறசமய உலகோடு அவர் கொண்ட தொடர்பால் விளைந்த அனுபவமும் சேர்ந்து, பவுலைப் பின்வருமாறு கூறச்செய் கின்றன: ''திருச்சட்டத்தைப் பெற்றிராத புறவினத்தார் அதில் உள்ள கட்டளைகளை

இயல்பாகவே நிறைவேற்றும்போது, அவர் களுக்குத் திருச்சட்டம் இல்லாத போதிலும் அவர்கள் உள்ளம் சட்டமாக அமைகிறது. திருச்சட்டம் கற்பிக்கும் செயல்முறை தங் கள் உள்ளத்தில் எழுதப்பட்டிருக்கிறது என் பதை அவர்கள் எண்பிக்கிறார்கள்; ஏனெ னில், அவர்களுடைய மனச்சான்று அதற்குச் சாட்சியாய் நிற்கிறது. பிறர் செய்வது குற்றமா, குற்றமில்லையா என அவர்கள் தங்கள் மனத்திற்குள் தீர்ப்பிடுவது அதற்குச் சாட்சி'' *(உரோ 2:14-15).*

இந்தச் சூழ்நிலையிலிருந்து நோக்கும் போது, இறைவனது தீர்ப்பு நன்மை, தீமை பற்றிய அறிவின்மேல் விழவில்லை; மாறாக, அதைக் கடைப்பிடிப்பதின் மேல் விழுகிறது என்பதுதான் முதன்முதலில் இக்கூற்றின் பொருளாகும். இறுதிநிலை யில், இது, வெளிப்படுத்தப்பட்ட சட்டத்தா லன்று, நன்மை, தீமை என்பதன் உள் ளுணர்வால் தீர்மானிக்கப்படுகிறது. இதில் இறைவனது சித்தம் வெளிப்படுகிறது. இதன்படிதான் ஆதாம் இறைவனுக்குக் கீழ்ப்படியாமல் போன பின்பு, தான் ஆடையின்றி இருப்பதை அறிந்து, இறை வன் திருமுன்னின்று ஓடி ஒளிந்து கொள் கிறார் *(ஆதி 3:8தொ).* பவுலின் கருத்துப் படி, இது, வெளிப்பாடு இறைவனது திட்டத்தை வெளிப்படுத்தும் முன்பே, அது ஒவ்வொரு மனிதனது உள்ளத்திலும் எழு தப்பட்டிருக்கிறது என்பதை முன் உணர்த்து கிறது. இறைவன் படைப்பவராக ஏற்றுக் கொள்ளப்படா விட்டாலும் *(உரோ 1:19 தொ),* வெளிப்படுத்தப்பட்ட சட்டம் இல்லையென்றாலும், மனிதன் இறைவ னுடன் உரையாடலில் பிறந்துள்ளான்; அவ ரது முன் முயற்சியால் எதிர்கொள்ளப்படு கிறான்; அவரது திட்டத்திற்கேற்ப பதில் அளிக்கிறான்.

IV. **வழிபாட்டின்வழி மனச்சான்று தூய் மைப்படுதல்:** எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் மனச்சான்று என்ற சொல்லை, பொதுவாக, பலிச் சூழ்நிலையில் பயன் படுத்துகிறது. பழைய ஏற்பாட்டுப் பலிகள் மனச்சாட்சியைப் பொறுத்தமட்டில் வழி படுபவர்களை நிறைவுள்ளவர்களாக்க இய லாதவைகளாகும் *(எபி 9:9).* இல்லையென் றால், வழிபாட்டில் ஈடுபடுவோர், பாவ உணர்வு கொண்டிருந்திருக்க மாட்டார்கள்; வழிபாடும் முடிவுக்கு வந்திருக்கும் *(10:2).* இதற்கு மாறாக, ''கிறிஸ்துவின் இரத்தம், நாம் உயிருள்ள கடவுளுக்கு வழிபாடு செலுத்தும்படி நம்முடைய மனச்சாட்சி யைச் சாவுக்குரிய செயல்களிலிருந்து மேலாகத் தூய்மைப்படுத்துகிறது'' *(9:14).* இந்தத் தூய்மைப்படுத்தல் திருமுழுக்கில் செயல்படுகிறது *(10:22).* ஏனெனில், பேதுரு வின் கூற்றுப்படி, இந்தத் திருமுழுக்குத் தான் ''நல்ல மனச்சாட்சியுடன் கடவு ளுக்குத் தரும் உறுதிவாக்கை'' உறுதிப்படுத் துகிறது *(1 பேதுரு 3:21).* இறுதியாக கிறிஸ்துவின் இரத்தமும் உயிர்ப்பும் மட் டுமே நேர்மையான மனச்சான்றை இயலக் கூடியதாக்குகிறது.

**மனத்துணிவு** *(BOLDNESS)*

புதிய ஏற்பாட்டில் மனத்துணிவு என்பது ஆவியின் வல்லமையால் துணிந்து நின்று பேசக் கூடிய மனநிலையைக் குறிப்பிடுகின் றது. இயேசு தனது பாடுகள் பற்றி மனத்திடத்துடன் வெளிப்படையாகவே பேசுகிறார் *(மாற் 8:32).* பேதுருவும், யோவானும் துணிச்சலுடன் பேசுகிறார்கள் *(அ.ப. 4:13; காண்க. 4:31).* அந்தியோக்கியா வில் உள்ள பிசிதியாவில் பவுலும் பர்னபா வும் மனத்துணிவுடன் பேசுகிறார்கள் *(அ.ப. 13:46).*

நம்பிக்கையிலும், மன உறுதியிலும் புதுக் கிறிஸ்தவர்கள் கடவுளை ஏற்றுக்கொள் கிறார்கள் *(2 கொரி 3:4-5. 12.18; எபி 4:16; 10:19).* இறுதி வருகையின்போது மனிதன் பயப்படவோ, வெட்கப்படவோ தேவை யில்லை; மாறாக, நம்பிக்கையோடும் மனத் திடத்தோடும் இருக்க வேண்டும் *(1 யோவா 2:28;4:17).* இந்த மனத்திடம் தன்னை நம்புவதிலிருந்து பிறப்பது அன்று; மாறாக, கடவுளுடைய வாக்குறுதிகளை நம்புவதிலிருந்து பிறக்கின்றது. கிறிஸ்து வினால், நமக்குக் கடவுளிலும், மனிதனி லும் புது நம்பிக்கை பிறக்கிறது.

**மனம், உள்ளம்** *(MIND)*

இச்சொற்கள், பல எபிரேய மற்றும் கிரேக்கச் சொற்களை மொழிபெயர்க்கப் பயன்பட்டுள்ளன. இவை பல்வேறுபட்ட மனிதப்பண்புகளையும் அலுவல்களையும் உணர்த்துகின்றன (எ.கா. உப 6:5). இவை இதயத்தை மனித உணர்ச்சி, அறிவுத்திறன் மற்றும் மனத்திட்பம் ஆகியவற்றின் இருப்பிடமாகக் கருதுகின்றன (எ.கா. எரே 19:5). இதற்கேற்றவாறு, மக்கள் இறைவனது செயல்களையும் (எசா 65:17), உடன்படிக்கை மேற்கோள்களையும் (உப 30:1) உள்ளத்தில் வைத்துச் சிந்தனை செய்கின்றனர். மனதின் வழியாக அவர்கள் ஞானத்தை (1 அர 3:12) அல்லது திறமையை (யாத் 28:3) வெளிப்படுத்துகின்றனர். ஒருவன் தனது வாழ்வை நடத்திச் செல்ல மனம் ஆற்றலுள்ளவனாக்குகிறது (1 சாமு 2:35; 1 அர 8:48).

புதிய ஏற்பாட்டில் மனம் அல்லது உள்ளத்தைக் குறிக்கும் கிரேக்கச் சொற்கள் மனிதவாழ்வு, உணர்வுநிலை மற்றும் செயல்படும்முறை ஆகிய்வற்றின் பல்வேறு கூறுகளைச் சுட்டுகின்றன. ஆனால், அவற்றில் துல்லியமான வேறுபாடுகளை உணர்த்துவதில்லை. ஒருபுறம் முழு ஆளையும் உணர்த்த சில இடங்களில் பல சொற்கள் பயன்படுகின்றன (மத் 22:37; எபே 2:3; பிலி 4:7; திருவெளி 2:23). மறுபுறம், ஒப்பீட்டடிப்படையில் பல சொற்களைப் பயன்படுத்தி மனித இருதலை வாதநிலை உணர்த்தப்படுகிறது (உரோ 7:22-25; 8:5; 1 கொரி 14:14).

மனித வாழ்வு மற்றும் உணர்வின் சிந்திக்கும், பகுத்தறியும் மற்றும் திட்டமிடும் கூறுகளைக் குறிக்க மனம் அல்லது உள்ளம் என்ற சொற்கள், குறிப்பாக பவுலின் திருமுகங்களில் முதன்மை பெறுகின்றன. இவற்றில், ஒரு குறிப்பிட்ட நோக்கில் முழுமனித வாழ்வையும் அனுபவத்தையும் குறிக்கின்றன. மனிதவாழ்வின் மற்றக் கூறுகளைப் போல் மனமும் பாவத்தால் சீர்கெட்டு விட்டது (உரோ 1:28; எபே 4:17-19; கொலோ 2:18; காண்க. 1 திமொ 6:5; 2 திமொ 3:8). மனம் தனது இயல்பால் நன்மையைப் புரிந்து கொள்ள முடியும்; ஆனால், அதை நிறைவேற்ற முடியாத நிலையில் உள்ளது (உரோ 7:22-25). இறைவனது சித்தத்திற்கேற்ற வாழ்வில் ஒருவர் தாம் புதுப்பிக்கப்படுவதற்கு அவர் மனம் உருநிலை மாற்றம் அடைய வேண்டும் (உரோ 12:2; எபே 4:23). மனம் கிறிஸ்துவின் மனதோடு ஒத்திருக்க முடியும்; உயிர்த்த ஆண்டவர் வழியாக, கிறிஸ்துவின் சீடன் ஆண்டவரது ஆற்றலையும் ஞானத்தையும் அனுபவிக்க முடியும் (1 கொரி 12:16). மனதின் பகுத்தறிவு ஆற்றல்களைப் பரவசப்பேச்சு ஆன்மீக அனுபவத்தால் கடந்து செல்லலாம்; ஆனால், அவற்றை விஞ்சக்கூடாது, அகற்றக்கூடாது (14:13-19).

**மனவருத்தம் / மனமாற்றம்** *(REPENTENCE / CONVERSION)*

I. கடவுள் மனிதர்களைத் தன்னோடு உறவுகொள்ள அழைக்கிறார். பிறப்பிலிருந்தே பாவிகளாக இருக்கும் மனிதர்களுக்கே இந்த அழைப்பு விடப்படுகிறது (சங் 51:7). அவர்களின் முதல் தந்தையின் குற்றத்தால் பாவம் உலகில் நுழைந்தது (உரோ 5:12). அன்றிலிருந்து பாவம் அவர்களில் மிக ஆழமாகக் குடிகொண்டுள்ளது (7:20). அவர்கள் பாவிகளாக இருப்பதற்கு அவர்களும் காரணம்தான். ஏனெனில், தாங்களாகவே ''பாவத்திற்கு அடிமையாக விற்றுவிட்டனர்'' (7:14); தங்களது இச்சையினால் பாவத்தின் நுகத்தை விரும்பி ஏற்றுக்கொண்டனர் (காண்க. 7:5). கடவுளின் அழைப்புக்குப் பதில் கொடுக்க வேண்டுமெனில் அவர்கள் தொடக்கத்திலிருந்தே மனமாற்றம் பெற வேண்டும். அதுபோலவே தங்கள் நிலையை நினைத்து மனம் வருந்தும் தன்மை வாழ்வு முழுவதும் இருக்க வேண்டும். அதனால்தான் விவிலிய வெளிப்பாட்டிலே மனமாற்றமும், மனவருத்தமும் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றன.

இக்கருத்துக்களை வெளிப்படுத்தும் சொற்கள் அவற்றின் முழுப்பொருளை மிகத் தாமதமாகவே பெற்றுக்கொண்டன.

எப்பொழுது பாவத்தைப் பற்றிய புரிந்து கொள்ளுதல் ஆழப்பட்டதோ அப்பொழுது மனமாற்றம், மனவருத்தம் என்பனவற்றின் பொருளும் ஆழப்பட்டது. ''யாவேயைத் தேடுதல்'' *(ஆமோ 5:4; ஓசே 10:12)*, ''அவரது முகத்தைத் தேடுதல்'' *(ஓசே 5:15; சங் 24:6; 27:8)*, அவர் முன் தன்னைத் தாழ்த்துதல்'' *(1 அர 21:29; 2 அர 22:9)*, ''முழு உள்ளத்தோடு ஆண்டவரிடம் திரும்புதல்'' *(1 சாமு 7:3)* என்ற சொற்றொடர்கள் இறைவனை நோக்கி தன் வாழ்வை விரும்பி அமைத்துக்கொள்ளும் மனிதனது மனநிலையைக் காட்டுகின்றன. ஆனால், ஒருவன் தனது வழியை மாற்றுதல், தன் பாதைகளை மாற்றிக்கொள்ளல் என்பதைக் குறிக்கும் எபிரேய வினைச்சொல் ''சூப்'' (Sūb) இதன் பொருளை முழுமையாகக் கொணர்கிறது. ஒரு சமயப் பின்னணியில் இது தீமையிலிருந்து விலகி, கடவுளை நோக்கித் திரும்புவதைக் குறிக்கும். இஃது ஒருவன் நடத்தையிலும், முழு மனிதனிலும் நிகழும் மாற்றத்தை உள்ளடக்கும். எனவே, முழுமனிதனும் ஒரு புதிய பார்வையோடு வாழ்வை அமைக்கிறான். இதுவே மனமாற்றத்தைக் குறிப்பதாகும். பிற்காலத்தில் உள்ளார்ந்த மனவருத்தத்திற்கும் அது கோரும் வெளி அடையாளச் செயலுக்குமுள்ள வேறுபாடு தெளிவாகக் காட்டப்பட்டது. ''எப்பிஸ்ட்ரேபெயின்'' (Epistrephein) என்ற கிரேக்க வினைச்சொல் இறைவனிடம் திரும்பி வருதலையும், அதன் விளைவாக செயல்முறையான நடத்தையில் மாற்றத்தையும் உணர்த்துகிறது. விவிலியப் பகுதிகளை அலசிப் பார்ப்பதன் வழியாக இந்த இரண்டு வேறுபட்ட ஆனால், ஒன்றையொன்று நிறைவு செய்யும் கருத்துக்கள் நமக்குத் தெளிவாகும். ''மெட்டானோயின்'' (metanoein) என்ற கிரேக்க வினைச்சொல் உள்ளார்ந்த மாற்றத்தை (metanoia - மனவருத்தம்) உணர்த்துகிறது.

II. **பழைய ஏற்பாடு**

***1. மனவருத்தம் கொள்வதைக் குறிக்கும் வழிபாடுகளின் தொடக்கம்:***

அ. தொடக்க காலத்திலிருந்தே உடன் படிக்கையின் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், தனி மனிதனோ, சமூகமோ பாவம் செய்யும்போது கடவுளுக்கும் மனிதனுக்குமிடையேயுள்ள உறவின் பிணைப்பு முறிக்கப்படலாம் என்பது தெளிவாகிறது. தனிமனிதனது பாவம் ஒரு விதத்தில் குழுத் தன்மையையும் கொண்டுள்ளது. சமூகத் தீமைகள் நிகழும்போது அவை ஒரு மனச்சான்றின் சோதனைக்கு நம்மையே ஆட்படுத்திக்கொள்ளும் தருணமாகிறது *(யோசு 7; 1 சாமு 5-6)*. பாவத்தைப் பற்றிய கருத்து மிகப் பக்குவமுறாததாக, இறைவனது கோரிக்கையை நிறைவேற்றாத ஒவ்வொரு உடல் சார்ந்த தவறும் இறைவனைச் சினமூட்டக்கூடியதாகப் புரிந்து கொள்ளப் பட்டது. மீண்டும் அந்த யாவே கடவுளோடு உறவை, ஒன்றிப்பை ஏற்படுத்த அந்தப் பிரிவுக்குக் காரணமானவர்கள் தண்டிக்கப்பட வேண்டியது அவசியமாகிறது. இது மரண தண்டனைவரை கூட போகலாம் *(யாத் 32: 25-28; எண் 25:7 தொ; யோசு 7:24 தொ)*. ஏனெனில், பாவிகட்கு மீட்பு இல்லை என்ற எண்ணம் இருந்தது *(1 சாமு 14:36-35)*. குற்றமுள்ளவன் தெய்வ தண்டனைக்குத் தன்னையே தருவதால் அவன் வாழும் சமூகம் தண்டனையிலிருந்து தப்ப வாய்ப்புண்டு.

ஆ. மேலும் துயரம் நீடிக்கும்வரை, அல்லது அதை நிறுத்த, இறை மன்னிப்பைப் பெற வேண்டி பல தவ முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. உண்ணா நோன்பு *(நீதி 20:26. 1 அர 21:8 தொ)*, சாக்கு உடை தரித்தல் *(1 அர 20:31 தொ; 2 அர 6:30; 19:1 தொ; எசா 22:12; காண்க. யோவா 3:5-8)*, சாம்பலைப் பூசிக்கொள்ளல் *(எசா 58:5; காண்க. 2சாமு 12:16)* ஆகியவை கடைப்பிடிக்கப்பட்டன. வழிபாட்டுக்காகக் கூடும்போது அழுகையும், புலம்பலும் கேட்டது *(நீதி 2:4; யோவே 1:13; 2:17)*. புலம்பலுக்கான வாய்பாடுகளும், வடிவங்களும் வகுத்துக் கொடுக்கப்பட்டன. இத்தகைய அமைப்புகள் நமது சங்கீதங்கள் பலவற்றில் காணப் படுகின்றன *(காண்க. சங் 60; 74; 79; 83; புல 5;...)*. பாவப்பரிகாரப் பலிகள், சடங்கு

கள் நிறைவேற்றப்பட்டன (எண் 16:6-15). எல்லாவற்றிற்கும் மேலாக, பொதுப்பாவ அறிக்கையிடல் நடைபெற்று (நீதி 10:10; 1 சாமு 7:6), அதன்பின் மோசே போன்ற ஒரு தலைவர் அல்லது இறைவாக்கினர் மக்களுக்காகப் பரிந்து மன்றாடுதல் நடைபெற்றது (யாத் 32:30 தொ).

இ) இது போன்ற நடைமுறைகள் எல்லாக்காலங்களிலும் இருந்திருக்கின்றன. இறைவாக்கினர் எரேமியா ஒரு பாவ மன்னிப்பு வழிபாட்டில் இடையாளராக இருந்து பரிந்து பேசுவதைப் பார்க்கிறோம் (எரே 14:1-15:4). நாடு கடத்துதலுக்குப் பிறகு இந்த நடைமுறைகளில் மிகுந்த வளர்ச்சிகளைப் பார்க்கிறோம். ஆனால் இதில் உள்ள பிரச்சனை என்னவென்றால், இது வெறும் வெளி ஆசாரச் சடங்காக மாறி விடும் ஆபத்தும் இருக்கிறது. மன வருத்தம் அடைவது செயலில் வெளிப்பட வில்லையெனில் அது பொருளற்றதாகும். எனவே, இத்தகைய வெற்றுச் சடங்காக மாறும் அபாயத்தைக் கண்டித்து இறைவாக் கினர்கள் மனமாற்றத்தின் செய்தியை அறி விக்கின்றனர்.

**2. இறைவாக்கினர்கள் தந்த மனமாற்றச் செய்தி:**

***அ)*** தாவீதின் ஆட்சிக்காலத்திலே, நாத்தான் தலையிட்டு, விபசாரம் செய்த அரசனைக் கண்டித்தபோது, இறைவாக்கினரின் மனமாற்றச் செய்தி அறிவிக்கப்படுகிறது. தாவீது அவரது பாவத்தை அறிக்கையிடக் கட்டாயப்படுத்தப்படுகிறார் (2 சாமு 12:13). பிறகு சட்டப்படி பரிகாரம் செய்து தெய்வ தண்டனையைப் பெற்றுக்கொண்டார் (12:14-23). சிறப்பாக எட்டாம் நூற்றாண்டிலிருந்தே, மக்கள் அனைவருக்கும் மனமாற்றத்திற்கான செய்தியை இறைவாக்கினர்கள் தொடர்ந்து கொடுத்துக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இஸ்ராயேலர் உடன்படிக்கையை முறித்து ''இஸ்ராயேலின் தூயவரைக் கைவிட்டு விட்டனர்; அவருக்கு அன்னியராய் ஆகிவிட்டனர்'' (எசா 1:4). அவர்கள் மனமாற்றம் பெறும்வரை அவர்களைக் கைவிட யாவேக்கு உரிமை இருந்தது. மனம் வருந்துதலுக்கான அழைப்பு இறைவாக்கினர் போதனையில் முக்கிய அங்கம் வகித்தது (காண்க. எரே 25:3-6).

***ஆ) ஆமோசும் ஓசேயாவும்:*** நீதியின் இறைவாக்கினரான ஆமோஸ் மக்களின் பாவங்களைக் கண்டிப்பதோடன்றி கடவுளைத் தேடுங்கள் என்கிறார் (ஆமோ 5:4.6). அப்படியென்றால் தீமையை வெறுத்து நன்மையைத் தேடுவதாகும் (5:14தொ). இது நடத்தையில் திருத்தத்தையும், நீதியைப் பிரமாணிக்கமாகக் கடைப் பிடித்தலையும் உள்ளடக்கும். இத்தகைய திரும்புதல்தான் ''யோசேப்பின் வீட்டாரில் எஞ்சியிருப்போர்க்கு இறைவன் காட்டுவார்'' (5:15). ஓசேயா இறைவாக்கினர் தீவினை அனைத்தையும் அகற்றி, குறிப்பாகச் சிலை வழிபாட்டை விட்டு விட்டு, கடவுளிடம் திரும்பிவர அழைக்கிறார். அப்பொழுது கடவுள் தனது கோபத்தை விட்டு, அவர்கள்மீது தமது நன்மையைப் பொழிவார் என்கிறார் (ஓசே 14:2-9). பலனளிக்காத மேலோட்டமான மனமாற்றத்தை விட்டு அன்பினால் உந்தப் படும், இறை அறிவு மற்றும் அன்பால் உந்தப்படும் உள்ளார்ந்த மனமாற்றத்தை வலியுறுத்துகிறார் (6:1-6; காண். 2:9).

***இ) எசாயா:*** யூதாவைச் சேர்ந்தவர்களிட மிருந்த எல்லாப் பாவங்களையும் வன்மையாகக் கண்டிக்கிறார் எசாயா. நீதியை ஒழித்தல், வழிபாட்டில் தீமை, அரசியலில் அக்கிரமம் இது போன்ற எல்லாப் பாவங் களையும் விட்டு மனமாற்றம் பெற்றால் தான் மீட்புப் பெறலாம். இறைவனது திருவுளத்துக்குச் செயல்முறையாகப் பணி யாத வழிபாடு பயனற்றது (எசா 1:11-15; காண்க. ஆமோ 5:21-25) ''உங்களைக் கழுவித் தூய்மைப்படுத்துங்கள்; உங்கள் தீச்செயலை என் திருமுன்னிலிருந்து அகற்றுங்கள்; தீமை செய்தலை விட்டொழியுங் கள்; நன்மை செய்யக் கற்றுக்கொள்ளுங் கள்; நீதியை நாடித்தேடுங்கள்; ஒடுக்கப்பட் டோருக்கு உதவி செய்யுங்கள்; திக்கற்றோருக்கு நீதி வழங்குங்கள்; கைம்பெண்ணுக் காக வழக்காடுங்கள்'' (எசா 1:16-17).

அப்பொழுது உங்கள் பாவங்கள் கருஞ் சிவப்பாக இருந்தாலும், வெண்பனி போல் மாறும்; இரத்தச்சிவப்பாய் இருந்தாலும் பஞ்சைப்போல் வெண்மையாகும் (எசா *1:18*). ஆனால், எசாயாவின் இந்தச் செய்தி அவர்களது கடின இதயத்தைத் தொட வில்லை *(6:10)*. ''நீங்கள் என்னிடம் திரும்பி வந்து அமைவுற்றால் விடுதலை பெறுவீர்கள்... நீங்களோ ஏற்க மறுத்தீர்கள்'' *(30:15)*. இஸ்ராயேல் தம்மையே பேரழி வுக்கு இட்டுச்சென்றனர். ஆயினும், எசாயா உறுதி குன்றாமல் எஞ்சியோர் வல்லமை யுள்ள இறைவனிடம் திரும்பிவருவர் *(10:21.* காண்க. *7:3)*; மனமாற்றம் பெற்ற வரே இறைவனின் மீட்பைப் பெறுவர் என்கிறார்.

**ஈ) எரேமியா:** இறைவன்பால் இந்த உள் ளார்ந்த மனநிலை வலியுறுத்துவது விரை வில் இறைவாக்கினர் போதகத்தின் ஒரு பொதுக்கூறாக மாறுகிறது. ''நேர்மை, இரக் கம், தாழ்ச்சி'' என்று மீக்கா அறைகூவல் விடுக்கிறார் (மீக் *6:8*); இதைத் தாழ்ச்சி, நேர்மை என்று செப்பனியாவும் (செப் *2:3; 3:12* தொ) எதிரொலிக்கிறார். ஆனால், ஓசேயாவின் வழியில் நின்று எரேமியாதான் மனமாற்றத்தின் செய்தியைப் பெரிதும் வளர்ச்சியுறச் செய்கிறார். யூதாவை அச் சுறுத்தும் தீமைகள் பற்றி இறைவாக்கினர் முன்னறிவித்து, ஒவ்வொருவனும் தன் தீய வழியை விட்டுத் திரும்ப வந்தால் கடவுள் நிச்சயம் மன்னிப்பார் (எரே *36:3*). உண்மை யில், திரும்பி வருதலுக்கான அழைப்பு நூல்முழுவதும் சுடர்வீசுகிறது. ஆனால், இந்தத் திரும்புதலுக்கான நிபந்தனைகளை யும் குறிப்பிடுகிறது. பற்றுறுதியற்ற இஸ்ரா யேல், இறைவன் அதன் மேல் இனிச் சினம் கொள்ளாமல் இருக்க விரும்பினால், தன் குற்றத்தை அஃது ஏற்றுக்கொள்ள வேண்டும் *(3:11-13; 2:23)*. கலகம் செய்த மக்கள் தங்கள் பாவங்களை ஏற்று அறிக்கையிடும் போது அழுகையோடும் வேண்டலோடும் திருப்தியடைந்து விடக்கூடாது *(3:21-25)*; தங்கள் நடத்தையை மாற்றிக்கொள்ள வேண்டும்; தங்கள் இதயத்தில் விருத்தசேத னம் செய்து கொள்ள வேண்டும் *(4:1-4)*.

மனமாற்றத்தின் செயல் முறையான விளைவுகளைப் பார்த்த இறைவாக்கினர் நிலையான உண்மையான மனமாற்றம் சாத்தியமா என்று ஐயுறுகிறார் (காண்க. *7:3-11*). மனமாற்றத்திற்கு அவர் அழைத்த வர்களில் பலர் தங்கள் பாவ வழியை விட்டு விலகுவதற்குப் பதிலாக, தங்கள் இதயத்தின் பிடிவாதப்படியே செயல்பட்ட னர் *(18:11-12;* காண்க. *2:23*தொ). தங்கள் தீச்செயலுக்காக வருந்தாமல், அதிலே இன் னும் அதிகம் மூழ்கிப் போகின்றனர் *(8:4-7)*. அதனால்தான் மாற்ற முடியா எருசலேமுக்குத் தண்டனை காத்திருக்கிறது என்று அறிவிக்கிறார் *(13:20-27)*. வருங் காலம் பற்றிய முன்னோக்கில் அவர் நம்பிக்கை கொள்கிறார். ஆனால், ஒருநாள் வரும். அன்று மக்கள் தண்டனையை ஏற்று, 'நான் திரும்பிச் செல்லும் வழியை எனக் குக்காட்டும்' என்று மக்கள் வேண்டுவார் கள் *(31:17)*. அன்று யாவே அவர்களது தாழ்மையான வேண்டுதலைக் கேட்டு, அக்காலத்தின் புதிய உடன்படிக்கையின் சட்டத்தை அவர்களது இதயத்தில் எழுது வார் *(31:33)*. ''நானே ஆண்டவர் என்பதை அறிந்துகொள்ளும் உள்ளத்தை நான் அவர் களுக்குக் கொடுப்பேன். அவர்கள் என் மக்களாக இருப்பார்கள். நான் அவர்கள் கடவுளாய் இருப்பேன். ஏனெனில், அவர் கள் தங்கள் முழு உள்ளத்தோடு என்னிடம் திரும்பி வருவார்கள்'' *(24:7)*.

**உ) எசேக்கியேல்:** இந்தப் பாரம்பரி யத்தைப் பின்பற்றும் எசேக்கியேல், இறை வனது அச்சுறுத்தல்கள் செயல்படுவதை யும், அவசியமான மனமாற்றத்தையும் தனது செய்தியின் மையமாக்குகிறார். ''எனக்கெதிராக நீங்கள் இழைத்த குற்றங் கள் அனைத்தையும் விட்டுவிடுங்கள். புதிய இதயத்தையும் புதிய மனதையும் பெற்றுக் கொள்ளுங்கள். ஓ, இஸ்ராயேல் வீட்டாரே! நீங்கள் ஏன் சாக வேண்டும்? எவனுடைய சாவிலும் என்க்கு விருப்பமே இல்லை. எனவே, மனம் மாறி வாழ்வு பெறுங்கள்''

*(எசே 18:31-32).* இறைவனுடைய நிபந்தனைகளைக் குறிப்பிடும்போது, முன்பு இருந்த இறைவாக்கினர்களைவிட எசேக்கியேல் வழிபாட்டுக் கடமைகளுக்கு அதிக இடம் அளிக்கிறார் *(22:1-31).* ஆனால், அவர்களை விட அதிகமாக மனமாற்றத்தில் ஒவ்வொருவனுடைய சொந்தப் பொறுப்பை வலியுறுத்துகிறார். ஒவ்வொருவனும் தனக்காக மட்டுமே பதில் கூற முடியும். ஒவ்வொருவனும் அவனுடைய சொந்த நடத்தைக்கேற்ப சன்மானம் பெறுவான் *(3:16-21; 18; 33:10-20).* இஸ்ராயேல் ''கிளர்ச்சி செய்யும் இனம்'' என்பதில் ஐயமில்லை *(2:4-8).* இந்தக் கடின இதயமுடைய மனிதர்களுக்கு, இறைவன், அவர்களிடமிருந்து அதிகாரத்துடன் கோரியதையே அவர்களுக்கு ஓர் அருளாகக் கொடுக்கக்கூடும். புதிய உடன்படிக்கைக் காலத்தில், அவர் அவர்களுக்கு ஒரு புதிய இதயத்தை அளிப்பார். அவரது ஆவியை அவர்களுக்குள் புகுத்துவார். அப்போது அவரது நியமங்களைக் கடைப்பிடிக்கவும் அவரது நீதித் தீர்ப்புகளைக் கவனமாய்ச் செயல்படுத்தவும் செய்வார்கள். அவர்களது தீய வழிகளையும் தகாத செயல்களையும் எண்ணித் தங்களையே வெறுப்பார்கள் *(36:26-31; காண்க. 11:19 தொ).*

**ஊ)** இவ்வாறு, ஆமோசிலிருந்து எசேக்கியேல் வரை, மனமாற்றம் பற்றிய கோட்பாடு, பாவத்தைப் புரிந்து கொண்டதற்கு இணையாகத் தொடர்ந்து, ஆழப்படுத்தப்படுகிறது. நாடுகடத்தலின் இறுதியில், ஆறுதலின் செய்தி, இஸ்ராயேலின் அல்லது எஞ்சியோரின் செயலாற்றல் மிக்க மனமாற்றத்தைக் குறிப்பிடுகிறது. அறிவிக்கப்பட்ட மீட்பு, ''நீதியைத் தேடுவதில் ஆண்டவரைத் தேடுபவர்களுக்கும்'' *(எசா 51:1),* ''சட்டத்தை இதயத்திலே தாங்குபவர்களுக்கும்'' *(51:7)* உரியதாகும். இவர்கள் தங்கள் அடிமைவேலை முடிந்து போயிற்று என்றும் பாவங்கள் பரிகாரம் செய்யப்பட்டு விட்டன என்றும் உறுதிபெறலாம் *(40:2).* யாவே தன் ஊழியனான இஸ்ராயேலுக்கு ''உன் குற்றங்களைக் கார்மேகம் போலும், உன் பாவங்களைப் பனிப்படலம் போலும் அகற்றி விட்டேன். என்னிடம் திரும்பவா, நான் உனக்கு மீட்பளித்து விட்டேன்'' *(44:22)* என்று கூறுகிறார். இறைவனுடைய மக்கள் தங்கள் பிரமாணிக்கத்தில் வலுவாய் உள்ளனர் என்று முன்கருதும் இந்தப் புதிய முன்னோக்கில், இறைவாக்கினர் மீட்புப் பற்றிய வாக்குறுதி இதுவரை கேட்டிராத அளவுக்கு விரிவடைவதைக் காண்கிறார். இஸ்ராயேலர்களைத் தொடர்ந்து, பிறநாடுகளும் மனமாற்றம் பெறப்போகின்றன. இவர்கள் தங்கள் சிலைகளை விட்டுவிட்டு, உயிருள்ள இறைவன்பால் திரும்பிவருவர் *(45:14 தொ. 23தொ; காண்க. எரே 16:19 தொ).*

இங்குக் குறிக்கோளானது முன்னேற்றம் அடைகிறது. நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூதத்துவம் பிற மக்களிலிருந்து மனந்திரும்பியவர்களை ஏற்றுக்கொள்வது மட்டுமின்றி *(எசா 56:3.6),* இறுதிக்காலக் காட்சி ஓவியம் மனித இனம் முழுமைக்கும் மீட்புக் கிடைக்கும் என்ற சமயக் கோட்பாட்டையும் குறிக்கத் தவறுவதில்லை *(காண்க. சங் 22:28).* யோனா நூல் பிற இன மக்களுக்கும் மனமாற்றத்தின் செய்தியை நேரடியாக அறிவிப்பதைக் காணலாம். ஏனெனில், அவர்களும் மனமாறி வாழ்வு பெறுவதே இறைவனின் விருப்பம். இத்தகைய கோட்பாட்டு வளர்ச்சியின் முடிவில், மனவருத்தம் என்ற கருத்து எவ்வாறு ஆழம் பெறுகின்றது என்பதையும், பழங்கால இஸ்ராயேலில் இன்னும் இடம் பெற வேண்டிய கலப்பற்ற வெறும் சடங்கு முறையிலிருந்து எவ்வாறு தூர விலகியிருக்கிறது என்பதையும் காணலாம்.

### 3. மனம் வருந்துதலின் வழிபாடும் இதய மனமாற்றமும்:

***அ.*** இறைவாக்கினரின் இடைவிடாத போதனையும், நாடு கடத்தப்பட்ட சோதனையும் இஸ்ராயேலின் தேசிய மனமாற்றத்தை விளைவித்தன எனலாம். அவர்கள் தங்கள் பாவத்தை உணரவும் உண்மையாக அறிக்கையிடவும் நாடுகடத்தல், இறையருள் பாலிப்பு அளித்த வாய்ப்பாகும். இதை

உபாகம இலக்கியமும் *(1 அர 8:46-51)*, குருக்கள் இலக்கியமும் *(லேவி 26:39தொ)* கருத்தொற்றுமையுடன் சுட்டிக்காட்டுகின் றன. நாடு கடத்தலுக்குப்பின், யூதர்களின் முழு ஆன்மீக வாழ்வைப் பாதிக்கும் அளவிற்கு, மனவருத்த உணர்வு அவர் களிடையே நிலைபெறுகின்றது. பழைய நோன்புமுறைக்குரிய வழிபாடுகள் தொடர்ந்து கடைப்பிடிக்கப்படுகின்றன *(காண்க. யோவேல் 1-2)*; ஆனால், இறை வாக்குக் கோட்பாடு அவற்றின் பொருளடக் கத்தைப் புதுப்பிக்கின்றது. தொடக்கத்தி லிருந்து செய்யப்பட்ட தேசிய பாவங்களை அறிக்கையிட்டு, இறைவனது மன்னிப்பை யும் மீட்பின் வருகையையும் மன்றாடும் மக்களைப் பற்றிக் கூறும் நூல்கள் ஒரே மாதிரியான வாய்பாடுகளைக் கொண்டுள் ளன *(எசா 63:7-64:11; எஸ் 9:5-15; நெகே 9; தானி 9:4-19; பாரூ 1:15-3:8)*. சங்கீதங் களில் காணப்படும் குழுப்புலம்பல்களும் இந்த மாதிரியைப் பின்பற்றுகின்றன *(சங் 79; 106)*. மனம் வருந்தாத கடந்த காலத்தை நினைவு கூர்தல் இன்னும் அதிகமாகக் காணப்படுகிறது *(காண்க. சங் 95:8-11)*. எப்போதும் புதுப்பிக்கப்பட்ட ஆழ்ந்த மன மாற்றத்திற்கு இஸ்ராயேல் இட்டுச் செல்லப் படுகிறது. பாவம் பற்றிய வெட்கம் எவ்வளவு அதிகமாய் இருந்ததென்றால் *(லேவி 4-5:16)*, இக்காலத்தில்தான் பாவப் பரிகார வழிபாடுகள் பரவலாகின.

***ஆ)*** தனிநபர் அளவிலும், இத்தகைய முயற்சி எசேக்கியேலின் போதகத்தில் காணப்படுகிறது. நோய் மற்றும் துன்புறுத் தப்படுதல் பற்றிய சங்கீதங்கள் பாவ அறிக்கையைக் கொண்டுள்ளன *(சங் 6:2; 32; 38; 103:3தொ; 143:1தொ)*. யோபு நூல் ஆசிரியர், அடிப்படையிலேயே மனிதனது தூய்மையற்ற தன்மை பற்றிய ஆழ்ந்த உணர்வை வெளிப்படுத்துகிறார் *(யோபு 9:30தொ; 14:4)*. இந்த உணர்வுகள் சங் 51-இல் நிறைவாக எடுத்துக் கூறப்படுகின் றன. இதன் முழுவதிலும் மனமாற்றம் பற்றிய இறைவாக்கு போதகம் செபமாக, இறைவனோடு கொள்ளும் உரையாடல் வடிவில் *(காண்க. 51:6)* அமைந்துள்ளது. இச்சங்கீதத்தில் குற்றங்களை ஏற்றுக்கொள் ளுதல் *(51:5தொ)*, உள்ளார்ந்த தூய்மை பெறுதல் பற்றிய கோரிக்கை *(51:3தொ.9)*, இதயத்தை மாற்றக்கூடிய அருளுக்காக வேண்டுதல் *(51:12 தொ)*, புனிதமிக்க வாழ்வை நோக்கிய மனநிலை *(51:15-19)* ஆகிய கூறுகள் உள்ளன. மனவருத்த வழிபாட்டில் ''நொறுங்கிய நெஞ்சின்'' பலி மையம் வகிக்கிறது *(51:18தொ)*. இந்தப் பாரம்பரியத்தில் வந்த கும்ரான் பிரிவினர் பாலைவனத்திற்குச் சென்று, இறைவனுக்கான ''வழியைச் செம்மைப் படுத்தக்'' கடவுளின் சட்டத்திற்கு உண்மை யாகவே மனம் மாறுவதை எதிர்நோக்கினர். அவர்களின் முயற்சியில் ஓரளவு சட்டத் தன்மை இருந்தாலும், புதிய ஏற்பாட்டில் காணப்பட இருக்கும் முயற்சியிலிருந்து அஃது அதிகம் வேறுபட்டதன்று.

### III. புதிய ஏற்பாடு.

***1. இறுதி இறைவாக்கினர்:*** புதிய ஏற் பாட்டின் தொடக்கத்திலேயே மனமாற்றம் பற்றிய இறைவாக்கினரின் செய்தி, திரு முழுக்கு யோவானின் போதகத்தில், அதன் தூய்மையான வடிவில் காணப்படுகிறது. யோவானின் தூதை லூக்கா மிகச்சுருக்க மாக, ''இஸ்ராயேல் மக்களுள் பலர், தம் கடவுளாகிய ஆண்டவரிடம் திரும்பி வரச் செய்வார்'' என்று கூறுகிறார் *(லூக் 1:16தொ; காண்க. மலா 2:6; 3:24)*. ''மனமாற்றம் அடையுங்கள்; ஏனெனில், விண்ணரசு நெருங்கிவிட்டது'' *(மத் 3:2)* என்ற வாக்கு அவரது செய்தியைச் சுருக்க மாகத் தருகிறது. இறையரசின் வருகை நம்பிக்கையின் முன்னோக்கத்தைத் திறந்து விட்டாலும், அதற்குமுன் வரும் தீர்ப்பை யோவான் வலியுறுத்துகிறார். யாவேயின் நாளில் *(மத் 3:7.10.12)* ஆபிரகாமின் இனத் தைச் சேர்ந்தவர் என்பதால் எப்பயனு மில்லை *(3:9)*. மனிதர் எல்லாரும் தாங்கள் பாவிகள் என்று ஏற்று, மனமாற்றம் அடைந் தவர்கள் என்பதை அதற்கேற்ற செயல் களால் காட்ட வேண்டும் *(3:8)*; இந்நிலைக் கேற்ற புதிய வாழ்க்கை முறையைக் கடைப்

பிடிக்க வேண்டும் (லூக் 3:10-14). இந்த மனமாற்றத்தின் அடையாளமாகவே யோவான் தண்ணீரால் திருமுழுக்கு கொடுத்தது; தூய ஆவி என்னும் நெருப்பால் மெசியா கொடுக்கவிருக்கும் திருமுழுக்குக்குப் பாவிகளைத் தயாரித்தது (மத் 3:11 தொ).

**2. மனமாற்றமும் இறையரசில் நுழைதலும்:**

***அ)*** இறையரசைப் போதிப்பதோடு நிறைவடையாமல், இயேசு அதை உண்மையாக்க ஆற்றலோடு முயன்றார். அவரோடு அரசு தொடங்கிவிட்டது. ஆனால், அது மறைபொருளான நிறைவை நோக்கியே இயக்கப்படுகிறது. திருமுழுக்கு யோவான் போதித்த மனமாற்றத்திற்கான அழைப்பு, இயேசு தனது பணியின் தொடக்கத்தில் அதைத் தனதாக்கிக் கொண்டதால், அதன் உண்மைத்தன்மை குறைந்து விடவில்லை (மாற் 1:15; மத் 4:17). இயேசு ''பாவிகளை மனமாற்றம் அடையுமாறு அழைக்கவே வந்தார்'' (லூக் 5:32). இஃது அரசு பற்றிய நற்செய்தியின் ஒரு முக்கியமான கூறாகும். தன் பாவநிலையை உணரும் மனிதன், இப்போது நம்பிக்கையோடு இயேசுவிடம் திரும்பலாம். ஏனெனில், ''மண்ணுலகில் பாவங்களை மன்னிக்க மானிட மகன் அதிகாரம் கொண்டுள்ளார்'' (மத் 9:6 இணை). ஆனால், மனமாற்றம் பற்றிய செய்தி செல்வத்தின்பால் கொண்ட பற்று முதல் (மாற் 10:21-25) பரிசேயர்களின் அகந்தை மிக்க உறுதிவரை (லூக் 18:9) எல்லா வடிவங்களிலும், மனித நிறைவோடு மோதியது. கடந்த காலத்தில் நினிவே இருந்ததைவிட (லூக் 11:29-32 இணை) இறைவன்பால் நல்லுணர்வு கொள்ளாத தீய தலைமுறை மத்தியில் ''யோனாவின் அடையாளமாக'' இயேசு உயர்த்தப்படுவார். தீய தலைமுறைக்கு எதிராக எழுந்து நினிவேமக்கள் அதைக் கண்டனம் செய்வர் (11:32). கெனசரேத்து ஏரிக்கரை நகர்கள் பெறும் தண்டனையை விட, தீரும் சீதோனும் பெறுவது எளிதாகவே இருக்கும் (லூக் 10:13-14 இணை). உண்மையில், இஸ்ராயேல் மனமாற்றம் கொள்ளாமை அதன் கடின இதயத்தின் அடையாளமாகும் (மத் 13:15 இணை; காண்க. எசா 6:10). இஸ்ராயேல் தனது நடத்தையை மாற்றிக் கொள்ளாவிட்டால், காய்க்காத அத்திமரத்தைப்போல் (லூக் 13:6-9; காண்க. மத் 21:18-22 இணை) இயேசுவுக்குச் செவிமடுக்க மனமாற்றம் கொள்ளாதவர்கள் அழிய வேண்டியதுதான் (லூக் 13:1-5).

**ஆ.** மனமாற்றத்திற்கு அழைத்தபோது, இயேசு பாவமன்னிப்பு வழிபாடுகள் பற்றி எதுவும் பேசவில்லை. பகட்டான வெளியடையாளங்கள் எதையும் அவர் நம்பவில்லை (மத் 6:16 தொ). அவசியமானது எதுவென்றால், ஒருவன் குழந்தையாக மாறும் இதயமாற்றமே (18:3 இணை). அதன் பிறகு ''இறைவனது அரசையும் நீதியையும் நாடுவதில்'' (6:33) தொடர்ந்து முயல வேண்டும். அதாவது, ஒருவன் தன் வாழ்வை இறையரசின், புதிய சட்டத்தின் படி அமைத்துக்கொள்ள வேண்டும். மனமாற்றம் என்ற செயல் பல உவமைகளிலும் மிக அழகாகச் சித்தரிக்கப்படுகிறது. ஒழுக்க மாற்றத்தின் விருப்பத்தை உள்ளடக்கினாலும் மனமாற்றம் ஒரு தாழ்மையான நம்பிக்கை மிக்க வேண்டுதலாய் அமைகிறது; ''கடவுளே பாவியாகிய எனக்கு இரங்கும்'' (லூக் 18:13). மனமாற்றம் ஒரு அருள் எனலாம். ஏனெனில், கடவுள்தான் முதலடி எடுத்து வைக்கிறார். காணாமல் போன ஆட்டைத் தேடிச் செல்வது ஆயன் தான் (லூக் 15:4தொ;காண்க. 15:8). கடவுள் எடுத்துவைக்கும் முதலடிக்கு மனிதன் தரும் பதில் என்ன என்பதுபற்றி ஊதாரி மைந்தன் உவமையில் மிகத்தெளிவாக அலசப்படுகிறது (லூக் 15:11-32). மனந்திரும்பத் தேவையில்லாத தொண்ணூற்று ஒன்பது நீதிமான்களைவிட, மனந்திரும்பும் ஒரு பாவியைக் குறித்து விண்ணகத்தில் அதிக மகிழ்ச்சி உண்டாகும் என்ற மன உலைவு தரும் வெளிப்பாட்டை நற்செய்தி கொடுக்கிறது (லூக் 15:7.10). பரிசேயர்களுக்கு இடறலாக இருக்குமளவுக்குப் பாவிகளை

இயேசு வரவேற்றார் (*மத் 9:10-13* இணை; லூக் *15:2*). ஆனால், அது மனமாற்றத்தை அவர்களில் விளைவித்தது. லூக்காவின் நற்செய்தி மனமாற்றத்தின் சில நிகழ்வு களை மிகத் தெளிவாக விளக்குகிறது. பாவம் செய்த பெண் (லூக் *7:36-50*)-மற்றும் சக்கேயுவின் கதை (*19:5-9*) நல்ல சான்று களாகும்.

**3. மனமாற்றமும் திருமுழுக்கும்:**

***அ)*** இயேசு தான் வாழ்ந்த காலத்தில் இறை அரசின் நற்செய்தியை அறிவிக்கவும், அதற்கான மனமாற்றத்தின் செய்தியை எடுத்துரைக்கவும் தனது அப்போஸ்தலர் களை அனுப்பினார் (மாற் *6:12*); உயிர்ப் புக்குப் பிறகு அவர்களது அந்தப் பணி யைப் புதுப்பித்தார். உலகெங்கும் அவரது பெயரால் பாவமன்னிப்பின் நோக்கோடு மனமாற்றத்தின் நற்செய்தியை அறிவிக்க (லூக் *24:47*) வேண்டுமென்றார். ஏனெனில், எவருடைய பாவங்களை மன்னிப்பார் களோ அவை அவருக்கு மன்னிக்கப்படும் (யோவா *20:23*). அப்போஸ்தலர் பணி யிலும், திருமுகங்களிலும் இந்தக் கட்டளை நிறைவேறுவதைக் கண்கூடாகப் பார்க்கி றோம். ஆனால் மனமாற்றம் என்பது யூதர்களைப் பொறுத்தும், புறவினத்தார் களைப் பொறுத்தும் மாறுபடுகின்றது.

***ஆ)*** யூதர்களுக்குத் தேவையானது என்ன வென்றால் இயேசு ஏற்கெனவே அழைப்பு விடுத்த ஒழுக்க வாழ்வில் ஏற்படும் மாற்ற மாகும். அவர்கள் மனம் மாறினால் கடவுள் அவர்களுக்கு மன்னிப்பளிப்பார் (அ.ப. *2:38; 3:19; 5:31*). இந்த மன்னிப்பு திருமுழுக் கையும், தூய ஆவியின் கொடையையும் பெறுவதால் முத்திரையிடப்படும் (*2:38*). மனமாற்றம் என்பது ஓர் ஒழுக்க மாற்ற மாகும்போது அது கிறிஸ்துவில் விசுவாசம் கொள்ளும் செயலையும் உள்ளடக்க வேண் டும். யூதர்கள் ஆண்டவரிடம் திரும்புவர் (அ.ப. *3:19; 9:25*). பவுல் குறிப்பிடுவது போல இவ்வாறு கிறிஸ்துவைப் பற்றிக் கொள்ளுதல் அடைவதற்குக் கடினமாகும். ஏனெனில், யூதர்கள் தங்கள் இதயத்தைச் சுற்றி ஒரு திரையைப் போட்டிருக்கிறார்கள். மனம் மாறினால் அத்திரை கீழேவிழும் (2 கொரி *3:16* தொ). ஆனால், எசாயாவின் கூற்றுக்கேற்ப (எசா *6:9* தொ) அவர்களது கடின இதயம் மன மாற்றத்தை முழுவதும் பெறாமல் போகுமாறு செய்து விட்டது (அ.ப. *28:24-27*). புறவினத்தாரைப்போல் இவர்களும் இறைக் கோபத்தால் அச்சுறுத் தப்பட்டாலும், இவர் மனம் வருந்த வேண் டும் என்பதற்காகவே கடவுள் பொறுமை காட்டியதை இவர்கள் புரிந்து கொள்ள வில்லை (உரோ *2:4*). அவர்களில் எஞ்சி யோரே அப்போஸ்தலர்களின் போத னைக்குச் செவி மடுத்தனர் (உரோ *11:1-5*).

***இ)*** நற்செய்தி புறவினத்தார் நாடுகளிலே மிகச் சிறப்பான வரவேற்பைப் பெற்றது. கொர்னேலியு திருமுழுக்குப் பெற்றபோது யூதக் கிறிஸ்தவர்கள் வியந்து குறிப்பிட்டதா வது, ''வாழ்வுக்கு வழியாகும் மனமாற்றத் தைக் கடவுள் நமக்கும், புறவினத்தாருக்கும் கூட அருளினார்'' (அ.ப. *11:18*. காண்க. *17:30*). உண்மையிலேயே நற்செய்தி அந்தி யோக்கியாவிலும் மற்ற இடங்களிலும் வெற்றியோடு போதிக்கப்பட்டது (*11:21; 15:3.19*). பவுலின் சிறப்புப் பணியே புற வினத்தார் மத்தியில்தான் (*26:18:20*). ஆனால், இங்கு மனமாற்றம் ஒருவனைச் சிலைவழிபாட்டிலிருந்து உயிருள்ள கட வுளை நோக்கி வருமாறு அழைப்பு விடுக் கிறது (*14:15; 26:18; 1* தெச *1:9*). எனவே, முதல் முயற்சி எடுக்கப்பட்டவுடன் புற வினத்தாரும் யூதர்களைப்போல ''அவர்கள் தம் ஆன்மாக்களில் ஆயரும் காவலருமான வரிடம் திரும்பி வந்தனர்'' (1பேதுரு *2:25*).

**4. திருச்சபையில் பாவமும், மனம் வருந் துதலும்:**

அ) திருமுழுக்கால் முத்திரையிடப்பட்ட மன மாற்றச் செயல் உறுதியாக என்றென்றுக்கும் செயல்பட்டதாகும். இந்த அருள் திரும்ப வும் புதுப்பிக்க முடியாத ஒன்றாகும் (எபி *6:6*). ஆனால், திருமுழுக்குப் பெற்றவர்கள் மீண்டும் விழக்கூடியவர்கள். இதை அப் போஸ்தலர் குழு பாவத்தில் விரைவில் கண்டது. எஃது எப்படியிருந்தாலும் மீட்பில் பங்குபெற மனம் வருந்துதலின் அவசி

யத்தை உணர்ந்தனர். எனவே, பேதுரு சீமோன் எனும் மந்திரவாதியை மனம் வருந்தத் தூண்டினார் (அ.ப. 8:22). உண்மையை விட்டு விலகித் திரிபவர்களை மனம் திருப்புமாறு பக்தியுள்ள கிறிஸ்தவர்களை யாக்கோபு தூண்டுகிறார் (யாக் 5:19-20). பவுல், கொரிந்தியர்கள் மனம் வருந்தியதைக் கேட்டு மகிழ்ச்சி அடைகின்றார் (2 கொரி 7:9); தவறுபவர்களைத் திருத்துமாறு திமொத்தேயுவைக் கேட்கின்றார்; ஏனெனில், கடவுள் அவர்கட்கு மனம் வருந்தும் அருளைத் தருவார் என நம்புகிறார் (2 திமொ 2:25). திருவெளிப்பாட்டு நூலின் தொடக்கத்தில் வரும் ஏழு சபைகளுக்கு அளிக்கப்பட்ட செய்திகள், மனம் வருந்துதலுக்கான தெளிவான அழைப்பைக் கொண்டுள்ளன. இது முதல் ஆர்வத்திலிருந்து வீழ்ச்சியுற்றதைச் சுட்டுகிறது (திருவெளி 2:5.16.21தொ; 3:3.19). பாவ மன்னிப்புத் திருவருட் சாதனத்தைப் பற்றி வெளிப்படையாகப் பேசாவிடினும், இந்த வாசகங்கள், திருமுழுக்கு மனமாற்றத்தை நீட்டிப்பதில், பாவமன்னிப்பு என்னும் நற்பண்பு கிறிஸ்தவ வாழ்வில் அதற்குரிய இடத்தைக் கொண்டிருக்க வேண்டும் என்பதைக் காட்டுகின்றன.

ஆ. மனம் வருத்தம் கொள்தலே இறைவனின் தீர்ப்பை ஒருவன் சந்திக்க அவனைத் தயாரிக்கிறது (காண்க. அ.ப. 17:30 தொ). இப்பொழுது வரலாறு அந்தத் தீர்ப்பை நோக்கியே போய்க் கொண்டிருக்கிறது. அதன் வருகை தாமதமாகிறதென்றால் அதற்குக் காரணம் ''கடவுள் பொறுமையாக இருக்கிறார்; ஒருவரும் அழிவுறக் கூடாது, முடிந்தால் எல்லாரும் மனந் திரும்ப வேண்டுமென்றிருக்கிறார்'' (2 பேதுரு 3:9). இறைவாக்கினரின் காலத்திலும் சரி, இயேசு வந்தபோதும் சரி, அப்போஸ்தலர்களின் போதனைகளைக் கேட்ட பின்பும் சரி யூதர்கள் மனம் மாறாமல் தங்கள் இதயங்களைக் கடினப் படுத்திக் கொண்டனர். அது போலவே இன்று வரலாற்றில் நிகழும் அருங்குறிகளைக் கண்டபின்பும் மனமாற்றமோ, மன வருத்தமோ இன்றி வாழ்பவர்கள் (திருவெளி 9:20 தொ), தெய்வநிந்தனை செய்து, கடவுளுக்கு மகிமை செலுத்தாமல், மனமாற்றமின்றி அழிவார்கள் (16:9.11). இதற்குக்காரணம் திருச்சபையின் அங்கத்தினர்கள் அல்லர். புறவினத்தாரும் கொள்கை துறப்பவர்களுமே காரணம் (காண்க. 21:8). இத்தகைய சூழலில் கிறிஸ்தவர்கள் மனவருத்தம் கொண்டு, மனமாற்றம் பெற்று இந்த நெறிகெட்ட இந்தத் தலைமுறையினரிடமிருந்து தங்களையே காத்துக் கொள்வார்களாக (அ.ப. 2:40).

**மனவுறுதி** (ENDURANCE, STEADFASTNESS)

இது, புதிய ஏற்பாட்டில் காணப்படும் கிறிஸ்தவ வாழ்வின் நற்பண்புகளில் ஒன்றாகும். குறிப்பாக, இறைவன் பொருட்டுக் கொடுமைப்படுத்தப்படும் போது வெளிப்படும் நற்பண்பாகும். இது மனத் திண்மையை விளைவிக்க வல்லது (லூக் 21:19; உரோ 5:3-4; 2 கொரி 6:4; கொலோ 1:11; எபி 10:36; திருவெளி 1:9; 2:2. 19; 3:10; 13:10; 14:12). இதைக் குறிக்கும் கிரேக்கச்சொல் விட்டுக்கொடுத்தல், பொறுமை, விடாமுயற்சி போன்ற பொருள்களைச் சுட்டவல்லது.

கிறிஸ்தவர்கள் இயேசுவைப் போன்று மனவுறுதியுடன் வாழவேண்டும் என்று உரோமையர்களுக்குப் பவுல் கூறுகிறார் (உரோ 5:3-4). மேலும், தெசலோனிக்கேயர்கள் வேதனைகளை மனவுறுதியோடு தாங்கிக்கொள்வதை நினைத்துத் தான் பெருமைப்படுவதாகவும் கூறுகிறார் (2 தெச 1:4). தனது திருமுகத்தில், யாக்கோபு விசுவாசம் சோதிக்கப்படுவதால் மனவுறுதி விளையும் என்று கூறுகிறார் (யாக் 1:3-4).

**மனாசே** (MANASSEH - மறக்கச் செய்தல்)

1. மனாசே, யோசேப்பின் முதல் மகனும், எகிப்தியக் குருவின் மகளான ஆசினத்துக்குப் பிறந்தவருமாவார் (ஆதி 41:51; 46;20). யாக்கோபால் தன் புதல்வராய் ஏற்றுக்கொள்ளப்பட்டவர் (48:5). ஆனால், யாக்கோபின் புதல்வர்களின் பெயர் வரிசையில் மனாசேயின் பெயர் காணப்பட்டதே

யில்லை; யோசேப்பின் பெயரே வருகிறது. மற்ற இடங்களில் இவர் தனி நபராக வருகிறார் (ஆதி 50:23). இவரே மனாசே கோத்திரத்தின் இனப்பெயர் முதல்வர். மனாசே கோத்திரத்தின் தலைவராக இவ ரின் பங்கு முக்கியமானது. இவர் யாக்கோ பின் புதல்வராக ஏற்றுக்கொள்ளப்பட்டா லும் முதல் மைந்தனான இவர் எப்பிராயி முக்குப் பின்தான் வைக்கப்படுகிறார். இஃது எப்பிராயிம் கோத்திரத்துக்கு அளிக் கப்பட்ட முக்கியத்துவத்தைக் காட்டுகிறது.

கோத்திரங்களுக்கிடையே ஏற்பட்ட பல குழப்படியான உறவுகளைச் சரிசெய்யவே எப்பிராயிமும், மனாசேயும், யாக்கோபின் புதல்வர்களாகத் தத்து எடுக்கப்பட்டார்கள். எண் 1:34-இன்படி, மனாசேக்குப் போருக்குப் போகத்தக்கவர் 32,200 பேர் கொடுக்கப்பட் டனர். எண் 26:29-34-இன்படி 52,700 போருக்குப் போகத்தக்கவர்கள் கொடுக்கப் பட்டனர். மனாசேயின் இனம் எண்ணிக்கை நூலில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளது (எண் 26:29-34; 1நாள் 7:14-29). யாக்கோபு ஆசி அளிக்கும்போது அங்கு மனாசே காணப்பட வில்லை (ஆதி 49). ஆனால், மோசே ஆசி அளிக்கும்போது யோசேப்பின் குடும்பத் தில் எப்பிராயிமுடன் மனாசே இடம் பெறுகிறார் (உப 33:17).

மனாசே, யோர்தானின் கிழக்கிலும், பாசானிலும், கிலயாதின் வடபாதியிலும், வாழ்ந்ததாகப் பரம்பரை ஒன்று கூறுகிறது (உப 3:13-14; யோசு 13:29-31; 17:1-6). மனாசே கோத்திரத்தின் ஒரு பிரிவான மாக்கீர், வட கிலயாதில் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. எரிகோவின் அருகே கீழ்த் திசையிலுள்ள பகுதி மோசே பிரித்துக் கொடுத்ததின்படி மனாசேயின் கோத்திரத் தாருக்குக் கிடைத்தது (எண் 32:33. 39தொ; 34:14; உப 3:13-14; யோசு 1:12; 12:6; 18:7). மனாசேயின் கோத்திரத்தார், இஸ்ராயேலர் கானான் நாட்டுக்குள் நுழையுமுன்பே, பாலஸ்தீனத்தில் குடிபுகுந்து வாழ்ந்ததாக உரிமை கொண்டாடினர். ஆனால், இஃது ஏற்றுக்கொள்ளக்கூடியதன்று. ஏனெனில், மனாசேயும், எப்பிராயிமும், இஸ்ராயேலர் களாக எகிப்திலிருந்து கானான் நாட்டுக்கு மற்றெல்லோருடனும் சேர்ந்தே வந்தனர். மேற்குப் பாலஸ்தீனத்திலிருந்து, கிழக்குப் பாலஸ்தீனத்துக்கு மனாசேயின் கோத்திரத் தார் சென்றதால் இவ்வாறு கூற வாய்ப் புண்டு. மேலும், மனாசே கோத்திரத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மாக்கீர் இனம், பாலஸ்தீனத்தில் இஸ்ராயேல் புகுமுன்பே, குடியேறி இருக்கலாம். எண்ணாகமம் 32:33. 89-40-இல் மனாசேயின் கோத்திரம் காத்து, ரூபன் கோத்திரங்களோடு சேர்த்துக் கூறப் படுகிறது. இதற்கு முன்பகுதியில் இவ்வாறு கூறப்பட்டதில்லை. ஆனால், மனாசேயின் கோத்திரத்தார் பலிபீடம் பற்றிய சச்சரவில் கூறப்படுகின்றனர் (யோசு 22). மேற்குப் பாலஸ்தீனத்தில் எப்பிரயிமின் வடபுறத் தில், மனாசேக்குரிய நாடு அமைந்துள்ளது. இது செக்கேமையும் உள்ளடக்கியுள்ளது (யோசு 17:7-13). அதன் கானானிய நகரங் கள் எல்லாம் மேற்குப் பாலஸ்தீனத்திலே உள்ளன (நீதி 1:27). மனாசேயின் குடும்பத் தினரையெல்லாம் போருக்கு ஒன்று சேர்த்த கிதியோன் மேற்குப் பாலஸ்தீனத்திலே வாழ்ந்தார் (நீதி 6:15.35; 7:23). எப்பிரயிமுக் கும் மனாசேக்குமிடையே ஏதாவது எல்லை இருந்ததா என்பது நிச்சயமாக இல்லை; எப்பிரயிம் கோத்திரத்தார் மனாசேயின் நாட்டிலே வாழ்ந்தனர் எனவும் கூறப்படு கிறது (யோசு 16:9; 17:7-13). மனாசேயில் இருந்த கானானிய நகரங்கள் (நீதி 1:2) எப்பிரயிமின் நகரங்களாயின (1 நாள் 7:29). இந்த மாற்றம் போரினாலா அல்லது ஒப்பந் தத்தாலா என்பது கூறப்படவில்லை.

எப்பிரயிமும், மனாசேயும் வட அரசைக் குறிப்பதாக எசா 9:20-இலும், மனாசேயைக் கிழக்குப் பாலஸ்தீனத்திலுள்ள கில்யா தோடு தொடர்புபடுத்தி சங் 60:9; 108:9-இலும் கூறப்படுகின்றன. நாள் ஆகம மும் எப்பிரயிமும், மனாசேயும் வட வரசையே குறிப்பதாகக் கூறுகிறது (2 நாள் 15:9; 30:1. 18; 31:1). கி.மு. 734-இல் அசீரியர்கள் மனாசேயின் கோத்திரத்தை மெசபொத்தாமிய நகரங்கட்கு இட்டுச் சென்றதாக 1 நாள் ஆகமம் ஒரு மரபுவழிச் செய்தியைக் கொண்டிருக்கிறது.

*2.* மனாசே கி.மு. *687-642* வரை யூதாவை ஆண்ட அரசன் ஆவான். இவன் எசேக்கியா வின் மகன் *(2 அர 20:21; 2 நாள் 32:33).* இவனது காலத்தில் அன்னியக் கடவுளை வழிபட்டதாகவும், எல்லாவகை மூடநம் பிக்கைகளையும் கொண்டிருந்ததாகவும், அடக்குமுறையும், கொலைகளும் நிரம்பி யிருந்தன எனவும் கூறுகின்றனர். எனவே, யூதாவின் அரசர்களில் மிகவும் மோசமான வனாகக் கருதப்படுபவன் இவன் *(2 அர 21:1-17).* இவனது ஆட்சிக்காலமே ஆண்ட வர் யூதாவை அழிக்க முடிவு செய்வதற்கு ஏதுவாகிறது. *2 நாள் 33:1-10-* இதே போன்ற குறைகளை எடுத்துக் கூறியபோதி லும், *33:11-20-*இல், தனக்கேயுரிய சில குறிப்புகளையும் சேர்த்துக் கொள்கின்றது. இதில் மனாசே அசீரியாவுக்குக் கைதியாகக் கொண்டு செல்லப்பட்டதாகவும், அங்கு அவன் மனம் மாறி, தனது மூடநம்பிக்கை, சிலைவழிபாடு ஆகியவற்றை விட்டு விட்டதாகவும் கூறினாலும் இது வரலாற்று உண்மை போல் தெரியவில்லை. இவனது சீர்கேடுகளே யாவே இஸ்ராயேலைத் தண் டிப்பதற்கு ஏதுவான காலமாகியது என்பதற் குப் பல சான்றுகள் உள்ளதால் மேலே கூறியதை வரலாற்று உண்மையாக ஏற்றுக் கொள்ள இயலாததாய் இருக்கிறது *(2 அர 23:26; 24:3; எரே 15:4).*

*2* நாளாகமத்தின் அடிப்படையில் எழுதப் பட்ட கற்பனை நூலே 'மனாசேயின் செபம்' எனும் போலி நூலாகும். மனாசே கேடு கெட்டவனாயினும் அவனது மனந் திரும்புதலின் பயனாக அவன் நெடிய அமைதியான அரசாட்சியைப் பெற்றிருந் தான்; எத்துன்பமுமின்றி இயற்கையான மரணமடைந்தான் என நாளகமமும் கருது கிறது. ஒரு மரபுச்செய்தியை இறையியலாக் குவதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும். எருசலேமைச் சுற்றி மனாசே அரண் அமைத் தான் என்பது ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒன் றாகும் *(2 நாள் 33:14).*

மனாசே அசீரியர்களுக்குப் பணிந்து ஆட்சி செய்ததால், அவனது மதக்கொள்கை கள் பல ஒழுங்கற்றனவாக இருந்தாலும் நாட்டில் அமைதி நிலவியது என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியதே. சனகெரிபின் படையெடுப்பு யூதாவை முற்றிலும் அடி மைப்படுத்தியது. மனாசே யூதா முழுவதை யும் பண்பாட்டு, மத அளவில் அசீரியா வுக்குக் கீழ்ப்படுத்த விரும்பினான். தன்னை எதிர்க்கும் யாவேயின் ஊழியர்களையும் துன்புறுத்தி வன்முறையில் அடக்கி வைத் தான். கி.மு. *680-630* வரை அசீரியர்களின் கீழ் சிற்றரசனாக இருந்தான். இவன் பாபி லோனில் சிறை வைக்கப்பட்டிருந்தான் என்ற கதை, மெசபொத்தாமியாவுக்குச் சென்ற பயணத்தின் விளைவாக வந்த கருத்தாக இருக்கலாம்.

**3.** பகத் மோவாபின் புதல்வர்களில் ஒரு வர். இவர் தன் அன்னிய மனைவியை விலக்கிவிட வேண்டியிருந்தது *(எஸ் 10:30).*

**4.** ஆசமின் புதல்வர்களில் ஒருவர். இவர் தன் அன்னிய மனைவியை விலக்கிவிட் டார் *(எஸ் 10:33).*

**5.** யூதித்தின் கணவன்; செல்வந்தர்; சிமி யோன் இனத்தைச் சேர்ந்தவர். இவர் கடும் வெயிலால் தாக்குண்டு இறந்துபோனார் *(யூதி 8:2-3.7).*

**மனாசேயின் செபம்** *(*MANASSEH, PRAYER OF*)*

*2 நாள் 33:11-13-*ஐ அடிப்படையாகக் கொண்டு மனாசேயின் செபமாகக் கூறப் படுவது. *15* வரிகளைக் கொண்ட ஒரு மனம்வருந்துதலின் சங்கீதம். *2 அர 21-24-*இல் கூறப்பட்டதற்கு மாறாக, இவர் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டுச் சிறை யிலடைக்கப்பட்டதாகவும், அங்கு மனந் திரும்பி மன்னிப்பு வேண்டிச் செபித்ததே இச்செபம் எனவும் உரைப்பர்.

இச்செபம், இறைவனை நீதியுள்ளவர்கள் மற்றும் முதுபெரும் தந்தையர்களின் தந்தை யாகவும், அனைத்தையும் படைத்து நடத்து பவராகவும், பாவத்தை மன்னிப்பவராக வும், இரக்கம் காட்டுபவராகவும் விளித்துத் தொடங்குகிறது. அவர் மனந்திரும்புதலை நீதிமான்களுக்கன்று, பாவிகட்கே அளித்

தார். மனாசே தன் பாவங்கள் கடலின் மணலைப் போன்றதென்றும், தனக்கு மன்னிப்பருளுமாறும் உருக்கமாக வேண்டுகிறார். கடவுள் தன் இரக்கப் பெருக்கத்தில் தன்னை மன்னிப்பாரேயாகில் வாழும்நாள் எல்லாம் அவரையே புகழ்வதாக வாக்குறுதி அளிக்கிறார்.

இச்செபம் நாடு கடத்தலுக்குப் பிற்பட்ட யூதர்களின் செபம் போன்றுள்ளது. இதில் பொது, தனி மனிதப்பண்புகள் காணப்படுவதோடு, மறு வாழ்வு பற்றிப் பேசுகையில் பாதாளம் (செயோல்) என்று கூறுவதால் சங் 51, அசரியாவின் செபம் முதலியவற்றைப் போன்றுள்ளது. மனாசேயின் செபம் இவற்றோடு ஒப்பிடும்போது தரத்தில் சிறிது குறைவாகத் தோன்றினாலும் உண்மையான பக்தியும், கடவுட்பற்றும் உள்ளதாக இருக்கிறது.

மனாசேயின் மனந்திரும்புதல் என்பது உண்மையை விட, கற்பனை என்றே கூறத் தோன்றுகிறது. ஏனெனில், அவன் மனந்திரும்பி வந்து மேற்கொண்ட சீர்திருத்தங்களெல்லாம் 2 அரசர்கள் நூல், அரசன் யோசியா செய்ததாகக் கூறுகிறது. யோசியா பல சீர்திருத்தங்களைச் செய்தாலும், மனாசேயின் சீர்கேட்டினால் விளைந்த பாபிலோனியப் படையெடுப்பு எவ்வளவு தீமைகளை விளைத்துள்ளது எனக் குற்றம் சாட்டுகிறது இந்நூல் *(2 அர 21:13-14; 23:26-27; 24:3-4)*. ஆனால், நாளாகமம் செதேக்கியா அரசன்தான் இத்தகைய சீர்கேடுகளுக்குக் காரணமெனக் கூறுகிறது *(2 நாள் 36:14-21)*. போலிநூல்கள் மட்டுமே மனாசேயின் மனந்திரும்புதலின் செபம் பற்றிப் பேசுகின்றன.

இச்செபத்தின் முதன்மை மொழி எதுவென்பது தெளிவாக இல்லை. கிரேக்கம் என்று பலர் கூறுகின்றனர். இச்செபம் திரிதெந்தின் சங்கத்திற்குமுன் 2 நாளாகமத்தின் முடிவில் வைக்கப்பட்டது. பின், புதிய ஏற்பாட்டின் பிற்சேர்க்கையில் வைக்கப்பட்டது. லூத்தர் போன்றோர் தமது விவிலியத்தில் ஏற்றுக்கொண்டனர். ஸ்விங்லி இதனை ஒதுக்கிவிட்டார். கத்தோலிக்கத் திருச்சபை தனது விவிலியத்திலிருந்து இதனை எடுத்துவிட்டது.

**மனாயேன்** *(MANAEN - ஆறுதல் அளிப்பவர்)*

பர்னபா, நீகர் எனும் சிமெயோன், சிரேனே ஊரான் லூக்கியு, அந்தியோக்கு திருச்சபையைச் சேர்ந்த சவுல் ஆகியவர்களில் ஒருவராக, அப்போஸ்தலர் பணி நூலில் மனாயேன் காட்டப்படுகிறார் *(அ.ப. 13:1)*.

மனாயேன் ஏரோது அந்திப்பாவுடன் வளர்ந்தவர் எனக் கூறப்படுகிறது. ''கூட வளர்ந்தவன்'', என்பதைக் குறிக்கும் கிரேக்கச்சொல் புதிய ஏற்பாட்டில் இங்கு மட்டுமே வருகிறது. இந்தச் சொல்லை 'அரசவையின் உறுப்பினர்', 'நெருங்கிய நண்பர்' என மொழிபெயர்க்கலாம். எனவே, மனாயேன் சிறுவயதிலிருந்தே ஏரோதின் நண்பனாக இருந்திருக்க வேண்டும்.

**மனிதப் பண்பேற்றிக் கூறுதல்** *(ANTHROPOMORPHISM)*

இஃது ஒப்புமை மொழியைச் சேர்ந்த சொற்றொடராகும். மனிதப்பண்புகளையும் உணர்ச்சிகளையும் ஒப்புமை முறையில் இறைவனுக்குச் சாற்றிக் கூறுவதாகும். இச்சொற்றொடர் இறைவன் மனிதவடிவில் தம்மை வெளிப்படுத்துவதையும் உணர்த்துகிறது. விவிலியம் அடிக்கடி இறைவனை மனிதச் சொற்களில் விவரிக்கிறது. அவருக்குக் கைகளும் *(யாத் 6:6)*, கால்களும் *(24:10)* இருப்பதாக விவரிக்கிறது. அவர் கோபம் *(4:14)*, அன்பு *(20:6)* போன்ற மனித உணர்ச்சிகளை அனுபவிப்பதாக விவரிக்கிறது.

அதன் வரலாற்றின் தொடக்கத்திலிருந்து இஸ்ராயேலுக்கு இறைவன் மனிதத்தன்மையோடு தோன்றுகிறார். தன் கோபத்தை மிகவும் மனிதத்தன்மையான சொற்களில் எடுத்துரைக்கிறார். அதே சமயம் தமது இறைத்தன்மையை மோசே மறந்துவிட அனுமதிக்கவில்லை. அவரது பின்புறத்தை மோசே காணலாம்; ஆனால் அவர்

முகத்தைக் காணமுடியாது (யாத் 33:21-23). இஸ்ராயேலின் பிற்கால வரலாற்றில் எசாயா இறைவனது மகிமையை அறிவிக்கிறார் (எசா 40:12-13). இஃது இஸ்ராயேலின் படைப்பவரும் மீட்பவருமானவரை மிகுந்த மனிதப்பண்பில், ஆகவே வரையறைக்குட்பட்ட, பாவமான கருத்தில் விவரிப்புக்கு எதிராகப் போராடும் முயற்சியாகத் தெரிகிறது.

புதிய ஏற்பாட்டில் இறைவன் தம் மகனில் தம்மை வெளிப்படுத்துகிறார். இயேசுவில் இறைவன் ''தம்மை வெறுமையாக்குகிறார்'' (பிலி 2:7). இயேசுவில் அவர் தம்மை மனிதர் காணச் செய்கிறார் (யோவா 14:9). இறைவன் தம்மைத் தூய முடிவில்லாதவராக, வரையறைக்குட்பட்ட வீழ்ச்சிக்குப் பின், பாவமிக்க, மனிதர்களுக்குத் தம்மை வெளிப்படுத்த விரும்பியதால், அவர் மனித மொழிக்கும், உணர்ச்சிகளுக்கும் பொருட்களுக்கும் தம்மை இசைவுபடுத்த வேண்டியிருந்தது எனலாம். இந்த மனிதப் பண்பேற்றிய சுயவெளிப்பாடுகள் உண்மையான இறைவெளிப்பாடுகளே என்று விவிலியம் ஐயமின்றிச் சுட்டுகிறது.

இம்முறையில் வெளிப்பாடு அளிக்கப் படுவது பற்றி கிறிஸ்தவர்களிடையே எப்போதும் பிரச்சனை இருந்து கொண்டேயிருக்கும். சிலர் இந்த உடல் சார்ந்த உருவங்களைச் சொற்பொருளில் எடுத்துக் கொண்டு இறைவனை ஒரு வரையறைக் குட்பட்ட உயிராய்க் கொள்வர். இதற்கு மாறாக வேறுசிலர், இறைவனுக்குச் சாற்றிக் கூறப்படும் மனிதக்கூறுகளை மறுத்து,அவர் அறிய முடியாதவர் என்று வலியுறுத்துவர். ஆனால், மறைநூல் அவரது இறைத்தன்மை, மனித செயற்களத்தில் பங்குபெற அவர் விருப்பம் கொள்ளுதல் ஆகிய இரு கூறுகளையும் வலியுறுத்துகிறது.

## மனிதப்பேச்சு (HUMAN SPEECH)

பழங்காலத்தில் பொதுவாக இருந்த ஒரு கருத்தைப் பின்பற்றி மனிதப் பேச்சானது காலியான, பொருளற்ற ஒலி மட்டுமே, என்றும் மனிதர்கள் தங்களிடையே தொடர்பு கொள்ளப்பயன்படுத்தும் எளிய தொரு கருவி என்றும் விவிலிய உலகு கருதவில்லை. மாறாக, மனிதப்பேச்சானது ஓர் ஆளைப் பற்றி நமக்கு வெளிப்படுத்துகிறது; அவரது இயக்க ஆற்றலில் பங்கு கொள்கிறது; ஒருவாறு பயனிறைவுடையதாக இருக்கிறது என்று விவிலிய உலகு கருதுகிறது. எனவே, அது மனித நடத்தையில் சிறப்பிடம் பெற்று நிற்கிறது.

ஒருவனது மரியாதையும் மகிமையும் அல்லது அவன் அடையும் குழப்பமும் சிறுமையும் அவனது சொல்லின் தன்மையைப் பொறுத்தது (சீரா 5:13). சாவும் வாழ்வும் ஒருவனது சொல்லாற்றலிலிருந்தே விளைகின்றன (பழ 18:21). ஒருவனது வாயினின்று புறப்படும் சொற்கள் அவனது மதிப்பை நிர்ணயிக்கக்கூடிய உரைகல்லாகப் பயன்படுத்தப்படும் (சீரா 27:4-7). பயனுள்ள பேச்சை ஞானிகள் நம் மனதிற் பதியுமாறு கற்பிக்கின்றனர் என்பதையும், பயனற்ற பேச்சைப் பலரறியப் பழித்துக் கூறியிருக்கின்றனர் என்பதையும் நாம் அறிவோம். பழைய ஏற்பாடு கற்பிக்கும் இக் கருத்தைத்தான் புதிய ஏற்பாடும் நமக்கு மீண்டும் எடுத்துக்கூறுகிறது.

**1. பயனற்ற பேச்சு:** ஓயாது ஒழியாது பேசுவதற்குத் துடிக்கும் வாயாடியானவன் (பழ 10:8.19; 13:3; 20:19; 29:20) தன்னைத் தானே வெறுப்புக்கும் பகைமைக்கும் ஆளாக்கிக் கொள்கிறான் (சீரா 20:5-8). சூதுவாதுள்ள சொல்லுள்ளவனை அறிவிலி என்று நாம் கண்டு கொள்கிறோம் (20:18-தொ). வெறுமையான, பயனற்ற சொற்களை ஆறதலாகக் கூறுபவன் உண்மை நண்பனல்லன் (யோபு 13:4). இவற்றிற்கு எல்லாம் மேலாக இன்னும் மோசமானது என்ன வென்றால், தீயோனது பேச்சாகும். அது பிறர் இரத்தத்தைச் சிந்துவதற்காகப் பயன்படுத்தப்பெறும் சூழ்ச்சிப் பொறியாகும் (பழ 12:6).

அறிவாளியானவன் அவதூறான பேச்சிலிருந்து தன்னைத் தானே பாதுகாத்துக்

கொள்ளவேண்டும் (*சீரா 5:14*). ஏனெனில், ஒரு வாளைவிட நாவானது பலரைக் குத்திக் கொல்லக் காரணமாயிருக்கிறது (*பழ 12:18; சீரா 28:17 தொ*). புறங்கூறுபவர்களது சொற்கள் பல வேளைகளில் இனிப்புப் பண்டங்களைப்போல ஏற்றுக் கொள்ளப்படுகின்றன (*பழ 26:22*). ஆனால், அவை கொடூரமாகக் காயப்படுத்துகின்றன. அதிகத் துன்ப வேதனைகள் அடைந்திருக்கும் மக்களைப் பற்றிப் பேசும்போதெல்லாம், அவர்களை மீண்டும் துன்பத்துக்குள்ளாக்கும் பழிச்சொற்களையும் அவதூறுகளையும் பலரறியப் பழித்துக் கூறிக்கொண்டேயிருக்கிறார் சங்கீத ஆசிரியர் (*சங் 5:10; 19:7*). புதிய ஏற்பாட்டில், புனித யாக்கோபின் திருமுகமும் தவறான பேச்சைப் பற்றிய இந்த அறிவுரைகளைத்தான் ஆழ்ந்து ஆய்கிறது (*யாக் 3:2-12*). நாவடக்கமாய் இருப்பது கிறிஸ்தவ ஞானத்தின் முதல் கோரிக்கைகளில் ஒன்றாகும் (*காண்க. 1:26; 3:2*).

அஞ்சித் தவிர்க்க வேண்டிய மற்ற ஆபத்துகள் என்ன வென்றால், தூய்மையற்ற இழிவான பேச்சும் (*சீரா 23:12-21*), பொய் ஆணையும் ஆகும். பொய் ஆணையை மோசேயின் சட்டம் தடுத்திருக்கிறது (*யாத் 20:6; எண் 30:3; உப 23:22...*). சிந்திக்காமல் மக்கள் ஆணைகளைப் பயன்படுத்தலாம் என்று அஞ்சுகிறார் சீராக்குநூல் ஆசிரியர். எனவே, ஆணைகளின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்த வேண்டும் என அறிவுறுத்துகின்றார் (*சீரா 23:7-11*). அதற்கு மாறாக, ஆணைகளைப் பயனற்றதாக்கக் கூடிய உண்மை கூறுதல் பற்றிய கொள்கை ஒன்றைப் போதித்தார் இயேசு (*மத் 5:33-37*). இதே எடுத்துக்காட்டை அப்போஸ்தலர்கள் போதனையிலும் காணலாம் (*யாக் 5:12; 2 கொரி 1:17 தொ*).

பேச்சினால் விளையும் பயனை மாயவித்தை எனக் கருதி அதில் நாம் அளவற்ற குருட்டு நம்பிக்கை வைக்கும் நிர்ப்பந்தமும் ஏற்படலாம். ஆனால், இஃது ஒரு பாவம். இப்பாவத்தையும் நாம் பேச்சைப் பற்றிய பாவங்களின் பட்டியலில் சேர்த்துக்கொள்ள வேண்டும். இப்பாவம் பழங்காலக் கீழ்த்திசை நாடுகளில் பொதுவாக வழக்கிலிருந்திருக்கிறது; வேதாகமச் சூழ்நிலையிலும் காணப்படுகிறது (கேடுகாலம் பற்றிய சொற்கள்: *எண் 22:6*; கற்பனைத் தோற்றமான சொற்கள்: *எசா 29:4*). மாயவித்தையைச் சார்ந்த மற்ற மாயவித்தைச் சடங்குகளைப்போல இதையும் சட்டம் தடுத்திருக்கிறது. இப்பாவத்தைக் கட்டிக் கொள்வோர்க்கு மரணதண்டனை விதித்திருக்கிறது (*லேவி 29:6.27*).

***2. பயனுள்ள பேச்சு:*** பாவிகளுக்கும் அறிவிலிகளுக்கும் மாறாக, அறிவுள்ளவன் தனது பேச்சை எவ்வாறு கட்டுப்படுத்த வேண்டும் என்பதை நன்கறிந்திருக்க வேண்டும். தகுதியான ஒருபேச்சு அல்லது தக்க சமயத்தில் தரப்படும் ஒருவிடை ஒரு பெரும் செல்வமாக எல்லாரையும் மகிழ்விக்கின்றது (*பழ 15:23; 25:11*). ஏனெனில், ''பேசுவதற்கு ஒரு காலம் உண்டு; பேசாதிருப்பதற்கு ஒரு காலம் உண்டு'' (திருவுரை *3:7*). அறிவுள்ளவன் தனது பேச்சைக் கட்டுப்படுத்த வேண்டும் (*சீரா 1:24*). தனது சொற்களைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். தனது வாய்க்கு ஒரு தாழ்ப்பாள் போட வேண்டும் (*சீரா 28:25; சங் 39:2; 141:3*). சிந்தித்து ஆற அமரப் பேசவேண்டும் (*யாக் 1:19*). மேலும், இலட்சியப் பெண்ணைப் போல் ஞானத்தையும், நன்மைத்தனத்தையும் மேற்கூறியவற்றோடு சேர்த்துக்கொள்ள வேண்டும் (*பழ 31:26*).

மனிதப்பேச்சானது ஆழ்கடலைப் போன்றதொன்றாகும்; பாய்ந்தோடும் நீரோட்டம் போன்றதாகும்; வாழ்வின் ஊற்றைப் போன்றதாகும் (*பழ 18:4*; காண்க. *உப 32:1தொ*). ஏனெனில், உள்ளத்தின் நிறைவையே வாய் பேசும். எனவே, நல்லதொரு மனிதன் தன் உள்ளமாகிய நல்ல கருவூலத்திலிருந்து நல்ல செல்வத்தை வெளிக் கொணர்கிறான் (*லூக் 6:45*). தூய ஆவியின் ஆற்றலினால் பேசுபவனால் பிறருக்கு முன்மாதிரியாக இருக்கமுடியும்; அறிவுரை கூற முடியும்; தன் சகோதரர்களுக்கு ஆறுதலளிக்க முடியும் (*1 கொரி 14:3*). ஏனெனில்,

அப்போது அவனது பேச்சானது இறை வார்த்தையை வெளிப்படுத்தி நிற்கிறது.

**மனிதனாதல்** *(INEARNATION)*

இஃது ஓர் இறையியல் சொல். காலங் களுக்கு முந்திய இறைமகன் நாசரேத்தூர் இயேசுவில் மனிதன் ஆனதைக் குறிக்கும். இதைக் குறிக்கும் நேரடிக் கலைச்சொல் புதிய ஏற்பாட்டில் காணப்படவில்லை. ஆனால், இக்கருத்தின் வளர்ச்சி பல கட்டங் களிலும் காணப்படுகிறது.

தொடக்ககாலக் கிறிஸ்தவ அறிவிப்பில், இயேசுவை அடையாளம் காட்டுவதில் அவர் மரித்தோரிலிருந்து உயிர்ப்பது மிக முக்கிய நிகழ்ச்சியாகும். இந்த அறிவிப்பின் படி, இறைவன், இயேசுவை ஆண்டவரும் மெசியாவாகவும் ஆக்கி *(அ.ப. 2:32-36)*, அவரை ஈன்றெடுத்துத் தம் புதல்வராக்கி னார் *(13:32-33; உரோ 1:3-4)*. ஆனால் இந்தப் போதகம், இயேசு தனது வாழ்வுக் காலத்தில் ஏற்கெனவே இறைமகனாக இருந்தார் என்ற உண்மையை விளக்க வில்லை.

நான்கு நற்செய்திகளில் மாற்கு இயேசு வின் பிறப்பு விவரிப்பை விட்டுவிடுகிறது. அதற்குப் பதிலாக, இறையரசை யோவான் போதிப்பது மற்றும் இயேசுவின் திருமுழுக் கோடு இயேசுவின் பொதுப்பணி ஏட்டைத் தொடங்குகிறது *(மாற் 1:1-11)*. திருமுழுக் கின்போதும் *(1:11)*, உருமாறியபோதும் *(9:7)* இயேசுவைத் தன் ''அன்பார்ந்த மகனாக'' இறைவன் அறிவிக்கிறார்.

மத்தேயுவும் லூக்காவும், இயேசுவின் குழந்தைப்பருவம் பற்றிய தங்கள் நிகழ்ச்சி யுரையில் அவரது கன்னிப் பிறப்பைக் கூறும்போது இயேசுவின் இறைத்தன்மைத் தோற்றத்தை இன்னும் பின் தள்ளுகின்றனர் *(மத் 1:18-23; லூக் 1:26-38)*. இயேசுவின் பொதுப்பணியைக் கூறுமுன் இயேசுவின் பிறப்புப் பற்றிய விவரிப்பைக் கொடுக்கின் றனர். இயேசு மரியாளின் மகனாகப் பிறந்தவர். ஆகவே, அவர் ஒரு மனிதன் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றனர் *(மத் 1:16; 2:1; லூக் 2:6-7)*. ஆயினும், அவருக்கு மனிதத் தந்தையில்லாததால் அவர் ஓர் அசாதாரண மனிதன் என்பதையும் உறுதி யாகச் சுட்டிக்காட்டுகின்றனர் *(மத் 1:18; லூக் 1:34)*. அவரது பிறப்பை இறை ஆவியின் பிரசன்னத்தோடு தொடர்புபடுத்து கின்றனர் *(மத் 1:20-23; லூக் 1:35)*. இந்த இரு நற்செய்தியாளர்களின்படி, இயேசு தன் பிறப்பில் இறைத்தன்மையும் மனிதத் தன்மையும் உடையவர். அதே நிலையைத் தனது வாழ்க்கை முழுவதும் கொண்டிருந் தார் (இயேசு தந்தையாகிய இறைவனுடன் கொண்டிருந்த தனித்தன்மையுடைய உற வுக்குக் காண்க. *மத் 11:25-27; லூக் 10:21-22)*.

மத்தேயு, மாற்கு, லூக்கா ஆகிய மூன்று நற்செய்தியாளர்களும் இயேசுவை இறைவனின் இறுதியான நீதிபதியாக விண் ணிலிருந்து மீண்டும் வரவிருக்கும் மானிட மகனாகக் குறிப்பிடுகின்றனர் *(மத் 25:31-46; மாற் 13:24-27; லூக் 21:25-28)*. இம்மூவரும் இயேசுவின் காலத்திற்கு முந்திய வாழ்வு பற்றிய பிரச்சனையைப்பற்றி ஒன்றும் கூற வில்லை.

பவுல் மனிதன் ஆதல் பற்றி நேரடியாக ஒன்றும் கூறவில்லை. ஆனால், அவரது திருமுகங்களில் பல பகுதிகள் இறை மகனின் காலத்திற்கு முந்திய வாழ்வை உள்ளடக்குவதாகத் தோன்றுகின்றன. இதன் படி, ''கடவுள் தன் மகனை... அனுப்பினார்'' என்றும் *(கலா 4:4; உரோ 8:3)*, ''இயேசு கிறிஸ்துவிடமிருந்தே எல்லாம் வந்தன;..... அவராலேயே எல்லாம் உண்டாயின'' என் றும் *(1 கொரி 8:6)* பவுல் கூறுகிறார். மேலும்,கிறிஸ்துவே ''கடவுளின் ஞானம்'' ஆவார் என்று கூறும்போது *(1:24)*, காலத் திற்கு முந்திய ஞானம் என்ற பழைய ஏற்பாட்டுக் கருத்தை நினைவுபடுத்துகிறார். *பிலி 2:6-11; கொலோ 1:15-20* ஆகிய பாடல்கள் மிக முக்கியமானவையும் தர்க் கத்திற்கு உரியவையும் ஆகும். *பிலி 2:6-11*, கிறிஸ்துவின் காலத்திற்கு முந்திய இறை வாழ்வைக் குறிப்பதாக உள்ளது. *கொலோ 1:15-20*, கிறிஸ்துவைக் ''கட்புலனாகாக் கடவுளின் சாயல், படைப்புகளுக்கெல்லாம் தலைப்பேறானவர்... முழு நிறைவு அவரில்

குடிகொள்ள வேண்டும் என்று இறைவன் திருவுளம் கொண்டார்'' என்று பாடுகிறது *(1:15.19; காண்க. 2:9)*.

கிறிஸ்துவின் காலத்திற்கு முந்திய வாழ்வு பற்றிய கருத்து எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் மேலும் தெளிவாகிறது. இறைவன் தம் மகன் வழியாகவே உலகங்களையெல்லாம் படைத்தார் என்று ஆசிரியர் கூறுகிறார் (எபி *1:2*). மேலும், அவரை வான தூதர்களுக்கும் மேலானவர் என்றும் *(1:5-2:8)*, பாவமற்றவர் என்றும் *(4:5; 7:26)* விவரிக்கிறார்.

மனிதன் ஆதல் என்ற கோட்பாட்டை நற்செய்தியாளர் யோவான்தான் சிறந்த முறையில் எடுத்துக்கூறுகிறார். இயேசுவின் இறைத்தன்மைக்கு முன் அவரது மனிதத் தன்மையை எடுத்துக்கூறும் மத்தேயு மற்றும் லூக்காவுக்கு நேர்மாறுபட்ட நிலையில், கிறிஸ்துவின் காலத்திற்கு முந்திய விண்ணக வாழ்வோடு யோவான் தனது நற்செய்தியைத் தொடங்குகிறார் (வாக்கு கடவுளோடு இருந்தார். யோவா *1:1*). பின்பு, ''வாக்கு மனிதர் ஆனார்'' என்று உறுதியாகக் கூறுகிறார் *(1:14)*. மூலத்தில் ''மனிதன் ஆதல்'' என்ற கலைச்சொல்லைப் பயன்படுத்தாவிட்டாலும், யோவான் இயேசுவின் மனிதத்தன்மை பற்றிய உண்மையை வெளிப்படையாகக் கூறுகிறார். யோவானின் அணுகுமுறை மீபௌதீகத் தன்மையுடையதாயினும் அவர் மத்தேயு மற்றும் லூக்கா கூறுபவற்றை மறுத்துக்கூறவில்லை.

கிரேக்க மறைபொருள் சமயங்கள் மற்றும் ஞானபோதகம் ஆகியவை கொண்டிருந்த மனிதஅவதாரம் பற்றிய கருத்துக்கள் வாக்கு மனித உடல் எடுத்தல் என்ற கருத்தை எடுத்துக்கூற யோவானைத் தூண்டின என்பர் அறிஞர் சிலர். இதைவிட, யோவான் இயேசுவின் இறப்புப் பற்றிய பொருளின் ஆழத்தைக் காண முயன்ற போது, இயேசுவின் பிறப்பின் உட்பொருளைப் புரிந்துகொண்டார் என்று ஏற்றுக்கொள்வது ஏற்புடைய நிலையாகும். காலத்திற்கு முந்திய இறைவாக்கு ''மனிதன் ஆகி நம்மிடையே குடிகொண்டதை'' *(1:14)* அறிவிக்கும் பாடலோடு யோவானின் நற்செய்தி தொடங்குகிறது. இக்கருத்திற்குப் பின்னணி பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியச் சிந்தனையில் காணப்படுகிறது (பழ *8*; சீரா *24*; ஞான *8*). மேலும் இந்த நற்செய்தி இயேசுவின் முந்திய வாழ்வு (யோவா *6:62; 8:38*), அவர் விண்ணிலிருந்து இறங்கியது *(3:13; 6:33)*, அவர் இறைனிடமிருந்து வருவது *(16:27; 17:8)*, அவர் உலகிற்கு வருவது *(10:36; 12:46)* ஆகியவை பற்றிப் பேசுகிறது. மேலும், இந்த நற்செய்தியில் மட்டும்தான் இயேசு ''ஆபிரகாம் பிறப்பதற்கு முன்பே நான் இருக்கிறேன்'' *(8:58)* என்று உறுதியாகக் கூறுகிறார். யோவானின் காலத்தில் இயேசுவின் காலத்திற்கு முந்திய வாழ்வு பற்றிய கருத்துகள் எவ்வளவு வலுப்பெற்றிருந்தன என்றால், இயேசுவின் மனிதத்தன்மையை மறுக்கும் போக்கை எதிர்த்து யோவானின் திருமுகங்கள் போராட வேண்டியிருந்தன *(1* யோவா *4:2-3)*. மனிதன் ஆதல் என்ற மறையுண்மையை ஆழ்ந்து ஆய்வு செய்யவில்லையானாலும், கிறிஸ்துவின் மனிதத்தன்மைக்கும் (காண்க. யோவா19:34) இறைத்தன்மைக்கும் யோவான் ஆதரவு அளிக்கிறார். கிறிஸ்து மனிதன் ஆதல் அவரது இறைத்தன்மையை அகற்றிவிடவில்லை (தந்தைக்கும் மகனுக்கும் உள்ள ஒருமைப்பாடு பற்றிக் காண்க. *14:10*; யோவான் நற்செய்தியின் குறிக்கோளுக்குக் காண்க. *20:31*). மூன்றாம் நான்காம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த திருச்சபைத் தந்தையர்கள் காலத்தில்தான் மனிதன் ஆதல் என்ற கோட்பாடு முழுவளர்ச்சி அடைந்தது.

மனிதன் ஆதல் கோட்பாட்டுக்கு ஒத்த ஒப்புமைகளைப் பிற மதக் கலாச்சாரங்களிலும் காணலாம். இந்துக்கள் விஷ்ணுவின் மனித அவதாரத்தை விசுவசிப்பர். புத்தர் விஷ்ணுவின் மனித வடிவம் என்று புத்த மதத்தினர் சிலர் நம்புவர். பார்வோன் ரே என்ற கடவுளின் மனித அவதாரம் என்று எகிப்தியர் நம்புவர். பழங்கால மக்களில்

பலர் தங்கள் அரசர்கள் இறைத்தன்மை யுடையவர்கள் என்று நம்பினர். ஆனால், அப்போஸ்தலரான யோவான் இறைவனின் நிலையான ஒரே மனிதன் ஆதல் இயேசு மட்டுமே என்று பறைசாற்றுகிறார் *(1:14)*.

மனிதன் ஆதல் பற்றிய யோவானின் போதனையை அவர் காலத்து யூதர்கள் நிராகரித்திருக்கலாம் (காண்க. *6:41-42; 10;31*). இப்போதுகூட கிறிஸ்தவர்கள் சிலர் இறைவன் மனிதன் உருவில் தோன்றுதலின் சூழ்நிலை மற்றும் விளக்கம் பற்றித் தர்க்கிக் கலாம். ஆனால், அத்தனேசியு (கி.பி. 330) உணர்ந்து கூறியதுபோல், பரிகாரம் பற்றிச் சரியாகப் புரிந்துகொள்வதற்கு, மனிதன் ஆதல் பற்றிச் சரியாகப் புரிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

**மனிதன்** (MAN)

I. விவிலிய மனித இன இயல் பற்றிய கருத்துக்களை ஆன்மா, இதயம், ஊன், உடல், ஆவி என்ற தலைப்புகளின் கீழ்க் காணலாம். இத்தொகுப்பான நோக்கு முழு மனிதனை அவனது வெவ்வேறு கோணங் களில் காண்கிறது. ஆனால், இது மனிதனை உடல், ஆன்மா என்ற இருபகுதிகள் இணைந்த ஒன்றாகக் கருதுகிறது. இன்றைய பொதுவான மனப்போக்கிலிருந்து இது வேறுபட்டது. ஆன்மா உயிர் ஆவியால் உந்தப்படுகிற மனிதனை உணர்த்துகிறது. அவன் அழிந்து போகக்கூடிய படைப்பு என்று சுட்டுகிறது. ஆவி இறைவனை நோக்கிய அவனது சிறந்த தன்மையைக் குறிக்கிறது. உடல், அவனது வெளி அடை யாளமாய் விளங்குகிறது. இவ்வேறு பாடான நோக்கங்களுக்கிடையே ஆழமான வேறு ஒன்றையும் கூற வேண்டும். கிரேக்க தத்துவம் மனிதனை ஆவி, பருப்பொருள் தன்மையுடைய இரு உலகை இணைக்கும் சிறு அண்டமாகக் கருதுகிறது.

மறுபுறம் விவிலிய இறையியல் மனி தனை இறைவனோடு தொடர்புபடுத்தி, இறைவனின் சாயலாகக் காண்கிறது. மனி தனைக் குறுகிய இயற்கைவுலகிலே அடைத்து விடாது, விவிலியம் வரலாற்றின் முதன்மைக் கதாநாயகனாகிய இறைவனை, மனிதனை உண்டாக்கிய இறைவனை, மனி தனை மீட்க வந்த மனுவுரு எடுத்த இறைவனைக் கண்முன் நிறுத்துவதன் மூலம், மனித வரலாற்றின் ஆழ்ந்த உண் மையை எடுத்தியம்புகிறது. ஏற்கெனவே இறையியலோடு இணைக்கப்பெற்ற இந்த மனித இன இயல் கிறிஸ்து இயலிலிருந்து பிரிக்க முடியாததாகிறது. எனவே, மனித வரலாற்றில் வாழ்கின்ற பல்வேறு வாழ்க்கை முறைகளையும் இரு பகுதிகளில் தொகுத்துப் பாவி, புது மனிதன் என்று பிரித்துவிடலாம். இவை புனித வரலாற் றின் சிறப்பான இரு காலங்களில் வெளிப் படுத்தப்படும் ஆதாம் மற்றும் யாவேயின் ஊழியன் என்ற இரு உருவங்களில் உண் மையாகின்றன. இவை இயேசு கிறிஸ்து வால் நிறைவு பெறுகின்றன. எனவே, வாழும் மனிதனின் உண்மையான மாதிரி ஆதாம் அன்று கிறிஸ்து இயேசுவே; மண் ணிலிருந்து வந்த மனிதன் அன்று, விண்ணி லிருந்து வந்தவரே. இயேசு கிறிஸ்துவே ஆதாமின் முன் அடையாளமாக இருந்தார். இந்த விண்ணக ஆதாமே, மண்ணக ஆதா மில் உருவகப்படுத்தப்பட்டவர்.

**II. இறைவனின் சாயல்**

***1. மண்ணக ஆதாம்:*** ஆதியாகமத்தின் இரண்டாம் அதிகாரம் ஒரு தனிப்பட்ட மனிதனின் வரலாற்றைப் பற்றி மட்டு மன்று, மாறாக அது மனித இனத்தின் வரலாறு முழுவதையும் கருத்தில் கொள் கிறது. ஏனெனில், ஆதாம் என்கிற சொல் லின் பொருள் அதுவே. ஆதாம் என்றால் 'மனிதன்'. அக்கால செமித்திய மக்களின் மனப்பான்மையின்படி ஓர் இனத்தின் முன் னோர், தன்னுள் தன் இனத்தையே அடக்கி உள்ளனர், அவர் வழிவருவோர் அனை வரும் அவரில் வெளிப்படுகின்றனர், அவ ரில் உள்ளடக்கப்படுகின்றனர் என்று கருதப் பட்டு வந்தது. இதைத்தான் 'குழுவைத் தன்னுள் அடக்கிய ஆட்தன்மை' அல்லது குழு ஆட்தன்மை என்று அழைக்கிறோம். ஆதியாகமத்தின் இரண்டாம் அதிகாரம் மனிதனை இறைவன், உலகு, தன் சகோத

ரன் ஆகிய மூன்றுடன் ஆதாமில் முத் தொடர்பு கொண்டவனாகச் சித்தரிக் கின்றது.

**அ) படைத்தவருடன் மனிதன்:** ஆதாம், வீழ்ச்சியடைந்த கடவுளோ, விண்ணி லிருந்து வந்து உடல் புகுந்துள்ள ஆவியின் துகளோ அல்லன். அவன் இறைவனோடு எப்போதும் ஆழ்ந்த முறையில் நிலையான தொடர்பு கொண்ட சுதந்தரப்படைப்பு. இதை அவனது ஆதித்தொடக்கத்திலிருந்து காணலாம். பூமியிலிருந்து உதித்தாலும் அவன் அதனால் வரையறுக்கப்பட்டவன் அல்லன். அவன் கொண்டுள்ள உயிர், இறைவன் அவனுள் உயிர் மூச்சை ஊதியத னால் பெற்றுள்ளான். இதனால் அவன் ஓர் உயிருள்ள ஆன்மாவாக, அதாவது ஆட் தன்மையுடைய உயிராக அதே நேரத்தில் அவருக்குட்பட்டவனாக ஆகின்றான். எனவே, மதம் என்பது முன்னமே உள்ள மனித இயற்கையுடன் சேர்த்துக்கொள்ள வேண்டிய ஒரு நிரப்புக் கூறாக அமைவது அன்று, மாறாக அவனது மனித இயற்கை இயல்பிலிருந்து பிறக்கும் ஒன்று. எனவே, இறைவனிலிருந்து பிரித்து மனிதரின் இயல்பைப் பற்றிப் பேசுவது மடமை யாகும்.

மனிதனுக்கு உயிரூட்டும் மூச்சோடு இறைவன் தன் வார்த்தையை இணைக் கிறார். இந்த முதல் வார்த்தை ''தோட்டத் திலிருக்கும் எல்லா மரத்திலிருந்தும் உன் விருப்பம்போல் நீ உண்ணலாம்; ஆனால் நன்மை, தீமை அறிவதற்கு ஏதுவான மரத்திலிருந்து மட்டும் உண்ணாதே; ஏனெ னில், அதிலிருந்து நீ உண்ணும் நாளில் சாகவே சாவாய்'' *(ஆதி 2:16.17)* என்ற கட்டளை வார்த்தையாகப் பிறந்தது. மனி தன் தன் வாழ்வு முழுவதும் தன்னைப் படைத்தவராகிய இறைவனுக்கு அடி பணிந்து அவர் சித்தப்படி நடக்க வேண்டிய வன். இக்கட்டளை மனிதனுக்கு ஒரு தடை உத்தரவாக, கட்டுப்படுத்தலாகத் தோன்று கிறது. உண்மையில் இஃது அவன் முழு மைபெற இன்றியமையாத ஒன்றாகும். இவ்வுண்மைதான் அவன் கடவுள் அல்லன், அவனுக்கு வாழ்வு தரும் இறைவனைச் சார்ந்து இருக்க வேண்டும், அவர் அளிக் கும் உயிர்மூச்சால்தான் உயிர் கொண்டுள் ளான் என்று அவனுக்குக் காண்பிக்கிறது.

எனவே, மனிதன் தன்னைப் படைத்தவரு டன் உயிருள்ள, அடிப்படையான முறை யில் இறைவனைத் தழுவி வாழ்கிறான் என்பதை அவனது சுதந்தரம் இறைவ னுக்குக் கீழ்ப்படிதல் மூலம் எண்பிக்க வேண்டும். மனிதன் இதயத்தில் எழுதப் பட்ட இச்சட்டமே, மனச்சாட்சி. இம்மனச் சாட்சி மூலம்தான் இறைவன் மனிதனுடன் பேசுகிறார்.

**ஆ) மனிதன் அகிலத்திற்கும் தலைவன்:** இறைவன் மனிதனைத் தன் சீரிய, உயர்ந்த, அழகான படைப்பின் தலைவனாக நிய மித்து, அவற்றைக் காத்து, வளர்த்து வளப் படுத்தும்படி அவனைத் தன் பணியாளனாக வைத்துள்ளார் *(ஆதி 2:9)*. ஆதாம், விலங்கு களுக்குப் பெயர் கொடுப்பதன் மூலம் அவற்றைக் கட்டுப்படுத்தி நடத்த வேண்டு மென இறைவன் விரும்புகிறார் *(2:19-20; காண்க. 1:28 தொ)*. இதன் மூலம் இயற் கையை இறைமயமாக்க அன்று அதை ஆண்டு நடத்திக் கட்டுப்படுத்தவே வேண்டு மென்பதைக் காட்டுகிறார். நிலத்தில் உழைக்க வேண்டுமென்ற கடமை, நாம் இறைவனுக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்ற நியதி-நின்று பிறக்காவிடினும் அத னோடு நிலையான தொடர்புடையதாகும். இதையே படைப்புப் பற்றிய முதல் விவ ரிப்பு, அதற்கே உரிய பாணியில் குறிக் கிறது. படைத்தவராகிய இறைவன் செயல் முறையைப் பிரதிபலிக்கும் வண்ணம் ஏழாம் நாள் ஓய்வு நாள். அந்நாளில் மனிதன் தன் வேலைகளுக்கு முடிவு கட்டவேண்டும்.

**இ) சமூகத்தில் மனிதன்:** மனிதன் இயற் கையாகவே ஒரு சமூகப் பிறவி. இது வெளியிலிருந்து திணிக்கப்பட்ட ஓர் கட்ட ளையால் விளைவதன்று. பால் உணர்வு வேறுபாடுகள் சமூகத்தில் வாழ்வின் மாதிரி யும் ஊற்றுமாகும். இச்சமூகம் அன்பில்

தோன்றுவது, கட்டாயத்தில் அன்று. இறைவன் இப்பாலியல் தொடர்பு ஒருவர்க்கொருவர் உதவியாக, உறுதுணையாக அமைய வேண்டுமென விரும்புகிறார். ஆண், இறைவன் தனக்குத் தந்த பெண்ணில் தன் முழு இயல்பை உணர்ந்து தன்னை மறந்த, தன்னையே தியாகமாகத் தரும் தியாக அன்பிற்கும் தயாராகயிருக்கிறான். நாம் பிறருடன் கொள்ளும் ஒவ்வொரு தொடர்பிலும் இந்த முதல் மனப்பான்மை வெளிப்படுகிறது. இஃது எவ்வளவு உண்மை என்றால் இறைவனும்கூட தாம் மக்களுடன் கொண்டுள்ள உடன்பாட்டினைத் திருமண உருவகத்தின் மூலம்தான் வெளிப்படுத்துகிறார்.

ஆடையில்லா நிலையிலும் ஆணும், பெண்ணும் ஒருவர் மற்றவர் முன் ''ஆடையின்றி இருந்தனர். ஆனால், அவர்கள் வெட்கப்படவில்லை''. இதனுடைய முக்கியத்துவம் என்னவென்றால் சமூகத் தொடர்பு இன்னும் நிழலற்று இருக்கிறது. ஏனென்றால், இறைவனுடன் நாம் கொள்ளும் தொடர்பு மகிமையுடன் மிளிரும் முழுமையாகும். இவ்வாறு மனிதன் கடவுளுக்குப் பயப்படுவதற்குப் பதில் அவருடைய தோட்டத்தில் நண்பனைப்போல் நடக்கிறான்; அமைதியில் உள்ளான். அவன் தன் துணையோடு, விலங்குளோடு, படைப்பு முழுவதுடன் மறைப்பற்ற உரையாடல் கொண்டுள்ளான்.

***ஈ) இறைவனின் சாயலில்:*** படைப்பு பற்றிய குருக்கள் பாரம்பரிய விவரிப்பு (ஆதி 1), யாவே பாரம்பரிய விவரிப்பைத் தொடர்ந்து மனிதன் படைப்பின் மணிமகுடம் என்பதே கடவுளின் குறிக்கோள் என்று காட்டுகிறது: ''மனிதனை நம் உருவிலும், நம் சாயலிலும் உண்டாக்குவோம். நீங்கள் பலுகிப் பெருகி மண்ணுலகை நிரப்புங்கள். அதை உங்கள் ஆற்றலுக்கு உட்படுத்துங்கள்... நிலத்தில் உயிர் வாழ்வன அனைத்தையும் ஆளுங்கள்'' *(ஆதி 1:26-28)* என்று விவரிக்கிறது. கடவுளின் சாயலில் படைக்கப்பட்டதால் மனிதன் இறைவனுடன் உறவாட முடிகிறது. மனிதன் கடவுள் அல்லன், ஆனால், எப்படி ஓர் மகன் தன் தந்தையைச் சார்ந்து வாழ்கின்றானோ, அது போல மனிதன் கடவுளைச் சார்ந்து வாழ்கின்றான் *(காண்க. 5:3)*. ஆனால் இந்த வேறுபாடு உண்டு, அதாவது யாருடைய சாயலாகத் தோன்றினானோ அவரில்லாது மனிதன் தானாய் இருக்கமுடியாது. படைப்பு விவரிப்பில் மூச்சு என்ற சொல்லின் பொருளும் இதுவே. மனிதன் இச்சாயலை இருமுறைகளில் செயல்படுத்துகிறான். அவன் தெய்வீகத் தந்தையின் சாயல் என்ற அளவில் பலுகிப் பெருகி மண்ணுலகை நிரப்ப வேண்டும்; அவன் தெய்வீக ஆட்சி உரிமையின் சாயல் என்ற அளவில் அவன் மண்ணுலகைக் கட்டுப்படுத்தி ஆண்டு நடத்த வேண்டும். மனிதனே மண்ணுலகில் தலைவன். அவனே பூமியில் இறைவனின் பிரசன்னம்.

**2. விண்ணக ஆதாம்:** மேலே கூறியதே இறைவனின் திட்டம். ஆயினும், இத்திட்டம் இறைமகன் இயேசு கிறிஸ்துவில்தான் முழுமையாக நிறைவேறுகிறது. கிறிஸ்து ''இறவா ஒளியின் சுடர். கடவுளுடைய செயல்திறனின் கறைபடியாக் கண்ணாடி; அவருடைய நன்மையின் சாயல்'' (ஞான *6:25)* என்ற ஞானத்தின் பண்புகளைத் தனதாக்கிக் கொள்கிறார். ஆதாம் இறைவனின் . சாயலில் படைக்கப்பட்டான். ஆனால், கிறிஸ்துதான் கடவுளின் சாயலாகத் திகழ்கின்றார் *(2* கொரி *4:2*; காண்க. எபி *1:3)*. இதையே பவுலும், ''அவர் கட்புலனாகாக் கடவுளின் சாயல், படைப்புக்கெல்லாம் தலைப்பேறானவர்; ஏனெனில், அவரில் அனைத்தும் உண்டாயிற்று. விண்ணிலுள்ளவை, மண்ணிலுள்ளவை, கட்புலனாவன, கட்புலனாகாதன, அரியணை ஆள்வோர், ஆட்சி புரிவோர், தலைமை ஏற்போர், அதிகாரம் தாங்குவோர் ஆகிய வானதூதர் அனைவரும் உண்டானது அவரிலேதான். அவராலேயே அவருக்காகவே அனைத்தும் ஆயின. அனைத்தும் அவரில் இணைந்து நிலைக்கும், திருச்சபையாகிய உடலுக்குத் தலையும் அவரே, ஆதியானவரும் அவரே''

*(கொலோ 1:15-18)* என்று விளக்குகிறார். ஆதாமின் மூவகைத் தொடர்பு மறுபடியும் தெளிவாக, ஆனால் பன்மடங்கு உயர்ந்த வகையில் தோன்றுகிறது.

***அ) தந்தையின் முன்னிலையில் மகன்:*** கடவுளின் திருமகன் இயேசுதான், அவரின் உண்மையான சாயல் என்று பவுல் கூறினார் *(கொலோ 1:13)*. அவர் காணமுடியாக் கடவுளின் காணும் சாயல் மட்டுமன்று, அவர்தான் தந்தையோடு என்றும் இணைந் திருக்கும் திருமகன். அவரே தன்னைப் பற்றிக் கூறுகிறார்: ''மகன் தாமாகவே ஒன்றும் செய்ய இயலாது, தந்தையிடம் தான் காணும் செயல்களையே செய்ய இயலும். தந்தை செய்பவற்றை மகனும் அவ்வாறே செய்கிறார். என் விருப்பத்தை நாடாமல் என்னை அனுப்பியவரின் விருப் பத்தையே நாடுகிறேன்'' *(யோவா 5:19.30)*. ஆதாம் எப்படி இருந்திருக்க வேண்டுமோ, அதாவது மகனுக்குரிய வாஞ்சையோடு இருக்க வேண்டிய தொடர்பை, இயேசு நிறைவேற்றுகிறார். இயேசுவைப் பார்ப் பவர்கள் தந்தையைப் பார்க்கிறார்கள் *(யோவா 14:9)*.

***ஆ) கிறிஸ்துவும் அகிலமும்:*** மனிதன் தன் கையால் செய்யக்கூடிய வேலைகளை நிறைவேற்றுகிறான். ஆயினும், இயேசு தந்தையின் வேலைகளை நிறைவேற்று கிறார்: ''என் தந்தை இன்றும் செயலாற்று கிறார், நானும் செயலாற்றுகிறேன்'' *(யோவா 5:17)*. படைப்பே உண்மையில் இவ்வலுவல், ''அனைத்தும் அவரால் உண் டாக்கப்பட்டது'', அவரது பார்வையின்கீழ் படைப்பு முழுவதும் வாழ்வு பெறுகிறது, விண்ணரசின் உவமையாகத் திகழ்கிறது. படைப்பு விவரிப்பில், எல்லாம் மனிதனுக் காகப் படைக்கப்பட்டது என்பதுபோல, இங்கு ''அனைத்தும் அவருக்காகப் படைக் கப்பட்டது.'' உண்மையில் அவரது அரசு ரிமை விலங்குகள் மட்டுமல்ல, படைப்பு கள் அனைத்தையும் உள்ளடக்குகிறது.

***இ) கிறிஸ்துவும் மனித இனமும்:*** இறுதி யாக அவரே ''முதல்வர், உடலின் தலை!'' அதாவது முதன்முதலில் அவர்தான் அதற்கு உயிர் அளிப்பவர் - இரண்டாம் ஆதாம் *(1 கொரி 15:45)*. இந்த விண்ணக ஆதாமின் சாயலைத்தான் நாம் அணியவேண்டும் *(15:49)*. அவரே நிறைவான மனித சமூக அமைப்பான திருச்சபை என்ற குடும்பத் தின் தலைவர். இன்னும் சொல்லப் போனால் அவரே மனித சமுதாயத்தை இணைக்கும் இணைப்புத் தத்துவம்.

நம்மையெல்லாம் இறைமக்களாக்க மனி தனாய்ப் பிறந்த இறைமகன் இயேசு கிறிஸ்து வில்தான், ஆதாமின் வாழ்வுக்கு, மனித னாய் இருப்பதற்குப் பொருள் உண்டு. *(ஆதி 4:4)*.

III. ***உருக்குலைந்த சாயல் வழியாக:*** படைப்பின் மூலம் நிர்ணயிக்கப்பட்ட, நாம் அடிக்கடி அடைக்கலம் புக வேண்டிய இலட்சியம், அடைய முடியா ஒன்றாய் விட்டது; ஏன், நேரடியாக அதை அடைய முயற்சிக்கக்கூட முடியாததாகி விட்டது. இனிமேல், மனிதன், உருக்குலைந்த பாவச் சாயலிலிருந்து, கடவுளின் ஊழியனின் உண்மையான இலட்சியச் சாயலுக்கு மாற வேண்டும். இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் மனித வாழ்வு தொடங்குகிறது.

***1. பாவியான ஆதாம்:*** ஆதியாகமத்தின் ஆசிரியர், ஓர் தோல்வியைப் பற்றி சித்திரம் தீட்ட விழையவில்லை; மாறாக, போருக்குப் பின் வெற்றியையே அறிவிக்க ஆசிக்கிறார் *(ஆதி 3)*. மூன்று முறைகளில் மனிதனை மாற்றப்போவதாகக் கூறுமுன், இறைவன் மனித இதயத்தில் நம்பிக்கையை விதைக்கி றார்; பெண்ணின் சந்ததி வருவோர், எதிரி யின் குதிங்காலால் தீண்டப்பட்டாலும், அவர்கள் பாம்பின் வர்க்கத்தை நசுக்குவர் *(ஆதி 3:15)*. இந்த மூல நற்செய்தி பின் வரும் மங்கலான செய்திகளை மெருகு ஊட்டி, இறைவன் இறுதியில் வெற்றி வாகை சூடுவதை மனிதனுக்குப் பறை சாற்றுகிறது.

***அ) மனித குடும்பத்தில் பிளவுகள்:*** பாவி யான பின் ஆதாம் உணர்ந்த முதற்காரியம் தான் ஆடையின்றி இருப்பதுதான் (ஆதி

3:7.11). அதுவரை அடையாளமாய் மட்டும் இருந்தது, இப்போது பிரிவினையாக மாறு கிறது. இறைவன் ஆதாமை வினவும்போது அவன் தன் மனைவி மீது குற்றம் சாட்டு கிறான். இதன் மூலம் தன் மனைவியிடம் இருந்து தன்னைப் பிரித்துக் கொள்கிறான் (ஆதி 3:12). அப்போது இறைவன் அவர் களுக்குக் கூறுகிறார். அவர்களின் ஒற்றுமை அழிந்துவிட்டது; அவர்களது தொடர்பு இனிமேல் இயல்புணர்ச்சியாலும் பொறா மையாலும், ஆதிக்கத்தாலும் ஆளப்படும். அவர்கள் அன்பின் பலன், துன்பமிக்க குழந்தைப் பிறப்பு என்னும் விலைக்குத்தான் கொடுக்கப்படும் (ஆதி3:16). அதன் பின் ஆதியாகமத்தில் தொடரும் அதிகாரங்கள் முதல் ஜோடியின் பிரிவால் எல்லாச் சமூகத் தொடர்புகளும் பெரும் அளவு பாதிக்கப் படுகின்றன என்று காட்டுகின்றன. காயீன், ஆபேல் சகோதரராயினும், விரோதிகள் (ஆதி 4). பாபேலிலுள்ளோர் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள முடியவில்லை (ஆதி11:1-9). சமய வரலாறு பிளவுகளின் இழை மூலமாக மக்களிடையே, நாடு களிடையே, இந்த மக்களுக்குள்ளேயே கூட, ஏழை பணக்காரர்களிடையே எழும் சண்டைகளின் தொகுப்பாக அமைந்துள் ளது. ஆயின், வெற்றி பற்றிய வாக்குறுதி நிலைத்து நிற்கிறது. இஃது இரவுக்குப் பின் அதிகாலை போன்றது. இறைவாக்குரைப் போர் அமைதியின் இளவரசன் அனைவரை யும் ஒன்றுபடுத்த வருவார் என்று தொடர்ந்து அறிவிப்பர்.

**ஆ) மனிதனுக்கெதிரான அகிலம்:** ஆதா மின் பாவத்தால் பூமி, சபிக்கப்பட்டதாகி விட்டது. இனிமேல் மனிதன் தன் உணவைப் பூமி தன்னியல்பாக அளிக்கும் பலனாக இல்லாமல், கடின உழைப்பின் மூலம், நெற்றி வியர்வை நிலத்தில்விழ, பாடுபட் டுத்தான் பெறமுடியும் (ஆதி 3:17). படைப்பு தன் இயல்புக்கெதிராய்ப் பயனற்ற நிலைக்கு உட்பட்டுள்ளது (உரோ 8:20). மனிதனுக்கு அடிபணிவதை விட்டு அவனுக்கெதிராய் எழுகிறது. இப்படிப்பட்ட நிலையில் பூமி நடுக்கமுற்று, வாழத்தகா முட்புதராய்ச் சுடு காடாகி இருக்கலாம். ஆனால் இம்முட்புதர் களோ, இடர்ப்பாடுகளோ இப்போது உல கம் பாழ்பட்டுப் போய் விட்டது என்பதை விட மனிதன் பாவியாயிருக்கிறான் என் பதையே காட்டுகின்றன. இவ்வாறு இருந் தும் இறைவாக்குரைப்போர் இன்பவன நிலையைப் பறைசாற்றுகின்றனர் (எசா 11:6-9); அதாவது இன்றும் மனிதனிடத்தில் இறைவனிடமிருந்து பிறந்த இயற்கை அழி யாதிருக்கிறது என்று காட்டுகிறது. நம் பிக்கை மடிந்து விடவில்லை (உரோ 8:20).

**இ) மனிதன் சாவுக்குக் கையளிக்கப்பட்ட வன்:-** ''நீ மண்ணாயிருக்கிறாய்; மண் ணுக்கே திரும்புவாய்'' (ஆதி 3:19). இறைவ னிடமிருந்து பெற்ற வாழ்வைக் கொடையாகக் கருதுவதற்குப் பதில் ஆதாம் தன் வாழ்வைத் தன் விருப்பம்போல் நடத்தி விலக்கப்பட்ட கனியைத் தின்றதின் மூலம், தன்னை ஒரு தேவனாக்கிக் கொள்ள விழைந்தான். இக்கீழ்ப் படியாமையால் வாழ்வின் ஊற்றிலிருந்து தன்னைத் துண்டித்துக் கொண்டான் மனிதன். இம்மனித வாழ்விலிருந்து இறைவாழ்வுக்கு ஒரு சாதாரண நிலைமாற்றமாகயிருக்க வேண்டிய சாவு, இனி ஓர் இயற்கையான நிகழ்ச்சியாக இருக்காது. இப்போது சாகும் தன்மை தண்டனைக்கும், நித்திய மரணத் திற்கும் அடையாளமாய் உள்ளது. இது தான் இன்பவனத்திலிருந்து விரட்டப்பட்ட தன் அடையாளமுங்கூட. இறைவனின் பிரசன்னமான நம் இதய உள் நியதியை, சட்டத்தை மீறி, மனிதன் தவறக்கூடிய தன்னாட்சிக்குக் கையளிக்கப்படுகிறான். உலக வரலாறு திரும்பத் திரும்ப, தன்னைத் தெய்வத்திற்கிணையாக நினைத்துச் சாவுக் குரியவர்களானவர்கள் மீண்டும் மீண்டும் தோல்வியடைந்ததை எடுத்துக் கூறுகிறது. இருப்பினும் இதை மனிதன் முழுவாழ்வு அடையக் காணும் கனவின் முடிவு என்று கூறிவிட முடியாது. மறுபடியும் இறைவன் வாழ்வின் மரத்திற்கு வழியைத் திறந்து விடுகிறார் (பழ 3:18; 11:30). அவரது கட்டளைகள், அவரது ஞானம் ஆகியவை களை வாழ்வில் கடைப்பிடிப்போர்க்கு, அவை பலனுடைமையின் ஊற்றாக இருக்

கின்றன. ஆனால் இச்சட்டம் மனித உள்ளத்தை விட்டு அகன்று விட்டது. இப்போது, எப்போதும் தனக்குப் புறம்பாய் இருப்பதாக அவனுக்குத் தோன்றுகிறது.

***ஈ) மனச்சாட்சியின் பிளவு:*** இப்போது இறைச்சட்டமானது மீட்பைக் கொடுக்க முடியாவிட்டாலும், மீட்புக்கு அடிகோலுகிறது. இது மனிதனுக்குள்ளே பிளவை உண்டாக்குகிறது. இந்தப்பிளவு ஒரே சமயத்தில் சாவைத் தருவதாகவும், நலன் அளிப்பதாகவும் உள்ளது. படைத்தவரோடு இணைந்திருந்த ஆதாம், இறைவனிடமிருந்து தப்பித்து ஓட முனையும்போது தன்னிடமிருந்து ஓடுகிறான். தன்னை அழைப்பவரிடமிருந்தே மறைந்து கொள்ள முற்படுகிறான் (*ஆதி 3:10*). உண்மையான தெய்வ பயத்திற்குப் பதிலான இப்போலிப் பயம் ஒரு தொற்றுநோய். இது மனிதனிடம் பிளவுபட்ட மனச்சாட்சியைக் காட்டுகிறது.

உள்ளத்தில் ஒருங்கிணைந்த மனிதனே, இவ்வளவு முரண்பாடான பிளவுகளைக் கட்டுப்படுத்தி ஆளமுடியும். தூய ஆவியின் ஏவுதல் பெற்ற பவுல் இதை எடுத்துக்கூறுகிறார். உரோமையருக்கு எழுதிய திருமுகத்தில் பாவத்தின் ஆதிக்கத்திற்குக் கையளிக்கப்பட்ட தனக்கு அத்தியாவசியமான ஆவிக்குப் புறம்பே வாழும் ''நான்'' என்பதை விவரிக்கிறார். தலைவெட்டுண்டும் உயிர்பிரியாத நிலைபோல் தன் பிளவுபட்ட அவல நிலையை ''நான் பாவத்திற்கு அடிமையாக விற்கப்பட்டவன்; சீரழிந்த இயல்புள்ளவன்; ஏனெனில், செய்வது என்னவென்று எனக்கே தெரியவில்லை. எதைச் செய்ய விரும்புகிறேனோ அதை நான் செய்வதில்லை. எதை வெறுக்கிறேனோ அதைச் செய்கிறேன்'' என்று விளக்குகிறார் (*உரோ 7:14-15*). கடவுளுடைய சட்டத்தை மனச்சாட்சியில் பரிவுடன் நோக்குவதற்குப் பதிலாக, தன்னுள் பாவம் ஆதிக்கம் செலுத்த இடம் அளித்துவிட்ட மனிதன், ஊன் அதன் இயல்பு சார்ந்த முறையில் தீர்ப்பிடுவதையும் (*கொலோ 2:18*), அதன் இதயத்தைக் கடினப்படுத்திக் கொள்வதையும் (*எபே 4:18*), தீய செயல்களை உண்டாக்கும்வரை அதன் உடலைக் கொடுமைப்படுத்துவதையும் (*உரோ 8:13*) காண்கிறான். மரணத்தை நோக்கி மீட்கமுடியாத விதத்தில் அவன் செல்வதாக அவனுக்குத் தோன்றுகிறது. ஆனால், இது தவறு. ஏனென்றால், ஓர் ஊனின் ஆதிக்கத்திலிருந்து பாவியை மீட்க முடியும். ஆனால், இவ்வாறு விசுவாச முயற்சி மேற்கொள்ளும் வரை, பாவப் பிரிவு நிலையிலேயே வாழ்கிறான். அவனிடம் ஒன்றுபடுத்தும், ஆள்தன்மை அளிக்கும் ஆவியில்லை. பழைய ஏற்பாடு முழுதும் திரும்பத்திரும்பக் கேட்ட அதே வேண்டுகோளை மீட்பருக்காக பாவி, பவுலின் வாக்கின்மூலம் விண்ணப்பிக்கின்றான்: ''ஆழ்துயரில் மூழ்கியுள்ள மனிதன் நான், சாவின் பிடியிலுள்ள இந்த உடலிலிருந்து என்னை விடுவிப்பவர் யார்?'' (*உரோ 7:24*).

இவ்வழைப்புடன் பாவி தன் பயணத்தை முடிக்கின்றான். வாழ்வைக் கொடையாகப் பெற மறுத்தவன், தன் சக்தி கொண்டே தன்னை வழிநடத்த வழி தெரியாதவன், இறுதியாக அருள் தருபவரிடம் அண்டுகிறான். இங்கு மீண்டும் ஒரு படைக்கப்பட்ட பொருளின் அடிப்படை மனப்பான்மையை மனிதன் கொள்கிறான். ஆனால் இனித்தொடங்கும் உரையாடல், பாவிக்கும் அவரது மீட்பருக்குமிடையேயுள்ள ஒன்றாகும்.

***2. இறைவனின் ஊழியன்:*** ஆதித் திருச்சபை உணர்ந்ததுபோல், இறை ஊழியன் என்று எசாயாவால் அறிவிக்கப்பட்டவராக இம்மீட்பரைப் பவுல் கண்டுகொண்டார். மாண்புமிக்க மனுமகன் என்ற மீட்பர் பற்றிய விவரிப்புகளைப் பொருட்படுத்தவில்லை. அவர்களுக்கு ஆற்றல் மிகுந்த ஓர் உயர்மனிதன் தேவைப்படவில்லை. அவர்கள் விரும்பியதெல்லாம், உலகின் பாவத்தை ஏற்று அப்பாவத்திலிருந்து மீட்கும் மனிதனைத்தான்.

***அ) சாகும்வரை இறைவனுக்குப் பிரமாணிக்கம்:*** தன் ஊழியர் மீது திருப்தியடைந்த இறைவன், ''இதோ என் ஊழியன், அவருள் என் ஆவியைத் தங்கும்படி செய்தேன். அவர் மக்களினங்களுக்கு நீதி வழங்குவார்'' *(எசா 42:1)* என்று கூறுகிறார். தன் சக்தியெல்லாம் செலவழித்து இலாபம் கருதாது உழைத்துக் களைக்கும்போது இறை ஊழியன், இறைவன் தன்னை இடைவிடாமல் மகிமைப்படுத்துவதை அறிகிறார் *(49:4)*. காலைதோறும் இறைவன் அவரது செவியில் புகட்டும்போது, கீழ்ப்படிதலுள்ள சீடனாக நடந்து கொள்கிறார். அவர் அவமதிக்கப்படும்போதும் கூட எதிர்ப்பதோ, தடுப்பதோ இல்லை. ஏனென்றால், இறைவன்மேல் அவர் கொண்டுள்ள நம்பிக்கை அசைக்க முடியாதது *(57:4-7)*. பலி ஒப்புக்கொடுக்கும் நேரம் வரும்போது, ''அவர் கொடுமையாய் நடத்தப்பட்டார்; தாழ்மையாய் அதைத் தாங்கிக் கொண்டார். அவர் வாய்கூட திறக்கவில்லை, கொல்வதற்காக இழுத்துச் செல்லப்பட்ட ஆட்டுக்குட்டியைப் போலும், மயிர்கத்திரிப்போர், முன்னலையில் கத்தாத செம்மறியைப்போலும் அவர் வாய்திறக்கவில்லை'' *(53:7)* என்ற விவரிப்புக்கேற்ப நடந்துகொள்கிறார். கயவர்களின் கொடுமை அவரின் மேல் விழுந்தபோதும், அஃது இறைவனின் திருச்சித்தம் என்று ஏற்று, தன்னையே சாவுக்குக் கையளிக்கிறார் *(53:12)*. அப்படிப்பட்ட நம்பிக்கைக்குரிய ஊழியர்தான், மனித குலத்தின் இறுதியாக எஞ்சியவர்தான் இவர். தனது கீழ்ப்படிதலால், ஆதாமில் முறிந்த இணைப்பை இணைத்து வைத்து மரணம் மேற்கொள்வதன் மூலம், இந்தப் பந்தத்தின் முழுமையான பண்பை வெளிப்படுத்துகிறார்.

***ஆ) துன்பங்கள் சூழ் மனிதன்:*** பாவியான ஆதாம் துன்பங்களாலும், துயரங்களாலும் பீடிக்கப்பட்டவர் என்பது தெளிவு. இறை ஊழியன் நமது துன்பங்களையும், துயரங்களையும் தன் மீது ஏற்றுக்கொள்கிறார் *(எசா 53:3)*. இதற்கு மேலும் விலங்குகளை ஆண்டு நடத்த வேண்டியவர், அவைகளைப் போலாகிவிட்டார்; ''அவரிடம் மனிதச் சாயலே இல்லாதிருந்தது'' *(52:14)*, ''அவர் மனிதர் அல்லர், ஒரு புழு'' *(சங் 22:6)*.

***இ) சமூகத்தின் முன்:*** ''காண்போர் தம் முகத்தை மூடிக்கொள்ளும் நிலையில் இருந்த'' *(எசா 53:3)*, இறை ஊழியன் இறுதியாக எல்லோராலும் நிராகரிக்கப்படுகிறார். அவருடைய காலத்தவர் அவரைக் கண்டு திகைப்புற்றனர்; அவரை ஒரு தோல்வியாகவே கருதினர் *(52:14)*. ஆனால், தனது இறைவாக்கினர் மூலம் இறைவன், அவர்களை இப்பலியின் மீட்புச் சக்தியையும் பாவப் பரிகார நிலையையும் உணரவும், ஏற்றுக்கொள்ளவும் செய்கிறார். ''நம் குற்றங்களுக்காகக் காயம் அடைந்தார்; நம் தீச்செயல்களுக்காக நொறுக்கப்பட்டார்; நம்மை நலமாக்கும் தண்டனை அவர்மேல் விழுந்தது. நமக்கு நிறைவாழ்வை அளிக்க அவர் தண்டிக்கப்பட்டார்; அவர்தம் காயங்களால் நாம் குணமடைகிறோம்'' *(53:5)*. இந்தத் துன்பம் நிறை மனிதரில் இறைவாக்கினர், பாவங்களுக்காகப் பரிந்து பேசும், மக்களை ஏற்புடையவராக்கும் மீட்பரைக் காண்கிறார் *(53:11)*. இறை ஊழியர் மரணத்தின் மூலம் ஆதாம் தன் பாவத்தால் தோல்வியுற்றதை ஏற்றுக்கொள்ள முடியும். இவ்வாறு தன் சுயநீதியைக் கைவிடும் போதுதான் மீட்பு உதயமாகிறது. மனிதர்களால் கைவிடப்பட்ட மனிதரின் இறுதிப் பாடுகளால்தான் இறைவனின் மீட்புச் செயல் ஆற்றலுடையதாகிறது. உண்மையில் வாழ்வு பேராசையின் விளைவன்று; மாறாக, பயன்கருதாக் கொடையின் எப்போதும் புதிய பலனாகும்.

***ஈ) இறை ஊழியர் இயேசு கிறிஸ்து:*** ஆதித்திருச்சபையின் பல இசைப்பாக்கள் ஊழியர் பற்றிய இறைவாக்கின் அடிப்படையில் எழுந்தவை. இவைகள் ஏற்றத்திலும், தாழ்விலும் மனிதனுடைய நிலையைக் காட்டும் வரைபடமாக இயேசுவைச் சித்தரிக்கின்றன. அவருடைய தாழ்வே அவரின் மகிமை *(பிலி 2:6-11; எபி 1:3;*

உரோ 1:3 முதலியன). தன் வாழ்வு முழுவதும்,தந்தையின் திருவுளத்தை நிறை வேற்றுவதிலே நிறைவு கண்ட அவர், கடவுளுக்கு இணையான நிலைக்கு உரிமை யிலிருந்தும், அதை விடாமல் பிடித்துக் கொண்டிராமல், அடிமையின் தன்மை பூண் டார். மனிதனாக வந்தவர், எவ்வளவு தாழ்ச்சி கொண்டவர் என்றால் சிலுவை மரணம் மேற்கொள்ளும் அளவிற்குக் கீழ்ப் படிபவர் ஆனார். முழுமையான கீழ்ப்படித லினால் இயேசு, உண்மையான ஆதாமாக விளங்கினார். இப்படித் தனிமை நிலை புகுந்து புதிய மனிதகுலத்தின் தந்தையாக வும் பேரின்ப வாழ்வின் ஊற்றாகவும் ஆனார். இவரைத்தான் பிலாத்து ஏளன மாகக் கூறினான்: ''இதோ மனிதன்'' (யோவா 19:5). மகிமையின் பாதை இப் படிப்பட்டதே. பாவத்தால் பாதிக்கப்பட்ட உருவிழந்த இந்த உருவத்தில், மனிதன் ''கடவுளுடைய அருள் தன்மையோடு நாமும் கிறிஸ்துவுக்குள் விளங்கும்படி, பாவமே அறியாத, நமக்காக பாவ உரு வாகிய'' (2 கொரி 5:21) இறைமகனைக் காணவேண்டும்.

IV. **கிறிஸ்துவின் உருவில்:** பாவியான ஆதாம், ''இறைவனின் சாயலில் படைக்கப் பட்டவன்''. மறுபடியும் அவன் முதலி விருந்த நிலைக்கு உரிமை கொண்டாட முடியாது. அவன் இப்போது வார்த்தை யானவர்போல் இல்லாவிடினும், சிலுவை யில் அறையுண்ட மரணத்தை வென்ற கிறிஸ்துவின் சாயலில், புதுப்பொலிவுடன் படைக்கப்பட்டுள்ளான். ஆதியாகமத்தின் இரண்டாம் அதிகாரத்தில் காணப்படும் அதே மதிப்பீடுகள் இப்போது கிறிஸ்துவில் மிளிரும்.

***1) கிறிஸ்துவில் விசுவாசம்:*** இப்போது மனிதன், தன் கீழ்ப்படிதலையும், வணக்கத் தையும், நேரடியாக கடவுளுக்கோ, பாவ மனிதனுக்கு இரக்கத்தால் கொடுக்கப்பட்ட சட்டத்திற்கோ அளிக்க வேண்டியதில்லை; மாறாக, மனித உருவெடுத்த கிறிஸ்து வுக்கே அளிக்க வேண்டும் (உரோ 10:5-13). நாம் செய்ய வேண்டிய ஒரே காரியம் கடவுள் அனுப்பியவரிடம் விசுவாசம் கொள்வதே (யோவா 6:29). ஏனென்றால் கடவுளுக்கும், மனிதனுக்குமிடையே பரிந்து பேசுபவர் கிறிஸ்து ஒருவரே (1 திமொ 2:5). ஒரே தந்தையிடமே விசுவசிப் போர் அனைவரும் அபரிமிதமாகவும் எப் போதும் வாழ்வு பெற, மகன் வழியாக இட்டுச் செல்லப்படுகின்றனர்.

***2) கிறிஸ்துவின் முதன்மை:*** இயேசு தந் தையின் வாழ்வை அளிக்கிறார் என்றால் அஃது ''ஆதியானவரும் அவரே, அனைத் திலும் முதன்மை பெறும்படி இறந்தோரிட மிருந்து பிறந்த தலைப்பேறும் அவரே. முழுநிறைவும் அவரில் குடிகொள்ள வேண்டுமென்று, இறைவன் திருவுளங் கொண்டார். சிலுவையில் அவர் சிந்திய இரத்தத்தால், சமாதானம் உண்டாக்கி விண் ணிலும், மண்ணிலும் உள்ள யாவற்றையும் அவர் வழியாக தம்மோடு ஒப்புரவாக்க விரும்புகிறார்'' (கொலோ 1:18-20) என்ப தால்தான். பாவத்தில் மூழ்கிக் கிடக்கும் மனித குலத்தின் பிளவுகள் புறக்கணிக்கப் படவில்லை; மாறாக, அவைகள் வெல்லப் பட்டு ஒரு புதிய மனிதராம் கிறிஸ்துவில் ஒரு புதிய ஆழத்துடன் தொடர்புபடுத்தப் பட்டுள்ளது. ''இனி யூதர் என்றும், கிரேக் கர் என்றும் இல்லை; அடிமையென்றும் உரிமைக்குடி மகனென்றும் இல்லை; ஆணென்றும் பெண் என்றும் இல்லை; கிறிஸ்து இயேசுவுக்குள் நீங்கள் அனை வரும் ஒருவரே'' (கலா 3:28). ஆண், பெண் பால் முறைகளிடையே பிணக்கு ஏற்பட் டது; கணவன், மனைவி பிரிவு, சமூக இன வேறுபாட்டிற்கும் பரவியது. கிறிஸ்து வில் தன் இணைப்பைத் திரும்பவும் உணரும்போதுதான் மனிதன், மனிதச் சூழ் நிலைகளை ஆதிக்கம் செலுத்தமுடியும். சுதந்தரம் அல்லது அடிமைத்தனம், திரு மணம் அல்லது கன்னிமை ஒவ்வொன்றும் கிறிஸ்துவில் பொருளையும், மதிப்பீட்டை யும் கொண்டுள்ளது.

பிளவின் பிணக்கத்தின் அடையாளமாய் விளங்கும் மொழிகளின் குழப்பம், கிறிஸ்து தவறாது தரும் ஆவியின் மொழியில்

வெல்லப்படுகிறது. இந்த அன்பு, தந்தையின் மகிமைக்காக, பல்வேறு அருட்கொடைகள் மூலம் வெளிப்படுகிறது.

***3) புது மனிதன்:*** இப்புதிய மனிதன் முதன்முதலில் கிறிஸ்துவேதான் *(எபே 2:15)*. அவர் மட்டுமல்லர் அவரில் விசுவாசம் கொள்ளும் அனைவருமே ஆவர். அவருடைய வாழ்வு இப்போது ஊன் உடலுக்கு உட்பட்டதன்று, ஊனின்மேல் ஆவிகொள்ளும் தொடர்ந்த வெற்றியான தொன்று *(கலா 5:16-25; உரோ 8:5-13)*. ஊனுடல் எடுத்த கிறிஸ்துவோடு இணைந்து *(கொலோ 1:22)*, அவருடைய மரணத்துள் திருமுழுக்கில் பங்குபெற்று *(உரோ 6:5)*, கிறிஸ்துவனின் உடல் பாவத்திற்கு மடிகிறது *(8:10)*. துன்பநிறைவுடலானது, மகிமைமிக்க உடலாக *(பிலி3:21)*, ஆன்ம உடலாக *(1 கொரி 15:44)* மாறும். அவனில் புது ஒளியும் மனப்பான்மையும் தோன்றும் *(உரோ 12:2; எபே 4:23)*. ஆவியின் ஒளியில் ஒவ்வொன்றையும் எப்படித் தீர்மானிப்பது என்று அறிகிறான். இவ்வாறு ஏற்படும் அனுபவத்தை எப்படிப் பிறருக்கு வெளிப்படுத்துவது என்பதையும் அறிகிறான். அவன் கிறிஸ்துவின் மனதைக் கூட கொண்டிருக்கவில்லையா? *(1 கொரி 2:16)*. மனிதன் இப்போது வெறும் மடியக் கூடியவன் மட்டும் அல்லன்; மாறாக, விசுவாசத்தால் இதயத்தில் சாகாத் தன்மையைக் கொண்டுள்ளான். எல்லா மனிதருக்காகவும் ஒரே தடவை மரித்த கிறிஸ்துவோடு இணைந்து மனிதன் இடைவிடாது தனது ''பழைய மனிதனை'' மடிய வைக்க வேண்டும். அப்போது அவனுடைய வாழ்வு பொலிவுமிக்க புதுவாழ்வாக அமையும். இப்போது நம் முகத்தை மறைக்கும் திரையில்லாததால், நம் ஆண்டவரின் மகிமையைக், கண்ணாடியைப் போல் காட்டுகின்றோம். அதனால் மேன்மேலும் மாட்சிமை ஒளிபெற்று, அதன் சாயலாகவே உருமாற்றம் அடைகிறோம். இவையெல்லாம் நம்மில் ஆவியான ஆண்டவரின் செயலே, இயக்கமே *(2 கொரி 3:18)*. கிறிஸ்துவாகிய தனித்தன்மையுடைய சாயலால் ஆட்கொள்ளப்பட்ட புதுமனிதன் முன்னேற்றப் பாதையில் பீடுநடை போட வேண்டும். பழைய மனிதனின் உரு இழந்த சாயல்மூலம், மகிமைமிக்க, பேரொளிமிக்க சாயல் கொண்ட புதுமனிதனாம் கிறிஸ்து இயேசு தோன்றுகின்றார். இவ்வாறாக, மனிதன் மறுபடியும் படைத்தவரின் சாயலில் நிலைநிறுத்தப்படுகிறான் *(கொலோ 3:9-10)*.

***4) படைப்பு:*** இறுதியாக, படைப்பு, தன்னையுமறியாது பயனற்ற நிலைக்கு உட்படுத்தப்பட்டு, தன்னுள்ளே பேறுகால வேதனையால் இந்நாள்வரை தவித்தபோதிலும், அழிவுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து விடுபட்டு, இறைமக்களுக்குரிய மகிமையையும், விடுதலையையும் பெற்றுக்கொள்ளும் நம்பிக்கை கொண்டுள்ளது. உழைப்பு இன்னும் பாவத்தின் காரணமாக துன்பமிக்க சுமையாக இருந்தாலும், அதே நேரத்தில், இறுதி மகிமையில் உருமாற்றம் பெறும் நம்பிக்கையால் உழைப்பு புது மதிப்பீடு பெறுகிறது *(உரோ 8:18-20)*. மனிதனின் இறுதிப் பகைவனான மரணம் அழிக்கப்படும்போது இறைமகன் தன் அரசுரிமையை இறை-தந்தைக்கு அளிப்பார். அப்போது கடவுளே அனைத்திலும் அனைத்துமாய் இருப்பார் *(1 கொரி 15:24-28)*:

## மனுமகன், மானிட மகன், *(*SON OF MAN*)*

I. நான்கு நற்செய்திகளின் பல பகுதிகளில் இயேசு பல தடவை தம்மைத் தாமே ''மனுமகன்'' என்று குறிப்பிட்டு அழைக்கிறார். புதிர்ப்பொருள் தன்மையுடைய இப்பெயர் இரு பண்புக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு தனிச்சிறப்பு வாய்ந்த பெயராக விளங்குகிறது. ஒருபுறம் யாவும் கடந்த அவரது தெய்வீகத்தை மறைத்து நிற்கும் திரைச்சீலையாகத் திகழ்வதோடு, மறுபுறம் அத்தன்மையைத் தொனிக்கும் பண்புகளையும் காட்டி நிற்கிறது. இவ்வாறு கருத்துச் செறிவு ததும்ப நற்செய்திகள் நான்கிலும் ''மனுமகனின்'' உட்பொருளை உய்த்து உணர வேண்டுமாயின் பழைய ஏற்பாட்டிலும், யூதமத வழக்கிலும் கண்

டுள்ள அதே ''மனுமகன்'' என்ற சொல்லின் பொருளினைப் பகுத்து அறிவது இன்றியமையாதது.

II. **பழைய ஏற்பாடு**

**1. விவிலியக் காலத்தில் பழக்கத்தில் இருந்த ''மனுமகன்'':**

எபிரேய, அரமேய நடைமுறை மொழிகளில் ''மனுமகன்'' எனும் சொல் பொதுவாக ''மனிதன்'' *(காண்க. சங் 80:18)* எனப் பொருள்படும். ''மனிதன்'' என்பது மனித இனத்தில் ஓர் உறுப்பினன் (அதாவது, மனுகுலத்து மகன்) எனும் கருத்தைக் குறிக்கும். ஆதாம் மனுகுலத்துக்கு முதல்வராகவும் தந்தையாகவும் விளங்குவதோடு, மனித வர்க்கத்தின் பெயரையே தன்னுள் தாங்கி நிற்கும் காரணத்தால் (ஆதாம்-மனிதன்-காண். யோபு *14:1)* மனிதன் எனும் சொல்லுக்கு ''ஆதாமின் மகன்'' என்று பொருள் கொடுத்துச் சிறப்பிப்பது தகும். பழைய ஏற்பாட்டின் ஏடுகளைப் புரட்டுவோமாயின் அங்கே இச்சொல் மனித இயல்பின் பல பண்புகளைக் கொண்டு சித்திரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்; மனிதனின் நிலையற்ற வாழ்வு (எசா *51:12;* யோபு *25:6)*, இறைவன் திருமுன் அவனது சிறுமைத்தனம் *(சங் 11:4)*, அவனது பாவநிலை *(14:2தொ. 31:20)*, மரணத்திற்குத் தீர்ப்பிடப்பெற்ற அவனது பரிதாப நிலை *(89:48; 90:3)*- என்ற பல்வேறு அம்சங்களையும் பழைய ஏற்பாடு 'மனிதன்' என்னும் சொல்லில் வலியுறுத்துகிறது. எசேக்கியேல் இறைவாக்கினர் மகத்துவம் நிறைந்த, மாட்சிமை மிக்க கடவுள் திருமுன் குப்புற வீழ்ந்து வணங்குங்கால், அவரை, ''மனுமகன்'' (எசே *2:1. 3;...)* என்று யாவே அழைக்கின்றார். இப்பெயர் மனிதனுக்கும் மனிதனைப் படைத்த பரம்பொருளுக்குமிடையே நிலவும் இடைவெளியை எடுத்தியம்புவதோடு, மனிதனின் நிலையற்ற நிலைமையையும் இறைவாக்கினருக்கு நினைவுறுத்துகிறது. சுருங்கக் கூறின், இவ்வம்சங்கள் அனைத்தும் ஒருசேர மனிதன் இறைவன் திருவடி முன் வலிமையிழந்து நிற்பதை வலியுறுத்துகின்றன.

எனினும், தம்மால் படைக்கப்பட்ட காரணத்தால் இதே மனிதனை இறைவன் சிறப்புற நடத்துகிறார் என்பதையும் ''மனிதன்'' எனும் சொல் தெளிவாக்குகிறது. இதனால் அவன் தனித்தன்மை வாய்ந்தவனாகவும் காணப்படுகிறான். மனிதனின் நலனையே விரும்பும் இறைவன் அவனுக்குப் பன்மடங்கு நன்மைகளை வாரி வழங்குகிறார் *(சங் 107:8)*. அவரது ஞானம் மனுகுலத்தில் குடியிருப்பதில் அக்களிப்புக் கொள்கிறது *(பழ 8:31)*. வலிமை குன்றிய ஆற்றலற்ற மனிதன் கடவுளின் கருணையால் அனைத்துப் படைப்புக்களுக்கும் கொடுமுடியாகச் சிறப்புற்றுத் திகழ்வதை நெஞ்சம் நிறைய நினைந்துருகிக் கவிதை வடிவில் வடிக்கும் சங்கீத ஆசிரியர் தம்மையே வியப்பில் மெய்ம்மறந்து கூறுகிறார்: ''மனிதரை நீர் நினைவில் கொள்வதற்கு அவர்கள் யார்? மனிதப்பிறவிகளை நீர் ஒரு பொருட்டாக எண்ணுவதற்கு அவர்கள் எம்மாத்திரம்'' *(சங் 8:4; ஆதி1)*. பரம்பொருளின் பாதத்தில் மனிதன் ஒரு தூசி. இறைவனின் ஆவிதான் அவனை இயக்குகிறது. இருப்பினும், அதே கடவுள் அவனுக்கு நன்கொடைகள் பல நல்கி அவனை மகிமைப்படுத்துகிறார்.

**2. வெளிப்பாட்டு இலக்கியத்தில் மனுமகன்.**

***அ) தானியேல் நூல்:*** விவிலிய வெளிப்பாட்டு இலக்கியத்தைச் சேர்ந்த தானியேல் நூலில் ''மனுமகன்'' தோன்றுகிறார் (தானி 7). விண்ணரசின் வருகைக்கு வழிவகுக்கும் பொருட்டு, தொன்று தொட்டுத் தொடர்ந்து வரும் நிலையற்ற மனித குலப் பேரரசுகள், இறுதியில் சரிந்து மடிந்து மறைந்து போகும் காட்சியை இறைவாக்கினர் தானியேல் வருணிக்கும் விதம் குறிப்பிடத் தக்கது. கொடிய விலங்குகளையொத்த வல்லரசுகள் ஆழ்கடலிலிருந்து உருப்பெற்று உதயமாகின்றன. வயது முதிர்ந்தவரைப் போன்று தோற்றமளிக்கும் ''தொன்மை வாய்ந்தவராகிய'' இறைவனின் அரியாசனத்திற்கு முன் எழும் வல்லரசுகளின் பலமும் பெருமையும், புக

ழும் மாட்சியும், ஆற்றலும் அதிகாரமும் ஒவ்வொன்றாகப் பறிக்கப்படுகின்றன. அப்பொழுது வானத்து மேகங்கள்மீது மனு மகனைப் போன்ற ஒருவர் நீண்ட ஆயுள் உள்ளவரின் அருகில் வருகிறார்; ஆட்சியும் மகிமையும் அரசுரிமையும் அவருக்கு அளிக்கப்படுகின்றன *(7:13 தொ).*

தானியேல் 7-ஆம் அதிகாரத்தில் மனுமகனுக்கு நேர் எதிரிடையாக விலங்குகளையும், தெய்வத்தன்மைக்கு எதிரிடையாக தீய சக்திகளையும் காண்கிறோம். மனுமகனின் ஆட்சிக்குள் தீய சக்திகளின் அதிகாரமும் ஆணவமும் அடங்கி ஒடுங்கி நிற்கின்றன வென்று, இதற்கு நாம் பொருள் கொள்ளலாம். பின்வரும் வசனங்கள் *(7:15 தொ)*, காட்சியின் உட்பொருளை விவரிக்குங்கால், ''உன்னதமானவரின் புனிதர்கள் அரசுரிமை பெறுவர்'' என்று கூறுகின்றன *(7:18.22.27).* முன்னைய வசனத்தையும் *(7:13 தொ)*, பின்னைய விளக்கத்தையும் ஒருங்கிணைத்து நோக்குங்கால் தானியேல் நூலிலே முக்கியமாகக் கூறப்படும் கருத்தொன்று நமக்குத் தெளிவாகப் புலப்படுகிறது. ''மனுமகன்'' எனும் சொல் தனி நபரைக் குறிக்காமல், ''கடவுளின் புனிதர்கள்'' எனப்படும் ஒரு குழுவினைச் சுட்டிக் காட்டுகிறது. இங்குத் தோற்றமளிக்கும் மனுமகன் துன்புறுத்தப்பட்டு, துயரில் தோய்ந்து கிடக்கும் சாதாரண மனிதனல்லன்; அவைகளை வென்று வெற்றிவாகை சூடிய வேந்தனாக விளங்குவது குறிப்பிடத்தக்கது.

மேலும், இறைவாக்கினர் காட்சியில் தென்படும் கொடிய விலங்குகள் வல்லரசுகளை மட்டுமல்லாது, அவைகளை ஆட்சி புரியும் பேரரசர்களையும் குறிக்கின்றன. ஆதலால் ''மனுமகன்'' ஒரு குழுவைச் சுட்டிக்காட்டுவதோடு, அதற்குத் தலைவனாகத் திகழும் ஒரு தனிநபரையும் குறிப்பதாகக் காண்கிறோம். மாட்சிமிகு மனுமகன் இறுதிக்காலத்தில் முழுமைபெறும் விண்ணரசில் இறைவனின் புனிதர்களுக்குத் தலைமை வகித்து ஆட்சி புரிவார்.

இறுதியாக, மெசியா எனப்படும் தாவீது மன்னனின் மகனைவிட மிகச் சிறந்த குணாதிசயங்களை மனுமகன் கொண்டிருப்பதையும் அறிகிறோம். இக்காட்சிப் பகுதி முழுவதிலும் மனுமகன் மனுவுலகைச் சார்ந்தவராகவும் இறைத் தன்மையைத் தன்னகத்தே கொண்ட நாயகனாகவும் திகழ்கிறார்.

***ஆ) யூத மக்களின் மரபுவழியில் மானிட மகன்:*** விவிலிய நூலுக்குப் புறம்பான யூத வெளிப்பாட்டு இலக்கிய மரபிலும் ''மனுமகனைப்'' பற்றிய பகுதிகள் உள்ளன. தானியேல் நூலுக்குப் பின் எழுதப்பட்ட இந்நூல்கள் கண்டுணர்ந்த மனுமகன் ஒரு தனிப்பட்ட குழுவைச் சுட்டிக் காட்டாமல், தனி மனிதனாக மட்டும் சிறப்புற்று விளங்குகிறார். ஏனோக்கு நூல் எடுத்துரைக்கும் மனுமகன் ஒரு மர்ம மனிதர்; இறைவனோடு வாழ்பவர்; நீதி நிறைந்தவர்; இறுதிநாளில் மீட்புக்குரிய நல்லனவற்றை வெளிப்படுத்துவார்; இறுதி நாளில் வையகத்து நீதிபதியாகவும், மீட்பராகவும், உயிர்த்தெழுந்த நல்லோரின் நாயகனாகவும் அரியாசனத்தில் அமர்ந்திருப்பார். அரசகுல மெசியாவுக்கும், யாவேயின் ஊழியனுக்கும் (''இதோ நம் ஊழியன்... நம்மால் தேர்ந்து கொள்ளப்பட்டவர்... மக்களினங்களுக்கு நீதி வழங்குவார்...''காண். எசா42:1) உரிய சில கருத்துக்கள் ஏனோக்கு நூலில் வரும் மனுமகனில் காணக்கிடக்கின்றன. ஆனால், தானியேல் நூல் மனுமகனைப் போலல்லாமல் இம்மனுமகன் வேறுபட்டுக் காட்சியளிக்கிறார். இவர் பாடுகளுக்கு அப்பாற்பட்டவர்; மண்ணுலகுக்குரிய . மானிடப் பிறவியும் அல்லர்.

ஏனோக்கு நூல் எழுதப்பட்ட காலத்தை விவிலிய வல்லுநர்களால் இன்றும் கணிக்க முடியவில்லை. எனினும், தானியேல் நூலுக்குப் பிறகு வடிவெடுத்த இந்நூலில் காணும் மனுமகனைப் பற்றிய கருத்துக்கள் சற்றுத் தெளிவாகவும், விளக்கமாகவும் வளர்ச்சி பெற்றிருப்பதை நாம் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இயேசு தமது மீட்புப் பணியைத் தொடங்கவிருக்கும்

காலத்திற்குச் சற்றுமுன் இக்கருத்துக்கள் யூத மக்கள் சிலரிடையே பரவலாகப் போதிக் கப்பட்டு ஏனோக்கு நூலுக்கு மூலமாக அமைந்திருக்க வேண்டும்.

தானியேல் நூலில் இடம்பெறும் மனு மகன் பற்றிய மறைபோதனை எஸ்ராவின் நான்காம் நூல் எனும் மற்றுமொரு யூத வெளிப்பாட்டு ஏட்டிலும், யூத ராபிகளின் விரிவுரை இலக்கியத்திலும் காணப்படு கிறது. இவையனைத்தையும் படித்தும் போதித்தும் வந்த யூத மக்களின் உள்ளங் களில் வானுலகிலிருந்து இறங்கி வரும் மானிட மீட்பரின்மேல் நம்பிக்கை வளர்ந்து வளம் பெற்றிருக்க வேண்டும். நாளடை வில் நற்செய்திகள் நவிலும் மனுமகனைச் சிறப்புறச் சித்தரிக்க இக்கருத்துக்கள் உறு துணையாக அமைந்திருக்க வேண்டும்.

**III. புதிய ஏற்பாடு**

***1. நற்செய்திகள்:***

***அ)*** ''மனுமகன்'' என்ற சொற்றொடர் நற்செய்திகளில் எழுபது முறை கையாளப் பட்டுள்ளது. சில சமயங்களில், இத்தொடர் 'நான்' என்பதைச் சுட்டுவதாக உள்ளது (காண். *5:11*; லூக் *6:22*; மத் *16:13-21*; மாற் *8:27-31*). இறைவனின் வலப்புறம் நின்றி ருக்கும் மனுமகனைக் காண்பதாக ஸ்தே வான் கூறியது (அ.ப. *7:56*), ஆதித்திருச் சபையின் சில பகுதிகளில் இந்தச் சிந்தனை வழக்கத்திலிருந்ததை உணர்த்துகிறது. ஆனால், இதுதான் நற்செய்தியில் இத் தொடர் காணப்படுவதற்குக் காரணம் என்று கூற முடியாது. நற்செய்திகளில் இத்தொடர், இயேசுவே தம்மைக் குறிக்கும் படி பயன்படுத்துவதாகத்தான் உள்ளது. அவரது உயிர்ப்புக்குப் பின்னால் அப் போஸ்தலர்கள் இயேசுவை வேறு சில சிறப்புப்பெயர்களால் அழைப்பதையே விரும்பினர். இயேசுவும் தம்மை வெளிப் படையாக மனுமகனுடன் ஒன்றுபடுத்த வில்லை என்பதும் இங்கு நோக்கத்தக்கது (மத் *6:27;24:30* இணை). ஆனாலும், வேறு சில இடங்களில் மனுமகன் என்று இயேசு தம்மையே அழைக்கிறார் (மத் *8:20*இணை; *11:19*; *16:13*; யோவா *3:13* தொ; *12:34*). இவ்வித முரண்பாட்டுக்குக் காரணம் உண்டு. புதிய ஏற்பாட்டிலே வரும் ''மனு மகன்'' என்ற சொல் ''இறைத்தன்மை பூண்ட தலைவன்'' பற்றிய இருவேறு கருத்துக்களைச் சுட்டிக்காட்டி நிற்கிறது. இவ்விரு பண்புகளும் இயேசுவுக்குப் பொருந்தும். ஆதலால், தம்மியல்புக்கு ஏற்ற இப்பெயரை இயேசு தமதாக்கிக் கொண்டதில் வியப்பில்லை. இதனைப் பின்வரும் விளக்கம் நன்கு தெளிவு படுத்தும்.

***ஆ) ஒத்தமை நற்செய்திகள்:***

***1)*** இம்மூன்று நற்செய்திகளில் காணக் கிடக்கும் இறுதிக் காலத்தைச் சித்திரிக்கும் பகுதிகளை மேலே விளக்கியுள்ள வெளிப் பாட்டு இலக்கிய மரபுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, கருத்துக்கள் பல ஒத் திருப்பதை அறிவோம். மனுமகன் வான மேகங்கள்மீது வருவார் (மத் *24:30* இணை); மாட்சிமிகு அரியணையில் வீற்றிருப்பார் (*10:28*); ஒவ்வொருவனுக்கும் அவனவன் செயலுக்கேற்ப கைம்மாறு அளிப்பார் (*16:27* இணை). அறிஞரும் மூப்பரும் கூடிய தலைமைச் சங்கம் முன்னிலையில் குற்றவாளியாகக் கொணர்ந்து நிறுத்தப் பட்ட இயேசுவை நோக்கி, ''நீ கடவுளின் மகனான மெசியாவோ?'' என்று தலைமைக் குரு வினவ, ''மனுமகன் வல்லமையுள்ள இறைவனின் வலப்பக்கத் தில் அமர்ந்து (காண். சங் *110:1*) வான மேகங்கள்மீது வருவதை நீங்கள் இனிக் காண்பீர்கள்'' (காண். தானி *7:13*; மத் *26:64*இணை) என்று இயேசு பதில் பகர் வதை நாம் காண்கிறோம். தம்மையும் இம்மனுமகனையும் ஒருங்கிணைத்துக் கூறு வதன் மூலம் தாம் கடவுளின் மகன் என்பதை இயேசு மறைமுகமாக அறிவிக் கிறார். யூத மரபுப்படி எவனொருவன் தன்னைத்தானே இறைமகனென்று இயம்பு கிறானோ, அவன் இறை நிந்தைக்கு ஆளா கிறான். அவன் அவமானப்படுவதோடு, மரண தண்டனைகளையும் அனுபவிக்க நேரிடும். ஆதலால்தான் யூத மதத்

தலைமைச் சங்க அங்கத்தினர் அனைவரும் ''இவன் சாவுக்குரியவன்'' என்று கூக்குர லிட்டனர் *(மத் 26:26).*

மேலே கூறியுள்ள ஒத்தமை நற்செய்தி வசனத்திலிருந்து புலப்படும் கருத்துக்களை வெளிப்பாட்டு இலக்கியக் கண்கொண்டு நோக்குவோமாயின், நமக்குத் தென்படுவது கீழ்க்காணும் கருத்துத்தான்: யூத மக்க ளிடையே பிறந்து வளர்ந்து, வையகம் முழு வதையும் தமது ஆட்சிக்குள் கொணர்ந்து, யூதமக்களுக்கு மகிமையைத் தேடித் தரும் மாவேந்தர்தாம் மெசியாவாக இருக்க வேண்டுமென்ற தவறான எண்ணம் யூத மக்களிடையே புகுந்துவிட்டது என்பதை எடுத்துக்காட்டி, மனுவுலகில் உதித்து மனு குலத்தை ஆட்சி செய்யும் மன்னர்தாம் மெசியா என்று யூதர்கள் வகுத்த இலக் கணத்தை இயேசு தகர்த்தெறிகிறார். தனது யாவும் கடந்த தன்மையைத் தோன்றச் செய்கிறார்.

***2.*** ஒத்தமை நற்செய்திகளின் வேறுசில பகுதிகளில், வெளிப்பாட்டு இலக்கியக் கருத்துக்களுக்கு மாறாக, தாம் ஒரு சாதா ரண மனிதன் என்று பொருள்பட இயேசு இயம்புவதையும் காண்கிறோம். இம்மண் ணில் இயேசு மனிதனாகப் பிறந்தார். ஆனால், இவ்வையகத்து வேந்தர்களின் மகிமை பெருமையைத் தேடி அலையா மல், *''யாவேயின் ஊழியன்''* எனும் தமது இறையழைப்புக்கிணங்க வெறுத்துப் புறக்க ணிக்கப்படச் சித்தமானார்; இறுதியாக மகி மையோடு மனுகுலத்தை மீட்கும் பொருட்டு, சிலுவையில் மரித்தார். மனு மகன் என்ற முறையில் இவையனைத்தையும் அவர் அனுபவிக்க வேண்டியவராய் இருந் தார் *(மாற் 8:31 இணை; மத் 17:9 இணை.22இணை; 20:18 இணை; 26:2. 24இணை. 45 இணை).* தானியேல் நூலின் படி இறைவனின் புனிதர்கள் மாட்சிமை மிக்க மறுவுலகின் அரசுரிமைகளில் பங்கு கொள்ளும்முன் இவ்வுலகின் துன்ப நிலையை அனுபவிக்க வேண்டும். அது போன்று இறுதிநாளில் மகிமையில் தோன் றும்முன்பு மனுமகன் மண்ணகத்தில் துன்பு றுத்தப்பட்டு துக்கத்தில் துவள வேண்டும். இதனால் இயல்பான அவரது தெய்வீகத் தன்மை தாழ்ந்த நிலைக்குட்பட்டு மரணம் மட்டும் மூடி மறைக்கப்பட்டிருந்தது. இதி லிருந்து நாம் அறிவது என்னவென்றால், தாம் மனிதனென்று மொழிந்தவர் யூதமக் கள் எதிர்பார்த்த மண்ணுலகின் மாட்சிமிகு மெசியா அல்லது மாவீரன் என்று தம்மைக் கருதவுமில்லை, போதிக்கவுமில்லை என்ப தும், மனுகுலத்தின் துன்பத்தில் பங்கு கொள்ளும் பண்பை அழகாகவும் ஆழமாக வும் எடுத்துக்காட்டவல்ல ''மனுமகன்'' என்ற நாமத்தையே தமதாக்கிக் கொண்டு, அப்பெயரால் தம்மைத் தாமே அழைத்துக் கொள்ள விரும்பினார் *(காண். மாற் 8:29 தொ)* என்பதுமாகும்.

***3)*** மனுமகனின் தெய்வீகம் அவரது வாழ் வில் மூடிமறைக்கப்பட்டிருந்த போதிலும் *(காண். மத் 8:20 இணை; 11:19),* இயேசு மனுமகனுக்குரிய அதிகாரங்களுக்குச் செயல் உருவம் கொடுக்கத் தயங்கிய தில்லை. அவர் தம்மை அண்டிவரும் மக்களின் பாவங்களை மன்னித்தார் *(மத் 9:6 இணை);* மனுமகன் ஓய்வு நாளுக்கு ஆண்டவர் என அதிகாரத் தொனியில் பதிலளித்தார் *(மத் 12:8 இணை);* மனுமகன் இறைவாக்கினைப் போதிப்பவரென்று தமது சிறப்புரிமையை விளக்கினார் *(மத் 13:37).* இயேசுவின் வாழ்நாளில் மறைந்தவண்ணம் அறிமுகப்படுத்தப்பட்ட இத்தெய்வீக மகிமை இறுதி நாளில் வெளிப்படும் அவரது முழு மகிமைக்கு அறிகுறியாகத் தென்பட்டதென்று நாம் கண்டுணர்கிறோம்.

***இ) யோவானின் நற்செய்தி:*** யோவா னின் *''மனுமகன்'',* ஒத்தமை நற்செய்திகள் நவிலும் (மனுமகனுக்குரிய) எல்லாப் பண் புகளையும் கொண்டுள்ளார். இறுதிநாளில் இறைமகன் மனுமகனுக்குரிய அதிகாரத் தோடு இறந்தோருக்குத் தீர்ப்பிடுவார் *(யோவா 5:26-29).* அப்பொழுது ''கடவுளு டைய தூதர்கள் மனுமகனிடமிருந்து ஏறுவ தையும் அவரிடம் இறங்குவதையும் காண் பீர்கள்'' *(1:51);* மனுமகன் முன்னர் இருந்த இடத்துக்குச் செல்வார் *(6:62);* இறுதி

நாளில் மனுவுலகில் இவருக்கு மகிமையும் மாட்சியும் அளிக்கப்படும். இவைகளனைத்தும் மனுமகன் வானத்திலிருந்து வந்தவர் என்பதை வெளிப்படுத்துகின்றன *(3:13)* என்றெல்லாம் யோவான் ''மனுமகனின்'' மகிமைக்குரிய பண்பினைப் பற்றிக் கூறுகிறார்.

ஆனால் மாட்சிமையின் வாயிலில் நுழையுமுன், அதே மனுமகன் மனிதவுடல் பூண்டு மரிக்க வேண்டிய தாழ்நிலையை அனுபவிக்க வேண்டும் *(9:35)*. ஆதலால், மக்களினங்கள் இவரை இறைமகன் என்று கணித்துக் கண்டுணர்ந்து விசுவாசம் கொள்ள இயலாத நிலை ஏற்படும். தமது உடலை உணவாக உண்டு, இரத்தத்தைப் பானமாக அருந்தி *(6:53)*, உண்மை உயிர் பெற்று உய்யும் வண்ணம் தம்மையே தகனப்பலியாக அர்ப்பணிக்க வேண்டும் *(காண். 6:51)*.

ஆனால், ஒத்தமை நற்செய்திகளில் கண்டறியாத ஓர் அரிய கருத்தை யோவான் தமது நற்செய்தி நூலில் வலியுறுத்துகிறார். இயேசுவின் சிலுவை மரணம், அவரது விண்ணுலகம் எய்துதலோடு பின்னிப் பிணைத்துச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. மனுமகன் சிலுவையில் உயர்த்தப்பட வேண்டும் *(3:14தொ; 12:34)*. அவர் கழுமரத்தில் ஏற்றப்பட்டது அவரது உயிர்ப்புக்கு வாயிலாக விளங்குவதோடு, அடையாளமாகவும் அமைந்து, விண்ணுலக மாட்சிமைக்கு உயர்த்தப்பட்டதற்கும் ஒப்பாகுமென்று யோவான் ஆணித்தரமாக எடுத்துரைக்கிறார் *(12:23; 13:31)*. சிலுவைச் சின்னத்தில்தான் இயேசுவின் திருவெளிப்பாடு நிறைவு பெற்றது. ''மனுமகனை நீங்கள் உயர்த்திய பின்பு இருக்கிறவர் நானே என்று அறிந்து கொள்வீர்கள்'' *(8:28)*. அவரது மாட்சிமை இறுதிக்காலத்தில்தான் முழுவடிவம் பெற்றாலும், முன் கூட்டியே இவ்வுலகில் அவரது ஆற்றல் மிக்க செயல்களின் வழியாக வெளிக்கொணரப்படுகிறது. மனிதனுக்குத் தீர்ப்பு வழங்கி *(5:21 தொ)*, தமது ஊனை உணவாக ஈந்து *(6:53)*, முடிவற்ற வாழ்வை அளிக்கிறார் *(5:25 தொ)*. நிலையான உணவை மனுமகன் தாம் கொடுக்க முடியும்; ஏனெனில், தந்தையாகிய கடவுள் அவர்மீது தம் முத்திரையைப் பொறித்துள்ளார் *(6:27)*.

**2. திருமுகங்களில் மலரும் மனுமகன்:** வெளிப்பாட்டு இலக்கியத்தைச் சார்ந்த சில வசனங்களைத் தவிர, மனுமகனைப் பற்றிய குறிப்புக்களைப் பொதுவாகத் திருமுகங்களில் காண்பது அரிது. மனுமகன் என்ற முறையில் *(அ.ப. 7:55தொ)* இயேசு கடவுளின் வலப்பக்கத்தில் மாட்சியுடன் *(காண்க. சங் 110:1)* வீற்றிருப்பதை ஸ்தேவான் காண்கிறார். அதுபோன்று இறுதிநாள் அறுவடைக்காக *(திருவெளி 14:14 தொ)* அவரது மறுவருகையினை எதிர்நோக்கும் காட்சியாளரைப் பற்றி யோவானின் திருவெளிப்பாட்டு நூல் கூறுகிறது *(திருவெளி 1:12-16)*. பவுல் இயேசுவை விண்ணிலிருந்து வந்த ஆதாம் என்று பெயரிட்டு, அவரது சாயலை உயிர்த்தெழுந்த மக்கள் வெளிப்படுத்துவார்கள் என்று விவரிக்கும் பொழுது *(1 கொரி 15:45-49)*, மனுமகனைத் தான் குறிப்பிடுகிறார் என்று கூறலாம். எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகமும் இயேசுவை எட்டாவது சங்கீதத்தின் கண்ணோட்டத்தில் நோக்கி ''அந்த மனிதன்'' அல்லது ''மனுமகன்'' மாட்சிமைக்கு அழைக்கப்படுவதற்குமுன், மிகத் தாழ்ந்த நிலைக்குள்ளாக்கப்பட்டார் என்று காட்டுகிறது *(எபி 2:5-9)*.

சங்கீதங்கள் முழங்கும் ''ஆதாமின் மகன்,'' வெளிப்பாட்டு இலக்கியம் கூறும் ''மனுமகன்,'' பவுலின் திருமுகங்கள் பறைசாற்றும் ''புதிய ஆதாம்'' (அல்லது ''இரண்டாவது மனிதன்'') - இம்மூவரையும் மறையியல் அறிஞர்கள் ஒன்று சேர்த்து ஒப்பிட்டு நோக்கி, இம்மூவருக்குமிடையே உள்ள உறவின் நெருக்கத்தை உறுதிப்படுத்தினார். மேலும், இம்மூன்று பெயரும் சேர்ந்து இயேசுவின் முழு உருவத்தை வருணிக்கவல்ல பிணைப்பைப் பெற்றிருப்பதையும் அறிவித்தார்கள். ஆதாமின் மகன் என்ற முறையில் இயேசு மனிதனின்

தாழ்வுநிலையிலும், துன்பத்திலும் பங்கு கொண்டார். வானத்திலிருந்து இறங்கி வந்த மனுமகன் என்ற நிலையில் இயேசு உலக முடிவில் தீர்ப்பளிக்கும் பொருட்டு, திரும்பி வருவார். அவரது பாடுகளும், மரணத்தின் வழியாக அடைந்த உயிர்ப்பும் மாட்சியும் அவரைப் புதிய ஆதாமாகத் திகழச் செய்வதோடு, அவற்றினால் புதிதாக உருவாக்கப்பட்ட மனுகுலத்துக்கு நாயகனா கவும் விளங்கும்படி சிறப்பிக்கின்றன. இறுதிக் காலத்தில் அவர் தம்மை முழுமை யாக வெளிப்படுத்துவார். அப்பொழுது இன்று நம்மை அண்டிவரும் அவரது சின்னஞ்சிறிய சகோதரர்களில் அவரையே கண்டதாக உணர்வோம். இவ்வனுபவம் நம்மை வரம்பில்லா வியப்பில் மூழ்கச் செய்யும் *(காண். மத் 25:31 தொ)*.

**மனோவாகு** (MANOAH - ஓய்வு)

இவர் சிம்சோனின் தந்தை. இவருடைய குழந்தையற்றிருந்த மனைவிக்கு ஒரு காட்சி யில் அவளுக்குப் பிறக்கும் மகன் வாழ்க்கை முழுதும் நசீராக இருப்பானென்றும், அவன் இஸ்ராயேலர்களைப் பெலிஸ்தியர் களின் பிடியினின்று மீட்பானென்றும் கூறப் பட்டது *(நீதி 13:5)*. குழந்தையை எவ்வாறு வளர்க்க வேண்டுமென்று மனோவாகு மன்றாடியதைக் கேட்டு மீண்டும் தோன்றிய ஆண்டவரின் தூதரிடம் கேட்டபோது, தாய் தீட்டான உணவையும், மயக்கமளிக்கும் மதுவையும் தவிர்க்க வேண்டுமென உறுதிப்படுத்தினார் *(13:14)*. அவரை உண வுண்ண அழைத்தபோது அதனைப் பலி யாகத் தருமாறு கேட்டார். பலியாக உணவை அளித்தபோது அப்பிழம்பில் ஆண்டவரின் தூதர் மேல்நோக்கிச் சென்று மறைந்தார். தனக்குத் தோன்றியவர் ஆண்ட வரின் தூதர் என்று மனோவாகு அறிந்து, தான் கடவுளை நேரில் கண்டேனே என மரணபயத்தால் துடித்தார். இறைவன் அவ ரது பலியை ஏற்றுக்கொண்டதால் அஞ்ச வேண்டியதில்லை என அவரது மனைவி அவரைத் தேற்றினாள்.

சோராவுக்கும், எசுத்தாவோலுக்குமிடையே மனோவாகுவின் கல்லறை இருந்த தாகக் கருதப்பட்டது. இங்குச் சிம்சோனின் எலும்புகளும் அடக்கம் செய்யப்பட்டன *(நீதி 16:31)*.

**மன்னா** (MANNA)

*1.* மன்னா என்பது இஸ்ராயேலர் பாலை வனத்தில் அலைந்தபோது இறைவனால் அவர்களுக்கு அளிக்கப்பட்ட உணவாகும் *(யோசு 5:12)*. நமது கவனத்திற்குரியதென் பது அஃது என்ன என்பது பற்றிய பகுப்புரை யன்று; மாறாக, அதனுடைய அடையாள மதிப்பீட்டின் பொருளாகும். ''இஃது என்ன?'' *(யாத் 16:15)* என்ற பெயரின் விளக்கமானது அதனுடைய மறைபொரு ளான பண்பை வெளிக்கொணர்கிறது. இறைவன் தனது மக்களுக்கு உயிர்வாழத் தேவையானதை அளிக்கின்ற அதே வேளை யில், அவர்களைச் சோதனைக்கு உட்படுத்த வும் விரும்புகிறார் *(16:4.28)*. இந்த வியப்பு மிகு கொடையானது பாரம்பரியத்தில் பல விளக்கவுரைகளுக்கு இடமளித்தது. ஐந்நூல் *(யாத் 16;எண் 11:4-9)*, சங்கீதங்கள், ஞான நூல் *(ஞான 16:20-29)* ஆகியவற்றின் நிகழ்ச்சி யுரைகள் இதற்குச் சான்று பகர்கின்றன. இவ்வாறாக, விண்ணகத்தின் உண்மையான அப்பத்தினுடைய வெளிப்பாட்டிற்கு இது தயாரிக்கிறது. விண்ணக அப்பத்திற்கு மன்னா வாக்குறுதியாகவும் மாதிரியாகவும் உள்ளது *(யோவா 6:31-32)*.

***2. மன்னா பற்றிய விவரிப்பு:*** அது ''மிருது வான பாளமாக மெல்லிய உறைபனிக்கு ஒத்த சிறிய பொருளாகும்'' *(யாத் 16:14)*. அது ''கொத்தமல்லி போன்று வெண்ணிற மாய்த் தேன் கலந்து ஆக்கிய பணியாரம் போன்ற சுவையுடையதாகும்'' *(16:31)*. ''அதன் தோற்றம் முத்துப் போன்றதாகும்'' *(எண் 11:7)*. அதைச் சுட்டோ, வேக வைத்தோ உண்ணலாம் *16:23)*. பணியார மாகச் செய்து சாப்பிடலாம் *(16:31)*. இயற்கை உணவுப் பொருட்களில் ஏதாவது ஒன்றை மன்னாவாக அடையாளம் காட்ட முயன்றுள்ளனர் அறிஞர் பலர். காற்றில் அடித்துச்செல்லப்படும் காளான்வகைப் பூண்டாகவோ, பல செடிகளில் காணப் படும் பிசினாகவோ, சில பூச்சிகள் சுரக்கும்

பசையாகவோ மன்னாவை அடையாளம் காட்ட முயன்றுள்ளனர். ஆனால், இவை யெல்லாம் மன்னாவைவிட விந்தையாக உள்ளன.

**3. மன்னாவும் பாலைவனச் சோதனையும்:** பாலைவனத்தில் தங்களின் நிலையற்ற சூழ் நிலையை எதிர்கொண்டவர்களாய், விசு வசியாதவர்கள் இறைவனைச் செயல்படு மாறு வற்புறுத்தினர்; ''ஆண்டவர் தங்க ளோடு இருக்கிறாரா, இல்லையா?'' (*யாத் 17:7*) என்று ஐயுற்றனர். மற்ற வழிகளிடை யில் மன்னாவினுடைய கொடையினால் தனது மகிமையைக் காட்டுவதன் மூலம் இறைவன் பதிலுரைத்தார் (*16:7.10-12*). தனது முறையில் இறைவன் தனது மக் களைப் படிப்பிக்கவும், சோதிக்கவும் மன் னாவினால் ஒரு கேள்வியை எழுப்பினார். ''எனது கட்டளைக்கு உடன்படுவதன் மூலம் நாமே உங்கள் கடவுள் என்பதை நீங்கள் ஏற்றுக்கொள்ளப் போகிறீர்களா, இல்லையா?'' (*16:4.28*).

இஸ்ராயேலுக்கு வாழ்வதற்கான இந்த உணவை அளிப்பதில் இறைவன் தனது ஆற்றலுள்ள பிரசன்னத்தை அவர்களுக்குச் சுட்டிக்காட்டுகிறார் (*16:21*). இந்த அறிகுறி யானது எந்த அளவிற்குப் பொருளுடைய தெனின், உடன்படிக்கைப் பேழையில் சட்டப் பலகைகளுடன் ஒரு பாத்திரத்தில் மன்னாவையும் வைப்பதன் மூலம் அத னுடைய நினைவை இஸ்ராயேல் பாது காக்க வேண்டும் (*16:32-34; காண்க. 25:21; எபி 9:4*). ஆனால், ஒவ்வொரு அறிகுறியும் ஒரு பதிலை எதிர்பார்க்கிறது. மன்னா என்ற கொடையோடு, கொடுத்தவர்மேல் கொண்டுள்ள விசுவாசத்தைச் சோதிப்பதற் கான கட்டளையும் கொடுக்கப்பட்டது. ஓய்வு நாளின் ஓய்வை மதிப்பதற்கென ஓய்வு நாளுக்கு முந்தின தினம் இரண்டு நாளுக்குத் தேவையானதைச் சேகரிக்க வேண் டும். மற்றப்படி ஒவ்வொரு முறையும் அன்றன்றைக்குத் தேவையானதை மட்டுமே அவர்கள் சேகரிக்க வேண்டும். இவ்வாறு மன்னாவானது இறைவனுக்குக் கீழ்ப்படி தலையும் அவரது வார்த்தையில் நம்பிக் கையைக் காட்டுவதற்கு ஒரு வாய்ப்பாகவும் அமைந்தது (*யாத் 16:16-30*). மேலும், சுவையற்றவையாக இல்லாத நிலையில் சமைக்கப்பட்ட மன்னாவின் துண்டுகள் எப்போதும் ஒரே சுவையைக் கொண்டிருந் தன (*எண் 11:8*). சோதனையையும் அத னுடைய படிப்பினையையும் அறியத் தவ றிய நிலையில், இஸ்ராயேலர் மன்னாவில் சலிப்புற்று, முறையிடத் தொடங்கினர். மண்ணக உணவை மட்டுமே சார்ந்தவனாக இல்லாமல் (*11:4-6*), மன்னாவை அடை யாளமாகக் கொண்ட மறை உணவாகிய விண்ணிலிருந்து வருகின்ற இறைவார்த்தை யின் மீது மனிதன் முதலில் நம்பிக்கை வைக்க வேண்டும் (*உப 8:2-3*).

**4. மன்னாவும் இறுதிக்கால எதிர் பார்ப்பும்:** இறைவன் முன்னிலையிலான செபத்தில் தன்னுடைய பழமையைப் பற் றிச் சிந்திக்கும்போது, இஸ்ராயேலானது மன்னாவின் உதவியைப் பற்றிப் பாடியது: ''விண்ணிலிருந்து வந்த கோதுமை அப் பத்தை,'' வானதூதரின் ''வலியோருடைய அப்பத்தை'' (*சங் 78:23-25; 105: 40; நெகே 9:15*) அவர்கள் மீது யாவே பொழிந்தார். இந்த வியத்தகு கொடையினைப் புகழும் போது, இறுதிக்கால விருந்தின்போது படைத்தவர் தனது பிள்ளைகளுக்கு அளிக் கக்கூடிய விண்ணக உணவு கொண்டிருக்க வேண்டிய பண்புகளைப்பற்றி ஞானிகள் கற்பனை செய்தனர். இஸ்ராயேலின் எதிர் பார்ப்பாகிய இந்த உணவைப் பற்றியே ஞானநூல் ஆசிரியர், யாத்திரை மீதான தன்னுடைய விளக்கவுரையில் சிந்திக்கின் றார். எதிர்கால மன்னாவானது ஒவ்வொரு நபரினுடைய சுவைக்கேற்ப அமையும். இறைவனுடைய பிள்ளைகளின் ஆசை களுக்கேற்ப அஃது அமையும். அதனைச் சுவைப்பதில், தன்னில் விசுவாசங் கொள்ப வரின் பணிக்குத் தன்னுடைய படைப்பை உட்படுத்துகின்ற படைத்தவரின் வள்ளன் மையை அவர்கள் மேலும் சுவைப்பர் (*ஞான 16:20-21. 25-26*). திருவெளிப்பாட்டு நூல் அதே மன்னா பற்றிப் பேசுகிறது. யாருடைய விசுவாசமும் சாட்சியமும்

அவர்களைச் சாத்தான் மற்றும் உலகத்தின் மீதான வெற்றியாளர்களாக மாற்றுகிறதோ, அவர்களுக்கு அது வாக்களிக்கப்படுகிறது *(திருவெளி 2:17; காண்க. 1 யோவா 5:4-5).*

**5. மன்னாவும், இறைவனுடைய உண்மையான அப்பமும்:** கிறிஸ்து பாலைவனத்தில் பழைய ஏற்பாட்டின் படிப்பினையை வாழ்ந்து காட்டி உறுதிப்படுத்துகிறார்: ''மனிதர் அப்பத்தினால் மட்டுமன்று, மாறாக, கடவுளின் வாய்ச்சொல் ஒவ்வொன்றாலும் வாழ்வர்'' *(மத் 4:1-4இணை; காண்க. 8:3).* அவர் புதுமையான உணவினால் இறைவனுடைய மக்களுக்கு உணவு அளித்தபோது, இந்தப் படிப்பினையைப் புதுப்பிக்கிறார். மக்களைத் திருப்திப்படுத்திய இந்த அப்பமானது *(மத் 14:20; 15:37இணை; காண்க. சங் 78:29),* இயேசு கோரிய விசுவாசத்துடன் எவ்விதத் தொடர்புமற்ற ஓர் ஆர்வத்தைக் கிளறியது *(யோவா 6:14-15).* சீடர்கள் கூட்டத்தினரை விட எந்த விதத்திலும் அதிகமாக கொடை மற்றும் புதுமையின் பொருளைப் புரிந்து கொள்ளவில்லை. விசுவசியாத பரிசேயர், சதுசேயரைப் பொறுத்தவரை, அத்தருணத்தில் ''விண்ணிலிருந்து அடையாளம் ஒன்றைக்'' கோரினர் *(மத் 16:1-4 இணை; காண்க. யோவா 6:30-31; சங் 78:24-25).*

ஆனால் ''விண்ணிலிருந்து வருகின்ற'' உண்மையான அப்பமானது மரணத்தை அனுமதிக்கின்ற மன்னாவாக இல்லாமல் விசுவாசத்தினால் பெறப்படுகின்ற *(யோவா 6:35-50)* இயேசுவே ஆவார் *(6:32-33).* ''உலகம் வாழ்வதற்காகவே கொடுக்கப்படும்'' அவரது சதையே *(6:51-58).* அதே ''ஆன்மீக உணவானது'' பாலைவன மன்னாவினால் முன்குறித்துக் காட்டப்படுவதாகப் பவுலும் கண்டார் *(1 கொரி 10:3-4).* எனவே, உரிய காரணத்துடன் நற்கருணை வழிபாடானது மன்னாவைக் குறிக்கின்ற விவிலிய உருவங்களை எடுத்துக் கொள்கிறது. தோற்றத்திற்கு மன்னாவைப் போன்று எப்போதும் ஒரேவிதமாக உள்ள நற்கருணை உணவினுடைய மறைபொருளான அப்பத்தைப் பெறும்போது, இறைவனுடைய அறிகுறிக்குக் கிறிஸ்தவன் பதிலளித்து, விண்ணிலிருந்து இறங்கிய அவருடைய வார்த்தையிலான தனது விசுவாசத்திற்குச் சான்று பகர்கிறான். எனவே, இக்காலம் முதல் அவன் ''வழிப்போக்கர்களின் அப்பமான வான தூதருடைய அப்பத்தினால் உணவூட்டப்படுகிறான்''. இறைவனுடைய மக்களின் புதிய யாத்திரையின்போது, அஃது அவர்களுடைய தேவைகள் அனைத்தையும் நிறைவுபடுத்தி, அவர்களது சுவைகளுக்கேற்றதாக அமைகிறது. மேலும், விசுவாசி, போரில் ஏற்கெனவே வென்றவர் என்ற அளவில், தனது பயணத்திலும் அதனைத் தொடர வேண்டும். ஏனெனில், அவர் ஏற்கெனவே இறைவனுடைய அப்பத்தினால் ஊட்டப்பட்டு, அவரது முடிவில்லா வாழ்வினால் வாழ்கிறார் *(யோவா 6:33.54.57-58; திருவெளி 2:17).*

## மன்னிக்க முடியாத பாவம் *(UNFORGIVABLE SIN)*

இது மாற்கு *3:29-30-*இலிருந்து வருகிறது: ''தூய ஆவியாரைப் பழித்துரைப்பவர் எவரும் எக்காலத்திலும் மன்னிப்புப் பெறார்; மேலும், என்றென்றும் தீராத பாவத்திற்கு ஆளாவார்'' என்று இயேசு கூறினார். ஏனெனில் ''இவனைத் தீய ஆவி பிடித்திருக்கிறது'' என்று அவர்கள் சொல்லி வந்ததால் இயேசு இவ்வாறு கூறினார்.

மாற்கின் இந்த வாசகத்தை ஆய்வு செய்யும்போது சூழ்நிலை தூய ஆவியாரைப் பழித்து உரைப்பது அவ்வளவு எளிதில் செய்யப்படுவதன்று எனத் தெரிகிறது. இயேசு இங்கு மறைநூல் வல்லுநர்களைக் குறிப்பிடுகிறார். இவர்கள் பயிற்சி பெற்ற மறைநூல் அறிஞர்களும் மக்களின் தலைவர்களும் ஆனவர்கள். தங்கள் காலத்தில் தூய ஆவி ஆற்றும் செயல்களைக் கண்டுணர வேண்டிய பொறுப்புடையவர்கள். இவர்கள் மன்னிக்க முடியாத பாவத்தைச்செய்யும் ஆபத்திலிருந்தனர். இயேசு பேய்களை ஓட்டுவதில் வெளிப்பட்ட தூய ஆவியின் ஆற்றல் பெற்ற செயல்கள் சாத்தானின் ஆற்றலால் செய்யப்பட்டவை என்று மீண்

டும் மீண்டும் கூறி வந்தனர். இத்தகைய கூற்று இறைவன்பால் எதிர்ப்பு மிக்க பகைமையையும், இறைவனது ஆவி செய லாற்றுவதைக் காண வேண்டுமென்று மறுப்பதையும் காட்டுகிறது. இயேசுவின் எச்சரிக்கை மக்களைப் பார்த்துக் கூறப்பட்ட தன்று; பொறுப்புடைய மறைநூலறிஞர் களுக்குக் கூறப்பட்டதாகும்.

இந்தப் பகுதியும் 2 தெச 1:8-9-இல் வரும் பவுல் கூறுபவையும் சேர்த்துப் பேசப்படு கின்றன. ஆங்கே நற்செய்தியை நம்பாதவர் முடிவில்லா அழிவை அடைவர் என்று பவுல் கூறுகிறார். எபிரேயருக்குத் திருமுகம் எழுதிய ஆசிரியர், ஒருமுறை விசுவாச ஒளிபெற்றுப் பின் பதிதர்கள் ஆனவர்கள் இறைமகனைத் தாங்களே சிலுவையில் அறைந்து அவரை வெளிப்படையாக இகழ் கின்றனர்; அவர்கள் விசுவாசத்தை மீண்டும் சீர்திருத்த முடியாது என்று கூறுகிறார் (எபி 6:4-6). திருமுழுக்குக்குப்பின் செய்த பாவம் மன்னிக்கப்பட முடியாது என்றும், இறை மகனையும், உடன்படிக்கையின் இரத்தத் தையும் அருள்தரும் ஆவியையும் நிராகரித்த வன் பெரிய தண்டனைக்குத் தகுதியுள்ள வன் (10:26-31) என்றும் கூறுகிறார். முத லாம் யோவான் திருமுகம் எழுதிய ஆசிரி யர் பாவம் செய்பவனுக்காகச் செபிக்க ஆலோசனை கூறத் தயங்குகிறார் (1 யோவா 5:14-17).

எனவே, மன்னிக்க முடியாத பாவம் விவிலியத்தின் ஒரே இடத்தில் மட்டுமல்லா மல், பல இடங்களிலும் கடுமையான தண்டனையோடு குறிப்பிடப்படுகிறது (எண் 15:30-31; மத் 11:21-24; மாற் 14:21; லூக் 10:13-15; திருவெளி 14:9-11). இருப் பினும், இப்பாவத்தை வலியுறுத்திக் கூறு தல் இஃது இறைவனுடைய அளவு கடந்த இரக்கத்தைக் குறைவுபடுத்தக் கூடாது. கர்த்தர் கற்பித்த செபத்தில் நம் பாவங்களை மன்னிக்க நாம் வேண்டுகிறோம். இயேசு தம்மைச் சிலுவையில் அறைந்தவர்களுக் காகவும் வேண்டினார். பேதுரு இயேசுவை மும்முறை மறுதலித்த பின்னும் மன்னிப் புப் பெற்றார்.

மன்னிக்கமுடியாத பாவமானது, முடி வில் தண்டனை பெறவல்ல ஒரே ஒரு செயலை மட்டும் குறிக்கவில்லை. இது மனிதன் புரியாமல், தெரியாமல் செய்யும் பாவமன்று. மேலும், இது நற்செய்தியை அறியாத பிறமதத்தினரின் செயல்களையும் குறிப்பிடவில்லை. மாறாக, இப்பாவம், மனிதன் இயேசுவை முழுமையாக அறிந்த பின், வேண்டுமென்று, தொடர்ந்து வெறுத்து, அவரது செயல்களை இறை வனது செயல்களாக ஏற்க மறுப்பதாகும். இறைவனை வெளிப்படுத்துபவர் என்ற அளவில் சொல்லிலும் செயலிலும் வாழ்வு மற்றும் சாவின்மேல் இயேசு கோரிய உரிமையை நிராகரிப்பதாகும். அவரை அறிந்தவன் அவரை நிராகரிப்பது நற்செய்தி உண்மைக்குத் தன்னையே புறம்பாக்கி, அழிவிற்குத் தன்னையே தீர்ப்பிட்டுக் கொள்வதாகும். இந்த அளவில், இந்தக் கடுமையான இறைவாக்குகள் இப்பெரிய வெளிப்பாட்டை நிராகரிக்க வேண்டாம் என்று மனிதர்களை எச்சரிக்கிறது. கிறிஸ்து வில் நிறைவைத் தரும் அருளை நிராகரித் தால் இழப்பும் அழிவுமே மிஞ்சும்.

ஆவி அளிக்கும் சாட்சியத்தை மறுக்கும் மனிதன் இறைவனைப் பொய்யராக்கு கிறான் (1 யோவா 5:10). இது முழு ஆன்மீக அமைப்பைச் சீர்கெடச் செய்கிறது. ஒருவனை ஏற்புடைமையின் அரசுக்குப் புறம்பாக்குகிறது. இந்த நெறிபிறழ்வு, இறைவன் இலவசமாக அளிக்கும் அருளை ஏற்றுக்கொள்வதற்கு ஒருவரை ஆற்றல் இழக்கச் செய்கிறது.

**மன்னிக்காத ஊழியன்** (UNFORGIVING SERVANT)

என் சகோதரனை எத்தனை முறை மன்னிப்பது? எனக்கேட்ட பேதுருவுக்குப் பதிலாக இயேசு இந்த நீதிக்கதையைக் கூறுகின்றார் (மத் 18:23-35). தலைவனிடம் மன்னிப்புப் பெற்றவன் தன் உடனூழி யனை மன்னிக்க மறுக்கிறான். எனவே, தலைவன் அந்த மன்னிக்காத ஊழியனைத் தண்டிக்கிறான். இந்த நீதிக்கதை விண்ணர சில் நுழைய வேண்டிய குணநலனைக்

குறிப்பிடுகிறது. மற்றவரை மன்னிக்க மறுப்பது பாவத்திலே கொடிய பாவம். நமது கொடிய பாவங்களையெல்லாம் இறைவன் மன்னிக்கக் காத்திருக்கும்போது அயலாரின் சிறிய குற்றங்களை நாம் மன்னிக்க மறுக்கலாகாது. நாம் மறுத்தால் தந்தையும் நம் குற்றங்களை மன்னிக்க மாட்டார்.

**மன்னிப்பு** (FORGIVENESS, PARDON)

I. விவிலியத்தில் பாவியானவன் ஒரு கடனாளியாகவும், இறைவன் தனது மன்னிப்பினால் அவனுடைய கடனை நீக்குபவராகவும் உள்ளார் (எண் 14:19). இந்த நீக்குதல் எந்த அளவிற்கு ஆற்றல் மிக்கதெனில் பாவங்களை அவரது முதுகுக்குப் பின்னால் எறிந்துவிட்டு (எசா 38:17), அவற்றை நீக்கிவிட்டு (யாத் 32:32), பரிகாரம் செய்து அவற்றை அழித்த (எசா 6:7) இறைவன் பாவத்தினை இனி ஒருபோதும் பார்ப்பதில்லை. அதே சொற்றொகுதியைப் பயன்படுத்தி, இந்தப் பாவநீக்குதலானது, கைம்மாறு கருதாததாகும் என்றும், கடனாளி கடன் தீர்க்கப்பட முடியாதவன் ஆகிறான் என்றும் கிறிஸ்து வலியுறுத்துகிறார் (லூக் 7:42; மத் 18:25-27). முதன்மையான போதனையானது ஆவியின் கொடையுடன் சேர்த்து, அதன் முதல் விளைவாகிய பாவமன்னிப்பை முக்கியமானதாகக் கொண்டுள்ளது (லூக் 24:47; அ.ப. 2:38). தூய்மைப்படுத்துதல், கழுவுதல், நியாயப்படுத்துதல் போன்ற மற்றும் சில சொற்கள் மன்னிப்பை உணர்த்துகின்றன. மன்னிப்பின் நேரடிக் கூறுகளான ஒப்புரவையும் ஒன்றிப்பையும் வலியுறுத்துகின்ற அப்போஸ்தலிக்க நூல்களில் இவை தோன்றுகின்றன.

II. **மன்னிப்பின் இறைவன்:** பாவத்துடனான நேருக்குநேர் சந்திப்பில், சகித்துக் கொள்ளாத இறைவன் (யாத் 20:5) மன்னிப்பின் இறைவனாக தன்னை வெளிப்படுத்துகிறார். உடன்படிக்கைக்கு வாய்ப்பளித்து மக்களுக்கு அழிவினைப் பெற்றுத் தந்த பதிதம் (யாத் 32:30-32), ''இரக்கமும் தயவும் உள்ள இறைவன் சினம் கொள்ளத் தயங்குபவர்; பேரன்பு மிக்கவர்; நம்பிக்கைக்குரியவர்; கொடுமையையும், குற்றத்தையும் பாவத்தையும் மன்னிப்பவர்; ஆனால், தண்டிக்காமல் எதையும் விட்டுவிடுவதில்லை'' என்று இறைவன் தன்னைப் பற்றி பறைசாற்றுவதற்கு வாய்ப்பாக அமைகிறது. இவ்வாறு ''இம்மக்கள் வணங்காக் கழுத்துள்ள மக்கள் எனினும், என் தலைவா! நீர் எங்களோடு வந்தருளும். எங்கள் கொடுமையையும் பாவத்தையும் மன்னித்து எங்களை உம் உரிமைச் சொத்தாக்கிக் கொள்ளும்'' (34:6-9) என்று மோசே நம்பிக்கையோடு மன்றாடுகிறார்.

மனித மற்றும் சட்டரீதியான பார்வையில் மன்னிப்பானது நியாயப்படுத்தப்படவில்லை. தூய இறைவன் தனது தூய்மையை நீதியால் வெளிப்படுத்தி (எசா 5:16) தன்னை இகழ்பவரைத் தண்டிக்கக் கூடாதா (5:24)? உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கமற்ற, தனது வேசித்தனத்திற்காக வெட்கமடையாத துணைவி எவ்வாறு மன்னிப்பை எதிர்பார்க்கலாம் (எரே 3:1-5)? ஆனால், இறைவனுடைய இதயம் மனிதனுடைய இதயத்தைப் போன்றதன்று. தூயவர் அழிக்க விரும்பவில்லை (ஓசே 11:8-9). பாவியினுடைய மரணத்திற்குப் பதிலாக, தன்னுடைய மன்னிப்பை அவன் மேல் பொழிவதற்காக அவனுடைய மனமாற்றத்தினை அவர் எதிர்பார்க்கிறார் (எசே 18:23); ஏனெனில், ''அவருடைய வழிமுறைகள் நம் வழிமுறைகளல்ல... மண்ணுலகத்திலிருந்து விண்ணுலகம் மிக உயர்ந்திருப்பது போல நம் எண்ணங்களை விட அவருடைய எண்ணங்கள் மிக உயர்ந்திருக்கின்றன'' (எசா 55:7-9).

தனது குற்றத்தை அறிக்கையிடுகின்ற பாவியை இறைவன் மன்னிப்பதன் காரணமாக, சங்கீத ஆசிரியரின் செபம் நம்பிக்கை மிக்கதாக உள்ளது (சங் 32:5; காண்க. 2 சாமு 12:13). இறைவன் அவனை இழக்க விரும்பவில்லை (சங் 78:38). அவனை வெறுப்பதற்குப் பதிலாக, மகிழ்ச்சியால் அவனுடைய வருந்துகின்ற தாழ்ந்த இதயத்தினைத், தூய்மைப்படுத்தி நிரப்புவதனால், அவர் அவனை மீண்டும் படைக்கிறார் (சங்

*51:10-14.19;* காண்க. *32:1-11)*. அவர் தனது அனைத்துப் பிள்ளைகளையும் மன்னிக்கின்ற தந்தையாக இருப்பதனால், இறைவன் மீட்பினுடைய அளவற்ற ஊற்றாக இருக்கிறார் *(சங் 103:3.8-14)*. நாடு கடத்தப்பட்ட பின்னர் ''தயையும்'' (நெகே 9:17) மற்றும் ''இரக்கமும், மன்னிப்பும் உள்ள இறைவன்'' *(தானி 9:9)* என இறைவன் இடைவிடாமல் அழைக்கப்படுகிறார். பாவியானவன் மனமாறினால் தான் அச்சுறுத்திய தீமைகள் அனைத்தையும் விலக்கிக்கொள்ள அவர் என்றும் தயாராக உள்ளார் *(யோவே 2:13)*. ஆனால், இஸ்ராயேலினுடைய ஒதுங்கி வாழும் தனித்துவத்தின் முன்மாதிரியான யோனா, இம்மன்னிப்பு அனைவருக்கும் அளிக்கப்படுவது கண்டு கலக்கமுறுகிறார் *(யோனா 3:10; 4:2)*. யோனாவிற்கு முரண்பட்ட விதத்தில் ஞான நூலானது தான் படைத்த அனைத்தையும் அன்பு செய்கிற, அனைவர் மீதும் தயவு கொண்ட, மனந்திரும்புவதற்கென மனிதருடைய பாவங்களை விலக்குகின்ற, சிறிதுசிறிதாக அவர்களைத் தண்டித்து, அவரில் விசுவாசங்கொள்வதற்காக அவர்கள் எவ்வாறு பாவம் புரிகின்றனர் என்பதை நினைவுபடுத்துகின்ற இறைவனுக்குப் புகழ்ச்சிப் பண் இசைக்கின்றது *(ஞான11:23-12:2)*. இவ்வாறாக, மன்னிக்கும் சிறப்புப் பண்புடைய எல்லாம் வல்லவர் தானே என்பதை அவர் காட்டுகிறார் *(ஞான11:23.26)*.

**III. கிறிஸ்து வழியாக இறைவனுடைய மன்னிப்பு:**

**1.** இஸ்ராயேலைப் போன்று (லூக் 1:77) திருமுழுக்கு யோவானும் பாவங்கள் நீக்கப்படுதலை எதிர்நோக்கியுள்ளார். இந்த நீக்குதலுக்கு நிபந்தனையான ஒரு திருமுழுக்கினை அவர் போதிக்கிறார்; தவம் செய்யுங்கள் அல்லது வரவிருப்பவர் தீயினால் உங்களுக்குத் திருமுழுக்கு அளிப்பார். யோவானைப் பொறுத்தமட்டில் இத்தீயானது நல்ல தானியம் பிரிக்கப்பட்ட பின் பதரைச் சுட்டெரிக்கின்ற கோபத்தீயாகவும் மற்றும் தீர்ப்பாகவும் உள்ளது *(மத் 3:1-12)*. இயேசுவைப் பின்பற்றிய யோவானின் சீடர்களும் இதே கருத்தைக் கொண்டுள்ளனர். போதகருடைய போதனைக்குச் செவி கொடுக்க மறுப்பவர்கள் மீது வானங்களினின்று நெருப்பு விழ வேண்டுமென அவர்கள் விரும்புகின்றனர் *(லூக் 9:54)*. இயேசு பாவிகளை மனந்திரும்பி விசுவசிக்குமாறு அழைப்பதோடு மட்டுமன்றி(மாற் *1:15)*, அவர்களைக் குணப்படுத்தி மன்னிக்க மட்டுமே வந்ததாகக் கூறுவதைக் கேள்விப்பட்டு, திருமுழுக்கு யோவானும் வியப்புறுகிறார் *(லூக் 7:19-23)*.

**2. மன்னிப்பின் செய்தி:** உண்மையில் இயேசு மண்ணுலகில் தீ வைக்க வந்தாரெனில் *(லூக் 12:49)*, அவர் தனது தந்தையால் நீதிபதியாக இல்லாமல், மீட்பராகவே அனுப்பப்பட்டார் *(யோவா 3:17-18; 12:47)*. மனமாற்றம் தேவையாக உள்ள அனைவரையும் மனம் மாற அவர் அழைக்கிறார் *(லூக் 5:32 இணை)*. இறைவன் மன்னிப்பதில் மகிழ்கிற தந்தை *(லூக் 15)*, மற்றும் எவரும் தொலைந்து போவதை விரும்பாதவர் என்பதை வெளிப்படுத்துவதன் மூலம் *(மத் 18:12-14)* அவர் இந்த மன மாற்றத்தைத் தூண்டிவிடுகிறார் *(லூக் 19:1-10)*. செருக்கானது புறக்கணிக்கின்ற வேளையில் தாழ்மையான விசுவாசமானது ஏற்கின்ற மன்னிப்பை மட்டும் இயேசு போதிக்கவில்லை *(லூக் 7:47-50; 18:9-14)*. அவர் மன்னிப்பின் வல்லமையைச் செயல்படுத்துகிறார். இறைவனுக்கு மட்டுமே உரிய ஒரு வல்லமையை அவர் கொண்டுள்ளார் என்பதற்கு அவரது செயல்கள் சான்று பகர்கின்றன *(மாற் 2:5-11 இணை;* காண்க. யோவா *5:21)*.

**3. பாவங்களை நீக்குவதற்கான பலி:** பாவிகளுக்காக தனது தந்தையின் மன்னிப்பைப் பெறுவதன் மூலம் கிறிஸ்து தனது பணியை உச்ச நிலையடையச் செய்கிறார். அவர் பாவங்களை நீக்குவதற்காகச் *(மத் 26:28)* செபிக்கிறார் *(லூக் 23:24)*; இரத்தம் சிந்துகிறார் *(மாற் 14:24)*.இறைவனுடைய உண்மையான ஊழியன் என்ற நிலையில் அவர்களுடைய பாவங்களைத்

தன்மீது ஏற்றுக்கொள்வதன் மூலம் அவர் மக்கள் திரளை ஏற்புடையதாக்குகிறார் (1 பேதுரு 2:24; காண்க. மாற் 10:45; எசா 53:11-12). ஏனெனில், உலகைக் காப்பாற்றுவதில் உலகின் பாவங்களைப் போக்குகின்ற செம்மறி அவரே (யோவா 1:29). அவரது இரத்தத்தினால் நாம் தூய்மைப்படுத்தப்பட்டு, நமது தவறுகளினின்று சுத்தப்படுத்தப்படுகிறோம் (1 யோவா 1:7; திருவெளி 1:5).

**4. மன்னிக்கும் ஆற்றலை அளித்தல்:** விண்ணிலும் மண்ணிலும் அனைத்து வல்லமையும் கொண்டவராய், பாவங்களை நீக்கும் ஆற்றலை உயிர்த்த கிறிஸ்து, அப்போஸ்தலர்களுக்கு அளிக்கிறார் (யோவா 20:22-23; காண்க. மத் 16:19; 18:18). முதல் பாவ விலக்கானது, மனம் மாறி இயேசுவின் பெயரில் விசுவாசங்கொள்ளும் அனைவருக்கும் திருமுழுக்கின்போது அளிக்கப்பட வேண்டும் (மத் 28:19; மாற் 16:16; அ.ப. 2:38; 3:19).

பாவத்தை விலக்குவதைப் பற்றி அப்போஸ்தலர்கள் போதிக்கின்றனர் (அ.ப. 2:38; 5:31; 10:43; 13:38; 26:18). ஆனால் அவர்கள் தங்களுடைய திருமுகங்களில் மன்னிப்பினுடைய சட்டரீதியான தன்மையைவிட இயேசுவின் மூலமாக நம்மைக் காப்பாற்றிப் புனிதப்படுத்துகின்ற இறை அன்பினை அதிகமாய் வலியுறுத்துகின்றனர் (உரோ 5:1-11). ஒருவரது பாவங்களுக்கான மன்னிப்பை அடைவதற்கான வழிமுறையாக ஒருவர்க்கொருவர் பாவங்களை அறிக்கையிடுதல் மற்றும் திருச்சபையினுடைய செபம் ஆகியவற்றினுடைய பங்கு குறிப்பிடத்தக்கது (யாக் 5:15-16).

IV. **குற்றங்களுக்கான மன்னிப்பு:** பழைய ஏற்பாட்டில் சட்டமானது ஏற்கெனவே பழிக்குப் பழி விதியின் மூலம் பழி தீர்த்தலின்மீது ஒரு கட்டுப்பாடு விதித்ததோடு (யாத் 21:15), சகோதரன் மீதான வெறுப்பையும், அயலார் மீதான பழிவாங்குதலையும், கடுவெறுப்பையும் தடை செய்கிறது (லேவி 19:17-18). இவ்விதிகளைப் பற்றித் தியானித்த சீராக்கு என்னும் ஞானி, அயலானுக்கு மனிதன் அளிக்கும் மன்னிப்பிற்கும் அவன் இறைவனிடம் கேட்கும் மன்னிப்பிற்கும் இடையிலான பிணைப்பைக் கண்டுபிடித்தார் (சீரா 27:30-28:7). ''அடுத்தவர் செய்த அநீதியை நீ மன்னித்துவிடு; அவ்வாறெனில் நீ மன்றாடும்போது உன் பாவங்கள் மன்னிக்கப்படும். மனிதர், மனிதர் மீது சினம் கொள்கின்றனர்; அப்படியிருக்க, ஆண்டவர் தங்களுக்கு நலம் அளிப்பார் என எப்படி எதிர்பார்க்க முடியும்? மனிதர் தம்மை ஒத்த மனிதர்மேல் இரக்கம் கொள்வதில்லை; அப்போது அவர்கள் தம் பாவமன்னிப்புக்காக எப்படி மன்றாட முடியும்?'' (சீரா 28:2-4). நீதிமான்கள் தாங்கள் தீர்ப்பிடும்போது இறைவனுடைய இரக்கத்தை எடுத்துக்காட்டாகக் கொள்ள வேண்டும் என நினைவுறுத்திய வாறு ஞான நூலானது இப்படிப்பினையை நிறைவு செய்கிறது (ஞான 12:19.22). இந்த இருவிதப் படிப்பினையை இயேசு ஏற்று, அதனை மாற்றியமைப்பார். சீராக்கு நூல் ஆசிரியரைப் போன்று, தனது சகோதரனை மன்னியாதவனை இறைவன் மன்னிக்க மாட்டாரென அவர் கற்பிக்கிறார். இரக்கமற்ற கடனாளியின் உவமையானது இந்த உண்மையை ஆற்றலுடன் மனதில் பதிய வைக்கிறது (மத் 18:23-35). இந்த உண்மையைக் கிறிஸ்து வலியுறுத்தி ''வானிலுள்ள எம் தந்தாய்'' என்னும் செபத்தில் அதனை அடிக்கடி கூறச் செய்து, அதனை மறப்பதினின்று நம்மைத் தடுக்கிறார். நாங்கள் மன்னிக்கிறோம் என்று கூறக்கூடியவர்களாக நாம் இருக்க வேண்டும். இக்கூற்று ஓரிடத்தில், சொற்களில், இறை மன்னிப்பினுடைய நிபந்தனையாக மன்னித்தலை அமைக்கின்றது (லூக் 11:4); மற்றோரிடத்தில் அதை அளவையாக நிறுவுகிறது (மத் 6:12). இது நமது வேண்டுதலுடன் இணைந்துள்ளது.

இயேசு மேலும் தொடர்கிறார். ஞான நூலினை ஒத்தவாறு, தான் தந்தையாக இருப்போருக்கும், தனது பிள்ளைகளாக இருப்பதற்குத் தன்னைப் பின்பற்ற வேண்டி

யவர்களுக்கும் (*மத் 5:43-45;48*) அவர் இறைவனை இரக்கத்தின் மாதிரியாக எடுத்துக்கூறுகிறார் (*லூக் 6:35-36*). மன்னிப்பு என்பது புதிய வாழ்வினுடைய தொடக்க நிலை நிபந்தனை மட்டுமன்று; அஃது அதனுடைய அத்தியாவசியக் கூறுகளில் ஒன்றுமாகும். எனவே, மன்னிப்பதில் சோர்வடையக்கூடாதென இயேசு பேதுருவுக்குக் கட்டளையிடுகிறார். தனது பழிவாங்குதலின் முழு அளவினை வலியுறுத்துகின்ற பாவிக்கு முற்றிலும் எதிரான நிலை இது (*மத் 18:21-22; காண்க. ஆதி 4:24*). நம்முடைய ஆண்டவரைப் பின்பற்றியவாறு (*லூக் 23:34*), தன்னைக் கல்லால் எறிபவர்களை மன்னித்தவாறு ஸ்தேவான் மரித்தார் (*அ.ப. 7:60*). ஸ்தேவான் மற்றும் இயேசுவைப் போல இருப்பதற்கும், தீமையை நன்மையால் வெல்வதற்கும் (*உரோ 12:21; காண்க. 1 பேதுரு 3:9*) கிறிஸ்தவன் எப்போதும் மன்னிக்க வேண்டும். மேலும், கிறிஸ்துவைப் போலவும் (*கொலோ 3:13*), அவரது தந்தையைப் போலவும் (*எபே 4:32*) அன்பினால் மன்னிக்க வேண்டும்.

# மா

**மாகதாய்** (MAADAI - அணிகலன்கள்)

புறவின மனைவிமார்களை விட்டு விடும்படி எஸ்ராவால் கட்டாயப்படுத்தப் பட்டவருள் இவரும் ஒருவர் (எஸ் 10:34).

**மாகாசு** (MAAZ - கோபமுள்ள)

யூதாவைச் சேர்ந்தவர். இராமின் மகனும், எரகுமவேலின் பேரனும் ஆவார் (1 நாள் 2:27).

**மாகாத்து** (MAHATH - பிடிப்புள்ள)

1. இவர் கோகாத்திய லேவியர்; அமாசாயின் மகனும் சாமுவேல் மற்றும் ஆலயப் பாடகர் ஏமான் ஆகியோரின் முன்னோரும் ஆவார் (1 நாள் 6:35).

2. எசேக்கியா காலத்தில் ஆலயத்தைத் தூய்மைப்படுத்தியதில் பங்கெடுத்த ஒரு கோகாத்திய லேவியர்; அமாசாயின் மகன் (2 நாள் 29:12). மேலும், இவர் கோயில் காணிக்கைகளை மேற்பார்க்கவும் நியமிக் கப்பட்டார் (31:13).

**மாகோகு** (MAGOG)

இது கோகுவின் நாடு (எசே 38:2; 39:6). மோசேக்கு மற்றும் தூபால் ஆகியவர்களின் முதன்மைத் தலைமையைக் கொண்டது (38:3). நாடுகளின் பட்டியலில் எப்பேத்தின் மகன் (ஆதி 10:2; 1 நாள் 1:5), மேசேக்கு மற்றும் தூபால் ஆகியவற்றோடு மாகோகு கொண்டிருக்கும் தொடர்பு, கருங்கடலின் தென்கரையில் அஃது இருந்திருக்கலாம் என்று கருத இடம் தருகிறது. கோகு மற்றும் மாகோகு என்ற பெயர்களில் காணப்படும் ஒலியியைவு காரணமாக, எசேக்கியேலின் மூல வாசகத்தில் மாகோகு செருகப்பட்டிருக்கிறது என்று நவீன ஆய் வாளர்கள் கருதுகின்றனர். திருவெளி 26:8-இல் கோகு மற்றும் மாகோகு என்ற பெயர்கள் ஆட்களின் பெயர்களாக உள் ளன. இறுதிக்கால இயலில், இவ்விருவரும் இறைவன் மற்றும் அவருடைய மக்களின் எதிரிகளைக் குறிக்கும் பொது அடையாள மாக உள்ளனர்.

**மாகோர் - மிசாபிபு** (MAGOR - MISSABIB - சுற்றிலும் பேரச்சம் எப்பக்கமும் திகில்)

எருசலேம் நகர அழிவைப் பற்றி இறை வாக்குரைத்த எரேமியாவை இம்மேர் என்ப வரின் மகன் பஸ்கூர் சிறையில் அடைத் தான். அவனது பெயரை மாற்றி, எரேமியா ''எப்பக்கமும் திகில்'' அல்லது ''சுற்றிலும் பேரச்சம்'' என்று பொருள்படும் மாகோர்-மிசாபிபு என்ற பெயர் கொடுத்து அழைத் தார் (எரே 20:3). இந்தச் சொற்றொடர் பழைய ஏற்பாட்டில் மேலும் பல இடங் களில் காணப்படுகிறது (சங் 31:13; எரே 6:25; 20:10; 46:5; 49:19; புல 2:22). இப்பெயர் யூதாவுக்கு வரவிருக்கும் அழிவைச் சுட்டிக்காட்டுவதாக அமைந் துள்ளது.

**மாகோல்** (MAHOL - நடன அரங்கம்)

ஏமான், கல்கோல், தர்தா (ஒருவேளை எசுராகியரான ஏத்தான், காண்க. சங் 88-89 மேல்குறிப்பு) ஆகியவர்களின் தந்தையாவர் மாகோல். இவரது இந்தப் புதல்வர்கள் அறிவில் மற்ற மனிதர்களைவிட, சிறந்து விளங்கினர். ஆனால், சாலமோன் அரசர் இவர்கள் எல்லோரையும் விட ஞானத்தில் சிறந்து விளங்கினார் (1 அர 5:11). ஆனால், 'மகோலின் புதல்வர்' என்பதற்கு உண்மை யான பொருள் இசைச்சங்க உறுப்பினர் என்றிருக்கலாம். ஏமான் ஆலய இசைக் கலைஞர் (1 நாள் 6:33). ஏத்தான், ஏமான், கல்கோல் மற்றும் தர்தா ஆகியோர் செரகு வின் புதல்வர்களாகக் குறிக்கப்படுகின்றனர் (2:6). ஞானமும், இசையும் ஒன்றோ டொன்று பின்னிப் பிணைந்திருப்பதாக எபிரேய மக்கள் கருதியதால் ஞானமுற் றுள்ளோரைப் பழங்கால இசைச்சங்கத் தோடு சேர்த்தனர் (1 நாள் 25:2; 2 நாள் 29:30).

**மாக்கா** (MAACAH - மந்தமான, அறிவில் லாத) - ஆள்

1. ஆபிரகாமின் சகோதரர் நாகோருக்கும், இரயுமாவுக்கும் பிறந்த மகன் (ஆதி 22:24).

இது மாக்கா அரசின் குலப்பெயர் மூதாதையரின் பெயர்.

*2.* தாவீது அரசனின் மகனான அப்சலோமின் தாயும், கெசூரின் அரசனான தல்மாயின் மகளும் ஆவாள் *(2 சாமு 3:3; 1 நாள் 3:2).*

*3.* காத்தின் அரசனான ஆக்கிசுவின் தந்தையும் சாலமோன் அரசனின் சமகாலத்தவரும் ஆவார் *(1 அர 2:39).*

*4.* யூதாவின் அரசனான ரெகபயாமின் அன்பு மனைவியும், அபியாம் அரசனின் தாயும் ஆவாள் *(1 அர 15:2-3). 2 நாள் 13:2*-இல் அபியாமின் (அபியா) தாய் மீக்காயா என்றழைக்கப்படுகிறாள். ஆனால், வாசகங்களில் சிறிது குழப்பம் உள்ளது. அபியாமின் தாய்வழிப் பாட்டன் (மாக்காவின் தந்தை) *2 நாள் 13:2*-இல் கிபயாவின் உரியேல் என்றும், *1அர 15:2; 2 நாள் 11:20-21*-இல் அபிசலோம் (அதாவது தாவீது, மாக்கா ஆகியோரின் மகனான அப்சலோம்) என்றும் குறிக்கப்படுகிறார். இக்குழப்பத்தைத் தீர்க்கும் வழியாக, அபியாமின் தாயாகிய மாக்கா உரியேல், தாமார் ஆகியோரின் மகள் *(1 சாமு 14:27)* என்றும் ஆகவே அப்சலோமின் பேத்தி என்றும் கருதப்படுகிறாள். அபியாமின் மகன் ஆசா *(1 அர 15:8)*, அபிசலோமின் *(15:10)* மகள் அல்லது பேத்தியான மாக்காவின் மகன் என்றழைக்கப்படுகிறான். உண்மையில் அவளது பேரனாவான். ஆசாவின் ஆட்சிக் காலத்தில் தாய் அரசி என்ற முறையில் மாக்கா முக்கியத்துவம் பெற்றிருந்தாள். ஆனால், கானானிய பாலினப்பெருக்க வழிபாட்டுக்கு எதிராக ஆசா சீர்திருத்தம் செய்தபோது மாக்கா பதவி இழந்தாள் *(1 அர 13:2; 2 நாள் 15:16).*

*5.* இவள் காலேபு(2)வின் வைப்பாட்டி. காலேபியரின் முன்னோர் *(1 நாள் 2:48).*

*6. 1 நாள் 7:14-19* என்ற பழுதுபட்ட வாசகத்தின்படி, இவள் மனாசேயின் மகனும் கிலயாதின் தந்தையுமான (காண்க. *எண் 26:29)* மாக்கிரின் சகோதரி *(1 நாள் 7:15)* அல்லது மனைவி *(7:16)* ஆவாள்.

*7.* இவள் கிபயோன் மற்றும் அரசன் சவுல் போன்ற பென்யமினியரின் முன்னோரான எயியேலின் மனைவி *(1 நாள் 8:29; 9:35)* ஆவாள்.

*8.* இவர் தாவீதின் வலிய வீரர்களுள் ஒருவரான அனானின் தந்தை ஆவார் *(1 நாள் 11:43).*

*9.* இவர் தாவீது ஆட்சியில் சிமியோன் இனத்தின் படைத்தலைவரான செபற்றியாவின் தந்தை ஆவார் *(1 நாள் 27:16).*

**மாக்கா** (MAACAH - மந்தமான, அறிவில்லாத) - இடம்

இது கோலான் முகடுகளில் அமைந்திருந்த சிறிய அரமேய (சீரிய) அரசாகும். இஃது எர்மோன் மலைக்குத் தெற்கிலும், பாசானுக்கு மேற்கிலும், யோர்தான் தோன்றும் பகுதிக்குக் கிழக்கிலும், கெசூருக்கு வடக்கிலும் அமைந்திருந்தது. இது கெசூர் அரசோடு சேர்ந்து இஸ்ராயேல் படையெடுப்பை ஓரளவு எதிர்த்து நின்றது *(உப 3:14; யோசு 12:5; 13:11).* இது *யோசு 13:13*-இல் மாக்காத்து என்று குறிக்கப்படுகிறது. தாவீது காலத்தில் மாக்கா அரசு மீண்டும் சுதந்தரமாய் இருந்தது. அப்போது இது மற்ற அரமேய அரசுகளோடும் அம்மோனியர்களோடும் கூட்டணியாகத் திகழ்ந்தது. இந்தக் கூட்டணி இஸ்ராயேலரால் தோற்கடிக்கப்பட்டது *(2 சாமு 10:6).* மாக்காத்தியர் என்றழைக்கப்படும் தனிநபர்கள் மாக்கா அரசைச் சேர்ந்தர்களாகவோ, அருகில் உள்ள ஆபல்-பெத்-மாக்கா நகரைச் சேர்ந்தவர்களாகவோ இருந்தனர். இந்நகரம் தொடக்கத்தில் மாக்கா அரசைச் சேர்ந்ததாகவும் பிற்காலத்தில் நீண்ட காலத்திற்கு இஸ்ராயேலரின் உடைமையாகவும் கருதப்பட்டது *(2 சாமு 20:15-19).*

**மாக்காசு** (MAKAZ - முடிவு, எல்லை, வெட்டித்தள்ளு)

இது சாலமோனின் ஆட்சிக்குட்பட்ட இரண்டாவது மாவட்டத்தில் உள்ள ஒரு நகரமாகும் *(1 அர 4:9).* இஃது எக்ரோனுக்குத் தெற்கே 6 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத் ஏல்-முக்கெயிசின் என்ற இடமாக இருக்கலாம்.

**மாக்கி** (MACHI - குறைதல்)

கானான் நாட்டை வேவு பார்க்க அனுப்பப்பட்ட கெயுவேலின் தந்தை. இவர்கள் காத்துக் கோத்திரத்தைச் சார்ந்தவர்கள் (எண் 13:15).

**மாக்கிர்** (MACHIR - வாங்கப்பட்டவர்)

1. இவர் மனாசே (1)க்கும், அவரது வைப்பாட்டியான அசிரியேலுக்கும் பிறந்த முதல் மகனாவார் (யோசு 17:1; காண்க. 13:31; எண் 26:29). இவர் மாக்கிரியர்களின் குலப்பெயர் மூதாதையரும் கிலயாதியர்களின் முன்னோரான கிலயாதின் தந்தையுமாவார் (ஆதி 50:23; எண் 26:29; 1 நாள் 7:14).

மாக்கிரியர்களின் குடியிருப்பின் இரு கூறுகள் மீண்டும் மீண்டும் குறிப்பிடப்படுகின்றன. இவர்கள் கிலயாதைச் சேர்ந்த எமோரியப் பகுதியை வென்றனர். அங்கே குடியேற அனுமதி பெற்றனர் (எண் 32:39.40; உப 3:15; யோசு 13:31; 17:1; காண்க. 1 நாள் 2:21-23). கிலயாதின் பேரனான செலோபுகாது புதல்வியர்களை மட்டுமே கொண்டிருந்தார். அவர்களும் நாட்டில் பங்கு நிலம் பெறுவதற்கு வழி வகை செய்யப்பட்டது (எண் 26:33; 27:1-11; 36:1-12; யோசு 17:3-6; 1 நாள் 7:15). யோசு 5:14-இல் யோர்தான் ஆற்றுக்கு மேற்கே மாக்கிரியரின் ஒரு பகுதியைக் குறிக்கும் இடப்பெயராக மாக்கிர் பயன்பட்டுள்ளது. யோசு 27:1-இல் வரும் யோர்தானுக்கு மேற்கிலுள்ள சில இடங்களின் பெயர்கள் செலோபுகாதின் புதல்வியர் சிலரைக் குறிக்கலாம்.

2. இவர் லோதபாரில் வாழ்ந்தவர். இவரது வீட்டில் யோனத்தானின் மகன் மெபிபொசேத்து ஒரு காலத்திற்கு வாழ்ந்து வந்தார் (2 சாமு 9:4-5). அப்சலோமிடமிருந்து தாவீது தப்பி ஓடியபோது மாக்கிர் அவருக்கு உதவி செய்தார் (17:27).

**மாக்கேது** (MAKED)

இது கிலயாது நாட்டிலுள்ள ஒரு நகரம். இங்கிருந்துதான் யூதா மக்கபேயு கிரேக்கர்களால் அச்சுறுத்தப்பட்ட யூதர்களைக் காப்பாற்றினார் (1 மக் 5:26.39). இஃது இருந்த இடம் தெரியவில்லை.

**மாசா** (MASSA - பல்லவி, வாக்கு)

மாசா, இசுமயேலின் ஏழாவது மகனும், வட அரேபிய இனத்தாரின் குலப்பெயர் மூதாதையும் ஆவார் (ஆதி 25:4; 1 நாள் 1:30). மூன்றாம் திகிலத்பிலேசர் இசுமயேலின் மற்றக் குலப்பெயர்களுடன் மாசாவையும் குறிப்பிடுகின்றார்.

மாசா என்னும் இதே சொல் பழ 30:1; 31:1-இல் தலைப்பின் ஒரு பகுதியாகக் கூறப்படுகிறது. அனேகமாக இது மாசாவில் வாழ்ந்தவர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட சொல்லாக இருக்கலாம். ஆனால் பழ 31:1-இல் 'மாசா' என்ற சொல் சுட்டுச் சொல்லுடன் வராததால் இதை 'மாசாவின் அரசர்' என்று பொருள் கொள்ளலாம். இவ்வாறு பழ 30:1; 31:1-இல் வரும் 'மாசா' என்ற சொல் ஆதி 25:4; 1 நாள் 1:30-இல் வருவது போல வட அராபிய இனத்தைக் குறிக்கும்.

**மாசா மற்றும் மெரிபா** (MASSAH AND MERIBAH - சோதனை, கலகம் அல்லது வழக்காடுதல்)

இவை இஸ்ராயேலின் பாலைவன வாழ்க்கையோடு தொடர்புடைய இரு இடங்களின் பெயர்கள். இரண்டு பெயர்களும் சேர்ந்து மூன்று பகுதிகளில் குறிக்கப்படுகின்றன (யாத் 17:7; உப 33:8; சங் 95:8).

ஆய்வாளர் சிலர் இரு பெயர்களும் ஒரே இடத்தைக் குறிக்கின்றன என்று கருதினர். ஆனால் நவீன ஆய்வுகள், இவை இஸ்ராயேலர் ''ஆண்டவரைச் சோதித்த இரு ஒத்த நிகழ்ச்சிகளின் விவரிப்பைக் குறிக்கின்றன என்று காட்டுகின்றன. இரண்டிலும் ஆண்டவர் பாறையை அடிக்க மோசேக்குக் கட்டளையிடுகிறார். அதன் விளைவாகப் பாறையிலிருந்து தண்ணீர் புறப்படுகிறது (யாத் 17:5-6; எண் 20:5.8-9). முதல் நிகழ்ச்சி, பாலைவன வாழ்க்கையின் தொடக்கத்தில், சீன் பாலைவனத்தில்

ஒரேபு மலைக்கு அருகில் இரபிதிம் என்ற இடத்தில் நடந்தது (யாத் 17:1-7). இவ் விடம் மாசா என்றும் மெரிபா என்றும் அழைக்கப்பட்டது. இவ்விடம், உப 6:19; 9:22-இல், மாசா என்று மட்டும் அழைக்கப் படுகிறது. இரண்டாவது நிகழ்ச்சி, பாலை வன வாழ்க்கையின் இறுதியில் மெரிபா வில் நடந்தது. இந்த இடம் சீன் பாலை வனத்திலுள்ள காதேசு பர்னேயாவாக அடையாளம் காட்டப்படலாம் (எண் 20:1-13; காண்க. உப 9:23).

உப 33:8-இன்படி, மாசா/மெரிபாவில், இறைவன்தான் லேவியரைச் சோதித்து வழக்காடினார் (காண்க. சங் 83:7). ''மெரி பாவின் தண்ணீர் அருகில்'' இஸ்ராயேலர் கலகம் செய்தனர்; மோசே இறைவனில் நம்பிகை கொள்ளவில்லை. ஆகவே, ஆரோ னும் மோசேயும் வாக்களிக்கப்பட்ட நாட் டில் புகவில்லை (எண் 20:12; 27:14; உப 32:51; காண்க. சங் 106:32-33).

**மாசாய்** (MAASAI - யாவேயின் வேலை அல்லது செயல்)

பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்த ஒரு குருவின் பெயர். இவர் இம்மேரின் வழித்தோன்றல் (1 நாள் 9:12). இவரும் நெகே 11:13-இல் வரும் அமச்சா யும் ஒரே ஆளைக் குறிக்கலாம்.

**மாசால்** (MASHAL)

ஆசேர் பகுதியிலுள்ள ஒரு லேவியர் நகரம் (1 நாள் 6:74). காண்க. மீசால்.

**மாசிதோனியா** (MACEDONIA)

கிரேக்க நாட்டிற்கு வடபகுதியில் உள்ள இந்நாட்டு மக்களைக் கிரேக்கர்கள் காட்டு மிராண்டிகள் என அழைத்தனர். மாசிதோ னிய மன்னன் பிலிப்பு அரசனானபின் கிரேக்க நாட்டைக் கைப்பற்றினார். அவரது மகன் அலக்சாந்தர், மேற்காசியா முழுவதை யும் கைப்பற்றினார். இவர்கள் காலத்தில் மாசிதோனியா வரலாற்றில் முக்கிய இடத்தைப் பிடித்தது. இவர்களை மக்கபே யர் நூல்களின் ஆசிரியர் அறிந்திருக்கின்றார் (1 மக் 1:1; 6:2). புதிய ஏற்பாட்டுக் காலத்திலே இப்பகுதி தெசலோனிக்கே யாவைத் தலைநகராகக்கொண்டு ஓர் உரோமை மாகாணமாக விளங்கியது. பவுல், தமது முதலாம் (அ.ப. 16:9 தொ), மூன்றாம் மறைபரப்புப் பயணத்தின்போது (20:2தொ) இந்த மாசிதோனியாவிற்குச் சென்றார். மாசிதோனியாவிலுள்ள பிலிப்பி, தெசலோனிக்கேயா ஆகிய இடங் களில் திருச்சபைகளைப் பவுல் நிறுவினார். பவுல் மாசிதோனியாவில் தான் அடைந்த தொந்தரவுகளைச் சுட்டிக்காட்டுகிறார் (2 கொரி 7:5). ஆனால், அவர்கள் தங்கள் வறுமையிலும் தாராள மனதுடன் உதவி செய்ததைப் பாராட்டத் தவறவில்லை (2 கொரி 8:1 தொ).

**மாசியா** (MAAZIAH - யாவே புகலிடமாவார்)

1. தாவீதின் ஆட்சிக்காலத்தில் குருக் களில் இருபத்தி நான்காம் பிரிவை நிறுவிய குலப்பெயர் மூதாதையர் (1 நாள் 24:18).

2. நெகேமியாவின் தலைமையில் புதிய உடன்படிக்கையில் கையொப்பமிட்ட ஒரு குரு (நெகே 10:8).

**மாசில்லாக் குழந்தைகள் கொலை செய் யப்படுதல்** (INNOCENTS, SLAUGHTER OF THE)

இது மத் 2:16-18-இல் கூறப்பட்டுள்ள ஒரு நிகழ்ச்சி. ஞானிகள் வாயிலாக 'யூதர் களின் அரசன்' பெத்லகேமில் ஒரு குழந்தை யாகப் பிறந்துள்ளார் எனக் கேள்விப்பட்ட ஏரோது அரசன், தனது அரசைப் பறிப் பதற்கு அக்குழந்தை பிறந்துள்ளதாக நினைத்தான். ஞானிகள் தன்னிடம் திரும்பி வராமல் சென்றதைக் கண்டு கடுங்கோபம் கொண்டு, ஆட்களை அனுப்பி பெத்லகேமி லும் அதன் சுற்றுப்புறமெங்கும் இரண்டு வயதும் அதற்கு உட்பட்டதுமான ஆண் குழந்தைகளை எல்லாம் கொன்றான் (கொலையுண்டவர்களின் எண்ணிக்கை தொடக்ககாலத் திருச்சபையில் பல்லாயிர மாக இருக்கலாம் என்று கருதப்பட்டது. ஆனால், தொல்பொருள் செய்திகளிலிருந்து இந்த எண்ணிக்கை ஏறக்குறைய 20 அல்லது 30 இருக்கும்). இதன் மூலம் எரே 31:14-இல்

கூறப்பட்டுள்ள இறைவாக்கு நிறைவேறிய தாக மத்தேயு கூறுகிறார். ஆனால், இந்த வசனத்திற்கும் பெத்லகேமுக்கும் இடையே உள்ள தொடர்பு தெளிவாகத் தெரிய வில்லை. ஏனெனில், ராகேல் அடக்கம் செய்யப்பட்ட இடமான ராமா, எருசலே மிற்கு வடக்கே ஏறக்குறைய 16 கி.மீ. தொலைவில் இருக்கிறது *(காண்க. ஆதி 35:17; 48:7)*.

*யாத் 1-2*-இல் பார்வோனைப் பற்றியும், மோசேயைப் பற்றியும் விவரிக்கப்படுவதை இந்நிகழ்ச்சி நினைவுபடுத்துகிறது. எனி னும், இந்நிகழ்ச்சிக்கு வேறுசான்றுகள் இல் லாவிடினும், ஏரோது அரசனின் குணமும், செயல்களும், குறிப்பாக அவனது கடைசி ஆண்டுகளில் அவன் செய்தவைகளும், இந்நிகழ்ச்சி நடைபெற்றிருக்கலாம் என்றே காட்டுகின்றன. யோசிப்பஸ் இதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. இஃது அவர் பொது வாகவே மெசியாவைப்பற்றிய செய்தி களைத் தவிர்ப்பதின் ஒரு பகுதியாக இருக்க லாம். ஆனால், அவர் ஏரோது அரசன் செய்த இதைப் போன்ற, இதைவிடக் கொடூரமான செயல்களை எல்லாம் தன் னுடைய நூலில் விவரிக்கிறார். சான்றாக, தனது இறப்பைக் குறிப்பதற்கு ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒரு உறுப்பினரைக் கொலை செய்ய வேண்டுமென்று ஏரோது ஆணையிட்டிருந்தான் என்று யோசிப்பஸ் கூறுகிறார்.

**மாசின்மை** (INNOCENCE)

கடவுளைத் தன் பாவத்தால் நோகச் செய்யாத ஒரு நிலை, அல்லது பாவத்தி னின்று விடுதலை பெற்ற ஒரு நிலையை இது குறிக்கும்.

பழைய ஏற்பாட்டிலே இது மூன்று முறை பயன்படுத்தப்பட்டுள்ளது *(ஆதி 20:5; சங் 26:6; 73:13)*. இதன் எபிரேய மூலச்சொல்லுக்குத் 'தூய்மையான' என்பது பொருள். அதாவது பாவத்திலிருந்து தூய்மை *(யாத் 23:7; 2 அர 24:4)*, மாசற்றவன் எனப்படுபவன் கடவுளுக்கும் மனிதருக்கும் எதிராக பாவம் புரியாதவன் என்பதைக் குறிக்கும் *(யாத் 20:7; உப 5:11; எரே 2:34)*. இதற்குக் குற்றமற்றவன், ஏற்புடையவன் எனவும் பொருள் கூறலாம் *(ஆதி 7:1; யோபு 1:1; சங் 17:23)*. இதற்கு முழுமையான என்ற பொருளும் கூறலாம் *(லேவி 22:21)*.

பழைய ஏற்பாட்டில் மாசின்மை என்பது ஒழுக்கத்தின் கண்ணோட்டத்தில்தான் கூறப் பட்டது. கடவுளின் திட்டமே ஐந்நூல் (தோரா) என்ற கருத்து பரவி வந்ததால் இந்த ஐந்நூலைக் கடைப்பிடிப்பவனே மாசற்றவன் எனக் கருதப்பட்டது. கடவுள் மட்டுமே நல்ல உள்ளத்தை உருவாக்கி, பாவத்தை நீக்க முடியும் என நம்பினர்.

புதிய ஏற்பாட்டிலே இச்சொல் எட்டு முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கே நான்கு கிரேக்கச் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இவை கலப்பற்ற, தூய்மை யான *(மத் 10:6; பிலி 2:15)*, நீங்கிய அல்லது விடுதலை பெற்ற *(மத் 27:4.24)*, நீதியுள்ள, நேர்மையான *(மத் 23:35; லூக் 23:)*, தூய்மையான *(அ.ப. 18:6; 20:26)* ஆகிய பொருள்களில் பயன்பட்டுள்ளன. இதற்குக் குற்றமற்ற, கபடற்ற என்ற பொருள் உண்டு *(மத் 27:24)*. பவுல் போதித்தவைகளைக் கேட்டும் கேளாதவராய் இருப்போரின் விதியைப் பற்றி தான் குற்றமற்றவன் என்கிறார் *(அ.ப. 18:6)*.

புதிய ஏற்பாட்டிலே இயேசு கிறிஸ்து மூலம் வெளிப்படுத்தப்பட்ட கடவுளின் திருவுளத்தோடு தொடர்புடையதாகும். இது வெறும் ஒழுக்கத்தோடு மட்டுமின்றி இறுதிக்காலத் தன்மையோடும் தொடர் புடையதாகப் புரிந்து கொள்ளப்பட வேண் டும். கிறிஸ்தவன் ஒரு வகையில்தான் மாசற்றவன் எனலாம். ஏனெனில், கிறிஸ்து மட்டுமே உண்மையிலேயே மாசற்றவர். அதாவது, எல்லா வகையான பாவத்திலிருந் தும் குற்றத்திலிருந்தும் - சுதந்தரம் கொண் டவர் அவர் ஒருவரே *(லூக் 23:47 காண்க. 1 பேதுரு 1:19)*. ஆதாமோடு கிறிஸ்துவன் தன் மாசின்மையை இழந்ததை வெளிப் படுத்தும் குற்ற உணர்வுடைய படைப்பா

வான். ஆனால் இரண்டாம் ஆதாமான கிறிஸ்துவில் இறைவனின் ஒரே பிரமாணிக் கமுள்ள மனிதனின் மாசின்மையில் மீண் டும் அமைக்கப்படும் வாய்ப்பை எதிர் கொள்கிறான். அவன் கிறிஸ்து வழியாக மன்னிக்கப்பட்டுப் புதுப்படைப்பாகும் அளவில், மாசில்லாதவன் என்றழைக்கப் படலாம். இந்த இறுதிப்பொருளில் மாசில் லாது இருத்தல் என்பது கிறிஸ்துவில் ஏற்கெனவே தொடங்கிவிட்ட புதிய காலத் தின் முழுமையாக நிறைவேறலை உள் ளடக்குகிறது. கிறிஸ்து மட்டும்தான் அவனை ''மாசு மறுவும் குறைபாடு மின்றிப் புனிதனாகவும்'' (கொலோ 1:22; காண்க. எபே 5:27), ''இயேசு கிறிஸ்துவின் நாளில் குறைபாடற்றவனாயும்'' (1 கொரி 1:8; காண்க. 1 தெச 5:23), இறைவன் முன் பிரசன்னப்படுத்த முடியும். இறுதிப் பொருளில், கிறிஸ்தவனைப் பொருத்தமட் டும், மாசின்மை என்பது அவன் அடைவ தன்று, உரிமை கொள்வதன்று அல்லது உடைமையாகக் கொண்டிருப்பதன்று. அஃது இயேசு கிறிஸ்துவில் கொள்ளும் விசுவாசத்தால் வெளிப்படுத்தப்பட்டு அளிக்கப்படும் இறைவனது கொடையா கும் (எபே 1:4). அதன் முழுப்பொருளும் விளைவுகளும் ஆண்டவர் நாளில் இறுதி வெளிப்பாட்டிற்குக் காத்திருக்கின்றன.

**மாசு, களிம்பு** (DROSS)

உலோகங்களிலிருந்து, குறிப்பாக வெள் ளியிலிருந்து, உருக்கு உலையில் பிரித் தெடுக்கப்படும் கழிவுப்பொருளாகும் (பழ 25:4). பழைய ஏற்பாட்டில் மாசு பொது வாக ஒழுக்கச் சீர்கேட்டின் அடையாள மாகையால், ''வெள்ளி களிப்பேறுதல்'' சீர்கெட்ட ஒழுக்கத்தின் விளைவாகும் (எசா 1:22; எசே 22:18-19; காண்க. சங் 119:119).

**மாசேயா** (MAASEIAH - யாவேயின் செயல்)

இப்பெயரைக் கொண்டவர் பலர் உள்ள னர்.

1. இஃது உடன்படிக்கைப் பேழை எருச லேமுக்குக் கொண்டு செல்லப்பட்டபோது அதன் முன் தம்புராவை இசைத்த ஒரு லேவிய இசை வல்லுநர் பெயர் (1 நாள் 15:18.20).

2. அத்தலியா அரசிக்கு எதிராகக் கலகம் செய்த குரு யோயாதாவுக்கு ஒத்துழைத்த ஓர் இராணுவ அதிகாரியின் பெயர். அதன் விளைவாக யோவாசு அரியணை ஏறினார் (2 நாள் 23:1).

3. ஊசியா அரசனுக்குப் போர் வீரர் அட்டவணை தயார் செய்தளித்த யூதாவைச் சேர்ந்த அதிகாரி (2 நாள் 26:11).

4. இவர் யூதாவின் அரசன் ஆகாசின் மகனோ, சகோதரனோ ஆவார். இவர், இஸ்ராயேலின் அரசன் பெக்கா படை யெடுத்தபோது சிக்ரியால் கொல்லப்பட் டார் (2 நாள் 28:7).

5. இவர் யோசியா அரசன் காலத்தில் எருசலேம் நகரத் தலைவராக இருந்தவர். ஆலயம் பழுதுபார்க்கப்பட்டபோது மேற் பார்த்தவர்களுள் ஒருவர் (2 நாள் 34:8).

6. எஸ்ரா காலத்தில் வாழ்ந்த அன்னிய மனைவியை நீக்கிவிட வேண்டியிருந்த ஒரு குருவின் பெயர். ஏசுவா (5)வின் புதல்வர் களில் ஒருவர் (எஸ் 10:18).

7. ஆரிம் குடும்பத்தில் பிறந்த இக்குரு எஸ்ரா காலத்தில் அன்னிய மனைவியை விலக்கிவிட வேண்டியிருந்தது (எஸ் 10:21).

8. பஸ்கூரின் குடும்பத்தில் தோன்றிய குரு. அன்னிய மனைவியை விலக்கிவிட்ட வர் (எஸ் 10:22).

9. எஸ்ரா காலத்தில் அன்னியப் பெண்ணை மணந்த ஒருவரின் பெயர் (எஸ் 10:30).

10. அசரியாவுக்குப் (20) பிறந்த இவர் எருசலேம் மதிலைப் பழுதுபார்க்க உதவி னார் (நெகே 3:23).

11. எஸ்ரா திருச்சட்டத்தைப் படிக்கும் போது மேடையில் அருகில் நின்றவர்களுள் ஒருவர் (நெகே 8:4).

12. திருச்சட்ட நூலை விளக்க எஸ்ரா வுக்கு உதவி செய்த லேவியருள் ஒருவர் (நெகே 8:7).

*13.* நெகேமியாவின் தலைமையில் புதிய உடன்படிக்கையில் கையொப்பமிட்ட மக்கள் தலைவருள் இவரும் ஒருவர் (நெகே 10:25).

*14.* அடிமைத்தனத்திற்குப்பின் எருசலேமில் வாழ்ந்த யூதாவைச் சேர்ந்த ஒருவர் (நெகே 11:5). இவர் 1 நாள் 9:5-இல் அசாயா என்றழைக்கப்படுகிறார்.

*15.* பென்யமின் குலத்தைச் சார்ந்தவர். அடிமைத்தனத்திற்குப்பின் எருசலேமில் வாழ்ந்தவர் (நெகே 11:7). இவர் 1 நாள் 9:7-8-இல் குறிக்கப்படவில்லை.

*16.* புதிதாய்க் கட்டப்பட்ட எருசலேம் மதில் சுவர்களை அர்ப்பணிக்கும் வழிபாட்டில் கலந்து கொண்ட ஒரு குருவின் பெயர். இவர் எக்காளம் தாங்கியவர்களுள் ஒருவர் (நெகே 12:41).

*17.* புதிதாய்க் கட்டப்பட்ட எருசலேம் மதில்கள் அர்ப்பணிக்கப்பட்டபோது, அதில் பங்கெடுத்த ஓர் இசை வல்லுநர் (நெகே 12:42).

*18.* இவர் இறைவாக்கினர் எரேமியா மற்றும் செதேக்கிய அரசன் காலத்தில் வாழ்ந்தவர். குரு செப்பானியாவின் தந்தை (எரே 21:1; 29:25; 37:3).

*19.* பொய்யை இறைவாக்காக உரைத்ததாக இறைவாக்கினர் எரேமியாவால் குற்றம் சாட்டப்பட்ட போலி இறைவாக்கினர். செதேக்கியாவின் தந்தை ஆவார் (எரே 29:21).

*20.* எரேமியா காலத்தில் எருசலேம் தேவாலய வாயில் காப்போனாக இருந்தவர் (எரே 35:4).

**மாசோரா** (MASORA - பாரம்பரியம்)

பாரம்பரியமாகக் கையளிக்கப்படுவதைப் பாதுகாக்க மாசோரேட்டிக் வாசகத்தின் மேலும், கீழும், பக்கங்களிலும் எழுதப்பட்ட குறிப்புகள் இப்பெயரால் அழைக்கப்படுகின்றன. காலப்போக்கில் இவை தனித் தொகுப்பாக ஒன்று சேர்க்கப்பட்டன.

**மாசோரேட்டிக்கு வாசகம்** (MASORETIC TEXT - மரபுரையினர் ஏடு)

எபிரேய வேதாகமம்; தற்போது அச்சிடப்பட்டுள்ள ஆதாரச் சுவடியாய் இருக்கும் ஏட்டுத் தொகுப்பிற்குப் பெயர்தான் மாசோரேட்டிக்கு வாசகம் என்பதாகும்.

எபிரேய எழுத்துகள் மெய்யெழுத்துகளாக மட்டும் முதலில் பயன்படுத்தப்பட்டன. அதாவது புள்ளிகள், கொம்புகள் ஆகியவை இல்லாமல் இருந்தன. சில மெய்யெழுத்துக்களைச் சேர்த்து நெடிலாக மாற்றினர். எடுத்துக்காட்டாக, கா என்பதற்குப் பதிலாக கஆ என்று எழுதப்படுவதைப்போல. இவ்வாறு மெய் எழுத்துக்களை மட்டும் பயன்படுத்தி எழுதும் முறையில், விவிலியம் கி.பி. 100-ஆம் ஆண்டுவாக்கில் எழுதப்பட்டது.

ஆனால் கிரேக்கர், அசீரியர், பாபிலோனியர் ஆகியவர்கள் தொடர்ந்து பாலஸ்தீனத்தைத் தங்கள் ஆட்சியின் கீழ் வைத்திருந்த காரணத்தால், எபிரேய மொழி அழிய ஆரம்பித்தது. யூதர்களுக்குத் தங்கள் மூல மொழியான எபிரேய மொழியை எழுதவும் வாசிக்கவும் தெரியாமல் இருந்தனர். இவையெல்லாம் நடந்தது கி.மு. 3-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு. இந்நிலையில் கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் தங்கள் பூர்வீக மரபைக் காத்திட வேண்டும் என்ற கொள்கையுடன் பிறந்தது ஓர் இயக்கம். அவர்கள் பழங்காலத்தில் பயன்படுத்தப்பட்ட மெய் எழுத்தை மட்டும் பயன்படுத்தி எழுதிய முறையைச் சற்று மாற்றினர். புள்ளிகள், துணையெழுத்துக்கள் கொடுத்து, மக்கள், தாங்கள் மறந்துவிட்ட, தங்களின் சொந்த மொழியை எழுதவும் வாசிக்கவும் வகை செய்தனர். இவர்களைத்தான் நாம் மாசோரேத்தியர் (மரபுரையினர்) என்று அழைக்கிறோம். இவர்கள் அளித்துச் சென்ற வாசகத்தை மாசோரேட்டிக்கு வாசகம் என்கிறோம்.

இவ்வாறு தோன்றிய இயக்கம் மூன்று திசைகளில், மூன்று விதமாக வளர்ந்து வந்தது. இவை பாலஸ்தீனம், பாபி

லோனியா, திபேரியா ஆகிய இடங்களில் வளர்ச்சியுற்றன. பாலஸ்தீனம், பாபிலோனியா ஆகிய இடங்களில் வளர்ந்த எழுத்து முறைப்படி, புள்ளிகள், அடையாளங்கள் மெய்யெழுத்தின் மேல் வைக்கப்பட்டன. ஆனால், திபேரியாவில் வழங்கிய முறைப்படி, இப்புள்ளிகள் மெய்யெழுத்துகளின் கீழே எழுதப்பட்டன.

தற்போது அச்சிடப்பட்டுள்ள எபிரேய விவிலியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள முறை திபேரியாவில் விளங்கிய முறையாகும். இம்முறை கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் பென் அசேர் என்பவராலும், அவர் அமைத்த பள்ளியிலும் பயன்படுத்தப்பட்டது. அதைப் பின்பற்றிதான், தற்போது அச்சிடப்பட்டிருக்கும் எபிரேய விவிலியம் அமைந்திருக்கிறது.

தற்போது இரண்டுவித முக்கிய எபிரேய விவிலியங்கள் அச்சடிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. இவைகளின் பெயர்கள் எபிரேய விவிலியம், ஸ்டுட்கார்ட் எபிரேய விவிலியம் என்பனவாகும். இந்த இரண்டு அச்சிடப்பட்ட விவிலியங்களும் லெனின் கிரோடு ஏட்டுத் தொகுதி என்பதன் படிவமாகும். இந்த லெனின் கிரோடு ஏட்டுத் தொகுதி கி.பி. 1008-இல் எழுதப்பட்டது. ஆனால், பக்கங்களின் ஓரங்களிலும், கீழும், மற்றப் பழஞ்சுவடிகளில் காணப்படும் மாற்று வசனங்கள் தரப்பட்டுள்ளன.

இந்த மரபுரையினர் அறிமுகப்படுத்திய உயிரெழுத்துக் குறியீடுகளில் முக்கியமானவைகள்: புள்ளி, கேரே என்ற குறியீடு, தாக்கேஷ் என்று எழுத்தின் நடுவில் புள்ளி வைத்தல் (இதனால் அந்த மெய்யெழுத்து அழுத்தி இரட்டிப்பாக உச்சரிக்கப்படும்), வாசிக்கும்போது நிறுத்தப்பட வேண்டிய இடத்தைக் குறிக்கும் குறியீடு, பக்கங்களின் ஓரத்திலும் பக்கங்களின் கீழேயும் கொடுக்கப்பட்டிருக்கும் குறிப்புகளைக் குறித்துக் காட்டும் குறியீடுகள் முதலியன.

**மாடப்புறா** (PIGEON - *சிறிய பறவை*)

பல்வேறு இனங்களைச் சேர்ந்த பறவைக் கூட்டத்தில் இஃது ஒன்று. 'புறா' எனும் சொல் பல சிறு பறவைகளுக்குப் பாகுபாடற்ற நிலையில் கூறப்பட்டுள்ளது. பாலஸ்தீனத்தில் ஏராளமான புறாக்கள் காணப்பட்டாலும், இரண்டு வகைப் புறாக்கள் மட்டுமே அங்கு ஆண்டு முழுவதும் வாழ்ந்து வந்தன (எரே *49:28*); காட்டுப்புறா குளிர்காலத்திலும், மாடப்புறா வெயில் காலத்திலும் காணப்பட்டன.

வழிபாட்டுச் சடங்கிற்குரிய பொருளாகவோ, பலிப் பொருளாகவோ இப்பறவைகள் பயன்பட்டபோது அவற்றைக் குறிக்க மாடப்புறா அல்லது புறாக்குஞ்சுகள் என்ற சொற்கள் பொதுவாகப் பயன்பட்டன (காண்க. ஆதி *15:9*). லேவியராகமத்தில் உயிரினக் காணிக்கைகளில் புறா, மாடப் புறா காணிக்கைகளே விலை குறைந்தவையாகவும், பொதுவானவையாகவும் எண்ணப்பட்டன. அவை தகனப்பலியாகவும், பாவப்பரிகாரப் பலியாகவும் பயன்பட்டன (லேவி *1:14; 5:7.11*). குழந்தை பெற்றபின் பெண்ணைத் தூய்மைப்படுத்துதல் *(12:6.8)*, குணமான தொழுநோயாளியைத் தூய்மைப்படுத்துதல் *(14:22.30)*, உடலில் ஏற்படும் தூய்மையற்ற ஒழுக்கிலிருந்து குணமடைந்தவனைத் தூய்மைப்படுத்துதல் *(15:14.29)* ஆகிய சடங்குகளில் புறாவும் பங்கு வகிக்கிறது. தீட்டுப்பட்ட நசரேயரைத் தூய்மைப்படுத்த காட்டுப்புறாக்களோ, புறாக்குஞ்சுகளோ உபயோகப்படுத்தப்பட்டன (எண் *6:10*). இப்படிப்பட்ட சட்டங்களின்படியே, மரியாள் இயேசுவின் பிறப்பிற்குப் பின் மாடப்புறாக்களைக் காணிக்கையாக அளித்தாள் (லூக் *2:24*). இயேசுவின் காலத்தில் இத்தகைய தேவைகளுக்காக வியாபாரிகள் கோவில் வளாகத்தில் புறாக்களை விற்க அனுமதிக்கப்பட்டனர் (மத் *21:12*; மாற் *11:15*; யோவா *2:14.16*). தனிக்கோவில் அதிகாரியின் கண்காணிப்பில் நடைபெற்ற இந்தப் பறவைக் காணிக்கைகள் காலப்போக்கில் குழப்பத்திற்குட்பட்டன. ராபி இஸ்மா என்பவரின் கூற்றுப்படி, ''பறவைக் காணிக்கைகள் மற்றும் மாதவிடாய் பற்றிய சட்ட திட்டங்களே 'அலகோத்திற்கு' இன்றியமையாதவைகளாகும்''.

**மாடி, மேல்தளம், கூரை** *(ROOF)*

பழங்கால மேற்காசிய வீடுகள், மண்ணால் பூசி மூடப்பட்ட சமதளக் கூரையைக் கொண்டவையாக இருந்தன. இந்த இடத்தில்தான் குடும்பத்து உறுப்பினர்கள் பல மணி நேரங்கள் செலவழிப்பார்கள் *(யோசு 2:6; 1 சாமு 9:25; 2 சாமு 11:2; மாற் 2:4; அ.ப. 10:9)*.

**மாட்டுக்கொட்டில்** *(MANGER)*

விலங்குகளுக்கு உணவு அளிப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட தொட்டி அல்லது பெட்டி. இஃது ஒரே கல்லில் செய்யப்பட்டதாகவோ, கட்டுமான வேலையாகவோ, தொழுவமாகப் பயன்பட்ட குகைகளின் சுவர்கள் குடையப்பட்டதாகவோ இருக்கும்.

புதைபொருள் ஆராய்ச்சிச் சான்றுகள், நவீன கால அராபிய முறைகள் ஆகியவற்றில் இந்தக் கொட்டில்களின் இரு வகையான அமைப்பு பற்றிய கருத்துக்கள் உள்ளன.

1. பாலஸ்தீனில் உள்ள பெரும்பான்மையான ஏழை வீடுகளில், மேடான, தாழ்வான இரு பிரிவுகளைக் கொண்ட ஒரே அறை இருந்தது. நுழை வாயிலின் அருகில் தரைமட்டத்திற்கு நிகரான தாழ்வுப் பிரிவு அமைக்கப்பட்டு அங்கு விலங்குகளுக்குத் தங்கவும், உணவிடவும் வசதி செய்யப்பட்டது. இதைவிட, 45 செ.மீ. உயரம் மேடான மற்றொரு பகுதியில், குடும்பத்தில் உள்ளவர்கள் வாழ்ந்தனர். இத்தகைய வீடுகளில் மாட்டுக்கொட்டில், கற்களால் செய்யப்பட்ட பெட்டியாகவோ, பாறையில் செய்யப்பட்டதாகவோ அமைக்கப்பட்டு தாழ்வுப்பகுதியில் வைக்கப்பட்டிருந்தன. கல் தொட்டிகள் மெகித்தோவில் காணப்பட்டன. இவை சுண்ணாம்புக்கல் பாறையிலிருந்து எடுக்கப்பட்ட ஒற்றைக் கல்லால் செய்யப்பட்டன. இது ஏறக்குறைய 225 செ.மீ நீளம், 45 செ.மீ. அகலம், 150 செ.மீ. ஆழம் என்ற அளவினைக் கொண்டிருந்தது. சுமார் கி.மு. 1200-ஆம் ஆண்டைச் சேர்ந்த சாந்து வேலைப்பாடாலான கொட்டில்கள் இலாக்கீசில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

2. மற்றொரு கருத்தின்படி, வீட்டிற்கு அருகில் இருந்த் இயற்கையான குகையிலோ, வீட்டுக்கு அடியில் இருந்த சுண்ணாம்புக்கல் அடித்தளத்திலோ தொட்டி அமைக்கப்பட்டிருந்தது. இலாக்கீசில் இஸ்ராயேலின் ஆரம்பகாலத்திலிருந்தே இத்தகைய தொட்டிகளின் அடையாளங்கள், குகைகளில் இருந்துள்ளன. குகைகள் மீது கட்டப்பட்டிருந்த தங்கு வீடுகளில் விலங்குகளுக்கான கொட்டில் இருந்ததாகத் தெரிகிறது.. இத்தகைய வீடுகளில் குகையின் சுண்ணாம்புக்கல் சுவரிலேயே கொட்டில்கள் செய்யப்பட்டன.

குகைத் தொழுவத்தில் இயேசு பிறந்தார் என்பதைச் சுமார் கி.பி. 150-ஐச் சேர்ந்த யுஸ்தீன் என்பவர் குறிப்பிடுகிறார். முதல் நூற்றாண்டுகளைச் சேர்ந்த போலி நற்செய்திகளிலும் இதைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

இயேசு, பிறந்தபின் அவர் தீவனத் தொட்டியில் வைக்கப்பட்டது *(லூக் 2:7.12.16)* வறுமையையோ, விடுதி உடைமையாளனின் இதயமற்ற தன்மையையோ காட்டவில்லை எனலாம். அகுஸ்துவின் கணக்கெடுப்புக் கட்டளையால் ஏற்பட்ட இயேசுவின் பிறப்பையொட்டிய அசாதாரணச் சூழ்நிலையைச் சுட்டுகிறது எனலாம். மாட்டுக்கொட்டில் மும்முறை குறிக்கப்படுவதோடு, ஓர் அடையாளமாகவும் ஆக்கப்படுகிறது *(லூக் 2:12)*. ஒருவேளை இஃது எசா *1:3*-ஐச் சுட்டலாம். மாட்டுக்கொட்டிலில் காணப்படும் ஆண்டவர் இஸ்ராயேல் இழந்து விட்ட இறைவனைப் பற்றிய அறிவை இறைவன் அவர்களுக்கு மீண்டும் அளிக்கிறார் என்பதற்கு அடையாளமாகும்.

நான்காம் நூற்றாண்டில் கான்ஸ்டன்டைன், இயேசு பிறந்த குகையின்மீது ஓர் ஆலயத்தைக் கட்டி எழுப்பினார். இதுவே பெத்லகேமின் சிறப்பு மிக்க ஆலயமாகியது. பின்னர், இதைச் சுற்றி மேலும் பல ஆலயங்கள் தோன்றியுள்ளன. லூக்காவின் சான்று இது வீட்டினுள்ளோ, அருகிலோ இருந்த எளிமையான தங்குமிடத்தைக் குறிப்பிடுகின்றது.

**மாதயா** (MAADIAH - *யாவே ஒன்றுகூட்டு கிறார், யாவே வாக்குறுதி தருகிறார்)*

பாபிலோன் அடிமைத்தனத்திலிருந்து செருபாபேலின் தலைமையில் நாடு திரும்பி வந்த ஒரு குருவின் அல்லது குருக்கள் குடும்பத்தின் பெயர் (*நெகே 12:5*). நெகே *12:17*-இல் வரும் மோவாதியா அல்லது நெகே *10:8*-இல் வரும் மாசியா வும் இவரும் ஒரே ஆளைக் குறிக்கலாம்.

**மாதாய்** (MADAI - *மேதியா)*

எப்பேத்தின் புதல்வர்களில் ஒருவர் (ஆதி *10:2; 1 நாள் 1:5*). மேதியாவின் குலப்பெயர் மூதாதையர் பெயர் *(காண்க. 2 அர 17:6; எசா 21:2)*.

**மாதிரி** (FIGURE)

I. **பழைய ஏற்பாடு:** ஒவ்வொரு சமய மொழியினைப் போன்று, பழைய ஏற்பாட் டின் மொழியும் அடிக்கடி அடையாள வியலைப் பயன்படுத்துகிறது. அதனுடைய இயல்பு மற்றும் அடிப்படைகள் விளக்கம் பெறும்வரை காத்திருப்பதில்லை. ஆனால், இந்த அடையாளவியல் தோன்றக் காரணங்களாக அடிப்படைக் கருத்துக்களை நாம் எளிதாக அடையாளம் காட்டலாம். இங்கு நமக்கு வேண்டியது இது மட்டுமே.

***1. முன்மாதிரியான அடையாளவியல்:***

**விண்ணக மாதிரியும் அதன் மண்ணக நகல்களும்:** அனைத்துப் பழங்காலச் சமயங் களையும் பின்பற்றி, பழைய ஏற்பாடு அமைக்கப்பட்ட சாயலுக்கான புனித மூல முன்மாதிரியாக இறை உலகை, விண்ணக உலகு குறித்துக்காட்டுகிறது. ஓர் அரசனைப் போன்று, இறைவன் விண்ணக அரண் மனையில் தங்கியுள்ளார் *(மீக் 1:3)*. அவர் பணியாளர் அவையால் சூழப்பட்டுள்ளார் *(எசா 6:1தொ)*. வழிபாட்டின் முடிவானது மனிதனை இறைவனோடு உறவு கொள்ளச் செய்வதாகையால், விண்ணக உலகானது மனிதனுக்கு எட்டுகிற விதத்தில் அமைக்கப் பட வேண்டும் என்பதற்காக, இம்மாதிரி யான இந்தக் கருத்தியலான மாதிரி மீண்டும் அமைக்க முயற்சி செய்யப்படு கிறது. இவ்வாறே, எருசலேமும், அதன் ஆலயமும், ஒரு குறிப்பிட்ட அளவில் ஒப்பிடப்படுகின்ற, இறை அரண்மனையின் நகலாக உள்ளன *(சங் 47:1-4)*. இதன் காரணமாகவே, சீனாய் மலையில் இறை வன், ஆசாரக்கூடாரம் பொருந்தியிருக்க வேண்டிய மாதிரி அமைப்பினை மோசேக்கு அறிவிப்பதாக குருக்கள் பாரம்பரியம் காட்டுகின்றது *(யாத் 25:9.25)*. இம்மாதிரி யானது தமது உறைவிடத்தைப் பின்பற்றி, இறைவனாலேயே அமைக்கப்பட்ட கட்டடக் கலைஞருடைய திட்டத்தைப் போன்றதா கும் *(1 நாள் 28:11)*. அவ்வாறே ஞான *9:8*-இன்படி சாலமோனால் கட்டப்பட்ட ஆலயமானது, ''தொடக்கத்திலிருந்தே இறைவன் தயாரித்திருக்கும் பரிசுத்த கூடா ரத்தின் மாதிரியாக'' உள்ளது.

***2. இறுதிக்கால அடையாளவியல்:***

***மீட்பின் வரலாறும் அதன் இறுதி நிறைவும்:***

**அ) புனித வரலாற்றின் விவிலியக் கருத்து:** பழமையான புராணக்கதைகள் இதே முன்மாதிரியான கோட்பாடுகளை அண்ட சுழற்சிக்கும் (நாட்கள் மற்றும் காலங்கள் மீண்டும் மீண்டும் வருதல்), மனித வரலாற்றின் அடிப்படை அனுபவங் களுக்கும் (அரியணை ஏறுதல், போர், போன்ற பல) சாற்றிக்காட்டின. எல்லாக் காலத்திற்கும் முன்பாக நடந்த இறைவர லாற்றின் மண்ணக பிரதிபலிப்புகளை அவைகள் இங்குமங்கும் கண்டன. இந்தப் பிரதிபலிப்புகளே எல்லா அண்ட எதிர் காலத்திற்கும், எல்லா மனிதச்செயல்களுக் கும் தொடக்கத்திலுள்ள மூல உருவமாகும். காலத்தில் அறுதியிட முடியாத முறையில் பின்பற்றப்பட்ட இந்த மூல உருவம் உலகப்பொருட்களுக்கு அவற்றின் புனிதப் பொருளை அளித்தது. இதன் காரண மாகவே, தெய்வங்களின் செயல்களோடு மனிதனைத் தொடர்புபடுத்துவதற்காக, புராணக்கதையானது வழிபாட்டில் சடங்கு முறையினால் செயல்படுத்தப்பட்டது. இப் போது விவிலிய வெளிப்பாடு, பல கடவுள் கோட்பாட்டினை நிராகரிப்பதன் மூலம் அண்டைப் புறவினத்தார் அறிந்திருந்த ஒரே புனித வரலாற்றின் உட்பொருளை வெறு

மையாக்கியது. அவர்களுக்கு இறைவனின் செயலானது அவரது படைப்புடன் வரையறுக்கப்பட்டது. ஆனால், ஒரு புதிய முன்னோக்கில் புறவினத்தார் முற்றிலும் அறியாமலிருந்த மற்றொரு வகையான புனித வரலாற்றை அவர்கள் கண்டுபிடித்தனர். அஃது இறைவனது திட்டத்தின் வரலாறு ஆகும். அது, வட்டவடிவமாக இல்லாமல் நேர்வரிசையில் முழுமையாக நிறைவேறும்வரை, காலத்தில் வளர்ச்சியுறுகிறது. எல்லாப் பொருட்களும் முடிவுக்கு வருகின்ற போது காலத்தின் முடிவில் நிறைவேறும்.

**ஆ) புனித வரலாற்றில் நிகழ்ச்சிகளின் பொருள்:** இறைவனுடைய திட்டத்தின் முடிவானது, இறுதிக்கால நிகழ்ச்சியில் அவர் உடலெடுக்கும்போது மட்டுமே தெளிவாக வெளிப்படுத்தப்படும். ஆயினும், அவர்களது வரலாற்று நிகழ்ச்சிகளின் தொடக்கத்திலிருந்தே, அதைப் பற்றிய ஒரு தெளிவற்ற அறிவினை அளிக்க ஏற்கெனவே தொடங்கி விட்டார். யாத்திரை, சீனாய் உடன்படிக்கை, வாக்களிக்கப்பட்ட நாட்டில் நுழைதல் போன்ற நிகழ்ச்சிகள் ஏதோ பொருளெதுவும் அற்ற தற்செயலான நிகழ்ச்சிகள் அல்ல. மனித வரலாற்றில் இறைவனின் செயல்கள் என்ற அளவில் வரலாற்றில் நடைமுறையை நடத்துவதில், அதனுடைய சிறப்பியல்புகளை வளர்ச்சியடைகின்ற விதத்தில் சித்தரிப்பதில், இறைவன் பின்தொடர்கின்ற நோக்கத்தின் அடையாளத்தை அவை தம்முள் கொண்டிருந்தன. இதன் காரணமாகவே அவை ஏற்கெனவே இறைமக்களின் விசுவாசத்திற்கு ஊட்டம் அளிக்க முடிந்தது. இதன் காரணமாகவே, இறைவாக்கினர்களும், இறைவனுடைய திட்டத்தின் நோக்கத்தினைத் தங்களுடைய இறுதிக்கால இறைவாக்குகளில் வெளிக்கொணர்வதன் மூலம், புதிய யாத்திரை *(எசா 43:16-21)*, புதிய உடன்படிக்கை *(எரே 31:31-34)*, புதிய எருசலேமை நோக்கி வாக்களிக்கப்பட்ட நாட்டிற்குள் புதிதாய் நுழைதல் *(எசா 49:9-23)* போன்றவை பழைய அனுபவங்களின் மிக முழுமையான மீண்டும் தொடர்தலாகக் காட்ட முடிந்தது. எனவே, இவ்வாறு, புனித வரலாறானது தனது எல்லா உட்பொருள்களுடனும் (நிகழ்ச்சிகள், நபர்கள், அமைப்புகள்) இறுதிக்கால அடையாளவியலைக் கொண்டுள்ளது. இஃது, இதுவரையில் முழுமையற்று இருந்த இறைவனது திட்டத்தின் ஒரு பகுதி வெளிப்பாடாகும். இஃது, இத்திட்டத்தின் முடிவைத் திரையிடப்பட்ட முறையினில் காட்டுகிறது.

**இ) இறுதிக்காலமும் தொடக்க காலமும்:** புனித வரலாற்றின் தொடக்கமாகிய படைப்பிற்கும் இதே மூலக்கோட்பாடானது மிகச் சிறந்த முறையில் சாற்றிக் கூறப்படுகிறது. ஏனெனில், இறைத் தொடக்க வரலாற்றினைப் பற்றி விவிலிய வெளிப்பாட்டில் அதிகமாக வேறு ஒன்றும் இல்லையெனில், கீழுலகில் இறைவன் தொடர்ந்து நிறைவேற்ற விரும்பிய நோக்கத்தைத் தொடக்கத்திலிருந்து வெளிப்படுத்தி, இறைவன் தமது திட்டத்தைத் தொடங்கிய மூலத்தொடக்கச் செயலை உயிருள்ளதாகக் காத்துவருகிறது. இறைவனின் இறுதிச் செயலாகிய இறுதிக்கால இயல், இறைவனின் தொடக்கச் செயலில் தனது சிறப்பியல்புகளைக் கண்டறிய வேண்டும். இறைவாக்குக் கூற்றுகளின்படி அஃது ஒரு புதிய யாத்திரையாக மட்டுமே இருக்காது. முதல் படைப்பினைப் போன்ற புதுப்படைப்பாக இருக்கும் *(எசா 65:17)*. ஏனெனில், அதே திட்டத்தைக் கொண்டிருக்கும். இறைவனுடைய முதல் திட்டங்கள் தோல்வியடைவதற்குக் காரணமாக இருந்த பாவம் மற்றும் மரணம் முதலிய தடைகளை இது நீக்கிவிடுவதால், இஃது அதிக முழுமையானதாக இருக்கும். எனவே, அவை காலத்தின் இரு எல்லைகளிலும் தொடக்ககால இன்பவனத்தையும், மீண்டும் பெறப்பட்ட இன்பவனத்தையும் *(ஓசே 2:20-24; எசா 11:5-9; 51:3; 65:19-25; எசே 36:35)* எடுத்துக்காட்ட உதவும் முழுமை மற்றும் மகிழ்ச்சி ஆகியவற்றின் சாயல்களாக உள்ளன. இந்த இரண்டு இன்பவனங்களுக்கிடையில் புனித வரலாறு வளர்

கிறது. அதைப் பழைய உடன்படிக்கையின் மக்கள் தன்னுணர்வோடு வாழ்ந்தனுபவித்த னர். அது புதிய உடன்படிக்கையில் நிறைவு பெறுவதைக் காணக் காத்திருக்கின்றனர்.

**ஈ) வழிபாடும் புனித வரலாறும்:** பழைய ஏற்பாட்டில் வழிபாடு என்பது மனிதரை வரலாற்றில் பங்கெடுக்கச் செய்வதற்காக, சமயச்சடங்கு நாடகத்தில் பிரசன்னப்படுத் தப்படும் தெய்வங்களின் புராண வரலா றன்று. மனித காலத்தில் நிறைவேற்றப் பட்ட இறைசெயலாக புனித வரலாறு, வழிபாட்டு விழாக்கள், அவற்றில் அடங்கி யுள்ள உன்னதச் செயல்களின் கொண் டாட்டச் செயல்களின் நினைவு கூர்தலாக சிறிது சிறிதாக மாறின. இவ்வாறு ஓய்வு நாளானது படைப்பின் நினைவாகவும் (ஆதி 2:2-3; யாத் 31:12 தொ), பாஸ்காவா னது யாத்திரையின் நினைவாகவும் (யாத் 12:26-27), பெந்தகோஸ்தே சீனாய் உடன் படிக்கையின் நினைவாகவும் (விவிலிய காலத்திற்குப் பிற்பட்ட யூத மதத்தில்), ஆசாரக் கூடாரங்கள், பாலைவனத்தில் அலைந்து திரிந்ததன் நினைவாகவும் (லேவி 23:42-43) உருவாயின. மற்றொரு புறத்தில், இப்பழைய நிகழ்ச்சிகள் இறுதி மீட்பின் முன் அறிகுறிகளாக இருந்ததால், அவற்றின் சடங்குக் கொண்டாட்டமானது நம்பிக் கையைக் கொண்டதாக உள்ளது. இஸ்ரா யேலர், உயர்ந்த விசுவாசத்துடன் இறுதிக் கால ஆசியினைப் பெறுவதற்காகவே, இறைவனின் வரலாற்று ஆசிகளை நினைவு கூர்கின்றனர். அவர்கள் இந்த இறுதிக்கால ஆசீர்களின் வரலாற்றில் பின்னிப்பிணைக் கப்பட்ட திரையிடப்பட்ட அறிவிப்புகளாக உள்ளனர்.

**3) ஒழுக்க முன்மாதிரி:** இறுதியாக, கடந்த காலத்தைச் சேர்ந்த மாதிரிகையான மனிதர்கள், தனது மக்களுக்கு அறிவுறுத்து வதற்கென இறைவனால் அளிக்கப்பட்ட முன்மாதிரியாக உள்ள ஒழுக்க முன்மாதிரி யினைப் பழைய ஏற்பாடு அறிந்திருந்தது. இவ்வாறு, ஏனோக்கு, தவத்திற்கு மாதிரி கையாக இருந்தார் (சீரா 44:16). இவ்வகை யான எடுத்துக்காட்டுகளை ஞான நூல்கள் அடிக்கடி பயன்படுத்துகின்றன. நாம் மேலே விளக்கியதற்கேற்ப, அது புனித வரலாற்றின் இறுதிக்கால அடையாள வியலை அடிப்படையாகக் கொண்டிருக் கும்போது, அது தனி வலிமை பெறுகிறது (ஞான 10-19).

முன்குறித்துக் காட்டுதல் பற்றிய கோட் பாடானது ஏற்கெனவே பழைய ஏற்பாட் டில் இருந்தது என்பது தெளிவான ஒன்று. விவிலிய வெளிப்பாட்டிற்கு மட்டுமே உரிய புனித வரலாற்றின் கருத்தினின்று வெளிப்படும் நிலையில் இது, பழைய ஏற்பாடு நன்கு அறிந்து, வாய்ப்பு கிடைக் கும்போதெல்லாம் பயன்படுத்திய சாதாரண முன்மாதிரி அடையாளவியலினின்று, முற் றிலும் வேறுபட்டு உள்ளது. மீட்பைப் பற்றிய மறைபொருளை முன்னதாகவே வெளிக்கொணர்வதற்கென, இஃது இறை வாக்குக் கூற்றுகளுக்கு ஒரு மொழியினைத் தருகின்றது. வெளிப்பாட்டினுடைய வாத முறையோடும் இஃது இணைக்கப்பட் டுள்ளது. புதிய ஏற்பாடானது விளக்கத் தினை நிறைவுசெய்யும்.

### II. புதிய ஏற்பாடு

**1. இயேசுவின் மனப்போக்கு:** தயாரிப் பின் காலத்தை முடிவுக்குக் கொண்டு வருவதையும் (மாற் 1:15), இறைவாக்குக் கூற்றுகளால் அறிவிக்கப்பட்ட பொருட் களின் நிலையைக் கீழுலகில் தொடங்கு வதைப்பற்றியும் (மத் 11:4தொ; லூக் 4:17 தொ) இயேசு அறிந்திருந்தார். அதுமுதல், முதல் உடன்படிக்கையினுடைய விதியின் கீழ் நிகழ்ந்தேறிய முழுப் புனித வரலாறும், அவர் நிறைவேற்றுகின்ற செயல்களிலும், நிறுவிய அமைப்புகளிலும், வாழ்கின்ற நாடகத்திலும், தனது உண்மையான பொருளை அடைகின்றது. இவ்வாறு தனது பணியினை விளக்கி, அதனைத் தெளிவு படுத்துவதற்கென, அவர் அதனை அவ்வர லாற்றில் அடங்கியுள்ள உருவகக் கூறு களோடு விரும்பி ஒப்பிடுகிறார். அவரால்

உருவாக்கப்பட்ட சமூகம் திருச்சபை என்றழைக்கப்படும் *(மத் 16:18)*. அதாவது, பாலைவனத்தில் இஸ்ராயேலர் கொண்டிருந்ததற்கு ஒப்பான வழிபாட்டிற்கான சபை *(அ.ப. 7:38)* ஆகும். அஃது இஸ்ராயேல் மக்களின் அடிப்படை அமைப்பான பன்னிரு கோத்திரங்களை நினைவிற்குக் கொணர்கின்ற பன்னிரு அப்போஸ்தலர்களை அடிப்படையாகக் கொண்டிருக்கும் *(மத் 19:28)*. தனது சிலுவையின் பொருளை விளக்கி, அருட்சாதன அடையாளங்களின் கீழ் உண்மையைத் தோன்றச் செய்கின்ற இரவுணவிற்கும் இதே முறையில் பொருள் கூறப்பட வேண்டும்; இதைப் பாஸ்காவுடனும் *(லூக் 22:16)*, சீனாய் உடன்படிக்கையுடனும் *(லூக் 22:20)* தொடர்புபடுத்திப் புரிந்து கொள்ள வேண்டும். வாழ்வின் வாக்களிக்கப்பட்ட உணவாகிய அவரது உடல் தனது விளைவுகளில், அதன் மறைமுகமான சாயலாக இருந்த மன்னாவை விட மேலோங்கி உள்ளது *(யோவா 6:38)*. புனித வரலாற்றின் இறுதிக்கால அடையாளங்களை ஏற்றுக்கொண்டு காலமுடிவில் மீட்பு மறைபொருளும் வரும் என்ற செயல்முறையாக எடுத்துக் கூற அவற்றைப் பயன்படுத்துகிறார். இந்த மறைபொருள் அவரது ஆளிலும் வாழ்விலும் தொடங்கப்பட்டு, அவரது திருச்சபையின் வரலாற்றில் பிரசன்னமாக்கப்பட்டு, மனித காலமானது முடிவிற்கு வருகின்ற நித்தியத்தில் நிறைவேறும். இதை மேற்கூறப்பட்ட எடுத்துக்காட்டுகள் காட்டுகின்றன. இதன் மூலமாக, இதுவரை ஓரளவு திரையிடப்பட்டு, இப்போது முன்னேறிச் செல்கின்ற நிகழ்ச்சியால் திரை நீக்கப்பட்டுள்ள பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளும் அமைப்புகளும் தங்களின் முழுப் பொருளை, எவ்வாறு தம்மில் அடைகின்றன என்பதை அறியுமாறு அவர் செய்கின்றார்.

***2. விவிலிய உருவங்கள் வளர்ச்சியுறுதல்:*** இயேசுவைப் பின்பற்றி புதிய ஏற்பாட்டின் புனித ஆசிரியர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, உருவகக் கோட்பாட்டைத் தொடர்ந்து பயன்படுத்தியுள்ளனர். சில நேரங்களில் மீட்பின் மறைபொருளானது மறைநூலுக்கேற்ப வளர்கிறது என்பதைக் காட்டுவதற்கும், சில நேரங்களில் சமயப் பொருளால் செறிவுற்ற மொழியில் அதை விளக்குவதற்கும் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறு யோவான், சிலுவையில் தொங்கும் கிறிஸ்துவிற்கு, பாஸ்கா செம்மறி பற்றிய விவரிப்பைப் பயன்படுத்தும்போது *(யோவா 19:36)*, ஓசேயா, இஸ்ராயேலைப் பற்றிக் கூறிய 'இறைமகன்' என்ற சொல்லை மத்தேயு இயேசுவிற்குச் சாற்றிக் கூறுகிறார் *(மத் 2:15; ஓசே 11:1)*. இவ்விரண்டு சம்பவங்களிலும் மறைநூல் நிறைவேறுவது விவிலிய முன்னடையாளங்கள் நிறைவேறுவதை அடிப்படையாகக் கொண்டுள்ளது. பல இடங்களில் புதிய ஏற்பாட்டினுடைய கோட்பாட்டு மொழியானது, அஃது இறைவாக்குக் கூற்றுக்கள் தங்களுடைய குறிப்புகளை இறுதிக்கால இயலைக் குறிப்பிடும் விதமாக மாற்றியமைத்தாலும் *(திருவெளி 21 ஆனது, ஏசா 62-ஐ ஏற்கிறது)*, அல்லது இந்த வாசக மாற்றமானது புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களுக்கு மட்டுமே உரியதாக இருந்தாலும் *(1 பேதுரு 2:9 ஆனது, யாத் 19:5-6-ஐக் குறிக்கிறது)* இஸ்ராயேல் மக்களுடைய வரலாற்று அனுபவத்தில் தனது தொடக்கத்தைக் கொள்ளாது. ஆயினும், முன்னடையாளங்களின் இறையியல் கோட்பாட்டின் தெளிவான விளக்கத்தைப் பவுலின் திருமுகங்களிலும், எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்திலும் காண்கிறோம்.

**3. புனித பவுல்:** பவுலைப் பொறுத்தவரையில், புனித வரலாற்றின் நபர்களும் உண்மைகளும், கிறிஸ்து மற்றும் கிறிஸ்தவ உண்மைகள் பற்றிய மறைபொருளை அறிவிக்கின்ற உருவங்களைக் கொண்டுள்ளன. ஆதியிலிருந்தே ஆதாம், வரவிருக்கும் ஆதாமின் உருவமாக இருந்தார் *(உரோ 5:14)*. பின்னர், யாத்திரை நிகழ்ச்சிகள் முன் அடையாளமாக நிகழ்ந்தன *(1 கொரி 10:11)*. உலகின் முடிவுகள் வரவிருக்கும் நம்மீது அக்கறை கொண்ட உருவங்களாக அவை உள்ளன *(1 கொரி 10:6)*. இந்த மாதிரிகை

களால் முன் குறிக்கப்பட்ட உண்மை யானது, கிறிஸ்தவ அருட்சாதனங்களால் உறுதிப்படுத்தப்பட்ட கிறிஸ்துவின் மறை பொருளில் நாம் பயனுள்ள விதமாகப் பங்கேற்பதாகும். *1 பேதுரு 3:21*-இல் திருமுழுக்கானது வெள்ளத்தின் எதிர்மாதிரி கையாகக் கூறப்படுகிறது. ஒழுக்க முன் மாதிரியானது, புனித வரலாற்றினுடைய இந்த உருவகமான விளக்கவுரையினின்று எளிதாக வெளிவருகின்றது. பாலைவனத் தில் நமது தந்தையருக்கான தண்டனைகள் நமக்கொரு பாடமாக உள்ளன *(1 கொரி 10:7தொ)*. விசுவாசமற்ற கிறிஸ்தவர்களுக் குரிய உறுதியான தண்டனையையும் அவை அறிவிக்கின்றன. சோதோமின் அழிவும், லோத்தைக் காப்பாற்றியதும், வருங்கால இறைப்பற்றற்றவர்களுக்கான எடுத்துக்காட் டாகும் *(2 பேதுரு 2:6)*. விசுவாசத்தை அறிக்கையிடுவோர் ஆபிரகாமின் மக்களா கும்படி *(கலா 3:7)*, ஆபிரகாமின் விசுவாச மானது ''நம்மையும் குறிக்கின்றது'' *(உரோ 4:23)*.

இத்தகைய மாதிரிகையியலை நீட்டிப் பதன் மூலம் பவுல் மறைநூலின் சில பகுதிகளை உருவகப்படுத்துகிறார். அவற் றில் கிறிஸ்தவ உண்மைகளின் அடை யாளங்களைக் காண்கிறார். வாக்குறுதியின் பிள்ளையாகிய ஈசாக்கைப் பற்றி ஆதியாக மம் கூறியதைக் கிறிஸ்தவர்களுக்கு மாற்றி யமைக்கும்போது, கலா *4:24*-இல் அவர் இதனை வெளிப்படையாகவே கூறுகின் றார். இந்த உருவகப்படுத்தல் அதனுடைய அடித்தளமாகிய மாதிரிகை இயலோடு குழப்பப்படுவதில்லை. இது விவிலிய வாசகங்களை அவை முதலில் கொண்டி ருந்த பொருளைத் தவிர்த்து மற்றொரு பொருளுக்குத் தழுவியமைக்கவும், அவை கொண்டுள்ள அனைத்து விபரங்களின் மீதும் இரண்டாந்தர பொருளைத் தடை யின்றி அமைக்கவும் பயன்படுத்தப்பட்ட செயல் முறையாக உள்ளது. மேலும், விவிலிய உருவங்கள் இப்போது திரை நீக்கப்பட்ட உண்மைகளைப் பொருத்தமட் டில் முழுமையற்ற உருவங்களே என்று பவுல் அறிந்திருந்தார். இவ்வாறு, யூத வழிபாடானது, வரவிருப்பவற்றின் வெறும் நிழலையே கொண்டிருந்தது. அதன் உண்மைப் பொருளோ கிறிஸ்துவின் உடல் தான் *(கொலோ 2:17)*.

**4. எபிரேயருக்கான திருமுகம்:** பவுலில், இறைவாக்குக் கூற்றுக்களில் ஏற்கெனவே பயன்பட்டிருந்த இறுதிக்கால அடையாள வியலானது மாதிரி/எதிர்மாதிரி நிழல்/ நிஜம் என்னும் சோடியான சொற்களால் வெளிப்பட்டது. எபிரேயருக்கான திருமுகத் தில் இந்த இறுதிக்கால அடையாளவிய லானது மேற்காசிய மதங்களுக்கும், பிளேட் டோவிற்கும், பழைய ஏற்பாட்டிற்கும் பொதுவாக உள்ள முன்மாதிரி அடையாள வியலுடன் குறுக்கிடுகிறது. கிறிஸ்து நிறை வேற்றுகின்ற பலியும், கொண்டு வருகின்ற மீட்புமாகிய கிறிஸ்துவின் மறைபொரு ளானது தன்மையாலே முடிவில்லாததும் *(எபி 5:9; 9:12; 13:20)* விண்ணகப் பொருட் களாகவும் *(8:5; 9:23; 12:22)* உள்ளது. அதே சமயம், காலங்களின் இறுதியில் *(9:26)* வரவிருக்கும் பொருட்களாகவும் *(6:5; 10:1)* இருப்பதே இதற்குக் காரணமாகும். இவையே உண்மையான மெய்மைகள் *(8:2; 8:24)*. பழைய ஏற்பாட்டு மனிதர்களாகிய, நமது விசுவாசத்தின் தந்தையர்கள் இவற்றிற் காக ஏங்க மட்டுமே முடிந்தது *(11:16,20)*. திருமுழுக்கின் மூலமாக கிறிஸ்தவர் களாகிய நாம் ஏற்கெனவே இவற்றைச் சுவைத்துவிட்டோம் *(6:4)*. உண்மையில் முதல் உடன்படிக்கையானது, அவற்றி னுடைய எதிர்பார்க்கப்பட்ட மறுபதிப்பு களையும் *(8:5; 9:23)*, கீழுலகில் கிறிஸ்து வால் மட்டுமே வெளிப்படுத்தப்பட வேண் டியிருந்தாலும், அப்போது விண்ணகத்தி லிருந்த மாதிரியின் நிழல்களையும் *(8:5)*, முன்னடையாளங்களையும் *(9:24)* மட்டுமே கொண்டிருந்தது. ஆசாரக் கூடாரத்தைக் கட்டியபோது மலையில் மோசேக்குக் காட்டப்பட்ட இம்மாதிரியானது *(8:5; யாத் 25:40; அ.ப. 7:44)*, புதிய உடன்படிக்கையை நிறைவேற்றுவதற்கென வரவிருக்கும் ஆசீர் களின் தலைமைக் குருவாக, விண்ணக

புனித இடத்தில் நுழைந்த கிறிஸ்துவின் பலியே ஆகும் *(9:11-12)*. இந்தத் திருச்சபை உண்மைகள் இனிமேல் வரவிருக்கும் ஆசீர் களின் நிழலை மட்டும் கொண்டிராமல், அவற்றின் உட்பொருள் அனைத்தையும் தன்னுள் கொண்டு, அவற்றிற்குள் மறை வான பங்கேற்பினை அனுமதிக்கின்ற சாய லையும் கொண்டுள்ளது. இவ்வாறு, பழைய நடைமுறை மற்றும் அதனுடைய உருவகமான வழிபாடு ஆகியவற்றிற்கு எதிரான நிலையில், புதிய உடன்படிக்கை யின் அருட்சாதன நடைமுறையினை நாம் வரையறுத்துள்ளோம்.

இந்தக் கலைச்சொல் மொழியில், மாதிரிகை என்ற சொல்லுக்கு, பவுலின் திருமுகங்களில் கொடுக்கப்பட்டதற்கு வேறான பொருள் கொடுக்கப்படுகிறது. ஏனெனில், இது பழைய ஏற்பாட்டில் உள்ள புதிய ஏற்பாட்டின் முன்னடையாளங் களைக் குறிக்காமல் காலத்தின் இறுதியில் மீட்பின் நிகழ்ச்சியை நிறைவேற்றுகின்ற கிறிஸ்துவின் செயலை மட்டுமே குறிப்பிடு கிறது. கிறிஸ்துவின் மறைபொருளுடனான பழைய ஏற்பாட்டின் உறவானது, உலகின் சமயச் சடங்குகள் தங்களது விண்ணக மூல மாதிரியுடன் கொண்ட உறவினைப் போன்றே இருப்பதால், முன்மாதிரி அடை யாளவியலின் தெளிவான சுவடு இங்கே உள்ளது. ஆயினும், இம்மூல மாதிரியானது அதே நேரத்தில் புனித வரலாற்றின் முடி வாகவும் இருப்பதால், பழைய ஏற்பாட்டின் பொருட்கள் மறுபதிப்பாக உள்ள இறுதிக் கால அடையாளவியலின் துணையால் அவ்வாறு இருக்கிறது. ஒரே சமயத்தில் காலத்தையும் நித்தியத்தையும் சேர்ந்த கிறிஸ்துவில், விண்ணகத்துடன் மண்ணகம் கொண்டுள்ள உறவும், உருவக வரலாறு அதன் முடிவோடு கொண்டுள்ள உறவும் கலந்துள்ளன அல்லது இதைவிட ஒன்றாக் கப்படுகின்றன. உண்மையில் ஆசிரிய ருடைய மொழியானது எல்லாவற்றிற்கும் மேலாக, செங்குத்தான பருமனைச் சுட்டிக் காட்டினாலும், பவுலைப் போன்றே இத் திருமுக ஆசிரியரும் மாதிரிகை இயலின் தளமட்டப் பருமனிலும் அக்கறையுள்ளவ ராக உள்ளார் என்பதை நாம் மற்றப் பகுதிகளில் காணலாம். அவர் உண்மையில் பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளில் மீட்புச் செயலின் முன்னடையாளங்களைக் கண்டு பிடிக்கிறார். இறந்து உயிர்த்த கிறிஸ்துவின் அடையாளமாக ஈசாக்கு உள்ளார் *(11:19)*. நமது மூதாதையர் நுழைந்த வாக்களிக்கப் பட்ட நாட்டின் ஓய்வமைதி, கிறிஸ்தவ வாழ்வுமுறை நம்மை அறிமுகப்படுத்து கின்ற இறை அமைதிக்கு அடையாளமாக உள்ளது *(4:9-10; 12:23)*. இந்த இறுதிக்கால அடையாளவியலிலிருந்து இயற்கை யாகவே ஓர் ஒழுக்க முன்மாதிரியியல் தோன்றுகிறது. பாலைவனத்தில் இருந்த எபிரேயர்கள் கீழ்ப்படியாமையின் எடுத்துக் காட்டாக நமக்கு உள்ளனர் *(4:11)*. அவர் களுடைய தண்டனையானது, நாமும் அவர் களைப்போலப் பிரமாணிக்கமற்றவர்களாய் இருந்தால், நமக்கெனக் காத்திருப்பதை முன்னறிவிக்கின்றது. இதற்கு மாறாக, பழைய ஏற்பாட்டின் புனிதர்கள் நமக்கு விசுவாசத்தின் எடுத்துக்காட்டுகளாக உள்ள னர் *(4:11)*.

பழைய ஏற்பாட்டில் முதலில் வரையப் பட்டு, புதிய ஏற்பாட்டில் அடிக்கடி பயன் படுத்தப்படும் முன்னடையாளங்களின் கோட்பாடு பவுலாலும் (பாராட்டத்தக்க நுட்ப வேறுபாடுகளுடன்) எபிரேயருக்கான திருமுகத்தாலும் வெளிப்படையாக விளக் கப்படுகிறது. அது விவிலிய வெளிப்பாட் டிற்கு அத்தியாவசியமானதாக உள்ளது. அதனுடைய வளர்ச்சியைப் பற்றிப் புரிந்து கொள்ளவும் அது நம்மை அனுமதிக்கின் றது. ஒன்றிலிருந்து மற்றொரு ஏற்பாட் டிற்குப் பல்வேறு நிலைகளில் இறைமக்க ளால் நடத்தப்பட்ட விசுவாச வாழ்வின் தொடர்ச்சியின் மீது அஃது ஒளியைப் பொழிகிறது. அவ்விசுவாசத்தைப் பற்றிப் பின் வரவிருக்கும் உருவங்களின் மூலமாக முதல் ஏற்பாடானது முன்னறிவித்தது.

**மாதுளை** (POMEGRANATE - யாவே புகலிட மாவார்)

இது புதர்ச்செடி போன்ற ஒருமரவகை. இதன் பழங்கள் உண்ணக்கூடியவை. குருக்கள் அணியும் எபோது என்னும் ஆடையின் அலங்காரங்களைப் பற்றிக் கூறும்போது மாதுளம் பழத்தைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. ஒரு பொன்மணி, ஒரு மாதுளைத் தொங்கல் என மாறிமாறி அந்த எபோது என்னும் ஆடையின்கீழ் தைக்க வேண்டும் (யாத் 28:33-34; 33:24-26; காண்க. சீரா 45:8).

சாலமோனின் அரண்மனையில் உள்ள இரு வெண்கலத் தூண்களின் மேல் இருந்த போதிகையைச் சுற்றிலும் வலைப்பின்னலின் மேல் இரு வரிசையாக மாதுளம்பழ வடிவங்கள் அமைக்கப்பட்டிருந்தன (1அர 7:18.20.42; 2 நாள் 3:16; 4:13; காண்க. 2 அர 25:17; எரே 52:22-23). பாலஸ்தீனா நாட்டின் வளமைக்கும் செழிப்புக்கும் அடையாளமாக உளவு பார்க்கச் சென்ற உளவாளிகள் அந்நாட்டிலிருந்து மாதுளை, திராட்சை, அத்தி ஆகிய பழங்களை மோசேயிடம் கொண்டு வந்து காட்டினர் (எண் 13:23). வாக்களிக்கப்பட்ட நாட்டைப் பற்றி மோசே கூறும்போது இப்பழங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார் (உப 8:8; காண்க. எண் 20:5).

சவுல் கிபயாவின் எல்லையில் ஒரு மாதுளை மரத்தின்கீழ் காத்திருந்தார் (1 சாமு 14:2). உன்னத சங்கீதம் 4:3.13; 6:7-இல் மணப்பெண்ணைப் பற்றிக் கூறும்போது மாதுளம் பழத்தைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இதன் பூக்கள் வசந்த காலத்தின் அடையாளமாகும் (6:11; 7:13). இப்பழத்திலிருந்து இரசம் செய்யப்பட்டது. யோவேல் வெட்டுகிளிகளால் அழிக்கப்பட்ட மரங்களில் இதையும் ஒன்றாகக் குறிப்பிடுகிறார் (யோவே 1:12).

கடவுளின் இரக்கத்தைப் புதுப்பிக்கும் அடையாளமென திராட்சை, அத்திப்பழங்களோடு மாதுளம் பழங்களையும் ஆகாய் சேர்க்கிறார் (ஆகா 2:19). நகரங்களின் பெயர்களில் இதைப்பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. ரிம்மோன் பாரேசு (எண் 33:19.20), ரிம்மோன் (யோசு 15:32; காண்க. எசா 10:27), கத்ரிம்மோன் (எசா 21:25), ஏன் ரிம்மோன் (நெகே 11:29). பழங்கால சித்திரக்கலையிலும் புராணங்களிலும் இது பெரும் பங்கு வகிக்கிறது. புராணங்களில் மாதுளை மரம் வளமையின் அடையாளமாகும். இது வாழ்வின் மரம் என்று கூட அழைக்கப்பட்டது.

**மாதோன்** (MADON - போராட்டம்)

இது கலிலேயாவில் உள்ள கானானிய ஊர். இதன் அரசன், யாபீன் அரசனோடு இஸ்ராயேலுக்கு எதிராகக் கூட்டுசேர்ந்தான். இந்தக் கட்டணி தோல்வியுற்றது (யோசு 11;1; 12:19). திபேரியாவுக்கு வடமேற்கில் 8.5 கி.மீ. தொலைவிலுள்ள கரன் காட்டின் இஃது இருந்து இடமாகக் கருதப்படுகிறது.

**மாத்து** (MAATH - சிறிய)

இறைமகன் இயேசுவின் முன்னோர்களில் இவரும் ஒருவர். நாடு கடத்தலுக்குப் பிற்காலத்தைச் சேர்ந்தவர் (லூக் 3:26).

**மாநிலம்** (PROVINCE)

ஒரு நாட்டின் நிர்வாக வசதிக்காக பல பகுதிகளாக நாடு பிரிக்கப்பட்டிருந்தது. அதில் மாநிலம் என்பது ஒரு பகுதி. ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு தலைவர் இருந்தார்.

1) பழைய ஏற்பாட்டில் ஆகாபின் காலத்தில் இஸ்ராயேல் நாடு ஆளுநர்களைக் கொண்ட பல மாநிலங்களாக அல்லது மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது (1 அர 20:14). பிற்காலத்தில் பாபிலோனிய, பாரசீக ஆட்சியின்போதும் இப்பிரிவே காணப்பட்டது (எஸ்த 4:11 புல 1:1; எசே 19:8; தானி 8:2).

2) புதிய ஏற்பாட்டில் உரோமையர்களின் நிர்வாக வசதிக்காக நாடு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது (அ.ப. 23:34; 25:1). உரோமைக்குடியரசில் மாநிலத் தலைவர்கள் திருவுளச் சீட்டு அல்லது குலுக்கல் சீட்டு (lots) மூலம் நிர்ணயிக்கப் பட்டார்கள்.

அந்தந்த மாநிலத்தில் உள்ள படைகளுக்கு அத்தலைவரே பொறுப்பு.

கி.மு. 27-இல் அகுஸ்து தன் நேரடிப்பார் வையில் சில மாநிலங்களை ஏற்படுத்தி னான். நிர்வகிப்பதற்குச் சற்றுக் கடினமான மாநிலங்களையும் தன் நேரடிப் பார் வைக்குக் கொண்டு வந்தான் (அ.ப. 13:7). ஒவ்வொரு மாநிலத்திலும் அதன் தலை வரது அதிகாரத்தில் படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. இம்மாநிலத் தலை வர்கள் மக்களிடமிருந்து வரியையும் வசூ லித்தனர். முரட்டுத்தனமான மக்கள் கொண்ட மாநிலங்கள், உதாரணமாக யூதேயா மற்றும் பிற்காலப் பாலஸ்தீனம், திராக்கு, எகிப்து, மௌரேட்டானியா ஆகி யவை, அரசனின் நேரடி ஆட்சியில் இருந் தன. அதாவது அரசனால் அனுப்பப்பட்ட ஆளுநன் அதைக் கவனித்து வந்தான். இரண்டாம் எரோது அகிரிப்பாவிற்குப்பின் பாலஸ்தீனம் சீரியா மாநிலத்தோடு இணைக்கப்பட்டது.

***3) உரோமையரின் முக்கிய மாநிலங்கள்: மேலோர் சபையின் கீழ் இருந்த மாநிலங்கள்:***

***அ)*** மாசிதோனியா *(கி.மு. 146)*, அக்காயா *(கி.மு. 146)*, ஆசியா *(133)*, கிரேத்து *(74)*, சைப்பிரசு *(22)*.

ஆ) பேரரசன் நேரடிப் பார்வையில் இருந்த மாநிலங்கள் பம்பிலியா *(கி.மு. 101)*, சிசிலியா *(கி.மு. 67)*, சீரியா *(கி.மு. 64)*, எகிப்து *(கி.மு. 31)*, கலாத்தியா *(25)*, யூதேயா *(கி.பி. 6)*, கப்பதோக்கியா *(17)*, லீக்கியா *(43)*.

### மாய வித்தை (MAGIC)

***1. மாய வித்தையும் மந்திரவாதிகளும்:*** தன்னைத் திணரடிக்கிற உலகை, தன்னை அச்சுறுத்துகின்ற உயிர்களை அல்லது தான் ஆதிக்கம் செலுத்த விரும்புகின்ற உயிர் களை எதிர்கொள்ளும்போது, தனது வலி மைக்கு அப்பாற்பட்ட, இறைத்தன்மைக் கும் தனது ஊழிற்கும் தலைவணங்குகின்ற வல்லமையினை அடைய மனிதன் முயல் கிறான். இப்போது செயல்முறைகள் மாறி யிருந்தாலும், முன்பின் அறியாததைக் கட் டுப்படுத்தும் போக்கும், ஆசையும் மனித னுடைய இதயத்தில் வேறூன்றியுள்ளது; பழைய முறைகளுக்கொத்த செயல்முறை களுக்கு நடத்திச் செல்கிறது.

குறிகூறுதல் *(எசே 22:28)* மற்றும் சூனி யம் வைத்தல் *(மீக் 5:11; உப 18:10; ஞான 12:4;* திருவெளி *18:23)* முதலியவற்றைக் கொண்டது மந்திரவாதக் கலையாகும் *(ஞான 17:7)*. ஞானிகளுடைய வானஇயல் அறிவியலுடன் இவற்றைக் குழப்பிவிடக் கூடாது *(மத் 2:1-12)*. மந்திரங்கள் *(சங் 47:6;* எரே *8:17;* திருவுரை *10:11)*, காப்புகள் மற்றும் முக்காடுகளை உபயோகித்தல் *(எசே 13:17-23)*, தீமையின் கவர்ச்சி *(ஞான 4:12; 2:24; கலா 3:7)* முதலியன இந்த மாய நடைமுறைகளில் அடங்கும். எகிப் திய மற்றும் கல்தேய மந்திரவாதிகள் *(யாத் 7-9; எசா 47:12-13)*, குறி சொல்வோர் *(ஆதி 41:8.24; எசா 44:25)*, ஞானிகள் மற்றும் சூனியக்காரர்கள் *(யாத் 7:11)* ஆகியோரு டன் எபிரேயரும் யூதரும் தொடர்பு கொண் டிருந்தனர். இஸ்ராயேல் உட்பட அனைத்து நாடுகளிலும் மாயவித்தைக்கான ஆதாரம் உள்ளது.

ஒரு மாதிரி நிகழ்ச்சி விரிவாக விவரிக்கப் படுகிறது; அது சவுலினுடைய பயங்கர மரணத்தைப் பற்றி அவனுக்கு முன்னுரைப் பதற்கென, சாமுவேலின் ஆவியைத் தோன்றச் செய்கின்ற ஏந்தோரைச் சேர்ந்த குறிசொல்பவள் பற்றிய சம்பவம் ஆகும் *(1 சாமு 28:3-25)*. ஈசபேலின் மாயவித்தை களும் *(2 அர 9:22)*, ஆகாசு *(16:3)* மற்றும் மனாசே *(21:6)* ஆகிய அரசர்களுடைய அருவருப்பான மூட நடைமுறைகள் பற் றிய குறிப்புகளும் உள்ளன. இவற்றை யோசியா எதிர்த்துப் போராடினார். இரு ளின் சக்திகள் மாயவித்தை மற்றும் குறி சொல்லுதல் போன்றவற்றைப் பயன்படுத் தின. இச்சக்திகள் மேல் யாவேயும், பிற் காலத்தில் ஆண்டவராகிய இயேசுவும் கொண்டிருக்கும் மேலாண்மையை எடுத் துக்காட்டும் விதத்தில் நிகழ்ச்சியுரைகள் அமைந்துள்ளன.

***2. மாயவித்தைக்கு எதிரான போராட்டம்:*** இம்முக்கிய கருத்தைப் பற்றிய இறை வெளிப்பாட்டினுடைய தீர்ப்பைக் காட்டுவ தாய்ச் சட்டங்கள் அமைக்கப்பட்டு வருங் காலத்திற்குக் கையளிக்கப்பட்டதற்குக் கார ணம் உண்மையில் இதுவே.

***அ) தடைகள்:*** மோசே சட்டத்தின் மூன்று பெருந்தொகுப்புகள் மாயவித் தைக்கு மரணதண்டனை அளித்து அதைத் தடுக்கின்றன (லேவி 19; உப 18; யாத் 23). அவ்வாறே மாயவித்தையுடன் தொடர் புடைய செயல்முறைகளும் தடை செய்யப் பட்டுள்ளன (உப 22:5.11; லேவி 19:19). எடுத்துக்காட்டாக, தாயின் பாலில் கன்றுக் குட்டியைச் சமைக்கும் கானானியச் சடங்கு (யாத் 23:19; 34:26; உப 14:21). குழந்தை களைப் பலியிடுதல் (உப 18) குறிப்பாக, நகர்களுக்கு அடித்தளமிடும் சடங்குகள் (1 அர 16:34), நகர்களைப் பாதுகாத்தல் (2 அர 3:27) அல்லது புதுமுகம் செய்யப்படும் சடங்குகள் (ஞான 12:3-5) ஆகியவற்றில் குழந்தைகளைப் பலியிடுதல் தடை செய் யப்பட்டு அருவருப்பானதொன்றாகக் கரு தப்பட்டது. மேலும் இறுதியாக, இரத் தத்தைப் பயன்படுத்துதல் பற்றியும் பல தடைகள் உள்ளன. ஏனெனில், இரத் தத்தைக் குடிப்பதென்பது இறைவனுக்கு மட்டுமே உரிய உயிர்நாடியான வல்ல மையைத் தனக்காக எடுத்துக் கொள்வதா கும் (ஆதி 9:4; லேவி 3:17; அ.ப. 15:29). இத்தகைய நடைமுறைகள் சிலைவழிபாட் டுடன் ஒன்றுபடுத்தப்படுகின்றன (கலா 5:20; திருவெளி 21:8).

***ஆ)*** எண்ணற்ற கதைகளில் மந்திரவாதி கள் இறைவல்லமையால் வெல்லப்படு கின்றனர். இவ்வாறாக,யோசேப்பு குறி சொல்வோர் மேலும் (ஆதி 41),மோசே எகிப்திய மந்திரவாதிகள் மேலும் வெற்றி கொள்கின்றனர் (யாத் 7:10-13. 19-23; 8:1-3. 12-15; 9:8-12). தனது பெண் கழுதையுடன் யாவேக்கும் எபிரேய மக்களுக்கும் ஊழி யம் புரியுமாறு பாலாம் வற்புறுத்தப்படு கிறார் (எண் 22-24). கல்தேய ஞானிகளைத் தானியேல் திகைப்புறச் செய்கிறார் (தானி 2; 4; 5; 14). தேவையானால் இயன்னே, இயம்பிரே ஆகியவை பற்றிய கதை போன்ற (2 திமொ 3:8) பாரம்பரியக் கதைகளை, ஒழுக்க மேம்பாட்டை நோக்க மாகக் கொண்டு மீண்டும் எடுத்துக்கூறுதல் புதிய ஏற்பாட்டிலும் காணப்படுகின்றது. மந்திரவாதி சீமோன் தாழ்மையுடன் பேதுரு விடம் மன்னிப்பு வேண்டுகிறான் (அ.ப. 8:9-24), பர்யேசு-எலிமா பவுலினால் தண் டிக்கப்படுகிறான் (13:6-11). பிலிப்பியில் குறிசொல்ல ஏவும் ஆவியால் பீடிக்கப்பட்ட பணிப்பெண் (16:16-18) அல்லது எபேசு வின் யூதப் பேயோட்டுபவர்கள் (19:13-20) ஆகியோருடைய நிலையும் இத்தகையதே.

மாயவித்தையின் உதவி இன்றியே செயல்பட புதுமைகளும் இறைவாக்கு களும் மனிதரை அனுமதிக்கின்றன. ஏனெ னில், அவை இறை பிரசன்னத்தை உறுதி யான வழியில் உணரச்செய்கின்றன (உப 18:9-22; காண்க. எண் 23:23). மற்றொரு புறத்தே சூனியக்காரர்கள் உண்மை இறை வனிடமிருந்து மனிதரைத் திசை திருப்பு கின்றனர் (உப 13:2-6); புதுமை புரிவோர், கோட்பாட்டினைப் பொய்யாக்குகின்றனர் (மத் 24:34; திருவெளி 16:12-16). எனவே, இறைவாக்கினர்கள் நாட்டிலுள்ள மந்திரவா திகளை முழு முனைப்புடன் எதிர்க்கின்ற னர் (எசா 19:1-3; 44:25; 47:12-13; எரே 27:9. எசே 21:34).

மாய வித்தையைப் பயன்படுத்துவதற்குச் சோதனை வலியது. ஓரளவிற்கு இயேசு இச்சோதனைக்கு உட்பட்டார். தன்னுடைய இறை வல்லமையால் பசியைத் தணித்துக் கொள்ளவும் யூதரை வியப்பிலாழ்த்தவும் சாத்தான் அவரை அழைக்கிறான். ஆனால், இயேசுவோ உலகின் மீதான வல்லமையை அவனிடமிருந்து ஏற்றுக்கொள்ள விரும்ப வில்லை: ''உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி, அவர் ஒருவருக்கே பணிசெய்வா யாக'' (மத் 4:1-11).

***இ) மாய வித்தை முறைகளும் சடங்கு களும்:*** பழைய ஏற்பாட்டின் சடங்குமுறை யானது, மாய வித்தையினின்று தூய்மைப்

படுத்தப்பட்ட பின் பெறப்பட்ட சில குறிப்பிட்ட நடைமுறைகளைக் கொண்டிருந்தது என்பது உறுதி. உண்மையான இறைவனை வழிபடுவதற்காக அவற்றைக் கீழ்ப்படுத்தும் ஒருவித வழி இது. இரத்தத்தைச் சமயச்சார்பற்ற முறையில் பயன்படுத்துவது தடை செய்யப்பட்ட வேளையில், இறைவனுடைய பெயரால் குரு, இரத்தத்தினால் பரிகாரம் (லேவி 17:11) மற்றும் உடன்படிக்கையின் சடங்குகளை நிறைவேற்றுகிறார் (யாத் 24:8). இறைவனை நோக்கிக் கூக்குரலிடும் குரலை இரத்தமானது மூழ்கடிக்க வேண்டும் (எரே 17:1; லேவி 4). இந்தப் பின்னணியின் நோக்கில் சடங்கானது தனது பொருளை மாற்றுகிறது. எவ்வாறாயினும் ஒரு சடங்கானது குருட்டு நம்பிக்கைக்குரியதாகும் போது, அஃது உடனடியாக நீக்கப்படுகிறது. வெண்கலப் பாம்பானது சிலைவழிபாட்டுப் பொருளாக ஆன உடனே அழிக்கப்பட்டது (2 அர 18:4). முதலில் அனைத்து மக்களுக்கும் அளிக்கப்பட்ட இறைப்பெயரின் உபயோகமானது (எகிப்திய தெய்வங்களைப்போல, குறிசொல்வோரின் ஆதிக்கத்தில் விழுவது பற்றி யாவே அஞ்சவில்லை) இறுதியில் குருவிற்கே ஒதுக்கப்பட்டுள்ளது (எண் 6:27). இறைவனுடைய பெயரை வீணாக உரைக்கின்றவாறு இந்த இறைப்பெயரை உபயோகிக்க பண்டைய மந்திரவாதிகள் தயங்கவில்லை என்பதை எகிப்தில் கண்டெடுக்கப்பட்ட கிரேக்க ஏட்டுச் சுருள்களினின்று அறிகிறோம் (யாத் 20:7).

மனிதன் சுதந்தரமாகப் படைக்கப்பட்டு இறைவனைத் தேர்ந்தெடுக்கக்கூடியவனாக இருக்கிறான். உலகின் மீதான தலைமையை இறைவனிடமிருந்தே அவன் பெற்றான். சமயத்தையும் மறைபொருளான அறிவையும் செயற்கையான முறையில் ஒன்றுபடுத்தும், ஆனால் உண்மையில் இயற்கையைக் கேலிக்குரியதாக்குவதாகவும், விசுவாசத்தின் விளைவுகளைச் சிதைக்கக் கூடியதாகவும் மட்டுமே இருக்கக்கூடிய கலப்படமான கலையாகிய மாயவித்தையுடன் அவன் தொடர்பு கொண்டிருக்க வேண்டியதில்லை.

**மாரனாதா** (MARANATHA - *வாரும் ஆண்டவரே*)

பவுல், *1 கொரி 16:22*-இல் வாழ்த்துரையில் பயன்படுத்தியுள்ள அரமேயச் சொல்லின் கிரேக்க எழுத்துப் பெயர்ப்பே இது. 'ஆண்டவரே வாரும்' என்றோ, 'இயேசு ஆண்டவரே வாரும்' என்றோ (திருவெளி 22:20) பொருள் கொள்ளலாம். இச்சொற்றொடரை ஆண்டவர் அகரமும், னகரமுமாய் இருக்கிறார் எனும் கிரேக்க அரமேய மொழிப் பொருளில் கொள்ளலாமென அறிஞர் சிலர் கருதுகின்றனர்.

பவுல் புறவினத்தாரை வாழ்த்தும் பொழுது அரமேய மொழிச் சொற்றொடராகிய இதனைப் பயன்படுத்துவதிலிருந்து, இயேசுவின் இரண்டாவது வருகையை விசுவாசத்துடன் எதிர்பார்த்திருந்த அன்றைய கிறிஸ்தவர்கள் அனைவரும் நன்கறிந்த ஒன்றாகவே இஃது இருந்திருக்க வேண்டும். இஃது அவர்கட்கு நம்பிக்கையும், உற்சாகமும் அளிக்கும் ஒரு சொற்றொடராக இருந்தது. திதாக்கே, தனது நற்கருணைச் செபத்தில் 'ஆண்டவர் அண்மையில் இருக்கிறார்' (காண்க. பிலி 4:5) என்று பயன்படுத்தியுள்ளது. இஃது ஆழ்ந்த இறுதிக்காலத் தொனியைக் கொண்டுள்ளது.

**மாரா** (MARA - *கசப்பு*) - ஆள்

தன்னை ஆண்டவர் கசப்புத் தன்மையால் நிறைத்திருக்கிறார் எனும் பொருள்பட 'நகோமி' தன்னைக் 'கசப்பி' எனப் பிறர் அழைக்குமாறு கூறினாள் (ரூத் 1:20).

**மாரா** (MARAH - *கசப்பு*) - இடம்

சூர்ப் பாலைவனத்தில் மூன்று நாட்கள் இஸ்ராயேலர்கள் பயணம் செய்தபின் முதலில் கிடைத்த நீரூற்றே இவ்வாறு அழைக்கப்பட்டது (யாத் 15:23). இதனை எத்தாம் பாலைவனமெனவும் கூறுவர் (எண் 33:8). கசப்பானதும், சுவைக்க முடியாததுமான பல நீர்க்குட்டைகளும், கிணறுகளும் பாலை

வனத்தில் காணப்படுவது இயற்கை. இந்த இடம் எப்படித் தன் பெயரைப் பெற்றது என்று விளக்கும் காரணகாரியக் கதையே இந்நிகழ்ச்சி. மூன்று நாட்களாக நீரின்றி அலைந்த இஸ்ராயேலர்கள் முடிவில் இந்த நீரருகே வந்தபோது, குடிக்க முடியாத அளவுக்கு அது கசப்பானதாக இருந்ததால் அதனைக் 'கசப்பு' என அழைத்தனர். அவர்கள் மோசேக்கு எதிராக முறையிட, அவர் ஆண்டவர் கூறியபடி ஒரு மரத்தை நீரில் போட, அது குடிப்பதற்கேற்றதாக மாறியது. இது நடந்த இடம் எதுவென்று கண்டுபிடிக்க முடியவில்லை.

சூயெஸ் வளைகுடாவின் வடமுனைக் குத் தெற்கே 72 கி.மீ. தொலைவிலும், 11 கி.மீ. தொலைவில் உள்நாட்டிலும் உள்ள அயிகவரா என்ற இடம்தான் இது என்று சிலர் அடையாளம் காட்டுவர்.

**மாராத்து** *(MAARATH - தரிசு நிலம், திறந்தவெளி)*

இது யூதா மலைநாட்டின் பெத்சூர் மாவட்டத்திலுள்ள சிற்றூர் *(யோசு 15:59)*. இதுவும் மாரோத்து நகரமும் *(மீக் 1:12)* ஒரே இடத்தைக் குறிக்கலாம். இது, பெயித்-உம்மருக்கு வடகிழக்கில் பெத் சூருக்கு 3 கி.மீ. தொலைவிலும், எபிரோ னுக்கு வடக்கில் 10.5 கி.மீ. தொலைவிலும் உள்ள கிர்பெத் குபினாக இருக்கலாம்.

**மாரி** *(MARI)*

அபுகெமாலுக்கு அருகேயுள்ள இன்றைய தேல் ஏல் கரீரியின் அண்மையில் யூப்பிரத் தீசுக்கு நடுவில் அமைந்த மிகப் பழமை யான மெசபொத்தாமிய நகரமே இந்த 'மாரி'. இந்நகரம் பற்றி விவிலியத்தில் கூறப்படவில்லை. கி.பி. 1933-39-இல் இவ் விடம் அகழ்ந்தெடுக்கப்பட்டது. அகழ்வா ராய்ச்சியாளர்கள் இவ்விடத்தில் அரச மாளி கையொன்றைக் கண்டனர். இது 15 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்த அன்றைய நிலைக் குப் பிரம்மாண்டமான ஒரு மாளிகையாக இருந்தது. இங்கு மிகப்பெரும் கலைப் படைப்புகள், பழங்காலத்தைச் சேர்ந்தவை கண்டுபிடிக்கப்பட்டன.

வரலாற்றின் மிக முக்கியமான 20,000 ஆப்பு எழுத்து ஏடுகள் இங்குக் கிடைத்தன. இவை அரச கடிதங்களையும், சட்ட, பொருளாதார, மத சம்பந்தமான பல முக்கிய கோட்பாடுகளையும் உள்ளடக்கியி ருந்தன. இவை மாரியின் மக்கள் வாழ்க்கை யையும், சமூகத்தையும் பெருமளவு மாற்றி அமைக்க உதவியிருக்குமென்பது தெரி கிறது. மேலும், இஸ்ராயேலரின் முது பெரும் தந்தையர்கள் காலத்துப் பழக்க வழக்கங்களையும், சட்டங்களையும் பிரதி பலிப்பதுபோல் பல கோட்பாடுகள் இதில் காணப்படுகின்றன. கி.மு. மூன்றாம் ஆயிர மாண்டுத் தொடக்கத்தில் இங்கு மக்கள் வாழ்ந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

மத்திய தரைக்கடலுக்கும், மெசபொத்தா மியாவுக்கும் இடையில் இயற்கையிலே அமைந்த ஒரு சிறந்த வியாபார மையமாக இருந்ததால் மாரியைப் பலர் தமதாக்க முயன்றனர். இது கமுராபியால் பிடிக்கப் பட்டது. மக்கள் இவருக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்ததால் அவர் இதனை அழித்த தோடு இந்நகரம் கைவிடப்பட்டது.

**மாரேசா** *(MARESHAH - தலைமை இடம்) - ஆள்*

*1.* இவர் காலேபுக்குப் பிறந்த முதல் மகன்; எபிரோன், சீபு ஆகியவர்களின் தந்தை *(1 நாள் 2:42)*. ஆனால், இப்பகுதி சிறிது தெளிவற்றதாகவும், குழப்பம் தருவ தாகவும் இருக்கிறது. எபிரேயப் படிவத்தில் காலேபின் முதல் மகன் மேசா எனவும், பின்னர் மாரேசா என்றும் உள்ளது. சில மொழி பெயர்ப்புகளின்படி, மாரேசாவின் தந்தையும், எபிரோனின் பாட்டனும் ஆன சீபுவின் தந்தையாவார். மேசா அல்லது மேசா மற்றும் மாரேசா என்பவர்கள் சீபு மற்றும் எபிரோன் என்ற நகர்களை நிறுவிய வர்கள் ஆவார்.

*2.* இவர் யூதா கோத்திரத்தைச் சேர்ந்த இலாதாவின் மகன் ஆவார் *(1 நாள் 4:21)*.

**மாரேசா** *(MARESHAH - தலைமை இடம்) - இடம்*

பெயின் இப்பிரினுக்குத் தென்கிழக்கே யுள்ள இன்றையத் தேல் சன்தகனாவே

மாரேசாவாகும். இஃது ஒரு கானானிய நகரம்; யூதாவைச் சேர்ந்த செபேலா மாவட்டத்தின் தலைநகரம் ஆகும் (*யோசு 15:44*).

ரெகபயாம் மன்னர் இதனைச் சுற்றி மதில் சுவர் அமைத்தார் (*2 நாள் 11:8*). ஆசா இதனை உறுதிப்படுத்தினார். மாரேசாவுக்கு 48 கி.மீ. தொலைவில் தென்மேற்கே உள்ள கெராருக்கு யூதாவை எதிர்த்து வந்த எத்தியோப்பியர்களை மன்னன் ஆசா துரத்தியடித்தார் (*2 நாள் 14:9-14*). இந்நகரம் எலியேசரின் சொந்த ஊராகும். இவர்தான் இஸ்ராயேலின் மன்னனான அகசியாவும், யோபாத்தும் இணைந்து செயற்படுத்த நினைக்கும் 'வியாபாரக் கப்பல்கள்' ஒன்றுமில்லாமல் போகும் என்று மிகச் சரியாகச் சொன்னார் (*2 நாள் 20:37*). மீக்கா உரைத்த இறைவாக்கின்படி அழியப்போகும் நகரங்களில் ஒன்றாகக் கூறப்பட்டது இந்த மாரேசா (*மீக் 1:15*).

மக்கபேயர் காலத்தில் மாரேசா மிக முக்கியான நகரமாகத் துலங்கியது. இதுமேயர் காலத்திலிருந்து இது மரிசா என்றழைக்கப்பட்டது. இதுமேய ஆளுநராகிய கோரிக்கியா கி.மு. 164-இல் இதனை அடைக்கலத்திற்குரிய இடமாகப் பயன்படுத்தினான் (*2 மக் 12:35; காண்க. 1 மக் 5:66*). ஏறத்தாழ கி.மு. 110-இல் யோவான் இரிக்கானு இதனைப் பிடித்து, விருத்தசேதனம் செய்து கொள்ளத் தயாராக இருந்த இதுமேயர்களை இங்கு வசிக்க அனுமதித்தார். கி.மு. 40-இல் மாரேசா பார்த்தியர்களால் பிடிக்கப்பட்டு, அழிவுற்றது. அதன்பின் இது மீண்டும் கட்டப்படவேயில்லை.

**மாரோத்து** (MAROTH - கசப்பு)

இது யூதாவிலுள்ள ஒரு நகரம் (*மீக் 1:12*). இதுவும் மாராத்தும் (*யோசு 15:59*) ஒரே இடத்தைக் குறிக்கலாம் என்று கருதப்படுகிறது.

**மார்சியோனுடைய நற்செய்தி** (MARCION, GOSPEL OF)

மார்சியோன், கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; ஞானவாதக் கோட்பாட்டைச் சேர்ந்த ஒரு பதித வகுப்பைத் தோற்றுவித்தவர்; யூதர்களைச் சார்ந்த எதையும் வெறுத்தவர்; ஆகவே, பழைய ஏற்பாட்டை முழுவதையும் நிராகரித்தார். நற்செய்தி நான்கு வடிவம் கொண்டிருப்பதையும் அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆகவே, அவற்றை ஒரே நூலாக்க முயன்றிருக்கின்றார். இந்த ஒரே-நற்செய்தி லூக்காவின் நற்செய்தியின் சுருக்கப் பதிப்பு போல் தோன்றுகிறது. இந்தப் பதிப்பில் இவரது கைவேலைப்பாடு எவ்வளவு என்று உறுதி செய்ய முடியாது. இதில் லூக் 1-2 ஆகிய பகுதிகள் காணப்படவில்லை. மேலும், தனது பதிதக் கோட்பாட்டுக்கு எதிராக லூக்கா நற்செய்தியில் காணப்படுபவற்றை மாற்றி எழுதியிருக்கிறார். இவரது விவிலியத்தில் இவரால் பதிப்பிக்கப்பட்ட ஒரே நற்செய்தியும் பவுல் எழுதியதாக இவர் கருதிய பத்துத் திருமுகங்களும் அடங்கும்.

இவர் ஞானவாதத்தைச் சேர்ந்தவர் என்று கருதப்பட்டாலும், தோசேத்திய கிறிஸ்து இயலைப் பின்பற்றினார். அதாவது கிறிஸ்து இயேசு உண்மையான மனிதனும் ஆவார் என்பதை மறுத்தார். திருச்சபை பழைய ஏற்பாட்டு நூல்களை ஏற்றுக்கொண்டதும், இயேசு இறைவாக்கினரால் முன்னறிவிக்கப்பட்ட மெசியா என்று நம்புவதும் தவறு என்று சாதித்தார். விவிலிய நூல்கள் பற்றிய பல தவறுகளையும் போதித்து வந்தார். இதற்கு மாறாக, விவிலியத்தைப் பதிப்பிக்கும்போது, ஒரு முன்னுரை எழுதும் வழக்கு 3-ஆம், 4-ஆம் நூற்றாண்டுகளில் திருச்சபையில் இருந்து வந்தது. இவர் கடுமையான துறவு வாழ்க்கை வாழ்ந்ததாகத் தெரிகிறது.

கி.பி. 144-இல் மார்சியோனைத் திருச்சபை தனது ஒன்றிப்பிலிருந்து விலக்கி வைத்தது. ஆனால், இப்பதிதம் மிக விரைவில் பரவியது. நான்காம் நூற்றாண்டில் கட்டுப்படுத்தப்பட்டது.

**மார்துக்கு** (MARDK - சூரியனின் கன்று)

இது பாபிலோன் நாட்டுக் கடவுள்களிலே முதன்மையானது. கி.மு. 1700-இல் கமுராபி

காலத்தில் புயல் கடவுள், படைக்கும் கடவுள் ஆகியோரின் செயல்கள் இந்தக் கடவுளுக்குச் சாற்றிக் கூறப்பட்டன. எபிரேயத்தில் இப்பெயர் 'மெரோதாக்கு' எனப் பட்டது. புது வருட விழாவின்போது இக்கடவுள் சூனிய நீரின்மேலும், பிற சக்திகள் மீதும் கொண்ட வெற்றியே வசந்தமென்றும், இது எல்லாக் கடவுளர்களது வெற்றியென்றும், அவரது படைப்பாகிய இயற்கையையும், மனிதனையும் நினைத்துப் பெரும் விழா எடுத்து இக்கடவுளை அரசனாகக் கொண்டாடினர். இது புராணக்கதை மற்றும் சடங்குகளில் முழுமையாக வெளிப்படுத்தப்பட்டது. இது சீரிய நாட்டுப்பாகாலின் வழிபாடுகளிலும், புராணங்களிலும் வெளிப்பட்டு, எபிரேயத்தில் யாவேயின் அரசப்பண்பில் தாக்கத்தை ஏற்படுத்தியது.

**மார்த்தா** *(MARTHA - குடும்பத்தலைவி)*

பெத்தானியாவில் வாழ்ந்த இலாசர், மரியா ஆகியவர்களின் சகோதரியே மார்த்தா *(லூக் 10:38-42; யோவா 11:1-12:2)*.

மார்த்தா, மரியா மற்றும் இலாசர் எனும் இருவரோடு பிறந்தவர், பெத்தானியா ஊரினள் எனும் விவிலிய மரபு நான்காவது நற்செய்தியாளராலே உறுதி செய்யப்படுகிறது. ஆனால், லூக்கா தென் கலிலேயாவில் இவர்கள் வாழ்ந்திருக்க வேண்டுமெனச் சுட்டினாலும் *(லூக் 9:51; 10:38-42; 17:11)*, இப்பகுதிகளில் கூறப்படும் கருத்துக்கள் கால, இடம் பற்றிச் சரியாக அறிந்து எழுதப்படாததால் அது சரியென்று ஏற்றுக் கொள்ளத் தேவையில்லை. யோவான் இச்சகோதரிகள் பற்றித் தரும் பல விளக்கமான உண்மைகள், மூன்று நற்செய்திகளும் தரும் தெளிவற்ற விளக்கங்களைத் தெளிவுபடுத்துகின்றன *(மாற் 11:1-12; லூக் 21:37)*.

மார்த்தாவின் குணத்தைப் படம் பிடித்துக் காட்டுவதில் யோவானிடமும், லூக்காவிடமும் பெரிய ஒற்றுமை காணப்படுகிறது. மார்த்தா உலக காரியங்களில் அக்கறையுள்ள குடும்பத் தலைவியாக *(லூக் 10:38; யோவா 12:2)*, இயேசுவின் தேவைகளை நிறைவு செய்து வைப்பதில் கண்ணும் கருத்தும் உள்ளவளாக *(லூக் 10:40; யோவா 12:2)*, தனது சகோதரியின் தியானித்துக் கொண்டிருக்கும் சோம்பல் மனநிலையைக் கண்டு பொறுமையிழப்பவளாக *(லூக் 10:40)*, தன் சகோதரன் இறந்தபோது தன்னையே திடப்படுத்திக் கொண்டு ஊரின் எல்லையிலே போய் இயேசுவைச் சந்திப்பவளாக *(யோவா 11:20)*, உடல் அடக்கம் செய்து நான்கு நாட்கள் ஆனதால் அது கெட்ட மணம் வீசுமே என அக்கறை கொண்டவளாகக் *(11:39)* காட்டப்படுகிறாள்.

இயேசு இவ்விரு சகோதரிகளையுமே அன்பு செய்தார். நான்காவது நற்செய்தியாளர் மிகத் தெளிவாக, ''மார்த்தாவிடமும், அவளது உடன் பிறப்பான மரியாவிடமும், இலாசரிடமும் இயேசு அன்பு கொண்டிருந்தார்'' *(யோவா 11:5)* என்கிறார். மார்த்தா செய்த உபசாரங்களையெல்லாம் இயேசு முழு மனதுடன் ஏற்றுக்கொண்டார். அதே நேரத்தில் அவள் உலக காரியங்கள்மீது கொண்டிருந்த அளவற்ற அக்கறையைக் கண்டிக்கிறார். எனவே, இறை அரசின் மதிப்பீடுகளே எல்லாவற்றிற்கும் மேலானதென்றும், அதையே முதலில் தேட வேண்டுமென்றும் அறிவுரை கூறுகிறார்.

யோவா *12:1-8*-இல் பெத்தானியாவில் நடந்த விருந்து ஒன்றில் மார்த்தா இயேசுவுக்கு விருந்து பரிமாறுவதாகவும், அவரது சீடர்களும், இலாசரும் அவருடன் இருந்தார்களெனவும், மரியா இயேசுவின் பாதங்களை நறுமணத் தைலத்தால் பூசினாள் எனவும் கூறப்படுகிறது. மாற் *14:3-9* (பெத்தானியாவில்) தொழுநோய்ச் சீமோன் வீட்டில் இயேசு விருந்துண்ணும்போது இயேசுவின் தலையில் ஒரு பெண் நறுமணத் தைலத்தை ஊற்றியதைக் கூறுகிறது. ஆனால், அப்பெண்ணின் பெயர் குறிப்பிடப்படவில்லை. இவையெல்லாம் பெத்தானியாவில் நடந்த ஒரே நிகழ்ச்சியின் வெவ்வேறு வடிவங்களாக இருக்கலாம். தொழுநோயுடையவனாக இருந்த சீமோன் இயேசுவால் குணப்படுத்தப்பட்டிருக்க

லாம். அவன் மார்த்தாவின் தந்தை அல்லது கணவனாக இருந்திருக்கலாம். அல்லது அவன் இறந்த பின்னும் அவன் பெயரால் அந்த வீடு அழைக்கப்பட்டிருக்கலாம்.

**மார்புக்கவசம்** *(COAT OF MAIL)*

பாதுகாப்பிற்காக கழுத்திலிருந்து இடுப்பு வரைக்கும் அணியப்படுகின்ற மார்புக்கவச மாகும். கோலியத்து என்பவன் இதைப் போன்ற வெண்கலத்தால் செய்யப்பட்ட போர்க்கவசத்தை அணிந்திருந்தான் *(1 சாமு 17:5)*. அந்தக் கவசத்தின் நிறை ஐயாயிரம் செக்கேல் வெண்கலமாம். தாவீது சவுலி னுடைய மார்புக்கவசத்தை அதனுடைய அதிகமான எடையளவினால் அணிய மறுத்து விட்டார் *(17:38)*. லேவியாத்தானின் மேல் தோலானது இருமடங்கான மார்புக் கவசத்திற்குச் சமமாகக் கூறப்படுகின்றது *(யோபு 41:4)*. மார்புக்கவசம் போருக்குப் பயன்படும் பொருள்களில் ஒன்றாகும் *(காண்க. 2 நாள் 26:14; நெகே 4:16; எரே 46:4; 51:3)*.

**மாலுமி** *(PILOT)*

எசே *27:8.27-29*-இல் குறிப்பிடப்படும் மாலுமிகள் தீர் நாட்டுக் கடல் வாணிபத் துடன் தொடர்புடைய பெனிசியர்கள் ஆவர். யாக் *3:4*-இல் உடலின் ஒரு சிறிய பகுதியான நாவானது கப்பலோட்டிக்கு ஏற்ற திசையில் கப்பலைச் செலுத்த உதவும் சிறிய சுக்கானுடன் ஒப்பிடப்படுகிறது.

**மால்கு** *(MALCHUS - அரசன்)*

இவர் பேதுருவால் காது துண்டிக்கப் பட்ட தலைமைக் குருவின் ஊழியன் ஆவார் *(யோவா 18:10)*.

இந்த அடிமை தலைமைக் குருவின் வீட்டு ஊழியர்களில் தலைமைக் குரு வுக்குப் பணி செய்பவராக இருந்திருக்க வேண்டும் *(18:13)*; மேலும், கோவில் காவலர்களின் தலைவனாகக் கூட இருந்தி ருக்கலாம். இவர் சீரியா நாட்டினனாகவோ, நபத்தேயனாகவோ இருந்திருக்கலாம்.

இயேசுவைக் கைது செய்ததில் இவர் முக்கிய நபராக இருந்தாரா, இல்லையா என்பது தெளிவாக இல்லை. பேதுரு இவரது காதைத் துண்டித்தது இயேசுவுக்கு முன்னால் நடந்திருக்க வேண்டும். அத னால்தான் உடனே இயேசு அவரைக் குணப்படுத்துகிறார் *(லூக் 22:51)*. இவர் தலைமைக் குரு காயபாவின் பிரதிநிதியாக அங்கு வந்திருந்தால், அவன் தலைமைக் குருவுக்கு இணையாக மதிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது அன்றைய எபிரேயப் பாரம்பரியம். அப்படியிருந்தால் பேதுரு செய்தது பெருங்குற்றமாகும். எனவேதான், இயேசு உடனே அதனைச் சரி செய்திருக் கிறார்.

நான்காவது நற்செய்தி தனிப்பட்ட பாரம் பரியச் சான்று ஒன்றைக் கொண்டிருந்ததா லேயே, அது மட்டும் தாக்கியவர், தாக் குண்டவர் ஆகிய இருவர் பெயரையும் தருகிறது.

**மால்தா** *(MALTA)*

மால்தா, சிசிலிக்குத் தெற்கே அமைந்த ஒரு தீவாகும். கி.மு. முதலாம் நூற் றாண்டைச் சேர்ந்த தியோதோரசு கூறும் விளக்கப்படி சிசிலிக்கு அப்பால் மூன்று தீவுகள் இருந்தன. இவை ஒவ்வொன்றும் ஒரு நகரையும் புயல்காலத்தில் பாதுகாப் பளிக்கும் துறைமுகத்தையும் கொண்டிருந் தன. இத்தீவுகளில் 'மால்தாவும்' ஒன்று. மால்தா சிரக்கூசா துறைமுகத்திலிருந்து 144 கி.மீ. தொலைவிலும், சிசிலியின் மிக நெருங்கிய முனையிலிருந்து 96 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

மத்தியதரைக்கடல் வழியாக கிழக் கினின்று மேற்கே செல்பவர்களுக்கும், மேற்கினின்று கிழக்கே செல்பவர்க்கும் மால்தா அமைந்த இடம் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. பெனீசியர்கள் இதனைக் கைப்பற்றியது மேற்குக் கடலின் வியாபாரத்திற்கு இஃது ஒரு பாதுகாப்பான துறைமுகமாக இருந்ததுதான் காரணம். மேலும், இம்மால்தாவின் மக்கள் வியா பாரிகளால் ஆதரிக்கப்பட்டனர் எனவும் தியோதோரசு கருதுகிறார்.

மால்தா 29 கி.மீ. நீளமும், 13 கி.மீ. அகலமும் கொண்டது. இதன் உயரமான

பகுதி கடல் மட்டத்திலிருந்து 254 மீட்டர் உயரமுள்ளதே. மால்தாவின் மிகப் பெரிய துறைமுகம் இன்றைய வலேத்த என்ற நகரமாகும். புனித பவுல் வளைகுடா என அழைக்கப்படுமிடமே அப்போஸ்தலர் பணியில் கூறப்படும் கப்பற் சிதைவு நடந்த இடமென்பர்.

பவுல் நோன்பு இருந்தபின், கிரேத்தாத் தீவைக் கடந்து சென்ற பின்புதான் கப்பல் சிதைவு ஏற்பட்டது (அ.ப. 27:9). அதாவது, ஏழாம் மாதம் 10-ஆம் நாளுக்குப்பின் (லேவி 16:29), கப்பல் 13 நாட்கள் புயலில் சிக்கியது (அ.ப. 27:27). அக்டோபர் மாதத்தில் இது நடந்திருக்க வேண்டும். அப்படியென்றால் குளிரும் மழையும் நிறைந்த காலமாகும் (28:2). மால்தாவில் பவுல் மூன்று மாதங்கள் தங்கினார். அப்போது ஒரு பாம்பின் தாக்குதலிலிருந்து புதுமையாகத் தப்பினார். அதனால் மால்தா மக்கள் பவுலை ஒரு கடவுளாகக் கருதினர் (8:3-6). பவுல் தீவின் தலைவனான புப்லியுவின் தந்தையையும் பலரையும் குணப்படுத்தினார் (8:7-10).

யூத, கிறித்தவக் கல்லறைகள் பல மால்தாவில் உள்ளன. கிறிஸ்தவக் கல்லறைகள் 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பர்.

**மாவாய்** (MAAI - இரக்கமுள்ள)

எருசலேமின் மதிற் சுவர் மீண்டும் கட்டியெழுப்பப்பட்டபின் அம்மதிலை ஆண்டவனுக்கு அர்ப்பணித்தனர். அந்த ஊர்வலத்தில் மாவாய் என்ற பாடகரும் கலந்து கொண்டார் (நெகே 12:36).

**மாவு** (FLOUR)

இது நல்ல மாவு என்றும் அழைக்கப்பட்டது. இது உமியுடன் அரைக்கப்பட்ட மாவிலிருந்து வேறுபட்டதாகும். இந்த மாவு கோதுமை மணியின் உள் பருப்பிலிருந்து மட்டும் அரைத்து எடுக்கப்பட்டது. இவ்வாறு தானியத்திலிருந்து தயாரிக்கப்படும் மாவு ''கொழுமையான கோதுமை'' என்று அழைக்கப்படுகிறது (உப 32:14; சங் 81:16; 147:14). எனவே, இஃது ஒரு சொகுசு உணவு ஆகும் (2 அர 7:1; எசே 16:13; திருவெளி 18:13). அப்படியிருந்த போதிலும் சாதாரண மக்களும் இதைப் பயன்படுத்தினார்கள். சாராள் இந்த மாவிலிருந்து மூன்று அன்னியர்களுக்கு ரொட்டி செய்தாள் (ஆதி 18:6). இஃது உணவுக் காணிக்கைகளில்தான் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டது (யாத் 29:2; லேவி 2; 7; எண் 15: 28-29). இம்மாவு எண்ணெயோடு கலக்கப்பட்டு காணிக்கையாக்கப்பட்டது.

**மாவோக்கு** (MAOCH - ஏழ்மையான, நெஞ்சோடு கட்டப்பட்ட)

மாவோக்கு ஆக்கிசின் தந்தையும், காத்தின் அரசனுமாவார் (1 சாமு 27:2). தாவீது, தன்னை இடைவிடாது துரத்தி வந்த சவுலை விட்டு ஓடி அடைக்கலம் தேடி இவரிடமே சென்றார். இவர் ஆக்கிசின் தந்தையாகிய மாக்கா (3) எனக் கூறுவதும் உண்டு (1 அர 2:39). ஆனால், மாக்கா முதலாவது ஆக்கிசின் மகனாகவும், மாவோக்கின் பேரனாகவும் இருப்பதே சாத்தியம். ஏனெனில், மாக்காவின் காலம் பிந்தியது.

**மாவோன்** (MAON - குடியிருப்பு) - ஆள்

காலேபின் வழிவந்த இவர் சம்மாயின் மகனும், பெத்சூரின் தந்தையும் (1 நாள் 2:45) ஆவார். நாளாகமத்தின் மற்றொரு பகுதியில் இதனை ஒரு கிராமத்தையோ, நகரத்தையோ குறிக்கும் சொல்லாகவோ, அங்கு வாழ்ந்தவர்களிடையே நிலவி வந்த உறவைக் குறிப்பதாகவோ கொள்ளலாம்.

**மாவோன்** (MAON - குடியிருப்பு) - இடம்

யூதாவின் மலைநாட்டு மாவட்டத்தின் முக்கிய நகரம் இது (யோசு 15:55). யூதாவின் கர்மேலுக்குத் தெற்கே 2 கி.மீ. தொலைவிலும், எபிரோனிலிருந்து 14 கி.மீ. தொலைவிலும் உள்ள தேல் மயிம் என்ற இடமே இஃது எனக் கூறுகின்றனர். இதன் குன்றுப்பகுதிகளில் காணப்படும் சில சிதைந்த பகுதிகள் தாவீதின் காலத்தில் சிலர் இவ்விடத்தில் வாழ்ந்ததைக் காட்டுகின்றன. இப்பகுதிகளில் சுவர் எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. மாவோன் இதனைச் சுற்றியுள்ள சமவெளியின் நிலங்

களைப் பாதுகாப்பதற்குரிய இடமாகப் பயன்பட்டிருக்கலாம் *(1 சாமு 25:27தொ).*

தாவீது சவுலிடமிருந்து தப்பி மாவோனுக்குக் கிழக்கேயுள்ள மாவோன் பாலைவனத்தில்தான் அடைக்கலம் புகுந்தார். அவரைத் தொடர்ந்து வந்த சவுல் பெலிஸ்தியரின் திடீர்ப் படையெடுப்பைப் பற்றிக் கேள்விப்பட்டதும்தான், தாவீதைத் தொடர்வதைக் கைவிட்டு, திரும்பிச் சென்றார் *(1 சாமு 23: 24-25).* மாவோனில் இருந்த நாபால் ஒரு காலேபியர்; நிலங்கள் அழியாமல் பாதுகாத்த தாவீதுக்கு அவ்விடத்தில் தங்க வசதி தர மறுத்தார் *(1 சாமு 25:2 தொ).*

**மாற்கு எழுதிய நற்செய்தி** *(*MARK, GOSPEL ACCORDING TO*)*

***1. முன்னுரை:*** ஆதிக் கிறிஸ்தவப் பாரம்பரியம், நற்செய்தியின் இரண்டாவது வடிவத்தை மாற்கு எழுதியதாக ஒருமுகமாகச் சான்று கூறுகிறது. இந்நூல் நாம் கொண்டிருக்கும் நான்கு நற்செய்திகளில் சிறியதாகும். ஆனால், அவைகளில் காலத்தால் முந்தியது. ஆயினும், அரமேயிக்கு மொழியில் புனித மத்தேயு முதல் நற்செய்தியை எழுதியதாகப் பாரம்பரியம் கூறுவதால், கிரேக்க மத்தேயு முதலாவதாகவும், மாற்கு இரண்டாவதாகவும் எண்ணப்பட்டது. இந்நூல் மத்தேயுவின் சுருக்கம் என்று பல காலமாகக் கருதப்பட்டதால், இஃது அவ்வளவு முதன்மை பெறவில்லை; முக்கியத்துவம் அடையவில்லை. ஆனால், சமீப காலத்தில் அறிஞர்கள் இந்நூலின் சிறப்பையும் முக்கியத்துவத்தையும் ஆராய்ந்து அறிந்துள்ளனர்.

***2. பாரம்பரியச் சான்றுகள்:*** ஆதித் திருச்சபையின் பாரம்பரியம் இந்நூலை மாற்குதான் எழுதினார் என்று ஒருமுகமாகக் கூறுகிறது என்றோம். அப்பாரம்பரியத்தினின்று சில சான்றுகள் தருவது சாலச் சிறந்தது. காலத்தால் முந்திய சான்றாளர் பாப்பியசு என்பவராவர். இவரை மத்தேயுவைப் பற்றிக் கூறுங்கால் சாட்சியாகச் சுட்டிக்காட்டினோம். இவர் யார்? பிரிகியாவிலுள்ள எராப்போலியின் ஆயராவர். இவர் கி.பி. 130-க்கு முன் வாழ்ந்ததாகத் தெரிகிறது. இவர் ''ஆண்டவருடைய வாக்குகளுக்கு விளக்கம்'' என்ற தலைப்பில் ஐந்து நூல்களை எழுதினார். அவை நமக்குக் கிடைத்தில. ஆனால், அவற்றிலிருந்து சில பகுதிகளை யுசேபியு என்ற திருச்சபை வரலாற்று ஆசிரியர் தமது நூலில் தருகிறார். பாப்பிசு, யோவான் என்ற முதியோரின் (இவர் அப்போஸ்தலரான யோவானா, வேறொருவரா என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை) கூற்றைச் சான்றாகத் தருகிறார்: ''மாற்கு பேதுருவின் (மொழிபெயர்ப்பாளர்) போதனையை விளக்கிக் கூறியவர். தாம் நினைவிற்கொண்ட ஆண்டவருடைய சொல், செயல் யாவற்றையும் கவனத்தோடு எழுதினார். ஆனால், ஒழுங்கு முறையுடன் எழுதவில்லை'', என்று யோவான் என்ற முதியோர் கூறினார். மேலும், இக்கூற்றுக்கு விளக்கமாகவும் மாற்கின் நற்செய்தியில் ஒழுங்குமுறையில்லை என்று குறை கூறியவர்களுக்குப் பதில் அளிக்கும் முறையில், அதே யோவான் என்ற முதியோர் பின்வருமாறு கூறுகிறார்: ''இவர் (மாற்கு) ஆண்டவருடைய போதனையை நேரில் கேட்டதுமில்லை; அவரோடு அப்போஸ்தலர்களைப்போல் வாழ்ந்ததுமில்லை; ஆனால், பிற்காலத்தில் பேதுருவைப் பின்பற்றினார். பேதுருவோ, ஆண்டவருடைய வாக்குகளை ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறையுடன் போதிக்கவில்லை. தமக்குச் செவிமடுப்போரின் தேவைக்கு ஏற்பத் தமது போதகத்தை அமைத்துக் கொண்டார். ஆகவே, மாற்கும் தாம் நினைவில் கொண்டிருந்த அளவு, இவற்றைத் தவறில்லாது எழுதிவைத்தார். ஏனெனில், தாம் கேட்டவற்றில் ஒன்றையும் விட்டுவிடாதிருக்கவும், தவறான ஒன்றையும் கூறாதிருக்கவும் மிகவும் கவனமாயிருந்தார்''.

இக்கூற்றில், மாற்கு பேதுருவைச் சார்ந்து எழுதினார், அவரது போதக முறையைப் பின்பற்றி எழுதினார், தவறில்லாது துல்லியமாக எழுதினார் என்பவை தெளிவு. இக்

கூற்றில் அடங்கியவை எவ்வளவு உண்மை யானவை என்று உறுதியுடன் கூறுதல் கடினம். இன்று அறிஞர் பலர் இக்கூற்றை உண்மை என்று ஏற்றுக்கொள்வர். இது பற்றி அறிஞரிடையே முன்பு காணப்பட்ட ஐயம் இப்போது காணப்படுவதில்லை. பேதுரு கிரேக்க, இலத்தீன் மொழிகளை அறிந்திருக்க முடியாது. ஆகையால், அவருக்கு ஒரு மொழி பெயர்ப்பாளர் அவசியமாகும். இப்பெரும் அலுவலை மாற்கு ஏற்றுக்கொண்டார் எனலாம். ''ஒழுங்கு முறைப்படி அல்ல'' என்ற சொற்றொடர் கால வரை முறையைக் குறிக்கலாம். அல்லது அறிஞர் பலர் கருதுவதுபோல் குறிப்பிட்ட கருத்துக்கள் தழுவிய முறை யான திட்ட அமைப்பைக் கொண்டிருக்க வில்லை என்பதைக் குறிக்கலாம். ஏனெனில், மாற்கில் திட்ட அமைப்பு அவ்வளவு தெளிவாகத் தெரியவில்லை. ஆயினும், மாற்கு தவறின்றிக் கவனமாய் எழுதினார்.

பாப்பியசுக்கு முன், மாற்கின் நற்செய்தி பற்றிய புறச்சான்று ஒன்றும் நமக்குக் கிடைத்திலது. ஆயினும், உரோமைக் கிளமந்து, போலிக்கார்ப்பு ஆகியோருடைய நூல்களிலும், பர்னபா முதலியோருடைய கடிதங்களிலும் மாற்கின் கடிதங்கள் சுட்டிக் காட்டப்படுகின்றன. லூக்காவின் நற்செய்தியை மட்டும் ஏற்றுக்கொண்டு மற்ற நற்செய்திகளை ஏற்க மறுத்த மார்சியனுக்கு எதிராக, ஒவ்வொரு நற்செய்திக்கும் ஒரு முன்னுரை எழுதுவது இரண்டாம் நூற்றாண்டின் வழக்கம். அதிலே ''மாற்கு, பேதுருவின் மொழி பெயர்ப்பாளர். பேதுரு மரணத்துக்குப் பிறகு இவர் இத்தாலிய தேசப்பகுதியில் இந்நற்செய்தியை எழுதினார்'' என்று காணக்கிடக்கிறது. இதே கூற்றைத் திருச்சபையின் தந்தையராகிய கிளமந்து, ஓரிசன் ஆகியோர் தெளிவாகக் கூறுகின்றனர்.

இவற்றையெல்லாம் ஆராயுங்கால் இந்நற்செய்தியை மாற்குதான் எழுதினார் என்றும், அவர் பேதுருவின் சீடர் என்றும் ஐயமற அறியலாம். ஓர் அறிஞர் கூறுவது போல், நற்செய்திகள் அப்போஸ்தலர்களால் எழுதப்பட்டன என்று கூற விரும்பும் பாரம்பரியத்திலே, மாற்குதான் இந்நற்செய்தியை எழுதினார் என்று கூறுவதற்குப் போதிய அடிப்படையும், சான்றும் இருந்திருக்க வேண்டும். இல்லையெனில் இப்பாரம்பரியம் எழுந்திருக்க முடியாது; நீடித்திருக்க முடியாது.

**3. ஆசிரியர்:** புதிய ஏற்பாட்டில் பல தடவைகள் மாற்கு என்னும் பெயர் வருகின்றது (*அ.ப. 12:25; கொலோ 4:10; பில 24; 2 திமொ 4:1; 1 பேதுரு 5:13*). இவ்வாறு பலதடவை குறிப்பிடப்படும் மாற்கு என்றழைக்கப்பட்ட யோவான்தான் இந்நற்செய்தியை எழுதியவர் என்பதனை ஐயுறக் காரணங்கள் இல்லை. இவர் யூதர்களிடையே யோவான் என்றும், புற இனத்தவரிடையே மாற்கு என்றும் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இவர் எருசலேமில் வாழ்ந்த மரியா என்ற பெண்மணியின் மகனாவர் (*அ.ப. 12:12*). முதலாம் ஏரோது அக்கிரிப்பா, பேதுருவைச் சிறைப்படுத்திய போது, மாற்கின் வீட்டில் பலர் செபம் செய்வதற்குக் கூடியதாக வாசிக்கிறோம். இவர் பர்னபாவுக்கு உறவினர் (*கொலோ 4:10*). பர்னபா லேவியர் ஆகையால், மாற்கும் லேவியராக இருக்க வேண்டும் என்பர் சிலர். பாப்பியசின் கூற்றுப்படி, இவர் இயேசுவைப் பார்த்ததில்லை; சந்தித்ததில்லை. ஆனால், விவிலிய விரிவுரையாளர் சிலர் இயேசு கெத்சமனித் தோட்டத்தில் பிடிபட்டபோது, மேல் ஆடையை விட்டு விட்டுத் தப்பி ஓடிய, பெயர் குறிக்கப்படாத இளைஞன் (*மாற் 14:51-52*) மாற்காக இருக்க வேண்டும் எனக் கருதுகின்றனர். ஏனெனில், இந்நிகழ்ச்சி மாற்கின் நற்செய்தியில் மட்டும்தான் காணக்கிடக்கிறது.

பர்னபாவின் வழியாக, மாற்கு பவுலை அறிந்திருக்க வேண்டும். ஏரோது அக்கிரிப்பாவின் வேதகலாபனைக்குப்பின், பர்னபாவும் பவுலும் அந்தியோக்கியாக் கிறிஸ்தவர்களின் காணிக்கையைப் பஞ்சத்தால் வருந்திய எருசலேம் கிறிஸ்தவர்களுக்கு அளித்தபின் மாற்கைத் தங்களோடு கூட்டிச்

சென்றனர் (அ.ப. *12:25*). அவர்களின் முதல் வேதபோதகப் பயணத்தில் மாற்கை ''உதவியாளனாகச்'' சைப்பிரசுக்குக் கூட்டிச் சென்றனர் (அ.ப. *13:5*). அவர்களோடு சைப்பிரஸ், பம்பிலியா, சிறிய ஆசியா ஆகிய பகுதிகளுக்குச் சென்றார் மாற்கு. பம்பிலியாவிலுள்ள பெருகை என்னுமிடத்தில், ஏதோ ஒரு காரணத்தினால் அவர்களை விட்டு எருசலேமுக்குத் திரும்பினார் (அ.ப. *13:13*). இந்நிகழ்ச்சி பவுலுக்கும் பர்னபாவுக்கு மிடையே மனவருத்தம் ஏற்படக் காரணமாயிற்று. பவுல் மாற்கின்பால் கொண்ட நம்பிக்கையை இழந்தார். பவுல், பர்னபா ஆகியோரின் இரண்டாம் வேதபோதகப் பயணத்தில், பவுல் மாற்கைக் கூட்டிப் போக மறுத்துவிட்டார் (அ.ப. *15:36-38*). பர்னபாவோ மாற்கைக் கூட்டிப் போக விரும்பினார். அதனால் மனவேற்றுமையின் விளைவாக, பவுலும் பர்னபாவும் பிரிந்தனர். மாற்கு பர்னபாவோடு சைப்பிரசுக்குச் சென்றார்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு, மாற்கு பவுலின் நன்மதிப்பை மீண்டும் பெற்றிருக்க வேண்டும். ஏனெனில் உரோமையில் பவுல் கைதியாக இருந்தபோது மாற்கும் அவரோடு இருந்ததாக, பவுல் கைதியாக இருந்த காலத்தில் எழுதிய திருமுகங்களில் வாசிக்கின்றோம். பவுல் மாற்கைத் தம் ''உடன் உழைப்பாளி'' என்று குறிப்பிடுகிறார் (பில *24*). கொலோ *4:10* பவுலோடு மாற்கு உரோமையில் இருந்தார் என்றும், 2 திமொ *4:11* பவுலோடு மாற்கு தொடர்பு கொண்டிருந்தார் என்றும் கூறுகின்றன. பேதுரு, (ஒருவேளை) உரோமையிலிருந்து எழுதிய முதல் திருமுகத்தில் தமது ''மகன்'' என்று குறிப்பிடுவது ஒருவேளை மாற்காக இருக்கலாம் (1 பேதுரு *5:14*). பேதுருவையும் மாற்கையும் இணைக்கும் புதிய ஏற்பாட்டுச் சான்று இஃது ஒன்றுதான். ஆயினும், ஒரு தலைமுறை பிந்திய பாப்பியசு, மாற்கு பேதுருவின் மொழிபெயர்ப்பாளர் என்றும், மாற்கு எழுதிய நற்செய்தி பொருளளவில் பேதுருவின் போதகத்தை அடிப்படையாகக் கொண்டது என்றும் கூறுகிறார். இப்பாரம்பரியம் இதுநாள் வரை நிலைத்துள்ளது. மாற்கு அலக்சாந்திரியாவில் ஆயராக இருந்ததாக யுசேபியு கூறுகிறார். இக்கூற்றின் உண்மை ஐயத்திற்குரியது. இக்கூற்றிற்கு ஆதாரம் ஒன்றுமில்லை. ஏனெனில், அந்நகரின் ஆயர் பட்டியலில் மாற்கின் பெயர் காணப்படவில்லை. மற்றபடி, மாற்கைப் பற்றிய விவரங்கள் புதிய ஏற்பாட்டில் எங்கணுமில்லை. தாம் யார் என்றோ, தம்மைப்பற்றிய விவரங்களையோ மாற்கு தமது நற்செய்தியில் கூறவில்லை.

கிறிஸ்தவ ஓவியங்களில் மாற்கு நற்செய்தியுடன் தோன்றுகிறார். பல இடங்களில் மாற்கிற்கே உரியதாகக் கருதப்படும் அடையாளமான இறக்கையுள்ள சிங்கமும் பொறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வடையாளம் இரு விவிலியக் கருத்துக்களைக் கொண்டுள்ளது. மாற்கு தமது நற்செய்தியின் தொடக்கத்தில் திருமுழுக்கு யோவானைப் ''பாலை நிலத்தில் குரல் ஒன்று கேட்கிறது'' (*1:3*) என்ற தொடரால் சுட்டிக்காட்டுகிறார். இதை ஓவியர்கள் கர்ச்சிக்கும் சிங்கத்திற்கு ஒப்பிட்டனர். எசேக்கியேல் காட்சியில் காணப்படும் இறக்கையுள்ள நான்கு விலங்குகளில் ஒன்று இந்நற்செய்தியாளரைச் சுட்டுவதாகப் பாரம்பரியம் கருதியது. இவ்விரண்டையும் உள்ளடக்கிய இறக்கையுள்ள சிங்கத்தை மாற்கின் அடையாளமாகப் பாரம்பரியம் கருதியது. ஓவியர் சிலர் மாற்கைப் பேதுருவோடு ஒன்றித்துக் காட்டுகின்றனர். இவரது திருநாளை ஏப்பிரல் மாதம் 25-ஆம் நாள் கொண்டாடுகிறோம். இவ்விழா கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து கொண்டாடப்படுகிறது.

**4. மாற்கும் பேதுருவும்:** இருவரையும் இணைத்துக் கூறும் பாரம்பரியச் சான்றுகளில் சிலவற்றைப் பார்த்தோம். இக்கூற்றுக்கு மாற்கின் நற்செய்தியில் சான்றுகள் உளவா? இதற்குச் சார்பாகப் பல காரணங்கள் காட்டப்படுகின்றன. பாலஸ்தீனத்தைப் பற்றியும், சிறப்பாக எருசலேமைப் பற்றியும் பரந்த அறிவைக்

கொண்டுள்ளார் ஆசிரியர். அடிக்கடி பேதுருவின் பெயர் கூறப்படுகிறது. பேதுருவுக்குச் சிறப்பு வருவிக்காத விவரங்கள் *(8:33; 14:37)* மத்தேயு, லூக்காவில் காணப்படாது மாற்கில் மட்டும் காணப்படுகின்றன. மாற்கின் நற்செய்தி தனது இலக்கியத் தன்மையிலும், திட்ட அமைப்பிலும் அப்போஸ்தலர் பணியில் பேதுரு கொடுக்கும் கிறிஸ்துவின் வாழ்வைப் பற்றிய சுருக்கத்தோடு நெருங்கிய ஒற்றுமை கொண்டிருக்கிறது *(அ.ப. 1:21; 10:37-43)*. இந்நற்செய்தியில் காணப்படும் நிகழ்ச்சியுரைகள் நேரே கண்டவர் கூறுவதுபோல் உயிருள்ள விதத்தில் அமைந்துள்ளன. இதில் காணப்படும் சிந்தனையும் மொழி நடையும் பேதுருவின் திருமுகங்களில் காணப்படுபவைகளோடு சிறிது ஒற்றுமை கொண்டுள்ளன. ஆகையால், இந்நூல் பேதுருவின் போதகத்தை அடிப்படையாகக் கொண்டது என்பர்.

ஆனால், மாற்கு எருசலேமில் வாழ்ந்தவர். ஆகவே, பாலஸ்தீனத்தைப் பற்றியும், எருசலேமைப் பற்றியும் நன்கு அறிந்திருப்பதில் தனிச்சிறப்பு ஒன்றுமில்லை. இதற்கு அவர் பேதுருவைச் சார்ந்து எழுத வேண்டியதில்லை. பேதுரு சீமோன் என ஆறு முறையும், பேதுரு என்று பத்தொன்பது முறையும் பதினேழு நிகழ்ச்சிகளில் குறிக்கப்படுகிறார். இதுவும் இருவருக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருந்ததாகக் காட்டும் விதத்தில் அமையவில்லை என்று கூறலாம். பேதுரு அப்போஸ்தலர் பட்டியலில் முதல்வராகக் கூறப்படுவது எல்லா நற்செய்திகளுக்கும் பொதுவானது. மாற்கு பேதுருவுக்குச் சிறப்பு வருவிக்காதவைகளைக் கூறுதல் பேதுருவுக்கு இழிவைத் தரவில்லை. ஏனெனில், ஏற்கெனவே பேதுருவின் பதவியும் பெருமையும் யாவராலும் ஏற்கப்பட்டு உறுதி பெற்றிருந்தது. மாற்கு வாய்மொழிப் பாரம்பரியத்தைக் கூறுகிறாரே ஒழிய, பேதுருவைப் பற்றித் தமக்கு மட்டும் தெரிந்த ஒரு நிகழ்ச்சியையும் கூறவில்லை. உயிருள்ள விதத்தில் கூறுதலோ, கருத்தொன்றிப்போ ஆதி அப்போஸ்தல மறைபோதகத்திற்கு உரியவையாகும்.

ஏற்கெனவே பாரம்பரியம் கூறுவது தவறாகுமா? ஆகாது. மேற் கூறியவற்றிலிருந்து சிலவற்றை நாம் யூகிக்கலாம். காலத்தால் முந்திய, அப்போஸ்தலர்கள் எளிய போதகத்தை அளிக்கிறது மாற்கின் நற்செய்தி. பாரம்பரியம் பேதுருவையும் மாற்கையும் இணைத்துக் கூறுவதிலிருந்து பேதுரு நிறுவிய திருச்சபைகளிலுள்ள, சிறப்பாக உரோமைத் திருச்சபையிலுள்ள வாய்மொழி மறைபோதக மரபை, மாற்கு பொருளளவில் அப்படியே காத்து நமக்கு அளிக்கிறார் எனக் கொள்ளலாம்.

**5. யாருக்காக எழுதப்பட்டது?:** மாற்கு, உரோமையில், புற இனக் கிறிஸ்தவர்களுக்காக, அவர்கள் சூழ்நிலைக்கேற்ப தமது நற்செய்தியை எழுதினார் என்று பாரம்பரியம் ஒருதலையாகக் கூறுகிறது. இக்கூற்றுக்கு இந்நூலில் அகச் சான்றுகள் பலவுள. அரமேயிக்கு சொற்களுக்கும் சொல் வழக்குகளுக்கும் விளக்கம் அளிக்கப்படுகிறது. அரமேயிக்கு மொழியை அறியாதோர்க்கு இவ்விளக்கம் அளிக்கப்படுகிறது என்பது வெளிப்படை. யூதப் பழக்க வழக்கங்களும் விளக்கப்படுகின்றன. இவ்விளக்கங்கள் மற்ற நற்செய்திகளில் காணப்படுவதைவிட மாற்கில் அதிகமாகக் காணப்படுகின்றன *(2:26; 3:17; 5:41; 7:3; 11:34; 14:12-36; 15:22.34.42)*.

புதிய ஏற்பாட்டின் எந்த நூலையும்விட மாற்கில் இலத்தீன் சொற்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆகையால், இஃது உரோமையருக்காக எழுதப்பட்டது என்று முடிவுகட்டி விடக்கூடாது. ஏனெனில், இவற்றில் பல அக்காலத்திய படைத்துறைச் சொற்களும், கலைச்சொற்களும் ஆகும். உரோமையில் இலத்தீனை விட கிரேக்க மொழியே அதிகம் பேசப்பட்டது. ஆயினும் படைத்துறை, நீதி வழங்கல், பொருளாதாரம் ஆகியவை சார்ந்த சொற்கள் கிரேக்க மொழிமட்டும் பேசப்படும் இடங்களில்கூட, இலத்தீன் மொழியில்தான் வழக்கில் இருந்தன. ஆயினும், இரண்டு இடங்களில் கிரேக்கச் சொற்களுக்கு இலத்தீனில் விளக்கம் அளிக்கப்படுகிறது *(12:42; 15:16)*.

இவை மாற்கின் நற்செய்தி உரோமையில் எழுதப்பட்டது என்ற பாரம்பரியத்திற்கு ஆதரவாக இருக்கின்றன.

பழைய ஏற்பாட்டிலிருந்து, மத்தேயுவை விட மாற்கு குறைந்த அளவிலேயே வாச கங்களை எடுத்துக் காட்டுகின்றார். மோசே யின் சட்டத்துக்கும், இயேசுவின் முதன்மை யான அலுவல் யூதர்களிடையே உழைப் பதே என்ற உண்மைக்கும் இந்நூல் முக்கி யத்துவம் அளிக்கவில்லை. இயேசுவுக்கும் பரிசேயர், மறைநூலறிஞர் ஆகியோருக்கு மிடையே நடந்த தர்க்கங்கள், மற்ற நற் செய்திகளில் கூறப்படுவதுபோல் அழுத்திக் கூறப்படவில்லை. இவை யாவும், இந்நற் செய்தி புற இனக் கிறிஸ்தவர்களுக்காக எழுதப்பட்டது என்பதை வலியுறுத்து கின்றன.

இந்நூல் எகிப்தில் எழுதப்பட்டது என் றும், அந்தியோக்கியாவில் எழுதப்பட்டது என்றும் ஒரு சிலர் கூறியுள்ளனர். ஆனால், இக்கூற்றுகளுக்கு ஆதாரம் ஒன்றுமில்லை.

**6. எப்போது எழுதப்பட்டது?:** மாற்கின் நற்செய்தி எப்போது எழுதப்பட்டது என்று திட்டவட்டமாகக் கூற முடியாது. இந்நூல் பேதுரு, பவுல் ஆகியோர் மரணத்திற்குப் பின் (கி.பி. 64) எழுதப்பட்டது என்று இரனேயு கூறுகின்றார். மார்சியனுக்கு மாறாக எழுதப்பட்ட முன்னுரையும் இத னையே கூறுகிறது. பேதுரு வாழ்ந்தபோதே உரோமைக் கிறிஸ்தவர்களின் வேண்டு கோளுக்கிணங்கி மாற்கு தமது நூலை எழுதியதாக அலக்சாந்தரியாவின் கிளமந்து கூறுகிறார். பேதுரு பார்த்து ஒப்புதல் அளித்ததாகவும் கூறுகிறார். உரோமைத் திருச்சபை ஒப்புதல் அளித்து ஏற்றுக் கொண்டதையே அவர் இவ்வாறு கூறியிருக் கலாம். இவ்விரு கூற்றுகளில் எது உண்மை என்று கண்டறிதல் கடினம். இக்கால விவிலிய ஆய்வாளர்கள் மாற்கு கி.பி. 60-70-க்குள் எழுதப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதுகின்றனர். இந்நூல் கி.பி. 70-க்குப் பின் எழுதப்பட்டிருக்க முடியாது என்பர் சிலர். அப்படி எழுதப்பட்டிருந்தால் கி.பி. 70-இல் நடந்த எருசலேம் அழிவைப் பற்றித் தெளிவாகக் கூறியிருந்திருப்பார் ஆசிரியர். அதைப் பற்றி விவரங்கள் காணப் பட வேண்டும். ஆனால், அவ்வாறு காணப் படவில்லை. ஆகையால், 70-க்கு முன் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பர். ஆனால், ஒன்று கூறப்படவில்லை, ஆகை யால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று கூறுதல் எப்போதும் உறுதியற்ற வாதமாகும். கி.பி. 70-க்கு முன்னே நிலை யான வடிவம் பெற்ற வாய்மொழிப் பாரம்பரியத்தைப் பிரமாணிக்கமாய்க் கூறு வதால் எருசலேம் அழிவைப் பற்றி மாற்கு ஒன்றும் கூறாதிருக்கலாம். ஆயினும், ஆய் வாளர்கள் மாற்கு, 70-க்கு முன் எழுதப்பட் டிருக்க வேண்டும் என்று ஒருமனதாகக் கூறுகின்றனர். மேலும் லூக்கா, தமது நற்செய்தியில் மாற்கின் நற்செய்தியைப் பயன்படுத்தியிருப்பதால், மாற்கு லூக்கா வுக்கு முன் எழுதப்பட்டிருக்க வேண்டும். இவற்றிலிருந்து கி.பி. 65-70-க்குள் எழுதப் பட்டிருக்க வேண்டும் என்று நாம் கூறி னால், அதனை உண்மை என்று கொள் வதில் தவறொன்றுமில்லை.

**7. மூலங்கள்:** பேதுருவின் மொழி பெயர்ப்பாளராக மாற்கு விளங்கினார் என்ற பாரம்பரியத்தைக் கூறினோம். அத னால் மாற்கு கையில் ஏட்டை வைத்துக் கொண்டு பேதுரு சொல்லச் சொல்ல எழுதினார் என்று கருதக்கூடாது. மாற் குக்குப் பேதுருவின் போதகமானது மூலம் என்பது உண்மையே. ஆனால், பல மூலங் களில் இதுவும் ஒன்று; ஒரே மூலம் அன்று. பல இலக்கிய மூலங்களை மாற்கு பயன் படுத்தியிருக்க வேண்டும். அவற்றில் சிறப் பானவை இரண்டு. இரண்டும் பேதுருவின் போதகத்தை அடிப்படையாகக் கொண் டவை. அவற்றுள் ஒன்று மத்தேயுவின் அரமேயிக்கு நற்செய்தியின் மொழி பெயர்ப்பு. இஃது அப்போஸ்தலர்களின் போதகத்தின் சுருக்கமாகும். இது பொருள ளவில் பேதுரு பாலஸ்தீனத்தில் போதித்த நற்செய்தி அறிக்கையாகும். மற்றொன்று பேதுரு உரோமையருக்குப் போதித்த நற்

செய்தியறிக்கையாகும். பின்னதன் காரண மாக மாற்கின் நற்செய்தியில் ஒருவித விறுவிறுப்பு இருக்கிறது; நேரில் கண்டவர் கூறுவதாகத் தோன்றுகிறது. முன்னதன் காரணமாக மாற்கில் மொழி நயமும் சில இடங்களில் காணப்படுகிறது.

இந்நற்செய்தியை ஆராயுங்கால் இந் நூலுக்குப் பிற மூலங்களும் இருந்திருக்க வேண்டும் எனத் தெரியவருகிறது. ஓர் அறிஞர் இந்நூலை முப்பெரும் பகுதி களாகப் பிரிக்கின்றார். *1)* ஏற்கெனவே பாரம்பரியத்தின் அடிப்படையில், அமைக் கப்பட்ட நிகழ்ச்சியுரை, வாக்குகள் அடங் கிய தொகுதி. இவை *1:1-13; 9:30-35; 10:1-31; 10:32-55; 11:1-25. 2)* ஆள் சான்றின் அடிப்படையில், ஒருவேளை பேதுருவின் நேரடிச் சான்றின் அடிப்படையில், அமைக் கப்பட்ட நிகழ்ச்சியுரைத் தொகுதி. இவை *1:21-39; 4:35-5:43; 6:30-56; 7:24-37; 8:27-9:29; 14:1-16. 3)* வாக்குகள், அறிவிப்புகள் அடங் கிய நிகழ்ச்சியுரைத் தொகுதி. இவை *2:1-3:6; 3:19-35; 4:1-35; 11:27-12:44; 13:5-37.* முதலாவது மூன்றாவது தெகுதிகளை வகுக்க ஏதுவான இயேசுவின் வாக்குகள், செயல்கள் அடங்கிய வாய்மொழிப் பாரம் பரியம் ஏற்கெனவே இருந்திருக்க வேண் டும். இவைகளில் சில எழுத்து வடிவமும் எடுத்திருக்கக்கூடும். ஆயினும், மாற்கின் நற்செய்தியில் இவை தொகுக்கப்பட்டிருக் கும் முறைக்கு மாற்கே பொறுப்பாளி. *1:14* தொ; *3:7-12* ஆகிய பகுதிகளில் காணப் படும் இணைப்புப் பகுதிகள் மாற்கி னுடையவையாகும்.

மாற்குக்கு மட்டும் உரிய பகுதிகள் சிலவே. அவை: செவிடனும் ஊமையனு மானவனைக் குணப்படுத்துதல் *(7:31-37)*; பெத்சயிதாவைச் சார்ந்த குருடனுக்குப் பார்வை அளித்தல் *(8:22-26)*; விதையின் உவமை *(4:26-29)*; இயேசுவின் உறவினர் பற்றிய நிகழ்ச்சி *(3:20* தொ); கெத்சமனித் தோட்டத்து இளைஞன் *(14:51* தொ)

மாற்கு தமக்குக் கிடைத்த மூலங்களை எவ்வாறு பயன்படுத்தினார் என்று ஆராயுங் கால், கீழ்க்கண்ட முறைகளைப் பின்பற்றி யிருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்ற னர். *1)* பாரம்பரியத்திலிருந்து பெற்ற தனி நிகழ்ச்சிகளையும், ஏற்கெனவேயுள்ள தொகுப்புகளையும் சிறிதும் மாற்றாது, ஏறக்குறைய அப்படியே தமது நற்செய்தி யில் ஏற்றுக்கொள்கிறார். *2)* வெகு அரி தாகச் சில இடங்களில் சில பகுதிகளுக்கு விளக்கம் அளிக்கிறார். *3)* பாரம்பரியத்தில் சில பகுதிகள் ஏற்கெனவே பொருள் சார்ந்த தலைப்பு அடிப்படையில் தொகுக்கப்பட்டி ருந்தால், அவைகளுக்கு நிகழ்ச்சியுரை அமைப்பைக் கொடுக்கமாட்டார். *4)* ஒரு நிகழ்ச்சியைப் பற்றி இருவகைப் பாரம்பரி யம் இருந்தால், அவற்றை ஆராய்ந்து தேர்ந்தெடுக்காது அல்லது ஒற்றுமைப் படுத்திக் கூறாது இரண்டு பாரம்பரியத்தை யும் கூறுவார். அப்பம் பலுகியது இரு முறை கூறப்படுவது *(6:30-44; 8:1-10)* மேற்கூறிய முறை அமையப் பெற்றதற்குச் சான்றாகும். மாற்கின் நற்செய்தி இரட்டை விவரிப்புகளைக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. பேதுரு மட்டும்தான் மாற் குக்கு மூலம் என்றால் இவ்விதநிலை அவரது நூலில் காணப்பட மாட்டாது. மேற்கூறியவற்றிலிருந்து, மாற்கு பல மூலங்களைப் பயன்படுத்தினர் என்றும், அவற்றில் நிகழ்ச்சிகள் பல வேறுபாடு களுடன் காணப்பட்டிருக்க வேண்டும் என்றும் அறியலாம்.

**8. குறிக்கோள்:** மாற்கே கூறுவதுபோல் ''கடவுளின் மகனாகிய இயேசு கிறிஸ்து வின் நற்செய்தியை'' (மாற்கு *1:1*) மக்க ளுக்கு அளிப்பதே அவரது குறிக்கோளா கும். அப்போஸ்தலர்களின் போதகத்தின் குறிக்கோளும் இதுவே. இயேசு, கடவுளின் மகன் ஆகிய சொற்களின் பொருளை மாற்கின் வாசகர்கள் ஒரு சிறிது அறிந்திருந் தனர் என்றே கூற வேண்டும். இதற்கு, மாற்கிற்கு முன் எழுதப்பட்ட பவுலின் திருமுகங்கள் சான்று கூறுகின்றன (உரோ *1:7; 1* கொரி *1:3;* பிலி *2:5-11;* கொலோ *1:15-20*). இயேசுவே மீட்பர், இறைமகன். இதுவே திருச்சபையின் விசுவாசம். இவ்

விசுவாசத்திற்கு விளக்கம் அளிப்பதே இந் நூலின் முதல் நோக்கம்.

மேலும், இந்நூல் புற இனத்தவருக்காக எழுதப்பட்டது. ஆகவே, இந்நூலில் மறை போதகத் தன்மை மிளிர்வதைக் காணலாம். இவ்விரண்டு நோக்கங்களும் இந்நற்செய்தி யில் அருஞ்செயல்களுக்கு ஏன் முக்கியத் துவம் அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை அறியத் துணை செய்கின்றன. அதனோடு நற்செய்தியின் திட்டத்தையும் நிர்ணயிக் கின்றன.

**9. திட்டம்:** தலைப்பு: *1:1*-முதல் வச னத்தைப் பலர் முழுநூலுக்கும் தலைப் பாகக் கொள்வர். அறிஞர் சிலர் அதை *2,3*-ஆவது வசனங்களோடு சேர்த்து வாசிப் பர். இதன்படி, இயேசு கிறிஸ்துவிடம் கொண்ட விசுவாசத்தினால் வரும் மீட்பின் நற்செய்தி எனப்பொருள் கொள்வர். *2,3*-ஆம் வசனங்களில் வரும் எசாயாவின் இறைவாக்கு நிறைவேறுகிறது என்று இந் நூல் காட்டுவதாகக் கொள்வர். ஆனால், முதலாம் வசனத்தை நூலின் தலைப்பாகக் கொள்ளுதல் மேலாகும். ஏனெனில், இது நற்செய்தியின் நோக்கத்தை எடுத்துக் காட்டு கிறது. அதாவது, இறை மகனான இயேசு கிறிஸ்துவின்பால் கொண்ட விசுவாசத்தின் விளைவாக வரும் மீட்பின் போதகம் திருமுழுக்கு யோவான், இயேசு ஆகியோ ரின் பணியால் செயல்படுகிறது என்று காட்டுகிறது.

முன்னுரை: *1:2-13* திருமுழுக்கு யோவான் போதித்தல்; இயேசுவின் திருமுழுக்கு; அவர் சோதிக்கப்படல்.

இம்முன்னுரை திருமுழுக்கு யோவானை யும், இயேசுவையும் அறிமுகப்படுத்து கிறது. வரலாற்றிலே இருவரையும் இணைக்கிறது. இவ்விருவரின் வழியாக இறைவன் வரலாற்றில் புகுகின்றார். சாத்தா னின் ஆதிக்கத்தை அழித்தொழிக்கும் அலு வல் தொடங்குகிறது.

***அ) கலிலேயாவில் இயேசுவின் திருப் பணி: (1:14-6:6).***

*1:14-45* கப்பர்நாகுமிலும், அதை அடுத்த பகுதிகளிலும் இயேசுவின் திருப்பணி: முதல் சீடர்களை அழைத்தல்; அவரது போதகம் கேட்டு மக்கள் மலைத்தல்; கப்பர்நாகுமில் இயேசுவின் பணி; நோய் களைக் குணப்படுத்துதல்; பேய் ஓட்டு தல்; இயேசுவின் புகழ் பரவுதல்; தொழு நோயாளி குணமடைதல்.

*2:1-3:6* இயேசுவுக்கும் மறைநூலறிஞர்களுக் குமிடையே சச்சரவுகளும் தர்க்கங்களும்; மறைநூல் அறிஞரும் பரிசேயரும் திகைக் கின்றனர்; சினம் கொள்கின்றனர்; ஐந்து தர்க்க அறவுரைகள்.

*3:7-35* மக்கள் திரள் இயேசுவைப் பின்பற் றல்; பன்னிரு அப்போஸ்தலர்களைப் பொறுக்கி எடுத்தல்; மறைநூல் அறி ஞரின் குற்றச்சாட்டுகள்.

*4:1-34* உவமைகள்

*4:35-5:43* கலிலேயாக் கடலருகில் அருஞ் செயல்கள்; அருஞ்செயல்கள் வழியாக அப்போஸ்தலர்களின் விசுவாசத்தை உறு திப்படுத்துகிறார்.

*6:1-6* நாசரேத்தூரார் இயேசுவை ஏற்க மறுத்தல்.

***ஆ) இயேசுவின் பயணங்கள்: (6:6-10:52).***

*6:6-13* அப்போஸ்தலர்களை அனுப்புதல்.

*6:14-29* ஏரோதின் அச்சமும், திருமுழுக்கு யோவானின் மரணமும்.

*6:30-56* 5,000 பேருக்கு உணவு அளித்தல்.

*7:1-23* மாசுபடுத்துதல் பற்றிய பிரச்சனை.

*7:24-8:12* பயணமும் திரும்புதலும்; தீர், சீதோன் என்ற பகுதிகளுக்குச் செல்லல்; 4,000 பேருக்கு உணவு அளித்தல்; பல அருஞ்செயல்கள்.

*8:13-9:50* பயணமும் திரும்புதலும்;பேதுரு வின் விசுவாச அறிக்கை;பாடுகளை முன் னறிவித்தல்; இயேசு ஒளியுருவாதல்; போதகங்கள்.

*10-1-52* பெரயா, யூதேயா வழியாக எருசலே முக்குச் செல்லல்; போதகங்கள்; தர்க்கங் கள்; குருடனுக்குப் பார்வை அளித்தல்.

**இ) எருசலேமில் இயேசுவின் பணி:** *(11:1-13:37).*

*11:1-26* எருசலேமில் வெற்றி நுழைவு; ஆலயத்தைத் தூய்மையாக்கல்.

*11:27-12:44* யூதத் தலைவர்களுடன் தர்க்கம்.

*13:1-37* உலக இறுதிக்காலம் பற்றிய அற வுரை.

**ஈ) பாடுகளும் உயிர்ப்பும்:** *(14:1-16:8).*

*14:1-42* இயேசுவும் அவரது சீடர்களும்; இறுதி இரவு உணவு.

*14:43-72* யூத நீதிமன்றத்தின் முன் இயேசு.

*15:1-47* உரோமையரின் நீதிமன்றத்தின் முன் இயேசு; சிலுவையில் உயிர் நீத்தல்.

*16:1-8* உயிர்த்த இயேசு.

*16:9-20* முடிவுரை : பிற்சேர்க்கை.

மேற்கூறப்பட்டதிட்டம் மேலெழுந்த வாரியான பிரிவாகும். இந்நூலில் திட்டம் இல்லாதிருப்பதுபோல் தோன்றுகிறது. ஆயினும், இந்நூலின் மூலங்கள் அறிவிக்க விழைந்தவற்றைப் பிரமாணிக்கமாய் நமக்கு அளிக்கிறது. நன்றாக ஆராய்ந்தால், அதில் ஒரு திட்டம் இருப்பது நன்கு விளங்கும். நற்செய்தியின் திட்டம் (அமைப்பு) இயேசுவைப் பிறர் ஏற்க மறுத்தல், அவரைப் பிறர் தவறாகப் புரிந்து கொள்ளு தல் ஆகியவற்றைச் சுற்றி அமைகிறது. அவரை ஏற்க மறுத்தல், கலிலேயப் பணி யின் ஒவ்வொரு கட்டத்திலும் காணப்படு கிறது. இது கலிலேயப் பணியின் முடிவில் நாசரேத்தூரார் இயேசுவை ஏற்க மறுக்கும் செயலிலே உச்சநிலை அடைகிறது. அவரைத் தவறாகப் புரிந்துகொள்ளுதல் சீடர் குழுவிலே தொடங்குகிறது. பாடு களை மும்முறை அறிவித்தலில் வளர் கிறது. இந்நூலின் அமைப்பின் இரண்டா வது படி பேதுருவின் விசுவாச அறி விப்பைக் கொண்டுள்ளது. இது வருங் காலத்தில் இயேசுவையும் அவரது போதகத் தையும் சரியானபடி புரிந்து கொள்ளத் துணை செய்கிறது.

இயேசுவின் உண்மையான குணவியல்பு கள் கலிலேயப்பணி,பயணங்கள், எருச லேம் பணி ஆகியவற்றில் படிப்படியாகக் காட்டப்படுகின்றன. ஆனால், மாற்குக்கோ, உண்மையான இயேசுவின் முழுவெளிப் பாடு அவரது பாடுகளிலும், உயிர்ப்பிலும் காணப்படுகிறது. இவையின்றி நாம் அவரை அறிந்து கொள்ளவோ, ஏற்றுக் கொள்ளவோ முடியாது. இந் நற்செய்தியில் இஃது ஒரு சிறப்பான உறுப்பாகும்.

சிலர் இந்நூலை வேறு விதமாய்ப் பிரிவு செய்வர்: முன்னுரை *(1:1-13)*; திருப்பணி *(1:14-13:37)*; பாடுகள் *(14:1-15:47)*; முடி வுரை *(16:1-8)*. மேலும் திருப்பணியை இரு பிரிவுகளாகக் கொள்வர். முதல் பிரிவு *(1:14-8:30)*: இயேசுவையும் அவரது போத கத்தையும் பற்றிய பல்வேறு கருத்துக்கள் தரப்படுகின்றன. பேதுருவின் விசுவாச அறிக்கையில், இப்பிரிவு உச்சநிலை அடை கிறது எனலாம். இரண்டாம் பிரிவு *(8:31-13:47)*: இயேசுவின் வரவிருக்கும் மரணம் பின்னிலையாக அமைகிறது; அவ ரது மரணத்துக்கு இட்டுச் செல்கிறது. மேலும், மாற்கு *1:14-15*-இலும், *14:1-2*-இலும் ஆசிரியர் அளிக்கும் சிறிய முன்னுரைகள், ஆசிரியர் இந்நூலை இரு பகுதிகளாகப் பிரிக்கக் கருதினார் என்று காட்டுவதாக அமைந்துள்ளன. முதல் பிரிவு இயேசுவின் போதக அலுவலை விவரிக் கின்றது *(1:14-13:37)*. இரண்டாம் பிரிவு அவரது பாடுகளையும் மரணத்தையும் விவ ரிக்கின்றது *(14:1-15:47)*.

மேலும் இயேசு யார் என்ற கேள்விக்கு விடையளிக்கும் வாயிலாக இந்நூலை இரு பகுதியாகப் பிரிப்பர். முதல் பகுதி

இயேசுவே மெசியா என்று காட்டுகிறது *(1:14-8.30)*. இப்பகுதி பேதுருவின் விசுவாச அறிக்கையில் உச்சநிலை அடைகிறது என லாம். இரண்டாம் பகுதி இயேசுவே மனுமகன் என்று அறிவிக்கிறது *(8:31-16:8)*. இப்பகுதி இயேசுவின் பாடுகள், இறப்பு, உயிர்ப்பில் உச்ச நிலை அடைகிறது.

பலரும் பலவாறு இந்நூலைப் பிரித்துத் திட்டம் செய்வதை எடுத்துக் கூறினோம். ஆனால், ஒன்றும் நிறைவுடைய விளக்க மாக அமையவில்லை. மாற்கு எந்தக் கருத்தை மையமாகக் கொண்டு தமது நூலை எழுதினார், எவ்விதத் திட்டத்தை மனதில் கொண்டு தமது நூலை எழுதினார் என்பன பற்றி அறிஞர்களிடையே ஒருமித்த கருத்து இல்லை எனலாம். இஃது அவர் களது ஆய்வுத்திறனுக்குச் சவால் விடுவதாக அமைந்துள்ளது.

***10. முடிவுரை பற்றி:*** முடிவுரை பற்றிக் குறிப்பு எழுதுவது வினோதமாகத் தோன்ற லாம். ஆனால், இந்நூலுக்கு இஃது அவசிய மாகிறது. ஏனெனில், மாற்கு *16:9-20* என்ற பகுதியைப் பற்றி ஒரு பிரச்சனை உண்டு. இப்பகுதி பல கையெழுத்துச் சுவடிகளில் காணப்படவில்லை. சிலவற்றில் இப் பகுதிக்குப் பதிலாகச் சுருக்கமான முடி வுரை காணப்படுகிறது; சிலவற்றில் நீண்ட முடிவுரை காணப்படுகிறது. திருச்சபையின் தந்தையருள் பலர் இப்பகுதியை அறிந்திருந் ததாகத் தெரியவில்லை. இப்பகுதி முதன் முதலாக வேதசாட்சியான யுத்தீன் (இறப்பு 165) எழுதிய நூல்கள், தேசியன் (இறப்பு 170) எழுதிய ஒத்தமை நற்செய்தி, இரனேயு (இறப்பு 202) எழுதிய நூல்கள் ஆகியவற் றில் காணப்படுகிறது.

பொருளடக்கத்திலும், அமைப்பிலும், சொற்றொகுதியிலும், நடையிலும், இப் பகுதி மாற்கு எழுதிய நற்செய்தியின் மற்றப் பகுதிகளோடு ஒத்ததாகத் தோன்றவில்லை. இதன் பொருளடக்கத்தை ஆராயும் பொழுது, இது மற்ற நற்செய்திகளில், சிறப்பாக லூக்காவிலும் *(24)*, யோவானி லும் *(2)* காணப்படும் காட்சிகளோடு ஒற்றுமையுடையதாகவும் அவற்றின் சுருக்க மாகவும் அமைந்திருக்கிறது. இவை யாவும் இப்பகுதி மற்றொருவரால் எழுதப்பட்டது என்பதைச் சுட்டுவதாக அமைகிறது.

மாற்கு *16:8*-ஆம் வசனத்தோடு தமது நற்செய்தியை முடித்தாரா? ''கடவுளின் மகனாகிய இயேசு கிறிஸ்துவின் நற்செய் தியைக்'' கூற முனைந்தவர், ''அச்சம் அவர்களை மேற்கொண்டது'' என்று முடித் தார் என்றால் அஃது அவ்வளவு பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. மேலும், பேதுருவுக்கும் மற்றச் சீடர்களுக்கும் உயிர்த்த இயேசு தோன்றப்போவதாகக் கூறப்படுகிறது *(16:7)*.*16:8*-ஆம் வசனத் தோடு இந்நற்செய்தி முடிந்தால், இக்காட்சி களைக் கூறுவதற்கு வாய்ப்பே இல்லை எனலாம். ஆகவே, மாற்கின் முடிவுரை தவறிவிட்டதா? அல்லது வேண்டுமென்றே சிலர் நீக்கி விட்டனரா?

மாற்கு தமது நற்செய்தியை முடிக்கு முன்னரே இறந்துபோனார்; ஆகவே, பிறி தொருவர் அதை நிறைவு செய்தார் என்பர் சிலர். இரனேயு இப்பகுதியைக் கையாளும் விதம், இப்பகுதி அப்போஸ்தலர்கள் காலத் திலேயே தோன்றியிருக்க வேண்டும் என்று காட்டுகிறது. எது எப்படியிருந்தாலும், நமது தாயாகிய திருச்சபை இப்பகுதியும் விவிலியப் பட்டியலுள் முற்றிலும் அடங்கி யது என்று ஏற்றுக்கொண்டுள்ளது. இப் பகுதியும் இறையூக்கம் பெற்றது.

***11. சிறப்பியல்புகள்:*** மாற்கின் நடையில் இலக்கிய நயம் இருப்பதாகத் தோன்ற வில்லை. அதிலே பேச்சு வழக்கும், பேச்சு வழக்கிலுள்ள சொற்களும் அதிகமுண்டு. இலக்கிய நயம் பற்றி ஆசிரியர் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், கதை நடையில் எழுதுவதில் வல்லவர் எனத் தெரிகிறது.

ஆசிரியர் பயன்படுத்தும் சொற்றொகுதி அதிகமில்லை. சொற்செறிவு சில இடங் களில் மிகுந்தும் சில இடங்களில் குறைந் தும் காணப்படுகிறது. அணியழகு அதிக மில்லை. சொல்ல வேண்டியதை நேரடி

யாக எளிமையுடன் சொல்கிறார். ஆனால், அதிலே ஒரு தனிக்கவர்ச்சி உண்டு. நேரே நிகழ்ச்சிகளைக் கண்டவர் கூறுவதுபோல் பல விவரங்களுடன் நிகழ்ச்சிகளை விவரிப் பார். ஆனால், சில இடங்களில் தமக்கு ஓர் ஈடுபாடும் இல்லை என்ற முறையில், உணர்ச்சியற்ற, விறுவிறுப்பற்ற முறை யிலும் நிகழ்ச்சிகளை விவரிப்பார்.

ஆயினும், மற்ற நற்செய்தியாளர்களை விட, மாற்கிடம் உயிர்த்தோற்றச் சித்திரிப் பும், புலன்கவர் வண்ணநடையும் உண்டு. இது, மத்தேயு, லூக்கா ஆகியவற்றில் காணப்படாத பல சிறுவிவரங்கள் கூறப்படு வதிலிருந்து அறியக்கிடக்கிறது. அறிஞர், பலர் இச்சிறு விவரங்கள் மாற்கினுடை யவை அல்ல; பாரம்பரியத்திலிருந்து அவ ருக்குக் கிடைத்திருக்க வேண்டும்; மரபு மூலங்களில் பற்றுடைய மாற்கு அப்படியே தமது தொகுப்பில் அவற்றைச் சேர்த்திருக்க வேண்டும் என்பர். நேரடிச் சான்றாளர்கள் உயிர்த்தோற்றக் காட்சிகளையும், சிறுசிறு விவரங்களையும் அளித்திருக்க வேண்டும். கிறிஸ்தவச் சமூகம் திட்ட அமைப்பை அளித்திருக்க வேண்டும்.

சாதாரண மக்களுக்குக் கூறுவதுபோல் கதை சொல்லும் முறையில் தமது நூலைத் தருகிறார் ஆசிரியர். ஒரு நிகழ்ச்சியை விவரிக்கையில் சில சொற்றொடர்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்தி நமது மனதில் பதிய வைப்பார். சில சமயத்தில் இன்றியமையாத சொல்லை அல்லது சொற் றொடரைச் சிறப்பான விதத்தில் அழுத்திக் கூறி அதன் முக்கியத்துவத்தை உணர வைப்பார். தெளிவற்ற முறையில் பொதுப் படையான கூற்றுக்குப்பின், தெளிவாகப் பல செய்திகளைத் தருவார் *(1:28)*. இடை யில் விளக்கங்கள் சில தருவார் *(2:5.10)*. சில சமயம், நிகழ்ச்சிகளை நிறைவுபடுத்த வேண்டுமென்றே சிறு விவரங்களைப் புகுத்துவார் *(5:42)*. சிலவற்றில், சிறப்பாக அருஞ்செயல் நிகழ்ச்சிகளில், ஒரு திட்ட மான அமைப்பு உண்டு. அவை: கட்டளை, விளைவு, காண்போரிடம் கண்ட பயன், அவர்களின் வியப்பு. அருஞ்செயல் காண் போரின், அறவுரை கேட்டோரின் உணர்ச்சி களைப் பலமுறை எடுத்துக் கூறுகிறார் ஆசிரியர். சிறு விவரங்கள் அளிக்கப்படும் தன்மையையும் அதன் விளைவையும் *2:1-13; 5:1-20. 21-43; 7:31-37* போன்ற பகுதிகளில் காணலாம். இவைகளோடு ஒத்த பகுதிகளை மத்தேயு, லூக்கா ஆகிய வற்றில் வாசித்தால் இது விளங்கும். இந்த நற்செய்தி மிகச் சிறியதாயினும், சில இடங்களில் சிறுவிவரங்களைக் கூறப் பல சொற்களை ஆசிரியர் பயன்படுத்துவார்.

மாற்கில் காணப்படும் வாக்கிய அமைப்பு, மிகச் சாதாரணமானது. ஒரே தன்மையுடைய வாக்கிய உட்பிரிவுகளைத் தொகுத்து இணைத்து அமைப்பது அவ ருக்கு உரிய சிறப்பியல்பாகும். ஆசிரியர் அடிக்கடி வரலாற்று நிகழ்காலத்தைப் பயன் படுத்துகிறார். அது நிகழ்ச்சிகளுக்கு உயிர்ச் சித்திரத் தன்மையை அளிக்கிறது; வாசகர் களை நிகழ்ச்சியோடு ஈடுபடுத்துகிறது. ''அவ்வேளையில்'', ''உடனே'' போன்ற சொற்களை அடிக்கடி பயன்படுத்துகிறார். இவையும், வரலாற்று நிகழ்காலமும், தொடங்கிய வாக்கியத்தை முடிக்காது விட லும், இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் யாவும் வெகு வேகமாய்த் தங்களது முடிவை நோக்கி இயங்குவதாக வாசகர் களுக்கு ஒருவித உணர்ச்சியளிக்கின்றன. தொடர்ந்து இந்நூலை ஒரே மூச்சில் வாசித் தோமென்றால், நாமே அந்நிகழ்ச்சிகளில் ஈடுபட்டிருப்பது போலவும், கூட்டங்கள் நம்மைச் சூழ்ந்திருப்பது போலவும், அவை களின் இரைச்சலும், பேரொலியும் நமது செவியைத் தாக்குவதுபோலவும் நாம் உணர்வோம். இயேசுவின் வாழ்நாட்கள் அறவுரைகளும், அருஞ்செயல்களும் தர்க் கங்களும் நிறைந்து விளங்கிய நாட்களாக இந்நூலில் காணப்படுகின்றன. இப்படிப் பல நாட்கள் கிறிஸ்துவின் வாழ்வில் இருந்திருக்கக் கூடும்.

மேலும், செமித்திக்குப் பேச்சு வழக்கில் காணப்படும் இணை அமைப்புகள் மாற் கில் காணப்படுகின்றன *(1:7 தொ; 11:9 தொ.28; 12:14; 13:4; 15:29)*; அரமேயிக்கு

சொற்கள் உள்ளன (*3:17; 5:45; 7:11.34; 14:36; 15:34*). இவை ஆசிரியர் பாலஸ்தீனத்தைச் சேர்ந்தவர் என்றும், இந்நூலுக்கு அரமேயிக்கு பின்னிலை உண்டு என்றும் காட்டுகின்றனவேயொழிய, சிலர் கூறுவது போல் மாற்கின் நற்செய்தி அரமேயிக்கில் எழுதப்பட்டுக் கிரேக்க மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது என்று காட்டவில்லை. பற்பல இலத்தீன் சொற்கள் காணப்படுகின்றன. இவை பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம்.

இந்நூலில் உள்ள பல குறைகள் நமது கவனத்தைக் கவரலாம். அவற்றில் சில: தன்மையால் ஒத்த நிகழ்ச்சிகளை ஒரே அமைப்புடன் விவரித்தல், தேவையின்றிக் கூறியது கூறல், தொடங்கிய வாக்கியத்தை முடிக்காது விடல், இலக்கணச் சிதைவுகள் - இவை கிரேக்க மாற்கில் காணப்படுகின்றன. இவற்றில் சிலவற்றை ஆசிரியர் வேண்டுமென்றே பயன்படுத்தியிருக்கலாம். பொதுவாக ஆசிரியர் பொதுமக்களுக்குக் கதை சொல்லும் முறையில் இந்நூலைத் தருகிறார் என்பதைக் கருத்தில் கொண்டால் மேற்கூறப்பட்ட குறைகள் நமது கண்ணையும் கருத்தையும் உறுத்தா.

***12. இறையியல் கருத்துக்கள்:*** இந்நூலில் மாற்குக்கு மட்டும் உரிய தனிப்பட்ட போதகம் இல்லையென்பர். இந்நூல் அப்போஸ்தலர்களின் போதகத்தைத் தருவதால் இதில் காணப்படும் போதகங்கள் யாவும் புதிய ஏற்பாடு முழுவதற்கும் உரியனவாகும். ஆனால், மாற்கு சிலவற்றை அழுத்திக் கூறுகிறார். அவற்றில் சிறப்பான சிலவற்றை நாம் இங்குப் பார்ப்போம்.

***அ) கடவுளின் மகன்:*** மாற்கின் சிறப்பான போதனைகளில் ஒன்று முதல் வரியிலேயே கொடுக்கப்படுகிறது: ''கடவுளின் மகனாகிய இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியை''ப் (மாற்கு 1:1) பறைசாற்றலாகும். மத்தேயு, லூக்காவுடன் ஒப்பிடுகையில், இது மாற்குக்குச் சிறப்பாக உரியதொன்றாகும். மற்ற நற்செய்தியாளரைவிட, இயேசுவின் வாத்தைகளை மிகச் சொற்பமாகவே கொடுக்கிறார் ஆசிரியர். அவர் கிறிஸ்துவினுடைய அறவுரைகளில் இரண்டை மட்டும் கொடுக்கிறார் (*4:1-34; 13:1-37*). இயேசு போதித்தவைகளைக் கூறாமல், ''இயேசு போதித்தார்'' என்று அடிக்கடி கூறுகிறார். அவருக்கு வேண்டியது இயேசுவின் செயல்களே. இவற்றை மற்ற நற்செய்தியாளரை விட அதிகமான சூழ்நிலை விவரங்களுடன் கூறுவார். அவர் சித்திரிக்க விரும்புவது மனிதனும் இறைமகனுமான இயேசுவையே. அவரது போதகப் பகுதிகளிலும் இயேசுவே முதன்மையும் அடிப்படையுமானவர். இயேசு இறைமகன் என்பது விசுவாச சத்தியம் பற்றிய அறிக்கையிடவிலோ, போதகத்திலோ தோன்றவில்லை. அவர் செய்யும் இறையாற்றல் மிக்க செயல்களில் வெளிப்படுகிறது: பாவம் மன்னித்தல் (*2:10-12*); பேய்களை ஓட்டுதல் (*1:23-34; 3:11* தொ); ஓய்வு நாளின்மேல் அதிகாரம் கொண்டிருத்தல் (*2:27-28; 3:4*); மறை பொருள்களைப் பற்றிய அறிவைக் கொண்டிருத்தல் (*2:8; 8:17; 12:15*); வர விருப்பவற்றை முன்னறிவித்தல் (*8:31; 10:39; 13:1*தொ). இறைமகன் அல்லது கடவுளின் மகன் என்ற பட்டம் முக்கியமான பகுதிகளில் வருகின்றது: முன்னுரை (*1:1*); ஒளியுருவாதல் (*9:2*); நூற்றுவர் தலைவனது விசுவாசப் பிரமாணம் (*15:39*). இப்பட்டத்தை ''மனுமகன்'' என்ற பட்டத்துடன் சேர்த்துப் பார்த்தால் அதன் சிறப்பு, மேன்மை தெரியும்.

மாற்கின் நற்செய்தியில் இறைமகனாய்த் திகழும் இயேசு உண்மையான மனிதனாகவும் விளங்குகின்றார். மற்ற நற்செய்திகளில் காணப்படுவதை விட இந்நூலில் இயேசுவின் மனிதப்பண்பு அதிகமாகக் காணப்படுகிறது. இயேசு மதிமயங்கி விட்டதாகப் பிறர் கூறுகின்றனர் (*3:21*). அவர் ஒரு தச்சன். அவரது குடும்பத்தைப் பலர் அறிந்திருந்தனர் (*6:3*). இயேசு, மரியின் மகன் என, புதிய ஏற்பாடு முழுவதிலுமே இந்த ஓர் இடத்தில்தான் கூறப்படுகிறார். பிறரிடம் விசுவாசமின்மையால் அவரால் அருஞ்செயல்கள் செய்ய முடியவில்லை

*(6:5-6)*; பிறரைக் கண்டு வியப்புறுகிறார் *(10:18)*. இறுதித் தீர்ப்பின் நேரத்தை அவர் அறியார் *(13:32)*; மனித உணர்ச்சிகள் அவரிடம் உண்டு *(3:5;6:34; 8:1-12; 10:14-21; 14:41)*. படிப்படியாக அருஞ் செயல்கள் செய்கிறார் *(7:31-35; 8:22-26)*. கேள்விகள் கேட்டு அறிகிறார் *(5:30; 8:5; 9:16-21)*. அவர் மக்களால் ஏற்றுக்கொள்ளப்படாது மறுக்கப்படுவதற்கும், உண்மையான முறையில் மரித்து உயிர்த்து வெல்வதற்கும் இயேசுவின் உண்மையான மனிதத் தன்மை இன்றியமையாததாகும். இந்நூலைப் படிக்கும்போது, இயேசுவின் இறப்பு மீட்பளிக்க வல்லது என்பது தெளிவாகிறது *(10:45; 14:24)*; ஆயினும், அஃது ஒரு விசுவாச சத்தியமாக விவரிக்கப்படவோ, வெளியிடப்படவோ இல்லை. இந்நூலில் இயேசுவின் சிறப்பான அலுவல் அவர் இறப்பதும் உயிர்ப்பதுமாகும்.

உண்மையான மனிதனும், இறை மகனுமான இயேசு தம்மை இறை மகன் என்று கூறாது, ''மனுமகன்'' என்றே குறிப்பிடுகிறார். இக்கருத்தைப் பற்றி நாம் நன்கு அறிதல் இன்றியமையாதது.

***ஆ) மனுமகன், மானிட மகன்:*** இச்சொற்றொடர் மறைபொருள் மிக்கது. இப்பட்டம் நற்செய்திகளில் அடிக்கடி வருகிறது. தம்மைக் குறிக்க, இயேசுவே இச்சொற்றொடரை விரும்பிப் பயன்படுத்துகிறார். மாற்கின் நற்செய்தியில் இச்சொற்றொடர் பதினான்கு முறை வருகிறது; மாற்கு *2:10-28*-ஐத் தவிர, மற்றப்படி இந்நற்செய்தியின் பிற்பகுதியிலேயே காணப்படுகிறது; அதுவும் செசரியா பிலிப்பியில் பேதுரு விசுவாச அறிக்கையிட்ட பின்னர்தான் *(8:29)* காணப்படுகிறது. ''மனுமகன்'' என்ற சொற்றொடர் வரும் இடங்கள்: *2:10-28; 8:31.38 9:9.12.31; 10:33.45; 13:26; 14:21* (இருமுறை). *41.62.*

இச்சொல் இருவகைச் சூழ்நிலையில் பயன்படுத்தப்படுகிறது. முதலாவதாக மனுகுலம் முழுவதையும் தீர்ப்புச் செய்ய உலக முடிவிலே வரவிருக்கும் மாட்சிமை மிக்க இயேசுவைக் குறிக்க ''மனுமகன்'' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்படுகிறது *(8:38; 13:26; 14:62)*. இவைகளில் மனுமகனது மகிமை காணப்படுகிறது. இச்சொற்றொடரின் உண்மைப் பொருளை இயேசு சனேத்திரின் முன் தம்மைக் குறிக்க இதனைப் பயன்படுத்தியபோது நாம் உணர்கிறோம். ''போற்றுதற்குரிய கடவுளின் மகனாகிய மெசியா நீதானோ?'' என்று கேட்ட தலைமைக் குருவுக்கு இயேசு, ''நானே அவர்; மேலும், மானிட மகன் வல்லவரின் வலப்புறத்தில் வீற்றிருப்பதையும் வான் மேகங்கள் சூழ வருவதையும் காண்பீர்கள்'' என்றார் *(14:62)*. இக்கூற்று நம்மைத் தானியேலது இறைவாக்குக்கு இட்டுச் செல்கிறது. தானியேல் இறைவாக்கு ஏழாம் அதிகாரத்திலே, தீர்ப்புக் காட்சியிலே, தானியேல், நான்கு விலங்குகளுக்கிடையே ''மனுமகன் போன்ற'' ஒருவரை அதாவது மனித உருவத்தைக் கண்டார். உலகப் பேரரசுகளைக் குறிக்கும் நான்கு விலங்குகளும், கடலிலிருந்து தோன்றுகின்றன. ஆனால் ''மனுமகன்'' போன்றவரோ, ''வான மேகங்களிடையே'' தோன்றுகிறார். இம்மனுமகன் கடவுளின் முன் சென்று யாவற்றையும் உள்ளடக்கும் முடிவில்லா ஆட்சியைப் பெறுகிறார். தானியேலது இறைவாக்கில் *(7:13. தொ)* நாம் காணும் உருவம் ஒரு தனிப்பட்ட மனிதரையே குறிக்கிறது. ஆயினும் காட்சியின் விளக்கத்தில் *(7:26தொ)* ''மனுமகன்'' என்பது மெசியாவைச் சார்ந்த மக்களை, இஸ்ராயேலின் தூய்மையாக்கப்பட்ட எஞ்சியோரைக் குறிக்கிறது. இச்சொற்றொடர் தனிப்பட்ட நபரையும் குழுவினரையும் ஒரே சமயத்தில் குறிப்பதாகத் தோன்றுகிறது. இக்காட்சியை மனதில் கொண்டால் இயேசுவின் பதிலைக் கேட்ட தலைமைக் குரு ஆடையைக் கிழித்து ஆர்ப்பாட்டம் செய்து இயேசுவுக்கு மரணத் தீர்வையிட்ட நிகழ்ச்சியின் காரணத்தை நாம் நன்கு உணரலாம்.

இரண்டாவதாக, தமது பாடுகளைக் குறிக்கும்போதோ, முன்னறிவிக்கும் போதோ இயேசு தம்மையே மனுமகன் என்று

கூறுகிறார் *(8:31; 9:9.12-31; 10:33-45; 14:21-41)*. அவரே துன்புறும் ஊழியன். துன்பங்கள் நிறைந்த மனிதன். கிறிஸ்துவின் பாடுகள், நம்மை எசாயா இறைவாக்குக்கு இட்டுச் செல்கின்றன. எசா *42:1-9; 49:1-6;50: 4-9; 52:13-53:12* என்ற பகுதிகளில் ''யாவேயின் ஊழியர்'' எனப்படும் மர்ம மிக்க ஒருவரைக் காண்கிறோம். இவர் யார் என்பது பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு இருந்தாலும் யாவரும் இப் பகுதிகள் மெசியாவைப் பற்றியன என்று ஏற்றுக்கொள்வர். ''மனுமகன்'' என்ற சொற்றொடரைப் போல் ''யாவேயின் ஊழியர்'' என்ற சொற்றொடரும் மெசியாவையும் மெசியாவைச் சார்ந்த மக்களையும் குறிக்கும் நிலையில் காணப்படுகிறது. இந்த ஊழியரது அலுவலை இயேசு தமதாக்கி அதை நிறைவேற்றுகிறார். ''துன்புறும் ஊழியராகத் திகழ்கிறார்''; அவர் பிறருக்காகவும், அவர்களுக்குப் பதிலாகவும் துன்புறுகிறார் *(எசா 53:3-6)*.

மாட்சிமை நிறைந்த மாபெரும் நீதிபதி, துன்புறும் ஊழியர் என்ற இரு கருத்துக்களும் ஒன்றுக்கொன்று முரணானவைகளாகத் தோன்றலாம். ஆயினும், இரண்டையும் தம்மைக் குறிக்கப்பயன்படுத்தி, இரண்டும் தம்மில் ஒன்றிக்கின்றன என்று காட்டினார் இயேசு. அதற்கு அவர் பயன்படுத்தும் சொற்றொடர் ''மனுமகன்''. எசா 53; தானியேல் 7, ஆகிய இரு பகுதிகளும் ஐயமின்றி மெசியாவைக் குறித்தாலும், மெசியாவைக் குறிக்க மனுமகன் என்ற சொல்லை யூத மக்கள் அவ்வளவு அதிகமாகப் பயன்படுத்தவில்லை. அவர்கள் எதிர்பார்த்ததோ, ஓர் உலக அரசன், தாவீதின் குலவழி வந்தவர்; தமது எதிரிகளைப் போரில் வென்று, தமது அரசை நிறுவுபவர். மாறாக, வான மேகங்களில் வந்து, யாவற்றையும் அடக்கி முடிவில்லாத அரசைப் பெறும் மறைபொருள் மிக்க ஆளை அறியார். வானின்று தோன்றி, யாவற்றையும் கடந்தவராய்த் திகழ்ந்து, இறைவனின் நேரடி இடையீட்டாலும் அதிகாரத்தாலும் அரசு பெறும் தலைவரை அவர்கள் மனதில் கொள்ளவில்லை. இதைவிட, பெரும்பாலான யூதர்களுக்கு மெசியா துன்புறுவார் என்ற கருத்து கனவிலும் கருதவொண்ணாததாகும். ஆயினும், சில குழுக்கள் மகிமை நிறைந்த மெசியாவும், துன்புறும் மெசியாவும் ஆகிய மனுமகனை எதிர்பார்த்தனர். ஆனால், பெரும்பாலான யூதர்கள் இவற்றை அறியார்.

இயேசுவின் திருப்பணியின் தொடக்கத்தில் மாற் *2:10-28* என்ற வசனங்களில் வரும் மனுமகன் என்ற சொற்றொடர் இயேசு இறைத்தன்மையுடையவர் என்று காட்டுகின்றது. இப்பகுதிகளில் தாம் வானின்று வந்தவர் என்றும், இதுவரை வானில் மட்டும் இருந்த பாவ மன்னிப்பின் ஊற்றையே பூவுலகுக்குத் தாம் கொண்டு வந்துள்ளதாகவும் உரிமை பாராட்டுகிறார். ''மண்ணுலகில் பாவங்களை மன்னிக்க மானிட மகனுக்கு அதிகாரம் உண்டு என்பதை நீங்கள் உணருமாறு'' *(2:10)* முடக்குவாதக்காரனுடைய பாவங்களை மன்னித்து உடல் நலம் அளிக்கிறார். ''ஓய்வுநாளும் மானிட மகனின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதே'' *(2:28)*. அப்போஸ்தலர்களுக்கு ஓய்வு நாள் அனுசரிப்பிலிருந்து விதிவிலக்கு அளித்துப் புதியதொரு திட்டத்தை ஏற்படுத்துகிறார். இவ்விரு நிகழ்ச்சிகளிலும் மனுமகன் என்ற சொற்றொடர் மெசியாவையே குறிக்கின்றது.

இயேசுவே மெசியா, இறைமகனும் மனுமகனுமாவர். இரு பெயரும் மறைபொருள் மிக்கவை. ஆயினும், மனுமகன் என்ற பெயராலே தம்மைக் குறித்தார் இயேசு. யூத மக்கள் இப்பெயரைக் கேட்டுத் திகைத்தனர். ஆனால், யூதத்தலைவர்கள் இயேசு தாமே உண்மையான மெசியா என்று உரிமை கொண்டாடுகின்றார் என்பதை நன்கு அறிந்தனர். தானியேல் இறைவாக்கில் காணப்படும் ''மனுமகன்'' என்ற பட்டத்தைத் தம்முடையதாக்கி இயேசு தம்மையே உண்மையில் இறைமகனாக்குகிறார் என்று நன்கு அறிந்தனர். ஆனால், இஃது அவர்களது கடவுள் ஒருவரே என்ற கொள்கைக்கு மாறானதாகும். ஆகவே, இயேசு இறை நிந்தை செய்தார் என்று

குற்றம் சாட்டினர்; மரணத்தீர்ப்பு அளித்த னர். அப்போஸ்தலர்கள் இப்பெயரின் பொருளைப் புரிந்து கொண்டனரா? இல்லை என்றே கூற வேண்டும். ஒரு வேளை மற்றவர்களைவிட, சிறிது அதிக மாகத் தெரிந்திருக்கலாம். ஆனால், அவர் கள் ''மனுமகன்'' என்ற புதிரின் பொருளை முழுவதும் இயேசுவின் காலத்தில் அறிய வில்லை. தமது தாழ்ச்சியினாலும் பாடுகளி னாலும் உலக மக்களை நீதிமான்களாக்கும் ''துன்புறும் ஊழியர்'' இயேசுவே என்று அவர்கள் அறிய, இயேசுவின் பாடுகள் அவசியமாயின. இயேசு மரித்தோரினின்று உயிர்த்ததும், பரிசுத்த ஆவியரை அனுப்பி யதும், இயேசுவே மனுமகன், இறை மகன் என்று அவர்களுக்கு உணர்த்தின.

***இ) மெசியா பற்றிய மறைபொருள்:*** இயேசு தம்மைச் சுட்டிக்காட்ட ''மனுமகன்'' என்ற மறைபொருள் மிக்க பெயரைப் பயன்படுத்தினாலும், இயேசுவே மெசியா என்ற உண்மை மாற்கில் தெளிவாகக் காணப்படுகிறது. ஆயினும், இதைப் பிறரி டமிருந்து மறைத்து வைக்கும் போக்கு காணப்படுகிறது. இந்நற்செய்தி முழுவதி லும் இயேசு தாமே மெசியா என்பதை மறைக்க முயலுவதாகத் தோன்றுகிறது. அசுத்த ஆவிகள் ''நீர் கடவுளின் பரிசுத்தர்'' என்று உரக்கக் கூவுகின்றன. அவைகள் பேசாதிருக்க இயேசு கட்டளையிடுகிறார் *(1:25-34; 3:11 தொ)*; மாபெரும் அருஞ் செயல்கள் செய்தபின், அவற்றைப் பிற ருக்குத் தெரிவிக்கக்கூடாது என்று கட்டளை யிடுகிறார் *(1:44; 5:45; 7:36; 8:26)*. செசரியா பிலிப்பியில் பேதுரு, இயேசுவை மெசியா என்று விசுவாச அறிக்கையிட்ட பின்னும், ஒளியுருவான பின்னும், தாமே மெசியா என்பதைத் தாம் மரித்தோரினின்று உயிர்க் கும்வரை பிறருக்குக் கூறலாகாது என்று பணிக்கிறார் *(8:30; 9:9)*. சில சமயம் கூட்டத்திலிருந்து பின்வாங்கி இரகசிய மாகப் பயணம் செய்கிறார் *(7:24; 9:30)*. தமது சீடர்களுக்கு மட்டும் தனியாகப் போதகம் அளிக்கிறார் *(4:10-11.33-34; 7:17-23; 8:31; 9:27தொ.31; 10:32தொ; 13:3-37)*.

இப்படி மறைத்து வைப்பது செயற்கை யாகத் தோன்றுகிறது. அருஞ்செயல்களைப் பிறர் அறியா வண்ணம் மறைத்து வைப்பது கூடுமானதா? அப்படியிருந்தும் அவ்வருஞ் செயல்களைப் பிறருக்கு அறிவிக்காதிருக் கும்படி கட்டளையிடுகிறார் இயேசு. இக் கருத்தை மாற்கு தாமாகப் புனைகிறாரா? இக்கருத்து மத்தேயுவிலும் காணப்படுகிறது *(மத் 9:27-31)*. இதற்கு விளக்கம் கூறுவது அவசியமாகும்.

மேற்கூறிய கருத்துக்கு விளக்கம் கூறப் பலர் முயன்றுள்ளனர். தோல்வியே கண்ட னர் என்று கூற வேண்டும். ''ரீடு'' என்பவர் வினோத விளக்கம் அளிக்கிறார். இயேசு, உயிர் வாழ்ந்தபோது, மெசியா என்ற பட்டத்திற்கு உரிமை கொண்டாடவில்லை. இயேசுவின் மரணத்திற்குப் பின் இக்கருத்து ஆதிக்கிறிஸ்தவர்களுக்கிடையே எழுந்தது. அதை இயேசுவுக்குச் சூட்டி நற்செய்தியில் இங்குமங்குமாகப் புகுத்தி விட்டது ஆதித் திருச்சபை என்றார் அவர். இக்கூற்றிலே நற்செய்தியாளர்கள் பொய்யர்கள், உண்மை யைக் கூறவில்லை என்ற குற்றச்சாட்டு தொக்கி நிற்கிறது. அதனோடு இயேசு மரித்தோரிடையிலிருந்து உயிர்த்தல் முடி யாத காரியம் என்ற கருத்து பின்னணியாக அமைந்திருக்கிறது.

நற்செய்தியாளர்கள் வாய்மைக்கும், நமது உண்மைகளுக்கும் ஊறுவிளையாதபடி கீழ்க்கண்ட விளக்கம் அளிக்கலாம். இயேசு தான் மெசியா. ஆனால், அவர் மெசியா வைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துக்கும் பொது மக்கள் கொண்டிருந்த கருத்துக்கும் பெரிய வேறுபாடு உண்டு. முன் கூறியது போல், பொதுமக்கள் அரசியல், பொருளா தார விடுதலை அளிக்கும் மெசியாவை எதிர்பார்த்தனர். எத்தனை பேர் தாங்களே மெசியா என்று பொய்ப்பட்டம் சூட்டிக் கொண்டு மக்களிடையே தோன்றினர்! இயேசுவின் காலத்தில் மெசியாவைப் பற்றிய கருத்து சிதைந்து இழிவடைந்து உருமாறியிருக்கவில்லையா? இச்சூழ்நிலை யில் பொதுமக்களிடம் சென்று ''நான்தான் மெசியா'' என்று கூறியிருந்தால் தவறாகப்

புரிந்து கொண்டிருப்பர். துன்புறும் ஊழிய ரான மெசியாவை ஏற்றுக் கொள்ளார். மகிமை மிக்க ஆண்டவராகிய மெசியாவை அறிந்து கொள்ளும் மனப்பக்குவம் அவர்கள் கொண்டிருக்கவில்லை. இரண்டையும் கொண்டுள்ள ஆன்மீக மெசியாவை அறிந்து கொள்ளும் மனநிலை அவர்களிடத்தில் இல்லை. அவர்களைப் படிப்படியாக மெசியாவின் உண்மைப் பண்பை அறியும்படி செய்ய வேண்டியிருந்தது. அப்படிச் செய்ய தாம் மெசியா என்பதை இயேசு மறைத்து வைப்பது அவசியமாயிற்று. அஃது அவர் கையாண்ட ஒரு தந்திரமன்று; தாம்தான் உண்மையான மெசியா என்று வெளிப்படுத்த ஒரு நிபந்தனையாகும். இயேசுவைப் போலவே, அவரின் மெசியா என்ற பெயரும் இறைத்திட்டத்தில் மறைபொருள் மிக்கதாகும். இயேசு பாடுபட்டு உயிர்க்கும்முன், அப்போஸ்தலர்களே இப்பட்டத்தின் உண்மைப்பொருளை அறியாத போது, பொதுமக்கள் எப்படி அறிவர்? ஆகையால், பொதுமக்களிடமிருந்து இப்பட்டத்தை மறைத்துத் தமக்குச் சான்றாளர்களாக விளங்கப்போகிற சீடர்களுக்கு இக்கருத்தைப் பற்றிப் போதிக்கிறார்; அவர்களுக்குத் தெளிவாக்குகிறார். அவர்களும், இயேசுவின் பாடுகள், மரணம், உயிர்ப்பு வரை இதன் உண்மைப்பொருளை நன்கு உணரவில்லை என்றே கூறவேண்டும். பிற்காலத்தில் இயேசுவின் பாடுகள், மரணம், உயிர்ப்பு ஆகியவற்றுடன் அவருடைய சொற்களையும் ஒத்துப்பார்த்து உண்மைப் பொருளை உணர்கின்றனர். தாங்கள் மந்த புத்தி உள்ளவர்களாயிருந்தும், பின்னர் ஆவியரின் அருட்பொழிவால் இயேசுவை உண்மையான விதத்தில் அறிந்து போதித்ததையே நற்செய்தியாளர் மாற்கு நமக்கு அளிக்கிறார்; தாமாக ஒன்றையும் புனைந்து கூறவில்லை. இந்த மறைவுமுறை ஆதித் திருச்சபையின் தந்திரமும் அன்று. ஆகையால்தான், நல்லெண்ணத்துடன் வாசிக்கும் எவரும், மறைபொருளிலிருந்து உண்மைப் பொருளை அறிவதாக உணர்வர்; இருளிலிருந்து ஒளிக்குச் செல்வதாகவும், அறியாமையிலிருந்து உண்மை அறிவை அடைவதாகவும் உணர்வர். இவ்விதம் வாசகர்களிடையே தெளிவை உண்டாக்கவே, இயேசுவைப் பின்பற்றி, மறைவு முறையைப் பயன்படுத்தி, விரிவாகவும் நுணுக்கமாகவும் தமது நூலை எழுதுகிறார் நற்செய்தியாளர் மாற்கு. அதிலே ஆழ்ந்த கருத்துடைய வரலாறும், இறையியல் நோக்கமும், இயேசுவே மீட்பர், மெசியா என்ற மெய்யான வெளிப்பாடும் உள.

**13. வரலாற்று மதிப்பீடு:** மாற்கின் நற்செய்தி, நாம் இக்காலத்தில் கருதுவது போல் ஒரு வரலாற்று நூல் அன்று; வாழ்க்கை வரலாறும் அன்று. கிறிஸ்துவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் காலவரையுடன் இதிலே காணமுடியாது. அதில் ஆசிரியருக்கு அக்கறையுமில்லை. ஆதிக் கிறிஸ்தவர்களுக்குப் பல இன்னல்கள் விளைந்தன. எதிர்ப்புகளும் எழுந்தன. அவற்றை வெல்ல அவர்களுக்கு ஒரு காப்புரை வேண்டும். அதற்கு ஏற்ற நூலை மாற்கு வழங்குகிறார். கிறிஸ்தவர்களின் விசுவாசத்தைப் புதுப்பிக்கவும், ஆழமாக வேரூன்றச் செய்யவும் ஒரு நூல் வேண்டியிருந்தது. அதற்கு ஏற்ற ஒரு மறைபோதக நூலை இந்நற்செய்தியில் காணலாம் (ஆதிக் கிறிஸ்தவர்களின் நிலையை மறைமுகமாகச் சுட்டிக்காட்டுவதில் அடங்கியிருக்கிறது இந்நூலின் வரலாற்றுப். பயன்). இதை நிறைவேற்ற என்ன செய்கிறார்? இயேசுவே கிறிஸ்து அல்லது மெசியா என்ற வரலாற்று உண்மையை மையமாகக் கொண்டு ஒரு நூல் எழுதுகிறார். இயேசுவைப் பற்றிய அப்போஸ்தலர்களின் போதகம் மற்றப் பாரம்பரியங்கள் முதலியவற்றைச் சேர்த்து அளிக்கிறார். இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை மீட்பெனும் மாபெரும் நாடகத்தின் முக்கிய கட்டங்களாக அமைத்து விவரிக்கின்றார். இயேசு விண்ணரசைப் போதித்தார். அருஞ்செயல்கள் பல செய்தார்; பாடுகள் பட்டு மரணம் எய்தினார்; உயிர்த்தெழுந்தார். இவரே இறைமகனார். இதுவே யாவருக்கும் மீட்பளிக்கும் நிகழ்ச்சி. இதுவே வரலாற்று உண்மை. இந்நூலை ''விசுவாசிகளுக்கு ஒரு விசுவாச நூலாக''

அளிக்கிறார் ஆசிரியர். இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், அவருடைய பாடுகள், மரணம், உயிர்ப்பு ஆகியவற்றிலிருந்து வரும் அறிவு ஆகியன விசுவாசத்தால் புது உருவெடுத்து மிளிர்கின்றன.

நடையையும் கருத்தையும் நோக்கினால், சாதாரண மக்களுக்காக எழுதப்பட்டது போல் தோன்றுகிறது இந்நூல். மாற்கின் நற்செய்தியோ, அதன் மூலங்களோ துல்லியமாய், திறன் ஆய்வுடன் விவரங்கொடுக்கும் நோக்கம் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. மாறாக, பாரம்பரியம் என்ன கூறியதோ அதைத் தொகுத்துத் தருவது ஆசிரியரது வெளிப்படையான நோக்கமாகத் தெரிகிறது. இதில் அடங்கியிருக்கிறது இந்நூலின் வரலாற்றுப் பயன். இதைக் கருத்தில் கொண்டுதான் ''அமைப்புத்திறன் ஆய்வாளர்கள்'' இந்நூலின் முக்கியத்துவத்தை அறிந்து, இந்நூலைக் கவனத்துடன் ஆராயத்தலைப்பட்டனர். இவ்வாராய்ச்சியில் ஆதிக் கிறிஸ்துவத்தின் வரலாற்றையும் மரபுகளையும் காண முற்பட்டனர். அவர்களை எதிர்நோக்கிய இன்னல்களையும் ஊகிக்க முயன்றனர்.

***14. முடிவுரை:*** இந்நூல் பலகாலமாகப் புகழ்பெறாது மங்கிப் போயிருந்தது எனலாம். மத்தேயுவின் சுருக்கமென இந்நூலைக் கருதியதே இதற்குக் காரணம். வெகுசிலரே இந்நூலுக்கு விளக்கவுரை எழுதினர். நமது வழிபாட்டுச் சடங்கிலும் இந்நற்செய்தி அதிகமாக இடம் பெறவில்லை. மற்ற நற்செய்திகளோடு ஒப்பிடுகையில் இந்நற்செய்தி மிகச் சிறிய அளவில் தான் நமது வழிபாட்டில் பயன்படுத்தப் பட்டது. முந்திய வாசக முறைப்படி பதினேழு முறைதான் இந்நூலிலிருந்து வாசகங்கள் எடுக்கப்பட்டன. ஆயினும் உயிர்ப்பு, ஆண்டவர் விண்ணெழுச்சி விழாக்களில் நற்செய்தியை முழங்கும் பெருமை இந்நூலைச் சார்ந்ததாகும்.

இந்த மங்கிய நிலையிலிருந்து இந்நூலை மேற்கூறிய ஆய்வாளர்கள் ஒளிக்குக் கொணர்ந்தனர் எனலாம். இதில் காணப்படும் உணர்ச்சியோடு சொல்லும் முறையும், அணியற்ற முறையும் உளநூல் ஆய்வாளரைப் பெரிதும் கவர்ந்தன. பகுத்தறிவுவாதிகள் இந்நூலில் காணப்படும் அருஞ்செயல்களை வெறும் புனைகதைகள் என்று ஒதுக்கினாலும் இயேசுவைப் பற்றிய மூல வாழ்க்கை விவரங்கள் இந்நூலில் காணப்படுவதாகக் கருதுகின்றனர். விசுவாசிகள் இந்நூலில் இறைமகனான இயேசுவைக் காணுகின்றனர்; ஆதித்திருச்சபையின் மூல பாரம்பரியத்தைக் காணுகின்றனர்; அப்போஸ்தலர்களின் மூல போதகத்தைக் காணுகின்றனர். இதுவே இந்நூலின் சிறப்புகளில் தலையாயது எனலாம்.

**மாற்கு என்னும் யோவான்** *(JOHN MARK)*

காண்க. மாற்கு எழுதிய நற்செய்தி. *3.* ஆசிரியர்.

**மானகத்தியர்** *(MANAHATHITES)*

*1* நாள் *2:54*-இல் மட்டுமே குறிப்பிடப்படும் யூதா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பிரிவாகும். இதனால்தான் மானகத்து எனுமிடம் யூதா கோத்திரத்துக்கேயுரியதாகக் கணக்கிடப்பட்டது.

**மானகத்து** (MANAHATH - ஓய்வு எடுக்கும் இடம், குடியிருப்பு) - ஆள்

மானகத்து சோபாலின் இரண்டாவது மகன். இவர், ஏதோமிலுள்ள ஓரியர் வம்சத்தின் ஒரு பிரிவின் மூதாதையர் (ஆதி *36:23; 1* நாள் *1:40*).

**மானகத்து** (MANAHATH - ஓய்வு எடுக்கும் இடம், குடியிருப்பு) - இடம்

பென்யமீன் குலத்தைச் சேர்ந்த சிலர் கெபாவிலிருந்து மானகத்துக்கு நாடு கடத்தப்பட்டனர் (*1* நாள் *8:6*). எனவே, ஒருவேளை மானகத்து யூதாவிலுள்ள ஓரிடமாக இருக்கலாம். இதே பெயரையுடைய ஓரியர் வழித்தோன்றலுடன் தொடர்பு படுத்தப்பட்டால் மானகத்து ஏதோமில் இருந்திருக்கலாம். இதைவிட மேலாக, இது மானகத்தியர்களுடன் தொடர்புடையதாக இருக்கலாம். அப்படியாயின் இது யூதாவில் இருந்திருக்க வேண்டும். எருசலேமுக்கு மேற்கு, தென்மேற்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள இக்கால மல்காவாக இஃது அடையாளம் காட்டப்படுகிறது.

**மானி** (MANI)

மானிகேயிசம் எனும் சமய இயக்கத்தை நிறுவியவரே இவர். பாபிலோனியாவில் பிறந்து ஈரானிய வழிவந்தவராகிய இவர் சசானியப் பரம்பரை ஆண்ட காலத்தில் வாழ்ந்தவர் (கி.பி. 216-77). இவர் உலகில் பல இடங்களுக்குப் பயணம் செய்ததால் இவரது சமூகங்கள் பாரசீகத்திலும், இந்தியாவிலும் உருவாக்கப்பட்டன. வட ஆப்பிரிக்காவிலிருந்து சீனா வரை பரவியிருந்த இவரைப் பின்பற்றுவோர்க்குப், பல மடல்களையும், புனித நூல்களையும் எழுதினார். சசானிய அரசரான முதலாம் சாபுர் இவருக்கு அரசியல் ஆதரவு தந்தார். ஆனால், சொராஸ்டிரியக் குருக்களால் சமயமுரண்பாட்டுக்காகக் குற்றம் சாட்டப்பட்டு மிகவும் கொடுமையான மரணமடைந்தார் இவர்.

**மானிகேயிசம்** (MANICHEISM)

இது கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலே மானி என்பவரால் தொடங்கப்பட்ட சமய இயக்கம்.

***1. மூலங்கள்:*** (Sources) மானிக்கேயிச மூலங்கள் பலவகைப்பட்டன. அண்மைக் காலம் வரை இந்தச் சமயத்திற்கு எதிராக எழுதப்பட்ட செய்திகளின் மூலம் இந்தச் சமயத்தை அறிந்த நமக்கு, தற்போது அசல் மானிக்கேயிசக் குறிப்புகள் கிடைத்துள்ளன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிடைத்த இந்தக் குறிப்புகள் மூன்று ஈரானிய மொழிகளிலும், சீன மொழியிலும், உய்கூர் (பழைய துருக்கிய) மொழியிலும் உள்ளன.

***2. மானியின் நூல்கள்:*** மானியின் புத்தகங்கள் முதன் முதலில் அரமேயிக்கு மொழியில் எழுதப்பட்டன. இப்புத்தகங்களில் சில (பெரிய உயிருள்ள) நற்செய்தி, வாழ்க்கையின் புதையல், வரலாற்றுநூல், இரகசியங்களின் நூல், அசுரர்களின் நூல், கடிதங்கள், சங்கீதங்கள் மற்றும் செபங்கள் ஆகியவையாகும்.

***3. மானியின் கோட்பாடு:***

***அ) சமயச் சூழ்நிலை:*** மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மேற்கு ஈரான் பல சமயக்கொள்கைகளும் கோட்பாடுகளும் சஞ்சரிக்கும் இடமாக இருந்தது. இவைகளுள் முக்கியமானவை யூத, கிறிஸ்தவ, சொராஸ்டிரிய மதங்களாகும். மற்றும் கிரேக்க மெய்யியலும், பிற மதங்களும் இங்கே தஞ்சம் புகுந்தன. மேலும், புத்த, இந்து மதங்களும் இங்கே ஓரளவு செல்வாக்கைப் பெற்றிருந்தன. எனவே, இந்த மதங்களின் கூற்றுக்கள் மானியின் சமயக் கொள்கைகளைப் பாதித்திருக்க வேண்டுமென்பது ஓர் உண்மை.

***ஆ) அடிப்படைக் கொள்கைகள்:*** மானி தனது சமயம் அனைவருக்கும் பொதுவான ஒன்று என்கிறார். மானி இதன் நிறுவனர்; இதன் இறுதி வெளிப்பாடு அளிப்பவர். இந்தச் சமயம் மறைபரப்புப் பணியை மையமாகக் கொண்டது. உலகின் பல பகுதிகளுக்கும் சென்று மறையைப் பரப்புவது பக்தனது கடமை. மேலும், இந்த மதத்திற்கு எழுத்து வடிவம் இன்றியமையாதது. எனவே, மானி தனது மதக் கருத்துக்களைப் புத்தகங்களாக எழுதினார்.

***இ) அண்டப்பிறப்புக் கோட்பாடு:*** உலகில் மனிதனின் நிலையையும், எங்கிருந்து வந்தான், ஏன் தவறி விழுந்தான், அவன் யார், எங்கே செல்கிறான் என்பதையும் உணர்த்த மானி அண்டம் பற்றிய ஒரு புராணத்தைத் தொகுத்தார். இதன்படி நன்மை மற்றும் தீமை, ஒளி மற்றும் இருள், இறைவன் மற்றும் சடப்பொருள் ஆகிய முரண்பாடுள்ள இரு கோட்பாடுகள் தொடக்கத்தில் இருந்தன. இந்த இருமைக் கோட்பாடு மானிக்கேயிசத்திற்கு அடிப்படையான ஒன்றாகும். மேலும், அவர் மூன்று காலங்களைப் பற்றியும் பேசுகின்றார். இருளின் தாக்குதலினால் ஒளி அணு, இருள் பொருளுடன் கலந்து சிறைப்பட்டது. சிறைப்பட்ட அணுவை மீண்டும் அதன் இடத்திற்கு அனுப்ப ஓர் உலகக் காலம் தேவைப்படுகிறது. இந்த உலக

மானது இறைவனால் பழைய நிலையை நோக்கிச் செல்லுமாறு அமைக்கப்பட்டுள் ளது. சடப்பொருள் இந்த முயற்சிக்கு எதிராகச் செயல்பட்டு ஆதாம் ஏவாளைப் படைத்தது. ஆதாம் தனது ஆன்மாவின் இறைமூலத்தை ஒரு மீட்பரால் உணர்ந் தாலும் அவர்தம் பிள்ளைகள், சடப்பொரு ளின் சூழ்ச்சிக்கு அடிபணிந்தனர். இதுவே தற்போது மனிதனின் நிலை. மானிக் கேயிசப் புரணத்தின் மூன்றாம் காலத்திலே பல திருவெளிப்பாடுகள் நிகழும். ஓர் இறுதித் தீர்வைக்குப்பின் உலகம் *1486* ஆண்டுகள் எரியும். ஒளிப்பொருள் ஒன்று கூடும். இவ்வுலகம் முடிவுபெறும். இருள் அதனிடத்திலேயே இருக்கும். இந்த இரண்டு அடிப்படைக் கொள்கைகளும் தனித்தனியாகப் பிரிக்கப்படும்போது ஒரு சுற்று முடிகிறது.

***ஈ) மீட்பு:*** மேலே கூறப்பட்ட புராணத்தி லிருந்து மனிதன் இந்த இரண்டு கொள்கை களை அறியும்போது மீட்புப் பெறுகிறான் எனத் தெரிகிறது. உலகிலுள்ள பல பொருட்களில் ஒளிப்பொருள் இருப்பதால் மனிதன் அதற்குத் தீங்கிழைத்தல் கூடாது. எனவே, இந்த மதம் கொலை, குடித்தல், மாமிசம் உண்ணுதல், உடல் உறவு கொள் ளுதல் ஆகியவற்றைத் தடுக்கிறது. உயர்ந் தோர் குழுவுக்கே இக்கடினமான ஒழுங்கு கள் உரியன. இவர்கள் தங்கள் மரணத்தின் போது ஒளியின் சுவர்க்கத்திற்குத் திரும்பு வர். மற்றவர்களுக்கு விதிவிலக்கு உண்டு. ஆனால், இவர்கள் மறுபிறப்பைத் தவிர்க்க முடியாது.

**3. வளர்ச்சியும், நிலைத்தலும்:** இந்தக் கலப்பு மதமானது வட ஆப்பிரிக்கா, சீனா நாடுகள் வரை வளர்ந்தது. கி.மு. *8,9*-ஆம் நூற்றாண்டுகளிலே சில நாடுகளில் இஃது அரசாங்க மதமாகவும் விளங்கியது. உரோமை அரசு இதன் வளர்ச்சிக்குத் தடையாக இருந்தது. சீனாவின் தென் மேற்குப் பகுதியில் இது பல இன்னல்களுக் கிடையில் நிலைத்திருந்தது. அகுஸ்தீனார் தொடக்கத்தில் இப்பிரிவைச் சேர்ந்தவர். மத்தியகாலத்தில் கிறிஸ்தவப் பிரிவினைச் சபைகளில் சில இக்கலப்பு மதத்தால் பாதிக்கப்பட்டன.

**மானியு தீத்து** *(MANIUS TITUS)*

கி.மு. *165*-இல் யூதருக்கு வாழ்த்துக் கொணர்ந்த உரோமையத் தூதுவர்களில் ஒருவர் *(2 மக் 11:34)*. கி.மு. *163*-இல் அந்தியோக்கு எப்பிபானுக்குத் தூதுவராக வந்த மானியு செர்கியுவைப் பற்றி போலி பியு குறிப்பிடுகிறார். தீத்து மான்லியு தோர்காத்து என்பவர் *164*-இல் ஒரு பணி யினிமித்தம் எகிப்துக்குச் சென்றார் என்று லிவி கூறுகிறார். எனினும் மானியுதீத்து யாரென்று காட்டுவது இயலாததாய் உள்ளது. காண்க. தீத்து-*1*.

# மி

**மிக்கேல்** (MICHAEL - இறைவனைப் போன்றவர் யார்?)

*1.* இவர் வாக்களிக்கப்பட்ட நாட்டினை உளவறிந்து வர மோசே அனுப்பியவர் களில் ஒருவரான செதூரின் தந்தை. இவர் ஆசேர் குலத்தைச் சேர்ந்தவர் *(எண் 13:13).*

*2.* காத்து கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தலைவர் *(1 நாள் 5:13).*

*3.* 'காத்து' கோத்திரத்தைச் சேர்ந்த அபிக யிலின் மூதாதையர் *(1 நாள் 5:14).*

*4.* ஒரு லேவியப் பாடகர். ஆசாபுவின் முன்னோர் *(1 நாள் 6:40).*

*5.* இசக்காரின் பரம்பரையில் வந்த இசு ராகியாவின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 7:3).*

*6.* பென்யமீன் குலத்தைச் சேர்ந்த பெரீ யாவின் புதல்வர் *(1 நாள் 8:16).*

*7.* மனாசேயில் ஆயிரவர்க்குத் தலைவ னாக இருந்தவர் மிக்கேல். சிக்லாகுக் கருகில் இவர் தனது தலைவரை விட்டு, தாவீதின் படையில் சேர்ந்து ஒரு படைத் தலைவராக ஆனவர் *(1 நாள் 12:20-21).*

*8.* இசக்காரின் இனத்தைச் சேர்ந்த ஓம்ரீ யின் தந்தை *(1 நாள் 27:18).*

*9.* யூதாவின் அரசனான யோசபாத் துக்குப் பிறந்த புதல்வர்களில் ஒருவர் *(2 நாள் 21:2-4).* இவர் இவரது சகோதரன் யோராம் ஆட்சிக்கு வந்தபோது, இவரது மற்றச் சகோதரர்களுடன் சேர்த்துக் கொல் லப்பட்டார்.

*10.* எஸ்ராவோடு பாபிலோனிலிருந்து திரும்பியவர்களுள் ஒருவரான செபதியா வின் தந்தை *(எஸ் 8:8).*

***11. அதிதூர்:*** யூதர்களின் விண்ணகப் பாதுகாவலர் *(தானி 10:13.21; 12:1).* தானி யேலின் இறுதிக்காட்சியின் மையப்பகுதி *(தானி 10-12)* மற்றும், மத்தியதரைக் கட லின் கிழக்குப் பகுதியின் அரசியல் வர லாறு பற்றியதாகும். இது பாரசீகப் பேரர சின் வீழ்ச்சியையும் *(11:2-3)*, செலூக்கியப் பேரரசன் நான்காம் அந்தியோக்கு எப்பிபா னின் ஆட்சியையும் *(11:21-45)* எடுத்துக்கூறு கிறது. மிக்கேல் யூதேயாவை ஆண்டு வந்த பாரசீக மற்றும் கிரேக்க நாடுகளின் காவல னாகிய தூதனுடன் விண்ணகத்தில் போராடு கிறார் *(10:13.20-21).* தோலமி மற்றும் செலூக்கியப் பேரரசுகளுக்கிடையே நடந்த போராட்டக் குழப்பத்திலிருந்து *(11:40-45)* யூதர்களின் விடுதலைக்கு இட்டுச் செல்வ தில் மிக்கேலின் வருகை இடம் பெறுகிறது *(12:1).* இந்தப் போராட்டங்களிலும் மக் களின் துன்பங்களிலும் விண்ணகம் ஈடுபட் டிருக்கிறது என்பதும், இறைவனின் தேர்ந் தெடுக்கப்பட்ட மக்கள் விண்ணகத்தில் வல்லமை மிக்க பரிந்துரையாளரைக் கொண்டிருந்தனர் என்பதும் குறிப்பிடத் தக்கவை.

விவிலியத்துக்குப் பிந்திய யூத நூல்களில் மிக்கேல் ஏழு அதிதூதர்களில் ஒருவராகவும் *(காண்க. திருவெளி 8:2)*, எல்லா நோய்கள் மற்றும் குழந்தைகளின் புண்களின் மேலும் அதிகாரம் கொண்டுள்ளவராகவும் கருதப் பட்டார். இவர் இஸ்ராயேலருக்காகப் பரிந் துரைக்கும் இஸ்ராயேலின் ஆதரவாளராக வும் பாதுகாப்பாளராகவும் இக்கால இறுதி யில் அவர்களின் எதிரிகளைப் பழிவாங்கு பவராகவும் அடிக்கடி சித்திரிக்கப்படுகிறார். இவர் வானக வீட்டின் வாயில் காப்பாள ராகவும், வானம் பூமி ஆகியவற்றைத் திட்டம் செய்து அமைக்கும் ''மறை பொருள்களின்'' காவலராகவும் உள்ளார்.

மோசேயின் உடலைப் பற்றி பேய்க்கும் அதிதூதரான மிக்கேலுக்குமிடையே நடந்த தர்க்கம் பற்றிய யூதப் பாரம்பரியத்தை யூத 9 சுட்டிக்காட்டுகிறது. ஓரிசன் கருத்துப்படி, இப்பாரம்பரியம் மோசேயின் விண்ணேற்பு என்ற நூலில் காணப்படுகிறது.

பறவை நாகம் (சாத்தான்) மற்றும் அதன் தூதர்களுக்கு, எதிராகப் போராடும் வான தூதர்களின் தலைவராக மிக்கேல் போராடு கிறார் (திருவெளி 12:7-9). சில சமயம், சீனாயில் சட்டம் கொடுக்கப்பட்டபோது இறைவனுக்கும் மோசேக்கும் இடையில் நடுவராக இருந்த தூதராக மிக்கேல் குறிக் கப்படுகிறார். இவர் அ.ப. 7:38-இல் குறிக் கப்படும் தூதனாக இருக்கலாம். மிக்கேல் திருச்சபையைக் காப்பவராகவும் இறந்தவர் களின் ஆன்மாவை வானக வீட்டிற்கு இட்டுச் செல்பவராகவும் உள்ளார் என்ற ஒரு பாரம்பரியம் திருச்சபையில் உண்டு.

**மிக்தலேல்** (MIGDAL-EL - ஏலின் கோட் டைக்கோபுரம்)

இது நப்தலி நாட்டிலுள்ள மதிலால் சூழப்பட்ட ஒரு நகரம் (யோசு 19:38). இஃது அமைந்த இடம் எதுவென்று தெரிய வில்லை. ஆனால், இது கலிலேயாவின் வடபகுதியில் ஈரோனின் சுற்று வட்டாரத் தில் தீருக்குக் கிழக்கு, தென்கிழக்கில் 26 கி.மீ. தொலைவிலுள்ள இக்கால மெச்தெல் இஸ்லிமாக இருக்கலாம்.

**மிக்தல்கது** (MIGDAL-GAD - காத்தின் கோபுரம்)

இலாக்கீசின் செபேலா மாவட்டத்தி லுள்ள யூதாவின் சிற்றூர்களில் ஒன்று (யோசு 15:37). பெயித்-இப்ரினுக்குத் தெற்கே 8 கி.மீ. தொலைவில் இருக்கும் கிர்பெத் ஏல்-மெச்தெலேவாக இருக்கலாம்.

**மிக்தாம்** (MIKTAM - பரிகாரச் சங்கீதம்)

சங் 16:56-60-இன் தலைப்பாகும் இது. இஃது எசா 38:9-இல் உள்ள பாடலின் தலைப்பாகவும் இருக்கலாம். பாவத்தை மறைக்கும், அல்லது பாவப்பரிகாரத்துக் கான சங்கீதம் எனக்கொள்ளலாம்.

**மிக்தோல்** (MIGDOL - கோபுரம்)

பழைய ஏற்பாட்டில் வெவ்வேறு இடங் களில், சூழலில் கூறப்படும் எகிப்தின் தென்பகுதியில் உள்ள ஒரு நகரமாகும்.

அ) இஃது எகிப்திலிருந்து பாலஸ்தீனத் துக்கு இஸ்ராயேலர் பயணம் செய்த வழியில் பிக்கிரோத்து, பாகால்-செபோன் மற்றும் கடலுக்கு அருகில் உள்ளதாகக் கூறப்படுகிறது.

ஆ) இது மெம்பிசு, தகபனகேசு ஆகிய வைகளோடு ஒன்றாக எரேமியாவால் குறிப் பிடப்படும், எகிப்தில் யூதர்கள் வாழ்ந்த நகரம் (எரே 44:1; 46:14).

இ) எசே 29:10; 30:6-இல் குறிப்பிடுவது போல் வட எகிப்தில் உள்ள நகரமாகவும் இருக்கலாம்.

இவை மூன்றும் ஒரே இடங்கள் தானா அல்லது வெவ்வேறு இடங்களா என்ப தற்குத் தெளிவான சான்றில்லை. இந்தச் சொல்லின் பொருள் 'கோட்டை', அல்லது 'கோபுரம்'. இஃது எகிப்தியரால் செமித்திய மொழியிலிருந்து பெறப்பட்டு 'கோட்டை' அல்லது இராணுவம் அமைந்த இடங் களைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப் பட்டது.

எசேக்கியேலில் வரும் மிக்தோல் தெல் ஏல்-எயிரோடு அடையாளம் காட்டப்பட லாம். அதே இடமோ, அதே கழிமுகப் பகுதியிலுள்ள மற்றொரு மிக்தோலோ இஸ்ராயேலர் நாணல் கடலைக் கடக்கு முன் தங்கிச் சென்ற இடமாக இருக்கலாம் (யாத் 14:2; எண் 33:7).

**மிக்மத்தாத்து** (MICHMETHATH - பாறை யான, கல்லான)

மிக்மத்தாத்து செக்கேமுக்கு அருகில் எப்பி ராயிம், மனாசேயின் எல்லையில் அமைந்த ஓரிடமாகும். யோசுவா 16:6-இன்படி எப்பி ராயிமின் வட எல்லையில் மிக்மத்தாத்து இருக்கிறது; 17:7-இன்படி செக்கேமுக்குக் கிழக்கிலும், ஏன்-தப்புவாகுக்கு வடக்கிலும் மனாசேயின் எல்லையில் இருக்கிறது. அப் படியானால், மிக்மத்தாத்து எப்பிராயிம், மனாசேயின் பொது எல்லை இருக்க முடியாது. இவற்றை ஒத்துபோகச் செய்வது கடினம்.

இஃது இருந்த இடமாக இரு இடங்கள் அடையாளம் காட்டப்படுகின்றன. ஒன்று செக்கேமின் தென்கிழக்கில் 8 கி.மீ.

தொலைவிலுள்ள கிர்பெத் மக்னே ஏல்-போகாவாகும். மற்றது செக்கேமின் கிழக்கில் உள்ள கிர்பெத் யுலெசில் என்பதாகும்.

**மிக்மாசு** (MICHMAS - *மறைத்து வைக்கப்பட்ட)*

இஃது எருசலேமுக்கு வடகிழக்கே 12 கி.மீ. தொலைவிலும், எரிகோவுக்கு மேற்கில் 17 கி.மீ. தொலைவிலும் பெத்தேலின் மலைநாட்டில் அமைந்த பென்யமினின் நகரமாகும். *1 சாமு 14:4*-இன்படி, மிக்மாசின் சுற்றுவட்டாரத்தில் போட்சேசு, செனே என்ற பெயர்களுடைய இரு செங்குத்தான பாறைகள் இருந்தன.

விவிலிய வரலாற்றில் முதன் முதலாக மிக்மாசு, பெலிஸ்தியர்கள் சவுலுக்கு எதிராக வந்து பாளையம் இறங்குமிடமாகக் காட்டப்படுகிறது *(1 சாமு 13-14)*. இங்கு சவுல் தன்னோடு ஈராயிரம் பேரை மிக்மாசில் வைத்துக்கொண்டு, ஓராயிரம் பேரைக் கெபாவில் இருந்த யோனத்தானுக்குக் கொடுத்தார் *(13:2-3)*. யோனத்தான் மிக்மாசில் பாளையம் இறங்கியிருந்த பெலிஸ்தியருக்கு எதிராகப் போய் அங்கு இருந்த காவலர்களைக் கொன்றதனால் அவர்களிடையே குழப்பம் விளைந்தது. இதனைப் பயன்படுத்தி சவுலும், அவரது ஆட்களும் பெலிஸ்தியர்களைக் கொன்று குவித்துப் பெரும் வெற்றி அடைந்தனர் *(14:5.13)*. முதலில் மிக்மாசில் இருந்த சவுல் பின்னர் எவ்வாறு அவ்விடம் விட்டு அகன்றார் என்பது தெளிவாக இல்லை.

தலைநகரை நோக்கி முன்னேறிக்கொண்டிருக்கும் அசீரியப் படையெடுப்பு பற்றிய எசாயாவின் விவரிப்பில், எருசலேமுக்கு வடக்கிலுள்ள நகரங்களில் ஒன்றாக மிக்மாசு குறிக்கப்படுகிறது *(எசா 10:28)*. செருபாபேலோடு நாடு கடத்தலிலிருந்து திரும்பிய பென்யமின் குழுவினருள் மிக்மாசைச் சேர்ந்த மக்கள் குறிப்பிடப்படுகின்றனர் *(எஸ் 2:27; நெகே 7:31; 11:31)*. அந்தியோக்குவுக்கு ஓட பாக்கீதைக் கட்டாயப்படுத்தியபின், அசமோனிய யோனத்தான் ஒரு காலத்திற்கு மிக்மாசில் வாழ்ந்து வந்தார் *(1 மக் 9:73)*.

**மிக்ரி** (MICHRI - *மதிப்பு மிகுந்த, விலையுயர்ந்த)*

நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பென்யமின் இனத்தைச் சேர்ந்த எலாவின் முன்னோர் *(1 நாள் 9:8)*.

**மிக்ரோன்** (MIGRON - *செங்குத்தான பாறை)*

இது பென்யமின் ஆட்சிக்குட்பட்ட பகுதியின் எல்லையிலுள்ள நகரங்களில் ஒன்று. இதற்கருகேயுள்ள மாதுள மரத்தின் கீழிருந்துதான் சவுல் நாட்டில் உட்புகுந்த பெலிஸ்தியர்களைக் கவனித்தார் *(1 சாமு 14:2)*. அசீரியர்கள் எருசலேமை நோக்கிப் படையெடுக்கும்போது இவ்விடத்தில் தங்கள் சுமைகளை இறக்கி வைத்துச் சென்றனர் *(எசா 10:28)*. இஃது இருந்த இடம் எதுவென்று தெரியவில்லை. இது வடி எஸ்-சுவேனித்தின் வடபகுதியிலுள்ள கெபாவுக்கு வடக்கிலும், மிக்மாசுக்குத் தென் மேற்கிலும் உள்ள தெல் மிரியாமாக அடையாளம் காட்டப்படலாம். எசாயாவின் குறிப்பிலிருந்து, இது மிக்மாசுக்கு வடக்கில் இருந்ததாக அறிஞர் சிலர் கருதுவர்.

**மிக்லோத்து** (MIKLOTH - *பிரம்பு, தடி)*

*1.* இவர் கிபயோனில் வாழ்ந்து வந்த பென்யமின் குலத்தவர். இவர் எயியோவின் வழித்தோன்றலும், சிமயாவின் தந்தையும் ஆவார் *(1 நாள் 8:32; 9:37-38)*.

*2.* அகோகியரான தோதாயின் தலைமையில், இரண்டாம் மாதத்திற்குரிய தாவீதின் படைப்பிரிவுக்கு அதிகாரியாக இருந்தவர் *(1 நாள் 27:4)*.

**மிக்னேயா** (MIKNEIAH - *யாவே படைக்கிறார் அல்லது கொண்டிருக்கிறார்)*

தாவீதால் அமர்த்தப்பட்ட யாழ் மீட்டும் தலைவர்களில் ஒருவர். லேவியர்களில் இரண்டாம் நிலைக்குரியவர் *(1 நாள் 15:18.21)*. இதற்கு இணையான பட்டியலாகிய *1 நாள் 16:5*-இல் இப்பெயர் விடப்பட்டிருக்கிறது.

**மிசா** (MIZZAH - திகில், பேரச்சம்)

இவர் இரகுவேலின் புதல்வர் நால்வரில் கடைசியானவர். இவர் ஏதோமிய இனத் தலைவர்களில் ஒருவர் (*ஆதி 36:13.17; 1 நாள் 1:37*).

**மிசாம்** (MISHAM)

பென்யமின் குலத்தினனான மிசாம் ஓனோ, லோது எனும் சிற்றூர்களைத் தோற்றுவித்தவர்களில் ஒருவர். எல்பாக லின் புதல்வர் (*1 நாள் 8:12*).

**மிசால்** (MISHAL)

ஆசேரின் எல்லையிலுள்ள மிசால் ஒரு லேவிய நகரம் (*1 நாள் 6:74*). இது மூன்றாம் துத்-மோசால் 39-ஆவதாகக் கைப் பற்றப்பட்ட நகரம். இஃது அமைந்த இடம் எதுவென்று சரியாகத் தெரியவில்லை. ஒரு வேளை இஃது அக்கோ சமவெளியில் கர்மேல் மலைமுகடுக்கு அருகில் இருந் திருக்கலாம். அக்கோவுக்குத் தென் கிழக் கில் 10 கி.மீ. தொலைவிலுள்ள தெல் கிசான் என்ற இடமாக இருக்கலாம்.

**மிசாவேல்** (MISHAEL - இறைவன் இருப் பதைப் போல் உள்ளவர் யார்?)

1. உசியேலின் மகனான மிசாவேல் ஒரு லேவியர். இவன் ஆரோனுக்குச் சிற்றப்பா மகன் (*யாத் 6:18:22*). மிசாவேலையும், அவரது சகோதரர் எல்சாபானையும் மோசே அழைத்து, ஆரோனின் புதல்வர்களான நாதாபு, அபிகூ ஆகியோர், ஆண்டவருக்கு அன்னிய நெருப்பைச் சமர்ப்பித்து இறந்த போது அவர்களின் உடலை எடுத்துப் பாளையத்திற்கு வெளியே போடுமாறு கூறினார் (*லேவி 10:4*).

2. எஸ்ரா பொதுமக்கள் முன்பாகச் சட் டத்தைப் படித்துக் காண்பித்தபோது அவர் அருகே இடப்புறத்தில் நின்றவர்களில் ஒரு வர் (*நெகே 8:4*).

3. தானியேலின் மூன்று நண்பர்களில் ஒருவர் (*தானி 1:6-7.11.19; 2:17; 1மக் 2:59*); பாபிலோனியர் இவரை மேசாக்கு என அழைத்தனர் (*தானி 1:7*). சதிராக்கு, ஆபது நெகோ ஆகியோருடன் பாபிலோன் மாநி லத்தில் முக்கியமான அரசாங்கப் பதவிக்கு நியமிக்கப்பட்டார் (*3:12*). நெபுகத்னேசரால் எழுப்பப்பட்ட சிலையை வணங்க அவர் கள் மறுத்ததால், மூவரும் தீச்சூளையில் எறியப்பட்டனர். அங்கே இறைவனது வானதூதரால் காப்பற்றப்பட்டனர் (*தானி 3.*).

**மிசிராயர்** (MISHRAITES)

கிரியத்து எயாரீமைச் சேர்ந்த, யூதாவைச் சேர்ந்த, ஒரு குடும்பம். இதிலிருந்து சொராத்தியர் மற்றும் எசுத்தாவோலியர் தோன்றினர் (*1 நாள் 2:53*).

**மிசுகாபு** (MISGAB - உயர்ந்த இடம்)

எரே *48:1*-இல் பேசப்படும் மோவாபில் உள்ள ஓரிடம் இது. இது நகரைச் சூழ்ந் திருக்கும் கோட்டையைக் குறிப்பதற்கான பொதுப்பெயர் எனவும் கொள்ளப் படுகிறது.

**மிசுமன்னா** (MISHMANNAH - தடித்த, கொழுத்த)

காத்து இனத்தைச் சேர்ந்த ஆற்றல் மிக்க வரும், திறமை மிக்கவருமான போர்வீரர் களில் சிலர் 'சிக்லாகு' எனுமிடத்தில் தாவீது மறைந்திருக்கும்போது அவருடன் வந்து சேர்ந்து கொண்டனர். அவர்களில் மிசுமன்னா ஒருவர். அவர் பின்னர் தாவீ தின் படையில் ஓர் அதிகாரி ஆனார் (*1 நாள் 12:10*).

**மிசுமா** (MISHMA)

1. இசுமயேலின் புதல்வர்களுள் ஒருவன். ஓர் அரேபிய இனத்தின் குலப்பெயர் மூதாதையர் (*ஆதி 25:14; 1நாள் 1:30*). சில வரைபடங்களில், தெயிமா மற்றும் ஏபெல் சமார் ஆகிய இடங்களுக்கு இடையிலுள்ள ஏபெல் மிசுமா குறிக்கப்படுகிறது.

2. இவர் சிமியோனுடைய வழிவந்த, மிப்சாம் என்பவரின் மகன் (*1 நாள் 4:25-26*). மிப்சாம், மிசுமா எனும் பெயர்கள் இந்தத் தலைமுறை அட்டவணையிலும் இசுமயேலின் தலைமுறை அட்டவணை யிலும், வருவது (*1:29-30; 4:25*). இந்த இரு அராபிய இனங்களும் சிமியோன் இனம் தெற்கு நோக்கிப் பரவியபோது சிமியோ

னுடைய இனத்தோடு சேர்க்கப்பட்டு விட்டன என்பதைச் சுட்டுகின்றன.

***மிஸ்பரத்து*** (MISPERETH)

மிஸ்பார் என்ற பெயரின் மற்றொரு வடிவம் (நெகே 7:7).

***மிஸ்பா, மிஸ்பே*** (MIZPAH, MIZPEH - காவல் கோபுரம்)

இவை பாலஸ்தீனத்திலும் அதன் அண்டை நாடுகளிலும் உள்ள பல நகரங்களின் பெயர்களாகும். மிஸ்பா, மிஸ்பே என இருவகையிலும் இப்பெயர்கள் பயன்படுத்தப்படுகின்றன. எந்த நாட்டில் இப்பெயருடைய ஊர் இருக்கிறதோ அந்த நாட்டோடு இணைத்துக் கூறப்படும். எடுத்துக்காட்டு: மோவாபின் மிஸ்பே (1 சாமு 22:3); கிலயாதின் மிஸ்பே (நீதி 11:29). எழுபது நூல் பல இடங்களில் இப்பெயர்களைப் பொதுப்பெயராகவே மொழி பெயர்க்கிறது (நீதி 10:17; 11:29).

1. யாக்கோபு, தனக்கும் லாபானுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கைக்கு அடையாளமாக இப்பெயரை இட்டார் (ஆதி 31:49). கற்குவியலுக்கு இப்பெயர் இடப்பட்டதாக மாசோரேட்டிக்கு வாசகம் கூறுகிறது. சமாரியர் வாசகம் இது தூணுக்கு இடப்பட்டதாகக் கூறுகிறது; ஆகவே மிஸ்பா என்ற பெயர் 31:45-இல் வரும் தூணின் பெயராகக் கருதப்படுகிறது. மிஸ்பா ஆசீர்கள் என்றழைக்கப்படும் 31:49 இந்நிகழ்ச்சிகளோடு தொடர்புடையது. யாக்கோபு யாபோக்கு ஓடையை இன்னும் கடக்கவில்லை என்பதால் (32:22), யாக்கோபு மிஸ்பா என்று கொடுப்பது வட கிலயாதில் நடந்திருக்க வேண்டும்.

2. மிஸ்பா நாடு (யோசு 11:3) அல்லது மிஸ்பே பள்ளத்தாக்கு (11:8):- வட கலிலேயாவில் இந்த இடத்தில் எர்மோன் மலையடிவாரத்தில் இவ்வியர் சிலர் வாழ்ந்து வந்தனர். இவர்கள் ஆட்சோரின் யாபீன் அரசனின் தலைமையில் இஸ்ராயேலருக்கு எதிராக அமைக்கப்பட்ட கூட்டணியில் சேர்ந்தனர். இந்தக் கூட்டணி படுதோல்வியுற்றது. இந்த இடம் இஸ்ராயேலரின் கட்டுப்பாட்டில் இல்லாத வட எல்லையில் இருந்திருக்கலாம். ஆனால், இஃது இருந்த இடத்தைத் துல்லியமாகக் கணிக்க முடியவில்லை.

3. யூதாவின் மிஸ்பே:- இது யூதாவின் செபேலா பகுதியிலுள்ள ஒரு நகரம் (யோசு 15:38). இது தெல் எஸ்-சாபியாக அடையாளம் காட்டப்பட்டுள்ளது. ஆனால், இது காத்து இருந்த இடமாக இருக்கலாம். யுசேபியுவும், எரோனிமுவும் இப்பகுதியிலுள்ள ஓர் இடத்தை அடையாளம் குறிக்கின்றனர்.

4. பென்யமினின் மிஸ்பா:- இது பென்யமின் இனப்பகுதியில் உள்ள ஒரு நகர் (யோசு 18:26). இந்த மிஸ்பாவில்தான் பென்யமினியர் லேவியரின் மறுமனைவியைக் கற்பழித்துக் கொன்றனர். இதற்குப் பழிவாங்க இஸ்ராயேலின் வீரர்கள் ஒன்று கூடினர் (நீதி 20:1.3; 21:1.5.8). பிற்காலத்தில் சாமுவேல் இஸ்ராயேலருக்கு நீதிவழங்கிய மூன்று இடங்களில் இதுவும் ஒன்றாகும் (1 சாமு 7:16). இங்குதான், சாமுவேல் பெலிஸ்தியருக்கு எதிராகப் போராட இஸ்ராயேலரின் படையை ஒன்று கூட்டினார் (7:5-12). யூதாவின் அரசன் ஆசா இந்த மிஸ்பாவைக் கோட்டைகளுடன் கட்டி எழுப்பினான் (1 அர 15:22; 2 நாள் 16:6); இதனால் தன் நாட்டின் வட எல்லையை விரிவுபடுத்தினான். கெதல்யா ஆளுநராக இருந்த குறுகிய காலத்தில் மிஸ்பா யூதா நாட்டிற்குத் தலைநகராக இருந்தது (2 அர 25:23.25; எரே 40-41). நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் எருசலேம் சுவரை மீண்டும் கட்டுவதில் மிஸ்பாவின் ஆட்கள் உதவி செய்தனர் (நெகே 3:7. 15.19). அசமோனியர் காலத்தில் மிஸ்பா (மாஸ்பா) செபக்கூட மையமாகத் திகழ்ந்தது (1 மக் 3:46). இஃது இந்த இடம் சாமுவேல் காலத்தில் இஸ்ராயேல் சபை கூடும் இடத்தை நினைவு படுத்தலாம்.

இந்த இடம் எருசலேமுக்கு வடக்கில் 12 கி.மீ. தொலைவில் உள்ள தெல் ஏன்-நஸ்பே என்று பலரால் அடையாளம்

காட்டப்படுகிறது. எருசலேமுக்கு வடமேற்கில் 8 கி.மீ. தொலைவில் உள்ள நெபிசம்வில் என்று வேறு சிலர் அடையாளம் காட்டுகின்றனர். தெல் ஏன்-நஸ்பேயில் நடந்த அகழ்வாய்வுகளில், குறிப்பாக ஆசா குலத்தைச் சேர்ந்த அதிகம் பாதுகாப்புடைய கோட்டைச் சிதைவுகள் கண்டு பிடிக்கப்பட்டன. ஒருவேளை *2 அர 25:23; எரே 40:8*-இல் குறிக்கப்படும் யாசானியாவின் முத்திரை இவ்விடத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளது எனலாம். பொதுவாக, தெல் ஏன்-நஸ்பே பற்றிய செய்திகள் மிஸ்பாவோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளோடு ஒத்துப்போகின்றன.

5. தென் கிலயாதின் மிஸ்பா:- இஃது அம்மோனியர்களுக்கு எதிராகப் போரிட இஸ்ராயேலர் படைகள் கூடிய இடமாகும். இப்தாகு, போரை நடத்த கிலயாதுக்கு மீண்டும் அழைக்கப்பட்டு, அங்குத் தங்கி வாழ்ந்தார் (*நீதி 10:17; 11:11.29.34*). இராமாத்து-மிஸ்பே (*யோசு 13:26*) இந்த நிகழ்ச்சிகளோடு தொடர்புடைய மிஸ்பேயுடன் ஒத்துப்போகிறது. ஆனால், யாக்கோபோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளோடு ஒத்துப் போகாது. ஆகவே, இது யாபோக்கு ஓடையின் தெற்கில் இருந்திருக்க வேண்டும்.

6. மோவாபின் மிஸ்பே:- சவுலிடமிருந்து ஓடிய போது தாவீது இங்குதான் மோவாபின் அரசனைச் சந்தித்துத் தன் பெற்றோருக்கு மோவாபில் அடைக்கலம் தருமாறு வேண்டினார் (*1சாமு 22:3*). இஃது இருந்த இடம் தெரியவில்லையானாலும், மெதேபாவுக்குத் தென்மேற்கில் மிக முனைப்பாக உள்ள உயரமான பகுதியான ரசும் ஏல்-மெஸ்ரிப என்ற இடம் அடையாளம் காட்டப்படுகிறது.

7. ஓசேயா *5:1*-இல் குறிக்கப்படும் ஓர் இடம். இது மேலே 4 அல்லது 5-இல் குறிக்கப்படும் இடங்களாக இருக்கலாம்.

**மிஸ்பார்** (MISPAR)

இவர் செருபாபேலோடு பாபிலோன் அடிமைத்தனத்தினின்று நாடு திரும்பியவர்களில் ஒருவர் (*எஸ் 2:2*). இவர் நெகே *7:7*-இல் மிஸ்பரத்து என்று அழைக்கப்படுகிறார்.

**மிஸ்ரபோத்து-மயிம்** (MISREPHOTH-MAIM)

இது பெனிசியக் கடற்கரையில் சீதோனுக்கு அண்மையிலுள்ள ஓர் இடம் (*யோசு 11:8; 13:6*). இங்கு வெப்ப ஊற்றுகள் உள்ளன. இவ்விடம் இன்று அயின் மிஸ்ரேபி எனப்படுகிறது. ஒருசிலர் 'கிர்பெத் ஏல்-முசெய்ரேபெ'' என்ற இடத்தை இதற்கு அடையாளம் காட்டினாலும், அயின் மிஸ்ரேபிதான் இந்த இடம் என்று கருதுவது மேலானதாகும்.

இப்பெயருக்குச் ''சுண்ணாம்பு, நீரில் வெந்து கொண்டிருக்கிறது'' எனும் பொருள் கொடுக்கலாம். யோசுவா கானானியர்களை, மேரோம் எனும் ஏரிக்கருகில் திடீரென அவர்கள் மேல் தாக்கித் தோல்வியுறச் செய்து, மிஸ்ரபோத்து-மயிம் ஏரி வரை அவர்களைத் துரத்திக் கொண்டு வந்தார். ஏறக்குறைய சீதோன் நாட்டு எல்லை வரை துரத்தி வந்தார்.

**மிஸ்ராயிம்** (MIZRAIM - செம்மண்)

இவர் காமின் மக்களில் ஒருவர் என ஆதி *10:6.13*-இல் கூறப்படுகிறது. இஃது எகிப்தைக் குறிப்பதற்குப் பயன்பட்ட எபிரேயச் சொல்லாகும் (*ஆதி 12:10; 3:10; 25:18; 47:20*). ஆனால், சில இடங்களில் இஃது எகிப்தையன்று 'முஸ்ரி' நாட்டைக் குறிப்பதாக இருக்கிறது (*2 அர 10:28; 2 அர 7:6; 2 நாள் 1:16-17*). இது மூன்றாம் சல்மனேசரின் குறிப்புகளில் காணப்படுகிறது. அவர் முஸ்ரியிலிருந்து பல ஒட்டகங்கள் தனக்குத் திரையாகச் செலுத்தப்பட்டதாகக் கூறுகிறார். இந்தப் பாக்டிரியன் ஒட்டகங்கள், முஸ்ரி ஆசியாவில் இருந்திருக்க வேண்டுமெனச் சுட்டுகின்றன. இப்பெயர் பல பொருள்களில், பல எல்லைகளில் உள்ள நாட்டைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால், இது சிறிய ஆசியாவிலோ, எகிப்திலோ இருந்திருக்க வேண்டும்.

மிஸ்ராயிமிலிருந்தும், கேவேயிலிருந்தும் சாலமோனுக்குக் குதிரைகள் வந்தன (1 அர

10:28). இது மிஸ்ராயிம் சிறிய ஆசியாவில் இருந்தது என்பதற்குச் சான்றாக இருக்கலாம்.

**மிஸ்னா** (MISHNA - திரும்பக்கூறுதல்)

இஃது ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு அளிக்கப்படும் யூதச் சட்டத்தின் வாய்மொழி விளக்கத் தொகுப்பு ஆகும். இது கி.பி. 135-இல் பிறந்த யூதா ஹாநாசி எனும் ராபியால் தொகுக்கப்பட்டது.

இது கி.பி. 2-ஆம் நூற்றாண்டுவரையுள்ள சட்ட விளக்கங்களைக் கொண்டுள்ளது. இது ஆறு நூல்களாகவும், அறுபத்து மூன்று பாகங்களாகவும் பின்னவை அதிகாரங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. இதைத் தொகுத்தவர் காலம் வரையில் பாலஸ்தீனப் பள்ளிகளில் போதிக்கப்பட்ட யூதசமய, சட்ட அமைப்பு முழுவதையும் கொண்டுள்ளது. இதில் விவசாயம் பற்றிய சட்டங்கள், ஓய்வுநாள் மற்றும் திருவிழாக்கள் பற்றிய சட்டங்கள், பலிகள் மற்றும் சடங்குத் தூய்மை பற்றிய சட்டங்கள், குடும்பச்சட்டங்கள், சமூகம் மற்றும் குற்றங்கள் பற்றிய சட்டங்கள் ஆகியவை அடங்கியிருந்தன. காலப்போக்கில், இது பிற்கால விளக்கவுரைகளால் விரிவாக்கப்பட்டது; அதன் விளைவாக பாலஸ்தீன மற்றும் பாபிலோனியத் தால்மூதுகள் தோன்றின.

**மிட்சார்** (MIZAR - சிறிய தன்மை)

இது யோர்தான், எர்மோன் பகுதிகளோடு தொடர்புபடுத்திப் பேசப்படும் மலையாகும் (சங் 42:6). யோர்தான் புறப்படுமிடம் பற்றி இச்சங்கீதம் பேசுவதால் தாண் எனுமிடத்திற்கு, இவ்விடம் அண்மையில் உள்ளதாக இருக்க வேண்டும். அல்லது இந்தச்சொல் எர்மோன் மலைக்கும், மிட்சார் மலைக்கும் உள்ள வேறுபாட்டைப் புலப்படுத்துவதற்கும் அதாவது அவ்வளவு உயர்ந்த எர்மோனின் முன் இம்மலை எவ்வளவு சிறியது என்பதற்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். இஃது அமைந்த இடம் எதுவென்று காண இயலவில்லை.

**மிட்ராஷ் இலக்கியம்** (MIDRASHIC LITERATURE)

**1. முன்னுரை:** கி.மு. 587-இல் இஸ்ரா யேலர் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டு கி.மு. 538-இல் யூதேயாவுக்கு மீண்டும் திரும்பிக் குடியேற அனுமதிக்கப்பட்டனர். இக்காலம் இஸ்ராயேலின் வரலாற்றில், குறிப்பாக அதன் இலக்கிய வரலாற்றில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. இக்காலத்திற்கு முன்பே இஸ்ராயேலில் பல நூல்கள் தோன்றத் தொடங்கியிருந்தன. ஆனால், இக்கட்டத்திற்குப் பின்வந்த நூற்றாண்டுகள் இஸ்ராயேலின் இலக்கிய வரலாற்றில் ஒரு பொற்காலம் எனலாம். ஏனெனில், இக்காலத்தில் இஸ்ராயேல் ஆசிரியர்களின் இலக்கிய நடவடிக்கைகள் செழித்தோங்கின.

நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய காலத்திற்குப் பின்புதான் தோரா அல்லது ஐந்நூல் தொகுப்பு இறுதி வடிவம் எடுத்தது. இறைவாக்கினர்களின் கூற்றுகள் தொகுக்கப்பட்டு முழு நூல் வடிவம் எடுத்தன. சங்கீதங்களின் பல்வேறு தொகுப்புக்களும் ஒன்றிணைக்கப்பட்டு, நாம் கொண்டிருக்கும் வடிவில் நூல்வடிவம் எடுத்தன. இவற்றோடு இறை ஏவுதல் பெற்ற புதிய நூல்களும் தோன்றின. கி.மு. 6-ஆவது அல்லது 5-ஆவது நூற்றாண்டைச் சேர்ந்த ஓர் இஸ்ராயேலர், எக்காலத்திலும் எல்லா மக்களுக்கும், மன உலைவைத் தரும் தீமை பற்றிய பிரச்சனையை, யோபுவுக்கும் அவரது நண்பர்களுக்குமிடையே நடக்கும் காவிய உரையாடலாக, நாடகப் பாணியில், எடுத்தியம்பினார். கி.மு. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மற்றொரு கவிஞர் உன்னத சங்கீதம் அல்லது பேரின்பப்பாடல் என்ற நூலில் ஆண்-பெண் அன்புறவைச் சிறப்பித்துப் பாடினார். அந்த அன்புறவு வழி, இறைவனுக்கும் அவரது மக்களுக்குமிடையேயுள்ள அழிவற்ற அன்பை நாடகப்படுத்தினார். கி.மு. 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புலமை மிக்க குரு ஒருவர் நாளாகமம், எஸ்ரா, நெகேமியா ஆகிய நூல்கள் அடங்கிய பழைய ஏற்பாட்டுத் திருச்சபை வரலாற்றை ஒரு புதிய இலக்கிய வடிவில்

எழுதினார். இக்காலத்தில்தான், யோனா என்ற வசை இலக்கியமும், நற்பண்புடைய வாழ்வு பற்றிய தோபியா நூலும், ரூத்து, எஸ்தர் யூதித்து போன்ற துணை வரலாற்று (Para-historical) நூல்களும், தானியேல் என்ற ஊழியிறுதி வெளிப்பாட்டு நூலும், விவிலியத்திலுள்ள மற்றும் சில நூல்களும் தோன்றின.

இவற்றோடு, இறைமக்களுக்குப் போதிக்கவும் உற்சாகம் அளிக்கவும் அவர்களை உறுதிப்படுத்தவும் ஆசிரியர்கள் சிலர் புதிய இலக்கிய வடிவங்களை வளர்த்தனர். இவ் வடிவங்கள் முந்தைய நூல்களில் இங்கு மங்குமாகப் பயன்பட்டிருந்தன. ஆனால், நாடு கடத்தலுக்குப் பின்வந்த காலத்தில் இவை சிறப்பான முறையில் வளர்ந்து முன்னுக்கு வந்தன. இவற்றில் ''மிட்ராஷ்'' அல்லது துணை வரலாற்று இலக்கியம், ஊழியிறுதி வெளிப்பாட்டு (apocalyptical) இலக்கியம் ஆகிய இரண்டும் முக்கியமானவை; சிறப்பானவையுமாகும். இவற்றில் ஒன்றான மிட்ராஷ் இலக்கியம் பற்றி இப்போது பார்ப்போம்.

***2. ஆய்வின் அவசியம்:*** மிட்ராஷ் இலக்கிய வகையைச் சேர்ந்த விவிலிய நூல்கள் பெரிதும் வியப்பளித்துள்ளன; தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளன. இவ்வகை நூல்களில், ஒரு வரலாற்றுக் கரு, பல கற்பனை விவரங்கள், மன்றாட்டுக்கள், உரைகள் ஆகியவற்றால் விரிவாக்கப்பட்டு போதக வடிவில் எடுத்துக் கூறப்படும். அதன் நோக்கம் ஒரு குறிப்பட்ட சபையினருக்குப் போதித்து அவர்களை உற்சாகப் படுத்துவதும், அறிவுறுத்துவதும், உறுதிப் படுத்துவதுமாகும்.

இந்த இலக்கியம் தோன்றிச் செழிப்புற்ற காலத்தில், அதைக் கேட்ட அல்லது வாசித்த மக்கள் வியப்படையவில்லை; தவறாகப் புரிந்து கொள்ளவுமில்லை; அதை அதற்குரிய விதத்திலேயே சரியாகப் புரிந்து கொண்டனர். ஆனால், காலப்போக்கில் இந்த இலக்கிய வடிவைச் சரியாகப் புரிந்து கொள்ளும்முறை தவறிப் போய் விட்டது. அதன் விளைவாக இவ்வகை இலக்கியத்தைச் சேர்ந்த நூல்கள் அப்படியே வரலாற்று நூல்களாகக் கருதப்பட்டன. இவற்றின் வரலாற்றுப் பின்னணிகள் மறைவாக இருந்த மட்டும் இவற்றிற்கு எதிர்ப்புகள் எழவில்லை. புனித எரோனிமு இந்நூல்களைக் கண்டு மலைத்தார்; ஆனால், ஒரு முடிவுக்கும் வரவில்லை. லூத்தரும் பிற கிறிஸ்தவச் சபைகளின் சமயச் சீர்திருத்த வாதிகளும் இந்நூல்களை ஐயுற்றனர்; ஆகவே, திருமுறைப் பட்டியலிலிருந்து தள்ளுபடி செய்தனர். கத்தோலிக்க அறிஞர்கள் மலைப்பும், குழப்பமும் கொண்டனர்; ஆனால், விசுவாசத்தால் வரும் உறுதியால் இந்நூல்களை ஏற்பதில் நிலைத்து நின்றனர். இந்நிலை அண்மைக்காலம் வரை நீடித்தது.

நவீன காலத்தில் கிடைத்துள்ள, பழங்கால மேற்காசிய வரலாறு பற்றிய தெளிவான அறிவும், விவிலிய இலக்கிய வடிவங்கள் பற்றிய துல்லியமான அறிவும், கத்தோலிக்க விசுவாசத்தை முன்கூறப்பட்ட குழப்ப நிலையிலிருந்து விடுவித்தன; இந் நூல்களை அவை முறையாகச் சேர்ந்த இலக்கிய வடிவங்களோடு சேர்த்தன. ஆகவே, இவ்விலக்கிய வடிவங்கள் பற்றிய ஆய்வு அவசியமாகியது. இந்தக் கட்டுரையில் மிட்ராஷ் என்ற சொல்லின் பொருள், இந்த இலக்கியத்தின் வகைகள், பண்புகள், அதன் தோற்றம், வளர்ச்சி, புதிய ஏற்பாட்டில் அதன் பாதிப்பு ஆகியவற்றைப் பார்ப் போம்.

***3. மிட்ராஷ் என்ற சொல்:*** அலசியாராய்தல், தேடுதல், நுணுகி ஆராய்தல் என்று பலவாறு பொருள் கொடுக்கக் கூடிய 'தராஷ்' (darash) என்ற எபிரேயச் சொல்லிலிருந்து மிட்ராஷ் என்ற சொல் வருவதாகத் தெரிகிறது. தராஷ் என்ற சொல் இறைவாக்கு வழியாக இறைவனிடமிருந்து பதில் தேடுவதைக் குறிக்கிறது. ஒருவேளை இப்பொருள் வேதாகமப் படிப்பைக் குறிக்க அடிப்படையாக அமைந்திருக்கலாம். இதிலிருந்து மிட்ராஷ் என்ற சொல் ஆராய்தல், தேடுதல் என்று பொருள்படும். இவற்றிலிருந்து இச்சொல் விளக்கவுரை என்றும்

பொருள் பெறுகிறது. இச்சொல்லின் வினைச்சொல் வடிவம் தேடுதல், படித்தல், ஆய்வு செய்தல் என்ற பொருட்களில் விவிலியத்தில் பல இடங்களில் வருகிறது. ஆனால், பழைய ஏற்பாட்டில் இச்சொல் லின் பெயர்ச்சொல் வடிவம் மூன்றே இடங்களில் மட்டுமே காணப்படுகிறது. இறைவாக்கினர் இத்தோவின் நூல் *(மிட் ராஷ். 2 நாள் 13:22)*, அரசர்களின் வரலாறு *(மிட்ராஷ். 2 நாள் 24:27)* ஆகியவற்றை நாளாகமம் குறிப்பிடுகிறது. இவை இரண் டும் அந்த ஆசிரியர் பயன்படுத்திய மூல நூல்களைக் குறிப்பிடுகிறது. ஆனால், அவற் றின் தன்மை பற்றி ஒன்றும் கூறப்பட வில்லை. சீராக்கு ஆசிரியர் தனது பள்ளியை 'bet-ha-midrash'-*(மிட்ராஷ் வீடு) (சீரா 51:31)* என்று குறிப்பிடுகிறார். இதைக் கத்தோலிக்கத் தமிழாக்கம் ''நன்னெறியின் வீடு'' என்று மொழிபெயர்த்துள்ளது. இஃது ஒருவேளை வேதாகமத்துக்கு விளக் கம் அளிக்கப்படும் பள்ளியாக இருக்கலாம். இங்கு வேதாகமத்தைப் படித்தலும், ஆராய் தலும், விளக்கம் அளித்தலும் நடந்திருக்க வேண்டும்.

யூத ராபிகளின் நூல்களில் மிட்ராஷ் என்ற சொல்லின் வினை, பெயர்ச் சொல்லின் வடிவங்கள் பரவலாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன. அதனால் ராபிகளின் போதக விளக்கவுரைகளைக் குறிக்க, இச்சொல்லின் பன்மை வடிவம் ''மிட்ராஷிம்'' (Midrashim) என்ற சொல் பயன்பட்டுள்ளது. இம்மர புக்குக் கும்ரான் ஏடுகள் சான்று பகர்கின் றன. ராபிகளின் இலக்கியத்தில் மிட்ராஷ் என்ற சொல் பொதுவாக, வேதாகமப் படிப்பையும், போதகத்தன்மையுடைய விவிலிய விளக்கவுரையையும், விவரிப்பை யும் குறித்தது. வேதாகமம் பற்றிய நவீன ஆய்வுகளில் யூதராபிகள் தங்கள் விளக்க வுரைகளில் பழைய ஏற்பாட்டு வாசகங் களைப் பயன்படுத்திய தனிப்பட்ட முறையை, இச்சொல் ஒரு கலைச் சொல் லாகக் குறிக்கிறது. இச்சொல்லுக்கு விளக்க முறை என்பதைவிடப் பயன்படுத்தும் முறை அதாவது வேதாகம வாக்குகளைப் பயன்படுத்தும் முறை என்று பொருள் கொள்வதே சிறந்தது என்று மெக்கென்சி என்ற அறிஞர் கூறுவார்.

சுருக்கமாக, *1)* ஒரு விவிலிய வாசகத் திற்கு அளிக்கப்பட்ட தனி விளக்கக் குறிப் பையோ, அத்தகைய குறிப்புகளின் தொகுப் பையோ குறிக்க மிட்ராஷ் என்ற சொல் பயன்பட்டது. *2)* கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் விவிலியத்தில் நேரடியான, எளிய பொருளில் (plain sense) அக்கறை காட்டப் பட்டது. இதில் போதக விளக்கம் முக்கியத் துவம் பெற்றது. இப்பொருளில் மிட்ராஷ் பயன்பட்டது. இத்தகைய விளக்கமுறை பிற்கால அறிவியல் விளக்கமுறையிலிருந்து வேறுபட்டது. சொற்பொருளைக் (literal sense) கடந்து சென்று வேதாகமத்தின் மறைந்த, ஆழ்ந்த பொருளைத் தேடும் விவிலிய விளக்கத்தைச் சில சமயம் இச் சொல் குறித்தது. *3)* இப்போது இச்சொல், ஒரு குறிப்பிட்ட இலக்கிய வகையைக் குறிக்கப் பயன்படுகிறது. கி.பி. 2-13-ஆம் நூற்றாண்டுகளில் யூத ராபிகள் பயன்படுத் திய விளக்கவுரை இலக்கியத்தையும் ஒத்த பண்புடைய முந்தைய யூத இலக்கியங் களையும், புதிய ஏற்பாட்டுப் பகுதிகளை யும் இச்சொல் ஒரு கலைச்சொல்லாகக் குறிக்கிறது.

**4. மிட்ராஷ் வகைகள்:** மிட்ராஷ் நூல்கள் விவிலிய வாசகங்களைப் பற்றியவை யாகும். விளக்கம் கூறப்படும் விவிலிய வாசகத்தின் தன்மைக்கேற்ப, அலாக்கா (halakkah), அக்காதா (haggadah) என இரு வகையாக மிட்ராஷ் இலக்கியத்தைப் பிரிக் கலாம்.

***அ) அலாக்கா மிட்ராஷ்:*** இப்பெயரால் விவிலியத்தின் சட்டப்பகுதிகளுக்கு அளிக் கப்பட்ட விளக்கவுரைகள் குறிக்கப்படு கின்றன. அலாக்கா என்ற சொல் நடத்தல் என்று பொருள்படும். ஆகவே, இவ்வகை மிட்ராஷ் வாழ்க்கையை ஒழுங்குபடுத்து வதைக் குறிக்கோளாகக் கொண்டது. யூத ராபிகள் மோசே சட்டத்தைப் படித்தனர்; ஆய்வு செய்தனர்; அதன் உதவி கொண்டு

வாழ்க்கை முறையை வரையறை செய்தனர்; புதிய வேறுபட்ட காலத்திற்கும் மாறுபட்ட சூழ்நிலைகளுக்கும் ஏற்றவாறு மோசே சட்டத்திலிருந்து புதிய சட்டங்களையும் ஒழுக்க முறைகளையும் கண்டுபிடிக்க முயன்றனர். இவ்வாறு, மோசே ஒழுக்கச் சட்டங்களிலிருந்தும், சடங்குக் கட்டளைகளிலிருந்தும் அதிகாரபூர்வமான வாழ்க்கை முறையை எடுத்துக்கூறுவது அலாக்கா மிட்ராஷ் ஆகும். இஃது எஸ்ராவில் தொடங்கி, இடையீடற்ற யூத போதகத் தலைமுறை மரபு, விவிலியச் சட்டங்களுக்கு அளித்த விளக்கம், மறு விளக்கம் ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட யூத போதனைகள், சட்டங்கள், மரபுகள் ஆகியவற்றைக் கொண்ட தொகுப்பாகும். இஃது அந்தக் காலத்தில் ஏற்படும் பொருளாதார, குடும்ப, அரசியல், சமூக, சமய மாற்றங்களுக்கு ஏற்ப யூத ஆன்மீகத் தலைவர்கள் அளித்த மாற்றங்கள், தழுவிய விளக்கங்கள் (adaptation) ஆகியவற்றை உள்ளடக்கியது. சட்டத்தன்மையுடையதாயினும், அலாக்கா மிட்ராஷின் நோக்கம் மனிதனது எல்லாக் கூறுகளையும், அலுவல்களையும் இறைவனது சேவையோடு தொடர்புபடுத்துவதாகும்; இறைவனது திருவுளத்தின் மேலாண்மையை மனித வாழ்வின் மேலளவையாக நிறுவுவதாகும்.

இப்படிச் சட்டத்திற்கு விளக்கம் அளிப்பது மிகைப்படுத்துவதும் உண்டு. இஃது எந்த அளவுக்குப் போகக்கூடும் என்பது நற்செய்தியில் விரிவாகச் சித்திரிக்கப்படுகிறது (*மாற் 7:9-13*). அலாக்கா விளக்கவுரைகள் பல நூற்றாண்டுகளாக வாய்மொழியாகவே தலைமுறை தலைமுறையாகக் கையளிக்கப்பட்டன. பிற்காலத்தில் இவை மிஷ்னா (Mishna), தால்மூது (Talmud) என்ற இரு தொகுப்புகளாக வடிவம் எடுத்தன. கி.பி. 2-ஆம் நூற்றாண்டு வரையுள்ள அலாக்கா விளக்கவுரைகள் மிஷ்னாவில் அடங்கியுள்ளன. இது யூத ஹா-நாசி (judaha-Nasi) என்ற ராபியால் தொகுக்கப்பட்டது. கி.பி. 3-6ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய அலாக்கா விளக்கவுரைகளின் தொகுப்புகள் தால்மூது என்றழைக்கப்பட்டன. இவை எருசலேம் தால்மூது, பாபிலோனியத் தால்மூது என்று இருவடிவில் உள்ளன. மத் *19:3-12*-இல் வரும் விவாகரத்து பற்றிய தர்க்கம் அலாக்கா விளக்கவுரைப் பண்புகளைக் கொண்டுள்ளது. அலாக்கா விளக்கவுரைக்கு ஒத்த பகுதிகள் புதிய ஏற்பாட்டில் அரிதாகவே காணப்படுகின்றன.

***ஆ) அக்காதா மிட்ராஷ்:*** இது, சட்டமல்லாத விவிலியப் பகுதிகளுக்கு அளிக்கப்படும் விளக்கமாகும். இதில் இஸ்ராயேலின் வரலாற்றுக்கு யூத ராபிகள் விளக்கம் அளிக்க முயன்றனர். யூதவரலாற்றிலிருந்து, விசுவாசிகளின் ஆன்மவாழ்வுக்கு நலம் தரும் பாடங்களையும், எடுத்துக்காட்டுகளையும், அறிவுரைகளையும் வெளிக்கொணர முயன்றனர். குறுகிய அல்லது நீண்ட வரலாற்றுக் கருவை அடிப்படையாகக் கொண்ட ஒரு கதை பல கற்பனை விவரங்களுடன் சுதந்தரமாகவும் தாராளமாகவும் விவரிக்கப்பட்டு, ஆசிரியரின் நோக்கத்திற்கேற்ப வாசகர்களுக்குப் போதகம் அளிக்கப்பட்டது; அறிவுரை வழங்கப்பட்டது. அவர்களது விசுவாசம் உறுதிபெற உதவி அளிக்கப்பட்டது. இது பற்றி பின்பு விரிவாகப் பார்ப்போம்.

இந்த அக்காதா மிட்ராஷில் வரலாறு ஒரு நிரூபணமாகவோ, ஆதாரமாகவோ பயன்படவில்லை. அஃது ஒரு முகப்புத் தோற்றமே. முக்கியமில்லாத ஒரு பின்னணி, கதைக்குப் பயன்படும் ஒரு பணித்திட்டம். ஆயினும், இவ்வாறு விளக்கும் முறை ஒரு வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. இக்காரணத்திற்காக அக்காதா மிட்ராஷைப் பரந்த பொருளில் ஒரு வரலாற்று இலக்கிய வடிவம் என்று கருதலாம். சரியாக, இஃது ஒரு துணை வரலாற்று (Para-historical) வடிவமாகும்.

அக்காதா விளக்கங்கள் அடங்கிய தொகுப்புகள் எதுவும் நூல் வடிவம் எடுத்ததாகத் தெரியவில்லை. கி.பி. முதல் நூற்

றாண்டில் பழைய ஏற்பாட்டு வரலாற்று நூல்களுக்கு அளிக்கப்பட்ட யூதப் புனை பெயர் நூல்களிலும், யோசிப்பசு, போலி பீலோ ஆகியோரின் நூல்களிலும், கும்ரான் ஏடுகளிலும் இத்தகைய விளக்கங்கள் பரந்த அளவில் காணப்படுகின்றன. அக்காதா வுக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு ஞானம் 10-14-இல் காணப்படுகிறது. யோனா, தோபியா, யூதித்து, எஸ்தர், பாரூக்கு ஆகிய நூல்களும் தானியேலில் சில பகுதிகளும் (1-6; 13-14) ஒரு வேளை ரூத்து என்ற குறுநூலும் அக்காதாவுக்குத் தொடக்க மாதிரியாக அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்படும்.

: அலாக்கா கடமையை எடுத்துக் கூறு கிறது என்றால் அக்காதா அந்தக் கடமையை ஆர்வத்தோடு கடைப்பிடிக்க உள்ளத்தைத் தூண்டுகிறது எனலாம். இந்த இரண்டையும் தவிர்த்து, பெஷர்மிட்ராஷ் (Pesher midrash) என்ற மூன்றாம் வகை மிட் ராஷ் உண்டு என்பர் சிலர். இது விவிலிய வாசகங்களுக்குச் சொற்பொருள் (literal sense) அளிப்பதில் அக்கறை கொள்கிறது என்பர். சிறப்பாக, நிகழ்கால நிகழ்ச்சிகளின் ஒளி யில் இறைவாக்கினர்களின் கூற்றுகளுக்கு விளக்கம் அளித்து, அவற்றை நிகழ்காலச் சபையினருக்குப் பொருத்தமுடையதாகக் காட்டுவதாகும். இவ்விளக்கவுரைகள் அடங்கிய எந்தத் தொகுப்பும் கிடைக்க வில்லை.

ஆனால் தானி 9, அபக்கூக்கு ஆகியவை பற்றிய கும்ரான் ஏடுகள் இந்த விளக்க முறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். புதிய ஏற்பாட்டில் மத்தேயு, உரோமையர், எபிரேயர், திருவெளிப்பாடு ஆகிய நூல்கள் இந்த வகையைப் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. பெஷர் விளக்கவுரை உண்மை யில் அக்காதா விளக்கவுரைதான்.

மிட்ராஷ் இலக்கிய வகையும் ஊழியிறுதி வெளிப்பாட்டு இலக்கியமும் இணைந்த இலக்கிய நூல்களும் உண்டு. சிலர் தொகுப்பு முறையை (anthological-method) மிட்ராஷ் என்று கூறியுள்ளனர். ஆசிரியர் தமது சொந்த சிந்தனையை எடுத்துக் கூற விவிலியத்திலிருந்து எடுக்கப்பட்ட சொற் களையும் சுட்டிக்காட்டல்களையும் பயன் படுத்துவதாகும் இந்தத் தொகுப்புமுறை. சில சமயம் விவிலியச் சுட்டிக் காட்டல் களும், சொற்களும் ஒரு புதிய இலக்கி யத்தைப் படைக்க மட்டுமே உதவியுள்ளன. அவற்றின் மூலப்பொருள் கவனத்தில் கொள்ளப்படுவதில்லை. இது மிட்ராஷ் அன்று. இதற்கு மாறாக, சில சமயங்களில் தொகுப்புமுறை புதிய படைப்புக்கு வேண் டிய சொற்களையும் உருவகங்களையும் மட்டும் தரவில்லை; புதிய படைப்பு நிறைவுபெற்ற வடிவில் மூல வாசகங் களைப் புரிந்து கொள்ள உதவும் வகையில் அமைந்துள்ளது. இத்தகைய தொகுப்பு முறை மிட்ராஷ் ஆகும். இதற்குத் தானி 1-9-இல் காணப்படும் எரேமியாவின் எதி ரொலிகளும், சாக்கடல் ஏடுகளும் சான்றா கும். இத்தொகுப்பு முறை மிட்ராஷும் அக்காதா விளக்கவுரையில் அடங்கும் எனலாம்.

**5. மிட்ராஷ் இலக்கியம் தோன்றிய வர லாறு:** இந்த இலக்கிய வடிவம் தோன்றி வளர, இஸ்ராயேல் வரலாற்றின் சில காரியங்கள் காரணமாயின. அவை, இஸ்ரா யேலர் பாபிலோனுக்கு நாடு கடத்தப்படு தல், செபக்கூட வழிபாடு, வேதாகமத் திருமுறைப்பட்டியல் படிப்படியாக நிர்ண யிக்கப்படுதல், புலமை பெற்ற குருக்களும் சட்ட வல்லுநர்களும் தோன்றுதல் ஆகிய வையாகும்.

பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட போது இஸ்ராயேல் தனது நாட்டையும், அரசையும், உடைமைகளையும் இழந்தது. எருசலேம் அழிக்கப்பட்டது. ஆலயம் தரை மட்டமாக்கப்பட்டது. ஆகவே, வழிபாடும் இல்லை. இஸ்ராயேலுக்கு எஞ்சியதெல் லாம் அதன் ஆன்மீக மரபுச்சொத்து ஒன்று தான். இதுவே இஸ்ராயேலுக்கு ஆறுதலும், ஆதாரமுமாய் இருந்தது. இந்த மரபுச் சொத்து அதன் எழுதப்பட்ட, எழுதப்படாத பாரம்பரியங்களாகும். இவற்றின்மேல் இஸ் ராயேல் தனது கவனத்தையும், ஆர்வத்தை

யும் செலுத்தியது. தனது சட்டங்களையும், வரலாற்றையும், இறைவாக்கு நூல்களையும் ஆராய்ந்து தனது நிகழ்காலத் துன்பங் களுக்கு விளக்கம் காணவும், மகிழ்ச்சிமிக்க வருங்காலத்திற்கு வழிகாட்டத் தேவையான வெளிப்படுத்தப்பட்ட வழிமுறைகளைக் கண்டு பிடிக்கவும் முயன்றது.

நாடு கடத்தப்பட்ட காலத்தில் பாபிலோ னிலும், பிறநாடுகளிலும் சிதறிக் கிடந்த இஸ்ராயேலர்களிடையே அவர்களது சமய மரபுகளைப் பாதுகாக்க வேண்டியிருந்தது. மாறிய சூழ்நிலைக்கேற்ப அவற்றை மாற்றி யமைக்க வேண்டியிருந்தது. அக்காலத்தில் ஓய்வுநாள் கடைப்பிடிப்பு, விருத்தசேதனம், பாரம்பரிய நாட்களில் நோன்பு போன்ற சில புறச்சடங்குகள் அதிகம் முக்கியத்துவம் பெற்றன. அந்தந்த இடங்களில் வாழ்ந்த யூத சமூகத்தினர் குறிப்பிட்ட நாட்களில் வழிபாடு செய்ய ஒன்று கூடினர். இதுவே செபக்கூட வழிபாட்டின் தொடக்கமாகும். இச்செபக் கூட்டங்களில் பழங்கால வழி பாட்டின் எல்லாக் கூறுகளும் முடிந்த அளவு பாதுகாக்கப்பட்டன. அவற்றில் சில, தோராவிலிருந்தும் புனித வரலாற்று நூல் களிலிருந்தும் சில பகுதிகளை வாசித்தல், அவற்றுக்கு விளக்கம் அளித்தல், அறிவுரை வழங்குதல், மன்றாடுதல், சங்கீதங்கள் பாடு தல், குரு அல்லது முதியவர் சபையினருக்கு ஆசீர் வழங்குதல் ஆகியவையாகும்.

இந்தச் செபக்கூட்டங்கள் திருமுறைப் பட்டியல் நூல்கள் நிர்ணயிக்கப்படுவதில் முக்கிய இடம் வகித்தன. ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளப்பட்ட நூல்கள் வாசிக்கப் பட்டன, பாதுகாக்கப்பட்டன. இது பழங் கால நூல்கள் பாதுகாக்கப்பட்ட விதத்தை ஓரளவு விளக்குகிறது. நாடுகடத்தப்பட்ட காலத்திலும் அதற்குப் பின்வந்த நூற்றாண்டு களிலும் இஸ்ராயேலின் வரலாற்று ஆசிரி யர்களுடைய பழங்கால ஏடுகளும், இறை வாக்கினர் நூல்களும் படிப்படியாகச் சேர்க் கப்பட்டு, பதிப்பிக்கப்பட்டன. இவை உயி ருள்ள பாரம்பரியத்தின் ஒப்புதலோடு ''இறைவனுடைய வார்த்தை'' என்று முத் திரையிடப்பட்டன. ஒருவேளை எஸ்ரா காலத்தில் தோரா திருமுறைப் பட்டியலில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கலாம் (நெகே *8:1-9*). பாரசீகர் காலத்தில் பழைய ஏற்பாட் டின் பெரும்பாலான நூல்கள் திருமுறைப் பட்டியலில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இக் காலத்திலிருந்து இஸ்ராயேல் ''புத்தகத்தின் மக்களாக'' மாறியது எனலாம்.

இறை ஏவுதல் பெற்ற நூல்களைப் பதிப்பிக்கவும், அவற்றைச் செபக்கூட வழி பாட்டில் வாசித்து விளக்கவும் ஆட்கள் வேண்டியிருந்தது. ஏனெனில், விளக்கம் அளிக்கும் வழக்கம் பரவலாகப் பயன் பட்டது. இது புதிய நூல்கள் தோன்ற வாழ்க்கைச் சூழ்நிலையாக அமைந்தது. சான்றாக, யாத்திரை நிகழ்ச்சி செபக்கூட வழிபாட்டில் வாசிக்கப்பட்டிருக்க வேண் டும். அதுபற்றிய புதியவிளக்கம் எசா *63:7-64:12*-இல் வரும் நோன்பு வழிபாட்டி லும், எசா *43:16-21*-இல் வரும் நம்பிக்கை அறிவுரையிலும், சங் *78; 105; 106*-இல் வரும் தியானங்களிலும் காணப்படுகிறது. இவற்றில் கடந்த காலம் நிகழ்காலத்திற்கு உரியதாக மாற்றியமைக்கப்பட்டு, புதிய விடுதலையின் நம்பிக்கை வெளிக்கொண ரப்படுகிறது. இது, சோதனைக் காலத்தில் இஸ்ராயேலுக்கு ஆறுதலாக அமைந்த வேதாகமத்தைப் பற்றிய தியானத்தின் விளைவாகத் தோன்றியதாகும். செபக் கூடங்களில் வேதாகமத்துக்கு விளக்கம் அளிக்க வேண்டிய அவசியம் புலமைமிக்க குருக்களும், சட்டவல்லுநர்களும் தோன்ற ஏதுவாயிற்று (எஸ் *7:6.10*). குருக்களும், சட்டவல்லுநர்களும், பாடகர்களும், செபக் கூட வழிபாட்டில் ஒன்று கூடினர். இவர்கள் வேதாகமத்தைப். படிப்பதிலும், விளக்குவ திலும் தங்கள் வாழ்வைச் செலவிட்டனர். அதே சமயம் உள்ளத்திலும், அறிவிலும் வளர்ச்சி பெற்றனர். பழங்கால நூல்களைச் சேகரித்தனர்; பிரதி எடுத்தனர்; சிறுசிறு விளக்கங்களோடு அவற்றைப் பதிப்பித்த னர்; அவற்றைத் தங்கள் காலத்துக்குப் பொருத்தமாக எடுத்துக் கூறினர்; காலப் போக்கில் போதக உரைகளையும் விளக்க வுரைகளையும் படைத்தனர். இவையெல் லாம் சேர்ந்து மிட்ராஷ் இலக்கியமாயின.

மேற்கூறப்பட்ட வரலாற்றுக் காரியங்களோடு, மூன்று உளவியல் காரியங்களும் மிட்ராஷ் இலக்கியத் தோற்றத்தை விளக்க வல்லன. *1)* வேதாகமம் இறை ஏவுதல் பெற்றது, என்ற இஸ்ராயேலின் தளராத விசுவாசம். *2)* வேதாகமம் இறைவனைப் பற்றிய எல்லா உண்மைகளையும், எல்லாச் சூழ்நிலைகளுக்குமுரிய பாடங்களையும் கொண்டிருக்கிறது என்ற இஸ்ராயேலின் மன உறுதி. *3)* தனிப்பட்ட வாசகம் தன்னிலேயே முழுப்பொருளைக் கொண்டிருப்பதில்லை; மாறாக, வேதாகமப் பாரம்பரியம் அடங்கிய பின்னணியில் கொண்டிருக்கிறது என்ற நம்பிக்கை. இந்த விசுவாச அடிப்படையில்தான் இஸ்ராயேலின் ஆசிரியர்கள் வேதாக்மத்தை ஆராய்ந்தனர். இணைப் பகுதிகளையும், உருவகங்களையும், ஒப்புவமைகளையும் தேடினர். ஒரு வாசகத்தை மற்றொன்றோடும், ஒரு நூலை மற்றொன்றோடும் ஒப்பிட்டுச் சமநிலை உண்டு பண்ணினர். இதில் எல்லாம் வேதாகமம் தங்கள் அன்றாடப் பிரச்சனைகளுக்கு இறைவனது விடையைக் கொடுக்கும் என்றும், தங்களது நாட்டு வாழ்வில் இறைவனது வழியைக் காட்டும் என்றும் இஸ்ராயேலர் உறுதியாக நம்பினர்.

**6. மிட்ராஷ் இலக்கிய வளர்ச்சி:** தங்கள் அன்றாட வாழ்வுக்கு வேண்டிய ஆன்மீக உணவையும், செயல் முறையான ஒழுங்குகளையும் வேதாகமத்திலிருந்து கண்டுணர இஸ்ராயேல் தொடர்ந்து செய்த ஆய்வு, காலப்போக்கில், பல்வேறுபட்ட பெரும் இலக்கியங்களை உருவாக்கியது. இந்த இலக்கியங்களின் தொடக்கம் இஸ்ராயேலின் மிக முந்திய வரலாற்றிலேயே இடம் கொண்டிருந்தது. இந்த இலக்கியப்போக்கு இஸ்ராயேலில் எப்போதும் இருந்தது என்று கூறலாம். இதற்கு இறைஏவுதல் பெற்ற ஆசிரியர்களே சான்று அளிக்கின்றனர். உபாகம ஆசிரியர் உடன்படிக்கையைப் புதுப்பித்தல் போன்ற முந்தைய வாசகங்களைத் தமது காலத்து மக்களின் தேவைக்கு ஏற்றதாகச் செய்கிறார். இஃது உடன்படிக்கையையும், உடன்படிக்கைச் சட்டங்களையும், இன்னும் முந்திய காலத்து இஸ்ராயேலுக்குப் பொருத்தமுடையதாகச் செய்யப்பட்ட முந்தைய முயற்சிகளுக்கும் சான்று பகர்கிறது. ஆமோசை எசாயாவும், ஓசேயாவை எரேமியாவும், ஆமோஸ், எசாயா மற்றும் எரேமியாவை எசேக்கியேலும், ஓசேயா மற்றும் எசாயாவை இரண்டாம் எசாயாவும் தழுவி எழுதியுள்ளனர்.

நாடு கடத்தலுக்குப்பின், பாரம்பரியத் தொடர் முந்தைய வேதாகம நூல்களோடு மிக நெருங்கிய தொடர்புகொள்கிறது. இறைஏவுதல் பெற்ற புதிய ஆசிரியர்கள் மேலும் மேலும் முந்தைய ஆசிரியர்களைத் தழுவி எழுதும் போக்கைக் கடைப்பிடிக்கின்றனர். முந்தைய நூல்களுக்குப் பொழிப்புரை வழங்குவது, அவற்றைச் சுதந்தரமாக எடுத்துக்காட்டுவது எவ்வளவுக்குப் போகிறதென்றால், நாடு கடத்தலுக்குப்பின் தோன்றிய சில நூல்கள், முந்தைய நூல்களிலிருந்து எடுத்துத் தொகுக்கப்பட்ட எடுத்துக்காட்டுகளின் தொகுப்பாக அமைகின்றன. இவ்வாறு பழ *1-9* என்ற பகுதி உபாகமம், எசாயா, எரேமியா ஆகிய நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகளைக் கொண்ட தொகுப்பாக அமைகிறது.பழ *8*-ஐ, *சீரா 24* தழுவியுள்ளது.ஞானம் *10-14*, யாத்திரை நிகழ்ச்சியைப் பொழிப்புரையாகத் தருகிறது. அதை விளக்கவும் செய்கிறது. இப்பழக்கம், இறை ஏவுதல் பெற்ற நூல்களின்பால் கொண்ட பேரன்பையும், வணக்கத்தையும் மட்டும் காட்டவில்லை. இஸ்ராயேல் அந்தந்தக் காலத்துக்குரிய விதத்தில் தனது போதகத்தை எடுத்துக்கூறுவதில் இறைஏவுதல் பெற்ற வார்த்தையை உயிருள்ள பாரம்பரியம் பயன்படுத்துவதை வலியுறுத்துகிறது.

நாடுகடத்தலுக்குப் பின் வந்த ஆசிரியர்கள் இறைஏவுதல் பெற்ற முந்தைய ஆசிரியர்களின் நூல்களைப் பயன்படுத்துதல், அவற்றின் பொருளை விளக்குதல் ஆகியவற்றோடு நின்றுவிடவில்லை. இதற்கு மேலும் செயல்பட்டனர். பாரம்பரியத்தில் நம்பிக்கை வைத்து, முந்தைய வாசகங்களைப் புதிய வெளிப்பாடு, புதிய சூழ்

நிலை ஆகியவற்றின் ஒளியில், மறுஆய்வு செய்தனர். அவற்றில் உள்ளடங்கிய செய்தி களை வெளிக்கொணர்ந்தனர். இவ்வாறு ஓசேயாவில் காணப்படும் பிரமாணிக்கமற்ற மனைவி என்ற உருவகத்தைப் பயன் படுத்தி, குல முதியவர்கள் காலம் தொடங்கி அவர் காலம் வரையிலுள்ள இஸ்ராயேலின் வரலாற்றுக்கு உருவக விளக்கம் அளிக்கிறார் எரேமியா (எரே 16; 23). இவ்வாறே உன்னத சங்கீத ஆசிரியர் ஓசேயாவின் போதகத்தை, நாடு கடத்தலுக் குப்பின் வந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு கூறுகிறார். நாளாகம ஆசிரியர் தோராவில் வரும் குருக்கள் பாரம்பரியமும், இறை வாக்கினர்களும் இஸ்ராயேலின் கதி, ஆலயம், தாவீது மரபு ஆகியவற்றோடு எவ்விதம் பொருத்தமுடையன என்று கி.மு. 4-ஆம் நூற்றாண்டின் இறுதியில் காட்டு கிறார். தானியேல், யூதித்து ஆகிய நூல் களின் ஆசிரியர்கள், ஊழியிறுதி வெளிப் பாட்டு மிட்ராஷ் இலக்கியத்தைப் பயன் படுத்தி, ஆமோஸ், எசேக்கியேல், செக்க ரியா ஆகிய நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகளை மாற்றியமைத்துத் தொகுத்துத் தருகின்றனர்.

**7. மிட்ராஷ் இலக்கியத்தின் பண்புகள்:** இந்த இலக்கிய வகை நிகழ்காலத்தை விளக்க, பழங்கால வாசகங்களை ஆய்வு செய்கிறது; அவற்றைப் பயன்படுத்துகிறது. இந்த ஆய்வு நமது காலத்து ஆய்வுப்போக் கின் வரையறைகளுக்குக் கட்டுப்பட்ட தில்லை. காலத்தையும், இடத்தையும் புற நிலையாக மீண்டும் அமைக்கும் முயற்சி கோரும் பொருளை, வாசகத்திற்களிப்பதை நமது ஆய்வுமுறை குறிக்கோளாகக் கொண் டுள்ளது. மிட்ராஷ் ஆய்வு இதற்கு மாறான தாகும். மிட்ராஷ் வேதாகமத்தின் சொற் பொருளையோ, துல்லியமான பொரு ளையோ கண்டுபிடிக்கும் முயற்சியன்று. நாம் புரிந்து கொள்ளும் விதத்தில் சொற் பொருள் காணும் கருத்து, ராபிகளின் நூல்களிலோ, விவிலிய நூல்களிலோ காணப்படவில்லை. மிட்ராஷ் எடுத்துக்காட் டான பாடங்களை எவ்வளவு தேட வேண்டுமோ அவ்வளவு தேடியது. அது வேதாகமத்தைப் பற்றிய தியானமாகும். அல்லது எடுத்துக்கொண்ட காட்சியையோ, நிகழ்ச்சியையோ கற்பனையாக மீண்டும் அமைத்தலாகும். அதன் குறிக்கோள் வேதாக மத்தைச் செயல்முறையான விதத்தில் எப் போதும் நிகழ்காலத்திற்குப் பொருத்திக் காட்டுவதாகும். இவ்வாறு ஒரு கட்டளை மீண்டும் எடுத்துக்கூறப்படலாம். ஒரு நிகழ்ச்சியுரை அதன் மூல வரலாற்றுச் சூழ்நிலையில் இல்லாமல், நூல் எழுதப் படும் தலைமுறை மக்களுக்கு ஒளி காட்டும் விதத்தில் வழிகாட்டும் முறையில் எழுதப்படலாம். இவற்றில் எல்லாம் மிட் ராஷ் ஆய்வின் நோக்கம் வாசகத்தின் துல்லியமான பொருளைக் காண்பதைவிட, எண்பித்தல், உறுதிப்படுத்துதல் ஆகிய வற்றைக் குறிக்கோளாகக் கொண்டு, பல் வேறுபட்ட கருத்துக்களை வெளிக்கொணர் வதாகும். இறைவார்த்தை, மனிதமொழி என்னும் ஆடை அணியும்போது, அஃது உள்ளடக்கும் எந்தப் பொருளையும் இழந்து விடக் கூடாது. ஏனெனில், அஃது அறிவுத் திறனையெல்லாம் கொண்டுள்ளது; யாவர்க் குமுரிய ஞானத்தைக் கொண்டுள்ளது. அதை நாம் அறிவோடும், கற்பனை யோடும் அணுக வேண்டும். இவ்வாறுதான் மிட்ராஷ் ஆசிரியர்கள் செயல்பட்டனர். மிட்ராஷ் நூல்கள் தத்துவஇயல், சட்ட, இறைஅனுபவப் பண்புகளைக் கொண் டுள்ளன. இவ்வாறு மிட்ராஷ் ஒரே சமயத் தில் ஒருவகை அறிவு சார்ந்த ஊகமும், வேதாகமத்தையும் பாரம்பரியத்தையும் அடிப்படையாகக் கொண்ட கற்பனை விவரிப்புமாகும்.

மிட்ராஷ் இலக்கியம் பல கோணங் களைக் கொண்டது. இஃது எல்லாவகை நூல்களிலும் இடம் பெறுகிறது. ஞானநூல் களில் சட்டப்பகுதிகள் ஒருவகை மொழி மாற்றங்களுக்கு வாய்ப்பளித்தன. சில பழ மொழிகளில் யாவே தத்துவத்தைப் பரப்பும் நோக்கோடு சட்டத்தை நிகழ்காலத்துக்குரிய தாக்கும் போக்கைக் காணலாம். பழங்கால விவரிப்புக்கள் கற்பனை விவரிப்புகளுக்கு

இடம் அளிக்கின்றன. இவ்வாறு யாத்திரை நிகழ்ச்சியை நினைவுகூறும் ஞானம் *10:15-12:7* என்ற பகுதியையும், எகிப்தின் வாதனைகள் பற்றிய ஞானம் *16:1-19:22*- என்ற பகுதியையும், அவை பற்றிய தோரா வில் வரும் நிகழ்ச்சியுரைகளோடு ஒப் பிட்டுப் பார்க்கலாம். இவற்றில் மிட்ராஷ் ஒரு வகையில் வரலாற்றையே விவரிக் கிறது. இறைவாக்கு இலக்கியங்களில் வருங்காலம் இறைவாக்கினர்களின் மனப் போக்கிற்கேற்ற வண்ணம் பெறும்போது, வரலாற்றுக்கு ஒரு புதிய பொருள் அளிக்கப் படுகிறது (*காண்க. எசே 16;40-45; எசா 40 தொ; தானி 1-6*). சட்ட நூல்களில் பழங்கால வரலாற்று - சட்ட வாசகங்கள் பல விவரங்களையும், ஒழுக்கக் கட்டளை களையும் அதிகம் கொண்டுள்ளன. இது குருக்கள் பாரம்பரியத்தை யாவே, எலோ யீம், உபாகமப் பாரம்பரியங்களோடு ஒப் பிட்டால் தெளிவாகும். இறுதியாக வர லாற்று நூல்களில், திருமுறைப்பட்டியலைச் சேர்ந்த -சேராத மூலங்கள் பயன்பட் டுள்ளன; அல்லது அப்படியே கையாளப் பட்டுள்ளன. இவை, அக்கால விளக்க முறைக்கேற்ப ஒரு நிலையை ஆதரிக்க, தழுவி எழுதப்பட்டுள்ளன; அணி செய்யப் பட்டுள்ளன. இதற்குத் தோபித்து, யூதித்து போன்ற நூல்கள் சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றன. நாளாகம ஆசிரியர் சில புறநிலை உண்மைகளைப் பயன்படுத்து கிறார். இந்த அளவில் அவர் ஒரு வரலாற்று ஆசிரியர். ஆனால், சில சமயம் அந்த உண்மைகளைத் தமது கருத்துக்கேற்பப் பயன்படும் முறையில் வரிசைப்படுத்து கிறார். இந்த அளவில் அவர் ஒரு மிட்ராஷ் ஆசிரியர். அவரது புறநிலை விளக்கம் அவரது விசுவாசத்தால் பாதிக்கப்படுகிறது.

மிட்ராஷ் இலக்கியம் எப்போதும் நிகழ்ச் சியுரை வடிவம் எடுப்பதில்லை. இவ்வாறு வரலாற்றுச் சங்கீதங்கள் என்றழைக்கப்படும் *சங் 78; 105; 106* ஆகியவை மிட்ராஷ் வகையைச் சேர்ந்தவையே. இவை கடந்த காலம் பற்றிய திட்டமிட்ட நிகழ்ச்சியுரை யில் முடிவதற்குப் பதிலாக, தியானத்திலும் மன்றாட்டிலும் வளம்பெறுகின்றன. இதே முறையில் பொதுவாகப் பெயர் தெரியாத ஆசிரியர்களின் ஊழியிறுதி பற்றிய வாசகங் கள், இறைவாக்கு நூல்களிலிருந்து தலைப் புகளையும், சொற்றொகுதிகளையும் எடுத்து விளக்குவதுடன், அவற்றை மீண்டும் அறிவிக்கின்றன. பழங்கால வாச கங்களுக்குத் திட்டமிட்ட முறையில் மறு விளக்கம் அளிப்பதும் மிட்ராஷ் வகையே. அதாவது வாசகங்கள் கவனமாய் ஆய்வு செய்யப்பட்டு, மற்ற வாசகங்களின் ஒளி யில், அவற்றின் பொருள் தெளிவாக்கப்படு கிறது.இறுதியாக, இந்த விளக்கங்கள் புதிய வேதாகம நூல்கள் தோன்ற வழிவகுத்தன. இவ்வாறுதான் அலாக்கா, அக்காதா, பெஷர் என்ற மிட்ராஷ் வகைகள் தோன்றின.

மிட்ராஷ் இலக்கியங்களில் காணப்படும் பண்புகளைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம். *1)* மிட்ராஷ், தன்மையாலே இலக்கியம் பற்றிய இலக்கியமாகும்; வேதாகம வாக்குகள் பற்றிய சிந்தனை அல்லது தியானமாகும்; அவற்றின் பொருளைத் தேடுவதாகும். ஏற்கெனவே இருந்த வேதாகம நூல்களில் கூறப்பட்டபடி இறைவனது திருவுளத்தைத் தேடுவதாகும். *2)* விவிலியத்தின் ஒளியில் விவிலியத்தைப் படிப்பதாகும். இதற்கு அடிப்படை, விவிலி யம் ஒற்றுமையுடையது; அதன் விளைவாக விவிலியத்தின் சிறந்த விளக்கம் விவிலி யமே என்ற யூதராபிகளின் மன உறுதியா கும். *3)* மிட்ராஷ் போதக உரைத்தன்மை யுடையது. அதாவது செபக்கூட வழிபாட் டில் வேதாகம வாசகத்திற்குப்பின் அளிக்கப் படும் விளக்கமாகும். *4)* இது கருத்திய லானதன்று; செயல்முறையான சமயபோதக மாகும். அதாவது வேதாகமத்தின் பொரு ளையும், படிப்பினையையும் சபையினரின் உடனடி ஆன்மீகத் தேவைக்கு ஏற்றவாறு விளக்குவதாகும். வேதாகம வாசகத்தை இங்கு, இப்போது பொருத்தமுடையதாக்கு கிறது. வாசகத்தில் எக்காலத்துக்கும் மதிப் பீடும் பொருளும் உடைய இறைவார்த் தையைக் காண்கிறது. அதே சமயத்தில்

வாசகத்தின் நிகழ்காலத்திற்குரிய பாடங்களையும் உய்த்துணரும்படி செய்கிறது. 5) மிட்ராஷ் சுதந்தரமானது. இது சொற்பொருளை அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். அல்லது கற்பனை மிக்கதாக, அணிசெய்யப்பட்டதாக இருக்கலாம். இவை யாவும் வாசகர்களின் விசுவாச வளர்ச்சியையும் உறுதிப்பாட்டையும் நோக்கமாகக் கொண்டவை.

இவற்றில் எல்லாம் ஆதிக்கிறிஸ்தவர்கள், திருச்சபைத் தந்தையர்கள் ஆகியோரைப் போல், யூதராபிகளும், ''இறைவனுடைய வார்த்தை உயிருள்ளது, ஆற்றல்மிக்கது. இருபக்கமும் கருக்கு வாய்ந்த எந்த வாளினும் கூர்மையானது. உள்ளத்தின் கருத்துக்களையும் எண்ணங்களையும் சீர்தூக்கிப் பார்க்கிறது'' (எபி *4:12*) என்று உறுதியாக நம்பினர்.

***8. பழைய ஏற்பாட்டில் மிட்ராஷ் எடுத்துக் காட்டுகள்:*** ஏற்கெனவே இவற்றை இங்கு மங்குமாகச் சுட்டிக்காட்டியுள்ளோம். இப்போது இங்கு இவற்றைத் தொகுத்துத் தருகிறோம். சில, முந்தைய விவிலிய வாசகத்தைப் பற்றிய தியானமாக அமைந்துள்ளன. சில நிகழ்ச்சியுரைகள், கற்பனை மிக்க விதத்தில் திருத்தி அமைக்கப்பட்டுள்ளன. சில, விவிலியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு கட்டுக்கதையாக உருவெடுத்துள்ளன. ஐந்நூலில் குருக்கள் பாரம்பரியம், படைப்பு, பெருவெள்ளம், குலமுதியவர்கள் பற்றிய நிகழ்ச்சியுரைகள், யாத்திரை, உடன்படிக்கை ஆகியவற்றைத் தனக்கே உரிய விதத்தில் விரிவாக்குகிறது. இவை பற்றிய முந்தைய பாரம்பரியங்களோடு குருக்கள் பாரம்பரியத்தை ஒப்பிடும்போது, கடந்த காலத்தை அப்படியே எடுத்துக்கூறுவதன்று; அதைப் போதகமுறையில் மீண்டும் எடுத்துக் கூறி, பாரம்பரியத்திலிருந்து பாடங்களை வெளிக்கொணர்வதே குருக்கள் பாரம்பரியத்தின் நோக்கமாகும் என்பது தெளிவாகும். இம்முறையிலேயே சாமுவேல் ஆகமம், அரசர் ஆகமங்கள் ஆகிய நூல்களின் நிகழ்ச்சியுரைகளை நாளாகமம் விளக்குகிறது. கடந்த காலத்தைப் பற்றிய மிட்ராஷ் விளக்கத்தை சங் *78; 105; 106;* சீரா *44-50;* ஞானம் *16-19* ஆகிய பகுதிகளில் காணலாம். இஸ்ராயேலின் தொடக்க வரலாற்றை எசே *16* உருவகமாக விவரிக்கிறது. எசா *40-55*-இல் வரும் உரைகளை எசா *60-62* எருசலேமுக்குப் புதிய முறையில் சாற்றிக் கூறுகிறது. பழ *8:22*-க்குப் பின்வரும் பகுதியைச் சீரா *24* சட்டமே ஞானம் என்று விளக்குகிறது. ரூத்து, யோனா, தோபியா, யூதித்து, எஸ்தர், பாரூக்கு, தானியேல் போன்ற நூல்கள் சட்டத்திலிருந்தோ, யூத விசுவாசத்திலிருந்தோ ஒன்றை எடுத்துக்கற்பனையான நிகழ்ச்சியுரையாக அமைக்கப்பட்டவையே. இது பற்றி இந்நூல்களுக்குரிய தனி அறிமுகங்களில் காணலாம். ஆள், இடம், பெயர்கள் பற்றிய பொதுப்பாணி விளக்கங்கள் சொல்லியல் அடிப்படை கொண்ட விளக்கங்கள் அன்று. ஒலியியைபு அடிப்படையில் பெயர்களின் பொருள் கொடுக்கப்படுகின்றது. எழுபது நூலில் வரும் வாசகங்கள், பல இடங்களில் எபிரேய மொழியின் மொழி பெயர்ப்புக்கள் அல்ல; மாறாக, பொழிப்புரையாகவோ, விரிவாக்கமாகவோ அமைந்துள்ளன. இப்படிச் செய்யப்பட்டிருப்பது, எபிரேய மொழியை அறியாமையாலோ, வேண்டுமென்று செய்த மாற்றத்தினாலோ, விளைந்ததன்று. மாறாக, கி.மு. 3-ஆம் நூற்றாண்டு கிரேக்க மொழி பேசிய யூதர்களுக்கு விவிலிய வாசகத்தைப் பொருளுள்ள விதத்தில் விளக்க விரும்பியதின் விளைவேயாகும்.

***9. புதிய ஏற்பாட்டுக் காலத்தில் மிட்ராஷ்:*** வேதாகமத்தை உரக்க வாசித்து அதற்கு விளக்கம் அளிக்கும் இந்த மிட்ராஷ் இலக்கியவகை இஸ்ராயேல் நாடு கடத்தப்பட்ட காலத்தில் தோன்றியது. அஃது எஸ்ரா காலத்தில் வளர்ந்து உறுதியாக நிலைபெற்று விட்டது என்பதற்கு நாளாகமப் பாரம்பரியம் சான்று கூறுகிறது (நெகே *8:1-13*). கி.மு. *444*-இல் சட்டத்தை யூத மக்களுக்குப் பொதுவில் வாசித்துக் காட்டியபோது, எஸ்ரா, மிட்ராஷ் முறையையே

பின்பற்றினர் எனலாம். இந்த இலக்கிய வகை எஸ்ராவோடு கி.மு. 5-ஆம் நூற்றாண் டில்தான் தோன்றியிருக்கலாம். அல்லது அதற்கு முன்பே வழக்கில் இருந்திருக்க லாம். யூதர்களிடையே மட்டுமன்று, ஆதிக் கிறிஸ்தவர்களிடையேயும் இதற்கு ஒரு பெரும் பொற்காலம் காத்திருந்தது.

காலப்போக்கில் யூதர்களிடையே வேதாக மத்தைப் பொதுவில் வாசித்து விளக்கம் அளிப்பது யூதச் செபக்கூட வழிபாட்டின் முக்கிய மையச் சடங்காக விளங்கியது (*லூக் 4:14-30; அ.ப.13:15; 17:2-3*). இப்பழக் கம் காலப்போக்கில் விவிலியத்தைவிட, ராபிகளின் பெரும் இலக்கியங்கள் தோன்ற வாய்ப்பளித்தது. தொடக்கத் திருச்சபையில் வேதாகமத்தை வாசித்து அதற்கு மறையுரை அளிப்பது யூதச் செபக்கூடங்களிலிருந்து வந்த மரபாகும். புதிய ஏற்பாட்டு ஆசிரியர் கள் செபக்கூடங்களில் அளிக்கப்பட்ட இந்த விளக்கமுறையில் வளர்ந்தவர்கள். ராபி களின் விளக்கமுறையில் தேர்ச்சிபெற்றவர் கள். அதன் விளைவாகப் பழைய ஏற்பாடு பற்றிய தங்கள் விளக்கவுரைகளில் அதே முறையைப் பின்பற்றினர். திருச்சபையின் தந்தையரும் இதே முறையைப் பின்பற்றி னர். பழைய ஏற்பாட்டு வரலாற்றையும், காப்புரையாக இறைவாக்கினர்களின் கூற்றுக் களையும் பயன்படுத்தினர். யூத ராபிகளைப் பின்பற்றி, அதே நோக்கத்திற்காக, புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களும் திருச்சபைத் தந்தையரும் விவிலியத்தைக் கொண்டே விவிலியத்தை விளக்கினர். இவ்விளக்க வுரைகள் அலாக்கா, அக்காதா, பெஷர் மிட்ராஷ்கள் என்ற யூதக் கலைச்சொற் களால் அழைக்கப்படவில்லை; பொதுவாக மறையுரை விளக்கங்கள் என்றழைக்கப் பட்டன.

காலப்போக்கில் கிரேக்கச் சிந்தனை ஆதிக்கத்தின் விளைவாக, விவிலியத்தைக் கொண்டே விளக்கும் மரபு குறைந்து, அறிவைக் கொண்டு விவிலியத்தை விளக் கும் முறை அதிகம் வளர்ந்தது. விவிலி யத்தை விளக்குவதில், எப்போது விவிலி யத்திற்கும் அறிவுக்குமிடையே விரும்பத் தக்க சமநிலை ஏற்பட்டது என்றும், அஃது எப்போது மறைந்து போயிற்று என்றும் கூற முடியாது. இது தர்க்கத்திற்குரிய ஒரு பிரச்சனையாகும். ஆனால், இது விவிலிய நோக்குடைய இறையியலிலிருந்து அறிவை அடிப்படையாகக் கொண்ட இறையியல் தொடங்கியதைக் குறிக்கிறது. இஃது இரண் டையும் பாதித்தது. இதன் விளைவாக மிட்ராஷ் இலக்கியத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளும் முறை மறைந்து போயிற்று. அண்மைக் காலம் வரை சில விவிலிய நூல்களைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாது விளக்கவுரையாளர்கள் மலைத்த னர். ஆனால், அண்மைக்காலத்தில் விவி லிய இலக்கியவகைகள் பற்றிய ஆய்வுகள் இக்குறையை ஓரளவு நீக்கி, அந்நூல்களைச் சரியான முறையில் புரிந்து கொள்ள வாய்ப் பளித்துள்ளன.

புதிய ஏற்பாட்டிலும் பல மிட்ராஷ் பகுதிகள் காணப்படுவதாகத் தோன்று கின்றன. குறிப்பாக மத்தேயு நற்செய்தி இம்முறையைப் பயன்படுத்துவதில் ஆர் வம் காட்டுவதாய்த் தோன்றுகிறது. எண் *24:17*-க்கு மத் *2:1-12*-ம், ஓசே *11:1*-க்கு மத் *1:13-15*-ம், எரே *31:15*-க்கு மத் *2:16-18*-ம், மறுவிளக்கமாகத் தோன்று கின்றன. மத் *2:23*, நாசீர் என்ற சொல்லின் ஒலியியைபு அடிப்படையில் நீதி *13:5*-உடன் நெசெர் (கிளை) என்ற சொல் லின் ஒலியியைபு அடிப்படையில் எசா *11:1*-உடன் நசரேத்தை இணைக்கிறது. செக் *11: 12-13*-ஐயும் எரே *32:6-15*-ஐயும் இணைத்து, மத் *27:3-10*, அது எடுத்துக் கூறும் நிகழ்ச்சிக்குச் சாற்றிக் கூறுகிறது. விவாகரத்துப் பற்றிய மத் *5:32;19:9* அலாக்கா மிட்ராஷுக்குச் சான்றாகும். இந்த மிட்ராஷ் புதிய ஏற்பாட்டில் அரி தாகவே காணப்படுகிறது.

லூக் *1-2*-இல் வரும் நிகழ்ச்சியுரை மிட்ராஷ் முறைக்குச் சிறந்த எடுத்துக்காட் டாகும் என்பர். இங்குக் குறிக்கப்படும் நிகழ்ச்சிகள் பற்றிய அடிப்படை உண்மை யான நினைவுச் செய்திகள் பாதுகாக்கப் பட்டுள்ளன; ஆனால் நிகழ்ச்சியுரை,

மெசியா பிறப்புக்கு ஏற்றவாறு, பழைய ஏற்பாட்டுச் சுட்டிக்காட்டுத் தொகுப்பு களால் நிரப்பப்பட்டுள்ளன என்பர். இப் பகுதியை மிட்ராஷுக்கு ஒப்பிட்டால், இப்பகுதியின் நிகழ்ச்சியுரைகள் விவிலிய வாசகங்களின் விளக்கங்களாக அமைந் திருக்க வேண்டும். ஆனால், நாம் காண்பது என்ன? திருமுழுக்கு யோவான், இயேசு ஆகியோருடைய குழந்தைப் பருவ நிகழ்ச்சி களை விவரிக்கும்போது, ஆசிரியர் பழைய ஏற்பாட்டிலிருந்து ஒப்புமைகளையும், மொழி நடையையும் சொற்றொடர்களை யும் பயன்படுத்தியுள்ளாரே தவிர பழைய ஏற்பாட்டு வாசகங்களுக்குக் கால, இடச் சூழ்நிலைக்கேற்ப விளக்கமாக தம் நிகழ்ச்சி யுரைகளை அமைக்கவில்லை. ஆகவே, லூக் *1-2*-இன் இலக்கிய வடிவம் தனிப்பட் டது என்றே கொள்ள வேண்டும். நற்செய்தி முழுவதிலும், சிறப்பாக, இந்தப் பிள்ளைப் பருவ நிகழ்ச்சியுரையிலும், நிகழ்ச்சிகளை மட்டும் கருத்தில் கொண்டு லூக்கா எழுத வில்லை. அவற்றின் பொருளைக் கருத்தில் கொண்டு எழுதுகிறார். அப்போதும் முந்தைய வேதாகம வாசகங்களுக்கு விளக் கம் அளிக்கவில்லை. புதியதொரு வாழ்க்கை நிகழ்ச்சியுரையையே எழுது கிறார்.

புனித பவுல் பலமுறை மிட்ராஷைப் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. இதை ஆபிரகாம், சாராள், ஆகார் ஆகியோர் பற்றிய கலா *3-4*-இலும், ஆபிரகாமின் விசுவாசம் பற்றிய உரோ *4*-இலும் யாத் திரைப் பாரம்பரியங்கள் பற்றிய *1* கொரி *10:1-13*-இலும் காணலாம். எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் முழுவதும், குறிப் பாக எபி *7:1-10*-ம்; எபி *11*-இல் வரும் விசுவாச வீரர்கள் பற்றிய விவரிப்பும், மிட்ராஷ் முறையைப் பயன்படுத்தி யுள்ளன. பழைய ஏற்பாட்டில் காணப் படாத பல மிட்ராஷ் பாரம்பரியங்களைப் புதிய ஏற்பாடு எடுத்துக்கூறுகிறது. இவை வரலாற்று மதிப்பீடு உடையவை அல்ல. சான்றுகள்: அ.ப. *7:22-32*; பாலையில் இஸ்ராயேலைப் பின்தொடர்ந்த பாறை பற்றிய *1* கொரி *10:4*; உடன்படிக்கையை அறிவித்த வானதூதன் பற்றிய கலா *3:19*; எகிப்திய மந்திரவாதிகள் பற்றிய *2* திமொ *3:8*; மிக்கேலுக்கும், அலகைக்கு மிடையே வாதம் பற்றிய யூதா *9*. திருவெளிப்பாட்டு நூல் பழைய ஏற்பாட் டின் பல வாசகங்களுக்கு, குறிப்பாக எசாயா, செக்கரியா, தானியேல் ஆகிய நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட வாசகங் களுக்கு மிட்ராஷ் விளக்கமாக அமைந்திருப் பதாகத் தோன்றுகிறது.

இவ்வளவு கூறியபின் ஓர் எச்சரிக்கை அவசியமாகிறது. புதியஏற்பாடு, வேதாகம விளக்கமன்று; அலாக்கா மிட்ராஷோடு தொடர்பு கொண்டிருக்கவில்லை; மிட்ரா ஷோடு, அதன் கலைச்சொல் பொருளில் தொடர்பு கொண்டிருப்பதாகக் கூற முடி யாது.

**மிதியடிகள், காலணிகள்** (SANDALS OR SHOES)

விவிலியக்காலங்களில் பலவகையான மிதியடிகள் பயன்பட்டன. அவற்றையும் அவற்றைக் குறிக்கும் சொற்களையும் துல்லியமாக வேறுபடுத்துவது கடினம்.

மிதியடிகளின் தரமும் பாணியும் (காண்க. எசே *16:10*), அவற்றை அணிந் திருப்பதும் வெறுங்காலோடு இருப்பதும் (காண்க. லூக் *15:22*) ஒருவருடைய சமூக நிலையைப் பிரதிபலித்தன.

இறையாற்றல் தோற்றக்காட்சிகளில், அவ்விடங்களின் புனிதத்தன்மையின் பொருட்டு மிதியடிகள் அகற்றப்பட்டன (யாத் *3:5*; யோசு *5:15*). வெறுங்காலோடு செல்லல் துக்கச்சடங்கின் ஒரு பண்பாகும் (*2* சாமு *15:30*; காண்க. எசே *24:17.23*). கைதிகள் வெறுங்காலோடு நடத்திச் செல்லப்பட்டனர் (*2* நாள் *28:15*; எசா *20:2-4*). வீட்டில் நுழையுமுன் விருந்தின ரின், மிதியடிகள் அகற்றப்படுவது வழக்கம் (காண்க. லூக் *7:38.44*). ஆனால், இது வீட்டுச் சொந்தக்காரனால் செய்யப்பட வில்லை. வேலையாட்களால் செய்யப் பட்டது (காண்க. *15:22*). மிதியடிகளை

அணிந்துகொள்வது ஒரு பயணம் செய்யத் தயாராக உள்ளார் என்பதை உணர்த்தும் *(யாத் 12:11; மற் 6:9; அ.ப. 12:8)*. ஆனால், ஏழைகளும் துறவிகளும் நீண்ட பயணத்தைக்கூட வெறுங்காலோடே செய்தனர் *(மத் 10:10; காண்க. லூக் 9:1-5)*.

உடன்பிறந்தான் திருமணத்தால் ஏற்கெனவே பிறந்த குழந்தைகளின் சொத்துரிமையைக் குறைக்கும்போது நிலச்சொத்துரிமையைத் துறக்கும் சடங்கின் ஒரு பகுதியாக மிதியடிகளை அகற்றுவது அமைந்தது *(உப 25:9-10; ரூத் 4:6-10)*. மிதியடியைத் தரையில் எறிவது உடைமைக்கு உரிமை கொண்டாடுவதைக் குறித்தது *(காண்க. சங் 60:8)*. அரசர்கள் மற்றும் மேல் குடிமக்களின் பணியாளர்களில் கீழ் மட்டத்திலுள்ளவர்கள் மிதியடிகளைச் சுமந்து சென்றனர். இயேசுவோடு தன்னை ஒப்பிடும்போது, திருமுழுக்கு யோவான் இந்தத் தாழ்மையான செயலைச் செய்யக்கூட தான் தகுதியற்றவன் என்று கூறுகிறார் *(மத் 3:11; மாற் 1:7; அ.ப. 13:25)*. ''சமாதான நற்செய்தியை அறிவிக்கும் ஆர்வத்திற்கும்'' அஃது அளிக்கும் பாதுகாப்பிற்கும் மிதியடிகள் உருவகமாயின *(எபே 6:15)*.

**மிதியான்** (MIDIAN - போராட்டம்)

இஃது ஒரு நாடோடி இனம். இவர்களுக்கும் இஸ்ராயேலர்களுக்கும் இரத்த உறவு, ஆபிரகாம் மணந்த செத்தூராள் என்பவள் மூலம் ஏற்பட்டது. அவள் மூலம் அவருக்குப் பிறந்த மிதியானே இந்த இனத்தின் இனப்பெயர் முதல்வர் ஆவார் *(ஆதி 25:2-4; 1 நாள் 1:32 தொ)*. இவர்கள் வியாபாரிகளாகவே காணப்படுகிறார்கள் *(ஆதி 37:28.38; எசா 60:6)*. எகிப்திலிருந்து மோசே ஓடியது இந்த மிதியான் நாட்டுக்குத்தான் *(யாத் 2:15)*; இங்கேதான் எரியும் முட்புதரில் ஆண்டவர் இவருக்குக் காட்சியளித்தார் *(யாத் 3:1)*. மோசேயின் மாமனார் எத்திரோ அல்லது இரகுவேல் மிதியான் நாட்டுக் குரு ஆவார் *(யாத் 18:1)*. இரகுவேலின் மகன் ஒபாபு இஸ்ராயேலர்கள் பாலைவனத்தைக் கடக்க வழிகாட்டினான். ஆனால், இந்தத் தொடக்க கால நட்புறவு தொடரவில்லை.

எண் *22:4-7*-இல் பிலயாம் பற்றிய நிகழ்ச்சியில் மோவாபியர்களோடு மிதியானியரின் முதியவர்களும் வருகின்றனர். மோவாபியப் பெண்ணோடு விபசாரத்தில் ஈடுபட்ட இஸ்ரயேலன் ஒருவனைப் பினகாசு என்பவர் கொன்றார். பெயோர் பாகாலின் சிற்றின்ப வழிபாட்டில் ஈடுபட்டான் *(எண் 25)*. எண் *31* பாகால் பெயோரை மிதியானியரோடு தொடர்புபடுத்துகிறது. ஆனால், அவர்களை இஸ்ராயேலர்கள் பழிவாங்கிய போர் வரலாற்றுண்மையென ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

யோசு *13:21*-இல் மோவாபின் மன்னனாகிய சீகோனுக்கு மிதியான் நாட்டுத் தலைவர்கள் சிற்றரசர்களாக இருந்தார்கள் என்று கூறப்படுகிறது. நீதிபதிகள் *6-8*-இல் கூறப்படும் மிதியானியர் இஸ்ராயேலர்கள் மேல் கொண்ட தாக்குதல்கள், ஆண்டவர் அவர்கட்கு அளித்த தண்டனை ஆகும். இங்குதான் முதன் முதல் பழக்கப்பட்ட ஒட்டகங்கள் பற்றி பழைய ஏற்பாட்டில் பேசப்படுகிறது. கிதயோனின் வெற்றி, யாவே இஸ்ராயேலர்களைக் காப்பாற்ற மேற்கொண்ட வெற்றிச் செயலாகக் கருதப்பட்டது *(எசா 9:3; 10:26; சங் 83:10)*. மிதியானியர், ஏதோம் நாட்டினருக்கு அண்டை நாட்டவர் என்றும் *(1 அர 11:18)*, அவர்களை ஏதோமியர் வென்றதாகவும் *(ஆதி 36:35; 1 நாள் 1:46)* கூறப்படுகிறது.

எப்பொழுதும் மிதியானியர் ஒரு நாடோடி இனத்தவராகவே காட்டப்பட்டதால் இவர்கட்கென்று எந்தச் சொந்த நிலமும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், இவர்கள் சில மேய்ச்சல் நிலங்கள் மேல் உரிமை கொண்டாடினர். எகிப்துக்குச் செல்லும் வழியில், ஏதோமுக்கும், பாரானுக்குமிடையே சீனாய்க்கு அருகில் உள்ள இடமே இஃது என விவிலியக் கருத்துக்கள் கூறுகின்றன. வட அரேபியாவில் உள்ள மிதியான் நாடே இந்த மிதியான் நாடு

எனச்சிலர் கருதுகின்றனர். இந்த மிதியான் அன்றைய கிரேக்க, அரேபிய புவியியலார் கள் கருத்துப்படி அடையாளம் காட்டப்படு கிறது. விவிலியத்தில் தவிர வேறு எந்தக் குறிப்புகளிலும் மிதியானைப் பற்றிக் குறிப் பெதுவுமில்லை. மிதியானின் ஒரு கிளை யான எப்பா என்பவர்கள், அரேபியப் பாலைவனத்தின் இனமான கையப்பு தான் என அறிஞர் எபேல் கருதுகிறார் (ஆதி *25:4; 1* நாள் *1:33*). மூன்றாம் திகிலத்பிலே சர் (கி.மு. *745-727*) இந்த அரேபிய இனத்திடமிருந்து கப்பம் பெற்றுக்கொண்டி ருந்தார். பின்னர் சார்கோன் (கி.மு. *721-705*) இவர்களை வென்று, சமாரியாவில் குடி யேற்றினார்.

கொடுமைப்படுத்துபவர்களை அழிக்க யாவேக்குள்ள ஆற்றலின் எடுத்துக்காட்டாக எசாயாவின் இறைவாக்கில் மிதியானியர் குறிக்கப்படுகின்றனர் (எசா *9:4*). மிதியானி யர் மகிமைப்படுத்தப்பட்ட சீயோனுக்கு ஒட்டகங்களை அளிப்பர். இது மீண்டும் அமைக்கப்பட்ட நகரின் செல்வத்திற்கு அடையாளமாகும் *(66:6)*.

**மிதின்** (MIDDIN - அளவைகள்)

யூதாவின் பாலைவனப் பகுதியிலுள்ள ஓர் ஊர் (யோசு *15:61*). இது சாக்கடலின் வட முனைக்கு மேற்கிலுள்ள ஆக்கோர் பள்ளத்தாக்கிலுள்ள கிர்பெத் அபுதபாக்கு என்ற இடமாக அடையாளம் காட்டப்படு கிறது.

**மிதுனம்** (TWIN BROTHERS -இரட்டையர்கள்)

மால்தா தீவிலிருந்து உரோமைக்குப் பயணம் செய்த புனித பவுல் ஏறிச் சென்ற அலக்சாந்திரியக் கப்பலின் முன் பகுதியில் உள்ள சின்னத்தைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்ட சொல்லாகும் (அ.ப. *28:11*). சேயூசு, லீடா ஆகியவர்களின் இரட்டைக் குழந்தை களான கஸ்த்தோர், பொல்லுக்ஸ் ஆகிய இரட்டைச் சகோதரர்களின் உருவமே அது. கிரேக்க மூல வாசகம் ''இரட்டைச் சகோத ரர்கள்'' என்றே குறிப்பிடுகிறது. கப்பலுக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டிருப்பவர்களாக அவர்கள் கருதப்பட்டார்கள். ஏனென்றால், மோசமான தட்பவெப்ப நிலையில், நட்சத் திரக் கூட்டத்தைப் பார்ப்பது நல்ல நிமித்த மாக இருந்திருக்க வேண்டும்.

**மித்கா** (MITHKAH - இனிப்பு)

இஃது இஸ்ராயேலர்கள் அட்சரோத்துக்கு அடுத்துத் தங்கிய பாலைவனத்திலுள்ள இடம் (எண் *33:28-29*). இஃது அவர்கள் பாளையம் இறங்கிய இடங்களில் ஒன்று. ஆனால், இஃது அமைந்த இடம் எது வென்று தெரியவில்லை.

**மித்தன்னி** (MITANNI)

ஏறக்குறைய கி.மு. *15*-ஆம் நூற்றாண்டள வில் வடமெசபொத்தாமியாவில் ஆட்சி புரிந்த முக்கிய அரசு ஆகும். ஊரியர்களே இவ்வரசில் வாழ்ந்த அதிக மக்களாதலால் தேசிய மொழியாக ஊரிய மொழியே பயன்படுத்தப்பட்டது. ஆனால், ஆட்சி புரிந்த இனமோ இந்தோ-ஈரானியர்களாகவும், குதிரை பூட்டிய தேர்ப் படை கொண்டு போர்புரிந்தவர்களாகவும் இருந்தனர். கி.மு. *1502 - 1448*-இல் எகிப்தியப் பேரரசையும், மித்தன்னி அரசை யும் யூப்பிரத்தீசு ஆறு பிரிக்கும் எல்லையாக இருந்தது. அதன் பிறகு இந்த அரசின் இளவரசர்கள் பார்வோனிய மன்னர்கள் மத்தியில் தங்கள் திறமையினால் பெயர் பெற்று அவ்வரசில் முன்னேற்றம் கண்டனர்.

விவிலிய உலகில் இவர்களின் பண் பாட்டுத் தாக்கம்போல், அரசியல் தாக்கம் ஏற்படவில்லை. தங்கள் எல்லைக்கு அப் பாற்பட்டும் இவர்களின் ஆட்சியும், அதன் தாக்கமும் நிலவி வந்தன. *2* சாமு *24:16*-இல் எபூசிய எருசலேமின் ஆட்சியாளர் ''தலை வர், ஆட்சியாளர்'' (அரவுனா) என்ற ஊரியப் பட்டத்தைக் கொண்டுள்ளார்.

**மித்திலேன்** (MYTHLENE - வரை செய்யப் பட்ட, சுருக்கப்பட்ட)

இது பவுலின் மூன்றாவது நற்செய்திப் பயணத்தின் வழியில் உள்ள ஊர். இந்நகரம் சிறிய ஆசியாவின் தென்கிழக்குக் கடற் கரையில் வெஸ்போசின் ஆகியன் தீவில் உள்ள முக்கியமான நகரமாகும்.

இந்நகரம் உரோமையர்கள் விடுமுறை நாட்களில் வந்து தங்குமிடமாக இருந்தது. அரசுக்கு எதிராகப் புரட்சி செய்ததால் பல தண்டனைகளை அனுபவித்தது. கி.மு. 80-இல் அவர்கள் வரிவசூலித்ததை எதிர்த்த தால் நகரமும் சுவர்களும் உரோமையரால் அழிக்கப்பட்டன. ஆனால், பாம்பே யூலியு சீசருக்குத் தப்பி அடைக்கலம் தேடியபோது இதனைக் கைப்பற்றி இதற்குச் சுதந்தரம் அளித்தார். கி.பி. 151-52-இல் ஏற்பட்ட பெரிய நிலநடுக்கத்தால் இந்நகரம் தரை மட்டமாக்கப்பட்டது. மத்திய காலத்தில் இந்நகரத்தின் பெயரே அஃது இருந்த தீவு முழுவதற்கும் வழங்கப்பட்டது.

அக்காயாவிலிருந்து சீரியாவுக்குப் பவுல் திரும்பிச் செல்லும்போது *(அ.ப. 20:2)*, ஆசோவின் மேற்குக் கடற்கரைத் துறை முகத்திலிருந்து சென்று, பின் அங்கிருந்து மித்திலேன் நகரை அடைந்தனர். மறுநாள் கீயுத் தீவுக்கும், பின் சாமுத் தீவுக்கும் சென்று இறுதியில் மிலேத்துத் துறை முகத்தை அடைந்தனர் *(20:13-16)*.

**மித்ரதாத்து** (MITHREDATH - மித்திராவின் கொடை)

1. இவர் பாரசீக அரசன் சைரசின் கரு வூலக் கண்காணிப்பாளர். எருசலேம் கோவி லுக்குரிய பாத்திரங்களை யூதத் தலைவரான சேசுபட்சரிடம் திருப்பிக் கொடுத்தார் *(எஸ் 1:8)*.

2. இரண்டாம் அர்த்தக்சஸ்தாவின் ஆட்சி யின்போது எருசலேம் மீண்டும் கட்டி யெழுப்பப்படுவதை எதிர்த்து அரசனிடம் மனு கொடுத்த மூன்று பாரசீக அதிகாரி களில் ஒருவர் *(எஸ் 4:7)*.

**மித்னியர்** (MITHNITE)

தாவீதின் படையில் உள்ள யோசப்பாத் துக்குக் கொடுக்கப்பட்ட சிறப்புப்பெயர் மித்னியர். ஆனால், இப்பகுதியில் வாசகம் கேள்விக்குரியதாக இருக்கிறது.

**மிந்தோசு** (MYNDOS)

இஃது ஆசியாவில், காரியாக் கடற்கரைப் பகுதியில் உள்ள ஒரு நகரம். இது வெள்ளிச் சுரங்கங்களுக்குப் பெயர் பெற்ற இடம். கி.மு. 139-இல் உரோமையருடைய தூதர் லூக்கியு இந்நகரத்திற்கும் மற்ற நகரங்களுக் கும் யூதருக்கு நன்மை விளையும் வகையில் கடிதங்கள் எழுதியதாகக் கூறப்பட்டுள்ளது *(1 மக் 15:23)*. எனவே, யூதர்கள் இந்நகரிலே வெள்ளி வியாபாரம் காரணமாகக் குடியேறி யிருக்கலாமெனக் கருதப்படுகிறது.

**மிப்கார்** (MIBHAR - தேர்ந்தெடுக்கப்பட்ட, மிகச்சிறந்த)

இவர் அக்ரியின் மகன். தாவீதின் ''வலிமை வாய்ந்த முப்பது பேர்களில்'' ஒருவர் *(1 நாள் 11:38)*.

**மிப்சாம்** (MIBSAM - இனிய மணம்)

1. இவர் இசுமயேலின் புதல்வருள் ஒரு வர் *(ஆதி 25:13; 1 நாள் 1:29)*. ஓர் அரேபிய இனத்தாருடைய குலப்பெயர் மூதாதையர்.

2. இவர் சிமயோனின் வம்சத்தைச் சார்ந் தவரும், மிசுமாவின் தந்தையும் ஆவார் *(1 நாள் 4:25)*.

**மிப்சார்** (MIBZAR - கோட்டை, அரண்)

மிப்சார் ஏதோமிய குடும்பத் தலைவர் *(ஆதி 36:42; 1 நாள் 1:53)*. இஃது ஒருவேளை இடப்பெயராக இருக்கலாம். யுசேபியு, இஃது ஏதோமின் வடபகுதி யிலுள்ள மப்சாராவாக இருக்கலாம் என் கிறார். வேறு சிலர் இது மோவாபில் உள்ள பொட்சராவாக இருக்கலாம் என்று கருது கின்றனர்.

**மிய்யாமின்** (MIJAMIN - வலக்கை)

புதிய பாபிலோனிய, பாரசீக வியாபாரப் பத்திரங்களில் காணப்படும் ஒரு பெயரா கும். ஆகவே, இதனைப் பென்யமினாகக் கருதமுடியாது. அதே நேரத்தில் எஸ் 10:25 மிய்யாமினுக்குப் பதிலாக பென்யமின் என்று கொண்டுள்ளது.

1. தாவீது காலத்தில் வாழ்ந்த குருக்களின் ஆறாவது குழுவுக்குத் தலைவர் *(1 நாள் 24:9)*. நாடுகடத்தலுக்குப் பிற்பட்ட ஒரு குருத்துவக் குடும்பத்தின் மூதாதைய ரெனக் கருதப்படுகிறார்.

2. பாரோசின் மகனாகிய இவர் அன்னிய மனைவியரை விலக்கி விடுமாறு எஸ்ரா வால் கோரப்பட்டார் (எஸ் 10:25).

3. இவர் எஸ்ராவின் கீழ் நடந்த புதிய உடன்படிக்கையில் கையொப்பமிட்ட குருக் களில் ஒருவர் (நெகே 10:7). இவர் மினியமின் (3) ஆக இருக்கலாம்.

4. நாடு கடத்தலிலிருந்து செருபாபே லோடு திரும்பி வந்த குரு இவர் (நெகே 12:5).

**மிரியாம்** (MIRIAM - கிளர்ச்சி)

1. மிரியாம் யோக்கபேதுவின் மகளும், ஆரோன், மோசே ஆகியவர்களின் சகோதரியு மாவாள். இவளது பெயர் குறிப்பிடப்பட வில்லையெனினும் 'எலோகிம்' பாரம்பரிய ஏட்டில் இவள், கூடையில் வைத்து நதியில் விடப்பட்ட மோசேயைக் கவனித்திருந்து, பார்வோனின் மகள் குழந்தைக்குப் பாலூட்டி வளர்க்க யார் வருவார் எனக் காத்திருக்கும்போது, தானே முன்சென்று மோசேயின் தாயைக் கூட்டி வந்தவள் (யாத் 2:4.7-8). நாணல் கடலைக் கடந்ததன் வெற்றியை நினைந்து வெற்றிக்கீதம் பாடிய தால் இவள் ஓர் இறைவாக்கினளாக நினைவு கூரப்படுகிறாள் (யாத் 15:20-21). இப்பாடல் ஓர் எபிரேயப் பாடலின் தொடக்க காலப் பகுதிகளைக் கொண்டுள்ளது. கூசியப் பெண்ணை மோசே மணந்தபோது ஆரோ னும், மிரியாமும் சேர்ந்து கொண்டு, எங்களைக் கொண்டும் ஆண்டவர் பேசவில் லையாவென எதிர்த்துப் பேசியதால் மிரியா மின் உடலெங்கும் தொழுநோய் உண்டா யிற்று. எனவே, அவள் ஏழுநாட்கள் பாளை யத்துக்குப் புறம்பாக்கப்பட்டாள். மோசே யின் மன்றாட்டைக் கேட்டு அவளை யாவே குணப்படுத்தினார் (எண் 12). காதேசில் அடக்கப்பட்டது பற்றியேயன்றி, இதன்பின் வேறெங்கும் மிரியாமைப் பற்றிக் கூறப்படவில்லை (எண் 20:1). பின்னர் இவள் கடவுளால் அனுப்பப்பட்ட ஒரு தலைவராகவும் (மீக் 6:4), தொழுநோ யால் துன்பப்படுபவர்கட்கு ஒரு மாதிரியாக வும் கூறப்படுகிறாள் (உப 24:9). யூதர்களின் பிற்காலக் கதைகளில் மூன்று குழந்தைக ளில் மூத்தவளாகவும், காலேபின் மனைவி யான இவள் ஓர் இறைவாக்கினள் எனவும், இவளே மோசே இஸ்ராயேலைக் காக்க வருபவர் என முன்னறிவித்தாள் எனவும் கூறுகின்றனர்.

மிரியாம் எனும் பெயர் 'கசப்புத்தன்மை', 'கடலின் மீன்' எனப் பலவகைகளில் விளக்கப்படுகிறது. ஆனால், இது புதிய ஏற்பாட்டுக் காலத்தில் எல்லோரும் நன் கறிந்த ஒரு பெயராக இருக்கின்றது. ஏரோ தின் மனைவியான மரியம்னே உள்பட்ட ஆறுபேர் இப்பெயரைக் கொண்டிருந்தனர் என்று யோசிப்பசு குறிப்பிடுகிறார்.

2. சம்மாய், இசுபாகு ஆகியவர்களின் உறவினளே இந்த மிரியாம்; எஸ்ராவின் வழித்தோன்றல்களில் யூதாவைச் சேர்ந்த வள் (1 நாள் 4:17). இவளது தந்தை, தாய் பெயர் கொடுக்கப்படவில்லை. திருத்தி அமைக்கப்பட்ட வாசகத்தின்படி பாரவோ, மெரேது ஆகியோரின் புதல்வியான பித்தி யாவின் மகனோ, மகளோ ஆவர் மிரியாம்.

**மிருதுச்செடி** (MYRTLE)

இஸ்ராயேலர் கூடார விழாவின்போது தங்கள் கூடாரங்களை அமைக்க மிருதுக் கிளைகளைப் பயன்படுத்துவர். காஞ் சொறிச் செடிக்குப் பதிலாக மிருதுச்செடி தளிர்த்து வளர்வது, இறுதிக்காலவியல் அடையாளத்தின் ஒரு பகுதியாகும் (எசா 41:19; 55:13). மிருதுச் செடிகளுக்கிடையே சிவப்புக் குதிரை மேல் ஏறி வந்த மனிதன் பற்றிய காட்சியில், செக்கரியாவுக்கு ஆண்ட வருடைய தூதர் தோன்றினார் (செக் 1:8.10-11).

மிருது எப்போதும் பசுமையாக இருக் கும் புதர்ச்செடியாகும். இது கருத்த நீண்ட வட்ட இலைகளையும், வெள்ளை அல்லது ஊதாப்பூக்களையும் கொண்டிருக்கும். இதன் கருப்பான பழம், சீரியா, பாலஸ் தீனம் மற்றும் மத்தியதரைக் கடற்பகுதி களில் சாதாரணமாகக் காணப்படும்.

**மிர்மா** (MIRMAH - *மோசடி)*

இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்த சகரயிம் என்பவருக்கு அவரது மனைவி ஓதேசிடம் பிறந்த புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 8:10)*.

**மிலலாய்** (MILALAI - *வாய்ச்சாலக்கமுடைய)*

நெகேமியா எழுப்பிய எருசலேம் சுவரின் அர்ப்பணிப்பு விழாவில் கலந்து கொண்ட பாடகர்களில் ஒருவர் *(நெகே 12:36)*. இவரது பெயர் கிரேக்க வடிவத்தில் காணப் படவில்லை.

**மிலேத்து** (MILETUS)

சிறிய ஆசியாவின் மேற்குக் கடற்கரை யில் அமைந்த துறைமுகப் பட்டினமே மிலேத்து.

இங்கு அப்போஸ்தலர்களின் காலத்தில் திருச்சபை நிறுவப்பட்டிருக்கலாம்; ஆனால், இங்கு திருச்சபை நிறுவப்பட்ட தற்கு எந்தச் சான்றும் இல்லை. பவுல் எபேசு நகரத்தின் மூப்பர்களை மிலேத்துத் துறைமுகத்தில் சந்தித்துப் பிரியாவிடை பெகிறார் *(அ.ப. 20:15. 17)*. அவரோடு பயணம் செய்த துரோபிம் நோயுற்றதால் அவரை மிலேத்துவிலே பவுல் விட்டுச் சென்றார *(2 திமொ 4:20)*.

இஃது ஒரு பெரிய துறைமுகமாகவும், வியாபார மையமாகவும் விளங்கியது. இப் பகுதியை இன்று அகழ்ந்து பார்க்கும்போது உரோமையர் காலத்துப் பெரிய அரங்குகள், செனட்டர்களின் மாளிகை, சந்தை கூடு மிடம், சில கோவில்களின் அடித்தளங்கள் எனப் பல இந்நகரத்தின் கலாச்சாரத்தைப் பறைசாற்றின. மத்திய காலத்துக்குப்பின் ஆற்றின் முகத்துவாரத்தில் படிந்த படி மானங்களால் இத்துறைமுகம் பயனற்றுப் போயிற்று.

**மில்கா** (MILCAH - *இளவரசி)*

1. இவள் ஆபிராமின் சகோதரனாகிய ஆரானின் மகள். இவள் பின்னர் ஆபிரா மின் சகோதரன் நாகோரை மணந்து கொண் டாள் *(ஆதி 11:29)*; இவள் நாகோருக்கு எட்டுப் புதல்வர்களைப் பெற்றாள் *(22:20-23)*. இவளின் மகனான பெத்துவே லின் புதல்வியே ரபேக்கா *(24:15. 24.47)*.

2. செலோபுகாதின் ஐந்து புதல்விகளில் ஒருத்தியே இவள். இவர்கள் தங்கள் தந்தை இறந்தபின், மோசேயின் வழியாக வடமனா சேயில் உரிமைச் சொத்து பெற்றனர் *(எண் 26:33; 27:1; 36:11; யோசு 17:3)*. செலோபுகா தின் புதல்வியர் பெயர்கள் அன்றைய கானானிய நகரங்களின் பெயர்களாக மூலத் தில் இருந்திருக்கலாம். மில்கா இருந்த இடம் எதுவென்று தெரியவில்லை.

**மில்கோம்** (MILCOM - *அரசன்)*

அம்மோனியர்களின் தேசக் கடவுளின் பெயர் இது. இது மோலேக்கு என்ற பெயரின் திரிபு ஆகும்.

எபிரேய வாசகத்திலிருந்து மில்கோம் என்ற பெயர் மனித அரசனைக் குறிக்கிறதா, தேவதையைக் குறிக்கிறதா என்று நிர்ணயிப் பது கடினம். யோவாபு அம்மோனியத் தலைநகர் இரபாவைத் தோற்கடித்தபோது, மில்கோமின் மணிமுடி தாவீதின் தலையில் வைக்கப்பட்டது *(2 சாமு 12:30; 1 நாள் 20:2)*. இங்குத் தேவதை குறிக்கப்பட்டால், முடி சிலைக்காகச் செய்யப்பட்டதாக இருக் கலாம். சாலமோன் வழிபட்ட அன்னியத் தேவதைகளில் அம்மோனியர்களின் மில் கோமும் ஒன்று *(1 அர 11:5.33)*. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த யூதாவைச் சேர்ந்த வர்கள் யாவேயின் பெயராலும் மில்கோ மின் பெயராலும் சத்தியம் செய்ததாகச் செப் 1:5 கூறுகிறது.

மற்ற தேசத் தேவதைகளைப் போன்று, மில்கோம் அதன் நாட்டின் விதியோடு (அதாவது அம்மோனியர்களின் விதியோடு) நெருங்கித் தொடர்புபடுத்தப்படுகிறது. ஆனால் எரே 49:1-இன்படி, இரபாவின் தோல்வியோடு மில்கோம் நாடு கடத்தப் படுவார். ஆமோ 1:15, இரபாவின் தோல்வி யால் மில்கோம் நாடு கடத்தப்படுதலைக் குறிப்பிடலாம்.

மில்கோம் என்பது மோலேக்கு என்ற பெயர் வேண்டுமென்ற திரித்துக் கூறப்பட்

டது என்று பொதுவாகக் கருதப்படும். சாலமோனின் வழிபாட்டுக் குறிப்பில் மில்கோம் மோலேக்கு என்று ஒருமுறை அழைக்கப்படுகிறது *(1 அர 11:7)*. ஆனால் *2 அர 28:10.13*-இல் சாலமோனின் மில்கோம் மற்றும் மோலேக்கு ஆகியோரின் புனித இடங்களில் மக்கள் வழிபட்டது தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளது. காண்க. மோலேக்கு.

**மில்லோ** (MILLO - *நிரப்புதல்)*

*1.* காண்க. பெத்மில்லோ.

*2.* தாவீதின் நகரத்தில் கோட்டைப் பாதுகாப்பின் ஒரு பகுதி. தாவீது எருசலேமைக் கைப்பற்றிய பின் நகரைக் கட்டியெழுப்பும் போது அதனோடு தொடர்புபடுத்திப் பேசப்படுகிறது *(2 சாமு 5:9; 1 நாள் 11:8)*. மில்லோவைக் கட்டியெழுப்பியவர் சாலமோனே என *1 அர 9:15.24; 11:27* கூறுகின்றன. யோவாசின் இறப்பு பற்றிக் கூறும்போது ''மில்லோ-பெத்'' *(மில்லோவின் வீடு)* எனக் கூறப்படுகிறது *(2 அர 12:21)*. தாவீதின் நகரத்தின் வடமேற்கில் 'மில்லோ' இருந்ததாகக் கூறப்படுவது நிரூபிக்கவியலாத ஒன்றாக இருக்கிறது. உறுதியான சம தரையின் மீது எழுப்பப்பட்ட மேடையில் அமைந்த ஓர் அமைப்பே 'மில்லோ' என இப்பெயரினின்று பொருள் கொள்ள முடிகிறது.

*3.* செக்கேம் நகரின் ஒரு பகுதியின் பெயர் *(நீதி 9:6.20)*.

**மினாசோன்** (MINASON*)*

பவுல் இறுதி முறையாக எருசலேம் வந்தபோது மினாசோன் வீட்டில்தான் தங்கினார் *(அ.ப.21:16)*. இப்பெயர் கிரேக்கத்தில் 'நாசோன்' எனவும், யூதர்களிடையே யாகோன் எனவும் வழங்கப்பெற்ற பொதுப் பெயராகும். அப்போஸ்தலர் பணியின் கிரேக்கப் படிவத்திலிருந்து மினாசோன் எருசலேமில் வாழ்ந்தாரா, செசரியாவுக்கும், எருசலேமுக்குமிடையேயுள்ள ஒரு கிராமத்தில் வாழ்ந்தாரா என்று முடிவு செய்ய இயலவில்லை. ஆனால், இரண்டுவகைப் படிவங்களிலும் அ) இவர் சைப்ரசுத் தீவைச் சேர்ந்தவர்; ஆ) பழைய சீடர் எனும் கருத்து உள்ளன. இஃது அவர் தொடக்கத்திலே மனந்திருப்பப்பட்டவராக இருக்க வேண்டும் எனச்சுட்டுகிறது எனலாம்.

**மினா நாணய உவமை** (MINA, PARABLE OF*)*

கிரேக்க உரோமையர் உலகில் பயன்படுத்தப்பட்ட நாணயங்களுள் ஒன்று மினா ஆகும். இஃது ஏறக்குறைய நூறு திராக்குமா மதிப்புடையது.

இயேசு எருசலேமை நெருங்கிக் கொண்டிருந்தார். மக்கள் இறையரசு உடனடியாக மலரப்போகிறது என்று எதிர்பார்த்தனர். அப்போது இயேசு இந்த மினா நாணய உவமையைக் கூறினார் *(லூக் 19:11-27)*. இதே உவமையைச் சிறிது மாற்றி தாலந்து உவமையாக மத்தேயு தருகிறார் *(மத் 25:14-20)*.

இறைவன் ஒவ்வொருவருக்கும் அவர்களுக்கே உரிய ஆற்றல்களை அளித்துள்ளார். அவற்றை அவர்கள் வளர்த்துப் பெருகச் செய்ய வேண்டும்; கணக்குக் கொடுக்க வேண்டும். தங்கள் ஆற்றல்களைப் பெருகச் செய்பவர்கள் கணக்குக் கொடுக்கும் நாளில் பாராட்டுப் பெறுவர். இதற்கு மாறாக, தங்கள் ஆற்றல்களைப் புதைத்து வைத்து வாழாயிருப்பவர்கள், அவற்றை இழந்து விடுவர். இவ்வாறே இயேசுவின் சீடர்கள் தங்களது ஆன்மீகக் கொடைகளை வளர்த்துப் பெருகச் செய்ய வேண்டும். இறையரசின் வருகைக்காக எப்போதும் தயார் நிலையில் இருக்க வேண்டும்.

**மினியமின்** (MINIAMIN - வலக் கைப்பட்ட, நற்பேறுடைய)

*1.* இவர் எசேக்கிய அரசன் காலத்தில் ஆண்டவருக்குக் கொடுக்கப்பட்ட காணிக்கைகளை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்த கோரே என்ற லேவியருக்கு உதவியவர் *(2 அர 31:15)*.

*2.* யோயாக்கிம் தலைமைக் குருவாக இருந்தபோது இருந்த ஒரு குருத்துவக் குடும்பமே இது *(நெகே 12:17)*.

*3. இவர் நெகேமியா எழுப்பிய மதிலை அர்ப்பணமாக்கும் நாளில் அதில் கலந்து கொண்டு எக்காளம் ஊதியவர் (நெகே 12:41).*

**மின்னி** *(MINNI)*

*இக்கால ஈரானிலுள்ள உரிமா எனும் ஏரிக்குத் தென்பகுதியில் அமைந்த ஓர் அரசே மின்னி (எரே 51:27).*

*மின்னி அரசு பற்றி பழைய ஏற்பாட்டில் பேசப்படுவது இந்த ஒரே இடத்தில்தான். பாபிலோனை அழிக்க யாவேயால் அழைக் கப்பட்ட அரராத்து, அஸ்கனாசு போன்ற நாடுகளில் மின்னியும் ஒன்று. மின்னியை யும், மன்னேயனையும், ஆர்மேனியாவில் உள்ள மினியாவையும் தொடர்புபடுத்திப் பேசுகிறார் அறிஞர் ஒருவர். ஆனால், இஃது ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இல்லை.*

**மின்னித்து** *(MINNITH - பிரிவு)*

*அம்மோனின் புதல்வர்களோடு இப்தாகு போரிட்டு அவர்களின் 20 நகரங்களைப் பிடிக்க அவருடன் ஒத்துழைத்த ஒரு நகரத் தினரே இவர்கள் (நீதி 11:29-33). இஃது அமைந்த இடம் எதுவென்று தெளிவாகத் தெரியவில்லையெனினும், இது பாலஸ் தீனத்தின் கீழ்ப்பகுதியில் இன்றைய அம் மான் இருக்கும் இடமான இரபாவின் வடக்கு மற்றும் கிழக்குப் பகுதியில் இருந் திருக்க வேண்டுமெனக் கூறப்படுகிறது. எஸ்போனுக்கு வடகிழக்கே 7 கி.மீ. தொலைவில் அமைந்த ஒரு கிராமமே மின்னித்து என யுசேபியு குறிப்பிடுகிறார்.*

# மீ

**மீக்கா** (MICA - இறைவனைப் போன்றவர் யார்?)

1. மீக்கா, மிபிபொசேத்தின் மகனும், சவுலின் மகனான யோனத்தானின் பேரனும் ஆவார் (2 சாமு 9:12). யோனத்தானின் காரணமாக, மீக்காவும் அவரது தந்தையைப் போல் தாவீதின் அன்பைப் பெற்றார்; சீபாபின் கபட நாடகத்தால் தண்டிக்கவும் பட்டார் (16:1-4; 19:24-30). இவர் இஸ்ராயேலின் புகழ்வாய்ந்த குடும்பத்தின் தலைவராகவும், நான்கு மக்களின் தந்தையாகவும் குறிப்பிடப்படுகின்றார் (1 நாள் 8:34-35; 9:40-41).

2. மீக்கா ஆசாபின் குலத்தவரும் சிக்ரியின் மகனும் ஆவார் (1 நாள் 9:15). இவர், நாடுகடத்தப்பட்டுத் திரும்ப வந்தபின் நன்றிப்பாடல் இசைப்பதில் பொறுப்பாளராய் இருந்த மத்தனியாவின் தந்தையும் ஆவார் (நெகே 11:17; 12:8). எருசலேமில் லேவியரின் தலைவராயிருந்த உசீ (நெகே 11:22), எருசலேமின் சுவர்களை மீண்டும் அர்ப்பணித்தபோது எக்காளம் ஊதுபவராக இருந்த செக்கரியா (12:35) ஆகியவர்கள் மீக்காவின் வம்சத்தைச் சார்ந்தவர்கள்.

3. மீக்கா, நெகேமியாவின் காலத்தில் செய்த உடன்படிக்கையில் கையெழுத்திட்டவர்களில் ஒருவர் (நெகே 10:12).

**மீக்கா** (MICAH - யாவேயைப் போன்றவர் யார்?)

1. மீக்கா, நீதிபதிகள் காலத்தில் எப்பிராயிம் கோத்திரத்தைச் சார்ந்தவர் (நீதி 17-18). மீக்காவின் தாய், அவருக்கு 200 வெள்ளிக் காசுகள் கொடுத்து, அவரது வீட்டில் ஒரு புனித இடம் அமைக்க, ஒரு செதுக்கிய சிலையையும், வார்க்கப்பட்ட சிலையையும் செய்தாள்; மேலும், ''ஏபோதையும்'' ''தெராபீம்களையும்'' செய்தாள். மீக்கா தன் வீட்டில் அத்தேவதைகளுக்கு ஒரு கோவில் அமைத்தார். தன் புதல்வர்களில் ஒருவனை அர்ச்சகனாகவும் நியமித்தார் (17:1-5). பின்பு யூதாவின் பெத்லகேமிலிருந்து வந்த ஓர் இளைஞனுக்கு உணவு, உடை, உறைவிடம் கொடுத்து அவனைத் ''தந்தையாகவும், அர்ச்சகனாகவும்'' ஆக்கிக் கொண்டார் (17:7-12). தாண் கோத்திரத்தாருக்குச் சொந்தமாக நிலம் இல்லாததால் அவர்களில் ஐவர் தங்குவதற்கு இடம் தேடிக் கொண்டு எப்பிராயிமுக்கு வந்தனர். அங்கு லேவியன் இருப்பதை அறிந்து கொண்டபின் (18:1-4), 600 ஆட்களுடன் வந்து, லேவியனை அழைத்துக் கொண்டு இலாயிசுக்குப் போயினர். அப்போது அவர்கள் மீக்காவின் ஏபோத்தையும், தெராபீம்களையும், செதுக்கப்பட்ட சிலையையும் எடுத்துக் கொண்டு போயினர் (18:14-20). மீக்கா இதை எதிர்த்த போதும் அவரால் ஒன்றும் செய்யமுடியவில்லை (18:21-26). தாணியர்கள் இலாயிசைக் கைப்பற்றி அங்கு ஒரு புனித இடத்தில் சிலையை நிறுவினர். கெரிசோமின் யோனத்தானை அர்ச்சகனாக நியமித்தனர் (18:27-31).

2. மீக்கா ரூபன் வம்சத்தில் பிறந்தவர். சிமயியின் மகனும் இரயாயாவின் தந்தையும் ஆவார் (1 நாள் 5:5).

3. மீக்கா, மெரிபாகாலின் (மெபிபோசேத்தின்) மகன் (1 நாள் 8:34-35; 9:40-41; 2 சாமு 9:12).

4. தாவீதின் கடைசிக் காலத்தில் வாழ்ந்த ஒரு கோகாத்திய லேவியர். உசியேலின் புதல்வர்களுடைய தலைவர் (1 நாள் 23:20; 24:24-25).

5. இவர் அப்தோனின் தந்தை (2 நாள் 34:20). இவர் 2 அர 22:12-இல் மீக்காயா என்றழைக்கப்படுகிறார்.

6. இவர் மோரசேத்தைச் சேர்ந்தவர்; இறைவாக்கினர். இவருடைய இறைவாக்குகள் அவர் பெயர் கொண்ட நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. காண்க. மீக்கா திருநூல் - 3. வாழ்க்கை வரலாறு.

**மீக்கா திருநூல்** (MICAH, BOOK OF)

*1. முன்னுரை:* எசாயாவின் சம காலத்தவ ராகிய மீக்காவின் நூலுக்கு அறிமுகம் வழங்குகிறோம். எசாயாவைப் போல், மீக்காவும் கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் தென் அரசாகிய யூதாவுக்கு இறைவாக்குரைத்தார். நாட்டில் நிலவிய ஒரே சூழ்நிலையிலும், ஒழுக்கக் கேட்டிலும் இருவரும் போதித் தனர். ஆனால், அவர்கள் நோக்கிய கோணங்கள் வேறுபட்டன. எசாயா நகர வாசியாகவும், மீக்கா நாட்டுப்புற வாசியாக வும் நாட்டில் நிலவிய சமூகத்தீமைகளை நோக்கினர்.

**2. பெயர்:** மீக்கா என்ற பெயர் ''யாவே யைப்போல் யார்?'' என்ற பொருளுடைய ''மீக்காயாஹீ'' (mikayahe) என்ற சொல்லின் சுருக்கமாகும். நூல் முழுவதும் இப்பெயர் அறிவிக்கும் விசுவாச அறிக்கை பரவிக் கிடக்கிறது. அதன் விளைவாக, இறைவாக் கினரின் வாழ்க்கைக் குறிப்புகள் அவ்வளவு முக்கியமில்லாதவையாகக் கருதப்பட்டு, பின்னணிக்குத் தள்ளப்பட்டு, முழுவதும் மறைந்து போவது போல் தோன்றுகிறது. இஃது உண்மையான இறைவாக்குப் பணி யின் பண்பாகும். இறைவாக்கினரும் அவ ரது வார்த்தைகளும் முக்கியமானவை அல்ல. யாவேயும் அவரது வார்த்தைகளும் மட்டுமே முக்கியமானவை.

மீக்கா என்ற பெயரை விவிலிய கிரேக்க மொழியாக்கமாகிய எழுபது நூல், மிக்கே யஸ் என்று அழைத்தது. ஆகவே, மீக்கா வேறு; 1 அர 22-இல் வரும் இம்லாவின் மகனான மீக்காயா வேறு என்பதை நினை வில் கொள்ளுதல் இன்றியமையாதது.

**3. வாழ்க்கை வரலாறு:** மீக்கா யூதாவி லுள்ள மோரசேத்து என்ற நாட்டுப்புற ஊரில் தோன்றியவர். இந்த ஊர் ''காத்து'' அருகில், பெலிஸ்தியச் சமவெளியோரத்தி லுள்ள தாழ்ந்த பகுதியான செபேலாவில், எருசலேமுக்குத் தென்மேற்கில் 40 கி.மீ. தொலைவில் உள்ள ஒரு சிறிய நகரமாகும். பல நூற்றாண்டுகளுக்கு முன் சாலமோனின் மகனான ரெகபயாம் இவ்வூரை ஒரு கோட்டை நகரமாக மாற்றி அமைத்தான். நாட்டின் எல்லையிலிருந்த இவ்வூர், அன்னி யர் படையெடுப்பால் பெரிதும் பாதிக்கப் பட்டது. இது மீக்காவையும் பாதித்திருக்கக் கூடும்.

இதைத் தவிர, மீக்காவின் வாழ்க்கை, அவரது ஆட்தன்மை, அவர் இறைவாக்குப் பணிக்கு அழைக்கப்படுதல் ஆகியவை பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. அவரது தந்தையின் பெயர் கொடுக்கப்பட வில்லை. அவர், ஆமோசைப்போல், ஒரு சாதாரண கிராம வாசியாக இருந்திருக்க வேண்டும். அவரது எளிய நயமில்லாத நடையும், சொகுசான வாழ்வையும் பெரும் நகரங்களில் பரவியிருந்த இழிநிலையையும் அவர் தாக்குவதும் அவர் ஒடுக்கப்பட்ட விவசாயிகள், இடையர்கள் சமூகத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்று காட்டுகின் றன. நாட்டுப்புறத்தில் துன்புறும் மனிதனது நோக்கில், நாட்டின் அவல நிலையை அனுபவித்தவராக, சமய, சமூகத்தீமைகளை எடுத்துக் கூறிக் கண்டனம் செய்கிறார்.

இந்நூலில் காலக்குறிப்பு தெளிவாகக் கொடுக்கப்படவில்லை. ஆனால், மீக் *1:1*-இன்படி இவர் யோத்தாம் (கி.மு. *742-35*), ஆகாசு *(735-15)*, எசேக்கியா *(715-687)* ஆகிய அரசர்களின் ஆட்சிக் காலத்தில் போதித்தார். இதன்படி கி.மு. *742-687*-க்கு இடையிட்ட காலத்தில் மீக்கா இறைவாக்குரைத்திருக்க வேண்டும். ஆகவே, மீக்கா வட அரசில் போதித்த ஓசேயாவோடு ஓர் அளவு சமகாலத்தவர்; தென் அரசில் போதித்த எசாயாவோடு பெருமளவு சமகாலத்தவர். அவருக்குப் பின்னும் போதித்திருக்க வேண்டும் என்று எண்ண இடமிருக்கிறது. மீக்கா ஆகமம் எசாயா ஆகமத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது (*1:10-16*.-ஐ எசா *10:27-28*-ஓடும்; *2:1-5*-ஐ எசா *5:88*-ஓடும்; *4:1-5*-ஐ எசா *2:2-5*-ஓடும்; *5:9-14*-ஐ எசா *2:6-7*- ஓடும் ஒப்பிடுக). அதி. 2-இல் செல்வந்தர்களையும், அதி. 3-இல் இறை வாக்கினர்களையும், அர்ச்சகர்களையும், அவர்கள் தங்கள் கடமைகளைப் புறக்

கணிப்பதையும், அவர்களுடைய பேராசையையும், அதி. 5-இல் பிறஇன வழிபாட்டையும், *3:1-4:11*-இல் போலியான சமயப் பாதுகாப்பையும் மீக்கா தாக்குதல், இவை பற்றி எசாயா செய்யும் கண்டனத்தோடு ஒத்துப் போகிறது. இவையெல்லாம் மீக்கா எசாயாவை அறிந்திருக்க வேண்டும் என்றும் அவரது பாணியில் இறைவாக்குரைத்திருக்க வேண்டும் என்றும் காட்டுகின்றன. *1:2-7*-கி.மு. 721-இல் நடந்த நிகழ்ச்சியையும், *1:8-16*-கி.மு. 701-இல் நடந்த நிகழ்ச்சியையும் சுட்டுகின்றன. ஆகவே, இந்த இடைக்காலத்தில் மீக்கா போதித்தார் என்று உறுதியாகக் கூறலாம்.

மீக்கா, தனது வாழ்க்கையைப் பற்றியோ, அழைத்தலைப் பற்றியோ, ஆமோ 7; ஓசே 1-3 ஆகியவற்றில் காணப்படுவது போன்ற, எக்குறிப்பையும் கொடுக்கவில்லையானாலும், தன்னைப் பற்றி இருமுறை பேசுகிறார். ''நான் யாக்கோபுக்கு அவன் குற்றத்தையும், இஸ்ராயேலுக்கு அவன் பாவத்தையும் அறிவிக்க வல்லமையாலும், ஆண்டவரின் ஆவியாலும், நீதியாலும் ஆற்றலாலும் நிரப்பப்பட்டுள்ளேன்'' *(3:8)*; ''நானோ, ஆண்டவரை விழிப்புடன் நோக்கியிருப்பேன்; என்னை மீட்கும் என் கடவுளுக்காகக் காத்திருப்பேன். என் கடவுள் எனக்குச் செவிசாய்த்தருள்வார்'' *(7:7)*. இந்த இரு சுயவரலாற்றுக் குறிப்புகள் அவரது மன உறுதி மிக்க, ஆற்றல் மிக்க ஆட்தன்மையைக் காட்டுகின்றன. மேலும் இவை, இறைவாக்குரைக்க தம்மை இறைவன் அழைத்துள்ளார் என்று மீக்கா உறுதியாக உணர்ந்தார் என்றும், அதன் விளைவாக அச்சமில்லாது இறைவாக்குரைத்தார் என்றும் காட்டுகின்றன. போலி இறைவாக்கினர் இப்பண்புகளைக் கொண்டிருக்கவில்லை *(2:6-11; 3:5-7)*.

வட அரசின் மீது மிக விரைவில் வரவிருந்த அழிவு மீக்காவை மிகவும் பாதித்திருக்க வேண்டும். ஆகவே எசாயாவைப் போல், பேரழிவை எடுத்துக் காட்டும் முறையில் மீக்கா ஓலமிட்டுக் கதறி அழுதார்; வெறுங்காலோடும், ஆடையின்றியும் திரிந்தார் *(1:8)*. ஆகவே கி.மு. 722-க்கு முன்பே இறைவாக்கு ஆவி மீக்காவை ஆட்கொண்டிருக்க வேண்டும் *(3:8)*. இந்த அழைப்பு அவரது ஊராகிய மோரசேத்திலேயே நிகழ்ந்திருக்க வேண்டும். அசீரியர்கள் படை எடுத்தபோது எருசலேமுக்குச் சென்று, நாட்டின் இடுக்கண் நிலையை உணர்ந்தவராய்ப் போதிக்கத் தொடங்கினார். ஆளும் தலைவர்களின் ஊழலை எடுத்தியம்பினார்.

மீக்காவைப் பற்றிய மற்றொரு குறிப்பு எரேமியா ஆகமத்தில் காணக்கிடக்கிறது *(எரே 28:18-20)*. எருசலேமுக்கும் ஆலயத்துக்கும் எதிராக மீக்கா உரைத்த வாக்குகள், கி.மு. 715-701க்கு இடையில் எசேக்கியா செய்த சீர்திருத்தத்திற்குக் காரணமாயிற்று *(2 அர 18:3-6: 2 நாள் 29:8-11)*. அந்த அளவுக்கு அவரது போதகம் பயனுள்ளதும் முக்கியம் வாய்ந்ததும் என்று அறிகிறோம். எரேமியாவின் கூற்று, மீக்காவுக்கு எதிராக எழுந்த இயக்கம் *(2:6-8)* அவர் போதிப்பதைத் தடுக்க முடியவில்லை என்றும், அவர் தமது இறைவாக்குப் பணியில் ஓரளவு வெற்றி பெற்றார் என்றும் காட்டுகிறது. அவர் இறைவாக்குரைத்தலைத் தொழிலாகக் கொண்ட இறைவாக்கினர்களைத் தாக்குவது, அவர் அக்குழுவைச் சேர்ந்தவர் அல்லர் என்று காட்டுகிறது.

**4. வரலாற்றுப் பின்னணி:** ஊசியாவின் ஆட்சி உன்னத நிலையில் இருந்தது. அவனுக்குத் தொழு நோய் கண்டதால், அவனது மகன் யோத்தாம், தன் தந்தையின் பிரதிநிதியாக ஆட்சி செய்தான்; பின்பு அரசனானான். அவனது ஆட்சிக்காலமும் செழிப்பு மிக்கதாய் இருந்தது. அவன் பல கட்டடங்களைக் கட்டினான்; சில போர்களில் வெற்றி கண்டான். யோத்தாமின் மகன் ஆகாசு ஏறக்குறைய கி.மு. 735-இல் ஆட்சி செய்யத் தொடங்கினான். அப்போது இஸ்ராயேலும் யூதாவும் அஞ்சிய ஒரே அபாயம் அசீரியப் பேரரசின் படையெடுப்பாகும். அசீரியர்களின் தாக்குதலால் வட அரசாகிய இஸ்ராயேல் அழிந்து கொண்டிருந்தது. இந்தச் சூழ்நிலையில் மீக்கா தனது

இறைவாக்குப் பணியைத் தொடங்கினார் எனலாம்.

ஆமோஸ் இஸ்ராயேலுக்கு அளித்த செய்தி, நெருப்பைப்போல் சூடாகவும், இரும்பைப்போல் கடினமாகவும் இருந்தது. ஓசேயா, இஸ்ராயேல் மனந்திரும்ப வேண்டுமென்று அன்பு மொழியில் மன்றாடினார். இருவருக்கும் இஸ்ராயேல் செவிசாய்க்கவில்லை. ஆகவே, இறைவனின் நீதியின் கருவியாக, அசீரியா நாடு வடஅரசுக்கு எதிராக ஆயுதம் தாங்கி எழுந்தது. சீரியாவும் இஸ்ராயேலும் தாங்கள் அசீரியர்களுக்கு எதிராக அமைத்த எதிர்ப்புக் கூட்டணியில் சேரும்படி யூதாவை அழைத்தன. இதை ஆகாசு நிராகரித்தபோது, இஸ்ராயேலும் சீரியாவும் யூதாவுக்கு எதிராகப் போர் தொடுத்தன; ஆனால், வெற்றியடையவில்லை. இஃது ஆகாசின் ஆட்சியின் தொடக்கத்தில் கி.மு. 735-ஐ ஒட்டி நடந்தது எனலாம். இந்நிகழ்ச்சி பற்றிய விவரிப்பை எசா 7-இல் வாசித்தறியலாம். கி.மு. 732-இல் அசீரிய மன்னன் மூன்றாம் திகிலத் பிலேசர் சீரியாவை வென்றான். கி.மு. 722-இல் இரண்டாம் சார்கோன் என்ற அசீரிய மன்னன் வடஅரசின் தலைநகரமான சமாரியாவை அழித்தான் (*2 அர 17:1தொ*). அவனது நாளேட்டிலிருந்து அவன் சமாரியாவிலிருந்து 27,000 பேரை நாடு கடத்தியதாக அறிகிறோம். இப்பேரழிவுக்குச் சிறிது முன்பாக, மீக்கா தனது இறைவாக்குப் பணியைத் தொடங்கி, தனது செய்தியை வடஅரசுக்கு அளித்திருக்க வேண்டும்.

சமாரியாவின் வீழ்ச்சி யூதாவைப் பாதுகாப்பற்றதாக்கியது. யூதாவின் அரசன் ஆகாசு பலவீனமானவன்; அசீரியர்களுக்கு அடிபணிந்து சிற்றரசன் ஆனான். அவனுக்குப் பின் வந்த எசேக்கியா ஆற்றல் மிக்க சீர்திருத்தவாதியாகத் திகழ்ந்தான். யூதாவின் நல்ல அரசர்கள் சிலருள் எசேக்கியா ஒருவன். அசீரிய அடிமைத்தளையிலிருந்து விடுபட்டு, யூதாவின் சமய வழிபாட்டு முறையைச் சுத்தி செய்தான்; சீர்திருத்தினான். எரே *26:18-20*-இன்படி, இச்சீர்திருத்தம், மீக்காவின் போதனையின் விளைவாகும்.

கி.மு. 705-இல் சார்கோன் கொல்லப்பட்டான். அவனை அடுத்து சனகெரிபு அசீரியா நாட்டு அரசுக்கட்டில் ஏறினான். இவன் கி.மு. 701-இல் யூதாவின் மீது படையெடுத்தான்; அதில் வெற்றியடைந்தான்; ஆனால், எருசலேமைக் கைப்பற்றவில்லை. அனேகமாக, இக்காலத்தில் மீக்கா இறைவாக்குப் பணியைத் தொடர்ந்து செய்திருக்க வேண்டும் (*1:9-11.14*). இப்பொழுதோ, பத்து வருடங்களுக்குப் பின்போ இது போன்ற ஒரு சூழ்நிலையில் சனகெரிபு எருசலேமை முற்றுகையிட்டான். நாட்டின் நிலை யூதாவுக்கு நம்பிக்கையற்றதாக இருந்தது. ஆனால், ஒரு கொடிய நோயால் அசீரியர்கள் சிதறடிக்கப்பட்டனர். இவ்விடுதலை எசா *37:37-38*; 2 அர *19:35-36*- ஆகிய பகுதிகளில் சிறப்பித்துக் கூறப்படுகிறது. இந்தக் கொந்தளிப்பான அரசியல் பின்னணி, போர்ப் பின்னணியில் மீக்கா ஆகமத்தை வாசிக்க வேண்டும்.

ஆமோஸ், ஓசேயா ஆகியோர் காலத்தில் வடஅரசில் நிலவியதும், இவ்விரு இறைவாக்கினரால் கண்டனம் செய்யப்பட்டதுமான சமய, சமூக அவல நிலையே யூதாவிலும் நிலவியது (*1:9*).

**5. யார், எப்போது எழுதினார்?:** அழிவு பற்றி மீக் *1-3*-இல் வரும் பகுதிகள் மீக்காவினுடையது என்று எல்லா ஆய்வாளர்களும் ஏற்றுக்கொள்வர். இஃதோடு இந்நூல் முடிவடைந்து விடுவதாகச் சிலர் கருதுவர். மீட்புச் செய்தியை அளிக்கும் பகுதிகள் மீக்காவினுடையனவா என்று பலர் ஐயுறுவர்; ஏற்றுக்கொள்ள மறுப்பர். இவற்றில் சில பகுதிகளாவது மீக்காவினுடையன என்று இக்காலத்தில் ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்வர். இப்பகுதிகள் உண்மைத் தன்மையுடையனவா? மீக்காவின் போதனையைப் பிரதிபலிக்கின்றனவா? இப்பிரச்சனைக்கு *2:12-13; 4:6-7*-ஆகிய பகுதிகளுக்குரிய பகுப்பாராய்ச்சியில் ஓரளவு விடை காணலாம்.

பெரும்பாலான இறைவாக்கு நூல்கள், இறைவாக்கினர்களால் எழுதப்படவில்லை. அவை அவர்களுடைய சீடர்களின் ஆர்வத்தின் விளைவாகும். இறைவாக்குகள் முதலில் சிறு சிறு தொகுதிகளாகத் தொகுக்கப்பட்டு, பிற்காலத்தில் பெயர் தெரியாத பதிப்பாசிரியரால் திட்டம் செய்தோ, அவருக்குக் கிடைத்தவாறு அப்படியேயோ தொகுத்துப் பதிப்பிக்கப்பட்டன. இதில் இலக்கிய நோக்கு முக்கியத்துவம் பெறவில்லை; மாறாக, சமய நோக்கே சிறப்புப் பெற்றது. இப்படித் தொகுக்கப்பட்டவை வெறும் உயிரற்ற வார்த்தைகளை மட்டும் கொண்டிருக்கவில்லை; உயிருள்ள விசுவாசத்தைக் கொண்டிருந்தன; வழிபாட்டில் ஆர்வத்தோடு பயன்படுத்தப்பட்டன. வாழ்க்கைச் சூழ்நிலைக்கேற்ப, திருத்தி அமைத்தல் அவசியமாயிற்று. ஆனால், இதில் பதிப்பாசிரியர்கள் இறைவாக்கினரின் போதகத்தைப் பிரமாணிக்கமாய்க் காப்பாற்றினர் எனலாம்.

நாம் கொண்டிருக்கும் வடிவில் மீக்கா ஆகமம், நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய காலத்தைச் சேர்ந்த பெயர் தெரியாத ஒரு பதிப்பாசிரியருடைய வேலைப்பாடாகும். ஆகவே, மீக்கா எதையும் எழுதினாரா, அப்படி எழுதியிருந்தால் எதை எழுதினார் என்று உறுதியாகக் கூறுவது கடினம். இப்பிரச்சனையை எச்சரிக்கையோடு அணுக வேண்டும். ஏனெனில், இஃது ஒரு தீராத பிரச்சனையாகும்; ஆய்வாளர்களின் தொடர்ச்சியான அயரா உழைப்புக்குரியது.

மீக்கா ஆகமம் ஏறத்தாழ கி.மு. 200-இல் பதிப்பிக்கப்பட்டது என்பர் சிலர். இதை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. நூறு ஆண்டுகளுக்குப்பின், மீக்காவின் வாக்குகள் எரேமியாவுக்கு எதிராக எடுத்துக் கூறப்படுகின்றன (எரே 26:18-20). இவ்வாதம் மீக்காவின் நூல் ஏற்கெனவே வழக்கில் இருந்தது என்று உறுதியாக நிரூபிக்காவிட்டாலும், ஒரு முக்கியமான சான்றாகும். எடுத்துக் கூறப்படும் வாசகம் மீக்காவின் போக்குக்கு ஏற்றதாயுள்ளது. அதனால் இது, பாரம்பரிய வாசகத்தின் உண்மைத் தன்மைக்குச் சான்று பகர்கிறது.

***6. யாருக்காக எழுதப்பெற்றது?:*** *மீக்காவின் தூது முதன்மையாக யூதாவுக்கே உரியது. நூலின் பெரும்பகுதி யூதாவையே சாடுகிறது. ஆனால், மீக்கா இஸ்ராயேலர் மீது அக்கறை செலுத்தினார்; சமாரியாவை மிக விரைவாக நெருங்கி வரும் அழிவைப் பற்றி எச்சரித்தார் (1:5-7); அதன் சிலை வழிபாடு (1:7) அதனை முழுவதும் அழித்து விடும் என்று அறிவித்தார். கி.மு. 722-இல் அப்படியே நடந்தது. சமாரியாவின் வீழ்ச்சி, மீக்காவுடைய வாக்கின் மேன்மையை உணர்த்திற்று.*

*ஆமோஸ் இஸ்ராயேலுக்குச் செய்த பணியையே, மீக்கா யூதாவுக்குச் செய்தார் என்று நூலிலிருந்து அறிகிறோம். ஆமோசைப் போல் மீக்கா ஒளிவு மறைவு இன்றிப் பேசினார். ஆமோசின் பாணியில் சமூக அநீதிகளைத் தாக்கினார். ஆமோஸ் இஸ்ராயேலில் கண்ட அதே சமய் சமூகச் சிதைவு, யூதாவிலும் பரவிவிட்டதைக் கண்டார். இஃது இறைவனின் தீர்ப்பைக் கோரியது (2:3; 6:9-16). சிறிதும் விட்டுக் கொடுக்காத முறையில், யாவேயின் தீர்ப்பை எடுத்துரைக்கிறார் மீக்கா. அவர், ஆமோசையும் மிஞ்சி, இறைவன் அளிக்கவிருக்கும் தண்டனையைக் கடந்து, மெசியா வரவிருக்கும் எதிர்காலத்தை நோக்குகிறார். மெசியா வந்து யூதாவை மட்டுமின்றி, உலகநாடுகள் அனைத்தையும் ஆள்வார் (4-5).*

***7. இலக்கியச் சிறப்பு:*** *இந்நூலின் சிறப்புக்களில் ஒன்று அதன் அமைப்பாகும். இது கருத்து அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது; காலவரை அடிப்படையில் அன்று. இறைவழிபாட்டில் பயன்படுத்துவதற்காக இவ்வாறு அமைக்கப்பட்டிருக்கலாம். கேடுகளை, அழிவை அறிவிக்கும் அச்சுறுத்தல்களும், மீட்பை அறிவிக்கும் வாக்குறுதிகளும் சமன்படுத்து முறையில் மாறி மாறி வருகின்றன.*

*1:1-3:12* —கேடுகளை அறிவிக்கும் அச்சுறுத்தல்கள்.

*4:1-5:14* —மீட்பை அறிவிக்கும் வாக்குறுதிகள்.

*6:1-7:7* —கேடுகளை அறிவிக்கும் அச்சுறுத்தல்கள்.

*7:8-20* —மீட்பை அறிவிக்கும் வாக்குறுதிகள்.

அச்சுறுத்தல்களுக்கும், வாக்குறுதிகளுக்குமிடையே உள்ள வேறுபாடுகள் மிகவும் வலியுறுத்தப்படுகின்றன. இந்தச் சமன் செய்யும் செவ்வொழுங்கு, பதிப்பாசிரியருடைய வேலையாக இருக்கலாம்.

மீக்கா ஆகமத்தின் நடை எளியது; நாட்டுப்புற வாசனை உடையது; புலனீடான, கரடுமுரடான பேச்சுத்தன்மையுடையது. இதில் நகரம் பற்றி ஆசிரியர் கொண்ட ஐயம் வெளிப்படுகிறது. ஆசிரியர் உருவகங்களைப் பயன்படுத்துவதில் ஆர்வம் காட்டுகிறார். சொற்களைக் கொண்டு விளையாடுவதில் இன்பம் காண்கிறார்.

இந்நூலின் எபிரேய வாசகம் பெரும்பாலும் கரடுமுரடானது. இறைவாக்கு நூல்களில் ஓசேயாவுக்கு அடுத்தபடி, இந்நூல்தான் மிகவும் பழுதுபட்ட நிலையில் உள்ளது. பல இடங்களில் பொருள் தெளிவாக இல்லை. மொழி பெயர்க்கும்போது, ஆய்வாளர்கள் பல இடங்களில் மூல வாசகத்தை ஊகிக்க வேண்டியிருக்கிறது.

**8. அமைப்பு:** நூலின் திட்டம் எளியது. அதை அச்சுறுத்தல்கள் - வாக்குறுதிகள் அடிப்படையில் நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

I. யூதாவுக்கு எதிராக அழிவை அறிவிக்கும் இறைவாக்குகள் *(1-3)*.

*1:2-9:* சமாரியாவின் பாவங்களுக்காக அதன்மேல் வரவிருக்கும் அழிவை முன்னறிவிக்கிறது (கி.மு. 721-க்கு முந்தியது).

*1:10-16:* யூதாவுக்கு எதிரான இறைவாக்குகள், சமாரியாவுக்கு எதிரான தீர்ப்பு, எருசலேமுக்கு ஓர் எச்சரிக்கையாகும்.

*2:1-11:* யூதாவின் சமூக அநீதிகளுக்கு எதிரான இறைவாக்குகள், மீக்காவின் போதனைக்கு எதிர்ப்பு.

*2:12-13:* அழிவு பற்றிய இறைவாக்குகளுக்கிடையில் மீட்புப் பற்றிய இறைவாக்குகள். இஸ்ராயேலரின் ''எஞ்சியோரை'' மீண்டும் ஒன்று சேர்ப்பதை அறிவிக்கிறது.

*3:1-12:* நீதிபதிகள், இறைவாக்கினர்கள். ஆளும் தலைவர்களுக்கு எதிரான இறைவாக்குகள். இத்தலைவர்களின் குற்றங்கள் எருசலேமை அழிக்கும்.

II. புதிய இஸ்ராயேலின் மகிமை *(4-5)*.

*4:1-5:* புதிய எருசலேம் மகிமையோடு அமைக்கப்படும்.

*4:6-8:* சீயோனில் ஆண்டவர் ஆட்சி செய்தல்.

*4:9-10:* நாடு கடத்தப்படுதலும் திரும்புதலும்.

*4:11-14:* சீயோனின் எதிரிகள்.

*5:1-5:* விடுதலை அளிப்பவர் பெத்லகேமிலிருந்து தோன்றுவார்.

*5:6-8:* நாடு கடத்தப்பட்டவர்களுள் எஞ்சியோர்.

*5:9-14:* தண்டனைத் தீர்ப்பும் இஸ்ராயேல் சுத்தி செய்யப்படுதலும்.

III. இஸ்ராயேலுக்கு எதிராக ஆண்டவரின் வழக்கு *(6:1-7:7)*.

*6:1-2:* வழக்காட அழைப்பு.

*6:3-5:* யாவேயின் வழக்கு.

*6:6-8:* உண்மையான சமயம்.

*6:9-16:* சமூக அநீதிகளும் அவற்றிற்குரிய தண்டனையும்.

*7:1-7:* நாட்டில் நிலவிய அநீதி, பிரமாணிக்கமின்மைக்காக இறைவாக்கினர் புலம்புகிறார்.

IV. விசுவாசத்தின் வெற்றி *(7:8-20)*.

*7:8-10:* இஸ்ராயேல் தனது பாவங்களை அறிக்கையிடல்.

*7:11-13:* நாடு கடத்தப்பட்டோர் திரும்பு தல்; வாக்குறுதி.

*7:14-17:* யாவேயை நோக்கி மன்றாட்டு.

*7:18-20:* இஸ்ராயேல் மன்னிப்புக் கோரி மன்றாடுதல்.

**9. சிறப்புக் கருத்துக்கள்:-**

***அ. அழிவை அறிவிக்கும் இறைவாக்கினர்:*** மீக்காவின் காலம், யூதா இஸ்ராயேல் ஆகிய இருநாடுகளிலும் அரசியல் குழப்பமும் கொந்தளிப்பும் மிக்க காலமாகும். இந்நிலை, மக்களிடையே உன்னத உணர்வுகளைத் தட்டியெழுப்புவதற்குப் பதிலாக, அவர்களில் இழிவான உணர்ச்சிகளையே வெளிப்படுத்தியது. இறைவாக்கினர், மக்களின் ஒவ்வொரு பிரிவினரையும் ஆய்வு செய்து அவர்களது குற்றங்களை எடுத்துக் கூறிக் கண்டனம் செய்கிறார். ஏனெனில், யாவே அவர்களைச் சோதித்தார் *(1:2; 6:1தொ)*; அவர்களைக் குற்றமுள்ளவர்களாகக் கண்டார். அவர்களது சமயமும் ஒழுக்கமும் தூய்மை கெட்டு அழுகிப் போயிருந்தன. இந்நிலை இறைவனை வருத்தியது. இதை உணர்ந்த மீக்காவால் வாளாயிருக்க முடியவில்லை; வன்மையாகக் கண்டனம் செய்கிறார்.

தலைவர்கள் செல்வமும், செல்வாக்கும், அதிகாரமும், ஆட்பலமும் உடையவர்கள்; தங்களுக்குள்ளேயே பிளவுபட்டிருந்தனர்; எளியோரையும் ஏழைகளையும் துன்புறுத்தினர். பெரும் நிலக்கிழார்கள் சிறுகுடியானவர்களைக் கொடுமைப்படுத்தினர். அரசியல் அமைதியின்மை காரணமாக நாட்டில் பாதுகாப்பின்மை என்ற உணர்வு பரவியிருந்தது. பெண்களிடமும் சிறுவர்களிடமுமிருந்து வீடும், குடும்பமும் அபகரிக்கப்பட்டன *(2:9-10)*. ஒருவரும் மற்றவரை-தனது சொந்த மனைவியையோ, தந்தையையோ, மகனையோ கூட-நம்பவில்லை *(7:1-6)*.

பணம் படைத்த முதலாளிகள், மனம் இரங்கா வட்டிக்கடைக்காரர்கள், மோசடி செய்யும் வணிகர்கள், நாட்டில் மலிந்திருந்தனர் *(6:10-11)*. இவர்கள் இரவு முழுவதும் விழித்திருந்து அடுத்தநாள் செய்யப்போகும் பேராசைச் செயல்களைத் திட்டம் செய்யும் தீயோராவர் *(2:1)*.

நீதிபதிகளும் தலைவர்களும் மக்களுக்கு நீதி வழங்கவேண்டும். ஆனால், கைக்கூலி வாங்கிக் கொண்டு நீதியைத் திரித்துக் கூறினர் *(3-1-3.9-12)*. குருக்கள் புறச்சடங்கையே பெரிதும் வளர்த்தனர். சமய ஒழுக்க முறைகளை முழுவதும் புறக்கணித்தனர். பேராசை பிடித்த, சுய ஆதாயம் தேடும் பணப்பை உடைய இறைவாக்கினர்களை மீக்கா வெறுத்து ஒதுக்குகிறார். இவர்கள் தங்கள் வயிற்றை உணவாலும் பானத்தாலும் நிரப்பியவர்களுக்கும், பணம் கொடுத்தவர்களுக்கும் நல்ல செய்தி கூறுவர். இறைவனது செய்தியைத் திரித்துக் கூறுவர். புரட்டு செய்வர் *(2:11; 3:5-7; 11)*. ஆனால், இறைவனின் உண்மையான செய்தியைத் தேடவில்லை. இவர்கள் தேடியதெல்லாம் பணம் ஒன்றே.

இவ்வாறு மேற்கூறப்பட்ட யாவரும், இறைவனது சட்டம் கோரும் ஒழுக்க முறையைப் பற்றிக் கவலைப்படவில்லை. மக்களுக்குப் பாதுகாப்பாளர்களாகவும் வழிகாட்டுபவர்களாகவும் இருக்க வேண்டிய இவர்களே மக்களைச் சிறுமைப்படுத்தினர்; கொடுமைப்படுத்தினர். இவர்கள் பிறருக்கு மனிதத்தன்மையைக் காட்டவில்லை. இறைவனின் சாயலாகப் படைக்கப்பட்ட அயலானது ஆட்தன்மையை மதிக்க விரும்பவில்லை. இறைவாக்கினரின் சிந்தனையில் புனிதமானவற்றிற்கும், உலகியல் சார்ந்ததற்கும், சமயத்திற்கும், ஒழுக்கத்திற்கும் இடையே வேறுபாடு இல்லை. யாவும் ஒன்றே. இறைவன் நேர்மையுள்ளவராய் இருப்பதால் அவரது மக்கள் நேர்மையுள்ளவர்களாக இருக்க வேண்டும். அவர் பரிசுத்தராய் இருப்பதால் அவர்களும் பரிசுத்தராய் இருக்க வேண்டும். இறைவன் தமது மக்களுக்கு அன்பு செய்து அவர்களுக்கு வேண்டியதை அளிப்பது போல் அவர்களும் ஏழைகள், விதவைகள், அனாதைகள் அன்னியர்கள் ஆகியோரைப் பேண வேண்

டும். இது மோசே சட்டத்தின் முக்கிய கூறுகளில் ஒன்றாகும் (யாத் 22:21-24; உப 24:17-22). இக்கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாமை, இறைவனை வருத்துவதாகும்.

ஆகவே ஏழைகளைக் கொடுமைப்படுத்துதல், ஆளும் வர்க்கத்தினரின் ஊழல், எளியோரைச் சட்டம் என்ற இயந்திரத்தில் அரைத்து நசுக்குதல் ஆகிய சமூகத்தீமைகளுக்கு எதிராகப் போராடுகிறார் மீக்கா. அவரது இந்தப்போராட்டம் மனிதனது மேன்மையையோ, தனி நபர் என்ற அளவில் அவனது தனித்தன்மையையோ, உரிமைகளையோ அடிப்படையாகக் கொண்டதன்று; இறைமக்கள் பற்றிய மீக்காவின் கருத்தை அடிப்படையாகக் கொண்டது. இறைமக்கள் ஓர் அரசியல் - பொருளாதார சக்தியல்லர். அவர்கள் யாவேயால் தேர்ந்தெடுக்கப்பட்டு மீட்கப்பட்ட, தனிச்சலுகையால் அவரோடு சிறப்பான முறையில் ஒன்றிக்க அழைக்கப்பட்டவர்கள். இவ்வுண்மையிலிருந்து அவர்களது மீட்பராகிய யாவேக்குக் காட்ட வேண்டிய கடமையும், தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களிடையே நிலவ வேண்டிய மனித உறவும் தோன்றுகிறது. இக்கடமையும் உறவும் மீண்டும் அமைக்கப்பட மீக்கா போராடுகிறார்.

சமூக ஒழுக்கமுறை சீர்கெட்டிருந்தது போல், இஸ்ராயேலரிடையே சமய வாழ்வும் இழிவுபட்டிருந்தது. சிலை வழிபாடு பரவியிருந்தது. ''அதன் சிலைகளையெல்லாம் உடைத்துக் கற்குவியலாக்குவேன்'' (1:7). மீக்கா இஸ்ராயேலின் எல்லைக்கருகில் வாழ்ந்தவர். ஆன்மீக ஊழல் நிறைந்த வட அரசில் நிலவிய சிலை வழிபாட்டையும், சமயத்தின் பெயரால் செய்யப்பட்ட இழிசெயல்களையும் அறிந்திருந்தார். இதே நிலை யூதாவிலும் பரவியிருந்தது (1:9). இதற்காக இறைவன் யூதாவின் புனித இடங்களைத் தீர்ப்பிடுவது பற்றி எடுத்துக் கூறுகிறார். தீமைகளைக் கண்டனம் செய்து உடனடியாக வரவிருக்கும் அழிவை எடுத்துக்கூறி உண்மையான மனமாற்றத்தை மக்களிடமிருந்து அச்சமின்றிக் கோருகிறார்.

இப்படி மீக்கா கண்டனம் செய்வது, தன் சொந்த வாழ்வில் ஏற்பட்ட கசப்பாலோ, நாட்டு மக்களின் அற்பத்தனத்தின்பால் கொண்ட வெறுப்பாலோ அன்று; தான் பணியும் இறைவனது நீதி பற்றிய உண்மையான அறிவின் விளைவால்தான் (3:8). மக்களிடையே நிலவிய சிதைவுக்கு உண்மையான காரணம் அவர்கள் கொண்டிருந்த போலிச் சமயப் பாதுகாப்புத்தான் என்பதைத் தெளிவாகக் கண்டுணர்கிறார். இறைவனது பிரசன்னம் தங்களிடையே இருப்பதால் தீமைகளிலிருந்தும் கேடுகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும் என்று மக்கள் நம்பியதுதான் இந்தப் போலிச் சமயப் பாதுகாப்பு (3:11 தொ). இது மாயவித்தைத் தன்மையுடையது. இஃது இறைவன் கோரும் உண்மையான சமயத்தை (6:8) ஏற்றுக்கொள்ளும் உணர்வை மக்களிடையே மந்தமாக்கியது; அழித்தது. சமயம் உள்ளார்ந்ததாக இருக்க வேண்டும். செயலால் நிரூபிக்கப்பட வேண்டும். இறைவனை மையமாகக் கொண்டிருக்க வேண்டும். இவற்றிலிருந்து மீக்கா காலத்துச் சமய முறைகள் தவறிவிட்டன.

இறைவனது கோரிக்கைகளுக்கு நேர் மாறாகச் செயலாற்றும் தலைவர்களையும், வணிகர்களையும், நீதிபதிகளையும், அர்ச்சகர்களையும் மீக்கா வன்மையாகக் கண்டிக்கிறார். அவர்களது குற்றங்களுக்காக அவர்கள் மேல் வரவிருக்கும் தீர்ப்பையும் அழிவையும் வலியுறுத்துகிறார். அவர்களுடைய குற்றங்களுக்காக இறைவன் அவர்களைத் தீர்ப்பிடுவார்; தண்டிப்பார் (1:3-4). சமாரியா அழியும் (1:6-7); மீக்கா வாழ்ந்த சமவெளி நகரங்களும் (1:10-16) எருசலேமும் கூட (3:12) அழிவுக் குவியலாகும். இவை யாவற்றையும் யாவே செய்வார்.

சமூக, சமயத் தீமைகளைக் கண்டனம் செய்யும்போது இறைவனது சீற்றத்தையும் தீர்ப்பையும் மீக்கா வலியுறுத்துகிறார். ஆனால், இறைவனது இரக்கத்தைப் புறக்கணிக்கவில்லை. இறைவனது ''உடன்படிக்கை அன்பை,'' அன்பிரக்கத்தை எடுத்

துக்கூறுகிறார். இறைவனது இந்தப் பயன் கருதாத அன்பே உடன்படிக்கையின் ஊற்றும் உயிருமாகும். அதற்கேற்றவாறு, மக்களின் சமய, சமூக வாழ்வு ஒழுக்கமிக்கதாக இருக்கவேண்டும்.

***ஆ. மீட்புச் செய்தி - மெசியா:*** ஆமோசைப் போல், கண்டனங்களையும் தீர்ப்பையும் அழிவையும் மீக்கா போதித்தார். ஆனால், அஃதோடு நின்று விடவில்லை. ஆமோசையும் கடந்து சென்று, யாவேயின் ஆட்சியையும் சீயோனின் வெற்றியையும் முன்னோக்குகிறார் மீக்கா. நற்காலத்தை எதிர்பார்க்கும், அறிவிக்கும் பகுதிகள் இந்நூலில் நிறைய உண்டு. வருங்காலம் பற்றிய மீக்காவின் காட்சி, தாவீதோடு செய்த உடன்படிக்கை நிறைவேறுதலிலும், யாவேயின் திட்டம் இறுதியில் செயல்படுவதிலும் அவரது நம்பிக்கையை எடுத்துக்கூறுகிறது.

வரும் நற்காலத்தில் மக்கள் சிலைவழிபாட்டை விட்டு விடுவர். எருசலேமில் ஏற்புடைய உண்மையான வழிபாட்டை இறைவனுக்கு அளிப்பர் *(4:1-2)*. சமயப் பற்றுறுதி பெருகும் *(5:11-13)*. அக்காலத்தில் படையெடுப்பு, போர் ஆகியவை பற்றிய அச்சுறுத்தல் இராது. நாட்டில் அமைதி நிலவும் *(4:3-5)*. இஸ்ராயேலின் எதிரிகள் அவர்களுக்குரிய தண்டனை பெறுவர் *(4:11-13; 5:14; 6:10. 16-17)*. பாவங்களுக்கு அளிக்கப்பட்ட தண்டனையிலிருந்து தப்பிய, துன்பங்களால் சுத்தி செய்யப்பட்ட மக்களாகிய எளியோர், நாட்டிற்குத் திரும்பி வருவர் *(2:12; 4:7;5:6தொ)*. நாடு மீண்டும் அமைக்கப்படும் *(2:12தொ; 4:6-8. 10-13; 5:1-14; 7:8-20)*. மீக்கா காலத்திலிருந்து கடவுள் பற்றற்ற, பேராசை மிக்க, அகந்தையுள்ள, அநீதி மிக்க ஆளுபவர்களுக்குப் பதிலாக, நேர்மைமிக்க ஆளுபவர், ஆயரும் அரசருமாக, தாவீதின் குடும்பத்திலும் தாவீதின் நகரமான பெத்லகேமிலிருந்தும் தோன்றுவார் *(5:1-4)*. இந்த மகிமை மிக்க இறைவாக்கு கிறிஸ்து பிறப்பில் நிறைவேறும். இறைவன்து எஞ்சியோர் அவருக்குப் பிரமாணிக்கமாய் இருப்பர். அவரது தலைமையை ஏற்றுக்கொள்வர். சீயோனில் இறைவனது அரசு மகிமையோடு நிறுவப்படும்.

இந்த, நம்பிக்கையும் ஊக்கமும் ஊட்டும் பின்னணியில், இறைவனிடம் திரும்பி வருமாறு தனது கால மக்களை உருக்கத்தோடு வேண்டுகிறார் மீக்கா. இதை இறைவன் தமது மக்களோடு வழக்காடுவதாக எடுத்துக்கூறுகிறார். இறைவன் அவர்களைக் கைவிட்டதாலா, புறக்கணித்ததாலா, அவர்கள் பிற கடவுள்களிடம் சென்றனர் *(6:1-5)*? தமக்கு ஏற்புடைய வழிபாடு எது என்று அவர்களுக்கு இறைவன் போதிக்கவில்லையா? தங்களது அயலாரோடு நீதியோடு நடந்து இறைவனைப் பிரியப்படுத்துவதற்குப் பதிலாக, அவர்கள் நீதி நேர்மையற்றவர்களாகவும், ஏமாற்றுக்காரர்களாகவும் விளங்கினர் *(6:9-7:6)*. அவர்களைச் சுத்தி செய்யும் ஒரே வழி, அவர்களைத் தண்டிப்பதும் துன்புறுத்தலும் ஆகும். அது நாடுகடத்தலில் வரும் *(7:15-17)*. மீக்காவின் செய்தி, பழைய ஏற்பாட்டிலேயே உருக்கம் மிக்க ஒரு வேண்டுகோளில் உச்சநிலை அடைகிறது. மனத்துக்கம் கொள்ளும் அவர்களை இறைவன் மன்னிப்பார். அவர்களது பாவங்களை ஆழ்கடலில் தள்ளிவிடுவார். அவரது வாக்குறுதி ஒருபோதும் தவறாது *(7:18-20)*.

மீக்காவின் மீட்புச் செய்தி மற்றொரு முக்கிய கருத்தையும் கொண்டுள்ளது. மீட்பு யூதர்களுக்கு மட்டும் உரியதொன்று அன்று. அது யாவர்க்கும் உரியதாகும். இந்த விவிலிய உண்மையை மீக்கா, எசாயாவைப் பின்பற்றி (எசா 2:2-4), மக்கள் யாவர்க்கும் ஆண்டவரது வழிகளில் போதிக்கப்படும் வருங்காலத்தை *(மீக் 4:1-2)* அறிவிக்கிறார். இஃது ஆபிரகாமின் வழியாக எல்லா மக்களும் ஆசீர்வதிக்கப்படுவர் *(ஆதி 12:3)* என்று இறைவன் ஆபிரகாமுக்கு அளித்த வாக்குறுதியின் வளர்ச்சியாகும்.

***11. மீக்காவும் விவிலியத்தின் பிறநூல்களும்:*** விவிலியத்தில் மீக்கா ஆகமத்தின் செல்வாக்கு வரைக்குட்பட்டதே; ஆனால், நிலையானதாகும். ஆமோஸ், ஓசேயா,

எசாயா ஆகியோரை மீக்கா நன்கு அறிந் திருந்தார். அவர்களது போதகம் மீக்கா ஆகமத்தில் பிரதிபலிக்கிறது. எரேமியா காலத்தவர் மீக்காவை அறிந்திருந்தனர். மீக்காவின் கூற்றை எரேமியாவுக்கு எதிராக எடுத்துக்காட்டினர் *(எரே 26:18)*.

புதிய ஏற்பாட்டில், மத் *2:6;* யோவா *7:42* ஆகிய வாசகங்கள் எப்ராத்தா எனப் படும் பெத்லகேமில் மெசியா பிறப்பது பற்றிய மீக்காவின் வாசகத்தை *(மீக் 5:2)* எடுத்துக் கூறுகின்றன. மத் *10:35* தொ; லூக் *12:53* ஆகியவை மீக் *7:6*-இல் வரும் துன்பத்தைக் கிறிஸ்துவக் காலத்திற்குப் பொருத்திக் கூறுகின்றன.

***12. முடிவுரை:*** மீக்காவின் செய்தி இன் றும் மக்களுக்குப் பொருத்தமுடையது. நமது அலுவலகங்களில், தொழிற் கூடங் களில் நடப்பவை பற்றியும் இறைவன் அக்கறை கொள்கிறார் என்ற உண்மையை நாம் சில சமயம் மறந்து விடுகிறோம். நாம் நம் அயலாருக்கு எதிராகத் தீயன செய்யும்போது இறைவனையே வருத்து கிறோம், அவருக்கு எதிராகக் குற்றம் செய் கிறோம். நமது பாவங்களை நாம் நேர்மை யாய்ச் சிந்தித்து மனத்துக்கமடைந்து அவ ரது மன்னிப்பைப் பெற்று உய்வு பெற அவர் சில சமயம் கடுமையான நடவடிக் கைகள் எடுக்க வேண்டியிருக்கிறது. ஆனால், மனத்துக்கப்பட்டு அவரிடம் திரும்ப வரும்பொழுது மீட்பு உறுதியாக நம்மை ஆட்கொள்ளும். மீக்கா போதித்த உண்மையான சமயம் எக்காலத்திற்கும் உரியதாகும். ''ஓ! மானிடனே, நல்லது எது என அவர் உனக்குக் காட்டியிருக்கிறாரே! நேர்மையைக் கடைப்பிடித்தலையும், இரக் கம் கொள்வதில் நாட்டத்தையும், உன் கடவுளுக்கு முன்பாகத் தாழ்ச்சியோடு நடந்து கொள்வதையும் தவிர வேறு எதை ஆண்டவர் உன்னிடம் கேட்கிறார்?'' *(6:8)*.

***மீக்காயா*** (MICAIAH - யாவேயைப் போன்ற வர் யார்?)

1. இவர் இம்லாவின் மகன். ஆகாபு இஸ்ராயேலை ஆண்டபோது இறைவாக்கு உரைத்தவர் *(1 அர 22:8-28; 2 நாள் 18:7-27)*. இவர் ஆகாபின் ஆட்சியின்போது அரச னுக்கு எதிராகவே இறைவாக்குரைத்தார். ஒரு கட்டத்தில் ஆகாபு போருக்குச் செல்ல லாமென மற்றவர்களெல்லாம் கூற, இவர் தோல்வி, மரணம் ஆகிய அழிவுச் செய்தி யையே எடுத்துரைத்ததால் சிறை வைக்கப் பட்டார். ஆனால், அவர் உரைத்தபடியே ஆகாபு போரில் இறந்தான். இந்த இறை வாக்கு மூலம் மூன்று கருத்துக்கள் தெளிவா கின்றன. அன்று இஸ்ராயேலர் யாவே இறைவனைத் தன் அவையோரால் சூழப் பட்ட ஓர் அரசனாகவே கண்டனர். நல் லவை, தீயவை எது நடந்தாலும் அதற்குக் காரணம் இறைவனே எனக் கருதினர். மேலும், 'பொய் சொல்லும் ஆவி' இறை வனின் ஆவி எனப் பிரித்துப் பார்த்ததால், போலித்தீர்க்கதரிசிகள், இறைவனின் தீர்க்க தரிசிகள் எனும் பாகுபாடு ஏற்பட்டது.

2. இவர் அக்போரின் தந்தை *(2 அர 22:12)*. *2* நாள் *34:20*-இல் மீக்காயா மீக்கா என்றும், அக்போர் அப்தோன் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

3. இவர் யூதா அரசனான அபியாவின் தாயும், கிபயா ஊரானான உரியேலின் மகளும் ஆவார் *(2 நாள் 13:2)*.

4. யூதாவின் யோசபாத்து ஆட்சி செய்த காலத்தில் யூதத் தலைவர்களில் ஒருவர் *(2 நாள் 17:7)*. இவர் மற்றத் தலைவர்களோடு யூதாவின் நகரங்களுக்கு ஆண்டவனின் திருச்சட்டத்தை எடுத்துரைக்க அரசனால் அனுப்பப் பெற்றார்.

5. இவர் நெகேமியாவின் காலத்தில் வாழ்ந்த ஒரு குரு. மத்தனியாவின் தந்தை யும் செக்கரியாவின் முன்னோரும் ஆவார். எருசலேம் சுவர் அர்ப்பணிக்கப்பட்ட சடங் கில் பங்கெடுத்தார் *(நெகே 11:17.22; 12:35)*.

6. இவர் நெகேமியாவின் காலத்தில் வாழ்ந்த ஒரு குரு *(நெகே 12:41)*. எருசலே மின் மதிலை அர்ப்பணிக்கும் நாளில் அங்கு எக்காளம் ஊதிச்சென்றவர்களின் குழுவில் ஒருவராக இருந்தார்.

7. கெமாரியாவின் மகனும் சாபனின் பேரனுமான இவர் எரேமியாவின் சமகாலத்தில் வாழ்ந்தவர். யோயாக்கிம் அரசனின் ஐந்தாம் ஆண்டில், எரேமியா கூறிய வாக்குகள் அடங்கிய சுருளை நோன்பு நாளில் ஆலயத்தில் பாரூக்கு வாசித்ததை இவர் தலைவர்களிடம் அறிவித்தார் (எரே 36:11-13).

**மீக்கால்** (MICHAL - இறைவனைப் போன்றவர் யார்?)

சவுலின் இளைய புதல்வியே மீக்கால் (1 சாமு 14:49). இவள் தாவீதை அன்பு செய்வதை அறிந்து, அவன் நூறு பெலிஸ்தியர்களைக் கொன்று வந்தால் அவனுக்கு மணமுடித்து வைப்பதாகக் கூறினார் சவுல் (1 சாமு 18:20-25). ஆனால் தாவீது எதிர்பார்த்ததுக்கு எதிராக, இந்தச் சோதனையில் மக்களிடையே பிரபலம் பெற்றார்; மீக்காவை மணந்தார். இது சவுலின் பொறாமையைக் கொண்டு வந்தது. சவுல் அவரைக் கொல்லத் தேடும்போது மீக்கால் அவரைத் தப்பிக்கச் செய்தாள் (19:11-17). பின் சவுல் மீக்காலை இலாயிசின் மகன் பல்தியேலுக்கு மணம் முடித்துக் கொடுத்தார் (1 சாமு 25:44; 2 சாமு 3:15). பின்பு தாவீது அப்னேருடன் உடன்பாட்டுக்கு வருவதற்கு முன், மீக்காலைத் தன்னிடம் திருப்பி அனுப்பினால் மட்டுமே அவனுடன் நட்பும், ஒத்துழைப்பும் கொள்வதாகக் கூறினார். அவ்வாறே அப்னேர் செய்தார் (2 சாமு 3:13-16). எருசலேமுக்கு உடன்படிக்கையின் பேழை கொண்டு வரப்பட்டபோது தெருவில் தாவீது ஆடிய நடனத்தைப் பற்றி அவரிடம் கடிந்து பேசி, மீக்கால் அவனை நிராகரித்தாள். இதற்குப் பதிலாக சாகும்வரை தாவீது அவளுக்குக் குழந்தைப்பேறு அருளவேயில்லை (6:16-23).

2 சாமு 21:8-இல் வரும் மீக்கால், அவளுடைய மூத்த சகோதரியும் அதிரியேலின் மனைவியுமான மேராபாக இருக்க வேண்டும்.

**மீசியா** (MYSIA)

இது சிறிய ஆசியாவின் வடமேற்கில் உள்ள இடம். இதன் மேற்கில் ஆகியன் கடலும், வடக்கில் எல்லெஸ்போந்தும் புரோபோந்தும் கிழக்கில் பித்தினியாவும், பிரிகியாவும், தெற்கில் லீதியாவும் அமைந்துள்ளன. இது சிறிய ஆசியாவின் மற்றப் பகுதிகளைவிட நீர் வளம் குன்றிய பகுதியாகும். கி.மு. 133-இல் இப்பகுதி ஆசியாவில் உரோமை மாகாணத்தின் ஒரு பகுதியாக மாறியது. புதிய ஏற்பாட்டில் மீசியாவின் நகரங்களாகக் கூறப்பட்டுள்ளவை அலக்சாந்திரியா, துரோவா, ஆசோ, அஸ்ஸோஸ் அதிராமித்தியம் மற்றும் பெர்கமு ஆகியவையாகும்.

பவுல் மீசியாவிற்குச் செய்த முதல் பயணம் அ.ப. 16:6-11-இல் கூறப்பட்டுள்ளது. தேவ ஆவி அவரைத் தேவ வார்த்தையை ஆசியாவில் போதிக்காதபடி தடுக்கவே, அவர் மீசியாவின் எல்லைக்கு வந்தார். இயேசுவின் ஆவி தடை செய்ததால் மீசியாவைக் கடந்து துரோவா நகருக்கு வந்தபோது மாசிதோனியாவுக்குப் போகும்படி கனவில் அறிவிக்கப்பட்டார். இந்த மீசியாப் பகுதியில் சிலர் கிறிஸ்தவர்களாக மாறினர். பின்னர், இப்பகுதியில் நற்செய்திப்பணி செய்ய நல்ல வாய்ப்பு இருப்பதைக் கண்டார் (2 கொரி 2:12). இன்னும் பிற்காலத்தில் அங்குள்ள கிறிஸ்தவர்களைச் சந்திக்கச் சென்றார் (அ.ப. 20:5-14).

**மீட்பரின் உரையாடல்** (SAVIOR, DIALOGUE OF THE)

மறையியல் ஞானக் கோட்பாடுடைய முற்கால கிறிஸ்து சமயக் கிளையினரின் ஆய்வுக்கட்டுரை அண்டம் தோன்றியதைப் பற்றி இயேசுவும் அவருடைய சீடர்களும் உரையாடுவதாக அமைந்துள்ளது. இந்நூலின் பல ஏடுகளில் ஒன்று வடஎகிப்தில் 1946-இல் செனோபோஸ்கியோன் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

**மீட்பு, மீட்பர்** *(*REDEMPTION, REDEEMER*)*

I. இறைவன் தம் மக்களை விடுதலை செய்யும் அல்லது பணம் கொடுத்து விடுவிக்கும் ஆற்றலான மீட்பு என்ற கருத்தும், இதையொத்த கருத்தான அவர்களை விலை கொடுத்து வாங்கும் ஆற்றலான ஈட்டிக் கொள்ளுதலும் வீடுபேறு பெறுதல் என்ற கருத்தோடு விவிலியத்தில் நெருங்கிய தொடர்புடையன. இஸ்ராயேலை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்கும் பொருட்டும் *(யாத் 12:27; 14:13; காண்க. எசா 63:9)*, இஸ்ராயேலை ஒரு ''தனிச்சிறப்பான மக்களாக'' அமைக்கவும் *(யாத் 19:5; உப 26:18)* இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட சலுகை பெற்ற சாதனங்களாக இவை குறிக்கப்படுகின்றன. புதிய ஏற்பாட்டில் மூலஞான உபதேசத்தைப் பிரதிபலிக்கும் வாசகமான தீத் *2:14*தொ, கிறிஸ்துவின் செயலை விவரிக்கும்போது ஆசிரியர் சுட்டிக்காட்டும் மூலத்தைத் தெளிவாக வெளிப்படுத்துகிறது; ''நம்மை எல்லா அக்கிரமத்திலிருந்தும் மீட்டு, நம்மைத் தூயவர்களாக்கித் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்கிறார்'' என்ற அளவில் இயேசு மீட்பராவார். இவ்வாறு கடவுளின் மீட்புத் திட்டம் தொடர்ச்சியாக நிறைவேறி வருகிறது. இதில் புதியதும் எதிர்பாராததுமாய் இருப்பவை ஒவ்வொரு உண்மையான இறைவாக்கும் நிறைவேறுவதை எவ்வழியிலும் தடை செய்வதில்லை.

II. **பழைய ஏற்பாடு:**

**1. விடுதலைப் பயணமும் உடன்படிக்கையும்:** விடுதலைப் பயணத்தின் தொடர்பில் தான் பழைய ஏற்பாடு மீட்பைப் பற்றி அடிக்கடி பேசுகிறது. இஸ்ராயேல் அனுபவித்த இந்தச் சமய அனுபவம் மீட்பு என்பதின் பொருளைப் புரிந்து கொள்ள வாய்ப்பளிக்கிறது. ஏனெனில், யூத சமய சமூக உணர்வில் விடுதலைப்பயணம் உடன்படிக்கையிலிருந்து பிரிக்க முடியாதது. இறைவன், மக்களைத் தம்மோடு சேர்த்துக் கொள்ளவே, அவர்களை அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தார்; ''நானே ஆண்டவர்... உங்களை அடிமைப்படுத்துவதிலிருந்து விடுவிப்பேன். ஓங்கிய கையாலும் மாபெரும் தீர்ப்புகளாலும் நான் உங்களுக்கு மீட்பளிப்பேன். உங்களை நான் என் மக்களாகத் தெரிந்தெடுப்பேன். உங்களுக்குக் கடவுளாக நான் இருப்பேன்'' *(யாத் 6:6-7; காண்க. 2 சாமு 7:23தொ)*. இந்த உடன்படிக்கையினால், இஸ்ராயேல், ''தூய மக்களினமாகவும்,'' ''யாவேக்கு அர்ப்பணிக்கப்பட்டவர்களாகவும்,'' ''இறைவனுடைய சொந்த மக்களாகவும்'' மாறினர் *(யாத் 19:5-6)*. தூய மக்கள், யாவேயால் மீட்கப்பட்டவர்கள் என்ற இரு சொற்றொடரும் சம பொருளுடையவையாகும். *(எசா 62:11தொ)*. ''அவர்களை எகிப்து நாட்டினின்று விடுவிப்பதற்காக, அவர்களை இறைவன் கைப்பிடித்து நடத்தி வந்த'' நாளிலிருந்து உடன்படிக்கைக்கு எரேமியா காலம் குறிக்கிறார் *(எரே 31:31)*.

இவ்வாறு மீட்பு என்ற கருத்து நேர்தன்மையுடையதாகும். பாவ அடிமைத்தனத்திலிருந்து விடுதலையைப்போல இறைவனோடு ஒன்றிப்பும் உறுதிப்படுத்தப்படுகிறது. மேலும், ஒன்றிப்பையும் ஒப்புரவையும் அது மூலப்பொருளாகக் கொண்டுள்ளது.

***2. மெசியாவின் மீட்பு:*** நாடு கடத்தப்பட்டதிலிருந்து விடுதலை பெறுவதை உணர்த்த இறைவாக்கினர்கள் அதே வாய்பாட்டை விரும்பிப் பயன்படுத்துகின்றனர். இதற்கேற்றவாறு, குறிப்பாக இரண்டாம் எசாயாவில் மீட்பர் என்பது யாவேயின் மிக அன்புக்குரிய பட்டங்களில் ஒன்றாகிறது. இதனால்தான் பெரும் மெசிய நம்பிக்கைகள் எல்லாம் மீட்பு என்ற சொல்லால் எடுத்துக் கூறப்படுகின்றன என்பது வியப்பைத் தர வேண்டியதில்லை. ''பேரன்பு ஆண்டவரிடமே உள்ளது! அவரிடமே மிகுதியான மீட்பும் உண்டு. அவரே இஸ்ராயேலரை அவர்களுடைய எல்லாத் தீவினைகளிலிருந்தும் மீட்பார்'' *(சங் 130:7-8)*. மற்றவர்களையெல்லாம் விட, பாவிகளுக்கு அளிக்கப்படும் அத்தகைய மீட்பின் முழு இலவசத்தன்மையை எசேக்கியேல் வலியுறுத்துகிறார் *(எசே 16:60-63; 36:21* தொ). இதற்கப்பால், புதிய உடன்

படிக்கையின் தன்மையைத் தெளிவாக்கு கிறார். எரே *31:32*-இல் ''என் சட்டத்தை அவர்கள் உள்ளத்தில் பதிப்பேன்'' என்று கூறும் யாவே, எசே *36:27*-இல் ''என் ஆவியை உங்களுக்குள் புகுத்துவேன்'' என் றும் கூறுகிறார். மீட்பு, சட்டத்தின் இடத் தில், யாவேயின் சொந்த ஆவியை அளிப் பதில் அடங்கியுள்ளது (காண்க. யோவா *1:17.29.33; 7:37*தொ; உரோ *8:2-4*).

**III. புதிய ஏற்பாடு:**

**1. பழைய ஏற்பாட்டின் தொடர்ச்சி:** இந்த மெசியாச் சூழ்நிலை பற்றிய குறிப்பு சில இடங்களில் வெளிப்படையாக உள்ளது. செக்கரியா ''அவர் தம் மக்களைத் தேடி வந்து விடுவித்தருளினார்'' என்று இறை வனைப் போற்றுகிறார் (லூக் *1:68*). ''எருச லேமின் மீட்புக்காகக் காத்திருந்த யாவரிட மும்'' இறைவாக்கினள் அன்னா இயேசு குழந்தையைப் பற்றிப் பேசினாள் (*2:38*). பழைய ஏற்பாட்டிலிருந்து வரும் மெசி யாவைப் பற்றிய சொற்களில் பெரும்பா லானவை கிறிஸ்துவின் முதல் வரு கைக்கோ, இரண்டாம் வருகைக்கோ சாற்றிக் கூறப்படலாம். அதே போன்று மீட்பு என்னும் சொல், கல்வாரியில் கிறிஸ் துவால் நிகழ்த்தப்பட்ட செயலைக் குறிக்க மட்டும் பயன்படவில்லை. அதே அளவில் காலமுடிவில் அவர் நிகழ்த்தப் போவதற் கும் சாற்றிக் கூறப்படலாம். அதன் விளை வாக இரண்டாம் வருகைக்கும், உடலின் மகிமை மிக்க உயிர்ப்புக்கும் சாற்றிக் கூறப்படலாம் (லூக் *21:28*; உரோ *8:28*; எபே *1:14; 4:30*; ஒருவேளை 1 கொரி *1:30*). இரண்டு வருகையிலும் விடுதலை உண்டு, மீட்பு உண்டு. இவற்றைவிட அஃது இறைவனால் சேர்த்துக் கொள்ளு தலும், உடைமையாக்கிக் கொள்ளுதலு மாகும். அப்போது உடலும் ஆன்மாவும் கொண்ட மனிதன், அவனோடு படைப் பனைத்தும் ''கடவுளுடைய முழு நிறை வால் நிரப்பப்படுவர்'' (எபே *3:19*); ''கட வுளே அனைத்திலும் அனைத்துமாய் இருப் பார்'' (1 கொரி*15:28*); ''படைப்பு முழுவ தும் அவரால் நிறைவாக்கப்பெறும்'' (எபே *1:23*).

இதனால்தான் புதிய ஏற்பாடு இதே கருத்தை ''விலை கொடுத்து வாங்கப்பெறு தல்'' என்ற சொற்றொடரால் எடுத்துக்கூற முடிகிறது (1 கொரி *6:20; 7:23*; காண்க. கலா *3:13; 4:5*). நடுநிலை நேர்மைச் சட்டத்தாலோ, பரிமாற்ற நீதிச்சட்டத் தாலோ ஒழுங்கு செய்யப்படும் வியாபாரத் தொழில் நடைமுறையில் ஈடுபடுபவர் தான் இழப்புறுவதில்லை என்ற ஒரே நிபந்தனையின் பேரில் சிறைக்காவல் கைதியை விடுவிக்கிறார். வியாபாரி தனது பொருட்களை விற்கிறார். ''விலை கொடுத்து வாங்கப்பெறுதல்'' என்ற சொற் றொடரைப் பயன்படுத்தும்போது, புதிய ஏற்பாட்டு ஆசிரியர் மீட்பை மேற்கூறப் பட்ட வியாபாரத்தொழில் நடைமுறை யோடு ஒன்றிணைக்க விரும்பவில்லை. ஆனால் இச்சொற்றொடர், நிபந்தனைகள் எல்லாம் நிறைவேற்றப்பட்ட ஓர் உடன் படிக்கையின் விளைவாக நாம் கடவுளின் உடைமையாக மாறவிட்டோம் என்பதை ஐயமற உணர்த்துகிறது. கொடுக்கப்பட்ட விலை என்ற ஒரு சிறப்பான நிபந்தனை எப்போதும் சுட்டிக்காட்டப்படுகிறது (1 கொரி *6:20; 7:23*; காண்க. 1 பேதுரு *1:18*). ஆனால், உருவகம் இந்த அளவிலேயே நின்று விடுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். விலைகொடுத்தலைக் கோரும் அல்லது ஏற்கும் ஆள் பற்றிய பிரச்சனை இங்கு ஒருபோதும் இல்லை. இவ்வாறு இந்த நோக்கிலும், பழைய ஏற்பாடு பழக் கப்பட்டிருந்த விலை கொடுத்து வாங்குதல் என்ற கருத்தைப் புதிய ஏற்பாடு செயலுருப் படுத்துவதாகத் தோன்றுகிறது. மற்றவை எப்படியிருப்பினும், திருவெளிப்பாட்டு நூல் விலை கொடுத்து வாங்குதல் என்ற சொற்றொடரைப் பயன்படுத்தும்போது சீனாய் உடன்படிக்கையை வெளிப்படை யாகச் சுட்டிக்காட்டுகிறது. முற்காலத்தில் உடன்படிக்கையின் விளைவாக இறைவ னுடைய உடைமையாகியதுபோல், செம் மறியின் இரத்தத்தில் எல்லா மக்களினங் களும் இறைவனுடைய தனிச்சிறப்பான உடைமையாகின்றன. இரண்டும் இரத்தத் தில் முத்திரையிடப்படுகின்றன (திருவெளி

*5:9)*. இதே உண்மையை நினைவுகூரும் போது, *அ.ப. 20:28,* இச்சொற்றொடரைப் பழைய ஏற்பாட்டுக்கு உரிய முறையில் பயன்படுத்தி, ''கடவுள் தமது இரத்தத்தி னால் சொந்தமாக்கிக் கொண்ட இறைவ னுடைய திருச்சபையைப் பற்றிப்'' பேசு கிறது *(காண்க. 1 பேதுரு 2:9; தீத் 2:14).*

மேலும், இந்த விளக்கம் கிறிஸ்துவை நோக்கித் தடம் கண்டுபிடிக்கத் தக்கது. விரும்பித்தேர்ந்தெடுக்கப்பட்ட பாஸ்குச் சூழ்நிலையையும் உடன்படிக்கை இரத் தத்தை வெளிப்படையாகச் சுட்டிக்காட்டு தலும் இதில் நாம் தவறு செய்ய முடியாது என்பதைப் போதிய அளவு தெளிவாக்கு கின்றன *(மத் 26:28 இணை; 1 கொரி 11:25).*

***2. கிறிஸ்துவின் விரும்பி முன்வந்து ஏற்ற மரணம்:*** மாதிரியையும் அதன் நிறைவேற்ற லையும் பிரிக்கும் இடைவெளியைப் புதிய ஏற்பாடு தெளிவாக வரைபடம் செய்கிறது. பழையதைப் போன்று புதிய உடன்படிக் கையும் இரத்தத்தில் முத்திரையிடப்படு கிறது. ஆனால், புதிய உடன்படிக்கையின் இரத்தம் இறைவனது ஒரே மகனுடையதா கும் *(1 பேதுரு 1:18தொ; எபி 9:12; காண்க. அ.ப. 20:28; உரோ 3:25).*

***விலைமதிப்பற்ற மீட்பு:*** அறிவற்ற விலங் குகளின் பலிகளை யாவேயின் ஊழிய னுடைய சுயமான விரும்பி ஏற்ற பலி பின் தொடர்கிறது. அவர் ''தன்னையே சாவுக்குக் கையளித்தார்'' *(எசா 53:13),* ''தமது அறிவால் பலரை நீதிமானாக்கினார்'' *(53:11).* இயேசு ''தொண்டு ஏற்பதற்கு அன்று; மாறாகத் தொண்டு ஆற்றுவதற்கும் பலருடைய மீட்புக்கு ஈடாகத் தம் உயிரைக் கொடுப்பதற்கும் வந்தார்'' *(மத் 20:28; மாற் 10:45).* அவரது பலி நமது விடுதலையின் கருவியாகும். கிறிஸ்துவினுடைய சாவின் இந்த விரும்பி ஏற்கும் பண்பைத்தான் பாடுகள் பற்றிய யோவானின் விவரிப்பு நன்கு புலப்படுத்துகிறது *(எ.சா. யோவா 18:48).* இதைவிடத் தெளிவாகக் கூறக்கூடு மெனில், கிறிஸ்து தனது சாவுக்குத் தன்னை முன்னதாகவே அர்ப்பணிக்கும் நற்கருணை விருந்து பற்றிய ஒத்தமை நற்செய்திகளின் விவரிப்பில், கிறிஸ்துவின் விரும்பி ஏற்கும் துன்பம். என்ற அதே கருத்து வலியுறுத்தப் படுகிறது.

**3. சாவின் மீது கிறிஸ்துவின் வெற்றி:** கிறிஸ்துவின் சீடர்களுக்கு அவரது சாவு ஓர் இடறலாகியது; அவர்தான் எதிர்பார்க் கப்பட்ட மீட்பர் அல்லர் என்பதற்குச் சான்றாயிற்று *(லூக் 24:21).* அவர்களது மனம் உயிர்ப்பு மற்றும் ஐம்பதாம் நாள் விழா அனுபவத்தால் ஒளியூட்டப்பட்டும், உயிர்ப்புக்குச் சாட்சிகளாகிய பின்னும் *(அ.ப. 1:8; 2:31தொ),* அவர்களுடைய போதகரின் பாடுகளும் சாவும், இறைவனது மீட்புத் திட்டத்திற்கு ஒரு தடையாக இல் லாமல், மறைநூலில் உள்ளபடி அதை நிறைவேற்றின என்று புரிந்து கொண்டனர் *(1 கொரி 15:4).* ''வீடு கட்டுவோரால் விலக்கப்பட்ட கல் மூலைக்கல்லாக'' *(அ.ப. 4:11; சங் 118:22; 1பேதுரு 2:7),* புதிய ஆலயத்தில் அடிப்படையாக *(மத் 21:42)* ஆயிற்று. எசா 52:13 என்ற வாசகச் சொற்களில் ஊழியர் உண்மையிலேயே உயர்த்தப்பட்டார் *(அ.ப. 2:33; 5:31);* மகிமைப்படுத்தப்பட்டார் *(3:13).* இன்னும் அதிகமாக அவர் தன்னையே சாவுக்குக் கையளிக்கும் பொருட்டு ஊழியன் ஆனார் *(எசா 53:12; பிலி 2:8).* தோல்வியாகத் தோன்றிய கிறிஸ்துவின் சாவு, சாவின் மேலும், சாவின் காரணனான சாத்தான் மேலும் உண்மையில் வெற்றியாகும் *(யோவா 12:31தொ; காண்க. எபி 2:14).*

**4. சாவும் உயிர்ப்பும்:** மீட்பு மறை பொருள் பற்றிய தொடக்கப் போதகத்தில், உயிர்ப்பு இரண்டாம் தர பாகத்தைத்தான் கொண்டிருந்தது. இரண்டாம் வருகையின் தொடர்பில் *(1 தெச 1:10),* உயிர்ப்பு சில சமயங்களில் குறிப்பிடப்படுகிறது *(எ.கா. 1 பேதுரு 1:3).* ஆனால் பரிசுத்த ஆவியால் வழிகாட்டப்பட்டு, பாடுகள் மற்றும் சாவு ஒருபுறமும், உயிர்ப்பு மற்றும் விண்ணேற் றம் மறுபுறமுமாய் அமைவதை அப்போஸ் தலர் தேர்ந்து தெளியத் தொடங்கினர். நிகழ்ச்சிகளின் இந்த இரு தொகுப்பும்

ஒன்றொடொன்று தொடர்புடையன மட்டு மல்ல (எ.கா. பிலி 2:9). ஆனால், அவை எவ்வளவு ஒன்றொடொன்று ஊடுருவிப் பிணைந்துள்ளன என்றால், அவை மீட்பு எனும் தனிச்சிறப்பான மறையுண்மையின் இரு பிரிக்க முடியாத பண்புக்கூறுகளாக அமைந்துள்ளன.

இவ்வாறு விண்ணேற்ற முன்னோக்கில், இயேசு எருசலேமை நோக்கிச் செய்யும் நீண்ட பயணத்தின் விவரிப்பை எடுத்துக் கூற லூக்கா கவனமாய் உள்ளார் (லூக் *9:51*). அதை நிறைவு செய்யும் விதத்தில் கிறிஸ்துவின் மகிமை மிக்க வாழ்வை விவரிக்கும்போது, அவரது பாடுகளையும் சாவையும் வேண்டுமென்றே வலியுறுத்து வதையும் லூக்கா நினைவுபடுத்துகிறார் (*24:7.26.39.46*; காண்க. *9:31*). இதேபோல், பவுல் சாவைப் பற்றிக் கூறாதபோதும், உயிர்ப்பைப் பற்றிக் கூறுவதைத் தவிர்ப்ப தில்லை. அவர் அடிக்கடி சுட்டிக்காட்டும் வாழ்வு உயிர்த்த கிறிஸ்துவின் வாழ்வில் பங்கு கொள்ளுதலாக எப்போதும் கருதப் படுகிறது (எ.கா. கலா *2:20*; *6:14*தொ; உரோ *6:4.11*; *8:25*). இறுதியாக, யோவானில், மூல ஞான உபதேசத்தில் இயேசுவின் உயிர்ப்பைக் குறிக்கும் சொற்கள் கிறிஸ்து வின் பாடுகள் மற்றும் மகிமை ஆகிய இரண்டிற்கும் சாற்றிக் கூறப்படுகின்றன (யோவா *12:23.32.34*). மேலும், பத்முவின் காட்சியாளருக்குத் தோன்றும் திருவெளிப் பாட்டின் செம்மறி உயிர்ப்புக்குச் சான்று கூறும் விதத்தில் உயிருள்ளதாயும், ஆயி னும் பலியின் அடையாளமாகக் கொல்லப் பட்டதாயும் தோன்றுகிறது (திருவெளி *5:6*).

**5. அன்பின் மறைபொருள்:**

**அ) யோவான்:** இவரைப் பொருத்தமட் டும், மீட்பின் மறைபொருள் தன்மையாலே அன்பின் மறைபொருளாகும்; ஆகவே, இறைவாழ்வின் மறைபொருளாகும். ஏனெ னில், அன்பே கடவுள் (*1* யோவா *4:8*). அது, ''தன் மகனையே அளிக்கும் அள வுக்கு உலகின்மேல் அன்பு கூர்ந்த'' (யோவா *3:16*; *17:23*; *1* யோவா *4:9*) தந்தையின் அன்பாகும் என்பது உறுதி. அதே போன்று அது மகன் தந்தைக்கும் (யோவா *14:31*), மனிதர்க்கும் (*10:11*; *1* யோவா *3:16*; திருவெளி *1:5*) காட்டும் அன்பாகும். அது தந்தையிடமிருந்து மகன் பெறும் அன்பாகும். மகன் எல்லாவற்றிற் கும் தந்தையையே சார்ந்துள்ளார். ஆகவே, அது ''கீழ்ப்படிதலுள்ள'' அன்பாகும் (யோவா *14:31*). இறுதியாக, அதைவிடப் பெரிய அன்பில்லை (*15:13*). ஏனெனில், கிறிஸ்துவின் வாழ்வு முழுவதும் ''அவரைச் சார்ந்தோர் மேல்'' காட்டிய அன்பானால், பாடுகள் ''அவர்கள்மேல் இறுதிவரையும் அவர் அன்பு செலுத்திய'' நேரமாகும்; அவரது முழுநிறைவு வரை செலுத்திய நேரமாகும் (*13:1*). செயலள வில், பன்னிருவரில் ஒருவர் தன்னைக் காட்டிக் கொடுக்கவும் (*18:2*தொ), அவரது குழுவின் தலைவரால் மறுதலிக்கப்படவும் (*18:25*தொ), சட்டத்தின் பெயரால் இறைநிந் தனை செய்தவராகத் தீர்ப்பிடப்படவும் (*19:7*), மிகவும் இழிவான சாவுக்கு உட்பட வும், அதுவும் சிலுவைச் சாவுக்கு உட்பட வும் (*19:31*) தன்னையே கையளித்தார். இந்த நேரத்தில்தான் அவர் ''எல்லாம் நிறைவேறிற்று'' என்று உண்மையிலேயே கூறமுடியும் (*19:30*). மறைநூலில் வெளிப் படுத்தப்பட்டு இயேசுவின் மனித இதயத் தில் மனு உரு எடுத்த தந்தையின் அன்பை உன்னதமான முறையில் செயல்படுத்துவதா கும். அன்பின் பொருட்டு அவர் மரித்தால், அஃது அந்த அன்பை மனிதர்க்கு, அவரது சகோதரர்களுக்கு அளிப்பதற்காகவே. குத்தித் திறக்கப்பட்ட விலாவிலிருந்து (*19:37*; செக் *12:10*), ''பாவத்தையும் தீட்டை யும் நீக்கித் தூய்மையாக்கும் நீரூற்று தாவீ தின் குடும்பத்தாருக்கெனவும் எருசலேமில் குடியிருப்போருக்கெனவும் தோன்றுவதாக'' (செக் *13:1*; காண்க. எசே *47:1*தொ) யோவான் காண்கிறார். இது திருமுழுக்கின் போது ''மெசியாவின்மேல் இறங்கித் தங்கிய தாக'' (யோவா *1:32*தொ) திருமுழுக்கு யோவான் கண்ட ஆவி பொழியப்படுவ தின் (*20:22*) பீடிகையாகும்.

***ஆ) பவுல்:*** இந்நோக்கு பவுலில் தெளிவாக உள்ளது. அவரும் கிறிஸ்துவின் மரணத்தில் முதலில் அன்பின் மறை பொருளைக் காண்கிறார். ''நாம் பாவிகளாய் இருந்தபோதே'' (*உரோ 5:8*) அவரது பகைவர்களாய் இருந்தும் (*5:10*) தந்தை நம்மீது கொண்டுள்ள அன்பை எண்பித்தார் (*உரோ 5:5-8; 8:39; எபே 1:3-6; 2:4; காண்க. கொலோ 1:13*). ஒருபுறம், கீழ்ப்படிதல் வழியாகத் தந்தைபால் மகன் கொண்டுள்ள அன்பையும், அதன் விளைவாக முதல் ஆதாமின் கீழ்ப்படியாமையைச் சீர்ப்படுத்தியதையும் (*உரோ 5:19; பிலி 2:6*), அதேபோல் மக்கள்பாலுள்ள மகனது அன்பையும் (*உரோ 5:8 தொ; 8:34*) பவுல் காண்கிறார். இதைப் பொருத்தமட்டும் பவுல் மூல ஞான உபதேச வாய்பாட்டை மட்டும் (*காண்க. மாற் 10:45*) பயன்படுத்தவில்லை; எசா 53:10.12 என்ற வாசகத்தால் தூண்டப்பட்டு, ''கிறிஸ்து நம் பாவங்களுக்காகத் தம்மையே கையளித்தார்'' (*கலா 1:4; 1 திமொ 2:6; தீத் 2:14*) என்று அறிவிக்கிறார். ''நம்மேல் கிறிஸ்து அன்பு கூர்ந்ததால்'' இவ்வாறு கையளித்தார் (*கலா 2:20; எபே 5:2.25*) என்று விளக்குகிறார்.

யோவானைப்போல், பவுலும் ''தம் நண்பர்களுக்காக உயிரைக் கொடுப்பதை விடச் சிறந்த அன்பு இல்லை'' (*யோவா 15:13*) என்று அறிவார். விளக்கமாக, ஒவ்வொரு மனித அன்பும் நிபந்தனைக்குட்பட்டது. அது செயல்படும் சூழ்நிலையால் இணக்கம் செய்யப்படுகிறது. அசாதாரண சூழ்நிலை அசாதாரண அன்புக்கு ஒத்திருக்கும். மேலும் துல்லியமாக, தந்தையிடமிருந்து இந்த அன்பை ஏற்றுக்கொள்வதில், தந்தை அவரை வைத்திருந்த சூழ்நிலை காரணமாக, கிறிஸ்து அந்த அன்பை முழுமையாக ஏற்றுக் கொண்டார். இவ்வாறு, ''தம் மகன் என்றும் பாராமல், நம் அனைவருக்காகவும் அவரைக் கையளித்தார் கடவுள்'' என்ற கூற்றில் (*உரோ 8:32*) கிறிஸ்துவினுடைய அன்பின் முனைப்பான சான்றை (*8:35*), இன்னும் மேலான ''நம் ஆண்டவராகிய கிறிஸ்து இயேசுவில் வெளிப்பட்ட இறை அன்பின்'' சான்றைப் பவுல் காண்கிறார்.

உடன் செல்லுகின்ற எல்லாச் சூழ்நிலைகளிலும், யோவானைப்போல், பவுலும், சிலுவையில் அறையப்பட்டுத் தண்டிக்கப்படும் கேவலமான சூழ்நிலையைச் சுட்டிக் காட்டுகிறார். இந்த இழிவான மரணம் கிறிஸ்தவர்களைச் சிறப்பாக உருகச் செய்கின்றது (*காண்க. 5:30; 10:39*). முற்காலத்தில் ''கடவுளால் வதைக்கப்பட்டு, நொறுக்கப்பட்டு'' மக்கள் பார்த்த ஊழியனைப் போன்று (*எசா 53:4*), நீதிமானாகிய அவர், உலகின் கண்களில், சட்டத்தை மீறுபவராக நமக்காகச் சாபமாகினார் (*கலா 3:13*). கிறிஸ்துவுக்கு இதைவிட மோசமான இழிவை நாம் கற்பனை செய்து பார்க்க முடியாது (*பிலி 2:8*). அதே காரணத்திற்காக, இதைவிட மிக உன்னதமான கீழ்ப்படிதலையும், அன்புச் செயலையும் கற்பனை செய்ய முடியாது. இத்தகைய மரணத்தை ஏற்ற நொடியிலிருந்து அதை விரும்பித் திட்டம் செய்தார். இவ்வாறு கிறிஸ்து மனுகுலத்தை மீட்டார். அதைத் தந்தைக்கு, அடைந்து, தந்தார்.

**6. ஊனில் பாவத்தின்மேல் வெற்றி:** மறுபுறம், இது மனுகுலத்தைச் சேர்ந்த ஒருவரால் செய்யப்பட்டது. இவ்வாறு அதைக் கடந்த நிலையிலும் கூட, நமது மனித நிலையில் நிறைவாகப் பங்கு கொள்கிறார். இவ்வாறு, மனிதகுலம், உள்ளார்ந்த மாற்றத்தால், மீட்படைந்ததாக, இறைவனுக்கு ஈட்டப்பெற்றதாகத் தன்னைக் காண்கிறது. யோவானின் கருத்துப்படி, சிலுவையில், ''இவ்வுலகின் தலைவன் தண்டனை பெற்றுள்ளார்'' (*யோவா 16:11*). அதாவது, அவர் ''வெளியே துரத்தப்படுவார்'' (*12:31; காண்க. திருவெளி 12:9 தொ*); அவரது அரசிலிருந்து நீக்கப்படுவார். ''ஊனிலே பாவத்திற்குத் தண்டனைத் தீர்ப்பளித்தார்'' (*உரோ 8:3*) என்று பவுல் கூறும்போது, எசே *38-39*-இல் (*காண்க. 38:22தொ; 39:21 தொ*) முன்சொல்லப்பட்ட ''இறுதிக்காலப் போரில்'' உள்ளதுபோல், மெசியாக் காலம் நிறுவப்படுவதின் பீடிகையைக் குறிப்பிடுகிறார். சாவின்மேல் கிறிஸ்து வழியாக இறைவன் கொள்ளும் வெற்றி, ஊனிலே

சாத்தானை மேலாண்மையுடையவனாக நம்பியபோதுதான், நிறைவேறுகிறது. ''கடவுள் சாகும் இயல்புடைய ஊனைப் போன்ற இயல்பில் தம் சொந்த மகனை அனுப்பினார்'' என்பதை இது விளக்குகிறது. அதாவது, அது நமது ஊனைப்போல் பாவத்தின் கருவியாக ஆகாமல், கிறிஸ்துவின் ஊன் பாவத்தின் காரணமாக நமது இறப்பைப்போல், கீழ்ப்படுத்தப்பட்டு சாகும் தன்மையுடைய நிலையை விளக்கும். அப்போஸ்தலரின் நோக்கில், ஆவியின் வாழ்வை ஊனுக்கு அளிப்பதில் அதே ஊனில் பாவத்தின்மேல் கடவுள் வெற்றி பெற்றார் என்று சூழ்நிலை காட்டுகிறது (*உரோ 8:2.4*). கிறிஸ்து தனது சாவு மற்றும் உயிர்ப்பு வழியாக உயிர்தரும் ஆவியானவர் (*1 கொரி 15:45*). நமக்கும் ஆவியின் வாழ்வு அளிக்கப்படுகிறது. ஏனெனில், நாம் ஊனியல்புக்கு உட்பட்டவர்கள் அல்லோம்; ஆவியின் செயல்களுக்கு உட்பட்டவர்கள்'' (*உரோ 8:9; காண்க. 8:4*). கிறிஸ்து ஊனியல்பிலிருந்து ஆவியின் இயல்புக்குக் கடந்து சென்று விட்டதில், ''இறைவனிடம் திரும்புதல்'', மீண்டும் நிறைவேறுகிறது. நாமும் கிறிஸ்துவோடு சேர்ந்து கடந்து சென்று விட்டோம்.

மற்ற இடங்களில், ''கடவுளுடைய அருள் தன்மையோடு நாமும் கிறிஸ்துவுக்குள் விளங்கும்படி, பாவமே அறியாத அவரை நமக்காக பல உருவாக்கினார்,'' என்று பவுல் துணிந்து கூறுகிறார். அடிக்கடி தவறாக விளக்கப்படும் இத்தகைய கூற்றுகள் அதே சூழ்நிலையில் விளக்கப்படக்கூடியதாகத் தோன்றுகின்றன. நம்மோடு ஒன்றாகிவிட்ட கிறிஸ்துவோடு கொண்டிருக்கும் கூட்டொருமை வழியாக, அவரில் நாம், வாழ்வின் இந்த ஆற்றலின் நலம் தரும் விளைவுகளுக்கு ஆட்பட வேண்டும். இதை விவிலியமும் பவுலும் ''இறைவனது நீதி'' என்றழைக்கின்றனர். பாவ மனிதனுடன் கொண்டிருக்கும் கூட்டொருமையால், தந்தை, தன்மகன் பாவம் எனும் சாவின் ஆற்றலின் தீய விளைவுகளுக்கு அடங்கியிருக்க வேண்டும் என்று விரும்பினார். இந்த விளைவுகள் அன்பு மற்றும் கீழ்ப்படிதல் ஆகியவற்றின் பெரிய செயல்களின் விரும்பத் தக்க தகுதியாகின்றன.

இவ்வாறு பாவத்தின் அழிவு உண்டாக்கக்கூடிய செயல் செப்பம் செய்யப்படுகிறது. மனித இனம் மீண்டும் அமைக்கப்படுகிறது; மீட்கப்படுகிறது. இறைவனோடு மீண்டும் ஒன்றிக்கப்படுகிறது; மீண்டும் இறைவாழ்வை உடைமையாகக் கொள்கிறது. பழங்கால இறைவாக்கின்படி (*எசே 36:27*) யாவேயின் ஆவியே ஊனுக்கு அளிக்கப்படுகிறது. ஆனால் இந்த இறைவாக்கு, அன்பின் மேலாண்மை மிக்க செயலில் மனிதனான இறைவனின் ஒரே மகன் இடையீட்டால், எதிர்பார்க்காத மகிமையோடு நிறைவேறியது.

## மீண்டும் அமைத்தல், புதுப்பித்தல் (RESTORATION)

மீண்டும் அமைத்தல் என்பது பழைய ஏற்பாட்டில், இஸ்ராயேலின் அரசு மீண்டும் அமைக்கப்படுவதைக் குறிக்கும் கலைச் சொல்லாகப் பயன்படுகிறது (*சங் 16:5; எரே 15:19; 16:15; 23:8; 24:6; எசே 16:55; ஓசே 11:11*). இக்கருத்து மலா *3:23*-இல் எலியாவுடன் தொடர்புபடுத்தப்படுகிறது. இதில், ''நான் வந்து உலகைச் சபித்துத் தண்டிக்காதபடி, அவர் (எலியா) தந்தையரின் உள்ளங்களைப் புதல்வரிடத்தும், புதல்வரின் உள்ளங்களைத் தந்தையரிடத்தும் திருப்புமாறு செய்வார்'' என்று கூறப்பட்டுள்ளது. எலியா ''யாக்கோபின் குலங்களைத் திரும்ப நிலைநிறுத்துகிறார்'' (*சீரா 48:10*). ''எலியா வந்து எல்லாவற்றையும் சீர்ப்படுத்தும்'' பிரச்சனையைத் திருமுழுக்கு யோவானுடன் ஒத்துப்போகச் செய்வது மத் *17:11*; மாற் *9:11-13*-இல் எடுத்துக் கூறப்படுகிறது. ''இஸ்ராயேலுக்கு அரசாட்சியை நீர் மீட்டுத் தருவது'' பற்றிய இந்த யூதக் கருத்தை லூக்கா மற்றொரு இடத்தில் உயிர்த்தெழுதலில் சீடர்கள் வாயிலாக எடுத்துக் கூறுகிறார் (*அ.ப. 1:6*). இஃது, அரசு நெருங்கி வருவதையும் இதை இஸ்ராயேலுக்கு மட்டு வரை செய்வதுமாகிய கருத்தைத் திருத்துவதற்கும், வாய்ப்பளித்தது. ''அனைத்தும் புதிதாக்கப்படுதல்'' என்பது

அ.ப. 3:21-இல் வருகிறது. இதுவும், எலியா பாரம்பரியம் பற்றிய மற்றச் சுட்டல் களும், வாசகச் சூழ்நிலையில் இத்தகைய தொடர்பு, லூக்காவின் மூலங்களிலேயே இருந்திருக்க வேண்டும் என்று சுட்டுகின் றன. ஆயினும் இதன் லூக்கா வடிவில், ''தொன்றுதொட்டு வந்த தம் பரிசுத்த இறைவாக்கினர்களின் வாயிலாகக் கடவுள் அறிவித்த அனைத்தும் புதுப்பிக்கப்படும் காலம் வரை'' இயேசு விண்ணகத்தில் காத்திருக்கிறார் என்பதை விட அதிகமாகக் கூறவில்லை.

புதிய ஏற்பாட்டில், கிறிஸ்துவின் வெற்றி யின் முழுமை பற்றிய நோக்கு (யோவா 1:29; 4:42; 12:32; உரோ 5:18; 8:19 தொ; 11:32; 1 கொரி 15:22-28; 2 கொரி 5:19; பிலி 2:10; 1 திமொ 2:4; 1 யோவா 2:2; 4:14) உண்மைத் தன்மையுடைய நீதித் தீர்ப்புப் பற்றிய யூதக்கருத்தைத் தள்ளி விலக்குவதில்லை. மாறாக, வேர் நிலை யான தீர்மானம் செய்யும் அழைப்பிற்கு நேர்நிலை அடிப்படையாக அமைகிறது.

**மீரா** (MYRA - அழுகின்ற)

இது லீக்கியா நாட்டிலுள்ள முக்கியமான துறைமுகம். இத்துறைமுகம் மத்தியதரைக் கடற்கரையிலிருந்து 4 கி.மீ. தொலைவில் அந்திரியாக்கு ஆற்றின் கரையில் அமைந் திருந்த்து. இது லீக்கியா மாகாணத்துக்குத் தலைநகராக விளங்கியது.

கடல் பயணத்தில் மீரா துறைமுகத்தின் முக்கியத்துவம் பற்றி அ.ப. 27:2-6 விரி வாகக் கூறுகிறது. பவுலும் கைதிகள் வேறு சிலரும் இத்தாலிக்குப் போன பயணத்தில் அவர்களைச் சிறிய ஆசியாத் துறைமுக மான அதிராமித்தியம் செல்லும் கப்பலில் ஏற்றி அனுப்பினார். இக்கப்பல் சீதோனை அடைந்த பின் எதிர்க்காற்று வீசியதால் சைப்ரசு தீவின் ஒதுக்கிலே சென்றது. பின்னர் இக்கப்பல் லீக்கியா நாட்டு மீரா நகரை அடைந்தது.

**மீன்** (FISH)

விவிலியத்தில் மீன்பற்றிய குறிப்புகள் பல உள்ளன. விவிலியத்தில் நீரில் வாழும் எல்லா உயிர்களும் மீன் என்றழைக்கப்படு கின்றன. ஆனால், அவை வகைப்படுத்தப் படவில்லை. கடல்களும் ஆறுகளுமாகிய நீர் நிலைகளில் இருப்பனவற்றில் துடுப்பும் செதிலுமுள்ளவை அனைத்தும் தூய்மை யானவையும் உண்ணத்தக்கவையுமாகும். அவற்றில் துடுப்பும் செதிலும் அற்றவை தூய்மையற்றவையும் அருவருப்பானவையு மாகும் (லேவி 11:9-12; உப 14:9-10).

மீன் இறைவனால் படைக்கப்பட்டது (ஆதி 1:20-22). அவருடைய திருவுளத்துக் குப் பணிந்தது (எசா 50:2; எசே 38:20; செப் 1:3). பறவைகள், விலங்குகள், ஊர் வன ஆகியவற்றோடு சேர்ந்து மீனும் உயிரினமாகக் கருதப்பட்டது (ஆதி 1:26; யோபு 12:7-8;...). இவற்றையெல்லாம் பற்றி சாலமோன் கருத்துரை வழங்கினார் (1 அர 4:33). சிலைகள் செய்யத் தடை செய்யும் பகுதியில் நீரில் வாழும் மீன்களும் உள்ளடங்கும் (உப 4:15-18).

பழைய ஏற்பாட்டில் எகிப்திய மீன் குறிக்கப்படுகிறது (எசே 29:4-5). எகிப்தில் தங்கியிருந்தபோது எபிரேயர் மீனை உண்ட னர் (எண் 11:5). மோசே காலத்தில் முதல் வாதனையில் மீன்கள் அழிந்தன (யாத் 7:18.21; சங் 105:29).

இஸ்ராயேலுக்கு இறைவன் அளிக்க விருக்கும் மகிமை மிக்க வருங்காலம் பற்றிய எசேக்கியரின் காட்சியில் ஆலயத்தி லிருந்து ஓடி வரும் உயிர்தரும் ஆறு சாக்கடலோடு கலந்து, அதன் தண்ணீரை நல்ல தண்ணீராக்கும். அதன் விளைவாக மிகுந்த மீன்கள் வளரும் (எசே 47:7-10).

விவிலியத்தில் இலக்கியப்புகழ் பெற்ற மூன்று மீன்கள் உள்ளன. 1) யோனா நூலில் வரும் பெரிய மீன் (யோனா 2:1). 2) திகிரீசு நதியில் தோபியா கண்ட மீன். அதன் உள் அங்கங்கள் பெரிய தோபியைக் குணமாக்க உதவின (தோபி 6:1-5). 3) இயேசுவுக்காக வும் பேதுருவுக்காகவும் ஆலயவரி கட்டிய மீன் (மத் 17:27).

பாலஸ்தீனத்தில் குளங்களில் மீன்கள் வளர்க்கப்பட்டாலும், அவற்றின் இயற்கை யான இடங்கள் நல்ல தண்ணீர் கொண்ட கலிலேயக் கடலும், யோர்தான் ஆறும், அதன் உப ஆறுகளுமாகும். கூலே ஏரியும், அதற்குத் தெற்கிலுள்ள சதுப்பு நிலமும் மீன் வளர்வதற்குச் சிறந்த இடமாகும். அங்கு நெருக்கமாக வளர்ந்துள்ள நாணல், மீன் களைப் பிடிப்பதற்குத் தடையாக இருந்தன. அங்கு மிகுதியாக உள்ள கொசுக்களும் பூச்சிகளும் மீன்களுக்குப் போதிய உணவை அளித்தன.

பாலஸ்தீனத்தில் பொதுவாகக் காணப் படும் மீன்கள் நைல்நதியிலும் ஆப்பிரிக்கா வின் வடகிழக்குப் பகுதியிலும் காணப் படும் மீன்களோடு தொடர்புடையன. கலி லேயாக்கடல், பலவகை மீன்களைக் கொண்டுள்ளது. அவற்றில் ஒன்று ''புனித பேதுருவின் மீன்'' என்றழைக்கப்படும் திலாப்பியாவாகும். யோர்தான் ஆற்றில் காணப்படும் மீன்கள் கலிலேயாக்கடலில் காணப்படுபவைகளிலிருந்து அதிகம் வேறு படவில்லை. யோர்தான் ஆற்றில் அடித்துப் போகப்படும் மீன்கள் சாக்கடலை அடைந்து, மடிந்து, அப்பகுதியிலுள்ள பறவைகளுக்கு உணவாயின. சாக்கடலில் ஒரு மீனும் உயிர் வாழ முடியாது (காண்க. எசே 47:7-10). ஆனால், அதைச் சுற்றியுள்ள உப்பு ஊற்றுக்களிலும் சவர் நீருடைய ஓடைகளிலும் பல சிறிய மீன்கள் காணப் படும்.

எகிப்தில் வாழ்ந்தபோதே, இஸ்ராயேல ரின் உணவில் மீனும் இடம் பெற்றிருந்தது (எண் 11:5.22). நாடு கடத்தப்பட்டுத் திரும் பிய பின்னும் (காண்க. நெகே 13:16), புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் (மத் 14:17 இணை; 15:37; லூக் 24:42; யோவா 21:9-13) மீன்கள் உணவில் இன்னும் அதிகமாகப் பயன்பட்டன.

உருவக வழக்கில், உலகில் மனிதனது இயலாமை, வலையில் அகப்படும் மீனுக்கு ஒப்பிடப்படுகிறது (திருவுரை 9:12; அ.ப. 1:14). யோனாவை விழுங்கும் பெரிய மீன் மீட்பின் அடையாளமாக உள்ளது (யோனா 1:17). கடலில் வீசப்பட்டு எல்லாவகை யான மீன்களையும் வாரிக்கொண்டு வரும் வலைக்கு இறையரசு ஒப்பாகும் (மத் 13:47-48).

திருச்சபையின் தொடக்கத்தில், மீன் கிறிஸ்துவத்தின் ஓர் அடையாளமாகும். அடிநிலக் கல்லறைச் சித்திரங்களில் மீன்கள் காணப்படுகின்றன. மீனைக் குறிக்கும் ICHTHYS என்ற கிரேக்கச் சொல்லின் எழுத்துக் கள் ''இயேசு கிறிஸ்து, இறைமகன், மீட்பர்'' (Jesus Christ, Son of God, Savior - Jesous Christes Theon Huios Soter) என்ற விசுவாச அறிக்கையின் தலைப்பெழுத்துச் சொல்லாகும். இப்படி அடையாளப்படுத்து வது எப்போது நிகழ்ந்தது என்று கூற முடியாது. ஆனால் இந்த அடையாளப்படுத் தப்படுதல் செய்யப்பட்டபின் மீன் ஓர் எடுத்துக்காட்டான கிறிஸ்தவ அடையாள மாயிற்று.

### மீன் பிடித்தல் (FISHING)

இத்தொழில் பொழுது போக்கிற் காகவோ, வருமானத்திற்காகவோ, உணவுப் பொருள் சேகரிப்பதற்காகவோ செய்யப் படும் தொழிலாகும். எகிப்திய அரசர்கள் மீன்பிடித்தலை ஒரு விளையாட்டாகக் கருதி ஈடுபட்டனர். இஸ்ராயேலரின் தொடக்க காலத்தில் பெனிசியர்கள் மீன் பிடிப்போராய் இருந்தனர். பாபிலோனிய நாடு கடத்தலுக்குப்பின், தீர் நகர மக்கள் மீன்வளத் தொழில் துறையில் முதன்மை பெற்று விளங்கினர் (நெகே 13:16).

விளையாட்டாகவோ, பொழுதுபோக் காகவோ இஸ்ராயேலர் மீன் பிடித்தலில் ஈடுபட்டிருந்தனர் என்பதற்கு எவ்வித ஆதார மும் இல்லை. எகிப்தில் இருந்தபோதே இஸ்ராயேலர் மீனை உண்டு வந்தனர் என்றாலும் (எண் 11:5.22), வியாபாரத்திற் காகவோ, வாழ்க்கைத் தொழிலாகவோ அவர்கள் மீன் பிடித்தலில் ஈடுபட்டிருந்தனர் என்பதற்குப் பழைய ஏற்பாட்டில் சான்று கள் அரிதாகவே உள்ளன. இதற்குக் கார ணம் மத்தியதரைக் கடற்கரையின் பெரும்

பகுதி பெலிஸ்தியர், பெனிசியரின் கட்டுப் பாட்டில் இருந்ததும், தங்களுக்கு வேண் டிய மீன்களுக்கு இஸ்ராயேலர் அன்னிய வியாபாரத்தைச் சார்ந்து இருந்ததுமே ஆகும் (நெகே 13:16). புதிய ஏற்பாட்டுக் காலத்தில் வியாபாரத்திற்காக மீன்பிடித்தல் கலிலேயாக் கடலில் பரவலாக நடைபெற் றது. மீன்பிடிப்போர் சங்கங்களாகவோ, குழுக்களாகவோ சேர்ந்து இத்தொழிலில் ஈடுபட்டனர் (காண்க. லூக் 5:7.10).

மீன் பிடித்தலைத் தொடர்ந்து, உப் பிட்டுப் பதப்படுத்தி மீன்களை விற்பதும், வலைகளைப் பின்னுவதும், கடற்பயணம் செய்வதும், படகுகளைப் பழுதுபார்ப்பதும் வேலைவாய்ப்புத் தரும் தொழில்களாக இருந்தன (எசே 26:5; மத் 4:21). கடலில் வீசப்பட்ட வலை நிறைந்ததும், அதை இழுத்துக்கொண்டு போய்க் கரையில் உட் கார்ந்து நல்லவற்றைக் கூடையில் சேர்த்து வைப்பர்; கெட்டவற்றை, அசுத்தமான வற்றை வெளியே எறிவர் (மத் 13:48). மீன் பிடிப்போர் கூடைகளில் மீன்களைச் சந்தைக்குக் கொண்டு சென்றனர். எருசலே மில் மீன்வாயில் என்ற ஒரு வாயில் இருந்தது. ஒருவேளை இங்கு மீன் விற்கும் சந்தை இருந்திருக்கலாம் (2 நாள் 33:14). எருசலேமுக்குத் தூரத்திலிருந்து கொண்டு வரப்பட்டால் பெரும்பாலும் மீன்கள் உப் பிடப்பட்டுப் பதப்படுத்தப்பட்டிருக்கும் (நெகே 13:16). ஏதன்சு போன்ற நகரங்களில் இத்தகைய மீன் சந்தைகள் இருந்திருக்கின் றன. மீன்பிடிப்போர் பெரும்பாலும் குழு வாகத் தொழில் செய்தனர் (யோபு 41:6; லூக் 5:10). அவர்கள் சில வேளைகளில் இரவிலும் தொழில் செய்தனர் (லூக் 5:5; யோவா 21:3). மீன்பிடிக்கும் தொழில் நைல்நதி (எசா 19:8), மத்திய தரைக்கடல் (நெகே 13:16), கலிலேயாக் கடல் (மத் 4:18), யோர்தான் ஆறு, கூலே ஏரி, ஒரோன்தசு, யூப்பிரத்தீசு, திகிரீசு நதிகள், ஆகியன் கடல் ஆகியவற்றில் நடைபெற்றது.

விவிலியத்தில் மீன்பிடிக்கும் பல்வேறு முறைகள் குறிப்பிடப்படுகின்றன (அ.ப. 1:15). பாலஸ்தீனத்திலும் எகிப்திலும் முற் காலத்திலிருந்தே மீன்கொக்கிகள் பயன் படுத்தப்பட்டு வந்திருக்கின்றன. இவை எலும்பு, இரும்பு போன்றவற்றால் ஆன வையாகவும் அல்லது வெறும் முள்ளாக வும் இருக்கலாம். இவை நூல்கயிற்றோடு இணைக்கப்பட்டிருக்கும் (யோபு 41:1-2; எசா 19:8; ஆமோ 4:2; அ.ப. 1:15). நத்தூபியன் குடியிருப்புகளில் எலும்பினால் செய்யப்பட்ட மீன் கொக்கிகள் கண்டெடுக் கப்பட்டுள்ளன. ஈரான் நாட்டுக் கொக்கிகள் சாலமோன் காலத்திய எசியோன் கெபேரில் காணப்படுகின்றன. புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் கொக்கிகள் பழக்கத்தில் இருந் தன (மத் 17:27). இதிகாச விலங்கான லேவியத்தானைக் கொக்கிகளால் பிடிக்க முடியாது (யோபு 41:1-7). இப்பகுதியும், ஆமோ 4:2-ம் முன்பெல்லாம் ஒரு முள் தான் மீன்கொக்கியாகப் பயன்பட்டது என்று சுட்டுகின்றன. பெரிய மீன்களைப் பிடிப்பதற்கு ஈட்டி போன்ற எறிஆயுதம் பயன்பட்டது (யோபு 41:7). எசா 19:8-இல் மீன்கொக்கியும், வலையும் குறிக்கப்படு கின்றன. தூண்டில் தடியைப் பற்றி எக்குறிப் பும் இல்லை.

மீன் வலைகள் பரவலாகக் குறிக்கப்படு கின்றன. இவை மூன்று வகைப்படும்.

**அ) எறிவலை:** இது பொது நோக்குடை யது; வேட்டையாடுவதற்குப் பயன்படும் வலை போன்றது; நான்கு மீட்டர் விட்ட முடையது; வலையை விரைவில் படியச் செய்யக் கூடிய கல்லால் ஆன விளிம்புடை யது. இந்த வலையைத் தரையிலிருந்தோ, படகிலிருந்தோ, தண்ணீரில் நின்று கொண்டோ பயன்படுத்தலாம் (திருவுரை 9:12; மத் 4:18; மாற் 1:16). தயாராகக் கையில் பிடித்துக்கொண்டு மீன்கள் காணப் படும் பகுதிகளில் பரந்த அளவில் படியு மாறு இவ்வலை எறியப்படும். ஆகவே, இது பகலில்தான் பயன்படும். ஒருவேளை பேதுருவும் அந்திரேயாவும் இவ்வகை வலையைப் பயன்படுத்தியிருக்கலாம் (மத் 4:18).

*ஆ) இழுவலை அல்லது வாரிக்கொண்டு வரும்வலை:* *200-250 மீட்டர் நீளமும் 5 மீட்டர் அகலமும் உடையது. அடியோரத்தில் கனமான எடைகளும், மேல் ஓரத்தில் மிதப்புகளும் இணைக்கப்பட்டிருக்கும். இரண்டு படகுகளுக்கிடையில் தொங்க விடப்பட்டு கயிறுகளால் கரைக்கு இழுக்கப்படும் (எசா 19:8; அப 1:15-16; மத் 13:47-48). இவ்வகை வலை மெதுவாகச் சரியும் கடற்கரைகளில் மீன்பிடிக்க மிகவும் ஏற்றது. ஒருவேளை செபதேயுவின் புதல்வர்கள் இவ்வகை வலைகளைப் பயன்படுத்தியிருக்கலாம் (மத் 4:21).*

*இ) இணை வலைகளின் தொடர்:* *மிகவும் சிக்கலானது. குறுகிய பின்னலுடையது (அ.ப.1:15-17; மத் 4:20; மாற் 1:18; லூக் 5:2.4-7). படகுகளுக்கிடையில் பார வலையாகத் தங்கவிடப்படும். மற்றொரு படகு மீன்களை விரட்டிவிட உதவும். கடற்கரைக் கருகிலுள்ள ஆழமான நீர் நிலைகளில் இது மிகவும் பயன்படும் (யோவா 21:8).*

அடிமைப்படுத்தப்பட்ட இஸ்ராயேலரைக் குறிக்க மீன்பிடித்தல் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது (திருவுரை 9:12; எசே 29:4; அப 1;14). இஸ்ராயேலருக்கு எதிரான இறைவனின் தீர்ப்பு, கிளர்ச்சி செய்யும் மக்களைப் பிடிக்க மீன்பிடிப்போர் மற்றும் வேட்டையாடுபவர் பலரை அனுப்புவதற்கு ஒப்பாகும் (எரே 16:16; எசே 47:10).

இயேசு மீன்பிடிக்கும் அருஞ்செயல்களை நிகழ்த்தினார் (லூக் 5:1-11; யோவா 21:1-8; காண்க. மத் 14:13-21). இறையரசுக்கு மீன்பிடித்தலை ஒப்பிட்டார் (மத் 13:37-48). ஐயாயிரம் பேருக்கு உணவளித்ததில் மீன் பயன்பட்டது (யோவா 6:1 தொ). புதிய ஏற்பாட்டில் இயேசுவின் சீடர்களில் பலர் மீன் பிடிப்பவர்களாக இருந்தனர் (மத் 4:18.21; மாற் 1:16; லூக் 5:2). புதிய ஏற்பாட்டுப்பணி முழுவதுமே ஒரு மீன் பிடிக்கும் நிகழ்ச்சியாகும் என்று உருவகமாகக் கூறலாம். சீடர்களும் அவர்களைப் பின்பற்றி வருபவர்களும் ''மனிதரைப் படிப்போராக'' இருக்க இயேசுவால் அழைக்கப்படுகின்றனர் (மத் 4:19; மாற் 1:17; லூக் 5:2.10). இவர்கள் இயேசுவின் அழைப்பை ஏற்றுக்கொண்டு மீன்பிடிக்கும் உரிமைகளையும், வலைகளையும், உபகரணங்களையும் கைவிட்டு இயேசுவைப் பின்பற்றினர். மனிதரைப் பிடிப்போராய் இருக்கும் கிறிஸ்தவப் பணிக்கு மீன் இசைந்த அடையாளமாக உள்ளது.

**மீன் வாயில்** *(FISH GATE)*

எருசலேமின் வடசுவரில் அமைந்துள்ள ஒரு வாயில். இது மீன் சந்தைக்கு அருகில் இருந்ததால் இப்பெயர் பெற்றிருக்கலாம் (காண்க. நெகே 13:16). மனாசே தாவீதின் நகரில் கீகோன் பள்ளத்தாக்கின் மேற்புறம் தொடங்கி, மீன் வாயிலின் தொடக்கம் வரையிலும், வெளிப்புற மதிலை எழுப்பினார்; இம்மதில் ஓபேலைச் சுற்றிலும் உயர்ந்திருக்கச் செய்தார் (2 நாள் 33:14). யோசியா ஆட்சியின் தொடக்கத்தில் இறைவாக்குரைத்த செப்பனியா, இரண்டாவது பகுதி அல்லது மிஸ்னேயோடு தொடர்புபடுத்தி மீன் வாயிலைக் குறிப்பிடுகிறார் (செப் 1:10). அனானேல் காவல் மாடத்துக்கு மேற்கில் அமைந்த மீன்வாயில், நெகேமியா மீண்டும் கட்டிய எருசலேம் சுவருக்குள் அடங்கியதாக அமைந்தது (நெகே 3:3; 12:39).

அறிஞர் சிலர் மீன்வாயிலை எப்பிராயிம் வாயிலாக அடையாளம் காட்டுவர். எப்பிராயிம் வாயில் எப்பிராயிமியர் பகுதிக்கு இட்டுச் சென்றது (செக் 14:10-முன்னைய வாயில்).

இயேசுவின் சிலுவையைச் சுமக்கக் கட்டாயப்படுத்தப்படுமுன் (மாற் 15:21; லூக் 23:26), சிரேனாகிய சீமோன் மீன் வாயில் வழியாக எருசலேமுக்குள் நுழைந்தார் என்று கிறிஸ்தவப் பாரம்பரியம் நெடுங்காலமாகக் கருதி வந்திருக்கிறது. ஆனால் இது, பிலாத்துவின் நீதிமன்றம் (பிரேத்தோரியம்) அந்தோனியாக் கோட்டைக்குள் அமைந்திருந்தால்தான், இயலக் கூடியதாகும்.

# மு, மூ

## முகடு (PINNACLE)

புதிய எருசலேமில், சூரிய ஒளியில் பளிச்சிடும், கட்டடங்களின் ஒரு பகுதியைக் குறிப்பிடும் எபிரேயச் சொல் (எசா 54:12). புதிய ஏற்பாட்டில் இச்சொல் கோவிலின் ஒரு பகுதியைக் குறிக்கிறது (மத் 4:5; லூக் 4:9). புதிய மொழிபெயர்ப்பில் ''உயர்ந்த பகுதி'' என்றமைந்திருக்கிறது.

## முகம் (FACE)

***1. முகமும் இதயமும் :*** ''நீரில் ஒருவன் தன் முகத்தைக் காண்பான்; அது போல, தன் உள்ளத்தில் ஒருவன் தன்னைக் காண்பான்''(பழ 27:19). நீரின் கண்ணாடியானது மனித முகத்தோற்றத்தினுடைய முரண்பாட்டினைத் திறந்து காட்டுகிறது. நபருக்கு அது பார்க்க உதவுவதாகவும், அதே நேரத்தில் பார்க்கப்படுவதாகவும் உள்ளது. நேருக்கு நேர் நிகழும் மனிதச் சந்திப்புகள் இதயங்களில் உள் அங்கீகாரத்தை அடையாளப் படுத்தி, தூண்டியெழுப்புகின்றன.

முகமே இதயத்தின் கண்ணாடி. அங்கு ஒருவன் கவலை (எரே 30:6; எசா 13:8), தளர்ச்சி (தானி 1:10), வேதனை (நெகே 2:2) ஆகியவற்றை மட்டுமின்றி, ஓய்வு நாளில் ஒருவன் அடையும் (சீரா 13:26; சங் 104:15) மகிழ்ச்சியையும் கண்டடைகிறான் (பழ 15:13). மகள்களிடம் தந்தை வெளிப்படுத்த வேண்டிய கண்டிப்பை மட்டுமின்றி (சீரா 7:24), தற்பெருமையுடன் உறுதியாக உள்ள தந்தையினுடைய (எசே 2:4; தானி 8:23) இரக்கமற்ற கடினத்தன்மையினையும் அது வெளிப்படுத்துகிறது (உப 28:50). சுருக்கமாக, ''மனிதனின் உள்ளம் நன்மைக்கோ, தீமைக்கோ முகத் தோற்றத்தை மாற்றி விடுகிறது'' (சீரா 13:31). ஆனால், முகத்தின் கண்ணாடியானது தவறாக நடத்திச் செல்வதாகவும் இருக்கும். இறைவன் மட்டுமே இதயத்தை உற்று நோக்கி (1 சாமு 16:7; யாக் 2:9) அதற்கேற்ப மனிதச் செயல்களுக்குத் தீர்ப்பிடுகிறார் (சீரா 35:22; மத் 22:16).

***2. அரசனுடைய முகம்:*** அரசனுக்கும் அவனுக்குக் கீழ் உள்ளவர்களுக்குமிடையேயுள்ள உறவுகள் முகத்தோற்ற மாற்றங்களில் தங்களை வெளிப்படுத்துகின்றன. அரசனுடைய முகத்தைக் காணுமாறு ஒருவன் கேட்கிறான் (2 சாமு 14:32). ஆனால் அவரது முன்னிலையில் அவன் ''தலை குப்புற'' தரையில் தெண்டனிடுகிறான் (2 சாமு 1:2; 14:33). அரசனுடைய முகத்தைக் காணமுடிவதென்பது (எஸ்த 1:14) தெளிவானதொரு சலுகையாகும். மேலும், மிக ஆர்வத்துடன் எதிர்பார்க்கப்படுகின்ற உதவியானது, அவரில் புன்னகை ஒளிவீசுவதைக் காண்பதாகும் (யோபு 29:24-25). ஏனெனில், ''அரசனின் முக மலர்ச்சி வாழ்வு அளிக்கும்'' (பழ 16:15).

***3. இறைவனுடைய முகத்தை நாடுதல்:*** இறைவன் மனிதனாக இல்லாவிட்டாலும் (எண் 23:19), அவரது மகிமையைப் பற்றி எந்தப் படைப்புமே கருத்துக் கூற இயலாவிடினும் (எசா 40:18; 46:5), மனிதன் செய்வது போலவே அவரும் திட்டங்களையும் எண்ணங்களையும் கொண்டுள்ளார். மனிதனுடன் தொடர்புகொள்ள அவர் விரும்புகிறார். எனவே, அவரும் ஒரு முகத்தைக் கொண்டுள்ளார். தனது முறையில் தனது இரக்கத்தில் தனது திருமுகத்தைக் காட்டவும் (சங் 4:7; 80:4.8.20), தனது சினத்தில் அதனை மறைத்துக் கொள்ளவும் கூடியவராக அவர் உள்ளார் (எசா 54:8; சங் 30:8; 104:29).

இந்த இறை முகமானது இஸ்ராயேலின் நடுவில் உறைகின்றது. காண இயலாததாயினும், உயிருள்ள இறைவனுடைய அசாதாரண ஆற்றல் நிறைந்ததாக இஃது உள்ளது. இந்த இறைமுகத்தினுடைய தோற்றமே அவரது மக்களுடைய பலமாகும் (யாத் 33:14; 2 சாமு 17:11; உப 4:37; எசா 63:7). இதுவே இறைவனுடைய முகத்தைக் காண்பதற்கும் (சங் 42:3),

''இறைவனுடைய முகத்தை நாடுவதற்கும்'' (ஆமோ 5:4; சங் 27:8;105:4) உரிய வழி பாட்டு ஆவலுக்குப் பொருள் அளிக்கிறது. ஆனால், யாவேயின் முகமானது தூய, நீதியுள்ள இறைவனுடைய முகமாக இருப் பதன் காரணமாக, ''நேர்மையுள்ளவர்கள் மட்டுமே அவர் முகத்தைக் காண்பார்கள்'' (சங் 11:7).

**4. நேருக்கு நேர்:** மனிதனுடைய பாவத் தின் காரணமாக (எசா 6:5; சங் 51:11) இறைவனுடைய முகமானது மனிதனுக்குச் சாவுக்குரிய அச்சமூட்டுவதாக உள்ளது (நீதி 13:22; யாத் 33:20). ஆயினும், அதுவே மனிதனுடைய வாழ்வும் மீட்புமாகும் (சங் 51:13-14). விதிவிலக்காக, ''ஒருவன் தன் நண்பனோடு பேசுவது போல ஆண்டவர் மோசேயோடு நேரிலே உரையாடிக்கொண் டிருப்பார்'' (யாத் 33:11). ஆனால், இறை வனுடைய மகிமையைக் காண்பதற்கென மோசே கேட்கும் போது, இறைவனுடைய பின் புறத்தை மட்டுமே காண்கிறார் (33:18-23). ''ஒருவரைப் பின்தொடர்வதென் பது அவரைப் பின்னிருந்து பார்ப்பதாகும்.'' இறைவனுடைய முகத்தைக் காண்பதற் கெனப் பற்றியெரிந்த மோசே, இறை வனைக் காண்பது எவ்வாறு என்பதைப் புரிந்துகொண்டார்: ''அவர் செல்லுமிட மெல்லாம் அவரைப் பின்தொடர்வது- இவ்வாறாகவே, ஒருவன் இறைவனைக் காண்கிறான்'' (நீசா கிரகோரியார்).

**5. கிறிஸ்துவினுடைய முகத்தின் மேல்:** இறைவனே தனது திருமுகத்தை நம்மேல் ஒளி வீசச் செய்து, நமக்கு அருளுடையதாக இருக்கச் செய்தார்(எண் 6:24). இம்முகத்தின் மேல் இறைவனுடைய முகமானது ஒளி வீசுகிறது (2 கொரி 4:6). உருமாற்ற மகிமை (மத் 17:2 இணை) இயேசுவில் இறைவனே ஒரு முகத்தை ஏற்கிறார் என்பதற்கு ஓர் அடையாளமாகும் (திருவெளி 1:16). மற் றும் அவரில் ''இதுவரை எவரும் கண்டி ராத'' முகம் இப்போது அவரில் தோன்று கிறது (யோவா 1:16). ''என்னைக் கண்ட வன் தந்தையையே கண்டான்'' (14:19). அது துப்பப்பட்ட, கண்கள் கட்டப்பட்ட (மாற் 14:65), விகாரப்படுத்தப்பட்ட (எசா 52:14) ஒரு மனித முகம். ஆனால், அதுவே ''அவருடைய இறைத்தன்மையின் சாயலா கும்'' (எபி 1:3).

இம்முகத்தினுடைய மகிமையை ஒரு முறை கண்ட பின்னர், தன்னுள் தங்கியிருக் கும் தூய ஆவியின் மூலமாக கிறிஸ்தவன் தொடர்ந்து ஒளிர்விக்கப்பட்டவனாகவும், மாற்றப்பட்டவனாகவும் உள்ளான். ஆனால், இந்நிலையானது மோசேயின் முகத்திற்கு உண்மையாக இருந்த கடந்து செல்லும் வெளிப்பாட்டினால் மட்டுமின்றி (2 கொரி 3:7-8) வாழ்வு மற்றும் மீட்பி னுடைய கதிரினால் அமைக்கப்பட்டுள்ளது. ''இப்பொழுது நாமனைவரும் மூடு திரை யில்லா முகத்தினராய், ஆண்டவரின் மாட்சி மையைக் கண்ணாடி போல் காட்டு கிறோம். அதனால் மேன்மேலும் மாட் சிமை ஒளி பெற்று, அதன் சாயலாகவே உருமாற்றம் அடைகிறோம். இவையெல் லாம் ஆவியாகிய ஆண்டவரின் செயலே'' (2 கொரி 3:28). ''கிறிஸ்துவின் முகத்தி லுள்ள இறைவனுடைய இந்த மகிமை யினை'' நற்செய்தியினுடைய ஊழியமா னது ''ஒவ்வொரு மனித உள்ளத்திலும்'' சுடரிடச் செய்கிறது (2 கொரி 4:2-6).

இவ்வாறாக, ஆண்டவருடைய மகிமை யால் ஆவியில் உருமாற்றப்பட்ட கிறிஸ்த வர்கள், இதுவரை கண்ணாடியில் மட்டுமே அறிந்திருந்தவரை ஒரு நாள் நேருக்கு நேராகவே காண்பர்; தாங்கள் அறியப்பட்ட வாறே, தாங்களும் அறிவர் (1 கொரி 13:12). மற்றும் தாங்கள் ''இறைவனைக் காண் போம்'' (மத் 5:8) என்ற உறுதிப்பாட்டைக் கொண்டுள்ளனர். இவ்வாறாக, இஸ்ரா யேலை ஆலயத்திற்கு ஈர்த்த ஆசையானது நிறைவேற்றப்படும். ''கடவுளும் செம்மறி யானவரும் வீற்றிருக்கும் அரியணை அங்கே இருக்கும். அவருடைய ஊழியர்கள் அவரைத் தொழுவார்கள்; அவரது முகத்தைக் காண்பார்கள்'' (திருவெளி 22:3-4).

**முகம் பார்க்கும் கண்ணாடி** (MIRROR)

பண்டைய முகம் பார்க்கும் கண்ணாடிகள் பளபளப்பாக்கப்பட்ட உலோகங்களிலிருந்தே செய்யப்பட்டன. யாத்திராகமத்தில் இதைப் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது *(யாத் 38:8)* ''சந்திப்புக் கூடார நுழைவாயிலில் பணியாற்றும் பெண்கள் கொண்டுவந்த வெண்கலக் கண்ணாடிகளைக்கொண்டு அவர் வெண்கல நீர்த் தொட்டியையும், அதன் வெண்கல ஆதாரத்தையும் செய்தார்.'' யோபு ஆகமத்தில் *(37:18)*, ''வார்ப்படக் கண்ணாடியை ஒத்த திண்ணிய விசும்பு'' என்று கூறுகிறார் ஆசிரியர்.

உரோமையர்களின் காலம் வரை கண்ணாடிகள் பயன்படுத்தப்படவில்லை, கண்டுபிடிக்கப்படவுமில்லை. எனவே, முகக் கண்ணாடி என்ற பொருளைத் தருவதாகப் பயன்படுத்தப்படும் எபிரேய, கிரேக்கச் சொற்கள் புதைபொருள் ஆராய்ச்சியின் காலமயக்கமாக ஏற்பட்ட விளைவு என்று கருதப்படுகிறது.

பெண்களின் ஒப்பனைப் பொருள்களில் ஒன்றாக முகம்பார்க்கும் கண்ணாடியும் இருந்திருக்கலாம். ஆனால் அது பளிங்கினாலானதன்று. பளிங்கினால் செய்யப்பட்டவையாக இருந்தால் அவை முகக் கண்ணாடி அல்ல; மாறாக, பளிங்கு மணிகளாகவும், சிறிய அணிகலன்களாகவும் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

தொடக்க காலத்தில் முகக்கண்ணாடிகள் மிக உயர்ந்த மதிப்புக் கொண்டவையாகக் கருதப்பட்டன. அரசர்கள், இளவரசர்கள் ஆகியோர் தங்களுக்குள் கொடுத்துக் கொண்ட அன்பளிப்புப் பொருட்களில் இவை மிக முக்கியத்துவம் பெற்றுள்ளன. எகிப்திய மன்னன் நான்காம் அமெனோபிஸ் என்பவர், புர்ராபுரியாசுக்கு என்பவருக்கு முப்பது பளபளப்பாக்கப்பட்ட வெண்கலக் கண்ணாடிகளை அன்பளிப்பாக அளித்ததற்கான ஆதாரங்கள், அமர்னா ஏடுகளில் காணப்படுகின்றன. அந்த ஏட்டில் இத்திய அரசனால் அளிக்கப்பட்ட வெள்ளிக் கண்ணாடியைப் பற்றிய ஆதாரமும் உள்ளது.

கிரேக்க நாகரிகத்தின் ஆதிக்கம் அதிகமானதால், கண்ணாடிகளைப் பயன்படுத்தும் பழக்கம் அதிகமாகப் பரவியது. இதனால், அரச பெண்களும், உயர்ரக விபசாரப் பெண்களும் மட்டுமே பெருமையுடன் பயன்படுத்தி வந்த நிலைமை மாறியது.

பாலஸ்தீனத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளில் வெண்கலக் கண்ணாடிகளின் மாதிரிகள் கிடைத்துள்ளன. இவற்றுடன் பலவகையான ஒப்பனைப்பொருள்களும் கிடைத்துள்ளன. அவை வட்டவடிவினில், மரக்கட்டை அல்லது தந்தத்தாலான கைப்பிடியைக் கொண்டதாகவோ, இல்லாமலோ காணப்பட்டன. காசாவுக்கு அருகிலுள்ள தெல் ஏல்-அச்சூல் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு கண்ணாடியின் கைப்பிடியில் தாமரை மலர் போன்ற வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. ஒருவேளை இஃது எகிப்திலிருந்து பதினெட்டாவது அரசமரபின் ஆட்சிக்காலத்தில் இறக்குமதி செய்யப்பட்டதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

பாலஸ்தீனம் மற்றும் சீரியா பகுதிகளில் அதிகமான எண்ணிக்கையில் கண்ணாடிகள் கிடைத்துள்ளன. இவை, நாடுகடத்தலுக்குப் பிற்பட்ட காலம் தொடங்கி உரோமையரின் காலம்வரைக்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவை. இவற்றின் கைப்பிடிகளில் புள்ளிகள், வட்ட வடிவ அமைப்பு, திருச்சுருள் வடிவம் போன்ற பல அழகு அமைப்புகள் செய்யப்பட்டிருந்தன. இவ்வமைப்பு மத்தியத்தரைக் கடல் பகுதியில் விளங்கிய கலையழகினைப் பிரதிபலித்தது. மேலும், இஃது எகிப்திய, மெசாபொத்தாமிய, ஆகிய, அனதோலிய பாரம்பரியப் பண்புகளின் கூட்டுக்கலவையாகவும் காட்சியளித்தது. இந்தக் கண்ணாடிகளில் பளபளப்பு செய்யப்படாத பக்கத்தில் எந்தவொரு அழகு அமைப்பும் செய்யப்படவில்லை. ஆனால், கெசேரில் கிடைத்த ஒரு

மாதிரிக் கண்ணாடியின் பின்பக்கமும் திராட்சை போன்ற அமைப்பு காணப் பட்டது.

**முக்கவட்டியாழ்** *(TRIGON)*

இந்த யாழைப் பற்றி தானியேல் ஆகமம் *3:5.7.10.15* கூறுகிறது. புதுமொழிபெயர்ப் பில் கின்னரம் என்று மொழிபெயர்க்கப் படுகிறது. இது தரங்கெட்ட பாடகர்களா லும், விலை மாந்தராலும் பயன்படுத்தப் பட்டது. பிளேட்டோ இந்த யாழ் வாசிப் பதைத் தடை செய்தார். இதன் வடிவம் ஒரு கப்பலையும், ஏணியையும் சேர்த்தது போல் இருக்கும். இத்தகைய கருவி ஊர் என்ற இடத்திலே கிடைக்கப் பெற்றது. இந்த இசைக்கருவி பாபிலோனிய இசைக் குழு கொண்டிருந்த ஒன்றாகும்; இஸ்ரா யேலரின் கருவி அன்று.

**முக்காடு** *(VEIL)*

பழைய ஏற்பாட்டில் பெண்கள் அணிந்த முக்காட்டில் எந்தவிதக் குறிப்பிடத் தகுந்த பொருளும் இல்லை. தால்மூது எந்தவிதக் குறிப்பும் தரவில்லை. பலசொற்கள் 'முக் காடு' என்று மொழிபெயர்க்கப்படுகின்றன.

*அ)* திருமணத்திற்கு முன் ரபேக்கா ஈசாக்கைக் கண்டவுடன் ஒட்டகத்தை விட் டிறங்கி, தன் முகத்தை முக்காடிட்டுக் கொண்டாள் *(ஆதி 24:65)*. இங்கு இந்த முக்காடு ஒரு திருமண வயது வந்த பெண்ணின் அடையாளமாக இருக்கின்றது. திருமணச் சடங்கின்போது இது நீக்கப்பட் டது. யூதாவைத் தன்வசப்படுத்த இத்தகைய முக்காட்டைத்தான் தாமார் பயன்படுத்தி னாள் *(ஆதி 38:14. 19)*. இது முகத்தை மூடும் பொருளாகும்.

*ஆ)* சல்லா முக்காடு: இஃது எருசலேம் நகரத்து மகளிராலும் *(எசா 3:23)*, உன்னத சங்கீதத்தில் கன்னிப் பெண்களாலும் அணி யப்பட்டது *(உ.ச. 5:7)*.

*இ)* முகத்திரை: அனேகமாக இஃது ஓர் அணிகலனாகப் பயன்படுத்தப்பட்டது *(உ.ச. 4:1.3; 6;7; எசா 47:2)*.

*ஈ)* முக்காடு: மோசே ஆண்டவரோடு உரையாடிவிட்டுத் திரும்பிய பின், அவர் முகத்தில் வீசிய ஒளியைத் தடுக்க அவர் ஒரு முக்காடு அணிந்தார் *(யாத் 34:33-34)*.

*உ)* தலையை மூடும் துண்டு (kerchief): ஒவ்வொருவர் தலைக்கும் ஏற்ப முக்காடு செய்யும் போலி இறைவாக்கினிகளுக்கு (sorceresses) ஐயோ, கேடு! என்கிறார் எசேக்கி யேல் *(எசே 13:18)*.

**முசுக்கட்டை மரம்** *(SYCAMINE, MULBERRY)*

இச்சொல் *2 சாமு 5:23-24; 1 நாள் 14:14-15*-இல் குறிக்கப்படுகிறது. *1 மக் 6:34*-இல், கருமுசுக்கட்டை மரத்தின் இரத்தச் சிவப்புச் சாற்றை மக்கபேயர் களுக்கு எதிராக அந்தியோக்குவின் யானை களைத் தூண்டக் கொடுக்கப்பட்டது என்ற குறிப்பு உள்ளது.

இயேசு விசுவாசத்தைப் பற்றிப் பேசுகை யில் முசுக்கட்டையைக் குறிப்பிடுகின்றார்: ''கடுகளவு விசுவாசம் உங்களுக்கு இருந் தால் இம்முசுக்கட்டை மரத்தை நோக்கி 'நீர் வேரோடே பெயர்ந்து போய்க் கடலில் வேரூன்றி நில்' எனக் கூறினால் அஃது உங்களுக்குக் கீழ்ப்படியும்'' *(லூக் 17:6)*. இப்பொருளில் கிரேக்கச் சொல் புதிய ஏற்பாட்டில் இங்கு மட்டும் பயன்பட்டுள் ளது. எழுபது நூல் காட்டு அத்தி மரத்தைக் குறிக்க இக்கிரேக்கச் சொல்லை வழக்க மாகப் பயன்படுத்துகிறது. லூக் *19:4*-இல் காட்டு அத்தி மரம் குறிக்கப்படலாம். லூக்கா, லூக் *17:6; 19:4* ஆகிய இடங்களில் வரும் மரங்களின் தன்மையைப் பற்றிக் கூறாததால், இவை இரண்டையும் வேறு படுத்த லூக்கா விரும்பவில்லை என்று எண்ணப்படுகிறது.

கருமுசுக்கட்டை மரம் பாலஸ்தீனத்தில் சாதாரணமாகக் காணப்பட்டது. அதன் சாறு மிகவும் மதிப்பு மிக்கதாகக் கருதப்பட்டது. பட்டுப்புழு வளர்ச்சிக்கு மிக முக்கியமான வெண்முசுக்கட்டை பாலஸ்தீனத்தில் நாடு கடத்தலுக்குப்பின் தான் அறிமுகம் செய்யப் பட்டது.

**முடக்கு வாதம்** (PARALYSIS)

இயேசுவாலும் (*மத் 4:24; 9:2-7* இணை), தொடக்கத் திருச்சபைத் தலைவர்களாலும் (*அ.ப. 8:7*) குணப்படுத்தப்பட்ட நோய்களில் ஒன்று. ஆனால், இந்த நோய் விவரிக்கப்படவில்லை. ஒரு நிகழ்ச்சியில் ஒருவர் முடக்கு வாதத்தில் மட்டுமன்று, ''மிகுந்த வேதனையுடன் கிடந்தான்'' என்றும் விவரிக்கப்படுகிறார். ஒரு வேளை அவனது மூச்சு பாதிக்கப்பட்டிருக்கலாம் (*மத் 8:6;* காண்க.*லூக் 7:2; யோவா 4:52*). பேதுரு குணமாக்கிய முடக்கு வாதக்காரன் எட்டு ஆண்டுகள் படுக்கையாய்க் கிடந்தான் (*அ.ப. 9:33*).

**முடமாக்குதல், உறுப்புகளைக் குறைத்தல்** (MUTILATION)

விவிலியக் காலங்களில் உயிரின் புனிதத்தன்மை போற்றிப் பாதுகாக்கப்பட்டதால் மனிதன் அல்லது மிருகங்களின் உறுப்புகளை வெட்டி முடமாக்குவது இல்லாதிருந்தது. உடலில் குறையுள்ளவர்கள் யாரும் குருவாகி இறைவனுக்கு ஊழியம் செய்ய அனுமதிக்கப்படவில்லை. இவர்களில் ''முடவன், குறைந்த அல்லது நீண்ட உறுப்பு உடையவன்'' ஆகியோர் உள்ளடங்குவர் (*லேவி 21:18*). இந்தத் தடை உடல் குறைவு இயற்கையாக ஏற்பட்டவர்களுக்கா, விபத்தினால் உண்டானவர்களுக்கா அல்லது தானே உடல் குறைவு செய்துகொண்டவர்களுக்கா என்பது புரியவில்லை. ''குறையுள்ளவற்றை ஆண்டவருக்குச் செலுத்தக் கூடாது'' (*வேலி 22:22*) என்று கூறுகின்றது. ஆனால், பாகாலின் தீர்க்கதரிசியின் ''வழக்கப்படி வாளினாலும், வேலினாலும் இரத்தம் கொட்டும் வரை, தங்களையே கீறிக் கிழித்துக் கொண்டார்கள்'' (*1 அர 18:28*) என்று பார்க்கின்றோம். எபிரேய இறைவாக்கினர்கள் தாமே உடலை முடமாக்குதலைக் கண்டனம் செய்தனர் (*எரே 47:5; ஓசே 7:14*). உடலை முடமாக்குகின்ற செயல் செக்கேம், சிலோவா, சமாரியா (*எரே 41:5*), மோவாபு (*எரே 48:37*) மக்களிடையே துக்கத்தின் அடையாளமாகக் கருதப்பட்டது.

எதிரிகளின் உடலை ஊனமாக்குதல் என்பது போரில் வழக்கமாக இருந்ததாக அதோனி பெசக்கு பற்றிய நிகழ்ச்சியுரையிலிருந்து தெரிய வருகின்றது (*நீதி 1:6-7*); பெலிஸ்தியர் சிம்சோன் கண்களைப் பிடுங்கினார்கள் (*16:21*); அம்மோனியர்கள் யாபேசு மனிதர்களின் கண்களைப் பிடுங்கி விடுவதாக மிரட்டினர்(*1 சாமு 11:2*); இசுபொசேத்தின் தலையை வெட்டியவர்களின் கை கால்கள் ஒருவேளை சாவுக்குப் பின், வெட்டப்பட்டன (*2 சாமு 4:12*); நெபுகத்னேசர் தனது ஊழியர்களைக் கண்டந்துண்டமாய் வெட்டி விடப் போவதாக மிரட்டினான் (*தானி 2:5*).

பவுல், இரு பகுதிகளில், விருத்த சேதனத்தை முடமாக்குதலாகக் கருதுவதாகத் தோன்றுகிறது. போலி விருத்த சேதனக்காரர்களிடம் எச்சரிக்கையாக இருக்கும்படி கேட்டுக் கொள்கிறார் (*பிலி 3:3*). கலாத்தியர் உள்ளங்களில் குழப்பம் உண்டாக்குகிறவர்கள் தங்களையே அண்ணகராக ஆக்கிக் கொள்ளட்டும் என்று கூறுகிறார் (*கலா 5:12*).

**முடம், கால் ஊனம்** (LAME, CRIPPLED)

இஃது ஒருவர் நடக்க முடியாமல் செய்யும் உடல் ஊனமாகும். இது பிறவி ஊனமாகவோ, பிற்பாடு வந்த ஊனமாகவோ இருக்கலாம். ஒரு குழந்தை தாயின் வயிற்றில் இருக்கும் போது ஏற்படும் சத்துக் குறைவினால் இத்தகைய ஊனம் ஏற்படலாம்.

குருக்களைச் சந்திப்பின் கூடாரத்திலும், ஆலயத்திலும் பணிசெய்வதில் பங்கு பெறுவதற்குத் தகுதியற்றவர்களாக்கிய குறைகளில் முடமும் ஒன்றாகும் (*லேவி 21:18*). இத்தகைய தடைகள் பலியாக ஒப்புக் கொடுக்கப்பட்ட விலங்குகளுக்கும் பொருந்தும் (*உப 15:21; மலா 1:8.4*). பொதுவாக முடமானவர்கள் சமூகத்திலிருந்து ஒதுக்கிவைக்கப்பட்டனர். முடமானவர்கள் போர்ச் சேவையோ, மற்றச் செயல்களோ செய்ய முடியாது என்பதால் அவர்கள் இழிவாக நோக்கப்பட்டனர் (காண்க.

2 சாமு 5:6; சங் 35:15; எசா 33:23). இரண்டு கைகளோடு அல்லது இரண்டு கால்களோடு முடிவில்லா நெருப்பில் தள்ளப்படுவதை விட, கை ஊனனாய் அல்லது கால் முடவனாய் வாழ்வில் நுழைவது நலம் என்று இயேசு எச்சரிக்கிறார் (மத் 18:8 இணை). ஆயினும், முடம்தான் இசுபொசேத்துக்குத் தாவீதின் அவையில் பாதுகாப்புப் பெற்றுத் தந்தது (2 சாமு 4:4; 9). நீதிமான்கள் முடவர்களுக்கு உதவ வேண்டும் (யோபு 29:15; எசே 34:4).

இறைவாக்கு இறுதிக்கால இயல், இஸ்ராயேல் மீண்டும் அமைக்கப்படுதலுக்கு முடவர்கள் குணமாகுதல் ஓர் அடையாளமாகும் என்கிறது (எசா 35:6; எசே 34:16). இறுதிக் காலத்தில் இறை மக்கள் ஒன்று சேர்க்கப் படுவதில் முடவர்களும் உள்ளடங்குவர் (எரே 31:8; மீக் 4:6-7; செப் 3:19; காண்க. லூக் 14:13.21). முடவர்கள் இயேசுவாலும் (மத் 15:30-31; 21:14), தொடக்ககாலத் திருச்சபைத் தலைவர்களாலும் (அ.ப. 3:1-8; 4:7-10; 8:7; 14:8-10) குணமாக்கப்படுதல், பழைய ஏற்பாட்டு இறைவாக்குகள் நிறைவேறுதலாகப் புரிந்து கொள்ளப்பட்டது (காண்க. மத் 11:5 இணை). இயேசு பெத்சதாவில் முடவனைக் குணமாக்கியதை ஓய்வுநாள் அனுசரிப்பை மீறுவதாக யூதர்கள் குற்றம் சாட்டினர் (யோவா 5:3).

**முடியாலான ஆடை** (HAIRCLOTH)

ஒட்டக முடியாலான ஆடை அணிந்தவராய் விவரிக்கப்படுகிறார் திருமுழுக்கு யோவான் (மத் 3:14; மாற் 1:6). 2 அர 1:8-இல் எலியா மயிரடர்ந்த மனிதராக விவரிக்கப்படுகிறார்.

**முடிவு, இறுதி** (END)

இச்சொல் பொதுவாக, பல பொருட்களில் பயன்படுத்தப்பட்டிருந்தாலும், சிறப்பாக நிகழ்கால முடிவைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது (மத் 24:13-14; மாற் 13:7; 1 கொரி 15:24; 1 பேதுரு 4:7).

இச்சொல் நிறுத்திவைத்தலையும், நோக்கத்தையும் குறிக்க வல்லது. உரோ 16:21-22-இல் சாவில் முடியும் பாவ வாழ்வை, முடிவில்லா வாழ்வைப் பெற்றுத் தரும் பணியின் புனிதப்படுத்தப் பட்ட வாழ்வோடு பவுல் ஒப்பிட்டு வேறுபடுத்தும் போது, நோக்கம் அல்லது குறிக்கோள் உள்ளடங்கியுள்ளது. உரோ 10:4 இருபொருளையும் உள்ளடக்கியுள்ளது எனலாம். விசுவாசத்தின் வழியாக மனிதன் ஏற்புடையவனாவதற்குரிய கோரிக்கைகளையெல்லாம் கடைப்பிடித்து, கிறிஸ்து மோசே சட்டத்தை நிறைவேற்றுவதோடு, ஏற்புடைமைக்கு ஒரு சாதனம் என்ற அளவில் பழைய உடன்படிக்கையை ஒரு முடிவுக்குக் கொண்டு வருகிறார்.

''இறுதிவரை'' என்ற சொல் கிறிஸ்துவுக்காகத் துன்பப்படுவதின் முடிவைக் குறிக்கலாம் (மத் 10:22; 24:13; காண்க.மாற் 13:13; திருவெளி 2:26). ''உலக முடிவு'' (மத் 24:3) இறையரசு தொடங்கி வைக்கப்படும் காலமாகும். ''தொடக்கமும் முடிவும் நானே'' என்ற சொற்றொடர் இறைவனுக்கும் கிறிஸ்துவுக்கும் சாற்றிக் கூறப்படுகிறது (திருவெளி 21:6; 22:13). இஃது இறைவனின் மேலாண்மை மிக்க, வரையில்லா மாட்சிமையின் மற்றொரு விளக்கமாகும்.

**முட்செடியும் முட்புதரும், காஞ்சொறி** (THORNS AND THISTLES, BTAMBLES, NETTLES)

இவ்வகையைச் சார்ந்த காட்டுச் செடிகளின் தண்டுகளிலும், இலைகளிலும் முட்கள் காணப்படுகின்றன. எபிரேய மொழியில் ஏறக்குறைய பதினேழு பெயர்கள், இச்செடிகளுக்கு வழங்கப்படுகின்றன. விவிலியத்தை ஆதாரமாகக் கொண்டு நாம் பார்க்கும் போது முட்களும் புதர்களும் பாவத்தண்டனையின் உருவகங்களாகப் பயன்படுத்தப்பட்டன (ஆதி 3:18; யோசு 23:13; யோபு 31:40; எசா 5:6; 32:13; 34:13; எசே 9:6; 10:8; மீக் 7:4). இவை, ஒன்றுக்கும் உதவாதவை என்றும் கருதப்படுகின்றன (2 சாமு 23:6; 2 அர 14:9; 2 நாள் 24:18; பழ 15:19; எசா 7:23-25; 55:13; எபி 6:8). இவை தீமையின் அடையாளமாகச் சித்தரிக்கப்படுகின்றன (மத் 7:16; காண்க. பழ 22:5; எரே 4:3; 12:13; எசே 2:6). இவை

துன்பத்தின் அடையாளமாகக் காணப்படு கின்றன (பழ 26:9; எசே 28:24; 2 கொரி 12:7). புதிய ஏற்பாட்டில் விதை விதைப்ப வன் உவமையில் முட்கள் உலகக் கவலை களையும், பண ஆசையையும் குறிக்கின்றன (மத் 13:7; மாற் 4:7. 18; லூக் 8:7.14).

இஸ்ராயேல் மக்கள் முட்களையும், முட் புதர்களையும், நெருப்பில் இட்டு எரிப்ப தற்கு மட்டுமே பயன்படுத்தினர். எனவே, முட்களைத் தீமைக்கும், அதை எரிக்கும் நெருப்பைத் தண்டனைத் தீர்ப்புக்கும் ஒப் புமைப்படுத்துவது மிகவும் எளிதானது (எசா 9:18; 10:17; 33:1; நாகூ 1:10). நல்ல பயிர்கள் வளரும் இடத்தில் முட்கள் தேவையற்றன, தீமையானவை என்ற கருத் தும் விவிலியத்தில் காணப்படுகிறது (பழ 24:31). முட்புதர் யோத்தாமின் உவமை யிலும் (நீதி 9:8-5), இயேசுவின் உவமை யிலும் (லூக் 6:44) வருகிறது.

முட்செடியில் காஞ்சொறி என்பது ஒன்றா கும். இது மயிரிழை போன்ற இலைகளை யுடையது. இது நச்சுத் தன்மையுடைய நீரைச் சுரக்கக் கூடியது. இச்செடியைத் தொட்டால், கடுப்பு உண்டுபண்ணும். பாழ் வெளியில் வளர்வது, அதை அடையாள மாக உணர்த்தும் (எசா 34:13; ஓசே 9:6; செப் 2:9).

## முட்டை (EGG)

கி.மு ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு தான் பாலஸ்தீன மக்கள் முட்டையை உணவாக உண்ண ஆரம்பித்தார்கள். குருவி, புறா போன்ற சிறிய பறவைகளின் முட்டை கள் உணவுக்காகச் சேகரிக்கப்பட்டன (உப 22:6; எசா 10:14). லூக் 11:12-இல் வீட்டில் வளர்க்கும் பறவைகளின் முட்டையைப் பற்றியே கூறப்பட்டிருக்கிறது. எசா 59:5-இல் தீயவர்களின் திட்டங்களுக்கு நச்சுப் பாம்பின் முட்டைகள் உருவகப் படுத்திப் பேசப்படுகின்றன. தீக்கோழி தன் முட்டைகளைத் தரைமேலேயே இட்டு வைத்து, மண்ணிலேயே அவை வெப்ப முறும்படி செய்து விடுகிறது என்று யோபு ஆகமம் கூறுகிறது (யோபு 39:14). யோபு 6:6-இல் 'முட்டையின் வெண்கரு' என்று கூறப்பட்டிருப்பது ஒரு சிறிய பறவையின் முட்டையைக் குறிக்கலாம்.

பிற்காலத்தில் தகனப் பலியைக் குறிப்ப தற்குப் பாஸ்கா விழாவின் போது மற்றப் பொருட்களுடன் ஒரு வறுத்த முட்டையை யும் மேசையில் யூதர்கள் வைத்திருப்பார் கள். மிஸ்னாவின் படி, அக்காலத்தில் முட்டையை அவித்தும், பொறித்தும், எண் ணெயோடு சேர்த்துப் பொறித்தும், மீனோடு சேர்த்தும் உண்டனர்.

## முணுமுணுத்தல் (MURMUR)

திருப்தியற்ற நிலையையோ, கோபத் தையோ, முறையீட்டையோ மெல்லிய குரலில் வெளிப்படுத்துவது (மத் 20:11; 1 கொரி 10:10).

யாத்திரை நிகழ்ச்சிகளில் இச்செயல் அடிக்கடி குறிக்கப்படுகிறது (யாத் 15:22-25; 16:1-36; 17:1-7; எண் 11:1-34; 20:1-13; 21:4-9).

முணுமுணுத்தல் பற்றிய மற்றக் குறிப்பு கள்: எண் 16-17; உப 9:6-29; யோசு 9:18; நெகே 9:16-31; சங் 78;106; எசே 20; 1 கொரி 10:9-10).

## முதலில் பழுத்த (FIRST-RIPE)

(எண் 13:20; 18:13; எசா 28:4; எரே 24:2; மீக் 7:1; நாகூ 3:12). முதலில் முற்றிய அல்லது பழுத்த தானியங்கள், காய்கறிகள், பழங்கள் ஆகியவைகளைச் சித்திரிக்கும் ஓர் உரிச்சொல். அறுவடைக்காலம் நெருங்கி விட்டது என்பதை இவை முன்னறிவிக்கின் றன. முதற்கனிகளும் எல்லா உயிர்களிலும் தலைப்பேறும் எல்லா உயிரையும் படைத்தவ ரான கடவுளுக்கு ஒப்புக்கொடுக்கப்பட வேண்டும். முதற்கனிகளைக் காணிக்கை யாக்குவது இஸ்ராயேலருடைய குழு வழி பாட்டிலும் (லேவி 23:9-21), தனி வழிபாட் டிலும் (யாத் 23:19; உப 26:1-11) சிறப்பிடம் பெறுகிறது. ''முதலில் பழுத்த'' அல்லது ''முதற் பலன்கள்'' என்ற சொற்றொடர்கள் பல புதிய ஏற்பாட்டு எழுத்தாளர்களால் உருவகமாகக் கையாளப்படுகிறது; பிரபல

மாகிவிட்ட இறையியல் பொருளிலும் பயன்பட்டுள்ளது (உரோ 8:23; 11:16; 16:15; 1 கொரி 5:20. 23; 16:15; யாக் 1:18; திருவெளி 14:4).

## முதலும் இறுதியும் (FIRST AND LAST)

இது யாவேயின் முடிவில்லாத புகழையும் ஆற்றலையும் குறிப்பதற்காக இரண்டாவது எசாயா (எசா 41:4; 44:6; 48:12; காண். 40:28; 43:10-11) பயன்படுத்துகிற சிறப்புப் பெயர் அல்லது பட்டம் ஆகும். அடிமைத் தனக் காலத்து இறைவாக்கினர் ''முடிவில்லா'' என்பதைப் புரியாத, வரலாற்றுக்குப் புறம்பான, கருத்தியலான சொற்களில் நினைத்துப் பார்க்க முடியாது. மாறாக, உலக மொழியை அதனுடைய குறைகளோடு பயன்படுத்துகிறார்.

> ''நமக்கு முன் தெய்வம் ஏதும் உண்டானதில்லை; நமக்குப்பின் ஏற்படப்போவதுமில்லை'' (எசா 43:10).

திருவெளிப்பாட்டு நூலில் 1:17; 2:8; 22:13-இல் இந்தச் சிறப்புப்பெயர் காணப் படுகிறது.

## முதலை (CROCODILE)

யோபு 40:25-41:26-இல் வரும் லேவியாத்தானின் விவரிப்பு, முதலையைப் பற்றியதாக இருக்குமென பொதுவாக எண்ணப் படுகிறது. 40:25-41:3 வரையுள்ள விவரிப்பு பெரிய நீர்வாழ் விலங்கைக் குறிக்கிறது. 41:4 முதல் உள்ள விவரிப்பு முதலையைச் சிறப்பாக விளக்குகிறது. இந்த முதலையை உலகத்திலேயே பெரிய விலங்காக எபிரேயர் கருதினர். யோபு ஆகம ஆசிரியர் எகிப்திய முதலையைப் பற்றிக் கேட்டு அறிந்திருந்தாலும், அவரது முதலையைப் பற்றிய அறிவு பாலஸ்தீன நாட்டிலிருந்தே கிடைத்திருக்க வேண்டும். ஏனெனில், இங்கே முதலைகள் அதிகமாக இருந்த ஓர் ஊர் அம்முதலையின் பெயரைக் கொண்டே அழைக்கப்பட்டது.

## முதற்பலன்கள் (FIRST FRUITS)

### I. முதற்கனிகள்

**1. சட்டம்:** விளைச்சலில் சிறந்தவை என்று நாம் கருதுகின்ற, மண்ணின் முதல் படைப்புகளின் மீது விதிக்கப்படுகின்ற வரிகளினின்று, முதற்பலன்கள் என்னும் சொல்லை நாம் பெறுகிறோம். மற்ற மக்களைப் போலவே (எகிப்தியர், பாபிலோனியர், கிரேக்கர், மற்றும் உரோமையர்) இஸ்ராயேலிலும் மக்கள் இந்த முதற்கனிகளை இறைவனுக்கு அளித்தனர். எபிரேயச் சட்டமானது மெதுவாக இந்தச் சட்டத்தினையும், முதலில் எவ்விதத் துல்லியமான சடங்குமின்றி நிறைவேற்றப்பட்ட இந்தக் காணிக்கையினுடைய பண்புகளையும் தீர்மானித்தது (ஆதி 4:3-4). பல்வேறு காலங்களைப் பற்றிய நூற்பகுதிகளில், இந்த வளர்ச்சியின் படிகளை நாம் காணலாம்: யாத் 22:29; ''உன் பெருகிய விளைச்சலும் வழிந்தோடும் இரசமும்'' மற்றும் ''உன் நிலத்தின் முதற்கனிகளில் முதன்மையானவை'' (யாத் 23:19; காண்க. 34:26) ஆகிய காணிக்கைகள்; உப 26-இல் சடங்கினுடைய விரிவான விவரிப்புகள்; முதற்கனிகளிலிருந்து செய்யப்பட்ட அல்லது எடுக்கப்பட்டதற்குரிய சட்டத்தினுடைய நீட்டிப்பு (எண் 15:20; எசே 44:30; லேவி 23:17.20; 2 அர 4:42; உப 18:4; காண்க. தோபி 1:6). குருத்துவச் சட்ட நெறியானது, பாஸ்கா வார காலத்திய பார்லியின் முதற்கட்டு (லேவி 23:10-11), மற்றும் ஐம்பதாம் நாள் விழாக் காலத்துக் கோதுமை அறுவடையின் முதற்பலன்கள் (யாத் 34:22; லேவி 23:17) என்னும் உயரிய உன்னத வகையான இரு காணிக்கைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இதன் காரணமாகவே அந்நாள் ''முதற்பலன்களின் நாள்'' என்று அழைக்கப்படுகிறது (எண் 28:26).

**2. சடங்கின் பண்புக் கூறுகள்:** லேவி 2:12-இல் உள்ள ஒரு பலியுடன் இணைந்த வழிபாட்டுச் சடங்கானது ஒரு பல்கூட்டான பொருளைக் கொண்டுள்ளது. இந்தக் காணிக்கையானது, இயற்கையின் தலைவராகவும் அனைத்துப் பலன்களின் ஊற்றாகவும் உள்ள இறைவனுக்கு நன்றி செலுத்தும் செயலுக்குச் சமமாக உள்ளது. உப 26:3-இன்படி சடங்கு முறையின் பொருளை வெளிப்படுத்துகின்ற விசுவாச

அறிக்கையானது முக்கியமானதொரு நுட்பத்தினைச் சேர்க்கிறது. இஃது எகிப்திலிருந்தான பயணத்தையும், உரிமைப்படுத்திய கானான் நாட்டில் நுழைவதையும் வெளிப்படையாகக் குறிப்பிடுகிறது: ''ஆண்டவரே, இதோ நீர் எனக்குக் கொடுத்த நிலத்தின் முதற்பலன்களைக் கொண்டு வந்துள்ளேன்'' *(உப 26:10)*. எபிரேயரின் காணிக்கையானது வரலாறு முழுதும் இறையின் தயாளகுணத்திற்கான பதிலாகும். இறைவனுடைய கொடையானது மனிதனுடைய கொடையைக் கோருகிறது. உலக முக்கியத்துவமிக்க கோட்பாடு ஒன்று இங்கு உள்ளது.

இச்சடங்கானது மற்றொரு பண்பையும் கொண்டுள்ளது. இறைவனுக்கு அர்ப்பணிக்கப்படும் முதற்பலன், இப்பகுதி முழுமையினையும் குறித்து நிற்பதால், முழு விளைச்சலையும் புனிதப்படுத்துகிறது *(உரோ 11:16)*. எனவே, இந்த அடையாளச் சைகையின் மூலமாக, பூமியின் பொருட்கள் தங்களுடைய முழுமையில் திருநிலைக்குப் புறம்பான அமைப்பினின்று, புனிதத்தின் ஆளுகைக்குக் கடந்து செல்கின்றன; புனித மக்களுக்கெனப் புனிதப்படுத்தப்பட்ட பலன் ஆகின்றன! ஒருமுறை புனிதப்படுத்தப்பட்ட ஒரு பகுதியானது மொத்தத்தின் மீதும் புனிதப்படுத்தும் ஆதிக்கத்தைச் செயல்படுத்துகிறது என்ற எண்ணமானது விவிலியத்தில் மற்ற இடத்தில் காணப்படுகிறது. மேலும், அஃது உயர் மட்டத்தில் எடுத்துக் கூறப்படுகிறது. இவ்வாறு, இஸ்ராயேல் *(எரே 2:3)*, கிறிஸ்தவர்கள் *(யாக் 1:18)* மற்றும் சிறப்பாக முதலில் மனம் மாறியவர்கள் *(உரோ 16:5; 1 கொரி 16:15)* அல்லது கன்னியர் *(திருவெளி 14:4)* முதலியோர், மொத்தப் பொருட்களின் மீது வரியாக விதிக்கப்பட்டு, இறைவனுக்கு அல்லது கிறிஸ்துவிற்கு அர்ப்பணிக்கப்படுகின்ற முதற்கனிகளுடன் ஒப்பிடப்படுகின்றனர். மீட்பின் திட்டத்தில், ஓர் அர்ப்பணிக்கப்பட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் உலகைப் புனிதப்படுத்துதலில் ஆற்றல் மிக்க பங்கு வகிக்கிறார். *1 கொரி 15:20.23*-இன்படி, இப்போது உறங்குவோர் அனைவரும் மகிமையில் அவரைப் பின்தொடரும்படி முதற்கனியாக கிறிஸ்து எழுகிறார். பவுல் கொலோ *1:15-17*-இல், இறை ஞானமானது இறைசெயல் அல்லது ஆற்றல் என்று அழைக்கப்படுகின்ற பழ *8:22*-ஆல் தூண்டப்பட்டிருக்கலாம். மீட்பின் அமைப்பில் உள்ளது போலவே படைப்பின் அமைப்பிலும், முதற்கனிகளின் கருத்தில் அடங்கியுள்ள முன்னுரிமை மற்றும் செல்வாக்கு என்னும் இரு பண்புகளையும் கிறிஸ்து நிறைவேற்றுகிறார். ஆவியின் முதற்பலன்கள் கிறிஸ்தவரின் முடிவான மீட்பினுடைய முன்குறித்தல் மற்றும் உத்தரவாதம் ஆகியவற்றை விளக்குகின்ற உரோ *8:23*-இல் இச்சாயல் வெளிப்படுகின்றது.

**3. தசமபாகம் அல்லது பத்திலொரு பங்கு:** பழைய ஏற்பாடு அடிக்கடி பத்திலொரு பங்கினை முதற்பலன்களுடன் தொடர்புபடுத்துகிறது. ஆனால், நீண்ட நெடுங்காலமாகவே வழக்கில் இருந்தாலும் *(ஆமோ 4:4; ஆதி 28:22)*, மிகப்பழைய சட்டம் இதனைப் பற்றிக் குறிப்பிடவே இல்லை *(யாத் 20-23)*. பத்திலொரு பங்கானது முதலில் முதற்பலன்களுடன் குழப்பப்பட்டதாகத் தெரிகிறது *(உப 12:6.11.17; 14:22)*. ஆனால் மற்றொரு புறம், சில குறிப்பிட்ட பிற்கால வாசகங்களில் *(எசே 44:30; எண் 18:12;...)* முதற்பலன்கள் காணிக்கையின் பலிப்பண்பு குறைந்து முதற்பலன்கள் குருக்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட வரி எனத் தாழ்த்தப்பட்டது *(மலா 3:10; சீரா 45:20; நெகே 10:36...)*. இறுதியாக, பத்திலொரு பங்கானது முதற் பலன்களிலிருந்து தெளிவாக வேறுபடுத்தப்பட்டு, பூமியின் பலன்களில் பத்திலொரு பங்கையும், மந்தையில் பத்திலொரு பங்கையும் கொண்டிருந்தது.

II. **தலைப்பேறு, தலைமகன்:** அதாவது கருப்பையைத் திறக்க விலங்குகளுடைய மற்றும் மனிதருடைய, தலைப்பேற்றைக் காணிக்கையாக அளித்தல், முதற்பலன்கள் பற்றிய சட்டத்தினைச் சிறப்பான முறையில் செயற்படுத்தலாகும். உடன்படிக்கைச் சட்

டம் மனிதன், விலங்கு மற்றும் ஆட்டு மந்தையினுடைய முதற்பிறப்பினைக் கொடையாக யாவேக்கு வகுத்துத் தருகிறது (*யாத் 22:28-29*). வழிபாட்டுச் சட்டம் பின்வரும் காரணத்தை அதற்குக் குறிப்பிடு கிறது: ''கருப்பையைத் திறக்கும் தலைப் பேறு அனைத்தும் என்னுடையன. ஆடு, மாடு, கால்நடைகளின் ஆண் தலையீற்று அனைத்தும் எனக்குரியனவே'' (*யாத் 34:19*). ஆனால், முதற்பலன்களைப் போலவே, இறைவனுடைய முழுமையான மேலாண்மையின் அடிப்படைக் கோட்பாட் டின் மீது ஒரு வரலாற்று நோக்கம் சுமத்தப்படுகிறது. தனது மக்களை விடுவித் தவராகிய ஆண்டவருக்கு இக்கொடை அளிக்கப்படுகிறது. மேலும், ''எகிப்து நாட் டிலுள்ள மனிதருள் தலைப்பேறு தொடங்கி, கால்நடைகள் தலையீற்று ஈறாக ஆண் தலைப்பிறப்பு அனைத்தையும் சாகடித்த'' இரவின் நினைவையும் இது நிலைக்கச் செய்கிறது (*யாத் 13:15*).

சட்டமானது ஒரே சமயத்தில் விலங்குகள் மற்றும் மனிதருடைய தலைப்பிறப்பிற்குச் செயற்படுத்தினாலும் அதன் நோக்கம் இரண்டில் ஒவ்வொன்றுக்கும் வேறுபட்ட தாகும். விலங்குகளின் ஒவ்வொரு தலைப் பிறப்பும் பலியிடப்படுகிறது (*யாத் 13:15; உப 15:20; எண் 18:17*), அல்லது மீட்கப்படு கிறது (*யாத் 13:13; 34:20; லேவி 27:27*). முதல் குழந்தையைப் பொருத்தமட்டில் மனிதன் அதனை அளிக்கிறான்; அதாவது, யாத் 13:2-இன் விளக்கப்படி, ஆண்ட வருக்கு அர்ப்பணிக்கிறான். எவ்வாறு? அவர்கள் விருத்தசேதனத்தைப்பற்றி எண் ணினார். கெசேர் மற்றும் தானாக்கு ஆகிய இடங்களில் செய்யப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சிகளினால் சான்று பகரப்பட்ட குழந்தைகளைப் பலியிடும் கொடுமையான பழக்கமானது, இஸ்ராயேலிலும் இருந்ததை ஆய்வாளர்கள் சிலர் ஏற்றுக்கொள்கின்றனர். பண்டைக்காலங்களில் அவர்கள் அவற்றைச் சட்டமுறைப்படியானவை என்று கருதி யிருக்கலாம். பெனிசியரின் செல்வாக்கின் கீழ் கலப்புச் சமய காலத்தில் இத்தகைய செயல்முறைகள் இஸ்ராயேல் மக் களிடையே அறிமுகப்படுத்தப்பட்டன (*1 அர 16:34*) என்பது உறுதி. ஆகாசு ''தனது மகனை நெருப்பைக் கடக்கச் செய்கிறார்'' (*2 அர 16:3*); மனாசே அவரைப் பின்பற்று கிறார் (*2 அர 21:6*). *மீக் 6:7* இப்பழக்கத் தினை மறைமுகமாகக் குறிப்பிடுகிறது. ஆனால், இஸ்ராயேல் சடங்கானது இந்தத் தீங்கினை வெளிப்படையாகவே கண்டிக் கிறது (*உப 12:31; 18:10-12; எரே 7:31; 19:5; 32:35; லேவி 18:21; 20:2-4*). வாழ்வின் முதற் பலன்களுக்கு ஆண்டவர் உறுதியாக உரிமையுள்ளவர் (*ஆதி 22:2*). ஆனால், மனிதனுடைய பிள்ளைகளைப் பலியிடு வதை அவர் மறுக்கிறார். எனவே, தலை மகன் பலியிடப்படுவதற்குப் பதிலாக, மீட்கப்படுகிறான். ஈசாக்கினுடைய பலி யின் நிகழ்ச்சி, *யாத் 13:13; 34-20*-ஆல் குறிக்கப்பட்ட மீட்பு மாற்றினுடைய சட்டத் தினை எடுத்துக்காட்டுகிறது. பிற்காலத்தில் முதற்பிறப்பினுடைய இடத்தினை ஏற்ற லேவியரால் இந்த மீட்பு உறுதிப்படுத்தப் படுகிறது (*எண் 3:11-13; 8:16*). மனித இனத்தின் முதற்கனியாகிய இயேசு, மரியா ளுடைய கரங்களின் மூலமாக தன்னையே தந்தைக்கு அளித்தபோது, அந்த நாளும் வந்தது (*லூக் 2:22-24*). அப்போது அவர் பழைய சட்டத்தின் கட்டளைகளுக்கு முழு மதிப்பையும் அளித்தார்.

## முதுமை (OLD AGE)

*1.* நீண்ட காலம் வாழவேண்டும் என் பதே தனது உறவினருடன் மகிழ்ச்சியுடன் வாழும் ஒவ்வொருவருடைய விருப்பமு மாகும். ஆனால், முதுமை அனுபவத்திலும் ஞானத்திலும் மிகுந்த வளப்பம் உடைய தாக இருக்கக்கூடுமானாலும், தளர்ந்து போனவர்களும், பொறுமை இழந்தோர் களுமான துரதிர்ஷ்டசாலிகள் மீது அது கனமான சுமையாக அடையும் (*சீரா 41:1-2*). இவ்வாறாக, முதிர்ந்த வயதானது மரணத்தை நோக்கிய வீழ்ச்சிப் பாதை அல்லது முடிவில்லா இன்பத்தை நோக்கிய வளர்ச்சிப்பாதை என்ற நோக்கிற்கு ஏற்ப, வேறுபட்ட பொருளைக் கொண்டுள்ளது.

***2. நீண்ட வாழ்வும் மரணம் அணுகுதலும்:*** மரணத்தினால் அச்சுறுத்தப்பட்டாலும், வாழ்வானது இறைவனின் கொடையாகும். இவ்வாறாக, நீண்ட வாழ்வானது ஆசிக்கப் பட வேண்டும். தங்களுடைய பெற்றோரை மதிப்பவருக்கு இது வாக்களிக்கப்படுகிறது *(யாத் 20:16)*. இதன் வழியாக, தன்னுடைய பிள்ளைகளின் பிள்ளைகளைக் காணுகின்ற மகிழ்ச்சியடையும் நீதிமானுக்கு *(பழ 17:6)* இது மணிமுடியாக உள்ளது *(10:27; 16:31)*. நிறைந்த வாழ்நாள்களை உடையவரான ஆபிரகாமைப் போன்று *(ஆதி 25:9)*, தனது வாழ்வு முழுமையானது என்பதை உணர்ந்த வனாய் *(ஆதி 15:15; தோபி 14:1; சீரா 44:14)*, நீதிமான் மகிழ்ச்சியும் வளமுமான முடிவில்லா வாழ்விற்குப் பின்னர் அமைதி யாக இறக்கலாம் *(சங் 92:15)*. ஆனால், முதியவர் தனது வலிமை தளர்வதை உணரும்போதும் *(சங் 70:9; திருவுரை 12:5)*, எதுவுமே அவருக்கு ஆர்வமுடையதாக இல்லாதபோதும் *(2 சாமு 19:36)*, மரணம் ஒரு விடுதலையாகப் பார்க்கப்படுவதும் நிகழலாம் *(சீரா 41:2)*.

**3. ஆண்டுகளின் அனுபவமும் ஞானத்தில் முன்னேற்றமும்:** அனைத்து மக்களும் அதி காரத்தினை வயதுடனும் அது கொணர் கின்ற அனுபவத்துடனும் தொடர்புபடுத்தி யுள்ளனர். விவிலியத்திலும், முதிர்ந்தோர் சமுதாயங்களின் தலைவர்களாக உள்ளனர் *(யாத் 3:16; 18:12; 2 சாமு 5:3; எஸ்த 6:7; அ.ப. 11:30; 15:4)*. முதியோர் சிலர் அவதூறான, அநீதியான வாழ்வு வாழ்ந்தா லும் *(சீரா 25:2; தானி 13:5)*, நரை திரண்டவர் மரியாதைக்கு உரியோராவர் *(லேவி 19:32; 1 திமொ 5:1-2)*. தங்களுடைய பெற்றோரின் வயது முதிர்ந்த காலத்தில் பிள்ளைகள் அவர்களுடைய உதவிக்கு வர வேண்டும் *(சீரா 3:12)*. தனது ஞானத்தின் காரணமாகவும் *(25:4-5)*, பாரம்பரியத்தின் சாட்சி என்ற நிலையிலும், முதியவர் அதிகாரத்துடன் பேசமுடியும். ஆயினும், அவர் இதனை விவேகத்துடன் செய்ய வேண்டும் *(32:3; 42:8)*. உண்மையில் முதியோரை அச்சுறுத்துகின்ற அபாயம் ஒன்றுண்டு. புதியவற்றிற்கு அவர்கள் தங்க ளுடைய மனங்களைத் திறவாமல் மூடிக் கொள்வர் என்பதே அந்த அபாயமாகும். மரபிற்கான இந்தப் போலியான பற்று றுதியே *(மத் 15:2-6)* கிறிஸ்துவினுடைய எதிரிகளோடு சேர்ந்துகொண்டு, அவர் சிலு வையில் தொங்கியபோது ஏளனம் புரியு மாறு மக்களில் முதியோரை இட்டுச் சென்றது *(27:1.41)*. ஆகவே, முதியவருக்கு அளிக்கப்படுகின்ற மரியாதைக்கு அவரை உரியவராக்குவதற்கு நீண்ட வயது மட்டும் போதுமானதாயில்லை. உண்மையில் ஞான மானது இளையோருக்கு உரிமையானதா கும் *(சங் 119:10; ஞான 4:8-9. 16)*. மேலும், விண்ணக அரசில் நுழையும் தகுதியை அடைவதற்கு, ஒவ்வொருவரும் அதனை ஒரு சிறு குழந்தையைப்போல ஏற்றுக் கொள்ள வேண்டும் *(மாற் 10:15)*. எனவே, முதிய கிறிஸ்தவர்கள் முதிய பவுலின் அறிவுரையைப் பின்பற்றி *(பில 9)*, தங்க ளுடைய நற்குணங்களால் ஒளிவீசட்டும் *(தீத் 2:2-5)*.

இறுதியாக, முதிர்ந்த வயதானது முடி வில்லாமையின் அடையாளமாகும். முடி வில்லாதவர் ஒரு முதியவரின் வடிவத்தில் தானியேலுக்குத் தோன்றுகிறார் *(தானி 7:9)*. திருவெளிப்பாட்டில் இருபத்து நான்கு பெரியோர்களும், முடிவில்லாமல் இறைவ னுடைய மகிமையைப் பாடிக்கொண்டிருக் கின்ற இறைவனுடைய அவைக்காக நிற் கின்றனர் *(திருவெளி 4:4; 5:14;...)*.

## முத்தம் (KISS)

ஒருவர் தனது உதடுகளால் மற்றொரு வரின் உதடுகளையோ, கன்னத்தையோ, கைகளையோ, காலையோ தொடுதலே முத்தம் ஆகும். இஃது அன்பின் அடையாள மாகவோ, மரியாதையின் அடையாள மாகவோ, வாழ்த்தி வரவேற்கவோ, வழிய னுப்பவோ, எந்தவித உடல் இன்ப நோக்கு மின்றிப் பரிமாறிக் கொள்ளப்பட்டது. இது திருமண உறவினால் அல்லது நெருங்கிய, தூர இரத்த உறவினர்களிடையே பரிமாறிக் கொள்ளப்பட்டது *(ஆதி 27:26-27: 29:11.13; 31:28; 32:1; 33:4; 45:15; 48:10; 50:1; யாத்*

*4:27; 18:7; 2 சாமு 14:33; 1 அர 19:20; ரூத் 1:9.14)*; நண்பர்களிடையே பரிமாறிக் கொள்ளப்படலாம் *(1 சாமு 20:41; 2 சாமு 19:40; பழ 24:26)*. பகைவனின் முத்தம் வஞ்சகமானது *(பழ 27:6)*. யோவாபு, அமாசாவைக் கொல்வதற்கு முன் அத் தகைய வஞ்சக முத்தம் கொடுத்தே வரவேற் றான் *(2 சாமு 20:9)*. காதலர்களுக்கிடையே யும் முத்தம் பரிமாறிக்கொள்ளப்பட்டது *(உ.ச. 1:2; 8:1)*. அப்சலோம் நீதிகோரி அரசரிடம் வந்த அனைவரையும் கையை நீட்டிக் கட்டி அணைத்து முத்தமிட்டான். இவ்வாறு தம்மைவிடத் தாழ்ந்தவரை முத்த மிடுவது வழக்கத்திற்கு மாறானதாகும் *(2 சாமு 15:5)*. சவுலை அரசனாக எண்ணெய் ஊற்றி அபிடேகம் செய்யும்போது சாமு வேல் அவரை முத்தமிடுகிறார் *(1 சாமு 10:1)*. விலைமகளின் முத்தம் இதற்கு விதிவிலக்காகும் *(பழ 7:13)*.

வழிபாட்டில் தெய்வச்சிலைகளை முத்த மிட்டனர் *(1 அர 19:18; யோபு 31:27; ஓசே 13:2)*. வேசி தன்னோடு பாவம் செய்ய வருபவனை முத்தமிடுகிறாள் *(பழ 7:13)*. வழக்கமாக வாழ்த்துக் கூறி இடும் முத்தத் தையே யூதாசு இயேசுவுக்குக் கொடுத்து, இரவில் அவரைக் காட்டிக்கொடுக்கிறான் *(மத் 26:48; மாற் 14:44; லூக் 22:47)*. விருந்தாளியை முத்தமிட்டு வரவேற்க வேண்டியது விருந்தளிப்பவர் காண்பிக்க வேண்டிய மரியாதையாகும் *(லூக் 7:45)*. ஆதிக்கிறிஸ்தவர்கள் ஒருவருக்கொருவர் சமாதானத்தின் முத்தம் கொடுத்தனர் *(உரோ 16:16; 1 கொரி 16:20; 2 கொரி 13:12; 1 தெச 5:26; 1 பேதுரு 5:14)*; உரோமைக் கிறிஸ்தவ வழிபாட்டு முறையிலான திருப் பலியில் இன்றும் சமாதானத்தின் முத்தம் அளிக்கும் பகுதி உண்டு.

**முத்திரை** (SEAL)

**1. முத்திரையின் பொருளும் உபயோக மும்:** முத்திரையானது திறமையாகச் செதுக் கப்பட்ட ஆபரணம் மட்டுமன்றி *(சீரா 32:5-6)*, ஓர் ஆள் *(ஆதி 38:18)* மற்றும் அவரது அதிகாரம் *(ஆதி 41:12; 1 மக் 6:15)* ஆகியவற்றின் அடையாளமாகவும் உள்ளது. முக்கிய காரணத்திற்காக அன்றி வேறுவிதத்தில் விலக்கப்படாத மோதிரத் தில் இது பெரும்பாலும் பதிக்கப்படுகிறது *(ஆகா 2:23; காண்க. எரே 22:24)*. ஒரு நபர் தனது முத்திரையைப் பதிக்கின்ற பொறிப்பானது, அப்பொருள் அவருக்குரி யது *(உப 32:34)*, ஒரு செயல் அவரிட மிருந்து தோன்றுகிறது *(1அர 21:8)*, அவரது உடைமைகளுக்குள் நுழைவு பெறுதல் தடை செய்யப்பட்டுள்ளது என்பதற்குச் சான்று பகர்கிறது *(தானி 14:14)*. இந்தப் பொறிப்பானது ஓர் ஆணவத்தின் ஏற்புடை மையை உறுதிப்படுத்துவதாலும் *(எரே 32:10)*, அதனுடைய சேரிடத்தைச் சுட்டிக் காட்டுவதாலும் *(காண்க. உரோ 15:28)* அது கையெழுத்தாகவும் உள்ளது. முத்திரையை உடைக்கும் உரிமையை உடையவர் மட்டுமே படிக்கக்கூடிய முத்திரையிடப் பட்ட சுருளைப்போன்று, சில நேரங்களில் அஃது இரகசியப் பண்பை அதற்கு அளிக் கிறது *(எசா 29:11)*.

**2. இறைவனுடைய முத்திரை:**

அ) இறைவனுடைய முத்திரையானது தனது படைப்புகளின் மீதும் வரலாற்றின் மீதுமான அவரது தலைமையின் கவிதை வடிவ அடையாளமாகும். அவர் விண்மீன் களையும் முத்திரையிடலாம் *(யோபு 9:7)*. அஃது இருளார்ந்த இரவாகும். அவர் தனது திட்டங்களின் நூலுக்கும் முத்திரையிடு கிறார் *(திருவெளி 5:1-8:1)*. அவருடைய திட்டங்களைச் செயல்படுத்துகின்ற செம் மறியானவரைத் தவிர வேறெவரும் அத னுடைய இரகசியத்தைக் கண்டுபிடிக்க முடியாது. ஒரு கட்டுப்பாடு விதிக்கின்ற அளவில், தனிப்பட்ட பாவங்களையும் *(யோபு 14:17)* குழுப்பாவங்களையும் *(தானி 9:24)* இறைவன் முத்திரையிடுகிறார். இறுதி நிகழ்ச்சியில், இறைவன் அதே நேரத்தில் இறைவாக்கையும் முத்திரையிடு கிறார். அதாவது, அதனை நிறைவேற்று தலின் மூலம் அதற்கு முற்றுப்புள்ளி வைக் கிறார்.

ஆ) தனது தந்தையாகிய இறைவ னுடைய முத்திரையால் தான் குறிக்கப்பட்

டிருப்பதாக கிறிஸ்து கூறும்போது, அடையாளவியலானது புதிய மதிப்பீட்டை ஏற்கிறது (யோவா 6:27). மனுமகனின் மீதான தந்தையினுடைய இந்த முத்திரையானது, அவரது பணியை நிறைவேற்றுவதற்காக அவருக்கு அளிக்கப்படும் வல்லமை மட்டுமின்றி (காண்க. யோவா 5:32.36), அவரை இறைவனுடைய மகனாக்குகின்ற திருநிலைப்படுத்தலுமாகும் (10:36). ஆவிக்கான பற்றுறுதியைக் கோருகின்ற கொடையாகிய (எபே 4:30) ஆவியை அளிப்பதன் மூலம் இறைவன் கிறிஸ்தவனைத் தனது முத்திரையால் குறிக்கும்போது அவன் இந்தத் திருநிலைப்படுத்தலில் பங்கேற்கிறான் (2 கொரி 1:22; எபே 1:13 தொ). இந்த முத்திரையே இறைவனுடைய ஊழியர்களின் குறியாகும். முடிவான சோதனையின் போது இதுவே அவர்களுடைய பாதுகாப்பாக உள்ளது (திருவெளி 7:2-4; 9:4). இதன் மூலமாக, பவுலால் முத்திரை என்று அழைக்கப்படும் இறைவார்த்தைகளுக்கு விசுவாசமிக்கவர்களாக இருக்க அவர்களால் முடியும். உண்மையில் அவற்றின் மூலமாகவே மீட்பு அடையப்பெறுகின்ற நிலைகளை இறைவன் மாற்ற முடியாத அளவில் குறிப்பிடுகிறார் (2 திமொ 2:19).

**முத்து** (PEARL)

சிப்பிகளின் ஓடுகளுக்கு உட்புறம், அசாதாரண நிலையில் உருவாகும் ஒரு கெட்டியான பொருள்.

''ஞானத்தின் விலை முத்துக்களிலும் உயர்ந்தது'' (யோபு 28:18). அலக்சாந்தரின் வெற்றிக்கு முன்னர்க் கிரேக்க உலகம் முத்தைப் பற்றி அறிந்திருக்கவில்லை. கிரேக்க மற்றும் உரோமை நாடுகளில் புகழ்பெற்று விளங்கிய முத்துக்கள் செங்கடல், பாரசீக வளைகுடா மற்றும் இந்தியப் பெருங்கடலிலிருந்து எடுக்கப்பட்டவை. புதிய ஏற்பாட்டில் முத்துக்கள் உருவகமாக உபயோகிக்கப்படுகின்றன. விண்ணரசைப் பற்றி மதிப்பீடு செய்ய முத்து உபயோகப்படுத்தப்படுகிறது (மத் 13:46). இறை உண்மைக்கு உருவகமாக முத்து கூறப்படுகிறது (மத் 7:6). அஃது, அடக்க ஒடுக்கமான பெண்டிர் அணியக் கூடாத அணிகலன் (1 திமொ 2:9); வேசியின் அணிகலன் (திரு 17:4) மற்றும் பாபிலோனின் அணிகலன் (18:16). அது பாபிலோனின் ஏற்றுமதிப்பொருள் (18:12). புதிய எருசலேமின் ஒவ்வொரு வாயிலும் ஒவ்வொரு முத்தாலானது (21:21).

**முத்லபேன்** (MUTH-LABBEN - மகனின் இறப்புப் பற்றி)

சங் 9-இன் மேற்குறிப்பாகும். இதன் பொருள் ''மகனுக்காக உயிரைக் கொடு'' என்பதாகும். இஃது இச்சங்கீதம் பாடப்பட வேண்டிய, எல்லாரும் அறிந்த, ஓர் இசை மெட்டின் பெயராக இருக்கலாம்.

**முந்திரி விளைச்சல், திராட்சை விளைச்சல்** (VINTAGE)

1. அரை நாடோடிகளாக இருந்த இஸ்ராயேலர்கள் வாக்களிக்கப்பட்ட நாட்டில் நுழைந்தவுடன் ஓரிடத்தில் தங்கி கோதுமை, திராட்சை பயிரிடும் விவசாயிகளாக மாறினர். அறுவடையைப் போலவே திராட்சை அல்லது கொடி முந்திரி சேகரிப்பதும் ஒரு மகிழ்ச்சியான செயலாகும். அதே நேரத்தில் அது துரதிர்ஷ்டத்தின் அடையாளமாகவும் இருக்கிறது.

**2. இறைவனின் ஆசீர்வாதம்:** அறுவடையின் திருவிழா (யாத் 23:16; 34:22) கூடாரத் திருவிழாவாகிறது (உப 16:33). இதுதான் திருவிழாக்களில் மிகச் சிறந்ததும் திருவிழா எனச் சொல்லக் கூடிய அளவுக்குப் பெருமைக்குரியதுமாகும் (1 அர 8:2.65). ஒருவேளை இது மக்கள் செல்வாக்குப் பெற்றது இதற்குக் காரணமாக இருக்கலாம். இது பாக்கசு வழிபாட்டுடன் எத்தொடர்பும் அற்றது. அதே நேரத்தில் கானானியர்களின் முந்திரி விளைச்சலின் திருவிழாவிலிருந்து வந்திருக்கலாம் (நீதி 9:27). முந்திரி அறுவடையில் கடவுளின் ஆசீர்வாதத்தை உணர்ந்து இறைவனுக்கு நன்றி செலுத்தினர். தங்கள் மகிழ்வை நடனமாடுவதின் மூலமும் (நீதி 21:19), வேலையாட்கள் திராட்சைத் தோட்டத்திற்கு உள்ளும், புற

மும் கத்துவதன் மூலமும், திராட்சை பிழியப்படும் இடத்தில் கத்துவதாலும் (எசா 16:10; எரே 48:33), குடித்து மயக்க முறுவதிலும் (1 சாமு 1:14) வெளிப்படுத்தினர். இந்த மகிழ்ச்சிப் பெருக்கெல்லாம் உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கமாய் இருப்பவர்களுக்குத்தான். ஆனால் உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கமாய் இல்லாதவர்கட்கு இஃது ஒரு சாபக்கேடு. திராட்சைச் செடிகள் வீணாகும் (2 ஓசே 21:14; எசா 7:23); அறுவடை இருக்காது (உப 28:39); திராட்சைக் கொடி தவர்கின்றது (எசா 24:7); நடனமும் குடியும் இருக்குமிடத்தில் அழுகையும், கண்ணீரும் இருக்கும் (எசா 32:10-13; யோவேல் 1:5); அகந்தைமிக்க மோவாபில் பெருமையோடு கூக்குரலிடுவது இல்லாமல் போகும் (எசா 16:9; எரே 48:32 தொ). ஆனால், மக்கள் தங்கள் பாவத்திற்குப் பரிகாரம் செய்த போது வெட்டுக்கிளிகள் திராட்சைக் கொடியைப் பலனற்றுப் போகும்படி செய்யாது (மலா 3:11); வளம்மிக்க திராட்சைத் தோட்டங்கள் (எரே 31:12; ஆகா 2:19) மீண்டும் தரமான இரசம் கொடுக்கும் (எசே 14:8). சுருங்கக் கூறவேண்டுமென்றால் மெசியாவின் காலத்தில் இருக்கும் மகிழ்ச்சியின் வெளிப்பாடாக திராட்சை அறுவடையின் மகிழ்ச்சி அமையும் (ஆமோ 9:13; எசே 28:26; யோவேல் 2:24; எசா 25:6).

**3. இறைத் தண்டனையின் அடையாளம்:** அறுவடையின் போது பதரெல்லாம் நீக்கப்படுவது கடினமனம் கொண்ட பாவி தண்டிக்கப்படுவதை முன்னுணர்த்துகிறது. எனவே, திராட்சை அறுவடை விசுவாசமற்றவர்களுக்குரியதாக உருவகப்படுத்தப்படுகிறது. முதலில் திராட்சைக் கொடியின் கிளையிலிருந்து பிரிக்கப்பட்டு பின் திராட்சை பிழியப்படுகிறது. இறைவனை மறுதலித்தவர்களைக் களைந்தெறிய வெளிநாட்டவரை இஸ்ராயேலில் புகுந்தழிக்க அழைக்கிறார் (எரே 6:9). கடவுளே இஸ்ராயேல் எனும் கன்னிப்பெண்ணை இரசம் பிழிவது போலத் துன்புறுத்துகிறார் (புல 1:15). திராட்சைக் கொத்துக்களைச் சேகரித்தல், இனம் பிரித்தல், திராட்சை பிழியப்படுதல் போன்ற உருவகங்கள் எல்லாம் நாடுகளை, குறிப்பாக எருசலேம் பிடிபட்ட போது உதவிசெய்யாத ஏதோமை, இறைவன் தண்டிப்பதை உணர்த்துகின்றன. திராட்சைப் பழம் சேகரிப்பவர்கள் ஏதோமில் எதையும் விட்டுவைக்க மாட்டார்கள் (எரே 49:9; ஒப 5 தொ). யாவே இறைவனே திராட்சையைப் பிழிவது போல ஏதோமை மிதிப்பார். அதிலிருந்து பீச்சியடிக்கும் இரத்தம் அவரது உடையை இரத்தச் சிவப்பாக்கும் (எசா 63:1-6). இவ்வாறு திராட்சை அறுவடை உருவகம் மிகப் பொருத்தமாக கடவுளின் இறுதித் தீர்ப்பை அடையாள முறையில் உணர்த்துகிறது. யாவே வெறியூட்டும் பானத்தைப் புறவினத்தார் குடிக்கச் செய்வர்; இஃது அவர்களின் துரதிர்ஷ்டமாக அமையும் (எரே 25:15-30). அல்லது திருவெளிப்பாட்டின் படி, இறைவனின் தூதர் அரிவாளால் திராட்சைக் குலைகளைக் கொய்து கடவுளின் கோபமாகிய திராட்சை பிழியுமிடத்தில் போடுவார் (திருவெளி 14:17தொ; 19:15) என்று கூறப்படுகிறது.

## முப்பிம் (MUPPIM - பாம்பு)

இவர் பென்யமினின் புதல்வர்களில் ஒருவர் (ஆதி 46:21). இவர் எண் 26:39-இல் செபுபாம் என்றும், 1 நாள் 8:5-இல் செபுபான் என்றும் அழைக்கப்படுகிறார்.

## முயல் (HARE)

இலை தின்னும் விலங்குகளில் ஒன்று. பழைய ஏற்பாட்டில லேவி 11:6; உப 14:7-இல் இது குறிப்பிடப்பட்டுள்ளது; சுத்தமில்லாத விலங்கு. இஃது அசை போட்டாலும் இதற்கு விரிகுளம்பு இல்லை. பாலஸ்தீனத்திலும், சீரியாவிலும் பலவகையான முயல்கள் இருக்கின்றன.

## முரணுரை (PARADOX)

விவிலியத்தில் முரணுரை உண்மை நிகழ்ச்சிக்கு எதிர்மாறாகவும் பொருந்தாததாகவும் உள்ள, ஆனால் ஓரளவு உண்மைக் கூறுகளைக் கொண்டிருக்கும் கருத்துகளை மிகைப்படுத்திக் கூறுவதாகும். எனவே,

முரணுரைகள் மிகைப்படுத்துதலோடு தொடர்பு படுத்தப்படுகின்றன. தனது பார்வையின் முக்கியத்துவத்தை உணர்த்தவே, இயேசு அடிக்கடி தனது போதனையில் முரணுரையைப் பயன்படுத்துகிறார். எதிராளிகளுடன் விவாதிக்கும்பொழுது, அல்லது பற்றற்றும் கொள்கையற்றும் வாழ்வோருடன் பேசும்பொழுது, கிறிஸ்து தனது எண்ணத்தைக் கூர்மைப்படுத்தித் தெளிவாக இதனைப் பயன்படுத்துகிறார்.

பரிசேயருக்கு எதிராகக் குற்றஞ்சாட்டும் பொழுது, இயேசு அவர்களைக் ''கொசுவை வடிகட்டி அகற்றி, ஒட்டகத்தை விழுங்குபவர்கள்'' *(மத் 23:24)* எனவும், ''தன் கண்ணில் உள்ள மரக்கட்டையைப் பாராது அடுத்தவர் கண்ணிலுள்ள துரும்பைக் கூர்ந்து கவனிப்பவர்கள்'' *(மத் 7:3-5)* எனவும் கண்டனம் செய்கிறார். கொடுப்பதும் எடுப்பதும் *(மாற் 4:25)* பற்றி பல்வேறு நற்செய்தியாளர்கள் பல்வேறு பின்னணியினைத் தருவதால், அவ்வுண்மை பரிசேயருக்கு எதிரான ஒன்று எனக் கூற இயலாத நிலையில் உள்ளது *(மத் 13:12; 25:29; லூக் 8:18; 19:26)*.

விரைவில் வரவிருக்கும் இறைவனின் அரசைப் பற்றிய நற்செய்தியின் முக்கியத்துவத்தை மனிதனுக்கு உணர்த்த, இயேசுவும் தனது பேச்சில் முரணுரையைப் பெரிதும் கையாள்கின்றார். கடவுளது அரசின் வருகையானது மனிதனது கடமைகளையும், அழைப்புகளையும் மாற்ற வேண்டும். ''செல்வர்கள் இறையாட்சிக்கு உட்படுவதை விட ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவது எளிது'' *(மாற் 19:25)* என்று கூறுவதன் மூலம் செல்வர்களின் தன்னிறைவுணர்ச்சியைத் தாக்குகிறார். கடவுளின் அரசிற்காக தனது வாழ்வையே முற்றிலும் கையளிப்போருக்கு அளிக்கப்படும் நிபந்தனைகள்: ''இறந்தோர் தங்கள் இறந்தோரை அடக்கம் செய்வர்'' *(மத் 8:22)*; ''தியாகப் பணிக்காக தன் வாழ்வை இழப்பவன் அதை மீண்டும் கண்டடைவான்'' *(மத் 10:39)*; பிறரது தேவைகளில் உதவுவோர் தங்களது உயர்வைக் கண்டடைவர் *(மாற் 10:43)*. பவுலின் சமய வாழ்விற்கு இந்த முரணுரைக்கருத்து அடிப்படையானதாகும். ஏனெனில், கிறிஸ்துவுக்கு அடிமையாயிருந்து, அவரது சகோதரருக்குச் சேவை செய்வதன் வழியாய் இதுவரை அடையாத விடுதலையை அவர் அடைந்தார்.

## முராத்தோரியின் சிதைந்த ஏடு
(MURATORIAN FRAGMENTS)

இஃது இலத்தீன் மொழியில் எழுதப்பட்டிருக்கிறது. இதில் புதிய ஏற்பாட்டு நூல்களின் அட்டவணை கொடுக்கப்பட்டுள்ளது. அத்துடன் புதிய ஏற்பாட்டு நூல்களை எழுதியவர் பற்றியும், அவைகள் எவ்வாறு நமக்கு உண்மையுடன் வந்து சேர்ந்துள்ளன என்பதைப் பற்றியும் சிறிது விளக்கம் தருகிறது. இது கிரேக்க மொழியிலிருந்த வாசகத்தை, இலத்தீனில் மொழி பெயர்த்ததாகும். இந்த இலத்தீன் மொழிபெயர்ப்பு கொச்சையான மொழியிலேயே செய்யப்பட்டிருக்கிறது. இந்த இலத்தீன் மொழி பெயர்ப்பு கி.பி. எட்டாம் நூற்றாண்டில் போபியோ என்ற இடத்தில் செய்யப்பட்டது. ஆனால் மொழிபெயர்ப்பின் மூலமான கிரேக்க வாசகம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே உரோமையில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என அறிஞர்கள் கணிக்கின்றனர். இந்த இலத்தீன் சுவடி, சிதைவுகளுக்கு உள்ளாகி, மிலான் நகரிலுள்ள அம்புரோசியார் நூலகத்தில் காக்கப்பட்டு வந்தது. இதை லூதோவிகோ அந்தோனியோ முராத்தோரி என்பவர் 1740-இல் கண்டுபிடித்து வெளியிட்டார். அவர் பெயராலேயே இந்தச் சிதைந்த ஏடு பெயரிட்டு அழைக்கப்படுகிறது.

இதில், நற்செய்தி நூல்களைப் பற்றிக் கூறுவதுடன் வாசகம் ஆரம்பமாகிறது. ஆனால் முதல் வசனமே சிதைவுக்குள்ளாகியிருக்கிறது. லூக்கா, யோவான் ஆகியவர்களின் நற்செய்திகள் மூன்றாவது, நான்காவது நற்செய்திகள் என இரண்டாம் வசனம் கூறுகிறது. எனவே, முதல் வசனம் மத்தேயு, மாற்கு நற்செய்திகளைப் பற்றிதான் கூறியிருக்க வேண்டும் என்பது தெளிவு. நான்கு நற்செய்திகளின் ஒற்றுமையைப்

பற்றி கீழ்க்கண்ட முறையில் இவ்வேடு விளக்குகிறது. ''பல்வேறு அடிப்படைக் கருத்துக்களை, நற்செய்தி ஒவ்வொன்றும் தங்களுக்கு ஏற்ற முறையில், வற்புறுத்திக் கூறினாலும், விசுவாசிகளுக்கு இவை எவ் விதத்திலும் குழப்பத்தைத் தரமுடியாது. ஏனென்றால், எல்லா நற்செய்திகளிலும் இயேசுவின் பிறப்பு, அவரின் பாடுகள், உயிர்ப்பு இவைகளுடன் அவர் தன் சீடர் களுடன் செய்த உரையாடல், அவரது இரண்டாம் வருகை இவைகளைப் பற்றி தான் நாம் பார்க்கின்றோம். இவை அனைத் தும் ஒரே ஆவியின் வழித்துணையுடன் எழுதப்பட்டவை''. இவ்வாறு புதிய ஏற் பாட்டு நூல்கள் பரிசுத்த ஆவியின் ஏவுத லால் எழுதப்பட்டன என்பதற்கு விளக்கம் தருகிறது இவ்வேடு.

நற்செய்தி நூல்களையடுத்து அப்போஸ் தலர் பணி வைக்கப்படுகிறது. இதை யடுத்துப் புனித பவுல் எழுதிய 13 திருமுகங்கள் பட்டியல்படுத்தப்படு கின்றன.

இதையடுத்து, புனித பவுலின் பெயரைப் புனைபெயராக வைத்து எழுதப்பட்ட நூல் களின் பட்டியலும் தரப்படுகிறது. புனித பவுல் இலவோதிக்கேயர்களுக்கும் அலக் சாந்திரியர்களுக்கும் எழுதிய திருமுகங்கள் மார்சியனின் தோழர்களால் புனித பவுல் பெயரால் எழுதப்பட்டவை என்று விளக்கு கிறது இவ்வேடு. மற்றும் பல நூல்களை இவ்வேடு ஏற்றுக்கொள்ள முடியாதவை எனச் சுட்டிக்காட்டுகிறது. இவைகளை ஏன் கத்தோலிக்கத் திருச்சபையில் ஏற்றுக்கொள் ளக்கூடாது என்பதற்கான காரணத்தையும் ஓர் உதாரணத்தின் வழியாக விளக்குகிறது. நஞ்சை எப்படித் தேனுடன் கலக்க முடியும் என்று கேள்வி கேட்கிறது.

இதையடுத்து யூதா எழுதிய திருமுகம், யோவா எழுதிய இரண்டு திருமுகங்கள் *(1, 2 யோவா)*. இவைகளும், சால மோனைச் சிறப்புச் செய்ய சாலமோன் நண்பர்களால் எழுதப்பட்ட ஞானாகமமும் கத்தோலிக்கத்தில் *(திருச்சபையில்)* ஏற்றுக் கொள்ளப்படுகின்றன என்றும் இவ்வேடு தெரிவிக்கிறது.

இவைகளுடன் பேதுரு, யோவான் ஆகி யவர்கள் எழுதிய திருவெளிப்பாடு என்ற நூல்களும் திருச்சபையில் அங்கீகாரம் பெற்ற நூல்கள் என்று தெரிவிக்கிறது. இதில் எபிரேயருக்கு எழுதப்பட்ட திரு முகம், யாக்கோபு, பேதுரு ஆகியோர் எழுதிய திருமுகங்கள் குறிப்பிடப்பட வில்லை.

ஆயர் எர்மா என்பவர் எழுதியவை களைத் தனிப்பட்ட முறையில் படிக்கலாம். ஆனால், ஆலயங்களில் பொதுவாக வாசிக் கக்கூடாது என்ற ஒழுங்கினையும் இம் முராத்தோரியின் ஏடு தெரிவிக்கிறது. அதற் கான காரணங்களையும் இவ்வேடு விளக்கு கிறது. ''எர்மா அண்மையில்தான், உரோ மையில், அவரது சகோதரன் பத்திநாதர் ஆயராயிருக்கும்போது எழுதினார். எனவே இறைவாக்கினர், அப்போஸ்தலர்கள் இவர் கள் எழுதிய நூல்களோடு, இதைச் சமமாகக் கருதக்கூடாது'' என்று தெளிவுபடுத்துகிறது. இந்த முராத்தோரியின் அட்டவணை திருச் சபைக்கு எவ்வாறு குறிப்பிட்ட புத்தகங் களை அங்கீகரித்து வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது என்பதைப் புரிந்து கொள்ள உதவுகிறது. ஞானவாத, மார்சி யோன் குழுவைச் சேர்ந்த மற்றும் மோன் தானிச நூல்களைப் பொதுவாக நிராகரிக் கிறது. இத்தகைய தப்பறையான நூல்கள் இருந்ததுதான் திருச்சபை புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலை வரையறை செய்யத் தூண்டியது என்று இத்துணுக்குகள் வலி யுறுத்துகின்றன.

## முழங்கால் *(KNEE)*

***1. முழங்காலிடுதல்:*** ஒருவர்முன் முழங் காலிடுதல் என்பது அவருடன் நிற்பதற்குச் சரிசமமற்ற தனது நிலையினை அடை யாளம் மூலமாக வெளிப்படுத்துதலாகும்; மேலும், ஒருவரது தாழ்நிலையை அறிவிப் பதும், பணிவைக் குறிப்பதுமாகும். இவ் வாறு, ஆமானைக் கடந்து செல்லும்போது அனைவரும் முழங்காலிட்டுத் தலைகுனிய

வேண்டும் (எஸ்த 3:2). இறைமனிதராகிய எலியாவிற்கு முன் நிகழ்ந்ததுபோல், இந்தச் சைகைக்குச் சமயப் பொருளையும் தரலாம் (2 அர 1:13). முழங்காலிட்ட (மாற் 1:40) அல்லது முகங்குப்புற விழுகின்ற (லூக் 5:12) தொழுநோயாளியின் மனநிலையில் போர்வீரருடைய கேலியான, அவதூறான அணிவகுப்பிலும் (மத் 27:29இணை) ஆராதனையின் உண்மையான சைகையை முதல் கிறித்தவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது (மத் 8:2). ''பாகாலுக்கு முன் முழங்காலிடாதவர்களுடைய'' பார்வைக்கும் (1 அர 19:18; உரோ 11:4), அல்லது அது தனக்கு மட்டுமே ஒதுக்கப்பட வேண்டுமென யாவே விரும்பும்போதும் (எசா 45:23; காண்க. மத் 4:9) இந்தச் சைகையானது வெளிப்படையாகவே ஆராதனையைச் சுட்டிக்காட்டுகிறது. இறுதியாக, இயேசுவே ஆண்டவர் என்பதை ஏற்றுக்கொள்ள இயேசுவின் பெயருக்கு அனைவரும் மண்டியிட வேண்டும் (பிலி 2:10) என்பதை ஒவ்வொரு கிறித்தவனும் அறிந்துள்ளான்.

**2. செபவேளையில் முழங்காலிடுதல்:** மிகவும் எளிய முறை என்ற அளவில் முகம் குப்புற வணங்குதலைவிட மிக எளிய வடிவமான இது நிற்கும்போதும் அமரும் போதும் ஒருவர் கொண்டுள்ள ஆன்மாவின் மாறுபட்ட ஒரு நிலையைச் சிறப்பித்துக் காட்டுகிறது. அப்போது ஒருவர் செய்யும் செபமானது விளக்கத்தையோ, தூண்டுரையையோ, ஆசீரையோ கொண்டிருப்பதில்லை. இஃது ஓர் இறைஞ்சுகின்ற, சில நேரங்களில் அமைதியான, ஆழமான மன்றாட்டாகும். அதிகாரபூர்வமான அல்லது தனிப்பட்ட இத்தகைய செபத்தின் நான்கு சந்தர்ப்பங்கள் பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்படுகின்றன. ஆலயம் திருநிலைப்படுத்தலின் முடிவில், நிற்கின்ற மக்கள் திரளை நோக்கித் திரும்பும் சாலமோன், அதனை ஆசீர்வதித்துச் சிற்றுரை ஆற்றுகின்றார் (1 அர 8:14-21): பின்னர் பீடத்தை நோக்கித் திரும்பியவராய் நீண்ட செபம் முழுவதும் (8:22-53) ''முழந்தாட்படியிட்டு, வானத்தை நோக்கித் தம் கைகளை விரித்திருந்தார்'' (8:54). இறுதியாக அவர் எழுந்து நின்று மக்களுக்கு அறிவுரை கூறும்போது அவர்களை ஆசீர்வதிக்கிறார் (8:55-61). பாகாலின் குருக்கள் மீதான தன்னுடைய வெற்றிக்குப் பின்னர், இஸ்ராயேலின் இறை நிந்தையைத் தண்டித்த பஞ்சம் முடிவுக்கு வந்துவிட்டதை எலியா உணர்கிறார். ''எலியா கர்மேல் மலையின் உச்சிக்கு ஏறிச் சென்று, அங்கே தரையில் மண்டியிட்டுத் தம் முழங்கால்களுக்கு இடையே முகத்தைப் புதைத்துக் கொண்டார்'' (1 அர 18:42); மழை பெய்தது. பல நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் அன்னியருடன் யூதரால் மேற்கொள்ளப்பட்ட திருமணத்தினுடைய செய்தியைக் கேட்டு, எஸ்ரா ''மாலைப்பலி வரை துயரோடு செயலற்று அமர்ந்திருந்தார்''. பின்னர், ''நோன்பை விடுத்துக் கிழிந்த ஆடையோடும், மேலுடையோடும் முழந்தாளிட்டு என் கடவுளாகிய ஆண்டவரை நோக்கிக் கைகளை விரித்து'' (எஸ் 9:4-5) செபித்தார். இச்செபத்தில் மக்கள் அழுகையுடன் சேர்ந்து கொண்டனர் (10:1). இறுதியாக, தானியேல் தன் வீட்டு மேல் அறையில் தனியாக, ''வழக்கப்படி நாள் தோறும் மூன்று வேளையும் தம் கடவுளுக்கு முன்பாக முழந்தாளிலிருந்து மன்றாடி அவருக்கு நன்றி செலுத்துவார்'' (தானி 6:11).

இயேசு கெத்சமனித் தோட்டத்தில் மரண வேதனையில் முழங்காலிலிருந்து (லூக் 22:41), ''தரையில் விழுந்து'' (மாற் 14:35), ''முகங்குப்புற விழுந்து'' (மத் 26:39) செபித்தார். மற்றப்படி, அவர் முழந்தாளிடுவதை நாம் காண்பதில்லை. வீறார்ந்த சூழ்நிலைகளில் முழந்தாளிடுதலை அடிக்கடி சுட்டிக்காட்டுகிறார். தன்னைக் கல்லெறிபவர்களை மன்னிக்கின்ற வேளையில் ஸ்தேவானும் (அ.ப. 7:60), தபித்தாவை உயிர்ப்பிப்பதற்கு முன் பேதுருவும் (9:40), எபேசு நகரப் பெரியோர்களுக்கான தனது நீண்ட பிரியா விடை உரைக்குப்பின் பவுலும் (20:36), பிரியும் நேரத்தில் கடற்கரையில் கிறித்தவர் அனைவரும் ஒன்றுபட்

டும் (21:5) முழந்தாளிட்டும் செபிக்கின்றனர். ஆராதனையில் வேண்டுதலை வெளிப்படுத்துவதற்கான இயல்பான நிலையாக முழந்தாளிடுதல் உள்ளது (எபே 3:14).

**முழுமை, நிறைவு** (FULLNESS, PLEROMA)

1. இது மிகுதியான நிறைவுடைமையைக் குறிக்கும். விண்ணிலும் மண்ணிலும் எல்லா அதிகாரங்களையும் பெற்றுள்ள கிறிஸ்துவின் மீட்பு ஆற்றலை விவரிக்கப் பொருத்தமான சொல்லாகும். இதைக் குறிக்கும் கிரேக்கச் சொல் பல பொருள்கள் அளிக்கக்கூடியது. அடிப்படையில், கடல் (1 நாள் 16:32) அல்லது பூமி (சங் 24:1; 1 கொரி 10:26) போன்ற இடங்களை நிரப்புவனவற்றையோ, ஏதாவது ஒன்றை நிறைவு செய்வதையோ (மத் 9:16; மாற் 2:21; கொலோ 1:24) இஃது உணர்த்தும். சமமாக, இது கொள்கலத்தையோ, முழுத் தொகையையோ (உரோ 11:12), மிகுதியையோ (15:29), நிறைவையோ (13:10) உணர்த்தலாம்.

**2. காலத்தின் முழுமை:** எலிசபெத்துக்கும் (லூக் 1:57) மரியாளுக்கும் (2:6) பேறுகாலம் வந்ததுபோல், உலகிற்குக் காலம் நிறைவேறுகிறது (மாற் 1:15). நாம் மெசியா மற்றும் இறுதியியல் காலங்களைப் பற்றிப் பேசலாம் (கலா 4:4; எபே 1:10). இறுதியாக நிறைவடையும் இந்த அளவை, மணலால் நிரப்பப்பட்ட பெட்டியின் உள்ளடக்கத்தைப் பற்றி நம்மை நினைக்கச் செய்யலாம். ஆனால், இது மனிதரால் அடையப்படும் முதிர்ச்சியோடோ, நிறைவுடைமையோடோ ஒத்திருப்பதில்லை. ஆனால், இறைவனால் குறிக்கப்பட்ட காலத்தோடு ஒத்துப்போகிறது. இவ்வாறு இயேசு நிரப்புகிறார், இறைவாக்குகளை நிறைவேற்றுகிறார்.

**3. கிறிஸ்துவில் உள்ள முழுமை:** ''முழு நிறைவும் அவரில் (உயிர்த்த கிறிஸ்துவில்) குடிகொள்ள வேண்டுமென்று இறைவன் திருவுளம் கொண்டார்'' (கொலோ 1:19). இச்சொற்றொடரை விளக்கும் பலவற்றுள் இருவிளக்கங்கள் கவனிக்கத்தக்கவையாகும். முதலாவது விளக்கம் இயக்கமற்ற நிலையுடையது. இதில் முழுமை என்பது இறைப்பிரசன்னத்தால் நிறைவடைந்துள்ள உலகமுழுமையுமாகும். இக்கருத்தைப் பொருத்தமட்டும், அக்காலத்தில் பரவலாக இருந்த ஸ்தோயிக்கு கொள்கையாலும், ஞான இலக்கியத்தாலும் பவுல் பாதிக்கப்பட்டிருக்கலாம். செயலளவில், ஞானம் ''உலகை நிரப்பியுள்ளது; அனைத்தையும் ஒருங்கிணைக்கிறது'' (ஞான 1:7). இரண்டாவது விளக்கம் இயக்க ஆற்றலுடையது. இதில் ஞான இலக்கியத்தின் மற்ற உருவங்களைப் பவுல் பிரதிபலிக்கிறார். பெரும் நதிகளின் நீர் போன்று, ஞானம் தனது கரைகளின் உயரம்வரை பெருகி, வழிந்தோடுகிறது. அது கடலை விடப் பெரியது, பாதாளத்தை விட ஆழமானது. ஞானம் ஞானியை நிரப்புகிறது. முதலில் ஓடையாகவும் கிளை ஆறாகவும் உள்ள அவர் நதியாகவும் கடலாகவும் மாற்றப்படுகிறார் (சீரா 24:25-31; காண்க. பழ 8:12 தொ). மற்ற வாசகங்களில், இறைவன் ஞானத்தை இஸ்ராயேலில் வாழச்செய்கிறார் (சீரா 24:8-12). துல்லியமாக கிறிஸ்துவில்தான் நிறைமுழுமை குடிகொள்கிறது (கொலோ 1:19; 2:9). அவரில்தான் இறைவனின் ஞானமும் அறிவுமாகிய செல்வம் எல்லாம் காணப்படுகின்றன (2:3). இந்தச் செல்வங்கள் பதுக்கிவைக்கப்பட்டு, பேராசையுடன் பாதுகாக்கப்படும் செல்வங்களோடு சேர்ந்தவையல்ல; மாறாக, பரவிடும் உயிருள்ள நீர்போல, அவை சாவின் வெறுமைக்கு எதிரான வாழ்வின் முழுமையும் (பிலி 2:7), எல்லாப்பெயருக்கும் மேலான பெயரிலிருந்து (2:9) வரும் மீட்பளிக்கும் மிக மிகுதியான ஆற்றலுமாகும். இந்த மிக மிகுதித்தன்மை பவுலின் திருமுகங்களில் எல்லாம், குறிப்பாக உரோ 5:15-21; 8:31-39; 11:33-36; பிலி 2:9தொ ஆகிய பாடல் பகுதிகளில் தெளிவாகக் காணப்படுகிறது. இஃது இன்னும் மிகக்குறிப்பாக எபேசியர் திருமுகத்தில் வரும் பாடலில் காணப்படுகிறது (எபே 1:3-14). இதில் தன் அன்பு மகனில் நமக்கு முடிசூட்ட இறைவன் பயன்படுத்திய அருளின் வழிந்தோடும்

வளமையை மொழி பெயர்க்க குறையாத நிறைவளமுடைய நடை போராடுகிறது.

**4. திருச்சபை கிறிஸ்துவின் முழுமையா கும்:** கிறிஸ்து இறைவனின் எல்லா வல்ல மையை முழு உடைமையாகக் கொண்டி ருக்கிறார் *(கொலோ 1:19; 2:9)*; விசுவாசி கள் அவரது முழுமையில் பங்கு கொள்கின் றனர் *(2:9; 3:19)*. உண்மையில் கிறிஸ்துவின் மகிமைப்படுத்தப்பட்ட உடலில் குடிகொள் ளும் புறவாழ்வும் மிக மிகுதியான புனிதப் படுத்தலும் அவரது உலகாக மாறும் *(2:9)* திருச்சபையால் பங்கு கொள்ளப்படுகின் றன. இதனால்தான் இக்காலமுதல் திருச் சபை கிறிஸ்துவின் முழுமை என்றழைக்கப் படலாம் *(எபே 1:23)*. உடல் மற்றும் முழுமையாகிய இரு பட்டங்களும் உலகம் முழுமைக்கும் சாற்றிக் கூறப்படுவதில்லை. மாறாகத் திருச்சபைக்கு மட்டும் சாற்றிக் கூறப்படுகிறது. ஆனால் திருச்சபை கிறிஸ் துவினுடைய, முழுமையின் முதிர்ச்சியை அடைய *(4:13)* இன்னும் வளரவேண்டும். இந்த வளர்ச்சியில் ஆழமும் பரப்பும் கொண்டிருக்க வேண்டும் *(4:14-16)*. உண் மையில், எல்லாவற்றையும் ஒன்றுகூட்டி மீட்கும் பொருட்டு, ஏக்கத்தோடு எதிர் பார்த்திருக்கும் படைப்பு முழுமைக்கும் சென்றடைய திருச்சபை முன்கூட்டி ஏற் பாடு செய்யப்பட்டுள்ளது *(காண்க. உரோ 8:19-23)*. இந்த முறையில், கிறிஸ்து, திருச் சபை வழியாக தமது முழுமையால் படைப்பு முழுவதையும் முன்னேற்றமாக நிரப்புகிறார் *(எபே 1:20தொ; 4:10)*.

யோவான், தமது முன்னுரையில், இந்தக் கோட்பாட்டை எளிய சொற்களில் எடுத்துக் கூறுகிறார். தமது மகிமையில் ''அருளும் உண்மையும் நிறைந்து விளங்கிய'' *(யோவா 1:14)* ஒரே மகன், இறை நன்மை யின் வற்றாத நனி மிகுதியை மனிதர்மேல் பொழிகிறார். ''இவரது நிறைவிலிருந்து நாம் யாவரும் நிறைவாக அருள் பெற்றுள் ளோம்'' *(1:16)*.

**முளை** *(PEG, TENT PEG)*

உறுதியான சுவரில் பொருட்களைத் தொங்கவிட அடிக்கும் முளை *(எசா 22:23.25; எசே 15:3)*, அல்லது உறுதியாக தரையில் கூடாரம் அமைக்க உதவும் முளை. போரிலிருந்து தப்பி ஓடிவந்த கானானியப் படைத்தளபதி சீசராவிற்கு யாவேல் தனது கூடாரத்தில் அடைக்கலம் அளித்து, பின்னர் முளையைச் சுத்தியல் கொண்டு அவன் தலையில் அடித்து, அவனைக் கொன்றான் *(நீதி 4:21-22; 5:26)*. கடவுளின் அருள் மற்றும் வல்லமையால் எருசலேம் பாதுகாப்பாகவும், வலிமையா னதாகவும் உருவாக்கப்பட்டதென விளக்க இச்சொல் சிறந்த உருவகமாக விளங்கு கிறது *(எசா 30:20; 54:2; காண்க. எஸ் 9:8; செக் 10:4)*.

**முள் கரண்டி** *(FORK)*

விவிலியத்தில் உணவு உட்கொள்வதற்கு முள்கரண்டி பயன்பட்டது என்பதற்குக் குறிப்புகள் இல்லை. இது பாலஸ்தீனத் திலும் பழையமேற்காசியாவிலும் மக்கள் கையாலே உண்டனர் என்பதைச் சுட்ட லாம். மூன்று பல் கொக்கிகள், பலியில் அவர்களுக்குரிய பகுதிகளைக் குருக்கள் எடுத்துக்கொள்ளப் பயன்பட்டன *(1 சாமு 2:13-14)*. இதையொத்த, பொன்னால் அல் லது பளபளப்பாக்கப்பட்ட வெண்கலத் தால் செய்யப்பட்ட *(1 நாள் 28:17; 2 நாள் 4:16)* முள்கரண்டி சந்திப்புக் கூடாரத்திலும், ஆலயத்திலும், பீடத்தில் பலி ஒப்புக் கொடுக்கும்போது பயன்பட்டதாகத் தெரி கிறது *(யாத் 27:3; 38:3; எண் 4:14)*.

ஆறு கவர்முள் உள்ள முறம் அல்லது சுளகு தானியங்களிலிருந்து பதரைப் பிரித் தெடுப்பதற்குப் பயன்பட்டது *(எரே 15:7; மத் 3:12; லூக் 3:17)*. இத்தகைய கருவி தாற்றுக்கோலையும் குறிக்கலாம் *(1 சாமு 13:21)*.

**முள்முடி** *(CROWN OF THORNS)*

பிலாத்து இயேசுவைச் சாவிற்குக் கை யளித்த பின்பு, உரோமை வீரர்கள் இயே சுவை ஏளனம் செய்தபொழுது, இயேசு வின் தலையில் அழுத்திய முள்ளால் ஆன ஒரு வட்டவடிவ அமைப்பு *(மாற் 15:17)*. இயேசு தன்னை அரசன் என்று சொல்லிக் கொண்டதால், சட்டப்பிரகாரம் சதி செய்த

தாக அல்லது கலகம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டார். உரோமையச் சட்டத்தில் மாட்டிக்கொண்ட எவனுக்கும் உரோமைய வீரர்கள் செய்த ஒரு செயலாகத்தான் இஃது இருந்திருக்கலாம். லூக்கா இதைப் பற்றிச் சொல்லவில்லை.

'முட்கள்' என்ற சொல்லைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்ட கிரேக்கச் சொல்லின் பொருள் நெருஞ்சி என்பது. இயேசுவி னுடைய போதனைகளில் இச்சொல் கெட்ட பொருளில் உவமைகளில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது *(மத் 7:16; மாற்கு 4:7; காண்க.எபி 6:8)*.

**முள்ளம் பன்றி** (HEDGEHOG, PORCUPINE)

இஃது ஒரு பாலூட்டி வகை உயிரினம். *25* முதல் *30* செ.மீ நீளமுள்ளது. முட் களோடு கூடிய தோலையுடையது. தாக்கப் படும்போது பந்துபோல் சுருட்டி அமைத் துக்கொள்ளும் தன்மையுடையது. இதன் முதன்மையான தீனி பூச்சிகளாகும். ஆனால் எலிகள், தவளைகள், தாவரங்கள் ஆகியவற் றையும் தின்னக்கூடியது. இது பெரும்பா லும் இரவில்தான் வெளிவரும். வெற்றிடங் களிலும் பாறையின் இடுக்குகளிலும் வாழும். நகரங்கள் அழிக்கப்பட்ட பகுதி களில் இது வாழ்வதாகச் சித்தரிக்கப்படு கிறது *(எசா 14:23)*. இஃது ஒரு கொரிக்கும் வகையாகும்.

**முறுக்கேற்றி நெய்த நார்ப்பட்டு** (TWINED LINEN)

இஃது ஒரு சிறந்த துணியாகும். இதைக் கொண்டுதான் திருஉறைவிடத்தின் திரைகள் *(யாத் 26:1; 36:8)*, கூடார வாயில்களின் திரைகள் *(26:36)*, பெட்டகத்தின் திரைகள் *(36:37)*, முற்றத்தின் திரைகள் *(27:9; 38:9.16)*, முற்றத்து வாயில்களின் திரைகள் *(27:16.18; 38:10)* மேலும் ஏபோது என்னும் மேலாடை மற்றும் அதன் கயிறுகள் *(28:6.15; 39:5. 8.29)*, மார்புப்பதக்கம் *(28:15; 39:8)* ஆகியன செய்யப்பட்டன.

**முறை தவறிய புணர்ச்சி** (INCEST)

இது சாதாரணமாக, திருமணத்திற்கும் மிக நெருங்கிய உறவுடையவர்களுக்கிடையே ஏற்படும் புணர்ச்சியாகும். இப்பழக்கம் லேவி *18:6-18*-இல் தடைசெய்யப்பட்டுள் ளது. இத்தகைய புணர்ச்சி கொள்பவர்களுக் குரிய தண்டனை, அவர்கள் பிள்ளையில்லா தவர்களாக ஆக்கப்பட வேண்டும் *(லேவி 20:19-21)*. ஆனால், இதை எப்படிச் செய் வது என்பது கொடுக்கப்படவில்லை. ஆயி னும், இத்தகைய புணர்ச்சி பற்றிய குறிப்பு கள் விவிலியத்தில் பல இடங்களில் காணப் படுகின்றன *(ஆதி 19:31-35; 20:2. 12; 35:22; 49:4; 2 சாமு 13:14; எசே 22:10-11; 1 கொரி 5:1)*.

யூபிலி நூல் ஆதாமின் புதல்வர்கள் தங்கள் சகோதரிகளை மணந்து கொண்ட னர் என்று கூறுகிறது. இந்தக் குறிப்பும், லோத்தும் அவரது புதல்வியர்களும் பற்றிய கதையும் *(ஆதி 19:31-35)*, இத்தகைய முறை தவறிய புணர்ச்சிக்கு, மக்கள் தொகையைப் பெருக்குவது ஒரு காரணமாகும் என்று சுட்டுகின்றன. காமவெறியைக் காரண மாகக் கொண்ட நிகழ்ச்சியுரைகள் உள்ளன. மேலும், பல மனைவியர்களைக் கொள் ளும் சமூகத்தில் ஒரு மகன், தன் தந்தையின் உரிமைச் சொத்தைப் பெற்றபோது, தனது தாயைத் தவிர தன் தந்தையின் மற்ற மனைவியரையும் உரிமையாகக் கொண் டான் *(2 சாமு 3:6-11)*.

''இரத்த உறவாயிருப்பவர்'', தாய், தந் தையின் மற்ற மனைவியர், சகோதரிகள், தந்தைக்கோ, தாய்க்கோ, வீட்டிலோ, வெளி யிலோ பிறந்த மகளான சகோதரி, தந்தை யின் அல்லது தாயின் சகோதரி, தந்தையின் சகோதரன் மற்றும் அவன் மனைவி, மரு மகள், சகோதரனின் மனைவி, மனைவியின் சகோதரி ஆகிய நெருங்கிய இரத்த உறவின ரோடும் *(லேவி 18:6-16)*, மாமியார் *(உப 27:23)* ஆகியோரோடும் ஒருவன் உடல் உறவு கொள்வது தடை செய்யப்பட்டுள் ளது. இத்தகைய குற்றங்களுக்குரிய தண் டனை அவனைப் பிள்ளையற்றவனாக ஆக்குவதும் *(லேவி 20:21)*, சாவும் *(20:11-13)* ஆகும். ஒருவன் ஒரு பெண்ணை யும் அவள் தாயையும் மணம் செய்தால் அவர்கள் அனைவரும் நெருப்பில் சுட்

டெரிக்கப்பட வேண்டும் *(20:14)*. இத் தகைய தகாத புணர்ச்சி கொள்பவர்கள் யூத இனத்தில் இராதபடி அழிக்கப்பட வேண்டும் *(18:29)*.

*1* கொரி *5:1-13*-இல் ஒருவன் தன் தந்தையின் மனைவியோடு (ஒருவேளை மாற்றாந் தாயாக இருக்கலாம்) பாலின உறவு கொண்டதாகவும் இது கொரிந்தியக் கிறிஸ்தவர்களால் அனுமதிக்கப்பட்டதாக வும் தெரிகிறது. இதைப் பவுல் கடுமை யாகக் கண்டனம் செய்கிறார். ''இச்செயல் செய்தவனை உங்களிடமிருந்து அகற்றி விட்டிருக்க வேண்டும்... அத்தகையவனைச் சாத்தானுக்குக் கையளிக்க வேண்டும்'' *(1:2.5)*. பவுல் அளிக்கும் தண்டனை கொரிந் தியத் திருச்சபைக்கும் உரியதாகும். ஏனெ னில், அவர்கள் தங்கள் அகந்தையில் இப்பாவத்திற்குக் குருடாகிப் போய்விட்ட னர். ஒருவன் தனது குலத்துக்குப் புறம்பே தான் மணம் செய்து கொள்ள வேண்டும் என்று கட்டுப்படுத்தும் மரபும் கானானியர் களின் சிலைவழிபாட்டில் இருந்த முறை தகாத புணர்ச்சி மரபும் (லேவி *20:23*), இதுபற்றிய விவிலியப் போக்கை விளக்கு கின்றன எனலாம்.

### முற்றத்தின் நடுப்பகுதி *(MIDDLE COURT)*

எருசலேமில் அரச மாளிகைக்கும் ஆல யத்திற்கும் இடையிலுள்ள ஒரு வளாகம் *(2 அர 20:4)*. ஒருவேளை இது நீதி வழங்குவதற்கென்று அரியணை மண்டபத் திற்குப் பின்புறம் இருந்த முற்றமாக இருக்க லாம் *(1 அர 7:7-8)*.

### முன்குறித்தல் *((PREDESTINE))*

*1.* புதிய ஏற்பாட்டில் மட்டுமே முன் குறித்தல் என்ற கருத்து காணப்படுகிறது. இஃது அப்போஸ்தலர் பணிநூலில் *(4:28)* ஒரு முறையும், பவுலின் மடல்களில் ஐந்து முறையும் *(உரோ 8:29.30; 1* கொரி *2:7;* எபே *1:5.11)* வருகிறது. முன் குறித்து வைத்தல் பற்றிய பெயர்ச்சொல் பயன்படுத் தப்படவில்லை. ஆனால், திட்டம், உரு வரை முன்மாதிரி, முன்னறிவு, தேர்ந்து கொள்ளுதல் போன்ற சொற்கள் பயன்பட் டுள்ளன. இங்கு இறை செயல் மட்டுமே முக்கியத்துவம் பெறுகிறது. நாம் கூறும் எந்தக் கொள்கையும் அன்று. ''முன்குறித் தல்'' என்பது பற்றிய தன்விளக்கமான ஒரு கோட்பாடு விவிலியத்தில் இல்லை. ஆனால், பவுல், இறைவனின் திட்டத்தைப் புரிந்து கொள்வதில் இந்த இறைசெயலுக்கு முக்கியபங்கு அளிக்கிறார். எனவே தான் அது பற்றிய விவிலிய முன் கருத்துகளை யும் யோவானில் வரும் இணைக் கருத்து களையும் காணும்முன், இது பற்றிய பவுலின் சிந்தனையைத் தருகிறோம்.

***2. அவரது சுவிகாரப் பிள்ளைகளாக அன் பினால் முன்குறித்து வைத்தார்:*** கடவுளின் திட்டம் பற்றிய தனது இறைவாக்கு விளக் கத்தின் முடிவில் *(உரோ 1-8)*, பவுல் விசுவாசிகளை அவர்கள் நம்பிக்கையில் உறுதிப்படுத்த விரும்புகிறார். அதற்காக, ''கடவுளின் ஞானத்தையே பேசுகிறோம். அதுவோ மறைபொருளான ஞானம். நமது மகிமைக்காக உலகம் உண்டாகும் முன்பே கடவுளின் திட்டத்தில் இருந்தது'' *(1 கொரி 2:7)* என்றும், ''கடவுளிடம் அன்பு கூர்பவர் களோடு, அதாவது அவரது திட்டத்திற் கேற்ப அழைக்கப்பட்டவர்களோடு ஆவி யானவர் அவர்கள் நன்மைக்காக அனைத் திலும் ஒத்துழைக்கிறார் என்பதும் நமக்குத் தெரியும். ஏனெனில், கடவுள் யாரை முன்பே தேர்ந்துகொண்டாரோ, அவர்கள் தம் மகனின் சாயலுக்கேற்ற உருவைத் தாங்கும்படி முன் குறித்திருக்கிறார்; சகோ தரர் பலருள் தம் மகன் தலைப்பேறான வராய் இருக்க வேண்டுமென்றே இப்படிக் குறித்தார். யாரை முன்குறித்தாரோ அவர் களை அழைத்திருக்கிறார்; யாரை- அழைத்தாரோ அவர்களைத் தமக்கு ஏற் புடையவர்களாக்கினார். யாரைத் தமக்கு ஏற்புடையவர்களாக்கினாரோ அவர் களுக்குத் தம் மாட்சிமையில் பங்குதந்தார்'' *(உரோ 8:29-30)*. இறைவனுடைய திட்டத் தில், அதை முழுமையாக நோக்கி, பவுல் இரு பண்புகளை வேறுபடுத்துகிறார். அவற்றில் ஒன்று கடவுள் முன்பே அறிவார் என்பது. மற்றது கடவுள் முன்பே குறித்து

வைக்கிறார் அல்லது தீர்மானித்துள்ளார் என்பது ஆகும். இந்த இரு கருத்துகளையும் குழப்பிவிடக் கூடாது.

அ) விவிலிய நோக்கில், அறிவு என்பது ஆழ்ந்த ஆராய்ச்சிச்செயலில் அடங்கியிருக்க வில்லை. மாறாக, இரண்டு உயிர்களுக் கிடையே உள்ள உறவிலிருந்து எழுகிறது. படைப்புக்கு முன்னிருந்தே, இறை உள்ளத் தில் இறைவனுக்கும் மனிதர் சிலருக்கும் இடையே அன்புறவு இருக்கிறது. ''அவர் களை அவர் அறிந்திடுவார்'' *(1 கொரி 8:3; கலா 4:9; காண்க. மத் 2:13).* ''தந்தையாகிய கடவுளின் முன்னறிவுக் கேற்பத் தேர்ந்து கொள்ளப்பட்டவர்கள்'' *(1 பேதுரு 1:1)* இருக்கின்றனர். ஆகவே, முன்குறித்து வைத்தலுக்குப் பின்னணியாக முன்னறிவும், தேர்ந்து கொள்ளுதலும் அமைந்துள்ளன.

ஆ) இப்போது கடவுளது திட்டத்தின் இரண்டாவது பண்புக்கு வருவோம். இஃது ஒரு முடிவை நோக்கி, அதாவது துல்லிய மான சேரிடம் நோக்கித் தேர்வு செய்யப் படுகிறது. இதுவும் தொடக்கத்திலிருந்தே செய்யப்படுகிறது; ஆகவே முன் குறித்து வைத்தல் என்றே அழைக்கப்படலாம். ஆனால் தொடக்கத்தைப் பின்னோக்கிச் செல்லும்போது, இப்போது நாம் கால முடிவை அறிவதனால், அதைப் புரிந்து கொள்ள மட்டுமே முடியும். மீட்கும் பலி இறைவனோடு ஒப்புரவையும் மகன்களாக சுவிகாரத்தையும் அடைந்துவிட்டது. ''அவர்தம் திருவுள விருப்பத்திற்கேற்ப... இயேசு கிறிஸ்து வழியாகவே நம்மைத் தம் பிள்ளைகளாக்கிக் கொள்ள, அன்பினால் நம்மை முன்குறித்து வைத்தார்'' *(எபே 1:5-6).* திருவுளம் *(எபே 1:9),* அருள் *(உரோ 11:5; எபே 1:6-7; 2:5 தொ),* இரக்கம் *(உரோ 11:28; எபே 1:4)* ஆகியவைதான் பவுலின் இறையியல் அமைந்திருக்கும் சூழ்நிலையாகும். ஆகவே, முன்குறித்து வைத்தல் என்பது இறைவனால் அன்பு செய்யப்படுவது என்றால், இந்த மறை பொருளில் அச்சுறுத்துவது ஒன்றுமில்லை. மாறாக மனிதன், இறைத்திட்டத்தின் தொடக்கத்தை மட்டுமன்று, முடிவையும் அறியும் மகிழ்ச்சியைக் கொண்டுள்ளான். சமய வரலாறு பொருளுள்ளதாகிறது. தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் ''முன்பிருந்தே இதற் காகத் தயாரிக்கப்பட்டிருந்தனர்'' *(உரோ 9:23).*

**3. தன்னுரிமையில் முன்குறித்து வைத் தல்:** பவுல், இறைத்திட்டத்தின் இம்மைக் குரிய இரு கட்டங்களை அடுத்ததாக விவரிக்கிறார். ''யாரை முன் குறித்தாரோ அவர்களை அழைத்திருக்கிறார்; யாரை அழைத்தாரோ, அவர்களைத் தமக்கு ஏற் புடையவர்களாக்கினார்; யாரை ஏற்புடைய வர்களாக்கினாரோ, அவர்களுக்குத் தம் மகி மையில் பங்கு தந்தார்''*(உரோ 8:30).* முன்குறித்து வைத்தலின் தொடர்ச்சியாக இக்காலத்தில் செயல்முறையான அழைத்த லும் ஏற்புடையவராக்குவதும், வருங்காலத் தில் மகிமைப்படுத்தப்படுதலும் உள்ளன. இறைவனின் மாறாப்பொருளில் நிலை கொண்டு பவுல், கடந்த காலத்தில் வினைச் சொற்களைப், பயன்படுத்தித் தனது முழு உறுதிப்பாட்டை எடுத்துக்கூறுகிறார். இந்த இரு செயல்களை வேறுபடுத்தும் நுணுக் கங்களை ஒதுக்கிவிட்டு, பவுல் நமக்களிக் கும் சூழ்நிலையை ஆய்வுசெய்வோம். எல் லாமே முழுவதும் இறைவனின் செயலா கும். ''தம் திருவுளக் கருத்திற்கேற்ப அனைத்தையும் செய்து முடிக்கும் இறை வனின் திட்டப்படி முன் குறிக்கப்பட்ட நாங்கள் கிறிஸ்து இயேசுவுக்குள் பங்கு பெற்றுக் கொண்டோம்'' *(எபே 1:11).*

ஆனால் இந்தத் திட்டத்தில் மனிதனின் சுதந்தரம் என்னவாயிற்று? அதற்கு இடமே இல்லை போல் தோன்றுகிறது. பவுல் மற்றொரு இடத்தில் கூறுகிறார்: ''அப்படி யானால் கடவுள் ஒருவன் மீது எவ்வாறு குற்றம் சாட்டமுடியும்? அவருடைய விருப் பத்தை யார் எதிர்க்கக்கூடும்? நீ கேள்வி கேட்கலாம்'' *(உரோ 9:19).* இங்குத் தனி நபர்களைப் பற்றியன்று, கிறிஸ்துவை ஏற்க மறுத்த இஸ்ரயேல் மக்கள் அனைவரையும் பற்றியே பவுல் இப்பிரச்சனையை எதிர் கொள்ள வேண்டியிருந்தது. இறைவனின்

மறைபொருளான, ஆராய்ந்தறியக் கூடாத ஞானத்தை எடுத்துக் கூறி இப்பிரச்சனையை இறுதியாக விடுவிக்கிறார். இந்த ஞானத்தின் முன் மனிதன் வியப்படைய வேண்டும்; மௌனம் காக்க வேண்டும். ஆயினும், பவுல் மனுகுலத்தில், தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள், மற்றவர்கள் என இரு குழுக் களைத் தெளிவாக வேறுபடுத்துகிறார். இரு குழுக்களையும் இறைவன் திட்டத்தில் ஒரே விதமாய்ப் பவுல் கருதுவதில்லை. தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் ''இந்த மகிமைக்காக'' முன்னதாகவே தயாரிக்கப்பட்டிருக்கும் போது *(9:32)*, மற்றவர்கள் ''அழிவிற்குத் தயாராக'' மட்டுமே உள்ளனர் *(9:32)*. இறைவன் அழிவிற்கு முன்குறித்து வைப்பதில்லை.

ஆகவே, பவுல் கொண்டிருக்கும் நோக்கு நமக்குக் கடினமாக இருக்கலாம். நாம் தனிநபர்களைப் பற்றி எண்ணுகிறோம். அவரோ இஸ்ராயேலைப் பற்றிஎண்ணுகிறார். அவருக்கு, வரலாற்றின் ஆட்கள் அஃது ஏசாவோ, பார்வோனோ மூல முன் மாதிரியாவர். அவர்களின் சொந்த மீட்பு விவாதத்திற்குரியதன்று. ஆகவே, இறை மற்றும் மனிதச் செயல்களுக்குமிடையேயுள்ள உறவு பற்றிய பிரச்சனை இங்கு விடுவிக்கப்படவில்லை. ஆனால் இரண்டுக்குமிடையே எந்த முரண்பாட்டையும் காணாது, இரண்டையும் எடுத்துக் கூறும் அமைதியான முறையில் ஒரு விடுவிப்பைக் காணலாம். எடுத்துக்காட்டாக அவர் சூழ்நிலையைச் சுட்டிக்காட்டுதலையும் (இதனால் இந்த உண்மையின் நிலையை எடுத்துக் கூறுகிறார்), கடைப்பிடிக்கக் கோரும் கட்டளையையும் (இதனால் செயலாற்ற வேண்டிய கடமையை எடுத்துக் கூறுகிறார்) சேர்த்துக் கூறுகிறார். ''நீங்கள் கிறிஸ்துவில் இறந்துவிட்டீர்கள்; ஆகவே, வாழுங்கள்''. இதில் நாம் ஒரு மொழிப் பிரச்சனையைக் காண்கிறோம். ஆனால், பவுல் காணவில்லை. ஆகவே, அவர் கூறுகிறார்; ''அச்ச நடுக்கத்தோடு உங்கள் மீட்புக்காக உழைத்து வாருங்கள். நீங்கள் எதையும் விரும்பவும் செயலாற்றவும் தம் திருவுளம் நிறைவேற, உங்களில் செயலாற்றுபவர் கடவுளே'' *(பிலி 2:12-13)*. ''நாம் செய்ய வேண்டுமென்று கடவுள் முன்னேற் பாடு செய்த நற்செயல்களில் நாம் ஈடுபடுவதற்கே கிறிஸ்து இயேசுவுக்குள் நாம் படைக்கப்பட்டோம்'' *(எபே 2:10)*. ஆகவே, முடிவில்லாக் காலத்திலிருந்து கடவுளால் முன்னறியப்பட்டவைகளைச் செயல்படுத்துவதிலேயே மனித சுதந்தரம் அடங்கியிருப்பதுபோல் இவ்வுலகில் எல்லாம் நடந்தேறுகிறது. இதுவே வெளிப் பாட்டின் காட்சிப் பணித்திட்டமாகும். சமகாலத்திய சிந்தனை, இறைவனில் அன்பின் முதன்மையை அறிந்துணர்ந்ததென்றால், விதிவசம் என்ற கோட்பாட்டோடு குழப்பாது.

**4. பவுலின் சிந்தனைக்கு விவிலிய மூலம்:** முன்குறித்து வைத்தலின் அடிப்படை ஏற்கெனவே பழைய ஏற்பாட்டில், அதாவது எல்லாவற்றையும் முன்னரே காணும், உடனுழைக்கும் இறைவனின் செயலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. உண்மையில், எல்லாம் *(சீரா 11:4)* இடர்ப்பாடுகள்கூட *(ஆமோ 3:6; எசா 45:7)* ஆண்டவரிடமிருந்தே வருகின்றன. கடவுள் எப்போதும் ஒரு திட்டம் கொண்டிருந்தார் *(எசா 37:26)*. அதை வரலாற்றுப் போக்கில் *(14:24)* குறிப்பிட்ட காலங்களில் *(அ.ப. 17:26.31)* நிறைவேற்றுகிறார். இதே கருத்து இயேசுவை இறைமகனாகவும் *(உரோ 1:4)*, மேலாண்மையுடைய நடுவராகவும் *(அ.ப. 10:42)* ஏற்படுத்திய கடவுளின் செயலை விவரிக்கும்போது வருகிறது. இறைவனால் முன்னறியப்படாத அல்லது தீர்மானிக்கப் படாத எதுவும் நடப்பதில்லை *(அ.ப. 4:28; காண்க. மத் 25:14)*. இறைவன் தமது தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் நன்மைக் காக எல்லாவற்றையும் ஒழுங்கு செய்துள்ளார்; தயாரித்துள்ளார் *(மத் 20:23; 25:34)*. இறைவனைப் பொருத்தமட்டும் எதுவும் தற்செயலாக நிகழ்வதில்லை. எதுவும் அவரது கட்டுப்பாட்டுக்குப் புறம்பாக நடப்பதில்லை *(பழ 16:33)*. ஏனெனில், ''ஆண்டவர் படைத்த ஒவ்வொன்றிற்கும் குறிப்

பிட்ட ஒரு முடிவுண்டு'' *(16:4)*. ஆனால், இதுவரை கூறியவை எல்லாம் முன்னறி வையும் பரிபாலிப்பையும் பற்றியவை யாகும். முன்குறித்து வைத்தலைப் பற்றிப் பேச, இன்னும் அதிகமாக அறிய வேண்டும்.

இக்கருத்துக்கு நெருங்கிய ஒரு விசுவாசம் உண்டு. அது வாழ்வின் நூலில் எழுதப்பட் டிருப்பதாகும். இஃது இறுதித் தீர்ப்பை நோக்காகக் கொண்டு நற்செயல்களின் பட் டியலைக் கொண்டிருக்கும் கணக்குநூல் அன்று (தானி *7:10*; திருவெளி *20:12*). இது, சங்கீத ஆசிரியர் பேசும், காலத்திற்கு முந்திய நூலாகும். ''நீர் எனக்குக் குறித்து வைத்துள்ள நாள்கள் எல்லாம் உமது நூலில் எழுதப்பட்டுள்ளன. எனக்கு வாழ்நாள் எதுவும் இல்லாத காலத்தில் நீர் எனக்கு நாட்களைக் குறித்தீர்'' (சங் *139:16*). இது ''முன்குறித்து வைக்கப்பட்டவர்களின் நூல்'' என்றழைக்கப்படலாம். ''வாழ்வு நூலில் உலகத் தொடக்க முதல் பெயர் எழுதப் படாத மண்ணுலகினர், அந்த விலங்கைக் காணும்போது வியப்படைபவர்களும்'' உண்டு (திருவெளி *17:8*; காண்க. *13:18*; தானி *12:1*). இயேசுவும் ''உங்கள் பெயர் கள் விண்ணகத்தில் எழுதப்பட்டிருக்கின் றன என்பது பற்றியே மகிழுங்கள்'' என்று கூறும்போது, இதே கருத்தில் பங்கு கொள்ளுகிறார்.

இக்கருத்துகளோடு பவுலின் கருத்து களை ஒப்பிடும்போது, இயேசுவால் நிறை வேற்றப்பட்ட மீட்பு என்பது நழுவி விடுகிறது. மீட்பு வரலாற்றின் முடிவுக்கு வழியைத் திறந்துவிடும்போது, இயேசு அதன் மூலத்திற்குத் திரும்பப் போகவும், இறைவனது மனதைப் பின்பற்றவும் அனு மதிக்கிறார். இறைவன் தமது அன்பில் தாம் தேர்ந்தெடுத்தவர்கள் தமது மகனது சாய லுக்கு ஒத்திருக்க முன்குறித்து வைத் துள்ளார்.

**5. யோவானில் இணையான கருத்துகள்:** நற்செய்திகளில், பவுலின் சிந்தனைக்கு இணையான மற்றும் அதற்கு ஆதரவு அளிக்கும் கருத்துகள் இல்லையென்றால் அது வியப்பளிக்கலாம். முன்குறித்து வைக்கப்பட்டவர்களின் நூலைக் குறிப் பிடும்போதும் (லூக் *10;20*), தேர்ந்தெடுத் தலைக் குறிக்கும் சொற்களைப் பயன்படுத் தும்போதும் (மத் *7:23; 25:12*), இயேசுவின் சிந்தனை வேரூன்றியுள்ள பேரச்சம் பற்றிய விவிலியக் கருத்தைப் பற்றி நாம் பேச வில்லை. மிகவும் வெளிப்படையாக, யோவானில், தந்தைதான் விசுவாசிகளை மகனுக்கு அளிக்கிறார் (யோவா *10:29; 17:2. 6.9.24*); ''என்னை அனுப்பிய தந்தை ஈர்த்தாலொழிய எவரும் என்னிடம் வர இயலாது'' *(6:44)*. இங்கு மக்களைப் பொருத்தமட்டுமன்று, தனி நபரைப் பொருத்தமட்டும் முன்குறித்து வைத்தல் என்ற பிரச்சனையைக் காண்கிறோம். விசு வாசி தன்னைச் சூழ்ந்திருந்து எல்லாப் பக்கங்களிலும் வளைந்து கொள்ளும் உல கில் வைக்கப்பட்டுள்ளான். விதிவசக் கோட்பாட்டு உணர்வைத் தவிர்ப்பதற்கு ஒரேவழி இறைப்போக்கிற்குப் பின்னால் உள்ள உலகளாவிய அன்பைக் கண்டுணர்வ தாகும்.

**6. மொழியும் விளக்கமுறையும்:** ஒத்திசை வானதும் ஆறுதல் அளிப்பதுமான இந்த விவிலியமொழி இன்று புரிந்து கொள்ளக் கூடியதா? இக்கால விசுவாசிக்கு, விவிலிய எபிரேயத்தில் காணப்படும் தெளிவின் மையை ஏற்றுக்கொள்வது கடினமாக உள் ளது. எபிரேயம் நோக்கத்தையும் விளை வையும் தெளிவாக வேறுபடுத்துவதில்லை. அது ''கடவுள் விரும்புகிறார்'' என்று சொல்லும்போது அவரது விருப்பத்தை அன்று, மாறாக அவர் ஒன்றை அனுமதிப் பதைக் குறிக்கலாம். ஆனால், இந்த இலக் கணக்குறிப்பு தன்னிச்சையான விளக்கங் களுக்கு இடமளிக்கிறது. இது கோட்பாட் டின் பொருளைப் பலவீனப்படுத்தலாம். இதைத் தவிர இரு இடுக்கண்கள் குறிப் பிடப்பட வேண்டும். முதலாவது புறத்தைச் சார்ந்தது. இது தனி நபர்களை விடக் குழுவை முதன்மையாகக் கொண்ட சொற் களில் கூறப்படும் முன்குறித்து வைத்தல்

பற்றிய பிரச்சனையை நாம் சிந்திக்க முடியாது என்ற உண்மையிலிருந்து எழுகிறது. இதன் காரணமாகத்தான் உரோமையருக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் வரும் பவுலின் கடினமான சொற்கள் பல தவறுகள் எழ வாய்ப்பளித்துள்ளன. மேலும், சில சமயங்களில் தாங்கள் முடிவில்லா அழிவிற்கு முன்குறித்து வைக்கப்பட்டவர் என்று மக்களை இட்டுச் செல்லும் அவநம்பிக்கையை ஏற்படுத்தியுள்ளன. ஒரு சமய அனுபவத்தை எடுத்துக்கூற விவிலிய மொழி இடம், காலம் ஆகிய கூறுகளைப் பயன்படுத்துகிறது. இம்முறையில் இறைவனுக்கு மனித நடத்தையைச் சாற்றிக் கூறுகிறது என்பதை ஆழ்ந்த மட்டத்தில் நாம் பெரும்பாலும் மறந்து விடுகிறோம். இந்த மொழியை மீபௌதீக அல்லது இயல் கடந்த கோட்பாடாக ஆக்குவது, தன்மையால் இம்மைக் காலத்தைச் சேர்ந்ததை முடிவில்லாக் காலத்திற்குரியதாக்குவதாகும்.

''இறைவன் தாம் தேர்ந்து கொண்டவர்களைத் தம் சுவிகாரப்பிள்ளைகளாக முன்குறித்து வைத்தார்'' என்று கூறும்போது, கடவுளுக்கு மனிதப்பண்புகளைச் சாற்றிக் கூறும் மொழிநடையைப் பயன்படுத்துகிறோம். மனித மொழியமைப்பின் ஒரு பகுதியாகவும், நமது சுதந்தரத்தின் ஆற்றல்களை எடுத்துக்கூறும் முயற்சியில் பயன்படுத்தப்படுபவைகளுமான கூறுகளால் இறைவன் கட்டுப்பட்டுள்ளார் என்று நாம் கூறுவதாக இதற்குப் பொருளில்லை. இவ்வாறு, நமது இம்மைக்கால நிலையின் ஒளியில் நோக்கும்போது, முன்தேர்வு ''முன் குறித்து வைத்தலாகத்'' தோன்றலாம். இது தேர்ந்து கொள்ளப்படாதவர்களை நிராகரிப்பதையும் மற்றும் அவர்களை அடையாளம் கண்டுகொள்ள மறுப்பதையும் கூட உள்ளடக்கலாம். ஆனால், இஃது ஒரு பேச்சு முறையாகும். காலம், இடம் ஆகியவற்றுக்குக் கட்டுப்படாத ஒன்றை அவற்றுக்குள் மாற்றி வைப்பதாகும். முன்னறிவு முன்காணுதல், முன்தேர்வு, முன் குறித்தல் ஆகிய அனைத்துமே முதல் முயற்சி மனிதனிடமிருந்தன்று, மாறாகக் கடவுளிடமிருந்தே வருகிறது என்று கூறும் மனித முயற்சிகளின் அடையாளம் மட்டுமே ஆகும். தனி மனிதருக்குரிய சொற்களில் இந்த விதத்தில் மாற்றி அமைக்கும்போது, காலத்தின் மொழி அதன் உண்மைப் பொருளை உணர்த்துகிறது. இதை ''அவரே நமக்கு அன்பு செய்ததால் நாமும் அன்பு செய்வோமாக'' *(1 யோவா 4:19)* என்று யோவான் நன்கு எடுத்துக் கூறுகிறார்.

### முன்மாரி *(EARLY RAIN)*

மழைக் காலத்தைத் தொடக்கும் இலையுதிர்கால முதல் மழை. இம்மழை உழுவதற்கு ஏற்றதாக நிலத்தை நன்கு மென்மையாக்குகிறது. பின் மாரியோடு இஃது இணைக்கப்பட்டு இறைவனின் நன்மைத் தனத்திற்குச் சான்றாக இவை விளங்குகின்றன *(உப 11:14; சங் 84:6; எரே 5:24; யோவேல் 2:23)*.

### முன்னறிதலும் முன்னறிவும் *((FOREKNOW AND FOREKNOWLEDGE)))*

*1.* இச்சொற்கள் விவிலியத்தில் அடிக்கடி காணப்படாவிட்டாலும் இக்கருத்துகள் விவிலியம் முழுவதும் பரவிக் கிடக்கின்றன. இவை தேர்ந்தெடுத்தல், முன்குறித்து வைத்தல், பரிபாலிப்பு ஆகிய கருத்துகளோடு பிரிக்கமுடியாத விதத்தில் இணைந்துள்ளன.

இக்கருத்து பிற்காலத்தில் நடக்க இருப்பவைகளை நிகழ்காலத்தில் அறிந்திருப்பதைக் குறிக்கும். இதைக் குறிக்கும் கிரேக்கச் சொல், மருத்துவ இயலில் கலைச் சொல்லாகப் பயன்பட்டது. விவிலியத்தில் இறைவனுக்கு மட்டும்தான் இக்கருத்து சாற்றிக் கூறப்படுகிறது. நடைமுறையில் காணப்படுபவைகளை ஆதாரமாகக் கொண்டு, மனிதன் ஒரு சில காரியங்களை முன்னறியலாம். இதிலிருந்து வேறுபட்டதாகும் இறைவனுடைய முன்னறிவு. ஏனெனில், அவர் மட்டுமே காலங்களின் ஆண்டவர். அவரது நோக்கம் வரலாற்றின் தொடக்க முதல் முடிவு வரை எல்லா நிகழ்ச்சிகளையும் தன்னுள் அடக்கியுள்ளது. ஞானநூல்

காலத்திற்கு அப்பாற்பட்ட ஞானம் இந்த முன்னறிவைக் கொண்டிருப்பதாகக் கூறினாலும் இறைவன் மட்டும் முன்னறிவைக் கொண்டுள்ளார்.

**2. இறைவனின் அறிவு :** இறைவனின் முன்னறிவையும் அத்துடன் தொடர்புடைய முன்குறித்து வைத்தலையும் விதிவசக்கோட்பாடு அல்லது முன் தீர்மானக் கோட்பாட்டோடு சேர்த்துத் தவறாகப் புரிந்து கொள்ளுதலைத் தவிர்க்க, விவிலியத்தில் அறிதல், அறிவு என்ற சொற்களின் பொருளை நாம் புரிந்துகொள்ள வேண்டும். மனிதன் தான் எதிர்கொள்ளும் புறப்பொருளிலிருந்தோ, காலமில்லா உண்மைகளிலிருந்தோ சிந்தனையால் அறிவைப் பெறுகிறான். இந்தப் பொருளில், இறைவனது சிந்தனையின் விளைவாகும் அவருடைய அறிவு. அது முடிவில்லாக் காலத்திற்கும் இருப்பவற்றை, அல்லது எல்லாவற்றையும் பற்றி அறியக் கூடிய அனைத்தையும் ஒரு கலைக் களஞ்சியம் போல் அறிகிறது.

விவிலியத்தில் அறிவு என்பது காலமில்லா உண்மைகளைக் கருத்தியலாக அல்லது புறப்பொருள்களைப் புலனறிவால் பெற்றுக்கொள்வதன்று. அஃது ஆட்களுக்கிடையிலான உறவில் தோன்றுவதாகும். இத்தோற்றம் மனிதனைப் பற்றிய இறைவனது அறிவுக்கும், இறைவனைப் பற்றிய மனிதனது அறிவுக்கும் சாலப்பொருந்தும். மனிதனது அறிவுக்குத் தொடக்கம் உண்டு, வளர்ச்சியுண்டு. இறைவனது அறிவு அவரோடே என்றும் இருக்கிறது. அனைத்தையும் அறிந்தவர் இறைவன். விசுவாசமுள்ள மனிதன் தன்னை இறைவன் முழுவதும் அறிவதாக விசுவாச அறிக்கையிடுகிறான் (*சங் 139:1; எரே 1:5; 1 கொரி 8:3; 13:12; கலா 4:9*). அதாவது மனிதனைப் பற்றிய உண்மைகளை மட்டும் இறைவன் அறியவில்லை. அவர் அவனைச் சந்தித்து, நிபந்தனைகள் இட்டு, தீர்ப்பிட்டு, ஆசீர்வதித்து, அவனோடு உறவு கொள்கிறார் என்பதாகும். இறைவன் அறிவது, அவருடைய திருவுளத்தை எடுத்துக் காட்டுவதாக இருப்பதால், தேர்ந்தெடுக்கும் செயலும் ஆகும் (*ஆதி 18:19; ஓசே 13:5; ஆமோ 3:2; 2 திமொ 2:19*). இந்த உண்மை ''பெயர் உட்பட உன்னை எனக்குத் தெரியும்'' என்ற கூற்றில் (*யாத் 33:12; காண்க. எசா 43:1; 445:3-4; 49:1*) வெளிப்படுகிறது. இறைவனோடு ஆட்தன்மை உறவு கொண்ட விவிலிய மனிதன், தொடக்கமுதல் முடிவு வரையுள்ள தன் முழுவாழ்வும் இறைவனால் அறியப்பட்டிருக்கிறது என்று உறுதியாகக் கூறலாம். அதே நோக்கில் மனித வரலாற்றின் அனைத்தும் இறைநோக்கத்தினுள் அடங்கியுள்ளன என்பதையும் கண்டுணர்கிறான்.

இறைவனால் அறியப்படும் அனுபவத்திலிருந்து, இறைவன் எல்லாம் அறிந்தவர் என்ற விசுவாச அறிக்கை தோன்றுகிறது. தமக்குத் தெரியாத ஒன்றை உறுதிப்படுத்த யாவே செயலாற்றுவதுபோல் சில பகுதிகள் சுட்டினாலும் (*ஆதி 3:9; 11:5; 18:21*), இறைவன் எல்லாம் அறிந்தவர் என்பது விவிலிய விசுவாசத்தின் மையக் கோட்பாடாகும். இந்த அறிவு எல்லாவற்றையும் உள்ளடக்குகிறது. யாரும், எதுவும் அவரது ஆட்தன்மையுடைய ஆட்சியிலிருந்து தப்ப முடியாது. அவருடைய பார்வையிருந்து எதுவும் மறைந்திருக்க முடியாது. முட்டாள்கள் மட்டும்தான், இறைவனுக்குத் தெரியாது தங்கள் செயல்களைச் செய்யக் கூடும் என்று எண்ணுவர் (*யோபு 21:27; சங் 10:4.11; 11:4-6; 33:13-15; 51:6; 138:6; எசா 29:15-16*). ''பாதாளமும் படுகுழியுமே ஆண்டவர் பார்வையில் இருக்க, மனிதரின் உள்ளம் அவர் பார்வைக்கு மறைவாய் இருக்குமா?'' (*பழ 15:11; காண்க.யோபு 26:6*). மனிதனது சிந்தனையையும் (*சங் 94:11*), அவனது ஒழுக்கப் பலவீனத்தையும் (*103:4*) இறைவன் அறிவார். ஆகவே தன்மை முழுவதும் அறியும் இறைவனிடத்திருந்து தப்பியோட படைப்புக்கு ஒரு மறைவிடமும் இல்லை (*139:1-6*). ''ஆண்டவரின் கண்கள் கதிரவனைவிடப் பத்தாயிரம் மடங்கு ஒளி பொருந்தியவை. அவை மாந்தரின் வழிகளை எல்லாம் காண்கின்றன; மறைந்திருப்பவற்றை அறிகின்றன'' (*சீரா 23:19*).

இறைவனுடைய தப்ப முடியாத தீர்ப்புப் பற்றிய உறுதிப்பாடு அவரது முன்னறிவு பற்றிய குறிப்பால் வலியுறுத்தப்படுகிறது. ''அனைத்தும் படைக்கப்படும் முன்பே ஆண்டவர் அவற்றை அறிந்திருந்தார். அவற்றைப் படைத்து முடித்த பின்னும் அவற்றை அறிந்துள்ளார்'' *(23:20)*. புதிய ஏற்பாட்டில், இறைவனது அக்கறையிலிருந்து ஏதும் விலக்கப்படுவதில்லை என்று கூறப்படுகிறது *(மத் 10:29-31)*. மேலும், இருபக்கமும் கருக்கு வாய்ந்த எந்த வாளினும் கூர்மையானதான இறைவனுடைய வார்த்தை மனித வாழ்வின் உள்ளாழ மையத்தையும் ஊடுருவுகிறது; ஏனெனில், ''அவரது பார்வைக்கு மறைந்திருக்கும் படைப்பெதுவும் இல்லை. யாருக்கு நாம் கணக்குக் கொடுக்க வேண்டுமோ, அவரது கண்ணுக்கு அனைத்தும் வெளிப்படையாகவும், திறந்தவையாகவும் உள்ளன''*(எபி 4:12-13)*.

இவ்வாறு இறைவனுடைய ஆட்தன்மையுடைய ஆட்சி என்பது அவரிடமிருந்து எதுவும் மறைந்திருப்பதில்லை என்பதை உணர்த்துகிறது. வானின் கீழுள்ள யாவற்றையும் கண்டு, நிகழ்காலத்தை அவர் கண்கள் ஆய்வு செய்வதுபோல், கடந்த காலமும் வருங்காலமும் அவர் முன் திறந்தனவாக உள்ளன. விசுவாச நோக்கில், இறைவனுடைய அறிவு முன்னறிவும் ஆகும்.

***3. நிகழ்ச்சிகள் பற்றிய முன்னறிவு:*** பழங்கால நோக்கின்படி கடவுள்கள், தங்களின் மேலான அறிவாலும் சாகாத்தன்மையாலும், மனிதர்களிடமிருந்து வேறுபடுத்தப்பட்டனர் *(காண்க. ஆதி 3:22)*. மனிதனது அறிவு, குறிப்பாக வருங்காலத்தைப் பற்றிய அவனது அறிவு, கடுமையாக வரையறை செய்யப்பட்டுள்ளது. ஆகவே, அவன் தன் ஊழைப் பற்றி அறிய விரும்பினால் கடவுள்களின் உதவியை நாட வேண்டும். குறிசொல்லும் பலவகை உத்திகளை வளர்த்துக் கொண்டு, அவற்றின் உதவியால், மனிதன் தன் வருங்காலத்தை அறியவும் கட்டுப்படுத்தவும் முயன்றான். கனவுகளுக்கு விளக்கம் அளித்தல் *(ஆதி 41)*, ஆவிகள் தொடர்பால் வருவதுரைத்தல் *(1 சாமு 28)*, சீட்டுப் போட்டுத் தீர்மானித்தல் *(30:7-8)*, இறைவாக்குரைகள் *(1 அர 22:1-36)* போன்ற உத்திகள் பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்படுகின்றன.

எபிரேயர் இறைவாக்குரைத்தல், சோதிடம் கூறுதலாகிய தனது தாழ்மை மிக்க தோற்றத்திலிருந்து மேலான நிலைக்கு உயர்ந்தாலும் *(1 சாமு 9-10)*, வருங்காலத்தை முன்னுரைக்கும் பண்பை ஒருபோதும் கைவிட்டதில்லை. இறைவாக்கு, அதன் உன்னத நிலையில், தனது ஊழைக் கட்டுப்படுத்த மனிதனுக்கு உதவும் நோக்கோடு இறை இரகசியங்களை அறியும் ஆர்வத்தோடு துருவி ஆராய்வதன்று. ஆயினும், பெரிய இறைவாக்கினர்கள் விண்ணக அவையில் யாவேயின் தீர்மானங்களைக் கேட்டவர்களாகப் பேசினர் *(எரே 2:18.22; காண்க. எசா 6:8; 40:6; ஆமோ 3:7)*. நிகழ்காலத்திற்கு அவர்கள் அளித்த செய்தி, யாவே தமது திட்டத்தை நிறைவேற்ற, செய்யவிருப்பதை அறிவிப்பதையும் கொண்டிருந்தது. பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும், இறைவனது முன்னறிவானது, வரவிருப்பவை பற்றிய இறைவாக்குச் செய்தியை முன் கருத்தாகக் கொண்டிருந்தது.

இறைவனது வரலாற்று மேலாண்மை பற்றிய விசுவாச அனுபவத்திலிருந்து முன்னறிவு என்ற கருத்து பிரித்தெடுக்கப்படும்போது விரைவில் அஃது ஒரு கோட்பாடாக மாற்றப்படுகிறது. இந்தக் கோட்பாடு சிந்தனையைப் பிரதிபலிக்கும் பொருட்டு மனித சுதந்தரத்தையும், வரலாற்றுப் படைப்புத் தன்மையையும் மதிப்புக்குறையச் செய்வதாகத் தோன்றுகிறது. ஆயினும், இறைவனது முன்னறிவு விதிவசம் அல்லது மனிதச் செயல்களின் புறத்தூண்டுதலால் தீர்மானிக்கப்படுகின்றன என்ற கோட்பாடுகளோடு எத்தொடர்பும் கொண்டிருக்கவில்லை. அது, வரலாற்றில் ஏற்கெனவே எழுதப்பட்டுவிட்டது என்றும், இறைவனால் வகுக்கப்பட்ட காலவரையை வர

லாறு பின்பற்றுகிறதென்றும் பொருள் அளிப்பதில்லை. மனித சித்தம் ஆட்தன்மை யற்ற விதிவசத்தாலோ, ஆட்தன்மையற்ற சட்ட அமைப்புகளாலோ தற்செயலாக நிர்ணயிக்கப்படுகிறது என்று பொருள் அளிப்பதில்லை. மாறாக, மனிதவாழ்வை, அதன் தொடக்கமுதல் முடிவு வரை, தம் திருவுளத்தால் ஆட்சிசெய்கின்ற ஆட்தன் மையுடைய ஆண்டவரோடு கொள்ளும் மனித உறவின் அனுபவத்திலிருந்து எழும் இறைமுன்னறிவை உறுதியாக எடுத்துக் கூறுவதாகும். விசுவாச முன்னோக்கில் எதுவும் தற்செயலாகவோ, தான் தோன்றித் தனமாகவோ நிகழ்வதில்லை. ஏனெனில், இறைவனது திருவுளம் எல்லாவற்றையும் - ஒரு நகருக்கு ஏற்படும் தீமையைக் கூட (*ஆமோ 3:6*) - உள்ளடக்குகிறது. மீண்டும் மீண்டும் இறைவாக்கினர்கள் யாவேயின் மேலாண்மை நோக்கை வலியுறுத்துகின்ற னர். ''நான் எண்ணியவாறு யாவும் நடந் தேறும்; நான் தீட்டிய திட்டமே நிலைத்து நிற்கும்'' (*எசா 14:24; காண்க. 5:19; 19:17; 28:29; எரே 50:45; ஆமோ 3:7; மீக் 4:12*). எந்த ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையிலும் மனிதனது விசுவாசம் இறைவனது நோக் கின் முதன்மையை உணர்கிறது. இதை இவ்வுலகச் சொற்களில், ஒரு நிகழ்ச்சி முன்னதாகவே திட்டம் செய்யப்பட்டது; ஆகவே, இறைவனுக்கு முன்னதாகவே தெரிந்தது என்று கூறலாம். எதிர்பாராத சூழ்நிலையை நல்லதாக மாற்றி, தமது செயலுக்குள் உள்ளடக்குகிறார் இறைவன் என்று இதற்குப் பொருளன்று. மாறாக, விசுவாசக் கோணத்தில் அச்சூழ்நிலை இறைவனது முன்னறிவு நோக்கத்தைத் தன்மையாலேயே சார்ந்தது ஆகும் (காண்க. *ஆதி 45:44-8; சங் 50:20; பழ 16:4; 2 பேதுரு 3:9*).

இறைவனது நோக்கத்திற்கு முதன்மை அளிப்பது, இரண்டாம் எசாயா நூலின் அடிப்படைக் கருத்துக்களில் ஒன்றாகும். பிற இன மக்களின் கடவுள்கள் வருவதை முன்னுரைக்க முடியாது. ஏனெனில், மனித னில் காணப்படும் அதே பலவீனத்திற்கும் வரையறைகளுக்கும் இக்கடவுள்கள் உட் பட்டவர்களாவர்; இக்கால நடைமுறை களில் இவர்களும் சிக்கியுள்ளனர். இதற்கு மாறாக யாவே முடிவில்லாதவர். அவரே முதலும் முடிவும் ஆவார். அவரது நோக்கம் தொடக்கமுதல் முடிவு வரை வரலாற்றை உள்ளடக்குகிறது. இந்த இறைவாக்கினரின் படி யாவேயின் தனித்தன்மையுடைய இறைத்தன்மைக்கு அவரது முன்னறிவே சான்றாகும். வரவிருப்பவற்றை அவர் மட்டுமே முன்னறிவிக்க முடியும். வரலாறு அவரது நோக்கைப் படிப்படியாகத் திறந்து காட்டுகிறது. இது வாக்குறுதியிலிருந்து நிறைவேறுதலுக்குச் செல்லும் இயக்க மாகும். ''நாங்கள் அறியும்படி தொடக்கத்தி லிருந்தே அறிவித்தது உங்களுள் யார்? 'அது கூறியது சரி' என்று நாங்கள் சொல்லும்படி முன்னரே உரைத்தது யார்?'' (*எசா 41:26; காண்க. 41:2-26; 43:8-13; 44:6-8; 48:8-11; 48:3-8*). மேலும், வரலாற்றில் புதியதொன்றைச் செய்து, புதிய படைப்புச் செயலைச் செய்து, யாவே தமது நோக்கை நிறைவேற்றுகிறார். ''முன்னர் நான் அறி வித்தவை நிகழ்ந்துவிட்டன; புதியன வற்றை நான் அறிவிக்கிறேன். அவை தோன்று முன்னே உங்களுக்குத் தெரியப் படுத்துகிறேன்'' (*42:9; காண்க. 43:18-19*). இவ்வாறு சைரசின் எழுச்சியால் அறிவிக் கப்பட்டதும், நாடு கடத்தப்பட்டோர் உட னடியாக விடுதலைபெறுதல் ஆகிய புதிய யுகம் யாவேயின் திருவுளத்தில் மாற்றம் இருக்கிறது என்று காட்டவில்லை. மாறாக, முன்பே அறிவிக்கப்பட்ட அவரது மீட்பு நோக்கம் நிறைவேறுகிறது என்று காட்டு கிறது.

தானியேல் நூல், இறைவாக்குக் காட்சி களால் அளிக்கப்பட்ட இறை முன்னறிவு, வரலாற்று விவரங்கள் பற்றிய முன்னறிவை உள்ளடக்கியுள்ளது என்ற தோற்றத்தை அளிக்கிறது. வெளிப்பாட்டு இலக்கிய ஆசிரியர்கள் இம்முறையில் சிந்திக்கும் போக்கைக் கொண்டிருந்தனர் என்பது தெளிவு. ஆனால், இந்நூல் மக்கபேயர்கள் காலத்தில் எழுதப்பட்டது என்பதையும்,

இறைவாக்கு முன்னறிவிப்புகள் பெருமளவிற்கு வரலாற்று நிகழ்ச்சிகளைப் பின்னோக்காக எடுத்துரைப்பதாகும் என்பதையும், ஆசிரியர் தனது காலத்தை நெருங்கும் போது நிகழ்ச்சியுரை மிகவும் துல்லியமாக உள்ளது என்பதையும் மனதில் கொள்ளும் போது, தானியேல் வெளிப்பாட்டின் பல இறையியல் பிரச்சனைகள் மறைந்து போகின்றன. இந்நூல், வரலாற்றின்மேல் இறைவன் கொண்டுள்ள மேலாண்மை ஆட்சி பற்றிய அனுபவத்திற்குச் சான்று பகர்கிறது. பின்னோக்காக, வரலாறு பொருந்தாத தற்போக்காலோ, நாடுகளில் வலிமையான பேராசையாலோ ஆட்சி செய்யப்படுவதில்லை; மாறாக, இறைவனின் முன்னோக்குக் குறிக்கோளால் மட்டுமே ஆட்சி செய்யப்படுகிறது என்பது தேர்ந்து தெளியப்படுகிறது. மனிதச் செயல்களைச் செயலறச் செய்வதற்குப் பதிலாக, யூதர்களுக்கு எதிராகச் சமாளிக்க முடியாத எதிர்ப்புகள் எழுந்த மக்கபேயர்கள் காலத்தில், இறைவனது எல்லாவற்றையும் வெல்லும் மேலாண்மை பற்றிய உணர்வு செயல்களுக்கு ஊற்றாகவும் விசுவாசத்தில் ஆதரவாகவும் விளங்கியது (*காண்க. தானி 11:32*). அதே போல், யூதித்து நூலின் கதையிலும், நடக்கின்றவைகளையும் நடக்கப்போவதையும் இறைவன் முன்னதாகவே திட்டம் செய்துள்ளார் என்ற உறுதியில் கதைத் தலைவி செயல்படுகிறாள். ''ஏனெனில் உம் வழிகளை எல்லாம் நீர் முன்னேற்பாடு செய்து, முன்னறிவுடன் உம் தீர்ப்புகளை அளித்து வருகிறீர்'' (*யூதி 9:5*). வரவிருப்பவை பற்றிய இறைவாக்கு முன்னறிவு, யூதி *11:19* போன்ற பகுதிகளிலும் கூறப்பட்டுள்ளது (*காண்க. ஞான 18:6; 2 பேதுரு 3:17*).

இறைவன் தன் வாக்குறுதிகளை நிறைவேற்றவிட்டார் என்ற அறிவிப்பு புதிய ஏற்பாட்டில் ஆதிக்கம் செலுத்துவதால், இறை முன்னறிவு பற்றிய கருத்து பலவகையில் எடுத்துக் கூறப்படுகிறது. ''தம் வாக்குரைப்போர் வழியாய்ப் பரிசுத்த நூல்களிலே ஏற்கெனவே வாக்களித்திருந்த'' (*உரோ 1:2*) இறைவனது நற்செய்தியைப் பவுல் அறிவிக்கிறார். நற்செய்தி ஆசிரியர்கள் அடிக்கடி ''இறைவாக்கினர் வாயிலாக ஆண்டவர் உரைத்தது நிறைவேறுகிறது'' என்று மெசியாவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறுகின்றனர் (*மத் 1:22-23; 2:5-6.15.17;...*). பழைய ஏற்பாட்டு வாசகங்கள் போதிய சுதந்தரத்துடன் கையாளப்பட்டாலும், இயேசு கிறிஸ்துவின் வாழ்வு, மரணம், உயிர்ப்பு ஆகியவற்றில் இறைவனது முந்திய நோக்கு வெளிப்படுத்தப்படுகிறது என்ற உறுதி எடுத்துக்காட்டுகளில் தெளிவாக்கப்படுகிறது. நற்செய்திகளின் படி, இயேசுவும் கூட முன் அமைக்கப்பட்ட இறைவனது திட்டத்தை நிறைவேற்றுவதே தமது பணி என்று நம்பினார். இந்த நம்பிக்கை, ''மானிட மகன் பல துன்பங்கள் படவும்...வேண்டும்'' (*மாற் 8:31*), ''மானிட மகன் தமக்கென்று குறிக்கப்பட்ட படியே போகிறார்'' (*லூக் 22:22*), அவரது குறிக்கப்பட்ட ''நேரம்'' நெருங்கிவிட்டது (*மத் 26:45; லூக் 12:40.46; யோவா 7:30; 12:27; 17:1*) போன்ற கூற்றுகளை ஓரளவிற்கு விளக்குகிறது. தொடக்ககாலத் திருச்சபையின் விசுவாச அறிக்கையின்படி ''கடவுளின் திட்டத்திற்கும் முன்னறிவுக்கும் ஏற்ப'' (*அ.ப. 2:23; காண்க. 4:28*), இயேசு காட்டிக் கொடுக்கப்பட்டார், சிலுவையில் அறையப்பட்டார். இவையும், இவை போன்றனவுமான புதிய ஏற்பாட்டுக் கூற்றுக்களிலிருந்து இயேசுவின் பணி முன்னதாகவே வரைபடம் செய்யப்பட்டிருந்தது என்றும், அவர் முன்னேற்பாடாய் அமைக்கப்பட்ட விதிக்குப் பணிந்தார் என்றும் முடிவு செய்வது தவறாகும். இதைவிட மேலாக, புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள் இயேசுவின் பணியை விசுவாசநிலையில் நோக்கி, இந்த நிகழ்ச்சிகளில் இறைவனது முந்திய நோக்கைத் தேர்ந்து தெளிகிறார். மெசியாவின் வருகை பற்றிய நிகழ்ச்சி இறைவனின் பின் சிந்தனையன்று, தற்செயலானது அன்று, வரலாற்றில் எதிர்பார்க்காத நிகழ்ச்சியன்று; மாறாக, இறைவாக்கினர் வாயிலாக முன்னதாகவே அறிவிக்கப்பட்ட இறைவனது மீட்பு நோக்கின் முக்கியபாக

மாகும். படைப்பு முதலே மோசே தேர்ந் தெடுக்கப்பட்டார் என்று யூத பாரம்பரியம் கூறுவது போல், புதிய ஏற்பாடும் ''தேர்ந்து கொண்டவர்'' தொடக்கமுதலே கருத்தில் கொள்ளப்பட்டார் என்று கூறுகிறது (லூக் *9:35; 23:35;* காண்க. *1* பேதுரு *2:4).''* உலகம் தோன்று முன்னே முன்னறியப் பெற்ற இவர் உங்களுக்காக இந்த இறுதிக் காலத் தில் வெளிப்பட்டார்'' *(1* பேதுரு *1:20;* யோவா *17:24).* இவ்வாறு இயேசு கிறிஸ்து வில் வெளிப்படுத்தப்பட்ட இறைவனின் மீட்புச் செயல், வரலாற்றுச் சூழ்நிலைக்கு ஒத்துப் போவதன்று; மாறாக, இறைவனது முடிவில்லா நோக்கை வெளிப்படுத்து கிறது. முன்னறிவு மற்றும் முன்குறித்து வைத்தல் ஆகியவை பற்றிய மொழி யமைப்பு, இயேசு கிறிஸ்து வழியாக இறைவனது மேலாண்மை ஆட்சி பற்றிய அனுபவத்தைச் சேர்ந்தது. ஆகவே, ''விசு வாசத்திலிருந்து விசுவாசத்திற்குப்'' போகி றது என்பது எப்போதும் வலியுறுத்தப்பட வேண்டும். விசுவாசச் சூழ்நிலைக்குப் புறம் பாகக் கருத்தியலான அறிவு வகைகளாக மாற்றினால், அதன் பொருள் தவிர்க்க முடியாதவிதத்தில் செறிவு குன்றுகிறது அல்லது பொய்யாக்கப்படுகிறது.

*4)* **முன்னறிவும் தேர்ந்தெடுத்தலும்:** முன் கூறியது போல, இறை முன்னறிவும் இறை தேர்தலும் மிக நெருங்கிய விதத்தில் தொடர்புடையன. தனிப்பட்டவர் களுக்கோ, ஓர் இனத்திற்கோ இடப்படும் இறைவனது அழைப்புப் பற்றிய உணர்வி லிருந்து, விசுவாச அறிக்கையாக இறைமுன் னறிவு பற்றிய மொழியமைப்பு எழுகிறது. இஃது இறைவாக்கினர் அல்லது அப்போஸ் தலர் அழைக்கப்படுவதில் தெளிவாகக் காணப்படுகிறது. இறைவனது அழைப்பு இறைத்திட்டத்திற்குள் ஒரு பணியைச் செய்ய அழைப்பது மட்டும் இன்றி, அவரது சொந்த வரலாற்றில் இறைநோக்கின் முன் னறிவையும் வெளிப்படுத்துகிறது. எரே மியா, தனது ஆழமான உள்ளார்ந்த போராட்டத்திலிருந்து தீர்மானம் செய் கிறார்; யாவேயின் அழைத்தலுக்குப் பதில் அளிக்கிறார்; விசுவாசத்தின் சாதகமான நோக்கில், எப்போதும் தான் ஓர் இறைவாக் கினராக இருக்க வேண்டும் என்று யாவே விரும்புகிறார் என்பதைக் கண்டுணர்கிறார். அவர் தன் தாய் வயிற்றில் இருக்கும் போதே யாவே அவரை அறிந்திருக்கிறார்; அவரை அவரது பணிக்கு நியமித்திருக் கிறார் (எரே *1:5).* அதேபோல், பவுல், தன்வாழ்வைப் பின்னோக்கி, இறைவன் ''தாயின் வயிற்றில் இருந்தபோதே என்னைத் தேர்ந்தெடுத்து தமது அருளால் என்னை அழைத்தார்''(கலா *1:15)* என்று கூறுகிறார். இந்த எடுத்துக்காட்டுதல்களில், இறை அழைப்புக்கு, இறைவனே முன் முயற்சி எடுக்கிறார் என்றும், அவரது நோக்கம் ஒருவரது வாழ்வைத் தொடக்க முதல் ஒவ்வொரு நொடியிலும் பாதிக்கிறது என்றுமான அனுபவ உணர்வைத் தூண்டு கிறது. ''உம் கண்கள் கருமுளையில் என் உறுப்புகளைக் கண்டன; நீர் எனக்குக் குறித்து வைத்த நாள்கள் எல்லாம் உமது நூலில் எழுதப்பட்டுள்ளன. எனக்கு வாழ் நாள் எதுவுமே இல்லாத காலத்தில் நீர் எனக்கு நாட்களைக் குறித்தீர்'' என்று சங்கீத ஆசிரியர் யாவேயிடம் விசுவாச அறிக்கை யிடுகிறார் (சங் *139:16).*

இறைவனது மக்களும் ஒரு பொது அழைத்தலில் பங்குபெறுகின்றனர். இஸ்ரா யேலின் தேர்ந்தெடுக்கப்படுதல், எகிப்தி லிருந்து இறைவன் தம் மக்களை விடுவித் தலில் முதன்மையான அடிப்படை கொண் டுள்ளது (யாத் *19:3-6;* எரே *2:2-7;* ஓசே *2:16-17; 11:1;* ஆமோ *3:1-2; 9:7;* மீக் *6:4).* ஆதியாகம நூலில் காணப்படும் பாரம்பரி யங்கள், நாம் கொண்டிருக்கும் வடிவில், யாத்திரை மற்றும் சீனாய் வெளிப்பாடு களுக்கு முன்பே, யாவே ஒரு மக்க ளினத்தை அழைத்துக் கொண்டிருந்தார் என்றும், குலமூதாதையர்களின் வாழ்வில், தமது முந்திய நோக்கை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார் என்றும் அழுத்திக் கூறு கின்றன. இரண்டாம் எசாயாவின்படி, இஸ் ராயேலை இறைவன் படைப்பதும், தமது மக்களைப் பெயர் சொல்லி அழைப்பதும்,

இஸ்ராயேல் வரலாற்றுக்குப் பின்னணியாக வும் அந்த வரலாற்றுக்குள் செயல்படும் இறைமுன் முயற்சியையும் அருளையும் எடுத்துக் காட்டுவதாகவும் உள்ளன (எசா *43:1*). மேலும், ஊழியன், ''கருப்பையில் இருக்கும் போதே ஆண்டவர் என்னை அழைத்தார்; என் தாய் வயிற்றில் உருவா கும் போதே என் பெயர் சொல்லிக் கூப்பிட்டார்'' என்று சாட்சி கூறுகிறார் (*49:1*; காண்க.எரே *1:5*). புதிய ஏற்பாட்டில் பவுல், ''முன்பு தேர்ந்தெடுத்த தம் மக் களைக் கடவுள் தள்ளிவிடவில்லை'' என்றும், ''அருளால் தேர்ந்தெடுக்கப்பட்ட வராய் எஞ்சியோர் சிலர் உள்ளனர்'' என்றும் குறிப்பிடுகிறார் (*உரோ 11:2.5*). தாயின் வயிற்றில் யாக்கோபும் ஏசாவும் இருந்தபோதே யாக்கோபின் தேர்தலை எடுத்துக் கூறி இறைவனது நோக்கின் முன் ஏற்பாடு வலியுறுத்தப்படுகிறது (*9:6-18*).

சிறப்பான பொருளில், திருச்சபை, இறை அழைப்பால், ஒன்றிணைக்கப்படு கிறது. ''கடவுள் யாரை முன்பே தேர்ந்து கொண்டாரோ, அவர்கள் தம் மகனின் சாயலுக்கேற்ற உருவைத் தாங்கும்படி முன் குறித்திருக்கிறார்'' என்று பவுல் கூறுகிறார் (*உரோ 8:29*). இச் சூழ்நிலையில் (*8:18-39*), கிறிஸ்தவர்கள் இக்கட்டான சூழ்நிலை களை எதிர்கொண்டிருந்த போது, பவுல், மிகவும் நடைமுறை சார்ந்த விதத் தில், இறைபாலிப்புக் கோட்பாட்டை விளக்குகிறார். ''இறைவனது திட்டத்திற் கேற்ப அழைக்கப்பட்டவர்கள்'' எல்லாவற் றிலும் இறைவன் தங்கள் நன்மைக்காகச் செயலாற்றுகிறார் என்று அறிக்கையிடுகின் றனர். ஆகவே, விசுவாசம் இறைவனின் முன் முயற்சியிலும் அருளிலும் மட்டுமே அடிப்படை கொண்டுள்ளது. அது மாறு படும் மனித நற்பேறுகளையோ, நற்செய் திக்கு உலகம் அளிக்கும் பதிலின் தன்மை யையோ அடிப்படையாகக் கொண்டிருக்க வில்லை. இத்தச் சிந்தனைச் சூழலில்தான் மற்றப் புதிய ஏற்பாட்டு உறுதிப்பாடுகள் இடம் பெறுகின்றன. பலநாடுகளில் சித றுண்டு வெளி நாட்டவரான கிறிஸ்தவர்கள் ''தந்தையாகிய கடவுளின் முன்னறிவுக் கேற்பத் தேர்ந்து கொள்ளப்பட்டவராவர்'' (*1 பேதுரு 1:2*). ''மீட்பு அடைவதற்கென்று கடவுள் அவர்களைத் தொடக்க முதல் தேர்ந்து கொண்டுள்ளார்'' (*2 தெச 2:13*). இறைவன் ''உலகம் உருவாகும் முன்னரே நம்மைக் கிறிஸ்துவுக்குள் தேர்ந்து கொண் டார்; அவர் தம் திருவுளத்திற்கேற்ப... இயேசு கிறிஸ்துவின் வழியாகவே, நம்மைத் தம் பிள்ளைகளாக்கிக் கொள்ள அன்பினால் நம்மை முன் குறித்துவைத்தார்'' (*எபே 1:4-7*). பழைய ஏற்பாட்டு மக்கள் விசுவாசத்தால் வாழ்ந்தாலும், இறைவன் ''நம்மை மனத்திற்கொண்டு மேலான தொரு திட்டம் வகுத்திருந்தார்'' (*எபி 11:40*). விசுவாசிகளின் பெயர்கள் உலகத் தொடக்கமுதல் வாழ்வு நூலில் எழுதப்பட் டுள்ளன (*திருவெளி 17:8*).

முன்னறிவு மற்றும் முன்குறித்துவைத் தல் பற்றிய இக்கூற்றுகள் அகந்தையாலோ, விலகியிருக்கும் போக்காலோ கூறப்பட் டவை அல்ல; மாறாக, எல்லாவற்றிற்கும் மேலான முதன்மை கொண்டுள்ள இறைத் திட்டத்திற்கு மனிதன் அளிக்கும் பதிலுக்கு முந்திய இறை முன்முயற்சிக்குச் சாட்சியம் அளிக்கின்றன. ''பெற்றுக் கொள்ளாதது உன்னிடத்தில் என்ன உண்டு? நீ பெற்றுக் கொண்டவனாய் இருக்கும்போது, பெற்றுக் கொள்ளாதவனைப்போல் ஏன் பெருமை பாராட்டிக் கொள்கிறாய்?'' (*1 கொரி 4:7*). இவ்வாறு மீட்பு, மனித மற்றும் இக் காலத்தைச் சார்ந்த எதற்கும் அப்பால் கடந்து, இறைவனது முடிவில்லா நோக்கத் திற்குத் தடம் காட்டுகிறது. இந்த நோக்கு தொடக்க முதல் முடிவு வரை வரலாற்றை உள்ளடக்குகிறது; இயேசு கிறிஸ்துவைத் தன் மையமாகக் கொண்டுள் ளது. இந்தக் கூற்றுகள் மனித சுதந்தரத்தை அழிக்கும் நோக்கம் கொண்டவையல்ல. மாறாக, மனிதனது மீட்பு இறைவனின் கையிலுள்ளது என்ற உறுதி உலகக் கவலை களிலிருந்து விசுவாசியை விடுவிக்கிறது. ''நம்மேல் அன்பு வைத்தவரின் செயலால் நாம் இவை அனைத்திலும் மாண்புமிக்க

வெற்றி அடைகிறோம்'' (உரோ 8:37) என்ற உறுதிப்பாட்டைக் கூற வல்லவனாக்கு கிறது.

**முன்னோடி** (FORERUNNER)

பிறருக்கு வழியை ஆயத்தம் செய்ய முன்னால் அனுப்பப்படுபவர். போர்த் துறையில் எதிரியிடமிருந்து புலன்காண முயல்பவரைக் குறிக்கும் கலைச்சொல்லா கும். எபி 6:20-இல் இயேசு, தமது சீடர்களுக்கு விண்ணகப் புனிதத்தலத்தை ஆயத்தம் செய்ய, அவர்கள் சார்பாக முன் னோடியாகச் சென்றுள்ளார் என்று கூறப்படு கிறது (காண்க. யோவா 14:2). இச்சொல் காணப்படாவிட்டாலும் இக்கருத்து எசா 40:3-11; மலா 3:1-இல் காணப்படுகிறது. இக்கருத்து திருமுழுக்கு யோவானின் பணிக்கு அடிப்படையாக அமைந்துள்ளது (மத் 11:10; மாற் 1:2-8;லூக் 7:27-28).

மற்றொரு பொருளில், முன்னோடி ஒரு தூது அறிவிப்பவனாகவும் இருக்கலாம் (காண்க. 1 சாமு 8:11; 2 சாமு 15:1; 1 அர 1:5; 18:46; எஸ்த 6:9). இப்பொருளும் திருமுழுக்கு யோவானுக்குப் பொருந்தும்.

**மூக்குத்தி** (NOSE RING)

''வளையம்'' என்ற சொல்லானது பெரும்பாலும் ''மூக்குத்தியையே'' குறிக் கின்றது. ஆபிரகாமின் வேலையாட்கள் ரபேக்காவுக்குக் கிணற்றருகில் பொற் காதணிகளை அளித்ததாகக் காண்கின்றோம் (ஆதி 24:22.30). அதுவும் மூக்குத்திகளை அளித்ததாக ஆதி 24:47-இல் பார்க்கின் றோம். ஒருவரின் மூக்கில் வளையங்கள் மாட்டுவது இறைவன் இஸ்ராயேல் மக்க ளுக்கு அளிக்கும் ஒரு நன்கொடை போன் றது என்று உருவகமாக எசே 16:12-இல் கூறப்படுகிறது.

**மூசி** (MUSHI - கைவிடப்பட்ட)

இஃது எபிரோனைச் சுற்றியுள்ள பகுதி யில் வாழ்ந்த லேவிய குருக்கள் குடும்பத் தின் பெயர் (எண் 26:58தொ).

குருக்கள் பாரம்பரியமும், நாள் ஆகம மும் மூசி மெராரியின் மகன் எனவும், மெராரி வழியாக வந்த இரண்டு லேவியர் பிரிவுகளில் ஒன்றின் குலப்பெயர் மூதாதை யரும் ஆவார் என்றும் கூறுகின்றன (யாத் 6:19; எண் 3:20.33; 1 நாள் 16:19.47; 23:21.23; 24:26.30).

**மூச்சு** (BREATH)

யோபு 41:13-இல் இது லேவியாத்தான் என்ற கடல் விலங்கின் மூச்சுக் காற்று பற்றிப் பேசும் போது கூறப்படுகிறது. மூச்சு பொதுவாக, காற்று என்று மொழி பெயர்க் கப்படும்.

வாழ்வின் மூச்சு பொதுவாக உயிரினங் களைக் குறிக்கும் (ஆதி 1:30). ஆதி 2:7-இல் மனிதமூச்சு இறைவனின் கொடையாக விவரிக்கப்படுகிறது. மூச்சு வாயோடும் (யோபு 41:21; சங் 135:17), மூக்கோடும் (யோபு 27:3; புல 4:20) தொடர்புபடுத்தப் படுகிறது.

ஆனால் உளவியல், இறையியல் மற்றும் உருவகக் கண்ணோட்டத்தில் இதை 'ஆவி' என்றும் மொழிபெயர்ப்பர். இது மனித மற்றும் இறை ஆவியாக இருக்கலாம் (யோபு 27:3; 34:14-15; காண்க. 15:30). யோபு 32:8-இல் ''மனிதனில் இருக்கும் ஆவி'' இறைவனது ஆவிக்கு ஒப்பானது; ஞானத்துக்கும் உய்த்துணர்தலுக்கும் ஊற்றா கிறது. இறைவனின் மூச்சு மனுகுலத்தின் மேல் தண்டனை அளிக்கவல்லது (யோபு 4:9; எசா 11:4; 30:28; 2 தெச 2:8; காண்க. தானி 5:23). எசேக்கியேலின் காட்சியில் காய்ந்த எலும்புகளின் பள்ளத்தாக்கு இறை வனின் மூச்சால் உயிருள்ளதாக்கப்படுகிறது (எசே 37:9).

**மூதாதையர்கள்** (PARTIARCHS)

இவர்கள் இஸ்ராயேலரின் மூதாதையரா வர். இந்தச் சொல் விவிலியத்தில் பெரும் பாலும் பன்மையிலேயே வருகிறது (அ.ப 2:29; உரோ 9:5). மேலும், 'நம் முன்னோர்' (யூதி 8:25), 'தந்தையார்' (ஆதி 48:17; உப 1:11; லூக் 1:55.;72) போன்ற சொற்களும், இந்த மூதாதையரைக் குறிக்கப் பயன் படுத்தப்பட்டன.

விவிலியத்தில் மூதாதையர் என்ற சொல் குறுகிய கண்ணோட்டத்துடன் நோக்கும் போது, ஆதி ஆகமத்திலே வருகின்ற முன்னோர்களைக் குறிக்கிறது. இவர்கள், வெள்ளப்பெருக்கிற்கு முன்பு வாழ்ந்தவர்களாகவோ, அதற்குப்பின் வாழ்ந்தவர்களாகவோ இருக்கலாம். இந்த இரண்டாம் வகையில் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு முதலானோர்களுக்கு இந்த மூதாதையர் என்ற சொல் சாலப் பொருந்தும் (எபி *7:4*). இந்தக் குழுவில் யாக்கோபின் *12* புதல்வர்களையும் சேர்த்துக் கொள்ளலாம் *(அ.ப 7:8-9)*.

பரந்த நோக்குடன் பார்க்கும் போது இஸ்ராயேல் வரலாற்றில் வாழ்ந்த பலரும் இப்பெயரால் அழைக்கப்படுகின்றனர். *அ.ப 2:29* தாவீதை மூதாதையர் என அழைக்கிறது. *1 மக் 2:51-60* ஆபிரகாமில் இருந்து தானியேல் வரை *11* பேரை இத்தகைய மூதாதையராகக் கருதுகிறது. *சீரா 44-50-இல்* மற்றொரு பட்டியலைக் காண்கிறோம். எபி *11* மூதாதையரின் மற்றொரு பட்டியலைக் கொடுக்கிறது.

**1. வெள்ளப்பெருக்குக்கு முன் வாழ்ந்தவர்கள்:** ஆதி ஆகமம் வெள்ளப்பெருக்கிற்கு முன் வாழ்ந்த தந்தையர்களின் பெயர்கள் இரண்டு தலைமுறை வரலாற்று அட்டவணையைத் தருகிறது. ஒன்று, காயின் வழி வந்தவர்களின் பட்டியல் *(ஆதி 4)*. இது யாவே பாரம்பரியத்தைச் சேர்ந்தது. மற்றது சேத்தின் வழி வந்தவர்களின் பட்டியல் *(ஆதி 5)*. இது குருக்கள் பாரம்பரியத்தைச் சேர்ந்தது. இந்த இரண்டிலும் பெயர்கள் ஏறக்குறைய ஒரே வகையாக இருப்பதால் இதன் ஆசிரியர்கள் ஒரே மூலத்திலிருந்து மொழி பெயர்த்திருக்க வேண்டும் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

**2. வெள்ளப் பெருக்குக்குப் பின் வாழ்ந்தவர்:** இந்தக் காலத்தில் வாழ்ந்த மூதாதையர்கள் மத்திய வெண்கலக் காலத்தைச் சேர்ந்தவர்கள் (கி.மு. *2000-1500*). உகாரித்து, மாரி, நூசி ஆகிய இடங்களில் கண்டெடுக்கப்பட்ட ஏடுகள் இந்தக் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அழகாகப் பதிவு செய்திருக்கின்றன. இவைகளும் ஆதி ஆகமத்திலே கொடுக்கப்பட்டுள்ள செய்திகளும் இணையாக உள்ளன. ஆகவே ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோர் இந்த மத்திய வெண்கலக் காலத்தில் வாழ்ந்தவர் என்பது உறுதி.

ஆதி ஆகமத்திலுள்ள மூதாதையர்களைப் பற்றிய வரலாறு, பழங்காலந்தொட்டு பேச்சு வழக்கில் இருந்த கதைகளின் வடிவமாகும். இந்தக் கதைகள் வரலாறு, சமூக, சமய முக்கியத்துவம் வாய்ந்தவை. இந்த மூதாதையர்களின் வரலாறு இஸ்ராயேல் நாட்டை உருவாக்கியதில் உள்ள பங்கு முக்கியமானதாகக் கருதப்பட்டது. பழங்காலக் குறிப்புகள் இந்த மூதாதையர் ஒவ்வொருவரையும் பற்றிக் குறிப்பிடாவிட்டாலும் அவர்கள் அந்தக் காலத்திலே வாழ்ந்திருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன.

**3. மூதாதையர்களின் மதம்:** இந்த மூதாதையர்கள் தங்களுக்குத் தோன்றி, வாக்குறுதி அளித்த ஆண்டவனைத் தொழுதனர். அந்தக் கடவுள், ''ஆபிரகாமின் கடவுள், ஈசாக்கின் கடவுள், யாக்கோபின் கடவுள்'' என அழைக்கப்படுகிறார் *(ஆதி 24:12; 26:24; 28:13; 32:9; 40:24; யாத் 30:6)*. மூதாதையரை ஆசீர்வதித்து அதன் மூலமாக பூமியிலுள்ள இனத்தையெல்லாம் அவர் ஆசீர்வதித்தார் *(ஆதி 12:2-3; 18:18; 26:4; 28:14)*. இந்த ஆசீர்வதித்துத் தந்த வாக்குறுதி கானான் நாட்டையும், சந்ததியையும் தருவதில் அடங்கியுள்ளது *(ஆதி 12:7; 13:14-17; 15:4.18; 17:6-8; 22:16-18; 24:7; 26:3; 28:3; 28:13; 50:24)*. அவர் பாதுகாத்துக் காப்பாற்றுகிறார் [*(ஆதி 19 (லோத்து); ஆதி 21 (இசுமயேல்); ஆதி 22 (ஈசாக்கு); ஆதி 28 (யாக்கோபு)*]; துன்புறுவோரின் கூக்குரலைக் கேட்கிறார் *(ஆதி 18:20-21; 19:13; 21:15-19; 32:9-12)*. அவர் தம் பெயரைக் கூவியழைத்து விண்ணப்பிக்க விரும்புகிறார் *(ஆதி 18:22-33)*.

இந்தக் கடவுள் மனிதனோடு தொடர்பு கொண்டுள்ள கடவுள். தனி மனிதனோடும், குடும்பத்தோடும் உறவு கொண்டிருக்கும்

இவர், மற்றக் கானானியத் தெய்வங்களி னின்று மாறுபட்டவர். இடங்களோடு இவர் ஒன்றுபடாவிட்டாலும், இவர் தோன் றிய இடங்கள் முக்கியத்துவம் வாய்ந்த தாகக் கருதப்படுகின்றன (ஆதி *12:7; 16:13-14; 22:14; 26:23-25; 28:10-22; 32:1-2; 22-32*).

இக்கடவுள் மனிதனைத் தன்னோடு பிணைக்கப் பயன்படுத்தும் கருவி 'உடன் படிக்கை உறவு' ஆகும். பக்தன் உடன் படிக்கையை ஏற்றுக் கொண்டால் (ஆதி *15:7-21; 17*), அவன் இந்த உடன்படிக்கை யின் கடமைகளான வழிபாடு, பிரமாணிக் கம், ஒழுக்கம் முதலியவைகளைக் கொண்டு ஒழுகவேண்டும்.

## மூதாதையர் பட்டியல் (GENEALOGY)

1. இஃது ஓர் ஆள், குடும்பம் அல்லது இனத்தின் மரபுக் கொடி விவரிப்பாகும். விவிலிய மூதாதையர் பட்டியல் இரு வகைப்படும். ஒன்று நேர் கோடான அமைப்பைக் கொண்டுள்ளது. இஃது உயிர் வாழும் ஒருவரிடம் தொடங்கி அவரது மூதாதையருக்குச் செங்குத்தாகத் தலை முறைத் தடம் காண்பதாகும் (லூக் *3:23-38*; ரூத் *4:18-22*). அல்லது ஒரு மூதாதையரிடம் தொடங்கி உயிர்வாழும் ஒருவருக்குச் செங் குத்தாகத் தலைமுறைத் தடம் காண்பதாகும் (மத் *1:1-17*). மற்றொன்று பகுதி பகுதி யாகப் பிரித்துக் கூறுவதாகும். இது பல உயிர்வாழும் நபர்களை ஒரு மூதாதை யருடன் தொடர்புபடுத்துவதாகும் (யாத் *6:14-15*). இரண்டிலும் இடைப்பட்ட பெயர் கள் விடப்படலாம், மாற்றி அமைக்கப்பட லாம், உறவு முறைகள் மாற்றப்படலாம். இப்படிப்பட்டவைகளைச் சுமேரிய ஏடு களில் காணலாம்.

இந்த மூதாதையர் பட்டியல்கள் குடும் பங்கள், நாடுகள், இனங்கள் போன்ற வற்றுக்குள்ளான உறவுகளைக் கூறுகின்றன. இப்பட்டியல்களின் நோக்கம்: அ) உரிமைச் சொத்து போன்ற சட்டநோக்கோடு தனி நபரை அடையாளம் காட்டுவது; ஆ) மேல்குலத்தோர், அரசர்கள், குருக்கள் போன்றோரின் உரிமைகளையும் அவற்றிற் குரிய சலுகைகளையும் நிறுவுவது; இ) இனத்தூய்மைக்குச் சான்று அளிப்பது; ஈ) கடந்த காலத்தைச் சேர்ந்த மேன்மை மிக்க ஒருவரோடு உள்ள தொடர்பைப் பெருமையோடு எடுத்துக் காட்டுவது; உ) கடந்த காலத்தில் ஒரு பதவிக்கு நியமிக் கப்பட்ட முக்கியமான நியமனத்துக்குத் தடம் கண்டு நிகழ்காலத்தில் அப் பதவியைப் பலப்படுத்துவது என்பனவாகும்.

2. **பழைய ஏற்பாடு:** எபிரேய வரலாறு, எல்லாருக்கும் மூதாதையரான ஆதாம் வரை தடம் காட்டுகிறது (ஆதி *51* தொ). நாடுகடத்தலுக்கு முந்திய பட்டியல்களும் ஆதாம் வரை செல்கின்றன. ஐந்நூலில் காணப்படும் பட்டியல்கள் பெரும்பாலும் தனிநபர் பற்றியதல்ல. அவை நாடுகள், நகரங்கள், ஆசிரியருக்குத் தெரிந்த மக்களின் தோற்றம், உறவுகள் பற்றிக் கூறுகின்றன; ஆனால் அவற்றைத் தனிநபர் மூதாதையர் பட்டியல் வடிவில் தருகிறது.

பழைய ஏற்பாட்டு மூதாதையர் பட்டியல் கள் முதன்மையாக ஆதியாகமத்திலும், முதலாம் நாளாகமத்திலும் காணப்படுகின் றன. ஆதியாகமப்பட்டியல் ஆதாம் (ஆதி *5*), நோவா (ஆதி *10*), ஈசாக்கு, யாக்கோபு வழியாக ஆபிரகாமின் தலைமுறைகளைக் கொடுக்கிறது. யாக்கோபின் பட்டியல் அவ ரின் மனைவிகள், வைப்பட்டிகளின் அடிப் படையில் பகுதி பகுதியாகப் பிரிக்கப்பட் டுள்ளது (*46:8-27*). யாத்திரை ஆகமம், லேவியரின் மூதாதையர் பட்டியலைக் கொடுக்கிறது. இதில் லேவியில் தொடங்கி, கோகத்தின் வழியாக, ஆரோன், மோசே ஆகியோரின் தந்தையான அம்ராம் வரை கொடுக்கப்படுகிறது (*6:16-20*). எண் ணிக்கை நூல் இஸ்ராயேலின் மக்கள் தொகைக் கணக்கெடுப்போடு தொடர்கிறது (எண் *26:5-50*). முதலாம் நாளாகமம், ஆதாமில் தொடங்கி நாடு கடத்தல் வழி யாக, மிகவும் பரந்த மூதாதையர் பட்டியல் வரிசைகளைக் கொண்டுள்ளது (*1* நாள் *1-9*). எஸ்ரா, நெகேமியா நூல்கள் நாடு திரும்பிய எஞ்சியோரின் மூதாதையர் பட்டியலோடு

இந்த விவரிப்பை முடிக்கின்றன (எஸ் 2:1-70; நெகே 7:6-63).

பண்டைய மேற்காசிய மக்களைப்போல, எபிரேயர்களும் இப்பட்டியல்களைத் தங்களது உரிமைச் சொத்தின் உரிமைகளை எண்பிக்கப் பயன்படுத்தினர் (எண் 27:1-11); புறத்திலிருந்த வந்தவர்களின் சமூக நிலையை மேன்மைப்படுத்தவும் (எண் 32:12; யோசு 14:6; 15:13; 1 நாள் 2:18), அரச, வழிபாட்டு வரிசைமுறையை நிறுவவும் (1 நாள் 3; 2 நாள் 31:16-19; நெகே 7:43-45.46-56), அவர்கள் சமூகப் புவியியலை அமைக்கவும் (ஆதி 10), இப்பட்டியல்களைப் பயன்படுத்தினர்.

பொதுவாக ஆண்களின் பெயர்களே இடம்பெறுகின்றன. பெண்கள் மனைவி, வைப்பாட்டி என்ற முறையில் இடம் பெறுகின்றனர். இவர்களின் நிலை பின் வரும் சந்ததியினருக்குள்ளே உள்ள உறவையும் பதவி நிலையையும் சுட்டிக் காட்டுகின்றது. மனைவியின் பிள்ளைகள், வைப்பாட்டியின் பிள்ளைகளைவிட முக்கியமானவர்கள் ஆவர் (ஆதி 35:22-26). அரிதாகவே இப்பட்டியலில் பெண்கள் சுதந்தரமான நிலை கொண்டுள்ளனர் (எண் 26:23; 1 நாள் 2:16; 3:19). நாடு கடத்தலுக்குப் பின் எபிரேயர்கள் என்று உரிமை கொண்டாடியவர்களின், உடல் சார்ந்த தலைமுறையை (நெகே 7:61) அல்லது குருகுலச் சந்ததியை (7:63-65) எண்பிக்க இப்பட்டியல்கள் பயன்பட்டன. கலப்புமணத்திலிருந்து மக்களைத் தூய்மைப்படுத்த எஸ்ரா இந்தப் பட்டியல்களைப் பயன்படுத்தினார் (எஸ் 10).

முதலாம் நாளாகமம், பழைய ஏற்பாட்டின் மிகவும் நிறைவான பட்டியலைக் கொடுக்கிறது. இந்தச் சிக்கலான விவரிப்பை அமைக்க மறைநூல் (ஆதி 5:10-11; 9:2-16; நெகே 11:3-22), அதிகாரபூர்வமான மூதாதையர் பட்டியல்கள் (காண்க. 1 நாள் 4:33; 5:17; 9:1), படைக்கணக்கெடுப்பு ஏடுகள் (காண்க. 5:24), அரச நாளேடுகள் போன்ற அதிகாரபூர்வமான ஏடுகள் (காண்க. 27:24), திருமுறை சேராத இறைவாக்கு நூல்கள் (2 நாள் 12:15) போன்ற மூலங்களைப் பயன்படுத்துகிறது. அதன் மிகவும் பகுதி பகுதியாக்கப்பட்ட விவரிப்பு முறை பிற நாடுகளிலிருந்து இஸ்ராயேல் தேர்ந்தெடுக்கப்பட்டதையும் (1 நாள் 1), இறை மக்கள் என்ற அளவில் பன்னிரண்டு கோத்திரத்தின் சீர்மை நிலையையும் (1 நாள் 2-9) எடுத்துக் கூறுகிறது. இப்பட்டியல், நாடுகடத்தலுக்குப்பின் எஞ்சியோர் (யூதா, லேவி, பென்யமின்) இஸ்ராயேலின் வரலாற்றையும் தேர்ந்தெடுக்கப்படுதலையும் வழிபாட்டையும் தொடர்கின்றனர் என்ற உறுதிப்பாட்டை எடுத்துக் கூறுகிறது. இங்கு நாளாகம ஆசிரியர், இஸ்ராயேலின் தூய்மையைவிட, முடிந்த அளவுக்குப் பெரும் எண்ணிக்கையில் பலர் இறைமக்களுடன் சேர்ந்து கொள்ளும் பொருட்டு, இஸ்ராயேலின் விரிவாக்கத்திற்கு முக்கியத்துவம் அளிக்கிறார். இந்த மூதாதையர் பட்டியல்கள் தாவீது அரசமரபு மற்றும் ஆலயத்தின் தொடர்ச்சியை எடுத்துக்காட்டுகின்றன.

இந்தப் பட்டியல்களைத் தயாரித்தவர்கள், காலவரை பற்றிய வழிமுறைகளைப் பின்பற்றவேண்டும். அதாவது, எத்தனை ஆண்டுகளை உள்ளடக்கிய பட்டியல் என்றும், ஒரு தலை முறையின் காலம் என்னவென்றும் வரையறை செய்து கொள்ள வேண்டும். இத்துறையில் யூதர்கள் சிறந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். அவர்களின் கணக்குப்படி ஒரு தலைமுறையின் காலம் 30-இலிருந்து 40-ஆண்டுகள் வரை குறிக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக, பாலைவன யாத்திரையிலிருந்து சாலமோனின் ஆலயம் எழுப்பப்படும் வரை 480 ஆண்டுகள் எனக் குறிக்கப்பட்டது (1 அர 6:1). இது பன்னிரண்டு தலைமுறைகளைக் கொண்டதாகும். குறிப்பிட்ட இந்தக் கால இடைவெளிக்குள் குறிப்பிட்ட பெயர்கள் இணைக்கப்பட வேண்டும். இது பட்டியலின் ஆசிரியரது விருப்பப்படி அமைக்கப்பட்டது. இப்பட்டியல்களில் காணப்படும் முரண்பாடுகள், வெவ்வேறு மூலங்களிலிருந்து இவை தோன்றுவதால் ஏற்படுகின்

றன. விவிலியத்தில் காணப்படும் மூதாதையர் பட்டியல்கள் துல்லியமானவை அல்ல. அவற்றில் வருபவர்களின் உறவுகளைப் புரிந்துகொள்வது கடினம். ஏனெனில், உறவுகள் பல பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன (ஆதி 46:12; எண் 26:19-20; 1 நாள் 4:21; 2:34; 2:31; 3:19; எஸ் 5:2; ஆகா 2:2; மத் 1:12; லூக் 3:37).

**3. புதிய ஏற்பாடு:** இயேசுவின் மூதாதையர் பட்டியல்கள் மத்தேயு, லூக்கா நற்செய்திகளில் கொடுக்கப்பட்டுள்ளன. இவை பற்றி, **கிறிஸ்துவின் தலைமுறை அல்லது மரபு முறை** என்ற தலைப்பைக் காண்க.

**மூதாதையர் மரபு** (TRADITION OF THE ELDERS)

இது யூதப் பெரியோர்களின் வாய்மொழிப் போதகம் ஆகும். இது விவிலியத்தில் காணப்படும் எழுதப்பட்ட சட்டங்களுக்கு அளிக்கப்பட்ட யூத வாய்மொழிச் சட்டமாகும். இவை காலப்போக்கில் வெறும் சடங்கு, பாரம்பரியங்களுக்கான விளக்க உரைகளாக மாறிவிட்டன இச்சொற்றொடர் மத் 15:2; மாற் 7:3.5 (காண்க. அ.ப. 6:14; கலா 1:14) ஆகிய பகுதிகளில் வருகிறது. மத் 15:2-இல் இயேசுவைப் பற்றிய புகார் ஒன்று குறிப்பிடப்படுகிறது. அதாவது அவர் அவருடைய மூதாதையரின் மரபுகளை மீறுவதாகக் கூறப்படுகிறது. அதற்கு இயேசு கூறும் பதில்: ''இவ்வாறு உங்கள் மரபின் பொருட்டுக் கடவுளின் வார்த்தையைப் பயனற்றதாக்கி விடுகிறீர்கள். வெளிவேடக்காரரே உங்களைப் பற்றிப் பொருத்தமாகவே எசாயா இறைவாக்கு உரைத்திருக்கிறார்...'இம்மக்கள் என்னை உதட்டினால் போற்றுகின்றனர். அவர்கள் உள்ளமோ என்னைவிட்டுத் தொலைவில் இருக்கிறது. மனிதக் கட்டளைகளைக் கோட்பாடுகளாகக் கற்பிக்கின்றனர். இவர்களது இறையச்சம் வீண் என்கிறார்' என்றார்'' (மத் 15:6-9). இயேசு பலமுறை ராபிகளின் வாய்மொழிப் பாரம்பரியத்தை அலட்சியம் செய்திருக்கிறார் (மாற் 2:13-17). இயேசு வாய்மொழிப் பாரம்பரியத்தை முழுமையாக வெறுக்கவில்லை (மாற்கு 1:44). ஆனால் அவற்றின் தீமையான விளைவுகளை எதிர்த்துக் கண்டிக்கிறார். யூதர்களிடம் காணப்பட்ட மரபுகளில் மூதாதையர்களின் மரபு ஒன்றாகும்.

**மூப்பர், பெரியோர்** (ELDER)

1. இதைக் குறிக்கும் எபிரேயச் சொல், பெரிய தாடியையுடைய ஒருவரைக் குறிக்கும். எனவே மூப்பர்கள் வயது மிகுந்த, வளர்ச்சி பெற்ற மனிதர்களாவர், தாங்களாகவே அதிகாரம் உள்ளவர்கள். தங்கள் ஆட்தன்மையாலும், வீரத்தாலும், பதவியாலும் அதிகாரம் உள்ளவராவர். வலிமைமிக்க குடும்பங்களில் ஆதிக்கம் செலுத்துபவராக இருப்பர். ஒரு சமூகத்தின் தலைவர். இவர்கள் அந்தந்த இடங்களில் உயர் பதவியாளராகவும், ஆட்சி செய்பவராகவும் இருப்பர். பழங்கால கிரீசிலும் உரோமையிலும், எகிப்திலும் (ஆதி 50:7), மோவாபிலும், மிதியானிலும் (எண் 227) மூப்பர்கள் இருந்திருக்கின்றனர்.

**2. பழைய ஏற்பாடு:** மூப்பர்கள், குடும்பங்களின் தலைவர்களாவர்; கோத்திரங்களின் பிரதிநிதிகளாகவும் தலைவர்களாகவும் இருந்தனர். விடுதலைப் பயணம் தொடங்குமுன் மோசே இஸ்ராயேலர் மூப்பர்களுக்கு விடுதலை பற்றிய இறைவனது திட்டத்தை விளக்கிக் காட்டுகிறார் (யாத் 4:29). பிற்காலத்தில் பாலையில் பயணம் செய்தபோது மூப்பர்களோடு மோசே ஆலோசனை செய்கிறார் (லேவி 16:25). லேவி 4:15; 9:1-இல் மூப்பர்கள் வழிபாட்டுச் சடங்குகளில் உதவி செய்கின்றனர் (காண்க. யாத் 24:1.14). தனது மாமனாரின் ஆலோசனைப்படி, மோசே, நீதிவழங்குவதற்குத் தனக்கு உதவி செய்யும்படி, மக்கள் மேல் தலைவர்களை நியமிக்கிறார் (யாத் 18:24-26). பிற்காலத்தில் இறைவனின் தூண்டுதலின் பேரில், தனது பரந்த நீதிப் பொறுப்புகளைக் குறைக்க, மோசே எழுபது மூப்பர்களைத் தேர்ந்தெடுக்கிறார் (எண் 11:16.24).

பாலஸ்தீனத்தைக் கைப்பற்றியபின், பல வகையான மூப்பர்கள் காணப்படுகின்றனர். இவர்கள் சமூக அமைப்பில் கொண்டிருக்

கும் நிலைக்கு ஏற்ப முக்கியத்துவம் பெறு கின்றனர். இவர்கள் குடும்பங்களுக்கும் (2 சாமு 12:17; காண்க. ஆதி 50:7), நகரங்களுக் கும் (நீதி 8:14; ரூத் 4:2.4; 1 சாமு 11:3; 2 அர 10:1), பல கோத்திரங்களுக்கும் (நீதி 11:6. 7-8), வட, தென் இனக் கூட்டுகளுக் கும் (1 சாமு 30:26) தலைமை தாங்குகின்ற னர். கோத்திரங்களின் மூப்பர்கள் அல்லது பெரியோர்களிடமிருந்து (உப 29;9; 31:28) அதிகாரிகளும் (யோசு 23:2; 24:1), தலத்து தனது நீதிபதிகளும் (உப 21:2; யோசு 8:33) வேறுபடுத்தப்படுகின்றனர். மூப்பர்கள் பல சட்டப்பிரச்சனைகளைத் தீர்மானித்தனர் (உப 21:2 தொ. 19 தொ; 22:15-18; 25:7-9); சட்டத்தை வாசிப்பதில் பங்கெடுத்தனர் (31:9). நீதிபதிகள் காலத்தில், உடன் படிக்கைப் பேழையைப் போர்க்களத்திற் குக் கொண்டுவர மூப்பர்கள் பரிந்துரைத்த னர் (1 சாமு 4:3). இவர்கள் இஸ்ராயேலில் அரசாட்சி முறை நிறுவப்படுவதற்குக் கரு வியாக இருந்தனர் (8:4). இஸ்ராயேலின் மூப்பர்கள் தாவீதைத் தங்கள் அரசனாக ஏற்றுக்கொண்டனர் (2 சாமு 5:3). அரசாட் சிக்காலத்திலும் (1 சாமு 15:30; 2 சாமு 17:4.15), பிளவுபட்ட அரசாட்சிக்காலத் திலும் (1 அர 21:16) செல்வாக்குள்ளவர் களாகத் திகழ்ந்தனர். இவர்கள் அரசனின் ஆலோசகர்களாக விளங்கினர் (1 அர 20:7-8). தாவீது (நாள் 15:25) மற்றும் சாலமோன் காலத்தில் (1 அர 8:1.3 இணை) வழிபாட்டுச் சடங்குகளிலும், மோசே சட்டத்தை வாசிப்பதிலும் (2 நாள் 34:29 இணை) பங்கெடுத்தனர்.

யூதாவைச் சேர்ந்தவர்கள் பாபிலோனுக்கு நாடுகடத்தப்படுதலுக்கு, இம் மூப்பர்களும் ஓரளவு பொறுப்பாவர் (புல 4:16; காண்க யோவேல் 1:14). நாடு கடத்தப்பட்ட காலத்தில் மூப்பர்கள் தனித்துத் தலைமைப் பொறுப்பை ஏற்க வேண்டியிருந்தது (எரே 19:1). இவர்கள் அடிக்கடி எசேக்கியே லோடு காணப்படுகின்றனர்; ஆனால் இறை வனது வழிகாட்டுதலை எப்போது நேர்மை யோடு விரும்பவில்லை (எசே 20:3). நாடுகடத்தலிலிருந்து திரும்பியபின் சீர் திருத்தப் பணிகளில் எஸ்ராவுக்கு மூப்பர் கள் உதவி செய்தனர் (எஸ் 10:8.14). இவர்கள்தான் ஆலயம் மீண்டும் கட்டப் பட்டபோது குறிக்கப்படும் ''யூத மூப்பர் களாக'' இருக்கலாம் (5:5.9; 6:14).

**3. புதிய ஏற்பாடு:** யூத உயர் ஆட்சிக் குழுவான சனேத்ரினில், மூப்பர்களும் இருந்தனர் (மத் 16:21 இணை). இவர்கள் சட்டம் (21:23) மற்றும் பாரம்பரியங்கள் (15:2 இணை) கடைப்பிடிக்கப்படுவதை மேற்பார்த்தனர். இயேசுவைக் கைது செய்து (26:3) விசாரணை செய்ததிலும் (26:57 இணை; 27:1), அப்போஸ்தவர்களை விசா ரணை செய்ததிலும் (அ.ப. 4:5) மூப்பர்கள் பங்கெடுத்தனர்.

போற்றத் தகுந்த ஞானமிக்க முதியவர் களுக்கு அதிகாரம் வழங்கும் யூத வழக் கத்தைக் கிறிஸ்தவத் திருச்சபையும் பின்பற் றியது (1 திமொ 5:1; எபி 11:2). திருச்சபை யின் தொடக்கத்திலிருந்தே தலைமைப் பொறுப்பு அளிக்கப்பட்ட மூப்பர்கள் இருந் தனர் (அ.ப. 11:30; 21:18; காண்க. யாக் 5:14). அப்போஸ்தலர் பணிநூல் எருசலே மில் நடந்த அப்போஸ்தவர் சங்கத்திலும் (அ.ப. 15:6.22), அதற்குப் பின்னும் (16 4) இவர்களின் செல்வாக்குக்குச் சான்று கூறு கிறது. திருச்சபை வளர்ச்சியில் எந்தக் கட்டத்தில் மூப்பர்கள், தியாக்கோன் மற் றும் ஆயர்களோடு சேர்ந்து பதவி வகிப்ப வர்கள் ஆனார்கள் என்பது தெளிவாக இல்லை. பவுல் தம் காலத்தியத் திருச்சபை களில் மூப்பர்களை நியமித்தார் (14:23); எபேசிய மூப்பர்களோடு உரையாடினார் (20:17). அப்போஸ்தலர் கால முடிவி லிருந்து, மூப்பர் பதவி இருந்தது என்பது உறுதியாகும் (1 திமொ 5:17; தீத் 1:5). 1 திமொ 4:14-இன்படி மூப்பர்கள், தங்கள் கைகளைத் தலைமேல் விரிப்பதால் கொடைகள் அளிக்கும் அதிகாரம் கொண் டிருந்தனர்.

தொடக்ககாலக் கிறிஸ்தவப் பாரம்பரி யம், திருவெளிப்பாட்டில் வரும் இருபத்தி நான்கு மூப்பர்களை (திருவெளி 4:4.10),

இஸ்ராயேல் மற்றும் திருச்சபையின் மூதாதையரான பன்னிரண்டு குல மூதாதையருடனும், பன்னிரண்டு அப்போஸ்தவர்களுடனும் தொடர்புபடுத்தியது. இதைவிட மேலாக, இவர்கள் 24 குருக்கள் மற்றும் 24 லேவியர் அமைப்புகளில் வானகத்தூதர்களின் சரிநிகர் படிவமாக உள்ளனர் எனலாம்.

**மூலக் கட்டிகள்** (TUMOURS)

இஃது ஒரு வகையான கொடிய தொற்று நோய். கொடிய நோய். கடவுள் இந்நோயினால் பெலிஸ்தியரை வதைக்கிறதை விவிலியத்தில் நாம் காண்கிறோம் *(1 சாமு 5:6.9.12; 6:4-5.11.17)*. இந்நோய் எலிகளால் பரப்பப்படுகிறது. இந்நோய் குறிப்பாக மறைவிடங்களில் (அக்குளிலும், தொடை இணைப்புப் பகுதியிலும்) ஏற்படுகிறது.

**மூலைக்கல்** (CORNER STONE)

இரண்டு சுவர்கள் சேருமிடத்தை உறுதியாக்க அடித்தளத்தில் வைக்கப்படும் ஒரு பெரிய கல். சில இடங்களில் பாதுகாப்புக் கோபுரத்தின் மேல் வைக்கப்பட்டுள்ள கல்லைக் குறிக்கும். பழைய ஏற்பாட்டில் உறுதியாயிருப்பதையும், விசுவாசத்தையும் குறிக்கலாம். புதிய ஏற்பாட்டில் இயேசுவைக் குறிக்க மட்டுமே இந்தச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

***1. பழைய ஏற்பாட்டில்:*** சாதாரணமாக இஃது அடிதளக் கல்லைக் குறிக்கின்றது *(யோபு 38:6)*. இது குறிப்பிடத்தக்க முறையில் எசா *28:16*-இல் பயன்படுத்தப்பட்டுள்ளது. தீயவர்கள் கட்டும் பொய்மையின் கட்டடத்தை யாவே கட்டும் விசுவாசிகளின் கட்டடத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றது. இப்பகுதியில் வரும் மூலைக்கல்லானது யாவேயாகவும், சாலமோனின் ஆலயமாகவும் புதுப்பிக்கப்பட்ட சமூகமாகவும், ஒரு மெசியா உருவமாகவும், புதுப்பிக்கபட்ட இஸ்ராயேலின் விசுவாசமாகவும் விளக்கப்பட்டிருக்கின்றது.

எசா *19:13*-இல் வரும் இச்சொற்கள் கோத்திரங்களை உறுதியாக வைத்திருக்கும் தலைவர்களைக் குறிக்கின்றன (காண்க. நீதி *20:2)*. சங் *118:22*-இல் உள்ள 'மூலைக்கல்' அனேகமாக 'மூலையின் மேலுள்ள' அல்லது கொத்தளத்தின் மேலுள்ள கல்லைக் குறிக்கலாம் *(காண்க. செக் 4:7)*. செக் *10:7*-இல் வரும் மூலைக்கல் புதிரானதாகும்.

***2. புதிய ஏற்பாட்டில்:*** புதிய ஏற்பாட்டில் காணப்படும் 'மூலைக்கற்கள்' அனைத்தும் பழைய ஏற்பாட்டிலிருந்து எடுக்கப்பட்டவை அல்லது பழைய ஏற்பாட்டின் பிரதிபலிப்புகள் ஆகும். சங் *118:22* என்ற பகுதி மத் *21:42*; மாற் *12:10* லூக் *20:17*; *1* பேதுரு *2:7*; அ.ப. *4:11*-இல் எடுத்துக் கூறப்படுகிறது. எசா *28:16* என்ற பகுதி *1* பேதுரு *2:6*-இல் எடுத்துக் காட்டப்படுகிறது. இங்கு மூலைக்கல் கிறிஸ்துவே.

எபே *2:20*, எசா *28:16*-ஐ எதிரொலிக்கின்றது. இங்கே அடிப்படையாக அப்போஸ்தலர்களும் இறைவாக்கினர்களும், மூலைக்கல்லாகக் கிறிஸ்துவும் உள்ளனர். யூதப் பாரம்பரியத்தைப்போல், புதிய ஏற்பாட்டு விளக்கவுரையாளர்களும் இந்தப் பழைய ஏற்பாட்டு வாசகங்களுக்கு மெசியாப் பொருள் அளிக்கின்றனர். திருச்சபையின் விசுவாசம் நிலைகொள்ளும் அடித்தளம் கிறிஸ்துவே. இதை யூதர்கள் நிராகரித்துவிட்டனர். ஆனால், இஃது ஒன்றே நிலையான அடித்தளமாகும் என்று இந்த அடையாளம் சுட்டி நிற்கிறது.

**மூலையிலிருந்த மேல்மாடி** (UPPER CHAMBER OF THE CORNER)

எருசலேமின் சுவர்கள் மீண்டும் அமைப்பது பற்றிய நெகேமியாவின் விவரிப்பில் வரும் இறுதியான பொருளாகும் *(நெகே 3:31)*. இது நகரின் வடகிழக்கில் இருந்தது.

**மூலை வாயில்** (CORNER GATE)

இஃது எருசலேம் நகரத்தின் வாயில்களில் ஒன்று. நகரத்தின் வடமேற்கு மூலைக்கருகில் இஃது அமைந்துள்ளது. எப்பிராயிம் வாயிலுக்குக் கிழக்கே *400* முழத்தொலைவில் உள்ளது *(2 அர 14:13; 2 நாள் 25:23)*. இதன் கோபுரங்கள் ஊசியா என்பவரால் கட்டப்பட்டன *(2 நாள் 26:9)*.

எருசலேம் நகர் திரும்பக் கட்டப்படுவது பற்றிய நெகேமியாவின் விவரிப்பில் இதைப் பற்றி ஒன்றும் கூறப்படவில்லை.

**மூன்றாம் நாள்** *((THIRD DAY))*

இயேசு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார் என ஆதித் திருச்சபை நம்பியது. புதிய ஏற்பாட்டின் இரு குறிப்புகள் இயேசு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தாரெனக் குறிப்பிடுகிறது *(அ.ப. 10:40; 1 கொரி 15:3-4)*.

இயேசு, தான் மூன்றாம் நாள் உயிர்த்தெழப் போவதை முன்கூறுவதாக நற்செய்திகள் கூறுகின்றன *(மத் 16:21; 17:23; 23:19; லூக் 9:22; 18.33)*. இந்தக் கூற்றுகள் இயேசு கூறியதா அல்லது பிற்சேர்க்கையா என உறுதியாகக் கூற அறிஞர்களுக்கிடையே கருத்தொற்றுமை இல்லை.

மாற்கு 'மூன்று நாளைக்குப்பிறகு' என்ற சொற்றொடரைப் பயன்படுத்துகிறார் *(8:31; 9:31; 10:34)*. மூலத்தில் 'மூன்றுநாளைக்குப் பிறகு', 'மூன்றாம் நாள்' போன்ற சொற்றொடர்கள் ஒரே பொருளைத் தந்திருக்க வேண்டும். முதலாவது துல்லியமில்லாமல் இருக்கிறது. ஆகவே, இரண்டாவது சொற்றொடரே சரியானதாக இருக்க வேண்டும்.

யோவான் இந்தச் சொற்றொடரை உயிர்ப்போடு தொடர்புபடுத்தாமல் ''மூன்றாம் நாள்...இயேசு...தம் மகிமையை வெளிப்படுத்தினார்'' எனக் கூறுகிறார் *(யோவா 2:1.11)*.

**மூன்று இளைஞர்களின் பாடல்** *(SONG OF THE THREE YOUNGMEN)*

இப்பாடல் எபிரேய வாசகத்தில் இல்லை. கிரேக்க, இலத்தீன் வாசகங்களில் தானி *3:23*-க்கும் *3:24*-க்கும் இடையில் காணப்படுகிறது. ஆகவே, பிற்சேர்க்கையாகக் கருதப்படும்.

இப்பாடல் அசரியாவின் செபத்திற்குப் பின் வருகிறது. இதில், தானியேலின் தோழர்களான சதிரக்கு, மேசாக்கு, ஆபதுநெகோ (அனனியா, மிசாவேல், அசரியா) ஆகிய மூவரும் தங்களைத் தீச்சூளையில் வியத்தகு முறையில் பாதுகாத்த இறைவனைப் புகழ்கின்றனர். ஆனால், அவர்கள் தீச்சூளையில் தள்ளப்பட்டது பற்றிப் பாடலில் குறிக்கப்படவில்லை. ஒரு வரியில் மட்டும் மூவருடைய பெயர்களும் எபிரேய வடிவில் குறிக்கப்படுகின்றன. மற்றப்படி இது, படைப்பவராயும் ஆலயத்தில் வழிபடப்படுபவராயுமுள்ள இறைவனுக்கு ஒரு போற்றுரைப் பாடலாகும். இதில் இஸ்ராயேல் மேல் பேரழிவு ஏற்படும்போது இறைவனின் நீதி ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இறைவனுடைய பெயருக்காகவும், இஸ்ராயேலை அவர் அழிக்கமாட்டார் என்று குல மூதாதையர்களுக்கு அளித்த வாக்குறுதியின் பொருட்டும், விடுதலைக்காக மன்றாடப்படுகிறது. இப்பாடல் எதிரிகளைத் தண்டிக்கும் படியும் மன்றாடுகிறது.

இப்பாடல் சங் *103; 136; 148* ஆகியவற்றைத் தழுவி எழுதப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இஃது எங்கு, எப்போது, யாரால் எழுதப்பட்டது என்பது தெரியவில்லை. ஒருவேளை இஃது அந்தியோக்கு எப்பிபான் காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம். கடந்த காலத்தில் மூதாதையர்களைக் கடவுள் காப்பாற்றியது போல், நிகழ்காலத்திலும் கடவுள் காப்பாற்றுவார் என்று இஸ்ராயேலருக்கு நம்பிக்கையூட்டுவது ஆசிரியரின் நோக்கமாகும்.

**மூன்று விடுதி** *(THREE TAVERNS)*

உரோமைக்குச் செல்லும் வழியில் உள்ள ஒரு தங்கும் இடம். இதன் வழியாக பவுல் பயணம் செய்திருக்கிறார் *(அ.ப. 28:15)*.

மூன்று விடுதி, உரோமிலிருந்து *50* கி.மீ. தொலைவில் உள்ளது. சிசரோ, பல முறைகள் மூன்று விடுதியைக் குறிப்பிடுகிறார்; மேலும், அந்தியம் செல்லும் பாதை, ஆப்வழியை ஊடுறுவிச் செல்லும் இடத்தில் உள்ள ஓர் இடம் என்றும் குறிப்பிடுகிறார்.

# மெ

**மெகிதா** (MEHIDA - வாங்கப்பட்டவன்)

இவர் ஆலய ஊழியர்களான நெத்தினிய ரின், ஒரு குடும்பத் தலைவர்; இவர்கள் நாடுகடத்தலிலிருந்து செருபாபேலோடு நாடு திரும்பினர் (எஸ் 5:52; நெகே 7:54).

**மெகிதோ** (MEGIDDO - கூட்டமான, நெருக்க மான)

மெகிதோ, கடற்கரைச் சமவெளியையும், எசுதிரலோன் சமவெளியையும் இணைக் கும் கர்மேல் மலைத்தொடர் வழியாகச் செல்லும் பாதையில் உள்ளது. இது போர் முக்கியத்துவம் வாய்ந்த நெடுஞ்சாலையில் இருப்பதால் முந்திய காலத்திலிருந்தே மிக வும் முக்கியம் பெற்றிருந்தது. மெகிதோ மூன்றாம் துத்மோசு, முதலாம் சேத்தி, சிசாக்கு ஆகியவர்களால் கைப்பற்றப்பட்ட நகரங்களில் ஒன்றாகும். இவ்விடத்தில் கானானியர் துத்மோசை எதிர்த்தார்கள். எகிப்தைச் சார்ந்து இப்பகுதியில் வாழ்ந்த சிற்றரசர்கள் எகிப்துடன் கொண்டிருந்த கடிதத் தொடர்புக்கு அமர்னா கடிதங்கள் சான்று பகர்கின்றன.

யோசுவாவால் வெல்லப்பட்ட நகரங் களின் அட்டவணையில் மெகிதோவும் குறிப்பிடப்பட்டுள்ளது (யோசு 12:21). இந்த அட்டவணையில் பிற்காலத்தில் வெல்லப்பட்ட நகரங்களும் இடம் பெறு கின்றன. யோசு 17:11, மெகிதோ மனா சேயால் கானானியர்களிடமிருந்து கைப் பற்றப்படாமலிருந்த நகரங்களில் ஒன்று என்று கூறுகிறது (காண்க. நீதி 1:27). நீதி 6:19 மெகிதோவின் நீர்துறையைப் பற்றிக் கூறுகிறது. இச்சமயத்தில் இப்பகுதியில் மக்கள் வாழ்ந்தனர் என்று அறிஞர் பலர் கருதுகின்றனர். இதுவும் தொல்பொருள் ஆய்வுகளும் தெபோரா, பாராக்கு ஆகியோ ரின் போருக்குக் காலம் குறிக்க உதவுகின் றன. சாலமோன் அரசர் மெகிதோவைத் திரும்பவும் கட்டி (1 அர 9:15; 1 நாள் 7:29), அதைத் தன்னாட்டின் ஒரு மாவட்டத் தின் தலைமையகமாக்கினார் (1 அர 4:12). யூதா அரசன் அகசியா ஏகூவிடமிருந்து தப்பித்துச் செல்லும்போது மெகிதோவில் இறந்தான் (2 அர 9:27). யோசியா மெகி தோவில் நெக்கோ என்னும் அரசனால் கொலை செய்யப்பட்டார் (2 அர 23:29தொ; 2 நாள் 35:22 தொ); மெகிதோ சமவெளியில் அதாது - ரிம்மோனின் புலம்பல் பற்றிய குறிப்பு (செக் 12:11) தெளிவாக இல்லை.

மெகிதோ இருந்த இடம் தெல் ஏல்- முத்தேசெலீம் ஆகும். அங்கு அகழ்வா ராய்ச்சி நடத்தியவர்கள் 20 குடியேற்ற நிலைகளைக் கண்டுள்ளனர். கி.மு. 4000 ஆண்டுகளுக்கு முன் செப்புக்காலத்தில் அங்கு மக்கள் வாழ்ந்தார்கள் எனக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. மூன்றாம் ஆயிர மாண்டுக் காலத்தில் பாதுகாக்கப்பட்ட சுவர்கள் தோன்றியுள்ளன. கி.மு. 2500-ஐ ஒட்டி இந்நகரம் அழிக்கப்பட்டது. ஆனால் காரணம் தெளிவாகத் தெரியவில்லை. இங்குக் கி.மு. 2100-க்கும், 1850-க்கும் இடைப்பட்ட மத்திய வெண்கலக் காலத் தில் கட்டப்பட்ட மூன்று கானானியக் கோவில்களும் ஒரு பீடமும் கண்டு பிடிக் கப்பட்டுள்ளன. இங்குக் கண்டுபிடிக்கப் பட்ட எகிப்தியச் சிலையின் அடிப்பகுதி, எகிப்தியர்களின் செல்வாக்கு இங்குப் பழங் காலத்திலிருந்தே இருந்திருக்கிறது என் பதைத் தெளிவாக்குகிறது. சுமார் கி.மு. 1479-இல் இந்நகரம் துத்மோசால் அழிக்கப் பட்டு பின்கட்டப்பட்டு, வட பாலஸ்தீனத் தில் எகிப்தியர் ஆட்சியின் தலைமையக மாக்கப்பட்டது. பின் கி.மு. 1300-இல் முதலாம் சேத்தி என்பவனால் அழிக்கப் பட்டு மீண்டும் கட்டப்பட்டது. பிற்கால வெண்கலக்காலத்தில், கி.மு. 1150-ஐ ஒட்டி இந்நகரம் வன்மையாக அழிக்கப்பட்டு, கி.மு. 1050-இல் குடியேறப்பட்டது. இந்த இடைவெளியை விளக்குவது கடினம். இக்காலத்தில் பாராக்கு, தெபோரா ஆகி யோரின் போரை வைக்கின்றனர் அறிஞர் சிலர். இந்த அழிவு யாரால் ஏற்பட்டது என்பதற்கு வரலாற்று ஏடுகள் இல்லை.

ஆனால், இஃது இஸ்ராயேலரால் ஏற்பட்டது என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். இங்கு, சுமார் கி.மு. 1050-950-க்கு இடைப்பட்ட காலத்தில் பெலிஸ்தியர் வாழ்ந்தனர். பின் அது தாவீதால் கைப்பற்றப்பட்டது.

இந்நகர் இஸ்ராயேல் மக்கள் வாழ்ந்த காலத்தில் நன்கு கட்டப்பட்டிருந்தது. நகரின் சுவர்கள் கற்களால் கட்டப்பட்டன. இச்சுவரில் ஒரு வாயிலும், பல கோபுரங்களும் அமைக்கப்பட்டன. இங்கு ஆளுநனின் பெரிய அரண்மனையும், சுமார் 480 குதிரைகள் இருக்கக் கூடிய குதிரை இலாயமும் உண்டு. இந்நகரம் மூன்றாம் திகிலத் பிலேசரால் அழிக்கப்பட்டு மீண்டும் கட்டப்பட்டது. சுமார் கி.மு. 350-இல் இப்பகுதி கைவிடப்பட்டது.

**மெகிதோ சமவெளி** (MEGIDDO, PLAIN OF)

மெகிதோவின் அருகிலுள்ள இஸ்ரியேல் சமவெளியின் ஒரு பகுதி. இது பெரும் புலம்பல்களின் இடமாகும். இறைவாக்கினர் செக்கரியாவின் புலம்பல் யோசியாவின் (2 நாள் 35:22) இறப்பையோ, போர்க்களத்தில் இறந்தவர்களையோ குறிக்கிறது (செக் 12:11).

**மெகிதோவின் நீர்நிலை** (MEGIDDO, WATERS OF)

மெகிதோவின் நீரூற்று, மெகிதோவின் அருகிலுள்ள ஒரு வற்றாத நீரோடை ஆகும். சீசராவுக்கும், பாராக்குக்கும் இங்குதான் போர் நடந்தது (நீதி 5:19).

**மெகில்லோத்து** (MEGILLOTH - புல் தாள் சுருள்)

முக்கியமான 5 சுருள்கள், திருவிழா நாட்களில் வாசிக்கப்பட்டன. இவை உன்னத சங்கீதம் (பாஸ்கா), ரூத்து (ஐம்பதாம் நாள்), புலம்பல் ஆகமம் (அபுமாதம், ஒன்பதாம் நாள்), திருவுரை நூல் (கூடாரத்திருவிழா), எஸ்தர் (பூரிம்) ஆகியவையாகும்.

**மெகீர்** (MEHIR - விடை, வாடகை)

யூதாவின் வம்சத்தாரில் ஒருவர். கெலூவின் மகனும், எஸ்தோனின் தந்தையுமாவார் (1 நாள் 4:11).

**மெகுமான்** (MEHUMAN - உண்மையான)

இவர் அகசவேர் அரசனுக்குப் பணிபுரிந்த ஏழு அண்ணகர்களில் ஒருவர் (எஸ்த 1:10).

**மெகுயாவேல்** (MEHUJAEL - அடிபட்ட)

இவர் இலாமேக்கின் மூதாதையரும், ஈராதின் மகனும், மெத்துசாவேலின் தந்தையும் ஆவார் (ஆதி 4:18). அறிஞர் சிலர் இவரையும் மகலலேலோடு ஒன்றாக்குகின்றனர் (5:12-13.15-17).

**மெகேற்றபேல்** (MEHETABEL - இறைவன் நன்மை செய்கிறார்)

1. இவள், ஏதோமின் அரசனான அதாரின் (அதாதின்) மனைவி ஆவாள் (ஆதி 36:39; 1 நாள் 1:50). இவள் மதிரேதின் மகளும், மேசகாபுவின் வழித்தோன்றலும் ஆவாள்.

2. இவள் பொய்த் தீர்க்கதரிசியான செமாயாவின் மூதாதையருள் ஒருத்தி. தோபியா, சன்பல்லாற்று ஆகியவர்கள் நெகேமியாவைக் கொலை செய்ய செமாயாவைப் பயன்படுத்தினர் (நெகே 6:10).

**மெகோலாயர்** (MEHOLATHITE)

இது சவுலின் மகளான, மேராபின் கணவனான அதிரியேலின் இனப்பெயராகும் (1 சாமு 18:19; 2 சாமு 21:8). இவர் பர்சில்லாயின் மகன். இப்பெயர், இவர் ஆபல் - மெகோலாவின் குடிமகனன்று என்று சுட்டுகிறது. மேலும், சவுல் தனது அரசைப் பலப்படுத்த, கிலயாதைச் சேர்ந்த இந்த நகரத்தின் தலைவனோடு திருமண உறவு ஏற்படுத்திக் கொண்டதாகத் தெரிகிறது.

**மெக்கராத்தியர்** (MECHERATHITE)

மெக்கராத்தியர் என்பது 'ஏபர்' என்பவருக்குக் கொடுக்கப்பட்ட இனப்பெயராகும். இவர் தாவீதின் படைவீரர்களுள் ஒருவர். இச்சொல் அனேகமாக 'மாக்காத்தியர்' என்றுதான் இருந்திருக்க வேண்டும் (2 சாமு 23:24).

**மெக்கோனா** (MECONAH - அடித்தளம், ஒய்வு இடம்)

மெக்கோனா, யூதா நாட்டின் தென்பகுதியில் சிக்லாகு, அயின் - ரிம்மோன் ஆகிய

ஊர்களுக்கு இடையே உள்ள ஓர் ஊர் (நெகே 11:28). இவ்வூர் இருந்த இடம் தெளிவாகத் தெரியவில்லை. ஒருவேளை மத்மன்னாவுடன் அடையாளம் காட்டப் படலாம்.

**மெசசபேல்** (MESHEZABEL - இறைவன் விடுவிக்கிறார்)

1. நெகேமியாவின் காலத்தில், எருசலேமின் சுவரை மீண்டும் கட்டியவர்களில் ஒருவரான மெசுல்லாமின் மூதாதையர் (நெகே 3:4).

2. எஸ்ராவின் உடன்படிக்கையில் கையெழுத்திட்ட மக்கள் தலைவர்களில் ஒருவர் (நெகே 10:21).

3. யூதாவின் குடும்பத்தைச் சேர்ந்த செரகுவின் வழிவந்த பெத்தகியாவின் தந்தை ஆவார் (நெகே 11:24).

**மெசபொத்தாமியா** (MESOPOTAMIA - ஆறுகளுக்கிடையிலுள்ள நாடு)

மெசபொத்தாமியா என்பது யூப்பிரத்தீசு, திகிரீசு நதிகளுக்கு இடைப்பட்ட பகுதியாகும். இதனுடைய நீண்ட வரலாற்றில் இதன் அரசியல் எல்லைகள் வேறுபட்டு இருந்தன. இது கிழக்கில் ஏலாம், மேதியா வரையிலும், வடக்கில் இக்காலத் துருக்கி வரையிலும், மேற்கில் கானான், எகிப்து வரையிலும் பரவியிருந்தது. ஏறக்குறைய இக்கால ஈராக்கு மற்றும் தென்கிழக்கு சீரியாவுக்குச் சமமானது. இங்கு முதன் முதலில் நாகரிகத்தைக் கொடுத்தவர்கள் சுமேரியர்கள் ஆவர் (கி.மு. 3000). இவர்கள் பொருளாதாரத்திலும், உலோக வேலைகளிலும், கற்களைச் செதுக்குவதிலும் சிறந்திருந்தனர். மற்ற நாடுகளோடு ஏற்றுமதி மற்றும் இறக்குமதி வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர். மெசபொத்தாமிய வணிகர்கள் அரசர்களின் ஆதரவினால் சட்டம், இலக்கியம் முதலியவற்றைப் பரவச் செய்தனர். எபிரேயர்கள் சமயம், இலக்கியம், வரலாறு முதலியவற்றில் மெசபொத்தாமியர்களைவிடச் சிறந்திருந்த போதிலும், வாணிபத்திலும், சட்டத்திலும் அவர்களை விடத் தாழ்ந்தவர்களாகவே இருந்தனர்.

எபிரேயர்கள், அவர்களுடைய வரலாறு முழுவதும் மெசபொத்தாமியாவுடன் தொடர்பு கொண்டிருந்தனர். குல மூதாதையர் பலர் காரானில் வாழ்ந்தார்கள் (ஆதி 11:31-12: 4; 24:10; 28:6தொ). நீதிபதிகள் காலத்தில் மெசபொத்தாமியாவின் அரசர் இஸ்ராயேலரை அடிமைப்படுத்தினர் (நீதி 3:8). அம்மோனியர், தாவீதுக்கு எதிராகப் போர் புரிந்த போது, மெசபொத்தாமியாவின் தேர்களையும், குதிரைகளையும், வாடகைக்கு அமர்த்தியிருந்தனர் (1 நாள் 19:6). அரசு பிளவுபட்டிருந்தபோது அசீரியர்கள் இஸ்ராயேலரை மெசபொத்தாமியாவின் பல பகுதிகளுக்கு நாடு கடத்தினர். பாபிலோனில்தான் பழைய ஏற்பாட்டின் பெரும் பகுதியும், தால்மூதும் எழுதப் பட்டன. பெந்தகோஸ்தே நாளில் மெசபொத்தாமியாவைச் சார்ந்தவர்களும் அங்கு இருந்தனர் (அ.ப. 2:9). ஸ்தேவான், ஆபிரகாம் காரானுக்குமுன் மெசபொத்தாமியாவில் வாழ்ந்ததாகக் குறிப்பிடுகின்றார் (7:2).

**மெசலேமியா** (MESHELEMIAH - யாவே சன்மானம் அளிக்கிறார்)

மெசலேமியா லேவியரும், கோரேயின் மகனும் ஆவார். இவர் வாயில் காப்போனாகப் பணிபுரிந்தார். இவர் செக்கரியாவின் தந்தை (1 நாள் 9:21; 26:1.2.9). 1 நாள் 26:14-இல் குறிப்பிடப்படும் 'செலேமியா' மெசலேமியா என்ற பெயரின் குறுகிய வடிவமாகும். 1 நாள் 9:7. 19. 31; எஸ் 2:42-இல் கூறப்படும் சல்லூம் இதே பெயரின் மறு வடிவம் ஆகும். இதுவும் ஒரே நபரைத்தான் குறிக்கும்.

**மெசலோத்து** (MESALOTH)

பாக்கீது, ஆல்கிமு ஆகியவர் யூதர்களின் மீது படையெடுத்தபோது, அர்பேலாவிலுள்ள மெசலோத்து என்னும் இடத்தைக் கைப்பற்றினர் (1 மக் 9:2).

**மெசியா, கிறிஸ்து** (MESSIAH, CHRIST)

I. எபிரேயம், அரமேயிக் ஆகிய மொழிகளின் சொல்லான 'மெசியாவும்', கிரேக்கச் சொல்லான 'கிறிஸ்து'வும் 'அபிடேகம் செய்யப்பட்டவர்' என்ற ஒரே பொருளைத்

தருவன. அப்போஸ்தலர்கள் காலத்தில் இஃது இயேசுவுக்கே உரிய பெயராக மாறியது. அவருக்குரிய பிற சிறப்புப் பெயர்களின் சாரத்தையெல்லாம் இப்பெயர் தன்னகத்தே கொண்டு விளங்கியது. தாவீதின் மகனான மெசியாவின் வருகையை எதிர்பார்த்திருந்த யூத மக்களின் ஓராயிரங் கால நம்பிக்கைக்கும் இயேசுவுக்குமுள்ள நிலையான பிணைப்பை வெளிக்காட்டுவதும் இப்பெயரே. எனினும், கிறிஸ்து என்ற சொல்லுக்குப் புதிய ஏற்பாடு தரும் பொருட்செறிவு பழைய ஏற்பாட்டிலும் யூத மக்கள் பயன்படுத்திய 'அபிடேகம் செய்யப்பட்டவர்' என்ற சொல்லிலும் இல்லை. இயேசுவின் வாழ்க்கையிலும், வார்த்தைகளிலும் பொதிந்திருந்த சிந்தனைகளின் அடிப்படையில் புதிய ஏற்பாடு இப்பெயருக்கு இவ்விதக் கருத்துச் செறிவு அளித்தது. இப்பொருட் செறிவின் தன்மையைப் புரிந்துகொள்ள மூலச்சொற்களை ஆராய்வது அவசியமாகின்றது.

II. **பழைய ஏற்பாடு:**

பழைய ஏற்பாட்டில் ''அபிடேகம் செய்யப்பட்டவர்'' என்ற சொல் அரசனுக்கே முதற்கண் இடப்பட்டது. ஆனால் பின்னர், வேறு சிலரையும், சிறப்பாக, குருக்களையும் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டது. எனினும், யூத மக்களின் இறையரசு நிறுவப்படும் இறுதிக்காலத்தைப் பற்றிய சிந்தனைகளிலும், நம்பிக்கையிலும் அதிகமான அடிச்சுவடுகளை விட்டுச் சென்றது முதல் வழக்கேயாகும்.

***1. அரசனும் மெசியாவும்:***

***அ) வரலாற்றில் யாவேயால் அபிடேகம் செய்யப்பட்டவர்:*** இறை ஆவியால் பதவியில் அமர்த்தப்படுவதைக் குறிக்க அரசன் எண்ணெயால் அபிடேகம் செய்யப்பட்டான் *(1 சாமு 9:16; 10:1.10; 16:13)*. இவ்வபிடேகம் இஸ்ராயேல் மக்களின் மத்தியில் இறைவனின் பிரதிநிதியாக ஆட்சிபுரியும் பணிக்காக மன்னனை அர்ப்பணித்தது. மன்னனின் முடிசூட்டு விழாவில் அபிடேகச் சடங்கு முக்கியமான இடத்தினைப் பெற்றிருந்தது (காண்க. நீதி *9:8*). சவுல் *(1 சாமு 9-10)*, தாவீது *(2 சாமு 2:4; 5:3)*, சாலமோன் *(1 அர 1:39)*, *(அரசியல் நெருக்கடியில் பதவி ஏற்ற)* சாலமோனின் சந்ததியார் *(2 அர 11:12; 23:30)* ஆகியோரின் முடிசூட்டு விழாக்களில் இச்சடங்கு முக்கிய இடம் வகித்தது. இவ்வாறு மன்னன் ''யாவேயால் அபிடேகம் செய்யப்பட்டவனானான்'' *(2 சாமு 19:22; புல 4:20)*; அதாவது விசுவாசமுள்ள ஒவ்வொரு குடிமகனின் தனிப்பட்ட மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிமையுடைய புனித ஆளாகிறான் *(1 சாமு 24:7.11; 26:9.11.23; 2 சாமு 1:14.16)*. ''இஸ்ராயேலின் எதிர்காலமே தாவீதின் அரச வம்சத்திலே தான் அடங்கியிருக்கின்றது என்று மொழிந்தார் நாத்தான் இறைவாக்கினர் *(2 சாமு 7:12-16)*; அந்நாள் முதல் தாவீதுக்குப்பின் அரியணை அமர்ந்த ஒவ்வொரு அரசனும் நடைமுறையில் 'மெசியா'வாகத் திகழ்ந்தான். இம்'மெசியா'வின் மூலமே இறைவன் தம் மக்களின் நலன் கருதி வகுத்திருந்த திட்டத்தை நிறைவேற்றவும் விரும்பினார்.

***ஆ) செபத்தில் அபிடேகம் செய்யப்பட்டவர்:*** பாபிலோனிய அடிமைத்தனத்திற்கு முன் எழுதப்பட்ட சங்கீதங்கள், அரச மெசியா இஸ்ராயேல் மக்களின் வாழ்விலும் விசுவாசத்திலும் சிறப்பான இடம் வகித்ததாகக் குறிப்பிடுகின்றன. மெசியா பெற்ற அபிடேகம், இறைவன் அவரிடம் காட்டும் தனிச்சலுகையின் அடையாளமாகும் *(சங் 45:8)*; அவரை யாவேயின் சுவிகார மகனாக்குவதும் இவ்வபிடேகமே *(சங் 2:7; காண்க. 2 சாமு 7:14)*. இனி இறைவனே அவரது வலிமையும் பாதுகாப்பும் என்பதும் உறுதி *(சங் 18:51; 20:7; 28:8)*. அவருக்கு எதிராகச் சதிசெய்வது மடமையாம் *(சங் 2:2)*; ஏனெனில், அவரை மீட்கவும் *(அப 3:13)*, அவர் கரத்தை உயர்த்தவும் *(1 சாமு 2:10)* ஆண்டவர் தவறமாட்டார். அவர் நலனுக்காக மக்கள் மன்றாட்டு எழுப்பத் தவறவில்லை *(சங் 84:10; 132:10)*. ஆனால், தாவீதுக்குக் கொடுக்கப்பட்ட உறுதிமொழிகளின் அடிப்

படையில், அவருடைய அரச வம்சத்தை இறைவன் என்றும் நீடிக்கச் செய்வார் என்று நம்பப்பட்டது (சங் 132:17). இதனால் தான் எருசலேம் நகர வீழ்ச்சிக்குப்பின் யாவேயால் அபிடேகம் செய்யப்பட்டவர் புறவினத்தாரால் சிறைப்படுத்தப்பட்ட போது (புல 4:20), மக்கள் பெரிதும் குழப்பத்தில் ஆழ்ந்தனர்; புறவினத்தார் பழிக்கவும் தூற்றவும் ஆண்டவர் தம் மெசியாவைப் புறக்கணித்ததேன் என்று அங்கலாய்த்தனர் (சங் 89:39.52). தாவீது மன்னர் குலத்திற்கு நேர்ந்த இவ்வவமானம் மக்களின் இறைப்பற்றுக்குப் பெரும் சோதனையாக அமைந்தது. பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்தபின் ஏற்பட்ட மறுமலர்ச்சிக்குப் பின்கூட இச் சோதனை நீங்கியபாடில்லை. செருபாபேல் அரியணையேறியபோது மீண்டும் தாவீதின் அரசர்குலம் நிலைநாட்டப்பெறும் - என்ற நம்பிக்கை சிறிது உயிர் பெற்றது. ஆனால் செருபாபேல் ஒரு பொழுதும் மணிமகுடம் சூடவில்லை (ஆனால் செக் 6:9-14 இதற்கு எதிர்மாறாகக் கூறுகின்றது). எனவே, யூத மக்களுக்குத் தலைமை தாங்கிட இதற்குப் பின் அரச மெசியாவுக்கு இடமேயில்லை என்று தெரிந்ததும், எரிய ஆரம்பித்த நம்பிக்கை தீபமும் அணைந்து போயிற்று.

**இ) இறுதிக்கால இயலில் யாவேயின் அபிடேகம் பெற்றவர்:** தங்கள் காலத்து அபிடேகம் செய்யப்பட்ட மன்னர் நெறி தவறிய போதெல்லாம், இறைவாக்கினர் அவர்களைக் கடிந்து கொள்ளத் தவறவில்லை எனினும், அவ்வரியணையில் எதிர்காலத்தில் அமரவிருக்கும் மன்னன் ஒருவன்தான் இஸ்ராயேலுக்கு நல்வாழ்வளிப்பான் என்று நம்பிக்கையூட்டவும் அவர்கள் தவறவில்லை. ஆனால், அம்மன்னனை அவர்கள் மெசியா என்று பெயரிட்டு அழைக்கவில்லை என்பது உண்மைதான். பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து திரும்பிவந்து இவ்வாறு இறைவாக்கினர் மக்களுக்கு உறுதி கூறும் இந்நாட்களில்தான் அரச மெசியாவைப் பற்றிய சிந்தனைகள் புதுவளம் பெறுகின்றன. தங்கள் காலத்து அபிடேகம் செய்யப்பட்டவரைக் குறித்து முன்பே பாடப்பெற்றிருந்த அரச சங்கீதங்களை மக்கள் புதிய கோணத்தில் காண ஆரம்பிக்கின்றனர். இப்புதிய சிந்தனைகளே பிற்காலத்தில் மெசியாவைப் பற்றித் திட்டவட்டமான கருத்துக்களை உருவாக்க வழிகோலின. மேலும், இச்சங்கீதங்கள் அவருடைய புகழ், போராட்டங்கள், வெற்றிகள் (காண். சங் 2) ஆகியவற்றை முன்னதாகவே எடுத்துரைக்கின்றன. புதிய ஏற்பாட்டுக் காலத்தில் யூதர்களில் அனேகர் (குறிப்பாக பரிசேயர்கள்) இத்தகைய பழைய ஏற்பாட்டுப் பகுதிகளின் அடிப்படையில் மெசியா வருவார் என்று நம்பி வாழ்ந்தனர். சாலமோனின் சங்கீதங்கள் என்ற நூலின் ஆசிரியர் (கி.மு. 63) தாவீதின் மகனான மெசியா வரவேண்டுமென (சால சங் 17:18) மன்றாடினார். யூத ராபிகளின் இலக்கிய உலகிலும் இதே கருத்து பரவலாகக் காணப்படுகிறது. இந்நூல்கள் அனைத்திலும் மெசியாவும் பண்டைய இஸ்ராயேல் மன்னர்களுக்குச் சரிசமமாகக் கருதப்படுகிறார். அவரது அரசு இறையாட்சி அமைப்புப் பணித்திட்டத்தில் நிகழ்கிறது. ஆனால் சாதாரண அரசியல் அமைப்பு கொண்ட அரசைத்தான் மக்கள் வெகுவாகப் புரிந்து கொண்டனர்.

**2. 'அபிடேகம் செய்யப்பட்டவர்' என்ற சொற்றொடரின் பிற பொருட்கள்:**

**அ) பரந்த பொருளில் ''யாவேயின் அபிடேகம் பெற்றவர்'':** தம் மக்களின் நலன் கோரி இறைவன் வகுத்துள்ள திட்டத்தை நிறைவேற்றும் பணிக்காக அபிடேகம் மன்னனைத் திருநிலைப்படுத்தியது. எவ்வித அபிடேகச் சடங்குமின்றி ஒருவர் ஒரு பணியை மட்டுமே மேற்கொள்ள அனுப்பப்படும்போது கூட குறிப்பாக, இவ்வேளைகளில் இறை ஆவி கொடையாக அளிக்கப்பட்டால், அவர் அபிடேகம் செய்யப்பட்டதாக பழைய ஏற்பாடு சிற்சில சமயங்களில் குறிப்பிடுகின்றது. இச்சந்தர்ப்பங்களில் அபிடேகம் என்ற சொல் பரந்த பொருளிலும், பொதுப்படையாகவும், உருவகப் பொருளிலும் பயன்படுத்தப்படு

கின்றது. இவ்வுருவகப் பொருளில்தான் பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து இஸ்ராயேலை மீட்க இறைவனால் அனுப்பப்பட்ட சைரசு ''யாவேயால் அபிடேகம் செய்யப்பட்டவர்'' என்று அழைக்கப்படுகிறார் (எசா 45:1). அவன் தன் நாட்டில் அரியணையேறியபோது பெற்ற வழக்கமான அபிடேகம், இறைவனின் பராமரிப்பில் எழுந்த இப்பணிக்காக அவரைத் தயார் செய்தது போல் அமைகிறது. மேலும், இறைவாக்கினர் எவரும் தங்கள் பணியை மேற்கொள்ள எண்ணெயால் அபிடேகம் செய்யப்பட்டு அர்ப்பணிக்கப்பட்டாரல்லர். எனினும் ''தனக்குப் பதிலாக எலிசாவை இறைவாக்கினராக அபிடேகம் செய்ய'' (1 அர 9:16), எலியா பணிக்கப் பெறுகிறார். எலியா தமது ஆவியின் இருமடங்கை எலிசாவுக்குக் கொடுப்பார் (2 அர 2:9) என்பது மேற்கூறிய அபிடேகத்திற்கு விளக்கமாக அமையக்கூடும். உண்மையில், ''எளியோர்க்கு நற்செய்தி அறிவிக்க ஆண்டவர் என்னை அனுப்பியுள்ளார்'' என்று எசாயா இறைவாக்கினர் தாம் பெற்றதாகக் குறிப்பிடும் ஆவியின் அபிடேகம் இதுவே (எசா 6:1). ''யாவேயின் இறைவாக்கினர்'' என்ற தகுதியின் பொருட்டே இறைமக்கள் அனைவரும் அபிடேகம் செய்யப்பட்டவர்களாக அழைக்கப்படுகின்றனர் (சங் 105:15; காண்க. சங் 28:8; அப 3:13). ஆனால், இவ்வாறு மேலே கூறப்பட்ட வண்ணம் ''அபிடேகம் செய்யப்பட்டவர்'' என்ற சொல் வெவ்வேறு விதங்களில் பயன்படுத்தப்படுவது சிற்சில சமயங்களில் மட்டுமேயாகும்.

**ஆ) அபிடேகம் செய்யப்பட்ட குருக்கள்:** பாபிலோனிய அடிமைத்தனத்திற்கு முன் எழுதப்பட்ட நூல்களில் குருக்கள் அபிடேகம் செய்யப்பட்டதாக நாம் வாசிப்பதில்லை. பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து திரும்பித் தாயகம் வந்தபோது குருக்களின் செல்வாக்கு உயர்ந்தது. ஆட்சிபுரிய அரசன் இல்லாத அந்நாட்களில் தலைமைக் குரு சமுதாயத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்கின்றார். எனவே, அவர் பதவிக்கென அர்ப்பணிக்கப்பட அபிடேகமும் செய்யப்படுகிறார். இச்சடங்கின் முக்கியத்துவத்தை வலியுறுத்தும் வண்ணம், ஆரோன் முதற்கொண்டே இது வழக்கிலிருந்ததாகப் பிற்காலத்துக் குருக்கள் பாரம்பரிய வாசகங்கள் குறிப்பிடுகின்றன (யாத் 29:7; 30:22-33; காண்க. சங் 133:2). பிற்காலத்தில் தலைமைக் குரு மட்டுமின்றி குருக்கள் யாவரும் அபிடேகம் செய்யப்படுவர் (யாத் 28:41; 30:30; 40:15). இக்காலமுதல் தலைமைக் குரு அபிடேகம் செய்யப்பட்ட குருவாகத் திகழ்கின்றார் (லேவி 4:3. 5. 16; 2 மக் 1:10); பிறகு, முற்கால மன்னர்களைப் போல் நடைமுறையில் 'மெசியா'வாகவே ஆகின்றார் (காண்க. தானி 9:25). இறுதிக்கால இயலில் குருத்துவமும் அரசும் இணைந்து செயல்புரியும் காட்சிகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. சில இறைவாக்கு வாசகங்களை நீடித்து (எரே 33:14-18; எசே 45:1-8; செக் 4:1-14; 6:13) சில குழுக்கள் எல்லாவற்றிற்கும் முதன்மை வகிக்க குருத்துவ மெசியாவும், இவ்வுலக காரியங்களுக்குப் பொறுப்பேற்க அரச மெசியாவும் ஆக இரண்டு மெசியாக்கள் வருவார்கள் என்று எதிர்பார்த்தனர் (12 பிதாப்பிதாக்களின் ஏற்பாடுகள், கும்ரான் ஏடுகள்). குறிப்பாக எஸ்ஸேனியர் குழுவினர் இரு மெசியாக்களை எதிர்ப்பதாகத் தெரிகின்றது. இதில் குருக்களின் செல்வாக்கு சிறப்புப் பெற்றுள்ளது.

**இ) இறுதிக்கால இயலும் மெசியா கோட்பாடும்:** யூதர்களின் இறுதிக்காலவியல் மெசியாவின் எதிர்பார்ப்புக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்தது. அரச மெசியாவைப் பெரும்பாலோரும், குருத்துவ மெசியாவை ஒரு சிலரும் எதிர்பார்த்தனர். யூதர்கள் கனவு கண்ட மெசியா அவர்களின் அன்றாட அல்லல்களிலிருந்து விடுவிக்கும் விடுதலை வீரர் ஆவார். ஆனால் மறைநூல்கள் கூறும் மெசியா, அதற்கு அப்பாற்பட்டவராய்த் திகழ்கின்றார். மறைநூல்கள், மெசியாவின் கீழ் இறையரசு நிலைநாட்டப்படுவதையும், அவர் ஆண்டவரின் ஊழியனாகவும், மனுமகனாகவும், மீட்பராகவும் தோன்றுவதையும் அறிவிக்கின்றன. இத்

தகைய பலவகையான சிந்தனைகளையும் மெசியாவின் (மெசியாக்களின்) எதிர்பார்ப்போடு ஒன்றுபடுத்திப் பார்க்கும் செயல் எளிதாகவோ, தெளிவாகவோ அமையவில்லை. இதையொட்டி இறைவாக்கினர் எழுப்பும் ஐயங்களை இயேசுவின் வருகையே தீர்த்து வைக்கும்.

III. **புதிய ஏற்பாடு:**

***1. இயேசுவும் மெசியாவை எதிர்நோக்கலும்:***

***அ) இயேசு பெற்ற பட்டம்:*** இயேசுவின் புனிதத்தையும், அதிகாரத்தையும், வல்லமையையும் கண்டு வியப்புற்ற (காண். *யோவா 7:31)* மக்கள் ''அவர் மெசியாவாக இருப்பாரோ?'' *(யோவா 4:29; 7:40தொ),* ''தாவீதின் மகன் இவரோ?'' *(மத் 12:23)* என்று தங்களையே கேட்டுக் கொண்டனர். மேலும், அவர் தம்மைப் பற்றித் தெளிவாகச் சொல்லும்படி அவரை வற்புறுத்தினர் *(யோவா 10:24).* எனவே, அவரைக் குறித்து மக்களிடையே பிளவு ஏற்பட்டது *(காண்க. 7:43).* யூதத் தலைவர்களோவெனில், அவரை மெசியாவாக எவனாவது ஏற்றுக்கொண்டால், அவனைச் செபக்கூடத்திற்குப் புறம்பாக்க முடிவு செய்தனர் *(9:22).* ஆனால், அவருடைய அதிசய வல்லமையின் பயனை அடைந்தோரோ 'தாவீதின் மகனே' என்று உலகறிய உரக்கக் கூவினர் *(மத் 9:27; 15:22; 20:30தொ).* மேலும் 'நீரே மெசியா' என்று பலர் வெளிப்படையாக விசுவாச அறிக்கையிடலாயினர். இயேசுவின் திருமுழுக்கு நிகழ்ச்சிக்குப்பின் முதற் சீடர்கள் 'மெசியாவைக் கண்டோம்' என்றனர் *(யோவா 1:41.45.49).* 'உயிர்ப்பும் உயிரும் நானே' என்று இயேசு விளம்ப *(11:27),* மார்த்தாள் விசுவாச அறிக்கையிடுகின்றாள். ''நீங்களோ என்னை யாரென்று சொல்லுகின்றீர்கள்?'' என்ற கேள்விக்கு, ''நீர் மெசியா'' *(மாற் 8:29)* என்ற பேதுருவின் விசுவாச அறிக்கையை ஒத்தமை நற்செய்தியாளர்கள் சிறப்பாகக் குறிப்பிடுகின்றனர். இவர்கள் அனைவரின் விசுவாசமும் உண்மையானது; ஆனால், அவ்விசுவாசம் பக்குவம் பெற வேண்டியிருந்தது. ஏனென்றால், அவரைப் பிடித்துக்கொண்டு போய் அரசனாக்கும் (காண்க. *யோவா 6:15)* எண்ணங்கள் இன்னும் நீங்கவில்லை.

***ஆ) இயேசுவின் மனநிலை:*** இது பற்றி இயேசுவோ தன்னடக்கமான போக்குடையவராக உள்ளார். மேலும், தமக்குத்தாமே அவர் மெசியா என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டாரல்லர். *யோவா 4:25*தொ இதற்கு ஒரு விதிவிலக்கு. (ஆனால், இங்கு மெசியா என்ற சொல் கிறிஸ்தவர்கள் புரிந்து கொள்ளும் வகையில் சமாரியர்களின் விசுவாசத்தைச் சுருங்கக் கூறுவதாக அமைகின்றது). 'தாவீதின் மகனே' என்று தம்மைக் கூவி அழைக்க அனுமதி அளித்தாலும், மெசியா வென்று தம்மைப் பேய் பிடித்தோர் அறிவிப்பதைத் தடை செய்கின்றார் *(லூக் 4:41).* சாதாரணமாக மற்றவர்கள் விடுக்கும் விசுவாச அறிக்கைகளை ஏற்றுக் கொள்கின்றார். ஆனால், பேதுருவின் விசுவாச அறிக்கைக்குப் பின் தான் மெசியா என்பதை ஒருவருக்கும் சொல்ல வேண்டாமென தம் சீடர்களைக் கேட்டுக்கொள்கிறார் *(மத் 16:26).* அக்கட்டத்திலிருந்து மெசியாவைப் பற்றித் தம் சீடர்கள் கொண்டிருந்த கருத்துக்களைத் தூய்மையாக்கும் முயற்சியில் ஈடுபடுகின்றார். பாடுபடும் ஊழியனைப்போல் தமது மெசியாப் பணியை ஆரம்பித்து, மனுமகனைப் போன்று தமது உயிரைக் கையளித்து மகிமையில் புகுவார் *(மாற் 8:3 இணை; 9:31 இணை; 10:33 தொ.இணை)* என்று உணர்த்துகின்றார். இப்பொழுது சீடர்கள் மனச்சஞ்சலமடைகின்றனர். பிறகோ 'மனுமகன் உயர்த்தப்படும்' *(யோவா 12:34)* நிகழ்ச்சியை உரைக்கும்போது, யூதர்கள் தங்கள் மன அமைதியை இழப்பார்கள்.

எனினும், குருத்து ஞாயிறன்று தம்மைத் ''தாவீதின்மகனே'' என்று மக்கள் ஆர்ப்பரிக்க வேண்டுமென்று விட்டு விடுகின்றனர் *(மத் 21:9).* பிறகு, பரிசேயர்களோடு வாதாடும்போது 'தாவீதின் மகன்' (தாவீதுக்கு ஆண்டவராய் இருப்பதால்) தமது மூதாதையரைக் காட்டிலும் உயர்ந்தவர் என்பதை வலியுறுத்துகின்றார் இயேசு *(மத் 22:41-46 இணை).* இறுதியில் சமயத்தலை

வர்கள் அவரை விசாரணை செய்தபோது 'நீர் மெசியாவா' என்பதற்கு இயேசு பதில் சொல்லும்படி தலைமைக் குரு கட்டளை யிடுகிறார். இயேசுவோ அப்பட்டத்தை மறுக்காது 'தாம் இறைவன் வலப்பக்கத்தில் அமர்வதற்கென்றே பிறந்த மனுமகன்' என்று எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட கண்ணோட்டத்தில் விளக்கமளிக்கின்றார் *(மத் 26:63 தொ)*. பாடுகளின் ஆரம்பத்தில் வெளியிடப்பட்ட இவ்வறிக்கையே இறுதி யில் அவரை மரணத் தீர்ப்புக்குள்ளாக்குவ தற்கும் காரணமாக அமைந்தது. இவ்வாறு அவருடைய மெசியாப் பட்டத்தோடு *(26:68; மாற் 15:32; லூக் 23:35.39)* அரசர் பட்டமும் ஒரே சமயத்தில் இகழ்ச்சிக்குள் ளாயின. சீடர்கள் அவருடைய உயிர்ப் புக்குப் பின்னரேதான் அவர் எதை மறைத்துக் கொண்டிருந்தார் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. ''மெசியா தாம் மாட்சி அடைவதற்குமுன் இத்துன்பங்களைப் பட வேண்டுமல்லவா?'' *(லூக் 24:26)*. மெசியா பெற்ற மகிமை உலக மகிமையிலிருந்து உயர்ந்தது என்பதை உணர்ந்தனர். மெசியா பாடுபட்டு இறந்தோரிடமிருந்து மூன்றாம் நாள் உயிர்த்தெழுவார்; பாவமன்னிப் படைய மனந்திரும்ப வேண்டுமென்று புறவினத்தார் அனைவருக்கும் அவர் பெய ரால் அறிவிக்கப்படும் *(24.46)* என்று மறைநூல் பகர்கின்றது.

**2. இயேசுகிறிஸ்துவில் திருச்சபை காட் டிய விசுவாசம்:**

**அ) உயிர்த்த இயேசுவே கிறிஸ்து ஆவார்:** பாஸ்கு அனுபவம் மெசியாவைப் பற் றிய தவறான கருத்துக்களைத் தகர்த்தெறி யவே இளந்திருச்சபை இயேசுவே மெசியா - கிறிஸ்து என்று பறை சாற்றியது. இவ்விதம் பறைசாற்றுவதற்குக் காரணங்கள் இருந்தன. 'இயேசு உருவில் வந்தவரே அவர்கள் எதிர்பார்த்த கிறிஸ்து' என்று யூதர்களுக்குக் காண்பிக்க வேண்டியிருந்தது. இவ்விதம் காட்டுவதற்குப் பழைய உடன் படிக்கையும் புதிய உடன்படிக்கையும் தொடர்ச்சியானவை; அத்துடன், பழைய உடன்படிக்கையின் நிறைவே புதிய உடன் படிக்கை ஆகும் என்று ஆணித்தரமாக எடுத்துரைத்தனர். இச்சிந்தனைகளின்படி, தாவீதின் உண்மையான மகன் இயேசு ஆவார் *(காண். மத் 1:1; லூக் 1:27; 2:4; உரோ 1:3; அ.ப. 2:29தொ; 13:23)*. அவர் தூய ஆவியின் வல்லமையால் தாயின் வயிற்றில் உருவான தருணத்திலிருந்தே *(லூக் 1:35)*, தமது தந்தையான தாவீதின் அரியணையில் அமர நிச்சயிக்கப்பட்டவர் *(1:32)*. அவரே இஸ்ராயேலரின் அரசுக்கு நிறைவு அளிக்கும் வகையில் வையகத்தில் இறையரசை நிலைநாட்டப் பிறந்தவர். ''வாக்களிக்கப்பட்ட தூய ஆவியைப்'' பெற் றவர் அவர் *(அ.ப. 2:33)*. பிறகு, ''உங்களால் சிலுவையில் அறையப்பட்டவரான இந்த இயேசுவைக் கடவுள் ஆண்டவரும், மெசி யாவுமாக ஆக்கினார்'' *(2:36)*. இவ்வாறு தமது உயிர்ப்பின் மூலம் இன்று இயேசு மன்னருக்குரிய மகிமையில் விளங்குகின் றார். இம்மகிமை இறைவனின் புதிய படைப்பைச் சார்ந்ததாகும். பழைய ஏற்பாட்டில் யாவேயினால் அபிடேகம் செய்யப்பட்டவர் பெற்ற சிறப்புகள் இம் மகிமையின் மங்கிய, தூர மாதிரியே ஆகும்.

**ஆ) இயேசு கிறிஸ்து பெற்ற பட்டங்கள்:** 'இயேசு' என்ற சொந்தப் பெயரோடு 'கிறிஸ்து' என்ற சொல் பிரிக்க முடியாத வாறு இணைந்தது. இதிலிருந்து 'கிறிஸ்து' என்ற சொல்லின் உட்பொருள் வெகுவாக விரிவடைந்தது. ஏனெனில், இயேசுவின் பண்புகளை எடுத்துரைத்த பிற பட்டங்கள் இச்சொல்லையே மையமாகக் கொண்டன. இறைவன் அபிடேகம் செய்தவரே ஆண்ட வரின் புனித ஊழியனாகிய இயேசு *(அ.ப. 4:27)*. எசாயா *(53)* கூறும் மாசுமறுவற்ற செம்மறியும் அவரே *(1 பேதுரு 1:19; காண்க. 1 கொரி 5:7)*. இக்காரணத்தினால் தான் அவர் பாடுபட வேண்டுமென *(அ.ப. 3:18; 17:3; 26:22தொ)* முன்பே எழுதப் பட்டிருந்தது; இதையொட்டியே 2-ஆம் சங்கீ தம் ''யாவேக்கும் அவர்தம் மெசியாவுக் கும் எதிராக'' *(அ.ப. 4:25தொ; காண்க. சங் 2:1தொ)* எழுந்த மாநில மன்னர்களின் சதியை முன்னதாகவே விவரித்தது. சிலு

வையில் அறையுண்டு (1 கொரி 1:23; 2:2), பாவிகளுக்காக இறந்த கிறிஸ்துவையே (உரோ 5:6தொ) பவுலின் நற்செய்தியாக அறிவிக்கின்றார். பேதுருவின் முதல் மடலும் வெகுவாக விவாதிக்கும் தலைப்பு மெசியாவின் பாடுகளாகும் (1 பேதுரு 1:11; 2:21; 3:18; 4:1.13; 5:1). அடுத்தபடியாக இறை ஊழியனின் பணியானது துன்புறுத்தப்பட்ட இறைவாக்கினரின் வாழ்க்கையைப் போன்று அமையும் என்று எசாயா நூல் எடுத்துரைக்கின்றது. இயேசுவும், இறைவாக்கினர் பெற்ற ஆவியின் அபிடேகத்தையே தாமும் பெற்றதாகத் தெளிவாகக் கூறுகின்றார் (லூக் 4:16-22; காண்க. எசா 61:1). அப்போஸ்தலர் பணியில் பேதுருவும், ''கடவுள் இயேசுவுக்குப் பரிசுத்த ஆவியையும் வல்லமையையும் அளித்து அபிடேகம் செய்தார்'' (அ.ப. 10:38) என்று குறிப்பிடுகின்றார்.

அடுத்தபடியாக, தமது சாவுக்கு முந்திய தினத்தில் இயேசுவும் தமது மனுமகன் பட்டத்தின் மேன்மையை எடுத்தியம்புகின்றார் (மத் 26:63தொ). அப்போஸ்தலர்களும் புதிய உலகை நிலைநாட்டும் மனுமகனாக இறுதிக்காலத்தில் இயேசு திரும்பிவரும் உண்மையை வலியுறுத்திப் போதித்தனர் (அ.ப. 1:11; காண்க. 3:20தொ; மத் 25:31.24). மேலும், மனுமகனுக்குரிய தகுதியில்தான் இயேசு இறைவனின் வலப்பக்கத்தில் வீற்றிருக்கின்றார் (அ.ப. 7:55தொ; திருவெளி 1:5.12-16; 14:14). மேலும், திருவெளிப்பாட்டுப் புத்தகம் இயேசுவை ஒரு குருவின் உருவில் படம் பிடித்துக் காட்டுகின்றது (திருவெளி 1:13). இத்தகைய உருவில்தான் மெசியா தோன்றுவார் என்று பிற்கால யூதர்கள் எண்ணினர். எபிரேயருக்கு எழுதப்பட்ட மடல் வெறும் சாயலான ஆரோனின் குருத்துவத்திற்குப் பதிலாக நிலையான வகையில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட இயேசுவின் குருத்துவத்தை வானளாவப் புகழ்கின்றது (எபி 5:5;...;7). அடுத்து ''இயேசு கிறிஸ்துவே ஆண்டவர்'' (லூக் 2:11; 2 கொரி 4:5 தொ) என்றும், ''நமது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து'' (அ.ப. 15.26) என்றும் குறிப்பிடுவது, இயேசுவுக்குத் தலைசிறந்த பட்டமாகிய ''ஆண்டவர்'' என்னும் பட்டத்தை அளிக்க யாரும் தயங்கவில்லை (காண்க. அ.ப. 2:36) என்பதைக் காட்டுகின்றது. மேலும், மானிட மகிமையைக் காட்டிலும் உயர்ந்த மகிமையை இயேசு பெற்றுள்ளார் என்பதற்கு அவருடைய உயிர்ப்பே மிகத்தெளிவாகச் சான்று பகர்ந்தது. எனவே, கிறிஸ்துவே உண்மையான இறைமகன் ஆகிறார் (உரோ 1:4); இதனால் அவரே கடவுளும் ஆகிறார் (உரோ 9:5; 1 யோவா 5:20). இவ்வாறு 'கிறிஸ்து' என்பது இயேசு பெற்ற பல பட்டங்களில் ஏதோ ஒன்று என்ற நிலை திருந்தி ஏனைய பட்டங்களையெல்லாம் சுருக்கித் தன்னகத்தே கொண்டு விளங்கும் அவருடைய சொந்தப் பெயராக மாறிவிடுகின்றது (1 கொரி 15:12-23-இல் எவ்விதப் பெயரடையுமின்றித் தனித்துப் பயன்படுத்தப்படுகின்றது). அவரால் மீட்புப் பெற்றவர்களுக்குக் ''கிறிஸ்தவர்கள்'' என்ற சிறப்புப்பெயர் தகுதி வாய்ந்ததே ஆகும் (அ.ப. 11:26).

## மெசியா பற்றிய இரகசியம் (MESSIANIC SECRET)

புதிய ஏற்பாட்டு நூல்களின்படி இயேசு கடவுளின் மகனும், மெசியாவும் ஆவார் என்ற செய்தி அவர் உயிர்த்தெழும்வரை ஒரு சிறிய குழுவான சீடர்களைத் தவிர வேறு யாருக்கும் வெளிப்படுத்தப்படவில்லை என்று தோன்றுகிறது. இச்செய்தியைப் பிறரிடமிருந்து மறைத்து வைக்கும் போக்கு, குறிப்பாக மாற்கில், காணப்படுகிறது.

மாற்கின் நற்செய்தியின்படி, அசுத்த ஆவிகள் ''நீ கடவுளுக்கு உரித்தாக்கப்பட்டவர்'' என்று உரக்கக் கூவுகின்றன. அவைகள் பேசாதிருக்கும்படி இயேசு கட்டளையிடுகிறார் (மாற் 1:24-25; 3:11-12). மாபெரும் அருஞ்செயல்கள் செய்தபின், அவற்றைப் பிறருக்கு அறிவிக்கக்கூடாது என்று கட்டளையிடுகின்றார் (1:44; 5:43; 7:36; 8:26). செசரிய பிலிப்பியில் பேதுரு இயேசுவை மெசியா என்று விசுவாச அறிக்கை

யிட்டபின்னும், ஒளியுருவானபின்னும், தாமே மெசியா என்பதைத் தாம் மரித்தோரி னின்று உயிர்க்கும்வரை பிறருக்குக் கூறலா காது என்று பணிக்கிறார் (8:27-30; 9:9). அதேபோது தாமே துன்புறும் மானிட மகன் என்று போதிக்கிறார். ஆனால், இப்போதகத்தின் பொருளைச் சீடர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை (8:31-32; 9:30-32). இயேசு தமது உவமைகளைச் சீடர்களுக்கு விளக்கிக்காட்டும்வரை அவர் களுக்கு அவை மறைவாகவே உள்ளன (4:10-13.33-34). சிலசமயம் கூட்டத்தி லிருந்து பின்வாங்கி இரகசியமாகப் பய ணம் செய்கிறார் (7:24; 9:30). தமது சீடர்களுக்கு மட்டும் தனியாகப் போதகம் அளிக்கிறார் (4:10-11.33-34; 7:17-23; 8:21; 9:27 தொ. 31; 10:32 தொ; 13:3-37). பெரிய குருவின் முன் விசாரிக்கப்படும்போதுதான் மெசியா பற்றிய இரகசியம் பகிரங்கமாக வெளிப்படுத்தப்படுகிறது (14:62).

இந்தப் போக்கு, இயேசு நிராகரிக்கப் படுதலையும், அவரது போதனைகளில் சில தெளிவற்றவையாகத் தோன்றுவதையும் விளக்குவதாக நற்செய்தியாளர்கள் உணர்வ தாகத் தெரிகிறது. சில பகுதிகள் அவர் நிராகரிக்கப்படுவதையும், மெசியா பற்றிய இரகசியத்தையும் அழுத்திக் கூறுவதாகத் தெரிகிறது (மத் 11:2-30=லூக் 7:18-35; 10:12-15.21-24). இந்த இரகசியம் புறவினத் தாருக்கும் யூதர்களுக்கும் மறைத்து வைக்கப்பட்டிருந்தது என்றும் (உரோ 11:25; 1 கொரி 1:18-24; 2:6-9), ஆனால் கிறிஸ்தவர் களுக்கு இஃது ஒருபோதும் மறைபொருள் அன்று என்றும் (2 கொரி 3:12-18) பவுல் நம்புகிறார். லூக்காவின்படி, மெசியா பற்றிய பழைய ஏற்பாட்டு இறைவாக்குகள் உயிர்ப்புக்குப்பின் வரை புரிந்து கொள்ளப் படவில்லை (லூக் 24:25-27. 44-48). யோவா னின் நற்செய்தியில், திருமுழுக்கு யோவான் இயேசுவை உடனே அடையா ளம் கண்டு கொள்கிறார். இயேசு தொடக் கத்திலிருந்தே சீடர்களுக்குத் தம் வரவை வெளிப்படுத்துகிறார் (1:29-51). ஆனால் அவர்கள் இப்போதகத்தின் பொருளை மெதுவாகவே புரிந்து கொள்கின்றனர். மேலறையிலிருந்து யூதாசு வெளியேறிய பின், இந்த இரகசியத்தை இயேசு விளக்கிக் காட்டுவதை யோவா 13-17-இல் காண்கி றோம்.

மெசியா பற்றிய இரகசியத்தை மறைத்து வைப்பது செயற்கையாகத் தோன்றுகிறது. அருஞ்செயல்களைப் பிறர் அறியா வண்ணம் மறைத்து வைப்பது கூடு மானதா? அப்படியிருந்தும் அவற்றைப் பிறருக்கு அறிவிக்காதிருக்கும்படி கட்டளை யிடுகிறார் இயேசு. இக்கருத்து, மாற்கில் மட்டுமன்று, மத்தேயுவிலும் காணப்படு கிறது (மத் 9:27-31). இதற்கு விளக்கம் கூறுவது அவசியமாகும்.

இதற்கு விளக்கம் கூற முயன்ற பலரும் தோல்வியே கண்டனர் என்று கூற வேண் டும். ''ரீடு'' என்பவர் ஒரு வினோத விளக்கம் அளிக்கிறார். இதன்படி, இயேசு உயிர் வாழ்ந்தபோது மெசியா என்ற பட்டத்திற்கு உரிமை கொண்டாடவில்லை. இயேசுவின் மரணத்திற்குப் பின்புதான் இக்கருத்து ஆதிக்கிறிஸ்தவர்களுக்கிடையே எழுந்தது. அதை இயேசுவுக்குச் சூட்டி நற்செய்திகளில் இங்குமங்குமாகப் புகுத்தி விட்டது ஆதித்திருச்சபை என்றார் ரீடு. இக்கூற்றில் நற்செய்தியாளர்கள் பொய்யர் கள், உண்மையைக் கூறவில்லை என்ற குற்றச்சாட்டு தொக்கி நிற்கிறது. அஃதோடு இயேசு மரித்தோரிடையிலிருந்து உயிர்த்தல் முடியாத காரியம் என்ற கருத்தும் பின்னணி யாக அமைந்திருக்கிறது.

நற்செய்தியாளர்கள் வாய்மைக்கும் நமது உண்மைகளுக்கும் ஊறு விளையாதபடி கீழ்க்கண்ட விளக்கம் அளிக்கலாம். இயேசு தான் மெசியா. ஆனால், மெசியாவைப் பற்றி அவர் கொண்டிருந்த கருத்துக்கும், பொதுமக்கள் கொண்டிருந்த கருத்துக்கும் பெரிய வேறுபாடு உண்டு. பொதுமக்கள் அரசியல், பொருளாதார விடுதலை அளிக் கும் மெசியாவை எதிர்பார்த்தனர். எத்தனை பேர் தாங்களே மெசியா என்று பொய்ப் பட்டம் சூட்டிக்கொண்டு மக்களிடையே

தோன்றியுள்ளனர்! இயேசுவின் காலத்தில் மெசியாவைப் பற்றிய கருத்து சிதைந்து இழிவடைந்து உருமாறியிருந்தது. இச்சூழ் நிலையில் பொதுமக்களிடம் சென்று ''நான் தான் மெசியா'' என்று கூறியிருந்தால் தவறாகப் புரிந்து கொண்டிருப்பர். துன் புறும் ஊழியரான மெசியாவை ஏற்றுக் கொள்ளார். மகிமை மிக்க ஆண்டவராகிய மெசியாவை அறிந்துகொள்ளும் மனப்பக்கு வம் அவர்கள் கொண்டிருக்கவில்லை. இரண்டையும் கொண்டுள்ள ஆன்மீக மெசி யாவை அறிந்து கொள்ளும் மனநிலை அவர்களிடம் இல்லை. அவர்களைப் படிப் படியாக மெசியாவின் உண்மைப் பண்பை அறியும்படி செய்ய வேண்டியிருந்தது.

அப்படிச் செய்ய தாம் மெசியா என்பதை இயேசு மறைத்து வைப்பது அவசிய மாயிற்று. அஃது அவர் கொண்ட ஒரு தந்திரமன்று; தாம்தான் உண்மையான மெசியா என்று வெளிப்படுத்த ஒரு நிபந் தனையாகும். இயேசுவைப் போலவே, அவரின் மெசியா என்ற பெயரும் இறைத் திட்டத்தில் மறைபொருள் மிக்கதாகும். இயேசு பாடுபட்டு உயிர்க்குமுன், அப் போஸ்தலர்களே இப்பட்டத்தின் உண்மைப் பொருளை அறியாதபோது பொதுமக்கள் எப்படி அறிவர்? ஆகையால் பொதுமக்களிட மிருந்து இப்பட்டத்தை மறைத்துத் தமக்குச் சாட்சிகளாக விளங்கப்போகிற சீடர்களுக்கு இக்கருத்தைப் பற்றிப் போதிக்கிறார்; அவர் களுக்குத் தெளிவாக்குகிறார். அவர்களும் இயேசுவின் பாடுகள், மரணம், உயிர்ப்பு வரை இதன் உண்மைப்பொருளை நன்கு உணரவில்லை என்றே கூற வேண்டும். பிற்காலத்தில் இயேசுவின் பாடுகள், மரணம், உயிர்ப்பு ஆகியவற்றுடன் அவருடைய கூற்றுகளையும் ஒத்துப்பார்த்து உண்மைப்பொருளை உணர்கின்றனர். தாங் கள் மந்தபுத்தி உள்ளவர்களாயிருந்தும், பின்னர் ஆவியின் அருட்பொழிவால் இயே சுவை உண்மையான விதத்தில் அறிந்து போதித்ததையே நற்செய்தியாளர்கள் நமக்கு அளிக்கின்றனர்; தாங்களாக ஒன்றை யும் புனைந்து கூறவில்லை. இந்த மறைவு முறை ஆதித்திருச்சபையின் தந்திரமும் அன்று. ஆகையால்தான் நல்லெண்ணத் துடன் வாசிக்கும் எவரும் மறைபொருளி லிருந்து உண்மைப்பொருளை உணர்வதாக உணர்வர். இருளிலிருந்து ஒளிக்குச் செல்வ தாகவும், அறியாமையிலிருந்து உண்மை அறிவை அடைவதாகவும் உணர்வர். இவ் விதம் வாசகர்களிடையே தெளிவை உண் டாக்கவே, இயேசுவைப் பின்பற்றி, மறைவு முறையைப் பயன்படுத்தி, விரி வாகவும் நுணுக்கமாகவும் நற்செய்திகளை நற்செய்தியாளர்கள் எழுதினர். அதிலே ஆழ்ந்த கருத்துடைய வரலாறும், இறை யியல் நோக்கமும், இயேசுவே மீட்பர், மெசியா, கிறிஸ்து என்ற மெய்யான வெளிப்பாடும் உள.

**மெசிலமோத்து** (MESHILLEMOTH - ஈடுசெய் *தல்)*

*1. இவர் எப்பிராயிம் கோத்திரத்தில் முன்னணியிலிருந்த ஒரு குடும்பத்திலிருந்து வந்தவர்; பெரக்கியாவின் தந்தை (2 நாள் 28:12).*

*2. ஒரு குரு. இம்மேரின் மகன் (நெகே 11:13). 1 நாள் 9:12-இல் இவர் மெசில்ல மித்து என்றழைக்கப்படுகிறார்.*

**மெசுசா** (MEZUZAH - கதவுநிலை)

இந்த எபிரேயச் சொல்லுக்கு, ''வாயில் நிலை'' அல்லது 'நிலை' (post) என்று பொருள். 1 அர 7:5-இல் இது 'சன்னல்' (window) என்று கூறப்படுகிறது. வழிபாட்டு இடத்தின் நிலைகளைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டது *(யாத் 12:7. 22-23; உப 6:9; 11:20). பழ 8:34, எசே 43:8*-ஆகிய இரண்டிலும் இச்சொல் வீட்டின் நிலை களைக் குறிக்கின்றது. நீதி 10:3-இல் இச் சொல் நகரவாயிலின் நிலைகளைக் குறிக் கின்றது. இவற்றைத் தவிர மற்ற இடங் களில் இச்சொல் ஆலயத்தின் வாயில் நிலைகளைக் குறிக்கின்றது *(1 அர 6:33; 1 சாமு 1:9; எசே 4:21; 43:8; 45:19)*. முற்றத்தைப் போலவே கதவு நிலைகளும் புனிதமாகக் கருதப்பட்டன. இவற்றில் இரத்தம் தெளிக்கப்பட்டது (யாத்

*12:7.22-23)*; விவிலியத்தின் சில பகுதிகளும் பொருத்தப்பட்டன *(உப 6:9; 11:20)*.

**மெசுல்லமேத்து** *(*MESHULLEMETH - ஒப்புரவாதல், இறந்த குழந்தைக்கு ஈடு*)*

இவள், யூதாவின் அரசனான மனாசேயின் மனைவியும், ஆமோனின் தாயும் ஆவாள் *(2 அர 21:19)*.

**மெசுல்லாம்** *(*MESHULLAM - நண்பன், ஒப்புரவாதல்*)*

*1.* யூதாவின் அரசன் யோசியா ஆட்சியில் செயலாளனாக இருந்த சாபானின் தாத்தா ஆவார் *(2 அர 22:3)*.

*2.* இவர் செருபாபேலின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 3:19)*.

*3.* இவர் பாசானில் வாழ்ந்த காத்தின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 5:13)*.

*4.* இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்த எல்பாகாலின் மகன் ஆவார் *(1 நாள் 8:17)*.

*5.* இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்த சல்லூவின் தந்தை அல்லது முன்னோர் ஆவார் *(1 நாள் 9:7)*. இவரும் *4*-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

*6.* இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்த செபற்றியாவின் மகன். நாடு கடத்தலிலிருந்து முதலில் திரும்பியவர்களுள் ஒருவர் *(1 நாள் 9:8)*.

*7.* இவர் சாதோக்கின் மகனும், இலிகியாவின் தந்தையும் ஆவார் *(1 நாள் 9:11)*. குரு அசரியா *(9:11)* மற்றும் செராயா *(நெகே 11:11)* ஆகியோரின் மூதாதையர். இவரும் சல்லூமும் *(9)* ஒரே ஆளாக இருக்கலாம் *(1 நாள் 6:12-13; எஸ் 7:2)*.

*8.* இவர் சாதோக்கின் குடும்பத்தில் பிறந்த இம்மேரின் வீட்டைச் சேர்ந்த ஒரு குரு *(1 நாள் 9:12)*.

*9.* யோசியா அரசன் காலத்தில், ஆலயம் செப்பனிடப்பட்டபோது மேற்பார்வையாளர்களாய் இருந்த கோகாத்தின் புதல்வர்களுள் ஒருவர்; ஒரு லேவியர் *(2 நாள் 34:12)*.

*10.* இவர் லேவியர்களை அழைத்துவர எஸ்ராவால் கசிப்பியாவிலுள்ள இத்தோவுக்கு அனுப்பப்பட்ட மக்கள் தலைவர்களில் ஒருவர் *(எஸ் 8:16)*.

*11.* அன்னிய மனைவியரை நீக்கிவிடும் எஸ்ராவின் கோட்பாட்டை எதிர்த்தவர்களுக்கு ஆதரவு அளித்தவருள் ஒருவர் *(எஸ் 10:15)*. இவரும் *10*-இல் குறிக்கப்பட்டவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

*12.* அன்னிய மனைவியை நீக்கிவிடக் கோரப்பட்டவருள் ஒருவர் *(எஸ் 10:29)*. இவர் *10*-இல் அல்லது *11*-இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

*13.* இவர் பெரக்கியாவின் மகனும், எருசலேமின் சுவர்களைக் கட்டியவர்களில் ஒருவரும் ஆவார் *(நெகே 3:4.30)*. இவர் தன் மகளைத் தோபியாவின் மகன் யோகனானுக்கு மணமுடித்து வைத்தார் *(6:18)*.

*14.* இவர் பெசோதியாவின் மகனும், எருசலேமின் பழைய வாயிலைப் பழுது பார்த்தவர்களுள் ஒருவரும் ஆவார் *(நெகே 3:6)*.

*15.* இவர் எஸ்ரா, ஆண்டின் 7-ஆம் மாதம், சட்டங்களை மக்களுக்குப் படித்தபோது, அவருடைய இடப் பக்கத்தில் நின்றிருந்தவர்களுள் ஒருவர் *(நெகே 8:4)*.

*16.* பாபிலோனின் அடிமைத்தனத்திலிருந்து திரும்பியபின், கடவுளுக்கும், மக்களுக்கும் இடையே செய்யப்பட்ட உடன்படிக்கையில் கையொப்பமிட்டவருள் ஒருவர் *(நெகே 10:7)*.

*17.* பாபிலோனின் அடிமைத்தனத்திலிருந்து திரும்பியபின், செய்யப்பட்ட உடன்படிக்கையில் கையெழுத்திட்ட மக்கள் தலைவர்களில் ஒருவர் *(நெகே 10:20)*.

*18.* யோயாக்கிம் தலைமைக் குருவாய் இருந்தபோது எஸ்ராவின் ஒரு குருகுலக் குடும்பத்துக்குத் தலைவராய் இருந்தவர் *(நெகே 12:13)*.

*19.* யோயாக்கிம் தலைமைக் குருவாய் இருந்தபோது கின்னத்தோனின் குருகுலக்

குடும்பத்தின் தலைவராய் இருந்தவர் (நெகே 12:16).

20. யோயாக்கிமின் காலத்தில் கருவூலங் களைக் கவனித்து வந்தவர் (நெகே 12:25).

21. இவர் எருசலேமின் புதிய சுவர் அர்ப்பணமாக்கப்பட்ட போது ஊர்வலத் தில் கலந்து கொண்டவர்களுள் ஒருவர் (நெகே 12:33).

**மெசோசின் வெளிப்பாட்டுநூல்** (MESSOS APOCALYPSE OF)

இது பண்டைக்கால எகிப்திய மொழி யில் ஞானவாத கோட்பாட்டினர் எழுதிய ஓர் நூல். இது 1946-இல் செனோபோஸ்கி யேன் என்னுமிடத்தில் கண்டெடுக்கப்பட் டது. இது பிளேட்டினு எதிர்த்துப் போரா டிய ஐந்து வெளிப்பாட்டு நூல்களில் ஒன்று எனப் போர்பெரி கூறுகிறார். இந்நூலின்படி மெசோஸ் என்பவர் பல காலமாக புரியாத புதிரான ஓர் ஆள். இவர் மோசேயும் அல்லர்; ஒரு மறைஞானி இடையாளரும் அல்லர். மாறாக, இவர் ஞானவாதக் கோட்பாட்டுக்காட்டியாளர் அல்லது ஒரு தீர்க்கதரிசி ஆவார்.

**மெசோபாபு** (MESHOBAB - சீர்திருத்துதல், மீண்டும் அமைத்தல்)

இவர் சிமியோனுடைய புதல்வர்களில் ஒருவர். இவர் தம் குலத்தவருடன் எசேக் கியா காலத்தில் கெதோரில் உள்ள மேய்ச் சல் நிலங்களை உடைமையாகக் கொண் டார் (1 நாள் 4:34-41).

**மெட்சோபயா** (MEZOBAITE)

தாவீதின் படையிலிருந்த வலிமை மிக்க வீரர்களுள் ஒருவரான யகசியேலுக்குச் சூட்டப்பட்ட பெயர் (1 நாள் 11:47).

**மெதக்கம்மா** (METHEG - AMMAH)

இது 2 சாமு 8:1-இல் வரும் பொருள் விளங்காத சொற்றொடர். இஃது ஒரு வேளை தாவீது பெலிஸ்தியரை வென்ற இடமாக இருக்கலாம். இதற்கு இணையான 1 நாள் 18:1, இதைக் ''காத் நகரையும் அதன் கிராமங்களையும்'' என்று கொண் டுள்ளது.

**மெதான்** (MEDAN - போராட்டம்)

மெதான், ஆபிரகாம் - கெத்தூராள் ஆகியவர்களின் மூன்றாம் மகன் (ஆதி 25:2; 1 நாள் 1:32). ஆகவே, ஓர் அராபியக் குழுவின் பெயர். மெதான் என்னும் இப் பெயர் 'மிதியான்' என்னும் பெயருக்கு முன் குறிப்பிடப்பட்டு இருப்பதால், அது மிதியான் என்பதன் திரிபு அடைந்த படிவ மாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. 'மதான்' என்று அழைக்கப்படும் அராபியக் கடவுள் இருந்ததாக அப்து-அல்மாதான் என்னும் குடும்பப் பெயரிலிருந்து தெரிய வருகிறது. மூன்றாம் திகிலத்பிலேசர் கி.மு. 732-இல் சீரியாவில் 'பதான்' (Badan) என் னும் நகரைக் கைப்பற்றினார். இது தேமா என்னும் ஊரின் தெற்கே உள்ளது. அராபிய மொழியில், பல சமயங்களில் மெய்யெழுத் துகள் 'ப' (B) வும், 'ம' (m) வும் மாற்றிக் கொள்ளப்படுவதால் 'பதான்' என்பது 'மெ தான்' என்று அழைக்கப்படலாம் என்று எண்ணப்படுகிறது.

**மெத்துசவேல்** (METHUSHAEL)

காயின் மரபுவழியில், மெகுயாவேலின் மகனும், இலாமேக்கின் தந்தையுமாவார் (ஆதி 4:18). அறிஞர் சிலர் குருக்கள் பாரம்பரிய மெத்துசேலாவுக்கு யாவே பாரம்பரிய சரிநேர் படிவமாக இவரைக் கருதுகின்றனர்.

**மெத்துசேலா** (METHUSELAH - வேலின் மனிதன், சேலாவை வழிபடுபவர்)

இவர் சேத்து வழியாக ஏனோக்கின் மகனும், இலாமேக்கின் தந்தையும் ஆவார் (ஆதி 5:21-27; 1 நாள் 1:3). பெரும் வெள்ளத்திற்கு முன், மிக நீடிய காலம் (969 ஆண்டுகள்) வாழ்ந்தவராகக் கருதப் படுபவர். இயேசுவின் மூதாதையருள் ஒரு வராவார் (லூக் 3:37).

**மெபிபொசேத்து** (MEPHIBOSHETH - மானக் கேட்டைத் தூவுபவன், மானக்கேட்டின் வாயிலிருந்து)

1. இவர் சவுலுக்கும், அவரது வைப் பாட்டியும் அய்யாவின் மகளுமான இரிசா பாவுக்கும் பிறந்தவர். இவரையும் இவரது

சகோதரர் அர்மோனியையும், சவுலின் மகளான மேராபுக்குப் பிறந்த 5 புதல்வர்களையும் தூக்கிலிடும்படி, தாவீது கிபயோனியர்களிடம் கையளித்தார். மெபிபொசேத்தின் தாய், கடவுளின் கோபம் போய்விட்டது என்பதற்கு அறிகுறியான மழை விழும் வரை, பிணங்களைப் பாதுகாத்து வந்தாள். பின் எலும்புகளை எல்லாம் ஒன்றாகக் கூட்டி கீசின் கல்லறை அருகில் புதைத்தனர் *(2 சாமு 21:10-14;* காண்க. *யோசு 9)*.

2. இவர் சவுலின் மகன் யோனத்தானின் மகன். சவுலின் வழித்தோன்றிய இவன் இயற்பெயர் மெரிபகால் என்று கருதப்படுகிறது *(1 நாள் 8:34)*. மெபிபொசேத்துக்கு ஐந்து வயது நடக்கும்போது அவனுடைய தந்தை இறந்தார். இதைக் கேட்ட அவனுடைய செவிலித்தாய் ஆபத்தினின்று தப்பிக்க விரைந்தாள். அப்போது அவன், அவளின் கைகளிலிருந்து தவறிக் கீழே விழவே இரண்டு கால்களும் முடமாயின *(2 சாமு 4:4)*. இதன்பின் அவன் தாவீதின் அரண்மனையில் வளர்ந்தான். அவனுடைய சிற்றப்பன் இசுபகால் இறந்த பின், ஆட்சிக்கு வரக்கூடிய வாரிசு மெபிபொசேத்து என்றாலும், அதை அவன் பொருட்படுத்தாமல், இருக்கும் பாதுகாப்பே போதும் என்று இருந்தான். தாவீது, தம் கருணையால் மெபிபொசேத்தை அழைத்து, சவுலின் சொத்து முழுவதையும் அவனுக்குத் தந்து, அவனைச் சவுலின் ஊழியர்களுள் ஒருவனான சீபாவின் பாதுகாப்பில் இருக்கச் செய்தார் *(2 சாமு 9)*. எருசலேமில் அப்சலோமின் கலகம் நடக்கும் வரை மெபிபொசேத்துக்கு எல்லாம் நன்றாக அமைந்தது. எருசலேமிலிருந்து தப்பித்துச் சென்றபோது, தாவீதுக்குச் சீபா ஏராளமான அன்பளிப்புப் பொருட்களைக் கொடுத்தான். சீபாவின் கொடைகளில் தாவீது மயங்கி, மெபிபொசேத்தின் எல்லாச் சொத்துகளையும் சீபாவுக்குக் கொடுக்கும்படி கட்டளையிட்டான் *(2 சாமு 16:1-4)*. தாவீது அப்சலோமின் கலகத்தை அடக்கிய பின் மெபிபொசேத்து போரினின்று திரும்பிவரும் தாவீதை யோர்தானின் அருகில் சந்தித்து, தன் வருத்தத்தைத் தெரிவித்தான். அவன் ஏன் எருசலேமிலேயே தங்கியிருந்தான் என்று தாவீது கேட்டபோது, மெபிபொசேத்து, சீபாவின் சதியை வெளிப்படுத்தி, தாவீது அவனுக்குக் காட்டிய தனிப்பட்ட அன்புக்கு நன்றி கூறினான். சீபா, மெபிபொசேத்துக்கு இளமையில் பல பணிகளைச் செய்ததால், சொத்தை ஆளுக்குப் பாதியாகக் கொடுக்க தாவீது கட்டளையிட்டான். அதற்கு மெபிபொசேத்து ''என் தலைவராகிய அரசர் சமாதானமாய்த் தம் வீடு திரும்பி வந்திருக்கும்போது அவன் எல்லாவற்றையுமே எடுத்துக் கொள்ளட்டும்'' என்றான் *(2 சாமு 19:30;* காண்க. *19:24-29)*.

யோனத்தானும், தாவீதும் சேர்ந்து எடுத்த வாக்குறுதியின்படி தாவீது சவுலின் மற்ற மக்கள் அனுபவித்த இறப்பினின்று மெபிபொசேத்தை விடுவித்தார் *(2 சாமு 21:7; 1 சாமு 20:12-17)*. மெபிபொசேத்துக்கு மீக்கா என்ற மகன் இருந்தான் *(2 சாமு 9:12)*. இவனிலிருந்து ஒரு புகழ் மிக்க குடும்பம் தோன்றியது *(1 நாள் 8:35; 9:41)*.

**மெபுன்னாய்** *(MEBUNNAI - பலமாகக் கட்டப்பட்ட)*

இது தாவீதின் 30 வலிமை மிக்க போர்வீரர்களின் குழுவில் ஒருவரின் பெயர் *(2 சாமு 23:27)*. இவருக்கு ஊசாயியர் என்ற பட்டப்பெயரும் அளிக்கப்படுகிறது. மற்ற இடங்களில் இவர் சிபகாய் என்றழைக்கப்படுகிறார் *(2 சாமு 21:18; 1 நாள் 11:29; 20:4; 27:11)*.

**மெமுக்கான்** *(MEMUCAN - தேற்றுபவர்)*

அகசவேர் அரசனின் அவையில் அரசனுக்கு ஆலோசனை கூறி வந்த, பாரசீகம், மேதியா ஆகிய நாடுகளைச் சார்ந்த 7 இளவரசர்களில் இவரும் ஒருவர் *(எஸ்த 1:14.16.21)*.

**மெம்பிசு** *(MEMPHIS)*

மெம்பிசு, நைல் நதியின் மேற்குக் கரையிலுள்ள இக்காலக் கைரோ என்னும்

நகரிலிருந்து தெற்குத்திசையில் சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இது வட எகிப்தின் மிகவும் பழைமை வாய்ந்த நகரங்களுள் ஒன்று.

மெம்பிசு, பாரம்பரியத்தின்படி, மெனஸ் என்பவரால் சுமார் கி.மு. 2800-இல் கட்டப் பட்டது. மெம்பிசு என்ற சொல்லுக்குப் பல பொருள் கொள்ளப்பட்டாலும், 'நல்லது நிலைத்திருக்கிறது' என்றுதான் பொருள் கொள்ளப்படுகிறது.

முதல் இரண்டு எகிப்திய அரச மரபு காலத்தில் இந்நகரம் அரசியல் செல்வாக் குப் பெற்ற நகரமாக இருந்தது. மூன்றாம் நான்காம் அரச மரபின்போது இஃது எகிப்தின் தலைநகரமாகவும், அரசர்களின் உறைவிடமாகவும் இருந்தது. பிற்காலத்தில் இஃது அரசர்களின் உறைவிடமாக இல்லா விட்டாலும் முக்கியத்துவம் உடையதாக இருந்தது. அந்நகரத்தின் இடுகாடு பல பார்வோன்களால் கட்டப்பட்ட பிரமிடு களைக் கொண்டுள்ளது. இவை 18 மற்றும் 19-ஆம் அரசமரபு பார்வோன்களால் கட்டப் பட்டவை. இது பலமுறை எத்தியோப்பியர் களாலும், அசீரியர்களாலும், பாரசீகர்களா லும் கொள்ளையடிக்கப்பட்டது. மகா அலக்சாந்தர் கி.மு. 332-இல் எகிப்தை வென்று அலக்சாந்திரியா நகரை அமைத் தது, மெம்பிசுவின் அழிவிற்கு முக்கிய காரணமாகும். பின்னர் கி.பி. 638-இல் அராபியர்களால் கைரோ அமைக்கப் பட்டது. மெம்பிசுவின் மீதம் இருந்த பொருட்கள் கைரோவைக் கட்டப்பயன் படுத்தப்பட்டன.

மெம்பிசு, எசா *19:13;* எரே *2:16,* ஓசே *9:6*-இல் குறிப்பிடப்படுகின்றது. எரே *46:14*-இல் குறிப்பிடப்படும் பாபிலோனி யப் படையெடுப்பு நடந்ததாகத் தெரிய வில்லை. மெம்பிசுவின் அழிவு எரேமியா, எசேக்கியேல் ஆகிய இறைவாக்கினர்களால் முன்னறிவிக்கப்பட்டது (எரே *46:19;* எசே *36:3.16*). ஆனால், இங்கு மெம்பிசு என்று பெயரைக் குறிப்பிடாமல் எகிப்தின் ஒரு நகரம் என்று குறிப்பிடப்படுகின்றது. எரே *44:1*, மெம்பிசுவில் யூதர்கள் வாழ்ந்தார்கள் என்று கூறுகின்றது. கி.மு. 587-இல் யூதா வின் வீழ்ச்சிக்குப் பின் யூதர்கள் குடியேறிய நகரங்களில் இதுவும் ஒன்று.

**மெம்மியு குவிந்து** (MEMMIUS, QUINTUS)

இவர் உரோமைத் தூதுவர் ஆவார். தித்து மானியு என்னும் தூதுவருடன், யூத மக்க ளுக்கு ஒரு கடிதத்தைக் கொண்டு வந்தார் (*2 மக் 11:34*). இவர்களைப் பற்றிய வேறு குறிப்புகள் வரலாற்றில் இல்லை. கடிதம் பற்றிய நிகழ்ச்சியை ஒரு கட்டுக்கதையாகச் சிலர் கருதுவர்.

**மெயாரா** (MEARAH - குகை)

சீதோனின் கிழக்கிலுள்ள மூகார் ஏசின் என்று வழங்கப்படும் குகையும், மெயாரா வும் ஒன்றாக இருக்கலாம் என்று கருதப்படு கிறது. இது யோசுவாவால் கைப்பற்றப் படாது விடப்பட்ட இடங்களில் ஒன்றாகக் குறிக்கப்படுகிறது (யோசு *13:4*).

**மெயோனத்தாய்** (MEONOTHAI - என் குடியிருப்பு)

இவர் யூதாவின் கோத்திரத்தைச் சார்ந்த ஒத்னியேல் என்பவரின் மகனும், ஒபிரா வின் தந்தையும் ஆவார் (*1 நாள் 4:13-14.*)

**மெயோனியர்** (MEUNIM, MEUNITES - குடியிருப்பு)

இவர்கள் பெத்ராவிலிருந்து தென்கிழக் காக 20 கி.மீ. தொலைவிலுள்ள மாஆன் என்னும் இடத்தில் வாழ்ந்த அரேபிய இனத்தவர்கள். ஒருவேளை இவர்களும் மாவோனியர்களும் ஒரே குழுவைக் குறிக்க லாம் (நீதி *10:12*). இவர்கள் அம்மோனிய ருடன் சேர்ந்து கொண்டு யூதாவுக்கு எதி ராகப் படையெடுத்தனர். யோசபாத்து படையைத் திரட்டி தெக்கோவாவின் கிழக் கில் சீசு ஏற்றத்தின் அருகே வென்றார் (*2 நாள் 20:1-23*). மெயோனியரின் தாய்நாடு, ஏதோமின் கிழக்கு எல்லையிலுள்ள கோட்டைக்கருகில் உள்ளது. ஊசியா இவர் களை நசுக்கினார் என்னும் குறிப்பிலிருந்து இவர்கள் மீண்டும் தொல்லை கொடுத்தனர் என்பது தெளிவாகிறது (*26:7*). இதிலிருந்து

அவர்கள் யூதாவின் தெற்குப் பகுதியில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. எருசலேமி லிருந்து நாடு கடத்தப்பட்டு, திரும்பி வந்தவர்களின் பட்டியலில் இந்தப் பெய ரும் குறிப்பிடப்படுகிறது (எஸ் 2:50; நெகே 7:52).

**மெய்க்காப்பாளர்** (BODYGUARD)

ஒரு மனிதனைக் காப்பதற்காக படைக் கலமேந்திய இன்னொரு மனிதன். சாதாரண மாக, ஓர் அரசனுக்கு மெய்க்காப்பாளன் இருப்பான். அவன் நேரடியாக அரசனுக்குப் பொறுப்புடையவன் ஆவான். சவுலின் மெய்க்காப்பாளர்களுக்குத் தாவீது தலைவ னாக இருந்தார். காத்தின் அரசன் ஆக்கிசு விற்குத் தாவீது மெய்க்காப்பாளனாக இருந் தார் (1 சாமு 22:14; 28:2). யோயாதாவின் மகன் பெனாயா என்பவர் தாவீதின் வீர மிக்க முப்பதின்மரில் ஒருவர். இவர் தாவீதின் மெய்க்காவலர்களுக்குத் தலைவ னாகவும் இருந்தார் (2 சாமு 23:23; 1 நாள் 11:25). பார்வோனின் மெய்க்காப்பாளருக்குப் போத்திபார் தலைவனாக இருந்தார் (ஆதி 37:36; 39:1). நெபுசரதான், அரியோக்கு ஆகியோர் நெபுகத்னேசருடைய மெய்க்காப் பாளரின் தலைவர்கள் என அழைக்கப்படு கின்றனர் (2 சாமு 25:8; எரே 39:9 தொ; 52:12 தொ; தானி 2:14). செதேக்கியா தனிப்பட்ட அரண்மனைப் பாதுகாவலர் களைக் கொண்டிருந்ததாகத் தெரிகின்றது. இவர்கள் தங்கியிருந்த இடத்தில்தான் எரே மியா ஒரு காலத்திற்குச் சிறை வைக்கப் பட்டிருந்தார் (எரே 32:2; காண்க. நெகே 3:25; 12:39).

**மெய்க்காப்பாளர் தலைவன்** (SENTRY)

ஆயுதம் ஏந்திய காவலாளி; நுழைவாயி லின் குறிப்பிட்ட இடத்தில் நின்று கொண்டு உள்ளே வருபவர்களையும், வெளியே செல்பவர்களையும் கண் காணித்து வருபவன். விவிலியத்தில் அனனியாவின் பேரனும் செலேமியாவின் மகனும் ஆன இரிய்யா மட்டுமே மெய்க் காவலர் தலைவன் என்று அழைக்கப்படு கின்றான் (எரே 37:13-14).

**மெரமோத்து** (MEREMOTH - உயர்ச்சி, உச்சி)

1. இவர் எஸ்ரா, நெகேமியா ஆகியவர் கள் காலத்தில் வாழ்ந்த ஒரு குரு. இவர் உரியாவின் மகனும் அக்கோசின் பேரனும் ஆவார். முதன் முதலில் இவருடைய குடும்பம் குருகுல வம்சத்தைச் சார்ந்தது என்பதை எண்பிக்க முடியவில்லை (எஸ் 2:61; காண்க. நெகே 3:4). பிற்காலத்தில் அவர்களுடைய குடும்பம் அங்கீகரிக்கப் பட்டு, ஆலயத்தில் பணி செய்யவும், எருசலேமின் சுவர்களை மீண்டும் கட்டி யெழுப்பவும் அனுமதிக்கப்பட்டனர் (எஸ் 8:33; நெகே 3:4. 21).

2. இவர் பானியின் மகன். எஸ்ரா அவர்க ளுடைய அயல் நாட்டு மனைவியரை விலக்கிடுமாறு கேட்டுக் கொண்டவர்களுள் ஒருவர் (எஸ் 10:36).

3. நெகேமியாவின் தலைமையில் புதிய உடன்படிக்கை முத்திரையிடப்படுவதில் பங்கு பெற்ற ஒரு குரு (நெகே 10:5). இவரும் 1-இல் குறிக்கப்படுபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

4. இவர் பாபிலோனிய அடிமைத்தனத்தி லிருந்து செருபாபேலோடு திரும்பி வந்த ஒரு குரு (நெகே 12:3).

**மெரயோத்து** (MERAIOTH - கிளர்ச்சி செய்யும், பிடிவாதமுடைய)

1. இவர் ஆரோனின் குலத்தில் பிறந்த ஒரு குரு (1 நாள் 6:6-7.52). அனேகமாக இதே நபர்தான் 1 நாள் 9:11; நெகே 11:11 ஆகியவற்றில் குறிப்பிடப்படுகிறார் எனக் கருதப்படுகிறது. நாளாகமப் பாரம்பரியம் அவரைச் சாதோக்கு மற்றும் எஸ்ராவின் மூதாதையருள் ஒருவர் எனக் குறிப்பிடு கின்றது (எஸ் 7:3).

2. ஒரு குரு. அகித்தூபுவின் மகனும் சாதோக்கின் தந்தையும் அசரியா (1 நாள் 9:11) அல்லது செராயாவுக்கு (நெகே 11:11) முன்னோர். அறிஞர் சிலர், இவரை 1-இல் கூறப்பட்டவரோடு அடையாளம் காண் கின்றனர்.

*3.* நாடு கடத்தலுக்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்த பெரிய குரு யோயாக்கிம் காலத்தில், எல்காய் தலைமை தாங்கிய ஒரு குரு குலம் *(நெகே 12:15).*

**மெராத்தயிம்** *(*MERATHAIM - *இரட்டிப்புக் கிளர்ச்சி செய்யும்)*

யூப்பிரத்தீசு, திகிரீசு ஆகிய நதிகள் சேர்ந்து பாரசீக வளைகுடாவில் கொட்டும் வாயிலின் அருகில் தெற்குப் பாபிலோனில் உள்ள ஒரு பகுதி *(எரே 50:21).* பாபிலோனியப் பெயர் ''இரட்டிப்புக் கிளர்ச்சி'' என்று பொருள்படும். இங்கு, சொல்லாடலாகப் பயன்பட்டுள்ளது.

**மெராயா** *(*MERAIAH - *யாவே வாக்களித்துள்ளார்)*

பெரிய குரு யோயாக்கிமின் காலத்தில் ஒரு குருகுலத்தின் தலைவராய் இருந்த செராயாவின் புதல்வர்களில் ஒருவர் *(நெகே 12:12).*

**மெராரி** *(*MERARI - *கசப்புத்தன்மை)*

*1.* இவர் லேவியின் மூன்றாவது மகனும், கேர்சோன் மற்றும் கோகாத்து ஆகியோரின் தம்பியும் ஆவார் *(ஆதி 46:11; யாத் 6:16; எண் 3:17; 1 நாள் 6:1.16; 23:6).* இவருடைய புதல்வர்களான மக்லி, மூசி *(யாத் 6:9; எண் 3:20; 1 நாள் 6:19)* ஆகியவர்களிலிருந்துதான் மெராரியர்கள் தோன்றினர்.

*2.* இவர் யூதித்தின் தந்தை ஆவார்; ஓசுவின் மகன் *(யூதி 8:1; 16:7).*

**மெராரியர்கள்** *(*MERARITES *)*

மெராரியர்கள், மெராரியின் வம்சத்திலிருந்து தோன்றிய லேவியர் குலம். இவர்களைப் பற்றிய செய்திகள் குருக்கள் பாரம்பரிய ஆசிரியராலும் நாளாகமத்தின் ஆசிரியராலும் தரப்படுகின்றன.

***1. யாத்திரை மற்றும் நாட்டை வெற்றி கொண்ட காலம்:*** பாலைவனத்தில் உடன்படிக்கைக் கூடாரம் அமைக்கப்பட்டபோது, மூன்று முக்கிய குடும்பங்களான கேர்சோனியர்களும், கோகாத்தியரும், மெராரியர்களும் கூடாரத்தைக் கவனித்துக்கொள்ளவும், தூக்கிச்செல்லவும் வசதியாக, கூடாரத்தைச் சுற்றி வாழ்ந்தனர். மக்லியர், மூசியர் என இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்ட மெராரியின் குடும்பத்தில் ஒரு மாதமும் அதற்கு மேற்பட்ட வயதுமுடைய 6200 ஆண்களும், *30* வயது முதல் *50* வயது வரையுள்ள *3200* ஆண்களும் இருந்தனர் *(எண் 3:33-34; 4:42-45).* இவர்கள் உடன்படிக்கைக் கூடாரத்தின் வடக்கே வசித்தனர். இவர்கள் கூடாரப்பலகைகளையும், அதன் தண்டுகளையும், பாதங்கள், தூண்கள், மண்டபத்தைச் சுற்றியுள்ள தூண்கள், பாதங்கள், முளைகள், கயிறுகள் ஆகியவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டும் *(எண் 3:35-37; காண்க. 4:29-33).* இதைச் செய்ய அவர்கள் *4* வண்டிகளையும், *8* மாடுகளையும் பெற்றார்கள் *(எண் 7:8; காண்க. 10:17).* இஸ்ராயேல் மக்கள் பாலஸ்தீனத்தில் நுழைந்தபின், மெராரி வம்சத்தார் ரூபன், காது, செபுலோன் ஆகிய கோத்திரங்களிடமிருந்து 12 நகரங்களையும், ஓர் அடைக்கல நகரையும் பெற்றார்கள் *(யோசு 21:7; 34-40;காண்க. 1 நாள் 6:63.77-81).*

***2.முடியாட்சியின்போது:*** தாவீது உடன்படிக்கைப் பெட்டகத்திற்குத் தனி இடத்தைத் தயாரித்துக் கூடாரத்தை அமைத்தபின், மெராரியின் புதல்வர்களில் *220* பேரைப் பெட்டகத்தை எருசலேம் வரை தூக்கிவர அசாயாவின் தலைமையில் நியமித்தார் *(1 நாள் 15:6).* மெராரி வம்சத்தைச் சார்ந்த சிலர் வாயில் காப்போராகவும் பணிபுரிந்துள்ளனர் *(1 நாள் 26:10.19).* கி.மு. *725*-இல் எசேக்கியா வழிபாட்டு முறைகளைத் தூய்மைப்படுத்தும்படி கட்டளையிட்டபோது, இதில் கீசும், அசாரியாவும், மெராரி வம்சத்தின் பிரதிநிதிகளாகக் கலந்து கொண்டனர் *(2 நாள் 29:12).* இதைப் போலவே கி.மு. *621*-இல் யோசியா ஆலயத்தைச் செப்பனிட்டபோது மெராரியின் புதல்வர்கள் யாகத்தும், ஒபதியாவும் மேற்பார்வையாளர்களாய்ப் பணிபுரிந்தனர் *(2 நாள் 34:12).*

***3. நாடுகடத்தப்பட்ட பின்:*** மக்லியின் வம்சத்தவரான செரேபியாவும் மற்ற மெரா

ரியரும் எஸ்ராவுக்கு ஆலய ஊழியத்தில் உதவி செய்தனர் *(எஸ் 8:18-19).*

**மெரிபத்து - காதேசு** *(*MERIBATH - KADESH*)*

இது காதேசு பர்னேயா என்ற பெயரின் மற்றொரு வடிவம் *(எண் 20:1-3; 27:14; உப 32:2.51; எசே 47:19; 48:28).* காண்க. மெரிபா.

**மெரிபா** *(*MERIBAH - போராட்டம், வாக்கு வாதம்*)*

மெரிபா, சின் பாலைவனத்தில் மோசேக்கும் இஸ்ராயேல் மக்களுக்கும் வாக்குவாதம் நடந்த இடமாகும் *(எண் 20:1-13).* இங்கு மோசே பாறையினின்று நீர் வரச் செய்தார். இங்குதான் பாரம்பரியத்தால் பாதுகாக்கப்படாத இரகசியமான தவற்றை மோசே செய்தார் *(எண் 20:12).* காதேசும், மெரிபாவும் ஒன்று என்று கருதப்படுகிறது. மெரிபத்து - காதேசு என்பதும் இவ்வொற்றுமையை எண்பிக்கிறது *(எண் 27:74; உப 32:51; எசே 47:19; 48:28). சங் 81:9* மெரிபாவில் நடந்த சோதனை பற்றிப் பேசுகிறது. *சங் 95:8*-இல் மெரிபாவும், மாசாவும் இணையாகக் கூறப்படுகின்றன. *உப 33:8*-இல் லேவிக்குக் குருத்துவம் அளிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் இந்நிகழ்ச்சி பாரம்பரியத்தால் உறுதி கூறப்படவில்லை. மெரிபா என்னும் சொல் வாக்குவாதத்தையும், சண்டையையும் குறிக்கும். எனவே, இச்சொல் காதேசின் பொருளான 'தீர்ப்பின் நீரூற்று' என்பதுடன் ஒத்துப்போகின்றது. *எசே 47:19; 48:28*-இல் இது தெற்கில் ஓர் எல்லையே ஆகும்.

**மெரிபாகால்** *(*MERIBBAAL*)*

மெரிபாகால், மெபிபொசேத்தின் இயற்பெயர். இப்பெயரின் உண்மைப்படிவம் மெரிபாகால். முடியாட்சியின்போது பாகால் என்னும் பெயருடன் மற்றப் பெயர்களைச் சேர்த்து வைத்துக்கொள்ளும் வழக்கம் இருந்தது. கி.மு. 9-ஆம் நூற்றாண்டில் பாகால் வழிபாட்டோடு நடந்த போராட்டத்துக்குப்பின் ''பாகாலால் அன்பு செய்யப்பட்டவன்'', என்னும் பொருள்படும் பெயர், ''பாகாலின் எதிரி'' என்று பொருள்படும்படி மாற்றப்பட்டது. இது பிற்காலத்தில் திரிபு அடைந்து மெபிபொசேத்து என்றாயிற்று. இதைப் போலவே எருபாகால் என்பது எருபொசேத்து என்றும், இசுபாகால் என்பது இசுபொசேத்து என்றும் மாற்றப்பட்டன.

**மெருகூட்டிப் பளபளப்பாக்கு** *(*GLAZING*)*

*சீரா 38:30*-இல் வரும் குறிப்பு, குயவன் கலன்களின் மேல் வண்ணக்குழம்பைத் தெளித்துக் கலத்தை மெருகூட்டிப் பளபளப்பாக்குதலை விவரிக்கிறது. இந்த மெருகூட்டிப் பளபளப்பாக்குதல் *நீதி 26:23*-இல் உருவகமாகத் தீய நெஞ்சத்தை விவரிக்கிறது.

**மெரேசு** *(*MERES - தகுதியுள்ள*)*

அகசவேர் அரசனுக்கு அடுத்தபடியாக அதிகாரம் கொண்ட, பாரசீகம், மேதியா ஆகிய நாடுகளைச் சார்ந்த ஏழு அமைச்சர்களுள் மெரேசும் ஒருவர் *(எஸ்த 1:14).*

**மெரேது** *(*MERED - கிளர்ச்சி செய்பவன், கலகக்காரன்*)*

இவர் பார்வோனின் மகளையும், மற்றொரு யூதப் பெண்மணியையும் மணந்தவர் *(1 நாள் 4:17-18).* இவர் யூதா கோத்திரத்தைச் சார்ந்தவர்; எஸ்ராவின் மகன். பார்வோன் என்ற சொல் எகிப்திய அரச பரம்பரையைக் குறிக்கின்றதா என்பது தெளிவாகத் தெரியவில்லை. இங்கு, இவருடைய எகிப்திய மனைவியின் பெயர்தான் குறிப்பிடப்பட்டுள்ளது.

**மெரொதாக்கு** *(*MERODACH*)*

இது பாபிலோனில் வணங்கப்பட்டு வந்த பேல் என்னும் கடவுளின் மற்றொரு பெயர் *(எரே 50:2).* இப்பெயர் 'மெரொதாக்கு-பலாதான்' *(2 அர 20:12; எசா 39:1)*, அவில் மெரொதாக்கு என்னும் பெயர்களுடன் சேர்க்கப்பட்டுள்ளது *(2 அர 25:27; எரே 52:31).*

**மெரொதாக்கு - பலாதான்** *(*MERODACH - BALADAN - மார்துக்கு ஒரு மகனைக் கொடுத்துள்ளார்*)*

இவர் பித்யாக்கின் என்னும் குலத்தின் தலைவராவார். இவர் இருமுறை பாபிலோ

னின் அரசராக இருந்தவர் (கி.மு. 721 -710; 704-703).

மெரொதாக்கு, மூன்றாம் திகிலத் பிலேசருக்குப் பணிந்திருந்ததாக அவருடைய சாசனங்கள் கூறுகின்றன. மற்ற அசீரியர்களின் காலத்தில் இவர் முதன்மைக் கலகக்காரராக விளங்கினார். இவரை அசீரிய மன்னர்களால் அடக்க முடியவில்லை. பின்னர் இரண்டாம் சார்கோனின் காலத்தில் கி.மு. 721-இல் ஏலாமிலிருந்து கிடைத்த படையின் உதவியால் அரசர் ஆனார். சார்கோன் ஏலாமியரைத் தேர் என்னும் இடத்தில் சந்தித்தபோது மெரொதாக்கு -பலாதான் தாமதமாக வந்தான். சார்கோன் கி.மு. 710 வரை படையெடுக்க முடியாததால் மெரொதாக்கு - பலாதான், பாபிலோனில் எவ்விதப் பயமும் இன்றி ஆண்டான். அசீரிய மன்னன் பாபிலோனியாவை வென்று அரசாட்சியைக் கைப்பற்றிய போதிலும் மெரொதாக்கு - பலாதானை அங்கிருந்து வெளியேற்ற முடியவில்லை. மெரொதாக்கு - பலாதான் மீண்டும் சனகெரிபின் காலத்தில் தோன்றி, அசீரியாவின் சிற்றரசர்களைக் கலகம் செய்யும்படி தூண்டினான். இதற்காக யூதாவின் அரசன் எசேக்கியாவுக்கு ஒரு கடிதம் எழுதினான் (2 அர 20:12). எசாயா இறைவாக்கினர் கூறிய அறிவுரையைக் கேளாமல், அவருக்கு எதிராக மெரொதாக்கு - பலாதானோடு எசேக்கியா சேர்ந்து கொண்டான். மீண்டும் கி.மு. 704-இல் அரசனான். இம்முறை அவனுடைய ஆட்சி குறுகியதாக இருந்தது. ஏனெனில், கி.மு. 689-இல் சனகெரிபு மீண்டும் பாபிலோனியாவைத் தாக்கி அதனைக் கொள்ளையடித்தபோது பலாதான் தன் நாட்டுக்குத் திரும்பிவிட்டான். இதன்பின் சனகெரிபின் மகன் அசூர்னதின்சுனி அரசனானான். கல்தேயாவின் அகதிகள் தெற்குப் பாபிலோனியாவில், பாரசீக வளைகுடாவில் கலகம் செய்ய சதி செய்தபோது சனகெரிபு இக்கடற்கரை நகரைத் தாக்கி அதனை அழித்துப் பலாதானின் மகன் நபுசுமிஸ்குமைச் சிறைப்பிடித்துச் சென்றார். மெரொதாக்கு - பலாதான் கி.மு. 692-க்கு முன்பே இறந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

**மெரொனோவியர்** (MERONOTHITE - மெரொனோத்திலிருந்து வந்தவன்)

கிபயாவுக்கு அருகிலுள்ள மெரொனோத்தைச் சார்ந்த எகுதியா, யாதோன் ஆகியவர்களுக்கு இடப்பட்ட பட்டப்பெயர் (1 நாள் 27:30; நெகே 3:7).

**மெரோசு** (MEROZ - தஞ்சம்)

இது தெபோரா, பாராக்கு ஆகியோர் சீசராவுக்கு எதிராகப் போரிட்டபோது அப்போரில் பங்கேற்று அவர்களுக்கு உதவி செய்யாததால், தெபோராவின் நன்றிப் பாடலில் சபிக்கப்பட்ட நகரங்களில் ஒன்று (நீதி 5:23). ஆட்சோரின் வடமேற்கில் சுமார் 5 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து - மாருசில் மெரோசு இருந்த இடமாகக் கருதப்படுகிறது. மெரோசு என்பது மெரோன் என்பதன் திரிபு அடைந்த பெயராக இருக்கலாம். மெரோசு இஸ்ரியேல் பள்ளத்தாக்கில் அல்லது அதன் அருகில் இருந்ததாகக் கருதப்படுகிறது.

**மெர்க்குரி** (MERCURIUS)

மெர்க்குரி என்பது எர்மசுக் கடவுளின் இலத்தீன்மொழிப் பெயராகும். பிரிகியர்களுக்கு சேயுசுவும், எர்மசும் மனித உருவில் தோன்றியது பற்றிய, சிறிய ஆசியாவில் உலவி வந்த கதையை அடிப்படையாகக் கொண்டு, லிஸ்திராவின் மக்கள், முக்கிய பேச்சாளரான பவுலை எர்மசு (மெர்க்குரி) ஆகக் கருதினர் (அ.ப. 14:12).

**மெர்னெப்தா** (MER-NE-PTAH - மெம்பிசுவின் கடவுளால் அன்பு செய்யப்பட்டவன்)

மெர்னெப்தா எகிப்தின் 19-ஆம் அரச மரபைச் சார்ந்த பார்வோன் (கி.மு. 1224-1214). மெர்னெப்தா என்னும் பார்வோன்தான் இஸ்ராயேல் மக்கள் எகிப்தை விட்டு வெளியேறியபோது ஆட்சியில் இருந்த பார்வோன் என்று கருதப்படுகிறது. ஏனெனில், அவருடைய தந்தை இரண்டாம் இராமசேசுதான் இஸ்ராயேல் மக்களைக்

கொடுமைப்படுத்தியதாகப் பாரம்பரியம் கூறுகின்றது. மொர்னெப்தா லிபியாவுக்கு எதிராகத் தன் நாட்டின் வடமேற்கு எல்லையைப் பாதுகாக்க வேண்டியிருந்தது.

**மெலற்றியா** (MELATIAH - *யாவே மீட்டார்)*

இவர் கிபயோன் ஊரைச் சார்ந்தவர். இவர் நெகேமியாவின் காலத்தில் எருசலேமின் சுற்றுச் சுவர்களை மீண்டும் கட்ட உதவி செய்தவர் *(நெகே 3:7).*

**மெலேக்கு** (MELECH - *அரசன்)*

இவர் மீக்கா *(3)*வின் புதல்வர்களில் ஒருவரும் மெரிபாகாலின் பேரனும், சவுலின் மகன் யோனத்தானின் கொள்ளுப் பேரனும் ஆவார் *(1 நாள் 8:35; 9:41).*

**மெலேயா** (MELEA - *நிறைவான)*

இயேசுவின் மூதாதையருள் ஒருவர் *(லூக் 3:31).*

**மெல்கி** (MELCHI - *என் அரசன்)*

1. இயேசுவின் மூதாதையருள் ஒருவர். இயன்னாயின் மகனும் லேவியின் தந்தையுமாவார் *(லூக் 3:24).*

2. நாடுகடத்தப்பட்டதற்குப் பிந்திய இயேசுவின் மூதாதையருள் ஒருவர். அதியின் மகனும் நேரியின் தந்தையுமாவார் *(லூக் 3:28).*

**மெல்கிசெதேக்கு** (MELCHIZEDEK - என் *அரசர் நீதியாவார்)*

மெல்கிசெதேக்கு என்பவர் பழைய ஏற்பாட்டுக் கதாபாத்திரம் ஆவார். எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்திலும் இவர் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

I. **பெயர்:** மெல்கிசெதேக்கு என்பதற்கு ''நீதியின் அரசர்'' என்பது பொருள் (எபி 7:2). சரியான பொருள் தெளிவாக அறியப்படாவிட்டாலும், இச்சொல்லுக்கு, ''செதேக்கு என்பவர் அரசர்'', ''மெல்கி (அரசன்) நீதியானவர்'' அல்லது ''என் அரசர் நீதியுள்ளவர்'' என்பன போன்ற பல பொருள்கள் கூறப்படுகின்றன.

II. **வாசகங்கள்:**

***அ) பழைய ஏற்பாட்டில்:*** வரலாற்று ரீதியாக, மெல்கிசெதேக்கு, இஸ்ராயேல் மக்கள் எருசலேமுக்கு வருமுன் எருசலேமின் அரசராக இருந்தவர். இவர் பழைய ஏற்பாட்டில் இரண்டு இடங்களில் குறிப்பிடப்படுகின்றார். ஆதி *14:18-20*-இல் அபிராம், நான்கு அரசர்களை வென்று வெற்றியோடு திரும்பியபோது, மெல்கிசெதேக்கு அவரைச் சந்தித்து, அவருக்கு அப்பமும், திராட்சை இரசமும் அளித்து அவரை ஆண்டவர் பெயரால் ஆசீர்வதித்தார். பின் அபிராமிடமிருந்து, அவர் கொள்ளையடித்த பொருட்களில் பத்தில் ஒரு பகுதியைப் பெற்றுக் கொண்டார். சங் *110:4*-இல் குருவான இவருடைய முறைப்படிதான் தாவீது குல அரசர் அபிடேகம் செய்யப்பட்டார்.

***1) ஆதி 14:18-20:*** முதலில் மெல்கிசெதேக்கு சாலேமின் அரசர் என்றும், சாலேமும், எருசலேமும் ஒன்று என்றும் கருதப்படுகிறது *(சங் 77:2)*. இரண்டாவது அவர் ''உன்னத கடவுளின் குரு''. மெல்கிசெதேக்கு என்பது, இஸ்ராயேல் மக்களுக்கு முன் எருசலேமில் கானானியர் வழிபட்ட தெய்வத்தின் பெயரால், இவருக்கு இடப்பட்ட பெயராக இருக்கலாம். இவர் பிற்காலத்தில் இஸ்ராயேல் மக்களுக்குப் புனித நகரமாக விளங்கிய எருசலேமில், அரச மற்றும் குருவின் அதிகாரங்களைக் கொண்ட புனித அரசராக விளங்கினார். அவருடைய தனித்தன்மை வாய்ந்த பணியின் காரணமாக இவ்வதிகாரத்தில் கூறப்படும் எல்லாரையும்விட மெல்கிசெதேக்கு தனிச்சிறப்புடன் சித்திரிக்கப்படுகிறார். இவருக்கு மட்டுமே அபிராம் பணிகிறார்.

***2) சங் 110:4:*** மெல்கிசெதேக்கு அரசரான தாவீதின் குலத்தைச் சேர்ந்த மெசியாவுடன் தொடர்புபடுத்திக் காட்டப்படுகிறார். இங்கு மெல்கிசெதேக்கு யாவேயின் சுவிகாரம் செய்யப்பட்ட மகனும் *(சங் 2:7)* அபிடேகம் செய்யப்பட்டவருமாகக் *(18:50; 132:7)* கருதப்பட்ட தாவீது குல அரசருக்கு மூல மாதிரியாகத் தோன்றுகிறார். தாவீதின்

மகன் எடுத்துக்காட்டான அரசன் என்ற அளவில் நீதியையும் சமாதானத்தையும் நிலைநாட்டுகிறார் (சங் 72:1-7; 99:4). எடுத்துக்காட்டான குரு என்ற அளவில், இஸ்ராயேல் மக்கள் வழிபாட்டுக்குத் தலைமை தாங்கி (2 சாமு 6:12; 1 நாள் 13:15-16), கடவுளுக்கும், மக்களுக்கும் இடையே இணைப்பாளராக இருக்கிறார் (1 அர 8; சங் 132:9-10). இந்தக் குருத்துவம் முடிவில்லாத தன்மையுடையது (சங் 110:4). எனவே, இஃது ஆரோனின் குருத்துவத்தைக் கடந்து செல்கிறது; அதைவிட மேலானது.

**ஆ) புதிய ஏற்பாடு:** எபிரேயருக்கு எழுதப்பட்டுள்ள திருமுகத்தில் மட்டும் தான் மெல்கிசெதேக்கு குறிப்பிடப்பட்டுள்ளார் (எபி 5:6.10; 6:20; 7:1.10-11.15.17). கிறிஸ்து எல்லாப் படைப்புகளுக்கும் மேலானவர் என்பதும், கடவுளுக்கு ஊழியம் செய்பவர்களில் தலைசிறந்தவர் என்பதும் எபிரேயருக்கு எழுதப்பட்ட மடலின் முக்கிய கருத்துகளாகும். இதை எண்பிக்க பழைய ஏற்பாட்டு மெல்கிசெதேக்கு ஒரு நிரூபணமாகப் பயன்படுத்தப்படுகிறார். கிறிஸ்து மெல்சிசெதேக்கின் முறைப்படி தலைமைக் குரு ஆவார் (எபி 5:5-10; 6:20; காண்க. 7:21; சங் 110:4). நீதி, சமாதானம் ஆகியவற்றின் அரசராகவும், தனித்தன்மையும் தொடக்கமும் முடிவும் இல்லாத தன்மையும் கொண்டிருப்பதால் மெல்கிசெதேக்கு கடவுளின் மகனைப் போல் உள்ளார் (7:1-17). மெல்கிசெதேக்கு ஆபிரகாம், குருவாகிய ஆரோன் ஆகியவர்களைவிட உயர்ந்தவராகையால் இவர் அரசரும் குருவுமான இயேசுவின் 'மாதிரியாக' உள்ளார் (7:23-28; 8:1-10:8).

III. **இறையியல் சிந்தனை:** மெல்கிசெதேக்கு விவிலியத்தில் ஆபிரகாமின் பாதுகாப்பாளராகவும், தாவீதின் முன்னோடியாகவும், இயேசுவின் முன் மாதிரியாகவும் தோன்றுகிறார்.

**1. மெல்கிசெதேக்கும் ஆபிரகாமும்** (ஆதி 14): சாலேமின் அரசரும் குருவுமாகிய மெல்கிசெதேக்கு (சங் 75:3-ஆல் எருசலேமுடன் ஒப்பிடப்படுவது) உடன்படிக்கையின் சடங்காகிய அப்பமும், திராட்சை இரசமும் அடங்கிய உணவை ஆபிரகாமுக்கு அளிக்கிறார் (ஆதி 31:44-46; யோசு 9:12-15). அவர் ஆபிரகாமின் மீது ஆசியுரைக்கிறார். தனது பாதுகாப்பிற்குப் பதிலாக ஆபிரகாமிடமிருந்து ஒரு பங்கைப் பெறுகிறார்.

செமித்திய இனத்தவரின் பண்டைய இறைவனும், மிக உயர்ந்த கடவுளுமாகிய 'ஏல் ஏலியோன்' முன்னிலையில் இச்செயல்கள் நிகழ்கின்றன. இவரை மெல்கிசெதேக்கு உயரிய கடவுளாகவும், ஆபிரகாம் ஒரே கடவுளாகவும் கருதுகின்றனர். இந்நிகழ்ச்சியில் முக்கிய பங்கானது எபிரேயரல்லாத குருவாகிய மெல்கிசெதேக்குவினால் நிகழ்த்தப் பெறுகிறது. அவரின் முன்னிலையில் லேவிய குருக்களின் மூதாதையராகிய எபிரேய ஆபிரகாம் தாழ்வான இடத்தையே வகிக்கிறார். ராபிகளின் விளக்கவுரை இந்த உண்மையை மறக்க முயலும்; ஆனால், கிறிஸ்தவ விளக்கவுரை இதனை நினைவுகூரும்.

**2. மெல்கிசெதேக்கும் தாவீதும்** (சங் 109):-தாவீது எருசலேமில் தன்னை நிலைப்படுத்திய போது, தன்னியற்படுத்தும் கோட்பாட்டினைச் செயல்படுத்தி வந்தார். இஸ்ராயேல் அரசர் புகழ்பெற்ற மெல்கிசெதேக்குவின் பங்கினைத் தொடர்ந்து செயல்படுத்தி வருவதை சங் 109-எடுத்துக்காட்டுகிறது. எருசலேமின் அரசர் என்ற அளவில் ''மெல்கிசெதேக்குவைப் போல நீர் என்றென்றும் குருவே'' என்று தன்னுடைய அபிடேகம் செய்யப்பட்டவருக்கு யாவே உறுதியளிக்கிறார். நிலையற்ற மெசியாக்களைப் பொருத்தமட்டில் மிகைப்படுத்தப்பட்டுள்ள இந்தக் கூற்று இறுதி மெசியாவிற்கு உண்மையாகப் பொருந்தும். அவர்பால் நாடு கடத்தப்பட்டதற்குப் பின்னர் சங் 110 ஆனது இஸ்ராயேலின் நம்பிக்கைகளைத் திருப்பும். உண்மையில் இதனை வாசிப்பவர்கள், தன்னில் குருத்துவத்தையும் அரச தன்மையையும் இணைத்து எழுகின்ற மீட்பரைக் காண்பதைக் கற்பனை செய்வர்.

வரவிருக்கும் காலங்களில் அரச வல்லமையும் குருத்துவ வல்லமையும் ஒன்றாகக் கொணரப்படும் என இறைவாக்கினர்கள் அறிவித்துள்ளனர் (எரே *33:14-22;* செக் *3-6*). சிலர் தலைமைக் குருவிற்கு அரச நிலையைக் கோரினர். மக்கபேயருக்கு இது பொருந்தும் *(1 மக் 10:20.65; 14:52.57)*. ''பன்னிரு மூதாதையருடைய உடன்படிக்கைகள்'' (குறிப்பாக, லேவீயின் ஒப்பந்தம்) யூத நூலின் தொகுப்பாளர்களுக்கு ஒரு நம்பிக்கையாக உள்ளது. இதற்கு மாறாக, மெல்கிசெதேக்கு மற்றும் தாவீதினால் பரிந்துரைக்கப்பட்ட முறைக்கு விசுவாசமாக உள்ள மற்றவர்கள் அரச குருத்துவத்தை எதிர்கால அரசருக்குச் சாற்றிக் கூற விரும்புகின்றனர். உண்மையில் தூய்மையாக்கப்பட்ட அரச நிலை மற்றும் உண்மையான குருத்துவம் ஆகியவற்றின் இணைப்பானது இயேசு கிறிஸ்துவில் மட்டுமே வரும்.

**3. மெல்கிசெதேக்கும் இயேசுவும்** (எபி *7;* காண்க. *5:6-10; 6:20*): மனிதனாகிய இயேசு ஆபிரகாமினிடமிருந்து மட்டுமின்றி, முதலில் ஆதாமிடமிருந்தும் இறங்கி வருகிறார் (லூக் *3:23-38*). எபிரேயருக்கான திருமுகத்தின்படி குருவாகிய இயேசு நிறைவான குருத்துவத்தைச் செயல்படுத்துகிறார். இது லேவியின் குருத்துவத்துடன் இணைக்கப்படாமல் (எவ்வாறாயினும் இயேசு யூதா குலத்தைச் சேர்ந்தவர்), மெல்கிசெதேக்கின் வாரிசாகிய தாவீதின் வழிவந்த மெசியாவினுடைய அரச குருத்துவத்தை நிறைவுபடுத்துகிறது *(சங் 110)*. ஆதியாகமம் முதல் இந்த அரச குரு லேவிய குருக்களைவிட உயரியவராகப் பார்க்கப்படுகிறார். ஏனெனில், அவர்களது முன்னோராகிய ஆபிரகாமில், லேவியின் மக்கள் இவருக்கு முன் மரியாதையுடன் வணங்கி, இவரது ஆசியைப் பெற்று, இவருக்குக் காணிக்கை அளிப்பதை இவர் கண்டார்.

மேலும், மெல்கிசெதேக்குவினுடைய குணம், பெயர் மற்றும் பதவிகள் முதலியன சில வழிகளில் இயேசுவின் குணவியல்புகளை முன்குறித்துக் காட்டுகின்றன. அவர் ''தொடக்கமும் முடிவும் அற்றவராக''த் தோன்றி, அதன் வழியாக முடிவில்லாக் குருவாகிய கிறிஸ்துவை முன்குறித்துக் காட்டுகிறார். மெல்கிசெதேக்கு என்னும் அவருடைய பெயர் ''எனது அரசர் நீதியானவர்'' என்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. சாலேமின் அரசர் என்பது கிட்டதட்ட சலோமின் அரசர், அதாவது சமாதானத்தின் அரசர், என்பதை யொத்ததே. ஆனால், இயேசு உலகிற்குச் சமாதானத்தையும் நீதியையும் கொண்டுவரவில்லையா? சங் 110-இன் பயபக்தியுடன் கூடிய உறுதிமொழியானது லேவிய குருக்களுக்கு உரியதாக இல்லை. ஏனெனில், அவர்கள் பாவிகளாகவும், அழியக் கூடியவர்களாகவும் இருப்பதால் பலராகவும், ஒரு தலைமுறை முதல் மறுதலைமுறை வரை ஒருவரையொருவர் தொடர்பவர்களாகவும், பழமையாக்கப்பட்ட உடன்படிக்கையின் ஊழியர்களாகவும் உள்ளனர். இஃது அரச குருவும், தாவீதின் உண்மையான மகனும், மாசற்ற, முடிவில்லாத ஆகவே தனித்துவமிக்கவரும், முன்னொரு காலத்தில் மெல்கிசெதேக்குவுடனான உடன்பாடு இருந்தது போல அப்பத்தினாலும் திராட்சை இரசத்தினாலும் குறிப்பிடப்படுகின்ற புதிய இறுதி உடன்படிக்கையின் பணியாளருமாகிய இயேசுவிற்குக் குறிக்கப்பட்டுள்ளது.

எனவே இஸ்ராயேலில் அன்னியரும், நாடுகளின் உறுப்பினரும், இறைவனைப் பற்றிய அறிவில் சுயமாகக் கற்றறிந்த சமயநபரும், ஆபிரகாமின் வல்லமை மிக்க நண்பரும், தாவீதினால் ஏற்றுக்கொள்ளப்பட்டவரும், இயேசுவை முன்குறித்துக் காட்டுபவருமாகிய மெல்கிசெதேக்கு, அசாதாரணமான உயர்வின் குடிமகனாக உள்ளார். அவரது பெயரானது திருச்சடங்கு நூலிலும் (பீடங்களை அபிடேகம் செய்வதில்), உரோமைத் திருப்பலி நூலிலும் (முதல் நற்கருணை வழிபாடு) தோன்றுகிறது. நம்மைக் கிறிஸ்துவிடம் இட்டுச் செல்வதற்கென இஸ்ராயேலை மட்டுமின்றி மற்ற நாடுகளையும் பயன்படுத்துகின்ற இறைவனுடைய திட்டங்களின் உலகளாவிய தன்மைக்கு அவரே இன்னும் சாட்சியாக உள்ளார்.

**மெல்கியேல்** (MELCHIEL)

மெல்கியேல், கார்மியின் தந்தை ஆவார். இவர் பெத்துலியாவின் தலைவர்களில் ஒருவர். இவரிடம்தான் யூதித்து உதவி கேட்டு வந்தாள் (*யூதி 6:11*).

**மெல்கியோர்**(MELCHIOR - ஒளியின் அரசன்)

மேற்கத்திய திருச்சபைப் பாரம்பரியப்படி, குழந்தை இயேசுவுக்குக் காணிக்கைகள் அளித்த ஞானிகளில் முதல்வரானவர் (*மத் 2:11*). இவர் நரைதிரை மிகுந்தவராயும் தாடியுடையவராகவும் சித்திரிக்கப்படுகிறார். ஒருவேளை இவர் சேமின் வழித்தோன்றலாக இருக்கலாம். மற்றப் பழைய மூலங்கள் இவரை ஓரியராகவோ பாரசீக மன்னனான ஓர்மிசுதாவாகவோ அடையாளம் காட்டுகின்றன. கி.பி. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இயேசுவின் பால பருவம் பற்றிய அர்மேனிய நற்செய்தியில் இவர் மெல்கோன் என்றழைக்கப்படுகிறார். இந்நூல், கடவுள் ஆதாமுக்கு எழுதிய ஒரு கடிதத்தை இவர் இயேசுவுக்கு அளித்ததாகக் கூறுகிறது.

**மெல்கோன்** (MELKON)

பிற்காலப் பாரம்பரியத்தின்படி மெல்கோன் மூன்று ஞானிகளுள் (Magi) ஒருவர் (*மத் 2:1-12*). இயேசுவைக் காணவந்த ஞானிகள் 'மூவர்' என்று குறிப்பிடும் பழங்காலப் பாரம்பரியம் மெல்கோனைப் பல சமயங்களில் பாரசீகத்தின் அரசராகவும், சில சமயங்களில், அவருடன் இயேசுவைக் காண வந்த இந்தியாவின் அரசரான கஸ்பார், அரேபியாவின் அரசரான பல்தசார் ஆகியவர்களின் சகோதரர் என்றும் கூறுகின்றது. திருச்சபையில் அங்கீகரிக்கப்படாத இயேசுவின் பாலபருவம் பற்றிய அர்மேனிய நற்செய்தியின்படி, மெல்கோன், குழந்தை இயேசுவுக்கு அன்பளிப்பு கொடுத்ததோடல்லாமல், ஆதாமுக்கு எழுதப்பட்டு, கடவுளால் முத்திரையிடப்பட்டு பாரசீக மன்னனின் ஆவணக்களரியில் வைக்கப்பட்டிருந்த ஒரு கடிதத்தையும் கொடுத்தார் என்று கூறப்படுகிறது. இவர் மேற்கத்திய நாடுகளில் ஒரு புனிதராகக் கருதப்படுகின்றார். விசித்திரமான கற்பனைப் பாரம்பரியத்தின்படி இந்த ஞானிகள் தோமையாரிடம் ஞானஸ்நானம் பெற்று பாரசீகத்தில் வேதபோதகர்களாக இருந்தார்கள் என்று கருதப்படுகிறது. காண்க. மெல்கியோர்.

**மெல்லிய துணி** (SHROUD)

மரித்த உடலைச் சுற்றி அடக்கம் செய்யப் பயன்பட்ட மெல்லிய துணியாகும். இது ''சின் தோன்'' என்ற கிரேக்கச் சொல்லின் மொழிபெயர்ப்பாகும் (*மத் 27:59; மாற் 15:46; லூக் 23:53*). இச்சொல் சில இடங்களில் போர்த்திக் கொள்ளப்பயன்படும் ஆடையையும் குறிக்கலாம் (*மாற் 14:51-52*).

**மெழுகு** (WAX)

விவிலியம் மெழுகினுடைய சாதாரண உபயோகங்களைப் பற்றிய குறிப்புகள் ஒன்றும் தருவதில்லை. விவிலியத்தின் பாடல்களில் மட்டும்தான் காணப்படுகிறது. மெழுகினுடைய உருகிக் கரைந்து மறைந்து போகும் தன்மை மட்டுமே உவமைப் பொருளிலும், உருவகப் பொருளிலும் பயன்படுத்தப்படுகின்றது. தேய்ந்து போவதையும், அழிவையும் உணர்த்தப் பயன்படுத்தப்படுகிறது. துன்புறுத்தப்படுவோனின் இதயமும் (*சங் 22:14*), கடவுளின் தீர்ப்புக்கு முன் தீயவனும் (*சங் 68:2*), இறைவனின் முன்னிலையில் மலைகளும் (*சங் 97:5; மீக் 1:4; யூதி 16:18*) மெழுகினைப் போல் உருகுவார்கள் என்று விவிலியம் குறிப்புகள் தருகின்றது.

**மெனகேம்** (MENAHAM - ஆறுதல் அளிப்பவர்)

மெனகேம், சுமார் கி.மு. 745-738 வரை ஆண்ட இஸ்ராயேல் மக்களின் அரசனாவார். இவர் சல்லூமைக் கொன்று அரியணை ஏறினார். வலிமை வாய்ந்த இரண்டாம் எரோபவாமின் இறப்புக்குப் பின் வடநாட்டில் குழப்பம் ஏற்பட்டது. எரோபவாமுக்குப் பின் அவனுடைய மகன் செக்கரியா அரியணை ஏறினான். அவன் ஆறு மாதம் ஆண்டபின் சல்லூமால் கொலைசெய்யப்பட்டான் (*2 அர 15:8-10*).

சல்லூம் ஒரு மாத ஆட்சிக்குப் பின் மெனகேமால் கொல்லப்பட்டான் (எசே 7:7; 8:4).

செக்கரியா இறந்தபின் அரியணையைக் கைப்பற்ற பலர் விரும்பினர். சல்லூம் ஒரு கட்சியின் தலைவராகவும், மெனகேம் மற்றொரு கட்சியின் தலைவராகவும் இருந்தனர். மெனகேம் 10 ஆண்டுகள் ஆட்சி புரிந்ததாகக் கூறப்படுகிறது (2 அர 15:17). ஆனால், எப்போது இறந்தான் என்பது தெளிவாகத் தெரியவில்லை. கி.மு. 738-இல் அவன் மூன்றாம் திகிலத்பிலேசருக்குக் கப்பம் கட்டிய போது உயிருடன் இருந்திருக்க வேண்டும்.

மெனகேமின் காலத்தில் மேற்கு அசீரியர்கள் செல்வாக்கு மிகுந்திருந்தது. ''அசீரியாவின் அரசன் பூல் இஸ்ராயேல் நாட்டின் மீது படையெடுத்து வந்தான். அப்போது மெனகேம் பூலின் உதவியால் தன்னாட்சி நிலைபெறும் பொருட்டு ஆயிரம் தாலந்து நிறையுள்ள வெள்ளிக் காசுகள் கொடுத்தான்'' என்று 2 அர 15:19 கூறுகின்றது. இந்நிகழ்ச்சியிலிருந்து இரண்டு முக்கிய உண்மைகள் புலனாகின்றன. முதலாவது பூல் என்பதும், திகிலத்பிலேசர் என்பதும் ஒரே நபரைக் குறிக்கும். மேலும், மூன்றாம் திகிலத்பிலேசர் கி.மு. 729-இல் பாபிலோனில் அரியணை ஏறியபோது ''பூலு' என்ற பெயரைச் சூட்டிக் கொண்டார் என்பது பாபிலோனிய ஏடுகளிலிருந்து புலனாகிறது. இரண்டாவதாக, மெனகேமின் ஆட்சி பலமுள்ளதாக இல்லை என்பதும் தெளிவாகிறது.

மெனகேம், திகிலத்பிலேசருக்கு, 1000 தாலந்துகள் நிறையுள்ள வெள்ளிக்காசுகளைக் கப்பம் கட்டியதாக திகிலத்பிலேசரின் ஏடுகள் கூறுகின்றன. மெனகேம் ஆள் ஒன்றுக்கு 50 செக்கேல் வெள்ளிவீதம் வரி வசூலித்தான். இவ்வாறு வரி கொடுக்கக் கூடியவர்கள் சுமார் 60,000 பேர் இருந்தனர். எனவேதான் ஆமோஸ், ஓசேயா போன்ற இறைவாக்கினர்கள் செல்வம் சேர்ப்பதைச் சாடினர். மெனகேம் அமைதியான மரணம் அடைந்தான் என்று கூறப்படுகிறது (2 அர 15:22). ''இவன் ஆண்டவரின் பார்வையில் தீயதெனப்பட்டதைச் செய்தான். மேலும், இவன் தன் வாழ்நாள் முழுவதும் இஸ்ராயேலைப் பாவத்திற்கு உள்ளாக்கிய நெபாற்றின் மகன் எரொபவாமின் பாவ வழியை விட்டு விலகவில்லை'' (15:18) என்பது இவனது ஆட்சி பற்றிய அரசராகம ஆசிரியரின் தீர்ப்பாகும்.

**மெனத்தேயு** (MENESTHEUS)

இவர் கூலே-சீரியா மற்றும், பெனிசியா ஆகிய பகுதிகளின் ஆளுநராய் இருந்த அப்பொல்லோனியு என்பவரின் தந்தை ஆவார் (2 மக் 4:4).

**மெனலாவு** (MENELAUS-எதிர்த்து நிற்கும் மனிதர்கள்)

மெனலாவு, அந்தியோக்கு எப்பிபானின் ஆட்சியில் வாழ்ந்த நீதி நெறிகளுக்குக் கட்டுப்படாத தலைமைக் குரு. கி.மு.171 இல் தலைமைக் குருவாயிருந்த யாசோன் கப்பத்தை மெனலாவிடம் கொடுத்து அந்தியோக்கியாவிற்கு அனுப்பினார். ஆனால், மெனலாவு இன்னும் அதிகமாக அந்தியோக்கு அரசனிடம் கப்பம் கொடுத்து, யாசோனைக் கவிழ்த்துவிட்டு தலைமைக் குருவானார் (2 மக் 4:23தொ). யாசோன் உயிருக்காக எருசலேமை விட்டு ஓடினார். மெனலாவு குறிப்பிடப்பட்ட தொகையைச் செலுத்தாததால், கணக்கை ஒப்புவிக்க அந்தியோக்கியாவிற்கு அழைக்கப்பட்டார். இச்சமயத்தில் இவருக்குப் பதிலாக, இவருடைய சகோதரர் லிசிமாக்கு தலைமைக் குருவாக இருந்தார். மெனலாவு அந்தியோக்கியாவை அடைந்த போது அரசன் அங்கு இல்லை. இதைப் பயன்படுத்திக் கொண்டு, மெனலாவு ஆலயத்திலிருந்து திருடிக்கொண்டு போன பொன்னையும், பாத்திரங்களையும், அந்தியோக்குவின் உதவியாளன் அந்திரோனிக்கு என்பவனிடம் கையூட்டாகக் கொடுத்து அவனது ஆதரவைப் பெற்றார். பின், மெனலாவுவின் ஊழல்களை வெளிப்படுத்த முயன்ற மூன்றாம் ஒனியா என்ற தலைமைக் குருவைக் கொன்றுவிடும்படி அந்திரோனிக்கைக்

கேட்டுக்கொண்டான். இவ்வாறு ஒனியா அநியாயமாகக் கொலை செய்யப் பட்டதைக் கண்ட யூதர்களும், கிரேக்கர்க ளும் அந்தியோக்குவிடம் சென்று முறை யிட்டனர். இதைக் கேட்டுக் கோபமுற்ற அரசன், ஒனியா கொலை செய்யப்பட்ட இடத்திலேயே அந்திரோனிக்கைக் கொன் றான். எருசலேமில் லிசிமாக்கு ஆலயத்தில் பல ஊழல்கள் செய்ததால், மக்களால் கொல்லப்பட்டார். லிசிமாக்கு ஊழல் செய்ததற்கு மெனலாவுதான் காரணம் என்று தீர் நகரத்திலிருந்த அந்தியோக்குக்கு மக்கள் செய்தி அனுப்பினர். மெனலாவு தண்டனைக்கு உள்ளாகப் போவதை அறிந்து, தனக்குப் பரிந்துரை செய்ய, தோலமி தொரிமேனுக்குக் கையூட்டுத் தருவ தாக வாக்களித்தான். தோலமியின் பரிந் துரையால் அந்தியோக்கு, மெனலாவுவை விடுவித்தது மட்டுமல்லாது அவனுக்கு எதிராகச் சாட்சி கூறியவர்களையும் கொன் றான். அந்தியோக்கு எகிப்திலிருந்த போது யாசோன் மறுபடியும், எருசலேமில் தோன்றி அந்நகரைத் தாக்கினார். இதைக் கேட்ட அரசன் எருசலேமுக்கு வந்து நகரைத் தாக்கி மெனலாவுடைய உதவி யுடன் ஆலயத்தையும் சூறையாடினான். இதன்பின் மெனலாவு தலைமைக் குருவாக நியமிக்கப்பட்டார் ( *2 மக் 5:1-20*). கி.மு. 164-இல் அந்தியோக்கு அரசனால் யூதருக்கு எழுதப்பட்ட கடிதத்தில், மெனலாவு குறிப் பிடப்படுகின்றார் (*2 மக் 11:29.32*). எல்லாத் தீமைகளுக்கும் மெனலாவுவே காரணம் என்று லீசியா அரசனிடம் சொல்ல, கி.மு. 163-இல் மெனலாவு கோபுரத்திலிருந்து சாம்பலினுள் தள்ளிக் கொல்லப்பட்டான் (*2 மக் 13:3-8*).

**மெனி** (MENI - எண்ணுதல், பங்கிடுதல்)

பாபிலோனியாவுக்கு நாடுகடத்தப்பட்ட பின், இஸ்ராயேல் மக்கள் உணவும், பானமும் படைத்து வழிபட்ட நற்பேற்றுத் தேவதை (*எசா 65:11*). இஸ்லாம் மதம் வருமுன், அரேபியாவில் வணங்கப்பட்ட தெய்வம் மன்னாத்து என்று குரான் கூறுகிறது.

**மெனுகோத்து** (MENUHOTH - ஓய்வெடுக் கும் இடங்கள்)

மெனுகோத்து தெளிவாக அறியமுடியாத ஒரு குடும்பம் (*1 நாள் 2:52*). இதை மனகத்தியர் என்று கொண்டால், இச்சொல் *1 நாள் 2:54*-இல் குறிப்பிடப்படும் எருசலே மின் தெற்கில் வாழ்ந்த 'சால்மா' குலத்தைச் சார்ந்த மனகத்தியர்களையும், *1 நாள் 2:52*-இல் குறிப்பிடப்படும், எருசலேமின் வடமேற்கில் கிரியத்-எயாரிம் அருகில் வாழ்ந்த சோபால் குலத்தைச் சார்ந்த மனகத் தியரையும் குறிக்கும்.

**மெனே, மெனே, தெக்கேல், பார்சின்** (MENE, MENE, TEKEL, PARSIN)

இவை பெல்சாட்சர் அளித்த விருந்தின் போது சுவரில் அரேபிய மொழியில் எழுதப்பட்ட சொற்கள். அங்கிருந்தவர்கள் ஒருவராலும் இச்சொற்களைப் படிக்க முடியவில்லை. இச்சொற்களை ''மினா, மினா, செக்கேல், அரைச் செக்கேல்'' என்றும் ''எண்ணப்பட்டது, எண்ணப் பட்டது, எடைபோடப்பட்டது, பிரிக்கப் பட்டது'' என்றும் மொழிபெயர்க்கலாம். இந்த எடைகள் பொருட்கள் மட்டும் நிறுக்கப் பயன்படாமல் மனிதனின் நடத்தையையும் கணிக்கப் பயன்படுத்தப் பட்டதாக தால்மூது குறிப்பிடுகின்றது. இச்சொற்கள் 'பாபிலோனிய மன்னர்களின் உண்மையான மதிப்பு என்ன?' என்ற கேள்விக்கு விடையளிக்கப் பயன்படுத்தப் பட்டன. 'கடவுள் அவர்களை நிறுத்து அவர்கள் இலேசாய் இருக்கிறார்கள் எனக் கண்டார்' என்பதே விடையாகும். இச்சொற் களின் *உட்பொருள்:* மெனே-''கடவுள் உமது அரசின் நாள்களை எண்ணி வரை யறுத்து முடிவாக்கிவிட்டார்''. **தெக்கேல்-** ''நீர் தராசில் நிறுக்கப்பட்டீர்; எடையில் மிகவும் குறைந்துள்ளீர்''. பார்சின்-''உமது அரசு பிரிக்கப்பட்டு மேதியருக்கும் பாரசீக ருக்கும் கொடுக்கப்பட்டது'' (*தானி 5:25-28*). இஃது ஒரு பழமொழியாக இருக்க லாம். பாபிலோனியர்கள் இதை விளக்க முடியாத போது தானியேல், இறைத்தீர்ப் பாக விளக்கம் அளிக்கிறார். பாபி லோனியப் பேரரசு கி.மு. 539-இல் மேதியர்

மற்றும் பாரசீகர்களால் தோற்கடிக்கப் பட்டது. இவ்வாறு சொற்களின் ஒலியியை பைக் கொண்டு விளக்கம் அளிப்பது இறைவாக்கினர்களிடம் காணப்படுகிறது *(எரே 11:11 தொ; ஆமோ 8:1 தொ)*. இது ஞானத்தின் எடுத்துக்காட்டாகும்.

**மெனோரா** *(MENORAH - ஒளி)*

இச்சொல் எபிரேய மொழியில் விளக்குத் தண்டைக் குறிக்கும். ஆனால், பழைய ஏற்பாட்டில் இது கலைச்சொல்லாக, உடன் படிக்கைப் பெட்டகத்தின் முன் வைக்கப் படும் ஏழு கிளைகளுள்ள விளக்குத் தண்டையும், செக்கரியாவின் காட்சியில் வரும் விளக்குத் தண்டையும் குறிக்கும் *(செக் 4:2.11)*.

**மென்னா** *(MENNA)*

இவர் இயேசுவின் மூதாதையருள் ஒருவர் *(லூக் 3:31)*.

# மே

**மேகம்** (CLOUD)

*1.* இரவு அல்லது இருளைப் போலவே மேகமும் இரண்டு வகையான சமய அனுபவங்களை வெளிப்படுத்த முடியும். நன்மை தரும் கடவுளின் அண்மையையும் அவரது முகத்தை மறைத்து அவர் தரும் தண்டனையையும் குறிக்கலாம். இறைப்பிரசன்னத்தின் மறைபொருளைக் குறித்துக் காட்டும் பேறுபெற்ற ஓர் அடையாளம் மேகமாகும். ஏனெனில், இஃது அவரை முழுமையாக மறைத்து அதே நேரத்தில் நமக்கு இறைவனை வெளிப்படுத்துகிறது. எல்லாம் வல்ல ஞானத்தைத் தியானிக்க உதவும் மேகத்தின் இயற்கையான அடையாளம் (*யோபு 36:22-37:24*) இறைப்பிரசன்னத்தின் அனுபவத்தை அளிக்கவும் உதவ வேண்டும். மேகங்கள் இரண்டு முக்கிய பண்புகளைக் கொண்டுள்ளன. அவை மிக இலகுவாகவும் வேகமாகவும் செல்லக்கூடிய தன்மையும் (*எசா 60:8*), சில சமயங்களில் பொய்த்தோற்றமுடையவை யாயினும் (*யோபு 7:9; ஓசே 6:4; 13:3; யூதா 12*), பல சமயங்களில் மழையைக் கொண்டுவரும் தூதுவர்களாகவும் இருக்கின்றன (*1 அர 18:44 தொ; எசா 5:6; சங் 8:23*). இதிலிருந்து இவை யாவேயைச் சுமந்துவரும் தேராக முடியும் என்பது தெரிகிறது (*சங் 104:3*). மறுபக்கம் பார்த்தால் விண்ணகத்தை ஊடுருவிப் பார்க்க முடியாதவாறு மறைக்கும் முக்காடாகவும் (*யோபு 22:13*), பயங்கரமான நிழலால் பூமி முழுவதையும் மறைத்து (*எசே 34:12; 38:9.16*), புயல் வரும் என்ற அச்சத்தை உண்டாக்குகிறது (*எரே 4:13; நாகூ 1:3*).

***2. மேகத் தூணும், நெருப்புத் தூணும்:*** யாவே பாரம்பரிய ஆசிரியரின் விளக்கப்படி விடுதலைப் பயணத்தில் எபிரேயர்கள் பகலில் மேகத் தூண் வழியாக அவர்களுக்குப் பாதை காட்டியும், இரவில் நெருப்புத் தூண் வழியாகவும் யாவே இறைவன் வழி நடத்தினார் (*யாத் 13:21*). அவர்கள் தொடர்ந்து பயணம் செய்யும் வண்ணம் கடவுள் அவர்களோடே எப்போதும் இருக்கிறார். அவர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் பொருட்டு மேகத்தூண் ஒருபக்கம் மிக ஒளியாகவும், மறுபக்கம் இருளாகவும் இருந்து பகைவர்களுக்குப் பாதகமாக இருப்பதையும் பார்க்கிறோம் (*யாத் 13:21*). இம்மாற்றம் காலத்திற்கு ஏற்றவாறு இல்லாது மனிதர்களுக்கு ஏற்றவாறு அமைகிறது. இவ்வாறு மேகத்தூணும், நெருப்புத் தூணும் (*யாத் 14:24*) இறைவனின் இரு ஒப்பற்ற தன்மைகளைக் காட்டுகின்றன. பாவிகளுக்கு அணுகமுடியாத தூரத்தில் உள்ளவராகவும், தேர்ந்து கொள்ளப் பெற்றவர்கட்கு அருகிலிருக்கும் அருளாகவும் இருக்கிறார். கடவுளிடம் முரண்பாடுகள் இல்லை. மனிதனிடம் இது பாவத்தையோ, அஃது இல்லாத நிலையையோ குறித்துக்காட்டும். இறை அனுபவப் பக்திக்கு மிகவும் விருப்பமான, மேகமும் நெருப்பும் சேர்ந்திருத்தல் பிற்காலப் பாரம்பரியத்திலும் காணப்படுகிறது (*உப 1:33; நெகே 9:12; சங் 78:14; 105:39; 2 மக் 2:8*; ஞானம் *17:20-18:4*). மனிதன் படைத்த உருவத்திலிருந்து இறைவன் பேசவில்லை; மாறாக, ''நெருப்பு, மேகம், காரிருள் நடுவிலிருந்து பேசுகிறார்'' (*உப 5:22*).

**3. மேகமும் யாவேயின் மகிமையும்:** சீனாய் மலையிலிருந்து கடவுள் பேசினார். அப்பொழுது ஒரு மேகம் மலை முழுவதையும் ஆறுநாட்கள் சூழ்ந்து கொண்டது. யாவே அங்கு நெருப்பு வடிவிலே இறங்கி வந்தார் (*யாத் 19:16*). எலோகிம், குருக்கள் பாரம்பரியங்களின்படி, ''யாவேயின் பரிசுத்த ஆவி பிரசன்னமாயிருக்க ஒருவன் காத்திருக்கும்போது (*எசா 63:14*), மேகத் தூண் இறைவனின் தூதனாகிறது (*யாத் 14:19*). இவ்வாறு இறைவனது யாவும் கடந்த தன்மையை உயர்த்திக் காட்ட மேகம் உதவுகிறது. இனி நெருப்பும் மேகமும் இல்லை; மாறாக, மேகத்தில் நெருப்பு உள்ளது. அச்சுத்தப் பார்வைகளி

னின்று இறைவனின் மகிமையை மூடி மறைக்க மேகம் திரையாகிறது. இதில், மனிதர்களுக்குள்ள வேறுபாட்டை அன்று, இறைவனுக்கும் மனிதருக்குமிடையே யுள்ள தூரத்தை அழுத்திக்கூறும் விருப்பம் உள்ளது. அணுகக் கூடிய அதே நேரத்தில் ஊடுருவமுடியாத மேகம், சாவை வருவிக் கக் கூடிய காட்சியான இறைவனை நேருக்கு நேர் காணாது *(யாத் 33:20)*, இறைவ னோடு தொடர்புகொள்ள அனுமதிக்கிறது. மலையை மூடியுள்ள மேகத்தினின்று மோசேயை அழைக்கிறார். அவர் மட்டுமே மேகத்தை ஊடுருவிச் செல்லக் கூடும் *(24:14-18)*. மறுபுறம், மேகம் இறைவனது மகிமையைப் பாதுகாக்கிறது என்றால், அதுவே அம்மகிமையை வெளிப்படுத்த வும் செய்கிறது. ''ஆண்டவரின் மாட்சிமை மேகத்தில் தோன்றியது'' *(16:10)*. மேகத் தூண் இறங்கிவந்து கூடார நுழைவாயிலில் நின்று கொள்ளும் *(33:4-10)*, அல்லது மக்களின் பயணத்தை நிர்ணயிக்கிறது *(40:34-38)*. முந்தைய அடையாளத்தைச் சிறிது விரிவாக்கினால், நெருப்பாகிய மாட்சிமையோடு மேகம் தொடர்புபடுத்தப் படுகிறது *(எண் 9:15)*. இரவில் மேகத்தின் மாட்சிமை நெருப்பாக இருக்கும் *(யாத் 40:38)*.

பிற்காலத்தில் சாலமோன் ஆலயத்தைத் திருநிலைப்படுத்திய பின், ஒரு மேகமும், ஆண்டவரின் மாட்சிமையும் அவர் இல் லத்தை நிரப்பின *(1 அர 8:10-11; காண்க. 6:4 தொ)*. ஆலயத்தை விட்டகலும் மாட்சி மையை மேகம் பாதுகாப்பதாக எசேக்கி யேல் காண்கிறார் *(எசே 10:3 தொ; காண்க. 43:4)*. அதே மாட்சிமையோடு மேகம் திரும்புதலை யூதத்துவம் கனவு காணும்.

**4. இறுதிக்கால மேகங்கள்:** யாத்திரை யின் இறையாற்றல் தோற்றங்களில் காணப் படுவதுபோல், யாவேயின் நாள் மஞ்சு மற்றும் மேகங்களோடு வருகிறது; மேகம், அதன் இயற்கையான அடையாளப் பொருளி லோ, விண்ணக வானகம் என்ற உருவகத் திலோ, இறைவன் நடுவராக வருவதை உணர்த்துகிறது *(காண்க. எண் 17:7)*. எடுத்துக் காட்டாக, இருள் *(யோசு 24:7)* ஆண்டவர் வருவதை விவரிக்க உதவுகிறது. அஃது ''இருட்டும் காரிருளும் கவிந்த நாளாகும்'' *(செப் 1:15; எசே 30:3.18; 34:12; நாகூ 1:3; யோவே 2:2)*. இங்கு மேகம் புயலை முன்னறிவிக்கிறது *(எரே 4:13)*. புயல் கடந்தபின் யாவேயை மறைத்திருக்கும் திரையைப் பற்றிய நினைவை விட்டுச்செல் கிறது. ''எங்கள் மன்றாட்டு உம்மை வந்த டையாதபடி மேகத்தால் உம்மை மூடிக் கொண்டீர்! *(புல 3:44)*. நலந்தரும் புதிய யாத்திரைக் காலத்தைச் சுட்ட வல்லது மேகம் *(எசா 4:5)*. மீட்பின் நம்பிக்கையை உறுதிப்படுத்தவல்லது; ''மேகங்கள் மாரி யென நீதியைப் பொழியட்டும்'' *(45:8)*.

அவரைச் சூழ்ந்துள்ள *(2 சாமு 22:12; சங் 97:2)* மேகத்தின் மேல் ஏறி *(எசா 19:1)*, தமது தேரில் வரும் யாவேயைச் சித்தரிக்கும் *(சங் 104:3)* உருவகத்தோடு, மற்றொரு உருவம் வெளிப்பாட்டு இலக் கிய முறையில் சித்திரிக்கப்படுகிறது. என்றுமே நீடிக்கும் பேரரசையுடையவர் ''வானத்தின் மேகங்கள் மீது மனுமகனைப் போன்றவராகத்'' *(தானி 7:13)* தோன்று வார்.

**5. கிறிஸ்துவும் மேகமும்:** வானத்தில் மேகத்தின் மீது வருமுன் மனுமகன், தூய ஆவியின் நிழலாலும் உன்னதக் கடவுளின் வல்லமையாலும் போர்த்தப்பட்டு, கன்னி மரியாளால் கர்ப்பம் தரிக்கப்படுவார் *(லூக் 1:35)*. இயேசு உருமாறியபோது, பழைய ஏற்பாட்டில் காணப்படுவதுபோல், மேகம் இறைவனது பிரசன்னத்தையும் மகனின் மாட்சிமையையும் வெளிப்படுத்துகிறது *(மத் 17:1-8 இணை)*. அப்போது அது சீடர்களின் பார்வையிலிருந்து அவரை அகற்றி, அவர் எல்லாக் காணக்கூடிய பொருள்களுக்கும் அப்பால் வானகத்தில் வாழ்கிறார் என்றும் *(அ.ப. 1:9)*, ஆனால் அவரது சாட்சிகளுக்குப் பிரசன்னமாய் உள் ளார் என்றும் *(7:5 தொ)*காட்டுகிறது. பழைய ஏற்பாட்டில் உள்ளதுபோல், மானிட மகன், இறுதி நாளில் மேகங்க ளோடோ, மேகங்களின் மேலாகவோ

வரும்போது, மேகம் அவரது விண்ணகத் தேராக இருக்கும் (மத் 24:30 இணை; 26:64 இணை). இதற்கிடையில், வெளிப்பாட்டு நூலின் காட்சியாளர் மானிடமகனை ''வெண்மேகத்தில் அமர்ந்தவராயும்'' (திரு வெளி 14:14), மேகங்கள் சூழ வருபவ ராயும் (1:7) காட்சி காண்கிறார். இத்தகையவையே வரலாற்றின் ஆண்டவ ரது உபகரணங்கள்.

**6. மேகத்தில் கிறிஸ்தவர்கள்:** இயேசு வின் உருமாற்றத்தின் போது இயேசுவை யும் வானகத்திலிருந்து வந்தவர்களையும் மட்டுமன்று சீடர்களையும் மேகம் மூடியது (லூக் 9:34). அது விண்ணகத்தையும் மண் ணகத்தையும் இணைக்கிறது. தமது வார்த் தையைச் சுற்றி இயேசுவால் தொடங்கி வைக்கப்பட்ட சீடர்கள் குழுவையும் திரு நிலைப்படுத்துகிறது. விண்ணக மேகத்தி னுள் நுழைந்தவுடன் அதிலிருந்து இயேசு வின் வார்த்தைக்குச் செவிமடுக்குமளவுக்கு, இயேசுவோடும் விண்ணகத்தோடும் கூட, ஒரே சமூகமாக ஆகின்றனர் என்பதைச் சீடர்கள் அறிகின்றனர். மற்றொரு பாரம் பரியப்படி, உருவங்கள் உண்மைக்கு இடங் கொடுக்கின்றன. எபிரேயர் மோசேயில் (மோசேயின் பெயரில்) மேகத்திலும், கடலிலும் திருமுழுக்குப் பெற்றனர் (1 கொரி 10:1-2). ஆனால் கிறிஸ்தவன் கிறிஸ் துவில் (கிறிஸ்துவின் பெயரில்) தூய ஆவியிலும், நீரிலும் திருமுழுக்குப் பெறு கின்றான். உண்மையான மேகம் வெளிப் படுத்தும் (யோவா 14:26), வழிநடத்தும் (16:24) ஆவியே ஆவார். மேகத்தைப்போல், மோசேயின் முகத்தை முடிய திரை தற் காலிகமாக மாட்சிமையை ஒளிர்வித்தது. ஆனால், ஆவியான ஆண்டவரிடம் திரும்பு வோருக்கு இத்திரை விழுந்துவிடுகிறது (2 கொரி 3:12.18). ஆனால், இறுதிக்கால மேகங்களின் உருவம் அதன் மதிப்பீட்டைத் தக்கவைத்துக் கொள்கிறது. இறுதிநாளில் ஆண்டவர் வரும்போது அவர் முன் செல்வ தற்காக விசுவாசிகள் உலகத்தினின்று மேகங்கள் மீது தூக்கிச் செல்லப்படுவர் என்பதை மேகம் உணர்த்துகிறது (1 தெச 4:17; காண்க. திருவெளி 11:12).

**மேசகாபு** (MEZHAB - பொன்னீர்)

இவர் மதிரேதின் தந்தையும் ஏதோமின் அரசன் அதாரின் மனைவியான மெகேற்ற பேலின் தாத்தாவும் ஆவார் (ஆதி 36:39; 1 நாள் 1:50). இப்பெயர் ஓர் இடத்தையும் குறிக்கலாம் என்று அறிஞர் சிலர் கருது கின்றனர்.

**மேசா** (MESHA) - ஆள்

1. இவர் இஸ்ராயேலர், யூதா மற்றும் ஏதோமுக்கு எதிராக கி.மு. ஒன்பதாம் நூற்றாண்டில் போரிட்ட மோவாபிய அர சன் (2 அர 3:4). கி.மு. 865-இல் மேசா இதுவரை இஸ்ராயேலின் அரசன் ஆகாபின் கைவசமிருந்த மோவாபின் ஆட்சியைக் கைப்பற்றினார். ஆனால், தமது சொந்தச் சொத்திலிருந்து இஸ்ராயேலருக்குக் கப்பம் செலுத்தக் கட்டாயப்படுத்தப்பட்டார். ஆகா பின் சாவுக்குப்பின் மேசா கப்பம் செலுத்து வதை நிறுத்திவிட்டார் (2 அர 1:1; 3:4-5). இது போருக்கு இட்டுச் சென்றது (3:6-27). மோவாபியக் கல்லில் பொறிக்கப்பட்டுள்ள மேசாவின் சொந்த அறிக்கையினபடி தான் இஸ்ராயேலர் மேல் உறுதியான வெற்றி யடைந்ததாகக் கூறுகிறான். ஒரு போராட் டத்தை மட்டும் கூறும் விவிலிய விவரிப்பு போர் மேசாவுக்குப் பாதகமாக அமைந்தது என்று கூறுகிறது (3:24-26). ஆனால், இறுதியில் இஸ்ராயேலர் பின் வாங்க வேண்டியிருந்தது. இஃது, அவன் தன் வாரிசைக் கெமேசு கடவுளுக்குப் பலியிட்டதின் விளைவாகக் கருதப்பட்டது (3:27). 2 நாள் 20-இல் குறிக்கப்படும் இஸ்ராயேலருக்கும் மோவாபியக் கூட் டணிக்கும் இடையே நடந்தபோர், முந்தையப் போரின் ஒரு பகுதியாக இருக்க லாம். இதில் கூட்டணியினர் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் வீழ்த்தி அழித்துக் கொண்டனர் (20:23). யூதா போரின் கொள்ளைப் பொருள்களைச் சேர்த்துக் கொண்டது.

2. மேசா, சீபுவின் தந்தை (1 நாள் 2:42).

*3.* மேசா, என்பவர் பென்யமின் குலத்தைச் சார்ந்தவர். இவர் சகரயிம்-ஒதேசு ஆகியோரின் மகன். இவர் மோவாபில் வாழ்ந்தவர் *(1 நாள் 8:9)*.

**மேசா** (MESHA) - இடம்

இது யோக்தானின் வழித்தோன்றல்கள் வாழ்ந்த பகுதியின் ஓர் எல்லையாகும் *(ஆதி 10:30)*. இதுவும் இசுமயேலர் குழுவின் மாசாவும் ஒரே இடத்தைக் குறிக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர் *(ஆதி 25:14; பழ 31:1)*. அனேகமாக, மேசா சீரிய அல்லது அராபியப் பாலைவனத்தில் ஓர் இடத்தைக் குறிக்கலாம். உண்மையில் பல யோக்தானியப் பெயர்கள் அராபியத் தோற்றத்தைச் சுட்டுகின்றன.

**மேசாக்கு** (MESHACH - அகூ இருப்பது போல் இருப்பவர் யார்?)

இவர் தானியேலின் தோழர்களில் ஒருவர் *(தானி 1:7; 2:49; 3:12-30)*. மேசாக்கு என்பது பாபிலோனியப் பெயராகும். இவரது எபிரேயப் பெயர் மிசாவேல் ஆகும். காண்க. சாத்ராக்கு, மேசாக்கு, ஆபேதுநெகோ.

**மேசேக்கு** (MESHECH - நீட்டப்பட்ட, உயர்ந்த)

*1.* இது, சிறிய ஆசியாவிலுள்ள ஓர் இடத்தையும், இனத்தையும் குறிக்கும். மேசேக்கு, எப்பேத்தின் புதல்வர்களான கோமேர், யாவான், தூபால் ஆகியவர்களுடன் குறிப்பிடப்பட்டுள்ளார் *(ஆதி 10:2; 1 நாள் 1:5)*. யாவான், தூபால், மேசேக்கு ஆகிய நாடுகளின் வணிகர்கள் வெண்கலப் பாத்திர வாணிகம் செய்தனர் *(எசே 27:13)*. மேசேக்கை, வெற்றி கொள்ளப்பட்ட நகரங்களில் ஒன்றாக எசேக்கியேல் கூறுகின்றார் *(எசே 32:26)*. இது கோகு என்பவனால் ஆளப்பட்ட பகுதிகளுள் ஒன்று *(எசே 38:2 தொ; 39:1)*. இது கேதாரோடு குறிக்கப்படுகிறது *(சங் 120:5)*. இக்கருத்துகள், மேசேக்கும் முசுக்கியும் ஒன்று என்ற கருத்தை வலியுறுத்துகின்றன. முதலாம் திகிலத் பிலேசர் *(கி.மு. 1112-1074)* யூப்பிரத்தீசின் கிழக்கில் முசுக்கியைத் தோற்கடித்தார். இவர் அவர்களை வலிமை வாய்ந்த மக்கள் என்று குறிப்பிடுகின்றார். சார்கோனின் ஆட்சியில் *(கி.மு. 721-705)* இவர்களின் அரசன் மித்தா ஆவான். இவன் சார்கோனின் எதிரிகளுள் ஒருவன். சார்கோனின் படையெடுப்புகள் பின்வருவன: கி.மு. 717-இல் மித்தாவுடன் உடன்படிக்கை செய்திருந்த கார்கெமிசின் அரசன் பிசிரிசைத் தண்டித்தார். கி.மு. 715-இல் மித்தா, குவேயில் கைப்பற்றியிருந்த மூன்று நகரங்களை வென்றார். கி.மு. 713-இல் சார்கோனிடமிருந்து மித்தாவிடம் ஒப்பந்தத்தை மாற்றிய அம்பாரிசு அதிகாரத்திலிருந்து நீக்கப்பட்டார். இதற்குப்பின் அசீரிய மன்னர்கள் நாட்டைப் பலப்படுத்தினர். கி.மு. 709-இல் குவேயின் ஆளுநன் மித்தாவின் மீது படையெடுத்து அவனுடைய இரு கோட்டைகளைக் கைப்பற்றினான். முசுக்கி இனத்தவரும், பிரிகியா நாட்டினரும் ஒன்றாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. கிரேக்கப் பாரம்பரியத்தில் கூறப்படும் மிதாசும், முசுக்கியின் மித்தாவும் ஒன்றாக இருக்கலாம். பிரிகியாவின் பாறைகளில் மிதாசு என்ற பெயர் 'மிதா' என்று எழுதப்பட்டுள்ளது. சங் 120:5-இல் தவிர, மற்ற இடங்களில் மேசேக்கு எப்போது தூபலுடன் குறிப்பிடப்படுகிறது.

*2.* மேசேக்கு என்ற பெயர் அரமேய இனத்தைக் குறிக்கும். ஆராமின் மகன் ஓர் அரமேய இனத்தின் குலப்பெயர் மூதாதையர் *(1 நாள் 1:17)*. இணைப்பகுதியான ஆதி 10:23-இல் இவர் மசு என்றழைக்கப்படுகிறார்.

**மேடையிருக்கை** (GALLERY)

எசேக்கியேலின் ஆலய விவரிப்பில் ஒரு கட்டட அம்சம் *(எசே 41:15.16; 42:3.5)*. இதன் பொருள் தெளிவாக இல்லை.

**மேதபா** (MEDEBA)

மேதபா, யோர்தான் நதி சாக்கடலோடு கலக்கும் இடத்திலிருந்து சுமார் *24* கி.மீ. தொலைவில் தென்கிழக்கிலும், அர்னோன் ஆற்றுக்கு வடக்கில் *30* கி.மீ. தொலைவிலும், எஸ்போனுக்குத் தெற்கில் *11* கி.மீ. தொலைவிலும் உள்ள நகரம். மோவாபியர்களின் நகரமான மேதபா, எமோரிய அரச

னான சீகோன் என்பவனால் கைப்பற்றப் பட்டது. பின் இந்நகரம் இஸ்ராயேல் மக்களால் பிடிக்கப்பட்டது (எண் 21:30). மோசேயால் ரூபன் கோத்திரத்தாருக்குக் கொடுக்கப்பட்ட நிலங்களில் மேதபா பீட பூமியும் அடங்கும் (யோசு 13:9.16). தாவீ தின் காலத்தில் மேதபா அம்மோனியர்க ளின் கைகளில் இருந்தது. ஏனெனில் அம்மோனிய சிற்றரசர்கள் யோவாபால் தோற்கடிக்கப்படுமுன் அங்கு பாளையம் இறங்கி இருந்தார்கள் (1 நாள் 19:7). மோவாபியர் கல்லின்படி, மேதபா, மோவாபியர்களுக்குச் சொந்தமானது. இவர் களிடமிருந்து இஸ்ராயேல் மன்னன் ஓம்ரி திரும்பவும் கைப்பற்றினான். இவனுடைய ஆட்சியிலும், இவனுடைய மகனின் ஆட்சி யிலும் இஸ்ராயேல் மக்கள் இப்பகுதியில் வாழ்ந்தனர். மோவாபிய மன்னன் மேசா அதை இஸ்ராயேல் மக்களிடமிருந்து கைப் பற்றி அதனைப் புதுப்பித்தான். இரண்டாம் எரொபவாம், ஆமாத்து கணவாய் முதல், அராபாக் கடல்வரை இஸ்ராயேலுக்குரிய நிலப்பகுதிகளை மீண்டும் இணைத்துக் கொண்டான் (2 அர 14:25). மோவாபுக்கு எதிராக இறைவாக்கு கூறும்போது எசாயா மேதபாவையும் சேர்த்துக் கொள்கிறார் (எசா 15:2).

மக்கபேயர்களின் காலத்தில் மத்தத்தி யாவின் மூத்தமகன் யோவான் யாம்ரியின் மக்களால் மேதபாவுக்கு வெளியில் மறைந் திருந்து தாக்கப்பட்டு கொலை செய்யப் பட்டார் (1 மக் 9:36). யோவானின் சகோதரர்களான யோனத்தானும், சீமோனும் மேதபாவிற்கு வெளியே காத்திருந்து, அங்கி ருந்து வந்த எதிரிகளின் ஒரு திருமணக் கூட்டத்தைக் கொன்று பழி தீர்த்துக் கொண் டார்கள் (1 மக் 9:35-42). பிற்காலத்தில் ஆறு மாத முற்றுகைக்குப் பின் சீமோனின் மகன் யோவான் இரிக்கான் மேதபாவைக் கைப்பற்றினார். மேதபா கிறிஸ்தவர்கள் தொடக்க காலத்தில் வாழ்ந்த இடங்களில் ஒன்று. கி.பி. ஆறாம் நூற்றாண்டில் கலை ஞன் ஒருவன் அங்கிருந்த ஆலயத்தின் தரையில் பாலஸ்தீனத்தின் வரைபடம் ஒன் றைப் பல வண்ணத்தில் அமைத்தார். கி.பி. 1890-இல் புதிய ஆலயம் கட்டப்பட்ட போது, அவ்வரைபடத்தின் பெரும் பகுதி அழிந்துவிட்டது. இன்றும் 'மேதபா' என்றே அழைக்கப்படும் இப்பகுதியில் மக்கள் வாழ்கிறார்கள்.

## மேதாது (MEDAD - அன்புக்குரியவர்)

பாலைவனத்தில் இறைவாக்குரைத்த ஓர் இஸ்ராயேலர். மோசேக்கு உதவியாக நியமிக்கப்பட்ட 70 மூப்பர்கள் மேல் ஆண்டவரின் ஆவி இறங்கி வந்தபின், சந்திப்புக் கூடாரத்துக்குப் புறம்பே, பாளை யத்தில் இருந்த எல்தாது, மேதாது ஆகியவர் கள் மேலும் ஆண்டவரின் ஆவி இறங்கியது (எண் 11:26-20).

## மேதியா, மேதியர் (MEDIA, MEDES)

மேதியா, வடமேற்கு ஈரானின் ஒரு பகுதியாகும். இஃது எல்புரூ மலைத்தொடர் களுக்கும், உப்புப் பாலைவனத்திற்கும், பார சீகம் மெசபொத்தாமியா ஆகியவற்றுக் குமிடையே அமைந்துள்ளது. பிற்காலத்தில் இது வடக்கு மேதியா, தெற்கு மேதியா என இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது.

கி.மு. 1400-க்கும் 1000-க்கும் இடைப் பட்ட காலத்தில் ஈரானிலும், அதன் சுற்றுப் புறங்களிலும் குடியேறிய இனத்தவர்களில் மேதியரும், பாரசீகரும் இருந்தனர் (எஸ்த 1:19; தானி 5:28; 6:8.12.15 காண்க.எஸ்த 1:3.14.18; 10:2). ஆதி 10-இல் கூறப்படும் நாடுகளின் பட்டியலில் எப்பேத்தின் புதல் வனான மாதாய், அவருடைய மற்றப் புதல்வர்களான கோமேர், மாகோகு, யாவான், தூபால், மேசேக்கு, திராசு ஆகிய வர்களுடன் குறிப்பிடப்படுகின்றார் (ஆதி 10:2; 1 நாள் 1:5).

பழங்கால மேதியர்களைப் பற்றிய முக்கிய குறிப்புகள் யாவும் அசீரிய சாசனங் களிலிருந்து கிடைக்கின்றன. அசீரியாவின் அரசன் மூன்றாம் சல்மனேசர் வடக்கு நோக்கிப் படையெடுத்த போது பார்சு வாவை வென்று தென்கிழக்குப் பகுதியில் மேதியாவில் நுழைந்தார். ஐந்தாம் சம்சி அதாது (கி.மு. 823-810), மூன்றாம் திகிலத்

பிலேசர் (கி.மு. 745-727), இரண்டாம் சார்கோன் (கி.மு. 721-705), சனகெரிபு (கி.மு. 705-681) ஆகியவர்களின் சாசனங்களி லிருந்து சுமார் இரண்டு நூற்றாண்டுகளாக மேதியாவிற்கும் அசீரியாவிற்கும் தொடர்பு இருந்தது என்பது புலனாகிறது. சார்கோன் இஸ்ராயேல் மக்களை நாடுகடத்தப் பயன் படுத்திய நகரங்களில் ''மேதியர் நகரங்க ளும்'' உள்ளடங்கும் (2 அர 17:6; 18:11).

தேயியோக்கெசு அரசன் மேதியர்களை ஒன்று கூட்டி நகரத்தை மீண்டும் கட்டி யெழுப்பினான் என்று எரோதோத்து என்பவரால் எழுதப்பட்ட குறிப்பு ஒன்று கூறுகிறது (காண்க. எஸ் 6:2; தோபி 3:7). கி.மு. 7-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சிமிரியர்களும், சித்தியர்களும், மேதியர்க ளுடன் தொடர்பு கொண்டு அசீரியாவுக்கு எதிராக இருந்தனர். எசா 13:17-18; எரே 5:11-இல் கூறப்பட்டுள்ள மேதியா பாபி லோனைத் தாக்கும் நிகழ்ச்சி நடக்கவே இல்லை. மேதிய மன்னன் அஸ்த்யாகு பெரிய சைரசு அரசனால் தோற்கடிக்கப் பட்டதால் மேதியா பாரசீகப் பேரரசின் ஒரு பகுதியாயிற்று. இப்பகுதி அலக்சாந்தரால் வெல்லப்பட்டது (தானி 8:1-8.20-21). பின்பு செலூக்கியர் ஆட்சிக்கும் (1 மக் 6:56), பார்தியர்களின் ஆட்சிக்கும் (14:1-3) உட் பட்டது. யூதர்கள் பாபிலோனிலிருந்து யூதா வுக்குத் திரும்பி, எருசலேமை மீண்டும் கட்ட சைரசு அனுமதித்திருந்தாலும், மேதியா போன்ற இடங்களில் சிதறிக் கிடந்த யூதர்கள் பலர், கி.மு. முதலாம் நூற்றாண்டில் தங்கியிருந்தனர் என்று அறிகி றோம் (அ.ப. 2:9).

கி.மு. 539-இல் பழைய ஏற்பாட்டில் மேதியர்களும் (பாரசீகர்களும்) புதிய பாபி லோனியப் பேரரசை வென்ற சூழ்நிலை யில் கூறப்படுகின்றனர் (எசா 13:17; 21:2; எரே 51:11.28; தானி 5:28). மேதியர்களின் சட்டத்தின் மாறும் இயல்பற்ற தன்மை ஒரு முதுமொழியாயிற்று (தானி 6:8.12.15; காண்க. 1:19.).

**மேபாத்து** (MEPHAATH)

மேபாத்து ரூபன் கோத்திரத்தாருக்குக் கொடுக்கப்பட்ட ஒரு நகரம் (யோசு 13:18). இது மெராரியர்களுக்குக் குறிக்கப்பட்டதாக வும் கூறப்படுகிறது (யோசு 21:37; 1 நாள் 6:79). எரேமியா இறைவாக்கினரின் காலத் தில் இது மோவாபியரின் பிடியில் இருந் தது (எரே 48:21). இந்நகரம் அனேகமாக ஆமானின் தெற்கில் சுமார் 10 கி.மீ. தொலைவிலுள்ள யாவா என்ற இடமாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**மேம்** (MEM)

இஃது எபிரேய நெடுங்கணக்கில் பதி மூன்றாவது எழுத்து. இஃது அகரவரிசைச் சங்கீதம் 119-இல் பதிமூன்றாவது பகுதிக் குத் தலைப்பாக உள்ளது. இப்பகுதியின் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்தோடு தொடங்குகிறது.

**மேயர்க்கோன்** (ME-JARKON - யர்க்கோன் நீர், வெளிறிய பச்சைநீர்)

இது தாண் நாட்டின் ஒரு பகுதி. அனேகமாக இப்பெயர் ஓர் இடத்தைக் குறிக்காமல் யோப்பா நகருக்கு வடக்கில் சுமார் 6 கி.மீ. தொலைவில் மத்தியதரைக் கடலோடு கலக்கும் நீரோடையைக் குறிக்க லாம். இந்நீரோடை, நகர் ஏல்-அவுயா ஆகும். இஃது உள்நாட்டில், கடலிலிருந்து சுமார் 16 கி.மீ. தொலைவில் ராஸ் ஏல்-அயின் என்னும் இடத்தில் உற்பத்தி யாகிறது. இது சாரோன் சமவெளியையும், யூதேயா-சமாரியா பீடபூமியையும் வளமாக் கும் வற்றாத ஐந்து நீரோடைகளில் ஒன்று. முதலில் இது சதுப்பு நிலத்தின் வழியாகப் பாய்ந்து பெரிய ஆழமான கால்வாயின் வழியாக கடலில் கலக்கிறது.

**''மேயா காவல்மாடம்''** (TOWER OF MEAH, TOWER OF THE HUNDRED)

எருசலேமின் வட சுவரில், மீன் வாயிலுக் கும் ஆட்டுவாயிலுக்கும் இடையேயுள்ள ஒரு கோபுரம் (நெகே 31:1; 12:39). நெகேமியா மீண்டும் கட்டியெழுப்பிய சுவரின் ஒரு பகுதியாகும். இது அனனே லின் காவல்மாடத்திற்கு முன் குறிக்கப்படு

கிறது. இஃது ஒபேல்-மோரிய முகட்டின் வடமேற்குப் பகுதியிலிருந்து , ஆலயத்தை மேலிருந்து நோக்கியிருந்திருக்கவேண்டும். இது பிற்காலத்தில் பெரிய ஏரோது கட்டிய அந்தோனியாக் கோட்டையிருந்த இடத்தில் இருந்திருக்கலாம்.

**மேய்ச்சல் நிலம்** (PASTURE LAND)

கிராமங்களைச் சுற்றியுள்ள பரந்த நிலம். கிராமத்திலுள்ள ஆடு, மாடு மேய்ப்போரால் எல்லோருக்கும் பொதுவாக, இலவசமாகப் பயன்படுத்த வேண்டிய சமவெளி. ஐந்நூல் *(எண் 35:7)*, யோசு *(14:4)* மற்றும் எசேக்கியேல் *(45:2)* ஆகிய நூல்களில், லேவியருக்கு நிலங்களைப் பிரித்தளிக்கும் பொழுது மேய்ச்சல் நிலங்கள் அடிக்கடி குறிப்பிடப்படுகின்றன.

**மேய்ப்புப்பணித் திருமுகங்கள்** (PASTRO-RAL LETTERS)

திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரு திருமுகங்களும் தீத்துவுக்கு எழுதப்பட்ட ஒரு திருமுகமும், ஒத்த தன்மையும் பொதுவான அக்கறைகளையும் கொண்டிருப்பதால் ஒரே தொகுப்பாகக் கருதப்படும். இத்தலைப்பு கி.பி. 175-இல் அந்தோன் என்பவரால் முதன்முதலில் பயன்படுத்தப் பட்டது. இதன் நோக்கம் இத்திருமுகங்களில் காணப்படும் மேய்ப்புப்பணி மற்றும் திருச்சபையின் அக்கறைகளை வலியுறுத்துவதாகும். இந்நோக்கோடு திருச்சபைகளின் தலைமை மேய்ப்பனும் நிர்வாகியும் என்ற அளவில் பவுல் தன் தோழர்களுக்கு இத்திருமுகங்களை எழுதுகிறார்.

இவை பவுலின் தோழர்களுக்குத் தனிப்பட்ட மடல்களாக எழுதப்பட்டாலும் பொதுத் தன்மையும் உடையனவாகும். திருச்சபையின் ஏடு என்ற அளவில் அதன் அதிகாரபூர்வமான தன்மை, ஒவ்வொரு மடலின் இறுதியில் வரும் வாழ்த்துதலால் வெளிப்படுகிறது. மூன்று மடல்களிலும் மிகவும் தனிநபர்த் தன்மையுடைய திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டாம் திருமுகம் கூட, ''இறையருள் உங்களோடு இருப்பதாக'' *(2 திமொ 4:22)* என்று பன்மையில் வாழ்த்துதலைக் கொண்டிருக்கிறது. திருச்சபையை நிலைப்படுத்துவது என்ற முதன்மையான அக்கறையைக் கொண்டுள்ளார் ஆசிரியர். ஆகவே, அவர் கிறிஸ்தவ விசுவாசத்திற்குக் கீழ்ப்படிதலைச் செயல்படுத்துமாறு தமது தோழர்களுக்கு அறவுரை கூறுகிறார். வழிபாடு, விசுவாச அறிக்கை, பணி, திருநிலைப்படுத்துதல், திருச்சபையின் நிர்வாக அமைப்பு முதலியவற்றைப் பொருத்தமட்டும் உறுதியான நடவடிக்கைகளை எடுக்குமாறும் தப்பறையை எதிர்த்துப் போராடுமாறும் கூறுகிறார்.

**மேராபு** (MERAB - பெருகுதல்)

மேராபு சவுலின் மூத்தமகள் *(1 சாமு 14:49)*. பவுல் இவளைத் தாவீதுக்கு மணம் முடித்து வைப்பதாக வாக்குறுதி கொடுத்தார். அதிக வீரத்தோடு தாவீது பெலிஸ்தியரோடு போராட வேண்டும் எனவும் நிபந்தனை விதித்தார். இதனால் தாவீது கொல்லப்படுவான் என நினைத்தார். சவுல், தாவீதை ஏமாற்றி, மேராபை அதிரியேலுக்கு மணமுடித்து வைத்தார். இதனால் மேராபின் தங்கை மீக்கால் தாவீதின் மனைவியானாள் *(1 சாமு 18:17-27)*. பிற்காலத்தில் தாவீது, சவுலின் ஏழு புதல்வர்களைக் கொன்ற போது, அந்தக் குழுவில் மேராபின் 5 புதல்வர்களும் இருந்தனர் *(2 சாமு 21:8)*.

**மேரான்** (MERRAN)

மேரான் என்பது ஓர் இடத்தின் பெயர் *(பாரூ 3:23)*. மிதியான் என்பதை எழுத்துப் பெயர்ப்பு செய்யும் போது எழுந்த தவறால் தோன்றிய பெயர்.

**மேரோம் நீரோடை** (MEROM, WATERS OF)

மேரோம், கலிலேயாவின் வடக்குப் பகுதியில் உள்ள ஒரு வறண்ட காட்டாறு *(வாடி)*. இவ்விடத்தில்தான் யோசுவா ஆட்சோரின் அரசர் யாபீனைத் தோற்கடித்தார் *(யோசு 11:5.7)*. மேரோமைக் குறிக்க பல இடங்களின் பெயர்களைக் கூறுகின்றனர். பரம்பரையாக மேரோம் என்பது கூலே ஏரி என்று கருதப்படுகிறது. ஆனால், அது

யோசு *11:1-9*-இல் கூறப்படும் போருக்கும், அந்தச் சதுப்புநிலப் பகுதிக்கும் ஒத்துவர வில்லை. எபெல் எர்மாகின் பாதிச்சரிவில், சாபெத்தின் மேற்கு வடமேற்கில் சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ள மேய்ரோன் கிராமம்தான் மேரோம் இருந்த இடமாக, பெரும்பாலோரால் கருதப்படுகிறது. இந்த இடமானது இசிரியேல் பள்ளத்தாக்கு கிழக்கிலிருந்து மேற்காகச் செல்லும் வழி யில் உள்ளது. அவ்விடத்தில் ஆராய்ச்சி நடத்திய போது மேய்ரோனில், பிற்கால வெண்கலக் காலம், இரும்புக்காலம், கிரேக்க-உரோமானியக் காலம், பைசாந்தி யர் காலம், இஸ்லாமியர் காலம் ஆகியவற் றில் மக்கள் வாழ்ந்தனர் என்று அறியப் பட்டுள்ளது. யோசுவாவின் போர், பிற்கால வெண்கலக் காலத்தில் நடந்ததால் இந்த இடம் யோசு *11:1-9*-இல் கூறப்படும் நிகழ்ச்சியோடு ஒத்துப் போகின்றது. குன் றின் கிழக்குச் சரிவில் அழிந்து போன செபக்கூடத்தின் சில பகுதிகளும், கல்லில் குடையப்பட்ட பல கல்லறைகளும் உள் ளன. பாரம்பரியத்தின் படி, இவற்றில்தான் இல்லேல், சம்மாய் போன்ற பல ராபிக்கள் அடக்கம் செய்யப்பட்டனர். மேய்ரோனின் கீழே, குன்றின் தெற்கு அடிவாரத்தில் வடி மேய்ரோன் என்ற பள்ளத்தாக்கு உள்ளது. இதன் வழியாக வற்றாத நீரூற்றிலிருந்து தண்ணீர் பாய்கிறது. இது கிழக்கு முகமாகச் சென்று, பின் தெற்கு முகமாகத் திரும்பி, வடி ஏல்-தவாகின் என்னும் பெயரைப் பெறுகிறது. இங்குள்ள கரடுமுரடான குன்றுகள் இஸ்ராயேல் மக்களுக்குப் போர் புரிய வசதியாக இருந்தது.

மேரோம், கர்னாக்கு அட்டவணை யில் கி.மு. 15-ஆம் நூற்றாண்டில் மூன்றாம் துத்மோசு வென்ற நகரங்களில் ஒன்றாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இஃது இரண்டாம் ராம்சேசால் கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் அழிக்கப்பட்ட நகரங்களில் ஒன்றாகவும் குறிப்பிடப்படுகிறது.

**மேற்குக் கடல், மத்திய தரைக்கடல்** *(WESTERN SEA)*

மத்திய தரைக் கடலைக் குறிக்கும் சொல் *(உப 11:24; 34:2; யோவே 2:20; செக் 14:8)*.

**மேற்கோள்** *(QUOTATION)*

வெளிப்படையான நேரிடையான மேற் கோள்கள் பழைய ஏற்பாட்டில் மிகச் சொற்பமாகவே காணப்படுகின்றன. ஆனால், புதிய ஏற்பாட்டில் சற்று அதிகம் காணப்படுகின்றது.

***1. பழைய ஏற்பாட்டில்:*** அழிந்துபோன பழங்காலப் புத்தகங்களிலிருந்து அரிதாக, நேரிடையாக உள்ள மேற்கோள்கள் எடுக் கப்பட்டன. இருமுறை யாசார் நூலிலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்டிருக்கின்றன *(யோசு 10:12-13; 2 சாமு 1:19-27;* காண்க. யாசாரின் நூல்). எழுபது நூலின்படி ''பா டல் புத்தகத்திலிருந்து'' *(1 அர 8:12-13;8:53)* எடுக்கப்பட்டிருக்க வேண்டும். புவிஇயல் குறிப்புகளுக்குப் பயன்படும் எண் *21:14-15* என்பது ''யாவேயின் போர்கள்'' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றது.

வெளிப்படையான, ஆனால் மறைமுக மான, மேற்கோள்கள் நிரம்பி இருக்கும் 1,2 அரசர்கள் நூல் அழிந்து போன அரசர்களின் ஆட்சிக்குறிப்பேடு என்ற இரு நூல்களிலிருந்து எடுக்கப்பட்டிருக்க வேண் டும். ஒன்று இஸ்ராயேலர் அரசர்களின் ஆட்சிக் குறிப்பேடு. மற்றொன்று யூதா அரசர்களின் ஆட்சிக் குறிப்பேடு. இந்த ஆட்சிக் குறிப்பேடுகள் அரசர்கள் பலரின் அரசாட்சியைச் சுருங்கக் கூறும் நூல்களா கும். 1,2 நாள் ஆகமம் ஒரு நூலிலிருந்து பல மேற்கோள்களை மறைமுகமாக, பல பெயர்களோடு கூறுகின்றது. ஒருவேளை இந்நூல் ''அரசர்கள் நூலின் விளக்கவுரை'' *(2 நாள் 24:27)* என்று அழைக்கப்பட்டிருக்க லாம். ஆனால், இப்புத்தகம் உண்மை யானதா, போலியானதா என்பது ஆராய வேண்டி உள்ளது.

மறைமுகமான மேற்கோள்கள் பல நெகேமியாவில் குறிப்பிடப்பட்டுள்ளன. அதிகாரபூர்வமான ஏடுகள் எஸ்ரா - நெகேமியாவில் குறைவாகவே எடுத்துக் கூறப்படுகின்றன. பழைய ஏற்பாட்டிலி ருந்து பழைய ஏற்பாட்டில் கூறப்படும் மேற்கோள்கள், சாமுவேல், அரசர்கள் நூல்

களிலிருந்து பெரும்பகுதிகள், நாளாகமத்தி லும் முற்காலச் சட்டத்தொகுதியிலிருந்தும் பிற்காலச் சட்டத் தொகுதியில் எடுத்துக் கூறப்படுவது ஆகியன தெளிவாக உள்ளன. உரைநடையில் கொடுக்கப்படும் கவிதைப் பகுதிகள் மேற்கோள்களாக அல்லாமல் ஏடுகளாகவே கருதப்படவேண்டும். பழைய ஏற்பாட்டுக்கும், மெசபொத்தா மியா, எகிப்து, கானான் நாடு, கிரேக்க நாடு ஆகியவைகளின் இலக்கியங்களுக்கும் கருத்துகளிலும், தோற்றத்திலும் எடுத் துரைக்கும் முறைகளிலும் தொடர்பு இருக் கின்றன. இவை இலக்கியத் தழுவலாகக் கூட இருக்கலாம்; ஆனால், மேற்கோள்கள் அல்ல. சட்டங்கள், பழமொழிகள், புரா ணங்கள், தத்துவங்கள் ஆகியன அரசிய லையோ, பண்பாட்டையோ பொருத்து எழவில்லை.

**2. புதிய ஏற்பாட்டில்:** புதிய ஏற்பாட்டில் பழைய ஏற்பாட்டு மேற்கோள்கள் நேரிடை யாக *150* முறையும், மறைமுகமாக *1100* முறையும் காட்டப்பட்டிருக்கின்றன. பழைய ஏற்பாடு யூதர்களால், கிறிஸ்துவர் களால், கடவுள் பயமுள்ள புற இனத்து மக்களால் ஏற்கப்பட்டு வந்தது. புதிய ஏற்பாடும் அதையே கூறுகின்றது என் பதைக் காட்ட பழைய ஏற்பாட்டிலிருந்து புதிய ஏற்பாட்டில் மேற்கோள்கள் காட்டப் படுகின்றன. பழைய ஏற்பாட்டு மேற்கோள் கள் சில நேரங்களில் அதற்கு எதிராகவே புதிய ஏற்பாட்டில் குறிக்கப்பட்டிருக்கின் றன *(மாற் 10:2-9)*; அல்லது குறை கூறப்பயன்படுகின்றன *(மத் 5:38-39)* அல் லது வேறொரு விளக்கத்திற்கு மாறாக வாதமுறையில் கூறப்பட்டுள்ளன *(மாற் 9:12; 1 கொரி 9:9)*. பொது விதிமுறைகள் *(மத் 15:8-9)* அல்லது இறையியல் கருத்துக் கள் *(உரோமை 3:10-18)* ஆகியவை உறுதி செய்யப்படுகின்றன. மத்தேயு நற்செய்தி யில் பல இடங்களிலும் யோவானில் சில இடங்களிலும், மற்ற நூல்களில் இங்குமங்கு மாகவும் இறைவனால் பழைய ஏற்பாட்டில் முன்னுரைக்கப்பட்டவை இப்பொழுது நடைபெறுகின்றன என்று காட்டப்படு கின்றது. பழைய ஏற்பாட்டிலுள்ள மேற் கோள்கள் பல எவ்வித விவாதமும் இன்றிப் புதிய ஏற்பாட்டில் குறிக்கப்பட்டுள்ளன *(மத் 12:40; 1 கொரி 10:7)*. பழைய ஏற்பாட்டுச் சுட்டிக்காட்டுதல்கள் புதிய ஏற் பாட்டு ஆசிரியர்களிடம் தோன்றிய பொதுப் பண்பாட்டினைப் பிரதிபலிக்கின் றன. அல்லது யாருக்காக நூல்கள் எழுதப் பட்டனவோ, அவர்கள் அறிந்த இலக்கியத் தையும் பிரதிபலிக்கின்றன. குறிப்பாக, பவுலின் மடல்கள், அப்போஸ்தலர் பணி, திருவெளிப்பாடு ஆகிய நூல்கள்.

புதிய ஏற்பாட்டில் பயன்படுத்தும் பழைய ஏற்பாட்டு மேற்கோள்கள் பெரும் பாலானவை எழுபது நூலைச் சார்ந்தவை. இதில் வாசகம் எபிரேய வாசகத்தை அரி தாகவே பிரதிபலிக்கிறது. மத்தேயு நற்செய் தியில் காணப்படும் நாற்பத்துமூன்று மேற் கோள்கள் இதற்கு விதிவிலக்காகும். இவை மத்தேயுவுக்கே உரியன. இவற்றில் பதி னொன்று எழுதும் நூலோடு ஒத்துப்போ கின்றன. மற்ற முப்பத்திரண்டும் எழுபது நூலிலிருந்தும் மற்றக் கிரேக்க வாசகங்களி லிருந்தும் வேறுபடுகின்றன; எபிரேய வாச கத்துக்கு நெருங்கியவையாக உள்ளன. இது மத்தேயுவின் ஆசிரியர் எபிரேய வாசகத்தி லிருந்து நேரடியாகவோ, இப்போது தொலைந்துபோன ஒரு கிரேக்க வாசகத்தி லிருந்தோ மேற்கோள்களை எடுத்திருக்க வேண்டும் எனச் சுட்டுகிறது.

புதிய ஏற்பாட்டில் புனித யூதா எழுதிய திருமுகத்தில் எழுதப்பட்டிருக்கும் *14*-ஆவது வசனம் யூத திருமுறை சாராத நூலான ஏனோக்கு நூலிலிருந்து *(1:9)* எடுக்கப்பட்டி ருக்கின்றது. ஆனால் இத்தகைய சுட்டிக் காட்டுதல்களில் எதிரொலி பல உண்டு. புறவினத்து ஆசிரியர்கள் பலர் புதிய ஏற்பாட்டில் குறிக்கப்படுகின்றனர். மெனான்டர் *(1 கொரி 15:33)*, கிறிஸ்து வுக்கு முன் மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த தர்சுவைச் சேர்ந்த அராத்து என்னும் கிரேக் கப்புலவன் *(அ.ப. 17:28)*, கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த எபிபிமெனிதஸ் என்பவர் *(தீத்து 1:12)* ஆவார்கள். புறவினத்

தாரின் இலக்கிய வடிவங்கள் எல்லாம் புண்ணியங்கள், பாவங்கள் என்ற தலைப்பில் உள்ள குடும்பத்தின் கடமைகளில் பவுல் குறிப்பிடுவதைப் பார்க்கின்றோம். ஸ்தோயிக்கு நன்னடத்தைகள் எல்லாம் பவுலின் திருமுகங்களில் இடம் பெறுவதைப் பார்க்கின்றோம். சில சமயங்களில் பவுல் தான் எழுதிய மடல்களையே சுட்டிக்காட்டுகிறார் *(1 கொரி 7:1;...) 1 கொரி 6:12; 8:1* நேரிடையாகக் காட்டப்பட்ட மேற்கோள்களாகக் கருதப்படுகின்றன. 2 கொரி *10* நேரிடையாகக் காட்டப்பட்ட மேற்கோளாய் இருந்தாலும் பவுலால் சற்று வேறுவிதமாகக் கூறப்பட்டுள்ளது.

புதிய ஏற்பாட்டில் ஒரு நூலை மற்றொரு ஆசிரியர் வெளிப்படையாக எடுத்துக் கூறுவதற்குச் சான்று இல்லை. ஆனால், நிகழ்ச்சிகள் பற்றிய எடுத்துக்காட்டுகள் உள்ளன. இவ்வகையானவைதான் மத்தேயு மற்றும் லூக்காவில் காணப்படும் மாற்கின் பகுதிகளின் இரட்டிப்பு விவரிப்பு; பேதுருவின் இரண்டாம் திருமுகம் யூதாவைப் பயன்படுத்துவது; எபேசியரில் கொலோசியர் பயன்பட்டிருப்பது. புதிய ஏற்பாட்டில் வரும் பாடல் பகுதிகள் மேற்கோள்கள் அல்ல; மாறாக, இதுவரை எழுதப்படாத பாடல்களுக்கு எழுத்து வடிவம் அளிப்பதேயாகும். இவ்வகையைச் சேர்ந்தவையே *1* கொரி *13;* எபே *5:14;* பிலி *2:6-11;* கொலோ *1:15-18; 1* திமொ *3:16;* மற்றும் திருவெளிப்பாட்டு நூலில் சிதறிக் கடக்கும் விண்ணக வழிபாட்டின் பல பகுதிகள். எழுதப்படாத மற்றும் ஆள்பெயர் தெரியாத பாரம்பரியம் மேற்கோள் என்று கருதப்பட்டால், இத்தகைய எடுத்துக்காட்டல்களை இருமுறையும் *(1* கொரி *11:23; 15:3)* மறைமுகமாகப் பலமுறையும் பவுல் தருகிறார். இத்தகைய மேற்கோள்கள் புதிய ஏற்பாட்டின் முதல் ஐந்து நிகழ்ச்சியுரை நூல்களில் பல முறை காணப்படுகின்றன.

## மேற்பார்வையாளர் *(CHAMBERLAIN, OVERSEER)*

அரசனது அரண்மனை அல்லது மேல்குலத்தோரின் வீடுகளில் தனி நிலைப்பகுதிகளுக்குப் பொறுப்பான அதிகாரிகள் *(2* அர *23:11;* எஸ் *1:10;* அ.ப. *12:20).* பானம் அளிக்கும் கடமையுள்ளவர்கள் போன்றவர்கள் அரசனது நம்பிக்கையைப் பெற்று, அவருக்கு நெருக்கமாக இருந்தனர். நாத்தான் - மெலேக்கு யோசியா காலத்தில் மேற்பார்வையாளராக இருந்தார் *(2* அர *23:11).* இந்த அதிகாரிகள் அரண்மனையின் பெண்கள் பகுதிகளுக்கும் செல்ல வேண்டியவர்களாய் இருந்ததால், பெரும்பாலும் இவர்கள் அண்ணகர்களாக இருந்தனர்.

ஏதாவது ஒரு குழுவைக் கவனித்துக் கொள்ளும் அதிகாரிகளும் மேற்பார்வையாளர் என்றே குறிக்கப்படுகின்றனர் (ஆதி *39:4; 41:34;* யாத் *1:11; 2* சாமு *20:24; 2* நாள் *2:18; 34:13.17;* நெகே *11:9; 12:42;* பழ *6:7;* அ.ப. *20:28).*

## மேன்மை, நன்மதிப்பு *(HONOUR)*

இஃது ஒருவருக்குச் செய்யப்படும் அல்லது ஒருவரிடமிருந்து பெறப்படும் நன்மதிப்பு, மரியாதை, சிறப்பு, வணக்கம் ஆகும். பழைய ஏற்பாட்டில், நன்மதிப்பு ஒருவனின் உயர் பதவியோடு இணைந்தது. ஒருவனுடைய ஆற்றல், சொத்து, செல்வம், ஞானம், உயர் பதவி போன்றவையே ஒருவருடைய நன்மதிப்புக்கும் சிறப்புக்கும் அடையாளமாகக் கருதப்பட்டன (ஆதி *45:13).*

விவிலியத்தில், நன்மதிப்பும் புகழும் மிகவும் தொடர்புடையனவாகும். பெருமை (ஆதி *30:20),* மாண்பு *(1* சாமு *2:8)* போன்ற சொற்களும் பயன்பட்டன.

பழைய ஏற்பாட்டில் இச்சொல் பெரும்பாலும் மனிதனின் நன்மதிப்பையே குறிக்கிறது. ஏனெனில், முன்பே கூறியதுபோல, இச்சொல்லுக்குப் பதிலாகப் 'புகழ்', 'மாட்சி', 'சிறப்பு' போன்ற சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. கடவுளின் மேன்மையைப் பற்றிக் கூறும் போது புகழ், மாட்சி, சிறப்பு, மேன்மை போன்ற சொற்களை மொழிபெயர்ப்பாளர்கள் கையாளுகிறார்கள். மனிதனின் நன்மதிப்பு, மேன்மை என்பன கடவுளின் கொடையா

கும் (சங் 8:6; 61:7; 70:21). மனிதனின் இப்புகழ், அவனது ஆட்தன்மையை வளர்க்கும் கொடைகளாகிய சொத்து, செல்வம், ஞானம், ஆற்றல் ஆகியவற்றில் அடங்கும். தன்னுடைய மேன்மையை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வதன் மூலம் மனிதன் தனது மேன்மையை வெளிப்படுத்துகிறான். கடவுளுக்குக் கீழ்ப்படிய மறுப்பதன் மூலம் மனிதன் தனது மேன்மையை இழக்கிறான். தங்களுக்காக நன்மதிப்பைத் தேடிக் கொள்பவர்களை இறைவாக்கினர்கள் கண்டிக்கிறார்கள் (எசா 1:23; ஆமோ 5:11-12; 8:4-5). மனிதனின் நன்மதிப்பு சமுதாயத்தின் நலனுக்காகப் பயன்படுத்தப்பட வேண்டும். இவ்வாறு, மனிதனின் நன்மதிப்பு நீதி, நேர்மை, சமாதானம் முதலியவற்றோடு இணைக்கப்பட்டுள்ளது. அவ்வாறே, அவமதிப்பு, அவமானம் என்பன பாவத்தோடு இணைக்கப்பட்டுள்ளன. தாய் தந்தையர்களுக்குரிய மதிப்புக்குப் பழைய ஏற்பாடு முக்கியத்துவம் கொடுக்கிறது (யாத் 20:12; உப 5:16). இக்கட்டளை புதிய ஏற்பாட்டில் ஆறு தடவை வருகிறது.

புதிய ஏற்பாடும் 'நன்மதிப்பு' என்ற சொல்லை முதன்மையாக மனிதனின் மேன்மையைக் குறிப்பதற்கே பயன்படுத்துகிறது. இருப்பினும், தங்களுக்கே நன்மதிப்பைத் தேடி அலைபவர்களைப் புதிய ஏற்பாடு எச்சரிக்கிறது. குறிப்பாக, விருந்தினர்கள் பந்தியில் முதன்மையான இடங்களைத் தேடுதல் (லூக் 14:7-8; 20:46; எபி 5:4), பதவியின் பெயரால் உயர்நிலை தேடுதல் (எபி 5:4) ஆகியவற்றை எச்சரிக்கிறது. யாருக்கெல்லாம் மதிப்பு உரியதோ, அவர்களுக்கெல்லாம் ஒரு கிறிஸ்தவன் சுதந்தரமாகவும், மகிழ்ச்சியோடும் மதிப்புக் கொடுக்க வேண்டும் (2 உரோ 12:10; பிலி 2:29; 1 திமொ 5:3; 6:1). சில வேளைகளில் அவன் தனது நன்மதிப்பை இழக்க நேரிட்டால் அஃது அவன் மனிதன் என்ற அளவில் தனது அழைத்தலுக்குக் காட்டிய பிரமாணிக்கமின்மையையோ இறைபால் பற்றுறுதியின்மையையோ சுட்ட வேண்டியதில்லை. மாறாக, அவன் கடவுளின் பணியாளர் என்று காட்டுவதற்காக அவ்வாறு நேரலாம் (2 கொரி 6:8).

எல்லாப் புகழும், மாட்சியும், வல்லமையும் பெறத் தக்கவர் இறைவனே (1 திமொ 1:17; 6:16; திருவெளி 4:9; 7:12). ஏனெனில், எல்லா மேன்மையின் ஊற்றும் அவரே (2 பேதுரு 1:17; திருவெளி 4:11). இயேசு பாடுபட்டு இறந்ததால் மகிமையும், மாட்சியும் அவருக்கு முடியெனச் சூட்டப்பட்டன (எபி 2:9). பலியான செம்மறி வல்லமையும், செல்வமும், ஞானமும், பலமும், மாட்சியும், மகிமையும், போற்றியும் பெறத் தகுதியுள்ளவர் (திருவெளி 5:12-13). ''தன் உடலில் கிறிஸ்துவை மகிமைப்படுத்துவதும்'' (பிலி 1:20), ''கடவுளுக்கு மகிமை செலுத்துவதும்'' (அ.ப. 12:23) கிறிஸ்தவனின் கடமையாகும். இஃது இறைவனுடைய மேலாண்மையையும் மகிமையையும் ஏற்பதாகும் (யோசு 7:19). கடவுளுக்கு அல்லது அவரது மகனுக்கு மதிப்புக் கொடுக்க மறுப்பது பாவமாகும்.

# மை

**மை** (INk)

பழங்காலத்தில் எரிக்கப்பட்ட மரப் பிசினின் கரி, நிலக்கீல், ஊசியிலை, மரத்தூள் ஆகியவற்றைக் கலந்து அல்லது விளக்குப் புகைபோக்கியிலுள்ள கருவண்ணப் பொருள், பிசின், நீர் அல்லது மற்ற திரவப் பொருட்களைக் கலக்கிக் கருமை செய்யப் பட்டது. பொதுவாக, மை கடினப் பொருளாகக் காயவைக்கப்பட்டது; பயன்படுத்தப் படும் போது ஈரமாக்கப்படும். சிவப்புமை செய்வதற்குப் பிசின்கரிக்குப் பதிலாக மஞ்சள் களிமண் அல்லது இரும்பு ஆக்சைடு சேர்க்கப்படும். இத்தகைய மைகள் எகிப்தில் பயன்பட்டுள்ளன; பிற்காலத்தில் பாலஸ்தீனத்தில் சாக்கடல் ஏடுகளில் பயன் பட்டுள்ளன. பழைய ஏற்பாட்டில் எரே *36:18*-இல் மட்டும்தான் மை வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது. மற்ற இடங்களில் மறைமுகமாகவே குறிக்கப்படுகிறது. மை அழிக்கப்படலாம் *(யாத் 32:33; சங் 69:28)*, அல்லது கழுவப்படலாம் *(எண் 5:23)*. ராபிகளின் நூல்கள், அழிக்கப்படக் கூடிய மைக்கும் அழியாத மைக்கும் உள்ள வேறுபாட்டை வலியுறுத்துகின்றன.

புதிய ஏற்பாட்டில் பொதுவாக, கருமை பயன்பட்டதாகச் சுட்டிக்காட்டப் படுகிறது *(2 யோவா 12; 3 யோவா 13)*. அழிந்து போகும் மையால் எழுதப்பட்ட செய்தியை மனித இதயங்களில் அழியாமல் எழுதப்பட்ட தூய ஆவியின் செய்தியோடு ஒப்பிட்டு வேறுபடுத்த பவுல் மையைப் பயன்படுத்துகிறார் *(2 கொரி 3:3)*.

எபிரேய எழுத்தாளர்கள் மரம், கொம்பு, தந்தம் அல்லது உலோகத்தால் செய்யப்பட்ட பெட்டிகளில் அல்லது கூடுகளில் மை, எழுதுகோல் முதலியவற்றை வைத்திருப்பர். இவை இடைக் கச்சையோடு இணைக்கப்பட்டிருக்கும் *(எசே 9:2)*.

# மொ

**மொகுமூர்** (MOCHMUR)

இது தோதாயிமுக்குத் தென்கிழக்கில் உள்ள சிற்றேடை (யூதி 7:18). இது தற்போதைய வாடி மக்பூரியேவாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**மொசா** (MOZAH - பிரிந்து செல்லுதல்)

பென்யமினுக்குக் கொடுக்கப்பட்ட நகர்களில் கெபிராவுக்கு அடுத்தபடியாக வரும் நகர் இது (யோசு 18:26).

இந்நகரின் பெயரானது எரிகோவிலும் தெல் ஏன்-நாஸ்பேவிலும் தோண்டியெடுக்கப்பட்ட மட்பாண்டத்தின் கைப்பிடியில் எழுதப்பட்டுள்ளது. கி.பி. 66-73-இல் நடைபெற்ற போருக்குப்பின் வெஸ்பாசியன் 800 படை வீரர்களை இங்கு தங்க வைத்தான். இதை எம்மாவு குடியிருப்பு என்று அழைத்தான். இந்த இடம் எருசலேமிற்கு வடமேற்கில் 6.5 கி.மீ. தொலைவில் உள்ள இக்காலக் கலோனியேவாக இருக்கலாம்.

**மொட்டை, வழுக்கை** (BALDMESS)

இயற்கையாக தலைமுடி முழுவதும் இல்லாமல் இழப்பது விவிலியத்தில் உள்ள மக்களிடையே இல்லாத ஒன்று. பழைய ஏற்பாட்டில் இதைப் பற்றிய குறிப்பு அரிது; புதிய ஏற்பாட்டில் ஒன்றும் இல்லை. கிழக்கத்திய நாடுகளில் உள்ள ஓவியங்கள் நீண்ட தலைமுடியும், தாடியும் கொண்ட செமித்திய இன மக்களைக் காட்டுகிறது.

லேவி 13:41-43-இல் மொட்டைத் தலையைப் பற்றிய குறிப்பு உள்ளது. அது தொழுநோயின் அறிகுறியானால் அவன் விலக்கப்பட்டவன் ஆவான் என்கிறது சட்டம்.

புலம்பலுக்கு அறிகுறியாகவும் (ஆமோ 8:10), அடிமையாவதற்கு அறிகுறியாகவும் (எசா 3:24), மொட்டையடிக்கப்பட்டது. இதிலிருந்து கோராகு என்ற பெயர் வந்திருக்கலாம் (ஆதி 36:5; யாத் 6:21; எண் 16:1). ''வழுக்கைத் தலையன்'' என்று எலிசா ஏளனம் செய்யப்பட்டார் (2 அர 2:23). இஃது இயற்கையாக உள்ளதா, இறைவாக்கினருக்குரிய தலையில் உள்ள வட்டமா எனத் தெரியவில்லை. எபிரேயர்கள் தலை முடியை மழிக்க அனுமதிக்கப்படவில்லை (உப 14:1), ஏனெனில், அண்டை நாட்டவர்கள் இப்படிச் செய்தனர் (எரே 9:26; 25:23). தலையில் நடுவட்டம் எடுக்க குருக்கள் அனுமதிக்கப்படவில்லை (லேவி 21:5). எனினும், மொட்டைத்தலை எனப் பெயர் இல்லையெனினும், நாசரேயர் தன் பொருத்தனையின் முடிவில் தலைமுடியை மழிப்பதும் அம்முடியை எரிப்பதும் வழக்கில் இருந்தது (எண் 6:19; காண்க. அ.ப. 18:18; 21:24). குருக்களின் சட்டம் செயற்கையாக மொட்டையடிப்பதைத் தடை செய்கிறது. ஆனால், இறைவாக்கினர் இதை அழுது புலம்புவதற்கு அறிகுறி என்கின்றனர் (எசா 15:2; 22:12; எரே 47:5; 48:37; எசே 7:18; மீக் 1:16). இதை இறைவாக்கினர்கள் ஒரு சடங்காக ஏற்றுக் கொண்டார்களா, எபிரேயர்களிடம் இந்தப் பழக்கம் பொதுவாக இருந்ததா என்று தெளிவாக இல்லை. ஆனால், இறைவாக்கினர்கள் உடனடியாக வரவிருக்கும் அழிவையும், அடிமைத்தனத்தையும் உருவகமாகக் குறிக்க மொட்டைத்தன்மையைச் சுட்டிக் காட்டுகின்றனர் (காண்க. எசே 29:18). இதில் அடிமை வேலையாட்களின் தலைகள் யாவும் மொட்டை அடிக்கப்பட்டன.

**மொட்டை வெட்டுக்கிளி** (BALD LOCUST)

நேரான, குறுகிய முள் இறகுகள் கொண்ட வண்டு இனத்தைச் சேர்ந்த ஒரு பூச்சி. இது சுத்தமானதால், உண்ணக் கூடியதாகும் (லேவி 11:22).

**மொர்தக்காய்** (MORDECAI)

இது மார்துக்கு என்ற பாபிலோனியத் தெய்வத்திலிருந்து வந்த பெயர்.

1. பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து செருபாபேலோடு திரும்பி வந்த யூதர்களில் ஒருவர் (எஸ் 2:2; நெகே 7:7).

2. இவர் எஸ்தர் ஆகமத்தின் கதாநாயகன். இவரும், அகசவேரு மன்னனின் அரசியாகிய இவரது சகோதரன் மகள் எஸ்தரும் மன்னனின் அமைச்சரான ஆமானின், யூதருக்கு எதிரான சதித்திட்டங்களை முறியடித்தனர். இவர்கள் இவ்வாறு யூத குலத்திற்காகப் போராடவில்லையெனில் இவர்களும், பாரசீகத்திலுள்ள அனைத்து யூதர்களும் கொல்லப்பட்டிருப்பார்கள் (எஸ் *2:5-10:3*).

மொர்தக்காய், அகசவேரு மன்னனுக்கு எதிராக கபத்தா, தாரா ஆகியோர் அரசனைக் கொல்லும் பொருட்டுச் செய்த சதியை அரசனுக்கு அறிவித்தார் (எஸ் *12:1-2*). இவர் அரசனின் அமைச்சனான ஆமானை மண்டியிட்டு வணங்க மறுத்தார். இதைக் காரணமாகப் பயன்படுத்தி ஆமான் யூதர்களை அழிக்கத் திட்டமிட்டான் (எஸ் *3*). மொர்தக்காய் எஸ்தரிடம் யூத மக்களுக்காக மன்றாடினார் (எஸ் *4*). ஒருநாள் அகசவேரு மன்னன் தனக்கு மொர்தக்காய் செய்த உதவியை நினைந்து அவனைக் கௌரவித்தான் (எஸ் *6*). ஆமானுக்குப் பின் மொர்தக்காய் அமைச்சனாக நியமிக்கப்பட்டு, யூதரின் எதிரிகளை அழிக்கும் அதிகாரமும் வழங்கப்பட்டது (எஸ் *8*). இத்தகைய யூதரின் எதிரிகளை அழிக்கும் நாளை மொர்தக்காய் பூரிம் என்ற திருவிழாவாக ஏற்படுத்தினார். இது மொர்தக்காயின் நாள் என மக்கபேயர் ஆகமத்தில் வழங்கப்படுகிறது (2மக் *15:36*; எஸ்த *9*).

# மோ

**மோசரோத்து** (MOSEROTH)

மோசேரா என்ற பெயரின் மற்றொரு வடிவம் (எண் 30:30-31).

**மோசே** (MOSES - மகன், பிறக்க வேண்டியவன்)

I. **விவிலியத்தில் மோசே:** யாத் 2:10-ஐ அடிப்படையாகக் கொண்டு இப்பெயருக்கு ''எடுத்தல்'' என்று பொதுப்பாணி விளக்கம் அளிக்கப்படும். ஆனால், இப்போது ''பிறத்தல்'' என்ற பெயருடைய எகிப்தியச் சொல்லாக அடையாளம் காட்டப்படுகிறது. யாத் 2:1 தொ-இல் வரும் தொடக்கக் கதையில் மோசேயின் பெற்றோரின் பெயர்கள் கொடுக்கப்படவில்லை. யாத் 6:14தொ-இல் கொடுக்கப்படும் மூதாதையர் பட்டியல், அவர்களின் பெயர் அம்ராம், யோக்கபேது என்று கொடுக்கிறது. இது பிற்காலத்தைச் சேர்ந்த செயற்கையான பட்டியலாக இருக்கலாம்.

*1.* **மூலங்கள்:** விவிலியத்துக்குப் புறம்பே மோசேயைப் பற்றிய செய்திகள் இல்லை. விவிலியச் செய்திகளும் தரத்தில் ஒரே சீராக இல்லை. இவற்றில் தொடக்க காலத்தைச் சேர்ந்த நிகழ்ச்சியுரைகள் முதன்மை முக்கியத்துவம் உடையனவாகும். ஐந்நூலின் பிற்கால நிகழ்ச்சியுரைகள் வரலாற்றுச் செய்திக்குத் தொடக்ககால நிகழ்ச்சியுரையைச் சார்ந்துள்ளன. இவை மிட்ராஷ் தன்மையுடையனவாகத் தெரிகிறது. தொடக்ககால நிகழ்ச்சியுரைகள் எழுதப்பட்ட காலத்தை கி.மு. 10-ஆம் நூற்றாண்டுக்கு முன் குறிக்க முடியாது என்பது முக்கியமாகும். ஐந்நூலின் இப்போதைய வடிவத்திற்கு அடிப்படையான நூலுக்கு இன்னும் ஒரு நூற்றாண்டு பின் குறிக்கலாம். ஐந்நூலின் தொகுப்புக்கு கி.பி. 400-க்கு முந்திய காலம் குறிக்க முடியாது. ஆகவே, மோசேயின் பாரம்பரியங்கள் பற்றிய இலக்கிய வரலாறு கூட சிக்கல் மிக்கதாகும்; ஒரே சீரான, எளிய, ஒன்றிணைந்த நிகழ்ச்சியுரை அன்று. மோசேயின் காலத்திற்கும் பாரம்பரியங்களின் எழுத்து வடிவத் தொகுப்புக் காலத்திற்கும் இடையில் இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகள் கடந்திருக்க வேண்டும். ஆய்வின் முடிவுகளின்படி, இஸ்ராயேலர்களிடையே வாய்மொழிப் பாரம்பரியம் இரண்டு, மூன்று அல்லது நான்கு வடிவங்கள் எடுத்தன. எழுதப்படும் முன் தேர்வு செய்தல், விவரித்தல், விளக்கம் அளித்தல் ஆகியவை நடைபெற்றன. ஆகவே, தாவீது அல்லது சாலமோனைப் போல் மோசே ஒரு வரலாற்று ஆள் இல்லை எனலாம். இதனால் அவர் இருந்ததைப் பற்றியோ, இஸ்ராயேலையும் அதன்படி பல அமைப்புகளையும் நிறுவியவர் மோசே என்பது பற்றியோ ஒரு பிரச்சனையுமில்லை. இக்கால வரலாற்று ஆசிரியர் எவரும் இவற்றை மறுக்கமாட்டார். அவரது வாழ்வு பற்றிய விவரங்கள் குறித்த பிரச்சனைகளுக்கு உறுதியான பதில் கூறுவது அவ்வளவு எளிதன்று. ஆனால், ஓரளவு அவரது வாழ்க்கை வரலாற்றை மீண்டும் அமைக்கலாம்.

**2. வாழ்க்கை வரலாறு:** விவிலிய ஏட்டின்படி, பார்வோனுக்கு எபிரேயர்கள் அடிமைப் பட்டிருந்தபோது, மோசே எகிப்தில் பிறந்தார். இது புதிய அரச மரபுக்காலத்தின் (கி.மு. 1550-1085) பிற்பகுதியில் நடந்திருக்கலாம். மோசேயின் பெற்றோர் லேவி இனத்தைச் சேர்ந்த அம்ராம் - யோக்கபேது ஆவர் (யாத் 2:1; 6:20).

மோசேயின் பிறப்பும், பார்வோனின் கட்டளைப்படி நைல்நதியில் மூழ்கிச் சாவதிலிருந்து காப்பாற்றப்பட்டதும், யாத் 2:1-10-இல் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இறைவன் மோசேயைத் தேர்ந்தெடுத்தார் என்று நம்பி (காண்க. எபி 11:23), அவரது பெற்றோர் மூன்று மாதங்களுக்கு மறைத்து வைத்து, கோரைப்புல் பேழையில் வைத்து நைல்நதிக் கரையிலுள்ள நாணல்களிடையே ஒரு குளிக்குமிடத்தில் விட்டு வைத்தனர். பார்வோனின் மகளால் கண்டெடுக்கப்பட்டு, தன் தாயால் வளர்க்கப்பட்டு, பின்பு மோசே பார்வோனின்

மகளால் தத்து எடுக்கப்பட்டார். இந்நிகழ்சியுரை மோசே என்ற பெயரை நீரிலிருந்து எடுக்கப்படுதலோடு தொடர்புபடுத்துகிறது. இதற்கு ஒத்த பிறப்பு வரலாறு பழைய மேற்காசியாவில் காணப்படுகிறது (எ.கா. அக்காதின் சார்கோன்).

மோசே எகிப்திய அரண்மனையில் வளர்ந்தார். ''எகிப்து நாட்டுக் கல்வி கேள்விகள் அனைத்தையும் கற்று, சொல்லிலும் செயலிலும் வல்லவராய்த் திகழ்ந்தார்'' *(அ.ப. 7:22)*. ஆயினும் தான் ஓர் எபிரேயன் என்பதையும் தனது மக்களின் அவல நிலையையும் அறிந்தார். அதன் விளைவாக, அவர்களுக்கு உதவி செய்யவும் விடுவிக்கவும் தனக்கு இறை அழைப்பு இருப்பதாக உணர்ந்தார். நாற்பது வயதை அடைந்தபோது ஓர் எகிப்தியன் ஓர் எபிரேயனை அடிப்பதைக் கண்டார். மோசே எகிப்தியனைக் கொன்று பழிவாங்கினார் *(யாத் 2:11-2)*. மோசே தங்கள் காரியங்களில் தலையிடுவதை எபிரேயர் வெறுத்தனர் *(2:14)*. பார்வோன் தன்னைக் கொல்லக் கூடும் என்று அஞ்சி மோசே மிதியானுக்கு ஓடிப்போனார் *(2:15)*.

மிதியானிலும் விடுதலை அளிப்பவராக மோசே செயல்படுகிறார். குரு இரகுவேலின் (இவர் இத்திரோ என்றும் ஓபாபு என்றும் அழைக்கப்படுகிறார்) ஏழு புதல்வியர்களை அவர்கள் எதிரிகளான இடையர்களிடமிருந்து காப்பாற்றுகிறார். இரகுவேலுடன் தங்கி, அவரது புதல்வி சிப்போராவை மணந்து கேர்சோம், எலியேசர் என்ற இரு புதல்வர்களுக்குத் தந்தையாகிறார் *(2:22; 18:3-4; 1 நாள் 23:15)*.

ஓரேபு பாலைவனத்துக்கு அருகில் இத்திரோவின் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தபோது, மோசே அழைப்பையும் பணிக்கட்டளையையும் பெறுகிறார். தீய்ந்து போகாது எரிந்து கொண்டிருந்த முட்புதரால் ஈர்க்கப்படுகிறார். அங்கு ஆண்டவரின் தூதரும், கடவுளும் மோசேயிடம் பேசுகின்றனர். நீண்ட உரையாடலுக்குப்பின், எகிப்திலிருந்து எபிரேயர்களை நடத்திச் செல்லும் விடுதலையளிப்பவராக ஆக இணங்கச் செய்கின்றனர் *(3:1-4:17)*. இச்சூழ்நிலையில் இறைவன் யாவே என்ற தமது பெயரை வெளிப்படுத்துகிறார் *(3:14 தொ)*. மோசே திக்குவாயனாக இருந்ததால், மோசேயின் சகோதரன் ஆரோனை, மோசேக்குப் பேச்சாளனாக உதவ, இறைவன் தேர்ந்தெடுக்கிறார் எனலாம் *(4:14)*.

பார்வோனுக்கு முன் அருஞ்செயல்கள் புரிந்து மக்களின் விடுதலையைக் கோர, யாவே மோசேக்குக் கட்டளையிட்டிருந்தார். ஆனால், பார்வோனின் இதயத்தைக் கடினப்படுத்தப் போவதையும், அதனால் அவன் விடுதலை அளிக்கமாட்டான் என்றும் அறிவித்தார். யாவேக்குப் பலி ஒப்புக்கொடுக்க எபிரேயர்களுக்கு மூன்று நாள் விடுதலை அளிக்குமாறு மோசே கேட்க, அவர்களின் நிலை இன்னும் கடினமாயிற்று. பார்வோன் மறுத்ததோடு அல்லாமல் அவர்களுக்கு வேண்டிய வைக்கோலை அவர்களே தேடிக்கொள்ளவும், ஆனால் அதே அளவு செங்கல் தயாரிக்கவும் கட்டளையிட்டான் *(5:1-19)*. இதனால் மோசே உற்சாகம் இழந்தார். ஆனால் ''ஓங்கிய கையாலும் மாபெரும் தீர்ப்புகளாலும்'' எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து இஸ்ராயேலரை மீட்டு, வியத்தகு முறையில் மீட்கப்பட்ட தமது மக்களாக்கி வாக்களிக்கப்பட்ட நாட்டைக் கொடுப்பதாக இறைவன் மீண்டும் வாக்களிக்கிறார் *(5:22-6:8)*.

பத்து வியத்தகு பெருந் துன்பங்களால் யாவே எகிப்தியரை நசுக்கி, எபிரேய அடிமைகளை விடுவிக்கிறார். மக்களை விடுவிக்குமாறு பார்வோனை மோசேயும் ஆரோனும் கேட்ட ஒவ்வொரு முறையும், பார்வோன் மறுத்தான். பத்து முறை மோசே தனது கரத்தை நீட்டி, பேரழிவு கொண்டு வரும் பெருந்துன்பங்கள் நிகழச் செய்தார் *(7:8-11:10; 12:29-32)*. எகிப்திய ஆண்பால் தலையீற்றுகளின் மரணமாகிய இறுதிப் பெருந்துன்பம், விவிலியத்தில் பாஸ்கு விழாவோடு தொடர்புபடுத்தப்படுகிறது. இந்த விழா இஸ்ராயேலரைக் கடந்து சென்றதில் இறைவனுடைய இரக்கத்தை நினைவு கூர்ந்தது *(12:1-28)*.

பார்வோனிடமிருந்து விடுதலையும், செங்கடலைக் (நாணல் கடலை) கடந்ததும் (அதி 14-15), மோசேயால் நடத்தப்பட்டு வாக்களிக்கப்பட்ட நாட்டிற்கு இஸ்ராயேலர் செய்த கடுமையான பயணத்தின் தொடக்கமே ஆகும். மாராவில் கசப்பான தண்ணீரின் பொருட்டு மக்கள் மோசேக்கும் இறைவனுக்கும் எதிராக முணுமுணுத்த போது, மோசே தண்ணீரைச் சுவையுள்ள தாக்கினார் (15:22-25). ஆயினும், தொடர்ச்சியான கிளர்ச்சி மனப்போக்கால் (எ.கா. 17:1-4; எண் 14:1-4), மோசே உட்பட்ட இஸ்ராயேலரின் இந்தத் தலைமுறை முழுவதும், வாக்களிக்கப்பட்ட நாட்டில் நுழையாமல், பாலைவனத்திலே மடிவர் (எண் 14:26-35; காண்க. எபி 3:7-19).

இஸ்ராயேலுக்குச் சட்டம் அளிப்பவர் என்ற மோசேயின் அலுவல் தனிச்சிறப்பான முக்கியத்துவம் உடையதாகும். சீனாய் அல்லது ஓரேபு என்ற ''ஆண்டவரின் மலையில்'' மோசே இறையாற்றல் தோற்றத்தை அனுபவித்தார்; யாவேயிடமிருந்து பத்துக் கட்டளைகளைப் பெற்றார் (யாத் 19:1-20:7; உப 5). இந்தச் சமயத்தில்தான் உடன்படிக்கைச் சட்டத்தின் பல்வகைச் சட்டங்களையும் (யாத் 20:22-23:33), லேவியர் நூலிலுள்ள வழிபாட்டு ஒழுங்குகளையும் (காண்க. எண் 5:1-6:21; 15; 18-19), உபாகமச் சட்டங்களையும் (எ.கா. உப 12-26), மிஸ்னாவிலும் தால்மூதிலும் உள்ள வாய்மொழிச் சட்டங்களையும் மோசே பெற்றார் என்பது பாரம்பரியமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மோசே வாக்களிக்கப்பட்ட நாட்டில் நுழைய அனுமதிக்கப்படவில்லையெனினும் நெபோ மலையுச்சியிலிருந்து அதைப் பார்க்க அனுமதிக்கப்பட்டார் (உப 34:1-4). அவர் மோவாபில் தனது 120 வயதில் இறந்தார். பெத்போகாருக்கு எதிரில் யாரும் அறியாத ஓர் இடத்தில் அடக்கம் செய்யப்பட்டார் (34:5-7).

யாவேக்கும் இஸ்ராயேலருக்கும் இடையில் பரிந்துரைக்கும், மன்றாடும் பாகம் கொண்டிருந்ததால், மோசே எபிரேயர்களின் மிகப் பெரிய இறைவாக்கினர்களுள் ஒருவரும் முதன்மையானவருமாகக் கருதப்படுகிறார் (34:10; 18:15-18; காண்க. யாத் 20:19; எண் 11:25; 12:7-8). ஆனால் இஸ்ராயேலர்களுக்குள்ளே நடுவராகச் செயல்பட்டார் (எ.கா. யாத் 18:13-16; காண்க. எண் 27:1-11; 36:1-12). போர்களுக்குத் தலைமை தாங்கியதாக (யாத் 17:8-13; எண் 31), பல மக்கள்தொகைக் கணக்கெடுப்பு நடத்தியதாக (எண் 1; 4; 26), மக்களுக்கு நாட்டைப் பிரித்துக் கொடுத்ததாக (எண் 32), சந்திப்புக் கூடாரத்தை அமைத்ததாக (யாத் 25-31) மோசே கூறப்படுகிறார். எபிரேயப் பாடல்களின் இரண்டு மிகப்பழைய மாதிரிகளை மோசே கூறியதாகக் கருதப்படுகிறது. ஒன்று மோசேயின் பாடல் (உப 32:1-43; காண்க. 2 மக் 7:6); மற்றது மோசேயின் ஆசிகள் அல்லது ஏற்பாடு (உப 33:2-29). சிலரால் மிரியாம் பாடியதாகக் கருதப்படும் பாடல் சில சமயம் மோசே பாடியதாகக் கூறப்படும் (யாத் 15:1-18; காண்க. 15:3).

**3. பழைய ஏற்பாட்டின் பிற நூல்களில் மோசே:** ஐந்நூலுக்குப் புறம்பே பழைய ஏற்பாட்டில் மோசே வெகு அரிதாகக் குறிக்கப்படுகிறார். சிலமுறை அபக்கூக்கு நூலிலும், சாமுவேல் நூலில் இருமுறையும், அரசர்கள் நூலில் 10 முறையும், தானியேல் நூலில் இரு முறையும், சங்கீதங்களில் எட்டு முறையும், எஸ்ரா - நெகேமியா - நாளாகமம் நூல்களில் 31 முறையும் மோசே குறிக்கப்படுகிறார். எஸ்ரா - நெகேமியா - நாளாகமம் ஆகிய நூல்களுக்குப் புறம்பே மோசேயைப் பற்றிய குறிப்புகள் அவரை எகிப்திலிருந்து விடுதலை அளித்தவராகவும் (1 சாமு 13:6.8; சங் 77:21; 105:26; எசா 63:11தொ; மீக் 6:4), தோராவையும் (1 அர 2:3; 2 அர 23:25; மலா 3:22), கட்டளைகளையும் (2 அர 18:6.12; 21:8) அளித்தவராகவும், உடன்படிக்கையின் இடையாளராகவும் (1 அர 8:9.53. 56; சங் 99:6), இஸ்ராயேலுக்குப் பரிந்து பேசுபவராகவும் (சங் 106:23; எரே 15:1) கூறுகின்றன. ஐந்நூல் தொகுக்கப்பட்ட காலத்தை ஒத்த எஸ்ரா, நெகேமியா,

நாளாகம நூல்களில், அவர் சட்டநூலின் ஆசிரியராக முதன்மையாகத் தோன்றுகிறார். இவையெல்லாம் ஐந்நூலில் காணப்படும் பாரம்பரியங்களை ஒத்த ஒரு பாரம்பரியத்தைச் சார்ந்தவை. எண் *2:6-9*-இல் வரும் வெண்கலப் பாம்பைப் பற்றிய கதையை *2* அர *18:4* நினைவு கூர்கிறது.

பிற்காலத்தைச் சேர்ந்த பழைய ஏற்பாட்டுக் கிரேக்க நூல்கள் ஐந்நூல் தொகுப்பின் செல்வாக்கைக் காட்டுகின்றன. மோசே முதன்மையாகச் சட்டம் அளிப்பவராகத் தோன்றுகிறார் (பாரூ *2:2.28;* தோபி *7:11-13*). சீரா *45:1-5*-இல் வரும் புகழுரை மோசேயை வியத்தகு செயல் செய்பவராகவும், வெளிப்படுத்துபவராகவும், சட்டம் அளிப்பவராகவும் போற்றுகிறது. 2 மக்கபேயர் நூல் மோசேயைச் சட்டம் அளிப்பவராகவும், சட்டநூலின் ஆசிரியராகவும் அறிந்திருப்பதோடு ஐந்நூலிலிருந்து பல எடுத்துக்காட்டுகளைத் தருகிறது (2 மக் *1:29*-இல் யாத் *15:17;* உப *30:5*-உம், 2 மக் *2:10*-இல் லேவி *9:14*.உம், 2 மக் *2:11*-இல் லேவி *10:16*தொ-உம், 2 மக் *7:6*-இல் உப *32:36*-உம் எடுத்துக் கூறப்படுகின்றன). 2 மக்கபேயர் மேகத்தின் மாட்சிமையையும் *(2:8)*, மோசே சட்டத்தையும் *(7:8)* சுட்டிக்காட்டுகிறது.

**4. யூதத்துவத்தில் மோசே:** யூதத்துவத்தில் சட்டத்திற்கு அளிக்கப்பட்ட முதன்மை, மோசேக்கு அளிக்கப்பட்ட பெருமையைப் பெரிதும் பெருகச் செய்தது. இது போலி நூல்களில் காணப்படும் யூதத்துவத்திலும், ராபிகள் குழுவின் யூதத்துவத்திலும் காணப்படுகிறது. இதை யூபிலி நூல், மோசேயின் விண்ணேற்பு ஆகிய நூல்களில் காணலாம்.

**5. புதிய ஏற்பாட்டில் மோசே:** மோசே புதிய ஏற்பாட்டில் *80* தரம் குறிக்கப்பெறுகிறார். இவற்றில் பல, ஐந்நூல் அல்லது சட்டத்தைக் குறிப்பதாகவும், மோசே சட்டத்தை அளிப்பவராகவும் காட்டுகின்றன (மத் *8:4; 19:7*தொ; *22:24; 23:2;* மாற் *1:44; 7:10; 10:3*தொ; *12:9.16;* லூக் *2:22; 5:14; 20:28;* யோவா *1:17; 19:22* தொ). மத் *23:2*-இல் மோசேயின் இருக்கை சட்டத்திற்கு விளக்கமளிப்பதற்குள்ள அதிகாரத்தைக் குறிக்கிறது. இவ்வதிகாரத்தை மறைநூல் அறிஞரும் பரிசேயரும் கொண்டிருப்பதாக இயேசு ஏற்றுக்கொள்கிறார். தாங்கள் இறைவன் பேசிய மோசேயின் சீடர்கள் என்று யூதர்கள் பெருமை பாராட்டிக் கொள்கின்றனர் (யோவா *9:28* தொ). ஸ்தேவானின் உரை (அ.ப. *7:20-45*) யூதர்களிடையே நிலவிய கதைகள் பலவற்றைப் பிரதிபலிக்கிறது. இதன்படி, மோசே கடவுளுக்கு உகந்தவராய் இருந்தார் *(7:20)*; எகிப்திய நாட்டுக் கல்வி கேள்விகள் அனைத்தையும் கற்று, சொல்லிலும் செயலிலும் வல்லவராய்த் திகழ்ந்தார் *(7:22)*; சீனாயில் வானதூதரிடமிருந்து வெளிப்பாட்டைக் கேட்டார் *(7:38)*. ஆனால், தொடக்க காலத்திருச்சபையின் நிலை ஸ்தேவானின் உரைப்படி வடிவம் எடுக்க ஏற்கெனவே தொடங்கிவிட்டது. மோசே வெளிப்பாட்டின் இடையாளரும் விடுதலை அளிப்பவரும் ஆவார். ஆனால், ஸ்தேவான் மோசேயின் சட்டம் அளிக்கும் அலுவலைக் குறிப்பிடவேயில்லை.

யோவானிலும் மற்ற அப்போஸ்தல நூல்களிலும் மோசே ஒரு மாதிரி உருவமாகிறார். மோசே இயேசுவின் மாதிரியாகிறார். இயேசுவே இரண்டாம் மோசே; முதலாம் மோசேயைவிடப் பெரியவர். பழைய இஸ்ராயேலில் மோசே கொண்டிருந்த நிலையை இயேசு புதிய இஸ்ராயேலாகிய திருச்சபையில் கொண்டுள்ளார். அதாவது இயேசு நிறுவியவர், இடையாளர், வெளிப்பாடு அளிப்பவர். மெசியாவின் உண்மையைச் சுட்டிக்காட்டும் இறைவாக்கினர் ஆவார் மோசே (லூக் *24:27.44;* யோவா *1:45; 5:45*தொ; அ.ப. *3:22; 26:22*). ''சட்டத்தைக் கடைப்பிடிப்பவனே இறைவனுக்கு ஏற்புடையவனாக வாழ்வான்'' என்று மோசே எழுதினார். ஆனால் கிறிஸ்துவினால் வரும் ஏற்புடைமை முழுமையானது; எல்லா மனிதருக்கும் அஃது அளிக்கப்படுகிறது (உரோ *10:5*தொ). கடல் வழியாக இஸ்ராயேல் கடந்து சென்றது ''மோசேயில்''

அளிக்கப்பட்ட திருமுழுக்காகும் *(1 கொரி 10:2)*. உருமாற்ற நிகழ்ச்சியில் சட்டத்தின் பிரதிநிதியாக மோசேயும், இறைவாக்கின் பிரதிநிதியாக எலியாவும், இயேசுவோடு தோன்றுகின்றனர். இயேசு இறைவார்த்தை யான மகன் என்ற அளவில் சட்டம் மற்றும் இறைவாக்கு ஆகிய இரண்டின் நிறைவாக உள்ளார் *(மத் 17:1-8; மாற் 9:2-8; லூக் 9:28-36)*. சட்டத்தின் சமய மாட்சி எவ்வளவு என்றால், மோசே தனது முகத்தைத் திரை யால் மூட வேண்டியிருந்தது. ஏனெனில், இஸ்ராயேலர் அதன் ஒளியைப் பார்க்க முடியவில்லை. கிறிஸ்துவினுடைய வெளிப்பாட்டின் மாட்சி முன்னதைவிட மிகப் பெரியது. ஆனால் அதை எதுவும் மறைக்க வேண்டாத முறையில் முழுமை யாக வெளிப்படுத்தப்படுகிறது *(2 கொரி 3:7-18)*. மோசே சட்டத்தை அளித்தார்; ஆனால் இயேசு அருளையும் உண்மையை யும் அளித்தார் *(யோவா 1:17)*. மோசே மன்னாவை அளித்தார்; இயேசுவோ வாழ் வின் அப்பத்தை அளித்தார் *(6:32)*. இஸ்ரா யேல் வாழ்வதற்காக மோசே பாம்பை உயர்த்தினார்; இயேசு, விசுவாசிகள் முடி வில்லாத வாழ்வைப் பெறும் பொருட்டுத் தன்னையே (சிலுவையில்) உயர்த்தினார் *(3:14)*. மோசே வீட்டின் கண்காணிப்பவர்; இயேசுவோ வீட்டையே கட்டுபவர் *(எபி 3:2 தொ)*. மோசேயின் குருத்துவத்தையும் உடன்படிக்கையையும், இயேசுவின் குருத் துவமும் உடன்படிக்கையும் விஞ்சுகிறது. புதிய உடன்படிக்கை எரேமியாவால் வாக்களிக்கப்பட்டது *(8:5 தொ)*. மோசே பலிகளின் இரத்தத்தால் உடன்படிக்கையை உறுதிப்படுத்தினார்; இயேசுவோ தமது சொந்த இரத்தத்தால் புதிய உடன்படிக் கையை உறுதிப்படுத்துகிறார் *(9:11-22)*. மோசேயின் சட்டத்தை மீறுவது சாவால் தண்டிக்கப்பட்டது; இறைமகனது சட்டத்தை மீறுவது அதைவிடக் கடுமை யான தண்டனைக்குரியதாகும் *(10:28தொ)*. யூதர்களோடும் யூதமயமாக்க முயற்சித்த கிறிஸ்தவர்களோடும் கொண்ட போராட் டம் இயேசுவின் மற்றும் அவரது வெளிப் பாட்டின் மேன்மையை வலியுறுத்திக் கூற கிறிஸ்தவர்களைக் கட்டாயப்படுத்தியது. இதனால் மோசேவையும் அவரது சட்டத் தையும் சிறிது குறைத்துக் கூற வேண்டியது அவசியமாயிற்று என்பது தெளிவு. இது மோசேவைக் குறைத்துக் கூறுவதற்கன்று, இயேசு புதிய இஸ்ராயேலை நிறுவுவதால் மோசேயின் வேலையை முடித்து வைக் கிறார், நிறைவேற்றுகிறார் என்பதை வலி யுறுத்தவே. இந்த நிறைவேறுதலை ஏற்றுக் கொள்ளாதவர்கள் முழுமையற்ற, நிறை வுறாத ஒன்றைக் கடைப்பிடிக்கின்றனர் என்று சுட்டிக்காட்டுவது அவசியமாயிற்று.

II. **இறையியல் சிந்தனை:** இஸ்ராயே லைப் பொருத்தமட்டில் மோசே ஈடிணை யற்ற இறைவாக்கினராவார் *(உப 34:10-12)*. இவர் வழியாக இறைவன் தனது மக்களை விடுவித்தார். அவருடன் இறைவன் தனது உடன்படிக்கையை ஏற்படுத்தி உறுதிப்படுத் தினார் *(யாத் 24:8)*. அவருக்கு இறைவன் தனது சட்டத்தை வெளிப்படுத்தினார் *(யாத் 24:3; 34:27)*. இயேசுவிற்கு அப்பாற்பட்டு மோசேவுக்கு மட்டுமே புதிய ஏற்பாடானது இணைப்பாளர் என்ற பட்டத்தை அளிக் கிறது. ஆனால், இறைவன் தனது விசுவாச மிக்க ஊழியனாகிய மோசேயின் மூலம் தனது சட்டத்தைத் தனது மக்கள் இஸ்ராயே லுக்கு மட்டுமே அளித்தாலும் *(எபி 3:5; கலா 3:19)*. தனது மகனாகிய இயேசு கிறிஸ்து *(1 திமொ 2:4-6)* நடுவராய் இருந்து இணைக்கும் செயல்மூலமாக அனைத்து மனிதரையும் அவர் மீட்கிறார் *(எபி 3:6)*. மோசே மற்றும் இயேசு ஆகியோரிடையே யுள்ள இணைவுத் தன்மை இரு உடன்படிக் கைகளினுடைய வெளிப்படையான வேறு பாடுகளைக் குறித்துக்காட்டுகிறது.

**1. இறைவனுடைய ஊழியனும் நண்பனும்:** மோசேயினுடைய அழைப்பானது நீண்ட, இறைசெயலான, தயாரிப்பின் உச்சக்கட்ட நிகழ்ச்சியாக உள்ளது. ஒடுக்கப்பட்ட இனத் தில் பிறந்திருந்தாலும் *(யாத் 1:8.22)*, ஒடுக்கு கின்ற பார்வோனுடைய மகளால் நீரி னின்று காப்பாற்றப்பட்டு வாழ்வளிக்கப் பட்டதோடு மட்டுமல்லாமல் *(2:1-10)*, தலைவர் என்ற நிலைக்கு அவரைத் தயா

ரித்த கல்வியையும் அவளிடமிருந்தே மோசே பெற்றார் (அ.ப. 7:21-22). எவ்வா றாயினும், இவ்வாறு பெறப்பட்ட ஞானமோ, வல்லமையோ, பெருமையோ (யாத் 11:3) தனது மக்களின் மீட்பாளராக அவரை அமைக்கப் போதுமானவையாக இல்லை. அவர் தன்னுடைய மக்களின் வெறுப்பையும் அடைந்து (யாத் 2:11-15; அ.ப. 7:26தொ), பாலைவனத்திற்கு ஓடு மாறு துரத்தப்பட்டார். அங்கு அவர் தனது அழைப்பைப் பெற்றார். இறைவன் அவருக் குத் தோன்றி, தனது பெயரையும், மீட்புத் திட்டத்தையும் அதே நேரத்தில் அவருக்கு வெளிப்படுத்தி, தனது பணிக்கான திட்டங் களை நன்கு அறியச் செய்து, அதனை நிறைவேற்றுவதற்கான செயல்முறையினை யும் அவருக்கு அளித்தார் (யாத் 3:1-15). இறைவன் அவருடன் இருப்பார் (3:12). வீணாக அப்பணியை மறுக்க மோசே முயல்கிறார். நான் யார்? (3:11). இவ்வளவு பெரிய பணியின்முன் முதலில் தயங்கச் செய்த அவரது தாழ்ச்சியானது (4:10-13) பின்னர், தனது மக்களுடைய எதிர்ப்பிற்கும் அப்பாற்பட்டு இணையற்ற எளிமை மற் றும் சாந்தத்துடன் அதனைச் செய்து முடிக்க அவரை மேம்படுத்தும் (எண் 12:3.13). அவரது விசுவாசம் சற்று வலுக்குறைவை வெளிப்படுத்தினாலும் (20:10), இறைவன் தனது ஊழியனை மிகவும் பிரமாணிக்கமிக் கவர் என்று (12:7-8) நண்பனைப்போல அவருடன் செயல்பட்டார் (யாத் 33:11). ஒரே அருளின் மூலமாக தனது மகிமையை அல்லாவிடினும், தனது பெயரையாகிலும் இறைவன் அவருக்கு வெளிப்படுத்தினார் (33:17-23). மோசேவுடன் மேகத்தினின்று உரையாடும் வேளையில், இறைவன் அவ ரைத் தனது மக்களின் தலைவராக முறைப் படி ஏற்படுத்தினார் (19:9; 33:8-10).

**2. விடுதலை அளிப்பவரும் உடன்படிக் கையின் இணைப்பாளரும்:** தலைவர் என்ற அளவில் அவருடைய பணியின் முதற்செய லானது தனது மக்களை விடுவிப்பதாகும். பார்வோன் அங்கீகரிக்க மறுத்த கடவுளை வழிபடுவதினின்று இஸ்ராயேலைத் தடுத்த அடக்கு முறைக்கு மோசே ஒரு முற்றுப் புள்ளி வைக்க வேண்டி இருந்தது (யாத் 4:22-23; 5:1-18). ஆனால், இந்த முடிவை அடைவதற்காக இறைவன், தடுக்க முடி யாத அடிகளால் எகிப்தியரைத் தாக்குவதின் மூலம் தனது கரத்தின் வலிமையைக் காட்ட வேண்டியிருந்தது. இறைத் தீர்ப்பை வெளிப்படுத்துகின்ற இந்தப் பேரழிவு களைத் திட்டமிடுபவர் மோசேதான். இறு திக்கொள்ளை நோயின்போது இறைஞானத் தினால் நிரம்பப்பெற்றவராய்ப் பாஸ் காவைக் கொண்டாடுமாறு இஸ்ராயேலுக் குக் கட்டளையிட்டவரும் மோசேதான் (ஞான 10:16-20). அதன் பிறகு, தொடரும் எகிப்தியரிடமிருந்து ''மோசேயின் கரத்தி னால் இறைவனுடைய மக்கள் விடுவிக்கப் படுகின்றனர்'' (சங் 77:21). தொடர்பவரை மூழ்கடிக்கும் கடலை இஸ்ராயேலர் கடக் கின்றனர் (யாத் 14). பின்னர், யாத்திரையின் முதல் நோக்கமானது இவ்வாறு அடையப் படுகிறது. அவர்களுடன் உடன்படிக் கையை முத்திரையிடுவதன் மூலம் (24:3-8; காண்க. எபி 9:18-20) இஸ்ராயேலரை இறைவனுடைய மக்களாக்குகின்ற பலியை மோசே சீனாயில் அளிக்கிறார் (யாத் 19:4-6).

மோசேயில் திருமுழுக்கு அளிக்கப்பட்ட அனைவரும் உடன்படிக்கையின் மக்க ளுடன் சேர்க்கப்படுகின்றனர் (1கொரி 10:2). அதாவது, அவரது வழிகாட்டுதலுக்குத் தம்மையே அளிப்பவர்கள் மேகத்தி னுடைய வழிகாட்டுதலால் கடலைக் கடந்து மீட்பினை அனுபவித்தனர். இவ் வாறு அவர்களது ''தலைவரும் மீட்பருமா கிய'' மோசே (அ.ப. 7:35) புதிய முழுநிறை வான உடன்படிக்கையினுடைய இணைப் பாளராகிய கிறிஸ்துவை முன்குறித்துக் காட்டுகிறார் (எபி 8:6; 9:14-15). தனது பெயரில் திருமுழுக்குப் பெற்றோரைப் பாவத்தினின்று விடுவிக்கின்ற மீட்பரும் இக்கிறிஸ்துவே (அ.ப. 2:38; 5:31).

**3. இறைவாக்கினர், சட்டம் அளிப்பவர் மற்றும் மன்றாடுபவர்:** உடன்படிக்கை மக்க ளுடைய தலைவர் என்ற நிலையில்,

இறைவனின் பெயரால் மோசே அவர்களுடன் பேசுகிறார் (*யாத் 19:6-8; 20:19; உப 5:1-5*). ஒவ்வொரு உண்மையான இறைவாக்கினரைப்போலவே இவரும் இறைவனுடைய பேச்சாளராக (வாயாக) உள்ளார் (*உப 18:13-20*). அவர் இறைச் சட்டத்தினை இஸ்ராயேலுக்கு வெளிப்படுத்தி, அவர்கள் தங்களுடைய நடத்தையை அதற்கேற்ப எவ்வாறு அமைப்பது என்பதை அவர்களுக்குக் கற்பிக்கிறார் (*யாத் 18:19-20; 20:1-17 இணை*). எந்நாளும் அவர்களோடு இருப்பவரும் (*உப 6*), அன்புடனும் சுதந்தரமாகவும் அவர்களைத் தேர்ந்தெடுத்துக் காத்தவருமான யாவும் கடந்த ஒரே கடவுளுக்குப் பிரமாணிக்கமாக இருக்குமாறு அவர் அவர்களுக்கு அறவுரை கூறுகிறார் (*உப 7:7-9*).

இறைவாக்கினர் என்ற அளவில் அவருடைய பங்கானது உடன்படிக்கையை நிலைப்படுத்தி, கிளர்ச்சி செய்யும் மக்களுக்குப்பயிற்சி அளிப்பதாகும் (*ஓசே 12:14*). இவ்வாறு, அப்பணியின் செயல்பாடானது அவரை இறைவனுடைய துன்புறுத்தப்பட்ட ஊழியர்களில் முதலாவதானவராக ஆக்குகிறது (*காண்க. அ.ப. 7:52-53*). சில நேரங்களில் இதைப் பற்றி அவர் இறைவனிடமும் முறையிடுகிறார்: ''இந்த மக்களையெல்லாம் நானா கருத்தரித்தேன்? நானா இவர்களைப் பெற்றெடுத்தேன்? 'பாலுண்ணும் குழந்தையை ஏந்திச் செல்பவள் போன்று இவர்களை மார்போடு ஏந்தி, அவர்கள் மூதாதையருக்கு வாக்களித்திருந்த நாட்டிற்குக் கொண்டு செல்' என்று நீ எனக்குச் சொல்வானேன்? நான் தனியாக இம்மக்கள் அனைவரையும் கொண்டு செல்லவே முடியாது. எனக்கு மிகப்பெரும் பளு'' (*எண் 11:12-14*). ஒருநாள் தனது மக்களின் பிரமாணிக்கமின்மையால் அமிழ்ந்து திணறியவராய் (*எண் 20:10-12; சங் 106:33*), ஆழ்ந்த தனது விசுவாசத்தையும் சாந்தத்தையும் தளரவிட்டார் (*சீரா 45:4; எபி 11:24-29*). இந்தத் தவறுக்காக அவர் தண்டிக்கப்பட்டார் (*உப 3:26; 1:21*).

தான் ஓர் இறைவாக்கினர் என்ற காரணத்தினால் தன் மக்களோடு கொண்டிருக்கும் கூட்டொருமை உணர்வால் தூண்டப்பட்டு அவர்களுக்காக மோசே மன்றாடுகிறார். மன்றாடுபவரின் பங்கில் அவர் போற்றத்தக்கவராக உள்ளார். அவரது செபங்களின் மூலமாக, அதன் பகைவரின் மீதான வெற்றியானது இஸ்ராயேலுக்கு உறுதிப்படுத்தப்படுகிறது (*யாத் 17:9-13*); அதனுடைய பாவங்களுக்கான மன்னிப்பும் பெறப்படுகிறது (*32:11-14; எண் 14:13-20; 21:7-9*). இறைக்கோபத்தின் முன் ''உடைமதில் காவலராக நின்று'' அவர் தனது மக்களை மரணத்தினின்று காப்பாற்றுகிறார் (*சங் 106:23*). ''நீர் அவர்கள் பாவத்தை மன்னித்தருளும். இல்லையேல் நீர் எழுதிய உம் நூலிலிருந்து என் பெயரையும் நீக்கிவிடும்'' (*யாத் 32:31-32*). இந்த ஆர்வமிக்க அன்பின் மூலமாக, பாவிகளுக்காக மன்றாடி அவர்களது குற்றத்தைத் தன்மேல் ஏற்றுக்கொள்கின்ற துன்புறும் ஊழியனின் குணங்களை அவர் முன்குறித்துக் காட்டுகிறார் (*எசா 53:12*). எவருடைய வருகையைப் பற்றி முன்னுரைக்கின்றாரோ அந்தத் ''தன்னையொத்த இறைவாக்கினரையும்'' அவர் முன்குறித்துக் காட்டுகிறார் (*உப 18:15-18*). ஸ்தேவான் அந்த இறைவாக்கினை நினைவுகூர்வார் (*அ.ப. 7:37*). இயேசுவில் அதன் முழுநிறைவைப் பேதுரு அறிவிப்பார் (*3:22-23*). ஒப்பற்ற இந்த இறைவாக்கினருக்கு (*யோவா 1:21; 6:14*) இறைவாக்குகளில் மோசே சான்று பகர்கிறார் (*யோவா 5:47; லூக் 24:27*). இதன் காரணமாகவே உருமாற்றத்தின்போது இயேசுவின் பக்கத்தில் மோசே தோன்றுகிறார் (*லூக் 9:30-31*). ஆனால், புதிய மோசேயாகிய கிறிஸ்து சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் அதைக் கடந்து செல்கிறார் (*மத் 5:17*). ஏனெனில், பழைய சட்டத்தின் முடிவு அவரே (*உரோ 10:4*). மோசேயின் சட்டத்தில் அவரைப் பற்றி எழுதப்பட்டிருந்த அனைத்தையும் நிறைவேற்றிய பின்னர், மனிதருக்குத் தூய ஆவியை அளிப்பதற்கென, தனது தந்தையின் மூலமாக அவர் இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தார் (*லூக் 24:44-49*).

***4. மோசேயும் இறைவனுடைய மகிமையும்:*** இறைவனுடனான சந்திப்புகளுக்குப் பின்னர் மோசேயின் முகத்தை ஒளிர்வித்த *(யாத் 34:29-35)* மாட்சியானது இப்போது கிறிஸ்துவில் வெளிப்படுத்தப்படுகிறது *(யோவா 1:14)*. கணநேரத்தில் தோன்றி மறைவதாக இருந்தாலும் இப்பிரதிபலிப்பின் ஒளியினைப் பழைய உடன்படிக்கையின் மக்களால் தாங்க முடியவில்லை *(2 கொரி 3:7)*. எனவே, அவரது முகத்தை ஒரு திரையால் மோசே மூடிக்கொண்டார். பவுலைப் பொருத்தமட்டில் இத்திரையானது யூதருடைய குருட்டுத்தன்மையை அடையாளங்காட்டுகிறது. மோசேயின் செயல்களை வாசித்த அவர்கள் அவற்றைப் புரிந்து கொள்ளவுமில்லை. அவை முன்னுரைத்த கிறிஸ்துவிடம் மனம் மாறவுமில்லை *(2 கொரி 3:13-15)*. ஏனெனில், மோசேயில் உண்மையாகவே விசுவாசங் கொள்ளும் எவரும் கிறிஸ்துவிலும் விசுவாசங்கொள்கின்றனர் *(யோவா 5:45-47)*. அவரது மாட்சியானது மோசேயினுடையதைப் போன்று, அவரைத் தனது சாயலாக மாற்றுகின்ற ஆண்டவருடைய மாட்சியைப் பிரதிபலிக்கின்றது *(2 கொரி 3:18)*. விண்ணகத்தில், மீட்கப்பட்டோர் இறைவனுடைய ஊழியனாகிய மோசேயின் புகழ்ப்பாடலையும், மோசே முன் உருவமாக உணர்த்திய தனித்துவமிக்க மீட்பருடைய தனித்துவமிக்க பாஸ்காவின் புகழ்ப் பாடலாகிய செம்மறியின் புகழ்ப் பாடலையும் பாடுவர் *(திருவெளி 15:3; யாத் 15)*.

## மோசேயின் இருக்கை *(SEAT OF MOSES)*

மறைநூல் அறிஞரும் பரிசேயரும் மோசேயின் இருக்கையில் அமர்ந்திருப்பதாக இயேசு கூறுகிறார் *(மத் 23:2)*. இங்கு இருக்கை அதிகாரத்தை உருவகமாக உணர்த்தவல்லது. இஃது இவர்கள் மோசேயின் சட்டத்திற்குச் சரியான விளக்கம் அளிக்க தங்களுக்கு அதிகாரமும் ஆற்றலும் உண்டு என்று உரிமை பாராட்டியதைக் குறிக்கலாம். இங்கு இருக்கை நீதி வழங்கும் அதிகாரத்தை உருவகமாகவும், பல செபக் கூடங்களில் அமைக்கப்பட்டிருந்த கல்லினால் செய்யப்பட்ட இருக்கையையும் குறிக்கலாம். அதிகாரபூர்வமான சட்ட வல்லுநர்கள் இந்த இருக்கையிலிருந்து போதிப்பர். பரிசேயர் எனப்பட்ட பெரிய குழுவில் சிலரே மறைநூல் அறிஞர் ஆவர். மத்தேயு எல்லோரையும் சேர்த்துக் கண்டனம் செய்கிறார்.

## மோசேயின் விண்ணேற்பு *(MOSES, ASSUMPTION OF)*

*1.* ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு பழுதுற்ற கையெழுத்துப் பிரதியின் இலத்தீன் பதிப்பாகத் தோன்றிய ஒரு போலி யூதநூல் மோசேயின் ஏற்பாடு மற்றும் மோசேயின் விண்ணேற்பு என்னும் இரண்டு முந்தைய நூல்களின் இணைப்பாக இருக்கலாம். இணைக்கப்பட்ட நூலானது மோசேயின் ஏற்பாடு என்றே பெயரிடப் பட்டிருக்கலாம். ஏனெனில், மோசேயின் விண்ணேற்பு பற்றிய குறிப்பே இதில் இல்லை. ஆனால் மோசே சாதாரணமாகவே மரித்து, அடக்கம் செய்யப்பட வேண்டுமென அடிக்கடி குறிப்பிடப் பட்டுள்ளது *(1:15; 10:12-14; 11:8)*.

மோசேயின் விண்ணேற்பு என்ற ஒருநூல் ஒரு காலத்தில் இருந்ததாக ஓரிசன் உறுதியாகக் கூறுகின்றார். மோசேயின் உடலுக்காக மிக்கேலுக்கும், சாத்தானுக்கும் இடையே ஏற்பட்ட விவாதத்தினைப் பற்றிக் குறிப்பிடும் யூதா *9*, மோசேயின் விண்ணேற்றம் என்னும் சிறுநூலிலிருந்து எடுக்கப்பட்டதாகக் குறிப்பிடுகிறார். இதற்கும் சிறிது காலம் முந்திய அலக்சாந்திரிய கிளமெந்து யூதா *9*-ஐ மோசேயின் விண்ணேற்புடன் தொடர்புபடுத்துகிறார். உருமாற்ற மலையில் எலியாவோடு மோசே தோன்றியதும் *(மாற் 9:4இணை)*, திருவெளி *11:3*-இல் கூறப்படும் இரு விண்ணக சாட்சிகளை மோசே மற்றும் எலியாவாக அடையாளம் காட்டுவதும், இந்நூல் இருந்ததைக் குறிப்பிடாவிட்டாலும், அத்தகைய கதைகள் இருந்தமைக்குச் சான்று பகர்கின்றன. மோசேயோ எலியாவோ விண்ணகம் செல்லவில்லை என ராபிகள் மறுப்பது, இப்பாரம்பரியம் யூதர் சிலரிடையேயாவது

பரவி இருந்தது என்பதைச் சுட்டிக்காட்டு கிறது.

மோசேயின் ஏற்பாடு மற்றும் மோசே யின் விண்ணேற்பு என்னும் இரு நூல்க ளும், அங்கீகரிக்கப்படாத போலி நூல்க ளின் அட்டவணையில் சேர்க்கப்பட்டுள் ளன. இவ்விரு நூல்களும் தொடக்க காலத் திலேயே இணைக்கப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது. யூதா 9 விண்ணேற்பைப் பிரதிபலிப்பது மட்டுமல்லாமல் யூதா *16*, மோசே ஏற்பாட்டிலுள்ள *7:7.9*; *5:5*- ஆகியவற்றின் ஒருங்கிணைப்பாகத் தெரி கிறது. இரண்டு நூல்களும் இணைக்கப் பட்டபோது மோசேயின் விண்ணேற்பு என்னும் ஒரே பெயர் அவற்றிற்கு அளிக்கப் பட்டிருக்கலாம்.

**2. பொருளடக்கம்:** மோசே, மரணம் நெருங்குகையில், யோசுவாவிற்கு ஒரு பணியை அளிக்கிறார். நாட்களின் இறுதி யில் இஸ்ராயேலின் எதிர்காலம் முழுமை அடையும் என்றும், மனந்திரும்பும் காலத் தால் இது குறிக்கப்படும் என்றும் அவர் விரிவாக முன்னுரைக்கின்றார். முதலில், மக்கள் வாக்களிக்கப்பட்ட நாட்டை (கானான்) உரிமையாக்கிக் கொள்வர்; பின் னர் தமது தலைவர்களாலும் (நீதிபதிகள்), அரசர்களாலும் ஆளப்படுவர். அரசு இரண் டாகப் பிளவுபடும்; கிழக்கிலிருந்து வரும் ஓர் அரசனால் (நெபுகத்னேசர்) அவர்கள் அடிமைகளாக்கப்பட்டு, 77 ஆண்டுகள் அன்னிய நாட்டில் வாழ்வர். அவர்களில் ஒருவர் (தானியேல்) கடவுளின் இரக்கத்திற் காக செபம் செய்வார். கருணை கொண்ட ஓர் அரசன் (சைரசு) அவர்களை அவர்களது நாட்டிற்குத் திருப்பி அனுப்புவான். சிலர் திரும்புவர். ஆனால், பத்துக் குலத்தவர் புற இனத்தாருடனேயே தங்கிவிடுவர். தீய அரசர்கள் சிலரின் கீழ் (செலூக்கியர்) அழிவின் நாள் ஏற்படும்; குருக்கள் சிலர் (கிரேக்கமுறை விரும்பும் பெரிய குருக்கள் யாசோன், மெனலவு) புதிய கடவுள்களை நோக்கித் திரும்புவர். ஆனால், மக்க பேயரைப் பற்றி இங்குக் குறிப்பிடப்படவே இல்லை; அவர்களது வாரிசுகள், தீய குரு - அரசர்கள் (அசமோனியர்கள்) மற்றும் அடுத்து வரும் குரு அல்லாத அகந்தை மிக்க அரசன் (ஏரோது) ஆகியோரைப் பற்றி முன்னுரைக்கப்படுகிறது. அவனது *34* ஆண்டுகால ஆட்சி, அவனுடைய மகன்க ளின் ஆட்சியைவிட நீண்டதாக இருக்கும். அடுத்து மேற்கிலிருந்து ஒரு வல்லமைமிக்க அரசன் தோன்றி அவர்களை வெல்வான்; கோவிலின் ஒரு பகுதியை எரித்து அவர்க ளில் சிலரையும் சிலுவையில் அறைவான் (சீரியா ஆளுநனாகிய வாரிசு என்பவன் கி.மு. 4-இல் தோன்றிய ஒரு புரட்சியை அடக்கினான்).

இது முதல், ஆட்களையும், நிகழ்ச்சி களையும் கண்டுபிடிப்பது இயலாத ஒன் றாக உள்ளது; ஆசிரியர் (மோசே பெய ரால்) தனது, காலத்திற்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றியும் முன்னுரைக்கத் தொடங்குகின்றார். இவ்வாறு, அறியப்பட முடியாத பக்தியற்ற ஆட்சியாளர்கள், தங் களை நேர்மையானவர்கள் என்று கூறிக் கொண்டு ஆட்சி புரிவார்கள். இதுவரை நாட்டில் ஏற்படாத பழியும், கோபமும் யூதர்கள் மேல் எழும் (காண்க. தானி *12:1*). உலகிலுள்ள அரசர்க்கெல்லாம் அரசன் அவர்களைத் துன்பப்படுத்தி, சித்ரவதை புரிவான். தாக்ஸோ எனும் லேவியன் ஒருவன் கடவுளின் நீதிமுறைகளை மீற மறுப்பான்; ஆனால், தனது ஏழு மகன்க ளுடன் நோன்பிருந்து, பின்னர் மரணத்தை எதிர்பார்த்து ஒரு குகைக்குள் செல்வான். இப்படிச் செய்வதால் ஆண்டவர்முன் அவர் களுக்காகப் பழிவாங்கப்படும் என்று எதிர் பார்த்தனர். இத்துன்ப காலம் முடிந்த பின்னர், இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள, ஒரே வெளிப்பாட்டுப் பகுதியாகிய மூன்று வரிகளுடன் அமைந்த பத்துப் பல்லவி களைக் கொண்ட பாடல் பின்தொடரும்.

உலகை ஆளுகின்ற பேயானது வான தூதர் ஒருவரால் (மிக்கேல்) அடக்கப்படும் என்றும், அதன் பின்னர்த் துன்பமே இராது என்றும் முன்னுரைக்கப்படுகிறது. உடந்தை யாயிருப்பதன் மூலம் துன்பத்திற்கெல்லாம் காரணமாய் இருப்பது இவனே. தன்

மக்களைக் காப்பாற்ற கடவுளே நேரடியாக ஈடுபடுவார். பெரிய நிலநடுக்கங்கள் ஏற்படும்; சூரியன் இருளடையும்; நிலா இரத்தமாக மாறும்; விண்மீன்களின் பாதைகள் அலைக்கழிக்கப்படும்; கடல் மற்றும் ஆறுகளில் உள்ள நீர் அனைத்தும் மறைந்துவிடும்; புறவினத்தாரின் சிலைகளைக் கடவுள் அழித்துவிடுவார்; இஸ்ராயேல், கழுகினுடைய (உரோமை) இறக்கைகளின் மீதும், கழுத்தின்மீதும் அமரும்; பின்னர், கடவுள் தான் உறையும் விண்ணகத்திற்கு இஸ்ராயேலை உயர்த்துவார்; இஸ்ராயேல் உலகிலுள்ள (கேகன்னா), தனது எதிரிகளைக் கீழ்நோக்கிப் பார்த்து மகிழ்வர்.

மோசேயின் இறப்பிற்கு 1,750 ஆண்டுகளுக்குப் பிறகு, (கி.பி. 75-107) இவை அனைத்தும் நிறைவடையும் என யோசுவாவிடம் கூறப்படுகிறது. இவற்றைக் கேட்டு, யோசுவா துயரப்படுகிறார்; ஆயினும், கடவுளின் பரிபாலிப்புக்கு ஏற்ப அனைத்தும் நிறைவேறும் என மோசே உறுதியளிக்கிறார் (இவ்வாக்கியம் இடையிடையே நின்றுவிடுகிறது).

**3. முக்கிய பிரச்சனைகள்:**

***அ) வாசகம்:*** இலத்தீன் பகுதியானது முழுமையற்றதும், குழப்பமானதுமாக உள்ளது. மொழிபெயர்ப்பாளர்கள் பல்வேறு திருத்தங்களைச் சார்ந்து உள்ளனர். முடிவுரை காணப்படவில்லை. இலத்தீனின் மூலமாகிய கிரேக்கப் பகுதி, எபிரேய மூலத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கலாம். சில சிறு கருத்துக்களைத் தவிர்த்து, விண்ணேற்றம் பற்றி ஓரிசன் கூறிய எந்தப் பகுதியும் தற்சமயம் வரை பாதுகாக்கப்படவில்லை.

***ஆ) காலம்:*** இந்நூலானது 2-ஆம் பாரூக்கு நூலுக்கு மூலமாய் இருக்குமேயானால், இதனுடைய காலம் கி.பி. முதலாம் நூற்றாண்டின் இறுதிக்குப் பிந்தியதாக இருக்க முடியாது. இவற்றின் நிறைவு மோசேயின் இறப்பிற்கு 1,750 ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி. 75-107-இல் ஏற்படும் என்னும் கணிப்பின்படியும் இஃது உறுதிப்படுத்தப்படுகிறது. ஆயினும், இதற்கு முந்தைய எல்லைகளும் அமைக்கப்படலாம். ஏரோதினுடைய 34-ஆண்டு ஆட்சி அவனுடைய மகன்களின் தனிப்பட்ட ஆட்சியைவிட நீண்டதாக இருக்கும் என்று முன்னுரைக்கப்பட்டது. ஆனால், இஃது ஒரு தவறு. அர்க்கெலா கி.பி. 6-இல் நீக்கப்பட்டு சிறிது காலமே ஆட்சி புரிந்தான்; ஆனால், பிலிப்பு 37 ஆண்டுகளும், அந்திப்பா 43 ஆண்டுகளும் ஆட்சிபுரிந்தனர். எனவே, இப்பகுதி ஏரோதின் மகன்கள் அதிக காலம் ஆட்சி புரிவதற்கு முன்னரோ, கி.பி. 30-க்கு முன்னரோ எழுதப்பட்டது. அவ்வாறாயின், இஃது இயேசுவின் காலத்தில் எழுதப்பட்டு இருக்க வேண்டும்.

***இ) ஆசிரியர்:*** இந்நூலின் ஆசிரியர் கடவுளுக்கும், இஸ்ராயேலுக்கும், ஆலயத்திற்கும் சட்டத்திற்கும் அவரது தலைவனாகிய மோசேவுக்குப் பிரமாணிக்கமுள்ள பாலஸ்தீன யூதனாக இருக்கக்கூடும். இவர் ஒரு சதுசேயன் என்பதற்கு ஆதாரம் எதுவுமில்லை; உரோமை ஆட்சியை வெறுத்தாலும், தீவிரவாதிகளைப்போலப் போராட்டத்திற்கு உடன்படவில்லை; ஆலயத்தின் மீது அவருக்கு உள்ள பற்று அவர் எஸ்ஸேனியக் குழுவைச் சேர்ந்தவரல்லர் என்று சுட்டுகிறது. இவர் ஓர் அமைதியான பரிசேயன் எனப்படுகிறார். ஆனால், அவரது வெளிப்பாட்டுப் பகுதி அவர் பரிசேயனல்லர் என உணர்த்துகிறது. இன்னும் சொல்லப்போனால், இவர் எந்தப் பொதுவான குழுவிலும் இணையாத, ஒரு வெளிப்பாட்டு யூதன் ஆவார்.

***ஈ) தாக்ஸோ:*** மர்மமாக விளங்கும் தாக்ஸோ என்னும் பெயர், ஒரு குழூஉக் குறி என சிலரால் கருதப்படுகிறது. இப்பெயரானது மக்கபேயர் காலத்து மறைசாட்சியான எலயாசாரையும், மக்கபேயரின் தந்தையும் அசமோனியரின் மூதாதையருமான மத்தத்தியாவையும் குறிப்பிடுவதாகக் கூறப்படுகிறது. தாக்ஸோ என்பவர் ஆசிரியரின் காலத்தில் வாழ்ந்த அறிய இயலாத ஒருவரைக் குறிப்பதாக, ஒரு கருத்து கூறுகிறது. காலத்தின் நிறைவிற்கு முன்னர்

வரப்போகும் துன்பங்களைப் பொறுமை யுடன் ஏற்கவிருக்கும் நேர்மையான யூதர் களைக் குறிக்கும் சின்னமாக தாக்ஸோவும் அவரது பிள்ளைகளும் இருக்க முடியுமா? இஃது உண்மையாயின் தாக்ஸோ பற்றிய பகுதி மக்கபேயர் காலத்தைக் குறிப்பதாக வும் (அதி 5-6), அதிகாரம் 6-இல் அசமோ னியர் பற்றிக் குறிப்பிடுவதற்கு முன்னர் இணைக்கப்பட வேண்டும் என்றும் கூறும் சார்லசின் கருதுகோள் தேவையற்றது.

**உ) மோசே:** உலக ஆரம்பத்திலிருந்தே, கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களான இஸ்ராயேலருடன் செய்யப்பட்ட உடன் படிக்கையின் இடைநிலையாளராக இருக்க, மோசே அங்கீகரிக்கப்பட்டிருந்தார்; ஏனெ னில் இவர்களுக்காகவே உலகம் படைக்கப் பட்டது. இறைவாக்கினராக இருந்தமை யால் வருங்காலத்தைப் பற்றி அறிவதற்கு வானதூதரின் செய்தியோ, விண்ணகப் பயணமோ அவருக்குத் தேவைப்பட வில்லை. அவரைப் புதைப்பதற்கு ஏற்ற இடம் எதுவுமில்லை; உலகம் முழுவதுமே அவரது கல்லறையாக இருக்கும்.

**ஊ. இறுதிக்கால இயல்:** திருவெளிப் பாட்டு நம்பிக்கையானது தானி *12:1*-ஐ அடிப்படையாகக் கொண்டது. உலகம் இதுவரை கண்டிராத அளவு பழிவாங்கும் காலம் ஒன்று இருக்கும். மீட்பர் இருக்க மாட்டார்; மாறாக, ஒரு வானதூதர் (மிக் கேல்) பேயினை வெற்றி கொள்வார். கடவுள் புறஇனத்தாரைத் தண்டிப்பார். தானியேலில் உள்ளது போல, நேர்மை யாளர்கள் முடிவற்ற வான்வெளியை அனு பவிப்பார்கள் (அவர்களது எதிர்கால இல் லம் மண்ணில் இருக்காது); தீயவர்கள் முடிவில்லாக் கேகன்னாவில் துன்புறுவர்.

**மோசேரா** (MOSERAH - பிணைப்பு, கட்டுப் பாடு)

இஸ்ராயேல் மக்கள் எகிப்திலிருந்து வரும் வழியில் பெயரோத்-பெனே- யாக்கானைக் கடந்து மோசேராவுக்கு வந்து தங்கினர் (உப *10:6*). இங்கே ஆரோன் இறந்து அடக்கம் செய்யப்பட்டார். அவர் புதல்வனாகிய எலயாசார் அவருக்குப் பதி லாகத் தலைமைக்குரு ஆனார். எண் *30:30-31*, இவ்விடத்தை மோசரோத்து என்று குறிப்பிடுகிறது. எண் *30:38* முந்தைய திலிருந்து வேறுபட்ட பாரம்பரியத்தைக் கொடுக்கிறது. இதன்படி ஆரோன் ஓர் மலையில் இறந்து அடக்கம் செய்யப்படுகி றார். *30:30*-இன்படி இஸ்ராயேலர் மோச ரோத்திலிருந்து பெயரோத்-பெனே- யாக்கானுக்குச் செல்கின்றனர்.

**மோட்சா** (MOZA - சூரிய உதயம்)

*1.* இவர் யூதா குலத்தினர். காலேபுடைய வைப்பாட்டி ஏப்பாகு வழியாகப் பிறந்தவர் *(1 நாள் 2:46)*.

*2.* இவர் யோனத்தான் வழியாக சவுலின் வழி வந்தவர். சிம்ரியின் மகனும் பினயா வின் தந்தையும் ஆவர் *(1 நாள் 8:36-37; 9:42-43)*.

**மோதயின்** (MODEIN - அறிவிப்பவர்கள்)

இஃது ஆரம்பகால மக்கபேயத் தலைவர் களின் இருப்பிடமும், அவர்கள் புதைக்கப்பட்ட இடமுமாகும்.

கி.மு. 167-இல் யூதகுரு மத்தத்தியா மோதயினிலிருந்து நான்காம் அந்தியோக்கு மன்னனின் கிரேக்கக் கலாச்சாரத் திணிப்பை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார்; மற்ற மக்களையும் கிளர்ச்சி செய்யத் தூண்டினார் *(1 மக் 2:1-28)*. இக்கிளர்ச்சியின் விளைவாக யூத மக்கள் மத, சமூக சுதந்தரத்தைப் பெற்றனர். இப்போராட்டத்தின்போது மோதயின், வீரர்களுக்குப் பாதுகாப்பிட மாகவும், எதிரிகளை எதிர்கொள்ளும் இட மாகவும் அமைந்தது *(1 மக் 16:4-10; 2 மக் 13:14-17)*. இத்தகைய புகழ் வாய்ந்த இந்த இடம் வீரமிக்க மத்தத்தியாவையும், அவர்தம் புதல்வரையும் அடக்கம் செய்ய சாலச்சிறந்தது எனக்கருதி யூதமக்கள் அவர் களை இங்கு அடக்கம் செய்தனர் *(1மக் 2:70; 9:18-21; 13:25-26)*. இந்த இடத்திலே சீமோன் ஞாபகச் சின்னமாக குடும்பக் கல்லறை ஒன்றைக் கட்டி எழுப்பினார் *(1 மக் 13:27-30)*.

மேலும், ராபி எலயாசர் தோன்றியது இவ்விடத்தில்தான். இது தற்போதைய ராஸ் மேடியேவாக இருக்கலாம். இஃது எருசலேமுக்கு வடமேற்கில் 29 கி.மீ. தொலைவிலும், லோதுக்கு (லித்தாவுக்கு)க் கிழக்கில் 6 கி.மீ. தொலைவிலும் மலைப் பகுதியில் உள்ளது. இது பழைய எருசலேம் - யாப்பா சாலையின் மேலே அமைந்துள்ளது.

**மோரசேத்து** (MORESHETH - *உடைமை)*

இஃது இறைவாக்கினர் மீக்காவின் ஊர் *(எரே 26:18; மீக் 1:1)*. இவரது இறைவாக்கில் சொல்லாடல் பகுதியில் வரும் நகரங்களில் ஒன்று *(1:14)*. இது பொதுவாகத் தெல் எச்-யூதேயிதே ஆக அடையாளம் காட்டப்படும். இது பெயித்-இப்ரினுக்கு வடக்கு-வடகிழக்கில் 2.5 கி.மீ. தொலைவிலும், இலாக்கீசுக்கு வடகிழக்கில் 9.7 கி.மீ. தொலைவிலும் உள்ளது. 2 நாள் 11:8-இல் குறிக்கப்படும் காத்து இந்நகரமாக இருக்கலாம். உலோகக் காலத்தில் தோன்றிய மோரசேத்து பின்பு புறக்கணிக்கப்பட்டு கி.மு. 750-இல் மீண்டும் குடியேறப்பட்டது.

**மோரசேத்துக் காத்து** (MORESHETH - GATH - *காத்தின் உடைமை)*

இது மீக்காபின் புலம்பலில் பேரழிவை எதிர்கொள்ளப்போகும் நகரங்களில் ஒன்றாகக் குறிக்கப்படுகிறது *(மீக் 1:14)*. காண்க. மோரசேத்து.

**மோரியா** (MORIAH)

1. பெயேர்செபாவிலிருந்து மூன்று நாள் பயணம் செய்து அடையும் இடம் மோரியா மலைநாடு *(ஆதி 22:2)*. கடவுள் ஆபிரகாமை இம்மலைமீது ஈசாக்கைப் பலி கொடுக்கக் கட்டளையிடுகின்றார். அவரும் அப்படியே செய்தார். ஆபிரகாமின் விசுவாசத்தைக் கண்ட இறைவன் ஈசாக்கிற்குப் பதில் ஓர் ஆட்டுக்கிடாயைப் பலியாகக் கொடுக்கக் கட்டளையிடுகின்றார்.

இந்த இடத்தை அடையாளம் காட்டுவது கடினம். மோரியா என்ற சொல் ''பார்த்தல்'' அல்லது ''கொடுத்தல்'' என்ற பொருளுடைய வேர்ச்சொல்லிலிருந்து வருவதாகத் தெரிகிறது. ஆபிரகாம் இந்த இடத்திற்கு ''ஆண்டவர் பார்த்துக் கொள்வார்'' என்ற பொருளுடைய ''யாவே ஈரே'' என்று பெயரிடுகிறார் *(22:14)*. வுல்கத்தா வாசகம் மோரிய என்ற பெயருக்குக் ''காட்சியின் நிலம்'' என்று விளக்கம் அளிக்கிறது.

2. சாலமோன் அரசர் எருசலேமின் மலையுச்சியில் தம் தந்தை தாவீதுக்கு, ஆண்டவரால் காட்சியில் காண்பிக்கப்பட்ட மோரியா மலையில், ஆண்டவருக்கு ஆலயம் கட்டினார் *(2 நாள் 3:1)*. தாவீதே அந்த இடத்தை எபூசியர் ஓர்னானிடமிருந்து வாங்கியிருந்தார் *(2 நாள் 21:16-26; 2 சாமு 24:16-25)*.

**மோரே** (MOREH - *போதனை இடம், சோதிடம் பார்க்கும் இடம்)*

1. இது செக்கேமிற்கு அருகில் ஒரு புனித கருவாலி மரமுள்ள இடம். இங்கே ஆபிரகாம் தனக்குத் தோன்றிய ஆண்டவருக்கு ஒரு பீடத்தைக் கட்டினார் *(ஆதி 12:6-8)*. இந்த இடத்திலே ஆபிரகாம் இம்மரத்தை ஊன்றாத காரணத்தால் இது கானானியர்களின் வழிபாட்டு இடமாக இருந்திருக்கலாம் என எண்ணப்படுகிறது. யாக்கோபு அன்னிய சிலைகளைச் செக்கேம் நகருக்கு வெளியே இருந்த ஒரு கருவாலிமரத்தின் கீழே புதைத்தார் *(35:4)*. உப 11:30-இல் இந்த இடம் கெரிசிம், எபால் மலைகளுக்கு அருகில் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. செக்கேமில் யோசுவா ஆண்டவரின் சட்டங்களைக் கூறியபின் ஒரு பெரியகல்லை எடுத்துப் புனித இடத்திற்கு அருகிலிருந்த கருவாலி மரத்தின் கீழே அதை நாட்டினார் *(யோசு 24:26)*.

2. இது மிதியானியர் பாளையம் இறங்கியிருந்த பள்ளத்தாக்கிற்கு அருகிலிருந்த குன்று *(நீதி 7:1)*. இதுதான் இசிரியேல் பள்ளத்தாக்காகும். இது தற்போதைய ஏபெல் தாகி குன்றாக இருக்கலாம்.

**மோலதா** (MOLADAH - *பிறப்பு, சந்ததி)*

இது தெற்கு யூதேயாவிலுள்ள சிமியோனுக்குரிய நகரமாகும் *(யோசு 15:26;*

*19:2)*. இப்பெயரானது, பெண்கள் தமக்குப் பிள்ளைப்பேறு கிடைப்பதற்காக வேண்டும் ஒரு திருத்தலத்தைக் குறிக்கிறது. எரகுமவேலின் சந்ததியினர் ஒருவர் இப்பெயரைப் பெற்றிருந்ததால் இப்பகுதி எரகுமவேலியர்களுக்குக் கொடுக்கப்பட்ட இடமாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது *(1 நாள் 2:29; 1 சாமு 27:10)*.

அடிமைத்தனத்திற்குப்பின் திரும்பி வந்த யூதரில் சிலர் மோலதாவுக்கு வந்து தங்கினர் *(நெகே 11:26)*. பிற்காலத்தில் எதோமியர்கள் இந்நகரைக் கைப்பற்றினர். இது பெயேர்செபாவுக்குக் கிழக்கு - வடகிழக்கில் 12 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலக் கிர்பெத் ஏல்-வாட்டன் என்றும், பெயேர்செபாவுக்குக் கிழக்கில் 24 கி.மீ. தொலைவிலுள்ள தெல் ஏல்-மில்கா என்றும் அடையாளம் காட்டப்படுகிறது.

**மோலிது** (MOLID - *பெற்றெடுப்பவர்)*

இவர் யூதா குலத்தினர். இவரது தந்தை பெயர் அபிசூர். தாயின் பெயர் அபிகயில் *(1 நாள் 2:29)*.

**மோலேக்கு, மோலோக்கு** (MOLECH, MOLOCH - *அவமானம்)*

இஃது அரசன் என்ற பொருளில் ஒரு கடவுளுக்கு அளிக்கப்பட்ட பெயராகும்; எபிரேய வாசகத்தில் வேண்டுமென்றே ஓர் உயிரெழுத்தை மாற்றி அவமானம் என்ற பொருள்படும் சொல்லாக மாற்றப்பட்டது. இதன் வேர்ச்சொல், பொருத்தனையாக அளிக்கப்படும் பலியைக் குறித்தது. பிற்காலத்தில்தான் இச்சொல் ஒரு கடவுளின் பெயராகப் பொருள் கொள்ளப்பட்டது. யாவே உட்பட்ட பல கடவுள்கள், அரசன் என்ற பொருளில், மெலேக்கு என்று அழைக்கப்பட்டனர். மோலேக்கு, அம்மோனியக் கடவுளான மில்கோமோடு ஒற்றுமை கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இரண்டும், *2 அர 23:10. 13*-இல், தனித் தனியாகக் கூறப்படுகின்றன.

குழந்தைகளைப் பலியிடுவது சில சமயங்களில் இஸ்ராயேலிலும் யூதாவிலும், குறிப்பாக எருசலேமுக்கு அருகிலுள்ள இன்னோம் பள்ளத்தாக்கில், கடைப் பிடிக்கப்பட்டது *(2 நாள் 28:3; 33:6; எரே 7:31; 19:5-6)*. சில சமயங்களில் இப்பழக்கம் மோலேக்கோடு தொடர்புபடுத்தப்படுகிறது *(2 அர 23:10; எரே 32:35)*. இப்பழக்கத்தை ஐந்நூல் வன்மையாகக் கண்டித்துத் தடை செய்கிறது *(லேவி 18:21; 20:2-5)*.

சில வாசகங்கள் மோலேக்குக்குப் பதிலாக மோலோக்கு என்று கொண்டிருக்கின்றன *(ஆமோ 5:26; அ.ப. 7:43)*.

**மோலோக்கு** *(*MOLOCH *)*

காண்க. மோலேக்கு.

**மோவாதியா** (MOADIAH - *யாவே வாக்களிக்கிறார்)*

இது பெரிய குரு யோயாக்கீம் காலத்தில் வாழ்ந்த ஒரு குருகுலக் குடும்பம் *(நெகே 12:17)*.

**மோவாபு** (MOAB - *தந்தையின் வித்து)*

இது சாக்கடலுக்குக் கிழக்கிலும், அர்னோன் ஆற்றுக்குத் தெற்கிலும் அமைந்திருந்த நாடு. பழைய ஏற்பாடு மட்டுமே இந்த நாட்டைப் பற்றிய தகவலைத் தருகிறது. நெல்சன் குளுயெக்கு இந்தப் பகுதியில் புதைபொருள் ஆராய்ச்சி செய்தார். அதன்படி கி.மு. 23 முதல் 20-ஆம் நூற்றாண்டுகள் வரை இப்பகுதியில் நாகரிகம் சிறந்து விளங்கியது. ஆனால், இது கி.மு. 1900-இல் திடீரென அழிந்தது. காரணம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் மறுபடியும் இங்கே மக்கள் நாகரிகத்தை வளர்த்தனர். இஃது இஸ்ராயேலர்களின் அரசர் காலம் வரை நிலைத்தது. இஸ்ராயேலருக்கு முன்னரே இவர்கள் மன்னர் ஆட்சியைக் கொண்டிருந்தனர். இவர்களது மொழி எபிரேய மொழியை ஒத்தது. மேலும் மோவாபியரும், எபிரேயரும் ஒரே பண்பாட்டைப் பெற்றிருந்தனர். கி.மு. 13-ஆம் நூற்றாண்டிலே மோவாபியர் அரண்களைக் கட்டியிருந்தனர். எனவே, அவர்கள் இஸ்ராயேலரைத் தங்கள் நாட்டின் வழியாகச் செல்ல அனுமதிக்கவில்லை. இவர்

களது சமயம் பற்றி அதிகமாக அறியப்பட வில்லை. இவர்களது தலைமைத் தெய்வம் கெமோசு ஆகும். இந்த நாடு இரண்டாம் இராமசேசு பிடித்த ஆசிய நாடுகளில் ஒன்றாகும் (கி.மு. 1301 - 1234). அசீரிய மூன்றாம் திகிலத்து பிலேசர் (கி.பி. 745 - 727) தனக்குக் கப்பம் கட்டிய அரசர்களுள் மோவாபின் சலமானைக் கூறுகிறார். சார் கோன் மன்னர் (கி.மு. 721-705) மோவா பிடம் கப்பம் வசூலித்தார். மேலும் சனகெரிபு, ஏசர்க்கத்தோன், அசூர்பானிப் பால் போன்ற அரசர்களும் மோவாபியரிட மிருந்து கப்பம் வசூலித்தனர்.

ஆதி ஆகமம் மோவாபியர் லோத்தும் அவரது மூத்த மகளும் கூடிப் பிறந்தவர் எனக்கூறுகிறது (ஆதி 19:37). இக்கதை மோவாபியருக்கும் இஸ்ராயேலர்களுக்கும் இடையிலுள்ள உறவைச் சுட்டுகிறது. ஏதோமிய அரசர் அட்டவணை மோவாபு நாட்டிலே மிதியானியர் தோற்கடிக்கப்பட்ட தாகக் கூறுகிறது (ஆதி 36:35). எண்ணிக்கை நூல் இஸ்ராயேலர் வருமுன் மோவாபிய ரின் வரலாறு பற்றிக் கூறுகிறது (எண் 21:13-19). மோவாபியர் அர்னோனுக்கு வடக்கிலுள்ள பகுதிக்கு உரிமை கொண்டா டினர். ஆனால், சீகோனின் எமோரிய அரசால் ஆற்றுக்குத் தெற்கே விரட்டப்பட்ட னர். இங்கே குறிப்பிடப்படும் பாடல் இப்போரில் மோவாபியரின் தோல்வியைச் சுட்டுகிறது. இஸ்ராயேலர் எமோரிய அரசை வெற்றி கொண்டபோது, அர்னோ னுக்கு வடக்கிலுள்ள பகுதிக்கு உரிமை கொண்டாடினர். இப்பகுதியின் உரிமை இஸ்ராயேலருக்கும் மோவாபியருக்கு மிடையே ஒரு தொடர் பிரச்சனையாயிற்று. இதில் இஸ்ராயேலரே பெரிதும் வெற்றி பெற்றனர். மோவாபு இஸராயேலைவிடச் சிறிய நாடு. இஸ்ராயேலர் தங்களது படையை ஒன்று கூட்ட முடியாதபோது தான் மோவாபியர் வெற்றி பெற்றனர். பாலாக்கு அரசன் இஸ்ராயேலருக்கு எதி ராகக் குறி சொல்லும்படி பிலயாமிடம் வேண்டுகிறான் (எண் 22-24). எண் 25, இஸ்ராயேலர் மோவாபிய பெயோரின் பாகாலை வழிபட்டதை எடுத்துக்கூறு கிறது. இது மோவாபியருக்கு எதிரான பழிவாங்கும் போர் பற்றிய கதைக்கு வாய்ப்பாயிற்று (எண் 31). இது, உப 2:9-இல் குறிக்கப்படும் நட்பு மனப்பான் மைக்கு மாறாக உள்ளது. இது யாவேயால் உறுதி செய்யப்பட்ட பகுதிக்கு மோவாபிய ரின் உரிமையையும், இஸ்ராயேலருக்கும் மோவாபியருக்குமிடையேயுள்ள உறவை யும் கூறுகிறது. உப 2:10 எமியர் மோவா பின் தொடக்ககாலக் குடிகளாவர் என்று கூறுகிறது. உப 23:4-இன் சட்டம் நட்புற வைக் காட்டவில்லை. இச்சட்டம் மோவா பியப் பெண்களை இஸ்ராயேலர் மணக்கக் கூடாது என்றும், இஸ்ராயேலர் சமூகத்துக் குள் மோவாபியரை ஏற்றுக்கொள்ளக் கூடாது என்றும் கூறுகிறது. இது பாலாக் கோடு கொண்ட பகைமையை நினைவுகூர் கிறது. மோசேயின் இறப்பும் அடக்கமும் மோவாபில் நிகழ்ந்தன (உப 34). நீதி 3:11-30, மோவாபிய எக்லோனால் பென்யா மின் இனத்தவர் தோற்கடிக்கப்பட்டதை யும், எகூதால் மீட்கப்பட்டதையும் கூறு கிறது. சீகோனின் எமோரிய அரசை இஸ்ரா யேலர் வெற்றி கொண்டதை அடிப்படை யாகக் கொண்டு, அர்னோனுக்கு வடக்கி லுள்ள பகுதிக்கு உரிமை கொண்டாடும் இப்தாகுவின் பேச்சு வினோதமாகவுள்ளது (நீதி 11:15-27). சவுல் மோவாபியரை வெற்றி கொண்டார். ஆனால் விபரங்கள் கொடுக்கப்படவில்லை (1 சாமு 14:47). தாவீதுக்கும் மோவாபிய மன்னனுக்கு மிடையேயுள்ள நட்புறவு ஓரளவு மலைப் பைக் கொடுக்கிறது (1 சாமு 23:3தொ). ரூத்தின் கதை, தாவீதின் குடும்பம் மோவா பியத் தொடர்புடையது என்று காட்டுகிறது. ஆனால் இந்த உறவின் தரம், இக்கதை சுட்டுவதைவிட, அதிகமாக இருக்கலாம். தாவீது அரசனானபின் இந்த உறவு நீடிக்க வில்லை. இதற்குக் காரணம் தெரிய வில்லை. ஏனெனில், தாவீது மோவாபைப் பயங்கரமான முறையில் வெற்றி கொண்டு தனது அடிமை நாடாக மாற்றினார் (2 சாமு 8:2). மோவாபின் மேல் இஸ்ராயேலர் கொண்டிருந்த ஆதிக்கம் ஆகாபின் ஆட்சி

வரை நீடித்தது. பழைய ஏற்பாடும் *(2 அர 1:1; 3:4*தொ), மோவாபுக்கல்லும் கூறுவது போல் மேசாவின் கிளர்ச்சி வெற்றியடைந்தது. இவற்றிலிருந்து வட அரசாகிய இஸ்ராயேல் அல்லாமல், யூதாதான் மோவாபியர் மேல் ஆதிக்கம் செலுத்தியது என்பது தெரிகிறது. யோவாசு காலத்தில் மோவாபிய கொள்ளைக் கூட்டத்தினர் இஸ்ராயேலையும் *(2 அர 13:20)*, அனேகமாக நெபுகத்னேசரின் கூட்டாளியாக, யோயாக்கிம் காலத்தில் யூதாவையும் *(24:2)* கொள்ளையடித்தனர். யோசபாத்தின் ஆட்சிக்காலத்தில் *(2 நாள் 20)* மோவாபியர் யூதாவின் மேலும் மற்ற நாடுகளின் மேலும் படையெடுத்தனர்.

எசா *15-16;* எரே *48*-இல் வரும் மோவாபுக்கு எதிரான வாக்குகள் பழைய ஏற்பாட்டிலேயே மிகவும் தெளிவில்லாத பகுதிகளாகும். மோவாபின் அழிவு மிகைப்படுத்தப்படும்; மிகவும் கடுமையாகவும் விவரிக்கப்படுகிறது; வென்றவர் பெயர் கொடுக்கப்படவில்லை. அவர் இஸ்ராயேல் அல்லர். ஆமோ *2:1* தொ ஏதோமுக்கு எதிரான போரில் மோவாபியர் செய்த காட்டுமிராண்டித்தனத்தைக் கூறுகிறது. எரேமியா மோவாபின் வீழ்ச்சியை முன்னறிவிக்கிறார் *(எரே 9:25; 25:21)*. பாபிலோனுக்கு எதிரான கிளர்ச்சியில் சேர வேண்டாம் என்று எரேமியா எச்சரித்த நாடுகளில் மோவாபும் ஒன்று *(27:3)*. இந்நாடுகளின் அரசர்கள் செதேக்கியாவின் ஆட்சிக்காலத்தில் எருசலேமில் தங்கள் தூதுவர்களைக் கொண்டிருந்தனர். நெபுகத்னேசருக்கு எதிரான கிளர்ச்சியில் யூதாவோடு மோவாபு சேர்ந்து கொண்டதற்குச் சான்றுகள் இல்லை. செப் *2:8*தொ, தோல்வியுற்ற யூதாவைப் பழித்துரைத்ததற்காக மோவாபை அச்சுறுத்துகிறது. இஃது இந்தக் கிளர்ச்சியில் மோவாபு சேரவில்லை என்று சுட்டுகிறது. எசே *25:8*தொ, யூதாவின் அண்டை நாடுகளுடன் சேர்ந்து மோவாபு தோல்வியுற்ற யூதாவைக் கொள்ளை அடித்தது, அதன் ஒரு பகுதியை அபகரித்துக் கொண்டது என்று கூறுகிறது. யூதாவின் வீழ்ச்சிக்குப் பின் மோவாபு வரலாற்றில் தோன்றவில்லை. ஒருவேளை, ஏதோமைப் போன்று மோவாபும் அராபியாவிலிருந்து வந்த நபத்தேயக் குடியேற்றத்தில் மூழ்கிப் போயிருக்கலாம்.

**மோவாபுக்கல்** *(*MOABITE STONE*)*

இது மோவாபின் அரசனான 'மேசா' இஸ்ராயேல் மீது தான் கொண்ட வெற்றியைப் பொறித்து வைத்துள்ள *112* x *71* x *36* செ.மீ. அளவுள்ள பசுமை நிறத் தீக்கல்.

இக்கல் *1868*-இல் கிளெயின் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டாலும் அவர் அதனை அப்பொழுது எடுக்காததால் அங்கு வாழ்ந்த மக்கள் அதனை உடைத்து விட்டனர். ஆனால், அது மீண்டும் ஒன்று சேர்க்கப்பட்டு அதன் எழுத்துக்கள் படிக்கப்பட்டன.

இதில் உள்ள எழுத்துக்கள் மோவாபியரின் மொழியாகக் கருதப்படுகிறது. அஃது எபிரேய மொழியையொத்ததாக இருக்கிறது. இதில் பொறித்துள்ளவை இஸ்ராயேலின் மீது தாங்கள் கொண்ட வெற்றிக்காக கெமோசு எனும் கடவுளுக்கு நன்றி செலுத்துவதாக அமைந்துள்ளன. *1* அர *16*-இல் கூறப்பட்டிருப்பது போல், அவர்களின் தெய்வம் அவர்கள் மேல் கொண்ட கோபத்தினால் ஓம்ரியினால் தண்டிக்கப்பட்டு துயரப்படுகிறார்கள். ஆனால், மீண்டும் மேசா எனும் மோவாபிய அரசனால் அவர்கள் வெற்றி பெறுகிறார்கள்.

இவ்வாறு இந்தக் கல் அக்கால மதச் சடங்கு, மக்கள் பழக்கவழக்கங்கள் பற்றிய பல உண்மைகளை எடுத்துரைக்கிறது.

**மோவாபு நகர்** *(*CITY OF MOAB*)*

பிலயாமைச் சந்திக்க பாலாக்கு அரசன் சென்ற இடம். இது பாலாக்கு நாட்டின் எல்லையில், அர்னோன் ஆற்றை ஒட்டி அமைந்திருந்தது *(எண் 22:36)*. இது யோசு *13:9*-இல் குறிக்கப்படும் நகரமாக இருக்கலாம். இந்நகரை ஆர் என்ற இடமாக அடையாளம் காட்டுகின்றனர் அறிஞர் பலர். ஒரு சிலர் இஃது இக்கால ஏல்-மெதேயினாக இருக்கலாம் என்கின்றனர் *(காண்க. எண் 21:14-15)*.

# மௌ

## மௌனம் (SILENCE)

பேச்சில் முற்படுதல், குறுக்கிடுதல் அல்லது தொடருதல் ஆகியவற்றில் மௌன மானது தனக்கேயுரிய வழியில் இறைவனுக் கும் மனிதனுக்கும் இடையிலான உரை யாடலை ஒளிமயமாக்குகிறது.

**1. இறைவனுடைய மௌனம்:** ''ஆதியிலே வார்த்தை கடவுள் தன்மை கொண்டிருந் தார்'' *(யோவா 1:1)*; ஆனால், மனிதனுக்கு வெளிப்படுத்தப்படும் வரையில் ''ஊழி ஊழிக் காலமாக (மௌனத்தில்) மறை வாயிருந்தது'' *(உரோ 16:25)*. வார்த்தையி னுடைய இந்த மறைவான முதிர்ச்சியானது உரிய காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவ ருடைய முன் குறிக்கப்பட்ட நியதியால் வெளிப்படுத்தப்படுகிறது. அவர்களுடன் பேசுவதற்கும் முன்னர், அவர்களுடைய தாயின் உதரத்திலிருந்தே இறைவன் அவர் களை அறிந்திருந்தார் *(எரே 1:5; காண்க. உரோ 8:29)*. ஆனால் இறைவனுடைய மற்றொரு மௌனமும் உள்ளது. அஃது இனியும் அன்பின் மறைபொருளால் நிறைந்ததாய்த் தோன்றாமல், இறைசினத் தால் நிறைந்ததாய் உள்ளது. தனது பாவமக் களை அமைதிகுலையச் செய்ய இறைவன் இனியும் தனது இறைவாக்கினர்கள் மூல மாகப் பேசுவதில்லை *(எசே 3:26)*. ஏன், அடிக்கடியும் வலிமையாகவும் இவ்வாறு பேசிய பின்னர், பக்தியின்மையின் வெற்றி யின் முன்னால் இறைவன் மௌனமாக உள்ளார் *(அப 1:13)*? யோபுவினுடைய *(யோபு 30:20)* அல்லது சங்கீத ஆசிரியர்க ளுடைய *(சங் 83:2; 109:1)* செபத்திற்கு அவர் இனிமேல் பதிலளிக்காமல் இருப்பது ஏன்? தன்னுடைய இறைவனின் குரலைக் கேட்க ஆசிக்கும் இஸ்ராயேலுக்கு மௌன மானது ஒரு தண்டனையாகும் *(எசே 64:11)*. ஏனெனில், அதனுடைய ஆண்டவரின் பிரிவை அது சுட்டிக்காட்டுகிறது *(சங் 35:22)*. இந்த மௌனமானது மரண தண் டனைக்குச் சமமானது *(காண். சங் 28:1)*. இறைவனும் மனிதனும் இனி ஒருவரோ டொருவர் பேசாதிருக்கும் ''பாதாளத்தின் மௌனத்தினையும்'' இஃது அறிவிக்கிறது *(சங் 94:17; 115:27)*. ஆயினும், இந்த உரையாடலானது முற்றிலுமாக முறிந்து விடவில்லை. ஏனெனில், இறைவனுடைய மௌனமானது, மனிதருடைய பற்றுறுதி யின்மையின் நாட்களில் அவருடைய பொறுமையின் பிரதிபலிப்பாகவும் இருக்க லாம் *(எசே 57:11)*.

**2. மனிதனுடைய மௌனம்:** ''பேசாதிருப் பதற்கு ஒரு காலமுண்டு; பேச ஒரு காலமுண்டு'' (திருவுரை *3:7*). இம்மூதுரை யானது பல்வேறுபட்ட ஆழமான நிலை களில் புரிந்து கொள்ளப்படலாம். காலப் போக்கில் மௌனமானது உறுதியின்மை *(ஆதி 24:21)*, சம்மதம் *(எண் 30:5-16)*, குழப்பம் *(நெகே 5:8)*, பயம் *(எஸ்த 4:14)* முதலியவற்றையும் குறிப்பிடலாம். மனி தன் பாவத்தை விலக்குவதற்கென, குறிப் பாக வம்புச் செய்தி அல்லது தவறான முடிவு ஆகியவற்றினிடையில் *(பழ 11:12-13; 17:28; காண்க. யோவா 8:6)* தனது நாவினைக் கட்டுப்படுத்துவதன் மூலம் *(பழ 10:19)* தனது சுதந்தரத்தைக் காட்டு கிறான்.

முற்றிலும் மனிதத்தன்மையான இந்த ஞானத்திற்கு அப்பால், மனிதனுக்கான மௌனம் மற்றும் பேச்சின் நேரங்களை ஏற்படுத்துபவர், இறைவனே. இறைவன் முன்பான மௌனமானது பாவத்திற்குப் பிற்பட்ட வெட்கக்கேட்டை *(யோபு 40:4; 42:6; காண்க. 6:24; உரோ 3:19; மத் 22:12)* அல்லது மீட்பிலான உறுதியை வெளிப் படுத்துகிறது *(புல 3:26;யாத் 14:14)*. மனித னுடைய அநீதிகளை எதிர்கொண்ட நிலை யில் பிரமாணிக்கமுள்ள ஊழியனாகிய கிறிஸ்து *(எசா 53:7)*, தனது நிலையை இறைவன் முன்னிலையில் சமர்ப்பித்தார் என அது குறிப்பிடுகிறது *(மத் 26:63 இணை; 27:12.14 இணை)*. ஆனால், மற்றச் சூழ்நிலைகளில் பேசாமலிருப்பதென்பது நம்பிக்கையில் தவறுவதும், இறைவனை அறிக்கையிடாததும் ஆகும் *(மத் 26:64*

இணை; அ.ப. *18:9;* 2 கொரி *4:13)*. அப்போது மனிதன் மௌனமாயிருக்க முடியாது (எரே *4:19; 20:9;* எசா *62:6;* லூக் *19:40)*.

இறுதியாக, இறைவன் மனிதனைச் சந்திக்கச் செல்லும்போது, மண்ணுலகம் மௌனம் சாதிக்கிறது (அப *2:20;* செப் *1:7;* எசா *41:1;* செக் *2:17;* சங் *76:9;* திருவெளி *8:1)*; அவர் வந்தவுடன், பயம் அல்லது மரியாதையின் மௌனமானது மனிதனுடைய ஆராதனையை வெளிப்படுத்துகின்றது (புல *2:10;* யாத் *15:16;* லூக் *9:36)*. தனது இதயத்தில் தியானிப்பவனுக்கு (லூக் *2:19.51)* இந்த எளிய மௌனமானது அமைதிக்கான வழியாக மட்டுமின்றி (சங் *13:2)*, சிறியோருக்கு ஆண்டவரால் வாக்களிக்கப்பட்ட வெளிப்பாட்டிற்கான வழியாகவும் உள்ளது (மத் *11:25)*.

# ய

**யகசியா** (JAAZIAH - யாவே பலப்படுத்துவாராக)

லேவியர் மெராரியின் மகன்; பெனோ, சோகாம், சக்கூர், இப்ரி ஆகியோரின் தந்தை *(1 நாள் 24: 26-27)*. *யாத் 6:19; 1 நாள் 23:21*-இல் வரும் மெராரியின் புதல்வர்களுள் இவரும் இவரது வழித் தோன்றல்களும் குறிக்கப்படவில்லை.

**யகசியேல்** (JAASIEL - இறைவன் செயலாற்றுகிறார்)

1. இவர் ஒரு மெட்சோபாயர். தாவீதின் வலிமை மிக்க முப்பது வீரர்களில் ஒருவர் *(1 நாள் 11:47)*.

2. இவர் தாவீது காலத்தில் பென்யமின் இனத்துக்குத் தலைவர். அப்னேரின் மகன் *(1 நாள் 27:21)*. ஒன்றில் குறிக்கப்படுபவரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**யகசியேல்** (JAAZIEL - இறைவன் பலப்படுத்துவாராக)

இவர் இரண்டாம் தர லேவியர். தாவீதின் காலத்தில் வாயில் காப்போராகவும் பாடகராகவும் இருந்தவர் *(1 நாள் 15:18)*. இப்பெயர் *1 நாள் 15:20*-இல் அசியேல் என்றும், *16:5*-இல் எயியேல் என்றும் வாசிக்கப்பட வேண்டும்.

**யகசு** (JAASU - யாவே செயலாற்றுவாராக)

அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்தவர்களில் புறவின மனைவியரை நீக்கிவிட எஸ்ராவால் கட்டாயப்படுத்தப்பட்டவர்களில் இவரும் ஒருவர் *(எஸ் 10:37)*.

**யகபேசு** (JABEZ - வருந்துதல்) - ஆள்

யூதாவைச் சேர்ந்த ஒரு குடும்பத்தின் குலப்பெயர் மூதாதையர் *(1 நாள் 4:9-10)*. பொதுப்பாணிச் சொல்லிலக்கணத்தின்படி, இவர் கடினமான பிறப்பிலிருந்து இப்பெயர் வந்திருக்கலாம் எனத் தெரிகிறது. இஃது அவருடைய மன்றாட்டில் காணப்படுகிறது.

**யகபேசு** (JABEZ - வருந்துதல்) - இடம்

யூதாவில் உள்ள ஓர் ஊர். இது பெத்லகேமுக்கு அருகில் இருந்திருக்கலாம். இங்கு எழுத்தர்கள் பலர் குடியிருந்தனர் *(1 நாள் 2:55)*.

**யகரே - ஓர்கீம்** (JAARE - OREGIM -நெசவாளர் நாடு)

இவர் எல்கானானின் தந்தையாவார் *(2 சாமு 21:19)*. இணைப்பகுதியாகிய *1 நாள் 20:5*-இல் இவர் யாயீர் என்றழைக்கப்படுகிறார். இப்பொழுதுள்ள வடிவம் நெசவாளர் என்று பொருள்படும் ''ஓர்கீமை'' என்ற சொல்லை வாசகத்தின் முடிவிலிருந்து எழுத்தர்கள் தவறாகப் புகுத்தியதின் விளைவாகும்.

**யகரேசியா** (JAARESHIAH - யாவே நடுவாராக)

எருசலேமில் வாழ்ந்த ஒரு பென்யமின் குடும்பத் தலைவர் *(1 நாள் 8:27)*. எரொகாமின் புதல்வர்.

**யகுதாய், எகுதாய்** (JAHDAI - யாவே வழி நடத்துவாராக)

இவள் யூதாவின் வழித்தோன்றல்களில் ஒருத்தி. ஒருவேளை இவள் காலேபின் வைப்பாட்டியாக இருக்கலாம். இவள் வழியாக ஆறு புதல்வர்கள் பிறந்தனர் *(1 நாள் 2:47)*.

**யகுதியேல், எகுதியேல்** (JAHDIEL - இறைவன் மகிழ்வாராக)

மனாசேயின் பாதிக்கோத்திரத்தில் ஒரு குடும்பத் தலைவர் இவர் *(1 நாள் 5:24)*.

**யம்பிரே, இயம்பிரே** (JAMBRES)

*2 திமொ 3:8*-இன்படி, மோசேயை எதிர்த்த இரு சூனியக்காரர்களுள் ஒருவரின் பெயர் (காண்க. *யாத் 7:11.22*). யாத்திரை நூலில் வரும் மூல விவரிப்பில் இந்தச் சூனியக்காரர்களின் பெயர் குறிக்கப்படவில்லை *(யாத் 7:11-12.22; 8:7; 9:11)*. ஆனால் தர்கூமிலும், கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்த நூல்களிலும் இவர்களின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. யன்னே மற்றும் யம்பிரேயின் போலிநூல்

செலாசியன் சட்டத்தால் கண்டனம் செய்யப்படுகிறது (கி.பி. 6-ஆம் நூற்றாண்டு). காண்க. யன்னே, இயன்னே.

**யன்னாய், இயன்னாய்** (JANNAI - ஆண்டவரால் கொடுக்கப்பட்டது)

இவர் இயேசுவின் மூதாதையர்களில் ஒருவர்; மெல்கியின் மகன் (லூக் *3:24*). இப்பெயர் பழைய ஏற்பாட்டில் காணப்படவில்லை.

**யன்னே, இயன்னே** (JANNES)

*2* திமொ *3:8*-இன்படி, எகிப்திய அரசவை மந்திரவாதிகளில் ஒருவன். இவன் யம்பிரேயுடன் சேர்ந்து மோசேயை எதிர்த்தான். இவர்கள் செயல்கள் பற்றிய மூலவிவரிப்பில் (யாத் *7:11-12.22; 8:7; 9:11*) இவர்களது பெயர்கள் கொடுக்கப்படவில்லை. இவர்களைப் பற்றிய போலிநூல் செலாசியன் சட்டத்தால் கண்டனம் செய்யப்பட்டுள்ளது.

**யன்னேயு** (JANNEUS)

கி.மு. *103-76*-இல் யூதேயாவின் அரசனாக இருந்த இவன் அலக்சாந்தர் எனவும் அழைக்கப்படுகிறான். இவன் யோவான் கிரிக்கானுவின் மகன். முதலாம் அரிஸ்தோபுல் என்பவன் அரசனானவுடன் இவனைச் சிறையிலிட்டான். ஆனால், ஒரு வருடத்தில் அரிஸ்தோபுல் இறந்தவுடன் அலக்சாந்தர் மீண்டும் அரசனாகி, குழந்தையற்ற விதவையையும் மணந்து கொண்டான். இதன் பின்னரே இவன் தலைமைக் குருவானான். இவ்வாறு தலைமைக் குருவான பின் ஒருவன் விதவையை மணத்தலாகாது எனும் சட்டத்தை மீறவில்லை.

இவன் பெலிஸ்தியா, காசா இவற்றோடு போரிட்டு வென்றான்; பரிசேயர்க்கும் சதுசேயர்க்குமிடையே நடந்த போட்டியை, சண்டையைத் தீர்த்து சமரசப்படுத்தினான்.

பரிசேயர்களுக்கும், யன்னேயுவுக்கும் பிரச்சனை ஏற்படலாயிற்று. மத சம்பந்தப் பட்டவைகளில் போருக்கான தந்திரங்களை இவன் கையாள்வதையும், அரசன் எனும் பெயரை அவன் வைத்துக் கொள்வதையும் அவர்கள் விரும்பவில்லை. இவன் பணத்துக்கு ஆட்களை ஏவி ஆறாயிரம் பரிசேயர்களைக் கோவிலில் கொன்றான்.

பரிசேயர்கள் இவனுக்கு எதிராகப் போரிட முடிவு செய்து மூன்றாம் தெமேத்திரியு என்பவனுடன் சேர்ந்து கொள்ள நினைத்துப் பின் தம் செயலுக்காக மனம் வருந்தி அதனைக் கைவிட்டனர். ஆனால், அலக்சாந்தரோ எண்ணூறு பரிசேயர்களை அவர்களது மனைவியர், குழந்தைகள் முன் கொன்றான். தான், தன் அரசவையுடன் அதற்காக விருந்துண்டு மகிழ்ந்தான்.

தனது போர் செய்யும் முயற்சிகளைத் தொடர்ந்து செய்து வந்த அலக்சாந்தர் அராபிய அரசன் அரேத்தாவுடனும் சண்டையிட்டான். ஆனால், பெருந்தோல்வியுற்றான். நோயால் துன்புற்றாலும், சண்டை செய்வதைத் தொடர்ந்து கொண்டிருந்ததால், தனது இறுதிக்காலத்தில் அதிகத்துன்புற்றான். நிர்வாகம் இவரது மனைவி சலோமையிடம் விடப்பட்டது. தனது மரணப் படுக்கையில், பரிசேயர்களுடன் நட்புறவு கொண்டிருக்கும்படி தனது மனைவியைக் கேட்டுக் கொண்டான். இவனது கொடுங்கோன்மையைப் பொருட்படுத்தாமல் பரிசேயர்கள் இறுதி மரியாதையைச் செலுத்தினர்.

யூதேயாவின் எல்லையை விரிவுபடுத்த வேண்டுமென்பதே இவனது முக்கியமான நோக்கம். இதனால் இவன் பரிசேயர்களுடன் அரசியல் காரியங்களில் வேறுபட்டு நிற்கவேண்டியதாயிற்று. இவன் பெற்ற வெற்றிகளெல்லாம் தற்காலிகமானதாய் இருந்ததால், இவனது சூட்சியின் பின்விளைவுகள் மக்கட்குப் பெருந்துயர் அளித்தன.

சீமோன் பென் செதா எனும் இவரது மைத்துனருக்கும் (சனத்திரின் சங்கத்தின் தலைவர்களில் ஒருவர்) அலக்சாந்தர் யன்னேயுவுக்குமிடையே இருந்த தொடர்புகளைப் பற்றி தால்மூது குறிப்பிடுகின்றது; பல செயல்களில் இருவரும் சேர்ந்து செயல்பட்டதைச் சுட்டிக்காண்பிக்கிறது. இவனுக்குப் பிறகு அவனது மனைவி சலோமை அரசியானாள். இவளது ஆட்சி பரிசேயர்களுக்குச் சாதகமாய் அமைந்தது.

# யா

**யாகசியேல்** (JAHAZIEL - இறைவன் பார்ப்பாராக)

1. இவர், தாவீது சிக்லாகு எனுமிடத்தில் இருந்தபோது அவரிடம் வந்து சேர்ந்து கொண்ட ஆற்றல் மிக்க வீரர்களில் ஒருவர். பென்யமின் வந்த ஆற்றல் மிகக் கொண்டவரும், திறமை மிக்கவருமான போர் வீரர் இனத்தைச் சேர்ந்தவர் *(1 நாள் 12:4)*.

2. உடன் படிக்கையின் பேழையின் முன் எக்காளம் ஊத, தாவீதினால் நியமிக்கப் பட்டவர்களுள் ஒருவர் *(1 நாள் 16:6)*.

3. கோகாத்திய லேவியரான இவர் தாவீதின் இறுதிக் காலத்தில் வாழ்ந்தவராவார்; எபிரோனின் மூன்றாம் மகன் *(1 நாள் 23:19; 24:23)*.

4. இவர் செக்கரியாவின் மகன். ஆசாபின் குலத்தில் உதித்த ஒரு லேவியர் *(2 நாள் 20:14)*. மோவாபியர் மேலும், அம்மோனியர் மேலும் யூதா வெற்றிபெறும் என்று அரசன் யோசபாத்துக்கு இவர் இறைவாக் குரைத்தார் *(20:14-17.20-30)*.

5. இவர் பாபிலோனிலிருந்து எஸ்ராவோடு திரும்பி வந்தவர்களுள் ஒருவராகிய செக்கனியாவின் தந்தையாவார் *(எஸ் 8:5)*.

**யாகசு** (JAHAZ - திறந்தவெளி, மிதிபட்ட இடம்)

யோர்தானின் அக்கரைப் பகுதியிலுள்ள இந்நகரத்தில்தான், எமோரிய அரசனான சீகோன் அவனது நாட்டின் வழியாக இஸ்ராயேலர் செல்ல வழி மறுத்தபோது தோற்கடிக்கப்பட்டான் *(எண் 21:23; உப 2:32; நீதி 11:20)*. ரூபன் கோத்திரத்துக்கு இந்நகர் மோசேயால் கொடுக்கப்பட்டது *(யோசு 13:18)*. இந்நகரமும் அதனுடன் கூடிய மேய்ச்சல் நிலங்களும் மெராரிய லேவியர்கட்குக் கொடுக்கப்பட்டன *(யோசு 21:36; 1 நாள் 6:78)*. சீகோனுடைய வெற்றிக்குமுன் இதன் சொந்தக்காரர்களாகிய மோவாபியரே பின்னர் இதனைப் பிடித்துக் கொண்டனர் *(எசா 15:4; எரே 48:21.34)*. மேசா இஸ்ராயேலின் அரசன் யாகசில் ஒரு கோட்டை கட்டி அங்குத் தங்கி மோவாபியருக்கு எதிராகப் போரிட்டதைக் குறிப்பிடுகிறான். கெமோசு எனும் மோவாபிய அரசன் இஸ்ராயேலின் மன்னனை இங்கிருந்து துரத்தினான். மேசா யாகசைக் கைப்பற்றி தீபோனுடன் இணைத்தான். இஃது எரே *48:21*-இல் யாகுசா என்றுள்ளது.

யாகசு அர்னோனுக்கு வடக்கே, தீபோனுக்கு அண்மையில் இருந்திருக்க வேண்டும். ஆனால், இஃது அமைந்த இடம் தெரியவில்லை. இது மேதபாவுக்குக் கிழக்கே 6.5 கி.மீ. தொலைவில் அமைந்த யாலூல் ஆக அடையாளம் காட்டப்படுகிறது. மேலும், மேதபாவுக்குத் தென்மேற்கில் 1.5 கி.மீ தொலைவில் உள்ள கிர்பெத் எத்-தெயிம் அல்லது 12 கி.மீ. தொலைவு தென்கிழக்கே அமைந்த உம்மா ஏல்-வலீது ஆகவும் இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**யாகத்து** (JAHATH - இறைவன் பறித்து விடுவார்)

1. யூதாவின் வழித் தோன்றல்களில் ஒருவர். இராயாவின் மகனும், அகுமாய் மற்றும் இலகாது ஆகிய சோராவிய குடும்பங்களின் மூதாதையரும் ஆவார் *(1 நாள் 4:2)*.

2. லிப்னியின் மகனும் கேர்சோமின் வழித்தோன்றலுமான ஒரு லேவியர்; குலப் பெயர் மூதாதையர் *(1 நாள் 6:20.43)*.

3. கேர்சோமின் வழித்தோன்றல் சிமயியின் புதல்வர்களுள் தலைவர் *(1 நாள் 23:10-11)*.

4. செலமோத்தின் மகனும், இட்சகாரின் வழித்தோன்றலுமான ஒரு லேவியர் *(1 நாள் 24:22)*.

5. யோசியா அரசன் ஆண்ட காலத்தில் ஆலயத்தைப் பழுது பார்த்தவர்களை மேற்பார்வையிட்ட மெராரிய லேவியர் *(2 நாள் 34:12)*.

**யாகர்** (JAAR - காடு)

இஃது உடன்படிக்கைப் பேழை கண்டு பிடிக்கப்பட்ட இடமாகக் கருதப்படுகிறது *(சங் 132:6)*. எப்ராத்து இணையாகக் காணப் படுகிறது. இருபது ஆண்டுகள் உடன்படிக் கைப் பேழை தங்கியிருந்த இடமாகிய கிரியத்-எயாரிமின் மற்றொரு வடிவமாக இருக்கலாம் இப்பெயர் *(1 சாமு 7:1-2; 2 நாள் 1:4)*.

**யாகிசியா** (JAHZEIAH - யாவே பார்ப்பாராக)

புறவினப் பெண்களைக் கொண்டிருந்த வர்கட்கு எதிராக எஸ்ரா செயல்பட்டபோது அதனை எதிர்த்த நால்வரில் ஒருவர் இவர்; திக்வாவின் மகன் *(எஸ் 10:15)*.

**யாகிசேரா** (JAHZERAH - விவேகமுள்ள)

பாபிலோனிலிருந்து திரும்பி வந்தவர்க ளுள் ஒரு குருவின் மூதாதையர் இவர் *(1 நாள் 9:12)*. இவரும் நெகே *11:13*-இல் வரும் அகிசாயும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**யாகுசா** (JAHZAH)

மோவாபியச் சமவெளியிலுள்ள ஓர் ஊரான யாகசு என்பதின் மற்றொரு வடி வம் *(எரே 48:21)*.

**யாகுட்சியேல்** (JAHZIEL)

இது யாகுட்சேல் என்ற பெயரின் மற் றொரு வடிவம் *(1 நாள் 7:13)*. நப்தலியின் மகன்.

**யாகுட்சேல்** (JAHZEEL - இறைவன் அருள் கிறார் அல்லது பங்கீடு செய்கிறார்)

நப்தலியின் மகன். இவர் ஓர் இனப் பெயர் முதல்வர் *(ஆதி 46:24; எண் 26:48)*. இவர் *1 நாள் 7:13*-இல் யாகுட்சியேல் என்றழைக்கப்படுகிறார்.

**யாகுதாய், எகிதாய்** (JADAI - யாவே நடத்துவாராக)

இவர் ஒரு காலேபியர். ஒருவேளை காலேபின் மனைவியாகவோ, வைப்பாட்டி யாகவோ இருக்கலாம். இவள் வழியாக ஆறுபேர் பிறந்தனர் *(1 நாள் 2:47)*.

**யாகுதியேல், எகுதியேல்** (JAHDIEL - இறைவன் மகிழ்வாராக)

பாதி இனமான மனாசே இனத்தின் ஒரு குடும்பத் தலைவர் *(1 நாள் 5:24)*.

**யாகுதோ** [JAHDO - (இறைவன்) மகிழ்வா ராக]

இவர் காத்து கோத்திரத்தைச் சேர்ந்த பூசுவின் மகன் *(1 நாள் 5:14)*.

**யாகுமாய்** (JAHMAI - யாவே காப்பாற்றுவா ராக)

இவர் தோலாவின் மகனும், இசக்காரின் வழிவந்தவரும் ஆவார் *(1 நாள் 7:2)*.

**யாகுலவேல்** (JAHLEEL - இறைவனுக்காகக் காத்திரு)

இவர் செபுலோனின் மூன்றாவது மகன் *(ஆதி 46:14)*; யாகுலவேலியரின் குலப் பெயர் மூதாதையர் *(எண் 26:26)*.

**யாகூர்** [JAGUR - (இறைவன் அவர்களோடு) தங்குவாராக]

ஏதோமின் எல்லைக்கருகே, யூதாவின் தென்கிழக்குப் பகுதியில் அமைந்த ஒரு நகரம் *(யோசு 15:21)*. இது கூர்பாகாலாக வும் இருக்கலாம். மேலும், பெயேர் செபா வுக்குக் கிழக்கே *16* கி.மீ தொலைவில் அமைந்த தெல் கூர் என்ற இடமாக இருக்கவும் வாய்ப்புண்டு.

**யாக்கன்** (JACAN - வருத்தம் தருகிறது)

காது இனத்தைச் சேர்ந்தவர். பாசானில் வாழ்ந்தவர் *(1 நாள் 5:13)*.

**யாக்கான்** (JAAKAN)

இவர் ஓர் ஓரியர்; குலத்தலைவன் எட்சே ரின் மூன்றாம் மகன் சேயிரின் வழித்தோன் றல் *(1 நாள் 1:42)*. இவர் ஆதி *36:27*-இல் ஆக்கான் என்றழைக்கப்படுகிறார். இது பென-யாக்கான் என்ற பெயரிலும் *(எண் 33:31-32)*, பாலைவனப் பயணத்தில் இஸ்ரா யேலர் தங்கிச் சென்ற இடமாகிய பெய ரோத் பென-யாக்கான் என்ற பெயரிலும் *(உப 10:6)* காணப்படுகிறது.

**யாக்கிம்** [JAKIM - (இறைவன்) நிறுவுவாராக]

1. பென்யமின் கோத்திரத்தைச் சேர்ந்த சிமயியின் மகன் (1 நாள் 8:19).

2. ஆரோனின் வழித்தோன்றலான இவர் ஒரு குரு (1 நாள் 24:12). தாவீது காலத்தில் குருக்களின் பன்னிரண்டாவது பிரிவுக்குத் தலைவர்.

**யாக்கின்** (JACHIN - அவர் நிறுவுகிறார்)

1. இவர் யாக்கோபின் பேரனும், சிமியோனின் ஆறு புதல்வர்களுள் நான்காமவரும் ஆவார் (ஆதி 46:10; யாத் 6:15). இணைப்பட்டியலான 1 நாள் 4:24-இல் சிமியோனின் புதல்வனாகச் சொல்லப்பட்டிருக்கின்ற யாரிபாக இருக்கலாம். யாக்கினியர் வம்சத் தலைவனாகவும் கருதப்படுகிறார் (எண் 26:12).

2. தாவீது, குருக்களைச் சீட்டுப் போட்டுப் பிரிக்கின்ற பொழுது, ஆலய ஊழியர்களில் இருபத்தொன்றாவது பிரிவுக்கு யாக்கின் தலைவரானார் (1 நாள் 24:17). எருசலேமில் தங்கியிருந்த ஒரு குருகுலத்தின் குலப்பெயர் மூதாதையரும் ஆவர் (1 நாள் 9:10; நெகே 11:10).

**யாக்கின் மற்றும் போவாசு** (JACHIN AND BOAZ - அவர் நிறுவுகிறார்; அதில் வலிமையுள்ளது)

சாலமோனின் ஆலயத்தின் நுழைவாயிலில் இரண்டு பக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்த இரண்டு வெண்கலத் தூண்கள் யாக்கின் மற்றும் போவாசு என்று அழைக்கப்பட்டன (1 அர 7:15-22.41-42; 2 அர 25: 16-17; 2 நாள் 3:13. 15-17; எரே 52:17. 20-23). இவை தீரின் மன்னன் கீராமால் செய்யப்பட்டவை. இந்தத் தூண்களைப் பற்றிய விளக்கங்கள் அவ்வளவு தெளிவாக இல்லை. ஒவ்வொரு வாசகமும் இத்தூண்களின் நீளம், அகலம், உயரம், சுற்றளவு ஆகியவற்றைப் பொருத்தவரை வேறுபட்ட அளவுகளைத் தருகின்றன.

இத்தூண்களின் உட்புறம் குழாய் போன்று இருந்தது. அதன் தடிப்பு நான்கு விரல்களின் (7.5 செ.மீ) அளவாகும் (எரே 52:21). தூண்களின் உச்சியில் ஐந்து முழ உயரமான வெண்கலக் கும்பம் ஒன்று இருந்தது. அதைச் சுற்றிப் பலவிதமான சித்திரங்கள் செதுக்கப்பட்டிருந்தன. இத்தூண்கள் மிகவும் அழகாகவும், அடையாளத்தன்மை மிக்கதாகவும், வழிபாட்டிற்குரியதாகவும் விளங்கின. இத்தூண்கள் கோர்சபாது, தீர், பாப்போ போன்ற இடங்களில் இருந்த ஆல்யங்களின் முன் இருந்த தூண்களோடு ஒப்பிடப்படுகின்றன.

ஆட்சோரில் தொல்பொருள் ஆய்வின் மூலம் கண்டுபிடிக்கப்பட்ட கானானிய ஆலயத்தின் முன் வட்டவடிவமான தூண்கள் இருந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன. இத்தூண்களின் அளவையும் அமைப்பையும் வைத்துப் பார்க்கும் பொழுது இவைகள் நறுமணப் புகை எழுப்புவதற்காகப் பயன்படுத்தப்பட்ட தூண்களாக இருக்கலாம் என்பது ஆல்பிரைட்டின் கருத்தாகும். ஆனால், இத்தூண்கள் வழிபாட்டிற்காகப் பயன்படுத்தப்பட்டதைப் பற்றி விவிலியத்தில் குறிப்புகள் இல்லை. எனவே, இவைகள் வெறும் அலங்காரப் பொருளாக இருந்திருக்கலாம். இத்தூண்கள் விண்ணகத்தின் தூண்களைப் பிரதிபலிக்கின்றன என்று (யோபு 26:11) கருதப்பட்டிருக்கலாம். சாலமோனின் ஆலயத்தில் காணப்பட்ட தூண்களின் பெயர்கள், அரசகுலத்தைப் பற்றிய கல்வெட்டுகளில் காணப்பட்ட சொற்களிலிருந்து எடுக்கப்பட்டிருக்கலாம். ஆதி ஆகமம் 31:45.49-இல் பெயரிடப்பட்ட ஒரு தூண் ஆபிரகாம் செய்த உடன்படிக்கைக்கு அழியாத சான்றாக நிறுத்தப்படுகின்றது. இரண்டாம் அரசர் ஆகமத்தில் 11:14; 23:3 என்ற பகுதிகளில் அரசன் படியில் நின்றுகொண்டு என்று கூறப்பட்டிருப்பது ஓர் உள்ளார்ந்த பொருளை உணர்த்துகின்றது.

**யாக்கே** (JAKEH - விவேகமுள்ள, தேர்ந்து தெளிதல்)

ஞானியான ஆகூரின் தந்தை அல்லது மூதாதையராக இருக்கலாம். இவர் அறிவு முதிர்ந்த அறிவர். பழமொழி ஆகமத்தில்

வரும் இந்த வரி பின்னால் வரும் பகுதிக்கு ஒரு தலைப்பு போல் அமைகிறது. மேலும், இது பல வகையில் விளக்கப்படுகிறது.

**யாக்கோபா** *(JAAKOBAH - இறைவன் பாதுகாப்பாராக)*

இவர் சிமியோன் குலத்தில் ஓர் இளவரசன் *(1 நாள் 4:36)*.

**யாக்கோபு** *(JACOB O.T. - ஏய்த்தல், பிறர் உரிமை பறித்தல்) - பழைய ஏற்பாடு*

*1. யாக்கோபு-இஸ்ராயேல்-காண்க.*

*2.* மத்தேயு அளிக்கும் இயேசுவின் மூதாதையர் பட்டியலின்படி, யாக்கோபு, மரியாளின் கணவர் யோசேப்பின் தந்தை ஆவார் *(மத் 1:15-16)*.

**யாக்கோபு** *(JAMES) - புதிய ஏற்பாடு*

புதிய ஏற்பாட்டில் இது பலருடைய பெயராகும்.

*1.* யாக்கோபு ஓர் அப்போஸ்தலர்; செபதேயுவின் மகன்; யோவானின் மூத்த சகோதரர். தங்கள் தந்தையுடன் மீன்பிடிக்கும் படகில் இருந்தபோது இருவரும் இயேசுவால் அழைக்கப்பட்டனர் *(மத் 4:21; மாற் 1:19; காண்க. லூக் 5:10)*. அப்போஸ்தலர்களுக்குள்ளே பேதுரு, யோவான் ஆகியோருடன் இவரும் இயேசுவுக்கு மிகவும் நெருங்கியவர் *(மத் 17:1; 26:37; லூக் 8:51)*. ஆனால் இவரைப் பற்றி விவிலியம் அதிகம் கூறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இவரது தந்தை செபதேயு ஒரு மீன் பிடிப்பவர். யாக்கோபும் யோவானும் தொழிலில் அவருக்கு உதவி செய்தனர். பேதுருவும் அந்திரேயாவும் அவர்களின் தொழில் கூட்டாளிகள் *(மத் 4:21; லூக் 5:10)*. இவரது தாய், இயேசுவின் தாய் மரியாளின் சகோதரியான சலோமியாக இருக்கலாம். இது யாக்கோபை இயேசுவின் சகோதரன் ஆக்குகிறது *(மத் 27:56; காண்க. மாற் 15:40; 16:1; யோவா 19:25)*. யாக்கோபும் யோவானும் குறிக்கப்படும் போதெல்லாம், யாக்கோபு முதலில் குறிக்கப்படுகிறார் *(ஆனால், காண்க. லூக் 9:28; அ.ப. 1:13)*. இஃது இவர்தான் மூத்தவர் என்று சுட்டுகிறது. இதனால்தான் பெரிய யாக்கோபு என்று பொதுவாகக் குறிக்கப்படுகிறார். பேதுரு மற்றும் அந்திரேயாவின் வீட்டிற்கு இவர் இயேசுவோடு சென்றார் *(மாற் 1:29)*. யாக்கோபும் யோவானும் இயேசுவை ஏற்றுக்கொள்ள மறுத்த சமாரியர்கள் மேல் வானத்திலிருந்து தீயைக் கொண்டுவந்து அழிக்கட்டுமா? என்று கேட்கிறார்கள் *(லூக் 9:54)*. மாற்கு இந்த நிகழ்ச்சியைக் குறிக்கவில்லை என்றாலும் இவர்களின் இந்த மனநிலையின் காரணமாகத்தான், இயேசு இவர்களுக்கு ''இடியைப் போன்றோர்'' என்று பொருள்படும் ''பொவனேர் கேசு'' என்ற பட்டப் பெயரை அளித்திருக்கலாம் *(மாற் 3:17)*. யாக்கோபு மற்றும் யோவானின் தாய் அவரது அரசில் அவரது அருகில் அவர்கள் அமரவேண்டும் என்று இயேசுவிடம் கேட்ட போது, தான் குடிக்கப் போகும் கிண்ணத்தில் குடிப்பீர்களா என்று இயேசு கேட்டார். அதற்கு ''முடியும்'' என்றனர் *(மத் 20:20-28; மாற் 10:35-45)*.

இயேசுவின் வாழ்க்கையில் நடந்த சில சிறப்பு நிகழ்ச்சிகளில் பேதுரு, யோவானுடன் யாக்கோபும் பங்குகொண்டார். யாயிரின் மகளை உயிர்ப்பித்தல் *(மாற் 5:37; லூக் 8:51)*; இயேசுவின் உருமாற்றம் *(மத் 17:1; மாற் 9:2)*; கெத்சமனியில் வேதனையுறல் *(மத் 26:37; மாற் 14:33)*. பன்னிருவர் பட்டியலில் யாக்கோபு வருகிறார் *(மத் 10:2; மாற் 3:17; லூக் 6:14; அ.ப. 1:13)*. இயேசு உயிர்த்து விண்ணேற்றமானபின் மற்ற அப்போஸ்தலர்களுடன் யாக்கோபுவும் எருசலேம் சென்றார் *(அ.ப. 1:13)*. ஆனால் விரைவில் ஏரோது அகிரிப்பாவால் சிரச்சேதம் செய்யப்பட்டார் *(12:2)*.

விவிலியத்துக்குப் புறம்பே, யாக்கோபைப் பற்றிச் சில கதைகளே காணப்படுகின்றன. அவற்றை யுசேபியு, அலக்சாந்திரியா கிளமந்து எடுத்துக்காட்டுகின்றனர். அதில் யாக்கோபு ஏரோதை மன்னித்துவிட்டதாய்க் கூறப்பட்டுள்ளது. அப்தியாவின் அப்போஸ்தலர் வரலாறு என்ற போலிநூலில்

யாக்கோபு செய்த அருஞ்செயல் சிலவற்றின் விவரிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. பிற்காலப் பாரம்பரியம், யாக்கோபு ஸ்பெயினுக்குச் சென்று போதித்து, மரித்து அடக்கம் செய்யப்பட்டார் என்று கூறுகிறது.

பாரம்பரியம், செபதேயுவின் மகனான யாக்கோபைப் ''பெரிய யாக்கோபு'' என்றும், அல்பேயுவின் மகனான யாக்கோபைச் ''சின்ன யாக்கோபு'' என்றும் அழைக்கிறது.

2. இந்த யாக்கோபு, அல்பேயுவின் மகன்; இயேசுவின் அப்போஸ்தலர்களில் ஒருவர் (*மத் 10:3; மாற் 3:18; லூக் 6:15; அ.ப. 1:13*). இவர் சின்ன அல்லது இளைய யாக்கோபு என்றழைக்கப்படுகிறார்.

இவர் பன்னிருவர் பட்டியலில்தான் குறிக்கப்படுகிறார். நான்கு பேர் அடங்கிய மூன்றாவது குழுவில் முதல்வராக இவரது பெயர் வருகிறது. இதற்கு மேல் இவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. இவர், அல்பேயுவின் மகன் என அழைக்கப்படும் லேவியோடு (*மாற் 2:14*) தொடர்புபடுத்தப் படுகிறார். நற்செய்தியில் இருவரும் இணைத்துக் கூறப்படாமையால் இந்த யூகம் சரியாக இருக்க முடியாது. இவர் மரியாளின் மகனான யாக்கோபாக இருக்கலாம். காண்க. *4*-இல்.

3. இயேசுவின் சகோதரன் அல்லது ஒன்றுவிட்ட சகோதரரான யாக்கோபு (*மத் 13:55 இணை; மாற் 6:3; கலா 1:19*). காண்க. ஆண்டவரின் சகோதரர்கள். இவர் நாசரேத்தைச் சேர்ந்த யோசேப்பு அல்லது யோசே, சீமோன், யூதா ஆகியோரின் சகோதரராகக் கருதப்படுகிறார்.

புதிய ஏற்பாடும், தொடக்ககாலக் கிறிஸ்தவ ஆசிரியர்களும் இந்த யாக்கோபை இயேசுவின் சகோதரர் என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் பழங்காலத் திருச்சபைப் பாரம்பரியத்தின் பெரும்பகுதி இதை நிராகரிக்கிறது. இதற்குக் காரணம், மரியாளின் நிலையான கன்னிமையில் கொண்ட விசுவாசம் ஆகும். இவற்றை ஒத்துப்போகச் செய்ய, பல கருத்துகள் கூறப்படுகின்றன. முதலாவது கருத்து யாக்கோபு இயேசுவின் ஒன்றுவிட்ட சகோதரன் என்பது. இரண்டாவது கருத்து, யோசேப்பு மரியாளை மணக்குமுன், ஏற்கெனவே பிள்ளைகள் பலரைப் பெற்றிருந்தார்; இவர்கள் இயேசுவின் சகோதரர்கள் என்று அழைக்கப்பட்டனர் என்பதாகும்.

மற்ற அப்போஸ்தலர்கள் மறைபரப்புப் பயணத்தில் சென்றபோது, இந்த யாக்கோபு எருசலேம் திருச்சபைக்குத் தலைமை தாங்கினார். செபதேயுவின் மகன் யாக்கோபு ஏற்கெனவே கொல்லப்பட்டுவிட்டார். இந்த யாக்கோபு குறிக்கப்படும் வாசகச் சூழ்நிலையில், இவர் அல்பேயுவின் மகன் என்று ஒருபோதும் கூறப்படவில்லை. பன்னிருவருள் ஒருவராக இல்லாவிட்டாலும், இயேசுவின் சகோதரன் இத்தகைய தலைமைக்கு அவசியமான உயர்வு கொண்டிருந்திருக்கலாம்.

எருசலேம் சங்க விவரிப்பில் யாக்கோபு ஆதிக்கம் செலுத்துகிறார். புற இனக் கிறிஸ்தவர்கள் மற்றும் யூதத்துவத்தை அவர்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்ற பிரச்சனையில், யாக்கோபின் கருத்து முடிவாக அமைகிறது. புற இனக் கிறிஸ்தவர்களின் சுதந்தரத்திற்குக் காப்புரை வழங்குகிறார்; நான்கு யூத வழக்குகளை மட்டும் கடைப்பிடித்தால் மட்டும் போதும் என்றார். இது சங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டது (*அ.ப. 15:13-33*). தனது மூன்றாவது மறைபரப்புப் பயணத்துக்குப்பின் பவுல் எருசலேமுக்குச் சென்று யாக்கோபையும், மூப்பர்களையும் சந்தித்துத் தனது வெற்றிகளை எடுத்துக் கூறினார் (*21:18*). தான் தமஸ்கு செல்லும் வழியில் மனந்திரும்பிய பின்னும் முன்பு இவ்விதமே பவுல் செய்தார் (*கலா 1:19; காண்க. 2:9.12*). ஆலயப்பலியில் சேர்ந்து கொள்ளும்படி பவுலுக்கு ஆலோசனை கூறியவர்கள் இந்த யாக்கோபுவும் திருச்சபை மூப்பர்களும் தான் (*21:17-26*). ''யாக்கோபின் ஆட்கள் சிலர்'' பவுல் மனந்திருப்பியவர்கள் யூதத்துவத்திலிருந்து விடுதலை அடைவதை எதிர்த்தனர்; பவுலுக்கு எதிராக

பேதுருவுக்கு ஆதரவு அளித்தனர் (கலா 2:12). யாக்கோபின் அங்கீகாரத்தையும் உரையையும் (அ.ப. 15:13 தொ) பவுல் கோருவது, இந்த ஆட்கள் யாக்கோபின் எண்ணத்தைப் பிரதிபலிக்கவில்லை என்று காட்டுகிறது. உயிர்த்த இயேசு யாக்கோபுக் குத் தனியாகக் காட்சியளித்ததாகக் கூறப் படுகிறது (1 கொரி 15:7). பேதுரு தான் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டபோது, அதை யாக்கோபுக்கும் சகோதரர்களுக்கும் அறிவிக்கச் செய்கிறார் (அ.ப. 12:17).

இயேசுவின் சகோதரரான யாக்கோபு முதலில் இயேசுவின் மெசியா உரிமையை நம்பவில்லை எனத் தெரிகிறது (காண்க. யோவா 7:5). ஆனால், சிலுவை மரணத்திற் குப்பின் அப்போஸ்தலர்களுடன் தொடர்பு கொண்டிருந்தார் (அ.ப. 1:14). ஆகவே யாக்கோபுக்கு, உயிர்த்த இயேசு காட்சி யளித்ததாகக் கூறப்படுவது (1 கொரி 15:7) இயேசுவின் சகோதரரான இந்த யாக்கோபு வுக்குத் தான் என்று கருதலாம்.

யாக்கோபு எழுதிய பொதுத்திருமுகத் திற்கு இந்த யாக்கோபுதான் ஆசிரியராக இருக்கலாம். திருச்சபைப் பாரம்பரியப்படி, யாக்கோபு எருசலேமின் முதல் ஆயராவார். யூதக்கிறிஸ்தவர்கள் அவரைப் பேதுரு மற் றும் பவுலுக்கும் உயர்ந்தவராகக் கருதியதா கத் தெரிகிறது. பல மூலங்களிலிருந்து இவர் கி.பி. 62-இல் மறைசாட்சியாக மரித்தார் எனத் தெரிகிறது.

மத் 27:56; மாற் 15:40 என்ற வாசகங்கள் அவ்வளவு தெளிவாக இல்லை. யாக்கோபு, யோசேப்பு என்பவர்களின் தாயாகிய மரியா, ஆண்டவர் சகோதரர்களின் தாயான மரியாவாக இருக்கலாம். மாற் 15:40-இல் யாக்கோபுக்குச் ''சின்ன'' என்ற அடை மொழி கொடுக்கப்படுகிறது. ''சின்ன யாக் கோபு'' என்ற பட்டம் பொதுவாக 2-இல் குறிக்கப்படுபவருக்குக் கொடுக்கப்படு கிறது. மாற் 16:1-இல் ''யாக்கோபின் மரியா'' என்று வருகிறது. இது மரியாவின் மகனைக் குறிப்பதை விட, வழக்கமாக அவளது கணவனைக் குறிக்கிறது.

திருச்சபைத் தந்தையர் காலத்திலேயே 2-இலும் 3-இலும் குறிக்கப்படுபவர்கள் ஒரே ஆளா, வெவ்வேறானவர்களா என்ற பிரச்சனை எழுந்தது. பாரம்பரியமாக இருவ ரும் ஒரே ஆளையே குறிக்கின்றனர் என்று கருதப்பட்டு வந்தது. ஆனால், இக்கால ஆய்வாளர்களில் பெரும்பாலோர், இருவ ரும் வேறுபட்டவர்கள் என்று கருதுகின்ற னர். ''இயேசுவின் சகோதரர்'' பன்னிருவ ருள் ஒருவர் என்றோ அப்போஸ்தலர் என்றோ எங்கும் தெளிவாகக் கூறப்பட வில்லை. யாக்கோபு எழுதிய திருமுகத்தின் முன்னுரையில் ஆசிரியர் அப்போஸ்தலர் என்று உரிமை கோரவில்லை (யாக் 1:1). 1 கொரி 15:7-இல் அப்போஸ்தலர்களுக்கும் யாக்கோபுவுக்கும் இடையில் வேறுபாடு சுட்டிக்காட்டப்படுகிறது.

4. இந்த யாக்கோபு மரியாவின் மகனாவார் (மத் 27:56; மாற் 15:40; 16:1; லூக் 24:10).

5. இந்த யாக்கோபு, பன்னிருவருள் ஒரு வரான யூதாவின் தந்தையாவார் (லூக் 6:16; அ.ப. 1:13). இவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை.

**யாக்கோபு - இஸ்ராயேல்** (JACOB -ISRAEL)

1. யாக்கோபு என்பவர் ஈசாக்கு - ரபேக்கா ஆகியோரின் இளைய மகனும், ஏசாவின் இரட்டைச் சகோதரரும் லேயா, ராகேல் ஆகியோரின் கணவரும் ஆவார் (ஆதி 25:21-26; 29:21-30). இவர் இஸ்ரா யேல் என்றும் அழைக்கப்படுகிறார் (32:28; 49:2). இவரது பன்னிரண்டு புதல்வர்களும் இஸ்ராயேலின் இனப்பெயர் மூதாதையர் ஆவர்.

2. **பெயர்:-** இச்சொல்லுக்குப் பொருள் கூறுவது கடினம். இது குதிங்காலோடு தொடர்புடையதாகத் தெரிகிறது (ஆதி 25:26). இச் சொல் ''கால்வாரி விடுதல், பிறர் உரிமை பறித்தல்'' என்பன போன்ற பொருள் அளிக்கும். இவை மூதாதையர் யாக்கோபின் வாழ்வில் வரும் நிகழ்ச்சி களைப் பின்னணியாகக் கொண்டதாகத் தெரிகிறது. தன் பிறப்பில் இவர் தன்

சகோதரன் ஏசாவின் குதிங்காலைக் கையால் பற்றிக் கொண்டு வெளிவந்தார் (ஆதி 25:26; காண்க. ஓசே 12:4). இவர் ஏசாவின் தலை மகனுரிமையைப் பறித்துக் கொண்டார் (ஆதி 27:36; காண்க. எரே 9:3). விவிலிய ஆசிரியர் இச்சொல்லுக்குத் தெளிவான பொருள் கொடுக்கவில்லை. ஒருவேளை, யாக்கோபு என்ற பெயருக்கு ''இறைவன் காப்பாற்றுவாராக'' அல்லது ''இறைவன் காப்பாற்றுகிறார்'' என்ற பொருள் இருந்தி ருக்கலாம். எகிப்திய பார்வோன் மூன்றாம் துட்மோசு பாலஸ்தீனத்தில் கைப்பற்றிய இடங்களில் சில இப்பொருளுடைய பெய ரைக் கொண்டிருந்தன. கைக்சோஸ் காலத் தைச் சேர்ந்த பொருள்களில் இப்பெயர்கள் காணப்படுகின்றன. கி.மு. 18-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்த மெசபொத்தாமியக் களிமண் ஏடுகளில் இத்தகைய பெயர்கள் காணப்படுகின்றன. யாக்கோபு இஸ்ரா யேல் என்ற பெயராலும் அழைக்கப் படுகிறார். இச்சொல்லுக்கும் தெளிவான பொருள் அளிக்க முடியாது. இதில் விவி லிய ஆசிரியருக்கு அக்கறையிருப்பதாகத் தெரியவில்லை. ''கடவுளோடும் மனிதரோ டும் போராடி வெற்றி கண்டவன்'' (ஆதி 32:29) என்ற பொருள் அளிக்கலாம். யாக் கோபை இறைவன் தேர்ந்தெடுத்தலையும் அவரது வழிவந்தோரான இஸ்ராயேலர் களை உயர்த்தியும், ஏசாவையும் அவரது வழிவந்தோரான ஏதோமியரையும் தாழ்த்தி, அவர்களின் பிறப்புரிமை பறிபெற்ற நிகழ்ச் சியைச் சிறப்பித்துக் கூறவுமே ஆசிரியர் விழைகிறார் எனலாம்.

3. **வாழ்க்கை வரலாறு:-** ஆதியாகமத்தில் யாக்கோபின் வரலாறு மைய நிலையைக் கொண்டுள்ளது (ஆதி 25-50). குழந்தை களின் பிறப்புக்கு முன்பே ''மூத்தவன் இளையவனுக்குப் பணிந்திருப்பான்'' என்று ரபேக்காவுக்கு ஆண்டவர் கூறியிருந் தார் (25:23; காண். உரோ 9:12). ஏசாவின் குதிங்காலைப் பற்றிக்கொண்டு யாக்கோபு பிறந்தார் (25:26). அவர் வளர்ந்த போது யாக்கோபு பண்புடையவனாய்க் கூடாரத் தில் உறைபவனாய் வாழ்ந்து வந்தார். ஏசாவோ வேட்டையில் வல்லவனாய்த் திறந்த வெளியில் வாழ்ந்து வந்தார் (25:27); முரட்டுத் தன்மையுடையவராயும் உணர்ச்சி வசப்படக் கூடியவராகவும் இருந்தார். ஒரு முறை, ஏசா கடுமையான பசியால் வருந்திய போது, ''கொஞ்சம் அப்பம் மற்றும் சுவையான பயற்றங்காய்க் கூழுக்காகத்'' தலைமகனுரிமையை விற்றுவிட யாக்கோ பால் கட்டாயப்படுத்தப்பட்டார் (25:29-34). மேலும், தனது தாயால் தூண்டப்பட்டு, யாக்கோபு மாறுவேடமிட்டு தலைமகனுக் குரிய ஆசீரையும் தன் தந்தையிடமிருந்து பெற்றுக்கொண்டார் (27:1-45). ஏசா, தான் உடனடியாக எதிர்பார்த்த தன் தந்தை ஈசாக்கின் இறப்புக்குப்பின், யாக்கோபைக் கொல்லத்திட்டமிட்டிருந்தார். ஆனால், ரபேக்கா தன் பிரியமான மகனான யாக்கோ பைக் காரானிலுள்ள அவனது மாமன் லாபானிடம் ஒடி விடும்படி கட்டளையிட் டாள் (27:41-28:5).

பெயேர்-செபாவிலிருந்து காரானுக்குப் பயணம் செய்தபோது யாக்கோபு பெத்தே லில் ஓய்வெடுத்தார். இவ்விடம் பழங்கா லப் புனித இடமாக இருந்திருக்கலாம். அங்கு ஒரு கனவில், நிலத்தில் ஊன்றி யிருந்த ஓர் ஏணியின் நுனி மேலே வானத்தைத் தொட்டுக்கொண்டிருப்பதை யும், அதில் கடவுளின் தூதர்கள் ஏறுவதும் இறங்குவதுமாய் இருப்பதையும், ஆண்ட வர் அதற்கு மேல் நின்று கொண்டிருப்பதை யும் கண்டார் (28:10-17). யாக்கோபு பாவி யானாலும், அவர் கானானுக்குப் புறம்பே வாழும்போது, தான் யாக்கோபுக்குப் பாது காப்பு அளிப்பதாகவும், கானானுக்கு யாக் கோபைத் திரும்பிவரச் செய்வதாகவும் அவ ரைக் கைவிட மாட்டார் என்றும் ஆண்டவர் வாக்களிக்கிறார். பேரம் பேசுவதில் வல்லவரான யாக்கோபு ''கடவுள் என் னோடு இருந்து நான் போகிற இந்த வழியில் எனக்குப் பாதுகாப்பளித்து உண்ண உணவும் உடுக்க உடையும் தந்து என் தந்தை வீட்டிற்கு நான் நலமுடன் திரும்பச் செய்வாராயின்'' ஆண்டவருக்குப் பணி செய்வதாக வாக்களிக்கிறார் (28:20-22).

லாபானோடு யாக்கோபு தங்கியிருந்த காலம், இருவரும் ஒருவர் மற்றவரைத் தந்திரத்தால் வெல்ல விழையும் போக்கைக் கொண்டிருந்தது. லாபானின் இரண்டாவது மகளான வடிவழகும் எழில் தோற்றமும் உள்ள ராகேலை மணக்க விரும்பி, அவளை அடைய, யாக்கோபு லாபானுக்கு ஏழு ஆண்டுகள் வேலை செய்தார். ஆனால் லாபான் தந்திரமாக, திருமண இரவில் ராகேலுக்குப் பதிலாக மூத்த மகள் லேயாவை யாக்கோபுக்கு மணம் செய்து வைத்தார் *(30:15-26)*. திருமணப்படுக்கையில் கூட மணமகள் முகமூடித்திரை அணிந்திருந்ததால் இத்தந்திரம் கூடுமானதாக இருந்தது. இன்னும் ஏழு ஆண்டுகள் தனக்குப் பணிசெய்தால் ராகேலையும் மனைவியாகத் தருவதாக லாபான் யாக்கோபுக்கு வாக்களித்தார் *(30:27-30)*. மெசபொத்தாமியாவில் யாக்கோபு பதினொன்று புதல்வர்களுக்கும், ஒரு புதல்விக்கும் தந்தையானார். லேயா வழியாக ரூபன், சிமியோன், லேவி, யூதா, இசக்கார், செபுலோன் மற்றும் மகள் தீனாவுக்கும், லேயாவின் பணிப்பெண் சில்பா வழியாக காத்து, ஆசேர் ஆகியோருக்கும், மலடியான ராகேலின் பணிப்பெண் பில்கா வழியாக தாண், நப்தலி ஆகியோருக்கும், இறுதியாக ராகேல் வழியாக யோசேப்புக்கும் யாக்கோபு தந்தையானார் *(29:31-30:24)*. யாக்கோபு தன் மனைவிகளுக்காக மட்டுமன்று, தன் மந்தைக்காகவும் ஊழியம் செய்ய வேண்டும் என்று லாபான் கோரினார். இருவரும் தந்திரங்களையும், குறுக்கு வழிகளையும் பயன்படுத்தினர். ஆனால் இதில் யாக்கோபு லாபான்னைப் பாதிக்கும் முறையில், செல்வத்தில் பெருகினார் *(30:25-43)*. தனது செல்வப் பெருக்கினால், லாபானும் அவரது புதல்வர்களும் தன்மேல் பொறாமை கொள்வதை உணர்ந்த யாக்கோபு, இரகசியமாக தன் குடும்ப முழுவதோடும் காரானிலிருந்து ஓடிவிட்டார் *(31:17-21)*. மேலும், ராகேல் குடும்பத் தேவதைகள் சிலைகளையும் எடுத்துச் சென்றுவிட்டாள் என்பதை அறிந்த லாபான் கோபங்கொண்டு, யாக்கோபைத் துரத்திச் சென்றார். ஆனால், யாக்கோபுக்கு எவ்விதத் தீமையும் செய்யக் கூடாது என்று லாபான் ஆண்டவரால் கனவில் எச்சரிக்கப்பட்டார் *(31:22-24)*. பின்பு லாபானும் யாக்கோபும் ஒருவர் மற்றவர்க்குத் தீங்கு செய்வதில்லை என்று கிலயாது மலைகளில் உடன்படிக்கை செய்துகொண்டனர். பின்பு, யாக்கோபு தன் நாட்டிற்குத் திரும்பினார் *(31:44-32:1)*.

யாக்கோபுக்குத் தொடர்ந்து பாதுகாப்பு அளிப்பதாக இறைவன் உறுதி அளித்திருந்தாலும் *(32:2-3)*, சேயீர் வழியாகத் திரும்பிய போது, யாக்கோபு தன் சகோதரன் ஏசாவைச் சந்திக்க அஞ்சினார். ஏசா நானூறு பேருடன் வருவதைக் கேள்வியுற்ற யாக்கோபின் அச்சம் இன்னும் அதிகமாயிற்று. ஆகவே, யாக்கோபு மிகவும் அஞ்சிக் கலங்கி தம்முடன் இருந்த ஆள்களையும், ஆடு மாடு ஒட்டகங்களாகிய மந்தைகளையும் இரு பகுதிகளாகப் பிரித்தார். ஏனெனில், ஏசா வந்து ஒரு பகுதியைத் தாக்கினாலும் எஞ்சிய பகுதியாவது தப்புமே என்று நினைத்துக் கொண்டார் *(32:4-9)*. மேலும், தன் சகோதரன் ஏசாவுக்கு நிறைய அன்பளிப்பு அனுப்பிவைத்தார் *(32:15-22)*. தனக்குப் பாதுகாப்பு அளிக்குமாறு இறைவனிடம் மன்றாடியது *(32:10-14)* அவரது வாழ்வின் உறுதியான உச்சக்கட்ட நிகழ்ச்சிக்கு இட்டுச் சென்றது. பெனியேல் (கடவுளின் முகம், *32:31*) என்ற இடத்தில், ஓர் ஆடவன் பொழுது விடியுமட்டும் யாக்கோபோடு மற்போரிட்டார். தொடைச் சந்து விலகியதால் முடமானவனானாலும், யாக்கோபு, தன்னை ஆசீர்வதிக்கும் வரை அந்த ஆடவனைப் போகவிடவில்லை. ஆசீரிலிருந்து, அந்த ஆடவன் இறைவனே என்பது தெளிவாயிற்று. அவர் யாக்கோபுக்கு இஸ்ராயேல் (''கடவுளோடும் மனிதரோடும் போராடி வெற்றி கொண்டவன்'', *32:29*; காண்க. ஓசே *12:4-5*) என்ற புதுப் பெயர் அளித்தார். ஏசா அமைதியோடும் சகோதரப் பாசத்தோடும் யாக்கோபைச் சந்தித்தார். ஆனால், வாக்களித்தபடி யாக்கோபு செயீருக்குத் தன் சகோதரனைப் பின்பற்றிச் செல்லாது, சுக்கோத்துக்குச் சென்று செக்கேமுக்கு அருகில் குடியேறினார் (ஆதி *33*). செக்கேமில் ஆமோரின் புதல்வர்கள் தீனாவைத் தாக்கி அவமானப்படுத்தினர் (ஆதி *34*). அவ

ளுடைய சகோதரர்கள் சமாதான ஒப்பந்தத்திற்கு உடன்படுவது போல் பாசாங்கு செய்து, செக்கேமின் ஆண்கள் அனைவரையும் விருத்த சேதனம் செய்யச் செய்தனர். இவர்கள் வலியால் வருந்திக் குணமாகிக் கொண்டிருந்தபோது, தீனாவின் சகோதரர்கள் சிமியோனும் லேவியும் நகரைத் தாக்கி ஆண்கள் அனைவரையும் கொன்று தீர்த்தனர்; நகரைக் கொள்ளையிட்டனர். குழந்தைகள் பெண்டிர் அனைவரையும் கைதிகளாக்கினர் *(ஆதி 34)*.

முதலில் யாக்கோபோடு இருந்தவர்கள் தங்களிடமிருந்த வேற்றுத் தெய்வங்களின் சிலைகளையும் தாயத்துகளையும் யாக்கோபிடம் கொடுக்க, அவர் அவற்றைச் செக்கேம் அருகிலுள்ள ஒரு கருவாலி மரத்தின் அருகே புதைத்தார். பின்பு இறைவனது கட்டளைப்படி, யாக்கோபும் அவரது குடும்பமும் பெத்தேலுக்குச் சென்றனர் *(35:1-7)*. அங்கு இறைவன் யாக்கோபுக்கு மீண்டும் தோன்றி ஆசீர்வதித்து, இஸ்ராயேல் என்ற புதிய பெயரை உறுதிப்படுத்தினார். யாக்கோபிடமிருந்து, ''ஓரினமும், மக்களின் கூட்டமும் தோன்றும்'' என்று வாக்களித்தார். ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் வாக்களித்த நாட்டை, யாக்கோபுக்கும் அவரது வழிமரபினருக்கும் அளிப்பதாக வாக்களிக்கின்றார் *(35:9-12)*. இதற்குச் சிறிது காலத்திற்குப்பின், அவர்கள் எப்பிராத்துக்குச் (பெத்லகேமுக்குச்) செல்லும் போது, ராகேல் தனது கடைசி மகன் பென்யமினைப் பெற்றெடுத்தபின் மரித்தாள் *(35:19)*.

ஆதியாகமத்தின் பின்வரும் பகுதியில், யோசேப்பின் வரலாறு முதன்மை பெறுகின்றது; யாக்கோபு பின்னணிக்குச் செல்கிறார். ஏசாவின் பொறாமையைப் போன்ற பொறாமை கொண்ட யோசேப்பின் சகோதரர்கள் அவரை அடிமையாக விற்றனர் *(37:1-28)*. யோசேப்பு ஒரு விலங்கால் கொல்லப்பட்டதாக நம்பிய யாக்கோபு, தனது சாவு வரை யோசேப்புக்காகத் துக்கம் கொண்டாடப் போவதாக உறுதி எடுக்கிறார் *(37:29-35)*. இறுதியில் தன் மகன் யோசேப்பு உயிரோடு இருப்பதாகவும், எகிப்தை ஆட்சி செய்வதாகவும் யாக்கோபு செய்தி அறிகிறார் *(45:26)*. தான் இறப்பதற்கு முன் தன் மகன் யோசேப்பைப் பார்க்கும் உறுதியுடன், யாக்கோபு கானானைவிட்டு எகிப்துக்குச் செல்கிறார். செல்லும் வழியில் பெயேர் செபாவில் யாக்கோபு, 'எகிப்தில் ஒரு பெரிய இனமாக வளர்வார்' என்று இறைவன் வாக்குறுதி அளிக்கிறார் *(46:1-4)*. யாக்கோபு எகிப்துக்கு வந்து பார்வோனைச் சந்தித்த போது *(47:1-12)*, அவருக்கு 130 வயதாகும். பத்து ஆண்டுகளுக்குப் பின் இறந்தார். அதற்குமுன் அவர் யோசேப்பின் புதல்வர்களான எப்பிராயிம், மனாசேயை ஆசீர்வதித்தார் *(48:8-20)*. பன்னிரண்டு புதல்வர்களின் வருங்காலத்தை முன்னறிவித்தார் *(ஆதி 49)*. அவர் யூதாவை வாக்குறுதியின் வாரிசாக்கினார் *(49:10)*. அவருடைய விருப்பப்படி, ஆபிரகாம் அடக்கம் செய்யப்பட்ட மக்கபேலாக் குகையில், யாக்கோபு அடக்கம் செய்யப்பட்டார் *(49:29-32; 50:13)*. எகிப்தியர் அவருக்காக எழுபது நாள் துக்கம் கொண்டாடினர். அவரது அடக்கத்திற்குப் பிறகு அவரது புதல்வர்கள் எகிப்துக்குத் திரும்பினர் *(50:3.14)*.

**4. காலமும் வரலாற்றுப் பின்னணியும்:-** யாக்கோபின் வாழ்க்கை பற்றிய காலத்தைத் துல்லியமாக நிர்ணயிக்க முடியாது. மத்திய வெண்கலக் காலத்தின் (கி.மு. *2000-1700*) மத்திய நூற்றாண்டுகளை இந்நிகழ்ச்சிகள் நடந்த காலமாக பொதுவாகக் குறிக்கலாம். ஆல்பிரைட் இந்நிகழ்ச்சிகளுக்கு கி.மு. *1750*-ஐக் குறிக்கிறார். மற்றச் சான்றுகளும் இதைக் குறிப்பதாக உள்ளன. இக்காலத்தை ஒட்டிய நூசி ஏடுகளில் யாக்கோபு வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கு இணையானவை காணப்படுகின்றன. இந்த ஏடுகள் மூதாதையர்கள் தங்கள் வாழ்வைத் தொடங்கிய வட மெசபொத்தாமியாவைச் சேர்ந்தவையாகும். இவ்வகை இணைத்தன்மையுடைய நிகழ்ச்சிகளுக்குச் சான்றுகள், தலைமகனுரிமையைக் குறைந்த விலைக்கு விற்றல், வாய் மொழி ஆசீர்களும் ஏற்பாடுகளும், யாக்கோபுக்கும் லாபானுக்குமிடையே உறவு ஆகியவையாகும். ஆண் வாரிசு அற்ற லாபான் யாக்கோபைத் தத்து எடுத்துக் கொள்கிறார் (காண்க. ஆதி *31:43*).

அதன் விளைவாக, யாக்கோபின் குடும்பத்தின் மேல் லாபான் மூதாதையர் உரிமை கோருகிறார். ராகேல் திருடிச் சென்ற குடும்பத் தேவர்களின் சிலைகள் நூசியில், குடும்பத்தின் தலைமையையும் வாரிசு உரிமையையும் அடையாளமாக உணர்த்துகின்றன.

உப 26:5-இல் யாக்கோபின் இனப் பின்னணி அரமேயம் என்று கூறப்பட்டுள்ளது. அரமேயனான லாபானோடு யாக்கோபு கொள்ளும் உறவோடு இஃது ஒத்துப்போகிறது. பிற்கால இஸ்ராயேலர் அரமேயர் அல்லர். ஆனால், அரமேயர்களோடு கொண்ட உறவு ஏற்றுக் கொள்ளப்படுகிறது. யாக்கோபுக்கும் லாபானுக்கும் இடையிலான உடன்படிக்கைக் கதை, கிலயாதின் பழங்கால எல்லைப் பாரம்பரியத்துக்கு வரலாற்றுத் தன்மை அளிக்கிறது என்பதில் ஐயமில்லை. இஸ்ராயேல் மற்றும் ஏதோமின் உறவு யாக்கோபு மற்றும் ஏசா ஆகியோரின் கதைகளில் பிரதிபலிக்கிறது. இக்கதைகள் சிலவற்றில் தனிப்பட்ட கதாநாயகன், தான் மூதாதையராக உள்ள இனத்தின் பண்புகளை ஏற்றுக் கொள்கிறார். தலைமகனுரிமை, மற்றும் ஆசீர் பற்றிய கதைகள், ஏதோம் மூத்தவராக இருந்தாலும் அவர் மேல் இஸ்ராயேல் கொண்ட மேலாண்மையை எடுத்துக் கூறுகின்றன. இவை ஏதோமைத் தாவீது வென்ற காலத்தின் நிலையைப் பிரதிபலிக்கலாம். இரட்டையர் பிறப்புபற்றிய கதையும் இதே தன்மை கொண்டிருக்கலாம். யாக்கோபு என்ற பெயரின் விளக்கத்திலிருந்து பிறப்புபற்றிய கதை தோன்றியிருக்கலாம்.

**5. யாக்கோபின் சமயம்:-** ஆபிரகாம் பாரம்பரியத்தில் அவரது சமயம் கொண்டிருப்பதுபோல், யாக்கோபு பாரம்பரியத்தில் அவரது சமயம் அவ்வளவு முதன்மை பெற்றிருக்கவில்லை எனலாம். ஆபிரகாம் பாரம்பரியத்தில், ஆபிரகாமுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை யாக்கோபு உரிமைச் சொத்தாகப் பெறுகிறார் (ஆதி 28:13-15; 48:3தொ). ''யாக்கோபின் வலியவர்'' அல்லது ''இஸ்ராயேலின் வல்லவர்'' போன்ற இறைப்பட்டங்களின் (ஆதி 49:24; எசா 1:24; 49:26; 60:16; சங் 132:2.5) பொருள் தெளிவாக இல்லை. வல்லவர் என்ற பொருளைக் குறிக்கும் மூலச் சொல், உகாரித்தில் காளையைக் குறிக்கும். ஆனால், இது பிற்கால இஸ்ராயேலுக்கு வெறுப்பைத் தருவதாகும். பெனியேலில் இறை ஆளோடு யாக்கோபு போராடியது பற்றிய கதையில் மூலக்கருத்தைக் கண்டு பிடிப்பது கடினமாகும். இஃது எல்லையில் நடக்கிறது. உட்புகுபவரான யாக்கோபு, கானான் நாட்டில் நுழைய இறை எதிர்ப்பை மேற்கொள்ள வேண்டும். பிறப்புரிமை மற்றும் ஈசாக்கின் ஆசீர் பற்றிய கதைகளைப் போல், இது நாட்டில் நுழைய யாக்கோபு குழுவினரின் உரிமையை நேர்மைப்படுத்துகிறது. பெத்தேல் (ஆதி 28), செக்கேம் (33:20) ஆகிய இடங்களில் உள்ள புனித இடங்களோடு யாக்கோபு தொடர்பு படுத்தப்படுகிறார். பெத்தேலில் யாக்கோபு புனித நினைவுத் தூணை நாட்டுகிறார். இத்தகைய தூண்கள் கானானிய வழிபாட்டின் ஒரு பகுதியாகும். ஆனால், யாவேயின் பிற்காலப் புனிதத் தலங்களில் இவை முழுவதும் புறம்பாக்கப்பட்டன. யாக்கோபைப் பற்றிய இந்தக் கதையை ஒளிவு மறைவு இன்றிக் கூறும் எபிரேயப் பாரம்பரியம் போற்றப்பட வேண்டியதொன்றாகும். ஆபிரகாமின் சமயத்தோடு யாக்கோபின் சமயம் கலந்து ஒன்றுபடுதல் கானானில் இஸ்ராயேலர் குடியேறியதற்குமுன் நடக்கவில்லை.

**6. விவிலியத்தின் பிறபகுதிகளில் யாக்கோபு:-** தனிப்பட்ட ஆள் என்ற அளவில் யாக்கோபு அரிதாகவே குறிக்கப்படுகிறார். சலுகை பெற்ற குழந்தையாகவும் (மலா 1:2; உரோ 9:10-13), இறைவாக்குறுதியின் வாரிசாகவும் (எபி 11:9), ஆசீரின் மனிதனாகவும் (எபி 11:20-21) குறிக்கப்படுகிறார்.

இஸ்ராயேலைக் குறிக்கும் பொதுப்பெயராக யாக்கோபு என்ற பெயர் பயன்பட்டுள்ளது. இஸ்ராயேலுக்குச் சமமதிப்புள்ளதாகப் பயன்பட்டுள்ளது: உப 32:9; 33:28; சங் 44:4; 59:13; 79:7; 87:2; 99:4; 147:19; எசா 27:9; 48:20; 59:20; எரே 10:25; 30:7. 18; 31:6.10; 46:27தொ; ஒப 10; மீக் 2:12; 5:6தொ. இஸ்ராயேல் என்ற பெயருக்கு இணையாகப் பயன்பட்டுள்ளது: ஆதி 49:7;

*எண் 23:2.7.10.21.23; 24:5.17.19; உப 33:10; சங் 14:7; 53:6; 105:10; 135:4; எசா 9:7; 27:6; 40:27; 41:8.14; 42:24; 43:1.22.28; 44:1.5.21.23; 45:4; 48:12; 49:5.6; எரே .30:10; 46:2; மீக் 3:8; நாகூ 2:3.* யாக்கோபின் வீடு என்ற தொடரில்: *யாத் 19:3; எசா 2:5; 8:17; 10:20தொ; 14:1; 29:22; 46:3; 48:1; 58:1;எரே 2:4; 5:20; எசே 20:5; ஆமோ 3:13; 9:8 (வட அரசைக் குறிக்கிறது); சங் 114:1; ஒப 17தொ; மீக் 2:7; 3:1.9.* யாக்கோபின் திருக்கூட்டம்: *உப 33:4.* யாக்கோபின் மரபினர்: *சங் 22:23; எசா 45:19; எரே 33:26.* யாக்கோபின் புதல்வர்கள்: *1 அர 18:31; 2 அர 17:34; சங் 77:15; 105:6; மலா 3:6.* யாக்கோபு என்ற பெயர் வட அரசைக் குறிக்கிறது: *ஓசே 10:11; ஆமோ 6:8; 7:2.5; மீக் 1:53.* யாவே யாக்கோபின் இறைவனாவார்: *சங் 20:1; 46:7.11; 75:9; 76:6; 81:1.4; 84:8; 94:6; 114:7; 146:5; எசா 2:3; மீக் 4:2.* யாக்கோபின் பெருமை: *ஆமோ 8:7.* யாக்கோபின் தூயவர்: *எசா 29:23.* யாக்கோபின் அரசர்: *எசா 41:21; 44:6.* இது யாக்கோபு என்ற பெயர் இஸ்ராயேல் என்ற பெயருக்குச் சமமாகப் பயன்பட்டுள்ளது என்று காட்டு கிறது. ஆனால், ஈசாக்கு, ! ஆபிரகாமோடு இணையாகப் பயன்படுத்தப்படவில்லை. ஓசே 12:2-4.12 யாக்கோபை இஸ்ராயேல் மக்களோடு அடையாளம் காண்கிறது. இப் பகுதி ஏசாவை யாக்கோபு ஏமாற்றுதல், அவர் விண்ணக ஆடவனோடு போராடு தல், அவர் ஆராமுக்கு ஓடிப்போதல் ஆகியவற்றில் இறைவனது வெறுப்பின் அடையாளத்தைக் காண்கிறது. ஆனால், யாக்கோபைப் போல் இஸ்ராயேலும் இரக் கத்தையும் மன்னிப்பையும் பெறலாம். யாக்கோபுக்குப் பாதகமான இந்தத் தீர்வு ஆதியாகமப் பாரம்பரியத்தில் உள்ளடங்கி யுள்ளது.

புதிய ஏற்பாட்டுக் குறிப்புகள், யாக் கோபை ஆபிரகாமோடும் ஈசாக்கோடும் தொடர்புபடுத்துகின்றன. அவரது வாழ்வு பற்றிய குறிப்புகள் குறிப்பாக ஸ்தேவானின் உரையில் *(அ.ப. 7:8தொ)* சுட்டிக்காட்டப் படுகின்றன. பெத்தேலில் யாக்கோபு காட்சி யில் கண்ட ஏணிக்கு, விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையாளராக, இயேசு தன்னை ஒப்பிடுகிறார் *(யோவா 1:51).* மலா *1:2*-இல் வரும் சிந்தனையை அடிப்படை யாகக் கொண்டு, பிறப்புரிமையை ஏசாவிட மிருந்து யாக்கோபுக்கு மாற்றுவதை, பவுல் இறைவனது சுதந்தரமான தேர்வுக்கு ஒரு எடுத்துக்காட்டாகக் காட்டுகிறார்.

7. **இறையியல் பொருள்:-** யாக்கோபின் வாழ்க்கை வரலாறு போராட்டங்கள் நிறைந்ததாகும். அவரது பிறப்புக்கு முன் னேயே தோன்றும் போராட்டம் பற்றிய குறிப்பு (ஆதி 25:22-23) வாழ்க்கை வரலாறு முழுவதும் எதிரொலிக்கிறது. ஏசாவை இருமுறை ஏமாற்றியதன் விளைவாக அவர் காரானுக்கு ஓடவேண்டியிருந்தது. அங்கு லாபானுடன் தொடர்ந்து போராட வேண்டி யிருந்தது. இப்போராட்டம் அவர் பாலஸ் தீனத்திற்குப் புறப்பட்ட பின்புதான் முடி வுக்கு வந்தது. ஏசாவைச் சந்திக்க வரும் போது, பகைமையால் அச்சுறுத்தப்படுத லும் பயமும் யாக்கோபை ஆட்கொண்டன. யோசேப்பு பற்றிய பகுதியில் கூட, தன் புதல்வர்களுடன் கொண்ட உறவில் கூட, கவலை மற்றும் மனத்துக்கத்திற்கு யாக் கோபு உள்ளானார். சுருங்கக் கூறின் இயற் கையிலிருந்தும் (பஞ்சம்), மனிதர்களிட மிருந்தும் (ஏசா, லாபான்), இறைவனிடத்தி லிருந்தும் (போராடிய ஆடவன்), எல்லாப் பக்கத்திலிருந்தும் யாக்கோபை ஆபத்துக் கள் சூழ்ந்திருந்தன. ஒவ்வொரு சமயத்தி லும் ஆசீருக்கு அவர் கொண்டிருந்த உரிமை அச்சுறுத்தப்பட்டது.

இவ்வரலாறு, யாக்கோபின் ஆட்தன்மை யால் மேலும் சிக்கலாக்கப்படுகிறது. அவர் கெட்டிக்காரர்; பொய் சொல்லக் கூசாதவர்; பிறர் உரிமை பறிப்பவர். இவையெல்லாம் நிகழ்ச்சியுரைகளில் முனைப்பாகக் காட்டப் படுகின்றன. இவை இந்த வரலாற்றைச் சரியான முறையில் மதிப்பீடு செய்வதைக் கடினமாக்குகின்றன. இந்த ஏமாற்றுப் பேர் வழி கைவிடப்படத் தகுதியுள்ளவன் என் றும் அவர் எதிர்கொண்ட ஆபத்துக்களின் முழுப்பாதிப்பையும் தனியே அனுபவிக்க

வேண்டியவர் என்றும் வாசகர்கள் உணர் கின்றனர். எந்த மற்ற மூதாதையர் வர லாறும் மனிதனது ஆட்தன்மையின் ஆதிக் கத்தால் இந்த அளவுக்குப் பாதிக்கப்பட வில்லை. இந்த உணர்வு நிகழ்ச்சிகளை மதிப்பீடு செய்வதைக் கடினமாக்குகிறது.

ஆனால், யாக்கோபின் வரலாற்றில் காணப்படும் முரண்பாடு என்னவெனில் வாசகர்களுக்கு வெறுப்பூட்டி மதிப்பீட் டைக் கடினமாக்கும் மனித ஆட்தன்மை மற்றும் சமயச் சார்பற்ற அக்கறைகள் ஆதிக்கம் செலுத்துவதே, பின்னணியாக அமைந்துள்ள இறையியலைச் சுட்டிக்காட் டும் திறவு கோலையும் அளிக்கிறது. மற்ற மூதாதையர்களோடு இறைவன் நேரடியாகச் செயல்படுகிறார். யாக்கோபின் வரலாற்றில் நேரடியாகச் செயல்படுவதிலிருந்து இறை வன் பின்வாங்கியவராகத் தோன்றுகிறார். ஆயினும், இறைவன் செயலாற்றாமல் இல்லை. தமது குறிக்கோளுக்காக வரலாற் றைத் திட்டமிட்டு நடத்துகிறார். இதைப் பெத்தேல், பெனியேல் நிகழ்ச்சிகள் எடுத் துக்காட்டுகின்றன. இறைவன் தகுதியற்ற வர்கள் மற்றும் விரும்பத்தகாத சூழ்நிலை கள் வழியாகவும் செயலாற்றுகிறார். போராட்டங்களையும் அவல நிகழ்ச்சிகளை யும் கொண்டு யாக்கோபு தானே அமைத்து அதிலே தானே விழுந்து கொள்ளும் சிக்கல் மிக்க வலையில் இறைவனே வழிநடத்து கிறார் என்பது இஸ்ராயேலின் விசுவாசமா கும். இவற்றில் எல்லாம் இறைவன் பாதி மறைந்தவர் போல் தோன்றினாலும், அவர் பிரசன்னமாக இருக்கிறார். இவ்வாறு, மூதா தையர் வரலாற்றில் எங்கும் காணாத முறையில், தனது கண்பார்வையற்ற தந்தை யிடம், தான் விரைவில் வேட்டைப் பொருளை அடைந்ததற்கு ''உன் கடவு ளாகிய ஆண்டவரால்தான் இது நிகழ்ந்தது'' என்று காரணம் கூறும் யாக்கோபின் இறை நிந்தனையில், தன் வாழ்வின் மிகவும் ஆழ்ந்த உண்மையான விளக்கத்தையும் கூறுகிறார்.

யாக்கோபின் வரலாற்றில் பல வெறுக்கத் தக்கவையானாலும், மற்றவை மகிழ்ச்சி மிக்கவையாக உள்ளன. தனிப்பட்ட பகுதி களின் மூலநோக்கம் எதுவானாலும், நாம் கொண்டிருக்கும் வடிவில் யாக்கோபின் வரலாறு வேடிக்கையாகவோ, பொழுது போக்காகவோ எழுதப்பட்டதன்று. வாசகர் களுக்குப் போதகம் அளிப்பதற்காகவே எழுதப்பட்டது. யாக்கோபு தந்திரத்தாலும் மனிதக் கணிப்பினாலும் வெற்றி பெறத் திட்டமிட்டார். ஆனால், விவிலியம் அவரை ஏமாற்றுபவன் என்று சித்திரிக் கிறது. அவர் காலத்திய சமூக அமைப்பின் சூழ்நிலையில், அவரது குறிக்கோள் மிக உயர்ந்தது. அது தலைமகனுக்குரிய ஆசீரா கும். இது வெறும் நல்லெண்ண வெளிப் பாடு மட்டுமன்று, தன்னியலான கொடை யாகும். ஒரு தடவை இதைக் கூறிப் பின் அதை எடுத்துக் கொள்ள முடியாது. யாக் கோபுக்கு இது கானானை உரிமைச் சொத் தாக அடைவது மட்டுமன்று, ஆபிரகாம் மற்றும் ஈசாக்குக்கு அளிக்கப்பட்ட மீட்பு வாக்குறுதியை அடைவதுமாகும். யாக்கோ பின் வாழ்வின் முரண்பாடு என்ன வென்றால் அவரது சூழ்ச்சிகளும் முயற்சிக ளும் விரும்பிய விளைவுகளை ஏற்படுத் தின, வெற்றிபெற்றார். அவர் தலைமகனுக் குரிய ஆசீரைப் பெற்றார். லாபான் வீட்டில் கடின உழைப்பும் சூழ்ச்சிகளும் அவருக்குச் செல்வச் செழிப்பைத் தந்தன. பெனியே லில், தோற்றத்திற்கு, அவர் இறைவன் மேல் கொண்ட வெற்றி அவருக்கு இறைவ னது ஆசீரையும், இஸ்ராயேலாக அடை யாளப் பெயர் மாற்றத்தையும் மிக உறுதியா கத் தந்தது. ஆயினும் தனது மரணத்தில், எல்லா ஆசீர்களும் ஆண்டவரிடமிருந்து மட்டுமே வருகின்றன என்று கண்டுணர்ந் தார் (*காண்க. 49:14*). ''உண்மையாகவே ஆண்டவர் இவ்விடத்தில் இருக்கிறார்; நானோ இதை அறியாதிருந்தேன்'' *(28:16)* என்று தான் முன்னர் அறிந்ததின் உண் மையை முழுவதும் கண்டுணர்ந்தார். யாக் கோபு விசுவாசத்தின் வீரராகக் கருதப்பட லாம் (*எபி 11:21*). அவரது வாழ்வு இறைவனுடைய பிரமாணிக்கத்திற்கும் அரு ளுக்கும் சான்று பகர்கிறது. யாவே ''யாக் கோபின் கடவுள்'' என்றும் (*சங் 20:1; 46:7;*

எசா *2:3*; மீக் *4:2*; காண்க. யாத் *3:6.15-16*; மத் *22:32* இணை; அ.ப. *3:13*), ''யாக்கோபின் அரசர்'' என்றும் (எசா *41:21*) குறிக்கப்படுவது, இஸ்ராயேலர் சமய வளர்ச்சியில் யாக்கோபின் முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டுகிறது.

**யாக்கோபு எழுதிய திருமுகம்** (JAMES, LETTER OF)

***1. ஆசிரியர்:-*** ''உலகெங்கும் சிதறுண்டு வாழும் பன்னிரண்டு கோத்திரங்களுக்கும், கடவுளுக்கும் ஆண்டவராகிய இயேசுவுக்கு ஊழியனான யாக்கோபு வாழ்த்துக் கூறி எழுதுவது'' (யாக் *1:1*) என்று இத்திருமுகம் தொடங்குகிறது. இந்த யாக்கோபு யார்? புதிய ஏற்பாட்டில் இப்பெயருடன் ஐந்து பேர் வருகின்றனர்.

இவர் செபதேயுவின் மகனான பெரிய யாக்கோபுவாக இருக்க முடியாது. தன் தம்பி யோவானுடன் ஒரே நேரத்தில் இயேசுவால் அழைக்கப்பட்டுப் பன்னிருவருடன் சேர்த்துக் கொள்ளப்பட்ட (மத் *4:21*; மாற் *1:19*) இவர் கி.பி. 42-இல் ஏரோது அகிரிப்பாவால் தலைவெட்டப்பட்டு கொல்லப்பட்டார். அல்பேயுவின் மகனும் சின்ன யாக்கோபு என்று அழைக்கப்படுபவரும் இத்திருமுகத்துக்கு ஆசிரியராக இருக்க முடியாது. இவரும் பன்னிருவருள் ஒருவரானாலும், ஆதித்திருச்சபையில் எந்த முக்கிய பங்கும் கொண்டதாகத் தெரியவில்லை. இவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. மரியாளின் மகன் யாக்கோபும் (மத் *27:56*;மாற் *15:40*; *16:1*; லூக் *24:10*), பன்னிருவருள் ஒருவரான யூதாவின் தந்தையுமான யாக்கோபும் (லூக் *6:16*; அ.ப. *1:13*) இத்திருமுகத்திற்கு ஆசிரியராக இருக்க முடியாது. இவர்களைப் பற்றி ஒன்றும் அறிவதற்கில்லை.

ஆகவே, இத்திருமுகத்திற்கு ஆசிரியர் ஆண்டவரின் சகோதரர் என அழைக்கப்படும் யாக்கோபாக இருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது. இவர் நாசரேத்தூர் யோசேப்பு, சீமோன், யூதா ஆகியோரின் சகோதரனாக இருக்கலாம் (மத் *13:55*; மாற் *6:3*). பேதுருவுக்குப்பின் எருசலேமில் ஆதித்திருச்சபைக்குத் தலைவராக இருந்தவர் (காண்க. அ.ப. *12:17*). ஆதித் திருச்சபையில் நல்ல செல்வாக்கு இவருக்கு இருந்தது. எருசலேமில் அப்போஸ்தலர்களும் மூப்பர்களும் கூடி அக்காலத்துத் திருச்சபையின் பிரச்சனைகளை ஆராய்ந்தபோது, இவரது கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது (*15:13-23*). பவுலின் பணிகளிலும் திருமுகங்களிலும் யாக்கோபின் முக்கியத்துவம் தெரிகின்றது. தம்பணியின் வெற்றிகளை யாக்கோபிடமும் எருசலேம் மூப்பர்களிடமும் பவுல் அறிவிக்கின்றார் (*21:18*). உயிர்த்த இயேசுவின் காட்சிகளில் அவர் யாக்கோபுவுக்குத் தனியாகத் தோன்றியதாகவும் கூறப்படுகிறது (1 கொரி *15:7*). வரலாற்று ஆசிரியர் யோசிப்பசின் கூற்றுப்படி இந்த யாக்கோபு கி.பி. 62-இல் யூதர்களால் கொல்லப்பட்டார். இவரும் அல்பேயுவின் மகனான யாக்கோபும் ஒருவரே என்று சிலர் கருதுவர். இவர்கள் ஒருவர் அல்லர்; வெவ்வேறானவர்கள் என்பர் வேறு சிலர். இவர் அப்போஸ்தலர்களில் ஒருவர் இல்லையெனினும், பரந்த பொருளில் இவர் அப்போஸ்தலராகக் கருதப்படலாம் (காண்க. அ.ப. *15:13*; கலா *1:19*). இத்திருமுகம் புனைபெயர் நூல் என்றும், ஒரு வேளை முந்தைய யூத நூல் மாற்றி எழுதப்பட்டிருக்கலாம் என்றும், வேறு ஒரு யாக்கோபு இந்நூலை எழுதியிருக்கலாம் என்றும் கருதும் அறிஞர்கள் உண்டு.

ஆசிரியர் ஓர் அப்போஸ்தலராய் இருந் திருந்தால் ''உலகெங்கும் சிதறுண்டு வாழும் பன்னிரண்டு கோத்திரங்களுக்கு'' அதிகாரத்துடன் எழுதுபவர் அப்பட்டத்தை முன்னுரையில் சுட்டிக் காட்டியிருப்பார். அவர் காட்டும் அதிகாரத்தொனியும் (காண்க. *1:2.13*; *3:1.13* தொ; *4:13*தொ; *5:7*), இந்நூல் திருமுறைப் பட்டியலுக்குள் இடம் பெற்றிருப்பதும், இந்நூலின் ஆசிரியர் ஏதாவது ஒரு விதத்தில் ஆதித் திருச்சபையில் முக்கியமானவராய் இருந்திருக்க வேண்டும் என்று காட்டுகின்றன. பவுல் ''திருச்சபையின் தூண்கள் எனக் கருதியவர்

களுள்'' எருசலேம் திருச்சபையின் யாக்கோபும் ஒருவராவார் (கலா 2:9).

ஆசிரியர் ஒரு யூதர் என்று தெரிகிறது. அவர் பழைய ஏற்பாட்டை நன்கு அறிந்திருக்கிறார். எபிரேய இலக்கிய முறைகளையும் (எ.கா. இணையமைப்புகள்) எடுத்துக்காட்டான யூதச் சொற்ளையும் பயன்படுத்துகிறார். கிரேக்கர்களின் கருத்தியலான மனப்போக்கில் அல்லாமல், பழைய ஏற்பாட்டின் செயல் முறையான மனப்போக்கில் தனது கருத்துகளை அமைக்கிறார். இந்நூல் பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியப் போக்கைப் பல இடங்களில் எதிரொலிக்கிறது.

அதே சமயத்தில் ஆசிரியர் ஒரு கிறிஸ்தவர் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. புதிய ஏற்பாட்டின் பிற நூல்களுக்கும் இந்நூலுக்கும் பொருள் அளவில் தொடர்புகள் பல உள்ளன. இதற்குச் சான்றாக, பின்வருவனவற்றைச் சுட்டிக் காட்டலாம்.

*யாக் 1:2 தொ.12=மத் 5:11தொ; உரோ 5:3தொ; 1பேதுரு 1:6தொ; யாக் 1:12=மத் 7:24தொ; 2 திமொ 4:7தொ; யாக் 1:13=1கொரி 10:13; யாக் 1:17-21=1 பேதுரு 1:22-2:2; யாக் 1:22தொ=உரோ 2:13தொ; யாக் 2:1தொ=மத் 25:31; யாக் 2:5=மத் 5:2.3; லூக் 6:20 தொ; 1 கொரி1:27; யாக் 2:13=மத் 5:7; யாக் 4:3=1யோவா 5:14; யாக் 4-6-10=1 பேதுரு 5:5-9; யாக் 5:1-11=மத் 24; யாக் 5:12= மாற் 5:4தொ; யாக் 5:15=மத் 12:32.*

இவை இந்நூல், புதிய ஏற்பாட்டின் பிறநூல்களைத் தழுவி எழுதப்பட்டுள்ளது என்று சுட்டவில்லை; மாறாக, தான் வாழ்ந்த காலத்துத் திருச்சபையின் கோட்பாடுகளில் ஊறிப்போய், அத்திருச்சபையின் உயிருள்ள போதனையின் பின்னணியிலேயே இந்நூலை ஆசிரியர் எழுதுகிறார் என்று காட்டுகின்றன. எனவே, ஆசிரியர் ஒரு கிறிஸ்தவராக இருந்திருக்கவேண்டும்.

எருசலேம் திருச்சபையின் தலைவராகவும் ஆண்டவரின் சகோதரராகவும் கருதப்படும் யாக்கோபு இந்நூலுக்கு ஆசிரியர் ஆவார் என்று கருதினால், சில பிரச்சனைகள் எழும்.

அ) அக்காலத்து வரலாற்று ஆசிரியரான யூசேபியு, கெகசிப்பு போன்றோரும், மற்றும் போலிக் கிளமந்துவின் அறவுரைகளும், எருசலேம் யாக்கோபு யூதச் சட்ட முறைகளில் மிகவும் கண்டிப்பானவர் என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் இந்நூல் அத்தகைய சடங்கு, சட்டங்களைப் புறக்கணிப்பதாகத் தெரிகிறது. இதிலிருந்து எருசலேம் யாக்கோபு இந்நூலை எழுதியிருக்க முடியாது என்று கூறத் தேவையில்லை. ஏனெனில், பாரம்பரியம் அவரைச் சட்டத்தின்பால் பேரார்வம் மிக்கவராகக் காட்டவில்லை. எருசலேம் சங்கத்தில் யாக்கோபு மிதமான, சகித்துப்போகும் போக்கையே காட்டுகிறார் (அ.ப. 15:1.5. 19தொ.22; 21:18தொ; கலா 2:1-11). மேலும், ஆசிரியர் யூதக் கிறிஸ்தவர்களுக்காகவும், அவர்கள் சூழ்நிலையில் அவர்களுக்குத் தேவையானவற்றையே எழுதுகிறார். தம்முடைய தத்துவங்கள் கோட்பாடுகளை எல்லாம் எழுதுவது அவரது நோக்கமன்று. மேலும், இந்நூலில் வருபவை எதுவும் யாக்கோபின் நிலைக்கு மாறானவை அல்ல.

ஆ) மேற்கூறப்பட்டதைவிட முக்கியமான பிரச்சனை, இயேசுவுக்கும் அவரது பணிக்கும் அதிகக் கவனம் கொடுக்கப்படாமையாகும். இரு இடங்களில் மட்டும் தான் இயேசுவின் பெயர் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது (யாக் 1:1; 2:1தொ). 5:7.14-இல் வரும் ''ஆண்டவர்'' என்னும் சொல் இயேசுவைக் குறிக்கலாம். 2:7-இல் வரும் ''அவருடைய திருப்பெயர்'' இயேசுவின் பெயரையே சுட்டுகிறது எனலாம். இவற்றைத் தவிர இந்நூலில் இயேசுவைப் பற்றிய குறிப்பு ஏதுமில்லை. அப்போஸ்தலர் ஒருவராலோ, ''ஆண்டவரின் சகோதரர்களுள்'' ஒருவராலோ இந்நூல் எழுதப்பட்டிருந்தால், இது வினோதமாகத் தோன்றுகிறது. இலக்கிய அமைப்பைப் பற்றி விளக்க முறையைத் தவிர, ஆய்

வாளர்கள் இப்பிரச்சனைக்குத் தெளிவான விளக்கம் தரவில்லை. இவர்கள் கருத்துப் படி இந்நூல் பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியப்பாணியில் எழுதப்பட்டுள்ளது. ஒழுக்க முறை சார்ந்த செயல்முறைக் காரியங்களைப் பற்றி ஆசிரியர் எழுது கிறாரே ஒழிய, இயேசுவையும் அவரது பணிகளைப் பற்றியும் எழுதுவது ஆசிரி யரது நோக்கமன்று.

இ) இன்னும் அதிகச் சிக்கல் மிக்க பிரச்சனை மொழி நயத்தை அடிப்படை யாகக் கொண்டதாகும். யாக்கோபு ஒரு கலிலேயர். அவர் பாலஸ்தீனத்தைவிட்டு அதிகம் வெளியே போயிருக்க வழி யில்லை. ஆனால், அவருடைய கிரேக்க நடை மிகுந்த நயம் மிக்கதாக உள்ளது. புதிய ஏற்பாட்டில் எபிரேயருக்கு எழுதப் பட்ட திருமுகத்தைத் தவிர வேறு எந்த நூலிலும் இவ்வளவு தெளிவான, அழகான கிரேக்க நடையையும், சொற்றொகுதிகளை யும் காண்பது அரிது. எருசலேமில் வாழ்ந்த ஒரு சாதாரண கலிலேயர் இந்த அளவுக்குக் கிரேக்க மொழியில் புலமை பெற்றிருந் தாரா? இப்பிரச்சனைக்குப் பதில் கூறுவது கடினமன்று. யாக்கோபு தானாகக் கைப்பட இந்நூலை எழுதியிருக்கத் தேவையில்லை. யாக்கோபு தன் கருத்துகளைக் கூற, கிரேக்க மொழியில் புலமைபெற்ற வேறொருவர் எழுதியிருக்கலாம்.

மேற்கூறப்பட்ட காரணங்கள் மற்றும் விளக்கங்களின் அடிப்படையில், ''ஆண்ட வரின் சகோதரர்'' எனக் கருதப்படும் எருசலேம் யாக்கோபு இத்திருமுகத்தை எழுதியிருக்கலாம். இதுவே பாரம்பரியக் கருத்துமாகும். ஆனால், இந்நூல் ஒரு புனைபெயர் நூல் என்று கருதுபவர்கள் உள்ளனர்.

***2. யாருக்காக, எப்போது எழுதப் பட்டது?:*** ''உலகெங்கும் சிதறுண்டு வாழும் பன்னிரண்டு கோத்திரங்களுக்கு'' என்று இத்திருமுகம் தொடங்குகிறது (யாக் 1:1). இச்சொற்றொடர் கிரேக்கர்களிடையே வாழ்ந்த யூதர்களைக் குறித்தது (காண்க. யோவா 7:25). ஆனால், இங்கு இச்சொற் றொடர் இவர்களைக் குறிக்கவில்லை. ஏனெனில், யூதர்களுக்காக மட்டும் எழுதப் பட்ட ஒரு திருமுகம் கிறிஸ்தவத் திரு முறைப்பட்டியலில் இடம் பெற்றிருப்பது முடியாத காரியமாகும். ஆசிரியர் கிறிஸ்தவ சமூகம் முழுவதையும் குறிக்க ''பன்னி ரண்டு கோத்திரங்கள்'' என்ற சொற் றொடரை உருவகமாகப் பயன்படுத்துகிறார் எனலாம் (காண்க. மத் 19:28). ''சிதறுண்டு வாழும்'' என்னும் சொற்கள் எருசலேமி லிருந்து ஓரளவு தூரத்தில் வாழ்ந்தவர் களைக் குறிக்கலாம் (காண்க. 1 பேதுரு 1:1). ஒருவேளை, ஏரோது அகிரிப்பா திருச்சபையைத் துன்புறுத்திய காலத்தில் (காண்க. அ.ப. 11:19) சீரிய அந்தியோக்கி யாவுக்கு ஓடிப்போன யூதக் கிறிஸ்தவர் களுக்கு இந்நூலை யாக்கோபு எழுதி யிருக்கலாம்.

''ஆண்டவரின் சகோதரர்'' எனக் கருதப் படும் யாக்கோபு இந்நூலை எழுதியிருந் தால், யாக்கோபு மறைசாட்சி மரணம் எய்திய கி.பி. 62-க்குச் சிறிது முன் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும். நூலில் புற வினத்தாருக்கும் விரிவாக்கப்பட்ட வாக் குறுதி பற்றிய குறிப்பு இல்லை. யூத-புறவினப் பிரச்சனைகளும் குறிப்பிடப்பட வில்லை. ஆகவே, இந்நூல் பவுலின் நூல்களுக்கு முந்தியது. ஆகவே கி.பி. 50-ஐ ஒட்டி இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண் டும் என்பர் சிலர். இந்நிலை சரியென்றால் புதிய ஏற்பாட்டு நூல்களிலேயே இந்நூல் தான் முதலாவது ஆகும். எளிய வாழ்வு மற்றும் திருச்சபை அமைப்புகள் பற்றிய குறிப்புகள் (யாக் 2:2; 3:1; 5:14) இந்நூல் முற்காலத்தில் (கி.பி. 35-50) தோன்றியது என்பதற்கு ஆதரவாக உள்ளன. அப்படி யானால் இந்நூல் எருசலேமிலிருந்து எழுதப்பட்டிருக்க வேண்டும். கிரேக்க நடையையும், ஆசிரியர் பவுலின் நூல்களை அறிந்திருக்கக்கூடும் என்பதையும் (உரோ மையரில் ஏற்புடைமையும் விசுவாசமும்) அடிப்படையாகக் கொண்டு, இந்நூல் பிற் காலத்தில் (கி.பி. 70-130) தோன்றியிருக்க

லாம் என்று கூறுபவரும் உள்ளனர். இந் நிலையை ஏற்றுக்கொள்ளத்தேவையில்லை. நூலின் தொன்மைத்தன்மை, இந்நூல் இவ் வளவு பிந்தித் தோன்றியிருக்கக்கூடும் என்று சுட்டவில்லை.

**3. திருமுறைப் பட்டியலில் யாக்கோபின் திருமுகம்:** மத்தேயு நற்செய்தியைத் தவிர்த்து, மற்ற யூதக்கிறிஸ்தவ நூல்களைப் போலவே, இந்நூலும் எல்லாராலும் எல்லா இடங்களிலும் திருமுறைப் பட்டியலில் சேர்ந்ததாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. நூலின் ஆசிரியர் பற்றிய ஐயம், செமித்தியப் பின்னணி, கோட்பாடுகள் இல்லாமை, பவுலுக்கு எதிரான போக்கு இருப்பதாகத் தோன்றுதல் ஆகிய காரணங்களுக்காக இந் நூல் ஓரிசன் வரை திருமுறைப்பட்டியலில் இடம் பெறவில்லை. ஓரிசன்தான் முதன் முதலில் திருமுறைப்பட்டியலில் சேர்க் கிறார். இந்நிலைக்கு எதிரான போக்கைச் சில திருச்சபைகள் கொண்டிருந்தன என்று யூசேபியு கூறுகிறார். மேலையத் திருச்சபை யின் திருமுறைப் பட்டியலில் கி.பி. 350-க்குப்பின்தான் இந்நூல் தோன்றுகிறது. இதற்கு எதிரான போக்குடைய ''சீர்திருத்த வாதிகள்'' சிலரும் பின்பு இதை ஏற்றுக் கொண்டனர். திரிதெந்தீன் பொதுச்சங்கங் கள் இந்நூலும் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்தது என்று உறுதியாகக் கூறியது.

**4. இலக்கிய நடை:** நூலின் முன்னுரை யில் திருமுகங்களுக்குரிய வாழ்த்துக் கூறு தல் உள்ளது (யாக் 1:1). ஆனால் முடிவுரை யில் வாழ்த்தும் ஆசீரும் கூறுதல் இல்லை. நூலில் திருமுகத் தொனியும் இல்லை எனலாம். புதிய ஏற்பாட்டின் பிற திருமுகங் களில் சிறப்பாகக் காணப்படும் கோட்பாடு களும், அவற்றின் விளக்கங்களும் இந் நூலில் காணப்படவில்லை. நூல்முழுவதும் ஒழுக்க முறை பற்றிய அறவுரையாக, ஊக்கவுரையாக அமைந்துள்ளது. இந்நூல், பழைய ஏற்பாட்டு ஞான இலக்கிய நூல் களோடும், பன்னிரண்டு மூதாதையர்களின் ஏற்பாடு, முதலாம் ஏனோக்கு, 4-ஆம் மக்கபேயர், கும்ரானின் சில ஏடுகள் போன்ற போலி நூல்களில் காணப்படும் செபக்கூட அறவுரைகளோடும் தொடர் புடையதாகத் தெரிகிறது. ஆசிரியர், ஸ்தோயிக்குகளின் வாதமுறைகளையும், கேள்விபதில் முறையையும், கற்பனை உரையாடல் முறையையும் அறிந்திருப்ப தாகத் தெரிகிறது (யாக் 2:4தொ; 8.14தொ 18தொ; 3:11தொ; 4:4தொ 5:13தொ). வழிபாடு மற்றும் திருமுழுக்குப் போதக வாசகங்களின் சுவடுகள் காணப்படு கின்றன. தமது காலத்தில் நிலவிய யூத, கிரேக்க அறவுரை வடிவங்களையெல்லாம் ஆசிரியர் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. நூலில் கிரேக்க நடை நயமிக்கதாக உள்ளது. இதுபற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம்.

**5. நோக்கம்:** இந்த நூல் எழுதப்பட்ட தற்கு எந்தக் குறிப்பிட்ட நோக்கமும் இருந்ததாகத் தெரியவில்லை. எந்தக் கோட் பாடும் இதில் தனிப்பட்ட முறையில் விளக்கப்படவில்லை. கிறிஸ்தவர்கள் அன் றாட வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய சில காரியங்களைப் பற்றியே அறவுரை தருகிறார் ஆசிரியர். அவர் தரும் குறிப்பு களும் எடுத்துக் காட்டுகளும் ஒன்றிற் கொன்று தொடர்பற்றவையாகத் தோன்று கின்றன.

இந்நூல் ஒரு கடிதமன்று, ஓர் அறவுரை யாகும். வெறும் தத்துவம் பேசும் கிறிஸ்த வத்தால் பயனில்லை; அதை வாழ்ந்து காட்ட வேண்டும். கிறிஸ்தவ விசுவாசத்தின் பொருள் வாழ்ந்து காட்டுவதில்தான் அடங்கியிருக்கிறது. அப்படியில்லை யெனில் அவ்விசுவாசம் பொருளற்றது, பயனற்றது. இக்கருத்தையே மையமாகக் கொண்டு, அதைப் பற்பல கோணங்களில் விளக்குகிறார் ஆசிரியர்.

**6. நூலின் திட்டம்**

1) வாழ்த்துரை (1:1).

2) துன்பத்திலும் சோதனையிலும் பொறுமை (1:2-18).
   - அ. துன்பத்தில் மகிழ்ச்சி (1:2-12).
   - ஆ. சோதனையின் காரணம் (1:12-15).
   - இ. இறைவார்த்தையில் நமது பிறப்பு (1:16-18).

3) உயிருள்ள விசுவாசம் (1:19-27).
   அ. கோபத்தை அடக்குதல் (1:9-21).
   ஆ. இறைவார்த்தையின்படி நடப்பவர்கள் (1:22-25).
   இ. இறைவனின் தொண்டன் (1:26-27).

4) ஏழைகளை மதித்தல் வேண்டும் (2:1-13).

5) விசுவாசமும் நற்செயல்களும் (2:14-26).
   அ. மையக்கருத்து (2:14-17).
   ஆ. சில எடுத்துக்காட்டுகள் (2:18-26).

6) நாவடக்கம் (3:1-12).

7) மெய்ஞ்ஞானம் (3:13-18).

8) சண்டை சச்சரவு (4:1-2).

9) பணக்காரருக்கு எச்சரிக்கை (4:13-5:1-6).
   அ. எதிர்காலத்தின் நிச்சயமின்மை (4:13-17).
   ஆ. எச்சரிக்கை (5:1-6).

10) இறுதி அறவுரை (5:7-20).
   அ. ஆண்டவர் வருகைக்குக் காத்திருத்தல் (5:7-12).
   ஆ. நோயில் பூசுதல் (5:13-15).
   இ. பாவ அறிக்கையும் செபமும் (5:16-18).
   ஈ. பாவிகளின் மன மாற்றம் (5:19-20).

**8. இறையியல் போதகம்:** ''இறை வார்த்தையின்படி நடப்பவர்களாய் இருங்கள்; அதைக் கேட்பதோடு மட்டும் நின்றுவிடாதீர்கள்'' (யாக் 1:22); அன்றாட வாழ்வை இறைவனது திருவுளத்தின் ஒளியில் வாழுங்கள் (4:14-15) என்ற கருத்துகளின் அடிப்படையில் இந்நூலின் இறையியலைப் புரிந்துகொள்ள வேண்டும். பவுலின் இறையியலைப் போன்று அவ்வளவு ஆழமுடையதன்று யாக்கோபின் இறையியல்

இறைவன் நமது தந்தையாவார் (யாக் 1:27). அவரின் சாயலில் மனிதன் படைக்கப்பட்டுள்ளான் (3:9). இறைவன் நன்மையான கொடைகளையும், நிறைவான வரத்தையும் அளிக்கிறார் (1:17). துன்பமாகிய கொடையையும்கூட அவரே அளிக்கிறார். அது விசுவாசத்தை மனவுறுதியாக மாற்றுகிறது (1:3). அது விசுவாசிகளை அவரது அரசுக்குள் சேர்த்துக் கொள்கிறது (2:5). இறைவன் •விசுவாசியைச் சோதனைக்கு உட்படுத்துவதில்லை; பாவத்திற்கு இட்டுச் செல்வதில்லை (1:13).

இயேசு ''மாட்சிமை மிக்க ஆண்டவர்'' என்றழைக்கப்படுகிறார் (2:1). அவர் உலகைத் தீர்ப்பிட விரைவில் திரும்புவார் (5:7-9). விண்ணின்று வரும் ஞானம் மண்ணுலகைச் சார்ந்த ஞானத்தோடு ஒப்பிட்டுக் கடுமையாக வேறுபடுத்தப்படுகிறது. இதுவே இறைவனுக்கு ஏற்புடைய வாழ்வெனும் கனியை விளைவிக்கிறது (3:13-17). இதன் வழியாக விசுவாசி இறைவனோடு தோழமை கொள்கிறான் (4:8). இறைவன் முன் ஏற்புடைமை பற்றிய பவுலின் போதகத்தை, விசுவாசமும் நற்செயல்களும் பற்றிய யாக்கோபின் போதகம் மறுத்துக் கூறுவதாகச் சிலர் (எ.கா. லூத்தர், பார்த்து) சர்ச்சை செய்வர். ஏற்புடைமை பற்றிய பவுலின் போதகத்தை யாக்கோபு நிறைவுசெய்கிறார் என்று புரிந்து கொள்வதே மேலான விளக்கமாகும்.

மூப்பர்கள் நோயில் பூசுதல் பற்றி, உரோமைக் கத்தோலிக்கரும் பிரிவினைச் சகோதரரும் வெவ்வேறு விதத்தில் விளக்கம் அளித்துள்ளனர் (5:14). இதைப் பற்றி திரிதெந்தீன் பொதுச்சங்கம் அளிக்கும் விளக்கம்: மூப்பர்கள் நோயாளிகளைச் சந்தித்தல் வெறும் அன்புச் செயல்மட்டுமன்று. தனக்கு அளிக்கப்பட்டிருக்கும் குருத்துவ ஆற்றலால் நோயாளியின் மீது எண்ணெய் பூசுதல் ஓர் அருட்சாதனச் சடங்காகும். யாக்கோபு எழுதிய திருமுகம் இப்படி வெளிப்படையாகக் கூறாவிட்டாலும், பொதுச்சங்கம் பாரம்பரியப் போதகத்தை எடுத்துக் கூறுகிறது. இப்பூசுதலின் விளைவுகளான பாவமன்னிப்பு, குணம்

பெறுதல் ஆகியவை அருட்சாதனத்தைச் சேர்ந்தவையாகும்.

**யாக்கோபுவின் ஆசீர்** (JACOB, BLESSING OF)

ஆதி 49-இல், யாக்கோபு தன் வாழ்வின் இறுதியில் தன் புதல்வர்களுக்கு ஆசி அளித்து வாழ்த்துரை கூறியதை இத் தலைப்பு குறிக்கும். இந்த ஆசீர்கள் ஒன்றிப் புடைய இலக்கியப்படைப்பு என்று இக் கால ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்வ தில்லை. வேறுபட்ட தோற்றத் தொடக்க முடைய தனிப்பட்ட கூற்றுகளின் தொகுப் பாகக் கருதுகின்றனர். இவற்றை யாக்கோ புக்கோ, அவர் காலத்திற்கோ சாற்றிக் கூறமுடியாது. சாகும் மனிதனுக்கு வருங் காலத்தைப் பற்றிய தனிச் சிறப்பான உள்நோக்கு அளிக்கப்பட்டதாக பழங்காலத் தில் கருதப்பட்டது. சாகும் மனிதனது சொற்கள், சிறப்பாக அவை ஆசீராகவோ, சாபமாகவோ இருந்தால், சாதாரண ஆசீர் மற்றும் சாபத்தை விட, அதிக ஆற்றல் மிக்கதாகக் கருதப்பட்டன. இந்த வாய்பாடு கள் ஆசீர்களும் அன்று, முன்னறிவிப்பு களும் அன்று. இக்கூற்றுகள் கூறப்பட்ட காலத்தை நிர்ணயிக்க முடியாது. யூதாவுக்கு அளிக்கப்படும் ஆசீர் தாவீது ஆட்சிக் காலத்தைச் சேர்ந்ததாகத் தெரிகிறது. இவற் றில் காலத்தால் முந்திய கூற்று தாவீதுக்கு 300 ஆண்டுகளுக்கு முன் தோன்றியிருக்க லாம். இஸ்ராயேலின் நாட்டு மற்றும் வரலாற்று உணர்வு எழுச்சியுற்று, இலக் கியப் படைப்புகள் தோன்றித் தொகுக்கப் பட்ட தாவீதின் ஆட்சிகாலம், அனேகமாக இந்த ஆசீர்கள் தோன்றிய காலமாக இருக்க லாம்.

**யாக்கோபுவின் ஏணி** (JACOB'S LADDER)

பெத்தேலில் யாக்கோபு கனவில் கண்ட ஏணி (ஆதி 28:12). படிகளை உடைய ஏணியாகக் கருதப்பட வேண்டியதில்லை. அது மெசபொத்தாமிய கோவில் கோபுரம் போன்ற (காண்க. பாபேல் கோபுரம்) விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையிலான இணைப்பாக இருக்கலாம். பாபிலோனி லுள்ள மார்துக்கின் கோவில் கோபுரம் ''விண்ணையும் மண்ணையும் இணைக்கும் வீடு'' என்ற பொருளுடைய சொல்லால் அழைக்கப்பட்டது. இந்த ஏணியில் ஏறுவ தும் இறங்குவதுமாக இருந்த கடவுளின் தூதர்கள், இறை விருப்பத்தைச் செயல் படுத்துவதில் ஈடுபட்டிருந்தனர்.

**யாக்கோபுவின் ஏற்றம்** (JAMES, ASCENTS OF)

இஃது ஒரு போலி நூல். எப்பிபானியு என்ற ஆதித்திருச்சபை எழுத்தாளர் இதைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இஃது எபியோ னியர் என்ற யூதக்கிறிஸ்தவப் பிரிவினையா ளர்களால் பயன்படுத்தப்பட்டதாகும். இந் நூலின் கதைத்தலைவன் இயேசுவின் சகோ தரரான யாக்கோபு ஆவார். இந்நூல் ஆலயம், மற்றும் பலிகளைக் கண்டனம் செய்கின்றது; ஆனால், விருத்தசேதனத்தை ஆதரிக்கிறது. தர்சுவைச் சேர்ந்த ஒரு பவுலை இந்நூல் கடுமையாக விமர்சிக் கிறது. பவுல் ஒரு கிரேக்கர்; தலைமைக்குரு வின் மகளை மணக்க விருத்தசேதனம் செய்து கொண்டார். பின்னர் தலைமைக் குருவின் மகளை அடைய முடியாமல், யூதர்களை வெறுத்து விருத்த சேதனத்துக்கு எதிராக எழுதினார் என்று கூறப்படுகிறது.

இங்கு ''ஏற்றம்'' என்பது படிகளை உணர்த்துகிறது. ஏனெனில், ஆலயப் படி களிலிருந்து மக்களுக்குப் போதித்தார்.

**யாக்கோபுவின் கிணறு** (JACOB'S WELL)

கெரிசிம் மலை அடிவாரத்திலிருந்து வட கிழக்கிலும், செக்கேமுக்குத் (இக்கால தெல் பலாத்தாவுக்குத்) தென் கிழக்கில் 76 மீட்டர் தொலைவிலும் உள்ள ஒரு கிணறு. இது பற்றிய ஒரே ஒரு விவிலியக் குறிப்பு யோவா 4:6-12-இல் கொடுக்கப்பட்டுள் ளது. இங்கு இயேசு ஒரு சமாரியப் பெண்ணைச் சந்தித்து உரையாடுகிறார். ''யாக்கோபு தன் மகன் யோசேப்புக்குக் கொடுத்த நிலத்துக்கு அருகே இருந்த ஊராகிய'' (காண்க. ஆதி 33:18-19; யோசு 24:32) சாமாரியாவிலுள்ள சிக்காரில் ((யோவா 4:5) இக்கிணறு இருந்தது. ''பிர்

யாக்கூப்பு'' என்று பாரம்பரியமாக அழைக்கப்படும் இக்கிணறு முக்கிய வியாபாரச் சாலைகளின் சந்திப்பில் அமைந்திருக்கிறது. இஃது ஒரு கிணறும், நீர்த் தொட்டியுமாகும். இது 41 மீட்டர் ஆழமுடையது; குளிர்ந்த நீரையுடையது.

இங்குப் பைசாந்தியர் கோவில் ஒன்று கட்டப்பட்டது. இது சிலுவைப்போர் வீரர்களால் மீண்டும் கட்டப்பட்டது. இங்கு இக்காலத்தைச் சேர்ந்த முற்றுப்பெறாத கிரேக்கத் திருச்சபைக் கோவில் ஒன்றும் உள்ளது.

**யாக்கோபுவின் திருவெளிப்பாடு** (JAMES, APOCALYPSE OF)

இஃது ஒரு ஞானவாதப் போலி நூல். இது கி.பி. 1946-இல் எகிப்திலுள்ள செனோபோஸ்கியன் என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. இது கோப்திக்கு மொழியில் எழுதப்பட்டது. இந்நூல் ஆதிகால மனிதன் மற்றும் அண்டசராசரத்தின் மூன்று கோட்பாடுகள் போன்றவற்றினை விளக்குகின்றது. இதை இப்போலித்து எனும் அறிஞர் தனது நூலில் குறிப்பிடுகின்றார். இதை மரியாம்னேக்கு இயேசுவின் சகோதரர் யாக்கோபு அளித்ததாகக் கூறப்படுகிறது.

இந்நூல் கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம். இயேசுவின் உயிர்ப்பு மற்றும் விண்ணேற்றம் ஆகியவற்றுக்கு இடைப்பட்ட 550 நாட்களில் (அ.ப. 1:3-க்கு மாறாக), இயேசுவின் விண்ணேற்றம் பற்றிய வெளிப்பாட்டை ஆசிரியரும் பேதுருவும் பெற்றதாக உரிமை கொண்டாடுகிறார். மற்ற அப்போஸ்தலர்கள் இந்த வெளிப்பாட்டைப் பெறவில்லை. யாக்கோபும் பேதுருவும் விண்ணேற்றத்தைக் கண்டனர்; வானதூதர்களின் மன்றாட்டுகளையும் பாடல்களையும் கேட்டனர். இறைமக்களுக்கு இந்த இரகசிய உண்மையை அளிப்பதாக வாக்குறுதி கொடுத்தனர்.

**யாக்கோபுவின் மூல நற்செய்தி** (JAMES, PROTOEVANGLIUM OF)

மரியாளின் வரலாறு மற்றும் இயேசுவின் பிறப்பு ஆகிய நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கும் பக்தியும் கற்பனையுமிக்க நற்செய்திகளில் மிகவும் தொன்மையானது யாக்கோபின் மூல நற்செய்தியாகும். ஓரிசன் தனது நூலில் இதை யாக்கோபின் நூல் எனக் குறிப்பிடுகிறார். இந்நூல் மரியாளின் பிறப்பினைப் பற்றிக் கூறுகிறது. இது பழைய ஏற்பாட்டில் காணப்படும் சாமுவேலின் பிறப்பு நிகழ்ச்சியை ஒத்திருக்கின்றது. யோவாக்கிம், அன்னாவின் கண்ணீர்மிக்க செபங்களால் மரியாள் உற்பவித்தாள் எனக் கூறப்படுகின்றது. மரியாள், மூன்று வயதிலேயே ஆலயத்திற்குக் கொண்டுவரப்பட்டாள் எனவும், யூதர்களின் முறைப்படி கன்னிகையாக வளர்க்கப்பட்டாள் எனவும் கூறப்படுகிறது. பின்பு அவள் யோசேப்புக்கு மண ஒப்பந்தம் செய்யப்படுகிறாள். ஆனால், திருமணத்திற்கு முன்பே பரிசுத்த ஆவியால் நிரப்பப்பெற்று இயேசுவைக் கருவில் தாங்குகிறாள். இதை அறிந்த யோசேப்பின் கலக்கமும் மனமாற்றமும் கூறப்படுகிறது. பின்பு, இயேசுவின் பிறப்பு பற்றிக் கூறப்படுகிறது. இது, மரியாளுக்குப் பிரசவம் பார்த்த தாதிப் பெண் கூறுவது போல அமைந்திருக்கின்றது. பின்பு இயேசுவின் வளர்ச்சி, திருமுழுக்கு, யோவான் ஏரோதிடமிருந்து தப்பித்தல் போன்ற நிகழ்ச்சிகள் வருணிக்கப்படுகின்றன. செக்கரியா மரணம் பற்றிக் கூறப்படுகிறது. இப்புத்தகத்தில் பல முரண்பாடுகள் காணப்படுகின்றன. சான்றாக, மரியாளுக்கு 12 வயதில் திருமணம் நடப்பதாக ஓர் இடத்தில் கூறப்படுகிறது. மற்றுமோர் இடத்தில் 16-ஆவது வயதில் அவள் கருத்தரிக்கிறாள் என்னும் செய்தியை நாம் காண்கிறோம். இந்நூல் முந்தைய இரு திருமுறை நற்செய்திப் பாரம்பரியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கலாம் என்று கூறப்படுகிறது. நாட்டுப்புறப் பாடல்களின் நடையிலேயே இந்நூல் அமைந்திருக்கின்றது. இந்நூல் ஆதித்திருச்சபை மக்களிடையே மிகவும் பிரபலமானதாக இருந்திருக்கலாம்.

இந்நூலின் முதன்மையான நோக்கம் மரியாளை மகிமைப்படுத்துவதாகத் தெரி

கிறது. திருமுறை நற்செய்திகளில் இயேசுவுக்குச் சாற்றிக் கூறப்படும் பண்புகளில் பல இந்நூலில் மரியாளுக்குச் சாற்றிக் கூறப்படுகின்றன. மரியாளின் நிலையான கன்னிமையை மற்ற எல்லா விவிலியச் செய்திகளோடும் ஒத்துப்போகச் செய்வதில் ஆசிரியர் கவனமாய் இருக்கிறார்.

மரியாள் பக்தியின் வளர்ச்சியில் இந்நூல் முக்கிய இடம் வகிக்கிறது. பல போலி நூல்களில் இந்நூலின் ஆதிக்கம் தெரிகிறது. பல ஓவியங்களுக்கு இந்நூல் அடிப்படையாக இருந்துள்ளது.

இந்நூல் கிரேக்கமொழியில் இரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் எகிப்தில் எழுதப் பட்டதாகும் என்று பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும்.

**யாசனியா** (JAAZANIAH - *யாவே செவிமடுக்கிறார்)*

கி.மு. 6-ஆம் நூற்றாண்டுக் காலத்தில் இஃது ஒரு பொதுவான பெயர்.

1. இவர் எருசலேமின் வீழ்ச்சிக்குப்பின், யூதாவில் ஆளுநன் கெதல்யாவின் அவையில் இருந்த ஒரு போர்த் தலைவர்; மாகாத்தியரின் மகன் *(2 அர 25:23; எரே 40:8)*. எரே *42:1*-இல் வரும் ஓசயா மாகாத்தியரானால், அவரது மகன் அசரியாவும் யாசனியாவும் ஒரே ஆளாக இருக்கலாம் *(43:2)*.

2. இவர் இரேக்காபியர் எரேமியாவின் மகன். இவர் யோயாக்கிமினின் ஆட்சிக் காலத்தில் இறைவாக்கினர் எரேமியாவால் சோதிக்கப்பட்டவர் *(எரே 35:3)*.

3. எசேக்கியேல் காட்சி கண்ட பொழுது இஸ்ராயேல் மக்களில் சிலை வழிபாடு செய்வோரிடையே சாபானின் மகன் யாசனியாவும் நின்று கொண்டிருந்தான் *(எசே 8:11)*.

4. எசேக்கியேல் கண்ட காட்சியில் யூதேயாவின் 25 தலைவர்களைக் கண்டார். இவர்கள் எருசலேமில் தீய ஆலோசனை செய்து கொண்டிருந்தனர். இவர்களில் ஒருவர் அசூரின் மகனான யாசனியா ஆவான் *(எசே 11:1)*.

**யாசாரின் நூல்** (JASHAR, BOOK OF)

இஃது ஓர் எழுதப்பட்ட பதிவேடு. யோசுவா சூரியன், சந்திரனைப் பார்த்துக் கூறும் செய்யுள் நடைப்பகுதியிலும் *(யோசு 10:12-13)*, தாவீது சவுல் மற்றும் யோனத்தான் மேல் புலம்பும் பகுதியிலும் *(2 சாமு 1:17-27)* நன்கு அறியப்பட்ட நூலாக இது குறிக்கப்படுகிறது. ஆலய அர்ப்பணம் பற்றிய சாலமோனின் சொந்த வார்த்தைகளிலும் இக்குறிப்பு உண்டு என்றும் கூறலாம் *(1 அர 8:12-13)*.

மேலே கூறப்பட்டுள்ள, யோசுவா, தாவீது இவர்களின் செய்யுள் நடைக் குறிப்புகள், ''யாசாரின் நூலில் எழுதப் பட்டுள்ளன'' என்று உள்ளது *(யோசு 10:13; 2 சாமு 1:18)*. எழுபது நூல் ஆசிரியர் யோசு *10:13*-இன் மொழி நடையைப் பயன்படுத்தி, சாலமோனின் மேற்கோள் ''பாடல் புத்தகத்தில்'' எழுதப்பட்டிருக்க வில்லையா என்று கேட்கிறார். அறிஞர்கள் பலரின் கருத்துப்படி, *1 அர 8:12-13*, காணாமல் போன யாசார் நூலிலிருந்து எடுக்கப்பட்டதாய் இருக்கும் என்று கருதப் படுகிறது.

'யாசார்' என்ற எபிரேயச் சொல்லுக்கு, ''நேராக, நேர்மையாக, நீதியாக, இருப்பவர்'' என்பது பொருள். எனவே ''நீதிப் புத்தகம்'' என்ற தலைப்பு, வரலாற்றில் சில தனிப்பட்ட நபர்களையும் அல்லது, இஸ்ராயேல் குலத்து எல்லாரையும் குறிக்கலாம். இஸ்ராயேலைக் குறிப்பதாக இருந்தால், இத்தலைப்பு எசுரூனோடு தொடர்புடையது.

யாசாரின் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ள மூன்று மேற்கோள்களும், எல்லாம் செய்யுள் நடையாய் உள்ளன. எனவே பலர், இதை ''நீதிப் புத்தகம்'' என்று கூறுவதை விட, ''பாடல் புத்தகம்'' என்று கூறலாம் என்கின்றனர்.

இப்புத்தகத்தில், பல வேறுபட்ட பாடல்கள் இருந்திருக்கலாம். ஏனெனில், நமக்குக் கிடைத்திருக்கும் பகுதிகள் ஒன்று மற்றொன்றுக்கு வேறுபட்டதாக இருக்கின்றன.

முதலாவது, யாவேயின் விண்ணக உடல்க ளுக்குப் பகல் ஒளியை நீட்டித்து வைக்க எழுந்த ஒரு பழைய மந்திரவாசகமாக இருக்கலாம் (அல்லது) மாலை இருளைத் தள்ளிவைப்பதற்காக இருக்கலாம். இரண் டாவது, தாவீதின் கவிதைத் திறமையைப் பற்றிய ஆணித்தரமான ஓர் இலக்கிய நினைவுச் சின்னம். இது, நாட்டைச் சார்ந்த வற்றிலும், தனிப்பட்ட நட்பு சார்ந்தவற்றி லும் முக்கியத்துவம் வாய்ந்தது. மூன் றாவது, உகாரித்து இணைப்பகுதிகளை நினைவூட்டுவதாக இருக்கலாம். ஆனால், சாலமோனின் அதிகாரபூர்வமான கூற்றாக வும் இருக்கலாம். இது, கடவுள் மற்றும் இயற்கைச் சடங்குகளின் மேல் கொண்ட மேலாண்மை பற்றிய பழங்காலப் பாட லாகும்.

யாசார் நூலின் தொடக்கம் பற்றியவை ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. இதை அரசாட்சிக்கு முந்திய காலத்தில் எழுதப் பட்ட தொகுப்பாக சிலர் கருதுகின்றனர். வேறு சிலர், சாலமோனின் காலத்திற்குப் பிறகு எழுந்த வாய்மொழி மரபாகும் என்கின்றனர். ஒருவேளை இதுதான், பரி சுத்த இலக்கியத்தின் தொடக்கமாக இருக்க லாம். இஃது இஸ்ராயேலின் மரபுகளைப் பாதுகாக்க எழுந்தவையாக இருக்கலாம். இஃதோடு இணைத்தன்மையுடைய மற் றொன்று ''ஆண்டவரின் போர்கள் புத்தக மாக'' இருக்கலாம் (எண் 121:14). அறிஞர் கள் சிலர் இந்த இரண்டையும் ஒன்றாகக் கருதுகின்றனர். தெபோராவின் பாடலும் (நீதி 5), மிரியாமின் பாடலும் (யாத் 15:21) இஃதோடு சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று ஒரு கருத்து உள்ளது. ஆனால், எழுத்து ஆதாரம் எதுவும் இல்லை.

விளக்கவுரையாளர் சிலர் இந்தப் புத்தகத்தை, தோராவோடு தொடர் புடையது என்று கருதுகின்றனர்.

**யாசிசு** (JAZIZ - நகர்த்தப்பட்ட)

அக்ரியரான இவர் தாவீதின் மந்தை களைக் கண்காணித்து வந்தார் (1 நாள் 27:31).

A

**யாசுபிலகேம்** (JASHUBI - LEHEM - லகேமிலிருந்து திரும்பியவர்)

ஒரு மொழிபெயர்ப்பு இது யூத குலத்தில் ஒரு மனிதனின் பெயர் என்று கூறுகிறது. (1நாள் 4:22). ஆனால் மற்றவை ''அவர்கள் லகேமுக்குத் திரும்பினார்'' என்று மொழி பெயர்க்கிறது. சரியான மொழி பெயர்ப்பு ''ஆனால் அவர்கள் திரும்பினர்'' என்ப தாகும்.

**யாசூபு** (JASHUB - அவர் திரும்புவாராக)

1. ஆசேரின் வழித்தோன்றல்களில் ஓர் இனப்பெயர் முதல்வர் (எண் 26:24; 1 நாள் 7:1). ஆனால் ஆதி 46:13-இல், இவர் யோபு என்று அழைக்கப்படுகிறார். இஃது எழுத் துப் படி எடுத்தவரின் தவறாகும்.

2. தனது புறவின மனைவியை விலக்கி விடுமாறு எஸ்ராவால் வற்புறுத்தப்பட்டவர் களில் ஒருவர் (எஸ் 10:29).

**யாசேர்** [JAZER - (இறைவன்) உதவுவாராக]

எமோரியர்கள் வாழ்ந்த அரணுள்ள நக ரம். இது கிலயாதில் இருந்தது. இஸ்ரா யேல், மோவாபியர், அம்மோனியர் ஆகிய வர்கள் இதற்கு உரிமை கொண்டாடினர்.

1. **வரலாறு:** எமோரியர்களின் அரசனான சீகோன் தோற்கடிக்கப்பட்டபின், யாசே ருக்கு மோசே ஒற்றர்களை அனுப்பி, பிறகு அந்நகரைக் கைப்பற்றினார் (எண் 21:32). இந்நகர் காத்துகோத்திரத்தாருக்குக் கொடுக் கப்பட்டது (எண் 32:1.34-35). பிற்காலத்தில் இஃது ஒரு லேவியர்களின் நகரமானது (யோசு 21:39). இப்பகுதி மேய்ச்சல் நிலங்க ளுக்கும், பழவகைகளுக்கும், திராட்சைக் கும் பேர் போனதாகும் (எசா 16:8-9; எரே 48:32). அம்மோனியர்கள் தாக்கிய போது யாசேர் நகரம் எல்லைக் கோட்டை அர ணாகச் செயல்பட்டது. தாவீது அரசனின் காலத்தில் எபிரோனிலிருந்து யூதா குலத் தைச் சேர்ந்த படைவீரர்கள் இந்நகரில் அமர்த்தப்பட்டனர் (1 நாள் 26:31). ஆகாபு இறந்த பிறகு (கி.மு. 853) மோவாபு நாட்டு மன்னனாகிய மேசா இப்பகுதியைக் கைப் பற்றினான். அதிலிருந்து, எரேமியா ஆகமத்

திலும் எசேக்கியேல் ஆகமத்திலும் யாசேர் நகரம் மோவாபு நாட்டின் ஒரு முக்கிய நகரமாகக் கூறப்பட்டுள்ளது. கிரேக்கர்க ளின் காலத்தில் இந்நகரம் அம்மோனியர் களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. யூதா மக்கபேயு அதை அம்மோனியர்களிட மிருந்து மீண்டும் கைப்பற்றினார் *(1 மக் 5:8)*.

*2.* **அமைந்துள்ள இடம்:** யாசேர் நகரம் அம்மோனியர்களின் எல்லையான யாபோக்கு ஆற்றிலிருந்து வெகு தூரத்தில் அமைந்திருக்கவில்லை. எழுபது நூல் மொழி பெயர்ப்பு ''அம்மோனியர்களின் எல்லை வலிமையானது'' *(எண் 21:24)* என்பதை ''அம்மோனியர்களின் எல்லை யாசேர்'' என்று மொழி பெயர்க்கிறது. யூசேபியுவும், எரோனிமுவும் அம்மோனியர் களின் ஊரான ராபாவிலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ள ஆசேர் அல்லது இயாசேர் என்ற ஒரு நகர் இருந்ததாகக் கூறுகிறார்கள். வாடி கொம்முக்கும் வாடி யாயூசுக்கும் இடையிலுள்ள கொம் யாயூசு என்ற இடிபாடுகள் உள்ள இடமே இந்நக ராக இருக்கலாம். பிலதெல்பியாவுக்கு (இக் கால அம்மான், அம்மோனியர்களின் இரபா) மேற்கில் 15.5 கி.மீ. தொலைவி லுள்ள கிர்பெத் எஸ்-சாரும், அதன் வட கிழக்கில் 2.5 கி.மீ. தொலைவில் உள்ள கிர்பெத் எஸ்-சீரேயும், எஸ்-சால்துவுக்குத் தெற்கில் 4 கி.மீ. தொலைவில் வாடிசயிப் பில் அமைந்துள்ள கிர்பெத் யாசீரும் யாசேர் இருந்த இடமாகச் சுட்டிக் காட்டப் படுகின்றன.

**யாசேன்** (JASHEN - தூங்குகிற)

'முப்பது பேர்' என்று அழைக்கப்பட்ட தாவீதின் வலிமை மிகுந்த படைவீரர்களில் ஒருவர் *(2 சாமு 23:32)*. இதில் ''யாசேன் மகன்'' என்று காணப்படுகிறது. ஆனால் அதற்கு இணையான பகுதியான *1 நாள் 11:34*-இல் 'கிசோனியனான ஆசேமின் புதல் வர்' என்று உள்ளது. இவ்விரு பகுதிகளி லும் 'புதல்வர்' என்பது எழுத்துப் படி யெடுக்கும் போது தற்செயலாக ஏற்பட்ட பிழைபட்ட இரட்டுறு பகர்ப்பாகும். 2 சாமு *23:32*-இல் எழுதாமல் விடப்பட்ட கிசோனி யனான என்பது *1 நாள் 11:34*-இல் சேர்க்கப்பட்டுள்ளது. எனவே, இப்பட்டிய லில் உள்ள படைவீரனின் பெயர் யாசோன் அல்லது கிசோனியனான ஆசேம் என்ப தாகும்.

**யாசொபயாம்** [JASHO BEAM - மக்கள் (இறைவனிடம்) திரும்பட்டும்]

*1.* அக்மோனியின் குலத்தைச் சேர்ந்த சப்தியேலின் மகன். இவர் பெரேட்சின் வழி வந்தவர். இவர் தாவீதின் படையில் சக்தி வாய்ந்த 'முப்பது பேருக்கு'த் தலை வர்களாக இருந்த மூவரில் ஒருவர். தன் ஈட்டியால் ஒரே நேரத்தில் முந்நூறு பேரைக் குத்திக் கொன்றவர் *(1 நாள் 11:11)*. தாவீதின் படையில் முதல் மாதத்தில் முதல் பிரிவுக்குத் தலைவனாக இருந்த இவருக்குக் கீழ் இருபத்து நாலாயிரம் பேர் இருந்தனர் *(1 நாள் 27:2-3)*.

*2 சாமு 23:8*-இல் கூறப்பட்டிருப்பவை *1 நாள் 11:11*-இல் கூறப்பட்டிருப்பதிலிருந்து வேறுபடுகிறது. இதைக் கீழ்க்கண்டவாறு மாற்றி அமைக்கலாம். ''யோசேபு பச பேத்து'' என்பதைச் சில மொழிபெயர்ப்பு கள் ''இருக்கையில் வீற்றிருந்தவன்'' என்று மொழி பெயர்க்கின்றன. அனேகமாக இசு பாகால் என்ற பெயரே மருவி இவ்வாறு வந்திருக்கலாம். இனப்பெயரான ''தாக் மோனியர்கள்'' என்பது ''அக்மோனியர் கள்'' என்று வாசிக்கப்பட வேண்டும் *(1 நாள் 11:11)*. *2 சாமு 23:8*-இல் காணப்படும் ''எண்ணூறு பேர்'' என்பதை விட *1 நாள் 11:11*-இல் காணப்படும் ''முந்நூறு பேர்'' என்பது மிகவும் விரும்பத்தக்கது.

சுருங்கக் கூறின், அக்மோனியனான இசு பாகால், தாவீதின் படைத்தலைவர்கள் மூவ ரில் முதல்வராக இருந்தார். இவர் ஒரே நேரத்தில் முந்நூறு பேரை ஈட்டியால் குத்திக்கொன்றார்.

*2.* தாவீது சிக்லாகில் இருக்கும் போது அவருடைய படையில் சேர்ந்த பென்யமின் குலப் போர் வீரர்களில் ஒருவர் *(1 நாள் 12:6)*. இவர் ஒரு கோராகியர்.

**யாசோன்** (JASON - *யாவே மீட்பாவார், குணப்படுத்துதல்)*

இப்பெயர் கிரேக்க யூதர்களிடையே ஒரு சாதாரணப் பெயர். கிரேக்க மொழியில் யோசுவா, இயேசு என்ற பெயர்களுக்கு மாற்றுப் பெயர்.

*1. ஓர் எலயாசரின் புதல்வர் இரண்டாம் யாசோன் என்பவராவார். உரோமையர்களோடு நட்பும் சமாதானமும் செய்து கொள்வதற்காக யூதா மக்கபேயுவால் உரோமைக்கு அனுப்பப்பட்டவர்களில் ஒருவர் (1 மக் 8:17).*

*2. அந்திபாத்தரின் தந்தை; கி.மு. 144-இல் உரோமைக்குத் தூதுவனாக யோனத்தானால் அனுப்பப்பட்டவர் (1 மக் 12:16). இவரும் 1-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.*

*3. முதலாம் யாசோன் என்பவர் கி.மு. 174 முதல் 171 வரை தலைமைக் குருவாக இருந்தார். இவர் இரண்டாம் சீமோனின் புதல்வர். மூன்றாம் ஓனியா என்பவரின் சகோதரரான இவர் ஓனியாவை அகற்றி விட்டு தலைமைக் குருவானார். மூன்றாம் ஓனியா எகிப்து நாட்டுக்கு ஓடிச் சென்ற போது யாசோன் தலைமைக் குருவானார். உண்மையில், தலைமைக் குரு பதவி மூன்றாம் ஓனியாவின் மகனாகிய நான்காம் ஓனியாவுக்கே கிடைத்திருக்க வேண்டும். ஆனால், யாசோன் இதற்கு இணங்காததால் குருத்துவம் வீழ்ச்சியுற்று, யோசேப்பின் புதல்வர்களின் அதிகாரத்திற்கு உட்பட்டது. யாசோன் தனது பதவியை உறுதி செய்வதற்காக எருசலேமில் உடற்பயிற்சிக் கூடங்கள் கட்டுவதாகவும், அந்தியோக்கு மன்னனுக்கு அதிக பணம் கொடுப்பதாகவும் வாக்களித்தார். எருசலேமில் இருப்பவர்களை அந்தியோக்கியாவின் குடிமக்கள் என்று ஏற்றுக் கொள்ளச் செய்தார் (2 மக் 4:8தொ). ஐந்தாண்டுக்கு ஒரு முறை கொண்டாடப்படும் விளையாட்டுக்கள் தீர் நகரில் கொண்டாடப்பட்ட போது, தீயொழுக்கம் நிறைந்த யாசோன் கெரிக்குலிசிற்குப் பலி செலுத்த முந்நூறு வெள்ளித் திராக்மா நாணயங்களைக் கொடுத்து, தீயவரை எருசலேமிலிருந்து அனுப்பினார். ஆனால், அவைகளைக் கொண்டு போனவர்களோ, பலிகளுக்காக அவைகளைச் செலவிடுவது சரியன்று என்றும், வேறு செயல்களுக்குப் பயன்படுத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள். அவைகளை அனுப்பினவனால் அவை கெரிக்குலிசிற்குப் பலிக்காகக் கொடுக்கப்பட்டன; கொண்டு போனவர்களாலே கப்பல்களின் வேலைக்குக் கொடுக்கப்பட்டன (2 மக் 4:18-20).*

*சீமோனின் சகோதரனான மெனலாவுவை யாசோன் அந்தியோக்கு அரசனுக்குப் பணம் கொண்டு போகும்படி அனுப்பிய போது, மெனலாவு அரசனுடைய தயவை அடைந்து, தலைமைக் குருத்துவத்தைத் தானே கைப்பற்றிக் கொண்டான். அந்தியோக்கு அரசன் இறந்துவிட்டானென்று ஒரு பொய் வதந்தி எங்கும் பரவிய போது, யாசோன் எருசலேமைத் தாக்கி, தன் நகரத்தாரை இரக்கமில்லாமல் கொன்றார்; பிறகு மெனலாவுக்கு எதிராகப் போரிட்டு அவனை எருசலேமை விட்டு விரட்டினார். ஆனால், உரோமையர்களின் தலையீட்டால் எகிப்தில் போரைக் கைவிட்ட அந்தியோக்கு எருசலேமைத் தாக்கி மெனலாவுக்கு உதவினான். யாசோன் யோர்தானுக்கு அப்பாலுள்ள அம்மோனியர்களின் நாட்டுக்கு ஓடினார்.*

*இறுதியில், அரேபிய நாட்டு அரசரான அரேத்தாவின் முன் குற்றம் சாட்டப்பட்டு யாசோன் ஒரு நகரினின்று மற்றொரு நகர் ஓடி எல்லோராலும் பகைக்கப்பட்டு, எகிப்து நாட்டுக்குத் துரத்தப்பட்டார். எகிப்தில் ஓனியா இருந்ததாலும், யாசோன் கிரேக்க ஆதரவாளன் என்பதாலும் அவரால் அங்கே தங்க முடியவில்லை. இலக்கதேமோனியாவில் அடைக்கலம் புகுந்த அவர் அந்த அன்னிய நாட்டிலே மாண்டார்; அழுவாரில்லாமல், அடக்கமில்லாமல் எறியப்பட்டார்; தன்னுடைய தந்தையர்களின் கல்லறையிலே புதைக்கப்படாமல் சபிக்கப்பட்டார் (2 மக் 5:10).*

4. சீரேன் ஊரைச் சேர்ந்தவர். யூதா மக்கபேயுடையவும். அவருடைய சகோதரர் களுடையவும் வரலாற்றை ஐந்து பாகங் களில் எழுதினார். இவையே இரண்டாவது மக்கபேயர் நூலின் அடிப்படையாயிற்று. அந்தியோக்கு நகரைச் சேர்ந்த ஒரு யூதர் இவற்றைச் சுருக்கி எழுதினார். யாசோன் அடிப்படை உண்மைகளை இவருக்கு எடுத் துச் சொல்லியிருக்கலாம். இந்நூல் யூத-கிரேக்க இலக்கியத்தின் அழகிய நடையைக் காட்டுகிறது.

யாசோன் எப்போது வாழ்ந்தார் என்று யாருக்கும் தெரியாது. அசமோனியர்களுக்கு முன்னால் யூதர்களிடையே நடந்த உள் நாட்டுப் போர்களுக்கு யாசோனின் நூல் மட்டுமே ஆதாரமாகும் *(2 மக் 2:23தொ).*

5. தெசலோனிக்கேயில் பவுலையும் சீலா வையும் வீட்டில் விருந்தாளியாக ஏற்றுக் கொண்டவர் *(அ.ப. 17:5-7.9).* யூத கூட்டத் தினர் பவுலைக் காண முடியாத போது இவரை நகராட்சிக் குழுவினரிடம் இழுத்து வந்து குற்றம் சாட்டினர். அமைதி காக்க உறுதி அளித்தபின் இவர் விடுதலை செய்யப்பட்டார். உரோ 16:21-இல் வாழ்த் துக் கூறுவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் யாசோன் என்பவர் இத்திருமுகம் எழுதப் பட்டபோது கொரிந்து நகரில் இருந்தார். ஆனால், அப்போஸ்தலர் பணியில் கூறப் பட்ட யாசோனும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம். அப்படியாயின், அவர் ஒரு யூதராக இருக்க வேண்டும்.

6. உரோமைத் திருச்சபைக்கு வாழ்த்துக் கூறுபவர் *(உரோ 16:21).* இவர் பவுலுக்கு உடன் உழைப்பாளியும் ''உறவினரும்'' ஆவார். இவரும் 5-இல் குறிக்கப்பெறுபவ ரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**யாதா** [JADA - *(இறைவன்) அக்கறை கொண்டார்*]

இவர் யூதாவைச் சேர்ந்த ஓர் எரகுமே வேலர். ஓனாமின் மகனும், சம்மாயின் சகோதரனும், எத்தேர் மற்றும் யோனத்தான் ஆகியோரின் தந்தையுமாவார் *(1 நாள் 2:28.32).*

**யாதாய்** (JADDAI - *அன்புசெய்கிற)*

புறவின மனைவியரை விலக்கிடக் கோரப்பட்ட ஓர் இஸ்ராயேலர் *(எஸ் 10:43).* நெபோ வழிமரபில் வந்தவர்.

**யாதுவா** (JADDUA - *அறியப்பட்ட)*

1. மக்களுக்குள் ஒரு தலைவர்; நெகேமி யாவின் தலைமையில் புதிய உடன்படிக் கையில் கையெழுத்திட்டவர் *(நெகே 10:21).*

2. யோனத்தானுக்கு மகனாகவும் ('யோ னத்தான்' என்ற இச்சொல் 'யோகனான்' என்ற சொல்லுக்குப் பதிலாக தவறுதலாக வந்திருக்கலாம்), எல்யசீபுவுக்கு மூன்று தலைமுறைகளுக்குப் பிறகு தலைமைக் குருவாகவும் இருந்தவர் *(நெகே 12:11.22).* பழைய ஏற்பாட்டில் குறிப்பிட்டு இருப் பதன்படி, இவர் தான் கடைசி தலைமைக் குரு. நெகே 12:22-இன்படி பெரிய அலக் சாந்தரால் வெற்றி கொள்ளப்பட்ட பாரசீக அரசன் மூன்றாம் தாரியு கொதொமானுவின் காலத்தில் இவர் தலைமைக் குருவாக இருந்திருக்கலாம்.

**யாதோன்** (JADON - *யாவே ஆள்கிறார்)*

கிபயோனிய மெலற்றியாவோடும் கிப யோன் மற்றும் மிஸ்பாவின் ஆட்களோடும் நெகேமியக் காலத்தில் எருசலேம் நகரச் சுவர்களைப் பழுது பார்த்த ஒரு மெரொ னோவியர் *(நெகே 3:7).*

**யாத்தனியேல்** (JATHNIEL - *இறைவன் அருள்வார்)*

கோராகிய குலத்தைச் சேர்ந்த ஆலய வாயிற்காவலாளி. மெசலேமியாவின் நான் காவது புதல்வர் *(1 நாள் 26:2).*

**யாத்தான்** (JATHAN)

செமாயாவின் மகனும் அனனியாவின் சகோதரனுமாவார் *(தோபி 5:13).* இவர்கள் தோபியாவின் உறவினர்கள். தன்னோடு எருசலேமிற்குத் தொழுவதற்காக வந்த அனனியாவையும் யாத்தானையும் தோபியா அன்புடன் நினைவுகூர்கின்றார்.

**யாத்திரை அல்லது புறப்பாடு** (EXODUS)

1. இந்தச் சொல் வெளியே போகும் வழி என்று பொருளுடையது. எனவே வெளி

யேறிச் செல்லும் செயலையும், புறப்பாட்டையும் குறிக்கிறது. விவிலியத்தில் எபிரேயர் எகிப்திலிருந்து புறப்பட்டுச் சென்றதைச் சிறப்பாக உணர்த்துகிறது. விரிந்த பொருளில் இச்சொல் நாற்பதாண்டுகளாய் எபிரேயர் செய்த நீண்ட பயணத்தைக் குறிக்கிறது. இப்பயணம் எகிப்திலிருந்து பாலை வழியாக வாக்களிக்கப்பட்ட நாட்டிற்கு எபிரேயரை இட்டுச் சென்றது. இப்பயணத்தின் பல்வேறு கட்டங்களை விவிலியத்தின் முதல் ஐந்து நூல்களில் முக்கியமாக யாத்திரை, எண், உபாகமங்களில் காண்கிறோம். யூதர்களும் கிறிஸ்தவர்களும் சிந்திக்கின்றபடி, இப்பயணம், இறைவன் இனித் தம் மக்கள் சார்பாக ஆற்ற இருக்கும் மீட்புச் செயல்களுக்கெல்லாம் மாதிரியும் பிணையமுமாய் விளங்குகிறது.

### 2. பழைய ஏற்பாடு

***அ) முதல் யாத்திரை:-*** இவ்யாத்திரையில் இறை மக்கள் தோன்றினர். இத்தோற்றம் இரத்தத்தில் நிகழ்ந்தது (எசே *16:4-7*). இந்த யாத்திரையில்தான் இறைவன் இஸ்ராயேலைப் பெற்றெடுப்பார் (உப *32:5-10*). ஆபிரகாமுக்குக் காட்டியதை விட மேலான விதத்தில் இஸ்ராயேலுக்கு இறைவன் அன்பும் அக்கறையும் நிறைந்த தந்தையாகத் திகழ்வார் (ஓசே *11:1*; எரே *31:9*; எசா *63:16; 64:7*). இறையன்பின் அடையாளம் என்ற அளவில், யாத்திரை தன்மையாலே, மீட்பின் வாக்குறுதியாகிறது. எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து தம் மக்களை ஒரு முறை மீட்டதுபோன்று, அசீரியாவிலிருந்து ஆபத்தும் பாபிலோனியாவிலிருந்து இடரும் வரும்போது இறைவன் அவர்களைக் காப்பாற்றுவார் (எசா *10:26*தொ; மீக் *7:14*தொ; எரே *16:14*தொ; எசா *63-64*; காண்க. சங் *107:31-35*; ஞான *19*). ஆனால் இறைவன் காட்டிய அக்கறைக்குப் பதிலாக இஸ்ராயேல் காட்டியதெல்லாம் செய்நன்றி மறத்தலே (ஆமோ *2:10*; மீக் *6:3* தொ; எரே *2:1-8*; உப *32*; சங் *106*; மேலும், பெரிய வெள்ளிச் சிலுவை ஆராதனையில் பயன்படும் ''என் மக்களே'' என்னும் பாடல்). பாலையில் காட்டப்பட்ட உன்னத வாழ்வில் அவர்கள் பிரமாணிக்கமாய் இருக்கவில்லை (ஓசே *2:16*; எரே *2:21*).

***ஆ) புதிய யாத்திரை:-*** தங்களுடைய பிரமாணிக்கமின்மையின் விளைவாக அடிமைப்படுத்தப்பட்டுப் பாபிலோனியாவுக்கு நாடு கடத்தப்பட்ட மக்களுக்கு யாத்திரையின் புதுப்பித்தலாக விடுதலை அறிவிக்கப்படுகிறது. மீளவும் இறைவன் தம் மக்களை மீட்பார் (எசா *63:16*). தளர்ந்து போனவர்களும் ஊனமுற்றோரும் வலிமைபெற்று உறுதியடைந்து யாத்திரைக்கு ஆயத்தம் செய்வர் (எசா *35:3-6*; *40:1*தொ; *41:10*; *42:7-16*; செப் *3:18*தொ). பாலையிலே அவர்களுக்கு ஒரு வழி அமைக்கப்படும் (எசா *35:8*தொ; *40:3*; *43:19*; *49:11*; *11:16*). முன்பு, மெரிபாவில் செய்ததுபோல், இறைவன் நீரூற்றுக்கள் பீறிட்டுக் கிளம்பச் செய்வார் (எசா *35:6*தொ; *41:18*; *43:20*; *44:3*; *48:21*; காண்க. யாத் *17:1-7*). பாலைவனம் இன்கனிச்சோலையாக மாற்றப்படும் (எசா *35:7*; *41:19*). பழங்காலத்தில் செங்கடல் பிளந்து வழிவிட்டது போல், யூப்பிரத்தீசு பிரிந்து புதிய யாத்திரையின் வாகனங்கள் செல்ல வழிவிடும் (*11:15*தொ; *43:16*தொ; *51:10*). இறைவன் தம் இறக்கைகளில் இக்குழுவைத் தூக்கிச் செல்வார் (*46:3*தொ; *63:9*; காண்க. யாத் *19:4*; உப *32:11*); அவர்களுக்கு வழிகாட்டியுமாய் இருப்பார் (எசா *52:12*; காண்க. யாத் *14:19*).

### 3. புதிய ஏற்பாடு:-

''ஆண்டவரது வழியை ஆயத்தப்படுத்துங்கள்.... என பாலைவனத்தில்'' ஒலிக்கின்ற கூக்குரலுக்கு உரியவராகத் திருமுழுக்கு யோவானை ஆக்கியதில் (மத் *3:3* இணை; எசா *40:3*) கிறிஸ்துவில் செயல்படும் மீட்புப்பணி, யாத்திரையால் முன்னுருவாக உணர்த்தப்பட்ட மீட்பு மறைபொருளின் நிறைவாகும் என்றுகாட்ட அப்போஸ்தோலிக்கப் பாரம்பரியம் விழைகிறது. அதே நோக்கோடு, பாரம்பரியம், உப *18:18*-இல் முன்னறிவிக்கப்பட்ட புதிய மோசே இயேசுவைக் காண்கிறது (அ.ப. *3:15.22;5:31;7:35*தொ).

அ) புனித பவுல் இக்கருத்தைச் சுட்டிக் காட்டுவதோடு நிறுத்தி விடுகிறார். இயேசுவே நமக்காகப் பலியிடப்பட்ட உண்மையான பாஸ்குச் செம்மறி; (செங்கடலைக் கடத்தல், மன்னா, பாறை போன்ற) யாத்திரையின் வியத்தகு செயல்கள் கிறிஸ்துவால் படைக்கப்படும் ஆன்மீக உண்மைகளின் அடையாளங்களாகும் *(1 கொரி 10:1-6)*.

ஆ) புனித பேதுரு, யாத்திரையைத் திருச்சபையின் முன்னிலை நோக்கில் விவரிக்கிறார். கிறிஸ்துவர்கள் மாசுமறுவற்ற செம்மறியின் இரத்தத்தால் மீட்கப்பட்டிருக்கின்றனர் *(1 பேதுரு 1:18தொ; காண்க. யாத் 12:5; எசா 52:3)*. இருளிலிருந்து ஒளிக்கு *(1 பேதுரு 2:9; காண்க. ஞான 17-18)* அழைக்கப்பட்டிருக்கின்றனர் *(1 பேதுரு 1:14தொ; காண்க. ஓசே 11:1)*. ஒருகாலத்தில் அஞ்ஞானத்தில் வாழ்ந்த ஒழுக்கக்கேடான வாழ்விலிருந்து விடுவிக்கப்பட்டு *(1 பேதுரு 1:14:18; 4:3)*, இறைவனின் புதிய மக்களாக மாற்றப்பட்டு *(2:9தொ; காண்க. யாத் 19:6; எசா 43:20தொ)*, புனிதத்தின் சட்டத்தால் ஆட்சி செய்யப்படுகின்றனர் *(1 பேதுரு 1:15தொ; காண்க. லேவி 19:2)*. கிறிஸ்துவின் இரத்தத்தெளிப்பால் தூய்மையாக்கப்பட்டு, அக்காலத்திலிருந்து இறைவனுக்குக் கீழ்ப்படிய வாக்குறுதி அளித்தனர் *(1 பேதுரு 1:2.14.22; காண்க. யாத் 4:23)*. தங்களின் இடைகளை வரிந்துகட்டிக் கொண்டு *(1 பேதுரு 1:13: காண்க. யாத் 12:11)* வானுலகத்திலுள்ள தங்கள் தந்தை நாட்டிற்கு இட்டுச் செல்லும் வழியில் நடந்து செல்ல ஆயத்தமாய் இருக்கிறார்கள் *(1 பேதுரு 1:17)*.

இ) புனித யோவான் நீண்ட விரிவான இறையியலைத் தருகிறார். பாஸ்குச் செம்மறியின் இரத்தத்தால் கிறிஸ்துவர்கள் பேயின் அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்பட்டுள்ளனர் *(யோவா 1:29; 19:36; 8:34தொ; 8:44; 1 யோவா 3:8)*; இப்போது விண்ணரசுக்கு இட்டுச் செல்லும் வழியில் சென்றுகொண்டிருக்கின்றனர். அவர்கள் வானின்று இறங்கிய உயிருள்ள அப்பமாகிய கிறிஸ்துவால் உணவு ஊட்டப்பெறுகின்றனர் *(யோவா 6:30-58; காண்க. யாத் 16)*; அவருடைய விலாவிலிருந்து புறப்படும் நீரால் தாகம் தீர்க்கப்படுகின்றனர் *(யோவா 7:37தொ; 19:34; காண்க. யாத் 17:1-7)*; காயம்பட்டபோது, சிலுவையில் உயர்த்தப்பட்ட கிறிஸ்துவைப் பார்த்துக் குணமடைகின்றனர் *(யோவா 3:14; 19:37; காண்க. எண் 21:4-9)*. உலகின் ஒளியான கிறிஸ்துவைப் பின்பற்றி *(யோவா 8:12; காண்க. யாத் 13:21தொ)*, அவர்கள் ஒருநாள் தந்தையின் முன்வந்து சேர்வர் *(யோவா 12:26;13:8;14:3;17:24)*. உண்மையிலேயே, அவரது உயிர்ப்புக்குப்பின், இயேசு இவ்வுலகைவிட்டுத் தந்தையிடம் செல்லுதலாகிய *(13:1)* கடந்துபோகும் நிகழ்ச்சியைச் செய்துமுடித்த முதல்வராவார். அப்போது ''பூமியின்மேல் உயர்த்தப்பட்டு'' எல்லாரையும் தன்னிடமே ஈர்த்துக்கொள்கிறார் *(12:32)*. அவர்கள் குறிக்கப்பட்ட காலத்தில், தங்களது இறுதி யாத்திரைக்கு வந்து சேர்வர். அப்போது இவ்வுலகத்திலிருந்து வானுலகத்திற்குக் கடந்து செல்லுவர்.

**4) திருவெளிப்பாடு:-** பேதுருவின் முதல் திருமுகத்தில் காணப்படும் கருத்துக்களைக் கொண்டுள்ளது இந்நூல். செம்மறியின் இரத்தத்தால் சாத்தானுக்கு அடிமையான உலகாகிய மண்ணுலகிலிருந்து கிறிஸ்தவர்கள் விடுவிக்கப்பட்டுள்ளனர் *(திருவெளி 14:13)*. அதன் விளைவாக, யாத் 19:6-இல் இறைவனால் முன்னறிவிக்கப்பட்ட குருக்களின் அரசாக மாறுவார் *(5:9தொ)*. இது பழைய உடன்படிக்கையின் புதுப்பித்தலாகும் *(11:19; காண்க. யாத் 19:16)*. வேதகலாபனைக் காலத்தில் எழுதப்பட்ட நூலானாலும், திருவெளிப்பாட்டு நூல் ஒரு வெற்றிப் பாடலாக ஒலிக்கிறது. செங்கடல் பற்றிய நினைவுகள் *(திருவெளி 15:3தொ; காண்க. யாத் 14-15)*, இறைமக்களின் எதிரிகளை அழிவு மிக நெருங்கிக்கொண்டிருக்கிறது என்னும் சிந்தனையைத் தூண்டுகின்றன. இவ்வெதிரிகள், எகிப்தின் தலைப் பேற்றாண்கள் அழிக்கப்பட்டதுபோல, இறைவனுடைய வார்த்தையால் அழிக்கப்

படுவர் (திருவெளி *19:11-21*; காண்க. ஞான *18:14-18*). இறைவன் ''அவர் இருக்கிறவர்'' என்றழைக்கப்படுவதாலும், அவர்முன் மற்றப்படைப்புகள் யாவும் ஒன்றுமின்மை யாவதாலும் (திருவெளி *11:17;16:5;* காண்க. யாத் *3:14*) தம்மக்களிடையே வாழவும் (திருவெளி *15:8*), அவர்களுக்கு வெற்றி கொணரவும் வருகிறார். பாஸ்கு இரவுத் திருவிழிப்பில் கிறிஸ்துவர்கள், இக்காலத் தில்கூட, ''அகமகிழ்வதாக'' என்ற பாட லில் யாத்திரை என்னும் வீரக்காப்பியத்தை நினைவுகூர்கின்றனர்.

**யாத்திரை ஆகமம்** (EXODUS, BOOK OF)
**காண்க:** விடுதலைப் பயண நூல்

**யாத்திர்** (JATTIR - மேம்பாடுடைய, உயரியநிலை)

தெபீர் மலைப்பகுதியில் யூதாவைச் சேர்ந்த லேவியர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு நகரம் (யோசு *15:48; 21:14*; 1 நாள் *6:57*). அமலேக்கியரிடமிருந்து தாவீது கொள்ளையடித்திருந்த பொருட்களில் யாத் திர் நகரமும் ஒரு பகுதியைப் பெற்றது (1 சாமு *30:27*). இப்போது எபிரோனுக்குத் தென்மேற்காக 21 கி.மீ. தொலைவில் இருக்கும் இக்காலக் கிர்பெத் அத்திர் நகரம் யாத்திர் இருந்த இடமாக அடையாளம் காட்டப்படுகிறது. யூசேபியுவின் கூற்றுப் படி யாத்திர் பைசாந்திய காலத்தில் ஒரு முக்கிய கிறிஸ்தவக் குடியிருப்பாகும்.

**யாபால்** (JABAL - ஓடை)

இவன் இலாமேக்கின் ஒரு மனைவியான ஆதாவுக்குப் பிறந்தவன். நாடோடி வாழ்க்கை நடத்தி வந்த இடையர் கூட்டம் ஒன்றிற்குக் குலப்பெயர் மூதாதையர் (ஆதி *4:20*).

**யாபீன்** (JABIN - இறைவன் காட்டுகிறார் அல்லது தெளிவாக உணர்கிறார்)

1. ஆட்சோரின் அரசன் யாபீனை யோசுவா வெற்றி கொண்டு கொலை செய்தார் (யோசு *11:1*). கானானில் மற்ற இடங்களில் யோசுவா வெற்றி கொண்டதை அறிந்த யாபீனால் அமைக்கப்பட்ட கானா னியக் கூட்டணியினர் கலிலேயாக் கடலின் மேற்கிலும் வடக்கிலும் யோசுவாவை எதிர்த்தனர். கானானியர்கள் குதிரை களோடும், தேர்களோடும் போரிடப் புறப் பட்டனர். ஆனால், இஸ்ராயேலர்களால் மேரோம் நீரோடைக்கருகில் தோற்கடிக்கப் பட்டார்கள். யாபீனின் நகரமாகிய ஆட்சோரைத் தீயால் சுட்டெரித்தனர். மற்றப் பகுதிகள் அழிக்கப்படாவிட்டாலும் இஸ்ராயேலர் அவற்றை ஆக்கிரமித்துக் கொண்டார்கள்(*11:1-15*).

2. இவன் ஆட்சோர் நகரை ஆண்டு வந்த கானான் நாட்டு அரசன். இவனிடம் இஸ்ரா யேலரை இறைவன் கையளித்தார். அவன் அவர்களைத் துன்புறுத்தினான். அவன் படைத்தலைவன் சீசரா புறவினத்தாரின் நகரான அரோசத்து ககோயிமில் வாழ்ந்து வந்தான். ''யாபீனின் படைத்தலைவன் சீசராவையும் அவன் தேர்களையும், படை கள் அனைத்தையும் கீசோன் ஆற்றங்கரை யில் உன் கையில் ஒப்படைப்போம்'' என்று ஆண்டவர் கூறுவதாக தெபோரா, பாராக் கிடம் உரைத்தாள் (நீதி *4:2.7.17.23-24*; சங் *83:9*). இவ்விருவர் தலைமையில் இஸ்ரா யேலர் யாபீனின் படைகளைத் தோற்கடித் தனர்.

**யாபேசு** (JABESH - வறண்ட) - ஆள்

இவர் இஸ்ராயேல் அரசன் சல்லூம் என்பவரின் தந்தை (2 அர *15:10.13-14*). யாபேசு என்பது ஒரு தனிப்பட்ட ஆளின் பெயர் அன்று புவியியல் சார்ந்த இடப் பெயராகும் என்று அறிஞர் சிலர் கருது கின்றனர். ''யாபேசின் மகன்'' என்பதற்கு யாபேசு என்ற ஊரைச் சேர்ந்தவன் என்றும் பொருள் கொள்கின்றனர்.

**யாபேசு** (JABES - வறண்ட) - இடம்

கிலயாதின் முக்கிய நகரம். காண்க. யாபேசு-கிலயாது.

**யாபேசு - கிலயாது** (JABESH - GILEAD - கிலயாதின் யாபேசு)

யாபேசு என்பது கிலயாது நாட்டிலுள்ள ஒரு நகரமாகும். பென்யமினுக்கு எதிராக

நடத்தப்பட்ட போரில் யாபேசு-கிலயாது பங்கெடுக்கவில்லை (*நீதி 19-21*). ஆகவே, இஸ்ராயேல் மக்கள் இந்நகரைச் சேர்ந்த கன்னிப் பெண்களைத் தவிர மற்ற எல்லா ஆண்களையும், திருமணமான பெண்களையும் கொன்று குவித்தனர் (*நீதி 21:8-12*). பின் கொலை செய்யப்படாத நானூறு கன்னிப் பெண்களை அழைத்துக் கொண்டு போய் எஞ்சியிருந்த பென்யமின் குலத்தவர்கள் மணந்து கொண்டார்கள். இந்நிகழ்ச்சியின் வரலாற்றுத் தன்மை சந்தேகத்திற்குரியதாக இருக்கிறது. ஆனால், யாபேசு-கிலயாதுக்கும் சவுலுக்கும் உள்ள உறவு பற்றிக் கூறும் பொழுது இந்நகரத்திற்கும் பென்யமினுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. அம்மோனின் அரசனாகிய நாகசு யாபேசுக்கு எதிராக போரிடத் தொடங்கிய பொழுது, யாபேசு நகரத்திலுள்ளவர்கள் சவுலின் உதவியை நாடினார்கள். சவுல் இஸ்ராயேல் மக்கள் எல்லாரையும் திரட்டிக் கொண்டுபோய் அம்மோனியரை முறியடித்து யாபேசு நகரை மீட்டுக் கொடுத்தார் (*1 சாமு 11:1 தொ*). இதற்கு நன்றிக்கடனாக பெத்சான் நகர் மதிலில் தொங்கிக் கொண்டிருந்த சவுலின் இறந்த உடலை யாபேசு-கிலயாது மக்கள் எடுத்துக் கொண்டு வந்து அடக்கம் செய்தனர் (*1 சாமு 31:11 தொ*). யாபேசு-கிலயாது நகர மக்களின் இச்செயலைக் குறித்து தாவீது அவர்களுக்கு நன்றிச் செய்தி அனுப்பினார் (*2 சாமு 2:4 தொ*). அடக்கம் செய்யப்பட்ட சவுல், அவரது புதல்வர்களின் உடல்கள் கல்லறையிலிருந்து எடுக்கப்பட்டு பென்யமினில் உள்ள கல்லறையில் தாவீதால் அடக்கம் செய்யப்பட்டன (*சாமு 21:12 தொ*).

யாபேசு-கிலயாதிலிருந்து பெத்சானுக்கு இரவில் மக்கள் நடந்து சென்றார்கள் என்பது இந்நகர் இருந்த எல்லைப் பகுதியைக் குறித்துக்காட்டப் பயன்படுகின்றது. யோர்தான் பள்ளத்தாக்கில் பெத்சானுக்குத் தென்கிழக்கே சில மணி நேரத்தில் நடந்து செல்லக்கூடிய தூரத்தில் இருக்கும் தெல் அபு கராசு அல்லது தெல் ஏல்-மெக்பெரே என்பன யாபேசு-கிலயாது இருந்த இடமாக இருந்திருக்கலாம். எலியாவைத் திசபேயர் என்று அழைப்பது தவறு என்றும் அவரை யபேசியர், அதாவது யாபேசு கிலயாதைச் சேர்ந்தவர் என்று அழைப்பதே சரியென்றும் அறிஞர் சிலர் கருதுவர் (*1 அர 17:1 தொ*).

**யாபோக்கு** (JABBOK - ஆற்றொழுக்காகச் செல்கிற)

கிழக்கிலிருந்து யோர்தான் ஆற்றுக்குள் பாயும் கிளை ஆறுகளில் முக்கியமானது. இஃது இப்போது ''நீல ஆறு'' என்று பொருள்படும் எஸ்-சேர்கா என்றழைக்கப்படுகிறது. ஏனெனில், இதன் நீர் மிகக் குளிர்ச்சியானதாகும். இஃது (விவிலிய இரபாவாகிய) அம்மானுக்கு வடக்கிலுள்ள ஊற்றிலிருந்து தொடங்கி, முதலில் வடக்காக ஓடி, பின் வடமேற்காகப் படிப்படியாக ஆழமாகும் ஆற்றுக் குடைவுகள் வழியாக ஓடி, (விவிலிய ஆதமாகிய) தெல் எத்-தமியேவுக்கு வடக்கில், சாக்கடலுக்கு வடக்கில் 24 கி.மீ. தொலைவிலுள்ள இடத்தில் யோர்தானுடன் சேர்கிறது. இதன் மொத்த நீளம் ஏறக்குறைய *80* கி.மீ. ஆகும். இதன் நீர் வேகமாக, ஆனால் ஒரே சீராக ஓடும்.

விவிலியக் காலத்தில், இந்த ஆறு எஸ்போனின் எமோரிய அரசனான சீகோன் நாட்டையும் அம்மோன் மற்றும் பாசான் நாடுகளையும் பிரிக்கும் எல்லையாக இருந்தது. மேலும், இது கிலயாதை இரு பகுதிகளாகப் பிரித்தது (*எண் 21:24; உப 2:37; 3:12.16; யோசு 12:2-6; நீதி 11:13.22*).

பதான்-ஆராமிலிருந்து யாக்கோபு தன் குடும்பத்துடன் திரும்பியபோது, இந்த ஆற்றைக் கடந்து சென்றார். அப்போதுதான் யாக்கோபு ''ஓர் ஆடவனுடன்'' பொழுது விடியுமட்டும் போராடி, அந்த ஆடவனிடமிருந்து ஆசீரும் இஸ்ராயேல் என்ற புதுப் பெயரும் பெற்றார் (*ஆதி 32:22-29*).

**யாப்பியா** [JAPHIA - (இறைவன்) ஒளிரட்டும்] - ஆள்

1. எருசலேமுக்குத் தென்மேற்கேயுள்ள இலாக்கீசின் அரசனே இவன் (யோசு 10:3). யோசுவா தங்கள் நாட்டில் நுழைவதைத் தடுக்க ஒன்று சேர்ந்த ஐந்து அரசர்களில் ஒருவன். இவர்கள் பெத்-கோரோனில் யோசுவாவால் தோற்கடிக்கப்பட்டு (10:3), பின்பு கொல்லப்பட்டனர் (10:22-27).

2. தாவீது எருசலேமின் அரசனானபின் அவருக்குப் பிறந்த மகன் இவர் (2 சாமு 5:15; 1 நாள் 3:7; 14:6). இவரது தாயின் பெயர் கொடுக்கப்படவில்லை. ஒரு வேளை இவள் ஒரு வைப்பாட்டியாக இருந்திருக்கலாம்.

**யாப்பியா** [JAPHIA - (இறைவன்) ஒளிரட்டும்] - இடம்

செபுலோனின் எல்லை நகரமிது (யோசு 19:13). நாசரேத்துக்குத் தென்மேற்கே 2.5 கி.மீ. தொலைவுக்குள் அமைந்த ''யாப்பா'' இஃது அமைந்த இடமாக இருக்கலாம் என்கின்றனர். பழைய செபக்கூடத்தின் சிதைவுகள் இவ்விடத்தில் காணப்பட்டன.

**யாப்பேத்து, எப்பேத்து** [JAPHETH - (இறைவன்) பெருகச் செய்வாராக]

நோவாவின் மூன்றாவது மகன் இவர் (ஆதி 5:32;6:10;7:13;9:18). நாடுகளின் அட்டவணையில் யாப்பேத்து, கோமேர், மகோகு, மதாய், யாவான், தூபால், மெசேக்கு, திராசு ஆகியோரின் தந்தையாகக் காட்டப்படுகிறார். இவர்கள் செமித்திய இனத்தவரல்லர்; பெரும்பாலும் கருங்கடல் பகுதியில் வாழ்ந்தவர்கள் (ஆதி 10:1 தொ). யாப்பேத்துக்கு நோவா அளித்ததாகக் கூறப்படும் ஆசீர் அவ்வளவு தெளிவாக இல்லை (ஆதி 9:27). இங்குக் கூறப்படும், செமித்திய மக்களின் பகுதிக்குச், சிறிய ஆசியாவைச் சேர்ந்த செமித்தியர் அல்லாதார் செல்வது, குடியேறிய இயக்கத்தைக் குறிக்கலாம். வரலாற்றில் இத்தகைய நிகழ்ச்சிகள் பல தடவை நடந்துள்ளன. இந்த வரியோடு (9:27) தொடர்புபடுத்தக் கூடிய குறிப்பிட்ட நிகழ்ச்சி இல்லை. யாப்பேத்தும் சேமும் அமைதியான நல்லுறவு கொண்டிருப்பர் என்பதை உணர்த்துகிறது. ஆனால் ''கானான் இவனுக்கு அடிமையாய் இருப்பான்'' எனும் வாக்கியம் மூல வாசகத்தைச் சேர்ந்ததாக இருக்க முடியாது.

**யாப்லேற்றியர்** (JAPHLETITES)

ஆசேரின் இனத்தைச் சேர்ந்த யாப்லேற்றின் வழித்தோன்றல்கள். இவர்கள் வாழ்ந்த பகுதி கெசேருக்குக் கிழக்கில் எப்பிராயிமின் தென் எல்லையைக் குறிக்க உதவுகிறது (யோசு 16:3).

**யாப்லேற்று** (JAPHLET - (இறைவன்) விடுவிப்பாராக)

இவர் ஆசேரின் குடும்பத்தைச் சேர்ந்த எபேரின் மகன் (1 நாள் 7:32-33). இவர் யாப்லேற்றியரின் மூதாதையராக இருந்திருக்கலாம். இக்குழுவினரின் பகுதி யோசேப்பு இனத்தின் தென்எல்லையில் அமைந்திருந்தது (யோசு 16:3).

**யாப்னவேல்** (JHABNEEL - இறைவன் கட்டச் செய்கிறார்)

1. இது யூதாவின் வடக்கு எல்லையில் அமைந்துள்ளது. இது, மத்திய தரைக்கடலுக்கு வடக்கே 6.5 கி.மீ. தொலைவிலும், ஆசோத்தின் வடக்கு, வடகிழக்கில் 14.5 கி.மீ. தொலைவிலுமாக உள்ள இக்கால எப்னவாக இருக்கலாம். இது 2 நாள் 26:6-இல் யாப்னே என்றும், கிரேக்கர்கள் காலத்தில் யாம்னியா (காண்க. 1 மக் 4:15) என்றும் அழைக்கப்பட்டது.

ஊசியா (கி.மு. 783-742) ஆண்ட காலத்தில் பெலிஸ்தியரிடமிருந்து யாப்னே திரும்பவும் கைப்பற்றப்பட்டது (2 நாள் 26:6 தொ). யூதா மக்கபேயர் யாம்னியாவைக் கி.மு. 164-இல் கைப்பற்றி எரித்துவிட்டார்கள். கி.மு. 80-இல் அலக்சாந்தர் யன்னேயுவின் ஆட்சியின்கீழ் இந்த நகரம் இருந்தது.

கி.மு. 63-இல் யாம்னியாவைப் பாம்பே கைப்பற்றினார். சில வருடங்களுக்குப் பிறகு கபினியு அதைப் பழுதுபார்த்து திரும்பவும் கட்டச் செய்தார். கிளியோபத்திராவின் இறப்பிற்குப் பின், இந்நகரை

ஏரோது தன்னுடைய ஆட்சியில் இணைத்துக் கொண்டான். ஏரோது இதை முதலில் தன்னுடைய சகோதரி சாலோமேக்குக் கொடுத்தான்; பின்பு, பேரரசி லீவியாவுக் குக் கொடுத்தான். திபோரியு (கி.பி. 14-37) காலத்தில் அது பேரரசின் அதிகாரியால் நிர்வகிக்கப்பட்டது.

உரோமைக்கு எதிரான முதல் கிளர்ச்சிக் குப்பின் யாம்னியா சனத்திரினின் மைய மாக விளங்கியது. கி.பி. 100-ஐ ஒட்டி யாம்னியாவில் கூடிய யூதப் பொதுச் சங்கத்தில் யூதப் புனித நூல்கள் பற்றிய வரையறைகள் செய்யப்பட்டன. இவை யூத மற்றும் கிறிஸ்தவ விவிலியத் திருமுறைப் பட்டியலுக்கு முக்கியமானவையாகும்.

2. நப்தலியின் தெற்கில் உள்ள ஓர் ஊர் (யோசு 19:33). இது கலிலேயாக் கடலின் மேற்கிலும், தென் மேற்கிலும், திபேரியா வுக்குத் தென்மேற்கில் 11 கி.மீ. தொலை விலும் அமைந்துள்ள இக்காலக் கிர்பெத் எம்மாவாக இருக்கலாம். வெண்கலக் காலத்திலிருந்து அராபியர் காலம் வரை இங்கு மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர்.

**யாப்னே** (JABNEH - *அவர் கட்டச் செய்கிறார்*)

இது யாப்னவேல் என்ற பெயரின் மற்றொரு வடிவம் (2 நாள் 26:6).

**யாமலேக்கு** (JAMLECH - *(இறைவன்) ஆள்வாராக*)

சீமோனின் கோத்திரத்தைச் சேர்ந்த இவர் ஒரு குடும்பத்தின் தலைவர் ஆவார் (1 நாள் 4:34).

**யாமின்** (JAMIN - *வலக்கரம், நற்பேறு*)

1. சிமியோனின் புதல்வராகிய இவர் ஓர் இனப்பெயர் முதல்வர் (ஆதி 46:10; யாத் 6:15; எண் 26:12; 1 நாள் 4:24).

2. இவர் யூதாவைச் சேர்ந்தவர். இராமின் மகனும், எரகுமவேலின் வழித்தோன்றலும் ஆவார் (1 நாள் 2:27).

3. எஸ்ரா மக்களுக்குமுன் சட்டத்தைப் படித்துக் காண்பித்தபோது அதனை விளக்கு வதற்கு உதவிய லேவியர்களில் ஒருவர் (நெகே 8:7).

**யாம்பிரி, இயாம்பிரி** (JAMBRI)

யோர்தானுக்கு அப்பாலுள்ள மேத பாவைச் சேர்ந்த கொள்ளைக் கூட்டத்தார் ஆவார். இவர்கள் யூதா மக்கபேயுவின் சகோதரன் யோவானைச் சிறைப்பிடித்துக் கொன்றனர் (1 மக் 9:36). யோவானின் சகோதரன் யோனத்தான் ஒரு திருமண விருந்தின்போது இக்கொலைக்குப் பழி வாங்கினார் (9:37 தொ). இயாம்பிரியர்கள் எமோரியராக இருக்கலாம் (காண்க. எண் 21:30-31).

**யாம்னியா** (JAMNIA)

யூதாவின் கடற்கரையில் இருந்த ஒரு நகரம். இது மத்தியதரைக் கடலிலிருந்து 6 கி.மீ. தொலைவிலும், எருசலேமிலிருந்து 48 கி.மீ. தொலைவிலும் இருந்தது. இஃது இப்போது எப்னா என்றழைக்கப்படுகிறது. அசமோனியர்களுக்கு எதிராகப் போரிட்ட செலூக்கியப் படைத்தவர்களான கோரிக்கியா (1 மக் 4:15; 5:58), அப்பொல்லோனியு (10:69), கெந்தபேயு (15:40) ஆகியோரின் போர்ச்செயல்களின் மையமாகத் திகழ்ந்தது யாம்னியா. யாம்னியா மக்கள் அங்கு இருந்த யூதர்களை அழித்தொழிக்கத் திட்ட மிட்டிருந்ததை அறிந்த யூதா மக்கபேயு, இந்தக் கடற்கரை நகரையும் படையையும் எரித்து அழித்தார் (கி.மு. 165; 2 மக் 12:8-9). யூதாவின் சகோதரன் சீமோன் கி.மு. 142-இல் இதைக் கைப்பற்றினார். கி.மு. 63-இல் பாம்பே யாம்னியாவை விடு வித்துச் சீரியாவோடு சேர்த்து, இதை யாம்னியர்களுக்குக் கொடுத்ததுவரை இந் நகர் யூதர்கள் ஆட்சியிலேயே இருந்தது. உரோமையரிடமிருந்து இஃது ஏரோதின் ஆட்சிக்குள் வந்தது. ஏரோது இதைத் தன் சகோதரி சலோமிக்குக் கொடுத்தார். இவள் இந்நகரைப் பேரரசி யூலியாவுக்கு அளித் தாள். இக்காலம் முழுவதும் இது யூதர் களைப் பெரும்பான்மையாகக் கொண்ட நகராகவே இருந்தது. பீலோவின் கருத்துப் படி, இந்நகரில் செங்கல்லால் கட்டப்பட்ட ஒரு பீடத்தை யூதர்கள் அழித்ததுவே,

எருசலேம் ஆலயத்தில் தன்னுடைய பொற் சிலையை அமைக்க காயுவைத் தூண்டியது (கி.பி. 40).

தால்மூது பாரம்பரியப்படி, யூதப் போர் களின் காலத்தில் (கி.பி. 66-70) எருசலே மின் பரிசேயரின் முக்கிய தலைவரான யோகனான் பென் சக்காய் என்பவர், வெஸ்பாசியன் பாளையத்திற்குத் தப்பிச் சென்று, யாம்னியாவில் ஒரு பள்ளியை அமைக்க அனுமதி கேட்டார். கி.பி. 70-இல் எருசலேமின் வீழ்ச்சிக்குப்பின் எருசலேம் சனத்திரினின் அதிகாரம் யாம்னியாவி லுள்ள பெத்-தின்னால் (சட்டமன்றம்) ஏற்றுக் கொள்ளப்பட்டது. இங்கு யோகனா னின் தலைமையின்கீழ் யூதத்துவம், நாட் டின் பேரழிவுக்குப்பின், மீண்டும் அமைக் கப்பட்டது. இவ்வாறு கி.பி. 70-132-இல் யாம்னியா யூதத்துவத்தின் ஆன்மீக மற்றும் அறிவியல் மையமாகத் திகழ்ந்தது. இக் காலத்தில் ராபிகளின் யூதத்துவம் நிறுவப் பட்டது.

யாம்னியாவில் கி.பி. 90-இல் நடந்த சங்கம் யூதத்திருமுறைப் பட்டியலை நிர்ண யித்தது என்று அறிஞர்கள் கருதி வந்திருக் கின்றனர். இத்தகைய சங்கம் கூடியதற்கோ, இத்தகைய குறிப்பிட்ட முடிவுகள் எடுக்கப் பட்டதற்கோ சான்றுகள் தெளிவாக இல்லை என்று அண்மைக்கால ஆய்வுகள் காட்டியுள்ளன. கி.பி. 132-இல் கோக்பா வின் தலைமையில் நடந்த கிளர்ச்சியோடு, யூத மையம் என்ற அளவில் யாம்னியாவின் முதன்மை முடிவுக்கு வந்தது. கி.பி. ஐந் தாம் நூற்றாண்டில் யாம்னியா கிறிஸ்தவர் களைப் பெரும்பான்மையாகக் கொண்ட நகராகத் திகழ்ந்தது. காண்க. யாப்னவேல்-1.

**யாயிர்** (JAIRUS - அறிவுடைய, விழித்தெழு)

1. இயேசு செபக்கூடத் தலைவனான இவரது மகளையே இறந்தபின் உயிர்பெறச் செய்தார் (மாற் 5:21-24.35-43; லூக் 8:40-42.49-56; மத் 9:18-19. 23-26, மத்தேயு யாயிரின் பெயரைக் குறிப்பிடவில்லை).

மூன்று நற்செய்தியாளர்களும் இந்த நிகழ்ச்சிகளை விளக்கும் போது 12 ஆண்டு களாக இரத்தப்போக்கினால் வருந்திய பெண்ணைப் பற்றிப் பேசுகின்றனர். இவை மூன்றுமே விசுவாசம், 12 வருடம் எனும் பொதுவான இரு உண்மைகளைக் கொண் டிருப்பதோடு, அதனைத் தொடர்ந்துவரும் நிகழ்ச்சிக்கு இஃது ஒரு தயாரிப்பு போலும், முக்கியத்துவத்தை அதிகரிப்பது போலும் தோன்றுகிறது.

மாற் 5:35-36.38.40-இல் பெயர் மீண்டும் மீண்டும் வந்திருக்கலாம்; ஆனால், அவ் வாறு வரவில்லை. இரண்டு முக்கியமான கையெழுத்துப் பிரதிகள் மாற் 5:22-இல் யாயிரின் பெயரைக் குறிப்பிடவில்லை. லூக்கா இந்நிகழ்ச்சியில் பெயரைக் குறிப் பிடுகிறார். இது மூல பாரம்பரியத்தில் இல்லாத ஒரு மரபாகும். அதாவது, முன் னர் மரபில் தெரியாத பெயர்களைப் பிற் காலத்தில் ஆட்களுக்குக் கொடுப்பதாகும். அதன்படியே லூக்காவும் பெயர் கொடுத் திருக்கிறார் எனக் கருதப்படுகிறது.

மத்தேயு நற்செய்தியில் 10 புதுமைகளில் ஒன்றாக மிகச் சுருக்கமாக வருகிறது. லூக்காவும் மாற்கும் தராத சில தகவல் களோடு நிகழ்ச்சியைத் தருகிறார். மாற் 5:41-இல் இயேசு, ''தலித்தாகூம்'' அதா வது, ''சிறுமியே உனக்குச் சொல்கிறேன் எழுந்திரு'' என அரமேய மொழியில் கூறுவதாகக் காட்டுகிறார். ஆனால் மத்தேயு வும், லூக்காவும் இந்த அரமேயச் சொல்லை எடுத்தாளவில்லை. லூக்கா, ''சிறுமியே எழுந்திரு'' எனவும், மத்தேயு ''கையைப் பிடித்துத் தூக்கி விட சிறுமி எழுந்தாள்'' எனவும் கூறுகின்றனர். அ.ப. 9:36-43-இல் பேதுரு 'தபீத்தா' எனும் பெண்ணை உயிர் பெறச்செய்வதும், இச்சிறுமியை உயிர் பெறச் செய்வதும் ஒன்றுபோல் உள்ளதைப் பலர் குறிப்பிட்டுக் காட்டுகின்றனர்.

''யாயிர்'' என்பதன் எபிரேயப் பொருள் 'அவன் விழித்தெழுவான்' என்பதால் இதி லிருந்து இந்நிகழ்ச்சி ஒரு கட்டுக்கதையாக இருக்க முடியாதெனத் தெரிகிறது.

நற்செய்தி விளக்கவுரையாளர்கள் சிறுமி மயக்கநிலையில் இருந்தாளேயொழிய சாக வில்லை எனக் கருதுகின்றனர். ஆனால் நற்செய்தியாளர் வேறுசிலர் 'சிறுமி தூங்கு கிறாள்' என்பதை அப்படியே எடுத்துக் கொள்ளவில்லை. அவ்வாறெனில் அஃது அருஞ்செயலாகாது. ''உயிர் மூச்சு திரும்பி வரவே, அவள் உடனே எழுந்தாள்'' என்று லூக்கா கூறி, உயிர் பெறுவதைச் சுட்டிக் காட்டுகிறார். எஃது எவ்வாறு இருப்பினும் மூன்று நற்செய்தியாளர்களும், இயேசு ஓர் அருஞ்செயலைச் செய்தார் என்பதைக் காண் பிக்க விரும்புகின்றனர் என்பது தெளிவு.

2. மொர்தக்காயின் தந்தை *(எஸ்த 11:2)*. காண்க. *யாயீர்-4.*

**யாயீரியர்** *(JAIRITE)*

இது தாவீதின் குருவாக இருந்த ஈராவைக் குறிப்பதற்காகப் பயன்படுத்தப் பட்ட இனப் பெயராகும் *(2 சாமு 20:26)*. இவர் கிலயாதில் வாழ்ந்து வந்த மனாசே யின் மகன் யாயீரின் வழித்தோன்றல் *(எண் 32:41; உப 3:14)*. எழுபது நூலையும் சில வாசகங்களையும் பின்பற்றி யாயீரியருக்குப் பதிலாக யாத்திரியா அதாவது யாத்திரின் குடிமகன் என்று இருக்க வேண்டும் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர் *(எ.கா. 1 சாமு 30:27; காண்க. 2 சாமு 23:38: இத்ரியரான ஈரா)*.

**யாயீர்** [JAIR - *(இறைவன்)* ஒளிர்வாராக அல்லது பொங்கியெழுவாராக]

1. மனாசேயின் புதல்வர்களுள் ஒருவ ரான யாயீர் ஒரு இனப்பெயர் முதல்வர் *(2 சாமு 20:26)*. இவர் அர்கோபு நாட்டி லுள்ள கிலயாதின் கிராமங்களை ஆட் கொண்டார் *(எண் 32:41; உப 3:14; யோசு 13:10; 1 அர 4:13)*. *1 நாள் 2:22*-இல் இவர் யூதாவைச் சேர்ந்தவர்; செகுபுவின் மகனும், எட்சரோனின் பேரனும் ஆவார். இவரது பாட்டி, மனாசேயைச் சேர்ந்த மாக்கிரின் புதல்வியாவாள். யாயீர் என்ற பெயர் ஓர் இடப் பெயராகவும் இருக்க லாம். அர்கோபு அல்லது கிலயாதைச் சேர்ந்த பத்து நகரங்களான அவ்வோத்து யாயீரோடு தொடர்புடையதாக இருக்க லாம்.

2. கிலயாதைச் சேர்ந்த இவர் இஸ்ராயே லில் 20 ஆண்டுகள் நீதி வழங்கினார் *(நீதி 10:3.5)*; இவரது புதல்வர்களும் 40 நகரங் களைக் கொண்டிருந்தனர். இவரும் ஒன்றில் குறிக்கப்பட்டவரும் ஒரே ஆளைக் குறிக்க லாம். இவர் காமோனில் அடக்கம் செய்யப் பட்டார்.

3. எல்கனானின் தந்தையான யாயீர் *1 நாள் 20:5*-இன்படி கோலியாத்தின் சகோதர னான இத்தியர் இலகுமியைக் கொன்றவர் ஆவார். *2 சாமு 21:19*-இன்படி இவரே கோலியாத்தைக் கொன்றார் என்று கூறப் படுகிறது. இங்கு இவர் யகரே ஓர்கீம் என்று குறிப்பிடப்படுகிறார். இது பிரதி எடுத்தவரின் தவறாக இருக்கலாம்.

4. பென்யமின் குலத்தைச் சேர்ந்த இவர் 1-இல் குறிப்பிடப்படும் யாயீரின் உறவின னாக இருக்கலாம். இவர் எஸ்தரின் பாது காவலரான மொர்தக்காயின் மூதாதையர் ஆவார் *(எஸ்த 2:5)*.

**யாரா** (JARAH - தேன் கூடு)

இவர் சவுலின் வழித்தோன்றல்களில் ஒருவர். இவர் ஆகாசின் புதல்வனும் ஆலமேத்து, அசமாவேத்து, சிம்ரி ஆகியோ ரின் தந்தையும் ஆவார் *(1 நாள் 9:42)*. *1 நாள் 8:36*-இல் இவர் யோகதா என்றழைக்கப்படுகிறார்.

**யாரிபு** (JARIB - அவர் எதிர்த்துப் போராடு வாராக)

1. *1 நாள் 4:24*-இன்படி இவர் சிமியோ னின் மகன். ஆனால் *ஆதி 46:10; யாத் 6:15; எண் 26:12*-இல் இவர் யாக்கின் என்றழைக்கப்படுவதால் இப்பெயர் எழுத் தர்களின் தவறாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

2. எஸ்ரா ஆலயப் பணியாளர்களைச் சேகரிக்க பாலஸ்தீனத்துக்கு வருவதற்கு முன், அவருக்கு உதவிய தலைவர்களில் ஒருவர் *(எஸ் 8:16)*.

3. எஸ்ரா, அன்னிய மனைவியை விட்டு விடுமாறு கட்டாயப்படுத்திய ஒரு குரு (எஸ் 10:18).

**யாரேது, எரேது** (JARED - கீழே போதல்)

சேத்தின் குடும்ப முதுபெரும் தந்தையர்களில் ஒருவரான யாரேது பெரும் வெள்ளத்துக்கு முந்தியவர். இவர் ஏனோக்கின் தந்தை (ஆதி 5:15-20; 1 நாள் 1:2; லூக் 3:37). ஆதி 5:20-இன்படி இவர் 962 ஆண்டுகள் வாழ்ந்தார். காண்க. எரேது, ஈராது.

**யாரேபு** (JAREB - எதிரி)

ஓசே 5:13;10:16-இல் உள்ள ஓர் அரசனின் பெயர் எனக் கொள்ளலாம். அசீரிய அரசனுக்கான மாமன்னன் எனும் அடைமொழியைக் குறிப்பதாகவே இதனைக் கொள்வது சரியானது. இச்சொல் ஓர் அடைமொழியென்பது சரி.

**யாரோவாகு** (JAROAH - மென்மையான)

இவர் காத்தின் குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் பாசானில் வாழ்ந்தவர். இவர் கிலயாதின் மகனும் ஊரியின் தந்தையுமாவார் (1 நாள் 5:14).

**யார்கா** (JARHA)

இவர் எரகுமவேலியரான சேசானின் எகிப்திய அடிமையாவார் (1 நாள் 2:34). சேசானுக்கு ஆண் பிள்ளைகள் இல்லாததால் வாரிசு உண்டாக்க யார்காவுக்குச் சேசான் தன் பெண்ணை மணமுடித்து வைத்தார் (2:35; காண்க. யாத் 21:4).

**யார்முத்து** (JARMUTH - உச்சி, முடி)

1. இது யூதாவின் செபேலாப் பகுதியில் அமைந்துள்ள ஒரு நகரம் (யோசு 15:35). சகரியேவுக்கு அருகில் ஏலாப் பள்ளத்தாக்கில் பெத்லகேமுக்கு மேற்கில் 24 கி.மீ. தொலைவில் உள்ள இக்காலக் கிர்பெத்-யார்முக்காக அடையாளம் காட்டப்படுகிறது. இது எளிதில் தற்காத்துக் கொள்ளும் வகையில் ஒரு குன்றின் மேல் அமைந்திருந்தது. எலுத்தெரோபோலிக்கு (இக்கால இப்ரின்) வடக்கு வடகிழக்கில் 13 கி.மீ. தொலைவிலுள்ள இடமாக இதை யூசேபியு குறிப்பிடுகிறார். இங்குச் சுவர்களும், வெண்கல மற்றும் இரும்புக் காலத்திய பாண்டத் துணுக்குகளும் கிரேக்க, பைசாந்தியர் காலத்திய பொருட்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

கானானிய அரச நகரங்களின் ஒன்றான இது, யோசுவா உட்புகுவதைத் தடுக்க முயற்சித்தது (10:3-27; 12:11). பின்னர், இதனுடன் கூட்டுச் சேர்ந்த பிற அரசர்களும் தோற்கடிக்கப்பட்டதால் இதன் அரசனும் தோற்கடிக்கப்பட்டு மக்கேதாவில் கொல்லப்பட்டான் (10:3.5.22; 12:11). பின்னர் சோர-அசேக்காவின் செபேலோ மாநிலத்தின் ஒரு பகுதியாகியது (15:35). பிற்காலத்தில், பாபிலோனிலிருந்து திரும்பிய யூதர்கள் இப்பகுதியில் வாழ ஆரம்பித்தனர் (நெகே 11:29).

இங்குக் கண்டெடுக்கப்பட்ட கி.மு. 1365-ஐச் சேர்ந்த ஆப்பு எழுத்து ஏடுகள், கொள்ளையர் தலைவர் ஒருவனால் இந்நகரம் ஆளப்பட்டதாகவும், அவன் எகிப்தியருக்கு மட்டுமே பொறுப்பானவனாக இருந்தான் என்றும் கூறுகிறது.

2. இஃது இசக்காரில் உள்ள ஒரு லேவியர் நகரம் (யோசு 21:29). 1 நாள் 6:73-இல் வரும் இராமோத்தும் அல்லது யோசு 19:21-இல் வரும் இரமேத்தும் இந்த யார்முத்தும் ஒரே இடத்தைக் குறிக்கலாம். இது பெத்சானுக்கு வடக்கில் 11 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலக் கோகாபு ஏல்-காவா ஆகவோ விவிலிய ஏன்-கன்னீமாகிய எனினுக்குத் தெற்கில் 17 கி.மீ. தொலைவிலுள்ள எர்-இராமேயாகவோ அடையாளம் காட்டப்படுகிறது.

**யாலா** (JAALA - பெண் மலையாடு)

அடிமைத் தனத்திலிருந்து செருபாபேலோடு திரும்பி வந்தவர்களில் சாலமோனின் ஊழியர்களில் ஒருவர். குலப்பெயர் மூதாதையர் (நெகே 7:58). இவர் எஸ் 2:56-இல் யாலாகு என்றழைக்கப்படுகிறார்.

**யாலாகு** (JAALAH - பெண் மலையாடு)

இது யாலா (நெகே 7:58) என்ற பெயரின் மற்றொரு வடிவம் (எஸ் 2:56).

**யாலாம்** *(JALAM - இளைஞன்)*

ஏதோமிய குலப்பிரிவொன்றின் தலைவனான இவர் ஏசாவுக்கும் ஒகோலிபாமாவுக்கும் பிறந்தவர் *(ஆதி 36:5.14.18; 1 நாள் 1:35).*

**யாலோன்** *(JALON - யாவே ஓய்வெடுத்தார்)*

யூதா இனத்தைச் சேர்ந்த எஸ்ராவின் புதல்வர் *(1 நாள் 4:17).*

**யாவான்** *(JAVAN - களிமண்)*

*ஆதி 10:2.4; 1 நாள் 1:5.7; எசா 66:19; எசே 27:13; தானி 8:21; 10:20: 11:2; யோவே 4:6; செக் 9:13*-இவைகளில் யாவானின் வழித்தோன்றல்களைப் பற்றியும் அவர்களின் நாடுகளைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. இவர் நோவாவின் புதல்வனாகிய யாப்பேத்து என்பவரின் நான்காவது புதல்வர் *(ஆதி 10:1-2).* இவர் எலீசா, தர்சிசு, கித்திம், தோதானீம் என்பவர்களின் தந்தை யாவார் *(ஆதி 10:4; 1 நாள் 1:5.7).* யாவான் என்ற பெயர் யாவானின் வழியாக யாப்பேத்தின் வழிவந்தவர்களையும், அவர்கள் தங்கியிருந்த மேற்கு நாடுகளையும் குறிக்கின்றது *(ஆதி 10:5).*

தொலைதூர நாடான யாவான் இறைவனின் மாட்சிமையைக் காணும் என்று எசாயா கூறுகிறார் *(எசா 66:19).* யாவானியர்களின் மக்கள் (கிரேக்கர்கள்) பெனிசியர்களிடமிருந்தும், பெலிஸ்தியர்களிடமிருந்தும் யூத அடிமைகளை விலைக்கு வாங்கி விற்கும் வியாபாரிகள் என்று யோவே *4:6* குறிப்பிடுகின்றது. யாவானியர்களின் அடிமை வியாபாரத்தைப் பற்றியும், மற்ற வியாபாரத்தைப் பற்றியும் தீர் நகரின் வீழ்ச்சியைப் பற்றிய புலம்பலில் குறிப்பு காணப்படுகிறது *(எசே 27:13).* செக் *9:13*-இன்படி, சீயோனின் மக்களாகிய யூதாவும் எப்பிராயிமும் யாவான் மக்களுக்கு (கிரேக்கர்கள்) எதிராக கடவுளின் போர் வீரர்களாகப் பணியாற்றுவார்கள். தானியேல் நூலில் காணப்படும் கிரேக்க அரசன் *(8:21)*, இளவரசன் *(10:20)*, யாவான் அரசு *(4:2)* முதலியவை கிரேக்க-மாசிதோனியப் பேரரசைக் குறிப்பதோடு, சிறிய ஆசியாவில் உள்ள அயோனியக் குடியேற்றத்தையும் யாவானியர்களையும் ஒன்றுபடுத்துகின்ற கருத்தையும் பிரதிபலிக்கிறது.

எபிரேய விவிலியத்தில் எசே *27:19*-இல் யாவானியர்கள் தீர் நகரத்தோடு வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தனர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சிலர் யாவான் என்பது ஒரு கிரேக்கர்களின் குடியிருப்பு அல்லது அராபியாவிலுள்ள ஓர் அராபிய இனம் என்று கூறுகிறார்கள். அசீரிய ஆவணங்களிலும், தாரியு காலத்து ஆப்பு எழுத்துப் பொறிப்புகளிலும், இரண்டாம் ராமசேசின் காலத்திலிருந்து எகிப்திய ஆவணங்களிலும் அயோனியர்களைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

**யாவே** *(YAHWEH)*

யாவே என்ற பெயர் **கடவுள்** தனக்குத் தானே கொடுத்துக் கொண்டது. இதனால் கடவுள் இந்த ஒரே வழியில்தான் தன்னை வெளிப்படுத்த வேண்டுமென்பதன்று. ஏனெனில், இஸ்ராயேலுக்கு வெளியிலும் கடவுள் யார் என்பதை மனிதன் அறிந்து கொள்ள முடிந்தது. கடவுள் தன்னையே மற்றச் சமயங்களில் ''ஏல் எலியேன்'' என்ற பெயரால் அழைக்கும்படி வெளிப்படுத்தியிருக்கிறார். ஆனால், யாவே என்ற பெயரால் அவரை வெளிப்படுத்திக் கொண்டதில் சிறப்பம்சம் இருக்கிறது. அவரே இப்பெயரை முதலில் உச்சரித்தது, இந்தப் பெயரை அறிவித்ததால் அவர் யார் என்பதை வெளிப்படுத்தியது என்பன மட்டுமல்ல, அந்தப் பெயர் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அவர்களது செபங்களிலும் வழிபாடுகளிலும் மீண்டும் மீண்டும் பயன்படுத்தப்பட்டது. அதற்குரிய பொருளையும் அவரே கொடுக்கிறார் *(யாத் 3:13-15; 34:6).* இந்தப் பெயருக்கு ஓர் ஆழமான பொருளும், அது கொணர்ந்த மீட்பையும் குறிக்கும் ஒரு பின்னணியில் இப்பெயர் தரப்பட்டது. 'ஏல்' என்ற பெயர் மூதாதையர்கட்கு அவர்களது சொந்த நாட்டிலே சாதாரண சூழ்நிலையிலே உணர்த்தப்பட்டது. ஆனால் 'யாவே' என்ற பெயரையோ பாலைவனத்தில் மோசேக்குக் கடவுள்

நெருப்பு வடிவில் வந்து வெளிப்படுத்து கிறார். ஆனால், இக்கடவுள் பரிவும், இரக்கமும் உடையவராதலால்தான் தன் மக்கள்படும் துயரங்களையும், சுமைகளை யும் கண்டு அவர்கள் குற்றங்களை மன் னித்து அவர்களுக்குச் செவிமடுக்கிறார் *(யாத் 34:6; 3:7)*.

யாவே என்ற பெயர், அதன் தோற்றம், பொருள், அது பிற்காலத்தில் பயன்படுத்தப் பட்ட முறை ஆகியவைபற்றிக் காண்க. விடுதலைப் பயணநூல்: சிறப்புக் கருத்துக் கள்: 4) இறைவனின் திருப்பெயர்.

**யாவேல்** *(*JAEL - *மலை வெள்ளாடு)*

இவள் இஸ்ராயேலர்களிடம் தோல்வி யுற்று யாவேலின் கூடாரத்துக்கு வந்த கானானியப் படைத்தலைவனைக் கொன் றாள் *(நீதி 5:2-31)*. கேனிய இனத்தைச் சேர்ந்த இவள் நாடோடி இனத்தவரைப் போலவே சீசராவை உபசரித்து, தாகத் துக்குப் பால் கொடுக்கிறாள். அவன் அதனை எடுத்துக் குடிக்கும்போது யாவேல் அவனைக் கொன்றிருக்க வேண்டும். ஆனால் *(நீதி 4:17-22)*, மற்றொரு பகுதி இவனைத் திட்டமிட்டு யாவேல் கொலை செய்வது போல் வேறுவிதமாகக் காட்டி யுள்ளது. இது பாடலின் உட்கருத்தைத் திசை திருப்புவதாக உள்ளது.

யாவேலைக் கேனிய எபேரின் மனைவி யாக *(5:24)* நீதி 4:17-ஆம் பாடலில் புகுத்தியிருக்கலாம். எபேரின் மனைவியின் சில வீரச்செயல்கள் யாவேலுடையதாகச் சேர்க்கப்பட்டிருக்கலாம். யாவேல் ஒரு கேனியப் பெண்; கேனியர் அன்றைய யூதா நாட்டினருடன் நட்புறவுடன் திகழ்ந்தவர் கள் *(நீதி 1:16)*. போர் நடந்த இடத்தையும், யூதாவின் கோத்திரம் போரிட்டவைகளில் ஒன்றாகத் தரப்படவில்லை என்பதையும் கருத்தில் கொண்டால் யாவேல் வட பகுதியைச் சேர்ந்தவள் என்று கருத இட மிருக்கிறது.

பொதுவாக நீதி *5:6*-இல் குறிப்பிடப் படும் யாவேல் வரலாற்றளவிலும், இப் பாட்டளவிலும் கேள்விக்குரிய ஒரு பாத்திர மாகவே இருக்கிறாள்.

**யாழ், வீணை** *(*HARP, LUTE, LYRE*)*

இவை நரம்பிசை இசைக் கருவிகளாகும். இவை விவிலியத்தில் தெளிவாக விவரிக் கப்படவில்லை. மொழிபெயர்ப்புகளும் ஒரே சீரான சொற்களைப் பயன்படுத்த வில்லை. காண்க. இசைக் கருவிகள்.

**யானாய்** *(*JANAI - *யாவே பதில் அளிப் பாராக)*

இவர் பாசானில் வாழ்ந்து வந்த காத்தின் வழித்தோன்றல் *(1 நாள் 5:12)*.

**யானிம்** *(*JANIM - *தூங்குகிற)*

யூதாவின் மலைப்பாங்கான எபிரோன் நாட்டில் உள்ள யூதாவின் கிராமங்களில் ஒன்று; எசான் மற்றும் பெத்-தப்புவாகு சுற்றுவட்டாரத்தில் இருந்தது *(யோசு 15:53)*. எபிரோனுக்குக் கிழக்கே 6 கி.மீ. தொலை வில் உள்ள பெனி நயிம் ஆக இஃது இருக்க வேண்டும்.

**யானை** *(*ELEPHANT*)*

இந்திய வகை, அதைவிடப் பெரிய ஆப்பிரிக்க வகை என இருவகை யானை கள் உண்டு. இந்திய வகை பழக்கப்பட்ட தாகும். ஆண் யானையின் தந்தத்திற்காக யானை பெரிதும் மதிக்கப்பட்டது. இந்திய யானைகளின் பிறப்பிடம் இமாலய மலை யடிவாரம் முதல் சுமத்திராத் தீவு வரையி லுள்ள தென்கிழக்கு ஆசியாவாகும். இங் கிருந்து ஆசியாவின் பல பகுதிகளிலும் யானைகள் பரவியிருக்கவேண்டும். கி.மு. 15-ஆம் நூற்றாண்டில், வடசீரியாவில் யானைகள் வேட்டையாடப் பட்டதாக அசீரிய, எகிப்திய மூலங்கள் குறிப்பிடுகின் றன. *8*-ஆம் நூற்றாண்டில் மூன்றாம் திகிலத் பிலேசருக்கு அளிக்கப்பட்ட கொடைகளில் யானைத்தோலும், தந்தமும் குறிக்கப்படு கின்றன. நாகரிகமும் தந்தத்தின் தேவையும் வளர வளர, யானைகளின் எண்ணிக்கை குறைந்து, காலப்போக்கில் மேற்காசியா வில் யானைகள் மறைந்து போயின. பழைய ஏற்பாட்டில் யானைகள் குறிக்கப்

படாமையை இது விளக்கலாம். ஒரு வேளை, யூதாவைச் சேர்ந்த எசேக்கியா கி.மு. 701-இல் சனகெரிபுக்கு அனுப்பிய யானைத்தோல்களும், தந்தப்பதிப்புகளும் எத்தியோப்பியா அல்லது எகிப்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதாக இருக்கலாம். கிரேக்கர்கள் போரில் யானையைப் பயன் படுத்த அறிந்திருந்தனர். கிரேக்கர்களுக்கு எதிரான யூதர்களின் விடுதலைப் போரில், 5-ஆம் அந்தியோக்கு யுபாத்தோர் யானை களைப் பயன்படுத்தினான் *(1 மக் 3:34; 6:30.45-47)*.

பழைய ஏற்பாட்டுக் காலத்தில் இந்திய யானைகளின் தந்தம் தரை வழியாகவோ, பெனிசியர்களின் கப்பல்கள் வழியாகவோ ஆசியாவிலிருந்து பாலஸ்தீனத்திற்கும் அதைச் சுற்றியுள்ள நாடுகளுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. சாலமோனின் தர்சிசு கப்பல்படை ஆப்பிரிக்கத் தந்தத்தை இறக்கு மதி செய்திருக்கலாம் *(1 அர 10:22 இணை)*. அதைக் கொண்டு சாலமோன் தன் அரண் மனையை அழகுபடுத்தினார் *(10:18)*. இவ் வாறே வட அரசின் அரசர்களும் உயர் குடி மக்களும் செய்தனர் *(22:39; ஆமோ 3:15; 6:4)*. காண்க. தந்தம்.

**யானோவாகு** (JANOAH - ஓய்வு எடுக்கும் இடம்)

1. எப்பிராயிமின் வட எல்லைப் புற நகரம் இது *(யோசு 16:6-7)*. இது செக்கே முக்குத் தென்கிழக்கே 11 கி.மீ. தொலை வில் அமைந்த கிர்பெத் யாமுன் எனும் இடமாக அடையாளம் காட்டப்படுகிறது.

2. அசீரிய அரசன் திகிலத்பிலேசர் பிடித்த வட கலிலேய நகரங்களில் ஒன்று *(2அர 15:29)*. இஃது அமைந்த இடம் தெளிவாக இல்லையெனினும் ஆபல்-பெத்-மாக்கவுக்கும், காதேசுக்கும் இடையில் இருக்கும் தெல் ஏன்-நயிமே ஆக இருக்க லாம் என்று கருதப்படுகிறது *(யோசு 13:37)*.

# யு, யூ

**யுஸ்து** (JUSTUS - *நேர்மையான, நீதியான*)

*(1)* இது யோசேப்பு பர்சபாவின் சிறப்புப் பெயராகும். பன்னிரு அப்போஸ் தலர்களில் யூதாசு இஸ்காரியோத்து இருந்த இடத்தை நிறைவு செய்ய மத்தியா, யுஸ்து ஆகிய இருவரில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று சீட்டுப் போட்டு மத்தியாவைத் தேர்ந்தெடுத்தார்கள் *(அ.ப. 1:23.)*.

*(2) அ.ப. 18:7*-இன்படி தித்திய யுஸ்து கடவுளுக்கு வழிபாடு செலுத்துகிறவர். கொரிந்து நகரக் கிறிஸ்தவர்களைச் செபக் கூடத்திலிருந்து தன்னுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றார். பவுல் தங்கு வதற்கும், சபையினர் கூடுவதற்கும் இட மளித்த காயு *(உரோ 16:23)* என்பவராக இருக்கலாம்.

*(3)* யுஸ்து எனப்படும் இயேசு *(கொலோ 4:11)*. விருத்த சேதனம் பெற்றவர்களில் இவர்தான் பவுலோடு இணைந்து கடவு ளுடைய அரசுக்காக உழைத்தவர். இவர் பவுலுக்கு ஆறுதலாக இருந்தவர்.

**யூக்கால்** (JUCAL - *யாவே வல்லவர்*)

செதேக்கியாவின் அவையிலிருந்த செலே மியாவின் மகன். இறைவாக்கினர் எரேமி யாவின் எதிரி. எரேமியாவைப் பாழுங் கிணற்றில் தள்ளிக் கொல்ல யூக்கால் முயற்சி செய்தார் *(எரே 38:1-6)*. *எரே 37:3*-இல் இவர் எகுக்கால் என்று அழைக் கப்படுகிறார்.

**யூசபு-கெசேது** (JUSHAB - HESED - *நிலையான அன்பு பலன்பெறும்*)

செருபாபேலின் புதல்வன் *(1 நாள் 3:20)*.

**யூசேபியு** (EUSEBIUS)

செசரியாவின் ஆயர், பெருமளவு எழுதிய வரலாற்று ஆசிரியர், விவிலிய அறிஞர், கிறிஸ்தவக் காப்புரையாளர். அலக்சாந் திரியப் பாரம்பரியத்தில் பம்ப்பிலியு என்ற மூப்பரிடம் பயிற்சி பெற்றவர். அதனால் யூசேபியு பம்ப்பிலியு என்றும் அழைக்கப் பட்டார். வாசக-ஆய்வுகளில் ஆற்றல் பெற்றிருந்தார். அதனால் கான்ஸ்டண்டை யின் பேரரசன் கீழ் எழுத்தாளராகப் பணி புரிந்தார். இவருடைய *10* பகுதிகள் அடங் கிய ''திருச்சபையின் வரலாறு'' என்ற நூல், அப்போஸ்தலர் காலத்திலிருந்து கி.பி. *323* வரையிலுள்ள திருச்சபை வரலாற்றை எடுத் துரைக்கிறது. அதில் காணப்படும் எடுத்துக் காட்டுகளும், விரிவுரைகளும், பழங்கால நூல்களின் பகுதிகளைக் காத்து நிற்கின்றன. இல்லையெனில் அவை மறைந்து போயி ருக்கும். அவரது ''நாளேடு'' என்ற நூல் பழங்கால மேற்காசிய, கிரேக்க, விவிலிய வரலாறு ஆகியவற்றின் ஒப்புமைக் காலக் கணிப்பைக் கொண்டுள்ளது. இவர் விரிவான விவிலிய விளக்கவுரைகள் எழுதியிருந் தாலும், விவிலிய ஆய்வுக்கு இவர் அளிக் கும் முக்கியமான நூல்கள், விவிலிய இடங்களின் பட்டியலைக் கொண்ட ''ஒனோமாஸ்டிக்கோன்'' என்ற நூலும், நற்செய்திகளின் இணையான பகுதிகளைச் சுட்டிக்காட்டும் திட்டம் அடங்கிய யூசேபிய சின் திருமுறைப்பட்டியலும் ஆகும்.

**யூதத்துவம்** (JUDAISM)

இது யூதர்களின் விசுவாசமும் வாழ்க்கை முறையும் ஆகும். இந்தச் சொல் கோட்பாடு களைக் குறிக்கவில்லை. மாறாகக் கட வுளால் தேர்ந்தெடுக்கப்பட்டு அவரோடு, உடன்படிக்கை உறவு கொண்ட யூதசமூகத் தின் முழு வாழ்க்கை முறையைக் குறிக் கிறது. இயேசுவின் காலத்தில் வாழ்ந்த யூதர்களிடையே நம்பிக்கையிலும், வாழ்க்கை முறையாலும் வேறுபட்டிருந்த குழுக்களைக் காணலாம். அவர்களில் பரி சேயர்கள், சதுசேயர்கள், தீவிரவாதிகள், எஸ்ஸேனியர் ஆகியோர் அடங்குவர். ஆனால், எல்லாப் பிரிவினரும் இஸ்ரா யேலின் கடவுளை ஒரே கடவுளாக ஏற்று, சட்டத்தையும் ஏற்றுக்கொண்டார்கள்.

**யூதப்பெண்** (JEWESS)

இச்சொல் விவிலியத்தில் ஒரே ஒரு தடவை பயன்பட்டுள்ளது. பெலிக்சுவின்

மனைவி துருசில்லா ஒரு யூதப்பெண் என்று குறிக்கப்படுகிறாள் (அ.ப. 24:24). திமொத்தேயுவின் தாய் ''யூத இனத்தைச் சேர்ந்த ஒரு கிறிஸ்தவப் பெண்'' என்று குறிக்கப்படுகிறாள் (16:1). பித்தியாவிடமிருந்து, மெரேதுவின் மற்றொரு மனைவியை வேறுபடுத்திக் காட்டும் பொருட்டு ''அவரின் யூத மனைவி'' என்று கூறப்பட்டுள்ளது (1 நாள் 4:18). ''யூதப்பெண்'' என்று பொருள்படும் யூதித்து ஏசாவின் மனைவியும், இத்தியனான பெயேரியின் மகளும் ஆனவளின் பெயராகும்; யூதித்து நூலின் கதைத் தலைவியின் பெயருமாகும்.

**யூதராக்குதல்** (JUDAIZING)

அந்தியோக்கியாவில் பேதுரு புறவினத்தாரோடு சாப்பிட மறுத்ததைப் பவுல் கண்டிக்கின்ற சமயத்தில் பயன்படுத்தப்படுகிறது இச்சொல் (கலா 2:14). புறவினத்தார்கள் யூதச் சட்டங்களை ஏற்றுக் கொண்டிருந்தால் பேதுரு அவர்களோடு உணவருந்தியிருப்பார். புறவினத்தாரை யூதர்களைப் போல வாழ வேண்டும் என்று பேதுரு தனது நடத்தையால் கட்டாயப்படுத்துவதாகத் தெரிகிறது. இன்னும் சில இடங்களில் இந்தக் கிரேக்கச் சொல் பயன்படுத்தியிருக்கின்ற இடத்தில் இதுதான் பொருள்.

யூதர்களுக்குப் பயந்து அனேக புறவினத்தார் மக்கள் யூதச் சட்டங்களை ஏற்றுக் கொண்டு அவர்களைப் போல் வாழ்ந்தனர் (எஸ்த 8:17).

இச்சொல் பயன்படும் ஒவ்வொரு பகுதியும் முறைப்படி வாழுகின்ற புறவினத்தாரையே குறிக்கின்றது. யூதர்களோடு ஒத்துணர்வுகொள்வதும், அவர்களைப் பின்பற்றுவதும் அதற்குப் பொருளன்று; யூதர்களைப் போல் வாழ்வதுதான் அந்தச் சொல்லுக்குப் பொருள். மோசேயின் சட்டத்தை யூதப் பழக்கவழக்கங்களோடு ஏற்றுக் கொண்டார்கள்.

புறவினத்தாரை யூதர்களைப்போல் வாழக் கட்டாயப்படுத்தும் பொழுது, அவர்கள் கிறிஸ்தவத்தையே விட்டுவிடுவதற்கு வழி வகுக்கும் என்று பவுல் கூறினார். அந்தியோக்கியாவிலும், எருசலேமிலும் யூதேயாவிலிருந்து வந்த சிலர் ''மோசேயின் முறைமைப்படி விருத்தசேதனம் செய்து கொள்ளாவிட்டால் மீட்படைய முடியாது'' என்றார்கள். புறவினத்தார் விருத்த சேதனம் பெற வேண்டும், மோசேயின் சட்டத்தைப் பின்பற்ற கட்டளையிடவும் வேண்டும் என்றார்கள். அவர்களது சட்டமானது நிரந்தரமான மதிப்புடையது என்பதுதான் அவர்களது வாக்குவாதம். யூதப் பழக்கவழக்கங்களையே அது குறித்துக்காட்டியது. இதைக் கடைப்பிடிக்காதவன் எவனும் விண்ணரசில் நுழைய முடியாது. ஆனால் பவுல், எவனும் தன்னிலே சட்டத்தை, நிறைவேற்றுவது கடினம்; முழுவதுமாக ஆண்டவருடைய மீட்பை அடைவதற்கு அவருடைய அருளைக் கிறிஸ்து வழியாக நமக்கு வழங்குகிறார்; புறவினத்தார்கள் யூதர்களைப் போல் வாழ்ந்தால் தான் மீட்பு உண்டு என்று கட்டாயப்படுத்தக் கூடாது என்கிறார். இந்தப் பிரச்சனை பற்றி பவுல் கலாத்தியருக்கு எழுதிய திருமடலிலும், உரோமையருக்கு எழுதிய திருமடலிலும் எருசலேம் சங்கத்திலும் தர்க்கிக்கப்பட்டு தெளிவாக்கப்படுகிறது.

**யூதன்** (JEW)

1. விவிலிய வழக்கில், இச்சொல், யூதாவின் தென்பகுதியைச் சேர்ந்தவர்களையோ (நெகே 1:2; எரே 32:12; 40:11), நாடுகடத்தலுக்குப் பின் புற இனத்தாரிடமிருந்து இஸ்ராயேல் மக்களை வேறுபடுத்திக் காட்டவோ (எஸ்த 9:15-19; தானி 3:8; செக் 8:23; யோவா 4:9; அ.ப. 14:1), நாடுகடத்தலுக்குப்பின் யாவேயை வழிபடுவோரைக் குறிக்கவோ (எஸ் 3:4-6; தானி 3:8) பயன்படுகிறது.

**2. பழைய ஏற்பாடு:** யூதன் என்ற சொல் யூதாவின் இனத்தைச் சேர்ந்தவர்களைக் குறிக்கவோ, தென் அரசைச் சேர்ந்தவர்களிடமிருந்து வட அரசைச் சேர்ந்தவர்களை வேறுபடுத்திக் காட்டவோ (காண்க. 1 சாமு 11:8; 2 சாமு 2:4; 2 அர 16:6) பயன்படுத்தப் படவில்லை. வட இஸ்ராயேல் அரசு அழிந்து, யூதாவின் அரசு தப்பிப்பிழைத்தது

வரை இச்சொல் அரிதாகவே பயன்பட்டுள்ளது (*2 அர 25:25; எரே 38:19; 52:28-30*). நாடு கடத்தலுக்குப்பின், யூதா என்னும் பாபிலோனிய அல்லது பாரசீக மாகாணத்தில் வாழ்ந்தவர்கள், அல்லது மக்கபேயர் நாட்டில் வாழ்ந்தவர்கள் இப்பெயரால் குறிக்கப்படுகின்றனர் (*எஸ்த 9:15-19; நெகே 3:33; செக் 8:23; 1 மக் 8:20*). இப்பெயரால் புறவினத்தாரிடமிருந்து அவர்கள் வேறுபடுத்தப்படுகின்றனர். யூத மக்களையோ, சமயத்தையோ சேர்ந்தவர்களைக் குறிக்க இச்சொல் பயன்படுகிறது (*எஸ் 4:12; 5:5; எஸ்த 2:5; 8:17*).

**3. புதிய ஏற்பாடு**

I. புதிய ஏற்பாட்டின் தொடக்க காலத்தில் யூதன் என்பது இஸ்ராயேல், எபிரேயன் என்ற சொற்களுக்குரிய அதே பொருளில் தான் பயன்படுத்தப்பட்டது. பவுலும், யோவானும் இதனை இறையியல் பொருளில் பயன்படுத்தினர். இதுதான், சரியான கவனமின்றிப் படிக்கும் வாசகருக்குக் குழப்பம் விளைவிக்கும் வாய்ப்பாக அமைந்துவிடுகிறது.

II. **பவுலில் யூதனும் புறவினத்தானும்:** இறைவாக்கினர்களைப் போலவே பவுலும் மனித குலத்தைத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள், ஏனைய நாடுகள் (யூதர்கள்-கிரேக்கர்கள்) என்று இரு பிரிவாகப் பிரித்துப் பார்க்கிறார் (*கலா 3:28*). இந்த அடிப்படையான வேறுபாடு கிறிஸ்துவின் வருகையால் காக்கப்பட்டது; அதே நேரத்தில் அழிக்கப்பட்டது.

**1) ஒரு யூதனாய் இருப்பதால் உள்ள சலுகைகள்:** யூதன் என்ற பெயரே ஒரு பெருமைக்குரிய பட்டமாகும் (*உரோ 2:17*). யூதா என்ற அடிச் சொல்லிலிருந்து வருவது யூதன்; அதாவது, ஆண்டவருக்குப் பெருமை செலுத்துவான் (*ஆதி 29:35*). மேலும், யாக்கோபின் ஆசீர்வாதத்தால், ''உன்னுடைய சகோதரர்கள் உன்னைப் புகழ்வார்கள்'' (*49:8*). சட்டம் மற்றும் விருத்தசேதனத்தின் சலுகைகள் யூதனுக்குரியவையே (*உரோ 2:17-29*). பவுல் தான் ஒரு யூதன் என்பதை மிகவும் பெருமைக்குரிய ஒன்றாக அறிக்கையிடுகிறார் (*கலா 2:18*). அதனால் ஒவ்வொரு பக்தியுள்ள யூதனும் தன்னைப் புறவினத்தானாகப் படைக்காததற்கு இறைவனுக்கு நன்றி கூறினான். பவுல் ஒரு கிறிஸ்தவராக இருந்தும் தன்னை ஓர் இஸ்ராயேலன் என்கிறார் (*உரோ 11:1; பிலி 3:5*). லூக்காவின் கூற்றுப்படி எருசலேமிலே மிகப்பெருமையாக தன்னை யூதனாக அறிவித்துக் கொள்கிறார் பவுல் (*அ.ப. 22:3*). கிறிஸ்தவன் ஆன அப்பொல்லொ ஒரு யூதன் என்று குறிப்பிடுகிறார் (*18:24*).

கடவுளுடைய கொடைகள் மகத்தானவை; ஆனால், அவை பொழியப்படுகிறவர்கள் மீது ஒரு சில கடமைகளைச் சுமத்துகின்றன. அதே போல யூதர்களுக்கு இறைச் சட்டம் அருளப்பட்டது. ஆனால், அதை அவர்கள் பிறருக்குப் போதிப்பதோடு நின்றுவிட்டு தாங்கள் அதைப் பின்பற்றாமல் இறைப் பெயரை அவமதிப்புக்குள்ளாக்கினர் (*உரோ 2:17-24*). விருத்த சேதனம், இறைவாக்கினர் போதிப்பது போல உள்ளத்தில் நிகழ்ந்திருந்தால் தான் அது பொருளுடையதாகும் (*எரே 4:4; உப 30:6; லேவி 26:41*). விசுவசிக்காத யூதன் தோற்றத்தில் மட்டுமே யூதனாகிறான் (*உரோ 2:28*). அவன் மகத்தான பெயரை அபகரித்துக்கொள்கிறான் (*திருவெளி 2:9; 3:9*). கிறிஸ்துவனே உண்மையாக விருத்த சேதனம் செய்யப்பட்ட யூதன் (*பிலி 3:2*). ஆவியில் யூதனாகிறான் (*உரோ 2:29*). எல்லோருக்கும் எதிராக குற்றச்சாட்டுகளைக் கூறியபோது பவுல், 'யூதர்களும் சரி, கிரேக்கர்களும் சரி அனைவரும் பாவிகளே' என்கிறார் (*உரோ 3:9*).

**2) மனம் மாறிய புறவினத்தானும், விசுவசிக்காத யூதனும்:** யூதனுக்கும் கிரேக்கனுக்குமிடையேயுள்ள உறவு சிக்கலானது. ஒரு நோக்கில் வேறுபாடுகள் அனைத்தும் பாவ நிலையில் மட்டுமன்று, அருளின் நிலையிலும் மறைந்து போய்விட்டன. ஏனெனில், யூதனென்றும் இல்லை; கிரேக்கனென்றும் இல்லை (*கலா 3:28*); கிறிஸ்துவுக்குள்

அனைவரும் ஒன்றே. நீதியை நிலை நாட்டக் கூடியது விசுவாசம் ஒன்றே, சட்டமன்று (காண்க. கொலோ 3:11). இத்தகைய சூழ்நிலையில்தான் இறைவாக்கினர்கள் முன்னறிவித்த, நாடுகளுக்கிடையே யான ஒப்புரவு நிகழ வேண்டும். ஏனெனில், ''கடவுள் புறவினத்தாரின் கடவுளாகவும் இருக்கிறார்'' (உரோ 3:29; 10:12).

அதே நேரத்தில் பவுல் தண்டனையாக இருந்தாலும் சரி, பரிசாக இருந்தாலும் சரி முதலில் யூதனுக்கு, பிறகுதான் கிரேக்கனுக்கு என்பதில் மிகக் கவனமாக இருக்கிறார் (உரோ 2:19 தொ; 1:16; மத் 15:24தொ; அ.ப. 13:46; 18:6). மனம் மாறிய புறவினத்தான் கடவுளின் திட்டத்தில் யூதனுக்குரிய இடத்தைத் தான் அடைந்து விட்டதாக நினைப்பது தவறு. யூதனுடைய மேன்மை மாறுவதில்லை (உரோ 3:1). ஏனெனில், கடவுள் தான் கொடுத்த கொடைகளை நினைத்து வருந்துபவரல்லர் (உரோ 11:29). கிறிஸ்தவத்திற்கு மனம் மாறிவந்த யூதர்கள் ஒலிவ மரத்தின் இயற்கையான கிளையில் ஒன்றாகிறார்கள். ஆனால், மனம் மாறிய புறவினத்தாரோ இயற்கைக் கிளையோடு ஒட்டப்படுகிறார்கள் (உரோ 11:24). தனது பிடி முரண்டான நிலையிலும், கிறிஸ்துவின் திருச்சபையில் இஸ்ராயேல் ஆற்ற வேண்டிய ஒரு பங்கு உண்டு. திருச்சபைக்கு, இஸ்ராயேல் இல்லாமை ஒரு குறைபாடே ஆகும். ஆகவே, ஒவ்வொரு விசுவாசிக்கும் இது ''பெருந்துயரமும் இடைவிடாத வேதனையும்'' கொடுக்க வேண்டும் (9:2).

III. **புனித யோவானும், விசுவாசமற்ற யூதனும்:** நான்காவது நற்செய்தியாளர் மற்றவர்களைப் போலவே இயேசுவின் காலத்து யூதர்களைப் பற்றிப் பேசுகிறார் (யோவா 3:1; 12:19). ஆனால், யோவான் எழுதிய காலத்திலேயே திருச்சபையும், செபக்கூடங்களும் தனித் தனிச் சமூகங்களாகப் பிரிந்துவிட்டன. புதிதாகப் பிறந்த திருச்சபைக்கு யூதர்களால் வந்த பிரச்சனைகள் எல்லாம் முடிந்துவிட்டன. ஏறக்குறைய எல்லா இடங்களிலும் யோவான் யூதன் என்ற சொல்லை ஒரு இனத்தைக் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தாமல் ஒரு வரலாற்றுப் பின்னணியில் ஓர் இறையியல் சொல்லாகப் பயன்படுத்துகிறார். முதலில் இயேசுவைச் சிலுவையில் அறைந்தவர்களைக் குறிப்பிடவும், பின்னர் விசுவசியாத அனைவரையுமே குறிக்கவும் இச்சொல்லைப் பயன்படுத்துகிறார். ஒருவகை விசுவாசமற்ற குழுவினராக யூதர்களைப் பிரித்துப் பார்க்க யோவான் முயல்வதைப் பார்க்கிறோம்.

தனது நற்செய்தியில் யூதர்களின் விழாக்களையும், பழக்கவழக்கங்களையும் பற்றிப் பேசும்போது யாரோ வெளி நாட்டவரைப் பற்றிப் பேசுவது போலக் குறிப்பிடுகிறார் (2:6.13; 5:1; 6:4; 7:2....). நிக்கோதேமுவுடன் பேசுவதுபோல் அல்லாமல் (7:51) யூதர்களிடம் பேசும் போது வெளிநாட்டவரிடம் பேசுவது போல இயேசு பேசுகிறார் (8:17; 10:34; காண்க. 7:19.22). பொதுவாக யூதன் என்ற சொல் இயேசுவின் எதிரிகளை இங்குக் குறிக்கிறது (2:18.20; 5:16.18; 6:41;...). அதே நேரத்தில் இயேசுவைப் பின்பற்றுபவன் அவன் யூதனாகவே இருந்தாலும் கூட யூதர்களின் எதிரியாகிறான் (5:15; 7:13-ஐ 7:11; 1:19-ஒடு ஒப்பிடுக). இவ்வாறு ஒருவகையான விசுவாசமற்ற கூட்டத்தினராக யூதர்கள் யோவான் நற்செய்தியிலே அடையாளம் காட்டப்படுகின்றனர். இது செமித்தியர்களுக்கு எதிரான விளக்க முறைக்கு ஈடுசெய்யக் கூடும். இத்தகைய விளக்கத்திற்கு யோவான் ஆதரவு அளிக்கவில்லை என்றே சொல்ல வேண்டும். யூதர்கள் இயேசுவைச் சிலுவையில் அறையக் காரணமாக இருந்த அளவில் உலகில் உள்ள மற்றவர்கள் இயேசுவின் சீடர்களைத் துன்புறுத்தியதால் தங்கள் பங்கை நிறைவேற்றிக் கொண்டனர். கிறிஸ்துவைத் தங்கள் அரசராக ஏற்றுக்கொள்ள மறுத்த யூதர்களுக்கு நடுவராக இயேசு நியமிக்கப்பட்டுள்ளது போல் (19:13.14.19-22) கிறிஸ்தவன், தன்னைத் தீர்ப்பிட விரும்பும் உலகைத் தீர்ப்பிட வேண்டும். இதற்காக அவன், இயேசுவின்

ஆவியாகிய, பரிசுத்த ஆவிக்கு இடைவிடாது செவிமடுக்க வேண்டும்.

**யூதா** (JUDAH) - ஆள்

1. யாக்கோபு, லேயா ஆகியோரின் நான்காவது மகன் *(ஆதி 35:23; 46:12; யாத் 1:2; 1 நாள் 2:1)*. ஆதி *29:35*-இல் வரும் பெயர்க்காரண விளக்கம் ''போற்றுதல்'' என்ற சொல்லிலிருந்து வருகிறது எனலாம்.

யூதாவைப் பற்றிய செய்திகள் எல்லாம் ஆதியாகமத்தில் காணப்படுகின்றன. தன் சகோதரர்களோடு சேர்ந்து, யூதா, யோசேப்பைத் தொலைத்துக்கட்டத் திட்டமிட்டார். ஆனால் அவரைக் கொல்வதற்குப் பதிலாக, அடிமையாக விற்றுவிடச் செய்தார் *(37:26-27)*. கானானியப் பெண்ணான, சூவாவை மணந்து தனது குடும்பத்தை நிறுவினார் *(38:1-5)*. அவருடைய மருமகள் தாமார் பிள்ளையின்றி விதவையான போது, அவளுடைய கணவனது உடன் பிறந்தானாகிய ஓனான் அவளைக் கருவுறச் செய்ய மறுத்த போது, அவள் தந்திரமாக யூதாவின் வழியாகக் கருவுற்றாள் *(38:8-30)*.

யோசேப்பு எகிப்தில் உயர்வுற்றபின், பஞ்சம் உண்டாயிற்று. யூதா, தன் சகோதரர்களோடு சேர்ந்து, தானியங்கள் வாங்க எகிப்துக்குச் சென்றார். யோசேப்பு கோரியவாறு, தங்கள் இரண்டாம் பயணத்தில் பென்யமினைக் கூட்டிச் செல்ல அனுமதிக்குமாறு, யூதா யாக்கோபை இணங்க வைத்தார் *(43:3-5.8-10)*. தந்திரத்தால் பென்யமினைத் தன்னோடு வைத்துக் கொள்ள யோசேப்பு முயன்றபோது, யூதா தன்னை அடிமையாக வைத்துக் கொண்டு பென்யமினைப் போகவிடுமாறு வேண்டினார் *(44:18-33)*.

யாக்கோபின் மற்றப் புதல்வர்களைப் போல், யோசேப்பின் அழைப்பை ஏற்று, யூதாவும் அவரது குடும்பத்தினரும் எகிப்தில் குடியேறினர் *(46:12.28)*. யாக்கோபு யூதாவுக்கு அளித்த ஆசீர் *(49:8-12)*, அவரை அச்சந்தரும் சிங்கமாகவும், ஆட்சி செய்யக் குறிக்கப்பட்டவராகவும் விவரிக்கிறது (இந்த ஆசீர் யூதா இனத்திற்கு உரியது என்றும், தாவீது காலத்தைப் பிரதிபலிக்கிறது என்றும் ஆய்வாளர்கள் கருதுவர்).

மத்*1:2*; லூக் *3:33*-இல் யூதா இயேசுவின் மூதாதையர்களுள் ஒருவராகக் குறிக்கப்படுகிறார்.

2. ஒரு லேவியர். நாடுகடத்தலுக்குப்பின் ஆலயப்பணியை மேற்பார்த்த ஒரு குடும்பத்தின் முன்னோர் *(எஸ் 3:9)*. இவரும் எஸ் *2:40*-இல் வரும் ஓதவியாவும் ஒரே ஆளாக இருக்கலாம்.

3. அன்னியப் பெண்ணை மணந்த ஒரு லேவியர் *(எஸ் 10:23)*.

4. அசெனாவாவின் மகன். நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் குடியேறிய ஒரு தலைவர் *(எஸ் 11:9)*.

5. நாடு கடத்தலிலிருந்து செருபாபேலோடு நாடு திரும்பிய ஒரு லேவியர் *(நெகே 12:8)*.

6. மீண்டும் கட்டப்பட்ட எருசலேமின் சுவர்கள் அர்ப்பணிப்புச் சடங்கில் பங்குபெற்ற யூதா இனத்தின் ஒரு தலைவர் *(நெகே 12:34)*.

7. எருசலேமின் சுவர்கள் அர்ப்பணிக்கப்பட்ட சடங்கில் பங்கு பெற்ற ஒரு குருவும், இசைக் கலைஞரும் ஆவார் *(நெகே 12:36)*.

8. இயேசுவின் மூதாதையர்களில் ஒருவர் *(லூக் 3:30)*.

**யூதா - இனமும் நாடும்** (JUDAH - TRIBE AND LAND)

1. குலமூதாதையர் யாக்கோபின் நான்காம் மகனான யூதாவின் வழித்தோன்றல்கள் யூதா இனமாகவும், அவர்களுக்குப் பாலஸ்தீனத்தில் குறிக்கப்பட்ட நிலப்பகுதி யூதா நாடாகவும் அழைக்கப்பட்டன. யாத்திரை நிகழ்ச்சிக்குப்பின் இந்த இனத்திற்குப் பாலஸ்தீனத்தின் தென்பகுதி கொடுக்கப்பட்டது.

**2. தொடக்ககால வரலாறு:** பாலைவனத்தில் அலைந்து திரிந்த காலத்தில் யூதாவைச் சேர்ந்தவர்கள் சந்திப்புக் கூடாரத்தின் கிழக்

கில் பாளையம் இறங்கினர். அம்னினதீபின் மகன் நகுசோன் இவர்களுக்குத் தலைமை தாங்கினார் (எண் 2:3). பயணம் செய்யும் போது யூதா, இசக்கார், செபுலோன் ஆகிய இனத்தவர் சேர்ந்து ஓர் அணியாக அமைந்து முதலில் அணிவகுத்துச் சென்றனர் (2:9; 10:14). மக்கட்தொகைக் கணிப்பின்படி, யூதாவில் ஏறக்குறைய எழுபத்து நாலாயிரத்து அறுநூறு பேர் இருந்தனர் (1:26-27; 2:4; 26:22). அறிஞர்களின் கருத்துப்படி, ஆயிரம் என்று பிற்காலத்தில் பொருள் கொள்ளப்பட்ட எலேபு என்ற எபிரேயச் சொல்லின் மூலப் பொருளில், இந்த எண்ணிக்கை, படைக்கு ஆள் அனுப்ப வேண்டிய எழுபத்து ஐந்து தலைக்கட்டுகளைக் குறிக்கலாம். யோர்தானைக் கடந்த பின் மக்களுக்கு ஆசீர் வழங்கும் பொருட்டுக் கெரிசிம் மலையில் நிற்குமாறு, மோசேயால் கட்டளையிடப்பட்ட இனங்களில் யூதாவும் ஒன்றாகும் (உப 27:12). மோசேயின் இறுதி ஆசீர்வரை, அக்காலத்தில் யூதா அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததன்று என்றும், பிற இனங்களிடமிருந்து அதற்குப் படை உதவி தேவைப்பட்டது என்றும் சுட்டுகிறது (33:7).

பாலஸ்தீனத்தைக் கைப்பற்றியபோது, லேயா வழியாகத் தோன்றிய இனங்களில் ஒன்றான யூதா மலைப்பகுதியிலிருந்தும் நெகேபிலிருந்தும் கானானியர்களை விரட்டியடித்த போர்களில் யூதா இனம் மும்முரமாகப் போராடியது (நீதி 1:1-20; காண்க. யோசு 11:21-23). ஆனால், எல்லா இஸ்ராயேலருடனும் சேர்ந்து, பொதுவாக, பிற இன மக்களை எல்லாம் பாலஸ்தீனத்திலிருந்து விரட்ட யூதாவால் முடியவில்லை (நீதி 1:19).

**3. யூதாவின் நிலப்பகுதி:** எருசலேமுக்கும் எபிரோனுக்கும் இடைப்பட்ட மத்திய மலைப்பகுதியும், மக்கள் அதிகம் வாழாத, யூதாவின் பாலைநிலம் என்றழைக்கப்படும் நெகேபும் (நீதி 1:16) யூதாவின் நிலப்பகுதி யாகும். இப்பகுதியின் வட எல்லையில் பென்யாமின், கிபயோனிய, பெலிஸ்திய நகரங்கள் அமைந்திருந்தன. கிழக்கு எல்லையாக சாக்கடலும், தெற்கெல்லையாக ஏதோமும், மேற்கெல்லையாக, வெற்றி கொள்ளப்படாத கானானிய நகரங்களும் பெலிஸ்தியப்பகுதியும் அமைந்திருந்தன. யூதாவுக்குக் குறிக்கப்பட்ட நிலப்பகுதி அதற்குப் பெரியதாக இருந்ததால் (யோசு 19:1-9), சிமினியோன் இனத்திற்கும் மற்றக் குழுக்களுக்கும் யூதாவின் பகுதிக்குள் நிலப் பகுதிகள் குறிக்கப்பட்டன [எ.கா. காலேபு (14:13-15; 15:13-19); எரகுமவேல் (காண்க. 1 சாமு 27:10); ஒத்னியேல் (யோசு 15:19); கேனியர் (நீதி 1:16]. இந்த எல்லைகள் தாவீது காலத்தில் நிலவிய சூழ்நிலையைப் பிரதிபலிக்கின்றது என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். எபிரோன் யூதாவின் மிகப் பெரிய நகரமாகும். இஃது அடைக்கல நகர்களில் ஒன்றாகும் (யோசு 20:7). லேவியர்கள் தங்கள் உரிமைச் சொத்தாக, யூதாவில் ஒன்பது ஊர்களைப் பெற்றிருந்தனர் (21:4.9-16).

இஸ்ராயேலர் பாலஸ்தீனம் முழுவதையும் கைப்பற்றிக்கொள்ள முடியாமை, நீதிபதிகள் அல்லது விடுதலை வீரர்கள் காலத்தில் (கி.மு. 12-ஆம் நூற்றாண்டு) தொடர்ச்சியாக வந்த தாக்குதல்களை எதிர்த்துப் போராட வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கியது. முதல் நீதிபதி அல்லது விடுதலை வீரரான ஒத்னியேல் யூதாவில் தோன்றியவராவார். காலப்போக்கில் பெலிஸ்தியர் மற்றும் அம்மோனியர் ஆகியோரின் ஆதிக்க எழுச்சி இஸ்ராயேலில், கி.மு. 11-ஆம் நூற்றாண்டில், அரசாட்சி முறையை ஏற்படுத்த இட்டுச்சென்றது.

**4. அரசாட்சிமுறை:** பென்யாமின் இனத்தைச் சேர்ந்தவரும் இஸ்ராயேலின் துர்லபமான முதல் அரசனுமான சவுல் யூதாவில் அதிக ஆதரவு பெற்றிருந்தார். யாபேசு-கிலயாதில் அம்மோனியர்களின் தாக்குதலை எதிர்த்துப் போராட தொண்டர்களைச் சவுல் கோரியபோது, யூதாவைச் சேர்ந்த 30,000 பேர் அதில் பங்கெடுத்தனர் (1 சாமு 11:8). அமலேக்கியருக்கு எதிரான

போரில் யூதாவைச் சேர்ந்த *10,000* பேர் பங்கெடுத்தனர் *(15:4)*.

யூதாவின் மேற்கு எல்லையில் சோக்கோ என்ற இடத்தில் பெலிஸ்தியர் நடத்திய தாக்குதல், தாவீதின் தீரச்செயல் ஒன்றிற்கு வாய்ப்பளித்தது; இஸ்ராயேலின் எதிரியின் மீது பெரும் வெற்றியையும் அளித்தது *(1 சாமு 17)*. தாவீதின் பெருமை வளர்வது சவுலின் பொறாமையைத் தூண்டியது. ஆகவே, தாவீது சவுலிடமிருந்து தப்பி யோட வேண்டியிருந்தது. தாவீது, முதலில் பெலிஸ்திய நகரான காத்திலும் *(21:11)*, பின்பு, யூதாவின் சீபு பாலையிலும் *(23:14-15)* வாழ்ந்து வந்தார். பாலையிலும், சவுல் தாவீதைத் தேடிச்சென்றார்; ஆனால், வெற்றியடையவில்லை. இறுதியாக, தாவீது பெலிஸ்தியர்களின் பாதுகாப்பைத் தேடக் கட்டாயப்படுத்தப்பட்டார். யூதா வோடு தாவீதின் பிணைப்பு பலமாகவே இருந்தது. தாவீது அமலேக்கியரிடமிருந்து சிக்லாகுவின் மக்களை விடுவித்தபின் *(1 சாமு 30)*, கொள்ளைப்பொருளில் ஒரு பகுதியை யூதாவின் தலைவர்களுக்கு அனுப்பினார்.

சவுல் போரில் இறந்தபின், தாவீது யூதாவின் அரசனாக எபிரோனில் அபிடே கம் செய்யப்பட்டார் *(2 சாமு 2:1-4)*. அங்கிருந்து $7^{1}/_{2}$ ஆண்டுகள் ஆட்சி செய்தார் *(2:10-11)*. இஸ்ராயேல் சவுலின் மகன் இசுபொசேத்தால் ஆட்சி செய்யப்பட்டது. இவரின் $2^{1}/_{2}$ ஆண்டு ஆட்சியில் இரு நாடுகளுக்குமிடையே இடைவிடாத போராட்டம் நடந்து கொண்டேயிருந்தது *(2:12-31)*. இசுபொசேத்து கொலைசெய்யப் பட்ட பின்பு, வடபகுதியிலுள்ள இனங்க ளும் தாவீதைத் தங்கள் அரசனாக ஏற்றுக் கொண்டன. இவ்வாறு இரட்டை அரசாட்சி நிறுவப்பட்டது *(5:1-5; காண்க. 1 சாமு 18:16)*. தாவீது தனது நிலையைப் பலப் படுத்த முனைந்தார். எபூசியர்களிடமிருந்து எருசலேமைக் கைப்பற்றி, அதை அரச தலைநகரமாக்கினார். பின்பு கிரியத்து - எயாரிமிலிருந்து உடன்படிக்கைப் பேழையை எருசலேமுக்குக் கொண்டு வந் தார். அது முதல் எருசலேம், யூதாவுக்கும் இஸ்ராயேலுக்கும் வழிபாட்டு மையம் ஆயிற்று *(2 சாமு 6:1-5)*.

தாவீதுக்கு எதிராக அப்சலோம் கிளர்ச்சி செய்தபோது, அவனும் எபிரோனில் தன்னை அபிடேகம் செய்து கொண்டான் *(15:10-12)*. இச்செயலுக்காக அரசன் பழி வாங்குவான் என்றஞ்சிய யூதாவின் தலை வர்கள், தாவீது திரும்ப எருசலேமுக்கு வந்தபோது அவரை வரவேற்கத் தயங்கி னர். திறமையுள்ள அரசியல் செயலாக, அவர்களது அச்சத்தைப்போக்கி, தாவீது யூதாவையும் இஸ்ராயேலையும் ஒன்றுபடுத் துவதில் வெற்றி கொண்டார் *(19:11-15; காண்க. 19:9-10)*. ஆனால், தாவீது யூதா வுக்கு அதிகச் சலுகைகள் அளிப்பதாக இஸ்ராயேல் விரைவில் உணரத்தொடங்கி யது. இஃது ஒரு கிளர்ச்சிக்கு இட்டுச் சென்றது *(19:41-20:2)*. பென்யமினைச் சேர்ந்த சேபா தலைமை தாங்கிய இக் கிளர்ச்சி, யூதாவைச் சேர்ந்த வீரர்களால் அடக்கப்பட்டது *(20:4-22)*.

சாலமோன் *(கி.மு. 961-922)*, தனது தந்தை சேர்த்து வைத்த நிலப்பரப்பைப் பாதுகாப்பதில் கவனம் செலுத்தினார். அக் காலப் பழம் மேற்காசிய நாடுகளிலேயே செழிப்புற்று விளங்கிய பொருளாதாரத் தைப் பயன்படுத்த விரும்பினார் *(1 அர 4:24-25)*. அரண்மனைக்கு வேண்டிய உணவுப்பொருட்களைச் சேகரித்துக் கொடுக்க இஸ்ராயேல் நாட்டைப் பன்னிரு மாவட்டங்களாகப் பிரித்து அமைத்ததில் *(4:7)* தென் அரசாகிய யூதா விலக்குப் பெற்றிருக்கலாம் *(காண்க. 4:19)*. கட்டடங் களை எழுப்புவதில் சாலமோன் காட்டிய பேரார்வச் செயல்களில், யூதாவைச் சேர்ந்த பல நகரங்களைப் பலப்படுத்துவதும் அடங்கும். இவையெல்லாம் வணிகச் சாலையில் அமைந்திருந்தன. திம்னா பள்ளத்தாக்கின் சுரங்கங்களிலிருந்து செம் புக் கனிப்பொருளை இஸ்ராயேலுக்குக் கொண்டு செல்லவும், செங்கடல் துறைமுக மான எட்சியோன் கெபேர் வழியாக இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களை

எடுத்துச் செல்லவும் யூதா இஸ்ராயேலுக்கு வாயில் போல் அமைந்திருந்தது. சால மோன் எருசலேமில் ஆலயத்தைக் கட்டியது யூதாவின் வருங்காலத்துக்குரிய பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது எனலாம் *(1 அர 6)*.

**5. தென் அரசாகிய யூதா:** வட, தென் பகுதிகளுக்கிடையிலான தொன்மையான கூட்டாட்சியைக் காப்பாற்றுவதில் சால மோன் வெற்றி பெற்றார் என்று கூறலாம். ஆனால் அவரது மகன் ரெகபயாம், தனது விவேகமற்ற சொற்களால் அதை உடைத் தான். வடபகுதி இன மக்கள் தாவீது அரசமரபு தங்களை ஆட்சி செய்வதை நிராகரித்தனர் *(1 அர 12:1-17; 2 நாள் 10:1-7)*. இதன் விளைவாக, பலம் வாய்ந்த ஒரு நாட்டிலிருந்து வலிமை குன்றிய இரு சிறு நாடுகள் தோன்றின. ஆயினும், தொடக்கத் திலிருந்தே வட அரசாகிய இஸ்ராயேல் மேல் யூதா சில சலுகைகளைப் பெற்றிருந் தது. யூதாவில் தாவீது அரச மரபு பழுது படாதிருந்தது, அதன் தொடர்ச்சியை உறுதிப்படுத்தியது. ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு அரசியல், சமய வாழ்க்கையின் மையமாகத் திகழ்ந்த இடமாக எருசலேம் இருந்தது. யூதாவின் பரப்பளவு குறுகிப் போனாலும் தாவீது வீட்டிற்குப் பென்ய மின் காட்டிய பிரமாணிக்கம் தென் அரசுக்கு எருசலேமைப் பெற்றுத்தந்தது. இனிமேல் யூதாவின் அரசியல் வாழ்க்கை, உள்நாட்டில் குறுகிய கால மகிமைகளையும், அரசியல் சூழ்ச்சிகளையும் கொண்டிருந்தது; புறத்தில் பலரது தாக்குதல்களுக்கு எதிராகப் போராட வேண்டியிருந்தது.

ரெகபயாம் *(கி.மு. 922-915)* வடஇன மக்களை அரசியல் ரீதியாக ஒற்றுமைப் படுத்த எந்த முயற்சியும் செய்யவில்லை. அதற்குப் பதிலாக, அவர்களுக்கு எதிராக வடயூதாவில் *15* நகரங்களைப் பலப்படுத்தி னான் *(2 நாள் 11:5-12)*. பார்வோன் சீசாக்கின் தலைமையில் எகிப்தியர்கள் எருச லேம் உள்பட்ட பல நகரங்களைத் தாக்கிய போது, அவர்கள் மலைப்பகுதியில் புக முடியவில்லை *(1 அர 14:25-26; 2 நாள் 12:2தொ)*.

அபியா *(915-913)*, ஆசா *(913-873)* ஆகி யோரின் ஆட்சிக்காலத்தில் யூதா தன் எல்லையில் இஸ்ராயேலரிடமிருந்தும் எகிப்தியர்களிடமிருந்தும் தாக்குதல்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது *(2 நாள் 13; 14:9-14)*. இஸ்ராயேலைச் சேர்ந்த பாசா பென்யாமின் மீது படையெடுத்தான். ஆனால், ஆசா தமஸ்குவைச் சேர்ந்த முத லாம் பெனதாதுக்குப் பெரும் கையூட்டுக் கொடுத்து, அவன் இஸ்ராயேலுடன் செய்தி ருந்த உடன்படிக்கையை முறித்து, கலிலே யாவிற்குள் படை அனுப்பச் செய்தான். அதைத் தடுக்க பாசா பின் வாங்கினான் *(1 அர 15:16-22)*.

ஆசாவின் மகன் யோசபாத்து *(873-849)* பயனுள்ள விதத்தில் ஆட்சி செய்தான். இவனுடைய தந்தையைப்போல் இவனும் யாவேயை வழிபடுபவன்; ஒழுக்க வாழ் விலும், போர்க்காரியங்களிலும் நாட்டை வலுப்படுத்தினான் *(2 நாள் 17; 19:4-11)*. இஸ்ராயேலைச் சேர்ந்த ஆகாபுவால் தூண்டப்பட்டு இராமோத்து - கிலயாதின்மேல் நடந்த துர்லபமான தாக்கு தலில் இவன் பங்கு கொண்டான் *(2 நாள் 18)*. ஆனால், மோவாபுக்கும் அம்மோனுக் கும் எதிராக வெற்றியோடு போரிட்டான் *(20:1-30)*. செங்கடல் வியாபாரத்தைப் புதுப் பிக்க இவன் செய்த முயற்சி தோல்வியில் முடிந்தது *(1 அர 22:48-49; 2 நாள் 20:35-37)*.

யோசபாத்து, தன் மகன் யோராமுக்கு ஆகாபின் சகோதரி அல்லது மகளான அத்தாலியாவை மணம் செய்து, இஸ்ராயே லுடன் அமைதியான உறவை வலுப்படுத்தி னான். ஆனால், யோராமின் ஆட்சியில் *(849-842)* யூதாவின் வளர்ச்சி பாழ்பட்டுப் போனது. ஏதோமும், பெலிஸ்தியர் எல்லை யில் லிப்னாவும் கிளர்ச்சி செய்தனர் *(2 அர 8:20-22)*. மேலும், அரண்மனை ஏறிய பின் இவன் தன் சகோதரர் அனைவரையும் கொன்றான். அவனது அரசி எருசலேமில்

புறஇன வழிபாட்டை ஊக்குவித்தாள் (2 நாள் 21:4.11). இதை இஸ்ராயேலைச் சேர்ந்த இறைவாக்கினர் எலியா கடுமை யாகக் கண்டனம் செய்தார். நோய், போராட்டம் ஆகிய வடிவில் இவன் இறைவனுடைய தண்டனையை அனுபவித் தான் (21:12-20).

அனுபவமற்ற இளைஞனான அகசியா, குறுகிய காலத்திற்கே (842), தன் தாய் மற்றும் அவளுடைய ஆலோசகர்களின் ஆதிக்கத்தின் கீழ் ஆட்சி செய்தான். இஸ்ரா யேலோடு சேர்ந்து அரமேயர்கள் மேல் தாக்கியது வெற்றியின்றி முடிந்த பிறகு வடஅரசில் ஏகூவின் சூழ்ச்சிக்குப் பலியா னான் (2 அர 9:1-28; 2 நாள் 22:1-9). அத்தலியா யூதாவில் அரச அதிகாரத்தைக் கைப்பற்றினாள் (842-837). அரச குடும்பத்தி னரைத் திட்டமிட்டுக் கொன்று அழித்தாள்; குழந்தையான யோவாசு மட்டுமே தப்பி னான் (2 அர 11:1-3; 2 நாள் 22:10-12). சூழ்ச்சிக்குச் சூழ்ச்சிகள் நிகழ்ந்தன. தலை மைக்குரு யோயாதா, யோவாசை ஆறு ஆண்டுகளுக்குப் பாதுகாத்து வந்தார்; அதே சமயம், பிரமாணிக்கமுள்ள படைத் தலைவர்களோடும், லேவியர்களோடும் உடன்படிக்கை செய்து கொண்டார். ஏழு வயதில் யோவாசு முடிசூட்டப்பட்டான். அத்தலியா கொல்லப்பட்டாள். பாகால் ஆலயம் அழிக்கப்பட்டது (2 அர 11:4-21; 2 நாள் 23). யோயாதாவின் மேற்பார்வை யில் யோவாசு ஆண்டு வந்தான்; ஆலயத் தைப் பழுதுபார்த்தான் (2 அர 12:1-16; 2 நாள் 24:1-14). தலைமைக் குருவின் இறப்புக்குப்பின், யோவாசு திடீரென்று புறமத வழிகளைப் பின்பற்றலானான் (2 நாள் 24:17-19; காண்க. 2 அர 12:3). சிறிது காலத்திற்குப்பின் அரமேயர்கள் யூதாவின் மேல் படையெடுத்துக் கொள்ளையிட்டனர் (2 நாள் 24:23); எருசலேமிலிருந்து கப்பம் கோரினர் (2 அர 12:17-18). யோவாசு போரில் காயம் அடைந்தான். பின்பு, இறைவாக்கினர் செக்கரியாவைக் கொன்ற தற்குப் பழிவாங்குதலாகக் கொல்லப் பட்டான் (2 நாள் 24:25-26; காண்க. 2 அர 12:20-21).

எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அசீரிய ஆதிக்கத்தின் வளர்ச்சி அரமேயர் களை மட்டுப்படுத்தியது. இஃது இஸ்ரா யேலுக்கும் யூதாவுக்கும் ஓரளவு அமைதி யளித்தது. ஆயினும், யூதாவைச் சேர்ந்த அமட்சியா (800-783) ஏதோமுக்கு எதிராகப் போரிட்டான் (2 அர 14:7). இஸ்ராயேலின் அரசன் யோவாசை நேருக்கு நேர் போரிட அழைத்தான். அமட்சியா கைது செய்யப் பட்டான். இஸ்ராயேல் எருசலேம் மேல் படையெடுத்துக் கொள்ளையடித்தது (2 அர 14:8-14; 2 நாள் 25:5-24).

இஸ்ராயேலின் அரசன் இரண்டாம் எரொ பவாம் (793-753) மற்றும் யூதாவின் ஊசியா (அல்லது அசரியா; 783-742) ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் இஸ்ராயேலும் யூதாவும் மறுமலர்ச்சியடைந்தன. ஊசியா யூதாவின் படையையும், வணிகத்தையும் சீர் செய் தான்; எருசலேமின் அரண்களைப் பழுது பார்த்தான்; படைக்கு நல்ல போர்க்கருவி களை அளித்தான்; ஏதோமைக் கட்டுப்படுத் தினான்; நெகேமில் வியாபாரச் சாலை யைப் பாதுகாத்தான்; செங்கடல் துறைமுக மான எட்சியோன்கெபேரை மீண்டும் செயல்படச் செய்தான் (2 அர 14:22; 2 நாள் 26:9-15).

ஆனால், இந்தச் செழிப்பெல்லாம் முடி வுக்கு வந்தது. ஏனெனில், ஆசீரிய மன்னன் மூன்றாம் திகிலத் பிலேசரின் படை யெடுப்பு சீரிய-பாலஸ்தீனத்தில் உள்ள சிறிய நாடுகளை அச்சுறுத்தத் தொடங்கி யது. இஸ்ராயேலின் மெனகேம் அசீரியா வுக்குக் கப்பம் கட்டினான். ஆனால், அவன் மகன் பெக்காதமஸ்கு, பெலிஸ்திய நகரங்க ளுடன் சேர்ந்து அசீரியர்களுக்கு எதிரான கூட்டணி அமைத்தான். யூதாவின் யோத் தாம் (742-735) இக்கூட்டணியில் சேர மறுத்து விட்டான். ஆகவே, அவர்கள் அவனைத் தாக்கத் தயாரானார்கள் (2 அர 15:37). யோத்தாமுக்குப் பின் வந்த ஆகாசு அரசுக்கு வந்தவுடன் (735-715) வடக்கு,

மேற்கு, தெற்கிலிருந்து யூதா ஒரே சமயத்தில் படையெடுக்கப்பட்டது (16:5-6; 2 நாள் 28:5-8.17-18). இந்த இடுக்கண் நிலையில் ஆகாசு, திகிலத் பிலேசரின் உதவியை நாடினான் (2 அர 16:7-8; 2 நாள் 28:16; காண்க. எசா 7:1-8:15). அசீரியப்படை விரைவாக நகர்ந்து தெற்கு நோக்கிப் படையெடுத்து சீரியா, பாலஸ்தீனம், பெலிஸ்தியாவைக் கைப்பற்றி எகிப்துவரை சென்று நின்றது. அசீரியாவின் சிற்றரசன் என்ற அளவில் ஆகாசு அன்னிய சமய ஆதிக்கத்திற்கு உட்பட்டான் (2 அர 16:10-18; 2 நாள் 28:24-25).

அசீரியர்களுக்கு இஸ்ராயேல் கி.மு. 722-721-இல் வீழ்ந்தது. ஆகாசின் மகனும் அவனுக்குப்பின் அரசனும் ஆன எசேக்கியா (715-687) யாவேயிடம் கொண்டுள்ள நாட்டின் பிரமாணிக்கத்தைப் புதுப்பிக்கவும், மறைமுகமாக அரசியல் சுதந்தரம் பெறவும் உறுதி பூண்டான். அவன் பழங்கால பிற மதப் புனித இடங்களை அழித்தான் (2 அர 18:4; 2 நாள் 31:1); ஆலயத்தைச் சுத்தி செய்தான். வழிபாட்டை மையப்படுத்தும் நோக்கோடு, யாவே வழிபாட்டை முறைப் படுத்தினான் (2 நாள் 29-31:1). அசீரியப் பேரரசு முழுவதும் பரவி நிலவிய கிளர்ச்சியில் சேர நெடுங்காலமாகத் தூண்டப்பட்டாலும், 705-இல் சார்கோனின் இறப்புவரை காத்திருந்தான். கப்பம் கட்டுவதை நிறுத்தினான் (2 அர 18:7). எருசலேம் மற்றும் பிற யூதா நகரங்களின் பாதுகாப்பை விரைவாக வலிமைப்படுத்தினான் (20:20; 2 நாள் 32:1-5.30). அசீரியாவுக்கு எதிரான மற்றொரு கூட்டணியில் சேர்ந்தான். எகிப்தோடு ஒப்பந்தம் செய்து கொண்டான் (காண்க. எசா 30:1-7; 31:1-3). அசீரியா விரைவாகப் பழிவாங்கியது. சனகெரிபு, சீரியா, பாலஸ்தீனத்தில் எழுந்த எதிர்ப்புகளையெல்லாம் கி.மு. 701-இல் தகர்த்தெறிந்தான் (2 அர 18:13-16). யூதாவின் 46 நகரங்கள் வீழ்ந்தன. எருசலேம் முற்றுகையிலிருந்து தப்பியது. ஆனாலும் (2 அர 18-19; 2 நாள் 32; எசா 36-37), எசேக்கியா உடன்படிக்கை கோரக் கட்டாயப்படுத்தப் பட்டான்.

எசேக்கியாவின் இளைய மகன் மனாசே (687-642), அப்போது ஆதிக்க உச்சியில் இருந்த அசீரியாவுக்குச் சிற்றரசனாக விரைவில் பணிந்தான். அவனது மகன் ஆமோன் (742-740), ஆகாசின் காலத்தில் நிலவிய அநீதியான மற்றும் புறமதப் பழக்கங்களைப் பின்பற்றினான்; அசீரியத் தேவர்களுக்கு வழிபாடு செய்தான்; ஆலயத்தில் யாவே வழிபாட்டை நீக்கிவிட்டு கானானிய கடவுள்களுக்கு வழிபாடு நடக்க அனுமதித்தான் (2 அர 21:3-7; 2 நாள் 33:2-9; காண்க. 2 அர 21:10-11.16; 24:3-4).

அசீரியப் பேரரசு முழுவதும் அடிக்கடி கிளர்ச்சிகள் எழுந்தன. மேற்கிலிருந்து எகிப்தியர்கள், வடக்கிலிருந்து மேதியர்கள், கிழக்கிலிருந்து பாபிலோனியர்கள் தாக்கும் அச்சம் இருந்து கொண்டேயிருந்தது. ஆகையால், அப்பேரரசு கட்டிக் காக்க முடியாததாயிற்று. இது சிறுநாடுகளுக்குச் சிறிது அமைதியை அளித்தது. இறுதியாக யூதா யோசியாவின் ஆட்சியில் (640-609) சுதந்தரம் பெற்றது. யாவே குழுவினரால் அரசனாக்கப்பட்ட யோசியா ஆலயத்தைச் சுத்தி செய்தார். பரவலாக சமயச் சீர்திருத்தம் செய்தார். இஃது, ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட ''சட்டநூலால்'' இன்னும் ஊக்குவிக்கப்பட்டது (2 அர 22-23; 2 நாள் 34). நொறுங்கிக் கொண்டிருக்கும் பேரரசைப் பாபிலோனியர்களிடமிருந்து காப்பாற்றும் இறுதிச்செயலாக, அசீரியா தன் பழைய எதிரியான எகிப்தோடு உடன்படிக்கை செய்து கொண்டது. பார்வோன் 2-ஆம் நெக்கோவின் தலைமையில், அசீரியர்களுக்கு உதவிட, யூப்பிரத்தீசு ஆற்றங்கரையிலுள்ள கார்கேமிசை நோக்கி எகிப்தியப் படை முன்னேறிக்கொண்டிருந்தபோது, யோசியா விளக்க முடியாத விதத்தில் அப்படையைத் தாக்கினார்; ஆனால் அப்போரில் கி.பி. 609-இல் இறந்தார் (2 அர 23:29-30; 2 நாள் 35:20-25). அவரது மகன் யோவகாசு (சல்லூம்) மூன்று மாதங்களுக்கே ஆட்சி செய்தான். நெக்கோ அவனைப் பதவிநீக்கம் செய்து நாடு கடத்தினான். அவனது சகோதரனும் எகிப்தியர்க

ளுக்குச் சார்பானவனுமான எலியாக்கிமை (யோயாக்கிம், 609-598) நெக்கோ யூதாவின் அரசனாக்கினான்; பெரும் கப்பம் கட்டச் செய்தான் (2 அர 23:31-35; 2 நாள் 36:2-4; காண்க. எரே 22:10-12).

இப்போது எகிப்து, சீரியாவையும் பாலஸ்தீனத்தையும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டிருந்தது. தொடக்கத்தில், புத்தெழுச்சி பெற்றுக்கொண்டிருந்த பாபிலோனியர்கள் எகிப்தைத் தாக்கும் வலிமை கொண்டிருக்கவில்லை. ஆனால், 605-இல் நெபுகத்னேசர் கார்கேமிசில் எகிப்தியரைத் தோற்கடித்தான். நெபுகத்நேசர் அரசனாக முடிசூட்டிக் கொள்ள தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றபோது. பாபிலோனியர்களின் முன்னேற்றம் தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. 604-இன் பிற்பகுதியில் அவன் படையுடன் திரும்பி வந்து அசுதோதைக் கைப்பற்றி அதன் மக்களை நாடு கடத்தினான். பாபிலோனியப் படையோடு போரிட அஞ்சிய யோயாக்கிம், நெபுகத்னேசருக்குப் பணிந்தான் (2 அர 24:1). ஆனால் எகிப்திய எல்லையில் நடந்த கடும்போரில் பாபிலோனியர்கள் தற்காலிகமாகப் பின்வாங்கியபோது, யோயாக்கிம் மடத்தனமாய்க் கிளர்ச்சி செய்தான். இது சிறிது காலத்திற்கே நீடித்தது. 598-இல் நெபுகத்னேசர் படையெடுத்து எருசலேமுக்குள் நுழைந்து ஆலயத்தைக் கொள்ளையிட்டான். யோயாக்கிமைச் சங்கிலியால் பிணைத்து நாடு கடத்தினான் (2 நாள் 36:6-7). யோயாக்கிமின் மகன் யோயாக்கினை (கோனியா) அரசனாக்கினான். மூன்று மாதங்களுக்குப்பின், இவனும், எருசலேமில் வாழ்ந்த ஏழைகளும் தவிர, மற்ற அனைவரும் நாடு கடத்தப்பட்டனர் (2 நாள் 24:8-16; 2 நாள் 36:9-10; எரே 22:24-30). பின்பு யோயாக்கினின் சிற்றப்பன் மத்தனியா (செதேக்கியா) அரசனாக்கப்பட்டான்.

597-இல் நடந்த நாடுகடத்தலுக்குப்பின் யூதா குழம்பிப்போன, கலக்கமடைந்த நாடாக இருந்தது. யூதாவின் உடனடியாக வரவிருக்கும் முடிவு பற்றிய அடையாளங்கள் இறைவாக்கு நூல்களில் நிறைந்து காணப்படுகின்றன (எ.கா. எரே 27-29; எசே 21:25-27). வாய்ப்பான காலத்திற்குக் காத்திராமல், எந்த வெளி ஆதரவும் இல்லாமல், பாபிலோனியர்களுக்கு எதிராக செதேக்கியா கலகம் செய்தான் (2 நாள் 36:11-16). பாபிலோனியர் விரைவாகச் செயல்பட்டனர். 588-இல் எருசலேமை முற்றுகையிட்டனர் (2 அர 25:1; எரே 21:3-7; 52:4). எருசலேமைச் சுற்றியிருந்த நகரங்களை ஒன்றன் பின் ஒன்றாக அழித்தனர். எகிப்தியப்படை எருசலேமை நோக்கி வந்தபோது, பாபிலோனியர் சிறிது காலத்திற்குப் பின்வாங்கினர். ஆனால், விரைவில் மீண்டும் எருசலேமை முற்றுகையிட்டனர் (37:5-10). எருசலேம் இந்த முற்றுகையை ஓர் ஆண்டுக்குத் தாக்குப்பிடித்தது. செதேக்கியா சரண் அடைய விரும்பினான் (38:14-23). ஆனால், எருசலேமின் உணவுப் பொருள்கள் தீர்ந்து விட்ட நிலையில் 587-இல் ஜூலை மாதத்தில் நகரச்சுவர்களைப் பாபிலோனியர் தகர்த்தனர். அரசன் தப்பிக்க முயற்சி செய்தான்; ஆனால், கைது செய்யப்பட்டு, பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டான் (2 அர 25:4-7; எரே 52:6-11). நெபுகத்னேசரின் படைத்தலைவன் நெபுசரதான் ஆலயத்தைக் கொள்ளையடித்தான்; சுவர்களைத் தரைமட்டமாக்கினான்; எருசலேமை எரியூட்டினான். யூதாவின் தலைவர்களுள் சிலர் நெபுகத்னேசர் முன் கொண்டு வரப்பட்டுக் கொல்லப்பட்டனர். மிக ஏழையான மக்கள் தவிர மற்ற அனைவரும் நாடு கடத்தப்பட்டனர் (2 அர 25:8-21; 2 நாள் 36: 17-20; எரே 39:8-10).

யூதா ஒரு பாபிலோனிய மாகாணம் ஆயிற்று. கெதல்யா ஆளுநராக நியமிக்கப்பட்டார். கொலை செய்யப்படுவதற்குமுன் குறுகிய காலத்திற்கே இவர் ஆட்சி செய்தார் (2 அர 25:22-25; எரே 40:7-41:18).

**6. நாடுகடத்தலும் அதற்குப் பின்னும்:** பாபிலோனால் வெற்றி கொள்ளப்பட்ட பின், யூதா வறிய நாடாயிற்று. அதிகமாக மக்கள் அங்கு வாழவில்லை. நெபுகத்னேசர் மீண்டும் பாலஸ்தீனம் மற்றும் எகிப்தின்

மேல் படையெடுத்தான். கி.மு. *582*-இல் மூன்றாம் முறையாக யூதாவிலிருந்து மக்களை நாடு கடத்தினான் *(எரே 52:30)*. அடுத்த ஐம்பது ஆண்டுகளுக்குள்ள யூதாவின் வரலாறு இருளிலே மூழ்கியுள்ளது, ஒன்றும் கூறுவதற்கில்லை. உள்நாட்டுப் போராட்டங்களாலும், பாரசீகப் படையெடுப்பாலும் பாபிலோனியப் பேரரசு முடிவுக்கு வந்தது. *538*-இல் அக்டோபர் மாதத்தில் பாரசீக மன்னன் சைரசு, பாபிலோனில் புகுந்து அதைக் கைப்பற்றினார். *588*-இல் பாலஸ்தீனத்தில் யூதர்களை மீண்டும் நிறுவி, எருசலேம் ஆலயத்தை மீண்டும் கட்டியெழுப்ப வேண்டிய பொருளுதவியும் செய்து சைரசு சட்டம் இயற்றினார் *(2 நாள் 36: 22-23; எஸ் 1:1-4; 6:3-5)*.

யூத நாட்டை மீண்டும் அமைக்கும் பொறுப்பு, யூதாவின் அரச குடும்பத்தைச் சேர்ந்த சேசுபட்சரிடம் கொடுக்கப்பட்டது. இவர் முன்னாள் நாடு கடத்தப்பட்டவர்கள் அடங்கிய ஒரு குழுவுடன் புறப்பட்டார். இக்குழுவில் இருந்தவர்களின் எண்ணிக்கை தெரியவில்லை. இந்த மீண்டும் நாடமைக்கும் வேலை தொடங்கிய நாள்கள் கடினமானவையாகும். கடந்த மகிமையை மீண்டும் அடைய, கண்ட கனவுகள் நிறைவேறவில்லை. நாடு கடத்தப்பட்டவர்கள் சிறு சிறு குழுக்களாக நாடு திரும்பினர். அவர்களுக்கும், ஏற்கெனவே யூதாவின் பகுதியில் இருந்தவர்களுக்குமிடையே பிணக்குகள் ஏற்பட்டன. இது, நிலவிளைச்சல் குறைவாலும் *(ஆகா 1:9-11; 2:15-17)*, ஆலய அமைப்பு வேலை மெதுவாக முன்னேறியதாலும் *(2:3; எஸ் 3:12)* மேலும் கேடாகியது.

சேசுபட்சருக்குப்பின் செருபாபேல் ஆளுநர் ஆனார். ஏசுவா தொடங்கி, தலைமைக் குருக்கள் பலர் யூதாவின் ஆன்மீகக் காரியங்களுக்குப் பொறுப்பாய் இருந்தனர். பாலஸ்தீனம் உள்ளடங்கிய, யூப்பிரத்தீசுக்கு மேற்கிலுள்ள பகுதிகளுக்குப் பாரசீக ஆளுநனாக இருந்த தத்தனாயும் மற்றவர்களும் எதிர்ப்புக் காட்டினாலும், கி.மு. *515*-இல் ஆலயம் கட்டி முடிக்கப்பட்டது *(6:13-18)*.

இக்காலத்து வரலாறு பற்றிய கால வரையை நிர்ணயிப்பது கடினமானாலும், ஐந்தாம் நூற்றாண்டின் மத்தியில், நெகேமியா பாரசீக யூதா மாகாணத்துக்கு ஆளுநராக நியமிக்கப்பட்டார். எருசலேமின் சுவர்களை மீண்டும் கட்டியெழுப்ப இவருக்கு அனுமதியளிக்கப்பட்டது *(நெகே 2:1-8)*. இரண்டாவது முறையாக இவர் யூதாவுக்கு ஆளுநராக வந்தபோது, நாடு கடத்தலுக்குப் பின் இருந்த சமூகத்தை நிலைப்படுத்தும் நோக்கோடு, இவர் பல சமூக, சமயச் சீர்திருத்தங்களைச் செய்தார் *(நெகே 13)*. இந்தக் காலத்தில்தான் மறைநூல் வல்லுநர் எஸ்ரா பாபிலோனிலிருந்து யூதாவுக்கு வந்து *(எஸ் 7:1-26)*, மோசே சட்டத்துக்குரிய முதன்மை இடத்தை அதற்குப் பெற்றுத் தந்தார் எனலாம் *(நெகே 8)*.

கி.மு. *333*-இல் பெரிய அலக்சாந்தர் பாலஸ்தீனத்தை வென்றபோது, கிரேக்கர் காலத்தில், யூதாவும் செலூக்கிய ஆட்சிக்குட்பட்டது. இந்த யூதாவின் பகுதி அசமோனிய நாட்டின் மையப்பகுதியாயிற்று. பாலஸ்தீனத்தை உரோமையர் ஆக்கிரமித்த காலத்தில், யூதா என்ற பெயர், இதை விட யூதேயா என்ற பெயர், சுயமாக ஆட்சி செய்யும் அரசியல் அமைப்பை விட, ஒரு நிலப்பகுதியையே குறித்தது *(காண்க. லூக் 1:39)*.

புதிய ஏற்பாட்டில், இயேசு யூதா இனத்தின் வழித்தோன்றலாகக் காட்டப்படுகிறார் *(எபி 7:14; காண்க. திருவெளி 5:5)*. திருவெளி *7:5*-இல் முத்திரையிடப்பட்டவர்களின் பட்டியலில் முதல் இனமாக யூதா குறிக்கப்படுகிறது. காண்க. இஸ்ராயேலின் வரலாறு, யூதேயா.

**யூதா எழுதிய திருமுகம்** *(JUDE, LETTER OF)*

புதிய ஏற்பாட்டில் வரும் பொதுத் திருமுகங்களில் இச்சிறு நூல் கடைசியானது.

***1. ஆசிரியர்:-*** ஆசிரியர் தன்னைப்பற்றி ''இயேசு கிறிஸ்துவின் ஊழியன் யாக்கோபின் சகோதரன்'' என்று குறிப்பிடுகிறார் யூதா. இந்த யாக்கோபு யார்? யாக்கோபு என்ற பெயருடைய புதிய ஏற்பாட்டு நபர்களில் இங்குக் குறிப்பிடப்படும் யாக்கோபு, ''ஆண்டவருடைய சகோதரர்'' என்று குறிப்பிடப்படுபவரும், எருசலேம் திருச்சபையின் தலைவராக இருந்தவருமான யாக்கோபாக இருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

யூதா அல்லது யூதாசு என்ற பெயரைக் கொண்ட நபர்கள் சிலர் புதிய ஏற்பாட்டில் காணப்படுகின்றனர். இத்திருமுகத்தின் ஆசிரியர் யூதாஸ் இஸ்காரியோத்தாகவோ (மத் 10:5), ததேயு என்றழைக்கப்படும் (மத் 10:4; மாற் 8:18), அப்போஸ்தலருள் ஒருவரும் யாக்கோபின் மகனுமான (லூக் 6:16; யோவான் 14:22) யூதாசாகவோ, யூதாசு பர்சபா ஆகவோ (அ.ப. 15:22.27.32), தமஸ்கு நகரத்து யூதாசாகவோ (9:11) இருக்க முடியாது என்று கருதப்படுகிறது. மேலும், ஆசிரியர் தான் ஓர் அப்போஸ்தலர் என்று உரிமை கொண்டாடவில்லை. மேலும், அப்போஸ்தலர்களைப்பற்றிக் குறிப்பிடும்போது, கடந்து சென்றுவிட்ட ஒரு காலத்தைக் குறிப்பிடுவதைப்போல எழுதுகிறார் (யூதா 17). ஆகவே, இந்நூலின் ஆசிரியர் ''ஆண்டவருடைய சகோதரனாகக்'' கருதப்படும் யூதாவாக இருக்கலாம்.

திருச்சபைத் தந்தையருள் ஒருவரான தெர்த்துல்லியன் என்பவர் அப்போஸ்தலரான யூதாவே இந்நூலை எழுதியதாகக் கருதினார். மற்றத் தந்தையர் ஆண்டவருடைய சகோதரரும், யாக்கோபின் சகோதரருமான யூதாவே இந்திருமுகத்தை எழுதியதாகக் கருதினர்.

இக்கால ஆய்வாளர்கள், இந்நூல் ஒரு புனைபெயர் நூலாக இருக்கலாம் என்கின்றனர். பிற்காலத்தைச் சேர்ந்த ஒரு கிறிஸ்தவர், தன் கருத்துகள் ஏற்கப்பட வேண்டும் என்பதற்காக அனைவருக்கும் தெரிந்த யூதாவின் பெயரைப் பயன்படுத்தி இந்நூலை எழுதியிருக்கலாம். இம்முறை விவிலிய இலக்கியங்களில் காணப்படுகிறது.

எழுதியவர் யாராய் இருப்பினும், புனைபெயர் நூலாக இருந்தாலும், இறை ஏவுதலோடு எழுதுகிறோம் என்பதை ஆசிரியர் அறியாதிருந்தாலும், இந்நூல் இறை ஏவுதல் பெற்றது என்று வளர்ச்சியுள்ள, உயிருள்ள திருச்சபையின் விசுவாசம் ஏற்றுக் கொண்டுள்ளது.

***2. யாருக்கு, எப்போது எழுதப்பட்டது?***

''இறைவனால் அழைக்கப்பட்டு, தந்தையாகிய கடவுளின் அன்பிலும் இயேசு கிறிஸ்துவின் பாதுகாப்பிலும் வாழ்பவர்களுக்கு'' *(1)* இத்திருமுகம் எழுதப்படுகிறது. இக்குறிப்பு இந்நூல் யாருக்கு எழுதப்பட்டது, அவர்கள் வாழ்ந்த இடம் எது என்பதைச் சுட்டவில்லை. விவிலியத் திருமுறைப் பட்டியலைச் சேராத நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் தருகிறார். இஃது, இந்நூல் யூதர்களுக்கு எழுதப்பட்டிருக்கலாம் என்று சுட்டுகிறது. ஆனால், அதே சமயத்தில் புறவினத்தாரிடையே காணப்பட்ட தீயபண்புகளும், பிரமாணிக்கமற்ற தன்மையும் இந்நூலில் குறிக்கப்படுகின்றன. இது புறவினத்தாரிடையே வாழ்ந்த யூதக் கிறிஸ்தவர்களுக்கு எழுதப்பட்டிருக்கலாம். ஒருவேளை சிறிய ஆசியாவில் வாழ்ந்த யூதக் கிறிஸ்தவர்களுக்கு இத்திருமுகம் எழுதப்பட்டிருக்கலாம்.

இத்திருமுகம் கி.பி. 95-இல் எழுதப்பட்டதாகக் கருதப்படும் முதலாம் கிளமந்து பாப்புவின் திருமுகத்தோடு பலவகைகளில் ஒத்திருக்கிறது. முதல் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் பேதுரு எழுதிய இரண்டாம் திருமுகம் யூதாவின் திருமுகத்தைத் தழுவியதாகத் தெரிகிறது. இவற்றைக் கருத்தில் கொண்டு, இத்திருமுகம் கி.பி. 90-ஐ ஒட்டி எழுதப்பட்டிருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

***3. ஏன் எழுதப்பட்டது?:*** நூலை ஆராயுங்கால் யூதக் கிறிஸ்தவ சமூகங்களுக்கு யூதர்களிடமிருந்தோ, உரோமை அதிகாரி

களிடமிருந்து சில தத்துவக் கொள்கை யாலோ, விசுவாச எதிர்ப்புகள் தோன்றி யிருப்பதாகத் தெரிகிறது. தங்களுடைய தவறான போதனையாலும், கெட்ட நடத் தையாலும் சிலர் விசுவாசிகளைக் குழப்பி யிருக்கலாம். நூல் தாக்கும் தப்பறைகள், பிற்காலத்தில் ஞான வாதம் என்று வளர்ச்சி யடையும் தப்பறைக் கொள்கையாகத் தெரி கிறது. இத்தவறான போதனைகள் என்ன என்று ஆசிரியர் விளக்கவில்லை. ஆசிரியர் கூறுவன எந்தத் தவற்றுக்கும் பொது வானவையாக இருப்பது போல் தோன்று கிறது. தப்பறைகளையும், அவற்றைப் பரப்புவோரையும் கண்டிக்கிறாரே ஒழிய அவற்றை விளக்கவில்லை. இவற்றிலிருந்து கிறிஸ்தவர்கள் தங்களையே காத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் பெற்றுக் கொண்ட விசுவாசத்தைக் காத்து வளர்த்துக் கொள்ள வேண்டும். இப்படி ஊக்குவிப் பதையும், உற்சாகப்படுத்துவதையுமே இந் நூல் குறிக்கோளாகக் கொண்டுள்ளது.

**4. திருமுறைப்பட்டியலில் இந்நூல்:-** யூசே பியு (கி.பி. 4-ஆம் நூற்றாண்டு) போன்றவர் கள் இந்நூலின் உண்மைத்தன்மை பற்றி ஐயுற்றுள்ளனர். இதற்கு எரோனிமு கார ணம் கொடுக்கிறார். யூதா போலி நூலான ஏனோக்கிலிருந்து எடுத்துக்காட்டு கொடுப் பதால், பலரால் இந்நூல் நிராகரிக்கப் பட்டது. ஆயினும், அதன் தொன்மையா லும், அது பயன்படுத்தப்பட்டிருக்கும் முறையாலும், திருமுறையில் இடம்பெறத் தகுதியுள்ளதே என்று கூறுகிறார். இந்நூல் அலக்சாந்திரியா கிளமந்து, தெர்த்துல்லியன் போன்ற இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த திருச்சபைத் தந்தையரால் மதிக்கப்பட்டது. மூராத்தோரியின் திருமுறைப்பட்டியலிலும், அத்தனாசியு, எருசலேம் சிரில், தமசுஸ், இன்னோசன்ட் ஆகியோரின் பட்டிய லிலும், இப்போ சங்கம், இலவோதிக் கேயா சங்கம், மூன்றாம் கார்த்தேசு சங்கம் ஆகியவற்றின் பட்டியலிலும் இந்நூல் இடம் பெறுகிறது. ஓரிசன் இந்நூலிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார்.

**5. இலக்கியத் தொடர்பு:**

**அ. யூதாவும் இரண்டாம் பேதுருவும்:-** இருநூல்களும் போலிப்போதகர்களால், விசுவாசத்திற்கும் ஒழுக்க வாழ்வுக்கும் வரக்கூடிய ஆபத்துகளைப் பற்றி விசுவாசி களை எச்சரிப்பதற்காக எழுதப்பட்டுள்ளன. இந்தப் பொது நோக்கிலிருந்து எழும் இந்நூல்களுக்குள் நெருங்கிய தொடர்பு உள்ளது. சிந்தனையிலும், மொழியிலும் இரண்டுக்குமிடையே மிகுந்த ஒற்றுமையுள் ளது. யூதா திருமுகத்தின் 25 வசனங்களில் 19 வசனங்கள் முழுமையாகவோ, பகுதி யாகவோ பேதுருவின் திருமுகத்தில் கையாளப்பட்டுள்ளன என்பது பின்வரும் ஒப்புமையால் தெளிவாகும். யூதா 2—2 பேதுரு *1:2;* யூதா *3*—*2* பேதுரு *1:5;* யூதா *5*அ—*2* பேதுரு *1:12;* யூதா *4.5*ஆ*-19-2* பேதுரு *2:1-3:3;* யூதா *24*—*2* பேதுரு *3:4.* இந்த ஒப்புமை, இவை ஒன்றை மற்றது தழுவி எழுதப்பட்டிருக்கலாம் என்ற கருத் தைத் தோற்றுவிக்கவல்லன. 2 பேதுருவை விட யூதா காலத்தால் முந்தியது எனக் கருதப்படுகிறது. ஏனெனில், இறைவனது தண்டனைகளைக் காலமுறைப்படி எடுத் துக் கூறி, 2 பேதுரு *2:4-7,* யூதா *5-7*-இல் வரும் வரிசையைத் திருத்துகிறது. மேலும், 2 பேதுரு யூதாவில் வரும் விநோத மானவைகளை விட்டுவிடுகிறது. எ.கா. வானதூதர்களின் பாவத்தின் தன்மை (யூதா 6தொ), பேயினுடன் மிக்கேல் வாதிடுதல் (யூதா 9), வழிதவறி அலையும் விண்மீன் கள் பற்றிய குறிப்பு (யூதா *13*), ஏனோக்கு நூலிலிருந்து மேற்கோள் (யூதா 14தொ). இறுதியாக 2 பேதுரு 2-இல் போலி இறைவாக்கினர்களைப் பற்றிப் பேசும் பகுதி ஆசிரியரின் நோக்கத்திற்கேற்றவாறு மாற்றி அமைக்கப்பட்டிருப்பதோடு, திரு முகத்தின் பொதுக்கருத்தை முறிப்பதாகத் தெரிகிறது. இதுவும் 2 பேதுரு யூதாவைத் தழுவியுள்ளதாகச் சுட்டுகிறது.

**ஆ. யூதாவும் ஏனோக்கு நூலும்:** யூதா போலி நூலான ஏனோக்கைப் பெரிதும் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. யூதா *14-15*-இல் வரும் மேற்கோளைத் தவிர்த்து,

ஆசிரியர், வழி தவறி அலையும் விண் மீன்களைப் பற்றியும் (யூதா 13), வான தூதரின் தண்டனை பற்றியும் (யூதா 6) குறிப்பிடுகிறார். ஏனோக்கு நூல் இறை ஏவுதல் பெற்றதா இல்லையா என்று யூதா தீர்ப்புக் கூறவில்லை. ஆனால் தப்பறைக ளைப் போதிப்பவர்களைத் தாக்கி அவர்க ளுக்கு உரிய பதிலை அளிக்க வல்லது என்று தனது வாசகர்களால் ஏற்றுக் கொள் ளப்பட்ட நூல்போல் ஏனோக்கை யூதா பயன்படுத்துகிறது.

**6. நூலின் திட்டம்:**

I வச. *1-2* : முன்னுரை.

II வச. *3-4* : மடலின் காரணம் ; போலிப் போதகர்களின் பிரசன்னம்.

III வச. *5-16* : போலிப் போதகர்கள்.

அ. எச்சரிக்கைப் பாடங்கள் *(5-7)*.

ஆ. தீயோரின் வாழ்வு *(8-10)*.

இ. உவமைகளும் உருவகங்களும் *(11-13)*.

ஈ. ஏனோக்கு மேற்கோள் *(14-16)*.

IV வச. *17-23* : விசுவாசிகளுக்கு அறவுரை.

அ. அப்போஸ்தலப் படிப்பினை *(17-19)*.

ஆ. விசுவாசிகளின் கடமைகள் *(20-23)*.

V வச. *24-25* : இறுதிப் போற்றுரை.

**யூதாசின் நற்செய்தி** (JUDAS, GOSPEL OF)

இஃது ஒரு போலி நற்செய்தியாகும். இதை இரனேயு விவரிக்கிறார். தப்பறைக ளுக்கு எதிராக எப்பிபானியு எழுதிய நூல்களில் இது குறிப்பிடப்பட்டுள்ளது. இதைக் காயின் ஞானவாதப் பிரி வினர் பயன்படுத்தினர். ஒருவேளை கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் இரனேயுவின் கருத்துப்படி, இந்நூல் யூதாசு இஸ்காரியோத்தைச் சாதகமான முறையில் விவரிக்கிறது. யூதாசு, அறவொளியூட்டப் பெற்ற ஞானவாதி என்ற அளவில், மனு குலத்தை மீட்புப் பெறச்செய்யும் உன்னத நோக்கோடு இயேசுவைக் காட்டிக் கொடுத் தார்.

**யூதாசு** (JUDAS)

யூதாசு என்ற பெயர் யூதா என்ற எபிரேயப் பெயரின் கிரேக்க வடிவமாகும்.

*1.* யூதாசு மக்கபேயு. காண்க. யூதா மக்கபேயு.

*2.* கலிபியின் மகன். யோனத்தான் படை யில் ஒரு தலைவர் *(1 மக் 11:70)*. ஆட்சோரில் பதுங்கியிருந்து தாக்கப்பட்ட போது, எல்லாரும் ஓடிவிட இந்த யூதாசும் மத்தத்தியாவும் யோனத்தானுடன் இருந்தனர்.

*3.* சீமோன் மக்கபேயுவின் மகனும், யோவான் இரிக்கானுவுடைய சகோதரரும் ஆவார். சீமோன் மக்கபேயு வயது முதிர்ந்த வரான பின்பு, இந்த யூதாசும் யோவானும் யூத நாட்டுக்காகப் போரிடப் படைத் தலைவர்களாக நியமிக்கப்பட்டனர். இருவரும் சேர்ந்து செந்தபேயுவைத் தோற் கடித்தனர் *(1 மக் 16:2-10)*.

*4.* அரிஸ்தோபுலுக்கும் எகிப்திலுள்ள யூதர்களுக்கும் கடிதம் எழுதியவர்களில் ஒருவர் *(2 மக் 1:10)*. சிலரின் கருத்துப்படி, இவர் யூதா மக்கபேயுவாக இருக்கலாம்.

*5.* இயேசுவின் சகோதரர்கள் என்று மத் *13:55*; மாற் *6:3*-இல் கூறப்பட்டுள்ள நால் வரில் ஒருவர். பொதுவாக, இவர் ''யாக் கோபின் சகோதரர் யூதா'' என்னும் யூதா எழுதிய திருமுகத்தின் ஆசிரியராகக் கருதப் படுகிறார்.

*6.* யூதாசு இஸ்காரியோத்து-

இத்தலைப்பின் கீழ்க் காண்க.

*7.* யாக்கோபின் மகன் (அல்லது சகோ தரன்). பன்னிருவருள் ஒருவர். லூக் *6:16*; யோவா *14:22*-இல் மட்டும் குறிக்கப்படுகி றார். இவர் மத் *10:3*; மாற் *3:18*-இல் குறிக்கப்படும் ததேயுவாகக் கருதப்படுகி றார். சிலர் இவரையும் 5-இல் விவரிக்கப் படுபவரையும் ஒன்றாகக் கருதுகின்றனர்.

*8.* கலிலேயனான யூதாசு; தீவிரவாதி; கி.பி. 6-7-இல் நடந்த கணக்கெடுப்பின்

போது உரோமையர்களுக்கு எதிரான கிளர்ச்சியின் தலைவன். உரோமையரின் ஆட்சியையும், யூதேயாவின்மேலான வரிமுறையைச் சுமத்துவதற்கும் இந்தக் கணக்கெடுப்பு அடையாளமாகும் (அ.ப. 5:37).

9. தமஸ்குவில் நேர்த் தெரு என்ற தெருவிலுள்ள இவரது வீட்டில்தான், இயேசுவின் காட்சிபெற்ற சவுல் தங்கியிருந்தார் (அ.ப. 9:11). இவரது வீட்டில்தான் சவுல் திருமுழுக்குப் பெற்று, தனது பணிக்கு ஆணை பெற்றார். இவரைப் பற்றி வேறு எதுவும் தெரியவில்லை.

10. யூதாசு பர்சபா எருசலேம் திருச்சபையின் முக்கிய அங்கத்தினரும் (இறைவாக்கினரும்) ஆவார். அந்தியோக்கு, சீரியா, மற்றும் சிலிசியா ஆகிய பகுதிகளில் வாழ்ந்த புற இனக் கிறிஸ்தவர்களை உற்சாகப்படுத்த பவுல், பர்னபாவோடு செல்வதற்காக அப்போஸ்தலர்களாலும் மூப்பர்களாலும் தேர்ந்தேடுக்கப்பட்டவர்களில் ஒருவர் (அ.ப. 15:22-35). மோசே சட்டத்தைப் பொருத்த மட்டும் புற இனக் கிறிஸ்தவர்களின் பொறுப்பைப் பற்றி எருசலேம் திருச்சபையின் தீர்மானத்தை யூதாசும் பர்னபாவும் விளக்கிக்காட்ட வேண்டும். யூதாசு எருசலேமுக்குத் திரும்பினார். இவர் யோசேப்பு பர்சபாவின் சகோதரனாக இருக்கலாம்.

**யூதாசு இஸ்காரியோத்து** (JUDAS ISCARIOT)

பன்னிரு அப்போஸ்தலர்களில் ஒருவர். இயேசுவைக் காட்டிக் கொடுத்தவர். இஸ்காரியோத்து என்ற பெயரின் பொருள் (காண்க. லூக் 22:3; யோவா 14:22) ஐயப்பாடு உள்ளதாகவே உள்ளது. ''பொய்யன் (பொய்யின் மனிதன்), வாள் கொண்டிருப்பவன், இசக்காரின் மனிதன்'' என்று இச்சொல்லுக்குப் பலவாறு சொல்லிலக்கணம் சுட்டிக்காட்டப்படும். ''கெரியோத்தைச் சேர்ந்த மனிதன்'' என்பது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும் பொருளாகும். கெரியோத்து இருந்த இடம் தெரியாது. அது யூதேயாவில் இருந்தது என்று கருதப்பட்டது. அதே பெயர், யோவா 6:71; 13:26-இல் யூதாசின் தந்தை சீமோனுடன் தொடர்புபடுத்தப்படுகிறது.

இயேசுவைக் காட்டிக் கொடுத்ததற்காக யூதாசு இஸ்காரியோத்து பழிக்கப்படுகிறார். இதற்கு நான்கு நற்செய்திகளும் சான்று கூறுகின்றன (மத் 26:47-56 இணை). இயேசுவே இதை முன்னறிவிக்கிறார் (யோவா 6:70-7). படை வீரர்களையும், தலைமைக் குருக்களும் பரிசேயரும் அனுப்பிய காவலர்களையும் தோட்டத்திற்கு நடத்திச் சென்று, இயேசுவை முன் ஒழுங்கு செய்யப்பட்ட அடையாளமாகிய முத்தமிட்டுக் காட்டிக் கொடுத்து இக்கொடிய செயலைச் செய்தார்.

அப்போஸ்தலர்களின் பட்டியலில் யூதாசு சேர்க்கப்பட்டிருந்தாலும், அவர் தேர்ந்தெடுக்கப்படுதல், அழைப்பு ஆகியன விவரிக்கப்படவில்லை. அவரும் மற்ற அப்போஸ்தலர்களைப் போல் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். அவருடைய நடத்தையும் மற்றவர்களுடையதைப் போலவே இருந்திருக்க வேண்டும். மீட்பரின் வார்த்தைகளைக் கேட்டிருக்க வேண்டும்; அவருடைய அருஞ்செயல்களைக் கண்டிருக்க வேண்டும். சீடர்களின் பல பொறுப்புகளை யூதாசும் செய்திருக்க வேண்டும். யோவா 12:5-6; 13:29-இன்படி, குழுவின் பணப் பொறுப்பு அவரிடம் இருந்தது. அதிலிருந்து திருடிக்கொள்வதுண்டு. அவரது பேராசையினால், தலைமைக் குருக்களிடம் சென்று, இயேசுவைக் காட்டிக் கொடுக்கப் பேரம்பேசினார் (மத் 26:14-16 இணை).

இயேசுவைக் காட்டிக்கொடுக்கத் திட்டமிட்டு வாய்ப்புக்காகக் காத்திருந்தார். பாஸ்கு உணவின்போது, சீடர்களில் ஒருவன் தன்னைக் காட்டிக் கொடுப்பான் என்று இயேசு முன்னறிவித்தார். யூதாசு அந்த அறையை விட்டு வெளியேறி, தனது திட்டத்தின்படி நடக்கலானார். இயேசுவின் பழக்க வழக்கங்களை நன்கு அறிவராதலால் யூதாசுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. படைவீரர்களையும் காவலர்களையும் கெத்சம

னித் தோட்டத்திற்குக் கூட்டிச் சென்று, முன் ஒழுங்கு செய்திருந்தபடி, முத்தமிட்டுக் குருவைக் காட்டிக் கொடுத்தார். இயேசு மரணத்திற்குத் தீர்ப்பிடப்பட்டபின், யூதாசை அவரது மனச்சாட்சி குத்த ஆரம்பித் தது. தலைமைக் குருக்களிடமும் மூப்பர்க ளிடமும் சென்று, அவர்களிடமிருந்து பெற்ற முப்பது வெள்ளிக்காசுகளை விட் டெறிந்துவிட்டு, பின் தூக்குப்போட்டுக் கொண்டார் (*மத் 27:3-5; அ.ப. 1:18-20*).

இறையியல் நோக்கிலிருந்தும், விவிலிய விவரிப்பிலுள்ள சிலுவை வழி பரிகாரம் செய்வது என்ற நோக்கிலிருந்தும், யூதாசு இயேசுவைக் காட்டிக் கொடுத்த நிகழ்ச்சி யைப் பற்றியும், யூதாசின் ஆட்தன்மையின் ஆற்றலுடைமையைப் பற்றியும் ஊகங்களுக் குக் குறைவேயில்லை. இயேசு ஏன் யூதா சைத் தேர்ந்தெடுத்தார்? ஏன் பணப் பெட்டியை அவரிடம் ஒப்படைத்தார்? யூதாசு ஏன் முதலில் சீடராகி, பின்பு காட்டிக் கொடுத்தார்? இதனால், இயேசு தமது ஆற்றலை வெளிப்படுத்தக் கட்டாயப் படுத்த முயற்சித்தாரா? இவற்றிற்கெல்லாம் நிச்சயமான பதிலே இல்லை எனலாம்.

**யூதா மக்கபேயு** (JUDAS MACCABEUS)

யூதா மக்கபேயு என்பவர் குருவாகிய மத்தத்தியாவின் மூன்றாவது புதல்வராவார். மக்கபேயு என்பது யூதாவுக்கு வழங்கப் பட்ட சிறப்புப் பெயராகும் (*1 மக் 2:1*). மத்தத்தியா செலூக்கிய மன்னர்களால் செய்யப்பட்ட அனைத்துத் தீய செயல்களை யும் கவனித்துக் கொண்டே வந்தார். அந்தியோக்கு மன்னனால் அனுப்பப்பட்ட வர்கள் மத்தத்தியாவிடம் வந்து, அவரை யும் அவரது புதல்வர்களையும், அரசரின் நண்பர்களாக்கிக் கொள்ளுமாறு வேண்டிய பொழுது, மத்தத்தியா என்பவர் எங்கள் குலத்தந்தையர்களின் சமயத்தை விட்டு யார் பிரிந்து சென்றாலும் நாங்கள் பிரிந்து செல்லவும் மாட்டோம், எங்கள் சட்டங்க ளால் விதிக்கப்பட்ட கட்டளைகளை மீறி நடக்கவும் மாட்டோம், வேறு தெய்வங்க ளுக்குப் பலியிடவும் மாட்டோம், அரச னின் கட்டளைக்குக் கீழ்ப்படியவும் மாட் டோம் என்று உறுதியளித்தார் (*1 மக் 2:21*).

மேலும், அரசனின் கட்டளைக்குக் கீழ்ப் படிந்து சிலைகளுக்குப் பலியிட வந்த யூதனையும், அவனைப் பலி செலுத்த வலியுறுத்திய அரசனால் அனுப்பப்பட்ட மனிதனையும் மத்தத்தியா கொன்றார். இதி லிருந்துதான் மக்கபேயர் புரட்சி ஆரம்ப மாகின்றது. மத்தத்தியாவும், அவருடைய புதல்வர்களும் மலைகளுக்கு ஓடிச்சென்று அங்கு ஒரு படைக்குழுவை ஏற்படுத்துகின் றனர். மறைந்திருந்த சிலர் ஓய்வு நாளில் போர்புரிய மறுத்ததால் அரசரால் அனுப்பப் பட்டவர்களால் கொலை செய்யப்படுகின்ற னர். பகைவர்கள் தாக்கும் பொழுதெல்லாம் எதிர்த்து நின்று போர்புரிய வேண்டும் என்று தீர்மானம் எடுக்கப்பட்டது. பின், மத்தத்தியா தனது வயதான காலத்தில் தனது இளைய மகனாகிய யூதா மக்க பேயுவைப் படைத்தலைவனாக்கி, இதே புரட்சியை முன்னின்று வழிநடத்த வேண்டு கோள் விடுக்கின்றார் (*1 மக் 2:66*). மக்கபேயர்களால் தொடங்கப்பட்ட இந்தப் புரட்சியை அடக்குவதற்காக அரசனால் அனுப்பப்பட்ட சிறிய சிறிய படைகளை யெல்லாம் யூதா தாக்கி வெற்றி பெறுகின் றார். அப்பொல்லோனியு என்பவரைத் தோற்கடித்துக் கொலை செய்கின்றார் (*1 மக் 3:10-12*). மேலும், செரோன் (*3:13-26*), கோரிக்கியா (*1 மக் 3:38-4:25*), லீசியா (*4:28-35*) போன்றவர்களையும் போரில் தோற்கடித்துக் கொலை செய்கின்றார். இவ் வாறு யூதாசு மக்கபேயு அடைந்த வெற்றி களின் பயனாக அவரால் கி.மு. 165-இல் எருசலேம் ஆலயத்தைத் தூய்மைப்படுத்தி அபிடேகம் பண்ண முடிந்தது (*4:36-60*). உடனே புறவினத்தார்கள் கோபம் கொண்டு தங்களைச் சுற்றி வாழ்ந்த யூதமக்களை அழித்தொழிக்க திட்டம் தீட்டினர். இத னால் யூதா இதுமேயர்களுக்கும் (*5:1-8,65*) கிலயாதில் திமொத்தேயுவுக்கும் எதிராகப் போர் புரிந்து பெரிய சேதங்களை ஏற்படுத் தினார் (*5:24-44*). கிலயாதில் யூதர்களின் நிலைமை மிகவும் மோசமானதாக இருந்த

தால் அவர்களனைவரையும் யூதா யூதேயா விற்கு அழைத்துச் சென்றார் (*5:45-54*). மேலும், அவர் பெலிஸ்தியாவின் நகரங் களையும் தாக்கினார் (*1 :66-68*).

ஐந்தாம் அந்தியோக்கு மன்னனின் அர சவை அதிகாரியும் படைத்தலைவனுமாகிய லீசியா வலிமைமிக்க படைகளையும், பல் லாயிரக்கணக்கான போர் வீரர்களையும் அனுப்பி யூதா மக்கபேயுவின் படைக்கு எதிராகப் போர்புரிந்து, இறுதியில் யூதாவைப் பெத்சூர் என்ற இடத்தில் தோற்கடித்தான் (*6:28-47*). இருப்பினும் அந்தியோக்கு மன் னன் தான் அடைந்த வெற்றியின் மமதை யில் இருந்துவிடாமல் இருக்க தெமேத்தி ரியு என்பவன் அத்தியோக்குவையும் லீசி யாவையும் கொன்றுவிட்டு கி.மு. 162-இல் அரியணை ஏறினான். இவர் அரசரான பின் யூதா செய்த வீரச் செயல்களைக் கேட்டு, அவரை முறியடிக்க நிக்கானோர் என்ப வனை அனுப்பினார். யூதா அவனைத் தோற்கடித்துக் கொன்றுவிட்டார் (*7:32; 39-80*). பின் உரோமையர்களோடு யூதா உடன்படிக்கை செய்துகொண்டார். ஆனால், இது பின்வந்த நிகழ்ச்சிகளைப் பாதிக்கவில்லை (*1 மக் 8*). ஆனால், தன்னால் அனுப்பப்பட்ட நிக்கானோர் யூதா வால் கொலை செய்யப்பட்டுவிட்டான் என்பதை அறிந்த தெமேத்திரியு பாக்கீதின் தலைமையின் கீழ் வலிமைமிக்க படை களை அனுப்பி யூதாவை எதிர்த்துப் போரி டச் செய்கின்றான். இந்தப் போரில் யூதா தோற்கடிக்கப்பட்டு உயிர் துறக்கின்றார் (*9:1-21*).

காண்க. மக்கபேயர் கிளர்ச்சி.

**யூதாவின் பாலைவனம்** (JUDAH, WILDERNESS OF)

பழைய ஏற்பாட்டு வாசகங்களின் அடிப் படையில், பாலஸ்தீனத்தின் தெற்கில் நெகேபு பகுதியில் இந்த யூதேயா பாலை வனப் பகுதி அமைந்துள்ளது; சாக்கடலின் மேற்குக் கரை வரை விரிந்திருக்கிறது. திருமுழுக்கு யோவான் யூதேயா பாலை வனத்தில் போதிக்கத் தொடங்கினார் என்று மத் *3:1* சொல்லுகிறது. இதற்கு இணையான மாற் *1:4*; லூக் *3:2*-இல் இப்பகுதி வெறு மனே ''பாலைவனம்'' என்று குறிப்பிடப் படுகிறது. வாசகங்களின் சூழ்நிலை, இப் பகுதி, யோர்தான் பள்ளத்தாக்கில் சாக்கட லின் வடமுனையில் அமைந்திருக்கலாம் என்று சுட்டுகிறது.

**யூதாவின் மலைப்பகுதி** (JUDAH, HILL COUNTRY OF)

பாலஸ்தீனத்தில் உள்ள ஒரு மாவட்டம். எப்பிராயிம் மலைப்பகுதிக்குத் தெற்கில் உள்ள மத்திய மலைப் பகுதி. கிழக்கில் யூதேயா பாலைவனத்தையும் மேற்கில் செப்பேலாவையும் எல்லையாகக் கொண் டது (யோசு *11:21; 20:7; 21:11*; 2 நாள் *21:11; 27:4*). இந்த மாவட்டத்தின் பரப்பைப் பற்றி பழைய ஏற்பாடு குறிப்பிடவில்லை. எபிரோன் இந்த இடத்தில் தான் இருந்தது (யோசு *20:7; 21:11*). இது யோசு *15:48*; எரே *32:44; 33:13*-இல் வெறுமனே மலைப் பகுதி என்று குறிப்பிடப்பட்டாலும்; இம் மாவட்டத்தில் பல நகரங்கள் இருந்தன என்பதை இவ்வாசகங்கள் தெளிவுபடுத்து கின்றன.

அனேகமாக லூக் 1·65-இல் சொல்லப் பட்டிருக்கின்ற 'யூதேயா மலை நாடு' இந்த இடமாகத்தான் இருக்க வேண்டும்.

**யூதித்து** (JUDITH - யூதப்பெண்)

1. ஏசாவின் மனைவிகளுள் ஒருத்தி. இத் தியன் பெயேரியின் மகள் (ஆதி *26:34*). சிலரது கருத்துப்படி இவளும் ஒகோலி பாமாவும் ஒரே ஆள் ஆவர்.

**2.** யூதித்து நூலின் முக்கிய கதைத் தலைவி; மெராரியின் வழித்தோன்றலும் மனாசேயின் விதவையும் ஆவாள் (ஆதி *46:11*; யாத் *6:16:19*). அழகானவள், செல்வ மிக்கவள், பக்தியுள்ளவள் என்று விவரிக் கப்படுகிறாள். அவளுடை கவர்ச்சியும் துணிவும் நெபுகத்னேசரின் படைகளிட மிருந்து எபிரேயர்களுக்கு விடுதலை தந் தன. படையெடுத்து வந்த தளபதியாகிய ஒலபெரினேயால் விருந்துக்கு அழைக்கப் பட்டு அவன் குடிபோதையில் இருந்த

போது, அவனைக் கொன்று, எபிரேயர்களுக்கும் எருசலேமுக்கும் விடுதலை அளித்தாள்.

**யூதித்து நூல்** JUDITH, BOOK OF)

*1.* **முன்னுரை:-** இது துணைத் திருமுறைப் பட்டியலைச் சேர்ந்த நூலாகும். இந்நூல் மிட்ராசு முறையிலும் வெளிப்பாட்டு இலக்கிய முறையிலும் விளக்கம் பெறக் கூடியதாகும். இது பெத்தூலியாவின் யூதித்து என்ற வீராங்கனையின் தீரச் செயல்களைக் கூறுகிறது.

*2.* **பெயர்:-** அ) இப்பெயரில் ஏசாவின் மனைவியருள் ஒருத்தி இருக்கிறாள். இவளும், ஏசாவின் மற்றொரு மனைவியான பாசமத்தும், தங்களது மாமனார் மாமியாருக்கு எவ்வளவு தொந்தரவு கொடுத்தார்கள் என்றால், ஆதியாகம ஆசிரியர் ''அவர்கள் இருவரும் ஏற்கெனவே ஈசாக்கையும், ரபேக்காவையும் மனம் நோகச் செய்திருந்தனர்'' என்று கூறுகிறார் (ஆதி *26:34-35*).

ஆ) ஆனால் இவர்களுக்கு நேர் மாறாக அமைந்திருக்கிறாள் இந்நூலின் கதைத் தலைவி. இவள் செல்வமிக்க விதவை. இவள் யூதாவின் மேல் படையெடுத்த ஒலபெரினே என்ற படைத் தலைவனது தலையைவெட்டி, தனது மக்களுக்கு விடுதலை அளித்தாள். இவள் லேவியின் மக்களுள் ஒருவரான மெராரியின் தலைமுறைகளில் வந்தவள் (ஆதி *46:11*; யாத் *6:16.19*). யூதித்து என்ற பெயருக்கு ''யூதப் பெண்'' என்ற பொருள் கொடுக்கலாம். பெண்களில் பக்தி மிகுந்த ஓர் எடுத்துக்காட்டான பெண்ணின் கதையைக் கூறும் நூலுக்குப் பொருத்தமானதே யூதித்து என்ற பெயர். இறைவனது வலிமையில் நம்பிக்கை வைத்து அவருக்குச் சரியான தொண்டு செய்தால், எவ்வளவு வல்லமை மிக்க உலக ஆற்றல்களையும் வெற்றி கொள்ளலாம் என்று எடுத்துக் கூறுகிறது இந்நூல்.

*3.* **திட்டம்:-** கதை தானாகவே இரு தெளிவான பகுதிகளாகப் பிரிகிறது.

I. நெபுகத்னேசர், ஒலபெரினே ஆகியோரின் வீரச் செயல்கள் (*1:1-7:32*).

அ) *1:1-12:* அர்ப்பகசாதுமேல் நெபுகத்னேசரின் வெற்றி.

ஆ) *2:1-3:15:* மேற்கு நாடுகள் மேல் ஒலபெரினே படையெடுத்தல்.

இ) *4:1-7-32:* பெத்தூலியாவிலுள்ள யூதர்களின் எதிர்பார்ப்பும் நெருக்கடி நிலையும்.

II. யூதித்து இஸ்ராயேலர்களுக்கு விடுதலை அளித்தலும் போற்றுரைப் பாடலும் (*8:1-16:25*).

அ) *8:1-34:* யூதித்தின் மேன்மையும் அவள் யூதத் தலைவர்களைக் கடிந்து கொள்ளுதலும்.

ஆ) *9:1-19:* யூதித்தின் மன்றாட்டு.

இ) *10:1-13:11:* யூதித்து ஒலபெரினேயின் பாசறைக்குச் சென்று அவனைக் கொலை செய்தல்.

ஈ) *13:12-15:15:* யூதித்தின் வெற்றியும், அசீரியர்கள் தோல்வியும்.

உ) *16:1-31:* யூதித்தின் வெற்றிப் போற்றுரைப் பாடல்.

**4. பொருளடக்கச் சுருக்கமும், குறிப்புகளும்:** I. கதைக்கு மேடை அமைக்கப்படுகிறது. இஸ்ராயேலர்களைத் தாக்க இருக்கும் அசீரியர்களின் ஆதிக்கம், ஆற்றல், வெற்றிகள் முதலியவை எடுத்துக் கூறப்படுகின்றன.

அதி. *1:-* பின்னணியில் அசீரிய மன்னன் நெபுகத்னேசரின் மாபெரும் உருவம் அச்சம் தரும் விதத்தில் தோன்றுகிறது. அவனுக்கு நிகரான மேதியா மன்னன் அர்ப்பகசாது, எக்பத்தான் என்னும் நகரை நம்பத்தகாத அளவுகளையுடைய கோட்டை கொத்தளங்களோடு அமைத்து, பெருமை பாராட்டிக் கொள்கிறான். இவனுக்கு எதிராகத் தன்னோடு சேர்ந்து போர்செய்ய, அசீரிய மன்னன் நெபுகத்னேசர் ஏலாம் மற்றும் பாரசீகம் தொடங்கி எகிப்து மற்றும் எத்தியோப்பியா வரையிலுள்ள மேற்கு நாடுக

ளுக்கு அழைப்பு விடுக்கிறான். அவை யாவும் அவனது அழைப்பை ஏளனம் செய்து ஏற்க மறுக்கின்றன. அவன் கிழக்கு நாடுகளின் துணைகொண்டு எக்பத்தானை வென்று அழிக்கிறான். அந்த வெற்றியை அந்த இடத்திலேயே நூற்று இருபது நாட்களுக்கு அவனும் அவன் படையும் கொண்டாடி மகிழ்ந்தனர்.

அதி. 2-3:- அவ்வெற்றிக்குப்பின் ஒரு கடவுளுக்குரிய ஆடம்பரத் தனிமையில் நெபுகத்னேசர் வாழ ஆரம்பிக்கிறான் (3:8). மன்னனது அழைப்பை ஏற்க மறுத்த மேற்கு நாடுகளைப் பழிவாங்கும் பொறுப்பை அவனது படைத்தலைவன் ஓலபெரினே ஏற்கிறான். நினிவே அருகில் பெரும்படை ஒன்று ஆற்றலோடு முன்னேறுகிறது. ஒரே அதிரடித்தாக்குதலில் இப்படை மேற்குக் கடலையும் அயோனியாவின் கடற்கரையான யாபேத்தின் எல்லையையும் அடைகிறது. திடீரென்று தெற்கு நோக்கிச் செல்லத் தீர்மானித்து சீரியா, தமஸ்கு வரையிலுள்ள பகுதிகளை அழித்து, தீர் முதல் காசா வரையிலுள்ள கடற்கரை முழுவதையும் சரண் அடையக் கட்டாயப் படுத்தியது. ஓலபெரினே நிகழ்த்திய அழிவைக் கண்டு அஞ்சிய மக்கள் தாமாகவே அவனுக்கு அடிபணிந்தனர். பின் எசுதிரலோன் சமவெளியில் சமாரியாவின் மலைகளைக் கர்மேல் மலையோடு இணைக்கும் மலைமுகட்டைக் கடந்து கடற்கரை வழியை ஓலபெரினே அடைகிறான். அச்சமவெளியில் படைகளை மீண்டும் ஒன்று கூட்டும் பொருட்டு ஒரு மாதம் தங்குகிறான் (3:9-10).

படைகள் புறப்பட்டு எருசலேமுக்குச் செல்லும் வழியைப் பாதுகாக்கும் மலைகளின் அடிவாரத்தை அடைந்தன. இதை அறிந்து எருசலேம் கலங்கியது. இஸ்ராயேல் ஒரு சிறிய மக்களினமாகும். வெற்றி மேல் வெற்றிகொள்ளும் ஒரு பெரும் படைக்குமுன் இஸ்ராயேலின் அவல நிலையை வாசகர் கண்டுணரக் கதை சொல்பவர் ஒரு மாதகாலம் இடைவெளி அளிக்கிறார் எனலாம் (4:1-3). பெரிய குரு யோயாக்கிம் மலைப்பாதைகளையும், கணவாய்களையும் கைப்பற்றிக் காக்கும்படி பெத்தூலியா, பெத்தோமசுத்தயிம் நகரங்களில் வாழ்ந்த மக்களுக்குக் கட்டளையிட்டார். இதற்கிடையில் தீயவர்களின் கையில் இஸ்ராயேலரைக் கைவிட்டு விடாதவாறு இறைவனை மன்றாட பொதுச் செபம் கட்டளையிடப்படுகிறது. யூதேயா முழுவதும் மக்களனைவரும் மயிராடை உடுத்தி, நோன்பிருந்து இறைவனை மன்றாடினர். ஆண்டவரின் பீடத்தையும் மயிராடையால் மூடினர்.

அதி. 5-6:- இச்சிறிய எதிர்ப்பைக் கண்டு ஓலபெரினே கோபாவேசம் கொள்கிறான். இம்மக்களையும் இப்பகுதியின் தன்மையையும் அறியும்பொருட்டு மோவாபு மக்கள் தலைவர்களையும், அம்மோனியாப் படைத்தலைவர்களையும் அழைத்து அவன் ஆலோசனை நடத்துகிறான். அப்போது அம்மோனியர்களுக்கெல்லாம் தலைவரான அக்கியோர் இஸ்ராயேலைப் பிற மக்களிடமிருந்து எது வேறுபடுத்துகிறது என்று விரிவாக எடுத்துக் கூறுகிறார். இஸ்ராயேல் மக்கள் தங்கள் இறைவனுக்குப் பிரமாணிக்கமாய் இருக்கும்வரை அவர்களை யாரும் வெல்ல முடியாது என்று அவர்கள் வரலாற்றிலிருந்து எடுத்துக் காட்டுகிறார். ஓலபெரினேயின் அவை முழுவதும் அவரை நகைத்து ஏளனம் செய்கிறது. ''நெபுகத்னேசரை அன்றி வேறு கடவுள் இல்லை'' என்று ஓலபெரினே அறிக்கையிடுகிறான் (6:2). வெல்லமுடியாத மக்களின் விதியைப் பகிர்ந்து கொள்ளட்டும் என்று கூறி அக்கியோரை இஸ்ராயேலரிடம் அனுப்பிவிடுகிறான். அக்கியோர், பெத்தூலியா நகருக்குள் அழைத்துச் செல்லப்படுகிறார். அங்கு ஓலபெரினேயின் திட்டத்தையும் அகந்தையையும் எடுத்துக் கூறுகிறார். பெத்தூலியா மக்களுக்கும் வாசகர்களுக்கும் அக்கியோரின் தூதுப்பொருள் இல்லாமல் இல்லை. போரின் குறிக்கோள் தெளிவாக்கப் படுகிறது. ஒருபுறம் நெபுகத்னேசரும், மறுபுறம் இறைவனும் பிரசன்னமாகின்றனர். இதில் எசே 38-39-இல் வருவது போன்ற

வெளிப்பாட்டுப் பண்பைச் சிலர் காண்கின்றனர்.

அதி. 7:- இறுதியாக ஓலபெரினே தனது தாக்குதலைத் தொடங்குகிறான் (7:1-3). பெத்தூலியா நகரை முற்றுகையிடுகிறான். நாட்டை அறிந்த மோவாபு அம்மோனியாக் கூட்டாளிகள் ஆலோசனைப்படி, மும்முரமாகத் தாக்கும் இறுதிக் கட்டத்தைத் தள்ளிப் போடுகிறான். நகரைச் சுற்றி வருகையில் நகருக்குத் தண்ணீர் கொடுத்து வந்த ஊற்றைக் கண்டுபிடித்து, தண்ணீர் கொண்டுவரும் கால்வாயை அடைத்துவிடுகிறான். இனி முற்றுகையிடப்பட்ட நகருக்குள் உள்ள மக்கள் சரண் அடைய வேண்டும் அல்லது தாகத்தால் மடியவேண்டும். நகரத்துக்குள் தலைவர்கள் இதைத் தாக்குப்பிடிக்கத் தயாராகின்றனர். ஆனால், பொது மக்கள் பசி தாகத்தால் மடிவதைவிட அடிமைத்தனத்தில் வாழ்வதைத் தேர்ந்தெடுத்தனர். ஊசியா நகரத் தலைவனான ஊசியா பெரும் முயற்சி செய்து, இதை ஐந்து நாட்களுக்குத் தள்ளிப்போடச் செய்கிறார். இறைவன் தமது மக்கள் சார்பில் தமது வல்லமையைக் காட்டமாட்டார் என்று யார் சொல்லக்கூடும்! எக்பத்தானை அழிக்க நெபுகத்னேசர் ஐந்து ஆண்டுகள் எடுத்துக் கொண்டான். அவனது வல்லமை மிக்க படையைவெல்ல இறைவனுக்கு ஐந்தே நாட்கள்தான் தரப்பட்டன.

II. இவ்வாறு அமைக்கப்பட்ட நாடக மேடையில் இறுதிக் காட்சி நிறைவேறுகிறது.

அதி. 8:- இக்கட்டத்தில் கதைத் தலைவி யூதித்து காட்சியில் தோன்றுகிறாள். அவளது கைம்மை நிலையும், புனித வாழ்வும் மேன்மையும் விவரிக்கப்படுகின்றன (8:1-8). அவள் நகரத்துத் தலைவர்களை அழைத்து, அவர்கள் இறைவனுக்குக் கெடு வைத்து அவரை ஒரு மனிதனாக நடத்தியதற்காகக் கடிந்துகொள்கிறாள். அவர் தமது மக்களை மீட்கவோ தண்டிக்கவோ விரும்பினாலும் வரையில்லா நம்பிக்கைக்கு உரியவராவார். நாட்டின் எல்லையையும் நகரத்தையும் பாதுகாக்க தங்களைப் பலியிடுவதே அவர்களுக்குரிய கடமையாகும் என்பதை நினைவுபடுத்துகிறாள். தலைவன் ஊசியா, அவளது புனிதத்தையும் சொற்களையும் ஏற்று, மழைபெய்து நீரால் குளத்தை நிரப்ப இறைவனிடம் வேண்டுமாறு யூதித்தைக் கேட்கிறார். அருஞ்செயலை எதிர்பார்த்து வெறுமனே இருப்பதற்குப் பதிலாக அவளும் அவளது பணிப்பெண்ணும் நகருக்கு வெளியே செல்ல அனுமதி கேட்கிறாள். ஐந்து நாட்கள் முடியும் முன்பே, ஒரு பெண் கையால் இறைவன் என்ற செய்ய முடியும் என்று அவர்கள் காண்பார்கள் (8:9-34).

அதி. 9:- இறைவனது கரமே எல்லாவற்றையும் செய்கிறது. ஆகவே, யூதித்து செயல்படுமுன் தன் தந்தை சிமியோனின் இறைவனைப் பார்த்து உருக்கமாக மன்றாடுகிறாள். இதே மலையில் குலத் தலைவரான யாக்கோபுவினுடைய மகன் சிமியோனின் தங்கையைக் கற்பழித்தவர்களை அக்காலக் குலத் தலைவர்கள் அடித்துக் கொன்று பழிதீர்த்தனர். இப்போது இஸ்ராயேலின் மக்களை மாசுபடுத்தி ஒருவன் இறை நிந்தையாகச் செயல்படுகிறான். இத்தீயவனை வசியம் செய்து அழிக்க இறைவன் தம் அடியாருக்கு உதவி செய்ய வேண்டும் என்று மன்றாடுகிறாள்.

அதி. 9-13:- பின்பு அவசரமின்றிச் செயல்படத் தொடங்குகிறாள். விண்ணிலிருந்து வரும் மின்னல் இறைவனது நீதித் தீர்ப்புகளை இங்கே செயல்படுத்துவதில்லை. ஆனால், அவை மனிதச் செயல்களின் சாதாரண விளைவாகக் காட்டப்படுகின்றன. யூதித்து சட்டச் சடங்குகளிலும் பெண் கவர்ச்சிக்குரிய முறைகளிலும் ஈடுபடுகிறாள். பேரழகு மிக்கவளாக பகைவன்முன் செல்ல முனைகிறாள். புறக்காவல் முதல் தளபதியின் கூடாரம்வரை அவளது அழகு வழி திறந்து விடுகிறது. தனது மக்களைத் தவறான வழியில் இட்டுச் செல்ல முனைபவனை, யூதித்து தனது நயமான பேச்சால் தவறான வழியில் இட்டுச் செல்கிறாள். ஆனால் (புறவினத்தாரிடையே இருந்த

போதும் இறைவனுக்குப் பிரமாணிக்கமாய் இருக்கிறாள். ஒவ்வொரு இரவும், அனுமதி பெற்று, பாளையத்துக்கு வெளியேயிருந்த ஓடைக்குச் சென்று சடங்குச்சுத்தி செய்த பின், இறைவனைத் தனக்கு வழிகாட்டு மாறு தூய உள்ளத்துடன் மன்றாடுகிறாள். புறவினத்தாரின் உணவை அவள் தொட்ட தில்லை. தன்னோடு கொண்டு வந்திருந்த பொருட்களைக் கொண்டு பணிப்பெண் தயாரித்த உணவையே உண்டாள். காத் திருந்த மூன்று நாட்கள் இவ்வாறு கடந்து போயின. இறுதியாக நான்காம் நாள் தூண்டில் போடப்படுகிறது. இந்த யூதப் பெண் தன்னைக் கட்டுப்படுத்தியதால் தான் அவளை ஒன்றும் செய்யாததை உணர்ந்து ஓலபெரினே வெட்கப்படுகிறான். ஆனால், அவள்பால் மோகவெறி கொண்டிருந்தான். அவன் அவளை ஒரு விருந்துக்கு அழைக்க, அவளும் எப்போதும்போல் அமைதியாகச் செல்கிறாள். குடித்து மயங்கிய முரட னோடு யூதித்து தனித்து விடப்படுகிறாள். ஓலபெரினே குடிபோதையில் தன்படுக்கை யில் உறங்கிக் கொண்டிருந்தான். யூதித்து மன உறுதிக்காக தன் இறைவனிடம் மன்றாடியபின், அருகில் தூணில் தொங்கிக் கொண்டிருந்த வாளை எடுத்து, இருமுறை அவனது கழுத்தை வெட்டி தலையைக் கொய்து பணிப்பெண்ணிடம் கொடுத்துத் தன் பையினுள் வைத்துக் கொள்ளச் செய்கி றாள். பின்பு வழக்கம்போல் பாளையத் துக்கு வெளியே சென்று, தளபதியின் தலையோடு நேரே பெத்தூலியா நகருக்குச் செல்கிறாள் *(13:1-10)*.

அதி. *13:1-16:25:-* பெத்தூலிய மக்கள் யூதித்து திரும்பி வருவாள் என்று எதிர் பார்க்கவில்லை. அவளது செயல் எல்லாரையும் வியப்பில் ஆழ்த்துகிறது. அந்த இரவு நன்றி மகிழ்ச்சியில் முடிகிறது. ஊசியா இந்தத் துணிவும் ஞானமும் மிக்க பெண்ணை ஆசீர்வதிக்கிறார். அவள் வழி யாகத் தங்களுக்கு மீட்பளித்த இறை வனைப் போற்றுகிறார். நடந்ததையெல் லாம் அறிந்து வியப்புற்ற அக்கியோர் இஸ்ரோயேலின் இறைவனில் விசுவாச அறிக்கையிடுகிறார். அங்கேயே விருத்தசேத னம் செய்யப்படுகிறார். ஐந்தாம் நாள் விடிந்தது. ஓலபெரினேயின் தலை பெத்தூ லியா நகர் மதில்மேல் கட்டித் தொங்க விடப்பட்டது. யூத வீரர்கள் போர் செய்யச் சென்றனர். தளபதியை எழுப்பச் சென்ற அசீரியர்கள் அவன் கொல்லப்பட்டுக் கிடப் பதை அறிந்து, அச்சமிகுதியால் கதிகலங்கித் தலைதப்பினால் போதும் என்று தப்பி யோடினர். யூதர்கள் அவர்களை விரட்டிச் சென்று, அகப்பட்டவர்களையெல்லாம் கொன்று தீர்த்தனர். அசீரியர்களின் பொருட் களைக் கொள்ளையிட்டுக் கொண்டு வந்தனர். எருசலேமிலிருந்து பொதுச் சங்கத் தின் பெரிய குரு யோயாக்கிமே வந்து ''எருசலேமின் மகிமை நீ! இஸ்ராயேலின் மகிழ்ச்சி நீ! நம் மக்களின் பெருமையும் நீயே! ஏனென்றால், நீ செய்தது தீரச் செயல்....'' என்று யூதித்தைப் பாராட்டு கிறார். புதிய தெபோராவான யூதித்து வெற்றிப் பாடல் பாடுகிறாள். அதுவே நன்றிப் புகழ்ப்பாடலாகவும் மாறுகிறது. பின்பு, பகைவரின் கொள்ளைப் பொருட் களை ஆலயத்தில் ஒப்புக் கொடுக்க மக்கள் படை எருசலேமை நோக்கிச் செல்கிறது.

யூதித்து மக்களால் போற்றப்பட்டவளாக நீண்ட காலம் வாழ்கிறாள். அவளது கைம்மை நிலையை நீக்க முன்வந்தவர் களை மறுத்துவிடுகிறாள். அவளது மரணத் துக்குப் பின்னும் பல ஆண்டுகளுக்கு இஸ்ராயேல் அமைதியாக வாழ்ந்தது.

**5. யூதித்து நூல் ஒரு வரலாற்று நூலா?:** இந்நூல் வரலாற்றுத் தன்மையுடையது என்று வெகுசிலரே இப்போது கூறுவர். கதையின் உண்மைத்தன்மையில்லாத பின் னணி, ஆசிரியர் வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறவிரும்பினாரா என்று பெரிதும் ஐயம் எழுப்புகிறது. நெபுகத்னேசர் அசீரிய மன்னனாக நினிவேயில் ஆண்டதாகக் கூறப் படுகிறது *(1:1)*. மேலும் இவன், யூதர்கள் நாடுகடத்தப்பட்டுத் திரும்பி வந்து ஆலயம் கட்டப்பட்ட காலத்திற்குச் சம காலத்தவ னாகவும் ஆக்கப்படுகிறான் *(4:3)*. இவை யாவும் வரலாற்றுக்குப் புறம்பானதாகும்.

ஏனெனில், இவன் அசீரியன் அல்லன்; பாபிலோனிய மன்னன் ஆவான். அசீரியப் பேரரசின் ஆதிக்கமும் நினிவேயும் இவனது தந்தை நெபோபோலசரால் கி.மு. 612-இல் அழிக்கப்பட்டு ஏழு வருடங்களுக்குப்பின் 605-இல் இவன் ஆட்சி செய்யத் தொடங்கினான்; 562-வரை பாபிலோனில் ஆட்சி செய்தான். இவன்தான் எருசலேமை அழித்தான். இவனது சந்ததியின் ஆட்சியைப் பாரசீக மன்னன் சைரசு நசுக்கினான். 538-இல்தான் நாடுகடத்தல் முடிந்தது. தாரியுவின் காலத்தில்தான் 515-இல் ஆலயம் மீண்டும் கட்டப்பட்டது.

மேதிய நாட்டு அரசனான அர்ப்பகசாது வரலாற்றில் அறியப்படாத ஒருவனாவான். இவனோடு நெபுகத்னேசர் போரிட்டு வென்று இவனது தலைநகரான எக்பத்தானை அழித்தான் என்பது வரலாற்றைச் சேர்ந்த நிகழ்ச்சியன்று. ஓலபெரினே பாபிலோனியப் பெயரன்று, பாரசீகப் பெயராகும். இவன் நெபுகத்னேசர் இறந்த 200 ஆண்டுகளுக்குப்பின் மூன்றாம் அர்த்தக்சஸ்தா என்ற பாரசீக மன்னனது காலத்தில் (358-337) வாழ்ந்தவன். மேலும் யூதித்து நூல் கூறுவது போல் ஓலபெரினே அவல முடிவெய்தவில்லை. எகிப்தியப் போரில் வெற்றிகொண்டு தன் நாடு திரும்பி யாவராலும் மதிக்கப்பட்டான். கதை ஆசிரியர் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த நெபுகத்னேசரோடு நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஓலபெரினேயை இணைக்கிறார். இப்படையெடுப்பில் முக்கிய இடம் வகிப்பதாகக் கூறப்படும் பெத்தூலியா நகர் பற்றி ஒன்றும் அறிவதற்கில்லை. இவ்விடத்திற்கு எந்தப் பாலஸ்தீன ஊரையும் அடையாளம் காட்ட முடியாது. இது முழுவதும் கற்பனைப் படைப்பாக இருக்கலாம். இவற்றையெல்லாம் விட, பெத்தூலியா சமாரியாப் பகுதியில் இருந்தது என்பது நம்ப முடியாததாகும். அங்குதான் நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய யூதர்களின் மிகப் பெரிய எதிரிகள் வாழ்ந்தனர். பாரசீகர் காலம் முதல் கி.மு. 108-இல் யோவான் இரிக்கான் வெற்றி கொள்ளும் வரை எசுதிரலோன் சமவெளியை எதிர்கொண்ட இம்மலைப் பகுதி சமாரியர் கையில் இருந்தது. அங்குதான் அவர்கள் வாழ்ந்தனர்.

கதைத் தலைவியான யூதித்தும் விவிலிய வரலாற்றில் அறியப்படாத ஒருத்தியாவாள். யூதித்து என்ற பெயர் ஏசாவின் இத்திய மனைவியின் பெயராக மற்ற இடங்களில் காணப்படுகிறது (ஆதி 26:34). இப்படியிருக்க, ஓர் உத்தம யூதப் பெண்ணின் பெயராக இஃது இருந்திருக்கக் கூடுமா என்பது ஐயத்திற்குரியது. யூதப் பெண் என்று பொருள்படுவதாலோ, யூதாசு என்ற பெயரோடு கொண்டுள்ள ஒலியியைபாலோ இப்பெயர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கலாம். யூதாசு என்ற பெயர் ஒருவேளை மக்கபேயர் தலைவரைச் சுட்டலாம்.

நூலில் இஸ்ராயேலர் பெரிய குருவாலும் மூப்பர் சபையாலும் ஆளப்படுவதாகக் கூறப்படுகிறது. தாவீது மரபு சார்ந்த மன்னனது பெயரே காணப்படவில்லை. யூதி 8:18-இல் ''தங்கள் இறைவனைக் கைவிட்டு அன்னியக் கடவுள்களை வணங்கி வந்த நம் முன்னோரின் பாவ வழியை நாம் பின்பற்றியதில்லையே'' என்று யூதித்து கூறுகிறாள். இதை நெபுகத்னேசரின் காலத்தைப் பொருத்தமட்டும் புரிந்து கொள்வது கடினம்; ஏற்றுக் கொள்ளவும் முடியாது.

மேலும், வட சமாரியாவின் இட விவரங்களை ஆசிரியர் அறிந்திருப்பதாய்த் தெரியவில்லை. கி.மு. 351-350-இல் எகிப்துக்கு எதிராகவும், 345-இல் சீதோனுக்கு எதிராகவும், 344-43-இல் எகிப்துக்கு எதிராகவும் பாரசீக மன்னன் அர்த்தக்சஸ்தா செய்த படையெடுப்புகளோடு தொடர்புபடுத்தி இக்கதையை ஒரு வரலாற்று நிகழ்ச்சியாக அமைக்க ஆய்வாளர்கள் சிலர் முயன்றுள்ளனர். ஆனால், இப்படையெடுப்புகள் பாலஸ்தீனத்தைத் தொட்டன என்பதற்கு எந்த வரலாற்று ஏட்டுச் சான்றுமில்லை. ஏதோவொரு படையெடுப்பை வரலாற்றைப் பின்னணியாக வைத்துத் திட்டமிட்டுப் புனைந்துரைக்கப்பட்ட முழுவதும்

கற்பனையான புதினமாக இருக்கலாம் இந்நூல்.

இவ்வாறு வேறுபட்ட நிகழ்ச்சிகளுக்கு நெபுகத்னேசரைப் பொறுப்பாக்கி, ஒவ்வாத நிகழ்ச்சிகளையும் ஆட்களையும் மட்டு மீறிய முறையில் வரிசைப்படுத்துவதில் ஆசிரியர் பெரும் தவறு செய்திருக்கக் கூடுமா? இல்லையென்றே கூற வேண்டும். நவீன ஆய்வுகள் இந்நூலில் வரும் செய்தி களுக்குத் தடயம் கண்டுபிடிப்பதில் கடினப் பட்டாலும், எருசலேமின் வரலாற்றில் ஆசூர், நெபுகத்னேசர், பாரசீகர்கள் ஆகி யோரின் பங்கைப்பற்றி எந்த யூதனும் அறியாமல் இருந்ததில்லை. ஆசிரியர் பழைய ஏற்பாட்டை அறியாதவர் அல்லர். இவர் இஸ்ராயேல் வரலாற்றின் எந்தக் குறிப்பிட்ட காலத்திலிருந்தும் ஒதுங்கி நின்று, குறிப்பிட்ட நோக்கங்களுடன் விரும்பி பல நூற்றாண்டுகளிலிருந்து எடுக் கப்பட்ட கூறுகளை ஒன்று சேர்த்துக் காலம் சாராத கதையை உண்டாக்குகிறார் என்று கூறலாம். சான்றாக, நினிவேயைத் தலைநக ராகக் கொண்ட அசீரியர்கள் ஆதிக்கம் கி.மு. எட்டாம், ஏழாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்ததாகும். நெபுகத்னேசர் பாபிலோ னில் ஆட்சி செய்தான். மேதியர்கள் ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். பாரசீகர் களின் ஆதிக்கம் 540-இலிருந்து 330 வரை நீடித்தது. இவ்வாறு நான்கு பேரரசுகளைச் சேர்த்து நூலுக்குப் பின்னணி அமைக்கிறார் ஆசிரியர். பங்கெடுக்கும் ஆட்கள் ஒன்றும் அறியப்படாதவர்கள் அல்லது ஒரே காலத் தைச் சேர்ந்தவர்கள் அல்லர். இவற்றிலி ருந்து பல கூறுகளை எடுத்துப் பயன்படுத்தி ஆசிரியர் தமது கதையை எழுதுகிறார்.

நெபுகத்னேசர் எருசலேமின் எதிரிகளுக்கு ஒரு மாதிரிகையானவன். இதைவிட அகந்தை அடக்கப்பட வேண்டிய புறவினத் தாருக்கு ஒரு மாதிரியானவன். ஆசிரியர் உண்மை நிகழ்ச்சியிலிருந்து தொடங்கி னாரோ இல்லையோ, அதைப்பற்றியும் அதற்காகவும் அக்கறை கொள்ளவில்லை; மாறாக, அதன் அடையாளப் பொருளைப் பற்றியே அக்கறை கொள்கிறார். இடங்கள், ஆட்கள், நிகழ்ச்சிகள் பற்றிய துல்லியமான விவரிப்புகளைப் பற்றி ஆசிரியர் கவலைப் படவில்லை. ஆகவே, அவரை உந்தியதாகக் கருதப்படும் வரலாற்று நிகழ்ச்சியை மீண் டும் அமைக்கத்தேடுவது, ஆட்களையும் இடங்களையும் அடையாளம் காண முயல் வது ஆகியவை வீண் முயற்சியாகும். இவற்றால் எப்பயனும், தெளிவும் ஏற்படுவ தில்லை. ஏனெனில், ஆசிரியர் இஸ்ராயேல் வரலாற்றைச் சேர்ந்த ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியைப் பற்றிப் போதிக்கவில்லை. அவ்வரலாற்றின் பொதுப் பொருளையே- போதிக்க விரும்புகிறார். அதன் விளைவு களை எடுத்துக் கூறத் தெரிந்த கலைஞர் ஆவார். 8-ஆம் அதிகாரம்வரை கதைத் தலைவி யூதித்து தோன்றவில்லை. செயல் களை விவரிப்பதற்குப் போதிய அவகாசம் இருக்கிறது. முதல் ஏழு அதிகாரங்களும் நாடகத்திற்கு மேடை அமைக்கின்றன. பின், நூலின் முக்கிய நிகழ்ச்சி நடக்கவிருக் கும் இடத்தைச் சுற்றி நமது கவனத்தை நூல் மையங்கொள்ளச் செய்கிறது. அதே சமயம் இடங்கள் பற்றிய குறிப்புகள் நமது கவனத்தை ஒருங்கே குவிக்கின்றன. தீமை யின் சக்திகள் இறைவனது சிறிய மக்க ளினத்தைச் சுற்றிச் சூழ்கின்றன. இதன் கொடுமையை உணர, முடிவில் வரவிருக் கும் விடுவிப்பை மனதில் கொள்ளாதிருத் தல் நன்று. இவையெல்லாம் ஆசிரியர் ஒரு வரலாற்றை எழுத விரும்பவில்லை என்று காட்டுகின்றன.

இந்நிலையில் இரண்டு கருதுகோள் களுக்கு இடமுண்டு. ஒன்று புனைபெயர்க ளுக்குப்பின் உண்மை நிகழ்ச்சியின் விவ ரிப்பு மறைந்திருக்கிறது. அதை நம்மால் இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. மற்றது மிகவும் வேறுபட்ட காலங்களைச் சேர்ந்த கூறுகளை எடுத்துத் தன் நோக்கத் திற்கு ஏற்றவாறு ஆசிரியர் ஒரு வரலாற்றுப் புதினத்தை எழுதுகிறார். இரண்டிலும், ஆசிரியர் காலவரையறையுடைய நிகழ்ச்சி யுரை எழுதவில்லை; வேறொன்றைக் கூற விரும்புவதாகச் சுட்டிக் காட்டுகிறார். இந் நூல் வரலாற்று நூல் இல்லை என்றால்,

எவ்வகை இலக்கியத்தைச் சேர்ந்தது? மிட்ராஷா? வெளிப்பாட்டு இலக்கியமா? இரண்டும் கலந்த வெளிப்பாட்டு மிட்ராசா?

**6. மிட்ராசு விளக்கம்:-** யூதித்து நூலை ஓர் அக்காதா மிட்ராசு நூல் என்று பொதுவாக ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்வர். இவ்வடிவம் ஏதாவது வரலாற்றுத் தோற்றம் உடைய கருவை அடிப்படையாகக் கொண்டு, போதக நோக்கத்திற்காகச் சுதந்தரமாகப் புனையப்பட்ட நிகழ்ச்சியுரையாகும். சான்றாக, தோபி நூலில் இறைவனின் அன்புமிக்க பராமரிப்பை இறை மக்கள் சார்ந்திருப்பதை ஆசிரியர் போதிக்கிறார். எஸ்தர் நூல் இறைவன் தமது மக்களைக் காப்பாற்றுகிறார், அவர்களது எதிரிகளால் அழியமாட்டார்கள் என்று எடுத்துக் கூறுகிறது. தானியேல் நூலின் மிட்ராசு பகுதிகள் (தானி 1-6. 13-14) மூலமாக நான்காம் அந்தியோக்கு எப்பிபான் யூதர்களைத் துன்பப்படுத்தியபோது, அக்கொடுமைகளுக்கிடையில் யூதர்களுக்கு இறைவனது பாதுகாப்பை உறுதி அளித்து, அவர்களின் விசுவாசத்தை உறுதிப்படுத்த பிற மதங்களின் சிறுபிள்ளைத்தனத்தின் மேல் யூத சமயம் கொண்டிருக்கும் மேன்மையைச் சுட்டிக்காட்டி, அவர்களை உற்சாகப்படுத்துவதும் ஊக்குவிப்பதும் ஆசிரியரது நோக்கமாகும்.

யூதித்து நூலை மிட்ராசு இலக்கியமாக விளக்குபவர்கள், இந்நூலின் நோக்கமும், எஸ்தர் நூலின் நோக்கமும் ஒன்றே என்பர். அதாவது, இறைவன் தமது மக்களை எப்போதும் பாதுகாக்கிறார். எதிர்ப்பு எவ்வளவு பெரிதாயினும், அவர் தமது மக்களின் எதிரிகளை ஒரு பெண் போன்ற பலவீனமான கருவியால் அழிக்கக்கூடும் என்று காட்டி இந்நூல் விசுவாசிகளுக்கு உறுதி அளிக்கிறது.

சாதாரணமாய் அக்காதா மிட்ராசில் இரு பண்புகள் உண்டு. அவை வரலாற்றுப் பின்னணியில் காணப்படும் ஒரே சீரான அமைப்பும், உண்மை போன்ற தோற்றமும் ஆகும். இவ்வாறு, தோபி, எஸ்தர் நூல்களில் ஒரே பேரரசின் பின்னணியில் விவரிக்கப்படும் தலத்து நிகழ்ச்சிகளுக்குள் ஆசிரியர்கள் தங்களையே வரையறை செய்து கொள்கின்றனர். கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் அசீரிய வரலாற்றுப் பின்னணியில் தோபி கதை நடித்துக் காட்டப்படுகிறது. கி.மு. 5-ஆம் நூற்றாண்டு பாரசீக வரலாற்றுப் பின்னணியில் எஸ்தர் கதை அரங்கேறுகிறது. தோபி நூலில் கதைத் தலைவர் ஒரு நாடு கடத்தப்பட்டவர் என்று காட்ட மட்டுமே வரலாற்றுப்பின்னணி பயன்படுகிறது. எஸ்தர் நூலில் பாரசீகப் பின்னணி கதையில் நெருங்கிய விதத்தில் ஈடுபடுத்தப்பட்டுள்ளது. கதையில் வரும் நிகழ்ச்சிகளும் பின்னணியோடு ஒன்றிணைக்கப்பட்டிருக்கின்றன. இரண்டு கதைகளிலும் உண்மையான வாழ்வோடு ஒத்துப்போகும் தோற்றம் அளிக்க உண்மையாகவே முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. சாதாரண வாழ்வில் நிகழ்வதுபோலவே காரியங்கள் நடக்கின்றன; ஆட்களும் நடந்து கொள்கின்றனர். சில விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றன. குறிப்பிட்ட இடங்கள் ஓரளவு சரியாக விவரிக்கப்படுகின்றன.

ஆனால் யூதித்து நூலுக்கு வரும்போது, கண்டதெல்லாம் சேர்க்கப்பட்டு வரலாற்றுப் பின்னணி குழப்பப்பட்டிருக்கிறது என்பதை ஏற்கெனவே பார்த்துள்ளோம். இந்நூல் அக்காதா மிட்ராசுக்குரிய ஒரே சீரான அமைப்பும் உண்மைபோன்ற தோற்றமும் கொண்டிருக்கவில்லை. இப்பண்புகளைக் கொண்டிராதிருத்தல் வெளிப்பாட்டு இலக்கியங்களில் காணப்படுவதாகும். மேலும், நூலில் வரும் காலக்கணிப்புக் குறிப்புகளும் நிகழ்ச்சி நடந்த குறிப்பிட்ட காலத்தையும் பின்னணியையும் துல்லியமாகக் கண்டுபிடிக்க ஏதுவாக இல்லை. சான்றாக, நூலில் வரும் முதல் காலக் குறிப்பு நினிவேயில் நெபுகத்னேசர் கி.மு. 592-இல் வாழ்ந்ததாகக் கூறுகிறது (1:5). ஆனால், இருபது ஆண்டுகளுக்கு முன்பே கி.மு. 612-இல் இந்நகரம் முழுவதும் அழிக்கப்பட்டுப் பாழடைந்த நிலையில் இருந்தது என்பது வரலாற்று உண்மை.

இரண்டாவது காலக்குறிப்பு எருசலேம் கைப்பற்றப்பட்டு ஆலயம் அழிக்கப்பட்ட ஆண்டான *587*-ஐக் குறிக்கிறது *(2:1)*. இப்படிக் குறிப்பிட்ட முறையில் காலக் கணிப்பைக் கொடுத்தாலும், நாற்பத்து ஐந்து வருடங்களுக்குப்பின் நடந்த நிகழ்ச்சி யான *539*-இல் நாடு கடத்தலிலிருந்து திரும்பி வந்த நிகழ்ச்சியைப் பற்றித் தெளி வாக ஆசிரியர் பேசுகிறார் *(5:23)*. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒலபெரினேயை, 6-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவளாகக் கருதப்படும் யூதித்தின் உடனடி எதிரியாகப் பயன்படுத்துவது காலக்குறிப்புக் குழப் பத்தை மேலோங்கச் செய்கிறது எனலாம். மேற்கூறியவற்றை எல்லாம் கருத்தில் கொள்ளும்போது இந்நூல் அக்காதா மிட் ராசு இலக்கிய வடிவிலிருந்து மிக நுட்பமா கப் பிரிந்து, கருத்திலும் அடையாளத்திலும் வெளிப்பாட்டு வடிவத்தை நெருங்குவ தாகத் தெரிகிறது; இரண்டு வடிவங்களுக் கும் இடைப்பட்ட அமைப்பாகத் தோன்று கிறது. ஆகவே இதை ஒரு வெளிப்பாட்டு மிட்ராசு இலக்கியம் என்று கூறலாம்.

**7. இந்நூல் ஒரு வெளிப்பாட்டு மிட்ராசு இலக்கியம்:** முக்கிய கருத்து, நோக்கம், அடையாளத்தன்மை ஆகியவற்றால் இஃது ஒரு வெளிப்பாட்டு நூலாகும்.

***அ) முக்கிய கருத்து:-*** வெளிப்பாட்டு இலக்கியத்தின் அடிப்படைக் கருத்து இறை வனுக்கு எதிரான சக்திகள்மேல் இறைவன் வெற்றி கொள்வதாகும். இந்த வெற்றி இன்றியமையாததாகும். எசே *38-39;* செக் *14;* யோவே *3-4*-இல் தெளிவில்லாமலும், தானி *7-12*-இல் ஓரளவு தெளிவில்லாமலும் இருக்கும் காலக்கூறு இன்றி யமையாததன்று.

யூதத்து நூலில், இறைவன் தமக்கு எதிரான சக்திகளின்மேல் கொள்ளும் வெற்றியே அடிப்படைக் கருத்தாகும். இதை நெபுகத்னேசரை இறைவனோடு நேர் எதிர்ப்புக் கொள்ளச் செய்து ஆசிரியர் காட்டுகிறார். ''பேரரசனும் மண்ணகம் முழுமைக்கும் ஆண்டவனுமானவன் இவ் வாறு பேசினான்'' [*2:5 (2:3)*] என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். ''ஒலபெரினே தான் வென்ற மக்களின் புனிதத் தலங்களை அழித்தான்; புனித மரங்களை வெட்டி னான்; அவர்கள் வழிபடும் தெய்வங்களை அழித்தான்; நெபுகத்னேசரை மட்டும் வணங்கும்படி அவர்களைக் கட்டாயப்படுத் தினான்; எல்லா மொழியினரும் நாட்டவ ரும் அவனை மட்டும் கடவுளாக ஏற்றுக் கொள்ளக் கட்டாயப்படுத்தினான்'' [*3:8 (3:13)*] என்று ஆசிரியர் கூறுகிறார். அதி. 5-இல் எல்லா நாடுகளும் எப்படி நெபுகத் னேசருக்கு அடிபணிந்தன என்று விவரித்த பின், ஆசிரியர் அம்மோனியர் தலைவனான அக்கியோரின் வழியாக, நெபுகத்னேசரைப் பிரதிநிதியாகக் கொண்டிருக்கும் இறைவ னுக்கு எதிரான சக்திகளுக்கும், மிகச்சிறிய யூதாவைப் பிரதிநிதியாகக் கொண்டிருக்கும் இறைவனது சக்திகளுக்கும் இடையே நடக்கவிருக்கும் போருக்குத் தளம் அமைக் கிறார். ''அவர்களுடைய இறைவனே அவர் களைப் பாதுகாப்பார்'' என்று அக்கியோர் ஒலபெரினேயை எச்சரிக்க *(5:25)*, ஒல பெரினே, ''நெபுகத்னேசரைத் தவிர எந்தக் கடவுள் இருக்கிறார்? அவர் தமது வல்லமையைக் காட்டி அவர்களை மண் ணகத்திலிருந்தே அழிப்பார். அவர்க ளுடைய இறைவன் அவர்களைக் காப்பாற் றமாட்டார்'' என்று பதில் கூறி [*6:2-3 (5:27.29)*], நெபுகத்னேசரை இறைவனுக்கு எதிராக நிறுத்திப் போராடவிடுகிறான்.

***ஆ) நோக்கம்:-*** மற்ற வெளிப்பாட்டு இலக்கியங்களில் காணப்படுவது போன்றே, மக்களை ஊக்கப்படுத்தி அவர்களது நம்பிக்கைக்குப் புத்துயிர் அளிப் பதுவே யூதித்து நூல் ஆசிரியரது நோக்கமா கும். இஃது அக்கியோர், யூதித்து ஆகியோ ரின் பேச்சுக்களிலும், ஒலபெரினே மேல் கொண்ட வெற்றியிலும், யூதித்தின் பாடலி லும் தெளிவாக உள்ளது. இறைவன் தமக்கு எதிரான சக்திகளை உறுதியாக அழிப்பார் என்ற நம்பிக்கையே வெளிப்பாட்டு இலக் கியத்தின் முக்கிய பண்பாகும். ஒலபெரி னேயை வீழ்த்தி, அவனோடு இறைவ

னுக்கு எதிரான பிறமதச் சக்திகளை அழிப்பதற்குப் புறப்படுமுன், யூதித்து செய்யும் மன்றாட்டின் முடிவுரை இந்த நம்பிக்கையையே எடுத்துக் கூறுகிறது. ''இதனால் உமது மக்களும் எல்லா இனத்தவரும் உம்மைத் தவிர வேறு பாதுகாப்பாளர் இல்லை என்று அறிந்துகொள்ளச் செய்யும்'' *(9:14)*.

***இ) அடையாளம்:-*** இந்நூலை ஒரு வெளிப்பாட்டு இலக்கியமாகக் கருதுவதற்கு முக்கியமான காரணம், இதில் காணப்படும் அடையாளத்தன்மை வெளிப்பாட்டு இலக்கியத்தின் அடிப்படை அடையாளத் தன்மையோடு ஒத்திருப்பதாகும். மூன்று கருத்துகளில் இந்த ஒப்புமை தெளிவாகிறது.

*1)* இஸ்ராயேலை அழித்து உலகெங்கும் ஆதிக்கம் செய்யும் நோக்கம் கொண்ட பெரும்படை. செக்கரியா, யோவேல் நூல்களில் இறைவனுக்கு எதிரான சக்திகள் அவரது நகரான எருசலேமை அழிக்க முயற்சிக்கும் நாடுகளின் படைகளால் மட்டும் எடுத்துக்காட்டப்படுகின்றன. எசேக்கியேலின் இறைவனுக்கு எதிரான சக்திகள் பெரும் படைகளால் எடுத்துக் காட்டப்படவில்லை. கோகு என்ற பெயருடைய ஓர் அடையாளத் தளபதியால் எடுத்துக் காட்டப்படுகின்றன. இவை யாவும் நெபுகத்னேசர் கனவில் கண்ட சிலையிலும் *(தானி 2)*, கடலிலிருந்து தோன்றும் நான்கு விலங்குகளிலும் *(தானி 7)* ஒன்றிணைக்கப்படுகின்றன. மேலும், இந்தப் பிறமதச் சக்திகளின் அடையாளத் தலைவர்கள் *தானி 1-4*-இல் நெபுகத்னேசரும், *தானி 7-12*-இல் இறைவனுக்கு எதிராக நிந்தை செய்யும் ''சிறு கொம்பான'' நான்காம் அந்தியோக்கும் ஆவார்.

யூதித்து நூலில் பெரும்படையும், பிறமதச் சக்திகளின் அடையாளத் தலைவனும், உலகப்பேரரசுகளின் கூட்டமும் ஒன்று சேர்ந்து இறைவனுக்கு எதிரான பிறமதச் சக்திகளின் கலப்பு அடையாளமாக நிற்கின்றன. ஆசிரியர் முதல் அதிகாரங்களிலேயே படையின் மிகுதியையும், அதன் நோக்கத்தையும் வலியுறுத்துகிறார் [*2:5 (2:5-7)*]. படையெடுப்பின் நோக்கம் *3:8 (3:13)*-இல் தெளிவாகக் கூறப்படுகிறத. பிறமதச் சக்திகளின் சாதனங்களும் குறிக்கோளும் எசேக்கியேலிலும் *(38-39)*, தானியேலிலும் *(2:7-12)*, யூதித்திலும் ஒரே தன்மையுடையனவாகும்.

***2) பிறமதச் சக்திகளின் அடையாளத் தலைவன்:-*** நெபுகத்னேசரை ஒரு தனி ஆளாகக் கருதாமல், பிறமதச் சக்திகளின் அடையாளத் தலைவனாக சித்திரிக்கிறார் ஆசிரியர். இதை எடுத்துக்கூறும்போது, அவன் அரசன் மற்றும் வெற்றி வீரன் என்ற முறையில் செய்த வீரதீரச் செயல்களை ஒதுக்கிவிடுகிறார். அவனுக்கு இருநூறு ஆண்டுகளுக்குப்பின் வாழ்ந்த ஓலபெரினேயோடு அவனை இணைத்து, அவனை அசீரியர்களது மன்னனாகவும், மேதியர்களை வென்றவனாகவும் பாரசீகப் படைகள் அவனுக்குப் பணிசெய்வதாகவும் விவரிக்கிறார். அவன் கி.மு. 587-இல் எருசலேமையும், ஆலயத்தையும் அழித்ததால் நாடு கடத்தப்பட்ட யூதர்களால் இறைவனது எதிரிகளில் எல்லாம் எடுத்துக் காட்டானவனாகக் கருதப்பட்டான். அவனைப் பிறமதச் சக்திகளின் அடையாளமாக்கியபோது வெளிப்பாட்டு இலக்கியத்தின் ஒரு முக்கிய மரபையே ஆசிரியர் பின்பற்றுகிறார் *(செக் 5:5-11; தானி 1-4; திருவெளி 17:3-18)*.

***3) உலகப் பேரரசுகளின் கூட்டம்:-*** இந்நூலை வெளிப்பாட்டு இலக்கியத் தொகுப்பில் சேர்க்க உதவும் மூன்றாவது கூறு இறைவனுக்கு எதிரான சக்திகளின் பருமனை அடையாளமாக எடுத்துக்காட்ட நான்கு பேரரசுகளை ஆசிரியர் பயன்படுத்தும் முறையாகும். இந்த அரசுகள் அசீரியா, பாபிலோன், மேதியா, பாரசீகம் என்ற வரிசையில் வருகின்றன. நான்கு என்ற எண் உலகமனைத்தையும் உள்ளடக்கும் பண்பைக் குறிப்பதால் அது பயன்படுத்தப்படுகிறது *(எசா 11:12; செக் 1:7; 6:5-8; மேலும் ஆதி 4:10; எரே 49:36; மாற் 13;27; திருவெளி 7:1)*. இவ்வாறு எருசலேமை

அழித்த பிறமதச் சக்திகளை அடையாள மாகக் குறிக்க ''நான்கு கொம்புகளை''ச் செக்கரியா பயன்படுத்துகிறார் (செக் 1:18-21). இதே கருத்தைத்தான் 2:7-இலும் காணலாம்.

மேற்கூறப்பட்ட மூன்று ஒப்புமைக் கூறு களும் ஒன்றிணைந்து இறைவனுக்கு எதி ரான பிறமதச் சக்திகளின் கலப்பு அடையா ளமாக அமைகின்றன. யூதித்து நூல் பாபி லோனிய மன்னனான நெபுகத்னேசரை அசீரிய மன்னனாகக் காட்டுவதும் அவன் மேதிய மன்னனான அர்ப்பக்சஸ்தாவை வென்று மேதியா நாட்டுத் தலைநகரமான எக்பத்தானைக் கைப்பற்றியதாக விவரிப் பதும் ஏன் என்று வாசகர்கள் வியக்கலாம். மேலும், புகழ்பெற்ற பாரசீகத் தளபதியைக் கொண்ட பெரும்படை பாபிலோனிய மன் னனுக்குப் பணி செய்தது என்று இந்நூல் கூறுவதைக் கண்டும் வியக்கலாம். தானி 2:7-ஐ வெளிப்பாட்டு அடையாள இயலைக் கொண்டு விளக்குவதுபோல் இவற்றையும் விளக்க வேண்டும். இறைவனது எதிரி களில் எல்லாம் எடுத்துக்காட்டான நெபுகத் னேசரின் தலைமையில் அசீரியா, பாபிலோ னியா, மேதியா, பாரசீகம் ஆகிய நான்கு பேரரசுகளையும் ஒருங்கிணைத்து, இறைவ னுக்கு எதிரான உலகளாவிய சக்திகளைக் கலப்பு அடையாளமாக எடுத்துக் காட்டு வது யூதித்து நூல் ஆசிரியரின் நோக்கமா கும். இது, தானியேலின் கனவில் வரும் பெருங்கலப்புச் சிலையை மலையிலிருந்து பெயர்ந்துவரும் கல் அழிப்பது, இறைவ னுக்கு எதிரான ஒருங்கிணைந்த சக்திகளை அவர் அழிப்பதை எடுத்துக் காட்டுவது போன்றதாகும். இவ்வாறு அசீரியர்களின் பாபிலோனிய மன்னனும் மேதியர்களை வெறுப்பவனுமான நெபுகத்னேசரின் படைத்தளபதி ஒலபெரினேயை யூதித்து வெல்வது, இறைவன் தமக்கு எதிரான ஒருங்கிணைந்த சக்திகளை வெல்வதை எடுத்துக்காட்டுகிறது.

யூதித்து நூல் ஒரு வெளிப்பாட்டு இலக் கியமாகக் கருதப்படுவதற்கு மேலும் சில, ஆனால் அவ்வளவு முக்கியமல்லாத கார ணங்கள் உண்டு. அ) பெரும் போர் நடக்க விருந்த இடமான எசுதிரலோன் மெகித்தோ விலிருந்து அதிகத் தூரத்தில் இல்லை. மெகித்தோவில்தான் நடுவர்கள் காலத்தில் யாவேல் சீசராவை வென்றாள் (நீதி 4). இங்குதான் இறைவனது படைக்கும் அவ ருக்கு எதிரான சக்திகளுக்குமிடையே இறு திப் பெரும்போர் நடக்கவிருப்பதாகத் திரு வெளிப்பாட்டு நூல் சித்திரிக்கிறது (திரு வெளி 16:16). இந்த 'இடம்தான்' எபிரேய மொழியில் அருமகதோன் என்றழைக்கப் பட்டது. ஆ) நூல் முழுவதும் புனை பெயர்த் தன்மையுடையதன்று. ஆனால், ''யூதப்பெண்'' என்று பொருள்படும் யூதித்து ஓர் உண்மையான தனிநபரைவிட நாட்டையே குறிக்கிறாள் (16:4. இங்கு யூதித்து தன்னைத் தன் நாட்டோடு ஒன்றாக் கிக் கொள்கிறாள்). இ) தானியேல், எசேக் கியேல், யோவேல் ஆகிய நூல்களோடு இந்நூல் கொண்டிருக்கும் வாசகத் தொடர்பு கள்.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண் டால் யூதித்து நூல் அக்காதா மிட்ராசு இலக்கியத்தைவிட வெளிப்பாட்டு மிட்ராசு இலக்கியத்தோடு நெருங்கியது என்பது தெரியும். தானியேல் நூலைப்போல் இறை வாக்கு வெளிப்பாட்டு இலக்கியமாக இல் லாமல், எரே 38-39-ஐப் பின்பற்றும் ஓர் எளிய நிகழ்ச்சியுரை அல்லது வரலாற்றுத் தோற்றமுடையது யூதித்து நூல் என்று சொல்லலாம்.

**8. நூல் தோன்றிய காலம்:-** இந்நூல் தோன்றிய காலம் பற்றிய கணிப்பு பிரச் சனைக்குரியதாகும். பாரசீகர்கள் வெளிப் படையாகக் குறிப்பிடுவதால், இந்நூல் தோன்றிய முந்திய காலமாக கி.மு. 350-ஐக் குறிக்கலாம் என்பர் சிலர். மூன்றாம் அர்த்தக்சஸ்தா என்ற பாரசீகப் பேரரசின் (கி.மு. 358-338) தளபதியான ஒலபெரினே நடத்திய படையெடுப்பில் நடந்த ஒரு நிகழ்ச்சியிலிருந்து இக்கதையின் கரு அமை கிறது என்பர். ஒரு மிட்ராசு ஆசிரியர் போதக நோக்கத்திற்காக பிற்காலத்தில் இந்நிகழ்ச்சியை விரிவாக்கியிருக்க வேண்

டும். ஆனால் தமது மக்களுக்குத் தன்னையே கடவுளாக்கும் விருப்பமுள்ள அரசனது மனப்போக்கு இந்நூல் தோன்றிய காலத்தைப் பாரசீக காலத்திற்குப் பின் தள்ளுகிறது. கி.மு. *350*-க்குப் பின் இப்படி விரும்பிய முதல் அரசன் அலக்சாந்தர் ஆவான். ஆகவே, அவன் காலத்தில் இந் நூல் தோன்றியிருக்கலாம் என்பவரும் உளர்.

இந்நூல் கி.மு. *2*-ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்று கூறும் அறிஞர் பலர் உள்ளனர். அவர்கள் கூறும் சான்றுகள் மிகுதியானவை. அவர்கள், நான்காம் அந்தி யோக்கு காலத்தில் நடந்த சமயக் கொடுமைகளோடோ *(175-64)*, கி.மு. *145*-க்குப் பின் எகிப்தில் ஏழாம் தாலமியின் காலத்தில் நடந்த சமயக் கொடுமைக ளோடோ சிறப்பாக முன்னதோடு, இந் நூலைத் தொடர்பு படுத்துகின்றனர். அந்தியோக்குவோடு தொடர்புபடுத்தினால் நெபுகத்னேசர் அந்தியோக்குவையும், ஓல பெரினே நிக்கானோரையும் *(2 மக் 15:30)*, அசீரியர்கள் செலூக்கியச் சீரியர்களையும், நினிவே அந்தியோக்கியாவையும் குறிக்க லாம்.

நூலில் காணப்படும் ஓய்வுநாள் கடைப் பிடிப்பு, உணவு பற்றிய ஒழுங்குகள், நோன்பிருத்தல், சடங்குச் சுத்தம், தசம பாகம் செலுத்தல் *(8:4-8; 11:12-14; 12:1-4)* ஆகியவை பற்றிய ஆர்வம், பொதுவாக யூதபக்தி, கசிதீம்களின் ஆன்மீக வழித் தோன்றல்களான பரிசேயர்களின் ஆன்மீக ஆதிக்கம் வலுவாயிருந்த காலத்தைச் சுட்டு கின்றன. ஆகவே இந்நூல், *166-142*-இல் நடந்த மக்கபேயர் போர்க்காலத்திலோ, அதற்குப் பின்வந்த காலத்திலோ தோன்றி யிருக்க வேண்டும். யூதி *8:18*-இல் வரும் யூதித்தின் கூற்று மக்கபேயர்களுக்குப்பின் வந்த காலத்தைச் சுட்டுகிறது. ஏனெனில், *166-164*-இல் நடந்த கிரேக்க-சீரியர்களின் கொடுமைக் காலத்தில் பதிதமும் சிலை வழிபாடும் யூதர்களிடையே அதிகம் பரவி யிருந்தன. பெரிய குருவும், மூப்பர் சபை யும் எருசலேமில் தலைமை தாங்கியதாகத் தெரிகிறது *(4:6; 15:8)*. மேலும், கதை சமாரியாவில் அமைக்கப்படுகிறது. இப் பகுதி, கி.மு. *108*-இல் யோவான் இரிக்கான் சமாரியாவை வென்றபின்தான் யூதாவைச் சேர்ந்ததாயிற்று. இவையெல்லாம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ, முதலாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ இந்நூல் தோன்றியிருக்க வேண்டும் என்று சுட்டுகின்றன.

இவ்வாறு இந்நூல் பிற்காலத்தில் தோன்றியதுதான், இது யூதத் திருமுறைப் பட்டியலில் சேர்க்கப்படாமைக்கும், வர லாற்று ஆசிரியர் யோசிபசு இதுபற்றி ஒன்றும் கூறாமைக்கும் காரணமாகலாம். இவற்றோடு, ஆசிரியர் கிரேக்க வடிவங்கள் பற்றிக் காட்டும் அறிவு *(3:7; 15:13)*, அவர் சட்டகாரியங்களை வலியுறுத்துவது ஆகிய வற்றைக் கருத்தில் கொண்டால், ஒரு பெயர் தெரியாத ஆசிரியர் மக்கபேயர் காலத்திற்குப் பிற்பாடு, ஒருவேளை **145**-ஐ ஒட்டி, பாலஸ்தீனத்தில் இந்நூலை எழுதி னார் என்று கூறலாம்.

**9. வாசகம்:-** இந்நூலின், நமக்குக் கிடைத்துள்ள காலத்தால் முந்திய வாசகம் கிரேக்க மொழியில் உள்ளது. நான்கு வகை வாசகங்கள் உள்ளன. இவற்றிடையே அதிக வேறுபாடுகள் இல்லையென்றாலும், ஒவ் வொன்றிற்குமுரிய தனிப்பண்புகள் இந்நூல் மூலத்தில் எபிரேயத்திலோ, அரமேயிக் கிலோ எழுதப்பட்டிருக்கலாம் என்று காட்டுகின்றன. அதன் சுவடுகளைக் கிரேக்க வாசகங்களில் காணலாம். மரபுமுறை வாசகம் எழுபது நூல் வாசகமாகும். இது நம்பத்தகுந்தது. இதிலிருந்து பழைய இலத் தீன் வாசகம் செய்யப்பட்டது. இதையும் கருத்தில் கொண்டு, அரமேயிக்கு வாசகத்தி லிருந்து புனித எரோனிமு அவசரமாக வுல்காத்தா வாசகத்தைச் செய்ததாகத் தெரி கிறது. . இந்த அரமேயிக்கு வாசகம் எச் சுவடுமின்றித் தொலைந்து போய்விட்டதா கத் தெரிகிறது. இது கிரேக்க வாசகத்தின் பொழிப்புரையாகத் தெரிகிறது. இப்போது பழக்கத்திலிருக்கும் எபிரேய வாசகம் கிரேக்க வாசகத்திலிருந்தோ, இலத்தீன்

வாசகத்திலிருந்தோ சுதந்தரமாக மொழி பெயர்க்கப்பட்டதாக இருக்கலாம் அல்லது அடிக்கடி கூறப்பட்ட பொதுப்பாணிக் கதை யின் முழுவதும் வேறான வாசகமாக இருக்கலாம். இந்த அதிகாரத்தில் தரப்படும் வாசகக் குறிப்புகள் கிரேக்க வாசகத்தை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

***10. திருமுறைப் பட்டியலில் யூதித்து நூல்:*** நோக்கிலும் போக்கிலும் எஸ்தர் நூலைப் போன்றதே இந்நூல் என்றாலும் அதைப் போல் இது யூதத் திருமுறைப் பட்டியலில் இடம்பெறவில்லை. இதற்கு ஒரு காரணம் எஸ்தர் கதை பாரசீக அரசவையில் நிகழ்வ தாகக் கூறப்படும்போது, யூதித்து கதை சமாரியாவைச் சேர்ந்த ஒரு சிறு பகுதியில் நடப்பதாகக் கூறப்படுவதாக இருக்கலாம். இதைவிட மேலாக, எஸ்தர் நூல் விழாக் காலங்களில் யூதர்களிடையே வாசிக்கப் பட்ட ஐந்து சுருள்களில் ஒன்றாகும்; பூரிம் விழாவின்போது வாசிக்கப்பட்டது. ஆகவே, எஸ்தர் நூல் யூதத் திருமுறைப் பட்டியலில் ஏற்றுக் கொள்ளப்பட எளிதா யிற்று. யூதித்து நூலைப் பொருத்தமட்டும் அப்படிப்பட்ட சூழ்நிலை இருக்கவில்லை. யூதத்திருமுறைப் பட்டியலைப் பின்பற்றும் கிறிஸ்தவப் பிரிவினைச் சபைகள் இந் நூலைத் தங்கள் பட்டியலில் ஏற்றுக் கொள் வதில்லை.

புனித எரோனிமு இந்நூலைத் தமது பட்டியலில் ஏற்றுக்கொள்ளவில்லை. இந் நூலின் வுல்காத்தா வாசகத்திற்கு எழுதிய தம் முன்னுரையில், நீச்சேயாப் பொதுச் சங்கம் இந்நூலை அதன் திருமுறைப் பட்டியலில் சேர்த்துக் கொண்டதால்தான், வேண்டாவெறுப்பாகத் தமது மொழி பெயர்ப்பைச் செய்ததாகக் கூறுகிறார். ஆனால், இந்நூல் திருச்சபையில் வாசிக்கப் பட்டது என்றும் கூறுகிறார். கி.பி. முதலாம் நூற்றாண்டிலிருந்து திருச்சபைத் தந்தையர் கள் இந்நூலைப் பயன்படுத்தியுள்ளனர். பொது நலனுக்காகத் தங்களையே ஒப்புக் கொடுத்தலுக்கு மாதிரிகையாக எஸ்தரோடு யூதித்தையும் உரோமைக் கிளமந்து ஏற்கெனவே எடுத்துக் காட்டியுள்ளார். கார்த்தேசு என்ற இடத்தில் நடந்த திருச் சபையின் மூன்றாம் சங்கம் இந்நூலைத் தன் பட்டியலில் ஏற்றுக் கொண்டுள்ளது. கிரேக்கத் திருச்சபைகளும் இந்நூலை ஏற்றுக் கொள்கின்றன. கத்தோலிக்கத் திருச் சபையில் இந்நூல் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததுதான் என்று திரிதெந்தீன் பொதுச் சங்கம் உறுதியாக அறிவித்தது.

***11. யூதித்தின் ஒழுக்க வாழ்வு பற்றிய பிரச்சனை:-*** யூதித்து பிற்கால யூதப் பக்திக்கு ஓர் எடுத்துக்காட்டாக விவரிக்கப் படுகிறாள். அவள் யாக்கோபின் மக்களுள் ஒருவரான சிமியோன் குடும்பத்தைச் சேர்ந் தவள்; மனாசேயை மணந்தவள். அவள் ஒரு தனி ஆள் என்பது உண்மையே. ஆனாலும், ''யூதப்பெண்'' என்று பொருள் படும் யூதித்து என்ற அவளது பெயர் பொருத்தமில்லாமல் இல்லை. இறை வனின் ஊழியர் எப்படியிருக்கவேண்டும் என்பதற்கு அவள் ஓர் எடுத்துகாட்டாவாள் *(11:17)*. விதவைக் காலத்திலும் அவளது கற்பு சிறப்பித்துக் கூறப்படுகிறது *(8:4; 16:22)*. அவள் ஓய்வு நாட்களையும் விழாக் களையும் மட்டும் கடைப்பிடிக்கவில்லை; அவற்றிற்கு முந்தியநாள் சடங்குகளையும் அனுசரிக்கிறாள் *(8:6)*. அவள் குறிப்பிட்ட நேரங்களில் செபிக்கிறாள்; உணவு பற்றிய ஒழுங்குகளையும் சடங்குத் தூய்மை பற்றிய சடங்குகளையும் கடைப்பிடிப்பதிலும் அக் கறை காட்டு கிறாள் *(12:2.9.19; 16:18; 11:2)*. செயலாற்றுமுன் நோன்பாலும் செபத்தா லும் அவள் தன்னையே தயாரிக்கிறாள். இவற்றிலெல்லாம் யூதித்து பரிசேயர் சமயத் திற்கு ஒரு மாதிரிகையாவாள். இவ்வாறு சடங்கு முறைகளை நூல் வலியுறுத்துவது அதன் உண்மையான ஆன்மீக உணர்வுகளை நமக்கு மறைத்துவிடக் கூடாது. அவளது பக்தி ஆசீர்வதிக்கப்படுவதில் வியப் பில்லை. அவள் செல்வமிக்கவள், அழ குள்ளவள், எல்லாராலும் உயர்வாக மதிக் கப்படுபவள் *(8:7-8)*. ஆனால், அவளுக்குப் பிள்ளைகள் இருந்தனர் என்று கூறப்பட வில்லை. அவளது மனவுறுதி, முன் முயற்சி, சுயநலமின்மை ஆகிய பண்புகள்

அவளை மேலும் சிறப்பித்துக் காட்டுகின்றன *(13:20)*. ''எல்லாம் இறைவனைச் சேர்ந்தவை என்பது போல் செபி; எல்லாம் உன்னையே சேர்ந்தது என்பதுபோல் உழை'' என்ற மேற்கோளுக்கு யூதித்து எடுத்துக்காட்டாகத் திகழ்கிறாள்.

ஆனால், ஐயத்திற்குரிய சாதனங்களைப் பயன்படுத்தும் ஒரு பெண்ணை ஆசிரியர் இவ்வாறு மட்டு மிஞ்சிப் போற்றுவது நவீன வாசகர்களுக்கு ஒருவித வெறுப்பை உண்டாக்கலாம். ஏனெனில், அவள் தனது சாகசங்களால் ஒருவனுடைய ஆசாபாசங்களைத் தூண்டிவிட்டு, அவன் தூங்கும் போது கொல்கிறாள். யூதித்து ஒலபெரினேயைக் காமச் செயலுக்கு இட்டுச் செல்லவில்லை என்பது உண்மைதான். ஆனால், இஃது இறைவனது இரக்கத்தின் விளைவே என்றும் *(13:16)*, அவள் தன் குறிக்கோளை அடைய எதையும் செய்யத் தயாராக இருந்தாள் என்றும் ஆசிரியர் ஓர் உணர்வை விட்டுச் சென்றுள்ளார். ஆகவே, யூதித்தின் செயலை விளக்கவுரையாளர்கள் சிலர் இழிவாக விமர்சிப்பர்; வேறுசிலர் மாப்புக் கூறும் விதத்தில் விளக்குவர். இரு குழுவினரும் கதை கூறப்படும் பின்னணியைப் புரிந்து கொள்ளத் தவறிவிட்டனர் எனலாம். ஏனெனில் இக்கதை, யூதா நாடு உயிர் தப்புவதற்கு எல்லா வகைத் திறமையும், இரக்கமற்ற கொடிய செயலும்கூட, செய்ய வேண்டியிருந்த காலத்தைப் பின்னணியாகக் கொண்டது. மேலும், பாவத்தையும் புண்ணியத்தையும் இறைவன் எப்படி நோக்குகிறார் என்று காட்டுவது இந்நூலின் முதன்மையான நோக்கங்களில் ஒன்று என்பதையும், ஆசிரியர் 'இறைவன் அவர்களைப் பாதுகாப்பர் என்று யூதர்கள் அவரில் நம்பிக்கை வைக்க வேண்டும்' என்ற பாடத்தையும் கண்டுணரச் செய்ய விழைவதையும் விளக்கவுரையாளர்கள் சிலர் குறிப்பிடத் தவறிவிட்டனர். இறைவன் மனிதச்செயல்களில் ஆழ்ந்த ஆர்வம் காட்டுகிறார். மனிதச் செயல்கள் அவற்றிற்கேற்ற சன்மானம் பெறவேண்டும். மனிதன் சுதந்தரமுள்ளவன். அவனது செயல்களுக்கு அவன் கணக்குக் கொடுக்க வேண்டும். நீதிமான்கள்-இஸ்ராயேலும், யூதித்தும்-இறைவனது எல்லாம் வல்ல ஆதரவை நம்பலாம். பாவிகள் நெபுகத்னேசரும், ஒலபெரினேயும்-தவிர்க்க முடியாத வகையில் அழிவை எய்துவர்.

யூதித்தின் கதையில் மனிதர்கள் வழியாக, அதுவும் ஒரு பெண் வழியாக, மனிதர்களது மட்டுமிஞ்சிய இறுமாப்பை இறைவன் சாடுகிறார் *(13:12.18; 16:6)*. இறைவனது நீதியே ஒலபெரினேயைக் கொலை செய்கிறது; அசீரியர்களை விரட்டி அடிக்கிறது. யூதித்து தனது குறிக்கோளை அடைய பொய் சொல்கிறாள்; தன் அழகைப் பயன்படுத்துகிறாள். இவற்றில் எல்லாம் வஞ்சகமான, துணிவுள்ள, நேர்மையென எண்பிக்கக்கூடிய தந்திரத்தையே ஆசிரியர் காண்கிறார். என்ன இருந்தாலும் அது போர்க் காலமாகும்! நல்ல பரிசேயர் பாரம்பரியத்தைச் சேர்ந்த ஆசிரியர், சாதாரணமாக ஏமாற்றுவதையும், காமத்தால் வசியம் செய்வதையும் அனுமதியார். ஆனால், கதையின் சூழ்நிலையில் இறைவனுடைய எதிரிகள் தங்களது காமத்தாலும், குருட்டுத்தனத்தாலும் அழிவதை ஒருவகை விருப்பத்தோடே நோக்குகிறார். இறையூக்கம் பெற்றவர் ஆனாலும், ''முடிவு சாதனங்களை நேர்மையென எண்பிக்கிறது'' என்ற மேற்கோளை மறுக்கும், முழுவதும் கிறிஸ்துவப் பண்புடைய மனச்சாட்சியின் மேன்மை அவரிடமில்லையெனலாம். அவர் பழைய ஏற்பாட்டைச் சேர்ந்தவர். பலவற்றில் தன் காலத்தால் வரையறைக்குட்பட்டவர். இறைவனையும் அவரது பரிசுத்தத்தையும் எவ்வளவு போற்றினாலும், அந்தப் பரிசுத்தம் எதை மனிதனது நடத்தையில் எதிர்பார்க்கிறது என்பதைக் கிறிஸ்தவனைப் போல் ஆழ்ந்தறிய ஆசிரியருக்கு வாய்ப்பு அளிக்கப்படவில்லை எனலாம்.

யூதித்து கதை இப்தாகு, சிம்சோன், தாவீது போன்ற வீரர்களைக் கொண்ட பாரம்பரியத்தில் வருவதாகும். இவ்வீரர்களின் பண்பையும், அவற்றை இவர்கள் பயன்படுத்திய முறைகளையும் கடுமை

யான ஒழுக்கச் சோதனைக்கு யாரும் உட்படுத்தவில்லை. யூதித்து கதையையும் அதேமுறையில் புரிந்து கொள்ள வேண்டும். மனிதர்கள் இருக்கும் விதத்திலேயே அவர்களைப் பயன்படுத்தி, இறைவன் தமது மக்களை மீட்கிறார். மேலும் யூதர்களின் மீட்பு, சட்டத்திற்கு அவர்கள் காட்டும் பிரமாணிக்கத்தைப் பொருத்ததாகும். இதுதான் அக்கியோரின் உரையிலும் *(5:5-21)*, யூதித்தின் கூற்றுகளிலும் *(8:17-20)*, பெண் என்ற அளவில் யூதித்தின் மாதிரியிலும் வெளிப்படுத்தப்படும் கருத்தாகும். சட்டத்திற்கு அளிக்கப்படும் கடுமையான விளக்கத்திற்கேற்ப யூதித்து வாழ்ந்தாள் *(8:6; 10:5; 12:2.19)*. ''நீரே தாழ்ச்சியுள்ளோரின் இறைவன்; ஒடுக்கப்பட்டோரின் உதவி; பலவீனர்களின் ஆதரவு; கைவிடப்பட்டோரின் தஞ்சம்; நம்பிக்கையற்றோரின் மீட்பர்'' என்ற யூதித்தின் விசுவாச அறிக்கையை எடுத்துக் கூறுகிறது இக்கதை.

***12. இறையியல் செய்தி:*** யூதித்து நூல் ஒரு வரலாற்று நூலாகக் கருதப்படாவிட்டாலும், யாத்திரை வரலாறு வழி மனித வரலாற்றில் இறைவனது ஈடுபாடு பற்றிய மிக உன்னதமான வரலாற்று உண்மையில் வேரூன்றிய போதகத்தை இந்நூல் எடுத்துக்கூறுகிறது. இஸ்ராயேல் வரலாற்றில் காலத்தால் வெகு தூரம் வேறுபட்ட கூறுகளைச் செயற்கை முறையில் ஒன்றனுள் ஒன்றாகப் புகுத்தி அடக்கி, அவற்றிற்கு யாத்திரை அனுபவம் என்ற உண்மையொளியில் மறுவிளக்கம் அளிக்கிறது. இறைவன் இஸ்ராயேலை எகிப்திலிருந்து ஆற்றல் மிக்க முறையில் வெளிக்கொணர்ந்திருந்தால், இஸ்ராயேல் இவ்வுலகச் சக்திகளைத் தவறாது வெல்லக் கூடும், வெல்லும் என்பதில் நம்பிக்கை கொள்ளலாம். நாடுகடத்தப்பட்டதற்குப் பின் வந்த வரலாற்றுக் குழப்பத்திலும் இஸ்ராயேல் தனது விசுவாசத்தை உறுதியாக அறிக்கையிட வேண்டும். அதற்கு இந்நூல் ஒரு வாய்ப்பளிக்கிறது.

அந்த விசுவாச அறிக்கையில், இறைவனது தன்மையையும் அதன் விளைவுகளையும் ஆசிரியர் தமது காலத்து யூதர்களுக்குத் தெளிவாக எடுத்துக் கூறுகிறார். இந்நூல் இறைவனைப் பற்றிய சிந்தனையில் முழுவதும் தோய்ந்திருக்கிறது. இதில் எஸ்தர் நூலின் எபிரேய வாசகத்திற்கு நேர் மாறாக இருக்கிறது எனலாம். அடிக்கடி அவதூறு கூறப்படும் இந்நூல் ஓர் உன்னதமான சித்திரத்தை நமக்கு அளிக்கிறது. இறைவனது ஆற்றல் மிகச்சிறப்பான முறையில் வலியுறுத்தப்படுகிறது. அவர் தமது சொல்லால் படைப்பவர் *(9:12; 13:18; 16:14)*. அவரை மனிதனால் அறியமுடியாது. அவரை எதுவும் எடுத்துக் காட்டவும் முடியாது. விடுதலை அளிப்பதுவோ, தண்டனை அளிப்பதுவோ எது தகுதியுடையதென்று அவருக்குத் தோன்றுகிறதோ அதன்படி தன் விருப்பப்படி செய்பவர். யூதித்து போன்றவர்கள் அவரது கருவிகளே. இறைவனிடம் வேண்டுதலும், அவரது தயவுக்காகக் காத்திருத்தலும் மனிதனது கடமையாகும் *(8:14-17)*. ஏனெனில், நடப்பவற்றையெல்லாம் அறிபவரும் திட்டமிடுபவரும் அவரே *(9:5-6)*. ஆயினும், இந்த இறைவன் இஸ்ராயேலின் ஆண்டவராவார் *(9:13-14)*. அவர்களுக்காகக் கடந்த காலத்தில் யாத்திரை நிகழ்ச்சியில் பல அருஞ்செயல்களைச் செய்துள்ளார். அவரே அவர்கள் வரலாற்றை முழுவதும் அமைத்துள்ளார் *(5:6-19)*. அவர்கள் கதியைத் தமது கையில் கொண்டுள்ளார் *(7:25)*. அவர்களோடு உடன்படிக்கை செய்துள்ளார் *(9:13)*. ஆகவே, இஸ்ராயேல் அவருடைய உடைமையாகும் *(13:15)*; அவருக்கு அர்ப்பணிக்கப்பட்டதாகும் *(6:19)*. யாவே பாவத்தைப் பெறாதவர். ஆகையால், சில சமயங்களில் அவர்களின் பிரமாணிக்கமின்மையின் பொருட்டு, அவர்களைத் தமது சினத்தில் சந்திப்பார், தண்டிப்பார் *(5:17-18; 7:28; 8:19)*. ஆனால் மிகப்பெரிய கேடுகளுக்கிடையிலும் கூட அவரது மக்கள் நன்றியோடு அவரை ஆராதிக்க வேண்டும் *(8:25)*. ஏனெனில் அவர் அளிக்கும் தண்டனை ஓர் எச்சரிக்கையே ஆகும் *(8:27)*. இஸ்ராயேல் இறைவனுக்குப் பிரமாணிக்கமாய் இருக்கும்போது *(5:20-21; 8:18)* பெரும் நாடுகள் இஸ்ராயேலுக்கு எதிராக எழுந்தாலும்

*(16:4)*, அவர்கள் அவரை நம்பிக்கையோடு விசுவசிக்கலாம் *(7:30)*. இக்கருத்தில் யூதித்து வெளிப்பாட்டு நூல்களோடு ஒத்திருக்கிறது. கூறப்படும் முறை வேறுபடலாம். ஆனால் கூறப்படும் கருத்து ஒன்றே. தீயோர் தங்கள் சுய நம்பிக்கை அளிக்கும், ஆற்றலின் தோற்றத்திற்கு வெல்ல முடியாத பெரும் படையோடு, இறைவனது புனிதர்களோடு மோதலாம். இருப்பினும் புனிதர்களே இறுதியில் உறுதியாக வெற்றி கொள்வர். ஏனெனில், எல்லாம் வல்ல இறைவன் அவர்களோடு இருக்கிறார் (காண்க. எசே *38-39*; தானி *7-8*). ஆகவே, அவர்கள் நோன்பிருந்து மன்றாடுதல் நன்று *(4:8* தொ; *6:19; 9:1)*. அவர்களது மன்றாட்டு கேட்கப்படும் *(4:13)*. அவர்கள் விடுதலை அடையும் போது, அவர்கள் உடனே இறைவ்னது இரக்கமிக்க எல்லாம் வல்லமையைப் போற்றிப் பாடுதல் இயல்பானதே *(13:14.17; 16:11.13)*. இறைவனைப் பற்றிய இஸ்ராயேலின் இந்த நோக்கு அவருக்கு அளிக்கப்படும் வழிபாட்டின் அடிப்படையாகும். அவரது புனித இடம் எருசலேமிலுள்ள ஆலயமே *(4:2.12-13; 5:19; 9:8)*. அது பங்கப்படுவதிலிருந்து எவ்வழியிலாவது பாதுகாக்க வேண்டும் *(4:12; 8:21)*. ஏனெனில், அங்குதான் பணிசெய்யும் குருக்கள் வழியாக *(4:14; 11:13)* மன்றாட்டுகளாலும் பணிகளாலும் இறைவன் வழிபாடு பெறுகிறார் *(4:14; 16:18)*. பலி ஆண்டவர்பால் கொண்ட உண்மையான அச்சத்தை எடுத்துக் காட்டுகிறது *(16:16)*. ஆனால், வழிபாட்டின் மையம் எருசலேமில் இருந்தாலும், மன்றாட்டும் போற்றுரையும், நோன்பு முதலியவற்றால் முனைப்பாக்கப்பட்டு நாடு முழுவதிலும் எதிரொலிக்கிறது.

அதிக வலுவான யூதநாட்டுப் பற்றுடைய இந்நூலில், அன்னியரும் யூத மக்களினத்துக்குள் வர, மகிழ்ச்சியுடன் கதவு அகலத் திறந்துவிடப்படுகிறது. அக்கியோர் *(5:5* தொ.) யூதர்களால் வெறுக்கப்பட்ட அம்மோனிய இனத்தைச் சேர்ந்தவர் *(1* சாமு *11:2*; எரே *40:14*; உப *23:3)*. அவருடைய விசுவாசம், விருத்தசேதனம் ஆகிய அடிப்படையில், அவர் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களினத்துக்குள்ளும் உடன்படிக்கை ஆசீர்களுக்கும் வரவேற்கப்படுகிறார் *(6:20; 14:6-9)*. இவரைத் தோபி நூலில் வரும் அகிக்காரோடு ஒன்றாக்குகின்றனர் ஆய்வாளர்கள் சிலர். யாரும் அறிந்த ஆனால் தெளிவில்லாத உருவமுடைய ஞானியும் தலைவருமான இவர் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் கொடுமைகளில் பங்கு கொள்வதால் மீட்கப்படும் புற இனத்தவர்களுக்கும், தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை மீட்கும் அதே இறையாற்றலால் மீட்கப்படுபவர்களுக்கும், ஒரு மாதிரியாகிறார் என்பர். இவ்வாறு இஸ்ராயேலினால் வரும் மீட்பிலிருந்து ஒருவரும் ஒதுக்கப்படுவதில்லை என்று காட்டுவதில் ஆசிரியர் கவனமாய் இருக்கிறார்.

***13. இக்காலத்திற்கு:-*** துணிவு சேர்ந்த கெட்டிக்காரத்தனமும், ஆலோசனையில் விவேகமும், செயலில் அமைதியும் வலிமையும் ஆகிய குணங்கள் தன் பேச்சிலும் தோற்றத்திலும் ஒளிவிடும் அழகால் மெருகூட்டப்பட்ட, யூதித்தை ஓர் எடுத்துக்காட்டான மனிதநேயம் உள்ளவரின் நயமிக்க சித்திரமாய் எடுத்துக் காட்டுகிறது யூதித்து நூல். மேலும், அவளது கைம்மை நோன்பு கிறிஸ்தவக் கன்னிமைத் துறவுக்கு ஒரு முன்மாதிரியாகவும் உள்ளது.

யூதித்து மனித விடுதலைக்கு ஓர் எடுத்துக்காட்டாவாள். அசீரிய நெருக்கடியை ஒரு விசுவாச நெருக்கடியாக மட்டுமன்று, அதை விசுவாச வாய்ப்பாகவும் யூதித்து நோக்கினாள். விசுவாசம் வெறுமனே கைகட்டி அமர்ந்திருப்பதற்கன்று; அது செயலுக்கு இட்டுச்செல்ல வேண்டும். ஒரு குறிப்பிட்ட நெருக்கடிச் சூழ்நிலையில் நான் என்ன செய்யக்கூடும்? என்ன செய்ய வேண்டும்? என்று சிந்தித்துச் செயலாற்ற வேண்டும். இதற்கு யூதித்து ஒரு சிறந்த எடுத்துக்காட்டாவாள். ஒரு பெண் விதவை ஆனாலும், அசீரியர்களை எதிர்த்துப் போராட வேண்டும் என்று இவள்தான் துணிந்து எடுத்துக் கூறுகிறாள்; சமூக உணர்வோடு சிந்திக்கிறாள். மனித விடு

தலையைச் செயல்படுத்த, ஒவ்வொருவரும் தன்னை முழுவதும் தன் ஆற்றல் அனைத்தையும் பொது நன்மைக்காக அர்ப்பணிக்க வேண்டும். தன்னையே வெறுமையாக்க வேண்டும். அப்போதுதான் மனித விடுதலை தன்னிறைவுள்ளதாகக் கூடும். யூதித்து நூல் தனது தேவைகளை ஒதுக்கிவிட்டு, சமூகத் தேவைகளுக்காக தன்னையே அர்ப்பணிக்கும் ஒருவரை நாடகப் பாணியில் சித்திரிக்கிறது. தன்னையே சமூகத் தேவைகளோடு ஒன்றாக்கிக் கொள்வதால், யூதித்து மனித விடுதலையின் மாதிரியாகிறாள். அவள் பிறர் நலனுக்காக அர்ப்பணிக்கப்பட்டவள். பலவீனமான இப்பெண் இஸ்ராயேலின் விடுதலைக்காகவும், அதே சமயம் சமய விடுதலைக்காகவும் வலிமையாகச் செயல்படுகிறாள்.

நமது விசுவாச சமூகத்திற்கு யூதித்து நூல் ஒரு சவாலாகும். அடிப்படையில் பொதுப் பணியோடு நம்மையே ஒன்றாக்கி அச்சவாலை ஏற்று நமது வாழ்க்கைக்குப் பொருள் காண அழைக்கிறது. அதன் விளைவாக உலகச் சமூகத்தின் தேவைகளில் தங்களையே அர்ப்பணிக்க கிறிஸ்தவர்களைக் கோருகிறது. உலகில் தீமைகள் பலவடிவம் எடுக்கலாம்; திறமையாகச் செயல்படலாம். மனித அநீதி எவ்வடிவம் எடுத்தாலும், அதை எதிர்த்துப் போராட வேண்டும், அந்தந்த நூற்றாண்டு வரலாற்று மேடையில் பாடுகள்-உயிர்ப்பு வரலாற்றை உயிர்ப்பித்துக் காட்டவேண்டும். யூதித்து நூல் விடும் இந்தச் சவால் வரலாறு மற்றும் நாடுகளின் வரையறைகளைக் கடந்ததாகும். நற்செய்திக்குப் புறம்பாக வாசிக்கத்தக்கது அன்று யூதித்து நூல். விசுவாசச் சமூகம் இறைவனது முழு வார்த்தையைக் கேட்டு, எல்லாக் காலங்களுக்கும், இடங்களுக்கும் பொருத்தமான ஒரே பதில் இல்லை என்பதை உணரவேண்டும். உடன்படிக்கையை அதன் அடிப்படையான எல்லாம் உள்ளடக்கும் தன்மையில் புரிந்துகொள்ள விசுவாசச் சமூகத்தை இந்நூல் தூண்டுகிறது. முழு உலகின் ஒன்றியைந்த விடுதலையைத் தேடுவதே திருச்சபையின் கதியாகும்.

சமீப காலத்திலிருந்துதான் நமது வழிபாடு யூதித்து வாசகத்தை இயேசுவின் அன்னை மரியாளுக்குச் சாற்றிக் கூறுகிறது. இப்படிக் கூறுவதற்கு அடிப்படையில்லாமல் இல்லை. மரியாளே உண்மையிலேயே ஒன்றிணைந்த மனித விடுதலை பெற்றவள். அலகையின் ஆட்சியிலிருந்து நம்மை மீட்க இறைவன் திட்டமிட்டபோது இம்மரியாளை விரும்பித் தமது துணைக்கருவியாக்கிக் கொண்டார். இப்படிப்பட்ட மரியாளோடு, இறைவனுடையவும் தன் மக்களுடையவும் எதிரியின் தலையைக் கொய்த யூதித்து பெருமையில் ஒரே வரிசையில் உள்ளாள். மரியாளுக்கு முன்மாதிரியாகவும் உள்ளாள். ஆனால் யூதித்தின் அழகு, உண்மையான மனித விடுதலை பெற்றவளும் இறைவனது அருள் நிறைந்தவளுமான மரியாளின் அழகுக்கருகில் மங்கிப் போகிறது என்றே கூறவேண்டும்.

எல்லாவற்றையும்விட, இறைவனது ஆற்றலில் நம்பிக்கை வைத்து, அவருக்கு அயராது பணிசெய்து வந்தால், எவ்வளவு வலிமைமிக்க உலக சக்திகள் மேலும் வெற்றி கொள்ளலாம்; அவ்வெற்றி உண்மையான விடுதலையை அளிக்கும் என்று யூதித்து நூல் எக்காலத்திற்கும் போதிக்கிறது.

## யூதேயா *(JUDEA)*

இது யூதா என்ற பெயரின் கிரேக்க, இலத்தீன் வடிவமாகும். விவிலிய வழக்கில், நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூத நாட்டைக் குறிக்கும் சொல்லாக, பாரசீகர் காலத்தைச் சேர்ந்த நூல்களில் (எஸ்ரா, நெகேமியா; காண்க. தோபி *1:18)* முதல் முறையாக இச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

நாடு கடத்தலுக்கு முன் யூதா நாடு பாலஸ்தீனத்தின் தென்பாதியை அடக்கியதாக இருந்தாலும், பாரசீகர்கள் காலத்தில் அஃது எருசலேமைச் சுற்றியுள்ள பகுதியை முதன்மையாகக் கொண்ட சிறு பகுதியாகச் சுருங்கியது. பரந்தபொருளில், மக்கபேயர்களின் சுதந்தரநாடு பாலஸ்தீனம் முழுவதை

யும் உள்ளடக்கியதாய் இருந்தாலும் உண்மையில் இது சிறிய யூதேயாவால் ஆட்சி செய்யப்பட்டது. இதில் சமாரியாவும் கலிலேயாவும் அடங்கும் *(காண்க. 1 மக் 11:28)*. இதே அளவுப்பகுதிக்குத்தான் பெரிய ஏரோது அரசனாய் இருந்தான். ஏரோதின் மகன், அர்க்கெலா ஆண்ட யூதேயா இதுமேயாவையும் சமாரியாவையும் உள்ளடக்கியிருந்தது. ஆனால், கலிலேயாவையும் பெரேயாவையும் கொண்டிருக்கவில்லை *(காண்க. மத் 19:1; லூக் 13:5; அ.ப. 10:37)*. காலப்போக்கில் யூதேயா உரோமையரின் சீரியா மாகாணத்தோடு சேர்க்கப்பட்டு, உரோமையரால் நியமிக்கப்பட்ட ஆளுநரால் செசரியாவிலிருந்து ஆட்சி செய்யப்பட்டது *(காண்க. லூக் 3:1)*.

திருமுழுக்கு யோவான் முதலில் போதித்த யூதேயாவின் பாலைவனம், மத்திய மலைப்பகுதிக்கும் சாக்கடலுக்கும் இடையிலும், எருசலேமுக்கும் எபிரோனுக்கும் இடையிலும் அமைந்திருந்த வறண்ட பகுதியாகும்.

**யூத்திக்கு** *(*EUTYCHUS - *நற்பேறுள்ள)*

துரோவாவில் பவுல் நள்ளிரவு வரை பேசிக் கொண்டிருந்த போது சன்னலில் அமர்ந்திருந்த யூத்திக்கு மூன்றாம் மாடியிலிருந்து கீழே விழுந்து இறந்து விட்டதாக நினைத்து எல்லோரும் புலம்பியபோது, 'உயிர் அவனுக்குள் இருக்கிறது' என்று பவுல் கூறினார் *(அ.ப. 20:7-12)*. இளைஞன் இறந்து விட்டதாகவும் அவனுக்குப் பவுல் உயிர் அளித்ததை நேரடியாகக் கண்டதாகவும் லூக்கா எழுதுகிறார் *(20:10-12)*.

**யூபால்** *(*JUBAL - *கொம்பு ஊதுபவன்)*

இலாமேக்கின் ஒரு மனைவியான ஆதாவின் மகன். யாபாலின் தம்பி. இவர் ''யாழ்மீட்டுவோர், குழல் ஊதுவோர் ஆகியோர் அனைவரின் தந்தை'' ஆவார் *(ஆதி 4:21)*.

**யூபித்தர்** *(*JUPITER - *வானத்தின் கடவுள்)*

இஃது உரோமையர் கடவுள்களில் தலைமையானது. இத்தாலியின் ஒவ்வொரு மலையுச்சியிலும் வழிபடப்பட்டது. கிரேக்க சேயுசுவோடு அடையாளம் காட்டப்படும் *(அ.ப. 14:12-13)*.

**யூபிலி ஆண்டு** *(*JUBILEE, YEAR OF*)*

பழங்கால இஸ்ராயேலில் கடைப்பிடிக்கப்பட்ட ஓய்வு ஆண்டுகளின் சுழலில் ஐம்பதாவது ஆண்டாகும். அப்போது, வறுமையைத் தவிர்ப்பதற்காக குத்தகைக்கு விடப்பட்ட அல்லது விற்கப்பட்ட நிலங்கள் அவற்றின் மூலச் சொந்தக்காரர்களிடம் கொடுக்கப்பட்டன. இஸ்ராயேலில் ஒப்பந்த அடிமைகள் விடுவிக்கப்பட்டனர். நாடு முழுவதும் எழுப்பப்பட்ட எக்காள ஒலி யூபிலி ஆண்டைத் தொடங்கி வைத்தது. இஃது எத்தானிம் என்ற ஏழாம் மாதம், பத்தாம் நாளாகிய பரிகார நாளில் தொடங்கியது. *(திஸ்ரி, செப்டம்பர் — அக்டோபர், புரட்டாசி)*.

ஏழு ஓய்வு ஆண்டுகளின் சுழலை யூபிலி ஆண்டு முடித்து வைத்தது *(லேவி 25; காண்க. யாத் 23:10-11)*. நிலத்தைப் பயிர் செய்யும் ஆண்டுகளுக்குப்பின் வரும் ஒவ்வொரு ஏழாம் ஆண்டும் ஓய்வு ஆண்டாகும். அதில் மனிதர்களும் விலங்குகளும் ஓய்வு எடுக்க வேண்டும். ஆறாவது ஆண்டு அறுவடையின் நிறைவிலிருந்து மனிதர்களும் விலங்குகளும் உண்டு வாழ்வர் *(லேவி 25:20-21)*.

நில உடைமையுரிமை மற்றும் அடிமைத்தனம் ஆகியவற்றைப் பொறுத்தமட்டும் யூபிலி ஆண்டு அறிவிப்பு இஸ்ராயேல் சமூகத்தில் சிறப்புப்பொருளுடையதாகும். கானானில் குடியேறியபோது ஒவ்வொரு இனத்தவருக்கும் நாட்டின் நிலப்பகுதி குறிக்கப்பட்டது. நாடு தமக்கு மட்டுமே உரியது என்று யாவே தெளிவுபடுத்தியிருந்தார். அவரது விருப்பப்படியே மக்கள் அங்கு வாழலாம் *(யாத் 19:5; லேவி 25:23)*. நாடு இறைவனுக்கு மட்டுமே உரியதானாலும், வறுமையைத் தவிர்ப்பதற்காக இஸ்ராயேலர் நிலத்தை விற்பதோ, குத்தகைக்கு விடுவதோ தடைசெய்யப்படவில்லை.

யூபிலி ஆண்டுக்கு முந்திய ஆண்டுகளில் நிலத்தை விற்றவனின் முறை உறவினனான ''மீட்பன்'' அந்நிலத்தை மீண்டும் வாங்கும் அல்லது ''மீட்கும்'' கடமை கொண்டிருந் தான் (லேவி 25:25). அதேபோல், மூலத்தில் சொத்துக்குரியவன், செழிப்புற்ற காலத்தில் மீட்டுக்கொள்வான் *(25:26)*. இந்த மீட்புத் தொகை, வாங்கியவன் சொத்தைப் பயன் படுத்திய ஆண்டுகளோடு தொடர்பு படுத்திக் கணக்கிடப்பட வேண்டும் *(52:15-17.27)*. லேவியர்களின் வீடுகள் மற் றும் நிலங்களை மீட்க சிறப்பு விதிகள் உண்டு *(25:28-34)*. யூபிலி ஆண்டின் தொடக் கத்தில், முந்திய 49 ஆண்டுகளில் விற்கப் பட்ட நிலங்கள் மூல உடைமையாள ருக்கோ, அவரது சந்ததியினருக்கோ திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும்.

ஆண்டவருடைய புனிதத் தலத்திற்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட நிலத்தைக் குறிக் கும்போதும் யூபிலி கூறப்படுகிறது *(27:16-25)*. அதை மீட்க, மீட்புக்கும் அடுத்த யூபிலிக்கும் இடைப்பட்ட ஆண்டுகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப, நிலமதிப்பீட்டில் ஐந்தில் ஒரு பங்கை அதிகமாகச் சொந்தக் காரன் கட்ட வேண்டும். நிலம் மீட்கப்பட வில்லையென்றாலோ, மற்றொருவருக்கு விற்கப்பட்டாலோ, அடுத்த யூபிலி ஆண்டில், அது புனிதத்தலத்துக் குருவின் உடைமையாயிற்று.

யூபிலி ஆண்டுச் சட்டம், ஒப்பந்த அடிமைத்தனத்தின் மேலும் கவனம் செலுத்து கிறது. ஓர் இஸ்ராயேலன், வறுமையின் நிமித்தம் தன்னையே மற்றொரு இஸ்ரா யேலனுக்கு விற்கும்படி கட்டாயம் ஏற்பட் டால், அவன் அடிமையாக அல்லன், கூலியாள்போலும் விருந்தினர் போலும் நடத்தப்பட வேண்டும் *(25:40.42)*. யூபிலி ஆண்டில் ஒப்பந்த அடிமையும் அவன் பிள்ளைகளும் விடுதலையாகி அவனுக் குரிய நிலபுலங்களிடம் திரும்பிச் செல்ல லாம்.

இந்த யூபிலி ஆண்டுச்சட்டங்கள் இஸ்ரா யேலில் கடைப்பிடிக்கப்பட்டதா என்பது பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறு பாடு உண்டு. ஏனெனில், இவை புரட்சிகர மான விளைவுகளை ஏற்படுத்தவல்லன. ஆயினும் இவை, தமது மக்களிடையே நிலவவேண்டிய சமத்துவத்தைப் பற்றியும், பழங்கால இன நிலப் பகுதிகளைப் பாது காப்பது பற்றியும் இறைவனின் அக் கறைக்குச் சான்றாக உள்ளன.

**யூபிலி நூல்** *(JUBILEE BOOK OF)*

*1.* இது போலி விவிலிய நூல்களில் மிக முக்கியமானது. கிறிஸ்துவத்திற்கு முந்திய இரு நூற்றாண்டுகளில் யூத மதம் பற்றித் தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது. யூத மதம், அன்று இருந்த அளவில் வரலாற்று நாள் முதல் இருந்தவாறே இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுவதே இதன் முக்கிய நோக்க மாகும். இதில் புனித எண் ஏழு முன்பை விட ஒரு முக்கியமான எண்ணாகக் கருதப் பட்டு வந்தது. இந்த உலக வரலாறு முழுவதும் யூபிலி காலங்களாகப் பிரிக்கப் பட்டு இருக்கிறது. இது சீனாய் மலையில் மோசேக்கு அளிக்கப்பட்ட ஒரு திட்டமாகக் கருதப்படுகிறது. இந்தப் புத்தகம் வான தூதர், பேய்கள் பற்றிய கோட்பாட்டு வளர்ச்சி நிலைகளை நன்கு காட்டுகிறது. மேலும், யூத மதத்தின் பழக்க வழக்கத் திற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட் டுள்ளது. யூதர்களுக்கும் புறவினத்தார்களுக் கும் உள்ள வேற்றுமை காட்டப் பட்டுள்ளது.

**2. தலைப்பும் வாசகமும்:** இந்த நூல் பல் வேறு பெயர்களால் அழைக்கப்பட்டிருக் கிறது. யூபிலிகள், சிறிய ஆதியாகமம், மோசேயின் வெளிப்பாடு, மோசேயின் ஏற்பாடு, ஆதாமின் புதல்விகளின் புத்தகம், ஆதாமின் வாழ்க்கை.

இப்போது இருக்கும் பிரதிகள் எத்தி யோப்பிய, கிரேக்க, இலத்தீன், சீரியக்கு மொழிகளில் உள்ளன. நான்கு எத்தியோப் பியப் பிரதிகள் உள்ளன. 15-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்த முதல் பிரதியும், 16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டாம் பிரதியும் அதிகமாக நம்பத் தகுந்தன. எத்தி

யோப்பியப் பதிப்புகள் மட்டும்தான் முழுமையாகப் பாதுகாக்கப்பட்டுள்ளன. கிரேக்க பதிப்பில் சில பிரதிகளைத் தவிர மற்ற அனைத்தும் காணாமல் போய்விட்டன. ஒரு பிரதி *(11:2-21)* எத்தியோப்பிய வாசக சார்லசின் பதிப்பில் காணப்படுகிறது. நான்கில் ஒரு பகுதி இலத்தீன் பதிப்பில் பாதுகாக்கப்பட்டுள்ளது. இஃது எத்தியோப்பியப் பதிப்பிற்கு ஒத்த மதிப்புடையதாய் உள்ளது. ஆனால், திருத்தியவர்களின் கையில் அதிகம் பாதிக்கப்பட்டுள்ளது. சீரியக்கு பதிப்புச் சான்று சிறிது தாழ்ந்ததே. இது ''யூபிலி என்ற எபிரேய நூலின்படி குலமூதாதையர்களின் மனைவிகளின் பெயர்கள்'' என்ற சீரியக்குப் பிரதியில் அடங்கியுள்ளது.

**3. காலமும் ஆசிரியரும்:** இந்நூல் கி.மு. 153-க்கும், 105-க்கும் இடையில் எழுதப்பட்டது. இதன் வரலாற்றுப் பின்னணி சீமோன், இரிக்கானு என்பவர்களின் கீழ் இருந்த மக்கபேயர்களின் காலத்தைப் பிரதிபலிக்கிறது. இந்த நூல் ஓர் ஆசிரியரின் வேலை என்று பொதுவாகக் கருதப்படுகிறது. அவர் விருத்தசேதனம், ஓய்வுநாள், சட்டத்தின் மதிப்பு, வானதூதர்களின் மேல் நம்பிக்கை, பேய்கள் மற்றும் உயிரின் அழியாத்தன்மை ஆகியவற்றின் மேல் குறுகிய கண்ணோட்டம் கொண்டிருப்பதால், குறுகிய கண்ணோட்டம் உள்ள ஒரு பரிசேயராகவோ, ஒரு லேவிய குருவாகவோ இருக்கலாம். இவர் மக்கபேயர் குருத்துவத்திற்குப் பெரிதும் ஆதரவு அளித்தவராகவும் தெரிகிறது. மேலும், பழைய மரபுகளிலிருந்தும் பழைய நூல்களிலிருந்தும் குறிப்பாக நோவா நூல், ஏனோக்குநூல் போன்றவற்றிலிருந்து தனது கருத்துக்களை எடுத்திருக்கிறார்.

**4. குறிக்கோளும் பொருளடக்கமும்:** இதன் ஆசிரியரின் முக்கிய நோக்கம், உண்மைகளை மீண்டும் எழுதுவதாகும். அதாவது எவ்வாறு குலமூதாதையர்கள் சட்டத்தை மிக நுணுக்கமாக அனுசரித்தார்கள் என்று தெளிவுறுத்த எழுதினார். இவர் தனது நூல் மோசேக்குக் கடவுள் கொடுத்த வெளிப்பாடாகக் காட்ட முயற்சிசெய்தார்; அதாவது, 'முதல் சட்டம்' (வசனங்கள் 1-22) என்று கருதப்பட்ட 'ஐந்நூலுக்கு'ப் பிற்சேர்க்கையாக ஆக்க எண்ணினார். கிரேக்கமயமாக்கும் ஒழுக்கக்கேடான விளைவுகளிலிருந்து, யூதமதத்தைக் காப்பாற்றுவது இவருடைய ஆசையாக இருந்தது. இஸ்ராயேலைப் புகழ்ந்தார். சட்டத்தைப் புகழ்ந்தார். குலமூதாதையர்கள் குற்றமற்ற வாழ்க்கை வாழ்ந்தனர் என்று காட்டினார். புறவினத்தாரை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. ''பிரசன்னத்தின் வானதூதர்'' சீனாய் மலையில் மோசேக்கு ஆதி *1* -யாத் *3*-வரை அடங்கியுள்ள வரலாற்றையும் சமயச்சட்டங்களையும் வெளிப்படுத்தினார். இஃது அலாக்கா மிட்ராஸ் முறையில் உள்ளது. சாதகமானவற்றையே எடுத்துக்கூறுகிறார். பாதகமானவற்றை விட்டுவிடுகிறார்.

உலக வரலாறு முழுவதும் யூபிலி காலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஏழு முறை ஏழு ஏழாகப் பிரிக்கப்பட்டுள்ளது (லேவி *25:8-12*). *2:1-2* முதல், ஆதி *1:1* - யாத் *14:31* வரையுள்ள பகுதியோடு இணையாக உள்ளது. மிட்ராசிக் விரிவாக்கம் கொண்டுள்ளது. யூத முறைகள் அதிக முக்கியத்துவம் பெற்றுள்ளன. விழா அனுசரிப்புகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. யூதர்களுக்கும், புறவினத்து மக்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் தெளிவாக்கப்பட்டுள்ளன. இஸ்ராயேல் தனித்து இருக்க வேண்டும் என எச்சரிக்கப்பட்டுள்ளது. இங்கு ஏனோக்கு நூலை விட வானதூதர், பேய்கள் பற்றிய கொள்கை முன்னேற்றம் அடைந்துள்ளது. பல கற்பனைக் கதைகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. குலமூதாதையர்களைக் குறைவுபட வைக்கும் எதுவும் நீக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் எழுத்தாளர் 'தோரா' மேல் அதிக மதிப்பு வைத்திருப்பவர். தானியேல் மற்றும் ஏனோக்கு ஆகமங்களில் உள்ள வெளிப்பாட்டு முறையைத் தனது விளக்கத்தில் பயன்படுத்தியுள்ளார். இவ்வாறு மோசே வானதூதரிடமிருந்து வெளிப்பாடு

பெறுகிறார். இஃது ஒரு புது வகையான முறையில் பொருளை எடுத்துக் கூறுவதாகும். இவைதான் யூபிலி நூல் மூலத்தன்மையும் தனித்தன்மையும் உடையது என்று காட்டுகின்றன.

**5. மொழி:** கீழ்க்காணும் காரணங்களுக்காக, சார்லஸ் என்பவர் இந்தப் புத்தகம் எபிரேய மொழியில்தான் இருக்க வேண்டும் என்று நம்புகிறார். அ) மோசேயால் எழுதப்பட வேண்டிய புத்தகம் எபிரேய மொழியில்தான் இருக்க முடியும். இது புனிதமானதாகவும், தேசிய மொழியாகவும் இருக்கிறது. ஆ) தேசிய மொழி மறுமலர்ச்சியினால், தேசிய ஆர்வ மறுமலர்ச்சி சேர்க்கப்பட்டுள்ளது. இ) இருக்கின்ற பிரதிகள் எப்போதும், நமக்குத் தெரியாதவைகளை விளக்கும் பொருட்டு, எபிரேயத்தில் மொழிபெயர்ப்பது புரிந்து கொள்ளத் தக்கதாயுள்ளது. வேறுசிலர் இந்நூல் மூலத்தில் அரமேயிக்கில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுவர்.

யூபிலி நூலை ஒத்த ஏடுகள் கும்ரான் ஏட்டுத்தொகுப்பில் காணப்படுகின்றன.

**யூபுல்** (EUBULUS - விவேகமுள்ள, நல்லாலோசனையுடைய)

*2 திமொ 4:21*-இல் வாழ்த்துக் கூறிக் கொள்ளும் ஒரு கிறிஸ்தவன். கல்வெட்டுப் பொறிப்புகளிலும் புல்தாள்களிலும் இப்பெயர் அடிக்கடி வருகிறது.

**யூப்பத்தோர்** (EUPATOR - மேன்மைமிக்க தந்தையினுடைய)

செலூக்கிய அரசன் ஐந்தாம் அந்தியோக்கசுக்குக் கொடுக்கப்பட்ட சிறப்புப் பெயர் அல்லது பட்டம். அந்தியோக்கு எப்பிப்பானின் புதல்வனாக இருந்த காரணத்தால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம் (*1 மக் 6:17* தொ; *2 மக் 10:10* தொ).

**யூப்பிரத்தீசு** (EUPHRATES)

1. மேற்கு ஆசியாவில் மிக அகண்ட, நீளமான ஆறு. விவிலியப் பாரம்பரியத்தின் படி இன்ப வனத்திலிருந்து புறப்படும் ஆற்றின் நான்கு கிளை ஆறுகளில் இதுவும் ஒன்று. இறைவன் இஸ்ராயேல் மக்களுக்கு வாக்களித்த நாட்டின் வடக்கு எல்லையாக இந்நதி இருக்கிறது (*ஆதி 15:18; உப 1:7; 11:24; யோசு 1:4*). எபிரேய அரசு அதன் உச்சநிலையில் இதுவரை பரவியிருந்தது (*2 சாமு 8:3; 10:16; 1 அர 4:24*). யூப்பிரத்தீசு சில இடங்களில் வெறுமனே ''ஆறு'' என்றே அழைக்கப்படுகிறது (*எண் 22:5; உப 11:24; யோசு 24:3.14; யோசு 1:4*-இல் ''பேராறு'' என்று குறிப்பிடப்படுகிறது). ''நதிக்கு அப்பால்'' என்ற பாரசீகப் பகுதியில் நகர்கள் காணப்படுகின்றன (*எஸ் 4:10* தொ; *நெகே 2:7-9*).

*2.* **யூப்பிரத்தீசு மேற்பகுதி:** யூப்பிரத்தீசு ஆர்மேனியாவிலிருந்து புறப்படுகிறது. இரண்டு தனித்தனிக் கிளை ஆறுகளின் சங்கமத்தால் இஃது உருவாகிறது. இவற்றில் மேற்கே அமைந்துள்ள 'காரா-சூ'தான் யூப்பிரத்தீசின் உண்மையான தொடக்கமாக பொதுவாகக் கருதப்படுகிறது; அஃது ஏர்சேருமுக்கு வடபகுதியிலுள்ள வட்டமான குளத்திலிருந்து ஓடுகிறது. பின் மேற்குப் புறமாக ஓடிவருகிறது. கிழக்கிலிருந்து வரும் முரத் சூயு என்னும் கிளை ஆறு ஏர்சேருமின் கிழக்குப்பகுதியில் தோன்றி சிறிது சிறிதாக மேற்குப்புறமாக வந்து 'காரா-சூ'வுக்கு இணையாக ஓடுகிறது. மலாத்தியாவின் வடக்கே இரண்டும் இணைந்து யூப்பிரத்தீசாக உருவாகின்றன. மலாத்தியாவிலிருந்து தென்கிழக்கிலும், தென்மேற்கிலுமாகப் பாய்ந்து ஓடி, பழங்கால சமோசாத்தாவான சாம்சாதில் சீரியச் சமவெளியில் நுழைகிறது. இந்தச் சமவெளி ஆற்றின் வலக் கரையில் அமைந்துள்ளது. இஃது ஒரு முக்கியமான 'கடவுத்துறையை'க் குறிக்கிறது. பழைய 'சமோசாத்தா' அசீரிய கும்முக்கின் அதாவது கொம்மாகேனெயின் கிரேக்க அரசின் தலைநகராக விளங்கியது. இந்த ஆற்றின் ஊற்றுகள் கடல் மட்டத்திலிருந்து *2438* மீ (*8000* அடி) உயரத்தில் உள்ளன. கண்கவர் கெவிமலைப் பகுதி வழியாக ஓடி *305* மீ (*1000*) தாழ்கிறது.

*2.* **யூப்பிரத்தீசின் நடுப்பகுதி:** ஆற்றின் வலப்பகுதியிலுள்ள பழங்காலத் கார்க்கே

மிஸ் இருந்த இடமான எராப்லூவைத் தெற்காக ஓடிக் கடக்கிறது. தொடக்கத்தில் ஒரு சிறிய நகர அரசின் மையமாக விளங்கிய கார்க்கேமிஸ் கித்தியப் பேரரசினுடையவும், பிற்காலத்தில் அசீரியப் பேரரசினுடையவும் முக்கியமான மாநிலத் தலைநகராக மாறியது. பாபிலோனிய இரண்டாம் நெபுகத்னேசர் கி.மு. 605-இல் எகிப்தின் நெக்கோவை வெற்றிகொண்டது கார்க்கேமிசில் உள்ள யூப்பிரத்தீசின் நதிக் கரையில்தான் *(காண்க. 2 அர 24:7; எரே 46)*. கார்க்கேமிசின் தெற்கில், மேற்கிலிருந்து ஓடிவரும் ''சாசூர்'' *(அசீரிய சாகூர்)* ஆறு . கலக்கிறது; யூப்பிரத்தீசு தொடர்ந்து தெற்கு நோக்கி ஓடுகிறது. முதலில் பெலிக்கு *(அசீரிய பாலிக்கூ)*. பிறகு காபூர் ஆகிய ஆறுகள் இஃதோடு சேர்ந்து கொள்கின்றன. இரண்டு ஆறுகளுமே வடதிசையிலிருந்து வந்து யூப்பிரத்தீசில் கலக்கின்றன. ஆறு தென்மேற்காகத் தொடர்ந்து ஓடி சலேகியா, பழங்காலத் தூரா-யுரோப்போ, பழைய மாரிக்கு அருகிலுள்ள அல்புகெமால் ஆகியவற்றைக் கடக்கிறது. மேற்காக ஓடி 'அனா'வையும், பிறகு தென்மேற்காக பழைய 'இத்து'வான கித்துவையும் அடைகிறது. பழங்காலத்தில் இத்து அதன் நிலக்கீலுக்குப் பெயர் போனது. இந்நடுப்பகுதியில் ஆறு கடல் மட்டத்திலிருந்து 195 மீட்டரிலிருந்து 66 மீட்டருக்குத் *(650-220 அடி)* தாழ்கிறது.

**3. யூப்பிரத்தீசின் கீழ்ப்பகுதி:** கித்திலிருந்து யூப்பிரத்தீசு பெல்லுயாவுக்கும் தெற்கில் முசெய்யீபுக்கு ஓடுகிறது. அங்கு இரண்டு கிளைகளாகப் பிரிகிறது. முக்கிய கிளையான கிந்தியா, கிந்தியாவைக் கடந்து பகிர்சினாப்பியே வழியாகச் சாமாவாவுக்கு ஓடுகிறது. சிறிய கிளையான 'கில்லா' கிளை ஆறு கில்லாவையும் பழைய பாபிலோனியாவையும் கடந்து ஓடித் 'திவானியா'வை அடைகிறது. பிறகு தெற்கில் கிந்தியா கிளையோடும், தெற்கில் 'சாமாவா'வில் சேர்கிறது. 'சாமா'விலிருந்து தென்மேற்காக 'கம்மார்' ஏரி வழியாக 'நசிரியே'வைக்கடக்கிறது. 'பாஸ்ரா'வுக்கு முன் 'திகிரீசு' ஆற்றுடன் இணைகிறது. 'சாத்-ஏல்-அராப்' ஆக இரு ஆறுகளும் ஒன்றிணைந்து 'பாஸ்ரா'வைக் கடந்து பாரசீக வளைகுடாவில் கலக்கிறது. இந்தப் பகுதி பாபிலோன் கீஸ், நிப்பூர் எரேக், ஊர் போன்ற நகர்கள் வழியாக 3600 கி.மீ. *(2200 மைல்)* ஓடுகிறது.

**4. பண்டைக்காலத்தில் யூப்பிரத்தீசின் கீழ்ப்பகுதி:** இப்பகுதியில் யூப்பிரத்தீசின் பழங்கால ஓட்டம் இக்காலத்திலுள்ளதிலிருந்து வேறுபட்டதாகத் தெரிகிறது. பெல்லூயா பகுதியில் இன்று செல்வதற்கு இன்னும் கிழக்காக திசைமாறித் திரும்பி 'சிப்பார்' என்ற சூரியக் கடவுளின் நகரத்தைக் கடந்தது. சிப்பார், பழங்காலத்தில் கல்தேயர்களின் கல்வி மையமாகத் திகழ்ந்தது. சிப்பாரிலிருந்து மெசபொத்தாமியாவின் முதல் அரச மரபின் இடமான கீசை நோக்கித் தெற்குப் புறமாக ஓடி வந்து அடைகிறது. அங்கிருந்து சுமேரின் புனித இடமான, 'என்லில்' என்ற புயல் தேவதையின் நகரமான நிப்பூரைக் கடந்து சுருபாக்கை (இக்காலப் பாரா) அடைகிறது. இங்கேதான் சுமேரிய நோவா, செயுசுதரா அவருடைய பேழையைக் கட்டினார். பின் தெற்காக ஓடி இன்றைய 'வார்க்கா'வான எரேக்கை அடைகிறது. எரேக்கு இஸ்தார் தேவதையினுடையவும், காவியத் தலைவன் கில்காமெசினுடையவும் புகழ்பெற்ற நகரம். யூப்பிரதீசு எரேக்கிலிருந்து, ஆபிரகாம் பிறந்த இடமான ''ஊர்'' வந்து சேர்கிறது. பிறகு இந்த நகரத்தின் தெற்காக ஓடி, பாரசீக வளைகுடாவில் கலக்கிறது.

**5. விவிலியக் குறிப்புகள்:** யூப்பிரத்தீசு சுமேரியர், பாபிலோனியர்களுக்கு உயிர் நாடி போன்றதாகும். மெசபொத்தாமியா, சீரியா, மத்திய தரைக்கடல், எகிப்து ஆகியவற்றிற்கிடையே ஒரு முக்கிய வணிக மார்க்கமாகும். ஆனால், பழங்காலப் பாலஸ்தீனத்திலிருந்து வெகுதொலைவிலுள்ள யூப்பிரத்தீசு எபிரேயர்களை அவ்வளவு பாதிக்கவில்லை. ஆகவே, இஸ்ராயேலின் வரலாற்றைப் பாதித்த அளவுக்கு இங்குமங்குமாகவே விவிலியம் இந்த நதியைக் குறிக்கிறது.

***அ. பழைய ஏற்பாடு:*** *ஆதி 2:14-இன்படி யூப்பிரத்தீசு, ஏதேன் தோட்டத்தோடு தொடர்புடைய நான்காவது ஆறாகும். இஃது ஏதேன்தோட்டம், மெசபொத்தாமி யாவில் இருந்தது என்று சுட்டுகிறது. ஆபிரகாமுக்கும் அவரது சந்ததியினருக்கும் வாக்களிக்கப்பட்ட நாட்டின் கிழக்கு எல்லையாக, யூப்பிரத்தீசு அடிக்கடி கூறப்படுகிறது (ஆதி 15:18; காண்க. உப 1:7; 11:24; யோசு 1:4). தாவீது, சாலமோன் ஆட்சியில் (காண்க. 2 சாமு 8:3), ஒருவேளை 2-ஆம் எரொபவாமின் ஆட்சியிலும் (2 அர 14:25) இஸ்ரயேலின் அரசு வடகிழக்கில் யூப்பிரத்தீசு வரை பரவியிருந்தது (காண்க. எசா 27:12; செக் 9:10). எகிப்தியரை மெகித்தோவில் தடுக்க யோசியா செய்த வெற்றி பெறாத முயற்சிக்குப்பின் (2 அர 23:29), கார்கேமிசில் நெபுகத்னேசர் எகிப்திய நெக்கோவை 605-இல் தோற்கடித்துக் கிழக்கில் எகிப்தியரது செல்வாக்கை முடிவுக்குக் கொண்டு வந்தார் (2 அர 24:7). இது யூதாவின் முடிவையும் தொடங்கி வைத்தது. யூப்பிரத்தீசு பாரசீக மாநிலத்தின் ''ஆற்றுக்கு அப்பால்'' (ஆற்றுக்கு மேற்கு) கிழக்கு எல்லையாக அமைந்தது (எஸ் 4:11.17.20).*

*எரேமியா நூலில் யூப்பிரத்தீசு இருமுறை அடையாள எடுத்துக்காட்டாக வருகிறது. இறைவாக்கினர் தனது இடைக்கச்சையை இந்த ஆற்றில் புதைத்து வைத்துச் சிறிது காலத்திற்கு பின் எடுத்துவர இறைவனால் கட்டளையிடப்படுகிறார். இதனால் யூதாவின் அகந்தை நாடுகடத்தலால் அடக்கப்படும் என்று நாடகப்பாணியில் எடுத்துக் கூறப்படுகிறது (எரே 13:1-11). விளக்கவுரையாளர்கள் சிலர் எரேமியாவின் பிறந்த இடமான அனதோத்துக்கு வடகிழக்கில் 6 கி.மீ. தொலைவிலுள்ள பாராவிலுள்ள ஊற்றாகும் இந்த ஆறு என்று விளக்குகின்றனர். பிற்காலத்தில் எரேமியா, பாபிலோனுக்கு எதிரான இறைவாக்குகள் அடங்கிய சுருளை ஆற்றில் எறியும்படி செராயாவுக்குக் கட்டளையிடுகிறார். இச்செய்கையால் பாபிலோனின் வருங்கால வீழ்ச்சியைச் சுட்டிக்காட்டுகிறார் (51:63).*

***ஆ. புதிய ஏற்பாடு:*** *திருவெளிப்பாட்டு நூலில், யூப்பிரத்தீசு வருங்கால இறைத்தீர்ப்பின் இடமாகும். இங்கு நான்கு தூதர்கள் வைக்கப்பட்டிருந்தனர். இவர்கள் விசுவசியாதவர்களில் அனேகரை அழிக்க அனுமதிக்கப்படுவர் (திருவெளி 9:14). மற்றொரு இடத்தில், ஒரு வானதூதர் இறைச் சீற்றத்தின் பாத்திரத்தை ஆற்றில் கொட்டி அதை வறண்டுபோகச் செய்து, கிழக்கிலிருந்து வரும் படைக்கு வழி அமைக்கிறார் (16:12). இதனால், ஆசிரியரான யோவான் உரோமையர் பேரரசுக்கு எதிராக பார்த்தியரின் தாக்குதலைச் சுட்டிக்காட்டினாலும், அவருடைய உருவகம் இருந்த இருமக்களுக்குமிடையே நடந்த எந்த வரலாற்றுப் போராட்டங்களையும் குறிக்கும் வரைக்குட்பட்டதன்று.*

**யூப்பொலம்** *(EUPOLEMUS - போரில் ஆற்றல் உள்ளவன்)*

*ஒரு யூதப் பிரதிநிதி. நிக்கானோர்மேல் வெற்றிக்குப் பிறகு உரோமையரோடு உடன்படிக்கை ஏற்படுத்த கி.மு. 161-இல் யூதா மக்கபேயுவால் உரோமைக்கு அனுப்பப்பட்டவர் (1 மக் 8:17; 2 மக் 4:11). இந்தக் காலக்கட்டத்தில் யூதர்களின் வரலாற்றைக் கிரேக்கத்தில் எழுதிய வரலாற்று ஆசிரியருக்கும் இதே பெயர்தான். இவரும் அந்த அரசியல் பிரதிநிதியும் ஒரே ஆளைக் குறிப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது.*

**யூமன்** *(EUMENES - நற்சார்புடைய)*

*1 மக் 8:3-இல் குறிப்பிடப்படும் அரசன். இவர்தான் பெர்காமுவின் இரண்டாம் யூமன் என்ற அரசன் (கி.மு. 197-148). இவர்தான், செலூக்கிய அரசன் (பெரிய) மூன்றாம் அந்தியோக்கு என்னும் செலூக்கிய அரசனோடு உரோமையர்கள் போர் புரிந்தபோது (கி.மு. 190) உரோமையர்களுக்கு உதவினார். ஆகவே, அதற்குச் சன்மானமாக அவருக்குச் சீரியாவின் பெரும் பகுதியை உரோமையர்கள் கொடுத்*

தனர். அவர் பெர்கமுவில் பல கட்டடங்களைக் கட்டி எழுப்பினார்.

**யூர்கெத்து** *(EUERGETES - உபகாரி)*

இன்று நல்ல சேவை செய்பவர்களுக்கு அவர்களைப் பாராட்டி அவர்களுடைய சேவைக்காக விருது கொடுப்பது போல, பண்டைக்காலத்தில் குறிப்பிடும் வகையில் நல்ல பணிகள் செய்பவருக்குப் பெருமையாக அளிக்கப்படும் பட்டம் (காண். லூக் 22:25). சீராக்கு நூல் ஆசிரியர் யூர்கெத்தின் 38-ஆவது வருட ஆட்சியில் எகிப்துக்கு அவர் அங்கு வந்ததைக் குறிப்பதனால் தன் நூலின் காலத்தை நிர்ணயிக்கின்றார் (தோலமி 7).

**யூலியா** *(JULIA)*

உரோமையில் ஒரு கிறிஸ்தவப்பெண். பவுலிடமிருந்து வாழ்த்துப் பெற்றவர்களில் ஒருத்தி (உரோ 16:15). ஒருவேளை பிலலோகுவின் மனைவியாகவோ, சகோதரியாகவோ இருக்கலாம்.

**யூலியு** *(JULIUS)*

இவர் ஓர் உரோமை நூற்றுவர் தலைவன். பவுலைப் பாலஸ்தீனத்திலிருந்து உரோமுக்குக் கொண்டு செல்வதற்கு நியமிக்கப்பட்டவன். யூலியு என்ற பெயரானது, யூலியு குடும்பத்தினரால் புகழாக்கப்பட்ட உரோமையர்களின் பொதுவான பெயர். அ.ப. 27:1.3.11.43; 28:7-இல் குறிக்கப்படும் யூலியு அகுஸ்துவின் படைப்பிரிவைச் சேர்ந்த ஒரு நூற்றுவர் தலைவன். இப்படை செசரியாவில் நிலை கொண்டிருந்தது.

பவுலுக்கு எ்திராக யூதத் தலைவர்கள் முறையிட்டார்கள். 'யூதர்களிடையே கலகம் மூட்டுகிறவன், கோயிலை மாசுபடுத்த முயன்றவன், நசரேயர்களின் தலைவன் என்று சொல்லி ஆளுநன் முன்பாகக் குற்றஞ் சாட்டினர் (அ.ப. 24:1-9). பவுல் இவ்வழக்கு செசாருடைய மன்றத்திற்குச் செல்ல வேண்டும் என்று வாதாடினார். ஏனென்றால், பவுல் ஓர் உரோமைக் குடிமகன்; எனவே, செசாரிடமே என் வழக்கு செல்ல வேண்டும் என்றார் (25:8-12).

அகிரிப்பா என்ற அரசனும், பெஸ்து என்ற ஆளுநனும் பவுல் உரோமைக்கு அனுப்பப்படுவதற்குச் சம்மதித்தனர் (26:30-32). இந்த யூலியுவின் பாதுகாப்பில் பவுல் ஒப்படைக்கப்பட்டார் (27:1). இராணுவக் கப்பலுக்குப் பதிலாக வியாபாரக் கப்பலில் பயணம் செய்தனர். அதனால் பவுலின் நண்பர்களும் அவரோடு பயணம் செய்ய முடிந்தது.

படைத்தலைவன் யூலியு பவுலிடம் அன்பாகவும், இரக்கத்துடனும் நடந்து கொண்டான். அதனால் சீதோன் துறைமுகத்தில் பவுல் தன் நண்பர்களைச் சந்திக்கவும், அவர்களிடமிருந்து அன்பைப் பெற்றுக் கொள்ளவும் அனுமதி அளித்தான். பின்பு, மேற்காக உரோமை நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தனர்.

பயணத்தின்போது புயலும், எதிர்க்காற்றும் வீசி, சூழ்நிலை மோசமாய் இருந்ததால், அவர்கள் கணக்கிட்டிருந்த நாளுக்கும் தாமதமாகப் போய்ச் சேரவேண்டியிருந்தது. பவுல், கப்பல் பயணம் இப்பொழுது ஆபத்தானது என எச்சரித்தும், நூற்றுவர் தலைவன் அவரை நம்பாமல் கப்பலோட்டியும் கப்பலுக்குரியவனும் சொன்னதை நம்பினான். அதனால் கப்பல் புயலுக்குள் சிக்கியது (29:9-11). புயலில் தத்தளித்துப் பாறையில் கப்பல் மோதி உடைந்தது. சிதறுண்ட அனைவரும், ஒருவழியாக நீந்தியும், கட்டைகளைப் பிடித்துக்கொண்டும் கரை சேர்ந்தார்கள். அது மால்த்தா தீவு எனப் பின்பு அறிந்தார்கள் (28:1). மற்ற வீரர்கள் பவுலையும் மற்றக் கைதிகளையும் கொன்றுவிட எண்ணியபோது, யூலியு அதைத் தடுத்து நிறுத்தினான் (27:42-44). அதற்குப்பின் யூலியுவைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை.

**யூற்றா** *(JUTTAH - நீட்டப்பட்ட, சாய்ந்துள்ள)*

இது மாவோன் மாகாணத்தில், தென் கிழக்கு மலைப்பகுதியில் அமைந்துள்ள யூதா கோத்திரத்தின் ஒரு நகரம் (யோசு 15:55). ஆரோனின் புதல்வர்கள் இந்த

நகரத்தை, லேவியர்களின் நகரங்களில் ஒன்றாக உருவாக்கினார் *(21:6)*. இதற்கு இணையான *1 நாள் 6:59*-இல் இது விடப்பட்டுள்ளது.

இஃது எபிரோனுக்குத் தென்மேற்கில் *8.8* கி.மீ. தொலைவிலும், பெயித் இப்ரினுக்குத் தெற்கில் *25* கி.மீ. தொலைவிலும் உள்ள யாற்றாவாக அடையாளம் காட்டப்படுகிறது. தரோமின் (நெகேபு) மத்தியில் எலுத்தெரப்போலிலிருந்து *18* கி.மீ. தொலைவில் உள்ள யூதர்களின் மிகப் பெரிய ஊர்தான் யூற்றா என்று யூசேபியு சொல்லுகிறார்.

இந்த மலைப்பகுதியில்தான் மரியாள் எலிசபெத்தைச் சந்தித்ததாக ஒரு பக்தி மரபு சொல்லுகிறது. இக்கருத்து அறிஞர் பலரால் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.

**யூனிக்கி** (EUNICE - நல்ல வெற்றி)

லோயியின் புதல்வி *(2 திமொ 1:5)*. திமொத்தேயுவின் தாய். இவளுடைய கணவன் ஒரு புறவினத்தான் *(அ.ப. 16:1)*. *2* திமொத்தேயு நூலின் ஆசிரியர் அவளை அவளுடைய விசுவாசத்திற்காகப் பாராட்டுகின்றார். கலாத்தியாவிலுள்ள தெர்பை அல்லது லிஸ்திராவிலிருந்து வந்தவள். அவள் யூத இனத்தைச் சார்ந்தவள் (விதவையாக இருக்கலாம்). கிறிஸ்தவராக மாறியவள்.

அவள் விசுவாசமும், அவள் அன்னை லோயியின் விசுவாசமும் *2 திமொ 1:5*-இல் குறிப்பிடப்படுவது, திமொத்தேயு இளையவராக இருந்த போதிலும் *(1 திமொ 4:12; 2 திமொ 2:22)* அவர் பழமையான கிறிஸ்தவப் பாரம்பரியத்தில் நிலைத்திருப்பதைச் சிறப்பித்துக்காட்டுகிறது. இவளும் இவள் தாயும் பவுலின் போதகத்தால் கிறிஸ்தவ மறையைத் தழுவினர் (காண்க. *அ.ப. 14:6.21-22*).

**யூனியா** (JUNIAS)

ஒரு கிறிஸ்தவ யூதப்பெண். பவுலின் உறவினரும், உடன் கைதியுமாவாள். இவள் ஒருவேளை அந்திரோனிக்குவின் மனைவியாக இருக்கலாம். இவர்கள் பவுலின் மனந்திரும்புதலுக்கு முன்பே கிறிஸ்தவர்கள் ஆனவர்கள். அப்போஸ்தலர்களுள் இவர்கள் பேர்பெற்றவர்கள் *(அ.ப. 16:7)*.

# யோ

**யோகனான்** (JEHOHANAN - யாவே அருளுடையவர், கருணை மிகுந்தவர்)

1. கோராகிய குலத்தைச் சேர்ந்த லேவியர். மெசலேமியாவின் ஆறாவது மகன். இவர் ஆலய வாயிற்காவலராக இருந்தார் (1 நாள் 26:3).

2. யூதா இனத்தவர். யோசபாத்து அரசனின் படைத்தலைவர்களில் ஒருவர் (2 நாள் 17:15).

3. பெரிய குரு யோயாதா அத்தலியாவுக்கு எதிராக புரட்சி செய்த போது அவருக்கு உதவிய இசுமாயேல் என்பவரின் தந்தை (2 நாள் 23:1). இவர் (2)-இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

4. அடிமைத்தனத்தினின்று திரும்பி வந்தவர்களுடைய பாவத்தின் பொருட்டு, உடன்படிக்கையைப் புதுப்பித்தலுக்காக எஸ்ரா நோன்பு இருந்த அறையின் உடைமையாளன் (எஸ் 10:6). இவர் பெரிய குரு எல்யாசீபின் மகன் என்று அழைக்கப்படுகிறார். இவர் நெகே 12:22-23-இல் கூறப்படும் நெகேமியா காலத்துத் தலைமைக் குருவான எல்யாசீபின் (நெகே 3:1) பேரன் யோகனானாக இருக்கலாம். இஃது உண்மையாயின், எஸ்ரா-நெகேமியா காலக் கணிப்புக்கு இஃது ஒரு முக்கிய விடை அளிக்கிறது.

5. பேபாயின் ஒரு மகன். எஸ்ராவின் காலத்தில் புறவினப் பெண்ணை மணந்திருந்த ஓர் இஸ்ராயேலர் (எஸ் 10:28).

6. நெகேமியாவின் காலத்தில் வாழ்ந்த அம்மோனிய நாட்டவனும், நெகேமியாவின் எதிரியுமான தோபியா என்பவரின் மகன். எருசலேம் நகர் மதிலைக் கட்ட உதவிய மெசுல்லாம் என்பவரின் மகளே இவரது யூத மனைவியாவார் (நெகே 6:18; காண்க. 3:4.30).

7. தலைமைக்குரு யோயாக்கீமின் காலத்தில் ஒரு குரு. அமரியா குடும்பத்தின் தலைவர் (நெகே 12:13).

8. நெகேமியா இருந்த நாட்களில், எருசலேம் மதிலை அர்ப்பணித்தபோது பணிபுரிந்த குருக்களில் ஒருவர் (நெகே 12:42).

**யோகனான்** (JOHANAN - யாவே கருணை மிகுந்தவர்)

1. காரயாகு மகனாகிய இவர் இறைவாக்கினர் எரேமியா காலத்தவர். எருசலேம் பாபிலோனியரால் வீழ்த்தப்பட்ட பின்னர் (கி.மு. 586), பாபிலோனிய அரசனால் நியமிக்கப்பட்ட ஆளுநர் கெதல்யாவுடன் ஒத்துழைத்த யூதப்படைத்தலைவர்களுள் ஒருவர் (எரே 40:8; காண்க. 2 அர 25:23). கெதல்யாவைக் கொலை செய்யத் தீட்டப்பட்ட ஒரு சதித்திட்டம் பற்றி அவரை யோகனான் எச்சரித்தார் (எரே 40:13-16). ஆனால், கெதல்யா அதனைப் பொருட்படுத்தாததால் கொல்லப்பட்டார். பின்னர் இக்கொலைக்காகப் பழிவாங்கினாலும், இதன் பின்விளைவுகட்குப் பயந்து, கெதல்யா கொல்லப்பட்டதால் பாபிலோனிலிருந்து தமக்கு என்ன தொல்லை வருமோவென அஞ்சி, மற்றத் தலைவர்களுடன் கலந்து பேசி எகிப்துக்குப் போக எண்ணினார் (எரே 41:11-18). எரேமியா இறைவாக்கினர் எகிப்துக்குச் செல்ல வேண்டாம், கடவுளை நம்பி இங்கேயே இருங்கள் என்று கூறியும், அவரை நம்பாமல், இறைவாக்கினரையும் தங்களோடு இழுத்துக் கொண்டு எகிப்துக்கு ஓடிப் போயினர் (எரே 42:1-43:7).

2. யோசியா அரசனின் மூத்த மைந்தன் இவன். முதல் மைந்தனாக இருந்தும் (640-609) தன் தந்தையை அடுத்து இவன் அரியணை ஏறவில்லை; ஒருவேளை இளைஞராக இருக்கும்போதே இறந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது (1 நாள் 3:15).

3. தாவீதின் வழிவந்த எலியோவெனாய் என்பவரின் மகன் (1 நாள் 3:24).

4. யோகனான் ஒரு குரு. இவர் குரு அசரியாவின் மகன் அல்லது தூரத்து உறவினனாக இருக்க வேண்டும் (1 நாள் 6:9; காண்க. 1 அர 4:2). ஆலயத்தில் அசரியாவுடன் பணிபுரிந்தார்.

5. பென்யமின் குலத்தினனான இவன் தாவீதுடன் சிக்லாகில் போர் வீரனாகச் சேர்ந்து கொண்டான் (1 நாள் 12:4).

6. காத்து என்ற இடத்திலிருந்து வந்து சிக்லாகில் மறைந்து வாழ்ந்த தாவீதுடன் சேர்ந்து கொண்டவர்களில் இவனும் ஒருவன் (1 நாள் 12:12.14).

7. எப்பிரயிம் குலத்தலைவர்களில் ஒருவர் (2 அர 28:12). அசரியாவின் தந்தை.

8. எஸ்ராவுடன் பாபிலோனிலிருந்து திரும்பி வந்தவர்களில் ஒருவர் (எஸ்ரா 8:12). அஸ்காகு குலத்தைச் சேர்ந்தவர். அக்காற்றானின் மகன்.

9. தலைமைக்குரு எல்யாசீபின் பேரனும், யோயதாவுக்குப் பின்வந்த தலைமைக்குருவும் ஆவார் (நெகே 12:22-23). இங்கு மகன் என்பது சொந்த மகனையோ, பேரனையோ, தூரத்து உறவினர் யாரையோ குறிக்கலாம். நெகே 12:11-இல் கூறப்படும் யோனத்தான், யோகனான் என வருவதற்குப் பதிலாக தவறாக வந்ததாக இருக்கலாம். எஸ்ரா கோவிலிலிருந்து வந்து நோன்பு இருக்கப் புகுந்த அறை யோகனான் அறை என்று எஸ்ரா 10:6 குறிப்பிடுகிறது. எல்யாசீபின் பேரன் யோகனானும், எஸ்ரா ஓய்வெடுக்கச் சென்ற அறைக்குரியவனும் ஒரே ஆள்தானென்றால் நமக்குக் காலக்கணிப்பு சரியாக வருகிறது; உறவும் தெளிவாகிறது. எல்யாசீபு நெகேமியா காலத்தவர் என்றால் அவரது பேரன் யோகனான் எஸ்ராவின் காலத்தவர் என்பது சரியாக இருக்கும். ஆனால், எஸ்ரா நெகேமியாவுக்குப் பின் எருசலேம் வந்தார் எனக் கொண்டால்தான் இது சரியாகும்.

'எலபன்டைன் ஏடுகள்' எனும் நாணல்தாள் ஏடுகள் யோகனான் எனும் இத் தலைமைக்குரு பாரசீக மன்னன் இரண்டாம் தாரியு காலத்தவர் எனவும் குறிப்பிடுகிறது (கி.மு. 423-404). யூத வரலாற்றறிஞரான யோசிப்பசு இவரைக் கிரேக்கப் பெயரால் ''யோவான்'' என அழைக்கிறார். மேலும் தலைமைக் குரு பதவி பறி போய்விடும் எனக் கருதி தனது சகோதரன் ஏசுவாவைக் கொன்றார் எனவும் குறிப்பிடுகிறார்.

**யோகா** (JOHA - கொடுக்கப்பட்ட உயிர்)

1. பாரியாவின் புதல்வர்களில் ஒருவனான இவன் பெயர் பென்யமின் குலத்தின் தலைமுறை அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ளது (1 நாள் 8:16).

2. தாவீதின் வலிமைமிக்க போர்வீரர்கள் எனக்கூறப்படும் '30' பேர்களில், யோகா எனும் தீட்சியரும், அவனது சகோதரன் எதியவேலும் குறிப்பிடப்படுகின்றனர்.

**யோகிலி** (JOGLI - இறைவன் வெளிப்படுத்துவாராக)

தாண் கோத்திரத் தலைவனான புக்கியின் தந்தை இவர். இந்தப் புக்கி மேற்கு யோர்தானின் கானானிய நாட்டைப் பிரித்துக் கொடுக்கத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் ஒருவர் (எண் 34:22).

**யோக்கபேது** (JOCHEBED - யாவே மகிமை மிக்கவர்)

லேவியின் மகளான யோக்கபேது அம்ராமின் மனைவி; ஆரோன், மோசே, மிரியம் ஆகியவர்களின் தாய் (யாத் 6:20; எண் 26:59). குருக்கள் பாரம்பரியம் மட்டுமே இப்பெயரைக் கொண்டிருக்கிறது. எலோகீம் பாரம்பரியம் இவளை 'லேவியின் மகள்' என மட்டுமே குறிப்பிடுகிறது (யாத் 2:1). இப்பெயர் எதிலிருந்து தோன்றியது எனத் தெரியவில்லை. இப்பெயர் உணர்த்துவது என்னவெனில், 'யாவே மகிமைக்குரியர்' என்பதாம். எனவே 'யாவே' எனும் பெயர் மோசேக்கு முன்னரே தெரிந்த ஒன்றாகும் எனச் சுட்டுகிறது. ஆனால், குருக்கள் பாரம்பரிய ஆசிரியர் இதனை இந்தப் பொருளில் புரிந்து கொள்ளவில்லையெனத் தெரிகிறது.

**யோக்கிம்** *(JOKIM - யாவே எழச்செய்கிறார்)*

யூதாவின் வழித்தோன்றல்களில் ஒருவரும் சேலாவின் மகனும் ஆவார் *(1 நாள் 4:22)*.

**யோக்சான்** *(JOKSHAN - பறவை வேட்டைக்காரன்)*

ஆபிரகாமுக்கும் கெற்றூராவுக்கும் பிறந்தவர். சேபா, தெதான் ஆகியோரின் தந்தை *(ஆதி 25:2-3; 1 நாள் 1:32)*. பல அராபிய மக்களினங்களின் குலப்பெயர் மூதாதையர்.

**யோக்தயாம்** *(JOKDEAM - மக்கள் குடியேறியுள்ள)*

யூதாவின் கிராமங்களில் ஒன்றான இது மலைப்பாங்கான மாவோன் மாவட்டத்தில் உள்ளது (யோசு 15:16). இது, யூற்றாவுக்கும் சீபுவுக்குமிடையில், எபிரோனுக்குத் தெற்கில், இக்காலக் கிர்பெத் ராகா இருக்கும் இடத்தில் இருந்திருக்கலாம். எழுபது நூல் வாசகப்படி *1 நாள் 2:44*-இல் இருக்கும் யோர்க்கயாம் என்ற பெயரே மூலப்பெயராக இருக்கலாம்.

**யோக்தவேல்** *(JOKTHEEL - இறைவன் அடக்குகிறார்)*

1. யூதாவின் கிராமங்களில் ஒன்றான இஃது இலாக்கீசில் உள்ள தென்செபேலாவில் இருந்தது *(யோசு 15:38)*. இஃது இருந்த இடம் தெரியவில்லை.

2. யூதாவின் அரசனான அமட்சியா உப்புப் பள்ளத்தாக்கில் ஏதோமியரை முறியடித்து, தலைநகரான செலாவைப் பிடித்து அதற்கு யோக்தவேல் எனப் பெயரிட்டான் *(2 அர 14:7)*. பிறகு அமட்சியாவுக்கு எதிராக ஒரு முறை சதித்திட்டம் தீட்டப்பட்டபோது அவன் தப்பித்து இலாக்கீசுக்குச் சென்றான். இதன் அருகில்தான் யோக்தவேல் அமைந்திருந்தது *(யோசு 15:38)*.

**யோக்தான்** *(JOKTAN - இளையமகன், கவனமாயிரு)*

இவர் ஏபேரின் இளைய மகனும், பெலேகுவின் சகோதரனும், சேமின் வழித்தோன்றலும் ஆவார். அராபிய மக்கள் பலரின் குலப்பெயர் மூதாதையர் ஆவார் *(ஆதி 10:25-29; 1 நாள் 1:19-23)*. இந்த நாட்டில் முதலிலிருந்தே வாழ்ந்து வரும் மக்கள் இவர்களில் சிலரே; ஆனால், ஆபிரகாம் வழியாக ஆகாருக்கும் கெற்றூராவுக்கும் பிறந்தவர்கள் பின்னர் வந்து குடியேறியவர்களே.

யோக்தானின் வழிவந்தவர்களாகக் கூறப்படும் 13 பேரும், அரேபியாவின் வடபகுதியிலுள்ள மேசாவிலிருந்து கிழக்குப்பகுதியில் உள்ள மலைப்பகுதி வரையில் உள்ள நாட்டில் வாழ்ந்ததாகக் கூறப்படுகின்றனர். அட்சர்-மாவேத்து உட்பட முதலில் கூறப்படும் நான்கு பெயர்களும் இந்தியப் பெருங்கடலை நோக்கி இருக்கும் கடற்கரையின் ஓரத்திலே அமைந்திருக்க வேண்டும். மற்றவர்கள் ஏமனிலும், மற்றும் சிலர் இன்னும் வடக்கே தள்ளியும் வாழ்ந்திருக்க வேண்டும்.

**யோக்பகா** *(JOGBEHAH - உயர்ந்த இடத்திலுள்ள)*

காத்தின் கோத்திரத்துக்கான அரண் அமைந்த நகரமான யோக்பகா யாசேருக்கு அடுத்துக் கூறப்படுகிறது *(எண் 32:35)*. கிதியோன் மிதியானியரை விரட்டிச் செல்லும்போது, தன் பகைவர்களைப் பின்னிருந்து தாக்குவதற்காக நோபா, யோக்பகாவைச் சுற்றிச் சென்றார் *(நீதி 8:11)*. அம்மானுக்கு வடமேற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ள இக்காலக் கிர்பெத்-ஏல்-அய்பெயிகத்து இஃது அமைந்த இடமாக இருக்கலாம்.

**யோக்மயாம்** *(JOKMEAM - ஒன்றுகூட்டப்பட்ட)*

1. எப்பிரயிமில் உள்ள ஒரு லேவிய நகரம் இது *(1 நாள் 6:68)*. இதற்கு இணையான பட்டியலில் *(யோசு 21:22)* கிபட்சயிம் என்று உள்ளது. இவ்விரு நகரங்களும் இதே இடத்தில் இருந்திருக்கலாம்.

2. செபுலோனின் நகரம் இது *(1 அர 4:12)*. யோக்னயாமும் இதுவும் ஒன்றாக

இருக்கலாம். சாலமோன், பாகனா ஆட்சி செய்த மாகாணத்தில் இதைச் சேர்த்தார்.

**யோக்னயாம்** *(JOKNEAM - ஒன்றுசேர்க்கப் பட்ட)*

இது செபுலோனின் எல்லைக்கருகில் உள்ள ஒரு லேவிய நகரம் (யோசு *19:11; 21:34*). இது தெல்கெயிமுன் எனும் மலை என்று அடையாளம் காட்டப்படுகிறது. இம்மலை இஸ்ரியேல் பள்ளத்தாக்கின் எதிரில், கர்மேல் மலைத்தொடரின் வடசரிவில், மெகிதோவுக்கு வடமேற்கே 11 கி.மீ. தொலைவில் உள்ளது. மூன்றாம் துட்மோசு நகரங்களின் வரிசைப்படி இது 113-ஆவது நகராகும். இஃது 'ஊற்று' எனப்பொருள் தருவதாகும். ஒருவேளை இம்மலைக்குக் கிழக்கேயுள்ள ஊற்றினைக் கொண்டு இப் பெயர் வந்திருக்கலாம். யோசு 12:22-இன்படி இது யோசுவா தோற்கடித்த கானானிய நகரமாகும். யோக்னயாம், யேக்மயாம் என்று தவறாக உச்சரிக்கவும் பட்டது. இது சாலமோனின் ஐந்தாவது நிர்வாகப்பிரிவிலுள்ள நாட்டின் ஒரு பகுதியாக பின்னர் சேர்க்கப்பட்டது *(1 அர 4:12)*.

**யோசக்கார்** *(JOZACAR - யாவே நினைவு கூர்ந்தார்)*

சிமயாத்தின் மகன். யோவாசு அரசனின் ஊழியக்காரருள் ஒருவன். அவர் கொலை செய்யப்படுவதற்குப் பொறுப்பாக உள்ளவர்களில் ஒருவன் *(2 அர 12:21)*. இதற்கு இணையாக உள்ள *2 நாள் 24:26*-இல் இவன் சாபாது என்று அழைக்கப்படுகிறான்.

**யோசதாக்கு** *(JEHOZADAK - யாவே நேர்மையுள்ளவர்)*

நெபுகத்னேசரால் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட முக்கிய குருவான செராயாவின் மகன் *(1 நாள் 6:14-15)*. நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின், ஆலயத்தை மீண்டும் கட்ட உதவிய பெரிய குரு ஏசுவ / யோசுவாவின் தந்தை *(ஆகா 1:1. 12.14; செக் 2:2.4)*.

**யோசதாக்கு** *(JOZADAK - யாவே நேர்மையானவர்)*

தலைமைக்குரு ஏசுவாவின் தந்தை. நெபுகத்னேசரால் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டவர்களில் ஒருவர் *(எஸ் 3:2.8; 5:2; 10:18; நெகே 12:26)*.

**யோசதேக்கு** *(JOSEDECH)*

யோசதாக்கு என்ற பெயரின் மற்றொரு வடிவம்.

**யோசபக்காசா** *(JOSHBEKASHAH - கடினமாகப் போராடுதல்)*

இவர் தாவீது நியமித்த ஆலயப் பாடகர்களுள் 17-ஆவது பிரிவுக்குத் தலைவர். ஏமானின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 25:4)*.

**யோசபாது** *(JEHOZABAD - யாவே கொடுத்தார்)*

*1.* சோமேர் என்பவரின் மகன். மில்லோ அரண்மனையில் அரசனைக் கொன்ற யோவாசின் ஊழியர்களில் இவரும் ஒருவர் *(2 அர 12:21)*. இதற்கு இணையான பகுதியான 2 நாள் 24:26-இல் இவர் 'மோவாபியப் பெண் சிம்ரித்தின் மகன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் யோவாசின் மகனும் பின் அரசனுமான அமசியா (1)-ஆல் கொல்லப்பட்டார் *(2 அர 14:5)*.

*2.* ஓபேது-ஏதோமின் இரண்டாம் மகன். ஒரு கோராகிய லேவியர். ஆலய வாயிற்காப்பாளரும் ஆவார் *(1 நாள் 26:4)*.

*3.* யோசபாத்தின் படையில் இருந்த பென்யமின் குலத்தைச் சேர்ந்த படைத் தலைவர் *(2 நாள் 17:18)*.

**யோசபாது** *(JOZABAD - யாவே அளித்தார்)*

*1.* தாவீது சிக்லாகுவில் தலைமறைவாய் இருந்தபோது, அவருடைய படையில் கெதேராவிலிருந்து வந்தவரும் பென்யமின் கோத்திரத்தைச் சேர்ந்தவருமான இவர் சேர்ந்து கொண்டார் *(1 நாள் 12:4)*.

*2.* மனாசே இனத்தைச் சேர்ந்தவர். இவர் சவுலைக் கைவிட்டு, தன் படையின் தலைவராக சிக்லாகுவில் இருந்த தாவீதோடு சேர்ந்து கொண்டார் *(1 நாள் 12:20)*.

*3.* மனாசேயைச் சேர்ந்த மற்றொரு படைத்தலைவர். இவரும் சவுலைக்

கைவிட்டு, சிக்லாகுவில் தாவீதோடு சேர்ந்து கொண்டார் (1 நாள் 12:20).

4. எசேக்கியா அரசாண்ட காலத்தில் ஆலயத்தைக் கண்காணிப்பதற்காக பொறுப்பைப் பகிர்ந்து கொண்ட ஒரு லேவியர் (2 நாள் 31:13).

5. இவர் லேவியர் தலைவர்களுள் ஒருவர். யோசியா அரசாண்ட காலத்தில், பாஸ்காப் பலிக்கென 5000 செம்மறியாட்டுக் குட்டிகளையும், வெள்ளாட்டுக் குட்டிகளையும், 500 காளைகளையும் காணிக்கையாகக் கொடுத்தார் (2 நாள் 35:9).

6. ஒரு லேவியர். எஸ்ரா பாபிலோனிலிருந்து ஆலயப் பாத்திரங்களைத் திரும்பக் கொண்டு வந்து ஒப்படைத்தபோது, அவற்றை எண்ண உதவியவர் (எஸ் 8:33).

7. அன்னிய மனைவியரைக் கொண்ட லேவியருள் ஒருவர் (எஸ் 10:23). இவரும் 6-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

8. இவர் பஸ்கூரின் வழித்தோன்றலும் ஒரு குருவும் ஆவார். பின்பு தான் மணம் செய்திருந்த அன்னியப்பெண்ணை நீக்கிவிட்டார் (எஸ் 10:22).

9. எஸ்ரா சட்டத்தை வாசித்தபோது, அதை மக்களுக்கு விளக்கிக்காட்டிய ஒரு லேவியர் (நெகே 8:7). இவரும் 6 அல்லது 7-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

10. ஆலயத்தின் வெளிவேலைகளைக் கவனித்து வந்த ஒரு லேவியர் தலைவர் (நெகே 11:16). இவரும் 6, 7 அல்லது 9-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**யோசபாத்து** (JEHOSHAPHAT - யாவே தீர்ப்பிடுகிறார்)

1. அகிலூதின் மகனான இவர் தாவீது, சாலமோன் ஆவணங்களைப் பாதுகாக்கும் பதவியில் இருந்தார் (2 சாமு 8:16; 20:24; 1 அர 4:3; 1 நாள் 18:15).

2. பாருவாகின் மகனான இவர் சாலமோன் ஆட்சியில் இசக்காரின் பகுதிகளுக்கு ஆளுநராக இருந்தார் (1 அர 4:17). அரசருக்கும் அவரது அரண்மனைக்கும் வேண்டிய உணவுப் பொருட்களைச் சேகரித்துக் கொடுப்பதே ஒவ்வொரு ஆளுநரின் வேலையாகும் (4:7).

3. ஏறக்குறைய கி.மு. 873-849-ஆம் ஆண்டுகளில் யூதாவின் நான்காம் அரசராக இருந்தவர். இவர் தமது 35-ஆவது வயதில் அரசராகி, 25 ஆண்டுகள் ஆட்சி செய்தார். இவருடைய தாய் சில்கியின் மகளான அசுபா ஆவாள். ஆசாவின் மகனும் அவருக்குப் பின் அரசராக வந்தவருமாவார் (1 அர 22:42; 2 நாள் 20:31). இஸ்ராயேலுக்கு எதிராக யூதாவைப் பலப்படுத்தினார் (2 நாள் 17:2; 17:12-19). இவரது ஆட்சிக் காலத்தில் யூதாவுக்கும் இஸ்ராயேலுக்குமிடையே நடந்து வந்த போர்கள் நின்று அமைதி நிலவியது (1 அர 22:44). இந்த நட்புறவுக்கு ஆகாபு - ஈசபேலின் மகளான அத்தலியாவை இவருடைய மகன் யோராமுக்குத் திருமணம் செய்து வைத்தது ஓர் அடையாளமாகும் (2 நாள் 8:1). ஆனால் இத்திருமணத்தால் யூதாவில் புகுந்த புற இனச் செல்வாக்கு, பிற்காலத்தில் யூதாவுக்குப் பெரும் துன்பங்கொண்டு வந்தது (2 அர 8:18.27). கிலயாதிலுள்ள இராமோத் கிலயாதைக் கைப்பற்றுவதற்காக யோசபாத்து இஸ்ராயேலின் அரசரான ஆகாபுடன் சேர்ந்து கொண்டார் (1 அர 22). அப்போரில் ஆகாபு படுகாயமுற்றார் (1 அர 22:2-40; 2 நாள் 18:3-34). இப்போரிலிருந்து திரும்ப வந்த யோசபாத்தைத் திருக்காட்சியாளர் ஏகூ சந்தித்து, ''ஆண்டவரை வெறுக்கும்'' தீயவனுக்கு உதவி செய்ததற்காக அவரைக் கண்டித்தார் (2 நாள் 19:2).

பின்னர் யோசபாத்து யோராம் அரசனோடு சேர்ந்து மோவாபின் அரசனுக்கு எதிராகப் போர் தொடுத்தார்; ஆனால், தோல்வியுற்றார் (2 அர 3). அவரது நீண்ட ஆட்சிக்காலம் அமைதியானதாகவும் வளமிக்கதாகவும் இருந்தது. அவர் பொன் திரட்ட ஓபிருக்குப் போகும்படி கப்பல்

களைக் கட்டினார். ஆனால், அவைகள் போக முடியவில்லை. ஏனெனில், ஏட்சி யோன்-கெபேரில் கப்பல்கள் உடைந்து போயின. இப்படிக் கப்பல்கள் உடைந்த தற்கு இஸ்ராயேலின் அரசன் அகசியா வோடு யோசபாத்து கொண்டிருந்த நட்புறவே காரணம் என்று நாளாகம ஆசிரியர் கூறுகிறார் *(2 நாள் 20:35-37)*. அப்பொழுது ஆகாபின் மகன் அகசியா யோசபாத்தை நோக்கி ''என்னுடைய பணியாளர் உம் பணியாளரோடு கப்பலில் செல்லட்டும்'' என்று கேட்டார். அதற்கு யோசபாத்து இணங்கவில்லை *(1 அர 22:41-45)*.

யோசபாத்து அண்டை நாட்டாரால் மதிக்கப்பட்டார் *(2 நாள் 17:11)*; ஏதோமின் மேல் மேலாண்மை கொண்டிருந்தார் *(1 அர 22:47)*. இஃது அராபியாவிலிருந்து வரும் வியாபார வழிகளை யூதாவில் கட்டுப்பாட்டிற்குள் வைத்தது; அதனால் யூதாவுக்குப் பெரும் செல்வம் கிடைத்தது. 2 நாள் 20-இல் மோவாபியர், அம்மோனியர், மெயோனியர் ஆகியோர் சேர்ந்த கூட்டணியை ஏன்கேதியில் இவர் வெற்றி கொண்டது விவரிக்கப்படுகிறது.

யோசபாத்தின் ஆட்சிக்காலத்தை நாளாகம ஆசிரியர் சாதகமாக நோக்குகிறார். இவர் தாவீதின் நேர்மையான முன்மாதிரி கையைப் பின்பற்றினார் *(2 நாள் 17:3-4)*; பாகாலை ஒதுக்கி, இஸ்ராயேலின் இறைவனை மட்டுமே வழிபட்டார். யாவே வழிபாடுகள் நடந்த மற்ற மேட்டுப் புனித இடங்களை அழிக்காவிட்டாலும், பாகாலுக்குரிய மேட்டு நிலங்களையும் மற்ற பிறவின மத வழிபாட்டு இடங்களையும் அகற்றினார் *(1 அர 22:43; 2 நாள் 17:6; 19:13)*. இவர் இறைவனது ஆலோசனையைத் தேடுவது பற்றி பல குறிப்புகள் உள்ளன *(1 அர 22:5தொ; 2 நாள் 18:4தொ; 20:3-19.20)*. மேலும், ஆண்டவரது சட்டத்தை மக்களுக்குப் போதிக்க தலைவர்களையும் லேவியர், குருக்களையும் நகரங்களுக்கு அனுப்பினார் *(17:7-9)*. நீதி வழங்கும் முறையில் பல சீர்திருத்தங்கள் செய்தார். உடன்படிக்கைச் சட்டத்திற்கேற்ப நீதியையும் நேர்மையையும் வலியுறுத்தினார் *(19:5-11)*.

யோசபாத்து 25 ஆண்டுகள் ஆட்சி செய்தார். தாவீதின் நகரில் அடக்கம் செய்யப்பட்டார். அவருக்குப் பிறகு அவருடைய மகன் யோராம் ஆட்சிக்கு வந்தான் *(21:1-3)*. மத் 1:18-இல் இவர் இயேசுவின் முன்னோர் பட்டியலில் இடம் பெறுகிறார்.

4 ஒம்ரி அரசமரபை அழித்தொழித்த ஏகூவின் தந்தை. நிம்சியின் மகன் *(2 அர 9:2.14)*. *1 அர 19:16; 2 அர 9:20; 2 நாள் 22:7*-இல் ஏகூ நிம்சியின் மகன் என்று குறிக்கப்படுகிறார்; உண்மையில் நிம்சியின் பேரனாவார்.

5. இறைவனின் திருப்பேழை ஓபேது-ஏதோமின் வீட்டிலிருந்து தாவீதின் நகருக்கு எடுத்து வரப்பட்டபோது அப்பவனியில் பங்கு பெற்ற குருக்களில் ஒருவர். பேழையின் முன் எக்காளம் ஊதுவதே இவரது பணியாகும் *(1 நாள் 15:24)*.

**யோசபாத்து பள்ளத்தாக்கு** (JEHOSHAPHAT, VALLEY OF)

யூதா, எருசலேம் மீண்டும் அமைக்கப்படும் மெசியாக் காலத்தில் புறவினத்தார் அனைவரையும் ஒன்று சேர்த்து அவர்களுக்கு எதிராக தீர்ப்பு வழங்குமிடம் (யோவே 4:2.12). இதன் பொருள் ''கடவுள் தீர்ப்பு வழங்குவார்'' என்பதாகும். யோவேல் இப்பள்ளத்தாக்கைத் ''தீர்ப்பு வழங்கும் பள்ளத்தாக்கு'' என்று அழைக்கிறார் (யோவே 3:14). இந்த இடம் அடையாளமானதாகும் புவியியலைச் சார்ந்ததன்று. ஆனால், யூத விரிவுரையாளர்கள் சிலரும், முற்காலத்தில் கிறிஸ்தவ விரிவுரையாளர்களும் இவ்விடம் உண்மையில் இருந்ததாக விளக்கம் அளித்தனர். சிலவேளைகளில் யோசபாத்து பள்ளத்தாக்கு இன்னோம் பள்ளத்தாக்கோடும், கிதரோன் பள்ளத்தாக்கோடும் ஒப்பிடப்பட்டது. கிதரோன் பள்ளத்தாக்கில் எண்ணிக்கையற்ற யூதக் கல்லறைகளும், நினைவுச் சின்னங்களும் காணப்படுகின்றன. இவை, இறுதி நாளில் இறந்தவர்கள் தீர்ப்பிடப்படுவதற்

காக உயிர் பெற்றெழுவார்கள் என்ற உண்மையை நினைவுபடுத்துகின்றன. எனவேதான் கிதரோன் பள்ளத்தாக்கே யோசபாத்து பள்ளத்தாக்கு என்று பலர் கருதுகிறார்கள்.

**யோசபாற்று** (JOSHAPHAT - யாவே தீர்ப்பி டுகிறார்)

1. இவர் ஒரு மத்னியர். தாவீதின் வலிமை மிக்க போர்வீரர்கள் ''முப்பது'' பேரில் ஒருவர் *(2 நாள் 11:43)*.

2. ஆண்டவருடைய திருப்பேழைக்கு முன்பாக எக்காளம் ஊதி ஆர்ப்பரித்துக் கொண்டு வந்த குருக்களில் இவரும் ஒருவர். குறிப்பாக தாவீது எருசலேமிற்குத் திருப்பேழையைக் கொண்டு வந்தபோது இவர் எக்காளம் ஊதினார் *(1 நாள் 15:24)*.

**யோசபெயாத்து** *(JEHOSHABEATH)*

யூதாவின் அரசன் யோராமின் மகள். அகசியாவின் மகன் யோவாசை அரசி அத்தலியாவின் கொலையிலிருந்து காப்பாற்றினாள். இவள் அகசியாவின் சகோதரி *(2 நாள் 22:11)*. *2 அர 11:2*-இல் இவள் யோசேபா என்றழைக்கப்படுகிறாள் காண்க. யோசேபா.

**யோசவியா** *(JOSHAVIAH)*

எல்னாமின் புதல்வர்களில் ஒருவர். தாவீதின் வலிமை மிக்க ''முப்பது பேரில்'' ஒருவர் *(1 நாள் 11:46)*.

**யோசா** *(JOSHAH)*

அமட்சியாவின் மகன். எசேக்கியா காலத்தில், சிமியோன் இனத்தின் தலைவர்களுள் ஒருவர் *(1 நாள் 4:34)*.

**யோசிபியா** (JOSHIBIAH - யாவே பாதுகாப்போடு வாழச்செய்வார்)

ஏகூவின் தந்தையும், செராயாவின் மகனுமாவார். எசேக்கியாவின் காலத்தில் சிமியோன் இனத்தலைவர்களுள் ஒருவர் *(1 நாள் 4:35)*.

**யோசிப்பியா** (JOSIPHIAH - யாவே பெருகச் செய்கிறார்)

இவர் பாபிலோன் அடிமைத்தனத்திலிருந்து எஸ்ராவோடு திரும்பி வந்த செலோமித்தின் தந்தையாவார் *(எஸ் 8:10)*.

**யோசியா** (JOSIAH - யாவே வலுப்படுத்துகிறார், குணமாக்குகிறார்)

1. யோசியா யூதாவின் அரசராக இருந்த ஆமோனின் மகனாவார். தனது தந்தை இறந்தபின் யோசியா யூதாவின் அரசரானார் *(கி.மு. 640-609)*. இவர் ஆமோன் அரண்மனை ஊழியர்களால் கொலை செய்யப்பட்டபின் தனது எட்டாவது வயதில் அரசனாக்கப்படுகின்றார் *(2 அர 21:2தொ)*. இவர் யூதா நாட்டைச் சேர்ந்த மக்களால் அரசனாக்கப்படுகின்றார். அதாவது அரசவையைச் சேராத மக்கள் இவரை அரசராக்குகின்றார். ஆமோன் மன்னன் ஏன் கொலை செய்யப்பட்டான், இளம் வயதிலே ஏன் யோசியா அரசனாக்கப்பட்டான் என்பதற்கான காரணங்கள் தெளிவாக இல்லை. *2 அர 22-23; 2 நாள் 33-34* என்ற பகுதிகள் யோசியா செய்த சமய சீர்திருத்தங்களைப் பற்றி அழுத்திக் கூறுகின்றன. இவரது சமயசீர்திருத்தம் பழுதடைந்த நிலையிலிருந்த ஆலயத்தைப் பழுது பார்ப்பதில் தொடங்கி அன்னிய வழிபாடுகளையெல்லாம் அழித்தொழிப்பதில் உச்ச நிலையை அடைந்தது. இந்தச் சீர்திருத்தமானது இலிகியா என்பவரால் ஆலயத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சட்டநூலில் கூறப்பட்டிருந்த சட்டங்களின் அடிப்படையில் அமைந்திருந்தது *(2 அர 22:8தொ)*. மேலும், யோசியா உடன்படிக்கையைப் புதுப்பித்தார் *(2 அர 23:1-3; 2 நாள் 4:29-33)*. பின் சட்டநூலில் குறிப்பிட்டிருந்தபடி பாஸ்கா விழாவைக் கொண்டாடினார் *(2 அர 23:21தொ)*.

விவிலியத்திற்குப் புறம்பாகக் காணப்படும் குறிப்புக்களிலிருந்து இவர் காலத்தில் அரசியல் துறையில் ஏற்பட்ட முன்னேற்றங்களைக் காணலாம். கி.மு. 625-க்கும் 612-க்கும் இடைப்பட்ட காலத்தில் அசீரியா வீழ்ச்சியடைந்தது என்றால், கி.மு. 625-க்குப்பின் பாலஸ்தீனத்தில் அசீரியர்களின் அரசாட்சி ஆற்றலுள்ள விதத்தில் செயல்படவில்லை என்பதாகும். அசீரிய

அரசாட்சியின் கட்டுகளிலிருந்து சுதந்தரம் பெற்றதின் விளைவாகத்தான் 2 அர 23:4-இல் கூறப்படும் சமய சீர்திருத்தம் ஏற்பட்டது என்று நாத்து என்பவர் குறிப்பிடுகின்றார். இந்தச் சூழ்நிலையில் எந்த ஒரு வலிமைமிக்க அரச அமைப்பும் பாலஸ்தீனாவில் இல்லாததால் தாவீது அரசை மீண்டும் அமைக்க யோசியா முயற்சிகள் மேற்கொண்டார். மேலும் யோசியா பெத்தேல் (22 அர 23:15), சமாரியா, சமாரியாவிலுள்ள நகரங்கள் (23:18தொ), மெகிதோ போன்ற பகுதிகளில் பணிபுரிந்தார் என்பது வடக்கில் எசுதிரலோன் வரையிலுள்ள இஸ்ராயேல் நாட்டை மீண்டும் உடைமையாக்கிக் கொண்டார் யோசியா என்று காட்டுகிறது. இந்நிலை, அரசியல் நிகழ்ச்சிகளின் விளைவாக குறுகிய காலத்திற்கே நீடித்தது. அசீரியாவின் அரசராகிய அசூருபாலித்து மெசபத்தோமியாவிலுள்ள காரானிலிருந்து பாபிலோனியர்களாலும் மேதியர்களாலும் கி.மு. 610-இல் வெளியேற்றப்பட்டார். எனவே, அசீரியாவின் வீழ்ச்சியால் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்ப மற்றொரு மெசபத்தோமியர்கள் ஆட்சிக்கு வரலாம் என்று எகிப்தை ஆண்டுவந்த நெக்கோ என்பவர் அச்சமடைந்து அசூருபாலித்துக்கு உதவி செய்ய படையுடன் சென்றான். இதையறிந்த யோசியா மீண்டும் அசீரியர்களோ, எகிப்தியர்களோ ஆதிக்கம் செலுத்த வந்து விடுவார்கள் என்று அச்சம் கொண்டு மெகிதோவில் நெக்கோவை எதிர்த்துப் போரிடுகின்றார். ஆனால், அப்போரில் யோசியா இறந்ததாக 2 அர 23:29-இல் கூறப்படவில்லை. எனவே, அவர் கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று வரலாற்று ஆசிரியர்கள் சிலர் எண்ணுகின்றனர். 2 நாள் 35:20-27 என்ற பகுதி இந்தப் போரினைப் பற்றித் தெளிவாகக் கூறியுள்ளது.

ஏரேமியா நூலில் (1:2தொ; 3:6) யோசியா, எரேமியா பணி செய்த காலத்தில் ஆட்சி செய்தவர் போல் தோன்றுகின்றார். இறைவாக்கினர் எரேமியா யோசியாவை எளிமையானவர் என்றும், நீதியுடனும், நேர்மையுடனும் செயல் புரிந்தவர் என்றும், ஏழைகளின் வழக்கைத் தீர்த்து வைத்தவர் என்றும் புகழ்கின்றார் (எரே 22:13-16).

2. இவர் செப்பனியாவின் மகன். இவர் இல்லத்தில் இறைவாக்கினர் செக்கரியா தலைமைக் குரு யோசுவாவுக்கு (ஏசுவாவுக்கு) முடி சூட்டினார் (செக் 6:10-11).

**யோசுவா** (JOSHUA - யாவே மீட்பாவார்

1. யோசுவா, நூனிமகன் - இத் தலைப்பின் கீழ்க்காண்க.

2. பெத்-செமேசைச் சேர்ந்தவர். பெலிஸ்தியர் ஆண்டவரின் உடன்படிக்கைப் பேழையைத் திருப்பி அனுப்பிய போது, இரு கறவைப் பசுக்கள் பூட்டிய வண்டியில் வைத்து அனுப்பினர். இந்த வண்டி பெத்செமேசைச் சேர்ந்த யோசுவாவின் வயலுக்குள் வந்து நின்றது (1 சாமு 6:14).

3. அரசன் யோசியாவின் காலத்தில் இவர் எருசலேமின் ஆளுநராக இருந்தார் (2 அர 23:8).

4. நாடு கடத்தலுக்குப்பின் ஆகாய் மற்றும் செக்கரியா நூல்களில் வரும் முதல் தலைமைக் குருவின் ஏசுவா என்ற பெயரின் மற்றொரு வடிவம் இது.

5. இயேசுவின் மூதாதையருள் ஒருவர் (லூக் 3:29).

**யோசுவா நூல்** (JOSHUA, BOOK OF)

1. இறைவாக்கினர் நூல்களை முந்தைய இறைவாக்கினர், பிந்தைய இறைவாக்கினர் என்று இருபிரிவாக யூதர்கள் பிரித்தனர். இவ்வேறுபாடு அதிகாரப்பூர்வமான விவிலியப் பட்டியலில் வரும் வரிசையை அடிப்படையாகக் கொண்டு தோன்றியிருக்கலாம். முந்தைய இறைவாக்கினர் என்ற பிரிவின்கீழ் வரும் நூல்கள் ஒரு சிறப்புத் தன்மையுடையன. அவை யாவும் இஸ்ராயேலின் வரலாற்றைப் பதிவு செய்கின்றன. இதன் விளைவாக, அறிஞர்கள் சிலர்

இந்நூல்களை உபாகமத்தோடு சேர்த்து ''உபாகமப் பாரம்பரிய வரலாறு'' என் றழைப்பர். இந்த முந்தைய இறைவாக்கினர் பட்டியலில் முதலாவது வருவது யோசுவா நூல் ஆகும்.

**2. நூலின் பெயர்:** இந்நூல் ஒரு தனி நபரின் பெயரைத் தலைப்பாகக் கொண்டுள் ளது. இந்நூல் முழுவதும் சிறப்பான விதத்தில் செயல்பட்டு நிறைந்து நிற்கும் யோசுவாவின் தலைமையில் வாக்குறுதி அளிக்கப்பட்ட நாடாகிய கானானை இஸ் ராயேல் வெற்றிகொண்டு தங்களுடைய தாக்கிக் கொள்வதில், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகிய குலமூதாதையர்களுக்கு யாவே அளித்த வாக்குறுதி நிறைவேறு கிறது. யாவே யோசுவாவைப் பயன்படுத்தி அவருக்குச் சிறப்பான முறையில் துணை புரிநது வல்லமையோடு தாம் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுகிறார். ஆகவே, நூல் முழுவதும் யாவேயின் அருஞ்செயல்கள் பரவிக்கிடக்கின்றன. யாவேக்கு அடுத்து யோசுவா இந்நூலில் காப்பியத் தலைவனாகத் திகழ்கிறார். ஆகவே, பாரம்பரியம் இந்நூலுக்கு அவரது பெயரையே அளித்து அவரைச் சிறப்பிக் கிறது.

**3. நூலின் அமைப்பும் திட்டமும்:** இந்நூல் கி.மு. 1250-1225-க்கு இடையிட்ட காலத்தில் கானான் நாடு கைப்பற்றப்பட்ட வரலாற் றையும், அப்பகுதி பன்னிரண்டு குலத்தவ ரிடையே பங்கீடு செய்யப்பட்டதையும் காட்டுகிறது. யோசுவாவின் தீரச்செயல் களின் அடிப்படையில் இந்நூலை மூன்று பகுதியாகப் பிரிக்கலாம்.

I. **கானானை வெல்லுதல்** *(1:1-12:24)*

1. முன்னுரை *(1:1-18)*.
2. எரிகோவுக்குச் சென்ற ஒற்றர்கள் *(2:1-24)*.
3. யோர்தானைக் கடத்தல் *(3:1-5:1)*.
4. கில்காலில் சமயச் சடங்குகள், எரிகோ வின் வீழ்ச்சி *(5:2-6:27)*.
5. ஆயில் தோல்வியும் வெற்றியும் *(7:1-8:35)*.
6. கானான் வெற்றி நிறைவு பெறுதல் *(9:1-12:24)*.

II. **கைப்பற்றப்பட்ட நாட்டை இஸ்ரா யேல் இனத்தவரிடையே பங்கிடுதல் *(13:1.21:45)***

1. பன்னிரு இனத்தவர்களுக்கு நாட்டைப் பகிர்ந்தளித்தல் *(13:1-19:51)*.
2. அடைக்கல நகர்களும், லேவியர் நகர் களும் *(20:1-21:40)*.
3. இறைவனின் பற்றுறுதி; இஸ்ராயேலில் அமைதி *(21:40-43)*.

III. **பிற்சேர்க்கை *(22:1-24:33)***

1) முதற் பிற்சேர்க்கை

அ) யோர்தானுக்குக் கிழக்கிலுள்ள பகுதியை உரிமையாக்கிக் கொண்ட இனத்தவர் திரும்புதல் *(22:1-9)*.

ஆ) யோர்தானுக்கு அருகில் பீடம் *(22:10-34)*.

2) இரண்டாம் பிற்சேர்க்கை

அ) யோசுவாவின் பிரியாவிடை அற வுரை *(23:1-26)*.

ஆ) செக்கேமில் திருக்கூட்டம் : உடன் படிக்கை புதுப்பித்தல் *(24:1-28)*.

இ) யோசுவா இறத்தல், அடக்கம் செய் யப்படுதல் *(24:29-33)*.

இம்மூன்று பகுதிகளுக்கிடையே காணப் படும் வேறுபாடுகள், இவை ஒருகாலத்தில் தனிப்பட்ட இலக்கிய அமைப்புகளாக இருந்திருக்க வேண்டும், பிற்காலப் பதிப் பாசிரியர் இவற்றைச் சேர்த்து ஒரே நூலாகத் தொகுத்திருக்க வேண்டும் என்ற எண்ணத் தைத் தோற்றுவிக்கின்றன. மேற்கூறப்பட் டுள்ள நூலின் திட்ட அமைப்பை நன்கு புரிந்து கொள்ள இந்நூலின் இலக்கிய வரலாற்றையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இவ்வரலாறு பற்றிப் பின்னர்ப் பார்ப்போம்.

**4. ஆசிரியர்:** இந்நூலை யோசுவாதான் எழுதினார் என்று பழங்கால யூதப் பாரம் பரியங்களும், ஆதிக் கிறிஸ்தவப் பாரம் பரியங்களும் கூறி வந்தன. ஆனால் இப்

போது இக்கருத்து எல்லோராலும் கை விடப்பட்டு விட்டது எனலாம். ஆண்டவ ருடைய சட்டங்களை, யோசுவாதான் சட்ட நூலில் எழுதி வைத்தார் என்று யோசு *24:26*-இல் கூறப்பட்டுள்ளது. ஆனால், தன் பெயர் கொண்ட இந்நூலை அவர்தான் எழுதினார் என்று கூறப்படவில்லை. *4:23-25*-இல் ''யோர்தானின் நீரையும், நீங் கள் அதைக் கடக்கும்வரை உங்களுக்கு முன்பாக வற்றச் செய்தார்'' என்று ஆசிரியர் கூறுகிறார். *5:6*-இல் வரும் ''நாம் உங்க ளுக்கு......'' என்பது ஆசிரியரும் அங்கு இருந்ததாகக் காட்டலாம். ஆனால், தங்கள் மூதாதையரின் பொது ஆட்தன்மையோடு தங்களையும் சேர்த்துக் கொள்ளும் போக்கு இஸ்ராயேலரிடையே உண்டு. ஆகவே, இக்கூற்றுகள் யோசுவாதான் இந்நூலை எழுதினார் என்று ஏற்றுக்கொள்ள இடம் தரவில்லை. இறுதிப் பகுதி யோசுவாவின் மரணத்தைக் கூறுகிறது. இதை யோசுவா எழுதியிருக்க முடியாது. நாடு கைப்பற்றப் பட்டு வெகுகாலத்திற்குப் பிறகு வந்த நடை முறைகளைச் சில தொடர்கள் எடுத் துக்காட்டுகின்றன (*4:9. 5:9; 7:26; 9:27; 15:63; 19:47*). சூரியன், சந்திரன் பற்றிய முன்னிலைப்பாட்டு (*10:12* தொ) ''யாசா ரின்'' நூலிலிருந்து எடுக்கப்பட்டது எனக் கருதப்படுகிறது. இந்நூல் பிற்காலத்தைச் சேர்ந்ததாகும். ஏனெனில், இந்நூல் சவுல், யோனத்தான் ஆகியோர் மேல் தாவீது பாடிய இரங்கற்பாவையும் கொண்டுள்ளது.

சில உண்மைகள், அல்லது சூழ்நிலை கள் ''இன்று வரை'' உள்ளன என்றும் மீண்டும் மீண்டும் கூறப்படுகிறது (*4:9; 5:6; 6:25....*). இவை விவரிக்கப்படும் நிகழ்ச்சி கள் நடந்து வெகுகாலம் சென்றபின்தான், இந்நூலில் வரும் நிகழ்ச்சிகள் எழுத்து வடிவம் எடுத்திருக்கக்கூடும் என்று எண்ணத் தூண்டுகின்றன. இந்நூலில் காணப்படும் இலக்கியக்கூறுகள், இந்நூல் ஒருவரால் எழுதப்பட்டதன்று; மாறாக, பலரால் தொகுக்கப்பட்டிருக்கலாம் என்று காட்டுகிறது. மீண்டும் கூறப்படுதலும், முரண்பாடுகளும் பல இடங்களில் காணப் படுகின்றன (*3:17; 4:10*தொ). *4:8. 20*-இல் *12* கற்கள் ஆற்றிலிருந்து கொண்டு செல்லப் பட்டு, கில்காலில் நடப்படுகின்றன. ஆனால் *4:9*-இல் ஆற்றின் நடுவிலேயே நடப்படுகின்றன. எரிகோவைக் கைப் பற்றிய நிகழ்ச்சி உரை இரண்டு விவரிப்புக் களை ஒன்றாக்குவதாகத் தெரிகிறது. ஒரு விவரிப்பில் இஸ்ராயேலர் படை மௌன மாக நகரத்தை ஏழு தடவை சுற்றியபின் போர் அறைகூவல் கொடுத்துத் தாக்குகின்ற னர். ஒரே நாளில் போர் முடிந்து விடுகிறது. மற்றோர் விவரிப்பில் குருக்கள் எக்காளம் ஊதிக்கொண்டு ஊர்வலத்துக்குத் தலைமை தாங்குகின்றனர். ஏழு தரம் சுற்றிய பின் சுவர்கள் விழுகின்றன. இவ்விவரிப்பு ஏழு நாட்கள் எடுக்கின்றது. *8:13*-இல் ஆயிக்கு மேற்கே பதுங்கியிருக்க *30,000* வீரர்களை யோசுவா அனுப்புகிறார். *10:26; 10:37* -ஆகிய இவ்விரு கூற்றுகளும் எபிரோன் அரசனது மரணத்தை உரைக்கின்றன. *10:36*-இல் யோசுவாவும், *16:14*-இல் காலேபும் இந்நகரைக் கைப்பற்றியதாகவும் கூறப்படுகிறது. இந்நூலை நாம் கொண் டிருக்கும் வடிவில், யோசுவாவின் வாழ்வுக் காலத்திலேயே பாலஸ்தீன நாடு முழுவதும் கைப்பற்றப்பட்டு விட்டது என்ற கருத்து ஏற்படுகிறது. ஆனால் கானானியர் இன் னும் ஆங்காங்கேயிருந்து இஸ்ராயேலரை எதிர்த்தனர். நாட்டைக் கைப்பற்ற நீண்ட தோர் போராட்டம் நடத்த வேண்டி யிருந்தது என்பதற்குச் சான்றுகள் நூல் முழுவதும் காணப்படுகின்றன. இந் நிலையே நீதிபதி ஆகமத்தில் காணப்படும் நிலைக்கு ஒத்ததாயுள்ளது. ஆகவே, இந்நூல் ஓர் ஆசிரியருடைய வேலைப்பாடன்று. யோசுவாவால் இந்நூல் முழுவதும் எழுதப் படவில்லை. அப்படியே, யோசுவா ஏதா வது சில பகுதிகளை எழுதியிருந்தாலும், அவர் எழுதிய பகுதியைப் பிரித்துக்காட்டு வது முடியாத செயலாகும். இந்நூலின் இலக்கிய வரலாறு நீடியதொன்றாகும். பலர் இதில் ஈடுபட்டுள்ளனர்.

**5. நூலின் தோற்றம்:** இந்நூல் பலவகைப் பட்ட இலக்கியப் பொருட்களைக் கொண்

டுள்ளது. இந்நூல் எழுத்துவடிவம் எடுத்த வரலாறு பழைய ஏற்பாட்டுக் காலம் முழுவதும் பரவி நிற்கிறது. ஆகையால், இயற்கையாகவே இந்நூலின் வரலாறு பற்றி பல கருதுகோள்கள் உண்டு.

அண்மைக் காலத்தில் யோசுவா ஆகமம் தோராவோடு சேர்ந்த ஆறாவது நூலாகும் என்ற கருத்து எழுந்துள்ளது. ஆகவே, இந்நூலின் பொருளை ஐந்நூலைப் போன்று யாவே, எலோகிம், குருக்கள், உபாகமம் என்ற நான்கு பாரம்பரியங்களாகப் பிரித்து ஆய்வு செய்யலாம். 'நார்த்', 'பிரைட்' போன்றவர்கள் இந்நூலைப் புதிய கோணத்தில் ஆய்வு செய்வர். இதன்படி யோசுவா ஆகமம் ஐந்நூலைச் சேர்ந்ததன்று. மாறாக, உபாகமப் முதல் அரசராகமங்கள் வரையுள்ள உபாகமப் பாரம்பரியத் தொகுப்பைச் சேர்ந்தது. இக்கருத்து அடிப்படையில் இந்நூல் பற்றிய பகுப்பாராய்ச்சி பொதுவாக இப்பொழுது நடைபெறுகிறது. இதன்படி இந்நூல் தோன்றிய வரலாற்றைக் கீழ்க் கண்டவாறு திருத்தி அமைக்கலாம்.

அதிகாரங்கள் *2-11* அடங்கிய பகுதி மிகப்பழைய இலக்கியத் தொகுப்பு ஆகும். இதிலே காரணகாரியங்களைக் கொடுக்கும் (ETIOLOGIES) தொடர்களைக் காணலாம் *(2-9; 10:16-34)*; போர் வரலாற்றைக் காணலாம் *(10:10-15; 11:1-14)*. பென்யமின் இனத்தின் பாரம்பரியங்கள் கில்காலில் காப்பாற்றப்பட்டிருக்க வேண்டும். இப் பாரம்பரியம் யோசுவா காலத்திலேயே தோன்றியிருக்க வேண்டும். ஏனெனில், இராகாபு இஸ்ராயேலரிடையே வாழ்கிறாள் *(6:25)*. இத்துடன் பாலஸ்தீனத்தின் மற்றப் பகுதிகளில் சிதறிக்கிடந்த பாரம்பரியங்களையும் சேர்த்துத் திட்டம் செய்து, எழுத்து வடிவம் கொடுத்து, ஒரே சீராக ஓடும் நிகழ்ச்சியுரையாக அமைக்கிறார் யூதாவைச் சேர்ந்த ஆசிரியர். இவரை நாம் ''தொகுப்பாசிரியர்'' என்றழைக்கலாம். இது கி.மு. 900-ஐ ஒட்டி நடந்திருக்கலாம். அடுத்து இவ்வரலாற்றில் உபாகமப் பாரம்பரியப் பதிப்பாசிரியர் புகுகின்றார். இவர் மேற்கூறப்பட்ட 'தொகுப்பைப் பதிப்பித்து, தனது பெரிய உபாகம வரலாற்றுத் தொகுப்பில் சேர்த்துக் கொள்கிறார். இவர் இந்நூலுக்கு முன்னுரையாக முதல் அதிகாரத்தைச் சேர்க்கிறார். மேலும், இவர் தொகுப்பாசிரியரது முடிவுரையோடு *11:21-22; 14:6-15* என்ற பகுதிகளையும் சேர்த்திருக்கக்கூடும். நாட்டைக் கைப்பற்றும் நிகழ்ச்சியில் காணப்படும் இடைவெளிகளை இப்புதிய முடிவுரை தெளிவுபடுத்துகிறது. இதில் உபாகம ஆசிரியர் அக்கறை காட்டுவதாகத் தெரிகிறது. ஏனெனில், கானானியர் நாட்டில் இருப்பது இஸ்ராயேல் இறைவன்பால் பற்றுறுதியாய் இருப்பதற்கு ஓர் ஆபத்தாய் இருக்கும். இதே அக்கறையை *13:2-6*-இலும் காணலாம். இவ்வாசிரியர் காலேபின் உரிமையிலும் தனி அக்கறை காட்டுகிறார் (உப *1:36)*. இந்த ஆசிரியர்தான், வெல்லப்பட்ட அரசர்களின் பட்டியலையும் (யோசு *12)*, யோர்தானுக்குக் கிழக்கில் குடியேறிய இனத்தவரை விடுவித்தலையும் *(22:1-6)*, எஞ்சியிருக்கும் கானானியர் பற்றிய எச்சரிக்கையோடு கூடிய யோசுவாவின் பிரியாவிடை அறவுரையையும் சேர்த்திருக்க வேண்டும். இந்தப் பதிப்பின்படி இந்நூலில், அதி. *1-12; 13:2-6; 14:6-15; 22:1-6; 23* ஆகியவை அடங்கி இருக்க வேண்டும். இந்நூலுக்கு எழுத்து வடிவம் கொடுத்த ஆசிரியர்கள், இந்நூலில் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகள் நடந்த காலத்தை நெருங்கியவர்களாக இல்லாமல் போகலாம். ஆனால் அவர்கள் பயன்படுத்திய மூலங்கள், நிகழ்ச்சிகளின் காலத்தோடு நெருங்கிய தொடர்புடையன. அவற்றில் காணப்படும் உயிர்ச் சக்தியும் செழிப்பும் இதற்குச் சான்று காட்டுகின்றன.

''தொகுப்பாசிரியர்'' நாடு கைப்பற்றியது பற்றிய நிகழ்ச்சியுரை எழுதிய சிறிது காலத்திற்குப்பின், மற்றொரு ஆசிரியர் யூத இனத்தவர்களுடைய உடைமைகள் பற்றி ஓர் நூல் எழுதுகிறார். இது நிகழ்ச்சியுரை அன்று. இஃது ஒரு நிலநூல் அளவீடு ஆகும் - (Geographical Survey). இது மன்னராட்சிக்கு முன் அல்லது மன்னராட்சித் தொடக்

கத்தில் பாலஸ்தீனத்தில் நிலவிய எல்லைப் பட்டியலை முக்கியமாகக் கொடுக்கிறது. அஃதோடு, பிளவுபட்ட மன்னராட்சிக் காலத்தைச் சேர்ந்த யூதாவின் மாகாணப் பட்டியலையும் சேர்த்துத் தருகிறது. இதில் யோசுவா நாட்டைப் பகிர்ந்து அளிக்க வில்லை; இஸ்ராயேலர்களே செய்கின்ற னர். யோசுவாவுக்கும் ஒரு பங்கு அளிக்கப் படுகிறது *(19:49-50)*. இந்நூல் *13:15-21.24-28; 14:1-5; 14:13-15; 15:12; 15:20-63; 16; 17; 19*-ஆகிய பகுதிகளை உள்ளடக்கியதாகும். உபாகம வரலாற்றுத் தொகுப்போடு சேர்த்துக் கொள்ளும் பொருட்டு, இந்நூலும் உபாகமப் பாரம்பரியப் பதிப்பைப் பெற் றது. இப்பகுதியின்றியே யோசுவா, நீதிபதி கள், சாமுவேல், அரசராகமங்கள் அடங்கிய உபாகமத் தொகுப்பு நூல் ஏற்கெனவே வெளிவந்திருக்க வேண்டும். இந்த உபாகம ஆசிரியர் இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்ட காலத்தில் கி.மு. *600*-ஐ ஒட்டிச் செயல்பட் டிருக்க வேண்டும். இவர் உபாகமப் பாரம் பரிய அடிச்சுவடுகளை இந்நூலில் விட்டுச் சென்றுள்ளார். இவர் அளவீட்டு நூலை ஒரு நிகழ்ச்சியுரையாக மாற்றுகிறார். இதன் படி யோசுவா நாட்டைப் பகிர்ந்தளிக்கிறார். இவ்வாசிரியர் *14:6-15*-ஐ அதன் முந்தைய சூழ்நிலைகளிலிருந்து *(11:23* அடுத்து*)* அகற்றி, மற்றொரு காலேபு பாரம்பரியத் தால் *(15:13-19)* நிறைவு செய்கிறார். யூதா, யோசேப்பு ஆகிய இனத்தவர் தங்கள் உரிமைப் பகுதியை உடைமையாக்கிக் கொண்டது பற்றிய *17:14-18; 18:2-10* ஆகிய பகுதிகளை இவர்தான் சேர்த்திருக்க வேண் டும். இதன் விளைவாக இவ்விரு இனத்த வர், யோர்தானுக்கு மேற்குப்பகுதியில் குடியேறிய இனத்தவரில் முதல்வர்களாகக் கருதப்படுகின்றனர். யோர்தானுக்குக் கிழக் கில் குடியேறிய இனத்தவர், மேற்கூறப் பட்ட அளவீடு நூலுக்குப் புறம்பே நிற் கின்றனர். அவர்கள்மேல் கொண்ட தனிப் பட்ட அக்கறையால் ஆசிரியர் அவர்களுக்கு அதி. *13*-இல் முதலிடம் அளிக்கிறார். இந்நூல் *23:1*-ஐ முன்னோக்கி *13:1*-இல் உபாகம வரலாற்றுக்குள் புகுத்தப்படுகிறது. இதன் விளைவாக நாட்டைப் பகிர்ந்தளித் தல் யோசுவாவின் இறுதி வார்த்தைகளாகத் தோன்றுகிறது. யோர்தானுக்குக் கிழக்கில் வாழும் இனத்தவர் போர்ச்சேவையிலிருந்து விடுவிக்கப்படுதல், பின் தள்ளிப் போடப் படுகிறது *(22:1-6)*. ஆனால், சண்டைகள் முடிந்துவிட்டதால் இவர்கள் தங்கள் பகு திக்கு ஏற்கெனவே சென்று விட்டனர். உபாகமப் பாரம்பரிய ஆசிரியர் மேற்கூறப் பட்ட இரு சிறு தொகுதிகளையும் சேர்த்து ஒரே நூலாக அமைக்கிறார். பயன்படும் சொற்களும், நடையும், மனப்போக்கும், உபாகமப் பணிச்சட்டத்தைச் சார்ந்ததாகும் என்பது தெளிவு *(அதி. 1; 2:10தொ; 4:21-24; 8:30-35; 9:1தொ)*.

இந்நூலின் தோற்ற வரலாற்றில், உபா கமப் பதிப்பை அடுத்து வருவது குருக்கள் குழுவின் பணியாகும். இந்நூலின் இரண் டாம் பகுதியில் குருக்கள் பாரம்பரியம் எலயாசர் *(14:1; 19:51; 21:1)*, சீலோ *(18:1-10)* ஆகியவற்றையும் *2:7-34* என்ற பகுதியையும் உட்புகுத்துகிறது; அதி. *21*-ஐத் திருத்தி எழுதுகிறது. மற்ற இடங்களிலும் இக்குழு வின் சுவடுகள் காணப்படுகின்றன *(4:15-19; 5:10-12; 9:15-21)*.

இறுதியாக உபாகமம், குருக்கள் ஆகிய இரு பாரம்பரியங்களையும் சேர்ந்த ஓர் இறுதி ஆசிரியர் *8:30-35*-ஐயும் *24*-ஆம் அதிகாரத்தையும் சேர்த்து இந்நூலுக்கு இறுதிவடிவம் அளிக்கிறார். இது கி.மு. *5*-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்திருக்க வேண்டும்.

**6. இலக்கியக்கூறுகள்:** யோசுவா ஆகமம் வரலாற்று நிகழ்ச்சியுரை வகையைச் சேர்ந் தது. ஆனால், எப்பொருளில் இந்நூல் வரலாற்று நூல் என்பதைக் கவனமாய் வரையறை செய்ய வேண்டும். இதற்கு இந்நூலில் காணப்படும் இலக்கியக் கூறு களைச் சிறிது அறிந்திருத்தல் சாலவும் நன்று.

**6. அ. (பொருள்கள் தோற்றக்) காரண இலக்கியக்கூறு (Etiological):** முதல் அதிகா ரம் முழு நூலுக்கும் முன்னுரையாக அமை கிறது. அதி. 2-9-இல் அடங்கிய இலக்கியத்

தில் பெரும்பகுதி தோற்றக்காரண காரிய இலக்கிய வடிவமாகும். இவ்வடிவம் ஓர் இடத்தையோ, ஆளையோ சிறப்பித்துக் காட்டும் நிகழ்ச்சியுரையாகும். இஃது ஓர் இடத்தில் என்ன நடந்தது என்றோ, ஒருவருக்கு என்ன நிகழ்ந்தது என்றோ மட்டும் வெறுமனே கூறும் அமைப்பன்று. ஓர் இடத்திற்கோ, ஆளுக்கோ எப்படி அந்தப் பெயர் வந்தது என்று அல்லது ஓர் இடத்தில் ஏன் சில பொருட்கள் காணப்படுகின்றன என்று காரணம் காட்டி விளக்கும் வகையில் நிகழ்ச்சியுரை அமைந்திருக்கும். இத்தகைய தோற்றக்காரண இலக்கிய அமைப்பின் இறுதிப்பொருள் ஆழமானதாகும். சான்றாக ஆதி. 2:7-இல் ஆதாம் மண்ணிலிருந்து படைக்கப்பட்டான் என்பது தோற்றக்காரணக் கதையாகும் (ஆதாம் - உழவுநிலம்). இக்கதை முதல் மனிதனுக்குப் பெயரைக் கொடுப்பதாகத் தோன்றலாம். ஆனால் இவ்விளக்கத்தைவிட, இக்கதை, நிலத்தில் உழைக்க வேண்டியவன் ஆதாம் என்ற இறைவன் அளித்த அலுவலைப் பற்றிக் கூறுவதாக அமைந்திருக்கிறது. தோற்றக்காரணக் கதைகளின் வரலாற்று மதிப்பீடு கதைக்குக் கதை மாறுபடும். இம்மதிப்பீடு, கதையைச் சொல்பவர், அவர் விவரிக்கும் நிகழ்ச்சிக்கு எவ்வளவு அருகில் உள்ளார் என்பதைப் பொருத்ததாகும். யோசுவா ஆகமத்தைப் பொருத்த மட்டும் எரிகோ, ஆய், கிபயோன் முதலியவை பற்றிய பாரம்பரியங்கள், கி.மு. 12-13 நூற்றாண்டுகளில் கானான், இஸ்ராயேலரால் கைப்பற்றப்பட்ட காலத்தை ஒட்டியே உருவெடுக்கத் தொடங்கின என்று கூற நல்ல காரணங்கள் உள்ளன. யோசு 4:3. 5-9. 20-25; 5:9; 6:25-26; 7:26; 8:28-29; 9:27-இல் வரும் நிகழ்ச்சியுரைகள் தோற்றக்காரணக் கதையின் பண்புகளைக் காட்டுகின்றன. 4:1-9-இல் வரும் கற்களின் கதை, ஏன், எப்படி அக்கற்கள் வந்தன என்று மட்டும் கூறவில்லை. இதைவிட இக்கதை பிற்கால இஸ்ராயேலர்களுக்கு எடுத்துக் கூறிய உண்மையும், விடுத்த அழைப்பும் முக்கியமானதாகும். அவர்களின் மூதாதையரின் வரலாற்றில் ஓர் இக்கட்டான கட்டத்தில் யாவேயின் ஆற்றலால் யோசுவா யோர்தானைக் கடந்தார். இப்பெரும் நிகழ்ச்சியோடு இணைந்து அனுபவம் பெறுமாறு, குடியேறி நிலை பெற்றுவிட்ட பிற்கால இஸ்ராயேலரை அழைக்கின்றது யோர்தான் பள்ளத்தாக்கில் காணப்படும் பெரும் கற்கள் அடங்கிய நினைவுச்சின்னம். இப்படிப் பிற நிகழ்ச்சியுரைகளுக்கும் விளக்கம் கூறலாம். ஆனால், ஓர் எச்சரிக்கை! தோற்றக்காரணக் கூறுகள் இந்நூலில் இருப்பது உண்மை; ஆனால், அதை அதிகமாக அழுத்திக் கூறினால் நாம் தவறு செய்தவர்களாவோம்.

**6. ஆ. வீரகாவிய அல்லது காப்பிய இலக்கிய வடிவம்:** இப்பண்பு அதி. 10-11-இல் காணப்படுகிறது. இந்நூலில் யாவும் யோசுவாவை மையமாகக் கொண்டு நிகழ்கின்றன. வீரகாவியப் பரிமாணங்களோடு யோசுவா காட்சி அளிக்கிறார். வெற்றி கொண்டு நாட்டைக் கைப்பற்றிய வரலாறு முழுவதும் அவருக்கே சாற்றிக் கூறப்படுகிறது. இஃது எவ்வளவு மிகைப்படுத்தப்படுகிறது என்றால் பிறர் செய்த எந்தக் காரியமும் ஒன்றுமில்லாது மறைந்து போகின்றன. வெற்றிகள் ஒன்றன்பின் ஒன்றாக, தடை ஏதுமின்றி, வெகு எளிதாக நடைபெறுகின்றன. இந்த வெற்றிப் பெருமிதமும், யோசுவாவின் மீது முழுக்கவனத்தைச் செலுத்தும் பண்பும் வீரகாவியத்துக்கே உரிய மிகைப்படுத்துதல், எளிதாக்குதல் போன்ற அணிகளின் விளைவாகும். அதி. 10-இல் வரும் கிபயேன் சண்டையில் யோசுவாவின் கட்டளைக் கிணங்க, சூரியனும் சந்திரனும் நிற்கின்றன. அப்போது யோசுவா எதிரியின்மேல் முழு வெற்றி கொள்கிறார். இந்நிகழ்ச்சியுரை இந்நூலில் காணப்படும் பெருங்காப்பிய இலக்கியத் தன்மைக்கு மிகத்தெளிவான சான்றாகும். 10:12-13-இல் காணப்படும் காவியப்பண்பும், 10:14-இல் வரும் ''அந்நாளைப்போல் நெடிய நாள் இதற்கு முன் இருந்ததுமில்லை; இனி இருக்கப் போவதுமில்லை'' என்ற ஆர்வம் மிகுந்த முடிவுரையும், ஆசிரியர் தனது காவியத்தலைவனை

மிகைப்படுத்திக் கூறுகிறார் என்பதற்குச் சிறந்த சான்றாகும், இங்கு இக்கதையைக் காப்பிய இலக்கிய வடிவம் என்று எடுத்துக் கொண்டால், சூரியன் சந்திரன் பற்றிய அருஞ்செயல் ஒரு பிரச்சனையே இல்லை. இக்கதையைப் பற்றி பின்பு சிறிது பார்ப் போம்.

தென் கானானில் நடந்த போர்களை விவரிக்கும் *10:28-43* என்ற பகுதி, ஒரு வெற்றியிலிருந்து மறு வெற்றிக்கு யோசுவா வெற்றிநடை போடுவதாகக் காட்டுகிறது. இவை யாவும் யாவேயின் கட்டளையாலும் அவருடைய உதவியாலும் நிகழ்வதால் ஒரு தடையுமின்றி நிறைவேறுகின்றன. இது தான் இந்தக் காப்பிய இலக்கிய வடிவின் இறையியல் பொருளாக இருப்பதாகத் தோன்றுகிறது.

இந்நூலின் இரண்டாம் பகுதி நாட்டைக் கைப்பற்றும் வேலையை யோசுவா முழுவதும் முடிக்கவில்லை என்று காட்டுகிறது. இன்னும் வெல்லப் படாத புற இனத்தார் பகுதிகள் நாட்டின் இடையேயுள்ளன. முதற்பகுதியோடு ஒப் பிட்டு வேறுபடுவதால் இரண்டாம்பகுதி, முதற்பகுதியில் வரும் நிகழ்ச்சியுரைகளின் காப்பியத் தன்மையைச் சுட்டிக்காட்டுகின் றது. *11:23,* ''ஆண்டவர் மோசேக்குக் கட்டளையிட்டிருந்தபடியே யோசுவா நாடு அனைத்தையும் பிடித்து, அதை அந்தந்தக் குலமரபிற்கு அமைந்த பங்குகளின்படியே இஸ்ராயேலருக்குச் சொந்தமாகக் கொடுத் தார். போரின்றி நாடு அமைதியாய் இருந்தது'' என்று கூறுகிறது. ஆயினும் *13:1*-இல் இறைவன் யோசுவாவிடம் ''நீ வயது முதிர்ந்த கிழவனாய் இருக்கின்றாய்; பங்கி டாமல் கிடக்கிற நாடோ மிகப் பரந்த நாடாகும்....'' என்று கூறும் இன்னும் வென்று கைப்பற்றப்பட வேண்டிய பெரும் பகுதியுள்ளது என்று நினைவுபடுத்தும் ஒரு குறிப்பு உள்ளது. இதுவும் முதற்பகுதியின் வீரகாவிய இலக்கிய வடிவைச் சுட்டிக்காட் டும். இந்த வீரகாப்பிய இலக்கியக் கூற்றின் குறிக்கோள் என்ன? யாவேக்கு மகிமை அளிப்பதாகும். இவ்விலக்கிய வடிவு சமய போதகத்திற்காகப் பயன்படுத்தப்படுகிறது.

**6. இ. நிலவியல் இலக்கிய வடிவு (Geographical Literary Form):** *13-21*-ஆம் அதிகாரங்கள் அடங்கிய இரண்டாம் பகுதி நிலவியல் செய்திகள் நிறைந்ததாயுள்ளது. இதில் காணப்படும் இடங்கள் பற்றிய நீண்ட பட்டியல் நவீன வாசகர்களுக்கும் அயர்ச்சியை அளிக்கலாம். ஆனால், இப் பெயர்கள் தொல்பொருள் ஆய்வாளர்களுக் கும் நிலப்படம் வரைவோருக்கும் ஒரு சவாலாக அமைந்துள்ளன; ஊக்கம் அளித்துத் தூண்டி வந்துள்ளன. இவை ஒரு தனிப்பட்ட நிலவியல் அமைப்பை எடுத்துக் கூறவோ, கானான் நாட்டைக் கைப்பற்றி பங்கிட்டளிக்கும் கதையை எடுத்துக்கூறுவதற்காக மட்டுமாகவோ, இவ்விவரிப்புக்கள் தரப்பட்டதாகத் தெரிய வில்லை. அவை இறையியல் செய்தியைப் பறைசாற்றுகின்றன. அடிக்கடி கூறப்படும் இந்நகர்களின் பெயர்கள், இறைவன் வாக் களித்த நாட்டைக் கைப்பற்றப் போராடிய இடுக்கண் மிக்க காலத்தில் யாவே அளித்த சலுகையையும் பாதுகாப்பையும், இஸ்ரா யேலர்களுக்கு நினைவூட்டி நிற்கின்றன. இச்சிறப்பு அலுவலில் இப்பெயர்கள் யோர் தான் பள்ளத்தாக்கில் உள்ள நினைவுச்சின் னமாகிய கற்களைப் போன்றவை. குடி யேறி நிலையாக வாழ்ந்த காலத்திலும், மன்னராட்சிக் காலத்திலும், நாடிழந்து நாடு கடத்தப்பட்ட காலத்திலும் விசுவாசமிக்க இஸ்ராயேலர், இந்நகர்களின் நீண்ட பட்டி யலைச் சிந்தித்து, எப்படி இந்நாடு யாவேக்கு உண்மையிலேயே அன்பான முறையில் இருந்தது என்று நினைவுகூரவும் இப்பட்டியல் உதவியது. ஒருவிதத்தில் இரண்டாம் பகுதி, மிகைப்படுத்தல் அணி நிறைந்த முதற்பகுதிக்கு மாற்று அளித்து உண்மைத் தன்மையை விளக்குகிறது. மற் றப்படி இப்பகுதியிலும் கானானை இஸ்ரா யேலர் உடைமையாக்கிக் கொண்டது பற்றிய வரலாறு மிகைப்படுத்தப்பட்டுள் ளது. சான்றாக *13:1-7*-இல் குறிக்கப்படும் சில பகுதிகள் (வடபகுதிகள்) இஸ்ரா

யேலை ஒருபோதும் சேர்ந்ததல்ல. இவ் வாசகம் இதை வாசிக்கும் இஸ்ராயே லருக்கு என்ன நடந்தது என்பது பற்றிய விவரிப்பை மட்டும் கொடுக்கவில்லை. அஃதோடு வருங்காலத்திற்கு நம்பிக்கையை யும் கொடுத்தது. இந்நகரங்களின் பெயர் களை அன்போடு உச்சரிக்கும் பொழுது, இந்நம்பிக்கை வளர்ந்தது. யாவே இந் நாட்டை அவர்களுக்கு அளித்தார் என்ற விசுவாசம் உறுதி பெற்று வளர்ந்தது. ஆகவே, அந்நாடு நல்ல நாடாக இருக்க வேண்டும், வளமிக்க நாடாக இருக்க வேண்டும், பரந்து அகன்ற நாடாக இருக்க வேண்டும்.

**6. ஈ. உபாகம இலக்கிய வடிவு:** இந் நூலுக்கு முடிவுரையாகவுள்ள அதி. 22-24 அடங்கிய பிற்சேர்க்கை உபாகம நடையில் எழுதப்பட்டது. அதி. 23-இல் வரும் யோசுவாவின் பிரியாவிடை அறவுரைக்கு ஒத்ததாகும். யோசுவா, தமது முதிர்ந்த வயதில் தம் மக்களின் வரலாற்றைப் பின்னோக்கிப் பார்க்கிறார். இம்மக்கள் யாவேக்குத் தொடர்ந்து பற்றுறுதியுடன் கீழ்ப்படிந்து வந்தால், அவர் அவர்களுக்குத் தொடர்ந்து பாதுகாப்பு அளிப்பார் என்று வாக்குறுதி அளிக்கிறார். அவர்கள் கீழ்ப்படி யாவிட்டால், கொடிய தண்டனை கிடைக் கும் என்றும் எச்சரிக்கிறார். இந்த அற வுரைப் பகுதியில் போதகத்தொனி சிறப் பாகக் காணப்படுகிறது. கடந்த காலத்தில் யாவே செய்தவற்றை நினைவு கூரவும், அவர் வருங்காலத்தில் என்ன செய்வார் என்பதை ''இன்று'' உணரவும் வேண்டு கோள் விடுப்பது உபாகம இலக்கிய வடிவின் பண்பாகும். இவ்வேண்டுகோள் வாசகர்களின் உள்ளத்தை நோக்கி விடப்படு கிறது; மீண்டும் மீண்டும் விடப்படுகிறது. அதி. 23-இல் உள்ளதையே அதி. 24 பெருமளவிற்குக் கொடுக்கிறது; அஃதோடு செக்கேமிற்குச் சிறப்பு அளிக்கிறது. யோசு வாவின் இரு பிரியாவிடை விளக்கங்களில் அதி.24-இல் வரும் வாசகம் காலத்தால் முந்தியதாக இருக்கலாம் என்று சிலர் கருதுவர். இதிலும் மீட்பு வரலாற்றைப் பின்னோக்குதல், யாவேயின் பற்றுறுதியான அன்பை நினைவுபடுத்துதல், அவருக்கு அஞ்சவும் கீழ்ப்படியவும் அறவுரை கூறு தல், கீழ்ப்படியாமைக்கு எதிராக எச்சரித்தல் ஆகியவற்றில் உபாகம நடை காணப்படு கிறது. இவ்வதிகாரம், 23-ஆம் அதிகாரத்தை விடத் தெளிவாக உடன்படிக்கை புதுப்பித்த லுக்கு இட்டுச்செல்கிறது. இவ்வதிகாரத்தின் நடை உப 29-30-இல் காணப்படும் நடைக்கு ஒத்ததாகும். கெரிசிம் மலைக்கும் கெபால் மலைக்கும் இடையிலுள்ள செக் கேம் சிறப்பித்துக் கூறப்படுகிறது. இதன் காரணமாக யோசு 8:30-35-ஐ உபாகம ஆசிரியர் யோசு 24:1-15-ஆக விவரித்து எழுதியிருக்கலாம் என்பர் அறிஞர்கள் சிலர்.

**7. முக்கிய கருத்துக்கள்**

**அ. யோசுவாவின் முன் வரலாறு:** இந் நூலின் காப்பியத் தலைவன் பழைய ஏற்பாட்டில் யோசுவா என்ற பெயர் கொண் டவர்களில் எல்லாம், நூனின் மகனான யோசுவா மிகப் புகழ்ச்சி பெற்ற சிறப்புடை யவர். யோசுவா என்ற பெயருக்கு ''யாவே மீட்கிறார்'' என்ற பொருள் உண்டு. இயேசு என்ற பெயர் யோசுவா என்ற பெயரின் திரிபே.

யோசுவா நூனின் மகனாவார் (1 நாள் 7:27); எப்பிராயிம் இனத்தைச் சேர்ந்தவர். ஆகவே, யோசேப்பின் இனத்தைச் சேர்ந்த வர். பிற்காலத்தில் திம்னத்செரா அவருடைய சொந்த ஊராய் விளங்கியது (யோசு 19:49-50). யாத் 17:9-10-இல் இவர் மோசேயின் பணியாளராகவும், தானைத் தலைவராகவும் விளங்குகிறார். மோசே காலத்திலேயே யோசுவா திறமையுள்ள, அச்சமற்ற, துணிவுடைய, தகுந்த வழி காணும் போர்த்திறமுடைய தலைவராகத் திகழ்கிறார். சீனாய் மலைக்கு இஸ்ராயேலர் வந்து சேருமுன்பு பாலைவனத்தில் நடந்த சிறுசிறு போர்களில் இஸ்ராயேல் படைக்குத் தலைமை தாங்குகிறார். அப் படிப்பட்ட போர்களில் ஒன்றுதான் இரபிதி மில் அமலேக்கியரோடு செய்த போர். யாவேயுடன் மோசே உறவாடிக்கொண்

டிருந்த போது யோசுவா மோசேயின் நெருங்கிய, நம்பிக்கைக்குரிய கூட்டாளி யாகத் தோன்றுகிறார் (யாத் 24:13). மோசேயைப் போல், யாவேயின் ஆவியால் நிறைந்தவர் என யோசுவா கருதப்படுகிறார் (யாத் 33:11). மக்களிடையே இறைவாக்கு ஆவி தோன்றியது மோசேயின் இறை வாக்குப் பதவிக்கு ஆபத்தாகக்கூடும் என்று எண்ணியதால், அவ்வாவியைத் தடை செய் யும்படி மோசேயைக் கேட்கும்போது மோசேயிடம் தமக்குள்ள ஆர்வத்தைக் காட்டுகிறார் (எண் 11:27-29).

காலேபுடன் சேர்ந்து யோசுவா காதேசி லிருந்து பாலஸ்தீனம் மீது வேவு பார்க்கச் சென்று, திரும்பிவந்து, அந்நாட்டின் மீது படையெடுக்க வேண்டும் என்று சரியான ஆலோசனை கொடுத்தவர் (எண் 14:5-7). எண் 27:18-23-இல் மோசேயிடமிருந்து யோசுவாவுக்கு அதிகாரம் மாறுகிறது. யோசுவா அப்பதவிக்குத் தகுதியுடையவரே என்று இப்பகுதி விவரிக்கிறது. உப 1:37-38-இல் வாக்களிக்கப்பட்ட நாட்டிற் குள் தாம் நுழையப்போவதில்லை என்று மோசே கூறுகிறார். அந்நாட்டை உடைமை யாக்கிக் கொள்ள பாலையில் பிறந்த தலைமுறையை இட்டுச் செல்வது யோசு வாவின் சிறப்பான வேலையாகும். அவ் வேலையில் ஈடுபட யோசுவாவை உற் சாகப்படுத்துவது தமது கடமையாகக் கருது கிறார் மோசே. எகிப்திலிருந்து வெளிவந்த வர்களில் காலேபும் யோசுவாவும் மட்டும் தான் வாக்களிக்கப்பட்ட நாட்டில் புகுந்த னர். ஏனெனில், இவர்கள் யாவேயிடம் பற்றுறுதியாய் இருந்தனர். உப 34:7-9-இல் மோசேயிடமிருந்து யோசுவாவுக்கு இஸ்ரா யேலின் தலைவர் பதவி மாற்றப்படுதல் விவரிக்கப்படுகிறது. யோசுவா ஆகமத்தின் தொடக்கத்தில் இத்தகைய இறை ஆவி ஆட்கொண்ட ஞானம் நிறைந்த தலை வராகத்தான் யோசுவாவைக் காண்கி றோம். மோசேயிடம் நிலவிய யாவேயின் பிரசன்னம், யோசுவாவிடமும் நிலவித் தொடர்ந்து செயல் ஆற்றுகிறது. யாவேயின் விருப்பத்திற்கேற்ப இஸ்ராயேல் மக்கள் அவரைத் தலைவராக ஏற்றுக்கொள் கின்றனர்.

யோசுவா ஆகமத்தில், யோசுவா போரில் சிறிதும் அச்சமற்றவராகச் செயல் படுகிறார். இஃது அவருடைய சொந்த பலத்தினால் வந்ததன்று;அவரிடம் நிலவிய யாவேயின் பிரசன்னத்தின் விளைவாகும். கானானைக் கைப்பற்றும் போராட்டத்தில் இஸ்ராயேல் அடையும் வெற்றி யாவும் யாவேயின் ஆற்றல் மிக்க செயல்களின் விளைவே என்று யோசுவா ஆழ்ந்து உணர்ந்து செயல்படுவதின் விளைவாகும். இத்தகைய மனநிலையோடு யோர்தானைக் கடந்துசெல்ல யோசுவா ஆயத்தமாகிறார்.

**7. ஆ. யோசுவாவின் விவேகமும் இராகாபு வும்:** கானானைக் கைப்பற்றும் வரலாறு பலபடிகளைக் கொண்டது. அதன் முதற்படி யோர்தானைக் கடந்தவுடன் எரிகோவின் கோட்டையைக் கைப்பற்றுதலாகும். யோர் தானைக் கடக்குமுன் இஸ்ராயேலர் சித்திம் என்ற இடத்தில் படையை இறக்கினர். இது யோர்தான் சமவெளியின் கிழக்கு ஓரத்தில் அமைந்திருக்கும் இக்கால தெல் கெப்ரென் என்ற இடமாக இருக்கலாம். ஆற்றிலிருந்து ஆறு மைல் தூரத்தில் எரிகோவுக்கு ஒத்த உயரத்திலேயே இருந்தது (யோசு 3:1; எண் 33:49). இங்கிருந்து யோசுவா ஒற்றர்களை அனுப்பினார். ஏனெனில், யாவேயின் நிலையான வழிகாட்டுதலை நன்கு அறிந் திருந்தார் என்றாலும், பயன் படக்கூடிய மனிதக் கருவிகளைப் பயன்படுத்துவதை அவரது விசுவாசம் தடை செய்யவில்லை. இதே விவேகத்தை அவரது வாழ்வு முழு வதும் காணலாம்.

நகர்ப்புறச் சுவரிலிருந்த இராகாபுவின் வீடு ஒற்றர் குழுவுக்கு உதவியாய் இருந்தது. ஒற்றர் வேவு பார்த்து வந்து செய்தி கூறினர். இவ்வரலாற்றை நூலில் படித்தறியலாம், இராகாபு விலைமாதர் தொழிலைக் கொண் டிருந்தாலும் அவளுடைய விசுவாசத்திற்காக வும், இஸ்ராயேல் ஒற்றர்களுக்கு உதவி செய்ததற்காகவும் புதிய ஏற்பாட்டில் மதிப் போடு குறிக்கப்படுகிறாள் (எபி 11:31; யாக்

2:25). இயேசுவின் மரபுக்கொடியில்கூட அவளது பெயர் இடம் பெறுகிறது (மத் 1:15). ஒரே தடவை மீட்கப்பட்டபின், அவள் எப்போதும் யாவேயின் சமயத்தில் பற்றுறுதியாய் இருந்தாள் என்ற உறுதியே இதற்குக் காரணம் ஆகும்.

**7. இ. புனிதப்போர் அல்லது அர்ப்பணப் போர்:** ''உங்களைத் தூய்மையாக்கிக் கொள் ளுங்கள். ஏனெனில், நாளை ஆண்டவர் உங்களிடையே வியத்தகு செயல்கள்புரிவார்'' (யோசு 3:5) என்று யோசுவா மக்களுக்குக் கட்டளையிடுகிறார். அவர்களின் போர் எழுச்சி உலகியல் சார்ந்த நிகழ்ச்சியன்று. அஃது ஒரு சமய நிகழ்ச்சியாகும். ஆகை யால், அவர்கள் புணர்ச்சி உறவை ஒதுக்கி வைக்க வேண்டும்; முறையாக உடுத்திக் கொள்ள வேண்டும். ஏனெனில், அவர்கள் யாவேயின் அருஞ்செயல்களை அனுப விக்கப் போகிறவர்கள் (யாத் 19:10. 14; எண் 11:18). இப்போர் புனிதமானது. இதன் முக்கிய பண்பு சாபமாகும். இச்சாபத்தின் படி வெல்லப்பட்ட நகரும் அதிலுள்ள மனிதர், விலங்குகள், சொத்துக்கள் யாவும் யாவேக்கு அர்ப்பணிக்கப்பட்டவை. ஆகவே, முழுவதும் அழிக்கப்பட வேண் டும். ''சாபம்'', ''அர்ப்பணம்'' ஆகிய இரண்டு சொற்களும் ஒரே பொருளைக் குறித்தன.

இக்கருத்து இஸ்ராயேலர்களுக்கு மட் டும் உரியதன்று. மோவாபு இனத்தவரிடை யிலும், அராபியர், செர்மேன் இனத்தவரி டையேயும் இம்மரபு உண்டு. அர்ப்பணிக் கப்பட்டதென்றால் எதிரியை ஒருவரும் தனது உடைமையாக உரிமை கொண்டாட முடியாது; முழுவதும் துறந்து கைவிட வேண்டும். கொள்ளைப் பொருட்களைச் சேர்க்க மட்டுமே போர் செய்வதைத் தடுப்பதற்காகவே இச்சாபம் கொடுமையாக அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இச்சாபத் தின் விதிகளை மீறினால், வென்றவனே இச்சாபத்திற்குப் பலியாவான். சில சமயங் களில் யாவேயின் மக்களான இஸ்ராயேல ரின் மேலேயே இச்சாபம் விழுந்தது (நீதி 28:48; 21:10 தொ). இந்தச் ''சாபப்போர் அல்லது அர்ப்பணப்போர்'' என்ற கருத்து யாவேக்கு நிபந்தனையற்ற கீழ்ப்படிதலாக மாறியது. இஸ்ராயேல் இறைவனது தீர்ப் பின் கரமாய்த் திகழ்ந்தது. கானானியர் தீர்ப்பிற்கு உரியவர்களாய் இருந்தாலும், அமலேக்கியர்கள் இரக்கமற்ற கொள்ளைக் காரர்களாய் இருந்தாலும், இஸ்ராயேலர் யாவேயிடம் பற்றுறுதியாய் இருப்பதற்குத் தடையாக இருக்கக் கூடுமாதலால், அவர் கள் முழுவதும் அழிக்கப்பட வேண்டும். இச்சாபத்தால் யாவே தம் எதிரிகள் மேல் பழிவாங்குகிறார். சபித்தலும் தண்டித்தலும் ஒரே செயலாகிறது.

இக்கொடிய சாபம் ஒரு நிலையான நிறுவனம் அன்று, இது காலப்போக்கில் மாற்றியமைக்கப்பட்டது. சாபத்திலிருந்து விலங்குகளும், கொள்ளைப் பொருள் களும், பெண்களும், சிறுவர்களும் விலக் கப்பட்டனர். பொதுவாக இஸ்ராயேலரின் போர்களில் இரக்கம் இருந்தது. அவர்களின் அரசர்கள் இரக்கமிக்கவர்களாயிருந்தனர் (1 அர 20:31). கொலைக்குக் கொலை செய்தல் இஸ்ராயேலரிடையே அரிதாகிய செயலா கும். கைப்பற்றிய பெண்களைக் கற்பழித்த தாக இஸ்ராயேல் வீரர்களைப் பற்றிக் குற்றம் கூறப்படவில்லை. அவர்களின் போர்ச்சட்டப்படி பழமரங்களுக்குத் தனிப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது (உப 20:19). பிற்கால அரசர்கள் காலத்தில் இந்தச் சாபப்போர்முறை முழுவதும் மறைந்து விட்டது.

**7. ஈ. யோர்தானைக் கடத்தல்:** யாவே அடையாளம் கொடுக்க இஸ்ராயேல் படை சித்திமிலிருந்து புறப்பட்டது. இயற்கை நிகழ்ச்சியோ, அருஞ்செயலோ ஏதோ ஒரு சக்தி செங்கடலில் உதவியது போல், இஸ்ராயேலர் யோர்தானைக் கடக்க உதவி யது. இக்கடத்தல் அறுவடைக் காலத்தில் நிகழ்ந்தது. பாலஸ்தீனத்தில் அறுவடைக் காலம் ஏப்ரல், மே மாதங்களில் வந்தது. அப்போது மழை குறைவு. நாடு பொது வாக வறட்சியாக இருக்கும். ஆனால் யோர்தானின் நீர்மட்டம் எர்மோன் மலை யில் பனி உருகுவதைப் பொருத்தது.

இக்காலத்தில் அடிக்கடி யோர்தானில் வெள்ளம் பெருகுவதுண்டு. யோர்தானைக் கடத்தலுக்கு இக்காலம் சாதகமானதன்று. இறைவனது வல்லமைமிக்க உதவியால் இஸ்ராயேல் யோர்தானைக் கடக்கின்றனர். இந்நிகழ்ச்சியை யோசுவா நூல் ''அது அறுவடைக்காலம்'' ஆகவே, தண்ணீர் கரை புரண்டு ஓடிக்கொண்டிருந்தது. அவர்களின் உடன்படிக்கைப் பெட்டியைத் தூக்கிச் சென்ற குருக்களின் கால்கள் தண்ணீரில் நனையத் தொடங்கிய உடனே மேலிருந்து ஓடிவந்த தண்ணீர் ஒன்றாகக்கூடி ஆதாம் நகர் முதல் சாரத்தான் என்ற இடம் வரை மலைபோல் குவிந்து நிற்பதாகக் காணப் பட்டது. கீழேயுள்ள தண்ணீர் முழுவதும் சாக்கடல் என இப்போது அழைக்கப்படும் பாலைவனக் கடலுக்குள் வடிந்தோடிப் போயிற்று. அதற்குள் மக்கள் நதியைக் கடந்து எரிகோவுக்கு நேரே செல்லத் தொடங்கினர் *(யோசு 3:15-16)*.

ஆதாம் நகர் இப்போது தெல் எத்-தமியே என்றழைக்கப்படுகிறது. இஃது இஸ்ராயேல் நதியைக் கடந்த இடத்திலிருந்து *30* கி.மீ. தொலைவில் உள்ளது. சாரத்தான் *(1அர 4:12; 7:46)* இப்போது எங்குள்ளது என்பது பற்றி ஒன்றும் தெரியாது. கி.பி. 1267-இல் திசம்பர் மாதத்தில் இப்பகுதியில் ஏற்பட்ட நிலச்சரிவின் காரணமாக யோர்தானின் நீரோட்டம் அரை நாளுக்குத் தடைப்பட்டது. கி.பி. 1927-இலும் இத்தகைய நிகழ்ச்சி நடைபெற்று இருக்கிறது. இஸ்ராயேலர் யோர்தானைக் கடந்த போது இப்படிப்பட்ட ஓர் இயற்கை நிகழ்ச்சி நடத்திருக்கலாம் என்பர் சிலர். இவ்விளக்கம் எவ்வளவு உண்மையானது என்பது கேள்விக்குரியது. ஆனால் இயற்கை நிகழ்ச்சிகளை இறைவன் எவ்விதம் தம் திட்டத்தை நிறைவேற்றப் பயன்படுத்துகிறார் என்பது பற்றி நாம் யாத்திரை ஆகம முன்னுரையில் கொடுத்திருக்கும் குறிப்பு இங்கேயும் பொருந்தும்.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில், யோர்தானைக் கடத்தல் மீட்பின் அடையாளமாகச் சுட்டிக்காட்டப்படுகிறது *(யோவா 10:40-42)*. தம் நண்பன் இலாசரை உயிர்ப்பிக்கச் செல்லுமுன், யோசுவாவைப் போன்று மூன்று நாட்கள் தாமதித்தபின் இயேசு யோர்தானைக் கடக்கிறார். இயேசு கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குச் செல்லும் தமது இறுதிப் பயணத்தில் யோர்தானுக்குக் கிழக்கிலுள்ள பகுதிகளில் மெதுவாகச் சுற்றி வந்து, எரிகோவுக்கு அருகில் தான் யோர்தானைக் கடந்து பரிசுத்த நகர் எருசலேமுக்குச் செல்கிறார். அங்குதான் அவரது இறப்பிலும், உயிர்ப்பிலும் பாஸ்கு விழா நிறைவெய்தும், செங்கடலைக் கடத்தல் போன்று, யோர்தானைக் கடந்து வாக்களிக்கப்பட்ட நாட்டில் புகுவதும், கிறிஸ்துவச் சமயத்துக்குள் சேர்க்கும் சடங்கிற்கு ஆழ்ந்த அடையாளப் பொருளுடையது என்று தொடக்க காலத் திருச்சபைத் தந்தையர் அழுத்திக் கூறியுள்ளனர். நமது பாஸ்குத் திருவிழிப்பு வழிபாட்டில் யோர்தானை இஸ்ராயேலர் கடந்தது நினைவு கூரப்படுகிறது.

யோர்தானைக் கடந்தபின், இப்பெரும் நிகழ்ச்சியின் நினைவாக பன்னிரண்டு கற்கள் கொண்ட ஒரு நினைவுச் சின்னத்தை யோசுவா எழுப்பினார். ஒரு பாரம்பரியப்படி இச்சின்னம் யோர்தான் நதியிலே எழுப்பப்பட்டது *(யோசு 3:12; 4:4-7)*. மற்றொரு பாரம்பரியப்படி கில்காலில் எழுப்பப்பட்டது *(4:2தொ)*. இதன் காரணமாக கில்காலிற்குக் ''கற்கள் வட்டம்'' என்று பொருள் கொடுப்பர். இவ்விடம் எரிகோவுக்கு வடக்கில் ஒரு மைல் தூரத்தில் உள்ளது. அங்கு, பாஸ்கு விழா கொண்டாடப்பட்டது *(5:10-12)*. இதுவரை விருத்தசேதனம் செய்யப்படாதவர்களுக்கு அச்சடங்கு செய்யப்பட்டது. அதன் விளைவாக ''எகிப்தின் பழி'' நீக்கப்பட்டது *(5:9)*. இதன் காரணமாக கில்காலிற்கு ''நீக்கப்படுதல்'' என்ற பொருளும் உண்டு.

யோர்தானைக் கடந்து இஸ்ராயேலின் படை கில்காலில் கூடாரம் அடித்தது, தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் வரலாற்றில் ஒரு சிறப்பு மிக்க நிகழ்ச்சியாகும். இதனோடு யாத்திரையின் முதல் குறிக்கோள்

நிறைவு பெறுகிறது. இனிமேல் இஸ்ராயேலர் பாலையில் அலைந்து திரியார்; ''பாலும் தேனும் பொழியும்'' (5:6) நாட்டில் அனுமதிக்கப்பட்டனர். மூதாதையர்களுக்கு இறைவன் அளித்த வாக்குறுதி நிறைவேறுகிறது. யாவே தம் அடியார்களிடம் தம் பற்றுறுதியைக் காட்டி விட்டார். வாக்களிக்கப்பட்ட நாட்டில் நுழைவது ''உருவிய வாளைக் கையில் ஏந்தியவராய்'' ஆண்டவருடைய படைத்தலைவரான யாவேயின் தூதர் யோசுவாவுக்குக் காட்சியளிப்பதோடு தொடங்குகிறது (5:13-15). உருவிய வாள் அச்சம் உண்டாக்கும் அடையாளமன்று, ஆற்றல் மிக்க வீரத்தை ஊக்குவிப்பதற்கு அடையாளமாகவுள்ளது. இனி நடக்கப்போவது வெறும் உலகைச் சார்ந்த வரலாறு அன்று. உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளை நிர்ணயிப்பதில் இறையாற்றலும் செயல்படுகிறது. இந்த உறுதியோடு எரிகோவின் கோட்டையைத் தாக்க முற்படுகிறார் யோசுவா. இப்போர் புனிதமானதாகும்; தியாகப்போராகும்.

**7. உ. எரிகோ:** உடன்படிக்கைப் பெட்டகத்தைத் தாங்கி யூபிலி காலத்துக்குரிய ஏழு எக்காளங்களை ஊதிக்கொண்டு குருக்கள் நகரைச் சுற்றி வந்தனர். நகர் சரண் அடையாததால் ஏழாம் நாள் அதற்கு அழிவு வந்தது. நகர மதில்கள் கடகடவென்று இடிந்து விழுந்தன. இஸ்ராயேலர் உட்புகுந்து கொடிய ''சாபத்தை'' நிறைவேற்றினர். விலைமாது இராகாபுவின் குடும்பம் காப்பாற்றப்படுகிறது.

எரிகோ என்ற சொல்லுக்குச் ''சந்திரக் கடவுளின் புனிதத்தலம்'' என்று பொருள் உண்டு. இந்நகர் ''பனை மாநகரம்'' என்றும் அழைக்கப்பட்டது (உப 34:3; நீதி 1:16). இவ்வூர் சாக்கடலுக்கு வடக்கில் 9 கி.மீ. தூரத்திலும், யோர்தான் நதிக்கு மேற்கில் 8 கி.மீ. தூரத்திலும் உள்ளது. இஃது உலகிலுள்ள நகரங்களில் உயரத்தில் மிகத்தாழ்ந்த நகரமாகும். கடல் மட்டத்திற்கு 825 அடிக்குக் கீழேயுள்ளது. எரிகோ நகர் ஒரு மண் குன்றின் மேல் இருந்தது. இந்நூலில் எரிகோ சிறப்புப் பெறுகிறது.

எரிகோ பலதடவை அழிக்கப்பட்டு மீண்டும் கட்டப்பட்ட நகரமாகும். யோர்தான் பள்ளத்தாக்கின் தென்பாகத்திலுள்ள மலைப்பகுதியிலிருந்து படையெடுத்து வருபவர்கள் பாதையில் இந்நகர் இருந்தது; போர்களில் முக்கியத்துவம் வாய்ந்தது. மேற்குச் சமவெளியின் பாதுகாப்புக்கு முக்கியத்துவம் வாய்ந்தது. அதன் மேற்கில் பள்ளத்தாக்குகள் கொண்ட மலைப்பகுதிகள் உள்ளன. அம்மலைப் பகுதிகளுக்குச் செல்லும் வழியை இந்நகர் கட்டுப்படுத்தியது.

இந்நகர் இருந்ததாகக் கூறப்படும் பல இடங்களையும் தொல்பொருள் ஆய்வாளர்கள் தோண்டி ஆய்வு செய்துள்ளனர். இதிலிருந்து பல செய்திகளை அறிகிறோம். ஆனால் வெண்கலக் காலத்தின் பிற்பகுதியை ஒட்டிய (கி.மு. 1500-1200) தடயங்கள் ஒன்றுமே கிடைக்கவில்லை. யோசுவா இக்காலத்தைச் சேர்ந்தவர். ஆகவே, யோசுவா காலத்து எரிகோவைப் பற்றி தொல்பொருள் ஆய்வு ஒன்றும் கூறமுடியாது. ஆனால், பெத்தேல் இலாக்கீசு, தெபீர், ஆட்சோர் போன்ற நகரங்கள் கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் அழிக்கப்பட்டன என்பதற்குத் தொல்பொருள் ஆய்வுச் சான்றுகள் உள்ளன. இஃது, இஸ்ராயேலர் பாலஸ்தீனத்தைக் கைப்பற்றியது இக்காலத்தில்தான் என்ற கருதுகோளுக்கு ஒத்ததாயுள்ளது. எரிகோ நின்ற மண்மேட்டின் மேற்பகுதி, மண்ணரிப்பாலும், மனிதர் அழிப்பாலும் முழுவதும் மறைந்து போயிற்று. இருப்பதெல்லாம் கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முன்னிருந்த எரிகோவின் தடயங்களே.

இஸ்ராயேலர் எரிகோவை எப்படிக் கைப்பற்றினர்? முழுவதும் இறைவனது அருஞ்செயலால் நடந்ததா? அல்லது இங்கும் இயற்கை சார்ந்த விளக்கம் அளிக்க முடியுமா? எரிகோ யோர்தான் பள்ளத்தாக்கில் உள்ளது. இப்பகுதியில் நிலநடுக்கம் ஏற்படுவது உண்டு. இப்படிப்பட்ட நிலநடுக்கங்கள் கி.பி. 1267-இலும், 1927-இலும் இப்பகுதியில் நிகழ்ந்திருக்கின்றன. தொல்

பொருள் ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ள பழைய எரிகோவின் சுவர்கள், நிலநடுக்கத் திற்குப் பின் தோன்றும் சுவர்களைப் போன்றுள்ளன.

இவற்றைக் கருத்திற்கொண்டு இந் நிகழ்ச்சியைப் பின் வருமாறு நாம் கற்பனை செய்யலாம். இஸ்ராயேலர் மோவாபு நாட் டின் வழியாக வந்து, சிறு ஓடைகள் யோர்தானோடு சேரும் பகுதியில் நதிக்குக் கிழக்கில் கூடாரம் அடித்து நதியைக் கடக்கப் பேராவலோடு தங்கியிருக்கின்ற னர். அப்போது இறைவனது உதவி அவர் களுக்குக் கிடைக்கிறது. திடீரென்று யோர் தான் தண்ணீர் ஓட்டம் நிற்கிறது. பாளை யத்தை வேகமாகக் கலைத்து, இஸ்ராயேலர் நதியைக் கடக்கின்றனர். திகைத்து நிற்கும் எரிகோ கோட்டையைத் திடீரென்று எதிர்த்து நிற்கின்றனர். அதை யாவேயின் உதவியால் கைப்பற்றுகின்றனர். இந் நிகழ்ச்சி, காப்பிய முறையில் மிகைப் படுத்தி இந்நூலில் கூறப்படுகிறது.

**7. ஊ. மலைப்பகுதியின்மேல் படை யெடுப்பு:** எரிகோவிலிருந்து எருசேலம் வழியாகப் பாலஸ்தீன மலைப்பகுதி களுக்கு இட்டுச் செல்லும் பாதை மிகச் செம்மையானதன்று. யோசுவா தேர்ந் தெடுத்த வழியே மிக எளிதானது. இது, ஆய், பெத்தேல் ஆகிய நகரங்கள் வழியாக ஒரு பள்ளத்தாக்குப் பாதையில் யோர்தான் சமவெளிக்கு இட்டுச் சென்றது.

எரிகோவை வென்ற உற்சாகத்தில், ஆயியைத் திடீரென்று தாக்கிக் கைப்பற்று மாறு ஒரு சிறு படையை யோசுவா அனுப்பினார். ஆனால் இம்முயற்சி தோல் வியில் முடிந்தது. இதில் படைகளை இழந்ததைவிட இஸ்ராயேலர் மனவுறுதி இழந்ததுதான் பேரிழப்பாகும். யோசுவா வின் வீரர்கள் தன்னம்பிக்கை இழந்தனர். முதலில் பயந்து நடுங்கிய (யோசு 2:9-11; 6:27) எதிரிகள் தெம்பு அடைந்தனர்; புது ஊக்கம் பெற்றனர் *(7:9)*. யோசுவா தம் ஆடைகளைக் கிழித்துக்கொண்டு தலையின் மேல் புழுதியைப் போட்டுக்கொண்டு, முகம் குப்புற விழுந்து யாவேயிடம் புலம்பினார். இஸ்ராயேல் இருப்பதும், யாவேயின் அதிகாரமும் துலாக்கோலில் தொங்கின. இப்படிப்பட்ட அழிவை யாவே எப்படி அனுமதிக்க முடியும்? இப்பேரழிவிற்குரிய முதன்மையான கார ணம் இஸ்ராயேலின் பாவமே *(7:10)*. சாபப்போரில் விழுந்த எரிகோவின் சில பொருட்களை ஆக்கான் வைத்திருந்தான். இந்தத் தனிப்பட்ட ஒருவனது குற்றம் முழுச் சமூகத்தின் மேலும் சாபத்தைக் கொண்டு வந்தது. அவனும், அவன் குடும் பமும் தீர்ப்புக்குள்ளாகி அழிகின்றனர் *(7:10-26)*. யாவேயின் சித்தம் எதிர்க்கப்படு கிறது என்று தோன்றியபோதெல்லாம் யோசுவா தீவிர நடவடிக்கை எடுக்கிறார். இதில் விட்டுக் கொடுக்கும் தன்மையை அவரிடம் காணமுடியாது.

இதற்குப்பின் ஆயியைத் தாக்க யோசுவா முற்படுகிறார். இதில் தனது போர்த்திறமை யையும் காட்டுகிறார். இப் படிச் செய்யும்போதும் யாவேயின் ஆலோ சனைக்கேற்ப நடந்து கொள்கிறார். பதுங்கித் தாக்கும் முறையைப் பயன் படுத்துகிறார். தாக்கும் இஸ்ராயேலர் படை பின்வாங்குவது போல் தோன்றச் செய்கி றார். இதன் விளைவாக, கோட்டையைப் பாதுகாத்து நிற்கும் படை வெளியே வரத்தூண்டுகிறார். இப்படைகள் நகரி லிருந்து போதிய தூரம் வெளியே சென்ற பின் மறைவிடங்களில் இருந்து இஸ்ரா யேல் படை தாக்கி, எதிரிகளை வென்று எரியூட்டிச் சாபத்தைச் செயல்படுத்தினர் *(யோசு 8)*.

இவ்வாறு மத்திய பாலஸ்தீனத்தின் மலைப்பகுதியின் உயர்ந்த இடங்கள் இஸ் ராயேலர் வசமாயின. இந்நிலை, இங் கிருந்து மற்றப் பகுதிகளுக்குப் படை யெடுக்க உயிர் நாடியானதாகும். தொல் பொருள் ஆய்வுப்படி, யோசுவா காலத்தில் இம்மலைப்பகுதிகளில் ஒரு சிறு பகுதி யினரே வாழ்ந்து வந்தனர். பெரும்பாலான கானானியர்கள் மலைச்சரிவிலும் அடிவாரத் திலும் வாழ்ந்து வந்தனர். ஆகவே, இம்

மலைப் பகுதியைக் கைப்பற்றுவதற்குக் கடினமான தடையெதுவும் இல்லை. ஆகையால் இப்பகுதியைக் கைப்பற்றிய வரலாற்றை இந்நூல் சிறப்பித்துக் கூறவில்லை. கெபால் மலையில் உள்ள செக்கேம் வரை இஸ்ராயேலர் படை தனது ஆதிக்கத்தைச் செலுத்தியது. செக்கேமில் யோசுவா உடன்படிக்கையைப் புதுப்பிக்கிறார். சட்டத்தை அனுசரிக்க வேண்டிய மக்களின் கடமையையும் பற்றுறுதியையும் புதுப்பிக்கிறார் *(8:30-35)*.

'ஆய்' என்ற சொல்லுக்கு ''அழிவின் குன்று'' என்று பொருள் உண்டு. இந்நகர் பெத்தேலிலிருந்து 2 கி.மீ. கிழக்கே உள்ளது. தொல்பொருள் ஆய்வில் கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முந்திய காலத்துத் தடயங்கள் காணப்படுகின்றன. ஆனால் யோசுவா காலத்துத் தடயங்கள் எதுவும் காணப்படவில்லை. ஆனால் பெத்தேலில் காணப்படும் தடயங்கள் இந்நகர் நீதிபதிகள் காலத்தில் அழிக்கப்பட்டதற்குச் சான்று கூறுகின்றன. பல இடங்களில், ஆய், பெத்தேல் என்ற பெயர்கள் ஒரே மூச்சில் விவிலிய ஆசிரியர்களால் கூறப்படுகின்றன *(எஸ் 2:28; யோசு 9:3; ஆதி 12:8; 13:3)*. நீதிபதிகளின் ஆகமத்தில் வரும் பெத்தேலின் அழிவைத்தான் ஆயிக்கு நடந்ததாகக் கூறி, பெயர்க் காரணக்கதையாக இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுவர். ஆனால், ஆயியில் காணப்படும் அழிவிற்கும் விவிலிய நிகழ்ச்சியுரைக்கும் உள்ள உண்மையான தொடர்பு என்ன என்பது பற்றிய பிரச்சனைக்குக் காலம்தான் பதில் கூறவேண்டும்.

**7. எ. தென்பகுதியைக் கைப்பற்றுதல்:** கானான் நாடு நகர அரசுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு நகரமும் தன்னுரிமையாக இயங்கியது. இடுக்கண் வரும்போது, தங்கள் பாதுகாப்புக்காகக் கூட்டணி அமைத்துப் போரிடுவர். எரிகோ, ஆய் ஆகிய இடங்களில் இஸ்ராயேலர்கள் கொண்ட வெற்றியைக் கண்ட கானானிய நகரங்கள், இஸ்ராயேலரின் முன்னேற்றத்தைத் தடுக்க, திட்டமிட்ட எதிர்ப்புக் கொடுத்தனர். ஆனால் சிறுசிறு குழுவினராக எதிர்த்தனர். நாடு முழுவதும் சேர்ந்து இஸ்ராயேலரை எதிர்க்காதது இஸ்ராயேலர்களுக்கு வாய்ப்பாயிற்று.

கிபயோன், எருசலேமிலிருந்து மேற்கில் 8 கி.மீ. தூரத்திலிருந்த நகரமாகும். இந்நகரத்து மக்கள், போர் செய்து எதிர்ப்பதற்குப் பதிலாக, இஸ்ராயேலரோடு ஒரு வகை ஒப்பந்தம் செய்து கொள்ள முன் வந்தனர். இவர்கள் தொலைதூரத்திலிருந்து வந்து இஸ்ராயேலரோடு உடன்படிக்கை செய்துகொள்ள விரும்புவதாகச் சூழ்ச்சி செய்தனர். யோசுவா அவர்களை ஏற்று எல்லோர் முன்னிலையிலும் அவர்களோடு உடன்படிக்கை செய்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்தார். இந்த ஏமாற்றுதல் தெரிய வந்தபோது அவர்களைச் சபித்தார். ஆனால், உடன்படிக்கையைக் கடைப்பிடிப்பது தனது கடமை என்று உணர்ந்தார் *(9:19; 10:6-7)*. ஆனால், அவர்களைப் புனிதத் தலத்தில் பணி செய்ய எக்காலத்துக்கும் அடிமைகளாகத் தண்டித்தார் *(9:20.27)*. கிபயோனைப் போன்று கெபிரா, பெயரோத்து, கிரியாத்து-எயாரிம் போன்ற நகர்களும் இஸ்ராயேலருடன் ஒப்பந்தம் செய்து கொண்டன.

எருசலேமின் அரசன் அதோனி செதேக்கின் தலைமையின் கீழ், கானானின் தென் பகுதியைச் சேர்ந்த மற்ற எல்லாக் கானானிய அரசர்களும் ஒன்று சேர்ந்து யோசுவாவை எதிர்த்தனர். அவர்களின் முதல் குறிக்கோள் தங்களிடமிருந்து பிரிந்துபோன கிபயோனியர்களைப் பழிவாங்குவதாகும். கிபயோனியர் யோசுவாவின் உதவியைக் கோரினர். யோசுவா தனது விருப்பத்திற்கு மாறாக இப்போரில் பங்கெடுக்க வேண்டியிருந்தது. அதி. 10 இப்போரை விவரிக்கிறது. இப்போர் யோசுவாவின் போர்த் திறமைக்குச் சான்றாக விளங்குகிறது. கல் மழை இவ்வரசர்களை விரட்டி ஓட்டுவதற்கு யோசுவாவிற்கு உதவியது. கதிரவன் அப்படியே ஒரு நாள் முழுவதும் நின்று யோசுவாவின் வெற்றிக்கு உதவியதாகக் கூறப்படுகிறது. அய்யலோன் பள்ளத்தாக்

கில் இவ்வரசர்களை வென்று மெய்சிலிர்க்கிறார் யோசுவா. ஆயினும், இவ்வெற்றியை யாவேக்குச் சாற்றிக் கூறுகிறார்.

இதற்குப்பின் யோசுவா தெற்கே திரும்பி மக்கேதா, லிப்னா, இலாக்கீசு, எக்லோன் ஆகிய நகரங்களை ஒன்றன்பின் ஒன்றாக வென்று, அந்நகரங்களில் சாபப் போரை நிறைவேற்றுகிறார். இலாக்கீசு, எக்லோன் ஆகிய நகரங்கள் இருந்ததாகக் கருதப்பட்ட இடங்களில் செய்யப்பட்ட தொல்பொருள் ஆய்வுகள், இந்நகர்கள் கொடுமையாக அழிக்கப்பட்டன என்பதற்குச் சான்று காட்டுகின்றன.

இவ்விதம் தென்னாடு முழுவதிலும் யோசுவாவின் ஆதிக்கம் பரவிய பின், யூதா மலைப்பகுதியில் தனித்து நின்ற எபிரோன் கோட்டையைத் தாக்கி வென்றார். பின்பு எல்லையிலுள்ள தெபீரை வென்று அழிக்கிறார். இப்படியாக யோசுவா, மலை நாட்டையும், தென்னாட்டையும், சமவெளியையும் காதேசு பர்னேயா தொடங்கி காசா வரை, கிபயோன் முதல் கோசேன் வரையுள்ள பகுதியைத் தன் ஆதிக்கத்திற்குள் கொண்டு வருகிறார். அங்கிருந்த அனைவரையும் அழிக்கிறார். உயிருள்ள எல்லாவற்றையும் சுட்டெரித்துக் கொலைசெய்கிறார். எவரையும் விட்டுவைக்கவில்லை. ஆனால், தனது வெற்றி யாவற்றையும் யாவேக்கே சாற்றிக் கூறுகிறார். ''ஏனெனில் இஸ்ராயேலின் ஆண்டவராகிய கடவுள் அவர்கள் சார்பில் போர்புரிந்தார்'' (10:42).

இப்பகுதிகளில் தோண்டி, செய்யப்பட்ட தொல்பொருள் ஆய்வுகள் கி.மு. 1200-ஐ ஒட்டி, இஸ்ராயேல் இப்பகுதியைக் கைப்பற்றிய வரலாற்றைப் பற்றி பற்பல உண்மைகளை வெளிப்படுத்துகின்றன. இப்பகுதியிலுள்ள நகர் மக்கள் பலவந்தமாக அழிக்கப்பட்டுள்ளனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. வென்றவர்கள், கைப்பற்றிய நாட்டில் உடனே குடியேறி நிலைத்துவிட்டதாகத் தெரிகிறது. இஸ்ராயேலர் இனி நாடோடியாகத் திரியும் இனத்தவர் அல்லர். அவர்கள் கற்களினால் வீடுகட்டி வாழ்ந்தனர்; நிலத்தை உழுது பயிர் செய்தனர்; அவ்விடங்களில் நிலையாகத் தங்கி வாழும் நிலையை எய்திவிட்டனர். கானானியர்களை விட, இஸ்ராயேலர் நெருங்கிக் கூடி வாழ்ந்தனர். வெண்கலக் காலத்தின் பிற்பகுதியில் இவ்விடங்களில் மக்கள் வாழ்ந்ததாகத் தெரியவில்லை. ஆனால் கி.மு. 12-ஆம் நூற்றாண்டிலிருந்து, இம்மலைப் பகுதி முழுவதும் இரும்புக்காலக் கிராமங்களின் தடயங்கள் காணப்படுகின்றன. இப்படிப்பட்ட சிற்றூர்கள் விரைவாக உருவெடுத்தன. இம்மக்களின் வீடுகள் எளியவை. காடுகளை வெட்டி பயிர் செய்யும் நிலமாக மாற்றினர். அணுக முடியாத இடங்களிலும் குடியேறினர் (யோசு 17:15-17).

**7.ஏ. கல்மழையும், நிலையாக நின்ற கதிரவனும்:** இஸ்ராயேல் மக்களுக்குத் தப்பி ஓடிப்போகும் எமோரியரின் மீது ''ஆண்டவர் வானத்திலிருந்து பெரிய கற்கள் விழச் செய்தார். இஸ்ராயேல் மக்களின் வாளால் வெட்டுண்டு மடிந்தவர்களைவிட அக்கல் மழையால் அடிபட்டுச் செத்தவர்களே அதிகம்'' (யோசு 10:11). இக்கூற்று, இஸ்ராயேலர்களுக்கு யாவே அளித்த சிறப்பான உதவியை வலியுறுத்திக் கூறுகிறது. இவ்வெற்றியை யாவேக்கே சாற்றி ஆசிரியர் கூறுகிறார்.

அடுத்துக் கதிரவன் நிலையாக நின்ற நிகழ்ச்சி வருகிறது. இந்நிகழ்ச்சி, கலிலேயாவின் வழக்கு விசாரணையில் பலர் அறியப் புகழ்பெற்றது. ஓடிப்போகும் எமோரியர்களை, இஸ்ராயேலர் கொன்று முடிக்க ஏதுவாகப் பகல் நீடிக்குமாறு, யாவேயை வேண்டி யோசுவா சூரியனுக்கும், சந்திரனுக்கும் கட்டளையிடுகிறார். இக்கட்டளை ''யாசார்'' என்ற மிகப்பழைய பாடல் நூலிலிருந்து எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இவ்வருஞ்செயலை உரைநடையில் மீண்டும் எடுத்துக்கூறும் பதிப்பாசிரியர், யோசுவாவின் ஆணை நிறைவேறுகிறது என்றும், அந்நாளில் ''ஆண்டவர் ஒரு மனிதன் சொல்லுக்கு அடங்கி இஸ்ராயேலர்களுக்காகப் போர் புரிந்தார். அந்நாளைப்

போல் நெடியநாள் இதற்கு முன் இருந்ததும் இல்லை. இனி இருக்கப்போவதுமில்லை'' *(10:14)* என்றும் கூறுகிறார்.

இந்நிகழ்ச்சியைப் பற்றிய பாடலும் உரைநடை விவரிப்பும் வீரகாப்பியத் தன்மை கொண்டுள்ளன என்பது தெளிவு. கானான் நாட்டைக் கைப்பற்றுவதில் இஸ்ராயேலுக்கு யாவே அளித்த உதவியைச் சிறப்பித்துக் காட்டுவதே இவ்விளக்கத்தின் நோக்கமாகும். நிகழ்ச்சியை இது நடந்தபடியே எடுத்துக் கூறுவதைவிட, இவ்விளக்கம் ஓர் இறையியலாகும்; சமய விளக்கவுரையாகும். யாவே தங்களுக்குச் செய்த நன்மையையும், காட்டிய அன்பையும், அக்கறையையும், இஸ்ராயேல் பாடலாகவோ, உரைநடையிலோ நினைவு கூரும்போதெல்லாம், இப்பொருளே சிறந்து நிற்கும் *(யாத் 15:1-21;19:16-19; நீதி 5:2-31; சங் 134).*

நவீன அறிவியல் இந்நிகழ்ச்சியை ஏற்க மறுக்கும். நவீன இறையியல் வல்லுநர் இறைவன் மனிதனுக்குக் கீழ்ப்படிவதை ஏற்க மறுப்பர். ஆனால், இஸ்ராயேல் ஆசிரியர் வேறுவிதமாக எண்ணுகிறார். இவ்வாசிரியர்களுடைய கடவுள், சமய இலக்கியச் சுதந்தரம் ஆகியவை பற்றிய கருத்துக்களை மனதிற்கொண்டு, அதற்கேற்ப இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ள வேண்டும்.

கல்மழையும், கதிரவன் நிலையாய் நிற்றலும் ஒரே நிகழ்ச்சியைச் சிறப்பித்துக் கூறுகின்றன. இது யோசுவா எமோரியர் கூட்டணியை வென்றதாகும். இவ்வெற்றியில் யாவேயின் ஆற்றல் செயல்படுகிறது. மீட்பளிக்கும் கடவுளது இடையீட்டைப் பொதுமக்கள் பாணியில் பாரம்பரியம் வலியுறுத்திக் கூறுகிறது எனலாம். இது காலப் போக்கில் வீரகாப்பிய, வழிபாட்டுப் பரிணாமங்களைப் பெற்று விவிலியத்தில் இடம் பெறுகிறது.

**7. ஐ. வடபாலஸ்தீனத்தைக் கைப்பற்றல்:** தென்பாலஸ்தீனத்தின் தென்பகுதியில் இஸ்ராயேல் பெற்ற வெற்றியைக் கேள்விப்பட்ட ஆட்சோரின் அரசன் யாபீன் அஞ்சினான். தெற்கில் அதோனி செதேக்கு செய்ததுபோல், இவனும் வட அரசர்களை ஒன்றுகூட்டி, திட்டம் செய்து இஸ்ராயேலை எதிர்க்க முற்பட்டான். எவ்வழியாக யோசுவா வடபகுதிக்குச் சென்றார் என்பது பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. இஸ்ராயேலருடன் போர்புரிய வட அரசர்கள் மோரோம் என்ற ஏரிக்கு அருகே ஒன்று கூடினர். இஸ்ராயேலர்களைவிட இவர்கள் உயர்தரப் போர்க் கருவிகளைக் கொண்டிருந்தனர். குதிரைகளையும் தேர்களையும் கொண்டிருந்தனர். யாவேயால் ஊக்கமூட்டப்பெற்று *(11:6)* யோசுவா தன் வீரர்களோடு திடீரென்று எதிரிகள் மேல் பாய்ந்து ஓர் உறுதியான வெற்றி பெறுகிறார். மேற்கு ஆசியாவில் அடிக்கடி நடந்திருப்பது போல் இந்த ஒரே ஒரு சண்டை ஒரு படையெடுப்பையே தீர்மானிக்கிறது. அரசர்களின் கூட்டணி சிதறி ஓடுகிறது. வடமேற்கில் பெரிய சீதோன் வரையும், மேற்கில் ஆக்கோ வரையும், கிழக்கிலும் ஓடினர். யோசுவா அவர்களை விரட்டிக் கொன்று அழித்தார். அவர்களின் நகர்களில் சாபப்போரை நிறைவேற்றினார். சிறப்பாக இவ்வரசுகளுக்குத் தலைமையாய்த் திகழ்ந்த ஆட்சோரை எரியூட்டி அழித்தார்.

இவ்வளவு வெற்றி பெற்றாலும், கானான் முழுவதும் இஸ்ராயேலின் உடைமையாக மாறவில்லை. இதற்குப் பல போர்கள் நடத்த வேண்டியிருந்தது. இப் போராட்டம் அரசர்கள் காலம்வரை நீடிக்கும். ஆனால் யோசுவா நிகழ்த்திய போர்கள், அவர் நாட்டைப் பங்கிட்டு ஒவ்வொரு இனத்தவருக்கும் உரிய பகுதியை அளிக்க வாய்ப்பு அளித்தன. இந்தப் பகிர்ந்தளித்தலில் யோசுவாவின் ஞானமும் நேர்மையும் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன.

**7. ஓ. பிரியாவிடை அறவுரை:** யோசுவா தன் அலுவல்கள் எல்லாம் முடிந்தபின், செக்கேமில் இஸ்ராயேலரின் மூப்பர்கள், குடும்பத் தலைவர்கள், நீதிபதிகள், இயக்குனர்கள் மக்கள் யாவரும் அடங்கிய திருக்

கூட்டத்தை யாவேயின் முன்னிலையில் கூட்டுகிறார் (யோசு 21:1தொ). அங்கே உடன்படிக்கையைப் புதுப்பித்து அறிக்கை இடுகிறார். இஸ்ராயேலின் வரலாற்றைப் பின்னோக்கி, யாவே அவர்களுக்குச் செய்த அரும் பெருஞ்செயல்களை நினைவு படுத்துகிறார். இஸ்ராயேல் இருப்பதுவே இறைவனின் வேலையாகும். யூப்பிரத்தீசு நதிக்கு அப்பால் அன்னிய தேவர்களை வழிபட்டு வந்த அவர்களை யாவே தேர்ந் தெடுத்தார் *(24:2-3)*. யாவேதான் அவர் களை மீட்டு எகிப்திலிருந்து வந்து வாக் களிக்கப்பட்ட நாட்டிற்குள் இட்டுச்சென் றார். அவர்கள் ஒரு மக்களினமாய் நிலைத் திருக்க விரும்பினால், அஃது அவர்கள் யாவேக்குப் பற்றுறுதியாக இருப்பதைப் பொருத்ததாகும். யாவேக்குப் பற்றுறுதி யாக இருப்பது கடினமானதாகும். அவர் அவர்களிடம் கேட்பவை மிகச் சிறிய காரியங்கள் அல்ல. அவற்றை நிறை வேற்ற தியாகம் வேண்டும். அவற்றை நிறைவேற்றும் கடமையை எல்லார் முன் னிலையிலும் ஏற்றுக்கொண்டு விட்டு, அதற்குப் பற்றுறுதியில்லாமல் இருப்பதும், அதை நிறைவேற்றத் தவறுவதும் அவர் களது முந்தைய அஞ்ஞானத்தைவிட மோச மானதாகும். யாவேயின் நன்மைத்தன்மை யும் இரக்கமும் அவரது இயல்பான தூய் மையோடு இணைந்ததாகும். ஆகையால் அவர் எந்தப் பற்றுறுதியின்மையையும் அல்லது அநீதியையும் தண்டிக்காது விட முடியாது. யாவேக்கு எதிராகக் கலகம் செய்வது அவர்களது இனத்தை அழியச் செய்யும். அவர்கள் வாக்களிக்கப்பட்ட நாட்டை இழந்து விடுவர். யோசுவாவின் அறவுரையைக் கேட்ட யாவரும் ''அவரே நம் கடவுளாய் இருப்பதால் அவரையே வழிபடுவோம்'' என்று ஒரே குரலாய்ப் பதில் அளித்தனர் *(24-16-18)*. இவ்வாறு செக்கேமில் யோசுவா உடன்படிக்கையைப் புதுப்பிக்கிறார். அவர்களுக்குச் சட்டம் அளிக்கிறார். இப்பகுதியில் யாவே தாம் அளித்த வாக்குறுதியைச் செயல்படுத்து வதில், காட்டும் பற்றுறுதியை அனுபவித்த வராய் யாவேயிடம் மக்கள் பணிந்து பற்றுறுதியுள்ளவர்களாக இருக்க வேண்டும் என்பதில் ஆர்வமுள்ளவராய் யோசுவா தோன்றுகிறார். அதே பொழுது அவர்க ளுடைய சுதந்தரத்திற்கு மதிப்பளிக்கும் தலைவராகவும் திகழ்கிறார்.

யோசுவா இந்நிகழ்ச்சிகளை இறைவ னுடைய சட்டநூலில் எழுதிவைத்தார். பிறகு ஒரு பெரிய கல்லை எடுத்து யாவேயின் புனித இடத்துக்கருகிலுள்ள ஒரு கருவாலி மரத்தின் கீழ் அதை நாட்டினார். பின்னர், எல்லா மக்களையும் பார்த்து ''இதோ இக்கல் ஆண்டவர் உங்க ளுக்குச் சொல்லியிருக்கிற எல்லா வார்த்தை களையும் கேட்டிருக்கின்றது. நீங்கள் எப் போதாவது அவற்றை மறுத்து, உங்கள் ஆண்டவராகிய கடவுளுக்கு எதிராகப் பொய் சொல்லத் துணிவீர்களானால், இக் கல் உங்கள் நடுவில் உண்மைக்குச் சான்றாக விளங்கும்'' என்றார் *(24:26-27)*. பிறகு யோசுவா மக்களுக்கு விடை கொடுத்து அவர்களைத் தத்தம் வீட்டிற்கு அனுப்பி வைத்தார். பின்பு எப்பிராயிம் மலை நாட்டைச் சேர்ந்த தம் ஊராகிய திம்னாசெ ராவுக்குத் திரும்பினார். அங்கே தம் *110*-ஆம் வயதில் உயிர் நீத்தார். இவ்வாறு இஸ்ராயேலரின் பெரும் தலைவர்களில் ஒருவரது வாழ்வு முடிந்தது. இஸ்ராயேலின் வரலாற்றில் அவரது நினைவை ஒருபோ தும் அழித்து விட முடியாது. சீரா *46:1-6*-இன்படி யோசுவா போரில் வல்ல வர்; இறைவனின் தூதராய் விளங்கினார். அவர் தம் பெயருக்கு ஏற்ப இறைமக்களின் மீட்பராக விளங்குகிறார்.

இஸ்ராயேலின் வரலாற்றில் யோசுவா வின் மறைவு ஓர் உச்சக்கட்டமாகும். ஏனெனில், கானானில் இஸ்ராயேலின் வரலாறு வெறும் உலகைச்சார்ந்த வரலாறு மட்டுமன்று, யாவேயிடம் இஸ்ராயேல் கொண்ட உறவின் வரலாறுமாகும்.

**8. யோசுவா வாழ்வுபற்றிய திறன் ஆய்வு:** இந்நூலில் வீரகாவிய அல்லது காப்பியத் தன்மை மிகுந்து காணப்படுகிறது. இதிலே உயர்வு நவிற்சியணி, எளிதாக்குவது

போன்ற அணிகள் சிறப்புப் பெறுகின்றன. நாட்டைக் கைப்பற்றுவதில் உள்ள வெற்றி முழுவதுமே யோசுவாவுக்குச் சாற்றிக் கூறப் படுகிறது. இஃது எளிதாக்கும் அணியாகும். இதனால் மற்ற எந்த மனிதருடைய செய லும் குறைத்துக் கூறப்படுகிறது; பொருட் படுத்தப்படவில்லை; ஒன்றுமின்மையா கிறது. இறுதி முடிவு பற்றி ஐயம் எதுவு மின்றி ஒரு வெற்றியிலிருந்து மறு வெற்றிக்குச் செல்லும் வெற்றிப்போக்கில் உயர்வுநவிற்சி அணி காணப்படுகிறது.

''யோசுவா எல்லா நிலத்தையும் கைப் பற்றினார். அதை அவர்களின் அந்தந்தக் கோத்திரப் பிரிவுகளின்படி இஸ்ராயேலுக்கு உரிமைச் சொத்தாகக் கொடுத்தார்'' *(11:23)* என்று கூறப்படுகிறது. ஆனால் *13:1-6*-இன்படி யோசுவா வயது முதிர்ந்த பின்னும் இன்னும் கைப்பற்றப்பட வேண்டிய பகுதி கள் பல உள்ளன. இக்கூற்று நீதிபதிகள் ஆகமத்தில் காணப்படும் அமைப்புக்கு ஒத்ததாயுள்ளது. அஃதோடு முற்பகுதியில் கூறப்படுபவை மிகைப்படுத்திக் கூறப்பட் டவை என்று சுட்டுகிறது.

நாட்டைக் கைப்பற்றுவதில் யோசுவா வின் பாகம் உண்மையிலேயே என்ன என்ற கேள்விக்கு நிறைவான பதில் கூறுவது கடினம். யாத்திரை ஆகமம், எண்ணாகமம் ஆகிய நூல்கள் மோசே தனக்குப்பின் தலைவராக வருபவரைப் பற்றி அக்கறை காட்டினார் என்று காட்டுகின்றன. இப்பிரச் சனை எவ்வாறு தீர்க்கப்பட்டது என்று உபாகமம் விளக்குகிறது. கி.மு. 13-ஆம் நூற்றாண்டில், இஸ்ராயேல் மக்கள் கானா னில் நுழைந்து குடியேறியபோது நூனின் மகனான யோசுவா என்று விவிலியத்தால் அழைக்கப்படுபவர் முக்கியமான அங்கம் வகித்தார் என்பதற்கு ஐயமில்லை. நடு பாலஸ்தீனத்தைக் கைப்பற்றுவதில் யோசு வாவின் பங்கை இந்நூல் தருகிறது. இது யோசுவா, யோசேப்பு இனத்தைச் சார்ந்த எப்பிராயிம் பிரிவைச் சார்ந்தவர் என்ற *1 நாள் 7:27*-இன் கூற்றோடு ஒத்துப்போகிறது. பாலஸ்தீனத்தின் நடுப்பகுதியில் யோசுவா செயல் புரிந்தார். இக்கருவை இஸ்ராயே லின் வீரகாப்பியக் கதை சொல்பவர் கானான் முழுவதையும் யோசுவாதான் வெற்றி கொண்டாரென்று விரிவாக்கியிருக் கலாம். யோசுவாவின் போர்கள் முடிந்த பின்னும் நாட்டின் பெரும்பகுதி கைப் பற்றப்பட வேண்டியிருக்கிறது என்று யோசு *13:1-6* சுட்டுகிறது. உண்மையில் என்னதான் நடந்தது என்ற கேள்விக்குப் பதில் கூறுவது கடினம்!

இக்கேள்வியை விட, பழைய ஏற் பாட்டு இறையியலில், மீட்பு வரலாற்றில் யோசுவாவின் இடம் என்ன என்று அறிதல் முக்கியமானதாகும். மோசேயின் நிழலில் யோசுவா எப்போதும் நிற்பதைக் காண்கி றோம். இவ்வுண்மை அவரது உயர்வைக் குறைத்துக் காட்டவில்லை. மாறாக, புனித நாட்டிற்குள் புகுந்ததுவரை இறை மக்களை இட்டுச் சென்ற மனிதர் என்று மீட்பு வரலாற்றில் அவரது இன்றியமையாத பங்கை உயர்த்திக் கூறுகிறது. மோசே, யோசுவா ஆகியோரின் செயல்கள் வழியாக யாவேயின் பரிவன்புமிக்க பற்றுறுதி வெளிப்படுகிறது. எகிப்திலிருந்தும், பாலையிலிருந்தும் மக்களை யாவே மீட்கி றார்; ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியவர்களுக்குத் தாம் வாக்களித்த நாட் டிற்கு இட்டுச்செல்லுகிறார். இவை யாவும் மோசே, யோசுவா ஆகியவர்கள் வழியாகச் செயல்படுகின்றன.

**9. வரலாற்று மதிப்பீடு:** கி.மு. 13-ஆம் நூற்றாண்டின் கானான் நாட்டை இஸ்ராயே லர் தங்கள் ஆளுகைக்குள் கொண்டு வந்த னர் என்பது மறுக்க முடியாத ஓர் உண்மை யாகும். அவர்களுடைய வரலாற்றின் கடந்த கால நிகழ்ச்சிகளின் நினைவு அவர் களிடையே தொடர்ந்து தலைமுறை தலை முறையாக இருந்தது என்பது உறுதி. கானானை இஸ்ராயேலர் எளிதாகக் கைப் பற்றி விடவில்லை; போர்கள் பல செய்து கைப்பற்றினர். ஆகவே, இந்நூல் இவ் வெற்றிகளைப் பற்றிய உண்மையான நினைவேடுகளை அடிப்படையாகக் கொண்டது என்று நாம் பொதுவாக ஏற்றுக் கொள்ளலாம். இந்நூலில் வரும் பாரம்பரி

யங்கள் இப்பகுதிகளில் காணப்படும் பெயர்களின் பொருளையோ, நிறுவனங் களையோ, எல்லையைக் காட்டும் அடை யாளங்களையோ விளக்கும் தோற்றக் காரண உரைகளாகும். ஆகவே, இது பொதுமக்களின் கற்பனைப் படைப்பு என்று கூறுவது இந்நூல் கூறும் உண்மையை வெறுமையாக்குவதாகும். இதில் நாட்டுப்பாடல் இலக்கிய வடிவில் நிகழ்ச்சி உரைகள் வரையப்பட்டிருப்பதால் ஒரு நிகழ்ச்சி உரை, ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியைத்தான் விவரிக்கிறது என்று வாதிக்க முடியாது போகலாம். ஆனால் பொதுவாக இந்நூலில் காணப்படும் பாரம் பரியங்கள் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டன என்று உறுதியாகக் கூறலாம்.

இந்நூல் ஆசிரியர், யோசுவாவின் பகுதியை, மிகைப்படுத்திக் கூறுகிறார் என் பதற்காக யோசுவாவின் பகுதியை நாம் குறைத்துக் கூற முடியாது. இஸ்ராயேலரின் எல்லா இனத்தவரும் அவருடைய தலை மையை ஏற்றுக் கொள்கின்றனர். இஃது அவருடைய சிறப்பை எடுத்துக் காட்டு கிறது.

யோசுவாவின் வெற்றிகளை விவரிக் கும்போது ஆசிரியர் தனக்குக் கிடைத்த மூலங்களுக்குப் பிரமாணிக்கமாயிருக்க முயல்கிறார். சான்றாக, தென்பகுதியை வெற்றி கொண்ட விவரிப்போடு வட பகுதியைப் பற்றிய விளக்கத்தை ஒப்பிடுக. வெல்லப்பட்ட பகுதிகளை மீண்டும் மீண்டும் குறிப்பிடுகிறார் *(11:21-22; 13: 2-6; 23:4-5)*.

பாலஸ்தீனத்தை இஸ்ராயேலர் கைப் பற்றிய வரலாற்றுக்குத் தொல்பொருள் ஆய்வு ஓரளவு ஆதரவு தருகிறது. ஆயினும் இது தரும் சான்றுகளை எச்சரிக்கையோடு பயன்படுத்த வேண்டும். இலாக்கீசு, எக் லோன், தெபீர், ஆட்சோர் முதலிய நகரங் கள் இஸ்ராயேலின் வெற்றிக்காலத்தில் அழிக்கப்பட்டன. ஆனால், இவ்வழிவுக்கும் இஸ்ராயேலின் வெற்றிக்கும் உள்ள தொடர்பு தெளிவாகத் தெரியவில்லை. இவ்வழிவுதான் இந்நூலின் நிகழ்ச்சியுரை களுக்குக் காரணமாயின என்பதையும் நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது. எரிகோ, ஆய் ஆகிய இடங்களில் காணப் படும் சான்றுகள், இந்நூலில் காணப்படும் நிகழ்ச்சி உரைகளுக்கு ஆதரவு தரவில்லை. அண்டையிலுள்ள பெத்தேலுக்கு நிகழ்ந்த அழிவை ஆசிரியர் ஆயிக்குச் சாற்றிக் கூறியிருக்கலாம். யாபீனின் தோல்வியைப் பற்றி ஐயம் எழுந்துள்ளது. ஏனெனில், நீதி 4-இல் யாபீன் பிற்காலத்தில்தான் தோல்வி யடைந்ததாகப் படிக்கிறோம். மேலும், கர்மேலுக்கும் யோர்தான் பள்ளத்தாக்குக் கும் இடையிலுள்ள பகுதியில் கானானியர் வலிமைமிக்க இடங்களைக் கொண்டிருந்த னர். இஸ்ராயேலர் மலைப்பகுதியில் நன்கு வலிமை பெற்றிருந்தனர். சமவெளியில் கானானியர்கள் தேர்ப்படை வலிமை கொண்டு விளங்கினர். இப்படியிருக்க இவற்றைக் கடந்து, எசுதிரலோன் சமவெளி யைக் கடந்து கலிலேயாவின் மலைப்பகுதி களுக்கு இஸ்ராயேலர் சென்றிருக்க முடி யுமா? அறிஞர் சிலர் கருத்துப்படி இது யோசுவாவின் காலத்தில் நிகழ்ந்ததன்று; பிற்காலத்தில் நிகழ்ந்ததாகும். ஆகவே, யோசுவா ஆகமத்தில் வரலாற்று மதிப்பைக் குறைத்து மதிப்பீடு செய்ய சோதனை எழலாம்.

ஆனால், நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நாட்டைக் கைப்பற்றுதல் விரை வாகவும், நாடு முழுவதும் நடந்ததாகவும் தோற்றம் அளிக்கச் செய்திருப்பது உபாகமப் பாரம்பரிய ஆசிரியரது வேலைப் பாடாகும். இவற்றில் பெரும்பாலானவை மிகப்பழம் பாரம்பரியங்களை அடிப்படை யாகக் கொண்டவை. இப்பாரம்பரியங்கள், நிகழ்ச்சி நடந்த காலத்தை நெருங்கியவை. ஆகையால், பலமான உண்மையான கார ணம் இருந்தால் ஒழிய எளிதாக இவற்றை நிராகரிக்கக்கூடாது. தோற்றக் காரணப் பண்பை மிகைப்படுத்தக்கூடாது என்று ஏற்கெனவே கூறியுள்ளோம்.

***10. சமய மதிப்பீடு அல்லது போதகம்:*** யோசுவா ஆகமம் ஒரு வெறும் வரலாறு மட்டுமன்று. அஃது ஒரு சமய வரலாறு ஆகும். ஆசிரியர் இந்நூலை வரலாற்றுக்காக மட்டும் எழுதவில்லை; மாறாக, வேறுபட்ட வரலாற்று மதிப்புடைய தனது மூலங்களைப் பயன்படுத்தி வரலாற்றின், வரலாறு கடந்த போக்கை வரைகிறார். ஆசிரியர் தனது குறிக்கோளுக்கு ஏற்ற நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறுகிறார். இஸ்ராயேலின் வாழ்வில் யாவேயின் செயல் பற்றிய போதனையை எடுத்துக் கூறுவதில் அக்கறை காட்டுகிறார். இஸ்ராயேலின் வரலாறு யாவேக்கு எதிரான அல்லது சார்பான வரலாறு ஆகும். இதை எடுத்துக் கூறுவதே இத்தொகுப்பின் நோக்கமாகும். இந்நூல் மீட்பு வரலாற்றின் ஒரு பகுதியாகும்.

யாவே வழிகாட்ட யாவேயின் ஆற்றலால் யோசுவா கானானை வெற்றி கொள்கிறார். இது யாவேயின் செயலாகும். மனிதனைப் பொருத்த மட்டும் இவ்வெற்றிகள் ஒரு வழிபாட்டுச் செயலாகும். சிறப்பாக கில்கால் திருத்தலத்தோடும் அங்கு நடக்கும் சமயச் சடங்குகளோடும் நெருங்கிய தொடர்புடையன. சாபப்போரும் அதன் விளைவாக யாவற்றையும் அழித்தலும் ஒரு வழிபாட்டுச் செயலாகும். உபாகம ஆசிரியர் இக்கருத்தை வலியுறுத்திக் கூறுகிறார். இத்தகைய ''பரிசுத்தப் போர்'' என்ற சடங்கு முறை தனது காலத்தில் கடைப்பிடிக்கப்படாவிட்டாலும், உபாகம ஆசிரியர், கானானியரால் இஸ்ராயேலருக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைக் கருத்தில் கொண்டு, அவர்களுக்கு விரோதமாய்ப் பேசுகிறார். தனிப்பட்டோரின் குற்றமும் சமூகத்தையே சாரும் என்ற (யோசு 7) தொடக்க காலக்கருத்தைத் தொகுப்பாசிரியர் வலியுறுத்துகிறார். உபாகம ஆசிரியர் நிகழ்ச்சியுரைகளோடு தனது உடன்படிக்கைக் கருத்தையும் சேர்த்துக் கூறுகிறார். இஸ்ராயேலர் கானானைக் கைப்பற்றியது யாவே இஸ்ராயேல் மக்களுக்கும் (யாத் *3:17; 23:23-33;* யோசு *1:2* தொ; *21:41* தொ; *23:14* தொ) குல மூதாதையர்களுக்கும் அளித்த பரிவன்பு மிக்க பற்றுறுதியின் வெளிப்பாடாகும். இக்குல மூதாதையர்கள் தங்கள் குலத்தவர் ஒரு காலத்தில் மெய்யாகவே இந்நாட்டை உடைமையாகக் கொள்வர் என்று யாவேயிடமிருந்து வாக்குறுதி பெற்றிருந்தனர். அந்நாட்டைத் தொடர்ந்து உடைமையாகக் கொண்டிருத்தல் சீனாய்ச் சட்டத்திற்குப் பணிந்து இஸ்ராயேலர் யாவேக்குக் காட்டும் பற்றுறுதியைப் பொருத்ததாகும். உப 7-இல் கூறப்படுவதுபோல் இறைவனது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதின் கட்டாயத்தை இடைவிடாது எடுத்துக்கூறுகிறார். இந்நூல் ஆசிரியரால் *(யோசு 1:-9.16-18; 10:40; 11:15)* இஸ்ராயேலர் வெற்றி பெறுவது இறைவனுடைய வேலைப்பாடாகும் என்று வலியுறுத்தப்படுகிறது. இது கானானியரை வெற்றி கொள்வதில் மக்களுக்கு உதவ இறைவன் ஆற்றிய அருஞ்செயல் விவரிப்பில் நேரடியாக எடுத்துக் காட்டப்படுகிறது *(யோசு 3:6-10)*. மேலும், இதே உண்மை இஸ்ராயேலரின் கீழ்ப்படியாமையால்தான் அவர்கள் படைகள் தோல்வியடைகின்றன என்று காட்டுவதில் எதிர்மறையாக எடுத்துக்காட்டப்படுகின்றது *(யோசு 8:18 தொ; 9:14 தொ)*. உடன்படிக்கைச் சாபங்கள் இன்றும் செயல்படக்கூடும். இஸ்ராயேலரின் ஒழுக்கம் இறைவனின் கொடைகளுக்கு அளிக்கும் பதிலாகும். இஸ்ராயேலர் யாவேயோடு கொண்ட உறவு தனிச்சிறப்புடையது. இறைவன் தொடர்ந்து அளிக்கும் கொடைகளில் உபாகம ஆசிரியர் விசுவாசம் கொண்டிருக்கிறார். நாடு கடத்தப்பட்ட நிலை நாட்டை முழுவதும் உடைமையாகக் கொண்டிருப்பதை ஒரு தூரக் கனவாக ஆக்கினாலும் அதைத் திரும்பச் செயல்படுத்தக் கூடும்.

குருகுலப் பதிப்பாசிரியர் தனது விசுவாசத்தைக் கருத்தியலாகக் கூறுகிறார். திருத்தலத்தை மையமாகக் கொண்டு சுற்றி நிற்கும் பன்னிரண்டு இனத்தவரும் அடங்கிய வழிபாட்டுச் சமூகத்தை விவரிக்கும்போது வருங்கால இஸ்ராயேலைச் சித்தரிக்கிறார். ஒவ்வொரு இனத்தவரும் குருகுல

இனத்திற்கு அவசியமானவற்றை எல்லாம் கருத்தாய்ச் செய்கின்றனர். இஸ்ராயேலர் தன் உரிமையாக இறைவனைத் தேர்ந் தெடுக்கின்றனர் *(யோசு 24:15)*; இறை வனுக்கே பணி செய்வோம் என்று மீண்டும் மீண்டும் பறை சாற்றுகின்றனர் *(24:24)*. நூலின் இறுதிப்பகுதி இஸ்ராயேலின் பற்றுறுதியையும் நாட்டை உடைமையாகக் கொண்டிருப்பதையும் வலியுறுத்துகிறது *(24:30-33)*. ஏனெனில், யாவேயோடு இஸ்ராயேலர் கொண்ட உறவு தனிச்சிறப் புடையதாகும்.

ஆசிரியர் இந்நூலை நாட்டுப்பற்றை எடுத்துக் கூறும் பெருங்காப்பியமாக எளி தில் மாற்றியிருக்கலாம். ஆனால், இந்நூல் இஸ்ராயேலின் மகிமைக்காக அன்று, யாவேயின் மகிமைக்காகவே எழுதப் படுகிறது. நாட்டுத் தலைவனிடம் எதிர் பார்க்கப்படும் மேலான பண்பு சமயப்பற்று ஆகும் *(யோசு 1)*. நூலின் இறுதியில் வரும் அறக்கோரிக்கைகள், மக்களைச் சமயப் பற்றுறுதி உடையவர்களாய் இருக்கத் தூண்டுகிறது. இந்நூல் ஆசிரியர் பெரும் பாலும் போதகராகவே விளங்குகிறார். இதில் உபாகமப் பாரம்பரியத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளார். இதற்காகவே வெற்றி வரலாற்றைப் பயன் படுத்துகிறார். அவர் கடந்த வெற்றிகளை எடுத்துக் கூறுவது வீரமிக்க நாட்டுப் பற்றைத் தூண்டுவதற்காக அன்று, பற் றுறுதியையுடைய கீழ்ப்படிதலுக்கு இஸ்ரா யேலை அழைக்கவே; மக்களின் அகந்தை யைத் தூண்டுவதற்கு அன்று, மக்கள் யாவேயிடம் அசையா நம்பிக்கை கொண் டிருக்க வேண்டும் என்றும் தூண்டி எழுப்பவே.

***11. முடிவுரை:*** உள்ளக்கிளர்ச்சியை எழுப் பும் இந்நூலின் தொடக்கத்தில் யோசுவாவுக் குத் தெளிவான கட்டளைகளும் உற்சாக மூட்டும் சொற்களும் கூறப்படுகின்றன. ''உன்னோடு இருப்பேன். உன்னைக் கைந் நெகிழவிட மாட்டேன்; கைவிடவும் மாட் டேன்.. திடமும் உறுதியும் கொள்,.... எல்லாச் சட்டங்களையும் கடைப்பிடிப் பதில் கவனமாய் இரு. நீ அதனின்று வலப்புறமோ, இடப்புறமோ திரும்பாதே'' *(யோசு 1:5-7)*. இவை இன்றும் ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் சிறப்பாக கிறிஸ்தவத் தலைவர்களுக்கும் இறைவன் அளிக்கும் கூற்றாகும். உண்மையான இறைவனாகிய யாவேயையோ புறஇனத் தேவதை களையோ வணங்க உறுதியான தீர்மானம் எடுக்க இஸ்ராயேலை யோசுவா அழைப்ப தோடு இந்நூல் முடிகிறது *(யோசு 24:14-15)*. இஃது இஸ்ராயேலும் அவர்களுடைய வழித்தோன்றல்களின் ஒவ்வொரு தலை முறையும் ஏன் புதிய இஸ்ராயேல் ஆகிய கிறிஸ்தவர்களும் அவரவர்கள் காலத்தில் எடுக்க வேண்டிய முடிவுமாகும். எண் *13:17*-இல் நூனின் புதல்வனின் மீட்பு என்று பொருள்படும் ஓசேயா என்ற பெயரை யாவே மீட்பராய் இருக்கிறார் என்று பொருள்படும் ''யோசுவா'' என்று மோசே மாற்றுகிறார். இப்பெயர் யோசுவாவின் இறை அழைத்தலையும், இறைவனின் பெருஞ் செயல்களில் அவர் கொள்ளும் பங்கையும் விளக்குகிறது. இறைவனின் இப்பெரும் செயல்களில்தான் மீட்பு அடங்கியுள்ளது என்று விவிலியம் கூறு கிறது. யோசுவா தம் மக்களுக்கு மீட்பு அளிக்கிறார்; தங்க இடம் அளிக்கிறார்; எதிரிகளிடமிருந்து விடுதலை அளிக்கிறார். இதற்குப்பின் பல மீட்புகளும் வரும்... ஒன்று மற்றதற்கு இட்டுச் செல்லும் நம்பிக் கையை வளர்க்கும். இறுதியில் இறைவன், தன் மகன் இயேசுவையே மீட்பராக அனுப்புவார்.

**யோசுவா, நூனின் மகன்** *(JOSHUA, SON OF NUN)*

*1.* யோசுவா எப்பிராயிம் இனத்தைச் சேர்ந்த நூனின் மகனாவார் *(1 நாள் 7:20-27)*. இவர் மோசேயின் தொண்டனும் அவருக் குப்பின் இஸ்ராயேலரின் தலைவரும் ஆவார். இவருடைய மூலப்பெயர் ஓசேயா என்பதாகும் *(எண் 13:8)*.

*2.* மோசேயின் தொண்டனான யோசுவா, இஸ்ராயேலின் பாலைவனப் பயணம் முழுவதும் மோசேயின் நம்பிக்கைக்குரிய

தொண்டன் அல்லது ஊழியனாக இருந்தார் *(எண் 11:28)*; அவருடைய புனித செயல் களுக்கெல்லாம் சாட்சியாக விளங்கினார் *(காண்க. 7:14)*. இளைஞனாக இருந்த போதே *(எண் 33:11)* அமலேக்கியருக்கு எதிரான போரில் இஸ்ராயேலில் படையின் போர்த்தலைவராகச் செயல்பட்டார் *(யாத் 17:8-13)*.

யோசுவா மோசேயின் படைத்தலைவன் மட்டுமல்லர் சீடனும் ஆவார். மோசே சீனாய் மலைக்குச் சென்றபோது, அவ ரோடு யோசுவா சென்றார். மோசே இறை வனைச் சந்தித்த நாற்பது நாளும் அங்கே புனிததலத்துக்கு அருகே தங்கியிருந்தார் *(யாத் 24:13-18; 32:15-17)*; சந்திப்புக் கூடாரத் தின் காப்பாளனாக இருந்து மோசேக்கு உதவி செய்தார் *(33:11)*. தனது தலைவரின் இறைவாக்குரைக்கும் பதவியைக் காப் பதில் ஆர்வம் காட்டுகிறார் *(எண் 11:26-29)*.

மோசே கானான் நாட்டிற்குள் அனுப்பிய பன்னிரண்டு உளவாளிகளுள் யோசுவாவும் ஒருவர் *(13:8)*. காலேபோடு சேர்ந்து ஆண்டவரின் வாக்குறுதிகளில் உறுதியான நம்பிக்கையை எடுத்துக்காட்டுகிறார் யோசுவா. மற்ற உளவாளிகளின் பாதக மான செய்தியறிக்கையை எதிர்கொண்டு, யோசுவாவும், காலேபும் கடவுளை நம்பும் படி மக்களை ஊக்குவிக்கின்றனர். ஆனால், மக்கள் இவர்களது வேண்டுகோளை நிரா கரித்து, இவர்களைக் கல்லால் எறிய முயன்றனர் *(14:4-10)*. இவர்கள் காட்டிய விசுவாசத்திற்கும் துணிவுக்கும் சன்மான மாக, இவர்கள் இருவரை மட்டுமே வாக் களிக்கப்பட்ட நாட்டில் நுழைய ஆண்டவர் அனுமதித்தார் *(14:30; 26:65; காண்க. 1 மக் 2:55; எபி 3:17-18)*. யோசுவா காட்டிய ஆழ்ந்த பிரமாணிக்கத்திற்கு இவர் சீனாய் மலையில் பெற்ற அனுபவமே மூலமாய் அமைந்தது.

மோசேக்குப்பின், இஸ்ராயேலின் தலைவராக இறைவன் யோசுவாவைத் தேர்ந்தெடுத்தார். இறைவனின் கட்டளைப் படி மோசே யோசுவாவின் மேல் தன் கைகளை விரித்து மக்களுக்குத் தலைவரா கவும், தன் வேலையைச் செய்து முடிக்க வும் யோசுவாவைத் திருநிலைப்படுத்து கிறார் *(எண் 27:12-23; உப 3:28; 31:14)*. தன் தலைவரைப் போலவே யோசுவாவும் ஞானத்தின் ஆவியால் நிரம்பப் பெறுகிறார் *(34:9; காண்க. சீரா 46:1)*. மோசேயின் செயல்களுக்கு இணையாக யோசுவாவின் வாழ்வை யோசுவாநூல் சித்திரிக்கிறது *(யோசு 1:15. 17; 3:7; 4:23; 8:32; காண்க. 3:5; 5:15)*.

**3. இஸ்ராயேலின் தலைவரான யோசுவா:** மோசேயின் இறப்புக்குப்பின் யோசுவா மக்களுக்குத் தலைமை தாங்குகிறார்; வலிமை மிக்கவராகக் காட்சியளிக்கிறார் *(யோசு 1:6)*; புனிதப்போரை நடத்துவதில் துணிவைக் காட்டுகிறார். ஆயினும், இந்தப் போரில் விண்ணகத்தலைவர் உள்ளார். யோசுவா அவரின் பிரதிநிதி மட்டுமே ஆவார் *(5:13தொ)*. போரில் இஸ்ராயே லுக்கு உதவி செய்ய இயற்கைச் சக்திகளின் மூலம் விண்ணகத்தலைவர் அளிக்கும் உத வியைக் காணலாம் *(6:20; 10:10-14)*. ஆயி னும், இந்தப் போரின் குறிக்கோள் கானா னியர்களை அழிப்பதன்று, புற இனத்தாரின் நாட்டை இறைமக்களுக்கு உரிமைச் சொத் தாக அளிப்பதாகும் *(சங் 78:54தொ)*. வாக்க ளிக்கப்பட்ட நாடு அவர்களின் மூதாதைய ரின் நாடல்லவா! ஆனால், இறைவனோடு உடன்படிக்கையை நிலைப்படுத்தவும், அவ ரது சட்டத்தைக் கடைப்பிடிக்கவுமே இஸ் ராயேல் இந்நாட்டிற்குள் இட்டுச் செல்லப் பட்டது. இதில் முழுச் சமயத்தின் விட்டுக் கொடாமையோடு *(யோசு 23)*, யோசுவா தன்னையே ஒரு மாதிரியாகக் காட்டுகிறார்; பிரமாணிக்க வழியில் இஸ்ராயேலை இட்டுச் சென்றார் *(8:30-35; 24)*.

யோசுவாவின் தலைமையில், வலிமை மிக்க கானானிய எதிர்ப்பை முறித்து, இஸ்ராயேல் உறுதியாக நாட்டில் நிலைப் படுத்தப்பட்டது *(யோசு 6-12; சிறப்பாக 11:23)*. தொடக்க வெற்றிகளுக்குப்பின்

யோசுவா நாட்டைப் பங்கிடு செய்து ஒவ்வொரு இனத்தவர்களுக்கும் அவர்தம் உரிமைச் சொத்தாக அளித்தார் (யோசு 13-21). தன் வாழ்வின் இறுதியில், இஸ்ராயேலர் அனைவரையும் ஒன்றுகூட்டி அவர்கள் பிரமாணிக்கமாக இருக்க அறவுரை கூறு கிறார்; உடன்படிக்கையைப் புதுப்பிக்கிறார் *(23:1-24:28)*.

தனது *110*-ஆவது நிறைவயதில் யோசுவா இறந்தார். திம்னத்-செராவிலுள்ள அவ ருடைய உரிமைச் சொத்தான பகுதியில் அடக்கம் செய்யப்பட்டார் *(24:29)*.

**4. மீட்பரின் உருவம்:** தங்கள் தியானத் தில் எடுத்துக்காட்டான வரலாற்றின் ஒரு பகுதியான யோசுவாவின் வாழ்க்கைக்கு ஞானிகள் மீண்டும் மீண்டும் திரும்புவர். மோசேயின் இறைவாக்கு அலுவலில் அவருக்குப்பின் வந்தவராக யோசுவா சரி யாகவே பெயர் பெறுகிறார். இதன் பொருள் யாவே மீட்கிறார் என்பதாகும். இதற்கு ஏற்றவாறு, யோசுவா இறைவன் தேர்ந்தெடுத்தவர்களை மீட்கிறார் (சீரா *46:1*). இந்த முதல் ''இயேசு'' வரவிருக்கும் மற்றொரு மீட்பரின் மங்கலான முன் நிழலே ஆவார். வரவிருப்பவரும் அதே பெயரைக் கொண்டிருப்பார் (மத் *1:21*). நீண்ட மீட்பு வரலாற்றில் யோசுவாவின் செயல்கள் ஒரு முன் தயாரிப்புதான் (அ.ப. *7:45*); ஆனால், ஒரு முக்கியமான கட்டமா கும். இப்போது இயேசு இறந்து, உயிர்த்து, விண்ணேற்றமானதில் உண்மையான மீட்பு இறைமக்களுக்கு வெளிப்படுத்தப்படுகிறது. யோசுவா அடைந்த வாக்களிக்கப்பட்ட நாடு ஓர் இடைக்கட்டமேயாகும், முடி வன்று; ஒரு முன்நிழலேயாகும்; அமைதி யின் உண்மையான இடமன்று (எபி *4:8*). இதைவிட மேலான ஓய்விடம், அதாவது இறைவனுடைய ஓய்விலேயே பங்கு கொள்ளும் ஏழாவது நாள், இடம் நமக்கு வாக்களிக்கப்பட்டுள்ளது. வீரமிக்க மனிதனான யோசுவா இந்த ஓய்விடத்தை அடையப் போரிடுமாறு நம்மை உற்சாகப் படுத்துகிறார். அங்கே நம் உழைப்பின் சன்மானத்தைக் கண்டடைவோம் (திரு வெளி *14:13*).

**யோசே** *(JOSES)*

*1.* இயேசுவின் சகோதரர்களாகக் கருதப் படுபவர்களில் ஒருவர் (மாற் *6:3*). மத் *13:55*-இல் இவர் யோசேப்பு என்று அழைக் கப்படுகிறார்.

*2.* சிறிய யாக்கோபின் சகோதரர் (மாற் *15:40.47*). மத் *27:56*-இல் இவர் யோசேப்பு என்றழைக்கப்படுகிறார்.

**யோசேக்கு** *(JOSECH)*

லூக்காவின் தலைமுறைப்பட்டியலின் படி இயேசுவின் மூதாதையர்களுள் ஒருவர் (லூக் *3:26*).

**யோசேபா** [JEHOSHEBA - இறைவன் (யாவே) நிறைவுள்ளவர்]

யூதாவை ஆண்ட யோராம் அரசனின் மகள் (2 அர *11:2*). அரசன் அகசியாவின் சகோதரி. பெரிய குரு யோயாதாவின் மனைவி. ஏகூ செய்த புரட்சியினால் அகசியா அரசன் கொல்லப்பட்டபோது, அவனது தாய் அத்தலியா அரச குலத்தார் அனைவரையும் கொன்று குவிக்கத் தொடங் கினாள்; தானே அரசியானாள். ஆனால், யோசேபா கொல்லப்பட இருந்த அரச புதல்வரில் ஒருவனான அகசியாவின் கடைசி மகனான யோவாசை அத்தலியா வுக்குத் தெரியாத இடத்தில் ஆறு ஆண்டு களாக மறைத்து வைத்தாள். அதன்பின் பெரிய குரு யோயாதா அவனை அரசனாக் கினார் (2 அர *11:2*). 2 நாள் *22:11*-இல் இவள் யோசபெயாத்து என்று அழைக்கப் படுகிறாள். மேலும், இவள் தலைமைக்குரு யோயாதாவின் மனைவி என்று குறிக்கப் படுகிறாள்.

**யோசேபு - பசபேத்து** *(JOSHEB -BASSHE-BETH)*

இப்பெயர் 2 சாமு *23:8*-இல் வருகிறது. காண்க: யாசொபயாம் - *1*.

**யோசேப்பு** (JOSEPH - இறைவன் செழிப் பைக் கூட்டுவாராக)

*1.* யாக்கோபின் மகன் யோசேப்பு. காண்க. தொடக்கநூல் அல்லது ஆதியாக மம் (5ஒ): யோசேப்பு.

2. இசக்கார் இனத்தைச் சேர்ந்த இகாலின் தந்தை. கானானை உளவு பார்க்க மோசே அனுப்பிய பன்னிருவருள் ஒருவர் (எண் 13:7).

3. தாவீதின் இசைக்கலைஞர் ஆசாபின் புதல்வர். ஒரு லேவியர். இசையோடு இறைவாக்குரைக்கும் பணியில் பங்கு பெற்றவர் (1 நாள் 25:2.9).

4. பின்னூயின் வழித்தோன்றல். நாடு கடத்தலுக்குப்பின் அன்னியப்பெண்ணை மணந்த இஸ்ராயேலருள் ஒருவர் (எஸ் 10:42).

5. யோயாகிம் பெரிய குருவாக இருந்த காலத்தில் செபன்யா குலத்தின் குருக்கள் குடும்பங்களுள் ஒன்றுக்குத் தலைவர் (நெகே 12:14).

6. யூதித்தின் முன்னோருள் ஒருவர் (யூதி 8:1).

7. ஒரு செக்கரியாவின் மகன். யூதா மக்கபேயுவின் கீழ் ஒரு படைத்தலைவர். யூதா கிலயாதுக்கு எதிராகப் போர் செய்யச் சென்றபோது, யூதா நாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பை இந்த யோசேப்பிடமும் அசரியாவிடமும் விட்டுச் சென்றார். எந்தப் போர் நிகழ்ச்சியையும் தொடங்கக்கூடாது என்று கட்டளையிட்டிருந்தார். ஆனால், இந்த இருவரும் சுய மகிமை தேடும் பொருட்டு, யாம்னியாவைத் தாக்கினர்; படுதோல்வி அடைந்தனர் (1 மக் 5:18. 55-62).

8. 2 மக் 8:22; 10:19-இன்படி இவர் யூதாமக்கபேயுவின் சகோதரர்களுள் ஒருவர். ஆனால், 1 மக் 2:1-5-இல் இவர் மத்தத்தியாவின் புதல்வர்களுள் ஒருவராகக் குறிப்பிடப் படவில்லை.

9. இயேசு கிறிஸ்துவின் முன்னோர்களுள் ஒருவர். யன்னாயின் தந்தையும், மத்தத்தியாவின் மகனும் ஆவார் (லூக் 3:24).

10. தாவீதின் காலத்திற்கும், நாடு கடத்தப்பட்டதற்குப்பின் யூதாவின் ஆளுநரான செருபாபேலின் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த இயேசுவின் முன்னோர்களுள் ஒருவர் (லூக் 3:30).

11. யோசேப்பு, மரியாளின் கணவர்.

இத்தலைப்பின் கீழ்க்காண்க.

12. மத் 13:55-இன்படி இயேசுவின் சகோதரருள் ஒருவராகக் கருதப்படுபவர்.

13. சிறிய யாக்கோபின் சகோதரர் (மாற் 15:40).

14. அரிமத்தியா யோசேப்பு:- யூத சனேத்ரின்னைச் சேர்ந்த ஒரு செல்வமிக்கவரும் மதிக்கப்பட்டவரும் ஆவார். யூதேயாவின் மத்திய மலைப்பகுதியிலுள்ள அரிமத்தியாவைச் சேர்ந்தவர். இயேசுவை அடக்கம் செய்ய தனது புதிய கல்லறையை அளித்தவர் (மத் 27:57; மாற் 15:43). யோசேப்பு நல்ல, நேர்மையான யூதர் (லூக் 23:50-51). இரகசியமாக இயேசுவின் சீடர் (மத் 27:57; யோவா 19:38). இவர் துணிவோடு பிலாத்திடம் போய் இயேசுவின் சடலத்தைக் கேட்டார் (மத் 27:58; மாற் 15:43-45; யோவா 19:38; காண்க. உப 21:22-23). நிக்கோதேமின் உதவியுடன், யோசேப்பு இயேசுவின் சடலத்தை எடுத்து அதை யூத அடக்க முறைப்படி நறுமணப் பொருள்களுடன் துணிகளால் சுற்றிக் கட்டி புதிய கல்லறை ஒன்றில் அடக்கம் செய்தார் (மத் 27:59-60; மாற் 15:46; லூக் 23:53; யோவா 19:39-42).

14. யூதாசின் அப்போஸ்தல இடத்தை நிரப்ப, சகோதரர்களால் முன்னிறுத்தப்பட்ட இருவருள் ஒருவர். இவர் பர்சபா என்னும் யோசேப்பு ஆவார். இவருக்கு யுஸ்து என்ற பெயரும் இருந்தது (அ.ப. 1:23). மற்றவர் மத்தியா ஆவார். சீட்டு மத்தியா பேருக்கு விழுந்தது (1:26). இவர் 15:22-இல் வரும் பர்சபா அல்லர்.

15. சைப்ரசு தீவைச் சேர்ந்த ஒரு லேவியர். இவருக்கு அப்போஸ்தலர்கள் பர்னபா என்று பெயரிட்டார்கள் (அ.ப. 4:36).

**யோசேப்பு (அரிமத்தியா) எழுதிய நிகழ்ச்சியுரை** (JOSEPH OF ARIMATHEA, NARRATIVE BY)

இது கன்னி விண்ணேற்றம் பெற்றாள் என்ற நூலின் இலத்தீன் மொழிபெயர்ப்பு. இஃது அரிமத்தியா யோசேப்பு கதையிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒன்று. அரிமத்திய யோசேப்பு கதை பிலாத்துவின் பணிகள் என்று நூலின் இறுதியில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

**யோசேப்பு, மரியாளின் கணவர்** (JOSEPH, HUSBAND OF MARY)

இவர் மரியாளின் கணவர். இயேசுவின் தந்தையாகக் கருதப்பட்டவர். மத்தேயு விவரிப்பின்படி, யோசேப்பு பெத்லகேமைச் சேர்ந்த ஒரு தச்சர். பிற்காலத்தில் நாசரேத்தில் குடியேறியவர். ஆனால், உரோமைப் பேரரசரின் கட்டளைக்குக் கீழ்ப்படியும் பொருட்டு, யோசேப்பு நாசரேத்திலிருந்து பெத்லகேமுக்குச் சென்றதாக லூக்கா விவரிக்கிறார் (லூக் *2:4-5*). மத்தேயு, லூக்கா ஆகியோர் அளிக்கும் இயேசுவின் பிறப்பு, குழந்தைப்பருவம் பற்றிய நிகழ்ச்சியுரைகளுக்குப் புறம்பே யோசேப்பு அரிதாகத்தான் தோன்றுகிறார். மாற்கில் இவர் குறிப்பிடப்படவே இல்லை. ''யோசேப்பின் மகன் இயேசு'' என்று இரு குறிப்புகளில் யோவானில் யோசேப்பு குறிக்கப்படுகிறார் *(யோவா 1:45; 6:42)*.

யோசேப்பைப் பற்றி அதிகம் தெரியவில்லை. இயேசுவின் மூதாதையர் பட்டியல்கள் *(மத் 1:2-16; லூக் 3:23-38)*, இயேசு (அவரது சட்டபூர்வமான தந்தை யோசேப்பு வழியாக) அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் எனறு காட்ட, தாவீது வழியாக அவரது தோற்றத்தை எடுத்துக் கூறுகின்றன. (அறிஞர் சிலர் இயேசுவின் தாவீது வழிமரபு முறையை மரியாள் வழியாக எடுத்துக் காட்டுவர்). மரியாளுக்கும் யோசேப்புக்கும் திருமண ஒப்பந்தம் செய்யப்படும்போது, யோசேப்பு ஏற்கெனவே நாசரேத்தில் வாழ்ந்து கொண்டிருந்ததாக லூக்கா கூறுகிறார் (லூக் *1:26-27*). ஆனால், அவர்கள் இன்னும் கூடி வாழவில்லை. ஆகவே, மரியாள் கருவுற்றிருந்ததை அறியும்போது யோசேப்பு பெரிதும் திகைப்படைகிறார். ஆனால், அவர் நேர்மையாளர். அவர் மரியாளை இகழ்ச்சிக்குள்ளாக்க விரும்பாமல், மறைவாக விலக்கிவிடத் திட்டமிடுகிறார் (மத் *1:18-19*). ஆண்டவரின் தூதர் கனவில் தோன்றி மரியாளின் தூய்மை பற்றிய உறுதியையும், பிறக்கப்போகும் குழந்தையின் தன்மை பற்றிய வெளிப்பாட்டையும் அளித்தபோது, யோசேப்பு மரியாளைத் தன் மனைவியாக ஏற்றுக்கொண்டார் *(1:20-24)*.

பேரரசனது கட்டளைக்கிணங்க பெத்லகேம் சென்றது, அங்கு இயேசு பிறந்தது, இடையர்கள் குழந்தையைக் காண வந்தது, குழந்தைக்கு விருத்தசேதனம் செய்தல், குழந்தையை ஆலயத்தில் அர்ப்பணித்தல் (லூக் *2:1-40*), ஞானிகள் வருகை, ஏரோதின் கொடுமையிலிருந்து குழந்தையைக் காப்பாற்ற வானதூதர் கட்டளைப்படி எகிப்துக்கு ஓடிப்போதல், பின் தூதரின் கட்டளைப்படி பாலஸ்தீனத்துக்குத் திரும்புதல் (மத் *2:1-15. 19-25*), காணாமல் போன சிறுவன் இயேசுவைக் கண்டுபிடித்தல் (லூக் *2:41-51*) ஆகிய நிகழ்ச்சிகளில் யோசேப்பு சிறப்பிடம் பெறுகிறார். ஆண்டுதோறும் பாஸ்குவிழாவில் பங்குகொள்ளும் ஒரு பக்தியுள்ள யூதராக யோசேப்பை லூக்கா விவரிக்கிறார் *(2:41)*.

கி.பி. 2-ஆண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த யாக்கோபின் மூலநற்செய்தி, 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தச்சராகிய யோசேப்பின் வரலாறு என்ற நூல்கள், மரியாளுக்கு மணஒப்பந்தம் ஆனபோது, யோசேப்பு மனைவியை இழந்தவராகவும், பிள்ளைகளைக் கொண்டிருந்தவராகவும் சித்திரிக்கின்றன. பிந்தைய நூல், யோசேப்பு 110-ஆவது வயதில் இறந்தது பற்றி விரிவான விவரிப்புகளைக் கொடுக்கிறது. தோமா எழுதிய நற்செய்தி (2-ஆம் நூற்றாண்டு) இயேசு மற்றும் யோசேப்பு பற்றிய பல கற்பனையான நிகழ்ச்சிகளைத் தருகின்றது. மத்திய காலத்தில் புனித யோசேப்பின்பால் மக்கள் கொண்ட பக்தி

ம்முயற்சிகள் பெருகின. கத்தோலிக்கத் திருச்சபையில் யோசேப்புக்கு ஒரு பெருவிழா கொண்டாடப்படுகிறது. அவர் தொழிலாளர்களின் பாதுகாவலர் என்றும், திருச்சபையின் பாதுகாவலர் என்றும் போற்றப் படுகிறார்.

**யோசேப்புவின் செபம்** *(JOSEPH, PRAYER OF)*

யூதர்களின் திருவெளிப்பாட்டு நூலான இதன் ஒருசில பகுதிகள் கிரேக்க மேற்கோள்களாக ஓரிசனால் சேர்த்து வைக்கப் பட்டுள்ளன. பழமையான ஒரு பட்டியலில் இருந்து இது சாலமோனின் ஞானம் என்ற நூலைப்போன்று மிக நீளமானதெனத் தெரிகிறது. யாக்கோபு ஏற்கெனவே இஸ்ராயேல் எனும் வானதூதராக வாழ்ந்து வருவதாக இதில் காட்டப்படுகிறது. நமக்குக் கிடைத்துள்ள பகுதியில் அவரே எல்லாவற்றிலும் பேசுகிறார். மனித குலத்தின் எதிர்காலத்தை முன்னறிவிக்கிறார். எல்லா உயிர்களுக்கும் முன்னே பிறந்தது தான் மட்டும்தான் என்றும் உரிமை கொண்டாடுகிறார்.

இந்த நூலிலிருந்து கிறிஸ்தவத் தொடக்க காலத்திய யூதர்கள் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோரை வானதூதர்களிலும் மேலாக உயர்த்திப் பேசுவதும், அவர்களைத் தெய்வமாகக் கொள்ளுமளவுக்கு உயர்த்தும் அவர்களது போக்கும் தெரிகிறது. இந்த நூல் கிறிஸ்தவர்க்கு எதிராக எழுதப்பட்டதெனச் சிலர் கருதினாலும் ஓரிசன் இவற்றைப் பாதுகாத்ததன் மூலம் இஃது அவ்வாறு இருக்க முடியாது எனத் தெரிகிறது. ஒரு சிலர் இது கிறிஸ்தவர்களை ஆதரிக்கும் நூல் எனவும், இஸ்ராயேல், யாக்கோபு எனும் பெயர்கள் இயேசு கிறிஸ்துவைக் குறிப்பனவாகும் எனவும் கூறுகின்றனர். இந்நூல் பற்றி எம்முடிவுக்கும் வர இயலவில்லை. ஆனால், கிறிஸ்தவத்துக்கு எதிரான நூல் என ஒரு குறிப்பிட்ட அளவுக்கு ஏற்றுக்கொள்ளலாம்.

**யோதா** *(JODA)*

இயேசுவின் மூதாதையரில் ஒருவர் (லூக் *3:26*).

**யோது** *(JOD)*

எபிரேய நெடுங்கணக்கில் பத்தாவது எழுத்தான இஃது அகரவரிசைச் சங்கீதமான *119*-இல் பத்தாவது பகுதிக்குத் தலைப்பாக வருகிறது. இப்பகுதியின் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்தைக் கொண்டு தொடங்குவதுபோல் அமைக்கப்பட்டு வருகிறது.

**யோத்தாம்** *(JOTHAM - யாவே நிறைவானவர்)*

*1.* இவர் கிதியோனின் *(எருபாகாலின்)* கடைசிப்புதல்வர். அபிமெலக்கினால் கிதியோன் குடும்பத்தினர் அனைவரும் கொல்லப்பட்டபோது இவர் மட்டும் தப்பிவிட்டார் *(நீதி 9:5)*. ஓர் உவமையால் *(9:7-20)* அபிமெலக்கை அரசனாக்கியதற்காக செக்கேமின் மக்களை யோத்தாம் கண்டனம் செய்தார். இவரது சாபக்கூற்று நிறைவேற மூன்று ஆண்டுகள் எடுத்தன. இந்த இடைக் காலத்தில் இவர் பெயரில் தஞ்சம் புகுந்தார் *(9:21.57)*.

*2.* இவர் யூதாநாட்டு அரசராகிய ஊசியாவின் *(அசரியாவின்)* மகன் *(2 அர 15:32-38; 2 நாள் 27:1-9)*. கி.மு. *750*-இல் ஊசியா தொழுநோயால் பாதிக்கப்பட்டபோது யோத்தாம் பகர ஆட்சியாளராகச் செயல் ஆற்றினார். தந்தைக்குப்பின் *741* முதல் *735* வரை தனியாக ஆட்சிபுரிந்தார் *(2 அர 15:5; 2 நாள் 26:16-27:1)*.

தனது ஆட்சிக்காலம்முதல் தனது தந்தையின் கொள்கையை யோத்தாம் கடைப்பிடித்தார். ''ஆண்டவர் திருமுன் நேர்மையுடன் நடந்தார்'' *(2 அர 15:35; 2 நாள் 27:2)*. ஆனால், தன் தந்தையின் அகந்தையைக் கொண்டிருக்கவில்லை. இவரது ஆட்சியில் யூதா மிகவும் செழிப்புற்றது. மக்கள் சிலை வழிபாடு, பேராசை, செல்வத்தால் வரும் அலட்சியப் புறக்கணிப்பு ஆகியவற்றில் தொடர்ந்து தீய வழியில் நடந்தனர் *(2 நாள் 27:2; காண்க. எசா 2:8; 5:8-23)*.

யோத்தாம் ஆலயத்தின் மேலை (வட) வாயிலைக் கட்டினார் *(2 அர 15:35)*; ஓபேலின் மதில்களைப் பெரிதாகக் கட்டினார் *(2 நாள் 27:3)*; மலைப்பகுதியில் போர்

முக்கியத்துவமுடைய நகரங்களை அமைத்தார்; யூதா முழுவதும் கோட்டைகளையும் கொத்தளங்களையும் கட்டினார் (27:4). இவர் ஊசியாவின் இறப்புக்குப்பின் அம்மோனியர் கிளர்ச்சி செய்தபோது அவர்களை அடக்கி, அவர்களிடமிருந்து பெரும் கப்பம் பெற்றார் (27:5). பாரம்பரியப் பகுதியோடு, யோத்தாம் ஆட்சியில் யூதா, யோர்தானுக்கு அப்பாலுள்ள தென் பகுதியையும் (காண்க. 1 நாள் 5:17), மோவாபு, ஏதோம், அம்மான், ஏட்சியோன் - கெபேர் வரைகட்டுப்படுத்தியது.

தன் தந்தையைப்போல், யோத்தாம் இஸ்ராயேல், சீரியாவோடு சேர்ந்து அசீரியர்களுக்கு எதிரான போக்கைக் கடைப்பிடித்தார். மூன்றாம் திகிலத் பிலேசரின் படையெடுப்பை எதிர்கொண்டபோது எருசலேமில் அசீரியர்களுக்குச் சார்பான கட்சி ஆகாசைப் பகர ஆட்சியாளராக ஆக்கியது. இது செயல் அளவில் யோத்தாமை ஓய்வு பெற்றவராக்கியது; அவரது அயல்நாட்டுக் கொள்கையைக் கட்டுப்படுத்தியது; சீரோ-எப்பிராயிம் போருக்கு இட்டுச் சென்றது (காண்க. 2 அர 15:37; எசா 7:1தொ).

இயேசுவின் மூதாதையர் பட்டியலில் மத்தேயு யோத்தாமைச் சேர்க்கிறார் (மத் 1:9).

3. யூதாவைச் சேர்ந்தவர். எகிதாயின் மகன். காலேபின் வழித்தோன்றல் (1 நாள் 2:47).

**யோபாபு** (JOBAB - வெற்றிக்களிப்பு)

1. இவர் யோக்தானின் கடைசி (இளைய) மகன். எனவே, அரேபிய இனப்பெயராகும் (ஆதி 10:29; 1 நாள் 1:23).

2. ஏதோமின் இரண்டாவது அரசனான யோபாபு பொட்சராவைச் சேர்ந்த செராகுவின் மகன் (ஆதி 36:33; 1 நாள் 1:44-45).

3. இவர் யோசுவாவால் தோற்கடிக்கப்பட்ட மாதோனின் அரசன் (யோசு 11:1; 12:9).

4. சகராயிமின் மகனான இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 8:9).

5. எல்பாகாலின் மகனாகிய இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 8:18).

**யோபு** (JOB)

இசக்காரின் மூன்றாவது மகன் (ஆதி 46:13). ஆனால் எண் 26:24-இலும், 1 நாள் 7:1-இலும் வரும் இணையான பெயர்ப் பட்டியலில் இவர் யாசூபு என்று அழைக்கப்படுகிறார்.

**யோபுநூல்** (JOB, BOOK OF)

*1. முன்னுரை:-*

துன்பத்திற்குக் காரணம் யாது? அதன் பொருள் என்ன? தீயோர் செழிப்புற்றிருக்கும்போது நல்லோர் ஏன் துன்பப்பட வேண்டும்? துன்பத்திற்குப் போதிய காரணம் காணமுடியாதபோது அதை எப்படி ஏற்றுக்கொள்வது? மனித வாழ்வில் இறைவனது பங்கு என்ன? மனித வாழ்வில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளை இறைநீதியோடு ஒத்துப்போகச் செய்ய முடியுமா? நாம் காணும் தீமை மிக்கதாகத் தோன்றும் உலகில் இறைவன் எல்லாம் வல்லவரா? நீதியுள்ளவரா? அவர் உலகம் நடத்தும் விதம் சரிதானா? ஒழுக்கம், நேர்மை மிக்க வாழ்வு வாழ முயலுவதின் பயன் என்ன? பயன் கருதாது இறைவனுக்குப் பணி செய்ய வேண்டுமா? இவை, மனித நிலையில், உண்மைகளைச் சிந்தித்துப் பார்க்கும் எவருக்கும் காலந்தோறும் மன உலைவு தரும் கேள்விகளாகும். குறிப்பாக, இவை பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய இஸ்ராயேல் ஞானிகளை மிகவும் பாதித்தன. அதன் விளைவு யோபுநூல் என்னும் ஒரு மிக உன்னதமான இலக்கியப் படைப்பாகும். யோபு நூலின் ஆசிரியர் மேற்கூறப்பட்ட கேள்விகளோடு போராடி, தனது கால இஸ்ராயேலரின் விசுவாச உதவியோடு தம்மால் கூடிய விடையைக் காண முயலுகிறார். அதை வாசகர்களோடு பகிர்ந்து கொள்கிறார். இந்நூல், ஆசிரியரது சொந்த ஆழ்ந்த அனுபவத்தின் விளைவாகும். ஆசிரியரது கவித்தன்மை மிகச் சிறப்பாய்

இருப்பது போல், அவர் எடுத்துக் கொள்ளும் பிரச்சனையும் மிகச்சிறப்பானது; மிகப் பெரியது. துன்பம், குறிப்பாகக் குற்றமற்றோரின் துன்பம், எந்த மனிதனையும் பாதிக்கக்கூடியது. ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் தொட்டு எதிரொலி உண்டாக்கவல்லது. ஆசிரியர் இப்பிரச்சனையோடு அனுபவ முறையில் போராடி, தமது சொந்த ஆழ்ந்த அனுபவத்தை நம்மோடு பகிர்ந்து கொள்கிறார்.

**2. பெயர்:** யோபு என்ற பெயர் ''இய்யோப்'' அல்லது ''ஹியோப்'' (Iyyobh) என்ற எபிரேயப் பெயரிலிருந்து வருகிறது. இச்சொல்லுக்கு என்ன பொருள் என்பது உறுதியாகத் தெரியவில்லை. இதற்குப் ''பகையாளி, எதிரி'' என்று பொருள் கொடுக்கலாம். இது யோபு இறைவன்பால் காட்டும் எதிரி மனப்பான்மையை அடையாளமாக எடுத்துக் காட்டலாம்.

இச்சொல்லுக்குப் ''பகைப்பட்டவர், கொடுமைப்படுத்தப்பட்டவர்'' என்றும் பொருள் கூறலாம். இது யோபு அனுபவித்த துன்பங்களைச் சுட்டலாம். இச்சொல்லின் அராபிக் அடிச்சொல், ''திரும்புதல், மனத்துக்கப்படுதல்'' என்ற பொருளைக் கொடுக்கவல்லது. இதன்படி, நூலின் முடிவில், உண்மையாக மனத்துக்கம் கொள்ளும், மனந்திரும்பும் யோபுவைக் காண்கிறோம்.

இப்போது யோபு என்னும் சொல் முதலில் இந்நூலைக் குறிக்கும். அடுத்து ஒரு பழங்காலப் பெருந்தலைவரைக் குறிக்கும். இவர் இஸ்ராயேல் பாரம்பரியத்திலும், பிற இனப் பாரம்பரியங்களிலும் இடம் பெறுகிறார். மூன்றாவதாக, யோபு என்பது நூலின் ஆசிரியரைக் குறிக்கும். இவர் உடலிலும், உள்ளத்திலும் கடும் வேதனை அனுபவித்தவராகத் தோன்றுகிறார். இந்தச் சொந்த அனுபவத்தை அழகிய காவிய நயத்தோடு எடுத்துக் கூறுகிறார்.

**3. ஆசிரியர்:** இந்நூலை எழுதியவர் யார்? அவர் எங்கு வாழ்ந்தார்? இக்கேள்விகளுக்கு உறுதியாகப் பதில் கூற முடியாது. ஆனால், உரையாடல் பகுதி இந்நூலுக்குப் பின்னணியாகப் பாலஸ்தீனத்துக்குத் தென்கிழக்கிலுள்ள ஏதோம் நாட்டையும், அதை அடுத்த பகுதிகளையும் சுட்டுகிறது. யோபுவின் நண்பர்களில் ஒருவரின் பெயரான எலீப்பாசு என்பது ஏசாவின் மரபுக்கொடியில் வருகிறது *(ஆதி 36:4.11)*. ஏசா ஏதோமோடு தொடர்புடையவர் *(32:3)*. பால்தாது என்ற பெயர் ஏசாவின் மற்றொரு வழித்தோன்றலின் பெயராகும் [*(36:27)*. பல்தாது, பில்தாது என்ற பெயரின் எழுபது நூல் வடிவமாகும்]. சோப்பாரின் ஊராகிய நாமா, ஏதோம் நாட்டை அடுத்த ஆராம் நாட்டைச் சேர்ந்ததாகும். யோபுவின் நண்பர்கள் ஞானத்திற்குப் புகழ் பெற்ற நாடுகளைச் சேர்ந்தவர்கள் (ஒப *8*) என்று காட்ட ஆசிரியர் விழைவதாகத் தெரிகிறது. ஊசு (யோபு *1:1*), தேமான், சூகா, நாமா *(2:1)* ஆகிய ஊர்கள் இப்பகுதியைச் சேர்ந்தனவாக இருக்கலாம். ஆகவே, ஆசிரியரும் ஏதோம் நாட்டில் வாழ்ந்திருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது. ஆசிரியர் அதே நாட்டைத் தம் நூலுக்குப் பின்னணியாக அமைப்பதற்கு இதுவே காரணமாக இருக்கலாம்.

ஆசிரியர் நகர வாழ்க்கையை அறிந்திருக்கிறார் *(19:13 தொ; 24:10.12.16; 29:7தொ; 30:28; 31:2)*; வறண்ட பாலை நிலத்தையும் அதில் காணப்படும் செடி தழைகளையும் தின்று, இடர் செறிந்த நிலையற்ற வாழ்வு வாழும் மக்களையும் தெரிந்திருக்கிறார் *(30:40 தொ)*; பாலைவனத்தைக் கடந்து செல்லும் அனுபவத்தை உணர்ந்துள்ளார் *(38:26-27)*; பெடுயீனர் இனத்தையும் அவர்களது கொள்ளையடிக்கும் தொழிலையும் அறிந்திருக்கிறார்; ஏதோமையும் *(1:1தொ)* அதன் பாலைவனச் சோலைகளையும் தெரிந்திருக்கிறார். இவை ஆசிரியர் ஏதோம் நாட்டுக்குப் பழக்கப்பட்டவர் என்று காட்டுகின்றன.

ஆயினும், நூலின் இறுதி வடிவத்தில், நாடோடித் தன்மையும் முதியவர்களைத் தலைவர்களாகக் கொண்ட வாழ்க்கை

அமைப்பும், ஆசிரியரது பயண அனுபவங் களிலிருந்து, பின்னப்பட்ட பின்னணியா கவே அமைகின்றன. இவ்வாறு, இவர் பல காரியங்களை நினைவு படுத்தி உயிர்ச் சித்திரமாக விவரிக்கின்றார். சான்றாக, மணலில் குட்டி போட்டு அதை வளர்க்கும் பெண் மான்கள் *(39:1-4)*, புல் வெளியில் அலைந்து திரியும் காட்டுக் கழுதை *(38:5-8)*, தீக்கோழியின் பழக்க வழக்கங்கள் *(30:30; 39:13 தொ)*, குள்ள நரி *(30:29)* ஆகியவற்றை எடுத்துக் காட்டலாம்.

ஆசிரியர் பல இடங்களுக்குப் பயணம் செய்திருப்பதாகத் தெரிகிறது. கனிமப் பகுதிகளையும், கனிமத்தொழிலையும் அறிந்திருக்கிறார். இது சீனாய்ப் பகுதியையோ, அனேகமாக அக்காபாவி லுள்ள செம்புக் கனிமப் பகுதியையோ சுட்டலாம் *(28:2)*. எகிப்தையும், அதன் பிரமிடுகளையும் அடக்கம் செய்யும் இடங் களையும் *(3:14; 18:21)*, அதன் செல்வமிக்க பகுதிகளையும் *(3:15)*, அடிமைகளையும், சிறை அதிகாரிகளையும் *(3:18; 7:1-2)*, நாணலையும், புல்லையும் *(8:11)*, நைல் நதியையும், அதன் ஓடைகளையும் *(9:26)*, பெருவெள்ளம் எடுத்து ஓடும் ஆறுகள் வறண்டு போதலையும் *(14:11)* நன்கு நினைவு வைத்திருக்கிறார். நீர் யானை, லெவியாத்தான் ஆகிய விலங்குகள் பாலை யும், மலைகளும் கொண்ட ஏதோமில் காணப்படக்கூடியவையல்ல. இவை நைல் நதிப் பகுதிகளைச் சேர்ந்தவையாகும். இவையெல்லாம், ஆசிரியர் எகிப்தில், குறிப்பாக அலக்சாந்திரியாவில் வாழ்ந்திருக் கலாம் என்று கருதத் தூண்டியுள்ளன.

மேற்கூறப்பட்ட பயணக்குறிப்புகள் எபி ரேய இலக்கியங்களுக்குப் புறம்பானவை. ஏனெனில், இவ்விலக்கியங்கள் பெரும்பா லும் பாலஸ்தீனத்தைப் பற்றியவையே. ஆகவே, யோபு நூலின் ஆசிரியரிடம் ஒரு வகை அயற்பண்பும், கலப்புத் தன்மையும் காணப்படுகின்றன. அவர் மேன்மை மிக்க கவியாக மாறுமுன் அதிகம் பயணம் செய்தவராகவும் சிந்தனை மிக்கவராகவும் இருந்திருக்க வேண்டும் என்று நூல் சுட்டுகிறது.

ஆசிரியர் பாபிலோனில் வாழ்ந்தவர் என்று கூறுவோருமுள்ளனர். ஆசிரியர் எங்கு வாழ்ந்திருக்கக்கூடும் என்பது பற்றி உறுதியாக ஒன்றும் தெரியவில்லை. அவர் ஒரு யூதர் என்பது இப்போது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும். ஏனெனில், நூலின் மையப் பிரச்சனையும் கருத்துக்களும் அவற் றின் பின்னணியும் நாடு கடத்தலுக்குப் பின் பாலஸ்தீன யூதர்களிடையே நிலவியவை யாகும். நூலில் வரும் யோபுவைப்போல், ஆசிரியரும் ஓரளவு துன்புற்றிருக்கக்கூடும். ஆகவே, நூல் ஒரு வகையில் ஆசிரியரின் ஆன்மீக வரலாறு ஆகும். யோபு நூலின் ஆசிரியர் ஒரு தொழுநோயாளி என்று சிலர் கருதுவர். சிலர் யோபுவே இந்நூலின் ஆசிரியர் என்பர். இதற்கு ஆதாரமாக அதி. *3—31; 32-37* ஆகிய பகுதிகளை ஒப்பிட்டுக் காண்பிப்பர். அதி. *3-31* என்ற பகுதி யோபுவோடு ஒத்துணர்வைக் கொண்டுள் ளது. ஆனால், அதி. *32-37* என்ற பகுதி உண்மையிலேயே நல்ல காலத்தையும் துன் பக் காலத்தையும் ஆழ்ந்து அனுபவித்த, தமது மாசற்ற தன்மையை உறுதியாக நம்பின ஒருவருடைய சொந்த அனு பவத்தை - நினைவு கூர்வதாய் அமைந்துள் ளது. ஆனால், இத்தகைய வாதம் உறுதி யாக அமையவில்லை.

**4. காலம்:** இந்நூல் தோன்றிய காலத் தைப் பற்றித் தோராயமாகத்தான் கூற முடியும். இந்நூல் கி.மு. *600-300*-க்கு இடையிட்ட காலத்தில் தோன்றியதாகச் சிலர் கூறுவர். இதைவிட கி.மு. *600-450*-க்கும் இடையிட்ட காலத்தைக் குறிப்பது மேல். ஏனெனில், இஃது இஸ்ரா யேலர் பாபிலோனுக்கு நாடு கடத்தப்படுத லும், பாபிலோனிலிருந்து திரும்புதலும் நிகழ்ந்த காலமாகும். நாடு கடத்தலுக்குப் பின்புதான் இஸ்ராயேலின் ஞான இலக்கி யங்கள் தோன்றின என்பதை வாசகர்கள் மனதில் கொள்ள வேண்டும். அப்போது எரேமியா, எசேக்கியேல் போன்ற இறை வாக்கினர்களின் சில கருத்துக்கள் இஸ்ரா

யேல் மக்களிடையே இதுவரை நிலவிய கூட்டமைப்பு நன்னெறியில், ஓர் இக்கட்டான நிலையை உண்டாக்கின. வாழ்வில் நடைமுறை நிகழ்ச்சிகளுக்கும், பாரம்பரியப் போதகமான வினைப்பயன் கோட்பாட்டுக்கும் உள்ள நடைமுறை முரண்பாட்டிலிருந்து எழும் உள்ளார்ந்த போராட்டம் நாடு கடத்தலுக்குப் பின்புதான் கடினமான வடிவம் எடுத்தது. எரேமியா போராடிய பிரச்சனையோடுதான் (எரே *12:1-4; 20:14-18*), யோபுநூல் ஆசிரியரும் போராடுகிறார். மேலும், ஆசிரியர் பல சங்கீதங்களை அறிந்திருப்பதாகத் தெரிகிறது (யோபு *7:17*-ஐ சங் *8:5* ஓடும், யோபு *10:20*-ஐ சங் *39:14*-ஓடும் ஒப்பிடுக). ''சாத்தான்'' பற்றிய காட்சி செக் *3:1-2*-இல் வருவதற்கு ஒத்ததாக உள்ளது; ஆனால் கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 1 நாள் *21:1-8*-இல் காணப்படுவது போல் அவ்வளவு வளர்ச்சி அடையவில்லை. இறையியலிலும் நடையிலும், யோபு நூல் உப எசாயா நூலை ஒத்ததாக உள்ளது. நூலின் மொழியமைப்பில் அரமேயிக்கு, அராபிக்குப் பண்புகள் அதிகம் காணப்படுகின்றன. தனி நபர்க்கும் இறைவனுக்குமுள்ள உறவு பற்றிய போதகத்தைப் பொருத்தமட்டும், இந்நூல் பழமொழி நூலுக்கும் திருவுரையாளர் நூலுக்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்ததாகத் தெரிகிறது (சீரா *49:9*). யோபு *15:19*-இல் வரும் குறிப்பு தெளிவில்லாமல் உள்ளது. அஃது எழுத்தாளர்களின் திரித்துரையாக இருக்கலாம். எசே *14:12-20* இந்நூலைக் குறிக்கவில்லை; யோபு என்ற ஒரு பழங்காலத் தலைவரைப் பற்றிய பொதுப்பணிப் பாரம்பரியத்தைச் சுட்டுகிறது.

இவற்றையெல்லாம் மனதிற்கொண்டு பெரும் ஆய்வாளர்களோடு சேர்ந்து இந்நூல் அனேகமாக கி.மு. 5-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ, முடிவிலோ, 4-ஆம் நூற்றாண்டின் முடிவிலோ தோன்றியிருக்கக்கூடும் என்று ஏற்றுக்கொள்ளலாம். ஒரு வேளை இறைவாக்கினர் மலாக்கியா காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம். ''நீதியின் கடவுள் எங்கே?— கடவுளுக்கு ஊழியம் செய்வது வீண்; அவரது திருமுறைகளைக் கடைப்பிடித்து ஒழுகுவதாலும் — நமக்கு என்ன பயன்?'' (மலா *2:17; 3:14*) என்ற அவநம்பிக்கை மிகுந்த கேள்விகளுக்குப் பதிலாக இந்நூல் தோன்றியிருக்கலாம்.

**5. அயல் பாதிப்பு:** யோபு, பழங்கால மேற்காசியப் பாரம்பரியங்களில் வரும் ஒரு குலமூதாதையராகவோ, இனத்தலைவராகவோ, ஞானியாகவோ இருந்திருக்கக்கூடும். இத்தகைய பாரம்பரியத்தை இஸ்ராயேலிலும், அதை விட காலத்தால் முந்திய மெசபொத்தாமியாவிலும், எகிப்திலும் காண்கிறோம். ஆகவே, யோபுவை வரலாற்றைச் சேர்ந்த ஒருவராகக் கருதுவோரும் இருந்துள்ளனர். இவ்விதமே திருச்சபைத் தந்தையர்களில் சிலர் நம்பினர். ஆகவே, யோபு நூலை ஒரு வரலாற்று நிகழ்ச்சியுரையாகவே ஏற்றுக்கொண்டனர். ஆனால், நாம் கொண்டிருக்கும் வடிவில் இந்நூல் ஆசிரியருடைய கலைப்பண்புடைய படைப்பாகும். அதில் ஆசிரியர் தாம் கூற விரும்பும் செய்திக்குப் பழங்காலத் தலைவராகக் கருதப்பட்ட யோபுவை ஒரு கருவியாகப் பயன் படுத்தியுள்ளார் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

இந்தப் பழங்கால ஆளான யோபு, எசே *14:12-14.19-20* என்ற பகுதியில் குறிக்கப்படுகிறார். இப்பகுதி நோவா, தானியேல், யோபு ஆகியோரைப் பற்றிப் பேசுகிறது. தானியேல் என்ற பெயர் கி.மு. *1400*-ஐ ஒட்டிய உகாரித்து ஏடுகளில் காணப்படுகிறது (தானேல் என்ற பெயர் யூதர்களிடையே தானியேல் ஆனது. உகாரித்து இப்போது ராஸ்சம்ரா என்று அழைக்கப்படும் இடமாகும்.) பெனிசியத் தானேலும், ஏதோமின் யோபுவும் தொடர்புடையவர்களாகத் தெரிகிறது. இந்த இருவரும் வரலாற்றைச் சேர்ந்த ஆட்களாகத் தெரிகிறது. தானேல் ராஸ்சம்ரா ஏடுகளிலும், யோபு எபிரேய ஞான இலக்கியத்திலும் மக்களுக்கு அறிமுகப்படுத்தப்படுகின்றனர். இருவரும் நீதிமான்களாகவும், ஞானிகளாகவும் விவரிக்கப்படுகின்றனர். ஆனால், தானேல்

தம் ஒரே மகனை இழக்கிறார். யோபு தமது பிள்ளைகளையெல்லாம் இழக்கிறார்.

மேற்காசியப் பழங்கால ஏடுகளை ஆராயும்போது யோபு நூலுக்கு முன்னோடியாக இருந்திருக்கக்கூடிய இலக்கியங்களைக் காண்கிறோம். யோபுவின் கருத்துத் தலைப்பைக் கொண்ட நூல்களை மெசபொத்தாமியாவிலும், எகிப்திலும் காண்கிறோம். ''ஞானத்தின் ஆண்டவரைப் போற்றுவேன்'' (I will praise the Lord of Wisdom) என்று தொடங்கும் பாபிலோனியப்பாடல் யோபு நூலுக்கு மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இஃது ஒரு தனியுரையாகும். பாடலின் தலைவன் பலவாறு துன்புறுகிறான். காரணம் தெரியாது திகைக்கிறான். கடவுள்பால் செய்ய வேண்டியவற்றில் முழுப்பற்றுறுதியாக இருக்கிறான். ஏன் மார்துக்கு என்ற அவனது கடவுள் கோபம் கொள்ள வேண்டும்? இப்பிரச்சனையோடு போராடுகிறான். இறுதியில் மார்துக்கு என்ற அவனது கடவுள் அவனது துன்பங்களிலிருந்து விடுதலை அளிக்கிறார். இந்நூல் கி.மு. 1500 - 1200-ஐ இடையிட்ட காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும். நூலின் ஆசிரியர் நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனையோடு போராடுகிறார். அதற்கு எந்த விடையையும் காணவில்லை. அவர் கூறக்கூடியதெல்லாம், ''கடவுள் தண்டித்தார், அவரே குணமாக்கக்கூடியவர்'' என்பதே. ''பாபிலோனிய இறைப்போதகம்'' (Babylonian Theodicy) என்ற நூலும், யோபுவில் காணப்படுவது போன்று, துன்புறும் ஒருவருக்கும் அவரது நண்பருக்குமிடையே நடக்கும் உரையாடலைக் கொண்டுள்ளது.

கி.மு. 1700-ஐ ஒட்டிய சுமேரிய நாட்டுப் பழங்கால ஏடுகளும் துன்பம் என்ற பிரச்சனையை மையக்கருத்தாகக் கொண்டுள்ளன. இதே காலத்தைச்சேர்ந்த அக்காதிய ஏடுகளிலும் இப்பிரச்சனை சிறப்புப் பெறுவதைக் காணலாம். எகிப்திலும் யோபு நூலைப் போன்ற இலக்கியங்கள் காணப்படுகின்றன. கி.மு. 1800-ஐ ஒட்டிய ''வாழ்வில் சோர்வுகண்ட ஒருவன் - தன் ஆன்மாவோடு உரையாடுதல்'' என்ற பொருளுடைய நூல் (Dispute of a man, weary of life with his soul) ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். எபிரேயக் குலத் தலைவர்கள் எகிப்தில் நாடோடி வாழ்க்கை நடத்திய காலத்தில், இந்நூல் தோன்றியதாகக் கருதப்படுவது கவனிக்கத் தக்கது. இந்நூல் யோபு நூலோடு பல விவரங்களில் ஒத்திருக்கிறது. யோபுவின் கதை போன்ற எடுத்துக்காட்டுகள் கிரேக்க, இத்திய இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

யோபுநூல் பழங்கால மேற்காசிய நூல்களை ஒத்திருப்பதாகத் தோன்றுவதை எவ்வாறு மதிப்பீடு செய்வது? பிறஇன இலக்கியங்களுக்கும் யோபு நூலுக்குமிடையேயுள்ள ஒத்த தன்மை தலைப்புக் கருத்தைப் பொருத்தமட்டும் சரியாகும். ஆனால், இவற்றைத் தழுவியோ, சார்ந்தோ யோபு நூலின் ஆசிரியர் எழுதியதாகத் தெரியவில்லை. யோபு ஆசிரியர் திடீரென்று துன்பம் பற்றிய பிரச்சனையை எழுப்பவில்லை. அவருக்கு வெகு காலத்திற்கு முன்பே பக்தியும் சிந்தனை ஆற்றலுமுடைய ஆசிரியர்கள் யோபுவைப் போல் துன்பப்பட்ட ஒரு நல்லவரின் அனுபவத்தை இலக்கிய வடிவில் எடுத்துக் கூறியுள்ளனர் என்று அறிகிறோம். இவற்றில் சிலவற்றை யோபு நூலின் ஆசிரியர் அறிந்திருக்கலாம். இவை அவருக்கு முன்மாதிரியாக அமைந்திருக்கலாம். எபிரேயப் பாரம்பரியத்திலேயே, குற்றமற்ற யோபு என்ற ஒருவர் துன்புற்ற கதை இருந்ததையும் அவர் அறிந்திருக்க வேண்டும். ஆனால், இந்த நீதிமானின் துன்பம் என்ற அனுபவத்தை எபிரேய விசுவாசச் சூழ்நிலையில் ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார். இறையொருமைக் கொள்கை, இறைவனின் யாவும் கடந்த தன்மை போன்ற இறையியலாலும், ஆழ்ந்த மனப்போராட்டத்தை எடுத்துக்கூறும் இலக்கிய மேன்மையாலும், முன்கூறப்பட்ட பிறஇன நூல்களையெல்லாம் யோபு நூல் விஞ்சுகிறது. பிறஇன இலக்கியங்களில் எதுவும், யோபு நூலில் காணப்படும் இலக்கிய அமைப்பு, உண்மை

யான இறைபக்தி ஆகியவற்றின் கருத்துக் களைவிட உயரவில்லை. இந்நூல்களின் ஆசிரியர்களில் எவரும் உரையாடல் இலக் கிய வடிவத்தை யோபு நூலின் ஆசிரியரைப் போல் மிகச்சிறந்த முறையில் பயன்படுத்த வில்லை.

இஸ்ராயேலின் இலக்கியத் தொகுப்பி லும் இந்நூலில் காணப்படும் உரையாட லுக்கு இணையானது காணப்படவில்லை. இஸ்ராயேல் இலக்கியப் பாரம்பரியத்தில் யோபு நூலுக்கு மிக நெருங்கியவை-சங் *49; 73; 139* போன்ற சங்கீதங்களும் எரேமியாவின் சுயஅனுபவ அறிக்கைகளும் உப எசாயாவுமாகும். இவற்றை ஆசிரியர் நன்கு அறிந்திருக்க வேண்டும். இவற்றால் அவரது சிந்தனைப்போக்கு பெரிதும் பாதிக் கப்பட்டிருக்க வேண்டும். இவற்றை யோபு நூல் பிரதிபலிக்கிறது. முழுநூலும் விவிலி யத்தின் பிற பகுதிகளோடு தொகுக்க முடியாத தனிச்சிறப்புடையது.

**6. நூலின் மூலமொழி:** இந்நூல் முதலில் எந்த மொழியில் தோன்றியது என்பது பற்றிய பல கருத்துக்களைத் தொகுத்துத் தருகிறோம். இந்நூல் ஏதோமோடு தொடர் புடையது. இஃது ஏதோமின் புகழ் பெற்ற ஞானத்தை எதிரொலிக்கிறது. ஆகவே, ஆசிரியர் ஒரு யூதர் அல்லர், ஓர் ஏதோமி யரே என்று சிலர் கூறுவர். இந்நூலும் அம்மொழியில் முதலில் தோன்றியிருக்க வேண்டும். ஏதோம் மொழிபற்றி நாம் அறியக்கூடியது வெகு சிறிதே. இம்மொழி கானானியர் மொழியின் ஒரு திரிபாகும். ஆகவே, மற்றக் கானானியத் திரிபுமொழி களாகிய எபிரேய, அம்மோனிய, மோவா பிய மொழிகளை ஒத்திருக்க வேண்டும். ஏதோம் மொழியைப் பற்றி இன்னும் அதிகமாகத் தெரியும்வரை இக்கருத்துக் களை மதிப்பீடு செய்யக் காத்திருப்பதே நன்று.

மற்றும் சிலர், இந்நூல் முதலில் அரா பிக்கு மொழியில் எழுதப்பட்டுப் பின் எபிரேய மொழியில் மொழி பெயர்க்கப் பட்டது என்பர். இதற்கு ஆதாரமாக, நூலில் காணப்படும் பல சொற்கள் எபிரேய மொழியில் காணப்படாமையால், அவை அராபிக்கு வடிவில் விளக்கப்படுவதைச் சுட்டிக்காட்டுவர். இதையே மற்றும் சில விவிலிய நூல்களுக்கும் உகாரித்து வாசகங்க ளுக்கும் கூறலாம். இந்தக் கருதுகோளுக்கு மொழியியல் சான்றுகள் போதிய அளவு இல்லை.

இந்நூலில் அரமேயிக்குப் பண்புகள் அதி கம் காணப்படுகின்றன. யாப்பு இணை யமைப்பில், எபிரேய அரமேயிக்குச் சொற் கள், அருகருகே, ஒரு பொருள் பல சொல்லாக அடிக்கடி காணப்படுகின்றன. இந்த அரமேயிக்குக் கலப்பு, விவிலியத்தின் மற்ற நூல்களை விட யோபு நூலில்தான் அதிகம் காணப்படுகின்றது. இது அரமே யிக்கிலிருந்து பாதியளவில் மொழி பெயர்க்கப்பட்ட நூலாகும் இந்நூல் என்று கூற, சிலரைத் தூண்டியுள்ளது. இந்த மொழி பெயர்ப்பாளர், வேண்டிய அளவு மட்டும் மாற்றியமைத்து அரமேயிக்குப் பாடல் எபிரேயம் பேசும் மக்களுக்குக் கிடைக்கச் செய்துள்ளார் என்பர். இவ்வாறு மூல அரமேயிக்குப் பண்புகள் சொற்றொகு தியிலும், இலக்கண அமைப்புகளிலும், ஓசைக்கூறுகளிலும் காணப்படுகின்றன. அர மேயிக்கு மூலத்தை எழுதியவர் பாபிலோ னைச் சேர்ந்த கி.மு. 6-ஆம் நூற்றாண்டுக்கு முந்திய ஒரு யூதராய் இருக்க வேண்டும். இவர் நாடு கடத்தப்பட்ட காலத்திய தொடக்கத்தில் ஒரு பழங்கதையை அடிப் படையாகக் கொண்டு இந்நூலை எழுதி யிருக்க வேண்டும். இதைச் சில தலை முறைகளுக்குப் பின், பாலஸ்தீனத்தைச் சேர்ந்த ஒரு யூதர் வேண்டிய திருத்தங்கள் செய்து பதிப்பித்திருக்க வேண்டும் என்பர். ஆனால், இந்தக் கருதுகோள் போதிய நிறைவைக் கொடுக்கவில்லை. ஆகவே, இதையும் ஆய்வாளர்கள் ஏற்பதில்லை. ஆனால், இந்நூலில் காணப்படும் அரமே யிக்குப் பாதிப்பை ஏற்றுக்கொள்வர்.

இந்நிலையில், இந்நூலின் மூலமொழி எபிரேயம் என்றும், அம்மொழியில் உள்ள வாசகத்தை ஏற்றுக்கொள்வதும் சரியானதா

கும். இந்த மூல மொழிப்பிரச்சனை பற்றி ஆய்வாளர்கள் ஒரு நிலையான நிறைவான முடிவுக்கு வரும்வரை காத்திருப்போம். ஆனால், இப்படிப்பட்ட பிரச்சனை ஒன்று உளது என்பதை அறிந்திருப்பது நன்று.

**7. இலக்கியச் சிறப்பு:** இந்நூல் விவிலிய இலக்கியங்களுள் மிகச்சிறந்தவற்றின் ஒன்றாகும். இந்நூலின் ஆசிரியர் மிகப்பெரிய கவிஞர்களில் ஒருவராகப் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுவார். நூலின் மையக் கருத்து, அதை ஆசிரியர் எடுத்துக்கூறும் முறை, அவரது காவியச்சிறப்பு, மொழி நடை ஆகியவை காலந்தோறும் பலரைக் கவர்ந்துள்ளன, சிந்திக்கச் செய்துள்ளன.

இந்நூல் ஒரு போதகநூல். மிகக்கொடிய துன்பங்கூட முன்பாவத்தின் விளைவாக இருக்க வேண்டியதில்லை என்பதை நூல் நிறுவுகிறது. நிலையான பொறுமை, இறைவனது திருவுளத்துக்குப்பணிவு, இறுதியிலாவது அதற்கு அமைந்து நடப்பது ஆகிய உண்மையான இறைபக்தியை எடுத்துக் கூறுகிறது. இது கிறிஸ்தவர்களை வெகுவாகக் கவர்ந்துள்ளது. இவர்கள், யாக்கோபின் திருமுகத்தைப் பின்பற்றி *(யாக் 5:1)* காலந்தோறும் யோபுவின் பொறுமையைச் சிறப்பித்துக் கூறியுள்ளனர்.

இந்நூல் ஒரு நாடகமாகும் என்று சிலர் கூறியுள்ளனர். சிலர் இதை மறுத்துக் கூறியுள்ளனர். நாடகம் என்றவுடன் மேடையையும் புறநடிப்பு இயக்கத்தையும் நாம் எதிர்பார்க்கலாம். நாம் சாதாரணமாய் எடுத்துக்கொள்ளும் நாடகம் என்பதன் குறுகிய பொருளில் இந்நூல் நாடகமாகாது. அதன் பரந்த பொருளில் இந்நூல் ஒரு உளவியல் நாடகமாகும். இது நடித்துப் பார்க்கும் நாடகமன்று. படித்துச் சிந்திக்கச் செய்யும் நாடகமாகும். இதிலே தொடக்கம், நடுப்பகுதி, முடிவு ஆகியவை உண்டு. இதிலே உள்ளார்ந்த இயக்கம் இருக்கிறது. நாடகத்தில் பங்கெடுப்போரின் குணவியல்பில் வளர்ச்சியுண்டு. முன்னுரை மேடை அமைக்கிறது.யோபுவின் தனிப்புலம்பலோடு நாடகம் தொடங்குகிறது. பின், உரையாடல் வழியாகப் போராட்டம் வளர்ந்து, யோபுவின் இறுதிப்பேச்சில் உச்ச நிலையை நோக்கி இயங்குகிறது. இறைவனது தோற்றத்திலும் பேச்சிலும் உச்ச நிலை அடைகிறது.போராட்ட விடுவிப்பு யோபுவை மனம் வருந்தி இறைவனைச் சரண் அடைந்தவராகவும், நண்பர்களைக் குற்றஞ்சாட்டப்பட்டவர்களாகவும் காட்டுகிறது. முடிவுரை நாடகத்தை முடிவுக்குக் கொண்டு வருகிறது. இந்த நாடகத்தில் போராட்டம், உச்சநிலை, முடிவுரை ஆகியவை உண்டு. நாடக இயக்கம் புறநடிப்பில் இல்லை. மாறாக, நடிகர்களின் பேச்சுக்களில், அவர்களின் மனஉணர்ச்சி வெளிப்பாட்டில் வளர்கிறது. ஆசிரியர் தமது கருத்துக்களைக் கூற யோபுவையும், நண்பர்களை எதிர்கட்சியாளர்களாகவும் பயன்படுத்தியுள்ளார். இது துன்பம் என்னும் பிரச்சனை பற்றிய இந்த உளவியல் நாடகத்திற்குக் கூர்மையையும் பல்சுவையையும் அளிக்கிறது. நூலின் மையமான உரையாடலில் போதிய அளவு உள்ளார்ந்த நடிப்பு உள்ளது. இந்த அடிப்படையில் இந்நூலை ஓர் உளவியல் நாடகம் எனலாம்.

இந்நூல் ஒரு பெரிய காவியமாகும். இதில் குறுகிய உரைநடைப்பகுதிகளும் நீண்ட பாடல் பகுதிகளும் உண்டு. இவை நூலின் காவியப்பண்புகளையும், அதற்குரிய ஆசிரியச் சுதந்தரத்தையும் காட்டுகின்றன. முன்னுரையிலும், முடிவுரையிலும் நிறைவைக் குறிக்கும் எண்கள், முன்னுரையில் வரும் வானகக் காட்சிகள், உரையாடல்கள், யோபுவுக்கு அவருடைய உடைமைகளின் அழிவுபற்றிய செய்தியைத் தூதர்கள் கொண்டுவரும் முறை, உரையாடலில் பங்கு பெறுவோரின் குணவியல்புகளைச் சித்திரிக்கும் முறை, உரையாடலின் முடிவில் சுழல்காற்றிலிருந்து வெளிப்படும் இறை மகிமைத் தோற்றம், நூலில் காணப்படும் சொற்றொகுதிகள், நடை - இவை யாவும் நூலின் காவியச்சிறப்பையும் ஆசிரியர் காட்டியிருக்கும் கவிஞனுக்குரிய இலக்கியச் சுதந்தரத்தையும் எடுத்துக் காட்டுகின்றன.

இந்நூல் ஒரு போதகநூல், நாடகநூல், காவிய்நூல் என்று கூறப்படுவனவற்றில் எதுவும் தனியாகவோ, எல்லாம் சேர்ந்தோ, — இந்நூலின் தன்மையை விளக்கவில்லை. இந்நூல் ஒரு தனிவகையானது, தனிச்சிறப்புடையது. இதையொத்த நூல் விவிலியத்தில் வேறு இல்லை.

இனி, நூலில் காணப்படும் சில இலக்கிய வடிவங்களைப் பார்ப்போம். நூலின் பாடல் பகுதியில் பாதிக்கு மேல் போற்றுரைப்பாடல் மற்றும் புலம்பல் வடிவங்களைக் கொண்டுள்ளது. யோபுவின் பேச்சுக்களில் பல அழகிய போற்றுரைப் பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றிற்குச் சில சான்றுகள் - *9:4-12; 12:13-25; 26:5-14.* நண்பர்களின் பேச்சிலும் சில போற்றுரைப் பாடல் துணுக்குகளைக் காணலாம். அவற்றில் சில: *5:9-16; 11:7-11; 25:2-6; 34:18-30.* யோபு நூலுக்கும் சங் 104-க்கும் குறிப்பிடத்தக்க தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது. சங். *104:6-9*-ஐ,யோபு *38:8-11*-ஓடும், சங் *104:21-27*-ஐ, யோபு *38:39-41*-ஓடும், சங் *104:30*-ஐ, யோபு *12-10*-ஓடும், சங் *104:32*-ஐ யோபு *9:5; 26:11*-ஓடும் ஒப்பிடுக. சங் 104 சூரியனுக்குப் பாடப்பட்ட எகிப்தியப் பாடலால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. இப்பாடல் மேற்காசியப் பகுதிகளில் பலரால் அறியப்பட்டிருக்க வேண்டும்.

யோபுவின் உரைகளில் பெரும்பகுதி புலம்பல் வடிவத்தில் உள்ளன. *3:3-24; 6:2-7; 9:25-10:22; 13:23-14:22; 16:6-17:9; 19:7-20:23; 29:1-31:37.* இப்புலம்பல் வடிவம் வெறும் பேச்சு யுக்தியன்று. ஒருவர் தனது துன்பத்தின் கொடுமையை எடுத்துக் கூறி, இறைவனது இரக்கத்தை எழச்செய்து, தமக்கு விடுதலை அளிக்கும்படி மன்றாடுதலாகும். இது பாடல் வடிவிலுள்ள குணமாக்குதல் வழிபாடாகும். இவ்வடிவம் மெசபொத்தாமிய இலக்கியங்களில் அதிகம் காணப்படுகிறது. இவ்வடிவத்தை யோபு நூல் ஆசிரியர் நிறைவாகப் பயன்படுத்தியுள்ளார். இப்புலம்பல்களுக்கு ஒத்த சங் *22:12-19; 38; 88* ஆகிய சங்கீதங்களைக் காண்க.

பழைய ஏற்பாட்டில் உரையாடல்களுக்குப் பல முன்மாதிரிகைகள் உண்டு. அவற்றில் சில: ஆதி *18:22-32; 23:3-16;* யாத் *3:2-4:17;* எசா *6;* எரே *1:1-10;* ஆமோ *7:1-9; 8:1-3.* இவற்றைப் பின்பற்றி ஆசிரியர் தமது உரையாடலை அமைக்கிறார். பழைய ஏற்பாட்டில் காணப்படும் எந்த மாதிரிகையையும் கடந்து சென்று, யோபு நூல் ஆசிரியர் ஒரு கருத்தை மையமாகக் கொண்டு தமது உரையாடலை அமைத்துச் சிறப்புப் பெறுகிறார்.

நூலில் இங்குமங்குமாகப் பல முதுமொழிகள் காணப்படுகின்றன. அவற்றில் சில: *4:8-11; 5:1-7; 8:11-19; 11:12; 12:11-12; 14:1-2; 15:17-35.*

நல்ல சமாரியனைப்போல், யோபுவும் உலகின் பொதுச்சொத்தாக ஆகிவிட்டார் எனலாம். இது வரலாற்றைச் சேர்ந்தவர் யோபு என்று கருதச் செய்துள்ளது. இஃது இந்நூலின் சிறப்பைக் காட்டவல்லது. யோபு என்ற ஒருவர் வாழ்ந்திருக்கக்கூடும் என்பதற்கு எசே *14:12-20* என்ற பகுதி ஆதரவு அளிக்கிறது என்பர் சிலர். இக்கூற்றில் பெருவெள்ளக்கதையின் தலைவரான நோவாவோடும், கி.மு. 1400-க்கு முன் வாழ்ந்ததாக உகாரித்துப் பழங்கதையில் வரும் அரசனான தானேலோடும் யோபு சமமாகக் கருதப்படுகிறார். ஆனால், ஆசிரியர் யோபுவின் கதையை ஒரு கதையாகவே கூறுகிறார். துன்புறும் நீதிமானுக்கு எடுத்துக்காட்டாக யோபுவின், கதையைச் சித்திரிக்கிறார் என்பது நூலின் அமைப்பிலும் தொனியிலும் வெளிப்படுகிறது.

இந்நூல் வாசிப்பதற்கு அவ்வளவு எளிதானதன்று. அதே கருத்துக்கள் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்படுவதால், நூல் சிறிது அயர்ச்சி தரக்கூடியது. மேலெழுந்தவாரியாக வாசிப்பவர்களைக் கவராது, சிந்திக்கத் தூண்டாது. நூலின் ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட பிரச்சனையை மேலெழுந்தவாரியாக எடுத்துக் கூறவில்லை. அம்முறையை வெறுத்து ஒதுக்கினார். பிரச்சனைக்கு எளிதான விடை காணுதலைத்

தவிர்த்தார். ஆகவே நாமும் ஆசிரியரோடு சேர்ந்து நூலைக் கவனமாய்ப் படிக்கவேண்டும். ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அப்போதுதான் இந்நூலில் புதைந்து மறைந்து கிடக்கும் புதையலைக் கண்டெடுத்துப் பயன்பெற முடியும்.

**8. மூலவாசகமும் மொழிபெயர்ப்புகளும்:** நூலின் மூல எபிரேய வாசகம் பெரிதும் பழுது பட்டிருக்கிறது; நன்றாகப் பாதுகாக்கப்படவில்லை; இதைத் திருத்துவதற்குப் போதிய பிறமூலங்கள் கிடைக்கவில்லை. விவிலியத்தில் வேறெங்கும் காணப்படாத பல சொற்கள் இந்நூலில் காணப்படுகின்றன. இவற்றில் பலவற்றை அக்காதிய, அரமேயிக்கு, அராபிக்கு மொழிகளின் உதவியைக் கொண்டு மட்டும்தான் விளக்கமுடியும். மேலும், எபிரேய வாசகம் பல தவறான, தெளிவில்லாத, புதிரான வசனங்களைக் கொண்டுள்ளது. தலைமுறை தலைமுறையாக இது மரபுவழி ஒப்பிடப்படுவதையும் மொழிபெயர்ப்புக்களையும் வெகுவாகப்பாதித்துள்ளது. பலர் எபிரேய வாசகத்தைத் திருத்த முயன்றுள்ளனர். அவர்களிடமிருந்து நூலின் மூன்றில் ஒரு பகுதியே தப்பியுள்ளது.

மொழிபெயர்ப்புக்களில் முதலில் வருவது - கிரேக்க மொழிபெயர்ப்பாகிய ''எழுபது நூல்''—வாசகமாகும். கிரேக்க வாசகம், எபிரேய வாசகத்தைவிட, ஏறக்குறைய 400 வசனங்களை, அதாவது நான்கில் ஒரு பகுதியைக் குறைவாகக் கொண்டுள்ளது. இஃது எப்படி நிகழ்ந்தது என்று தெரியவில்லை. இதிலிருந்து கிரேக்க வாசகம், இப்போதுள்ள எபிரேய வாசகத்தைவிட காலத்தால் முந்தியது என்று சிலர் கருதியுள்ளனர். இக்கருத்துக்குப் போதிய சான்றுகள் இல்லை. கிரேக்க வாசகத்தில் விடப்பட்டுள்ளவை நூலைப் புரிந்து கொள்ள எவ்விதத்திலும் உதவவில்லை; மாறாக, வாசகத்தைக் கடினமாக்கியுள்ளது. பல இடங்களில் பிரமாணிக்கமான மொழிபெயர்ப்பாக இருப்பதற்குப் பதிலாக சுருக்கமாகவோ, பொழிப்புரையாகவோ உள்ளது. இவ்விதம், ஏற்கெனவே கடினமான அல்லது தெளிவில்லாப் பகுதிகள் கிரேக்கத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சிலரது கருத்துப்படி, அலக்சாந்திரியாவைச் சேர்ந்த ஒரு யூதர் பொது மக்களுக்காகச் சுதந்தரமாக மொழிபெயர்த்தார். பிற்காலத்தில் தியோடேசியன் என்பவர் எபிரேயத்திலிருந்து முழுநூலையும் கிரேக்கத்தில் மொழி பெயர்த்தார். ஓரிசன், எழுபது நூலின் குறுகிய வாசகத்தில் காணப்படாத வசனங்களைத் தியோடேசியன் மொழிபெயர்ப்பிலிருந்து எடுத்து, எழுபதுநூல் வாசகத்தில் அடையாளக் குறிப்புடன் சேர்த்துப் பதிப்பித்தார். ஆகவே, எழுபது நூல் வாசகத்தைப் பயன்படுத்தும்போது எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆனால், சில இடங்களில் மூல எபிரேய வாசகத்தைத் திருத்த கிரேக்க மொழிபெயர்ப்பு உதவியுள்ளது என்பதை மறுக்க முடியாது.

வுல்கத்தா இலத்தீன் மொழி வாசகம், கி.பி. 4-ஆம் நூற்றாண்டின் இறுதியில் புனித எரோனிமுவால், அவர் காலத்தில் வழக்கிலிருந்த எபிரேய மூலவாசகத்திலிருந்து நேரடியாக மொழி பெயர்க்கப்பட்டது. முடிந்த மட்டும் எபிரேய வாசகத்திற்குப் பிரமாணிக்கமாய் இருக்க முயன்றுள்ளார். கடினமான பகுதிகளில், சிலவற்றைப் பிரமாணிக்கமாகவும், மற்றவற்றைப் பொருளை அடிப்படையாகக் கொண்டு சுதந்தரமாகவும் மொழி பெயர்த்துள்ளார். எழுபது நூல் வாசகத்தையும் அறிந்திருந்தார். இதை இவரே இலத்தீன் மொழியில் மொழி பெயர்த்துள்ளார். எழுபதுநூல் வாசகத்தாலும் வுல்கத்தா வாசகம் பாதிக்கப்பட்டுள்ளது. வுல்கத்தா வாசகத்தில் காணப்படும் சந்தமும் மொழிநயமும் யோபு நூலின் பழங்கால மொழிபெயர்ப்புகளில் இதைச் சிறந்ததாகக் காட்டுகின்றன. யோபு நூலின் வாசக ஆய்வில் வுல்கத்தா வாசகம் உதவியுள்ளது. ஆனால், இதை மிக எச்சரிக்கையாகப் பயன்படுத்த வேண்டும். தமிழ்க் கத்தோலிக்கரிடையே பயன்படும் தமிழ் வாசகம் வுல்கத்தா வாசகத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இது 1980-இல் திருத்தப்பட்டு நம்மிடையே பழக்கத்தில் உள்ளது.

**9. திட்டம்:**

யோபு நூலில் கவனமாய் அமைக்கப் பட்ட இலக்கியத்திட்டம் உள்ளது.

I. *முன்னுரை (1: 1-2: 13).*

*1) 1:1-5* : யோபுவைப் பற்றிய விவரிப்பு.

*2) 1:6-12* : வானுலகில் முதற் காட்சி.

*3) 1:13-22* : யோபு தன் உடைமைகளை இழத்தல்.

*4) 2:1-6* : வானுலகில் இரண்டாம் காட்சி.

*5) 2:7-10* : யோபுவின் உடல் வேதனை.

*6) 2:11-13* : அவரது நண்பர்கள் அறிமுகப் படுத்தப்படுகின்றனர்.

II. உரையாடல் *(3:1-31:40).*

அ. உரையாடலின் முதற்சுழல் *(3:1-14:22).*

*1) 3:2-26* : யோபுவின் தனியுரை.

*2) 4:1-5:27* : எலீப்பாசின் முதல் உரை.

*3) 6:1-7:21* : யோபுவின் முதல் பதிலுரை.

*4) 8:1-22* : பில்தாத்தின் முதல் பதில் உரை.

*5) 9:1-10:22* : யோபுவின் இரண்டாம் பதிலுரை.

*6) 11:1-20* : சோப்பாரின் முதல் உரை.

*7) 12:1-14:22* : யோபுவின் மூன்றாம் பதிலுரை.

ஆ) உரையாடலின் இரண்டாம் சுழல் *(15:1-21:34).*

*1) 15:1-35* : எலீப்பாசின் இரண்டாம் உரை.

*2) 16:1-17:16* : யோபுவின் நான்காவது பதில் உரை.

*3) 18:1-21* : பில்தாத்தின் இரண்டாம் உரை.

*4) 19:1-29* : யோபுவின் ஐந்தாம் பதிலுரை.

*5) 20:1-29* : சோப்பாரின் இரண்டாம் உரை.

*6) 21:1-34* : யோபுவின் ஆறாவது பதிலுரை.

இ) உரையாடலின் மூன்றாம் சுழல் *(22:1-31:37).*

*1) 22:1-30* : எலீப்பாசின் மூன்றாவது உரை.

*2) 23:1-24:25* : யோபுவின் ஏழாவது பதிலுரை.

*3) 25:1-6* : பில்தாத்தின் மூன்றாம் உரை.

*4) 26:1-27:23* : யோபுவின் எட்டாவது பதிலுரை.

III ஞானத்தைப் பற்றிய ஒரு போற்றுரை *(28:1-20).* ஓர் இடைச் செருகல்.

IV உரையாடலின் முடிவு *(29:1:31-40).* யோபுவின் புலம்பலும், தனி இறுதியுரையும்.

V எலிகூவின் உரைகள் *(32:1-37:24).*

*1) 32:1-22* : அறிமுகமும், எலிகூவின் முன்னுரைப் பேச்சும்.

*2) 33:1-30* : எலிகூவின் முதல் பேச்சு.

*3) 34:1-37* : அவரது இரண்டாம் பேச்சு.

*4) 35:1-16* : அவரது மூன்றாம் பேச்சு.

*5) 36:1-37:24* : அவரது நான்காம் பேச்சு.

VI இறைவனின் தோற்றமும், யோபுவின் பதிலும் *(38:1-42:6).*

*1) 38:1-39:35* : இறைவனது முதல் பேச்சும், யோபுவின் பதிலும்.

*2) 40:1-42:6* : இறைவனது இரண்டாம் பேச்சும், யோபுவின் பதிலும்.

VII முடிவுரை *(42:7-16)*.

*1) 42:7-9* : நண்பர்களை இறைவன் கண்டித்தலும், அவர்களுக்காக யோபு மன்றாடுதலும்.

*2) 42:10-16* : யோபு செல்வச் சிறப்புகளை மீண்டும் பெறுகிறார்.

***10. நூலின் ஒருங்கமைவும் உண்மைத்தன்மையும்:*** இந்நூல் பற்றிய பகுப்பாய்வு நூலின் ஒருங்கமைப்பையும், உண்மைத்தன்மையையும் பற்றிப் பல ஐயங்களை எழுப்ப வல்லது. அப்படிப்பட்ட பகுதிகள்: உரை நடைப் பகுதிகள் *(அதி.1-2; 42:7-16)*, மூன்றாவது சுழற்பேச்சுக்கள் *(அதி.24-27)*, ஞானத்தைப் போற்றும் பாடல் *(அதி.28)*, எலிகூவின் பேச்சுக்கள் *(அதி.32-37)*, இறைவனின் பேச்சுக்கள் *(38:1-42:6)* ஆகியவையாகும். இப்பகுதிகள் மூலநூலைச் சேராதவை என்று ஆய்வாளர் சிலர் கூறுவர். இவர்களது கருத்துக்களை ஏற்றுக் கொண்டால், ஒரு சிறிய பகுதியே மூலநூலாக மிஞ்சும். இக்கருத்துக்கள் பெரும்பாலும், பல்வேறு முறைகளில் தோன்றிய பகுதிகளின் தொகுப்பாகும் இந்நூல் என்று கருதுவோரின் ஆய்வுகளாகும்.

இதற்கு மாறாக, ஏறக்குறைய நூல் முழுவதையுமே ஒரே ஆசிரியர் இயற்றினார் என்றும், இந்நூலில் ஒற்றுமையுண்டு என்றும் கருதுவர் வேறுபலர். இவர்கள், நூலின் ஆசிரியர் ஒரே கட்டத்தில் நூல் முழுவதையும் இயற்றவில்லை; பல கட்டங்களில் இயற்றி, ஒன்றிணைத்து, ஒரு குறிப்பிட்ட திட்டத்துடன் நூலுக்கு இறுதி வடிவம் கொடுத்தார் என்று கருதுவர். இவர்கள் நூலில் ஒருங்கமைப்பையும், இலக்கியக் கலைப் பண்பையும் காண்கின்றனர். இக் கருத்துக்கு எதிராக அமைந்திருப்பவை நூலில் காணப்படும் மிக உயர்ந்த தரமுடைய இலக்கியப் பண்பும், கருத்தோட்டத்தில் காணப்படும் ஒற்றுமையும் ஆகும். இவை தற்செயலாகச் சேர்க்கப்பட்ட தொகுப்பில் உண்டாவதில்லை.

இப்படிப்பட்ட ஆய்வுகளில் இறங்கும் போது நாம் மனதில் கொள்ள வேண்டியது ஒன்றுள்ளது. யோபுவின் குறிப்பிட்ட சூழ்நிலையை அடிப்படையாகக் கொண்டு சில பகுதிகள் மூலநூலைச் சேராதவை என்று கூறுவது சரியான முறையன்று. இதில் நாம் மிகவும் கவனமாய் இருக்க வேண்டும். யோபுவின் குறிப்பிட்ட சூழ்நிலையைச் சேராத, ஆனால் அதை ஒட்டிய கருத்துக்களைக் கூற கவிஞனுக்குச் சுதந்தரம் உண்டு. அவற்றைப் பொதுக் கருத்தாக ஆசிரியர் கூறலாம்.

இந்நூல் வெறும் பேச்சுக்களை மட்டும் கொண்டிருக்கவில்லை. இதில் செயலும் உண்டு. இதுவும் நூலின் உண்மைத் தன்மையைச் சேர்ந்ததாகும். இதை நாம் மனதில் கொள்ள வேண்டும். உரைநடைப் பகுதிகள் நூலின் ஒன்றிணைந்த பகுதிகளாகும். இதை, ஆசிரியர், ஏற்கெனவேயிருந்த பொதுப்பாணிக் கதையிலிருந்து எடுத்து, மாற்றம் செய்தோ, செய்யாமலோ பயன்படுத்தியிருக்கலாம். ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட பிரச்சனையை இருமட்டத்தில் விடுவிக்க முயல்கிறார். அப்பிரச்சனையை, உரைநடைப் பகுதிகளில் புறமட்டத்திலும், உரையாடலில் உள்ளார்ந்த மட்டத்திலும் விடுவிக்க முயல்கிறார். உரைநடைப் பகுதிகள் மூலநூலைச் சேர்ந்தவை, உண்மைத் தன்மை உடையவை என்று ஏற்றுக்கொள்வது நன்று. உரையாடல் பகுதி மூலநூலைச் சேர்ந்ததே என்று பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும்.

இறைவனது பேச்சுக்கும் யோபுவின் பதிலுக்கும் இவ்வாறே கூறலாம். இதுவும் மூலநூலைச் சேர்ந்ததே. இஃது இல்லாமல், முடிவுரையோடு தொடர்பு இல்லை. இறை மகிமைத் தோற்றத்திலும் இறைவனது பேச்சிலும், இறைவன் எல்லா மனித அறிவுக்கும் அளவு கடந்த முறையில் அப்பாற்பட்டவர் என்று கண்டுணர்ந்த யோபு தமது முறையீட்டைத் திரும்பப் பெறுகிறார்; மனம் வருந்துகிறார்; மனந்திரும்புகிறார். யோபுவின் நிலை சரியானதென்று இறைவன் ஏற்றுக்கொள்கிறார். இறைவனை அவ

ருள்ளபடியே யோபு ஏற்றுக்கொள்கிறார். இது யோபுவின் திருப்பத்திற்கும் முடிவுரை நிகழ்ச்சிகளுக்கும் இட்டுச் செல்கிறது. சிலர் இறைவனது பேச்சை *40:1-4* என்ற பகுதிக்கு மட்டும் குறைக்க முயன்றுள்ளனர். அப்படி யானால் இவ்வுரை மிகக் குறுகியதாகும். யோபு, நண்பர்கள் ஆகியோரின் நீண்ட உரைகளுக்குப்பின், இக்குறுகிய உரை, அஃது இறைவனிடமே இருந்து வந்தாலும், எப்படி யோபுவைப் பணிய வைக்கிறது என்று புரிந்து கொள்வது கடினம். இப் பேச்சு, ஆற்றலுள்ள விளைவை உண்டாக்க *38:1-40:9; 42:1-6* ஆகிய பகுதிகளையாவது அல்லது அவற்றில் காணப்படும் கருத்துக் களையாவது கொண்டிருக்க வேண்டும் என்று கூறுவாரும் உளர். விலங்குகள் பற்றிய விவரிப்பு *(40:10-41:23)* பிற்காலச் சேர்க்கையாக இருக்கலாம். இறைவ னுடைய இரு பேச்சுக்கள், ஒரே உரையின் இரு பகுதிகளாக இருக்கலாம், அல்லது இறைவனுடைய உரைபற்றிய இரு பாரம் பரியங்கள், பிற்காலத்தில், அருகருகே ஒன்று சேர்க்கப்பட்டிருக்கலாம். இறைவ னுடைய உரையும் யோபுவின் பணிவும் மூலநூலைச் சேர்ந்தவை, உண்மைத்தன்மை உடையவை என்று ஏற்றுக்கொள்வது மேல்.

எலிகூவின் உரை *(அதி.32-37)*, ஞானம் பற்றிய போற்றுரைப்பாடல் *(அதி. 28)* ஆகியவை மூலநூலைச் சேர்ந்தவையல்ல என்று இப்போது பொதுவாக ஆய்வாளர் கள் ஏற்றுக்கொள்வர். மூன்றாவது சுழற் பேச்சுக்கள் இப்போதுள்ள வாசக நிலையில் சரியான அமைப்பைக் கொண்டிருக்க வில்லை என்பதும் ஏற்றுக் கொள்ளப்படும். நூலின் மற்றப் பகுதிகளாகிய உரைநடைப் பகுதிகள், உரையாடல் பகுதிகள், இறை வனது பேச்சு ஆகியவை மூலநூலைச் சேர்ந்தவை என்று ஏற்றுக்கொள்ளப்படும். இவை யாவும் ஒரே ஆசிரியரால் இயற்றப் பட்டவை என்று கொள்வது மேல். இவை, பிற்காலச் சேர்க்கைகளோடு சேர்ந்து நூலுக்கு இப்போதுள்ள வடிவத்தைக் கொடுக்கின்றன. பிற்காலச் சேர்க்கைகளும் மூலத்திட்டத்திற்கு ஏற்றவாறு திறமை யோடும், கலைப் பண்போடும் சேர்க்கப் பட்டுள்ளன.

### 11. முக்கிய கருத்துக்கள்

***1) இறைவனது பெயர்கள்:*** நூலின் பின்னணி ஏதோம் நாட்டைச் சேர்ந்ததா யினும், யோபுவும் அவரது நண்பர்களும் இஸ்ராயேல் பாரம்பரியத்தைச் சேர்ந்தவர் களாகவே பேசுகின்றனர். ஆகவே, இந்த அன்னியப் பின்னணி ஓர் இலக்கிய யுக்தி யாக இருக்கலாம் என்று சிலர் கருதுவர்.

இந்நூலில் இறைவனைக் குறிக்கப் பயன் படும் பெயர்கள் கவனிக்கத்தக்கன. முன் னுரையிலும் முடிவுரையிலும் இறைவன், ''யாவே'' (ஆண்டவர்) என்ற பெயரால் குறிக்கப்படுகிறார். ஆனால், முன்னுரையில் வரும் உரையாடலில் பங்குகொள்வோர் யாவரும் இறைவனைக் கடவுள் என்று பொருள்படும் ''எலோயீம்'' என்ற பொதுப் பெயரால் குறிக்கின்றனர் *(1:8; 2:3)*. இதற்கு ஒரே ஒரு விதிவிலக்கு *1:21*-இல், யோபு ஆண்டவர் என்று பொருள்படும் யாவே என்ற பெயரை மும்முறை பயன்படுத்து தலாகும்.

இதற்கு மாறாக, உரையாடல் பாடல் பகுதியில் யாவே என்ற பெயர் ஒரே ஒரு தரம், அஃதும் ஓர் எடுத்துக்காட்டு வசனத் தில் வருகிறது *(12:9)*. ''எலோயீம்'' என்ற பொதுப் பெயரும் ஒருதடவை பயன்படு கிறது. மற்றப்படி ''ஏல்'' (இறைவன்), ''எலோவா'' (என்றும் உள்ளவர்), ''ஏல்ஷ டாய்'' (எல்லாம் வல்லவர்) போன்ற மிகப்பழங்காலப் பெயர்கள் ஒரே சீராகப் பயன்படுகின்றன.

யாத் *6:2-3*- இலிருந்து, இந்த ஐந்து பெயர்களும் ஒரே ஓர் இறைவனையே குறிக்கின்றன என்று காட்டலாம். இவை இறையொருமைக் கோட்பாட்டை நிறுவு கின்றன. ஆனால், இஸ்ராயேலைச் சேராத நிலையை எடுத்துக் கூறுகின்றன. யோபு வும் அவரது நண்பர்களும் ''உண்மையான விசுவாசிகள்''; ஆனால், இஸ்ராயேலோடு இறைவன் செய்த உடன்படிக்கைக்குப்

புறம்பானவர்களாகத் தோன்றுகின்றனர். அவர்கள் பொது மனுகுலத்தின் பெயரால் பேசுகின்றனர். இறைவனுக்கும் அவர்களுக்கு மிடையே உள்ள உறவு, அவர்கள் இறைவ னால் படைக்கப்பட்டவர்கள் என்பதை அடிப்படையாகக் கொண்டது. அவர்கள் இவ்வாழ்வில் தனி நபருடைய நலத்தைத் தவிர வேறு மீட்பை எதிர்பார்க்கவில்லை. யோபு மட்டுமே இறைவனோடு நெருக்க மான, நிலையான உறவைத் தேடுகிறார். இவ்வுறவு கொடைகள் பரிமாற்றத்தை அடிப்படையாகக் கொண்டதன்று; அன்பை அடிப்படையாகக் கொண்டது. யோபு இவ் விறைவனைத் தேடும் முயற்சியில் பெரு மளவு வெற்றி பெறுகிறார்.

இந்த இறைவனே ஒரே ஓர் உண்மை யான இறைவன், எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர், யாவற்றின் மேலும் மேலாண்மையுடைய ஆண்டவர். உரை யாடலில் இவரைப் பற்றிய மிக உன்னத விவரிப்புகளும் போற்றுரைகளுமுண்டு. இவை ஓர் உண்மையான இஸ்ராயேலனிட மிருந்தே வரக்கூடியன. இவை இஸ்ராயேல் பாரம்பரியத்தில் மூழ்கிப்போன ஓர் உண் மையான எபிரேயனின் படைப்பாகும் (5:8-18; 9:2-24; 11:7-9; 12:13-25; 26:5-14). இவை யோபுவை ஆழமாய்ப் பாதித்தன. (39:31-35; 42:1-6). யோபுவுக்கும் நண்பர் களுக்குமிடையே நடக்கும் உரையாடலில் வரும் இறைவனின் யாவும் அறியும், எல்லாம் வல்ல பண்புகளைப் பற்றிய காட்சிகள், அவற்றைப் போதியமட்டும் விவரிக்கவில்லை. இக்காட்சிகள் அதி.25-26; 36:22-37-இல் வளர்ச்சியுறுகின் றன. சுழல் காற்றிலிருந்து வெளிப்படும் இறை மகிமைத் தோற்றத்திலும், பேச் சிலும் உச்ச நிலை அடைகின்றன. எல்லாம் கடந்த இறைவனை, அதே சமயம் மனிதர் களிடையே தங்கும், அவர்கள் காரியங் களில் ஈடுபடும் இறைவனை யோபு காண்கிறார். ''இப்போதோ உம்மை என் கண்கள் கண்டுகொண்டன'' (42:5).

தன்னேரில்லா இறைவன் பற்றிய கருத்து நூல் முழுவதும் காணப்படுகிறது (5:9; 9:10; 37:5). அவரே யாவற்றையும் படைத்தவர்; யாவற்றிற்கும் ஆண்டவர் (12:13); அணுக முடியாதவர் (23:8-9); மனிதக் கணிப்புக் கெல்லாம் அப்பாற்பட்டவர் (11:8-9). இறைவனது திருவுளம் எல்லாம் வல்லது. அவர் தாம் விரும்பியதைச் செய்கிறார் (9:12; 11:10; 23:13-14). துன்பம், மகிழ்ச்சி, காயப்படுத்துதல், குணமாக்குதல் ஆகிய யாவும் அவரிடமிருந்து வருகின்றன (5:18; 22:18). இறைவன் தமது வானக அவையில் வாழ்கிறார். அவர் வானவர்கள் புடைசூழ இருக்கிறார். இவர்கள் அவரது பணிவிடை யாளரும் தூதுவர்களுமாவர். இவர்கள் மனி தர்களுக்கு மேலானவர்கள்; இறைவனுக் கும், மனிதர்களுக்குமிடையே இடையாளர் களாகப் பணிசெய்கின்றனர் (5:1; 33:23-24). இவர்களிடமும் (4:17-19; 5:1.2.8; 15:14-16), மற்ற வானத்துப் பொருட்களிடமும் (15:14-16; 25:4-6) இறைவன் குறை காண முடியும்.

**2) உயிர் அல்லது வாழ்வு இறைவனின் மறைபொருள் மிக்க கொடைகளில் ஒன்றா கும்:** அதுவே எல்லா நன்மைகளுக்கும், கொடுந் துன்பத்திற்குங்கூட, ஊற்றாகும்; உயிர் ஒளியைப்போல் இறைவனது கொடையாகும் (3:4-5.20). இறைவன் மனி தனை அவனது தாய் வயிற்றில் உருவாக்கு கிறார் (10:8-12). உயிரின் மூச்சு அவரிட மிருந்து வருகிறது (12:10; 33:4). அஃது இல்லையென்றால் சாவு வருகிறது (34:14-15). வாழ்வுக்கும் சாவுக்கும் இறை வனே காரணர் (8:8-9; 34:14-15). யோபு வாழ்வுக்கு எதிராகப் பேசுகிறார் (அதி. 3); மிகுந்த உணர்ச்சியோடு தாம் பிறந்த நாளைச் சபிக்கிறார் (3:3).

ஆனால், தற்கொலையை எண்ணிப்பார்க் கவில்லை. மிகுந்த துன்பம் அனுபவிக்கும் போது, சாவு மேலானதாகத் தோன்றுகிறது (3:11-12;16:21.22;6:8-9;10:18-19). வாழ்வின் துன்பங்களோடும் அவதியோடும் ஒப்பிடும் போது, சாவு அமைதியை அளிக்கிறது (3:17.18.19). சாவு எல்லாநிலையில் உள்ள வரையும் சமநிலைப்படுத்துகிறது (8:14-15.19). சாவுக்குப்பின் திரும்புதல்

இல்லை என்பது ஓரளவு வலியுறுத்தப்படு கிறது *(14:7-12.18-22)*. உயிர்ப்புப் பற்றிய கிறிஸ்தவக் கருத்துடைய நமக்கு இதைப் புரிந்து கொள்வது சிறிது கடினமாக இருக்க லாம். யோபுவுக்கு வாழ்வும் சாவும் முழு வதும் வேறுபட்டவையாகும் *(14:21-22; காண்க. லூக் 16:26)*. எபிரேயர் மறுஉலக வாழ்வு பற்றி தெளிவில்லாத கருத்துக் களைக் கொண்டிருந்தனர். மரித்தவன், ''செயோல்'' அல்லது இருண்ட பாதாளம் என்னுமிடத்தில் வாழ்ந்தான்; மங்கலான நிழல் தன்மையுடைய, விளக்க முடியாத நிலையில் வாழ்ந்தான். இந்நிலை பற்றிய தெளிவான கருத்துக்களை எபிரேயர் கொண்டிருக்கவில்லை. இந்த இருண்ட உறைவிடத்தில் நல்லோரும் தீயோரும், உயர்ந்தவர்களும் தாழ்ந்தோரும் ஒரே தன் மையான வாழ்வைக் கொண்டிருந்தனர், சமமாயினர் *(3:13-10;7:7-11;14:10-15;30:23)*. இந்நிலை இறுதியானது. சாவு என்னும் பயங்கர உண்மையின்முன் மனிதன் ஒரு சிறிய அற்பப் பொருளாவான் *(7:17-18;13:28;14:1-2)*. மனிதவாழ்வு போர்ச் சேவைக்கு ஒப்பிடப்படுகிறது *(7:1-2)*. விரைவில் ஓடி மறைந்து விடுவது *(9:25-26)*. அது நண்பர்கள் கைவிடுவதா லும், அவர்கள் ஏமாற்றுவதாலும் மேலும் மோசமாகிறது *(6:15-17;19:13-17)*. யோபு நூலில், மனிதனையும் மனித சமூகத்தையும் பற்றி நன்னம்பிக்கையே காணப்பட வில்லை.

**3) நீதியுள்ள இறைவன்:** இறைவன் மனிதர் மேலும், நாடுகள்மேலும் கடுமை யான கட்டுப்பாடு கொண்டுள்ளார் *(34:21-22.25-30)*; ஆனால், எப்போதும் குற் றம்கண்டு கொண்டிருப்பதில்லை. தமது படைப்பின்மீது அன்புமிக்க அக்கறை கொண்டிருக்கிறார் *(10:12;29:2-5)*. இறை வன் மனிதனது உயர்வையே விரும்பு கிறார். அதற்காகவே தண்டிக்கவும் செய் கிறார் *(5:17;33:19தொ)*. இக்கருத்து எலீப் பாசின் உரைகளிலே விளக்கப்படுகிறது. இறைவன் நீதியுள்ள இறைவன் *(9:14-16;10:13-15;37:23)*. மனிதர்களின் செயல்களைச் சீர்தூக்கிப் பார்த்துத் தீர்வை யிடுகிறார் *(31:6)*. யோபு தமது கொடுமை யான உடல் துன்பத்தாலும் மிகுந்த மனத் துயரத்தாலும் அவதிப்பட்டு, இறை நீதிக்கு எதிராகப் பழிப்புரை கூறுகிறார் *(16:11-18;19:6-12;27:2-3)*; ஆனால், இறை நீதியில் நம்பிக்கை இழக்கவில்லை *(19:25-27;31:35-37)*.

இறைநீதியை இருவகையில் புரிந்து கொள்ளலாம். உதவியற்றோர், கொடுமைப் படுத்தப்பட்டோர் நோக்கில் நீதி அவர்கள் இறைவனிடமிருந்து பெறும் விடுதலையா கும், மீட்பு ஆகும். நீதிபதிகள் நூல் இருக்கருத்தையே அடிப்படையாகக் கொண்டது. எகிப்திலிருந்து விடுதலை அடைந்த யாத்திரை அனுபவத்தில் யாவே அளிக்கும் மீட்புச்செயல் நீதியாகும். அவ ரது தலையீடு நீதியை நிறுவுகிறது. அது மனிதர்கள் கொண்டிருக்கவேண்டியதை அடைந்த நிலையாகும். அவரது உடன் படிக்கைப் பங்காளிகள், பாதுகாப்பும் நல் வாழ்வும் கொண்டிருப்பது அவர்களுக்கு உரியதாகும், நீதியாகும்.

இந்த உடன்படிக்கைப் பங்காளிகள், பிரமாணிக்க மற்று, இறைவனது எதிரிகளா னால், அப்போது அவர்கள் நீதியின் மறுபுற மான அழிவை அனுபவிக்க வேண்டும். யூதா நாடுகடத்தப்பட்டபோது, இறைவாக் கினர்களின் கருத்துப்படி, இதுதான் நிகழ்ந் தது. ஆகவே, நாடு கடத்தலுக்குப்பின் வந்த காலத்தில், யாவேக்குப் பிரமாணிக்கமாய் இருத்தல் மிகவும் வலியுறுத்தப்பட்டது. அது, விரிவான புறச் சட்டத்தை வழிபாட்டு முறையிலும், சமூக முறையிலும் கடைப் பிடிப்பாகச் செயல் முறையில் எடுத்துக் கூறப்பட்டது.

அதேபோது, ஞானநூல் ஆசிரியர்கள், நேர்மைமிக்க வாழ்வின் ஆற்றலையும் தேவையையும் வலியுறுத்தினர். மனித வாழ்வைப் புரிந்து கொள்ளும் அவர்களது முயற்சியில், வாழ்வின் தற்செயலான, முன் னறிவிக்க முடியாத கூறுகளைக் குறைக்க முயன்றனர். வாழ்வைக் கட்டுப்படுத்தும்

அற ஒழுக்கச் சட்டங்கள் உள்ளன என்றும், அவற்றிற்கு இறைவனே பாதுகாவலும் உறுதியும் ஆவார் என்றும், இவற்றை அறியமுடியும் என்றும் படிப்பித்தனர். விவேகமுள்ள தேர்வாலும் குற்றமற்ற நடத்தையாலும் மனிதன் இச்சட்டங்களோடு ஒன்றிணைந்து வாழமுடியும் என்றும் அதன் விளைவாக மகிழ்ச்சியும் வெற்றியும் பெற முடியும் என்றும் உறுதியாகப் போதித்தனர். இது மக்கள் நல்வாழ்வில் பயிற்சிபெற உதவியது என்பதில் ஐயமில்லை; ஆனால், சிந்தனையாளர்களுக்கு மனிதவாழ்வில் நீதி பற்றிய பிரச்சனையைத் தீவிரப்படுத்தியது

***4) வினைப்பயன் கோட்பாடு:*** எபிரேயர், தங்கள் இறைவனுடைய நன்மைத் தனத்தையும், நீதியையும் நம்பினர். அவர் நல்லவர்களுக்குச் சன்மானமும், தீயவர்களுக்குத் தண்டனையும் உறுதியாக அளிப்பார் என்றும் நம்பினர். இறைவன் நல்லோருக்கு நீடிய மகிழ்ச்சிமிக்க வாழ்வையும் செழிப்பையும் அளிக்கிறார்; தீயவர்களை உடல் நோயாலும் அகால மரணத்தாலும் தண்டிக்கிறார். துன்பம் பாவங்களின் விளைவாகும். ஒருவர் துன்புற்றால் அவர் பாவியாக இருக்க வேண்டும். இப்போதகத்தை விவிலியத்தின் பழங்கால ஆசிரியர்களும், உபாகமப் பாரம்பரிய ஆசிரியர்களும் பொதுவாக ஏற்றுக்கொண்டனர் *(ஆதி 15:15;49:25; யாத் 20:12; உப 7:12-15; 8:7-18; 27:30).* இதையே சங் 37-உம், பழமொழி நூலும் எடுத்துக் கூறுகின்றன. பழமொழி ஆசிரியர், ஞானம்=நேர்மை மிக்க வாழ்வு=வாழ்வில் வெற்றி, என்ற சமன்பாட்டை வலியுறுத்தினார். இதுவே யூத ஞானிகளின் பொதுவான போதனையாகும்.

இப்போதகமும், மறுவாழ்வு பற்றிய எபிரேயர்களின் தெளிவில்லாத கருத்துக்களும், சன்மானமும், தண்டனையும் இவ்வுலக வாழ்விலேயே அளிக்கப்பட வேண்டும் என்று மக்களை எதிர்பார்க்கச் செய்தது. ஆகவே, நீடிய மகிழ்ச்சிமிக்க வாழ்வு, பெரும்பொருட்செல்வம், பல பிள்ளைகளைப் பெறுதல், நீடிய பின் மரபுகள், மதிப்பு மிக்க நற்பெயர் ஆகியவை அடங்கிய நல்வாழ்வு நல்லோரின் உரிமையாகக் கருதப்பட்டது. இதற்கு மாறாக சாவு தீயோர்க்குரிய தண்டனையாகும். குறுகிய வாழ்வு, வறுமை, அகாலமரணம், மலட்டுத்தன்மை, பின் மரபு அற்ற தன்மை, அவப்பெயர் ஆகியவை தீயோருக்குரிய தண்டனையாகக் கருதப்பட்டது. இதை எலீப்பாசு, பில்தாது ஆகியோரின் உரைகளில் காணலாம் *(அதி. 4;8; 15;18).*

***5) நூலின் பிரச்சனை:*** வினைப்பயன் கோட்பாடும், மறுவுலக வாழ்வு பற்றிய கருத்துக்களும், குழுப் பொறுப்புடைமைப் பின்னணியில், பல நூற்றாண்டுகளாகப் போதிக்கப்பட்டன. அக்கால மக்களுக்கு இப்போதனை போதியதாக இருந்தது. ஒருவர் தம்மை ஒரு தனி நபராக அன்று, ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர் என்று கருதிய மட்டும், வினைப்பயன் கோட்பாட்டுக்கும் வாழ்க்கை நடப்பு முறைக்கும் இடையேயுள்ள முரண்பாடு அவ்வளவு கடுமையாக உணரப்படவில்லை. பக்தியுள்ள தனி மனிதன் தனக்குரிய சன்மானத்தையும், கடவுள் பற்றில்லாத தீயவன் தனக்குரிய தண்டனையையும் பெறவில்லை என்றால், அவ்விருவரும் சேர்ந்த சமூகம் அவற்றை அடையும் என்று ஆறுதல் பெற்றிருக்கலாம்.

யூதர்கள் நாடு கடத்தப்பட்ட காலத்தில், எசேக்கியேல் தனிநபருடைய பொறுப்புடைமையை வலியுறுத்தினார் *(எசே 18;33:10-20).* வினைப்பயன் கோட்பாட்டு விசுவாசத்தைத் தனி நபருக்குச் சாற்றிக் கூறினார். இச்சூழ்நிலையில் தனிநபர் வாழ்வில், வாழ்க்கை நடப்புமுறை, வினைப்பயன் கோட்பாடு அடிக்கடி ஒத்துப் போகவில்லை. இரண்டும் முரண்பட்டு நின்றன. வினைப்பயன் கோட்பாடு மனித வாழ்க்கையைப் பொதுவாக விளக்க முடிந்தது. ஏனெனில், நல்லோரில் பலர் செழிப்புற்றனர். தீயோரில் பலர் செத்து மடிந்தனர். ஆனால், இதே கோட்பாட்டைத் தனி நபருக்குச் சாற்றிக் கூறும்போது, அது வருந்தத்தக்க முறையில் குறையுள்ளதாகவும், மூடத்தனமான முடிவுக்கு இட்டுச் செல்வதாகவும் தோன்றியது. ஏனெனில்

தனிநபர் சிலர் உண்மையிலேயே நல்லவர் கள் ஆனாலும், துன்புற்றனர். யோசியா போன்ற பக்தியுள்ள நல்ல அரசனின் இறப்பையோ, இறைவாக்கினர் ஏரேமியா போன்ற புனிதர்களின் துன்பமிக்க வாழ் வையோ, வினைப்பயன் கோட்பாட்டால் விளக்க முடியவில்லை. இந்த உண்மை, உண்மையான பக்தியுள்ளோருக்கு ஆழ்ந்த மனத்துயரை அளித்தது. நீதிமான் துன்புறு கிறார், தீயோர் செழிப்புறுகின்றனர். ஏன்? எப்படி? இப்பிரச்சனையை வினைப்பயன் கோட்பாடு விளக்கவும் இல்லை, விளக்கப் போதியதாகவுமில்லை.

***6) பிரச்சனை வரலாறு:*** யூதசமய வரலாற் றில் யோபு நூலுக்கு, உடனடியான முந்திய காலத்தில், அதாவது கி.மு. 7-5 ஆம் நூற்றாண்டுகளில், இப்பிரச்சனை அடிக்கடி தர்க்கிக்கப்பட்டுள்ளது. இப்பிரச்சனை இஸ் ராயேலின் சிந்தனையாளர் யாவரையும் அமைதி குலையச் செய்துள்ளது. இப்பிரச் சனையை எரேமியா தாழ்ச்சியோடு, இறை வனிடமே எடுத்துக் கூறுகிறார். ''ஆண்ட வரே உம்மோடு நான் வழக்காடினால், நீரே நீதியுள்ளவர் என்று விளங்கும்; இருப் பினும் நான் உம்மிடம் சில முறையீடு களைச் செய்துகொள்கிறேன். தீயவர்கள் வாழ்க்கையில் நலமுடன் இருப்பது ஏன்? அநியாயமும் அக்கிரமமும் செய்கிறவர்கள் நலமாய் வாழ்வதேன்?'' *(எரே 12:1).* இதையே யோபு *21*-ஆம் அதிகாரம் பிரதி பலிக்கிறது.

எரேமியாவிற்குச் சிறிது காலத்திற்குப் பின், இறைவாக்கினர் அபக்கூக்கு இதே முறையில் கேள்வி எழுப்புகிறார்; ''உம் முடைய கண்கள் தீமையைக் காணக் கூசுகின்றன. நீர் கொடுமையைப் பார்க்கத் தாங்காதவர். தீமை செய்பவர்களை நீர் ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறீர்? தன்னிலும் நேர்மையானவனைப் பொல்லாதவன் ஒரு வன் விழுங்கும்போது நீர் பேசாமல் இருப்பதெப்படி?'' *(அப 1:13).*

பாபிலோனுக்கு யூதர்கள் நாடு கடத்தப் பட்ட காலத்தில், எடுத்ததற்கெல்லாம் குறைகூறும் சிலர், தங்களது குற்றத்திற்காக அன்று, தங்கள் மூதாதையரின் குற்றத்திற் காக இறைவன் தங்களைத் தண்டிப்பதாக முறையிட்டனர். ''தந்தையர் திராட்சைக் காய் தின்ன, பிள்ளைகளுக்குப் பல் கூசிற் றாம்'' *(எசே 18:1).* இறைவனது நீதிக்கு எதிரான இந்தக் குற்றச்சாட்டுக்கு மறுப்புக் கூறவும், நாடு கடத்தப்பட்டோர் அவர் களின் குற்றத்திற்காகவே தண்டனை பெறு கின்றனர் என்று நிரூபிக்கவும், எசேக்கி யேல், தமது மரபுக்கு மாறாகச் சென்று, பாவங்கள் பற்றிய தனிநபரின் பொறுப் புடைமையை வலியுறுத்துகிறார். ''பாவம் செய்த ஆன்மாவே சாகும்'' என்று திட்ட வட்டமாக அறிவிக்கிறார் *(எசே 18:20).* இறைவன் தீயோரைத் தண்டித்து நல்லோ ருக்குச் சன்மானம் அளிக்கிறார் என்ற பொதுவான உண்மையை எசேக்கியேல் வெளிப்படையாகக் கூறுகிறார். அவரது கூற்று தனிநபர்களையே கருத்தில் கொண் டுள்ளது. தீயோர் தண்டிக்கப்படுதலும் நல் லோர் சன்மானம் பெறுவதும் பொதுவாக உண்மையென்றாலும், இப்பொது விதிக்கு விலக்குகள் உண்டு. மாசற்றவர்கள் துன்புற் றனர். ஏன்? இதே கேள்வியை எரேமியா வும், அபக்கூக்கும் எழுப்பினர். தனிநபரின் பொறுப்புடைமையை எசேக்கியேல் வலி யுறுத்தியது இஸ்ராயேல் சிந்தனையாளருள், இக்கேள்வியை ஒரு முக்கியமான பிரச் சனையாக மாற்றியது.

நாடு கடத்தலின் முடிவில் உபஎசாயா தமது புகழ் பெற்ற 53-ஆம் அதிகாரத்தில் இப்பிரச்சனைக்கு ஓரளவு பதில் அளித்தார். உபஎசாயவில் வரும் துன்புறும் ஊழியர் உண்மையிலேயே பாவமற்றவர். இருப் பினும் இறைவன் அவரை இரக்கமற்ற முறையில் துன்புறுத்துகிறார். ஏன்? உபஎச யாவின் ஊழியன், பரிகாரமாகத் துன்புறு கிறார் என்று கூறுகிறார்.

''மெய்யாகவே அவர் நம் பிணிகளை ஏற்றுக் கொண்டார் ................................

நம்முடைய நோய்களைச் சுமந்து கொண் டார் ....................................................

ஆனால் நம் பாவங்களுக்காகவே அவர் காயப்பட்டார் ........................................

நம் அக்கிரமங்களுக்காகவே அவர் நொறுக்குண்டார் ....................................

நம்மை நலமாக்கும் தண்டனை அவர் மேல் விழுந்தது .....................................

அவருடைய காயங்களால் நாம் குண மடைந்தோம் ..........................................

நம் அனைவருடைய அக்கிரமங்களையும் ஆண்டவர் அவர்மேல் சுமத்தினார் ........

பலருடைய பாவங்களைத் தாமே சுமந்து கொண்டு பாவிகளுக்காகப் பரிந்து பேசினார்'' (எசா 53:4-12). நல்லோர் துன்புறுதல் என்ற பிரச்சனைக்கு இஃது ஒரு நல்ல ஆனால், பற்றாக்குறையான பதிலாகும். யோபு நூலின் ஆசிரியர் உபஎசாயாவின் இப்பதிலை அறிந்திருந்தாரா? அல்லது இப்பதில் தமது பிரச்சனைக்குப் போதிய பதிலென்று எண்ணினாரா? இப்பதில் யோபு நூலில் காணப்படவில்லை.

மேலும், இப்பிரச்சனைக்குப் போதிய விடையளிக்க, எல்லாருக்கும் நீதி வழங்கப் படும் மறுவுலக வாழ்வு பற்றிய அறிவும் விசுவாசமும் யோபுநூல் தோன்றிய காலத்தில் இஸ்ராயேல் மக்களிடையே இல்லை. இது மக்கபேயர் காலத்தில்தான் வளர்ச்சியுற்றது; யாவரும் அறிந்த போதகமாக விளங்கியது (2 மக் 6-7; தானி 12:2-3; ஞான 1-5).

இனி, யோபு நூலுக்கு வருவோம். நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனையை விளக்க முனைந்த ஆசிரியர், பலரும் அறிந்த ஒரு பழங்கதையை எடுத்து, பழங்கால நடையைக் கவனமாய்ப் பின்பற்றி அக்கதையை மீண்டும் எடுத்துக்கூறுகிறார். சோதனைகளின் கடுமையை மிகைப்படுத்த 2:1-10-என்ற பகுதியைச் சேர்க்கிறார். பின்பு ஞானமிக்க மூன்று நண்பர்களை அறிமுகப் படுத்தி, அவர்களுக்கும் யோபுவுக்குமிடையே நடக்கவிருக்கும் உரையாடலுக்கு மேடை அமைக்கிறார். உரையாடலில் கருத்து வளர்ச்சியிருப்பதாகத் தெரியவில்லை.

எலீப்பாசு, பில்தாது, சோப்பார் ஆகிய மூவரும் பரம்பரைப் போதகத்தில் தோய்ந்தவர்கள். அதன் காப்பாளர்களாகத் தோன்றுகின்றனர். வினைப்பயன் கோட்பாடு பற்றிய பாரம்பரியப் போதகத்தைச் சொல்லாற்றலுடன் எடுத்துக் கூறுகின்றனர். இது பற்றி அவர்களுக்கு எந்த ஐயப்பாடும் இல்லை. அவர்களது நிலை மிக எளியது. துன்பம் பாவத்திற்குத் தண்டனையாகும். ஒருவன் துன்புற்றால் அவன் பாவியாக இருக்க வேண்டும். இப்போதகத்திற்கு ஏற்றவாறு வாழ்க்கை நடப்புக்கள் பொருத்தி விளக்கப்படவேண்டும். ஆகவே யோபு ஒரு பாவியாவார். அவர்படும் துன்பத்தைப் பார்த்தால் அவர் ஒரு பெரும் பாவியாக இருக்க வேண்டும். அவர் இறைவனிடம் மன்னிப்புக்கேட்டால், இறைவன் இரக்கம் காட்டுவார். எல்லாம் முன்போல் சரியாகும். இவ்வாறு நண்பர்கள் யோபுவுக்கு ஆலோசனை கூறுகின்றனர்; ஆறுதல் கூற முயல்கின்றனர். அவர்களுடைய வாதம் ஒரே சீராக உள்ளது. யோபு தமது மாசற்ற தன்மையை மீண்டும் மீண்டும் வலியுறுத்த, அவர்கள் தங்கள் நிலையை மேலும்மேலும் சிறிதும் இரக்கமற்ற முறையில் வலியுறுத்துகின்றனர். யோபுவும் இந்தப் பாரம்பரியத்தையே விசுவசிக்கிறார்; ஆனால், நேர் எதிர் முடிவுக்கு வருகிறார்.

நண்பர்களது நேர்நிலைக் கருத்து சரியானது, எளியது, ஆறுதல் அளிக்கக் கூடியது. பாரம்பரியப் போதகம் குழுத்தன்மையுடையது; தீமையும் துன்பமும் மனித வன்மமும், கெட்ட எண்ணத்தின் விளைவாகும் என்று கூறுகிறது. இதையே தனிமனிதனுக்குச் சாற்றிக் கூறும்போது இப்போதகம் மதியீனமான முடிவுக்கு இட்டுச் செல்ல வல்லது என்பதை உணர நண்பர்கள் மறுத்து விட்டனர். இப்போதகத்திற்கு விதிவிலக்கு உண்டு என்றும், அவர்களது அறியும் ஆற்றலுக்கும் வரையுண்டு என்றும் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்களது போதக விளக்கத்திற்குப்பின் ''இறைவன் விரும்பினால்'' என்று எழுத அவர்கள் விரும்பவில்லை. இறைபாலிப்புச் செயல் முறைகள் யாவும் அவர்களுக்குத் தெளிவாக

வும், வெளிப்படையாகவும், கணிதத்தன் மையோடும் இருக்கவேண்டும். அவர்கள் மறை உண்மையை மறை உண்மையாக ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் இறை வனை ஓர் ஆய்வுக்குரிய, புரிந்துகொள்ளக் கூடிய, முன்னறிவிக்கப்படக்கூடிய ஒரு பொருளாக ஆக்கினர். அவர்களது அறி வுக்கு ஒத்ததாக உண்மைகளைக் கட்டாயப் படுத்தி, விரும்பி நேர்மையற்றவர்களா யினர் (யோபு 13:6-11). அவர்கள் தங்கள் கோட்பாடுகளுக்கும், வாழ்க்கை நடப்புக்கு மிடையே உள்ள முரண்பாட்டை உணர வில்லை. இத்தகைய ஆபத்தை, இக்காலத் தில் இறையியலைத் தொழிலாகக் கொண்ட பலரிடம் காணலாம்.

யோபு தாம் குற்றவாளி என்பதை மீண் டும் மீண்டும் மறுக்கிறார். தாம் குற்றமற்ற வர் என்பதை அவர் நன்கு அறிவார். குறைந்தபட்சம், தாம் அனுபவிக்கும் துன் பங்களைப் பெறக் காரணமாக எக்காரியத் தையும் தான் செய்துவிடவில்லை என்று உறுதியாக அறிவார். யோபுவும் வினைப் பயன் கோட்பாட்டை நம்பினார். ஆனால் அது தமது துன்பநிலைக்குப் பொருந்த வில்லை, பதில் கூறமுடியவில்லை. இந்த முரண்பாட்டுக்குப் அவர் விடை காண வில்லை. காணவும் முடியவில்லை என் பதை உணர்கிறார். ஆனால் பிரச்சனையுடன் வீரத்தோடு போராடுகிறார்; வழி ஒன்றும் தெரியாமல் அலைகிறார். அவரது துன்பம் முழுவதும் பொருளற்றதாகத் தெரிகிறது.

யோபுவின் பேச்சுக்களில் கருத்துக்கள் ஒரே சீராக அமையவில்லை. ஒரு கருத்தி லிருந்து மற்றதற்கு அலைகிறார். முதலில் நண்பர்களோடு தர்க்கம் செய்கிறார். போகப்போக அவர்களோடு வாதம் செய் வதை ஒதுக்கிவிட்டு இறைவன்பாலும் அவருக்கு எதிராகவும் திரும்புகிறார், மன் றாடுகிறார், முறைப்பாடு செய்கிறார், புலம் புகிறார். இறைவனைத் தமது எதிரியாகப் பாவிக்கிறார். இறைவன் ஆக்குவதைவிட அழிப்பதை விரும்புகிறாரா? இறைவன் அறிவுக்குப் பொருந்தாத வெறும் சக்தியே தவிர வேறொன்றுமில்லை! அவர் விரும்பு வது மட்டும் தான் நீதியா? என்பனபோன்ற பல பிரச்சனைகளை யோபு எழுப்புகிறார். அவநம்பிக்கையின் ஆழத்தில் மூழ்கிப்போ கிறார். அவர் கதைகளில் வரும் அசாதாரண வீரன் அல்லவே! சதையும் இரத்தமும் உடையவர் அல்லவா? இறைவனது ஆய்வு செய்ய முடியாத வழிகளைப் புரிந்து கொள்ள ஒளிகிடைக்காதா என்று ஏங்கு கிறார். அதைக்காண முயலுகிறார்.

ஒரு சமயம் அவநம்பிக்கையில் மூழ்கிப் போகும் யோபு மறுசமயம் நம்பிக்கையில் உச்சநிலையை அடைகிறார். துன்பம் என் னும் அடர் இருளில் அலைந்து திரிகிறார். இது ''விசுவாச இருளாகும்''. பாரம்பரியக் கோட்பாட்டுக்கும் தமது வாழ்வில் நடப்ப தற்குமுள்ள முரண்பாட்டை ஆழ்ந்து உணர்ந்து பெருந்துன்புற்ற நிலையிலும், அவர் தமது விசுவாசத்தை இழக்கவில்லை. இந்த விசுவாசம் வினைப்பயன் போதகத்தி லிருந்து பிரிக்க முடியாதது. யோபு தமது விசுவாசத்தால் உண்மையாகவே உறுதி பெறுகிறார். இந்த முரண்பாட்டைத் தமது பக்தியால் செயல் முறையில் மேற்கொள் கிறார். அவரது விசுவாசம், அவர் ஒரு நடுவருக்காக, மீட்பருக்காக ஏங்குவதில் உச்சநிலை அடைகிறது. அவரது நிலை இறைவனை நோக்கிக் கூக்குரல் இடுவ தாலும், அவரைச் சந்திக்க ஏங்குவதாலும் சமன்செய்யப்படுகிறது. தமது இறுதி மீட்ப ராகவும் தமது ஒரே உண்மையான அன்ப னாகவும் இறைவனில் விசுவாசம் கொண்டு அவருக்காக ஏங்குகிறார். இவ்வாறு அவநம் பிக்கையும் விசுவாசமும், முறைப்பாடும் ஏக்கமும் மாறிமாறி யோபுவின் உள்ளத்தில் எழுகின்றன. இவை அதி. 29-இல் உச்ச நிலையை அடைகின்றன.

அந்த உச்சநிலையில், பொருத்தமாக இறைவனே யோபுவோடு பேசுகிறார். யோபுவினுடைய அவமதிப்பான துடுக்குத் தனத்தையும், அறிவின்மையும் எடுத்துக் காட்டுகிறார். மனித உள்நோக்கையும் ஆற்ற லையும் கடந்து செல்லும் இயற்கை நிகழ்ச் சிகளின் மறை உண்மைகளைச் சுட்டிக்காட் டுகிறார். உலகை ஒழுங்குபடுத்தும்படியும்

குறிப்பாக இறைப் பற்றற்றவர்களையும் தீயோரையும் வென்று, அவர்களது செழிப்பால் ஏற்படும் இடரை நீக்கும்படியும் யோபுவுக்குச் சவால் விடுகிறார். அதே சமயம் யோபுவின் நிலையில் உள்ள நேர்மையையும் ஏற்றுக்கொள்கிறார். யோபு இறைவனது வியப்புக்குரிய செயல்களில் தம்மையே இழந்து தமது ஆற்றலற்ற தன்மையையும், தமது முறைப்பாடு குற்றச் சாட்டுகளின் ஒழுங்கின்மையையும் உணர்ந்து இறைவனிடம் சரணடைகிறார். தமது இறுதி விசுவாசப் பிரமாணம் செய்கிறார் *(42:5-6)*.

இறுதியில் யோபு தம் உடைமைகளை இருமடங்காக மீண்டும் பெறுவது பற்றிய நிகழ்ச்சியுரையோடு நூல் முடிகிறது. இவ்வாறு நூல், துன்பம் என்னும் பிரச்சனைக்குக் கோட்பாட்டளவில் விடையே கொடுக்கவில்லை. அக்கால இறையியல் வளர்ச்சி இப்பிரச்சனைக்குப் பதிலாக அமையவில்லை. யோபு, தாமும் தம் நண்பர்களும் இப்பிரச்சனைக்கு விடை காண முடியாது என்பதை உணர்கிறார். இது தீமையின் முன் மனித ஞானத்தால் அறிவால் ஒன்றும் செய்ய முடியாமையை எடுத்துக் காட்டுகிறது. யோபுவின் ஆன்மீக வளர்ச்சியின் உச்சநிலை இறைமகிமைத் தோற்றமாகும். யோபு தமது குற்றமின்மையை இறைவனிடம் எடுத்துக் கூறினார், முறையிட்டார், சவால் விட்டார். அதே இறைவன் இப்போது யோபுவுக்குத் தோன்றுகிறார். அவர் யோபுவின் முறைப்பாடுகளுக்கும் சவால்களுக்கும் செவிமடுத்ததாகவோ, அவற்றைப் பொருட்படுத்தியதாகவோ தெரியவில்லை. அவரது பேச்சு அவரது ஞானத்தை உறுதிப்படுத்துகிறது. அதன் பொருத்தத்தைக் கண்டுணர, பழைய ஏற்பாட்டில் ஞானம் என்றால் என்ன என்பதை அறிவது அவசியம். மனிதனது ஞானம் அவன் தன் காரியங்களை நடத்தும் விதத்தில் தெரிகிறது. அதுபோல, இறைவன் உலகை நடத்தும் விதத்தில் அவரது ஞானம் வெளிப்படுகிறது. உலகம் யாவேயின் ஞானத்தின் மறை உண்மைகளால் நிறைந்துள்ளது. அதில் பல முரண்பாடுகள் உள்ளதாகத் தோன்றலாம். அதனால் உலகம் பிளந்து அழியப் போவதில்லை; அதன் மூலக் குழப்பநிலைக்குத் திரும்பப் போவதில்லை. இந்த உலகில் மனிதர்கள், குறிப்பாக யோபு என்ற ஒரு மனிதன், ஒருமிகச் சிறிய பகுதியே. உலகத்தை அஃது இருக்கிற விதத்திலேயே, இறைவனையும் அவர் உள்ள விதத்திலேயே, யோபு ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகவே, தமது துன்பம் என்ற பிரச்சனை அவருக்குப் பெரிய மலையாகத் தோன்றியது. இறைத் தோற்றம், அவரைப்பற்றிய உண்மைகள் ஆகியவற்றைக் கண்டபின், யோபு இறைவனை இறைவனாக ஏற்றுக்கொள்கிறார். துன்பம் என்னும் பிரச்சனை முன்போல் மறை பொருளாகவே உள்ளது. அதற்கு யோபு விடை காணவில்லை; ஆயினும், அமைதியுறுகிறார். இவ்வாறு, எப்போதும் போலவே பிரச்சனை கொள்கை அளவில் தீர்க்கப்படாததாய் இருந்தாலும், பக்தியுள்ள மனிதன் வினைப்பயன் கோட்பாட்டில் விசுவாசம் கொண்டிருந்தாலும், துன்புறும் போது எப்படி நடைமுறையில் துன்பத்தை வெற்றி கொள்வது என்று நூல் காட்டுகிறது. எப்போதும் வளர்ச்சியுறும் நம்பிக்கையோடு இறைவனது கரங்களில் தம்மையே ஒப்படைத்து, யோபு தமது துன்பத்தை வெற்றி கொள்கிறார், அமைதி கொள்கிறார். அறிய முடியாத இறைவனில் கொள்ளும் விசுவாசம் பொறுமைக்கும் அமைதிக்கும் இட்டுச் செல்கிறது. இவ்வாறு, அளவற்ற பொறுமையுள்ள யோபுவின் வேதனை நிறைந்த அழிவிலிருந்து விசுவாசமிக்க யோபு எழுகின்றார்.

நண்பர்களது தவறான கருத்துக்களைத் திருத்துவது ஓரளவு எளிது. அதை யோபுவே செய்யலாம். ஆனால் யோபுவின் தவறு மிகவும் நுட்பமானது, வினயமானது. அவரை இறைவனே திருத்தவேண்டும். முன்னுரையில் யோபுவின் துன்பத்திற்கும் இறைவனது நீதிக்கும் எத்தகைய தொடர்பும் செய்யப்படவில்லை. நண்பர்களின் குற்றச்சாட்டை, யோபு தமது பிரமாணிக்கத்தை எடுத்துக்கூறி மறுக்கிறார். அதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

இறைவனே தமது மாசற்ற தன்மையை மறுப்பதாக எண்ணி, அதை அதிகமாக மதிப்பீடு செய்கிறார். இறைவனுக்கு எதிராக வழக்காடுகிறார். இறைவன் திருமுன் பேரம் பேசுவது நன்றன்று. ''நான் குற்ற மற்றவன், இதற்குச் சன்மானமாக நீர் எனக்கு மகிழ்ச்சி அளிக்க வேண்டும்'' என்று உரிமை கொள்ள முடியாது.

நண்பர்களுக்கு எதிராக யோபு கொண்ட நிலை சரியானது. ஆனால், இறைவனுக்கு எதிராக அவர் எடுக்கும் நிலை சரியான தன்று. இறைவன் முன் எந்த உரிமையை யும் அவர் கொள்ள முடியாது. ''நீங்கள் கட்டளையிடப்பட்டதையெல்லாம் செய்த பின் 'நாங்கள் பயனற்ற ஊழியர்கள், நாங்கள் செய்ய வேண்டியதையே செய்துள் ளோம்' என்று கூறவேண்டும்'' *(லூக் 17:10)* என்ற ஆழ்ந்த பொருளுள்ள கூற்றில் கிறிஸ்து பிற்காலத்தில் எச்சரிப்பார்.

**7. ஆசிரியரது விடை:** துன்பம் பற்றிய பிரச்சனைக்கு இந்நூலில் பல பதில்கள் காணப்படுகின்றன. அவை போலி யானவை அல்லது பற்றாக்குறையானவை என்று காட்டப்படுகின்றன. பாவம் துன்பத் திற்குக் காரணம் என்று நண்பர்கள் கூறுவது தவறன்று. ஆனால் துன்பப்படுவோர் எல் லாம் பாவிகள் என்று அவர்கள் வலியுறுத்து வது தவறாகும். நண்பர்களுடைய கருத்தை மறுத்துக் கூறுவதே உரையாடலின் நோக்க மாகும். அவர்கள் கருத்து தவறானது என்று காட்டவே இறைவன் அவர்களைக் கண்டிக் கிறார் *(42:7)*

எலீப்பாசும் எலிகூவும் துன்பத்திற்கு மற்றொரு விளக்கம் தருகின்றனர். துன்பம் மனிதனைத் திருத்துகிறது, பயிற்சி அளிக் கிறது, தூய்மைப்படுத்துகிறது; மேலான வாழ்வுக்கு இட்டுச் செல்கிறது; அவனது புண்ணியத்தை அதிகரிக்கச் செய்து அதன் விளைவாக அவனது சன்மானத்தையும் அதிகரிக்கிறது. இது ஓரளவு சரியே. ஆனால், இந்த விளக்கமும், ஏன் மனிதனுக் குத் தெரிந்த எந்த விளக்கமுமே நீதிமானது துன்பம் பற்றிய பிரச்சனையை விடுவிக்க வில்லை.

ஆசிரியர் இதை, நூலை எழுதுவதற்கு முன்பே, ஒருவேளை, உணர்ந்திருக்க வேண்டும். நண்பர்களின் கருத்துக்கள் தவ றானவை என்று காட்டியபின், இப்பிரச் சனைக்கு அவர் அளிக்கும் இறுதிவிடை, இப்பிரச்சனை மிகப் பெரியது, மனிதனால் விடை காண முடியாதது என்பதே. நீதி மான்மேல் துன்பத்தைச் சுமத்துவதில் இறைவனின் நோக்கத்தை மனிதனால் புரிந்துகொள்ள முடியாது. இறைபாலிப் பின் இரகசியங்களுக்குள் மனிதனால் புக முடியாது. தன்னால் புரிந்து கொள்ள முடியாதபோதும் இறை ஞானத்திற்கு மனி தன் பணிய வேண்டும், அதை ஆராதிக்க வேண்டும். நீதிமான்கள் ஏன் துன்புறுகின் றனர், தீயோர் ஏன் செழிப்படைகின்றனர் என்பதை விளக்க இறைவனே தேர்ந்து கொள்ளும்வரை, இறைவனது நீதியையும் நன்மைத் தனத்தையும் விசுவாசிக்க வேண் டும், நம்ப வேண்டும். அவர் வெளிப் படுத்த விரும்பாதவற்றை அறிய உரிமை கொள்ளக்கூடாது. ஆசிரியரது இந்தச்செயல் முறையான விடை, ஞான இலக்கியங் களின் மற்றொரு அடிப்படைக் கூற்றை எடுத்துக்காட்டுகிறது. ''இறை அச்சமே ஞானத்தின் தொடக்கம்'' *(28:28)*. ''இறை யச்சமும்'', ''தீமையிலிருந்து விட்டகலு வதும்'' இணையானதாகவும், ஒன்றோ டொன்று தொடர்புடையனவாகவும் காட் டப்படுகின்றன.

துன்பம் என்னும் பிரச்சனைக்கு மனிதன் விடைதேடும் முயற்சி இறைவனது சுதந் தரத்தை மீறியதாக இருக்கக்கூடாது. இறை வனிடம் வேண்டலாம்; விடாமுயற்சியுடன் மன்றாடலாம்; ஆனால், அவரைக் கட்டா யப்படுத்த முடியாது. மனிதன், சங் 8 — இல் விவரிக்கப்படும் அச்சத்தையும் தாழ்ச்சியையும் கொண்டிருக்க வேண்டும். ''நம்முடைய எண்ணங்கள் உங்கள் எண் ணங்கள் அல்ல என்கிறார் ஆண்டவர். மண்ணிலிருந்து விண் மிக உயர்ந்திருப்பது போல், உங்கள் வழிகளைவிட நம்முடைய எண்ணங்களும் மிக உயர்ந்திருக்கின்றன'' *(எசா 55:8 — 9)*. இறைவனைச் சந்தித்தபின் யோபு கூறுவது, ''நாயேன் நான்! உமக்கு

என்ன பதிலுரைப்பேன்? கையால் என் வாயைப்பொத்திக் கொள்கிறேன்! ஒரு முறை பேசி விட்டேன். இனி வாய்திற வேன். இன்னொரு முறையும் பேசினேன். இனிப்பேசவே மாட்டேன்'' (யோபு *39:34—45*). யோபு தம் சோதனையைக் கடந்து விட்டார் என்றும், மனிதனது ஞானம் இறைவனுக்குச் சேவை செய்வதில் தான் அடங்கியிருக்கிறது; அவரது அருள் பாலிப்பின் அறிவில் அவருக்குச் சமமாய் இருப்பதில் இல்லை என்றும் நூல் காட்டு கிறது.

இப்பதில் எதிர்மறையானதாகத் தோன்ற லாம். ஆனால் பாவத்திற்கும் துன்பத்திற்கு மிடையேயும், புண்ணியத்திற்கும் பின் சந்த திகளுக்குமிடையேயும் தொடர்பு இருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லை என்பதை நூல் உறுதியாகவும், நேரடியாக வும், தெளிவாகவும் நிறுவுகிறது. இந்த முடிவு, வருங்கால மறு உலக வாழ்வில் சன்மானம் — தண்டனை என்ற விடைக்குத் தவறாது இட்டுச் செல்லும் என்று நாம் எதிர்பார்க்கலாம்.

ஆனால், ஆசிரியர் அடுத்த அடியை எடுத்துவைக்கவில்லை. ஏன்? இஃது இறை பாலிப்பின் மற்றொரு மறைபொருளாகும். வருங்கால மறுஉலக வாழ்வு பற்றிய விசுவாசம் இஸ்ராயேலில் மெதுவாகவே வளர்ச்சியுறும். இவ்வுலக வாழ்வில் போதிய நீதியில்லை என்பதால், வருங்கால வாழ்வு இருக்கவேண்டும் என்ற அடிப் படையில், வருங்கால வாழ்வு உள்ளது என்று கிறிஸ்தவத்திற்குமுன், எந்தத் தத்துவ ஞானியும் உறுதியாகக் கூறவில்லை. நல் லோருக்கு நிர்வாண வாழ்வையும், தீயோ ருக்குத் தண்டனையையும் எடுத்துக் கூறும் புத்த மதம், இதற்கு நெருங்கி வருகிறது.

யோபு நூலில் பல முரண்பாடுகள் உள்ளன. ஏனெனில், ஆசிரியர், மனிதன் அணுகமுடியாத, புரிந்து கொள்ள முடியாத இறை உண்மையைப் பல கோணங்களி லிருந்து அணுக முயல்கிறார். நூல் போதிக் கும் பாடத்தை ஏற்றுக்கொள்ள, யோபு இறைவனின் அன்பனாக, புனிதனாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட மனிதன் தான் யோபு அனுபவிக்கும் துன்பங்களைத் தாங்கிக் கொள்ள முடியும். அப்படியிருந் தால்தான் அதி. *1-2*-இல் தோன்றுவதாகச் சிலர் கருதும், இறைவனது கவலையற்ற, மரத்துப்போன போக்கைக் கண்டு இடறல் படுவதை மட்டுப்படுத்தக் கூடும். இறை வன், தம் ஊழியன், எந்தச் சூழ்நிலையிலும் தமக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். யோபுவுக்கு இப்படிப் பட்ட வாய்ப்பளிக்கப்படுகிறது. இக் கருத்தை மறைசாட்சி பற்றிய கிறிஸ்தவ இறையியலோடு ஒப்பிடலாம். ஸ்தேவான், அந்தியோக்கியா இஞ்ஞாசியார் தொடங்கி இன்றுவரை, மறைசாட்சிகள் இறைவன் தங்கள் உயிரையே இறுதிப் பலியாகக் கோருவதைப் பற்றி, அவர் அநீதியானவர் என்றோ, கொடியவர் என்றோ முறையிட்ட தில்லை. அவர்கள் தாங்கள் அன்பின் இறுதிச் சாட்சியாக தங்கள் உயிரையே அர்ப்பணிக்க விரும்பினர் (யோவா *15:13*). குறைந்த ஆர்வமுடைய மறைசாட்சிகளை உற்சாகப்படுத்த, கிறிஸ்துவின் கெத்சமனித் தோட்ட மன்றாட்டு முன்மாதிரியாக உள் ளது. அதில் இறைமகன் கூடப் புலம்பி னார்; சோதனையிலிருந்து தம்மைக் காக் கும்படி மன்றாடினார்; ஆயினும், முழுச் சுதந்தரத்தோடு அதை ஏற்றுக் கொண்டார்.

**8) பிரச்சனையின் பின்வரலாறு:** இவ்வுல கில் நீதி வழங்கப்படாதவர்களுக்கும், எல் லாருக்கும் நீதி வழங்கப்படும் மறு உலக வாழ்வு இருப்பதை, யோபு நூலின் ஆசிரி யர் அறிந்திருக்கவில்லை. இதற்கு மாறாக, உயிர்ப்புக் கருத்தைப் புகுத்தும் யோபு *19:25—27* என்ற பகுதியின் வுல்கத்தா மொழிபெயர்ப்பு வாசகத்தை எடுத்துக் காட்டலாம். இது, பழுதுபட்ட வாசகத்தின் பிரமாணிக்கமற்ற மொழி பெயர்ப்பாகும். உயிர்ப்பிலும், மறு உலக வாழ்விலும் யோபுநூலின் ஆசிரியர் விசுவாசம் கொண்டி ருந்தார் என்று இவ்வாசகத்திற்கு விளக்கம் அளிக்க முடியாது. இக்கருத்து நூலின் வேறெந்தப் பகுதியிலும் காணப்பட

வில்லை. பிரச்சனைக்குப் பொருத்த முடைய விடையாக இக்கருத்தை ஆசிரியர் கருதியிருந்தால், இதை ஒரு தடவை கூறிய தோடு விட்டிருக்கமாட்டார். ஆயினும், இவ்வுலகில் தாம் குற்றமற்றவர் என்று எண்பிக்கப்படாவிட்டாலும், அவ்விதம் எண்பிக்கப்படக்கூடிய வருங்கால வாழ்வு இருக்காதா என்று யோபு வியக்கிறார். ஒருவேளை, ஆசிரியர் தமது தர்க்கத்தை இக்கருத்துக்கு இட்டுச் செல்வதாய்த் தோன் றலாம். அதற்கு வருங்கால வாழ்வில் கொள்ளும் விசுவாசமும் நம்பிக்கையும் அவசியம். அப்படிச் செல்வதற்கு அவர் காலத்து எபிரேய விசுவாசம் எந்த உதவியும் அளிக்கவில்லை. அத்தகைய விசுவாசம் கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் இஸ்ராயேல் மக்களிடையே தோன்றி, பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதுபற்றி முன்பே கூறி யுள்ளோம். ஆயினும் இந்த விசுவாச வளர்ச்சியில் யோபு நூல் ஒரு முக்கிய கட்டம் வகிக்கிறது.

வினைப்பயன் கோட்பாடு பழைய ஏற் பாட்டோடு முடியவில்லை. புதிய ஏற் பாட்டுக் காலத்திலும், பொதுவாக, மக்க ளிடையே காணப்படுகிறது. அதற்குச்சான்று யோவா *9:1-3* என்ற பகுதியாகும். இயேசு வின் சீடர்கள் வினைப்பயன் கோட் பாட்டை உண்மையாக எடுத்துக் கொள் கின்றனர். பிறவிக் குருடனான மனிதனைக் கண்ட சீடர்கள் ''இது பாவத்தின் விளைவா?'' என்று கேட்கவில்லை. ''ராபி, இவன் குருடனாகப் பிறந்தது யார் செய்த பாவம்? இவன் செய்த பாவமா? இவன் பெற்றோர் செய்த பாவமா?'' என்று கேட்டனர். அதற்கு ஆண்டவர் ''இவன் செய்த பாவமும் அன்று, இவன் பெற்றோர் செய்த பாவமும் அன்று. கடவுளுடைய செயல்கள் இவனிடம் வெளிப்படும் பொருட்டே இப்படிப் பிறந்தான்'' என்று கூறி சீடர்களைத் திருத்துகிறார். துன்பத் திற்குப் பாவத்தைத் தவிர, பிறிதொரு காரணமும் இருக்கலாம் என்று கூறுகிறார். அவர் கூறுவது யோபுநூல் படிப்பிக்கும் பாடத்திற்கு ஒப்பானது.

புதிய ஏற்பாட்டில் இலாசரும் பணக்கார னும் என்ற உவமை துன்பம் என்னும் பிரச்சனைக்கு அளிக்கும் விடையைக் கவ னிக்க வேண்டும். இறைமகன் இயேசுவின் சிலுவைப்பலியும் உயிர்ப்பும் விசுவாச முள்ளவனுக்குத் துன்பம், நீதி ஆகியவை பற்றிய இறுதிப் பொருளை அளிக்கிறது. இதைப் பற்றி புனித பவுல் ''உங்களுக்காக நான் படும் துன்பங்களில் இப்பொழுது மகிழ்ச்சி கொள்கிறேன். திருச்சபையாகிய தம் உடலின் பொருட்டு கிறிஸ்து பட வேண்டிய வேதனைகளில் இன்னும் குறை வாக இருப்பதை என் உடலில் நிறைவாக்கு கிறேன்'' (கொலோ *1:24*) என்று கூறக் கூடும். ஆயினும், துன்பம் பற்றிய மறை பொருள் விடுவிக்கப்படவில்லை. அப் படியே இருக்கிறது.

***12. இக்காலத்திற்கு:*** யோபு போராடிய பிரச்சனைகள், காலந்தோறும் மக்களின் கவனத்தை ஈர்த்துள்ளன. ஏனெனில், அவை எக்காலத்திற்குமுரியன, எல்லாரையும் பாதிக்க வல்லன. மனித இனம் அடிப்படை யில் மாறாவிட்டாலும், மனிதன் தன் ஆற்றலால் அமைக்கும் அவனது அகப்புற உலகு புதிய பிரச்சனைகளையும் சவால் களையும் எழுப்புகின்றது. இந்நிலையில் ஒரு சமயத்தின் உண்மைகள் அந்தந்தக் காலத்தில் வாழ்க்கைக்குப் பொருந்தியதாக வும் ஆற்றலுள்ளதாகவும் இருக்க வேண் டும் என்றால், அந்த உண்மைகள் அந்தந்தக் காலத்தில் எழும் பிரச்சனைகளுக்கு விளக் கம் அளிக்க வேண்டும். அக்கால மொழி யில் அந்த உண்மைகளை எடுத்துக் கூற வேண்டும். அப்படிச் செய்யும் போது உண்மைகளை விட்டுக் கொடாமல் விளக் கம் அமைய வேண்டும்.

யோபுவும் அவரது நண்பர்களும் வினைப்பயன் கோட்பாடு என்று பாரம் பரிய போதகத்தை உறுதியாக நம்பினர். அதன் விளைவாக, யோபுவின் துன்பம் பற்றி, இருதரப்பினரும் தவறான முடிவு களுக்கு வருகின்றனர். துன்பம் பாவத்தின் விளைவாகும். யோபு மிகக் கொடிய துன்பம் அனுபவிக்கிறார். ஆகவே, அவர்

A.

பெரும் பாவியாக இருக்க வேண்டும். இது நண்பர்களின் நிலை. தங்களது வினைப் பயன் கோட்பாட்டுக்கு விதிவிலக்கு இருக் கக்கூடும் என்பதை ஏற்க மறுத்துவிட்டனர். இறைவனது வழிகளை முழுவதும் அறிந்த வர்களாகவும், அவரது சுதந்தரத்தைத் தங் கள் பாரம்பரியப் போதகத்தால் கட்டுப் படுத்தக் கூடியவர்களாகவும் நடந்து கொள் கின்றனர். ஆகவே, யோபுவின் உண்மை நிலையை ஏற்கவும், அதற்குரிய ஆலோ சனையும் ஆதரவும் கூறவும் தவறிவிட்டார். வெறுமனே, உப்புச்சப்பற்ற முறையில் தங்களது பாரம்பரிய போதகத்தைக் கிளிப் பிள்ளை போல் எடுத்துக் கூறுகின்றனர். இப்படிப்பட்ட இறையியலைத் தொழி லாகக் கொண்டவர்களை நமது காலத்தி லும் காணலாம். இவர்கள் தங்கள் தொழி லில் தவறிவிட்டனர். அதன் விளைவாக மறைஉண்மைகளைப் பழிப்புக்கு உள் ளாக்குகின்றனர்.

இதற்கு மாறாக, மற்றொரு வகை இயல் வல்லுநர்களையும் காணலாம். இவர்கள் இறைவனையும் அவரது வழிகளையும் மறைஉண்மைகளையும் முழுவதும் மனித னால் அறியக்கூடும் என்று எண்ணுபவர் கள். அப்படி முடியாத போது, அவற்றை முழுவதுமே நிராகரித்து விடுவர். இவர் களும் இறைவனையும் அவரது சுதந்தரத் தையும் கட்டுப்படுத்த முயல்பவர்களே. இவர்களின் இறைவன் இவர்களது அறி வின் படைப்பே ஆகும். இவர்கள் எல்லாம் கடந்த, மனித அறிவுக்கும் அப்பாற்பட்ட, மறைபொருள் மிக்க இறைவனைச் செயல் முறையில் நிராகரிப்பவர்கள். இவர்களும் வாழ்க்கைப் பிரச்சனைகளுக்கு வழிகாட்டத் தவறிவிட்டனர். மேற்கூறப்பட்ட இருசாரா ரையும் பற்றி நாம் மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

மற்றொரு சாரார் யோபுவைப் போன்ற வர்கள். இவர்கள், வாழ்க்கைப் பிரச்சனை களைப் புரிந்து கொள்ள முடியாத போது, இறைவனைப் பழிப்பர், அவரது நீதியை ஐயுறுவர், முறைப்பாடு செய்வர். இது பல வடிவங்கள் எடுக்கலாம். இவர்கள் தங்கள் எதிர்பார்ப்புகளாலும், பாரம்பரிய போதகத் தாலும் இறைவனை ஒருவகையில் கட்டுப் படுத்த விரும்புபவர்கள். யோபு தம்பால் இறைவன் கொண்டிருக்கும் அக்கறையை யும், அன்பையும் *(1:8;2:3)* வாசகர் அறிந் திருப்பது போல், அறிந்திருந்தால், அவர் தம்மை அன்பு செய்யும் இறைவனைப் பற்றிப் பொறுப்பற்ற முறையிலும் சினத் தோடும் பேசியிருக்க மாட்டார். இந்நிலை யில்தான் இறைமகிமைத் தோற்றத்தையும் இறைவனது பேச்சையும் புரிந்து கொள்ள வேண்டும். இக்காட்சி மனித அறிவின் வரையறையை எடுத்துக்கூறி மனதில் பதிய வைக்கிறது. யோபு தமது வரைக்குட்பட்ட தன்மையையும், இறைவனது மேலாண்மை யையும், வரைக்கு அப்பாற்பட்ட தன்மை யையும் அனுபவ ரீதியாகப் புரிந்து கொள் கிறார், மனந்திரும்புகிறார், இறைவனுக்கு அடிபணிகிறார். விசுவாசமே தமது துன்பத் தில் பற்றுக்கோடு என்று அனுபவ ரீதியாகக் கற்றுக்கொள்கிறார். வேதனையால் துன் புறும் போதும் யாவும் அறிந்த இறைவன் தன் பிள்ளைகளுக்கு நன்மையானதையே அளிக்கிறார் என்பதுவே அவ்விசுவாச மாகும். இதில் யோபு நமக்கு ஓர் அரிய பாடமாக அமைகிறார்.

இறைவனது போக்கு சில உண்மைகளை வெளிப்படுத்துகிறது. இறைவன் யோபு வின் குற்றச்சாட்டுகளைப் பொருட்படுத்திய தாகத் தெரியவில்லை; அவற்றிற்குப் பதில் அளிக்கவுமில்லை. ஏனெனில், அவை இறைவனுக்கு எதிரான கிளர்ச்சியன்று, தவறான முடிவுகள். மாசற்றவனின் துன்பம் மறுக்கப்படவில்லை, விளக்கப்பட வில்லை. மாறாக, இறைவனது கேள்விகள் மற்றொரு தளத்துக்கு, உலகின் மேலுள்ள இறைவனது மேலாண்மை என்னும் தளத் திற்கு மாறுகின்றன. இறைவனது கேள்வி கள் அச்சத்தை உண்டாக்க வல்லன; மனித னது குறுகிய நோக்கத்தை உடைத்துச் செல்ல வல்லன; பணிவை ஏற்படுத்த வல்லன. அத்தகைய வியப்பின்முன் துன் பமோ, செழிப்போ, எதுவுமே பொரு ளுடையதன்று. துன்பம், இறைவனிட

மிருந்து விலக்கப்பட்டதற்கு அடையாள மன்று.

இறைவனது கேள்விகள், யோபுவின் உண்மையான மேன்மையைக் குறைக்க வில்லை; ஆனால், மனிதனது ஆற்றலை மிகைப்படுத்துவதைக் கண்டிக்கின்றன. மனிதனது வரையறைகளைச் சுட்டிக் காட்டு கின்றன. ஆனால், அவனது உண்மையான ஆற்றலைப் போற்றுகின்றன. யோபு தம் நேர்மையில் கொண்டிருந்த சுயமரியா தையை அவமதிக்கவில்லை, நகைக்க வில்லை. மாறாக, வீரனைப் போல் இறை வன் முன் நிற்க யோபு அழைப்புப் பெறுகிறார். இறைவன் முன் அடிபணியும் போது, யோபு தம்மை இழிவாகத் தாழ்த்திக் கொள்ளவில்லை. தமது உண்மை நிலையை உணர்ந்து இறைவனுக்கு அடி பணிகிறார்.

யோபுவின் நண்பர்களிடமிருந்து பல பாடங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். நமது கோட்பாடுகளில் எவ்வளவு உறுதி கொண்டிருந்தாலும், துன்புறுவோரிடம் பேசும் போது மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நண்பர்கள் யோபுவோடு அமர்ந்து ஒருவாரத்திற்குத் துக்கம் கொண் டாடியதில் ஒரு நல்ல செயல் புரிந்தனர். துன்புறுவோருக்கு, நமது பிரசன்னம், தோழமை, அன்பான செயல்கள் ஆகியவை சொற்களைவிட அதிக ஆறுதலும் தெளிவும் அளிக்கக் கூடியன. அன்பான சொற்கள் கொடிய மனப்புண்ணையும் குணமாக்க வல்லன. கவனமற்ற சொற்கள், அறிவுரை கள் துன்பத்தை அதிகமாக்கும், நிலையை மேலும் மோசமாக்கும். இதற்கு நண்பர் களின் உரைகள் சிறந்த எடுத்துக்காட்டு களாகும். அவை யோபுவுக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தன *(6:14-21)*. பிறரது தேவைகளைப் பற்றி ஒத்துணர்வு கொண் டிருக்கவேண்டும். வாழ்விலே துன்பம் அனுபவிக்காதவர்கள், பிறருடைய துன் பத்தை உணர்வதும், ஒத்துணர்வு கொள் வதும் கடினமாகும்.

யோபுவிடமிருந்து கற்றுக்கொள்ளக் கூடிய பாடம் ஒன்றுள்ளது. துன்புறும்போது வெறுப்புக்கும், மனக்கசப்புக்கும் இடம் கொடுக்கக்கூடாது. அது நமது நிலையை மேலும் மோசமாக்கும். அதற்கு மாறாக, நம்மையே ஆராய்ந்து, இத்துன்பத்தாலேயே நம்மை இறைவன்பால் ஈர்க்க இறைவனை மன்றாடுதல் நன்று. துன்பம் நமது வாழ் வில் திருத்தும் பணியைச் செய்யலாம் (எபி *12:3-13*). அது நாம் இறைவனைச் சார்ந்தி ருப்பதை மேலும் உணர ஒரு வாய்ப்பாக இருக்கலாம். நண்பர்களின் வார்த்தைகள் யோபுவுக்கு ஆறுதல் அளிப்பதற்குப் பதி லாக எரிகின்ற நெருப்பில் எண்ணெய் வார்த்தன எனலாம். ஆனால் நூலின் முடிவுரை, அவர்களோடு அவர் சண்டை போடுவதற்குப் பதிலாக, அவர்களுக்காகப் பரிந்து மன்றாடுபவராக யோபுவை விவரிக் கிறது. ''யோபு தம் நண்பர்களுக்காக வேண்டிக்கொண்டபின், ஆண்டவர் அவரு டைய செல்வச் சிறப்புக்களை மீண்டும் தந்தருளினார்'' *(42:10)*. இது கசப்பு மிகுந்த கதைக்கு எழுச்சி மிக்க முடிவாகும். இஃது ''உங்களைத் தூற்றுவோருக்காகச் செபியுங் கள்...மன்னியுங்கள், மன்னிக்கப்படுவீர்கள்'' *(லூக்6:28-37)*. என்ற இயேசுவின் போத கத்தை முன்னொலிக்கிறது.

இக்கட்டுரையின் முன்னுரையில் பல கேள்விகளை எழுப்பினோம். அவற்றை எதிர்கொள்ள, யோபுநூல் அவை பற்றிய உட்கருத்தையும் அவற்றை அணுகும் முறை யையும் கொடுக்கிறது. இறுதியில் ஒவ் வொருவரும் அவற்றை எதிர் கொள்ள வேண்டும். அவற்றோடு போராட வேண் டும். தானே அப்பிரச்சனைக்கு விடைகாண வேண்டும், அவற்றை விடுவிக்க வேண் டும். இதில் மறைபொருள் மிக்க இறை வனது மேலாண்மைக்கு ஆழ்ந்த முறையில் தன்னையே அர்ப்பணிப்பதும், தனது வரை யறைகளைச் சோதித்தறிவதில் காட்டும் நேர்மையும், படைக்கப்பட்ட பொருளின் வரையறைக்குட்பட்ட தன்மையைத் தாழ்ச் சியோடு ஏற்பதும், தனது உண்மை நிலை அறிந்தவனாய் இறைவனுக்கு அடிபணி

வதும், ஒருவனுக்குப் பாதுகாப்பாக அமை கின்றன.

**யோப்பா** *(JOPPA - அழகுள்ள)*

பாலஸ்தீனக் கடற்கரையில் எருசலே முக்கு மேற்கே வடமேற்கில் உள்ளது யோப்பா நகரம். எருசலேமுக்கு மிக அருகில் உள்ள துறைமுகம் இதுதான். ஆனால், இதில் சரியான துறைமுகம் எதுவுமில்லையாதலால் மோசமான தட்ப வெப்பம் நிலவும்போது இத்துறைமுகத் தைப் பயன்படுத்த முடியாது. எகிப்திய மன்னனான மூன்றாம் துத்மோசு கைப் பற்றிய கானானிய நகரங்களின் வரிசையில் இதுவும் ஒன்றாக வைக்கப்படுகிறது. எகிப் தின் 19-ஆவது அரச மரபைச் சேர்ந்த முதலாம் அனஸ்தாசியின் நாணல்தாள் (கி.மு. 13-ஆம் நூற்றாண்டு) இந்நகர்த் தோட்டத்தின் அழகு பற்றிப் பேசுகிறது. அமர்னா ஏடுகளில் இது நிர்வாக மைய மாகக் காட்டப்படுகிறது. தாண் கோத்திரத் தின் நகராகக் கூறப்பட்டாலும் (யோசு 19:46), இஃது இஸ்ராயேலரின் நகரமாக இருந்ததே இல்லை. கானானியர்களிடமோ, பெலிஸ்தியரிடமோ, பாரசீகத்தின் ஆட்சிக் காலத்தில் பெனீசியர்களிடமோதான் இஃது இருந்தது.

கி.மு. 701-இல் அசீரியாவின் அரசன் சனகெரிபு இதனைக் கைப்பற்றினான். கேதுரு மரங்களும், தேக்கு மரங்களும், சாலமோனின் ஆலயத்திற்கும் (2 நாள் 2:15) செருபாபேலின் ஆலயத்திற்கும் (எஸ் 3:7) இந்தத் துறைமுகத்துக்குத்தான் தண்ணீரில் மிதக்கவிடப்பட்டுக் கொண்டு வரப்பட்டன. எபிரேய பழைய ஏற்பாட்டில் யோனா கரை சேர்ந்தது இந்த இடத்தில்தான் என்பதைத் தவிர இந்த ஊரைப் பற்றி வேறு ஒன்றும் கூறப்படவில்லை (யோனா 1:3). சீரியா நாட்டினர் இதனைப் பிடித்தபோது அவர் கள் கைக்குப் போனாலும், மக்கபேயர்கள் போரிட்டு இதனை மீண்டும் பிடித்ததால் யோனத்தானிடம் ஒப்படைக்கப்பட்டது (1 மக் 10:75 தொ). ஆனால், தொடர்ந்து சீமோனால் இருமுறை மீண்டும் மீண்டும் பிடிக்கப்பட்டது (1 மக் 12:33; 13:11). கி.மு. 142-இல் சீமோன் நிரந்தரமாகத் தனதாக்கி (1 மக் 14:5), இதனைச் சுற்றிப் பாதுகாப்பு அரண்களைக் கட்டி எழுப்பினார் (1 மக் 14:34; 15:28.35). பாம்பே இதனைப் பிடித்த பின், சீசர் இதனை மீண்டும் கி.மு. 47-இல் யூதர்களுக்கு அளித்தான். ஆனால், கி.பி. 67-இல் யூதர்கள் புரட்சி செய்ததால் மீண் டும் உரோமையர்கள் இதனை எடுத்துக் கொண்டனர்.

கிறிஸ்தவத் தொடக்கத்தில் யோப்பாவில் ஒரு கிறிஸ்தவ சமூகம் இருந்தது. பேதுரு உயிர்பெறச் செய்த தபித்தாவும் (அ.ப. 9:36-42), தோல் பதனிடும் சீமோனும் இங்கிருந்தவர்களே. இந்தச் சீமோனுடைய வீட்டிலிருக்கும்போதுதான் செசாரியாவிலி ருந்து வந்த கொர்னேலியுவின் ஆட்களை ஏற்று, அவர்களுடன் செல்லுமாறு பேதுரு (அ.ப. 10:7-22) ஒரு காட்சி கண்டார். புறவினத்தார் முதலில் திருச்சபையில் சேர்ந் தனர்.

**யோயதா, யோகதா** *(JEHOADDAH)*

இவர் பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர்; ஆகாசின் மகனும் அலமேத்து, அசமா வேத்து, சிம்ரி ஆகியோரின் தந்தையுமா வார் (1 நாள் 8:36). 1 நாள் 9:42-இல் இவர் யாரா என்றழைக்கப்படுகிறார்.

**யோயதான்** *(JEHOADDAN - யாவே களிப்பா வார்)*

யூதாவின் அரசன் அமசியாவின் தாய் (2 நாள் 25:1). 2 அர 14:2-இல் யோவாதீன் என்றழைக்கப்படுகிறார்.

**யோயாக்கிம்** *(JEHOIAKIM - யாவே உயர்த்து வார், நிறுவுவார்)*

1. ஏறக்குறைய கி.மு. 609-598-ஆவது ஆண்டுகளில் யூதாவின் அரசனாக இருந்த வர். யோசியா, செபிதா ஆகியோரின் இரண்டாம் மகனும், யோவகாசின் சகோதர னுமாவார் (1 நாள் 3:15).

அக்கால ஆவணங்களில் இவன் பெயர் 'யாக்கிம்' என்று காணப்படுகிறது. இது யோயாக்கிம் என்ற பெயரின் சுருக்கமாகும். இப்பெயர்கள் அவர் அரியணை ஏறியபின்

கொடுக்கப்பட்ட பெயர்களாக இருக்கலாம். அவரது இயற்பெயர் எலியாக்கிம் என்பதாகும் (*2 அர 23:34; 2 நாள் 36:4*). ஆனால், பார்வோன் நெக்கோ அவரது பெயரை யோயாக்கிம் என்று மாற்றினார். இம்மாற்றம் இஸ்ராயேலின் நாட்டுப் பெருமையைக் காட்ட, பார்வோனால் வேண்டுமென்றே செய்யப்பட்டதாகும்.

*1 நாள் 3:15* கூறுவதன்படி யோயாக்கிம் யோசியாவின் இரண்டாவது மகன். அவனது சகோதரன் யோவகாசின் மூன்று மாதங்கள் ஆட்சி செய்தபின் பார்வோன் நெக்கோ அவரை அரியணையினின்று இறக்கினார். அதன்பின் யோயாக்கிம் அரசனானார். யோயாக்கிம் தனது இருபத்து ஐந்தாவது வயதில் அரசனாகி, 11 வருடங்கள் எருசலேமில் ஆட்சி செய்தார் (*2 அர 23:36; 2 நாள் 36:5*). அவர் தாயின் பெயர் செபிதா. இவள் கலிலேயாவிலுள்ள ரூமா என்ற ஊரைச் சேர்ந்த பெதாயா என்பவரின் மகள் (*2 அர 23:36*). யோயாக்கிம் ஓர் எகிப்திய ஆதரவாளராய் இருந்ததால் இவரைப் பற்றி அதிகமாகக் கூறப்படவில்லை. இறைவாக்கினர் உரியா ஓடிச் செல்வதும், அவர் மரணமும் எகிப்தியரிடம் யோயாக்கிமுக்கு இருந்த செல்வாக்கைக் காட்டுகிறது (எரே 26:20 தொ). இது நெக்கோ அவரை அரசனாகத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமாக இருக்கலாம். யூதா நாடு தனக்கு நூறு தாலந்து வெள்ளியையும், ஒரு தாலந்து பொன்னையும் கப்பம் செலுத்த வேண்டுமென்று நெக்கோ கட்டளையிட்டார் (*2 அர 23:33; 2 நாள் 36:3*). மேற்சொன்னவற்றைப் பார்வோனுக்கு அளிக்க எண்ணி, யோயாக்கிம் நாட்டு மக்கள் ஒவ்வொருவர் மேலும் வரி விதித்தார் (*2 அர 23:35*). இவ்வாறு கிடைத்த பணத்தை அவர் தனது சொந்த நலனுக்காகப் பயன்படுத்தினார் என்பது எரேமியா அவருக்கு எதிராக உரைத்த இறைவாக்கிலிருந்து தெளிவாகிறது (*எரே 22:13* தொ).

யோசியா அரசன் மெகிதோவில் இறந்தபின் (*609*) நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பாபிலோனிய நாளேடு விவரிக்கிறது. மெகிதோ போருக்குப்பின் எகிப்தும், பாபிலோனியாவும் வல்லரசுகளாகத் திகழ்ந்தன. 609-ஆம் ஆண்டிலிருந்து 605-ஆம் ஆண்டுவரை பாபிலோனை ஆண்ட நெபோபோலாசாரும், அவனது மகன் நெபுகத்னேசரும் தெற்கு உரார்தியர் எல்லையில் வாழ்ந்தவர்களுக்கு எதிராகப் போர்கள் பல தொடுத்தனர். அதே வேளையில் எகிப்தியர்கள் யூப்பிரதீசில் உள்ள கர்க்கமிசில் தங்களது வல்லரசை நிறுவியிருந்தனர். பொதுவாக, எகிப்தே வல்லமை மிகுந்ததாக இருந்தது. நெபோபோலாசார் பாபிலோனுக்குத் திரும்பி வந்து அங்கே 605-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் இறந்தான்.

605-ஆம் ஆண்டு மே-ஜூன் மாதம் பாபிலோனியப் படைக்குத் தலைமை வகித்த நெபுகத்னேசர் கர்க்கமிசில் உள்ள எகிப்தியர்களைத் தாக்கினார். அவர் எகிப்தியர்கள் அனைவரையும் அழித்தொழித்தார் என்று பாபிலோனிய நாளேடு கூறுகிறது. அவர் தொடர்ந்து சென்று சீரியா-பாலஸ்தீன நாடுகளையும் வென்றார். விவிலியமும் இதை உறுதிப்படுத்துகிறது. ''எகிப்திய அரசன் இதன்பின் தன் நாட்டிலிருந்து வெளிவரவே இல்லை. ஏனெனில், எகிப்திய நதி முதல் யூப்பிரத்தீசு நதிவரை எகிப்திய அரசன் கைவசம் இருந்த நாட்டையெல்லாம் பாபிலோனிய அரசன் பிடித்திருந்தான்'' (*2 அர 24:7*). நெபுகத்னேசர் தன் தந்தையின் இறப்புச் செய்தி கேட்டு, பாபிலோனுக்குத் திரும்பும் முன், அதாவது ஆகஸ்டு 605-க்கு முன் இந்நிகழ்ச்சி நடைபெற்றிருக்க வேண்டும்.

கர்க்கமிசின் போர் யோயாக்கிமின் ஆட்சிக்காலத்தில் நான்காவது ஆண்டில் நடைபெற்றது என்று எரேமியா கூறுகிறார் (*எரே 46:2*). இதிலிருந்து, மெகிதோ, போர் நடந்த காலத்தையும், யோசியா இறந்த காலத்தையும் நாம் கணிக்கலாம். மேலும், யோவகாசின் ஆட்சி நாட்களையும், யோயாக்கிம் அரசனான காலத்தையும் நாம் இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

நெபுகத்னேசர் எகிப்தை வென்றதால் யோயாக்கிம் நெபுகத்னேசருக்குத் தனது ஆதரவைக் காட்டினார். ஆனால் உண்மையில், நெபுகத்னேசரின் ஆட்சியின் முதலாம் ஆண்டில், அதாவது 604-603-இல் அவர் சீரியா, பாலஸ்தீன நாடுகளின் மீது படையெடுத்து அவற்றின் மீது கப்பம் விதித்த போதுதான் யோயாக்கிம் நெபுகத்னேசருக்கு முழுவதுமாக அடிபணிந்தார் (*2 அர 24:1*தொ).

யோயாக்கிம் மூன்று ஆண்டுகள் பாபிலோனுக்குப் பணிந்திருந்தார். பின்பு, அதற்கு எதிராகக் கலகம் செய்தார் (*2 அர 24:16*). இதற்குக் காரணம், 601-600-இல் எகிப்தியர்களுக்கும், பாபிலோனியர்களுக்கும் எகிப்திய எல்லையில் நடைபெற்ற பெரிய சண்டையேயாகும். இதன் விளைவாக நெபுகத்னேசர் பாலஸ்தீனத்தில் போரிடுவதை நிறுத்த வேண்டியிருந்தது. இப்போருக்குப் பின் நெபுகத்னேசர் பாபிலோனுக்குத் திரும்பி அங்கு இரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தார். அப்போது தனது படையை வலுப்படுத்துவதில் கவனமாயிருந்தார். அதே சமயம், காசாவைப் பிடிப்பதற்கு எகிப்து வலிமை பெற்றிருந்தது (*எரே 47:1*). யோயாக்கிமின் அரசவையில் எகிப்திய செல்வாக்கு இருந்ததனால் தான், அவர் எரேமியாவின் அறிவுரையைக் கேளாமல், பாபிலோனுக்கு எதிராகக் கலகம் செய்தார் (*எரே 27:9-11*). அவரது கலகத்தை அடக்குவதற்காக நெபுகத்னேசர் கல்தேயர்களை அனுப்பினார். மேலும் சீரியர்கள், மோவாபு நாட்டவர்கள், அம்மோனியர்கள் முதலியவர்களின் உதவியையும் நாடினார் (*2 அர 24:2*). இறுதியில் 598-ஆம் ஆண்டு அவரே படைக்குத் தலைமை தாங்கி வந்து, எருசலேமை முற்றுகையிட்டார்.

''கல்தேயரின் அரசன் நெபுகத்னேசர் அவனைத்தாக்கிச் சிறைப்பிடித்து, பாபிலோனுக்குக் கொண்டு போனான். ஆண்டவரின் ஆலயத்தில் இருந்த தட்டுமுட்டுகளையும் பாபிலோனுக்குக் கொண்டு சென்று அவற்றைத் தன் கோவிலிலே வைத்தான்'' என்று நாளாகமம் கூறுகிறது (*2 நாள் 36:6-7*). எரேமியாவின் இறைவாக்குரைகள் பலவற்றில் யோயாக்கிமின் ஆட்சியைப் பற்றியும், அவரது நடத்தையைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது (*எரே 36*).

யோயாக்கிம் எவ்வாறு இறந்தார் என்பது பிரச்சனைக்குரியதாக இருக்கிறது. *2 அர 24:6*-இல் ''யோயாக்கிம் தம் முன்னோரோடு துயில் கொண்டான்'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நாளாகமத்தில் அவனது மரணத்தைப் பற்றிய குறிப்பே இல்லை. ஆனால், ''ஒரு கழுதைக்குரிய அடக்கமே அவனுக்குக் கிடைக்கும்...'' (*எரே 22:18-19*) என்றும், ''அவனது பிணம் வெளியில் எறியப்பட்டு பகலின் வெயிலிலும் இரவின் குளிரிலும் கிடக்கும்'' (*எரே 36:30*) என்றும் யோயாக்கிமின் இறப்பு பற்றி எரேமியா இறைவாக்குரைத்தார். அனேகமாக யோயாக்கிம் பாபிலோனிய ஆதரவாளர்களால் கொல்லப்பட்டிருப்பான். அவன் எகிப்தியர்களை ஆதரித்ததே இதற்குக் காரணம். எனவேதான், அவருடைய மகனான யோயாக்கின் விரைவில் பாபிலோனியர்களிடம் சரணடைந்தான். இந்தச் சூழ்நிலையில் எரேமியாவின் இறைவாக்கு நிறைவேறியிருக்கலாம்.

*மத் 1*-இல் காணப்படும் தலைமுறை அட்டவணையில் யோயாக்கிமின் பெயர் இடம் பெறவில்லை. யோசியாவின் மகனாக யோயாக்கின் (எக்கோனியா) மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளார்.

2. ஒரு பெரிய குரு. சல்லூமின் வழித்தோன்றலும் இலிகியாவின் மகனும்மாவார். இவருக்கு நாடு கடத்தப்பட்டவர்கள் காணிக்கைகள் அனுப்பினர் (*பாரூ 1:7*).

**யோயாக்கிம்** (JOIAKIM)

1. யூதித்தின் கதையில் வரும் எருசலேமின் பெரிய குரு (*யூதி 4:6. 8.14; 15:8*).

2. இவர் சூசன்னாவின் கணவர் (*தானி 13:63*).

**யோயாக்கிம்** *(JOIAKIM)*

நாடுகடத்தலுக்குப்பின் இருந்த ஒரு பெரிய குரு. ஏசுவாவின் மகன். எல்யா சீபுவின் தந்தை *(நெகே 12:10.12.26)*.

**யோயாக்கின்** *(JEHOIACHIN - யாவே நிறுவுகிறார்)*

யோயாக்கிமின் மகனும், அவருக்குப் பின் யூதாவை ஆண்ட யூதாவின் 19-ஆவது அரசனுமாவார் *(கி.மு. 598-597)*; நெபுகத் னேசரால் நாடு கடத்தப்பட்டார் *(1 நாள் 3:16-17: எஸ்த 2:6; எரே 24:1; 27:20; 28:4; 29:27)*.

அக்காலத்திய எழுத்துப் பொறிப்புகளில் இவர் பெயர் யாக்கின் என்று காணப்படு கிறது. இப்பெயரும் யோயாக்கின் என்ற பெயரும் அவர் அரசனானபோது அவ ருக்குக் கொடுக்கப்பட்ட பெயராகும். அவ ரது இயற்பெயர் எக்கோனியாவாக இருக்க லாம். இவருடைய தந்தை எலியாக்கிம் என்ற பெயரை யோயாக்கிம் என்று மாற் றிக்கொண்டார் *(2 அர 23:34)*. அது போன்றே இவரது மாமனாரும் அரசனான போது சல்லூம் என்ற பெயரை யோவகாசு என்று மாற்றிக்கொண்டார் *(2 அர 23:30; 1 நாள் 3:15; எரே 22:11)*.

யோயாக்கின் 598-ஆம் ஆண்டு திசம்பர் மாதம் தனது பதினெட்டாவது வயதில் அரசனானார்; மூன்று மாதங்கள் அரசாண் டார் *(2 அர 24:8)*. 2 நாள் 36:9-இன்படி யோயாக்கின் எட்டு வயதில் அரசனாகி 40 நாட்கள் அரசாண்டார். ஆனால், பாபிலோ னியக் கற்பலகைகளிலிருந்தும், 2 அர 24:15 அவரது மனைவியர்களைப் பற்றிக் கூறுவ தாலும், அவனுக்குப் பதினெட்டு வயதா கும் போதே அரசனானார் என்பது தெளிவா கிறது. எருசலேமைச் சேர்ந்த எல்நாத்தா னின் மகளான நெகுஸ்தா அவனது தாயார். அனேகமாக எரே 26:22; 36:12.25-இல் கூறப்பட்டிருக்கும் எல்நாத்தான் இவராக இருக்கலாம்.

யோயாக்கின் ஒரு சிதைந்து போய் கொண்டிருந்த நாட்டிற்கு அரசனானார். இவர் அரசனானபோது யூதா நாட்டினர் நெபுகத்னேசருக்கு எதிராக, புரட்சி செய்த னர். இவருடைய தந்தை யோயாக்கிம் புரட்சி ஒன்றின்போது கொலை செய்யப் பட்டார். இதுவே யோயாக்கின் விரைவில் பாபிலோனிய அரசனிடம் சரணடைவ தற்குக் காரணமாக இருந்திருக்கலாம். பாபி லோனிய வரலாற்று ஏடு ஒன்று யோயாக் கின் ஆட்சி பற்றிக் கூறுகிறது: நெபுகத்னேச ரின் ஆட்சியில் ஏழாம் ஆண்டில், கிசிலேவு மாதத்தில் (திசம்பர் 598), நெபுகத்னேசர் தனது படையைத் திரட்டிக் கொண்டு சீரியா-பாலஸ்தீன நாடுகளை நோக்கிச் சென்றார்; எருசலேமுக்கு எதிரே முகாமிட் டார். ஆதர் மாதத்தின் இரண்டாம் நாளில் (மார்ச்சு 16, 597 (அல்லது) மார்ச்சு 15), எருசலேமைக் கைப்பற்றி அதன் அரசனைச் சிறைப்படுத்தினார். அங்கு அவருக்கு விருப்பமான ஒருவனை அரசனாக்கிவிட்டு, அங்கிருந்த செல்வங்களையெல்லாம் பாபி லோனுக்கு அனுப்பினார்.

சிறைப்படுத்தப்பட்ட அரசன் யோயாக் கின்தான். நெபுகத்னேசரால் அரசனாக்கப் பட்டவர் யோயாக்கினின் சிற்றப்பனாகிய மத்தானியா ஆவார். இவன் அரசனான வுடன் செதேக்கியா என்ற மறு பெயர் பெற்றான். விவிலியத்தில் யோயாக்கின் சரணடைந்ததாகவும், அவரையும், அவர் தாய், மனைவியர்கள், ஊழியர்கள் அனை வரையும் நெபுகத்னேசர் பாபிலோனுக்குச் சிறைப்படுத்திக் கொண்டு சென்றதாகவும் கூறப்பட்டுள்ளது. எரே 52:28 நாடு கடத்தப் பட்டவர்களின் எண்ணிக்கை 3023 என்றும், 2 அர 24:14 பத்தாயிரம் என்றும் குறிப்பிடு கின்றன.

யோயரக்கின் நாடு கடத்தப்பட்டபோது தான் எரேமியா அவரைப் பற்றி இறைவாக் குரைத்தார் *(எரே 13:18-19; 22:24-30; காண்க. 24:1-10)*. எரேமியா இங்கு யோயாக்கினின் தாயாரையும் பற்றிக் குறிப்பிடுகின்றார். யோயாக்கின் அடிமைத்தனத்திலிருந்து மீண்டு திரும்பி வரமாட்டார் என்றும், அவருடைய சந்ததியார் இனி யூதாவை ஆளமாட்டார்கள் என்றும் எரேமியா கூறி னார். ஆனால், யோயாக்கின் இரண்டு

ஆண்டுகளுக்குள் திரும்பி வருவான் என்று அனனியா இறைவாக்கினர் கூறினார் (எரே *28:3-4.11*). யோயாக்கின் நாடு கடத்தப் பட்ட பிறகுதான் இறைவாக்குரைக்க ஆரம் பிக்கிறார் (எரே *1:2; 8:1*); அந்நிகழ்ச்சியை வைத்துத்தான் தனது காலத்தைக் கணக்கிடு கிறார். இது யோயாக்கின் அரச பதவி தொடர்ந்து இருக்கிறது என்று நாடு கடத்தப் பட்டவர்கள் எண்ணியதைப் பிரதிபலிக் கிறது.

யோயாக்கின் திரும்பி வரும்வரை உள்ள இடைக்கால அரசராக செதேக்கியா பலரால் கருதப்பட்டிருக்கலாம். செதேக்கியாவின் காலத்தைச் சேர்ந்த இரு ஜாடிகளின் கைப் பிடிகள் அகழ்வாராய்வில் கிடைத்துள்ளன. அவற்றின்மீது ''யாக்கினின் (யோயாக்கின்) கண்காணிப்பாளனான எலியாக்கிமுக்குச் சொந்தமானது'' என்று பொறிக்கப்பட்டுள் ளது. எனவே, நாடு கடத்தப்பட்ட பின்பும் யோயாக்கின் அரசனாகக் கருதப்பட்டது தெரிகிறது. செதேக்கியாவுக்குப் பிறகு யூதா வின் ஆளுநராக இருந்த கெதல்யாவும் இடைக்கால ஆளுநராகவே கருதப்பட்டிருக் கலாம்.

பாபிலோனில் யோயாக்கின் யூதாவின் அரசன் என்றே அழைக்கப்பட்டார். 592-ஆம் ஆண்டைச் சேர்ந்த பாபிலோனியக் கற்பலகை ஒன்றில் யோயாக்கினின் பெயர் காணப்படுகிறது. மற்றொரு கற்பலகை அவருக்கு உணவுப் பொருட்கள் வழங்கப் பட்டதையும், அவருக்கு 5 புதல்வர்கள் இருந்ததையும் குறிப்பிடுகிறது. இதிலிருந்து யோயாக்கின் சிறையில் அடைக்கப்படா மல் வாழ்ந்தார் என்பது தெரிகிறது. பின்னர் ஒருவேளை தப்பிக்க முயன்றதால் சிறைப் படுத்தப்பட்டிருக்கலாம்.

பாபிலோனிய அரசன் எவில்- மெரோதாக்கு யோயாக்கினைச் சிறையிலி ருந்து விடுவித்தார் (2 அர *25:27-30*; எரே *52:31-34*). இது நடந்தது *560* அல்லது *561*-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 20 அல்லது 22-ஆம் தேதியாக இருக்கலாம். யோயாக்கி னுக்குப் பாபிலோனிலிருந்த மற்ற அரசர் களின் மேல் அதிகாரம் வழங்கப்பட்டது. அன்று முதல் தான் சாகும் வரை அவர் அரச பந்தியிலேயே அமர்ந்து உணவருந்தி வந்தார். அவர் இவ்வாறு நடத்தப்பட்டதால் நாடு கடத்தப்பட்ட இஸ்ராயேல் மக்க ளிடையே பெரும் நம்பிக்கை உதித்தது. அது மெசியாவை எதிர்பார்க்கும் அளவுக்கு வளர்ந்தது.

யோயாக்கினுக்கு ஏழு புதல்வர்கள் இருந் தனர். அவர்களின் பெயர்கள் 1 நாள் *3:17*-இல் காணப்படுகின்றன. அவைகளில் ஒரு பெயரான செனாட்சர் என்பது எஸ் *1:8*-இல் குறிப்பிடப்பட்டிருக்கும் சேசுபட் சரையே குறிக்கும் என்று சிலர் கருதுகிறார் கள். ஆகவே, பாபிலோனிலிருந்து திரும்பி வந்தபின் அவரே யூதாவின் முதல் ஆளுந ராக இருந்திருக்கலாம். இவருக்குப்பின் யோயாக்கினின் பேரனான செருபாபேல் ஆளுநரானார்.

மத் *1:11-12*-இல் காணப்படும் இயேசு வின் தலைமுறைப்பட்டியலில் யோசியா வின் மகன் எக்கோனியா (யோயாக்கின்) என்று கூறப்பட்டுள்ளது. யோயாக்கிமின் பெயர் பட்டியலில் இடம் பெறவில்லை.

**யோயாதா** (JEHOIADA - யாவே அறிவார்)

1. கெரேத்தியருக்கும் பெலேத்தியருக் கும் தலைவனும், தாவீதின் கூலிப்படைத் தலைவனுமான பெனாயா என்பவரின் தந்தை (2 சாமு *8:18; 20:23; 23:20.22*; 1 அர *1:8-2:46*). இவர் சாலமோனின் கீழ் பணிபுரிந்தார் (1 அர *4:4*; 1 நாள் *11:22.24; 18:17; 27:5*). இவரே எபிரோனிலிருந்த தாவீதிடம் வந்து சேர்ந்த ஆரோன் வழிவந்த வருக்குத் தலைவரான யோயாதா ஆவார் (1 நாள் *12:27*).

2. இவர் நூற்றுவர் தலைவர்களையும் வீரர்களையும் வரவழைத்து, அவர்களோடு உடன்படிக்கை செய்து கொண்டு, யூதாவை ஆண்ட அரசி அத்தலியாவை அரியணையி னின்று இறக்கினார் (கி.மு. *842-837*). மேலும், அவள் பரப்பி வந்த பாகால் வழிபாட்டை ஒழித்து, இளவரசனான யோவாசை அரியணையில் அமரச் செய்தார்

*(2 அர 11:4-21)*. யோவாசு சிறியவனாக இருந்தபோது அரசாள்வதில் அவருக்கு உதவி செய்தார். ஆலயத்தைப் பழுது பார்க்க யோவாசைத் தூண்டியவரும் இவர் தான் *(2 அர 12:1-6)*. இதற்கு இணையான பகுதியான 2 நாள் 22:10-24:27-இல் அத்தலி யாவால் கொல்லப்படாமல் யோவாசை மறைத்து வைத்துக் காத்த யோசேபா என்பவள் யோயாதாவின் மனைவி என்று கூறப்பட்டுள்ளது *(22:10-12)*. அவ்வாறு இருப்பின், யோயாதா புதிய அரசனான யோவாசின் மாமனாராவார்.

யோயாதா இறந்த பிறகு யோவாசு தன் நற்செயல்களைக் கைவிட்டான். மக்கள் சிலை வழிபாட்டில் ஈடுபட்டனர். யோயா தாவின் மகன், செக்கரியாவைக் கொலை செய்தான். ஏனெனில், செக்கரியா யூதா குலத்தினர் இறைவனைப் புறக்கணிப் பதைப் பற்றிக் கண்டித்தார். செக்கரி யாவைக் கொன்றதற்காக இறைவன் அவனைத் தண்டித்தார். இறுதியில் அவர் தோல்வியுற்றதோடு அல்லாமல் 130-ஆவது வயதில் கொல்லப்பட்டார் *(4:17-27)*. இவர் யூதாவுக்கும் யாவேக்கும் செய்த நல்ல சேவைக்குச் சன்மானமாக அரச கல்லறை யில் அடக்கம் செய்யப்பட்டார்.

3. 1 நாள் 27:34-இன்படி, இவர் அகித் தோபலுக்குப் பின் தாவீது அரசரின் ஆலோ சகராய் இருந்தார். இவர் பெனாயா என்ப வரின் மகனும், அனேகமாக (1)-இல் உள்ள யோயாதாவின் பேரனுமாவார். எழுத்துப் பிழை காரணமாக தலைமுறை அட்ட வணை மாறியிருக்கிறது என்றும், (1)-இல் கூறப்பட்டிருக்கும் யோயாதாவே இவர் என்றும் சிலர் கூறுகிறார்கள்.

4. இறைவாக்கினர் எரேமியா காலத்தில் இருந்த ஒரு குரு *(எரே 29:26)*.

**யோயாதா** *(JOIADA - யாவே அறிகிறார்)*

1. நெகேமியாவின் கீழ் எருசலேமின் சுவரில் பழைய வாயிலைக் கட்டியவரான பாசயாகு என்பவரின் மகன் *(நெகே 3:6)*.

2. நாடு கடத்தலுக்குப்பின் திரும்பி வந்து எருசலேமில் இருந்த தலைமைக்குருவான இவர் எல்யாசீபுவின் மகனும், யோகனா னின் தந்தையும் ஆவார். இவர் நெகேமியா வின் காலத்தவர். அறிஞர்கள் சிலர் 'யோக னான் எல்யாசீபுவின் மகன்' என்று இருப் பதைச் சுட்டிக்காட்டி *(நெகே 12:23; எஸ் 10:6)*, இதனால் யோகனான் யோயாதாவின் சகோதரனேயன்றி மகனல்லன் என்கின்ற னர். ஆனால், மகன் என்பது பேரனையும் குறிக்குமாதலால், யோகனான் யோயாதா வின் மகன்தான் என மற்றவர்கள் இக் கருத்தை மறுக்கின்றனர்.

**யோயாரிபு** *(JEHOIARIB - யாவே போராடு வாராக)*

ஆரோவின் வழிவந்தவர். தாவீது அரச னின் காலத்தில் இருந்த குருத்துவக் குடும் பம் ஒன்றின் குலப்பெயர் முதல்வர் *(1 நாள் 24:7)*. பாபிலோனிலிருந்து திரும்பி வந்தவர்களின் பட்டியலிலும் இக்குடும் பத்தைச் சேர்ந்தவர்களின் பெயர்கள் காணப் படுகின்றன *(1 நாள் 9:10; நெகே 11:10)*.

**யோயாரிபு** *(JOIARIB - யாவே போராடு கிறார்)*

1. பாலஸ்தீனத்துக்கு வருவதற்குமுன் ஆலயப்பணியாளர்களை ஒன்று சேர்ப்ப தற்கு எஸ்ராவுக்கு உதவியவர் *(எஸ் 8:16)*; இதே (வரியில்) வாக்கியத்தில் வரும் யாரீபு இவராக இருக்கலாம் என்றும் கூறப்படு கிறது.

2. நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் வாழ்ந்த ஒரு குருவின் குடும்பத்தின் பெயர் *(1 நாள் 9:10)*. செருபாபேல் *(நெகே 12:6)*, பெரிய குரு யோயாக்கீம் *(12:19)*, நெகேமியா *(நெகே 11:10)* ஆகியோர் காலத்தில் இப்பெயர் சிறப்பாகக் குறிக்கப் படுகிறது.

3. நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் வாழ்ந்த யூதா கோத்திரத்தைச் சேர்ந்த இவர் மாசெயாவின் முன்னோராவார் *(நெகே 11:5)*. செக்கரியாவின் மகனும் அதாயாவின் தந்தையுமாவார்.

**யோரா** *(JORAH - முந்திய மழை)*

இவர் பாபிலோனிய அடிமைத்தனத்தி லிருந்து செருபாபேலோடு திரும்பிய ஒரு குடும்பத்தின் தலைவர் *(எஸ் 2:18)*. நெகே *6:24*-இல் இவர் அரிபு என்றழைக்கப்படு கிறார்.

**யோராம்** *(JEHORAM, JORAM - யாவே உயர்த்தப்பட்டவர், பெருமைப்படுத்தப்பட் டவர்)*

*1.* இவர் அமாத்தின் அரசனான தோயி என்பவரின் மகன். தனது பகைவனான அத்தேசருடன் தாவீது போரிட்டு அவனைத் தோற்கடித்ததால் தாவீதுக்கு வாழ்த்துச் சொல்லவும், நன்றி கூறவும் தனது மகன் யோராமைத் தாவீதிடம் அனுப்பினான் *(2 சாமு 8:9-12)*; அவ்வாறு செல்லும்போது பொன், வெள்ளி, வெண்கலப் பாத்திரங் களைக் கொடையாக எடுத்துப்போனான். *1 நாள் 18:10*-இல் இவன் பெயர் ''தோகு வின் மகன் அதோராம் என்று வருகின்றது.

*2. கி.மு. 849-842*-இல் யூதாவின் அரச னாக இருந்த யோராம் யோசபாத்தின் மகன் *(1 அர 22:51)*. ஆகாபு, ஈசபேல் இவர்களின் மகளாகிய அத்தலியாவின் கணவன். *32*-ஆவது வயதில் அரசனானான். எட்டு ஆண்டுகள் ஆட்சி செய்தான் *(2 அர 8:17; 2 நாள் 21:5)*. இவனது ஆட்சிக்காலத்தில் தான் ஏதோம் யூதாவுக்கு எதிராகக் கிளர்ந் தெழுந்தது. அதனால் அதன் மேலுள்ள மேலாண்மையை யூதா இழந்தது. யோரா மின் உயிரும் ஆபத்துக்குரியதாகியது. லிப் னாவும் யூதாவுக்கு எதிராகப் புரட்சி செய் தது *(2 அர 8:16-24)*. நாளாகமம், இவன் தனது சகோதரர்களையெல்லாம் கொன் றான் எனவும் *(2 நாள் 21:4)*, அதன் பின் இவனது அரசில் பெலிஸ்தியரும், அராபி யரும் புகுந்து இதனை ஆட்கொண்டனர் எனவும் கூறுகிறது *(2 நாள் 21:16-17)*. இறைவாக்கினர் எலியாவிடமிருந்து ஒரு பயமுறுத்தும் கடிதம் வந்தது *(2 நாள் 21:12-15)*; அதில் அவன் செய்த தீமைகளின் விளைவால் குடல்நோயால் துயறுற்று இறப்பான் என எழுதப்பட்டிருந்தது *(2 நாள் 21:18* தொ) என்றும் ஆசிரியர் கூறுகிறார். ஆனால் நாளாகமத்தின் பாரம்பரியம் எவ் வளவு தூரம் வரலாற்று உண்மைகள் உடையது என்பது சந்தேகத்துக்குரியது. ஏனெனில் பாவம் செய்பவர்க்குத் தண் டனை உண்டு எனும் இறையியல் கருத்தை உணர்த்தவே இவையெல்லாம் கூறப்பட் டன. ஆனால், அரசர் ஆகமத்தில் கூறப் படும் யோராமின் துன்பங்கள் ஆகாபு குடும்பத்துப் பெண்ணை மணந்த அரசனின் தீமைக்குப் பொருத்தமாக அமையவில்லை.

*3. கி.மு. 849-842* வரை இஸ்ராயேலின் அரசனாக இருந்த யோராம், அகாசியாவின் மகன் *(2 அர 1:17; 3:1-3)*. ஆகாபு இறந்த பின் இஸ்ராயேலுக்கு எதிராக மோவாபு அரசன் மேசா கிளர்ச்சி செய்ததால், அவனை அடக்க யோராம் சென்றபோது, யோசபாத்து அவனுக்குச் சிற்றரசனானதால் யோசபாத்தும் அப்போரில் பங்கு பெற வேண்டியிருந்தது *(1:1; 3:4-5)*. இவர்கள் மோவாபியருடன் போர்புரியச் செல்லும் வழியில் குடிக்க நீரின்றி வருந்தியபோது இறைவாக்கினர் எலிசாவை அணுகி இறை வாக்கு என்னவென்று கேட்டனர். அவர், இறைவன் உங்களுக்கு நீரும், மோவாபிய ரிடம் வெற்றியும் தருவார் என்றார். மழை பெய்து நீர் கிடைத்தது. வெற்றியும் பெற்ற னர் *(3:4-12)*. ஆனால், மேசா மோவாபை மீண்டும் இஸ்ராயேலிடமிருந்து கைப்பற்றி னான் என்று கூறப்படுகிறது. தமஸ்குவைச் சேர்ந்த அசாவேலுடன் போரிட்டு யோராம் இராமோத்து கிலயாதில் காயப்படுத்தப்பட் டான். காயத்தைக் குணப்படுத்த இஸ்ரியே லுக்குச் சென்றபோது ஏகூவினால் கொல் லப்பட்டான். இவனது உடல் நாபோத்தின் தோட்டத்தில் எறியப்பட்டது *(2 அர 8:28-9:29; 2 நாள் 22:5-9)*. இவ்வாறு எலியாவின் இறைவாக்கு *(1 அர 21:17-19)* நிறைவேறிற்று.

*4.* மோசேயின் மகனான எலியேசரின் வழிவந்த ஒரு லேவியர் *(1 நாள் 26:25)*.

*5.* யூதாவின் மக்களுக்கு ஆண்டவரது சட்டத்தைப் போதிக்க அரசன் யோசபாத்து அனுப்பிய குழுவில் இருந்த இரு குருக் களில் ஒருவர் *(2 நாள் 17:8)*.

**யோராய்** *(JORAI - யாவே படிப்பிக்கிறார்)*

இவர் அபிகயிலின் மகன். பாசானில் வாழ்ந்த காத்து இனத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தின் தலைவர் *(1 நாள் 5:13).*

**யோரிம்** *(JORIM - யாவே உயர்த்தப்பட்டார்)*

இயேசுவின் மூதாதையர்களுள் ஒருவர். மத்தாத்தாவின் மகனும், எலியேசரின் தந்தையும் ஆவார் *(லூக் 3:29).*

**யோர்க்கயாம்** *(JORKEAM)*

இவர் இரகாமின் மகனும், காலேபுவின் வழித்தோன்றலுமாவார் *(1 நாள் 2:44).* அறிஞர் பலர் யூதாவின் பகுதியிலுள்ள ஒரு குடியிருப்பின் பெயராக விளக்குவர். எழுபது நூல், யோசு *15:56*-இல் வரும் யோக்தயாம் என்ற நகருக்குப் பதிலாக யோர்க்கயாம் என்று கொண்டுள்ளது. இஃது இந்த இரு பெயர்களுள் ஒன்று எழுத்தருடைய வேறுபாடாக இருக்கலாம் என்று சுட்டுகிறது. இந்த இடம் எபிரோனுக்குத் தெற்கிலுள்ள மலைப்பகுதியில் சீபுவுக்கு அருகிலுள்ள இக்காலக் கிர்பெத் ராகவாக இருக்கலாம்.

**யோர்தானுக்கு அப்பால்** *(JORDAN, BEYOND THE)*

ஒருவர் இருக்கும் இடத்தைப் பொருத்து யோர்தானின் கிழக்குப் பகுதியையோ மேற்குப் பகுதியையோ குறிக்கும் ஒரு சொற்றொடராகும். விவிலியத்தில் இச் சொற்றொடர் ஏறக்குறைய முப்பது தடவை வருகிறது. ஐந்து தடவைதான் இச்சொற்றொடர் யோர்தானுக்கு மேற்கிலுள்ள பகுதியைக் குறிக்கிறது *(ஆதி 50:10-11; உப 3:20.25; 11:30).* மற்றப் பகுதிகளில் இச் சொற்றொடர் யோர்தானுக்குக் கிழக்கிலுள்ள பகுதியையே குறிக்கின்றது. புதிய ஏற்பாட்டிலும் *(எ.கா. யோவா 1:28)* தால்மூது நூல்களிலும் இவ்வாறே இச்சொற்றொடர் பயன்பட்டுள்ளது.

**யோர்தான்** *(JORDAN,)*

இது பாலஸ்தீனத்திலுள்ள மிகப்பெரிய, மிக முக்கியான ஆறாகும். வடக்கே எர்மோன் மலையில் தொடங்கி தெற்கில் சாக்கடலில் ஒன்று கூடுகிறது. யோர்தான் என்ற சொல்லுக்குப் பலவாறு சொல்லிலக்கணம் கூறப்படும். ''எப்போதும் ஓடும் ஆறு'', ''விரைவாக இறங்கும் ஆறு'' ''நீர் குடிக்கும் இடம்'' என்று பலவாறு பொருள் கூறப்படும்.

உலகிலேயே மிகப்பெரிய நிலப்பிளவுப் பள்ளத்தாக்கின் வடநீட்டிப்பில் யோர்தான் ஆறு அமைந்துள்ளது. இந்த நிலப்பிளவு, ஆப்பிரிக்காவின் தென்கிழக்குப் பகுதியில் தொடங்கி பாலஸ்தீனம் வழியாக சீரியா வரை செல்கிறது. இந்தப் பிளவைப் பொருத்தது யோர்தானின் போக்கும், அதன் உப ஆறுகளான யார்முக்கு, யாபோக்கு, அர்னோன் மற்றும் சாரேதின் போக்கும் ஆகும். அவ்வப்போது நிகழும் நிலநடுக்கங்களும், நிலச்சரிவுகளும், வெப்ப நீர்ச்சுனைகளும் இப்பகுதியின் எரிமலைத் தன்மையுடைய கடந்த காலத்தின் அடையாளங்களாக உள்ளன.

யோர்தான் வளைந்து வளைந்து *320* கி.மீ. நீளம் அமைந்துள்ளது. இதன் படுகை தீக்கல் அல்லது எரிமலைப்பாறை வகையைச் சேர்ந்தது. இது வசந்தகால வெள்ளப் பெருக்குக்காலத்தில் *30.5* மீட்டர் அகலமுடையது. ஒன்று முதல் மூன்று மீட்டர் ஆழமுடையது. இதன் நெடுகிலும் பல கடவுத்துறைகள் காணப்படுகின்றன.

ஆற்றின் மூலங்கள், கிழக்கிலிருந்து மேற்காக நகர் பனியா, நகர் ஏல்-லேதான், நகர் கஸ்பானி மற்றும் நகர் பரேய்கித்து ஆகும். யோர்தான் தெற்கு நோக்கி ஓடும்போது கூலே ஏரி அல்லது பள்ளத்தாக்கு வழியாகச் செல்கிறது. விவிலியக் காலங்களில் இது வெப்ப மண்டலத்தைச் சேர்ந்த சதுப்பு நிலமாக இருந்தது. இங்கு நாணல்புல் அதிகமாக வளர்ந்தது.

இது மேலும் *11* கி.மீ. இறங்கி அடுத்து காலிலேயாக் கடலில் சேர்கிறது. சாதகமான தட்ப வெப்ப நிலையும், நீர் மிகுதியாகக் கிடைப்பதும் வரலாறு தோறும், கலிலேயாவை விவசாய முக்கியத்துவமுடையதாக்கியுள்ளது.

யோர்தான் மேலும் 180 மீட்டர் தாழ்ந்து கலிலேயாக் கடலிலிருந்து சாக்கடலுக்கு ஓடுகிறது. இப்பகுதியில் நீர் வேகமாக ஓடும். நீர்ச் சுழல்கள் காணப்படும். ஆற்றுப் படுகை அடிக்கடி மாறும். பள்ளத்தாக்கின் தாழ்ந்த பகுதிகளில் அடர்ந்த காடுகள் காணப்படுகின்றன. உயர்ந்த பகுதிகள் விளைநிலங்களாகவும், மேய்ச்சல் நிலங்களாகவும் உள்ளன. கலிலேயாவுக்குத் தெற்கே எட்டு உபநதிகள் உள்ளதால், தெற்கு யோர்தான் பள்ளத்தாக்கில் பல குடியிருப்புகள் தோன்றின. அவற்றில் சில யாபேசு-கிலயாது, எரிகோ, பெத்சான் ஆகியவையாகும்.

விவிலிய நிகழ்ச்சிகள் விவரிப்பில் யோர்தான் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. பழைய ஏற்பாட்டில் ஆபிரகாமும், லோத்தும் பிரிந்து போவது பற்றி நிச்சயிக்கும் நிகழ்ச்சியில் யோர்தான் முதன் முதல் குறிக்கப்படுகிறது (ஆதி 13:10-11). யோர்தானின் செழிப்பு மிக்க பள்ளத்தாக்குக்குச் செல்ல லோத்து தேர்ந்து கொண்டார். பிற்காலத்தில் யாக்கோபு ஆராமுக்குச் செல்லும்போது யோர்தானைக் கடந்து சென்றார் (32:10).

வாக்களிக்கப்பட்ட நாட்டிற்குள் புகுமுன் இஸ்ராயேலர் எதிர்கொண்ட கடைசித்தடை யோர்தானாகும். இந்த ஆற்றைக் கடந்து செல்வது மோசேயின் இறுதி விருப்பமாக இருந்தது (உப 3:23-25). அப்படிச் செய்வது யோசுவாவுக்கு ஆண்டவர் அளித்த முதல் கட்டளையாகும் (யோசு 1:2). யோர்தானை வியத்தகு முறையில் கடந்தது (யோசு 3-4; யாத் 14-15), எரிகோவின் அழிவிற்கும் கானானியர்களை அடிமைப்படுத்துவதற்கும் இட்டுச்சென்றது.

நீதிபதிகளிலிருந்து தொடக்க அரசாட்சிக்கு இடைப்பட்ட காலத்தில் யோர்தான் போர்த்தடையாக இருந்தது. ஆற்றின் கடவுத்துறைகளைக் கட்டுப்படுத்துவது பல போர்களில் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது (நீதி 3:29-29; 7:24-25; 12:5-6; காண்க. 1 சாமு 22:3-4; 2 சாமு 17:22; 19:1தொ).

எலியா, எலிசா பற்றிய சில நிகழ்ச்சிகளுக்கு யோர்தான் பள்ளத்தாக்கு பின்னணியாக உள்ளது. இங்கே இவர்களும் இவர்களுடைய சீடர்களும் கூடினர். இப்பகுதியில்தான் இந்த இரு இறைவாக்கினர்களும் பல வியத்தகு செயல்களைச் செய்தனர் (2 அர 2; 5:1-14; 6:1-7).

நற்செய்தியில் வரும் நிகழ்ச்சிகளுக்கும் யோர்தான் பின்னணியாக உள்ளது. திருமுழுக்கு யோவான், பாலை நிலத்திலிருந்து வெளிவந்து யோர்தானில் திருமுழுக்கு அளித்தார் (மத் 3:1-12 இணை). இங்குதான் இயேசு திருமுழுக்குப் பெற்றார் (3:13-17 இணை). இயேசு தனது பொதுப்பணிக் காலத்தில் ஆற்றில் கிழக்குக் கரையில் பயணம் செய்தார் (லூக் 12-18). எருசலேமுக்குச் செய்த தனது கடைசிப்பயணத்தில் எரிகோவுக்கு அருகில் இயேசு யோர்தானைக் கடந்து சென்றார்.

## யோர்தான் காடு, யோர்தான் மேன்மை (JUNGLE OF JORDAN, PRIDE OF JORDAN)

காலப்போக்கில் யோர்தானின் குறுகிய, வளைந்து செல்லும் படுகை அரிமானத்திற்குள்ளாயிற்று. அதில் வெப்பமும் வெள்ளப் பெருக்கும் சேர்ந்து பலவகை மரங்களும் செடிகளும் சேர்ந்த அடர்ந்த காடுகள் உண்டாயின (எரே 12:5; செக் 11:3). இக்காடுகள் காட்டு விலங்குகளின் உறைவிடமாயின (எரே 49:19; 50:44; செக் 11:3); ஆபத்துகள் நிறைந்த இடமாயின (எரே 12:5).

## யோர்தான் கிழக்குப்பகுதி (TRANSJORDAN)

1. கலிலேயாக்கடல், யோர்தான் ஆறு, அரபா அடங்கிய நிலப்பிளவுக்குக் கிழக்கிலும், சீரியா மற்றும் வட அராபியாப் பாலைவனத்திற்கும் மேற்கிலும் உள்ள பகுதி இப்பெயரால் குறிப்பிடப்படுகிறது. வடக்கில் எர்மோன் மலையிலிருந்து, தெற்கில் சாக்கடலின் தென்கிழக்குப் பகுதிவரை இப்பகுதி 350 கி.மீ. நீளமுடையது. வடக்கிலிருந்து தெற்காக, கலிலேயக்கடலின் தென்கிழக்கிலிருந்து இப்பகுதியில் பாசான், கிலயாது, அம்மோன், மோவாபு, ஏதோம்

நாடுகள் அமைந்துள்ளன என்று விவிலியம் குறிக்கிறது.

**2. விவரிப்பு:** மிகவும் சாதகமான கோணத்தில், யூதேயா அல்லது சமாரியாவின் கிழக்குப்பகுதியில், யோர்தானுக்குக் கிழக்குப்பகுதி நிலப்பிளவிலிருந்து எழும் பாறைச் சுவராகத் தோன்றுகிறது. இஃது உயர்ந்த பீடபூமியாகும். இஸ்ராயேலின் மத்திய பகுதியைப்போல் இப்பகுதியும் நிலவியல் சக்திகளாலும், மூலக்கடல்களாலும் பழங்கால எரிமலைகளாலும் உண்டாக்கப்பட்டதாகும். இதன் மேற்பரப்பு சிதைந்து போன தீக்கற்களாலும் மண்ணாலும் ஆனது. இப்பகுதியில் நிலவியல் சக்திகளால் ஏற்பட்ட கிழக்கு - மேற்காக அமைந்த நான்கு பிளவுகள் - யார்முக்கு, யாபோக்கு, அர்னோன், சேரேது - அமைந்துள்ளன. இந்தப் பாறைக் குடைவுகளின் வழியாக மழைநீர் மேற்காக ஓடுகிறது. இன்றும் இவை நீரோட்டமுடைய ஆறுகளாக உள்ளன. யார்முக்கு யோர்தானைச் சேரும்போது, யோர்தான் அளவு நீரைக் கொண்டுள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக, இந்தப் பிளவுகள் இப்பகுதியிலிருந்த நாடுகளின் இயற்கையான எல்லைகளாக அமைந்திருந்தன.

மத்தியதரைக் கடலிலிருந்து வரும் ஈரப்பசை மிக்க காற்றை இஸ்ராயேலின் நிலப்பரப்பு அனுமதித்த அளவுக்கே யோர்தான் கிழக்குப்பகுதி மழைநீரைப் பெற்றது. இவ்வாறு வடபகுதியாகிய பாசானும் கிலயாதும் ஏறக்குறைய ஆண்டுக்கு *100-125* செ.மீட்டர் அளவு மழையைப் பெற்றன. மோவாபும், அம்மோனும் குறைந்த அளவே மழைநீரைப் பெற்றன *(25-50* செ.மீ.). இதன் விளைவாக வடபகுதி விவசாயத்திற்கும், தென்பகுதி மேய்ச்சல் நிலங்களாகவும் பயன்பட்டன (காண்க. எண் *32:1;* 2 அர *3:4*). வறட்சியான ஏதோமை நாடோடி இனத்தவரும், இடையர்களும், வணிகர்களும் பயன்படுத்தினர். புதிய ஏற்பாட்டுக் காலத்தில் வடபகுதியில் தானியங்கள் அதிகமாகப் பயிரிடப்பட்டு ஆக்கோவிலிருந்து உரோமைப் பேரரசு முழுவதற்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. கிலயாது அதன் அடர்ந்த காடுகளுக்கும், வாசனைச் செடிகளுக்கும் பெயர்பெற்றது.

**3. முக்கியத்துவம்:** இஸ்ராயேலின் வரலாற்றில் யோர்தான் கிழக்குப்பகுதி முக்கியப் பங்காற்றியது. இஸ்ராயேல் நாட்டின் பொருளாதார அரசியல் நிலைகள், அது தனது அண்டைநாடுகளோடு கொண்டிருந்த உறவைப் பொருத்தன. தாவீது காலத்தில் இருந்ததுபோல், இஸ்ராயேல் கிழக்குப் பாலைவனப்பகுதிகளைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டிருந்ததால், அது நாட்டிற்குச் செழிப்பைக் கொண்டு வந்தது. இல்லையெனில், சாலமோனுக்கு எதிராக அதாதும் எரெசினும் இருந்தது போல், இப்பகுதி பல எதிரிகளைக் கொண்டு வரக்கூடும் *(1 அர 11:14-25)*. எஃது எப்படியிருந்தாலும் இந்தக் கிழக்கு நாடுகளை ஒதுக்கிப் புறக்கணிக்க இஸ்ராயேலரால் முடியாது. ஏனெனில், இவர்கள் மேற்கு நோக்கி தங்கள் நாட்டை விரிவாக்கும் நோக்கமுடையவர்கள்; இஸ்ராயேலைத் தங்கள் முதல் எதிரியாகக் கருதியவர்கள்.

யோர்தான் கிழக்கிலுள்ள பகுதியில் இஸ்ராயேலர் இனத்தவர்கள் புக முனைந்தபோது, முதல் சச்சரவு ஏற்பட்டது. தெற்கில் காதேசு-பர்னேயாவிலிருந்து வாக்களிக்கப்பட்ட நாட்டிற்குள் இஸ்ராயேலர் புக முடியாதபோது, அவர்கள் கிழக்காகப் பயணம் செய்து அராபாவைக் கடந்து, வடக்கு நோக்கிப் பயணம் செய்து சேரேது, அர்னோன் பள்ளத்தாக்குகளைக் கடந்தனர் *(எண் 21:10-13)*; ஏதோமையும், மோவாபையும் சுதந்தரமாகக் கடந்து சென்றனர். ஆனால், எமோரிய அரசன் சீகோன் தன் நாட்டின் வழியாக இஸ்ராயேலர் கடந்து செல்ல அனுமதி கொடுக்க மறுத்ததோடு அவர்களோடு போர்புரியத் தொடங்கினான்; ஆனால், தோற்கடிக்கப்பட்டான் *(21:21-30)*. காத்து, ரூபன் இனத்தவரும், மனாசேயின் பாதி இனத்தவரும் யோர்தான் கிழக்குப் பகுதியிலேயே குடியேறினர் *(எண் 32; யோசு 13:8-33)*. இப்பகுதி

எப்போதும் கிழக்கிலிருந்து வரும் எதிரிகளின் தாக்குதல்களுக்கு உட்பட வேண்டியிருந்தது. இதற்கு எதிராக, ஏகூது (*நீதி 3:12-30*), கிதியோன் (*நீதி 6-8*), இப்தாகு (*10:6-12:7*) போன்ற நீதிபதிகள் அல்லது விடுதலை வீரர்கள் போராட வேண்டியிருந்தது. தாவீதுதான் இப்பகுதியைக் கட்டுப்படுத்தி இங்கே ஒரு கணக்கெடுப்பும் நடத்தினார் (*2 சாமு 24:5-6*).

சாலமோனின் ஒன்றுபட்ட இஸ்ராயேல் பிளவுபட்டது, யோர்தான் கிழக்குப்பகுதியிலுள்ள அரசர்களுக்கு இஸ்ராயேலைத் தாக்க வாய்ப்பளித்தது. யூதாவுக்கும் இஸ்ராயேலர்களுக்குமிடையே ஏற்பட்ட பூசல்களில் இவ்வரசர்கள் பங்கெடுக்கவும் அழைக்கப்பட்டனர். இஸ்ராயேலின் பாசா படையெடுத்து வந்தபோது, யூதாவின் ஆசா தமஸ்குவின் பென்-அதாதுவின் உதவியை நாடினான் (*1 அர 15:16-21*). சீரியா நாட்டைச் சேர்ந்த பென்-அதாதுவின் தலைமையிலான அரசர்களின் கூட்டணி இஸ்ராயேலைத் தாக்கியது (*1 அர 20*), கிழக்கிலிருந்து வரும் ஆபத்தின் கடுமையைத் தெரிவிக்கிறது. அசீரிய, பாபிலோனிய ஆதிக்கம் மேற்காசியாவில் பரவியபோது இந்தப் போராட்டங்கள் முடிவுக்கு வந்தன. யோர்தான் கிழக்குப்பகுதியின் மக்கள் அன்னியர் ஆதிக்கத்திற்கு உட்பட்டனர்.

கிரேக்கர் காலத்தில் விவசாயத்திற்கு ஏற்ற வடபகுதியில் புதிய குடியிருப்புகள் தோன்றின. கிரேக்க நகரங்களின் கூட்டணியான தெக்கப்பொலி உரோமையர்களின் சலுகைகளால் செழிப்புற்றது. உரோமை பெரிய ஏரோதுக்கு அதிக அதிகாரம் கொடுத்தபோது கடைசித் தடவையாக யோர்தான் கிழக்குப்பகுதி யூதர் ஆதிக்கத்திலிருந்தது. பெரிய ஏரோதுக்குப்பின், இப்போது காலனித்து என்றழைக்கப்படும் பழைய ஏற்பாட்டுப் பாசான் பிலிப்புக்கு உரிமையாயிற்று. கலிலேயாவின் அரசனாகிய ஏரோது அந்திப்பாவுக்குப் பெரயா என்றழைக்கப்படும் யோர்தான் கிழக்குப்பகுதியின் மத்திய பகுதி கொடுக்கப்பட்டது.

**யோவகாசு** (*JEHOAHAZ - யாவே விடாமல் பிடித்தார், யாவே கைப்பற்றினார்*)

1. கி.மு. *815-801*-இல் இஸ்ராயேலை ஆண்ட *11*-ஆவது அரசன். இவர் ஏகூவின் மகனும் அவருக்குப் பின் அரசாண்டவரும் ஆவார் (*2 அர 10:35*). இவர் பதினேழு ஆண்டுகள் அரசராக இருந்தார் (*2 அர 13:1*). ஆனால், *2 அர 13:10*-இல் இவர் *14* ஆண்டுகள் ஆண்டதாகக் குறிப்பிடப்பட்டிருப்பதால், இவர் அனேகமாக முதல் மூன்று ஆண்டுகளில் தன் தந்தையோடு சேர்ந்து ஆட்சி செய்திருக்கலாம். *13:1.10* ஒத்துப்போக வைக்க இதை *15* ஆண்டுகளாகத் திருத்த வேண்டும்.

யோவகாசின் அரசாட்சியைப் பற்றிக் கூறும் *2 அர 13:1-9* தெளிவாக இல்லை. இவர் ஆண்டவர் திருமுன் தீயவற்றைச் செய்தார். இதில் தன் முன்னோரைப் பின்பற்றினார். இஃது இறைவனுக்குச் சினம் மூட்ட, அவர் இவரை அசீரியர் கையில் ஒப்படைத்தார். சீரிய அரசனான அசவேலும், அவரது மகன் பென்-அதாதும் இஸ்ராயேலரைத் தோற்கடித்தனர் என்பது உண்மை (*13:3; காண்க. 13:22*). சமாரியாவில் சிலை வணக்கத்திற்காக அமைக்கப்பட்டிருந்த தோப்பு அழிக்கப்படாததுதான் இஸ்ராயேலரின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்தது (*13:6*). இஸ்ராயேல் நாடு ஓர் அடிமை நாடானது. இஃது அவரது படை பற்றிய விவரிப்பிலிருந்து தெரிகிறது. ''ஐம்பது குதிரை வீரரும், பத்துத் தேர்களும், பதினாயிரம் காலாட் படையினருமே மீதியாயிருந்தனர்'' (*13:7*) என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு மாறான கர்கார் போரில், அரசன் ஆகாபிடம் இரண்டாயிரம் தேர்களும் பதினாயிரம் காலாட்படையினரும் இருந்தனர் என்று அசீரிய ஏடுகளில் குறிக்கப்படுகிறது. யோவகாசிடம் பதினாயிரம் காலாட் படையினர் இருந்தனர் என்பது கேள்விக்குறியாகும். ஏனெனில், அசீரியா நாட்டு அரசன் அவர்களை அழித்துப் போரடிக்கும் களத்தின் தூசிபோல் ஆக்கியிருந்தான் (*13:7*). இதிலிருந்து இஸ்ராயேலர் படை முழுவதும் அழிக்கப்பட்டது என்பது

தெளிவாகிறது. இக்கண்ணோட்டத்தில் பார்க்கும்போது யோவகாசின் 'பேராற்றல்' என்று கூறப்பட்டிருப்பது ஓர் ஆசாரப் புகழுரையேயாகும்.

*2அர 13:4-6* என்ற பகுதி பிற்காலத்தில் திணிக்கப்பட்ட பகுதி போலத் தோன்று கிறது. யோவகாசு ஒரு காலத்தில் மனந் திரும்பினார். ஆகவே, ஒரு மீட்பரால் அவருக்கு ஓய்வு அளிக்கப்பட்டது. இஸ்ரா யேலருக்குக் கொடுக்கப்பட்ட ''மீட்பர்'' *(13·5)* யாரென்று தெரியவில்லை. தொல் பொருள் ஆய்வு இப்போருக்குச் சான்று பகர்கின்றது. மெகிதோ நகரம் இக்காலத் தில் அழிக்கப்பட்டது போலத் தோன்று கிறது. வெகு காலத்திற்குப் பிறகுதான் அது மீண்டும் கட்டப்பட்டது. இவர் இறந்தபின் சமாரியாவில் அடக்கம் செய்யப்பட்டார். அவரது மகன் யோவாசு *(13:4)* ஆட்சிக்கு வந்தார் *(13:9)*.

2. கி.மு. 609-608-இல் யூதாவை ஆண்ட 17-ஆவது அரசர். அரசன் யோசியாவுக்கும் லிப்னா ஊராரான எரேமியாவின் மகள் கெமுத்தாளுக்கும் பிறந்த நான்காம் மகன் *(2 அர 23:30-31; 2 நாள் 36:1-2; 1 நாள் 3:15)*. யோசியாவின் மகனும், அவருக்குப் பின் யூதாவை ஆண்டவருமான இவர், பார்வோனாகிய நெக்கோவால் எகிப்து நாட்டுக்கு அடிமையாக எடுத்துச் செல்லப் பட்டார்.

இந்த அரசர் யோவகாசு, சல்லூம் என்ற இரு பெயர்களால் அழைக்கப்படுகின்றார் *(1 நாள் 3:15; எரே 22:10 தொ)*. சல்லூம் என்பது அவரது இயற்பெயராகவும், யோவ காசு என்பது அவர் அ்ரசரானபோது பெற்ற பெயராகவும் இருக்கலாம். இத்தகைய பெயர் மாற்றங்கள் பொதுவானதாகும் *(2 அர 23:34; 24:6; எரே 22:24; 24:1; எசே 1:2; 2 அர 24:17)*.

இவரது தந்தை மெகிதோ போரில் இறந்தபோது இவரது மூத்த சகோதரர் எலியாக்கிம் இருந்தும் யோவகாசு தனது இருபத்து மூன்றாவது வயதில் மக்களால் அரசனாக்கப்பட்டார். மூன்று மாதங்கள் எருசலேமில் அரசாண்டார் *(2 அர 23:31; 2 நாள் 36:2)*.

*1 நாள் 3:15*-இன்படி சல்லூம் தான் யோசியாவின் நான்கு புதல்வர்களில் கடை சியானவர். எனவே, அவரது மூத்த சகோ தரனை விட்டுவிட்டு அவரை அந்நாட்டு மக்கள் அரசனாக்கியதற்குச் சிறப்புக் கார ணம் ஏதாவது இருக்க வேண்டும். எலியாக் கிம் அல்லது யோயாக்கிம் எகிப்திய ஆதரவாளராக இருந்ததே இக்காரணமாக இருக்கலாம்.

பயங்கரமான சூழ்நிலையில்தான் யோவ காசு அரியணை ஏறினார். மெகித்தோவில் யோசியா இறந்த போது *(609)*, தாவீதின் அரசு உயிரூட்டம் பெற்று சுதந்தரம் அடை யும் என்ற யூதாவின் கனவு சிதைவுற்றது. யூதா அசீரியரின் ஆட்சியிலிருந்து விடு பட்டு எகிப்துநாட்டின் மாகாணமானது. யோவகாசு எருசலேமில் அரசாளாதபடி பார்வோன் நெக்கோ அவனைப்பிடித்து, கூலே-சீரியா நாட்டிலிருக்கும் ரிப்லாவில் சிறை வைத்தார். அன்றியும் யூதா நாடு தனக்கு நூறு தாலந்து வெள்ளியையும், ஒரு தாலந்து பொன்னையும் கப்பம் செலுத்தக் கட்டளையிட்டார். பார்வோன் நெக்கோ யோசியாவின் மூத்த மகன் எலியாக்கிமை அரசனாக ஏற்படுத்தி, அவனது பெயரை யோயாக்கிம் என்று மாற்றினார். பின்னர் யோவகாசை எகிப்துக்குக் கொண்டு சென் றார். அவர் அங்கேயே இறந்து போனார். யோவகாசு எகிப்துக்குக் கொண்டு செல்லப் பட்ட போதுதான் எரேமியா, ''இந்த இடத்திலிருந்து புறப்பட்டுப் போன அவன் இனி ஒருபோதும் மீண்டு வரான்'' என்று இறைவாக்குரைத்தார் *(எரே 22:10-12)*. *எசே 19:3* யோவகாசை 'இளஞ்சிங்கம்' என்று வர்ணிக்கிறது.

3. ஏறக்குறைய கி.மு. 842-ஆம் ஆண்டில் யூதாவை ஆண்ட அரசர். இவர் யோராமின் கடைசிப் புதல்வனும், அவரை அடுத்து ஆண்ட அரசனுமாவார் *(2 நாள் 34:8)*. இவர் ஒரே ஓர் ஆண்டு ஆட்சி செய்தார்.

யோவகாசு என்பது அகசியா (2)-இன் மறு பெயராகும் (2 நாள் 21:17; 22:1). முதற் பெயரில் இறைவனின் பெயர் முதலிலும், இரண்டாவது பெயரில் இறை வனின் பெயர் இறுதியிலும் உள்ளது.

**யோவகாசு** *(JOAHAZ - யாவே விடாமல் பிடித்தார்)*

யோவாகுவின் தந்தை (2 நாள் 34:8).

**யோவனான்** *(JOANAN - யாவே அருள் மிக்கவர்)*

இவர் செருபாபேலின் பேரன்; இயேசு வின் மூதாதையர்களுள் ஒருவர்.

இவர் 1 நாள் 3:19-இல் வரும் அனனியா வாக அடையாளம் காட்டப்படுகிறார்.

**யோவன்னா** *(JOANNA - யாவே அருளுள்ளவர்)*

ஏரோது அந்திப்பாவின் மாளிகை மேற் பார்வையாளர் கூசாவின் மனைவி. இயேசு வால் குணப்படுத்தப்பட்ட பெண்களில் ஒருத்தியான யோவன்னா, தங்களது உடை மைகளைக் கொண்டு இயேசுவுக்கும், பன் னிருவருக்கும் பணிவிடை செய்து வந்தவர் களுள் ஒருத்தி (லூக் 8:3). மக்தல மரியா வோடும், யாக்கோபின் தாய் மரியாவோ டும் மற்றப் பெண்களோடும் யோவன்னா வெற்றுக் கல்லறையருகே நின்றதாக லூக் 24:10-இல் குறிப்பிடுகிறார்.

**யோவாகு** *(JOAH - யாவே சகோதரர் ஆவார்)*

1. ஓபேது-ஏதோமின் மூன்றாவது மக னான இவர் ஒரு லேவியர். ஆலய வாயில் காப்பாளராக நியமிக்கப்பட்டவர் (1 நாள் 26:4).

2. சிம்மாவின் மகனாகிய இவர் ஒரு லேவியர்; கேர்சோம் குடும்பத்தைச் சேர்ந்த வர் (1 நாள் 6:21). எசேக்கியா அரசன் மேற்கொண்ட ஆலய சீர்திருத்தப்பணியில் ஒத்துழைத்தவராகவும் இருக்கலாம் (2 நாள் 29:12).

3. ஆசாபின் மகன். அரசவை அதிகாரி யான இவர் கி.மு. 701-இல் எருசலேம் முற்றுகையின்போது அசீரிய அரசனின் படையைச் சந்திக்க எசேக்கியா அரசனால் அனுப்பப்பட்ட பிரதிநிதிகளில் ஒருவர் (2 அர 18:26.37; காண்க. எசா 36:3.11.22).

4. யோசியா அரசனிடம் பதிவு செய்பவ ராகப் பணியாற்றியவர். யோவகாசின் மகன். ஆலயச் சீர்திருத்தத்திற்கான மேற் பார்வை செய்ய அரசனால் நியமிக்கப்பட்ட வர் (2 நாள் 34:8).

**யோவாசு** *(JOASH, JEHOASH - யாவே கொடுத்தார், உதவினார்)*

1. கிதியோனின் தந்தையான இவர் மனாசே கோத்திரத்தில் 'அபியேசர்' குடும்பத் தைச் சேர்ந்தவர் (நீதி 6:11-15). இவர் ஒபிரா எனுமிடத்தில் வாழ்ந்தாரெனப்படுகிறது. ஆனால் இஃது அமைந்த இடம் எதுவெனத் தெளிவாகத் தெரியவில்லை. இங்கு ஒரு கருவாலி மரத்தடியில் இறைவாக்கு அரு ளப்பட்டது. நீதி6:11-32 இரு மரபுகளை இணைத்து ஒரு நிகழ்ச்சியைத் தருகிறது. ஆனால், இவற்றில் உள்ள கருத்துக்கள் ஒத்துப்போவதாகத் தெரியவில்லை. யோவாசு பாகாலுக்கு ஒரு பீடத்தையும், அசெரா கம்பத்தையும் எழுப்பியதாகவும், அதனை இடித்துப் போடும்படியாக கிதி யோனுக்குக் கூறப்பட்டதாகவும் தெரி கிறது. பின்னர், நகரமக்களின் எதிர்ப்பு எழுந்தபோது யோவாசு தன் மகனுக்கு ஆதரவாக நின்றார்; தன் மகனுக்கு எருபா கால் என்ற புதுப்பெயர் அளித்தார் (நீதி 6:25-32).

2. ஆகாபின் மகனாகிய யோவாசு, சமாரி யாவின் ஆளுநனாகிய அமோனுடன் இணைத்துப் பேசப்படுகிறார். இராமோத்து கிலயாதுக்கு ஆகாபு போரிடப்போனபோது அவனுக்குத் தோல்வியின் இறைவாக்கை அறிவித்த இம்லாவின் மகன் மீக்காயாவை, அமோனிடம் யோவாசு ஒப்படைத்தார் (2 அர 22:26; 2 நாள் 18:25).

3. அகசியாவின் மகனாகிய யோவாசு கி.மு. 837-800-இல் யூதாவின் ஒன்பதாவது அரசனாக இருந்தான். அகசியாவின் புதல் வர்களெல்லாம் அத்தாலியாவால் கொல்

லப்பட்டபோது இவன் ஆறு ஆண்டுகள் கோவிலுக்குள் தனது அத்தை யோசேபா வால் வைத்துப் பாதுகாக்கப்பட்டான். அத்தலியா கொல்லப்பட்ட பின் யோயாதா வால் யோவாசு முடி சூட்டப்பட்டான் (*2 அர 11:1-20*). இவன் சிறுவனாக இருந்த போது யோயாதா இவனது இடத்திலிருந்து பகர · ஆளாகக் கவனித்துக் கொண்டார். யோவாசு ஆலயத்தைப் பழுது பார்த்தான் (*2 அர 12:1-16*). சீரிய நாட்டு அரசன் அசாவேல் இவனைத் தோற்கடித்ததால் ஆலயக்கருவூலங்களில் உள்ள எல்லாப் பணத்தையும் கொடுத்து தன்னை விடு வித்துக் கொண்டான் (*2 அர 12:17-18; காண்க. 2 நாள் 24:23-24*); இதனால்தான் அவனது பணியாளர்களே அவனைச் சதி செய்து கொன்று விட்டனர் (*2 அர 12:19*)

இறையியல் கருத்துக்களை, அறிவுரை களைக் கொடுப்பதற்காக, நாளாகமம் எவ் வாறு வரலாற்றை மாற்றி எழுதுகிறது என்பதற்கு யோவாசின் வாழ்க்கை ஒரு சிறந்த உதாரணம். ஆலயத்தின் மேலுள்ள பக்தியால், ஆலயத்தின் செல்வமுழுதும் கொடுத்தாவது அதனைப் பாதுகாக்க வேண்டுமென்ற (மீண்டும் பெற வேண் டும்) என்ற ஒரு பண்பைக் காட்டுகின்றனர். யோவாசு யோயாதாவால் வழிநடத்தப்பட்ட போது சிறந்த முறையில் ஆட்சி செய்தான். யோயாதா இறந்த பின்பு யோவாசு பொய்த் தெய்வங்களை வழிபட ஆரம்பித்தான்; இதனைச் சுட்டிக் காண்பித்த யோயாதாவின் மகன் செக்கரியாவைக் கொல்லச் செய் தான். ஒரு வருடம் கழித்து அரமேயர்கள் நாட்டை அழித்தனர்.

4. கி.மு. 801-786 வரை இஸ்ராயேலின் பன்னிரண்டாவது அரசனாக இருந்தவன் யோவாசு. இவனது தந்தையும் யோவாசு என்றழைக்கப்படுகிறான் (*2 அர 13:10-25; 14:8-17*). இறைவாக்கினர் எலிசாவின் வாழ்க்கையோடு தொடர்புடைய ஒரு நிகழ்ச்சியில் இவன் வருகிறான். அரமேயர் களை, 'நீ வெற்றி கொள்வாய்' என உறுதி அளித்த எலிசா அவனை வில் எடுத்து அம்பு எய்யுமாறு கூறினார். ஆனால், அவன் மூன்று முறை மட்டும் எய்ததால், 'நீ அவர்களை முழு வெற்றி கொள்ளமாட் டாய்' என அவனைக் கடிந்துகொண்டார் (*2 அர 13:14-19*). யூதாவின் அரசன் அமட்சியா, யோவாசைப் போருக்கு அழைத்ததால், அவனைத் தோற்கடித்து, எருசலேம் சுவரின் ஒரு பகுதியை இடித்து ஆலயக் கருவூலங்களைக் கொள்ளையடித் தான் (*2 அர 14:8-14; 2 நாள் 25:17-25*).

5. யூதாவின் மனிதர்களில் ஒருவனான இவன் சேலாவின் மகன் (*1 நாள் 4:22*).

6. பென்யமீன் குலத்தைச் சேர்ந்த இவன் பெக்கர் குடும்பத்தைச் சேர்ந்தவன் (*1 நாள் 7:8*).

7. கிபயாவைச் சேர்ந்த செமாகாவின் புதல்வரான யோவாசு இரு கையாலும், கவணையும், அம்பையும் கையாள்வதில் வல்லவர். தாவீது சிக்லாகுவில் தலைமறை வாய் இருந்தபோது அவருடன் வந்து சேர்ந்த யோவாசு, அகியேசருக்கடுத்து இரண்டாவது தலைவராவார் (*1 நாள் 27:28*).

8. தாவீதின் எண்ணெய்க்கிடங்குகளைக் கண்காணித்து வந்த அதிகாரி (*1 நாள் 27:28*).

**யோவாதீன்** (JEHOADDIN - யாவே களிப்பா வார்)

இவள் யூதா அரசனான அமசியாவின் தாயான (*2 நாள் 25:1*) யோயதான் என்ப வள். *2 அர 14:2*-இல் யோவாதீன் என்று அழைக்கப்படுகிறாள்.

**யோவாபு** (JOAB - யாவே தந்தையாவார்)

தாவீதின் சகோதரியான செரூயாவின் மூத்த மகனே இவர்; அபிசாய், அசாவேல் ஆகிய இருவரும் யோவாபின் சகோதரர்கள் (*1 நாள் 2:16*). யோவாபின் தந்தை பெயர் எங்கும் குறிப்பிடப்படாதது வியப்புக்குரிய தாய் உள்ளது. தாவீது யூதாவின் அரசனான பின்பு, தாவீதின் படைக்குத் தலைவனாய் இருந்து அப்னேரின் தலைமையில் போரிட்ட இசுபாகாலின் படையை வெற்றி கொண்டார் (*2 சாமு 2:12-32*). தாவீது

A

அரசராகும் முன்பு அவர் நாடோடியாகச் சுற்றித் திரிந்தபோது இவரும் அவருடன் இருந்தார் என்றாலும், அபிசாயின் சகோதரர் என்பது தவிர வேறு எதுவும் இவரைப் பற்றிக் கூறப்படவில்லை (1 சாமு 26:6). தனது சகோதரன் அசாவேலைக் கொன்ற அப்னேரைத் தானே கொன்று பழிவாங்கி னார் யோவாபு (2 சாமு 2:18-23; 3:24-27). இதற்கு அப்னேர் தாவீதை ஏமாற்றவே வந்தான் என்பதைக் காரணமாகக் கூறினார் (3:24-25). ஆனால் இது பழிவாங்குதல் செயலே என ஆசிரியர் கூறுகின்றார் (3:27). ஆனால், இந்தக் கொலையைத் தாவீது கண்டித்து, யோவாபைச் சபித்து (3:28), அப்னேருக்கு நல்லடக்கம் செய்வித்தார் (3:31-37). எல்லோருக்கும் முன்னிலையில் தனக்கும், கொலைகாரன் ஒருவனுக்கும் தொடர்பு இல்லை எனக் காண்பித்துக் கொள்ளவே தாவீது இவ்வாறு செய்தார் (3:37). ஆனால் தாவீது இக்குற்றத்திற்காக யோவாபைத் தண்டிக்க முடியாததிலிருந்தே தாவீதின்மேல் யோவாபுக்கு இருந்த பலம் தெரிகிறது (2 சாமு 3:38).

1 நாள் 11:6 யோவாபுதான் எருசலேமில் முதன் முதலில் நுழைந்தவன் எனும் ஒரு மரபு பற்றிக் குறிப்பிடுகிறது. இது சாமுவே லில் கூறப்படவில்லை; ஆனால் யோவாபு தலைமை இராணுவத் தளபதியாக்கப் பட்டதே இவ்வாறு விளக்கப்படுவதாகவும் கூறப்படுகிறது. தாவீதின் முக்கிய அமைச் சர் குழுவின் பெயர் வரிசையில் யோவா பின் பெயர் தளபதியாகக் குறிப்பிடப்படு கிறது (2 சாமு 8:16; 20:23; 1 நாள் 18:15; 27:33).

அம்மோனியா, அரமேயர்களை வெற்றி கொண்டபோது, யோவாபே தளபதியாக இருந்தார் (2 சாமு 10:7; 12:26). இந்த இரு வெற்றிகளிலும் யோவாபு கேட்டுக் கொண்ட பின்னே நகரைத் தாவீது கைக் கொண்டார். உரியாவைப் போர்முகப்பில் நிறுத்தி அவன் இறந்த பிறகு, விதவையான பத்சேபாவை மணக்க வழிவகுக்கும் அந்தத் திட்டத்தை நிறைவேற்றியது யோவாபுதான் (11:14-25). அம்மோன் கொல்லப்பட்டபிறகு ஒளிந்து திரிந்த அப்ச லோம் மீண்டும் நாட்டுக்குள் வர யோவா பின் செல்வாக்குதான் காரணம் (2 சாமு 14). தாவீதுக்கு எதிராகப் புரட்சி செய்த அப்சலோமைத் தாவீது கொல்ல வேண்டா மெனக் கூறியிருந்தும், அவன் கொல்லப் படுவதற்குக் காரணமாக இருந்தது யோவா புதான் (2 சாமு 18). தனது உண்மையுள்ள ஊழியர்களைவிட, அவருக்கு எதிராகப் புரட்சி செய்த மகனைத் தாவீது மதித்ததை எதிர்த்து, வெளிப்படையாகவே யோவாபு தாவீதைக் கடிந்து கொண்டார் (19:1-7). தாவீது அவனது அறிவுரையைக் கேட்டா லும், அமாசாவை அவனது இடத்தில் தளபதியாக்கினார் (2 சாமு 19:13). ஆனால் அமாசாவின் மிகவும் காலம் கடத்தும் மோசமான திட்டங்களைக் கண்ட யோவாபு தந்திரமாக அவனைக் கொன்று தானே தலைமை தாங்கி, சேபாவின் புரட்சியை அடக்கினார் (2 சாமு 20).

தாவீது எடுக்க நினைத்த மக்கள் கணக் கெடுப்பை எதிர்த்தார் யோவாபு. கடவுள் அளித்த ஆசீர்களைக் கணக்கெடுப்பது கட வுளையே எதிர்ப்பது போலாகும் எனும் ஒரு வகை நம்பிக்கையால் இது வேண்டா மெனக் கூறினாலும் (24:3), யோவாபு மற்றப்படை அதிகாரிகளோடு மக்கட் கணக்கெடுப்புக்குத் தலைமை தாங்கினார் (24:4-9). அதோனியாவின் கூட்டத்தோடு சேர்ந்ததால் (1 அர 1:7) சாலமோன் விரும்பாதவர்களில் இவரும் ஒருவரானார். அப்னேரையும், அமாசாவையும் கொன்றதற் காக யோவாபைப் பழிவாங்குமாறு பொறுப்பைச் சாலமோனிடம் தாவீது தனது மரணத்துக்குமுன் விட்டுச் சென்றார் (2 சாமு 2:5தொ). இதன் வரலாற்று மதிப்பீட்டை ஐயுறுவர் சிலர் . யோவாபைக் கொல்வதற்குத் தாவீது அதிகாரம் அளித்தார் என்பதைக் காண்பிப்பதற்காக மேலே கூறி யது மரபில் சேர்க்கப்பட்டதாக வரலாற் றறிஞர் சிலர் கருதுகின்றனர் (1 அர 2:28-34). ஆனால் இஸ்ராயேலரின் பழிவாங் கப்படாத இரத்தத்தால் வரும் ஆபத்து பற்றிய கருத்தின்படி யோவாபு கொல்லப் பட்டது சரியெனவே தோன்றுகிறது.

*தாவீதின் அரசை நிர்மாணிப்பதில் யோவாபின் பங்கை யாரும் குறைத்து மதிப்பிட முடியாது.* சிலர் கூறுவதுபோல், யோவாபு ஒரு போர்த் திறமைமிக்க தலைவர் என்று ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. ஆனால், அவர் ஆற்றல் மிக்க போர் வீரனாக இருந்தார் என்பது உண்மை. தாவீது அரியணை ஏறவேண்டும், அவரது உயிருக்கு ஆபத்து ஏற்படக்கூடாது என்று கருதியே யோவாபு ஓர் உண்மையுள்ள ஊழியனாக இருந்தார்; இதற்காகவே சில வன்செயல்களைச் செய்தார்; தாவீதிடம், விலகிச்செல்லாத, அர்ப்பணிக்கப்பட்ட பிரமாணிக்கம் காட்டினார். எனவேதான் தாவீதினால் யோவாபை எதற்கும் தண்டிக்க இயலவில்லை. தாவீது இச்செயல்களை மறுக்கவும் இயலவில்லை; இவற்றினால் கிடைக்கும் பயனை அடையாமலிருக்கவும் விரும்பவில்லை. ஆனால் தனது மகன் சாலமோன் இவற்றிற்குப் பழிவாங்கி நீதி வழங்க வேண்டுமென எண்ணினார்.

**யோவாரிபு** *(*JOARIB *- யாவே போராடுவாராக)*

மக்கபேயர் தம் முன்னோராகக் கருதும் இவர் ஒரு குருவின் தந்தை. எனவே அக்குடும்பத்தின் தலைவராகக் கருதப்படுகிறார் *(1 மக் 2:1; 14:29)*. இக்குடும்பம் பற்றி முதலில் தாவீது காலத்தில் தெரிய வருகிறது *(1 நாள் 24:7)*.

**யோவானின் பணிநூல்** *(*JOHN, ACTS OF*)*

இது மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு போலி நூல்; திருமுறைப்பட்டியலைச் சேர்ந்த அப்போஸ்தலர் பணி நூலை, அப்போஸ்தல் யோவானின் எல்லாப் பணிகளுக்கும் ஒரு வரலாறு அளித்து, நிறைவு செய்யும் நோக்கம் கொண்டது. நான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து, இந்நூலை லூக்கியு கரினு என்பவர் எழுதியதாகவும், இவர் இந்நூலில் வரும் நிகழ்ச்சிகளுக்கு நேரடிச்சாட்சி ஆவார் என்றும் கருதப்பட்டன. இவர் பல போலிப் பணி நூல்கள் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்திருக்கிறார்.

மானிக்கேயர்களால் படைக்கப்பட்ட பல போலிப் பணி நூல்களில் இந்நூல் காலத்தால் முந்தியதாகும். ஒருவேளை இரண்டாம் நூற்றாண்டின் முடிவில் எழுதப்பட்டிருக்கலாம். மற்றப் போலிநூல்களைப் போன்று யோவானின் பணிநூலும் நெருங்கிய அமைப்புடையதன்று. நூலின் தலைவரைப் பெருமைப்படுத்தும் பொருட்டு, பல மிகைப்படுத்தப்பட்ட வியத்தகு செயல்கள் எடுத்துக்கூறப்படும் இந்நூல் யோவானைப் பற்றிய பல நிகழ்ச்சிகளை விவரிக்கின்றது. அவற்றில் சில: உரோமைக்கு யோவான் பயணம் செய்தல்; பத்முவுக்கு நாடு கடத்தப்படுதல்; அவர் எபேசுக்கு வருதல் (இது பிற்சேர்க்கையாகும்); மிலேத்திலிருந்து எபேசுக்கு யோவான் பயணம் செய்தல்; கௌதாரி புழுதியில் விளையாடுதல்; யோவான் இலவோதிக்கேயாவிலிருந்து எபேசுக்குப் பயணம் செய்தல்; யோவானின் மரணம் பற்றிய நீண்ட விவரிப்பு; யோவானின் நீண்ட உரைகள்; கிறிஸ்துவின் வாழ்வு, இறப்பு மற்றும் தன்மை பற்றியவையாகும். இவற்றில் தோசேத்தியப் பதிதப் பண்புகள் காணப்படுகின்றன. ஆகவே, 787-இல் நீச்சேயாவில் நடந்த இரண்டாம் சங்கம் இந்நூலைக் கண்டனம் செய்து, இஃது அழிக்கப்பட வேண்டியது என்று தீர்ப்பிட்டது.

இந்த நூல் மூலத்தில் கிரேக்க மொழியில் எழுதப்பட்டது; மத்தேயு நற்செய்தி அளவுக்கு நீண்டது. இந்த நூலின் மூன்றின் இரண்டு பகுதியே இப்போது கிடைத்துள்ளது. இதன் இலத்தீன் மொழிபெயர்ப்பு நான்காம் நூற்றாண்டின் முடிவில் தோன்றியது. மற்ற, துறவு மற்றும் ஞானவாத நூல்களோடு சேர்த்துத் தொகுக்கப்பட்ட சீரியக்கு, அரமேனியன், கோப்திக்கு, அரபிக்கு, எத்தியோப்பியப் பதிப்புகளில் இந்நூல் காணப்படுகின்றது. இந்நூலில் காணப்படும் பொருள்கள் திருத்தி அமைக்கப்பட்ட வாசகம், பத்முவில் யோவான் செய்த நிகழ்ச்சிகளின் விவரிப்புகள் ஆகியன போலிப் பிராக்கோர் எழுதியதாகக் கருதப்படும் ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த தொகுப்புகளில் காணப்படுகின்றன.

**யோவானின் போலி அல்லது இரகசிய நூல்** *(JOHN, APOCRYPHON OR SECRET BOOK OF)*

இது தொடக்ககால ஞானவாதநூல்; அப்போஸ்தலர் யோவான் கண்ட காட்சியை விவரிக்கிறது. திருச்சபைத் தந்தையர் இரனேயு பதிதர்களுக்கு எதிர்ப்பாக எழுதிய மறுப்பு நூலில் இந்நூலைக் குறிப்பிட்டு அதற்கு மறுப்பு எழுதுகிறார். ஆயினும், வெகு காலமாக இதைப் பற்றி ஒன்றும் அறியப்படவில்லை. 1946-இல் எகிப்தில் செனேபோஸ்கியோன் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஏடுகளில் இந்நூலின் ஒரு பிரதியும் கண்டெடுக்கப்பட்டது. இது 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகத் தெரிகிறது. இது கோப்திக்கு மொழியில் உள்ள மொழிபெயர்ப்பாகும். இப்பிரதி நாக்-கம் மாதியிலுள்ள ஞானவாத நூல்நிலையத்தில் உள்ளது.

இந்நூல் இரகசிய நூல் என்றழைக்கப்படுகிறது. ஏனெனில், இது ஞானவாதப் பிரிவினருக்கு மட்டும் போதிக்கப்பட்ட ஞானவாத நற்செய்தியைக் கொண்டிருக்கிறது. இது மரியாளின் நற்செய்தி என்ற நூலோடு குழப்பப்படுகிறது. ஏனெனில், அஃதோடு சேர்த்து வைக்கப்பட்டதுதான். இதை, மற்றொரு போலிநூலான யோவானின் வெளிப்பாடாக அடையாளம் காட்டுவர். இந்த இரகசியநூல் 2-3-ஆம் நூற்றாண்டுகளிடையில் அதிகம் செல்வாக்குப் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. இப்போது மூல ஞானவாத நம்பிக்கைகளின் முதன்மையான மூலமாக உள்ளது.

மற்ற ஞானவாத நூல்களைப்போல், இந்த இரகசியநூல் காட்சியோடு தொடங்குகிறது. இதில் ஆசிரியருக்கு (யோவான்) இரகசியச் செய்திகள், ஓர் இறைவெளிப்பாட்டாளரால் (உயிர்த்த கிறிஸ்து) அளிக்கப்படுகின்றன. இக்காட்சி உரையாடல்களாக வளர்கிறது. தீமையின் தோற்றம், ஆன்மீக மற்றும் சடப்பொருள் உலகங்களின் படைப்பு, மரணத்தைச் சேர்ந்த கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட மனிதப் போராட்டம் போன்ற கருத்துகள் எடுத்துக் கூறப்படுகின்றன.

**யோவான்** *(JOHN - யாவே அருளுடையவர்)*

ஒரு காலத்தில் யூதர்களிடையே பொதுவாக வழங்கி வந்த, அதிகம் பயன்படுத்தப்பட்ட பெயர் இது.

*1.* மத்தத்தியாவின் தந்தையும், யூதா மக்கபேயரின் தாத்தாவும், குரு சிமியோனின் மகனும் ஆவார் *(1 மக் 2:1; 14:20)*. இப்பகுதி இக்குடும்பத்தை ''யோவாரிபின் புதல்வர்கள்'', என அழைக்கிறது. இந்த யோவாரிபு என்பவர் *1 நாள் 24:7*-இல் குறிப்பிடப்படும் *24* குருக்களின் குடும்பங்களில் முதலாவதின் முன்னோராக இருக்கலாம்.

*2.* மத்தத்தியாவின் ஐந்து புதல்வர்களில் மூத்தவனும், *1*-இல் கூறப்பட்ட யோவானின் பேரனும் ஆவார் *(1 மக் 2:2)*. இவர் காத்தி என அழைக்கப்படுகிறார். மனாசே கோத்திரத்தில் இப்பெயருடன் விளங்கியவர் முன்னர் யாரேனும் இருந்திருக்கலாம் *(எண் 13:11)*. யோவானின் சகோதரனான யூதா முதலில் அசமோனியர்களை வழிநடத்தினார். அவரது இறப்புக்குப்பின் யோனத்தான் மக்கபேயர்களின் தலைவரானார். இது யோவான் எல்லோருக்கும் மூத்த மகனாக இருந்தாலும் தலைவராக இருக்கவில்லை என்பதைச் சுட்டுகிறது. யோனத்தான் மக்கபேயர்களின் செல்வத்தைப் பாதுகாக்க அதனை நபத்தேயாவுக்கு எடுத்துச் செல்லும் பொறுப்பை யோவானிடம் ஒப்படைத்தார். அவ்வாறு எடுத்துச் செல்லும் போது கொல்லப்பட்டதாக மட்டுமே இவரைப் பற்றிக் கூறப்படுகிறது *(1 மக் 9:35-42)*. இவர் கி.மு. *161*-இல் மேதியாவைச் சேர்ந்த யாம்பிரியால் மறைந்திருந்து தாக்கப்பட்டு, கொல்லப்பட்டார். யோசேப்பு என பல இடங்களில் குறிப்பிடப்படுவது *(2 மக் 8:22; 10:19)*, இந்த யோவானைக் குறிப்பதற்குப் பதிலான தவறான வாசகம் எனக்கருதப்படுகின்றது.

*3.* இவர் அக்கோசின் மகனும் யூப்பெலமின் தந்தையும் ஆவார் *(1 மக் 8:17)*. இவருக்கு மூன்றாம் அந்தியோக்கு அரசலுகை அளித்தான் *(2 மக் 4:11)*.

*4.* முதலாம் யோவான் இரிக்கான் *(1 மக் 13:53; 16:1)*. காண்க. கசமோனியர்.

*5.* அந்தியோக்கு எப்பிபானின் தளபதியாகிய லீசியாவிடம் யூதர்கள் அனுப்பிய தூதர் *(2 மக் 11:17)*. இதைத் தவிர வேறு எதுவும் இவரைப் பற்றிக் குறிப்பிடப்படவில்லை.

*6.* திருமுழுக்கு யோவான். இத்தலைப் பின் கீழ்க் காண்க.

*7.* அப்போஸ்தலரான யோவான் காண்க. யோவான் எழுதிய நற்செய்தி:6

*8.* மாற்கு யோவான். காண்க. மாற்கு.

*9.* இவர் பேதுருவின் தந்தை *(யோவா 1:42; 21:15-17)*. மத் 16:17-இன்படி இப் பெயர் பார்-யோனா என்ற வடிவில் வருகிறது. இதற்கு யோனாவின் மகன் சீமோன் என்பது பொருள்.

*10.* ஒரு குருவின் குடும்பத்தைச் சேர்ந்தவர் என அ.ப. *4:6*-இல் குறிப்பிடப்படுவதைத் தவிர இவர் பற்றி வேறு எதுவும் தெரியவில்லை. இவர் பெரியகுரு அன்னாவின் உறவினரும் ஒருவேளை அவருக்குப் பின் வந்த பெரிய குருவாகவும் இருக்கலாம். சனேத்ரின்முன் பேதுருவையும், யோவானையும் விசாரித்த இருவரில் இவரும் ஒருவராவார். இவர் ஒரு 'ராபி' எனவும் யோகனான் பென்சக்கல் எனும் பெயரில் முக்கியமானவராகக் கருதப்பட்டார் எனவும் ஒரு கருத்து உண்டு.

## யோவான் எழுதிய திருமுகம் - I
*(JOHN, FIRST LETER OF)*

*1.* யோவான் எழுதியதாக, புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலில் மூன்று திருமுகங்கள் உள்ளன. முதலாவது திருமுகம் சிறிது நீண்டது. மற்ற இரண்டும் ஒருபக்கக் கடிதங்கள்.

*2.* **ஆசிரியர்:** தன்னை யார் என்று ஆசிரியர் குறிப்பிடவில்லை. இந்நூலை அப்போஸ்தலரான யோவான்தான் எழுதினார் என்று இரனேயு, அலக்சாந்திரிய கிளமந்து, ஓரிசன், தெர்த்துல்லியன், அலக்சாந்திரிய தியோனியுசு போன்ற திருச்சபைத் தந்தையர்கள் கூறியுள்ளனர். இந்நூல் மூராத்தோரியின் பட்டியலில் காணப்படுகிறது. பாப்பியு,போலிக்கார்பு, யுஸ்தீன் போன்றோர் இத்திருமுகத்திலிருந்து எடுத்துக்காட்டுகள் கூறியுள்ளனர். பாரம்பரியமும், நான்காம் நற்செய்திக்கும் இத்திருமுகத்திற்குமிடையிலுள்ள உள்ளார்ந்த சான்றுகளும், குறிப்பாக நடையிலும் பொருளடக்கத்திலுமுள்ள ஒற்றுமை, இந்த இரு நூல்களும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டவை என்று சுட்டுகின்றன.

*3.* **நற்செய்திக்கும் இத்திருமுகத்திற்கும் இடையேயுள்ள உறவு:** யோவான் எழுதிய நற்செய்திக்கும் இந்நூலுக்கும், சொற்றொகுதியில், நடையில், கோட்பாட்டில் உள்ள ஒற்றுமை அதிகமானது, நெருக்கமானது, ஆழமானது. எ.கா. *1* யோவா *1:1-4; 2:4.11.27; 3:14; 4:9.12; 5:9* ஆகிய பகுதிகளை யோவா *1:1-14; 8:44; 12:35; 16:30; 5:24; 3:16; 11:8; 5.34*-ஆகிய பகுதிகளோடு ஒப்பிடுக. இயேசு வார்த்தையாகவும், கடவுளாகவும் போதிக்கப்படுகிறார் *(1 யோவா 1:1; 5:20; யோவா 1:1; 20:29)*. அவர் மனிதன் ஆதல் அழுத்திக் கூறப்படுகிறது *(1 யோவா 1:2; 4:2; யோவா 1:14)*. விசுவாசமும் அறிவும் முடிவில்லா வாழ்வை அளிக்கின்றன; மனிதனான மகனோடு நம்மை ஒன்றாக்குகிறன *(1 யோவா 1:2 தொ; 5:10-13; யோவா 17:3; 20:31)*. இருளும், இறப்புமே எதிர்க்கும் ''உலகம்'' ஆகும். இஃது அவிசுவாசம், வெறுப்ப, பொய், கொலை ஆகியவற்றைச் சிறப்பாகக் கொண்டிருக்கும் *(1 யோவா 1:6;2:22 தொ; 3:12; யோவா 1:5; 3:18 தொ; 8:44; 15:18 தொ)*. செயல் முறையான நோக்கில் அன்பு என்பது இறைவனுடையவும் கிறிஸ்துவினுடையவும் கட்டளைகளைக் கடைப்பிடிப்பதாகும் *(1 யோவா 2:4; 3:23 தொ; யோவா 14:23தொ.31; 15:10.14)*. மறைபொருளான உள்ளுணர்வு பற்றிய ''இணைந்திருத்தல்'' ஒரே விதமாகக் கூறப்படுகிறது.

நற்செய்தியில் இயேசுவின் பிரியாவிடை உரை, முதலாம் யோவான் பயன்படுத்தும் உருவகங்களை நிர்ணயிப்பதில், குறிப்பான

முக்கிய பங்கு எடுத்துள்ளதாகத் தோன்று கிறது. இறைவனுக்கும் (தந்தை, மகன், ஆவி), கிறிஸ்தவனுக்கும் உள்ள உறவை முதலாம் யோவான் பிரதிபலிக்கிறது. தந்தை கிறிஸ்தவனை அன்பு செய்கிறார் *(1 யோவா 4:16; யோவா 14:21)*. பிரமாணிக் கமுள்ள கிறிஸ்தவனில் மகன் இணைந் திருக்கிறார் *(1 யோவா 3:24; யோவா 15:4)*. ஆவி கொடையாக அளிக்கப்படுகிறார் *(1 யோவா 4:13; யோவா 14:16-17)*. இறைவ னோடு கிறிஸ்தவன் உறவு கொள்வதில், ஒருவர் மற்றவரில் வாழ்தல் *(1 யோவா 3:24; யோவா 14:20)*, பாவமன்னிப்பு, தூய்மையாதல் *(1 யோவா 1:9; யோவா 15:3)*, முடிவில்லாத வாழ்வு *(1 யோவா 2:29; யோவா 17:2)*, ஏற்புடைமை *(1 யோவா 2:29;யோவா 16:10)* ஆகியவை சிறப்புக் கூறுகளாகும். கிறிஸ்தவச் சீடனுக் குரிய நிபந்தனைகள் மீண்டும் உறுதிப்படுத் தப்படுகின்றன. யோவா 16:8-9-இல் வரும் விசுவசியாத உலகத்திற்கும், 1 யோவா 1:8; 3:4-9-இல் வரும் போலி நிறைவுடையவர் களுக்கும் எதிரான நிலையில், விசுவாசம் பாவத்தில் இல்லை. அவன் இயேசுவை அன்பு செய்ய வேண்டும்; அவரது கட்ட ளைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் *(1 யோவா 2:3; 3:10.22-24; யோவா 14:15)*; உலகத்தின் போக்கை நிராகரிக்க வேண்டும் *(1 யோவா 2:5; 4:1; யோவா 15:18)*. விசுவாசம் உலகை வெற்றிகொள்கிறது *(1 யோவா 2:13-14; 5:5; யோவா 17:8-9)*.

முதலாம் யோவான் நான்காம் நற்செய்தி யின் திட்டத்தைப் பின்பற்றுவதாகக் கருது வர் சிலர். நற்செய்தியை எதிரொலிக்கும் முன்னுரைக்குப்பின் *(1 யோவா 1:1-4; யோவா 1:1-14)*, திருமுகம் இரு பெரும் பகுதிகளைக் கொண்டுள்ளது. முதல் பகுதி *(1 யோவா 1:5-3:10)* ''ஒளியில் நடப்பதின்'' கடமையை எடுத்துக்கூறுகிறது. இது நற் செய்தியின் ''அடையாளங்களின் நூலை'' *(யோவா 1-12)* எதிரொலிக்கிறது. ஒளியில் நடத்தலே நற்செய்திக்குக்காட்டும் உண்மை யான பதிலாகும். இதுவே, யோவானின் கிறிஸ்தவர்களைப் பிரிந்து சென்றவர்களிட மிருந்து பிரித்துக்காட்டுகிறது. இரண்டாம் பகுதி *(1 யோவா 3:11-5:12)* ஒருவர் மற்றவர்க்கு அன்பு காட்ட வேண்டியதை வலியுறுத்துகிறது. இது நற்செய்தியின் ''மகிமையின் நூலை'', குறிப்பாக இயேசு வின் பிரியாவிடை உரையைப் பிரதிபலிக் கிறது; அன்புக்கட்டளை நிறுவப்படுகிறது. இயேசுவின் இறப்பு, இறையன்பின் எடுத்துக்காட்டான ஊன் உருவாக எடுத்துக் காட்டப்படுகிறது. திருமுகத்தின் முடிவுரை யும், நற்செய்தியின் முடிவுரைக்கு இணை யாக உள்ளது *(1 யோசு 5:13;யோவா 20:30-31)*. திருமுகத்தின் குறிக்கோள் பற்றிய கூற்றும், நற்செய்தி மொழியை நேரடியாகப் பிரதிபலிக்கிறது. நற்செய்தியில் ''உங்கள் மகிழ்ச்சி நிறைவுபெற'' *(யோவா 15:11)* இயேசுவின் உரை பேசப்படுகிறது. திரு முகத்தில் வாசகர்கள் ''எங்களோடு நட் புறவு கொள்ளும்படியும்'', '' நம் மகிழ்ச்சி நிறைவு பெறவும்'' *(1 யோவா 1:3-4)* ஆசிரியர் எழுதுகிறார். இயேசுவின் வெளிப் பாட்டை ஏற்காத உலகின் மேலான தீர்ப்பு *(யோவா 12:44-50)*, 1 யோவா 3-10-இல் வரும் ''இறைமக்கள் அலகையின் மக்களிட மிருந்து'' பிரிக்கப்படுவதோடு தொடர் புடையது.

ஆனால், நற்செய்தியிலும் முதலாம் யோவானிலும் காணப்படும் இறையியல் வேறுபாடுகளைக் கண்டு அறிஞர் சிலர் தயக்கம் காட்டியுள்ளனர். நற்செய்தியில் காணப்படும் சில முக்கிய சொற்கள் முத லாம் யோவானில் காணப்படவில்லை. திருமுகம் இயேசுவில் மகிமையை நேரடி யாகக் குறிப்பிடவில்லை; இயேசுவுக்கும், தந்தைக்குமிடையேயுள்ள ஒன்றிப்பை வலி யுறுத்துவது கூட திருமுகத்தில் காணப்பட வில்லை. திருமுகத்தின் இறையியல் மொழி, நற்செய்தி கடந்து சென்றுவிட்ட அல்லது திருந்த மீண்டும் அமைக்கப்பட்ட, முந்தையப் பாரம்பரியத்திலிருந்து வருவ தாகத் தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக, ''துணையாளர்'' *(1 யோவா 2:1)* என்பது சமூகத்தை வழிநடத்த நிலையான பிரசன்ன மாக துணையாளரின் வருகையில் செய

லாற்றும் இயேசுவின் வருகையைவிட, பரிந்து பேசுபவராக இயேசுவையே குறிக்கிறது. இயேசுவுக்கு ''நம்மை ஏற்புடையவராக்குபவர்'' *(1 யோவா 2:7-8)*, மெசியா (கிறிஸ்து) *(2:22)*, மகன் *(1:3; 3:23)* என்ற பட்டங்கள் சாற்றிக் கூறப்படுகின்றன. இயேசுவின் சிலுவையில் அவரது மகிமையின் வெளிப்பாட்டைக் காண்பதற்குப் பதிலாக, திருமுகம் இயேசுவின் இறப்பு, பரிகாரம் என்ற பழைய பாரம்பரியத்தையே கூறுகிறது *(1:7; 2:2; 3:16; 4:10)*. இறுதிக் காலம் வலியுறுத்தப்பட்டுள்ளது *(2:18)*. சொற்றொகுதிகள் துல்லியமாக இல்லை *(1 யோவா 1:1-3; யோவா 1:1-14)*. மூவொரு இறைவனுக்குள் உள்ள உறவு, ஆவியின் ஆட்தன்மை ஆகியவை தெளிவாக இல்லை. சில பகுதிகள் தந்தையையோ, மகனையோ குறிக்கலாம் *(1 யோவா 2:20; 3:2.24)*. இவற்றில் எல்லாம், நற்செய்தியில் காணப்படுவதை விட மூலவடிவில் திருமுகம் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால், அடிப்படையில் நற்செய்திப் போதகத்தோடு ஒத்தேயிருக்கிறது எனலாம்.

திருமுகம் ஒரே மந்தத்தன்மையுடையது; நாடகப் பாணியற்றது; செமித்தியப் பண்புகள் கொண்டது. மிகக் குறைவாகவே பழைய ஏற்பாட்டு எடுத்துக்காட்டுகளைக் கொண்டுள்ளது என்பர் சிலர். கிரேக்க மொழி தவறற்ற மொழியே ஆனாலும், திருமுகத்தில் செமித்தியப் பண்புகள் அதிகம் காணப்படுகின்றன. ஏற்கெனவே, அமைப்புப் பெற்றுவிட்ட புறவினக் கிறிஸ்தவர்களுக்கு எழுதப்பட்ட திருமுகம் பழைய ஏற்பாட்டுக் குறிப்புகளையோ, நற்செய்தியின் நாடகத்தன்மையையோ, இயேசுவின் சொந்தச் சொற்களால் வரும் மாட்சிமையையோ கொண்டிருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், தனக்கே உரிய அழகையும் பெரும் கூற்றுக்களையும் திருமுகம் கொண்டுள்ளது.

நான்காம் நற்செய்திக்கும் முதலாம் யோவானுக்குமிடையேயுள்ள வேறுபாடுகள், இரண்டும் வெவ்வேறான ஆசிரியர்களால் எழுதப்பட்டன என்று கருதச் சிலரைத் தூண்டியுள்ளது. ஆனால் பொதுவாக, இரண்டிற்குமிடையேயுள்ள ஒப்பீட்டில் ஒத்த கருத்துகளே அதிகமாய் உள்ளன. இஃது இரண்டும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டவை என்று கருதுவதே மேல். இதுவே பாரம்பரியச் சான்றாகவும் உள்ளது.

**4. எப்போது எழுதப்பட்டது?:** சில கருத்துகளில், முதலாம் யோவான், நான்காம் நற்செய்தியில் காணப்படும் வடிவத்தைவிட காலத்தால் முந்திய வடிவைக் கொண்டிருப்பதாகத் தோன்றுவதால், இது நற்செய்திக்கு முன்பே எழுதப்பட்டது என்று சிலர் கூறியுள்ளனர். ஆனால், இரண்டும் கருத்தில் கொள்ளும் சமூக அமைப்புகள் வேறுபடுகின்றன. நற்செய்தி யூதத்துவத்தாலும், தந்தையால் அனுப்பப்பட்ட காலத்திற்கு முன்பே இருந்த மகனாக இயேசுவைப் பற்றிய போதகத்தை நிராகரித்த யோவானின் சமூகத்திற்குப் புறம்பானவர்களாலும் எழுப்பப்பட்ட சவால்களைத் தீர்க்க முயற்சிக்கிறது. ஆனால், திருமுகம் யோவான் சமூகத்தையே உடைப்பது பற்றிப் பேசுகிறது. மேலும், இந்த உடைபடுதலால் வரும் அதிர்ச்சி, ஒருவர் மற்றவர்க்கு அன்பு செய்தலின் முதன்மை, ''நீங்கள் தொடக்கத்திலிருந்து கேட்டவற்றிற்குப்'' பிரமாணிக்கமாய் இருத்தல் வலியுறுத்தப்படுதல் ஆகியவற்றை, நான்காம் நற்செய்திப் பாரம்பரியத்தில் யோவான் சமூகம் ஏற்கெனவே அமைந்து விட்டது என்ற கருத்தின் அடிப்படையில்தான் புரிந்து கொள்ள முடியும். ஆசிரியரும் வாசகர்களும் நற்செய்தி வாசகத்தோடு பழக்கப்பட்டவர்கள் என்ற அடிப்படையில்தான் புரிந்து கொள்ளக்கூடிய பகுதிகள் திருமுகத்தில் உள்ளன. நற்செய்தியில் காணப்படும் பாரம்பரியத்தைப் புரிந்து கொள்ள பணிச்சட்டம் அளிக்கவே திருமுகம் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. ஆகவே, நற்செய்திக்குப்பின்தான் முதலாம் யோவான் எழுதப்பட்டது என்று கொள்ளலாம். நற்செய்தி கி.பி. 90-ஐ ஒட்டித் தோன்றியதென்றால், இத்திருமுகம் 110-ஐ ஒட்டிய யோவான் சமூகத்தைப் பிரதிபலிக்கிறது எனலாம்.

**5. யாருக்கு? ஏன்?:** முதலாம் யோவான் திருமுகத்தைப் புரிந்து கொள்ள, அது கருத்தில் கொண்டிருக்கும் பதிதர்களைப் பற்றிய அறிவு அவசியமாகிறது. இவர்கள் யோவான் சமூகத்தைச் சேர்ந்தவர்கள், யூதக் கிறிஸ்தவர்கள் அல்லர். யோவான் சமூகத்தில் அங்கத்தினராக இருந்து, இப்போது தனிச்சமூகமாக அமைத்துக் கொண்ட புற இனக் கிறிஸ்தவர்கள் ஆவர். இவர்கள் புறஇன உலகில் பரவி, வெற்றியடைந்து கொண்டிருந்தனர் *(1 யோவா 2:19; 2 யோவா 7)*. இவர்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றிய உண்மையை அறிக்கையிடத் தவறியவர்கள். இவர்கள் இயேசு கிறிஸ்து ஊன் உருவில் வந்துள்ள இறைமகனாவார் என்பதை மறுத்தனர். விண்ணக வெளிப்பாட்டாளரின் மண்ணகக் கருவியே ஆவார் இயேசு என்று போதித்தனர். ஒழுக்கத் தவறுகளைப் போதித்தனர் *(1 யோவா 1:5-2:11.22தொ; 3:4-24; 4:2தொ.5; 5:3-5)*. இறைவனைப் பற்றிய இரகசிய அறிவைக் கொண்டிருப்பதாகவும் *(2:4)*, பாவமற்றவர்களாக இருப்பதாகவும் *(1:6.8.10)* உரிமை கொண்டாடினர். இவர்கள் கட்டளைகளைக் கடைப்பிடிப்பதில்லை; தங்கள் சகோதரர்களை அன்பு செய்வதில்லை; வெறுக்கின்றனர் *(2:3தொ.9; 3:10.15)*. யோவான் இத்திருமுகத்தை எழுதியபோது செரிந்து என்பவரைக் கருத்தில் கொண்டிருந்தார் என்று இரனேயு கூறுகிறார். இந்தச் செரிந்து ஆன்மீகக் கிறிஸ்து திருமுழுக்கின்போது இயேசுவின்மேல் இறங்கினார் என்றும், பாடுகளின்போது விலகிப் போய்விட்டார் என்றும் போதித்தார் *(காண்க. 2:22; 4:3; 5:5தொ)*. யோவான் போராடும் பதிதம் தோசேத்தியம், ஞானவாதம் ஆகியவற்றின் தொடக்க வடிவமாக இருக்கலாம். இப்பதிதர்கள் ஏமாற்றுபவர்கள், எதிர்க்கிறிஸ்துகள் என்று குறிப்பிடப்படுகின்றனர். இந்தப் ''போலி ஆவிகள்'' நிராகரிக்கப்பட வேண்டும் *(1 யோவா 4:1-5)*. இத்தகைய பிரிவினைப் போதகத்தோடு தொடர்புடையவர்களை ''உங்கள் இல்லத்தில் ஏற்காதீர்கள்; வாழ்த்துக் கூறாதீர்கள்'' என்று கட்டளையிடப்படுகிறது *(2 யோவா 8-11)*.

இத்திருமுகத்தின் நோக்கம் இவ்விதம் எச்சரிக்கை செய்வதனாலும், அதே சமயத்தில், நேரடியான போதனையினாலும் கொடுக்கப்படுகிறது.

**6. இலக்கியப் பண்பு:** ஒரு மடலில் காணப்படும் சாதாரணக் கூறுகள் இத்திருமுகத்தில் காணப்படவில்லை. பவுலின் திருமுகங்களில் சிறப்பாகக் காணப்படும் முகமன் வாழ்த்தும், இறுதிவாழ்த்தும், ஆசீர்களும் இந்நூலில் காணப்படவில்லை. ஆசிரியரது காலத்து மனிதர்களைப் பற்றியோ, குறிப்பிட்ட வரலாற்றுச் சூழ்நிலையைப் பற்றியோ குறிப்புகள் இல்லை. எதிர்க்கிறிஸ்து, போலி இறைவாக்கினர்கள் பற்றிய தெளிவில்லாத சுட்டிக்காட்டுதல்கள் உள்ளன. இவையெல்லாம் இந்நூல் எல்லாக் கிறிஸ்தவர்களுக்கும் எழுதப்பட்ட ஒரு சுற்று மடலாகும், ஓர் அறவுரையாகும் என்று கருதத் தூண்டுகின்றன. இதில் இந்நூல் எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம், யூதா எழுதிய திருமுகம் ஆகியவற்றை ஒத்திருக்கிறது. ஆனால் இவற்றிலிருந்து வேறுபட்டு, இந்நூல் பிரிவினைக்காரர் எழுப்பிய பிரச்சனைக்கு மறுப்புக் கூறுவதாக அமைந்துள்ளது. போதகம் முதன்மையான நோக்கமன்று. ஆனால், மறுப்புக் கூறுவதற்கு அதைப் பயன்படுத்துகிறது. இந்நூலுக்கு வரலாற்றுப் பின்னணியாகவுள்ள பதிதர்கள் பற்றிய குறிப்புகள் ஓரளவு காலவரையைச் சுட்டலாம். இத்திருமுகம் விசுவாசிகளுக்கு எழுதப்பட்டது என்பதைத் தவிர, வாசகர்களைப் பற்றி எந்தச் சிறப்பான குறிப்பையும் தரவில்லை.

**7. நூலில் ஒற்றுமை:** இத்திருமுகம் ஒரு தொகுப்பு நூலாகும் என்று காட்ட பலர் முயன்றுள்ளனர். இதற்குச் சான்றாக, எதிர்நிலை ஈரடியமைப்புகளையும், எதிர்மறையாகத் தோன்றுபவைகளையும் *(1 யோவா 1:8தொ; 3:6தொ)* சுட்டிக்காட்டுவர். ஆனால் நடைவேறுபாடு காரணமாக ஆசிரியர் பலரைச் சுட்ட வேண்டியதில்லை. நூலில் ஒற்றுமையுள்ளது என்பதைக் கைவிடாமல், இந்நூலில் பாடல், வாதப்போக்கு, அற

வுரை வடிவங்களை நாம் அடையாளம் காணலாம். குறிப்பாக, தனது போதகத்திலிருந்தே யோவான் கருத்துகளைப் பயன்படுத்தியிருக்கலாம் (*காண்க. 4:13 தொ*). திருமுகத்தின் முடிவுக்குப்பின் (*5:13*), ஆசிரியரே *5:14-21*-ஐச் சேர்த்திருக்கலாம்.

இந்நூலில் பல்வேறுபட்ட திட்ட அமைப்புகளைக் காண ஆய்வாளர்கள் முயன்றுள்ளனர். இஃது அறிவுசார்ந்த நேர்த் திட்டமில்லை என்று சுட்டுகிறது. இணையமைப்பு, மீண்டும் கூறுதல், அதே தலைப்பைப் பற்றி மீண்டும் பேசுதல் ஆகியவை செமித்தியரும் தியானியுமான யோவானுக்கு இயற்கையானதாகும். ஆனால், முன்னுக்குப்பின் (*1:1-4*) வளர்ச்சியான விவரிப்பு உள்ளது. இறைவன் ஒளியாவார் (*1:5-2:28*). இறைவன் நேர்மையானவர் (*2:29-3:24*). ஆவிகளைத் தெளிதல் பற்றிய இடைக் கூற்றுக்குப்பின் (*4:1-6*), இறைவன் அன்பானவர் (*4:75:3*), இறைமகன் இயேசுவின் மேல் கொண்டுள்ள விசுவாசம் இறைச்சான்றைக் கொண்டுள்ளது (*5:4-12*), முடிவில்லா வாழ்வைக் கொண்டுள்ளோம் (முடிவுரை: *5:13-21*) என்று அறிவோம்.

**8. திட்டம்:**

I. முன்னுரை (*1:1-4*).

II. ஒளியில் நடத்தல் (*1:5-2:28*).

அ. *1:5-2:17* : இருவழி அறவுரை.

ஆ. *2;18-28* : எதிர்க்கிறிஸ்துகளை நிராகரியுங்கள்.

III. இறைமக்களின் அடையாளம் அன்பே (*2:29-3:24*).

அ. *2:29-3:10* : தந்தை நம்மைத் தம் பிள்ளைகளாக்குகிறார்.

ஆ. *3:11-18* : அன்பின் கட்டளை.

இ. *3:19-24* : இறைவன்முன் நமது நம்பிக்கை.

IV. அன்பு செய்ய, விசுவசிக்கக் கட்டளைகள் (*4:1-5:12*).

அ. *4:1-6* : எதிர்க்கிறிஸ்துகளை நிராகரியுங்கள்.

ஆ. *4:7-12* : இறைவனே அன்பு.

இ. *5:1-12* : மகனில் விசுவாசம்.

V. முடிவுரை (*5:13-21*).

**9. போதகம்:** பிரிவினைக்காரர்களின் தவறுகளை எதிர்த்துப் போராட, நேரடியான கோட்பாடுகளையும் செயல்முறையான அறவுரைகளையும் ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார். ஆனால், கிறிஸ்தவர்கள் எச்சரிக்கப்பட வேண்டும். அவர்களை உற்சாகப்படுத்தவும், அவர்கள் இறைவனை அறிவார்கள் என்று உறுதிப்படுத்தவும் முனைகிறார். ''அறிதல்'' என்ற சொல் தொடர்ந்து பயன்படுத்தப்படுகிறது. இஃது ''உங்களுக்கு முடிவில்லா வாழ்வு உண்டு என்பதை நீங்கள் அறியவே'' (*5:13*) என்ற கூற்றில் உச்சநிலை அடைகிறது. அறிதல் என்ற சொல்லைக் கிரேக்க முறையில் புரிந்து கொண்டால், நாம் இந்தத் திருமுகத்தைத் தவறாகப் புரிந்து கொள்வோம். ஆசிரியர் இச்சொல்லைச் செமித்திய முறையில் பயன்படுத்துகிறார். இதன்படி இறைவனை அறிதல் என்பது, அவரை அடையாளம் கண்டு, அவரது ஆற்றலையும் செயல்மிக்க பிரசன்னத்தையும் அனுபவிப்பதாகும் (*யாத் 6:6; 7:5.17; 29:45 தொ; எசே 25:5; 39:28தொ*). அதற்கேற்றவாறு கடவுளின் கட்டளையைக் கடைப்பிடித்து, அவரது வழிகளில் நடந்து (*1 அர 14:8*), பணியையும் அன்பையும் மனிதனில் கோரியது (*எரே 9:25; ஒசே 6:6*). இப்படி நடவாவிட்டால், இறைவனை அறியாததாகும் (*எரே 9:2; காண்க. 1 யோவா 2:3தொ*). இஸ்ராயேல் உடன்படிக்கையை முறித்தபோது, எரேமியா மற்றும் எசேக்கியேல் வழியாக இறைவன் புதியதொரு உடன்படிக்கையை அறிவித்தார். அதில் தமது ஆவியால் அவர்களுடைய இதயங்களை மாற்றி, அவரை அறியவும், கட்டளைகளைக் கடைப்பிடிக்கவும் வழி செய்வார். இத்திருமுகத்தில் யோவான் இது நிறைவேறிவிட்டது என்று உறுதி கொண்டிருக்கிறார். இதை விவரிக்கிறார்.

எடுத்துக்காட்டாக, ''ஒருவரும் உங்களுக்குக் கற்பிக்கத் தேவையில்லை'' *(1 யோவா 2:27; எரே 31:34)*; ''தம் ஆவியில் நமக்குப் பங்கு தந்துள்ளார்'' *(1 யோவா 4:13; எசே 36:27)*; ''கடவுளின் மகன் உண்மை இறைவனை அறியும் ஆற்றலை நமக்குத் தந்துள்ளார்'' *(1 யோவா 5:20; காண்க. எரே 24:7)*. இந்த ஆன்மீக அறிவு அடையாளங்களால் எடுத்துக்காட்டப்படுகிறது *(1 யோவா 2:3.5; 3:10.19.24; 4:2.6.13; 5:2)*. முதலாம் யோவானில் விசுவாசம் என்பது மெசியா, இறைமகன், அவரது பெயர் அல்லது அவருக்கு இறைவனது சாட்சியம் பற்றியதாகும் *(2:23; 4:15 தொ; 5:1.10.13)*. அறிதல் (பார்த்தல்) இறைவனின் உயிருள்ள ஆளை அல்லது இயேசுவை அடைகிறது *(2:3தொ; 3:1தொ.5தொ; 5:20)*. அது கட்டளைகளைக் கடைப்பிடிப்பதாலும், புனிதத்தாலும், விசுவாசத்தாலும் பிற அன்பாலும் வெளிப்படுத்தப்படுகிறது. *(2:3தொ; 3:23; 4:6தொ)*. ''இறைவனிடமிருந்து பிறந்தவர்கள்'' என்பதாலும் ''இறைவனுடைய மக்களாய்'' இருப்பதாலும், இறைவாழ்வாலும், அவரைப்போலச் செயலாற்றச் செய்ய நம்முள் வைக்கப்பட்டிருக்கும் வாழ்வின் ஆற்றல் மிக்க வித்தாலும் இந்த விசுவாசத்தைக் கொண்டிருக்கிறோம் *(2:29-3:10; 4:7தொ)*. இறைவனில் நாமும், நம்மில் அவரும் இணைந்து இருத்தலோடும், இறைவாழ்வு மற்றும் அதை எடுத்துக்காட்டும் செயல்களில், எல்லாவற்றிற்கும் மேலாக, அன்பில் பங்கு கொள்ளுதலாகிய ஆவியின் பிரசன்னத்தோடும் இந்த விசுவாசம் அமைகிறது *(2:5தொ; 3:6.24; 4:4.12தொ; காண்க.யோவா 15:1-5)*. இவ்வாறு இறைவனைப் பற்றிய பழைய ஏற்பாட்டின் செய்து அறிகிற அறிவானது பணியில் வளர்ந்து, விசுவாசத்திலும் அன்பிலும் விரிவடைகிறது. ஏனெனில், அன்பாய் இருக்கும் இறைவனை, நம்மை மீட்க தமது செயலாற்றல் மிக்க பிரசன்னத்தால் நம்மில் தங்கவும் தம் மகனை அனுப்பிய இறைவனை, இப்போது அறிவோம்.

## யோவான் எழுதிய திருமுகம் II & III (JOHN, 2&3 LETTERS OF)

***1. முன்னுரை:*** இரண்டு திருமுகங்களும் புல்தாள் ஏட்டில் ஒருபக்க அளவு நீளம் கொண்டவை, கிரேக்கர்கள் தனிப்பட்டோருக்கு எழுதும் கடித அமைப்பையுடையன. இவை புதிய தன்மையுடையன, சிறிது கரடுமுரடானவை, செயல்முறையானவை, தனிப்பட்டோர் பற்றிய குறிப்புகளைக் கொண்டுள்ளன *(3 யோவா 1.9.12)*. கடிதம் பெறுபவரின் சொந்தக் காரியங்களில் கவனம் செலுத்தாமல், கிறிஸ்தவச் சமூகம் பற்றிய காரியங்களில் கவனம் செலுத்துகின்றன. இரண்டாம் யோவான் ஒரு சமூகத்திற்கும், மூன்றாம் யோவான் ஒரு செயல் மிக்க கிறிஸ்தவனுக்குச் சமூகத்தைப் பற்றியும் எழுதப்படுகின்றன. இரண்டாம் யோவானில் வரும் ''தேர்ந்தெடுக்கப்பட்ட பெருமாட்டி'' தனிப்பட்ட நபரைக் குறிக்கலாம். ஆனால், மடலின் தொனி ஒரு சமூகத்தைச் சுட்டுகிறது. இந்தப் பெருமாட்டி ''உண்மையை அறிந்துள்ள அனைவரோடும்'' அன்புப் பிணைப்பால் ஒன்றித்திருக்கிறாள். இது போலவே அவளது ''மக்கள்'' உடல் சார்ந்த மக்கள் அல்லர். ஆன்மீக மக்களாவர் *(2 யோவா 4.13; 3 யோவா 4)*. மூன்றாவது யோவானில் வரும் காயு என்பவர் மற்றப்படி அறியப்படாதவர்; அவரது சமூகத்தில் முக்கியமானவர்களில் ஒருவராக இருந்திருக்கலாம்.

***2. ஆசிரியர்:*** இரண்டாம் யோவானில் காணப்படும் கரடுமுரடான சொற்றொடர்கள் முதலாம் யோவானை எழுதியவரே இரண்டாம் யோவானையும் எழுதியிருக்க முடியாது என்று காட்டுவதாகச் சிலர் கருதுகின்றனர். 1 யோவா 1:4-இல் குறிக்கப்படும் ''நாம்'' என்பவர்களுள் ஒருவர் இதை எழுதியிருக்கலாம் என்று கருதுகின்றனர். இது தனிப்பட்டோருக்கு எழுதப்பட்டது, பொது அறவுரையன்று என்பது இந்த வேறுபாட்டுக்குக் காரணமாகலாம் என்று விளக்குவர்.

இரு கடிதங்களின் மொழியும் நடையும் ஒரே தன்மையுடையன. இரண்டும் மூப்பரால் எழுதப்பட்டுள்ளன. கடிதங்களின் தொடக்கத்தில் வரும் ''உண்மையான அன்பு கொண்டுள்ள நான்'' *(2 யோவா 1; 3 யோவா 1)*, ''உன் மக்களில் சிலர் உண்மைக்கேற்ப நடப்பது கண்டு நான் பெரும் மகிழ்ச்சியுற்றேன்'' *(2 யோவா 4; 3 யோவா 3)* ஆகிய சொற்றொடர்களும், முடிவுரையும் *(2 யோவா 12-13; 3 யோவான் 13-15)* இணையாயிருப்பதும் ஒரே தன்மையான இறுதிக்கால இயலைக் கொண்டிருப்பதும் இரு கடிதங்களுக்கும் ஆசிரியர் ஒருவரே என்று சுட்டுகின்றன. இரு கடிதங்களும் முதலாம் யோவானோடு கொண்டுள்ள உறவு நெருக்கமானது. சரியான விசுவாசம் அன்பு ஆகியவையே இம்மூன்று மடல்களுக்கும் பொதுவான முக்கிய கருத்துகளாகும் *(2 யோவா 5.6.9.12-ஐ 1 யோவா 2:7; 5:2*தொ*; 2:23; 1:4*-ஒடு ஒப்பிடுக). மேலும், 2 யோவா *10-11*-இல் வரும் பிரிவினைக்காரர்களுக்கு எதிரான கடுமையை, முதலாம் யோவானில் காணப்படும் யோவான் கிறிஸ்தவர்களுக்கிடையே நிலவிய இடுக்கண் நிலையின் பின்னணியில்தான் புரிந்துகொள்ள முடியும். ஆகவே, மூன்று மடல்களும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டவை என்று பலர் கருதுவர்.

மேலும், இம்மூன்று மடல்களும் நான்காம் நற்செய்தியோடு நெருங்கிய தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன. நற்செய்திக்கும் முதலாம் யோவானுக்குமிடையேயுள்ள உறவை யோவான் திருமுகம் - I-பற்றிய கட்டுரையில் கூறியுள்ளோம். உண்மையை அறிய *(2 யோவா1)*, ''அந்த உண்மை நம்மிடம் நிலைத்திருக்கிறது'' *(வச.2)*, ''நாம் தந்தையிடமிருந்து பெற்ற கட்டளை'' *(வச.4)*, ''நீங்கள் முழுப்பயனையும் அடையும்படி'' *(வச.8)*, ''கிறிஸ்துவின் போதனையில் நிலைத்து நில்லுங்கள்'' *(வச.9)* என்பனவற்றை யோவா *8:32; 14:16*தொ*; 10:18; 4:36; 8:3*-ஒடும், 3 யோவா *12*-ஐ யோவா *19:35; 21:24*-ஒடும் ஒப்பிடுக. ''சார்ந்திருத்தல்'', ''அறிதல்'', ''நிலைத்து நிற்றல்'' போன்ற ஆழ்ந்த கருத்துகள் திருமுகங்களில் மீண்டும் மீண்டும் காணப்படுகின்றன. இவை, யோவானின் நூல்களுக்கு ஆசிரியர் ஒருவரேதான் என்று கருதத்தூண்டியுள்ளன. பாரம்பரியம் இக்கருத்தையே கொண்டுள்ளது. அப்படியென்றால் இத்திருமுகங்களின் ஆசிரியர், நற்செய்தியின் ஆசிரியர் பற்றிய கருத்துகளால் சோதிக்கப்பட வேண்டும். மறுபுறம், நற்செய்திக்கும் முதலாம் யோவானுக்கும் உரிய ஆசிரியருக்கு ''மூப்பர்'' என்ற பட்டம் எப்படிப் பொருந்தும் என்ற கேள்வி எழலாம். இரண்டாம், மூன்றாம் யோவானில் ஆசிரியரின் அடையாளத்தை மறைக்கும் நோக்கோடு மூப்பர் என்ற சொல் பயன்படவில்லை என்று உறுதியாகக் கூறலாம். வரலாற்றில் அந்தந்தக் காலத்தைச் சேர்ந்தவர்கள் தங்களது ''முதியவர்''களைப் புரிந்து கொள்வதுபோல், இத்திருமுகங்களின் வாசகர்கள் இவை யாரிடமிருந்து வந்தன என்பதை உடனடியாக அறிந்து கொள்வர் என்ற கருத்து உள்ளடங்கியுள்ளது. ''மூப்பர்'' என்ற சொல்லைக் கலைச்சொற்பொருளில் தலத்திருச்சபைத் தலைவர்களோடு, பாப்பியசு குறிக்கும் ''மூப்பரான யோவானுடனும்'' இணைத்துக் கூற எச்சான்றுமில்லை. இத்திருமுகங்களின் தொனியும் மனப்போக்கும் குல மூதாதையருடையதாக உள்ளன; சட்ட அதிகாரத்தன்மையதல்ல. இப்போக்கு அவர் உண்மையான அதிகாரம் கொண்டிருந்தால் மட்டுமே ஆகக்கூடியது.

ஆசிரியரின் அடையாளம் பற்றிய பாரம்பரியம் ஒரே சீராக இல்லை. ஆண்டவரது சீடர் நூலிலிருந்து எடுத்துக்கூறுவதுபோல் இரனேயு இரண்டாம் யோவானைப் பயன்படுத்துகிறார். அலக்சாந்திரிய கிளமந்து இதே கருத்தைப் பிரதிபலிக்கிறார். மூராத்தோரியின் பட்டியலில் நான்கு நூல்களும் இடம் பெறுகின்றன. அலக்சாந்திரிய தியோனிசு, ஓரிசன், யூசேபியு போன்றோரும் இதே கருத்தைப் பிரதிபலிக்கின்றனர்; ஆனால், இக்கருத்து சிலரால் தர்க்கிக்கப்படு

கிறது என்றும் கூறியுள்ளனர். எரோனிமு இத்திருமுகங்களை ''மூப்பரான யோவான்'' எழுதியதாகக் கூறுகிறார். தோது என்பவர் மூப்பர் யோவானை இத்திருமுகங்களின் ஆசிரியரான நற்செய்தியாளரின் சீடராக்கு கிறார்.

**3. திருமுறைப்பட்டியல்:** திருமுகங்கள் நான்காம் நற்செய்தியாளரால் எழுதப்பட்டன என்று பாரம்பரியம் ஏற்றுக்கொண்டாலும், முதல் இருநூற்றாண்டுகளில் இவை அதிகாரபூர்வமான நிலை கொண்டிருக்கவில்லை. முதலாம் யோவான், மேற்கு மற்றும் கிழக்குத் திருச்சபைகளால் இரண்டாம் நூற்றாண்டின் முடிவில்தான் தெளிவாக எடுத்துக்காட்டப்படுகிறது. இரண்டாம் யோவான் கி.பி. *200*-ஐ ஒட்டியும், மூன்றாவது யோவான் மூன்றாம் நூற்றாண்டின் மத்தியிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. சீரியத் திருச்சபை ஐந்தாம் நூற்றாண்டில் தான் இவற்றை ஏற்றுக்கொண்டன. இப்போ *(393)*, கார்த்தேசு *(397)* ஆகிய இடங்களில் நடந்த திருச்சபைச் சங்கங்கள் இத்திருமுகங்கள் இறை ஏவுதல் பெற்றவை என்று படிப்பித்தன. அதன் விளைவாக, இவை திருமுறைப்பட்டியலைச் சேர்ந்தவை என்று எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

**4. இடமும் காலமும்:** இவை சிறிய ஆசியாவில் எழுதப்பட்டன என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும். ஆனால், காலத்தைக் குறிக்க சான்று இல்லை.

முதலாம், இரண்டாம் யோவான் திருமுகங்கள் யோவான் சமூகத்தில் முன்பு அங்கத்தினர்களாக இருந்து இப்போது பிரிந்து விலகியிருப்பவர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன *(1 யோவா 2:19; 4:1; 2 யோவா 7)*. இப்பிரிவினைப் போதகத்தோடு தொடர்புடையவர்களுக்கு வாழ்த்துக்கூடக் கூறக்கூடாது என்று கடுமையாகக் கட்டளையிடுகிறது இரண்டாம் யோவான் *(வச. 8-11)*. இரண்டு கடிதங்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் சூழ்நிலை இன்னும் மோசமாகிவிட்டது என்று இரண்டாம் யோவானின் கடுமையான தொனி காட்டுகிறது. முதலாம் யோவான் இரண்டாம் யோவானுக்கு முன் எழுதப்பட்டிருக்க வேண்டும்; இரண்டாம் யோவானின் வாசகர்களுக்கே அனுப்பப்பட்டிருக்க வேண்டும். மூன்றாம் யோவான் பிரிவினைக்காரர்களைக் குறிக்கவில்லை என்பதால், முதல் இரண்டு திருமுகங்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம். பிரிவினைப் போதகம் எழுதிய குழப்பத்தால் ஆசிரியரது சமூகத்திலிருந்து அனுப்பப்பட்ட மறைபரப்புப் பணியாளர்கள் ஏற்கப்பட்டு ஆதரிக்கப்படவில்லை எனலாம்.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு, நான்காம் நற்செய்தி கி.பி. *90*-ஐ ஒட்டி இறுதி வடிவம் எடுத்ததென்றால், இத்திருமுகங்கள் கி.பி. *100*-ஐ ஒட்டித் தோன்றியிருக்க வேண்டும். இதற்கு முன் இவற்றிற்குக் காலம் குறிப்பது கடினம்.

**5. நோக்கம்:** பிரிவினைப் போதகத்தைப் பற்றி யோவான் கிறிஸ்தவ சமூகத்தை எச்சரிப்பதே இத்திருமுகங்களின் முதன்மையான நோக்காகும். மேலும், பிரமாணிக்கமுள்ளவர்களை ஆசிரியர் உற்சாகப்படுத்துகிறார்.

**6. திட்டம்:**

**அ. இரண்டாம் யோவான்.**

I. முன்னுரை *(வச. 1-3)*.

II. திருமுகத்தின் செய்தி *(வச 4-11)*.

அ. வச. 4-6 : கடிதம் பெறுபவரின் பிரமாணிக்கம்.

ஆ. வச. 7-9 : பிரிவினைக்காரர்களுக்கு எதிரான எச்சரிக்கை.

இ. வச. 10-11: இவர்களுக்கு எதிரான நடவடிக்கை.

III. முடிவுரை *(12-13)*.

உண்மையைத் தேடுவதிலும், பிறருக்கு அன்பு காட்டுவதிலும் தொடர்ந்து நிலைநிற்கும்படி ஆசிரியர் உற்சாகப்படுத்துகிறார்; உண்மையான போதகத்தில் நிலைத்து நிற்கும்படி அறவுரை கூறுகிறார் *(வச.7-11)*.

விசுவாசிகள் போலிப் போதகர்களை உபசரிக்கக்கூடாது என்று எச்சரிக்கப்படுகின்றனர். நற்செய்திப் போதகர்களாக வரும் அன்னியர்கள் கிறிஸ்துவைப்பற்றிய உண்மையான விசுவாசம் கொண்டிருக்கின்றனரா என்று, விசுவாசிகள் அவர்களுக்கு உதவி செய்யுமுன், அவர்களைச் சோதித்தறிய வேண்டும்.

**ஆ. இரண்டாம் யோவான்.**

I. முன்னுரை *(வச. 1-2).*

II திருமுகத்தின் செய்தி *(வச. 3-12).*

அ. *வச. 3-8* : நற்செய்திப் பணியாளரை உபசரித்தல்.

ஆ. *வச. 9-10* : தியோதிரபு மறுத்தல்.

இ. *வச. 11-12* : பணியாளரை விருந்தோம்ப வேண்டுகோள்.

III. முடிவுரை *(வச. 13-15).*

ஆசிரியர், பொதுவான பெயருடைய ஒரு காயுவுக்கு எழுதுகிறார், திருச்சபைக்கு அன்று. காயுவின் பற்றுறுதியையும், உற்சாகத்தையும் *(வச. 3.5-8)*, தியோதிரபின், தன்னலமிக்க, தீய நடத்தையோடு ஒப்பிட்டு வேறுபடுத்துசிறார். தியோதிரபு யோவானின் அதிகாரத்தை ஏற்க மறுக்கிறான் *(வச. 9-10)*. இக்கடிதம் தெமேத்திரியுவுக்கு உற்சாகம் அளிக்கிறது *(வச. 12)*.

**யோவான் எழுதிய நற்செய்தி** *(*JOHN, GOSPEL OF*)*

*1.* முன்னுரை: இயேசு மரித்து, உயிர்த்து விண் சென்றபின், ஏறக்குறைய ஒரு தலைமுறை கடந்து விட்டது. கிறிஸ்துவின் முதன்மைச் சீடர் பேதுரு வேதசாட்சி மரணம் எய்தி விட்டார். அவருக்குப்பின், யூத உலகத்தையே ஒரு கலக்குக் கலக்கிய பவுலும் குருதி சிந்தி இறைவனடி சேர்ந்தார். யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்குமிடையே வேற்றுமையும், வெறுப்பும் வளர்ச்சியுற்று வந்தன. ஆயினும், கிறிஸ்தவர்களின் வழிபாட்டுமுறை யூத செபக்கூடங்களை மையமாகக் கொண்டு விளங்கியது. பல இடங்களில் நன்கு வளர்ச்சியுற்ற கிறிஸ்துவச் சமூகங்கள் நிலைபெற்றன. அவற்றிடையே கிறிஸ்து மீண்டும் வரும் காலம் நெருங்கி விட்டது என்ற நம்பிக்கை வளர்ச்சியுற்றது. கடைசி அப்போஸ்தலர் மரிக்கும் முன்பாகிலும் கிறிஸ்து மீண்டும் வருவார் என எதிர்பார்த்தனர்.

கி.பி. 70-இல் எருசலேம் தரைமட்டமாக்கப்பட்டது. இது பற்றிய இயேசுவின் முன்னறிவிப்பு நிறைவேறியது. பாலஸ்தீன யூதர்களும், கிறிஸ்தவர்களும் சிதறினர். இதுவரை கிறிஸ்தவர்களைத் தங்களது செபக்கூடங்களில் சகித்து வந்த யூத சமூகம் அவர்களைப் புறம்பாக விலக்கி விட்டது. அவர்களுக்கு விரோதமாகச் சாபம் ஒன்றையும் தங்களுடைய பதினெட்டு ஆசீர்களில் சேர்த்துச் சொல்லி வந்தது. கிறிஸ்தவர்களுள் பக்தியுள்ள யூதர்கள் பலர் இருந்தனர். பரம்பரை பரம்பரையாகத் தாங்கள் கடைப்பிடித்து வந்த மறை வாழ்க்கையிலிருந்து விலக்கப்பட்டிருந்தது கண்டு வெதும்பினர், தளர்ச்சியடைந்தனர். புற இனக் கிறிஸ்துவர்களும் பல இன்னல்களுக்கு உட்பட்டனர். கிறிஸ்து வருவாரா? இன்று இயேசு அவர்களுடைய கிறிஸ்துதானா? அல்லது இறந்துபட்ட உரோமை அரசர்கள்போல், முந்திய இறைவாக்கினர் போல் இயேசுவும் வரலாற்றில் தோன்றி மறைந்த பல மனிதர்களில் ஒருவர்தானா? என்று பல ஐயங்கள் எழுந்தன.

காலம் முதல் நூற்றாண்டின் முடிவை நெருங்கிக் கொண்டிருந்தது. இயேசுவின் அப்போஸ்தலர்களில் ஒருவர் மட்டும் எஞ்சியிருந்தார். அவரும் மூப்பெய்திக் கொண்டிருந்தார். அவர் மேற்கூறிய கிறிஸ்தவர்களின் நிலையைக் கண்டார். அவர்களுக்கு வேண்டியது ஊக்கம், ஆறுதல் என்பதை உணர்ந்தார். அதற்கேற்ப ஒரு நற்செய்தியை எழுத முனைந்தார். கிறிஸ்து உண்மையான மனிதர்; ஆனால், அதே நேரத்தில் இறைமகன். அவர் கடந்துவிட்ட வரலாற்றைச் சார்ந்த வெறும் மனிதரல்லர்; எக்காலத்திற்கும் உரிய மனிதர். அவரால்தான் நமது

வாழ்வு மேம்பாடு அடைகிறது. அவர் உலகில் வாழ்ந்தபோது எத்தொழிலைச் செய்தாரோ, அதே ஆன்ம வேலையை இன்றும் செய்து வருகிறார்; என்றும் செய்வார் என்று உறுதிகூறும் விதத்தில், ஊக்கமளிக்கும் விதத்தில், ஆறுதல் அளிக்கும் விதத்தில் செயலர்களைப் பயன்படுத்தித் தமது நற்செய்தியை வரைந்தார் இக் கடைசி அப்போஸ்தலர்.

அந்நூலை அவர் முடிக்கும் முன்பே அவர் இறந்திருக்கக்கூடும். அவரது சீடர்கள் அவரால் எழுதப்பட்ட நூலையும் அவரிடமிருந்து பெற்ற பல வாய்மொழிப் பாரம்பரியச் செய்திகளையும் சேர்த்து அதனைப் பல வடிவங்களில் பதிப்பித்தனர். இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அவரது சீடர்களில் ஒருவர் மேற்கூறப்பட்ட பல பதிப்புக்களை ஒன்று சேர்த்துத் தொகுத்து ஒரு நூலைப் பதிப்பித்தார். இவ்வாறு உருவான நூலே நாம் கொண்டிருக்கும் வடிவில் நமக்குக் கிடைத்திருக்கும் யோவான் எழுதிய இயேசு கிறிஸ்துவின் நற்செய்தி. இந்நூலைப் பற்றி பல பிரச்சனைகள் உண்டு.

***2. எழுதியது யார்?:*** இஃது ஒரு சிக்கலான பிரச்சனை. ஆய்வாளர்களிடையே ஒருமுகமான கருத்தொற்றுமையைக் காண்பது அரிது. பாரம்பரியத்தின் சான்றுகளும் இது பற்றி ஒருமுகமான தீர்ப்பைக் கூறவில்லை. இந்நூலின் ஆசிரியர் கலிலேயாவைச் சார்ந்த மீன் பிடிப்பவரும், அரமேயிக்கு மொழி பேசியவரும், யூதமதத்தில் பிறந்து வளர்ந்து இயேசுவோடு தோழமை கொண்டு அவரது சீடராகத் திகழ்ந்தவரும், செபதேயுவின் மகனுமான யோவான்தானா? கூறுவது கடினம். நாம் இக்காலத்தில் கருதும் விதத்தில் அவர் இந்நூலின் ஆசிரியர் அல்லர் என்று உறுதி கூறலாம். நாம் கொண்டிருக்கும் வடிவில் யோவானது நற்செய்தி யோவானிடமிருந்து வரவில்லை. எந்த விதத்தில் யோவான் இந்நூலுக்கு ஆசிரியர்? அப்போஸ்தலர்கள் காலத்தில் இந்நூல் தோன்றியதா? அல்லது பிற்காலத்தில் எழுதப்பட்டதா? அப்போஸ்தலிக்க அதிகாரம் பெற்றதா? சிறப்பாக, அப்போஸ்தலர் யோவானது பாரம்பரியத்தைக் கொண்டதா? தெளிய முயல்வோம்.

***3. புறச்சான்றுகள்:*** திருச்சபையின் பல தொடக்க காலச் சான்றுகள் செபதேயுவின் மகனும், யாக்கோபின் சகோதரனும் அப்போஸ்தலருமான யோவான் இந்நான்காம் நற்செய்தியை எபேசில் எழுதினார் என்று கூறுகின்றன. அதில் முக்கியமானது இரனேயுவின் சான்றாகும். இரனேயு *(கி.பி. 180)* ''அதன்பின் (மற்ற நற்செய்திகள் எழுதப் பட்டபின்) ஆண்டவரின் சீடரும் அவரின் நெஞ்சில் தலை சாய்த்தவருமான யோவான் ஆசியாவின் எபேசில் வாழ்ந்தபோது ஒரு நற்செய்தியைப் பதிப்பித்தார்'' என்று கூறுகிறார். இந்தப் பாரம்பரியத்தைத் தாமாக இரனேயு உண்டாக்கவில்லை. அவர் தமது குருவான, சிமிர்னாவின் ஆயரான போலிக்கார்ப்பிடமிருந்து பெற்றதாகக் கூறுகிறார். போலிக்கார்ப்பு யோவானது போதகத்திற்குச் செவிமடுத்து இருந்ததாகவும் கூறுகிறார். யோவான் திரேசன் காலம் வரை *(98-117)*, எபேசில் முதியோரிடையே வாழ்ந்ததாகக் கூறுகிறார். எபேசுத் திருச்சபை பவுலால் தொடங்கப்பட்டாலும், திரேசன் காலம்வரை யோவான் அங்கு வாழ்ந்ததாகக் கூறுகிறார்.

இரனேயுவின் சான்று மிக முக்கியமானது. இச்சான்று காலத்தால் முந்தியதுமாகும். ஆகையால், இதனைச் சிறிது ஆய்வுக் கண்ணோடு நோக்க வேண்டும். போலிக்கார்ப்பு அறிந்திருந்த யோவான் அப்போஸ்தலர்தானா? அல்லது அதே பெயரையுடைய வேறு ஒருவரா? அப்போஸ்தலரான யோவான் எபேசில் வாழ்ந்தாரா? அப்படி வாழ்ந்திருந்தால், பவுல் எபேசியருக்கு எழுதிய திருமுகம், அந்தியோக்கிய இஞ்ஞாசியாரின் கடிதங்கள், போலிக்கார்ப்பின் நூல்கள், இப்பெரியோர்களுடைய வாழ்க்கை ஆகியவற்றில் சான்றுகள் இருக்க வேண்டும்; அவ்வாறு சான்றுகள் இல்லை. வரலாறுகள் அவ்வாறு சான்று கூறவில்லை. ஆனால், பிற்காலச் சான்றுகள் உள. அவற்றைப் பின்னர்க் காண்போம். எனி

னும், அப்போஸ்தலரான யோவானுடன் போலிக்கார்ப்பு கொண்டிருந்த தொடர்பு பற்றி ஒன்றும் கூறப்படவில்லை என்பதற் காக அவர்களிடையே தொடர்பு இல்லை என்று கூறுதல் அறிவுக்கு உகந்ததன்று. மேலே கூறப்பட்டோரின் நூல்களில் சிலவே நமக்குக் கிடைத்துள்ளன என்பதும் நாம் நினைவில் கொள்ளத்தக்கதாகும். மேலும், அப்போஸ்தலரான யோவானுடன் போலிக்கார்ப்பு கொண்டிருந்த தொடர்பு பற்றி இரனேயு கூறுவது சரிதானா? ஏனெ னில், தமது நூலில் இவர் பாப்பியசு என்பவர் யோவானுக்குச் செவிமடுத்ததாகக் கூறுகிறார். இதனை யூசேபியு மறுத்து, இரனேயு முதியோர் யோவானை (John the Elder) அப்போஸ்தலர் யோவான் (John the Apostle) எனக் குழப்புகிறார் என்று பாப்பியசின் நூலிலிருந்து எடுத்துக் காட்டு கிறார். ஆகையால் பாப்பியசுக்கும், இரனே யுவுக்கும் தெரிந்த மற்றொரு யோவான் இருந்திருக்கக்கூடுமா? ஆனால், பாப்பி யசை இரனேயு நேரடியாக அறிந்திருக்க வில்லை; போலிக்கார்ப்பை நேரடியாக அறிந்திருந்தார். ஆகையால், தமது கூற்றில் தவறியிருக்க மாட்டார் எனக் கொள்ளலாம். ஆனாலும், ஆய்வாளரின் ஐயம் தீர்ந்த பாடில்லை.

மேலும், அப்போஸ்தலரான யோவான் முன்பே (கி.பி. 44-இல்) இறந்துவிட்டதாக ஒரு பாரம்பரியமுள்ளது. சிலர் மாற் 10:39-ஐக் கருத்தில் கொண்டு யோவான் முன்பே கொடுமையாகக் கொல்லப்பட்ட தாகக் கூறுவர். ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிலிப்பு, 9-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஜார்ஜ் ஹமர்டலோஸ் ஆகியோரின் நூல்கள், 5-ஆம், 6-ஆம் நூற்றாண்டு வேத சாட்சிப் பட்டியல் ஆகியவற்றிலிருந்து மேற்கூறிய கூற்றுக்குச் சான்று கூறுவர் அறிஞர் சிலர். ஹமர்டலோஸ், அப்போஸ் தலரான யோவான் எபேசில் அமைதியாக இறந்தார் என்று கூறுகிறார். முன்பே இறந்த செய்தி காணப்படவில்லை. வேதசாட்சி களின் பட்டியலில் பலவித வேறுபாடுகள் காணப்படுகின்றன. யாக்கோபு, யோவா னுடைய விழாக்கள் சேர்ந்து கொண்டாடப் படுவதால் இருவரும் முன்பே இறந்திருக்க வேண்டும் என்று கொள்ள வேண்டிய தில்லை. ஆகையால், தகுதி வாய்ந்த எந்த ஆய்வாளரும் அப்போஸ்தலரான யோவான் முன்பே இறந்து போனார் என்று ஏற்றுக் கொள்ளார்.

மேலும் சிலர், முதியோர் யோவான் என்ற ஒருவர் எபேசில் இந்நற்செய்தியை எழுதியதாகக் கூறுவர். கிறிஸ்து தோன்றிய விவரங்களை முதியோரிடமிருந்து பெற்ற தாகப் பாப்பியசு (100-140) கூறுகிறார்: ''முதியோர்களைப் பின்பற்றிய யாராவது வந்தால், அவர்களிடம் அந்திரேயா, பேதுரு, பிலிப்பு, யாக்கோபு, யோவான், மத்தேயு முதலியோர் சொல்லியவற்றையும், ஆண்ட வருடைய சீடர்களாகிய அரிஸ்டியன், முதி யோர் யோவான் ஆகியவர்கள் சொல்லு கின்றவற்றையும் கேட்பேன். ஏனெனில், இவர்களுடைய சாட்சியங்கள் உயிருள் ளவை, நிலையானவை. இவற்றை ஏடுகளி லிருந்து பெறமுடியாது''. இதில் கவனிக்க வேண்டியது, முதல் குழு அப்போஸ்தலர் களைத் தெளிவாகக் குறிக்கிறது. அவர் களை இறந்த காலத்தில் குறிப்பதால் அவர்கள் ஏற்கெனவே இறந்து போயிருக்கக் கூடும். இரண்டாம் குழு ஆண்டவருடைய சீடர்களைக் குறிக்கின்றது. நிகழ்காலம் பயன்படுத்தப்படுவதால் அவர்கள் பாப்பி யசு காலத்தில் உயிரோடு இருந்திருக்க வேண்டும். இரு யோவான்கள் குறிக்கப்படு கின்றார்கள். ஆனால், முதியோர் யோவான் எதையும் எழுதினார் என்றோ, எபேசில் வாழ்ந்தார் என்றோ ஒன்றும் கூறவில்லை. பிற்காலத்தில், ஆயிரமாண்டு நல்லாட்சிக் கொள்கையுடைய திருவெளிப்பாட்டு நூலை வேதாகமப் பட்டியலிலிருந்து நீக்க விரும்பிய அலக்சாந்திரியத் தியோனிசியு, யூசேபியு ஆகியோர் முதியோர் யோவான் திருவெளிப்பாட்டு நூலை எழுதினார் என்று கூறினர். முதியோர் யோவானைப் பற்றி நாம் அறியக்கூடியது மிகக் குறைவே. அப்படியொருவர் வாழ்ந்தார் என்பது உண்மை. அவர்தான் யோவான் நற்செய்

தியை எழுதினார் என்பதற்குச் சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை. ஒருவேளை அவர் யோவானது பாரம்பரியத்தைப் போதித்திருக்கலாம்.

***4. பிற சான்றுகள்:*** எபேசின் ஆயரான போலிக்கிரேத்து *(190)* ''சாட்சியும், போதகரும், ஆண்டவரது நெஞ்சிலே தலை சாய்த்தவரும், குருவின் அடையாளத்தை அணிந்த குருவுமான யோவான் எபேசில் உறங்குகிறார்'' என்று விக்டர் என்ற பாப்புவிற்கு எழுதுகிறார். இது யோவான் எபேசில் வாழ்ந்தார் என்பதற்கு உறுதியான சான்றாகும்.

அலக்சாந்திரியா கிளமந்து *(211-216)* கூறுவது: ''தோமிசியன் *(81-96)* இறந்தபின், யோவான் பத்மு தீவிலிருந்து எபேசுக்குச் சென்றார். சுற்றியுள்ள இடங்களுக்குச் சென்று, ஆயர்களை நியமித்து, கிறிஸ்துவச் சமூகங்களுக்குள் ஒற்றுமையை வளர்த்தார். மேலும், பிற நற்செய்திகள் (ஆண்டவரது) வரலாற்றை மட்டுமே கொடுக்கின்றன. யோவான், தம் நண்பர்களால் விரும்பிக் கேட்கப்பட்டு, ஆவியினால் தெய்வீகமாகத் தூண்டப்பட்டு இறுதியாக, ஓர் ஆன்மீக நற்செய்தியை எழுதினார்''.

மிகப் பழைய இலத்தீன் நற்செய்தி முன்னுரைகளும், மார்சியனுக்கு எதிராக எழுந்த நற்செய்தி முன்னுரைகளும், மூராத்தோரியின் அட்டவணையும், அப்போஸ்தலரான யோவான் நான்காம் நற்செய்தியை எழுதினார் என்பதற்குச் சான்று கூறுகின்றன.

மேற்கூறியவற்றிலிருந்து இந்நூல் பற்றிய திருச்சபையின் பாரம்பரியம் உறுதியானது. இந்நிலையை ஐயுற்றவர் பலர். ஆனால் தவறு என்று இதுவரை ஒருவரும் காட்டவில்லை. ஏறக்குறைய கி.பி. 200-இல் அலகொய், கேயஸ் போன்ற யோவானது போதகத்தை விரும்பாத சிலர், இந்நூல் உண்மைத் தன்மையுடையது என்பதையும், அப்போஸ்தலத் தொடக்கமுடையது என்பதையும் மறுத்தனர். 19-ஆம் நூற்றாண்டிலிருந்து இந்நூலின் ஆசிரியர் அப்போஸ்தலரான யோவான் என்பதைத் தீவிரமாக மறுத்தனர் பலர். அப்போஸ்தலரான யோவானைத் தவிர வேறு யாராகிலும் ஒருவர் (ஏன் யூதாசு கூட) எழுதியிருக்கக் கூடும் என்று நிறுவத் தயங்கவில்லை. அகச்சான்றுகள் பல கூறியுமுள்ளனர். ஒத்தமை நற்செய்திகளிலிருந்து அடிப்படையில் வேறுபடும் இந்நூலைப் பன்னிருவருள் ஒருவர் எழுதியிருக்கக்கூடும் என்பது முடியாத செயல் என்றும், மேலும் இந்நூல் 2-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்றும் வாதித்தனர். இவர்கள், யோவான்தான் இந்நூலின் ஆசிரியர் என்ற பாரம்பரியத்தின் ஒரே தன்மையான சான்றையும், அந்தியோக்கியா இஞ்ஞாசியார், போலிக்கார்ப்பு, யுஸ்தீன், உரோமைக் கிளமந்து ஆகியோர் 2-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே இந்நூலைப் பயன்படுத்தி இருப்பதையும் புறக்கணித்தனர்; ஏற்க மறுத்தனர். எகிப்தில் கண்டுபிடிக்கப்பட்ட புல்தாள் ஏடுகள், இந்நூல் கி.பி.150-ஆம் ஆண்டுக்கு முன்பே, ஏன் சில ஏடுகள், இந்நூல் கி.பி. 130-ஆம் ஆண்டுக்கு முன்பே அறியப்பட்டிருக்க வேண்டும் என்று காட்டுகின்றன. அப்போஸ்தலரான யோவான்தான் இந்நூலுக்கு ஆசிரியர் என்பதை மறுத்துக் கூறுபவர்கள் தங்கள் கொள்கைக்கு ஏற்பத் தம் கருத்துக்களை வெளியிடுவர். இவர்களது சான்றுகளும், காரணங்களும் ஒரே தன்மையுடைய பாரம்பரியத்தைத் தவறு என்று நிரூபிக்கவில்லை. நாம் மேற்கூறிய தொடக்க காலப் புறச்சான்றுகள் தவறுடையனவாக இருக்கலாம். அவை தவறுடையன என்று யாரும் இதுவரை நிரூபிக்கவில்லை. அப்போஸ்தலர்தான் நான்காம் நற்செய்தியின் ஆசிரியர் என்ற திருச்சபைப் பாரம்பரியம் இத்தாக்குதல்களையெல்லாம் வென்று நிலைத்து நிற்கிறது. யோவான் எந்த அளவில் இந்நூலுக்கு ஆசிரியர் என்பது பற்றிப் பின்னர்க் காண்போம்.

**5. அகச்சான்றுகள்:** இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நேரடியாகக் கண்டவர் விட்டுச்சென்ற பாரம்பரியமாகும் இந்நூல் என்று பொதுவாக ஆய்வாளர் பலர் ஏற்றுக்கொள்வர். ஆசிரியர் அளிக்கும் உயிர்ச் சித்திரத் தன்மையுள்ள விவரிப்பும் பாலஸ்தீனத்தின் நிலவியல், இடவிவரங்கள், யூதப் பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைப் பற்றிய நுண்ணிய அறிவும் இந்நூலில் காணப்படும் காலவரை ஆகியவற்றையும் நேரடியாகக் கண்டவரிடமிருந்தல்லாது வேறு ஒருவரிடமிருந்தும் எதிர்பார்க்க முடியாது. யோவா *1:14; 15:27; 19:35* ஆகிய பகுதிகளில் வரும் நேரடிச் சான்றுத் தன்மையை நாம் கருத்தோடு நோக்க வேண்டும்.

இந்நூலின் ஆசிரியர்தான் ''இயேசுவின் அன்புச் சீடர்'' என்று குறிக்கப் பெறுபவர் என்பர் சிலர். இப்பட்டம் இந்நூலில் ஐந்து தடவை கையாளப்படுகிறது: *13:23-26; 19:25-27; 20:2-10; 21:7.20;* பெரும்பாலும் நூலின் பிற் பகுதியிலேயே வருகிறது. இந்நூலின் ஆசிரியரைப் பற்றிய உறுதியான சான்றுகள் யோவா *21:24*-இல் கிடைக்கிறது: ''இந்தச் சீடரே....''. இங்குக் குறிக்கப்படும் சீடர்தான் *21:20*-இல் தெளிவாகக் குறிக்கப்படும் ''இயேசுவின் அன்புச் சீடராவர்''. *1:40*-இல் பெயரால் குறிக்கப்படுபவரும், *18:15*-இல் குறிக்கப்பெறும் ''மற்றொரு சீடர்'' என்பவரும், *20:2*-இல் வரும் ''மற்றொரு சீடர்'' என்பவரும் மேற்கூறப்பட்ட ''இயேசுவின் அன்புச் சீடராக'' இருக்க வேண்டும் என்பர். இப்படிப் பெயரில்லாது கூறுதல், தாம் யாரென்று காட்டிக்கொள்ளாமல், ஆசிரியர் தம்மை விவரிப்பதாகத் தெரிகிறது. ஆனால், இப்படிக் கூறுவதற்கு அடிப்படை இருப்பதாகத் தெரியவில்லை. விவிலிய அறிஞர்கள் இது பற்றிக் கருத்து வேற்றுமை கொண்டுள்ளனர். இவ்விதம் ஐயத்திற்குரிய பகுதிகளை விட்டுவிட்டுத் தெளிவான வாசகங்களை மட்டும் பார்த்தால் ''இயேசுவின் அன்புச் சீடர்'' முக்கியமான சந்தர்ப்பங்களில் பிரசன்னமாயிருக்கிறார் என்பது தெரிகிறது. இறுதி இரவுணவிலும், சிலுவையினடியிலும், கலிலேய ஏரிக்கரையில் உயிர்த்த இயேசு தோன்றியபோதும் இவரைக் காண்கிறோம். ஆனால், இவர்தான் அப்போஸ்தலரான யோவானா என்பதுதான் கேள்வி. யோவான்தான் 'இயேசுவின் அன்புச் சீடர்' என்பதற்குச் சாதகமாக ''இயேசுவின் அன்புச் சீடர்'' சீடர்களின் உட்குழுவில் ஒருவராக இருக்க வேண்டும். ஏனெனில் இறுதி இரவுணவிலும், சிலுவையடியிலும் அவரைக் காண்கிறோம். அப்போஸ்தலர்களில் செபதேயுவின் குமாரர்கள் வகித்த இடம், ஆசிரியர் இவர்களில் ஒருவராக இருக்கலாம் எனச் சுட்டுகின்றது. இயேசுவின் நெருங்கிய சீடர்கள் பேதுரு, யோவான், யாக்கோபு. இவர்களில் பேதுரு இந்நூலின் ஆசிரியராக இருக்க முடியாது என்பது தெளிவு. யாக்கோபு கி.பி. *44*-இல் வேதசாட்சியாக மரித்ததால் அவரும் இந்நூலின் ஆசிரியராக இருக்க முடியாது. மேலும், கவனிக்கத்தக்கது ஒன்றுளது. மத்தேயுவில் இருமுறையும், மாற்கில் ஒன்பது முறையும், லூக்காவில் ஆறுமுறையும் யோவான் குறிக்கப்படுகிறார். யோவான் நற்செய்தியில் யோவான் என்ற பெயரில் ஒருபோதும் குறிக்கப்படவில்லை. யோவானின் சகோதரரான யாக்கோபு மத்தேயுவில் இருமுறையும், மாற்கில் ஒன்பது முறையும், லூக்காவில் நான்கு முறையும் குறிக்கப்படுகிறார். யோவானில் அவரது பெயரைக் காணவில்லை. இருவரும் ஒரு முறை *21:2*-இல் ''செபதேயுவின் குமாரர்கள்'' எனக் குறிக்கப்பெறுகின்றனர். யோவான் நற்செய்தியில் பன்னிருவரில் யோவான், யாக்கோபோடு மத்தேயுவின் பெயரும் காணப்படவில்லை. யாக்கோபு, யோவான் ஆகியவரைப் பற்றி ஒன்றும் கூறாமையும், ஆசிரியர் தமது பெயரைத் தராமையும் யோவான்தான் இந்நூலில் ஆசிரியர் எனச் சுட்டவல்லன. ''இயேசுவின் அன்புச் சீடர்'' யோவான்தான் என்றால் யோவானின் பாரம்பரியமும், ஒத்தமை நற்செய்திகளின் பாரம்பரியமும் ஒத்துப் போகக் கூடியனவாக இருக்கின்றன. ''இயேசுவின் அன்புச்சீடருக்கும்'' பேதுரு

வுக்கும் இடையேயுள்ள தொடர்பு லூக்கா விலும், அப்போஸ்தலர் பணியிலும், யோவானுக்கும் பேதுருவுக்கும் இடையே யுள்ள தொடர்போடு பொருந்திப்போகும்.

''இயேசுவின் அன்புச் சீடர்'' யோவான் தான் என்ற கூற்றுக்கு எதிராகப் பல கூறப்படுகின்றன. தமது பெயரை மறைத்துத் தாம் ''இயேசுவின் அன்புச் சீடர்'' என்று கூறுவது ஆசிரியரின் போலித் தன்மையைக் காட்டுகிறது. தமது பெரு மையை அவரே பாராட்டிக் கொள்வதாகத் தெரிகிறது. 21:2-இல் செபதேயுவின் குமா ரர்கள் குறிக்கப்பட்டிருப்பதால் ''இயேசு வின் அன்புச் சீடர்'' யோவானாக இருக்க முடியாது; ஒருவேளை வரலாற்றில் வாழ்ந் திராத ஒரு நிழலுருவாய் இருக்கலாம், ஓர் அடையாள உருவமாய் இருக்கலாம் என்பர்.

''இயேசுவின் அன்புச் சீடர்'' என்ற பட்டம் ஆசிரியர் தாமே தமக்கு இட்டுக் கொண்டாரா? அல்லது பின்னைய பதிப் பாசிரியர்கள் அவருக்குத் தங்களது மரியா தையைத் தெரிவிக்கும் வண்ணம் இப் பட்டத்தை அளித்தார்களா? பின்னதுதான் பெரும்பாலும் உண்மையானது என அறி ஞர்கள் பலர் கருதுகின்றனர். ஆசிரியரைக் கிறிஸ்தவச் சீடர்களுக்கெல்லாம் மாதிரிகை யாகக் கருதிய அவரது சீடர்கள் இப் பட்டத்தை அன்போடு அளித்துப் பிறகு இந்நூலில் சேர்த்திருக்கலாம். ஓர் உண்மை யான மேன்மை மிக்க சீடர் கிறிஸ்தவச் சீடர்களுக்கெல்லாம் ஓர் அடையாளமாக ஆனார் என்பது நம்பத்தகுந்ததே. ஆனால், அவர் வரலாற்றில் வாழவில்லை; ஒரு நிழலுருவமே என்று கூறுவது நற்செய்திச் சான்றுகளுக்குப் புறம்பானதாகும். ஏனெ னில், நற்செய்தி முழுவதும், சிறப்பாக 19:35-ஆம் வசனமும், 21-ஆம் அதிகாரமும், ''இயேசுவின் அன்புச் சீடர்'' உலகில் வாழ்ந்து உடலும், உயிரும் கொண்ட ஒரு மனிதர் என ஐயமறக் காட்டுகின்றன.

''இயேசுவின் அன்புச் சீடர்'' இவ்வுல கில் வாழ்ந்தவர்தான் என்று ஏற்றுக்கொண் டாலும் அவர் யோவான் அல்லர், வேறு ஒருவரே என்பர் சிலர். அப்படிப்பட்டவர் இலாசராக இருக்கக்கூடும். ஏனெனில், அவரை இயேசு நேசித்ததாக அழுத்திக் கூறப்படுகின்றது (11:3.5.11.36) என்பர் சிலர். யோவானது பாரம்பரியத்தைப் பதிப் பித்த இறுதிப் பதிப்பாசிரியர், 11, 12-ஆம் அதிகாரங்களில் மட்டும் பெயர் கூறிவிட்டு, மற்ற இடங்களில் பெயர் குறிக்கப்பெறாத சீடராகும்படி விட்டுவிடுகிறார் என்று கூறு வது புத்திக்கு ஏற்றதாகத் தெரியவில்லை. யோவான் நற்செய்தியின் பெரும்பாலான நிகழ்ச்சிகள் எருசலேமில் நிகழ்வதால் மாற் குதான் ''இயேசுவின் அன்புச் சீடர்'' என்பர் சிலர். ஏனெனில், மாற்கின் வீடு எருசலேமி லிருந்தது (அ.ப. 12:12). இலாசரும், மாற் கும் இயேசுவுக்கு மிகவும் நெருங்கியவர் கள் என்றால் ஒத்தமை நற்செய்திகளில் வரும் இயேசுவைப் பின்பற்றுவோர் பட்டி யலில் இவர்கள் கூறப்படாது விடப்பட்டது ஏன்? ஒத்தமை நற்செய்தியாளர்களுக்கு இவர்களைத் தெரியாதா? விடை காண்பது அரிது.

ஒரு கலிலேய மீனவர் பெரிய குருவை அறிந்திருக்க முடியுமா? நற்செய்தி எழுதும் அளவிற்குக் கிரேக்க மொழியை அவர் அறிந்திருப்பாரா? ஆகையால், யோவான் ''இயேசுவின் அன்புச் சீடராக'' இருக்க முடியாது என்பர். அப்போஸ்தலர்களின் ஆற்றலையும், அவர்கள் அறிந்த நபர்களை யும் பற்றி நமக்கு என்ன தெரியும்? அவர் ஒரு மொழிபெயர்ப்பாளரைப் பயன்படுத்தி இருக்கக்கூடாதா? ஆகையால், இவ்வாதத் தில் வலுவில்லை. எனவே அகச்சான்றுகளி லிருந்து ''இயேசுவின் அன்புச். சீடர்'' யோவான்தான் என்று நம்பலாம்.

திருச்சபையின் பாரம்பரியத்தைச் சார்ந்த புறச்சான்றுகளுக்கும், ஆய்வாளர்களின் கருத்துக்கும் ஏற்ற முறையில் பின்வரும் விளக்கம் தரமுடியும். ஒத்தமை நற்செய்தி களுக்கு அடிப்படையாக பேதுருவின் போதகம் (Kerygma) அமைவது போல், நான்காம் நற்செய்திக்குச் செபதேயுவின் மகனான யோவானின் போதகம் அடிப்

படை வரலாற்றுப் பாரம்பரியமாக அமைகிறது. இந்நற்செய்தி பிற நற்செய்திகளிலிருந்து வேறுபட்டிருப்பதற்குக் காரணம் வேறு மூலத்தைக் கொண்டிருப்பதுமட்டுமன்று; வேறு இறையியல் நோக்கைக் கொண்டதும் ஆகும். இரு பாரம்பரியங்களில் எது பழையது என்று கூறமுடியாது, கூறுவதில் பொருளுமில்லை. ஏனெனில், இரண்டும் பல ஆண்டுகளின் போதகத்தால் வளர்ச்சியுற்றவை. ஏட்டுவடிவம் எடுத்தது முன்பின்னாக இருக்கலாம். யோவான் பல தடவை சீர்திருத்திப் பதிப்பிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

யோவான் எபேசில் இறந்தார் என நம்ப இடமிருக்கிறது. கி.பி. 63-ஆம் ஆண்டுக்குப் பின் யோவான் எபேசுக்குச் சென்று அங்கு வசித்தார். தமது போதகத்தைத் திட்டப் படுத்தி அஃது எழுதப்படுவதை மேற்பார்த்தார் எனலாம். அவர் சொல்லச் சொல்ல ஒருவரும் எழுதவில்லை. நான்காம் நற்செய்தி முடிக்கப் பெறுமுன்னே யோவான் இறந்திருக்க வேண்டும் *(21:20-23* இதைக் குறிக்கிறது). பின் அவரது சீடர்கள் அவர் கூறியிருந்த பிற செய்திகளையும் சேர்த்துப் பதிப்பித்தனர். ஆனால், இந்நூலை ஏற்கப் பலர் மறுத்ததாகத் தெரிகிறது. இவ்வாறு பதிப்பிக்கப்பெற்ற நூல்களைச் சேர்த்து கடைசிப் பதிப்பாசிரியர் தொகுத்து எழுதினார். இவர்தான் யோவானை ''இயேசுவின் அன்புச் சீடர்'' என்று அழைத்திருக்க வேண்டும். தாம் பதிப்பித்த நூல் உண்மையான யோவானது பாரம்பரியத்தைக் கொண்டுள்ளது என்று சான்று கூறும் பொருட்டுத் தமது பிற்சேர்க்கையாகிய *21*-ஆம் அதிகாரத்தில் *24*-ஆம் வசனத்தை அழுத்திக் கூறுகிறார். இவ்விதம் நாம் கொண்டிருக்கும் யோவானது நற்செய்தி அவரது சீடர்களால் பதிப்பிக்கப்பெற்றது என்பது *21:24*-ஆம் வசனத்தில் வரும் ''நமக்குத் தெரியும்'' என்ற சொல்லிலிருந்து தெரியவருகிறது. ஆகவே, அப்போஸ்தலரான யோவான் நாம் கொண்டிருக்கும் வடிவில் யோவான் நற்செய்திக்கு ஆசிரியர் அல்லர். அதன் அடிப்படை வரலாற்றுப் பாரம்பரியத்திற்குக் காரணமானவர் என்ற முறையில் அதன் ஆசிரியராவர்.

**6. யோவான்:** இவரைப் பற்றி புதிய ஏற்பாட்டில் நாம் அறிவது என்ன? யோவான் என்பதற்கு ''யாவே பெருந்தன்மையுடையவர், அருள்மயமானவர்'' என்பது பொருள். இவர் செபதேயுவின் மகன்; பெரிய யாக்கோபின் தம்பி. சலோமி இவர்களுடைய தாயாய் ஒருவேளை இருக்கக்கூடும் *(மத் 27:56; மாற் 15:40)*. மேற்கூறிய பகுதிகளோடு யோவா *14:25*-ஐயும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவர்களின் தாய் கன்னி மரியாளுடைய சகோதரியாக இருந்திருக்கக்கூடும் என ஊகிக்க இடமிருக்கிறது. ஆகவே, இவ்விருவரும் இயேசுவின் உறவினர்களாக அதாவது சகோதரர்களாகப் பிறரால் கருதப்பட்டிருக்கலாம். செபதேயுவும் அவரது குமாரர்களும் மீன் பிடிப்பவர்கள் *(மத் 4:21* இணை; *யோவா 21:7)*. லூக் *5:10* இவர்களைப் பேதுருவோடு தொழிலில் பங்காளிகளாகக் காட்டுகிறது. இவ்விரு சகோதரர்களின் பெற்றோர் போதிய செல்வம் படைத்தவர்களாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், இவர்களது தந்தை கூலியாட்கள் அமர்த்தி வேலை வாங்கினார் *(மாற் 1:20)*. இவர்களுடைய தாய் தனது உடைமையிலிருந்து இயேசுவுக்குப் பணிவிடை செய்கிறாள் *(மாற் 15:40; லூக் 8:3)*.

யோவா *1:35-40*-இல் வரும் பெயர் குறிக்கப்படாத சீடர் யோவான் என்றால், இயேசுவைச் சந்திக்குமுன் திருமுழுக்கு யோவான் சீடராய் இருந்திருக்க வேண்டும். திருமுழுக்கு யோவானின் வார்த்தைகளால் தூண்டப்பெற்று, அந்திரேயாவோடு கலிலேயாவிற்குச் சென்று இயேசுவைப் பின்பற்றியிருக்க வேண்டும். மேற்கூறியவை பற்றி மிகுந்த கருத்து வேறுபாடு அறிஞர்களிடையே உண்டு. அப்போஸ்தலர் பட்டியலில் பேதுரு, அந்திரேயா, யாக்கோபு, யோவான் ஆகிய பெயர்கள் முதலில் வருகின்றன. இவர்கள்தான் முதன்முதலில் கலிலேயாவில் அழைக்கப்பட்ட சீடர்கள் *(மத் 1:6-20)*. யாக்கோபும், யோவானும்

அவர்களுடைய தந்தையோடு மீன் பிடிக்கும் படகில் இருந்தபோது தம்மைப் பின்பற்றுமாறு அவர்களை இயேசு அழைக்கிறார் (மாற் 4:21தொ). பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகிய மூவரும் இயேசுவால் தனிப்பட்ட விதமாக அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இவர்கள் இயேசுவோடு நெருங்கிய தொடர்புடையவர்கள். இம்மூவர் மட்டுமே, இயேசு பேதுருவின் மாமியாரைக் குணப்படுத்தியபோதும் (மாற் 1:29), யாயிரின் மகளை உயிர்ப்பித்த போதும் (மாற் 9:2), கெத்சமனித் தோட்டத்தில் இயேசு அவதியுற்றபோதும் (மாற் 14:33; மத் 26:37) அவரோடுகூட இருந்தனர். இயேசுவை ஏற்க மறுத்த சமாரிய ஊர்களின் மேல் வானத்திலிருந்து தீயை அழைக்க அனுமதி கேட்டவர்கள் யாக்கோபுவும், யோவானுமே (லூக் 9:54). இச்சினமிக்க தீவிரத்தன்மை (மாற் 3:17) இவர்களுக்கு, ''இடியின் மக்கள்'' எனப்பெயர் கொடுக்கக் காரணமாயிருந்திருக்கலாம் (மாற் 9:38-39 என்ற பகுதியையும் காண்க). ஆகவே, யோவான் ஒதுங்கி வாழும் குணமும், சிந்தனையில் ஆழும் பண்பும், சிறிது மென்மைத் தன்மையும் உடையவர் என்று கருதுவது மிகத் தவறாகும். இயேசுவின் இரு பக்கங்களிலும் இரு இருக்கைகளில் அமரும்படி கேட்கும்போது, இருவரும் பதவிப் பிரியர்கள் எனத் தோன்றுகின்றனர். இருவரும் மென்மையாகக் கண்டிக்கப்பட்டாலும், இயேசுவின் கிண்ணத்தைப் பருகும் பேறு பெறுவர் என்ற உறுதியைப் பெறுகின்றனர் (மத் 20:20-28; மாற் 10:35-45). அதிகாரம் பெறாத ஒருவர் பேய் ஓட்டுவதைப்பற்றி யோவான் மட்டும் குறை கூறுவதாகக் கூறப்படுகிறது (மாற் 9:38; லூக் 9:49). யோவானும், பேதுருவும் இயேசுவின் இறுதிப் பாஸ்கு உணவைத் தயாரிக்க அனுப்பப்படுகின்றனர் (லூக் 22:8). இயேசு உயிர்த்து விண் சென்ற பிறகு, பேதுரு ஆலயத்தில் முடமானவனைக் குணப்படுத்திய போதும் (அ.ப. 3:1.3.4.11), யூத சங்கத்தின்முன் விசாரணையின் போதும் (4:13-19), சமாரியர்கள் மீது பரிசுத்த ஆவி எழுந்தருளிய போதும் (8:14-25) பேதுருவோடு யோவானும் இருக்கிறார். பவுல், தமது மனந்திரும்புதலுக்குப் பின், இரண்டாம் முறையாக எருசலேமுக்கு வந்தபோது பேதுரு (ஆண்டவரது சகோதரனான), யாக்கோபு ஆகியோருடன் யோவானையும் கண்டார். இம்மூவரும் எருசலேம் திருச்சபையின் மூன்று தூண்கள், முக்கியமானவர்களெனக் குறிக்கிறார் பவுல் (கலா 2:9).

''இயேசுவின் அன்புச் சீடர்'' யோவான் தான் என்றால் அவரைப் பற்றி இன்னும் பல விவரங்கள் தெரியவரும். நான்காவது நற்செய்தியின் ஆசிரியர் தமது பெயரை நேரடியாக வெளிப்படுத்தவில்லை. இறுதிப் பதிப்பாசிரியரால் சேர்க்கப்பட்டதாகக் கருதப்படும் 21-ஆம் அதிகாரத்தில், நற்செய்தியில் கூறப்பட்டவைகளுக்கு நம்பத்தகுந்த சான்றாளராகவும், ஆசிரியராகவும் ''இயேசுவின் அன்புச் சீடர்'' காட்டப்படுகிறார் (யோவா 21:20-23.34). இந்தச் சீடர் யாரென முன்னமே பார்த்துள்ளோம். இவர் ஓர் அப்போஸ்தலராக இருக்க வேண்டும்; இறுதி இரவுணவில் பங்கெடுத்து, இயேசுவுக்கு அருகில் பந்தியில மர்ந்து, அவரது நெஞ்சில் தலைசாய்த்தவர். இறுதி இரவுணவில், அப்போஸ்தலர்கள் மட்டும்தான் பங்கு எடுத்தனர். சிலுவையடியில் இவரிடம் தம் தாயை இயேசு ஒப்படைக்கிறார் (19:26). இயேசு தமது தாயை இச்சீடரின் பாதுகாப்பில் ஒப்படைத்தபோது (19:26தொ), பயமற்ற, மன உறுதியையுடைய, நம்பிக்கைக்குரிய அன்பு நிறைந்த ஒரு சீடரிடம் இக்கடமையைக் கொடுப்பதாக இயேசு அறிந்திருக்க வேண்டும். 21-ஆம் அதிகாரத்தில் இவரைப் பற்றிய குறிப்புகள் உள.

யோவானின் பிற்கால வாழ்வைப் பற்றி அதிகம் அறிவதற்கில்லை. திருச்சபையின் தந்தையர்களின் நூல்களில் இவரைப் பற்றி சிறிதளவு அறிகிறோம். இரனேயு சிமிர்னாவின் ஆயரான போலிக்கார்பிடமிருந்து பெற்றதாகக் கூறும் பாரம்பரியம் ஓர் அளவுக்கு நம்பத்தகுந்தது. இதையே இரண்டாம் நூற்றாண்டு நூல்களும் தருகின்றன.

இதன்படி கி.பி. 60-ஆம் ஆண்டுக்குப் பின்னும், 67-ஆம் ஆண்டுக்கு முன்னும் யோவான் சிறிய ஆசியாவிலுள்ள எபே சிற்கு வந்திருக்கலாம். பேரரசன் தோமிசி யன் ஆட்சியின் (கி.பி. 81-96) இறுதிக்காலத் தில் பத்மு தீவுக்கு நாடு கடத்தப்பட்டு, அங்குத் திருவெளிப்பாட்டு நூலை எழுதியி ருக்கலாம். பேரரசன் திரேசன் காலத்தில் (90-117) எபேசில் தமது திருமுகங்களையும் நற்செய்தியையும் எழுதியிருக்கலாம். இந் நற்செய்தி, யோவானின் சீடர்களால் பல முறை பதிப்பிக்கப்பட்டு, இப்போது நாம் கொண்டிருக்கும் வடிவம் எடுத்தது. திரேசன் காலத்தில் யோவான் எபேசில் மரித்திருக்க வேண்டும்.

யோவான் எபேசில் பழங்காலந்தொட்டு வணங்கப்பட்டு வந்துள்ளார். அவருக்கு எழுப்பப்பட்ட பேராலயத்தின் சிதைவு இதற்குச் சான்று கூறுகிறது. யோவானைச் சுற்றிப் பல கதைகளும், புராணங்களும் எழுந்துள்ளன. அவை உண்மையாயிருக்க லாம் அல்லது புனைவுகளாயிருக்கலாம். பிற்காலத்தில் யோவான் பெயரால் தோசேத்தியர், ஞானவாதியர் ஆகிய பிரிவி னர், பல போலி வேதநூல்களை எழுதிப் பதிப்பித்துள்ளனர்.

எசே 1:10; திருவெளி 4:7 ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, நான்கு நற் செய்தியாளருள் யோவான் கழுகு அடை யாளத்தால் குறிக்கப் பெறுகிறார். இதற்குக் காரணம் முன்னுரையில் வரும் அவரது இறையியல் சிகரத் தன்மையே. பிற்கால ஓவியங்களில் யோவானோடு ஒரு (பூசைக்) கிண்ணத்தையும் சேர்த்து வரைதல் மத் 20:23 என்ற பகுதியின் எதிரொலியாக இருக்க லாம். இதனோடு சேர்ந்த கதையுமுண்டு. நஞ்சு இட்ட பான பாத்திரம் யோவா னுக்குக் கொடுக்கப்பட்டதாகவும், நஞ்சு ஒரு பாம்பு உருவமாய் வெளிவந்ததாகவும் அக்கதை கூறும். யோவான் பெயரால் ''நட்பின் கிண்ணத்தைப்'' பருகும் வழக்கு ஐரோப்பாவில் உள்ளது. யோவானின் விழாவை (திசம்பர் 27) முடியப்பரது விழாவிற்குப்பின் கொண்டாடும் வழக்கம் மிகப்பழமையானதொன்றாகும். ஒரு வேளை ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றி யிருக்கலாம்.

**7. எங்கு எழுதப்பட்டது?:** மார்சியனுக்கு விரோதமாக எழுதப்பட்ட முன்னுரையின் ஆசிரியரும், எரோனிமு, எப்பிபானியு ஆகி யோரும் இந்நூல் சிறிய ஆசியாவில் தோன் றியது என்பர். இரனேயு அப்பகுதியிலுள்ள எபேசில் தோன்றியதாகக் கூறுவர். யோவான்தான் இந்நூலிற்கு ஆசிரியர் என் பதை மறுப்பவர்கூட இந்நூல் எபேசில் தோன்றியது என்பதை ஏற்றுக்கொள்வர். ஆனால், எப்பிரேம் இந்நூல் அந்தியோக்கி யாவில் எழுதப்பட்டது என்பார். அந்நகர் ஆயரான இஞ்ஞாசியாரின் கடிதங்கள் யோவானின் பாரம்பரியத்தால் பாதிக்கப் பட்டுள்ளது என்பதும் தெளிவு. யோவா னது பாரம்பரியம் நீண்டகாலமாக வளர்ச்சி யுற்றதொன்றாகும். அஃது எழுத்து வடிவம் எடுக்குமுன் பல இடங்களுக்கும் பரவி யிருக்கலாம். அவ்வளர்ச்சியில் அந்தியோக் கியாவும் பங்கு எடுத்திருக்கலாம். அறிஞர் கள், பெரும்பாலோர் இந்நூல் எபேசில் தோன்றியது என்பதை ஏற்பர்.

**8. எப்போது எழுதப்பட்டது?:** இந்நூல் கி.பி. 90-ஆம் ஆண்டுக்கும், 110-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் எழு தப்பட்டிருக்க வேண்டும் என்பர் அறிஞர். இப்படிக் கூறும்போது நாம் கொண்டிருக் கும் இறுதி நூலையே குறிக்கிறோம். யோவானின் பாரம்பரியம் முன்பே இருந் திருக்க வேண்டும்; சில பகுதிகள் ஏற் கெனவே எழுதப்பட்டிருக்கலாம்.

இந்நூல் கி.பி. 110-ஆம் ஆண்டுக்குப்பின் எழுதப்பட்டிருக்க முடியாது. சிலர் இந்நூல் இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் எழு தப்பட்டது என வாதித்து வந்தனர். இதை இப்போது அறிஞர் ஏற்கமாட்டார்கள். ஆராய்ச்சிகளின்படி இரண்டாம் நூற்றாண் டின் தொடக்கத்திலேயே இந்நற்செய்தி எகிப்து, உரோமை, சிறிய ஆசியா ஆகிய பகுதிகளில் கிறிஸ்துவ வைதீக வட்டாரங் களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது எனத் தெரி

கிறது. அந்தியோக்கிய இஞ்ஞாசியார் (கி.பி. 110), போலிக்கார்ப்பு (கி.பி. 110), எர்மசின் ஆயர் (கி.பி.140), யுஸ்தீன் (கி.பி. 150), தோசியன், அந்தியோக்கிய நகரத் தியோபிலசு, இரனேயு ஆகியோர் இந் நூலை அறிந்திருந்தனர் என்பது அவர்கள் நூல்களிலிருந்து தெரிய வருகிறது.

எனினும், எவ்வளவு காலத்திற்கு முந்தி எழுதப்பட்டது இந்நூல் என்பது பற்றி உறுதியாக ஒன்றும் கூறமுடியாது. யோவான் நற்செய்தி தனிப்பட்ட வர லாற்றுப் பாரம்பரியத்தைக் கொண்டுள்ளது. ஆகையால், இது முன்பே எழுதப்பட்டி ருக்க வேண்டும் என்பர் சிலர். யோவான் பாரம்பரியம் கி.பி. 70-ஆம் ஆண்டுக்கு முன்பே பாலஸ்தீனத்திலிருந்து வெளிவந் திருக்க வேண்டும்; 70-ஆம் ஆண்டுக்குப் பின் வெளிவந்திருக்க முடியாது. ஏனெ னில், முதல் யூதக் கிளர்ச்சியின்போது பாலஸ்தீனத்திலிருந்து கிறிஸ்துவச் சமூகங் கள் சிதறி ஓடின. அப்போது நேர்ந்த அழிவின் காரணமாக 70-ஆம் ஆண்டுக்குப் பின் உண்மையான வரலாற்றுப் பாரம்பரி யத்தைச் சேகரிப்பது கடினம். இந்த யூகங் களை மனத்திற்கொண்டு ஆசிரியர் 70-ஆம் ஆண்டுக்கு முன் தமது பாரம்பரியத்தைப் பாலஸ்தீனத்தில் எழுத அல்லது தொகுக்க ஆரம்பித்தார் எனலாம். 70-ஆம் ஆண்டுக் குப் பின் பாலஸ்தீனத்திற்கு வெளியில் அது வளர்ச்சியுற்றது. இதற்கு ஒரு தலைமுறை காலம் கொடுக்கலாம். பல பதிப்பு வேலை களுக்கு இன்னுமொரு தலைமுறைக் காலத்தைக் கொடுத்தால் இந்நூல் 90-ஆம் ஆண்டுக்கும், 110-ஆம் ஆண்டுக்கும் இடை யிட்ட காலத்தில் இறுதி வடிவம் எடுத் திருக்க வேண்டும்.

இந்நூலின் உள் ஆராய்ச்சி, இந்நூல் 70-ஆம் ஆண்டுக்கு முன் எழுதப்பட்டிருக்க முடியாது எனக் காட்டுவதாய் அமைகிறது. இந்நூலில் ஒரு பிரச்சனை சுட்டிக் காட்டப் படுகிறது. அதாவது, யூதக் கிறிஸ்தவர்கள் யூதச் செபக்கூடங்களிலிருந்து விலக்கி வைக்கப்பட்டதாகும். இப்பிரச்சனை 85-ஆம் ஆண்டுக்கு முன் முக்கியம் வாய்ந்த தாகத் தெரியவில்லை. ஆகையால், இந்நூல் 90-ஆம் ஆண்டை ஒட்டி எழுதப்பட்டிருக்க வேண்டும். ஆகவே, 90-ஆம் ஆண்டுக்கும் 110-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத் தில் இந்நூல் எழுதப்பட்டது என்று கூறுதல் நம்பத்தகுந்தது. மேலும், இக்கூற்று பாரம் பரியப் புறச்சான்றுடன் ஒத்ததாயுள்ளது. ஏனெனில், இந்நூல் பேரரசன் திரேசன் காலத்தில் (93-117) எழுதப்பட்டது என இரனேயு கூறுகின்றார்.

**9. யாருக்காக எந்நோக்கோடு எழுதப்பட் டது?:** இப்பிரச்சனைகள் பற்றி ஆராய்ச்சியா ளர்களிடையே ஒற்றுமை காண்பது அரிது; பல நோக்கங்கள் இருப்பதாகத் தோன்று கிறது. மூல ஆசிரியருக்குப் பின் வந்த பதிப்பாசிரியர்கள் தங்களுடைய காலத் தேவைகளுக்கு ஏற்ற நோக்கங்களைப் புகுத் தியிருப்பதாகத் தெரிகிறது.

நான்காம் நற்செய்தி திருமுழுக்கு யோவானைப் பின்பற்றிய பிரிவினைக்காரர் களுக்கு மாறாக எழுதிய காப்புரை என்பர் சிலர். காரணம், முன்னுரையில் திரு முழுக்கு யோவானுக்கு மிகுந்த சிறப்பு அளிக்கப்படுவதைத் தடுக்கும் விதத்தில் பல குறிப்புக்கள் இருப்பதாகத் தோன்று கிறது. அவ்வாறு திருமுழுக்கு யோவா னுக்கு அளிக்கப்பட்ட மிகைப்பட்ட வணக் கத்தை மறுத்து அதைத் திருத்துவது நான் காம் நற்செய்தியின் நோக்கம் என்பர்.

முன்னுரை திருமுழுக்கு யோவானைப் போற்றும்பாடல். அதை யோவான் திருத்தித் தமது நோக்கத்திற்கேற்ப அமைத் துள்ளார் என்று கூறுவோருமுளர். இந்தக் கொள்கையை ஆராயும்போது, நாம் மன தில் கொள்ள வேண்டியவை சில உள. திருமுழுக்கு யோவானைப் பின்பற்றிய ஒரு பிரிவினர் இருந்தனர் என்பது உண்மை. ஆனால், இவர்கள் இயேசுவைக் கிறிஸ்து வாக (மெசியாவாக) ஏற்றுக்கொண்டதே யில்லை. கி.பி. 200-ஐ ஒட்டிய போலிக் கிளமந்து ஏடுகள், இயேசு மெசியா அல் லர், திருமுழுக்கு யோவானே மெசியா என்று இப்பிரிவினர் கருதினர் என்பதற்குச்

சான்று கூறுகின்றன. லூக்காவின் நற்செய்தி யில் வரும் செக்கரியாவின் பாடல் திரு முழுக்கு யோவானைப் பற்றியது என்றால் திருமுழுக்கு யோவானின் சீடர்கள் அவரையே ஒளியாகக் கருதியதாகத் தெரிகிறது. இதற்கு மாறாக, யோவா 1:8-9 என்ற பகுதி திருமுழுக்கு யோவான் உண்மை ஒளி அல்லர், இயேசுவே உண்மையான ஒளி என்று அழுத்திக் கூறுவதாகத் தெரிகிறது. இயேசு திருமுழுக்கு யோவானுக்கு முன்பே இருந்தார். ஆகையால், அவரை விடப் பெரியவர் என்று வலியுறுத்துவதாகத் தெரிகிறது *(1:30)*. திருமுழுக்கு யோவான், தாம் மெசியா அல்லர் என்று கூறுவது, இயேசுதான் உண்மையான மெசியா என்று சுட்டுகிறது. இவ்விதம் தோன்றினாலும், இந்நூலைக் கூர்ந்து கவனிக்குங்கால், இறைவனின் மீட்புத் திட்டத்தில் திருமுழுக்கு யோவானின் இடத்தை நன்குணர்ந்து அதை ஆசிரியர் சிறப்பித்துக் கூறுவதாகத் தெரிகிறது. திருமுழுக்கு யோவானது மகிமையைக் குறைத்துக் கூறவில்லை. அதற்கு மாறாக திருமுழுக்கு யோவான் இறைவனால் அனுப்பப்பட்ட தனிச்சிறப்புடைய முக்கியமான சான்றாளர் எனக்காட்டுகிறது இந்நூல். ஆகையால், திருமுழுக்கு யோவானைப் பின்பற்றிய பிரிவினருக்கு மாறாக எழுதப்பட்ட காப்புரையாகும் இந்நூல் என்பது மிகைப்படுத்திக் கூறுவதாகும்.

இந்நூல் ''ஞானவாதிகள்'' (Gnostics), ''மண்டேயர்கள்'' (Mandeans) ஆகிய ஆதிகாலப் பிரிவினைச் சபையினருக்கு மாறாக எழுதப்பட்டது என்பர் சிலர். யோவானது சில கூற்றுக்கள் இதற்கு இடந்தருவனவாயுள்ளன. ஆனால் இப்பிரிவினையாளர்கள் காலத்தினால் மிகப் பிந்தியவர்கள். ஆகையால், இவர்களை மனதில் வைத்து மூல ஆசிரியரோ, பதிப்பாசிரியர்களோ இந்நூலை எழுதியிருக்க முடியாது.

மேலும் சிலர், இந்நூல், யூதர்களுக்கு விரோதமாகவும், அவர்களுக்காகவும், எழுதப்பட்ட வாத நூலாகும் என்பர். இயேசு தமது கால யூதர்களுக்குப் போதித்தது என்ன? கால நிறைவில், இறையரசைத் தாம் உலகிற்குக் கொண்டு வந்துள்ளதாயும், தமது வாழ்விலே அது தொடங்கி வளர்ச்சியடைவதாகவும், அதை யூதர்கள் ஏற்க வேண்டும் என்றும் இயேசு போதித்தார்; யூதர்கள் ஏற்க மறுத்தனர். ஆகையால், இயேசுவைப் பற்றிய உண்மையான வரலாற்றுப் பாரம்பரியத்தைக் கொண்டிருக்கும் எந்த நற்செய்தி நூலும், யூதர்களுக்கு விரோதமாக ஒரு காப்புரை கொண்டிருக்க வேண்டும் என்பது எதிர்பார்க்கத்தக்கத்தே. இத்தன்மை ஒத்தமை நற்செய்திகளைவிட யோவானில் அழுத்தமாகவும், தெளிவாகவும் காணப்படுகிறது. ஏனெனில், சுத்தி செய்தல், ஆலய வழிபாடு ஆகிய நிறுவனங்கள், ஓய்வுநாள், பாஸ்குவிழா, கூடார விழா, அபிடேகவிழா ஆகியவற்றை அகற்றி தாமே அவற்றின் நிறைவு ஆவதாகவும் பழைய உடன்படிக்கை முற்றுப்பெறுகிறது, பழைய திருவழிபாட்டு முறைகளும் மறைகின்றன, தன்னில் புதிய மீட்புச்செயலும், புதிய வழிபாட்டுமுறையும் ஆரம்பமாகின்றன என்பதாகவும், இயேசு காட்டுகிறார் என்ற கருத்தைச் சுற்றி இயேசுவின் பொதுப்பணி அமைக்கப்படுகிறது. ஆகவே, சுற்றுவட்டார யூதர்களைக் கிறிஸ்தவத்திற்கு ஈர்க்கும் வேதபோதக முயற்சியாகும் இந்நூல் என்பர்.

பாலஸ்தீன யூதர்களுக்காக நான்காம் நற்செய்தி எழுதப்படவில்லை என்று தோன்றுகிறது. இந்நற்செய்தி முழுவதிலும் ''யூதர்கள்'' என்ற சொல் விரோத, வெறுப்பு மனப்பான்மையுடன் பயன்படுத்தப்படுகிறது. இச்சொல் யூத இனத்தாரைக் குறிக்கவில்லை. ஏனெனில், 9-ஆம் அதிகாரத்தில் வரும் குருடனும், அவனது தந்தையும் யூதர்கள் ஆனாலும் ''யூதர்களோடு'' ஒப்பிடப்பட்டு வேறுபடுத்திக் கூறப்படுகின்றனர். ஒத்தமை நற்செய்திகள், தலைமைக் குருக்கள், பரிசேயர், சனேத்ரின் அதிகாரிகள் என்று குறிப்பவர்களை யோவான் நற்செய்தி ''யூதர்கள்'' என்று பெரும்பாலும் அழைக்கிறது (யோவா *11:47; 18:14)*. இயேசுவுக்கு விரோதமான

யூத அதிகாரிகளைச் சிறப்பாக எருசலேமைச் சார்ந்த யூத அதிகாரவர்க்கத்தினரை யோவான் நற்செய்தி 'யூதர்க''ளென அழைக்கிறது. பிற்காலத்தில் யூத இனத்தவர்க்கும், கிறிஸ்தவர்களுக்கும் எழுந்த பகையை மனதில் வைத்து, இயேசுவின் எதிரிகளுக்கு இனத்தாரின் பெயரையே அளித்ததாகத் தெரிகிறது. இவ்விதம் யூதர்கள் என்ற சொல் பிற்காலத்தில் கொண்ட பொருள் முற்காலத்துக்கும் உரியதாக வழங்கப்பட்டது. இந்நூல் எழுதப்பட்ட, அல்லது பதிப்பிக்கப்பட்ட காலத்திற்குள்ளாக, பொதுவாக யூதர்களுக்கும் கிறிஸதவர்களுக்கும் பெரும்பகை மூண்டது; போர் மூண்டது. இருவருக்குமிடையே மிகுந்த கருத்து வேறுபாடுகள் எழுந்தன. இக்கால யூதர்கள் கிறிஸ்தவர்களை எதிர்த்ததுபோலவே இயேசுவின் காலத்து அதிகாரிகள் அவரை எதிர்த்ததால், இவர்களது பொதுப் பெயரையே (யூதர்கள்) இயேசுவை எதிர்த்த அதிகார வர்க்கத்தினருக்கு அளிக்கிறார். இயேசுவின் விரோதிகளை யூதர்கள் என்று அழைக்கும்போது, அவர்களது சந்ததியரான, ஆசிரியர் காலத்து யூதர்களையும் சேர்த்து அழைக்கிறார். இதில் விரோதத் தன்மையும், வெறுப்புமே தெரிகிறது. யூத நிறுவனங்களையும், யூத விழாக்களையும் அகற்றுவது பற்றிய யோவானது கூற்றுக்களும், மற்ற வாதங்களும் இரு குழுவினரிடையேயும் விரோதத்தை ஏற்படுத்துவனவாக அமைந்துள்ளன. ஆகையால், இந்நூல் பாலஸ்தீன யூதர்களையோ, சுற்றுவட்டார யூதர்களையோ கிறிஸ்தவத்திறகு ஈர்க்கும் வேதபோதக முயற்சியாகும் என்று கூறுவது ஒவ்வாததாகத் தோன்றுகிறது.

கீழ்வருபவை இந்நூலின் உண்மையான நோக்கங்களாகத் தோன்றுகின்றன. யூதக் கிறிஸ்தவர்களுக்கு உற்சாகம் அளிக்கும் பொருட்டும், ஆறுதல் அளிக்கும் பொருட்டும் இந்நூல் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது. ஆலயம் அழிக்கப்படும்வரை யூத மதத்தினர்களும், அதிகாரிகளும் யூதக் கிறிஸ்தவர்களைச் செபக்கூடங்களில் அனுமதித்தனர், சகித்துக் கொண்டனர். கி.பி. 70-ஆம் ஆண்டுக்குப் பின் நிலை மாறியது. 80-ஆம் ஆண்டுக்குப் பின் இரு வகுப்பினருக்குமிடையேயுள்ள தொடர்பு சீரழிந்தது. செபக்கூடங்களிலிருந்து விரட்டப்பட்டனர் யூதக்கிறிஸ்தவர்கள். யூத சமூகத்திலிருந்து அவர்கள் ஒதுக்கி வைக்கப்பட்டனர்; யூதர்களுடைய பதினெட்டு ஆசீர்களோடு கிறிஸ்தவர்களைச் சபிக்கும் வாக்கும் சேர்த்து வெளிப்படையாகச் சொல்லப்பட்டது. இதைச் சொல்ல மறுப்பவன் கிறிஸ்தவ மனப்பான்மையுடையவன் என்று காட்டிக் கொள்வான்; அதனால், பல தொல்லையுறுவான். கி.பி. 90-ஐ ஒட்டி நடந்த யாம்னியா கூட்டத்திற்கு இரண்டாம் கமாலியேல் தலைமை தாங்கியபோது, இயேசுவை மெசியா என்று ஏற்றுக் கொண்ட யூதர்கள் யூத மதத்திலிருந்து அதிகாரப்பூர்வமாக வெளியேற்றப்பட்டனர். ஆனால், யூதக்கிறிஸ்தவர்களோ பாரம்பரியத்தில் வளர்ச்சியுற்றவர்க களது யூதப்பாரம்பரியத்தையும், உ ருடன் கொண்ட தொடர்பையும் விட்டுவிடப் பிரியப்படவில்லை. ஆனாலும், இயேசுவின்பால் கொண்ட விசுவாசத்தை இழக்கவும் மனம் கொள்ளவில்லை. இவ்விரண்டிற்கும் இடையில் யூதக்கிறிஸ்தவர்கள் பெரிதும் அல்லலுற்றனர். அவர்களை ஊக்குவிப்பது மிக அவசியமாயிற்று. அவர்களுக்கு ஆறுதல் அளிப்பது இன்றியமையாததாயிற்று. இதற்காகவே இந்நூல் எழுதப்பட்டது எனலாம். ஆகவே, இந்நற்செய்தியின் முதற்பகுதி, யூத மதத்தை விட்டதனால் யூதக்கிறிஸ்தவர்கள் தாங்கள் இழந்துவிட்டதாகக் கருதிய தங்களுக்கு விருப்பமான நிறுவனங்களையும், விழாக்களையும் இயேசுவில் மேலான விதத்தில் கண்டடைவார்கள் என்று காட்டும் விதத்தில் அமைந்துள்ளது. நற்செய்தியில் இயேசுவை விசுவசித்த யூதர்கள், விரோத மனப்பான்மையுள்ள யூதர்களிடமிருந்து பிரித்துக் காட்டப்படுகின்றனர். 9-ஆம் அதிகாரத்தில் தனது விசுவாசத்திற்காக விலக்கி வைக்கப்பட்ட குருடன், ஒரு வீரனாகக் காட்டப்படுகிறான் (9:22.34). பிற்காலத்தில் நிகழ்ந்த விலக்கிவைத்தல் நிகழ்ச்சி, கால

மயக்கத்தோடு இரு இடங்களில் குறிப் பிடப்படுகிறது (9:2.42; 16:2). இது நற் செய்தி எழுதப்பட்ட அல்லது பதிப்பிக்கப் பட்ட காலத்தில் விலக்கிவைத்தல் ஒரு பெரும் பிரச்சனையாக இருந்தது என்பதைக் காட்டுகிறது. 12:42-43-இல் இயேசுவில் விசுவாசம் கொண்டாலும் யூதர்களுக்குப் பயந்து அதை வெளிக்காட்டப் பயப்பட்ட வர்களைப் பற்றிக் கடுமையான கண்டனம் காணப்படுகிறது. 19:38-39-இல் யோசேப் பும், நிக்கோதேமுவும் எவ்விதம் இப் பயத்தை வென்று தாங்கள் கிறிஸ்தவர் களைச் சார்ந்தவர்கள் என்று வெளிப்படுத்தி னர் என்பது கூறப்படுகிறது. இவர்களைப் போல் முதல் நூற்றாண்டு முடிவில் வாழ்ந்த யூதக்கிறிஸ்தவர்களும் செய்ய வேண்டும் என்று தூண்டும் முறையில் இந்நற்செய்தி எழுதப்பட்டது.

புற இனக் கிறிஸ்தவர்களை ஊக்குவிக் கும் விதத்தில் இந்நூல் எழுதப்பட்டது என்பர் சிலர். இதிலும் உண்மையிருக்கிறது. இந்நூலாசிரியர் புற இனத்தவர் மனந்திரும் புதல், தமது மகனை அனுப்பிய இறை வனது திட்டத்தில் ஒரு பகுதியாகும் எனக் காட்டுகிறார். வஞ்சப் புகழ்ச்சியாக 7:35-இல், இயேசு இறுதியாக புறஇனத்த வர்க்குப் (கிரேக்கருக்குப்) போதிக்கப் போவார் என்று குறிப்பால் உணர்த்துகிறார். 10:16-இல் நல்லாயரான இயேசு தமது மந்தையைச் சேராத ஆடுகளையும் தம் மந்தைக்குக் கொண்டுவர தமது உயிரையும் அளிப்பார் என்பது சிறப்பித்துக் கூறப்படு கிறது. தனக்கே புரியாத இறைவாக்காக, காயபா, இயேசு யூத நாட்டினருக்கு மட்டு மல்லர், சிதறிக்கிடந்த இறைமக்கள் யாவ ருக்காகவும் மரிப்பார் என்று முன்னறிவிக் கிறார் (18:52). இயேசு நிராகரிக்கப்பட்ட பின் உலகெல்லாம் அவரிடம் வருவதிலும் (12:19), புற இனத்தார் அவரைத் தேடுவ திலும் (12:20-21) இயேசுவின் பொதுப்பணி உச்சநிலை அடைகிறது எனலாம். இதுதான் அவர் மகிமைப்படு நேரம் வந்துவிட்டது என்பதற்கு அடையாளம் (12:23). நம் தந்தையிடத்திற்குச் செல்லும் வழியாக சிலு வையில் உயர்த்தப்படும் விதத்தில் யாவரை யும் தம்மிடம் இயேசு ஈர்க்கிறார், கவர் கிறார் (12:32).

யூதக்கிறிஸ்தவர்களுக்காக மட்டுமோ, புற இனக் கிறிஸ்தவர்களுக்காக மட்டுமோ அன்று, பொதுவாகக் கிறிஸ்தவர்கள் அனை வருக்காகவும் எழுதப்பட்டது இந்நற் செய்தி. அனைவரையும் ஊக்குவிப்பதற்காக எழுந்தது இந்நற்செய்தி என்பர். இந்நற் செய்தியின் நோக்கம் 20:31-இல் கூறப்படு கிறது: ''இயேசுவே இறைமகனாகிய மெசியா என நீங்கள் நம்புவதற்காகவும், நம்பி அவர் பெயரால் வாழ்வு பெறுவதற் காகவுமே இந்நூலில் உள்ளவை எழுதப் பெற்றுள்ளன''. இவ்வசனத்தின் முற்பகுதி காப்புரைத் தன்மையை வெளிப்படுத்தினா லும், பிற்பகுதி ஏற்கெனவே விசுவசிப் போரை உறுதிப்படுத்த ஆசிரியர் விரும்புவ தாகக் காட்டுகிறது. இந்நற்செய்தி எழுதப் பட்ட காலத்தில் ஏற்கெனவே அருட்கருவி களையும், வழிபாட்டையும் வளர்ச்சியுற்ற நிலையில் கொண்ட கிறிஸ்தவச் சமூகங்கள் பல இடங்களில் இருந்தன. இவற்றிற்கும் நாசரேத்து இயேசுவுக்கும் தொடர்பு என்ன? அவர் ஓர் இயக்கத்தை ஏற்படுத்தினார். அஃது அவருக்குப் பின் தானாக இயங்குவ தாகத் தோன்றியது. அவர் பிறரைப்போல் ஒரு வெறும் வரலாற்று உருவம்தானா? இல்லை. அவர் வெறும் வரலாற்று உருவ மல்லர். தாம் வாழ்ந்த காலத்தைப்போ லவே, நூற்றாண்டின் முடிவிலும், என்றும் தமது சீடர்களுக்கு வாழ்வின் ஊற்றாகவும், வளர்ச்சியாகவும் விளங்குகிறார் இயேசு. இதுவே இந்நற்செய்தி அளிக்கும் செய்தி. இது நற்செய்தி முழுவதிலும் எதிரொலிக் கிறது. அவரில் விசுவாசம் கொள்வதால் எவனும் நித்திய வாழ்வை அடைய முடி யும். திருச்சபை இயேசுவுக்குப் பதிலாக இருக்கவில்லை. அவரில் கொண்ட விசு வாசத்தில் வேரூன்றிய சமூகமாகத் திகழ் கிறது. அவர் திராட்சை, திருச்சபை அதன் கொடிகள். கொடிகள் திராட்சையிலிருந்து பிரிந்து வாழமுடியாது. திருச்சபை ஓர் அருட்கருவி நிறுவனமாகும். அருட்கருவி

கள் இயேசு உயிர் அளிக்கும் வாய்க்கால் களாகும். அவர் உலகில் வாழ்ந்த காலத்தில் அவரது உயிர் அளிக்கும் செயல்களுக்கு அடையாளங்களாகத் திகழ்ந்தன. நற்செய்தியில் அருங்குறிகளுக்கு இரண்டாம் பட்சமாக (secondary meaning) அருட்கருவிப் பொருள் கொடுக்கப்படுகிறது. இதன் நோக்கம் உயிர் அளிக்கும் செயலாக அருங்குறிகளின் இடத்தை அருட்கருவிகள் எடுத்துள்ளன என்று காட்டுதலாகும். ஆறாம் அதிகாரத்தில் அப்பம் பலுகுதல் நற்கருணையை அடையாளமாகக் குறிக்கிறது. ஒன்பதாம் அதிகாரத்தில் சிலோவில் பிறவிக் குருடனைக் குணப்படுத்துதல் திருமுழுக்குப் பொருளுடையது.

இயேசு திருச்சபையுடன் எவ்விதம் தொடர்பு கொண்டுள்ளார்? அப்போஸ்தலத் தலைமுறை மறைந்து கொண்டு வந்தது. இயேசுவைப் போதிக்க அதிகாரம் பெற்ற நேரடிச் சாட்சிகளின்றி, இயேசுவின் பிரசன்னத்தைத் திருச்சபையில் உயிருள்ள விதத்தில் எப்படிக் காப்பாற்றுவது? இஃது ஒரு நெருக்கடி நிலையைத் திருச்சபையில் ஏற்படுத்தியது *(2 பேதுரு 3:4)*. பிற புதிய ஏற்பாட்டு நூல்கள் பரிசுத்த ஆவியை ஒரு கொடை அளிக்கும் ஆற்றலாகவும் திருமுழுக்கில் உயிர் அளிக்கும் சக்தியாகவும் அறிந்திருந்தன. ஆனால், இந்நற்செய்திதான் திருச்சபையில் இயேசுவின் செயலை ஆவி தொடர்ந்து நடத்துகிறார் என்று காட்டுகிறது. முன்பு இயேசுவைப் பற்றிச் சொல்லப்பட்டவையெல்லாம் இப்போது ஆவியைப் பற்றிச் சொல்லப்படுகின்றன. திருச்சபையை இயேசுவோடு இணைத்த நேரடிச் சாட்சிகள் மறைந்தபின்னும் இயேசு திருச்சபையில் பிரசன்னமாய் இருக்கிறார். எவ்வாறு? பரிசுத்த ஆவியே இயேசுவின் பிரசன்னம். திருச்சபை போதிக்கவும், அதற்கு வழிகாட்டவும், அதனோடு என்றும் இருக்கவும், தமது ஆவியை இயேசு திருச்சபைக்குக் கொடுத்திருக்கிறார் (யோவா *14-16)*.

திருச்சபையின் இந்தப் பின்னணியில், ஏற்கெனவே நிகழ்ந்துவரும் முடிவுகாலம் பற்றிய யோவானது போதனையை அறியலாம். அப்போஸ்தலிக்கத் தலைமுறை மறைந்த பின்னும் இயேசு மீண்டும் வராதது ஒரு பிரச்சனையை ஏற்படுத்தியது. இந்தத் தலைமுறை இறந்து போகுமுன் இயேசு மீண்டும் வருவார் என கிறிஸ்தவர்கள் எண்ணியதாகத் தெரிகிறது (யோவா *21:22-33)*. இயேசு இன்னும் வரவில்லையே! அந்நம்பிக்கை வீண்தானா? இயேசு மீண்டும் வருவார் என்ற மூல நம்பிக்கையை இழக்காமல் மேற்கண்ட பிரச்சனைக்கு, யோவான் விடை காண்கிறார். நீதித் தீர்ப்படையவோ, நித்திய வாழ்வு பெறவோ *(3:18-21; 5:24-25)* மனிதர்கள் இயேசுவின் இரண்டாம் வருகைக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. அவர்கள் ஏற்கெனவே இறைமக்கள். ஏனெனில், திருமுழுக்கில் மனிதர்கள் ஆவியின் வழியாக ஏற்கெனவே மேலிருந்து பிறந்துள்ளனர் *(3:5)*. இயேசுவின் பிரசன்னம் ஆவியின் வழியாக ஏற்கெனவே அவர்களிடையே இருக்கின்றது. உலக முடிவில் அவர்கள் எதிர்பார்த்த பல செயல்கள் ஏற்கெனவே அவர்களிடையே உள்ளன. அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் உண்மையான கிறிஸ்தவ வாழ்வு வாழ்வதே. இவ்விளக்கத்தின் காரணமாகவும், பிற விளக்கங்களின் காரணமாகவும் இந்நற்செய்தி ஒரு பெரும் இறையியலாகும். இயேசுவின் வார்த்தை, செயல்கள் பற்றிய பாரம்பரியத்தை விரிவுபடுத்தி, கிறிஸ்தவர்களின் விசுவாச வாழ்வை ஆழ்ந்து வேரூன்றச் செய்து, அவர்களுக்கு ஆறுதல் அளித்து, அவர்களை விசுவாசத்தில் உறுதிப்படுத்துவதே இந்நூலின் நோக்கம். இதில் முற்கூறப்பட்ட தனிப்பட்ட குழுவினரின் தேவைகளும் இடம் பெறுகின்றன.

**10. யோவானும், ஒத்தமை நற்செய்திகளும்:** இவ்விரண்டையும் ஒப்பிடுங்கால், சில இரண்டிற்கும் பொதுவானவையாக இருக்கின்றன. அவை: இயேசுவின் திருமுழுக்கு *(1:32-34)*, ஆலயத்தைத் தூய்மையாக்கல் *(2:13-16)*, அப்பங்களைப் பெருக்குதல் *(6:1-13)*, தண்ணீரில் நடத்தல் *(6:16-21)*,

பெத்தானியாவில் தைலம் பூசுதல் *(12:1-8)*, எருசலேமிற்குள் வெற்றி நுழைவு *(12:12-19)*, காட்டிக் கொடுக்கப்படுவதை முன்னறிவித்தல் *(13:21-30)*, பாடுகள், உயிர்ப்பு என்பன ஆகும். இவை யோவானிலும், ஒத்தமை நற்செய்திகளிலும் பொதுவாகக் காணப்பட்டாலும், இவற்றை யோவான் தமக்கே உரிய விதத்தில் விவரிக்கின்றார்.

மேற்கூறிய பொதுப்பகுதிகளைவிட யோவானிலும், ஒத்தமை நற்செய்திகளிலும் காணப்படும் வேறுபாடுகளே அதிகம். யோவானில் காணப்படுபவைகளில் பெரும்பாலானவை அவருக்கே உரியன. யோவானுக்கும் ஒத்தமை நற்செய்திகளுக்குமிடையே உள்ள தொடர்பு யோவானது இலக்கிய அமைப்பைப் பற்றி ஒரு பிரச்சனையை எழுப்புகிறது. அவர் ஒத்தமை நற்செய்திகளைக் கருத்தில் வைத்தே, அல்லது சார்ந்தே எழுதினாரா? இந்நூல்களை அவர் அறிந்திருப்பாரா? அல்லது அவரது பாரம்பரியமும் மூலங்களும் தனிப்பட்டவையா?

யோவானும், ஒத்தமை நற்செய்திகளும் வெவ்வேறு தளத்தில் உலாவுவதாகத் தெரிகிறது. ஒத்தமை நற்செய்தியாளர்கள் இயேசுவின் அருங்குறிகளையும், மனத்தைக் கவரும் உயிர்ச்சித்திரம் போன்ற விவரிப்புகளையும், இயேசுவின் வாக்குகளையும், உவமைகளையும் எடுத்துக் கூறுகின்றனர். அத்துடன் மனநிறைவடைந்து விடுவதாகத் தெரிகிறது. இவற்றில் பல புதுமைகள் உண்டு. யோவானில் ஏழே புதுமைகள் உள. அவற்றில் ஐந்து அவருக்கே உரியன. காலவரையிலும் ஒத்தமை நற்செய்திகளும், யோவானும் வேறுபடுகின்றன. ஒத்தமை நற்செய்திகளில் இயேசுவின் பொதுப்பணி ஓர் ஆண்டுக்கு மேற்பட்டது அன்று என்று தோன்றுகிறது. யோவானில் அப்பணி குறைந்தது இரண்டு வருடங்களுக்கு மேம்பட்டதாக இருக்க வேண்டும் என்று தெரிகிறது. ஒத்தமை நற்செய்திகளில் ஓர் எருசலேம் பயணமும், ஒரு பாஸ்கு விழாவும் குறிக்கப்படுகின்றன. யோவானிலோ நான்கு எருசலேம் பயணங்களும், மூன்று பாஸ்கு விழாக்களும் குறிக்கப்படுகின்றன. பணிசெய்த இடங்களைப் பற்றியும் வேறுபாடு உண்டு. இயேசு தமது பணியை முழுவதும் கலிலேயாவில் செய்ததாகவும், இறுதியாக ஒரே முறை எருசலேமுக்குச் சென்றதாகவும் தோன்றும்படி ஒத்தமை நற்செய்திகளின் விவரிப்பு அமைகிறது. ஆனால், யோவானில் இயேசு தமது பணியின் சிறுபகுதியைக் கலிலேயாவிலும், பெரும் பகுதியை எருசலேமிலும் செய்கிறார்.

இயேசுவின் வாக்குகளைப் பொருத்தமட்டும் இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாடு தெளிவாகவுளது. ஒத்தமை நற்செய்திகளில் இயேசு பரிசேயர், சதுசேயர், இறைநூல் அறிஞர், தமது சீடர்கள், பொதுமக்கள் ஆகிய பலதரப்பட்ட மக்களுக்குப் போதகம் அளிக்கிறார்; இறையரசைப் பற்றியும், மனிதன் அதை ஏற்க அவனிடம் இருக்க வேண்டிய மனநிலையைப் பற்றியும் பேசுகிறார். யோவானில், இயேசு பொதுத்தன்மையுள்ள யூத மக்களிடம் பேசுகிறார்; சில சமயங்களில் அவரை விசுவசியாத யூதத் தலைவர்களிடம் பேசுகிறார்; அல்லது நிக்கோதேமு, சமாரியப்பெண் போன்ற தனியாட்களுடன் பேசுகிறார். இந்த உரையாடல்களிலும், மற்றவர்கள் சிறிது சிறிதாகக் காட்சியிலிருந்து மறைகின்றனர். இயேசு ஒருவரே பேசுகிறார்; தனியாட்களுக்காக அல்லர், ஒவ்வொரு மனிதனுக்காகவும் பேசுகிறார். இதில் இயேசுவின் வார்த்தைகள் எங்கு முடிகின்றன, நற்செய்தியாளரின் வார்த்தைகள் எங்குத் தொடங்குகின்றன என்று கூறுவது கடினம். இயேசு மெசியாவுக்குரிய தமது அலுவலை வெளிப்படுத்துகிறார். அதேபோழ்து, அவரது தெய்வீகமும், அதற்கு மனிதர் அளிக்க வேண்டிய விசுவாசமும் அழுத்திக் கூறப்படுகின்றன. இங்குத் தர்க்கங்களுக்கோ, நல்லொழுக்கப் பிரச்சனைகளுக்கோ இடமில்லை. பிறர் அன்பு அழுத்திக் கூறப்படுகிறது. போதிக்கும் முறையும் வேறுபடுகிறது. ஒத்தமை நற்செய்திகளில் வரும்

உவமைகளும், போதகங்களும், யோவானின் உரையாடல்களுக்கும், அறவுரைகளுக்கும் இடம் அளிக்கின்றன. அறவுரைகள் மிக நீண்டிருக்கின்றன. சாதாரண மக்கள் எளிதில் அறிந்து கொள்ளும் முறையில் இல்லை. வேண்டுமென்றே கூறப்படும் இருபொருள் மயக்கமும், சுட்டிக்காட்டும் விதமும், இந்த அறவுரைகளைப் புரிந்து கொள்வதை இன்னும் கடினமாக்குகின்றன. சோதனை, பன்னிருவரைத் தேர்ந்தெடுத்தல், ஒழுக்கப் போதனைகள், ஒளி உருவானது, முடிவு காலம் பற்றிய அறவுரைகள், நற்கருணை நிறுவனம் ஆகிய நிகழ்ச்சிகள் யோவானில் காணப்படவில்லை. ஆகையால், ஒத்தமை நற்செய்திகளை யோவான் அறிந்திருந்தாரா என்ற கேள்வி எழுகிறது. அறிந்திருந்தால் இவ்வளவு வேறுபட்ட நற்செய்தியை எழுதியதன் நோக்கம் யாது?

யோவான், மாற்கை உறுதியாக அறிந்திருக்க வேண்டும்; லூக்காவை ஒருவேளை அறிந்திருக்கலாம்; மத்தேயுவை அவருக்குத் தெரிந்திருக்காது என்பர் தற்கால அறிஞர் பலர். யோவான் மாற்கோடு கொண்டுளதை விட, லூக்காவோடு அதிக இலக்கியத் தொடர்பு கொண்டிருப்பதாகத் தெரிகிறது. யோவானுக்குரிய தனிப்பண்புகள் லூக்காவில் காணப்படுகின்றன. நான்கு நற்செய்திகளில் யோவான் இறுதியானது என்றால், ஒத்தமை நற்செய்திகளை யோவான் அறிந்திருக்க வேண்டும். இறுதியானது இல்லையென்றால் சில நற்செய்திகளைக்கூட அவர் அறிந்திருப்பது அரிது. பிற செய்திகளை அவர் அறிந்திருந்தாரோ, இல்லையோ, ஒத்தமை நற்செய்திகளுக்கு அடிப்படையான பாரம்பரியத்தை நன்கு அறிந்திருந்தார் எனலாம்.

ஆனால், அவற்றைப்போல் எழுதவில்லை. இலக்கிய அமைப்பு வேறுபடுகிறது. அவற்றைப்போல், இயேசுவின் வாழ்க்கை வரலாற்றைத் தரவில்லை. அவற்றிலிருந்து வேறுபட்டு, சில நிகழ்ச்சிகளையும், தமது சொந்த மொழியில் அமைத்த பல அறவுரைகளையும் தருகிறார் ஆசிரியர். இதற்குக் காரணம் முன்பு சொன்னதுபோல் விசுவாசமற்ற யூதர்களுக்கு எதிராகவும், திருமுழுக்கு யோவானைப் பின்பற்றியோருக்கு எதிராகவும் ''தோசேத்தியம், ஞான வாதம்'' ஆகிய பிரிவினைக்காரர்களுக்கு எதிராகவும் எழுதப்பட்ட தர்க்க வாதமுடைய காப்புரையாகும் இந்நூல் என்பர். இவை சரியான காரணமாயிருக்க முடியாது என்று காட்டினோம். மேலும், இந்நூல் மற்ற நற்செய்திகளுக்குப் போட்டியாகவும், அவற்றை அகற்றவும் எழுதப்பட்டது என்பர். இதற்கு ஓர் ஆதாரமும் இல்லை. இதை அறிஞர் இன்று ஏற்கார். மேலும், இந்நூல் மற்ற நற்செய்திகளை நிறைவுபடுத்தும் பொருட்டு, முழுமைப்படுத்தும் பொருட்டு எழுதப்பட்டது என்பர். இவ்விதம் உண்மையில் நிறைவு செய்கிறதா என்பது தெரியவில்லை. ஆய்வாளர்கள் சிலர் இக்கூற்றுக்கு மாற்றுரைப்பர். இரு பாரம்பரியங்களுக்கும் பொதுவான நிகழ்ச்சிகளாகிய தூதுவனின் மகனைக் குணப்படுத்துதல் *(4:46-54)*, அப்பங்களைப் பெருக்குதல் ஆகியவற்றை ஆராயுங்கால், அவற்றிடையே காணப்படும் வேறுபாடுகள், யோவான், ஒத்தமை நற்செய்திப் பாரம்பரியத்தைச் சாராது, தமக்கே உரிய மூலத்தைச் சார்ந்து எழுதுவதாகத் தெரிகிறது. ஆகவே யோவான், ஒத்தமை நற்செய்திப் பாரம்பரியத்தை நிறைவுபடுத்தும் விதத்தில் எழுதினார் என்று கூறுவது சரியன்று.

யோவான் நற்செய்தி ஒரு தனிப்பட்ட பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டது; அஃது எழுதப்பட்ட காலத்திற்கேற்ப இயேசுவின் நற்செய்தியை மாற்றியமைத்துத் தருகிறது. முன்பு கூறியதைப் போல், பல இன்னல்களுக்கிடையில் அவதியுற்ற கிறிஸ்தவர்களை ஊக்குவிக்கும் பொருட்டு எழுதப்பட்டது. அதற்கேற்ப மாறிய இலக்கிய அமைப்பைக் கொண்டது. இயேசுவைப் பற்றிய பல சொந்த சிந்தனைகளைக் கொண்ட சுருக்கவுரைகளையும், கட்டுரைத் தொகுப்புகளையும் கொண்ட நூல். அன்றும், இன்றும், என்றும் மனிதனான இயேசு உண்மையான மெசியா, இறைமகன் என்று பறைசாற்றுகிறது.

***11. இந்நூலைப் பாதித்தவை:*** இந்நற்செய்தி, ஒத்தமை நற்செய்திப் பாரம்பரியத்தைச் சார்ந்து எழுதப்பட்டதன்று. இஃது ஒரு தனிப்பட்ட வரலாற்றுப் பாரம்பரியத்தைக் கொண்டது. இதைத் தவிர வேறு பிற சூழ்நிலைகள் இந்நூலைப் பாதித்தனவா என்ற கேள்வி எழுகின்றது. இந்நூல் ஞானவாதம், மந்தேயவாதம் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டுள்ளது என்பர். இவ்வாறு முதலில் கூறப்பட்ட காலத்தில், மேற்கூறியவற்றைப் பற்றிய நூல்கள் அதிகமில்லை. இப்போது இவைகளைப் பற்றிய பல நூல்களைக் கொண்டுள்ளோம். இவற்றோடு நான்காம் நற்செய்தியை ஒப்பிடும்போது சில இடங்களில் நடை ஒத்துள்ளது, சில இடங்களில் கருத்துகள் ஒத்திருப்பதுபோல் தோன்றுகின்றன. கருத்தளவில் இவை, நற்செய்தியைப் பாதித்திருப்பதற்குப் பதிலாக, நற்செய்தி இவற்றைப் பாதித்திருப்பதாகத் தெரிகிறது. எழுதப்பட்ட காலத்தை ஆராயுங்கால் இவை நற்செய்தியைவிடப் பிந்தியதாக உள்ளன.

அடுத்து, கிரேக்கம் எவ்வளவு தூரம் இந்நற்செய்தியைப் பாதித்தது? கிரேக்கம் என்று குறிப்பிடும்போது கிரேக்கக் கலாச்சாரத்தையும், இலக்கியத்தையும் சிறப்பாகக் குறிப்பிடுகிறோம். கிறிஸ்துவுக்கு முந்திய காலத்திலேயே கிரேக்கம் யூதத்தைப் பாதிக்க ஆரம்பித்தது எனலாம். இதை ஞானாகமங்களிலும், கும்ரான் ஏடுகளிலும் பார்க்கலாம். இவற்றின் வழியாகவும், இந்த அளவிலும் கிரேக்கம் யோவானைப் பாதித்தது எனலாம். ஆனால், நேரடியாகப் பாதித்ததா? நற்செய்திகள் கிரேக்க மொழியில் எழுதப்பட்டதால், நற்செய்தியாளர் அம்மொழியின் மரபுக்கேற்ப கிறிஸ்துவின் நற்செய்தியை எடுத்துக்கூறுவது அவசியமாயிற்று. இஃது எல்லா நற்செய்தியாளர்களுக்கும் பொதுவானது; யோவானுக்கு மட்டும் சிறப்பானது அன்று. ஆனால், யோவான் கிரேக்க அமைப்புகளையும், சொல்லமைப்புகளையும், கருத்துகளையும் பிற நற்செய்தியாளர்களைவிட பெருமளவில் பயன்படுத்துகிறார் என்பர் சிலர். ஒரு சில சான்றுகள் இங்குத் தருகிறோம்: ''மேலிருந்து வருபவர்'', ''மண்ணுலகைச் சார்ந்தவை'' என்றும் (யோவா *3:31*), ''விண்ணகத்திலிருந்து வந்த உணவு'' *(6:41)*, ''சாதாரண அப்பம்'' என்றும் பிரித்துக் கூறுவதில் சாதாரண மக்கள் கருதிய பிளேட்டோவின் தத்துவம் பிரதிபலிக்கின்றது என்பர். முன்னுரையில் வரும் ''வாக்கு'' பற்றிய போதகம், ''ஸ்தோயிக்கு'' தத்துவத்தைச் சார்ந்த ''வாக்கி''ன் மாற்றம் என்பர். இவை போன்ற சான்றுகள் தர்க்கத்திற்குரியனவாகும். ஆனால், இவற்றை ஆழ்ந்து, உண்மை நோக்குடன் ஆராயும் அறிஞர்கள், இக்கருத்துகளின் அடிப்படை பாலஸ்தீன யூத இலக்கியத்திலேயே காணப்படுகிறது என்று ஏற்றுக்கொள்வர். ''வாக்கு'' பற்றிய யோவானது போதகம் ''ஸ்தோயிக்கு'' வாக்கோடு கொண்டிருக்கும் தொடர்பைவிட, ஞானாகமங்களில் வரும் ஆட்தன்மைப்படுத்தப்பட்ட ஞானத்தோடும், கடவுளது ஆற்றல் மிக்க வாக்கு பற்றிய யூதர்களின் போதகத்தோடும் அதிகத் தொடர்புடையது எனத்தெரிகிறது. பீலோவின் நூல்களுக்கும், யோவானுக்கும் இணைவுத்தன்மையிருப்பதாகத் தெரிகிறது. இதைப் புற ஆதாரங்களின்றிப் பழைய ஏற்பாட்டுப் பின்னணியைக் கொண்டே விளக்கலாம். இவ்வாறு கூறிக்கொண்டே போகலாம். சுருங்கக் கூறின் ஆய்வாளர் கருத்துப்படி, கிரேக்கமோ, ஞானவாதமோ இந்நற்செய்தியைப் பாதிக்கவில்லை எனலாம்.

ஆனால், பாலஸ்தீன, யூதப் பண்பாடு இந்நற்செய்தியைப் பாதித்துள்ளது; அதன் கருத்தையும், நடையையும் பாதித்துள்ளது. அக்காலத்திய பழைய ஏற்பாட்டுக் கருத்துப் போக்கு யோவானில் காணப்படுகின்றது. இயேசு மெசியாவாகவும், யாவேயின் தேர்ந்தெடுக்கப்பட்ட ஊழியனாகவும், இஸ்ராயேலின் அரசராகவும், இறைவாக்கினராகவும் காட்டப்படுகிறார். பழைய ஏற்பாட்டிலிருந்து கொடுக்கப்படும் தெளிவான நேரடி எடுத்துக்காட்டுகள் சிலவேயானாலும், பழைய ஏற்பாட்டு ஆட்களையும்,

காட்சிகளையும் சுட்டிக்காட்டும் மறைமுக மான எடுத்துக்காட்டுகள் பல உள. *1:2-10* என்ற பகுதி ஆதியாகம முதல் அதிகாரத்தை யும், *8:31-58* ஆபிரகாமையும், *3:16* ஈசாக்கை யும், *4:5-10* யாக்கோபையும், *1:17; 5:46* மோசேயையும், *6:31-59* மன்னாவையும், *7:38* பாறையிலிருந்து தண்ணீர் வந்ததை யும், *3:14* பித்தளைப் பாம்பையும், *1:14* சந்திப்பின் கூடாரத்தையும், *10:35* நீதிபதி களையும், 10-ஆம் அதிகாரம் அரச ஆயனை யும் சுட்டுகின்றன. அதிகாரங்கள் 2-4 யூத நிறுவனங்களையும், அதிகாரங்கள் 5-10 யூதப் பெரும் விழாக்களையும் சுட்டு கின்றன. அரமேயிக்குப் பின்னணியை மிகுதியாகக் கொண்டுள்ளது இந்நற்செய்தி.

ஒத்தமை நற்செய்திகள் சிறப்பித்துக் கூறா தவற்றை யோவான் சிறப்பித்துக் கூறு கிறார். எழுபது நூலில், எசா *43:10-11. 25*-இலும் ஞானாகம இலக்கியங்களிலும் வரும் ''....நானே'' அல்லது ''நானே....'' என்ற சொல்வழக்கை யோவான் சிறப் பித்துக் கூறுகிறார் *(6:35; 10:7. 11;15:1)*. இச்சொல் வழக்கு மாற்கில் ஒரு முறை மட்டும் காணக்கிடக்கிறது (மாற் *6:50*). இயேசு மரித்துத் தம் தந்தையிடம் திரும்பிச் செல்லும் ''நேரம்'' உயிர்ப்பு, விண்ணேற்பு ஆகியவை *(2:4; 7:30;12:23; 17:1)* யோவா னில் முக்கியமானவை. அவை சிறப்பித்துக் கூறப்படுகின்றன. ஆனால், அவை ஒத்தமை நற்செய்திகளில் தற்செயலாகக் கூறப்படு கின்றன (மாற் *14:35.41*). தாமே இறை ஞானம் என்ற முறையில் இயேசு பேசுவது ஒத்தமை நற்செய்திகளில் சில இடங்களில் தான் காணப்படும் (மத் *11:9*; லூக் *11:49*). ஆனால், இவ்வகைக் கூற்றை யோவான் முழுவதிலும் காணலாம். தம்மையும் தமது வெளிப்பாட்டையும் விவரிக்க இயேசு பயன்படுத்தும் அப்பம், நீர் போன்ற உவமானங்கள் *(6; 7:37-39)* பழைய ஏற்பாட் டில் ஞானாகம நூல்களில் காணப்படுகின் றன (பழ *9:5*; உப *8:3*; எசா *55:1-3*; சீரா *24:18-20*): அவர் எடுத்தாளும் சொற்களும் கருத்துக்களும் பழைய ஏற்பாட்டின் வழக்கி லிருந்து எடுக்கப்பட்டவைகளாக இருக் கின்றன.

மேற்கூறியவற்றிலிருந்து பாலஸ்தீன, யூதப்பண்பாடு எவ்வளவு தூரம் யோவான் நற்செய்தியைப் பாதித்துள்ளது என்பதைச் சிறிது உணரலாம். இஃது, யோவான் தனிப்பாரம்பரியத்தைக் கொண்டது என்ற கொள்கைக்கும் ஏற்றதாகும். யோவான் சாக்கடல் சுருள் ஏடுகளோடு நெருங்கிய இணைவுத்தன்மை கொண்டுள்ளதாகவும் தெரிகிறது.

*12.* **நற்செய்தியில் ஒற்றுமை:**நாம் கொண் டிருக்கும் யோவான் நற்செய்தியின் நடை கரடுமுரடானது, திட்ட அமைப்பில் பல சிக்கல்களைக் கொண்டது. ஆகவே இஃது ஓர் ஆசிரியரின் வேலைப்பாடா, பலரது வேலைப்பாடா என்ற பிரச்சனை எழுகிறது. திறனாய்வு வருகைவரை, இந்நூலைச் செப தேயுவின் மகனும் அப்போஸ்தலருமான யோவான் எழுதினார் என்று ஏற்றுக் கொண்டனர். இப்போது இஃது அப்படியே ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. இந்நூல் இவ்வுருவம் எடுக்கப் பலர் உழைத்திருப்ப தாகத் தெரிகிறது. நூலில் ஒற்றுமை இருப்ப தாகத் தெரியவில்லை. நிகழ்ச்சியுரைப் பகு திகள் ஒரே சீராகச் செல்வதில்லை. சில பகுதிகள் அவற்றின் இயல்பான சூழ் நிலைக்குப் புறம்பாகத் தரப்படுவதாகத் தெரிகிறது. முன்னுரையில், நற்செய்தியில் வேறெங்கும் காணப்படாத கவிதைப் பண் பும், வார்த்தையானவர் ஆள்மயமாக்கப் படும் இறையியல் அழுத்தமும் காணப்படு கின்றன. யோவா *5:3-4* பல கையேடுகளில் காணப்படவில்லை. இப்பகுதி *5:7*-இல் வரும் ''தண்ணீர் கலங்கும்போது'' என் பதை விளக்க பிற்காலத்தில் புகுத்தப்பட்ட குறிப்பாகும். விபசாரப் பெண்ணைப் பற்றிய நிகழ்ச்சி *(7:53-8:11)*, நடையில் யோவானுடையதன்று; சூழ்நிலையோடு பொருந்தவில்லை. பல மூலக்கையேடு களில் இப்பகுதி காணப்படவில்லை. இந் நிகழ்ச்சியின் நடை லூக்காவின் நடையை ஒத்திருக்கிறது (இது நற்செய்திப் பாரம்பரி யத்தின் தனிப்பட்ட பகுதியாகும். பிற் காலத்தில் யோவானிலும் லூக்காவிலும் புகுத்தப்பட்டது. இப்பகுதி யோவானைச்

சார்ந்ததன்று என்றாலும், திரிதெந்தின் படிப் பினைப்படி இப்பகுதியும் இறையூக்கம் பெற்றது). முறைவைப்பு முறையில் பல முறிவுகளைக் கொண்டுள்ளது. சான்றாக, பொதுப்பணிக்கு இரு முடிவுகள் உள: *10:40-42;12:37-43.* இறுதிப் பிரியாவிடை உரையில் இரு முடிவுகள்: *14:31; 18:1.* சூழ்நிலைக்குப் பொருந்த இணைக்கப் பெறாத உரைகள்: *3:31-36; 12:44-50.* நற்செய் தியை வாசிப்போருக்கு நற்செய்தி *20:31*-ஆம் வசனத்தோடு முடிவுபெறுவது நன்கு தெரிகிறது. ஆயினும், *21*-ஆம் அதிகாரம் பிற் சேர்க்கையாகச் சேர்க்கப்பட் டுள்ளது. இது, *20*-ஆம் அதிகாரத்தில் காணப்படும் உயிர்ப்புக் காட்சிகளிலிருந்து முற்றிலும் தனிப்பட்ட காட்சிகளைத் தரு கிறது. இவ்வதிகாரத்தின் கிரேக்க நடை, நற்செய்தியின் மற்றப் பகுதிகளிலிருந்து வேறுபடுகிறது. இவ்வதிகாரத்தை அப் போஸ்தலரான யோவான் எழுதினாரா? இல்லையென்பர் அறிஞரில் பெரும்பா லோர். யோவான் இறந்தபின் அவரது சீடர்களில் ஒருவர் அல்லது பதிப்பாசிரியர் களில் ஒருவர் இப்பகுதியைச் சேர்த்திருக்க வேண்டும். திருச்சபையில் பேதுரு, ''இயேசுவின் அன்புச்சீடர்'' ஆகியோரின் நிலையைக் கூறவும், ''இயேசுவின் அன்புச் சீடர்'' இறந்ததைக் கூறவும் இப்பகுதி அமைக்கப்பட்டிருக்க வேண்டும். இந் நூலின் கடைசி வசனங்கள் *(21:24-25)* யோவானால் எழுதப்பட்டவையல்ல என்று உறுதியாகக் கூறலாம். ''இவரது சான்று உண்மையானது என நமக்குத் தெரியும்'' என்று கூறுவது அவரது சீடர்களின் படைப் பாகும். ஆயினும் இப்பகுதி, இந்நூல் பல இடங்களுக்குப் பரவுமுன்னே சேர்க்கப்பட் டிருக்க வேண்டும். ஏனெனில், எல்லாக் கையேடுகளிலும் காணப்படுகின்றது. இவை யாவும் யோவானது நற்செய்திக்குப் பொறுப்பான ஆசிரியர் ஒருவர் அல்லர்; நற்செய்தியாளரைத் தவிர ஒரு பதிப்பாசி ரியரோ, பலரோ இருந்திருக்க வேண்டும் என்று காட்டுகின்றன. ஒருவேளை இப் பதிப்பாசிரியர்கள் நற்செய்தியாளருடைய சீடர்களாக இருந்திருக்கலாம். இவர்கள் நற்செய்தியாளரிடமிருந்து ஏதாவது ஒரு விதத்தில் தோன்றிய உரைகளையும், நிகழ்ச் சிகளையும் நற்செய்தியில் புகுத்தியிருக்கக் கூடும். இவ்வாறு விவிலிய அறிஞர் பலர் கருதுகின்றனர்.

ஆகையால், இந்நூலின் ஒற்றுமையின் மைத் தோற்றத்தை விளக்கப் பல உத்தேசக் கொள்கைகள் தோன்றியுள்ளன. இந்நூல் சிறிது சிறிதாக எழுதப்பட்ட பகுதிகளின் தொகுப்பு; ஆகவே, இதில் ஒற்றுமையு மில்லை, ஒரு திட்டமும் இல்லை என்பர் சிலர். இந்நூலைப் பதிப்பித்தவர் தமது சொந்தக் கருத்துகளைப் புகுத்தி இந்நூலின் மூலத் திட்டத்தைத் திரித்து விட்டார் என்பர் வேறு சிலர். புல்ட்மன் போன்றவர்களின் கருத்துப்படி இந்நூல் மூன்று மூல நூல் களின் தொகுப்பாகும். வெளிப்பாட்டு உரைகளைக் கொண்டது முதல் மூலம். இதில் கவித்தன்மையுடைய உரைகள், ''....நானே'' என்ற பகுதிகள் அடங்கியிருக் கலாம். இரண்டாவது மூலம் இயேசுவின் அரும் அடையாளச் செயல்களைக் கொண்ட நூலாகும். இது கிரேக்க மொழி யில் எழுதப்பட்டிருக்கலாம். ஆயினும், செமித்திக்குத் தன்மை மலிந்ததாக இருந் திருக்க வேண்டும். மூன்றாவது மூலம் பாடுகளையும், உயிர்ப்பையும் கொண்ட நூலாம். புல்ட்மனின் கருத்துப்படி, முதல் இரண்டு மூல நூல்களும் வரலாற்று அடிப் படை கொண்டவை அல்ல. நற்செய்தி யாளர் தம் விருப்பம்போல் இவற்றைத் தொகுத்துத் தமது சொந்த இறையியல் சிந்தனைகளை வெளியிடுவதற்கு ஏதுவாகப் பயன்படுத்தியிருக்க வேண்டும். பிற்காலப் பதிப்பாசிரியர், இவற்றை மாற்றியமைத்துத் திருச்சபை அதிகாரிகளும் ஏற்றுக்கொள்ளக் கூடிய நூலாகப் பதிப்பித்தனர். இவ் வுத்தேசக் கொள்கைகள் எல்லாம், இந்நற் செய்தி வரலாற்று அடிப்படை கொண்டது அன்று என்ற முன் தீர்மானத்தின் விளைவு கள். இவை சிறிது காலத்திற்கு ஆய்வாளர் களின் கவனத்தைக் கவர்ந்தன. இப்போது இவை முக்கியம் வாய்ந்தவையாகக் கருதப் பெறுவதில்லை.

*13.* **பல பதிப்புக் கொள்கை:** இது சிறிது நம்பத்தகுந்ததாகும். நாம் கொண்டிருக்கும் வடிவில் யோவானுக்கு அடிப்படையாக, வாய்ப்பாரம்பரியமும், எழுத்துப் பாரம்பரியமும், பல பதிப்புகளும் இருந்திருக்க வேண்டும். இவற்றிற்கெல்லாம் மூல காரணமானவர் ஒரு நற்செய்தியாளர். இவரே இந்நூலுக்கு எழுத்து வடிவம் கொடுத்திருக்கலாம். இப்பாரம்பரியம் மீண்டும் மீண்டும் போதிக்கப்பட்டதால், சில மாறுபட்ட எழுத்து வடிவங்களும் எடுத்திருக்கலாம். அதையெல்லாம் சேர்த்து, பிற்காலப் பதிப்பாசிரியர் ஒரே நூலாக வெளியிட்டிருக்கலாம். நாம் கொண்டிருக்கும் யோவான் நற்செய்தியாளரிடமிருந்து நேரடியாக வந்த நூல் அன்று. பிற்காலப் பதிப்பாசிரியரது வேலைப்பாடாகும். இவர் இந்நூலுக்கு முழுமை அளித்திருக்க வேண்டும். இக்கொள்கைப்படி, இந்நற்செய்தியில் ஒற்றுமையும் திட்டமும் இருப்பதாகக் கொள்ளலாம். இக்கொள்கை, நற்செய்தியில் காணப்படும் உட்சான்றுகளுக்கும் பாரம்பரியப் புறச்சான்றுகளுக்கும் ஏற்றதாகவுளது. ஏனெனில், மூராத்தோரியம் போன்ற ஆதிகாலச் சான்றுகள், இந்நூலை எழுத நற்செய்தியாளரோடு பலர் தொடர்பு கொண்டிருந்தனர் என்று கருத இடந்தருகின்றன.

சிலர் இந்நற்செய்தியைத் திருத்தி அமைக்க முயன்றுள்ளனர். இதன்படி,

*(1)* யோவா *3:21*-ஐ அடுத்து *3:31-36* வரவேண்டும். அப்போது உரை தொடர்ந்து செல்லும். *3:22-30* என்ற பகுதியை *2:12* என்ற பகுதிக்கும், *2:13* என்ற பகுதிக்கும் இடையில் வைக்க வேண்டும். அப்போது இயேசுவின் பயணம் தொடர்புடையதாக இருக்கும். *2:1-12*-இல் இயேசு கலிலேயாவிலும், *3:22-30*-இல் யூதேயாவிலும், *2:13*-இல் எருசலேமிலும் காணப்படுவார் என்பர்.

*(2)* 6-ஆம் அதிகாரம் 4-ஆவது அதிகாரத்தின் பின் இடம் பெற வேண்டும். நாம் கொண்டிருக்கும் வடிவில் இப்பகுதியில் இயேசுவின் பயணம் சீருடையதாக இல்லை. மேற்கூறிய திருத்தத்தை ஏற்றுக் கொண்டால், *4:54*-இல் இயேசு கலிலேயாவில் இருக்கிறார்; அங்கிருந்து ஏரியைக் கடந்து *(6:1)* எருசலேமுக்குச் செல்கிறார் *(5:1)*; பின் கலிலேயாவிற்குத் திரும்புகிறார் *(7:1)*.

*(3) 7:25* என்ற வசனம், *7:14* என்ற வசனத்தையும், *7:5-24* என்ற பகுதி *5:47* என்ற வசனத்தையும் பின் தொடர வேண்டும். அப்போது இயல்பான தொடர்பு இருப்பதாகத் தோன்றும்.

*(4) 10:19-29* முன்னதாகவும், *10:1-18* பின்னதாகவும் இருக்கும்படி மாற்ற வேண்டும்.

*(5)* 15-ஆம் 16-ஆம் அதிகாரங்கள், பிரியாவிடை உரையின் முடிவாகிய *14:31*-க்கு முன் எப்படியாவது புகுத்தப்பட வேண்டும்.

*(6) 12:36*-ஐ அடுத்து, *12:44-50* வர வேண்டும்.

*(7) 18:24*-ஐ அடுத்து, *18:14-23* வர வேண்டும்.

இவ்வாறு பல திருத்தங்களைக் கூறுவர். ஆயினும் இவை ஒன்றிற்காவது, ஏடுகளிலோ, மற்றச் சான்றுகளிலோ அடிப்படையிருப்பதாகத் தெரியவில்லை.

இத்திருத்தங்கள் இயேசுவின் பயண வரலாற்றைச் சீர்திருத்தும் நோக்கோடு கூறப்படுகின்றன. ஆனால், நற்செய்தியாளர் பயணத்தை முக்கியமாகக் கருதியதாகத் தெரிகிறது. ஆகையால், நாம் கொண்டிருக்கும் வடிவிலேயே நூலை ஏற்று விளக்கம் கூறுவது சாலச்சிறந்ததாகும். அப்போது ஆசிரியரின் கருத்து நோக்கிலிருந்து சிறிதும் வழுவோம். இதுவேதான் தற்கால விளக்கவுரையாசிரியர்களின் போக்கும் ஆகும்.

*14.* **இந்நூலின் திட்டம்:** இந்நற்செய்தியில் ஓர் ஒற்றுமையிருக்கிறது, ஒரு திட்டம் இருக்கிறது என்று ஏற்று இந்நூலைநோக்குவது நன்று. ஆயினும் இத்திட்டத்தை வரையறை செய்தல் எளிதன்று. பலர் பலவிதமாக இந்நூலைப் பிரித்துத் திட்டம் செய்வர். அவற்றில் சிலவற்றை இங்குத் தருகிறோம். ''ஆல்லே'' என்பவர் இந்நற்

செய்தி ஐந்து பெரும் பிரிவுகளையும், உயிர்த்த இயேசுவைப் பற்றிய விவரிப்பை யும் கொண்டுள்ளது என்பார். இவ்வைந்து பிரிவுகளும் வருமாறு: முதல் வெளிப் பாடு:*1:19-4:42*; கலிலேயப்பணி: *4:43-7:9*; இயேசுவின் ஆள்தன்மையும், அவரது தூது ரையும் *7:10-11:57*; ''புனித வார நிகழ்ச்சி கள்'' *12:1-17:26*; பாடுகள்: *18:1-19:42*. மோலட் என்பார் இந்நற்செய்தி முன்னுரைக்குப்பின், யூத வழிபாட்டு விழாக்களை ஒட்டி ஒன்பது பிரிவாகப் பிரிக்கப்பட்டிருப்பதாகக் கூறு வார். அவை: மெசியாவின் முதல் வாரம்: *1:19-2:11*; முதல் பாஸ்கு : *2:12-4:54*; ஓய்வு நாள்: *5:2-37*; இரண்டாவது பாஸ்கு : *6:1-71*; கூடாரங்களின் விழா : *7:1-10:21*; அபிடேக விழா : *10:22 - 11:54*; மூன்றாவது பாஸ்கு: *11:55-19:42*; உயிர்ப்பும் காட்சி களின் வாரமும் : *20:1-20*; பிற்சேர்க்கை: *21:1-25*.

புயிலே, தோது, மெக்கன்சீ ஆகியோர் இந்நற்செய்தியை இரு பெரும் நூலாகப் பிரிக்கின்றனர். *1-12* அதிகாரங்களை ''அடையாளங்களின் புத்தகம்'' என்றும், *13-20 (21)* அதிகாரங்களைப் ''பாடுகளின் புத்தகம்'' என்றும் அழைக்கின்றனர். இவர் களைப் பின்பற்றி இந்நூலின் திட்டத்தைச் சிறிது நோக்குவோம்.

I. முன்னுரை *(1:1-18)*.

II. அடையாளங்கள் மற்றும் செயல்களின் நூல் *(1:19-12:50)*.

அ) *1:19-2:12* : பணியின் தொடக்கமும் சீடர்களை அழைத்தலும்.

ஆ) *2:13-4:54* : பழைய ஏற்பாட்டு நிறு வனங்கள் அகற்றப் படு தல்.

இ) *5:1-10:42* : யூத விழாக்கள் அகற்றப் படுதல்.

ஈ) *11:1-12:50* : இலாசரை உயிர்ப்பித்தலும் அதன் விளைவுகளும்.

III. மகிமையின் நூல் *(13:1-20:31)*.

அ) *13:1-17:26*: இறுதி இரவுணவும் அற வுரைகளும்.

ஆ) *18:1-19:42* : பாடுகளும் இறப்பும்.

இ) *20:1-31* : உயிர்ப்பும் காட்சிகளும்.

IV. முடிவுரை: பிற்சேர்க்கை *(21:1-25)*.

புயிலேயின் கருத்துப்படி, இந்நற்செய்தி நாடகப் பாணியைக் கொண்டுள்ளது. அதிலே, இருவகை இயக்கம் காணப்படு கிறது: ஒன்று இயேசுவின் ஆள்தன்மை, தூது ஆகியவை பற்றிய வளர்ச்சியான வெளிப்பாடும், அவரது சீடர்களின் விசு வாச வளர்ச்சியும்; மற்றது, யூதர்களுடைய அவிசுவாசமும், அவர்கள் அவரை மரணத் திற்குத் தீர்வையிட்ட கொடூரச் செயலும். இவ்விரு இயக்க வளர்ச்சியிலே, இயேசு, தாம் ஒரு புதிய மீட்புத் திட்டத்தை நிறுவுபவர் என்று வெளிப்படுத்துகிறார். புத்துயிர் அளிக்கும் திருமுழுக்கோடும் ஆவியின் வருகையோடும் *(1:19-4:42)* கூடிய புதிய உடன்படிக்கையை நிறுவுகிற மெசியாவாக தம்மை வெளிப்படுத்துகிறார். பின் இயேசு, பிதாவோடு வாழ்வின் ஊற்றாகவும் *(4:43-5:47)*, வாழ்வின் உயிர் தரும் உணவாகவும் *(6:1-71)*, உலகின் உயிராகவும், ஒளியாகவும் *(அதி. 7-12)* வெளிப்படுத்துகிறார். பின் அன்பு, ஆறுதல், ஒற்றுமை முதலிய கருத்துக்களை மைய மாகக் கொண்டு தம்மையே தமது சீடர் களுக்கு மிக நெருங்கிய விதத்தில் வெளிப் படுத்துகிறார் *(அதி. 13-17)*. இவ்வெளிப் பாடு, இயேசுவின் மீட்பளிக்கும் இறப் பிலே, அதாவது, அவரது ''நேரத்திலே'', உச்சநிலையடைகிறது *(அதி. 18-19)*.

**15. இலக்கியப்பண்பு:** யோவான் பயன் படுத்தும் சொல் தொகுதி வரைக்குட்பட்ட தாகும்; ஆனால், போதுமானதாகும். சொற் றொடர் இலக்கணம் சிறிது கடினமானது. நடை ஒரே தன்மையுடையதாயும், ஓரளவு சலிப்பைத் தரக்கூடியதாகவுமுள்ளது. ஆயி னும், ஒரு தனிச்சிறப்புடையது. யோவா னது திருமுகங்களைத் தவிர, இதனோடு ஒத்த நடையுள்ள நூல்கள் புதிய ஏற்பாட் டில் இல்லை. புதிய ஏற்பாட்டை நன்கறிந் தோர் இந்நடை யோவானுடையது என்று குறிப்பிடுதல் எளிது. அவரது நடை கிரேக்க

இலக்கியத் தன்மையைக் கொண்டதன்று; ஆனாலும், மக்களது கிரேக்க மொழியு மன்று. வேண்டுமென்றே திரும்பத்திரும்பக் கூறுவது ஓர் அளவு சலிப்பைத் தந்தாலும், அது பெருமிதமான உயர்நிலையை ஏற் படுத்துகிறது எனலாம். யோவானில் எல் லோராலும் போற்றப்படும் விழுப்பம் இருக்கிறது. இதனை அடைய ஆசிரியர், இலக்கிய நயத்தைப் பயன்படுத்தவில்லை. மாறாக, எளிமையாலும், ஆழமுடைமையா லும் இதனை அடைய விழைகிறார், அடைகிறார்.

ஆசிரியரது விவரிப்புகள் உயிர்ச்சித்திரம் போன்றவை. இதில் மாற்கு மட்டும்தான் யோவானை மிஞ்சியவர் எனலாம். நடை செமித்திக்குப் பண்பை அதிகமாய்க்கொண் டுள்ளது. அதிகமாக இணைவுத்தன்மை யுண்டு. இலக்கணத் தொடர்பற்ற தனிப் பட்ட வாக்கியங்களைக் கொண்ட இலக் கிய அமைப்புகள் உண்டு. சிலவற்றை ''உட்பகுதியாக அமைக்கும்'' வழியையும் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர். இவ்வழி யாவது, ஒரு பகுதியைச் சிறப்பித்துக் காட்ட அப்பகுதியைத் தொடங்கிய சொற் றொடர்களாலேயே, அப்பகுதியை முடித்து, அஃது ஒரு தனிப்பகுதி என்று காட்டுதலாகும். இந்நூல், அரமேயிக்குத் தன்மையுடையது மொழிபெயர்ப்போடு கூடிய பல அரமேயிக்குச் சொற்கள் பயன் படுத்தப்படுகின்றன: யோவா *1:38. 41. 42; 4:25; 9:7; 11:16; 19:13.17; 20:2.* ஒத்தமை நற்செய்திகளை ஒத்த பகுதிகளில், யோவான் பிற நற்செய்திகளில் இல்லாத அரமேயிக்குச் சொற்களைப் பயன்படுத்து வார். சான்றாக, பிறர் கிறிஸ்டோஸ், பெத்ரோஸ் என்ற சொற்களைப் பயன் படுத்தினால், யோவான், மெசியா, கேபா என்ற சொற்களைப் பயன்படுத்துவார். இவற்றை மனதில் கொண்டு பலர், நாம் கொண்டிருக்கும் நான்காம் நற்செய்தி அர மேயிக்கிலிருந்து மொழிபெயர்க்கப்பட் டிருக்க வேண்டும் என்பர். ஆனால், அறிஞருள் பலர், இதனை ஏற்க மறுப்பர். ஏனெனில், இந்நூலின் கிரேக்க நடையை யும், போக்கையும் நோக்குமிடத்து இஃது ஒரு மொழி பெயர்ப்பாகத் தெரியவில்லை. ஆயினும், இந்நூல் செமித்திக்குப் பின் னணியைக் கொண்டுளது என்பது உண்மை. இதனை மனத்தில் கொண்டால், இந்நூலை நன்கு புரிந்து கொள்ள முடியும். இந்நற் செய்தியின் சில பகுதிகள், முதலில் அரமே யிக்கில் எழுதப்பட்டிருக்கலாம்.

நமது சிந்தனைப்போக்கு எண்ணத் தொடர்புடையது. அதாவது, ஒன்றிலிருந்து ஒன்றைப் பகுத்தறிவு ஆராய்ச்சியுடன் முடிவு செய்வோம். யோவான் இம் முறையைக் கையாள்வதில்லை. எண்ணத் தொடர்புக்குப் பதிலாக உருவக முறையை யும், கற்பனைச் சித்திர முறையையும் கையாள்வர். உதாரணமாக, நாம், கிறிஸ்துவே தேவ அருளின் ''ஊற்று'' என்று கூற விரும்புவதை யோவான், ''நான் திராட்சைக் கொடி; நீங்கள் அதன் கிளைகள்'' என்று இயேசு கூறுவதாகத் தருவார் *(15:5)*. இவ்வுருவக முறையை நன்குணர்ந்தால் யோவானது செய்தியையும் நன்கு அறி வோம்.

யோவான் பகுத்தறிவாராய்ச்சியுடன் எழு தவில்லை. அத்தகைய ஆராய்ச்சி செய்வது அவரது நோக்கமுமன்று. அவர், இயேசுவே மெசியா என்று சான்று கூறுகிறார்; அவர் மேல் மக்களுக்குள்ள விசுவாசத்தை உறுதிப் படுத்துகிறார்.

யோவான் தொடர்ச்சியான தர்க்கவாதத் தால் ஒரு கட்டுரை வரையவில்லை. மாறாக, கிறிஸ்து என்னும் மையத்தைச் சுற்றி அவரது சிந்தனைகள் சுழல்கின்றன. இத்தகைய உண்மையின் ஒவ்வொரு பகுதி யையும் எடுத்து அறிய முயன்று, அதன் முழு உண்மையையும் மனித வார்த்தை களால் விவரிக்க முயல்கிறார். அவரது சிந்தனை கிறிஸ்துவைப் பொது மைய மாகக் கொண்ட வட்டங்களாக அமை கிறது. யோவான் கருத்துப்படி, கிறிஸ்து ஒளி, உயிர், உண்மை ஆவார். இந்த உருவகங்கள் கிறிஸ்துவில் தனித்தனியே காணப்படும் பண்புகள் மட்டும் அல்ல;

முழுக்கிறிஸ்துவையே குறிக்கின்றன; ஆகையால், ஒன்றுக்கொன்றாக மாற்றப் படக்கூடியன. கிறிஸ்துவே உயிர், கிறிஸ் துவே ஒளி, கிறிஸ்துவே உண்மை. கிறிஸ்து ஒவ்வொன்றின் நிறைவாயும், இவையெல் லாம் சேர்ந்த முழுமையாயும் விளங்கு கிறார்.

நற்செய்திகள் நான்கிலும், யோவானில் மட்டும்தான் ஆசிரியர், தமது சொந்தச் சிந்தனைகளைத் தருகிறார் *(1:15-17; 3:16-21; 3:31-35; 12:37-43.44-50)*. சில சமயம், ஆசிரியரது சிந்தனைகளை இயேசுவின் வார்த்தைகளிலிருந்து பிரித்துக்காட்டுவது கடினம். இயேசுவின் வார்த்தைகள் எங்கு முடிகின்றன, ஆசிரியரது சிந்தனையும் விளக்கமும் எங்குத் தொடங்குகின்றன என்று சுட்டிக்காட்டுவது விளக்கவுரையா ளர் கடமை. ஏனெனில், ஒன்றிலிருந்து மற்றதற்கு அவ்வளவு எளிதாக ஆசிரியர் பாய்ந்து செல்வார். யோவானில் காணப் படும் இயேசுவின் வாத்தைகளின் நடையும் தொனியும், ஒத்தமை நற்செய்திகளில் காணப்படும் இயேசுவின் வார்த்தைகளின் நடை, தொனியிலிருந்து குறிப்பிடத்தக்க முறையில் வேறுபடுகின்றன. அறிஞருள் பலர், ஒத்தமை நற்செய்திகள் இயேசுவின் வார்த்தைகளை மூல வடிவில் கொண்டி ருக்க, யோவான் தமக்கே உரிய முறைப்படி இயேசுவின் வார்த்தைகளைத் தருகிறார் என்பர். இயேசுவின் வார்த்தைகள் அற வுரை வடிவில் யோவானில் தரப்படுகின் றன. இந்த அறவுரைகள் தனிப்பட்ட தலைப்புகளின் விவரிப்பாக அமைகின்றன. இந்த விவரிப்பு, கிரேக்கத் தர்க்கவாத முறையையோ, யூத ராபிகள் முறை யையோ சார்ந்ததன்று. ஒரு தனிப்பட்ட உள்ளுணர்வின் பயனால், இறையொன்றிப் பின் பயனால் மலர்ந்த மலராகும். தலைப்புச் சார்ந்த விவரிப்பானாலும், ஒரு பகுதியிலிருந்து மற்றப் பகுதிக்குச் செல் லும்போது அதில் வளர்ச்சியைக் காண்கி றோம். ஏதாவது ஒரு நிகழ்ச்சியிலிருந்து இவ்வறவுரைகள் எழுகின்றன. ஏதாவது ஒரு நிகழ்ச்சியை ஒட்டி கிறிஸ்து ஒரு மறை உண்மையைப் பறை சாற்றுவார். இப்பறை சாற்றலைக் கேட்போர் தவறாகப் புரிந்து கொள்வர். ஐயமும் கேள்வியும் எழும். இவற்றிற்கு விளக்கம் அளித்துப் பதில் கூறப்படும். இவ்விளக்கமும் பதிலுமே மற்றுமொரு மறை உண்மையைப் பறை சாற்றும். இவ்விதம் அறவுரை நீளும். இத்தன்மை ஒத்தமை நற்செய்திகளில் காணப்படுவதில்லை. மேலும், யோவா னில் செவி மடுப்போரின் மனப்போக்கும், பதிலும் எப்போதும் குறிக்கப்படும். இந் நூலை வாசித்துக் கொண்டு செல்லும் போது, விசுவாசமும், அவிசுவாசமும் வளர்ந்து உச்சநிலை அடைதலைப் படிப் படியாகக் காணலாம்.

**16. யோவான் ஓர் இறையியல் வல்லுநர்; அவரது நற்செய்தி ஓர் இறையியல் நூல்:**

**(அ)** ஒவ்வொரு நற்செய்தியாளரும் ஓர் இறையியல் வல்லுநர். இவ்விறையியல் நோக்கு அவர்களது கிறிஸ்துவின் வர லாற்று விவரிப்பைப் பாதித்துள்ளது; அதற்கு ஒரு திருப்பத்தைக் கொடுத்துள்ளது. அவர்கள் வெவ்வேறு விதத்தில் இறையி யல் நோக்குடையவர்கள். அதனைச் சிறப் பித்துக் கூற முயன்றுள்ளனர். அப்படியி ருக்க, இந்நூல் மற்ற நற்செய்திகளைவிட, சிறப்பான முறையில் இறையியல் தன்மை யுடையது என்று நெடுங்காலமாகக் கருதப் பட்டு வந்துள்ளது. அலக்சாந்திரியா கிள மந்து, யோவானை ஓர் ''ஆன்மீக நற்செய்தி'' என்று அழைத்துள்ளார். ஏன் என்று சிறிது ஆராய்தல் நன்று.

இந்நூல் ஓர் இறையியல் நூல் என்று கூறும்போது, தற்காலப் பொருளில் ஒரு திட்டம் செய்யப்பட்ட நூல் என்று கருது வது தவறாகும். இறையியல் என்ற சொற் றொடரின் மூலப்பொருள், இறைவனைப் பற்றிய அறிவு, இறைக்காரியங்களைப் பற்றிய அறிவு என்பதாகும். இப் பொருளைக் கருத்தில் கொண்டால், யோவான், சிறப்பான முறையில் ஓர் இறையியல் நூல் என்பது தெரியும். மற்ற நற்செய்தியாளரைவிட யோவான் மீட்பு மறையுண்மையை ஊடுருவி ஆராய்ந்துள்

ளார். இந்நூல் இயேசு, கிறிஸ்து (மெசியா) என்பதன் பொருளை ஆழமாய் வெளியிடக் காண்கிறோம். இந்நூல் இயேசு கிறிஸ்து என்ற தேவ ஆளைப் பற்றிய நற்செய்தியா கும். முன்னுரை *(1:1-18)*, முதற்பகுதியின் முடிவுரை *(12:37-50)*, முழுநூலின் மூலமுடி வுரை *(20:30-31)* ஆகியவற்றைப் படிக்குங் கால் ஆசிரியரது நோக்கம், இயேசுவையும், அவரது வாழ்வின் மறைபொருளையும் எடுத்து விளம்புவதே எனத் தெரிகிறது. இந்நற்செய்தியில் வரும் குறிப்பு அடை யாள முறையும் இதை உணர்த்துகிறது. யோவானின் முக்கிய தலைப்புகளாகிய திருமுழுக்கும் நற்கருணை, விசுவாசம், உயிர், ஒளி, உண்மை, அன்பு, பாவம், ஆவி, வார்த்தை ஆகியவையும் இந்நூலில் தனிப்பட்ட முறையில் விளக்கப் பெறுகின் றன. இவ்விளக்கங்கள் யாவும் கிறிஸ்துவை மையமாக வைத்துச் சுழல்கின்றன. ஒத் தமை நற்செய்திகளில் கூறப்படுவதைவிட இந்நூலில் அருட்கருவித்தன்மை சிறப் பித்துக் கூறப்படுகிறது. தமது விளக்கத் திற்கு ஆசிரியர் பயன்படுத்தும் குறிப்பு அடையாள முறையும் சிறப்புடன் விளங்கு கிறது. இது பற்றிச் சிறிது பார்ப்போம்.

***(ஆ). குறிப்பு அடையாளம்:*** ஒவ்வொரு அறவுரையும் ஒரு நிகழ்ச்சியிலிருந்து எழு கிறது. அறவுரையின் பொருளை அடை யாளத்தால் குறிக்குமாறு ஒவ்வொரு நிகழ்ச் சியும் அமைக்கப்பெறுகிறது. இதனையே குறிப்பு அடையாளம் என்கிறோம். இவ் வடையாள நிகழ்ச்சி ஒவ்வொன்றும் ஓர் அருஞ்செயலாக (புதுமையாக) இருக்க வேண்டுமென்பதில்லை. இந்நூலில் அடை யாள நிகழ்ச்சிகளெல்லாம் அருஞ்செயலாக இருந்தாலும் *(2:11; 4:54; 6:14;12:18)*, இயேசு வின் பிற செயல்களும் அடையாளச் செயல்களே. சான்றாக, யோவா *1:1*-இல் ஆதி *1:1* எதிரொலிக்கிறது. மேலும், வார்த்தை மனிதனாதல், புதியதோர் படைப்பு தொடங்குகிறது என்று சுட்டு கிறது. ஆலயத்தைச் சுத்தி செய்தலும் *(2:13-25)*, சீடர்களின் பாதங்களைக் கழுவு தலும் *(13:1-20)* குறிப்பு அடையாளச் செயல்களே. ஒவ்வொரு நிகழ்ச்சியிலு முள்ள குறிப்பு அடையாளத்தை நாம் உணர முயல வேண்டும்.

இக்குறிப்பு அடையாளத்தையும், அருஞ் செயல்களையும் ஒப்பிடும்போது ஆசிரிய ரது நோக்கை நன்கு அறிகிறோம். ஒத்தமை நற்செய்தியாளர்கள் இயேசுவின் மெசியா ஆற்றலை வெளிப்படுத்தும் நோக்குடன் அருஞ்செயல்களை விளக்குகின்றனர். இவற்றில் இயேசு தமக்குப் பிசாசின் மேலும், இயற்கையின் மேலும் உள்ள அதிகாரத்தைக் காட்டுகின்றார். இவ்வதிகா ரம் இறையரசு வந்து விட்டது என்பதைக் காட்டுகிறது. ஆனால், யோவான் இந்நோக் கைச் சிறப்பாகக் கருத்தில் கொண்டதாகத் தெரியவில்லை. அவரது ஆர்வம், இவ் வருஞ்செயல் எதைச் சுட்டுகிறது, அதன் பொருள் என்ன என்று காட்டுவதிலேயே அடங்கியிருக்கிறது. எடுத்துக்காட்டாக குரு டனுக்குப் பார்வை வழங்கும் அருஞ்செயல் *(9:1-12)*, இயேசு அளிக்கும் ஞான ஒளிக்கு அடையாளமாக உள்ளதைக் கூறலாம். இவ் வருஞ் செயல் இயேசுவே ஒளி எனச் சுட்டுகிறது. இவ்வுண்மையை அதன்பின் வரும் அறவுரை விளக்குகிறது. இவ்விதமே இந்நூலின் பல பகுதிகள் அமைந்துள்ளன. அருஞ் செயல்கள், வெறும் அருஞ்செயல் களாக மட்டும் காட்டப்பெறவில்லை. இயேசுவின் வழியாக வரும் இறைவனது மீட்புச் செயலாகக் குறிக்கப்படுகின்றன. இவ்வருஞ்செயல் இம்மீட்பின் முன்நிகழ்வு அடையாளங்களாகும். யோவானில் வரும் எண்ணிக்கைகள் அடையாளப் பொருளைக் கொண்டிருக்கலாம் என்று எண்ண இட மிருக்கிறது. சான்றாக, இந்நற்செய்தியில் இயேசு செய்த ஏழு அருஞ்செயல்கள் *(2:1-11; 4:47-54; 5:1-15; 6:1-15; 6:16-21; 9:1-12; 11:1-46)*, இயேசுவைப் பற்றிய ஏழு சான்றுகள் *(1:14-34; 1:49 (15:27); 5:37; 8:14;5:36 (16:38); 5:39; 15:26)*, இயேசுவின் ஏழு இயல்புகள் *(6:35-51; 8:12 (9:5); 10:7.9; 10:11.14; 11:25; 14:16; 15:1)* காணப்படுகின் றன. இந்த ஏழு என்ற எண்ணை இயேசு வின் நிறைவைக் குறிக்கும் அடையாளப்

பொருளில் ஆசிரியர் பயன்படுத்தி யிருக்கலாம்.

ஆலோ, புயிலே போன்ற அறிஞர்கள் இந்நூலின் குறிப்பு அடையாளத் தன்மை யைப் பின்வருமாறு சுருக்கிக் கூறுவர். முன்பு கூறியதுபோல் முன்னுரை புதிய தோர் படைப்பைச் சுட்டுகிறது. திரு முழுக்கு யோவானது சாட்சிக்கும், கானா வூர் நிகழ்ச்சிக்குமிடையில் ஏழு நாட்கள் உள. தண்ணீர் விசுவாசத்திற்கும், திருமுழுக் குக்கும், சுத்திசெய்தலுக்கும் அடையாள மாக உளது. இரசமோ இரத்தம், பலி, அன்பு, நற்கருணை ஆகியவற்றிற்கு அடை யாளமாக உளது. நிகழ்ச்சிகளையும் அற வுரைகளையும் எட்டுப் பகுதிகளாக அமைக்கலாம்: 1) கானாவூர் அருஞ்செயல் களில் தண்ணீர், இரசம் ஆகிய இரண்டும் திருமுழுக்கில் தொடங்கி நற்கருணையில் இயேசுவின் இறப்போடு கொள்ளும் ஒன் றிப்பைச் சுட்டுகின்றன. 2) ஆலயத்தைத் தூய்மை செய்வது இயேசுவே புதிய ஆல யம் எனக்காட்டுகிறது. 3) நிக்கோதேமு, சமாரியப்பெண் ஆகியோர் பற்றிய நிகழ்ச்சி கள், யூதர்களுக்கும் புற இனத்தவர்களுக் கும், ஆணுக்கும் பெண்ணுக்கும் யாவருக் கும் திருமுழுக்கில் அளிக்கப்படும் புத்துயிர் இயேசுவே என்று காட்டுகின்றன. 4) இயேசு அரச அலுவலரின் மகனுக்கு உயிர் அளிக்கிறார். 5) பக்கவாதக்காரனுக்கு இயேசு கூறிய வார்த்தைகள் குணமளிக்கும் நீரின் ஆற்றலைக் கொண்டுள்ளன. 6) நற் கருணையில் இயேசுவே உயிர் அளிக்கும் அப்பம், புதிய மன்னா என்று குறிக்கப்படு கிறது. 7) இயேசுவே உலகின் ஒளி; யூதர் களின் குருட்டுத்தன்மைக்கு மாறாக, குருட னுக்கும் நீரின் உதவியால் பார்வை அளிக் கிறார். 8) கல்லறையின் இருளிலிருந்து, வாழ்வின் ஒளிக்கு வருகிறார் இறந்த இலாசர். இஃது இயேசுவே உயிர்ப்பு என்று காட்டுகிறது.

இவ்வாறு இந்நூலின் குறிப்பு அடை யாளத்தன்மையை அழுத்திக் கூறும்போது, இஃது இந்நூலின் உண்மைத் தன்மையை யும், வரலாற்றுத் தன்மையையும் பாதிக்காத வாறு அழுத்திக்கூற வேண்டும். ஏனெனில், கடந்த காலத்தில் தமது அடையாளப் பொருளை விளக்க, யோவான் தமது நிகழ்ச்சிகளைக் கற்பனை செய்துள்ளார்; ஆகவே, இந்நூல் வரலாற்றுத் தன்மையுடை யது அன்று என்று கூறியுள்ளனர் சிலர். இப்படிக் கூறப்படும்போது, ஆசிரியரது நோக்கத்தைக் காண வேண்டும். நசரேத்தூர் இயேசு ஓர் உண்மையான வரலாறு சார்ந்த ஆள், அவரே மெசியா, இறைவனின் மகன் என்று காட்ட விழைகிறார் ஆசிரியர். அப்படியிருக்க அவர் நிகழ்ச்சிகளைக் கற் பனை செய்தார் என்றால், அஃது அவரது நோக்கத்திற்கு மாறான விளைவைக் கொடுக்கும். ஆகவே, இந்நிகழ்ச்சிகளை ஆசிரியர் கற்பனை செய்யவில்லை. ஆனால், தமது நோக்கத்திற்கு வேண்டிய நிகழ்ச்சிகளை மட்டும் பொறுக்கி எடுத்தார். தமது குறிப்பு அடையாளத்தை விளக்கு மாறு சில சிறு விவரங்களை மாற்றியமைத் திருக்கக்கூடும். இந்நூலின் நிகழ்ச்சிகள் வரலாற்று நிகழ்ச்சிகளாயிருப்பதால்தான் அவற்றின் குறிப்பு அடையாளத்தன்மை சிறப்புறுகிறது என்பதை மறவாதிருப்பது நலம்.

(இ) யோவானில் மற்றொரு தன்மை யுண்டு. அஃது, இரு பொருள் மயக்க முடைய சொற்களைப் பயன்படுத்துதலா கும். இச்சொற்கள் மேலெழுந்தவாரியாக ஒரு பொருளையும், ஆழ்ந்த மற்றொரு கருத்தையும் உணர்த்தவல்லன. செவிமடுப் போர் மேலெழுந்தவாரியாகப் பொருள் கொள்வர். இயேசு இவற்றிற்கு விளக்கம் அளித்து, அச்சொற்களின் ஆழ்ந்த கருத்தை வெளிப்படுத்துகிறார். எடுத்துக்காட்டாக 2:19-இல், இயேசு குறிக்கும் ''ஆலயம்'', யூதர்கள் எண்ணியதுபோல், அப்போது கட்டப்பட்ட ஆலயத்தை உணர்த்தவில்லை; இயேசுவின் உடலாகிய ஆலயத்தைக் குறிக் கிறது (2:22). 3:3.7-இல் வரும் ''மேலிருந்து பிறத்தலைக்'' குறிக்கும் வார்த்தைக்கு, ''மீண்டும்'' என்ற மற்றொரு பொருள் உண்டு. இப்பொருளையே நிக்கோதேமு எடுத்துக்கொள்கிறார் (3:4). இயேசு இதற்கு

விளக்கம் அளித்து, மனிதன் எவ்விதம் நீரினாலும், ஆவியினாலும் மேலிருந்து பிறக்கிறான் என்ற உவமைப் பொருளை வெளிப்படுத்துகிறார். இதே போன்று *3:14; 8:28; 12:32*-இல் வரும் உயர்த்தப்படுதலுக்குச் ''சிலுவையில் அறையப்படுதல்'', ''இயேசு தமது உயிர்ப்பு, விண்ணேற்றத்தில் மகிமைப்படுதல்'' என்று இருபொருள் உண்டு. பின்னதையே நற்செய்தியாளர் கருத்தில் கொண்டுள்ளனர். ''உயிருள்ள தண்ணீர்'' என்ற சொற்றொடர், சமாரியப் பெண் எடுத்துக் கொண்ட சாதாரணத் தண்ணீரையும், இயேசு குறித்த ''இறைவனின் சுதந்தரக் கொடையாகிய'' ஆன்மீகப் பொருளையும் உணர்த்தவல்லது. இச்சொற்றொடர் *7:38*-க்குப் பின் பரிசுத்த ஆவியைக் குறிக்கிறது. ஆறாம் அதிகாரத்தில் ''மன்னா'' என்ற சொல் பழைய ஏற்பாட்டு மன்னாவை முதலில் குறிக்கிறது; பின், இயேசுவையும், இறுதியில் நற்கருணையையும் குறிக்கிறது. இப்படி இருபொருள் மயக்கமுடைய சொற்களைப் பயன்படுத்தும் முறையை *7:33-36*-இல் வரும் ''செல்லுதல்'', *8:33-36*-இல் வரும் ''அடிமைகளாயிருத்தல்'', *11:11-14*-இல் வரும் ''தூங்குகிறான்'', ''எழுப்புதல்'' ஆகிய சொற்களிலும் காணலாம்.

இவ்வாறு இயேசு தாம் கருதிய முழுமையான ஆழ்ந்த கருத்தையே உணர்த்த விரும்புகிறார். ஆனால், செவிமடுப்போர்தான் மேலெழுந்த வாரியாகப் பொருள் கொள்கின்றனர். ஆகையால், நான்காம் நற்செய்தியை ஆராயுங்கால், இந்த இருபொருள் மயக்க வழக்கை மனதிற் கொள்ள வேண்டும். நற்செய்தியாளர் இரு பொருளையும் கருத்தில் கொண்டு இச்சொற்களைப் பயன்படுத்துகிறார் எனலாம். இதில் அவரது நோக்கம் யாது? நாம் இந்நூலின் உண்மைகளை மேலெழுந்தவாரியாக உணராமல், இச்சொற்கள் உணர்த்தும் ஆழ்ந்த, ஆன்மீகப் பொருளை உணர வேண்டும் என்பதே. இயேசுவின் செயல்கள் மட்டும் ''அடையாளங்கள்'' அல்ல; அவரது வார்த்தைகளும் அடையாளங்களாகும். இயேசுவின் வார்த்தைகளாயிருப்பதால் அவை ''முடிவில்லாத வாழ்வு தரும் வார்த்தைகளாக'' இருக்கின்றன *(6:68)*. ஆகவே, அவை ஆழ்ந்த பொருளையுடையன என்பதை இந்த இருபொருள் மயக்க வழக்கு உணர்த்துகிறது.

*(ஈ)* ஒத்தமை நற்செய்திகளோடு ஒப்பிடுகையில், இயேசுவைப் பற்றிய பல சிறப்பான செயல்கள் யோவானில் கூறப்படவில்லை. இஃது இறையரசைப் பற்றிய நற்செய்தியன்று; மாறாக, உலகம் தோன்றும் முன்னே வாழ்ந்த இறையாள் மனிதனான இயேசு கிறிஸ்துவைப் பற்றிய நற்செய்தியாகும். வெளியடையாளங்களால், ''இயேசு எனும் ஆளைச்'' சிறிது சிறிதாக நற்செய்தியாளர் கண்டுபிடிக்கிறார் எனலாம். இயேசுவைப் பற்றிய வெளிப்பாடு, இயேசு, திருமுழுக்கு யோவானைச் சந்தித்து அவருடைய சாட்சியைப் பெற்றதிலிருந்து தொடங்குவதாக இந்நற்செய்தி காட்டுகிறது. இவ்வெளிப்பாடு யோவான் நற்செய்தியின் மையக் கூறுகளான இறப்பு, உயிர்ப்பு, விண்ணேற்பு ஆகியவற்றில் உயர்வு நிலை அடைகிறது *(1:51; 3:13; 5:20; 6:62; 8:28; 16:25-30)*. இந்நூலில் வரும் இயேசுவின் வெளிப்பாட்டை ''அவரது நாள்'', ''அவரதுநேரம்'' எனப் பிரிக்கலாம். ''அவரது நாள்'' மறைமுக வெளிப்பாடாகிய அவரது வெளிப்படைப் பணியாகும். இவ்வெளிப்பாடு திருமுழுக்கு யோவானது சாட்சி, வேதாகமச் சாட்சிகள், இயேசுவின் வார்த்தைகள், செயல்கள் ஆகியவற்றால் உறுதி பெறுகிறது. இதில் இயேசுதான் மெசியாவென்றும், தந்தையிடமிருந்து அலுவல் ஆணைபெற்றவர் என்றும், தந்தையினால் அனுப்பப்பட்டவர் என்றும், தந்தையிடமிருந்து வந்தவர் என்றும், இந்நற்செய்தி காட்டுகிறது. ''அவரது நாளுக்குப் பின்'', ''அவரது நேரம்'' வருகிறது. இந்நேரம் இயேசுவின் இறப்பையும் மகிமைப்படுத்தலையும் குறிக்கிறது. இது நிறைவான வெளிப்பாடாகும்; மீட்புப் பொருளையும், முடிவுகாலப் பொருளையும் கொண்டது. அவர் தந்தையிடம் செல்வது அவர் தந்தை

யிடமிருந்து வந்ததற்கும், தந்தையின் முழுச் சாயலாக இருக்கிறார் என்பதற்கும் தெளிவான சான்றாகும். இயேசு அடையும் மகிமை அவரது தந்தையான இறைவனது மகிமையாகும். அதை உலகம் படைக்கப் படும் முன்பே கொண்டிருக்கிறார். இந்த ''அவரது நேரத்தில்தான்'' மீட்பு நிறைவேறுகிறது. இயேசு மரிக்கும்போது முழுமையாக வாழுகின்றார்; தம்மில் விவசிப்பவர்களுக்கும், புற இனத்தவருக்கும் வாழ்வு அளிக்கிறார். அவரே உலகின் பாவங்களைப் போக்கும் செம்மறி. இயேசுவே உலகின் மீட்பர். அவர் அளிக்கும் உணவும், உலகின் மீட்பிற்காகப் பலியிடப்பட்ட அவரது உடலே (ஊனே). தமது ஒரே, மாபெரும் மந்தைக்காக தம் முயிரையே அளிக்கும் ஆயர் அவரே. மிகுந்த பலனைக் கொடுக்கும் பொருட்டு மரிக்கும் கோதுமைத் தானியம் அவரே. இந்த ''அவரது நேரத்தில்'' தான் உலகின் முடிவுகால முக்கியம் அடங்கியிருக்கிறது. இந்நேரத்தில்தான் உலகம் தீர்வையிடப்படுகிறது *(12:31)*; மனுமகன் மகிமைப்படுத்தப் படுகிறார் *(13:31)*. அதாவது, ''இந்நேர''த்திலிருந்து இயேசு தமது மகிமையில் நுழைகிறார்; முடிவுகால நீதிபதியாக மனுமகன் முழு அதிகாரம் பெற்றுத் தோன்றுவார். ''இந்நேரம்'' கால முடிவின் தொடக்கமாகும். ஒத்தமை நற்செய்திகளில் காணப்படும் வரவிருக்கும் முடிவு காலத்தைப்போல் அல்லாமல், யோவானில் ஏற்கெனவே நிறைவேறிக் கொண்டிருக்கும் முடிவுகாலம் குறிக்கப்படுகிறது. தீர்வை, நிகழ்காலத்தைச் சார்ந்ததாகக் கருதப்படுகிது.

*(உ)* இறைவெளிப்பாட்டை நாம் ஒன்றில் ஏற்க வேண்டும் அல்லது ஏற்க மறுக்க வேண்டும். ஏற்காமலும், மறுக்காமலும் ''நடுநிலைமை'' கொள்ள முடியாது. மனிதன் அதை விசுவசித்தால் வாழ்கிறான். விசுவசிக்க மறுத்தால் தீர்வையிடப்படுகிறான். இந்த விசுவாசத்தையும் விசுவாசமின்மையையும் பற்றியே பல தர்க்கங்கள் அமைந்துள்ளன யோவானில். கிறிஸ்தவம் ஏற்கெனவே ஓர் அளவு வளர்ச்சியுற்றபின் இந்நற்செய்தி எழுதப்பட்டதால், விசுவாசத்தில் பிரமாணிக்கமாயிருத்தல் அழுத்திக் கூறப்படுகிறது. ''கற்பனைகளைப் பின்பற்று'' என்பதைவிட, ''எனது படிப்பினைகளை உறுதியாகக் கைக்கொள்'' என்பது தான் முக்கியமானது. கால முடிவின் தொடக்கம், முடிவு ஆகியவற்றிற்கு இடைப்பட்ட காலத்தில் இது மிகத் தேவையானது. இந்த விசுவாசப் பிரமாணிக்கம் பிறர் அன்பில் மலர வேண்டும். விசுவாசம், பிறர் அன்பு ஆகிய இரண்டையும் யோவானது முதல் இரண்டு திருமுகங்களிலும் காண்கிறோம். இவ்விரண்டும் வெறும் படிப்பினைகள் மட்டுமல்ல. இவை விசுவசிப்போரை, இயேசு என்ற ஆளோடு இணைக்கின்றன. திருமுழுக்கு, நற்கருணை என்ற அருட்சாதனங்கள் மூலமாய் இவை அனுபவிக்கப்படுகின்றன. விசுவாசத்தை ஏற்பதும், அன்பு செய்தலும் திருச்சபையின் ஒற்றுமையையும், கிறிஸ்துவர்களுக்குள்ளே உள்ள ஒற்றுமையையும், கிறிஸ்துவர்கள் கிறிஸ்துவோடு கொள்ளும் ஒன்றிப்பையும் தோற்றுவிக்கின்றன; அவற்றை வளர்ச்சியுறச் செய்கின்றன. திருச்சபை, இஸ்ராயேலர் அல்லாதவர்களையே பெரும்பாலும் கொண்டிருந்தாலும், அதுவே இறைவனது உண்மையான மந்தையும், மந்தை உறையும் பட்டியுமாகும்; உண்மையான திராட்சைக் கொடியும், திராட்சைத் தோட்டமும் ஆகும். கிறிஸ்தவ விசுவாசிகளே ஆபிரகாமினுடையவும், இறைவனுடையவும் உண்மையான பிள்ளைகள்.

***17. நான்காம் நற்செய்தியின் வரலாற்று மதிப்பு:*** யோவான் ஒத்தமை நற்செய்திகளிலிருந்து பெரிதும் வேறுபடுகிறது; இறையியல் தன்மை மிகுந்து காணப்படுவதால், இந்நூலில் வரும் நிகழ்ச்சிகள் உண்மையானவையா என்று ஐயுற இடமிருக்கிறது. இந்நூல் இறையியலுக்கேற்ப ஆசிரியர் அமைத்த கற்பனையாகத் தோன்றுகிறது. ஆகவே, இது வரலாற்றுப் பாரம்பரியத்தைக் கொண்டதன்று என்பர் சிலர். இக்கூற்றை இக்காலத்தில் பலர் ஏற்க மாட்டார்கள்.

இந்நற்செய்தி ஒரு தனிப்பட்ட வரலாற்றுப் பாரம்பரியத்தைக் கொண்டது என்று ஏற்கெனவே பார்த்துள்ளோம். ஆயினும், இயேசுவின் வாழ்க்கையைத் திருத்தி அமைத்து எழுத உதவும் வாழ்க்கை வரலாற்று நூல் அன்று. ஒத்தமை நற்செய்தியாளர், இயேசுவின் வாக்குகளையும் செயல்களையும் காலவரைப்படி ஒரு வரலாறாக எழுதாமல், தங்களுடைய இறையியலுக்கேற்ப நிகழ்ச்சிகளை முறைப்படுத்தி எழுதினர். அதே போன்று, யோவானும் தமது இறையியலுக்கேற்ப நிகழ்ச்சிகளையும் அறவுரைகளையும் வரிசைப்படுத்துகிறார். இதில் ஒத்தமை நற்செய்தியாளர்களைவிட, சிறிது அதிகமான சுதந்தரத்துடன் தமது நூலை எழுதுகிறார். இஃது எவ்வளவு தூரம் நிகழ்ச்சிகளின் வரலாற்றுத் தன்மையைப் பாதித்தது என்று கூறுவது கடினம். ஆனால், இவை வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை என்று உறுதியாகக் கூறலாம். ஏனெனில், அப்போதுதான் இயேசு மெசியா, இறைமகன் என்று அவர் கூற விரும்பும் சாட்சிக்குப் பொருள் உண்டு என்று ஏற்கெனவே குறிப்பு அடையாளத்தின் கீழ்க் கூறியுள்ளோம்.

இந்நற்செய்தியில் வரும் காலக்கணிப்பு, ஒத்தமை நற்செய்திக் காலக்கணிப்பை விட நம்பத்தகுந்தது என்று கருதுவோர் உளர். ஒத்தமை நற்செய்திகளைப்போல், இதுவும் காலவரையுடன் எழுதப்படவில்லை. இந்நூலில் காணப்படும் காலக்கணிப்பும் நற்செய்தியாளருடைய இறையியல் நோக்கால் பாதிக்கப்பட்டிருக்கலாம் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். புதைபொருள் ஆராய்ச்சிகளிலிருந்து வரும் புறச் சான்றுகள் இந்நூலின் வரலாற்றுத் தன்மைக்குச் சான்று கூறுகின்றவையாக அமைகின்றன. யோவா *5:2*-இல் வரும் பெத்சாயிதாக் குளம் யோவான் விவரிப்பது போல் ஐந்து முற்றங்களைக் கொண்டுள்ளதாகப் புதை பொருள் ஆராய்ச்சி காட்டுகிறது. இப்பெயர் கும்ரான் குகைகளில் காணப்படும் செப்பு ஏடுகளிலும் காணப்படும். *19:13*-இல் வரும் லித்தோஸ்த்ரோத்தோஸ் என்னும் மேடை அந்தோனியாக் கோட்டையின் கீழ்க் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. யோவானில் காணப்படும் இயேசு அளித்த உரைகள், யூத வாசகங்களோடு ஒத்துள்ளன. அவரது விளக்கங்களும், அவர் காலத்து யூத ராபிகளின் விளக்கவிதிகளுக்கு ஒத்ததாகவுள்ளன. இவையும் பிறவும், இந்நற்செய்தியின் ஆசிரியர் கி.பி. *70*-க்கு முற்பட்ட பாலஸ்தீனத்தையும் அதன் பழக்கவழக்கங்களையும், இடங்களையும் நன்கு அறிந்திருந்தார் எனக் காட்டுகின்றன. இவற்றிலிருந்து ஆசிரியர் உண்மையான இடங்களில் நடந்த உண்மையான நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு தமது நற்செய்தியை எழுதுகிறார் எனலாம்.

ஆயினும், நாம் தற்காலத்தில் பொருள் கொள்வது போன்ற வாழ்க்கை வரலாறு அன்று இந்நூல். இந்நூல் எல்லாவற்றிற்கும் மேலாக ஓர் இறையியல் நூல். இயேசு மெசியா, இறைமகன் என்று சான்று கூறுவதே இந்நூலின் நோக்கம். ''இயேசுவே இறைமகனாகிய மெசியா என நீங்கள் நம்புவதற்காகவும், நம்பி அவர் பெயரால் வாழ்வு பெறுவதற்காகவுமே இந்நூலில் உள்ளவை எழுதப்பெற்றுள்ளன'' *(யோவா 20:31)*. ''இந்தச் சீடரே இவற்றிற்குச் சாட்சி. இவரே இவற்றை எழுதி வைத்தார். இவரது சான்று உண்மையானது என நமக்குத் தெரியும்'' *(21:24)*.

**யோவேசர்** (JOEZER - *யாவே உதவியாளர் ஆவார்)*

இவர் சிக்லாகில் ஒளிந்து வாழ்ந்த தாவீதுடன் சேர்ந்து கொண்ட வலிமை மிக்க படைவீரர்களில் ஒருவர்; பென்யமின் குலத்தினர். இவர் ஒரு கோராகியர் என்ற இனப்பெயர் இவரது ஊரைச் சுட்டுகிறது *(1 நாள் 12:6)*.

**யோவேது** (JOED - *ஆண்டவர் சாட்சியாவார்)*

இவர் நெகேமியாவின்கீழ் எருசலேமில் வாழ்ந்தவர்களில் ஒருவர்; பென்யமின்

குலத்தினர்; சல்லுவின் தாத்தா (நெகே 11:7). இதற்கு இணையான 1 நாள் 9:7-இல் இப்பெயர் காணப்படவில்லை.

**யோவேலா** (JOELAH - யாவே உயர்த்துகிறார்)

கெதோரைச் சேர்ந்த யோராமின் மகன். சிக்லாகில் தாவீதின் சிறப்பான தனிப்பட்ட படையோடு சேர்ந்து கொண்ட வன்மை மிக்க, புகழ்பெற்ற பென்யமின் குலத்துப் படைவீரர் ஆவார் (1 நாள் 12:7).

**யோவேல்** (JOEL - யாவே இறைவனாவார்)

பல கோத்திரங்களிலும் இப்பெயர் காணப்படுகிறது. இப்பெயரின் இறையியல் முக்கியத்துவம் இச்சொல்லின் சொல்லிலக்கணத்திலிருந்து தெரிகிறது.

1. இவர் இறைவாக்கினர் சாமுவேலின் மூத்தமகன் (1 சாமு 8:2). 1 நாள் 6:33; 15:17-இன்படி இவர் ஒரு கோகாத்திய லேவியர்; ஏமான் எனும் இசைக்கலைஞரின் தந்தை (1 நாள் 6:33).

2. எசேக்கியா காலத்தில் சிமியோன் இனத் தலைவர்களில் ஒருவர் (1 நாள் 4:35).

3. இவர் ரூபன் கோத்திரத்தைச் சேர்ந்தவர்; செமாயாவின் தந்தை (1 நாள் 5:4.8).

4. பாசானிலிருந்த காத்து கோத்திரத்தைச் சேர்ந்த தலைவர்களில் ஒருவர் (1 நாள் 5:12).

5. இறைவாக்கினர் சாமுவேலின் தந்தையாகிய எல்கனாவின் முன்னோர்களில் ஒருவராக நாளாகமம் இவரைக் காட்டுகிறது. இவர் ஒரு கோகாத்திய லேவியர் (1 நாள் 6:36; காண்க. 6:34-35; 1 சாமு 1:1). அறிஞர் சிலர் இவரைச் சாவூலோடு ஒன்றுபடுத்துகின்றனர் (1 நாள் 6:24).

6. இசக்கார் கோத்திரத்தைச் சேர்ந்த இசுரகியாவின் மகன். அரசன் தாவீது காலத்தின் ஓர் அதிகாரி (1 நாள் 7:3).

7. தாவீதின் வலிமை வாய்ந்த வீரர்களில் ஒருவர். நாத்தானின் சகோதரர் (1 நாள் 11:38). இதனோடு இணையான ஓர் அட்டவணையில் இவர் நாத்தானின் மகன் இகால் என்று குறிக்கப்படுகிறார் (2 சாமு 23:36).

8. கேர்சோமின் மகனான இவர் லேவியரின் தலைவர். தாவீது ஆட்சி செய்தபோது தனது சகோதரர் 130 பேருடன் உடன்படிக்கையின் பேழையை எருசலேமுக்குக் கொண்டுவரும் சடங்குகளில் பங்கு பெற்றார் (1 நாள் 15:7.11).

9. இலாதானின் மகன் (1 நாள் 23:8). இவர் ஆலயக்கருவூலப் பொறுப்பாளராக தனது சகோதரர்களுடன் இணைந்து பணியாற்றினார் (1 நாள் 26:22). இவரும் 8-இல் குறிக்கப்படுபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

10. தாவீதின் ஆட்சிக்காலத்தில் மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்குத் தலைவனாயிருந்த யோவேல் பெதாயியாவின் மகன் (1 நாள் 27:20).

11. கோகாத்திய லேவியனான யோவேல் எசேக்கியா அரசன் ஆட்சி செய்தபோது, ஆலயத்தைத் தூய்மைப்படுத்தி அதனை மறு அர்ப்பணம் செய்வதில் பங்கு கொண்டார் (2 நாள் 29:12).

12. பாபிலோனிலிருந்து திரும்பி வந்த யூதர்களில் அன்னியப் பெண்ணை மணந்தவர்கள் வரிசையில் இவரும் ஒருவர். இவர் எஸ்ரா வாழ்ந்தபொழுது வாழ்ந்தவர் (எஸ் 10:43).

13. நாடுகடத்தலுக்குப் பிற்பட்ட எருசலேமில் பொதுநிலையினரின் (பிரதிநிதியாக) தலைவனாக இருந்தவர் யோவேல். பென்யாமின் இனத்தவரை இவர் மேற்பார்த்தவர்; சிக்ரியின் மகன் (நெகே 11:9).

14. இறைவாக்கினர் யோவேல் பெத்துவேலின் மகன் (யோவே 1:1). காண்க. யோவேல் திருநூல்.

**யோவேல் திருநூல்** (JOEL, BOOK OF)

***1. இறைவாக்கினரது பெயரும் வாழ்வும்:*** ''யோவேல்'' என்ற சொல்லுக்கு ''யாவே இறைவன்'', மற்றும் ''ஆண்டவரே இறைவன்'' என்று பொருள் கூறலாம். இவரைப் பற்றி அறிந்து கொள்ள இந்நூலைத் தவிர வேறொன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. யோவேல் பெத்துவேல் என்பவரின் மகனாவார். இவர் யூதாவைச் சேர்ந்தவர்; ஒரு வேளை எருசலேமில் வாழ்ந்திருக்கலாம்; ஆலயத்தைச் சேர்ந்த வழிபாட்டு இறைவாக்கினராகவும் இருக்கலாம் *(1:2-18; 2:1-16.26-27; 3-4)*. ஏனெனில், இவர் ஆலயத்தையும் அதன் வழிபாட்டையும் நன்கு அறிந்திருக்கிறார் *(1:13-14; 2:15-17)*. அவற்றில் அதிக ஆர்வம் காட்டுகிறார் *(1:8-9; 2:27; 4:16.17)*; ஆலயப் பணியாளர்களை மரியாதையோடு போற்றுகிறார்; வழிபாட்டின் முறையான பணிகளைப் பெரிதும் மதிக்கிறார்; அன்றாடப் பலிகள் நடைபெற முடியாததைக் கண்டு மிகவும் வருந்துகிறார் *(1:9)*. இவற்றைக் கருத்தில் கொண்டு, இவர் ஒரு குருவாக இருக்கலாம் என்று சிலர் கருதுவர். இவர் சமூகத்தின் பிரதிநிதியாகவும் திகழ்கிறார் *(1:19-20; 2:17)*. யோவேல் நற்குடிப் பிறப்பும் பயிற்சியுமுடையவர் என்று இந்நூலிலிருந்து புலனாகிறது.

***2. நூல் எழுதப்பட்ட காலம்:*** இந்நூல் எப்பொழுது எழுதப்பட்டது என்று உறுதியாகக் கூறமுடியாது. சிலர், இந்நூல் ஆமோசுக்கு முந்தியது என்பர். அவ்வாறாயின், நூல் பெற்ற இறைவாக்கினர்களுள், யோவேல்தான் முதலானவர். ஆனால், இக்கருத்து பொருத்தமாகத் தெரியவில்லை. பலர் இந்நூல் பாரசீகப்பேரரசின் இறுதிக் காலத்தில் தோன்றியது என்பர். இதுதான் இன்று நிலவும் பொதுவான கருத்தாகும்.

இந்நூல் தோன்றிய காலத்தில் ஆட்சி செய்த அரசனைப் பற்றியோ, அரச மரபைப் பற்றியோ நாம் எதிர்பார்க்கக் கூடிய இடங்களில் கூட *(2:6-11)* எந்தக் குறிப்பும் கொடுக்கப்படவில்லை. இஸ்ராயேலரின் எதிரிகளான அசீரியர்களும் பாபிலோனியர்களும் குறிக்கப்படவில்லை. வட அரசாகிய இஸ்ராயேல் வரலாற்றிலிருந்து மறைந்து விட்டதாகத் தெரிகிறது. ஆகவே, யூதாவே - இஸ்ராயேல் என்று அழைக்கப்படுகிறது *(2:27;4:2.16)*. எருசலேமின் வீழ்ச்சி, நாடு கடத்தப்படுதல், நாடு அன்னியரால் பங்கிடப்படுதல் ஆகியவை கடந்தகால நிகழ்ச்சிகளாகி விட்டன *(4:1.3.17)*. கி.மு. *516*-இல் கட்டி முடிக்கப்பட்ட ஆலயம் மக்களின் சமய சமூக வாழ்வின் முறையான அங்கமாகிறது. எருசலேமின் மதில்கள் கட்டப்பட்டு விட்டன. இது நெகேமியா முதல் முறை ஆளுநனாக இருந்தபோது கட்டப்பட்டது (கி.மு. *445-433*). எந்த ஆளுநனுடைய பெயரும் குறிக்கப்படவில்லை. மூப்பர்களும் குருக்களும் யூத சமூகத்திற்குத் தலைமை வகிக்கின்றனர் *(1:2. 13-14; 2:15-17)*. மக்கள் குடியிருப்புக்கள் ஆலயத்திலிருந்து ஒலிக்கும் எக்காளத் தொனி கேட்கும் எல்லைக்குள் அமைந்திருக்கின்றன *(1:14; 21:1.9. 15.16)*. போகிற போக்கில் கிரேக்கர் குறிப்பிடப்படுகின்றனர் *(4:6)*. இது, மாமன்னன் அலக்சாந்தர் பாலஸ்தீனத்துக்குள் இன்னும் புகவில்லை என்பதை உணர்த்துகிறது. மேலும், தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு மட்டுமே மீட்பும் நற்கதியும் கிடைக்கும் என்ற கோட்பாடும் வழிபாட்டுச் சடங்குகளும் இந்நூலில் வலியுறுத்தப்படுகின்றன. பிற இனத்தவர் மீட்புப் பற்றி கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

மேலும், யோவேல் தனக்கு முந்திவந்த இறைவாக்கினர்களைத் தழுவி எழுதுவதாகத் தெரிகிறது *(2:10*-ஐ எசா *13:10*-ஓடும், *2:15*-ஐ எசா *13:6*-ஓடும், *4:18*-ஐ எசே *47:1*தொ ஓடும், *3:18*-ஐ ஆமோ *9:13*-ஓடும், *2:2*-ஐ செப் *1:15*-ஓடும், *2:6*-ஐ நாகூம் *2:18*-ஓடும், *3-5*ஐ ஒப *17*-ஓடும், *4:2-3*-ஐ ஒப *11*-ஓடும், *4:19*-ஐ ஒப *10*-ஓடும், *2:11*-ஐ மலா *3:2*-ஓடும், *3:14*-ஐ மலா *3:23*-ஓடும் ஒப்பிடுக). இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு, இந்நூல் கி.மு. *400-350*-க்கு இடையில் எழுதப்பட்டிருக்கலாம் என்று ஆய்வாளர் கருதுவர்.

***3. வாய்ப்பும்*** நோக்கமும்: நெகேமியா, எஸ்ரா ஆகியோர் செய்த சீர்திருத்தத்தின் விளைவாக, கொடுமைப்படுத்தப்பட்ட யூதர்கள் தங்கள் தனித்தன்மையையும், மதிப்பையும், உயர்வையும் உணர்ந்திருந்த னர். ஆலயத்தையும் சட்டத்தையும் மைய மாகக் கொண்டு தங்கள் சமய, சமூக வாழ்வை அமைத்துக் கொண்டிருந்தனர். பிற இனத்தவரிடமிருந்து வரும் ஆபத்துகளி லிருந்து தங்களையே காத்துக்கொள்ள, அவர்களிடமிருந்து தனித்து வாழ்ந்தனர். ஆண்டவரது நாளின் வருகைக்காகக் காத்தி ருந்தனர்.

இந்நிலையில், இதுவரை கண்டிராத வெட்டுக்கிளிக் கொள்ளை நோயின் தாக்கு தல், யூதர்களிடையே முதலில் பேரச்சத்தை உண்டாக்கியது. ஆனால், யோவேலின் தூண்டுதலால், மக்கள் இறைவனது உத வியைத் தேடி உருக்கமாக மன்றாடினர். ஏனெனில், யோவேல் இக்கொள்ளை நோயைக்கடந்து போகும் ஒரு நிகழ்ச்சி யாகக் கருதவில்லை. இதை யாவேயின் நாளுக்கு ஒரு முன்னோடியாகக் கண்டார். அப்படியே காண மக்களையும் தூண்டி னார். இறைவனது எதிரிகள் யூதாவின் மேலும், இறைவன் மேலும் நடத்தும் இறுதித் தாக்குதலின் முன்காட்சியாக அல் லது வெள்ளோட்டமாகக்கண்டார். இதை இறைத்தீர்ப்பின் முன்னோடியாகக் கருதி னார். இந்த விளக்கம் மக்களை இறைவன் பால் அச்சம் கொள்ளச் செய்கிறது. நல் விளைவுகளை ஏற்படுத்துகிறது. ஏனெனில், மக்கள் செபிக்கின்றனர்; நோன்பிருந்து தபசு செய்கின்றனர். அப்போது அவர்களுக்கு யோவேல் ஆறுதல் அளிக்கிறார். வெட்டுக் கிளிக் கொடுமை அகற்றப்படும்; யூதா மீண்டும் செழிப்படையும் *(2:19-27)*. யோவேல் இந்த உடனடியான விடு தலைக்கு முடிவுகாலப் பொருள் அளிக்கி றார். ஏனெனில், யூதாவுக்காக இறைவன் உறுதியாக, நேரடியாகத் தலையீடு செய்யும் நாளில் வெட்டுக்கிளிகள் சிதறடிக்கப் பட்டதுபோல், யூதாவைக் கொடுமைப் படுத்திய பிறஇன நாடுகள் அழிக்கப்படும். யோவேல் இந்தக் கருத்தை அதி. *3-4*-இல் விவரிக்கிறார்.

யோவேல், தனது காலத்தில் நடந்த வெட்டுக்கிளிக் கொள்ளை நோயாகிய ஒரு குறிப்பிட்ட ஆண்டவரது நாளிலிருந்து ''ஆண்டவரது வருங்கால மெசியா நாளுக் குச்'' செல்கிறார். பேரழிவை விளைவித்த ஒரு குறிப்பிட்ட வெட்டுக்கிளிக் கொள்ளை நோய், முதற்பகுதியில்*(அதி. 1-2)* காணப் படும் இறைவாக்குகளுக்கு வாய்ப்பாயிற்று. இந்தக் கொள்ளை நோயை அகற்றும் கருத்தோடு, பொதுச் செபக் கூட்டங்களா லும், நோன்புகளாலும் இறைவனை மன் றாட மக்களைத் தூண்டுவது முதல் பகுதி யின் நோக்கமாகும். நாடு கடத்தலுக்குப் பிற்காலத்தில், இஸ்ராயேல் சமூகம் தொடர்ச்சியாய் அனுபவித்த கடுந்துயர், இரண்டாம் பகுதியில் *(அதி. 3-4)* காணப் படும் இறைவாக்குகளுக்கு வாய்ப்பாயிற்று எனலாம். கொடுமையும் அவநம்பிக்கையும் மிக்க காலத்தில், மெசியா பற்றிய பழம் பெரும் இறைவாக்குகள் நிறைவேறும் காலத்தை முன்னோக்கிப் பார்ப்பதற்கு மக்களை உற்சாகப்படுத்துவதும் இப்பகுதி யின் நோக்கமாகும்.

இவ்வாறு, இதுவரை மக்கள் கண்டிராத முறையில் நாட்டைத் தாக்கிய கொடிய வெட்டுக்கிளிக் கொள்ளை நோயை, இறை வன் தமது மக்கள் மேல் அளித்த தீர்ப்பாக வும், உலகிலுள்ள யாவற்றின் மேலும் வரும் யாவேயின் நாளுக்கு முன்னோடி யாகவும் எச்சரிக்கையாகவும் யோவேல் விளக்குகிறார்.

***4. ஆசிரியர் ஒருவரா, இருவரா?:*** இந் நூலை இரு பகுதிகளாகப் *(அதி. 1-2; அதி.3-4)* பிரிக்கலாம். முதல்பகுதி, பழைய இறைவாக்கினர்களது நடையைக் கொண் டுள்ளது. யூதா மக்களுக்கும், குருக்களுக் கும் தலைவர்களுக்கும் யோவேல் அளிக் கும் போதகம், அவர்களை ''உண்ணா நோன்பிருந்து, அழுது புலம்பிக் கொண்டு, உங்கள் முழு இதயத்தோடு'' ஆண்டவரி டம் திரும்பி வருமாறு கோருகிறது. இரண்

டாவது பகுதியில் காட்சி இலக்கியப்பண்புகள் மிகுந்துள்ளன. இஃது, இந்நூலின் ஒருமைப்பாட்டைப் பற்றி ஐயம் எழுப்பியது. இந்த ஐயத்தைத் 'தம்' என்ற அறிஞர் தொடங்கி வைத்தார். இவரது கருத்துப்படி, யோவேல் என்ற இறைவாக்கினர் முதற் பகுதியை மட்டுமே எழுதினார். யோவேலுக்குப் பிற்காலத்தில் வாழ்ந்த மற்றொரு இறைவாக்கினர் இரண்டாம் பகுதியை எழுதினார். இவ்வாறு இந்நூலை இரு ஆசிரியர்கள் எழுதியிருக்கலாம் என்ற கருத்து பரவலாயிற்று.

ஆனால் இப்படிக் கூறுவதற்கு வற்புறுத்தும் காரணங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. இரு பகுதிகளும் வேறுபடுவது போல் தோன்றுவதற்குக் காரணம், முதற் பகுதி வரலாற்றில் நிகழ்ந்த ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியை விவரிக்கிறது; வெட்டுக்கிளிக் கொள்ளை நோயையும் வறட்சியையும் விவரித்து. மக்களை மனத்துக்கத்திற்கும் உண்மையான நோன்புக்கும், செபத்திற்கும் அழைக்கிறது. இதற்கு மாறாக, இரண்டாம் பகுதி, ஆள்தன்மையற்ற, முடிவு காலக் கருத்துக்களை விவரிக்கிறது. அது முடிவு கால இயலின் தொகுப்பாகும். வருங் காலத்தை முன்னோக்கி ஆண்டவரது நாளுக்கு முன்னும், அஃதோடு வரும் நிகழ்ச்சிகளாகிய எல்லா மக்கள் மேலும் இறை ஆவிபொழியப்படுதல், பிற இனத்தவர் மேல் தீர்ப்பு, இஸ்ராயேலின் இறுதிப் போர் ஆகியவற்றை விவரிக்கிறது. இரு பகுதிகளின் அமைப்புகளும் இறைவாக்குப் பாரம்பரியத்திலேயே அமைந்திருக்கின்றன. நடை, வரலாற்றுப் பின்னணி, முந்தைய இறைவாக்கினர்களை மேற்கோள் காட்டுவது, ஆண்டவரது நாளைச் சுட்டிக் காட்டுவது போன்றவை இரு பகுதிகளுக்கும் பொதுவானவை. இதில் உண்மையான இறைவாக்குப் பாரம்பரியத்தையே யோவேல் பின்பற்றுகிறார். முதல்பகுதி இரண்டாம் பகுதிக்கு முன்னோடியாகவும் எச்சரிக்கையாகவும் அமைந்துள்ளது. இரு பகுதிகளும் ஒன்றிணைந்த முறையில் அமைந்துள்ளன. ஆகவே, இரு பகுதிகளையும் ஒரே ஆசிரியரே எழுதினார் என்ற கருத்தைப் பெரும்பாலான அறிஞர்கள் இப்போது ஏற்றுக்கொள்கின்றனர்.

**5. இலக்கியப்பண்பு:** இந்நூல் எபிரேய இலக்கியம், இறைவாக்கு இலக்கியத்திலிருந்து வெளிப்பாட்டு இலக்கியத்திற்கு மாறிக் கொண்டிருந்த இடைக் காலத்தைச் சேர்ந்ததாகும். யோவேல் திருநூல் வெளிப்பாட்டு இலக்கியப் பண்புகளில் சிலவற்றைக் கொண்டுள்ளது.

இந்நூலின் நடை உயிருள்ளது, நயமிக்கது. சொற்களின் பொருளை நன்குணர்ந்து ஆசிரியர் பயன்படுத்துகிறார். விவரிப்புக்கள் வண்ணமிக்கவை; கற்பனை ஆற்றல் மிக்கவை. இதை வெட்டுக் கிளிகளின் படையெடுப்புப் பற்றிய விவரிப்புகளில் காணலாம் *(1:4-12; 2:4-9)*. ஆசிரியரது தெளிவான வலிமைமிக்க நடை, உயிர்ச்சித் திரமான விவரிப்பு, மொழி நயம், மீண்டும் மீண்டும் கூறுதல், வேறுபாடுகள் ஆகியவற்றைக் கையாளும் நயமிக்க முறையும், உருவகம், உவமைகளைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்தும் முறையும், யோவேலைப் பழைய ஏற்பாட்டில் சிறந்த கவிஞர்களில் ஒருவராக விளங்கச் செய்கின்றன. யோவேல் எபிரேய இலக்கிய வரலாற்றில் உயர்ந்த இடம் வகிக்கிறார். அவ்விலக்கியத்தின் ''வெள்ளிக் காலத்தின்'' இறுதிப் பிரதிநிதியாவார். இந்நூலின் எபிரேய வாசகம் பழுதுபடாமல் நன்கு பாதுகாக்கப் பட்டுள்ளது.

**6. நூலின் திட்டஅமைப்பு:**

***தலைப்பு (1:1).***

**I. வெட்டுக்கிளிக் கொள்ளை நோய் *(1:2-2:27).***

அ. முதல் போதகமும், விளைவும் *(1:2-20).*

*1:2-12* : கொள்ளை நோயின் விளைவுகள்.

*1:13-14* : செபம், உண்ணா நோன்புக்கு முதல் அழைப்பு.

*1:15-20* : செபம்.

ஆ. இரண்டாவது போதகம்-முடிவுகாலப் பொருள் (2:1-17).

2:1-11 : படையெடுப்பு உவமை.
2:12-16 : செபம், உண்ணாநோன்புக்கு இரண்டாவது அழைப்பு.
2:17 : செபம்.

இ. இறைவனது பதில் (2:18-27).

II. யாவேயின் நாளாகிய இறுதிக்காலம் (3.1-4:21).

அ. ஆண்டவரின் நாள் (3:1-5).
ஆ. பிற இனத்தார்மேல் தண்டனைத் தீர்ப்பு (4:1-15).
இ. இஸ்ராயேல் மீது இறைவனது ஆசீர்கள் (4:16-21).

**7. போதனை:**

**அ. யாவேயின் நாள்:** யோவேலின் சிந்தனையில் இரு கருத்துக்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன. ஒன்று யாவேயின் நாள் என்ற கருத்தாகும் (காண்க. யோவே 1:15). மற்றது, தனது கால நிகழ்ச்சிகள் மேல் இறைவனது தீர்ப்பை இறைவாக்கினர் அறிவிக்கிறார் என்பதாகும். ஆகவே, அவரது சமூகத்தில் வெட்டுக்கிளிக் கொள்ளை நோயும் விவசாயப் பேரழிவும், மனிதனைத் தண்டிப்பதற்காக வரலாற்றில் சீனாயின் புனித இறைவன் இடையீடு செய்வதின் வெளிப்பாடாகும் (உப 28:15தொ) என்று யோவேல் கருதுகிறார். எசேக்கியேலைப் பின்பற்றி யோவேல், ஒழுக்க மனந்திரும்புதலையும், குருக்கள் தலைமையில் செய்யப்படும் சமூகத் தபசின் ஆற்றலுடைமை பற்றிய குருக்கள் நோக்கையும் இணைக்கிறார். இன்றும் உரோமை வழிபாட்டு முறையில் யோவே 1:3தொ; 2:17தொ ஆகிய பகுதிகள் தபசுகால வழிபாட்டில் பயன்படுத்தப்படுகின்றன.

**ஆ. இறுதிக்கால இயல்:** தனது காலத்து மக்கள் அனுபவித்த ''நாள்'' இறுதிநாளின் நுண்மாதிரி மட்டுமே என யோவேல் கருதுகிறார். இறுதி நாள்தான் இறைவனின் தூய்மையையும் ஆற்றலையும் முழுமையாக வெளிப்படுத்தும். அது புதிய யுகத்தைத் தொடங்கிவைக்கும். கடந்த காலத்தில் தமது மக்களைத் தண்டித்துத் திருத்த இயற்கை நிகழ்ச்சிகளையும் அன்னியர்களையும் பயன்படுத்திய இஸ்ராயேலின் இறைவன், அவரோடு யாவும் கடந்த முறையில் இஸ்ராயேல் கொண்டிருக்கும் உறவை எண்பிக்கும் பொருட்டு, இப்போது சீயோனில் தம்மை வெளிப்படுத்துவார். மறுபுறம் தங்கள் செழிப்பை வரலாற்றுப் போக்கின் ஒரு பகுதியாக மட்டுமே கொண்டுள்ள பிறநாடுகள் மறைந்து கடந்து போகும். இஃது அவர்களின் தீமையின்மேல் கூறப்பட்ட தீர்ப்பாகும்.

**இ. ஆவி பொழியப்படுதல்:** திரும்ப அமைக்கப்பட்ட சமூகத்தின் அனைவர் மேலும் இறை ஆவியின் அருங்கொடைகள் பொழியப்படுதலை யோவேல் முன்னோக்குகிறார். இது, மனிதனது தன்மையிலான பலவீனத்திற்கு மாறுபட்ட நிலையில், அவர்களுக்கு வாழ்வையும் வலிமையையும் கொடுக்கும். ஐம்பதாம் நாள் விழாவின் போது பேதுரு ஆற்றிய உரையில் (அ.ப. 2:14-36) யோவே 3:1-5 என்பது, பன்மொழி பேசும் வியத்தகு கொடையில் நிறைவேறி விட்டதாகக் கூறுகிறார். அதில் ''அதற்குப் பின்பு'' என்பதற்குப் பதில் ''இறுதி நாட்களில்'' என்ற சொற்றொடரைப் பேதுரு பயன்படுத்துகிறார். இது பொருளுடையதே; ஏனெனில், புதிய ஏற்பாட்டின் முன்னோக்கிய இறுதிக்கால இயலின்படி, திருச்சபையில் பன்மொழிக்கொடை மெசியாக் காலம் தொடங்குவதின் வெளிப்பாடாகும். வரலாறு பற்றிய ஆற்றல் மிக்க தியானமாகிய இஸ்ராயேலின் நூல்களின் கடந்தகாலப் பாரம்பரியத்தில் ஆழ்ந்து வேரூன்றிய, யோவேலின் இச்சிறுநூல், ஐம்பதாம்நாள் விழாவின்போது ஆற்றப்பட்ட முதல் அப்போஸ்தல அறவுரைக்கு வாசகம் அளித்தது பொருத்தமுடையதே.

**8. இக்காலத்திற்கு:** நூல் முழுவதும் வழிபாட்டுப் பண்பு பரவிக்கிடக்கிறது. மக்களைப் பாதிக்கும் இக்கட்டான காலத்தில் தபசும் ஆலயத்தில் மன்றாட்டும் அடங்கிய பொதுவழிபாடு வலியுறுத்தப்படுகிறது. இதில் ஆகாய், செக்கரியா, மலாக்கி ஆகிய

இறைவாக்கினர்களோடு யோவேல் இணைந்துள்ளார். இறைவாக்கினர் ஆமோஸ் யாவேயின் நாளின் வருகையோடு தமது இறைவாக்குப் பணியைத் தொடங்கினார். அதே கருத்தை யோவேலும் விரிவாக எடுத்துக்கூறி வலியுறுத்துகிறார். இறைவாக்குப் போதகத்தில் இஃது அடிப்படைப் பண்பாகும். யாவேயை யாரும் எதுவும் வெல்லமுடியாது என்ற நிலையான விசுவாசத்தை இந்நூல் அறிவிக்கிறது; பூமியில் இறைவன் நிறுவியவற்றை அழிக்க முடியாது என்ற நம்பிக்கையை எடுத்துக் கூறுகிறது. இவையிரண்டும் இந் நூலின் சிறப்புப் போதகமாகும். இந்த வெல்ல முடியாத விசுவாசமும் நம்பிக்கையும் புதிய ஏற்பாட்டுத் திருச்சபைக்கும் நமக்கும் இறைவாக்கினர் அளிக்கும் உரிமைச் சொத்தாகும்.

**யோற்றுபா** (JOTBAH - இன்பமான, நன்மையான)

யூதாவின் அரசன் ஆமோனின் தாய், மெசுல்லமேத்து தங்கியிருந்த இடமாகும் *(2 அர 21:19)*. அனேகமாக இந்நகரம் யூதாவில் இருந்திருக்க வேண்டும். அப்படியானால், அக்காபுவுக்கு வடக்கில் 30 கி.மீ. தொலைவில் உள்ள அயின் அத்-தாபா இருக்கும் இடமாக இருக்கலாம். கெனசரேத்து ஏரியில் செபுலோன் பள்ளத்தாக்கிலுள்ள யோத்தபத்தாவும் (கிர்பெத் எபாத்து) இதுவும் ஒரே இடமாக இருக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர்.

**யோற்றுபாத்தா** (JOTBATHAM - இன்பமான, நன்மையான)

இஃது ஆறுகள் உள்ள இடமாகும் *(உப 10:7)*. இஸ்ராயேலர் தங்கள் பாலைவனப் பயணத்தின்போது, இங்குச் சிறிதுகாலம் தங்கினர் *(எண் 33:33-34)*. இஃது எட்சியோன் - கேபேருக்கு வடக்கில் அராபாவில் இருந்திருக்க வேண்டும். இந்த இடத்தை அயின் அத்-தாபாக அடையாளம் காண்கின்றனர் அறிஞர் சிலர்.

**யோனதாபு** (JEHONADAB, JONADAB - யாவே தாராள குணமுடையவர், மேன்மை மிக்கவர், யாவே தூண்டப்படுகிறார்)

1. இவன் தாவீதின் சகோதரர் சிமயாவின் மகன்; தாவீதின் மகன் அம்னோனின் தந்திரமுள்ள நண்பன். இவன்தான் அம்மோனின் ஒன்றுவிட்ட சகோதரி தாமாரை மயக்கி, அவளோடு உறவு கொள்ள அம்னோனுக்குத் திட்டம் தீட்டிக் கொடுத்தவன் *(2 சாமு 13:3.5)*. தாமாருடைய சகோதரன் அப்சலோம், தன் சகோதரி கற்பழிக்கப் பட்டதற்காக அம்னோனைக் கொன்று பழி வாங்கியபோது, தாவீதுக்கு, அவரது புதல்வர்களில் அம்னோன் மட்டுமே கொல்லப் பட்டான் என்று செய்தியை உறுதியளித்தவனும் இவனே *(2 சாமு 13:32-36)*. இவனைத் தாவீதின் சகோதரர் சிமயாவின் மகனும், இத்திய அரக்கனைக் கொன்றவனுமான யோனத்தானாக அடையாளம் காண்கின்றனர் சிலர் *(2 சாமு 21:21; 1 நாள் 20:7)*.

2. இவர் கேனியரான இரேக்காபின் மகன் *(எரே 35:6; காண்க. 1 நாள் 2:55)*; ஏகூ அரசன் மேற்கொண்ட சீர்திருத்தத்தில் அவனோடு துணை நின்றவர். ஆகாபின் புதல்வர்களைக் கொன்று குவித்துச் சமாரியாவில் பாகாலின் கோவில்களை அழித்தொழித்தபோது அவனுக்கு உதவி செய்தவர் *(2 அர 10:15.23)*; இரேக்காப்பியப் பிரிவினரின் கடுமையான வாழ்க்கை முறையை நிறுவியவர் *(எரே 35:6-9)*; இப்பிரிவினர் கேனியர்கள், காலேபியர்களின் வழித்தோன்றல்கள் ஆவர் *(1 நாள் 2:55; 4:11-12)*.

**யோனதெலம் - ரிக்கோகிம்** (JONATH ELEM RECHOKIM)

இச்சொல் ''தொலைவில் வாழும் மௌன மாடப்புறா'' என்ற பொருளுடைய மெட்டைக் குறிக்கிறது *(சங் 56)*. காண்க. இசை.

**யோனத்தான்** (JEHONATHAN - யாவே கொடுத்தார்)

1. யோசபாத்து அரசனின் ஆட்சியின் மூன்றாம் ஆண்டில் யூதா நகர்களில் சட்டத்தைப் போதிக்கும் பொருட்டு மூப்பர்களோடும் குருக்களோடும் அனுப்பப்பட்ட ஒரு லேவியர் *(2 நாள் 17:8-9)*.

2. நாடு கடத்தப்பட்ட பின்பு இருந்த செமாயா என்ற குரு குலத்தின் தலைவர் (நெகே 10:8; 12:6). ஏசுவாவின் மகனான யோயாக்கிம் தலைமைக் குருவாக இருந்த போது இவர் குலத்தலைவராக இருந்தார் (12:18; காண்க. 12:10. 12.26).

**யோனத்தான்** (JONATHAN - யாவேகொடுத் தார்)

1. இவன் யூதா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு லேவியன். இவன் எப்பிரயிமினனான மீக்கா ஏற்படுத்திய புனித இடத்தில் குரு வாகப் பணியாற்றினான். பின்னர், தாண் கோத்திரத்தில் பணியாற்றிய குருத்துவத்தை நிறுவியவன் (நீதி 17-18). யூதாவின் பெத்ல கேமைச் சேர்ந்த யோனத்தான் மீக்கா குடும்பத்தின் குருவாக மலைநாடான எப் பிரயிமில் உள்ள புனித இடத்தில் பணியாற் றினான். தாண் கோத்திரத்தைச் சேர்ந்த ஒற்றர்கள் சிலர் மீக்காவின் வீட்டுக்கு வந்து அவர்கள் வாழ்வதற்குச் சிறந்த இடம் கிடைக்குமா என்று கேட்டபோது அவர் களுக்குச் சாதகமான பதில் தந்ததால், தாண் கோத்திரத்தார் அறுநூறு பேர்கள் வந்து, மீக்காவிடமிருந்த புனிதப் பொருட்களைக் கைப்பற்றினர். பின்னர், யோனத்தானைத் தாண் கோத்திரத்தின் குருவாக இருக்குமாறு வற்புறுத்தினர். இதனால், தாண் கோத்திரத் திற்கு ஒரு குரு கிடைத்தான். இக்குருத் துவத்தை நிறுவியவன் மோசேயின் மக னான கேர்சோமின் மகன் யோனத்தான் என்று கூறப்பட்டுள்ளது (1 நீதி18:30).

2. யோனத்தான், சவுலின் மகன்: இத் தலைப்பின்கீழ்க் காண்க.

3. இவர் குருவான அபியத்தாரின் மகன் (2 சாமு 15:27). தாவீதின் மகன் அப்சலோம் அவருக்கெதிராக புரட்சி செய்தபோது, எதிரியான மகனின் திட்டங்களைத் தாவீ துக்கு எடுத்துக்கூறி அவருக்குப் பேருதவி செய்தார். ஆனால், பின்னர் அதோனியா வின் அரச பதவிப்போட்டியில் யோனத் தான் அவனுக்கு ஆதரவாக இருந்ததால் இப்பணியினின்று விலக்கப்பட்டார். தாவீது எருசலேமை விட்டு வெளியேறியபோது அவரிடம் உடன்படிக்கையின் பேழையைக் கொண்டு சென்றவர்களில் இவரும் ஒருவர். தாவீது நகரை விட்டு வெளியேறியபின் ஊசாய் என்ற உளவாளியிடமிருந்து அரண் மனையில் நடப்பவற்றை அறிய அபியத்தா ரும், சாதோக்கும் திரும்பிச் சென்றனர். அவர்களிடமிருந்து செய்தியைப் பெற்றுத் தாவீதுக்குக் கூறியவர்களுள் யோனத்தா னும் ஒருவர் (2 சாமு 15:24 தொ). இவர்கள் ஒற்றறிதல் கண்டு பிடிக்கப்பட்டவுடன் யோனத்தானும் அகிமாசும் தாவீது தங்கி யிருந்த மகனயிம் எனும் இடத்திற்கு ஓடிப்போயினர் (2 சாமு 17:17.20).

தாவீது தனது கடைசிக்காலத்தில் இருக் கும்போது அதோனியா, அரசரின் புதல்வர் களையும், அரச அலுவலர்களையும் ஏன்- ரேகேல் எனுமிடத்திற்குப் பலிவிழா ஒன் றிற்கு அழைத்தான். இந்தச் சமயத்தில் தான் அரசனாக அறிவிக்கப்படத் திட்ட மிடப் பட்டிருந்தான். அப்போது, யோனத் தான் அரச கட்டளைப்படி சாலமோன் அரியணையைப் பெற்று, கீகோனில் அபி டேகம் செய்யப்பட்டான் எனும் விருப்ப மில்லாத செய்தியைக் கொண்டு வந்தார். தனது தந்தை அபியத்தாருடன், யோனத்தா னும் அதோனியா அரியணை பெறும் முயற்சியில் ஒத்துழைத்திருக்க வேண்டும். எனவே, சாலமோனால், அபியத்தார் அவ ரது பதவியிலிருந்து வெளியேற்றப்பட்ட போது அதில் யோனத்தானும் பங்கு பெற்றார் (1 அர 1:42-43; 2:26-27).

4. இவர் தாவீதின் சகோதரனான சிமயா அல்லது சிமயியின் மகன். இவர் காத்து என்ற இடத்தில் ஓர் அசாதாரண, பெலிஸ் திய அரக்கனைக் கொன்றார் (2 சாமு 21:21; 1 நாள் 20:7).

5. இவர் ஆரரரியனான சம்மா அல்லது சகேயின் மகன். தாவீதின் வலிமை மிக்க முப்பது பேர்களில் ஒருவர் (2 சாமு 23:32; 1 நாள் 11:34).

6. இவர் யூதாவின் கோத்திரத்தைச் சேர்ந்த எரகுமவேலின் குடும்பத்தின் வழித் தோன்றல். இவர் யாதாவின் புதல்வரும்,

பெலேத்து, சாசாவின் தந்தையும் ஆவார் (1 நாள் 2:32-33).

7. இவர் அரசன் ஊசியாவின் மகன்; நகர்களிலும், ஊர்களிலும், கோட்டைகளிலும் உள்ள கருவூலங்களைக் கவனித்துக் கொண்டார் (1 நாள் 27:25).

8. இவர் தாவீதின் சிற்றப்பனும், அவருடைய ஆலோசகரும், கல்வியறிவும் நுண் மதியும் கொண்டவரும் ஆவார் (1 நாள் 27:32). இவர் பெயர் இங்கு மட்டுமே வருகிறது. இவர் சமாயியின் மகன் எனக் குறிப்பிடப்படுகிறார். இவர் அக்மோனியின் மகனான எகியேலுடன் அரசனின் மக்களைக் கவனித்து வந்தார் (1 நாள் 27:32) என்று காட்டப்படுகிறது. இவர் 4-இல் வருபவராக இருக்கலாம்.

9. இவர் எபேதின் தந்தை; அதீன் குடும்பத்தின் தலைவராவார். எஸ்ரா எருசலேமுக்கு வந்தபோது தனது குலப்பிரிவினர் ஐம்பது பேரோடு சேர்ந்து எஸ்ராவுடன் வந்தார் (எஸ் 8:6).

10. அசாவேலின் மகனான இவன் எஸ்ரா காலத்தில், அன்னியப் பெண்களை மணந்தவர்கள் பற்றி விசாரிக்க அமைத்த எருசலேம் குழுவினரை எதிர்த்தான் (எஸ் 10:15).

11. இவர் பாபிலோனிலிருந்து திரும்பிய பின் பணியாற்றிய தலைமைக் குருக்களுள் ஒருவர்; யோயாதாவின் மகனும், யாதுவாவின் தந்தையும் ஆவார் (நெகே 12:11). ஆனால், இங்கு வரும் யோனத்தான் எனும் பெயர் யோகனான் (11) எனும் பெயரின் சிதைந்த வடிவமாக இருக்கலாம் (எஸ் 10:6; நெகே 12:22-23).

12. யோயாக்கிம் தலைமைக் குருவாக இருந்தபோது மல்லூக்கியின் குருத்துவக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தின் தலைவர் (நெகே 12:4).

13. இவர் செமாயாவின் மகனும், செக்கரியாவின் (28) தந்தையும் ஆவார். நெகேமியா எழுப்பிய எருசலேம் சுவர் மறு அர்ப்பணம் செய்யப்பட்டபோது எக்காளம் ஊதிய குருக்களின் குழுவில் ஒருவராக இருந்தார் (நெகே 12:35).

14. எழுத்தர் அல்லது செயலனாகிய இவரது வீடு எரேமியாவை நாட்டைக் கைவிடும் துரோகத்துக்காக சிறை வைக்குமிடமாகியது (எரே 37:15.20; 38:26).

15. இவர் கரையாகுவின் புதல்வர்களில் ஒருவர். பாபிலோனியர்கள் யூதாவைப் பிடித்தபோது, திறந்தவெளியில் இருந்த யூதேயாவின் ஓர் இராணுவப் பிரிவின் தலைவராக இருந்தார். எருசலேமின் வீழ்ச்சிக்குப்பின் கெதல்யாவுடன் சேர்ந்துகொண்டார் (எரே 48:8).

16. இவர் மத்தத்தியாவின் மகன். இக்குடும்பத்தின் தலைமையில்தான் யூத நாடு சீரியாவின் அடிமைத் தளையினின்று (கி.மு. 166-142) விடுபட்டது. மத்தத்தியா இதனைத் தொடங்கி வைத்தார். அவர் தொடங்கி வைத்த புரட்சி யூதா மக்கபேயுவால் தொடரப்பட்டு, யோனத்தானால் முழுமைக்கு இட்டுச் செல்லப்பட்டது (1 மக் 9:23-12:53). யோனத்தான் இறந்த பின்னும் கூட அவரது சகோதரன் சீமோன் முயற்சியில் தளராது நாட்டின் சுதந்தரத்தைப் பெறுவதில் முடிவில் வெற்றி பெற்றார்.

17. இவர் அப்சலோமின் மகன். சீமோன் மக்கபேயுவால் யோப்பாவிற்கு அனுப்பப்பட்டார். அதை இவர் கைப்பற்றினார் (1 மக் 13:11).

18. நாடு கடத்தப்பட்ட பின் வாழ்ந்த் ஒரு குரு. நெகேமியாவால் நடத்தப்பட்ட பலியில், மன்றாட்டை நடத்தியவர் (2 மக் 1:23).

**யோனத்தான், சவுலின் மகன்** (JONATHAN, SON OF SAUL)

சவுலின் மூத்த மகனான இவர், தாவீதிடம் கொண்டிருந்த உண்மையான சிறந்த நட்பினால் தனது தலைமுறைக்குச் சிறந்த பெயர் பெற்றுத்தந்தார். பழைய ஏற்பாட்டில் மேன்மை மிக்கவர்களுள் ஒருவர். இவர் ஒரு சிறந்த போர்வீரன் ஆவார். மிக்மாசு எனுமிடத்தில் பெலிஸ்தியர்களைத் தனியொருவனாக எதிர்த்து நின்று

அவ்விடத்தைப பிடித்ததால், இஸ்ராயேலர்கள் உற்சாகப்படுத்தப்பட்டனர்; பெலிஸ்தியர்கள் அவ்விடத்தில் படுதோல்வியடைந்தனர். அன்று மாலைக்குள் யாரும் உணவுண்ணலாகாது, உண்பவன் சாகவே சாவான என முட்டாள்தனமாக சாபம் ஒன்றினைச் சவுல் இட்டிருந்தார். இதனை அறியாத் யோனத்தான் காட்டுத்தேனை உண்டுவிட்டார். மறுநாள் இறைவார்த்தை தனக்குக் கிட்டாததால், யார் உண்டது என விசாரித்தபோது யோனத்தான் என சவுலுக்குத் தெரிய வந்தது. மக்கள் பெருங்குரலெழுப்பி, யோனத்தான் சாகக்கூடாது என்று கூறாவிடில் சவுல் இட்ட சாவுத் தீர்ப்பின்படி யோனத்தான் அன்று இறந்திருப்பார் *(1 சாமு 14:1-45)*. தாவீது சவுலின் ஊழியனானபோது யோனத்தான் தாவீதின் நெருங்கிய நண்பனானார் *(18:1-4)*. சவுலுக்கும், தாவீதுக்கும் பிளவு ஏற்பட்டு, சவுல் தாவீதைக் கொல்லத் தேடியபோது தாவீதுக்காக யோனத்தான் பலமுறை பரிந்து பேசினார் *(19:1-7)*; ஆனால், அவரது முயற்சி தோல்வியடைந்து இருவரையும் இணைத்துவைப்பது இயலாததாயிற்று *(1 சாமு 20)*. யோனத்தானும், தாவீதும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து செல்லுதல் *(20:41*தொ*)* அவர்கள் தனியே சந்திக்க முடியாமையினால்தான். *1 சாமு 23:16-18*-இல் தாவீதும், யோனத்தானும் இறுதியாகச் சந்திப்பது பற்றிக் கூறப்படுகிறது. சவுலும், அவனது புதல்வர்களும் கில்போர்வா மலையில் பெலிஸ்தியர்களால் கொல்லப்பட்டு அவர்களது உடல்கள் பெத்சான் நகர வாயிலில் தொங்கவிடப்பட்டன. யாபேசு, கிலயாது மக்கள் அவர்கள் உடலை அங்கிருந்து கொணர்ந்தனர். தாவீது தனது புலம்பல் சங்கீதத்தில் சவுலையும், யோனத்தானையும் நினைத்து அழுகிறார் *(2 சாமு 1:17-27)*.

**யோனா** (JONAH - *புறா*)

இவர் அமித்தாயின் புதல்வன் *(2 அர 14:25)*. செபுலோனிலுள்ள கேப்பர் என்ற ஊரினர். இவர் ஓர் இறைவாக்கினர் என்றாலும் அவரது இறைவாக்குச் செயல்கள் எப்பொழுது நடந்தன என்பது பற்றி ஒன்றும் தெளிவில்லை. இஸ்ராயேலின் எல்லைகள், அதாவது வட அரசு ஆமாத்திலிருந்து அராபாக்கடல் வரை உள்ள பகுதி, அதற்கு மீண்டும் கிடைக்குமென முன்னுரைத்தார் *(2 அர 14:25)*. இவர் கூறியது போலவே இரண்டாம் எரொபவாம் இஸ்ராயேலுக்கு இஸ்ராயேலின் நாட்டை மீட்டுக் கொடுத்தான். நினிவேயைப் பற்றி இவரின் இறைவாக்குப் பணி பயன் அளித்ததால் 'யோனா திருநூலில்' இவர் முக்கியமானவர் ஆகிறார்; புதிய ஏற்பாட்டில் குறிக்கப் பெறுகிறார் *(மத் 12:39-41; 16:4; லூக் 11:29-32)*.

**யோனா திருநூல்** *(*JONAH, BOOK OF*)*

***1. முன்னுரை:*** எபிரேய விவிலியம் இந்நூலைப் போதக நூல்களோடு சேர்க்கிறது. கிரேக்க விவிலியம் இதை இறைவாக்கினர் நூல்களில் ஒன்றாகவும், பன்னிரு சிறிய இறைவாக்கினர்களில் ஒன்றாகவும் கருதுகிறது. இஃது இறைவாக்கினர் நூல்களிலேயே மிகவும் பரவலாக அறியப்பட்டதாகும். இதற்குக் காரணம் அவற்றிலிருந்து இது வேறுபட்டது என்பதாகும். மற்ற நூல்கள் இறைவாக்குகளின் தொகுப்பாக இருக்கும்போது இந்நூல் ஒரு கதையாக இருக்கிறது. மற்ற இறைவாக்கினர் நூல்களில் அவர்களது வாழ்க்கை பற்றிய குறிப்புகள் சிலவே காணப்படுகின்றன. ஆனால், இந்நூல் யோனா என்ன கூறினார் என்பதை விட அவர் செய்தவற்றையே அதிகம் கொடுக்கிறது.

விவிலியத்தை அறியாதவர்கள் கூட யோனாவையும், திமிங்கலத்தையும் பற்றிக் கேள்விப்பட்டிருப்பர். உண்மையில் இந்நூலில் திமிங்கலத்தைப் பற்றி எக்குறிப்பும் இல்லை. ஒருவன் துரதிர்ஷ்டத்தையோ, பேரழிவையோ கொண்டு வந்ததாகக் கருதப்பட்டால் அவனை ஒரு யோனா என்றழைப்பது பொதுமக்களிடையே பேச்சு வழக்காகும். மேலும், கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் நடந்த ஒரு கருத்து வேறுபாட்டுப் போராட்டம் இந்நூலுக்குத் தேவையில்லாத அவப்பெயரை அளித்து

விட்டது. ஒரு மனிதன் ஒரு பெரிய மீனால் விழுங்கப்பட்டு மூன்று நாட்களுக்கு அதன் வயிற்றுள் தங்கியபின் உயிரோடு வெளி வரும் கதையை விசுவாசத்திற்கு விரோதி களான ஐயவாதிகள் எள்ளி நகைத்தனர். ஆகவே, போர்க்காலத்தில் கொடியை உயர்த்திப் பிடிப்பதுபோல், விசுவாசிகள் இக்கதையின் உண்மைத் தன்மைக்காகப் போராடினர். இக்கதையை அப்படியே ஏற்றுக்கொள்வது பாரம்பரிய போதகத்தை ஏற்றுக் கொள்வதின் அடையாளமாகக் கருதப்பட்டது. இப்படித் தவறான காரணங் களுக்காக இந்நூல் பலராலும் நன்றாக அறியப்பட்டதொன்றாயிற்று. இந்நூல் உண் மையிலேயே நன்கு அறியப்பட தகுதி யுடையதொன்றாகும். ஏனெனில், நற் செய்தியின் அடிப்படை உண்மையும் போக் கும் இக்கதையில் அடங்கியுள்ளது.

**2. பெயர்:** யோனா என்றால் புறா என்று பொருள்படும்; வீட்டிலேயே தங்கியிருக் கும் ஆளைக் குறிக்கும். புறா இஸ்ரா யேலைக் குறிக்கும் அடையாளப் பறவை யாகும் (*ஓசே 7:11; 11:11; சங் 68:13; உ.ச. 2:14; 4:1*). ஓர் ஆளின் பெயராக, முதலில், கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த இரண்டாம் எரொபவாம் காலத்தில் வாழ்ந்த, கத்கேப்பேர் என்ற ஊரைச் சேர்ந்த அமித்தியின் மகனும், இறைவாக்கினரு மான யோனாவைக் குறிக்கும் (*2 அர 14:25*). இரண்டாவதாக இந்நூலில் வரும் இறை வாக்கினரைக் குறிக்கும்.

**3. எவ்வகை இலக்கியம்?:** இலக்கிய வடிவ ஒளியில்தான் இந்நூலின் பொருளைப் புரிந்து கொள்ள முடியும். இறைவாக்கு நூல்களிலேயே இந்நூல் தனித் தன்மையுடையதாகும். இது வாக்குகளின் தொகுப்பன்று; ஒரு நிகழ்ச்சியுரையாகும்.

கி.பி. 19-ஆம் நூற்றாண்டுவரை இந்நூல் ஒரு வரலாறு ஆகும் என்று பாரம்பரிய மாகக் கருதப்பட்டது. இக்காலத்தில் கூட சிலர் இவ்வாறு கருதுவர். இக்கருத்துக்குச் சார்பாக, பின்வரும் காரணங்கள் சுட்டிக் காட்டப்படும். இந்நூல் உண்மையாக நடந் தவற்றின் ஏடாகும் என்ற உணர்வை ஏற் படுத்துகிறது. யோனா இறைவாக்கினர் கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் இரண்டாம் எரொபவாம் ஆட்சிக் காலத்தில் உண்மை யாகவே வாழ்ந்துள்ளார் (*2 அர 14:25*). இவர் இஸ்ராயேல் இழந்துபோன பகுதி களை மீண்டும் கைப்பற்றும் என்று கூறியுள் ளார். மேலும், நமது ஆண்டவர் இயேசு தனது உயிர்ப்புக்கு யோனாவை அடையாள மாகக் காட்டியபோது, வரலாற்றைச் சேர்ந்த தென்னாட்டு அரசி பற்றிய குறிப்போடு யோனாவைப் பற்றிய குறிப்பையும் சேர்த்துக் கூறியுள்ளார் (*மத் 12:39-42; லூக் 11:29-32*). முன்னதை வரலாறு என்று ஏற்றுக்கொண்டால் பின்னதையும் வரலாறு என்று ஏன் ஏற்றுக்கொள்ளக்கூடாது? நினிவே உண்மையிலேயே ஒரு பெரிய நகரம் என்று புதைபொருள் ஆய்வுகள் காட்டுகின்றன. திமிங்கிலமோ, பெரிய சுறாமீனோ ஒரு மனிதனை விழுங்க வல் லது. யோனாவின் போதகத்தைக் கேட்டு நினிவே மக்கள் கோணியுடுத்தி நோன்பிருந் தனர்; விலங்குகளையும் நோன்பிருக்கச் செய்தனர் என்று நூல் விவரிக்கிறது (*3:7*). இப்படி இல்லாதிருந்திருந்தால் பிற்கால ஆசிரியர் இறைவாக்கினர் ஒருவரை வெறுக் கத்தக்க பாத்திரமாகச் சித்திரிக்கமாட்டார். மேலும், ஓர் இறைவாக்கினர் புறஇன நாடுகளுக்குச் செல்வது இதுதான் முதல் தடவையன்று. எலியா பெனிசியாவுக்கும், எலிசா சீரியாவுக்கும் சென்றனர் (*2 அர 8:7*). யோனாவில் வரும் அருஞ்செயல் களுக்கு மறுப்புக் கூறினால் நற்செய்திகளில் வரும் அருஞ்செயல்களுக்கு மறுப்புக் கூற வேண்டியிருக்கும். ஏனெனில், எந்த அருஞ் செயலுக்கும் ஒரே ஆற்றலே வேண்டியிருக் கிறது.

ஆனால், இக்காரணங்களில் எதுவும் புனித எரோனிமூவைத் திருப்திப்படுத்த வில்லை. புனித கிரெகோரி நாசியான்சன் இந்நூலை ஓர் உவமையாக விளக்கியுள் ளார். ஏன் இப்படி விளக்கினார் என்று நாம் அறிவதற்கில்லை. இந்நூல் ஒரு வாழ்க்கை வரலாறு என்ற கருத்தை நிரா

கரிக்கப் பல கோவையான காரணங்கள் உண்டு. இக்காரணங்கள் தனித்தனியே உறுதியளிக்கக் கூடியவை அல்ல என்றாலும் அவற்றை ஒருங்கு சேர்த்துக் கவனிக்குங்கால் அவை இந்நூல் ஒரு வரலாறு அன்று, ஓர் உவமையாகும், ஒரு போதகம் அளிக்கும் கதையாகும் என்ற விளக்கத்தைச் சுட்டுகின்றன. இக்கருத்தையே நவீன ஆய்வாளர்களும் விளக்கவுரையாளர்களும் ஏற்றுக்கொள்வர்.

இந்நூல் ஒரு வரலாறு ஆகும் என்பதற்கு எதிரான காரணங்களில் முக்கியமானது கதையில் வரும் மிகைப்படுத்தப்பட்ட அருஞ்செயல் தன்மையாகும். தமது மகனை இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழச் செய்த இறைவனில் விசுவசிப்பவன் அருஞ்செயல்கள் பற்றி ஐயுறான். ஆனால், இந்நூலில் விவரித்திருக்கிறபடி இறைவன் செயலாற்றும் முறை, மற்றப்படி நாம் அவரை அறிந்திருப்பதற்கு ஒத்ததா? ஒரு மனிதனை மீன் விழுங்கிக் காப்பாற்றும் கதை எல்லா மக்களின் நாடோடிப் பாடல்களிலும் உண்டு. இதே கதை லூசியன் நூலிலும் உண்டு. அந்த மீனின் வயிற்றுக்குள்ளே இருக்கும்போது யோனா நன்றியுரைப்பாடல் அமைக்கிறார். அதன் வயிற்றினுள் 72 மணி அளவு எவ்வித ஆபத்தின்றியும் தங்கியிருந்தபின் வெளிவருகிறார். அரசியலில் மிகச் சிறிய நாட்டைச் சேர்ந்தவரும் முற்றும் அன்னியருமான ஒருவர் வரவிருக்கும் அழிவைப் பற்றிப் போதிக்க, மிகப் பெரிய அரசின் தலைநகர மக்கள் யாவரும் ஒரே நாளில் மனந்திரும்பினராம். இரண்டுக்குமிடையேயுள்ள பொருத்தமின்மை தெளிவாக உள்ளது. இறைவாக்கினர்கள் தொடர்ந்து போதித்தாலும் இப்படிப்பட்ட உடனடி மனந்திரும்புதல் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பற்றிக்கூடக் கூறப்படுவதில்லை (காண்க. எசே 3:5-7). அப்படி நடந்திருந்ததென்றால் அது மனித வரலாற்றிலேயே நடந்திராத ஈடுஇணையற்ற ஒரு பெரும் அருஞ்செயலாகும். அது பரிசுத்த ஆவி அப்போஸ்தலர்கள் மேல் எழுந்தருளிய ''ஐம்பதாம் நாளை'' விட மிகப்பெரிய நாளாகும். அசீரிய ஏடுகளிலிருந்தும் விவிலியத்தின் மற்ற ஏடுகளிலிருந்தும் அசீரியாவைப் பற்றி நாம் அறிவதில் யாவேயை வழிபட நினிவே மக்கள் மனந்திரும்பியது பற்றிய சான்றுகள் ஏதுமில்லை. சிலர் கூறுவதுபோல் மனமாற்றம் தற்காலிகமானதே என்பது கதையின் குறிக்கோளையே அழித்துவிடுகிறது. ஒரே இரவில் ஒரு செடி மனிதனது உயரத்திற்கு மேலாக வளர்கிறது. இஸ்ராயேல் வரலாற்றில் அருஞ்செயல்கள் மனித மீட்பு வரலாற்றுத் திட்டத்தில் நிலையான விளைவுகளை விட்டுச் சென்றுள்ளன. ஆனால், இந்தக் குறுகிய கதையில் வரும் மிக அதிகமான அருஞ்செயல் கதைகள் அப்படிப்பட்ட எந்த விளைவுகளையும் விட்டுச் சென்றதாகத் தெரியவில்லை.

தொல்பொருளியல் சான்றுகள் இந்நூல் ஒரு வரலாறு என்பதற்கு எதிராக உள்ளன. நூலை இயற்றியவருக்கு நினிவே நகரைப் பற்றி எதுவும் தெரிந்திருப்பதாகத் தெரியவில்லை. கதையில் நினிவே நகரத்தைக் குறுக்கே நடந்து செல்ல மூன்று நாட்கள் எடுக்கும் என்று கூறப்படுகிறது (3:3). அப்படியாயின் நினிவே நகரம் 80 கி.மீ. விட்டமுள்ள பெரும் நகரமாக இருந்திருக்க வேண்டும். ஆனால், புதைபொருள் ஆய்வுகள் நகரத்தின் சுற்றளவு 13 கி.மீட்டருக்கும் குறைவானதே என்று காட்டுகின்றன. குறிக்கப்படும் மக்கள் தொகையும் நகருக்கு மிகப் பெரியதாக உள்ளது. ''நினிவே அரசன்'' என்ற பட்டம் விவிலியத்தின் மற்ற நூல்களில் காணப்படவில்லை. அசீரிய அரசன் ''அசூரின் அரசன்'' என்றே அழைக்கப்பட்டான். மேலும், நினிவே வீழ்ச்சிக்குப் பின்னரே (கி.மு. 612), இந்நூல் எழுதப்பட்டது என்று சுட்டிக்காட்டப் பல சான்றுகள் உள்ளன.

கதையின் தலைவர், 2 அர 14:25-இல் குறிக்கப்படும் யோனாதான் என்று 1:1 கூறுகிறது. அதாவது, இரண்டாம் எரொபவாமின் ஆட்சிக் காலமாகும் (கி.மு. 783-743). இக்காலத்தில் அசீரிய மன்னர்கள் அசூரில் தங்கினர், நினிவேயில் அன்று.

நினிவே சனகெரிபு காலத்தில்தான் *(760-680)* தலைநகராகியது. மேலும், நினிவேயின் அரசன் யார்? எதிலிருந்து நினிவே மக்கள் மனந்திரும்பினர்? பிற்காலத்தில் யோனாவும், நினிவே மக்களும் என்ன ஆயினர்? இந்நூல் வரலாற்று நூல் என்றால், அதில் இத்தகைய விவரங்களை நாம் எதிர்பார்க்கலாம். ஆனால், ஆசிரியர் இவை பற்றி அக்கறை கொள்ளவில்லை. இவற்றையெல்லாம் ஒருங்கே நோக்குங்கால் ஆசிரியர் வரலாற்றுக்காக அன்று, வேறொரு நோக்கத்திற்காக, அதாவது போதகம் அளிப்பதற்காக, இந்நூலை எழுதினார் என்பது தெளிவாகிறது. இதற்காக ஓர் உவமைக் கதையை எழுதினார். இதுவே இப்போது ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்ளும் ஒருமித்த கருத்தாகும். பழைய ஏற்பாட்டு உவமைகளின் *(2 சாமு 13:1-14; 14:6-8; 1 அர 20:39-41; எசா 5:1-6; 28:24-28)* நெருக்கமான அமைப்பு, உயிர்ச் சித்திரத்தன்மை, சுருங்கச் சொல்லுதல் ஆகிய பண்புகள் இந்நூலில் காணப்படுகின்றன. நூல் தன் தலைவனை அடையாளம் காட்டுகிறது. அவரது பண்பை வரலாற்றுத் தோற்றத்துடன் விவரிக்கிறது.

உவமை என்ற அளவில், பெயர்களையும், காலத்தையும் குறிப்பிட எந்த முயற்சியும் நூலில் காணப்படவில்லை. முக்கிய நிகழ்ச்சிக்கு அப்பால் கதையைத் தொடர ஆசிரியர் முயலவில்லை. பிறஇன மக்களே கதையில் முக்கியத்துவம் பெறுகின்றனர் *(1:3.5-6; 4:1-4.10-11)*. *1:16*-இல் வரும் நிகழ்ச்சிகளைப் பற்றி யோனாவோ, ஆசிரியரோ எப்படி அறிந்தனர் என்பது பற்றி விளக்கம் தரவில்லை. வேறு மொழி பேசுபவர்களுக்கு இறைவாக்கினர் தமது போதகத்தை எப்படிப் புரியவைத்தார் என்பதும் விளக்கப்படவில்லை. நல்ல சமாரியன் உவமைபோல், இஸ்ராயேலர் வெறுத்தவர்களைக் கதையின் முக்கிய பாத்திரமாக்குவது, போதகத்தை வலியுறுத்த பெரிதும் உதவுகிறது. ஓர் எபிரேய இறைவாக்கினர் போதிக்க, தபசு செய்து மனந்திருப்பத் தகுதியுடைய நாடுகளில் எல்லாம் கடைசி நாடு, யூதர் கருத்துப்படி, அசீரியாவாகத்தான் இருக்க முடியும்; இஃது இறைவனுடைய இரக்கத்தைப் பெறத் தகுதியற்றது. அவ்வளவுக்கு யூதர்கள் அசீரியாவை வெறுத்தனர்.

இந்த உவமைக் கதையில் ஓரளவு உருவகப் பண்புகளும் உண்டு. கடந்த காலத்தில் வாழ்ந்த ஒன்றும் அறியப்படாத ஓர் இறைவாக்கினர் ஒரு ''வில்லனாகத்'' தோன்றுகிறார். புறா என்று பொருள்படும் பெயருடைய யோனா இஸ்ராயேலைக் குறிக்கிறார். நினிவே, புறஇன உலகம் முழுவதையும் குறிக்கிறது. யாவேயையும் அவரைப் பற்றிய இறையொருமைக் கோட்பாட்டு அறிவையும் புறஇன மக்களுக்கு எடுத்துச் சொல்ல இஸ்ராயேல் அழைக்கப்பட்டது. ஆனால், இஸ்ராயேல் இக்கடமையிலிருந்து பின்வாங்கியது; அப்பணியை நிறைவேற்ற மறுத்தது. யோனா தர்சிசுவுக்கு ஓடிப்போவது, நாடுகடத்தலுக்குமுன் தூதுரைக்க இஸ்ராயேல் மறுத்ததைக் குறிக்கிறது. புயலால் யோனா துன்புறுகிறார்; மீனால் விழுங்கப்படுகிறார். இஸ்ராயேல் தனது கீழ்ப்படியாமைக்காக பாபிலோனால் விழுங்கப்பட்டது *(எரே 51:34)*. யோனா மீன்வயிற்றில் செய்ததுபோல், நாடுகடத்தப்பட்டபோது இஸ்ராயேல் யாவேயிடம் திரும்பியது; எழுபது ஆண்டு நாடுகடத்தலுக்குப்பின் விடுதலை அடைந்தது. நாடுகடத்தப்பட்டுத் திரும்பிய பின் தூதுரைக்க இரண்டாம் முறையாக இஸ்ராயேல் கட்டளை பெறுகிறது. இப்போதும் இறைவனது கட்டளைக்குப் பணிய இஸ்ராயேல் முரண்டு செய்தது. உருவகத்தின் இக்கட்டத்தில் ஆசிரியர் காலத்தை, நாம் அடைகிறோம். யோனா தூதுரைக்க புறஇன மக்கள் மனம்வருந்தித் திருந்தத் தயாராக இருந்தனர் என்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார். மனக் கசப்படைந்த, தீய எண்ணமுடைய யோனாவில், அவர் காலத்தில் யூதர்களிடையே நிலவிய குறுகிய மனப்பான்மையையும், சகிப்புத் தன்மையின்மையையும், புறஇனத்தார்பால் காட்டிய வெறுப்பையும் படம் பிடித்துக் காட்டுகிறார்.

பெருமளவிற்கு இந்த விளக்கம் உண்மையானாலும், இந்நூலை ஒரு தொடர் உருவகமாக எடுத்துக் கொண்டால் அது தவறான திசையில் இட்டுச் செல்லும். ஏனெனில், கதையில், மீன் தண்டனையின் கருவியன்று, மீட்பின் கருவியாகும். நினிவே மக்களுக்கு யோனா அறிவித்த செய்தி இறையொருமைக் கோட்பாடன்று, தவிர்க்க முடியாத அழிவைப் பற்றியதாகும். ஆகவே, யோனா கதைக்கும் இஸ்ராயேல் வரலாற்றுக்குமிடையே ஒவ்வொரு கட்டத்திலும் இணைவுத்தன்மை காண முயலக்கூடாது. ஆகவே, பெரும்பாலான விளக்கவுரையாளர்கள் இந்நூலை ஓர் உவமையாக ஏற்றுக் கொண்டு விளக்கம் அளிப்பர்.

விவிலியத்தின் உவமைக்கும் உருவகத்திற்குமிடையே துல்லியமான வேறுபாடுகள் இல்லை. உவமை ஒரு முக்கிய உண்மையை எடுத்துக்கூறும் கட்டுக் கதையாகும். இயேசு பயன்படுத்திய உவமைகள் போன்றது இந்நூல். ஆசிரியர் கதை சொல்வதில் வல்லவர். ஊதாரிப் பிள்ளை உவமையில் வரும் மூத்த சகோதரன் (லூக் *15:25-32*) ஒரு குறிப்பிட்ட குழுவினரின் மனப்போக்கைச் சித்திரிக்கிறான். அதுபோல் இந்நூல் புறஇனத்தவரை வெறுக்கும் குறுகிய மனப்பான்மையுடைய, சகிப்புத்தன்மையில்லாத ஓர் எபிரேயக் குழுவினரைச் சித்திரிக்கும் கீழ்த்தரமான படமாகும். நாத்தானின் உவமையைக் கேட்டு தாவீது மன்னன் தன் மேலேயே தீர்ப்புக் கூறிக்கொண்டான் (*2 சாமு 12:1-7*). இந்த உவமை ஒரு வாளைக் கொண்டு குத்துவது போன்றது. ஆசிரியர் தமது காலத்து மக்களைக் குற்றம் சாற்றிக் காயப்படுத்தி, அவர்களது சுயநலத்தைக் கண்டனம் செய்கிறார். ஏனெனில், இவர்கள் உண்மையான இறைவனைப் பற்றிய அறிவை உலகின் பிற மக்களுக்குப் பகிர்ந்தளிக்காது மறைத்தனர். இவற்றைக் கருத்தில் கொண்டால் இந்நூல் உருவகக் கூறுகளைக் கொண்ட உவமையாகும் என்பது தெளிவாகும்.

பழைய ஏற்பாட்டு உவமைகள், கற்பிக்கும் பாடத்தைக் கடைசிப்பகுதியில் தெளிவாகவும், வெளிப்படையாகவும் விளக்குகின்றன. யோனாவின் ஆசிரியர் இத்தகைய விளக்க முடிவுரையைக் கொடுக்கவில்லை. கதை திடீரென்று முடிகிறது. ஆகையால், இந்நூல் ஓர் உவமை என்பதைவிட ஒரு போதகக் கதை, அல்லது மிட்ராசு இலக்கியம் என்பது மேல்.

அரசர்கள், எரேமியா, எசேக்கியேல் நூல்களில் காணப்படும் இணைப்பகுதிகளோடு ஒப்பிடுகையில், யோனா நூல் பொதுப் பாணிக் கதையும் அன்று; பழைய ஏற்பாட்டில் நல்ல புலமை பெற்றவரின் படைப்பாகும். அவர் வேத நூலை நன்கு கிரகித்து, அதைத் தமது தனிப்பட்ட போதக நோக்கிற்காகப் பயன்படுத்துகிறார். யோனா நூலோடு ஒப்பிடக்கூடிய, இறைவாக்கினர் செயல்களைப் பொருளாகக் கொண்ட இரு வகைப் பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சியுரைகள் உள்ளன. அவை இறைவாக்கினர் பற்றிய கதைகளும், அடையாளச் செயல்களுமாகும். இறைவாக்கினர் பற்றிய கதைகள் வரலாற்று இலக்கியத்தின் பிற்கால வளர்ச்சியாகும். இவற்றைப் பின்பற்றி ஆசிரியர் தமது பாடத்தைப் போதிக்க வரலாற்று உண்மைகளை எடுத்துச் சுதந்தரமாகப் பயன்படுத்துகிறார் (*1 அர 20:35-43; 22:11; 2 அர 13:14-19; எசா 20; எரே 27:1-8; எசே 4:1-15*). இறைவாக்கினர் பற்றிய இந்த இருவகை நிகழ்ச்சியுரைகளுக்கும், யோனா நூலுக்கும் உள்ள ஒற்றுமை, ஆசிரியர் சமயச் செய்தி அளிப்பதையே தமது நோக்கமாகக் கொண்டிருந்தார் எனக் காட்டுகின்றன.

இவ்வாறு இஸ்ராயேல் நாடுகடத்தப் பட்டுத் திரும்பிய காலத்து வாழ்க்கைச் சூழ்நிலையில் இந்நூலை நாம் படிக்க வேண்டும். இறைவாக்கினர் நிகழ்ச்சியுரைகள், கதைகள் ஆகியவற்றோடு அது தழுவியுள்ள மூலங்களோடும் ஒப்பிட்டு ஆய்வு செய்ய வேண்டும். நமக்குக் கிடைத்திருக்கும் வடிவில் நூலைப் பகுப்பாய்வு செய்ய வேண்டும். அப்போது இந்நூல் ஒரு வர

லாற்று நிகழ்ச்சியுரை என்பதை விட, போதகக் கதையின் பண்புகளைக் கொண்ட ஓர் அக்காதா மிட்ராசு இலக்கியம் என்பது தெளிவாகும்.

***4. யார், எப்போது, ஏன், எழுதினார்?:*** இந் நூலின் ஆசிரியர் பற்றி ஒன்றும் தெரிவதற் கில்லை. எப்போது எழுதப்பட்டது என்பது பற்றியும் துல்லியமாகக் கூற முடியாது.

இந்நூலை வரலாறாகக் கருதி விளக்கம் அளிப்பவர்கள் இது கி.மு. 8-ஆம் நூற்றாண் டில் தோன்றியது என்பர். 2 அர 14:25-இல் குறிக்கப்படும் இறைவாக்கினர் யோனா தான் இந்நூலை எழுதினார் எனக் கருதுவர். ஆனால், இப்போதைய பெரும்பாலான ஆய்வாளர்கள், இக்கருத்தை ஏற்க மறுத்து, இந்நூல் கி.மு. 400-200-க்கு இடையிட்ட காலத்தில் தோன்றியிருக்க வேண்டும் என் பர். இதற்கு அவர்கள் பின்வருமாறு கார ணங்கள் கூறுவர். ஆசிரியர் இறைவாக் கினரைப் பற்றிப் படர்க்கையிலும், முரண் நகைச்சுவையோடும் எழுதுகிறார். இஃது ஆசிரியர் தம்மைப் பற்றி எழுதவில்லை என்று காட்டுகிறது. மீன் இறைவாக் கினரைக் கக்கிய நாட்டின் பெயர், நினிவே அரசனது பெயர் போன்ற பொருள் விவரங் கள் கொடுக்கப்படவில்லை. இவை ஆசிரி யர் தமது காலத்து நிகழ்ச்சியைப் பற்றி எழுதவில்லை என்று காட்டுகின்றன. மொழி நடை கி.மு. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகத் தெரியவில்லை. நூலில் பயன் பட்டுள்ள சில சொற்கள், பிற்கால எபிரே யங்களில் தவிர பழைய ஏற்பாட்டில் வேறெங்கும் காணப்படவில்லை. நூலில் காணப்படும் அரமேயிக்குப் பண்புகள், இந்நூல் 8-ஆம் நூற்றாண்டுக்கு மிகவும் பிந்திய காலத்தில் தோன்றியது என்று காட்டுகின்றன.

மேலும், இந்நூல் கி.மு.5-ஆம் நூற்றாண் டில் இஸ்ராயேலில் நிலவிய மனப்போக் கையும், பிரச்சனையையும் பிரதிபலிக் கிறது. அப்போது யூதா பரந்த பாரசீகப் பேரரசின் ஒரு சிறிய மாநிலமாகும். புற இன உலகோடு யூத சமூகம் எத்தகைய உறவு கொள்ள வேண்டும் என்பது பற்றிய ஓர் இக்கட்டான பிரச்சனை எழுந்தது. இஸ்ராயேல் புறஇனத்தவர்பால் பின்வரும் இரண்டில் ஒரு போக்கைப் பின்பற்றலாம். ஒன்று யூதர்கள் தங்களைப் பிறரிடமிருந்து பிரித்து, ஒதுங்கி வாழலாம்; சட்டத்தை வேலியாகக் கொண்டு, தங்கள் விசுவாசத் தையும் பாரம்பரியத்தையும் ஆர்வத்தோடு கடைப்பிடித்து பிறரோடு எத்தொடர்பும் கொள்ளாமல் தங்களையே பாதுகாத்துக் கொள்ளலாம். இறைவாக்கினர்களான ஆகாய், செக்கரியா, நாட்டுப்பற்றுடைய நெகேமியா, இறையியல் வல்லுநரான எஸ்ரா ஆகியோரின் நூல்கள் இத்தகைய மனப்போக்கை வலியுறுத்தின. புற இனத்த வரிடமிருந்து இறை மக்களைப் பிரித்துக் காட்டுபவைகளுக்கு முதன்மை அளிக்கப் பட்டது. அவற்றில் சில ஆலய வழிபாடு, சட்டத்தை நுணுக்கமாய்க் கடைப்பிடித்தல், விருத்தசேதனச்சடங்கு, ஓய்வு நாள் அனு சரிப்பு, புற இனத்தவரோடு செய்யும் கலப்புத் திருமணத்திற்கு எதிர்ப்பு, சமாரிய ரோடு பகை, அன்னியர் அரசுகளுக்கு எதிரான கசப்பான மனநிலை என்பன. இவற்றின் விளைவாக, இஸ்ராயேலர் புற இன மக்களிடமிருந்து பிரிந்து, ஒதுங்கி, கடுமையாக தனித்து வாழ்ந்தனர். குறுகிய நாட்டுப்பற்றும் பிறமதத் துவேசமும் பிற் கால யூதத்துவத்தின் பண்புகளாயின.

இத்தகைய மனப்போக்கு பரவலாக இஸ் ராயேல் சமூகத்தினரிடையே நிலவியிருந்தா லும், எல்லாரும் இந்நிலையை ஏற்றுக் கொண்டனர் என்று சொல்ல முடியாது. முன் கூறப்பட்ட மனப்போக்கை வன்மை யாக எதிர்த்துக் கண்டனம் செய்யும் மற் றொரு மனப்போக்கும் காணப்பட்டது என்பதற்கு யோனா நூல் ஒரு சாட்சியாகும். இதன்படி இஸ்ராயேல் யாவேயின் தூது ரைக்கும் அடியானாகப் பணிசெய்யலாம். உண்மையான இறைவனைப் பற்றி தனக்கு அறிவிக்கப்பட்ட தனிச்சிறப்பான வெளிப் பாட்டைப் பிற மக்களோடும் பகிர்ந்து கொள்ளலாம். சிறப்பாக யாவேயின் இரக் கம் எல்லாருக்குமுரியது என்ற பொதுமைப்

பண்பைக் கடைப்பிடிக்கலாம். இப்போக்கு ஏற்கெனவே இரண்டாம் எசாயாவில் சிறப் பிடம் பெற்றிருந்தது.

இந்த இரண்டில் எதைப் பின்பற்றுவது என்பதுதான் பிரச்சனை. இது யோனா நூல் போதிக்கும் பாடத்திற்கும் பின்ன்ணியாக அமைகிறது. புறஇனத்தவர்பால் யூதர்கள் காட்டிய கடும் கசப்புத்தன்மையும் வெறுப் பும் இந்நூலில் பயங்கரமாகச் சித்திரிக்கப் படுகின்றன. ஆனால், இறைவன் யாவர் மேலும் காட்டும் பரிவும் அன்பும், அவரது இரக்கத்தின் பரந்த தன்மை ஆகியவற்றோடு யூத சமூகத்தினரின் குறுகிய பழிவாங்கும் போக்கு ஒப்பிடப்பட்டு வேறுபடுத்தப்படு கிறது; குற்றம் சாற்றப்பட்டுக் கண்டிக்கப் படுகிறது. ஆசிரியர் இறைவன் யாவர் மேலும் காட்டும் அக்கறையையும், அன் பையும், இரக்கத்தையும் பறை சாற்றுகிறார். இஸ்ராயேலுக்கு அளிக்கப்பட்ட தூதுரைக் கும் அழைப்பை நிறைவேற்ற இஸ்ராயே லுக்குச் சவால் விடுகிறார்.

மேலும், நூலில் குறிப்பிடத்தக்க முறை யில் அரமேயிக்குப் பண்புகளும், பிற்கால எபிரேயப் பண்புகளும் காணப்படுகின்றன. ''விண்ணகக் கடவுளாகிய ஆண்டவர்'' *(1:9)* போன்ற சில சொற்கள் யூதர் களிடையே பிற்காலத்தில்தான் பயன்பட் டன (எஸ் *1:2; 2:11;...*நெகே *1:4.5; 2:4;* தானி *2:18. 37;...*). ஆசிரியர் எரேமியாவைத் தழுவி எழுதுவதாகத் தெரிகிறது. இஃது அசீரியப் பேரரசு அழிந்து நீண்ட காலத்துக் குப்பின் இந்நூல் எழுதப்பட்டது என்பதைச் சுட்டுகிறது. எபிரேய விவிலியத்தில் இந் நூல் இறைவாக்கினர் தொகுப்பில் சேர்க்கப் படவில்லை; மாறாக, போதக நூல்கள் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. இஸ்ரா யேல் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின்புதான் இத்தகைய போதக நூல்கள் தோன்றின. வரலாற்று வடிவில் போதகம் அளிக்க பழைய ஏற்பாட்டு ஆசிரியர்கள் விரும்பிய காலத்தில்தான் (யோபு, யூதித்து, எஸ்தர், தானியேல்) இந்நூல் எழுதப்பட்டது என்று இலக்கியப் பண்புகள் காட்டுகின்றன.

இந்நூல் சீராக்கு நூலுக்குமுன் (கி.மு. *190*) எழுதப்பட்டிருக்க வேண்டும். ஏனெ னில், சீராக்கு ஆசிரியர் ''பன்னிரு இறை வாக்கினர்களைக்'' குறிப்பிடுகிறார். இவற் றையெல்லாம் கருத்தில் கொண்டு, இந்நூல் *400-200*-க்கு இடையிட்ட காலத்தில், அதா வது எஸ்ரா-நெகேமிய நூல்களுக்குப் பின் னும் *(397)*, சீராக்கு நூலுக்கு முன்னும் தோன்றியது என்பது இக்கால ஆய்வாளர் களின் முடிவாகும்.

**5. மூலங்கள்:** ஆசிரியர் இந்நூலில் பயன் படுத்தியிருக்கும் மூலங்கள் பற்றி வெகு காலமாக பல யூகங்கள் உண்டு. பெர்செயூ சும், அன்ரோமெடாவும், கெரிக்கலிசும், கசியோனும், ஓனானெசு என்ற பெயரில் வழிபடப்பட்ட செமித்திய மீன் கடவுளான தேகோனும் ஆகிய பல கதைகளோடு யோனா வும் மீனும் என்ற கதையைத் தொடர்பு படுத்த முயற்சிகள் எடுக்கப்பட்டன. இக் கதைகளில் எதையும் இந்நூல் தழுவியுள் ளது என்பதற்கு நேரடிச் சான்றுகள் இல்லை. ஆசிரியர் பயன்படுத்தியிருக்கக் கூடிய விவிலிய மூலங்கள் முக்கியமான வையாகும். யோனாநூல் எரேமியா, எசேக் கியேல் ஆகியோரின் நூல்களோடும் தொடர்பு கொண்டிருப்பதாய்த் தெரிகிறது. யோனா *3:10;* எரே *8:6-7*-ஐத் தழுவியுள் ளது. யோனா *3:8*-க்கும், எரே *25:5; 26:3; 36:3.7*-க்குமிடையில் வாசகத் தொடர்பு இருக்கிறது. யோனா *3:3*-க்கும், எரே *36*-க்கும் கருத்து ஒப்புமை உண்டு. யோனா *3:8-9*-க்கும், எரே *26:2-3*-க்கும் இடையில் சொற்களில் ஒற்றுமையுண்டு. யோனா *1*-இல் வரும் புயல் விவரிப்பின் சொற் றொகுதி எசே *26-28*-ஐ நினைவுபடுத்து கிறது. யோனா *4, 1* அர *19*-உடன் ஒப்புமை கொண்டுள்ளது. மேலும், இரண்டாம் எசா யாவில் வரும் புறஇனத்தவர்க்குத் தூதுரைக் கும் கருத்தை மீண்டும் கையாண்டு, அதை இன்னும் தெளிவாகக் கூறுகிறது இந்நூல். இக்கருத்துக்கு எதிராக நிலவிய போக்கை யும், எஸ்ரா-நெகேமியா காலத்தில் நிலவிய தனித்திருக்கும், ஒதுங்கியிருக்கும் போக்கை யும் கண்டனம் செய்ய ஆசிரியர் முயற்சி

செய்வதாகத் தெரிகிறது. ஆதியாகம முதல் அதிகாரங்களில் காணப்படும் யாவரையும் உள்ளடக்கும் பொதுமைப்பண்பை மீண்டும் நிறுவும் முயற்சியாகும் இந்நூல். இவ்வாறு இந்நூல் முந்தைய விவிலிய இலக்கியங்களைத் தழுவிய தனது போதகத்தை அளிக்கிறது. ஆகவே, இந்நூல் ஓர் அக்காதா மிட்ராசாகும் என்று ஏற்றுக் கொள்ளலாம்.

**6. நூலின் ஒற்றுமை:** நூலில் ஒற்றுமையில்லை என்று கூறியுள்ளனர் ஆய்வாளர்கள் சிலர். இவர்கள் நூலில் இடைச் செருகல்களையும் இடமாற்றங்களையும் காண்கின்றனர். அதன் விளைவாக, கதையை அதன் மூல வடிவில் திருத்தி அமைக்க எடுக்கப்பட்டிருக்கும் முயற்சிகள் செயற்கையாகத் தெரிகின்றன. அண்மைக் காலத்தில் ஆய்வாளர்கள் இந்நூலில் ஒற்றுமையுள்ளது என்றும், *2:2-9* என்ற பகுதியைத் தவிர மற்றப் பகுதிகளை ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர்கள் எழுதினார்கள் என்று கூற எக்காரணமும் இல்லை என்றும் கூறியுள்ளனர்.

*2:2-9* என்ற நன்றியுரைப் பாடல் நூலின் மற்றப் பகுதிகளோடு ஒத்துப்போகவில்லை என்று இப்போது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும். ஏனெனில், இதில் மற்றப் பகுதிகளில் காணப்படும் அரமேயிக்குப் பண்புகள் காணப்படவில்லை. இதன் நடை மற்றப் பகுதிகளிலிருந்து வேறுபடுகிறது. இதை விட முக்கியமானது நன்றியுரைப் பாடலின் பொருள் இது தவறான இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது என்று சுட்டுவதாகும். இச்சங்கீதம் ஆபத்திலிருந்து விடுதலை பெற்ற சூழ்நிலையைப் பின்னணியாகக் கொண்ட நன்றியுரைப் பாடலாகும். நீர், மரண ஆபத்துக்கு அடையாளமாகக் கருதப்பட்டது. ஏனெனில் இஸ்ராயேலர், பாபிலோனியர் ஆகியோரிடையே கடல், சாவின் அரசாகக் கருதப்பட்டது. மரண ஆபத்திலிருந்து விடுதலையடைந்த ஓர் இஸ்ராயேலன் பாடிய நன்றிப்பாடலாக இச்சங்கீதம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, மீன் வயிற்றில் இச்சங்கீதத்தை ஒருவர் பாடுவது அவ்வளவு பொருத்தமாக இல்லை. மீனால் கரையில் கக்கப்பட்டு, பாதுகாப்பாக இருக்கும்போது யோனா பாடுவதாக அமைந்திருந்தால் பொருத்தமுடையதாக இருந்திருக்கும்.

இச்சங்கீதம் ஒரு தனிப்பட்ட படைப்பாகும், இதை ஆசிரியரோ அல்லது பிற்காலப் பதிப்பாசிரியரோ இங்கே புகுத்தியிருக்க வேண்டும் என்பர் சிலர். அப்படியே இருந்தாலும் இது தவறான இடத்தில் புகுத்தப்பட்டுள்ளது. குறிப்பிட்ட சூழ்நிலையைத் தராமல், இச்சங்கீதம் ஆபத்திலிருந்து விடுதலை அடைந்ததற்காகப் பாடும் நன்றியறிதலை எடுத்துக்கூறுகிறது. ஆயினும், இச்சங்கீதம் மூலநூலைச் சேர்ந்ததன்று என்று கூற வேண்டியதில்லை, ஏனெனில், சங்கீதங்கள் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்கு ஏற்றவாறு எப்போதும் அமைக்கப்படுவதில்லை.

**7. புதிய ஏற்பாட்டில் யோனா:** ''யோனாவின் அடையாளம்''. இது பற்றி இரு வாசகங்கள் உள்ளன. அவை: *மத் 12:39-42; லூக் 11:29-32.* அடையாளம் பற்றிய பகுதி லூக்காவில் சிறிது மாற்றியமைக்கப்பட்டுள்ளது. மூன்று பகலும், மூன்று இரவும் என்பது அடையாளமாக வெளிப்படையாகக் கூறப்படவில்லை. யோனாவின் போதகத்தின் வெற்றியை வலியுறுத்த யோனா திமிங்கலத்தின் விவரத்தை வேண்டுமென்றே மாற்றினாரா என்று உறுதியாகக் கூறமுடியாது. மரண ஆபத்திலிருந்து அடையும் விடுதலை இறைவாக்கினரின் உண்மைத்தன்மையை எடுத்துக் காட்டுகிறது என்பதில் அடங்கியிருக்கிறது யோனாவின் அடையாளம். யோனா போதகத்தின் விளைவான வெற்றி அடையாளத்தின் ஒரு பகுதியே ஆகும். ஆயினும், இருவாசகங்களிலும் இப்பகுதி பற்றிய சொற்கள் ஒரே மாதிரியுள்ளன.

யோனா நூல் வரலாற்றுத் தன்மையுடையது என்று கருதுபவர்கள் யோனா அடையாளம் பற்றிய நற்செய்தி வாசகத்தை எடுத்துக் காட்டுவர். யோனாவின் விடு

தலை கிறிஸ்துவின் உயிர்ப்போடு இணையாக வைக்கப்பட்டுள்ளது. ஆகவே, ஒன்றைப்போல் மற்றதும் வரலாற்றுத் தன்மையுடையது என்பர். நற்செய்தி வாசகம் மூன்று நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறுகிறது. அவை: மீன் வயிற்றில் யோனா தங்கியது, நினிவே மக்கள் மனந்திரும்பியது, தென்னாட்டு அரசி சாலமோனைப் பார்க்க வந்தது என்பன. இந்நிகழ்ச்சிகளை நிறுவ வேண்டிய அவசியம் இயேசுவுக்கு இல்லை. யூதர்களுக்கு மாதிரிகையாக எடுத்துக் காட்டப்பட்ட யோனாவும் நினிவே மக்களும், தென்னாட்டு அரசியைப்போல் ஒரு சூழ்நிலையை எடுத்துக் காட்டுகின்றனர். ஏனெனில், அவற்றிற்கு வேதாகமமே சான்று கூறுகின்றன. எல்லாம் ஒரே மூலத்தைக் கொண்டுள்ளன. அவ்விவரிப்பின் இலக்கியத் தன்மை அவ்வளவு முக்கியத் தன்மையுடையதன்று. இவ்வாறு மனந்திரும்புவோருக்கு மாதிரிகையாக மகதலா மரியாவையும், ஊதாரிப்பிள்ளையையும் திருச்சபைப் போதகர்கள் பயன்படுத்தலாம்.

பழைய ஏற்பாட்டு வாசகங்கள் புதிய ஏற்பாட்டில் எடுத்துக் காட்டப்படுவது பற்றிய நவீன ஆய்வுகள், பழைய ஏற்பாடு அதன் பல்வேறுபட்ட இலக்கியங்கள் வேறுபடுத்தப்படாமல், எப்போதும் ஒரே தொகுப்பாக ஏற்றுக்கொள்ளப்பட்டு எடுத்துக் காட்டாகப் பயன்பட்டுள்ளது என்று தெளிவாகக் காட்டுகின்றன. 1 கொரி *10:4*-இல் வரும் பாறை அல்லது 2 திமொ *3:8*-இல் வரும் யன்னேயும் யம்பிரேயும் போன்று, நற்செய்தியில் வரும் யோனாவும் வரலாற்றுத் தன்மையுடையவர் அல்லர். நல்ல சமாரியன் உவமை போன்று இதுவும் ஒரு கற்பனை நிகழ்ச்சியாகும். வரலாற்றுச் சுட்டிக் காட்டுதல்கள் போன்று ஆற்றலுடையதாகும்.

திருச்சபைத் தந்தையருள் பலர் இந்நூலை வரலாற்றுத் தன்மையுடையது என்று ஏற்றுக்கொண்டனர். ஏனெனில், அவர்கள் காலத்தில் யோனாநூல் வரலாற்று இலக்கிய வகையில் சேர்க்கப்பட்டிருந்தது. அதற்கேற்றவாறு இந்நூலின் வரலாற்றுத்தன்மை பற்றிய முடிவுகளும் அமைந்திருந்தன. அதன் விளைவாக இந்நூலில் வரும் அருஞ்செயல்கள் நடந்திருக்கக்கூடும் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருச்சபைத் தந்தையருக்குக் கிடைத்திருந்ததை விட, பழங்கால இலக்கிய வகைகள் பற்றி அதிக அறிவை நாம் இப்போது கொண்டிருக்கிறோம். அதன் விளைவாக யோனா நூல் வரலாற்று நூல் அன்று, போதகக் கதை வகையைச் சேர்ந்த மிட்ராசு நூல் என்று ஏற்றுக்கொள்ளப் போதிய காரணங்கள் உள்ளன.

**8. நூலின் திட்டம்:**

யோனாவின் தூதிற்கேற்ப இந்நூலை இரண்டு பாகமாகப் பிரித்துத் திட்டம் செய்யலாம்.

I. முதல் தூது *(1:1-2:11)*.

அ. யோனா தூதுரைக்கக் கட்டளை பெறுதல் *(1:1-2)*.

ஆ. யோனா தர்சிசுக்கு ஓடுதல் *(1:3)*.

இ. புயல் *(1:4-16)*.

*1) 1:4-9* : யோனா ஐயத்துக்குரியவராகிறார்.

*2) 1:10-12* : புயலின் பொருள்.

*3) 1:13-16* : யோனா கடலில் எறியப்படுதல்.

ஈ. யோனா காப்பாற்றப் படுகிறார் *(2:1-11)*.

*1) 2:1* : பெரிய மீன் யோனாவை விழுங்குகிறது.

*2) 2:2-10* : யோனாவின் நன்றியுரைப் பாடல்.

*3) 2:11* : யோனா விடுதலை அடைதல்.

II. இரண்டாம் தூது *(3:1-4:11)*.

அ. யோனா மீண்டும் தூதுரைக்கக் கட்டளை பெறுதல் *(3:1-4)*.

1) 3:1-2 : ஆண்டவரது செய்தி.

2) 3:3-4 : யோனாவின் அறிவிப்பு.

ஆ. நினிவே மக்கள் மனந்திரும்புதல் (3:5-10).

1) 3:5-9 : நினிவே மக்களின் மனத் துக்கமும் மாற்றமும்.

2) 4:4 : ஆண்டவரது பதில்.

ஈ. யோனாவும் ஆமணக்குச் செடியும் (4:5-11).

1) 4:5-8 : யோனாவின் மனக்கசப்பு.

2) 4:9-11 : ஆண்டவரது கண்டனம்.

**9. நூலின் போதகம்:** இந்நூலை எழுதத் தூண்டிய குறிப்பிட்ட சூழ்நிலையைப் பற்றி எந்தக் குறிப்பையும் நூல் கொடுக்க வில்லை. ஆசிரியரைப் பற்றியோ, யாருக் காக எழுதினார் என்பது பற்றியோ ஒன்றும் கூறப்படவில்லை. நூலுக்குப் பின்னணி யான வாழ்க்கைச் சூழ்நிலை பற்றி நாம் ஒன்றும் உறுதியாக அறிய முடியாவிட்டா லும், நூலின் பொதுவான பண்பாட்டுப் பின்னணி பற்றி ஒரு சிறிது அறிகிறோம். இந்தப் பின்னணியில் ஆசிரியரது போதக நோக்கு தெளிவாகிறது. தங்கள் எதிரிகளின் மீட்பைவிட அவர்களின் அழிவையே அதிக மாக எதிர்பார்க்க இஸ்ராயேலர் சோதிக்கப் பட்ட காலத்தில், இறைவனது இரக்கம் எவ்வளவு தூரம் போகும் என்பது பற்றி ஓர் ஒப்பற்ற செய்தியை அளிக்கிறார் ஆசிரியர். இச்செய்தி பழைய ஏற்பாட்டு வரலாற்றில் உன்னதமானதொன்றாகும். எல் லோருக்கும், இஸ்ராயேலின் கொடுமை யான பகைவர்களுக்கும்கூட, மீட்பு உண்டு என்ற செய்தி மனிதர்க்கு மகிழ்ச்சி அளிக்க வேண்டும். நல்விளைவுகளை ஏற்படுத்த வேண்டும்.

அ) இந்நூலை ஓர் உவமையாகவோ, மிட்ராசு நூலாகவோ எடுத்துக் கொண்டால் இதன் போதகம் என்ன? தாவீதுக்கு இறை வாக்கினர் நாத்தான் அளித்த உவமை போன்று (2 சாமு 12), புதிய ஏற்பாட்டில் வரும் திராட்சைத் தோட்டக் குத்தகைக்காரர் உவமை போன்று (மத் 21:33-46) ஆசிரியர் காலத்து வாசகர்களுக்கு அவர்கள் இருக்கும் விதத்தில் அவர்களைப் படம் பிடித்துக் காட்டுவது இந்நூலின் நோக்கங்களில் ஒன் றாகும். இறைவனது அன்பு இஸ்ராயேலர் களான தமக்கு மட்டுமே உரியது என்று கருதி, அது யாவர்க்குமுரியது என்று ஏற்றுக்கொள்ள மறுத்த இஸ்ராயேல் மக்க ளுக்கு அவர்களது அற்பத்தனத்தையும், சுயநலத்தையும் அறிவிலித்தன்மையையும் எடுத்துக்காட்டி, எரேமியாவின் போத னைக்கு ஏற்ப (எரே 18:8தொ), இஸ்ராயே லுக்கு எதிரான இறைவனது அச்சுறுத்தல் கள் மற்றும் நோன்பு செய்தால் நீக்கப்படு வது போன்று, புறஇனத்தாருக்கு எதிரான இறைவனது அச்சுறுத்தல்களும், அவர்கள் நோன்பு செய்தால், நீக்கப்படலாம் என்று படிப்பிக்கவும் இந்நூல் எழுதப்பட்டது.

மனிதர்கள், அவர்கள் யூதர்களோ, புற இனத்தவரோ யாவரையும் இறைவன் அன்பு செய்கிறார், அவர்கள் நலனில் அக்கறை காட்டுகிறார் என்பது இந்நூலின் அடிப்படைப் போதகமாகும். அப்போதகம் பழைய ஏற்பாட்டுத் தொடக்கத்திலிருந்தே தெளிவாக உள்ளது. ஆனால், தேர்ந்தெடுக் கப்பட்ட மக்களின் பொறாமையாலும், குறுகிய மனப்போக்காலும் அது மங்கிப் போயிற்று. ஆதி 3:15-இல் எல்லா மக்களுக் கும் நம்பிக்கை அளிக்கப்படுகிறது. தேர்ந் தெடுக்கப்பட்ட இனத்தின் தந்தையான ஆபிரகாமை இறைவன் அழைத்தபோது, ''பூமியிலுள்ள இனமெல்லாம் உன் வழி யால் ஆசீர்வதிக்கப்படும்'' (ஆதி12:3) என்று அவருக்கு இறைவன் வாக்களித்தார். ஆபிர காமும் அவரது சந்ததியினரும் அனுபவித்த சலுகைகள் காலப்போக்கில் பிற இனத்த வருக்கும் உரியதாக வேண்டும். ஒருவர் வழியாகப் பலர் பயனடைவதும், ஓர் இனத்தின் வழியாக மனுகுலம் முழுவதும் மீட்படைவதும், ஒரு பரிசுத்த நாட்டின் வழியாக எல்லா நாடுகளும் அறிவொளி பெறுவதும் இறைவனது நோக்கமாகும். பொறுப்பில்லாமல் சலுகைகளை அனுப விக்க மட்டும் இஸ்ராயேலைத் தமது

ஊழியனாக இறைவன் தேர்ந்தெடுக்க வில்லை. தொடக்க முதல் இறைவனது மீட்பளிக்கும் திட்டம் யாவரையும் உள்ள டக்கியதாகும். எசா *2:2-3*; மீக் *4:1-4*-இல் இறைவனது வழிகளைக் கற்றுக்கொள்ள எல்லா மக்களும் இறைவனது மலையில் ஏறுவதாக இறைவாக்கினர்கள் காண்கின்ற னர். சங் *72; 87; 117*, இறையரசு எல்லாருக்கு முரியது, அவர் எல்லாரையும் அன்பு செய்கிறார் என்று காட்டுகின்றன. ''உலகத் தின் எல்லை வரையில் நமது மீட்பு எட்டும்படி புறவினத்தார்க்கு ஒளியாக உன்னை ஏற்படுத்தினோம்'' *(எசா 49:6)*. ஆசிரியரது காலம்வரை இத்தூதுரைக்கும் அலுவலைச் செய்ய இஸ்ராயேல் தவறிவிட் டது. இந்நூலில் இறைமக்களை உலகத் தூதுக்கு ஆசிரியர் எக்காளத் தொனியுடன் அழைக்கிறார்.

இறைவனது இரக்கம் தேர்ந்தெடுக்கப் பட்ட மக்களுக்கு மட்டும் உரியதன்று, அது யாவருக்கும் உரியது என்று நூலில் விவரிக் கப்படுகிறது. அதன் விளைவாக இஸ்ராயே லின் இறைவாக்கினர்கள் புறவினத்தார்க்கு எதிராகக் கூறிய அச்சுறுத்தல்கள் மீண்டும் நீக்கப்படக் கூடாதவையன்று. இஸ்ராயே லர், தாங்கள் தீய வழிகளிலிருந்து மனந் திரும்பினால், தங்களுக்கு எதிராகக் கூறப் பட்ட அழிவுகளை, யாவே நிறைவேற்ற மாட்டார் என்ற விசுவாசத்தைப் போற்றி வந்தனர். யாவேயின் நாள் பற்றிய விவரிப் புக்குப்பின், இறைவாக்கினர் யோவேல், ''இப்பொழுதாவது நோன்பிருந்து அழுது கொண்டு உங்கள் முழு உள்ளத்தோடு நம்மிடம் திரும்புங்கள். ஏனெனில், அவர் அருளும் இரக்கமுமுள்ளவர், நீடிய பொறு மையுள்ளவர், நிலையான அன்புள்ளவர், செய்யக் கருதிய தீமையைக் குறித்து மனம் மாறுகிறார்... ஒரு வேளை அவர் திரும்ப வும் மனதை மாற்றிக்கொண்டு உங்களுக்கு ஆசி வழங்க மாட்டாரென யார் அறிவார்?'' என்று கூறுகிறார் *(யோவேல் 2:12-14*; மேலும் காண்க. நெகே *9:31*; சங் *103:8-12)*. யோவேலின் சொற்களே யோனா *3:9*-இல் பயன்படுத்தப்பட்டுள்ளன. புறஇன அரச னும் இதே நம்பிக்கையை எடுத்துக் கூறு கிறார். யோனாவும் மிகுந்த தயக்கத்தோடு இந்த உண்மையை ஏற்றுக் கொள்கிறார். அதாவது தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் சலுகையாக இதுவரை கருதப்பட்ட யாவே யின் இரக்கம் இங்குப் புறஇன மக்களுக்கு உரியதாக விவரிக்கப்படுகிறது. ''நாம் குறிப்பிட்ட அந்த நாடு தன் தீமையை விட்டுத் திரும்புமாயின், அதற்குத் தீமை செய்ய நினைத்ததற்காக மனம் வருந்து வோம்'' *(எரே 18:8)* என்ற எரேமியாவின் போதனையை யோனாநூல் ஆசிரியர் விளக் கிக்காட்டி, அப்போதனை புறவினத்தார்க் கும் பொருந்தும் என்று காட்டுகிறார்.

இதன் விளைவாக, நாடுகளுக்கு எதிரான அச்சுறுத்தல்கள், அவை அறிவிக்கப்பட்ட போது எவ்வளவு நீக்கப்படக் கூடாததாகத் தோன்றினாலும், அவை நிபந்தனைக்குரிய வையே. இது யூதர்களுக்கு ஓர் இடறலாக அமைந்தது. ஏனெனில், ஓர் இறைவாக்கி னர் யாவேயின் பெயரால் பேசினார் என்பதற்குச் சான்று அவ்வாக்கு நிறைவேறு தலாகும் *(உப 18:21)*. இப்படியிருக்க, யாவே புறவினத்தாரை அழிக்கவில்லை என்றால் இஸ்ராயேலின் அழிவை மட்டு மன்று, அதன் வருங்கால மகிமையையும் முன்னறிவித்த இறைவாக்குகளையும் எப்படி ஏற்றுக் கொள்வது? ஆசிரியர் இப்பிரச் சனையை எதிர் கொள்கிறார். நூலின் முதற்பகுதியில், யோனா, அவர் விரும்பா விட்டாலும், யாவேயின் இறைவாக்கினராக ஐயமறக் காட்டப்பெறுகிறார். இரண்டா வது பகுதியில் யோனாவின் தூதும், அதன் விளைவும் சிறப்பித்துக் காட்டப்பெறுகின் றன. ''இன்னும் நாற்பது நாட்களில் நினிவே வீழ்த்தப்படும்'' *(3:4)*. இதைவிட நிபந்தனையற்ற செய்தி ஒன்று இருக்க முடியாது. ஆயினும், இந்த அச்சுறுத்தலும் நிபந்தனைக்குரியதே என்று ஆசிரியர் காட்டுகிறார். ஏனெனில், ''நாம் அவர் களுக்குச் செய்யப் போவதாகச் சொல்லி யிருந்த தீங்கைக் குறித்துக் கடவுள் தம் மனத்தை மாற்றிக் கொண்டு, அதைச் செய்யாது விட்டு விட்டார்'' *(3:10)*.

யாவே யாவரையும், புறவினத்தாரையும், இஸ்ராயேலால் மிகவும் வெறுக்கப்பட்ட அசீரியர்களைக்கூட, அன்பு செய்கிறார். இதை யோனா ஏற்கெனவே நன்கு அறிந் திருந்ததால் அவர் இறைவனது கட் டளைக்குப் பணிய மறுத்தார் (4:2). நினிவே மக்கள் மனத்துக்கப்பட்டு நோன்பு இருந்ததால்' பரிவும் இரக்கமும் உள்ள யாவே அவர்களை அழிக்கப்போகும் தமது திட்டத்தைக் கைவிட்டு விடுவார்; அவர் களை மகிழ்ச்சியோடு மன்னித்துக் காப்பாற் றுவார் என்று யோனா அஞ்சினார். கசப்பும் வெறுப்பும் நிறைந்த யோனாவின் மோச மான படத்துக்கருகில், ''பரிவும் இரக்க மும், நீடிய பொறுமையும் அன்பும் உடைய'' (4:2) இறைவனது அழியாத அழகிய சித்திரம் ஒன்றையும் ஆசிரியர் வரைகிறார். யோனாவின் வரைக்குட்பட்ட அனுபவத் தோடு இறைவனது வரையற்ற இரக்கம் ஒப்பிடப்பட்டு வேறுபடுத்தப்படுகிறது. இறைவன் நினிவே மக்களையும் விலங்கு களையும் கூட, காப்பாற்ற ஏங்குவதில் அவரது உருக்கமான, மென்மை மிக்க பரிவு மிளிர்கிறது. மனுகுலம் முழுவதையும் இறைவன் அன்பு செய்கிறார். அவரது படைப்பு அனைத்தின் மேலும் அவரது பரிவிரக்கம் நாடிச் செல்கிறது. இறைவன் யாவரையும் வரையின்றி அன்பு செய்து, அவர்கள் மீட்படைய திருவுள்ளம் கொள்கி றார். இச்செய்தியை அளிப்பதில் யோனா நூல் மற்றுமொரு மூல நற்செய்தியாகும். கி.மு. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குறு கிய மனப்பான்மையுடைய யூதர்கள் செய்ய மறுத்ததை அப்போஸ்தலர்கள் பரிசுத்த ஆவியின் ஒளிபெற்றபின் அருளன்போடு செய்வர் (அ.ப. 10). அதாவது, நற் செய்தியை எல்லாப் படைப்புக்களுக்கும் போதித்து, இறைவனது வெளிப்பாட்டைப் புறவினத்தார்க்கும் அளிப்பர்.

ஆசிரியர் மனிதனது பாவத்தன்மையைத் தட்டிக் கழிக்கவில்லை. நினிவே ஒரு தீய நகரமாகும். அதன் குடிமக்கள் மனம் வருந்தினால் ஒழிய, எல்லாரும் அழிவர். ஆயினும், பிறவினமக்களை நூல் அவர் களுக்குச் சாதகமான ஒளியில் விவரிக்கிறது. புயலின்போது மாலுமிகள் உடனே தங்கள் கடவுள்களிடம் வேண்டுகின்றனர். யோனா வின் ஆலோசனைக்குப் பின்னும் அவரைக் கடலில் எறிய மிகவும் தயங்குகின்றனர். கடல் கொந்தளிப்பு அடங்கியபின் இறை வன்பால் பெரிதும் அச்சம் கொள்கின்றனர். அவருக்குப் பலியிட நேர்ச்சைகள் செய்கின் றனர். நினிவே மக்கள் இறைவனை விசு வசித்தனர். அவரது செய்தியைக் கேட்டு ஏற்றுக் கொண்டனர். உண்மையிலேயே மனம் வருந்தி நோன்பிருந்து, விடுதலைக் காக உருக்கமாக வேண்டுகின்றனர். நூலில் பிறவினத்தார் அனைவரும் நல்லவர்களாக வும், சமய உயர்வுடையவர்களாகவும் சித் திரிக்கப்படுகின்றனர். புறவினத்தவரது நற் பண்புகளை, யூதசமூகத்தில் தனித்து ஒதுங் கியிருக்கும் பண்பு புறக்கணித்தது. பிற இனத்தவரில் சிலரிடமாவது போற்றத்தக்க நற்குணங்கள் உண்டு என்று நூல் விவரிக் கிறது. இதே காலத்தில் எழுதப்பட்ட ரூத்து நூலும் இதையே வலியுறுத்துகிறது. அதில் கதாநாயகியான ரூத்து பிரமாணிக்கமுள்ள அன்பின் உருவாகத் திகழ்கிறாள். தாவீதின் மூதாதையருள் ஒருத்தி மோவாபு இனத்தைச் சார்ந்த புறவினத்தாள். யூத சமூகம் மட்டும் இறைவன் அளிக்கும் சலுகைகளுக்கும், ஆதரவுக்கும், புண்ணிய வாழ்வுக்கும் ஏகபோக உரிமை கொண்டது அன்று. வாய்ப்புக் கிடைத்தால் இறை வனது செய்தியை ஏற்றுக் கொள்பவர்கள் உலகில் பலர் உள்ளனர். தீயவர்களுக்கும் நம்பிக்கையில்லாமல் போகவில்லை. தீய நகரங்களும் புறக்கணிக்கப்படுவதில்லை. நல்லவர்களும், தீயவர்களும் மனம் திரும்ப வேண்டும். இறை ஆவியின் செயலால் அவிசுவாசிகளும் இறைவனுடைய வார்த் தையை ஏற்றுக்கொள்ளலாம். ஆனால் அதற்கு அவர்களுக்கு வாய்ப்பு அளிக்கப் பட வேண்டும். இஸ்ராயேல் இறைவனைப் பற்றித் தூதுரைக்க வேண்டும்; அவருக்குச் சாட்சி பகர வேண்டும். இதற்கு இஸ்ரா யேல் அழைக்கப்பட்டிருக்கிறது என்று யோனா ஆசிரியர் உறுதியோடும் உற்சாகத் தோடும் அறிவிக்கிறார்.

*ஆ)* அடுத்து ''எல்லாருக்கும் மீட்பு உண்டு'' என்ற பொதுமைக் கருத்தின் வளர்ச்சியில் யோனா நூல் முக்கிய இடம் வகிக்கிறது. இக்கருத்து இருவகைப்படும். ஒன்று ஆலயத்தையும் தாவீது மரபையும் மையமாகக் கொண்டது. மற்றது எல்லாத் தனிநாட்டுப் பண்புகளிலிருந்தும் விடுவிக்கப்பட்டது; எல்லை கடந்தது. இறைவாக்கினர் ஆமோஸ் ஒருவகை எதிர்நிலையான பொதுமைக் கோட்பாட்டைப் போதித்தார். அது யாவேயின் முன் எல்லா மனிதரும் குற்றமுள்ளவர்கள் என்பதாகும். எசாயா நேர்நிலையான, ஆனால் மிகவும் மையப் படுத்தப்பட்ட பொதுமைக் கோட்பாட்டைப் போதித்தார். அதில் எருசலேம் ஆற்றல் மிக்க ஆன்மீக மையமாகத் திகழ்ந்தது *(எசா 2:2-5)*. புற அடையாளங்களை விட உள்ளார்ந்த மனந்திரும்புதலை வலியுறுத்துவதில் எரேமியா ஒருபடி முன்னேறுகிறார். இது நாட்டுப்பற்று குறைந்த பொதுமைக் கோட்பாட்டிற்கு வழிகோலுகிறது. இரண்டாம் எசாயாவில் பொதுமைக் கருத்து எருசலேமோடு கொண்ட தொடர்பிலிருந்தும் இன்னும் அதிகமாக விடுவிக்கப்படுகிறது *(எசா 40-55)*. ஆயினும், நாடுகடத்தப்பட்டுத் திரும்பியபின், ஆலயம் மீண்டும் அமைக்கப்படுகிறது. அஃதோடு எருசலேமின் முக்கியத்துவம் புதுப்பிக்கப்பட்டு மீண்டும் வலுப்பெறுகிறது *(எசா 56-66)*. மக்களிடையே சமய ஆர்வம் குறைந்ததால், பரவலான பொதுமைக் கோட்பாடு மலாக்கியாவில் முன்னுக்கு வருகிறது *(மலா 1:11)*. யோனா நூல் இக்கட்டத்தைப் பிரதிபலிக்கிறது எனலாம். ஒருவன் நினிவேயின் குடிமகனாகவோ, புறவின மாலுமியாகவோ இருக்கலாம். அவனும் யாவேயைத் தொழலாம். எருசலேமுக்குப் போகாமலேயே அவனும் மன்னிப்புப் பெறலாம். பழைய ஏற்பாட்டில் இந்த அளவுக்குத்தான் எருசலேமோடு தொடர்பறுந்த பொதுமைக் கோட்பாடு வளர்கிறது. கிரேக்கக் கலாச்சாரம், கலப்புமதம் ஆகிய ஆபத்துக்களின் வருகையோடு எருசலேமும், உண்மையான வழிபாட்டின் மையமாக ஆலயமும் மறுபடி அழுத்தம் பெறுகின்றன. யூதர்களுக்கும், புறவினத்தவருக்கும், கிரேக்கர்களுக்கும், அல்லாதவர்களுக்கும் நற்செய்தி அறிவிக்கப்படுவதோடு புதிய ஏற்பாட்டில்தான் ''யாவருக்கும் மீட்பு உண்டு'' என்ற பொதுமைக் கோட்பாடு நிறைவடைகிறது.

*இ)* **மற்றப் போதனைகள்:-** இவை நேரடிப் போதகமில்லை என்றாலும் இக்கதையில் உள்ளடங்கியுள்ளன. யாவே புறஇனத்தவர்க்கும் இறைவனாவார். அவர்கள் மன்றாட்டுக்குச் செவிமடுக்கிறார் *(1:14)*. அவர்களது பலிகளையும், நேர்ச்சைகளையும் *(1:16)*, நோன்பையும், மனத்துக்கத்தையும் *(3:10)* ஏற்றுக் கொள்கிறார். அவர் உலகமனைத்துக்கும் ஆண்டவர். அவர் காற்றுக்கும், கடலுக்கும் கட்டளையிடுகிறார் *(1:4.15)*. கடலையும் கட்டாந்தரையையும் படைத்த அவரே விண்ணக இறைவன் *(1:9)*; விலங்குகளுக்கும், செடிகளுக்கும் *(4:6)*, வெப்பக்காற்றுக்கும் *(4:7)*, படைப்பு அனைத்துக்கும் ஆண்டவர். அவை யாவும் அவரது நோக்கத்திற்கேற்பப் பணி செய்கின்றன.

***10. இக்காலத்திற்கு:*** ''இக்கிடையைச் சேராத, வேறு ஆடுகளும் எனக்கு உள்ளன. அவற்றையும் நான் கூட்டிச் சேர்க்க வேண்டும்'' (யோவா 10:6) என்று இயேசு கூறினார். இந்தச் ''சேராதவர்களுக்காகவே'' திருச்சபை இன்னும் இருக்கிறது. அதன் அங்கத்தினர்கள் இவர்களையும் கூட்டிச் சேர்க்க வேண்டும். இதுவே இந்நூல் வழியாக புதிய இஸ்ராயேலாகிய கிறிஸ்தவத் திருச்சபைக்கு இறைவன் எல்லாக் காலங்களிலும் தொடர்ந்து விடும் சவாலாகும். யாவர்க்கும் நற்செய்தியை அளிக்கும் தூதுக்குத் திருச்சபை எப்போதும் அழைப்புப் பெறுகிறது. இந்த அழைப்பைச் செயல்படுத்துவதில் இக்காலத்தில் ''குறுகிய மனப்பான்மை'', ''பரந்த மனப்பான்மை'' ஆகிய இருவகை ஆபத்துகள் உண்டு. இரண்டிலும் திருச்சபை அங்கத்தினர்கள், இறைவனது அழைப்புக்கு யோனாவைப்போல் நேரடியாக இல்லாவிட்டாலும், மறைமுகமாக எதிர்ப்புக்

காட்டுகின்றனர். தூதுரைக்கும் அழைப்பை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றனர்.

''திருச்சபைக்கு வெளியே மீட்பு இல்லை'' என்ற கூற்றைக் குறுகிய மனப்போக்கில் புரிந்துகொண்டு, யோனாவைப்போல் இன்றைய கிறிஸ்தவனும் கடின இதயம் கொண்டவனாக இருக்க முடியும். இறைவன் தரும் மீட்பிலிருந்து பிறர் எல்லாம் புறம்பானவர்கள் என்று கருதக்கூடும். இஸ்ராயேலரைப்போல், திருச்சபை அங்கத்தினர்களும் மனுகுலத்திற்குச் சேவை செய்து சாட்சி பகர்வதற்குப் பதிலாக, தனித்திருக்கும், ஒதுங்கியிருக்கும் திருச்சபைக்குள் சுகமாக இருக்கக்கூடும். பிறரோடு பகிர்ந்து கொள்ள நம்மிடம் ஒப்படைக்கப்பட்ட விசுவாசத்தை நமது இதயத்துக்குள் பூட்டி வைத்துக் கொள்ளக்கூடும். மனுகுலமனைத்திற்கும் உரிய மீட்பை நமது திருச்சபைக் குழுக்களுக்குள் சுயநலத்தோடு மூடி வைத்துக் கொள்ளக்கூடும். இன்றைய உலகில் கிறிஸ்தவர்கள் புண்ணிய வாழ்விற்கு ஏகபோக உரிமை கொண்டிருக்கவில்லை. இன்றைய சமூக அரசியல் வாழ்வில் ஆண்டவர் பெயரைக் கூப்பிடாதவர்களும், பொறுப்போடு தன்னலந்துறந்து பிறருக்குச் சேவை செய்வதைப் பார்க்கிறோம். இவர்களுக்கு வாய்ப்புக் கிடைத்தால் நற்செய்தியை ஏற்று அதன்படி நடப்பவர்கள் பலர் உண்டு. இவர்களுக்கு நாம் வாய்ப்பளிக்க வேண்டும். நமது சொல்லாலும், செயலாலும், வாழ்க்கை முறையாலும் எக்காலத்திலும் எல்லாச் சூழ்நிலையிலும் எல்லாருக்கும் நற்செய்தியை அறிவிக்க வேண்டும். இத்தூதுக்குத் திருச்சபை இன்றும், என்றும் அழைக்கப்படுகிறது.

இத்தூதுரைக்கும் அழைப்புக்கு எதிரான மற்றொரு ஆபத்து உண்டு. இஃது ஒரு வகை ''பரந்த மனப்பான்மை'' ஆகும். இஃது ''எல்லா மதமும் சம்மதம்'' என்ற செயலளவில் காட்டும் போக்காகும். இது சில தான்தோன்றி இறையியல் வல்லுநர்களிடையே காணப்படுகிறது. இந்தப் போக்கு கிறிஸ்துவின் வழியாக இறைவன் தரும் மீட்பைப் பறைசாற்றத் தயங்கும், ஏன் மறுக்கும். ஆகவே, இதிலும் நற்செய்தி அளிக்கப்படுவதில்லை. இந்த நஞ்சு திருச்சபையின் பல மட்டங்களிலும் காணப்படுகிறது; தந்திரமாய்ப் பரப்பப்படுகிறது. இம் மனப் போக்குடையவர்களும் நற்செய்தி தூதுரைக்க விடப்படும் சவாலை ஏற்க மறுக்கின்றனர்; தயங்குகின்றனர்.

மேற்கூறிய இரு குழுவினரும் யோனாவைப் போல் நடந்து கொள்கின்றனர். நற்செய்தியை யாவர்க்கும் அறிவிக்கும் தூதை ஏற்க மறுக்கின்றனர். இரு குழுவினரும் ''நற்செய்தியை அறிவிக்காவிடில் ஐயோ! எனக்குக் கேடு'' *(1 கொரி 9:16)* என்ற புனித பவுலின், அறைகூவலுக்குச் செவிமடுப்பது நல்லது. திருச்சபையும் அதன் அங்கத்தினர்களும் கிறிஸ்துவின்பால் கொண்ட அன்பால் தூண்டப்பெற்று அவரது நற்செய்தியை எல்லாருக்கும், எக்காலத்திலும், எல்லாச் சூழ்நிலையிலும் அறிவிக்க வேண்டும். அவரது தூதுரைக்கும் அடியார்களாக வேண்டும். அப்படித் தூதுரைக்க மறுக்கும் யோனாவாக, வாசகர்கள் தங்களைக் காணும்போது, இந்நூலின் செய்தி உச்சநிலை அடைகிறது, ஆற்றல் உள்ளதாகிறது. பாவத்தைத் தீர்ப்பிடுவது மட்டும் ஆசிரியரது நோக்கமன்று; இறைவன் தரும் மீட்புச் செய்தியைப் பிறருக்கு அறிவித்து, அவர்களோடு அதைப் பகிர்ந்து கொள்வதற்கு வேண்டிய ஆற்றலுள்ள தூண்டுகோலாகவும் அமைந்திருக்கிறது. இதுவே இந்நூலின் சிறப்பாகும்.

**யோனாம்** *(JONAM)*

இயேசுவின் மூதாதையருள் ஒருவர். எலியாக்கிமின் மகனும், யோசேப்பின் தந்தையுமாவார் *(லூக் 3:30)*.

# ர...ரோ

**ரபேக்கா** (REBEKAH - பசு, பெண் குதிரை)

இவள் பெத்துவேலின் மகளும், லாபானின் சகோதரியும், ஈசாக்கின் மனைவியும், ஏசா, யாக்கோபு ஆகியோரின் தாயும் ஆவாள்.

ஆதி 24-இல் இவளுக்கும் ஈசாக்கிற்கும் நடந்த திருமணம் விவரிக்கப்படுகிறது. இருபது ஆண்டுகள் மலடியாய் வாழ்ந்த பின், ஈசாக்கின் வேண்டுதலால் இவளுக்கு இரட்டையர்கள் (ஏசா, யாக்கோபு) பிறந்தார்கள் (ஆதி 25:21.26). யாக்கோபையே அவள் அதிகமாக அன்பு செய்தாள். இவள் செய்த சூழ்ச்சியின்படியே யாக்கோபு தன் தந்தை ஈசாக்கின் ஆசீரைப் பெறுகிறார்; முதல் வாரிசு ஆகிறார். இதற்காக ஏசாவிடமிருந்து தப்பியோடிய யாக்கோபு தன் அன்னையை மீண்டும் காண முடியவில்லை. இவளது இறப்பைப் பற்றி வேதாகமத்தில் குறிப்பு இல்லை. ஆனால், மக்பேலா என்ற குகையில் இவள் உடல் புதைக்கப்பட்டிருப்பதாக ஆதி 49:31-இல் கூறப்பட்டுள்ளது.

புதிய ஏற்பாட்டில் உரோ 9:10-12-இல் மட்டுமே ரபேக்காவின் பெயர் குறிப்பிடப் பட்டுள்ளது. அங்கு, இறைவனின் தேர்ந்தெடுக்கும் நோக்கத்தின் எடுத்துக்காட்டாக ஆதி 25:23 எடுத்துக் கூறப்படுகிறது.

**ராகேலின் கல்லறை** (RACHEL'S TOMB)

ராகேல் அடக்கம் செய்யப்பட்ட இடம் பெத்லகேமிலிருந்து வடக்கில் 1.5 கி.மீ. தொலைவில் எருசலேம் சாலையின் மேற்குப்புறத்தில் அமைந்துள்ளதாக மரபு (ஆதி 35:19; 48:7).

ஆதியாகமம் பெத்தேலில் இருந்து எப்ராத்துக்குச் செல்லும் வழியில் இவள் இறந்ததாகக் கூறுகிறது (ஆதி 35:16-19). அங்குதான் அவள் அடக்கம் செய்யப்பட்டிருக்க வேண்டும். ''பெத்லகேம் என்ற எப்ராத்து'' என்பது தவறான அடையாளமாகும். பெத்லகேம் எப்ராத்தா மாவட்டத்திலுள்ளது (ரூத் 4:11; மீக் 5:1).

முதலில் ராகேல் இறந்த இடத்தில் சிறு நினைவுத்தூண் இருந்ததாகவும், பிறகு இஸ்ராயேலின் 12 குலத்தைக் குறிக்க 12 கற்களைக் கொண்ட பிரமிடு அமைப்பு இருந்ததாகவும் கூறுவர். இன்றுள்ள நினைவுச்சின்னம் சிலுவைப்போர் வீரர்களால் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. இது குவிமாட அமைப்புக்கொண்டது. கி.பி. 1841-இல் இதை மோன்தோபேரே என்பவர் வாங்கி, இதன் முன் ஒரு செபக்கூடத்தைக் கட்டினார்.

**ராகேல்** (RACHEL - பெண் ஆடு)

இவள் லாபானின் இளைய மகள். இவள் யாக்கோபின் இரண்டாவது மனைவி. யோசேப்பு, பென்யமின் ஆகியோர் இவளின் புதல்வர்கள். இவளுடைய அத்தையும் மாமியாருமான ரபேக்காளைப் போலவே பழைய ஏற்பாட்டில் கிணற்றடியிலே அறிமுகப்படுத்தப்படுகிறாள் (ஆதி 29:1-4). இந்தக் கிணறு மெசபொத்தாமியாவில் உள்ள காரான் அருகில் உள்ளது. இவளை மணம்முடிக்கும் பொருட்டு யாக்கோபு ஏழு ஆண்டுகள் தன் மாமன் லாபானிடத்தில் வேலை செய்தார் (29:17-20). ஆனால், திருமணத்தன்று லாபான் தன் மூத்தமகள் லேயாவை, யாக்கோபு அறியாவண்ணம், மணவறையில் அமரவைத்து விட்டார். இதனால் ஏமாற்றப்பட்ட யாக்கோபு ராகேலுக்காக இன்னும் ஓர் ஏழாண்டுகள் வேலை செய்து இறுதியில் அவளையும் மணமுடித்துக் கொண்டார் (29:21-30). இவளையே இவர் அதிகமாக அன்பு செய்தார். இவளுக்கு முதலில் பிள்ளைப் பேறு இல்லாததால் தன் ஊழியக்காரியை யாக்கோபிடம் அனுப்பி அவளுக்குப் பிள்ளைகள் பெறச்செய்தாள். அவர்களுக்குத் தானே பெயரிட்டாள் (29:31-30:8). இவ்வாறு அடிமை மூலம் பிள்ளை பெறும் பழக்கம் நூசி கல்வெட்டுக்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இறுதியாக இவள் யோசேப்பையும், பென்யமினையும் பெற்

றெடுத்தாள். இந்த யோசேப்பின் புதல்வர்களே எப்பிராயிம், மனாசே என்பவர்கள் (ஆதி 41:50-52). யாக்கோபு தன் சொந்த நாடு திரும்ப முடிவெடுத்தபோது அவனது மனைவிகள் இருவருமே இதற்கு ஒப்புக் கொண்டனர் (ஆதி 31:1-6). ராகேலையும் அவள் மூலமாகப் பிறந்த பிள்ளைகள் இருவரையும் யாக்கோபு அதிகமாக நேசித்தார் என்பது பல இடங்களில் தெரிகிறது (ஆதி 33:1-2). பென்யமின் பிறந்தபோது ராகேல் இறந்தாள். பென்யமின் நாட்டில் உள்ள எப்பிராத்தில் இவள் புதைக்கப்பட்டாள் (35:16-19) பின் அந்த இடத்தில் யாக்கோபு ஒரு கல்லறை கட்டினார்.

ரூத் 4:11-இல் லேயாவும் ராகேலும் இஸ்ராயேல் குலத்தின் தாய்மார்களாகக் கூறப்பட்டுள்ளது. எரேமியா அசீரியாவுக்கு நாடு கடத்தப்பட்ட தம் மக்களைப் பார்த்து ராகேல் அழுவதாகக் கூறுகிறார் (எரே 31:15). புதிய ஏற்பாட்டில் மத் 2:16.18-இல் எரே 31:15 மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

**ராக்கா** (RACA)

வெறுப்பு, புறக்கணிப்பு, அவமதிப்பு, பழியுரை, வசை ஆகியவற்றை எடுத்துரைக்கும் சொல்லாகும். இஃது ஒரு வேளை, ''அறிவற்ற மடையன்'' என்று பொருள்படும் 'ரக்கா' என்ற அரமேயச் சொல்லிலிருந்து வந்திருக்கலாம். ''தன் சகோதரனை 'முட்டாள்' (ராக்கா) என்பவன், தலைமைச் சங்கத் தீர்ப்புக்குள்ளாவான்'' என்று இயேசு கூறுகிறார் (மத் 5:22).

**ராசி** (RAZIS)

இவர் எருசலேமின் மூப்பார்களில் ஒருவர். இவருடைய பற்றுதலை முன்னிட்டு யூதருடைய தந்தை என்றழைக்கப்பட்டார். நிக்கானோர், யூதர்கள்பால் தனக்குள்ள வெறுப்பைக் காட்ட, இவரை இழிவுபடுத்த முயன்றான். ஆனால் இவர், ''பாவிகளுக்கு அடிமைப்படுவதையும், தன் பிறப்புக்குத் தகாத நிந்தைக்கு உட்படுவதையும் விடச் சாவதை மேலானதாகத் தேர்ந்துகொண்டு'', தற்கொலை செய்து கொண்டார் (2 மக் 14: 37-46).

**ராபா** (RAPHA)

காண்க. இராப்பா - I:727.

**ராபி, ரபூனி** (RABBI, RABBONI - என் தலைவர்)

மோசேயின் சட்டத்தில் புலமை மிக்கவர்களும், அச்சட்டங்களைப் பிறருக்குக் கற்பிப்பவர்களும் இவ்வாறு அழைக்கப்பட்டனர். பழங்காலத்தில் சட்டம் படித்தவர்களை வேலையாட்களிடமிருந்து வேறுபடுத்திக்காட்டவும், அவர்களுக்கு மரியாதை கொடுக்கவும் இப்பெயர் பயன்படுத்தப்பட்டது. ஆனால், தற்போது இஃது அதிகாரபூர்வமாக சிலருக்குக் கொடுக்கப்பட்ட பணி ஆகும்.

புதிய ஏற்பாட்டில் பொதுவாக இது சட்டங்களைக் கற்பிப்பவர்களையே குறித்தது (மத் 23:7-8). சில இடங்களில் இச்சொல் திருமுழுக்கு யோவானைக் குறிக்கவும் பயன்படுத்தப்பட்டது (யோவா 3:26). மற்ற இடங்களில் இது பெரும்பாலும் இயேசுவையே குறித்தது. இச்சொல் மத்தேயுவில் இருமுறையும், மாற்கில் நான்கு முறையும் பயன்பட்டுள்ளது. நான்காம் நற்செய்தி இப்பெயரால் இயேசுவை மிகவும் மேன்மைப்படுத்துகிறது (யோவா 1:38.49; 3:2; 4:31; 6:25; 9:2; 11:8; 20:16).

**ராமசேசு** (RAAMSES, RAMESES)

காண்க. இராமசேசு - I:728.

**ராமா** (RAMAH)

காண்க. இராமா - I:728

**ராமாத்தயிம் - சோப்பிம்** (RAMATHAIM -ZOPHIM)

காண்க. இராமா 5 - I:728.

**ராமாவினர்** (RAMATHITE)

காண்க. இராமாவியர் - I:729.

**ராமோத்து - கிலயாது** (RAMOTH - GILEAD)

காண்க. இரோமோத்து - கிலயாது - I:730.

**ரிம்மோனோ** (RIMMONO)

க்ாண்க. இரிம்மோனோ - I:733.

**ரிம்மோன்** (RIMMON)

காண்க. இரிம்மோன் - I:733.

**ரிம்மோன் பாரேசு** (RIMMON PEREZ)

காண்க. இரிம்மோன் பேரேசு - I :733.

**ரின்னா** (RINNAH)

காண்க. இரின்னா - I :733.

**ரூகாமா** (RUHAMA)

காண்க. உருகாமா - II:76.

**ரூத்து** (RUTH - தோழி, திருப்தி)

ஒரு மோவாபியப் பெண். இவள் ரூத்து நூலின் கதாநாயகி ஆவாள். இவள் யூதாவிலுள்ள பெத்லகேமிலிருந்து குடியேறிய எபிரேய மகுலோனை மணந்தாள் (ரூத் *1:2-5*). அவர் இறந்தபின், இவள் தன் மக்களிடம் போவதற்குப் பதிலாக, தன் மாமி நகோமியோடு பெத்லகேமுக்குத் திரும்பினாள். அங்குத் தன் கணவனுடைய உறவினரான போவாசை மணந்து தாவீதின் தந்தையான ஈசாயின் தந்தை ஓபேதுவைப் பெற்றாள். இவ்வாறு ரூத்து தாவீதின் மூதாதையும், அதனால் இயேசுவின் மூதாதையும் ஆவாள் (ரூத் *4:17-27*; மத் *1:5*).

**ரூத்து திருநூல்** (RUTH, BOOK OF)

***1. முன்னுரை:*** இந்நூல் எபிரேய விவிலியத்தின் ''நூல்கள்'' என்ற மூன்றாவது தொகுப்பில் காணப்படும் விழாக் காலங்களில் வாசிக்கப்பட வேண்டிய ''மெகில்லோத்'' (Megilloth) என்ற ஐந்து சுருள்களில் ஒன்றாகும். இது ''நீதிபதிகளின் காலத்தில்'' என்ற சொற்றொடரோடு தொடங்குகிறது; முரட்டுத்தனமும் காட்டுமிராண்டித்தனமும் பரவலாகக் காணப்பட்ட நீதிபதிகளின் காலத்தில் ஒரு பக்தி மிக்க இஸ்ராயேல் குடும்பத்தின் எளிய நாட்டுப்புற வாழ்க்கை பற்றிய மிகச் சிறந்த ஓர் ஓவியத்தை அளிக்கிறது. இதற்கிணையான பகுதியை *1* சாமு *1-3*-இல் வரும் அன்னா, எல்கானா, சாமுவேல் ஆகியோருடைய குடும்ப வரலாற்றில் காணலாம். இந்நூல் நீதிபதிகள் காலத்திற்கும், சாமுவேல் நூலில் வரும் அரசாட்சிக் காலத்திற்கும் இடையில் ஓர் இணைப்பாக அமைந்துள்ளது. இது தாவீதின் முப்பாட்டியான, மோவாபிய ரூத்து என்னும் தலைவியின் வரலாறு ஆகும்.

***2. பெயர்:*** ரூத்து என்ற பெயருக்கு அக்காதிய மொழிவழி ''தலைவியின் தோழி'' என்ற பொருள் கொடுக்கப்படும். எபிரேய மொழியில் இப்பெயருக்கு ''(நீரால்) திருப்திபெறுதல்,'' ''நீர்மிகுதி,'' ''புத்துயிர்ப்பூட்டு'' என்று பலவாறாகப் பொருள் கூறலாம்.

***3. கதை:*** நீதிபதிகள் காலத்தில், பெத்லகேமைச் சேர்ந்த எலிமெலக்கு என்பவர் பஞ்சத்தின் காரணமாகத் தமது மனைவி நகோமியோடும், இரு புதல்வர்களோடும் மோவாபு நாட்டில் குடியேறினார். அங்கு அவர் இறந்தார். மக்லோன், கிலியோன் என்ற இரு புதல்வர்களும் முறையே ரூத்து, ஓர்பா என்ற மோவாபியப் பெண்களை மணந்து தங்கள் விதவையான தாயோடு வாழ்ந்தனர். குடியேறிய பத்து ஆண்டுகளுக்குள் இரு புதல்வர்களும் இறந்து போயினர். நகோமி பெத்லகேமிற்குத் திரும்பத் தீர்மானிக்க, விதவைகளான இரு மருமக்களும் அவளுடன் யூதாவுக்குச் செல்ல விரும்பினர். இருவரும் அவர்களுடைய இனத்தவரிடம் 'அவர்கள் தாய்வீடுகளுக்குச் செல்வதே நல்லது' என்று அறிவுரை கூறினாள். அதற்கிசைந்து ஓர்பா தனது உறவினர்களிடையே திரும்பிச் சென்றாள். இதற்கு மாறாக, ரூத்து தனது மாமியிடம் உள்ள தனது பற்றுறுதியை எடுத்துக்கூறி, அவளோடு பெத்லகேமுக்குச் சென்றாள்.

இரு விதவைகளும் வாற்கோதுமை அறுவடைக் காலத்தில் பெத்லகேமை அடைந்தனர். தங்களுடைய அன்றாடத் தேவைகளை நிறைவு செய்ய, மாமியின் அனுமதி பெற்று ரூத்து வயலில் அறுவடை செய்வோர் விட்டுச் சென்ற கதிர்களைப் பொறுக்கச் செல்கிறாள். எலிமெலக்கின் உறவினனான போவாசு என்ற நிலக்கிழாரின் வயலில் கதிர் பொறுக்க அனுமதி பெறுகிறாள்.

அங்கே, போவாசை ரூத்து சந்தித்து அவரது ஆதரவு பெறுகிறாள்; அவர்பால் ஈர்க்கப் பெறுகிறாள். நகோமியால் தூண்டப் பெற்று, உறவினன் என்ற முறையில் தன்னை மணந்து பாதுகாப்பு அளிக்குமாறு போவாசை ரூத்து ஓர் அடையாளச் செய் கையால் கேட்கிறாள். இச்செயலைப் புரிந்துகொண்ட போவாசு தன்னையும் விட நெருங்கிய மற்றொரு உறவினன் எலிமெ லக்கின் குடும்பச் சொத்தை வாங்கும் உரிமையையும் அவருக்குச் சந்ததி உண்டாக் கும் கடமையையும் விட்டுக் கொடுத்தால், ரூத்தை மணந்து கொள்வதாகக் கூறுகிறார். அவ்வாறே செய்து காட்டுகிறார். இந்தத் திருமணத்தின் விளைவாக ஒபேது பிறக் கிறார். இவ்வாறு, நகோமி, ரூத்து ஆகியோ ரின் முயற்சியால், இறந்து போன எலிமெ லக்குக்குச் சந்ததி உண்டாகிறது. அவரது குடும்ப மரபுவழி பாதுகாக்கப்படுகிறது. குடும்பம் பெரும்பேறு பெறுகிறது. ஏனெ னில், ஒபேது தாவீது மன்னனின் முப் பாட்டனும், இயேசுவின் மூதாதையருள் ஒருவரும் ஆவார் (*மத் 1:5*).

***4. விவிலியத் திருமுறைப் பட்டியலில் ரூத்து நூல்:*** எபிரேய விவிலியத்தின் ''நூல்கள்'' என்ற மூன்றாம் தொகுப்பில், ரூத்து நூல் இடம் பெறுகிறது. இத்தொகுப் பிலும் முதலாவதாக, சங்கீதங்கள், யோபு ஆகிய நூல்களுக்கு முன் தால்மூது பாரம்பரி யம் இந்நூலுக்கு இடம் அளிக்கிறது. பிற்கால யூதப் பாரம்பரியம் ''நூல்கள்'' என்ற தொகுப்பில் ஐந்து நூல்களை ஒதுக்கி, விழாக்களில் வாசிக்கப்பட வேண்டிய நூல் கள் (Megilloth) என்றழைத்தது. இதில் உன்னத சங்கீதம், ரூத்து, புலம்பல், திரு வுரை, எஸ்தர் ஆகிய நூல்கள் அடங்கும். இவை ஆண்டுதோறும் குறிப்பிட்ட விழாக் களில் வாசிக்கப்பட்டன. உன்னத சங்கீதம் பாஸ்கு விழாவின்போதும், ரூத்து வாரங் களின் விழா என்றழைக்கப்பட்ட ஐம்பதாம் நாள் விழாவின்போதும், புலம்பல் அம் மாதம் ஒன்பதாம் நாளிலும், திருவுரை கூடாரவிழாவின் போதும், எஸ்தர் பூரீம் விழாவின்போதும் வாசிக்கப்பட்டன. எபி ரேய விவிலியத்தில் இந்த விழாக்களின் வரிசையில் இந்த ஐந்து சுருள்கள் காணப் படுகின்றன. சில மாசோரோட்டிக்கு வாச கங்களில் ரூத்து, உன்னத சங்கீதத்துக்கு முன் காணப்படுகிறது.

எபிரேயத் திருமுறைப்பட்டியலில் ரூத்து நூலின் இடமும், இது வாரங்களின் விழா வின்போது வாசிக்கப்படுவதும் யூதப் பாரம்பரியத்தில் இந்நூலின் பொருளை ஓர் அளவு சுட்டிக் காட்டுகின்றன. வாரங்களின் விழா ஒரு விவிலிய விழாவாகும். இது தானிய அறுவடை இறுதியில் கொண் டாடப்பட்டது. இந்த அறுவடைப் பின்ன ணியில் ரூத்து நூல் இவ்விழாவோடு தொடர்பு படுத்தப்படுகிறது. பாரம்பரியம் வாரங்களின் விழாவைச் சட்டம் அளிக்கப் படுதலின் நினைவுகூர்தலாகக் கருதுகிறது. விளக்கவுரையாளர் சிலர் சட்டம் அளிக்கப் படுவதை, யாவரையும் உள்ளடக்கும் பொதுமைப் பொருளுடைய நிகழ்ச்சியாகக் கருதுகின்றனர். ஏனெனில் சட்டம், மனு குலம் முழுமைக்கும் அளிக்கப்படும் கொடையாகும். யாவரையும் உள்ளடக்கும் பொதுமைப் பொருளுடைய விழாவில் ரூத்து நூல் வாசிக்கப்படுவது பொருத்த முடையதே.

எழுபதுநூல் பாரம்பரியம் விவிலி யத்தைச் சட்டம், இறைவாக்கினர்கள், நூல் கள் என்று பாகுபடுத்தவில்லை. இப்பாரம் பரியம் ரூத்து நூலை நீதிபதிகள் நூலுக்குப் பின்னும், புலம்பல் நூலை எரேமியா நூலுக்குப் பின்னும் வைக்கிறது. இதற்கு இவை அக்கால வரலாற்றைப் பற்றிக் கூறுவது ஒரு வேளை காரணமாய் இருக்க லாம். ரூத்து நூலைப் பொருத்த மட்டும், இந்நூல் நீதிபதிகள் காலத்தில் அமைக்கப் பட்டு (*1:1*), இதன் முடிவுரையில் வரும் தாவீதின் மரபுக்கொடி வழியாகச் சாமு வேல், அரசர்கள் ஆகிய நூல்களுக்கு இயற் கையான அறிமுகமாக அமைகிறது. யோசி பசு என்பவர் ரூத்து நூலை நீதிபதிகள் நூலின் பின் சேர்க்கையாகக் கருதியதாகத் தெரிகிறது. நீதிபதிகள், ரூத்து ஆகிய நூல்களுக்குச் சாமுவேல்தான் ஆசிரியர்

என்ற தால்மூதின் கூற்று மேற்கூறப்பட்ட கருத்தைப் பிரதிபலிப்பதாகத் தெரிகிறது. இலத்தீன் மொழிபெயர்ப்புக்கள் எழுபது நூல் பாரம்பரியத்தையே பின்பற்றுகின்றன. ஓரிசன், புனித எரோனிமு போன்றவர்கள் ரூத்து நூல் நீதிபதிகள் நூலுக்கு மூன்றாவது பிற் சேர்க்கையாக இணைக்கப்பட்டது என் பர். திருச்சபைத் தந்தையர் வேறு சிலர் இந்நூலுக்கு நீதிபதிகள் நூலுக்குப் பின் இடம் அளித்தனர். கத்தோலிக்கத் தமிழ் மொழி பெயர்ப்பும் எழுபதுநூல் பாரம்பரி யத்தையே பின்பற்றுகிறது.

மேற்கூறப்பட்ட இரு பாரம்பரியங்களில் எது காலத்தால் முந்தியது, மூல எபிரேயப் பாரம்பரியத்தைச் சேர்ந்தது என்று கூறுவது கடினம். ஏனெனில், நவீன எபிரேய விவிலி யம் அண்மைக் காலத்தைச் சேர்ந்ததாகும். இதில் நூல்கள் தொகுப்பில் ரூத்து நூல் காணப்படுகிறது. இந்த வரிசை எழுபதுநூல் வரிசைக்கு உறுதியான மறுப்பாகாது. இருப் பினும், மதிப்பு மிக்க முந்தைய இறைவாக் கினர் தொகுப்பிலிருந்து, ரூத்து நூல், அவ்வளவு மதிக்கப்படாத நூல்கள் தொகுப் பிற்கு மாற்றப்பட்டதை ஏற்றுக் கொள்வது கடினமாகும். ''நீதிபதிகள் காலத்தில்'' *(1:1)* என்ற சொற்றொடரையும், தாவீதின் மூதா தையர் பற்றிய நூலின் நோக்கத்தையும் பின்னோக்காகக் கருத்தில் கொண்டு, முந் தைய இறைவாக்கினர் தொகுப்பில் இந் நூலைச் சேர்ப்பது மேலானதாகத் தோன்ற லாம். இருப்பினும், பாபிலோனியத் தால் மூது, ரூத்து நூலைச் சாமுவேல் எழுதினார் என்று கூறினாலும், அதற்கு ''நூல்கள்'' என்ற தொகுப்புக்கு வெளியே இடம் அளிக்கத் துணியவில்லை. மேலும், தால் மூது பாரம்பரியத்தில் இத்தொகுப்பின் முதலாவதாக, சங்கீதநூலுக்கு முன் இந்நூல் இடம் பெறுகிறது. இது, திருமுறைப்பட்டி யலில் இந்நூலுக்குரிய இடத்தைச் சுட்டுவ தாக அமைகிறது.

**5. பின்னணிகள்:**

***அ. வரலாற்றுப் பின்னணி:*** தாவீது, சால மோன் ஆட்சிக் காலத்திலும் அதற்குப் பின்னும் யூதா தனது சட்டங்களையும், பாரம்பரியங்களையும் தொகுக்க ஒரு பெரும் முயற்சி நடந்தது. இதை இப்போது யாவே பாரம்பரியம் என்றழைக்கிறோம். இஃது ஆதியாகமம், யாத்திரை ஆகமம், எண்ணாகமம் ஆகியவற்றில் பரவிக் கிடக் கின்றது. இதில் பல வீரக்கதைகள், குறிப் பாகப் பெண்கள் பங்கெடுக்கும் கதைகள் உண்டு. இவற்றில் சில இறைவன் ஆபிரகா முக்கு அளித்த வாக்குறுதி நிறைவேறுவதில் கற்பனை செய்ய முடியாத தடைகள் எழுந்தாலும், அவர் அவற்றையெல்லாம் நீக்கி, தேர்ந்தெடுக்கப்பட்ட வாரிசுகளைத் தோன்றச் செய்து காப்பாற்றினார் என்று காட்டுகின்றன. சாரா, ரபேக்கா, ராகேல் ஆகியவர்களின் மலட்டுத்தன்மை குடும்ப மரபுக்கொடித் தொடர்ச்சியை அழித்துவிட இருந்தது *(ஆதி 15:3; 16:1; 25:21: 30: 1-2)*. சில சமயம் ஏசா போன்ற மூத்த சகோதரர் கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மரபுவழிக்குத் தடையாக இருக்கின்றனர். இவர்கள், நேர் மையான முறையில் தலையிட்டு வாக்குறு தியைப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்படாத மக்களுக்கு அதை உரிமையாக்கும் வாய்ப் பிருந்தது. யூதாவின் தலைமகன் பிள்ளை யின்றி மரிக்கிறான் *(ஆதி 38)*. ஆனால், இப்படிப்பட்ட அவல நிலையிலிருந்து இறைவன் எப்போதும் இஸ்ராயேலைக் காப்பாற்றுகிறார். இக்கதைகளை ஒரு தொகுப்பாக எடுத்துக் கொண்டால், இறை வன் தேர்ந்தெடுக்கப்பட்ட வாரிசு வரி சையைத் தடுக்க முடியாத வித்தில் தோன்றச் செய்து பாதுகாத்து, ஆபிரகாமி லிருந்து ஈசாக்கு, யாக்கோபு வழியாகப் பாரேசுக்கும், அரச மரபுக்கும் நீடிக்கச் செய்தார் என்று காட்டுகின்றன.

இக்கதைகள் பலவற்றில் பெண்கள் சிறப் பிடம் பெறுகின்றனர். ஏசாவுக்குப் பதிலாக யாக்கோபு ஈசாக்கின் சிறப்பு ஆசீரைப் பெற ரபேக்கா தந்திரமாய் ஒழுங்கு செய்கிறாள் *(ஆதி 27)*. தாமார் தனது அகந்தையைக் கைவிட்டு, தன் உயிரையே பணயம் வைத்து இறந்துபோன தனது கணவனுக்கு ஒருவாரிசை உண்டாக்குகிறாள் *(ஆதி 38)*. மூத்தவனை ஒதுக்கிவிட்டு சாலமோன் ஆட்

சிக்கு வருவதில், அவரது தாய் பத்சேபா சிறப்பான அங்கம் வகிக்கிறாள். இது தாவீது அரசுக்குப் பணி செய்த யாவே பாரம்பரிய ஆசிரியரை இக்கருத்துக்கு முக்கியத்துவம் அளிக்கத் தூண்டியிருக்க வேண்டும்.

குடும்ப வாரிசுகள் இறை பராமரிப்பால் காப்பாற்றப்படுகின்றன என்ற கருத்தைப் பதிப்பாசிரியர் கொண்டிருந்தார் என்பதை யாவே பாரம்பரியத்தில் வரும் மற்றக் கதைகளும் காட்டுகின்றன; நோவா நிகழ்ச்சியுரை (ஆதி 7-9), லோத்தும் அவர் புதல்வியரும் பற்றிய விவரிப்பு (ஆதி 19:30-38). இக்கருத்தில் மற்ற விவிலியப் பாரம்பரியங்களும் அக்கறை கொள்கின்றன (ஆதி 22:1-19; யாத் 1:15-22; 2:1-10; நீதி 13:1-25; 1 சாமு 1). இக்கதைகளில் காணப்படும் இடுக்கண் நிலையே ரூத்து நூலிலும் காணப்படுகிறது. எலிமெலக்கின் குடும்ப மரபு நீடிக்குமா? மேற்கூறப்பட்ட கதைகளில் நடந்தது போலவே, ரூத்து கதையிலும் இறைவனது பராமரிப்பால் இடுக்கண் விடுவிக்கப்படுகிறது. இடுக்கண் இருந்தாலும் மகிழ்ச்சியான முடிவு ஏற்படுகிறது.

இத்தகைய கதைகளில் ஆர்வம் தொடக்க கால எபிரேயர்களிடையே பரவலாக இருந்ததாகத் தெரிகிறது. இக்கதைகள் அரசாட்சிக் காலத்திலும் அதற்கு முன்னும் தோன்றியிருக்கலாம் என்று கருதப்படுகிறது. ரூத்து கதையும் இக்காலத்திலேயே தோன்றியிருக்க வேண்டும். மேற்கூறப்பட்ட கதைகள் தொடக்க காலத்தைச் சேர்ந்தவை, சுருக்கமானவை, நேரடித் தன்மையுடையவை. இவற்றோடு ஒப்பிடும்போது, ரூத்து கதை நீண்டது, நயத்தோடு அமைக்கப்பட்டது, மென்மைமிக்கது. ஓர் உயர்ந்த பண்பாட்டைப் பிரதிபலிக்கிறது. கதைக்குப் பின்னணி கிராமப்புறமானாலும் பங்கெடுப்போர் பேச்சிலும் நடைமுறையிலும் அரசவையைச் சேர்ந்தவர்களாகத் தோன்றுகின்றனர்.

தன் பெற்றோருக்கும், உறவினர்களுக்கும் தஞ்சம் தேடியபோது, தாவீது அதை மோவாபில் கண்டார் (1 சாமு 22:3-4). இது வரலாற்றுப் பின்னணியாக இருந்து, ரூத்தை மோவாபியப் பெண்ணாக்குதற்கு ஆசிரியரைத் தூண்டியிருக்கலாம்.

***ஆ. சமூகப் பின்னணி:*** எபிரேயரிடையே வலுவான குடும்பம் அல்லது இனக்கூட்டொருமை அமைந்திருந்தது. ஒரு மனிதன் மகனையோ, பேரனையோ பெற்றெடுக்கும் போது ஒரு குடும்ப மரபையே பெற்றெடுத்ததாகக் கருதப்பட்டது. ஒரு குலமரபின் நபர்கள் அனைவரும் மூலக் குலத்தலைவரின் நீடிப்பாகக் கருதப்பட்டனர்; அதே எலும்பு, சதை, இரத்தத்தில் பங்கு கொண்டவர்களாக வளரும் உடலின் அங்கங்களாகக் கருதப்பட்டனர் (ஆதி 29:14; 37:27; நீதி 9:1-2; 2 சாமு 5:1; 19:11-13). ஆகவே குலமரபின் தொடர்ச்சியிலும், நிறைவிலும் அக்குலத்தைச் சேர்ந்த அனைவரும் ஆழ்ந்த அக்கறை காட்ட வேண்டும். இந்தக் கூட்டொருமை உயிரையும், உடைமையையும் திருமணத்தையும் பாதித்தது.

ஒருவன் கொல்லப்பட்டால், அவன் மட்டும் இரத்தம் சிந்தவில்லை; அவன் குலம் முழுவதுமே இரத்தம் சிந்தியதாகக் கருதப்பட்டது. இரத்தம் உயிர் தங்குமிடமானதால் (ஆதி 9:4; லேவி 17:11). குலமரபின் ஆற்றலில் ஒரு பகுதி அழிந்துபோய் விட்டதாகக் கருதப்பட்டது. ஆகவே, அதே குலத்தைச் சேர்ந்த மற்றொருவன் கொலை செய்தவனைத் துரத்திச் சென்று கொல்ல வேண்டும். குற்றம் செய்தவனின் குலமரபிலிருந்து ஒன்றை அழித்து ஈடு செய்ய வேண்டும். இவ்வாறு சமூகச் சமன்பாட்டை நிறுவுவது வழக்கமாக இருந்தது (எண் 35:19-21; உப 19:6-13). இக்கடமையைச் செய்யும் உறவினன் மரபின், ''இரத்தப் பழி வாங்கியவன்'' (goel haddam) அல்லது ''மீட்பன்'' என்று அழைக்கப்பட்டான்.

நிலம், வீடு போன்ற உடைமைகளும் ஒருவிதத்தில் ஒருவனுடைய நீடிப்பாகக்

கருதப்பட்டன; குலமரபின் துணை உறுப்புக்களாகக் கருதப்பட்டன. நாபோத்து தனது குடும்பத்துக்குச் சொந்தமான திராட்சைத் தோட்டத்தை ஆகாபு அரசனுக்குக் கொடுக்க மறுத்ததை நினைவு கூரலாம் *(1 அர 21)*. ஒருவன் தன் குல உடைமைகளில் ஏதாவது ஒன்றை இழந்தால் அது குலமரபின் இழப்பாகவும், குலமரபின் தொடர்ச்சியையும் உயிர் ஆற்றலையும் பாதித்ததாகவும் கருதப்பட்டது. ஆகவே, ஒரு வறியவன் தன் உடைமையை விற்கவோ, இழக்கவோ கட்டாயப்படுத்தப் பட்டால், மற்றொரு உறவினன் தலையிட்டு தானே வாங்கியோ, கைப்பற்றிய அன்னியனிடமிருந்து மீட்டோ, அவ்வுடைமையைத் தன் குலமரபுக்குள்ளே வைத்துக் கொள்ள வேண்டும் *(லேவி 25:25-29; எரே 32:6-9)*. இக்கடமையைச் செய்யும் உறவினனும் ''மீட்பன்'' என்று பொருள் படும் ''கோயல்'' (goel) எனப்பட்டான். இச்செயல் ''மீட்பு'' என்று அழைக்கப்பட்டது. இதற்குரிய சட்டம் லேவி 25:25-29-இல் கொடுக்கப் படுகிறது. அது செயல்படும் முறை எரே 32-இல் விவரிக்கப்படுகிறது.

குலமரபின் தொடர்ச்சியும், நிறைவும் குழந்தையில்லாமையால் அழிந்து போகக் கூடும். உயிர்ப்பு, மறுஉலக வாழ்வு போன்ற எக்கருத்தும் இல்லாத காலத்தில், ஒருவன் தன் புதல்வர்கள், பேரப்பிள்ளைகள் வழியாகத் தனது பெயரை நிலைக்க வைத்துச் சாகாமையைத் தேடினான். ஒருவன் ஆண் மகவு இல்லாமல் இறந்து விட்டால் அவனது விதவை மனைவியை அவனது சகோதரனோ, நெருங்கிய உறவினனோ மணந்து ஆண் மகவு பிறக்க வழி செய்ய வேண்டும். இப்படிப் பிறக்கும் மகன் இறந்தவனின் மகனாகக் கருதப் பட்டு, அவனது உடைமைக்கு வாரிசாவான். இவ்வாறு அவனது குலமரபும் பெயரும் காப்பாற்றப்படும் *(உப 35:5-6)*. இக்கடமையைச் செய்பவன் ''சந்ததி உண்டு பண்ணுபவன்'' எனப் பொருளுடைய ''யாபான்'' (yaban) என்றழைக்கப்பட்டான். கணவன் உடன் பிறந்தானை ''லேவீர்'' (levir) என்ற இலத்தீன் சொல் குறித்தது. ஆகவே, இந்தக் ''கணவன் உடன்பிறந்தான் திருமணம்'' என்ற வழக்கு ''லேவீரேட் திருமணம்'' (levirate marriage) என்றழைக் கப்பட்டது.

யாவே, இஸ்ராயேலுக்கு ''மீட்பன்'' (goel) ஆவார் என்று விவிலியத்தில் பல இடங்களில் குறிக்கப்படுவது கவனத்திற்குரியதாகும். மேற்கூறப்பட்ட மூன்று முறையிலும் ''மீட்பன்'' என்ற பெயர் இறைவனுக்குப் பொருந்தும் *(யோபு 19:25; சங் 19:14; 78:35; எசா 38:17; 59:20; 23:16; எரே 50:34; புல 3:58; அ.ப. 7:35)*.

சுருக்கமாக ''மீட்பன்'' (goel) தன் உறவினனது உயிரைப் பாதுகாக்க வேண்டும் *(யோசு 20:3-5)*; சுதந்தரத்தைப் பாதுகாக்க வேண்டும் *(லேவி 25:47-49)*; அவனது பெயரும் குடும்பமும் மறைந்து போகாமல் பாதுகாக்க வேண்டும் *(உப 25:5-10;லேவி 25:23-26; ரூத் 4:3-4)*.

பிள்ளையில்லாது இறந்துபோன சகோதரனது விதவையை மணந்து அவனுக்கு வம்சம் உண்டாக்க மறுக்கும் கணவன் உடன்பிறந்தானை, ''அப்பெண் பெரியோர்கள் முன்பாக அவனருகில் வந்து, அவன் காலிலிருக்கிற செருப்பைக் கழற்றி, அவன் முகத்தில் உமிழ்ந்து, தன் சகோதரனின் வீட்டைக் கட்டாதவனுக்கு இப்படியே செய்யப்பட வேண்டும் என்று சொல்லக் கடவாள். மேலும், இஸ்ராயேலில் அப் படிப்பட்டவனுடைய வீடு செருப்புக் கழற்றப்பட்டவனுடைய வீடு என்றழைக்கப் படும்'' என்று உப 25:9-10 கூறுகிறது. இது, கணவன் உடன் பிறந்தான் திருமணம் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டிய தொன்று என்றும், தவறினால் அஃது ஓர் அவக்கேடாகும் என்றும் காட்டுகிறது. ரூத் 4:7-9-இல் வரும் மிதியடி நிகழ்ச்சி மேற் கூறப்பட்ட உப 25:9-10-ஐத் தழுவி எழுதப் பட்டது என ஆய்வாளர் சிலர் கருதுவர். ஆனால், நெருங்கி ஆராய்ந்தால் ரூத்து நூலில் வரும் சடங்கு உப 25:9-10-இலிருந்து வேறுபட்ட முறையில் நடத்தப்படுகிறது.

இது நில உடைமைகளை மீட்கும் ஒப்பந்தத்திற்கு உரியது. உபாகமத்தில் வருவது போல் கணவன் உடன்பிறந்தான் திருமணத்திற்குரியதன்று.

எபிரேயர்களிடையே தொடக்க காலத்தில் குலமரபுக் கூட்டு ஒற்றுமை மிகவும் வலுவாய் இருந்தது. அக்காலத்தில் 'கணவன் உடன்பிறந்தான் திருமணம்' என்ற வழக்கு மிகக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப்பட்டது (ஆதி 38). இது பற்றி உபாகமத்தில் வரும் சட்டம், கணவன் உடன் பிறந்தானை மட்டுமே கட்டுப்படுத்தியது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நகோமிக்கு வேறு புதல்வர்கள் இருந்திருந்தால் அவர்கள் இக்கடமையைச் செய்ய வேண்டும் என்பது அறியப்பட்டிருப்பதாய் ரூத் 1:11-இல் தெரிகிறது. மரித்தவனுக்குச் சகோதரர்கள் இல்லாதபோது குலமரபுக் கூட்டு ஒற்றுமைப்படி, நெருங்கிய மற்றொரு உறவினன் இக்கடமையைச் செய்யலாம். ஆனால், இது கட்டாயமன்று. தேவைப்பட்டால் எந்த அவப்பெயருமின்றி இக்கடமையை மற்றொரு உறவினனுக்கு விட்டுக் கொடுக்கலாம்.

உப 25:5-10, கணவன் உடன் பிறந்தான் திருமணம் பற்றிய பிற்காலக் குறுகிய மனப்போக்கைப் பிரதிபலிக்கிறது என்று ஆய்வாளர் பலர் கருதுவர். இக்காலத்தில் இக்கடமை ஒருவனுடைய சகோதரனுக்கு அப்பால் நீடிப்பது அவசியமற்றதாகக் கருதப்பட்டது. மரித்தவனுடன் வாழ்ந்தவன் அவன் சகோதரனாகக் கருதப்பட்டான். இவனும் பொதுமக்களின் கண்டனத்தைத் தவிர வேறு எந்தத் தண்டனையும் இல்லாமல் இக்கடமையைத் தவிர்த்து விடலாம். இக்காலத்தில் குடும்பக் கூட்டு ஒற்றுமை வலுவானதாக இருந்தாலும், இக்கடமை வெளிப்படையாக வலியுறுத்தப்படவில்லை என்பது தெளிவு. ஏனெனில், நாடு கடத்தப்பட்டபின் வந்த குருக்கள் பாரம்பரியம் இத்தகைய திருமணத்தைத் தடுத்தது எனலாம். லேவி 18:16, ஒருவன் தன் உடன் பிறந்தான் மனைவியோடு செய்து கொள்ளும் மணத்தைத் தடைசெய்தது. இத்தகைய உறவைத் தடைவிதிக்கப்பட்ட நெருங்கிய உறவினரிடையேயான தகாக் கலவி என்றழைத்தது (லேவி 20:21). ரூத்து நூல் முந்தையக் காலத்துப் பாரம்பரியத்தைச் சேர்ந்த குலமரபுக் கூட்டு ஒற்றுமையைப் பிரதிபலிக்கிறது. அப்போது தூரத்து உறவினனும் ஒரு விதவையை மணந்து, மரித்தவனுக்கு வாரிசு உண்டாக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டதாகத் தெரிகிறது. இந்த வழக்கின் பரந்த கடைப்பிடிப்பை ரூத்து நூல் ஆசிரியர் ஏற்றுக்கொள்வதாகவும், தமது வாசகர்கள் அறிந்திருப்பர் என்று எதிர்பார்ப்பதாகவும் தெரிகிறது.

ரூத்து கதையில், குடும்பச் சொத்தை வாங்குதல், இறந்தவனின் விதவையை மணம்செய்தல் ஆகிய இரு கடமைகளை எதிர்கொள்கிறான் மிக நெருங்கிய உறவினனான ''மீட்பன்'' (goel) அவன் முன்னதைச் செய்யத் தயாராக இருக்கிறான்; பின்னதை நிறைவேற்ற விருப்பமில்லை. ஏனெனில், இம்மணத்தில் பிறக்கும் குழந்தை இறந்தவனின் மகனாகவும், மீட்ட சொத்துக்கு வாரிசாகவும் கருதப்படும். ஆகவே, மிக நெருங்கிய ''கோயல்'' தன் உரிமையையும், கடமையையும் விட்டுக் கொடுக்கிறான். ஆகவே, அடுத்த உறவினரான போவாசு சொத்தை மீட்டு, ரூத்தையும் மணம் செய்து கொள்கிறார். போவாசுக்கு ஆண் மகவு இல்லாமலும், அதனால் சொத்துப் பிரச்சனை இல்லாமலும் இருந்திருக்கலாம். போவாசுக்கு ஏற்கெனவே பிள்ளைகள் இருந்திருந்தால், அவர் ரூத்தை மணந்தால், மீட்ட சொத்து இத்திருமணத்தில் பிறந்த குழந்தைக்குச் சேரும். குழந்தை ரூத்தின் இறந்துபோன கணவனான மக்லோனுடையதாகக் கருதப்படும். எல்லாவற்றையும் தாராள மனதோடு ஏற்று, போவாசு ரூத்தை மணம் செய்து தனது கடமையை நிறைவேற்றுகிறார்.

**6. நூலின் நோக்கம்:** இதுதான் நூலின் நோக்கம் என்று உறுதியாகக் கூற முடியாது. ஆசிரியர் பல கருத்துக்களை மனதில் கொண்டு இந்நூலை எழுதியிருப்பதாகத் தெரிகிறது. அவற்றை இங்குச் சுருக்கமாகத் தருகிறோம்.

நூலின் தலைப்பு தெளிவாக உள்ளது. அது தாவீதின் மூதாதையர்களான போவாசு-ரூத்து ஆகியோரின் திருமணம் வழியாக எலிமெலக்கின் குடும்பம் மறைந்து போவதிலிருந்து அசாதாரண முறையில் தப்புவதாகும். நகோமியின் குடும்பம் மீண்டும் அமைக்க முடியாது என்ற நிலையில் *(1:11-13)* ரூத்து, நகோமி ஆகிய இரு பெண்களின் தீரமிக்க முயற்சியால் அக்குடும்பம் மீண்டும் அமைக்கப்படுகிறது. இவர்களின் வீரமிக்க விடா முயற்சியும் மனித அன்பும் அடங்கிய உன்னதக் கதையாக வடிவெடுத்து, இந்நூல் தாவீதின் மூதாதையர்களின் வரலாற்றில் இடம் பெறுகிறது. இதுவே அக்குடும்பம் பெறக் கூடிய மேலான மகிமையாகும். நூலில் காணப்படும் குறுகிய மரபுக்கொடி *(4:17)* மூல நூலோடு சேர்ந்தது என்பதை மறுக்க எக்காரணமும் இல்லை.

மேலும், இந்நூல் யூத இனக்கூட்டு ஒற்றுமைச் சட்டமான ''*மீட்பன்*'' (goel) முறையையும், மற்றச் சடங்குகளையும் செயல் முறையில் புரிந்துகொள்ள இடமளிக்கிறது. இம்முறை பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம்.

ரூத்து நூல் விசுவாச வளர்ச்சிக்குதவும் ஒரு வரலாற்றுக் கதையாகும். குடும்ப வாழ்வின் மேன்மை மிக்க எளிமை, ஒருவர்க்கொருவர் காட்டும் பிரமாணிக்கம், தாராளத்தன்மை ஆகியவை இலக்கிய நயத்துடன் விவரிக்கப்படுகின்றன. எலிமெலக்கு தனது குடும்பத்தைக் காப்பாற்ற, பிழைப்புக்காக அயல் நாட்டில் குடியேறுவதை ஏற்றுக் கொள்கிறார் *(1:1)*. நகோமி தன்னைவிட, தன் மருமக்களின் நலனிலேயே அக்கறை காட்டுகிறாள் *(1:8-13)*. ரூத்து தன் மாமிக்குக் காட்ட வேண்டிய பிரமாணிக்கத்திற்கு முதன்மை அளிக்கிறாள் *(1:14-18)*. போவாசு தனது உறவினர்களிடம் அன்பும் பரிவும் காட்டுகிறார் *(2:8-17)*. குடும்ப நற்பண்புகள், இஸ்ராயேலின் இன மேன்மையை எடுத்துக்காட்டும் நற்பண்புகளின் விவரிப்புக்கள் ஆகியவை நூல் முழுவதும் பரவிக்கிடக்கின்றன. சமூகம் யாவேயிடம் கொண்டுள்ள அசைக்க முடியாத விசுவாசத்தின்மேல் கட்டப்பட்டுள்ளது. யாவே வறியவர், எளியவர், கைம்பெண்கள் ஆகியோரின் பாதுகாவலர்; பிரமாணிக்கத்திற்குச் சன்மானம் அளிப்பவர். அதை அன்னியர் கடைப்பிடித்தாலும் அதற்கு இறைவன் சன்மானம் அளிக்கிறார். எலிமெலக்கின் குடும்பப் பாரம்பரியம் நகோமி, ரூத்து ஆகிய இரு பெண்களின் நற்பண்புகளின் மேல் கட்டப்பட்டுள்ளது. ஒரு குடும்பத்தின் நல்ல எதிர்காலம் இத்தகைய நற்பண்புகளையே தழுவியுள்ளது. அன்னியப் பெண்ணான ரூத்திடம் இப்பண்புகள் சிறப்பாகக் காணப்படுகின்றன. இவள் தன் மாமி நகோமியையும், அவள் உறவினர்களையும், மக்களையும், கடவுளையும் தன்னுடையவர்களாக ஆக்கிக் கொள்கிறாள் *(1:16 தொ)*. நகோமியின் குடும்ப இடுக்கண் நிலையைத் தீர்க்கும் உடனடி ஏதுவாக ஆகிறாள் ரூத்து. அவள் அழகிலும், மேன்மையிலும் இஸ்ராயேல் மங்கையரைவிடச் சிறந்து விளங்குகிறாள். அவற்றால் போவாசு என்பவரைக் கவர வல்லவளாகிறாள். இஸ்ராயேலர், மங்கையர்களுக்குக் காட்டும் அருள்மிகு பராமரிப்பையே இந்த அன்னியப் பெண்ணுக்கும் இறைவன் காட்டுகிறார்.

மரபுக் கொடியையும் சமூக, சமயவழக்குகளையும் எடுத்துக் கூறுவதைவிட, இந்நூல் மனித அன்பை மேன்மைப்படுத்துவதாக அமைந்துள்ளது எனலாம். இந்நூல் சடங்கு அல்லது சட்டக் காரியங்களைப் பற்றிப் பேசவில்லை என்று கூறும் ராபா என்ற ராபி, அன்புச் செயல்களைச் செய்பவர்களுக்கு எவ்வளவு பெரிய சன்மானம் கிட்டுகிறது என்று காட்டவே இந்நூல் எழுதப்பட்டது என்பார். ரூத்து நகோமியிடம் காட்டும் சுயநலமற்ற பற்றுறுதியில் இக்கருத்து பாராட்டப் பெறுகிறது. ''நான் உம்மைவிட்டுப் போகும்படி இன்னும் என்னைத் தூண்ட வேண்டாம். நீர் எங்குப் போனாலும், நானும் வருவேன். நீர் எங்குத் தங்குவீரோ, அங்கே நானும் தங்குவேன். உங்கள் இனமே என் இனம். உங்கள்

கடவுளே எனக்குக் கடவுள்...'' *(1:16-17)* என்ற கூற்று பெண்களிடையே நிலவ வேண்டிய நட்புக்கு ஓர் எடுத்துக்காட்டாகக் காலந்தோறும் அமைகிறது. இது தாவீதுக்கும், யோனத்தானுக்குமிடையே நிலவிய புகழ்பெற்ற நட்புக்கு இணையானது. இங்கே குறிக்கப்படுவது, ஒரு பெண் அவள் உறவினர்பால் கொள்ள வேண்டிய பற்றுறுதியை மட்டுமன்று, அறிவு சார்ந்த முறையில் கோரப்படும் கடமையையும் கடந்து, ஓர் அன்னியளும் மாமியுமான பெண்ணுக்குக் காட்டும் பற்றுறுதியான பக்தியாகும்.

ரூத்து, தன் மாமிக்குக் காட்டும் பற்றுறுதியை எடுத்துக்கூறும்போது, அன்னியப் பெண்ணாக இருந்தும் ரூத்து இஸ்ராயேலில் ஏற்றுக்கொள்ளப்பட்டாள் என்பது நூலில் வலியுறுத்தப்படுகிறது *(1:4.22; 2:2.6.10.13.21. 4:5.10)*. ரூத்து, போவாசு தனக்குக் காட்டிய ஆதரவைப் பற்றிப் பேசும்போதும் இருமுறை இதை அழுத்திக் கூறுகிறாள் *(2:10.13)*. கதைக்கு அவசியமில்லாதபோதும் ரூத்து ஒரு மோவாபியப் பெண் என்பது இருமுறை சுட்டிக்காட்டப்படுகிறது *(2:21)*. இந்நூலில் போற்றப்படும் மனித அன்பு நாட்டு எல்லைகளைக் கடந்து செல்லவல்லது; எல்லா மனிதரையும் உறவினராக்க வல்லது. ரூத்து நகோமிக்குக் காட்டும் அன்பில் இந்த இரு பண்புகளும் உண்டு. யாவற்றையும் உள்ளடக்கும் பொதுமைப் பண்பு நூல் முழுவதும் காணப்படுகிறது. மோவாபியப் பெண்ணான ரூத்து தாவீதுக்கு முப்பாட்டியானாள் என்ற கருத்தே இந்தப் பொதுமைப் பண்பின் உச்சநிலையாகும். புற இனத்தாருக்கும் இறைவன் காட்டும் தாராளத் தன்மையையும், அன்பிரக்கத்தையும் எடுத்துக் கூறும் யோனா, உப எசாயா போன்ற நூல்களோடு இந்நூல் ஒத்துப்போகிறது. உப எசாயாவின் பொதுமைக் கருத்தால் தூண்டப்பட்டு, தாவீதின் முப்பாட்டியைப் பற்றிய வாய்மொழிப் பாரம்பரியத்தை ஆசிரியர் ஒரு நூலாக எழுதியிருக்கலாம். அதன் நோக்கம், மீட்புக்கு யாவரையும் இறைவன் அழைக்கிறார் என்பதை வலியுறுத்தவும், மோவாபைச் சேர்ந்த ரூத்து போன்ற புற இனப்பெண்ணையும் மெசியாவின் மரபுக் கொடியில் சேர்த்துக் கொள்ள இறைவன் தயங்கவில்லை, மாறாக விரும்பினார் என்றும் காட்டுவதேயாகும் *(ரூத் 4:18; மத் 1:3-6; லூக் 3:31-33)*.

ஆய்வாளர் சிலர் இந்நூலில் வாதப் போக்கைக் காண முயன்றுள்ளனர். கி.மு. 5-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எஸ்ரா, நெகேமியா போன்ற யூதச் சீர்திருத்தவாதிகள், இறைவனின் மூலக் கட்டளையையும், யூத இனத்தூய்மையையும் பாதுகாக்கும் பொருட்டு, யூதர்களுக்கும் பிற இனத்தலைவர்களுக்குமிடையே நடந்த திருமணங்களை நிறுத்த முயன்றனர்; தடை செய்தனர்; இச்சீர்திருத்தத்தைச் செயல்படுத்துவதில் கடுமையான போக்கையும் கடைப்பிடித்தனர் *(எஸ் 9-10; நெகே 13:1-3.23-28; காண்க. உப 23:4-7)*. இது யூதர்களிடையே ஒதுங்கி வாழும் குறுகிய மனப்போக்கை ஏற்படுத்தியது. இந்தச் சீர்திருத்தம் பலரிடையே எதிர்ப்பை எழுப்பியிருக்க வேண்டும். இச்சீர்திருத்தத்திற்கு எதிர்ப்பாக, ஒரு திருத்தமாக இந்நூல் தோன்றியது என்பர். ஒரு நற்பண்புடைய புறவினத்துப் பெண் இஸ்ராயேலர் குடும்பத் தலைவியருள் ஓர் எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தாள் என்றும், அவள் தாவீது மன்னனது மூதாதையருள் ஒருத்தியாக விளங்கினாள் என்றும் காட்டுவது. கலப்புத் திருமணம் முழுவதும் தீமையானதாக இருக்க முடியாது என்றும், சீர்திருத்தவாதிகளின் குறுகிய மனப்போக்கு இஸ்ராயேல் சமூகத்திலிருந்து தகுதியுடையவர்களையும் புறம்பாக்கக் கூடும் என்றும் காட்ட வல்லது. இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டுதான் ரூத்து நூல் எழுதப்பட்டது என்று ஆய்வாளர் சிலர் கூறுவர். இத்தகைய வாதப்போக்கே இந்நூலில் இல்லை என்பர் பலர்; அப்படி இருந்தாலும் அது மறைமுகமானது. இவர்கள் கருத்துப்படி இந்நூலில் போராட்டப் போக்கிற்குப் பதிலாக, பரந்த மனப்போக்கும் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும்

காணப்படுகின்றன. நூல் எந்தக் குறிப்பிட்ட கருத்தையும் தாக்கவில்லை. நாட்டு அல்லது சமய விட்டுக்கொடாத் தன்மையைக் கடந்து, நன்மை செய்ய வல்ல நல்லெண்ணத்தையும், பிறருக்குக் காட்டும் மரியாதையையும் எடுத்துக்கூறுவதை நேரடி நோக்காகக் கொண்டுள்ளது. இந்நூலில் போராட்டப் போக்கு இல்லாததுதான் இந்நூலை எந்தச் சூழ்நிலையிலும் பொதுமை நோக்குக்கு நேரடியான நிலையான சாட்சியாக்குகிறது.

சுருக்கமாக, ரூத்துநூல், விவிலியத்தில் காணப்படும் பல நிகழ்ச்சியுரைகளைப் போன்று பல நோக்குடையது. அஃது ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட குடும்பம் அழிவிலிருந்து தப்பிய கதையை நாடகப் பாணியில் எடுத்துக் கூறுகிறது. தன் கணவனுக்கும் உறவினர்களுக்கும் ஒரு பெண் காட்டும் விடாப்பிடியான பற்றுறுதிக்கு ரூத்து சிறந்த எடுத்துக்காட்டாவாள். போவாசு விவேகத்தையும், மேன்மையையும், தாராள குணத்தையும் காட்டுகிறார். இருவரும் வாசகர்கள் பின்பற்றக்கூடிய மாதிரிகளாகக் காட்டப்படுகின்றனர். குடும்பப் புண்ணியங்கள் சிறந்த முறையில் எடுத்துக்காட்டப்படுகின்றன. இஃது ஓர் ஒழுக்க மேம்பாட்டுக் கதையாகும். இதை அடிப்படையில்லாத ஒரு கட்டுக் கதையாக மதிப்பிட வேண்டியதில்லை. கூறப்படும் நிகழ்ச்சிகளில் ஆசிரியர் அவ்வளவு அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை. ஆனால், அவற்றின் வழியாக எப்படி இறைவனின் தன்மையும், வழிகளும் வெளிப்படுகின்றன என்பதையும் இறைவனின் திட்டத்தில் தாவீது குடும்பத்தின் சலுகை பெற்ற இடம், பற்றுறுதி, தாராளத் தன்மை ஆகியவற்றின் சன்மானம் முதலியவற்றையும் எடுத்துக் கூறுவதில் ஆசிரியர் அக்கறை காட்டுகிறார். அவருக்கு இவை முக்கியமானவையாகும். இவற்றை வலியுறுத்த ஆசிரியர் நிகழ்ச்சிகளைச் சுதந்தரமாக அழகுபடுத்துகிறார். ரூத்து ஒரு வரலாற்று ஏடன்று; ஓர் எடுத்துக்காட்டான கதையாகும்; ஓர் அக்காதா மிட்ராஷ் ஆகும்.

**7. நூல் தோன்றிய** *காலம்:* இது பற்றிப் பலத்த வேறுபட்ட கருத்துக்கள் உண்டு. சிலர் நாடு கடத்தலுக்கு முன்னும், வேறு சிலர் அதற்குப் பின்னும் இந்நூல் தோன்றியதாகக் கூறுவர்.

எழுபது நூலும், வுல்கத்தா வாசகமும் நீதிபதிகள் நூலுக்கு அடுத்து ரூத்து நூலை வரிசைப் படுத்துகின்றன. தால்மூது பாரம்பரியம் இவ்விரு நூல்களையும் சாமுவேல் எழுதியதாகக் கூறுகிறது. நூலும் ''நீதிபதிகளுடைய காலத்தில்..'' *(1:1)* என்று இயற்கைப் பண்போடு தொடங்குகிறது. இவை யாவும் இந்நூல் காலத்தால் முந்தியது என்று நினைக்க நம்மைத் தூண்டலாம்.

இந்நூல், தாவீதின் மூதாதையரது மரபுக் கொடி இறைவனது பராமரிப்பால் பாதுகாக்கப்பட்டதைக் கூறுவதால், தாவீது முக்கியத்துவம் அடைந்த சிறிது காலத்துக்குப் பின் தோன்றியிருக்க வேண்டும். இக்காலத்தில்தான் யாவே பாரம்பரியப் பதிப்பாசிரியர் இத்தகைய கதைகள் வழியாக ஆபிரகாமிலிருந்து தாவீது வரையிலுள்ள பல தலைமுறைகளை இணைக்க முயன்றனர். இக்காலத்தில்தான் தாவீதின் உரிமை பற்றிய பெரும் இலக்கியப் பகுதிகள் தோன்றின *(2 சாமு 9-10; 1 அர 1-2).* இக்காலம்தான் ரூத்து போன்ற நூல்கள் தோன்றச் சாதகமான சூழ்நிலையாகியது எனலாம்.

ரூத்து நூலுக்கும், யோசேப்பின் வரலாறு பற்றிய ஆதி *37-50* என்ற பகுதிக்குமிடையில் நடையிலும் மனப்போக்கிலும் ஒற்றுமை இருப்பதாக ஆய்வாளர்கள் கருதுவர். யோசேப்பு வரலாறு பற்றிய இலக்கியம் அரசாட்சிக் காலத்தில் தோன்றியதாகவும், விசுவாசத்தை வளர்க்கவும் நல்லொழுக்கத்தைக் கற்றுக்கொடுக்கவும் அமைக்கப்பட்டதாகவும் ஆய்வாளர்கள் கருதுவர். அப்படியாயின் அதே காலத்தில் ரூத்து நூலும் தோன்றியிருக்கக் கூடுமா?

மேலும், நாடு கடத்தப்பட்ட பிற்காலத்தில் தோன்றியவை என்று உறுதியாகக் கூறக்கூடிய தோபித்து, எஸ்தர் போன்ற

நூல்களின் மனம்போன போக்கான நிகழ்ச்சி யுரைகளோடு ஒப்பிடும்போது ரூத்து நூல் காலத்தால் முந்தியதாகவும், நயமிக்கதாக வும் தெரிகிறது. ரூத்து நூலின் மொழியும் நாடு கடத்தலுக்கு முன் இந்நூல் தோன்றி யது என்ற கணிப்புக்கு ஆதரவு அளிக்கிறது.

இவற்றை அடிப்படையாகக் கொண்டு, சிலர் இந்நூல் தாவீது அரச வரலாற்றோ டும், யாவே பாரம்பரியத்தோடும் ஒத்த காலமாகிய கி.மு. *950-850*-க்கு இடையிட்ட காலத்திலும், வேறுசிலர் கி.மு. *1000-700*-க்கு இடையிட்ட காலத்திலும், இன்னும் சிலர் கி.மு. *8*-ஆம் நூற்றாண்டி லும் தோன்றியதாகக் கூறுவர். அத்தாலியா வின் தீமை மிக்க ஆட்சிக்கு ஒரு மாற்றமாக கி.மு. *832*-ஐ ஒட்டி நாட்டில் இந்நூல் வழக்கில் இருந்தது என்பாரும் உள்ளனர்.

மேற்கூறிய கருத்துக்கு மாறாக, நாடு கடத்தலுக்குப் பின்புதான் இந்நூல் தோன்றி யது என்று ஆய்வாளர் பலர் கூறுவர். இதற்கு அடிப்படையான புறச்சான்று எபி ரேய விவிலியத்தில் ரூத்து நூல் கொண்டி ருக்கும் இடமாகும். இஃது எபிரேய விவிலியத்தின் மூன்றாம் தொகுப்பாகிய ''நூல்கள்'' என்ற தொகுப்பில் இடம் பெறுகிறது. பிற்காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் ரூத்து நூலைச் சாமுவேல் எழுதினார் என்று கூறும் தால்மூது பாரம் பரியம், இதை முந்தைய இறைவாக்கினர் நூல்களோடு சேர்க்கத் துணியவில்லை; ''நூல்கள்'' என்ற தொகுப்பிலேயே சேர்க் கிறது.

சிறிய நூலானாலும் இந்நூலில் காணப் படும் பல அரமேயிக்குப் பண்புகளும், நூலின் தொனியும், நடையும் இது நாடு கடத்தலுக்குப் பின்பு தோன்றியது என்று காட்ட வல்லன என்பர் ஆய்வாளர்கள் சிலர். ஆனால், மற்ற நூல்களோடு ஒப்பிடு கையில் இந்நூலில் காணப்படும் அரமே யிக்குப் பண்புகள் அதிகம் இல்லை. பெற்றெடுப்பது, மணம் செய்தல் போன்ற சொற்கள் இந்நூல் நாடுகடத்தலுக்கு முன் தோன்றியது என்று கூற இடந்தரவில்லை.

இந்நூல் எஸ்ரா, நெகேமிய சீர்திருத்தத் திற்கு எதிராகத் தோன்றியது; ஆகவே, நாடு கடத்தலுக்குப் பின் தோன்றியது என்பர் சிலர். இவ்விளக்கத்தை இந்நூல் நாடு கடத்தலுக்குப் பின் தோன்றியது என்று கூறுபவர்களும் நிராகரிப்பர். ஏனெனில், ரூத்து மோவாபியப் பெண்ணானாலும் தனது நாட்டையும் கடவுள்களையும் விட்டு விட்டு யாவேயைப் பின்பற்றுவோர்க்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாவாள் என்ற வரலாற்றைக் கூறும் இந்நூல் சீர்திருத்தவாதி களுக்குச் சாதகமாகவே பயன்பட்டிருக்கும். மேலும், யூத — புறவினத்தார் திருமணம் பற்றிய முழுவதும் வேறுபட்ட மனப் போக்கை இந்நூல் எடுத்துக்கூறுகிறது என் பது உறுதி.

ரூத் *4:18-22* குருக்கள் பாரம்பரியத்தைக் கொண்டிருக்கிறது என்பதும், கி.மு. *4*-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த *1* நாள் *2:4-15*-இல் வரும் மரபுக் கொடியையே தருகிறது என்பதும் உண்மையே. ஆனால், இஃது இங்கு வச. *17*-இல் விளக்கமாகப் பிற்காலத் தில் சேர்க்கப்பட்டது என்று ஆய்வாளர்கள் பொதுவாக ஏற்றுக்கொள்வர். ஆகவே, இப்பகுதி காலக்கணிப்பிற்கு உதவியாக அமைய முடியாது.

சுருக்கமாக, எபிரேய விவிலியத்தில் ரூத்து நூல் கொண்டிருக்கும் இடம், மொழி யில் காணப்படும் புதிய மரபுச்சொற்கள், மிகப் பழையன; ஆனால், வழக்கிலிருந்து மறைந்து விட்டன என்று காட்டுவதாக ஏற்றுக்கொள்ளப்படும் *(4:7)*. சட்டங்கள், வழக்கங்கள் பற்றிய விவரிப்புகள், கதைத் தலைவியான புறவின ரூத்தின் நற்பண்புகள் மட்டுமின்றி, அவளுடைய சகோதரி ஒர்பா வின் நற்குணத்தையும் எடுத்துக்கூற விரும் பும் ஆசிரியரது நோக்கம் முதலியவற்றைக் கருத்தில் கொண்டால், இந்நூல் கி.மு. *5*-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆசிரியரால் எழுதப்பட்டது என்று தோன்றும் என்றும், இவர் உப எசாயாவின் பொதுமைப் போத கத்தால் தூண்டப்பட்டு, தாவீதின் முப்பாட் டியைப் பற்றிய வாய்மொழிப் பாரம்பரி யத்தை ஒரு நூலாக எழுதினார் என்றும்

கூறுவர். யாவரும் மீட்புக்கும், மீட்புத் திட்டத்தில் பங்கெடுக்கவும் அழைக்கப்படு கின்றனர் என்ற பொதுமைக் கருத்தும் இந்நூல் பிற்காலத்தில் தோன்றியதென்ப தற்கு ஆதரவு அளிக்கிறது.

**8. இலக்கியச் சிறப்பு:** கதை கலைப் பண் போடு எடுத்துக்கூறப்படுகிறது. அதுவே நூலுக்குப் போதிய குறிக்கோளாகும் என்று விளக்கவுரையாளர் சிலர் கூறுவர். ''கதை அதன் தெளிவான எளிமையில் எவ்வளவு நயமிக்கதாய் இருக்கிறதென்றால், அதற்கு விளக்கம் அளிப்பது அதற்குப் பாதகம் செய்வதாகும்'' என்று ஓர் அறிஞர் கூறு கின்றார்.

ரூத்து நூல் எபிரேய இலக்கியத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். கதை சுருக்க மானாலும், ஓர் இலக்கிய இரத்தினமாகும். கவர்ச்சிமிக்க இக்கதை மகிழ்ச்சி அளிக்கக் கூடிய விதத்தில் அழகாகச் சொல்லப்பட்டி ருக்கிறது. காலந்தோறும், இக்கதையின் இலக்கியப் பண்புகள் அதிகம் பாராட்டப் பட்டுள்ளன. யோசுவா, நீதிபதிகள் ஆகிய நூல்களை வாசித்தபின் இந்நூலை வாசிக் கும்போது, இஃது உணர்ச்சிமிக்க, எளிய கிராமப்புற வாழ்க்கைச் சித்திரமாகத் தோன் றும். முன்னவற்றில் காணப்படும் போர் கள், கொடுமைகளிலிருந்து விடுபட்டு அமைதி மிக்க சூழ்நிலையில் நுழைவதை உணரலாம். கதை அன்றாட எளிய வாழ்வை அழகாகச் சித்திரிக்கிறது; பண்பு மிக்க பாத்திரங்களையும், வண்ண மிக்க காட்சிகளையும், சுருக்கமான உயிர்ச்சித்திர மான உரையாடல்களையும் கொண்டுள் ளது. இவை நன்கு சுவைக்கப் பெற்று, திறமையோடு எடுத்துக் கூறப்படுகின்றன.

பெயர்கள் அடையாளப் பொருளுடை யனவாக உள்ளன. நகோமி = இனியவள், எலிமெலக்கு = இறைவன் என் அரசர், மக்லோன் = சோர்வு, நோய், கிலியோன் = தேய்வு, மெலிவு, குறைவு, ஓர்பா = திரும்பிச் சென்றவள், ரூத்து = தோழி, போவாசு = இறைவன் வல்லவர். இவை யாவும் ஆசிரியர் இந்நூலுக்கு ஓர் அடை யாளப் பொருளை அளிக்க விரும்பினார் என்று சுட்டவல்லன.

கதையில் ''வில்லன்'' அல்லது பாதகன் இல்லை. பங்கெடுக்கும் பாத்திரங்களில் எவரும் கண்டனம் பெறவில்லை. ஆனால், ஆசிரியர் விவரங்களையும் வேறுபாடுகளை யும் நயமிக்க முறையில் பயன்படுத்தியுள் ளார். அதன் விளைவாக, சாதாரண நன் மைத்தனத்துக்கும், அசாதாரண நன்மைத் தனத்துக்கும் இடையேயுள்ள வேறுபாடு பொதுவாழ்வின் பின்னணியில் தெளிவாக வெளிக்கொணரப்படுகிறது. ஓர்பா தனது கடமையிலும் பற்றுறுதியிலும் எவ்விதத்தி லும் குறைந்து விளங்கவில்லை. அவள் தனது மாமி நகோமியோடு புது நாட்டிற்குச் செல்லத் தயாராக உள்ளாள். நகோமி மறுமுறை அறிவுரை கூறித் தூண்டியபின் தான், தன் மக்களிடம் திரும்பிப் போக ஒத்துக்கொள்கிறாள் *(1:8-14)*. பெயர் தெரி யாத மிக நெருங்கிய உறவினன் தனது பொறுப்பை ஏற்று, நகோமியின் உடை மையை மீட்கத் தயாராக இருக்கிறான். இஃது ஒரு திருமணத்தையும் உள்ளடக்கும் என்றும், அது தனது சொந்த மரபுரிமைக் குள்ள கடமைக்கு முரண்பாடாக அமையும் என்றும் அறியும்போதுதான், தன் உரி மையை விட்டுக் கொடுக்கிறான் *(4:4-6)*. இந்தப் பின்னணியில்தான் ரூத்து, போவாசு ஆகியோரின் அசாதாரணப் பெருந்தன்மை தெளிவாக மிளிர்கிறது. சாதாரண எளிய வழியைத் தேர்ந்தெடுக்கும் ஓர்பா பிர மாணிக்கமுள்ள ரூத்தைச் சிறப்பித்துக் காட்டுகிறாள் *(1:14-17)*. தன்னலத்திற்காக உரிமையை விட்டுக்கொடுக்கும் உறவினன் போவாசின் தாராள குணத்தைச் சிறப் பித்துக் காட்டுகிறான் *(4:9-10)*. நகோமியை நோக்கிக் கூறப்பட்ட புலம்பல் *(1:19)* அவளுக்கு அளிக்கப்படும் பாராட்டால் *(4:12-17)* சமன் செய்யப்படுகிறது. இந்த ஒப்பீட்டு வேறுபாடுகள் செயற்கைத் தன்மையுடையனவாகத் தோன்றலாம். ஆனால், இவை, ஆசிரியர் நூலுக்குக் கலையமைப்பும் திட்டமும் அளிக்க விரும் பினார் என்று காட்டவல்லன.

ஏற்கெனவே எழுதப்பட்டிருந்த மூலங்களை ஆசிரியர் பயன்படுத்தினார் என்பதற்குச் சான்றுகள் இல்லை. எழுதப்பட்ட நீதிபதிகள் நூலின் ஒரு பகுதியாக ரூத்து நூல் இருந்தது என்ற பாரம்பரியத்திற்கு, இரு நூல்களுக்குமிடையே பொருளடக்கத்திலும் உணர்வுகளிலும் காணப்படும் வேறுபாடுகள் சான்றாய் அமையவில்லை. நூலில் வரும் தாவீதின் மரபுக்கொடி எந்த எழுதப்பட்ட துல்லியமான மூலத்தையும் அடிப்படையாகக் கொண்டதாகத் தெரியவில்லை. கண்வன் உடன் பிறந்தான் திருமணச்சட்டம், சொத்தை மீட்டல் ஆகியவை பற்றிய ஆசிரியரது விளக்கம் உப 25-இல் வரும் சட்டத்தோடு ஒத்துப்போவதாகத் தெரியவில்லை. மேலும், நூலில் வரும் கதை வடிவம் நீண்டகால வாய்மொழிப் பாரம்பரியம் இருந்திருக்கக்கூடும் என்று சுட்டுகிறது. காலப்போக்கில் இது மீண்டும் மீண்டும் சொல்வதால் நயப்பட்டிருக்க வேண்டும். சரியாக, வேண்டிய அளவே விவரங்களைப் பயன்படுத்துவது கதைசொல்லும் கலையின் ஒரு பண்பாகும். ஒவ்வொரு விவரமும் தன் பாகத்தைச் சரியாகச் செய்யவேண்டும். இதற்கு, மத்திய இடைவேளையில் போவாசு, ரூத்துக்கு உணவு அனுப்புவது, ரூத்து உணவின் மீதிப்பகுதியைத் தன் மாமிக்கு எடுத்துச் சேகரிப்பது போன்றவற்றைச் சுட்டிக் காட்டலாம். உரிய அளவு எதிர்பார்ப்பு நிலை அமைந்து, அதற்கு அளிக்கும் முடிவும் சரியாக அமைந்துள்ளது. ரூத்து, போவாசுக்குச் சொந்தமான வயலை அடைந்து கதிர்பொறுக்கத் தொடங்குவதிலிருந்து, நெருங்கிய உறவினன் நகோமியின் சொத்தை மீட்கப் போவதாக அறிவிக்கும்போது முழுத்திட்டத்திற்கும் ஏற்படும் அச்சுறுத்தல்வரை எதிர்பார்ப்புநிலை படிப்படியாக வளர்ச்சியோடு எடுத்துக் கூறப்படுகிறது. இது, பலதடவை வெற்றியோடு சொல்லப்பட்ட ஒரு கதையின் கூறுகளைச் சுட்டுகிறது. இவ்வாறு கதை வளர்ச்சியுற்றிருந்தால், கதையின் மையம் அவ்வப்போது மாறியிருக்க வேண்டும் என்று கூறலாம். மூலக் கதையை இப்போது கண்டுபிடிப்பது ஒருவேளை முடியாத காரியமாகலாம். இஃது ஒருவேளை பெத்லகேமைச் சேர்ந்த பழங்கால வழிபாட்டுச் சடங்குக் கதையாக இருந்திருக்கலாம். இதில் அறுவடைச் சடங்கும், ஒரு பெண்ணின் கதையும், புலம் பலும், புதுக் குழந்தையின் பிறப்பும் தொடர்புபடுத்தப்பட்டிருக்கலாம். தோற்றமும், மூலப் பொருளும் எதுவாயினும் நமக்குக் கிடைத்திருப்பது கலைப்பண்புடைய சிறப்புமிக்க கதையாகும். மீண்டும் மீண்டும் கூறுவதால் நயப்படுத்தப்பட்ட, நாம் இப்போது கொண்டிருக்கும், கதையைத்தான் இந்நூலின் நோக்கத்தையும் பொருளையும் மதிப்பீடு செய்யும்போது நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

**9. நூலின் திட்டம்:**

நான்கு அதிகாரங்களைக் கொண்ட இக் குறு நூலை நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

I. மோவாபு நாட்டினிலே *(1:1-18)*.

*1:1-5* : நகோமியின் குடும்ப அவல நிலை.

*1:6-15* : நகோமியைப் பிரிந்து செல்ல ரூத்தின் வாய்ப்பு.

*1:16-18* : நகோமியோடு தங்க ரூத்து தேர்ந்தெடுத்தல்.

II. பெத்லகேம் வயலிலே *(1:19-2:23)*.

*1:19-22* : நகோமி, ரூத்து பெத்லகேமை அடைதல்.

*2:1-7* : ரூத்து கதிர்பொறுக்கச் செல்லுதலும், போவாசைச் சந்தித்தலும்.

*2:8-16* : போவாசு ரூத்துக்குப்பாதுகாப்பு அளித்தல்.

*2:17-23* : போவாசு ரூத்துக்குப் பரிவு காட்டுதல்.

III. பெத்லகேமின் சூட்டடிப்புக் களத்தினிலே *(3:1-18)*.

*3:1-5* : உறவுமுறை மீட்பளிக்க போவாசிடம் கேட்குமாறு ரூத்துக்கு நகோமியின் ஆலோசனையும், திட்டமும்.

*3:6-9* : ரூத்து நகோமியின் திட்டத்தைச் செயல்படுத்துதல்.

*3:10-18* : ரூத்துக்கு மீட்பளிக்க போவாசு இணங்குதல்.

IV. பெத்லகேம் நகர வாயிலிலே *(4:1-22)*.

*4:1-12* : நகரவாயிலிலே போவாசு வழக்காடுதலும், ரூத்தை மணந்து கொள்ளுதலும்.

*4:13-16* : ரூத்து ஒபேதைப் பெற்றெடுத்தல், நகோமி பாராட்டப்படுதல்.

*4:17* : ரூத்து தாவீதின் முப்பாட்டியாதல்.

*4:18-22* : பாரேசின் குலமரபுக்கொடி.

**10. நூலின் போதகம்:** இந்நூல் இவ்வுலகைச் சார்ந்த, சமய சார்பற்ற காரியங்களைப் பற்றிப் பேசுவதாகவும், கதையில் மனிதர்களே ஆதிக்கம் செலுத்துவதாகவும் தோன்றலாம். ஆனால், இந்நூல் மறைந்திருந்து செயலாற்றும் யாவேயின் கதையாகும். நூல் இறைவனது பெயரையும் தலையீட்டையும் குறிப்பிடுகிறது. மனிதர்கள் தங்கள் சகமனிதர்களின் தேவைகளில் அக்கறை கொள்ளும் போதெல்லாம் இறைவன் அங்குப் பிரசன்னமாக இருக்கிறார் என்றும், மனிதர்கள் தங்கள் பொறுப்பை ஏற்று நடக்கும்போதெல்லாம் அங்கு இறைவன் தம் பற்றுறுதியோடு பிரசன்னமாய் இருக்கிறார் என்றும் அழகாக எடுத்துக் கூறுகிறது. சமய சார்பற்றதாகத் தோன்றும் நிகழ்ச்சிகள் வழியாக உடன்படிக்கைப் பிரமாணிக்கமும் அன்பும் எடுத்துக் காட்டப்படுகின்றன. சாதாரண நிகழ்ச்சிகள், ஒதுங்கியிருப்பதாகத் தோன்றும் இறைவனின் பிரசன்னத்தை எடுத்துக்காட்டும் அசாதாரண நிகழ்ச்சிகளாக மாற்றி அமைக்கப்படுகின்றன.

சிறிய நூல் ஆனாலும், ஆசீர்களும், வேண்டுதல்களும் புலம்பல்களும் நூலில் அதிகம் காணப்படுகின்றன. அவை யாவேயைப் பார்த்துக் கூறப்படுகின்றன. அவரது பதில் மனிதர்கள் வழியாகத் தரப்படுகிறது. பசித்தோர்க்கு உணவு அளிக்கப்பட வேண்டும். விதவைகள் பாதுகாக்கப்பட வேண்டும். அன்னியர்களுக்கு இடம் அளிக்க வேண்டும். இத்தகைய தேவைகளுக்குட்பட்டோரைப் பற்றி இறைவன் கவலை கொள்கிறார். இவைகளை விசுவாசத்தை எடுத்துக் காட்டும் வாய்ப்பாகக் காணச் செய்கிறார். இவற்றை மனிதர் வழியாகவே நிவர்த்தி செய்கிறார். இறைவனது பராமரிப்பு, நூல் முழுவதும் பரவி நிற்கிறது.

இந்நூல் ஒரு பெண் விடுதலைக் கதையாகும். ஆண்களின் ஆதிக்கம் மிகுந்த சமுதாயத்தில் நகோமியும், ரூத்தும் அவர்களுடைய கணவர்களின் துணையின்றி அவர்களுடைய வாழ்வை அவர்களே நிர்ணயித்துச் செயல்படுகின்றனர். அவர்களே முன்முயற்சி எடுக்கின்றனர். அவர்களின் செயல்களுக்குப் பதிலாகவே போவாசின் செயல் அமைகிறது. ஆண்களின் உலகில் இவ்விரு பெண்களும் மையம் வகிக்கின்றனர்; இறை இடையீட்டைக் கோரும் ஊக்கு சக்திகளாக அமைகின்றனர்; அதிர்ச்சி அளிக்கின்றனர்; தூண்டுகின்றனர்; அச்சுறுத்துகின்றனர். பிதாப்பிதாக்களின் சமூகத்தில் நிலவிய வரையறைகளை எப்படிப் பெண்கள் மேற்கொள்கின்றனர் என்பதைக் கூறும் கதையாக அமைகிறது இந்நூல். மேலும், இது சமூக இடுக்கண்களை எதிர்கொள்ளும் வகையில் மனிதர்கள் சமூகத்திற்கு ஆற்ற வேண்டிய பங்கை எடுத்துக்கூறும் கதையாகும்; விசுவாச சமூகத்திற்குச் சவால் விடும் விசுவாசக் கதையாகும்.

நூலில் காணப்படும் உடன்படிக்கை மரபுமொழி வேறொரு போதகத்தையும் சுட்டுகிறது. அஃது ஒருவருக்கொருவர் உதவி செய்து ஆதரவு அளிப்பதாகும்; உடன்படிக்கையின் விளைவுகளைச் செயல் முறையில் வாழ்ந்து காட்டுவதாகும். ஒரு குறிப்பிட்ட

வரலாற்றுச் சூழ்நிலைக்குள் ஆசிரியர் தம் மையே வரையறுத்துக் கொண்டாலும் எல் லாச் சூழ்நிலைக்கும் ஏற்றவிதத்தில் உடன் படிக்கை அன்பைப் போதிக்கிறார். உடன் படிக்கையின் பொருள், அதைக் கடைப் பிடித்தல் ஆகியவை பற்றி இஸ்ராயேலர் கேள்வி எழுப்பும்போதெல்லாம், அவர்கள் நகோமி, ரூத்து ஆகியோரின் பற்றுறுதி, போவாசின் பெருந்தன்மை, கடமையை ஏற்க மறுக்கும் உறவினனின் போக்கு முதலியவற்றைக் கவனத்தில் கொண்டால், உடன்படிக்கையின் பொருளையும் கடைப் பிடிப்பையும் கண்டுணர்வர். பிறருக்குச் செய்யும் சேவையில் தங்கள் சன்மானத்தை யும் இறைவனது பிரசன்னத்தையும் கண்ட டைவர். இந்நூலில் இறைவனது பிரசன்னம் குறிப்பிட்ட இடங்களையோ இறையாவி பெற்ற தலைவர்களையோ சார்ந்ததன்று; மனிதர்கள் தங்கள் உலகத் தேவைகளை மனித முறையில் நிவர்த்தி செய்ய முயலும் போது எடுக்கும் துணிவுள்ள, இறைபயம் மிக்க தீர்மானங்களோடு இணைந்தது. முக் கிய பாத்திரங்களின் குறைநிறைகள் பூசி மேவப்படவில்லை. மனிதர்களின் பல வீனத்திலும், அதன் வழியாகவும் இஸ்ரா யேலின் இறைவன் செயல் ஆற்றுகிறார்.

மேற்கூறப்பட்ட போதகங்களுக்கெல் லாம் அடிப்படையாக இறைவனுக்கு முத லிடம் கொடு என்ற போதகம் அமைந்துள் ளது. அவரை மாட்சிமைப்படுத்தியவர் களை அவரும் மாட்சிமைப்படுத்துவார் (*1 சாமு 2:30*). நகோமியின் துன்பங்களில் அவளது விசுவாசம் ஒன்றே அவளுக்கு நங்கூரமாக விளங்கியதைக் கண்ட ரூத்து நகோமியின் இறைவனில் தனது நம்பிக் கையை வைத்தாள். நகோமிக்குப் பணி செய்ய தன்னையே அர்ப்பணித்தாள். அதற் காக ''உன் செயலுக்கு ஏற்ற வெகுமதியைக் கடவுள் உனக்கு அளிப்பாராக; நீயும் இஸ்ராயேலின் கடவுளாகிய ஆண்டவரை நாடி, அவரது திருவடியைத் தஞ்சமெனத் தேடி வந்தாயே; அவரால் முழுக் கைம் மாறு பெறுவாயாக'' என்று போவாசு அவளை வாழ்த்துகிறார் (*2:12*). உண்மையி லேயே மேன்மையான சன்மானம் பெறு கிறாள். விசுவாசி சன்மானத்திற்காகச் செய லாற்றுவதில்லை. ஆனால், இறைவனது சன்மானத்தைப் பெறாது போகான். ஏனெ னில், தாராள குணத்திலும் பற்றுறுதியிலும் இறைவன் யாவரையும் மிஞ்சியவர் ஆவார். மனித விவேகத்தையும் கடந்து சென்று தன்னலம் கருதாது, ரூத்து இறைவ னில் நம்பிக்கை வைத்தாள்; யாவரையும் பராமரிக்கும் இறைவனில் தஞ்சம் புகுந் தாள் (*2:12*). இறைவன் அவளது வாழ்வை வியத்தகு முறையில் புதியதாகவும், மகிழ்ச்சி மிக்கதாகவும் மாற்றி அமைத்தார். அவளது கொள்ளுப்பேரன் தாவீதின் சொற் களில், அவளது வாழ்வின் நெறியை உறுதிப்படுத்தினார் (*சங் 37:23*). அவர் களுக்கு எதிலும் குறைவு வைத்ததில்லை (*34:10*). எல்லாம் நிறைவாக அவளுக்கு அளிக்கப்பட்டது; ''கடவுளின் அரசையும் அவருக்கு ஏற்புடையதையும் முதலில் தேடுங்கள்; இவையனைத்தும் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப்படும்'' (*மத் 6:33;காண். உரோ 8:32*) என்ற இயேசுவின் போதகத்தைச் செயல் முறையில் ரூத்து நூல் எடுத்துக்காட்டுகிறது.

இதுவே இன்றைய உலகிற்கு இந்நூல் அளிக்கும் போதகமாகும்.

**ரூபன்** (REUBEN - *பால், ஒரு மகன்*)

யாக்கோபின் `பன்னிரண்டு புதல்வர்களி லும், லேயாவின் நான்கு புதல்வர்களிலும் தலைப்பேறானவர் (*ஆதி 29:31-32; 49:3*). இவரது வழித்தோன்றல்கள் ரூபனியர்கள் என்றழைக்கப்பட்டனர்.

யோசேப்பு தன் சகோதரர்களால் கொல் லப்படுவதிலிருந்து ரூபன் காப்பாற்றினார் (*37:21-30; 42:22*). யோசேப்பின் சகோதரன் பென்யமினின் பாதுகாப்பான திரும்புத லுக்குப் பிணையாக ரூபன் தன் இருமக் களை அளித்தார் (*42:37*). இவர் தன் தந்தையின் வைப்பாட்டி பில்காவுடன் உட லுறவு கொண்டதால் தந்தையின் அன்பை இழந்தார் (*35:22; 49:4; 1 நாள் 5:1*). இச்செயல் தன் தந்தையின் அதிகாரத்தை

அபகரித்துக் கொள்ளுதலாகக் கருதப்பட்டது *(2 சாமு 3:7; 6:21-22).*

இவருக்குக் கனோக்கு, பல்லூ, கெசிரோன், கர்மி ஆகிய நான்கு புதல்வர்கள் இருந்தனர் *(ஆதி 46:9).* இவர்களின் சந்ததியினர் மற்ற இஸ்ராயேல் இனத்தவர் கானானைக் கைப்பற்ற உதவியபின், யோர்தானுக்கு அப்பாலுள்ள சமவெளியில் அர்னோன் ஆற்றுக்கு வடக்கிலும் காத்து கிலயாதுக்குத் தெற்கிலும் உள்ள பகுதியைத் தங்கள் பங்காகப் பெற்றனர் *(யோசு 13:15-23).* இந்த இனம் பெரும்பாலும் ஆயர் தொழிலை உடையது. தொடக்கத்திலிருந்து இந்த இனம் யோர்தான் ஆற்றால் பிற இனங்களிடமிருந்து பிரித்து வைக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. மற்ற இனத்தவரோடு போரில் பங்கெடுக்காததற்குத் தெபோராவின் பாடல் இவர்களைத் தூற்றுகிறது *(நீதி 5:15-16).* குடியேறிய பின் ரூபன், காத்து, மனாசே ஆகிய இனங்கள் தங்களுக்கென வழிபாட்டு மையங்களை அமைத்துக் கொண்டன. இது மற்றவர்களுக்குச் சினம் மூட்டியது. அதனால், இவை வெறும் நினைவுச் சின்னங்களாகக் கருதப்பட்டன. அதனால் போர் தவிர்க்கப்பட்டது *(யோசு 22).*

*1 நாள் 5:1-10*-ஐ அடிப்படையாகக் கொண்டு, மூன்றாம் திகிலத் - பில்னேசர் என்பவரால் இஸ்ராயேலர் நாடு கடத்தப்படும் வரை (கி.மு. 732) ரூபனியர்கள் தங்களுக்கே உரிய அடையாளம் கொண்டிருந்தனர் என்று அறிஞர் சிலர் கருதுகின்றார். வேறுசிலர் சவுல் காலத்திற்குள்ளே (கி.மு. 1020) ரூபனியர்கள் காத்து, கிலயாது இனத்தவரோடு ஒன்றிப்போய் விட்டனர் என்று கருதுகின்றனர்.

இந்த இனம் பெரியதன்று *(உப 33:6);* காத்து இனத்தோடு இணைத்தே எப்பொழுதும் குறிப்பிடப்படுகிறது *(எண் 32:6.33; 1 நாள் 26:32).* எண் *32:34-38*-இல் வரும் நகரங்களின் பட்டியல் ரூபனியர்களுக்குத் தெற்கிலும் வடக்கிலும் காத்து தன் நகர்களைக் கொண்டிருந்தது என்று சுட்டுகிறது. ரூபன் நகர்கள் நெபோ மலையைச் சுற்றிய சிறிய பகுதியிலேயே உள்ளன. இஃது ரூபனுக்குப் பங்கீடு செய்யப்பட்ட பகுதியைவிடக் குறுகியது. அரசர் சவுலுக்குப்பின் ரூபன் இனம் இஸ்ராயேல் வரலாற்றில் பங்கெடுப்பதாய்த் தெரியவில்லை. ஆயினும், தாவீதின் காலத்தில் நபர்கள் சிலர் ரூபியர் என்று குறிக்கப்படுகின்றனர் *(1 நாள் 11:42).* மோவாபியக் கல் மற்றும் தாவீதின் மக்கள் கணக்கெடுப்பு *(2 சாமு 24:-6)* ரூபனியர்களைக் குறிக்கவில்லை.

இறுதிக்காலத்தில் இஸ்ராயேல் மீண்டும் அமைக்கப்படுவதில் ரூபன் இடம் பெறுகிறது *(எசே 48:6.31; திருவெளி 7:5).* புதிய ஏற்பாட்டில் திருவெளிப்பாட்டில் மட்டும் யூதாவுக்கு அடுத்த இனமாக ரூபன் குறிக்கப்படுகிறது *(திருவெளி 7:5).*

**ரூபு** *(RUFUS)*

காண்க. உரூபு - II:*87.*

**ரூமா** *(RUMAH)*

காண்க. உரூமா - II:*88.*

**ரெகபெயாம், ரெகபயாம்** *(REHOBOAM)*

காண்க. இரகபெயாம் - I:*707.*

**ரெசேபு** *(REZEPH)*

காண்க. இரசேப்பு - I:*714.*

**ரெத்சின், ரெசின்** *(REZIN)*

காண்க. இரசீன் - I:*713.*

**ரெயுவேல்** *(REUEL)*

காண்க. இரகுவேல் - I:*708.*

**ரெய்ம்ஸ் மொழிபெயர்ப்பு ஏடு** *(RHEIMS VERSION)*

அதிகார பூர்வமான உரோமைக் கத்தோலிக்க ஆங்கில விவிலியத்தில் புதிய ஏற்பாட்டுப் பகுதியைக் குறிக்கும். இது தூவே (Douay version) மொழி பெயர்ப்பு ஏடு என்றும் வழங்கப்படுகிறது. கர்தினால் வில்லியம் ஆலன் என்பவர் தூவேயிலுள்ள திருச்சபைச் சட்டப் பேராசிரியர்களை, ஒரு மொழிபெயர்ப்பு ஏட்டைத் தயாரிக்கும்படி தூண்டினார் *(1578).* கிரகோரி மார்ட்டின்

என்பவர் மொழிபெயர்ப்பைச் செய்து முடித்தார் (1582). பிரான்சிலுள்ள, தூவே யில் ஆங்கிலக் கல்லூரியில் வேலை தொடங்கியது. ஆனால், அரசியல் நிலை மையின் காரணமாக இவ்வேலை ரெய்ம்ஸ் நகருக்கு மாற்றப்பட்டது. இங்கு புதிய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பு முடிவடைந் தது. எனவே, இந்தப் பகுதி ரெய்ம்ஸ் மொழிபெயர்ப்பு ஏடு என்று வழங்கலா யிற்று. இஃது அதிகாரபூர்வமான இலத்தீன் மொழி பெயர்ப்பின் (Vulgate) அடிப்படை யில் அமைந்தது.

**ரேசு** *(RESH)*

எபிரேய நெடுங்கணக்கில் இருபதாவது எழுத்து. அகரவரிசைச் சங்கீதம் 119-இல் இருபதாவது பிரிவு இவ்வெழுத்துடன் தொடங்குகிறது (119: 153).

**ரோககா** *(ROHGAH)*

காண்க. உரோக - II:88.

**ரோகலிம்** *(ROGELIM)*

காண்க. உரோகலிம் - II:88.

**ரோசு** *(ROSH)*

காண்க. உரோசு - II:88.

**ரோதா** *(RHODA)*

உரோதா - II:88.

**ரோதானியர்** *(RODANIM)*

காண்க. உரோதானிம் - II:88.

**ரோதே** *(RHODES)*

காண்க. உரோது - II:88.

**ரோதொக்கு** *(RHODOCUS)*

காண்க. உரோதொக்கு - II:89.

**ரோமமத் எசேர்** *(ROMAMTI EZER)*

காண்க. உரோமந்தி ஏசேர் - II:89.

# ல...லோ

**லக்கதேமோனியர், இலக்கதேமோனியர்** (LACEDAEMONIANS)

இவர்கள் தென் கிரீசில் லக்கோனியாவின் தலைநகரான லக்கதேமோன் அல்லது ஸ்பார்த்த என்றழைக்கப்பட்ட ஊரில் வாழ்ந்தவர்கள். இவர்களுக்கும் யூதர்களுக்கும் நல்லுறவு இருந்ததாகத் தெரிகிறது. பெரிய குரு யாசோன் இவர்களிடையே தஞ்சம் புகுந்தார் (*2 மக் 5:9*). யோனத்தான் இவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினார் (*1 மக் 12:6-18*).

**லபவோத்து, இலபவோத்து** (LEBAOTH)

காண்க. பெத்லபவோத்து - IV:717.

**லாசேயா, இலசயா** (LASEA)

காண்க. இலசயா - I:750.

**லாபான்** (LABAN - வெள்ளை) - ஆள்

**1. குடும்பமும் நாடும்:** காரானிலுள்ள லாபான் ஓர் அரமேயர் (*ஆதி 25:20; 28:5; 31:34*); பாதான் ஆராமில் வாழ்ந்தவர் (*29:4-5; 27:43*). லாபான் பெத்துவேலின் மகனும், ரபேக்காவின் சகோதரனும், நாகேரின் பேரனும் ஆவார் (*24:29; 28:5*); லேயா, ராகேல் ஆகியோரின் தந்தை ஆவார் (*29:16*); யாக்கோபின் தாய்மாமன்; இப்பகுதி சீரியா என்றும் அழைக்கப்பட்டது. இவர்கள் யூதர்களுடன் வம்ச வழித் தொடர்பு கொண்டிருந்தனர்.

**2. ஆபிரகாமின் வேலையாளும் லாபானும்:** ஆபிரகாம் தன் ஊழியனை, ஈசாக்குக்குப் பெண் பார்த்து வரும்படி அனுப்பியபோது, ரபேக்காவை ஈசாக்கின் மனைவியாக நிச்சயம் செய்யக் காரணமாக இருந்தவர் லாபான் ஆவார். லாபான் அறிந்து கொள்வதில் ஆர்வம் உள்ளவராகவும், விருந்தினரை உபசரிப்பதில் சிறந்தவராகவும் விளங்கினார் (*24:29.31-32*). லாபான் ஆபிரகாமின் ஊழியன் செயல்களில் இறைவனின் செயல்களைக் கண்டார் (*24:31. 50-51.60*). இச்செயல்களிலெல்லாம் தன்னலமே தலைதூக்கி நிற்கின்றது (*24:30*).

**3. லாபானும் யாக்கோபும்:** யாக்கோபு தன் சகோதரன் ஏசாவை ஏமாற்றிய பின் தன் மாமனிடம் ஓடிவிட்டான் (*ஆதி 27: 41-44 காண்க. 27: 46-28:5*). லாபானும் அவனை வரவேற்று அவனுக்குத் தன் மகளை அதாவது ராகேலை மணம் முடித்துக் கொடுப்பதாக ஒத்துக்கொண்டார். ஆனால், முதலில் யாக்கோபு லேயாவை அடையும்படி செய்து லாபான் அவனை ஏமாற்றிவிட்டார். பின்னரே, யாக்கோபு ராகேலை மணந்தான். யாக்கோபு தன் நாடு திரும்ப எண்ணிய போது லாபான் தன் மந்தைகளைச் சரிபாதியாகப் பங்கிட முன் வந்தார். ஆனாலும், லாபான் தன்னலத்தால் அவனை விட்டுப் பிரிய விரும்பவில்லை. ராகேல் வீட்டு விக்கிரகங்களைத் திருடிக் கொண்டு போய்விட்டதால், லாபான் அவர்களைப் பின்தொடர்ந்தார். யோர்தான் ஆற்றின் அக்கரையில் இருவரும் உடன்படிக்கை செய்து கொண்டனர்.

யாக்கோபு லேயாவையும், ராகேலையும் மணக்க 14 ஆண்டுகள் வேலை செய்த நிகழ்ச்சி நூலில் கிடைத்த ஓரியர் சாசனங்களால் நன்கு விளங்குகிறது. இச்சாசனத்தில் கூறப்படும் பழக்கத்தின்படி லாபான், யாக்கோபை அவனுக்கு வளர்ப்பு மகன் ஆக்கிக் கொண்டான். வளர்ப்பவருக்கு ஆண் குழந்தை பிறந்தால் ஒழிய, மருமகனுக்குச் சொத்தில் உரிமையும், குடும்பக் கடவுள்களின் சிலைகளுக்கும் குடும்பத்தலைமைக்கும் உரிமையும் உண்டு. ஆனால், லாபானுக்கு ஆண் குழந்தை பிறந்தது. ஆகவே, ராகேல் குடும்பக் கடவுளர்களை எடுத்துச் சென்றது சட்டப்படி குற்றமாகும். இவற்றில் எல்லாம், லாபான்-யாக்கோபு கதை (ஆதி 29-31) நூசி வழக்கை நன்கு பிரதிபலிக்கிறது. இந்நிகழ்ச்சியானது இஸ்ராயேல் மக்களால் சீரியர்களை வெல்ல முடியும் என்பதையும், முதலில் எதிரி வெற்றி பெற்றாலும் இறுதியில் தோல்வி அடைவான் என்பதையும் கூறுகின்றது.

இந்நிகழ்ச்சியில் ஆண்டவரின் உதவியால் தான் யாக்கோபு வெற்றி பெற்றான் என்ற எண்ணம் மேலோங்கி நிற்கின்றது *(ஆதி31:24.42).*

**லாபான்** (LABAN - வெள்ளை) - இடம்

*சீனாய்ப் பகுதியில் உள்ள லாபான் என்னும் இடம், மற்ற இடங்களான தோபேல், அட்சரோத்து, திசகாபு ஆகிய இடங்களுடன் சேர்த்துக் கூறப்படுகிறது (உப1:1). அட்சரோத்துக்குப் பிறகு பாளையம் இறங்கிய மூன்றாவது இடமான லிப்னாவும் லாபானும் ஒன்று என்று கருதப்படுகின்றது (எண் 33:20). ஆனால், இஃது இருந்த இடம் தெளிவாகத் தெரியவில்லை.*

**லாமேது** (LAMED)

இஃது, எபிரேய நெடுங்கணக்கில் பன்னிரண்டாவது எழுத்து. அகரவரிசைச் சங்கீதமான 119-இல் பன்னிரண்டாவது பிரிவுக்குத் தலைப்பாக உள்ளது (சங் 119:89). இதில் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்துடன் தொடங்கும்.

**லிக்கவோனியா** (LYCAONIA)

காண்க. இலிக்கவோனியா - I: 760.

**லிக்கி** (LIKI)

காண்க. இலிக்கி - I: 760.

**லிசானியா** (LYSANIAS)

காண்க. இலிசானியா - I: 761.

**லிசிமாக்கு** (LYSIMACHUS)

காண்க. இலிசிமாக்கு - I: 761.

**லிஸ்திரா** (LYSTRA)

காண்க. இலிசித்திரா - I: 761.

**லித்தா** (LYDDA)

காண்க. இலிதா - I: 761.

**லிபியா** (LIBYA)

கிழக்கே எகிப்து, சூடானும், மேற்கே துனிசியா, அல்ஜீரியாவும், தெற்கே மேற்கு ஆப்பிரிக்காவும் இருக்க, இதன் நடுவே வட ஆப்பிரிக்காவில் அமைந்த பரந்த பகுதியே 'லிபியா' ஆகும். இதன் பெரும் பகுதி பாலைப்பகுதியாகும்.

கி.மு. 3-ஆம் ஆயிரமாண்டிலிருந்து லிபியா மக்கள், அவ்வப்போது எகிப்தின் செல்வத்தின் மேல் ஆசை கொண்டு எகிப்தோடு போரிட்டனர். கி.மு. 950-இல் லிபியா அரசமரபு தொடங்கி 730-வரை நீடித்தது. இதன் அரசர்களில் ஒருவரான முதலாம் சிசாக்கு சாலமோனிடமிருந்து தப்பியோடிய எரொபவாமுக்குத் தஞ்சம் அளித்தார் (1 அர 11:40). பிற்காலத்தில் எருசலேமைத் தாக்கி, கப்பம் கோரினார் (14:25; 2 நாள் 12:2-9).

பழைய ஏற்பாட்டில் எகிப்தின் அண்டை நாடு என்று மட்டுமே லிபியா கூறப்படுகிறது. இதுவும் பிற்கால லிபியர்களைப் பற்றியே கூறுகிறது (எசே 30:5; தானி 11:43; நாகூ 3:9; எரே 46: 7-9). செரகு தலைமை தாங்கிய படையில் லிபியர்களும் இருந்திருக்கலாம் (2 நாள் 16:8). லிபியாவுக்கும், அதன் மொழித்திரிபான இலகாபிமுக்கும் இடையேயுள்ள உறவு பற்றி உறுதியாக ஒன்றும் கூற முடியாது (ஆதி 10:13).

உரோமைப் பேரரசில், லிபியாவின் வட பகுதி சீரேனே மாகாணமாக அமைந்து, அதன் நகரமான சீரேனேயால் அழைக்கப்பட்டது (அ.ப. 2:10). சீரேனே ஆட்சிமுறையில் கிரேத்துத் தீவோடு சேர்க்கப்பட்டது.

**லிப்னா** (LIBNAH)

காண்க. இலிபுனா - I: 762.

**லிப்னி** (LIBNI)

காண்க. இலிபுனி - I: 762.

**லிலித்து** (LILITH)

காண்க. இலிலித்து - I: 762.

**லிவியத்தான்** (LEVIATHAN)

காண்க. இலவியத்தான் - I: 755.

**லிக்கியா** (LYCIA)

காண்க. இலிக்கியா - I: 760.

**லிசியா** (LYSIAS)

காண்க. இலிசியா - I: 763.

**லீசியா கிளாதியு** (LYSIAS CLAUDIUS)

காண்க. இலீசியா கிளாதியு - I:763.

**லீதியா** (LYDIA ) - ஆள்

இவள் சிறிய ஆசியாவில் உள்ள தியத்திரா நகரைச் சேர்ந்த பெண். இவள் பிலிப்பியில் வாழ்ந்தாள். பவுல் பிலிப்பி நகரில் இவள்ளைச் சந்திக்கிறார். ''லீதியா நகரைச் சேர்ந்தவள்'' என்பதிலிருந்து இவளது பெயர் வந்திருக்கலாம். ஏனெனில், தியத்திரா லீதியா நகரங்களில் ஒன்று. இவளது பெயர் அ.ப. *16:14.40*-இல் மட்டுமே வருகிறது. இவள் ஒரு யூதப் பெண்ணாக இருக்கலாம். இரத்தாம்பரம் விற்பதே இவளது தொழில். ஏனெனில், மற்ற லீதிய நகரங்களைப் போலவே தியத்திராவும் இதற்குப் பெயர்போனது. எனவே, அவள் ஓரளவு பணமுள்ளவளாகவே இருக்க வேண்டும்.

பவுலின் போதனையைக் கேட்டு அவளும், அவள் குடும்பத்தினரும் மனந்திரும்பி, திருமுழுக்குப் பெற்றனர். மேலும், அவள் அப்போஸ்தலர்களைத் தம் வீட்டில் தங்குமாறு வற்புறுத்தி விருந்தோம்பினாள். பவுலுக்கு மிகவும் பிடித்த திருச்சபை பிலிப்பி திருச்சபையாகியது. மேலும், மற்ற எந்தத் திருச்சபையிடமிருந்தும் உதவியும் நன்கொடைகளும் பெறாத பவுல் பிலிப்பி திருச்சபையிடமிருந்து மட்டும் இவற்றையெல்லாம் பெற்றுக் கொள்கிறார் (பிலி *4:15*). பிலிப்பி திருச்சபைக்கும் பவுலுக்குமிடையே இருந்த நெருங்கிய உறவுக்கு (பிலி *1:38; 2:12.15-16; 4:1.15.16.18*) லீதியாவின் விருந்தோம்பும் பண்பு முக்கிய காரணமாக இருந்திருக்க வேண்டும்.

**லீதியா** (LYDIA) - இடம்

காண்க. இலீதியா - I:763.

**லீலி, அல்லி** (LILY )

லீலி என்று மொழி பெயர்க்கப்படும் எபிரேயச்சொல் தெளிவில்லாமல் இருக்கிறது. இது தாமரையையும், அல்லியையும் குறிக்கக்கூடும். பாலஸ்தீனத்தில் இயற்கையாக வளரும் லீலி வெள்ளைப் பூவைக் கொண்ட காட்டுச் செடியாகும். இது, லீலியைப் பற்றிய விவரிப்புகளோடு ஒத்துப்போகவில்லை. ஆனால், லீலி என்பது, மேற்காசியா முழுவதிலும் திறந்த வயல்களிலும், மலைகளிலும் காணப்படும் செங்கறுப்பு, ஊதா அல்லது வெள்ளைப் பூக்களை உடைய செடியாக இருக்கலாம்.

உன்னத சங்கீதத்தில் வரும் லீலியும் (உ.ச. *2:1-2*), லீலிகளுக்கு நடுவில் மேயும் மான்குட்டிகளும் (*4:5*), இளம் பெண்ணின் அழகின் உருவகங்களாகும். பல மலர்ச் செடிகளின் பிரகாசமான சிவப்பு நிறத்தை மனதில் கொண்டு, காதலி தன் காதலனின் ''இதழ்கள் லீலி மலர்கள்'' என்கிறாள் (*5:13*). ''லீலிகள் நடுவில் மேய்கிறார்'' (*2:16; 6:3*), ''லீலி மலர்களைக் கொய்தல்'' (*6:2*) ஆகியவை சிற்றின்ப அன்பைக் குறிக்கும் உருவகங்களாகும். பலனுடைமையைக் குறிக்கவும் லீலி உருவகமாகப் பயன்படுகிறது (*7:3*).

சாலமோன் ஆலயத்தில் இருந்த இரு தூண்களின் உச்சியிலிருந்த போதிகைகள் (1 அர *7:19.22*), வார்ப்புக் கடலின் விளிம்பு (*7:26*; 2 நாள் *4:5*) ஆகியவற்றின் விவரிப்பில் லீலிமலர் இடம் பெறுகிறது. இந்த வாசகங்களில் இஃது அல்லி என்று குறிக்கப்படுகிறது. சங் *45; 69; 80*-இன் தலைப்பில் வரும் ''லீலிமலர்'' பலரும் அறிந்த ஒரு மெட்டைக் குறிக்கலாம். சங் *80*-இன் தலைப்பில் வரும் ''சான்று பகர் லீலிமலர்'' மற்றொரு மெட்டைக் குறிக்கலாம். இயேசுவின் உவமைகளில் ''வயல் வெளியின் லீலிமலர்கள்'' (காட்டு மலர்கள்) இடம் பெறுகின்றன. அவை இறைவன் காட்டும் அக்கறையின் அபரிமிதத்தைச் சுட்டுகின்றன (மத் *6:28-29*-இணை).

**லீலிமலர் வேலைப்பாடு** (LILY WORK)

சாலமோன் ஆலய நுழை வாயில் தூண்களின் போதிகைகளில் லீலி மலர்களின் வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இந்தப் போதிகைகளுக்குச் சற்றுக் கீழேயுள்ள பகுதியிலும் இதே மாதிரியான

அமைப்பு அமைக்கப்பட்டிருந்தது. *1 அர 7:26*-இல் விவரிக்கப்பட்டிருப்பது போல, வார்ப்புக்கடலின் விளிம்புகளில் செய்யப் பட்ட லீலிமலர்களின் வடிவமைப்புகள் மிக அழகானதாகவும், கம்பீரமானதாகவும் அமைந்தன. மெசிதோவில் கண்டெடுக்கப் பட்ட இரண்டு தூபப்பீடங்களில் செய்யப் பட்ட அலங்கார அமைப்பு கூட லீலி மலர் அமைப்பின் தன்மையைக் கொண்டதுதான்.

முதலாவது பீடம் மண்ணால் செய்யப் பட்டது. இதன் விளிம்புகளில் இரண்டு வரிசையாக அழகான இலை வடிவங்கள் செய்யப்பட்டுள்ளன. இரண்டாவது பீடமா னது சற்றுப் பெரிய அளவினையுடையது. இதில் தாமரை மொட்டுக்கள், மற்றும் விரிந்த மலர்கள் போன்ற கலை அமைப்பு கள் கொடுக்கப்பட்டிருந்தன. இந்தத் தூபப் பீடங்கள், தூண்களைப் போன்ற அமைப் பினைக் கொண்டதாக இருந்ததால் இவற் றில் செய்யப்பட்டிருந்த கலை அமைப்பு களை லீலி மலர் வேலைப்பாடாக ஏற்றுக் கொள்கின்றோம் *(1 அர 7:19.22.26)*.

**லீனு** (LINUS)

காண்க. இலினு - I:*763*.

**லூகித்து** (LUHITH)

காண்க. உலூகித்து - II:*113*.

**லூக்கா** (LUKE )

லூக்கா, பவுலின் உடன் உழைப்பாளரும் பயணத் தோழரும் ஆவார்; மூன்றாம் நற்செய்தி, அப்போஸ்தலர் பணி ஆகிய நூல்களின் ஆசிரியராகக் கருதப்படுகிறார்.

லூக்கா என்ற பெயர் லூக்கியு என்ற இலத்தீன் பெயரின் கிரேக்க வடிவத்திலி ருந்தோ, லூக்கானு என்ற இலத்தீன் பெயரி லிருந்தோ வந்திருக்க வேண்டும். புதிய ஏற்பாட்டில் லூக்கா என்ற சொல் மூன்று இடங்களிலும் *(கொலோ 4:14; 2 திமொ 4:11; பில 24)*, லூக்கியு என்ற சொல் இரு இடங்களிலும் *(அ.ப. 13:1; உரோ 16:21)* வருகின்றன. முதல் மூன்று குறிப்புகளிலி ருந்து, லூக்கா பவுலின் ''அன்பு மிக்க மருத்துவர்'' என்றும், ''உடன் ஊழியர்'' என்றும், லூக்கா மட்டும் பவுலோடு இருப்பதாகவும் அறிகிறோம்.

அப்போஸ்தலர் பணியின் ஆசிரியர் லூக் காதான் என்றால் அவரைப் பற்றி நாம் பல விவரங்களை அறியலாம். மறைமுக மாக, ஆனால், இயல்பாக, ஆசிரியர் தம்மையே தமது நூலில் அறிமுகம் செய்து கொள்கிறார். அப்போஸ்தலர் பணியில் காணப்படும் ''நாங்கள்....'' என்ற பகுதி களிலிருந்தும் மேற்கூறிய பவுலின் குறிப்பு களிலிருந்தும் லூக்காவைப் பற்றியும் அவ ரது வேத போதகப் பயணம், அலுவல் பற்றியும் கீழ்க்கண்டவைகளை நாம் அறிய லாம்.

லூக்கா, சீரியாவைச் சார்ந்த அந்தியோக்கி யாவில் கிரேக்கப் பெற்றோருக்குப் பிறந்த வர் *(கொலோ 4:10-14)*. இவர் தீத்துவின் சகோதரராக இருக்கலாம் *(2 கொரி 8:16-18; 12:18)*. இது, பவுலின் திருமுகங்களில் தீத்து முக்கியத்துவம் பெற்றிருந்தாலும், எருசலே முக்குப் பவுலோடு கூடச் சென்றவர்களில் அவரும் சேர்க்கப்பட்டிருந்தாலும், அப் போஸ்தலப் பணியில் *(அ.ப. 20:4*-இல் கூட) குறிக்கப் படாமையை விளக்கலாம். ஏறக்குறைய கி.பி. 50-இல் துரோவாவில் பவுலை அவரது இரண்டாம் வேதபோதகப் பயணத்தின்போது லூக்கா சந்திக்கிறார் *(அ.ப. 16:10)*. அவர் ஆரம்பகாலத்தில் மனந்திரும்பிய புறவினத்தார்களில் ஒருவ ராக இருந்திருக்க வேண்டும் *(11:19-21)*. பவுலோடும், சீலாவோடும் மாசிதோனியா விலுள்ள பிலிப்பிக்கு அவர் செல்கிறார் *(16:10-17)*. லூக்கா அங்கேயே தங்கியிருந்த தாகத் தெரிகிறது. ஏனெனில், அடுத்து வரும் ''நாங்கள்....'' என்ற பகுதி பவுலின் மூன்றாவது வேதபோதகப் பயணத்தில்தான் காணப்படுகிறது. ஏறக்குறைய ஆறு ஆண்டு களுக்குப் பிறகு, பவுல் தனது மூன்றாம் வேதபோதகப் பயணத்தில் பிலிப்பிக்கு வந்தபோது, அவரோடு சேர்ந்து லூக்கா மிலேத்து, செசரியா வழியாக எருசலே முக்குச் செல்கிறார் *(20:5-15; 21:1-18)*. அதன்பின், பவுல் கைது செய்யப்பட்டு இரு வருடங்கள் செசரியாவில் சிறையிருந்தார்.

இது, தன் நற்செய்திக்கும், அப்போஸ்தலப் பணிக்கும் வேண்டிய வாய்மொழி மூலங்களையும், எழுத்து மூலங்களையும் தேடி ஆராய, லூக்காவுக்கு வாய்ப்பளித்தது எனலாம். இறுதியாக லூக்கா பவுலோடு உரோமைக்குச் செல்கிறார் *(27:1-28:6)*. அங்குப் பவுல் வீட்டுக்கைதியாக இருந்த போது அவரோடு இருக்கிறார் (கொலோ *4:14*; பில *24*). அங்கு மாற்கை நேரடியாகச் சந்தித்திருக்கலாம்.

லூக்கா மணமாகாதவர். அவர் அக்காய என்ற பகுதியில் தன் நற்செய்தியை எழுதியதாகவும், போயேத்தியாவில் அல்லது பித்தினியாவில் தன் 74-ஆம் வயதில், பரிசுத்த ஆவியால் நிரம்பப் பெற்றவராய் மரித்தார் என்றும் மார்சியனுக்கு எதிராக எழுதப்பட்ட முன்னுரை கூறுகிறது. புனித எரோனிமுவும் இதையே கூறுகிறார். இதற்கு மேல் லூக்காவைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. திருச்சபை அவரை ஒரு முறை சாட்சியாக அறிவித்துப் போற்றுகிறது. அவரது திருநாளை அக்டோபர் 18-ஆம் நாள் கொண்டாடுகிறது.

பவுல் லூக்காவை, ''அன்புமிக்க மருத்துவர்'' (கொலோ *4:14*) என்று குறிப்பிடுவதை வைத்துக்கொண்டு, அவர் ஒரு மருத்துவர் என்று காட்டப் பலர் முயன்றுள்ளனர். மூன்றாவது நற்செய்தியிலும், அப்போஸ்தலர் பணியிலும் மருத்துவம் பற்றிய கலைச்சொற்களும், நோய்கள் பற்றிய தெளிவான குறிப்புகளும் சிறப்பான முறையில் காணப்படுவதாகக் காட்ட முயன்றுள்ளனர் (லூக் *4:38; 5:12; 6:18; 8:42; 13:11;* அ.ப. *3:7; 9:3; 28:7-10*). ஆனால், இந்நூலில் காணப்படும் மருத்துவ அறிவு அக்காலத்தில் வாழ்ந்த கல்வியறிவுடையோர் எவரும் அறிந்திருக்கக்கூடிய பொது அறிவேயன்றி நுணுக்கமான அறிவன்று என்று உறுதியாக நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆனால், இந்நூல்களிலே லூக்காவின் மனிதப்பண்பும் இரக்கச் செறிவும் தெளிவாகக் காணப்படுகின்றன.

ஆறாவது நூற்றாண்டிலிருந்து வரும் பாரம்பரியம் லூக்கா ஓர் ஓவியர் என்று குறிப்பிடுகிறது. இக்குறிப்பின் உண்மைத் தன்மை எத்தன்மைத்தாயினும், அவர் தூரிகையைப் பயன்படுத்திய கலைஞனாயிருந்திராவிடினும் சொற்களைப் பயன்படுத்துவதில் ஒரு கலைஞன், மொழிவல்லாளர் என்பது மட்டும் மறுக்க முடியாதது. அவருடைய நூல்களிலே உயர்ந்த நடையும், சொல் நயமும் உண்டு.

அந்தியோக்கியாவைச் சேர்ந்த போதகர்கள், இறைவாக்கினர்கள் ஆகியோருள் ஒருவரான சீரோனைச் சேர்ந்த லூக்கியாதான் லூக்காவாக இருக்கக்கூடும் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர் (அ.ப. *13:1*).

லூக்காவின் ஆட்தன்மை மற்றும் இறையியல் பற்றி அவருடைய நூல்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அவர் இஸ்ராயேல் எல்லையைக் கடந்து புறவின உலகில் நற்செய்தி பரப்புவதில் மிகவும் அக்கறை காட்டுகிறார் (லூக் *2:32; 4:25-27;* அ.ப. *11:18*). இயேசுவினுடைய பணி எருசலேமை மையமாகக் கொண்டது (லூக் *9:51; 13:33*). ஆனால், திருச்சபையின் பணி எருசலேமிலிருந்து உலகம் முழுவதும் பரவுகிறது (*24:47;* அ.ப. *1:8*). லூக்கா பாவிகளின் மனந்திரும்புதலில் (லூக் *5:8; 7:37-48;13:1-5; 18:13-14*), சமாரியர்களில் (*9:51-56; 10:29-37.* அ.ப. *8:5-25*) சிறப்பான அக்கறை காட்டுகிறார். மற்ற நற்செய்தியாளர்களைவிட, இவர் பெண்களை உள்ளிட்ட தாழ்த்தப்பட்டோரிடம் பெரிதும் அக்கறை காட்டுகிறார் (லூக் *1:25.26; 2:36-38.51; 7:12-15.37-38; 8:2-3; 10:38-42*). இவர், பரிசுத்த ஆவியின் வருகை, கொடை, நிறைவு மற்றும் மகிழ்ச்சியில் குறிப்பிடும் விதத்தில் அக்கறை காட்டுகிறார் (*4:1.14; 11:13;* அ.ப. *2:11-21; 4:8.31; 8:15-19*). பொருளாதாரத் துறத்தல், பகிர்ந்து கொள்ளுதல் உள்ளடங்கிய சீடராவதற்காகக் கடுமையான கோரிக்கைகளை அழுத்திக் கூறுகிறார் (லூக் *6:34-35; 12:13-21;14:7-14.25-26; 16:10-13; 17:7-10;* அ.ப. *2:44-45; 4:32-5:10*).

**லூக்கா எழுதிய நற்செய்தி** (LUKE, GOSPEL OF)

***1. முன்னுரை:*** இயேசு மரித்து உயிர்த்து விண்ணெழுந்தபின், ஏறக்குறைய இருபது இருபத்தைந்து ஆண்டுகள் கடந்து விட்டன. எதிர்ப்புகளுக்கிடையிலும் பல இன்னல்களுக்கிடையிலும் இயேசு போதித்த நற்செய்தி மக்களிடையே நாளடைவில் பரவுகிறது. இயேசுவின் சீடர்கள் யூதர்களிடையே முதலில் போதித்தனர். அவர்களுக்கென இயேசுவைப் பற்றிய நூல்களை எழுதினர். பரிசுத்த ஆவியரால் ஒளியும் பலமும் பெற்றுச் சீடர்கள் தங்களது வேத போதக அலுவலைப் புறவினத்தவரிடையும் நடத்துகின்றனர். பலர் கிறிஸ்துவின் நற்செய்தியைக் கேட்டு, அவரைப் பின்பற்றுகின்றனர். அப்படிப்பட்டவர்களில் ஒருவர் இளம் வயதிலேயே கிறிஸ்துவை ஏற்று விசுவசிக்கிறார். ஏறத்தாழ கி.பி. 50-இல் புறவினத்தாரது அப்போஸ்தலரான புனித பவுலைச் சந்தித்து, அவரது வேதபோதக அலுவலில் பங்கு கொள்ளுகிறார். அவரோடு நெருங்கி வாழ்கிறார்.

இயேசுவைப் பற்றிய இவர் கண்ட நூல்கள் யாவும், ஒரு சிலவற்றைத் தவிர, யூதர்களால் யூதர்களுக்காக எழுதப்பட்டிருந்தன. அந்நூல்கள் இயேசு யூதர்களுக்கு மட்டும்தான் மீட்பர் என்ற குறுகிய நோக்குடையன. அவற்றின் நடையும் நயம் குன்றிய நடை. பவுல் போதித்த பொதுமையை, அதாவது கிறிஸ்து யாவருக்கும் மீட்பர் என்ற கருத்தை, அடிப்படையாகக் கொண்டு புற இனத்தாருக்கென இயேசுவைப் பற்றிய ஒரு நூல் எழுத ஆசிக்கிறார் மேற்கூறிய அன்பர். இயேசுவைப் பற்றி அப்போதுள்ள நூல்களை ஆராய்கிறார். தாம் வாசித்தவற்றையும், கேட்டவைகளையும் பவுலின் போதகத்தையும் கொண்டு, உயரிய நடையிலே, இயேசுவைப் பற்றி அரியதொரு நூல் எழுதுகிறார். அம்முயற்சியின் விளைவே நாம் கொண்டிருக்கும் நற்செய்தியின் மூன்றாவது வடிவமான லூக்கா எழுதிய இயேசு கிறிஸ்துவின் பரிசுத்த நற்செய்தி.

***2. புறச்சான்றுகள்:*** மூன்றாவது நற்செய்தியை லூக்காதான் எழுதினார் என்று பாரம்பரியம் தயக்கமின்றிச் சான்று கூறுகிறது. இதற்கு கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சான்றுகள் பலவுள. ''பவுலின் தோழரான லூக்கா பவுலின் நற்செய்தியை ஒரு நூலாக எழுதினார்'', என்று இரனேயு கூறுகிறார். இதே விதத்தில், மார்சியனுக்கு எதிராக எழுதப்பட்ட முன்னுரைகளும், மூராத்தோரியின் பட்டியலும் சான்று கூறுகின்றன.

***மூராத்தோரியின் பட்டியல்:*** மிலானிலுள்ள அம்புரோசியார் நூல் நிலையத்தில் 1740-இல் மூராத்தோரி என்பவர் புதிய ஏற்பாடு பற்றிய பல பழைய ஏடுகளைக் கண்டெடுத்தார். இவற்றை யார் எழுதினார் என்று கூறுவதற்கில்லை. ஆகையால் கண்டெடுத்தவர் பெயராலேயே இவ்வேடுகள் அழைக்கப்பட்டன. இவ்வேடுகள் கி.பி. 2-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுதப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகின்றன. இவற்றில் புதிய ஏற்பாட்டின் சில பகுதிகளும் பட்டியலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தெர்த்துல்லியன், அலக்சாந்திரியா கிளமந்து, ஓரிசன், யூசேபியு போன்றோரும், விவிலிய அறிஞர் புனித எரோனிமுவும் இவ்விதமே சான்று பகர்கின்றனர். இவற்றை ஆராயுங்கால் கீழ்க்கண்டவை புலனாகின்றன: நற்செய்தியின் மூன்றாவது வடிவத்தை எழுதியவர் லூக்கா என்பவர். அவர் பவுலின் சீடனும், தோழனும் ஆவார். அவர் ஒரு மருத்துவர்; புற இனத்தாருக்கென இந்நூலை எழுதினார். இப்பாரம்பரியச் சான்றை இக்கால விவிலிய அறிஞர்கள் ஏற்றுக்கொள்வர். லூக்காதான் அப்போஸ்தலர் பணியையும் எழுதினார் என்பது யாவரும் ஏற்றுக்கொள்ளும் உண்மையாகும்.

***3. ஆசிரியர்:*** காண்க.லூக்கா.

***4. காலம்:*** மற்ற நற்செய்திகளைப்போல், இந்நூல் எங்கே, எப்போது எழுதப்பெற்றது என்று உறுதியாகக் கூறும் பாரம்பரியம் இல்லை. காலத்தைப் பற்றி இருவகைக்

கூற்றுக்கள் உள்ளன. ஒரு சாரார் கி.பி. 60-62-க்கு இடைப்பட்ட காலத்தில் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பர். காரணம்: தமது மற்றொரு நூலாகிய அப்போஸ்தலர் பணியில் பவுலின் உரோமைச் சிறைவாசத்தைக் கூறிவிட்டு அதன் முடிவைக் கூறாது தமது நூலை முடிக்கிறார் ஆசிரியர். இச்சிறைவாசம் ஏறத்தாழ கி.பி. 63-இல் நிகழ்ந்தது. ஆகையால், அப்போஸ்தலர் பணி கி.பி. 63-க்கு முன் எழுதப்பட்டிருக்க வேண்டும். ஆனால், நற்செய்தியோ, அப்போஸ்தலர் பணிக்கு முந்தியது. ஆகையால், நற்செய்தி கி.பி. 60-62-க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

இக்காரணம் எதையும் நிரூபிக்கவில்லை. லூக்காவின் நோக்கத்தை ஆராயும்போது, அப்போஸ்தலர் பணியின் முடிவு ஆசிரியர் விரும்பிய ஒன்றாகத் தெரிகிறது. அவரது நோக்கம், ''பரிசுத்த ஆவியார் உங்கள்மேல் வரும்போது அவரது வல்லமையைப் பெற்று எருசலேமிலும், யூதேயா, சமாரியா முழுவதிலும் மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே நீங்கள் என் சாட்சிகளாயிருப்பீர்கள்'' *(அ.ப. 1:8)*, என்ற இயேசுவின் இவ்வார்த்தைகளில் காணப்படும் திட்டத்தைப் பின்பற்றித் தமது நூலை எழுதலாகும். அப்போஸ்தலர் பணியில் எருசலேமிலிருந்து தொடங்கி, எவ்விதம் விசுவாசம் உலகெங்கும் பரவுகிறது என்று காட்டிப் புறவினத்தவரது அப்போஸ்தலரை, அக்காலத்து உலகின் மையமாகிய உரோமைப் பேரரசின் தலைநகரில் போதிப்பதாகக் காட்டுவதுடன் தமது நூலை ஆசிரியர் முடிக்கிறார். அப்போஸ்தலர் கைதியானாலும் ''தம்மைக் காண வந்தோரை உபசரித்து, மிக்க துணிவோடு, தடையெதுவுமின்றி அவர்களுக்குக் கடவுளின் அரசைப் பற்றிய செய்தியை அறிவித்து, ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றிய உண்மைகளைப் போதித்து வந்தார்'' *(அ.ப. 28:31)*. மேலும், ''ஈராண்டுகள்'' என்ற சொற்றொடர் உரோமைச் சட்டக்கலைச் சொல்லாகும். குற்றம் நிரூபிக்கப்படாவிட்டால், இருவருட முடிவில் விடுதலை அடையக் குற்றம் சாட்டப்பட்டவர் கொண்டிருந்த உரிமையை இச்சொற்றொடர் குறிக்கிறது. ஆகையால், அப்போஸ்தலர் பணியின் முடிவு திடீரென்று முடிவதில்லை. ஆசிரியர் வேண்டுமென்றே இவ்விதம் முடிக்கிறார். கிறிஸ்தவ மறையின் வெற்றியையும் முன்னேற்றத்தையும் காட்டி முடிக்கும் தன்மையே அவரது இலக்கியக் கலைத் திறனைக் காட்டுகிறது. ஆகையால், அப்போஸ்தலர் பணி கி.பி. 63-இல் எழுதப்பட்டது என்றும், மூன்றாம் நற்செய்தி கி.பி. 60-62-க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று கூறுவதற்குப் போதிய காரணங்கள் இல்லை என்றும் கூறலாம்.

மேலும், நாம் மாற்கின் நற்செய்தி கி.பி. 60-65-க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது என்று ஏற்றுக்கொண்டால், லூக்காவின் நற்செய்தி 65-க்கு முன் எழுதப்பட்டிருக்க முடியாது. ஏனெனில், லூக்கா மாற்கின் நூலைப் பயன்படுத்தியுள்ளார். ஆகையால், கத்தோலிக்க விவிலிய அறிஞர்களில் பலர் கி.பி. 65-70-க்கு இடைப்பட்ட காலத்தில் லூக்காவின் நற்செய்தி எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பர். கத்தோலிக்க அறிஞரில் சிலரும், பிரிவினைச்சபை அறிஞரில் பலரும், கி.பி. 70-80-க்கு இடைப்பட்ட காலத்தில் லூக்காவின் நற்செய்தி எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பர். இஃது இரண்டாவது கூற்று. இதற்குக் காரணம், எருசலேமின் அழிவைப் பற்றிய முன்னறிவிப்பு மிக விரிவாக உள்ளது என்பதாகும் *(லூக் 19:43 தொ; 21:20-24; 23:28-30)*. மாற்கும் மத்தேயுவும் ''பாழாக்கும் அருவருப்பு'' என்று குறிப்பிடுவதை *(மத் 24:15;மாற் 13:14)*, லூக்கா ''எருசலேமைப் படைகள் முற்றுகையிடக் காணும் போது'' *(லூக் 21:20)* என்ற சொற்களால் குறிக்கிறார். மேலும், எருசலேம் மக்கள் ''வாள் முனையில் மடிவார்கள்; புற நாடுகளுக்கெல்லாம் அடிமைகளாகக் கொண்டு செல்லப்படுவார்கள்; புறவினத்தாரின் காலம் நிறைவேறும் மட்டும்

எருசலேம் புறவினத்தாரால் மிதிபடும்'' *(21:24)* என்று கூறுகிறார். இவ்விதம் பின் நடந்ததை முன்னறிவிப்பாக விரிவாகக் கூறுகிறார் ஆசிரியர். ஆகையால், எருசலே மின் அழிவுக்குப்பின், அதாவது கி.பி. 70-க்குப் பின்தான் இந்நூல் எழுதப்பட்டி ருக்க முடியும் என்பர். இக்காரணமும் குறையற்றதன்று. ஏனெனில், மேற்கூறிய விவரிப்புகளும் சொற்றொடர்களும் பழைய ஏற்பாட்டில் காணப்படுபவை (உப *28:45;* ஓசே *9:7;* செக் *12:3*), அவற்றை லூக்கா பயன்படுத்தியிருக்கலாம்.

ஒருவேளை கி.பி. 70-ஐ மிகவும் அடுத்து இந்நூல் எழுதப்பட்டிருக்கலாம். கி.பி. 60-62-க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப் பட்டிருந்தால் இந்நூல் உரோமையில் எழு தப்பட்டிருக்க வேண்டும். கி.பி. 70-க்குப் பின் எழுதப்பட்டிருந்தால் கிரேக்க நாட்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும். ஆனால், எப்போது, எங்கே எழுதப்பட்டது போன்ற பிரச்சனைகள் முக்கியம் வாய்ந்தவையல்ல. நமது விசுவாசத்தையோ, ஒழுக்க முறை யையோ, நேரடியாகவோ, மறை முகமாகவோ இப்பிரச்சனைகள் பாதிப் பதில்லை; பாதிக்கவும் முடியாது. எனவே, இவைகளுக்கு அவசியமின்றி முக்கியத் துவம் அளிக்கக் கூடாது.

**5. யாருக்காக?:** இந்நூலை மற்ற ஒத்தமை நற்செய்திகளுடன் ஒப்பிட்டுச் சிறிது கவனத் துடன் படித்தால் யூதர்களுக்கு மட்டும் உரிய பிரச்சனைகள் விடப்பட்டுள்ளன என்பதும், புறவினத்தவர்களுக்குச் சிறப் பாக உரியவை வலியுறுத்திக் கூறப்பட்டுள் ளன என்பதும் விளங்கும். சான்றாக, யூதர்களது பாரம்பரியம் (மத் *15:1-20;* மாற் *7:1-23*), எலியா மீண்டும் வருதல் (மாற் *9:11-13*), எதிர்நிலைகள் (மத் *5:21-37*) என்பவை யூதர்களுக்கே உரியவை. இவை லூக்கா நற்செய்தியில் இடம் பெறவில்லை. பின்வரும் சொற்களை லூக்கா ஒருபோதும் பயன்படுத்துவதில்லை. ''அப்பா'' (மாற் *14:36* = லூக் *22:42*); 'பொவனேர்கேசு'' (இடியின் மக்கள்) (மாற் *3:17* = லூக் *9:54*); ''எப்பத்தா'' (திறக்கப்படு) (மாற்கு *7:34*); ஓசன்னா (மாற் *11:9;* மத் *21:9;* யோவா *12:13* = லூக் *19:38*). எபிரேயச்சொற்களுக்குப் பதிலாக அச்சொற்களின் பொருள் பொதிந்த கிரேக்கச் சொற்களைப் பயன்படுத்துகிறார். சில இடங்களில் வேண்டுமென்றே சில பகுதிகளை விட்டு விடுகிறார் அல்லது திருத்தி அமைத்துத் தருகிறார். சான்றாக, மத் *5:38-48* என்ற பகுதியை லூக் *6:27-36* என்ற பகுதியோடும், மத் *7:24-27* என்ற பகுதியை லூக் *6:47-49* என்ற பகுதியோடும் ஒப்பிட்டு நோக்குக. புறவினத்தவருக்கு அதிர்ச்சியைத் தரக்கூடியவற்றை வெகு கவனமாய்ச் சிறிது மாற்றிக் கூறுகிறார் (மாற் *3:5* = லூக் *6:10;* மாற்கு *11:15-17* = லூக் *19:45* தொ; மாற் *14:32-42* = லூக் *22:39,46;* மாற் *6:5* தொ = லூக் *4:25-30;* மாற் *1:34* = லூக் *4:40;* மாற்கு *1:45* = லூக் *5:15* தொ). புறவினக் கிறிஸ்தவர் களுக்குப் பெருமை தராதவைகளை விட்டு விடுகிறார் அல்லது மாற்றிக் கூறுகிறார்.

புறவினத்தவர்க்குச் சிறப்புத் தருபவை களை விரித்துப் பெரிதுபடுத்திக் கூறுகிறார் லூக்கா (லூக் *7:1-10* = மத் *8:5-13*). இதே போக்கை அப்போஸ்தலர் பணியிலும் காணலாம். அங்கே உரோமை வீரர்கள் பவுலை அன்புடன் நடத்தியதாக வாசிக்கி றோம் (அ.ப. *21:31* தொ; *22:29; 27:3*). மத்தேயுவோடு ஒப்பிடும்போது, லூக்கா குறைவாகவே பழைய ஏற்பாட்டு எடுத்துக் காட்டுகளைக் கொடுக்கிறார். லூக்காவுக்கு இயேசுவே இறைவாக்குரைஞர் (*4:24; 7:16-39; 9:19*). புறவினத்தவர்க்கு அனுப்பப் பட்ட இறைவாக்குரைஞர் எலியாவைப் போன்று கிறிஸ்து தோன்றுகிறார். ஆயி னும், லூக்காவில் இயேசு புறவினத்தார்க்கு ஒருபோதும் போதிக்கவில்லை. எலியா வோடு இயேசுவை லூக்கா ஒப்பிடுதலை நன்குணர, பின் வருவனவற்றை மனதில் கொள்ள வேண்டும். லூக்கா, நற்செய்தியில் வரும் கிறிஸ்துவின் திருப்பணியையும், அப்போஸ்தலர் பணியில் வரும் திருச்சபை யின் திருப்பணியையும் இணைவுபடுத்திக் காட்டுகிறார்: ஆவியரால் திருமுழுக்கு (லூக் *3:21* தொ = அ.ப. *2:1* தொ),

ஆவியரைப் பற்றிய போதகம் (லூக் 4:16-19 = அ.ப. 2:17); இயேசுவை மக்கள் ஏற்க மறுத்தல் (லூக் 4:29 = அ.ப. 7:58; 13:50); மக்கள் கூட்டத்தைக் குணப்படுத்துதல் (லூக் 4:40 தொ = அ.ப. 2:43; 5:16); மகிமைப்படுத்தப்படுதல் (லூக் 9:28-36 = அ.ப. 1:9-11). புறவினத்தவர்க்குப் பயன் படாத பழைய ஏற்பாட்டு எடுத்துக்காட்டு களை விட்டு விடுவதோடல்லாமல் இயேசு வின் இறைவாக்குத் திருப்பணியில் கவனம் செலுத்துகிறார். இது புறவினத்தவரிடையே நிகழும் திருச்சபையின் திருப்பணியில் நிறைவெய்துகிறது.

அப்போஸ்தலர்கள் காலத்துத் திருச்சபை இயேசுவையும், யூதத்துவத்தையும் இணைத்தே கருதியது. ஆனால், லூக்காவும் அவரது வாசகர்களும் யூதச் சட்டத்திலிருந்து விடுதலை பெற்றவர்கள் அல்லவா! ஆகை யால், மற்ற நற்செய்திகளில் காணப்படுவது போன்று யூதச் சட்டத்தையும் நற்செய்திைய யும் பொருத்திக் காட்ட வேண்டிய பிரச் சனையே எழவில்லை. லூக்காவின் நற்செய் தியிலும் நாம் காணும் இயேசு யூதர்களின் மெசியாவானாலும் அவர் உலக மீட்பர் ஆவார். லூக்காவின் சிறப்பான நோக்கம் இயேசுவையும் அவரது போதனைகளை யும் கவர்ச்சிகரமாய்ப் புறவினத்தவர்க்கு அளித்தலாகும். அதற்கு இடையூறான யாவற்றையும் தவிர்க்க முயல்கிறார்.

**6. மூலங்கள்:** ''நம்மிடையே நிறை வேறிய நிகழ்ச்சிகளைத் தொடக்கமுதல் கண்கூடாகக் கண்டவர்கள் தேவ வார்த்தை யின் பணியாளராகி நம்மிடம் ஒப்படைத் துள்ளனர். ஒப்படைத்தவாறே அவற்றைப் பலர் நிரல்பட எழுத முயன்றுள்ளனர்'' (லூக் 1:1-2), என்று தமது நற்செய்தியைத் தொடங்குகின்றார் லூக்கா. இதிலிருந்து, இயேசுவின் சொல் செயல்களைப் பற்றி ஏற்கெனவே எழுதப்பட்டிருந்த நூல்களை லூக்கா நன்கு அறிந்திருந்தார் எனலாம் (அ.ப. 1:1). இவைகள் குறையுள்ளவை என்று அவர் கருதியதாகத் தெரிகிறது. நேரடிச் சாட்சிகளாயிருந்து நற்செய்தியைப் போதித்தவர்களின் வாய்மொழிப் பாரம்பரி யத்தையும் மற்ற ஏட்டுச் சான்றுகளையும் ஏற்று, நுணுகி ஆராய்ந்து முறையாக வரைவதாகக் கூறுகிறார் (லூக் 1:3-4).

லூக்காவின் மூலங்களில் நமக்குத் தெரிந்த அளவில் முதன்மையானது மாற்கு எழுதிய இயேசுவின் நற்செய்தியாகும் எனப் பொதுவாக விவிலிய அறிஞர்கள் ஏற்றுக்கொள்வர். லூக்காவை மாற்கு, மத் தேயுவுடன் ஒப்பிடுகையில் லூக்காவில் காணப்படும் 1149 வசனங்களில் 548 வசனங் கள் அவருக்கு மட்டுமே உரியவை என்று கூறலாம். மாற்குவின் 660 வசனங்களில் 350 வசனங்களை லூக்கா எடுத்தாண்டுள்ளார். மாற்கில் காணப்படும் பெரும்பாலான வசனங்கள் ஏறக்குறைய சொல்லுக்குச் சொல் லூக்காவில் காணப்படுகின்றன. இது லூக்கா மாற்கைத் தமது மூலமாகப் பயன் படுத்தியுள்ளார் என்று காட்டுகிறது. 325 வசனங்கள் லூக்காவுக்கும் மத்தேயுவுக்கும் மட்டுமே பொதுவானவை. லூக்கா மத்தேயு வால் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட தாகக் கூறப்படும் நற்செய்தியை அறிந் திருக்கக் கூடுமோ என்பது பற்றி பலர் ஐயுறுவர். மத்தேயு, மாற்கு ஆகியோருடன் லூக்கா பொருளளவில் ஒத்திருந்தாலும் சிலவற்றில் வேறுபடுவதாகத் தெரிகிறது. சான்றாக, மாற்கில் காணப்படும் சில பகுதிகள் தமது நோக்கத்திற்கு ஏற்றதாயிருந் தும், அவற்றை அவர் பயன்படுத்தவில்லை (மாற் 7:24-30; சீரோபெனீசியக் கானா னியப், புறவினப்பெண்). மேலும் மாற்கு, மத்தேயுவில் காணப்படாத வாய்மொழிப் பாரம்பரியத்தைத் தருகிறார் லூக்கா. சான் றாக, இயேசுவின் பாலபருவம் பற்றிய பகுதி. இந்த வேறுபாடுகளை விளக்குவது மிகக் கடினம். சிலவேளை மற்ற இருவருக் கும் அகப்படாத எழுத்து மூலங்களை லூக்கா பயன்படுத்தியிருக்கலாம். நற்செய்தி கள் நாம் கொண்டிருக்கும் வடிவில் உரு வெடுக்கும் முன்பே, இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் வாக்குகளை யும் கொண்ட நூல்கள் இருந்தன என்பது இப்போது பொதுவாக ஏற்றுக்கொள்ளப் படுகிறது. இவற்றை ஒவ்வொரு நற்செய்தி

யாளரும் தங்களது விருப்பத்திற்கும் நோக்கத்திற்கும் ஏற்ற விதத்தில் கையாண்டிருக்கலாம். மாற்கும் லூக்காவும் ஒரே வாய்மொழிப் பாரம்பரியத்தை விருப்பம்போல் பயன்படுத்தியிருக்கலாம். லூக்காவுக்கு மட்டும் உரியவை என்று கருதப்படுபவை அவரைச் சார்ந்தனவா அல்லது தனிப்பட்ட சிதறிக்கிடந்த, எழுத்து வடிவடைந்த வாய்மொழிப் பாரம்பரியத்தைச் சார்ந்தனவா என்று கூறுதல் கடினம். சான்றாக, லூக்கா தமக்கே உரிய பகுதியில் இயேசுவை 'ஆண்டவர்' என்று குறிப்பிடுகிறார். இஃது ஆசிரியரது சொந்த விசுவாசமா? அல்லது பாரம்பரியமா? இது போன்றதே, அவரது இலக்கிய நடையும், தனிப்பட்ட பண்புகளும்; உறுதியாகக் கூறுவதற்கு ஒன்றுமில்லை. லூக்கா பாலஸ்தீனத்தில் சில காலம் வாழ்ந்ததாக அப்போஸ்தலர் பணி சுட்டிக்காட்டுகிறது. அப்போது அவர் இயேசுவைப் பற்றிய பாலஸ்தீன வாய்மொழிப் பாரம்பரியத்தைத் திரட்டியிருக்க வேண்டும். ஒருவேளை ஏரோது அந்திப்பாவின் பாலியத் தோழனான மனாயேன் (அ.ப. *13:1*), ஏரோதனின் மேற்பார்வையாளரான கூசாவின் மனைவி, யோவன்னா ஆகியோர் இயேசுவுக்கும் ஏரோதனுக்குமிடையே நிகழ்ந்தவற்றை (லூக் *13:31-33; 23:7-12*) லூக்காவுக்குக் கூறியிருக்கலாம். எபேசு நகரில் யோவானுடன் தொடர்பு கொண்டு, அவரிடமிருந்தும், ஏன், இயேசுவின் தாயாகிய மரியாளிடமிருந்தும், இயேசுவைப் பற்றிய பல நிகழ்ச்சிகளை அறிந்திருக்கக் கூடும். இஃது இயேசுவின் பால பருவத்தைப் பற்றி லூக்கா மட்டும் தருவதை விளக்கச் சிறிது உதவலாம். செசரியாவில் பவுல் கைதியாக இருந்தகாலை, சமாரியாவில் நற்செய்தியைப் பரப்பிய தியாக்கோன் பிலிப்புவிடமிருந்து (அ.ப. *8; 21:8*) இயேசு சமாரியாவில் நிகழ்த்தியவற்றை அவர் அறிந்திருக்கக்கூடும். அவரது மதிப்புக்கும் அன்புக்குமுரிய ஆசிரியரான பவுல் இயேசுவோடு வாழ்ந்திராவிட்டாலும் பவுலிடமிருந்து நேரடிக்காட்சி விவரங்களுக்குப் பதிலாக, அடிப்படை மனப்பான்மையை லூக்கா பெற்றிருக்கலாம்.

சிலர் லூக்கா பவுலைச் சார்ந்து எழுதுவதாகக் கூறுவர். இதற்குச் சான்றாக, நற்கருணை ஏற்படுத்தப்பட்ட பகுதி (லூக் *22:14-20 = 1* கொரி *11:23-26*), புற இனத்தவர் மீட்பிற்கு அழைக்கப்படுதல், யாவருக்கும் மீட்பு அளிக்கப்படுதல், சொல் தொகுதி ஒற்றுமை ஆகியவற்றை எடுத்துக்காட்டுவர். நற்கருணையைப் பற்றிய பகுதி இருவரிடமும் ஒத்திருப்பது உண்மையே. ஆனால், இவ்வொற்றுமை இருவரும் அந்தியோக்கியப் பாரம்பரியத்தைக் கூறுவதன் விளைவே என்று அறிஞர் ஏற்றுக்கொள்வர். புறவினத்தவர் மீட்புப் பற்றிய ஒற்றுமை இந்நூல் புறவினக் கிறிஸ்தவர்களிடையே எழுந்தது என்பதை மட்டும்தான் காட்டுகிறது. இருவருக்கும் இடையே காணப்படும் சொல் தொகுதி ஒற்றுமை இருவரும் கொய்னே கிரேக்க மொழியில் உயர்ந்த மரபுப்படி எழுதியதின் விளைவாக இருக்கலாம். இச்சான்றுகளில் எதுவும், லூக்கா பவுலைச் சார்ந்து எழுதுகிறார் என்று நிரூபிக்க வல்லதன்று.

**7. திட்டம்:**

**I. *பாலபருவம்.***

*1:1-4* முன்னுரை.

| | |
|---|---|
| *1:5-2:52* | இயேசுவின் பாலபருவம் பற்றிய சிறப்பு நற்செய்தி; லூக்காவுக்கு மட்டும் உரியசெய்திகள் பல காணக்கிடக்கின்ற இத்தொகுப்பில், இயேசு, திருமுழுக்கு யோவான் ஆகியோரின் பால பருவ நிகழ்ச்சிகள் கலைப்பண்புடன் பின்னிக் கிடக்கின்றன. இரு இணை விவரிப்புகளும் இயேசுவின் தாய் யோவானின் தாயைச் சந்தித்தலில் கூடுகின்றன. |
| *1:5-25* | திருமுழுக்கு யோவானுடைய பிறப்பின் அறிவிப்பு. |
| *1:26-38* | இயேசுவினுடைய பிறப்பின் அறிவிப்பு. |
| *1:39-56* | மரியாள் எலிசபெத்தைக் காணுதல், மரியாளின் பாடல். |

*1:57-80* திருமுழுக்கு யோவானுடைய பிறப்பு, விருத்த சேதனம், செக்கரியாவின் பாடல், பாலபருவம்.

*2:1-52* இயேசுவின் பிறப்பு, வானவர் கீதம், விருத்த சேதனம், காணிக்கை, பாலபருவம், மறைந்த வாழ்வு.

II. **கலிலேயாவில் திருப்பணி** *(3:1-9:50)*.

*3:1-4:13* வரலாற்றுப் பின்னணி, திருமுழுக்கு யோவானின் போதகம், இயேசுவின் திருமுழுக்கு, சோதனைகள் ஆகிய இவை இயேசுவின் திருப்பணிக்கு ஆயத்தமாக அமைந்துள்ளன.

*4:14-6:11* நாசரேத்தூர், கப்பர்நாகும்; சீடர்களை அழைத்தல்; அருஞ்செயல்கள், மறைநூல் அறிஞர், பரிசேயர் ஆகியோரோடு தருக்கம்.

*6:12-8:3* பன்னிருவரைத் தேர்ந்தெடுத்தல்; அறவுரைகள்; அருஞ்செயல்கள்.

*8:4-9:50* உவமைகளைப் பயன்படுத்திப் போதித்தல்; அருஞ்செயல்கள் *(8:22-56)*; பன்னிருவரை வேத போதக அலுவல் ஆற்ற அனுப்புதல் *(9:1-6)*; ஏரோதனின் அச்சம் *(9:7-9)*; ஐயாயிரம் பேருக்கு உண்டி அளித்தல் *(9:10-17)*; பேதுருவின் விசுவாச அறிக்கை; பாடுகளை முதன் முறையாக முன்னறிவித்தல் *(9:18-22)*; இயேசுவைப் பின்பற்றல் எப்படி? *(9:23-27)*; ஒளியுருவாதல் *(9:28-36)*; பேய்களை ஓட்டுதல் *(9:37-43)*; பாடுகளைப் பற்றி இரண்டாம் முறை முன்னறிவித்தல் *(9:43-45)*; யார் பெரியவன் முதலியன *(9:46-50)*.

III. **கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குப் பயணம்:** *(9:51-19:27)*.

*9:51-56* சமாரியா.

*9:57-62* சீடனாயிருப்பதற்கான தகுதி.

*10:1-24* எழுபத்திரண்டு சீடரைப் பணி செய்ய அனுப்புதல்.

*10:25-11:13* உண்மையான பக்தி.

*11:14-54* தருக்கங்கள்.

*12:1-53* சீடர்களுக்கு எச்சரிக்கை.

*12:54-13:35* மனந்திரும்புதலுக்கு அழைக்கும் வாக்குகள்.

*14:1-24* பரிசேயன் வீட்டில் உணவு கொள்ளல்.

*14:25-35* துறவு

*15:1-32* இரக்கம் பற்றிய மூன்று உவமைகள்.

*16:1-31* பிற உவமைகள்.

*17:1-19* பல போதகங்கள், அருஞ்செயல்கள்.

*17:20-37* மனுமகன் வரும் நாள்.

*18:1-14* செபம் பற்றிய உவமைகள்.

*18:15-30* இயேசுவும் குழந்தைகளும்; செல்வத்தால் வரும் கேடுகள்.

*18:31-34* பாடுகள் பற்றி மூன்றாம் முறை அறிவித்தல்.

*18:35-19:27* எரிகோவில் இயேசு.

இத்தொகுப்பு பெரும்பாலும் லூக்காவுக்கே உரியது. மாற்கு, மத்தேயுவில் காணப்படும் இயேசுவின் அறவுரைகள், வாக்குகள் இத்தொகுப்பில் சிதறிக் கிடக்கின்றன. இப்பயணப்பகுதி, சிதறிக் கிடந்த பல பாரம்பரியச் செய்திகளை ஒரே தொகுப்பில் ஒன்று சேர்க்கப் பயன்படும் ஓர் இலக்கிய முறையாகத் தோன்றுகிறது *(9:51; 13:22; 17:11)*.

IV. **எருசலேமில் திருப்பணி** *(19:28-21:38)*.

*19:28-46* எருசலேமில் மெசியாவின் வெற்றி நுழைவு.

*19:47 -21:4* ஆலயத்தில் போதகம்.

*21:5-36* எருசலேமின் அழிவைப் பற்றிய உரை.

*21:37-38* இறுதி நாட்கள்.

V. **பாடுகள், இறப்பு, உயிர்ப்பு *(22:1-24:50).***

இத்தொகுப்பு பெரும்பாலும் மத்தேயு-மாற்கை ஒத்துள்ளது. இதில் லூக்காவுக்கு மட்டும் உரியவை.

*22:24-30* இறுதி உணவின்போது அப்போஸ்தலர்களுக்குள் வாக்கு வாதம்.

*22:43* பின் கெத்சமனியில் தூதன், இரத்த வியர்வை.

*23:8-12* ஏரோதன் முன் இயேசு.

*23:27-31* எருசலேம் பெண்களின் புலம்பல்.

*23:34* தமது கொலையாளிகளுக்காக இயேசு வேண்டுதல்.

*23:39-43* நல்ல கள்ளனுக்கு உய்வு அளித்தல்.

*24:13-35* உயிர்த்த இயேசு எம்மாவுக்குச் செல்லும் இரு சீடர்களுக்குக் காட்சி அளித்தல்.

*24:50-53* விண்ணேற்பு.

**8. சிறப்பியல்புகள்:** லூக்கா தமது நூலை ''உத்தம தியோபில்'' என்பவருக்குச் (லூக் *1:13*) சமர்ப்பிக்கிறார். அதுபோலவே அப்போஸ்தலர் பணியையும் அதே நபருக்குச் சமர்ப்பிக்கின்றார். யார் இந்த 'உத்தம தியோபில்'' என்று இன்று வரை அறிவதற்கில்லை. ஆனால், அக்காலத்து இலக்கிய மரபைப் பின்பற்றுவதிலிருந்து, லூக்கா எந்நோக்குடனும் எந்த இலக்கியத் தரத்திலும் எழுத விழைகிறார் என்பதை இத் தொடக்கம் காட்டுகிறது. மேலும் முன்னுரை ஒன்றும் வழங்குகிறார். பொதுவாக, பாலபருவத்திலே *(1:5-2:52)* உறுதியான எபிரேயத் தொனியும், நற்செய்தியின் பிற் பகுதிகளிலே ''எழுபது நூலின்'' நடையையும் காணலாம்.

அ) முதல் மூன்று நற்செய்திகளில், லூக்கா எழுதிய நூல் இலக்கிய நயமிக்கது. பொதுமக்கள் பேசிய ''கொய்னே'' கிரேக்க மொழிப்பிரிவைப் பயன்படுத்தினாலும், அவரது நடை அக்காலத்திய உயர்ந்த இலக்கியப் பண்பைக் கொண்டுள்ளது. அவர் பயன்படுத்தும் சொல் தொகுதி மத்தேயு, மாற்கினுடையதைவிடப் பரந்து விரிந்தது. பிற மூலங்களைச் சாராது, அவராகவே எழுதும் பகுதிகளில் லூக்காவின் கிரேக்க நடை சிறந்து விளங்குகிறது, உயர்ந்த தரமுடையது. ஆயினும் எபிரேய, அரமேயிக்கு அமைப்புகளைத் தவிர்க்கவில்லை. இங்கும் அங்குமாகக் காணப்படும் செமித்திக்கு அமைப்புகள் இதற்குச் சான்றாகும். இவை ஆசிரியர் தமது மூலங்களுக்கு எவ்வளவு பிரமாணிக்கமாயிருந்தார் என்பதைக் காட்டும். சில சமயங்களில் எபிரேயச்சொற்களின் மொழிபெயர்ப்பைத் தருவார்; மற்றச் சமயங்களில் தம்முடைய மூலங்களில் காணப்படும் திருந்தாச் சொற்களை நீக்கி, நயமுடன் எழுதுகிறார். ஆனால், ஒரே சீராக இவ்விதம் எழுதவில்லை. அதன் விளைவாக அவரது நடை ஒரே சீராக இராது; சில இடங்களில் உயர்ந்தும், சில இடங்களில் மிகச் சாதாரணமாயும் காணப்படுகிறது. நிகழ்ச்சியுரைகளை எழுதுங்கால் மாற்கில் காணப்படும் சிறு விவரங்களை விட்டுவிட்டு, விளக்கவுரையுடன் எழுதுகிறார். லூக்கா அளிக்கும் நிகழ்ச்சியுரை, செய்தி அளிக்கும் தன்மையில் அமைந்துள்ளது. இது மூலங்களிலிருந்து எடுத்தாளப்பட்டதன்று. வேண்டுமென்றே ஆசிரியர் இம்முறையைப் பயன்படுத்துவதாகத் தோன்றுகிறது. இதில், ஆசிரியர் ''எழுபது நூலில்'' காணப்படும் கிரேக்க நடையை விரும்பிப் பின்பற்றுகிறார் என்பர் அனேக அறிஞர்.

ஆ) லூக்காவின் மற்றொரு இலக்கியப் பண்பு ஒரு பொருளைப் பற்றிய நிகழ்ச்சிகள், கூற்றுக்கள், விளக்கங்கள் யாவற்றையும் ஒரே இடத்தில் சொல்லி முடித்தல். சான்றாக, திருமுழுக்கு யோவானின் போதகத்தைக் கூறியவுடன் அவர் சிறைப்பட்டதையும் கூறுகிறார் *(3:19* தொ). இப்படிச் சேர்த்துக் கூறுவது சில சமயங்களில் தவறாகப் புரிந்துகொள்ள ஏதுவாகிறது. சான்

றாக, ''மரியாள் ஏறக்குறைய மூன்று மாதம் எலிசபெத்தோடு தங்கியிருந்து பிறகு வீடு திரும்பினாள்'' *(1:56)* என்று கூறிய பின், திருமுழுக்கு யோவானின் பிறப்பைப் பற்றிக் கூறுகிறார். ஆகையால் பிள்ளை பிறப்பிற்கு முன்னே, மரியாள் திரும்பி விட்டதாக நாம் புரிந்து கொண்டால் அது தவறாகும். ஆசிரியர் சொல்ல விரும்பியது, மரியாள் எலிசபெத்தைக் காணச் சென்ற நிகழ்ச்சியை முடிப்பதே. மத்தேயுவைப் போலவே, லூக்காவும் தாம் கூற விரும்பிய வற்றைக் கருத்துப்படி ஒழுங்கு செய்து தொகுத்துக் கூறுகிறார். ஆனால், கூறும் விதம் வேறு. இருவரும் காலவரைப்படி செய்திகளைத் தருவதில்லை.

இ) சிலசமயம் பின் வரப்போகிறவை களை முன்னே சுட்டிக்காட்டுகிறார். இது நிகழ்ச்சியுரைகளில் தொடர்பையும் ஒன்றிப் பையும் உண்டாக்குகிறது. சான்றாக, திரு முழுக்கு யோவான் ''பாலைவனத்தில் மறைந்து வாழ்ந்தார்'' என்று கூறுகிறார் *(1:80)*; பின்பு, பாலைவனத்தில்தான் அவ ருக்குக் கடவுளின் வாக்கு அருளப்படுகிறது *(3:2)*, சோதனைகளின் முடிவிலே அலகை ''குறித்த காலம் வரைக்கும் அவரை (இயே சுவை) விட்டுச்சென்றது'' *(4:13)* என்று கூறுகிறார். இக்கூற்றின் மூலம் ''ஆனால், இஃது உங்கள் நேரம், இருள் ஆட்சிபுரியும் நேரம்'' *(22:53)* என்று இயேசு கைது செய்யப்படும் நேரத்தை முன் குறிக்கிறார். இவ்விதம் *3:20 = 9:9; 5:33 = 11:1; 8:2*தொ *= 23:55*தொ; *9:1-6 = 10:1-12; 18:31 = 24:25*தொ; *20:19 = 22;2; 20:25 = 23:2* ஆகிய பகுதிகளை ஒப்பிட்டுப் பார்க்கலாம். இவ் விதம் நிகழ்ச்சிகளைக் கலைப்பண்போடு பின்னிக்கூறுவது லூக்கா நிகழ்ச்சிகளுக்கு அளிக்கும் இறையியல் விளக்கத்தின் ஒரு பகுதியாகும். இஃது அவருக்கே உரிய தொன்று, மூலங்களிலிருந்து பெற்றதன்று.

ஈ) லூக்கா தமக்குக் கிடைத்த மூலங் களை எவ்விதம் பயன்படுத்தினார் என்று அறிய, அவரது நூலை மாற்கு, மத்தேயு ஆகியோர் எழுதிய நூல்களுடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இவ்விதம் ஒப்பிட்டு ஆராய்தல் பல செயல்களை நமக்கு வெளிப் படுத்துகிறது. லூக்கா தமது நூலை எழுதுவ தற்கு முன்னே, இயேசுவின் வாழ்வு முப் பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுத் திட்டம் செய்யப்பட்டிருந்தது. இத்திட் டத்தை அடிப்படையாகக் கொண்டே அவர் தமது நூலை எழுதுவது அவசியமாயிற்று. இதில் லூக்கா மாற்கைப் பின்பற்றுகிறார். திட்டத்தில் மாற்கைப் பின்பற்றினாலும் மாற்கு கூறியவற்றை அப்படியே கூற வில்லை, தமது நோக்கத்திற்கேற்ப மாற்றி யமைத்துக் கூறுகிறார். இந்த மாற்றங்களை அகற்றல், உட்புகுத்தல், சீர்திருத்தல், மாற்றி யமைத்தல் ஆகிய தலைப்புகளின் கீழ் பிரித்துக் கூறலாம். இவ்வித மாற்றங்கள், அவர் கருத்தில் கொண்ட இறையியல் நோக்கிற்கேற்ப அமைக்கப்பட்டன.

உ) **அகற்றல்:** லூக்கா மாற்கில் காணப் படும் யூதர்களுக்கு மட்டுமே உரியனவும், தமது வாசகர்களுக்குப் புரியாதனவும் (மாற் *7:1-23; 9:9-13; 10:1-12)*, அவர்களுக்கு இக்கட்டானவையுமான (மாற் *3:20*தொ; *7:24-30; 11:12-14; 20:25; 6:45-52)* பகுதிகளை விட்டு விடுகிறார். இயேசுவின் பாலுள்ள மரியாதையினால் சில பகுதிகள் விடப் பட்டுள்ளன. சான்றாக, மாற்கில் இயேசு வின் மனித உணர்ச்சிகளைத் தெளிவாகக் காட்டும் பகுதிகள் (மாற் *1:43; 3:5; 9:36; 10:16-21; 14:33*தொ), அவரது அறிவு வரை யறையுடையது என்று காட்டும் பகுதிகள் (மாற் *13:32; 15:34)* லூக்காவில் அகற்றப் பட்டுள்ளன. அதேபோல் அப்போஸ்தலர் களுக்கு இழிவு தரும் பகுதிகள் அகற்றப் பட்டுள்ளன (மாற் *4:13-38; 6:31; 9:10-23*தொ.*33*தொ; *10:35-45; 14:50)*. மேலும், மாற்கில் காணப்படும் பல நிகழ்ச்சி விவரங்கள் விடப்பட்டுள்ளன. பொதுவாக, மாற்கில் காணப்படும் அவசிய மற்ற, கவர்ச்சி தரும் விவரங்களை லூக்கா விட்டு விடுகிறார். மாற் *6:45-8:26* என்ற பகுதியை லூக்கா அகற்றியிருக்கிறார். இது 'பேரகற்றல்' என்றழைக்கப்படுகிறது.

ஊ) **உட்புகுத்தல்:** மேற்கூறியதற்கு மாறாக, லூக்கா மாற்கில் காணப்படாத பல

பகுதிகளைத் தமது நூலில் உட்புகுத்தியுள்ளார். இவற்றில் முக்கியமானவை *6:20-8:3; 9:51-18:14*. இவற்றில் முன்னது மாற்கில் *3:19*-க்கும் *3:20*-க்கும் இடையிலும், பின்னது மாற்கில் *9:50*-க்கும் *10:1*-க்கும் இடையிலும் நிகழ்ந்திருக்கலாம். இரு நூல்களிலும் இப்பகுதிகளுக்கு முன்னும் பின்னும் வரும் பகுதிகளைக் கவனித்தால் நமது முடிவு நியாயமானதாக விளங்கும். லூக் *9:51 -18:14* என்ற பகுதி ''பெரிய உட்சேர்க்கை அல்லது பெரிய உட்புகுத்தல்'' என்று அழைக்கப்பெறும். இதைத் தவிர பல சிறு பகுதிகள் உட்புகுத்தப்பட்டுள்ளன; சில சீர்திருத்தப் பெற்றுள்ளன. அவற்றில் சில: லூக் *4:31; 5:1; 8:24; 19:37; 23:51; 6:15; 4:1; 8:18-30; 8:53-55; 9:9; 22:51-69*. லூக்கா கருத்தில் கொண்டுள்ள அவருக்கே உரிய நோக்கத்திற்கேற்ப பல பகுதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. அவை: லூக் *5:25; 18:43; 19:37; 23:47; 3:6-21; 6:12; 9:28; 23:34; 5:11-28; 14:26; 18:22-29; 4:14; 10:21; 11:13*.

எ) **இடமாற்றிக் கூறல்:** மாற்கில் காணப்படும் பல பகுதிகள் லூக்காவின் நோக்கத்திற்கேற்ப இடமாற்றிக் கூறப்படுகின்றன. சூழ்நிலை மாற்றிக் கூறப்படும் நிகழ்ச்சிகளுக்கும் வேறு விளக்கம் அளிக்கப்படுகிறது. அவை:

மாற்கு *1:16-20* = லூக் *5:1-11.*
மாற்கு *3:18-21* = லூக் *11:14-23.*
மாற்கு *4:30-32* = லூக் *13:18-21.*
மாற்கு *6:1-6* = லூக் *4:16-30*
மாற்கு *8:11-13* = லூக் *11:29-32*
மாற்கு *9:42-48* = லூக் *17:1*தொ.
மாற்கு *9:49* = லூக் *14:34*தொ.
மாற்கு *10:11*தொ = லூக் *16:8.*
மாற்கு *10:31* = லூக் *13:30.*
மாற்கு *10:35-45* = லூக் *22:24-27.*
மாற்கு *12:28-34* = லூக் *10:25-28.*
மாற்கு *13:15*தொ = லூக் *17:31.*
மாற்கு *13:21-23* = லூக் *17:23.*
மாற்கு *13:33-37* = லூக் *12:35-40.*
மாற்கு *14:27-31* = லூக் *22:31-34.*

ஏ) **இரட்டிப்பு உரைகள்:** மாற்கு ஒரே மூலத்தைப் பின்பற்றுவதாகத் தெரிகிறது. ஆனால், லூக்கா பல மூலங்களைப் பயன்படுத்தியுள்ளார் எனத் தெரிய வருகிறது. அதன் விளைவாக ஒரே பகுதி இரண்டு இடங்களில் வெவ்வேறு சூழ்நிலையில் தரப்படுகிறது. இவை பெரும்பாலும் இயேசுவின் வாக்குகளாகும். இவ்வாக்குகள் ஒரு முறை மாற்கிலிருந்து எடுத்துப் பயன்படுத்தப்படுகின்றன; மற்றொரு முறை லூக்கா - மத்தேயுவுக்கு மட்டும் உரிய மூலத்திலிருந்து எடுத்தாளப்படுவதாகத் தெரிகிறது *(8:16 = 11:33; 8:17 = 12:2; 8:18 = 19:26; 9:5 = 10:10; 9:23 = 14:27; 9:24 = 17:33; 9:26 = 12:19; 9:50 = 11:23)*. இப்படிப்பட்ட இரட்டிப்பு உரைகள் மாற்கில் காணப்படுவதில்லை. லூக்காவில் இயேசு செய்த பணியின் முதற்பகுதி *(4:1-9:50)*, இரண்டாம் பகுதியோடு *(9:51-19:28)* இணையாக அமைந்துள்ளது.

ஆனால், பல நிகழ்ச்சியுரைகளில் இரு முறை கூறுவதை லூக்கா தவிர்த்துள்ளார். சான்றாக, ஒருமுறைதான் இயேசு தைலம் பூசப்படுகிறார் *(7:36-50)*; அப்பம், மீன் பலுகுதல் ஒரு முறைதான் நிகழ்கிறது *(9:12-17)*; பலன் கொடா அத்திமர விவரிப்பு ஒருமுறைதான் கூறப்படுகிறது *(13:6-4)*; கெத்சமனித் தோட்டத்தில் இயேசு ஒருமுறைதான் அப்போஸ்தலர்களிடம் வருகிறார் *(22:39-46)*; யூத அதிகாரிகளின் முன் ஒரே ஒரு விசாரணைதான் நடைபெறுகிறது *(22:66-71)*.

ஐ) மருத்துவரெனக் கருதப்படும் லூக்கா செய்ற்கைப்பழக்கம் (mannerism), உள்வியல் போக்கு, புதைந்து கிடக்கும் நோக்கு இவைகளைக் கூர்ந்து கவனித்து எழுதுகிறார். அவர் மட்டும்தான் உளவியல் சூழ்நிலையைக் கொடுக்கிறார்: *3:15;*

*4:14*தொ; *9:43; 11:1-29;13:1; 17:20; 18:19; 19:11.* அவரது புறவினப் பிறப்பும் வளர்ப்பும், பல நாடுகளுக்குப் பயணம் செய்ததும், யாவற்றையும் சம நிலையோடு நோக்கும் மனப்போக்கும் அவருக்குப் பரந்த மனப்பான்மையைக் கொடுத்திருக்க வேண்டும். சிறுபான்மையினருக்கும், ஒதுக்கப்பட்டோருக்கும், தாழ்த்தப்பட்டோருக்கும் தனிப்பற்று காட்டுகிறார். சமாரியர், தொழு நோயாளிகள், ஆயக்காரர், வீரர்கள், நிந்தை அவமானம் நிறைந்த பொதுப்பாவிகள், கல்வியறிவில்லாத இடையர்கள், ஏழைகள் ஆகியோர் இந்நற்செய்தியில் தனிப்பட்ட விதத்தில் சிறப்புப் பெறுகின்றனர்; உற்சாகம் பெறுகின்றனர்.

ஒ) இவற்றையெல்லாம் ஆராயுங்கால், லூக்கா தம்முடைய மூலங்களைச் சுதந்தரத்துடன் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. நிகழ்ச்சிகளை மாற்றி அமைக்கவும், பொதுத் தன்மையுடையவைகளைத் தொகுத்து வரையவும், நிகழ்ச்சிகளை நாடகப் பாணியில் திருத்தி எழுதவும் தமக்குச் சுதந்தரம் உண்டென்று லூக்கா கருதியதாகத் தெரிகிறது. லூக்காவில் காணப்படுபவற்றை நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம்: 1. தொகுப்பாளர் என்ற முறையில் லூக்கா தரும் பகுதிகள்; 2. மாற்கைச் சார்ந்து எழுதும் பகுதிகள்; 3. மத்தேயுவைச் சார்ந்து எழுதும் பகுதிகள்; 4. லூக்காவுக்கு மட்டும் உரிய பகுதிகள்.

லூக் *1-2* அவருக்கே உரியதொன்றாகும். காணாமற் போன மகன் *(15:11-32)*, நல்ல சமாரியன், பரிசேயனும் ஆயக்காரனும் போன்ற அழகிய உவமைகள் லூக்காவில் மட்டும்தான் காணப்படுகின்றன. பாடுகள், உயிர்ப்புப் பகுதிகளில் லூக்கா பல விவரங்களை உட்சேர்த்துள்ளார். இவை யாவும் முக்கியமானவையாகும். பிற நற்செய்திகளில் காணப்படாத பல விவரங்களைத் தந்து சென்றதற்கு நாம் அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம்.

முன்பு கூறியதுபோல், லூக்கா தூரிகை பயன்படுத்தும் ஓவியராய் இருந்திராவிடினும், சொல்லோவியம் தீட்டுவதில் ஆற்றல் மிக்கவர். கிறிஸ்தவ ஓவியர்களுக்கு, ஓவியம் தீட்டும் வாய்ப்பை மற்ற நற்செய்தியாளர்களை விட லூக்கா அதிகமாக அளித்துள்ளார். இயேசுவின் பிறப்புப் பற்றிய காட்சிகள், இயேசுவினுடைய பிறப்பின் அறிவிப்பு, மரியாள் எலிசபெத்தைச் சந்தித்தல், ஆலயத்தில் இளைஞன் இயேசு, நல்ல சமாரியன், காணாமற்போன மகன், பணக்காரனும் இலாசரும் ஆகியவை போன்ற லூக்காவின் சொற்சித்திரங்களை ஓவியர்கள் திரைச்சீலைகளிலும், மதில்களிலும் தீட்டிப் பெரும் பேறடைந்துள்ளனர். லூக்காவின் நற்செய்திக்கு விளக்கம் அளிக்க முயல்பவர்கள் இவ்வாசிரியர் சொற்களால் சித்திரம் வரைபவர் என்பதை மனதிற்கொண்டு விளக்கவுரையில் சிறிது கற்பனைத் திறனையும் பயன்படுத்த வேண்டும். வெறுமனே விளக்கம் அளித்தால் இந்நூலில் காணப்படும் பல நயங்கள் விடுபட்டுப் போகும்.

**9. நோக்கம்:** எதற்கும் மேலாக, புறவினத்தாருக்குக் கிறிஸ்துவின் மீட்பளிக்கும் நற்செய்தியை அளிக்க விழைகிறார் லூக்கா. சிமியோன் கிறிஸ்துவில் ''புறவினத்தாருக்கு இருள் அகற்றும் ஒளி''யைக் கண்டார் *(2:32)*. பவுல் உரோமை யூதர்களுக்கு ''இறைவன் ஈந்த இந்த மீட்பு புறவினத்தாருக்கு அனுப்பப்பட்டது என்றும் அறிவீர்களாக'' *(அ.ப. 28:28)* என்று கடைசியாகக் கூறிய வார்த்தைகளைப் பவுலின் தோழனும் சீடனுமான லூக்கா மறந்திருக்க முடியாது.

அதன்படி லூக்கா எழுதிய நற்செய்தியிலே, இஸ்ராயேல் மக்கள் இயேசுவை ஏற்க மறுத்து அவரைச் சிலுவையில் அறைந்து கொன்றதையும், அவர் மகிமைப்படுத்தப் பெற்று, உலகனைத்திற்கும் மீட்பு போதிக்கப்படுவதையும் காண்கிறோம். மறைநூலில் எழுதியுள்ளது இதுதான்: ''மெசியா பாடுபட்டு, மூன்றாம் நாள் மரித்தோரிடமிருந்து உயிர்த்தெழுவார்; அவர் பெயரால் மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் எருசலேமில் தொடங்கி, புறவினத்தார் அனைவருக்கும் அறிவிக்கப்

படும். இவற்றிற்கெல்லாம் நீங்கள் சாட்சி'' *(24:46-48)*. இதற்காக, தமது நற்செய்தியை எருசலேமை மையமாகக் கொண்டு எழுத வேண்டும் என்பது அவரது முழுக்கவனத்தையும் ஈர்த்துள்ளது எனலாம். ஏனெனில், எருசலேம் இறைவனின் புனித நகரம். எருசலேம் என்ற மேடையில்தான், இயேசுவின் பாடுகள், வெற்றி ஆகிய மீட்பின் மாபெரும் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. எருசலேமில் நற்செய்தி தொடங்குகிறது *(லூக் 1:5)*; அங்கேயே நற்செய்தி முடிவு பெறுகிறது *(24:52தொ)*. பாலபருவ வரலாற்றிலேயே, எருசலேம் இருமுறை நம் கண்முன் கொணரப்படுகிறது. இதே நோக்கோடு ஆசிரியர் சில நிகழ்ச்சிகளை மாற்றியமைக்கிறார். சான்றாக, இயேசுவின் சோதனைகள், மத்தேயுவில் காணப்படும் இயற்கையான சூழ்நிலையில் அன்றி, எருசலேம் ஆலயக்கோபுரத்தில் உச்சநிலையடைகிறது. கலிலேயாவுக்கு வெளியில் இயேசு செய்த பயணங்கள் விடப்பட்டுள்ளன. அதற்கு மாறாக, ஆசிரியர் சேர்த்துள்ள ''பெரிய உட்புகுத்தல்'' *(9:51-18:14)* எருசலேமை நோக்கிச் செல்லும் நெடும் பயணமாக விவரிக்கப்படுகிறது. எருசலேமைப் பெரிதுபடுத்திக் காட்டும் பொருட்டு மற்ற இடங்களின் பெயர்கள் தவிர்க்கப்பட்டுள்ளன. பேதுரு தமது விசுவாச அறிக்கையிட்டது செசரியா பிலிப்பியில் என்று கூறப்படவில்லை. உயிர்த்தபின் கலிலேயாவில் இயேசு கொடுத்த காட்சிகள் தரப்படவில்லை. இயேசு எருசலேமுக்கு வந்தார்; அங்குத் தமது மக்களால் நிராகரிக்கப்பட்டார்; அங்குப் பாடுபட்டார்; அங்குதான் உயிர்த்தெழுந்தார்; எருசலேமிலிருந்துதான் விண்ணெழுந்தார். அந்நகரத்திலிருந்து சிறிது பிரிந்திருந்தாலும், அதனை ஒரு வீழ்ச்சி நிலையாக ஆசிரியர் கருதியதாகத் தெரிகிறது. எருசலேமே மீட்பு நிகழ்ச்சியின் மையம் என்ற நோக்கு ஆசிரியரது இரண்டாம் நூலாகிய அப்போஸ்தலர் பணியிலும் காணப்படுகிறது. ''எருசலேமிலும், யூதேயா, சமாரியா முழுவதிலும் மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே நீங்கள் என் சாட்சிகளாயிருப்பீர்கள்'' *(அ.ப. 1:8)*. எருசலேமிலிருந்துதான் கிறிஸ்துவின் உய்வளிக்கும் நற்செய்தி ஒளிர்கிறது, பரவுகிறது, உலகனைத்தையும் வெற்றிகொள்கிறது.

***10. முக்கிய கருத்துக்கள்:*** எந்த நற்செய்தியாளரும் கிறிஸ்தவக் கொள்கைகள் அடங்கிய இறையியல் நூலை எழுத விரும்பவில்லை. ஆனால், அவர்களது நூலில் இறையியல் காணப்படுகிறது. நற்செய்தியாளர் யாவரும் போதித்த இறையியலையே தங்களது நூலில் அளிக்கின்றனர். ஆனால், ஒவ்வொருவரும் கூறும் விதம் வேறு. அவரவர் குறிக்கோளுக்கு ஏற்பச் சிலவற்றை அழுத்திக் கூறுவர், சிலவற்றை மேலெழுந்த வாரியாகக் கூறுவர். அதன்படி, லூக்காவும் சில கருத்துக்களை அழுத்திக் கூறுகிறார். திருச்சபையின் முதல் தலைமுறை முடிவிலே வாழ்ந்த புறவினக் கிறிஸ்தவர்களுக்கு, அவர்களது ஆன்மீக வாழ்வை உறுதிப்படுத்தும் விதத்தில், இயேசுவின் தெய்வீகப் போதனையைத் தருகிறார்.

அ) லூக்காவின் நூல் உலகினர் யாவர்க்கும் இறைவன் அளித்த மீட்பின் (Universal salvation) நற்செய்தியாகும். நற்செய்தி யாவர்க்கும் பறைசாற்றப்படுகிறது. அதன் வழியாக யாவர்க்கும் மீட்பு அளிக்கப்படுகிறது. இந்த ''அனைத்துத்தன்மை'' லூக்காவின் நற்செய்தியின் சிறப்புக் கருத்தாகும், மையக்கோட்பாடாகும், அவரது ஆழ்ந்த விசுவாசமும் ஆகும். இக்கருத்து லூக்காவுக்கோ, பவுலுக்கோ மட்டும் உரியதொன்றன்று; மூலப் பாரம்பரியத்தைச் சேர்ந்ததாகும். ஆனால், லூக்கா பவுலைப்போல், தெளிவாக இக்கோட்பாட்டை எடுத்துக் காட்டுகிறார். இதன் காரணம், அவர் புறவினத்தாருக்கு எழுதியதால், அவர்களும் இந்த அனைத்துத் தன்மையை அறிந்து, உணர்ந்து, ஏற்றுப் பயன்பெறுதலை விரும்பியதே ஆகும். அதற்கேற்ப இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை வரைகிறார்.

இயேசுவின் மூதாதையரின் பட்டியல், ஆபிரகாமிலிருந்து தொடங்கவில்லை; மாறாக, மக்கள் அனைவரின் தந்தையும் ''கடவுளின் மகனும்'' *(3:38)*ஆன ஆதாமிலிருந்து தொடங்குகிறது. மக்கள் அனைவரையும் இறைவனின் பிள்ளைகள் என்ற உயர்நிலைக்குத் திரும்பக் கொணரும் புதிய ஆதாம் *(3:23-38)* இயேசுவே. ''(இறைவனது) தயவு பெற்றவர்க்கு அமைதியுமாகுக'' என்ற வானதூதர்களின் திருப்பாடலிலும் *(2:14)* இவ்வனைத்துத் தன்மை மிளிர்கிறது. இயேசுவைப் ''புற இனத்தார்க்கு இருள் அகற்றும் ஒளியாக''க் கண்டார் சிமியோன் *(2:28)*. அவரில் ''மனிதர் எல்லாரும் கடவுளின் மீட்பைக் காண்பர்'' *(3:6)*. அவர்பால் கொண்ட விசுவாசம் உலகினர் யாவரையும் ஆபிரகாமின் பிள்ளைகளாக்கும் *(3:8)*.

இவ்வனைத்துத் தன்மைக்கு ஊறு செய்பவைகளையும், இதனைக் குறுக்கிக் காட்டுபவைகளையும் லூக்கா அகற்றி விடுகிறார் அல்லது தெளிவற்ற முறையில் கூறுகிறார். மாறாக, இக்கோட்பாட்டை விளக்குபவைகள் அழுத்திக் கூறப்படுகின்றன. சான்றாக, மாற்கில் காணப்படும் யூதப் பழக்க வழக்கங்களும் பண்புகளும் லூக்காவில் அகற்றப்பட்டுள்ளன. பன்னிரு சீடர்கள் சமாரியரிடையே போதிக்கச் செல்ல வேண்டாம் என்று இயேசு கூறியது *(மத் 10:5*தொ*)* லூக்காவில் இல்லை. ஆனால், மீட்பின், திருச்சபையின் அனைத்துத் தன்மையை, லூக்கா தமக்கே உரிய முறையில் வெளிப்படையாகச் சுட்டிக்காட்டுகிறார் *(2:14-32; 24:47)*. இயேசு சமாரியரிடையே தங்க இடம் கேட்கிறார் *(9:52)*. குணமான தொழுநோயாளிகளுள் சமாரியனான ஒருவன் மட்டும் நன்றி கூற வருகிறான் *(17:11-19)*. பிறர் அன்பிற்கு மாதிரிகையாகச் சமாரியனை உவமை வாயிலாகக் காட்டுவதை நாம் மறந்து விட முடியாது *(10:30-37)*. இவ்வுவமையிலே, அன்பின்முன், இன, மத வேற்றுமைகள் தகர்ந்தொழிகின்றன. நல்லொழுக்கத்திற்கும் தாராள விசுவாசத்திற்கும் புறவினத்தவர் மாதிரிகையாவர் *(7:9)*. இயேசுவின் இறுதிக்கட்டளை அப்போஸ்தலர்கள், அனைவருக்கும் நற்செய்தியைப் போதிக்க வேண்டும் என்பதே *(24:47)*. மீட்பு அனைவருக்கும் அளிக்கப்படுகிறது என்ற போதகம் புறவினத்தார்க்கு எவ்வளவு மகிழ்ச்சியையும் அமைதியையும் அளித்திருக்கக்கூடும் என்பதை நாம் எண்ணியுணரலாம்.

ஆ) அடுத்து, இந்நற்செய்தி இயேசுவின் இரக்கத்தைப் பாடும் காவியமாகும். ஆசிரியர் இயேசுவின் இரக்கத்தையும், நன்மைத் தன்மையையும் பல இடங்களில் அழுத்திக் கூறுகிறார் *(7:36-50; 15:11-32; 18:10-14; 19:1-10; 23:42*தொ*)*. இயேசுவின் இரக்கத்தை நூலில் வரும் பெரும் மன்னிப்பு நிகழ்ச்சிகளில் காணலாம்: பாவியான பெண் *(7:36-50)*, ஊதாரிப்பிள்ளை அல்லது காணாமற்போன மகன் *(15:11-32)*, சக்கேயு *(19:1-10)*, இயேசுவின் கொலையாளிகள் *(23:34)*, நல்ல கள்ளன் *(23:39-43)*. பாவிகளை அவர் வெறுக்கவில்லை; மாறாக, அவர்களிடம் அன்பும் இரக்கமும் கொண்டார். இவற்றைக் காணும்போது, இந்நூலைப் ''பெரும் மன்னிப்புகளின் நற்செய்தி'' என்று அழைக்க சிலர் தயங்குவதில்லை. ''இயேசு பாவிகளின் நண்பன்.'' இது லூக்காவுக்கே உரிய கருத்தாகும். இஃது அவரது அனைத்துத் தன்மை நோக்கின் சிறப்புகளில் ஒன்றாகும். ''இழந்து போனதைத் தேடி மீட்கவே மனுமகன் வந்துள்ளார்'' *(14:10)* என்ற கூற்றை லூக்காவில் மட்டுமே காண்கிறோம். ''உங்கள் வானகத்தந்தை நிறைவுள்ளவராய் இருப்பது போல், நீங்களும் நிறைவுள்ளவராய் இருங்கள்'' *(மத் 5:48)* என்று மத்தேயு கூறுமிடத்து, ''உங்கள் தந்தை இரக்கமுள்ளவராய் இருப்பதுபோல் நீங்களும் இரக்கமுள்ளவர்களாய் இருங்கள்'' *(லூக் 6:36)* என்று லூக்கா கூறுகிறார். ''மனந்திரும்புதல்'' என்ற சொற்றொடர் லூக்காவில் மட்டும்தான் வருகிறது *(5:32)*. காய்க்காத மரத்திடம் காட்டும் பொறுமை பற்றிய உவமை

யும், பரிசேயனும் ஆயக்காரனும் என்ற உவமையும் என்றும் வாசகர்களின் மனதை விட்டு அகலா. அருஞ்செயல்களைக் கூறும் போது, துன்புறுவோரிடம் இயேசு காட்டிய கனிவிரக்கத்தை அழுத்திக் கூறுகிறார் ஆசிரி யர் *(7:11-17; 13:11-17; 14:1-6; 17:19-31)*. மாற்கில் காணப்படும் சீடர்களைப் பற்றிய கடுமையான கூற்றுகள் லூக்காவில் காணப் படவில்லை. அதேபோல் மாற்கில் காணப் படும் சில கொடூரமான சொற்கள் (மாற்கு *4:12; 9:43-48; 14:21*) லூக்காவால் தவிர்க்கப் பட்டுள்ளன. இயேசுவின் இரக்கத்தை லூக்கா எடுத்துக்கூறும் தன்மை மனதைக் கவரவல்லது. இதை மனதிற் கொண்டுதான் மகாகவி தாந்தே லூக்காவைக் ''கிறிஸ்து வின் இரக்கத்தைப் பாடுவோன்'' என் றழைக்கிறார்.

இ) அடுத்து, லூக்கா எழுதிய இந்நூலை எளியோருடையவும், தாழ்ச்சியுடையோரு டையவும் நற்செய்தி எனலாம். இக்கருத்து இயேசுவின் பால பருவ வரலாற்றிலும் (குழந்தையில்லாத் தம்பதியர் செக்கரியா, எலிசபெத்து; யாரும் அறியா நாசரேத்தூரி லிருந்து யோசேப்பும் மரியாளும் தோன்று கின்றனர்; ஆலயத்தில் ஒரு முதியோரும், ஒரு முதிய விதவையும் காட்சியளிக்கின்ற னர்), நாசரேத்தில் போதித்தலிலும் *(4:14தொ.18; 7:22)*, இந்நூலுக்கே உரிய பல வாக்குகளிலும் *(12:13-20)*, பணக்கார னும் ஏழை இலாசரும் போன்ற உவமை களிலும் *(16:19-31)* காணப்படுகிறது. மத் தேயு ''எளிய மனத்தோர் பேறு பெற்றோர்'' *(5:3)* என்று கூறும்போது, லூக்கா ''ஏழை களே, நீங்கள் பேறு பெற்றவர்கள்'' *(6:20)* என்று கூறுகிறார். தருமம் வழங்குதல் அழுத்திக் கூறப்படுகிறது. ஏழைகளுக்கும் இயலாதோர்க்கும் மனத்தளவிலும், செய லளவிலும் இரங்குதல் சிறப்பித்துக் கூறப் படுகிறது.

எளியோருள் மகளிரும் அடங்குவர். லூக்கா தமது நூலில் மகளிருக்குத் தனிச் சிறப்பும் முக்கியத்துவமும் அளிக்கிறார். இது லூக்காவின் அனைத்துத் தன்மையின் மற்றொரு சிறப்பான பகுதியாகும். மற்ற நற்செய்திகளில் காணப்படுவதை விட இந் நூலில் மகளிர் பலர் வருகின்றனர்; சிறப் புடையோராய்க் காட்சியளிக்கின்றனர். கிரேக்கர்கள், யூதர்களைவிட மகளிர்க்கு மதிப்பும் உயர் நிலையும் அளித்திருந்தனர். யூதர்கள் பெண்பாலர்பால் கொண்டிருந்த கருத்து இயேசுவின் நற்செய்தியில் இல்லை எனக் காட்ட விழைகிறார் ஆசிரியர். இதை, இயேசுவின் தாயாகிய மரியாளைப் பற்றிய நிகழ்ச்சிகள், நயீனைச் சார்ந்த விதவை *(7:11-17)*, மன்னிப்பு வேண்டும் பெண்மணி *(7:36-50)*, மார்த்தாவும் மரியாளும் *(10:38-42)*, இன்னும் இயேசுவுக்குப் பணி விடை செய்த மகளிர் ஆகியோரைப் பற்றிய நிகழ்ச்சிகளில் காணலாம்.

ஈ) உலகில் உள்ள எளியோர் யாவர்க்கும் இறைவனது மீட்பு கொடையாக அளிக்கப் படுகிறது. அதை அடைய ஒருவன் இஸ்ரா யேல் இனத்தைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும் என்பதில்லை. பணக்கார னாகவோ, தனிச்சலுகை பெற்றவனாகவோ இருக்க வேண்டியதில்லை. இறைவனுக்குத் தன்னை அர்ப்பணிக்க வேண்டும். யாவற் றையும் துறந்துவிடல் வேண்டும் *(12:33-34)*. இயேசுவே அதற்கு மாதிரிகை. மற்ற நற்செய்தியாளரை விட, லூக்கா, இயேசு பாடுகள் படவேண்டியதை அழுத்திக் கூறு கிறார் *(9:22; 13:33; 17:25; 22:37; 24:7.26.46)*. இயேசுவைப் பின்தொடர விரும்பும் அவ ருடைய சீடர்கள் தங்களது சிலுவையை நாள்தோறும் சுமக்க வேண்டும் *(9:23)*. சீடர்களைப் பற்றி ''அவர்கள்... யாவற்றை யும் துறந்து அவரைப் பின் தொடர்ந்தார்கள்'', ''அவரும் எழுந்து, அனைத்தையும் விட்டு அவரைப் பின் தொடர்ந்தார்'' *(5:11-29)* என்று லூக்கா கூறுகிறார். செல்வத்தை லூக்கா கண்டனம் செய்யவில்லை. ஆனால், செல் வத்திற்கு அடிமையானதைக் கண்டனம் செய்கிறார். சிலர் மண வாழ்வையும் துறந்து இயேசுவைப் பின் தொடரத் தயா ராக இருக்க வேண்டும் *(14:26)*. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு சிலர் இந் நூலை முழுத்துறவின் நற்செய்தி என்றழைத் தனர்.

*உ) மேற்கூறப்பட்ட, யாவற்றையும் துறந்து தங்களையே இயேசுவுக்கு அர்ப் பணிக்கும் வாழ்வு செபமும், பரிசுத்த ஆவியின் உதவியும் இன்றி இயலாத ஒன்றாகும். இயேசு தமது வாழ்வின் ஒவ்வொரு முக்கிய கட்டத்திற்கு முன்னும் செபித்தார் என்று குறிப்பாகச் சுட்டிக் காட்டுகிறார் லூக்கா. சான்று: இயேசுவின் திருமுழுக்கின்போதும் (3:21), அப்போஸ் தலர்களைப் பொறுக்கி எடுக்கும் முன்னும் (6:12), பேதுருவின் விசுவாச அறிக்கைக்கு முன்னும் (9:18), ஒளியுருவாகும் முன்னும் (9:28), பாடுகளுக்கு முன்னும் (22:39 தொ), சிலுவையின் மேலும் இயேசு செபிக்கிறார். இயேசு செபித்தலில் வல்லுநர் (11:1-13; 18:1-8). அடிக்கடி பிறரை விட்டுப் பிரிந்து சென்று, தமது தந்தையோடு செபத்தில் முழுவதும் ஒன்றித்திருப்பார். மீட்பும் அதன் வருகையும் செபமிக்க சூழ்நிலையில் நிகழ்கிறது; செபமிக்க சூழ்நிலையை ஏற் படுத்துகிறது (3:21; 5:16; 9:18-28; 10:21; 22:32; 23:34). விடாது தொடர்ந்து செபிக்கக் கற்பிக்கும் ''தொந்தரை செய்யும் நண்பன்'' (11:5-8) உவமை, ''பொல்லாத நடுவர்'' (18:1-8) உவமை போன்றவை லூக்காவுக்கே உரியவை.*

*செப வாழ்வின் பயனாக, இயேசு பரி சுத்த ஆவியரால் நடத்தப்பட்டார். இயேசு வையும் சீடர்களையும் அவர்களது வாழ் வின் முக்கிய நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றிலும் பரிசுத்த ஆவியர் நடத்திச் செல்வதை லூக்கா சிறப்பித்துக் கூறியுள்ளார் (1:15.35.41.67; 2:25-27; 3:16. 22; 4:1.14. 18; 10:21; 11:13; 12:10.12). இயேசுவுக்கு நேர்ந்தது, அவருடைய இரண்டாம் வருகை வரை திருச்சபையிலும் நடைபெறுகிறது. பரிசுத்த ஆவியர் அப்போஸ்தலர்களையும், அவர்களுடைய மறை வழித்தோன்றல் களையும் வழி நடத்துகிறார். இது பரிசுத்த ஆவியரின் காலமாகும்.*

*ஊ) இந்நூல் ''இறைவனைப் போற்றும், மகிழ்ச்சி அளிக்கும் நற்செய்தியாகும்''. மீட்பின் வருகை மகிழ்ச்சி மிக்க சூழ் நிலையைப் படைக்கிறது. இது மற்ற நற்செய்திகளில் காணப்படுவதைவிட, லூக் காவில் பல இடங்களில் குறிப்பிடப்படு கிறது (1:4.28.58; 2:10; 10:17. 20 தொ; 13:17; 19:6-37; 24:41.52). இந்நூலின் தொடக் கத்திலே வானதூதர்களின் மகிழ்ச்சிக் கானத்தைக் கேட்கிறோம் (2:13தொ). அதன் முடிவிலே, இறைவனை இடைவிடாது வாழ்த்திப் போற்றும் அப்போஸ்தலர்களின் காட்சி நம் கண்முன் கொண்டு வரப்படு கிறது (24:52தொ). மனந்திரும்பும் ஒரு பாவியைக் குறித்து விண்வீட்டிலே மிகுந்த மகிழ்ச்சியுண்டாகும் (15:7.10.32). இயேசு வின் விந்தை மிக்க அருஞ்செயல்கள் கண்டு, மக்கள் மகிழ்ச்சி மிக்க வியப் பெய்துகின்றனர் (5:26; 10:17; 13:17; 18:43). இவை கருத்தோடு நோக்குதற்குரியன. லூக் காவில் காணப்படும் மகிழ்ச்சி மரியாளின் பாடல், செக்கரியாவின் பாடல் போன்ற புகழுரையாகவும் போற்றுரையாகவும் மலர் கிறது.*

*எ) லூக்காவின் நற்செய்தி ஒரு வாழ்க்கை ஒழுங்காகும். அதை ஒரு ''சமூக நற்செய்தி'' என்று கூடக் கூறலாம். செல்வம், வறுமை பற்றிய அவருடைய கூற்றுக்கள் அவரு டைய நோக்கையும், மனப்பான்மையையும் காட்டுகின்றன. ''பணக்காரனும் ஏழையும்'' (16:19-31), பணக்கார அறிவிலி (12:13-21), ஏழைகளை விருந்துக்கு அழைத்தல் (14:12-14) ஆகிய உவமைகள் செல்வம் வறுமை பற்றிய கருத்துக்களை விளக்குகின் றன. இயேசுவின் சீடர்களிடம் காணப்பட வேண்டிய முற்றிய துறவு மனப்பான் மையை அழுத்திக் கூறுகிறார் லூக்கா. ஏழைகளுக்குத் தானம் வழங்குதல் (3:10தொ, 14:12-14), ஏழைகளுடன் பகிர்ந்து கொள்ளாவிட்டால் வரும் தண்டனை (16:25தொ), பிறரைத் துன்புறுத்தி ஏமாற்று வோரின் கடமைகள் (3:10-14) ஆகியவை பற்றித் தெளிவாகக் கூறுகிறார் லூக்கா.*

*ஏ) நற்செய்தியாளருள், லூக்கா மட்டுமே ஆதிக்கிறிஸ்தவர்கள் பயன்படுத்திய, கிறிஸ்து-இயல் என்னும் பொருள்படும் ''ஆண்டவர்'' என்ற சொல்லைப் பயன் படுத்துகிறார்; இயேசுவை மீட்பராகக் கரு*

துகிறார். இஃது ஆசிரியர் கிரேக்கர் என்பதன் விளைவோ, கிரேக்கப் பின்னிலையின் பயனோ அன்று. ஏனெனில், இந்நூலில் காணப்படும் மீட்பு விவிலியக் கருத்தாகும். ஆசிரியரின் அனைத்துத் தன்மைக் கருத்தின் விளைவும் ஆகும். ''ஆண்டவர்'' என்ற சொல்லைப் பயன்படுத்துவது, நற்செய்தியின் பாரம்பரியத்தைப் புரிந்துகொள்ளவும், அதனைப் பிரமாணிக்கமாக விளக்கவும் தகுதியான கிரேக்கச் சொற்களைப் பயன்படுத்த ஆசிரியர் கொண்ட பேராவலின் விளைவாகும்.

இக்கருத்துக்கள் யாவும் கலைப்பண்புடன் பின்னிப் பிணைக்கப்பட்டு, இறைவன் அனைவருக்கும் அளிக்கும் மீட்பின் நித்திய திட்டமாக வெளிப்படுகின்றன. இயேசுவே மீட்பர். அவரது இறப்பு-உயிர்ப்பில் மீட்பு நிறைவேறி பரிசுத்த ஆவியால் யாவருக்கும் அளிக்கப்படுகிறது.

***11. லூக்கா வரலாற்று ஆசிரியர்:*** லூக்கா தமது நூலுக்கு அளிக்கும் தொடக்க உரையும் அர்ப்பணமும், அவர் வெறுமனே நற்செய்தியைப் பற்றி எழுத விரும்பவில்லை; மாறாகத் தமக்குக் கிடைத்த மூலங்களைச் சீர்தூக்கி மதிப்பிட்டு, ஆதி போதகங்களின் உண்மைத்தன்மையை நிலைநிறுத்தி ஒரு வாழ்க்கை வரலாற்றை எழுத விரும்பினார் எனக் காட்டுகின்றன. அதனால், அவர் வரலாற்று நிகழ்ச்சிகளில் மற்ற நற்செய்தியாளரை விட அதிகக் கவனம் செலுத்தியிருப்பதாகத் தெரிகிறது. இயேசுவின் பிறப்பிற்கு முன்னும் *(2:1-3)*, திருமுழுக்கு யோவானின் திருப்பணிக்கு முன்னும் *(3:1தொ)*, அக்காலத்திய வரலாற்றுச் சூழ்நிலையைச் சுருக்கமாக விவரிக்கிறார். இதைக் கொண்டு, தாம் எழுதும் வரலாறு எப்போது எச்சூழ்நிலையில் நிகழ்கிறது என்று வரலாற்றுப் பண்புடன் விளக்குகிறார். அவர் வரலாற்றுக்கு அளிக்கும் மதிப்பு, அவர் தம்முடைய மூலங்களைப் பயன்படுத்தும் விதத்திலிருந்து விளங்குகிறது. அவரது முதன்மையான மூலநூல் மாற்கின் நற்செய்தியாகும். முன் கூறியதுபோல், தம்முடைய மூலங்களைச் சுதந்தரத்துடன் பயன்படுத்தினாலும் அவற்றிற்குப் பிரமாணிக்கமாக இருக்கிறார். சில சமயம் தமது மூலங்களின் கால ஒழுங்கு முறையைத் திருத்தி அமைப்பார். சான்றாக, பேதுருவின் விசுவாச அறிக்கைக்குப்பின் ஆறுநாட்கள் கழித்து ஒளியுருவாதல் நடைபெற்றது என்பார் மாற்கு *(9:2)*. ஆனால், லூக்கா அதை ''ஏறக்குறைய எட்டு நாட்களுக்குப்பின்'' *(9:28)* என்று திருத்துவார்; எண்களைப் பயன்படுத்தும்போது ''ஏறக்குறைய'' என்ற அடைமொழியைப் பயன்படுத்துவார் *(1:56; 3:23)*. பிற நற்செய்தியாளர் ஏரோதைப் பொதுவாக ''அரசன்'' *(மாற் 6:14)* என்று குறிப்பிடும்போது, லூக்கா அவனுக்குரிய பட்டமாகிய ''நான்கில் ஒரு பகுதிக்குத் தலைவன் அல்லது சிற்றரசன்'' என்று குறிப்பிடுவார் *(9:7)*; ''கலிலேயக் கடல்'' என்று கூறாமல் *(மாற் 1:16)* ''கெனசரத்து ஏரி'' *(லூக் 5:1)* என்பார்; பிலாத்து கலிலேயர்களைக் கொன்றது *(13:1-3)*, சீலோவாமின் கோபுர வீழ்ச்சி போன்ற வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறுவார். மேற்கூறியவாறு திருத்திக் கூறும்போதும், தம்முடைய மூலங்களைச் சுதந்தரமாய்ப் பயன்படுத்தும் போதும் அவர் நற்செய்தியைத் திரிபுபடுத்திக் கூறவில்லை. இயேசுவைப் பற்றிய நிகழ்ச்சிகளை மாற்றவில்லை. அவரும் பாரம்பரிய வரலாற்றையே கூறுகிறார். ஆனால், கூறும் விதம் தான் வேறு. தம்முடைய நூல் பிற நூற்செய்தி நூல்களை அகற்றவேண்டும் என்ற போலி ஆர்வம் அவரிடம் இல்லை. அவர் விரும்பியதெல்லாம் இயேசுவின் உண்மையான வரலாற்றை ஓரளவு வரலாற்றுப் பண்புடன் கூற வேண்டும் என்பதே.

ஆயினும், வரலாற்றைப் பற்றி நாம் கொண்டிருப்பன போன்ற கருத்துக்களைக் கொண்டிருக்கவில்லை லூக்கா. அவர் கால ஒழுங்கு முறையைப் பற்றியும் இட விவரங்களைப் பற்றியும் அவ்வளவு அக்கறை கொண்டதாகத் தெரியவில்லை. ஆனால், வரலாற்று நிகழ்ச்சிகளில் அதிகமான கவனம் காட்டுகிறார். அவர் ''முறையாக

வரைய'' விரும்பினாலும் அந்த முறை, அடிப்படையில் இறையியல் முறையாகும். ஏனெனில், அவர் வெறும் நேரடிச் சாட்சி களின் சான்றை மட்டும் கூறவில்லை. சாட்சிகளும் இறை வார்த்தையின் பணி யாளருமானவர்களுடைய சான்றுகளைத் தொகுத்துத் தருகிறார்.

***12. லூக்கா ஒரு நற்செய்தியாளர்:*** லூக்கா வரலாற்றுப் பண்புடன் தமது நூலை எழுதினாலும் அவர் ஒரு நற்செய்தியை எழுதுகிறார். அவர் சிறப்பாக ''வார்த்தை யின் பணியாளர்'' ஆவார், ''நற்செய்தியா ளர் ஆவார்''. ஆகையால்தான் அவர் இயேசுவைப் பற்றிய ஆதித் திருச்சபையின் பொதுத்திட்டத்தைப் பிரமாணிக்கமாகப் பின்பற்றுகிறார். ''நற்செய்தி'' என்ற சொற் றொடர், தொடக்க காலத்தில் இயேசுவின் போதகங்களைக் குறித்தது; பின், அப்போத கங்களை உள்ளடக்கிய நூலைக் குறித்தது. நற்செய்தியாளர் தம்முடைய நூலில் தமது சொந்தக் கருத்துக்களைத் தருவதில்லை. அவர் திருச்சபையின் பிரதிநிதி. அவர் கூறுவது திருச்சபையின் போதகம், பாரம்ப ரியம். அவர் அளிப்பது ஒரு பெரும் செய்தி; இயேசுவையும் அவரது செயல்க ளையும் பற்றிய அறிக்கையாகும். அவர் வரலாற்றுப் பண்புடன் தமது நூலை எழுதினாலும், அவர் கூறும் நிகழ்ச்சிகளெல் லாம் ஒருவரைச் சுற்றி நிகழ்கின்றன. மனிதரிடையே வாழ்ந்து, மனிதரிடையே பழகி, போதித்து, குறித்த காலத்திலும், இடத்திலும் மரித்து, உயிர்த்த ஒருவரைப் பற்றியது. இந்த உயிர்த்த நிகழ்ச்சியை மனதிற்கொண்டு இயேசுவைக் காணும் வரலாறு ஆகும் நற்செய்தி. லூக்கா கிரேக்கர் ஆனதால், வரலாற்று விவரங்களில் மற்ற நற்செய்தியாளரைவிடக் கவனம் செலுத்த லாம். ஆனால், அவர் எழுதுவது ஒரு நற்செய்தி; அடிப்படையில் ஒரு செய்தி அறிக்கையாகும்; ஆனால், இறையியல் நோக்குடன் எழுதப்பெற்றது.

இந்நோக்குடன் லூக்கா காலத்தை நோக் குகிறார். பழைய ஏற்பாட்டில் காலத்தின் மையம் வரவிருக்கும் மெசியாவாகும். ஆனால், கிறிஸ்தவன் ஏற்கெனவே வந்து விட்ட இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை, செயல் ஆகியவற்றில் காலத்தின் மையத்தைக் காண்கிறான். பழைய ஏற்பாட் டில் உலகின் முடிவுநாளைக் காலத்தின் மையமாகக் கருதினர். மெசியாவின் வரு கையும் உலகின் முடிவும் ஒன்றாகக் கருதப் பட்டன. அந்நாளை நோக்கி ஏங்கியிருந்த னர். புதிய ஏற்பாட்டிலும் இயேசுவின் வருகைக்காக ஏங்கியிருத்தல் காணப்படுகி றது. ஆனால், வரவிருக்கும் முடிவுநாள் அல்லது கிறிஸ்துவின் இரண்டாம் வருகை மீட்பு வரலாற்றின் மையமன்று, அதன் நிறைவு ஆகும். ஒரு வரலாற்று நிகழ்ச்சியே மீட்பு வரலாற்றின் மையம். கிறிஸ்துவே அம்மையம். அவரது பாடுகளும், மரண மும் உயிர்ப்பும் காலத்தின் மையமாகும். இவை உலகில் நடப்பவற்றிற்கெல்லாம் பொருள் அளிக்கின்றன. மீட்பு வரலாற்றின் இந்த மையத்தைப் பற்றி லூக்காவின் நற்செய்தி பறைசாற்றுகிறது. அதுவே கிறிஸ்து என்னும் வரலாற்று நிகழ்ச்சி.

**லூக்கியு** *(LUCIUS)*

காண்க. உலூக்கியு - II:*113*.

**லூசு** *(LUZ )*

காண்க. உலூசு - II:*114*.

**லூது, லூதியர்** *(LUD, LUDIM)*

காண்க. உலூது, உலூதியர் - II:*114*.

**லெபனோனின் கேதுரு** *(LEBANON, CEDAR OF)*

கேதுரு மரம் லெபனோனின் மலைகளில் அதிகம். வளர்ந்தது. இவை அழகும் வலி மையும் உடையன (எசே *31:1-18*; ஆமோ *2:9*). லெபனோனின் கேதுரு யூதாவின் அரசன் அமட்சியாவுக்கு இஸ்ராயேலின் அரசன் யோவாசு அனுப்பிய எச்சரிக்கை யில் இடம் பெறுகிறது (*2* அர *14:9*). சாலமோன் ''லெபனோனின் கேதுரு முதல் சுவரில் முளைக்கும் ஈசோப்பு வரை உள்ள எல்லா மரவகைகளையும்'' (*1* அர *5:13*) அதாவது தாவர உலகு முழுவதையும் அறிந்திருந்தார்.

**லெபனோனின் வன மாளிகை** (LEBANON, HOUSE OF THE FOREST OF)

இஃது எருசலேமில் இருந்த சாலமோனின் அரண்மனையின் ஒரு பகுதியாகும் (1 அர 7:1-8). இஃது, ஒரு செவ்வக மாளிகையாகும். இதன் தூண்களும் (7:2), மேல்தளம் (7:7), விட்டங்கள் (7:2), அறைகள் (7:3) ஆகிய யாவும் லெபனோனின் கேதுரு மரங்களால் அமைக்கப் பட்டிருந்தன.

இம்மாளிகையில் நான்கு வரிசையாகக் கேதுருத் தூண்கள் அமைந்திருந்தன. இதற்கு வரிசைக்குப் பதினைந்தாக நின்ற நாற்பத்தைந்து தூண்களின் மேல் அமைந்த அறைகள் கொண்ட மேல்மாடி உண்டு. பலகணிகள் மூன்று வரிசையாகவும், ஒன்றுக்கொன்று எதிராகவும் அமைந்திருந்தன. கதவுகளும் கதவு நிலைகளும் சதுர வடிவிலும், மூன்று வரிசையிலும், ஒன்றுக்கொன்று எதிராகவும் இருந்தன (7:3-5). இவை யாவும் கேதுரு மரத்தால் அமைக்கப் பட்டிருந்தன.

இந்த லெபனோன் வனவீடு, தூண்மண்டபம் அல்லது காத்திருக்கும் மண்டபம் (7:6), மற்றும் அரியணை மண்டபம் அல்லது நீதி மண்டபம் (7:7) ஆகியவற்றோடு சேர்த்துக் கட்டப்பட்டிருந்தது. இவற்றிற்குப்பின் சாலமோனின் குடியிருப்பிற்குக் கட்டப்பட்ட அரண்மனையும், பார்வோனின் மகளது வீடும் அமைந்திருந்தன.

இந்த லெபனோனின் மாளிகை (1 அர 10:17.21; 2 நாள் 9:16.20) எசா 22:8-இல் ''வன மாளிகை'' என்று குறிப்பிடப்படுகிறது. சாலமோனின் அரண்மனை வளாகம் ஆலயமுற்றத்தின் தெற்கில் அமைந்திருந்தது; ஆனால், எங்கு இருந்தது என்று துல்லியமாக அடையாளம் காட்ட முடியவில்லை. இதற்குப் போதிய தொல்பொருள் செய்திகள் கிடைக்கவில்லை.

**லெபனோன்** (LEBNON - வெள்ளையான மலை; வருடத்தில் அதிக நாட்கள் பனியால் மூடப்பட்டிருப்பதால் இப்பெயரால் அழைக்கப்பட்டிருக்கலாம்).

லெபனோன் மலைகள் வடக்கே அமனூசு மலைகளிலிருந்து தெற்கே சீனாய்த் தீபகற்பம்வரை மத்தியதரைக் கடலுக்கு இணையாக நீண்டு கிடக்கும் மலைத்தொடராகும். இது 160 கி.மீ நீண்டது. இப்பகுதி இரு நதிகளுக்கிடையே அமைந்த மலைத் தொடர்ப் பிரதேசமாகும். நாக்ரு ஏல்-காசிமெயே (லித்தானி) என்னும் நதி லெபனோனை, எதிர் லெபனோனினின்று பிரிக்கிறது. இந்நதி பெக்கா எனும் பள்ளத்தாக்கில் ஓடுகிறது. இது லெபனோன் பள்ளத்தாக்கு எனவும் அழைக்கப்படுகிறது (யோசு 1:7).

'வெண்மை' எனும் பொருள் லெபனோனை மூடியிருக்கும் பனிப்படலத்தைக் குறிக்கிறது. 1800 மீட்டரிலிருந்து 3000 மீட்டர் வரை உயர்ந்த இம்மலைப் பகுதிகள் குளிர்காலங்களில் மட்டுமே அதிகம் பனியால் மூடப்பட்டிருக்கும். எதிர்லெபனோனின் தெற்குப் பகுதியாகிய எர்மோன் மலை பனியால் சூழப்பட்டு உயர்ந்து நிற்கும் காட்சி அரியதொன்றாகும். மலைகள் வளைந்து உயர்ந்த சிகரங்களைக் கொண்டிருப்பதால், பல பள்ளத்தாக்குகளும் உள்ளன. இவற்றில் குறிப்பிடத்தக்கவை மரோனியா சமூகத்தினர் வாழ்ந்த ''புனிதப் பள்ளத்தாக்கும்,'' ''வீனசு அதோனிசு'' எனும் வழிபாடு தோன்றிப் பரவிய அதோனிசு பள்ளத்தாக்கும், மற்றொரு முக்கியமான இடமுமாகும். லெபனோன் மலைப்பகுதி தோன்றியது இயற்கையில் ஏற்பட்ட பல மாற்றங்களாலேயாகும்.

பெக்கா பள்ளத்தாக்கு விவசாயம் செய்வதற்கு ஏற்ற நிலமாகும். அன்றைய நாட்களில் லெபனோனின் திராட்சை ரசமும் (ஓசே 14:7.8), கேதுரு மரங்களும் (1 அர 5:14; சங் 29:5; எசா 2:13; எசே 17:3) பெயர் பெற்றவையாகும். சாலமோன் வாழ்ந்த அரண்மனை லெபனோனின் காட்டையொத்த வீடு எனப் பேசப்படுமளவுக்குச் சிறந்தவை அக்காடுகள் (உ.ச. 4:11; ஓசே 14:7). ஒலிவ மரங்களிலிருந்து பெறப்பட்ட ஒலிவ எண்ணெய் பல வகைகளில் பயன்படுத்தப்பட்டது. லெபனோனின்

காட்டு விலங்குகள் 2 அர 14:9; எசா 40:16; அப 2:17-இல் குறிக்கப்படுகின்றன. இன்று இப்பகுதி ஆடுமாடுகளின் மேய்ச்சலுக்கான அளவே வளமுள்ளதாய் உள்ளது. ஏனை யவை மறைந்து போயின.

**லெமுவேல்** *(LEMUEL)*

காண்க. இலமுவேல் - I:754.

**லெயுக்கியு** *(LEUCIUS)*

யோவானின் சீடராகவும், யோவானின் பணி என்ற திருமுறை சாராத நூலின் ஆசிரியராகவும் கருதப்படுபவர். 5-ஆம் நூற்றாண்டுக்குப்பின் பவுல், பேதுரு, அந்தி ரேயா, தோமா ஆகியோரின் பணிகள் என்ற நான்கு நூல்களை இவரே எழுதியதாகக் கருதப்பட்டது. மானிக்கேயர், திருமுறை அப்போஸ்தலர் பணி நூலுக்குப் பதிலாக இவரது நூல்களை ஏற்றுக்கொண்டனர். அலக்சாந்திரியாவின் கிளமந்தும், தெர்துல் லியனும் இருநூல்களைக் குறிப்பிடுகின்ற னர். இதுவும் இந்நூலில் காணப்படும் தோசேத்திய ஞானவாதக் கூறுகளும், இந் நூலை லெயுக்கியு இரண்டாம் நூற்றாண் டின் பிற்பகுதியில் எழுதியிருக்கக்கூடும் என்று சுட்டுகின்றன.

**லேயா** *(LEAH - காட்டுப் பசு)*

லேயா லாபானின் மகளும், ராகேலின் மூத்த சகோதரியும், யாக்கோபின் முதல் மனைவியுமாவாள். லாபான் யாக்கோபை ஏமாற்றி அழகு இல்லாத லேயாவை, ராகேலுக்குப் பதிலாக மணம் முடித்து வைத்தார் (ஆதி 29:15-30). லேயா ரூபன், சிமியோன், லேவி, யூதா (ஆதி 29:31-35), இசக்கார், செபுலோன் மற்றும் தீனா (30:14-24) ஆகியவர்களைப் பெற்றாள். லேயாவின் அடிமையான கில்பாவின் பிள்ளைகளான காத்து (30:9-11) மற்றும் ஆசேர் (30:12-13) ஆகியோரும் லேயாவின் மக்களாகவே கருதப்படுகின்றனர். லேயா வும் அவள் பிள்ளைகளும் யாக்கோபுடன் பாலஸ்தீனத்திற்குச் சென்றனர் (ஆதி 31). லேயா மம்பிரேயில் உள்ள மக்கபேலாக் குகையில் அடக்கம் செய்யப்பட்டதாகக் குருக்கள் பாரம்பரியம் கூறுகின்றது (49:11). லேயா குலத்தாரில் ரூபன், சிமியோன், யூதா கோத்திரத்தார் ஆகியோர் பாலஸ்தீனத் திற்குத் தெற்கே வாழ்ந்தனர். லேவி தனிக் கோத்திரமாகத் தோன்றவே இல்லை. யூதா கோத்திரம் இவை எல்லாவற்றையும் விடச் சிறந்திருந்தது. செபுலோனும், இசக்காரும் கலிலேயாவில் இருந்தனர்.

**லேவி** *(LEVI - சேர்க்கப்பட வேண்டியவர், நேர்ந்தளிக்கப்பட்டவர்)*

*1)* லேவி யாக்கோபுக்கும் லேயாவுக்கும் பிறந்த மூன்றாவது மகன் ஆவார். செக்கேமைத் தாக்கி, தன் சகோதரி தீனா வுக்குத் தீங்கிழைத்தவர்களைத் தன் சகோ தரர் சிமியோனுடன் சேர்ந்து பழிவாங்கிய தன் மூலம் (ஆதி34:25-31) யாக்கோபின் குடும்பத்திற்குக் கானானியரிடத்தில் கெட்ட பெயரை ஏற்படுத்துகிறார். யாக் கோபு ஆசீர் அளிக்கும்போது லேவியையும் அவன் சகோதரர் சிமியோனையும் ''முறை யற்ற போராட்டத்தின் கருவிகளெனக்'' கண்டிக்கிறார் (49:5-7). லேவி தன் சகோதரர் களுடன் எகிப்தில் குடியேறினார் (ஆதி 42:2). அங்கு அவர் தனது 137-ஆவது வயதில் இறந்தார் (யாத் 6:16).

இந்த லேவியின் மக்களே மோசேயின் சொற்படி பாலைவனத்தில் வழிதவறி நடந்த எபிரேயர்களையெல்லாம் கொன்று, பின்பு யாவேயின் பணிக்குத் தங்களையே முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவர் கள் (யாத் 32:25-29; உப 33:8-11).

பாரம்பரியப்படி கேர்சோன், கோகாத்து, மெராரி ஆகியோர் லேவியின் புதல்வர்களா வர். லேவியர்களின் மூன்று பிரிவின் மூதாதையராகக் கருதப்படுகின்றனர் லேவி யின் மக்களாகிய இவர்கள். மோசேயின் தாய் லேவிக்குப் பிறந்தவர் என்று கூறுவது அவளது மூதாதையரைக் குறிப்பதாகும்.

லேவியரின் கோத்திரம் இஸ்ராயேலின் மீட்பு வரலாற்றில் முக்கிய பங்கு வகிக் கிறது.

2. இவர் இயேசுவின் பெரிய கொள்ளுத் தாத்தா அல்லது தூரத்து உறவினராவார் (லூக் 3:24).

*3.* இயேசுவின் மூதாதையருள் ஒருவர் *(லூக் 3:29).*

*4.* முன்னாள் ஆயக்காரனும், அப்போஸ் தலருமான மத்தேயுவின் எபிரேயப் பெயர் *(மாற் 2:14; லூக் 5:27.29).* கப்பர்நாகுமில் இருந்த வரி வசூலிக்கும் லேவி இயேசுவைப் பின் தொடர்ந்தவர்களில் ஒருவர் *(மாற் 2:14).* லூக்கா இவரது இல்லத்திற்கு இயேசு விருந்தினராகச் சென் றார் என்கிறார். அதே நேரத்தில் மாற்கு இவரை அல்பேயுவின் மகன் என்று குறிப் பிடுகிறார். மத்தேயு ''லேவியை'' மத்தேயு என்றே அழைக்கிறார் *(மத் 9:9).* லேவி என்ற சொல் இயேசுவின் பன்னிரு சீடர் வரிசையில் எங்குமே காணப்படவில்லை.

**லேவியர்** (LEVITE )

இவர்கள் யாக்கோபு - லேயா ஆகியோ ருக்குப் பிறந்த மூன்றாம் மகன் லேவியின் வழித்தோன்றல்கள் ஆவர். லேவிக்குக் கேர் சோன், கோகாத்து, மெராரி என்ற மூன்று புதல்வர்கள் இருந்தனர். இதற்கேற்ப, லேவி யர்கள் கேர்சோனியர், கோகாத்தியர், மெரா ரியர்கள் என்று மூன்று பிரிவினராகப் பிரிக்கப்பட்டனர் *(யாத் 6:16-19; எண் 3:17-37; 1 நாள் 23:6-23).*

யாத்திரையின்போது, இஸ்ராயேலரின் தலைப்பேற்றாண்கள் அனைவருக்கும்மேல் தமக்குரிய உரிமையை யாவே அறிவித்தார் *(யாத் 13:2).* ஆனால், பாலைவனப் பயணத் தின்போது, தலப்பேற்றாண்களுக்குப் பதி லாக, லேவியின் இனம் தமது பணிக்கு அர்ப்பணிக்கப்படும் என்று யாவே தீர்மா னித்தார் *(எண் 3:12-13.41.45).* லேவியர் இனத்துக்குள் ஆரோனின் சந்ததியினர் குருக் களாக இருப்பர் *(யாத் 28:1).* மற்ற லேவியர் குருக்கள் அல்லர். இவர்கள் கூடார, ஆலய வழிபாட்டில் உதவிசெய்வர் *(எண் 18:1-7).* பொன் கன்றுக்குட்டி வழிபாட்டுக்குப்பின், லேவியர், மோசேயின் சொற்படி, கிளர்ச்சி யாளர்களைக் கொன்று தீர்த்தனர்; தாங்கள் யாவேயைச் சேர்ந்தவர்கள் என்று காட்டினர் *(யாத் 32:26-28).* வழிபாட்டில் உதவி செய்ய லேவியர் தேர்ந்தெடுக்கப்புட்டதற்கு அவர் களது பிரமாணிக்கமே காரணம் என்று இந்நிகழ்ச்சி காட்டுகிறது *(32:29).* லேவியர் அபிடேகம் செய்யப்படுதலை *எண் 8:5-22* என்ற பகுதி விவரிக்கிறது. இதில், இவர் கள் ஆரத்திப் பலியாக இறைவன் முன் நிறுத்தப்படுகின்றனர்.

கானானில் லேவியர்களுக்கென நாட்டின் எப்பகுதியும் உரிமைச் சொத்தாக அளிக்கப் படவில்லை. ஆகவே, இவர்கள் வாழ்க் கைக்கு ஆதரவாக எதையும் கொண்டிருக்க வில்லை. இவர்கள் மக்களிடமிருந்து அறு வடையிலும், விலங்குகளிலும் பத்தில் ஒரு பங்கைப் பெறுவர் *(லேவி 27:30-33; எண் 18:21.24).* இவற்றில் பத்தில் ஒரு பங்கை இவர்கள் குருக்களுக்கு அளிப்பர் *(18:26-27).* இஸ்ராயேலர் தங்களது பலி உணவில் பங்கு கொள்ள லேவியர்களை அழைப்பர் *(உப 12:12.18; 14:27.29; 16:11).*

லேவியர் ஐம்பது வயது வரை தங்கள் பணியை நிறைவேற்றலாம் *(எண் 4:3).* ஆனால், இவர்கள் தங்கள் பணியை இரு பது வயதில் *(1 நாள் 23:24.27; 2 நாள் 31:17; எஸ் 3:8),* இருபத்தைந்து வயதில் *(எண் 8:24),* முப்பது வயதில் *(எண் 4:3; 1 நாள் 23:3)* தொடங்கியதாகப் பலவாறு கூறப்பட்டுள்ளது. பாலைவனத்தில் இஸ்ரா யேலர் அலைந்து திரிந்தபோது, கூடாரத்திற் கும் அதைச் சார்ந்த பொருள்களுக்கும் இவர்கள் பொறுப்பாய் இருந்தனர் *(எண் 3:8.25-26.31.36-37; 4:15.25-26.31-32).* கூடார வழிபாட்டில் குருக்களுக்கு உதவி செய்தனர் *(18:2-4.6.23).* இக்கடமைகளைச் செய்வதற் காக, இவர்கள் போர்ப் பணியிலிருந்து விடுதலை பெற்றிருந்தனர் *(1:47-54).* மன்ன ராட்சிக் காலத்தில் லேவியர்களின் கடமை கள் மாறின *(1 நாள் 23:25-26).* ஆலயத்தைப் பாதுகாப்பதிலும், பலி ஒப்புக் கொடுத்தலி லும் இவர்கள் உதவி செய்ய வேண்டும் *(23:28-29.32);* மன்றாட்டு மற்றும் பலிகளின் போது குருக்களோடு நிற்க வேண்டும் *(23:30-31);* ஆலயக் கருவூலத்தைப் பாது காக்க வேண்டும் *(26:20-28; காண்க. 2 நாள் 8:15).* சிலர் அதிகாரிகளாகவும், நடுவர்களா கவும் *(1 நாள் 23:4;காண்க. 26:29-32),*

வாயில் காப்போராகவும் (23:5; காண்க. 16:38. 42; 26:1-19), இசைஞர்களாகவும் (23:5; காண்க. 16:41-42; 25; 2 நாள் 8:14) செயல்பட்டனர்.

சில சமயம், லேவியர் என்பது தலைமைப்பெயரைக் குறிக்காது, அலுவலர் பெயரையே குறித்தது. இதற்கு ஓர் எடுத்துக்காட்டு நீதி 17:7-இல் வரும் ''யூதா கோத்திரத்தைச் சேர்ந்த லேவியர்'' ஆவார். சீலோவின் குருக்களுக்கு உதவி செய்த (1 சாமு் 2:11) சாமுவேல் எப்பிராயிம் இனத்தைச் சேர்ந்தவர் ஆவார் என்பதையும் (1:1) இது விளக்கலாம். இஸ்ராயேல் முழுவதும் லேவியர் சிதறிக்கிடந்ததால் இது எதிர்பார்க்கத்தக்கதே.

**லேவியர் திருநூல்** (LEVITICUS, BOOK OF) காண்க. வழிபாட்டுத் திருநூல்.

**லேவியர் நகரங்கள்** (LEVITICAL CITIES)

நாற்பத்தெட்டு நகரங்களும், அவற்றைச் சேர்ந்த மேய்ச்சல் நிலங்களும் லேவியர்கள் வாழும் நிலங்களாக அவர்களுக்கு அளிக்கப்பட்டன. இஸ்ராயேலர் கானானுள் புகுமுன் இந்தக் கட்டளை அளிக்கப்பட்டது (எண் 35:2-8; காண்க. லேவி 25:32-34). ஆறு அடைக்கல நகர்களும் இந்த லேவியர் நகர்களுள் சேர்ந்தவையாகும் (எண் 35:6). இந்த நகர்கள் பிரிக்கப்பட்டு, கொடுக்கப்பட்ட நிகழ்ச்சி இருமுறை விவரிக்கப்படுகிறது (யோசு 21:1-42; 1 நாள் 6:54-81). ஆனால், இரண்டு பட்டியல்களிலும் வேறுபாடு காணப்படுகிறது.

லேவியர்களுக்கு நகரங்கள் அளிக்கப்படுவதற்கும் கானானில் லேவியர்களுக்கு உரிமைச் சொத்து இல்லை என்பதற்கும் இடையில் முரண்பாடு இருப்பதாகச் சிலர் கருதுகின்றனர். அவர்களுக்கு உரிமைச் சொத்துக் கொடுக்கப்படாததால் அவர்களுக்குத் தசமபாக வரி கொடுக்கப்பட வேண்டும் (எண் 18:20.24; உப 10:9; யோசு 13:4). மேலும், மற்ற இஸ்ராயேலரின் பல நகரங்களில் லேவியர் வாழ்ந்தனர். ஆகவே, பலியுணவில் பங்கு கொள்ள அவர்கள் அழைக்கப்பட வேண்டும் (உப 12:12.18; 14:27.29; 16:11). மத்திய வழிபாட்டு இடத்தில் நடக்கும் வழிபாட்டிலும் அத்துடன் வரும் உணவிலும், லேவியருக்கு இடம் உறுதிப்படுத்தப்பட்டது (18:6-8). உப 14:29; 16:11-இல் லேவியர்கள் ''அன்னியர், அனாதைகள், மற்றும் கைம்பெண்களோடு'' கருதப்படுகின்றனர்.

இப்பிரச்சனை பின்வருமாறு விளக்கப்படுகிறது. 1) லேவியர் நகர் என்ற அளவில் எந்த நகரமும் இருக்கவில்லை. நிகழ்ச்சியுரைகள், லேவியர் இனம் சிதறிக் கிடந்த நிலைக்குக் கருத்தியலான முறையில் இரு விளக்கங்களைத் தருகின்றன. 2) தாவீது நாட்டை மாற்றி அமைத்தலைச் சேர்ந்தவையாகும் லேவியர் நகரங்கள் (காண்க. 1 நாள் 13:2; 2 நாள் 11:14; 31:15.19). உரிமைச் சொத்துடைமையின்மை மற்ற இனத்தவர்களுக்கு உரிமையாக இருந்ததுபோல், நாட்டில் ஒன்றிணைந்த பகுதியின்மையாகும். ஒருவேளை லேவியர் நகர்கள் அவர்களின் தடையற்ற உடைமையாக இல்லாதிருந்திருக்கலாம். அல்லது இந்நகரங்கள் லேவியர்களின் தேவைகளை நிறைவு செய்யப் போதியதில்லாதிருக்கலாம். இதுவே மற்ற இஸ்ராயேலர்களிடையே லேவியர்கள் வாழ்ந்ததையும், அவர்கள் அன்னியர்களாகவும் ஊர் சுற்றித் திரிபவர்களாகவும் வாழ்ந்ததையும் விளக்கலாம் (காண்க. நீதி19:1).

**லேவிரேட்டுத் திருமணம்** (LEVIRATE MARRIAGE)

சகோதரர்கள் கூடிவாழும்போது, ஒருவன் ஆண் சந்ததியின்றி இறந்தால், அவனுக்கு அடுத்த சகோதரன் அவனது கைம்பெண்ணை மணக்க வேண்டும். இந்தத் திருமணத்தால் பிறக்கும் முதல் மகன் இறந்தவனின் சந்ததியாகக் கருதப்படுவான் (உப 25:5-10). முதல் கணவனின் உடன்பிறந்தானை ''லேவீர்'' (Levir) என்ற இலத்தீன் சொல் குறித்தது. ஆகவே, இந்தக் ''கணவன் உடன்பிறந்தான் திருமணம்'' என்ற வழக்கு ''லேவீரேட்டுத் திருமணம்'' (Levirate Marriage) என்றழைக்கப்பட்டது.

**லோ-அம்மி** (LO-AMMI)

இறைவனின் கட்டளைப்படி, விலை மகள் கோமேர் வழியாக இறைவாக்கினர் ஓசேக்குப் பிறந்த மூன்றாவது குழந்தையும், இரண்டாவது மகனுமான இவருக்கு ''என் மக்கள் அல்லர்'' என்று பொருள்படும் இப்பெயர் இடப்பட்டது. இஃது இஸ்ராயேலை இறைவன் உறுதியாக நிராகரித்ததை உணர்த்திற்று.

**''லோதபார்''** (LO-DEBAR)

யோர்தானுக்கு அப்பால் வடபகுதியிலுள்ள ஒரு நகர். ஒருவேளை தெபீர் 2-ஆக இருக்கலாம். யார்முக்குக்குத் தெற்கில், யோர்தானின் உபநதியாகிய வாடி அரபுக்குத் தெற்கிலுள்ள உம் எத்-தெபார் ஆக அடையாளம் காட்டலாம். லோதபாரின் மாக்கிர் யோனத்தானின் மகன் பெரிபொசேத்துக்கும் (2 சாமு 9:3-5), தாவீதுக்கும் (17:27-29) உதவி செய்தார். காத்துவின் எல்லையில் உள்ள இடமாக யோசு 13:26-இல் குறிப்பிடப்படும் கிலிதெபீர் என்ற இடமும் இதுவும் ஒன்றையே குறிக்கலாம். ஆமோ 6:13-இல் வரும் லோதபார் இவ்விடத்தையே குறிக்கலாம். இவ்விடத்தை, இரண்டாம் எரொபவாம் காலத்தில் அரமேயர்களிடமிருந்து இஸ்ராயேலர் கைப்பற்றினார்.

**லோது** (LOD)

காண்க. உலோது - II :114.

**லோத்தான்** (LOTAN)

காண்க. உலோத்தான் - II:115.

**லோத்து** (LOT)

லோத்து ஆரானின் மகனும், ஆபிரகாமின் சகோதரர் மகனும் ஆவார் (ஆதி 11:27.31). லோத்தின் வாழ்க்கைக் கதைகள் ஆபிரகாமின் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன. லோத்து ''ஊரில்'' பிறந்தவர். தன் பாட்டன் தேராகுவோடு காரனுக்குச் சென்றார். பின்பு, லோத்து கானானுக்கு ஆபிரகாமுடன் சென்றார் (12:4-5). அங்கு இருவரும் இரு பெரிய ஆயர் குலத்தவர்களுக்குத் தலைவர்களாகத் திகழ்ந்தனர். ஆபிரகாமின் ஆடுமேய்க்கும் ஊழியர்கட்கும், லோத்தின் ஊழியர்கட்கும் ஏற்பட்ட சச்சரவினால் லோத்து அவரைப் பிரிந்து சோதோமுக் கருகில் குடியேறினார் (13:5-13). மெசபொத்தாமிய அரசனால் சிறைசெய்யப்பட்ட லோத்து ஆபிரகாமால் விடுவிக்கப்பட்டார் (14:12-16). வானதூதருக்கு விருந்தளித்துக் காத்ததால் லோத்து குடும்பம் சோதோமின் அழிவினின்று காக்கப்பட்டது (19:1-26). லோத்து ஒரு குகையில் தனித்து வாழ்ந்த பொழுது அங்கு ஆடவர் வேறு எவருமில்லையாதலால் அவரது பெண்மக்கள் இருவரும் தங்கள் குடும்பத்தை அழிவிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு அவருக்கு மகன்களைப் பெற்றெடுத்தனர். இவர்களே மோவாபியர், அம்மோனியர்களின் மூதாதையர். 'மோவாபு' என்பதற்குத் தந்தையினின்று வந்தவன் என்பதும், 'அம்மோன்' என்பதற்கு என் உறவினனின் மகன் என்பதும் பொருளாகும். இவர்களிருவரும் லோத்தின் மகன்களென அழைக்கப்படுகின்றனர் (உப 2:9.19; சங் 83:9). எனவே தான், இவர்களை இஸ்ராயேலர் தாக்கக் கூடாது எனும் ஒரு கொள்கையைக் கொண்டிருந்தனர். ஆனால், இவர்கள் இஸ்ராயேலின் வருங்கால எதிரிகளாய் இருப்பர் (சங் 83:6-8). லோத்து பற்றிய கதைகள் பல அன்றைய நாட்டுப்புற இலக்கியங்களினின்று எடுக்கப்பட்டவையாக இருக்கலாம். பலருக்கு லோத்தைவிட, உப்புச் சிலையான அவரது மனைவியைப் பற்றியே அதிகம் தெரியும்.

''லோத்தின் காலத்தில்'' (லூக் 17:28-30) என்ற தொடர் திடீரென்று வரும் முழுமையான தீர்ப்பைக் குறிக்கும் பழமொழியாயிற்று. லோத்தின் அயலார் மன்னிக்கப்படாத பாவிகளுக்கு எடுத்துக் காட்டாயினர் (சீரா 16:6; ஞான 10:7-8). லோத்தின் மனைவி உறுதியின்மைக்கும் (லூக் 17:31-32), அவிசுவாசத்திற்கும் (ஞான 10:7) எடுத்துக்காட்டாவாள், லோத்து நீதிமானாகக் காட்டப்படுகிறார் (2 பேதுரு 2:7; ஞான 10:6).

**லோயி** (LOIS)

காண்க. உலோய் - II:115.

**லோருகாமா** (LO-RUHAMAH)

காண்க. அன்பு பெறாதவள் - I:362.

# வ

## வங்கி, வட்டிக்கடை (BANK)

பன்னாட்டு வாணிபங்கள் வளர்ச்சி அடைந்து கொண்டிருந்த நிலையில் பணத்தை மாற்றவும், புழக்கத்திற்கு விடவும் வங்கி அமைப்பு முறை அவசியமாயிற்று. பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வங்கியின் நடவடிக்கைகள் நிலச்சொந்தக்காரர்கள், வணிகர்கள், வியாபாரிகள் ஆகியவர்களால் செய்யப்பட்டு வந்தன. வங்கி அமைப்பு முறை ஒரு தொழிலாக கிரேக்கர்களின் காலத்திற்கு முன்பு இருக்கவில்லை. வங்கி என்ற சொல்லுக்குக் கிரேக்கத்தில் ''மேசையில் எண்ணுபவர்'' என்று பொருள். மத் 25:27; லூக் 19:23-இல் இது வட்டிக்கடை என்று கூறப்படுகிறது. நாணயங்கள் மாற்றுவது வங்கி நடவடிக்கைகளில் ஒன்றாகும். மிகவும் நுணுக்கமான தந்திரமான முறைகளில் நாணயம் மாற்றவும் ஆட்கள் இருந்தனர்.

## வசம்பு, கன்னல் (CALAMUS)

நறுமண வசம்பினால் (புல்லால்) செய்யப்பட்ட ஒரு வாணிகப் பொருள் (யாத் 30:23; உ.ச.4:14; எசே 27:19). இஃது அனேகமாக இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டிருக்கலாம்.

## வசனம் (VERSE)

நவீன காலப்பதிப்புகளில் விவிலிய நூல்கள் வசனங்கள், அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஆனால், இவை மூலநூல்களில் காணப்படவில்லை. இத்தகைய பிரிவுகள் கிறிஸ்தவ காலத்தொடக்கத்திலேயே எபிரேய விவிலியத்தில் புகுத்தப்பட்டு, கி.பி. 900-இல் இக்கால வடிவப்படி நிலைப்படுத்தப்பட்டன.

ஓரத்தில் வசனங்களோடு அச்சிடப்பட்ட முதல் விவிலியம் கி.பி. 1528-இல் தோன்றியது. இதை ராபர் எஸ்தியேன் (ஸ்தேவானுஸ்) என்பவர் இப்போது இருப்பதிலிருந்து வேறுபட்ட பிரிவுகளைக் கொண்ட கிரேக்கப் புதிய ஏற்பாட்டை 1551-இல் பதிப்பித்தார். அவர் 1555-இல் பதிப்பித்த இலத்தீன் விவிலியம்தான் இரண்டு ஏற்பாடுகளின் வசனங்கள், அதிகாரங்கள் கொண்ட பிரிவுகளுடன் அமைந்த முதல் பதிப்பாகும். இஃது ஆங்கிலமொழியில் செனிவா விவிலியத்தில் (1560) பின்பற்றப்பட்டது. அதற்குப் பின் வந்த பதிப்புகள் இதையே பின்பற்றின.

வசனப்பிரிவுகள் விவிலியத்தின் குறிப்பிட்ட பகுதிகளைக் கண்டுபிடிக்க உதவுகின்றன. தொடக்கப் பதிப்புகளில் ஒவ்வொரு வசனமும் குறிக்கப்பட்ட முதல் வரியுடன் பதிப்பிக்கப்பட்டு ஒவ்வொன்றும் தனிப்பத்தியாகத் தோன்றியது. இஃது ஒவ்வொரு வசனமும், வாசகச் சூழ்நிலையினின்று தனித்து விளக்கம் அளிக்க வாய்ப்பளித்தது. ஆனால், அந்த ஒரு பத்தியின் அல்லது பகுதியின் பொருளைப் புரிந்து கொள்வது கடினமாயிற்று. ஆகவே, பல மொழி பெயர்ப்புகள் வசன எண்ணை ஓரத்தில் அச்சிடுகின்றன. மற்றவை இதையொத்த காரணத்திற்காக, வாசகத்திற்குள்ளேயே வசன எண்ணைப் பதிப்பிக்கின்றன; ஆனால், ஒவ்வொரு பத்தியின் முதல் வரியில் மட்டும் குறிப்பிடுகின்றன.

## வஸ்தி (VASHTI - அழகுள்ளவள், அன்பு செய்யப்பட்டவர்)

எஸ்தர் நூலின்படி இவள் அகசுவேர் மன்னனின் மனைவி (எஸ்த 1:9-22) ஆவாள். விருந்தின் 7-ஆம் நாள் அரசி வஸ்தியின் அழகை விருந்தினருக்குக் காட்ட விரும்பி அகசுவேர் அவளை வரச் சொல்லி அனுப்பினான். அவள் வர மறுக்கவே, அரசன் அவளை அரசி பதவியிலிருந்து நீக்கி விட்டான் (1:22). இவள் அகற்றப்பட்டதால் எஸ்தர் புதிய அரசியானாள்.

இந்தப் பகுதியின் வரலாற்று உண்மை கேள்விக்குரியதாகும். இந்தப் பகுதி அனேகமாக, எஸ்தரை இந்த நூலில் நுழைப்பதற்காகச் சேர்க்கப்பட்ட ஒரு கதையாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**வஞ்சப்புகழ்ச்சியும் வசையுரையும்** (IRONY AND SATIRE)

I. வஞ்சப்புகழ்ச்சி ஒரு வகை இலக்கிய அணியாகும். இது நகைச்சுவை, கேலி செய்தல் மென்மையான வசை ஆகிய வற்றைப் பயன்படுத்தும் பேச்சு முறையா கும். சொற்பொருள் குறிப்பதற்கு எதிர் மறையான பொருளை உணர்த்துவது இவ் வணியின் நோக்கமாகும். வசை கவியுரை ஓர் இலக்கிய மரபு. இது மனித, தனிநபரின் தீயொழுக்கம், மடமை, சீர்கேடு அல்லது எவ்வகைக் குறையையும் வெறுக்கத்தக்க வையாகும் என்று கேலி செய்தல், ஏளனம் செய்தல், கிண்டல், நையாண்டி செய்தல், மற்றும் முன்னுக்குப்பின் முரணானதைச் சுட்டிக்காட்டும் எந்த முறையையும் பயன் படுத்தி எடுத்துக் கூறுவதாகும். இதன் நோக்கம் ஒருவரைத் திருத்துவதாகும். பொதுவாக, வஞ்சப் புகழ்ச்சியும் வசை யுரையும் ஒழுக்க மற்றும் கட்டுப்பாட்டு நோக்குடையது. இதில் இவை நகைச்சுவை யிலிருந்து வேறுபடுகின்றன. ரேனால்டு நாக்சு என்பவர் வஞ்சப் புகழ்ச்சியையும் வசையுரையையும் பின்வருமாறு வேறு படுத்துகிறார். அவரது கருத்துப்படி வஞ்சப் புகழ்ச்சி, ஒருவரை அவர் இருக்கும் விதத்தி லேயே, அவருடைய மதிப்பீட்டின்படியே விவரித்துப் பின், நமட்டுச் சிரிப்பு சிரிப்ப தாகும். வசையுரை மனிதனின் பிடிவாத மான, மீண்டும் மீண்டும் நிகழ்கிற மட மைக்குக் கசையடி கொடுப்பதாகும்.

II. **வஞ்சப்புகழ்ச்சி:** விவியத்தில் வஞ்சப் புகழ்ச்சி பற்றி ஏராளமான எடுத்துக்காட்டு கள் இருக்கின்றன. பழைய ஏற்பாட்டி லிருந்து குறிப்பிடத்தக்கவை: மனிதன் கட வுளுக்கு இணையாக இருக்க முடியும் என்று கேலியாகக் கூறுதல் (*ஆதி 3:5.22; 11:6*); சீசரா திரும்பத் தவறியதற்குக் கூறப் படும் போலிக் காரணம் (*நீதி 5:28-30*); ''நீர் எனக்கு அன்பு காட்டாமல் வெறுப் பையே காட்டுகின்றீர்'' (*நீதி14:16*); தெலீலா விடம் சிம்சோன் கூறும் பச்சைப்பொய் (*நீதி 16:7.11.13*); ''உயிரோடிருக்கும் குழந் தையை இரண்டாக வெட்டி விடு'' என்ற சாலமோனின் கட்டளை (*1 அர 3:25*); எலியா பாகாலின் தீர்க்கதரிசிகளை வசைச் சொற்களால் பழித்துக் கூறுதல் (*18:27*); மீக்காயா ஆகாபுக்கு அளிக்கும் கேலிப் பதில் (*22:15*); யோபு தன் நண்பர்களுக்கு அளிக்கும் கசப்பான பதில் (*யோபு 12:2*); கடவுள் யோபுவுக்கு அளிக்கும் சவால் (*யோபு 40:10-14; காண்க. ஆதி 3:5*); இறைவனைப் பற்றிய தவறான கருத்துகள் (*சங் 2:3-4; 83:3-4*); அரசனுக்கு ஏற்படுகின்ற வீழ்ச்சி (*எசா 14:9-17; 23:4.16; எசே 28:2*); ஏமாற்றப்பட்ட எப்பிராயிம் (*ஓசே 6:1-3*); ''யூதாவுக்கன்று, கானானுக்குப் பிறந்தவன் நீ'' (*தானி 13:56*).

புதிய ஏற்பாட்டில்: ''எனக்கு உங்களைத் தெரியாது'' (*மத் 25:12; காண்க. 7:23; லூக் 13:25-27*); விதைக்காத இடத்தில் அறுக்கிற வர் தூவாத இடத்தில் விளைச்சலைச் சேர்ப்பவர் (*மத் 25:26*); இயேசு யூதாசுக்கும் (நண்பா!) கூட்டத்திற்கும் அளித்த பதில் (*மத் 26:50.55*); கூட்டத்தின் கேலிச்சொல் (*மத் 26:68; 27:40-43.49; யோவா 19:3*); நாசரேத்தூரிலிருந்து நல்லது எதுவும் வர முடியுமோ? (*யோவா 1:46*); ''உங்களுள் பாவமில்லாதவன் முதலில் அவள்மேல் கல் எறியட்டும்'' (*8:7*). ''ஒருவேளை நீங்களும் அவருடைய சீடர்களாக விரும்புகிறீர்களா?'' (*9:27*); இயேசு பேதுருவுக்கு அளித்த பதில் (*13:38*); பிலாத்து இயேசுவுக்கு அரசன் என்ற பட்டம் அளித்தல்; ''நாசரேத்தூர் இயேசு யூதரின் அரசன்'' (*19:14-15.19*); ''உண்டு குடிக்க உங்களுக்கு வீடு இல் லையா? அல்லது இல்லாதவர்களை நாணச் செய்து, கடவுளின் சபையை இழிவுபடுத்து கிறீர்களா என்ன சொல்வது? உங்களைப் புகழ்வதா?'' (*1 கொரி11:22*); ''சுகமாகப் போய் வாருங்கள்; குளிர் காய்ந்து கொள் ளுங்கள்; பசியாற்றிக் கொள்ளுங்கள்'' (*யாக் 2:16*).

III. **வசைகவியுரை:** இது வஞ்சப்புகழ்ச் சியை விட நீண்ட விதத்தில் எடுத்துக் கூறப்படுகிறது. உண்மையாக இது வஞ்சப் புகழ்ச்சி, பழிச்சொல், நிந்தை, பரிகாசம், நையாண்டி போன்றவற்றைப் பயன்படுத்த

லாம். எப்படியிருந்தாலும், நிந்தை மட்டும் வசைகவியுரை அன்று என்பதை நினைவில் கொள்ள வேண்டும். வசைகவியுரை மென்மையான நகைச்சுவையைக் காட்ட வேண்டும்; இருந்தாலும், பரவலாக உள்ள தீமை அல்லது மடமையைச் சீர்திருத்தும் நோக்கத்தை முக்கியமாகக் கொண்டிருக்க வேண்டும். இதற்கு விவிலியத்திலுள்ள எடுத்துக்காட்டுகள் ஊழல் சமூகத்தைப் பற்றிய இறைவாக்கினர்களின் கசப்பான குற்றங்கூறலாகும். விவிலியத்தை இனியதாகவும், எளியதாகவும் கருதும் வாசகர்களும் விளக்கவுரையாளர்களும் இந்த வசை கவியுரையின் பயங்கரத் தாக்கத்தைப் பெரும்பாலும் தவிர்க்கின்றனர் அல்லது ஒதுக்குகின்றனர். பொதுவாக, விவிலியத்தின் வசை கவியுரையின் அளவு பலருக்கு அனேகமாகத் தெரியாமலிருந்திருக்கிறது. வசைகவியுரைக்குச் சில சிறந்த எடுத்துக்காட்டுகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

பொதுவாக அரசாட்சியைப் பற்றிய, குறிப்பாக, சாலமோனின் ஆட்சி பற்றிய வசையுரை (*உப 17:14-20; 1 சாமு 8:10-12; காண்க. 1 அர 9:15-11:40*); அபிமெலக்கின் தீய செயல்களுக்கு எதிரான யோத்தாமின் கதை அல்லது உவமை (*நீதி 9:4-20*). இஃது இலக்கிய நடையிலும் வடிவிலும் அரசாட்சி முறைக்கு எதிராக உள்ளது.

யோபு நூல், வசைகவியுரை உள்ளிட்ட பலவ்கை அடங்கிய உன்னதமான இலக்கியமாகும். வாக்குவாதத்தில் யோபுவினுடைய முழு முயற்சி தனிப்பட்ட பாதுகாப்பை மட்டும் உணர்த்துவதில்லை. பாரம்பரிய சமயக்கருத்துகளை, குறிப்பாக முழுமையான மற்றும் துல்லியமான வினைப்பயன் கோட்பாட்டை வசைபாடுகிறது. மறுபுறம் ''ஞானத்தின் மேன்மை'' பற்றிய பகுதியும் (*யோபு 28*), ஆண்டவருடைய உரைகளும் (*யோபு 38-41*) ஒருவகை வசையுரைகளே.

வசையுரையுடைய மற்றொரு நூல் திருவுரையாளர் நூலாகும். இந்நூலும் பாரம்பரிய கருத்துக்களைத் தாக்கித் தெளிவுபடுத்துகிறது. ''வீண், முற்றிலும் வீண், எல்லாமே வீண்!'' (*திருவுரை 1:2; 12:8*), ''செத்துப்போன சிங்கத்தை விட, உயிருள்ள நாயே மேல்'' (*9:4*) போன்ற ஏளனக் கூற்றுகளைக் காணலாம். இருந்தாலும், இதன் ஆசிரியர் யோபுவைப் போல், கடவுளை ஒரு பொழுதும் குறை சொல்லவில்லை. ஆசிரியர் இறைவனைப் பற்றிய மேலான கருத்தையும் வாழ்வு பற்றிய நலமான நோக்கையும் தேடுவதாகத் தெரிகிறது.

பழமொழி நூலில் ஒரு குறிப்பிட்ட அளவு வசைகவிகள் உள்ளன. இதற்குச் சில எடுத்துக்காட்டுகள்: தீமையான பெண்ணுக்குப் பலியானவன் (*பழ 5:1-20; 6:23-33; 7:4-27; 9:13-18* [பெண் இங்கே மடமையை உருவகப்படுத்துகிறாள்]; *22:14; 30:20; காண்க. சீரா 9:2-9*); சோம்பேறி மனிதன் (*பழ 6:6-11; 13:4; 18:9; 21:25; 22:13; 26:13-16; காண்க. சீரா 22:1-2*); குடிகாரன் (*பழ 20:1; 21:17; 23:19-21.29-35; காண்க. சீரா 31:25-30*). பேருண்டி (*23:1-3; காண்க. சீரா 31:12-24*); மூடன் (*10:8.14.23; 14:7.24; 15:5.7.14.21; 16:22; 17:7.10.12.16.21.24-25.28; 18:2.6-7; 21:20; 22:3.15; 26:3-12; 27:2; 29: 9.11.20*). இவற்றிற்கெல்லாம் முன்னுரையாக ஞானத்தைப் போற்றுதல் அமைந்துள்ளது (*1:20-2:22*) என்பது கவனிக்கத்தக்கது. ஞானம் கற்புடைய, அழகான பெண்ணாக ஆட்தன்மைப்படுத்தப்படுகிறது.

மேலே குறிப்பிட்டுள்ளவற்றிற்கு மேலாக, பழைய ஏற்பாட்டில் இறைவாக்கினர் நூல்களில் பொருள் பொதிந்த வசையுரைகள் உள்ளன. இவை இறைவாக்கினரின் சொந்த மக்களுக்கும், பண்பாட்டுக்கும் எதிராகக் கூறப்பட்டுள்ளன. வெளிநாட்டவர்களைக் குறைசொல்வது எளிதாகும். ஆனால், ஒருவருடைய சொந்தச் சமூகத்தில் நிலவும் தீமைகளைத் தாக்குவதற்கு அசாதாரணத் துணிச்சல் வேண்டும். இறைவாக்கினர் எலியாவின் கதை (*1 அர 18:16-46*); மீக்காயாவின் கதை (*22:5-38*).

ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு நூல் பெற்ற இறைவாக்கினர்கள் எபிரேயப் பகுதிகளின் நிலையைப் பற்றி வசைபாடுகின்றனர்,

வரவிருக்கும் அழிவைத் தவிர்ப்பதற்காக ஆமோசும், ஓசேயாவும் வட அரசு மக்களிடம் நேரடியாகவே பேசுகின்றனர். இந்தப் பின்னணியில்தான் ஆமோசு நூலை வாசிக்க வேண்டும். ஓசேயாவின் செய்தியும் இதையொத்ததே; ஆனால், மிகக் கசப்பானதாகும் *(ஓசே 2:2-13; 4.9; 11:12-13:16).*

எசாயாவும் மீக்காவும் கூட, யூதாவுக்குச் சாதகமாக, இஸ்ராயேலர்களுக்கு எதிராக வசை கூறினர் *(எசா 28:1-4; மீக் 1:6-8);* குறிப்பாக இஸ்ராயேலின் வீழ்ச்சிக்குப் பிறகு, அவர்களுடைய சொந்த நாட்டின் மேல், குறிப்பாக அதன் சுயநேர்மையை மிகக்கடுமையாகத் தாக்குகின்றனர் *(எசா 1:2-23; 3:13-26; 5:1-7.22.24; 28:7-22; 29:1-4; 30:8-17; 31:1-3; 32:9-14; மீக் 2:1-11; 3; காண்க. செப் 1:2-13).*

எரேமியாவும் எசேக்கியேலும் யூதேயாவிடம் அதன் வீழ்ச்சிக்கு முன்னால் இவ்வாறே பேசினர் [எரே *1:4-23:29 (3:14-18; 10:1-16.23-25; 12:14-17; 16:14.15.19-20; 17:19-27; 23:1-8* ஆகியவை தவிர்க்கப்பட வேண்டும்*); எசே 4-9; 11:1-12; 12:16; 20:45-24:14*].

இந்த இறைவாக்கினர்கள் அவர்களுடைய நாளில் காணப்பட்ட ஆட்சி முறையைக் குறை கூறினர். ஆகவே, இறைவாக்கினர் போதனையில் அரசாட்சிக்கு எதிரான வசையுரை தோன்றியிருக்கலாம். இறைவாக்கினர்கள் தங்களது சொந்த அரசர்கள், நகரங்களையும், மக்களின் சிலை வழிபாட்டையும், ஊழலையும் குறைகூறிக் கேலி செய்தனர்; வசை பாடினர். இதில் ஆமோஸ் அண்டை நாடுகளையும் சேர்த்துக் கொண்டார் *(ஆமோ 1:3-2:16).* எசாயா அசீரியா, பெலிஸ்தியா, தமஸ்கு, எகிப்து ஆகியவற்றுக்கு எதிராகவும் இறைவாக்கு உரைத்தார் *(எசா 10:12-15; 14:28-32; 17:1-3; 20).* எரேமியா எகிப்துக்கு எதிராக இறைவாக்குரைத்தார் *(எரே 44:30; 46:3-12).*

அன்னிய சிலைவழிபாட்டை நையாண்டி செய்யும்போது, எபிரேயர்களிடையே நிலவிய சிலைவழிபாடு கண்டனம் பெறுகிறது *(1 சாமு 5:1-7; காண்க. 1 அர 12:28-30; சங் 115:4-8;135: 15-18; எசா 44:9-20; 45:16; 46; காண்க. 57:3-13; எரே 10:1-16).*

தானியேல் நூலின் பெரும்பகுதி இத்தகைய வசையுரைப் போக்கைக் கொண்டுள்ளது. அதி. 1 அன்னியரின் ஞானத்தையும், சாப்பிடும் பழக்கத்தையும் நகைத்துக் கூறுகிறது. அதி. 2 - கல்தேயர்களின் அறியாமையையும், நாட்டையும், சிலைகளையும் நகைக்கிறது. அதி. 3-இல் மூன்று யூதர்கள் அரசனைக் கேலிக்குரியவனாக்குகின்றனர். அதி. 4 - ஒரு பெரிய அன்னிய அரசன் பைத்தியமாகத் திரிகிறான். அதி.5 - அன்னிய மந்திரவாதிகளின் தீய பழக்கங்கள், சிலைவழிபாடு, அறியாமை ஆகியவற்றை வசைபாடுகிறது. அதி 6 - வலிமை மிக்க அன்னிய அரசன் தாழ்த்தப் பெறுகிறான்.

யோனா நூல் மிகவும் வேறுபட்ட வசைகவியுரையை அளிக்கிறது. இது தொடக்க கால இறைவாக்கினர்களைப் பின்பற்றுவதாகத் தெரிகிறது. யூதித்து நூல் அன்னிய படை அதிகாரிகளின் இயலாமையை நகைக்கிறது. சாலமோனின் ஞானம் என்ற நூல் சிலைவழிபாட்டுக்கு எதிராக வசை கூறுகிறது *(ஞான 13:10-14:31; 15:7-16:1).* இப்படிக் கூறிக்கொண்டே போகலாம்.

புதிய ஏற்பாட்டில் முதன்மையான வசையுரை, நற்செய்திகளின் பரிசேயர், மறைநூல் வல்லுநர்களுக்கும், அவர்களுடைய போலித்தனத்திற்கும் எதிராகக் கூறப்படுகிறது *(மத் 23; லூக் 11:39-54; மாற் 2:16-17; லூக் 5:30-35; 6:7-11; 15:1-10);* பவுல் யூதமயமாக்குபவர்களைத் தாக்குகிறார் *(பிலி 3:2.19);* யாக்கோபு பணக்காரர்களுக்குக் கசையடி கொடுக்கிறார் *(யாக் 5:1-6;காண்க. மாற் 10:25).* இறுதியாக, திருவெளிப்பாட்டில் உரோமைக்கு எதிராகக் கூறப்படும் புகழ்பெற்ற வசையுரை வருகிறது *(திரு வெளி 13; 14:8; 16:18-19:3; 19:17-21).* அந்நகரும் அதன் கூட்டாளிகளும் அழிகின்றனர். அவற்றின்மேல் ஆசிரியர் தனது கசப்பான எள்ளி நகையாடுதலையும் வசையுரையையும் பொழிகிறார்.

**வடக்கிலிருந்து வரும் படை** (NORTHERNER)

யோவேல் *2:20*-இல் இச்சொற்கள் பெரும்பாலும் வெட்டுக் கிளியின் படையைக் குறிக்கின்றது. இது வழக்கத்திற்கு மாறாக, வடக்கிலிருந்து எருசலேமுக்குப் படையெடுத்தது. ஆண்டவர் கோதுமையும், திராட்சைரசமும், எண்ணெயும் அடங்கிய நிலச்செழிப்பைக் கொடுப்பதாக வாக்களித்திருந்தார். அஃதோடு வெட்டுக்கிளி வாதனையையும் நீக்குவதாகவும், அது விளைவித்த நிந்தையையும் பொருளாதாரத் துன்பத்தையும் நீக்குவதாகவும் வாக்களித்திருந்தார் *(2:19)*. வடக்கிலிருந்து வந்த பெருங்காற்று (காண்க. யாத் *10:19*), சாக்கடலுக்கும் மத்தியதரைக்கடலுக்கும் இவ்வெட்டுக்கிளிகளை அடித்துச் சென்றிருக்க வேண்டும்.

வெட்டுக்கிளிப் படையைக் குறிக்க யோவேல் பயன்படுத்திய இச்சொற்றொடர் வடக்கிலிருந்த வந்த எதிரிகளைப் பற்றிய முந்தைய இறைவாக்குகளைப் *(எரே1:14; 13:20; எசே 38:6.15; 39:2)* பலருக்கு நினைவுபடுத்தியிருக்க வேண்டும். மேலும், இச்சொற்றொடர் பல புராணக்கதைகளோடு தொடர்புடையதுமாகும்.

**வடநாடுகள்** (NORTH COUNTRY, THE)

பாலஸ்தீன நாட்டின்மீது வடக்கிலிருந்து படையெடுத்து வரும் எந்த நாட்டிற்கும் இறைவாக்கினர் இட்ட பெயர் ''வடநாடுகள்'' என்பதாகும். பாலஸ்தீனம் பல நாடுகளை இணைக்கும் பாலமாக இருந்தது. மேற்கில் மத்திய தரைக்கடலையும், கிழக்கில் அரேபியாவிலுள்ள பாலைவனத்தையும் இணைத்தது. உலகநாடுகளின் நெடுஞ்சாலை ஒன்று தென்வடலாகச் சென்றது. எகிப்து தெற்கிலும், மற்ற நாடுகளும் (அசீரியா, பாபிலோனியா, சீரியா) பிற செமித்தியர் அல்லாத நாடுகளாகிய மேதியா, பாரசீகம், ஏலாம் ஆகிய அனைத்தும் பாலஸ்தீனத்துக்கு வடக்கிலும் இருந்தன *(எசா 4:25)*. எபிரேயர்கள் கடவுள்களின் மலை தொலைவான வடபுற எல்லையில் இருக்கின்றது என்ற கானானியக் கருத்தை ஏற்றுக் கொண்டனர் *(சங் 48:2-3; எசா 14:13-14)*; அதேபோல் தங்கள் கடவுளாகிய யாவே வடக்கிலிருந்து வருவதாக விசுவசித்தனர் *(யோபு 37:22; எசே 1:4)*. வடக்கிலிருந்து வரும் எதிரிகளின் படையெடுப்புப் பற்றிய இறைவாக்கினரின் தெளிவற்ற கூற்று, அதை இறைவனுடைய பழிவாங்குவோரின் படையென விளக்கப்பட்டிருக்கலாம். சாதாரணமாக, இவ்வாறு பகைவர்கள் அனுப்புவது யூதேயாவுக்கு எதிராகத்தான். சில நேரங்களில் இறைவனின் தூதர்கள் வடக்கிலிருந்து எகிப்திற்கு எதிராகவும் *(எரே 46:10.20.24)*, பெலிஸ்தியர்களுக்கு எதிராகவும் *(47:2)* அனுப்பப்பட்டார்கள்.

வல்லரசு நாடுகள் எபிரேய நாட்டைப் பயமுறுத்தும்போது, வடக்கிலிருந்து வரும் எதிரிகள் பற்றிய இறைவாக்கினரின் மறைமுகமான குறிப்பு மக்களால் எளிதாய் அடையாளம் கண்டுகொள்ளப்படும். சூழ்நிலையின் சரித்திர மற்றும் புவியியல் குறிப்புகள் வடநாட்டை அடையாளம் காண உதவி செய்கின்றன. சில நேரங்களில் இந்நாடு அசீரியாவும் யூப்பிரத்தீசு நதியையொட்டிய மெசபொத்தாமியாவின் மேற்கு மாநிலங்களுமாக *(எரே 46:10; 2:13)* இருக்கலாம். இப்பகுதிகளுக்குத்தான் சிறைப்பிடிக்கப்பட்ட இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்டனர் *(2 அர 17:6)*. அங்கிருந்து அவர்கள் மீண்டும் திரும்புவர்*(எரே 3:12.18; 16:15; 23:8; 31:8)*. மற்றக் காலங்களில் வடநாடு பாபிலோனியாவிலிருந்த கல்தேய அரசாக இருக்கலாம் *(எசே 26:7; செக் 2:6-7)*. அல்லது பாரசீக அரசாகவோ *(எசா 41:25;எரே 50:3.9.41)*, சீரியாவைச் சேர்ந்த செலூக்கிய அரசாகவோ இருக்கலாம் *(தானி 11:6தொ)*. இவைகள் எல்லாம் வடக்கு நாடுகளாகக் கருதப்பட்டன.

சில சமயங்களில் செமித்திய இனத்தைச் சேராதவர்களும் *(எசே 38:6)* வடநாட்டைச் சேர்ந்தவர்களென்று குறிப்பிடப்பட்டுள்ளனர். எரேமியா குறிப்பிட்டுள்ள வடக்கிலுள்ள எதிரிகள் எல்லாம் சித்தியர்கள் என்பது தவறானதாகும் என்று கருத இட

மிருக்கிறது. வடக்கிலுள்ள நாடோ, இனமோ பாபிலோனியர்களிடமிருந்து வேறுபடுத்தப்படும்போது (எரே 1:14-15; 25:9; 50:9.41), அவர்கள் பெரும்பாலும் வலிமை வாய்ந்த நாடுகளோடு ஒன்று சேர்ந்த கூலிப்படையினராகவோ, அவர்களைச் சார்ந்தவர்களாகவோ இருக்கின்றனர்.

**வடிகட்டுதல், தூய்மைப்படுத்துதல்** (REFINING)

நயமான நிலைக்குக் கொண்டு வருதல். உருவகமாகக் கூறவேண்டுமெனில் மாசு அகற்றுதல், தூய்மைப்படுத்துதல் என்பதாகும்.

எபிரேயத்தில் இருவேறு சொற்கள் இரு வேறு நிலைகளைக் குறிப்பதாக வருகிறது. முதல் சொல் மழை நீரை வடிகட்டுதல் (யோபு 36:27), இரசத்தை வடிகட்டித் தூய்மைப்படுத்துதல் (எசா 25:6) என்பனவற்றைக் குறிக்கின்றது. அதே நேரத்தில் உலோகத்தைத் திடநிலையிலிருந்து திரவ நிலைக்கு மாற்றி அதிலுள்ள மாசுகளை அகற்றி உலோகத்தை இன்னும் தூய்மையானதாக மாற்றுதல் பற்றிய குறிப்பையும் கொண்டுள்ளது (1 நாள் 28:18;29:4; யோபு 28:1; சங் 12:6). மற்றொரு சொல் உலோகக் கனிப்பொருள்களிலிருந்து உலோகத்தைப் பிரித்தெடுத்தலுக்குப் பயன்படுத்தப்படுகிறது (எசா 1:25; 48:10; எரே 6:29; 9:7; 2 சாமு 22:31; சங் 12:6).

தொடக்ககாலத்தில் உலோகத் தாதுக்களிலிருந்து உலோகங்களைப் பிரித்தெடுக்கும் ஒரே வழியாக அவற்றைக் குவித்து வைத்து நெருப்பு வைப்பதாக இருந்தது. பின்னர், உயரமான சூளைகளில் வைத்து எரியவிட்டுப் பின்னர் அடியிலிருந்து தூய்மையான உலோகத்தைப் பிரித்தெடுத்தனர். இரும்பு போன்ற உலோகங்களைப் பிரித்தெடுக்க அதிக வெப்பம் தேவைப்பட்டதால் அதற்கேற்ற சூளைகளும் தயாரிக்கப்பட்டன. இத்தகைய சூளைகள் இரவு நேரங்களில் எரிவதும், பின் பகல் நேரங்களில் புகை போவதுமாக இருந்ததால் இவை தூய்மைப்படுத்துவதின் அடையாளங்களாக (எசா 1:25-26; செக் 13:9; மலா 3:3), தீர்ப்பின் அடையாளங்களாகக் (எசா 1:22; எரே 6:27-30; எசே 22:17.22) கருதப்பட்டன.

தங்கள் நாட்டில் உலோகக் கனிப்பொருள்கள் கிடைக்காததால் விவிலியகால மக்கள் இறுதி நிலையில் உலோகத்தைத் தூய்மைப்படுத்தினர். சாலமோன் காலத்தில் இரும்பு, தாமிரம் போன்றவற்றைத் தூய்மைப்படுத்துவதில் இஸ்ராயேல் சிறப்புற்றிருந்தது.

**வட்டி** (INTEREST)

கடன் வாங்கியவர் தான் வாங்கிய பணத்தைப் பயன்படுத்துவதற்காகக் கொடுக்கும் பணமே வட்டி. வட்டி என்பதற்கு 'அதிகரித்தல்' எனும் ஒரு பொருளும், இன்று நாம் கூறும் அநியாய வட்டி எனும் பொருளும் உண்டு. ஆனால், அன்று இப்பொருளில் அதனைப் பயன்படுத்தவில்லை. ஆனால், வட்டி வாங்குவது தவறு என சட்டம் சுட்டிக் காட்டியதை அன்றைய மக்கள் உணர்ந்திருந்தனர்; அதுவும் இரக்கமற்ற முறையில் அளவுக்கதிகமாக வட்டி வாங்குவதைப் பெரிய பாவம் எனவும் அறிந்திருந்தனர் (லேவி 25:36-37; உப 23:19-20; எசே 18:8.13.17; 22:12; நெகே 5:6-13). மத்திய காலத்து இறையியலார் சிலர் கடனுக்கு வட்டி வாங்குவதை வன்மையாகக் கண்டித்தனர்.

**வணக்கம் தெரிவித்தல்** (OBEISANCE)

பழைய ஏற்பாட்டிலே இச்சொல்லானது வழிபாட்டைப் பற்றிக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது. தன்னைத் தாழ்த்தி, தெண்டனிட்டு வணங்கும் இந்தச் செயலுக்கு ஆராதனை, தன்னையே அர்ப்பணித்தல் என்று பொருள்.

புதிய ஏற்பாட்டிலே இச்சொல்லானது வழிபாட்டைக் குறிப்பதற்கு மட்டும் பயன்படுத்தப்பட்டது.

**வணிகர்** (MERCHANT, TRADER)

பாபிலோனியர்களும், அரமேயர்களும், கானானியர்களும், பெனிசியா நாட்டி

னரும், கிரேக்கரும் பெரும் வணிகர்களாய் இருந்தனர். விவிலிய காலத்தில் எபிரேயர்கள் பெரும் வணிகர்களாக இல்லை. எனவே, 'கானானியர்' என்ற சொல் 'வணிகர்' என்பதற்குப் பதிலாகப் பயன்படுத்தப் பட்டது *(பழ 31:24; ஓசே 12:7)*.

வணிகர் சில சமயங்களில் வீடு வீடாகச் சென்று பொருட்களை விற்பதுண்டு (நெகே *13:16)*. அவர்கள் விவசாயிகளின் வீடுகளுக்குச் சென்று வீட்டில் நெய்த துணிகளைக் கொள்முதல் செய்தனர் *(பழ 31:24)*; தங்கள் பொருட்களைப் பொது இடங்களுக்குக் கொண்டுவந்து கடை வைப்பார்கள்(நெகே *3:31; 13:19* தொ; காண்க. *1 அர 20:34)*.

அவர்கள் நீண்ட தூரம் பயணம் செய்வர் *(ஆதி 37:28)*; கடல் கடந்து செல்வர் (எசா *23:2)*; கூட்டாக வணிகம் செய்வர் (யோபு *41:6)*; ஆலயத்திலும் வியாபாரம் செய்வர் *(செக் 14:21)*. முக்கியமான, செல்வமிக்க வணிகர்கள் பலர் குறிக்கப்படுகின்றனர் *(எசா 47:15; எசே 17:4)*.

தந்தமும், தங்கமும் ஆப்பிரிக்காவிலிருந்தும், பட்டும் அம்பரும் ஆசியாவிலிருந்தும், சாம்பிராணி நறுமணப் பொருட்கள் அரேபியா, மற்றும் இந்தியாவிலிருந்தும் பெற்றுவர வணிகர்கள் நீண்ட பயணம் மேற்கொண்டனர். வேறு நாடுகளுக்குப் பயணம் செய்யும் வணிகர்கள் தங்க வணிகர் விடுதிகள் அமைக்கப்பட்டிருந்தன. சேமிக்கும் களஞ்சியங்கள் விவிலியத்தில் குறிப்பிடப்படுகின்றன *(ஆதி 41:49; 1 அர 10:28)*. சாலமோனின் ஆட்சிக்காலத்தில், இஸ்ராயேல் வணிகத்தில் வளர்ச்சியுற்றது *(1 அர 9:26-27;10:28)*. யாக்கோபின் புதல்வர்கள் எகிப்தில் வாணிகம் செய்தனர் *(ஆதி 43:11)*. பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டிருந்த போது யூதர்கள் பெரும் வணிகர்களானார்கள். அங்கிருந்து அவர்கள் செல்வந்தர்களாகத் திரும்பி வந்தனர் *(நெகே 5:1-13)*. எசா *23:8*-இல் வணிகர்கள் குறிக்கப்படுகிறார்கள். எருசலேமின் சுவர்களை மீண்டும் கட்ட வாணிபக் குழுக்கள் நெகேமியாவுக்கு உதவி செய்தன *(நெகே 3:8.31-32.)* மோசே சட்டங்களும், கமுராபியின் சட்டங்களும் எடைகளையும், அளவைகளையும் சரிபார்த்தன *(உப 25:14)*. ஒப்பந்தங்களை முடிவு செய்ய முத்திரைகள் இடப்பட்டன. ஏமாற்றுவதற்கு எதிராக சீராக்கு எச்சரிக்கிறார் *(சீரா 26:28; 37:12;42:5)*. கி.பி. *70*-இல் எருசலேம் உரோமையர்களால் அழிக்கப்பட்ட பின்னும் யூதர் பலர் வாணிபத் தொழில் செய்து வந்தனர்.

**வணிகர் குழு, பயணியர் குழு** (CARAVAN)

இஸ்ராயேலின் உள்நாட்டு வணிகர்கள் கழுதைகளைப் பயன்படுத்தி, பொருட்களை மாவட்டத்திலிருந்து மாவட்டத்திற்குக் கொண்டு சென்றனர். கி.மு. *1100*-ஐ ஒட்டி உபயோகத்திற்கு வந்த ஒட்டகமானது அதிக அளவு பொதுவாக உபயோகப்படுத்தப்படவில்லை. அப்படிப்பட்ட வணிகமானது நிலையற்ற அரசியல் சூழ்நிலைகளால் பாதிக்கப்பட்டிருக்கும் *(நீதி 5:6)*. பழைய ஏற்பாட்டில் சொல்லப் பட்டுள்ள ஏறக்குறைய எல்லா வகைக் கூட்டங்களும் யோர்தானுக்கு அப்பாலுள்ள நாடுகள், அரேபியா ஆகியவற்றுடன் தொடர்புடையனவாக இருந்தன. அரேபியா நாட்டு ஒட்டக வணிகக்கூட்டங்கள், இலாபம் தரும் வாசனைப்பொருட்களையும், நறுமணப்பொருட்களையும் முதன்மையாக வணிகம் செய்தார்கள். இந்தப் பொருட்கள் தெற்கு அரேபியாவிலுள்ள அத்ரமவுத்தியிலிருந்து வந்தன. இப்படிப்பட்ட வணிகர்கள் வடக்கிலிருந்து திம்னா, மரிபு வழியாகக் கியாசில் புகுந்து, காசா அல்லது தமஸ்குவுக்கும், பிற்காலத்தில் அதே வழியாக பெத்ரா, மற்றும் போஸ்தராவுக்கும் சென்றனர். சாபாவின் அரசர்கள் இந்த வியாபாரத்தில் இறங்கியிருந்தார்கள் *(1 அர 10:2)*. யோர்தானுக்கு அப்பால் உள்ளவர்கள் எகிப்தியருடன் வணிகம் செய்தார்கள் *(ஆதி 37:25)*. அரேபியர்கள், பாரசீகர்களுக்கு வருடத்திற்கு ஓராயிரம் தாலந்து விலை மதிப்புள்ள வெள்ளைப்போளத்தைக் கொடுத்தார்கள் என்று எரோதோத்து கூறு

கிறார். வாசனைப் பொருட்கள் தெற்கு அரேபியாவிலிருந்து காசாவிற்கு வருவதற்கு 65 நாட்கள் ஆயின என்று பிளினி கூறுகின்றார்.

**வண்டி** *(CART)*

எண் *7:3-8;* 2 சாமு *6:3*-இல் உள்ள 'தேர்' என்பது இரண்டு மாடுகளால் இழுக்கப்பட்ட ஒரு பளுவான நான்கு சக்கர வண்டியைக் குறிப்பிடுகின்றது. இந்த வண்டிகள் ஆட்களையும், பொருட்களையும் கொண்டு செல்லப் பயன்படுத்தப்பட்டிருந்திருக்கலாம் *(ஆதி 45:19.21.27;46:5;* யூதி *15:11).* இதே போன்ற பளுவான நான்கு சக்கர வண்டியைத்தான் திருவெளி *18:13*-இல் உள்ள 'தேர்' குறிப்பிடுகின்றது. எண் *7:3*-இல் உள்ள 'வண்டி' என்பதின் பொருள் தெளிவாக இல்லை. எசே *23:24; 26:10*-இல் உள்ள 'வண்டி' என்பது படையைச் சேர்ந்த *4* சக்கரவண்டியாக இருந்திருக்கும். சங் *46:9*-இல் உள்ளதும் இதையேதான் குறிக்கும்; இருப்பினும், ''தேர்'' என்ற பொருளையும் பெறலாம். ஒரு சக்கர வண்டியானது போரடிப்பதில் பயன்படுத்தப்பட்டது (எசா *28:27-28*). இதுவும், ஆமோ *2:3*-இல் உள்ள ''வைக்கோல் பொதி நிறைந்த வண்டியும்'' ஒன்றல்ல.

**வண்ணார், சலவைத் தொழிலாளி** *(FULLER)*

இவர் கம்பளி மற்றும் நூல் ஆடைகளைச் சுருங்கவும், தடிமனாகவும் பக்குவப்படுத்தும் சலவைத்தொழிலாளி ஆவார். இது துணிகளை அடித்து மிதித்துச் சவர்க்காரத்தால் நீரில் தேய்த்துத் தூய்மைப்படுத்துதலாகும் *(மலா 3:2)*. இறுதியில் வெயிலில் காயவைத்து வண்ணம் போக்கி வெள்ளையாக்கப்படும்.

பொதுவாக வண்ணான் கடை நீர்த்தேக்கத்துக்கு அருகிலும், நகருக்குப் புறத்திலும் அமைந்திருக்கும். அங்கு, துவைக்கவும் காயவைக்கவும் போதிய இடமிருக்கும். அங்கிருந்து வரும் வீச்சம் நகரைப் பாதிக்காதபடி போதிய தொலைவில் இருக்கும்.

ஆண்டவருடைய நாளுக்கான தயாரிப்பில் குருத்துவத்தைத் தூய்மைப்படுத்துவது வண்ணான் சுத்திகரிப்புக்கு ஒப்பிடப்படுகிறது *(மலா 3:2; காண்க. எரே 2:22).* இயேசு உருமாறியபோது, அவருடைய ஆடைகள் இவ்வுலகில் எந்தச் சலவைக்காரரும் வெளுக்க முடியாத அளவுக்குப் பளபளப்பாக வெண்மையாயின.

**வண்ணான் வயல், வண்ணான்துறை** *(FULLER'S FIELD)*

எருசலேமின் புறநகர்ப் பகுதியிலே மேற்குளத்துக்குப் போகும் கால்வாயின் அருகில் இந்த வண்ணான்வயல் அமைந்திருந்தது. எசாயா ஆகாசைச் சந்தித்த இடமும் (எசா *7:3*), எசேக்கியாவின் அதிகாரிகள் சனகெரிபின் படைத்தலைவர்கள் சந்தித்த இடமும் *(2 அர 18:17; எசா 36:2)* இதுவே. கீகோனிலிருந்து வரும் நீர்சேமித்து வைக்கப்பட்டிருக்கும் மேற்குளத்தோடு இந்த 'வண்ணான் வயல்' இணைக்கப்பட்டிருக்கிறது. பிர் ஆயூபு (ஏன் ரோகேல்), அல்லது தாவீது நகரின் தெற்கு எல்லையிலுள்ள பகுதியாக இஃது அடையாளம் காட்டப்படுகிறது. யோசிப்பசின் ''வண்ணான் சின்னம்'' ''வண்ணான் வயலை'' மன்னராட்சிக் காலத்திய எருசலேமின் வடக்குச் சுவருக்கு வெளியில் குறித்துக் காட்டுகிறது. ஆனால், இது சூழ்நிலையில் பொருத்தமாகத் தெரியவில்லை.

**வதைத்தல், வேதனைக்குள்ளாக்குதல்** *(TORTURE)*

எபி *11:35*-இல் காணப்படும் ''வதைக்கப்பட்டு'' என்ற சொல் ஒருவித தண்டனை அளிக்கும் முறையைக் குறிக்கிறது. பொதுவாக இஃது உடலை மிகவும் வருத்தக்கூடிய தண்டனையாகும். எப்படி இந்தத் தண்டனை நிறைவேற்றப்பட்டதென்பது, கேள்விக்குறியாகும். திருவெளி *9:5*-இதனை வேதனைக்குள்ளாக்குதல் என்று கூறுகிறது.

**வத்திக்கான் சுவடித்தொகுப்பு** (CODEX VATICANUS)

இது வத்திக்கான் நூல் நிலையத்தில் காணப்படும் ஒரு பழைய சுவடித்தொகுப்

பாகும். இதனை 'B' என்ற குறியெழுத்துக் கொடுத்து எழுதுவர். இது கி.பி. 4-ஆம் நூறாண்டின் முற்பகுதியில் எழுதப்பட்ட சுவடி. இது வேல்லும் என்ற தோலினால் ஆனது. இச்சுவடியில் முதலில் கிரேக்க மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட விவி லியம் முழுவதும் எழுதப்பட்டிருக்கிறது. இதில் புதிய ஏற்பாடும், பழைய ஏற்பாடும் அடங்கும். ஆனால், இத்தொகுப்பில் மனா சேயின் செபமும், மக்கபேயரின் இரு புத்தகங்களும் இடம் பெறவில்லை. இப் பழஞ் சுவடி, விவிலியத்தின் பழமைக்குச் சாட்சியம் கூறும் முக்கியமான தொகுப்பா கும். குறிப்பாக எழுபது நூலைப் பற்றி ஆராய இப்பழஞ் சுவடி பெரிதும் துணை செய்கிறது. இச்சுவடி காலப்போக்கில் பல சிதைவுகளுக்கு ஆளாகியிருக்கிறது. இத னால் கீழ்க்கண்ட பகுதிகளை இப்பழைய ஏட்டில் நாம் காண முடியவில்லை. *ஆதி1:1-46:28; 2சாமு 2:5-7. 10-13* என்ற வசனங்கள்; *சங்கீதங்கள் 106:27* முதல் *138:6* வரை; புதிய ஏற்பாட்டில் *எபி 9:14-13:25* வரை; மேய்ப்புப்பணி மடல்கள் என்ற திமொத்தேயுவுக்கு எழுதிய இரண்டு திரு முகங்களும், தீத்துவிற்கு எழுதப்பட்ட திரு முகம், திருவெளிப்பாடு, ஆகியவற்றின் அனைத்துப் பகுதிகளும் இப்பழஞ் சுவடியி லிருந்து சிதைந்து போய்விட்டன.

இச்சுவடி 759 தாள்களைத் தன்னுள் கொண்டிருக்கிறது. இதில் 617 தாள்களில் பழைய ஏற்பாடும், 142 தாள்களில் புதிய ஏற்பாடும் எழுதப்பட்டுள்ளன. ஆனால், இத்தொகுப்பு மொத்தம் 820 தாள்களில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்ற குறிப்பு இச்சுவடியில் மறைமுகமாகத் தெரிகிறது. இதில் பயன்படுத்தப்பட்டுள்ள தோலேடு கள் 26 செ.மீ. நீளம், 25 செ.மீ. அகலம் என்ற அளவில் அமைந்துள்ளன.

கவிதை நடையில் உள்ள விவிலியப் புத்தகங்கள், ஒரு பக்கத்தில் இரு பத்திகள் வீதம் எழுதப்பட்டுள்ளன. மற்றப் புத்தகங் கள், பக்கத்திற்கு மூன்று பத்திகள் வீதம் எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு பத்தியி லும் 40 முதல் 44 வரிகள் இடம் பெறுகின்றன. இது, பன்னிரு பாக எழுத் துக்கள் என்ற எழுத்து முறையில் எழுதப் பட்டுள்ளது. இத்தொகுப்பை இரண்டு எழுத்தாளர்கள் நகலெடுத்து எழுதியிருக்க வேண்டும் என்பது தெளிவாகத் தெரிகிறது.

இச்சுவடி ஆரம்பத்திலிருந்தே வத்திக் கான் நூல் நிலையத்தில் இருந்து வந்திருக் கிறது. ஆனால், 1475-இல் இந்நூல்நிலை யத்தில் உள்ளவைகளைப் பற்றி அட்ட வணை ஒன்று தயாரித்தபோதுதான், இதனைப் பற்றிய முழுவிபரமும், முக்கியத் துவமும் உலகிற்குத் தெரிய வந்தது. இஃது அலக்சாந்திரியாவில் எழுதப்பட்டிருக்கலாம்.

**வயல், நிலம்** *(FIELD)*

மக்கள் குடியிருக்காத நிலப்பரப்பாகும். இது விளைச்சலுக்கும் மேய்ச்சலுக்கும் பயன்பட்டது. நிலத்தின் புவியியலுக்கும், நிலச்சொந்தக்காரனுடைய சொத்துத் தகுதிக் கும் ஏற்ப, பரப்பிலும் விளைச்சல் தரத்தி லும் இது வேறுபட்டது; நகர் அல்லது கிராமத்தைச் சுற்றியிருந்தது *(காண்க.லேவி 25:31.34; எண் 16:14; யோசு 15:18; நீதி 1:14; யோசு 21:12)*. இது திறந்தவெளியாக இருக்கலாம் *(லேவி 14:53; 2 சாமு 11:11; எசே 29:5)*; அல்லது சுவர் சூழ்ந்த தோட்ட மாக இருக்கலாம் *(எண் 22:23-24; பழ 24:30-31)*. இது பயிர் செய்யப்பட்டதாகவும் *(யாத் 23:16; லேவி 26:4; சங் 107:37; யோவா 4:35)*, பயிர் செய்யப்படாத திறந்தவெளியா கவும் *(ஆதி 25:27; 2 சாமு 11:11; எசே 39:10)*, மேய்ச்சல் நிலமாகவும் பயன்பட லாம் *(எண் 22:4; உப 11:15; லூக் 15:15)*. இப்பகுதிகளில் வாழ்ந்த உயிரினங்கள் அடிக்கடி குறிக்கப்படுகின்றன *(2 சாமு 17:8; எரே 14:15; எசே 31:6)*.

உருவகமாக வயல் இறையரசின் விதை களை விதைக்க ஏற்ற செழிப்பான இடமாக *(மத் 13:24.27.31)* உலகம் முழுவதையும் குறிக்கிறது *(13:38)*. கொரிந்தியத் திருச்சபை ஆன்மீக வளர்ச்சிக்கு ஊட்டம் இடப்பட வேண்டிய நிலமாகச் சித்திரிக்கப்படுகிறது *(1 கொரி 2:9; 2 கொரி 10:15)*. இறையரசு உண்மையாக்கப்படுதலை ''அறுவடைக்குத்

தயாராய் உள்ள வயல்வெளியாக'' யோவான் விவரிக்கிறார் (யோவா 4:35).

**வயிசாத்தா** (VAIZATHA - வெட்ட வெளி மகன்)

யூதர்களால் கொல்லப்பட்ட ஆமானின் பத்துப் புதல்வர்களுள் ஒருவன் (எஸ்த 9:9). பாரசீக அரசிலிருந்த யூதர்கள் அனைவரையும் அழிக்க வேண்டும் என்ற ஆமானின் எண்ணம் தோல்வியுற்று, யூதர்கள் எதிர்த்தெழுந்தபொழுது இது நடந்தது.

**வரலாறு** (HISTORY)

பழங்கால முன்னோக்கில், வரலாறு என்பது கடந்த கால நிகழ்ச்சிகளும், சூழ்நிலைகளும் நினைவுகூரப்பட்டு வாய்மொழியாகவும், எழுத்து வடிவத்திலும் கையளிக்கப்படுவதாகும்.

விவிலியம் பெருமளவில் வரலாற்றுச் செய்திகளைக் கொண்டுள்ளது, இதில், ஆதி 1-11-இல் உள்ள உலகளாவிய நிகழ்ச்சிகளை உள்ளடக்கும் ''முதன்மை வரலாறு, குலமூதாதையரில் தொடங்கி, எகிப்தில் வாழ்ந்தது., விடுதலை பெற்றது, கானானில் குடியேறியது, அரசாட்சி, சமாரியா மற்றும் எருசலேமின் வீழ்ச்சிவரையுள்ள இஸ்ராயேலின் வரலாறு' (ஆதி 12-2 அர), அரசாட்சி, நாடு கடத்தலுக்குப் பின்வந்தவை பற்றிய நாளாகம விவரிப்புகள் (1, 2, நாளாகமங்கள், எஸ்ரா, நெகேமியா), மக்கபேயர் காலவரலாறு, இயேசுவின் வாழ்க்கை மற்றும் போதனைகள் அடங்கிய நான்கு நற்செய்திகள், அப்போஸ்தலர் பணிநூலில் வரும் தொடக்ககாலத் திருச்சபையின் வரலாறு ஆகியவை அடங்கும். மற்ற வரலாற்றுச் செய்திகள் இறைவாக்கினர் நூல்களிலும், ரூத்து, எஸ்தர், தானியேல் ஆகியவை உட்பட்ட நூல்கள் என்ற தொகுப்பிலும், ஒரு வேளை தோபித்து, யூதித்து ஆகிய நூல்களிலும் காணப்படலாம்.

தலைமுறைப் பட்டியல்கள், மக்கள் தொகைக் கணக்கெடுப்புகள், நாட்டைப் பங்கீடு செய்தல், நாளேடுகள், ஆட்சிக் குறிப்பேடுகள், இஸ்ராயேலின் தலைவர்கள், மக்கள் ஆகியவர்களின் போற்றிப் பாதுகாக்கப்பட்ட தீரச்செயல்கள் ஆகியவை உள்ளிட்ட வரலாற்றுச் செய்திகள், பெரும்பாலும் கதைவடிவில் பாதுகாக்கப் பட்டுள்ளன. இவை யாவும் சமய, போதகப் பின்னணியில் ஒன்றிணைக்கப்பட்டு, ''மீட்பு வரலாறாக'' மனித வரலாற்றில், குறிப்பாக இஸ்ராயேல் வரலாற்றில் இறைவனது செயல்களைப் பற்றிய விசுவாச அறிக்கையாகத் திகழ்கின்றன.

**வரி, வரிகள்** (TAX, TAXES)

வரிகள் ஆட்சிக்குத் தேவையானவற்றைக் கவனிக்க மக்களால் கொடுக்கப்படும் பங்காகும். பின்வரும் சொற்கள் 'வரியை'க் குறிக்கின்றன: ''அவரவர் நிலைக்கேற்ப வரி'' (2 அர 23:35), ''கட்டாய'' ஊழியம் (உப 20:11), 'திறை' (எஸ் 4:13), 'தீர்வை' (எஸ் 4:13), 'வரி' (மத் 22:17) முதலியன.

செழுமையான ஏழு ஆண்டுகளில், எல்லாப் பொருட்களிலும் ஐந்திலொரு பகுதி வரியாக எகிப்தில் பெறப்பட்டது. ஏறக்குறைய 20% எல்லாப் பொருட்களிலும் சேமித்து வைத்ததினால் அடுத்து வந்த பஞ்ச காலத்தில் எகிப்து தன் மக்களுக்கு உணவுக்கு வழி செய்ததோடு அண்டை நாடுகளுடனும் தன் சேமிப்பைப் பகிர்ந்து கொண்டது (ஆதி 41 : 25 - 42 : 5). இத்தகைய வரிகள் பார்வோன்கள் நாட்டை முழுவதும் ஆண்டதால்தான் பெறமுடிந்தது (ஆதி 41:44).

நீதிபதிகளின் காலத்தில் இராணுவமோ, அரண்மனையோ இஸ்ராயேலில் இல்லை (1 சாமு 8:10-18). ஒவ்வொரு மாதமும் பணிபுரிய, தாவீது மக்களிடமிருந்து வரி வசூலிக்காமல், 24,000 படை வீரர்களைக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது (1 நாள் 27:1). நாளடைவில், மன்னர்கள் செலுத்திய திறையாலும், போர்க் கொள்ளைப் பொருளாலும் தாவீதின் கருவூலம் விரிவடைந்தது (1 நாள் 27:25-31).

நாட்டிலிருந்து விரட்டப்படாத கானானியரிடமிருந்து இஸ்ராயேல் மக்கள் கட்டாய வேலை வாங்கினர் (யோசு 16:10; 17:13; நீதி 1:28). தாவீதும், சாலமோனும் அன்னி

யர்களை ஆலயத்தைக் கட்டும் பணிக்குக் கட்டாயப்படுத்தினர் (1 நாள் 22:2; 2 நாள் 2). மற்றும் கட்டுமான வேலைகளுக்கும் சாலமோன் அவர்களைக் கட்டாயப்படுத்தினார் (1 அர 9:20; 2 நாள் 8:7).

சாலமோன் காலத்தில் கட்டாய வேலை செய்ய இஸ்ராயேல் மக்களே கட்டாயப் படுத்தப்பட்டனர் (1 அர 5:13). அனேகமாக, சாலமோன் அரசர்தான் இஸ்ராயேலில் வரியை முதன் முதலில் கொண்டு வந்தவராக இருக்க வேண்டும். தாவீதின் காலத்தில் போர்க் கொள்ளைப் பொருளைக் கொண்டே வாழ்ந்த அரண்மனைக்குச் சாலமோன் ஆட்சியில் இன்னும் அதிகமாக பொருள் தேவைப்பட்டது. எனவே, இஸ்ராயேல் மக்கள்மீது வரி விதிக்கப்பட்டது. அரசருக்கும் அவரது அரண்மனைக்கும் வேண்டிய உணவுப் பொருட்களைச் சேகரித்துக் கொடுக்க நாடெங்கும் பன்னிரு கண்காணிப்பாளர்கள் சாலமோனுக்கு இருந்தனர். அவர்கள் ஆண்டு முழுவதற்கும் வேண்டியவற்றை எல்லாம் அனுப்பி வைத்தனர் (1 அர 4:7). தனக்கு உட்பட்டவர் அளிக்கும் திறைகளுக்கும், வணிகரிடமிருந்து பெறப்பட்ட வரிகளுக்கும் மேலாக மக்களிடமிருந்து வரி வசூலிக்கப்பட்டது (1 அர 10:14-29; 2 நாள் 9:13-28).

அரசு, எரொபவாமால் இரண்டாகப் பிரிக்கப்பட்டது, சாலமோன் விதித்த அதிகமான வரியின் காரணமாகத்தான் என்று கருதப்படுகிறது (1 அர 12). நாளாகமத்தின்படி யோசபாத்து வரிகளைப் பெற்றான் (2 நாள் 17:5). இறுதியாக, யூதா நாடுதான் அசீரியர்களுக்கும் (2 அர 18:13-16), எகிப்தியர்களுக்கும் (2 அர 23:33), பாபிலோனியர்களுக்கும் (2 அர 24-25) கப்பம் கட்டியது. எகிப்து நாட்டுப் பார்வோன் நெக்கோ விதித்த கட்டளைப்படி வரி செலுத்த, யோயாக்கிம் மக்கள் ஒவ்வொருவர் மேலும் வரி விதித்தான் (2 அர 23:35).

பாரசீகர்களின் காலத்தில் வரிச்சட்டம் உருவாக்கப்பட்டது. இந்த முறை எல்லாப் பாரசீக ஆட்சியிடங்களிலும் ஒரு பாரசீக ஆளுநரால் அமுலாக்கப்பட்டது. தாரியுவின் ஆணையின்படி இந்த ஆளுநர்கள் நாட்டின் கருவூலத்திற்கு ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்த வேண்டும். இந்தத் தொகையானது மக்களிடமிருந்து வரி, தீர்வை ஆகியவைகளாகப் பெறப்பட்டன (எஸ் 4:13). அர்த்தக்சஸ்தா குருக்கள், லேவியர், பாடகர், வாயிற்காவலர், ஆலய ஊழியர்கள் ஆகியவர்கள் மீது வரி விதிக்கவில்லை (எஸ் 7:24). அரசாங்க வரியில்லாமல், ஆளுநரின் தேவைக்காக மக்கள்மீது வரி விதிக்கப்பட்டது. இந்த வரியானது உணவாகவும், திராட்சைரசமாகவும், நாள் ஒன்றுக்கு 40 செக்கேல் அளவு வசூலிக்கப்பட்டது (நெகே 5:14-15). நெகேமியா தன் ஆளுகையில் ஆளுநர் வரி விதிக்கவில்லையென்றாலும், பஞ்ச காலத்தில், மக்கள் வாழ அவர்கள் நிலங்களையும், உடைமைகளையும் அடைமானம் வைக்க வேண்டியிருந்தது (நெகே 5:3-4; 9:37). இந்த வரிகளோடு புனித இடங்களைப் பாதுகாக்கவும், எருசலேமின் நகரச் சுவரை மீண்டும் கட்டவும் வேண்டிய பொறுப்பும் சேர்ந்து கொண்டது.

ஆனால், பிற்பாடு கிரேக்கர்கள் தோலமியர்கள் மற்றும் செலூக்கியர்கள் காலத்தில், அன்னிய நாட்டு அரசன் வரி விதிக்கவில்லை. மாறாக, வரி வசூலிக்கும் பணி அதிகமாகச் சேர்த்துக் கொடுக்க ஒத்துக் கொள்வோருக்கு அளிக்கப்பட்டது. ஆனால், இந்த வரிவசூலிக்கும் பணியில் அவர்களுக்கு இராணுவ உதவியும் அளிக்கப்பட்டது. செலூக்கிய அரசன் மூன்றாம் அந்தியோக்குவின் ஆட்சியில் (1 மக் 10:29-31; 11:34-35; 13:37-39), உப்புவரி, பொன்முடி வரி ஆகியவை இருந்தன. விளைச்சலில் 1/3 பகுதியும், பழங்களில் 1/2 பகுதியும் வரியாக வசூலிக்கப்பட்டன. ஆலயத்திற்கு 1/10 பகுதி வரியாகச் செலுத்தப்பட்டது.

பாம்பே கி.மு. 63-இல் எருசலேமைக் கைப்பற்றியபோது அவன் யூதர்கள்மேல் விதித்த வரி சுமார் 10,000 தாலந்தாகும். யூலியு சீசர் வரியைக் குறைத்ததோடு, 1/4 பகுதிக்கு மேல் விளைச்சலில் வரியாக வசூலிக்கக்கூடாது என்றும், ஓய்வு ஆண்டில் வரி வசூலிக்கக் கூடாதென்றும் ஆணையிட்டான்; மேலும், யூதர்கள் இரிக்கானுக்குப் பத்திலொரு பங்கை வரி செலுத்த வேண்டும் என்றும் கட்டளையிட்டான். துறைமுக நகரான யோப்பா பாதுகாக்கப்பட, இரிக்கானு 20,675 மோதிகள் செலுத்த வேண்டும். இந்தத் தொகையானது நிலவரியாகவும், துறைமுக வரியாகவும், ஏற்றுமதி வரியாகவும் சேர்க்கப்பட்டு சீதோனில் உள்ள உரோமை அதிகாரிகளிடம் செலுத்தப்பட வேண்டும். ஆனால், இந்த வரி ஓய்வு ஆண்டில் மட்டும் வசூலிக்கப்படாது.

பெரிய ஏரோது நில விளைபொருட்கள் மற்றும் விற்பனை வரிகளை விதித்தான். ஆளுநர்களின் ஆட்சியில், நாட்டின் வருவாய்த்துறை தொடங்கப்பட்டது. தோலமியர்களின் ஆட்சியைப் போன்றே வரி வசூலிக்கும் பணி அதிகமான குத்தகைக்குக் கேட்பவருக்கு விடப்பட்டது. நான்கு வகையான வரிகள் இருந்தன. அவை: நிலவரி, தலைவரி (மத் 22:17), சுங்கவரி, எருசலேமில் வீட்டுவரி.

இவை இல்லாமல், யூதர்கள் ஆண்டு வரியாக ஆலயத்திற்கு அரைச் செக்கேல் செலுத்த வேண்டும். இது புதிய ஏற்பாட்டுக் காலத்தில் **திதிராக்மா** (இரண்டு திராக்மா) (மத் 17:24) என்று அழைக்கப்பட்டது. நெகேமியாவின் காலத்தில் ஒரு செக்கேலின் 1/3 பகுதியை ஆலயத்திற்குச் செலுத்தினர் (நெகே 10:32-33). இந்த வரியானது பிற்காலத்தில் அரைச் செக்கேலாக உயர்த்தப்பட்டு இருபது வயதும், அதற்கு மேற்பட்ட வயதுமுடைய, உலகெங்கும் வாழும் எல்லா யூத ஆண்களிடமிருந்தும் வசூலிக்கப்பட்டது. கி.பி. 70-இல் எருசலேம் அழிந்தபோது உரோமைப் பேரரசன் வெஸ்பாசியன் யூதர்களை வரி செலுத்தும்படி கட்டாயப்படுத்தினான்.

இந்த அரைச் செக்கேல் வரியை வசூலிப்பதற்காக வரி வசூலிப்போர் ஊர் ஊராகச் சென்று வரித்தொகையையும் உயர்த்தினர். வரி வசூலிப்பதற்காக ஒரு பட்டியல் தயாரிக்கும்படி அகுஸ்து ஆணையிட்டான். இந்த ஆணையால் யோசேப்பும் மரியாளும் பெத்லகேமுக்கு வந்தபோதுதான் இயேசு அங்குப் பிறந்தார் (லூக் 2:1-7).

மத்தேயு சுங்க வரி வசூலிப்போருள் ஒருவர் (மத் 9:9; மாற் 2:14). வரி வசூலிப்போர் மக்களாலும், பரிசேயர்களாலும் இழிந்தவர்களாகக் கருதப்பட்டாலும், இயேசு அவர்களோடு உறவாடினார் (மத் 9:10-13; மாற் 2:15-17; லூக் 5:29-32). பரிசேயர்கள் இயேசுவைச் சீசருக்கு வரி செலுத்துவது முறையா என்று கேட்டனர். இவர்கள் தம்மை மடக்கப் பார்க்கிறார்கள் என்று எண்ணி, நாட்டின் சட்டம் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்று பதிலுரைக்கிறார் (மத் 22:17-21; மாற் 12:13-17; லூக் 20:22-25). புனித பவுலும் வரிகளும், நிலவரிகளும் செலுத்தப்பட வேண்டும் என்று கூறுகிறார் (உரோ 13:6-7).

**வரிவசூலிப்பவர்** (EXACTOR OF TRIBUTE)

வரி, சுங்க வரி முதலானவற்றை விதிக்கும் அல்லது வசூலிக்கும் அரசாங்க அதிகாரி. வேலை வாங்கும் மேற்பார்வையாளரும் இவ்வாறு அழைக்கப்பட்டார். இதன் எபிரேயச்சொல் தனது அதிகாரத்தினால் சட்டத்துக்குப் புறம்பான முறையில், அளவுக்கதிகமான வரி வசூலிப்பவனை ஏளனமாகக் குறிக்கும். இச்சொல், ''கொடுமைப்படுத்துபவர்''. ''அச்சுறுத்திப் பணம் பறிப்பவர்'' போன்ற சொற்களுக்குச் சமமானதாகும்.

தானி 11:20-இல் நான்காம் செலூக்கிய பிலோபாத்தோரின் (கி.மு. 187-175) நிதியமைச்சராக இருந்த கெலியதோரின் எருசலேம் வருகையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இவர் எருசலேம் ஆலயத்தில் அதிக பணம் சேர்த்து வைக்கப்பட்டிருக்கிறதா என்று காண வந்தார்.

இத்தகைய வரிவிதிப்பாளர் சிறிது கால இடைவெளிக்குப் பின் எருசலேமுக்கு வந்திருக்கலாம். அந்தியோக்கு எப்பிப்பானுக்கு (கி.மு. 175-164) இத்தகைய வரி வசூலிப்பவன் ஒருவன் இருந்ததாக 1 மக் 1:29 கூறுகிறது.

**வருத்தம்** (SADNESS)

I. மகிழ்ச்சி, மீட்போடு இணைந்ததும் இறைப்பிரசன்னத்தைக் கொண்டிருப்பதும் ஆகும். அதற்கு மாறாக, பாவத்தின் கசப்பான கனிதான் வருத்தம். அது நம்மைக் கடவுளிடமிருந்து பிரிக்கிறது. வெளிப்படையான அதன் காரணங்கள் பல: கடவுள் தன் முகத்தை மறைத்துக் கொள்ளும் சோதனைக் காலமாக இருக்கலாம் (சங் 13:2 தொ); ஏமாற்றும் ஒரு தீய மனைவியாக இருக்கலாம் (சீரா 25:23); மோசமாக வளர்க்கப்பட்ட மகன் (30:9), நம்பிக்கைத் துரோகியான நண்பன் (37:2), ஒருவனுடைய சொந்த மடமை (22:10), மனக் கோட்டம் (36:20), புறங்கூறுதல் (பழ 25:23) ஆகியவையும் வருத்தத்திற்குக் காரணமாகலாம். மனிதன் இடைவிடாமல் சந்திக்கும் ஏமாற்றங்களை மட்டும் விவிலியம் அவனது துயரங்களுக்குக் காரணமாகச் சொல்லவில்லை. அவனது எல்லாத் துயரங்களுக்கும் பாவமே காரணம் எனத்தெளிவாக்குகிறது. மீட்பரில்தான் இதற்குச் சரியான குணம் கிடைக்கும். ஏனெனில், வருத்தம் பாவத்திலிருந்து வருகிறது. மகிழ்ச்சியோ மீட்பிலிருந்து வருகிறது (சங் 51:14).

II. **பழைய ஏற்பாடு:**

***1. நல்லுணர்வும், வருத்தமும்:*** ஆண்டவர் மேல் வைத்திருக்கும் பயமே ஒருவனுக்கு மகிழ்ச்சியான வாழ்வைத் தரமுடியும் (சீரா 1:12). நோயை விட வருத்தமே ஒருவரின் இதயத்தை நோகடிக்கிறது; ஒருவனின் ஆவியைக் கொல்கிறது; எலும்பைக் காய வைக்கிறது (பழ 18:14; 12:25; 15:13; 17:22). அதனால்தான் ஞானிகள் அறிவுரை கூறுகிறார்கள். ''மோசமான நினைவுகளுக்கு இடம் கொடாதீர்'' (சீரா 30:21). பலரை உருக்குலைத்த துயரத்தை விரட்டு. ஏனெனில், அது மனிதரை வயது வருமுன்னே கிழவர்களாக்குகிறது (30:22). அழுவாரோடு அழுவது சரிதான். ஆனால், நமக்கு நெருக்கமானவர்கள் இறந்து விட்டார்கள் என்பதற்காக அளவுக்கு மீறி புலம்பத் தேவையில்லை. திராட்சைரசம் பல துன்ப துயரங்களில் ஆறுதலாய் இருக்கிறது (பழ 31:6; திருவுரை 9:7; 10:9). எல்லா மகிழ்ச்சியும் விரைவில் துயரமாக முடியும் (பழ 14:13); கண்ணீர் விட ஒரு நேரமுண்டென்றால், சிரிப்பதற்கும் ஒரு நேரமுண்டு என்பதை மறவாதே (திருவுரை 3:4). இந்த அறிவுரைகள் எல்லாம் எழுச்சியூட்டாதவைகளானாலும் வருத்தத்திற்குள் தன்னையே புகுத்திக் கொள்ளும் நிலையைக் கண்டுணர உதவுகின்றன. இந்தச் சொற்கள் இன்னும் சிறப்பான, உயர்ந்த வெளிப்பாட்டுக்கு நம்மை அழைத்துச் செல்கின்றன.

***2. வருத்தம் பாவத்தின் அடையாளம்:*** ஒரு வகையில் பார்த்தால் இஸ்ராயேலரின் உடன்படிக்கை வரலாறு அவர்கட்கு ஒரு பாடம் கற்பித்துள்ளது. அஃது என்னவென்றால் அவர்கள் பெற்ற தண்டனையால் அவர்கள் வருத்தம் அடைந்தனர். ஏன் வருத்தம் அடைந்தனர்? அவர்கள் கடவுளை விட்டுப் பிரிந்து வந்ததால் வருத்தம் அடைந்தனர். சீனாய் மலையடிவாரத்தில் அவர்கள் சீனாயில் நிகழ்த்திய சிலை வழிபாட்டினால் கடவுள் இனிமேல் ஆட்தன்மையில் அவர்களைத் தொடரப் போவதில்லை என்ற தண்டனையைச் சுமத்துகிறார். துயரத்தின், புலம்பலின் அடையாளமாக மகிழ்ச்சியின் ஆடைகளைக் களைந்தெறியுமாறு கட்டளையிடப்படுகிறது (யாத் 33:4). பாவம், கடவுளிடமிருந்து பிரிதலும், வருத்தத்தைக் கொண்டுவரும் தண்டனையும் ஆகும். இதே அமைப்பை அவர்கள் வாக்களிக்கப்பட்ட நாட்டில் புகும்போதும் (யோசு 7:6தொ.11 தொ), நீதிபதிகள் காலத்திலும் (நீதி 2) அவர்கள் அனுபவிக்கின்றனர். இறைவாக்கினர்கள் இந்த வருத்தத்தை இனம் கண்டு பாவம் செய்தவர்களிடம் இருப்பது போலியான அமைதியே என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டியிருக்கிறது. அவர்களே துயரத்தில் ஆழ்ந்து அந்த

அனுபவத்திலிருந்து போதிக்கின்றனர். எரே மியா இதற்கு ஒரு மாதிரியாகத் திகழ்கிறார். அவரது துயரக்குரல்கள் மக்களுடைய துய ரத்தின் பிரதிபலிப்பு எனலாம். போர் நெருங்குவதற்கு முன் *(எரே 4:19)*, பஞ்சம் வருமுன் *(8:18)*, அவலம் நேருமுன் *(9:1)* அவர் பாவம் செய்த மக்களின் மனம் வருந்தும் மனச்சாட்சியாக இருக்கிறார் *(9:18; 13:17; 14:17)*. அவர் மறைந்து வாழ்கிறார். இதில் மக்களுக்கு ஒரு சாட்சி யாகத் திகழ்கிறார் *(15:17; 16:8)*. எசேக்கி யேல் இதையே, ஆனால் சற்று எதிர்முறை யான விதத்தில், செய்கிறார். அதாவது, அவர் தன் வாழ்வின் மகிழ்ச்சியான மனை விக்காக அழக்கூடாது. அவ்வளவு தூரம் இஸ்ராயேலின் உள்ளம் பாறையாக இறுகிப் போயிருந்தது *(யாத் 24:15-24)*.

**3. இறைவன் எதிர்பார்க்கும் வருத்தம்:** உண்மையான மனவருத்தத்தை உறுதிப் படுத்துவது இறைவாக்குத் தூதாகும். புலம் பலிலும் சைகைகளிலும் வருத்தம் அழுத்த மாக வெளிப்படுத்தப்படுகிறது. நோன் பிலும் *(நீதி 20:26)*, கிழிந்த ஆடைகளிலும் *(யோபு 2:12)*, சாம்பல், சாக்குத் துணிகளி லும் *(2 சாமு 12:16; 1 அர 20:31; புல 2:10; யோவே 1:13; நெகே 9:1; தானி 9:3)*, அழுகையிலும், புலம்பல்களிலும் *(எசா 22:12; புல 2:18; எசே 27:30; எஸ்த 4:3)* ஒருவர் கொண்டிருக்கும் வருத்தம் எவ்வளவு ஆழமானது என்பது தெரியவரு கிறது. ஆனால், இந்தப் பாவமன்னிப்பு வழிபாடுகள் எல்லாம் இறைவாக்கினர் களின் குற்றஞ்சாட்டுதலுக்குத் தகுதி பெற்ற தாகிறது *(ஓசே 6:1-6; எசே 3:21-4:22)*. ஒருவர் வருத்தம் அடைவது தான் இழந்த நலன்களுக்காக என்பதை விட ஆண்டவரை விட்டுத் தொலைவில் இருக்கிறோமே என் பதற்காக என்றால் சிறப்பாக இருக்கும் *(ஓசே 7:14)*. சட்டத்திற்குப் பிரமாணிக்க மாய் இருப்பதற்குப் பதிலாக ஒருவர் வெறும் கண்ணீர் வடித்தல் மட்டும் போதாது *(மலா 2:13)*. தபசு முயற்சிகளில் உண்மையான மனமாற்றம் வெளிப்பட வேண்டும். ''ஏனெனில், உங்கள் உடை களைக் கிழித்துக் கொள்ள வேண்டாம், இதயங்களைக் கிழித்துக்கொள்ளுங்கள்'' என்று கூறப்பட்டுள்ளது *(யோவே 2:12)*. இந்த நிபந்தனையின் அடிப்படையில் மேற் கூறப்பட்ட செயல்கள் பொருளுள்ளவையா கின்றன *(நெகே 9:6-37; எஸ் 9:6.15; தானி 9:4-19;பாரூ 1:15-3:8; எசா 63:7-64:11)*. கண்ணீர் இறைவனின் பரிவிரக்கத்தை நம் பால் ஈர்க்கிறது *(புல 1:2; 2:11.18; சங் 6:7)*. வருத்தம் பாவியின் நிலையை ஏற்றுக் கொள்வதாகும் *(சங் 56:9)*.

**4. வருத்தமும் நம்பிக்கையும்:** இதயம் நொறுங்கிப் போனாலும் நம்பிக்கை அழிக் கப்படுவதில்லை; அதற்கு மாறாக, பாவி வாழ்வதையே விரும்பும் மீட்பரைக் கூப் பிடுகிறது *(எசே 18:23)*. நாடு கடத்தப்பட்டு அன்னியராய் வேற்று நாட்டில் இருக்கும் போது தங்கள் பாவத்திற்கு இது சரியான தண்டனைதான் என்று உணர்ந்த அவர் களிடம், தங்கள் வருத்தம், துயரம் எல்லாம் என்றென்றைக்கும் இல்லாமல் போய் விடும் என்ற **நம்பிக்கை** தொடர்ந்து இருந்து கொண்டே இருந்தது. ராகேல் தன் குழந்தை களுக்காக அழுகிறாள். அவளைத் தேற்று வார் யாருமில்லை. ஆனால், கடவுள் இடையிடுகிறார், ''நீ அழுகையை நிறுத்து, கண்ணீர் வடிக்காதே'' *(எரே 31:15)*. புலம் பல்களின் இறைவாக்கினர் ஆறுதல் அளிக் கும் தூதராகி நம்பிக்கையையும் அறிவிக்கி றார். ''அவர்கள் அழுகையோடு சென்ற னர்... ஆறுதல் அளித்து அவர்களை அழைத்து வருவேன்... அவர்களுடைய அழுகையை நான் மகிழ்ச்சியாக மாற்று வேன். அவர்களுக்கு ஆறுதல் அளிப்பேன். துன்பத்திற்குப் பதிலாக, இன்பத்தை அருள் வேன்'' *(எரே 31:8.12)*. இவ்வாறு ஒரு நிலையில் துயரத்தையும், வருத்தத்தையும் கொடுக்கும் செய்தியையே அறிவித்துக் கொண்டிருந்த இறைவாக்கினர்கள், அவற் றையெல்லாம் இறைவன் மகிழ்ச்சியாக மாற்றுவார் எனும் நம்பிக்கையைத் தந்து இஸ்ராயேலரைத் தேற்றுவதைப் பார்க்கி றோம் *(எசா 40-55; 35:10; 57:18; 60:20; 61:2தொ; 65:14; 66:10.19; சங் 126:5;* காண்க.

பாரூ *4:23*; தோபி *13:14*; எசா *24:7-11*; *25:8*). இதுதான் பழைய ஏற்பாட்டின் முடிவான சொல்லன்று. திருவெளிப்பாட்டு நூலில் தோன்றும் இந்த விண்ணகக்காட்சி (திருவெளி *21:4*), முடிவில்லா மகிழ்ச்சிக்கு இட்டுச்செல்லும் பாதையின் துன்பமிக்க பாதையின் உண்மையை மறைப்பதில்லை. நகரின் மத்தியில் மகிழ்ச்சியின் வற்றா நிறைவளமுடைய ஊற்று, திறந்து விடப் படுமாறு தாங்கள் ''ஊடுருவக்குத்தியவருக் காகப்'' (செக் *12:107*) புலம்பும் நாள் நிகழ வேண்டும்.

III. **புதிய ஏற்பாடு:**

**1. இயேசுவின் (துயரம்) வருத்தம்:** உல கின் ப்ாவங்களை ஏற்றுக்கொண்டவர், மனி தனது வரையற்ற துன்பத்தால் அமிழ்த்தப் பட்டார். ஆனால், ஒருபோதும் முழுவதும் நொறுக்கப்படவில்லை. இறுகிப்போன உள்ளத்துடனிருந்த பரிசேயர்களின் நிலையைப் பார்த்துப் பெரிதும் வருத்த மடைந்தார் இயேசு (மாற் *3:5*). எருசலேம் தனக்கு வரும் அழிவை உணர்ந்து கொள்ள வில்லையே என்று மனம் வருந்துகிறார் (லூக் *19:14*). தேர்ந்து கொள்ளப்பெற்ற மக்களின் நிலையை நினைத்து வருந்திய அவர், தன் நண்பர் இலாசர் இறந்து போனதைக் கண்டு கண்ணீர் விடுகிறார் (யோவா *11:35*). யூதர்கள் எண்ணியதுபோல் இதுவெறும் மனித நட்பன்று (*11:36*). இலாசரிடம் அவர் கொண்ட அன்பு தந்தை யிடம் இருந்துவந்த நட்பு (*15:9*). ஆகவே, அவர் மீண்டும் உள்ளம் குமுறினார் (*11:38*). அவர் தேம்பி அழுதது சாவு என்ற உண்மை எவ்வளவு அதிர்ச்சிக்குரியது என்பதை உணர்த்துகிறது.

சாவைச் சந்தித்தபோது மட்டுமன்று, அதை நினைத்தபோதே அவருடைய உள் ளம் சாவுக்கு ஏதுவான மனவருத்தம் அடைந்தது (மத் *26:37*தொ). இது சாவைப் போன்றதுதானே. ஆனால், சாவைச் சந்தித்த அனைவரது கண்ணீரையும் தனது செபத் தில் ஒன்றாக இணைத்து அவர் தந்தையிடம் ஒப்படைத்தபோது அதைத் தந்தை கேட்டு அவர் குரலுக்குச் செவி மடுத்தார் (எபி *5:7*). சிலுவையில் தொங்கும்போது தான் தந்தையினால் கைவிடப்பட்டு இறப்பதாக எண்ணும்போது கூட, துன்புறுத்தப்பட்ட நீதிமான் பாடும் நம்பிக்கையின் சங்கீதத் தைத்தான் பாடுகிறார் (மத் *27:46* இணை). தன்னைக் கைவிட்டவரிடமே தன்னை ஒப் படைப்பதாக லூக்கா இந்த நிகழ்ச்சியை விளக்குகிறார் (லூக் *23:46*). இவ்வாறு பாவமற்ற அவர் தன்னையே வருத்தத் திற்குக் கையளிப்பதால் வருத்தத்தை வெல் கிறார்.

**2. அழுபவர்களே, நீங்கள் பேறு பெற் றோர் (லூக் 6:21):** துன்பத்தின் ஆழத்தை அனுபவித்தவர், துன்பம் என்ற அளவில் அல்லாமல் அவரது மீட்பு மகிழ்ச்சியோடு இணைந்த துன்பத்தைப் பேறுடையதாக முன்னதாகவே அறிவிக்கிறார். பலவகை வருத்தங்கள் உண்டு. ''கடவுளின் திருவுளப் படி ஏற்கப்படும் துயரம், மீட்பைத்தரும் மனமாற்றத்தை விளைவிக்கிறது. அதற்காக மனம் வருந்துவதற்கு இடமே இல்லை. ஆனால், இவ்வுலகுக்கடுத்த துயரமோ, சாவையே கொணர்கிறது'' (2 கொரி *7:10*). பவுலின் இந்தக் கூற்று பழக்கமான எடுத் துக்காட்டுகளால் விளக்கப்படுகிறது. சான் றாக ஓர் இளைஞன் இயேசுவை விட, தன் செல்வமே பெரிதென நினைத்ததால் வருத்தத்துடன் செல்கிறான் (மத் *19:22*). அதனால்தான் செல்வந்தர்கட்கு முடிவில் லாத சாவுதான் பரிசு என யாக்கோபு கண்டனம் செய்வதற்கு (யாக் *5:1*), மேலே கூறிய கருத்து முன்னோடியாக உள்ளது. இயேசுவின் சீடர்கள் துக்கத்தாலும் மிகுந்த மன வருத்தத்தாலும் கெத்சமனித் தோட்டத் தில் தங்கள் குருவை விட்டு ஓடிப் போவதையும் நினைத்துப் பார்க்க வேண் டும் (லூக் *22:45*). யூதாசைப் பொருத்தவரை யில் துரோகம் அவனை இயேசுவிடமிருந்து பிரிக்கிறது. அவனும் நம்பிக்கை இழக்கி றான் (மத் *26:22*). பேதுரு மனம் வருந்தி அழுகிறார். ஏனெனில், அவர் தன் தலை வரையே மறுதலித்து விட்டார் (மத் *26:75*). எம்மாவுக்குச் செல்லும் சீடர்கள் தங்கள் குரு தங்களைவிட்டுச் சென்றதை நினைத்து

வருத்தத்தோடு பேசிச் செல்கின்றனர் (லூக் 24:17). மரியாள் தன் ஆண்டவரை யாரோ எடுத்துச் சென்று விட்டார்கள் என்பதை நினைத்து அழுகிறாள் (யோவா 20:11). இங்கு இரண்டு வகையான வருத்தத்தைப் பிரித்துக்காட்டுவது இயேசுவின் மீது வைத்த அன்புதான். இயேசுவிடம் ஒன்று சேர்ப்பதற்காகத் தன்னை உலகிலிருந்து பிரித்து வைக்கும் வருத்தத்தைப் பாவி அனுபவிக்க வேண்டும். இயேசுவுக்குத் தன்னையே அர்ப்பணிக்கும் ஒருவன் அவரைப் பிரிவதைத் தவிர வேறு எந்தத் துயரத்தையும் உணரமாட்டான்.

**3. மகிழ்ச்சி வருத்தத்திலிருந்து பிறப்பது தான்:** எட்டுப்பேறுகளில் ஒன்று அழுபவர் கட்கு ஆறுதல் கூறுகிறது. ஆயினும், மணமகன் அவர்களிடமிருந்து எடுக்கப் படும்போது அவர்கள் அழுவார்கள் என இயேசு குறிப்பிடுகிறார் (மத் 9:15). இறுதி இரவுணவிற்குப் பின் இயேசு ஆற்றிய உரையில் வருத்தத்தின் முழுமையான பரி மாணம் வெளிப்படுகிறது. ராகேல் மீண் டும் தன் குழந்தைகளுக்காக அழுதது இயேசுவினால்தான் (மத் 2:18). தனது தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதற் காக, தன் தாயின் வருத்தத்தை அதிகரித் ததைப் பற்றி அவர் பயப்படவில்லை (லூக் 2:48 இணை). இறுதி இரவுணவின்போது அவரது பிரிவு வருத்தத்தை விளைவிக்கும் என்பதை அவர் மறுக்கவில்லை. இப்படி யில்லையென்றால், அவர் இல்லாத வாழ் வும் இறப்பாகும் என்ற உண்மையைக் காட்டுபவராக இருக்கமாட்டார். அவ ரது மறைவு உலகிற்கு மகிழ்ச்சி தரும் என்றும் அவர் அறிவார் (யோவா 16:20). எனவேதான் ஒரு புதிய உலகம் பிறப்பதை (எசா 26:17; 66:7-14; உரோ 8:22), ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கும் தாய் முத லில் துன்புற்றாலும் பிறகு உலகிற்கு ஒரு புதிய மனிதனைத் தருகிறோம் என்று மகிழ்ச்சியடைவாள் என்பதோடு ஒப் பிட்டுக் கூறுகிறார் (யோவா 16:21). இவ் வாறு உங்கள் வருத்தமெல்லாம் மகிழ்ச்சி யாக மாறும் என்கிறார் (16:20). வருத்தம் முடிந்துவிட்டது. இதைவிட மேலாக, அது மகிழ்ச்சியாக மாறிவிட்டது.

இதற்குப் பலியிடப்பட்டதுபோல் காணப்பட்ட விண்ணகச் செம்மறியை எப் போதும் குறிக்குக் காட்டும் காயங்களில் ஒரு எடுத்துக்காட்டுக் காணப்படும் (திரு வெளி 5:6). இனி, வருத்தம் நிலையான மகிழ்ச்சியாக மாறுகிறது (யோவா 16:22). ஏனெனில், அது சாவின் வாயில்களுக்கு அப்பால் நிமிர்ந்து நிற்பவரிடமிருந்து வரு கிறது. இந்த மகிழ்ச்சி, மனக்குழப்பத்திலி ருந்தும் அச்சத்திலிருந்தும் (14:27), வேத னையிலிருந்தும் (16:33) பொங்கி எழுகிறது. இயேசுவின் சீடர்கள் இனிமேல் வருத்தம் கொள்ளார்; திக்கற்றவர்களாக விடப்பட்ட வர் போல் அவர்கள் தனிமையில் வருந்தார் (14:18); துன்புறுத்தும் உலகிற்குக் கையளிக் கப்பட மாட்டார் (16:2 தொ). உயிர்த்த கிறிஸ்துவே அவர்கள் மேல் முழுமையான மகிழ்ச்சியைப்பொழிவார் (17:13; 20:20).

இனி, வேதனைகளோ (எபி 12:5-11; 1 பேதுரு 1:6தொ; 2:19), இறந்துபோன சகோதரர்களிடமிருந்து பிரிவோ (1 தெச 4:13), அவிசுவாசிகளிடமிருந்தான பிரிவு கூட (உரோ 9:2), விசுவாசியின் மகிழ்ச் சியை அடக்கி ஒடுக்கி விடவோ, அவரை இறை அன்பிலிருந்து பிரிக்கவோ முடியாது (8:39). வருத்தத்தில் இருப்பவர்கள்போல் தோன்றினாலும் இயேசுவின் சீடர்கள் எப் போதும் மகிழ்ச்சியில் திளைக்கின்றனர் (2 கொரி 6:10); இந்நிலையிலும் அடக்கமாக வாழ்கின்றனர்; ஆயினும், தேர்ந்தெடுக்கப் பட்டவர்களை எப்போதும் ஊடுருவும் விண்ணக மகிழ்ச்சியை அறிவர். அவர்க ளுடைய கண்ணீரனைத்தையும் துடைக்க (திருவெளி 7:17; 21:4), இறைவன் அவர்க ளோடு என்றும் இருப்பார்.

**வலக்கரம்** *(RIGHT HAND)*

வலம் என்பது, ஆற்றலின் அடையாள மான வலக்கரத்தையும், சலுகையின் அடை யாளமான வலப்பக்கத்தையும் குறிக்கிறது. பெரும்பாலும் இஃது அடையாளமாகப் பயன்படுகிறது.

**வலக்கரம்** இரு கரங்களில் திறமையுடையது என்பதால் மட்டுமன்று, பலமிக்கதும் ஆகும். இக்கரம் வாளை வீசக்கூடியது. ஆகவே, விவிலியம், வலிமைமிக்கது என்ற அளவில், வலக்கரத்திற்குச் சிறப்புப் பொருள் அளிக்கிறது *(யோபு 40:10; சங் 45:4; காண்க.லூக் 6:6; அ.ப. 3:7)*. இஃது இறைவனின் ஆற்றலின் அடையாளமாகிறது. இறைவன் தமது வலக்கரத்தின் வலிய செயல்களால் தம்மை வெளிப்படுத்துகிறார்; எதிரிகளை அதிரடிக்கிறார்; மக்களை மீட்கிறார் *(யாத் 15:6; சங் 20:7; 21:9)*. ஆகவே, சங்கீத ஆசிரியர் முன்னறிவித்தபடி*(சங் 118:16)*, இயேசு இறந்தபின், ''கடவுளின் வல்லமையால் (வலக்கரத்தால்) உயர்த்தப்பட்டார்'' *(அ.ப.2:33)*.

வலக்கரம் ஆசீர் அளிக்கும் கரமாகவே, தனிச்சிறப்பான திறமையுடையது *(ஆதி 48:14; யாத் 29:20; எசே 21:22; காண்க. மத் 25:33; 27:29; திருவெளி 1:16-17)*. இதற்கு மாறாக, இடக்கரம் ஏமாற்றும் தன்மையுடையது; உயிரிழப்பில் கொண்டு விடக்கூடியது *(நீதி 3:15.21; 20:16; 2 சாமு 20:9-10)*. முழுவலிமையின் அடையாளம் என்ற அளவில், வலக்கரப் பக்கம்தான் மனிதன் அச்சுறுத்தப்படுகிறான் *(யோபு 30:12; சங் 9:7)*, அல்லது குற்றம் சாட்டப்படுகிறான் *(செக் 3:1)*. அவனை மீட்பவன் பாதுகாக்க அப்பக்கத்தில்தான் நிற்க வேண்டும் *(சங் 16:8; 109: 31; 121: 5; காண்க. அ.ப. 2:25)*. ஒருவனுடைய வலக்கரப் பக்கம் மதிப்பின், மேன்மையின் இடமாகும் *(1 அர 2:19; சங் 45:9)*.

''கடவுளின் வலக்கரம்'' அவரது வலிய ஆற்றலை உருவகமாக உணர்த்துகிறது. அதனால் அவர் படைக்கிறார் *(எசா 48:13)*, போர் புரிகிறார், தமது மக்களை மீட்கிறார் *(உப 33:2; சங் 89:13; காண்க. யாத் 15:6-12; சங் 17:7; 18:35; 139:10)*. அது பின்வாங்கப்படுதல் தீர்ப்பையும், துர்ப்பேற்றையும் உணர்த்தும் *(சங் 74:11; காண்க. 77:10; புல 2:3)*. அது தமது மக்களுக்கு எதிராகவே பயன்படுத்தப்படலாம் *(புல 2:4)*.

வலக்கரம் அதன் பக்கத்தில் இருப்பவர்களைப் பாதுகாக்கிறது. இறைவனின் வலக்கரப்பக்கந்தான், அவரது அன்பர்கள் முடிவில்லா இன்பத்தைச் சுவைப்பர் *(சங் 16:1)*. அங்குதான் கடவுளுக்கு அருகில் மெசியா அரியணையில் அமர்த்தப்படுவார் *(110:1)*. *அ.ப. 2:33*-இல் காணப்படும் மற்றொரு மொழிபெயர்ப்பின்படி இயேசு, ''கடவுளின் வலக்கரத்திற்கு உயர்த்தப்பட்டுள்ளார்.'' அவர் கடவுளின் வலிய கரத்தின் கருவியாக, ''வலப்பக்கம் இருக்கும் மனிதனாக'' *(சங் 30:17)* ஆகிறார். இதில் இறைவன் தம் வலிமையால் உறுதிப்படுத்திய இஸ்ராயேலின் அரசனைப் போலாகிறார். பழைய ஏற்பாட்டின் இந்த வாக்குறுதிகளை இயேசு உறுதிப்படுத்துகிறார், நிகழச் செய்கிறார். அரசனாக, உலகம் முழுவதின் நடுவராக வரும்போது மனுமகன் தம் தந்தையால் ஆசி பெற்றவர்களைத் தம் வலப்பக்கம் நிறுத்துவார் *(மத் 25:31-34)*. *110*-ஆம் சங்கீதத்திற்கேற்ப, வல்லவரின் வலப்புறத்தில் வீற்றிருந்து, வான மேகங்கள்மீது வருவதாக இயேசுவே உறுதியாகக் கூறுகிறார். இவ்வாறு நடுவராக அவர் தோன்றுவதை அவரது எதிரிகள் காணும் முன்பே, அங்கு இயேசு சாட்சியாக நிற்பதை ஸ்தேவான் காண்கிறார் *(அ.ப. 7:55)*.

உயர்த்தப்பட்டு, கடவுளின் வலப்பக்கத்தில் மாட்சியோடும் வல்லமையோடும் ஆட்சிபுரிவதை எடுத்துக்கூற, புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலிக்க சாட்சியம் சங் *110*-ஐ அடிக்கடி எடுத்துக்காட்டுகிறது *(மாற் 12:36; அ.ப. 2:34-35; எபி 1:13; காண்க. அ.ப. 5:31; உரோ 8:34; எபே 1:20; கொலோ 3:1; எபி 8:1; 10:12; 12:2; 1 பேதுரு 3:22)*.

## வலிப்பு *(EPILEPSY)*

நடு நரம்பு அமைப்பின் சீர்குலைவு. அப்போது நினைவிழப்பு, வலிப்பு முதலியவை உண்டாகும். முற்காலத்தில் இது ''விழும் வியாதி'' என்று அழைக்கப்பட்டது. இதன் காரணம் தெளிவாக இல்லை. இத்தகைய வலிப்பு குழந்தைப் பருவத்திலும், வாலிபப்பருவத்திலும் ஆரம்பமாகும். பெருமூளைப் பகுதியில் உண்டாகும்

நெறிபிறழ்ந்த நிலையில் இஃது ஏற்படுகிறது.

முதல் நிலையாக ஏற்படுகின்ற வலிப்புக்கு முன் அறிகுறி ஒன்று தோன்றும். இந்த அறிகுறி கேட்கக்கூடிய, முகரக்கூடிய, சுவைக்கக்கூடிய அல்லது காணக்கூடிய உணர்வாக இருக்கும். சில வேளைகளில் அதிக வலிப்பினால் உணர்வு இழந்துவிடுவதும் உண்டு. இந்நோய் சிறிதே உடையவர்களுக்கு வலிப்பு ஏதுமின்றி உணர்விழப்பு மட்டும் ஏற்படலாம். இந்நோய் அதிகம் உள்ளவர்களுக்கு உணர்விழப்பும், தசைநார் வளைவும், முதுகு வளைவும், வலிப்பும், சிறுநீர் அடக்க முடியாமையும் ஏற்படுகிறது.

இயேசு குணப்படுத்திய வலிப்பு நோயுடைய பையன் (*மத் 17:14-18; மாற் 9:14-27; லூக் 9:37-42*) அனேகமாக அறிவு வளர்ச்சி நின்றுவிட்ட நிலையுடையவனாக இருக்கலாம். இது முதல்நிலையாக ஏற்படுகின்ற வலிப்பு நோய் என்று மாற்கு விவரிக்கிறார். லூக்கா கிப்போகிராத்து பயன்படுத்திய மருத்துவச் சொற்களைப் பயன்படுத்துகிறார். மத்தேயு நிலவால் பாதிக்கப்படுதல் என்ற பொருளுடைய சொல்லைப் பயன்படுத்துகிறார். நிலவுக்கும், வலிப்பு நோய்க்கும் தொடர்பு உண்டு என்ற முற்கால நம்பிக்கையை இது பிரதிபலிக்கிறது. இயேசு வலிப்பு நோயுற்ற மற்றவர்களையும் குணப்படுத்தினார் (*மத் 4:24*).

## வலிமை *(STRENGTH)*

I. விவிலியம் முழுவதும் வலிமையைப் பற்றிப் பேசுகிறது; கனவு காண்கிறது. ஆனால், அதே சமயம் வலியவர் வீழ்வார், தாழ்ந்தோர் உயர்த்தப்படுவார் என்பதையும் அது கூறுகிறது. இந்தப் போராட்டம் அல்லது முரண்பாடு சிலுவை பற்றிய போதகம் வரை தொடர்கிறது. அங்கு, கடவுளின் வலிமையின்மை அல்லது பலவீனம் மனிதனின் வலிமையை விட வலியதாகக் கருதப்படுகிறது (*1 கொரி 1:25*). அதனால்தான் சிறுவயது முதல் போர்ப்பயிற்சி பெற்று வாளோடும் ஈட்டியோடும் வந்த கோலியாத்து, வெறும் கவணோடும் ஐந்து கூழாங்கற்களோடும் யாவேயின் பெயரால் வந்த சாதாரணச் சிறுவனாகிய தாவீதினால் வீழ்த்தப்பட்டான் (*1 சாமு 17:45*). ''வன்மையானதை நாணச் செய்ய, வலுவற்றது (மடமை) என உலகம் கருதுவதைக் கடவுள் தேர்ந்து கொண்டார்'' (*1 கொரி 1:27*) எனக் கடவுளின் வழிமுறைகளைப் பவுல் விளக்குகிறார்.

இஃது ஒருவரின் பலவீனத்தை நியாயப்படுத்துவதற்காக அன்று, மாறாக கடவுளின் வலிமையை மகிமைப்படுத்துவதற்கும் விசுவாசியின் மீட்பை உறுதிப்படுத்துவதற்காகவும்தான் (*உரோ 1:16*). இதில் ஒரு மனிதன் இறைவனில் காணும் வலிமையை இறைவனின்றி வாழ்பவனுடைய வலுவின்மைக்கு எதிராக்குகிறார். இறைவனோடு இருப்பவன் ஆயிரம் பேரோடு சண்டையிட்டு வெற்றி பெறுவான் (*யோசு 23:10; லேவி 26:8*); கடவுள் இல்லாமல், அவன் ஓர் உதிர்ந்த இலையின் ஒலிக்கு அஞ்சி ஓடும் மனிதனாகிறான் (*லேவி 26:36*). ''எனக்கு உறுதியூட்டும் இயேசு கிறிஸ்துவில் எதையும் செய்ய முடியும்'' என பவுல் அறிக்கையிடுகிறார் (*பிலி4:13*). ''கடவுளின் துணையினால் வீரத்துடன் போரிடுவோம்'' என்று சங்கீத ஆசிரியர் பாடுகிறார் (*சங் 60:12*).

II. **இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவரின் வலிமை:**

***1. பிறரின் மரியாதையை வரவழைக்கும் வலிமை:*** இஸ்ராயேல் தனக்கு வலிமை வேண்டும் என கனவு கண்டது. ஏனெனில், அதன் வழியாகத்தான் உலகின் கவனத்தைக் கவரமுடியும் என அது நம்பியது. ''எப்பிராத்து மரபினில் சிறந்து நீர் வாழ்க! பெத்லகேமில் நீர் புகழுடன் திகழ்க!'' என்று போவாசை வாழ்த்துகின்றனர் (*ரூத் 4:11*). பிறரது கவனத்தை ஈர்க்கும் வலிமை ஒருவனது கை வலிமையாகும் (*சங் 76:5தொ*); இடையின் வலிமை (*93:1*), வளைந்து கொடுக்காத கால்கள், போராட்டத்திலும் தளராத உறுதியான இதயம்

*(57:8)* ஆகியவை சிறந்ததாகக் கருதப்படு கின்றன. ஒருவன் கொண்டிருக்கும் உயி ராற்றலும், உடல் நலமும், இனப்பெருக்க ஆற்றலும் *(ஆதி 49:3)* அவனது வலிமை யாகக் கருதப்படுகின்றன. பொருளாதார வளமும் வலிமையாக எண்ணப்பட்டது. பிறருக்குக் கப்பம் கட்டியும், பிறரிட மிருந்து பொருட்கள் வாங்கியும் இஸ்ரா யேல் இவ்வளத்தில் வலிமையற்றதாகப் போய்விட்டது *(ஓசே 7:9; எசா 30:6)*. தங்கள் செல்வத்தை வைத்துத் தீயவர்கள் தங்களை வலிமையுள்ளவர்களாகக் காட்டிக் கொண்டால் அஃது இழிவானதாகும் *(சங் 49:7.17)*. இதற்கு மாறாக, மாண்புமிகு நற்பண்புகள் புகழுக்குரியதாகும் *(பழ 31:10-31)*.

வலிமை புறநிலையை உறுதி கூறுவ தால், வலிமையாய் இருத்தல் என்பது (மற்றொன்றைவிட) வலிமையாக இருப்ப தாகும். வலிமையுள்ளவன் எதிரியைப் பாறையின், வைரத்தின் *(எசே 3:9)* மற்றும் வெண்கலத்தின் *(யோபு 6:12)* உறுதியோடு எதிர்க்கிறான் *(எசே 3:9)*. பாறையின் எதிர்ப்புச் சக்தி மாபெரும் அலைகளையும் தாங்கி அசையாது நிற்கிறது *(சங் 46:3தொ)*. உள்ளே போக முடியாத கோட்டைச் சுவர் *(எசா 26:5)*, அணுக முடியாத உச்சியில் அமைந்திருக்கும் குகை *(ஒப 3)* ஆகியவற் றின் எதிர்ப்புச் சக்தி சிறப்பானது. வலிமை யுள்ளவன் தலை நிமிர்ந்து நிற்கிறான்; வலுவற்றவனோ தடுக்கி விழுகிறான்; இறந் தவன் போலக் கீழே கிடக்கிறான். ''யாவே என் கற்பாறை, என்கோட்டை, புகலிடம் அளிக்கும் மலை, என் கேடயம், என் அடைக்கலம்'' *(சங் 18:2; 62:2)*.

இத்தகைய அசைக்க முடியா வலிமை எப்பொழுதும் தற்காக்கும் ஒன்றாகவே இருக்க முடியாது. ஏனெனில், உயிருக்கான போராட்டத்தில் யாராவது ஒருவர் வெற்றி பெற வேண்டும்; மற்றவர் தோல்வியுற வேண்டும். இதற்கு இடைப்பட்ட நிலை ஒன்று இருக்க முடியாது. யாவேயினால் அபிடேகம் பண்ணப்பட்டவர் ஒன்றித்த உலகின் முன் தலைநிமிர்ந்து நிற்கிறார். அவன் வலிமையினால் அவனது எதிரிகள் அனைவரும் கீழ்ப்படுத்தப்படும்படி யாவே பார்த்துக் கொள்கிறார் *(சங் 18:48)*. ஒரு வரும் அவனிடமிருந்து தப்ப முடியாது *(சங் 21:9)*. ஏனெனில், அரச சங்கீதங்களின் படி பார்க்கும்பொழுது முழுமையான, உறுதியான வெற்றியின்றி உண்மையான அமைதி இல்லை என்ற உண்மை வெளிப் படுகிறது.

***2. இறைப் பணியில் பெரும் வலிமை:*** தான் வலிமையுள்ளவளாய்த் திகழ்வதாய் இஸ்ராயேல் கனவு காண்பது கடவுளின் திட்டத்தை நிறைவேற்றும் நோக்கத்துடன் தான். அப்படியில்லையென்றால், கானான் நாட்டை யோசுவா வென்றிருக்க முடியுமா *(யோசு 1:6)*? அல்லது மீட்பைத் தேர்ந் தெடுக்கப்பட்ட மக்கள் நெருங்கிச் சென்றி ருக்க முடியுமா *(எசா 35:3)*?

புதிய ஏற்பாட்டு இறையரசில் பங்கு பெறுவதற்கும் ஒருவனுக்குத் தேவையான வலிமை வேண்டும். ஆனால், இவ்வலிமை வேறொரு மட்டத்தைச் சேர்ந்ததாகும். ''அவருடைய மாட்சிமை மிக்க ஆற்றலுக் கேற்ப எந்த நிலையிலும் பொறுமையும் மன உறுதியும் கொண்டிருக்கும்படி, முழு வல்லமையாலும் வலுப்படுத்தப் பெறுவீர் கள்'' *(கொலோ 1:11)*. கிறிஸ்தவர்கள் சோதனைகளையும், சவால்களையும் எதிர் கொண்டு வெற்றி கொள்ள அவர்கட்கு வலிமை தேவைப்படுகிறது. தந்தையின் வலப்பக்கத்தில் வீற்றிருக்கும் உயிர்த்த இயேசுவின் வலிமையில் கிறிஸ்தவன் பங்கு பெறுவதால் *(எபே 1:19)* அவன் உலகை வெற்றி கொள்பவனாகிறான் *(1 யோவா 5:5)*. கிறிஸ்துவின் வலிமை, அவர்களுள்ளும் *(2:4; 5:8)*, அவர்களைச் சுற்றியுள்ள, தீய சக்தி அனைத்தின் மேலும் *(மாற் 16:17 தொ)* அவர்களுக்கு ஆற்றல் அளிக்கிறது. ஆண்டவரின் ஆவி நாம் உயிர்த்தெழுதலுக்குரிய வலிமையாக நம் மில் இருக்கிறார் *(பிலி 3:10)*. நம்மில் இருக்கும் உள்ளார்ந்த மனிதனை அது வலிமைப்படுத்துகிறது *(எபே 3:16)*. இவ் வாறு அவரில் நாம் முழுமை பெறுவதற்கு இட்டுச் செல்கிறது *(3:19)*.

III. **பலவீனத்தில் வலிமை:** தன்னை மீட்கும் வலிமை மனிதனிடம் இல்லை. மாபெரும் படை அரசனுக்கு வெற்றி கொணர்வதில்லை. குதிரைப்படை தனக்கு வெற்றி கொண்டு வரும் என்று வீணாக நம்பிக்கை வைக்கிறான் *(சங் 33:16)*. இவ்வாறு தமது வலிமையற்ற நிலையை ஏற்றுக்கொள்வது எல்லாச் செபங்களிலும் பொதுப்பண்பாக இருக்கிறது. தங்களை விட வலிமைமிக்க உலகைச் சந்திக்கும் சாதாரண மனிதர்கள் கடவுளின் வலிமையைத் தமது பக்கம் வைத்துக்கொள்ள முயல்கின்றனர். ஆனால், மனிதனின் நிலையை ஈடுசெய்ய ஆற்றல் மிக்க மாற்று உபாயத்தை விவிலியம் அளிக்கிறது. ஏனெனில், கடவுள்தான் மனிதனைத் தனது பணியில் அவர் விருப்பம்போல் ஈடுபடுத்துகிறார். மனிதனை அவர் வலிமையுள்ளவனாக்கினால், அஃது அவரது விருப்பத்தை நிறைவேற்றி அவரது திட்டத்தைச் செயல்படுத்துவதற்காகத்தான் *(சங் 41:10; 2 கொரி 13:8)*.

யாவேயிடமிருந்து பெற்ற வலிமை அல்லது கொடைகளால் இஸ்ராயேலர் செயல்பட்டனர். ஆனால்,. அதை உணர பல நேரங்களில் இஸ்ராயேலர் தவறி விடுகின்றனர்; அவரிடமிருந்து சுதந்தரமானவர்களாகக் கருதினர் *(உப 8:17)*. அவராலும், அவரிலும்தான் ஒருவன் வலிமையுள்ளவனாக இருக்கிறான் என்பதைத் தெளிவாக உணர்த்த, இறைவன் சாதாரணத் தோற்றமுடைய, ஆனால் நிலையான இதயத்தையுடையவர்களைத் தமக்கெனத் தேர்ந்தெடுக்கிறார் *(1 சாமு 16:7)*. சவுலைப்போல் உள்ளவர்களை அவர் தேர்ந்தெடுக்க விரும்பவில்லை *(1 சாமு 10:23)*. சாதாரணத் தாழ்ச்சியான மனித சக்தியைத்தான் கடவுள் பயன்படுத்த விரும்புகிறார். ''உன்னுடன் இருக்கும் மக்கள் ஏராளமாக இருப்பதால் மிதியானியர்களை அவர்கள் கையில் ஒப்படைக்க மாட்டேன். இல்லையெனில், 'எம் கையே எம்மைக் காத்தது' என்று கூறி இஸ்ராயேல் மக்கள் எனக்கெதிராகத் தற்பெருமை கொள்வர்'' *(நீதி 7:2; எசா 30;15 தொ)*. அதனால்தான் பவுலிடம் ஆண்டவர் ''நான் தரும் அருள் உனக்குப் போதும். ஏனெனில், மனித வலுவின்மையில்தான் என் வல்லமை சிறந்தோங்கும்'' *(2 கொரி 12:9)* என்று கூறுகிறார்.

அப்படியில்லையென்றால் கடவுளின் மகிமை வெளிப்பட வாய்ப்பே இல்லை. மனிதனால் இனி ஒன்றும் செய்யமுடியாது என்ற நிலையில் கடவுள் தலையிட்டு *(எசா 29:4)* அச்செயலை இறைவனால் மட்டுமே ஆனது என்று மிகத் தெளிவுபடுத்துகிறார். இயற்கை உண்மைகளில் பெரியது, சிறியது என்ற அமைப்பை அவர் பொருட்படுத்துவதில்லை. ''தலைவர்கள்மேல் இகழ்ச்சியைக் கொட்டுகிறார்'' *(சங் 107:40)*. தூசியிலிருந்து தூக்கிய ஏழையைத் தம் வலப்புறத்தில் அமர்த்துகிறார் *(113:7)*. அவர் தனது ஊழியன் உயர்த்தப்படுவதில் மகிமையடைகிறார். ஏனெனில், சமுதாயத்தினால் ஒதுக்கப்பட்டவனாக தனது பலத்தை நம்பாமல், கடவுள் ஒருவரே தன்னை மீட்க வேண்டும் என்று அவரைச் சார்ந்திருப்பதால் அவன் மீண்டும் வெற்றி பெறுதலைக் கடவுள் மகிமையாகக் காண்கிறார். இந்த உண்மை கிறிஸ்துவின் உயிர்ப்பில் முழுமையாக வெளிப்படுகிறது. இந்த மறையுண்மை போதிக்கப்படும்பொழுது அது கடவுளின் வலிமை மிக்க செய்தியாக அமைகிறது *(1 கொரி 1:18)*.

கிறிஸ்தவத் தாழ்ச்சி என்பது மரியாளின் பாடலில் வெளிப்படும் தாழ்ச்சியாக இருக்கிறது. அவள் தன்னை ஒரு பலவீனமான படைப்புப் பொருளாகவோ, பாவியாகவோ தாழ்த்திக் கொள்ளவில்லை. அதே நேரத்தில் தனது வலிமை முழுவதும் கடவுளிடமிருந்தே வருகிறது என்பதில் தெளிவாக இருக்கிறாள். ''இணையற்ற இவ்வல்லமை எங்களிடமிருந்து வரவில்லை; கடவுளுக்கே உரியது என்று விளங்கும்படி, இந்தச் செல்வத்தைக் கொண்டிருக்கும் நாங்கள் வெறும் மட்கலங்களாகவே இருக்கிறோம்'' *(2 கொரி4:7)*.

**வலிமை மிக்கோர்** (MIGHTY MEN)

பொதுவாக, போர் வீரர்களுக்கும், வலிமை மிக்க மற்றவர்களுக்கும் இப் பட்டம் அளிக்கப்பட்டது (ஆதி 6:4; 10:8; 2 நாள் 32:3; காண்க.யோசு 1:14). இப் பட்டம் முதன்மையாக தாவீது அரசனின் கூலிப்படை வீரர்களுக்கும் கலைச்சொல் லாகப் பயன்பட்டுள்ளது (2 சாமு 17:8). இவர்களில் பலர் இஸ்ராயேலரைச் சேர்ந்த வர்கள். யோவாபுவின் தலைமையில் வலிமை மிக்க வீரர்கள் இருந்தனர் (2 சாமு 10:7). இவர்களில் கெரேத்தியர்கள், பெலேத்தியர்கள், பெனாயாவின் தலைமை யில் இருந்த அரச மெய்க்காப்பாளர் படை யினரும் அடங்குவர் (காண்க. 8:18; 1 அர 1:10.38). யோசேபுபசபேத்து, எலயாசர், சம்மாகு ஆகிய மூன்று வலிய வீரர்களைப் பற்றிக் கூறப்படுகிறது. இவர்கள் உயர் பட்ட அதிகாரியாக இருந்திருக்க வேண்டும் (2 சாமு 23:8; காண்க. 23:23). அதற்கு அடுத்து, வலிமை மிக்க முப்பது வீரர்களின் விவரிப்பு கொடுக்கப்படுகிறது. அவர்களின் தலைவர்களாகிய அபிசாய் மற்றும் பெனாயா ஆகியவர்களின் தீரச்செயல்கள் விவரிக்கப்படுகின்றன (23:18-39).

**வலை** (NET)

நார்கள் அல்லது நைலான் கயிறுகளால் பின்னப்பட்டு மீன், பறவை, விலங்கினங்க ளைப் பிடிப்பதற்குப் பயன்படும் கருவி.

**1. துறைச்சொல்:** வலை என்ற சொல் லால் பல எபிரேய, கிரேக்கத் துறைச்சொற் கள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. பழைய ஏற்பாட்டில், ''கண்ணி'' (சங் 141:10); வலை (எசா 51:20); நீரின் மேல் வலைவீசுதல் (19:8); வலை (அப 1:15-16); வலை (திருவுரை 9:8); கண்ணி (எசே 12:13; 17:20; 32:3) என வருகின்றன. வலையோடு தொடர்புள்ள சொற்கள்: வலைப்பின்னல் (யாத் 27:4; 38:4); புதிய ஏற்பாட்டில், ''வலையை வீசுதல் (மத் 4:18); வாரி வரும் வலை (13:47) என்பன.

**2. கயிற்று வலைகள்:**

**அ)** கயிறும், நூலும் தயாரிப்பது பழங் காலத் திறமைகளில் ஒன்றாகக் கருதப் பட்டது. இத்தகைய பொருட்களைக் கொண்டு வலைகள் பின்னுவது இடைக்கற் காலத்திலிருந்தே இருந்திருக்கிறது. எகிப்து, மேற்காசிய நாடுகளின், விவிலியக் குறிப்பு கள் அனைத்தும் வலைகள் மக்களின் பழக்கத்திற்குப் பழங்காலத்தில் இருந்தே உபயோகப்படுத்தப்பட்டு வந்ததாய்க் கூறு வதால் இவைகள் விவிலிய ஆசிரியர் களுக்கு நன்கு தெரிந்து இருந்தது. இக்கயிறு களைச் செய்ய சணல், புளிச்சை, பனைநார், கோரை ஆகியவற்றைப் பயன்படுத்தினர். பழைய ஏற்பாட்டில் வலைக்கும் கண்ணிக் குமுள்ள வித்தியாசம் சரியாகக் காட்டப்பட வில்லை.

**ஆ. மீன் பிடிக்கும் வலை:** மீன் பிடிக்கும் வலைகளிலே இரண்டு வகை இருந்தன. ஒன்று கைவலை எனப்பட்டது. இதன் வாய் அகலமாகவும், கூம்புவடிவத்தில் சென்று முடிவடையும் அகலமான பகுதி தண்ணீருக்கு மேலும், கூம்பிய பகுதி தண்ணீருக்குள்ளும் இருக்கும் (மத் 4:18-21; மாற் 1:16-19). இரண்டாவது ''இழுவலை'' எனப்பட்டது. இவ்வலையின் தலைப்பகுதி மிதக்கின்ற தக்கைகளாலும், அடிப்பகுதி நீரில் மூழ்கக்கூடிய பொருட்களாலும் இணைக்கப்பட்டிருக்கும். இவை எப் போதுமே அரைவட்ட நிலையில் இழுத்து வரப்பட்டு, கரைக்குக் கொண்டு வரப்படும் (எசா 19:8; எசே 26:5; 47:10; 32:3; மத் 13:47). காண்க. மீன்பிடித்தல் (FISHING).

**இ) பறவைகளைப் பிடிக்கும் வலை:** பறவைகளைப் பிடிக்கும் வலைகள் பழ 1:17; ஓசே 7:11-12-இல் குறிப்பிடப் பட்டுள்ளன. அவைகளை எப்படிப் போடு கின்றார்கள் என்பதை நாம் ஊகித்துணர லாம். பழங்காலத்தில் எகிப்து மக்கள் சுருக்கு வலையைப் பயன்படுத்தி குளங்களி லுள்ள நீர்க்கோழிகளையும், சதுப்பு நிலங் களில் காணப்படுவனவற்றையும் பிடித் தார்கள்.

**ஈ) காட்டு மிருகங்களைப் பிடிக்கும் வலை:** தப்பித்து ஓடுகின்ற காட்டு விலங்கின் மீது வலைகளை வீசியும், புதரின் மறைவில் கட்டப்பட்டிருக்கும் வலைகளின் பக்கம் மிருகங்களைத் துரத்தியும் பிடித்தார்கள்

(எசா 51:20; எசே 19:8). காண்க. வேட்டையாடுதல்.

3. உலோகத்தால் செய்யப்பட்ட வலைகளும் வெண்கலத்தால் செய்யப்பட்ட வலைப்பின்னல்களும் பலிபீடத்தைச் சுற்றி அமைக்கப்பட்டதாக, யாத் 27:4-5; 38:4-இல் பார்க்கின்றோம். யாத் 35:16: 38:5.30; 39:39-இல் வெண்கலச் சல்லடை அல்லது வலைப்பின்னல் என்று குறிக்கப் பட்டுள்ளது.

ஆலயத்தின் நுழைவாயிலில் நிற்கும் இரு தூண்களும் வெண்கலப் பின்னல்கள் சுற்றப் பட்டு அதன் போதிகையை அழகு செய்த தாக பழைய ஏற்பாட்டில் பார்க்கின்றோம் (1 அர 7:17-20).

**4. உருவகத்தில் பயன்படுத்தப்படும் வலை:** பழைய ஏற்பாட்டில் ''வலை'' என்பது பேச்சில் உருவகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. அப்போது வலை இஸ்ராயேலரை ஆண்டவர் தண்டிப்பதைக் குறிக் கிறது. ''வலையில் நாங்கள் அகப்படச் செய்தீர்'' (சங் 66:11; புல 1:13; ஓசே 7:12). செதேக்கியாவையும் (எசே 12:13), யோபுவையும் (யோபு 19:6), எகிப்தையும் (எசே 32:3) தண்டித்ததைக் குறிக்கிறது. இஸ்ராயேல் விரித்த கண்ணியையும் (ஓசே 5:1), சங்கீத ஆசிரியரின் எதிரிகள் விரித்த வலையையும் (சங் 9:5; 31:4; 35:7-8; 57:6; 140:5; 141:10), மனிதன் மனிதனுக்கு விரித்த வலையையும் (சங் 10:9; மீக் 7:2; அப 1:15-17), தலைவிதி ஒத்த ஒன்றையும் (யோபு 18:8;சங் 25:15; திருவுரை 9:12), தீய முடிவையும் (யோபு 18:8) என்று உருவகமாக விவிலியம் விவரிக்கிறது. பழ 29:5-இல் அளவு மீறிப் புகழ்கிறவனின் தந்திரமும், திருவுரை 7:26-இல் பெண்ணின் கவர்ச்சியும் சிக்க வைக்கும் வலைக்கு ஒப்பிடப்படுகின்றன.

## வலைப்பின்னல் (NETWORK, GRATING)

1. வலைப்பின்னலைப் போன்ற ஒரு வெண்கலச் சல்லடை செய்து பலிபீடத்தின் பாதி உயரத்தில் வைக்கப்பட்டிருக்கும் (யாத் 27:4-5; 35:16; 38:4-5.30; 39:39).

2. சாலமோன் ஆலய வாயிலிலிருந்த இரு தூண்களை வெண்கல வலைப்பின்னல்கள் அழகு செய்தன (1 அர 7:18.20.41-42; 2 அர 25:17; 2 நாள் 4:12-13; எரே 52:22-23).

## வல்லூறு (HAWK, HERON)

வல்லூறு என்ற சொல் பல பறவைகளின் எபிரேயப் பெயர்களை மொழிபெயர்க்கப் பயன்பட்டுள்ளது. இப்பறவையினத்தில் பல வகையுண்டு. இது நீண்ட மெல்லிய கழுத்தையும், நீண்ட கால்களையும் உடையது. இது நீர் நிலைகளையொட்டிக் காணப் படும்; மீனும் மற்ற நீர்வாழ் உயிரினங் களையும் உணவாகக் கொள்ளும். இது சில இடங்களில் கூகை என்றும், இராசாளி என்றும் தமிழில் மொழி பெயர்க்கப்பட் டுள்ளது (லேவி 11:16.18; உப 14:18; யோபு 39:26; எசா 34:11).

இது லேவி 11:19; உப 14:18-இல் உண்ணத் தகாத தீட்டான பறவை என்று குறிக்கப்படுகிறது.

## வவ் (VAU)

இஃது எபிரேய நெடுங்கணக்கில் ஆறாவது எழுத்து; அகர வரிசைச் சங்கீதம் 119-இல் ஆறாவது பகுதிக்குத் தலைப்பாக உள்ளது. இப்பகுதியின் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்தோடு தொடங்குகிறது.

## வழி (WAY)

I. பழங்கால செமித்திய இனத்தவர் பெரும்பாலும் நாடோடிகள். ஆதலால், வழி, பாதை, சாலை என்பன அவர்களின் வாழ்வில் இன்றியமையாதவைகளாக இருந்தன. எனவே, அவர்களது சமய, ஒழுக்க நெறியிலும் இச்சொற்கள் மிகுதியாகப் பயன்பட்டன. இதன் காரணமாக இச்சொற்கள் எபிரேய மொழியில் பெருமளவில், பல பொருள்களில் கையாளப்பட்டுள்ளன.

II. **வழிகளும் வழியும்:**

1. ''வானத்தில் கழுகு மிதத்தல், கற்பாறை மேல் பாம்பு ஏறுதல், ஆண் மகனுக்குப் பெண் மீதுள்ள நாட்டம்'' (பழ 30:19) ஆகியவை ஒவ்வொன்றும் ஒரு வழியே. மாதவிடாய் ''பெண்ணின் வழியா

கும்'' (ஆதி 18:11; 31:35). பிறப்பும் இறப்பும் மண்ணில் தோன்றிய யாவர்க்கும் உரிய வழியாகும் (ஆதி 19:31; யோசு 23:14; 1 அர 2:2). மனித நடத்தையும் ஒரு வழி (1 அர 2:4; 8:25; 2 நாள் 6:16; சங் 119:1.9; யாக் 5:20) அல்லது வழிகளாகும் (யோபு 4:6; 13:15; 22:3; சங் 39:1; 119:5.26; எசே 16:47; அ.ப.14:16; 1 கொரி 4:17; யாக் 1:8). மனிதனுக்கு இரண்டு வழிகள் திறந்திருக்கின்றன. அ) நல்ல, நேரிய வழி (1 சாமு 12:23) அல்லது ஆண்டவரின் வழிகள் (ஆதி 18:19; சங் 18:21; 25:9). ஆ) தீய வழி (பழ 2:12; 8:13; எரே 18:11; எசே 3:18; யோனா 3:8.10; செக்1:4). இது பாவிகளின், பொல்லாதவர்களின் வழியாகும் (சங் 1:1.6). ஆண்டவரது வழிகளும் மனிதனுடையவைகளும் அடிப்படையிலேயே வேறுபட்டன (எசா 55:8-9). ஆண்டவருடைய வழிகள் நிறைவானவை (உப 32:4; 2 சாமு 22:31; சங் 18:30), நேர்மையானவை (ஓசே 14:10), நீதியானவை (தானி 4:34), உண்மையானவை (திருவெளி 15:3). மனிதனது வழிகள் நல்லவையாகவோ (1 அர 8:36; 2 நாள் 6:27; சங் 101:2.6; பழ 2:20; 29:27; எசா 26:7; மத் 21:32; உரோ 3:17; 1 கொரி 12:31; 2 பேதுரு 2:15.21), தீயவையாகவோ (ஆதி 6:12; எண் 22:32; நீதி 2:19; 1 அர 13:33;யோபு 22:15; சங் 36:4; பழ 4:14.19) இருக்கலாம்.

2. தீய வழிகளைத் தவிர்க்கவோ (சங் 119:101.104.128), பின்பற்றவோ (எசா 53:6; 57:17; 59:8; 65:2; 66:3; எரே 3:21) மனிதன் சுதந்தரம் கொண்டுள்ளான் (சங் 119:59; பழ 7:25; 21:29; 23:19). மனிதர்களும் நாடுகளும் நன்மைக்கோ, தீமைக்கோ தங்கள் வழிகளை மாற்றலாம் (எரே 18;எசே 18). ஒழுக்கப் பயிற்சி செயலாற்றல் மிக்கது (பழ 26:6). நல்லமாதிரி பின்பற்றப்படலாம் (1 அர 22:43; 2 அர 22:2; 2 நாள் 11:17; 17:3) அல்லது தீய மாதிரி பின்பற்றப்படலாம் (1 அர 15:26.34; 22:52; 2 அர 8:18.27; 16:3; 2 நாள் 22:3; பழ 16:29; எரே 10:2; எசே 23:13.31; 2 பேதுரு 2:15; யூதா 11), அன்றி பின்பற்றப்படாமல் தவிர்க்கப்படலாம் (1 சாமு 8:3.5; 2 நாள் 21:12). ஒருவர் தவறாக வழிநடத்தப்படலாம் (எசா 3:12).

3. ''இறைவனுடைய கண் மனிதரின் நடத்தை மேல் உள்ளது''. இறைவன் அவர்களைக் கவனிக்கிறார்; அவர்களது வழிகளை அறிகின்றார் (யோபு 24:23; 31:4; 34:21; சங் 119:168; 139:3; பழ 5:21; எரே 16:17). தோற்றத்திற்கு எவ்வாறாய் இருப்பினும் (சங் 37:7-8), ஒவ்வொருவருடைய வழிகளுக்கேற்பப் பலனளிக்கிறார் (1 அர 8:32.39; 2 நாள் 6:23; யோபு 34:11;சங் 146:9; பழ 14:14; எரே 4:18; 17:10; 32:10; எசே 7:3.27; 11:21; 16:43; 18:30; 22:31; 24:14; 33:20; 36:19; ஓசே 4:9; செக் 1:6; 3:7). இருப்பினும், இஸ்ராயேல் மனம் வருந்தித் திரும்ப வரும்போது, அதன் தீயவழிகளுக்கேற்ப அன்று, தமது பெயருக்காகவும் உடன்படிக்கைக்காகவும், அவர்களை நடத்துவார் (எசே 16:61; 20:43; 36:31-32). மனிதர் தங்களது தீயவழிமுறைகளையும் எண்ணங்களையும் விட்டுவிட்டு, மனந்திரும்பி வாழ்வதையே ஆண்டவர் விரும்புகிறார் (2 அர 17:13; 2 நாள் 7:14; எசா 55:7; எரே 7:3.5; 18:11; 25:5; 26:3.13; 35:15; எசே 18:23; 33:8; யோனா 3:8.10; செக் 1:4). இறைவன் தம் வழிகளை மனிதனுக்குப் போதிக்கவும், அவற்றில் அவனை நடத்தவும் எப்போதும் ஆயத்தமாக உள்ளார் (சங் 16:11; 23:3; 25:8-9.12; 27:11; 32:8; 86:11; 119: 27.29.33.35.37; 143:8; எசா 30:21; எரே 32:39; 42:3; மீக் 4:2). ஆண்டவருடைய வழியைப் பின்பற்றுவது என்பது மோசே சட்டத்தைக் கடைப்பிடிப்பதாகும் (யாத் 18:20; 32:8; உப 5:33; 8:6; 9:12; 10:12; 11:22; 19:9; 26:17; 28:9; 30:16; யோசு 22:5; சங் 18:21; 25:4; 51:13; 81:13; 95.10; 103:7; 119:1.3; எசா 2:3; 42:24; 58:2; எரே 7:23; மாற் 12:14; லூக் 20:21). மனிதனுக்குத் திறந்திருக்கும் இருவழிகளுள் ஒன்று வாழ்வுக்கும் அமைதிக்கும் இட்டுச் செல்கிறது (சங் 16:11; பழ 3:17; 4:18; 6:23; 8:32; 10:17.29; 11:5; 12:28; 13:6; 15:24; 16:7.17; எரே 21:8; மத் 7:13-14;

அ.ப. 2:28; உரோ 3:17); மற்றது சாவுக்கும் துன்பத்திற்கும் இட்டுச்செல்கிறது (பழ 7:27; 13:15; 14:12; 16:25; 21:16; 22:5.25; எசா 59:7). மனிதன் தனது விதியைத் தானே கட்டுப்படுத்துவதாக எண்ணும் மயக்கத்தில் இருக்கலாம்; தன் விருப்பம்போல் செயலாற்றலாம் (பழ 12:15.26; 16:9; 21;2; எரே 10:23). ஆனால், ஆண்டவர்தான் மனிதனது வழிகளை நடத்துகிறார், பாதுகாக்கிறார் (சங் 37:23; 91:11; பழ 2:8; 16:9; எரே 10:23; தானி 5:23). ஆண்டவரிடம்தான் மனிதன் தன் வழிகளை ஒப்படைக்க வேண்டும் (சங் 37:5; பழ 3:6). ஆயினும், இறுதிவழி திரும்ப வரவியலாததாகவே உள்ளது(யோபு 16:22). இறைவாக்கினர் அறிவித்த ஆண்டவருடைய வழி, இறைவனது நோக்கம் (எசா 40:3; மலா 3:1) கிறிஸ்துவில் நிறைவேறுகிறது (மத் 3:3; மாற் 1:2-3; லூக் 3:4; 7:27; யோவா 1:23; அ.ப. 18:25-26). அஃது அமைதியின் (லூக் 1:79), உண்மையின் (2 பேதுரு 2:2), மீட்பின் (அ.ப. 16:17) வழியாகும். கிறிஸ்து ''புதியதும் உயிருள்ளதுமானதொரு பாதையைத் திறந்து வைத்துள்ளார்'' (எபி 10:20). அவரே வழி (யோவா 14:4-6). கிறிஸ்துவம் புதிய நெறி, வழி என்றழைக்கப்பட்டது (அ.ப. 9:2; 19:9.23; 22:4; 24:14.22).

III. **இறைவனின் வழிகள்:**

ஆபிரகாம் இறைவனின் குரல் கேட்டு வெளியேறினார் (ஆதி 12:1-5); அன்று மாபெரும் திருப்பயணம் ஒன்று ஆரம்பித்தது. அதில் பங்கேற்கும் இறைவனின் வழிகளைக் கண்டு பிடித்துப் பின்பற்றுவது எப்போதுமே பெரும் பிரச்சனையாக இருக்கிறது. அவருடைய வழிகளோ திக்குமுக்காடச் செய்கின்றன. ''என் வழிகள் உன் வழிகள் அல்ல'' என்று ஆண்டவரே கூறினார் (எசா 55:8). ஆனால், அவை வியப்பூட்டும் வகையில் நிறைவுக்கும் முழுமைக்கும் அழைத்துச் செல்கின்றன.

1. மேற்கூறியவாறு மனிதன் இறைவனோடு மேற்கொள்ளும் திருப்பயணத்தின் நிகரற்ற மாதிரியாக விளங்குவது இஸ்ராயேலர் எகிப்து நாட்டிலிருந்து வெளிப்போந்த **விடுதலைப் பயணமாகும்.** இதில் மக்கள் ''இறைவனோடு நடப்பது'' (மீக் 6:8) என்றால் என்ன என்றும், அவரோடு உடன்படிக்கை செய்வது என்றால் எப்படி இருக்கும் என்றும் அனுபவ வாயிலாக உணர்கின்றனர். இறைவன் அவர்களுக்கு வழிகாட்டிட மேகமாகவும், நெருப்புத் தூணாகவும் அவர்களுக்கு முன் செல்கின்றார் (யாத் 13:21 தொ). ''கடலைப் பிளந்து வழிநடத்தினார்; நீர்த்திரளை அணைபோல் நிற்கச் செய்தார்'' (சங் 77:20) எனும் மொழிக்கேற்ப, கடல் கூட அவருக்குத் தடையாக அமைவதில்லை. அதன் விளைவாக இஸ்ராயேலர் எகிப்திலிருந்து தப்பி, சுதந்தரம் பெறுகின்றனர்; பிறகு, பாலைவனத்தில் தங்கள் பயணத்தைத் தொடர்கின்றனர் (சங் 68:8). அங்கு இறைவன் தன் மக்களுக்காகப் போராடி, ஒரு தந்தை தன் மகவை ஏந்திச் செல்வது போல அவர்களை ஏந்திச் செல்கின்றார். அவர்களுக்கு உணவும், நீரும் அளித்து, பாளையம் இறங்க ஓர் இடத்தையும் தேடிப் பிடிக்கின்றார். அவரது பராமரிப்பில் அவர்களுக்கு எந்தக் குறையும் இருப்பதில்லை (உப 1:30-33).

அதே சமயத்தில் இஸ்ராயேல் தன்னிடம் விசுவாசம் இழக்கும்போது இறைவன் அம்மக்களைத் தண்டிக்கத் தவறுவதில்லை. இவ்வாறு இறைவனோடு மேற்கொள்ளும் திருப்பயணத்தில் அதற்குரிய இடர்ப்பாடுகளும் உள்ள பாலைநிலத்தில் அவர்கள் உள்ளங்களில் உள்ளதை அவர்களே அறிந்து கொள்ளும்படி செய்து, இறைவன் அவர்களைத் திருத்துகின்றார் (உப 8:2-6). எனவே, பாலைவனத்தில் வாழ்ந்த காலம் சோதனைக் காலமாகின்றது. எனவே, இறைவனின் வழி நீண்டதாயும், சுற்றானதாயும் இருக்கின்றது (உப 2:1தொ). எனினும், அவ்வலைச்சலுக்கும் ஒரு முடிவு உண்டு. உண்மையில் இறைவன் அவர்கள் இளைப்பாறும் வண்ணம் வளநிலத்திற்கு அழைத்துச் செல்கின்றார். அங்கு அவர்கள் உண்டு, நிறைவு எய்தி, யாவேயைப் போற்றுகிறார்கள் (உப 8:7-10). எனவே,

''ஆண்டவரின் வழிகள் யாவும் அருளும், உண்மையும் கொண்டவை'' (சங் 25:10; காண். சங் 136); ''அவருடைய வழிகள் யாவும் நேர்மையானவை'' (உப 32:4) என்பன படிப்படியாகத் தெளிவாகின்றன.

ஆண்டுதோறும் நடைபெற்ற பாஸ்கா விழாவிலும், கூடார விழாவிலும் எகிப்திலிருந்து அடைந்த விடுதலைப் பயணம் திரும்பத் திரும்ப நினைவுபடுத்தப்பட்டது. எனவே, இப்பயணம் ஒவ்வொரு யூதனின் நினைவிலும் ஆழமாகப் பதிந்திருந்தது. மேலும் செக்கேம், சீலோ, பிற்காலத்தில் எருசலேம் ஆகிய இடங்களுக்கு மேற்கொள்ளப்பட்ட திருப்பயணங்கள் இறைவன் தரும் இளைப்பாற்றுதலுக்கு அழைத்துச் செல்லும் புனித வழியைப் பற்றிய கருத்தினை இன்னும் ஆழமாக மனத்தில் பதித்தன. இக்கருத்தின் அடிப்படையில்தான் எலியா, இஸ்ராயேல் யாவேயை மறந்து சிலை வழிபாட்டில் மனத்தைச் செலுத்தியபோது, ஓரேபு மலைக்குப் பயணமாகின்றார். பிற்காலத்தில் இறைவன் தனது குழந்தையான இஸ்ராயேலைக் கையில் ஏந்திப் பயணமான காலத்தை (ஓசே 11:1 தொ) இறைவாக்கினர் கருத்தியலாக்கி எடுத்துரைக்கின்றனர்.

**2. திருச்சட்டம்:** வாக்களிக்கப்பட்ட நாட்டை அடைந்ததன் பின் ஆண்டவரின் வழியில் இனியும் தொடர்ந்து பயணம் செய்கின்ற கடமை (சங் 128:1) இஸ்ராயேலுக்கு எள்ளளவும் குறையவில்லை. உண்மையில் இறைவனின் வழிகளைப் பற்றிய அறிவும் தெளிவும் இஸ்ராயேல் மக்களின் தனிச் சிறப்புடைமை ஆயிற்று (காண். சங் 147:19தொ). அறிவதற்கான அனைத்து வழிகளையும் ஆண்டவர் அவர்களுக்கு வெளிப்படுத்தினார். இஃது என்றுமே அழிவுறாத அவரது திருச்சட்டங்களின் தொகுப்பாகும் (பாரூ 3:37;4:1). இனி இஸ்ராயேலர் ''ஆண்டவரின் திருச்சட்டப்படி நடக்க வேண்டும்'' (சங் 119:1). இதுவே, உடன்படிக்கையில் மாறாது இருக்கவும், ஒளி, அமைதி, நல்வாழ்வு இவற்றை நோக்கி நடைபோடவும் வழிகோலும் (பாரூ 3:13தொ). எனவே, மனிதன் நடக்க வேண்டிய உண்மையான பாதை திருச்சட்டமாகும். ஏனென்றால், அதுவே இறைவன் வகுத்த வழியாகும்.

திருச்சட்டத்தை மீறிச்செல்வது என்பது அழிவை நோக்கிச் செல்வதாகும் (உப 31:17). அதன் இறுதித் தண்டனை நாடிழந்து அடிமைகளாவதாகும். இஃது எகிப்திலிருந்து கிளம்பிய விடுதலைப் பயணத்திற்கு எதிரிடையான அடிமைப்பயணமாகும் (லேவி 26:41; ஓசே 11:5). ஆனால் தம் மக்களை முற்றிலும் தோல்வியுற விடுவது இறைவனுக்கு இயலாத ஒன்றாகும் (லேவி 26:44 தொ). எனவே (அவர்கள் திரும்பி வர), ''பாழ்வெளியில் யாவேயின் வழியை ஆயத்தப்படுத்துவது'' அவசியமாகின்றது (எசா 40:3). தன் மக்கள் வெற்றி வாகையோடு திரும்பி வர யாவேயே ''பாழ்வெளியில் பாதையொன்று வகுப்பார்'' (43:19); ''மலைகளை வெட்டி, சாலை அமைப்பார்'' (49:11).

IV. **இருவழிகள்:** மனிதனின் ஒழுக்க வாழ்வை ''இரு வழிகள்'' பற்றிய கொள்கையில் யூதர்கள் மொழிந்தனர். அதன்படி, இருவகையான ஒழுகலாறுகளும் அதற்கேற்ப இருவகையான நெறிகளும் உள்ளன. அவை நல்வழி, தீவழி என்பன (சங் 1:6; பழ 4:18 தொ; 12:28). நல்வழி நேரானது, செம்மையானது (1 சாமு 12:23; 1 அர 8:36; சங் 101:2.6; 1 கொரி 12:31). நீதியைக் கடைப்பிடிப்பதிலும் (பழ 8:20; 12:28), உண்மை வழுவாது வாழ்வதிலும் (சங் 119:30; தோபி 1:3), அமைதியைத் தேடுதலிலும் (எசா 59:8; லூக் 1:79) நன்னெறி அடங்கும். ஞானநூல்கள் நல்வாழ்வுக்கு இட்டுச் செல்லும் வழியைக் கற்பிக்கின்றன (பழ 2:19; 5:6; 6:23; 15:24). அவ்வழியில் நடப்பவன் இத்தரையில் நீண்டகாலம் வளமிக்க வாழ்வு பெறுவான்.

தீயோரின் வழியோ கோணலானது (பழ 21:8); மதியீனர்களையும் (பழ 12:15), பாவிகளையும் (சங் 1:1; சீரா 21:10),

அக்கிரமிகளையும் *(சங் 1:6; பழ 4:14.19; எரே 12:1)* அழிவுக்கும் *(சங் 1:6)*, சாவுக்கும் *(பழ 12:28)* இட்டுச்செல்வது. இவ்விரு வழிகளில் ஒன்றைத் தன் விருப்பத்தின்படி தேர்ந்தெடுக்க மனிதனுக்கு முழு உரிமையும், பொறுப்பும் உண்டு *(உப 30:15-20; சீரா 15:12)*.

'அழிவுக்குச் செல்லும் வழி அகன்றது; மிகப் பரந்தது. அதன் வழியே நுழைபவர் பலர். வாழ்வுக்குச் செல்லும் வாயில் எவ்வளவோ ஒடுக்கமானது; மிக இடுக்கானது. இதைக் கண்டு பிடித்து நுழைபவர் சிலரே' என்று நற்செய்தியும் எடுத்துரைக்கின்றது *(மத் 7:13 தொ)*.

V. **வாழும் வழி கிறிஸ்து:** அடிமைகளாய் நாடு கடத்தப்பட்ட இஸ்ராயேல் மறுபடியும் விடுதலை பெற்றுத் தாயகம் திரும்பியது அவர்கள் இறுதியாகப் பெறவிருந்த முழுமையான விடுதலையின் முன் அடையாளமே ஆகும். இதனை, இரண்டாவது எசாயாவின் கூற்றினை அடியொற்றி திருமுழுக்கு யோவான் தெளிவாக அறிவிக்கிறார். ''ஆண்டவரின் பாதைகளைச் செம்மைப்படுத்துங்கள்'' *(லூக் 3:4=எசா 40:3)*. மெசியாவின் காலத்தில் நடக்கும் புதிய விடுதலைப் பயணம் இறைவன் தரும் இளைப்பாறுதலுக்கு *(எபி 4:8தொ)* நிச்சயமாக அழைத்துச் செல்கிறது. இதில் இயேசுவே புதிய மோசே; அவரே வழி நடத்துபவர்; வழித்துணை; தலைவருமாவார் *(லூக் 24:15; எபி 2:10தொ; 17:2தொ)*. அவர் தன்னைப் பின்பற்றி நடக்க மனிதருக்கு அழைப்பு விடுக்கின்றார் *(மத் 4:19; லூக் 9:57-62; யோவா 12:35தொ)*. வரவிருக்கும் இறையரசினுடைய மகிமையின் முன்னறிவிப்பாக கிறிஸ்துவின் உருமாற்றம் ஒரு சில விநாடிகளுக்கு ஒளிவீசியது. ஆனால், கல்வாரியில் சிறிது நேரம் தங்க வேண்டும் என்பதைப் பாடுகளைப் பற்றிய முன்னறிவிப்பு உணர்த்துகிறது. ஆதலால், சிலுவையின் வழியே, மகிமையின் வழியாகும் *(மத் 16:23; லூக் 24:26; 9:23 யோவா 16:28)*. எனவே, இயேசு முன் வைத்த காலைப் பின்வைக்காது, எருசலேமை நோக்கிப் பயணமாகி, அங்குத் தன்னையே பலியாக ஒப்புக்கொடுக்கின்றார் *(லூக் 9:51; 22:22.33)*. பழைய பலிகளைப் போலன்றி, அவருடைய பலி வானகத்திற்குள்ளேயே நுழைகின்றது *(எபி 9:24)*; அதே சமயத்தில், நாம் பின் செல்லவும் ஒரு வழியை நமக்கு அமைத்துக் கொடுக்கின்றது. அவருடைய இரத்தத்தின் விளைவாக இறையாசனத்திற்குமுன் தோன்ற நமக்கு வாய்ப்புக் கிடைத்துள்ளது. குத்தி ஊடுருவப்பட்ட அவரது உடலின் மூலம், வாழும் வழியொன்றை இயேசு நமக்காகத் திறந்துள்ளார் *(எபி 10:19 தொ)*. அப்போஸ்தலர் பணி நூலில் கிறிஸ்துவ மறையை ''வழி'' என்ற சொல்லாலேயே குறிப்பிட்டனர் *(அ.ப. 9:2; 18:25; 24:22)*. ஏனெனில், அப்பொழுதுதான் புதிதாக வெளிப்படுத்தப்பட்ட மெய்வழி தங்களுக்குத் தெரிந்து விட்டது என்ற மகிழ்வுணர்வு ஆதிக்கிறிஸ்தவரிடம் இருந்தது *(எபி 9:8)*. அவர்கள் கண்ட புதுவழி முன்புபோலச் சட்டதிட்டத்தின் வடிவில் இருக்கவில்லை; மாறாக, இயேசுவே அப்புது வழியாக இருக்கிறார் *(யோவா 14:6)*. அவரில்தான் ஒரு கிறிஸ்தவனின் ''திருக்கடப்பும்'', ''விடுதலைப் பயணமும்'' நிகழ்கின்றன. அன்பின் வழியைப் பின்பற்றி *(எபே 5:2; 1 கொரி12:31)*, அவரில்தான் ஒன்றித்து நடக்க வேண்டும் *(கொலோ 2:6)*. ஏனெனில், அவரில்தான் யூதனும் கிரேக்கனும் ஒன்றாக ஒரே தேவ ஆவியில் தந்தையை அணுகும் பேறு பெற்றுள்ளனர் *(எபே 2:18)*.

**வழித்துணை** *(CUSTODIAN, GUIDE)*

அந்தக் காலத்தில், சிறுவன் 16 வயதை அடையும்வரை அவனைக் கவனித்துக் கொண்டும், பள்ளிக்கு அழைத்துச் சென்றும் வந்த அடிமையின் பட்டம்.

*கலா 3:24-25*-இல் புனித பவுல் இப்பெயரை உருவகப்படுத்திப் பேசுகிறார். இங்கே சட்டத்தின்படி நடப்பவர்களின் சிறுமைத்தன்மையைக் கூறுகிறார்.

''விசுவாசம் அளிக்கப்படுமுன், அவ்விசுவாசம் வெளிப்படும்வரை, சட்டத்தின் கீழ் அடைபட்டுக் காவலில் வைக்கப்பட்டிருந்

தோம். அவ்வாறு விசுவாசத்தால் நாம் இறைவனுக்கு ஏற்புடையவர் ஆக்கப்படுவதற்குத் திருச்சட்டம் நம்மைக் கிறிஸ்துவினிடம் அழைத்துச் செல்லும் வழித்துணையாய் இருந்தது. இப்பொழுது விசுவாசம் அளிக்கப்பட்டதால், இனி நாம் வழித்துணைவனின் கண்காணிப்பில் இல்லை''.

இங்கே வழித்துணையாளர் பாதுகாப்பதோடு மட்டுமல்லாமல் ஒரு பொருளில் கிறிஸ்துவிடமும் அழைத்துச் செல்கிறார்.

*1 கொரி 4:15*-இல் கொரிந்தியர்களுக்கு ஆசிரியர்கள், வழிகாட்டிகள் பலர் இருந்தாலும் தான்தான் அவர்களை இயேசு கிறிஸ்துவில் ஈன்றெடுத்த தந்தை என்று பவுல் உரிமை கொண்டாடுகிறார்.

## வழிபாடு *(WORSHIP)*

I. எல்லா மதங்களிலும் வழிபாடுதான் கடவுளுக்கும் மனிதனுக்குமிடையேயுள்ள உறவை உருவாக்குகின்றது, வலுப்படுத்துகின்றது, வளர்த்து விடுகின்றது. விவிலியத்தைப் பொருத்தவரையில் இந்த உறவுகட்கு முதல் முயற்சி எடுப்பவர் தன்னையே வெளிப்படுத்திக் கொண்ட உயிருள்ள கடவுள்தான். இதற்குப் பதிலாக மனிதன் கடவுளை வணங்குகிறான். இஃது ஒரு சமூகப் பண்பைப் பெறுகிறது. வழிபாடு மனிதனுக்கு அவசியம். அவனுக்குத் தன்னைப் படைத்த ஒருவரைச் சார்ந்து இருக்க வேண்டிய தேவை மட்டுமன்று. கடவுளே தன்னை வணங்கி, பணிவிடை செய்ய மனிதர்களைத் தேர்ந்தெடுத்து அதன் வழியாக அவர்கள் தன் சாட்சிகளாக மாற வேண்டும் என எதிர்பார்க்கிறார். எனவே, தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதர்கள் தங்கள் பணியைக் கடவுளை வழிபடுவதன் மூலம் நிறைவேற்ற வேண்டும். எபிரேயத்தில் வழிபாடு என்ற சொல் 'பணிசெய்ய' என்ற அடிச்சொல்லிலிருந்து வருகிறது.

II. **பழைய ஏற்பாடு:**

***1. வரலாற்றில் உண்மைக் கடவுளின் வழிபாடு:*** விவிலியம் வழிபாடு வரலாற்றில் சிறிது சிறிதாக வளர்ச்சி பெறுவதைக் காட்டுகிறது. எல்லா வழிபாடுகளுக்கும் பொதுவான சில தன்மைகள் எழுவதைப் பார்க்கிறோம். புனித இடங்கள், பொருட்கள், புனித மனிதர்கள், புனித நேரங்கள் (ஓய்வு நாட்கள், விழாக்கள்), வழிபாட்டுச் செயல்கள் (சுத்திகரிப்பு, விருத்தசேதனம்), மதத்தின் கட்டளைகள் என வளர்ந்து வழிபாட்டைச் சிறப்பித்தன.

பாவத்திற்குமுன் கடவுளுக்கும் மனிதருக்குமிடையேயுள்ள உறவு எந்தவிதச் சிக்கலுமற்றதாக இருந்தது. நல்லது தீயது அறிய உதவும் மரத்தின் கனியை உண்ண மாட்டாய் என்ற கட்டளைக்குக் கட்டுப்பட்டு அதன் மூலம் தான் கடவுளைச் சார்ந்தவன் என்பதை உணர்ந்து வாழ்வதன் மூலம் மனிதன் வாழ்வின் மரத்தின் கனியை உண்ணலாம் *(ஆதி 2:9; 3:22)* என்ற நிலை இருந்தது. வழிபாட்டுக்கு இணையான ஒரு செயலால் மனிதன் கடவுளோடு உறவு கொள்ளவும் உரையாடவும் முடிந்தது. இதே வாழ்வின் மரம் விண்ணக எருசலேமிலும் இருக்கிறது. ஆனால், இங்கு வழிபாடு கடவுளையும் மனிதனையும் இணைக்கும் பாலமாக இருப்பதில்லை *(திருவெளி 22:2தொ)*. ஏனெனில், இங்கு மனிதன் கடவுளை நேருக்கு நேராகச் சந்திக்கிறான்.

முதல் பாவத்திற்குப் பிறகு வழிபாட்டில் பலியிடுதல் தோன்றுகிறது. மூதாதையர்கள் யாவேயைத் தொழுது அவருக்கென பீடங்கள் எழுப்புகின்றனர் *(ஆதி 4:26; 8:20; 12:8)*. ஆனால், கடவுள் எவ்வகை வழிபாட்டையும் அப்படியே ஏற்கவில்லை. பலி கொடுக்கும் மனிதனின் உள்ளார்ந்த நிலையைப் பார்ப்பதோடு *(4:3தொ)*, மனிதனைப் பலியிடுதல் *(22; 2 அர 16:3; லேவி 20:2தொ)*, வழிபாட்டின் பெயரில் விபசாரம் செய்தல் *(1 அர 22:47; உப 23:18)*, கண்ணால் காணமுடியாத கடவுளை உணர்த்த சிலைகளைச் செய்தல் *(உப4:15-18; காண்க. யாத் 32:4)* போன்ற வெளிப்படையான முறை கேடுகளையும் கடவுள் ஏற்பதில்லை. அவற்றைப் புறம்பாக்குகிறார். கடவுளின் மக்களாகிய இஸ்ராயேலருடன் உடன்படிக்கை செய்யப்பட்ட பிறகு, அவர்கள் வழிபாடு பல சட்ட திட்டங்களுக்கு உட்படுத்தப்பட்டது.

கடவுளின் பிரசன்னத்தை உணர்த்தும் உடன்படிக்கையின் பேழை அவர்கள் வழி பாட்டின் மையமாக அமைந்தது. முதலில் எங்கு வேண்டுமானாலும் தூக்கிச் செல்ல முடிந்த நிலையில் உடன்படிக்கையின் பேழை பல வழிபாட்டு மையங்களில் தங்கியது (யோசு 18:1). தாவீது இறுதியாக அதனை நிலையாக எருசலேமில் கொண்டு வந்து வைத்தார் (2 சாமு 6). சாலமோன் அதற்கு ஆலயம் எழுப்பினார் (1 அர 6). உபாகமச்சீர்திருத்தத்திற்குப்பின் இந்த ஆல யம் பலிவழிபாட்டின் ஒரே மையமாக விளங்கியது. நாடு கடத்தலுக்குப்பின் வழி பாடு மோசே அளித்ததாகக் கருதப்பட்ட வழிபாட்டுச் சட்டங்களின்படி நடத்தப்பட் டது. பென்சீராக்கு மக்கபேயர்களின் போராட்டத்திற்குச் சிறிது முன்பு, மேலே கூறப்பட்ட உறவின் பிணைப்பை வலி யுறுத்தி மக்கள் சட்டத்திற்கும், ஒரே கட வுளுக்கும் வழிபாட்டுக்கும் என்றும் பிர மாணிக்கமாய் இருக்குமாறு கூறுகிறார் (1 மக் 1:41-46). செபக்கூடங்களின் வழிபாடு, பாடல்கள், செபங்கள் முதலியவற்றைக் கொண்டு நாடு கடத்தலுக்குப்பின் சிதறிப் போன யூத சமூகத்தை ஒன்றிணைக்கும் பணியைச் செய்தது. அத்துடன் ஆலய வழிபாட்டை நிறைவு செய்தது. ஆனால், இஃது ஒரே ஆலயத்தின் சலுகைகளை நீக்கிவிடவில்லை. ஆனால், கும்ரான் குழு வினர். இந்த ஆலய வழிபாட்டிலிருந்தும் குருத்துவப் பலிமுறையினின்றும் தங் களையே பிரித்துக் கொள்கின்றனர். ஏனெனில், அவர்கள் புதுப்பிக்கப்பட்ட ஓர் ஆலயத்தில் தனித்து இறைவனை வழிபட விரும்பினர்.

**2. வழிபாட்டுச் சடங்குகளும் இறைமக்க ளுக்குப் போதனையும்:** கடவுளின் மக்கள் தங்கள் அண்டை நாட்டவரது நாடோடி ஆயர்களின் அல்லது நிலையான உழவர் களின் வாழ்வைப் பிரதிபலிக்கும் வழி பாட்டுச் சடங்குகளின் பண்புகளைத் தங்கள் வழிபாட்டில் சேர்த்துக் கொண்டனர். ஆனால், உடன்படிக்கை வரலாற்றோடு இந்தச் சடங்குகளை இணைத்து, இவற் றிற்குப் புதிய பொருள் கொடுத்து (உப 16:1-8; லேவி 23:43) பலியால் அதனைச் செல்லத்தக்கதாகச் செய்தனர் (யாத் 5:1தொ; 19:6; சங் 50:5). அவர்கள் வழிபாட்டுச் சடங்கில் பாஸ்கா, கூடாரம், உடன் படிக்கை என எல்லாத் தன்மைகளும் உள்ளடங்கி, வரலாற்றில் இறைவன் அவர் களுக்குச் செய்தவற்றைப் போதிக்கும், சம யக்கல்வி அளிக்கும் சந்தர்ப்பங்களாக அவை அமைந்தன.

சடங்குகள் இவ்வாறு கடந்த நிகழ்வு களை நினைவுகூர்ந்து அவற்றைக் கொண் டாடிப் புதுப்பிக்கின்றன. அத்துடன் அவற் றிற்கு நிகழ்கால உண்மை அளித்து மக்க ளின் விசுவாசத்தைப் புதுப்பித்து, அவர்கள் விசுவசிக்கும் கடவுள், கடந்த காலத்தைப் போல் இன்றும் பிரசன்னமாக உள்ளார், மற்றும் சக்தியுள்ளவர் என்ற நம்பிக்கையை ஆழப்படுத்துகிறது (சங் 81:106; உப 1-11; யோசு 24). இறுதியாக இறைவன் தமது அரசை இம்மண்ணில் ஒருநாள் முழுமை யாக நிலைநாட்டுவார். அன்று விடுதலை பெற்ற இஸ்ராயேலரோடு பிறநாடுகள் ஒன்று சேர்ந்து உண்மையான இறைவனை வழிபடும்.

இத்தகைய முன்னோக்கிய பார்வை சிறிது சிறிதாகத்தான் மக்கள் மனதில் உருப்பெற்று வளர்ச்சி அடைகிறது. சிறப் பாக, புதிய உடன்படிக்கையின் நம்பிக் கையை மக்கள் உள்ளத்தில் ஏற்படுத்திய இறைவாக்கினர்கள்தான் பாராட்டுக்குரிய வர்கள் (எரே 31:31 தொ). முக்கியமாக ஆறுதலின் நூலிலும் (எசா 45), நாடு கடத்தலுக்குப் பின் வந்த இறைவாக்குகளி லும் (எசா 66:18-23; செப் 14:16-21) ஒரே கடவுள் தனது திட்டத்தை வெளிப்படுத்துகி றார். உலகனைத்தையும் படைத்தவரும் மீட்பரும் என்ற முறையில் அனைவரும் தன்னை அறியவும் தன்னை வழிபடவும் வேண்டும் என்பதே அந்த ஒரே கடவுளின் விருப்பமாகும். அவரது திட்டத்தின் சாட்சி களான இறைவாக்கினர்கள் உடன்படிக்கை யின் கடவுள் வாழ்வற்ற, உயிர் அற்ற வழிபாட்டை விரும்பவில்லை என்பதைத்

தெளிவாக்குகின்றனர். அதே சமயத்தில், மக்களின் ஒதுங்கியிருக்கும் தன்மையையும், சடங்கு முறை மனப்பான்மையையும் தாக்கி, இஸ்ராயேலின் வழிபாடு ஆன்மீக வாழ்வில் ஊன்றியதாக இருக்க வேண்டும் என்றும், தமது மக்களிடமிருந்து எதிர்பார்க் கும் ஆற்றல் மிக்க சாட்சியாக இருக்க வேண்டும் என்றும் இறைவாக்கினர்கள் வலியுறுத்துகின்றனர்.

**3. உண்மை வழிபாட்டின் ஆன்மா: உடன் படிக்கைக்குப் பிரமாணிக்கமாயிருத்தல்:** இறைவாக்கினர்களின் குரலைக் கேட்டு உடன்படிக்கையின் உள்ளார்ந்த கோரிக்கை களுக்குப் பணிந்து நடந்தால், நிச்சயமாக இஸ்ராயேலரின் வழிபாடு ஆன்மீக வழி பாடாக அமையும். இத்தகைய உள்ளார்ந்த பிரமாணிக்கமே இறைவனுக்குச் செலுத்தும் உண்மையான வழிபாட்டின் நிபந்தனை யும், இஸ்ராயேலுக்கு யாவேயைத் தவிர வேறு கடவுள் இல்லை என்பதற்குச் சாட்சி யுமாகும் *(யாத் 20:2தொ)*. அவர்களைக் காத்த கடவுள் புனிதமானவர். அவர் புனித குருத்துவ மக்களும் புனிதமானவர்களாக இருக்க வேண்டும் என்று கோருகிறார் *(லேவி 19:2)*. இவற்றை நினைவுகூரும் இறைவாக்கினர்கள் இந்தச் சடங்குகளைப் புறக்கணிக்காமல் அவற்றின் உண்மையான பொருளை அவற்றிற்குக் கொடுக்க வேண் டும் என்கின்றனர். நாம் பெறும் ஒவ்வொரு வாழ்வின் கொடைக்கும் ஊற்றாக இருக் கும் கடவுளுக்கு, நமது பலியின் கொடை கள் நமது நன்றியை அவருக்குச் செலுத்துவ தாக அமைய வேண்டும் *(சங் 50)*.

கீழ்ப்படிதல் இல்லாதவர்களின் பலியை இறைவன் புறக்கணிக்கிறார் என்பதை ஏற் கெனவே சாமுவேல் உறுதிப்படுத்தியிருக்கி றார் *(1 சாமு 15:22)*. ஆமோசும், எசாயாவும் இதே கருத்தை மிக அதிகமாகத் திரும்பவும் வலியுறுத்துகின்றனர் *(ஆமோ 5:21-26; எச 1:11-20; 29:13)*. எரேமியா ஆலயத்தில் நின்று கொண்டே அவர்கள் சடங்குகளின் வெறுமையைச் சுட்டிக்காட்டி, அவர்கள் உள்ளம் தீமையால் நிறைந்திருப்பதையும் கண்டனம் செய்கிறார் *(எரே 7:4-5.21தொ)*. குருவும் இறைவாக்கினருமான எசேக்கி யேல், சிலைவழிபாட்டால் இழிவுபடுத்தப் பட்ட ஆலயத்தின் அழிவைப் பற்றிக் கூறிவிட்டு, புதிய உடன்படிக்கையின் புதிய ஆலயம் *(எசே 37:26)* விசுவாசிகளின் வழிபாட்டு மையமாக இருக்கும் என விவரிக்கிறார் *(எசே 40-48)*. நாடு கடத்து தலிலிருந்து திரும்பி வந்த இறைவாக்கினர் கள் கடவுள் தனது மக்களின் வழிபாட்டை எந்த நிபந்தனையின் கீழ் ஏற்றுக் கொள்வார் என்பதைக் கூறுகின்றனர். அவர்கள் உண் மையிலேயே ஒரு சகோதரச் சமூகமாக வாழும்போதுதான் அவற்றை ஏற்றுக்கொள் வார் என்கின்றனர் *(எசா 58:6தொ. 9 தொ.13; 66:1தொ)*.

இறைவனுக்கு அஞ்சி, சட்டத்தைக் கடைப்பிடிக்கும் புறவினத்தாரை இந்தச் சமூகம் கரம் விரித்து வரவேற்கிறது. மேலும், உலகளாவிய வழிபாடு பரவலாக் கப்படுகிறது *(மலா 1:11)*. இத்தகைய எதிர்பார்ப்புகளால் ஆட்கொள்ளப்பட்டு, சட்டத்தோடும் சடங்கு வழிபாட்டோடும் பிரமாணிக்கத்தை மிக நெருங்கிய விதத்தில் இணைக்கும் இறைவாக்குப் பாரம்பரியத் திற்குத் தன்னையே வாரிசாகக் காட்டுகிறார் சீராக்கு *(சீரா 34:18தொ; 35:1-16)*. அவரது செய்திக்குத் தன்னை மூடிக்கொள்ளும் இந்த ஒதுங்கியிருக்கும் மற்றும் சடங்கு மனப் பான்மையுடைய இஸ்ராயேலரில் கிறிஸ்து எளிய இதயங்களைக் காண்பார். இவற்றில், உண்மையான நீதியையும் *(உண்மை வழி பாட்டின் நிபந்தனை; லூக் 1:74 தொ)* வழிபாட்டின் நிறைவடிவை நிறுவும் மெசியா பற்றிய நம்பிக்கையையும் *(மலா 3:1-4)* இணைக்கும் சங்கீதங்களின் மனப் பான்மையைக் காண்பார்.

III. **புதிய ஏற்பாடு:**

I. **பழைய சடங்குகளின் முடிவு:**

அ. பழைய சடங்குகளை நிறைவு செய்து இயேசு அவற்றை முடிவுக்குக் கொண்டு வருகிறார். முதலில் அவற்றைப் புதுப் பித்துப் பிள்ளைக்குரிய செபத்தின் தனது ஆவியால் அவற்றை உயிர்ப்பூட்டுகிறார். அவருடைய பிறப்பின்போது அவரைக்

கோவிலில் காணிக்கையாக ஒப்புக்கொடுத்த னர் (லூக் 2:22). அவர் வாழ்வு முழுவதும் விழாக்களுக்காக ஆலயத்திற்குப் பலமுறை செல்கிறார் (லூக் 2:41; யோவா 2:13; 10:22). மக்கள் வழிபாட்டுக்காகக் கூடுமிடங்களில் அடிக்கடி போதிக்கிறார் (மாற் 14:40; யோவா 18:20). இறைவாக்கினர்களைப் போலவே இவரும் வழிபாட்டின் உண்மை யான பொருளுக்குப் பிரமாணிக்கத்தைக் கோருகிறார் (மத் 23:16-23). உள்ளத் தூய்மை இல்லையென்றால் துப்புரவுச் சடங்குகள் பயனற்றவை (மத் 23:25; 5:8.23தொ).

பழைய சடங்குகளையெல்லாம் தனது பலியால் கடந்து செல்கிறார். பழைய ஆலயத்தின் மேல் தான் வைத்திருந்த மரியாதையை அதைத் தூய்மைப்படுத்து வதன் மூலம் காட்டிக் கொள்கிறார் (யோவா 2:14). அதே நேரத்தில் யூதர்கள் செய்த தவறினால் இந்த ஆலயம் இடிக்கப் படும் என்பதையும், ஆனால் ஒரு புதிய ஆலயம் எழும் எனவும், அது தன் உயிர்த்த உடலாகிய ஆலயமே என்றும் முன்னறிவிக் கிறார் (யோவா 2:19 தொ). அப்பொழுது எருசலேமில் நடக்கும் வழிபாடுகள் முடி வுக்கு வரும் (4:21).

ஆ. ஆதித்திருச்சபையும், ஆலய வழி பாட்டைக் கடந்து செல்வதால் அதனோடு உள்ள உறவை முறித்துக் கொள்கின்றது. இயேசுவைப் போலவே அவரது சீடர்களும் ஆலயத்தில் செபிக்கின்றனர், போதிக்கின்ற னர் (அ.ப. 2:46; 5:20). ஆனால், ஸ்தேவான் கூறுவதுபோல் கடவுள் குடிகொள்ளு மிடமே உண்மையான ஆலயம், என்றும் அதையே இயேசு கிறிஸ்து ஆள்கிறார் (6:13தொ; 7:48தொ.55தொ). ஆகவே, மன மாற்றம் பெற்ற யூதர்களின் உணர்வுகளை மதிக்கும் பொருட்டு அவர்கள் தங்கள் சமயச் சடங்குகளில் பங்கு பெற பவுல் அனுமதிக்கிறார் (21:24.26; காண்க. 1 கொரி 10:32தொ). ஆனால், விருத்த சேதனம் என்பது பயனற்றது. கிறிஸ்தவன் அந்தப் பழைய பழக்கத்தால் கட்டுப்படுத்தப்படாத வன் என்று அடிக்கடி பவுல் போதிக்கிறார். கிறிஸ்தவ வழிபாடு புதியது (கலா 5:1.6).

**2. புதிய வழிபாட்டின் தோற்றம்:**

அ) புதிய வழிபாடு எது என்பதை இயேசு வரையறுக்கிறார். உண்மையான வழிபாடு ஆன்மீக வழிபாடாகும். இது சடங்குகள் இல்லாமல் இருக்க வேண்டு மென்று அவசியமில்லை. ஆனால் வழி பாட்டில் பங்கு பெறுவோர் கட்டாயம் தூய ஆவியால் வழிநடத்தப்பட வேண்டும் (யோவா 4:23; 7:37; 4:10.14). புதிய உடன்படிக்கையைச் செல்லத்தக்கதாகச் செய்யும் இயேசுவின் பலி (மாற் 10:45; 14:22) பழைய சடங்குகளுக்கு அவற்றின் புதிய நிறைபொருளைக் கொடுக்கிறது (எபி 10:1-18; காண்க. சங் 40:7). அவர் மக்கள் அனைவருடைய பாவங்களுக்காகவும் பரி காரம் செய்து அவருடைய உடலிலும், இரத்தத்திலும் பங்கு பெறும் ஒவ்வொரு வருக்கும் முடிவில்லா வாழ்வைத் தருவ தால் புதிய வழிபாட்டு முறையை ஏற்படுத் துகிறார் (லூக் 22:19).

**ஆ)** திருச்சபை இதற்கு எப்போதும் பணிந்துள்ளது. கிறிஸ்தவர்கள் வழிபாட்டிற் கென எங்குக் கூடினாலும் அதன் உச்ச கட்டம் அப்பம் பிடுதலோடு நிறைவு பெற்றது (அ.ப. 2:42; 20:7.11). இந்த நற்கருணை வழிபாட்டின் மரபுப்பொருளை யும் அதற்குத் தேவையானவற்றையும் பற்றி மறந்து போனவர்கட்குப் பவுல் நினைவூட்டு கிறார் (1 கொரி 10:16; 11:24).

ஒருவன் நற்கருணையில் பங்கு பெற வேண்டுமெனில் அவன் இயேசு ஏற்படுத் திய திருமுழுக்கால் ஏற்கெனவே திருச்சபை யுடன் இணைக்கப்பட்டிருக்க வேண்டும் (மத் 28:19). ஏனெனில், புதுவாழ்வு பெறுவ தற்குரிய நிபந்தனையாகவும் (மாற் 16:16; யோவா 3:5), அப்போஸ்தலர்களால் பெந்த கோஸ்து நாளிலிருந்து இது நிறைவேற்றப் பட்டு வந்தது (அ.ப. 2:3-41). இறுதியாக அப்போஸ்தலர்கள் தங்கள் கரங்களை விரித்துத் திருமுழுக்குப் பெற்றவர்க்குத் தூய ஆவியை வழங்கினர் (8:15தொ).

இத்தகைய மூன்று மரபுவழி அடிப்படை யான சடங்குகளோடு கிறிஸ்தவ வழிபாட்

டில் மிக முக்கியமான மரபுச் செயல்பாடுகள் சேர்க்கப்பட்டன. வாரத்தின் முதல் நாளான ஞாயிறு கொண்டாட்டம் (அ.ப. *20:7; 1 கொரி 16:2*), ஆண்டவரின் நாள் (திருவெளி *1:10*), பெண்கள் முக்காடு அணிதல் போன்ற ஒழுங்கு பற்றிய சமயப் பொதுக்கூட்டங்களில் அவர்கள் அமைதி காக்க வேண்டும் என்பது, அமைதிக்காகவும், ஒழுங்கிற்காகவும் உருவாக்கப்பட்ட சட்ட திட்டங்களாய் இருந்தன (*1* கொரி*11:5-16; 14:34.40*).

**3. கிறிஸ்தவ வழிபாட்டின் அமைப்பும் அதன் மூன்று தன்மைகளும்:** இஸ்ராயேலின் வழிபாட்டைப் போலவே திருச்சபையின் வழிபாட்டிலும் மூன்று தன்மைகள் உள்ளன. *1)* இது கடந்தகால இறைச் செயலைக் கொண்டாடுகிறது; *2)* அந்த இறைச் செயலை இப்பொழுது பிரசன்னமாகச் செய்கிறது; *3)* அதை உண்மையாக்குகிறது. இவ்வாறு, இறுதி நாளில் கிறிஸ்துவின் மகிமையில் ஒவ்வொரு கிறிஸ்தவனும் பங்கு பெறுவான் என்ற நம்பிக்கையில் வாழச் செய்கிறது. பழைய வழிபாட்டிலிருந்து கிறிஸ்துவ வழிபாடு சில சடங்குகளை அப்படியே ஏற்றுக்கொண்டிருக்கலாம். அதனால் இது வரப்போகின்ற வழிபாட்டின் வெறும் உருவமன்று, அதன் சாயலாகும். கிறிஸ்தவ வழிபாட்டின் புதிய தன்மை என்னவென்றால், இது கடவுளின் மகனாகிய கிறிஸ்துவின் நிறைவான பலியை அடிப்படையாகக் கொண்டதாகும் (எபி *1:2*தொ). அவர் வழியாக இறைத் தந்தை முழுமையாக மகிமைப்படுத்தப்படுகிறார். அவரில் நம்பிக்கை வைப்பவர்கள் எல்லாம் பாவத்தினின்று விடுவிக்கப் பெற்று கிறிஸ்து தந்தைக்கு அளிக்கும் பிள்ளைக்குரிய வழிபாட்டில் இணைந்து, முடிவில்லா வாழ்விலும் அவருடன் பங்கு பெறுகின்றனர் (எபி *7:26;8:1*தொ; *9:14.26*).

அ) பழைய கிறிஸ்தவர்கள் கொண்டாடும் கிறிஸ்துவின் கடந்தகாலச் செயல் என்பது நமது மீட்புக்காக அவர் அளித்த காணிக்கையாகும்; அதன் பலன் உயிர்ப்பும் ஆவியின் கொடையுமாகும். இது மீட்பிற்கான நம்பிக்கையைத் தரும் பழைய வழிபாட்டிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது (எபி *7:18-28*). சிலுவையெனும் பீடத்தில் கிறிஸ்து அளித்த பலியின் பயன்களை நாம் நற்கருணையில் பகிர்ந்துகொள்ளும் வாய்ப்பை அவர் தந்துள்ளார் (எபி *13:10*).

ஆ) இந்த நற்கருணையினால் இப்பொழுது ஏற்படும் உறவின் ஒன்றிப்பு நிறைவாக நாம் அடையப்போகும் முடிவில்லாத ஒன்றிப்புக்கு நம்மைத் தயாரிக்கிறது. எனவே, நற்கருணை வழிபாடு புதிய வழிபாட்டின் மையமாகவும் புதிய வாழ்வின் வழியாகவும் அமைகிறது. அதன் அடையாளமாகவும் சாதனமாகவும் அமைகிறது. இந்தச் சடங்கின் வழியாக மகிமைப் படுத்தப்பட்ட கிறிஸ்து இங்குத் தன்னையே மறைபொருளாய்ப் பிரசன்னமாக்குகிறார். அதன் விளைவாக, அவர் அளித்த அவருடைய உடல் மற்றும் இரத்தத்தோடு நாம் ஒன்றிணைந்து ஒரே உடலாகி, கிறிஸ்துவாலும் கிறிஸ்துவோடும், தூய ஆவியின் தூண்டுதலால் தந்தையை மகிமைப்படுத்தலாம் (*1* கொரி *10:16*தொ; *11:24*தொ; பிலி *3:3*).

இந்த உண்மையால் விண்ணகத் தூயகத்துக்குள் (எபி *10:19*தொ) என்றென்றும் குருவாக விளங்கும் கிறிஸ்து குடியிருக்கும் அந்த இடத்தை நாம் அடைய முடிகிறது (எபி *7:24*தொ; *9:11. 24*). ஏனெனில், உயிருள்ள இறைவனுக்குத் தகுதியான ஒரே வழிபாடாகிய ஆவியிலும் உண்மையிலும் தந்தை இறைவனை ஆராதிக்கும் கொண்டாட்டம் அங்கு நடைபெறுகிறது (யோவா *4:23;* எபி *9:14*). இது பலியாக்கப்பட்ட செம்மறியால் இறைவனது அரியணை முன் கொண்டாடப்படுகிறது. இங்குதான் கடவுளின் உண்மையான ஆலயமும் உடன்படிக்கையின் பேழையும் இருக்கின்றன (திருவெளி *5:6; 11:9*). தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், எசாயா எதிரொலியாகக் கேட்ட ''தூயவர்'' என்ற சொல்லால் இறைவனை மகிமைப்படுத்துகின்றனர் (திருவெளி *4:2-11;* எசா *6:1*தொ); மகனாகிய செம்மறியையும் மகிமைப்படுத்து

கின்றனர் (திருவெளி 14:1). அவரே தனது நிறைவழிபாட்டில் அவர்களை ஒன்றிணைக்கும் பொருட்டு, அவர்களை அரசகுலக் குருக்களாக்கியுள்ளார் (5:9-13).

நம்மைக் கிறிஸ்துவோடு இணைக்கும் சடங்குகள் அவரது விண்ணக வழிபாட்டுடன் நம்மை ஒன்றிக்கச் செய்வன. இவை ஒரு சில ஒழுக்கக் கட்டுப்பாடுகளை எதிர்பார்க்கின்றன. திருமுழுக்கால் நாம் பாவத்திற்கு இறந்து உயிர்த்த கிறிஸ்துவின் புனித வாழ்வு வாழ அழைக்கப்படுகிறோம் (உரோ 6:1-11; கொலோ 3:1-10; 1 பேதுரு 1:14). எனவே, பாவம் செய்வதென்பது ஒருவன் இயேசுவின் இரத்தத்திலும் உடலிலும் பங்குபெறத் தன்னையே தகுதியற்றவன் ஆக்கிக் கொள்வதாகும். அதில் அவன் பங்கு பெற்றால் தன்னையே தண்டனைக்கு உள்ளாக்கிக் கொள்கிறான் (1 கொரி 11:27). மறுபுறம் கிறிஸ்துவைப் பின்பற்றவும், அவரை நிலையான பிரமாணிக்கத்துடன் அர்ப்பணமாக்கத் தூண்டிய அன்பில் தம்மை இணைத்துக் கொள்ளவும் ஒருவன் உயிருள்ள பலியாக அளிக்கும்போது கடவுள் அவனை ஏற்றுக்கொள்கிறார் (எபே 5:1; உரோ 12:1தொ; 1 பேதுரு 2:5; எபி 12:28). நமது வழிபாடுகளில் இறைவனை வழிபடும்போது நாம் பாடும் புகழ்க் கீதங்கள் இறைவனுக்கு என்றென்றும் மாறாத நன்றியறிதலாகும். நம் நன்றியைப் புகழ்ப்பாடலாக இயேசு கிறிஸ்துவான மகன் வழியாக தந்தைக்குச் செலுத்துகிறோம் (கொலோ 3:12-17).

இ) அந்த இறுதிநாளில் இந்தச் சடங்குகள் எல்லாம் முடிவுறுகின்றன. செம்மறி வரும்வரை இதனைக் கொண்டாடுகிறோம். அதன் பிறகு மணமகனின் அழைப்பை ஏற்று மணமகள் திருமணத்தை நிறைவு செய்யப் போகிறாள் (1 கொரி 11:26; 16:22; திருவெளி 19:7; 22:17). அதன்பிறகு ஆலயம் இறைப்பிரசன்னத்தை அடையாளமாக உணர்த்தாது. விண்ணக எருசலேமில் கடவுளின் மகிமை தன்னையே இனிமேல் அடையாளங்களின் வழியாக உணர்த்தாது (திருவெளி 21:22). ஏனெனில், முடிவில்லாத அந்தப் புனித நகரத்தில் கடவுளை வழிபடும் பணியாட்கள் இனிப் பாவிகள் அல்லர், புதல்வர்கள். ஏனெனில், கடவுளின் மற்றும் செம்மறியின் மகிமையால் அவர்கள் ஒளிர்விக்கப் பெற்று அவரில் மகன்களாக மாற்றப்பட்டுள்ளனர். அவர்கள் இறைத்தந்தையை முகமுகமாய்க் கண்டு உயிருள்ள நீரூற்றாம் ஆவியில் நீர் பருகுவர் (திருவெளி 21:1-7.23; 22:1-5).

## வழிபாட்டுத்திருநூல், லேவியர் திருநூல் (LEVITICUS, BOOK OF)

**1. பெயர்:** ஐந்நூலின் மூன்றாம்பகுதி எபிரேய மொழியில், அதன் தொடக்கச் சொற்களால் ''அவர் அழைத்தார்'' என்றழைக்கப்பட்டது. ''எழுபது நூல்'', கிரேக்க மொழியில், இப்பகுதியை லேவியர் சட்டம் என்றழைத்தது. நாம் தமிழில் லேவியர் திருநூல் என்றழைக்கிறோம். இப்பெயர் பொருத்தமுடையதே. ஏனெனில், நூலின் பெரும்பகுதி லேவியர் குருத்துவத்தின் சடங்குக் கடமையில் கவனம் செலுத்துகிறது. இந்நூல் அவர்களின் வழிபாட்டுக் கையேடாகும். ஆகவே வழிபாட்டுத் திருநூல் என்றும் அழைக்கப்படுகிறது. மேலும், இஸ்ராயேலர் தங்கள் வாழ்வின் ஒவ்வொரு செயலிலும் கொண்டிருக்க வேண்டிய கறையற்ற தூய்மையின் இன்றியமையாமையை அவர்களுக்கு இந்நூல் போதிக்கிறது. நூல் முழுவதும் பெரும்பாலும் சட்டங்களையும் வழிபாட்டு ஒழுங்குகளையும் கொண்டிருப்பதால், வரலாற்றைப் பொருத்தமட்டில், இந்நூலால் முன்னேற்றம் இல்லை. மாறாக, வரலாற்றின் ஓட்டத்தை இந்நூல் ஒரு விதத்தில் தடைசெய்கிறது எனலாம்.

**2. ஆசிரியர்:** ஐந்நூல் முழுவதையும் எழுதிய ஆசிரியரைப் பற்றிய சிக்கலை ஐந்நூல் பற்றிய கட்டுரையில் காணலாம். இதை, ஆசிரியரைப் பற்றிய இக்காலக் குறுகிய கருத்தோடு நோக்கக் கூடாது. இந்நூலுக்கு மோசேயைப் போல் வேறு எவரும் அவ்வளவு பொறுப்பாளியல்லர். மோசே பெரும் சட்டம் அளித்தவர். உண்மையில் அவரே இஸ்ராயேலின் ஆதிவழிபாட்டு முறைகளை ஒழுங்கு செய்தவர். ஆயினும்,

லேவியர் நூலின் இறுதி வடிவம் மோசேக்குப் பல்லாண்டுகளுக்குப் பிந்திய தாகும்; பாலைவனத்தில் நடந்தேறிய வழி பாட்டிலிருந்து பெரிதும் வேறுபட்டதாகும். அதன் பலி ஒழுங்குகளும், குருவை நிய மித்து திருநிலைப்படுத்தும் சடங்குகளும், நன்கு வளர்ச்சியடைந்த சமூகத்தில் தோன்றி யனவாகத் தெரிகின்றன. இவை இஸ்ரா யேல் நகர வாழ்வை ஏற்று, ஆலயத்தை மையமாகக் கொண்ட வழிபாட்டையும் ஏற்று, நிலையாக நன்கு அமைக்கப் பெற்ற சமூகத்தில் எழுந்திருக்க வேண்டும். அச் சமூகத்தோடு வழிபாடும் வளர்ந்திருக்க வேண்டும். பல நூற்றாண்டுகளாக மோசே யின் சட்டங்களை அவரவர் காலத் தேவைக் கேற்பத் திருத்தி அமைப்பதில் பலரும் ஈடுபட்டிருந்தனர். ஆகையால், லேவியர் நூல் வளர்ச்சியில் பலரும் பங்கெடுத்துள்ள னர் என்பது இப்போது பெரும்பாலோரால் ஏற்றுக்கொள்ளப்படும் உண்மையாகும். எனவே, இன்னார்தாம் எழுதினார் என்று ஒருவரை மட்டும் சுட்டிக் காட்டுவது இயலாத செயலாகும். ஆயினும், சீனாய் மலைப்போக்கு இந்நூல் முழுவதும் பரவி நிற்கிறது. இச்சட்டத் தொகுப்புக்கு நாடக மேடை சீனாய்மலை அடிவாரமாகும்; மோசேயே இயக்குநர். இவை, இந்நூலுக்கு மூலம் யார் என்பதையும், அதன் போக்கு யாருடையதென்பதையும், அதற்கு அதி காரத்தன்மை கொடுப்பவர் யார் என்பதை யும் சுட்டிக்காட்டுகின்றன. மோசேயே இந் நூலின் ஊற்றுமூலம் ஆவார். அந்த அள வில் அவரே இந்நூலுக்கு ஆசிரியராவார்.

**3. தோற்றமும் காலமும்:** ஐந்நூலில் காணப் படும் பெரும் பாரம்பரியங்களில் இந் நூலின் தோற்றத்தைத் தேட வேண்டும். ஆதியாகமம், யாத்திரை நூல், எண்ணாகமம் ஆகிய நூல்கள் பல மூலங்கள் சேர்ந்த திரட்டாகும். மாறாக, இந்நூலில் காணப் படுவது பெரும்பாலும் முழுவதுமே குருக் கள் பாரம்பரியமாகும். குருக்கள் குழுவில் வளர்ச்சி அடைந்த இந்நூல், அக்குழுவின் சிறப்பான வேலைப்பாடாகும். இது மோசேயில் தோற்றங் கொண்டது. அவ ருடைய சட்டங்களால் ஆழ்ந்த விதத்தில் பாதிக்கப்பட்டது.

இந்நூல் எழுத்து வடிவம் எடுத்த வர லாறு பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வளர்ந்து நீடியதொன்றாகும்; சிக்கல் மிக்க துமாகும். இந்நூலில் வரும் செய்திகளில் பல மிகப் பழமையானவையாகும். இவை இஸ்ராயேல் பாலஸ்தீனத்தைக் கைப்பற்றிக் குடியேறிய தொடக்க காலத்தைச் சேர்ந் தவை. இவற்றில் சில கானானியரின் பழக்கவழக்கங்களிலிருந்து எடுத்துத் திருத்தி அமைக்கப்பட்டன; பல இஸ்ராயே லின் புனித இடங்களில் தோன்றி, குருக்க ளால் காக்கப்பட்ட தனிச்சிறு தொகுதிகள்.

காலம் குறிக்க வேண்டுமென்றால், எபி ரேய மன்னராட்சியின் இறுதிக் காலத்தில் இந்நூல் முதன் முதல் எழுத்து வடிவில் தோன்றியிருக்கலாம். கி.மு. 587-இல் தென்னரசாகிய யூதாவும் வீழ்ந்தது. இவ் வாண்டை ஒட்டி, அதாவது கி.மு. 7-ஆம் நூற்றாண்டின் முடிவில் அல்லது 6-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எருசலேம் குருக்கள் ''புனிதத்தின் சட்டத்தைப்'' *(லேவி 17-26)* பதிப்பித்திருக்க வேண்டும். இப்பதிப்போடு லேவியர் திருநூல் எழுத்து வடிவம் எடுத்தது எனலாம். இப்பதிப்பு பிற்காலக் குருக்கள் குழுவின் நூல்களாலும், எசேக்கியேல் ஆகமத்தாலும் பெரிதும் பாதிக்கப்பட்டது, வளர்ச்சியடைந்தது.

நாம் கொண்டிருக்கும் வடிவில், லேவி யர் திருநூல் இஸ்ராயேலர் நாடு கடத்தப் பட்டுத் திரும்பிய பின் (கி.மு. 538) உருவெடுத்திருக்க வேண்டும். நாடு கடத் தப்பட்டுத் திரும்பிய பின், ஆலயம் மீண் டும் கட்டப்பட்டது; வழிபாடு திருத்தி அமைக்கப்பட்டது. குருக்கள் குழு இதனைச் செய்தனர். இக்காலத்தில் குருகுல ஆசிரியர்கள் புனிதத்தின் சட்டத்தை மீண்டும் பதிப்பித்தனர். நாடு கடத்தப்பட்ட காலத்தில் புனிதத்தின் சட்டம் பல இடைச் சேர்க்கைகளை ஏற்றுக்கொண்டது. அத் துடன் பலிகள் பற்றிய சட்டங்கள் (லேவி *1-7*), குருக்களைத் திருநிலைப்படுத்தும்

சடங்கு *(8-10)*, சட்டத்தூய்மை பற்றிய ஒழுங்குகள் *(11-15)*, பாவப்பரிகாரச் சடங்கு *(16)* ஆகியவையும் சேர்க்கப்பட்டன. 27-ஆம் அதிகாரம் நேர்ச்சிகளை மாற்றுவதைப் பற்றிக் கூறுகிறது. இஃது இன்னும் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதாகும். நாம் கொண்டிருக்கும் வடிவில், லேவியர் திருநூலின் நோக்கம், நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய எபிரேய மக்களுக்கு மறைவாழ்வு பற்றிய எல்லாச் செயல்களையும் ஒழுங்கு செய்தலாகும். சிறப்பாக, ஆலய வழிபாட்டை ஒழுங்குமுறை செய்தலாம்.

**4. திட்டம்:** லேவியர் திருநூலில் சில பகுதிகளில் பல செய்திகள் காணப்படுவதால், இந்நூலைத் திட்டம் செய்வது கடினம். ஆயினும், பொது அமைப்பைப் பின்பற்றி பின் வருமாறு திட்டம் செய்யலாம்.

1) பலிவகைகளும் பலிமுறைகளும் *(1:1-7:38)*.

*1:1-17* : தகனப்பலி.

*2:1-16* : உணவு, தானியக் காணிக்கைகள்.

*3:1-17* : சமாதானக் காணிக்கை, ஒன்றிப்புப் பலி.

*4:1-5:13* : பாவப் பரிகாரக் காணிக்கைகள்.

*5:14-6:7* : குற்றப் பரிகாரக் காணிக்கைகள்.

*6:8-13* : அன்றாடத் தகனப்பலி.

*6:14-23* : அன்றாட உணவு, தானியக் காணிக்கை.

*6:24-30* : பாவப்பரிகாரப் பலி.

*7:1-10* : குற்றப் பரிகாரப்பலி.

*7-11-21. 28-34* : சமாதானப்பலி.

*7:22-27* : இரத்தமும் கொழுப்பும் தடைசெய்யப்படுதல்.

*7:35-38* : முடிவுரை.

இப்பகுதி, பலி வகைகளையும், சடங்கு முறைகளையும் விவரிப்பதோடு, குருக்கள் அல்லாதவர்களுடைய உரிமை, சடங்கு முறை ஆகியவற்றையும் விவரிக்கிறது.

2) குருத்துவத் திருநிலைப்படுத்தும் சடங்கு *(8:1-10:20)*.

*8:1-13* : ஆரோனும் அவர் புதல்வர்களும் திருநிலைப்படுத்தப்படுதல்.

*8:14-36* : திருநிலைப்படுத்தும்போது பலிகள்.

*9:1-24* : திருநிலைப்படுத்திய பின் எண் கிழமைகள்.

*10:1-20* : குருத்துவப் பணியின் பெரும் பொறுப்பு.

லேவியர் திருநூல் முழுவதும் சட்டங்களையே கொண்டிருந்தாலும், இதில் இரு சிறு நிகழ்ச்சியுரைப் பகுதிகள் உள்ளன. அவை ஆரோனும் அவருடைய புதல்வர்களும் திருநிலைப்படுத்தப்பெறுதலையும், அவருடைய புதல்வர் நாதாபு, ஆபியூ ஆகியோரின் மரணத்தையும் பற்றியனவாகும். ஆரோனும் அவருடைய புதல்வர்களும் திருநிலைப்படுத்தப்பட்டது பற்றிய விரிவான விவரிப்பு, வரலாற்று நிகழ்ச்சியை விவரிப்பதைக் காட்டிலும், குருக்கள் திருநிலைப்படுத்தப்படுவதைப் பற்றிய சட்டத்தைக் கொடுக்கும் நோக்கத்தோடு விவரிக்கப்படுகிறது. ஆரோனுடைய புதல்வர் இருவருடைய வேளை தவறிய மரணம், வழிபாட்டுச் சடங்கில் தூய்மையானவைகளோடு உலகியலான செயல்களைக் கலப்பதின் தீமையையும், கடுமையையும், அதன் விளைவையும் எடுத்துக் காட்டுகிறது.

3) சட்டத்தூய்மை *(11:1-15:33)*.

*11:1-47* : சுத்த, அசுத்த விலங்குகள், பறவைகள்.

*12:1-8* : குழந்தையின் பிறப்பு.

*13:1-14:57* : தொழுநோய்.

13:1-46 : மனிதரில் தொழுநோய்.

13:47-59 : உடையில் தொழுநோய்.

14:1-32 : சுத்திகரம்.

14:33-57 : கட்டடங்களில் தொழுநோய்.

15:1-33 : ஆண், பெண், பாலினச் சுத்தம்.

இப்பகுதியில் இறைவனுக்கு முழுவதும் அர்ப்பணிக்கப்பட்ட மக்களிடமிருந்து கோரப்படும் சட்டத்தூய்மை விரிவாகக் கொடுக்கப்படுகிறது. வாழ்வின் ஒவ்வொரு செயலிலும் கறையற்ற தூய்மை, முழுமை இருக்க வேண்டும்.

*4) பரிகார நாள் (16:1-34).*

எல்லா மக்களின் பாவத்தீட்டையும் போக்க பரிகாரச் சடங்குகள் செய்யப் பட்டன.

*5) புனிதத்தின் சட்டம் (17:1-26:46).*

17:1-16 : இரத்தத்தின் தூய்மை.

18:1-30 : புணர்ச்சித் தூய்மை.

19:1-37 : ஒழுக்கம் பற்றிய பல விதி கள்.

20:1-27 : தீச்செயல்களுக்குத் தண்டனை.

21:1-24 : குருக்களுடைய புனிதம், ஒழுக்க முறை.

அ) 21:1-9 : குருக்கள்.

ஆ) 21:10-15 : பெரிய குரு.

இ) 21:16-27 தடைகள்.

22:1-33 : பலிகள் பற்றிய ஒழுங்கு கள்.

அ) 22:1-9 : குருக்கள்.

ஆ) 22:10-16 : குருக்கள் அல்லாதோர்.

இ) 22:17-33 ஏற்றுக்கொள்ளத்தகாத பலிப்பொருட்கள்.

23:1-44 : புனிதநாட்கள்; வழி பாட்டு ஆண்டு.

அ) 23:1-3 : ஓய்வு நாள்.

ஆ) 23:4-14 : பாஸ்குவிழா, புளியாத அப்பவிழா, முதற்கனிகள்.

இ) 23:15-22 : ஐம்பதாம் நாள் விழா.

ஈ) 23:23-26 : புத்தாண்டு.

உ) 23:27-32 : பரிகாரத்திருநாள்.

ஊ) 23:33-44 கூடார விழா.

24:1-23 : புனிதப் பொருட்கள்.

அ) 24:1-4 : திருத்தல விளக்கு.

ஆ) 24:5-9 : திருமுன் அப்பம்.

இ) 24:10-16 : இறைவன் திருப்பெயர்.

ஈ) 24:17-23 மனித உயிர்.

25:1-55 : புனித ஆண்டுகள்.

அ) 25:1-7 : ஓய்வு ஆண்டு.

ஆ) 25:8-55 : யூபிலி ஆண்டு.

26:1-46 : வெகுமதியும் தண்டனை யும்.

இப்பகுதி லேவியர் திருநூலின் மூலக் கருப்பொருளாகும். இஸ்ராயேலின், ஒழுக்க, சட்டப் புனிதம் யாவேயின் புனி தத்தையே எடுத்துக்காட்ட வேண்டும். மனி தன் இறைவனுக்குக் கீழ்ப்படிய வேண்டும்; இதற்குமேல், அவரையே பின்பற்ற வேண் டும். ''நாம் உங்கள் கடவுளாகிய ஆண்ட வர்; நாம் பரிசுத்தராய் இருப்பதுபோல் நீங்களும் பரிசுத்தராய் இருங்கள்'' (லேவி 19:2). இப்பகுதியில் இறைமக்கள் புனித ராய் 'இருக்க வேண்டியதன் தேவையும், அப்புனிதத்தின் சிறப்பும் அழுத்திக் கூறப் படுகின்றன.

*6) நேர்ச்சைகளின் மதிப்பீடும் மீட்டலும் (27:1-34).*

முன் சொன்னதுபோல் இவ்வதிகாரம் பிற்காலச் சேர்க்கையாகும். இது, நேர்ச்சி கள், பத்தில் ஒரு பாகவரி ஆகியவற்றை யும், அவற்றிற்குப் பதிலாக அளிக்கக்கூடிய வற்றையும் விவரிக்கிறது.

**5. சிறப்புக் கருத்துக்கள்:** பின்வருவன வற்றில் இந்நூலில் காணப்படுபவற்றோடு, பிற நூல்களில் காணப்படும் செய்திகளை யும் சேர்த்துத் தருகிறோம். இம்முறை இக்கருத்துக்களின் முழுமையை அறிய உதவும் என்பது எமது நம்பிக்கை.

**5. *1)* பலி வழிபாடு:** இறைவனுக்குப் பலி செலுத்துதல் எல்லா மதங்களிலும் உண்டு. ஆனால், இது விவிலியத்தில் சிறப்பான இடம் வகிக்கிறது. பழைய ஏற்பாட்டில் பலி செலுத்துதல், மக்களிட மிருந்து இறைவன் கோரும் வழிபாட்டு முறையாகும்; அவரது சித்தத்தின் விளை வாகும்; அவருடைய போதனைகளின்படி நடப்பதாகும். ஐந்நூல் சட்டங்கள் இப்பலி வகைகளையும், அவை செய்யப்பட வேண் டிய முறையையும் ஒழுங்கு செய்கிறது. ஆனால், முழுவதும் ஒருமைப்பாட்டுடன் அமையவில்லை. காலப்போக்கில் பல மாற்றங்கள் தேவையாயிற்று. சிலவற்றில் பழையனவற்றை விரிவாக்க வேண்டியிருந் தது; சிலவற்றில் திருத்தம் செய்ய வேண்டி யிருந்தது. மற்றவற்றை முழுவதுமே நீக்க வேண்டியிருந்தது. இப்படியாகப் பழையன வும் புதியனவும் அருகருகே காணப்படுகின் றன. ஆகையால், சில விவரங்கள் எப்படி வளர்ச்சியடைந்தன என்பது பற்றித் தெளி வாகக் கூற முடியாது. இவ்வழிபாட்டுச் சட்டங்கள் பிற மதச் சட்டங்களோடு சிலவற்றில் ஒத்திருக்கலாம். அதற்காக, மதங்கள் பற்றிய பொது வரலாறு அடிப் படையில் இவற்றை விளக்கக்கூடாது. பிற மதங்களிலிருந்து பழைய ஏற்பாட்டு மதத்தை, இறைவனைப் பற்றிய கருத்தும் விசுவாசமும் எவ்வளவு பிரித்துச் சிறப் பித்துக் காட்டுகின்றனவோ, அவ்வளவுக்கு இச்சட்டங்களும் அதன் பொருளும் பிறமதச் சட்டங்களிலிருந்து வேறுபட்டவை, சிறப் புடையவை. இந்தப் பலி வழிபாடு யாவே யிடம் கொண்ட விசுவாசத்தால் உந்தப்படு வது; அதனால் உயிர்பெறுவது.

இறைவனுக்குக் கொடை அளித்தல் என் பது இறைவனுக்கே உரிய சொத்தாக, தனிச் சிறப்பான சடங்குகளுடன் கொடையாக அளிக்கப்படுவது ஆகும். அவை முழுவதும் பீடத்தின் மீது எரிக்கப்பட்டாலும், அல்லது ஒரு பகுதி குருவுக்காகவோ, கொடை அளிப்பவனுக்காகவோ எரிக்கப்படாது தனித்து வைக்கப்பட்டு மீதி எரிக்கப்பட்டா லும், அச்சடங்கின் வழியாகப் பலியாகுகின் றன. ஏனெனில், அவை முழுவதும் இறை வனுக்கே உரியதாகும். பலி ஒரு கொடை, ஒரு காணிக்கையாகும்; மனிதன் தன்னிட முள்ள உன்னதமானதையும் விலையுயர்ந்த தையும் கொடையாக அளிப்பதாகும். பலி யின் சிறப்பானகூறு, சடங்கு வழியாக சொந்த அர்ப்பணமும் ஆகும். கொடை ஒரு புற அடையாளமேயாகும். அது கொடை அளிப்பவனது உள்ளத்தை எடுத்துக் காட்டு கிறது. பலி ஒருவனுடைய ஆராதனையை யும், நன்றியறிதலையும், மன்றாட்டையும், குற்ற மனப்பான்மையையும் அல்லது பரி கார மனப்பான்மையையும் எடுத்துக் கூறுவ தாக அமையலாம். அடிப்படையில் பலி இறைவனோடு கொள்ளும் ஒரு சந்திப்பா கும். முழுமையும் புனிதமிக்க இறைவனுக் கும், தூய்மையற்ற மனிதனுக்கும் உள்ள ஆழ்ந்த இடைவெளி அகற்றப்பட்டு, இரு வருக்குமிடையே ஒன்றிப்பு ஏற்பட ஏதுவா கிறது. பலியினால் மனிதன் இறைவனது புனிதத்தின் சூழ்நிலையில் நுழைகிறான்.

பொருட்களைப் பொருத்தமட்டில் பழைய ஏற்பாட்டில் பலிகள் இரத்தம் சிந்திய பலிகள், இரத்தம் சிந்தாத பலிகள் என இருவகையாகப் பிரிக்கப்படும். இரத் தம் சிந்தாத பலிகளாகத் தானியங்கள், எண்ணெய், தூபம், உணவு முதலியவை ஒப்புக் கொடுக்கப்பட்டன. எருது, செம்மறி யாடுகள், வெள்ளாடுகள் போன்ற விலங்கு கள் இரத்தம் சிந்திய பலியாக ஒப்புக் கொடுக்கப்பட்டன. சில சமயம் பாலினம் பார்த்து இப்பலி செலுத்தப்பட்டது. மந்தை யிலிருந்து எடுக்கப்படும் பலிப்பொருள் ஏழுநாள் வயது உடையதாக இருக்க வேண்டும். முழு உயிருள்ளதாக இருக்க வேண்டும். எல்லாம் வல்ல இறைவனுக்கு அளிக்கப்படுவதால், பலியாக ஒப்புக் கொடுக்கப்படும் விலங்கு ஒரு மாசு மறு

அற்றதாக இருக்க வேண்டும். குறையுள்ள விலங்கைப் பலியிடுதல் இறைவனுக்கு அளிக்கும் அவமரியாதையாகும்; பக்தி முயற்சியுமன்று.

பலிப்பொருள் உயிர் சார்ந்ததாக இருக்க வேண்டும். அதிலும் மனிதனது வாழ்வை நெருங்கிய விதத்தில் சார்ந்ததாக இருக்க வேண்டும். அவனது உழைப்பின் பயனான தாக இருக்க வேண்டும். அதன் விளைவாக அவை மனிதனைக் குறிக்கும் அடையாள மாக மாறுகின்றன. அவற்றின் வழியாக மனிதன் தன்னையே இறைவனுக்கு அளிக் கிறான். பலிப்பொருள், பலி ஒப்புக்கொடுக் கும் சமூகத்தின் பண்பாட்டுடன் நெருங்கிய தொடர்புள்ளதாக இருக்க வேண்டும். எந்தப் பொருளையும் பலியாக ஒப்புக் கொடுத்துவிட முடியாது. ஒருவனது சொந்தப் பண்பாட்டின் பயனான ஒன்றையே பலியாக ஒப்புக்கொடுக்க வேண்டும். பலிகள் பற்றிய எபிரேயச் சட்டம் எருது, ஆடு, போன்ற வீட்டு விலங்குகளை யும், புறா போன்ற பறவைகளையும், தானியங்கள், பழங்கள் போன்ற நிலத்தில் பயிர் செய்யப்படும் பொருள்களையுமே பலிகளாக ஒப்புக் கொடுக்கலாம் என்று தெளிவாக எடுத்துக் கூறுகிறது.

**5. *2)* பலிசெலுத்தும் சடங்கு-**
***முதற்படி:*** பலி விலங்கு புறமுற்றத்திற்குள் யாவேயின் திருமுன் பலி கொடுப்போரால் கொண்டு வரப்படுகிறது. அங்கே அதைப் பெற்று குரு சோதித்துப் பார்ப்பார். உடன் படிக்கைக் கூடாரத்தின் புற முற்றமே பலி செலுத்துவதற்கு முறையான இடமாகும். இதற்கு விலக்கு உண்டு *(யோசு 8:30-31; நீதி 2:5; 1 சாமு 6:15; 9:12; 7:17).*

***இரண்டாம் படி:*** பலிப் பொருளின் மேல் கை விரித்தல். இச்செயலுக்குப் பல பொருள் உண்டு. பொதுவாக, தகனப்பலி, சமாதானக் காணிக்கை, பரிகாரப்பலி ஆகி யவை நிகழும்போதும் இச்சடங்கு எப்போ தும் செய்யப்பட்டது. பொதுவாக, பலியில் இச்செயல் காணிக்கை அளிப்பதையும், உடைமை உரிமையைக் கையளிப்பதையும் உணர்த்திற்று. மனிதன் காணிக்கைப் பொருள்மேல் தனக்குரிய உரிமையைக் கைவிட்டு, இறைவனிடம் முழுவதும் சரண் புகுவதையும் எடுத்துக்கூற இச்செயல் பயன்பட்டது.

***மூன்றாம்படி:*** பலி விலங்கைக் கொல்லு தல். பலி கொடுப்பவரே இதைச் செய்வார். அப்போது குரு இரத்தத்தை ஒரு கலத்தில் பிடித்து வைப்பார். இதைப் பரிகாரச் சடங்கின் தெளித்தலுக்குப் பயன்படுத்து வார். பழங்காலத்துக் கருத்துப்படி மனிதனி லும் *(ஆதி 4:10;யோபு 16:19)*, விலங்குகளி லும் *(லேவி 17:11.14; உப 12:23)* ஆன்மா (உயிர்) இரத்தத்தில் தங்கியிருப்பதாகவும், இரத்தத்தோடு வெளிவருவதாகவும் கருதப் பட்டது. ஆகையால், இரத்தத்தைக் குடித் தல் கூடாது. மாறாக, உயிரின் உன்னத ஆண்டவர் என்ற அளவில் இறைவனுக்கு மட்டுமே அஃது ஒப்புக் கொடுக்கப்பட வேண்டும். ''உடலின் உயிர் இரத்தத்தில் அமைந்துள்ளது. இதை நாம் பலிபீடத்தின் மேல் உங்கள் ஆன்மாக்களுக்காகப் பாவப் பரிகாரம் செய்வதற்கும், உங்கள் ஆன்மா வின் சுத்திகரத்திற்கு உதவுவதற்கும் அல்லவோ உங்களுக்குத் தந்தருளினோம்'' *(லேவி 17:11)*. இரத்தம் உயிருள்ள ஆன்மா தங்கும் இடமாதலால், அது பரிகாரம் செய்யும் ஆற்றலையும் கொண்டதாகக் கரு தப்பட்டது. இவ்வாறு லேவியர் சட்டத்தில் இரத்தம் மற்ற உலகியல் பழக்கத்திற்குப் புறம்பாக்கப்படுகிறது. மேலும், இஸ்ராயே லின் பலி வழிபாட்டில் இரத்தம் பரிகாரம், ஒப்புரவு ஆகிய உன்னதமான பொருளை யும் பெறுகிறது. ஆனால், பலி கொடுப்பவ ரிடம் சரியான மனப்பண்பு இல்லாவிடில் இந்த இரத்தத்திற்குப் பொருளேயில்லை.

***நான்காம்படி:*** பலிப் பொருளின் ஊனை எரித்தலாகும். இப்படி ஊன் எரிக்கப்படுவ தால், பலிப்பொருள் எல்லா உலகியல் பழக்கத்திலிருந்தும் முழுவதும் நீக்கப்படு கிறது. பலிப்பொருள் முழுவதும் அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகள் மட்டும் எரிக்கப்பட்டன. பின்னதில், மீதிப்பகுதி பலியுணவு விருந்தில் பயன்பட்டது.

***5. 3) பலிவகைகள்: அ) தகனப்பலி அல்லது அவிப்பலி:*** பலிப்பொருள் முழுவதும் எரிக்கப்படுவதால் இப்பலி இப்பெயர் பெறுகிறது. இப்படி எரிக்கப்படுவது இறைவனுக்குச் செலுத்தும் தலை சிறந்த ஆராதனையை உணர்த்துகிறது. இப்பலிக்கு இடைவேளையேயில்லை. ஆகையால், இது நித்திய பலி என்றழைக்கப்பட்டது. ஒவ்வொரு நாளும் காலையும், மாலையும் ஒரு செம்மறி கொல்லப்பட்டு, பகலும் இரவும் முழுவதும் எரிக்கப்பட்டது (லேவி *6:9-13*).

***ஆ) பாவப்பரிகாரப் பலி:*** இப்பெயர் குறிப்பது போல் பாவங்களுக்குப் பரிகாரமாக இப்பலி செலுத்தப்பட்டது. இங்கே குறிக்கப்படும் பாவம் ''அகந்தையினாலே துணிந்து செய்யப்பட்டது'' அன்று. இப்பாவத்திற்குச் சாவுதான் பரிகாரம் (எண் *15:30-31*). இங்குக் குறிக்கப்படும் பாவங்கள் ஆத்திரத்தில் செய்யப்படும் குற்றங்கள், லேவியருடைய தூய்மையின்மையால் எழும் பலி செலுத்தத் தகுதியின்மை போன்றவையாகும். இவற்றை நீக்க இப்பலி செலுத்தப்பட்டது. இப்பலியில் பரிகாரம் முதன்மை பெறுவதால் இச்சடங்கில் இரத்தம் பயன்பட்டது. தனிப்பட்டோருக்காக இப்பலி செய்யப்பட்டால், தகனப் பலிபீடத்தின் கொம்புகளில் இரத்தம் தெளிக்கப்பட்டது; குருக்களுக்காகவோ, மக்கள் சமூகத்திற்காகவோ செய்யப்பட்டால், இரத்தம் தூயகத்திற்குள் கொண்டு வரப்பட்டு, திருத்தூயகத்திற்கு முன் தொங்கிய திரையின் மேல் தெளிக்கப்பட்டது. பரிகார நாளில் பலிப்பொருளின் இரத்தம் திருத்தூயகத்துள் எடுத்துச் செல்லப்பட்டது; உடன்படிக்கைப் பெட்டகத்தின் மேலுள்ள தகட்டின் மேலேயே தெளிக்கப்பட்டது. பலியிடப்பட்ட பொருளின் ஊனில் கொழுப்பும், தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளும் பீடத்தின்மேல் எரிக்கப்பட்டன. எந்தப் பலியிலாவது, இரத்தம் தூயகத்துக்குள் எடுத்துச் செல்லப்பட்டால், அப்பலிப் பொருளில் பீடத்தில் எரிக்கப்பட்டது போக மீதித்தசை மக்கள் கூடாரத்திற்குப் புறம்பே எரிக்கப்பட்டது; பிற்காலத்தில், நகரத்துக்கு வெளியே எரிக்கப்பட்டது. மற்றப் பலிகளில் தசை குருக்களுக்குச் சொந்தமாயிற்று. அதையும் புற முற்றத்திற்குள் மட்டும்தான் உண்ணலாம் (லேவி *4; 6:25-30; 16*).

***இ) குற்றப்பலி:*** இதற்கும் முன்னதற்கும் தெளிவான வேறுபாடுகள் தெரியவில்லை. இதில் இரத்தம் பீடத்தின்மேல் தெளிக்கப்பட்டது. கொழுப்புப் பகுதிகள் பீடத்தில் எரிக்கப்பட்டன. பலிப்பொருளின் மீதிப் பகுதி குருக்களுக்கு உரியதாயிற்று. இப்பலிக்குச் செம்மறி ஆடு போன்ற சிறு விலங்குகளே பயன்பட்டன. விலங்கின் விலையைக் குரு மதிப்பிட வேண்டும். ஆனால், இதற்குப் பதிலான வேறு பலி அனுமதிக்கப்படவில்லை. இது குற்றப்பலியின் தன்மைக்கு ஒத்ததே. பிறருடைய உடைமைகளைப் பறித்துக் கவர்ந்து கொள்ளுதல் அல்லது அவற்றிற்கு ஊறு செய்தல் போன்ற குற்றங்களுக்குப் பரிகாரமாக இப்பலி கட்டளையிடப்பட்டது. இதில் அழிக்கப்பட்ட பொருளுக்கு ஈடு கொடுப்பது அடங்கியிருந்ததால், இப்பலியோடு இழப்பீடும் கொடுக்க வேண்டும்; அஃதோடு, தண்டனையும் உண்டு. இது பொதுவாகப் பொருளின் விலையில் ஐந்தில் ஒரு பாகமாகும் (லேவி *5:14* தொ; *7:1-7*).

***ஈ) சமாதானப் பலி:*** இதன் சிறப்பு அங்கம் பலியுணவாகும். கொழுப்புப் பகுதிகள் எரிக்கப்பட்டன. பின்னங்கால்கள் குருக்களுக்கு அளிக்கப்பட்டன. மீதி ஊன், பலி உணவில் பயன்படுத்தப்பட்டது. இவ்விருந்தில், பலி கொடுத்தவரின் குடும்பம் முழுவதும், அடிமைகளும் பங்கெடுத்தனர். ஏழ்மை மிக்க லேவியரும் இதில் பங்கு பெற அழைக்கப் பெறுவர் (லேவி *3:7.11-21*). பலியின் பெயரே, அதன் பொருளை உணர்த்துகிறது. இப்பலியில், பலி கொடுப்பவர் தான் இறைவனின் அன்பன் எனக் காட்ட விழைகிறார். இறைவனுக்கும் தனக்கும் உள்ள சமாதான உறவையும், அன்பையும் வெளிக்காட்டவும் உறுதிப்படுத்தவும் இப்பலியை ஒப்புக் கொடுக்கிறார். இக்கருத்து பலியுணவில்

முதன்மை பெறுகிறது. இதில் இறைவனே விருந்தளிப்பவர். பலி செலுத்தியவர் விருந்தாளியாவார். விருந்து இருவருக்குமிடையேயுள்ள அன்பின் அடையாளமும் உறுதியுமாகும். இப்பலியுணவு, மெசியா அரசில் மனுகுலத்திற்கு யாவே தயாரிப்பதாக அடிக்கடி வேதநூலில் கூறப்படும் உணவுக்கு எடுத்துக்காட்டாகும்.

சத்தியம் செய்யும்போது ஒப்புக் கொடுக்கப்படும் பலியும், போற்றுரைப் பலியும், நன்றிப்பலியும் சமாதானப் பலியின் சிறப்பு வடிவங்களாகும். இப்பலிச் சடங்கு மகிழ்ச்சி மிக்கதாகும்.

**உ) உணவுக் காணிக்கை:** இஃது இரத்தம் சிந்தாத பலிவகையைச் சேர்ந்ததாகும். தானிய வகைகள் காணிக்கையாக ஒப்புக் கொடுக்கப்பட்டன. தானியங்கள் அப்படியே அளிக்கப்படவில்லை. மாவாகவோ, புளியாத அப்பமாகவோ மற்றும் ஏதாவதுஒரு வகை உணவாகவோ அளிக்கப்பட்டன. எண்ணெய் உணவுக் காணிக்கையோடு கலந்து ஒப்புக் கொடுக்கப்பட்டது. இவற்றோடு உப்பும் தூபப்பொருட்களும் ஒப்புக் கொடுக்கப்பட்டன. உணவுக் காணிக்கையில் ஒரு பகுதி மட்டும் தூபத்தோடு பீடத்தில் எரிக்கப்பட்டது. மீதி யாவும் குருக்களுக்குச் சொந்தமாயின. திராட்சைரசம் பானப்பலியாகப் பீடத்தின் மேல் ஊற்றப்பட்டது. குருக்கள் அளிக்கும் உணவுக் காணிக்கை முழுவதும் எரிக்கப்பட்டது. சிறப்பாகப் பெரிய குரு நாள் தோறும் அளிக்கும் உணவுப் பலி இவ்விதம் முழுவதும் எரிக்கப்பட்டது. உணவுக் காணிக்கை வெளி முற்றத்திலோ, தூயகத்திலோ ஒப்புக் கொடுக்கப்பட்டது. தூபக் காணிக்கை, திருமுன் அப்பம், பிற உணவுக் காணிக்கைகள், திராட்சைரசப் பானப்பலி, தங்க விளக்குத் தண்டின் ஒளி முதலியவை இரத்தம் சிந்தாப் பலிகளில் சிலவாகும். புற முற்றத்தில் ஒப்புக் கொடுக்கப்படும் பலிகளில், பெரிய குரு தனக்காகவும் குருகுலம் முழுவதற்காகவும் நாள்தோறும் அளிக்கும் பலியும், இரத்தப்பலி அளிக்க முடியாத ஏழைகளின் பேரில் அளிக்கப்படும் பரிகாரப் பலியும் சிறப்பு மிக்கவையாகும் *(லேவி 2;5:11-13).*

**5. 4) பழைய ஏற்பாட்டுப் பலியும் பிற சமயப் பலிகளும்:** தேவர்களுக்கு உணவு அளித்தல் என்கிற பொதுக் கருத்துக்கு விவிலியத்தில் இடமேயில்லை. யாவே உலகமனைத்திற்கும் ஆண்டவர். அவருக்கு அவருடைய படைப்புகள் உணவளிக்க வேண்டியதில்லை. எல்லா நற்கொடைகளையும் அளிப்பவர் யாவே என்று மனிதன் ஏற்று அவரை வணங்க, இப்பலிகள் அவருக்கு ஒப்புக் கொடுக்கப்படுகின்றன. இவ்விதம் இஸ்ராயேலின் வழிபாடு, ஒரு மனிதன் தனது மறை அனுபவத்தை வெளிப்படுத்த, பரந்த வாய்ப்பை அளிக்கிறது. இங்கே மனிதன் பாவ உணர்வையும், பரிகார மனப்பான்மையையும், பெற்ற உதவிக்கு நன்றி செலுத்துதலையும், ஆராதனையையும், வணக்கத்தையும் இறைவனுக்கு எடுத்துக்காட்ட வாய்ப்பு உண்டு. இவ்வழிபாட்டின் புறச் சடங்குகள், மற்றப் பழைய மேற்காசிய சமயச் சடங்குகளோடு சிறிது ஒற்றுமை கொண்டிருக்கலாம். இது யூதர்கள் பிற சமயத்தேவர்களுக்குப் பலி செலுத்தும் பொல்லாங்குக்கு எப்போதும் இடம் அளித்தது. ஆனால், இந்தப் புறச் சடங்குகளுக்கு யாவேயின்பால் கொண்ட விசுவாசம் புதிய பொருளையும் நோக்கத்தையும் அளித்தது.

**5. 5) பலியின் நோக்கம்:** முதல் பாவத்திற்குப்பின், இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே பெரும் ஆழ்ந்தகன்ற பிளவு இருக்கிறது. இஸ்ராயேலை இறைவன் தேர்ந்தெடுத்திருந்தாலும் அவரது சினம் மனுகுலத்தின் மேல் இன்னும் இருக்கிறது. இறைவனுக்கு அளிக்கப்படும் இடைவிடாத பலிகளால், இந்த மரண சாபமும் குற்றசாபமும் மனிதனுக்குத் தொடர்ந்து நினைவூட்டப் பெறுகின்றன எனலாம். ஆகையால்தான் இதற்குரிய பரிகாரத்தை, இரத்தம் குறிக்கும் உயிரை இறைவனுக்குச் சரணாகக் கொடுக்கும் மனப்பான்மையோடு அளிக்கும் இரத்தப் பலியால் மட்டும் செலுத்தக்கூடும். தனிப்பட்ட

உயிரைப் போலவே மக்கள் அனைவரின் உயிரும் எல்லாத் தலைமுறைகளுக்கும் குற்றத்தைச் சுமந்து நிற்கிறது. ஆகையால், எல்லாத் தலைமுறைகளுக்காகவும் ஆண்டு பரிகார நாளையும், நாள்தோறும் காலையும் மாலையும் அளிக்கப்படும் பரிகாரப் பலியையும் ஒப்புக்கொடுக்க வேண்டும். இப்பரிகாரம் தொடர்ந்து நடக்க வேண்டும். இவ்விதம் பலிவழிபாடு, மீட்பைத் தேடும் கட்டாயக் கோரிக்கையாக மாறுகிறது. பழைய ஏற்பாட்டு மறை மேலும் மேலும் உள்ளார்ந்ததாக மாறும்போது விலங்குகளின் இரத்தத்தைக் கொண்ட வழிபாட்டின் வெறுமை மேலும் மேலும் தெளிவாகுகிறது. குற்ற மிக்க மக்களுக்குப் பரிகாரமாகக் குற்றமற்ற மனிதப் பலியால் மட்டுமே இறைவனோடு மக்களை அடிப்படையிலேயே ஒப்புரவாக்கக்கூடும் என்ற மீட்புக் கருத்தின் தோற்றத்தை இறையூழியன் பாடலில் (எசா 53) காண்கிறோம்.

பழைய ஏற்பாட்டுப் பலி வழிபாட்டைச் சரியாகப் புரிந்து கொள்ள இவை யாவற்றையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இவை வெறும் புறச்சடங்குகள் மட்டும் அல்ல. உள்ளார்ந்த மனப்பக்குவம் இல்லையெனில் இவற்றிற்குப் பொருளேயில்லை. பழைய ஏற்பாட்டின் இறுதிக் காலத்தில் பலரிடையே புறவழிபாடே ஒரு குறிக்கோளாயிற்று. அதனால் இவ்வழிபாடு, தான் இருப்பதற்குரிய காரணத்தை இழந்து விட்டது. இந்நிலையில் கயிற்றால் ஆன சாட்டையோடு இயேசு தோன்றி வணிகர்களையும், வாங்குவோரையும் ஆலயத்திலிருந்து துரத்துகிறார்; பழைய ஏற்பாட்டுப் பலிவழிபாட்டின் தொன்மையான, சரியான மனப்பக்குவத்தை மீளவும் ஏற்படுத்த முயற்சிக்கிறார். பணிவாலும், விசுவாசத்தாலும் மனுகுலம் இறைவனோடு ஒப்புரவாகுதலே இம்மனப்பக்குவமாகும்.

**5. 6) வழிபாட்டின் பணியாளர்:** குலமுதுவர் காலத்தில் மேலாண்மை உரிமையுள்ள குருத்துவமில்லை. குலத்தலைவர்கள், சென்ற இடங்களிலுள்ள புனித இடங்களில் பொது வழிபாட்டுச் செயல்களை ஆற்றுவர் (*ஆதி 31:54; 46:1*). ஆதியாகமத்தில் குறிக்கப்படும் குருக்கள், நாடோடியாகத் திரியாத அன்னியரான புற இனத்தைச் சேர்ந்தவர்களாகத் தெரிகிறது (*ஆதி 14:18; 41:45; 47:22*). தொடக்க காலத்தில் இஸ்ராயேலில் லேவி இனத்தவர் குருக்களுக்குரிய பணிகளைச் செய்யத் தொடங்கினர். இஃது எப்படித் தொடங்கியது என்பது தெளிவாகத் தெரியவில்லை. லேவியரின் பிரமாணிக்கத்திற்குப் பரிசாக பாலையில் குருக்களுக்குரிய பணிகளைச் செய்யும் உரிமை இவர்களுக்கு அளிக்கப்பட்டதாகத் தெரிகிறது (*யாத் 32:25-29*). மோசே சட்டப்படி இஸ்ராயேலின் குருத்துவம் ஆரோனுக்கும் அவருடைய ஆண் வழித்தோன்றல்களுக்கும் மட்டுமேயுரிய பணியாக மாறியது (*யாத் 28:1*). லேவி இனத்தைச் சார்ந்த மற்றவர்கள் குருக்களுக்கு ஊழியர்களாக அமைக்கப்பட்டனர். இதற்காக இவர்கள் யாவேக்கு அவருடைய உடைமையாக அளிக்கப்பட்டனர். ஒவ்வொரு தலைப்பேறான மகனும் பிறப்பால் யாவேயின் உடைமையாவான். அதே முறையில் லேவியினத்தவர் யாவேயின் உடைமையாவர் (*எண் 3:6 தொ*). வழிபாட்டுப் பணியாளர் யாவரும் லேவி இனத்தவர்களிடமிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்களை லேவியர், குருக்கள், பெரியகுரு ஆக முப்பிரிவாகப் பிரிக்கலாம். லேவியர் குருக்கள் அல்லர். ஆனால், குருக்களுக்கு ஊழியராவார். குருக்கள் ஆரோனின் ஆண் வழித்தோன்றல்கள். பெரிய குரு ஆரோனின் பதவியாகும். அவருக்குப்பின் அவரது குடும்பத்தின் தலைப்பேறான ஆண் மக்கள் இப்பதவியை வகித்தனர். இப்பிரிவு வழிபாட்டு இடத்தின் பிரிவுக்கு ஏற்றதாகும். லேவியர் புறமுற்றத்திலும், குருக்கள் தூயகத்துள்ளும், பெரியகுரு திருத்தூயகத்துள்ளும் பணிபுரிவர்.

***அ) லேவியர்:*** சீனாய்ப் பாலைவனத்தில் மக்கள் செய்த கிளர்ச்சிக்குப்பின் லேவியர், யாவரும் அறிய இறைவனது சேவைக்காகத் திருநிலைப்படுத்தப்பட்டனர். இதுபற்றி எண் 8:5-22-இல் வாசித்தறியலாம். இதில்

மூவகைத் தூய்மைப்படுத்தும் சடங்கு உண்டு. இவை இறைப்பணியில் நுழைப வருக்கு இருக்க வேண்டிய உள்ளார்ந்த தூய்மையை எடுத்துக் காட்டுகின்றன. மக்க ளின் தலைவர்கள் தங்கள் கரங்களை லேவியர் மேல் நீட்டிப் பிடித்தனர். பின் ஆரோன் லேவியரைக் கூடாரத்துக்குள் இட்டுச் சென்றார். பிறகு யாவேய்க்கு அவர்கள் அளிக்கும் பணிவின் அடையாள மாக தகனப்பலி பீடத்திற்கு அவர்களை இட்டுச் சென்றார். இவ்விதம் அவர்க ளுடைய வழிபாட்டுப்பணி தொடங்கி வைக்கப்பட்டது. முடிவில் ஒரு தகனப்பலி யும், பரிகாரப்பலியும் ஒப்புக்கொடுக்கப்பட் டன. இச்சடங்கு எல்லாத் தலைமுறைக்கும் செல்லக்கூடியதாகும். ஒவ்வொரு தலை முறையிலும் புதுப்பிக்க வேண்டியதில்லை.

லேவியர், பலிவழிபாட்டில் குருக்க ளுக்குத் துணை புரிந்தனர்; கூடாரத்தைப் பாதுகாத்துத் தூய்மையாய் வைத்திருத்தல், யாத்திரையின்போது கூடாரத்தைத் தூக்கிச் செல்லல், திருமுன் அப்பத்தைச் செய்தல் முதலிய இறைபணியோடு சேர்ந்த செயல் களைச் செய்தனர் *(நெகே 11:22தொ)*; மக்களுக்குச் சட்டத்தைக் கற்பித்தனர் *(1 நாள் 26:29)*. எண் *4:3*-இன்படி லேவியர் முப்பது வயதிலிருந்து கடினமான வேலைக் குட்பட்டனர். எண் *8:24*-இன்படி 25-ஆம் வயதிலிருந்து எளிய வேலைக்குட்பட்டனர். 50 வயதோடு இப்பணியிலிருந்து ஓய்வு கிடைத்தது *(எண் 4:3; 8:25)*.

வாக்களிக்கப்பட்ட நாடு பங்கீடு செய்யப் பட்டபோது லேவியினத்தவர் தங்களுக் கென ஒரு பகுதியையும் உடைமையாகப் பெறவில்லை. யாவேயே அவர்களுடைய பாகமும் உடைமையும் ஆவார் *(எண் 18:20)*. நாடு முழுவதிலும் நாற்பது நகரங் கள் லேவியர் தங்குவதற்கென ஒதுக்கப்பட் டன. அவற்றில் பதின்மூன்று எருசலே முக்கு அருகிலிருந்தன. இந்நகரங்களில் வசிக்க, சீட்டுப் போட்டு லேவியர் தேர்ந் தெடுக்கப்பட்டனர் *(எண் 35: 1-8; யோசு 21)* அவர்களுடைய வாழ்க்கைத் தேவை களுக்கு இறைவனே பொறுப்பு. பூமியின் ஆண்டவரும் உடைமையாளரும் என்ற அளவில், இறைவன் வரிகளைப் பெற்றார். இது லேவியர்களுக்குச் சென்றது. பூமியில் விளையும் பொருட்களில் பத்தில் ஒரு பங்கை லேவியர் பெற்றனர். இவர்களும் தங்கள் வருவாயிலிருந்து பத்தில் ஒரு பங்கைக் குருக்களுக்கு அளித்தனர் *(எண் 18:21-28)*. வரிகளிலிருந்தும் போர்ச் சேவை யிலிருந்தும் இவர்களுக்கு விலக்கு உண்டு. இவர்களிடம் மக்கள் தாராளமாய் இருக்க வேண்டும் என்று பரிந்துரை செய்யப் பட்டது *(உப 12:9)*.

***ஆ) குருக்கள்:*** இவர்கள் தங்கள் குல மரபை ஆரோன் வழியாகப் பெறுகின்றனர். இதை எண்பிக்க எப்போதும் இவர்கள் தயாராக இருக்க வேண்டும் *(யாத் 28:1; எண் 3:10; எஸ் 2:62)*. குருக்களின் பதவியை யும் சலுகைகளையும் உரிமையின்றித் தவ றான முறையில் கைப்பற்றுவது மரண தண்டனைக்குரிய குற்றமாகும். ஆரோனின் கோல் மலர, கொரே, தாத்தான், அபிரோன் ஆகியோர் மடிந்தனர். இந்நிகழ்ச்சியின் விளைவாக குருத்துவம் ஆரோனின் குடும் பத்திற்கே உரியது என்று உறுதி செய்யப்பட் டது. இந்நிகழ்ச்சியின் நினைவாக உடன் படிக்கைப் பெட்டகத்தில் ஆரோனின் கோல் வைக்கப்பட்டது *(எண் 16:17கொ)*. இந்தக் குலமரபுக்கொடி பழைய ஏற்பாட் டின் ஒரு சிறப்பாகும். யூதா இனத்தைச் சேர்ந்த கிறிஸ்துவின் குருத்துவத்தால் பழைய ஏற்பாட்டுக் குருத்துவம் அகற்றப் படுவது பழைய சட்டமே அகற்றப்படு வதற்குச் சமமாகும் *(எபி 7:12)*. மெசியா வின் காலத்தில் லேவியரும் குருக்களும் புறமதத்தினரிடமிருந்து தேர்ந்தெடுக்கப்படு வர் *(எசா 66:21)*.

குருத்துவத்தின் மேன்மையைக் காக்கும் பொருட்டு, குருக்களின் உடம்பில் ஒரு குறையும் இருக்கக்கூடாது. ஊனமுடை யோர் குருக்களின் பணியிலிருந்து விலக்கப் பட்டனர் ஆனால், குருக்கள் வருவாயில் பங்கு பெற்றனர் *(லேவி 21:16-23)*. இறை வனது திருமுன் அவருக்கு நெருங்கிய அணுக்கத்தில் பணி செய்ய வேண்டியிருப்

பதால் குருக்களிடம் உயர்ந்த ஒழுக்கம் எதிர்நோக்கப்பட்டது. இறைப்பணியிலிருந்து விலக்க வேண்டிய எல்லாத் தூய்மையின்மையும் அவர்கள் தவிர்க்க வேண்டும். தூயகத்தில் பணி செய்யும் காலத்தில் திருமண உடலுறவுகளையும், போதை தரும் பானங்களையும் முழுதும் அகற்ற வேண்டும் (*லேவி 21:1-9; அதி. 9-11*).

குருக்கள் இறைவனுக்கும் மக்களுக்குமிடையேயுள்ள நடுவராவர் (*எபி 5:1*). இச்சலுகை நிறைந்த பதவி, அவர்களின் சொந்த மேன்மைக்காக அளிக்கப்பட்டது அன்று, இறைவன் முன் மக்களுக்காகச் செய்யும் சேவைக்காக அளிக்கப்பட்டதாகும். மக்களின் கவலைகளையும் தேவைகளையும் இறைவன் திருமுன் சமர்ப்பித்து, இறைவனுடைய ஆசீரையும் அருளையும் மக்களுக்கு அளிப்பது குருவின் கடமையாகும். இவ்வாறு, குரு இறைவனுக்கு அண்மையில் உலாவுவதால், குருவை இறைவனது உடைமையாகக் கருதலாம். இவர்கள் இறைவனது சேவைக்காக மக்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இவ்விதம் இறைவனுடைய எல்லைக்குள்ளே குரு நுழைவதால், இறைவனது உடைமையிலும், சிறப்பாக அவரது புனிதத்திலும் ஒரு பங்கு பெறுகிறார். பலிவழிபாடு முழுவதிலும் பங்கு கொள்ளுதலும், பரிசுத்த நெருப்பைக் காப்பாற்றுதலும் குருவின் கடமையாகும். பலியின்போது குருக்களுக்கு லேவியர் உதவி செய்வர். ஆனால், பலியின் சடங்கைக் குருக்கள் மட்டுமே செய்ய வேண்டும். தூயகத்தைக் காத்து, அதைத் தூய்மையாக வைத்திருப்பது, விளக்குத் தண்டுகளைப் போடுவது, திருமுன் அப்பங்களை ஒப்புக் கொடுத்தல், காலை மாலை பலிக்குப் பின் மக்களை ஆசீர்வதித்தல் முதலியவைகளும் குருக்களின் பணிகளாகும். அஃதோடு மக்களுக்குச் சட்டம் போதிப்பதும் (*மலா 2:7*), கடினமான வழக்குகளில் நீதி வழங்குதலும் (*உப 17:8-12*) இவர்களுடைய கடமையைச் சேர்ந்தனவாகும். குருக்கள், பலி செலுத்துவோராவர், ஆசிரியராவர், சட்ட வல்லுநர்களாவர். அவர்களிடத்தில், சமய சமூகக் கடமைகளும் அதிகாரங்களும் நெருக்கிப் பிணைக்கப்பட்டிருந்தன.

குரு தனக்குரிய பதவி ஆடையோடு மட்டும்தான் வழிபாட்டுச் சடங்கில் ஈடுபடலாம். இவ்வாடைகள் சணல் நூலால் நெய்யப்பட்ட கால்சட்டையும், மேலாடையும் ஆகும். மேலாடை கணுக்கால்வரை மூட வேண்டும். ஆடை வண்ணக் கயிற்றால் கட்டப்பட்டது. தலையில் தலைப்பாகை உண்டு (*யாத் 28:40-43*).

**இ) பெரிய குரு:** இவர் குருகுலத்தின் தலைவராவார்; ஆரோனின் மரபில் வரும் தலைப்பேற்று ஆண்மகன் ஆவார். அவரது ஆடை, குருக்களின் ஆடைகளோடு, முழங்கால்வரை நீண்ட கருநீல மேலாடையும், மார்புத் தகட்டோடு கூடிய ஏபோது முதலியவையுமாகும். ஏபோது குருக்களின் ஆடைகளில் ஒன்றாகத் தெரிகிறது (*சாமு 2:28; 22:18*); இது சணல்நூல் ஏபோது என்றழைக்கப்பட்டது. இது வருங்காலத்தை நிர்ணயிக்கவும், கடினமான சட்டச் செயல்களில் தீர்ப்பு வழங்கவும் பயன்பட்ட ஏபோதிலிருந்து வேறுபட்டது. பெரியகுருவின் ஏபோது, இடுப்பு வரை முன்னும் பின்னும் மறைக்கும் ஆடையாகும். இது பொன், நீலம், கருஞ்சிவப்பு, இருமுறை சாயம் தோய்த்த இரத்தநிறம் கொண்ட நூல்கள், முறுக்கிய சணல்நூல் ஆகியவற்றால் விசித்திர வண்ண வேலைப்பாட்டுடன் செய்யப்பட்டது. தோள்களை மூடவில்லை. கச்சையால் இடையில் கட்டப்பட்டது. இரு பகுதிகளையும் தங்கம் இழைக்கப்பட்ட தோல்வார்கள் தோள்மேல் இணைத்தன. ஏபோதில் இரண்டு கோமேதகக் கற்கள் அணி செய்தன. இக்கற்களில், இஸ்ராயேலின் பன்னிரண்டு புதல்வர்களின் பெயர்களும் செதுக்கப்பட்டிருந்தன. பெரியகுரு தூயகத்துள் நுழைந்த போது, இறைவனுக்கும் மக்களுக்கும் இடையேயுள்ள நடுவராகத் திகழ்ந்தார்; அன்போடும், அருளோடும் இஸ்ராயேலை நோக்குமாறு யாவேயை வேண்டினார்.

ஏபோதின் உண்மையான பொருளையும் மதிப்பையும் அதை மார்புப் பதக்கத்தோடு இணைத்து உணர வேண்டும். மார்புப் பதக்கம் பை போன்றது; ஏபோதைப்போல் நெய்யப்பட்டிருந்தது. அது நாற்கோணமாக வும், இரட்டையாகவும், நீளத்திலும், அக லத்திலும் ஒருசாண் அளவாகவும் இருந்தது. ஏபோதும், மார்புப் பதக்கமும் நன்றாய் இணைக்கப்பட்டிருந்தன. மார்புப் பதக்கத் தில் இஸ்ராயேலின் புதல்வர்களின் பெயரைக் கொண்ட பன்னிரண்டு இரத்தி னங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மார்புப் பதக்கத்தின் மற்ற விவரங்களை யாத் *28:15-30; 39:8-21*-இல் வாசித்தறியலாம். மார்புப் பதக்கப் பையில் யூரிம், தும்மிம் என்ற சொற்கள் பதிக்கப்பட்ட இரு பொருள்கள் இருந்தன. இச்சொற்களின் பொருள் என்ன என்று உறுதியாகக் கூற முடியாது. எழுபது நூல் இவற்றைக் ''கோட்பாட்டு, உண்மை'' என்று மொழி பெயர்த்தது. இந்த உத்தியின் வழியாக இக்கட்டான தீர்மானங்களில் யாவேயின் திருவுளம் அறியப்பட்டது (யாத் *28:29*). யூரிம், தும்மிம் என்பவை கற்களாக இருந் திருக்கலாம் என்று எண்ண இடம் இருக் கிறது. ஏபோதும் இறைவாக்கு மார்புப் பதக்கப் பையும் எகிப்து, பழங்கால மேற் காசிய மறைகளைச் சேர்ந்தனவாகத் தெரி கிறது. ஆயினும், யாவேயின் வழிபாட் டோடு ஒன்றும்போது தனிச்சிறப்பும், பெருமையும், மதிப்பும் பெறுகின்றன.

பெரிய குருவின் தலையிலே தங்கத் தகட்டோடு கூடிய தலைப்பாகையுண்டு. தலையில் ''ஆண்டவருக்கு அர்ப்பணித்து ஒதுக்கப்பட்டவர்,'' என்ற சொற்கள் பொறிக்கப்பட்டிருக்கும். இது தலைமைக் குருவைத் தனிப்பட்ட விதத்தில் யாவேயின் உடைமையாக்கியது. மற்றவர்களைவிடச் சிறந்த முறையில் இவர் இறைவனுக்கும் மக்களுக்கும் இடையேயுள்ள நடுவராக பரிந்துரைப்பவராவார். தலைமைக் குரு விரும்பினால் குருக்கள் அலுவல் அனைத் தையும் செய்யலாம். பரிகாரப் பெருநாளில் மக்கள் அனைவர்க்கும் பரிகாரம் செய்வதும், பெரும் சிறப்புக் காரியங்களில் இறை வாக்கு அருளுவதும் பெரிய குருவின் சிறப்பு அலுவல்களாகும். குருத்துவம் முழு வதன் மேலும் இறைவழிபாட்டிலும், ஆலயக் கருவூலத்தின் மேலும், பெரிய குரு முழு அதிகாரம் கொண்டிருந்தார். சமயப் பணிகளில் அவரது தீர்ப்பே இறுதியானது.

**ஈ) வரலாறு:** நீதிபதிகள் காலத்தில் இஸ் ராயேல் ஒரே இடத்தில் நிலையாகத் தங்கி வாழத் தொடங்கியபோது, கானானியரின் பழைய புனித இடங்களை அகற்றிவிட்டுப் புதியவற்றை நிறுவியபோது, புனித இடங் களைக் கவனிக்க வேண்டிய குருகுலத் தொழில் முழுவதும் லேவியரைச் சேர்ந்த தாகத் தெரியவில்லை. அரசர் காலத்தில் லேவியர் மட்டும் குருத்துவப் பணியைச் செய்கின்றனர். கி.மு. 7-ஆம் நூற்றாண்டிலி ருந்து பலி ஒப்புக்கொடுப்பது குருக்களின் சிறப்பான, அவர்களுக்கு மட்டும் உரிய தொழிலாக மாறியது. ஆலய வழிபாடு சேராத தொழில்கள் பிறருக்கு அளிக்கப்பட் டன. கி.பி. 70-இல் ஆலயம் அழிக்கப்பட் டது. அஃதோடு குருக்களின் ஆதிக்கம் முற்றுப்பெற்றது.

**5. 7) குருத்துவத் திருநிலைப்படுத்தும் சடங்கு:** இது யாத் *29:1-37*; லேவி *8:1-36*-இல் விவரிக்கப்படுகிறது. விவரங் களை இப்பகுதிகளில் வாசித்தறியலாம். இஃது ஏழுநாட் சடங்காகும். திருநிலைப் படுத்தப்பட விரும்புவோர், தண்ணீரால் கழுவப்படுவர். அவருக்குக் குருத்துவ ஆடை அணிவிக்கப்பட்டது. அவர் தலை மேல் அபிடேகத் தைலம் வார்க்கப்பட்டது. பின், திருநிலைப் படுத்தப்படுவோருக் காகத் தொடர்ச்சியாகப் பலிகள் செலுத்தப் பட்டன. பலிப்பொருளின் இரத்தம், திரு நிலைப்படுத்தப்படுவோரின் வலக்காது மடல், வலக்கைப் பெருவிரல், வலக்கால் பெருவிரல் ஆகியவற்றின் மேல் தடவப்பட் டது. பின், இரத்தமும் அபிடேகத் தைல மும் சிறிது, திருநிலைப்படுத்தப்படுவோ ரின் மேலும், அவர்கள் ஆடைகளின் மேலும் தெளிக்கப்பட்டன. இவ்விதம் முழு மனிதரும் இறைப்பணிக்காகத் திருநிலைப்

படுத்தப்பட்டார். திருநிலைப்படுத்தப்பட்டோர் யாவேயின் திருமுன் காணிக்கைகள் செலுத்தினர். இவை நறுமணமுள்ள தகனப் பலியாகப் பலிபீடத்தில் சுட்டெரிக்கப்பட்டன. முழுச்சடங்கும் ஒன்றிப்புப் பலியுணவோடு முடிந்தது. இச்சடங்கு ஏழு நாட்களுக்கு மீண்டும் செய்யப்பட்டது. இதில் திருநிலைப்படுத்தும் மிகப்பழைய சடங்கு முறையைக் காண்கிறோம். இதில் இரத்தம் தெளித்தல் ஒருவர் தம்மை இறைவனுக்கு அர்ப்பணிப்பதைக் குறிக்கிறது. எண்ணெய் பூசுதல், அவர் இறைவன் சேவைக்கு ஒதுக்கப்படுதலை உணர்த்துகிறது. திருவுடை அணிவித்தலின் வழியாக இவரிடம் இறைவழிபாடு ஒப்படைக்கப்படுகிறது.

இச்சடங்குகள், பாலைவனத்துச் சந்திப்பின் கூடாரச் சூழ்நிலையில் விவரிக்கப்பட்டாலும், ஐந்நூலில் குருக்கள் பாரம்பரிய ஆசிரியர்கள், நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் எருசலேம் ஆலயத்தில் வழக்கில் இருந்த சடங்குகளையே இங்கு விவரிக்கின்றன என்பர் சிலர். எண்ணெய் பூசுதல் பிற்காலத்தைச் சேர்ந்ததாகத் தெரிகிறது. மன்னர்கள் ஆட்சி முடிவுற்று, அரச சலுகைகள் குருக்களுக்கு மாற்றப்பட்டு, யூத சமூகத்தில் குருக்கள் அரச அதிகாரம் செலுத்தத் தலைப்பட்ட காலத்தைச் சேர்ந்ததாக இருக்கலாம். ஆனால், இவ்வழக்கு காலத்தால், அரசு நிலை மாற்றத்துக்கு முந்தியதாக இருக்கலாம்.

**5. 8. தூய்மையின் சட்டம்:** தூய்மை, தூய்மையின்மை பற்றிய கட்டளைகள், சட்டத்தை வீட்டுக்குள்ளும் புகுத்துகின்றன எனலாம். இச்சட்டம் வாழ்வின் ஒவ்வோர் அலுவலையும் பாதித்தது. இஃது இஸ்ராயேலுக்கு மட்டும் உரியதன்று. பழைய மேற்காசியச் சமயங்களிடையே பெரும்பாலும் காணப்படுவதாகும்.

**அ. வழிபாட்டுத் தூய்மையின்மை:** இக்கருத்துக்கள் வழிபாட்டுச் சூழ்நிலையில் முதலில் எழுந்து வளர்ச்சியடைந்தன எனலாம். தூய்மையற்றன யாவும் வழிபாட்டில் இடம் பெறலாகாது. இஃது ஆட்களுக்கும் பொருட்களுக்கும் பொருந்தும். ஆட்களும் பொருட்களும் தூய்மையானவை தூய்மையற்றவை எனவும், பலிச்சடங்கில் பங்கெடுக்கத் தகுதியுடையவர், தகுதியில்லாதவர் எனவும் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டனர். பலி செலுத்த முடியாமையாகிய தூய்மையின்மையில் பலபடிகள் உண்டு. மிகக் குறைந்த அளவு தூய்மையின்மை ஒருவரை அந்நாளில் மட்டும் புனித இடத்தின் புறமுற்றத்துக்குள் நுழைவதைத் தடுத்தது. இத்தூய்மையின்மை உடம்பைக் கழுவுவதால் அல்லது ஆடைகளைத் துவைப்பதால் நீக்கப்படலாம். வழிபாட்டுத் தூய்மையின்மை ஒரு வாரம் இரண்டு வாரம் அல்லது பலநாட்கள் வரை நீடிக்கலாம். இத்தூய்மையின்மை ஒரு வாரத்திற்கு மேல் நீடித்தால் அதை நீக்கும் சடங்கில் பலி செலுத்துதல் இடம் பெறும்.

ஆ) இந்த வழிபாட்டுத் தூய்மையின்மையை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1) இறந்த உடலால் உண்டாகும் தூய்மையின்மை. மரித்த மனித உடல், அஃது கிடந்த வீட்டையும் வீட்டில் வசித்தோரையும், வீட்டிலுள்ள பொருட்களையும் ஏழு நாட்களுக்குத் தூய்மையற்றதாக்கியது. இவற்றைத் தூய்மைப்படுத்த வெறுமனே கழுவினால் மட்டும் போதாது; செங்கிடாரியின் சாம்பல் கலந்த நீரால் தெளிக்க வேண்டும். யூதர்கள் பாலைவனத்தில் சுற்றித் திரிந்த காலத்தில், சுமை சுமக்காத செங்கிடாரி, தனிச்சடங்கோடு பரிகாரப் பலியாகக் கொல்லப்பட்டு, தேவதாருமரம், கடற்காளான், கம்பளி ஆகியவற்றோடு முழுவதும் எரிக்கப்பட்டது. இந்தச் சாம்பல் பாதுகாப்பாக வைக்கப்பட்டு, தூய்மையற்றவற்றைத் தூய்மையாக்க, லேவியர் குறிப்பிட்ட சடங்குகளில் தண்ணீரோடு கலந்து தெளிக்கப் பயன்பட்டது. இறந்த விலங்குகளின் உடலைத் தொட்டவன் அன்று மாலை வரை தூய்மையற்றவனாக இருந்தான்.

**2) தொழுநோயால் வரும் தூய்மையின்மை:** தொழு நோயுடையவன் அந்நோயால் வாடும் வரை தூய்மையற்றவனாகக்

கருதப்பட்டான். அவன் துக்க ஆடை அணிய வேண்டும். நகருக்கு அல்லது பாளையத்துக்குப் புறம்பே, மனித சமூகத் துக்கு அப்பால் தனது வீட்டை அமைத்துக் கொள்ள வேண்டும். தன்னை மக்கள் நெருங்கும்போது, தான் அசுத்தன் என்று உரக்கக் கூறி எச்சரிக்க வேண்டும். அவன் குணமானால், குருக்கள் மட்டுமே அவன் குணமானவன் என்று தீர்ப்பளிக்கக்கூடும். அவனுக்காகச் சிக்கல் மிக்க சுத்திகரச் சடங்கு செய்ய வேண்டும் (லேவி 13-14).

கட்டடங்களும் ஆடைகளும் கூடத் தொழுநோய்த் தூய்மையின்மை உடையன வாகக் கருதப்பட்டன.

**3) பாலினத் தூய்மையின்மை** (லேவி 12:15): முதற்கண் இது நோய்க் கூறுடையதா கும். ஆணிடமோ, பெண்ணிடமோ ஒரு நாள் வரை நீடிக்கக்கூடிய சட்டத்தூய்மை யின்மையை உண்டாக்கக்கூடிய இயற்கை நிலையோ, செயல்களோ இத்தூய்மையின் மையை உண்டாக்கின. இத்தூய்மை யின்மை உடையவர் எதைத் தொட்டாலும் அவை தூய்மை இழந்தனவாகக் கருதப்பட் டன. மூலநிலை நீங்கியபின் ஏழு நாட்களுக் குப்பின் அவை தூய்மையாயின. குளித்தல், கழுவுதல் போன்ற சடங்காலோ, தகனப் பலியாலோ, பாவப்பரிகாரப் பலியாலோ இத்தூய்மையின்மை நீக்கப்பட்டது. உடல் நல நோக்கும் ஒழுக்க நோக்கும் மிக மறைமுகமாகத்தான் இச்சட்டங்களில் இடம் பெறுகின்றன. தன்னியல்பான இரவுப் புறக்கசிவும், கணவன் மனைவி யரது முறையான புணர்ச்சியும்கூட ஒருநாள் வரைக்கும் தூய்மையின்மையை உண்டாக் கக்கூடும் (லேவி 15:16; உப 23:11). மாதவிலக்கு ஒரு பெண்ணை ஏழு நாட் களுக்குத் தூய்மையற்றவளாக்கியது (லேவி 15:19-24). இக்காலத்தில் அவள் தன் கணவ னுடன் புணர்ச்சி கொள்ளக்கூடாது. பெற்ற பிள்ளை ஆண் குழந்தையானால் 40 நாட்க ளுக்கும், பெண் குழந்தையானால் 80 நாட்களுக்கும் தாய் தூய்மையிழந்தவளாகக் கருதப்பட்டாள். இத்தூய்மையின்மை, தக னப்பலியாலோ, பாவப்பலியாலோ நீக்கப் பட்டது. பலிப்பொருள் ஒரு செம்மறியும், ஒரு புறாவும் ஆகும். ஏழையானால் இரு புறாக்களாகும் (லேவி 12; லூக் 2:22).

இச்சட்டங்கள் திருமணம், பிறப்பு ஆகி யவை பற்றிய வெறுப்பால் ஏற்படுத்தப்பட் டவை அல்ல. ஏனெனில், பெருங்குடும்பம் ஒரு மேலான ஆசீராகவும், மலட்டுத் தன்மை ஒரு அவமானமாகவும், இறைத் தண்டனையாகவும் கருதப்பட்டன.

**இ) உணவு பற்றிய ஒழுங்குகள்:** சட்டத் தூய்மை ஒழுங்குகளைப்போல், உணவு பற்றிய ஒழுங்குகளும் இஸ்ராயேலுக்கே தனியாக உரியனவல்ல; பழைய மேற் காசிய மக்கள் அனைவர்க்கும் பொதுவான தாகும். இப்படிப்பட்ட ஒழுங்குகளை எகிப் திலும் காணலாம்.

பழைய ஏற்பாட்டில் தூய்மையானவை தூய்மையற்றவை என்று விலங்குகளைப் பிரித்தல், புற அடையாளங்களை அடிப் படையாகக் கொண்டதாகும். நான்குகால் விலங்குகளில் அசைபோடுவனவும், பிளந்த குளம்புகளையுடையனவும் தூய்மையான வையாகும். நீரில் வாழ்பவைகளில் செதில் கள் உள்ளவையும், சிறகுகளை உடையவை யும் தூய்மையானவையாகும். ஒட்டகம், கழுதை, பன்றி, வளைதோண்டி வாழும் கரடி, குழிமுயல் போன்றவை தூய்மையற்ற வையாகும். ஐந்நூலில் பன்றிக் கறியை உண்பதைத் தடுப்பது தனிப்பட்ட முறை யில் அழுத்திக் கூறப்படவில்லை. ஆயி னும், பிற்காலத்தில் இது மோசே சட்டத் திற்குப் பிரமாணிக்கமின்மையின் மூடக் கொள்கையாகவும், இஸ்ராயேலின் மறையி லிருந்து விலகுவதற்குச் சமானமாகவும் மாறியது (எசா 65:4; 66:3.17; 2 மக் 6:18 தொ; தானி 1:8.12; அ.ப. 10;12). ஏன் இப்படிச் சில விலங்குகள் விலக்கப்பட்டன என்பது பற்றி ஒன்றையும் உறுதியாகக் கூறமுடியாது. பிறமதப் பலிவழிபாட்டில் இவ்விலங்குகள் பயன்பட்டதும், இவற்றில் பல பெருந்தீனி உண்பதும், சில வெறுக்கத் தக்க தோற்றம் கொண்டிருப்பதும் காரணங் களாக இருக்கலாம். இப்படி விலக்கப்படு

வதற்கு அறிவு சார்ந்த காரணம் எதுவும் கொடுக்க முடியாது. தங்களைச் சுற்றி இருந்த மக்களிடமிருந்து இப்பழக்க வழக் கங்களை ஏற்றுத் தங்களது தேவைக்கேற்ப மாற்றி அமைத்தது, அவற்றிற்குச் சமய அடிப்படையும், தபசு மனப்பான்மையும் அளித்துத் தனதாக்கிக் கொண்டது இஸ்ரா யேல் எனலாம்.

***ஈ) தூய்மை - தூய்மையின்மை - புனி தம்:*** மேற்கூறியவற்றிலிருந்து, தூய்மை, தூய்மையின்மை என்பன உடல் நலத் தோடோ, ஒழுக்கத்தோடோ சேர்ந்த கருத் தல்ல என்பது தெளிவாகும். ஒருபுறம் தூய்மையின்மை மறைபொருளான, பொல் லாங்கான ஒன்றை உணர்த்தி, அதை எப்படி யாவது தவிர்க்க வேண்டும் என உணர்த் திற்று. ஆகையால், தூய்மைற்றவை கண்டிப் பாகத் தடை செய்யப்பட்டவையாகும்; ஒதுக்கி வைக்கப்பட்டவையாகும். இதன் படி, ஓர் ஆள், ஒரு விலங்கு, ஒரு பொருள், ஏன் ஒரு செயல் கூட தூய்மையற்றதாகக் கருதப்படலாம். சான்று:- பிள்ளை பெற் றெடுத்திருக்கிற பெண், ஒட்டகம், இறந்த உடல். இப்பொருளை உணர்த்தும் சொற் கள் விவிலியத்தில் பல இடங்களில் காணப் படுகின்றன.

அடுத்து, தூய்மையானது மனிதனின் பிறப்பு, வாழ்வு, இறப்பையும் சார்ந்த கருத்தாக இருந்ததெனத் தெரிகிறது. இத் தூய்மையை இழந்தால் அவர்களிடமிருந்து யாவே தம் முகத்தைத் திருப்பிக் கொள் வார். ''அவர்களின் தூய்மையின்மைக்கும் குற்றங்களுக்கும் ஏற்ப நாம் அவர்களுக்குச் செய்தோம்; நமது முகத்தையும் அவர்களி டம் இருந்து மறைத்துக் கொண்டோம்'' *(எசே 39:24)*. இப்போக்கு, புனித மிக்க யாவேக்கு அவர்கள் அளிக்கும் பதிலின் விளைவாகும். ''நாம் பரிசுத்தராய் இருப் பதுபோல் நீங்களும் பரிசுத்தராய் இருங்கள்'' *(லேவி 19:2)*. தூய்மை இங்குப் புனிதத்தை உணர்த்திற்று. ஆயினும், சிலவேளைகளில் தூய்மையின்மையும் புனிதமும் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதாகத் தெரிகிறது. செமித்திய மொழிகளில், இரண்டையும் குறிக்க ஒரே மூலச்சொல் பயன்படுகிறது. இது புனிதத்தையும் குறிக்கிறது; வெறுக்கத் தக்கதையும் குறிக்கவல்லது. புனிதமாவது தொடக்கூடாததாகும் *(லேவி 11: 31-34; 15:4-12.20-28)* ஆகையால், குரு வழிபாட்டு வேலை முடிந்தவுடன், தன் திருச்சடங்கு ஆடைகளைக் களைந்து விட்டு, வேறு உடைகள் அணிய வேண்டும் *(எசே 44:19; யாத் 28:43)*. செங்கிடாரி போன்ற திருப் பொருளைத் தொட்டால் *(எண் 19:1-10)* ஒருவன் தூய்மையற்றவன் ஆவான். இரத் தம் தெளிக்கும் குரு தூய்மையற்றவராவார். ஆகவே, புனிதமான இறைவனை அணுகு முன் குளிக்க வேண்டும், கழுவ வேண்டும். தூய்மையின்மையை நீக்குதல், அர்ச்சித்தல் அல்லது தூய்மையாக்குதல் என்றழைக்கப் பட்டது *(யோசு 3:5; 1 சாமு 16:15)*. தூய்மையாய் இருத்தலும் புனிதமாய் இருத் தலும் ஒன்றல்ல. தூய்மை புனிதத்திற்கு ஒரு நிபந்தனையும் முன் தேவையுமாகும். புனிதரான இறைவனை அணுகுவதற்குத் தகுதியளிக்கும் நேரடி ஆற்றலாகும். புனித ரான இறைவன் தூய்மையின்மையைப் பொறுத்துக்கொள்ளார். இக்கருத்து, பழைய ஏற்பாட்டில் தூய்மை பற்றிய ஒழுங்குகள் மறைத்தன்மையை அடிப்படையாகக் கொண்டன என்று காட்டும்.

யாவே பொறாதவர், மற்றெந்தத் தேவர் களையும் பொறுத்துக்கொள்ளார். பிற தேவர்களை வணங்குவதால் யாவேயின் மக்கள் தூய்மையற்றவராகின்றனர் *(எரே 2:7-23; ஓசே 6:10)*. சோதிடம் பார்த்தலும் *(லேவி 19:31)*, இறந்த உடலில் நெற்றிக்கு மேல் மயிரைச்சிரைத்தலும் *(உப 14:1)*, அயல்நாடுகள் பிற தேவர்களை வணங்குவ தால் அந்நாடுகளும் *(ஆமோ 7:17; எசா 52:1)*, அவற்றிலிருந்து வரும் உணவு உட்பட்ட பொருள்களும் தூய்மையற்றவை யாகும் *(ஓசே 9:3; தானி 1:5-16)*. ஆகை யால், கானானியரின் புனித இடங்களும் அவற்றின் பொருள்களும் முழுவதும் அழிக் கப்பட வேண்டும் *(எண் 31:20-24)*. பாபி லோனியாவிலிருந்து திரும்பிய யூதர்கள் தங்களைச் சுத்தி செய்தனர் *(எஸ் 6:20-22)*.

அன்னியரால் தீட்டுப்பட்ட எருசலேமின் சுவர்கள் கூடச் சுத்திசெய்யப்பட்டன (நெகே 12:30). பாபிலோனுக்கு நாடுகடத் தப்பட்டுத் திரும்பிய காலத்துப் பழக்க வழக்கங்களிலிருந்து சடங்குத் தூய்மை பற்றிய சட்டங்களின் மையம், இறைவனுக் காகப் பிற மக்களிடமிருந்து பிரிந்திருக்கும் புனிதம் பற்றிய இறையியல் கருத்தாகும் என்று அறிகிறோம். புதிய ஏற்பாட்டுக் காலத்தினர் பாஸ்குக் காலத்தில் அன்னியரு டன் பழகுவதும் தீட்டாகும் எனக் கருதினர் (யோவா 18:28).

**உ) புறத்தூய்மை - அகத்தூய்மை:** ஏற் கெனவே பழைய மேற்காசிய மக்களி டையே இருந்த தூய்மை, தூய்மையின்மை என்ற கருத்துக்களை எடுத்து, அவற்றை இஸ்ராயேலர் தாங்கள் யாவேயிடம் கொண் டுள்ள விசுவாசத்திற்கேற்ப மாற்றியமைத்த னர். மோசே அவற்றை மறைசார்ந்த கட்டளையாக்குகிறார். அவருக்குப்பின் வந்த குருக்கள் பாரம்பரிய ஆசிரியர்கள் இதே அடிப்படையில் இச்சட்டங்களை வளர்த்துப் பேணிக்காத்தனர்.

இச்சட்டங்களைக் கடைப்பிடிப்பது இறைமக்களின் புனிதத்திற்கு அடையாள மாகக் கருதப்பட்டது (லேவி 11:44). இஸ்ரா யேலின் ஒரே இறைத்தன்மைக் கோட் பாட்டைக் காக்க இஃது உதவியது. ஏனெ னில், இதனால் மற்ற மறைகளிலிருந்து இஸ்ராயேலர் பிரிக்கப்பட்டனர் (தானி 1:8-12; தோபி 1:10-12). மேலும், தூய்மை பற்றிய ஒழுங்குகள் இறைவனுடைய கட்ட ளையாகக் கருதப்பட்டதால், அவற்றைக் கடைப்பிடித்தது ஒழுக்கத்தையும் வளர்த் தது. இது சிலவேளைகளில் எலியேசரின் வேதசாட்சி மரணம் போன்ற (2 மக் 16:18-31) வீரச் செயல்களுக்கும் இட்டுச் சென்றது. ஆயினும், வெறும் ஆசாரக் கண்டிப்பு, சடங்குத் தூய்மையை மிகைப் படுத்துவது போன்ற கேடுகள் எப்போதும் இருந்தன. நாடு கடத்தப்பட்ட காலத்திற்குப் பின் சுத்திகரச் சடங்கு வழக்கங்களைத் தவறாகப் பயன்படுத்துபவரை இறைவாக் குரைஞர்கள் இடித்துக் கூறியுள்ளனர். ''வா யால் இம்மக்கள் நம்மை அணுகி வருகின்ற னர்; உதட்டால் நம்மைப் போற்றுகின்றனர். அவர்கள் உள்ளமோ நம்மைவிட்டுத் தொலைவில் இருக்கின்றது. நம்மைப் பற்றிய அவர்களுடைய அச்சம், வெறும் மனிதக் கற்பனையை மனப்பாடமாய்க் கற்றதுதான்'' (எசே 29:13; ஓசே 6:6; ஆமோ 4:1-5; எரே 7:21-24). மனிதனைக் கறைப் படுத்தும் உண்மையான தூய்மையின்மை பாவமாகும் என்பதை இறை வாக்குரைஞர் கள் அழுத்திக் கூறினர் (எசே 36:17-20). இக்கறையை இறைவன் மட்டுமே தூய்மை யாக்க முடியும் (எசா 6:5-7). புறத்தோடு அகத்தையும் சேர்த்து முழு ஆளையும் தூய்மையாக்குதல் மெசியாவின் வாக்குறுதி யோடு வருவதாகும். ''நாம் உங்கள்மேல் தூயநீரைத் தெளிப்போம்; உங்கள் அழுக்கு கள் எல்லாம் போய்விட நீங்கள் தூய்மை யாக இருப்பீர்கள்; சிலை வழிபாட்டுத் தீட்டுகளிலிருந்து உங்களைத் தூய்மையாக் குவோம்; உங்களுக்குப் புதிய இதயத்தை அருளுவோம்; உங்கள் உள்ளத்தில் புதிய ஆவியை ஊட்டுவோம்; உங்கள் உடலிலி ருந்து கல்லான இதயத்தை எடுத்துவிட்டு, உணர்ச்சியுள்ள இதயத்தை உங்களுக்குக் கொடுப்போம்; உங்கள் உள்ளத்தில் நமது ஆவியை ஊட்டுவோம். நம் கற்பனைகளின் படி நடக்கவும், நம் நீதிமுறைமைகளைக் கடைப்பிடிப்பதில் கவனமாயிருக்கவும் செய்வோம்'' (எசே 36:25-27; செப் 3:9; எசா 35:8; 52:1).

சங்கீத ஆசிரியர்களும் ஒழுக்கத் தூய் மையைச் சிறப்பித்துக் கூறுகின்றனர். இறை வனின் நன்மைத் தன்மை தூய இதயத்தோரி டம் திரும்புகிறது (சங் 73:1). பாவமில்லா தோர், தூய இதயத்தோர் ஆண்டவரை அணுகலாம் (சங் 24:4). ஒவ்வொருவனுக் கும் அவனது நீதிக்கேற்ப இறைவன் பரிசு அளிக்கிறார் (சங் 18:21-25). மற்றச் சங்கீதங் களைவிட 51-ஆம் சங்கீதம் தூய்மை பற்றிய இஸ்ராயேலின் கருத்து, சடங்குத் தூய்மையி லிருந்து ஒழுக்கத் தூய்மைக்கு வளர்ந்துள்ள தற்குச் சான்று பகர்கிறது. ''என் பாவங்களி னின்று உம் திருமுகத்தைத் திருப்பிக்

கொள்ளும்; என் குற்றங்களையெல்லாம் போக்கிவிடும்; உமது மீட்பால் வரும் மகிழ்ச்சியை எனக்களித்தருளும்; உமது பெருந்தன்மையான மனப்பான்மையில் என்னை உறுதிப்படுத்தும்'' *(சங் 51:9-12)*. ஞானாகம ஆசிரியர்களும் அகத்தூய்மையை அழுத்திக் கூறுகின்றனர் *(யோபு 14:4-14; 16:17)*. இறைவன் முன் மனிதன் அடிப் படையிலேயே தூய்மையற்றவன் *(பழ 20:9; யோபு 9:30-31)*. அவரால் மட்டும் அவன் தூய்மையடைய முடியும்.

**ஊ) புதிய ஏற்பாட்டில்:** நாடு கடத்தப் பட்டபின், யூத சமயத்தில் ஒழுக்கத் தூய் மையும், சட்ட ஆசாரத் தூய்மையும் அடுத் தடுத்துக் காணப்படுகின்றன. இப்போக்கு கிறிஸ்துவின் காலத்திலும் காணப்படுகிறது. புறச் சடங்குகளைக் கடைப்பிடித்தல் அழுத்திக் கூறப்படுகிறது. சான்றுகள்: மீண் டும் மீண்டும் கழுவுதல் *(மாற் 7:3-8)*; கிண்ணங்களைக் கழுவுதல் *(மத் 23:25)*; பாவிகளோடு பழகுவதைத் தவிர்த்தல் *(மாற் 2:15-16)*. இயேசுவே இவற்றில் சிலவற்றைக் கடைப்பிடித்திருப்பதாகத் தெரிகிறது *(மாற் 1:43-44)*. ஆனால், இவற்றை மிகைப்படுத்திக் கூறுவதைக் கண்டிக்கிறார் *(மாற் 7:6-13)*. உணவு பற்றிய யூத ஒழுங்குகளை இயேசு அடியோடு அகற்றவில்லை. ஆதித்திருச்சபை இவற்றைச் சிறிதுசிறிதாக, துன்பமிக்க அனு பவத்தோடு அகற்ற வேண்டியிருந்தது *(அ.ப. 10:11-14; 15:28-29; கலா 2:11-17; உரோ 14:14; கொலோ 2:20-22)*. ஆதித் திருச்சபை உணவு பற்றிய ஒழுங்குகளை அடியோடு அகற்றியபோது, யூதநாடு முழு வதும் வீழ்ச்சியடைந்திருந்தது. இறையரசா கிய திருச்சபை, நாடுகளின் பிரிவைக் கடந்த, எல்லா மக்களுக்கும் இறையரசைப் போதிக்கும் பெரும் பணியில் ஈடு பட்டிருந்தது.

மனிதனைத் தூய்மையற்றவனாக்குவது ஒழுக்கமின்மைதான், சடங்குகளின் குறை வன்று. ''அனைவரும் நான் சொல்வதைக் கேட்டு உணர்ந்து கொள்ளுங்கள். புறத்தேயி ருந்து மனிதனுக்குள்ளே சென்று அவனை மாசுபடுத்தக்கூடியது ஒன்றுமில்லை; மனித னுள்ளிருந்து வெளிவருவதே அவனை மாசு படுத்தும்'' *(மாற் 7:14-15)*. இப்பொருளில் பேய்கள் தூய்மையற்ற அல்லது அசுத்த அரூபிகள் என்றழைக்கப்படலாம் *(மாற் 1:23; லூக் 9:42)*. தூய இதயத்தோர் இறைவனை அணுக முடியும் *(மத் 5:8)*. இறைவனைப் பார்ப்பது, அவர் திருமுன் வருவது, இறையரசுக்குள் நுழைவது ஆகிய வற்றுக்கு ஒழுக்கத்தூய்மை மட்டும் போதாது. ஒருவனது உள்ளத்தில் இறை வனே குடிகொள்வது இன்றியமையாததா கும். அப்போதுதான் மனிதன் அடிப்படை யிலேயே நிறைதூய்மையுடையவனாவான், புனிதனாவான் *(யோவா 13:10;15:3)*.

**5. 9. பரிகார நாள்:** இஃது ஒரு பெரு நாளாகும். இது திஸ்ரி மாதம் (செப்டம்பர்- அக்டோபர்) 10-ஆம் நாள், கூடார விழாவுக்கு ஐந்து நாட்களுக்கு முன் கொண்டாடப் பட்டது. இந்நாளில் ஓய்வுநாள் கடன் அனுசரிக்கப்பட வேண்டும். இந்நாள் தவம் செய்யும் நாளாகும், கடின உண்ணாநோன்பு இருக்க வேண்டும். ஒவ்வொருவரும் தங்க ளுடையவும் நாட்டு மக்களுடையவும் பாவங்களுக்காகத் தவம் செய்ய வேண்டும்; நோன்பு இருக்க வேண்டும்; பலிகள் ஒப்புக்கொடுக்க வேண்டும். பிற்காலத்தில் ராபிகள் இவ்விழாவை ''யோம் இப்பூர்'' என்றழைத்தனர். விவிலியத்தில் இது ''யோம் ஹகிப்யூரீம்'' என்றழைக்கப்பட் டது. இரண்டும் பரிகார நாள் எனப் பொருள்படும். இந்நாள் பற்றியும், அன்று செய்யப்படும் சடங்குகள் பற்றிய விவரிப் பும் லேவி *16:1-39;23:26-32;* எண் *29:7-14* ஆகிய பகுதிகளில் காணக் கிடக்கின்றன. இவ்விவரிப்பு குருக்கள் பாரம்பரியத்தைச் சேர்ந்ததாகும். இதில் ஆலய வழிபாட்டுக் கட்டளைகள், பாலைவனத்தில் ஆரோன் பணிசெய்த சந்திப்பின் கூடார வழிபாட்டுக் குள் வரலாற்றுக் கருத்துடன் புகுத்தப்படு கின்றன. இவ்விழா எப்போது தோன்றியது என்பது பற்றி ஒன்றும் உறுதியாகக் கூறமுடி யாது. முதலில் இப்பரிகாரச் சடங்கு குருக்க ளுக்கு மட்டும் உரியதாக இருந்திருக்க

வேண்டும். நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின் எல்லாரும் பொதுவாக தவமும், உண்ணாநோன்பும் செய்யும் நோன்பு நாளா யிற்று. சடங்கின் விவரிப்பு மிகப் பழங் காலத்தைச் சுட்டுகிறது.

இப்பெருநாள் எக்காளக் கொம்புகள் ஊதி முன்னறிவிக்கப்பட்டது. இது சிறப் பான முறையில் பெரிய குருவின் நாளா கும். பரிகார நாளில் காலைப்பலியின் போது, பெரிய குரு தனது பதவிக்குரிய குருத்துவ ஆடை அணிந்து, பாவப்பலிக் காக ஒரு காளைமாட்டையும், தகனப்பலிக் காக ஒரு செம்மறியாட்டையும் கூடாரத்திற் குள் இறைவன் திருமுன் கொண்டு வர வேண்டும். மக்களிடமிருந்து பாவப்பலிக் காக இரண்டு வெள்ளாட்டுக் கிடாய்களை யும், தகனப்பலிக்காக ஒரு செம்மறியாட் டையும் பெறுவார். பின் பெரிய குரு தனக்கும் தன் வீட்டுக்கும் பாவக் காணிக்கை ஒப்புக்கொடுப்பார். பின் சந்திப் பின் கூடாரத்து வாயிலில், இரண்டு வெள் ளாடுகளையும், கொண்டு வந்து சீட்டுப் போட்டு, ''ஒன்று யாவேக்கும் மற்றது ஆசசெலுக்குமாகத் தேர்ந்தெடுப்பார். யாவேயின் ஆட்டைப் பாவக் காணிக்கை யாக ஒப்புக்கொடுப்பார். பின், பெரிய குரு பாவப்பலியாக காளைமாட்டைக் கொல்லு வார்; தூபக்கலம் நிறைந்த நெருப்போடும் நறுமணச் சாம்பிராணியோடும் திரைக்குப் பின்னுள்ள திருத்தூயகத்துள் நுழைந்து சாம் பிராணியைத் தூபக்கலத்தில் இட்டு, தூபப் புகை ''இரக்க இருக்கையைச்'' சூழச் செய்வார். பின்னர் வெளியே சென்று, காளைமாட்டின் இரத்தத்தைக் கொண்டு வந்து, இரக்க இருக்கை மீது ஒரு முறையும் அதன் முன்தரையில் ஏழு முறையும் கையால் தெளிப்பார். இவ்வாறு குருகுலத் திற்காகப் பரிகாரம் செய்யப்பட்டது. பின், யாவேக்காக ஒதுக்கப்பட்ட மக்களுடைய வெள்ளாட்டைப் பலி கொடுத்து, அதன் இரத்தத்தைத் திருத்தூயகத்துள் கொண்டு சென்று முன் செய்தது போலவே, இரக்க இருக்கை மீதும் அதன் முன்னும் இரத் தத்தைத் தெளிப்பார். பின் தூயகத்துக்குள் வந்து, தூபப்பீடத்திற்குச் சென்று அதன் கொம்புகளில் இரத்தத்தைப்பூசி, அதன் முன்தரையில் ஏழு தரம் இரத்தம் தெளித்து, பரிகாரம் செய்வார். அதன் பின் வெளி முற்றத்திலும் தகனப் பலிபீடத்திலும் இதே பரிகாரச்சடங்கு செய்யப்பட்டது. இவ்வாறு மக்களுக்காகப் பரிகாரம் செய்யப்பட்டது. இந்தப் பரிகாரச் சடங்கு செய்யும்போது சந்திப்பின் கூடாரத்துக்குள் வேறு எந்த மனிதனும் இருக்கக்கூடாது.

இவ்விதம் பெரிய குரு தனக்காகவும் மக்களுக்காகவும் பரிகாரம் செய்தபின், ஆசசெலுக்காக ஒதுக்கப்பட்ட வெள்ளாடு இறைவன் திருமுன் கொணரப்பட்டது. பெரிய குரு அதன்மேல் கைகளை விரித்து மக்களின் பாவங்களையெல்லாம் அறிக்கை யிட்டு அதன்மேல் சுமத்துவார். ஆகையால், இவ்வெள்ளாடு பழிசுமத்தப்பட்ட ஆடு என்று அழைக்கப்பட்டது. இப்படி மக்க ளின் பழி சுமத்தப்பட்ட ஆடு பாலை நிலத்திற்குத் துரத்தப்பட்டது. பின், பலி யாக ஒப்புக்கொடுக்கப்பட்ட காளைமாடு, வெள்ளாடு ஆகியவற்றின் கொழுப்புள்ள பகுதிகள் பீடத்தில் எரிக்கப்பட்டன; மற்றப் பகுதிகள் யாவும் பாளையத்திற்கு வெளியே முழுவதும் எரிக்கப்பட்டன. இச்சடங்கு ஏழு செம்மறி ஆடுகளைத் தகனப்பலியாக ஒப்புக்கொடுத்தலோடு முடிவடைந்தது.

இப்பெருநாளில் மட்டும்தான் பெரியகுரு திருத்தூயகத்துள் நுழையலாம்; அதுவும் தூபத்தோடும், பலிப்பொருளின் இரத்தத் தோடும் செல்லலாம். ஆசசெல் என்றால் என்ன? அஃது ஓர் இடம் என்பர் சிலர். இது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படுவ தில்லை. ஆசசெல் என்றால் தீய ஆவி, பாலைவனத்தில் திரியும் பேய் என்று யூதர்கள் கருதியதாகத் தெரிகிறது. இப் பேய்க்குப் பழிசுமத்தப்பட்ட வெள் ளாட்டை இஸ்ராயேல் பலியிடவில்லை. ஆனால், அதை இறைவன் திருமுன் கொண்டுவந்து அதன்மேல் தங்களின் பாவங்களைச் சுமத்தி ஆசசெல்லிடம் பாலை நிலத்திற்கு ஓட்டினர். இதற்கொத்த சடங்கு, பாபிலோனியாவிலும், மற்றப்

பழைய மேற்காசியச் சமயங்களிலும் காணப்படுகிறது. ஒருவேளை ஏற்கெனவே யிருந்த பொதுப்பழக்கத்தை எடுத்து, இஸ்ராயேலர் அதற்குப் புதுப்பொருள் கொடுத்துத் தங்கள் சமய விழாவாக ஆக்கியிருக்கலாம்.

இப்பரிகாரப் பெருநாள் எப்போது இஸ்ராயேலரிடம் தோன்றியது என்பது மறைவாகவேயிருக்கிறது. நாடு கடத்தப்படும் முன் உள்ள பழைய ஏற்பாட்டு வாசகங்களிலும், பின் வரும் வாசகங்களிலும் இது பற்றிய குறிப்பேயில்லை. மிகப் பிற்காலத்தில் இவ்விழா நிறுவப்பட்டிருக்கலாம். இதை விடத் தெளிவாக நாம் எதையும் கூற முடியாது. எபிரேயர்களிடையே உள்ள பாவப் பரிகாரச் சடங்குகள் மிகப்பழையனவாகும்; ஆனால், எளிய முறையில் கொண்டாடப்பட்டன. நாடு கடத்தப்பட்டபின், இஸ்ராயேல் மக்கள் துய்த்த பெருங்கேடுகளால் பாதிக்கப்பட்டு, இப்பரிகாரச் சடங்கு வளர்ந்து ஒருபெரும் பரிகாரத் தவ விழாவாக மாறியிருக்கலாம். பழைய ஏற்பாட்டு இறுதியில் பரிகாரக் கருத்து யூதமறைக் கருத்துக்களில் சிறப்புப் பெறுகிறது. குருவும் மக்கள் யாவரும் இறைவன் முன் பரிகாரம் செய்ய வேண்டும். இதை இரத்தம் தெளிப்பதாலும் பலியாலுமே நிறைவேற்ற வேண்டும். இச்சடங்கின் பொருளைப் பழி சுமந்த ஆட்டுச்சடங்கு எடுத்துக் கூறுகிறது. பழி சுமத்தப்பட்ட ஆடு பாலை நிலத்திற்குத் துரத்தப்படுதல், இறைமக்களிடமிருந்து பாவப்பழி முழுவதும் அகற்றப்படுவதை உணர்த்துகிறது. காலப்போக்கில், இவ்விறையியல் கருத்தை, பொதுமக்கள் தங்களுக்குரிய பாணியில் செயல்படுத்தினர். பாவம் சுமத்தப்பட்ட ஆடு பாலைக்குப் போகும்போது, அதை வசைவு கூறி அது திரும்பிவராதபடி நெடுந்தூரத்திற்குத் துரத்தினர். பிற்காலத்தில் செங்குத்தான பாறையில் துரத்தி, அதை மடியச் செய்தனர்.

எபிரேயர்களுக்குத் திருமுகம் எழுதிய ஆசிரியர் இப்பரிகாரப் பெருநாள் சடங்கில், கிறிஸ்து, உலகம் யாவுக்கும் பரிகாரம் செய்ததின் அடையாளத்தைக் காண்கிறார். அதே சமயம் இரண்டிற்கும் உள்ள வேற்றுமைகளை அழுத்திக் கூறுகிறார். பெரிய குரு இயேசுவுக்கு ஓர் அடையாளமாவார் (எபி *8:1*). ஆனால், இவ்வடையாளம் அவ்வளவு வலுவுள்ளது அன்று. பெரிய குரு இந்த உலகிலுள்ள திருத்தூயகத்துள் விலங்குகளின் இரத்தம் ஏந்திச் செல்கிறார். மாறாக, கிறிஸ்து இறைவனுடைய உண்மையான திருத்தூயகத்துள் தனது சொந்த இரத்தத்தையே ஏந்திச் செல்கிறார் *(9:2)*. பழைய ஏற்பாட்டில் அந்தந்த ஆண்டில் செய்த பாவங்களைத் தூய்மையாக்கும்படியாக பரிகாரம் செய்யப்பட்டது. மாறாக, கிறிஸ்து தமது இரத்தத்தால் எல்லாக் காலங்களுக்கும், எல்லா மனிதர்களுடைய பாவங்களுக்கும், நிறைவான, முழுமையான பரிகாரம் செய்துள்ளார் *(9:28)*. தமது பரிகாரத்தால் கிறிஸ்து, சாவைத் தரும் செயல்களிலிருந்து நமது மனச்சாட்சியைத் தூய்மையாக்கியுள்ளார். அப்படியே நமக்கு வான் வீட்டின் கதவுகளைத் திறந்துவிட்டுள்ளார் *(10:20)*, பெரிய குரு எந்தப் பாவத்தையும் போக்கவல்லவர் அல்லர். ஏனெனில், அவர் அளித்தது விலங்குகளின் இரத்தமாகும் *(9:10.13; 10:4)*. ஆகையால்தான் திருத்தூயகம் மக்களனைவருக்கும் மூடியதாகவே இருந்தது *(9:8)*; பரிகாரச் சடங்கு ஆண்டு தோறும் நடைபெற வேண்டியிருந்தது *(10:1-3)*. மாறாக, கிறிஸ்து தமது சிலுவைப் பலியால் வான்வீட்டின் திருத்தூயகத்துள் ஒரே ஒருதரம்தான் நுழைய வேண்டியிருந்தது. அப்பலியால் தமது மீட்புச் செயலை நிறைவேற்றுகிறார். இக்கருத்தை எபிரேயருக்குத் திருமுகம் எழுதிய ஆசிரியர் அழுத்திக் கூறுகிறார்.

ஆயினும், கிறிஸ்தவ வழிபாட்டில் இவ்விழா இடம் பெறவில்லை.

**5. 10) புனிதத்தின் சட்டம்:** லேவி 17-26 அதிகாரங்கள் அடங்கிய இப்பகுதி புனிதத்தின் சட்டம் என்றழைக்கப்படுகிறது. முன்பே கூறியபடி, இப்பகுதி லேவியர் திருநூலின் கருப்பொருளாகும்; குருக்களின் பாரம்பரியத்தில் தோன்றியது; அதிலே

வேரூன்றியது; குருகுலச் சட்டப்பண்பைக் கொண்டுள்ளது. இப்பகுதிக்குரிய தனிச் சிறப்பு இதை லேவியர் திருநூலின் மற்றப் பகுதிகளிலிருந்து பிரித்துக் காட்டுகிறது.

இப்பகுதி புனிதத்தை அழுத்திக் கூறு கிறது. இறைவன் ஒருவரே புனிதமானவர். (அதன் விளைவாக) அவர், யாவற்றிலிருந் தும் வேறுபட்டவர்; மனிதனைச் சார்ந்த உலகத்திலிருந்து பிரிந்திருப்பவர்; யாவற் றையும் கடந்தவர்; நாம் அறியும் யாவற்றிற் கும் ''முழுவதுமற்றவர்''. இந்த அவரது திருப்பண்பை மதிக்க வேண்டும் (22:32). அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ராயேல் மக்கள் இறைவனது இப்பண்பைப் பின் பற்ற வேண்டும் (20:7-26;21:16). எகிப்திலி ருந்து வந்தபோது யாவே இஸ்ராயேலரைப் புனிதப்படுத்தியுள்ளார். அவர்களிடம் காணப்படும் எந்தப் புனித நிலைக்கும் எப்போதும் அவரே காரணம். ஆகவே, யாவேயின் புனித மக்களாகிற இஸ்ராயேல், உலகியல் சார்ந்தவற்றிலிருந்தும், தகாதவற் றிலிருந்தும், தன்னை அறவே பிரித்துக் கொள்ள வேண்டும். அதற்கு ஏதுவாகச் சடங்குத் தூய்மையையும் ஒழுக்க நேர்மை யையும் இஸ்ராயேல் கடைப்பிடிக்க வேண் டும். இவ்வழியாக, ஆண்டவரின் புனிதத் தன்மையையும், அவரின் ''முழுமையும் மற்ற தன்மையையும்'' தங்கள் வாழ்வில் எடுத்துக் காட்ட வேண்டும.

புனிதத்தின் சட்டத்தில் பல பகுதிகள் மிகப் பழையவையாகும். அவ்விடங்களி லுள்ள புனித இடங்களைச் சேர்ந்த குருக் களின் மரபு முறைகளைக் கொண்ட சிறு சிறு தொகுப்புகள் ஏற்கெனவே இருந் திருக்க வேண்டும். இவை பாதுகாக்கப் பட்டு, காலப்போக்கில் எருசலேம் குருக்க ளால் ஒன்று சேர்க்கப்பட்டுப் பதிப்பிக்கப் பட்டன. மன்னர் ஆட்சியின் இறுதிக் காலத்தில் இது நடத்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது.

பலவகைச் சட்டங்களைக் கொண்டிருப்ப தால் இப்பகுதிக்குச் சுருக்கம் அளிப்பது கடினம். இரத்தத்திற்கு மதிப்பளித்தல், சிலைவழிபாட்டைத் தடுத்து அழித்தல் போன்ற நோக்கங்களால் உந்தப்பட்டு, எவ் வகைப் பலியும் ஆலயத்தில் மட்டும்தான் நடக்க வேண்டும் எனக் கோருகிறது (அதி.17). அதி. 18-20-இல் வரும் ஒழுக்கச் சட்டமும், அதன் தடைகளும் குறிப்பிட்ட இரத்த உறவுக்குட்பட்ட பாலினப் புணர்ச்சியைத் தடை செய்கிறது. இதன் வழியாக மனித உயிரினம் பலுகும் செய லின் புனிதத்தன்மை காக்கப்படுகின்றது.

புனிதம் பற்றிய எந்த விளக்கமும் லேவி 19-ஆம் அதிகாரத்திற்கு இணையாகாது. இதில் வழிபாடு, நீதி, கற்பு, பிறர் அன்பு முதலியவை பற்றிய கட்டளைகள் காணப் படுகின்றன. உடல், ஆன்மா, ஆவி, சித்தம், ஒழுக்க மனச்சாட்சி, இயற்கை உணர்வு, காலம், இடம், தனிப்பட்டோர், சமூகம், வழிபாடு முதலியவை மன உலைவு தரும் விதத்தில் கலப்படமாகக் குறிக்கப்படுகின் றன. இவற்றை விளக்கும் அடிப்படைக் கொள்கை, ''நாம் பரிசுத்தராய் இருப்பது போல் நீங்களும் பரிசுத்தராய் இருங்கள்'' (19:2) என்பதாகும். மனிதன் கீழ்ப்படியமட் டும் அழைக்கப்படவில்லை; பின்பற்றவும் அழைக்கப்படுகிறான். தோரா வெறும் கட் டளைகள் அடங்கிய ஒரு நூலாகாது. அஃது இறைவனோடு ஒரு பங்கெடுத்தலாகும். அதற்கு இறைவனைப் பின்பற்றுதல் முதல் படியாகும். இந்த 19-ஆம் அதிகாரத்தைப் புரிந்து கொள்ள இந்தப் பின்பற்றுதல் ஒளி அளிக்கிறது. இறைவனது புனிதத்தைப் பின்பற்றுவதால் புனிதம் அடையலாம். ஒரே இறைவனில் புனிதம் நிறைவெய்துகி றது. அவருடைய சாயலான மனிதன், தன் வாழ்வில் பல எதிர்மறைகளைக் கொண்டு, நிறைவில்லாதவனாக இருக்கலாமா? சட் டம் மனிதவாழ்வு முழுவதையும் ஒளிர்விக் கிறது. அசுர அலைபோல், அதைத் தன்னுள் அடக்குகிறது. உடல் சார்ந்த விலங்குத் தன்மை உணர்ச்சிகள் முதல், மேன்மை மிக்க ஆன்மீக உச்ச மேம்பாடுவரை யாவற் றையும் சட்டம் அரவணைத்து வளமாக்கு கிறது. இறைவனது புனிதம் மனிதனின் வாழ்வில் ஒவ்வொரு பகுதியையும் புனித

வளமிக்கதாக்க வல்லது. யாவற்றிலும் அவரது புனிதத்தை மனிதன் பின்பற்ற வேண்டும்.

அதி. 21-22 வழிபாட்டுச் சடங்குகளையும் குருக்களையும் பற்றிய ஒழுங்குகளைத் தருகின்றன. அதி. 23-இல் நாடு கடத்தப்படு முன் உள்ள மூலவடிவில் பல விழாக்கள் தரப்படுகின்றன. இவை பற்றிப் பின் பார்ப்போம். அதி. 24-இல் தூயகத்து விளக்கு, திருமுன் அப்பம், இறை சிந்தனை, பழி வாங்குவது ஆகியவை பற்றிய விவரிப்புக் கொடுக்கப்படுகின்றது. அதி 24-இல் தரப்படும் புனித ஆண்டு பற்றிய விவரிப்பைப் பின் பார்ப்போம். அதி. 26 சாபங்களையும், ஆசீர்களையும் கொண்டது. புனிதத்தின் சட்டமாகிய இப்பகுதி உடன்படிக்கைச் சட்டம் (யாத் 20:22-23:19), உபாகமச்சட்டம் (உப 12-26) ஆகிய பகுதிகளைப்போல் முன்னுரையும் முடிவுரையும் கொண்டது.

**5. 11) புனித நாளேடு:** வழிபாட்டுச் சடங்குகளுக்கு இடமும் வேண்டும், காலமும் வேண்டும். காலம் கதிரவன், மதி ஆகியவற்றின் இயற்கைச் சுழற்சிகளைக் கொண்டு கணிக்கப்பட்டது. பகலவன் இயற்கையின் உயிர் ஊட்டத்திற்கு வேண்டிய பருவ காலங்களை அளித்து வருகிறது. ஆனால், பழங்காலந்தொட்டு, காலம் நிலாவைக் கொண்டே கணிக்கப்பட்டு வந்துள்ளது. இயற்கையின் இலயத்திற்கேற்ப பெரும் விழாக்கள் அமைக்கப் பெற்றன. தானியங்கள் பழ மரங்கள் முதலியவை முளைத்தல், வளர்ச்சி, முதிர்தல், அறுவடை ஆகியவை ஆண்டின் இயற்கை விழாக்களின் பொருளாகின. வசந்த காலத்தில் முதற்கனிகளை இறைவனுக்கு ஒப்புக் கொடுத்தல், தானிய அறுவடை முடிவில் விழாக்கொண்டாடுவது, இலையுதிர்காலத்தில் கூடாரங்களில் வதிந்து விழா எடுப்பது போன்ற இயற்கையை ஒட்டிய விழாக்களின் வழியாக இஸ்ராயேலரின் எளிய குடியானவர்களது வாழ்வு மறைபொருள் பெற்றது. இப்படிப்பட்ட விழாக்கள் கானானியர்களிடமும் இருந்தன. ஆனால், இஸ்ராயேலரிடையே இருந்த இயற்கை இலயத்தோடு ஒட்டிய விழாக்கள் மீட்பு வரலாற்றின் பெரும் நிகழ்ச்சிகளோடு இணைந்து சமய சமூக விழாக்களாயின. இஸ்ராயேலின் திருநாளேட்டில் பின்வரும் விழாக்களைக் காணலாம். 1) ஓய்வு நாளை ஒட்டிய விழாக்கள். 2) முப்பெரும் மகிழ்ச்சி விழாக்கள், பரிகார நாள். இவ் விழாக்களில் ஏழு என்ற எண் சிறப்பிடம் வகிக்கிறது. வாரத்தின் ஏழாவது நாள் ஓய்வு நாளாகும். ஏழாவது மாதம் ஓய்வு மாதம். ஏழாவது ஆண்டு ஓய்வு ஆண்டாகும். ஏழு தடவை ஏழாவது ஆண்டு யூபிலி ஆண்டாகும். பாஸ்கு விழாவுக்குப்பின் ஏழு தடவை ஏழாவது நாளில் 50-ஆம் நாள் விழாக் கொண்டாடப்பட்டது. ஏழாவது மாதத்தில் பரிகாரப் பெருநாளும். கூடாரங்களின் விழாவும் கொண்டாடப்பட்டன. பாஸ்கு விழா, கூடார விழா ஆகிய சிறப்பு விழாக்கள் ஒவ்வொன்றும் ஏழு நாட்களுக்குக் கொண்டாடப்பட்டன. பரிகாரப் பெருநாளைப் பற்றி ஏற்கெனவே விவரித்துள்ளோம். இனி, மற்றவை பற்றிச் சிறிது காண்போம்.

**5. 12) ஓய்வு நாளை ஒட்டிய விழாக்கள்:** அ) வாரத்தின் ஏழாவது நாள் ஓய்வு நாள் எனப்பட்டது. நாட்கள் மாலையிலிருந்து கணிக்கப்பட்டதால், வெள்ளிக் கிழமை மாலை ஓய்வு நாள் தொடங்கிற்று. யாவரும் அன்று முழு ஓய்வு எடுக்க வேண்டும். வேலை ஒன்றும் செய்யக் கூடாது. மீறினால் தண்டனை சாவாகும். மன்னாவைச் சேகரித்தல், தீ மூட்டுதல், உணவு சமைத்தல் போன்ற வேலைகள் கூட அன்று செய்யக்கூடாது. இப்படிப்பட்ட இன்றியமையாத வேலைகள் வெள்ளிக் கிழமையே செய்யப்பட வேண்டும். ஆகையால், வெள்ளிக்கிழமை ''ஆயத்தநாள்'' என்றழைக்கப்பட்டது. புறமத அடிமைகள், வீட்டு விலங்குகள்கூட இவ்வோய்வு நாளைக் கடைப்பிடிக்க வேண்டும். நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய காலத்திற்குப்பின் இஃது ஓர் அனுகூலமாய் இருப்பதற்குப் பதிலாகப் பெரும் சுமையாக மாறிற்று.

இதை இயேசு கண்டிக்கிறார். மாறாக, ஓய்வு நாளில் குணமாக்குதல் போன்ற நற்செயல்கள் புரிகிறார். வழிபாட்டில், ஓய்வு நாளன்று, இருமடங்காக நாள்பலிகள் செய்யப்பட்டன. புதிய திருமுன் அப்பம் சமர்ப்பிக்கப்பட்டது. மக்கள் கூடித் தொழுதனர்.

இஸ்ராயேலின் ஓய்வு நாளுக்கொத்த கடைப்பிடிப்பை எந்த மறையிலும் காண முடியாது. இஸ்ராயேல் வழியாக இறைவன் மக்களினத்திற்கு அளித்த மாபெரும் கொடையாகும் ஓய்வு நாள்.

***ஆ) ஓய்வு ஆண்டு:*** ஒவ்வொரு ஏழாவது ஆண்டும் ஓய்வு ஆண்டாகக் கொண்டாடப் பட்டது. இவ்வாண்டில், நிலத்திற்குக்கூட ஓய்வு உண்டு. நிலத்தை உழுதல், விதைத்தல், பயிர் செய்தல், அறுவடை செய்தல், யாவும் தடை செய்யப்பட்டன. வயல்களிலும், தோட்டங்களிலும், மரங்களிலும் தானாக விளைந்தவை பொதுச் சொத்தாகக் கருதப்பட்டன. இவையும் ஏழைகளுக்கும், அன்னியர்களுக்கும் பகிர்ந்து அளிக்கப்பட்டன (லேவி 25:54). இவ்வோய்வு ஆண்டில் கடனைக் கட்டும்படி கட்டாயப்படுத்த முடியாது. கூடார விழாக்காலத்தில் புனித தலத்தில் கூடியிருக்கும் மக்களனைவருக்கும் சட்டம் முழுவதும் வாசிக்கப்படும்.

இக்கடைப்பிடிப்பின் மறைபொருள் என்ன? நிலமும் அதில் விளையும் பயனும் யாவேக்கு உரியன என்று ஏற்றுக்கொள்ளுவதை மக்களுக்கு நினைவூட்டவே இவ்வோய்வு ஆண்டு கடைப்பிடிக்கப்பட்டது. ஓராண்டுப் பலன் முழுவதும் எளியவர்களுக்கு அளிப்பது நல்லெண்ணமுடையது. ஆனால், வாழ்க்கையில் கொள்ளக்கூடியதா? கடைப்பிடிக்கப்பட்டதா? பழைய ஏற்பாட்டில் ஒரே ஒரு சான்று உளது (1 மக் 6:53).

***இ) யூபிலி ஆண்டு:*** ஏழு தடவை ஏழாவது ஆண்டு யூபிலி ஆண்டாகக் கொண்டாடப்பட்டது. இது பரிகாரப் பெருநாளில் நாடு முழுவதும் தொடங்கியது. ஓய்வு ஆண்டைப் போல் இவ்வாண்டிலும் நிலங்களுக்கு ஓய்வு உண்டு (லேவி 25:2-7). இவ்வாண்டு சுதந்தர ஆண்டு என்றும் அழைக்கப்பட்டது. இவ்வாண்டில் அடைமானமாக வைக்கப்பட்ட பொருள்கள் எல்லாம் கடனைத் திரும்பப் பெறாமல் அதன் மூல உரிமையாளர்களிடம் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும். இவ்வாண்டில் அடிமைகளாக இருந்த இஸ்ராயேலர்களுக்கு விடுதலை அளிக்கப்பட்டது. இப்படி உடைமைகள் அதன் உரிமைக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படுவதால், தொடக்கத்தில் இறைவனின் சித்தப்படி, நாட்டு நிலங்கள் பிரிக்கப்பட்ட அமைப்பு, இஸ்ராயேலர்களுக்குள்ளே எக்காலத்தும் நிலைத்திருக்கும். யூபிலி ஆண்டில் உடைமைகள் அதன் மூல உரிமையாளர்களிடம் கொடுக்கப்படுவதால், உழவர்களின் உடைமை அமைதி காக்கப்படுகிறது. பெரும் சொத்துடையோரிடமிருந்து வரும் சமூக ஆபத்துக்கள் இதனால் நீக்கப்படுகின்றன. இதே மனப்போக்கு அடிமைகளுக்கு விடுதலை அளிப்பதிலும் காணப்படுகிறது. இறைமக்களிடையே நிலையான அடிமைத்தனம் இருக்கவே கூடாது. இக்குறிக்கோள் மிக உன்னதமானது. ஆனால், செயல்படும் போது அவ்வளவு எளிதானதாகத் தெரியவில்லை.

**5. 13. பெரும் விழாக்கள்:** இஸ்ராயேலரிடையே மூன்று மகிழ்ச்சி விழாக்கள் உண்டு. இவ்விழாக்கள் அவர்களுடைய மீட்பு வரலாற்று நிகழ்ச்சிகளோடு தொடர்புடையவை. அதே போழ்து வேளாண்மைத் தொழிலோடும் தொடர்புடையன. இவ்விழாக்களைக் கொண்டாட வயது வந்த ஒவ்வொரு யூதனும் திருத்தலத்துக்குத் (பிற்காலத்தில் எருசலேம் ஆலயத்துக்குத்) திருயாத்திரை சென்றனர். பெண்களும் குழந்தைகளும் விரும்பினால் போகலாம்; ஆனால், கடமை என்பதில்லை.

அ) யூதர்களின் முதற் பெரும் விழா பாஸ்கு-புளியாத அப்ப விழாவாகும். இஃது இருவிழாக்கள் இணைந்த கொண்டாட்டமாகும். பாஸ்குச் செம்மறி கொல்லப்படுவதோடு கூடிய பாஸ்கு விழாவும்,

புளியாத அப்ப விழாவும் சேர்ந்து நீசான் (மார்ச் - ஏப்பிரல்) மாதம் 14-ஆம் நாளி லிருந்து எட்டு நாட்களுக்குக் கொண்டாடப் பட்டது.

இவ்விழாக்கள் மோசே காலத்துக்கு முந் தியதாக இருக்கலாம் என்று கருத இடமிருக் கிறது. ஆனால், பழைய ஏற்பாட்டில் யாவேயிடம் கொண்ட விசுவாசத்தால் இவ் விழாக்கள் புதுப்பொருள் பெறுகின்றன. பாஸ்கு எகிப்தியரிடமிருந்து இஸ்ராயேலர் அடைந்த விடுதலையை நினைவு கூர்கிறது. பாஸ்கு விழாவுக்கு முந்திய நாள் மாலை வேளையில் எகிப்திலிருந்து வெளிப்போந்த வரலாற்று நிகழ்ச்சி கூடிய மட்டும் துல்லிய மாக மீண்டும் நடத்தப்பட வேண்டும் (யாத் 12). செம்மறியைக் கொல்லுதல், கதவு நிலைகளில் அதன் இரத்தம் பூசுதல், பயணத்துக்கு முன்னேற்பாடாக உணவு உண்ணுதல் ஆகிய எல்லாச் சடங்குகளும் எகிப்திலிருந்து வெளிப்போந்த அருஞ் செயல்மிக்க மீட்பின் நினைவாக்கமாகக் கொண்டாடப்பட்டன.

பிற்காலத்தில் பாஸ்கு உணவுச்சடங்கு, யாத்திரை ஆகமத்தில் காணப்படுவதற்குச் சிறிது வேறுபட்ட விதத்தில் கொண்டாடப் பட்டது. பாஸ்கு விழாவுக்கு முந்திய பிற்பகலில், ஆலயத்தின் புறமன்றத்தில் பாஸ்குச் செம்மறி கொல்லப்பட்டது. குருக் கள் இரத்தத்தைப் பிடித்துப் பீடத்தில் தெளித்தார்கள். கொழுப்புப் பகுதிகள் பீடத் தின்மேல் எரிக்கப்பட்டன. பின், செம்மறி யின் மீதிப் பகுதிகள் விறகின்மேல் சுடப் பட்டன. அதன் எலும்புகள் ஒன்றும் முறிக் கப்படவில்லை. செம்மறியோடு, புளியாத அப்பமும், கசப்பான கீரைகளும் உண்ணப் பட்டன.

புளியாத அப்பவிழா பழங்கால உழவர் விழாவாகும். புதிய அறுவடைக்குமுன், பழையவை புதியவற்றைப் பாழாக்காதபடி சென்ற அறுவடையின் முழுப்பயனும் பயன்படுத்தப்பட வேண்டும். எகிப்திலி ருந்து விடுதலையடைந்து, செய்த யாத்திரை யோடு தொடர்புபடுத்தப்பட்டு இவ்விழா மீட்பு வரலாற்றுப் பொருளைப் பெறு கிறது. நீசான் மாதம் 14-ஆம் நாளன்றே பாஸ்கு உணவுக்குமுன் வீட்டிலுள்ள புளிக் காரம் யாவும் அகற்றப்படும். இந்நாட்களில் புளியாத அப்பம் மட்டும் உண்ணப்பட்டது. இவ்விழாவின்போது ஒவ்வொரு நாளும் ஆலயத்தில் விழாப்பலி செலுத்தப்பட்டது. முதல் நாளிலும் இறுதி நாளிலும் மக்கள் கூடிப் பொதுத்தொழுகை செய்தனர் (யாத் 12:16). இரண்டாம் நாள் புதிய அறுவடை யின் கதிர்க் கொத்துக்கள் இறைவன் திரு முன் காணிக்கையாக அளிக்கப்பட்டன.

***ஆ) ஐம்பதாம் நாள் விழா:*** பாஸ்கு விழா விலிருந்து ஐம்பதாம் நாள் ஒரு பெரும் விழாவாகக் கொண்டாடப்பட்டது. அன்று விழாக்கூட்டங்களும், தனி விழாப் பலி களும், பல விருப்பப் பலிகளும், மகிழ்ச்சி விருந்துகளும் நடந்தன. இவ்விழா அறு வடையின் முடிவில் கொண்டாடப்பட்ட நன்றி விழாவாகும். ஆகையால், புது மாவிலிருந்து செய்யப்பட்ட இரு அப்பங் கள் இறைவன் திருமுன் ஒப்புக் கொடுக்கப் பட்டன (எண் 23:26). பிற்காலத்தில் இவ் விழாவில் அறுவடைக் கருத்தோடு சீனா யில் சட்டம் அளிக்கப்பட்ட நிகழ்ச்சியும் நினைவு கூரப்பட்டது.

***இ) கூடார விழா:*** (உப 16:13; லேவி 23:34-40). இலையுதிர் காலத்தில், ஏழாம் மாதமாகிய திஸ்ரியில் இவ்விழா கொண் டாடப்பட்டது. திராட்சை, ஒலிவாப் பழங் கள் கொய்தலின் முடிவில் கொண்டாடப் பட்டது: திஸ்ரி மாதம் 15-ஆம் நாளிலிருந்து ஏழு நாட்களுக்குக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவின்போது பரந்த வெளிகளிலும், வீதிகளிலும், வீட்டுக் கூரைகளிலும் மரக் கிளைகளால் அமைக்கப்பட்ட குடிசைகளில் அல்லது ''கூடாரங்களில்'' மக்கள் வாழ்ந் தனர். இவ்விழாவின் முதல் நாள் ஓய்வு நாளாகக் கடைப்பிடிக்கப்பட்டது. விழாக் கூட்டங்கள் நிகழும் ஓய்வு ஆண்டில் இவ்விழாவின் முதல் நாளில் சட்டம் மக்களுக்கு வாசித்து அறிவிக்கப்பட்டது. எட்டாம் நாளிலும் ஓய்வும், விழாக் கூட்ட மும் கடைப்பிடிக்கப்பட்டன (லேவி

*23:36.39;எண் 29:35-38).* இவ்விழா ஒரு நன்றி விழாவாகும். அண்மையில் கிடைத்த கனிகளுக்காக, பொதுவாக ஆண்டு அறுவடைக்காகவும் இறைவனுக்கு நன்றி செலுத்தப்பட்டது. இவ்விழாவோடு, இஸ்ராயேல் பாலை நிலத்தில் கூடாரங்களில் வாழ்ந்த தொடர்நிகழ்ச்சி நினைவு கூரப்பட்டது. இஃது ஒரு மகிழ்ச்சி விழாவாகும். ஆகவே, இதை வெறுமனே ''விழா'' என்று அழைத்தனர் *(1 அர 8:2;12:32).* பீலோ இதை மிகப்பெரிய விழாவென்றும், யோசிப்பசு ''புனிதமிக்க மிகப்பெரும் விழா'' என்றும் அழைக்கின்றனர். ஐந்நூல் இதை ''ஒன்று கூடும் விழா'' என்றும் அழைக்கிறது.

நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின், இவ்விழா வளர்ச்சியடைந்தது. இரு சடங்குகள் சேர்க்கப்பட்டன. ஒன்று நீர்க்காணிக்கையாகும். ''மீட்பின் ஊற்றுகளினின்று தண்ணீரை அகமகிழ்வோடு நீங்கள் முகந்து கொள்ளுங்கள்'' *(எசா 12:3)* என்று கூறிக் கொண்டு நீர்க்காணிக்கை செலுத்தப்பட்டது. மற்றது ஏழு நாட்களும் காலைப் பலியின்போது ஒரு தங்கக் குடத்தில் சீலோவாம் ஊற்றிலிருந்து நீர் கொணர்ந்து தகனப்பலி பீடத்துக்குத் தென்மேற்கு முனையில் ஊற்றுதலாகும்.

**6. முடிவுரை:** லேவியர் திருநூல் குருக்களையும் அவர்களின் சிறப்பான பணியாகிய ஆலய வழிபாட்டையும் பற்றிய நூலாகும். புதிய ஏற்பாட்டு நோக்கோடு பார்க்கும் போது பழைய ஏற்பாட்டுப் பலிவழிபாடு பயனற்றதாகவும் வலுவற்றதாகவும் தோன்றலாம். இதனால் நாம் அதன் மதிப்பைத் தாழ்த்தக் காரணமேயில்லை. பழைய மேற்காசியாவில், பழைய வழிபாட்டுச் சடங்குகள் சமய அனுபவத்தின் ஓர் உண்மையான உச்ச நிலையாகும். தம்மைத் தவிர வேறொரு கடவுளைப் பொறுக்காத ஒரே இறைவனாகிய யாவேயை - தமக்கென இம்மக்களைத் தன்னுரிமையாகத் தேர்ந்தெடுத்த ஆண்டவராகிய யாவேயை- வழிபடுதல், அவரிடமிருந்து வரும் கொடைகளுக்கு நன்றி கூறுதல், உதவியும் ஆலோசனையும் வேண்டுதல், குற்றங்களை அறிக்கையிட்டுப் பரிகாரம் செய்து மன்னிப்புப் பெறவிழைதல் போன்ற சமயக் கருத்துக்கள் கிறிஸ்து ஏற்படுத்திய மறைக்கு முன்னோடியாகும். இவற்றின் உண்மைப் பொருளை இறைவெளிப்பாடு பெற்ற மறையில்தான் உணர்ந்தறிய முடியும்.

மோசே, ஆரோன், இஸ்ராயேலரின் குருக்கள் ஆகியோரை இறையதிகாரத்தோடு நியமித்த இறைவனே, காலம் நிறைவுற்ற போது, தம் ஒரே மகனை அனுப்பினார். இயேசுவில், ஒரு புதிய மேன்மை மிக்க மோசேயைக் காண்கிறோம். இறைவனும் மனிதனும் என்ற அளவில் இயேசு மோசேக்கும், பழைய ஏற்பாட்டுக் குருக்களுக்கும் அளிக்கப்பட்ட எல்லா ஆற்றல்களையும் கொண்டிருந்தார். சட்டத்தை இயேசு அழிக்கவில்லை; அதை நிறைவேற்றினார். சட்டம் என்ற அடிப்படையின் மேல் தமது சொந்த மகிமை மிக்க அமைப்பை எழுப்புகிறார்.

லேவியர் சட்டம் நம்மை இப்போது கட்டுப்படுத்தவில்லை. ஆனால், அஃது எடுத்துக்காட்டும் புனிதம், இன்றும் நம்மைக் கட்டுப்படுத்தவல்லது. நம் இதயத்தில் புனிதம் என்னும் ஆலயத்தைக் கிறிஸ்து எழுப்புமுன், லேவியர் மனப்பான்மை என்னும் அடிப்படை அங்கே இருக்க வேண்டும். இம்மனப்பான்மை, எல்லாம் வல்ல இறைவனுக்கு வரையற்ற, நிபந்தனையற்ற அர்ப்பணமாகும்.

**வழிப்போக்கர்** (WAYFARER)

பயணி. நடைபாதையில் நடந்தே பயணம் செய்வோர். இத்தகு வழிப்போக்கர்கள் வியாபாரிகளாகவோ, இசைக் கலைஞர்களாகவோ, கொல்லர்களாகவோ, இருக்கலாம். அன்னியரும், பிச்சை எடுத்துப் பிழைப்போரும் வழிப்போக்கர்கள் என்றே அழைக்கப்பட்டனர். போர்க் காலங்களில் வழிப்பயணம் செய்வது அபாயமானதொன்றாகக் கருதப்பட்டது *(நீதி5:6; 19:17தொ; எசா 33:8).* வழிப்போக்கர்கள் வழியில் செமித்திய முறைப்படி

நல்லதொரு உபசாரம் பெற்று வந்தனர் என்பதற்கு *2 சாமு 12:14; யோபு 31:32; எரே 14:8* சான்று பகர்கின்றன. ''வழிப் போக்கர்'' என்ற பொருளுடைய ஆரகு என்பவரின் சந்ததியினர் அடிமைத்தனத் தினின்று திரும்பி வந்ததை *எஸ் 2:5;* நெகே *6:18; 7:10* குறிப்பிடுகின்றன.

**வழிப்போக்கர்களின் பள்ளத்தாக்கு** (TRAVELLERS, VALLEY OF)

சாக்கடலின் கிழக்கில், ஆகவே, புனித நாட்டிற்குப் புறம்பே அமைந்துள்ள ஒரு பள்ளத்தாக்கு (*எசே 39:11*). இஸ்ராயேல் பிற்காலத்தில் 'கோகு' என்பவனோடு போரிடும்பொழுது அவனையும் அவனது படைகளையும் இங்குதான் புதைப்பார்கள் என்று இறைவாக்கினர் எசேக்கியேல் முன்னறிவிக்கின்றார் (*எசே 38-39*). அதன் பிறகு அஃது அமோன்-கோகு பள்ளத்தாக்கு என்று அழைக்கப்படும் *(39:11-15)*.

**வழியடையாளம், சாலை அடையாளம்** (WAYMARK, GUIDEPOST)

இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்டபோது மீண்டும் தங்கள் நாடு திரும்புவதற்கு உதவியாக இருக்குமாறு ஆங்காங்கே கற் குவியல்களை வழியடையாளங்களாக ஏற் படுத்திச் சென்றனர். அவர்கள் தம்நாடு திரும்புவதற்கு இக்கற்குவியல்கள் வெகு வாக உதவியாக இருந்தன (*எரே 31:20*).

எசே *39:15* புதைக்கப்படாத மனித எலும்பின் இருப்பிடத்தைக் குறிக்கும் கற் குவியல் ஒன்றைப்பற்றிக் குறிப்புத் தரு கின்றது. அக்காலத்தில் கல்லறைகளுக்கும் கற்குவியல்களால் அடையாளங்கள் வைக்கப்பட்டிருக்கலாம். எனவேதான் 2 அர *23:17*-இல், கற்குவியல் நினைவுச்சின்ன மாகப் பொருள் கொள்ளப்படுகின்றது.

**வளமைச் செறிவு வழிபாடு** (FERTILITY CULT)

இது பழங்காலத்தில் மேற்காசிய நாடு களில் பின்பற்றப்பட்டு வந்த ஓர் வழி பாட்டு முறை. ஒரு தேவதையைச் செழிப் புக்குக் கடவுளாக உருவகப்படுத்தி அதை அவர்கள் வழிபட்டனர். இந்தத் தேவ தைக்கு இணையாக ஓர் ஆண் கடவுளை வழிபட்டனர். இந்த ஆண் கடவுள் இறந்து பின் உயிர்பெற்றார் என நம்பினர். எப்படித் தாவரங்கள் முதலில் வாடி, பின் வளர்ச்சி யடைகிறதோ அது போல உயிர் பெற்றார் எனக்கருதினர். இதைப் பற்றி பல புராணங் கள் உள்ளன. இந்த ஆண் கடவுள் வேறொரு கடவுளாலோ, மிருகத்தாலோ கொல்லப்பட்டார். அவர் இறந்தவுடன் பூமியில் வறட்சி ஏற்பட்டது. பெண் தேவதை அவனுக்காக அழுது புலம்பியது. பின் அவன் உயிர் பெற்றவுடன் இருவரும் மகிழ்ந்தனர்.

மெசபொத்தாமியாவில் இவ்விருவரும் இஸ்தார் (பெண்) மற்றும் தம்முசு (ஆண்) எனவும், எகிப்தில் இசிசு மற்றும் ஒசிரிசு எனவும், உகாரித்து ஏடுகளில் பாகால்- அதாது மற்றும் அனாத்து எனவும் அழைக் கப்பட்டனர். இதைப் பற்றிய குறிப்புகளை நாம் பழைய ஏற்பாட்டில் காண்கிறோம்.

இஸ்ராயேல் மக்கள் வாக்களிக்கப்பட்ட நாட்டிற்கு வந்தபோது அந்நாடெங்கும் இந்த வழிபாடு பரவியிருந்தது. இந்தக் கடவுளுக்குப் பெரிய பெரிய ஆலயங்களும் இருந்தன. காலப்போக்கில் இஸ்ராயேலும் உண்மைக் கடவுளையும் பாகாலையும் சேர்த்து வழிபடத் தொடங்கினர். கானா னிய சமயவிதிப்படி ஓர் ஆண்குருவும் பெண்குருவும் உடலுறவு கொண்டால் அவர்களின் கடவுளும் தேவதையும் உட லுறவு கொள்வர்; இதனால் பூமிவளம் பெறும் என நம்பினர். இந்த வழிபாட்டில் எல்லோரும் சேர்ந்து உணவை உட்கொண் டனர். அதிகமாக திராட்சை ரசம் பருகினர். இந்த வழிபாட்டின்போது சிறு பிள்ளைகள் பலியிடப்பட்டனர் (குழந்தைகள்). தங்கள் வாழ்விற்குத் தேவையான இரசம், பெண், பாடல் முதலியவற்றையே பலியாக ஒப்புக் கொடுப்பதாகவும் இதனால் வாழ்வு தொடர்வதாகவும் அவர்கள் எண்ணினர். இது நீதிபதிகளாலும், இறைவாக்கினர் களாலும் பெரிதும் கண்டிக்கப்பட்டது.

**வளர்ச்சி** (GROWTH)

***1. படைப்பில் வளர்ச்சி:*** உயிர் என்பது தன்னியல்பாகவே வளர்ச்சி பெறுவதாகும். இறைவன் மனிதனுக்கும் விலங்குகளுக்கும் 'பலுகிப் பெருகுங்கள்' என்று கட்டளை யிடுகிறார். மனிதன் எண்ணிக்கையில் பெரு குவதோடு மட்டுமின்றி, உலகையே தன் ஆளுகைக்குள் கொண்டு வரவும் வேண்டும் (ஆதி 1:22.28; 9:7). மேலும், கோரை தன் வளர்ச்சிக்குத் தண்ணீரை நம்பியிருப்பது போல (யோபு 8:11தொ), மனிதனும் தன் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் இறை வனைச் சார்ந்திருக்கிறான். இந்த உண் மையை அவன் மறந்திடலாகாது. படைத்த வரின் ஆசி உயிருக்கும் அதன் வளர்ச்சிக் கும் அடிப்படையாகும். மனிதனின் பாவம் படைப்பை இறைவனின் சாபத்திற்கு உள் ளாக்கியது. இறைவன் மட்டும் தமது இரக்கத்தால் தம் ஆசீரைத் திரும்ப அளித்தி ராவிடில் (ஆதி 9:1-7), இப்பாவம் பூமியின் மீதுள்ள உயிர்களை முடிவுக்குக் கொண்டு வந்திருக்கும் (3:17; 6:5தொ). இறைவன் தந்த இவ்வாசீர் ஆபிரகாம் வழியாக மக்கள் இனத்தார் அனைவருக்கும் உரியதாகும் (12:3; கலா 3:8).

***2. மீட்பு வரலாற்றில் வளர்ச்சி:***

***அ) உலகில் தீமையின் வளர்ச்சி:*** படைப் பில் தீமை இடம் பெற்றுவிட்டது. அத் தீமை அங்குப் பெருகவும் செய்கின்றது. எவ்வாறெனில், சகோதரர்களுக்குள் சண்டை மூள நீதிமான் அழிவுறுகிறான் (ஆதி 4:8); பழிவாங்கும் மனப்பான்மை அத்துமீறி வளர்ந்து கொலைகளின் எண் ணிக்கையைப் பெருக்குகின்றது (4:24); மனிதனின் உள்ளத்தில் வஞ்சகம் பெருக உலகில் வன்முறைகள் தாண்டவமாடுகின் றன; பல்வேறு தண்டனைகள் பொல்லாத வர்களின் கெடுமதியை அம்பலப்படுத்திக் கண்டனம் செய்தாலும் (6:13; 11:9; 19:24தொ), பொல்லாதவர்களோ பெரும்பா லும் வளமான வாழ்வும் (சங் 73:3-12; எரே 12:1), நிலையான சந்ததியும் பெற்றுச் செழித்தோங்குகிறார்கள் (யோபு 21:7தொ). இத்தகைய நிலை நல்லவர்களுக்கு இடற லாகும். கடவுள் இந்நிலையை விட்டு வைப்பதோடு அல்லாமல், தீமையின் வளர்ச்சியைத் தடுக்க முற்படும் தம் ஊழி யர்களையும் அனுமதிப்பதில்லை. ஏனெ னில், பொல்லாதவர்களைப் பூண்டோடு அழிப்பது தமது உரிமை என்கிறார் (மத் 13:39). தீமையை நன்மையால் வெல்வதே இறைவன் மேற்கொள்ளும் வழி முறை (உரே 12:21). ஆகவேதான், பாவம் பெருகிய இடத்தில் தம் அருளை அணை கடந்தோடச் செய்கிறார் (5:20).

***ஆ) தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் வளர்ச்சி:*** பாவ உலகினின்று இறைவன் யாக்கோபின் வழிவந்த இனமொன்றைத் தமக்கெனத் தேர்ந்துகொள்கிறார். யாக்கோ பின் சந்ததியார் பலுகிப் பெருக இறைவன் அருள்கூர்ந்ததுபோல் (ஆதி 35:11), தேர்ந்து கொள்ளப்பட்ட மக்களும் உடன்படிக்கைக் குப் பிரமாணிக்கமாய் இருந்தால் அவர்கள் பலுகிப்பெருகும்படி விரும்புவார்; இன் றேல், அவர்களை அழித்திடுவார் (லேவி 26:9; உப 28:63;30:16). இறைவன் தமது இரக்கத்தின் காரணமாக, பிற இனத்து மக்களைப்போல இஸ்ராயேல் மக்களை நடத்துவதில்லை என்பது உண்மை. ஏனெ னில், அவர்களின் பாவங்கள் முழு அளவை அடையும் முன்னரே அவர்களைக் கண்டித் துத் திருத்துகிறார் (2 மக் 6:12-16). இவ்வாறு தண்டிப்பதின் நோக்கமும் மனந்திரும்பு தலாகும். மனந்திரும்புதல் மீட்புப்பெற மக்களின் உள்ளங்களைத் திறந்து விடு கிறது. தம் மக்கள் திருந்தும்பொழுது அவர்கள் எண்ணிக்கையிலும் மகிமை யிலும் அதிகரிக்க இறைவன் அருள்புரிகின் றார் (எரே 30:19; எசே 36:10தொ.37தொ; எசா 54:1தொ).

***இ) மீட்பரும் அவர் வார்த்தையும் வளர்ச்சி பெறல்:*** இம்மீட்புத் திட்டத்தை நிறைவேற்ற, இறைவன் தம் திருமகன் இயேசுவை அருளும் உண்மையும் நிறைந்த வராய் இவ்வுலகிற்கு அனுப்புகிறார். இயேசுவோ மனித வாழ்வுக்குரிய வரம்பு களுக்குக் கட்டுப்படுகிறார். ஆகவே, முத லில் பாலனாகிறார். அப்பாலன் வலிமை

யிலும் ஞானத்திலும் வளர்கிறார் (லூக் 2:40.52). இயேசு தாம் யார், தம் பணி என்ன என்பது பற்றி மக்களுக்குத் தம் போதனையால் வெளிப்படுத்துகிறார். இதைப் படிப்படியாகச் செய்கிறார். செய்து மக்களின் எதிர்ப்புக்கு ஆளாகிறார். இவ் வெதிர்ப்பு, இருளே ஆட்சிபுரியும் நேர மென்று தோன்றுமளவுக்கு வளர்ந்து கொண்டே போகிறது (லூக் 6:11; 11:53தொ; 19:47தொ; 22:2.53). இவ்வாறு இருள் ஆட்சிபுரியும் நேரத்தில்தான் இயேசு தமது பணியை நிறைவாக்குகின்றார். எவ்வா றெனில், இயேசு தமது அன்பை உச்சக் கட்டத்தில் வெளிப்படுத்தி, தந்தை மக்கள் மீது எந்த அளவுக்கு அன்பு கூரலானார் என்பதை முழுமையாக வெளிப்படுத்து கிறார் (யோவா 3:16; 13:1; 15:13; 17:4; 19:30). மண்ணில் விழுந்த கோதுமைமணி அங்கு மடிந்து தன்னைப் பலுகச் செய்வது போல (12:24), நல்ல ஆயனும் மடிந்து தம் ஆடுகள் மிகுதியாய் வாழ்வு பெறும்படி செய்கிறார் (10:10தொ). மக்கள் உள்ளங் களில் விதைக்கப்பட்ட அவரது வார்த்தை பலனளிக்கும் (லூக் 8:11.15). எனவேதான், இளந்திருச்சபையின் வளர்ச்சியை லூக்கா வருணிக்கும்போது சிலவேளைகளில் விசு வாசிகளின் எண்ணிக்கை வளர்ந்து கொண்டே போகிறது என்பார் (அ.ப. 2:41; 5:14; 6:7; 11:4); சிலவேளைகளில் கடவு ளின் வார்த்தை மேன்மேலும் பரவி வரு கிறது என்பார் (6:7; 12:24; 19:20).

**ஈ) திருச்சபையின் வளர்ச்சியும் அதில் கிறிஸ்தவனின் வளர்ச்சியும்:** உயிரனைத்தை யும் போலவே கிறிஸ்தவ வாழ்வும் தன்னி யல்பாக வளர்ச்சியுறுவதாகும். கிறிஸ்தவன் வளர்ச்சியுற வேண்டும்; ஆனால், தனிப் பட்ட மனிதனாக அன்று, திருச்சபையின் உறுப்பினனாக வளர்ச்சியுற வேண்டும். ஏனெனில், அவன் திருச்சபையில் உயி ருள்ள கல்லெனப் பொருத்தப்பட்டுள்ளான். மீட்பில் கிறிஸ்தவன் வளரும்போதே ஞான இல்லமான திருச்சபையும் கட்டி எழுப்பப் படுகிறது (1 பேதுரு 2:2-5). பவுல் அறிவுறுத்துகின்றபடி, கிறிஸ்தவன் இறை யறிவிலும் விசுவாசத்திலும் வளர்ச்சி பெற வேண்டும் (2 கொரி 10:15). இதனால் கிறிஸ்தவன் எல்லா வகையான நற்செயல் களிலும் சிறந்து, அன்பில் வளர்ச்சியுறு கிறான் (கொலோ 1:10; பிலி 1:9; 1தெச 3:12). இறையறிவில் பெறும் வளர்ச்சி முதன் முதலாக அவர் அருளில் பெறும் வளர்ச்சியாகும் (2 பேதுரு 3:18). ஏனெ னில், இந்த அருளின் வளர்ச்சிக்குக் காரண மாயிருப்பவர் மீட்பரே. கடவுளின் உண்மை உடனுழைப்பாளர்களான அப் போஸ்தலர்கள் நடுகிறார்கள், நீர் பாய்ச்சு கிறார்கள். ஆனால், வளர்ச்சியைக் கொடுப் பவர் கடவுள்தாமே (1 கொரி 3:6-9).

மேலும், கடவுளே புனிதர்கள் ஒவ்வொ ருவருக்கும் அருளைப் பொழிந்து தங்கள் தலையாகிய கிறிஸ்துவை நோக்கி முன் னேறச் செய்கிறார். இதனால் இவர்கள் அன்பிலே உண்மையைப் பற்றிக்கொண்டு கிறிஸ்துவின் உடலைக் கட்டி எழுப்ப ஒத்துழைக்கின்றனர். அவ்வுடலும் வளர்ச்சி பெற்று அன்பினால் கட்டடமாக எழுகிறது (எபே 4:11-16). ஏனெனில், ஒவ்வொருவ ரின் வளர்ச்சியும் அவர் கிறிஸ்துவோடு கொண்டுள்ள ஒன்றிப்பின் வளர்ச்சியைப் பொருத்ததாகும். திருமுழுக்கு யோவான் கூறியதுபோல, ஒவ்வொருவரும் குறைய வேண்டும்; குறைந்தால்தான் கிறிஸ்து அவ ரிடத்தில் வளர்ச்சியடைந்து தமது முழுப் பருவத்தின் அளவை அடைய முடியும் (யோவா 3:30; எபே 4:13). இதனால் ஆண்டவருக்குள்ளும், தேவ ஆவிக்குள்ளும் திருச்சபை கடவுள் உறையும் புனித ஆலய மாகக் கட்டப்பட்டு உயரும் (2:21தொ).

**3. இறையரசை நோக்கி:** விசுவாசி தன் வாழ்வின் இலக்கை அடைய இடையறாது முயற்சி செய்கிறான் (பிலி 3;12தொ); அவன் ஆன்மீகக் குழந்தைப் பருவத்திலி ருந்து முதிர் பருவத்திற்குக் கடந்துசெல்ல ஆர்வம் கொள்கிறான் (1 கொரி3:1தொ; எபி 5:12தொ); நற்செய்தி உலகெங்கும் பரவித் தொடர்ந்து பயனளிக்க வேண்டும் (கொலோ 1:6). இவையெல்லாம் இறை யரசு என்பதையே வளர்ச்சியுறச் செய்கின்ற

னவா? உவமைகள், இறையரசை ஒருவகை வளர்ச்சியின் இறுதிக் கட்டமாகத்தான் எடுத்துக்காட்டுகின்றன என்பது உண்மை. புளிப்புமா, மாவு முழுதும் புளிப்பேறச் செய்து முடிக்கிறது (மத் 13:33); அறுவடை மட்டும், விதை வளர்ச்சியடைகிறது; ஒரு விதை மரமாகவும் வளர்கின்றது (13:23.32). இவை யாவும் தம்முள் கொண்ட ஆற்ற லால் நடப்பவை (மாற் 4:28). இத்தகைய உவமைகள் யாவும் இறையரசின் வளர்ச் சியைக் குறிப்பதை விட, இறையரசை நோக்கி முன்னேறிச் செல்லும் திருச்சபை யின் வளர்ச்சியைக் குறிப்பதில்லையா? அத்திருச்சபை இறையரசை அறிவித்து, அதன் விதை போல இருந்து, அதையே இறைவனின் ஒரு கொடையாகப் பெற எதிர்பார்ப்பது இல்லையா? இக் கொடையை ஒவ்வொருவரும் ஒரு குழந் தையைப் போலப் பெற்றுக் கொள்ள வேண்டும். எவ்வாறெனில், இறையரசை அறிவிக்கும் நற்செய்தியை (10:15; காண். 1:15) ஒருவர் விசுவசித்துப் பெற்றுக் கொள்ள வேண்டும். இவ்வாறுதான் இறை வனின் நட்புறவில் பங்கு கொள்ள முடி யும். இந்த நட்புறவே இறையரசாகும். இவ்வரசு, மனுமகன் தம் மாட்சியில் உலகைத் தீர்ப்பிட வரும்போது வெளிப் படும் (மத் 25:31-34). அப்பொழுதுதான் கடவுள் ஆட்சி புரிவார். ஏனெனில், அவ ரோடு கொண்ட நட்புறவு முழுமை பெறும்; கடவுள் அனைத்திலும் அனைத்து மாக இருப்பார் (1 கொரி 15:24-28). இக்கட்டத்தில் இறையரசு வளர்ச்சியுறுவதற் கில்லை. ஏனெனில் இந்த இலக்கை நோக் கித்தான் ஆன்மீக வளர்ச்சியனைத்தும் முன் னோக்கிச் செல்கிறது. இந்த இலக்குதான் நம்மிடத்தில் ஓர் ஏக்கத்தை உண்டாக்கி வளர்ச்சிக்குக் காரணமாகிறது. இயேசுவின் உயிர்ப்பைப்போல, இந்த இறையரசின் வருகையும் தந்தையின் கொடையாகும்.

**வளாகம்** (SQUARE)

விவிலியத்தில் வளாகம் என்னும் பொரு ளுடைய எபிரேயச் சொல்லின் மூலப் பொருள் இன்னும் சரிவரப் புரியாத ஒன்றே ஆயினும், பொதுவிடம், திறந்தவெளி, சதுக்கம் என்று பலவாறு மொழி பெயர்க்கலாம்.

தொல்பொருள் ஆராய்ச்சியின் கண்டு பிடிப்பின்படி இஸ்ராயேலரின் நகரங்களில் காணும் நுழைவாயிலுக்கு எதிரில் அமைந் துள்ள திறந்தவெளியே இவ்வளாகமாக இருக்கலாம் என்பது விவிலிய அறிஞர் களின் கருத்து (2 நாள் 32:6; நெகே 8:1.3.16; எஸ் 10:9; உப 13:16; நீதி 19:15; எஸ்த 4:6; யோபு 29:7).

**வளையங்கள், கொக்கிகள்** (LOOPS)

பழைய ஏற்பாட்டில், திரு உறைவிடத் திற்குப் போடப்பட்ட திரைகளின் இரண்டு பகுதிகளைச் சேர்த்துக் கட்டுவதற்கு வசதி யாகச் செய்யப்பட்டிருந்த கொக்கி வளை யங்களையே இங்கு விளக்குகிறோம் (யாத் 26:4-5.10-11; 36:11-12.17). கூடாரத்தின் மூடு திரைகளின் ஓரங்களிலும் இளநீல நூலால் வளையங்கள் அமைத்தனர். ஒவ்வொரு திரையின் இரு புறங்களிலும் ஐம்பது வளையங்கள் இருந்தன. அவை ஒன்றோ டொன்று இணையும்படி வளையங்கள் எதிர் எதிரே அமைக்கப்பட்டிருந்தன. அஃ தோடுகூட கூடாரம் ஒரே உறைவிடமாய் அமையும்படி, ஐம்பது பொன் கொக்கி களையும் செய்து மூடுதிரைகள் ஒன்றோ டொன்று அந்தக் கொக்கிகளாலேயே இணைக்கப்பட்டிருந்தன.

கூடாரத்தின் மேற்புறத்தை மூடுவதற்காக வெள்ளாட்டு மயிரினாலான கம்பளித் திரை களை, மேலே குறிப்பிடப்பட்டுள்ள முறைப்படியே அமைத்தனர். ஆனால், பொற் கொக்கிகளுக்குப் பதிலாக இதில் வெண்கலக் கொக்கிகளைப் பயன்படுத் தினர்.

**வளையம்** (RING)

''நெசெம்'' என்ற எபிரேயச் சொல் பொதுவாக வளையத்தைக் குறிக்கிறது. இது காதிலோ, மூக்கிலோ அணியப்பட் டால் அது தனியாகக் குறிக்கப்படுகிறது. பெண்கள் அணியும் ஆபரணமாக மூக்கு வளையம் ஆதி 24:47; எசா 3:21-இலும்,

காதில் அணிவதாக எசே 16:12-இலும் குறிக்கப்படுகிறது. காது வளையம் ஆண், பெண் இரு பாலராலும் அணியப்பட்டிருக் கிறது (ஆதி 35:4; யாத் 32:2). கையில் அணியும் வளையம் பொதுவாக முத்திரைக் கணையாழியையே குறிக்கும். இஃது அரசர் களாலும், அதிகாரிகளாலும் மட்டுமே பொதுவாக அணியப்பட்டது (யாத் 35:22; எசா 3:21). தொல்பொருள் ஆய்வுகள் காதுவளையத்தைச் சீரியர்கள், நீக்ரோக்கள் அணிந்தனர் என்று காட்டுகின்றன. மேதியர் கள், ஏலாமியர்கள், இத்தியர்கள், கி.மு. 14-13-ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த பாலஸ்தீனியர்கள், அசீரியப் படைவீரர்கள், எகிப்திய அரசிகள், அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், அசீரிய அரசர்கள், பாலஸ் தீனக் கடவுள்கள், இத்தியக் கடவுள்கள், அசீரியக் கடவுள்கள் முதலானோர் காது வளையங்களை அணிந்திருந்ததற்குச் சான்று கள் உள்ளன. இதிலிருந்து அக்காலத்தில் காதுவளையம் எவ்வாறு ஆண், பெண் யாவராலும் அணியப்பட்டது என்பது தெரி கிறது. காது வளையத்தோடு தொங்கல் களும் இணைக்கப்பட்டிருந்தன. சுபாதின் அரசி அணிந்தது 11 செ.மீ. விட்டம் கொண்ட வளையமாக இருந்தது.

**வறுக்கப்பட்ட தானியம்** (PARCHED GA-RAIN)

இஃது அறுவடைசெய்வோர் முதல் (ரூத் 2:14) அரசன் வரையில் (2 சாமு 17:28; காண்க. 1 சாமு 25:18) அனைவராலும் உண்ணப்பட்ட உணவு (லேவி 23:14;யோசு 5:11; 1 சாமு17:17; யூதி 10:5). கோதுமை மணிகளைச் சட்டியில் வறுப்பதன் மூலமோ, கோதுமைக் கதிர்க் கட்டுகளை நெருப்பில் ஏந்தியிருப்பதன் மூலமோ, இவ்வுணவு தயாரிக்கப்பட்டது.

**வனியா** (VANIAH - அன்பிற்குத் தகுதியான வர்)

எஸ்ராவின் காலத்தில் வாழ்ந்த அன்னியப் பெண்களை மணந்த பக்தர் களின் பட்டியலில் இவர் குறிக்கப்படுகிறார் (எஸ் 10:36).

**வன்முறை** (VIOLENCE)

I. வன்முறை என்றதும் முரட்டுத்தன மான அழிப்பு, கற்பளிப்பு, மீறல் ஆகிய வையே நம் கண்முன் தோன்றுகின்றன. ஆனால், வன்முறைக்கு அடிப்படையாக உள்ள உயிர் ஆற்றலையும், அஃது எவ்வாறு தன்னைப் பாதுகாக்க முனைகிறது என் பதையும், அதன் விளைவாகத் தன்னையே அழிக்க முற்படுகின்றது என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். மனிதரிடையே நிலவும் வன்முறையை வேதாகமம் ஒளிவு மறைவு இன்றிக் காட்டுகின்றது. இன்று உயிர் ஆற்றலும், அழிவாற்றலும் தற்காலிக மாக சமநிலையில் இருக்கின்றன. வன் முறையற்ற வாழ்வைப் பற்றிய கனவு இறுதிக்காலத்தில் இயேசுவினால் நனவா கும் என்றும் வேதாகமம் வெளிப்படுத்து கின்றது (காண். எசா 11:6-9; திருவெளி21:4).

II. **வர்ணனை**

**1.** ஒழுங்கை மீறி நிகழ்கின்ற எச்செய லும் வன்முறை என்று கூறலாம். சிமி யோன், லேவி இருவரும் வன்முறைக்குட் பட்ட தங்கள் சகோதரி தீனாவின் (ஆதி34; 2)பொருட்டு, பழிவாங்குதல் அக்கால வழக்கத்திற்கு இயைந்ததே. அதிலே அளவை மீறியதால் கொடியோரைத் தண் டிக்க அவர்கள் உபயோகித்த கத்திகளை, அவர்களின் தந்தை ''வன்முறைக் கருவிகள்'' என்கிறார் (49:5). மக்களும் குருக்களும் கூட திருச்சட்டத்தை மீறினார்கள் (எசே 22:26; செப் 3:4). பிறரை ஏமாற்றி, சமூகநீதியை மீறுவர் சிலர் (செப் 1:9); பிறர் உரிமையை மீறுவர் மற்றும் சிலர் (எசே 45:9). வழக்கமாக வன்முறையோடு செயலில் முன்கூட்டிய திட்டமும் நினைவும், பேச்சில் அடக்கமின்மையும் சேர்ந்திருக் கும். பதுங்கியிருந்து தந்திரமாகத் தாக்குதல் (சங் 140:2), பிறர் செல்லும் வழியிலே குழிதோண்டுதல் (7:17), வஞ்சகம் (72:14), பழிச்சொல் (140:12), ஏமாற்றுதல் (மலா 2:16), பொய்ச்சாட்சி (யாத் 23:1;உப 19:16;சங் 27:12; 35:11) போன்றவையும் வன்முறைகளேயாகும். நல்லவர்கள் இவற் றில் ஈடுபடுவதில்லை (யோபு 16:17).

2. வன்முறைகளின் தன்மையை அதன் முக்கிய விளைவாகிய உடல் மற்றும் சமூக வாழ்வின் அழிப்பிலிருந்தும் உணரலாம். இச்சூழ்நிலையில் வன்முறையைக் குறிக்கும் சொல்லோடு வழக்கமாக அடக்குமுறை, சுரண்டல், பாழாக்குதல், சிதைவு போன்றவற்றைக் குறிக்கும் வேறொரு சொல்லும் சேர்ந்து வரும். வன்முறைக்கு ஆளாகிய மக்களின் நிலைபற்றி இறைவாக்கினர் முறையிடுகின்றார்கள் (*ஆமோ 3:10; எரே 6:7; 20:8; எசா 60:18*); யாவே மட்டுமே இந்த அநீதியைச் சரிப்படுத்த முடியுமென்று அவரை இறைஞ்சுகின்றார்கள் (*அப 1:3*); ''உலகிலே வன்முறை அதிகரித்து விட்டது'' என்றுதானே பெருவெள்ளம் வரச்செய்கின்றார் (*ஆதி 6:11.13*)? வன்முறையாளரிடமிருந்து விடுதலை விரும்பும் அடக்கப்பட்டோரின் கூக்குரலையும் அடிக்கடி கேட்கின்றோம் (*2 சாமு 22:3-49; சங் 18:49; 140:2.5*). வன்முறைக்குப் பதில், வன்முறையே என்று இவர்கள் நம்புகின்றார்கள். ''வன் செயல் செய்பவனைத் தீமை விரட்டி வேட்டையாடுவதாக'' (*சங் 140:12*). இறைவனின் ஊழியன் மட்டும் தன்னை முழுவதும் கையளிக்கின்றார். வன்முறைகளிலோ, ஏமாற்று வித்தைகளிலோ அவர் ஈடுபடாவிட்டாலும் (*எசா 53: 9*) பாவிகளோடு சேர்க்கப்பட்டுத் துன்புறுகிறார்.

3. வலுக்கட்டாயமோ, பழிக்குப்பழி வாங்குவதோ, கோபமோ, பேரார்வமோ வன்முறை அல்ல. உயிர் ஆற்றல் இவை போன்ற வழிகளில் வெளிப்பட்டு, சில வேளைகளில் வாழ்வையே அழிக்கின்றது என்பது உண்மையே. ஆனால், இவையெல்லாம் வன்முறையின்பாற் பட்டதன்று. ஏனெனில், பழைய ஏற்பாட்டில் ஓர் ஒழுங்கை மீறுதலே வன்முறையாகக் கருதப்பட்டது. இவ்வொழுங்கு கிரேக்கர்கள் கருதியதுபோல், என்றும் மாறாத ஏதோ ஓர் இயற்கை நியதி அன்று. காலத்திற்கேற்ப, நீதியினால் அதாவது எல்லாச் செயல்களுக்கும் முடியும் நடுவருமான உடன்படிக்கையின் இறைவனால், அது நிர்ணயிக்கப்படுகின்றது. இந்தச் சூழ்நிலையில்தான் நாம் பழைய ஏற்பாட்டில் வன்முறையைப் பற்றி ஆராய வேண்டும்.

III. **சூழ்நிலைகள்:** மேற்கண்ட குறிப்புக்களைக் கொண்டு வன்முறைச் செயல்கள் எவை என்று பிரித்துணரலாம். ஆபேலைக் காயின் கொலை செய்தல் ஒரு வன்முறைச் செயல். ''உன் சகோதரனின் இரத்தத்தின் குரல் மண்ணிலிருந்து என்னை நோக்கிக் கதறிக் கொண்டிருக்கிறது'' என்கிறார் இறைவன். ஓரளவு பொருத்தமும் இன்றி, இலாமேக்கு தன்னைக் காயப்படுத்திய ஒரு மனிதனைக் கொல்கின்றான் (*4:23*). இஸ்ராயேல் எகிப்தில் அடிமைப்படுத்தப்படுகின்றது (*யாத் 1:12; உப 26:6;* காண். *2 சாமு 7:10*). ஒரு பெண்ணைக் கற்பழித்தல் ஒரு வன்முறைச் செயல். ஏனெனில், பெண்ணின் சம்மதம் இல்லாத இச்செயலால் சமூக உறவுகள் பாதிக்கப்படுகின்றன. அந்த அநீதச் செயலைச் சட்டம் கண்டனம் செய்கிறது (*உப 22:24.29;* காண். *ஆதி 34:2; நீதி 19:24; 20:5; 2 சாமு 13:12.14; புல 5:11*). தாவீது புனிதப்போர் என்ற சாக்கிலே தந்திரமாக பெத்சேபாவின் கணவனான உரியாவைச் சாவுக்குள்ளாக்குகின்றார் (*2 சாமு 11:15*). ஆனால், சிமயி அவரைப் பழித்துப் பேசினாலும் கூட, சவுல் குடும்பத்தாரோடு அவர் வன்முறையாக நடந்து கொள்ளவில்லை (*16:7தொ; 19: 19-24*). சவுல் அவரை மறைமுகமாகத் தாக்க, பன்முறை முயன்றாலும்கூட (*1 சாமு 18:10தொ; 19:9-17*), இரண்டு முறை அவரைக் கொல்லாது விட்டுவிடுகின்றார். (*24:26*). ஈசபேலால் சதித்திட்டம் செய்யப்பட்ட பொய்ச்சாட்சியினால் நாபோத்து கல்லால் அடித்துக் கொல்லப்பட்ட பின் ஆகாபு நாபோத்தின் திராட்சைத் தோட்டத்தை வன்முறையாக அபகரித்துக் கொள்கிறான் (*1 அர 21:8-16*). இறுதியாக, இயேசுவுக்கு முன் உள்ள விவிலிய வரலாறு மனிதரின் வன்முறை வரலாறோ என்று எண்ண வேண்டிய அளவு பேராசை, அடக்குமுறை, கொலை, கலகம் போன்றவை விவிலியத்தில் மலிந்திருக்கின்றன (*லூக் 13:1; மாற் 15:7;* காண். *மத் 2:16*).

IV. **யாவேயும் வன்முறையும்:** மேமெலெழுந்த வாரியாகப் பார்க்கும்பொழுது யாவேயின் செயல்முறையிலே தெளிவு இல்லை. அநீதியை அவர் வெறுக்கின்றார். என்றாலும் சில வேளைகளில் நாம் வன்முறை என்று கருதக்கூடிய செயல்களைக் கண்டிக்காது விடுவதோ, ஆதரிப்பதோ மட்டுமல்ல, அவரே செய்கின்றார். இதை எப்படிப் புரிந்துகொள்வது?

1. சந்தேகத்திற்கிடமின்றி வன்முறை, அநீதியையெல்லாம் கடவுள் கண்டிக்கின்றார். ஆனால், மக்களுடைய பண்பாட்டிற்கேற்ப அதைப் படிப்படியாகச் செய்கின்றார். எடுத்துக்காட்டாக, பழிக்குப்பழி கேட்கும் சட்டத்தை அவர் ஏற்றுக்கொண்டாலும் *(யாத் 21:24)*, இலாமேக்கினுடைய செயல்களோடு ஒப்பிடும்பொழுது *(ஆதி 4:15-24)* இது முன்னேற்றம் என்றே கூறவேண்டும். ஆமோஸ் அவரது காலமுறைக்கு ஏற்ப விவரிக்கும் வன்முறைச் செயல்களைச் செய்யக்கூடாதன என்று கண்டனம் செய்கிறார். இச்செயல்கள், மக்களை இரத்த உறவுகளைப் பார்க்காமல் இடம் பெயர்ப்பது; கற்பிணிகள் வயிற்றைக் கிழிப்பது; சடலங்களைக் கொளுத்துவது; திருச்சட்டத்தை நிராகரிப்பது; சிறியோரைக் கொடுமை செய்வது *(ஆமோ 1:1-2:8)* போன்றவையாகும்.

எகிப்தியர் இஸ்ராயேலரைக் கொடுமைப் படுத்தியபோது அவர்களுக்கு ஆதரவாயிருந்த *(யாத் 3:9)* யாவே, இஸ்ராயேலரும் எளியவருக்கு ஆதரவாயிருக்க வேண்டும் என்று கூறுகின்றார்: *''அன்னியனைத் துன்புறுத்தாதே! ஏனென்றால், நீங்களும் எகிப்து நாட்டில் அன்னியராய் இருந்தமையால், அன்னியரின் மனநிலையை நீங்களுமே அறிவீர்கள்!'' (23:9)*. மனிதரால் அநீதியாகக் கொடுமைப்படுத்தப்படுவோருக்கு, சிறப்பாக அனாதைகள், விதவைகள், ஏழைகள் ஆகியவர்களுக்குப் பாதுகாப்பாளராக இறைவன் இருக்கின்றார் *(யாத் 21-23; உப 24:20)*.

2. ஆனால், சிலைகளைத் தொழும் நாடுகளின் மத்தியில், மெசியா வரும்வரை இஸ்ராயேலரைப் பேணிப் பயிற்றுவித்து வந்த இறைவன், அவர்கள் வாழ்ந்த பண்பாடு சூழ்நிலை ஆகியவற்றை அலட்சியப் படுத்தாது, அவர்களோடு செய்த உடன்படிக்கையின் பெயரால், அச்சந் தருகிற போர்க்கடவுளாகக் காட்சியளிக்கின்றார்; எகிப்தியரின் தலைப்பிள்ளைகளை அழிக்கின்றார் *(யாத் 12)*; எதிரிகளை வெல்லும்பொழுது அவர்களை அடியோடு அழிக்க வேண்டும் என்ற அர்ப்பணப்போரை வற்புறுத்துகின்றார் *(யோசு 7)*; போர்களைத் தானே முன்னின்று நடத்துகிறார் *(காண். 2 சாமு 5, 24)*; சிம்சோன் தன் வலிமையால் எதிரிகளைப் பழிக்குப்பழி வாங்கி அழிக்கச் சம்மதிக்கின்றார் *(நீதி 15-16)*; உடன்படிக்கையை மீறுபவர்களைக் கொலை செய்யும் வெறியை ஆதரிக்கின்றார் *(எண் 15:11)*.

இவற்றையெல்லாம் இறைவன் செய்தாலும் அவரை விவிலியம் வன்முறையாளராகக் கருதவில்லை. ஏனெனில், அவர் தான் செய்த உடன்படிக்கையை மீறாது அதற்குப் பிரமாணிக்கமாகவும் உத்திரவாதமாகவும் இருக்கின்றார். இச்செயல்களால் ஓர் உயர்ந்த நன்மைக்காக இவ்வுலக உயிர்கள் அழிக்கப்படலாம் என்றும், இறுதி நாட் போரில் உலகிலுள்ள தீயனவெல்லாம் முழுவதும் அழிக்கப்படும் என்றும் குறித்துக்காட்டுகின்றார். ஆனால், இதே அடிப்படையில் தற்கால அரசியலில் இந்தப் போக்கைச் செயல்படுத்தல் கூடாது. கடவுள் தன்னை வெளிப்படுத்தியபோது இருந்த சூழ்நிலை வேறு; இப்பொழுதுள்ள சூழ்நிலை வேறு.

3. யாவேயின் செயல்முறையின் முரணான தன்மை தன் செயல்கள் மூலம் தன்னை உயிருள்ள இறைவன் என்று வெளிப்படுத்தும் அவரது இயல்பையும் ஓரளவு பிரதிபலிக்கிறது. ஆனால், இது வரலாற்றுப் போக்கில் படிப்படியாகத் தெளிவு நயம் பெறுகிறது. முதலில் இறைவன் இயற்கை நியதியை மீறும் அருஞ்செயல்கள் மூலம், எடுத்துக்காட்டாக

சீனாய் மலையில் (யாத் 19), தன்னை வெளிப்படுத்துகின்றார். பிறகு எலியா, இறைவனின் செயல் புயலைப் போலவோ, பெரும் காற்றைப் போலவோ, நிலநடுக்கம் போலவோ இல்லை, ஆனால் தென்றலின் மெல்லிரைச்சலைப் போன்றது என்று உணர்கின்றார் (1 அர 19:11தொ). மெசியா வும் முதலில் தன்னை எதிர்ப்போரின் தலைகளை நசுக்கும் போர்த்தலைவராக உருவகப் படுத்தப்பட்டாலும் (சங் 110:5தொ; காண். எரே 17:25; 22:4), பின்னர் ''அமைதியும் எளிமையும் பொருந்திய அரசராகக் கழுதையின்மேல் வருவார்'' (செக் 9:9; காண். ஆதி 49:11; நீதி5:10) என்ற கருத்தே நிலவுகின்றது. இறுதியாக இறைவனின் ஊழியன் இறைவனை மட்டுமே நம்புகின்றார். வன்முறையை விரும்பிப் பணிவோடு ஏற்றுக்கொள்வதன் மூலம் அதை வெல்கின்றார். தீயோரை அவர் எதிர்ப்பதில்லை (எசா 50:5தொ); ஏமாற்றமோ வன்முறையோ அவரிடம் இல்லை (53:9). இவ்வூழியனை இயேசு வின் முன்னுருவாகக் கிறிஸ்தவர்கள் காண் கின்றார்கள்.

IV. **இயேசுவும் வன்முறையும்:** இயேசு வின் செயல்முறையை எளிதாக விவரித்து விட முடியாது. அது சிக்கல்கள் நிறைந்தது; புதிரானது; மனிதர் அனைவரையும் வியப் பில் ஆழ்த்தியது. ஆகவே, அவருடைய சொல்லையும் செயலையும் விளக்க நம் முடைய விருப்பு வெறுப்புக்களையொட்டி அவற்றுள் சிலவற்றைப் பொறுக்கிக்கொள் ளாது இயேசுவினுடைய கண்ணோட்டத்தி லேயே அவை அனைத்தையும் அணுக வேண்டும்.

1. இறையரசை இயேசு தொடங்குகிறார். யூதர்கள் எதிர்பார்த்திருந்ததற்கு மாறாக அது வன்முறையை எதிர்கொள்கிறது. ''திரு முழுக்கு யோவான் நாள்முதல் இதுவரை, விண்ணரசு பலவந்தத்திற்கு உள்ளாகி வரு கிறது; பலவந்தம் செய்வோர் அதைக் கைப்பற்றுகின்றனர்'' (மத் 11;12). அனேக மாக இறையரசுக்குள் நுழைய இருப் போரைத் தடுக்கும் எதிரிகளைப் பற்றித் தான் இயேசு பேசுகின்றார் என்று பெரும் பாலான உரையாளர் கருதுகின்றனர். ஆனால், சீடர்கள் ''குறுகிய வாயில் வழி யாக நுழைய முயலவேண்டும்'' (லூக் 13:24) என்ற கண்ணோட்டத்தில் லூக்கா இதைப் புரிந்து கொள்கின்றார். ''திருச்சட்ட மும் இறைவாக்கினர்களும் யோவான் காலம் வரைதான். அதுமுதல் கடவுளின் அரசைப் பற்றிய நற்செய்தி அறிவிக்கப்படு கிறது. அதில் ஒவ்வொருவனும் பலவந்த மாய் நுழைகிறான்'' (16:16). இறையரசின் வருகையால் ஒரு புதிய வேகம் இவ் வுலகிலே தோன்றுகின்றது. அதன் இயல்பை விவரிக்க ஏற்ற சொற்கள் இல்லையென்றாலும், இயேசு அதை மறைக்கவில்லை.

2. இறையரசை ஏற்க மறுத்து அதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் அநீதமான ஓர் அமைப்பை மற்ற இறைவாக்கினரைப் போல இயேசுவும் எதிர்க்கும்பொழுது அவருடைய சொல்லும் செயலும் அவ் வமைப்பைக் கட்டிக்காப்பவர்களுக்கு வன் முறையாகத்தான் தோன்றும். வரம்பு மீறிய தால் அன்று, மேலெழுந்த வாரியாக நோக்கும்பொழுது திருச்சட்டத்தை மீறுவது போல் காணப்படுவதால், அநீதிக்கு முன் சகிப்புத்தன்மையின் தெளிவற்ற நிலையை யும், உண்மை அன்பின் தேவைகளையும் இவ்வாறு இயேசு தெளிவாக்குகின்றார். கடைக்காரர்களை அவர் கோவிலிலிருந்து விரட்டுகின்றார் (மத் 21:12தொ. இணை; யோவா 2:13-22). சமயம், சமூகம், மொழி இவற்றின் மரபுகளை மீறுகின்றார். ஓய்வு நாள் தன் அதிகாரத்திற்கு உட்பட்டது எனக்காட்டுகின்றார் (மாற் 2:28). இறை வாக்கினர் ஏற்கெனவே பழித்துக்கூறிய பொய்யான அமைதிக்குப்பதில் (காண்.எரே 6:14) வாளையே (மத் 10:34; காண்.லூக் 12:51) கொண்டு வந்த அவர் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக விளங்க வேண்டிய குடும்பத்தில்கூட பிளவுகளைத் தோற்றுவிக் கின்றார். அவருடைய அழைப்பு (மத் 19:35தொ) பெற்றோரிடமிருந்து பிள்ளை களையும், சகோதரரிடமிருந்து சகோதரி

களையும் பிரிக்கின்றது. பெற்றோருக்குச் செலுத்தவேண்டிய மரியாதையைக் கூடப் புறக்கணிக்கச் சொல்கின்றார். ''இறந்தோர் தங்கள் இறந்தோரை அடக்கம் செய்து கொள்ளட்டும்'' (லூக் 9:60). அங்கக்குறை வில்லாத உடலையே யாரும் விரும்புவார் கள். ஆனால், உனக்கு இடறலாயிருந்தால் ''கண்ணைத் தோண்டியெடு, கையைத் துண்டித்துவிடு'' என்று கூறுகின்றார் (மத் 5:29தொ). இவற்றிலெல்லாம் அமைப்புகள் தம்மிலே அநீதமானவை என்பதற்காக அல்ல, அவற்றைவிட உயர்ந்ததெனக் கரு தப்படும் இறையரசின் பொருட்டே மீறப் படுகின்றன. இவ்வமைப்பின் அதிகாரி களும் கபடர்கள், வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள் என்று அழைக்கப்படுகின்றனர் (23:13-36).

நிலவிவரும் சமூக அமைப்பைச் சேர்ந்த வர்கள், அதைவிட உயர்வானதொன்றை ஏற்க மறுக்கும்பொழுது, முன்னாளில் எலி யாவைப்போல (1 அர 19:17தொ) இயேசு வையும் ஒரு கலகக்காரனாகவோ அதிகாரி கள் வகுத்த வழியிலிருந்து மக்களைப் பிரிக்க முனையும் புரட்சியாளனாகவோ காண்கின்றனர் (லூக் 23:2). ஆனால், இறை வனுடைய கண்ணோட்டத்தில் நிறுவனங்க ளால் நெருக்கிச் சாகடிக்கப்பட்ட உண்மை யான மதிப்புக்களுக்கு இயேசு புத்துயிர் ஊட்டுகின்றார். நிகழ்ச்சிகள் தோன்றும் கண்ணோட்டத்திற்குத் தகுந்தாற்போல், திரு வெளிப்பாட்டு நூலோடு, இயேசுவை இறுதியில் அமைதியை நிலைநாட்டும் (திருவெளி 21:4) வன்முறையாளராகவோ (திருவெளி 6:4-8; 8:5...), அவரே தன்னைப் பற்றிக் கூறுவதுபோல, இதயத்தில் தாழ்ச்சி யும சாந்தமும் நிறைய, வன்முறைக்குப் பணிந்து அதன் விளைவுகளை ஏற்று அதை வெற்றி கொண்டு (1 பேது 2:21-24) அநீதியை ஒழித்து ஓய்வளிக்கும் தலைவரா கவோ காணலாம் (மத் 11:29). இவரை உயிருள்ள முன் மாதிரிகையாகக் கொண்டு தான் வாழும் முறையை வகுத்துக்கொள்ள ஒவ்வொரு கிறிஸ்தவனும் முனைகின்றான் (1 பேதுரு 2:18-21; 3:14; லூக் 5:9தொ; திருவெளி 14:12). சமூக அமைப்புக்களைப் பொருத்தவரை, எங்கெல்லாம் நீதியும் அன் பும் நசுக்கப்படுகின்றனவோ, அங்கெல் லாம் நற்செய்தி புரட்சி முழக்கம் செய்கின் றது. நீதியும் அன்பும் இல்லாமல் இறை வனின் எந்த மகனும் வாழமுடியாது. ''கடவுளுடைய அரசையும் அவருக்கு ஏற்பு டையதையும் தேடுங்கள்'' (மத் 6:33).

3. உலகில் நிலவும் அநீதியைப் பற்றிய இயேசுவின் கருத்துக்கள் பழைய ஏற் பாட்டை விடப் புரட்சிகரமானவை. பழிக் குப்பழி வாங்குவதில் சமநிலையைக் கடைப்பிடித்தது பழைய ஏற்பாட்டு நீதி. இயேசு வலியுறுத்தியதோ மன்னிப்பு (மத் 6:12. 14தொ; மாற் 11:25), அளவற்ற மன்னிப்பு (எழுபது முறை ஏழுமுறை: மத் 18:22). ''உங்கள் பகைவர்களுக்கு அன்பு செய்யுங்கள்; உங்களைத் துன்புறுத்து வோருக்காகச் செபியுங்கள்'' (மத் 5:44; லூக் 6:27) என்று எல்லோருக்கும் கட்டளை இடுகின்றார். ''தீயோனை எதிர்க்க வேண் டாம்'' (மத் 5,39) என்று தன் சீடர்களுக்கு ஆணையிடுகின்றார். இக்கட்டளைகளை விளக்க அவர் தரும் மூன்று எடுத்துக் காட்டுக்களிலும் (மத் 5:39-41) இயேசு சமூக அநீதிச் செயல்களின் (கன்னத்தில் அறை தல், மேலாடையை எடுத்துக் கொள்ளுதல், தன்னோடு வரும்படி கட்டாயப்படுத்தல்) அடிப்படைக் காரணங்களைத் தீர்ப்பிட வில்லை. இந்த வன்முறைச் செயல் களுக்குத் தகுந்த காரணங்கள் இருக்கலாம். மாறாக, நம்பிக்கைத் துரோகியான கணக் கரையோ (லூக் 16:1-8), பொல்லாத நடு வனையோ (18:1-5) பின்பற்றும்படியும் அவர் கூறவில்லை. தீங்கிழைக்கப்பட்டவ ரின் நிலையை மட்டும் கருத்தில் கொண்டு, அவர்கள் வன்முறைச் செயல்களை ஏற்றுக் கொள்ளத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார்.

இம்மனநிலைக்கு இயேசுவே முன் மாதிரிகை. இறையரசை வன்முறையால் நிலைநாட்ட மறுக்கின்றார். மாயவித்தை யால் உலகமக்களின் பசியைத் தீர்க்க கற்களை உணவாக அவர் மாற்றவில்லை

(மத் 4:3தொ). மனிதரை வலிமையால் தன் வயப்படுத்த அவர் விரும்பவில்லை (4:8தொ). அரசியல் புரட்சியில் ஈடுபட வில்லை (யோவா 6:15). சிலுவைப் பலி யின் வழியாக அன்றி மகிமையடையவும் அவர் விரும்பவில்லை (மத் 16:22தொ). இறுதியாக இரத்த வியர்வைக்குப்பின் ஒலிவ மலைத் தோட்டத்தில் தன் சீடர்கள் தன்னைச் சண்டையிட்டுக் காக்க முயன்ற போது, ''போதும், விடுங்கள்'' என்று அவர்களைத் தடுக்கின்றார். தன் எதிரியைக் குணப்படுத்தவும் அவர் தயங்கவில்லை (லூக் 22:49தொ; காண்.22:36தொ). இயேசு பிறருடைய இரத்தத்தைச் சிந்தவில்லை; தன் இரத்தத்தையே சிந்தினார்.

தீயோரை ஏன் எதிர்க்கக் கூடாது? அமை திப்போராட்ட வேட்கையினாலா? இல்லை. அன்பும் தியாகமும் வன்முறை யாளனுக்கும் துன்புறுவோனுக்கும் இடையே ஒப்புரவை ஏற்படுத்த வல்லன என்பதால்தான் (காண். ஆதி 33;45; 1 சாமு 26). இறையரசு மிருகத்தனமான வலிமை யால் அன்று, இயேசுவை உயிர்ப்பித்து, இறப்பையும் வெற்றி கொண்ட இறை யாற்றலாலே நிறுவப்படும். அப்போதி ருந்து ''வாளெடுப்போர் வாளால் மடிவர்'' (மத் 26:52). விருந்தோம்ப மறுத்த சமாரிய மக்களை நெருப்புக்கிரையாக்க வேண்டும் (லூக் 9: 54) என்ற விருப்பம் இயேசுவின் மனநிலைக்கு முற்றிலும் மாறானது. சாந்த மனமுள்ளவரே உலகைத் தம் உரிமையாக் குவர் (மத் 5:4). ''புறவினத்தாரின் தலைவர் கள் அவர்களை அடக்கி ஆண்டு, அவர்கள் மீது அதிகாரம் காட்டுதல் போல்'' இல்லா மல் இயேசுவின் சீடர், ''பிறரின் பணியாள னாய்'' இருக்க வேண்டும் (மத் 20:25தொ). இறைவனின் ஊழியனைப்போல, தனது எதிரிகளின் தீச்செயல்களிலிருந்து இயேசு பின்வாங்கி (மத் 12:15.18-21; 14:13;16:4) தன்னை முழுதும் இறைவனிடம் கை யளித்து, ஊழியனின் பாடல்களில் முன்னறி விக்கப்பட்ட (எசா 50:5; 53:9) கொடு மைக்கு உட்படுவோரின் பேற்றை (மத் 5:10தொ) உண்மையாக்குகிறார். ஆனால், மறுகன்னத்தைக் காட்டு என்று தன் சீட ரிடம் கூறும்பொழுதும், அநீதமான முறை யில் தன்னைச் சிலுவையில் அறைவோரை மன்னிக்கும்பொழுதும், இயேசு பழைய ஏற்பாட்டுக் குறிக்கோளைக் கடந்து நிற்கின் றார். அடக்கப்பட்டோரின் அடைக்கலமான இறைவனைச் செயலற்ற முறையில் சரண டைந்ததோடு அவர் நின்றுவிடவில்லை; மாறாக, வன்முறையைத் தன் 'வன்முறை' யால் வெற்றிகொள்கின்றார். இவ்வெதிர்ப்பு எதிர்நோக்கும் ஒப்புரவு ஒன்றே, இவ்வுலகி லேயே கூட, உண்மையாகலாம்.

# வா

## வாகேபு (WAHEB)

அர்னோன் ஆற்றுக்கு அருகிலுள்ள சூபா வின் மோவாபியப் பகுதியிலுள்ள ஓர் இடம் (எண் 21:14). இதன் எபிரேய வடிவம் தெளிவாக இல்லை.

## வாக்குகள் தொகுப்பு (LOGIA)

நற்செய்தி ஆசிரியர்களால் எடுத்தாளப் பட்ட வாக்குகள் தொகுப்பைக் குறிப்பிடும் சொல். அடிக்கடி எழுபது நூலிலும், பல தடவை புதிய ஏற்பாட்டிலும் இச்சொல் பயன்பட்டுள்ளது.

2-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாப்பியாவின் ஓர் உபயோகப்படுத்தப் பட்ட குறிப்பில் பயன்பட்டுள்ளதால் இச் சொல் சிறப்பு மிக்கதாக அமைந்துள்ளது. இக்குறிப்பை யூசேபியு எடுத்துக்கூறுகிறார். எபிரேய (அரமேயிக்கு) மொழியில் இயேசு வின் கூற்றுகளைத் தொகுத்து எழுதியதற்கு மத்தேயுவே பொறுப்பு என இக்குறிப்பு சுட்டிக்காட்டுகிறது. பாப்பியா மத்தேயுவின் நற்செய்தி அல்லது மறைந்துவிட்ட அர மேயிக்கு நற்செய்தியான எபிரேயரின் நற் செய்தியினைக் குறிப்பிடுவதாக, சிலர் கருது கின்றனர். இக்கருதுகோளுக்குத் திருச்சபைத் தந்தையரின் சில பாரம்பரியங்களும், பிலோவும் மற்றவர்களும் ''மறைநூல்'' என்ற பொருளில் ''வாக்குகள் தொகுப்பு'' என்ற சொல்லைப் பயன்படுத்துவதும் ஆதர வாக உள்ளன. மத்தேயுவைப் பொருத்தமட் டும், முதல் நற்செய்தி கிரேக்க மொழியில் கிரேக்க மூலக்கருத்துக்களைக் கொண்டு எழுதப்பட்டது என்பது, இதற்கு எதிரான சாட்சியமாக அமைந்துள்ளது.

பெரிதும் புகழ்பெற்ற கருதுகோள் பாப்பி யாவில் ஓலைச்சுருளில் கூறப்பட்டுள்ள வாக்குத்தொகுப்பு, முதல் மற்றும் மூன்றாம் நற்செய்திகளால் பயன்படுத்தப்படும் கூற்று களின் தொகுப்பாக அடையாளம் காட்டப் படுவதாகும். வாக்குத்தொகுப்பு என்பது மெசியா பற்றிய ஆதார வாசகங்களின் தொகுப்பு அல்லது பாப்பியா தவறான செய்தியைப் பெற்றுவிட்டார் என்பன போன்ற மற்றக் கருதுகோள்கள் பரவலாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

Q-வையும் வாக்குகள் தொகுப்பையும் அடையாளம் காட்ட ஆதரவாய் அமைவது இச்சொல் வரைக்குட்பட்ட பொருளில் எழுபதுநூல், புதிய ஏற்பாடு மற்றும் உரோமைக்கிளமந்து, போலிக்கார்ப்பு, யுஸ் தீன் ஆகியோரின் நூல்களிலும் பயன்பட்டி ருப்பதாகும். இத்தகைய விளக்கம், யூதர்கள் தங்களின் போதகர்களின் கூற்றுகளை ஒன்று சேர்த்ததுபோல, போதிக்கும் நோக்கங் களுக்காக, இறைவாக்குகள் எனக் கருதப் பட்ட இயேசுவின் கூற்றுகளை ஒன்றுசேர்க் கும் ஆதித்திருச்சபையின் செயல்களுக்கு ஏற்றதாகவே உள்ளது. இந்த நோக்கில் உலகளாவிய பொருள் பொதிந்த சுருக்க மான கூற்றுகளின் புனித மற்றும் இறை வாக்குத் தன்மை அழுத்தம் பெறுகின்றது (மத் 5-7). இது நிகழ்ச்சியுரைகளில் காணப் படும் வெறுமனே அறிவு சார்ந்த பொருள் கூற்றுகளிலிருந்தும் (மாற் 2:23.28; மத் 8:5-13; லூக் 7:10), யோவான் நற்செய்தியில் உள்ளதைப் போன்ற நீண்ட அல்லது காரண காரிய உரைகளிலிருந்தும் வேறுபடுத்தப் படுகிறது

## வாக்குக்கொடுத்தல், வார்த்தைப்பாடு, நேர்ச்சை, பொருத்தனை (VOW)

1. இஃது ஒரு செயலைச் செய்வதாக அல்லது செய்யத் தவிர்ப்பதாக ஒரு தேவ தைக்குப் பகிரங்க வாக்குறுதி அளிப்ப தாகும். இதைக் குறிக்கும் எபிரேயச்சொல் ஒரு செயலை (ஆதி 28:20-22), ஒரு காணிக்கையை (லேவி 27) அல்லது ஒன் றைத் தவிர்த்தலை (சங் 132:2-5) அல்லது இறைவனுக்கு அர்ப்பணம் செய்யும் செய லைக் குறிக்கிறது. நேர்ச்சிகள் விரைவில் செலுத்தப்பட்டன; ஆனால், எப்போதும் மனமார்ந்து சுதந்தரமாக அளிக்கப்பட்டன (உப 23:21-23; காண்க. திருவெளி 5:3-4).

II. **பழைய ஏற்பாடு:**

***1) நேர்ச்சை:*** பொதுவாக, இறைவன் ஓர் ஆபத்திலிருந்து விடுவித்த பின் அல்லது ஒரு சலுகை காட்டிய பின், ஒருவன் ஒரு சிறப்பான செயல் செய்வதாக வாக்குக் கொடுப்பான் (எ.கா. மனிதப்பலி: நீதி *11:30-31;* சடங்குப்பணிக்கு அர்ப்பணித்தல்: *1* சாமு *1:11;*வழிபாடு : *2* சாமு *15:7-8;* காண்க. சங் *22:25; 76:11; 116:18-19).*

இறைவனுக்கு வாக்குக் கொடுத்தலில் மனமார்ந்த உறுதி அளிக்கப்படுவதால், விலங்குகளின் முதற்பேறு போன்ற மோசே சட்டப்படி ஏற்கெனவே ஆண்டவருக்கு உரியதொன்றை நேர்ச்சி செய்ய அனுமதி யில்லை. விலைமாதின் வாடகையையோ, விலைமகனின் கூலியையோ இறைவனுக்கு நேர்ச்சையாக ஒப்புக்கொடுக்கக்கூடாது (உப *23:18).* இறைவனுக்கு நேர்ச்சை செய்வதைப் பிற்காலத்தில் ''கோர்பான்'' என்ற எபிரேயச் சொல்லால் குறித்தனர். அதாவது, ''இறைவனுக்குக் கொடுக்கப் பட்டது'', ''காணிக்கை'' என்று இச்சொல் பொருள்படும் (மத் *15:5;* மாற் *7:11).* பலிக்காக அனுமதிக்கப்பட்ட விலங்குகள் காணிக்கையாக மட்டும்தான் நேர்ந்தளிக்கப் படலாம்; அப்போதும் சமாதானக் காணிக் கையின் ஒழுங்குகளுக்கு உட்பட்டதாகும்.

**2. ஒழுங்குகள்:** ஆண்டவருக்கு நேர்ந் தளிக்கப்பட்ட ஆட்களை மீட்கச் செலுத்தப் பட வேண்டிய மதிப்பு பற்றி லேவி 27 கூறுகிறது. இந்த மதிப்பு பால்வகை மற்றும் வயதிற்கேற்ப வேறுபடும். இந்த மதிப்பைச் செலுத்த இயலாத அளவுக்கு ஒருவன் ஏழையாக இருந்தால், அவனுடைய நிலைக்கேற்ப குரு இந்த மதிப்பைச் சரிப் படுத்துவார் *(27:1-8).*

ஒரு விலங்கு காணிக்கையாக ஒப்புக் கொடுக்கத் தகுதியுள்ளதாயின் இறை வனுக்கு நேர்ந்தளிக்கப்பட்ட அந்த விலங் குக்குப் பதிலாக வேறு ஒன்றைச் செலுத்து வது அனுமதிக்கப்படவில்லை. ஒழுங்கு களையும் மீறி இப்படிச் செய்தால், விலங் கும், அதற்குப் பதிலாக ஒப்புக்கொடுக்கப் பட்டதும் இறைவனுக்குக் கொடுக்கப்பட வேண்டும். தூய்மையானதாக அறிவிக்கப் பட வேண்டும் *(27:9-10;* காண்க. மலா *1:14).* அசுத்தமான விலங்கு அல்லது வீடு ஆண்டவருக்கு நேர்ந்தளிக்கப்பட்டிருந்தால், அதைக் குரு மதிப்பீடு செய்வார். இந்த மதிப்பில் ஐந்தில் ஒரு பங்கு மீட்புப் பணமாகக் குறிக்கப்படும் *(27:11-15).*

நிலம், அதில் விதைக்கப்படும் விதை யின் அளவுக்கேற்ப மதிப்பீடு செய்யப்பட வேண்டும். ஆயினும், யூபிலி ஆண்டுக் கடுத்து உடனடியாக நேர்ச்சை செய்யப் பட்டால்தான், முழு மதிப்பீடும் செலுத்தப் பட வேண்டும். நேர்ச்சை செய்யப்படுவதற் கும் அடுத்த யூபிலி ஆண்டுக்கும் இடைப் பட்ட காலத்திற்கேற்ப, இது குறைக்கப் படும். மீட்டுக் கொள்வதற்கும் *(27:16-19),* குருக்கள் *(27:20-21)* மற்றும் மூலச் சொந்தக் காரரின் *(25:25; 27:22-24)* பாதுகாப்பிற்கும் ஒழுங்குகள் கொடுக்கப்பட்டிருந்தன.

ஒன்று அனுமதிக்கப்பட்டிருந்தும் அல்லது விரும்பத்தக்கதாய் இருந்தும், இறைவன் அவனது விருப்பத்தை நிறை வேற்றும்வரை அச்செயலைச் செய்வ தில்லை என்று நேர்ச்சை செய்யலாம். இதற்கு எடுத்துக்காட்டுகள்: போர் நடந்து கொண்டிருந்தபோது உணவு பற்றிய சவு லின் ஆணை *(1* சாமு *14:24);* ஊரியாவின் ஆணை *(2* சாமு *11:9-13);* ஆண்டவருக்கு ஓர் இடத்தை அமைக்கும் வரையில் தூங்க மாட்டேன் என்ற தாவீதின் ஆணை (சங் *132:2-5).* இவ்வகையில், நாசரேயர்களின் பொருத்தனைகள் சிறப்பிடம் வகிக்கின்றன.

திருமணமான பெண்ணும், தந்தையின் வீட்டிலுள்ள புதல்விகளும் செய்யும் நேர்ச்சை பற்றிய ஒழுங்குகளை எண் *30* கொடுக்கிறது.

**3. நேர்ச்சைகளின் வகைகள்:**

***அ) அடைந்த நன்மைகளுக்குப் பதிலாகச் செலுத்தப்படும் நேர்ச்சைகள்:*** இவ்வாறு, பெத்தேலில் யாக்கோபு, தனக்கு இறைவன் உதவினால் அவரை வழிபடுவதாகவும், புனிததலம் அமைப்பதாகவும், தன்னுடைய

உடைமைகளில் பத்தில் ஒரு பங்கு செலுத்துவதாகவும் நேர்ந்து கொள்கிறார் (ஆதி 28:20-22). இப்தாகு, தனக்குப் போரில் வெற்றி கிடைத்தால் திரும்பி வரும்போது, தன் வீட்டிலிருந்து முதலில் வெளிவருபவரைப் பலியாக ஒப்புக் கொடுப்பதாக நேர்ந்து கொள்கிறார். அதன் படி தன் மகளையே பலியாக ஒப்புக் கொடுத்தார் (நீதி 11:30-31). அன்னா, தனக்கு ஒரு மகன் பிறந்தால், அவனைச் சீலோவிலுள்ள ஆலயத்தில் பணிசெய்ய ஒப்புக்கொடுப்பதாக வாக்கு அளிக்கிறாள் (1 சாமு 1:11). தன் தந்தை வீட்டிற்குத் திரும்பினால் பலிவழிபாடு ஒப்புக் கொடுப்பதாக அப்சலோம் உறுதி கூறுகிறான் (15:7-12). யோனா தப்பியோடிய கப்பலில் இருந்தவர்கள், தாங்கள் அடைந்த பாதுகாப்பிற்காக பொருத்தனைகள் செய்து கொண்டனர் (யோனா 1:16). அ.ப. 21:23-இல் வரும் நால்வரும் செய்து கொண்ட பொருத்தனை இவ்வகையைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

**ஆ) தன்னலமற்ற பக்தி முயற்சிகள்:** தாவீது, ஆண்டவருடைய பேழையைத் தன்னுடைய புதிய தலைநகரான எருசலேமில் நிறுவ முடிவு செய்தபோது, எருசலேமில் பேழை நிலைபெறும்வரை வீட்டிற்குப் போவதோ, படுக்கச் செல்வதோ, தூங்குவதோ இல்லையென்று ஆணையிடுகிறார் (சங் 132:2-5; காண்க. பவுலின் பொருத்தனை: அ.ப. 18:18).

**இ) தவிர்ப்பதை அல்லது அழிப்பதைக் கூறும் பொருத்தனைகள்:** கானானியர்களைத் தங்களிடம் ஆண்டவர் ஒப்படைத்தால், அராது நகர மக்களையும் நகர்களையும் அழித்துவிடுவதாக இஸ்ராயேலர் பொருத்தனை செய்கின்றனர் (எண் 21:1-3); அப்படியே செயல்படுகின்றனர். இத்தகைய பொருத்தனைகள், ஆணையிடுதல்கள் என்பன சவுலின் காலத்திலும் (1 சாமு 14:24), பவுலின் வாழ்விலும் (அ.ப. 23:21) காணப்படுகின்றன.

மேற்கூறிய மூன்று வகையிலும் மன்றாட்டுகளோடோ, அவற்றைப் பலப்படுத்தவோ பொருத்தனைகள் செய்யப்படுகின்றன. இவற்றில் தனிப்பட்ட பொருத்தனையை விட, வழிபாட்டுக் கடமைகளின் பொது விவரிப்பே கொடுக்கப்படலாம் (பழ 7:14; 31:2; நாகூ 1:15). இஸ்ராயேலரைப் போன்று எகிப்தியரும் ஆண்டவரை வழிபடும்போது ஆண்டவருக்குப் பலி செலுத்துவர்; பொருத்தனைகள் செய்து அவற்றை நிறைவேற்றுவர் (எசா 19:21). அதுபோல பதித இஸ்ராயேலர் விண்ணக அரசிக்கு நேர்ச்சைகள் செய்தனர்; பொருத்தனைகள் நிறைவேற்றினர் (எரே 44:25).

ஈ) சங்கீதங்களில், அடைந்த விடுதலைக்கு நன்றிகூறுதலையும், நம்பிக்கையை எடுத்துக்காட்டவும் நேர்ச்சைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன (சங் 56:12-13; 66:13-15; 20:4; 22:25; 50:14; 61:5.8; 65:1; 79:13; 89:1-4; 101; 144:9;...). இஸ்ராயேலுக்கும் தனிப்பட்டவர்களுக்கும் இறைவன் அளிக்கும் வாக்குறுதிகள், ஆணைகள், ஒப்பந்தங்கள் ஆகியன இறைவனுடைய நேர்ச்சையாக விவரிக்கப்படலாம் (காண்க. ஆதி 12:2-3.7; 15:5-6; 2 சாமு 7; சங் 89:3-4).

III. **புதிய ஏற்பாடு:** மலைப்பொழிவில், ஆணையிடுதலைத் தவறாகப் பயன்படுத்துதலைப் பற்றி இயேசு போதிக்கிறார் (மத் 5:33-37). தனக்குச் செவி மடுப்போருக்கு ஆணையிட அவசியமின்மையை நினைவுபடுத்துகிறார் (5:35). அப்படிச் செய்தாலும் ''விண்ணுலகின் மேலும்'', ''மண்ணுலகின் மேலும்'' ஆணையிட வேண்டாம் என்று போதிக்கிறார். இதற்கு மாறாக, உண்மை பேசுபவர்களாய் இருக்கும்படி போதிக்கிறார் (காண்க. உப 23:22-24).

ஆதித்திருச்சபையில், பொருத்தனை செய்யும் பழக்கத்தை இரு பகுதிகள் எடுத்துக் காட்டுகின்றன. கொரிந்துவில் பணிமுடித்து அந்தியோக்குக்குப் பவுல் செல்லும் வழியில், கெங்கிரேயாவில் பவுலோ, அக்கிலாவோ பொருத்தனையின் பொருட்டு

முடிவெட்டிக் கொண்டனர் (அ.ப. 18:18). இப்பொருத்தனையின் சந்தர்ப்பம் கூறப் படாவிட்டாலும், இது நாசரேயர் பொருத்த னையாக இருக்கலாம். தனது மூன்றாம் மறைபரப்புப் பயணத்துக்குப்பின் பவுல் எருசலேமை அடைந்தபோது மற்றொரு நாசரேயரின் பொருத்தனை நிகழ்ச்சி நிகழ் கிறது (21:23-26).

## வாக்குறுதிகள் (PROMISES)

I. **வாக்குறுதிகளும் விசுவாசமும்:** அன்பு மொழியின் மிகச்சிறந்த சொற்களில் ஒன்று வாக்குறுதியளித்தல். வெளிப்படையாக அறிவித்தலே வாக்குறுதி செய்தலாகும்; அத்துடன் ஒரு கொடையின் அத்தாட்சி யாகிறது. உறுதியாகவுள்ள வருங்காலத்தை யும், தன்னையும் நிச்சயப்படுத்தி அறி வித்து, அதே சமயத்தில் ஒருவருடைய பங்காளியின் முழுமன ஒன்றிப்பையும், அவர்தம் விசுவாசத்தின் தாராளத் தன்மை யையும் தூண்டுவதே வாக்குறுதியாகும். என்றும் ஏமாற்றாத தனித்தன்மையைக் கொண்டு, இறைவன் தமக்கே உரித்தான முறையில் வாக்களிக்கும் தமது தனிப் பெருந்தன்மையை வெளிப்படுத்துகிறார். ''பொய் சொல்வதற்குக் கடவுள் மனிதன் அல்லர். மனதை மாற்றிக்கொள்ள ஒரு மனிதப் பிறவியும் அல்லர். அவர் சொல்லி யதைச் செய்யாமலிருப்பாரா? அல்லது உரைத்ததை நிறைவேற்றாமலிருப்பாரா?'' (எண் 23:19). அவரைப் பொருத்தமட்டும், வாக்குறுதி அளித்தல் ஏற்கெனவே கொடுத்ததற்குச் சமம். முதலில் அவரளிக் கும் விசுவாசமே வரவிருக்கும் அவரது கொடைக்காகக் காத்திருக்கச் செய்யும். இந்த அருள் அடைந்தவர் கொடையில் கொடுத்தவரின் உள்ளத்தை அறிந்து அவ ருக்கு நன்றி நவில முடிகிறது (உரோ 4:20).

இஸ்ராயேலில் இறைவனது இறை வாக்குகள், ஆணையிடுதல் முதலியவை நிறைவேறுதலாகிய மீட்புவரலாற்றின் திறவுகோல் வாக்குறுதிகளாகும் (ஆதி 22:16-18; சங் 110:4; லூக் 1:73). இந்த ஆணைகள் இறைவனது கொடைகளைத் திரும்பப் பெற முடியாததாகின்றன (உரோ 11:29; எபி 6:13தொ). சில வேளைகளில் இஸ்ராயேலரின் விசுவாசமின்மை இவ்வாக் குறுதிகளை வரையறைப்படுத்த இட்டுச் செல்கிறது. ஆனால் வாக்குறுதிகள் எஞ்சி யோரின் பொருட்டும், ''மானிட மகனின்'' (தானி 7) பொருட்டும் என்றும் நிலைத்து நிற்கும்.

யூதத்துவம், அவ்வாக்குறுதிகளில் நம்பிக் கையை ஒருபுறமும், அவற்றிலுள்ள வெகு மதித் தன்மையை மறுபுறமும் வலியுறுத்திக் காட்டும். கட்டளைகளுக்குப் பணிந்து நடப் பதன் மூலம் வாக்களிக்கப் பெற்ற சொத்துரி மையைப் பெற வேண்டும். மாறாக, அவற்றில் இறைவன் மேற்கொள்ளும் கலப் பற்ற முன் முயற்சியையும், விசுவசிப்பவர் களுக்கு வாக்களிக்கப் பெற்ற கொடைகளை யும் கிறிஸ்தவம் காணும். ஆனால், கும்ரான் சமூகம் அதே காலத்தில் அதைக் கடைப் பிடித்தொழுகும் உறுப்பினர்களுக்கு வாக் களிப்பின் நன்மைகளைக் கட்டுப்படுத்த விழைகிறது.

இதனால்தான் கிறிஸ்தவ வாழ்வு விசு வாசத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது என்பதை எடுத்துக்காட்ட பவுல் அக்கறை காட்டுகிறார்; ஆபிரகாமுக்கு அளிக்கப்பட்டு இயேசு கிறிஸ்துவில் நிறைவேறும் வாக்கு றுதிகளில் வேதாகமத்தின் மற்றும் இறைத் திட்டத்தின் பொருளைக் காண்கிறார் (கலா 3:16-39). இதனால்தான் எபிரேயருக்கு எழு திய திருமுகத்தில், பழைய ஏற்பாட்டி லுள்ள விசுவாசத்தின் வரலாற்றை எடுத்துக் கூறுவதில் ஆர்வம் காட்டும் ஆசிரியர், அதே சமயத்தில் அத்துடன் வாக்குறுதிக ளின் வரலாற்றுக்கும் முக்கியத்துவம் கொடுக்கிறார் (எபி 11:9.13.17.33.39). ஆக வேதான், பவுலின் சிந்தனைகளுக்கு முன்பே மிகப் பழமையான போதகங்களில் ஒன்றான தூய ஆவி எழுந்து வந்த நாளில் பேதுருவின் போதகம் தூய ஆவியின் கொடையையும், திருச்சபையின் தோற் றத்தை ''வாக்குறுதி''யாகவும் (அ.ப. 2:36) இறைவாக்குகளின் நிறைவேறுதலாகவும் (2:16) தவறின்றித் தெளிவாகக் கூறுகிறது. யூதனுக்கு வேதாகமங்கள் முதலில் ஒரு

சட்டம்; இறைவனின் திருவுளத்தை எப்பாடுபட்டாகிலும் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால், கிறிஸ்தவனுக்கு அவைகள் முதலில் வாக்குறுதிகளின் நூலாகிறது. வாக்குறுதிகளின் களஞ்சியங்களாக இஸ்ராயேலர் விளங்கினர் (*காண்க. உரோ 9:4*). கிறிஸ்தவர்கள் அவற்றின் உரிமையாளர்களாகத் திகழ்கின்றனர் (*கலா 3;29*).

புதிய ஏற்பாட்டின் மொழி இதைத் தெளிவாக்குகிறது. வாக்குறுதி என்னும் பொருள் தரக்கூடிய சொல் எபிரேய மொழியில் இல்லாததால் அதைப் பல சொற்களால் விளக்குகிறது. வாக்கு, உறுதிமொழி, ஆசீர், உரிமை, வாக்களிக்கப்பெற்ற நிலம்; அல்லது ''ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபின் இறைவன்'', ''ஆபிரகாமின் இனம்'', போன்ற வாய்பாடுகள். இதற்கு மாறாக, புதிய ஏற்பாடு வாக்குறுதியைக் குறிக்கக்கூடிய தகுந்த சொல்லைக் கொண்டுள்ளது. இது ''கொடுக்கப்பெற்ற இவ் வார்த்தையின்'' மதிப்பை அழுத்தமாகக் கூறுகிறது. இஃது ''ஓர் அறிவிப்பாகும்''. மேலும், இச்சொல் நற்செய்தி வார்த்தையோடு தொடர்பு கொண்டுள்ளது.

II. **வாக்குறுதிகளின் மக்கள், இஸ்ராயேலர்:** கலாத்தியர்களுக்கு எழுதிய திருமுகத்தில் வெளிப்படும் கிறிஸ்தவ உள்ளுணர்வு அடிப்படை அமைப்பைத் தெளிவாக்குகிறது. இஸ்ராயேலர் உயிர் வாழ்வதற்கு அழிக்க முடியாத தனிப்பெரும் அடித்தளமாகத் திகழ்வது இறைவனுடைய வாக்குறுதியாகும்.

***1. குல மூதாதையர்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகள்:*** பல்வேறு பாரம்பரியங்களும் ஆதியாகமத்தில் இணைந்து, இதை வாக்குறுதிகளின் கதையான நூலாகச் செய்கிறது. வாக்குறுதிகளைப் பெறுபவர் ஆபிரகாம் (*ஆதி 12:1.7; 13:15தொ; 15; 17; சங் 105:8தொ*). எப்பொழுதும் இவை ஒரு வாரிசையும், உரிமையாளனையும், மகிமையுள்ள பல வாரிசையும், வளமிகு நிலத்தையும் கொண்டுள்ளன (*காண்க. ஆதி 15:4-7; 17:17; 26:24; 28:13தொ; 35:12*). இவைகளும் மனுகுல ஊழியோடு எப்பொழுதும் இணைக்கப்பெற்றுள்ளன. மனுகுலப் பெயரை விண்ணகம்வரை உயர்த்த எண்ணி (*ஆதி 11:4*), பாபேலைச் சார்ந்த தகாத முயற்சிக்கு, ஆபிரகாமுக்கு வாக்குறுதி அளிக்கப்பட்ட ஆசீரை இறை பதிலாக யாவே பாரம்பரியம் காட்டுகிறது (*ஆதி 12:2*). மேலும், மனித பாவம் மண்ணகத்திற்குக் கொணர்ந்த சாபத்திற்கு ஈடு செய்வதாகவும் (*3:17; 4:11*), முதற் பாவத்திற்குப் பிறகு வெற்றிகரமான உறுதியான நம்பிக்கையை இறைவன் வெளிப்படுத்துவதாகவும் காணப்படுகிறது (*3:15*). மேலும் ''மண்ணின் மக்களினங்கள் அனைத்தையும்'' தன்னுள் அடக்கும் நோக்கை இவ் வாக்குறுதி கொண்டுள்ளது (*12:3*). படைப்பின் முதல் ஆசீருடன் ஆபிரகாமின் ஆசீரைக் குருக்கள் பாரம்பரியம் தெளிவாகத் தொடர்புபடுத்துகிறது (*1:22.28; 17:6.20*). வாக்குறுதிகளின் குறியிலக்கை விருத்தசேதனம் நிச்சயமாகக் கட்டுப்படுத்துவதாகத் தோன்றுகிறது. உண்மையில், இஸ்ராயேலர் இச்சடங்கின்மூலம் எவ்வினத்தையும் தன்னுடன் கூட்டிச் சேர்க்க இயலும் (*34*). இவ்விதமாக ''எண்ணற்ற நாடுகளுக்குத் தந்தை''யாகத் திகழும் ஆபிரகாம் பெற்ற வாக்குறுதி நிறைவேறுகிறது (*ஆதி 17:5; சீரா 44:19-22*). சேம், ஆபிரகாம் குடும்பங்களின் ஆசீர் ''குருக்களின் அரசாகவும், தூய மக்களினமாகவும் (*யாத் 19:6*) தயார் செய்வதன் மூலம், வாக்குறுதியின் சலுகையைச் செயல் முறையாக்குகிறது, அதாவது, ''இறைமக்களாக்குகிறது.''

***2. வாக்குறுதிகளும் திருச்சட்டமும்:*** குல மூதாதையர்களுக்கு அளிக்கப்பெற்ற வாக்குறுதிகளும், இறைவனுடைய முன்முயற்சி மற்றும் அருளின் வெளிப்பாடுகளும் ஏற்கெனவே, அவற்றின் கோரிக்கைகளையும் உள்ளடக்கியுள்ளன. விசுவாசத்திற்கு அவைகள் அளிக்கப்பெறுகின்றன; அதாவது, இறைவாக்கின் அடிப்படையில் தோன்றிய ஒரு புது உயிர் வாழ்வைத் தூண்டுகின்றன: ஆபிரகாம் புறப்படுதல் (*ஆதி 12:1*), அவர் இறைவன் திருமுன் நடத்தல் (*17:1*), அவ

ருக்குக் கீழ்ப்படிதல் *(22:1)*. இத்திருச்சட்டம் மனித வாழ்வு முழுமைக்குமே தனது கோரிக்கையை நீட்டிக்கிறது. உடன்படிக் கையின் உரிமைப் பத்திரமே இத்திருச்சட் டம் *(யாத் 19:5; 24:8; யோசு 24:25)*; அதாவது, இஸ்ராயேலர் ஒரு புதிய புனித மான வாழ்வில் நுழையவும், இறைமக்க ளுக்குரிய நிலையில் வாழவும், தன்னை அவர்தம் வழிநடத்தலுக்கு ஒப்படைக்கவும் சாதனமாக உள்ளது. இத்திருச்சட்டம் பழைய வாக்குறுதியைக் கொண்டுள்ளது; அவ்வாக்குறுதியின் துல்லியமான, நிபந் தனைகளையும் ஏற்படுத்துகிறது. கீழ்ப்படித லுக்குப் பதிலாக அளிக்கப்பெற்ற வாக்குறு திகள் இஸ்ராயேலரின் நேர்மைக்காக அளிக்கப்பெற்ற வெகுமதி அல்ல. ஆனால், பாவத்திற்கு முன் இரக்கமற்றவராகவும், தம்மில் விசுவாசம் கொள்ளாத எவர்க்கும் தம்மையே கொடுக்க இயலாதவராகயிருந் தாலும், அவ்வாக்குறுதிகள் இறைவன் தம்முடையவர்களை என்றென்றும் ஆசீர் வதிக்கும் தாராளத் தன்மையை வெளிப் படுத்துகின்றன.

**3. தாவீதுக்கு வாக்குறுதிகள்:** இஸ்ரா யேலரின் முழு வாழ்வும் விசுவாசத்தில் நிலைத்து நிற்கும்படியாக அதனுடைய நிறுவனங்களனைத்தும் இறைவாக்கில்தான் உறுதித் தலத்தைக் காண வேண்டும். உலக சமுதாயத்தின் சாதாரண அடிப்படையும், வாழ்வதற்குள்ள விருப்பத்தை எடுத்துக் கூறுவதுமான அரசாட்சி நிறுவனம் இஸ்ரா யேலில் முரண்பாடான தன்மையைக் கொண்டுள்ளது. ஏறக்குறைய இறைவனின் விருப்பத்திற்கு மாறாக இது விட்டுக் கொடுக்கப்படுகிறது. ஏனென்றால், யாவே தம் மக்களிடமிருந்து எதிர்பார்க்கும் முழுமையான நம்பிக்கையில் குறைவு ஏற் படும் பேராபத்துண்டு *(1 சாமு 8:7தொ)*; அதே சமயத்தில் மண்ணகக் கனவுகளுக்கப் பாலுள்ள மேன்மைக்கும், வருங்காலத்துக் கும் *(2 சாமு 7)* இஃது உயர்த்தப்படுகிறது. ''மேய்ச்சல் தொழிலிலிருந்து அழைக்கப் பெற்ற'' இளைஞன் ''மிகப்பெரிய மனிதர் களுக்குச் சமமான பெயரை''ப் பெறுவான் *(2 சாமு 7:9)*. ஓர் அரச பரம்பரையை உருவாக்குபவன் அவனே *(7:11)*; அவனை ஆசீரால் நிரப்பும் யாவேயின் அருளையும், அன்பையும் அனுபவிப்பான் *(சங் 89:21-30)*; அவனுடைய வழித்தோன்றல்கள் ''இறைவ னின் வலப்புறம்'' *(சங் 110:1)*, அமர்ந்து நாடுகளைத் தம்முடைய உடைமையாக்கு வர் *(2:8)*. இஸ்ராயேலின் இன்னல் நிறைந்த மிகத்தாழ்ந்த காலத்திலும், கிறிஸ்துவின் நாட்களிலுங்கூட, இஸ்ராயேலின் விசுவா சத்தை இவ்வாக்குறுதிகள் ஊட்டப்படுத்தும் *(எசா 11:1; எரே 23:5; செக் 6:12; லூக் 1:32.69)*.

இவ்வாக்குறுதிகள் நீண்ட காலமாக உலகத்தன்மையைக் கொண்டிருந்தன: ஒரு புதல்வன், ஒரு நிலம், ஓர் அரசர், நிறை வான வளம். இருந்தபோதிலும், மகிழ்வு, திருப்தி ஆகியவற்றின் கருத்தோடு ஏற் கெனவே அவைகள் உபாகமத்தில் தொடர்பு கொண்டுள்ளன. இறைவாக்கின ரோடு அவை ஆன்மீக மற்றும் உள்ளார்ந்த தன்மை பெறுகின்றன. மிக முக்கியமான ஒன்று புதிய உடன்படிக்கையாக மாறு கிறது. ''அவர்களுடைய உள்ளத்தின் ஆழத் தில் நம் திருச்சட்டத்தைப் பதிப்போம்; அவர்தம் இதயங்களில் அவற்றை எழுதி வைப்போம்'' *(எரே 31:32)*. நெருங்கிய ஞானத்தோடு இந்தப் புதிய உடன்படிக்கை இறைவன் மன்னிப்பையும், புதியதொரு இதயத்தையும் கொண்டுள்ளது *(எசே 36:26தொ; சங் 51:12)*. அரசியலில் எருச லேம் தன் நிலையை இழந்தபோதுதான், இறைவாக்கினர் அவளுக்கு மிக வியத்தகு வாக்குறுதிகளை வழங்குகின்றனர். ''யாவே என் உரிமைச் சொத்து'' *(சங் 16:5; 73:26)* என்று சங்கீத ஆசிரியர் பாடுவார். ஏழைக்கு இறைவனுடைய உரிமைச் சொத்தையும், பேற்றினையும் வாக்களிப்பர்; மறை சாட்சி கள் உயிர்ப்பை எதிர்நோக்கியிருக்கையில் *(தானி 12:2தொ; 2 மக் 7)*, ''நம்பிக்கையை யும்...சாகாமையின் நிறைவையும்'' *(ஞான 3:1-5)* ஞானிகள் நீதிமான்களுக்கு அறிவிப் பர்.

**4. மெசியா சார்ந்த வாக்குறுதிகள்:** குலமூதாதையர்களுக்கும், தாவீதுக்கும் அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் அவர்களுடைய இனத்தின் மகிமைமிக்க நிலையான வருங்காலத்தை உறுதிப்படுத்துகின்றன. ''வரவேண்டிய அந்த ஒருவரை'' (எசா *26:21;* ஆகா *2:3*தொ) எதிர்நோக்குவதில் இவை உச்சநிலை அடைகின்றன. இறைவாக்கினர் தண்டனைப் பயமுறுத்தல்களோடு மெசியா சார்ந்த நம்பிக்கை வாக்குறுதிகளையும் வெளிப்படுத்துகின்றனர். இம்மானுவேல் ஒரு கன்னியிடமிருந்து பிறப்பதை மக்களுக்கு அளிக்கும் ஆசீரின் அறிகுறியாக எசாயா நோக்குகிறார் (எசா *7:14*); தாவீதின் வழித்தோன்றலான இக் குழந்தையின் வருங்கால உயர்நிலையை ''அமைதியின் அரசனாகவும்'' (*9:5*தொ), ''நீதியுள்ள அரசனாகவும்'' (*11:11*) எடுத்துரைக்கிறார். மத் *2:6*-இன்படி, மீக்கா ''இஸ்ராயேலை ஆள வேண்டிய அந்த ஒருவர்'' பிறக்கும் இடத்தையும் பெயரிட்டுக் குறிக்கிறார்; பிறக்க வேண்டியவர் ''தோன்றும் மரபு ஊழி ஊழிக்காலம் உளதாகும்'' (மீக் *5:1-5*) என்றும் கூறுகிறார். இஸ்ராயேலின் மகிமையாகவும், அதை மீண்டும் அமைப்பவராகவும் உள்ள ஒரு ''நீதியுள்ள தளிரை'' எரேமியா வாக்களிக்கிறார் (எரே *23:5*தொ; *33:15*தொ; காண்க. எசா *4:2;* செக் *3:8*தொ; *6:12*). புதியதொரு தாவீதைப்போல, தம்முடைய ஆடுகளுக்கு உணவளிக்கவல்ல வரவிருக்கும் ஒரு நல்ல ஆயனைப் பற்றி எசேக்கியேல் முன்னறிவிக்கிறார் (எசே *34:23*தொ; காண்க. *37:24*தொ). மகிழ்ச்சி ஊர்வலத்தோடு அமைதியைக் கொணர்ந்து மெசியா அரசன் தாழ்ச்சியோடு எருசலேமில் நுழைவதைச் செக்கரியா நோக்குகிறார் (செக் *9:9*தொ).

**5. புதிய வாக்குறுதிகள்:** இஸ்ராயேல் தம் அரசன், தலைநகர், ஆலயம், மதிப்பு ஆகிய அனைத்தையும் இழந்து வாழ்வற்றிருக்கும் போது அதனுடைய விசுவாசத்தை இறைவன் புதிய வாக்குறுதிகளால் விழிப்புறச் செய்வார்; இஸ்ராயேலருக்கு முன்னறிவித்த ''முற்கால நிகழ்ச்சிகள்'' மீது இதை நிறுவத் துணிகிறார். அச்சுறுத்தக்கூடிய நுணுக்கத்துடன் அழிவின் பயமுறுத்தல்கள் நிறைவேறுகின்றன (எசா *48:3*தொ; *43:18*). ஆனால், இஸ்ராயேலுக்குப் ''புதியனவற்றையும், அறியாத மறைபொருள்களையும்'' (*48:6; 42:9; 43:19*), கற்பனை செய்ய இயலாத மாபெரும் செயல்களையும் அவர் வாக்களித்துள்ளார். ''மக்களினங்கள் அனைத்திற்கும் உரிய செபவீடு' (எசா *56:7*) எண்ணற்ற இனத்தினரின் தாயாகவும் (*54:3: 60:4*), இறைவனின் மகிழ்வும், பெருமையுமாகவும் (*60, 15*) விளங்கும் புதிய எருசலேம் இம்மாபெரும் செயல்களின் கூட்டிணைப்பாக எடுத்துக்காட்டப் படுகிறது.

**6. ஞானத்தின் வாக்குறுதிகள்:** இறைவனின் வாக்குறுதிகள் இஸ்ராயேல் மக்களின் வாழ்வு முழுவதற்கும் அடித்தளமாக விளங்குகின்றன என்பதை அவை ஞான நூல்களில் வகிக்கும் இடம் எடுத்துக் காட்டுகிறது. எல்லா ஞானமும் ஒரு வாக்குறுதியைக் கொண்டுள்ளது என்பது உண்மையே. ஏனென்றால் அஃது, ஒருவன் எதிர்பார்க்கும் பலன்களைப் பகுத்தறிய அனுபவங்களை மீண்டும் கூட்டிச் சேர்த்துப் பாகுபடுத்தலோடு தொடங்குகிறது. அனுபவத்தின் அடிப்படையில் கணித்துள்ள இவ்வெதிர் நோக்கலுக்குப் பதிலாக நம்பிக்கையை அளிப்பதே இஸ்ராயேல் ஞானத்தின் தனித்தன்மையாகும். இந்நம்பிக்கை வேறிடத்திலிருந்து வந்துள்ளது. யாவேயின் உண்மையான மனத்தன்மைக்கும், ''உன்னத இறைவனின் உடன்படிக்கைக்கும், மோசேயின் சட்டத்திற்கும்'' காட்டும் பிரமாணிக்கத்திலிருந்து இது (சீரா *24:23*) வருகிறது. இஸ்ராயேலரின் ஞானம் அதற்கும் மேலிருந்து வருகிறது (பழ *8:22-31;* சீரா *24:2*தொ; ஞான *9:4.10*). ஆதலால்தான் ''இறைவனுடைய நட்பையும்'' (ஞான *7:14*), ''யாவேயின் கருணையையும்'' (பழ *8,35*) அடைய அது வாக்களிக்கும் பேறு மனித நம்பிக்கைகளையெல்லாம் கடந்துள்ளது (பழ *8:32-36*). நேர்மையாயுள்ளோர் உள்ளத்தில் இவ்வாக்

குறுதிகளின் எதிரொலியாக சங் 119 ஒலிக்கிறது; இறைவனே போதும் என்னும் உறுதியோடுள்ள இஸ்ராயேலரின் விசுவாசத்திற்கு ஆதரவாகச் சான்று கூறுகிறது.

III. **இயேசு கிறிஸ்துவின் வாக்குறுதிகள்:**

***1. ஒத்தமை நற்செய்திகள்:*** வாக்களிக்கப்பெற்ற மெசியா இயேசுவில் ''இறைவனின் வாக்குறுதிகளனைத்தும் நிறைவேறுகின்றன'' *(2 கொரி 1:20)*. அவரே வாக்குறுதிகளின் பொருளாகவும், புதிய வாக்குறுதிகளைக் கொண்டுள்ளவராகவும், முதலில் காட்டப்பெறுகிறார். அரசை அறிவிப்பதோடு தம் போதகத்தைத் தொடங்குகிறார் *(மத் 4:23)*; அதை ஏழைகளுக்கும் துன்புறுத்தப்படுவோருக்கும், பேறுகளில் அவர் வாக்களிக்கிறார் *(5:3.10; லூக் 6:20.23)*. மனிதர்களைப் புதுமையாகப் பிடிப்பதையும் *(4:19)*, பன்னிரு இஸ்ராயேல் கோத்திரங்களின் மீது அதிகாரம் செலுத்தவும் *(19:28)* வாக்களிக்கையில் சீடர்களைத் தம் பங்காளிகளாகக் கொள்கிறார். பேதுரு மீது தம் திருச்சபையை எழுப்ப வாக்குறுதி அளிக்கிறார். நரகத்தின் மீது வெற்றி கொள்வதற்கு அவருக்கு உத்தரவாதம் அளிக்கிறார் *(16:16 தொ)*. தம்மைப் பின்பற்றுபவன் எவனுக்கும் நூறு மடங்கும், முடிவில்லா வாழ்வும் *(19:29)* வாக்களிக்கிறார்; தன்னை ஏற்றுக்கொள்பவனுக்கு இறைவன் திருமுன் தம் உதவியை வாக்களிக்கிறார் *(10:32)*. ஓரினத்தாரின், நிலத்தாரின், அரசின், பேற்றின் வாக்குறுதிகள் ஆகிய அனைத்துப் பழைய ஏற்பாட்டின் வாக்குறுதிகளையும் தம்முடையவைகளாக்கிக் கொள்கிறார். அவையனைத்தும் அவருடைய ஆட்தன்மையையும், அப்போஸ்தலப் பணியையும் சார்ந்துள்ளன. அவருடய நேரம் இன்னும் வராததால் அவைகள் இன்னும் நிறைவேற்றப்படவில்லை; விசுவாசத்தில் மட்டுமே எவனும் இயேசுவைப் பின்தொடர இயலும். அவரில் நம்பிக்கை வைத்தல் அவைகள் ஏற்கெனவே நிறைவேறி முடிவு பெறுவதை உணர்வதாகும் *(யோவா 1:41.45)*.

***2. யோவானின் நற்செய்தி:*** இஃது இயேசு தம்முடைய ஆட்தன்மையாலும், செயல்களாலும் எவ்வளவுக்கு இவ்வுலகில் வாக்குறுதிகளின் உயிருள்ள பிரசன்னமாய் இருக்கிறார் என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. மனிதன் எதிர்பார்ப்பதெல்லாம் அவரே! இறைவன் தம் மக்களுக்கு வாக்களித்த உண்மை, உயிர், உணவு, உயிருள்ள நீர், ஒளி, உயிர்ப்பு, இறைமகிமை ஆகிய யாவும் அவரே! ஆனால், மனுவுடலில் அவர் இவையெல்லாமுமாய் விளங்குகிறார். விசுவாசத்தில் மட்டுமே அவர் தம்மைக் கொடுக்க இயலும். அவர் ஒரு வாக்குறுதிக்கு மேலானவர்; ''அவரில் விசுவாசம் கொள்ளும் அனைவரும் முடிவில்லா வாழ்வைப் பெறும் பொருட்டு'' *(யோவா 3:16)* அவரே ஒரு கொடையாகி, விசுவாசத்தில் கொடுக்கிறார்.

***3. ஆவியின் வாக்குறுதி:*** ''தந்தையின் வாக்குறுதி'' தூய ஆவியாகும் *(லூக் 24:49; அ.ப. 1:4)*. ''உலகை நிரப்பி அனைத்தையும் ஒன்று சேர்த்திணைத்து'' *(ஞான 1:7)*, அவர் தம்மில் வாக்குறுதிகளனைத்தையும் கொண்டுள்ளார் *(கலா 3:14)*. அவரை நமக்களிக்க, இயேசு தம்முடைய வேலையை மண்ணுலகில் முடிக்க வேண்டும் *(யோவா 17:4)*; தம்முடையவர்களை இறுதிமட்டும் அன்பு செய்ய வேண்டும் *(13:1)*; தம்முடைய உடலையும், இரத்தத்தையும் கொடுக்க வேண்டும் *(லூக் 22:19)*. பிறகு இறைவனுடைய செல்வம் அனைத்தும் அவருக்களிக்கப்பட்டுள்ளதால், அவர் எல்லாவற்றையும் வாக்களிக்கலாம். எவனும் ''அவருடைய பெயரால் இறையவனிடம் கேட்பதெல்லாம்'' பெறுவது உறுதி *(14:13)*. இதுவே ''உலகம் பெற இயலாத உண்மையின் ஆவி'' *(14:7)*. ஏனென்றால், அவரே தந்தையும், மகனுடையதுமான உயிருள்ள சொத்து என்று இவ்வுலகம் விசுவசிக்க இயலாது *(16:15)*. ''எல்லாம் நிறைவேறிய'' பொழுது, இயேசு ''ஆவியைக் கையளித்து'' உயிர் விடுகிறார் *(19:30)*. அவர் தம்முடைய வாக்குறுதிகள் அனைத்தையும் நிறைவேற்றியுள்ளார். ''பிதா, சுதன், தூய ஆவியை'' *(மத் 28:19)*, அவர்களுக்குத் தாம் அளிக்கும் நேரத்தி

லிருந்து ''உலகம் முடியும் வரை'' அவர்களோடிருக்க அவர் வாக்களிக்க இயலும்.

IV. **வாக்குறுதியின் வாரிசுகளான கிறிஸ்தவர்கள்:** தூய ஆவியைப் பெற்றுள்ள கிறிஸ்தவர்கள் வாக்குறுதிகள் அனைத்தையும் பெற்றுள்ளார்கள் (அ.ப. 2:38தொ). முன்பு ''வாக்குறுதியின் உடன்படிக்கைக்கு அன்னியர்களாயிருந்த'' (எபே 2:12) ''புறவினத்தார்களும் பரிசுத்த ஆவியின் கொடையைப் பெற்றதிலிருந்து'' (அ.ப. 10:15), கிறிஸ்துவில் ''வாக்குறுதியின் பங்காளி''களாயுள்ளனர் (எபே 3:6). அன்றிலிருந்து விசுவாசத்திற்கே எப்பொழுதும் வாக்குறுதியளிக்கப்படுகிறது (உரோ 4:13); ''எல்லா இனத்தாரின் தந்தையாக விளங்கும் ஆபிரகாமின் விசுவாசத்தைக் கொண்ட அவர் வழிவந்தவர்கள்'' (4:16) எனப்படும் அனைவருக்கும், விருத்தசேதனம் செய்யப்பெற்றவர்களானாலும் சரி, விருத்த சேதனம் செய்யப்பெறாதவர்களானாலும் சரி (4:9) இவ்வாக்குறுதி யளிக்கப்படுகிறது.

''எல்லாக் கொடைகளாலும் நிரப்பப்பெற்று'', ''எந்த அருட்கொடையிலும் குறையில்லாததால்'' (1 கொரி1:5.7) கிறிஸ்தவர்கள் விரும்புவதற்கு வேறொன்றுமில்லை. ஏனென்றால், தூய ஆவி அவர்களை அபிடேகம் செய்து முத்திரையிட்டு அவர்களுள் நிலையாகக் குடிகொண்டுள்ளார். எனினும், அவர் நம் உரிமைச் சொத்தின் பிணையாக மட்டுமே இருக்கிறார் (எபே 1:14; 2 கொரி 1:22; 5:5). அவர் ''நம் மீட்பின்... முதற்கனி'' ஆவார் (உரோ 8:23). அவருடைய செபம் நம்மில் ஓர் ''ஏக்கக் குரலாகவும்'', நம்பிக்கையாகவும் விளங்குகிறது (8:23தொ). கிறிஸ்தவர்கள் ''மேலானதொரு தந்தை நாட்டின்'' யாத்திரிகர்களாகவே இன்னுமுள்ளனர் (எபி 11:16). அவர்கள் ''விசுவாசத்திலும், பொறுமையிலும்'' (6:12-15), ஆபிரகாமின் எடுத்துக்காட்டைப் பின்பற்றி அதை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். இறுதிநாள் வரை, ஒருவன் தன்னை இறையன்பினால் விசுவாசத்திற்கு ஒப்புக்கொடுக்கும் கருவியாக வாக்குறுதி உள்ளது.

**வாசனைக் கட்டை** (SCENTED WOOD)

வாசனைக் கட்டைகள், பாபிலோனியர்களால் விலை கொடுத்து இறக்குமதி செய்யப்படும் பொருள்களில் ஒன்று (திருவெளி 18:12). இஃது ஆப்பிரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. இதை மேசை போன்ற பொருட்களைச் செய்ய உரோமையர்கள் பயன்படுத்தினர்.

**வாசனை மரம்** (ALGUM, ALMUG)

லெபனோனிலிருந்து பெறப்பட்ட விலையுயர்ந்த மரம். ஆலயத்தையும் (2 நாள் 2:7) மற்றக் கட்டடங்களையும் (9:10) கட்ட சாலமோன் ஈராமிடமிருந்து கேட்டிருந்த மரமாகும். ஓப்பிரிலிருந்து இது பெறப்பட்டிருக்கலாம் (9:10; 1 அர 10:12).

**வாசிங்டன் சுவடித்தொகுப்பு** (CODEX WASHINGTONENSIS)

கி.பி. நான்காவது அல்லது ஐந்தாவது நூற்றாண்டைச் சார்ந்த பழைய ஏடு இது. இதில் புதிய ஏற்பாட்டு நூல்கள் மட்டும் இடம் பெற்றிருக்கின்றன. இது கிரேக்க மூல மொழியில் எழுதப்பட்டுள்ளது. இத்தொகுப்புக்குக் கொடுக்கப்பட்டுள்ள குழூஉக் குறிப்பெழுத்து 'W' என்பதாகும்.

இதில் நற்செய்தி நூல்கள் மேற்கத்திய வரிசை முறைப்படி அமைக்கப்பட்டுள்ளன. அதாவது மத்தேயு, யோவான், லூக்கா, மாற்கு என்ற வரிசையில் நற்செய்திகள் எழுதப்பட்டுள்ளன.

இந்தச் சுவடியின் தனி முக்கியத்துவம் என்னவென்றால், மாற் 16:14-இல் சேர்க்கப்பட்டுள்ள ஒரு புதிய வசனமாகும். இவ்வசனத்தின் கருத்து, தற்போதுள்ள தலைமுறை - சட்டங்களுக்குக் கட்டுப்படாத தலைமுறை - விசுவாசமற்ற தலைமுறை; எனவே, அது சாத்தானின் ஆதிக்கத்தின் கீழ் உள்ளது; ஆகவே மக்கள் சாத்தானின் ஆட்சியை விட்டு சத்தியத்தின் ஆட்சிக்குத் திரும்பவும், அதனால் விண்ணக நீதியில் நிலைத்து நிற்கவும் இயேசு இறந்தார் என்பதாகும். இப்பொருளில் வருகிற வாக்கியம் இச்சுவடியில் மட்டும்தான் காணப்

படுகிறது. இவ்வாக்கியத்தைப் பிரியர் வாக்கியம் என்பார்கள்.

இத்தொகுப்பை சி.எல்.பிரியர் என்பவர் 1906-ஆம் ஆண்டு கெய்ரோ நகரில் விலை கொடுத்து வாங்கினார். இப்போதும் இப்பிரியர் என்பவர் சேர்த்து வைத்திருக்கும் பழங்காலப் பொருட்களுடன் இவ்வேடும் சேர்த்துவைத்து வாசிங்டன் நகரில் காப்பாற்றப்பட்டு வருகிறது.

**வாஞ்சை, பரிவு** (TENDERNESS)

வாஞ்சையைக் குறிக்க குடல், வயிறு என்று பொருள்படும் எபிரேயச் சொற்கள் பயன்பட்டுள்ளன. தங்கள் குழந்தைகள் மீது தாய்மார்கள் கொண்டிருப்பது வாஞ்சை தான் (1 அர 3:26). இவ்வாஞ்சை எல்லா மனித உயிர்களும் தங்கள் குழந்தைகள் மீதும், தங்களுக்கே மிக நெருக்கமாக உள்ளவர்கள் மீதும் கொள்வது இயல்பு (ஆதி 43:30). இவை அனைத்தையும் விட, கடவுள் தம் படைப்புகள் மீது கொண்டிருக்கும் வாஞ்சை அளவற்றது.

***1. கடவுளின் வாஞ்சை:*** கடவுள் தந்தையாகவும் (சங் 103:13), தாயாகவும் (எசா 49:14தொ; 66:13) உள்ளார். அவர் கொண்டிருக்கும் வாஞ்சை மனிதரின் வாஞ்சையை விட ஒருபடி மேலானது. அதனால்தான் அவர் தனது சாயலாகவே மனிதனைப் படைத்தார் (ஆதி 1:25; 5:1-3). இந்தக் கொடை எந்தவித எதிர்பார்ப்புமின்றி இறைவனால் தரப்பட்டது (தானி 9:18); எப்பொழுதும் விழிப்போடிருக்கும் வாஞ்சை அது (ஓசே 11:8; எரே 31:20; எசா 63:15). அளவற்றது இவ்வாஞ்சை (எசா 54:7; பாரூ 2:27; சீரா 51:3). குறையா நிறைவளமுடையது (சங் 77:10; நெகே 9:9; 27:31). அஃது ஒவ்வொரு காலையும் புதுப்பிக்கப்படுகிறது (புல 3:22); என்றுமே மாறாத அசைக்க முடியாத பிரமாணிக்கமுடையது (சங் 25:6; லூக் 1:50); எல்லோருக்கும் எந்த விதிவிலக்குமின்றிக் காட்டப்படுவது (சீரா 18:12; சங் 145:9). முக்கியமாக ஏழைகட்கும், அனாதைகட்கும் சிறப்பாகக் காட்டப்படும் வாஞ்சை இது (ஓசே 14:4). இஃது இறப்புக்குப்பின் பிரமாணிக்கமுள்ள விசுவாசிகளை ஒன்றிணைக்கக் கூடியது (2 மக் 7:29).

இந்த அன்பை எதனாலும் கட்டுப்படுத்த முடியாது. எனவே, அஃது எல்லா வகையான ஆசீர்களைப் பொழிவதிலும் (எசா 63:7), வாழ்வெனும் கொடையைத் தருவதிலும் (சங் 119:77.156), மீட்பையும் விடுதலையையும் தருவதிலும் (உப 30:3; செக் 1:16), ஒரு சில போதனைகளைத் தருகின்ற சோதனைகளிலும் கூட (புல 3:32; ஞான 11:9) தன்னை வெளிப்படுத்துகிறது. எப்பொழுதும் தவறு செய்தவர்களை மன்னிக்கத் தயாராக இருக்கும் ஆண்டவரின் தன்மை அவரின் அளவற்ற வாஞ்சையையும் இரக்கத்தையும் காட்டுகிறது (எசா 55:7; தானி 9:9). எனவே, ஒவ்வொரு பாவியும் அவரது அளவற்ற நன்மைத்தனத்தில் நம்பிக்கை வைத்து, காத்திருக்கும் தந்தையிடம் திரும்பி வரவேண்டும் (சங் 78:8; லூக் 15:20). இந்த நம்பிக்கை மீண்டும் பாவம் செய்வதற்குப் பயன்படுத்தப்படக் கூடாது (சீரா 5:4-7).

'வாஞ்சையும், இரக்கமும் உள்ள கடவுள்' என்ற பெயரை அவரே முதன் முதலில் தனக்குரிய பட்டமாக உரிமை கொண்டாடுகிறார். இப்பட்டத்தையே யாத்திரைநூல் (34:6), உபாகம நூல் (4:31), சங்கீதங்கள் (86:15; 103:8; 111:4; 145:8), இறைவாக்கினர் நூல்கள் (யோவே 2:13; யோனா 4:2), வரலாற்று நூல்கள் (2 நாள் 30:9; நெகே 17:31), ஞானநூல்கள் (சீரா 2:11; ஞான 15:1) ஆகியவை அவருக்கு அளித்தன. வாஞ்சை என்ற சொல் ஒரே ஒரு தரம் மனிதனைப் பற்றிக் கூறப்படுகிறது (சங் 112:4). மற்ற இடங்களிலும் இது கடவுளைக் குறிக்கவே பயன்படுத்தப்படுகிறது (காண்க. சங் 78:38; 106:5). எனவே, ஒவ்வொரு விசுவாசியும் தனது ஆண்டவரின் மேல், ஒரு குழந்தை தாயின் மேல் வைக்கும் முழுமையான நம்பிக்கையை வைக்கலாம் (சங் 131). இதுவே இயேசு காட்டிய மகனுக்குரிய வாஞ்சை. அவர் வழியாகவும் அவரிலும் கடவுளின் வாஞ்சை நிறைவாக வெளிப்படுகிறது.

***2. கிறிஸ்துவிலும் கிறிஸ்து வழியாகவும் வெளிப்படும் கடவுளின் வாஞ்சை:*** இயேசுவில் கடவுளின் நன்மைத்தனம் முழுவதும் வெளிப்பட்டது (*லூக் 1:78; தீத் 3:4-7*). அவரில் இரக்கத்தின் ஊற்றாம் தந்தை (*2 கொரி 1:3; உரோ 12:1*) தன்னை வெளிப்படுத்தியுள்ளார். அவரது வாஞ்சை எவ்வளவு பெரியது என்பதை இயேசுவின் உயிர்ப்பில் காட்டுகிறார். அது நமக்கும் ஓர் உத்தரவாதமாக அமைவதைப் பார்க்கிறோம் (*எபே 2:4-6; 1 பேதுரு 1:3*).

இயேசு மட்டும் இறைவாஞ்சையைப் பெற்றுக்கொள்ளவில்லை. அதைத் தன்னுடையதாக மாற்றி அதை நமக்கும் தருகிறார். இறைவன் தம் இழிந்த மந்தையை எதிர்கொள்வது போல் (*எசே 34:16*), இயேசு, மக்கள் ஆயனில்லாத ஆடுகள் போல் தவிப்பதைக் கண்டு, அவர்கள்மீது மனமிரங்கி நற்செய்தியையும் (*மாற் 6:34*), உணவையும் (*8:2*) கொடுக்கிறார். தொழுநோயாளர்கள் (*1:14*), குருடர்கள் (*மத் 20:34*), பிள்ளையை இழந்த தாய்கள் அல்லது சகோதரிகள் (*லூக் 7:13; யோவா 11:3*) மற்றும் திக்கற்றோரையும் காணும்போது அவர்கள்மீது மனமிரங்கி வேதனைக் குரல் கொடுக்கிறார். கடவுளின் வாஞ்சையைப் போல இதுவும் சோர்வுறாத ஒன்றாக இருந்ததால் பாவத்தின்மீது வெற்றி கொண்டு, மிகக்கொடிய பாவியையும் அவரால் மன்னிக்க முடிந்தது (*லூக் 23:34*).

***3. கிறிஸ்தவர்கள் வாழ்வில் வெளிப்படவேண்டிய கடவுளின் வாஞ்சை:*** கடவுள் தன் வாஞ்சை மனிதரின் இதயத்தை ஊடுருவிச் செல்ல வேண்டும் என விரும்புகிறார் (*செக் 7:9; சங் 112:1.4; சீரா 28:1-7*). இதை மனிதர்கள் தாங்களாகவே பெற்றுக்கொள்ள முடியாததால், இயேசுவால் நிறைவேற்றப்பட்ட புதிய உடன்படிக்கையின் திருமணப்பரிசாக (*ஓசே 2:21*) இறைவன் மனிதர்களுக்கு அதைத் தருகிறார் (*செக் 12:10*). மனிதனான இறைமகனுடைய வாஞ்சையாக ஆகியபின், கடவுளின் வாஞ்சை, இயேசுவில் இறைவனுடைய பிள்ளைகளாக மீண்டும் பிறக்கும் மனிதர்களின் வாஞ்சையாகிறது.

''கிறிஸ்து இயேசுவுக்குரிய அதே பரிவுள்ளத்தை''த் தனதாக்கிக் கொள்ளும் ஒரே ஏக்கத்தைப் பவுல் கொண்டிருக்கிறார். ஆகவே, கடவுளுடையவும் அவருடைய மகனுடையவும் ''பரிவையும் இரக்கத்தையும்'' அணிந்து கொள்ளும்படி கிறிஸ்தவர்களை அவர் தூண்டுகிறார் (*கொலோ 3:12; எபே 4:32; காண்க. 1 பேதுரு 3:8*). நற்செய்தியாளர்களும் இதே முறையில் போதிக்கின்றனர். தன் சகோதரனுக்கு எதிராக, தன் இதயத்தை மூடிக்கொள்பவன் தந்தையின் அன்பிலிருந்து தன்னையே முறித்துக் கொள்கிறான் (*1 யோவா 3:17*). தன்னைப்போல் பிறருக்கு மன்னிப்பு அளிக்க மறுப்பவன் தனக்கே இறைவனது மன்னிப்பை வேண்டாம் என்று மறுக்கிறான் (*மத் 18:23-25*). இறைவனின் பிள்ளைகள் யாவரும், தந்தையின் இதயத்தைப் போன்ற இதயம் கொண்டு, உணர்ச்சி வசப்படுதல் மட்டுமின்றி செயலாற்றும் (*லூக் 10:33*) நல்ல சமாரியனின் எடுத்துக்காட்டை மாதிரியாகக் கொண்டு, எவ்வித விலக்குமின்றி தங்கள் அயலார் அனைவர் மீதும் இரக்கத்தால் தூண்டப்பட்டு (*லூக் 15:20.31*), தந்தையின் மாதிரியைப் பின்பற்ற வேண்டும் (*6:36*). இவ்வாறு, அவர்கள் இறைவாஞ்சையின் இயக்கத்தில் நுழைகின்றனர். இது தந்தையிடமிருந்து இயேசு வழியாக அன்பின் ஆவியில் (*பிலி 2:1*) அவர்களுக்குக் கிடைக்கிறது. இது பாவத்தையும் சாவையும் கடந்து, முடிவில்லாத மகிழ்ச்சியை நோக்கி அவர்களை இட்டுச் செல்கிறது.

**வாடைக்கொண்டல்** (NORTHEASTER, THE)

இது கிழக்கு-வடகிழக்கிலிருந்து வீசிய புயல் காற்றாகும். இத்தகைய புயல்காற்று ஒன்றில், பவுலையும் பிற கைதிகளையும் ஏற்றிச் சென்ற கப்பல் அகப்பட்டுக் கொண்டதால், இக்காற்றால் கிரேத்தாத் தீவின் தென்பக்கத்தில் கப்பல் அடித்துக் கொண்டு செல்லப்பட்டது (*அ.ப. 27:14-15*).

**வாதுமை** *(ALMONO - எழுப்புபவர்)*

சனவரி கடைசியில் அல்லது பிப்ரவரி தொடக்கத்தில் இம்மரம் முதன்முதல் மலர்வதிலிருந்து இப்பெயர் இதற்கு வருகிறது. இது புதிய உயிரின் அடையாளமாகும். 5 மீட்டர் உயரத்திற்கு மிகப்பெரியதாக வளரும் இம்மரம், சிறிது இளஞ்சிவப்புக் கொண்ட வெண்பூக்களைத் தருகிறது. எரே *1:11-12*-இல் ''வாதுமை (விழிப்பாயிருக்கும் மரம்) மரக்கிளையைக் காண்கிறேன்'' என்று எரேமியா கூற, ஆண்டவர் ''நீ கண்டது சரியே. என் வாக்கைச் செயலாக்க நானும் விழிப்பாய் இருக்கிறேன்'' என்று கூறுகிறார். **'வாதுமை மரம் பூத்து'** என்பது திருவுரை *12:5*-இல் முதுமையை உவமையாகக் குறிக்கிறது. ஆரோனின் கோல் தளிர்த்துப் பூத்து வாதுமைப் பழங்களைத் தாங்கியிருந்ததால் அவரது குருத்துவம் உறுதி செய்யப்பட்டது *(எண் 17:23)*. மேற்காசிய நாடுகளில் 'வாதுமைப் பருப்பு' உயர்ந்த பொருளாகவும், மென்மையானதாகவும் கருதப்பட்டது. எனவேதான் யாக்கோபு, யோசேப்புக்குக் காணிக்கையாக மற்ற உயர்ந்த பொருட்களுடன் இதனையும் அனுப்பி வைத்தார் *(ஆதி 43:11)*. பதான் - ஆராமில் ஆலயத்தில் விளக்குத் தண்டின் கிண்ணங்கள் வாதுமை வடிவில் செய்யப்பட்டிருந்தன *(யாத் 25:33-34; 37:19-20)*. இம்மரம் சிறிய ஆசியா, சீரியா, மெசபொத்தாமியா ஆகிய நாடுகளில் காணப்படுகிறது. பாலஸ்தீனத்தில் காட்டு மரமாக வளர்ந்தது.

**வாயில்** *(GATE, DOOR)*

I. வாயில்கள் திறந்திருக்கும்போது மக்கள் போவதும் வருவதுமாக சுதந்தரமான போக்குவரத்து அமைகிறது. எனவே, திறந்த வாயில்கள் வரவேற்பை உணர்த்துகின்றன *(யோபு 31:32)*; அத்துடன் வாய்ப்புத் தருவதாகவும் அமைகின்றன *(1 கொரி 16:19)*. அவை மூடிவைக்கப்படும்போது மக்கள் உள்ளே போய் வருவதைத் தடுக்கிறது; எனவே பாதுகாப்பாகிறது *(யோவா 20:19)* அல்லது உள்ளே நுழைவதை மறுப்பதின் அடையாளமாகிறது *(மத் 25:10)*. பிரித்து வகைப்படுத்தும் கருத்தையும் காட்டுகிறது.

II. **பழைய ஏற்பாடு:**

***1. நகரத்தின் வாயில்:*** நகரத்தின் அரண் சூழ்ந்த வாயில் அதில் வசிப்பவர்களை எதிரியின் தாக்குதலிலிருந்து காக்கிறது; நண்பர்களை உள்ளே அனுமதிக்கிறது. ''நகர வாயிலுக்குள் இருக்கும் அன்னியரும்'' *(யாத் 20:10)* இஸ்ராயேலுக்குரிய சலுகைகளைப் பெறுகிறார்கள். இவ்வாறு வாயில்கள் நகரத்தில் உள்ளவர்கள் பாதுகாப்பாக ஒரு சமூகத்தைக் கட்டியெழுப்பத் துணைபுரிகிறது. நகரத்தின் வாழ்க்கை நகர வாயிலை மையமாகக் கொண்டிருக்கிறது. இங்குதான் முக்கியமான கூட்டங்கள் நடைபெறுகின்றன *(யோபு 29:7; சங் 63:19)*; வியாபாரச் செயல்கள் பேசி முடிவு செய்யப்படுகின்றன *(ஆதி 23:11-18; ரூத் 4:1-11)*; அரசியல் தந்திரங்கள் திட்டமிடப்படுகின்றன *(2 சாமு 15:1-6)*. போர்க்காலங்களில் இங்கிருந்துதான் படைகள் பிரிந்து சென்றன *(1 அர 22:10)*. இவை எல்லாவற்றையும் விட முக்கியமான **நீதித்தீர்ப்புகள்** இங்குதான் கொடுக்கப்பட்டன *(உப 21:19; 22:15; 25:7; ஆமோ 5:10.15; யோபு 5:4; 31:21; பழ 22:22; 24:7)*. எனவே வாயில், நீதிக்கும் பாதுகாப்புக்கும் அடையாளமாய் நிற்கிறது *(எசா 28:6)*. எனவே, ஒருவகையில் வாயில்கள் நகரத்தை உணர்த்துவனவாகவும், நகரத்தையே குறிப்பனவாகவும் *(உப 28:52.57)* நகரத்தின் பலத்தையும் கூட உணர்த்துவனவாகவும் உள்ளன. வாயிலைப் பிடிப்பது என்பது நகரத்தையே பிடிப்பதாகவும் *(ஆதி 22:17)*, சிறைப்பட்டவர்களை விடுவிப்பதாகவும் *(சங் 107:16; எசா 45:2)*, வாயில் கதவுகளின் சாவிகளைப் பெற்றுக்கொள்வது அதிகாரத்தைப் பெற்றுக் கொள்வதாகவும் பொருள்படும் *(எசா 22:22)*. ஒப்புமையால் செயோல் அல்லது மரணத்தின் வாயில்களைப் பற்றிப் பேசலாம். இஃது எல்லா மனிதரும் செல்லும் மறைபொருளான உறைவிடத்தைக் குறிக்கிறது *(சங் 107:18; எசா 38:10)*. இதன் வாயிலை இறைவன் மட்டுமே அறிவார் *(யோபு 38:17)*. அதை வெல்லும் ஆற்றல் அவரிடம் மட்டுமே உள்ளது *(சங் 9:14; ஞான 16:13; காண்க. மத் 16:18)*.

எருசலேமின் வாயில்களை ஆண்டவரே பலப்படுத்தியுள்ளார். ஏனெனில், அதனை அவர் அதிகம் அன்பு செய்கிறார் (சங் 24:7தொ; 87; 147:13). இந்த வாயில்களைக் கடந்து செல்பவர்கள் அமைதியையும் ஒற்றுமை உணர்வையும் பெறுகின்றனர் (சங் 122). உடைத்து நுழைய முடியாத அளவுக்கு மிகவும் வலுவான இந்த வாயில்கள் எருசலேம் நகருக்குள் வாழ்பவர்கட்குச் சிறப்பான பாதுகாப்புத் தருகின்றன; ஆனால், இங்கு நீதி எப்பொழுதும் சரியாக வழங்கப்பட்டது என்று கூற முடியாது (எசா 2:21தொ; 29:21). ஆகவே இறைவாக்கினர்கள், எல்லா நாடுகளையும் ஏற்றுக்கொண்டு நீதியிலும், அமைதியிலும் உருவாக்கப்படும் புதிய எருசலேமைக் கனவு காண்கின்றனர் (எசா 26:1-5; 60:11; எசே 48:30தொ; செக் 2:8தொ).

**2. விண்ணகத்தின் வாயில்:** யாவே இறைவன் மழையை, மன்னாவை (சங் 78:23), ஆசீர்வாதங்களை மண்மீது பொழிவதற்கு விண்ணகத்தின் கதவுகளைத் திறந்து விடுகிறார் (மலா 3:10). ஆனால், விண்ணகத்தின் வாயில் அடைக்கப்பட்ட பிறகு மனிதன் கடவுளோடு நெருங்கிய முறையில் உறவு கொள்ள முடியவில்லை. வழிபாடுதான் விண்ணக, மண்ணக உலகுகளை உறவில் ஒன்றிணையச் செய்கிறது. இவ்வாறு யாக்கோபு 'பெத்தேலில்' விண்ணக வாயிலைக் கண்டார் (ஆதி 28:17). ஆலய வாயிலை நெருங்கும் இஸ்ராயேலன் யாவே இறைவனைச் சந்திக்க விரும்புகிறான் (சங் 100:4). ஆனால், அங்கு நுழைவதற்கான நிபந்தனைகளைக் குரு அவனுக்கு நினைவூட்டுகிறார்; உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கமாய் இருத்தலும், நீதியும் ஆண்டவரின் இல்லத்தில் நுழைவதற்கு அவசியமானவை என்கிறார் (சங் 15:24; எசா 33:15தொ; காண்க. மீக் 6:6-8; செப் 8:16தொ). ''ஆண்டவரது வாயில் இதுவே; இது வழியாய் நீதிமான்களே நுழைவர்'' (சங் 118:19). எரேமியா இறைவாக்கினரோ இதே வாயிலில் நின்று கொண்டு மேலே கூறிய நிபந்தனைகள் எதுவும் நிறைவேற்றப்படவில்லை; எனவே, கடவுளைச் சந்திப்பதென்பதே ஒரு மாயை, ஆலயம் நிராகரிக்கப்பட்டுவிட்டது என்றறிவிக்கிறார் (எரே 7; காண்க. எசே 8-11). எருசலேம் சிறப்பாக இருப்பதற்குரிய தகுதியை அஃது இழந்துவிட்டது. வெளிநாட்டவர்களை நுழையவிடாமல் அதன் வாயில்களை மூடிவைப்பதற்குப் பதிலாக அதன் மத்தியில் இருக்கும் தீமைகளை அகற்றுவதால் மட்டுமே நகரம் தூய்மையடைய முடியும். ஆலயம் அழிக்கப்படும் போது தாங்கள் விண்ணகம் ஏறிச் செல்ல முடியாது என்று உணர்ந்த இஸ்ராயேலர் கடவுளே நேரடியாக இறங்கி வருமாறு வேண்டுகின்றனர் (எசா 63:19). அவரே ஆடுகளை வாயில் வழியாக அழைத்துச் செல்ல வேண்டுமென்று வேண்டுகின்றனர் (மீக் 2:12 தொ; காண்க. யோவா 10:4).

**III. புதிய ஏற்பாடு:** அவர்களது செபத்திற்கு இயேசு செவிமடுக்கிறார். அவர் தனது திருமுழுக்கின்போது, விண்ணகம் திறக்கப்பட்டது; அவரே, மண்ணகத்திற்கு இறங்கி வந்த விண்ணகத்தின் வாயிலாகிறார் (யோவா 1:51;காண்க. ஆதி 28:17). அவர் விண்ணக ஆசீர்கள் இலவசமாக வழங்கப்படும் மேய்ச்சல் நிலங்களுக்கு அழைத்துச் செல்லும் வாயிலாகவும் (யோவா 10:9), ஒரே இடையாளராகவும் இருக்கிறார். அவர் வழியாகவே தந்தை மக்களோடு பேசுகிறார். அவர் வழியாகவே மனிதர்கள் கடவுளை நெருங்கிச் செல்ல முடியும் (எபே 2:18; எபி 10:19). ஆனால், அதே நேரத்தில் தாவீதின் திறவுகோல்களைத் தமது கையில் கொண்டு (திருவெளி 3:7), இறையரசில் நுழைவதற்குச் சில நிபந்தனைகளை விதிக்கிறார். விண்ணகத்தின் திறவு கோல்களைப் பேதுருவிடம் ஒப்படைக்கிறார் (மத் 16:19). வாழ்வில் நுழைதல் அல்லது மீட்பைப் பெறுதல் ஒரு நகரத்தில் நுழைதல் அல்லது விருந்து மண்டபத்தில் நுழைதலுக்கு ஒப்பிடப்படுகிறது. அதற்குக் குறுகிய வாயில் வழியே செல்ல வேண்டும். இது மனமாற்றத்தைக் குறிக்கிறது (மத் 7:13தொ;

லூக் 13:24). இதற்கு விசுவாசமும் மிகமிக முக்கியம் (அ.ப. 14:27; எபே 3:12). விழிப்போடு இல்லாதவர்கள் கதவு மூடியிருப்பதையே காண்பார்கள் (மத் 25:10; லூக் 13:25). இயேசு சாவின், நரகத்தின் திறவுகோல்களை வைத்திருக்கிறார் (திருவெளி 1:18). ஏனெனில், அவர் தீமையை வெற்றி கொண்டு தீமையின் சக்திகளை விட், தனது திருச்சபையைச் சக்தி மிக்கதாக மாற்றியுள்ளார் (மத் 16:18).

இறுதிநாளில் நகரமும், விண்ணகமும் ஒன்றாகிறது. திருவெளிப்பாடு, எசாயா, எசேக்கியேல், செக்கரியா ஆகிய இறைவாக்கினர்களின் முன்னறிவிப்பு நிறைவு பெற்றதைக் காட்டுகிறது. விண்ணக எருசலேம் பன்னிரண்டு வாயில்களைக் கொண்டுள்ளது. அஃது எப்பொழுதும் திறந்தே இருக்கும். ஆனால், தீமை அவற்றில் நுழைய முடியாது. அமைதியும், நீதியும் அங்கு நிலவும். கடவுளுக்கும் மனிதருக்குமிடையே முழுமையான நல்லுறவு அங்கு நிலவும் (திருவெளி 21:12-27; 22:14-15).

**வாயில்காப்போன்** (DOOR KEEPER)

வாயிலைக் காப்பவன். உடன்படிக்கைப் பெட்டகத்திற்குத் தனிப்பட்ட வாயிற்காப்போர்கள் இருந்தார்கள் (1 நாள் 15:23-24). இவர்களே கோவிலின் நுழைவாயிலையும் கவனித்துக் கொண்டார்கள் (2 அர 22:4); மக்களிடமிருந்து பணத்தையும் வசூலித்தார்கள். பாரசீக மன்னர்களின் அரண்மனையில் அண்ணகர்கள் வாயில் காப்போர்களாக இருந்தனர் (எஸ்த 2:21). சில சமயங்களில் பெண்கள் வாயிலைக் காத்தார்கள் (2 சாமு 4:6; யோவா 18:16-17). கடவுளின் வீட்டில் ஊழியனாயிருப்பவனுக்கு இந்தச் சிறுமையான வேலையும் மிகவும் மகிழ்ச்சியை அளித்தது (சங் 84:10).

**வாயில் நிலை** (DOOR POST)

இச்சொல் கெட்டியான உறுதியான கேதுரு மரங்களைக் கொண்டு செய்யப்பட்ட வாயில் நிலைகளைக் குறிக்கிறது (எசா 1:29; 57:5). இதன் வேலைப்பாடுகளைப் பற்றிய குறிப்பு எசேக்கியேலின் காட்சியில் கண்ட தேவாலயத்தின் குறிப்பில் அமைந்துள்ளது (எசே 40:9-41:3). எசே 40:9-இல் கூறப்பட்டுள்ளது சற்றே குழப்பத்திற்குரியது. இதன் மாறுபாடான அளவுகள் எதைக் குறிக்கின்றன என்றால் அந்தத் தேவாலயத்தில் ஒரே நிலை இல்லை; மாறாக, சேர்ந்த பல நிலைகள் இருந்தன என்பது தெளிவாகிறது.

எசா 6:4-இல் 'நிலைகள்' என்று பன்மையில் கூறப்பட்டுள்ளது. இஃது அதன் அடித்தளத்தின் பலத்தைக் குறிப்பதாக உள்ளது. சில இடங்களில் இது பக்க நிலைகள் எனவும் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால், பொதுவாக வாயில்நிலை என்றே கூறப்பட்டுள்ளது.

யூதர்களின் மதக் கொள்கையில் வாயில் நிலை என்பது பெரும் பங்கு வகிக்கிறது. யூதர்களின் பாஸ்காத் திருநாளுக்கு முன் தினம் அவர்களின் வாயில் நிலைகளில் இரத்தம் பூசப்பட்டது (யாத் 12:7-22-23). தன் தலைவனோடு இருக்க விரும்பும் அடிமையின் காதுகளில் துளை இடப்படும் (யாத் 21:6). இது நிலைகளுக்கு அருகே நடைபெறும். ஒவ்வொரு வீட்டின் வாயில் நிலையிலும் எழுதப்பட வேண்டும் (உப 6:9; 11:20). தொன்மையான யூதர்களுக்குப் புனித வார்த்தைகள் அடங்கிய சுருள் நிலையோடு பொருத்தப்பட வேண்டும் (1 அர 7:5).

**வாயைக்கட்டுதல்** (MUZZLE)

உப 25:4-இன்படி, ''போரடிக்கும் மாட்டின் வாயைக் கட்டலாகாது''. ''வேலையாள் தன் ஊதியத்துக்கு உரியவனே'' என்பதை எடுத்துக்காட்ட இத்தடையைப் பவுல் இருமுறை எடுத்துக் கூறுகிறார் (1 கொரி 9:9; 1 திமொ 5:18). ராசி போன்ற யூத விளக்கவுரையாளர்கள் இத்தடை உணவுப்பொருள் உண்டாக்குவதற்குப் பயன்படும் எந்த விலங்குகளுக்கும் பொருந்தும் என்பர். இத்தடையின் விளைவாக, இஸ்ராயேலில் மாடு உயர்வாகக் கருதப்பட்டது. அது வலிமையின், வளமையின் அடையாளமாகும். பிற்காலத் தலைமுறைகள் எவ்வளவுதான் பதிதத்தில் மூழ்கி

யிருந்தாலும், எரொபவாம் ஆட்சியிலும், அதற்குப் பின்னும், பொற்கன்று யாவே வழிபாட்டின் அடையாளமாக இருந்தது (1 அர 12:28தொ; 2 அர 10:29; 2 நாள் 13:8). அதுபோலவே, பாலைவனத்தில் அவர்களின் முன்னோருக்கும் பொற்கன்று அவ்வாறே இருந்தது (யாத் 32:1தொ). இதைப் பொருத்தமட்டும், இஸ்ராயேலில் பலிவழிபாட்டில் பரவலாக மாடு பயன்பட்டது என்ற உண்மை (எண் 7:87-88; 2 சாமு 24:22; 2 நாள் 5:6; 7:5) ஓரளவு பொருளுள்ளதாகும்.

### வாய் (MOUTH)

இச்சொல் பரவலாக, பல பொருளில் பயன்பட்டுள்ளது. உணவை உட்கொள்ளவும், நீரைப் பருகவும் உதவும் உடலுறுப்பாக வாய் இருக்கின்றது (நீதி 7:6; 1 சாமு 14:26-27). உருவகத்தில் பொருட்களின் சுவை அறியும் உறுப்பாக உள்ளது (யோபு 20:12; சங் 119:103); நிலம் தன் வாயைத் திறந்து விழுங்கி விடுகிறது (ஆதி 4:11; எண் 16:30. 32); பாதாளக் குழி அளவு கடந்து தன் வாயைத் திறந்துள்ளது (எசா 5:14; சங் 69:15).

வாய் ஒரு வெளி உறுப்பு (2 அர 4:34; பழ 30:20). இது முத்தமிடுவதற்கும் (1 அர 19:18; யோபு 31:27; உ.ச. 1:2), கேலிப்பரிகாசம் செய்வதற்கும் (யோபு 16:10; சங் 35:21; எசா 57:4) பயன்படுகின்றது.

வாய் பேசுவதற்கும் (ஆதி 45:12; உப 32:1; 2 சாமு 1:16; மத் 5:2; 12:34; 13:35), சிரிப்பதற்கும் (யோபு 8:21; சங் 126:2) பயன்படுகிறது. இறைவன் திருவாய் மலர்ந்து அருளுகிறார் (எசா 1:20; 40:5; எரே 9:12). பேசும் விலங்கினங்கள் வாய் (ஆதி 8:11; எண் 22:28; எசா 10:14; திருவெளி 12:16; 13:2). விரோதிகளின் பேச்சு கொடிய விலங்குகளின் வாய்க்கு ஒப்பிடப்படுகிறது (சங் 22:21). இறைவனின் வாயினின்று தீ புறப்பட்டது (2 சாமு 22:9; சங் 18:18).

கிணற்றின் வாய் (ஆதி 29:2-3.8.10); குகையின் வாய் (யோசு 10:18.22.27); உயர்ந்த பாறைகளின் இடுக்குகள் பொந்துகள் (வாய்) (எரே 48:28); சேயோலின் வாய் (சங் 141:7); கோணிப்பையின் வாய் (ஆதி 42:27-28; 44:1-2.8).

### வாய்மொழி மரபு, வாய்மொழிப் பாரம்பரியம் (ORAL TRADITION)

வாய்மொழியால் மட்டும் கூறப்படும் எந்தவொரு பொருளும், அது பாதுகாக்கப்படும் முறையும் இத்தலைப்பால் குறிக்கப்படும். இது பாதுகாக்கப்படுங்காலத்தில் இந்தப் பொருள்கள் நிலையான வடிவம் கொண்டிருப்பதில்லை. இவை மறு விளக்கம் பெறலாம். விவிலிய ஆய்வில் இச்சொல் கதைகள், வெளிப்பாடுகள், வரலாறுகள், இறைவாக்குகள், பிற்காலத்தில் எழுதப்பட்ட மறைநூலின் பகுதியாகிய பிறவற்றையும் குறிக்கிறது.

விவிலியத்தின் பெரும்பகுதி முதலில் வாய்மொழி மரபாக இருந்தது என்பதில் ஐயம் இருக்க முடியாது. இறைவாக்கினர்களின் கூற்றுகளும், எருசலேம் வழிபாட்டின் சங்கீதங்களும், இயேசுவின் உவமைகளும் போதகங்களும் முதலில் வாய்மொழியாகவே கொடுக்கப்பட்டன. ஒரு பொருள் வாய்மொழிப் பாரம்பரியத்திலிருந்து,, எழுத்து வடிவம் எடுத்ததற்கு இடையிலான காலம் பற்றி அறிஞர்களிடையே பெரும் தர்க்கம் உண்டு.

ஒருகாலத்தில் அறிஞர்கள் உறுதியான நிறுவப்பட்ட குழுக்களாகப் பிரிந்திருந்தனர். முற்போக்கான அறிஞர்கள் பெரும்பகுதியான பொருள்கள் மிகவும் பிற்பட்ட காலத்தில் (நாடு கடத்தல் அல்லது அதற்கும் பிற்பட்ட காலத்தில்தான் பழைய ஏற்பாடு) எழுதப்பட்டன என்றும், பிற்காலத்தைச் சேர்ந்த அக்கறைகளைத்தான் அவை முதன்மையாகப் பிரதிபலித்தன என்றும் கருதினர். பழமை தழுவிய அறிஞர்கள் இப்பொருள்கள் எடுத்துக்கூறப்படும் காலத்திற்கு நெருங்கிய முற்காலத்திலேயே எழுதப்பட்டன என்றும், முற்

காலத்து அக்கறைகளையே முதன்மையாகப் பிரதிபலித்தன என்றும் கருதினர். நவீன ஆய்வுகள் இந்தக் கெடுபிடியான நிலைகளைத் தகர்த்து விட்டன. இரு குழுக்களிடையே உரையாடலைத் தூண்டியுள்ளன.

வாய்மொழிப் பாரம்பரியத்தை ஆய்வு செய்ய, ''பாரம்பரிய ஆய்வு'' என்றழைக்கப்படும் தெளிவான ஆய்வு முறையை அறிஞர்கள் பயன்படுத்துகின்றனர். இந்த அணுகுமுறை முதலில் ஒரு குறிப்பிட்ட வாசகத்தின் வளர்ச்சியின் வரலாற்றைத் தடம் காண்கிறது. ஒவ்வொரு கட்டத்திலும் பாரம்பரியத்தைப் பாதுகாப்பதில் குறிப்பிட்ட ஆட்கள் சிலர் பொறுப்பாய் இருந்திருக்கின்றனர். இவர்களின் அக்கறைகள் அல்லது முன் கருத்துகளை அடையாளம் காண்பது, ஒரு பாரம்பரியம் வடிவம் எடுத்த அல்லது பயன்படுத்தப்பட்ட முறையைப் புரிந்துகொள்ள அறிஞர்களுக்கு உதவுகிறது. இரண்டாவது அணுகுமுறை, ஆய்வுக்குரிய பாரம்பரியத்தை அதையொத்த பிற பாரம்பரியங்களோடு ஒப்பிட்டு வேறுபடுத்துவதாகும். இத்தகைய ஒப்பீடு, பொதுத்தலைப்புகளையும், குறிக்கோள்களையும், ஒன்றையொன்று தழுவிய தன்மையையும் கூட அடையாளம் காண அறிஞர்களுக்கு உதவுகிறது.

வாசகத்திற்குப் பின்னணியாக உள்ள வாய்மொழிப்பாரம்பரியம் பற்றிய ஆய்வு, விவிலிய ஆய்வில் பெரிதும் பயனுள்ளதாக இருந்திருக்கிறது. குறிப்பாக, போதிய இணைவாசகங்கள் கிடைக்கும்போது (எ.கா. சங்கீதங்கள், நற்செய்திகள்) இந்த ஆய்வு மிகவும் பயனளித்தது. இது, சமூகம் (இஸ்ராயேல் அல்லது திருச்சபை) அதன் வரலாற்றில் ஒரு வாசகத்தைப் புரிந்துகொண்ட வேறுபட்ட முறைகளைக் காண விளக்கவுரையாளர்களுக்கு உதவியுள்ளது. இது வாசகத்தை ஆழமாகப் புரிந்துகொள்ளவும் உதவுகிறது.

**வாரங்களின் விழா** *(WEEKS, FEAST OF)*

பெரிய திருவிழாக்கள் இஸ்ராயேலில் கொண்டாடப்பட்டன. இவற்றில் இரண்டாவது வருவது இந்த வாரங்களின் விழா. இது, பாஸ்கு தொடங்கிய சுழலின் முடிவாகக் கொண்டாடப்பட்டது. இஃது எருசலேம் ஆலய அழிவிற்குப் பிறகு சட்டம் கொடுக்கப்பட்டதை நினைவு கூர்தலுக்காகக் கொண்டாடப்பட்டது.

இந்தத் திருவிழாவுக்கு அளிக்கப்பட்ட மற்றப் பெயர்கள்: ''அறுவடை விழா'', ''பெந்தக்கோஸ்தே அல்லது ஐம்பதாம்நாள் விழா'' (தோபி 2:1; 2 மக் 12:32; அ.ப. 2:1; 20:16; 1 கொரி 16:8; காண்க. லேவி 23:16), ''முதற் பலன்களின் நாள்'' (எண் 28:26) என்பன.

இவ்விழா அடிப்படையில் அறுவடை விழா ஆகும். விவிலிய வரலாறு முழுவதும் மூலப்பண்பு பாதுகாக்கப்பட்டு வந்திருக்கின்றது. யாத் 23:16 இதை ''அறுவடை விழா'' என்று அழைக்கின்றது. இதுதான் அதன் மிகப்பழைய பெயராக இருக்கலாம். ''வாரங்களின் விழா'' என்ற சொல் கோதுமையின் மு நற்பலனை ஆண்டவருக்கு அளித்த சிறப்பான விழாவாகக் குறிக்கப்பயன்பட்டாலும் இது வாற் கோதுமை அறுவடை செய்யத்தொடங்கிய நாளிலிருந்து, கடைசி அறுவடை வரையுள்ள ஏறக்குறைய ஏழு வாரங்கள் அடங்கிய முழுக்காலத்தைக் குறித்தது. இந்தக் காலம் புனிதமான காலமாகக் கருதப்பட்டது. இதன் வழியாக, கடவுள் மழையின் ஊற்றாகவும், விவசாயத்திற்கு வளமை அளிப்பவராகவும் உள்ளார் என்பதை இஸ்ராயேல் உணர வேண்டுமென்பதற்காகக் கொண்டாடப்பட்டது (எரே 5:24). இந்தத் திருவிழா முதற்பலன்களின் நாள் என்றும் (எண் 28:26; யாத் 23:16; 34:22; லேவி 23:17), இது தாராளமாக முதற்பலன்களை ஆண்டவருக்கு ஒப்புக்கொடுப்பதற்கு ஏற்றகாலம் என்பதையும் காட்டுகின்றது. கூடார விழாவுடன் இந்தக் காலம் முடிவடைந்தது. கிரேக்க மொழி பேசும் யூதர்களிடையே இந்தத் திருவிழா பெந்தக்கோஸ்தே நாள் என்ற பெயர் பெற்றிருந்தது. இஃது ஏழு வார காலத்தைக் குறிக்கும். மேற்குறிப்பிட்ட சொல் யூதத் திருவிழாவுக்குத் தலைப்பாக அமைந்து, முதற்பலனின்

வரியாகத் தானியங்களின் அறுவடையைச் சுட்டி நிற்கின்றது என்று கருத ஆதாரம் இல்லை. இந்த விழா இரு வடிவும், இருதன்மையுமுடையது என்று யூபிலி நூல் கூறுகிறது. இது வாரங்களையும், முதற் பலன்களையும் சுட்டுகிறது. தால்மூது, இவ்விழாவைத் ''திருக்கூட்டம்'' என்று அழைக்கும்போது, அது திருவிழா நாட்களின் சடங்குகள் மீது அதிகமாகக் கவனத்தைச் செலுத்துகின்றது. இப்படியாக பாஸ்கு விழாவோடும், கூடாரங்கள் விழாவோடும் ஒப்பிடப்படுகிறது (காண்க. லேவி 26:36; உப 16:8). மேலும், தால்மூதில் ''திருக்கூட்டம்'' என்ற சொல் பொதுவாகத் தென்படுகின்றது. இது பாஸ்குக் காலத்தை முடிக்கின்றது. இப்படியாக அறுவடைக் காலத்துடனும் தொடர்புடையதாக உள்ளது. ஆகையினால் இந்தத் திருவிழா, பாஸ்குத் திருவிழாவுடனும் அறுவடைக் காலம் முழுவதுடனும் மேலும் முதற்கனியை அர்ப்பணிக்கும் காலத்துடனும் தொடர்புடையதாகையால் இதை விவசாய விழா என்று கூறலாம். பழைய ஏற்பாடோ, யோசிப்பசோ, பீலோவோ இந்த விழா இஸ்ராயேல் வரலாற்றில் நடந்த நிகழ்ச்சியை ஞாபகப்படுத்துகின்றது என்று கூறவில்லை. யூபிலி நூலும் இதை அறுவடைக் கடைப்பிடிப்பாகக் கருதுகின்றது. மேலும், நோவா காலத்தில் நடந்த, உடன்படிக்கையைப் புதுப்பிக்கும் சடங்கைக் குறித்தது என்றும் சொல்லப்படுகின்றது. இஃது உண்மையாக இருக்கலாம். ஏனெனில், நோவாவின் உடன்படிக்கையோடு கூடிய தொடர்பு, ஆண்டவர் சீனாய் மலைமீது சட்டத்தைக் கொடுத்ததோடு தொடர்பு ஏற்படுத்துவதை எளிதாக்குகிறது.

பாலஸ்தீனத்தில் இந்த விழா ஒரே ஒரு நாளைக்கு மட்டும் நீடித்தது. சிதறிக்கிடந்த யூதர்களிடையே, சரியான நாளில் கொண்டாடாமல் இருப்பதைத் தவிர்க்க, இரண்டு நாட்களுக்கு நீடிக்கப்பட்டது. இஃது ஐம்பதாவது நாளாகக் கருதப்பட்டது. ''ஆண்டவருக்குப் புதுத் தானியப் படையலைச் செலுத்துங்கள்'' (லேவி 23:15). அதாவது, கதிர்க்கட்டை ஒப்புக்கொடுத்த நாள் ஓய்வு நாளுக்கு அடுத்த நாளில் நடந்தது. இந்நாள் பற்றி அறிஞரிடையே பல சர்ச்சைகள் உண்டு.

கைப்பிடியளவு கதிர்கள் எடுத்து ஆண்டவருக்குக் காணிக்கையாக அளிக்கப்பட்டது (லேவி 23:1). இஃது ஒரு சடங்கு முறையாக, முதன்முறையாக விளைந்து நிற்கும் கதிர்களை அரிவாளால் வெட்டிச் சேர்க்கப்பட்டது (உப 16:9). இது நாட்டின், மனித குல முழுவதின் முதற்கனியாகக் கொண்டு வரப்பட்டது (1 கொரி 15:20.23). இஃது ஆண்டவருக்கு நன்கொடையாகக் கொடுக்கப்பட்டது. ஏனெனில், நிலத்தின் சொந்தக்காரரும் விளைச்சலுக்கு முதல் காரணமும் அவரே. இதை ஆண்டவருக்கு அளிக்கும் வரை அறுவடை செய்வது, அல்லது அவற்றை உணவாகக் கொள்வது சட்ட விரோதமானது (லேவி 23:14). குரு இந்தக் காணிக்கையை அளிப்பது மக்களின் பெயரால் அளிக்கப்படும் சமூக வழிபாடாகும். இஃது அறுவடைக்காலத்தைத் தொடங்கி வைத்தது. இக்காணிக்கையின் ஒரு பகுதி பீடத்தின் மீது வைக்கப்படும். மீதியைக் குரு தனக்கு உணவாகப் பயன்படுத்திக் கொள்வார். தகனப்பலியாக ஓர் ஆண் செம்மறி அளிக்கப்பட்டது (லேவி 23:12). ஒரு கைப்பிடி கதிர்க்கட்டுக்களை அளிக்கும் சடங்கானது புளியாத அப்பத் திருவிழாவின் முக்கிய பகுதிகளில் ஒன்றாகும்.

இந்தத் திருவிழாநாள் ஆண்டவருக்கு நன்றி செலுத்தும் நாளாகவும், மகிழ்ச்சியின் நாளாகவும் கருதப்பட்டது. ஏனெனில், அவரது பாதுகாவல் நம்மைப் பாதுகாத்திருக்கின்றது. மேலும், ஏழு வாரங்களுக்கு முன் தொடங்கிய அறுவடையை நல்ல தொரு முடிவுக்குக் கொண்டு வந்துள்ளது. இது சபை கூடும் நாளாகும் (லேவி 23:21). வேலைகள் நிறுத்தப்பட்டன. இஸ்ராயேலின் ஆண் பிரதிநிதியின் வழியாக, பிற்காலத்தில் குறிப்பாக ஆலயக்குருக்கள் வழியாக, இஸ்ராயேல் சமூகம் முழுவதையும் ஆண்டவர் முன்னிலையில் பிரசன்னப் படுத்தியது. மற்றப் பெரிய திருவிழாக்

களில் உள்ளது போலவே சூரிய உதயத்தின் போது அளிக்கப்பட்ட தகனப்பலியுடன் சேர்த்து, வேறு பலிகளும் செலுத்தப் பட்டன (எண் *28:26*தொ). அந்த நாளின் மிகவும் முக்கியமான கட்டம் இரண்டு அப்பங்களைச் சுட்டு அவற்றை ஆண்டவருக்கு முதற்பலனின் ஆரத்திப்பலியாக ஒப்புக்கொடுப்பதாகும் (லேவி 23:17). புதியதாகக் கிடைத்த தானியங்களினால் செய்யப் பட்ட மாவினைப் புளிப்பேற்றிச் செய்யப் பட்ட அப்பங்களை மக்களின் பெயரால் குரு ஆரத்திப்பலியாக ஒப்புக்கொடுத்தார். இது புளிப்பு மாவினால் செய்யப் பட்டதாகையால் இதைப் பலிபீடத்தின் மீது வைக்கவில்லை. மாறாக, குருக்கள் அதை உணவாக உட்கொண்டனர். இரண்டு அப்பங்களுடன் இரண்டு செம்மறி ஆடுகளும் ஆரத்திப் பலியாக ஒப்புக்கொடுக்கப் பட்டன. இஃது ஏழு வாரங்களுக்கு முன் காணிக்கையாக அளிக்கப்பட்ட கதிர்க்கட்டுகளின் மூலம், புதிய தானியங்களை உணவுக்குப் பயன்படுத்தலாம் என்பதையும், மேலும் வழிபாட்டுத் தேவைக்கும் பயன் படுத்தலாம் என்று அனுமதித்ததையும் குறிக்கிறது. இந்தச் சடங்குகளில் பங்கு கொண்ட எல்லா ஆண்களும் பீடத்தைச் சுற்றி அல்லேலூ சங்கீதங்களைப் பாடிக் கொண்டு ''பீட நடனம்'' ஆடினர் (சங் *113-118*). ஏழைகளுடனும், அன்னியர்களுடனும், லேவியர்களுடனும் சேர்ந்து உண்ணும் பொது உணவுடன் விழா முடிவடைந்தது. இவ்வாறு அடிப்படையில் ஒரு விவசாயச் சடங்கு கடவுளை மகிமைப்படுத்தியது; அதே போல் ஆண்டவரின் உடன் படிக்கையால் ஒன்றிணைக்கப்பட்ட சமூகத்தின் சகோதரப் பிணைப்பின் பொறுப்பை எடுத்துக்காட்டியது.

வாரங்களின் விழா முதற்கனி விழா என்றும் அழைக்கப்படுகின்றது (எண் *28:26*). அப்பங்களைப் பலிக்காணிக்கையாக அளித்தபின், தனிநபர்கள் புதியதாகக் கிடைத்த தானியங்களைத் தங்களின் முதற் பலனின் பலியாக ஆண்டவருக்கு அளிக்கலாம். இக்காலம் கூடாரத்திருவிழாவோடு முடிவுக்கு வந்தது. இந்தக் காலத்தில் தனிநபர்கள் தனியாக வந்து காணிக்கைப் பெறும் விழாக்களில் மட்டுமன்று, எக்காலத்திலும் செலுத்தும் நிகழ்ச்சி இப்போது தொடங்கியது. இந்தக் காணிக்கைகள் சடங்கு முறையுடன் பக்தனால் குருவிடம் அளிக்கப்பட்டன; அப்போது அளித்தவர் தனது நன்றியறிதலை உருக்கமாக அறிக்கை செய்தார். இஃது ஆண்டவருடைய வல்ல செயல்களையும், வாக்களிக்கப்பட்ட நாட்டை உரிமைச் சொத்தாக அடைந்ததையும் நினைவு கூர்ந்தது (உப *26:1-11*). வாரங்களின் விழா, கடவுளைத் தானியங்கள் வழங்கும் வள்ளலாக மட்டும் கொண்டாடாமல், முதற்பலனை அளிக்கும் இந்தச் சடங்குகளில், இஸ்ராயேலரின் புனித வரலாற்றின் கண்ணோட்டத்தில் அறுவடையின் பொருளையும் விளக்கினர்.

ஆலயத்தின் அழிவிற்குப்பின், வாரங்களின் விழா படிப்படியாக மாற்றம் அடைந்து ஆண்டவர் அளித்த கொடையான சட்டத்தை ஞாபகப்படுத்தும் விழாவாகக் கடைப்பிடிக்கப்பட்டது. இந்தச் சட்டத்திற்காகவே இவ்விழா மகிழ்ச்சியாகக் கொண்டாடப்பட்டது. திருவிழாவின் மாலைத் தயாரிப்பாக, தோராவின் தொகுதிகளை வாசிக்கும் வழக்குத் தோன்றியது.

ஆனால் முன்பே குறிப்பிட்டதுபோல், வாரங்களின் விழாவைச் சட்டத்தின் திருவெளிப்பாட்டுடன் தொடர்புபடுத்துவது பிற்கால வளர்ச்சியாகும். இந்த விழாவின் போது யாத் 19-ஆம் அதிகாரம் வாசிக்கும் வழக்கம் ஏறக்குறைய கி.பி. 200-இலிருந்து தொடங்கியிருக்க வேண்டும் எனக் கருதப் படுகின்றது. இதற்கு முன்னால் ரூத்து புத்தகத்தை வாசிப்பது வழக்கமாக இருந்து வந்தது. அறுவடைச் சூழ்நிலையிலே, இந்தப் பழக்கம் பின்பற்றப்பட்டது. சட்டத்தின் விழாவாக மாற்றிக் கடைப்பிடிக்கப்பட்டாலும் ரூத்து நூலை வாசிக்கும் வழக்கம் தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. வாரங்களின் விழாவை இயேசுவின் காலத்தில் ''வெளிப்பாட்டின் விழா''வாக விவரிப்பது வரலாற்றுப் பூர்வமாகச் சரியானதன்று.

இதன் விளைவாக, சட்டத்தின் விழாவைப் பெந்தக்கோஸ்தே அகற்றுகிறது அல்லது அதற்குப் பதிலாக இருக்கிறது என்ற அடிப்படையில் அ.ப. 2-அதிகாரத்தையும் பெந்தக்கோஸ்தேயின் பொருளையும் விளக்க முயற்சிப்பது தவறான போக் குடையதாகும். இதற்குப் புதிய ஏற்பாட் டில் எந்த ஆதாரமும் இல்லை எனலாம். வாரங்களின் விழாவைப் பற்றிய புதிய ஏற்பாட்டுக் குறிப்புகள் முதற்பலனான பலி அப்பங்களின் அடையாளப்பொருளையே சுட்டிக் காட்டுகின்றன (உரோ 8:23; 1 கொரி 15:20.23).

**வாரம்** (WEEK)

***1. சமுதாய வாழ்விலும், வழிபாட்டிலும்:*** ஒரு வாரம் என்ற கால அளவு எவ்வாறு உருவானது என்பதைக் கண்டுபிடிப்பது சற்றுக் கடினமானது. ஓய்வு நாளோடு மிக நெருக்கமாகத் தொடர்பு, ஒருவேளை சந்திரச் சூழலோடும் தொடர்பு உடைய இது மத்திய கிழக்கு நாடுகளில் வழக்கமாக நாட்களைக் கணக்கிடும் முறையிலிருந்து மாறுபட்டு நிற்கிறது (ஆதி 8:10; 29:27; நீதி 14:12; 2 அர 3:9). மோசேயின் சட்டத்திற்கு முன்பே வாரம் என்பது பழமையான விவிலியப் பகுதிகளில் சிறப் பாகக் குறிப்பிடப்படுவதைக் காணலாம் (யாத் 20:8தொ; 23:12; 34:21). இவ்வாறு கடவுள் தனது மக்கள் வேலை செய்வதற் கும் ஓய்வெடுப்பதற்குமுரிய ஒழுங்கியல்பை வகுத்துக் கொடுக்கிறார்.

பழைய ஏற்பாட்டுச் சமய, சமூகப் பழக்கவழக்கங்களில் வாரம் முக்கிய பங்கு வகிக்கிறது. புளியாத அப்பத் திருவிழாவும், கூடாரத்திருவிழாவும் ஒரு வாரம் வரை நீடித்தன (உப 16:4; லேவி 23:8.34). பெந்தக்கோஸ்தே எனும் விழா பாஸ்கா முடிந்த ஏழு வாரங்கள் கழித்து வருகிறது (யாத் 34:22; லேவி 23:15). நாடு கடத்து தலுக்குப் பிறகு குருக்களும் லேவியர்களும் வாரம்வாரம் மாற்றி வழிபாட்டுச் சடங்கு களை நிறைவேற்றும் பொறுப்பை ஏற்று நடத்தினர். அதில் பயன்பட்ட அதிகாரபூர்வ மான நாட்காட்டியைக் கிறிஸ்தவர்களும் ஏற்றுப் பாதுகாத்தனர். இஃதோடு ஒரு பழங்காலக் குருத்துவ நாட்காட்டி 364 நாள்களும், 52 வாரங்களும் அடங்கிய சூரிய ஆண்டை இணக்குவித்தது.

ஆண்டுகளின் ஒவ்வொரு வாரமும் ஓய்வு ஆண்டோடு முடிந்தது. அவ்வாண்டில் அடிமைகளுக்கு விடுதலை அளிப்பதும் கடன் பெற்றவர்களை விட்டுவிடுவதும், நிலத்தைத் தரிசாக விடுவதும் கட்டாயமா கும் (யாத் 21:2; 23:10தொ; உப 15:1தொ; லேவி 25:3தொ). ஆண்டுகளின் ஏழு வாரங் களின் முடிவில் யூபிலி ஆண்டு, விடுதலை ஆண்டாகக் கொண்டாடப்பட்டது (லேவி 25:8). எழுபது வாரங்கள் பற்றிய இறை வாக்கு (தானி 9:4) இஸ்ராயேல் முழுமை யாக விடுதலை பெறும் என்று அறிவிக் கிறது. இது மரபுமுறை எண்ணான பத்து யூபிலிக் காலத்தை உள்ளடக்குகிறது. ஆனால், எரேமியாவின் வாசகம் (எரே 25:11தொ) பத்து ஓய்வுகாலங்களின் முடி வில் விடுதலை கிடைக்கும் என்று சுட்டுகிறது.

***2. இறையியல் முக்கியத்துவம்:*** குருக்கள் பாரம்பரிய இறையியலின்படி மனிதனின் செயல்பாட்டை ஒழுங்குபடுத்தும் வாரம் கடவுளின் படைப்புச் செயலைப் பிரதி பலிக்கிறது (ஆதி 1:1-2:3; யாத் 20:9; 31:17). எனவே, ஒரு வாரம் என்ற சட்ட ஒழுங்கு அகில உலகிற்கும் பொருந்துமாறு கடவுள் படைத்ததாகும்.

புதிய ஏற்பாட்டில் வாரம், ஒரு புதிய சமயமுக்கியத்துவம் பெறுகிறது. இதி லிருந்து ஆண்டவருடைய நாளாகிய ஞாயிறிலிருந்து வாரம் தொடங்குகிறது. இஃது அவரது வெற்றியின் வாராந்தரக் கொண்டாட்டமாகும். இவ்வாறு கிறிஸ் தவர்கள் செய்யும் வேலைகள் அனைத்துக் காலங்களையும் ஆளும் மீட்பராகிய கிறிஸ்துவின் செல்வாக்கில் நடைபெறு கின்றன. அஃது எட்டாவது நாளை நோக்கி இயங்குகிறது. இது வாரங்களின் சுழலுக்கு அப்பால், பெரும் இறை ஓய்வுக்குள் இறைமக்களை அறிமுகப்படுத்துகிறது (எபி

*4:1-11)*. ஞாயிறின் ஓய்வு அதன் வருகையை ஏற்கெனவே அறிவிக்கிறது.

**வாரிசு, உரிமையாளர்** *(HEIR)*

ஒரு குறிப்பிட்ட சொத்துக்குச் சொந்தக் காரரான ஒருவரின் மகன் வாரிசு எனப்படு வான். அவனே அந்தச் சொத்தைத் தந்தைக் குப் பின் அடைவான். அந்த வாரிசு குழந்தையாக இருக்கும்போது அடிமைக் குரிய மதிப்பே உண்டு. தன் தந்தையால் குறிக்கப்பட்ட நாள்வரையில் அவன் பாது காப்பாளர்கள், கண்காணிப்பாளர்களின் பொறுப்பில் உள்ளான் *(கலா 4:1-2)*.

கிறிஸ்துவினால் மனிதர் அடிமைக் கோலம் துறந்து புதல்வர்களாக மாறி வாரிசு ஆகின்றனர் *(கலா 4:4-7)*. மகன் எல்லாவற்றிற்கும் உரிமையாளராக நியமிக் கப்பட்டுள்ளார். அதன் விளைவாக அவர் இறைவனின் மகிமையைப் பிரதிபலிக்கி றார் *(எபி 1:2-3)*. விசுவாசத்தினால் நோவா ஏற்புடைமையின் வாரிசு ஆகிறார் *(11:7)*. ஈசாக்கும், யாக்கோபும், ஆபிரகாமும் வாக் குறுதிக்கு உரிமையாளர் ஆகின்றனர் *(11:9)*. ஏழைகளான ஆண்களும் பெண்களும், ''வாழ்வு தரும் இறையருளுக்கு'' உரிமை யாளர் ஆவர் *(1 பேதுரு 3:7)*.

**வாரிவரும் வலை** *(DRAGNET)*

இது மீன்பிடிக்கும் வலை; 200-250 மீட்டர் நீளமும், 5 மீட்டர் அகலமும் கொண்டது. மேலே மிதப்புகளையும் அடி யில் பளுவான எடைகளையும் கொண்டது. இரண்டு படகுகளுக்கிடையில் தொங்க விடப்பட்டு, கயிறுகளால் கரையை நோக்கி இழுக்கப்படும் *(எசா 19:8; அப 1:15-16; மத் 13:47-48)*. எகிப்தின் பார்வோன், கடல் அல்லது ஆற்றில் பறவை நாகம் என்னும் உருவத்தில், இவ்வலையால் பிடிக்கப் படுவான் *(எசே 32:3)*.

**வாரிவரும் வலை - உவமை (மத் 13:47-50)**

நல்லவையும் கெட்டவையும் எவ்வாறு பிரிக்கப்படும் என்பதை இவ்வுவமை எடுத்தியம்புகிறது. இங்கே கடல் இவ் வுலகைக் குறிக்கிறது. இந்தக் கடலிலே இறையரசாகிய வலை வீசப்படுகின்றது. (மீனவன்) வலை கரையை அடைந்தவுடன் நல்லவற்றை எடுத்துக்கொண்டு கெட்ட வற்றை எரிந்து விடுகின்றான். இதே போன்று இறுதிக்காலத்திலே நல்லவர்கள் இறைவனின் இன்பத்தை அடையவும், தீயவர்கள் தண்டனையை அனுபவிக்கவும் தனித்தனியாகப் பிரிக்கப்படுவார்கள். இதை வானதூதர்கள் செய்வர்.

**வார்ப்புக்கடல்** *(MOLTEN SEA)*

இது வெண்கலத்தால் செய்யப்பட்ட ஒரு பெரிய பாத்திரம். இது தீர் நாட்டு ஈராம் என்பவனால் செய்யப்பட்டது. அவனைச் சாலமோன் வெண்கல வேலைக்காகப் பணித்திருந்தார் *(1 அர 7:13-14); 1 நாள் 18:8*-இன்படி இது தாவீதுக்குக் கிடைத்த, கொள்ளைப் பொருளாகக் கிடைத்த வெண் கலத்தால் செய்யப்பட்டதாகும் *(காண்க. 2 சாமு 8:8)*. இது கழுவுவதற்காக வெண்கல நீர்த்தொட்டி குறிக்கப்படும் இடத்தில் அமைந்திருக்க வேண்டும். அதாவது சந்திப்புக் கூடாரத்துக்கும் பலிபீடத்திற்கும் இடையில் அமைந்திருக்க வேண்டும் *(யாத் 30:18)*.

பாத்திரம் வட்ட வடிவமானது. அதன் விட்டம் பத்து முழமும், உயரம் ஐந்து முழமும், சுற்றளவு முப்பது முழமும், இருந்தன *(1 அர 7:23; 2 நாள் 4:2)*. அதனுடைய பருமன் ஒரு கையகலம்; விளிம்பு கப்பு போன்று வளைந்து, லீலி மலரைப்போல் தோற்றமளித்தது. விளிம் பிற்குக் கீழே இரண்டு வரிசையில் வெண் கலத்தால் செய்யப்பட்ட கொம்மட்டிகள் அழகு செய்தன. பாத்திரம் பன்னிரண்டு காளை வடிவங்கள் மேல் அமர்ந்திருந்தது. காளைகள் நான்கு திசைகளை நோக்கினாற் போல இருந்தன. யோசிப்பஸ் என்பவரின் கருத்துப்படி அந்தப் பாத்திரம் அரை யுருண்டை வடிவம் உடையது. ஆனால், மற்றவர்களின் கருத்துப்படி அது நீள் உருளை வடிவமுடையது.

அரசர்கள் நூல் கடல் தொட்டியின் நோக்கத்தைக் குறிப்பிடவில்லை. ஆனால், 2 நாள் 4:6 கடல் தொட்டி குருக்கள் தங்களைத் தூய்மைப் படுத்துவதற்காக வைக்கப்பட்டிருந்தது என்று குறிப்பிடுகின்றது. அண்ட அடையாளம் இதில் தென்படுகின்றது. இது பாபிலோனிய நீர்த்தேக்கத்திற்கு ஒப்பிடப்படுகின்றது. இங்கிருந்து தான் எல்லாமே உயிரும், வளமையும் பெறுகின்றன என்று பாபிலோனியர் நம்பினர். அதைப் போலவே வெண்கலத்தால் செய்யப்பட்ட காளைகளின் மீது வைக்கப்பட்டுள்ள கடல் தொட்டியும் ஏதோ ஓர் அடையாளம் கொண்டதாக இருந்திருக்க வேண்டும்.

அரசர் ஆகாசின் ஆட்சிக்காலத்தில் கடல் தொட்டி வெண்கலக் காளையின் மீதிருந்து இறக்கி, கற்களால் பாவப்பட்ட தளத்தில் வைக்கப்பட்டது *(2 அர 16:17)*. கி.மு. 587-இல் பாபிலோனியர்கள் எருசலேமைக் கைப்பற்றியபோது, அதைச் சிறுசிறு துண்டுகளாக உடைத்துப் பாபிலோனுக்கு எடுத்துச் சென்றார்கள் *(25:13.16)*.

## வார்ப்புச்சிலை (MOLTEN IMAGE)

பண்டைக் காலத்து மக்கள் தேவதைகளை வழிபடுவதற்கு உதவியாக அவற்றின் உருவச் சிலைகளைப் பயன்படுத்தும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்ற உண்மையையே பழைய ஏற்பாட்டில் காணப்படும் இந்தச் சொல் குறிப்பிடுகின்றது. தங்கம், வெள்ளி, இரும்பு அல்லது வெண்கலம் போன்ற உலோகத்தினை உருக்கி, முன்பே தயாரிக்கப்பட்ட வடிவ அமைப்பில் ஊற்றி இத்தகைய உருவச் சிலைகளைச் செய்தனர் *(லேவி 19:4; உப 27:15; எசா 40:18-20)*.

இஸ்ராயேல் மக்களும் சிலைவழிபாட்டினைக் கொண்டிருந்தனர். எனவேதான் பத்துக்கட்டளைகளில் இது தடை செய்யப்பட்டுள்ளது. புதைபொருள் ஆய்வுகளின் மூலம், பாகால் மற்றும் பிற தேவதைகளின் சிறிய உருவச் சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டன. வெள்ளி, தங்க உருவங்களும், வெண்கலத்தால் வார்க்கப்பட்ட விலங்கு உருவங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

யாவேக்கு எந்தவிதமான உருவச்சிலையும் செய்யப்படவில்லை. ஆயினும், பொற்கன்றுக்குட்டியைப் பற்றிய கதை *(யாத் 32)*, மீக்காவின் சிலைகள் *(நீதி 17-18)*, இறைவாக்கினர்களின் கண்டன உரைகள் *(எசா 30:32; 40:19; ஓசே 13:2)* ஆகியவை இத்தகைய உருவச்சிலைகள் இஸ்ராயேலில் இருந்தன என்பதைச் சுட்டுகின்றன. இஸ்ராயேல் மக்கள் தாங்கள் யாவேக்குச் செய்த வழிபாடுகளில் கானானிய உருவச்சிலைகளைப் பயன்படுத்தியிருக்கலாம் என்ற கருத்தும் உள்ளது.

## வாழ்க்கைத்துணை (SPOUSE)

I. மணமகன் என்ற பெயர், இறைவன் தமக்கே அளித்துக்கொள்ளும் பெயர்களில் ஒன்றாகும் *(எசா 54:5)*. இது தமது படைப்புகள்பால் அவர் கொண்டுள்ள அன்பை எடுத்துக்காட்டுகிறது. இக்கோணத்திலே இக்கட்டுரையில் அவரைப் பற்றிப் பார்ப்போம். மனித உறவுகள் பற்றிய பண்புகளைத் திருமணம் என்ற கட்டுரையில் காணலாம்.

II. **பழைய ஏற்பாடு:**

**1.** இறைவன் தம் மறைபொருளான பெயரால் மட்டும் *(யாத் 3:14 தொ)* தம்மை வெளிப்படுத்துவதில்லை. நமது அன்றாட அனுபவத்திலிருந்து எடுக்கப்பட்ட மற்றப் பெயர்களாலும் தம் மக்களோடு கொண்டுள்ள உறவை வெளிப்படுத்துகிறார். அவர் அவர்களின் ஆயனாவார், தந்தையாவார், அவர்களின் மணமகனுமாவார்.

இங்குக் கானானிய சமயத்தில் காணப்படுவது போன்று இதிகாசங்களுக்கு இடமில்லை. இந்த இதிகாசங்களில் கடவுளாகிய மணமகன் பூமியை வளமுள்ளதாக்குகிறார். இக்கதையில் பாகால் (தலைவனும் கணவனும்) இந்த மணமகன் ஆவார் *(ஓசே 2:18; காண்க. நீதி 2:11தொ)*. சடங்கு விபசாரம் போன்ற உடலுறவுச் சடங்குகள் இதில் உண்டு. இந்தச் சடங்கு சிலைவழிபாட்டோடு தொடர்புடையது. ஆகவே,

மிகவும் பழித்துரைக்கப்படுகிறது (காண்க. யாத் 34:15தொ; எசா 1:21). பொறாத இறைவன் இதை விபசாரம் என்று கண்டனம் செய்கிறார். இஸ்ராயேலின் இறைவன் பூமிக்கு மணமகன் அல்லர்; தமது மக்களின் மணமகனாவார். அவர்களை ஒன்றிக்கும் அன்பிற்கு ஒரு வரலாறு உண்டு. இறைவனின் இலவசமான பரிபாலிப்பும் தமது மக்களின் பிரமாணிக்கமின்மையின் மேல் அவரது இரக்கம் கொள்ளும் வெற்றியும் இறைவாக்கினர்களின் முக்கிய கருத்துகளாகும். இக்கருத்துகள் ஓசேயாவோடு தொடங்குகிறது. அவர் திருமணத்தின், தனது சொந்த அனுபவத்திலிருந்து இக்கருத்துகளின் பொருளை உணர்ந்தவர்.

**2. ஓசேயாவின் அனுபவம்:**

**கணவனும் பிரமாணிக்கமற்ற மணமகளும்:** தான் அன்பு செய்த ஒரு பெண்ணை ஓசேயா திருமணம் செய்கிறார். அவளும் அவருக்குப் பிள்ளைகளைப் பெற்றளிக்கிறாள். ஆனால், அவள் அவரை விட்டு விலகி, ஆலய விபசாரத்தில் ஈடுபடுகிறாள். ஆனால் இறைவாக்கினர், பணம் கொடுத்து அவளை மீட்டு, தன் வீட்டிற்குக் கொண்டு வருகிறார். தபசும் சோதனைகளும் கொண்ட காலம், வீட்டில் அவளுக்குரிய இடத்தை மீண்டும் பெற அவளைத் தயாரிக்கிறது (ஓசே 1-3). இந்த நாடக விவரிப்பின் பொருள் இதுவாக இருக்கலாம். இந்த மணவுறவு அனுபவத்தில் தம் மக்களோடு தம்மையே இணைத்துக்கொள்ளும் இறைவனது அன்புக்கும், இஸ்ராயேலர் உடன்படிக்கைகளை முறிப்பதற்கும் இடையிலான உறவின் மறைபொருளை இறைவாக்கினர் கண்டுணர்கிறார். உடன்படிக்கை திருமணத் தன்மையைக் கொள்கிறது. சிலைவழிபாடு விபசாரம் மட்டுமன்று, பிறன்மனை நயக்கும் கூடா ஒழுக்கமுமாகும். சலுகைகள் பொழியப்பட்ட மணமகள், தான் பெற்றதையெல்லாம் மறந்து விட்டு ஒழுக்கக்கேடாக வாழ்வதாகும். பிரமாணிக்கமற்ற மணமகளைத் தண்டிக்கும் மணமகன், அலைந்து திரிபவளை வீட்டிற்குக் கொண்டு வந்து அவளை மீண்டும் அன்புக்குரியவளாக்க விரும்புகிறான். இது போன்றதே, இறைவன் தம் மக்களிடம் காட்டும் சினம். இந்த அன்பே இறுதி வார்த்தையைக் கொண்டது. இஸ்ராயேல் மீண்டும் பாலைப்பயணத்தை அனுபவிக்கும் (2:16தொ); நீதியிலும், வாஞ்சையிலும் நிறைவேறும் திருமணத்திற்குப் புதிய மண ஒப்பந்தம் தயாரிக்கும்; தூய்மைப்படுத்தப்பட்ட மக்கள் தனது மணமகனையும் அவரது பிரமாணிக்கமுள்ள அன்பையும் அறியும் (2:20தொ).

இதுவரை உடன்படிக்கை ஒரு சமூக ஒப்பந்தமாகக் கடைப்பிடிக்கப்பட்டது. அதை முறிப்பது இறைவனது சினத்தைக் கொண்டு வரும். இப்போது இச்சினம் மணமகனின் பொறாமையின் விளைவாகவும், உடன்படிக்கை திருமண உறவாகவும் தோன்றுகிறது. இந்த உறவு எவ்வளவு தனித்தன்மையுடையதோ அவ்வளவு நெருக்கமானதாக இருக்கிறது. இரு வாழ்க்கைத் துணைவர்களுக்குள் ஏற்படுவது போல், இந்த ஒருவர்க்கொருவரிடையேயான பரிமாற்றத்தில் மாறுபடும் நிலைகள் உண்டு. இந்நிலைகள் நீதிபதிகள் காலம் முதல் இஸ்ராயேல் வரலாற்றின் மாறுதல்களை அடையாளமாக உணர்த்துகின்றன. இவை பாவம், தண்டனை, மனத்துக்கம் மற்றும் மன்னிப்பு ஆகும் (காண்க. நீதி 2:11-19).

**3. இறைவாக்கினர் செய்தி:**

**அன்பு செய்யும் பிரமாணிக்கமுள்ள மணமகன்:** ஓசேயாவின் ஆன்மீக வாரிசான எரேமியா, இஸ்ராயேலின் நம்பிக்கைக் கேட்டையும் ஒழுக்கக்கேட்டையும், இறைவன் தம் மக்கள்பால் காட்டிய முடிவில்லாத அன்புடன் ஒப்பிட்டு வேறுபடுத்த, திருமண அடையாளத்தைப் பொருள் பொதிந்த உருவகங்களில் எடுத்துக் கூறுகிறார். ''உன் இளமையின் அன்பையும், மணமகளுக்குரிய காதலையும், விதைக்கப்படாத பாலை நிலத்தில் நீ என்னை எவ்வாறு பின்பற்றினாய் என்பதையும் நான் நினைவு கூர்கிறேன்'' (எரே 2:2); ஆனால், ''உயர்ந்த குன்றுகள் அனைத்தின் மீதும்,

பசுமையான மரங்கள் அனைத்தின் கீழும் விலைமாதாய்க் கிடந்தாயே'' *(2:20)*. ஆயினும், ''உனக்கு நான் முடிவில்லாத அன்பு காட்டியுள்ளேன்; எனவே, பேரன்பால் உன்னை ஈர்த்துள்ளேன்'' *(31:2)*. எசேக்கியேல் இன்னும் கரடுமுரடான உருவகங்களைப் பயன்படுத்தி, எருசலேமைக் கேட்பாரற்றுக் கிடந்த குழந்தையாய் மீட்டவர் அதை வளர்த்து, மணம் செய்து கொள்கிறார். ஆனால், அவள் விலைமகளானாள். அவளுடைய மணமகனோடு இணைத்த உடன்படிக்கையை முறித்தாலும், அவர் மீண்டும் நிறுவுவார் *(எசே 16:1-43.59-63)*.

இறுதியாக, ஆறுதல்களின் நூல்தான், எருசலேம் அன்பு செய்யப்பட்ட அன்பை அவளுக்கு மிகவும் உருக்கமான தொனியில் எடுத்துக்கூறுகிறது. ''வெட்கி நாணாதே... உன்னை உருவாக்கியவரே உன் கணவர்... தள்ளப்பட்ட இளம் மனைவிபோலும் இருக்கும் உன்னை ஆண்டவர் அழைத்துள்ளார்... நொடிப்பொழுதே நான் உன்னைக் கைவிட்டேன்.. என்றுமுள பேரன்பால் உனக்கு இரக்கம் காட்டுவேன்'' *(எசா 54:4-8)*. பலன் எதிர்பார்க்காத மற்றும் பிரமாணிக்கமுள்ள, அளவிட முடியாத மற்றும் முடிவில்லாததுமான, மணமகனின் அன்பு வெற்றியடையும்; பிரமாணிக்கமற்றவளைக் கற்புடைய மணமகளாக மாற்றும் *(61:10; 62:4தொ)*. அவர் அவளோடு முடிவில்லா உடன்படிக்கையால் ஒன்றிணைந்திடுவார்.

இந்த இறைவாக்கு முன்னோக்கில்தான் உன்னத சங்கீத நூலின் பாடல்கள் வாசிக்கப்பட வேண்டுமா? அவை இவ்வுலகக் காதல்களின் அன்பால் தூண்டுதல் பெற்றவை அல்லவா? அவை இஸ்ராயேலின் வரலாற்றை உருவகமாக எடுத்துக் கூறுகின்றனவோ? இறைவாக்கினரின் உடன்படிக்கைப் பந்தத்திற்கு மாதிரியாக்கும் திருமண அன்பைப் பாடுகின்றனவோ, இல்லையோ, அவை பயன்படுத்தும் அடையாளங்களைப் புரிந்துகொள்ள அவை விளக்கக்குறிப்பு எதுவும்அளிக்கவில்லை; அவற்றில் யாவே ஒருபோதும் மணமகனாக அடையாளம் காட்டப்படவில்லை. வாசகத்திற்கு உருவக விளக்கம் அளிப்பது எவ்வளவு நேர்மையானாலும், உன்னத சங்கீத நூலை ஓர் உவமையாக எடுத்துக்கொள்வது மேலானது என்று தோன்றுகிறது. சாவைப்போல் வலிமை மிக்க அன்பை இந்நூல் பாடுகிறது. இந்த அன்பின் தணிக்க முடியாத ஆர்வக்கனல் இறைவன் தம் மக்கள்பால் கொண்டிருக்கும் பொறாத அன்பின் உருவமாகிறது *(உ.ச. 8:6தொ; காண்க. உப 4:24)*. மூலத்தில் சங் 45. இஸ்ராயேலின் அரசனது திருமணத்திற்காக எழுதப்பட்டது; ஆனால், அரச-மெசியாவுக்குச் சாற்றிக் கூறப்பட்டது. அரசனுக்கு இறைப்பட்டங்களை அளித்துக் கிறிஸ்துவின் இறைமகன் தன்மை வெளிப்பாட்டுக்கு முன்னுரை அளிக்கும் அதன் கூறுகளை எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் பயன்படுத்துகிறது *(சங் 45:7தொ; எபி 1:8)*.

**4. ஞானமும் இறைவனோடு ஒன்றிப்பும்:** இறைவாக்கினர்களின் இயல்வாய்மை இறை அன்பின் ஆர்வத்தைப் புடைப்பியல் செதுக்கோவியமாகப் படைக்கிறது. இந்த அன்பினால் செயலுருவாக்கப்படும் ஒன்றிப்பின் ஆட்தன்மை வாய்ந்த உள்ளார்ந்த பண்பினை ஞானநூல்கள் வலியுறுத்துகின்றன. இறைவன் பிரமாணிக்கமுள்ளவர்களுக்குத் தம் மகளாகிய ஞானத்தை அளிக்கிறார் *(பழ 8:22)*. இந்த ஞானம் தாயாக மணமகளாகத் தன்னையே வெளிப்படுத்துகிறது *(சீரா 15:2)*. ஞானநூல் இந்த உருவத்தைப் பயன்படுத்துகிறது. இறைவனின் நண்பர்களாவதற்கு வழி ஞானத்தை அடைவதாகும் *(ஞான 7:14)*. ஒருவன் ஞானத்தைத் தேட வேண்டும்; அதை ஆர்வத்தோடு விரும்ப வேண்டும்; அஃதோடு வாழ வேண்டும் *(7:28; 8:21)*. இறைவன் மட்டுமே கொடுக்கக்கூடிய மணமகளாய் *(8:21)*, ஞானம் தன்னோடு ஒன்றிணைந்திருப்பவர்களை அழியாமைக்கு உட்படாதவர்களாக்குகிறது. பரிசுத்த ஆவியைப் போல் இறைவனால் அருளப்பட்டு *(9:17)*, ஞானம் ஓர் ஆன்மீகக் கொடையாகிறது. நம்மில் இறைவனது செயல்களை நிறை

வேற்றும், நம்மை நற்பண்புகளால் மிளிரச் செய்யும் (8:6தொ) கலைஞன் ஆகும் ஞானம். திருமண அடையாளம் இங்கு முழுவதும் ஆன்மீக மயமாக்கப்படுகிறது. இறைவனோடு மனிதன் கொள்ளும் ஒன்றிப்பை நிறைவேற்றும் அருள் பற்றிய மறையுண்மையின் வெளிப்பாடு இவ்வாறு தயாரிக்கப்பட்டது. இந்த நிறைவேறுதல் இறைவனின் ஞானமாகியவர் மனிதன் ஆதலும், அவர் தன் மணமகளாகிய திருச் சபையைத் திருமணம் செய்து கொள்வது மாகும்.

**III. புதிய ஏற்பாடு:**

***1. புதிய உடன்படிக்கையின் மணமகனான செம்மறி:*** இறைவனிடமிருந்து பிறந்து, மனிதர்களிடையே இருப்பதில் இன்பம் காணும் ஞானம் வெறும் ஆன்மீகக் கொடை மட்டுமன்று. அஃது ஊன் வடிவில் தோன்றுகிறது. அஃது இறைவனின் ஞானமாகிய கிறிஸ்துவேயாகும் (1 கொரி 1:24). இறைவனின் மடமையாகிய சிலுவையின் மறைபொருள்தான் இறைவன் தமது பிரமாணிக்கமற்ற மணமகளுக்குக் காட்டும் அன்பை வெளிப்படுத்துகிறது. இந்த அன்பு அவளைப் புனிதப்படுத்தி அவருடனான உடன்படிக்கைக்கு ஏற்றவளாகச் செய்கிறது (எபே 5:25தொ).

இவ்வாறு மணமகன், மணமகள் என்ற பெயர்களால் பழைய ஏற்பாட்டில் அடையாளமாக உணர்த்தப்படும் ஒன்றிப்பு மறைபொருளின் திரை நீக்கப்படுகிறது. மனிதன் மூவொரு கடவுளின் வாழ்வில் பங்கு பெறுதலும், விண்ணகத் தந்தையின் குழந்தையாவதற்கு இறைமகனோடு ஒன்றித்துக் கொள்வதும் முக்கியமாகும். மணமகள் கிறிஸ்துவே, அதுவும் சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவே. அவரது இரத்தத்திலேயே புதிய உடன்படிக்கை முத்திரையிடப்படுகிறது (1 கொரி 11:25). இதனால் தான் திருவெளிப்பாட்டு நூல் எருசலேமை இறைவனின் மணமகளாக இனி ஒரு போதும் அழைப்பதில்லை; செம்மறியின் மணமகளாக அழைக்கிறது (திருவெளி 21:9).

***2. புதிய உடன்படிக்கையின் மணமகளான திருச்சபை:***

இறைமகனுடன் உடன்படிக்கை செய்து கொள்ள அழைக்கப்பட்டிருக்கும் இந்த எருசலேம் எது? இஃது இனிமேல், பழைய உடன்படிக்கை மக்களின் பிரதிநிதியான ஊழியன் அன்று; சுதந்தரப் பெண்ணாகிய விண்ணக எருசலேம் ஆகும் (கலா 4:22-27). மணமகன் வந்தபின், அவரது முன்னோடியும் நண்பனுமானவர் சாட்சியளித்தார் (யோவா 3:29). அதற்குப்பின் மனுகுலம், இரு ஆன்மீக நகரங்களின் அடையாளமான இரு பெண்களால் எடுத்துக்காட்டப்படுகிறது. ஒருபுறம், சிலைவழிபாட்டையுடைய பாபிலோனின் மாதிரியான ''வேசி'' (திருவெளி 17:1.7; காண்க. எசா 47); மறுபுறம் விசுவசிக்கும் நகரத்தின் மாதிரியான செம்மறியின் மணமகளான (திருவெளி 20:9), விண்ணகத்திலிருந்து வரும் புனித எருசலேம். ஏனெனில், தனது மணமகனிடமிருந்து தனது புனிதத்தைப் பெறுகிறது (21:29தொ).

இப்பெண் இறைமக்களின் தாய் ஆவாள்; செம்மறி தனது இரத்தத்தால் பறவை நாகத்திடமிருந்து மீட்டவர்களின் தாய் ஆவாள் (12:1தொ.11.17). கிறிஸ்துவின் மணமகள் தேர்ந்தெடுக்கப்பட்டோர் சபை மட்டுமன்று; அவளே அவர்களின் தாயாகத் தோன்றுகிறாள். அவள் வழியாக அவளில் அவர்கள் ஒவ்வொருவரும் பிறக்கின்றனர். அவர்கள் கிறிஸ்துவின் அருளால் புனிதம் அடைகின்றனர் (தீத் 3:5தொ); கன்னி உயிர்களாகின்றனர்; அவர்களின் மணமகனான கிறிஸ்துவுக்குத் தகுதியாகி (2 கொரி 11:2), செம்மறியோடு எக்காலத்திற்கும் ஒன்றித்திருக்கின்றனர் (திருவெளி 14:4).

**3. முடிவில்லாத் திருமணம்:** திருச்சபை ஒரே சமயத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டோரின் தாயாகவும், அவர்களைக் கூட்டிச் சேர்க்கும் நகரமாகவும் விளங்கும் உண்மையிலிருந்து, செம்மறியின் திருமணம் வேறுபட்ட கட்டங்களைக் கொண்டிருக்கிறது.

அ) திருமணத்தின் முதல் கட்டம் கிறிஸ்துவின் வருகைக்காலமாகும் (மத் 9:15). இது கிறிஸ்துவின் சிலுவையில் புதிய ஆதாம் புதிய ஏவாளைப் புனிதப்படுத்தும் போது நிறைவேறுகிறது. அவள் அவரது விலாவிலிருந்து வருகிறாள். திருச்சபையின் அருட்சாதனங்கள் நீராலும் இரத்தத்தாலும் அடையாளமாக்கப்படுகின்றன (யோவா 19:34; காண்க. 1 யோவா 5:6). மணமகன் தன் வாழ்க்கைத் துணைக்குக் காட்டும் அன்பு கிறிஸ்தவத் திருமணத்தின் மாதிரியாகும் (எபே 5:25-32).

ஆ) இந்தத் திருமணத்திற்குக் கிறிஸ்து எல்லாரையும், முதலில் தமது மக்களை, அழைக்கிறார் (மத் 22:1-10). இதில் பங்கு கொள்ள ஒருவர் அழைப்புக்கு இணங்குவது மட்டும் அன்றி திருமண ஆடையும் அணிந்திருக்க வேண்டும். ஆனால், இந்த அழைப்பை மறுப்பவர்கள் பலருண்டு (22:11தொ). எப்போதும் விடப்படும் இந்த அழைப்பு, திருச்சபை இருக்குமட்டும் நீடிக்கும். ஆனால், கொண்டாட்டத்தின் நேரம், ஒவ்வொருவரைப் பொருத்தமட்டும் உறுதியில்லாதிருப்பதால், விழிப்பு அவசியமாகும். அதனால் மணமகன் வரும்போது, திருமண விருந்துக்கு அழைக்கப்பட்ட கன்னியர் தயாராக இருப்பதைக் காண்பார் (25:1-13).

இ) இறுதியாக, வரலாற்றின் முடிவில் மணமகளது திருமண ஆடை தயார் செய்யப்படும் விதம். அது விசுவாசிகளின் செயல்களால் நெய்யப்பட்ட, பகட்டானதும் தூய்மையானதுமான விலைமிக்க ஆடையாகும். செம்மறியின் திருமணத்திற்கு அழைக்கப்படும் மகிழ்ச்சி கொண்ட விசுவாசிகள் இத்திருமணத்திற்காகக் காத்திருக்கின்றனர்; செம்மறியின் திருமணத்தைப் போற்றுகின்றனர் (திருவெளி 19:7தொ). வேசி தீர்ப்பிடப்படும் இந்தச் சமயத்தில் (19:2), மணமகன், தமது ஆவி மணமகளிடம் தூண்டுகிற வேண்டுதலுக்கு, இறுதியாகப் பதில் அளிப்பார். அவளைப் போலவும் அவளிலும், மணமகனது அன்பிலும் வாழ்விலும் ஒன்றிக்க விரும்பும் அனைவருடைய தாகத்தையும் தீர்ப்பார். இந்த வளமையான ஒன்றிப்பை வாழ்க்கைத் துணைகள் என்பன மிகச்சிறந்த முறையில் எடுத்துக்காட்டுகின்றன (22:17).

**வாழ்வு நூல்** (BOOK OF LIFE)

கடவுளால் நீதிமான்களென முன்குறித்து வைத்தவர்கள் பெயர்கள் பொறித்த விண்ணக நூல் இது (காண்க. சங் 139:16; லூக் 10:20; பிலி 4:3; எபி 12:23; திருவெளி 13:8; 17:8; 21:27). இதுபோலவே தீயவர்க்கு 'அழிவோரின் நூல்' ஒன்று இருந்ததாக போலிநூல்களில் குறிக்கப்பட்டுள்ளது. ஒருவன் இறைவனுக்கு எதிராகச் செல்வதினால் தன் பெயரை வாழ்வு நூலினின்று நீக்கிக் கொள்ளலாம். அல்லது மனந்திரும்புதலால் தன் பெயரை இந்நூலில் சேர்த்துக் கொள்ளலாம் (காண்க. சங் 69:28; திருவெளி 3:5). மனிதரின் நல்ல, தீய செயல்கள் குறித்து வைக்கப்பட்டுள்ள விண்ணக நூல்கள் மேற்சொன்ன நூலினின்று வேறுபட்டவை (காண்க. தானி 7:10; 12:1; திருவெளி 20:12.15). இவை இறுதித்தீர்ப்பின் போது திறக்கப்படும்.

**வாழ்வுக்கு வழிகாட்டும் தலைவர்** (AUTHOR OF LIFE)

கிறிஸ்துவைக் குறிக்கும் ஒரு சொற்றொடர் (அ.ப. 3:15; 5:31). தலைவர் என்ற சொல் எபி 2:10; 12:2-இல் ''தொடங்கி வைத்தவர்'' என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. எல்லா இடங்களிலும் கிறிஸ்துதான் குறிக்கப்பெறுகிறார். ஒரு நகரை உருவாக்கிய எகிப்தியப் பெண் கடவுளைக் குறிக்க பிளேட்டோ பயன்படுத்திய சொற்றொடர் இது. அ.ப. 3:15-இல் சிலுவையில் அறையப்பட்டவர் புதிய வாழ்வை அளிப்பவராக ஏற்றுக்கொள்ளப்படுகின்றார். அவரைப் பின்பற்றுவோர் அப்புதிய வாழ்வைப் பகிர்ந்து கொள்கின்றனர்.

**வாழ்வோரின் கட்டுகள்** (BUNDLE OF THE LIVING)

இஃது உருவகமாக வாழ்வோர்கள் நடுவில் பாதுகாக்கப்படும் நிலையைக் குறிக்

கிறது (1 சாமு 25:29). விலையுயர்ந்த பொருட்களைக் கொண்டுள்ள மனிதன் அதை எவ்வாறு கட்டாக அல்லது பையில் போட்டுத் தன்னுடனேயே வைத்துக் கொள்கிறானோ அதுபோல ஆண்டவரும் வாழ்வதற்கென்று நியமனம் பெற்றவர்களைத் தன் வாழ்வோரின் கட்டுகளில் வைத்துக் காக்கின்றார். இத்தகைய வழக்கு பழங்காலத்தில் வழக்கத்தில் இருந்து வந்தது. வாழ்வோரின் நூல் என்பதும் இதைச் சார்ந்ததே (சங் 68:28; காண்க. யாத் 32:32-33; தானி 12:1).

**வாளுறை** (SCABBARD, SHEATH)

இது வாளின் மேலுறை அல்லது கவசம். தாவீது, யோவாபு, பேதுரு போன்றவர்களுடைய வாள்களுக்கு உறை பயன்படுத்தப் பட்டதாகக் (1 சாமு 17:51; 2 சாமு 20:8; யோவா 18:11) குறிப்பிடப்பட்டுள்ளது. உருவகமாக, ஆண்டவரின் அச்சமுறுத்தும் தீர்ப்புக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது (1 நாள் 21:27; எரே 47:6; எசே 21:3-5; காண்க. எசே 21:30).

**வாள்** (SWORD)

மிகவும் பழங்காலத்திலிருந்தே இரண்டு வகையான வாள்கள் இருந்திருக்கின்றன. ஒன்று குத்துவாள். இது கூறாகவும், இருபுறமும் வெட்டக்கூடியதாகவும் இருக்கும். இரண்டு கொடுவாள். இஃது ஒருபுறம் மட்டும் வெட்டக்கூடியது. எபிரேய மொழியில் இந்த இரண்டு வகையான வாள்களையும் வேறுபடுத்திக் காட்ட வேறு வேறு சொற்கள் கிடையாது. பழங்காலக் கலைகளிலும், ஓவியங்களிலும் காணப்படும் உருவங்கள், பிற்காலத்தில் வாள்கள் கைப்பிடிகளோடு இணைக்கப்பட்டனவே ஒழிய வேறு எந்த மாற்றமும் செய்யப்படவில்லை என்பதை எண்பிக்கின்றன. கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முன்னதாகவே வாள் செய்வதற்கு இரும்பும், வெண்கலமும் பயன்படுத்தப்பட்டன. இக்காலத்தில் இரும்புத் தொழில் பெலிஸ்தியர்களுக்கு மட்டுமே தெரிந்திருந்ததால் இஸ்ராயேலரிடம் வாள் இல்லை (1 சாமு 13:19.22). வாள் அரைக்கச்சையில் கட்டப்பட்டிருந்தது; தோல் உறையில் வைக்கப்பட்டது. இத்தியர்கள் நீளமான குத்துவாள் வைத்திருந்தனர். ஆனால், வெட்டும்பகுதி நீண்ட கொடுவாள் ஒரு சடங்குக் கருவியாகவே பயன்படுத்தப் பட்டது என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

பொதுவாக வாள், பழைய ஏற்பாட்டில் ஒரு போர்வீரனுக்குரிய கருவியாக விளங்கியது. ஒரு சமயம் இஸ்ராயேலரின் போர் முழக்கம் ''ஆண்டவருடைய வ்ளாக, கிதியோனின் வாளாக'' இருந்தது (நீதி 7:20). இஃது உருவகமாக வரும்போது அவதூறு பேசுகின்ற நா வாளைப் போன்றது என்று கூறப்படுகின்றது (சங் 55:21; 57:5; 59:8; பழ 12:18; 30:14). வாள் தசையை உண்ணும் கருவியாகக் குறிப்பிடப்படுகின்றது (உப 32:42; 2 சாமு 2:26; எசா 2:20; எரே 2:30; 12:12; 46:10). **'வாள்'** உருவகமாக, போரைக் குறிக்கும். அது பெரும்பாலும் ஆண்டவரால் அனுப்பப்படும் (லேவி 26:6.25; 2 சாமு 11:25; எரே 5:12; 46:16; எசே 7:15). இது வன்முறையையும் குறிக்கும் (2 சாமு 12:10). தண்டிக்க யாவே பயன்படுத்தும் கருவி (1 நாள் 21:12; சங் 7:12; எசா 34:5தொ; 66:16; திருவெளி 19:15). எசேக்கியேலில் வரும் ''வாளின் பாடல்'' கருத்து இதுவே (எசே 21:13-22). எரேமியாவில் யூதாவுக்கு எதிராகக் கூறப்படும் மூன்று தண்டனைகள் வாள், பஞ்சம், கொள்ளை நோய் ஆகும். மெசியாவின் அமைதிக் காலத்தில் வாள் கலப்பைக் கொழுக்களாக அடிக்கப்படும் (எசா 2:4; மீக் 4:3). நீதியின் காலத்தில் இது தலைகீழாக மாறும்; கலப்பைக் கொழுக்கள் வாள்களாக அடிக்கப்படும் (யோவே 4:10).

ஆனால், கிரேக்க மொழியில் குறுகிய வாள், அகண்டவாள், குத்துவாள் எனப் பலவகையாக வாள்கள் வேறுபடுத்திக் காட்டப்படுகின்றன. ஆனால், புதிய ஏற்பாட்டில், முதல் இரண்டு வகைகள் மட்டும் தெளிவான வேறுபாடு இல்லாமல் பயன்பட்டுள்ளன. வாள் அதிகாரத்தைக் குறிக்கின்றது (உரோ 13:4). வாள் மரண தண்டனையை நிறைவேற்றும் கருவியாகப் பயன்படுத்தப்பட்டது (அ.ப. 12:2; எபி

*11:37)*. சிவப்புக்குதிரையின் மீது வாளை ஏந்தி வரும் வீரன் போரைக் குறிக்கிறார் (*திருவெளி 6:4*). இதே சொல் உருவகமாகத் துக்கத்தையும் குறித்தது (*லூக் 2:35*). கிறிஸ்துவின் அன்பினின்று வேதகலாபனை என்ற வாள் கிறிஸ்தவனைப் பிரிக்க இயலாது (*உரோ 8:35*). கடவுளின் ஊழியனின் வாயினின்று வரும் வாளும், செம்மறியின் வாயினின்று வரும் வாளும் (*எசா 49:2; திருவெளி 1:16; 2:12.16*) கடவுளின் வார்த்தை ஆகும். கடவுளின் வார்த்தை யாகிய ஆவியின் இந்த வாள் கிறிஸ்தவனின் ஆயுதங்களில் ஒன்றாகும் (*எபே 6:17*). கடவுளுடைய வார்த்தை இருபுறமும் கருக்கு வாய்ந்த எந்த வாளினும் கூர்மையானது; ஆன்மாவின் உள்ளாழத்தையும், ஆவியின் உள்ளாழத்தையும் ஊடுருவுகிறது (*எபி 4:12*). இப்பகுதிகளில் வரும் கடவுளின் வார்த்தை புனித நூல்களில் எழுதப்பட்ட வார்த்தையன்று; மாறாக, இறைவாக்கினர்களின், அப்போஸ்தலர்களின் வெளிப்படுத்தப்பட்ட வார்த்தையாகும், குறிப்பாக இயேசுவின் வார்த்தையாகும். அஃது அவருடைய எதிரிகளை மறுத்துரைக்கும்; கிறிஸ்தவனுக்குக் காப்புரை அளிக்கும்; ஒவ்வொரு மனிதனையும், அவனது போலித்தன்மையையும் சாக்குப்போக்குகளையும் களைந்து விட்டு, தீர்மானம் செய்யக் கட்டாயப்படுத்தும்.

இயேசு கைது செய்யப்பட்டபோது, அவரைப் பாதுகாக்கும் எண்ணத்துடன் பயன்படுத்தப்பட்ட வாள் (*மத் 26:51; மாற் 14:47; லூக் 22:48 தொ; யோவா 18:10தொ*), புகழ் பெற்ற ஒரு கூற்றுக்கு வாய்ப்பாயிற்று. இது மத்தேயுவில் மட்டும் காணப்படுகிறது. ''வாளை எடுப்போர் அனைவரும் வாளால் அழிந்து போவர்'' (*மத் 26:52*). ''அமைதியையன்று வாளையே கொணர வந்தேன்'' என்று இயேசு கூறுகிறார் (*10:34*). இக்கூற்றின் சூழ்நிலை இங்கு, வாள் இயேசுவின் மீது கொள்ளும் விசுவாசம் எழுப்பும் பகைமையையும் எதிர்ப்பையும் சுட்டுகிறது என்பது தெளிவு. இயேசுவின் பாதுகாப்புக்காக வன்முறையைப் பயன்படுத்துவது பற்றிய அவரது மனநிலை பற்றி பிறநற்செய்திகள் மறைமுகமாகக் கூறுவதை மத் *26:52* வெளிப்படையாகக் கூறுகிறது. அவ்வாறு வன்முறை பயன்படுத்தப்படுவதைக் கண்டிப்பாக இயேசு நிராகரிக்கிறார். ஆனால், இஃது ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தைக் கடந்து பொதுவானதாகக் கூறப்படலாம்; ஆயுதங்களும் வன்முறையும் பயன்படுத்தப்படுவதை முழுவதும் நிராகரிப்பதாக விளக்கலாம். இவ்விளக்கம் நற்செய்தியின் மற்றக் கூற்றுகளோடு முழுவதும் ஒத்துப்போகிறது (*மத் 5:34-48; லூக் 6:27-30.32-36*). வன்முறையைக் கோருபவன் முடிவில் அதனாலேயே அழிந்து போகிறான். இஃது ஒழுக்கவியல் நிராகரிப்பாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டியதில்லை; மாறாக, வன்முறையின் பயனற்ற தன்மை பற்றிய அறிக்கையென வெறுமனே எடுத்துக் கொள்ளலாம். நேர்மையான வன்முறை இருக்கிறது என்று நம்பும் கிறிஸ்தவர்கள் வன்முறை பற்றிய கிறிஸ்துவின் தீர்ப்போடு அவர்கள் நம்பிக்கை எப்படி ஒத்துப்போகிறது என்று சிந்திக்க வேண்டும். நற்செய்தியின் சொற்களுக்கு அளிக்கும் குறைந்த அளவு மரியாதை கூட, கிறிஸ்துவின் பணியை முன்னேற்ற வன்முறையைப் பயன்படுத்துவதைப் பரிந்துரைக்கும் எதையும் தடுக்கிறது என்று தோன்றுகிறது.

இதே கருத்தை மற்றொரு வடிவில் லூக் *22:35-38* எடுத்துக்கூறுகிறது எனலாம். ''வாள் இல்லாதவர் தம் மேலங்கியை விற்று வாள் வாங்கிக் கொள்ளட்டும்'' என்ற இயேசுவின் எச்சரிக்கை உருவகமாகக் கூறப்பட்டுள்ளது என்பது தெளிவு. இதைச் சீடர்கள் அதன் சொற்பொருளில் புரிந்து கொள்கின்றனர். அப்பொருளிலேயே அஃது ஒன்றுமில்லாமல் போகுமாறு லூக்கா விட்டு விடுகிறார். இயேசுவின் பாடுகளுக்கு உடனடியான முன் சூழ்நிலையில், இது, வாள் பயன்படுத்துவதற்கான காலம் அன்று என்பதற்கு எந்த விளக்கமும் தேவையில்லை.

**வாற்கோதுமை** *(BARLEY)*

விவிலியத்தில் அடிக்கடி கூறப்படும் முக்கியமான இத்தானியம் 14-ஆம் நூற்றாண்டில் உள்ள உகாரித்துக் குறிப்புகளில் அடிக்கடி காணப்படுகின்றது. இதன் செமித்தியப் பெயர் 'முடி' என்ற சொல்லிலிருந்து வந்துள்ளது. இது விதைக்கு மேலே தோன்றிப் பாதுகாப்பு அளிப்பது போன்று கதிர்களில் இருப்பதால் இப்பெயர் வந்திருக்கலாம்.

கோதுமை அறுவடைக்குமுன் வாற்கோதுமை விளைந்து முதிர்வுறும் *(யாத் 9:31)*. வாற்கோதுமை அறுவடை முடிந்து இரு வாரங்களுக்குப்பின் கோதுமை அறுவடை தொடங்கும். கோதுமையும், வாற்கோதுமையும் பாலஸ்தீனத்தில் விளைந்தன *(உப 8:8)*. வாற்கோதுமை கோதுமையை விட மலிவானது *(2 அர 7:1.16.18; திருவெளி 6:6)*. இது விலங்குகளுக்கு உணவாகப் பயன்படுத்தப்பட்டது *(1 அர 4:28)*. இத்தானியம் மனித உணவின் ஒரு முக்கிய பகுதியாக, குறிப்பாக ஏழைகளின் உணவாகப் பயன்பட்டது *(லேவி 23:22; ரூத் 3:15.17; 2 சாமு 17:28; 2 அர 4:42; 7:1; 16:18; 2 நாள் 2:10.15; 27:5; எரே 41:8)*. அப்பங்கள் போல் இது சமைக்கப்பட்டது *(நீதி 7:13; எசே 4:12; யோவா 6:9.13)*. இத்தானியம் காணிக்கையாகச் செலுத்தப்படுவதற்கும் *(எண் 5:15; எசே 45:13; லேவி 23:10-14)*, பண்டமாற்றுவதற்கும் *(எசே 13:9; ஓசே 3:2)* பயன்படுத்தப்பட்டது. அக்கால நாள் காட்டியின் குறிப்பாக வாற்கோதுமை அறுவடை அமைந்து இருந்தது *(ரூத் 1:22; 2 சாமு 17:28)* என்பது கி.மு. 10-ஆம் நூற்றாண்டில் உள்ள கேசேர் நாள்காட்டி ''அவனுடைய மாதம் வாற்கோதுமை அறுவடைக்காலம்'' என்பதிலிருந்து தெரிகிறது. விவிலியத்தில் வரும் நாடுகளில் பலவகையான வாற்கோதுமைகள் பயிரிடப்பட்டன.

**வாற்கோதுமை அறுவடை** *(BARLEY HARVEST)*

இது வசந்தகாலத்தில் விளைந்து அறுவடை செய்யப்பட்ட வாற்கோதுமை அறுவடையைக் குறிக்கலாம். இந்த அறுவடை ஏப்ரல் மாதத்தின் இறுதியிலோ *(யோசு 3:15)*, மே மாதத்தின் முற்பகுதியிலோ, கோதுமை அறுவடையின் 2 வாரத்திற்கு முன் நடக்கும் *(ரூத் 2:23)*. வாற்கோதுமை அறுவடையின்போதுதான் அறுவடையை அர்ப்பணிக்க முதற்பயன்கள் கொண்டுவரப்பட்டன *(லேவி 23:10)*.

**வானகம், விண்ணகம்** *(HEAVEN, FIRMAMENT)*

I. வானில் பறக்கும் விமானிகள் மற்றும் வான இயலைப் படிப்பவர்களை, ''வானகம் எங்கிருக்கிறது, அடையாளம் காட்ட முடியுமா?'' என்று கேட்டால் அவர்கள் இயலாது என்றுதான் சொல்வார்கள். விவிலியத்தில் பயன்படுத்தப்படும் மொழியை நாம் சரியாகப் புரிந்து கொள்வது அவசியம். சாதாரண மனித அனுபவம் என்ன சொல்கிறது? கடவுள் படைப்புப் பொருள் அனைத்து வழியாகவும், அவற்றின் காணக்கூடிய அமைப்புகள் வழியாகவும் தம்மை வெளிப்படுத்துகிறார். இதனை விவிலியம் சற்றுச் சிக்கலான, அதிகக் குழப்பமில்லாத வடிவில் நமக்கு எடுத்துச் சொல்கிறது. அதே நேரத்தில் நாம் காணும் வானையும், கடவுளின் விண்ணகத்தையும் தெளிவாக வேறுபடுத்திப் பேசுகிறது விவிலியம். 'விண் மண்ணுக்குரிய' விண்ணகமும், மண்ணிலிருந்து வேறுபட்ட விண்ணகமும் இருக்கின்றன. முதலில் நாம் குறிப்பிடும் ஒன்றுதான் இரண்டாவதை நாம் எண்ணிப் பார்ப்பதற்குத் துணை புரிகிறது.

II. **விண்ணகமும் மண்ணகமும்:** எபிரேயர்களைப் பொருத்தமட்டில் வானம் அகிலத்தின் ஒரு பகுதியாக இருந்தாலும், மண்ணகத்தோடு தொடர்புடையதாக இருந்தாலும் அது மண்ணிலிருந்து வேறுபட்டது. விண்ணகம் என்பது பூமியைச் சூழ்ந்திருக்கும் உலகளாவிய ஒரு கோள வடிவம் என்று நினைத்தனர். மண்ணும் விண்ணும் சேர்ந்ததே அகிலம் என்று கருதினர். இவை இரண்டையும் சேர்த்து அழைக்க சரியான சொற்கள் இல்லாததால் 'விண்ணும் மண்ணும்' என்றழைத்தனர் *(ஆதி 1:1; மத் 24:35)*.

இஸ்ராயேலர் வானத்தின் மாட்சிமையையும் அதன் ஒளியையும் தெளிவையும் கண்டு வியந்தார்கள் என்றால் (*யாத் 24:10*) அதன் அசைக்க முடியா உறுதியை நினைத்து இன்னும் அதிகம் வியப்பு அடைந்தனர் (*ஆதி 1:18*). வானம், பூமியைப் போலவே மிக உறுதியாகக் கட்டப்பட்டு ஒழுங்குபடுத்தப் பட்டிருக்கிறது என நினைத்தனர். வானம் தூண்களால் (*யோபு 26:11*) அல்லது அடித்தளங்களால் (*2 சாமு 22:8*) தாங்கப்பட்டு நிற்கிறது எனவும், மழை, பனி, புயல், காற்று அனைத்திற்கும் தேக்கங்கள் போன்ற அமைப்புகள் இருப்பதாகவும் நினைத்தனர் (*யோபு 38:22தொ; 37:9தொ; சங் 33:7*). அதன் ''சன்னல்கள்'', ''கதவுகள்'' வழியாக சரியான நேரத்தில் மழை, காற்று முதலியவை அவற்றின் தேக்கங்களிலிருந்து திறந்து விடப்படுவதாக நம்பினர் (*ஆதி 7:11; 2 அர 7:2; மலா 3:10*). வானத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் கோள்கள், விண்மீன் கூட்டங்கள் (*ஆதி 15:5*) ஆகியவை மிகச்சிறப்பாக ஒழுங்காக இயங்குவதால் கடவுளின் திட்டம் எவ்வளவு மகத்தானது என்பதை விளக்குகின்றன (*காண்க. எசா 40:26; யோபு 38:3தொ*).

III. **பூமியிலிருந்து வேறானது விண்ணகம்:** வானத்தின் அகண்ட வெளி, அதில் உள்ள ஒளி, வியப்புமிக்க, விளக்க முடியாத முறையில் அனைத்தும் ஒரே சீராக இயங்கும் விதம் ஆகிய அனைத்துமே வானத்தைப்பற்றிய ஊடுருவ முடியாத மறைபொருள்; மனிதனுக்கு ஒரு பிரமிப்பும் வியப்பும் ஏற்படுத்துவன. பூமியின் ஆழமும், அதன் கீழ் உள்ள பேராழமும் அணுக முடியாததொன்றானாலும் (*யோபு 38:4தொ.16தொ*), அணுக முடியாத தன்மையை இன்னும் அதிகமாகக் கொண்டதாக வானம் தனக்கு வெளிப்படுத்தப்படுவதைக் கண்டு மனிதன் மேலும் வியப்படைகிறான். மனிதன் மண்ணுக்குரியவன். விண்ணகம் அவனுக்கு மூடப்பட்டுள்ளது. எவனும் வானகத்திற்கு ஏறிச் சென்றதில்லை (*யோவா 3:13; காண்க. பழ 30:4; உரோ 10:6*). பாபேலின் அரசன் வானத்தைத் தொடும் வண்ணம் ஒரு கோபுரம் அமைப்போம் என்று கனவு கண்டது முட்டாள்தனமானது (*ஆதி 11:4*). ஏனெனில், அஃது இறைவனுக்கு இணையாக ஒருவன் தன்னை வைத்துப் பார்ப்பதாகும் (*எசா 14:13தொ*). இவ்வாறு இறைவனுக்கும் வானத்திற்கும் ஓர் இயல்பான உறவு இருக்கிறது. ''விண்ணகமோ ஆண்டவருக்கு உரியது. மண்ணகத்தையோ அவர் மானிட மைந்தர்க்கு வழங்கியுள்ளார்'' (*சங் 115:16*).

வானகம் உண்டாக்கிய இந்த இயல்பான சமய உணர்வுகளினால் இதனை (வானகங்கள்), விண்ணகங்கள் என்று பன்மையில் எழுபது நூல் குறிக்கிறது. யூத சமயமும், புதிய ஏற்பாடும் இந்தப் பன்மைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்ததென்றால் 'விண்ணரசு' என்பது 'இறைவனின் அரசு' என்பதற்கு இணையாகப் பொருள் கொள்ளப்பட்டது. ஆனால், அதற்காக புதிய ஏற்பாட்டிலோ, பழைய ஏற்பாட்டிலோ விண்ணகம் என்பது மனிதர் காணும் சாதாரண வானம் என்றும், விண்ணகங்கள் என்பது இறைவனின் உறைவிடம் என்றும் பிரித்துப் பொருள் கொள்ள முடியாது. ஆனால், இந்தப் பன்மை பிறகு அடுக்கடுக்காக விண்ணகங்கள் உள்ளன என்று மேற்காசிய மக்கள் எண்ண இட்டுச் சென்றிருக்கலாம் (*காண்க. 2 கொரி 12:2; எபே 4:10*). ஆனால் பொதுவாக, இந்தப் பன்மையை ஒரு கவிதையின் மிகைப்படுத்தும் நடையாகவே நாம் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது (*காண்க. உப 10:14; 1 அர 8:27*). விவிலியம், சடப்பொருள் சார்ந்த வானகமென்றும், ஆன்மீக வானகமென்றும் பிரித்துப் பேசவே இல்லை. ஆனால், நாம் காணக்கூடிய இந்த விண்ணகத்திலேயே கடவுளின் செயல்களையும், அவரின் மறைபொருட்களையும் விவிலியம் காண முயற்சிக்கிறது.

IV. **இறைவன் வாழுமிடமாகிய விண்ணகம்:** தான் வாழுமிடமாக இறைவன், நீரின்மேல் கூடாரம் போல் முதலில் விண்ணகத்தைத் தூண்களின் மீது எழுப்பினார்

(சங் 104:2தொ). அதன்பிறகு மேகங்களின் மீது பறந்து வந்தும் (சங் 68:5. 34; உப 33:26), புயலின் மத்தியிலிருந்தும் தண்ணீர் மேல் தனது மாபெரும் குரலை எழுப்பினார் (சங் 29:3). விண்ணகத்தில் அவரது அரியணை இருக்கின்றது. அங்கமர்ந்து அவர் தனது அரசவையை நடத்துகிறார். அவரது ஆணைகளைப் பூமியின் கடை எல்லைவரை உடனடியாக நிறைவேற்ற விண்ணகச் சேனைகள் இருக்கின்றன (1 அர 22:19; காண்க. எசா 6:1தொ.8; யோபு 1:6-12). உண்மையில் அவரே விண்ணகத்தின் கடவுள் (நெகே 1:4; தானி 2:37).

இந்தக் கூற்றுக்கள் எல்லாம் சிறு குழந்தைகளின் கற்பனையிலிருந்தோ, மிகைப்படுத்தப்பட்ட கவிதைநடையிலிருந்தோ வந்தவை அல்ல. உலகத்தின் உண்மை நிலையிலிருந்து உருவாகிய ஆழ்ந்த, உண்மையாகும். இவை மேலாண்மையான அதிகாரத்தினால் ஆளப்படுகிறது; அவரது முழு அறிவினால் ஊடுருவப்பட்டுள்ளது. கடவுள் விண்ணகத்திலிருந்து ஆட்சி செய்வதால் அரசர்கள் தங்களுக்குள்ளே சதித் திட்டம் தீட்டுவதைக் கண்டு அவர் நகைக்க முடிகிறது (சங் 2:2தொ; காண்க. 11:7). ''அவர் விழிகள் மானிடரைச் சோதித்தறிகின்றன'' (சங் 11:4). அவர் வானங்களின் மேல் மாட்சிமையுடன் இருப்பதால் அவர் நீதியாக நடந்து கொள்கிறார்; சிறப்பாக ஏழையைப் புழுதியினின்று தூக்கி விடுகிறார் (சங் 113:4தொ). வானகத்தில் அமர்ந்திருந்து அவருடைய மக்கள் அனைவருடைய வேண்டுதல்களையும் அவரால் கேட்க முடிகிறது (1 அர 8:30). அவர் நமக்கு மிக அருகில் உள்ள கடவுளாக இருந்தாலும் அவர் தொலைவில்தான் இருக்கிறார் (எரே 23:23தொ); இஃது எப்படிச் சாத்தியமாகும்? அவரது மகிமை பூமியை நிரப்புவதால் மட்டுமன்று (எசா 6:3) உலகில் உள்ள எதுவும் அவரைத் தமக்குள் அடக்கி விட முடியாது; ''வானமும், வான மண்டலங்களும்'' அவரைக் கொள்ள இயலாது (1 அர 8:27).

இவ்வாறு கடவுள் விண்ணகத்தில் உறைதல் அவரது முழுவதும் யாவற்றையும் கடந்து நிற்கும் தன்மையை உணர்த்தினாலும், வானத்தைப் போல எங்கும் நிறைந்திருக்கும் அவரது பிரசன்னத்தையும் அஃது உணர்த்துகிறது. அவர் அருகில் இருக்கிறார், அதே நேரத்தில் தொலைவிலும் இருக்கிறார் என்ற இக்கருத்து ஒன்றுக்கும் மேற்பட்ட இடங்களில் விவிலியத்தில் சுட்டிக்காட்டப்படுகிறது. பெத்தேலில் யாக்கோபு கண்ட ''நிலத்தில் ஊன்றி வானத்தைத் தொட்ட ஏணியிலிருந்து தொடங்கி'' (ஆதி 28:12) எசாயாவினுடையதைப் போன்ற இறைவாக்குகள் வரை இறைவனின் அருகும் அணிமையும் இணைந்து கூறப்படுகின்றன.

''விண்ணகம் என் அரியணை. அவ்வாறிருக்க எத்தகைய கோயிலை நீங்கள் எனக்காகக் கட்டவிருக்கிறீர்கள்?....எளியவனையும் உள்ளம் வருந்துபவனையும் என் சொல்லுக்கு அஞ்சுபவனையும் நான் கண்ணோக்குவேன்'' (எசா 66:1-2; காண்க.57:15).

V. **வானங்களே, பொழியுங்கள்:** இஸ்ராயேலரின் இறைவன் வானங்களை உறைவிடமாகக் கொண்டு மீட்பளிக்கும் இறைவனாகையால், அங்கே அவர் தம் உண்மையோடும் (சங் 119:89தொ), தம் அருளோடும் பிரமாணிக்கத்தோடும் (89:3) வாழ்கிறார். பூமியின்மேல் மீட்பைப் பொழிவதற்கென அங்கே இருக்கின்றார். வானம் இறைவனது மேலாண்மையையும் யாவற்றையும் உள்ளடக்கும் பிரசன்னத்தையும் எடுத்துக் காட்டுவதுபோல், அது பூமியில் பொழியப்பட எப்போதும் தயாராக இருக்கும் மீட்பின் அடையாளமாகவும் உள்ளது. மேலும், வானத்திலிருந்து உயிரளிக்கும் மழையும் பனியுமாகிய ஆசீர்கள் வருகின்றன; இரண்டும் இறைவனது தாராளத் தன்மையையும் கொடையையும் உணர்த்துகின்றன. இவ்வாறு இயற்கை அடையாளமும் வரலாற்று நினைவு கூர்தலும் சேர்ந்து இணைந்து, இஸ்ராயேலின் நம்பிக்கையை விண்ணிலிருந்து இறங்கி வரவிருக்கும் ஒரு நிகழ்ச்

சியை எதிர்பார்க்கச் செய்கின்றன. ''நீர் வானங்களைப் பிளந்து இறங்கி வர மாட்டீரா?'' (எசா 64:1; காண்க. 45:8).

மேலும் ஏனோக்கு (ஆதி 5:24), எலியா (2 அர 2:11) போன்றோரின் விண்ணேற்புகள், மனிதர்களின் மனதை மேலே எழுப்பி, இவ்விருவரும் அனுமதிக்கப்பட்ட இறைவனோடு கொள்ளும் முடிவில்லா ஒன்றிப்பை அங்குத் தேடத் தூண்டின. எசேக்கியேல், செக்கரியா, சிறப்பாகத் தானியேல் போன்ற வெளிப்பாட்டுக் காட்சியாளர்கள், விண்ணக இறைவனிடமிருந்து நாடுகளின் ஊழ் பற்றிய மறைபொருள் வெளிப்பாடுகளைப் பெற்றனர் (தானி 2:28). அக்காலத்திலிருந்து இஸ்ராயேலின் மீட்பு விண்ணகத்தில் எழுதப்பட்டுள்ளது. அங்கிருந்து அஃது இறங்கி வரும். பாழாக்கும் அருவருப்பின் முடிவை வாக்குறுதியளிக்க விண்ணகத்திலிருந்து காபிரியேல் தானியேலிடம் இறங்கி வந்தார் (தானி 9:21தொ) புனித மக்களுக்கு அரசும், ஆட்சியுரிமையும், அரசர்களின் மேன்மையும் அளிக்கப்படுவதற்காக மனுமகன் வானத்தின் மேகங்கள் மீது தோன்றவேண்டும். இறுதியாக, ''கடவுளின் திருமுன் நிற்கும்'' (லூக் 1:19) விண்ணகத்திலிருந்துதான் கபிரியேல் செக்கரியாவிடமும் மரியாளிடமும் அனுப்பப்படுகிறார். ''கடவுளுக்கு மாட்சி உரித்தாகுக! உலகில் அவருக்கு உகந்தோருக்கு அமைதி உண்டாகுக!''என்று பாடிய வான தூதர்கள் விண்ணகத்திற்கு திரும்பிச் செல்கின்றனர் (2:11-15). வான தூதர்களின் இந்தப் பிரசன்னம், இறைவன் வானங்களைப் பிளந்துவிட்டார் என்பதற்கும் அவரே இம்மானுவேல், ''கடவுள் நம்மோடு'' ஆவார் என்பதற்கும் அடையாளமாகும்.

VI. **இயேசு கிறிஸ்து : விண்ணகமே மண்ணுக்கு வந்தது:**

***1. இயேசு விண்ணகத்தைப் பற்றிப் பேசுகிறார்:*** இயேசு அடிக்கடி பயன்படுத்திய சொற்களில் ஒன்று விண்ணகம். ஆனால் இச்சொல், இறை சாராது தானாக இருக்கும் எந்த ஓர் எதார்த்தத்தையும் சுட்டிக் காட்டவில்லை. விண்ணக அரசு பற்றியும், வானகத்தில் கைம்மாறு காத்திருக்கிறதையும் (மத் 5:12), விண்ணகத்தில் ஒருவனது செல்வம் சேர்த்து வைப்பது பற்றியும் (6:20; 19:21) இயேசு குறிப்பிடுகிறார். இத்தகைய சொல் வழக்கு விண்ணகத் தந்தையைப் பற்றிய எண்ணத்திலிருந்து தான் இயேசுவுக்கு வந்திருக்கிறது (மத் 5:16. 45; 6:1:9). எனவே, அனைத்தையும் சூழ்ந்து வற்றாத இரக்கம் காட்டும் (7:11) தந்தையின் காண முடியாத ஆனால், அக்கறையுள்ள பிரசன்னத்தை உணர்த்தும் ஒன்றாக வானகம் இருக்கிறது. இந்தப் பிரசன்னம் தான் வானத்துப் பறவைகளுக்கும் (6:26), நீதியுள்ளோர்க்கும், நீதியற்றோர்க்கும் (5:45) உணவளிக்கிறது; பாதுகாப்பும், வாழ்வும் தருகிறது. மனிதர்கள் இத்தகைய இறைப்பிரசன்னத்தை உணர முடியாத குருடர்களாக இருப்பதால் இயேசுகிறிஸ்து தான் பார்த்ததையும், அறிந்ததையும் மனிதர்களுக்கு எடுத்துச் சொல்ல வந்துள்ளார் (யோவா 3:11). இவ்வாறு விண்ணகம், ஒரு வாழ்கின்ற வெற்றிகொள்ளும் மெய்ம்மை ஆகிறது. எனவே, விண்ணக அரசு மண்மீது வருகை தருகின்றது.

***2. இயேசு விண்ணகத்திலிருந்து வருகிறார்:*** இயேசு விண்ணகத்தைப் பற்றிப் பேசும் பொழுது அவர் தனக்குத் தொடர்பற்ற ஒன்றைப் பற்றிப் பேசவில்லை. மாறாக, நமக்குப் பூமி எவ்வளவு தெளிவாக உள்ளதோ, அவ்வளவு அவருக்குப் பழக்கமானதும், அவருடையதும், அவருக்கு ஆழமானதும் முக்கியமானதுமான ஓர் உண்மையைப் பற்றிப் பேசுகிறார். அவர் விண்ணரசின் மறைபொருட்களைக் கொண்டிருக்கிறார் (மத் 13:11). நம் அனைவருக்கும் விண்ணகத்தில் தந்தையாக இருப்பவரைத் தனது சொந்தத் தந்தையாக அவர் அறிந்திருக்கிறார் (12:50; 16:17; 18:19). இவ்வளவு தெளிவாக விண்ணகத்தைப் பற்றிப் பேச முடிகிறதென்றால் அவர் விண்ணகத்திலிருந்து தான் வந்திருக்க வேண்டும். ''விண்ணகத்திலிருந்து இறங்கி வந்துள்ள மானிட மகனைத் தவிர வேறு

எவரும் விண்ணகத்திற்கு ஏறிச் சென்ற தில்லை'' (யோவா *3:13*). அவர் தமது ஊழை விண்ணகத்தில் கொண்டிருக்கும் மானிட மகனாகவும், விண்ணகத்திற்குத் திரும்பிச் செல்ல விண்ணிலிருந்து வந்த மனிதனாகவும் இருப்பதால் (யோவா *6:62*), அவர் செயல்பாடுகளும் விண்ணகத்தைச் சேர்ந்தவையாகவே இருக்கின்றன. அவரது மிக முக்கிய வேலையான அவருடைய உடலும் இரத்தமும் ஆகிய பலி விண்ணகத் தந்தை வானகத்திலிருந்து தந்த அப்ப மாகிறது (*6:35-58*). அதுவே அழியா வாழ்வு தருவது. ஏனெனில், அது விண்ணகத் தந்தையின் வாழ்வும், வானக வாழ்வும் ஆகும்.

**3. விண்ணுலகில் நிறைவேறுவதுபோல் மண்ணுலகிலும் நிறைவேறுக!**

இயேசு விண்ணகத்திலிருந்து வந்து மீண்டும் விண்ணகத்திற்குச் செல்கிறாரெனில், கிறிஸ்தவர்கள் ஏற்கெனவே அவரோடு விண்ணகத்தில் இருக்கின்றனர் என்பதும் தந்தை அவர்களை ''உயிர்தெழச் செய்து விண்ணுலகில் அமரச் செய்துள்ளார்'' என்பதும் உண்மையெனில் (எபே *2:6*; கொலோ *2:12; 3:1-4*) இயேசுவின் வேலை இன்னும் தொடர்கிறது என்பதாகும். இந்த வேலை எவ்வாறு தொடர்கிறது? மண்ணையும் விண்ணையும் எக்காலத்திற்கும் ஒன்றாகச் சேர்ப்பதாலும், இறையரசு வந்து விண்ணகத்தில் நிறைவேறுவது போலவே மண்ணகத்திலும் இறைவனின் திருவுளம் நிறைவேறச் செய்வதாலும் (மத் *6:10*) இயேசுவின் வேலை தொடர்கிறது. அதன் விளைவாக மண்ணுலகிலோ, விண்ணுலகிலோ அனைத்தும் அவரில் ஒப்புரவாகும் (கொலோ *1:20*). அவரது உயிர்ப்பின் போது மண் விண் ஆகியவற்றில் உள்ள அனைத்து அதிகாரங்களும் அவருக்குத் தரப்பட்டதாலும் (மத் *28:18*), விண்ணகத் தூயகத்துக்குள் தனது இரத்தப் பலியினால் நுழைந்துவிட்டதாலும் (எபி *4:14; 9:24*) அவர் விண்ணகத்திற்குமேல் உயர்த்தப்பட்டு (*7:26*) விண்ணகத் தந்தையின் வலப்புறம் வீற்றிருக்கிறார். அங்கு அவர் விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையிலான ஒரு புதிய உடன்படிக்கையை ஏற்படுத்தியுள்ளார் (*9:25*). அவர் தனது அதிகாரத்தைத் திருச்சபைக்குக் கொடுத்தபோது அது மண்ணகத்தில் உறுதி செய்வதை விண்ணகத்திலும் நிறைவேற்றி வைப்பதாக வாக்களிக்கிறார் (மத் *16:19; 18:19*).

**4. விண்ணகம் திறந்தது:** இயேசுவில் நாம் பெற்ற ஒப்புரவு ஒரு சில அடையாளங்களால் உறுதிப்படுத்தப்படுகிறது. வானகம் அவர்மேல் திறக்கிறது (மத் *8:16*). தூய ஆவி இறங்கி வருகிறார் (யோவா *1:32*). அதனால், அவரது சீடர்களும் அதே அனுபவத்தைப் பெறுகின்றனர். மாபெரும் பேரிரைச்சலுடனும் (அ.ப. *2:2*), ஒளி நிறைந்த காட்சியுடனும் (*9:3; 10:11*) விண்ணகம் திறக்கப்பட அவர்கள்மேல் தூய ஆவி இறங்கிவருகிறார். ''விண்ணகம் அவர்கள்மேல் திறக்கப்படுகிறது; தூய ஆவி இறங்கி வருகிறார்''. ''வானம் திறந்திருப்பதையும், கடவுளின் தூதர்கள் மானிட மகன் மீது ஏறுவதையும் இறங்குவதையும் காண்பீர்கள்'' என்ற தனது வாக்குறுதியைக் கிறிஸ்து நிறைவேற்றுகிறார் (யோவா *1:51*).

VII. **விண்ணகத்திற்கான நம்பிக்கை:**

''விண்ணகமே நமது தாய்நாடு''. அங்கிருந்து மீட்பர் வருவாரெனக் காத்திருக்கிறோம். ஆண்டவராகிய கிறிஸ்துவே அந்த மீட்பர். அவர் அனைத்தையும் தமக்குக் கீழ்ப்படுத்தவல்ல ஆற்றலால் தாழ்வுக்குரிய நம் உடலை மாட்சிக்குரிய தம் உடலின் சாயலாக உருமாற்றுவார் (பிலி *3:20-21*). இப்பகுதி கிறிஸ்தவன் நம்பும் விண்ணகத்தின் எல்லாத் தன்மைகளையும் உள்ளடக்குகிறது. கிறிஸ்தவர்கள் விண்ணகத்தை ஒரு நகரமாக, தங்களுக்காக ஏற்படுத்தப்பட்ட அன்புச் சமூகமாக, புதிய எருசலேமாக இருக்கும் என நம்பிக்கையோடு எதிர்பார்க்கின்றனர் (திருவெளி *3:12; 21:3.10*தொ). நாம் அவாவும் தங்குமிடம் நமக்கு விண்ணகத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது (2 கொரி *5:11*). நாம் விண்ணகத்துக்குச் சொந்தமானவர்கள். விண்ணகம் ஒரு புதிய அகிலமாகும் (*21:5*). இது நமது அகிலத்

தைப்போல ஒரு புதிய வானகமும், புதிய பூமியும் அடங்கியதாகும் (2 பேதுரு 3:13; திருவெளி 21:1). இது நமது அகிலத்தோடு வேறுபடுத்தப்படுகிறது. ஏனெனில், அங்கு சாவில்லை, புலம்பலில்லை, அழுகை யில்லை, நோயில்லை (திருவெளி 21:4); மாசுபட்டது எதுவும் இராது (21:27); இரவு இராது (22:5). இந்த விண்ணகம் தோன்றும் போது முதலில் தோன்றிய மண்ணகமும் விண்ணகமும் மறைந்து போகும் (திரு வெளி 21:1; 20:11; 6:14).

விண்ணகமே நமது புதிய உலகமாகும். ஊன் ஆன வார்த்தை மற்றும் அவருடைய உடலின் உடைமையதெல்லாம் எக்காலத் திற்கும் நம்முடையதாகும். இனி வார்த்தை மனுவுருவானவருடையதுதான். ஆண்டவ ருடன் ஒன்றிப்பு இல்லாமல் நமக்கு எந்த விண்ணகமும் இருக்க முடியாது (1 தெச 4:17; 2 கொரி 5:8; பிலி 1:23). கடவுளும் தந்தையுமானவரிடம் அனைத்தையும் ஒப் படைக்கும் பொருட்டு, அவர் அனைத்தை யும் தமக்குக் கீழ்ப்படுத்துகிறார் (1 கொரி 15:24-28).

## வான தூதர்கள் (ANGELS)

I. வானதூதர் என்ற பெயர் தன்மையைச் சுட்டிக்காட்டும் பெயரன்று; மாறாக, ஒரு செயலைக் குறிக்கிறது. செய்தியைக் கொண்டு வருபவர், 'தூதர்' என்பதே இதன் பொருள். ''ஊழியம் செய்யவும் மீட்பை உரிமைப்பேறாகப் பெறுபவர்களுக்குப் பணிபுரியவும் அனுப்பப்பட்ட ஆவிகளே'' வானதூதர்கள் (எபி 1:14). அவர்கள் மறை பொருளான ஓர் உலகை அமைக்கின்றனர். நமது சாதாரண பார்வைக்கு வான தூதர்கள் தோன்றுவதில்லை. வானதூதர்களின் பிரசன் னம் என்றுமே விவிலியத்தில் எந்தப் பிரச்சனையையும் ஏற்படுத்தியதில்லை. ஆனால் இதற்குமேல், வானதூதர்கள் பற்றிய போதனை வளர்ச்சியடைந்ததைப் பார்க்கும்போது, அவர்களைப் பற்றிப் பேசும் விதத்திலும், அவர்களைச் சித்திரிக் கும் விதத்திலும் சமய அடையாளங்களுக் குக் குறைவேயில்லை என்பது தெளிவாகும்.

II. **பழைய ஏற்பாடு:-**

**1. யாவேயின் தூதுவர்களும், தூதரும்:** மேற்காசியப் புராணங்களிலுள்ள பொதுத் தன்மையை எடுத்துக் கொண்டு, ஒரே இறைவனின் வெளிப்பாட்டிற்கு ஏற்றவாறு மாற்றியமைத்துப் பழைய ஏற்பாடு இறை வனை ஒரு மேற்காசிய அரசனாகச் சித்திரிக் கிறது (1 அர 22:19; எசா 6:1தொ). இந்த அரசரின் அவையில் உள்ள உறுப்பினர் களும் அவரது பணியாளர்களே (யோபு 4:18); அவர்கள் தூயவர்கள் எனவும் (யோபு 5:1; 15:15; சங் 89:6; தானி 4:10), இறைவனின் மைந்தர்கள் எனவும் அழைக் கப்படுகின்றனர் (சங் 29:1; 89:7; உப 32:8). அவைகளில் கெருபுகள் அவரது அரியணை யைத் தாங்கி நிற்கின்றனர் (சங் 80:2; 99:1); அவரது தேரை இழுக்கின்றனர் (எசே 10:1); அவரது வாகனங்களாகத் திகழ்கின்றனர் (சங் 18:10); அவரது ஆட்சிப் பகுதியில் அன்னியரின் தலையீடும் பாழாக்கும் தன்மையும் இல்லாமல் பாதுகாக்கின்றனர் (ஆதி 3:24). நெருப்பு வடிவில் உள்ள செராபியர் அவரது புகழைப் பாடுகின்றனர் (எசா 6:3). அவர்களில் ஒருவர்தான் எசாயா வின் தொடக்கக் காட்சியில் அவரது உதடு களைத் தூய்மைப் படுத்துகிறார் (6:7).

ஆலய உருவங்களில், கெருபுகள் இரக் கத்தின் இருக்கையைத் தம் இறக்கையால் மூடியவாறு உள்ளனர் (யாத் 25:18தொ; 1 அர 6:23-29). இவ்வாறு ஒரு விண்ணகச் சேனை முழுவதும் (1 அர 22:19; சங் 148:2; நெகே 9:6) இறைவனது புகழைப் பாடுகின்றது. இந்தச் சேனையைக் கொண்டு அவர் உலகை ஆள்கிறார்; தமது திருவுளத்தை நிறைவேற்றுகிறார் (சங் 103:20-21). இச்சேனை விண்ணையும் மண்ணையும் இணைக்கும் பாலமாக அமைகின்றது (ஆதி 28:12).

ஆனால், இந்தப் புதிரான தூதர்கள் அல்லாமல், பழங்கால விவிலிய நிகழ்ச்சி யுரைகள் யாவேயின் ஒரு தூதரைப் பற்றி யும் பேசுகின்றன (ஆதி 16:7; 22:11; யாத் 3:2; நீதி 2:1). இவர் யாவேயிடமிருந்து வேறுபட்டவர் அல்லர்; பூவுலகில் காணக்

கூடிய வடிவில் தம்மை வெளிப்படுத்து கிறார் (*ஆதி 16:13; யாத் 13:2*). அணுக முடியாத ஒளியில் வாழ்கிற இறைவன் (*1 திமொ 6:16*) தமது முகத்தைப் படைப்பு கள் பார்க்க அனுமதிக்க முடியாது (*யாத் 33:20*). மனிதர் அதன் மறைபொருளான பிரதிபலிப்பைத்தான் உணரமுடியும். பழைய வாசகங்களில் காணப்படும் யாவே யின் தூதர் பழமைமிக்க இறையியலை அளிக்கப் பயன்படுகிறார். இந்த இறை யியல், ''ஆண்டவரின் தூதர்'' என்ற பெய ரில் புதிய ஏற்பாட்டில் கூட மற்றும் திருச்சபைத் தந்தையார் நூல்களிலும் தனது சுவடுகளை விட்டுச் சென்றுள்ளது (*மத் 1:20.24; 2:13.19; லூக் 1:11; 2:9*). ஆயினும், வெளிப்பாட்டின் வளர்ச்சிக்கேற்ப, இறை வன் வானதூதர்களைத் தமது சாதாரண தூதர்களாகப் பயன்படுத்துவதைக் காண் கிறோம்.

**2. தூதர்களைப் பற்றிய கோட்பாட்டின் வளர்ச்சி:**

தொடக்கத்தில் எவ்வித வேறுபாடுமின்றி நல்ல, தீயபணிகள் இரண்டுமே வானதூதர் களுக்குச் சாற்றிக் கூறப்பட்டன (*காண்க. யோபு 1:12*). கடவுள் நல்ல தூதர்களை இஸ்ராயேலைக் காக்க அனுப்புகிறார் (*யாத் 23:20*); ஆனால், சாவுக்குத் தீமையின் தூதர்களை அனுப்புகிறார் (*சங் 78:49*). இவர்கள் அழிவைக் கொணர்பவர்கள் (*யாத் 12:23; காண்க. 2 சாமு 24:16தொ; 2 அர 19:35*). யோபு நூலில் வரும் சாத்தான் கூட இறைவனின் அவையில் பங்கெடுப்ப தாகக் கூறப்படுகிறது (*யோபு 1:6-12; 2:1-10*). ஆனால், நாடு கடத்தலுக்குப்பின் வானதூதுவர்கள் தனிப்பட்ட சிறப்பான பணிக்கு உரியவர்களாகக் கருதப்படுகிறார் கள். அவர்களின் அலுவலுக்கேற்ப ஒழுக்கப் பண்பைப் பெறுகின்றனர். நன்மையின் வானதூதர்கட்கும், சாத்தான் மற்றும் தீமை யின் தூதுவர்கட்குமிடையே பெரும் எதிர்ப் பும், போராட்டமும் தொடர்ந்து இருந்து கொண்டேயிருக்கிறது (*செக் 3:1தொ*). இத்தகைய பிளவுபட்ட ஆன்மீக உலகு பற்றிய கருத்து மெசபொத்தாமியா மற்றும் பாரசீக நாடுகளால் மறைமுகமாகப் பாதிக்கப்பட்டது. இரானிய - பாபி லோனியக் கலப்பு மதத்தை எதிர்த்துப் போராடுவதற்கு ஏதுவாக, யூத தத்துவம் தனது முந்தைய கோட்பாட்டை வளர்த்துக் கொண்டது. தனது கடுமையான ஒரே இறையொருமைக் கோட்பாட்டிலிருந்து விலகாமல், அது கடன் வாங்கிய அடை யாளங்களைச் சிலசமயம் பயன்படுத்தியது. தனது வானதூதர் உலகை எடுத்துக் கூறு வதைத் திட்டம் செய்தது. இவ்வாறு பாரசீக நாட்டு வானதூதர் கோட்பாட்டைப் போலவே தோபியா நூல் ஆண்டவரின் முகத்தின் முன் நிற்கும் ஏழு வானதூதுவர் களைப் பற்றிப் பேசுகிறது (*தோபி 12:15; காண்க. திருவெளி 8:2*). ஆனால், வான தூதர்களின் பணி மாறவில்லை. அவர்கள் மனிதர்களைக் காக்கின்றனர் (*தோபி 3:17; சங் 91:11; தானி 3:49தொ*); மனிதரின் செபங்களைக் கடவுளிடம் எடுத்துச் செல் கின்றனர் (*தோபி 12:12*); நாடுகளின் முடிவை நிர்ணயிப்பதில் தலைமை தாங்கு கின்றனர் (*தானி 10:13.21*). எசேக்கியேல் காலத்திலிருந்தே வானதூதர்கள்தான் இறை வாக்கினர்கள் காணும் காட்சியின் பொருளை அவர்கட்கு விளங்க வைக்கின்ற னர் (*எசே 40:3தொ; செக் 1:8தொ*). இஃது இறுதியில் வெளிப்பாட்டு இலக்கிய நடை யாக உருவாகிறது (*தானி 1:5-19; 9:21தொ*). அவர்கள் செய்யும் பணியைக் குறிக்கும் விதத்தில் அவர்கள் பெயர்கள் அமை கின்றன. இரப்பாயேல் என்றால் 'கடவுள் குணமாக்குகிறார்' (*தோபி 3:17; 12:15*), காபிரியேல் என்றால் கடவுளின் வீரர் என வும் (*தானி 8:16; 9:21*), மிக்கேல் என்றால் ''கடவுளுக்கு நிகர் யார்''? (*தானி 10:13.21; 12:1*) எனவும் பொருள் கொள்ளப்படுகின் றன. அனைவருக்கும் தலைவராக விளங் கும் வானதூதரிடம் இஸ்ராயேல் சமூகம் ஒப்படைக்கப்படுகின்றது (*தானி 10:13. 21; 12:1*). மேலே கூறப்பட்ட உண்மைகள் வெளிப்பாட்டுப் போலி நூல்களிலும் (ஏனோக்கு நூல்) ராபிகளின் இலக்கியங்களி லும் விரிவாக்கப்பட்டன. இந்நூல்கள் இவற்றை ஓரளவு ஒன்றியைந்த விதத்தில்

திட்டம் செய்ய முயன்றுள்ளன. இவ்வாறு வானதூதுவர்களின் உலகம் பற்றிய மற்றும் மனிதர்கள் உலகில் அவர்களின் பிரசன்னம் பற்றிய கோட்பாடுகள் தொடர்ந்து உறுதியாகப் பேசப்படுகின்றன. ஆனால், அவற்றைப் பற்றி பழைய ஏற்பாடு கூறும் விதமும், அவர்களை வகைப்படுத்தும் விதமும், ஓர் அடையாள மொழியில் அமைந்திருப்பதால் அதனை விளங்கிக் கொள்வதுதான் பிரச்சனைக்குரியதாக உள்ளது.

III. **புதிய ஏற்பாடு:** *1* அக்கால யூத மரபு மொழியிலிருந்தும், திருநூல்களிலிருந்தும், அக்கால யூதப்பாரம்பரியத்திலிருந்தும் அதே மரபு மொழியை எடுத்தாள்கிறது புதிய ஏற்பாடு. எனவே, புதிய ஏற்பாடு அதிதூதர்களைப் பற்றியும் *(1 தெச 4:16; யூதா 9)*, கெருபுகளைப் பற்றியும் *(எபி 9:5)*, அரியணை சூழ்வோர், ஆட்சிபுரிபவர், தலைமை ஏற்போர், அதிகாரம் தாங்குவோர் ஆகியோர் பற்றியும் *(கொலோ 1:16)*, வலிமை மிக்கோர் பற்றியும் *(எபே 1:21)* பேசுகிறது. இத்தகைய படிமரபுடைய அமைப்பை எடுத்துக்கூறுவது இடத்திற்கு ஏற்றாற்போல் மாறுபடுகின்றது. இது நிலையான போதகப் பண்பைக் கொண்டிருக்கவில்லை. ஆனால், பழைய ஏற்பாட்டைப் போலவே இவற்றின் அடிப்படை வேறொன்றை மையமாகக் கொண்டுள்ளது; அதாவது, இயேசு கிறிஸ்துவின் வெளிப்பாட்டை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

***2. வானதூதர்களும் கிறிஸ்துவும்:*** இயேசுவின் சிந்தனையில் வானதூதரின் உலகமும் பங்குபெறுகின்றது. நற்செய்தியாளர்கள் இயேசு வானதூதர்களோடு கொண்ட நெருக்கமான தொடர்பு பற்றிப் பேசுகின்றனர் *(மத் 4:11; லூக் 22:43)*. இயேசு வானதூசர்களைச் செயல்பாடு மிக்க உண்மையான உயிர்களெனக் கூறுகிறார். அவர்கள் மனிதரைக் காக்கும் அதே நேரத்தில் தந்தையின் முகத்தையும் பார்க்கின்றனர் *(மத் 18:10 இணை)*. அவர்கள் வாழ்வு தசையால் அடிமைப்படுத்தப்பட முடியா வாழ்வாகிறது *(மத் 22:30இணை)*. தந்தைக்கு மட்டுமே தெரியும் இறுதித் தீர்ப்பின் நாள் அவர்கட்குத் தெரியாவிடினும் *(மத் 24:36)* வானதூதர்களே அதனை நிறைவேற்றுபவர்களாக இருப்பர் *(மத் 13:39.49; 24:31)*. இப்போதிருந்து பாவிகள் மனந்திரும்பும்போது ஏற்படும் மகிழ்வில் தந்தையுடன் வானதூதர்களும் பங்கு பெறுவர் *(லூக் 15:10)*. இவை அனைத்துமே மரபுச் சிந்தனைகளோடு ஒத்துப் போகின்றன.

அவரது வருங்கால மகிமையில் அவரை விவரிக்கும் மறைபொருளான உருவமான மனுமகனோடு வாதூதர்களுக்குள்ள தொடர்பை இயேசு தெளிவுபடுத்துகிறார். மனுமகன் மகிமையோடு இறுதிநாளில் வரும்போது வானதூதர்கள் புடைசூழ வருவார் *(மத் 25:31)*; முற்காலத்தில் யாக்கோபின் ஏணியில் நிகழ்ந்ததுபோல் *(ஆதி 28:10)* அவர்கள் அவர்மீது இறங்குவர் *(யோவா 1:51)*. வானதூதர்களை அனுப்பி, தேர்ந்துகொள்ளப் பெற்றவர்களை ஒன்று சேர்க்கவும் *(மத் 24:31இணை)*, இறையரசினின்று ஒதுக்கப்பட்டோரை விலக்கவும் *(மத் 13:41தொ)* கட்டளையிடுவார். அவரது பாடுகளின் நேரத்திலிருந்து வானதூதர்கள் அவருக்குப் பணிபுரியக் காத்திருக்கின்றனர். எனவே, எப்பொழுதும் அவர்களை இயேசு உதவிக்கு அழைக்கலாம் *(மத் 26:53)*.

தொன்மையான கிறிஸ்தவச் சிந்தனை வானதூதர்கள் அவருக்குத் தாழ்ந்தவர்களே என்று குறிப்பிடும்போது இயேசுவின் சொற்களையே விரிவாக்குகின்றது. அவர் மனுவுருவெடுத்ததால் வானதூதரின் நிலையைவிட, தாழ்நிலையை அடைந்தாலும் *(எபி 2:7)*, இறைமகன் என்ற முறையில் அவைகளின் ஆராதனைக்குரியவராகிறார் *(எபி 1:6தொ; காண்க. சங் 97:7)*. ஆனால், அவரது உயிர்ப்புக்குப்பின் அவர்கள் அனைவரையும் இறைவன் அவருக்குக் கீழ்ப்படுத்துகிறார் *(எபே 1:20தொ)*. அவர்கள் அவராலும், அவரிலும், அவருக்காகவும் படைக்கப்பட்டவர்கள் *(கொலோ 1:16)*. இப்பொழுது வானதூதர்கள் அவரது ஆட்சியை ஏற்றுக்கொள்கின்றனா *(திரு*

வெளி 5:11தொ; 7:11தொ); இறுதி நாளில் அவரது வழிக்காப்பாளர்களாகச் செயல்படு வார்கள் (2 தெச 1:7; திருவெளி 14:14-16; 1 தெச 4:16). இவ்வாறு வானதூதர்களின் உலகம் அது தியானித்த மறைபொருளான கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படுத்தப்படுகிறது (1 திமொ 3:16; காண்க. 1 பேதுரு 1:12).

**3. வானதூதர்களும் மனிதர்களும்:** இந்த முன்னோக்கில் பழைய ஏற்பாட்டில் வான தூதர்கள் மனிதருக்குச் செய்த அதே உதவி களை இங்கும் தொடர்ந்து செய்வதை நாம் பார்க்கிறோம். விண்ணகத்திலிருந்து இறைச் செய்தி வரும்போது அதன் மறைபொரு ளான தூதுவர்களாக அவர்கள் விளங்குகின் றனர். காபிரியேல் தூதர் இரண்டு முன்னறி விப்புச் செய்திகளையும் தருகிறார் (லூக் 1:19.26). இயேசு பிறந்தபோது விண்ணகத் தூதரணி ஒன்று தென்படுகிறது (லூக் 2:9-14). உயிர்ப்பை அறிவிப்பது வானதூதர் தான் (மத் 28:5தொ). அத்துடன் அப்போஸ் தலர்கள் இயேசுவின் விண்ணேற்றத்தைப் புரிந்துகொள்ள உதவுவதும் வானதூதர்கள் தான் (அ.ப. 1:10தொ). மீட்புப் பணியில் கிறிஸ்துவின் உதவியாளர்கள் என்ற அள வில் (எபி 1:14), மனிதர்களின் பாதுகாப் புக்கு வானதூதர்கள் உறுதியளிக்கிறார்கள் (மத் 18:10; அ.ப. 12:15); புனிதர்களின் செபத்தைக் கடவுளிடம் எடுத்துச் செல் கிறார்கள் (திருவெளி 5:8; 8:3); நீதிமான் களின் ஆன்மாவை விண்ணகத்துக்கு அழைத்துச் செல்கிறார்கள் (லூக் 14:22); திருச்சபையைக் காப்பதற்குத் தங்கள் தலை வர் மிக்கேலின் தலைமையில் எதிரியான சாத்தானோடு தொடர்ந்து போராடுகிறார் கள் (திருவெளி 12:1-9).

இவ்வாறு விண்ணக உலகிற்கும் மண் ணக உலகிற்கும் ஒரு நெருங்கிய பிணைப்பு இருக்கிறது (திருவெளி 4:8-11). அத்துடன் விண்ணகத்தில் வானதூதர்கள் என்றுமுள வழிபாட்டைக் கொண்டாடுகின்றனர் (திரு வெளி 4:8-11). அஃதோடு நடக்கும் திருச் சபையின் வழிபாடு ஒன்றிணைக்கப்பெறு கிறது. இயல்பு கடந்த சக்தியின் பிரசன்னங் கள் நம்மைச் சூழ்கின்றன. திருவெளிப்பாட் டின் காட்சியாளர், வழக்கால் புனிதப்பட்ட மரபுமுறை மொழியில் இப்பிரசன்னத்தைச் செயல்முறையான விதத்தில் எடுத்துக்கூறு கிறார். இது நமது மரியாதையைக் கோரு கிறது (காண்க. யோசு 5.13தொ; தானி 10:9; தோபி 12:16). இதனை நாம் ஆரா தனை என நினைத்துக் குழம்பிக் கொள்ளக் கூடாது (திருவெளி 22:8தொ). விவிலியத் தில் காணப்படும் இத்தெளிவான கூற்று களுக்கு அப்பால், சுற்றியிருந்த புறவின உலகிலிருந்து பெரும்பாலும் கடன் வாங்கப்பட்டு விவிலிய மொழியில் புறக் கூறுகளைப் புகுத்தப் பயன்படும் இந்த உருவமைப்புகளின் பொருள் என்ன என்ற கேள்வி ஒருவரில் எழுவது இயல்பு. வானதூதர்களைப் பற்றிய இந்தக் கோட் பாடு மிக எளிதாகத் தீர்க்கப்படக்கூடிய ஒன்றன்று. ஆனால், கடவுளைச் சூழ்ந்து அவரது திருவுளத்தை நிறைவேற்றும் ஆன் மீக உலகின் தன்மையும் அமைப்பும் எத்தகையதாக இருந்தாலும் சரி, மீட்பின் இடைநிலையாளரான கிறிஸ்துவுக்குப் பணிவதன் வழியாகவே, படைப்பு மற்றும் மீட்பு ஆகிய இறைத்திட்டத்திற்குள் ஆன் மீக உலகு இணைக்கப்படுகிறது. இந்த அடிப்படையில்தான் இந்த வானதூதர் பற்றிய சிந்தனை நம் விசுவாசச் சூழலில் இடம் பெறுகிறது.

## வான மண்டலம் (HIGHEST HEAVENS, HEAVEN OF HEAVENS)

குறுகிய நோக்கில் வானத்தைக் குறிக்க எபிரேயர் இதைப் பயன்படுத்தினர். இது பூமியின் கூரை எனவும் கருதப்பட்டது. தொங்கவிடப்பட்டிருக்கும் வான மண்ட லம் (1 அர 8:27; 2 நாள் 2:6; 6:13) என்பது பூமியின் குவிகை மாடம் போல் உள்ள ஓர் அமைப்பு எனக் கருதப்பட்டது. மெசபொத்தாமியா மற்றும் பிற்கால யூத நாட்டுப்புறப் பாடல்களில் விண்ணகம் ஒன்றன்மேல் ஒன்றாக அமைந்த பல அடுக்குகள் அல்லது நிலைகளைக் கொண் டிருந்ததாகக் கருதப்பட்டது. இந்த அடுக்கு களில் வான மண்டலம் என்பதுதான் மிக உயரத்தில் உள்ள கடைசி அடுக்கு எனக் கருதப்பட்டது.

இதைத்தான் அக்காதியர்கள் 'அனுஷன் வானம்' என்றழைத்தனர். அங்குதான் அவர்களின் தலையான கடவுளான 'அனு' குடிகொண்டிருப்பதாகக் கருதப்பட்டது.

இதை உப *10:14* ''விண்ணின் வானங்கள்'' என்றும், நெகே *9:6* ''விண்வெளி வானங்கள்'' என்றும் மொழிபெயர்க்கின்றன.

**வானம்** *(FIRMAMENT)*

ஆதி *1:6-8*-இல் இச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இங்கும் மற்ற இடத்திலும் வானவெளிக்குக் கீழ் உள்ள நீரையும், வானவெளிக்கு மேல் உள்ள நீரையும் பிரிப்பதற்காக உண்டாக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இச்சொல்லின் எபிரேயத்தொடர் அடித்து மெல்லியதாக ஆக்கப்பட்ட உலோகத் தகட்டைக் குறிக்கிறது (காண்க. யாத் *39:3*; எண் *17:3*; எரே *10:8*). மேலும், கண்ணாடி போன்ற மேற்பரப்பைக் கொண்ட ஆகாயம் என்று கருதுதல் என்று முன்பு சொன்ன பொருளையே திரும்பச் சொல்கிறது. இக்கருத்து யோபு *37:18*-இல் திரும்ப வருகிறது. ''வெண்கல வானம்'' என்ற கோமேருடைய சொற்களில் இக்கருத்து சிறந்த மறுவடிவம் பெறுகிறது.

பழங்கால இஸ்ராயேலில் வானம் ஒரு குவிகை மாடம் அல்லது கூடாரமாகவும் (சங் *104:2*), அதிலிருந்து விண்மீன்களும் கோள்களும் தொங்கவிடப்பட்டிருந்தன வாகவும் (ஆதி *1:14-17*) கருதப்பட்டிருக்கலாம். மழை மற்ற விண்ணக ஆசீர்களும் வானங்களின் மதகுகள் வழியாக பூமியின் மேல் பொழியப்படலாம் (ஆதி *7:11*; *2* அர *7:2*; சங் *78:23-24*). யோபு *26:13*-இல் ஆகாயத்தில் வீசும் காற்று, வான்வெளியை ஒளிர்விக்க, கடவுள் அனுப்பிய அவரது மூச்சாகும் என்று சித்திரிக்கப்படுகிறது.

**வானவில்** *(RAINBOW)*

சூரிய ஒளி மழைத்துளிப் படலத்தில் பட்டுப் பிரதிபலிப்பதால் ஏழு வண்ணக் கலவை கொண்ட ஒரு வில் போன்ற வடிவம் பார்ப்பவர்க்குத் தோன்றும். இதன் பெயர்தான் வானவில். புயல் ஓய்ந்த பின்னே மேகங்களுக்கிடையே தோன்றுவதால் இது கடந்து போன புயலின் ஒரு அடையாளமாக இருக்கிறது. இந்த வில் தான் யாவே தனது மின்னல் அம்புகளைச் செலுத்தியபின் விட்டுச் சென்றது (புல *2:4*; அப *3:9-11*); மேலும், இஃது இனிமேல் தண்ணீரால் உலகை அழிக்கவே மாட்டோம் என யாவே செய்து கொண்ட உடன்படிக்கையின் அடையாளமாகவும் இருக்கிறது (ஆதி *9:8-17*). இதன் அழகு அச்சத்தோடும் வியப்போடும் நோக்கப்பட்டது (சீரா *43:11*). விண்ணகத்தின் காட்சிகளுள் இதுவும் ஒன்றாகக் கருதப்பட்டது (எசே *1:28*; திருவெளி *4:3*; *10:1*).

# வி

### விசாரணை (TRIAL)

I. விவிலியத்தில் பல இடங்களில் விசாரணை காணப்படுகின்றதென்றால், பல தடவைகள், இறைவனே குற்றம் சாட்டப்பட்டவராக, நீதிபதியாக, வாதியாக, வக்கீலாகத் தோன்றுகிறார் என்றால், இதற்குக் காரணம் மற்றவர்களை விட இஸ்ராயேலர்கள் சச்சரவுகளிலும் நீதி விசாரணைகளிலும் கைதேர்ந்தவர்கள் என்பதற்காக அன்று, விவிலியத்தின் இறைவன் நீதியையும் நேர்மையையும் விரும்புபவராக இருப்பதால் தான். இறைவன் தம் சாயலாக மனிதனைப் படைத்ததில், அவன் நன்றியோடு ஏற்றுக் கொள்ளுதலையும், சுதந்தரத்தில் நிலைத்து நிற்பதையும், உண்மையில் அவரோடு ஒன்றித்திருப்பதையும் இறைவன் எதிர்பார்த்தார். மனிதன் பாவம் செய்த பின்னும், இறைவன் தம் படைப்புப் பற்றியும் அவனது அறிவைப் பற்றியும் நம்பிக்கை இழந்து விடவில்லை. அவன் நிராகரிக்கப்பட்டாலும், அவனைத் தேடிச்செல்ல முனைவார். அவனை இறைவன் தண்டிக்க வேண்டும் என்றால், அவனுக்குச் செவி மடுக்காமலும், அவன் தவறில் உள்ளான் என்றும் தாம் செய்வது சரியானதென்றும் அவனை உணரச்செய்யாமலும் இறைவன் அவனைத் தண்டிப்பதில்லை. இவ்வாறு இறைவன் வெற்றி பெறுவது உண்மையின் வலிமையால் மட்டுமே. ஒரு விசாரணை என்றால், இரண்டு குழுக்களிடையே பூசல்களும் வழக்காடுதலும் இருக்க வேண்டும். அதே சமயத்தில் ஒரு சில அடிப்படை விதிகளில் இருவரும் ஒத்துப்போக வேண்டும். விசாரணை நடந்து, தீர்ப்புக் கூறாத வரையில் இருவரும் ஒப்புரவாவதற்கு இன்னும் வாய்ப்பிருக்கிறது. அப்படியே தீர்ப்பு ஏற்கெனவே வழங்கப்பட்டு விட்டாலும், முந்தைய வாக்குவாதங்களின் ஒளி நிலைத்து நிற்கிறது; ''அனைவருடைய வாயையும் அடைக்கிறது'' (*உரோ 3:19*); இறைவனது நீதியை ஒளிரச் செய்கிறது.

உடன்படிக்கையின் சாசனம் மற்றும் அறிவிப்பு என்ற அளவில், பழைய ஏற்பாடு முழுவதும் இறைவனுக்கும் அவர்தம் மக்களுக்கும் இடையே நிகழும் வாதங்களைப் பற்றியே முழுவதும் ஈடுபாடு காட்டுகிறது. முன் கேள்விப்பட்டிராத முறையில், இறைவன் செயலால் இயேசுவின் வருகை இந்த வாதத்தை முடிவுக்குக் கொண்டு வருகிறது. பாவத்தைக் குழப்பி, விசுவாசத்தால் தம் மகனோடு வெறுமனே ஒன்றிக்கொள்வதால், பாவிகள் தங்களை ஏற்புடையவர்களாக்கிக் கொள்ள இறைவன் வாய்ப்பளிக்கிறார். நிகழ்ச்சிகளின் இந்தத் திடீர்த் திருப்பம் புதிய வடிவம் எடுக்கிறது. இனிமேல், இயேசுவின் விசாரணை பற்றியும், அதில் இயேசு கொள்ளும் பங்குக்கு ஏற்பவும், மனிதனின் விசாரணை இறைவன் முன் நிகழும்.

### II. பழைய ஏற்பாட்டில் இறைவனும் அவர்தம் மக்களும் விசாரணையில்:

#### *1. இறைவனோடு பாவியின் விசாரணை:*

இறைவனோடு விசாரணையில் இறங்குவதும், அவர் பொய் சொல்வதாகவும் தீமை செய்வதாகவும் சந்தேகப்படுவதும் அடிப்படைச் சோதனையாகும். இந்தச் சோதனையைப் பாம்பு ஏவாளின் உள்ளத்திலே எழச் செய்தது; ''நீங்கள் சாகவே மாட்டீர்கள்;..... நீங்கள் கடவுளைப்போல் நன்மை தீமை அறிவீர்கள் என்று கடவுளுக்குத் தெரியும். அவர் உங்களை ஏமாற்றுகிறார்'' (*ஆதி 3:4-5*). பாவியான ஆதாமின் எதிர்ப்பதில்: ''என்னுடன் இருக்கும்படி நீர் தந்த அந்தப் பெண் மரத்தின் கனியை எனக்குக் கொடுத்தாள்; நானும் உண்டேன்''. எல்லாத்தீமையும் உம்மிடமிருந்து வருகின்றது (*3:12*). இதுவே பாலைவனத்தில் இஸ்ராயேலின் இறவாத பாவமாகும். எகிப்திலிருந்து தங்களைக் காப்பாற்றியவர் இறைவனே என்பதை மறந்து அவரது ஆற்றல் மற்றும் பிரமாணிக்கம் பற்றி சந்தேகம் கொண்டனர். செங்கடலைக் கடந்தபின், மெரிபா நிகழ்ச்சி இதற்கு ஓர் எடுத்துக்காட்டு (*யாத் 17:7*). மெரிபா என்ற சொல்லினுடைய வேர்ச்சொல்லின் பொருள் சோதனை, சோதித்தல் என்பதாகும். இந்த நிகழ்ச்சி,

''கேடுகெட்ட தலைமுறையின்'' (உப 32:20) எல்லாத் தவறுகளையும், யாவேக்கு எதிராக அவருடைய மக்கள் கொண்டு வந்த எல்லா முறையீடுகளையும் (எரே 2:29) அறிவிக்கிறது. விசுவாசம் இங்கு எழும் பிரச்சனையாகும். விசுவசிக்க மறுப்பது இறைவனுக்கு எதிராகத் தங்களுக்கே காரணம் கூறிக்கொள்வதும், அவரைச் சந்தேகப் படுவதும், அவரைச் சோதிப்பதும் ஆகும்.

**2. தம் மக்களோடு இறைவனின் விசாரணை:** சந்தேகப்படுவதை இறைவனால் தாங்கிக் கொள்ள முடியாது. அஃது அவரது அன்புக்கு அவமதிப்பாகும். எனவே, அவரது முறையில் இறைவன் தம் மக்களோடு வழக்காடுகிறார் (ஓசே 4:1; 12:3; எசா 3:13; மீக் 6:2; எரே 2:9). இந்த விசாரணை, இறைவாக்கினர் பாரம்பரியப்படி உடன் படிக்கையையும், அது விசுவாசத்திற்கு அளிக்கும் அடையாளங்களையும் அடிப்படையாகக் கொண்டதாகும். தாம் தேர்ந்தெடுத்த மக்களோடுதான் இறைவன் விசாரணையில் ஈடுபடுகிறார். ஆயினும், பிரபஞ்சத்தின் மத்தியில் உடன்படிக்கை வெளிப்படுத்தப் படும் அளவிற்கு ஏற்ப இந்த விசாரணை ''மக்களினங்களுக்கு எதிரான வழக்காகவும்'' (எரே 25:31), போலிக் கடவுள்களுக்கு எதிரான வழக்காகவும் விரிவாகிறது (எசா 4:21-24; 43:8-13; 44:6தொ).

இந்த விசாரணை, ''மலைகள், குன்றுகள், மண்ணுலகின் நிலையான அடித்தளங்கள்'' (மீக் 6:1தொ; காண்க. சங் 50:4) அடங்கிய மிகவும் ஆரவாரமான, மிகவும் பரந்த பின்னணியில், அளிக்கப்படும் பகிரங்கமான விளக்கமாகும். உலகம் முழுவதுமே சாட்சி கூற அழைக்கப்படுகிறது. கேதாரும், சைப்ரசின் தீவுகளும் (எரே 2:10), எருசலேமில் குடியிருப்போரும், யூதாவில் வாழ்வோரும் (எசா 5:3) நீதி வழங்க அழைக்கப் படுகின்றனர்.

இங்கு இறைவன், தம் சாட்சிகளோடு (எசா 43:10; 44:8) குற்றம் சாட்டுபவராகவும் (சங் 50:7.21; ஓசே 4:1-5), எல்லா வழிவகைகளும் தீர்ந்து விட்ட நிலையில் தன் ஆற்றலின் இறுதியிலுள்ள பலியாளாகவும் (மீக் 6:3தொ; எரே 2:9; எசா 43:22-25) காட்சி அளிக்கிறார். இஸ்ராயேல் தனது வாதங்களை எடுத்து முன்வைக்குமாறு கேட்கிறார் (எசா 1:18; 43:26; மீக் 6:3). ஆனால், ஏமாற்றும் மறுதலிப்புகள் மட்டுமே அவருக்குக் கிடைத்தன (எரே 2:35). ஒருவரும் அவருக்குப் பதில் கூற முடியாது. ''உயிர் வாழ்வோர் எவரும்'' அவர்முன் ஏற்புடையவராக முடியாது (சங் 143:2). தண்டனையாக மட்டுமே இருக்கக்கூடிய தீர்ப்பை அவர் கூற வேண்டியதுமட்டுமே எஞ்சியுள்ளது (ஓசே 2:4; 4:1தொ; எரே 2:9.29). இஃது அவர் மட்டுமே பேசமுடியும் என்பதையும், அவர் பக்கமே நேர்மையிருக்கிறது என்பதையும் தெளிவாக்குகிறது (எசா 41:24; 43:13தொ; 44:7; சங் 50:7.21; 51:6). ஆயினும், தண்டனையின் மத்தியிலேயே மற்றொரு உபாயம் கைக்கொள்ளப் படுகிறது; ''வாருங்கள், இப்பொழுது நாம் வழக்காடுவோம்.... உங்கள் பாவங்கள் கருஞ்சிவப்பாய் இருக்கின்றன; எனினும், உறைந்த பனியைப்போல் அவை வெண்மையாகும்'' (எசா 1:18; காண்க. ஓசே 2:16-25).

**3. இறைவனோடு யோபின் விசாரணை:** இறைவனைக் குற்றம் சாட்டுதல் தலையாய பாவம் என்றால், இஃது அடிக்கடி மனிதனுக்கு ஏற்படும் சோதனையாகும் என்று ஏற்றுக்கொள்ள வேண்டும். இதை நேர்மைப்படுத்த முடியவில்லையென்றால், மனதைக் குழப்பும் இறைவனுடைய வழிகளின் காரணமாக, இஃது அழிவுக்கு இட்டுச் செல்லலாம். உலகின் துன்பங்களும் தீமைகளும் இறைவனைப் பிரதிவாதியாக ஆக்கவில்லையா? இந்தச் சோதனைக்கு உச்சநிலையான எடுத்துக்காட்டு யோபு நூலாகும். இறைவனுக்கு எதிரான விசாரணையாக இந்நூல் அமைந்துள்ளது. யோபு அனுபவிக்கும் துன்பங்களின் தீமையெல்லாம் இறைவனிடமிருந்தே வருவதால் (யோபு 6:4; 10:2; 16:12; 19:21), இறைவன் தம்மையே எண்பிப்பது அவரது கடமையில்லையா? இறைவனுக்கு எதிராக

நேர்மையைத் தன் பக்கம் கொண்டிருப்பதாகக் கற்பனை செய்வது மடத்தனமாகும் என்பதை யோபு நன்கு அறிவார் *(9:1-13)*. ஆனால், யோபுவால் ''இறைவனுக்குப் பதிலுரைக்க'' முடிந்தால் *(9:14)*, தன் நடத்தையை இறைவன் முன் எண்பிக்க முடிந்தால் *(13:1தொ)*, வெறுமனே அவர் முன் வர முடிந்தால், தனது வழக்கு வெற்றி பெறும் என்றும் *(23:3-7)*, தனது ''மீட்பர்... தன்னைப் பாதுகாப்பார்'' *(19:25தொ)* என்றும் யோபு அறிவார். இங்கு வழக்காடுதலில் பயன்படும் மொழி காணப்படுகிறது. ஆனால், அவரது முறையீடு விசாரணையாக மாறும் மற்றும் அவரது ஐயப்பாடு குற்றம் சாட்டுதலாக மாறும் சரியான கட்டத்தில் யோபு நிறுத்திக் கொள்கிறார். அவரால் இறைவனைப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால், இறைவனைக் குற்றம் சாட்டும் சோதனைக்கு இடம் கொடுக்கவில்லை. இறைவன் தன் பக்கம் இருப்பதாகவும் தான் அவரது ஊழியன் என்பதையும் மறந்து விடவில்லை.

இறைவனிடம் வெல்ல முடியாத கேள்விகளைக் கேட்பது மனிதனுக்கு இயல்பு *(காண்க. எரே 12:1)*. அத்தகைய கேள்விகளைக் கேட்டு யோபு பாவம் செய்யவில்லை. ஆயினும், தன் கேள்விகளைக் கைவிடக் கற்றுக்கொள்வது அவசியமாயிற்று. இறைவனே இடையீடு செய்கிறார். மனிதன் தன் குருட்டுத்தனத்தைப் புரிந்து கொண்டு *(38:1தொ)*, தன் கேள்விகளையெல்லாம் திரும்பப் பெற்றுக்கொள்கிறான் *(42:6)*. எந்தத் தீர்ப்பையும் எடுத்துக்கூறும் தேவையின்றி, இறைவனது பிரசன்னமே எல்லாவற்றையும் விளக்கப் போதுமானதாக உள்ளது.

III. **கிறிஸ்து இயேசுவில் இறைவன் விசாரணையை முடிக்கிறார்:** பாவத்தினால் தோற்றுவிக்கப்பட்டு, இறைநீதியால் பின் தொடரப்பட்ட விசாரணை இயேசு கிறிஸ்துவில் இறுதிநிலையை அடைகிறது. இறைவன் அளிக்கும் விடை வியப்பளிக்கும் துணிகரம் கொண்டதாகும்; ஆனால், அறிவு மற்றும் சட்டம் ஆகியவற்றின் கோரிக்கைகளைக் கடுமையாகக் கடைப்பிடிக்கிறது. அவை இல்லாமல் விசாரணை பொருளற்றதாகும். இங்குப் பாவம் விட்டுக் கொடுத்தலின்றித் தீர்ப்பிடப்படுகிறது. எல்லா வடிவங்களிலும் எந்த ஆட்சியிலும், இவை புற இனத்தாரைச் சார்ந்ததாகவோ, யூத இனத்தாரைச் சேர்ந்ததாகவோ இருந்தாலும், இயேசுவோடு கொள்ளும் சந்திப்பில், பாவம் மிகக்கொடிய தீமையாகவும், இறைவனுக்குக் காட்டும் அடிப்படையான நன்றியின்மையாகவும், மனிதனின் சீர்செய்ய முடியாத அழிவாகவும் தோன்றுகிறது *(உரோ 1:18-3:20)*. இயேசுவின் நற்செய்தி வழியாக வெளிப்படும் புனிதம் ஒவ்வொரு உள்ளத்திலும் மறைந்திருக்கும் பொய்யைத் திறந்துகாட்டுகிறது *(3:4)*; அனைவருடைய நாவையும் அடைக்கிறது *(3:19)*; உண்மையுள்ள இறைவனின் வெற்றியை ஒளிரச்செய்கிறது *(3:4)*.

ஆனால், இந்த வெற்றியே ஒரே சமயத்தில் மனிதனது மீட்பு ஆகும். பாவி தனது வழக்கை இழக்கிறான்; தோல்வியை ஏற்கிறான். தனது சொந்த ஏற்புடைமையின் பாதுகாப்புகளைக் கைவிடுகிறான் *(பிலி 3:9)*. அதன் விளைவாக இயேசு கிறிஸ்துவில் இறைவனது மன்னிப்பு, அருள், மற்றும் நீதியில் விசுவாசம் கொள்கிறான்; அதனால், தனது ஏற்புடைமையையும் *(உரோ 3:21-26)*, விலையையும், இறைவன் முன் மதிப்பையும் பெறுகிறான். இயேசு கிறிஸ்துவிலும் அவரது இறப்பின் மீட்பு ஆற்றலிலும் விசுவசிப்பது, ஒரே சமயத்தில், இந்த இறப்புக்குப் பொறுப்பான தன்னுடைய சொந்தப்பாவங்களை மறுப்பதும் தமது எதிரிகளுக்காகத் தமது ஒரே மகனை மரணத்துக்குக் கையளிக்கச் செய்யக்கூடிய இறைவனது புரிந்து கொள்ள முடியாத அன்புக்கு உரியவன் என்பதை *(5:6-10; 8:32)* ஏற்றுக்கொள்வதும் ஆகும். அன்புக்கும் நன்றிக்கும் தன்னைக் கையளிப்பதால் இறைவனுக்கு எதிரான எந்த வாதத்தையும் குற்றச்சாட்டையும் மனிதன் கைவிடுகிறான். விசாரணை முழு ஒப்புரவில் முடிகிறது.

IV. **இயேசுவின் விசாரணை:**

*1.* இந்த ஒப்புரவு விசுவாசத்தில் மட்டுமே நிகழ்கிறது. இந்த விசுவாசத்தின் பொருள் கிறிஸ்துவும், அவரது இறப்பும் உயிர்ப்புமாகும். இறைவனைக் குற்றம் சாட்ட நம்மில் எழும் தன்னிச்சையான இயக்கத்தை மேற்கொள்ள, கிறிஸ்துவில் அவரது தந்தையால் கையளிக்கப்பட்ட அன்பார்ந்த மகனை நாம் காண வேண்டும். ஆனால், பாவி இறைவனின் தாராளத் தன்மையை ஏற்க மறுக்கிறான்; அவர் அனுப்பியுள்ளவரை நிராகரிக்கிறான். அவரது தூதின் சான்றாக அவர் செய்யும் அருஞ்செயல்களில் இறைநிந்தனையைக் காண்கிறான். கயாபா முன்னும், எருசலேமின் மற்ற நீதிமன்றங்கள் முன்னும் நடந்த விசாரணை, முதல் பாவத்தின் காலமுதல் இறைவனுக்கு எதிராக நடத்தப்படும் விசாரணையின் நிறைவான மாதிரியாகும். இறைவனிடம் தன்னையே கையளிக்க முடியாமல், அவரின் அன்பினால் பெற்றுக் கொண்ட எல்லாச் சான்றுகளையும் அவருக்கு எதிராகவே மனிதன் திருப்புகிறான்.

*2.* பாடுகளை எடுத்துக்கூறும் எல்லா நற்செய்தி விவரிப்புகளும் விசாரணையின் மையத்தில் ஒரு தீர்வான கேள்வியைக் கொண்டுள்ளன. இயேசு கிறிஸ்து, உலக மீட்பின் பொறுப்பைப் பெற்றுள்ள இறைவனின் தூதரா? *(மத் 26:63 இணை; 27:11இணை; யோவா 19:7).* இந்த விசாரணை விவரிப்புகள் இறைவனோடு இயேசு கொண்டுள்ள பிணைப்புப் பற்றிய உறுதியை வலியுறுத்த முயல்கின்றன. இந்தப் பிணைப்பை மனிதனிடமிருந்தோ இறப்பிலிருந்தோ வரும் எந்தச் சக்தியும் முறிக்க முடியாது; அவருடைய எதிரிகள் தம்மிடையே நிலவிய அவர்கள் உண்மையை ஏற்க மறுத்தது, யூத விசாரணையில் நிகழ்ந்த பொய்ச்சாட்சிகள் *(மத் 26:59)*, பிலாத்துவின் கோழைத்தனம் *(27:18-24)*, ஏரோதின் வீண்பெருமை *(லூக் 23:8-11)*, பரபாவுக்கு முன்னுரிமை அளித்தல் *(23:25)*, மேலும் இறைவன் அவரை விரும்பிக் கையளித்து *(அ.ப. 2:23; மத் 27:46)* பாவத்தின் ஆட்சிக்குக் கைவிட்ட சூழ்நிலைக்குக் *(லூக் 22:53; யோவா 14:30தொ; 2 கொரி 5:21)* காட்டும் சாக்குப்போக்கு *(லூக் 23:34; அ.ப. 3:24)* ஆகிய யாவும் இச்சக்திகளாக இருக்கலாம்.

*3.* யோவானின் நற்செய்தி இயேசுவின் விசாரணையில் எடுத்துக் காட்டுத் தன்மையை இன்னும் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறது. இந்த வரலாறு அவரது பொது வாழ்க்கை முழுவதும் வெளிப்படுகிறது. எருசலேமில் அவர் செய்த முதல் அருஞ் செயலுக்குப்பின் ''யூதர்கள் அவரைத் துன்புறுத்தினார்கள்'' *(யோவா 5:16)*; ஏற்கெனவே, அவரைக் கொல்ல முயற்சித்தனர் *(5:18; காண்க. மாற் 3:6)*. யூதர்களுக்கும் அவருக்குமிடையில் நடந்த தர்க்கங்கள் விசாரணை வடிவிலேயே உள்ளன. அவற்றில் தனது சான்றுகளையும் யோவானுடைய சான்றுகளையும் *(யோவா 5:33)*, தனது அடையாளங்களையும் செயல்களையும், இறுதியாக இறைவனுடைய தனித்தன்மையுடைய சாட்சியையும் *(5:31-37; 8:13-18)* எடுத்துக் கூறுகிறார். ஒத்தமை நற்செய்திகளில் காணப்படுவதுபோல், இந்த விசாரணையிலும் இயேசுவின் இறை மற்றும் மெசியா ஆட்தன்மையும், இறைமகன் என்ற பட்டமும் ஆகிய அதே உண்மைகள் *(5:18; 8:25தொ; 10:22-38; 19:7)* போராடி நிலைநாட்ட வேண்டிய நிலையில் உள்ளன.

*4.* இயேசுவின் விசாரணையை மறுபரிசீலனை செய்வதே திருச்சபையின் முதல் பொதுச் செயலாக உள்ளது. அப்படி மறுபரிசீலனை செய்வதே அதன் நிலையான தூதாக உள்ளது. இயேசுவை இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழச் செய்ததில், இறைவன் தமது நீதியைப் பகிரங்கமாக எடுத்துக்காட்டியுள்ளார்; அவரது எதிரிகளைக் கலங்கடித்துள்ளார். அவர்கள் சிலுவையில் அறைந்தவரை ''ஆண்டவரும் மெசியாவும்'' ஆக ஆக்கியுள்ளார் *(அ.ப. 2:36)*. ஆயினும், ஆற்றலின் வெளிப்பாட்டுக்குப் பதிலாக உயிர்ப்பை விசுவாசத்திற்கும் மனந்திருப்புதலுக்கும் உரிய கோரிக்

கையாக்கி, இறைவன் தமது வெற்றியை மன்னிப்பின் வெற்றியாக ஆக்கியுள்ளார். பாவிகள்மேல் இறைவன் கொள்ளும் வெற்றியும், இந்த வெற்றி பாவிகளுக்குக் கொண்டு வரும் மீட்புமாகிய இரட்டைச் செய்தி, புதிதாகத் தோன்றிய திருச்சபையின் போதகத்தில் முக்கியமான செய்தியாகும் *(அ.ப. 2:36.38; 3:13.19; 4:10.12; 5:30*தொ; *10:39*தொ.*43)*. இஃது உரோமையருக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் காணப்படும் பவுலின் வெளிப்படையான இறையியலோடு துல்லியமாக ஒத்துப்போகிறது.

கிறிஸ்தவன் உலகுக்கு அளிக்கும் சாட்சியம் இத்தகையதே. எருசலேமில் அப்போஸ்தலர்களின் தூதைப்போல் உலகம் இறைவனுக்கும் கிறிஸ்துவுக்கும் எதிராகத் தொடர்ந்து செய்யும் விசாரணையின் அநீதியை உலகுக்கு எடுத்துக்காட்டுவதே கிறிஸ்தவனின் தூதாகும். கிறிஸ்தவன் நீதிமன்றங்களிடம் ஒப்படைக்கப்படுவதும், அயலாரால் குற்றம் சாட்டப்பட்டுக் கையளிக்கப்படுவதும் இயல்பானதே *(மாற் 13:9.13* இணை*)*. கிறிஸ்துவின் சீடர்களை உலகம் வெறுப்பதும் துன்புறுத்துவதும் *(யோவா 15:18*தொ*)*, அவர்கள் உலகமனைத்திற்கும் இரக்கமற்ற முறையில் வேடிக்கையாதலும் *(1 கொரி4:9)* தவிர்க்க முடியாததாகும். ''அவர்கள் கொண்டிருக்கும் நம்பிக்கைக்கு விளக்கம் கூறும்படி யாராவது கேட்டால் தக்க விடை பகர எப்போதும் தயாராக இருக்க வேண்டும்'' *(1 பேதுரு 3:15)*. ஆனால், இந்த விசாரணை அவர்களுடையதன்று; அஃது கிறிஸ்துவினுடையதாகும். அவர்தான் பின்தொடரப்படுகிறார். அவருக்கு அவர்கள் சாட்சியம் கூற வேண்டும். ஆகவே, இந்தச் சாட்சியம் அவர்களுடையதன்று; அது பரிசுத்த ஆவியினுடையதாகும் *(மற் 13:1)*. வெல்ல முடியாத துணையாளரான பரிந்துரையாளர், கிறிஸ்தவர்களின் சொல்லாலும் வாழ்வாலும், உலகத்தின் அநீதியையும், இயேசு கிறிஸ்துவின் நீதியையும் விசுவாசிகளுக்கு வெளிப்படுத்தி உலகம் கொண்டுள்ள கருத்துகள் தவறானவை'' எனக் காட்டுவார் *(யோவா 16:8-11)*.

## விசுவாசம் *(FAITH)*

I. *1.*விவிலியத்தின்படி விசுவாசமே சமய வாழ்வு அனைத்திற்கும் ஊற்றும் மையமும் ஆகும். காலத்தின் இறைவன் செயலாற்றும் திட்டத்திற்கு விசுவாசத்தால் மனிதன் பதில் அளிக்க வேண்டும். ''விசுவசிக்கிற யாவருக்கும் தந்தையான'' *(உரோ 4:11)* ஆபிரகாமின் அடிச்சுவட்டில், பழைய ஏற்பாட்டு எடுத்துக்காட்டான ஆள்கள் விசுவாசத்தில் வாழ்ந்து இறந்தனர் *(எபி 11)*. இந்த விசுவாசத்தை ''இயேசு நிறைவு பெறச் செய்கிறார்'' *(12:2)*. ''விசுவசித்தவர்களும்'' *(அ.ப. 2:44)*, ''விசுவசிப்பவர்களுமே'' *(1 தெச 1:7)* இயேசுவின் சீடர்களாவர்.

*2.* விசுவாசத்தைக் குறிக்க எபிரேயத்தில் சொற்கள் பல பயன்படுகின்றன. அவை விசுவாசியின் ஆன்மீக மனநிலையைப் பிரதிபலிக்கின்றன. அவற்றில் இரு வேர்ச் சொற்கள் முக்கியமானவை. ஒன்று ''ஆமன்'' (காண்க. ஆமென்). இது திண்மையையும் உறுதியையும் பொருளாகச் சுட்டுகிறது. மற்றது ''பாற்றா'' என்ற சொல்லாகும். இது பாதுகாப்பையும் நம்பிக்கையையும் பொருளாகச் சுட்டுகிறது. கிரேக்கச் சொற்றொகுதி பல்வேறுபட்டவையானாலும், கிரேக்கச் சமயத்தில் விசுவாசத்திற்கு இடமே இல்லை என்று கூறலாம். எழுபது நூல் விவிலியத்தைக் கிரேக்க மொழியில் மொழி பெயர்த்தபோது, விசுவாசத்தைக் குறிக்க பொருத்தமான கிரேக்கச்சொல் கிடைக்கவில்லை. ''பாற்றா'' என்ற எபிரேய வேர்ச்சொல்லின் பொருளை உணர்த்த ''எல்பிஸ்'', ''எல்பிசோ'', ''பெப்போயிதா'' (elpis, elpizo, pepoitha) ஆகிய சொற்களையும், ''ஆமன்'' என்ற சொல்லின் பொருளை உணர்த்த ''பிஸ்திஸ்'', ''பிஸ்தேயோ'', ''அலேத்தேயா'' (pistis, pisteo, aletheia) ஆகிய சொற்களையும் பயன்படுத்தியது. புதிய ஏற்பாட்டில் பிற்காலக் கிரேக்கச் சொற்களில் அறிவு சார்ந்த பண்பு முதன்மை பெறுகிறது. சொல்லாய்வு, விவிலியத்தில் விசுவாசத்திற்கு இரு கோணங்களைக் காட்டுகிறது. ஒன்று, ''பிரமாணிக்கமுள்ள'' ஆளின்பால் காட்டும் நம்பிக்கை. இது முழு

மனிதனையும் ஈடுபடுத்துகிறது. மற்றது, காணாத உண்மைகளின்பால் (எபி 11:1), சொற்களால் அல்லது அடையாளங்களால் உணர்த்தும் அறிவு இயக்கமாகும்.

**3. விசுவாசிகளின் தந்தை ஆபிரகாம்:** கல்தேயாவில் ''மற்றத் தெய்வங்களுக்கு ஊழியம்'' செய்தவரின் மகனான ஆபிரகாமை அழைத்து (யோசு 24:2; காண்க. யூதி 5:6தொ) யாவே ஒரு நாட்டையும் பெரிய இனத்தையும் வாக்களித்தார் (ஆதி 12:1தொ). இவை நிறைவேறும் என்ற நம்பிக்கைக்கு இடம் இல்லாதபோதும் (உரோ 4:19), ஆபிரகாம் ''ஆண்டவர் மீதும்'' (ஆதி 15:6) அவரது சொல்லிலும் நம்பிக்கை கொண்டார்; அழைப்பை ஏற்றார். அந்த வாக்குறுதியில் தன் வாழ்வைத் தொடங்கினார். சோதனை நாளில் வாக்குறுதியின் பயனான தம் ஒரே மகனையும் பலியாக்குமளவுக்கு (ஆதி 22) அவரது விசுவாசம் வலிமை வாய்ந்ததாக இருந்தது. உண்மையில் இறைவனின் சொல் அதன் பலனைவிட அதிக உண்மை கொண்டது. இறைவன் பிரமாணிக்கமுள்ளவர் (காண்க. எபி 11:11); எல்லாம் வல்லவர் (உரோ 4:21).

இது முதல் ஆபிரகாம் விசுவாசியின் மாதிரியாகத் திகழ்ந்தார் (சீரா 44:20). உண்மையான இறைவனையும் (சங் 47:10; காண்க. கலா 3:8), அவரது மகனையும் (யோவா 8:31-41.56) கண்டுபிடிப்பவர்களையும், இறைவனிடமும் அவரது வார்த்தையிலும் மட்டும் தங்கள் மீட்பைக் காண்பவர்களையும் (1 மக் 2:52-64; எபி 11:8-19) ஆபிரகாம் தம் வாழ்வில் முன்னறிவிக்கிறார். ஒரு நாள் ஆபிரகாமுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதி அவரது வழித்தோன்றலான (கலா 3:16; உரோ 4:18-25) இயேசுவின் உயிர்ப்பில் நிறைவேறும். அப்போது, ஆபிரகாம் ''பல இனத்தாருக்கும் தந்தையாவார்'' (உரோ 4:17தொ; ஆதி 17:5); விசுவாசத்தால் இயேசுவோடு ஒன்றிக்கப்படும் அனைவருக்கும் தந்தையாவார்.

II. **பழைய ஏற்பாடு:**

**1. விசுவாசம், உடன்படிக்கையின் கோரிக்கை:** ஆபிரகாமின் இறைவன் எகிப்தில் துன்புறும் தம் மக்களைச் சந்திக்கிறார் (யாத் 3:16); மோசேயை அழைத்து அவருக்குத் தம்மை வெளிப்படுத்துகிறார்; இஸ்ராயேலை அதன் நாட்டிற்கு அழைத்துச் செல்வதில் அவரோடு இருப்பதாக வாக்களிக்கிறார் (3:1-15). ''கண்ணுக்குப் புலப்படாத இறைவனைக் கண்ணால் பார்ப்பவர் போல'' மோசே விசுவாசத்தால் இறைவனது திட்டத்திற்குப் பதில் அளிக்கிறார்; காலப்போக்கில் பலவீனமானவர் ஆனாலும் (எண் 20:1-12; சங் 106:32தொ), ''தளராமல் நிலைத்து நின்றார்'' (எபி 11:23-29). இடையாளர் என்ற அளவில், மோசே இறைவனது திட்டத்தை மக்களுக்கு அறிவிக்கிறார். அவர் செய்த அருஞ்செயல்கள் அவருடைய பணி இறைவனிடமிருந்து வருகிறது என்று சுட்டிக்காட்டுகின்றன. முழு நம்பிக்கையுடன் (எண் 14:11; யாத் 10:9) ''ஆண்டவரிடமும் அவர் அடியார் மோசேயிடமும் நம்பிக்கை வைக்க'' (யாத் 14:31; எபி 11:29) இஸ்ராயேலும் அழைக்கப்படுகிறது.

இஸ்ராயேல் வரலாற்றில் உடன்படிக்கை இறைவனது ஒப்பந்தத்தைத் திருநிலைப்படுத்துகிறது. இதற்குப் பதிலாக, இஸ்ராயேல் இறைவனின் வார்த்தைக்குப் பணியக் கோரப்படுகிறது (யாத் 19:3-9). ''யாவேக்குச் செவிமடுப்பது'' முதலில் ''அவரில் விசுவாசம் கொள்வதாகும்'' (உப 9:23; சங் 106:24தொ). இனி, இஸ்ராயேலின் வாழ்வும் சாவும் அதன் சுதந்தரமான பிரமாணிக்கத்தைச் சார்ந்திருக்கும் (உப 30:15.20; 28; எபி 11:33); அவர்களை இறைமக்களாக்கும் விசுவாச இணக்கத்தைக் (ஆமென்) கடைப்பிடிப்பதில் அடங்கியிருக்கும் (காண்க. உப 27:9-26). பாலைவனத்தைக் கடத்தல், வாக்களிக்கப்பட்ட நாட்டைக் கைப்பற்றுதல், கானானில் குடியேறுதல் ஆகியவை அடங்கிய வரலாற்றில் இஸ்ராயேலர் எண்ணற்ற முறை பிரமாணிக்கம் தவறுகிறார்கள். எனினும், இக்காலத்தைப்பற்றி ''விசுவாசத்தி

னால்தான் எரிகோவின் மதில்கள் விழுந் தன.... கிதியோன், பாராக்கு, சிம்சோன், இப்தாகு, தாவீது ஆகியோரைப் பற்றிக் கூற எனக்கு நேரமில்லை'' (எபி *11:30* தொ) என்று சுருக்கமாகக் கூறலாம்.

உடன்படிக்கை வாக்குறுதிகளின்படி (உப *7:17-24; 31:3-8*) இஸ்ராயேலர் உடன்படிக் கைக்குப் பிரமாணிக்கமாய் இருந்த போதெல்லாம் யாவேயின் எல்லாம் வல்ல பிரமாணிக்கம் இஸ்ராயேலர் பணியில் எப் போதும் வெளிப்படுத்தியது. இஸ்ராயேலர் வரலாற்றில் கடந்த காலத்தில் நடந்த அருஞ்செயல்களை, சிறப்பாக யாத்திரை நிகழ்ச்சியை, கண்ணுக்குப் புலப்படாத இறைவனின் செயலாக அறிவிப்பது, இஸ் ராயேலுக்கு விசுவாச அறிக்கையாகும் (உப *26:5-9*; காண்க. சங் *78; 105*). இந்த விசுவாசம் தலைமுறை தலைமுறையாக, சிறப்பாக பெரும் ஆண்டு விழாக்களின் போது (யாத் *12:26; 13:8*; உப *5:20*), கையளிக்கப்பட்டது. இவ்வாறுதான் மக்கள் தங்கள் இறைவனின் அன்பை உயிருள்ள விதத்தில் நினைவு கூர்ந்தனர் (சங் *136*).

***2. இறைவாக்கினரும் இன்னலுக்குட் பட்ட இஸ்ராயேலின் விசுவாசமும்:*** இஸ்ரா யேலர் நாடுகடத்தப்படும் வரை, அவர்கள் வாழ்வில் ஏற்பட்ட இன்னல்கள் யாவும் அவர்கள் விசுவாசத்திற்குக் கடும் சோதனை யாய் அமைந்தன. யாவேயில் மட்டும் கொண்ட விசுவாசத்தை அழித்த சிலை வழிபாட்டையும் (ஓசே *2:7-15*; எரே *2:5-13*), வழிபாட்டின் கோரிக்கைகளை அழித்த புறச்சடங்குகளையும் (ஆமோ *5:21*; எரே *7:22*தொ), ஆயுத பலத்தால் மீட்பைத் தேடுதலையும் (ஓசே *1:7*; எசா *31:1*தொ) இறைவாக்கினர்கள் கண்டனம் செய்தனர்.

விசுவாசத்தை வலியுறுத்திய தூதுவர் களில் மிகச் சிறந்தவர் எசாயா ஆவார் (எசா *30:15*). அவர் அச்சத்தில் மூழ்கியிருந்த ஆகாசை யாவே மீது அமைதியான நம் பிக்கை கொள்ள அழைக்கிறார் (*7:4-9; 8:5-8*). ஏனெனில், தாவீது வீட்டாருக்கு அளித்த வாக்குறுதிகளை யாவே காப்பாற்று வார் (2 சாமு *7*; சங் *89: 21-38*). யாவே எருசலேமைக் காப்பாற்ற வழி செய்த விசுவாசத்தால் எசேக்கியாவைத் தூண்டுகி றார் (2 அர *18-20*). விசுவாசத்தில்தான் இறைவனின் புரியாப் புதிரான ஞானத்தைக் கண்டு கொள்கிறார் (எசா *19:11-15; 29:13—30:6*; காண்க. *1* கொரி *1:9*தொ).

எருசலேம் கைப்பற்றப்பட்டு, நாடு கடத் தப்பட்டபோது, இஸ்ராயேலரின் விசுவா சம் மிகவும் சோதனைக்கு உள்ளாகியது. ''ஏழைகளும் வறியோரும்'' (எசா *41:17*) ஆன நிலையில், இஸ்ராயேலர் தங்கள் அவல நிலைக்கு யாவேயின் வலிமையின் மையே காரணம் என்று குறைகூறி, வெற்றி கொண்ட பாபிலோனியாவின் கடவுள்கள் பால் திரும்பும் அளவுக்குக்கூட சோத னைக்கு உள்ளாயினர். அப்போது இஸ்ரா யேலின் இறைவனுடைய (எரே *32:27*; எசே *37:14*), உலகைப் படைத்தவருடைய (எசா *40:28*தொ; காண்க. ஆதி *1*), வரலாற்று ஆண்டவருடைய (எசா *41:1-7; 44:24*தொ), அவரது மக்களின் பாறை ஆகியவருடைய (*44:8; 50:10*) எல்லாம் வல்லமையை இறைவாக்கினர் பறைசாற்றுகின்றனர். சிலைகள் யாவும் ஒன்றுமில்லாதவை (*44:9-20*). யாவேயைத் தவிர வேறு கடவுள் இல்லை (*44:6*தொ; *43:8-12*; காண்க. சங்*115:7-11*). நம்பிக்கைக்கு இடமேயில்லை என்று தோன்றும்போதும்கூட, யாவே முழு நம்பிக்கைக்கு உரியவர் (எசா *40:31; 49:23*).

**3. இறைவாக்கினர்களும் வருங்கால இஸ் ராயேலின் விசுவாசமும்:**

***அ) வரவிருக்கும் உண்மையாகிய விசுவா சம்:*** பொதுவாக நோக்குமிடத்து, விசுவா சங் கொள்ளும்படி இறைவாக்கினர்கள் விடுத்த வேண்டுகோளை இஸ்ராயேல் ஏற்கவில்லை (எரே *29:19*). இவ்வேண்டு கோளை ஏற்க வேண்டுமென்றால், ஒரு காலத்தில் மோசேயை நம்பியது போல் (யாத் *14:31*), மக்கள் முதலில் இறைவாக்கி னர்களை நம்ப வேண்டும் (தோபி *14:4*). இக்காலக் கட்டத்தில், இஸ்ராயேலர் இரு வகை இடையூறுகளை எதிர்கொண்டனர். முதலாவது, போலி இறைவாக்கினர்கள்

தோன்றியதாகும் (எரே 28:15; 29:31). உண்மையான இறைவாக்கினர்களிட மிருந்து இவர்களை எங்ஙனம் பிரித்து வேறுபடுத்துவது (23:9-32; உப 13:2-6; 18:9-22)? இரண்டாவதாக, விசுவாசத்தைப் பொருத்த அளவிலும் இடையூறு தோன்றி யது. அதன் கண்ணோட்டம் புரியாப் புதிராக உள்ளது; அதன் கோரிக்கைகளைக் கடைப்பிடிப்பது அவ்வளவு எளிதன்று.

பிரமாணிக்கமுள்ள இறைவன் தமது வாக்குறுதிகளை நிறைவேற்றத் தவற முடி யாது. ஆனால், உடன்படிக்கைச் சூழ்நிலை யில் இது விசுவாசத்தைப் பொருத்ததாகும். வரலாற்று இஸ்ராயேலில் இந்த விசுவாசம் காணப்படவில்லை. ஆகவே, இறைவாக்கி னர்களைப் பொருத்தமட்டும் விசுவாசம் வருங்காலத்தைச் சேர்ந்த உண்மையாயிற்று. அஃது இறைவனால் புதிய உடன்படிக்கை யின் இஸ்ராயேலுக்கு அளிக்கப்படும் ஒரு நாள் வரும். அப்போது இறைவன் மக்க ளின் இதயங்களைப் புதுப்பிப்பார் (எரே 32:39தொ; எசே 36:26). இவ்வாறு புதுப்பிக் கப்பட்டவர்கள் கல்மன நிலையிலிருந்து (எசா 6:9தொ) விசுவாசத்திற்குக் கடந்து செல்வர் (உரோ 10:9தொ; காண்க. யோவா 12:37-43). விசவாசத்திலிருந்து பிறக்கும் அறிவாலும் (எரே 31:33தொ) பணிவாலும் (எசே 36:27) இறைவன் அவர்களை நிரப்பு வார்.

**ஆ) வருங்கால இஸ்ராயேலின் பிணைப் பாகிய விசுவாசம்:** ஆபிரகாம் மற்றும் மோசே ஆகியோரைப் போன்று, இறை வாக்கினர்களின் வாழ்வும் யாவேயில் கொண்டிருந்த விசுவாசம், அவர்களின் அழைப்பு மற்றும் பணித்தூது (காண்க. எபி 11:33-40) ஆகியவற்றில் அடித்தளம் கொண் டிருந்தது. பெரும்பாலும், இந்த விசுவாசம் தொடக்கமுதல் அசைக்க முடியாததாய் இருந்தது (எசா 6; 8:17; 12:2; 30:18). சில வேளைகளில், தெளிவான உறுதியை அடையுமுன் (எரே 26; 37-38), மிகவும் கடுமையான கோரிக்கை (எரே 1; காண்க. யாத் 3:10தொ; 4:1-17) அல்லது இறைவன் பிரசன்னமாய் இல்லை என்று தோன்றுதல் (1 அர 19;எரே 15:10-21; 20:7-18) போன்ற சோதனைகளை எதிர்கொள்ளும்போது அவர்களுடைய விசுவாசம் மெதுவாகத் தான் உறுதிப்பட்டது.

இறைவாக்கினர்களின் இந்த விசுவாசம், சீடர்கள் அடங்கிய பெரிய அல்லது சிறிய குழுவினர்களுக்கும் செவிமடுப்பவர்களுக் கும் பரவியது (காண்க. எசா 8:16; எரே 45). இவ்வாறு, இஃது ஒரு சொந்த ஈடுபாடாகவும் மனநிலையாகவும் மேலும் மேலும் தோன்றியது. இஃது, இறைவாக்கி னரால் முன்னறிவிக்கப்பட்ட எஞ்சியோரை ஏற்கெனவே ஒன்று கூட்டியது.

இவர்கள், இந்தச் சிறு சமூகங்களில் இஸ்ராயேல் முன் நிழல் பெறுகிறது என்று காண்கின்றனர். சீயோனின் மறைபொரு ளான கல்லின்மேல் கொண்ட விசுவாசத் தால் ஒன்றிணைக்கப்பட்டு (எசா 28:6; காண்க. 1 பேதுரு 2:6தொ) இறைவனில் கொண்டுள்ள விசுவாசத்தால் ஒன்றுகூட்டப் பட்ட எளியோர் அடங்கிய மக்களாக இருப்பர் (மீக் 5:6தொ; செப் 3:12-18). ''நேர்மையுடையவனோ தன் பற்றுறுதி யால் (விசுவாசத்தால்) வாழ்வடைவான்'' (அப 2:4). இனிமேலும் மீட்கப்பட்ட சமூகமாய் இல்லாமல், சொந்த விசுவாசத் தால் பிணைக்கப்பட்ட எளியோரின் சமூ கத்தை ஏற்கெனவே அமையும் திருச் சபையை இறைவாக்கிளர்கள் முன்னோக்கு கின்றனர். இந்த விசுவாச மக்களுக்கு யாவேயின் ஊழியர் ஓர் எடுத்துக் காட்டாக இருப்பார். சாவுக்கும் இட்டுச் செல்லக் கூடிய சோதனைகள் நடுவிலும் (எசா 50:6; 53), இறைவனில் கொண்டுள்ள முழு விசுவாசத்தில், அவர் தன் முகத்தைக் ''கற்பாறை ஆக்கிக் கொள்வார்'' (50:7தொ; காண்க.லூக் 9:51); இதை வருங்காலம் எண்பிக்கும் (53:10தொ; காண்க. சங் 22).

**இ) நாடுகளின் விசுவாசம்:** ஊழியனின் தூது பிறநாடுகளுக்கும் மக்களுக்கும் விரி வாகிறது (எசா 42:4; 49:6). இவ்வாறு வருங்கால இஸ்ராயேல் விசுவாசத்தில் ஒன் றிணைந்ததாய் இருந்தால், பிற நாடுகளை

யும் திறந்த மனதுடன் தன்னுள் ஏற்றுக் கொள்ளும். அவர்களும் விசுவாசத்தில் ஒரே இறைவனை ஏற்று *(43:10)*, அவரை அவ் வாறு அறிக்கையிட்டு *(45:14; 52:15தொ; காண்க. உரோ 10:16; எசா 56:1-8)* அவரது வல்லமையிலிருந்து தங்கள் மீட்பை எதிர் பார்ப்பர் *(51:5தொ)*.

**4. விசுவாசிகள் ஒன்றுகூடுதலை நோக்கி:** நாடு கடத்தலுக்குப் பின்வந்த நூற்றாண்டுகளில், வரலாற்றைச் சேர்ந்த இஸ்ராயேல் இறைவாக்கினர்கள் முன் னுரைத்த வருங்கால இஸ்ராயேலுக்கு ஏற்ப தன்னை அமைத்துக் கொள்ளும் போக்கைக் கொண்டிருந்தது; ஆயினும், ஒரு நாடாக வும் ''விசுவாசிகளின் கூட்டமாகவும்'' *(1 மக் 3:13)* இருக்கத் தவறவில்லை.

**அ) ஞானிகள், எளியோர், வேதசாட்சிகள் ஆகியோரின் விசுவாசம்:** இறைவாக்கின ரைப்போல் இஸ்ராயேலரின் ஞானிகளும் மீட்படைய யாவேயில் மட்டுமே நம் பிக்கை கொள்ள வேண்டுமென்பதை நெடு நாளாய் அறிந்திருந்தனர் *(பழ 20:22)*. புலனுக்கு எட்டிய அளவு மீட்புத் திட்டங்க ளெல்லாம் மறையும்போதும் இறைவனில் முழு நம்பிக்கைக் கொள்ள வேண்டும் என்று ஞானம் கோருகிறது *(யோபு 19:25தொ)*. இறைவன் எல்லாம் வல்லவ ராய் விளங்குகின்றார் என்பதை ''அறியும்'' விசுவாசம் அவசியமாகின்றது *(42:2)*. தங் கள் நம்பிக்கையைச் சங்கீதங்கள் வழி பாடிய எளியோரும், ஞானிகளும் இதில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர்.

சங்கீதங்கள் அனைத்தும் ஒரே இறைவ னாகிய யாவேமீது இஸ்ராயேல் கொண் டுள்ள நம்பிக்கையை வெளிப்படுத்துகின் றன *(சங் 18:32; 115)*; அவர் படைத்தவர் *(9; 104)*, எல்லாம் வல்லவர் *(28)*, பிர மாணிக்கமுள்ள ஆண்டவர் *(89)*, தம் மக்கள் மீது இரக்கம் கொண்டவர் *(105; 136)*, உலகிற்கெல்லாம் பேரரசர் *(47; 96-98)* என்றெல்லாம் குறிப்பிடுகின்றன. யாவே மீது இஸ்ராயேல் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையைப் பல சங்கீதங்கள் எடுத்துக் காட்டுகின்றன *(44; 74; 125)*. எல்லாவற்றிற் கும் மேலாக, விசுவாசத்தின் சிறந்த சான் றாய் விளங்குவது அவர்களுடைய செபம். இந்தச் செபத்தில்தான் தனி நபர்களின் விசுவாசம் கிடைப்பதற்கரிய தனிப்பட்ட நம்பிக்கையாக மலர்கின்றது. துன்புறுத்தப் பட்ட நீதிமான் விரைவிலாவது பிறகாவது தன்னை மீட்கின்ற இறைவன் மீது கொண் டுள்ள விசுவாசம் *(7; 11; 31; 62)*, பாவி இறைவன் இரக்கத்தில் கொண்டுள்ள நம் பிக்கை *(40:13-18; 51; 130)*, சாவைவிட இறைவனில் அதிக உறுதி வாய்ந்த நம் பிக்கை *(4; 23; 121; 131; 16; 49; 73)* ஆகியவை காணக்கிடக்கின்றன. எல்லாத் துன்பங்களினின்றும் விடுவித்து *(22)*, நற் செய்தியையும் *(எசா 62:1; காண்க. லூக் 4:18)*, நாட்டின் உரிமையையும் *(சங் 37:11; காண்க. மத் 5:4)* இறைவன் வழங்குவார் என்ற நம்பிக்கையில் ஒன்றுகூடிய எளி யோரின் செபமே இவை.

வரலாற்றில் முதன் முறையாக *(காண்க. தானி 3)* இஸ்ராயேலர் நாடு கடத்தப்படுத லுக்குப் பிறகு இரத்தம் சிந்தும் வேதகலா பனை போன்றவைகளால் தாக்கப்பட்டனர் *(1மக் 1:62 தொ; 2:29-38; காண்க. எபி 11:37தொ)*. வேதத்திற்காக மடிந்தவர்கள் விசுவாசியாக இருந்ததால் மட்டுமல்லர், விசுவாசத்திற்காக உயிர் துறந்தனர். இறைப் பிரசன்னம் இன்மையை மிகக்கடுமையாக எதிர்கொண்டபோதும் மறை சாட்சிகள் விசுவாசம் தளரவில்லை *(1 மக் 1:62)*. சோதனைகள் மத்தியிலும் இறைவனின் பிரமாணிக்கத்தில் உறுதிகொண்டு உயிர்ப் பையும் *(2 மக் 7; தானி 12:2 தொ)*, அழியா வாழ்வையும் *(ஞான 2:19தொ; 3:1-9)* எதிர்நோக்கி விசுவாசம் ஆழமடைந் தது. இவ்வாறு விசுவாசம் மேலும் மேலும் வலுவடைந்து எஞ்சியோரைச் சிறிது சிறி தாகக் கூட்டிச் சேர்த்தது. இவர்கள் வாக் குறுதிகளின் பலனை அடைவோராயினர்.

**ஆ) புறவினத்தாரில் மனந்திரும்பியவரின் விசுவாசம்:** அக்காலத்தில் இஸ்ராயே லிடையே வேதபோதக ஆர்வம் மிகுந்திருந் தது. நாமானைப் போன்று *(2 அர 5)*,

புறவினத்தவர் பலர் ஆபிரகாமின் கடவுளை விசுவசித்தனர் (சங் 47:10). அப்போதுதான் ஒரேயொரு இறைவாக்கினரின் போதகத்தால் ''இறைவனில் விசுவாசங்கொண்ட'' (யோனா 3:4 தொ; காண்க. மத் 12:41) நினிவே மக்களின் வரலாறு எழுதப்பட்டது. நெபுகத்னேசரின் மனமாற்றம் (தானி 3-4) பற்றியும் ''விசுவசித்து இஸ்ராயேல் குலத்தில் நுழைந்த'' ஆக்கியோர் (யூதி 14:10; காண்க. 5:5-21) பற்றியும் எழுதப்பட்டது. ''தம்மில் விசுவாசங்கொள்வதற்கு'' இறைவன் பிற மக்களுக்குக் காலங்கொடுத்துக் காத்திருக்கின்றார் (ஞான 12:2; காண்க. சீரா 36:4).

**இ) இஸ்ராயேலரின் விசுவாசத்தின் குறைபாடுகள்:** வேதகலாபனை மறைசாட்சிகளை உருவாக்கியது. அஃதோடு இஸ்ராயேலை விடுவிக்கப் (1 மக் 2:11) போராடாது சாகமாட்டோம் என்று கூறிய போர் வீரர்களையும் உருவாக்கியது (1 மக் 2:39தொ). வலியவரோடுள்ள போராட்டத்தில் தங்கள் வெற்றியை இறைத்துணையில் தேடினர் (1 மக் 2:49-70; காண்க. யூதி 9:11-14). தன்னிலேயே புகழ்ச்சிக்குரிய விசுவாசமாக இருந்தாலும் (காண்க. எபி 11:34-39), அதில் மனித ஆற்றலில் கொண்ட நம்பிக்கையும் கலந்திருந்தது.

இஸ்ராயேலரின் விசுவாசத்திற்கு ஊறு விளைவித்த மற்றொரு குறைபாடுமுண்டு. இறைவனுக்கும் அவருடைய திருச்சட்டத்திற்கும் பிரமாணிக்கமாக இருந்ததால் மறைசாட்சிகளும் போர்வீரர்களும் இறந்துபட்டனர் (1 மக் 1:52-64). இதன் வழியாக உடன்படிக்கையின் கோரிக்கைகளுக்குக் கீழ்ப்படிகின்ற விசுவாசம் இன்றியமையாதது என்று இஸ்ராயேலர் உணரத் தொடங்கினர். இதே போக்கில் பரிசேயர் பலர் சிக்கிய விபத்தொன்றிருந்தது. திருமறைக்கும், திருநூலின் ஒழுக்கக்கோரிக்கைகளுக்கும் அளிப்பதைவிட புறச்சடங்கு முறைகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பதும் (மத் 2.:13-30), நீதிமானாக்கப்படுவதற்கு இறைவனைவிட மனிதரிலும், மனித உழைப்பிலும் அதிக நம்பிக்கை கொள்வதுமே (லூக் 18:9-14) ஆகும் அவ்விபத்து.

இறைவன் மீது இஸ்ராயேலர் கொண்ட நம்பிக்கை தூயதாகவில்லை. மறைநூலில் வெளிப்படுத்தப்பட்ட இறைத்திட்டத்திற்கும் அவர்களுடைய விசுவாசத்திற்குமிடையே தொங்கிய திரை இதற்கு ஒரு காரணமாகும் (2 கொரி 3:14). அத்துடன் உண்மையான விசுவாசம் வாக்களிக்கப்பட்டது எதிர்கால இஸ்ராயேல் குலத்திற்குத்தான். ஒரு நாட்டிற்கே நம்பிக்கை அளிக்கத் தோன்றிய விசுவாசத்திலோ, புறச்சடங்குகள் பலவற்றை மக்கள் கடைப்பிடிக்கத் தூண்டிய விசுவாசத்திலோ பங்குகொள்வது புறவினத்தவருக்குப் பெருங்கடினமாக இருந்தது. இத்தகைய விசுவாசத்தை ஏற்பதால் அவர்களுக்குப் பயனென்ன (மத் 23:23)? எளியோரிடம் ஆழ்ந்த உறுதியான விசுவாசமிருந்தது. ஆனால், இவ்விசுவாசம் புறவினத்தாரை நம்பிக்கையளவில் மட்டுமிருந்த மீட்பில் பங்குபெறச் செய்ய இயலவில்லை. இஸ்ராயேலரும், மற்றெல்லா நாடுகளும் விசுவாசத்தை முழுமையடையச் செய்பவருக்காகக் (எபி 12:2; காண்க. 11:39தொ) காத்திருக்கவும் ''வாக்களிக்கப்பட்ட தேவ ஆவியைப்'' (அ.ப. 2:33) பெற்றுக் கொள்ளவும் வேண்டியிருந்தது.

III. **புதிய ஏற்பாடு:**

**1. இயேசுவின் போதனையிலும் வாழ்விலும் இடம்பெற்ற விசுவாசம்:**

**அ) தயாரிப்பு:** எளியோரின் விசுவாசமே (லூக் 1:46-55) மீட்புப் பற்றிய முதற்செய்தியைப் பெறுகின்றது. செக்கரியாவின் குறைபட்ட விசுவாசமும் (லூக் 1:18தொ; காண்க. ஆதி 15:8), மரியாளின் நிறைவான விசுவாசமும் (லூக் 1:35தொ. 45; காண்க. ஆதி 18:4) சிறிது சிறிதாகப் பிறரால் பகிர்ந்து கொள்ளப்படுகின்றன (லூக் 1-2). தோற்றத்தின் எளிமை விசுவாசத்திலிருந்து இறைமுன் முயற்சியை மறைக்கவில்லை. தம் பாவங்களையுணர்ந்த எளியவர்கள்தான் திருமுழுக்கு யோவானை விசுவசித்தார்களேயன்றி ஆணவம் பிடித்த பரிசேயரல்லர் (மத் 21:23-32). அவர்களோடிருந்து (மத்

*3:4-17)* தன்னில் விசுவாசங்கொள்ள அவர்களைத் தூண்டிய (அ.ப. *19:4*; காண்க. யோவா *1:7)* இயேசுவைச் சுற்றிக்கூட அவர்கள் அறியாமலே செய்வதும் இந்த விசுவாசமே.

**ஆ) இயேசுவையும் அவருடைய வார்த்தையையும் விசுவசித்தல்:** இறையரசின் வருகை பற்றிப் போதித்த (மத் *11:3-6*இணை; *13:14-17*இணை) இயேசுவின் வார்த்தையையும் அருஞ்செயல்களையும் எல்லோராலும் ''கேட்கவும், காணவும்'' (*13:13*இணை) முடிந்தது. ஆயினும், இறை வார்த்தையைக் கேட்கவும் (*11:15*இணை; *13:19-23*இணை), அதன்படி நடக்கவும் (*7:24-27*இணை; காண்க. உப *5:27)* ஊனுடல் எடுத்த வார்த்தையை உண்மையில் காணவும், சுருங்கக் கூறின், விசுவசிக்கவும் (மாற் *1:15*; லூக் *18:12*; காண்க. உப *9:23)* சீடர்களால் மட்டுமே முடிந்தது (லூக் *8:20*இணை). அவருடைய போதனையும் அருஞ்செயல்களும் ''இவர் யார்?'' (மாற் *5:41*; *6:1-6.14*தொ. இணை) என்ற வினாவைத்தான் மக்களிடையே எழுப்பியது. இவ்வினா திருமுழுக்கு யோவானுக்கு ஒரு பரிசோதனையாகவும் (மத் *11:2*தொ), பரிசேயருக்கு இடையூறாகவும் (*12:22-28* இணை; *21:23*இணை) இருந்தது. இயேசுவின் முழு வல்லமையை ஏற்றலின் குறைவான பதிலிறுப்பாக (மத் *8:2*; மாற் *9:22*தொ) அமைந்ததுதான் அவருடைய அருங்குறிகளை ஏற்றுக்கொள்ளத் தேவைப்பட்ட விசுவாசம் (லூக் *7:50*; *8:48*). ''நீரே கிறிஸ்து'' (மத் *16:13-16* இணை) எனப் பேதுரு விசுவாச அறிக்கையிட்டு உண்மையான பதில் அளிக்கிறார். அந்த விசுவாசமே இயேசுவின் சீடர்களை இயேசுவோடிணைக்கின்றது. சீடர் தம்மிடையேயும் இணைக்கப்படுகின்றனர்; இயேசுவின் ஆளுமை பற்றிய மறைபொருளையும் பகிர்ந்து கொள்கின்றனர் (*16:18-20*இணை).

எளிய மனிதனான இயேசுவைச் சுற்றி (மத் *11:20*), எளியவருக்குத் தன்னை அறிமுகம் செய்தவரைச் (*5:2-10*இணை; *11:5*இணை) சூழ்ந்து ''சின்னஞ்சிறியோரைக்'' கொண்ட எளியோரின் (*10:42)* கூட்டம் கூடியுள்ளது. அனைத்திற்கும் மேலாக அவர் மீதும், அவருடைய வார்த்தை மீதும் (*18:6-10*இணை) கொண்ட விசுவாசமே அவர்களை இணைக்கும் பாலமாக அமைந்தது. இந்த விசுவாசம் இறைவனிடமிருந்து வருகின்றது (*11:25*இணை; *16:17)*. ஒருநாள் இந்த விசுவாசத்தை அனைத்து நாடுகளும் பகிர்ந்துகொள்ளும் (*8:5-13*இணை; *12:39-42*இணை). இறைவாக்குகள் நிறைவேறுகின்றன.

**இ) விசுவாசத்தின் நிறைவு:** ''மரணமட்டும் கீழ்ப்படிந்திருந்த'' (பிலி *2:7*தொ) ஊழியனாகிய இயேசு எருசலேமை நோக்கிப் பயணம் செய்யத் தீர்மானித்தபோது (லூக் *9:51*; காண்க. எசா *50:7)* தன் மரணத்தால் எளியோரின் விசுவாசத்தை (லூக் *23:46*=சங் *31:6*; மத் *27:46*=சங் *22)* ''நிறைவுக்கு இட்டுச் செல்கின்றார்'' (எபி *12:2)*. இவ்வாறு உயிர்ப்பின் வழி, ''சாவினின்று தன்னை விடுவிக்க வல்லவர்'' (எபி *5:7)* மீது தான் கொண்ட முழு நம்பிக்கையை இயேசு வெளிப்படுத்துகின்றார்.

இறையரசைப் பற்றிய மறைபொருளின் அறிவு இருந்தும் (மத் *13:11*இணை) விசுவாசத்தில் மனுமகனைப் பின் தொடர வேண்டியிருந்தபோது (*16:21-23*இணை) சீடர்களுக்குக் கடினமாயிருந்தது. கவலையினின்றும் அச்சத்தினின்றும் விடுவிக்கின்ற நம்பிக்கை (லூக் *12:22-32*இணை) எப்போதும் அவர்களிடம் இருந்ததில்லை (மாற் *4:35-41*; மத் *16:5-12*இணை). பாடுகளின் பரிசோதனை (மத் *26:41)* அவர்களுக்கு இடறலாகயிருந்தது (*26:33)*. அன்று அவர்கள் இயேசுவின் வாழ்வில் கண்டதை ஏற்று, விசுவாசத்தில் நிலைத்திருக்க அதிகமான தியாகம் தேவைப்பட்டது (காண்க. மாற் *15:31*தொ). பேதுருவின் விசுவாசம் அவரிடத்திலிருந்து மறைந்துவிடவில்லை. ஏனெனில், இயேசு அவருக்காகச் செபித்திருந்தார் (லூக் *22:2)*. இருப்பினும், அவ்விசுவாசத்தை ஆணித்தரமாக எடுத்துரைக்கக்கூடிய மனத்திடன் அவரிடத்திலில்லாமல் போயிற்று (*22:54-64* இணை). சீடர்களின் விசுவாசம் திருமறை

யின் விசுவாசமாக மாறுவதற்கு இன்னும் அதிக உறுதி பெற வேண்டியிருந்தது.

**2. திருச்சபையின் விசுவாசம்:**

**அ) பாஸ்கா விசுவாசம்:** உயிர்ப்புக் காட்சிகளை எதிர்கொண்டபோது(மத் 28:17; மாற் 16:11-14; லூக் 24:11), பலவிதத் தயக்கங்களுக்குப் பின் இயேசுவின் உயிர்ப்பில் சீடர்கள் நம்பிக்கை கொண்டநிலையில் உறுதியான முதல் கட்டம் தொடங்கியது. இயேசு கூறியவற்றிற்கும் செய்தவற்றிற்கும் சாட்சிகளான அவர்கள் (அ.ப. 10:39) அவரை ''ஆண்டவரும் கிறிஸ்துவும்'' என்றும், அவரில்தான் வாக்குறுதிகளனைத்தும் கண்ணுக்குப்புலப்படாத விதமாய் நிறைவேறியுள்ளன என்றும் (2:38-36) பறைசாற்றினர். ''குருதி சிந்துமளவிற்கு'' (காண்க. எபி 12:4) அவர்களுடைய விசுவாசம் உறுதி வாய்ந்ததாக இருந்தது. தங்கள் அறவுரைகளுக்குச் செவிமடுத்தவரை அவர் தம் பாவங்களுக்கு மன்னிப்புப் பெறுவதன் மூலம் வாக்குறுதியின் பயனைப் பெறும் வண்ணம் விசுவசிக்க அழைத்தனர் (அ.ப. 2:28தொ; 10:43). திருச்சபையின் விசுவாசம் பிறந்தது.

**ஆ) வார்த்தைமீது விசுவாசம்:** தொடக்கத்தில் இயேசுவோடு வாழ்ந்தவர்களின் போதனையைப் பெறுதல், நற்செய்தியையும் (அ.ப. 15:7; 1 கொரி 15:2), வார்த்தையையும் (அ.ப. 2:41; உரோ 10:7; 1 பேதுரு 2:8) ஏற்று, 'இயேசு ஆண்டவர்' (1 கொரி 12:3; உரோ 10:9; காண்க. 1 யோவா 2:22) என அறிக்கையிடுதல் ஆகியனவே விசுவாசமாகும். பாரம்பரியமாக எடுத்துரைக்கப்பட்டு வந்த இந்த முதல் செய்தி (1 கொரி 15:1-3) போதனையில் பொருள் பொதிந்ததாயும் தெளிவாயும் வெளிப்படும் (1 திமொ 4:6; 2 திமொ 4:1-5). இம்மனித வார்த்தை விசுவாசத்தைப் பொருத்தமட்டில் இறை வார்த்தையாகவே இருக்கின்றது (1 தெச 2:13). இந்த விசுவாசத்தைப் புறவினத்தவர் ஏற்பது என்பது சிலைவழிபாடுகளை விட்டு விலகி, வாழுகின்ற உண்மையான இறைவனை நோக்கித் திரும்புவதாகும் (1 தெச 1:8தொ). அனைவரும் இந்த விசுவாசத்தைத் தழுவுவது என்றால் ஆண்டவராகிய இயேசு இறைத்திட்டத்தை நிறைவு செய்கின்றார் (அ.ப. 5:14; 13:27-38; காண்க. 1 யோவா 2:24) என்பதை ஏற்பதாகும். திருமுழுக்கின்வழ் நாம் இத்திட்டத்தை ஏற்கிறோம். தந்தை, மகன், தூய ஆவி ஆகிய மூவொரு கடவுளின் மேல் நமது விசுவாசத்தை அறிக்கையிடுகின்றோம்.

பவுல் குறிப்பிடுவதுபோல கிறிஸ்துவிலுள்ள ''ஞானமும் அறிவுமாகிய செல்வத்தை'' (கொலோ 2:3) அறிந்துணர வழிவகுக்கின்றது இவ்விசுவாசம். ஞானம் தன்னிலேயே இறைவனிடமிருந்து பிறந்தது; பரிசுத்த ஆவியால் வெளிப்படுத்தப்பட்டது (1 கொரி 2); மனித ஞானத்திற்கெல்லாம் அப்பாற்பட்டது (1 கொரி 1:17-37; காண்க. யாக் 2:1-5; 3:13-18; எசா 29:14); கிறிஸ்துவையும் அவருடைய அன்பையும் பற்றிய அறிவினால் வெளிப்படுத்தப்பட்டது (பிலி 3:8; எபே 3:19; காண்க. 1 யோவா 3:16).

**இ) விசுவாசமும் திருமுழுக்குப் பெற்றோரின் வாழ்வும்:** திருச்சபையின் முழு அங்கத்தினராக்கும் திருமுழுக்கு மற்றும் கைகளை விரித்தலுக்கு விசுவாசத்தால் இட்டுச் செல்லப்பட்டு, வார்த்தையானவரில் விசுவாசம் கொண்டோர் இத்திருச்சபையின் போதனை, மனப்போக்கு மற்றும் வழிபாட்டில் பங்கு பெறுகின்றனர் (அ.ப. 2:41-46). ஏனெனில், விசுவசிப்போரின் மீட்புப்பணி பற்றிய திட்டத்தை இறைவன் திருச்சபையில்தான் செயல்படுத்துகின்றார் (அ.ப. 2:47; 1 கொரி 1:18). அந்த இறைத் திட்டத்திற்குட்பட்டு வாழ்ந்ததால்தான் விசுவாசம் பரவியது (அ.ப. 6:7; 2 தெச 1:8). நன்னெறியில் ஒழுகுகின்ற வாழ்க்கையினாலும் (1 தெச 1:3; யாக் 1:21தொ), கிறிஸ்துவின் கட்டளைக்குப் பணிந்து நடப்பதாலும்தான் (கலா 6:2; உரோ 8:2; யாக் 1:25; 2:12) விசுவாசம் மலர்கின்றது. சகோதர அன்பு வழி இந்த விசுவாசம் செயல்படுகின்றது (கலா 5:6; யாக் 2:14-26). இயேசுவின் முன்மாதிரியைப் பின்பற்றி (எபி 12; அ.ப. 7:55-60), சாவை எதிர்கொள்ளும்

அளவுக்குப் பிரமாணிக்கம் உள்ளதாகவும், ''யாரில் விசுவாசம் கொண்டுள்ளதோ'' *(2 திமொ 1:12; 4:17தொ)* அவரில் முழு நம்பிக்கை கொள்ளவும் விசுவாசம் தன்னை வளமாக்குகின்றது. மீட்படையாதோரை மீட்படைந்தோரிலிருந்து பிரிப்பது *(2 தெச 1:3-10; 1 பேதுரு 2:7தொ; மாற் 16:16)* இறைவார்த்தையில் விசுவாசம் மற்றும் நம்பிக்கை கொண்ட கீழ்ப்படிதல் என்ற திருச்சபையின் விசுவாசமே.

**3. புனித பவுல் விசுவாசம் பற்றிப் போதித்தல்:** புதிதாகப் பிறந்துள்ள மறைக்கு விசுவாசம் கடவுளின் கொடையாகும் *(அ.ப. 11:21 தொ; 16:14; காண்க. 1 கொரி 12:3).* புறவினத்தார் மனந்திரும்பியபோது இறைவனே அவர்கள் ''இதயங்களை விசுவாசத்தால் தூய்மையாக்கினார்'' *(அ.ப. 11:18; 14:27; 15:7தொ).* விசுவசித்த யூதர்கள் பெற்றுக்கொண்ட அதே பரிசுத்த ஆவியை விசுவசித்த புறவினத்தவரும் பெற்றனர் *(11:17).* பின்னரே திருச்சபையில் அவர்கள் சேர்க்கப்பட்டனர்.

**அ) விசுவாசமும் யூதச்சட்டமும்:** புறவினத்தார் விருத்த சேதனம் பெறவும், யூதச் சட்டத்தைப் பின்பற்றவும் வேண்டுமா என்ற பிரச்சனை ஆதித்திருச்சபையில் எழுந்தது *(அ.ப. 15:5; கலா 2:4).* பொறுப்புள்ளவர்களோடு கலந்தாலோசித்த பின் *(அ.ப. 15; கலா 2:3-6)* புறவினத்தவரை ''யூதர்களாக''க் கட்டாயப்படுத்துவது நியாயமல்லவென்று பவுல் கருதினார். ஏனெனில், யூதர்களுக்கு மீட்பளித்தது யூதச் சட்டமன்று; கிறிஸ்து இயேசுவின்பால் கொண்ட விசுவாசமே *(கலா 2:15தொ).* கலாத்தியாவிலுள்ள கிறிஸ்துவர்கள் மீது விருத்தசேதனத்தைச் சுமத்தியபோது *(கலா 5:2; 6:12)* வேறொரு நற்செய்தி போதிக்கப்படுவதாக பவுல் உணர்ந்தார் *(கலா 1:6-9).* இச்சிக்கல் மீட்பு வரலாற்றில் சட்டத்தின் பங்கு என்ன, விசுவாசத்தின் பங்கு என்ன என்பது பற்றி ஆழ்ந்து சிந்திக்க அவருக்கு வாய்ப்பளித்தது. ஆதாமின் காலமுதல் *(உரோ 5:12-21)* புறவினத்தவராயினும் சரி, யூதர்களாயினும் சரி, எல்லோரும் இறைவன் முன் பாவிகளே *(1:18-3:20).* வாழ்விற்கு வழிகாட்டியாக இருக்கவேண்டிய சட்டமே பாவத்திற்கும் சாவிற்கும் வழியாயிற்று *(உரோ 7:7-10; கலா 3:10-14.19-22).* விசுவாசத்தால் பெற்றுக்கொண்ட *(கலா 2:16; உரோ 3:22; 5:2)* இறைவனின் ஏற்புடைமையை வெளிப்படுத்தி *(உரோ 3:21-26; கலா 2:19தொ),* கிறிஸ்துவின் இறப்பு இந்நிலைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது. பின்னர், சட்டத்தின் துணை தேவையற்றதாக இருந்தது *(கலா 3:23-4:11).* வாக்குறுதியின் அரசாட்சி, இயேசுவில் நிறைவுபெற்று நிலவியது *(கலா 3:15-18).* ஆபிரகாமைப்போல கிறிஸ்தவர்களும் விசுவாசத்தால் ஏற்புடையோராக்கப்படுவார்களேயன்றி சட்டத்தாலன்று *(உரோ 4; கலா 3:6-9; காண்க. ஆதி 15:6; 17:11).* மேலும் இறைவாக்கினரின்படி, ''நீதிமான் விசுவாசத்தால் வாழ்வான்'' *(அப 2:4; கலா 3:11; உரோ 1:17);* இஸ்ராயேலரில் எஞ்சியோரில் *(உரோ 11:1-6)* இறைவனில் விசுவாசம் கொள்பவரே மீட்கப்பெறுவர் *(எசா 28:16; உரோ 9:33; 10:11).* விசுவாசம் எல்லா இனத்தவருக்கும் திறந்து வைக்கப்பட்டது *(உரோ 10:14-21; 1 பேதுரு 2:4-10).*

**ஆ) விசுவாசமும் அருளும்:** ''திருச்சட்டம் விதித்திருக்கும் செயல்களின்றியே மனிதன் விசுவாசத்தினாலே இறைவனுக்கு ஏற்புடையவனாக்கப்படுகின்றான்'' *(உரோ 3:28; கலா 2:16).* பவுலின் இக்கூற்று விசுவாச ஆட்சியில் யூதச் சட்டத்தின் பலனின்மையைக் கூறுகிறது. சிந்திக்குமிடத்து மீட்பு என்பது ஒருவனுடைய உரிமையன்று, விசுவாசத்தை முன்னிட்டு அவனுக்கு அளிக்கப்படும் இறைவனின் கொடையாகும் *(உரோ 4:4-8).* திருமுழுக்கின்போது பெற்றுக்கொண்ட ஆவியானவரின் கொடைகளுக்கேற்ப *(கலா 5:13-26; உரோ 6; 8:1-13)* விசுவாசம் ''செயல்பட'' *(கலா 5:6; யாக் 2:14-26)* வேண்டும் என்பதையும் பவுல் உணராமலில்லை. ஆயினும், விசுவசிப்பவன் ''தனது ஏற்புடைமை'' பற்றி ''பெருமை'' பாராட்டவோ, பரிசேயனான சவுலைப்போல் *(பிலி 3:4-9; 2 கொரி*

11:16-12:4) திருச்சட்டத்தின் செயல்களை மட்டும் நம்பியிருக்கவோ கூடாதென வலியுறுத்திக் கூறுகின்றார். அவருடைய மனச்சான்று இறைவன் முன்னிலையில் அவரைக் குற்றம் சாட்டாவிடினும் (1 கொரி 4:4). ''எதையும் விரும்பவும் செயலாற்றவும், தம் திருவுளம் நிறைவேற அவரில் செயலாற்றும்'' (பிலி 2:13) இறைவன் ஒருவரை மட்டும் நம்பியிருப்பதாகக் கூறுகின்றார். எனவே, அவர் தன் மீட்புக்காக ''அச்ச நடுக்கத்தோடு'' உழைத்து வந்தார் (பிலி 2:12). அத்துடன் மகிழ்வளிக்கும் நம்பிக்கையுடனும் உழைக்கின்றார் (உரோ 5:1-11; 8:14-39). ''கிறிஸ்து இயேசுவில் வெளிப்படுத்தப்பட்ட இறையன்பை'' (உரோ 8:38தொ; எபே 3:19) அவருடைய விசுவாசம் உறுதிப்படுத்துகின்றது. தொடக்கத் திருச்சபையின் மக்கள் பாஸ்கா விசுவாச வாழ்வைத் தெளிந்த மனச்சாட்சியோடு வாழ்வதற்குப் பவுல் துணைபுரிந்தார். இஸ்ராயேலரின் விசுவாசத்தில் காணப்பட்ட குறைபாடுகள், வரையறைகள் இவ்விசுவாசத்தில் இல்லை. இது முழுவதுமே திருச்சபையின் விசுவாசமாகும்.

**4. ஊன் உருவெடுத்த வார்த்தையில் விசுவாசம்:** புதிய ஏற்பாட்டின் இறுதியில் திருச்சபையின் விசுவாசம் புனித யோவானோடு சேர்ந்து தன் தொடக்கம் பற்றிய சிந்தனையைச் சுழலவிடுகின்றது. எதிர்காலத்தை மேலான விதத்தில் எதிர்கொள்ள தனக்கு நிறைவு அளித்தவரிடமே திரும்புகிறது. விசுவாசம் பற்றி யோவான் கூறுவது ஒத்தமை நற்செய்திகள் கூறுவதை ஒத்ததே. இயேசுவைச் சுற்றி சீடர்களை விசுவாசம் ஒன்றிணைக்கிறது (யோவா 10:26தொ; 17:8). இவ்விசுவாசம் திருமுழுக்கு யோவானால் அறிமுகப்படுத்தப்பட்டு (1:34 தொ; 5:33தொ) இயேசுவின் மகிமையைக் கானாவில் கண்டது (2:11). ''அவருடைய வார்த்தையைக் கேட்டு'' (12:46தொ), அதற்குச் ''செவிமடுக்கின்றது'' (10:26தொ; காண்க. உப 4:30); கப்பர்நாகூமில் பேதுருவின் வாய்மொழியால் தன்னை உறுதிப்படுத்துகின்றது (யோவா 6:70 தொ). பாடுகள் அதற்கு ஒரு பரிசோதனையாகவும் (14:1-28; காண்க. 3:14தொ), உயிர்ப்பு அதன் முடிவான நோக்கமாகவும் (20:8.25-29) இருந்தன.

ஆயினும், ஒத்தமை நற்செய்திகளைவிட, நான்காம் நற்செய்தியை விசுவாசத்தின் நற்செய்தியென்றால் பொருந்தும். ஏனெனில், இந்நற்செய்தியில் இயேசுவும், அவரது இறைமாட்சிமையும் விசுவாசத்தின் மையப்பொருளாக அறிக்கையிடப்பட்டுள்ளன. இயேசுவிலும் (4:39; 6:35), அவர் பெயரிலும் (1:12; 2:23) விசுவாசம் கொள்வது அவசியம். இறைவனை விசுவசிப்பதும், இயேசுவை விசுவசிப்பதும் ஒன்றே (12:44; 14:1; காண்க. 8:24; யாத் 3:14). ஏனெனில், இயேசுவும் தந்தையும் ஒன்றே (10:30; 17:21). இந்த ஒன்றிப்பே விசுவாசத்தின் பொருளாக அமைகிறது (14:10தொ). இயேசுவின் மாட்சிமையை வெளிப்படுத்தும் அருங்குறிகளைக் (2:11தொ; 4:48; 20:29) காணாமலே கட்புலன்களுக்குத் தோன்றாத அவருடைய இறைமாட்சியை உணரும் வண்ணம் விசுவாசம் இட்டுச்செல்ல வேண்டுமென்றும் போதிக்கிறது. ஆனால், உண்மையில் அவர் செய்த அருங்குறிகளைக் காணவும் (2:23; 11:45), தொடவும் (20:29) வேண்டிய தேவை விசுவாசத்திற்கு ஏற்பட்டால், கட்புலன்களுக்குத் தோன்றாதவை பற்றி அறியவும் (6:69; 8:28), தியானிக்கவும் (1:14; 11:40) விசுவாசம் அழைப்பு விடுக்கின்றது.

மேலும் விசுவாசத்தின் கட்புலனாகாத பயன்களின் இக்காலப் பண்பையும் யோவான் வலியுறுத்துகின்றார். விசுவசிப்பவன் தீர்ப்புக்குள்ளாக மாட்டான் (5:24); ஏற்கெனவே உயிர்த்துவிட்டான் (11:25தொ; காண்க. 6:40), ஒளியில் நடக்கிறான் (12:46), முடிவில்லா வாழ்வைக் கொண்டுள்ளான் (3:16; 6:47). மாறாக, விசுவசியாதவனோ ஏற்கெனவே தீர்ப்புப் பெற்றுவிட்டான் (3:18). சாவுக்கும் வாழ்வுக்குமிடையே, ஒளிக்கும் இருளுக்குமிடையே, எதை ஏற்பது, எதை மறுப்பது எனத் தேர்ந்தெடுக்க வேண்டிய துன்பகரமான மேன்மையை

விசுவாசம் உருவாக்குகின்றது. இந்நிலை மிகவும் கடினமானது. ஏனெனில், விசுவா சத்தை ஏற்பதும் மறுப்பதும் அவரவர்க ளுடைய ஒழுக்கச் செயலின் தன்மையைப் பொருத்ததாகும் *(3:19-21)*.

விசுவாசம், அதன் உண்மையான நோக் கம், அதன் முக்கியத்துவம் போன்றவற்றை வலியுறுத்திக் கூறுவதன் மூலம் தன் நற் செய்தியின் நோக்கம் என்ன என்பது பற்றி யோவான் விளக்கிக் கூறுகின்றார். வாசிப் போர் தன் விசுவாசத்தில் பங்குகொண்டு ''இயேசுவே கிறிஸ்து, அவரே இறைமகன்'' *(20:30)* என ஏற்று, ஊனுருவான வார்த்தை யில் *(1:9-14)* விசுவாசம் கொள்வதன் மூலம் இறைமக்களாக வேண்டும் என்பது அவரது நோக்கம். யோவானின் சான்று, விசுவாசத் தைத் தேர்ந்தெடுத்தல் இயலும் என்பதை உறுதிப்படுத்துகின்றது *(1 யோவா 1:2தொ)*. இந்த விசுவாசம் திருச்சபையின் பாரம்பரிய விசுவாசமேயாகும். இது தான் பெற்ற போதனைக்கேற்ப *(1 யோவா 2:23-27; 5:1)* இயேசுவை இறைமகன் என அறிக்கையிடு கின்றது. பாவமற்ற வாழ்க்கை மூலமும் *(3:9தொ)*, சகோதர அன்பு வழியும் *(4:10தொ; 5:1-5)* இந்த விசுவாசம் பரவுகின் றது. பவுலைப் போன்று *(உரோ 8:31-39; எபே 3:19)* யோவானும் மனிதர் மீது இறைவன் கொண்ட அன்பை ஏற்க வழி வகுக்கின்றது விசுவாசம் என்ற முடிவுக்கு வருகின்றார் *(1 யோவா 4:16)*.

வரவிருக்கின்ற போராட்டங்களைக் கண் முன் கொண்டு, மரணமட்டும் ''பொறுமை யாகவும்'' பிரமாணிக்கமாகவும் இருந்த புனிதர்களை விசுவாசிகளின் கண்முன் வைக்கின்றது திருவெளிப்பாட்டு நூல் *(திரு வெளி 13:10)*. இத்தகைய பிரமாணிக்கத்தின் ஊற்றாய் அமைவது ''சாவுக்குட்பட்டேனா யினும் இதோ, நான் என்றென்றும் வாழ் கின்றேன்'' *(1:18)* என்று கூறிய இயேசுவின் மீது கொண்ட பாஸ்கா விசுவாசமாகும்; தன்னரசை நிறுவுகின்ற ஊனுருக்கொண்ட [illegible] வார்த்தை *(19:11-16; காண்க. அ.ப. 4:24-30)* மீதுள்ள விசுவாசமாகும். விசுவா சம் முடிவு பெறும்போது, இறைவனை ''அவர் இருப்பதுபோல் அவரை நாம் காணும்'' *(1 யோவா 3:2)* நாளை எதிர் நோக்கி இருக்கச் செய்வதும் பாஸ்காவின் விசுவாசமாகும். இந்த விசுவாசமே, ''உலகைத் தோற்கடித்து நாம் அடைந்த வெற்றி நமது விசுவாசமே'' *(1 யோவா 5:4)*, என மீண்டும் பறைசாற்றப்பெறும்.

**விடிவெள்ளி** *(DAY STAR)*

கதிரவனைச் சுற்றிச் செல்லும் இரண்டா வது கோளான வெள்ளிக்கோளின் மற் றொரு பெயர். இது கதிரவனுக்கு முன் வானில் தோன்றும். தனது வசைப்பாடலில் எசாயா, பாபிலோனிய அரசனை வானத்தி லிருந்து வெட்டப்பட்டுத் தரையில் வீழ்ந்த விடிவெள்ளிக்கு ஒப்பிடுகிறார் *(எசா 14:12)*. இந்த வசனத்தைச் சாத்தானின் வீழ்ச்சி யோடு தொடர்புபடுத்துகின்றனர் திருச் சபைத் தந்தையர்கள் சிலர். ''வானத்தி லிருந்து சாத்தான் மின்னலைப்போல விழக் கண்டதாக'' இயேசு கூறுகிறார் *(லூக் 10:18)*. விளக்கவுரையாளர்கள் சிலர் விண்ணகத்தி லிருந்து இறை ஆட்கள் வெளியேற்றப் படும் பழங்கால இதிகாசங்களோடு இக் கருத்தைத் தொடர்புபடுத்துகின்றனர்.

*2 பேது 1:19*-இல் வரும் விடிவெள்ளி கிறிஸ்துவின் இரண்டாம் வருகையைச் சுட்டுகிறது. *திருவெளி 2:28*-இல் வரும் விடிவெள்ளி, தியத்திராத் திருச்சபைக்கு இயேசு அளிக்கும் ஆதரவைச் சுட்டுகிறது.

**விடுதலை / சுதந்தரம்** *(LIBERATION / LIBERTY)*

I. ''நீங்களோ, சகோதரர்களே, உரிமை வாழ்வுக்கு அழைக்கப்பட்டிருக்கிறீர்கள்'' *(கலா 5:13)*. இச்செய்தி மீட்பு நற்செய்தியின் ஓர் இன்றியமையாப் பகுதியாகும். ''சிறைப்பட்டோர் விடுதலையடைவர் என அறிவிக்கவும், ஒடுக்கப்பட்டோர்க்கு உரிமை வாழ்வு வழங்கவும்'' இயேசு வந்துள்ளார் *(லூக் 4:18)*. விதியினால் தாங்கள் ஆட்கொள்ளப்பட்ட உணர்வைக் கொண்டிருந்த பழங்காலப் புறவினத் தாருக்கு மட்டுமன்று, தாங்கள் அடிமைக ளென ஏற்றுக்கொள்ள மறுத்த யூதருக்கு மட்டுமன்று *(யோவா 8:33)*, குழம்பிய

வழிகளில் நிரந்தர விடுதலைக்காக ஏங்கி நிற்கும் இன்றைய மனிதர்கட்கும் இயேசுவின் வருகை விடுதலையைக் கொணர்கின்றது. ஆனால், 'விடுதலை' பலவாறு திரிக்கப்படுகின்றது; விவிலியமோ அதனை வரையறுத்துக் கூறுவதில்லை. எனினும், இறைவன் மனிதர்க்கென வகுத்திருக்கும் திட்டங்களைச் சுதந்தரத்துடன் தேர்ந்தெடுக்கும் ஆற்றல் படைத்தவன் மனிதன் என்று விவிலியம் மறைமுகமாய்க் கூறுகின்றது; மிகச் சிறப்பாக, உண்மைச் சுதந்தரத்தின் வழியைச் சுட்டிக் காட்டுகிறது. தம் மக்களின் விடுதலையை உறுதியாக்க, பழைய ஏற்பாட்டில் யாவே தலையிடுகின்றார். புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவின் அருள் உலகினருக்கு இறைமக்களின் உரிமை வாழ்வைக் கொண்டு வருகின்றது.

II. **மனித சுதந்தரம்:** இறை மேலாண்மையை மிக அழுத்திக் கூறுகின்றன விவிலிய வாசகங்கள் (*எசா 6:9தொ; உரோ 8:28தொ; 9:10-21; 11:13-36*); ஆதலின், இவை மனிதனுக்குச் சிறிதேனும் உண்மைச் சுதந்தரம் உண்டோ எனும் ஐயம் எழச் செய்யலாம். இத்தகைய கட்டங்களில் யூதரின் சிந்தனைப் பாணியைக் கணிப்பது முக்கியம். அது மூலகாரணமாகிய இறைவனிடம் நேரடியாகச் செல்கிறது; இரண்டாந்தரக் காரணங்களைச் சுட்டிக்காட்டாத போதிலும் அவற்றை மறுப்பதில்லை (*காண்க. யாத் 4:21; 7:13தொ; பார்வோனின் இதயம் கடினமாதல்*). இதற்கு மாறாக, இறை உள்ளத்தின் பல படிகளையும், அம்சங்களையும் பிரித்துணர்தல் தேவை. அவர் எல்லா மனிதருடைய மீட்பையும் விரும்புவது போலவே (*1 திமொ 2:4*), மனந்திருந்தாத பாவியின் நித்திய சாவையும் விரும்புகிறார் என்று எண்ணலாகாது (*காண்க. எசே 18:23*). இறைவன் 'தாமே விரும்பித் தேர்ந்தெடுப்பதையும்' (*உரோ 9:11*), (*தம் மகனின் சாயலுக்கேற்ப பலரை*) 'முன் குறித்தலையும்' (*8:29தொ*) பவுல் அழுத்தமாகக் கூறுகின்றார்; ஆனால், அக்கூற்றிலிருந்து மனித சுதந்தரம் மாயையில் தோய்ந்தது என்ற முடிவுக்கு வருதல் தவறு.

உண்மையில் மனிதன் சுதந்தரத்துடன் தீர்மானங்கள் செய்யக்கூடியவன் என்பது விவிலியம் பரம்பரையாக உணர்த்தும் ஒன்றாகும். அவனது தேர்ந்தெடுக்கும் ஆற்றலை அடிக்கடி வலியுறுத்துவது போல, அவனது பொறுப்புணர்ச்சியையும் வலியுறுத்திக் கூறுகின்றது. முதல் பாவ நிகழ்ச்சியினின்று இதனைக் காண்கின்றோம் (*ஆதி 2-3; காண்க 4:7*). ஆசீரையோ, சாபத்தையோ, வாழ்வையோ, சாவையோ (*காண்க. உப 11:23தொ; 30:15-20*), மனந்திருந்துதலையோ மனிதன் தேர்ந்தெடுக்கக் கடமைப்பட்டுள்ளான். இந்நிலை அவன் வாழ்வு முழுவதும் நீடிக்கும் (*எசே 18:21-28; உரோ 11:22தொ; 1 கொரி 9:27*). வாழ்வுக்கு அழைத்துச் செல்லும் பாதையில் நுழைந்து, அதனில் நிலைத்திருக்க ஒவ்வொரு மனிதப் பிறவிக்கும் சுதந்தரம் உண்டு (*மத் 7:13தொ*). விதியை நம்புவோரது சாக்குப் போக்குகளைச் சீராக்கு நூல் திட்டவட்டமாக உதறித் தள்ளுகிறது. ''என் பாவத்துக்கு ஆண்டவர் பொறுப்பு என்று சொல்லாதே; ஏனெனில், அவர் வெறுக்கும் பாவத்திற்கு அவரே காரணமாக இயலாது... கட்டளைகளைக் கடைப்பிடிக்க நீ விரும்பினால், பற்றுறுதியுடன் ஒழுக உனக்கு வலிமை உண்டு.'' (*சீரா 15:11-15; காண்க. யாக் 1:13தொ*). இறைவனது அநீதியின்மேல் பழிபோட்டு விடலாம் என்று எண்ணும் பாவியின் தெய்வ நிந்தனையைக் கடுமையாகக்கண்டிக்கின்றார் பவுல். ஏனெனில், உண்மையில் நீதியுடன் தான் தண்டிக்கின்றார் இறைவன் (*உரோ 3:5-8; 9:19தொ*).

இறைவன் ஆதிக்கத்துக்கும் மனித சுதந்தரத்துக்குமிடையே முரண்பாடு தோன்றத்தான் செய்கின்றது. விவிலிய எழுத்தாளர் இதனை அறவே நீக்கிவிடவில்லை. ஆனால், மீட்பு எய்த இறை அருளும் தேவை, மனிதனது சுதந்தரக் கீழ்ப்படிதலும் தேவை என்பதை ஐயந்திரிபறக் காட்டியுள்ளார். தன் வாழ்விலேயே இஃது உண்மை என்பதையும் (*அ.ப. பணி 22:6-10; 1 கொரி 15:10*), ஒவ்வொரு கிறிஸ்தவனுடைய வாழ்

விலும் உண்மை என்பதையும் (பிலி 2:12தொ) உணர்கின்றார் பவுல்.. நம் கண்ணோட்டத்தில் இது மறைபொருள்தான். ஆனால், நம் இதயங்களை வலுவந்தத்துக்கு உட்படுத்தாமல் இயக்குவதன் இரகசியமும், கட்டாயப்படுத்தாமல் தம்மிடம் ஈர்த்துக்கொள்ளும் இரகசியமும் இறைவனுக்கு நன்கு தெரியும் (காண்க. சங் 119:36; எசே 36:26தொ; ஓசே 2:16தொ; யோவா 6:44).

III. **இஸ்ராயேலின் விடுதலை:**

**1. எகிப்திலிருந்து வெளியேற்றம்:** தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் வரலாறு எகிப்தின் அடிமைத்தனத்தினின்று இறைவனால் மீட்கப்பெற்ற நிகழ்ச்சியை அடித்தளமாகக் கொண்டது (யாத் 1-15). இதனைக் குறிப்பிடும்போது பழைய ஏற்பாடு இரண்டு வினைச் சொற்கட்கு முக்கியத்துவம் தருகின்றது. முதல் சொல் 'கால்' (gaal) (யாத் 6:6; சங் 74:2; 77:16). இது குடும்ப உரிமைகளைக் குறிப்பதாகும். இரண்டாம் சொல் 'பாதா' (pādāh) (உப 7:8; 9:26; சங் 78:42). இது சாதாரணமாக வாணிப உரிமைகளை உணர்த்துவதாகும் - பணத்துக்கு ஈடான பொருளைத் தந்துவிடுதல். ஆனால், இறைவனுக்குச் சாற்றிக் கூறும்போது இரு சொற்களும் ஏறத்தாழ ஒரே பொருளைக் கொண்டுள்ளன. எழுபது நூல் மீட்டல் என்ற சொல்லால் மொழிபெயர்க்கிறது. விடுதலை பற்றிய வேர்ச்சொல் பொருள் மயக்கம் தருவதாக உள்ளது. எல்லா விவிலிய வாசகங்களும் விளக்குவது இதுதான்; முதல் மீட்பு வெற்றிகரமான விடுதலை ஆகும். இஸ்ராயேலை ஒடுக்கிய பகைவருக்கு மீட்புப் பணமாக எதுவும் தராமலேயே வெற்றி பெற்றார் யாவே.

**2. இறைவன், இஸ்ராயேலின் 'கோயேல்' (மீட்பளிக்கும் உறவினர்):** இறைமக்களது பிரமாணிக்கமற்ற செயல்கள் எருசலேம் நகர் பாழாவதற்கும் அவர்கள் அகதிகள் ஆவதற்கும் வழிகோலின. அதன்பின், பாபிலோனிலிருந்து விடுதலையடைதல் யூதர்களுடைய இரண்டாம் மீட்பாகும். இந்நற்செய்தியே எசா 40-55-என்ற பகுதியின் முக்கிய செய்தியாகும். இஸ்ராயேலின் தூயவரான யாவேயே அதன் 'மீட்பர்', அதன் 'கோ-யேல்' (எசா 43:14; 44:6.24; 47:4; காண். எரே 50:34).

பழங்கால எபிரேயச் சட்டத்தில், நெருங்கிய உறவினராகிய 'கோ-யேல்' என்பவருக்குப் பல கடமைகள் உண்டு. குலத்தின் சொத்தைப் பாதுகாக்க வேண்டிய வேளைகளில் குடும்ப உரிமைகளைப் பேணுதல் (லேவி 25:23தொ); அடிமைத்தனத்தில் நழுவி விழுந்த 'சகோதரனை' விடுவித்தல் (எசா 25:26-49); ஒரு விதவையைப் பாதுகாத்தல் (ரூத் 4:5); உறவினரது கொலைக்காகப் பழிவாங்குதல் (எண் 35:19தொ). எசா 40-55-இல் 'கோ-யேல்' எனும் பெயரைப் பயன்படுத்துவதிலிருந்து யாவேக்கும் இஸ்ராயேலுக்குமிடையே உள்ள உறவுப்பந்தம் நீடிக்கின்றது என்பதை உணர்கின்றோம். முதல் யாத்திரையின்போது உருவாக்கப்பட்ட உடன்படிக்கையே அதன் கருவூலம் ஆகும் (காண்க. யாத் 4:22). அதன் பாவங்கள் குறுக்கிட்ட போதிலும், தேர்ந்தெடுக்கப்பட்ட குலம் யாவேயின் மணவாட்டியாகவே நிலைத்திருக்கிறது (எசா 50:1). இரு விடுதலைகட்குமிடையே உள்ள ஒப்புமை தெளிவாகக் காணக்கிடக்கிறது (காண்க. எசா 10:25தொ; 40: 3); எகிப்தினின்று வெளியேறிய நிகழ்ச்சியைப் போலவே நாடு கடத்தப்பட்ட மக்கள் தாயகம் திரும்பியதும் முழுக்க முழுக்க இறைவனின் கருணைச் செயலே ஆகும் (45:13; 52:3); நாடிழந்த நிலை மக்களது பாவத்தின் தண்டனையாகும். ஆதலால், தாயகம் திரும்பிய செயலில்தான் இறைவனின் கருணை இன்னும் அதிகமாக மிளிர்கின்றது.

**3. நிரந்தர விடுதலையை எதிர்நோக்குதல்:** தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் இன்னும் பல சோதனைகட்கு உட்படும்போது இறைவன் உதவியை இரந்து வேண்டுவர் (காண்க. சங் 25:21; 44:27); நிரந்தர விடுதலைக்கு முன்னோடியான முதல் விடுதலையை நினைவில் கொண்டு இறைவனைக் கூவி அழைப்பர்; ''எகிப்து நாட்டிலிருந்து நீ

விடுதலை பெற்றுள்ளாய். ஆகவே, உன்னைச் சார்ந்துள்ள பொறுப்பைக் கைநெகிழவிடாதே'' [மொர்தக்காயின் செபம்- எஸ்தர் *4:17* (எழுபது நூல் வாசகம்); காண். *1* மக் *4:8-11*]. மெசியாவின் வருகைக்கு முந்திய சில நூற்றாண்டுகளில் 'நிரந்தர விடுதலையை' மக்கள் எதிர் நோக்குகின்றனர். யூத மறையிலுள்ள அதிகாரபூர்வமான செபங்கள் அவ்விடுதலை விரைவில் வந்து சேர வேண்டுமென இஸ்ராயேலின் 'கோ-யேலை' வருந்திக் கேட்பதாக உள்ளன.

அதுவுமின்றி, அன்னிய நாடுகளின் ஆதிக்கத்திலிருந்து மீளவேண்டுமென்று யூதர்கள் ஏங்கிக் கிடந்தனர். ''இஸ்ராயேலுக்கு விடுதலை அளிப்பவரது'' (லூக் *24:21*) பணி அத்தகைய மீட்பே என்று எம்மாவூ நோக்கிச் சென்ற சீடர்கள் கருதினார்கள் போலும். எனவே, தங்கள் மீட்பின் நம்பிக்கையில் சமயச் சார்புள்ள சிந்தனைகளைப் பிணைத்தவர்கள் சங்கீதப் பாடகர்போல உயர்ந்த நெஞ்சம் படைத்த ஒரு சிலரேயாவர் (காண்க. லூக் *2:38*); ''அவர் இஸ்ராயேலரை அவர்களுடைய எல்லாத் தீவினைகளிலிருந்தும் மீட்பார்'' (சங் *130:8*). இறைவனின் தூய்மையில் பங்குபெற அழைக்கப் பெற்றவர்கள் அவ்வாறு எஞ்சிநின்ற சிலரே; இவர்கள் தூய்மையாக்கப் பெறுதல் மூலம் உண்மை விடுதலை புலனாகும் (காண்க. எசா *1:27*; *44:22*; *59:20*).

**4. தனி மனிதனின் விடுதலையும், சமுதாய விடுதலையும்:**

***அ) தனி மனிதன்:*** சங்கீதங்களில் அடிக்கடி ஒலிக்கும் சிந்தனை இது: ''அனைத்துத் துயரங்களினின்றும் என்னை விடுவித்த எம்முள ஆண்டவர்'' (காண். *2* சாமு *4:9*). தம் மக்கட்கு இறைவன் கொணர்ந்த விடுதலையானது விசுவாசிகள் ஒவ்வொருவர் வாழ்விலும் அவர்களுக்கே தெரியாத வழிகளில் புதுப்பிக்கப்பெறுகிறது. சில சமயங்களில் தன்னைச் சூழந்துள்ள ஆபத்தைக் குறிப்பிடாது பொதுவில் இடர்களை உணர்த்திச் செபிக்கிறார் சங்கீத ஆசிரியர் (சங் *19:15*; *26:11*); வேறு சமயங்களில் தம் உயிரையே பறிக்க விரும்பும் விரோதிகளுடன் போராடுவதாகச் சொல்லுகின்றார் (*55:19*; *69:19*); அல்லது இறைவன் தலையிடாவிட்டால் தான் விரைவில் இறந்துவிடக்கூடும் என்று கடுமையான நோயால் வருந்துபவரின் செபம் அமைந்துள்ளது (*103:3*தொ). ஆழ்ந்த நம்பிக்கையை வெளிப்படுத்தும் எதிர்பார்ப்பின் செபங்கள் சில ஏற்கெனவே காணப்படுகின்றன (காண்க. *31:6*; *49:16*).

***ஆ) சமுதாயம்:*** யாவே தம் மக்களை மீட்டதன் நினைவாக எபிரேய அடிமை ஏழு ஆண்டுகட்குப் பின் விடுதலை பெற வேண்டும் என்று உபாகமப் பாரம்பரியம் நிர்ணயிக்கின்றது; இவ்வாறு விவிலியச் சட்டம் இஸ்ராயேலின் முதல் விடுதலையை மக்கள் கண்முன் வைக்கின்றது (உப *15:12-15*; காண்க. எரே *34:8-22*). எனினும், அச்சட்டத்தை மீறியவர் இல்லாமல் இல்லை; அகதிகள் நிலையினின்று திரும்பியபின்கூட விடுவிக்கப்பட்ட சகோதரர்களைத் திரும்பவும் அடிமைத்தனத்துக்கு உட்படுத்தத் தயங்காதவர்கள் இருந்தனர். இவர்களை நெகேமியா கடிந்து கொள்வார் (நெகே *5:1-8*). என்றாலும், ''ஒடுக்கப்பட்டவரை விடுவிப்பதும், எல்லாவிதத் தளையையும் தகர்த்தெறிவதும் யாவேக்கு ஏற்புள்ள நோன்பு முறையாகக்'' கருதப் பட்டது (எசா *58:6*).

IV. **இறைமக்களின் சுதந்தரம்:**

***1. நமது மீட்பராம் கிறிஸ்து:*** கிறிஸ்துவ மீட்பின் முன்னோடியாக இருந்தது இஸ்ராயேலின் விடுதலை. விசுவாசத்திலும் அன்பிலும் தம்முடன் இணையும் அனைவரையும் - யூதரையும் புறவினத்தாரையும் - முழுமையான மற்றும் நிரந்தரமான சுதந்தரத்தில் நிலைநிறுத்துபவர் கிறிஸ்துவே.

கிறிஸ்துவ சுதந்தரத்தின் தலையாய அறிக்கையாளர் பவுலும், யோவானும் ஆவர். கலாத்தியருக்கு விடுத்த மடலில் அதனைச் சிறப்பாகப் பறைசாற்றுகின்றார் பவுல்: ''கிறிஸ்து, அடிமைநிலையிலிருந்து நம்மை விடுவித்து, உரிமை வாழ்வு நமக்கு அளித்தார். அதிலே நிலைத்திருங்கள்... நீங்களோ,

சகோதரர்களே, உரிமை வாழ்வுக்கு அழைக் கப்பட்டிருக்கிறீர்கள்'' (*கலா 5:1.13; காண்க. 4:26.31; 1 கொரி 7:22; 2 கொரி 3:17*). இயேசுவின் வார்த்தையை வரவேற்கும் விசுவாசமே உண்மைச் சுதந்தரத்தின் ஊற்று. இதனை அழுத்திக் கூறுகின்றார் யோவான்: ''உண்மை உங்களுக்கு விடுதலை அளிக் கும்; மகன் உங்களுக்கு விடுதலை அளித் தால் நீங்கள் உண்மையிலே விடுதலை பெற்றவர்களாய் இருப்பீர்கள்'' (*யோவா 8:32.36*).

**2. கிறிஸ்துவ சுதந்தரத்தின் இயல்பு:** கிறிஸ்துவ சுதந்தரம் சமுதாய வாழ்வில் எதிரொலி எழுப்பும் என்பதற்குச் சான்று பிலமோனுக்குப் பவுல் எழுதிய திருமுகம். எனினும், அதன் மையம் சமுதாய அமைப் புகட்கு அப்பாற்பட்டது. ஒருவனது சமு தாய நிலை மாற வேண்டும் என்பது அது குறிக்கும் நிபந்தனையன்று. ஆதலின், சுதந் தரமுள்ள மனிதருக்கு மட்டுமன்று, அடி மைகட்கும் கூட அது கிடைக்கக்கூடிய ஒன்று (*1 கொரி 7:21*). கிரேக்க - உரோமை மயமான உலகில் தனி மனிதனின் முழு மைக்கு அடித்தளம் போன்றிருந்தது குடி யுரிமைச் சுதந்தரம்; ஆதலின் அவ்வுலகில் கிறிஸ்துவ சுதந்தரத்தின் உண்மை ஒரு முரண்பாடாகத்தானிருந்தது. ஆனால் இதே காரணத்தால், கிறிஸ்து அளித்துள்ள விடு தலையின் ஆழ்ந்த மதிப்பும் தெற்றெனத் துலங்கியது. தங்களையே முழுவதும் அடக்கி ஆளும் ஆற்றலையும், அசையாத அமைதியையும் தத்துவக் கோட்பாடுகள் மூலமும், ஒழுக்கப் பயிற்சிகள் மூலமும் எய்திட ஞானிகளும், பிறரும் முயன்றனர். இவர்களது குறிக்கோளுடன் கிறிஸ்துவின் விடுதலையைக் குழப்பலாகாது. கருத்திய லான, காலத்தோடு தொடர்பற்ற முறையில் அமையும் கொள்கையின் விளைபொருள் அன்று கிறிஸ்துவ விடுதலை; மாறாக, அது வரலாற்று நிகழ்ச்சியாம் இயேசுவினுடைய வெற்றிநிறை சாவின் விளைவாகும்; திரு முழுக்கில் கிறிஸ்துவுடன் ஆள் என்ற முறையில் தொடர்பு கொண்டு, அவரோடு ஒன்றிப்பதன் விளைவாகும்.

விசுவசிப்பவன் சுதந்தரமுள்ளவன் என்ப தற்குப் பொருள் இதுதான்; பாவம், சாவு, சட்டம் ஆகிய தளைகளின் தடையின்றி, தந்தையுடன் ஆழ்ந்த ஐக்கியத்தில் வாழ கிறிஸ்துவில் ஆற்றல் பெற்றுள்ளான்.

அ) பாவம் என்ற அரக்கன்தான் உண்மை யான கொடுங்கோலன். அதன் நுகத்தி னின்று நம்மைக் களைந்துள்ளார் இயேசு கிறிஸ்து. உரோமைருக்கு விடுத்த மடலில் (*1-3*) பவுல் உலக முழுவதிலும் பரவியி ருந்த பாவத்தின் கொடுங்கோலாட்சியை வருணனை செய்கின்றார்; நாம் அருட் பெருக்கை இன்னும் அதிகமாக உணரும் பொருட்டே அவ்வாறு விவரிக்கின்றார் (*உரோ 5:15.20; 8.2*). கிறிஸ்துவின் சாவு - உயிர்ப்பு மறைபொருளுடன் நம்மை இணைக்கும் திருமுழுக்கு - நம் அடிமை நிலைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டது (*6:6*). இஸ்ராயேலில் உள்ளுணர்வு பெற்ற சிறுபான்மையினரது கருத்துக்கேற்ப, பழைய ஏற்பாட்டில் மக்கள் எதிர்பார்த்த சிறப்பு அம்சத்தை இந்த விடுதலை நிறைவு பெறச் செய்கின்றது (*காண். லூக் 1:68-75*).

பவுல் அதன் ஆன்மீகப் பொருளை ஊடுருவிக் காட்டுகின்றார்; ''விடுதலை அளிப்பவர் சீயோனிலிருந்து வருவார். யாக்கோபின் குலத்திலிருந்து இறைப்பற் றின்மை அனைத்தையும் போக்கிடுவார்'' (*உரோ 11:26*). தேர்ந்தெடுக்கப்பெற்ற மக்க ளின் உரிமைகளில் முழுப்பங்கெடுக்க புற வினத்தாரும் அழைக்கப்பெற்றுள்ளனர் எனும் மறைபொருளை வெளியிடுகின்றார். முதல் விடுதலையின் வியத்தகு செயல்கள் நம் அனைவரிலும் புதுப்பிக்கப்பெறுகின் றன. ''இறைவனே இருளின் அதிகாரத்தி னின்று நம்மை விடுவித்து, தம் அன்பார்ந்த மகனுடைய அரசில் கொண்டு வந்து சேர்த்தார். இம்மகனால்தான் நமக்கு மீட்பு உண்டு, பாவமன்னிப்பு உண்டு'' (*கொலோ 1:13தொ*).

ஆ) பாவத்தின் தவிர்க்க முடியாத விளை வான **சாவும்** தோல்வியடைந்து விட்டது (*ஆதி 2:17; ஞான 2:23தொ; உரோ 5:12*);

அதன் கொடுக்கும் மறைந்து விட்டது (1 கொரி 15:56). சாவின் அச்சத்துக்குக் கிறிஸ்தவர்கள் இனி அடிமைகள் அல்லர் (எபி 2:14தொ). உண்மையாகவே, மகிமை நிறை உயிர்ப்பில்தான் சாவின் அச்சத்திலிருந்து முழுவிடுதலை பெறுவோம் (1 கொரி 15:26. 54தொ). இன்னும் நாம் ''நம் உடல் விடுதலையாக்கப்படும் நாளை எதிர்நோக்கித் தவித்துக்கொண்டிருக்கிறோம்'' (உரோ 8:23). ' ஆனால், இறுதிக்காலங்கள் ஏற்கெனவே ஓரளவு தொடங்கிவிட்டன; எந்த அளவுக்கு விசுவாசத்திலும் அன்பிலும் வாழ்கின்றோமோ, அந்த அளவுக்குச் ''சாவிலிருந்து வாழ்வுக்குக் கடந்து வந்துள்ளோம்'' (1 யோவா 3:14; யோவா 5:24).

**இ) சட்டம்:** அதே காரணத்தால் ''நாம் சட்டத்தின் அதிகாரத்தில் இல்லாமல், இறையருளின் அதிகாரத்தில் இருக்கின்றோம்'' (உரோ 6:15). பவுலின் வாக்கு வியப்பையும் மூட்டக்கூடும்; மிகச் சாதாரணமாகவும் தோன்றக்கூடும்; எனினும், அப்போஸ்தலர் மீட்பு பற்றித் தரும் நற்செய்தி சிறிதெனக் கருதினால் அதனைச் சிதைத்தது போலாகும். மறைபொருளான விதத்தில் நாம் கிறிஸ்துவுடன் இறந்துவிட்டோமாதலின், இனிச் சட்டத்தினின்று மீட்புப்பெற்றுவிட்டோம் (உரோ 7:1-6); வெளிச்சட்டத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம் மீட்பின் மூலப்பொருளைக் கண்டடையோம் (கலா 3:2.13; 4:3தொ). புது ஆளுகைக்கு உட்பட்டுள்ளோம். நம் உள்ளங்களில் பொழியப்பட்டுள்ள ஆவிக்குப் பணிதலே நம் நடத்தையின் கோட்பாடாகும் (காண்க. எரே 31:33; எசே 36:27; உரோ 5:5; 8:9.14; 2 கொரி 3:3.6). 'கிறிஸ்துவின் சட்டத்தைப் பற்றி' (கலா 6:2; காண்க. 1 கொரி 9:21) பவுல் இன்னும் பேசுகிறார் என்பது உண்மை; ஆனால், இச்சட்டத்தின் கொடுமுடி அன்பு (உரோ 13:8தொ). ஆவியின் உந்துதலில் தன்னியலார்ந்த முறையில் அதனைச் செயல்படுத்துகிறோம். ஏனெனில், ''ஆண்டவரின் ஆவியானவர் எங்கிருக்கிறாரோ அங்கு விடுதலை உண்டு'' (2 கொரி 3:17).

**3. கிறிஸ்தவ சுதந்தரத்தின் பயிற்சி முறை:**

அ) விடுதலை பெறும்போது, கிறிஸ்தவன் துணிவுள்ள நம்பிக்கையினால் நிறைவு பெறுகின்றான். இதனைப் பெருமிதம் எனலாம். புதிய ஏற்பாடு பயன்படுத்தும் 'பரேசியா' (parēsia) எனும் கிரேக்கச் சொல்லுக்கு 'யாவற்றையும் எடுத்துரைக்கும் சுதந்தரம்' என்று பொருள். கிறிஸ்தவனுக்கு, இன்னும் குறிப்பாக அப்போஸ்தலருக்கு, அலாதியான ஒரு மனப்பான்மையை அச்சொல் சுட்டிக்காட்டுகிறது. இறைத்திருமுன் மகவாய் நடக்க மனிதனை அழைத்துச் செல்வது இந்நம்பிக்கையே (காண்க. எபே 3:12; எபி 3:6; 4:16; 1 யோவா 2:28; 3:21). ஏனெனில், திருமுழுக்கில் நாம் பெறுவது 'அடிமையுள்ளம்' அன்று, மாறாக, 'தத்துப்பிள்ளையாகும் உள்ளத்தையே' (உரே 8:14-17). நற்செய்தியின் செறிவை மனிதர் முன் பறைசாற்றத் தேவைப்படும் முழு நம்பிக்கையையும் கிறிஸ்தவ மனப்பான்மை நம்முள் புகட்டுகிறது.

**ஆ) சுதந்தரம் என்பது தன்னடக்கமற்ற தன்மை அன்று:** ''நீங்களோ, சகோதரர்களோ, உரிமை வாழ்வுக்கு அழைக்கப்பட்டிருக்கிறீர்கள்; அந்த உரிமை, ஊனியல்பின் இச்சைகளுக்கு ஏற்ற வாய்ப்பாகும்படி விட்டுவிடாதீர்கள்'' (கலா 5:13). தொடக்கத்திலிருந்தே, கிறிஸ்தவ சுதந்தரத்தைச் சிலர் திரித்துக் கூறுவதைத் தவறென அப்போஸ்தலர்கள் கண்டிக்க வேண்டியிருந்தது (1 பேதுரு 2:16; 2 பேதுரு 2:19); குறிப்பாக, கொரிந்தியர் சமுதாயத்தில் இத்தகைய ஆபத்து கடுமையாக இருந்ததாகத் தெரிகிறது. அங்கிருந்த ஞானவாதிகள் பவுலின் வாக்கு ஒன்றைத் தங்கள் வாக்காகக் கொண்டனர் போலும்! ''எனக்கு எதையும் செய்ய உரிமையுண்டு''. ஆனால், அவர்கள் அதன் பொருளைத் திரித்து மாற்றிவிட்டனர். ஆதலின், பவுல் தன் வாக்கினைத் தெளிவுபடுத்த வேண்டியிருந்தது. கிறிஸ்தவன் ஆண்டவருக்குச் சொந்தம், உயிர்ப்பே அவனது இறுதிக் கதி என்று சுட்டிக்காட்டினார் (1 கொரி 6:12தொ).

**இ) யாவற்றிலும் உயர்ந்தது அன்பு:** ''எதையும் செய்ய உரிமை உண்டு. ஆனால், எல்லாமே பயன் தராது'' (*1 கொரி 10:23*). அயலார் நன்மையைக் கருதி நம் உரிமைகளையும் தியாகம் செய்ய வேண்டும் என்று நமது மனச்சாட்சி பகரலாம் (*1 கொரி 8-10; உரோ 14*). உன்னிப்பாய்க் கருதினால், அத்தகையநிலை நமது சுதந்தரத்தைக் கட்டுப்படுத்துவதில்லை; மாறாக, இன்னும் நிறைவழியில் அதனைக் கடைப்பிடிப்பதாகும். இறைவனுக்குப் பணிபுரியும் பொருட்டுத்தான் தங்களுடைய பழைய அடிமை நிலையிலிருந்து விடுதலை பெறுகின்றனர் கிறிஸ்தவர்கள் (*உரோ 6*). ஆதலின், தூய ஆவி அவர்களை உந்தும் வழிகளில் (*கலா 5:16-26*), ''ஒருவருக்கொருவர் அன்பின் அடிமைகளாய்'' மாறுவர் (*5:13*). தன்னைப் பணியாளனாகவும், இன்னும் சொல்லப்போனால் தன் சகோதரர்களின் அடிமையாகவும் மாற்றிக் கொள்ளும்போது (*காண்க. 1 கொரி 9:19*), பவுல் தன் சுதந்தரத்தை இழந்து விடுவதில்லை; மாறாக, ஊழியனான மகனை, கிறிஸ்துவைப் பின்பற்றுகின்றார் (*காண்க. 1 கொரி 11:1*).

**விடுதலை ஆண்டு** (RELEASE, YEAR OF)

காண்க. ஒய்வு ஆண்டு - II:597.

**விடுதலைத்தலைவர்கள் நூல், நீதிபதிகள் நூல்** (JUDGES, BOOK OF)

***1. பெயர்:*** இந்நூல் எபிரேயத்தில் 'சோபேட்டிம்' (Sopetim) என்ற பெயருடையது. இதை எழுபதுநூல் கிரேக்க மொழியில் 'க்ரிடைய' (Kritai) என்று மொழி பெயர்த்தது. இதைப் பிற மொழிகளில் நீதிபதிகளின் நூல் என்று அழைக்கிறோம். ஆனால், இப்பெயர் 'சோபேட்டிம்' என்ற எபிரேயச் சொல்லின் விவிலியப் பொருளை அவ்வளவாக எடுத்துக்காட்டவில்லை; ''விடுதலைத்தலைவர்கள் நூல்'' என்பது ஓரளவு எடுத்துக் காட்டுகிறது எனலாம்.

''சோபேட்டிம்'' என்ற எபிரேயச் சொல் கானானியரிடமிருந்து வந்திருக்க வேண்டும் (*ஆமோ 2:3*). இச்சொல்லின் பொருள் 'தலைவர்' அல்லது 'இளவரசர்' என்பதாகும். நீதிபதிகள் என்ற பெயர் இந்நூலில் வரும் தலைவர்களுக்குச் சாற்றிக் கூறப்படுகிறது. இக்காலத்துப் பொருளில் கொள்வது போல், சண்டைகளைத் தீர்த்து, குற்றம் தண்டித்து, மக்கள் தங்களது உரிமைகளைப் பெற உதவி செய்ய நியமிக்கப்பட்டவர்கள் அல்லர் இவர்கள். இந்நூலில் நீதிபதி என்பதற்கு முதன்மையான பொருள் எழுதப்பட்ட சட்டப்படியோ, வாய்மொழிப் பாரம்பரியப்படியோ நீதித்தீர்ப்பளிக்கும் நடுவர் என்பது அன்று. இவர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் யாவேயின் ஆவியால் உந்தப்பட்டுத் தோன்றிய, ஆவேசம் பெற்ற தலைவர்கள் ஆவர்; புற இனத்தவரின் கொடுமைகளிலிருந்து இக்கட்டான காலத்தில் நாட்டை முழுவதுமோ, ஒரு பகுதியையோ அழிவிலிருந்து காப்பாற்ற இறைவனால் அனுப்பப்பட்ட போர்த்தலைவர்கள். இறைமக்களை விடுவிப்பது இவர்களது சிறப்பான பணியாகும். இவர்கள் இறைமக்கள் இழந்துவிட்ட உரிமைகளை மீட்டுத் தருபவர்களாவர். இப்படிச் செய்யும்போது இறைவனுடைய சிறப்பான உதவியுடன் செயல்படுகின்றனர். யாவேயின் மீட்பு நீதியை மெய்ப்பிக்கின்றனர். புற இனத்தவருடைய கொடுமைக்கு உட்படுதல் இறைமக்கள் யாவேயிடம் பற்றுறுதி தவறுவதால் ஏற்படுகிறது (*உப 28:15.68; நீதி 2:11-15*). அதேபோல் அவர்கள் மனந்திரும்பி யாவேயிடம் திரும்பி வரும்போது, கொடுமைகளிலிருந்து அவர்களுக்கு விடுதலை கிடைக்கிறது (*உப 28:1-24; நீதி 2:18*). இதுவே யாவேயின் நீதியாகும்; உடன்படிக்கையின் விளைவாகும். யாவேயின் பற்றுறுதி இதற்கு உறுதியளிக்கிறது. ஏனெனில், யாவே நீதியுள்ளவர். இந்த இறை நீதியை மெய்ப்பிக்கும் கருவிகளாக இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆவேசமிக்க அருங்கொடை பெற்ற தலைவர்களே இந்த நீதிபதிகள்! ''விடுதலைத் தலைவர்கள்'' (*நீதி 9:15-31*) அல்லது நீதிபதிகள் என்ற அளவில் இவர்கள் யாவே தமது வார்த்தைக்கு அளிக்கும் பற்றுறுதியின் கருவிகளாவர்.

நீதிபதி பற்றிய இக்காலக்கருத்து ஓரள விற்கு, இந்நூலில் வரும் சிறிய நீதிபதி களுக்குப் பொருந்தும். இவர்கள் மக் களைப் பகைவர்களிடமிருந்து மீட்பதோடு நீதியும் வழங்கினர். இவர்கள் யூத இன ஆட்சியின் நிலையான நிறுவன அமைப் பைச் சார்ந்தவர்கள். இவர்கள் தேர்ந்தெடுக் கப்பட்டவர்கள். யாவேயின் சட்டத்திற்கு விளக்கம் அளிப்பதும், யூத இனத்தவரி டையே சச்சரவும் கருத்து மாறுபாடும் ஏற்படும்போது அதைத் தீர்த்து வைப்பதும் இவர்களுடைய பணியாகும்.

ஆகவே, இந்நூலாசிரியர், நீதிபதி என்ற பொதுத்தலைப்பின்கீழ்ப் பல செயல்களை உள்ளடக்கிக் கூறுகிறார். ஆயினும், இந் நூலில் சிறிய நீதிபதிகளின் நிறுவனச் செயல்கள் சிறப்புப் பெறவில்லை; பெரும் நீதிபதிகளின் தீரச் செயல்களே சிறப்புப் பெறுகின்றன. உபாகம ஆசிரியருக்கு எல் லாத் தீர்ப்பும், இறைவன் இஸ்ராயேல ரோடு செய்துகொண்ட வரலாற்று உடன் படிக்கையில் வேரூன்றியுள்ளன. நீதியென் பது இறைவனுடைய மீட்பளிக்கும் நீதியே. இந்நூலில் வரும் நீதிபதிகள் இறைமீட்புச் செயலின் அடையாளங்களும் கருவிகளுமா வர். இறைவன் ஒருவரே இறுதியான மீட்பராவர். மீட்கும் செயல் அவரிடமி ருந்து மட்டுமே வருகிறது (நீதி *6:34.36-37; 7:2.9.14-15*). ஒருவேளை இந்த இறையியல் கருத்து, இந்நூலில் வரும் எல்லாத் தலை வர்களுக்கும் நீதிபதி என்ற பெயரைச் சாற்றிக் கூறத் தூண்டியிருக்கலாம்.

இவர்கள் ஒவ்வொருவரும் நூலில் கொடுக்கப்பட்டிருக்கும் வாசகத்தின் நீளத் திற்கு ஏற்ப, பெரிய நீதிபதிகள் சிறிய நீதிபதிகள் என்று பிரிக்கப்படுவர். நூலில் பெரும்பகுதியை நிரப்பும் ஆறுபேர் பெரிய நீதிபதிகள் என்றும், மற்றவர்கள் சிறிய நீதிபதிகள் என்றும் அழைக்கப்படுவர். இஃது ஒருதலையான முடிவாகும். சிறிய நீதிபதிகள் பற்றிய பகுதியில், பெரிய நீதிபதிகளின் பகுதியில் காணப்படும் இறை யியல் வாய்பாடுகள் காணப்படவில்லை; ஆனால், சில நிலையான கூறுகள் உள்ளன. பதவியேற்றல், நீதி வழங்கிய காலம், அவர்கள் இறப்பு, அடக்கம் செய்யப்பட்ட இடம் ஆகியவை குறிக்கப்படுகின்றன. சில சிறிய நீதிபதிகளுக்கு அவர்களின் சொத்துப் பட்டியல் தரப்படுகிறது. சிறிய நீதிபதிகள் இஸ்ராயேலின் கூட்டாட்சியில் நிலையான நிறுவனமாக இருந்திருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது.

சிறிய, பெரிய நீதிபதிகளான பன்னிருவ ருடன் ஏலியையும் சாமுவேலையும் சேர்க்க வேண்டும் (1 சாமு *1:7*). இந்த இருவர் மட்டும்தான் இஸ்ராயேல் நாடு முழுவதற் கும் நடுவராக இருந்ததாகத் தெரிகிறது. மற்றவர்களைப்போல் அல்லாது, இவர்கள் முழுவதும் சமய, ஆன்மீகத் தலைவர்கள் ஆவர்.

**2. திட்டம்:**

அ. முதல் முன்னுரை *(1:1-2:5)*.

ஆ. இரண்டாவது முன்னுரை*(2:6-3:6)*.

இ. நீதிபதிகளின் நூல் *(3:7-16:31)*.

1. *3:7-11* : ஒத்னியேல்.
2. *3:12-30* : ஏகூது.
3. *3:31* : சம்கார்.
4. *4:1-5:32* : தெபோரா -பாராக்கு.
5. *6:1-8:35* : கிதியோன்.
6. *9:1-57* : அபிமெலக்கு (நீதிபதி களில் ஒருவன் அல்லன்).
7. *10:1-2* : தோலா.
8. *10:3-16* : யாயிர்.
9. *10:17-12:7* : இப்தாகு.
10. *12:8-10* : இப்சான்.
11. *12:11-12* : ஏலோன்.
12. *12:13-15* : அப்தோன்.
13. *13:1-16:31* : சிம்சோன்.

ஈ. முதல் பிற்சேர்க்கை *(17:1-18:31)*.

உ. இரண்டாவது பிற்சேர்க்கை *(19:1-21:25)*. இந்நூல் பல்வேறுபட்ட கதைகளின் தொகுப்பாகும். அவற்றிடையே ஒற்றுமை யில்லை; ஆனால், வரலாறு பற்றிய இறை யியல் திட்டத்தினுள் ஒன்று சேர்த்துத் தரப்படுகின்றன.

**3. எப்படித் தோன்றின:** இந்நூலின் தோற்ற வரலாற்றில் நான்கு படிகளைக் காணலாம்.

***அ. முதற்படி:*** வாய்மொழிப் பாரம்பரி யம். வீரர்களின் வரலாறு, குடும்ப வீரகாவி யங்கள், பெயர்க் காரணக்கதைகள் ஆகிய வற்றை ஒட்டிய மிகப்பழைய வாய் மொழிப் பாரம்பரியங்கள் இஸ்ராயேலரி டையே எங்கும் பரவியிருந்தன. பெரும்பா லும், இவை வழிபாட்டு மையங்களிலும், பாடகர் குழுக்களிலும் காப்பாற்றப்பட்டு வந்தன. குடியேற்றக் காலம் பற்றிய சில வீர காவியக்கதைகள் வாய்மொழியாக வட நாட்டுப் பாரம்பரியத்தில் மட்டும்தான் காப்பாற்றப்பட்டிருந்தன; மற்றவை தென் பகுதியில் பாதுகாக்கப்பட்டன. இப்பாரம் பரியங்கள் வெவ்வேறு விதத்தில் மாற்றிய மைக்கப்பட்டு நினைவில் காக்கப்பட்டன.

***ஆ. இரண்டாம்படி:*** வாய்மொழிப் பாரம் பரியங்கள் இணைவட்டவடிவில் ஒன்று சேர்க்கப்பட்டன. சிறிது காலத்திற்குப்பின் இப்பாரம்பரியங்களுக்கு எழுத்து வடிவம் கொடுக்கப்பட்டது. இது தாவீது அல்லது சாலமோன் காலத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும்.

***இ. மூன்றாம்படி:*** வட அரசு வீழ்ந்தபின் கி.மு. 721) இப்பாரம்பரியங்கள் இணைக் கப்பட்டு முதல் பதிப்பு தோன்றியது. இஃது இஸ்ராயேலின் சமய வரலாற்றை எழுத முயன்ற உபாகமப் பாரம்பரிய ஆசிரியர்களின் வேலைப்பாடாகும். இவர் கள் தங்களுக்குக் கிடைத்த ஏட்டு மூலங் களைப் பயன்படுத்தி, திட்டம் செய்து, வாய்பாட்டுச் சொற்களைப் பயன்படுத்தி இந்நூலுக்கு ஒற்றுமை அளித்தனர். மீண்டும் மீண்டும் வரும் வாய்பாட்டுச் சொற்கள் உபாகமப் பாரம்பரியக் கொள்கைக்கு ஒத்த னவாயுள்ளன. அவை அதே வரலாற்று விளக்கத்தையும் எதிரொலிக்கின்றன. உடன் படிக்கைக் கடமையையும் அதே முறையில் வலியுறுத்திக் கூறுகின்றன. இந்த ஒற்றுமை கள், உபாகம ஆசிரியர்களே இந்நூலை அமைத்தனர் என்று கருத இடமளிக் கின்றன. பாவம் செய்தல், கொடுமைப்படு தல், மனந்திரும்புதல், விடுதலை, அமைதி ஆகியவை மீண்டும் மீண்டும் வரும் இணைவட்ட அமைப்பாக எடுத்துக் கூறப் படுகின்றன. இந்நிலையில் நீதி *2:11-3:6*-இல் வரும் முன்னுரை சேர்க்கப்பட்டது. தனிப் பட்ட வீரகாவியங்கள் இந்த இறையியல் அமைப்பில் உருவாயின. ஒருவேளை இச் சமயத்தில்தான், வெற்றிகள் பற்றி உபாகமப் பாரம்பரிய விளக்கமுடைய நிகழ்ச்சியுரை *(1:1-2:5)* நீதிபதிகள் ஆகமத்திற்கு ஒரு முன்னுரையாகச் சேர்க்கப்பட்டிருக்கலாம். இதன் முற்சேர்க்கை, நீதி *2:6-4*-இல் யோசு *24:28-31* என்ற பகுதியை மீண்டும் கூறச் செய்கிறது. இந்தப் பதிப்பாசிரியர் தன் நோக்கத்திற்கு ஒவ்வாததும், ஒழுக்கத்திற் குப் பொருந்தாதுமாகக் கருதி நீதி *9: 16* அதிகாரங்களை வேண்டுமென்றே விட்டி ருக்கலாம். *(9; 16*-ஆம் அதிகாரங்களைத் தவிர்த்த) இந்தத் தொகுப்பு *(1:1-15:20)* ஆறு நீதிபதிகளைப் பற்றிய (ஒத்னியேல், ஏகூது, பாராக்கு, கிதியோன், இப்தாகு, சிம்சோன்) வரலாற்றை மட்டுமே கொண்டிருந்தது. பிற்காலப் பதிப்பாசிரியர் இன்னும் ஆறு பேருடைய (சம்கார், தோலா, யாயிர், இப்சான், ஏலோன், அப்தோன்) வரலாற் றைச் சேர்த்திருக்க வேண்டும். இவர்களைப் பாரம்பரியம் நினைவு கூர்ந்தது; ஆனால், அவர்களுடைய தீரச்செயல்களை வெகு காலமாக மறந்திருக்க வேண்டும். இச்சேர்க் கையின் விளைவால் ''பன்னிரண்டு நீதிபதி களின் நூல்'' தோன்றியது. ஒருவேளை இதுதான் இப்பதிப்பாசிரியரின் நோக்கமாய் இருக்கலாம். இவர்தான் 9; 16-ஆம் அதி காரங்களை இந்நூலில் புகுத்தியிருக்க வேண்டும். இப்பதிப்பு வேலைகள் கி.மு. 7-ஆம் நூற்றாண்டில் நடந்திருக்க வேண்டும்.

*ஈ. நான்காம்படி:* அதி. 17-18-இல் வரும் ''தாண்'' என்ற இடத்திலுள்ள திருத்தலம் பற்றிய நிகழ்ச்சியுரையும், அதி. 19-21-இல் வரும் தீரச்செயல் பற்றிய நிகழ்ச்சியுரையும் பிற்காலத்தைச் சார்ந்த ஆர்வத்தைக் காட்டுகின்றன. இவை நாடு கடத்தப்பட்ட காலத்தில் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். அதி. 1-16-இல் காணப்படும் இறையியல் போக்கு இப்பிற்சேர்க்கைகளில் காணப்படவில்லை. இவற்றையெல்லாம் சேர்த்து ஒரு பதிப்பாசிரியர் நாம் கொண்டிருக்கும் வடிவில் இந்நூலை எழுதியிருக்க வேண்டும்.

இம்முறையில் இந்நூல் தோற்றத்தில் பலபடிகளும் பல பதிப்புகளும் உண்டு.

**4. சில முக்கிய கருத்துக்களும் குறிப்புகளும்:**

*1. முதல் முன்னுரை: (1:1-2:5):* யோசுவா ஆகமத்தைப் படிக்கும்போது, வாக்களிக்கப்பட்ட நாட்டில் புகுந்த இஸ்ராயேல் படிப்படியாக வெற்றிமேல் வெற்றி கொண்டு, பாலஸ்தீனம் முழுவதையும் கைப்பற்றி நிலையாகக் குடியேறியதாக உணர்வு ஏற்படுகிறது. ஆனால், இந்த முன்னுரை அதற்கு எதிரான விவரிப்பைக் கொடுக்கிறது. இப்பகுதி யோசுவாவுக்குப்பின் வந்த காலத்தில் நிலவிய அரசியல், சமய நிலைகளை விவரிக்கிறது. இஸ்ராயேல் மக்கள் தங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்ட பகுதிகளில் குடியேற முயன்றபோது, அங்கே ஏற்கெனவே வாழ்ந்த மக்கள் எல்லோரையும் வென்று தங்களது அதிகாரத்தை நிறுவ முடியவில்லை. ஆகையால், அம்மக்களோடு ஒன்றி வாழ்வதைத் தவிர வேறு ஒன்றும் இஸ்ராயேல் இனத்தவர் சிலரால் செய்ய முடியவில்லை. தொடர்ந்து போராட்டம் இருந்து கொண்டே இருந்தது. அரசியல் ஆபத்து மட்டுமன்று, சமய ஆபத்தும் இருந்தது. நீதி 1:1-36 என்ற பகுதி குடியேறிய காலத்தில் கண்ட வெற்றிகளை விவரிக்கிறது. ஆனால், இஸ்ராயேலர் இறைவனோடு செய்து கொண்ட உடன்படிக்கையைக் கடைப்பிடிக்கவில்லை. ஆகவே, இக்காலத்தை 2:1-5 என்ற பகுதி இறையியலாகத் தீர்ப்பிடுகிறது. கானானில் வாழ்ந்த புற இனத்தவரை அழிக்கத் தவறியது, பாவமாகும். அதற்காக அவர்கள் அடைந்த தண்டனையை 2:6-16:31 விவரிக்கிறது. கானானை வெற்றி கொண்டு குடியேறிய இக்காலம் பற்றிய இம்முதல் முன்னுரை உபாகமப் பாரம்பரிய விளக்கவுரையாகும். இதையே பிற்காலத்திற்கு ஏற்றபடி மெருகேற்றியது இரண்டாம் முன்னுரை (2:6-3:6).

**4. 2. இரண்டாம் முன்னுரை:** *நீதி 1:1-2:5.* இந்நூலுக்கு நல்லதோர் முன்னுரையாக இருந்தாலும் 2:6-3:6 என்ற பகுதியும் ஒரு முன்னுரையாக அமைகிறது. இம்முன்னுரை, யோசுவாவின் இறுதி உரையோடு நேரடியாகத் தொடர்பு கொள்கிறது (யோசு 24:28-33; நீதி 2:6-9). இம்முன்னுரையின் மையப்பகுதி மிகக் கவனமுடன் அமைக்கப்பட்ட வேலைப்பாடுடையதாகும். இதிலே உபாகமப் பாரம்பரியக்குழுவின் இறையியல் திட்டம் வரையப்படுகிறது. இது பின்வரும் 3:7-16:31-இல் வரும் வரலாற்றை விளக்கப் பயன்படுகிறது. இவ்விரண்டாம் முன்னுரை நூலின் முதன்மைக் கருத்தை வட்டவடிவில் எடுத்துக் கூறுகிறது. இவ்வகையில் ஒரு வாய்பாடு அமைகிறது. இஸ்ராயேலர் இறைவன் திருமுன் தீமை செய்கின்றனர்; பொய்த்தேவதைகளை வணங்குகின்றனர்; பாவம் செய்கின்றனர். இறைவன் அவர்கள்மேல் சினம் கொள்கிறார். அவர்களுடைய எதிரிகளிடம் அவர்களைக் கையளிக்கிறார்; ''விற்றுவிடுகிறார்''. அவர்கள் கொடுமைப் படுத்தப்படுகின்றனர். அவர்கள் மனந்திரும்பி இறைவனை நோக்கி அபயமிடுகின்றனர்; அழுகின்றனர்; இறைவனை நாடுகின்றனர். இறைவன் மனமிரங்கி அவர்களுக்கு ஒரு மீட்பரை, நீதிபதியைத் தோற்றுவிக்கிறார். பாவம், இறைவனது சினம், துன்பப்படுதல், மனந்திரும்புதல், மீட்பு, அமைதி, பாவம், இறைவனது சினம்... இப்படித் தொடர்ந்து கொண்டே போகிறது. இந்த முதன்மைக் கருத்து நூல் முழுவதும் ஒரு திட்டம் செய்யப்பட்ட வாய்பாடுபோல் ஓடுகிறது. இன்னல்கள் பாவத்தின் தண்டனைகளாக

வும், விடுதலை மன்னிப்பின் அடையாள மாகவும் காட்டப்படுகின்றன. இக்கருத்து இந்நூல் முழுவதும் தொடர்ந்து செயல்படு கிறது. இறைவன் மீட்புச் செயலைத் தொடர்ந்து நடத்துபவர் என்ற கருத்து இந்நூல் முழுவதும் உறுதியடைந்து கொண்டே போகிறது.

இவ்விறையியல் கருத்தை எடுத்துக்காட் டும் நிகழ்ச்சியுரைகள் மூன்று முக்கிய கருத்துக்களைச் சுற்றி அமைகின்றன; இறை வன் ஒரு மீட்பரை எழுப்புகிறார். ஒரு பெரும் போர் நடக்கிறது, இஸ்ராயேலர் வெற்றி பெறுகின்றனர். நிகழ்ச்சியுரை இரு வகைக் கூறுகளோடு முடிகிறது; பகைவன் இழிவாக்கப்படுகிறான், நாட்டில் அமைதி நிலவுகிறது. ஒவ்வொரு நிகழ்ச்சியுரையும் வாய்பாட்டு முறையில் தொடங்கி முடிகின் றது. ஆனால், இந்த வாய்பாடு நிகழ்ச்சி யுரைகளைப் பாதிப்பதில்லை.

**4. 3. ஒத்னியேல்:** இவரைப் பற்றிய நிகழ்ச்சியுரை, பொதுவான வாய்பாடுடன் தொடங்குகிறது. இஸ்ராயேல் மக்கள் ''ஆண்டவன் திருமுன் பாவம் புரிந்து தங்கள் கடவுளை மறந்து போய்ப் பாகா லையும், அசரோத்தையும் வழிபட்டனர். ஆண்டவர் இஸ்ராயேலர் மேல் கோபம் கொண்டு மெசபொத்தாமியாவின் அரச னான கூசான் ரிசத்தயிம் என்பவனுக்கு அவர்களைக் கையளிக்கவே, இஸ்ராயேல் மக்கள் எட்டு ஆண்டுகளுக்கு அவனுக்கு அடிமைகளாக இருந்தனர்'' *(நீதி 3:7-8)*. கூசான் ரிசத்தாயிம் என்பதற்கு இரட்டிப் பாகக் கொடுமையுள்ளவன் என்பது பொருள். இவன் ஏதோமைச் சார்ந்தவன். யூதாவின் தெற்கு எல்லை இவனுடைய அரசுக்கு எல்லையாக விளங்கியது. யூதா இனத்தவருடைய பலவீனத்தை அறிந்து இவன் அவர்களைத் துன்புறுத்தினான். இதைக் கண்ட இஸ்ராயேலர் இறைவனி டம் மன்றாடினர். இக்கொடுமையிலிருந்து மக்களை மீட்க யாவே காலேபின் தம்பி கெனாசின் மகன் ஒத்னியேலைத் தேர்ந்து கொண்டார். இறைவனது ஆவி இவரை ஆட்கொண்டது. இந்த ஆவி ஒரு மனிதனை ஆட்கொண்டு அவருக்கு ஆற்றல் மிக்க சக்தி அளித்து, அவனைப் பெருஞ்செயல் செய்ய வைக்கக்கூடிய இறைவனது ஆற்றலாகும். ஒத்னியேல் இஸ்ராயேலை மீட்டு, அவர் களிடையே 40 ஆண்டுகளுக்கு நீதி வழங்கி னார்.

**4. 4. ஏகூது:** இஸ்ராயேலர் மீண்டும் இறைவன் திருமுன் தீயன செய்தனர். மோவாபு அரசன் எக்லோன் இறைவனின் தண்டிக்கும் கரமாக விளங்கினான். கொடுமை மோவாபியரிடமிருந்து வருகி றது. அராது, அர்னோன் ஆகிய ஆறுகளுக்கி டையில் சாக்கடலுக்கு வடகிழக்கில் மோவாபு இனத்தவர் வாழ்ந்து வந்தனர். தங்கள் நாட்டை விரிவாக்க எண்ணியபோ தெல்லாம் அர்னோனுக்கு வடக்கிலுள்ள செழிப்பான பகுதி அவர்கள் கண்ணில் பட்டது. இஸ்ராயேலரிடையே மத்திய அரசு அமைப்பு இல்லை. ஆனால், மோவா பியர் நல்ல அமைப்புப் பெற்று ஒரே அரசின் கீழ் இயங்கினர். ஆகையால், இவர்கள் இஸ்ராயேலரை எளிதில் வெற்றி கொள்ள முடிந்தது. இவர்களால் துன்புற் றது பென்யமின் இனமாகும். எக்லோன் என்பதற்கு எருது என்பது பொருள். இவ னால் கொடுமை அடைந்த இஸ்ராயேலர் இறைவனை மன்றாட, இறைவன் ஏகூது என்ற ''இடக் கையனைத்'' தனது மீட்புக் கருவியாகப் பயன்படுத்துகிறார். ஏகூது எக்லோனை இரகசியம் கூறுவதாகத் தனியே சந்தித்து அவனை வயிற்றில் குத்திக் கொல்லுகிறார். பின், இஸ்ராயேலருக்குத் தலைமை தாங்கி மோவாபியரை வெல்லு கிறார். இவர் 80 ஆண்டுகளுக்கு நீதி வழங்கினார்.

இப்படி அரசனைக் கொல்வது பற்றி இந்நூல் ஒரு தீர்ப்பும் கூறவில்லை. நாட் டின் விரோதிக்கு எதிராகச் செய்த நெருக் கடிக்கேற்ற செயல் ஆனதால், இச்செயல் கண்டிக்கப்படவில்லை. ஒருவேளை அக் காலத்தில் இப்படி நடப்பது வெகு அரி தான செயலன்று.

**4. 5. சம்கார்:** இப்பெயர் செமித்திக்கு பெயரன்று; அனாத்தின் மகன் எனப் பொருள்படும்; ஒருவேளை கலிலேயாவி லுள்ள பெத் - அனாத்தின் குடிமகன் எனப் பொருள்படும். இவர் சிறிய நீதிபதிகளில் ஒருவர். இவர் பெலிஸ்தியரிடமிருந்து வந்த ஆபத்திலிருந்து இஸ்ராயேலரைக் காப்பாற் றினார். இவர் பெலிஸ்தியரில் அறுநூறு பேர்களைக் கலப்பைக் கொழுவால் கொன் றார் என்று வாசிக்கிறோம் (நீதி 3:31). இது 2 சாமு 23:11-12-இல் வரும் ஆகேயின் மகன் சம்மாவின் தீரச்செயலை நினைவு படுத்துகிறது. இதே சம்கார் தெபோராவின் பாடலில் குறிப்பிடப்படுவதாகத் தெரிகிறது (நீதி 5:6). ஆனால், இக்குறிப்பு ஒரு கொடுமைக்காரனை விவரிக்கிறது, விடு தலை அளித்துப் பாதுகாக்கும் நீதிபதியை அன்று. ஆகவே, இந்நூலுக்கு இறுதி வடிவம் அளித்த உபாகமப் பாரம்பரிய ஆசிரியர் இவனைத் தவறாகப் புரிந்து கொண்டாரா என்று அறிஞர் ஐயுறுவர். சம்காரை விடுதலை அளிப்பவனாகவும், அபிமெலக்கை நீதிபதிகள் அட்டவணை யில் சேர்க்கத் தகுதியற்றவன் எனவும் கருதிய ஆசிரியர், சம்காரைப் பற்றிய ஒரு குறிப்பை நீதி 3:31-இல் உட்புகுத்துகிறார். இவ்வாறு 12 நீதிபதிகளின் எண்ணை நிறைவுபடுத்துகிறார் என்பர் அறிஞர் சிலர். இன்னும் பலவாறு சம்காரைப் பற்றிக் கூறுவர்.

**4. 6. தெபோரா-பாராக்கு:** இஸ்ராயேல் ஆண்டவர் திருமுன் மீண்டும் பாவம் செய்தனர். எனவே, ஆட்சோர் நகரை ஆண்டுகொண்டிருந்த கானான் நாட்டு அர சன் யாபீனுக்குக் கடவுள் அவர்களைக் கையளித்தார்.

கானானியர் நகரங்களிடையே நிலவிய ஒன்றிப்பு இஸ்ராயேலருக்கு, சிறப்பாக கலிலேயாவில் தங்கிய இஸ்ராயேலர்க ளுக்கு, ஒரு பெரும் ஆபத்தாக முடிந்தது. இந்த பத்து மத்திய பாலஸ்தீனத்தில் வாழ்ந்த எப்பிராயிம் இனத்தவரைப் பாதித் தது. இஸ்ராயேலரிடையே நிலையான மைய அரசு இல்லாதது கானானியர் எளி தில் வெற்றி கொள்ள உதவியது. இந்த ஆபத்துக்கு எதிர்ப்பு ஒரு பெண் இறைவாக் குரைஞரிடமிருந்து எழுகிறது. ''தெபோரா'' என்பதற்குத் ''தேனீ'' என்று பொருள். இவள் எப்பிராயிம் மலையில் இராமா, பெத்தேல் என்ற ஊர்களுக்கு இடையில் தங்கி இஸ்ராயேலர்களுக்கு நீதி வழங்கி னாள்.

கானானியரிடமிருந்து ஆபத்து வந்த போது, நெப்தலி இனத்தைச் சேர்ந்த பாராக்கை அழைத்து, கானானியரோடு போரிடுமாறு தெபோரா யாவேயின் பெய ரால் ஆணையிடுகிறாள். பாராக்கு என்ற சொல்லுக்கு ''மின்னல்'' என்று பொருள். தெபோரா தன்னுடன் வந்தால்தான் படையை நடத்துவதாக பாராக்கு கூற, அவளும் இசைகிறாள். பாராக்கு தனது இனமாகிய எப்பிராயிமிலிருந்தும், அண்டை இனமாகிய செபுலோன் இனத்தி லிருந்தும் வீரர்களைச் சேர்த்துத் தாபோர் மலைக்கு இட்டுச் செல்கிறார். அங்கிருந்து யாபீனின் படைத்தலைவன் சீசராவின் தலைமையின்கீழ் வந்த கானானியர் படை யைத் தாக்கி, பாராக்கு பெரும் வெற்றி கொள்கிறார். இவ்வெற்றி எவ்வளவு பெரி யதென்றால், யாவேயின் நேரடியான இடை யீட்டினால்தான் இது நடந்தது என்று இஸ்ராயேலரைக் கருதச்செய்தது (நீதி 5:20). சீசரா ஓடிப்போகும்போது கேனியரான ஏபேரின் மனைவி யாவேல் அவனைக் கொன்றாள்.

இவ்வெற்றி பற்றிய இரு விவரிப்புகள் உள்ளன. ஒரு வாசகம் அதி.4-இல் உரை நடையில் கொடுக்கப்படுகிறது. மற்றது அதி. 5-இல் பாடலாகத் தரப்படுகிறது. இரு வாசகங்களும் பலவற்றை விளக்காமல் விட்டு விடுகின்றன. புதை பொருள் ஆய்வுகள் இஸ்ராயேலருக்கும் கானானிய ருக்கும் இடையே நிலவிய நிலையற்ற போர்நிலையைப் பற்றிய பல குறிகள் காட்டுகின்றன. சான்றாக, பெத்தேல் கி.மு. 1200 - 1000-க்கு இடையில் நான்கு முறை அழிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

மெகிதோ கோட்டை கர்மேல் மலைக்குப் போகும் பாதையைக் காத்து வந்தது. இது கி.மு. *1150-1100*-க்கு இடையில் இஸ்ராயேலரால் அழிக்கப்பட்டது. அது திரும்பக் கட்டியெழுப்பப்பட சிறிது காலம் ஆயிற்று. அப்போது தெபோரா பாடலில் கூறப்படும் சீசராச் சண்டை நடைபெற்றிருக்கலாம். இச்சண்டை மெகிதோ நீர்த்துறை அருகே நடந்தது என்று குறிப்பிடப்படுகிறது (*நீதி 5:19*). இக்குறிப்பு, மெகிதோக் கோட்டை அழிவுற்றிருந்த காலத்தைச் சுட்டுகிறது. ஆகையால், இப்போர் கி.மு. *1100*-ஐ ஒட்டி நடந்திருக்க வேண்டும் என்பர் ஆய்வாளர்கள்.

தெபோராவின் பாடல் மிகப் பழைய எபிரேயப்பாடலுக்கு ஒரு சான்றாக நிற்கிறது. இஃது ஒரு சாதாரண நிகழ்ச்சி இவ்வாறு ஒரு பாடலாக அமைக்கப்படலாம் என்று காட்டுகிறது. அஃது உயிர்ச்சித்திரமாகவும் அழகோடும், மக்களைத் தூண்டி உற்சாகப்படுத்தும் விதத்திலும் அமைக்கப்பட்டுள்ளது. பொது மக்களின் மனதில் உயிருள்ள முறையில் பதிந்திருந்த நினைவைச் சமயமுறையில் தூய்மை செய்து ஓர் உன்னத காவியமாக்குகிறது. இப்பாடல் முழுவதும் நிறைந்து நிற்பது யாவேயின் புகழ் அஞ்சலியாகும். போர், வெற்றி, அதன்பின் வந்த அமைதி ஆகிய யாவுமே யாவேக்குச் சாற்றிக் கூறப்படுகின்றன. இப்படிப்பட்ட சூழ்நிலையில் தங்களது சமய உடன்படிக்கைக்கு ஒரு போர்க் கருத்தைக் கொடுத்தனர். அவர்கள் இறைவனாகிய யாவேயைச் ''சேனைகளின் ஆண்டவர்'' என்று அழைத்துப் போற்றினர்.

***4. 7. கிதியோன்:*** மீண்டும், இஸ்ராயேலர் இறைவன் திருமுன் பாவம் செய்தனர். இறைவனும் அவர்களை மிதியானியர் கையில் ஏழாண்டுகள் விட்டுவிட்டார்.

இந்த மிதியானியர், ஒட்டகங்களைப் பயன்படுத்தித் திரிந்த நாடோடிகளாவர். அவர்கள் வடமேற்கு அரேபியப் பாலையை மையமாகக் கொண்டு சுற்றித் திரிந்தனர். அவர்கள் நாடுகளைக் கைப்பற்றவில்லை. பிறருடைய நாட்டைத்தாக்கிக் கொள்ளையடிப்பதும், பயிர்களை அழித்துத் தானியங்களையும் விலங்குகளையும் கைப்பற்றிக் கொண்டு ஓடிவிடுவதுமே அவர்களுடைய சிறப்பான தொழிலாகும். அப்பகுதிகளிலே மிகுந்த அச்சத்தை உண்டாக்கினர். இதற்கு அஞ்சி இஸ்ராயேலர் மலைகளில் குகைகள் செய்து பாதுகாப்பான இடங்களைத் தேடிக்கொண்டனர். ஆயினும், மிதியானியர் மின்னல் வேகத்தில் வந்து கொள்ளை அடிப்பர்; வெட்டுக்கிளிகளைப்போல் பயிர்களை அழிப்பர். ஆகையால், இஸ்ராயேலர் அன்றாட உணவைக்கூட இழந்தனர். இத்தாழ்ந்த நிலையில் இறைவனிடம் இஸ்ராயேலர் மன்றாடினர். அவரும் ஒரு மீட்பரை அனுப்பினார்.

''கிதியோன்'' என்ற சொல்லுக்கு ''வெட்டுபவன்'' என்று பொருள். இவர் மனாசே இனத்தைச் சார்ந்த அபியேசர் குடும்பத்தைச் சேர்ந்த யோவாசின் மகன். யாவேயின் ஆவி இவரை ஆட்கொள்ள, இவர் பாகாலின் பீடத்தை அழித்து மரங்களையும் வெட்டி, நாட்டின் விடுதலையை ஒரு சமயச் செயலோடு தொடங்குகிறார். இதன் விளைவாக அவருக்கு எருபாகால் என்ற பெயர் கிடைக்கிறது, ஆண்டவரது தூதனின் காட்சியும், பனி பெய்தலான அருஞ்செயலும் இறைவன் அவருக்குக் கொடுத்த தூதை உறுதிப்படுத்துகின்றன. அவருடைய அழைப்புக்கிணங்க, பலபேர் அவரது படையில் சேர்கின்றனர். ஆயினும், தண்ணீர் குடிக்கும் சோதனை வழியாக *300* பேரை மட்டும் தேர்ந்தெடுத்தார். இதை நூலில் வாசித்தறிக. அவர்களுக்குப் பானைகளையும், அவற்றுள் விளக்குகளையும், கையில் எக்காளங்களையும் கொடுத்து, இஸ்ரியேல் பள்ளத்தாக்கில் பாளையம் இறங்கியிருந்த மிதியானியரைத் திடீரென்று தாக்கினார். இதைக் கண்டு கலங்கிய எதிரிகள் ஓடிப்போயினர். அவர்கள் யோர்தானை அடையுமுன்பே எப்பிராயிமியர் அவர்களைத் தாக்கி அவர்களது இளவரசர்களான ஒரேபுவையும் (காகம்), செயேபுவை

யும் (ஓநாய்) கொன்றனர். கிதியோன் யோர்தானைக் கடந்து, மிதியானியரைத் துரத்திச் சென்று அவர்கள் தலைவர்களான செபாகுவையும் சல்முன்னாவையும் வெட்டிக் கொன்றார். தனக்கு உதவி செய்ய மறுத்த சுக்கோத்து, பெனுவேல் ஊரார்களுக்குக் கொடிய தண்டனை அளித்தார்.

இதன்பின், இஸ்ராயேல் மக்கள் அவரை அரசனாக்க விரும்பினர். ஆனால் அவர், ''ஆண்டவரே உங்களை ஆளட்டும்'' என்று கூறி மறுத்துவிட்டார். இப்படி உண்மையிலேயே மறுத்தாரா அல்லது ஏதோ ஒப்புக்கு இப்படிச் செய்தாரா என்று கூறுவது கடினம். பின் வந்த அவருடைய செயல், அவரது மறுப்பு் உண்மையானது என்று காட்டவில்லை. ஒரு சமய மீட்பரும் தவறி நடக்கக்கூடும் என்பதற்குக் கிதியோன் ஓர் எடுத்துக்காட்டு. கொள்ளையடித்த பொருட்களைக் கொண்டு ஒரு ''ஏபோது'' என்ற சிலையைச் செய்து தன் ஊரான ஒப்பிராவில் வைத்தார். இஃது இஸ்ராயேலரைச் சிலை வழிபாட்டுக்கு இட்டுச் சென்றது. கிதியோன் அவர் காலத்துக்குரியவர்; கானானியரின் மத சோதனைக்கு உள்ளானார். இதன் விளைவாக, இவரைப் பற்றிய வரலாற்றுத் தீர்ப்பு ஐயப்பாடு உடையதாகும். ஆயினும், அவர் ''மிதியானியரை வெற்றி கொண்ட நாள்'' உலக இறுதியில் மெசியா கொள்ளும் வெற்றிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும் (எசா 9:4). இவர் 40 ஆண்டுகளாக இஸ்ராயேலர்களுக்கு நீதி வழங்கினார். அவர்களிடையே அமைதி நிலவியது.

**4. 8. அபிமெலக்கு:** இச்சொல்லுக்கு 'என் தந்தை ஓர் அரசன்' என்பது பொருள். இவன், கிதியோனுக்குச் செக்கேமைச் சார்ந்த ஒரு வைப்பாட்டியிடம் பிறந்தவன். ஆகையால், இவனை இவனுடைய சகோதரர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

இவன் தந்தை ஏற்க மறுத்த அரசை இவன் பெரிதும் விரும்பினான். இதற்கு இஸ்ராயேலரிடையே நிலவிய போட்டி மனப்பான்மை பெரிதும் உதவிற்று. தனது தாயின் ஊரான செக்கேம் மக்களைத் தூண்டி விட்டு அவர்களுக்கு அரசனானான். பின் தனது 70 சகோதரர்களையும் கொல்லத் தலைப்பட்டான். யோத்தாம் என்ற ஒரே ஒருவன் மட்டுந் தப்பினான். இக்கொடிய அபிமெலக்கு கானானியரைப்போல் ஒரு சிற்றரசனாக இருக்க விரும்பவில்லை. சிறிது சிறிதாகத் தன் ஆட்சியை மனாசே, எப்பிராயிம் இனத்தவர் நாட்டின்மீது செலுத்தத் தலைப்பட்டான்; அருமாவிற்குத் தன் தலைநகரை மாற்றினான். இதனால் செக்கேமியரைப் பகைத்துக் கொண்டான். அவர்கள் அவனுக்கு எதிராக எழுந்தபோது, அவர்கள் நகரையே அழித்தான். அவனுடைய ஆதிக்கத்திற்கு ஆதாரமான செக்கேமின் அழிவோடு அவனது ஆட்சியும் அழியத் தொடங்கியது. தேபேசு என்ற இடத்தில் நடந்த போரில், ஒரு பெண் எந்திரக்கல்லின் தண்டை அபிமெலக்கின் மேல் எறிந்து அவன் மண்டையை உடைத்தாள். இவ்வாறு ஓர் இழிவான முடிவை அடைந்தான் அபிமெலக்கு.

இஸ்ராயேலர் தலைவர்களில் தன்னையே அரசன் என்று கூறிக் கொண்டவர்களில் இவன்தான் முதல்வன். இவன் செய்த தீமைகளுக்கு இறைவனே பழிவாங்கினார் என்று நீதிபதிகள் ஆகமம் தீர்ப்புக் கூறுகிறது. இவன் நீதிபதிகளுள் ஒருவன் அல்லன்.

**4. 9. தோலா:** சிறிய நீதிபதிகளுள் ஒருவர். இசக்கார் இனத்தில் பூகாவின் மகனாவார். எப்பிராயிம் மலைநாட்டுச் சாமிரில் வாழ்ந்தார். 23 ஆண்டுகள் இவர் இஸ்ராயேலருக்கு நீதி வழங்கினார். இவர் செய்த தீரச்செயல்கள் குறிக்கப்படவில்லை.

**4. 10. யாயிர்:** இப்பெயருக்கு ''(இறைவன்) தெளிவுபடுத்துகிறார்'' என்பது பொருள். சிறிய நீதிபதிகளில் ஒருவர். கிலயாதைச் சேர்ந்தவர். இவரது மக்கள் யாயிரின் முப்பது நகரங்களுக்குத் தலைமை வகித்தனர். இப்பெயர் இந்நகரங்களின் பெயரை விளக்கக் கொடுக்கப்பட்ட கற்பனைப் பெயராக இருக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுவர். இவர் 23 ஆண்டுகள் இஸ்ராயேலர்களுக்கு நீதி வழங்கினார்.

***4. 11. இப்தாகு:*** இச்சொல்லுக்கு ''*(இறைவன்) கருப்பையைத் திறந்தார்*'' அல்லது ''(இறைவன்) விடுதலை அளித்தார்'' என்று பொருள் ஆகும். பெரிய நீதிபதிகளில் ஒருவர் கிலயாதைச் சேர்ந்தவர் (கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம்).

இஸ்ராயேலர் மீண்டும் இறைவன் திருமுன் பாவம் செய்தனர், பழிகாரராகினர்; பல புற இனத் தேவதைகளை வழிபட்டனர். சினமுற்ற இறைவன் அப்புற இனத்தவரிடையே இஸ்ராயேலரைக் கையளித்தார். இஸ்ராயேலர் பதினெட்டு ஆண்டுகளுக்கு மோவாபியர், அம்மோனியர் ஆகியவரிடம் அவதியுற்றனர்; இறைவனிடம் மன்றாடினர்; அவரும் செவிமடுத்தார்.

இப்தாகு கிலயாதைச் சேர்ந்த ஒரு விலைமகள் வழியாகப் பிறந்தவர். ஆகையால், இவரது சகோதரர்கள் இவரைத் தங்களுடையவராக ஏற்றுக் கொள்ளவில்லை; ஆகவே, கொள்ளைக் கூட்டத்திற்குத் தலைவரானார். அம்மோனியர்களை எதிர்த்துப் போராடத் தங்களுக்குள் தலைவன் இல்லாததால் இக்கிலயாது இஸ்ராயேலர், இப்தாகுவை அழைத்து அம்மோனியர்களுக்கு எதிராகத் தங்களை நடத்திச் செல்லுமாறு வேண்டிக் கொண்டனர். அவர்கள் தன்னைத் தலைவனாக ஏற்றுக் கொண்டதால், அவர்களைப் போருக்கு நடத்திச் செல்ல ஒத்துக்கொண்டார். மற்ற நீதிபதிகள் மேல் இறை ஆவி எழுந்து வந்து அவர்களை ஆட்கொண்டு மீட்புப் பணிக்கு அழைத்தது. ஆனால், இப்தாகுவை மக்கள் தேர்ந்தெடுத்து அதிகாரம் வழங்கினர். அவர் படையைக் கூட்டிக் கிலயாதிலுள்ள மிஸ்பாவுக்குச் செல்கிறார். அங்கு அவர்மேல் யாவேயின் ஆவி இறங்குகிறது (நீதி 11:29). அவரை இறை ஆவி உயர்ந்த தலைவராக்குகிறது. அவரது ஊக்கமிக்க தலைமையின் கீழ், கிலயாதைச் சேர்ந்த இஸ்ராயேலர் அம்மோனியர்களை வெற்றி கொள்கின்றனர். இவ்வெற்றிக்கு அவர் ஒரு பெரும் விலை கொடுக்க வேண்டியிருந்தது. போருக்குப் போகுமுன், இவ்வெற்றி கிட்டினால், திரும்பி வரும்போது அவர்தம் வீட்டிலிருந்து அவரை எதிர்கொள்ள யார் வருவாரோ அவரை ஆண்டவருக்குப் பலியாக ஒப்புக் கொடுப்பதாக வாக்குறுதி செய்திருந்தார். ஆனால், போர் முடிந்து திரும்பி வரும்போது, அவரது ஒரே மகள் ஆரவாரத்துடன் அவர் வீட்டிலிருந்து எதிர்கொள்கிறாள். அவளைப் பலியிடுகிறார்.

மனிதப் பலி யாவே வழிபாட்டுக்கு ஒவ்வாததாக இருந்தாலும் கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் இஸ்ராயேலில் மனிதப் பலி நடப்பது சாத்தியமான தொன்றாகும் என்று இந்நிகழ்ச்சி காட்டுகிறது. அக்காலத்தில் இப்படிச் செய்வது, தவறுதலாக இறைப்பற்றாகக் கருதப்பட்டிருக்கலாம்.

எப்பிராயிமியர்களோடு இப்தாகு போராடியது, இஸ்ராயேலர்களிடையே பொறாமை எவ்வாறு ஒரு போராட்டத்தை ஏற்படுத்தக் கூடும் என்பதைக் காட்டுகிறது. இப்தாகு எப்பிராயிம் மக்களை வென்று அடக்குகிறார். ''ஷிபோலத்''என்ற குறிச்சொல் யோர்தானுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் வாழ்ந்த மக்களிடையே நிலவிய மொழித் திரிபைச் சுட்டுகிறது. இப்தாகு ஆறு ஆண்டுகள் நீதி வழங்கினர்.

***4. 12. இப்சான்-ஏலோன்:*** இப்சான் சிறிய நீதிபதிகளில் ஒருவர். இவர் பெத்லகேமைச் சேர்ந்தவர். இவருக்கு 30 புதல்வர்களும், 30 புதல்விகளும் இருந்ததாகத் தெரிகிறது. இவர்களுக்கு வெளியிடங்களில் மணம் செய்து வைத்தார். இஃது ஒரு சிறப்பாகக் குறிக்கப்படுகிறது. இவர் ஏழு ஆண்டுகளுக்கு நீதி வழங்கினார். அவரை அடுத்து வந்தவர் ஏலோன். இவரும் சிறிய நீதிபதிகளில் ஒருவர்; செபுலோன் இனத்தைச் சார்ந்தவர்; பத்து ஆண்டுகள் நீதி வழங்கினார்.

***4. 13. அப்தோன்:*** இவர் சிறிய நீதிபதிகளில் ஒருவர்; பிராத்தோன் இனத்தாரான இல்லேலின் மகன். இவருக்கு 40 புதல்வர்களும், 30 பேரப்பிள்ளைகளும் இருந்தனர். இவர்கள் 70 கழுதைகளில் சவாரி செய்தனர். இக்குறிப்பு இவரது செல்வப் பெருக்கைச்

சுட்டுகிறது. இவர் எட்டு ஆண்டுகள் நீதி வழங்கினார்.

***4. 14. சிம்சோன்:*** இவர் பெரிய நீதிபதிகளில் கடைசியானவர்; தாண் இனத்தைச் சேர்ந்தவர்; மனோவாகுவின் மகன். இவரது குடும்பம் சோராவில் இருந்தது. இவர் இஸ்ராயேலரின் பொதுப்பாணி நாட்டுப் பாடலின் வீரத் தலைவனாவார். சிம்சோன் என்ற பெயருக்குச் ''சூரியன்'' என்ற பொருளுண்டு. ஆகையால், நீதிபதிகள் ஆகமத்தில் வரும் சிம்சோனின் கதை புற இனத்தவரின் இதிகாசங்களில் வரும் ''சூரியன் கதைக்கு'' ஒத்தது என்று அறிஞர் சிலர் கருதுவர். அதனால், இவரை ஓர் இதிகாசப் பாத்திரமாக ஆக்க முயல்வர்.

இக்கதையின் உண்மைப்பொருளை அறிந்து கொள்ள விரும்பினால் அதன் இலக்கிய வடிவத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். இந்நிகழ்ச்சியுரை, இஸ்ராயேலின் வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட இக்கட்டான நேரத்தை, ''ஒரு பெரிய கன நேரத்தை''ச் சித்திரித்துப் பின்வரும் தலைமுறைகளுக்கு விட்டுச் செல்கிறது. சிம்சோனின் கதையைப் புரிந்துகொள்ள, அக்கதை தோன்றிய வாழ்க்கைச் சூழ்நிலையையும் அக்கால உலகையும் பற்றிய அறிவு இன்றியமையாதது.

அக்காலம் பெரும் புரட்சிகளும், பெரும் படையெடுப்புகளும், பெரும் குடியேற்றங்களும் நிகழ்ந்த காலமாகும். இக்காலத்தில் தான் வாக்களிக்கப்பட்ட நாட்டின் மலைப் பகுதியில் இஸ்ராயேலர் குடியேறிக் காலூன்றத் தொடங்கியிருந்தனர். அவர்களுக்கு எவ்வகைப் பாதுகாப்பும் இல்லை. அவர்களைச் சுற்றிலும் பகைவர்கள் சூழ்ந்து இருந்தனர். இப்பகைவர்களில் வலிமையானவர்கள் பெலிஸ்தியராவர். இவர்கள் மட்டும்தான் இரும்பால் செய்த ஆயுதங்களைப் பயன்படுத்தினர். இவ்வித ஆயுதங்களையுடைய பெலிஸ்தியரிடமிருந்து, அரசியல் ஒற்றுமையும், மைய அமைப்பும் இல்லாத இஸ்ராயேலுக்குப் பேரழிவான அபாயம் எதிர் நோக்கியிருந்தது. இஸ்ராயேலின் ஒரே நம்பிக்கை சமய ஒற்றுமையும் யாவேயின் உதவியுமாகும். அவர்கள், யாவேயின் வழிபாட்டை விட்டு அவர் திருமுன் பாவம் செய்தபோதெல்லாம், அவர்களை யாவே அவர்களின் எதிரிகளிடம் ஒப்படைத்தார். அவர்கள் சிலை ஆராதனையை விட்டு மனம் திரும்பியபோதெல்லாம் அவர்களுக்கு விடுதலை அளிக்கும் நீதிபதிகளை அனுப்பினார். யாவே அனுப்பிய இப்படிப்பட்ட வீரர்களில் ஒருவர்தான் சிம்சோன். பெலிஸ்தியரிடமிருந்து வந்த பெரும் ஆபத்தை எதிர்த்து, சிம்சோன் தனியாகப் போராடினார். அவர் இறந்தபின், அவரது தீரச் செயல்கள் பல இடங்களில், சிறப்பாகப் புனித இடங்களில், பேசப்பட்டன; நாட்டுப் பாடல்களாக மக்கள் மனதில் குடியேறின; மக்களை ஊக்குவிக்க, அவர்களிடம் நாட்டுப்பற்றைத் தூண்ட ஓர் அரிய சாதனமாக அமைந்தன.

மற்ற நீதிபதிகளைப் போல் இவர் பெரும்படை சேர்த்து, பெலிஸ்தியரை எதிர்த்துப் போர் நடத்தவில்லை. தனிநபராக, பழிக்குப்பழி வாங்கும் நோக்கோடு போராடியதாகத் தெரிகிறது. ஆயினும், இவை யாவும் யாவேயால் ஒழுங்கு செய்யப்பட்ட செயல்களாகக் *(நீதி 14:4)* கருதப்படுகின்றன. இவருக்கு இருந்த ஆற்றல் மிகுந்த உடல் பலம், யாவேக்கு அர்ப்பணிக்கப்பட்டதன் விளைவாக வந்ததாகக் காட்டப்படுகிறது. சிம்சோன் திம்னாவைச் சேர்ந்த ஒரு பெலிஸ்தியப் பெண்ணை நேசிக்கிறார். இஃதோடு இவருக்கும் பெலிஸ்தியருக்குமிடையே எழும் பகைமை தொடங்குகிறது. திருமணத்தின் போது சிம்சோன் பெலிஸ்தியருக்கு ஒரு விடுகதை கொடுக்கிறார். அவரது மனைவி அவரை வசப்படுத்தி அவரிடமிருந்து விடையை அறிந்து பெலிஸ்தியரிடம் கூற, அதற்கு வெகுமதியாக சிம்சோன் *30* பெலிஸ்தியரைக் கொன்று, அவர்களின் ஆடைகளை விடுகதையை விடுவித்தவர்களுக்குக் கொடுத்தார். பின், உண்மையறிந்த அவர் கோபமடைந்து தன் மனைவியை விட்டகன்று செல்ல, அவளைப் பெலிஸ்தி

யருள் ஒருவன் எடுத்துக் கொண்டான். இந்த அபகரிப்புக்குப் பழிவாங்க, முந்நூறு நரிகளைப் பிடித்து, அவற்றின் வால்களை ஒன்றோடு ஒன்றாக இணைத்து, இரு வால்களுக்கிடையே ஒரு எரியும் பந்தத்தைக் கட்டி, பெலிஸ்தியருடைய பயிர் நிலங்களிலே செலுத்தி, அவற்றை எரித்து அழித்தார். பின் யூதாவின் பகுதியில் சென்று வாழ்ந்தார். பெலிஸ்தியர் சிம்சோனைத் தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கோர, யூதா இனத்தவர் சிறிதும் வெட்கம் இன்றி, அவரை அவர்களிடம் ஒப்படைத்தனர். பெலிஸ்தியர் அவரைக் கூட்டிச் சென்றபோது, அவர் கட்டுகளை அறுத்துவிட்டு, *1,000* பெலிஸ்தியரைக் கொன்றார்.

மற்றொரு நிகழ்ச்சியில், காசா நகரில் ஒரு விலைமகளுடன் இரவைக் கழிக்கச் சென்றபோது, பெலிஸ்தியர் அவரைக் கொல்லச் சதிசெய்தனர். அவர், இரவில் எழுந்து, நகரின் கதவுகளைப் பிடுங்கிக் கொண்டு எபிரோன் வரை சென்று தப்பினார். மற்றொரு வீரச்செயல் அவருக்கு அவல முடிவாக அமைந்தது. அஃது அவர் விலைமகள் தெலீலாவை விரும்பி அவளோடு வாழ்ந்ததும், அதன் விளைவுமாகும். அப்போது பெலிஸ்தியரில் பலரையும் அழித்துத் தன்னையும் அழித்துக் கொண்டார்.

சிம்சோன் கதைகள் தொடர்பு இன்றி அமைந்திருக்கலாம்; ஆனால், சமயப் பொருள் மிக்கன. இச்சமயப் பொருளும் கதைகளில் இல்லை, அவற்றை ஆசிரியர் அமைக்கும் சூழ்நிலையில் அஃது அமைந்திருக்கிறது. இவர் பிறக்குமுன்னே தேர்ந்தெடுக்கப்படுகிறார். அவருடைய பெரும் உடற்பலம் இறைவனுடைய கொடையாகும். இறைவனுடைய ஆவி அவர்மேல் வருவதால் பெருஞ்செயல்கள் செய்கிறார். அவர் ஒரு நசரேயராவார்; இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்டவர். நசரேயர் போதை தரும் பானங்களைக் குடிக்கக்கூடாது; தங்கள் முடியைச் சிரைக்கக்கூடாது; இறந்து பட்டவரின் உடலைத் தொடக் கூடாது. சிம்சோன் பற்றிய ஒவ்வொரு கதையும், இந்த அர்ப்பணத்தின் கடமையை மீறிய கதையாகும். அதன் விளைவு, அவர் பெலிஸ்தியர் பலரை அழித்தாலும் தானும் அழிகிறார். இறந்த சிங்கத்தைத் தொடுவதில் முதல் முறையாக தன் கடமையிலிருந்து தவறுகிறார். புற இனப்பெண்ணைத் திருமணம் செய்தபோது இரண்டாம் முறை மீறுகிறார். தன் அர்ப்பணத்தின் விளைவானது தன் பெரும்பலம் என்ற இரகசியத்தை வெளியிடுவதில் மூன்றாம் முறையாக மீறுகிறார். இது தெலீலா அவரது முடியைச் சிரைப்பதற்கும், அவர் கைது செய்யப்படுவதற்கும், சாவிற்கும் இட்டுச் செல்கிறது. இப்படியாக, அர்ப்பணத்தை மீறுவது பாவம். பாவம் சாவிற்கு இட்டுச் செல்லுகிறது. அடங்காத இச்சைகள் மிகப் பெரிய வீரனையும் அழிக்க வல்லன. அதன் விளைவாக, இறைவனாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டுப் பெரும் பணிகளுக்காக அழைக்கப்பட்ட வீரனுக்குக் கூட மரணமும் அழிவும் வந்து சேரும் என்ற பாடம் கற்பிக்கப்படுகிறது. சிம்சோன் பெரும் கோபக்காரர், ஒழுக்கம் கெட்டவர், போகப்பிரியர். ஆயினும் இத்தகைய சிம்சோனையும் இஸ்ராயேலின் விடுதலை வீரனாக யாவே பயன்படுத்துகிறார். அவரது சாவிலும் கூட சிம்சோன் ஒரு விடுதலை வீரனாகத் திகழ்கிறார். அழிவிலும் வெற்றிப் பெருமிதம் மிளிர்கிறது. இதுதான், இஸ்ராயேலின் இடுக்கண் மிக்க காலத்தில், சிம்சோனின் பெருஞ்செயலாகும். ஆகவே தீயவரானாலும், இஸ்ராயேலின் பெருமைமிக்கவராகத் திகழ்கிறார். .மக்கள் விரும்பும் நாட்டுப் பாடல்களில் தலைவனாக இடம் பெறுகிறார். இத்தன்மை மாறாது, தனக்குக் கிடைத்த வாய்மொழிப் பாரம்பரியத்தைத் தனது திட்டத்துக்குள் புகுத்தி இந்நூலாசிரியர் தனது நூலை அமைக்கிறார். அப்படிச் செய்யும்போது சிம்சோனைக் குறை கூறியோ, போற்றியோ தீர்ப்புக் கூறவில்லை. சிம்சோன் யாவேயின் மீட்பளிக்கும் சித்தத்திற்கும் ஆற்றலுக்கும் சாட்சியாகத் திகழ்கிறார்.

**4. 15. பிற்சேர்க்கைகள்:** அதி. 17-18 ஆகிய பகுதிகள் தாண் இனத்தவர் சுற்றித்திரிந்த வரலாற்றைக் கூறுகின்றன. பெலிஸ்தியரால் தாக்கப்பட்டு, தாண் இனத்தவர், தங்கள் உரிமைச் சொத்தான பகுதியை விட்டு விட்டு ஒரு புதிய உறைவிடம் தேடி வடக்கே செல்கின்றனர். எப்பிராயிமுக்குச் சொந்தமான மலைப்பகுதியை அடைந்து அங்குத் தங்கி ஒரு சிலை வழிபாட்டுத் தலத்தையும் அமைக்கின்றனர். காரணம், ''அக்காலத்தில் இஸ்ராயேலை ஆள அரசன் இல்லாததால், தனக்குச் சரி என்று பட்டதை ஒவ்வொருவனும் செய்து வந்தான்'' (நீதி *17:6*).

அதி *19-21* என்ற பகுதிகள் பென்யமின் இனத்தவரின் போர்களை விவரிக்கின்றன. இந்நிகழ்ச்சியுரை ஒரு லேவியனது மனைவிக்குப் பென்யமின் இனத்தவரால் ஏற்பட்ட கொடிய மானபங்கத்திற்குப் பழி வாங்குதலை விவரிக்கிறது. இந்த இழி செயலால் கோபம் அடைந்த இஸ்ராயேல் முழுவதும், பென்யமின் இனத்தைத் தண்டித்து அது முழுவதும் அழிந்து போகாமல் பார்த்துக் கொள்ளவும் செய்கிறது. இதை நூலில் வாசித்தறிக.

இப்பகுதி அக்காலத்தில் நிலவிய ஒழுக்க, சமய, சமூக நிலைகள் பற்றிய துயரமிக்க விவரிப்பைக் கொடுக்கிறது; இறைவனை மறந்து தங்கள் விருப்பம் போல் மக்கள் நடந்தால் என்ன நிகழும் என்று காட்டுகிறது. சில கதைகள் நம் காலத்திற்கும் தெளிவாக எச்சரிக்கையாக இருக்கின்றன.பேராசை (*17:1-3*), சிலை வணக்கம், கீழ்ப்படியாமை (*17:4-13*) ஆகியவற்றை இப்பகுதிகளில் நாம் காணுகிறோம். தடை செய்யப்பட்ட சிலைகளைக் கொண்டிருந்த வீட்டில் பணிசெய்ய ஒரு லேவியன் ஒத்துக் கொள்கிறான் (யாத் *20:4-5*). சுயநலம் தேடுதல், பற்றுறுதியின்மை, கொள்ளையடித்தல், களவு செய்தல் பற்றிய அருவருப்பான கதைகள் காணப்படுகின்றன (நீதி *18:1-31*). மக்கள் இதயமற்றவர்களாகவும், சுயநலம் மிக்கவர்களாகவும் (*18:7; 19:15.18*), ஒழுக்கம் கெட்டவர்களாகவும், கொடியவர்களாகவும் (*19:16-26*) மாறினர். குடும்பத் தகராறு உள்நாட்டுப் போராக மாறுகிறது. மூர்க்கத்தனமும் வலிந்து தாக்குதலும் நாட்டில் அமைதியைக் கெடுத்தன. ''பாலும் தேனும் பொழியும்'' நாடு இரத்தக்களரியும் கசப்பும் வெறுப்பும் மிகுந்த நாடாயிற்று. இந்தச் சுய நலமும் சண்டை சச்சரவும் இந்நூலின் இறுதியில் வரும் துன்பமிக்க வார்த்தைகளால் சுருக்கித் தரப்படுகிறது. ''ஒவ்வொருவனும் தனக்குச் சரியெனப்பட்டதைச் செய்தான்'' (*21:24*).

இப்பகுதிகள் காலத்தால் முந்திய பாரம் பரியங்களைச் சார்ந்ததாக இருக்கலாம். ஆனால், உபாகமப் பாரம்பரியத் தொகுப்பாசிரியரின் முதல் தொகுப்பில் இவை இடம் பெறவில்லை எனக் கூறலாம். ஏனெனில், இந்நூலின் மையக் கருத்துகள் இப்பகுதிகளில் இல்லை. ஒருவேளை இப்பகுதிகள், இந்நூலைச் சாமுவேல் ஆகமங்களோடு இணைக்கும் நோக்கத்தோடு இங்கே புகுத்தப்பட்டிருக்கலாம். இப்பிற்சேர்க்கைகள், அக்காலத்தில் இஸ்ராயேலரிடையே நிலவிய ஒழுக்க, கலாச்சார, சமயக் குழப்ப நிலைகளை எடுத்துக் காட்டுகின்றன; இஸ்ராயேலின் தான்தோன்றித்தனத்தைக் காட்டுகின்றன (நீதி *21:24*).

**5. காலக்கணிப்பு:** நீதிபதிகளின் காலம் கி.மு. *1200-1040*-க்கு இடையிட்ட காலத்தை உள்ளடக்கும். ஆனால், இந்நூலில் வரும் குறிப்புகளைக் கொண்டு கணித்தால், இந்நிகழ்ச்சிகள் நடக்க 410 ஆண்டுகள் எடுத்தது எனத் தோன்றலாம் (*3:8.11.14.30; 4:3; 6:1; 8:28; 9:22; 10:2.3.8; 12:7.10.11.14; 13:1; 15:20;16:31*). இக்கணிப்பு செயற்கை முறையானதாகும். ஒரு தலைமுறையைக் குறிக்க *40* ஆண்டுகள் அல்லது அதன்பாதி *20* ஆண்டுகள் அல்லது அதன் இருமடங்கு *80* ஆண்டுகளைப் பயன்படுத்துகிறார் ஆசிரியர் (*3:11; 5:31; 8:28; 13:1*). பல போர்களும், கொடுமைப்படுத்தப்படுதலும் ஒன்றன் பின் ஒன்றாக நடந்ததாகக் கூறப்படுகின்றன. இஃது ஆசிரியரின் வேலைப்பாடாகும். மூலத்தில் வேறுபட்டவைகளாக நின்ற

நிகழ்ச்சிகளை, இவ்வாசிரியர் தனது சமய வரலாற்றுத் திட்ட அமைப்புக்குள் புகுத்துகிறார். உண்மையில் இந்நூலில் வரும் நிகழ்ச்சிகளில் பல, நாட்டில் பல பகுதிகளில் ஒரே சமயத்தில் நடந்திருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது. இக்காலம் முழுமையும், இஸ்ராயேலில் ஏதாவது ஒரு பகுதி போராட்டத்திலும் இடுக்கண் நிலையிலும் இருந்து கொண்டே இருந்திருக்கிறது. இப்பகுதிகளில் வாழ்ந்து வந்த கானானியரோடு போராட்டம் இருந்து கொண்டேயிருந்தது. மேலும், இந்நூலாசிரியர் யோசுவா, சாமுவேல் ஆகியோருக்கு இடையிட்ட காலம் பற்றிய வரலாற்றை, காலவரையறைத் துல்லியமுடைய இஸ்ராயேலின் வரலாற்றை எழுதும் எண்ணம் கொண்டிருந்ததாகத் தெரியவில்லை. அவர் நீதிபதிகள் பற்றிய கதைகளைப் பரந்த உலக வரலாற்றோடு பொருத்திக் கூற வேண்டும் என்று கருதவேயில்லை. இஸ்ராயேலருடன் தொடர்பு கொண்ட அளவுக்குத்தான் புற இனத்தவர் இந்நூலில் காட்சியளிக்கின்றனர். இதனால் காலக்கணிப்பில், விடுபடாத பல பிரச்சனைகள் எழுகின்றன.

**6. நீதிபதி ஆகமத்தில் இஸ்ராயேலர்:** இக்காலத்தில் இஸ்ராயேலர் தம் சமூக அமைப்பில் பல மாறுதல்களைப் பெற்றனர். இம்மாற்றத்தை மூன்று பின்னிலைகளில் புரிந்து கொள்ளலாம். 1) யோசுவா ஆகமத்தின் பின்னிலை. 2) நாடோடியாகத் திரிந்த மக்கள் வேளாண்மைத் தொழிலை நிலையாக ஏற்றபோது அவர்கள் அடைந்த மாற்றம். 3) நெருக்கமற்ற கூட்டாட்சியிலிருந்து ஒற்றுமையுடைய அரச அமைப்பாக மாறும்போது ஏற்படும் மாற்றம்.

யோசுவா பாலஸ்தீனத்தின் ஒரு பகுதியான யூதாவும் சமாரியாவும் அடங்கிய பகுதியைத்தான் கைப்பற்றியிருந்தார். அதையும் முழுவதும் வெல்லவில்லை என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். யோசு 13:1-17; 17: 11-13; நீதி 2-3 ஆகிய பகுதிகளை வாசித்தால் ஆக்கோர் பள்ளத்தாக்கு, சாரோன் சமவெளி, பெலிஸ்தியச் சமவெளி ஆகிய பகுதிகள் இன்னும் இஸ்ராயேலரால் கைப்பற்றப்படவில்லை. இஸ்ரியேல் பள்ளத்தாக்கு இன்னும் கானானியரிடமே இருந்தது. இது பாலஸ்தீனத்தின் நடுப்பகுதியை வடபகுதியிலிருந்து பிரித்தது. நடுப்பகுதியைத் தென்பகுதியிடமிருந்து பிரித்த எருசலேம் அய்யலோன், ஆட்சோர் ஆகியவை இன்னும் கைப்பற்றப்படவில்லை. இதன் விளைவாக ஒவ்வொரு இனத்தவருக்கும் பிரித்தளிக்கப்பட்ட பகுதிகள் அவர்களுக்குப் பெயரளவில்தான் உரிமையாக இருந்தன. ஏனெனில், அப்பகுதிகளில் ஏற்கெனவே வாழ்ந்த மக்களை முழுவதும் விரட்ட இஸ்ராயேலரால் முடியவில்லை. சான்றாக 'தாண்' இனத்தைச் சேர்ந்தவர்கள், எருசலேமுக்கு மேற்கிலும் மத்தியதரைக்கடலுக்கும் இடையிலுள்ள பகுதியைக் கைப்பற்ற முடியவில்லை. அதன் விளைவாக வடக்கே சென்று யோர்தான் நதி தோன்றும் பகுதியில் குடியேற வேண்டியதாயிற்று (நீதி 18).

அடுத்து, இஸ்ராயேலரிடையே நடந்த சமூக மாற்றத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும். கி.மு. 1225-ஐ ஒட்டி, பாலஸ்தீன மலைப் பகுதியைக் கைப்பற்றிய இஸ்ராயேலர் தலைமுறை, ஏற்கெனவே ஏறக்குறைய 40 ஆண்டுகள் பாலையில் வாழ்ந்தவர்கள்; ஓரளவு நாடோடிகள்; நாகரிகக் கலாச்சாரத்தில் வளர்ச்சியுறாதவர்கள். இவர்கள் கானானைக் கைப்பற்றியது, நாகரிகம் அற்றவர்கள், நாகரிகம் வளர்ந்த நாட்டைப் படையெடுத்துக் கைப்பற்றியதற்கு ஒப்பாகும். அங்கு நிலையாகக் குடியேறியபோது பாலையில் கொண்டிருந்த ஓரளவு நாடோடி வாழ்க்கையிலிருந்து கானானின் உழவுத் தொழிலைக் கொண்ட நிலையான குடிமக்களாக மாற வேண்டியிருந்தது. ஆகவே, இக்காலத்தில் சிறிது காட்டுமிராண்டித்தனம் மிகுந்திருந்தது என்பதை நீதிபதிகள் ஆகமத்தில் காணப்படும் சில நிகழ்ச்சியிலிருந்து அறியலாம் (நீதி 1:7; 8:16; 9:5; 11:31; 19).

அடுத்து அரசியல் மாற்றம் ஏற்பட்டது. கானானைக் கைப்பற்றும் போது யோசுவா இஸ்ராயேலுக்குத் தலைமை தாங்கினார்.

நீதிபதிகள் காலத்தில் மைய அரசோ, அரச அமைப்போ இஸ்ராயேலரிடையே இல்லை. இவர்கள் நெருக்கமற்ற கூட்டாட்சி நடத்தினர். இவர்கள் பொதுவாக யாவேயிடம் விசுவாசம் கொண்டிருந்தனர். சீனாய் உடன்படிக்கையும், அதன் அடையாளமான உடன்படிக்கைப் பெட்டகமும் அவர்களை இணைக்கும் ஒரே கருவியாக அமைந்தன. உடன்படிக்கைப் பெட்டகம் தான் அவர்களின் வழிபாட்டு மையம். அஃது இக்காலத்தில் செக்கேம் அல்லது சீலோவில் வைக்கப்பட்டிருந்தது. இம்மையங்களில் விழாக்கள் முறையாக நடைபெற்றன; உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டது.

இக்கூட்டாட்சியின் நெருக்கமின்மை பற்றி இந்நூல் பல சான்றுகளைக் கொடுக்கிறது. இக்காலத்தில் இஸ்ராயேலர், பிற இனத்தவரால் அடக்கப்பட்டு, கொடுமைப் படுத்தப்பட்டது, அவர்கள் பாவத்தின் விளைவு மட்டுமன்று, அவர்களுடைய அரசியல் ஒற்றுமையின்மையின் விளைவு மாகும். இறுதி நீதிபதியான சாமுவேல் காலத்தில் தாங்கள் ஓரினமாக வாழ வேண்டுமென்றால், தங்களுக்கு மத்திய அரச அமைப்பு மிகத் தேவை என்பதை இஸ்ராயேலர் உணர்ந்தனர். இது காலப்போக்கில் அரச மரபு நிலவுவதற்கு இட்டுச் சென்றது.

**7. வரலாற்று மதிப்பீடு:** இந்நூல் ஒரு சமய வரலாறு ஆகும். இந்த அளவில் இது சில சிறப்பு இயல்புகளைக் கொண்டுள்ளது. இவை இந்நூலை மற்ற விதத்தில் வரையறை செய்கிறது.

சான்றாக அதன் நோக்கு, நடைமுறைத் தன்மையுடையது; கருத்தியலானதன்று. இந்நூல் நிகழ்ச்சிகளின் சமயப்பொருளில் அக்கறை காட்டுகிறது. வரலாற்றைச் சமய வரலாறாகவே நோக்குகிறது. அந்த அளவில்தான் வரலாற்று நிகழ்ச்சிகளையும், அவற்றின் சமயத்தின் மையங்களையும் சிறப்பித்துக் காட்டுகிறது. ஆயினும், நிகழ்ச்சிகளையும் உரையாடல்களையும் பொறுக்கி எடுத்தலில் தனது கலைப் பண்பைக் காட்டுகிறார் ஆசிரியர்.

ஆகையால், இந்நூலில் வரும் நிகழ்ச்சிகள் உண்மையானவையா அல்லது சமய போதகத்திற்காக அமைக்கப்பட்ட கற்பனைகளா என்ற ஐயம் எழலாம். இந்நூலில் காணப்படும் நிகழ்ச்சிகள் அக்காலத்து வரலாற்றுச் சூழ்நிலைகளோடு நன்கு ஒத்துப் போகின்றன. அஃதோடு இந்நிகழ்ச்சிகளில் காணப்படும் புவியியல், இடம் பற்றிய செய்திகள் ஆகியவை தொல்பொருள் ஆய்வுகளின் கண்டு பிடிப்புகளோடு ஒத்துப்போகின்றன. இன்று கிடைக்கும் சான்றுகளிலிருந்து இந்நூலில் வரும் நிகழ்ச்சிகள் வெறும் கற்பனைகள் அல்ல. மாறாக, அவை வரலாற்றுத் தன்மை கொண்டவை என்று நம்பிக்கையோடு கூறலாம்.

இந்நூலில் காணப்படும் பெயர்க்காரணக் கதைகள் மக்களிடையே இருந்த பழக்க வழக்கங்களையும் இடங்களின் பெயர்களையும் விளக்குகின்றன. ஆகையால், இப் பெயர்க் காரணப்பகுதிகள் வரலாற்றுத் தன்மையுடையவை அல்ல; ஐயத்திற்குரியன என்று சில காலமாகக் கருதப்பட்டு வந்தது. இந்நூலில் சில பகுதிகளில் பெயர்க் காரணக்கூறுகள் நிச்சயமாகக் காணப்படுகின்றன. ஆனால், இந்நூலின் மூலங்களில் அவை பெயர்க் காரணக்கூறுகளாக எடுத்துக் கூறப்படவில்லை. பெயர்க் காரணம்தான், ஒரு நிகழ்ச்சியைத் திட்டம் செய்து எழுதுவதற்குக் காரணமாயிருந்தது என்று இந்நூலின் பாரம்பரியங்களின் அமைப்பில் தோன்றவில்லை. மேலும், பெயர்க்காரணக்கூறு பழக்கவழக்கங்களின் தோற்றத்தையும் வியப்புமிக்க இடங்களையும் விளக்கும் நோக்கத்திற்காக மட்டும் பயன்படுத்தப்படவில்லை. பெரும்பாலும் அத்தகைய இடங்களும் பழக்கவழக்கங்களும், பெயர்களும் நிகழ்ச்சியின் நினைவை உறுதிப்படுத்துவதற்காக நிகழ்ச்சியுரையில் புகுத்தப்படுகின்றன. மேலும், இலக்கிய வடிவம் மட்டுமே வரலாற்றுத் தன்மைக்கு இறுதியான சோதனையன்று. வரலாற்றுத் தன்மை நம்பத் தகுந்தது என்று கூற, புறச்சான்று மிகவும் தேவையாகும். யாவற்றையும் மனதில் கொண்டால் இந்நூல் வரலாற்று அடிப்படை கொண்ட நூலாகும்.

**8. சமயபோதகம்:** மக்களிடமிருந்து பிரிந்து செல்லுமுன் யோசுவா சிலைவணக்கம், கலப்புத்திருமணம் பற்றிக் கடினமாக எச்சரிக்கை செய்திருந்தார் *(யோசு 23:11-15; 24:14-23)*. அவர்கள் புகுந்த நாட்டில் ஏற்கெனவே வாழ்ந்தவர்களை விரட்ட வேண்டும் என்று மோசே கூறியிருந்தார் *(யாத் 23:32-33; 34:12-16; எண் 33:55; உப 7:1-5)*. மக்கள் வினோதமான கடவுள்களைக் கொண்டிருந்தனர் *(யோசு 24:23)*. தங்கள் விசுவாசத்தைச் சாராதவர்களை மனைவியர்களாகக் கொண்டனர். தங்கள் எதிரியான கானானியர்களோடு இஸ்ராயேலர் ஒத்து வாழத் தொடங்கினர். இத்தகைய துன்பியலான வரலாற்றை நீதிபதிகள் ஆகமம் கூறுகிறது. மக்கள் இறைவனுக்கு ஓர் அளவு மட்டும் கீழ்ப்படிந்தால் என்ன நிகழும் என்பதை இந்நூல் எடுத்துக் கூறுகிறது *(நீதி1:19; யோசு 17:16-18)*. இறைவன் கூறியவற்றை விட்டு, தங்கள் விருப்பம் போல் மக்கள் வாழ்ந்தால், இறைவனிடம் மக்கள் முழுமையாகச் சரண் அடையாவிட்டால், என்ன நிகழும் என்பதை இந்நூல் எடுத்துக் கூறுகிறது. கீழ்ப்படிதலை விட சூழ்நிலைத் திறம் முக்கியமாகிறது. அதன் விளைவு, நாட்டை உடைமையாக்கி, அதன் பயனை அனுபவிப்பதற்குப் பதிலாக, இஸ்ராயேல் தாங்கள் வாழ்ந்த இடங்களையும் இழந்தனர். தங்கள் உயிரை இழந்துவிடும் அச்சத்தில் வாழ்ந்தனர் *(நீதி1:34-35)*. இத்துன்பியலான நூல் கூறுவதென்ன? இறைவனுக்குப் பணியாமை மனிதனுக்குப் பெரும் துன்பத்தையே கொண்டுவரும். கடவுள் ஒரு கட்டளையிடும்போது அவனைத் தடை செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு அன்று; மாறாக, அவனைச் செல்வனாக்கவே. நமக்கு எது சரியானது, நன்மையானது, மேலானது என்று அவருக்குத் தெரியும். நாம் சுயநலமிக்கவர்களாக இருப்பதால் நாம் எப்போதும் பிரச்சனைகளைத் தெளிவாகப் பார்க்க முடிவதில்லை. இறைவனது குரலுக்குக் கீழ்ப்படியும்போதுதான் அவரது கொடைகளை நாம் அனுபவிக்க முடியும். நாம் இறைவனது கட்டளைகளைச் சரியாகக் கடைப்பிடிக்காததால், அவர் வாக்களித்த அமைதியையும் செழிப்பையும் எப்போதும் அனுபவிக்க முடிவதில்லை. பழைய ஏற்பாட்டிலும் சரி, புதிய ஏற்பாட்டிலும் சரி கீழ்ப்படிதல் மையக்கருத்தாக அமைந்துள்ளது *(யோவா 2:5; 14:15; 15:10; அ.ப. 5:29; 6:7; 2 கொரி 6:16-17; பிலி 2:12; எபி 5:9; 1 பேதுரு 1:14.22)*.

இந்நூல் மனிதனின் தீமையை மட்டும் கூறவில்லை, இஸ்ராயேலின் நீதிபதிகள் சிலரின் மகிமைமிக்க ஆன்மீகப் பற்றுறுதியையும் வீரமிக்க போராட்டத்தையும் விவரிக்கிறது; அதற்கு மேலாக இறைவனின் நன்மைத் தன்மையையும் பறைசாற்றுகிறது.

பல்வேறு நீதிபதிகளுடைய வாழ்வின் ஆற்றலுக்கு அடிப்படை இறைவனது ஆற்றலாகும். அவர் சாதாரண, கோழையான, பொருத்தமில்லாத மனிதர்களை மாற்றித் தனது மாபெரும் ஆற்றலின் கால்வாய்களாக்கினார். இந்நூலில் பல இடங்களில் வெற்றி பெறுவோரின் உடல் பலவீனம் அல்லது அவர்கள் பயன்படுத்தும் கருவிகளின் பற்றாக்குறையுடைய தன்மை வலியுறுத்திக் கூறப்படுகிறது. ஏகூது இடக்கையனாவார் *(3:15)*. சம்கார் கலப்பைக் கொழுவை மட்டும் ஆயுதமாகக் கொண்டு போருக்குச் செல்கிறார் *(3:31)*. இஸ்ராயேலில் வீரர்கள் பலர் இருந்திருக்கக்கூடும். இருப்பினும் இரு பெண்கள் இஸ்ராயேலரை வெற்றிக்கு இட்டுச் செல்கின்றனர் *(4:1-5:31)*.

இறைவன் கிதியோனை ஆட்கொள்ளும் வரை அவர் ஒரு கோழையாக மிதியானியரைச் சந்திக்க அஞ்சினார் *(6:11-14)*. போரில் சிம்சோன் கழுதையின் தாடை எலும்பை ஆயுதமாகப் பயன்படுத்தினார் *(15:15)*. குருடனும் பலவீனனுமாயிருந்தபோது இவர் தமது மிகப் பெரிய வெற்றியை நிகழ்த்துகிறார் *(16:25-30)*. இம்மனிதர்கள் கடினமான செயல்களுக்காக இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இறைவனது ஆவி இவர்கள் மேல் இறங்கியது. இடர்மிக்க செயல்களைச் செய்ய இவர்களைத் தகுதியுள்ளவர்

களாக்க இறை ஆவி இவர்களை ஆட்கொண்டது. அதன் விளைவாக இவர்கள் பெருஞ் செயல்களை ஆற்றினர். பழைய ஏற்பாட்டில் பரிசுத்த ஆவி குறிப்பிட்ட காலத்திற்கு மனிதரில் குடிகொள்கிறார். ஆனால், புதிய ஏற்பாட்டில் அவருக்குக் கீழ்ப்படிபவர் அனைவரின் உள்ளத்திலும் எக்காலத்திற்கும் குடிகொள்கிறார் (அ.ப. 5:32).

இஃது, ஒரு துன்பியலான நூல் என்று முன்பு கூறினோம். பாவம் செய்தல், கொடுமைப்படுதல், மனந்திரும்புதல், விடுதலையும் அமைதியும் பெறுதல் என்ற வட்ட அமைப்புப் பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம். இறைவன் பாவத்தையும் கிளர்ச்சிகளையும் பொறுத்துக் கொள்ள மாட்டார். தம் மக்கள் தங்கள் கடமையில் தவறினால் அவர்களை மாறாது தண்டிப்பார். ஆயினும், அவர்களை அழிவிலிருந்து எப்போதும் காப்பாற்றுவார். இப்போதகத்தில் இறைவனது தூய்மையும் பற்றுறுதியும் சிறந்து விளங்குகின்றன. அவரால் தனிப்பட்ட முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள், அவரது பிரதிநிதி மக்களாகத் திகழ வேண்டும் என்று அவர் விரும்புகிறார். இப்போதகம் அக்காலத்திற்கு மட்டுமன்று, இக்காலத்திற்கும் எக்காலத்திற்கும் உரியதாகும்; நமக்கும் இன்று அளிக்கப்படுகிறது. இக்கொள்கையைச் செயல் முறையில் காட்ட விரும்பிய ஆசிரியர் உப 27-28; 32 ஆகிய அதிகாரங்களில் காணப்படும் போதகத்தை மனதில் கொண்டு செயல்படுகிறார்.

நீதிபதிகளே பெரும் தவறுகளைச் செய்துள்ளனர். கிதியோன் தன் பேராசையால் மக்களிடையே பேரழிவைக் கொண்டு வந்தார் (8:24-27). இப்தாகு முன்பின் யோசியாத வாக்குறுதியால் தன் குடும்பத்தாருக்கு இதயவலி கொண்டு வந்தார் (11:30-40). அக்காலத்திலும் மனித பலி தடை செய்யப்பட்டிருந்தது. சிம்சோன் தன் இறைப்பற்று மிக்க பெற்றோருக்கும், பிறகு நாட்டிற்கும் இதயவலி கொண்டு வந்தார். இப்தாகு சொல்லக் கூடாத வாக்குறுதியைக் கூறினார் என்றால், சிம்சோன் கொடுத்த வாக்குறுதியைக் கடைப்பிடிக்கவில்லை (13:3-5.7). இவ்வாறு மனிதர்கள் தவறிய வரலாற்றை எடுத்துக் கூறினாலும், இந்நூல் இறைவனை நம்ப எல்லாத் தலைமுறையினரையும் தூண்டுகிறது. ஏனெனில், அவர் வலுவற்றவர்களை எடுத்து, அவர்களை வலுவுள்ளவர்களாக மாற்றுவார்; வீழ்ச்சியுற்றோரை எழுப்புகிறார். இவ்வுண்மைக்குச் சிம்சோன் கதை மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும். சங்கிலியால் கட்டப்பட்டு, செக்கிழுத்து, கழிவிரக்கத்திற்குரிய துக்கத்திலும் இருளிலும் சிக்குண்டிருந்த இம்மனிதனுக்கு என்ன நம்பிக்கை இருக்க முடியும்? ஆனால் இவர் இறைவனை நம்பினார். துணிகரமிக்க நம்பிக்கையோடு இறைவனை உதவிக்கு அழைக்கிறார் (16:28-30). இத்தகைய மன்றாட்டு அவரது முதல் அனுபவமன்று (15:18-19). ஆனால், தன் பாவத்தினால் இழிநிலை அடைந்தபோதும் தன் மன்றாட்டை இறைவன் கேட்டருளுவார் என்ற நம்பிக்கையோடு வேண்டுகிறார். ''அவனது தலைமயிர் முளைக்கத் தொடங்கிற்று'' (16:22). இக்கூற்று ஓர் ஆன்மீக வரலாற்றைக் கொண்டிருக்கிறது. நாம் உண்மையிலேயே மனம் வருந்தினால், இறைவன் மன்னிப்பதில் மகிழ்ச்சி கொள்கிறார். நாம் அவரிடம் சரண் புகுந்தால் தவற்றிற்கு முன் நாம் செய்வதைவிட, தவற்றிற்குப்பின் அதிகமாகச் செய்து முடிக்கலாம் (19:30). இறைவன் தம் மக்களோடு அருளன்போடு செயல்படுகிறார்.

**9. நீதிபதிகள் ஆகமமும், கிறிஸ்தவமும்:** கிறிஸ்தவத்திற்கும் நீதிபதி ஆகமத்திற்கும் உள்ள பொருத்தம் மறைமுகமானதே. கிறிஸ்து நிகழ்ச்சியில் மனித வரலாற்றுக்கு இறைவன் முடிவான முன்நிலைத்த தோற்றமாய் இருக்கிறார் என்பதற்குப் பழைய ஏற்பாடு ஒரு தேவையான தயாரிப்பாகும். இறைமக்களின் பெரும் வரலாற்று நெருக்கடி நிலைகள் கிறிஸ்தவனின் வாழ்வுக்கும், வளர்ச்சிக்கும் எப்போதும் மூல எடுத்துக்காட்டுகளாக இருக்கின்றன. இந்த அளவில் பழைய ஏற்பாடு கிறிஸ்தவனுக்குப்

பொருத்தமுடையது. அப்படிப்பட்ட நெருக்கடி நிலைகளில் ஒன்று, இஸ்ராயேல் வாக்களிக்கப்பட்ட நாட்டில் குடியேறிய காலத்தில் அவர்கள் எதிர்கொண்ட சிலை வழிபாடாகும். இந்த நெருக்கடி நிலையை இந்நூல் சிறப்பாக எடுத்துக் காட்டுகிறது. உண்மையான இறைவனை ஏற்றுக் கொள்வதா அல்லது ஏற்கெனவே சுற்று வட்டாரத்திலுள்ள தேவதைகளை ஏற்றுக் கொள்வதா என்பது பிரச்சனை. நமக்கு அப்பாற்பட்ட, நம்மைச் சந்திக்கும் எல்லாம் வல்ல இறைவனை ஏற்றுக் கொள்வதா அல்லது நமது கரங்களே படைத்த பொருட்களுக்குச் சேவை செய்வதா? படைத்தவரை, மீட்டவரை இறைவனாக ஏற்றுப் பணி செய்வதா? அல்லது படைக்கப்பட்ட பொருட்களை இறைவனாக ஏற்றுக்கொள்வதா? இஃது ஒவ்வொரு மனிதனிலும் எக்காலத்தும் எழும் பிரச்சனையாகும். இஃது ஒவ்வொரு கிறிஸ்தவனுடையவும் அடிப்படை அனுபவம் ஆகும். இந்நிலையில் இந்நூல் ஒளியூட்டி வழிகாட்டுகிறது. இயேசுவின் சோதனைகளில் ஒன்றும் அதற்கு அவர் அளிக்கும் பதிலும் இந்நூலின் சுருக்கத்தைத் தருகிறது எனலாம் (மத் 4:9-10; லூக் 4:5-8). ''உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி அவரை மட்டுமே ஆராதிப்பாயாக''.

## விடுதலைப் பயணநூல், யாத்திரை நூல் (EXODUS, BOOK OF)

*1.* **பெயர்:** ஐந்நூலின் இரண்டாவது பகுதியான இந்நூல் எபிரேய மொழியில் ''இவை பெயர்கள்'' என்று பொருள்படும் தலைப்பைக் கொண்டுள்ளது. எழுபது நூலிலும், அதைப் பின்பற்றி இலத்தீனிலும், ஆங்கிலத்திலும் ''வெளிப்போதல்'' என்ற பொருளுடைய ''எக்சோடஸ்' என்ற பெயர் பெறுகிறது இந்நூல். முதல் பதினைந்து அதிகாரங்களில், இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ராயேலர் எகிப்திலிருந்து விடுதலை அடைந்து, அந்நாட்டிலிருந்து வெளியேறிய நிகழ்ச்சியின் விவரிப்பிலிருந்து இப்பெயரைப் பெறுகிறது இந்நூல். ஆனால், இப்பெயர் நூலின் முழுப் பொருளடக்கத்திற்கும் பொருந்தியதன்று. நாம் தமிழில் இந்நூலை யாத்திரை நூல் அல்லது விடுதலைப் பயணநூல் என்று அழைக்கிறோம். இப்பெயர்கள், ஓர் அளவு இந்நூலை நிறைவாக விவரிக்கின்றன எனலாம். ஏனெனில், இறை மக்கள் இஸ்ராயேலர் எகிப்திலிருந்து வெளிப்போந்து உறுதியளிக்கப்பட்ட கானான் நாட்டை நோக்கிச் செய்த மாபெரும் யாத்திரையின், விடுதலைப் பயணத்தின், சிறப்பான பகுதியை இந்நூல் விவரிக்கிறது.

*2.* **ஆசிரியரும் எழுதப்பட்ட காலமும்:** பழங்காலத்தில் இந்நூலை மோசே எழுதினார் என்று கூறினால் யாவரும் ஏற்றுக் கொள்வர். இதை மறுத்துக் கூற ஒருவரும் துணியார். திருச்சபையின் தொடக்க காலத்தில் ஞானவாதிகள் என்ற பிரிவினர் இந்நூல் யூதப் போலிநூலாகும் என்று கூறினர். மறுமலர்ச்சி ஆராய்ச்சிகளின் விளைவாக ஐயங்கள் பல எழுந்தன. கி.பி. 16-ஆவது நூற்றாண்டுத் தொடக்கத்திலேயே ஆந்த்ரே மாசியுசு என்ற சட்ட வல்லுநர், மோசேயைச் சேராத வாசகங்கள் இந்நூலில் புகுத்தப்பட்டுள்ளன என்று கூறினார். இவ்வாராய்ச்சி தொடர்ந்து நடந்தது. இஃது இந்நூல் பல பாரம்பரியங்களின் கலப்பின் விளைவாகும் என்று காட்டியது.

யாத்திரை எப்போது, எப்படித் தோன்றியது என்பன பற்றிப் போதிய அளவு அறிய விரும்பினால், ஐந்நூல் முழுவதற்கும் இச்சிக்கலைப் பொருத்திப் பார்க்க வேண்டும். இது பற்றி ஐந்நூல் என்ற தலைப்பின் கீழ்க் கூறியுள்ளோம். நால்வகை ஏடுகள் கருதுகோள் பற்றிக் கூறியவை இந்நூலுக்கும் பொருந்தும். யாவே (J), எலோகிம், (E), குருக்கள் பாரம்பரியம் (P) ஆகிய பகுதிகள் இந்நூலில் சிறப்பாகக் காணப்படுகின்றன. நாம் கொண்டிருக்கும் வடிவில் இந்நூல் கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் இறுதி வடிவம் எடுத்திருக்கலாம்.

வரலாற்று அடிப்படையில் உடன்படிக்கைத் தொகுப்பின் சில பகுதிகளுக்காவது (யாத் 19:1-24-18) மோசே ஆசிரியராக

இருந்திருக்க வேண்டும் என்று கூறலாம். மேற்காசிய மரபுப்படி, இவ்வுடன்படிக்கையின் சிறப்பான பகுதிகள் விரைவில் எழுதப்பட்டு, மக்களால் அவ்வப்போது புதுப்பிக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு வந்தன எனலாம் (*யோசு 26:16-28*).

எழுதப்பட்ட பகுதிகளோடு, வாய்மொழிப் பாரம்பரியங்களும் தொடர்ந்து வளர்ந்து பெருகின. இந்நிலை இறைமக்கள் கானான் நாட்டைக் கைப்பற்றிக் குடியேறிய பின்னும் தொடர்ந்து நடந்தது. கானான் நாட்டில் எபிரேயர் வாழ்வு நிலையான உருவம் எடுக்க எடுக்க, வாழ்க்கை முறையும் சிக்கல் மிக்கதாக மாறியது. இந்நிலைக் கேற்பப் புதிய ஒழுங்குகள் தேவையாயின. இப்படி எழுந்த சட்டங்கள் மோசேயின் சட்டம் முன் தொடங்கி வைத்த கோட்பாடுகளைப் பின்பற்றி எழுந்தன. ஆகையால், இவற்றையும் மோசேயே தந்தார் என்று கூறுவதற்கும், ஏற்றுக் கொள்வதற்கும் மக்களிடையே கருத்து வேற்றுமை எதுவும் எழவில்லை. கானானில் நிலையாக இஸ்ராயேலர் குடியேறியபின் பாலஸ்தீனத்தின் வடக்கிலும் தெற்கிலும் இஸ்ராயேலின் வரலாறு, சட்டம் ஆகியவை பற்றித் தனித் தனிப் பாரம்பரியங்கள் உருவெடுத்தன. இப்படியெழுந்த பாரம்பரியங்கள் இறுதியில் எப்படி ஐந்நூலில் இடம் பெற்றன என்பது ஒரு பெரும் பிரச்சனையாகும். இதை விளக்கப் பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஐந்நூல் நான்கு பெரும்பாரம்பரியங்களின் தொகுப்பாகும் என்ற கருது கோளை அறிஞர்கள் ஏற்றுக்கொண்டனர். இது யாத்திரை நூலுக்கும் பொருந்தும். இது பற்றி ஐந்நூல் என்ற தலைப்பின்கீழ் வாசித்தறியலாம்.

**3. திட்டமும் பொருளடக்கமும்:**

யாத்திரை நூலை ஆறு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

I. **எகிப்தில் இஸ்ராயேலர்** (*1:1-12:36*).

*1) 1:1-7* : இஸ்ராயேலரின் இனப் பெருக்கம்.

*2) 1:8-22* : இஸ்ராயேலர் துன்புறுத்தப் படுதல்.

*3) 2:1-10* : மோசே பிறப்பும் தத் தெடுக்கப்படுதலும்.

*4) 2:11-22* : மோசே மிதியானுக்கு ஓடிச்சென்று அங்கு வாழ்தல்.

*5) 2:23-4:9* : இறைவன் மோசேக்குக் காட்சி அளித்து அவரை அழைத்தல்.

*6) 4:10-17* : ஆரோன் மோசேக்கு உதவியாளன்.

*7) 4:18-5:13* : மோசே எகிப்துக்குத் திரும்புதல், பார்வோனிடம் இறைவனின் கட்டளைகளைத் தெரிவித்தல். பார்வோனின் பிடிவாதம்.

*8) 5:14-6:13* : இஸ்ராயேலர் முறையிடுதல், இறைவன் தமது உறுதி மொழியைப் புதுப்பித்தல.

*9) 6:14-27* : மோசே, ஆரோன் தலைமுறை.

*10) 6:28-7:13* : மோசேக்கும் ஆரோனுக்கும் இறைவனின் கட்டளை. கோல் பாம்பாய் மாறியது.

*11) 7:14-11:10*: வாதைகள்.

*அ) 7:14-25* : முதல் வாதை: நீர் குருதியாக மாறுதல் (J, E, P)

*ஆ) 8:1-15* : இரண்டாவது வாதை: தவளைகள் (J, P).

*இ) 8:16-19* : மூன்றாவது வாதை: கொசுக்கள் (P).

*ஈ) 8:20-32* : நான்காவது வாதை: ஈக்கள் (J).

*உ) 9:1-7* : ஐந்தாவது வாதை: விலங்குகளுக்குக் கொள்ளை நோய் (J).

*ஊ) 9:8-12* : ஆறாவது வாதை: கொப்புளங்கள் (P).

எ) 9:13-35 : ஏழாவது வாதை : கல்மழை (J, E).

ஏ) 10:1-20 : எட்டாவது வாதை : வெட்டுக்கிளிகள் (J, E).

ஐ) 10:21-29 : ஒன்பதாவது வாதை : இருள் (J, E).

ஒ) 11:1-10 : பத்தாவது வாதை: தலைப் பேறுகள் கொல்லப்படும் என்று அச்சுறுத்தல் (J, E, P)

12) 12:1-20 : பாஸ்காவும் புளியாத அப்ப விழாவும்.

13) 12:21-36 : முதல் பாஸ்கா, தலைப்பேறுகள் இறத்தல், இஸ்ராயேலர் விடுதலை அடைந்து எகிப்திலிருந்து புறப்படுதல்.

இப்பகுதி எகிப்தில் இஸ்ராயேலரின் அவல நிலையை எடுத்துக் கூறுவதுடன் தொடங்குகிறது. மோசேயின் பிறப்பும் தத்தெடுக்கப்படுதலும் விவரிக்கப்படுகின்றன. மோசே மிதியானுக்கு ஓடிப்போகிறார். அங்கே மோசேயை இறைவன் தேர்ந்தெடுக்கிறார்; தமது பணிக்கு அழைக்கிறார். இறைவனின் அழைத்தலுக்குப் பணிந்து, மோசே எகிப்துக்குத் திரும்பி, ''நம் மக்களைப் போகவிடு'' என்ற இறைவன் கட்டளையோடு பார்வோனைச் சந்திக்கிறார். பார்வோனின் பிடிவாதமும், எகிப்தியர் பல வாதைகளால் துன்புறுதலும் மீதிப்பகுதியில் விவரிக்கப்படுகின்றன. எகிப்தியரின் தலைப்பேறுகள் இறந்துபட, இஸ்ராயேலுக்கு விடுதலை கிடைக்கிறது. அடிமை நாட்டிலிருந்து உறுதியளிக்கப் பட்ட நாடு நோக்கிப் புறப்படுகின்றனர் இஸ்ராயேலர்.

**II. எகிப்திலிருந்து வெளிப்போதலும், சீனாய்மலை நோக்கிப் பயணமும் (12:37–18:27).**

1) 12:37-51 : எகிப்தை விட்டுப் புறப்படுதல்.

2) 13:1-16 : புளியாத அப்பமும், தலைப்பேறுகள் இறைவனுக்கு நேர்ச்சி செய்யப்படுதலும்.

3) 13:17-22 : பயணத்தின் முதற்பகுதி.

4) 14:1-22 : செங்கடலைக் கடத்தல்.

5) 14:23-31 : எகிப்தியரின் அழிவு.

6) 15:1-21 : மோசேயின் வெற்றிப்பாடல்

7) 15:22-27 : மாராவிலும் ஏலிமிலும் நடந்த நிகழ்ச்சிகள்.

8) 16:1-36 : இஸ்ராயேலரின் முணுமுணுப்பு; மன்னாவும் காடையும்.

9) 17:1-7 : பாறையிலிருந்து நீர்.

10) 17:8-16 : அமலேக்கியர் எதிர்த்தல்.

11) 18:1-12 : இத்திரோவும் மோசேயும்.

12) 18:13-17 : நடுவர்கள் நியமிக்கப்படுதல்.

இப்பகுதி யாத்திரையின் தொடக்கத்தையும் இஸ்ராயேலர் அலைந்து திரிந்ததையும் விவரிக்கின்றது. பெலிஸ்தியரின் நாட்டுக்குப் போகும் வழியைத் தவிர்த்துவிட்டு மோசே செங்கடல் என்றழைக்கப்படும் நாணல் கடல் வழியாகக் கரடுமுரடான சீனாய்த் தீபகற்பத்திற்கு இஸ்ராயேலரை இட்டுச் செல்கிறார். நிகழ்ச்சியுரை முழுவதிலும் இறைவன் இஸ்ராயேலருக்கு அளித்த உதவி சிறப்பான முறையில் அழுத்திக் கூறப்படுகின்றது. 15-ஆம் அதிகாரத்தில் வரும் வெற்றிப்பாடல் மேன்மையும், மகிழ்ச்சியும், நன்றியும் மிக்க போற்றுரைப் பாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அதே போழ்து, இதில் மிகப் பழைய எபிரேயக் கவிதை ஒன்றும் நமக்குக் கிடைத்திருக்கிறது. மக்களின் குறைகேட்டு யாவே மன்னாவையும் காடைகளையும், பாறையிலிருந்து தண்ணீரையும் அளிக்கிறார். மோசேயின் வேண்டுதலால் அமலேக்கியரின் மேல் இஸ்ராயேலர் வெற்றி பெறுகின்றனர். இப்

குதி, மக்களிடையே நடுவர்கள் அமர்த்தப் படுதலோடு முடிகின்றது.

**III சீனாய் மலையில் உடன்படிக்கை** *(19:1-24:18)*.

1) *19:1-2* : சீனாய் மலையை அடைதல்.

2) *19:3-8* : இறைவன் வாக்குறுதி அளித்தல்.

3) *19:9-25* : மலையில் இறையாற்றல்.

4) *20:1-17* : பத்துக் கட்டளைகள்.

அ) *20:2-6* : முதல் கட்டளை.

ஆ) *20:7-17* : மற்ற ஒன்பது கட்டளைகள்.

5) *20:18-21* : மோசே பரிந்து பேசும் நடுவர்.

6) *20:22-23:19* : உடன்படிக்கை நூல்.

அ) *20:22-26* : வழிபாடு பற்றிய ஒழுங்குகள்.

ஆ) *21:1-11* : அடிமைகள் பற்றிய ஒழுங்குகள்.

இ) *21:12-17* : கொலை, பெற்றோரை மதியாமை முதலியவை பற்றிய ஒழுங்குகள்.

ஈ) *21:18-32* : உடல் தீங்கு பற்றிய ஒழுங்குகள்.

உ) *21:33-22:15* : பொருள்களை அழிப்பது பற்றிய ஒழுங்குகள்.

ஊ) *22:16-30* : சமூக வாழ்வு பற்றிய ஒழுங்குகள்.

எ) *23:1-9* : நீதி, பிறருக்குச் செய்ய வேண்டிய கடமை.

ஏ) *23:10-19* : சமய ஒழுங்குகள்.

7) *23:20-33* : எச்சரிக்கைகளும் உறுதி மொழிகளும்.

8) *24:1-11* : உடன்படிக்கையை மக்கள் ஏற்றுக்கொள்ளுதல்.

9) *24:12-18* : மோசே நாற்பது நாள் மலையில் தங்குதல்.

இப்பகுதி இந்நூலின் மையமாகும். இஃது உடன்படிக்கையின் விவரிப்பைக் கொண்டுள்ளது. தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவனான மோசேயைச் சீனாய் மலைக்கு யாவே அழைக்கிறார். அவர் வழியாகத் தமக்கும் இஸ்ராயேல் மக்களுக்குமிடையே ஓர் இணையற்ற தனிச் சிறப்புடைய உறவை ஏற்படுத்துகிறார். இஸ்ராயேலர் யாவேயின் மக்களாயிருப்பர்; யாவே அவர்களுடைய இறைவனாவார். இவ்வுறவின் விளைவாக இஸ்ராயேலைக் கட்டுப்படுத்தும் கட்டுப்பாடுகளைப் பத்துக் கட்டளைகளும் உடன்படிக்கை நூலும் பறைசாற்றுகின்றன. இப்பகுதியின் முடிவிலே, மோசே முகில் நடுவே புகுந்து மலை மேல் ஏறி, அங்கே நாற்பது நாள் இரவும் பகலும் தங்கியிருப்பதைக் காண்கிறோம்.

**IV. புனித இடத்தை அமைப்பது, அதன் பொருட்கள் பற்றிய ஒழுங்குகள்** *(25:1-31:18)*.

1) *25:1-9* : பொருள்களைத் திரட்டல்.

2) *25:10-22* : பெட்டக விவரிப்பு.

3) *25:23-30* : திருமுன் அப்பக்காணிக்கை மேசை.

4) *25:31-40* : விளக்குத்தண்டு.

5) *26:1-14* : ஆசாரக்கூடாரத்துணி.

6) *26:15-30* : பலகைகள்.

7) *26:31-37* : திரை.

8) *27:1-8* : பலிபீடம்.

9) *27:9-21* : ஆசாரக் கூடாரச் சுற்றுலா வீதி.

10) *28:1-5* : குருகுலம்.

11) *28:6-30* : குருவின் மேலாடையும், நெஞ்சாடையும்.

12) *28:31-43* : மற்ற உடைகள்.

13) *29:1-9* : குருக்கள் திருநிலைப் படுத்தப்படுதல்.

14) *29:10-37* : திருநிலைப்படுத்தும்போது பலிகள்.

15) *29:38-46* : அன்றாடப்பலிகள்.

16) *30:1-10* : தூபப் பீடம்.

17) *30:11-16* : கணக்கெடுப்பு வரி.

18) *30:17-38* : புறத்தூய்மைக்கு நீர்த் தொட்டி, திருநிலைப்படுத் தும் தைலம், மணப்புகை வகைகள்.

19) *31:1-11* : கூடார வேலை செய்ய ஆட்களைத் தேர்ந்தெடுத் தல்.

20) *31:12-17* : ஓய்வுநாள்.

21) *31:18* : சட்டப் பலகைகள்.

இப்பகுதியில் பெட்டகம், ஆசாரக் கூடா ரம் ஆகியவற்றைப் பற்றிய கட்டளைகள் விரிவாக எடுத்துக் கூறப்படுகின்றன. அவற்றைச் சார்ந்த அணிகள் முதலியவை விரிவாகக் கூறப்படுகின்றன. மேலும், குருத்துவம் நிறுவப்படுதல், குருக்களைத் திருநிலைப்படுத்துதல், குருக்களின் உடை ஆகியவை பற்றிய ஒழுங்குகளும், பலிகள் பற்றிய கட்டளைகளும் இப்பகுதியில் தரப் படுகின்றன.

V. **மக்களின் பதிதமும் உடன்படிக்கை புதுப்பிக்கப்படுதலும்** *(32:1-34:25)*.

1) *32:1-29* : பொற்கன்றுக்குட்டிக்கு இறைவழிபாடு செய்தலும் தண்டனையும்.

2) *32:30-35* : மோசேயின் பரிந்துரை.

3) *33:1-6* : இறைவனின் அச்சுறுத்த லும், மக்களின் துக்கமும்; புறப்படக் கட்டளை.

4) *33:7-11* : உடன்படிக்கைக் கூடாரம்.

5) *33:12-33* : மோசேயின் செபம்.

6) *34:1-9* : சட்டப்பலகை புதுப்பிக்கப் படுதல்.

7) *34:10-28* : உடன்படிக்கை.

8) *34:29-35* : மோசே மக்களிடம் திரும்பி வருதல்.

இப்பகுதி தேர்ந்தெடுக்கப்பட்ட மக்க ளுடைய பதிதத்தின் கதையாகும். பொற் கன்றுக்குட்டியை மக்கள் வணங்குகின்ற னர். மோசே வேண்டுதலால் மக்களின் அழிவு தவிர்க்கப்படுகிறது. யாவேயுடன் உடன்படிக்கை மீண்டும் புதுப்பிக்கப்படு கிறது.

VI. **இறைவன் கட்டளைகளை நிறை வேற்றுதல்** *(35:1-40:38)*.

1) *35:1-3* : இஸ்ராயேலின் சபை: ஓய்வுநாள்.

2) *35:4-29* : பொருட்களைத் திரட்டல்.

3) *35:30-36:1* : கூடார வேலை செய்ய ஆட்கள்.

4) *36:2-7* : பொருட்களைத் திரட்டல் நிறுத்தி வைக்கப்படுதல்.

5) *36:8-19* : கூடார மூடு திரைகள்.

6) *36:20-34* : பலகைகள்.

7) *36:35-38* : திரை.

8) *37:1-9* : பெட்டகம்.

9) *37:10-16* : திருமுன் அப்பக்காணிக்கை மேசை.

10) *37:17-24* : விளக்குத்தண்டு.

11) *37:25-29* : தூபப்பீடம், தைலம், தூபம்.

12) *38:1-7* : பலிபீடம்.

13) *38:8-20* : கழுவுவதற்குத் தொட்டி, ஆசாரக் கூடாரச் சுற்றுலா வீதி.

14) *38:21-31* : பயன்பட்ட உலோகத்தின் கணக்கு.

15) *39:1-21* : குருவின் மேலாடையும், நெஞ்சாடையும்.

16) 39:22-32 : மற்ற உடைகள்.

17) 40:1-38 : கூடாரம் நிறுவப்படுதல்; திரு நிலைப்படுதல்.

இப்பகுதி 25-31-ஆம் அதிகாரங்களில் தரப்பட்ட கட்டளைகள் நிறைவேற்றப்படு வதை விவரிக்கிறது. இரண்டும் இணை யாய் இருப்பதை எளிதில் கண்டுணரலாம். புனித இடம் அமைக்கப்படுகிறது; அணி செய்யப்படுகிறது; திருநிலைப்படுத்தப்படு கிறது.

**4. மூலங்கள்:** யாவே, எலோகிம், குருக் கள் பாரம்பரியங்களின் கலவையில் எழுந்த தாகும் இந்நூல். அப்பாரம்பரியங்களுக் குரிய பகுதிகளை இங்கு, குறிப்பாகத் தருகிறோம். வழக்கம்போல், J, E, P, என்ற எழுத்துக்கள் யாவே, எலோகிம், குருக்கள் பாரம்பரியங்களைக் குறிக்கின்றன.

யாவே பாரம்பரியப் பகுதிகள் (J): 1 (EP); 2-5 (EP); 7-10 (EP); 11:4-8; 12:21-27; 13-14 (E); 15:22-27 (E); 16(EP); 19:20-25; 23-24 (EP); 32 (E); 34:1-28.

எலோகிம் பாரம்பரியப் பகுதிகள் (E): 1 (JP); 2-5(JP); 7-10(JP); 11:1-3; 12(JP); 13-14(J); 15:20; 16(JP); 17-18; 19(J); 20:22-23; 19:23-24(JP); 32(J); 33(J).

குருக்கள் பாரம்பரியப் பகுதிகள் (P): 1:1-5.7-13; 2:23-25; 6:2-30: 7:1-13; 8:1-3.12-15; 9:8-12; 11:9-12.20.28; 12:40-51; 16 (JE); 24:16-18; 25-31; 34:29-35; 35-40.

யாத்திரை ஆகமத்தில் உபாகமப் பாரம் பரியப் பகுதிகளுக்கு இடமில்லை. யாத் 15:1-19; 19:2-19; 20:22; 34:35 ஆகிய பகுதிகள் பிற்காலப் பதிப்பைச் சேர்ந்தவை என்று அறிஞர்கள் சிலர் கூறுவர்.

**5. சிறப்புக் கருத்துக்கள்:**

**1) யாத்திரை நூலின் காலம் ; இஸ்ராயேல ரின் இன்னல்கள்:** இந்நூல், அதில் காணப் படும் நிகழ்ச்சிகள் நடந்த காலத்தில் எகிப்தை ஆண்ட பார்வோன்களின் பெயர் களைக் கொடுக்கவில்லை. 1 அர 6:1-இல் வரும் குறிப்பு எகிப்திலிருந்து வெளிப்போ தலுக்கும் சாலமோன் ஆலயத்திற்கும் இடையிட்ட காலம் 480 ஆண்டுகள் என்று கூறுகிறது. இதை வைத்து அறிஞர்கள் சிலர் யாத்திரை நூலில் வரும் நிகழ்ச்சிகள் நடந்த காலம் கி.மு. 15-ஆம் நூற்றாண்டு என்பர். சாலமோன் அரசுக் கட்டில் ஏறியது ஏறத் தாழ கி.மு. 960 என்று உறுதியாகக் கூறலாம். இது சரியென்றால் எகிப்திலி ருந்து இஸ்ராயேலர் வெளிப்போந்தது ஏறத் தாழ கி.மு. 1440-இல் நடந்திருக்க வேண் டும். இம்முடிவை அறிஞர்கள் இப்போது ஏற்றுக்கொள்வதில்லை. 1 அர 6:1-இல் வரும் 480 ஆண்டுகள் 12 தலைமுறைகளைக் குறிக்கும் (ஒரு தலைமுறைக்கு 40 ஆண்டு கள்) முழு எண் ஆகும் என்று எடுத்துக் கொள்வர்.

கி.மு. 18-ஆம் நூற்றாண்டில் செமித்திய இனத்தைச் சார்ந்த நாடோடியரான கைச் சோஸ் என்ற மரபினர் எகிப்தைத் தாக்கி தங்களது ஆட்சியை நிறுவினர், அப்போது செமித்தியனான யோசேப்பு, முதல் அமைச் சராக இருந்திருக்கக்கூடும் என்பவை பற்றி ஆதியாகமம் பற்றிய கட்டுரையில் கூறியுள் ளோம். இந்தக் கைச்சோசின் ஆட்சியிலி ருந்து தீபன் என்பவன் எகிப்திற்கு விடு தலை அளித்தான். இவன் எகிப்தின் 18-ஆவது பேரரசைச் சேர்ந்தவன். இப்பேரரசு தன் தலைநகரைத் தென்எகிப்தில் கொண்டி ருந்தது. யாக்கோபின் மரபினர் எகிப்தின் வடபகுதியில் அமைதியாக வாழ இஃது உதவிற்று என்பதற்கு ஐயமில்லை. எகிப் தில் ஆற்றுக் கழிமுகப் பகுதிகளில் எபிரே யர் கட்டட வேலைகளில் துன்புற்று அவல நிலையில் இருந்ததாக விவிலியம் கூறு கிறது. கி.மு. 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 18-ஆம் பேரரசின் காலத்தில் இத்தகைய வேலைகள் நடந்ததாகத் தெரியவில்லை.

19-ஆம் பேரரசின் எழுச்சியோடு ஆட்சி மையம் எகிப்தின் தெற்கிலிருந்து வடபகு திக்கு மாறுகிறது. செமித்தியர் ஆற்றுக் கழிமுகப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். அவர்கள், பிறரோடு ஒப்பிடும்போது சிறு பான்மையினரானாலும், பெரும் தொகை

கொண்டிருந்தனர். அவர்கள் ஓர் அளவு சிறப்பு வாய்ந்தவர்களாகவும் இருந்திருக்க வேண்டும். எகிப்திய மொழியில் பல நூறு செமித்தியச் சொற்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பது இதைச் சுட்டுகிறது. இந்த 19-ஆம் பேரரசை நிறுவியவன் முதலாம் இராமசேசு ஆவான். இவன் கிழக்கு ஆற்றுக்கழிமுகப் பகுதியிலுள்ள ஆவாரிசு அல்லது சோஆன் என்றழைக்கப்படும் இடத்தைச் சேர்ந்தவன். கி.மு. 1309-இல் முதிய வயதில் இவன் அரசுக் கட்டிலில் ஏறினான்; ஓராண்டு அளவே ஆட்சி செய்தான். அவன் மகன் முதலாம் சேத்தி அரசு ஏற்று 18 ஆண்டுகள் ஆண்டான். இக்காலத்தில் அரசியல் மையம் வடபகுதிக்கு மாறியது. இந்தப் பார்வோன்தான் ஆவாரிசில் கட்டடங்கள் எழுப்பத் தொடங்கினான். இதற்கு எபிரேயர்களைப் பயன்படுத்தி இருக்கலாம். ''யோசேப்பை அறியாத'' (யாத் 1:8) பார்வோன் என்று விவிலியம் கூறுவது இந்த முதலாம் சேத்தியைப் பற்றித்தான் என்று அறிஞர் கூறுவர். இவன் காலத்தில்தான் இஸ்ராயேலர் பார்வோனுக்குக் களஞ்சியங்கள் கட்டினர்; துன்பப்படத் தொடங்கினர்; அவல நிலையில் இருந்தனர்.

இஸ்ராயேலரின் அவலநிலை இரண்டாம் இராமசேசின் காலத்திலும் தொடர்ந்தது. எகிப்தின் வரலாற்றில் முதலாம் சேத்தியைப் பற்றி மிகுதியாக ஒன்றும் கூறப்படவில்லை. அவன் மகன் இராமசேசின் புகழ் சேத்தியின் பெயரை மங்கச் செய்து விட்டது எனலாம். இவன் போர்ச் செயல்களிலும் கட்டடங்கள் கட்டுவதிலும் புகழ் பெற்றான்; நீண்ட காலம் ஆண்டான் (கி.மு. 1290-1224). இவன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் பல கட்டடங்களை எழுப்பினான். தன் தந்தையைப் பின்பற்றி இவன் எபிரேயர்களைக் கொடுமைப்படுத்தினான் என்று கருத இடமிருக்கிறது. ஆராய்ச்சியாளர்கள் கருத்துப்படி இஸ்ராயேலர் எகிப்திலிருந்து வெளிப்போந்தது இவன் காலத்தில்தான் நடந்திருக்க வேண்டும்.

இவ்வரலாற்றுச் சூழ்நிலையில், கொடுமைப் படுத்தப்பட்ட இஸ்ராயேலர் சார்பாக இறைவன் குறுக்கீடு செய்யத் தலைப்படுகிறார். தம் தூதுவனாக அவர் மோசேயைத் தேர்ந்தெடுக்கிறார். யாத்திரை நூலின் முதல் பன்னிரண்டு அதிகாரங்கள் யாவேயால் விடுதலை அடைந்தது வரை இஸ்ராயேலர் பட்ட துன்பங்களை எடுத்துக் கூறுகின்றன. மோசே தலைமையில் விடுதலை பெற்ற எபிரேயர் ஏறத்தாழ 40 ஆண்டுகள் (அதாவது ஒரு தலைமுறைக் காலம்) பாலையில் அலைந்து திரிந்த பின் (ஏறத்தாழ கி.மு. 1280-ஐ ஒட்டி), பாலஸ்தீனத்தைக் கைப்பற்றத் தொடங்குகின்றனர். ஆட்சோர், இலாக்கிசு, தேல்பெயித் மிரிசீம், போன்ற பாலஸ்தீன நகரங்கள் கி.மு. 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அழிக்கப்பட்டனவாகத் தெரிய வருகிறது. இந்த முடிவை நவீன அறிவியல் தொல்பொருள் ஆராய்ச்சியும் உறுதிப்படுத்துகிறது. இவற்றிலிருந்து இஸ்ராயேலர் எகிப்திலிருந்து வெளிப்போந்தது ஏறத்தாழ கி.மு. 1280-ஐ ஒட்டி நடந்திருக்க வேண்டும் என்று நாம் ஏற்றுக் கொள்ளலாம்.

**2) மோசேயின் தோற்றம்:** யாத்திரை ஆகமம் யாக்கோபின் புதல்வர்களின் பட்டியலோடும், அவர்களது செழிப்பான வளர்ச்சியை விவரிப்பதோடும் தொடங்குகிறது. அவர்களின் எண்ணிக்கை பெருகப் பெருக, அவர்களைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க விரும்பிய பார்வோன் அவர்களைக் கொடுமைப்படுத்தத் தொடங்கினான் (யாத் 1:8-22). இச்சூழ்நிலையில் மோசே பிறக்கிறார்; பார்வோனுடைய மகளால் காப்பாற்றப்படுகிறார். பின் அரச வீட்டில் தத்தெடுக்கப்படுகிறார் (2:1-10). இரண்டாம் இராமசேசுக்கு 79 புதல்வர்களும், 59 புதல்விகளும் இருந்தனர் என்பதை மனத்தில் கொண்டால், அரசவீட்டில், கூட ஒரு பிள்ளை இருப்பது யாருடைய கவனத்தையும் ஈர்த்திருக்காது என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம். தன் குலப் பின்னிலையை மோசே அறிந்திருந்தார் என்பது ஓர் உடன் எபிரேயனைக் கொடுமைப்படுத்திய எகிப்தியனைக் கொன்றதிலிருந்து அறியப்படுகிறது. இக்கொலையின் விளைவாக

மோசே மிதியான், பாலைவனத்துக்கு ஓடிப் போகிறார். அங்கே இரகுவேல் அல்லது இத்திரோ என்றழைக்கப்படுபவர் வீட்டில் தங்கி அவருடைய புதல்விகளில் ஒருத்தியை மணக்கிறார் *(2:11-22)*.

**3) மோசே இறைவனால் அழைக்கப்படுதல்:** இவ்வரலாற்றுச் சூழ்நிலையில்தான் விவிலிய ஆசிரியர் இறைவெளிப்பாட்டையும், இறைவன் மோசே அழைத்ததையும் கூறுகிறார் *(3:1-22)*. இறைவன் தோன்றியது புலன்களாலும் அறியப்படக்கூடியது என்று காட்ட, ஆசிரியர் இறைவனின் திரு முன்னைத் தாங்கும் இல்லமாக எரியும் செடியை வரைபடமாகச் சித்திரிக்கின்றார். இந்த இலக்கிய உத்தியால், இறைவன் தாம் தெரிந்து கொண்ட சாதாரணமானவர்களுக்கும் ஏதாவது ஒரு விதத்தில் தம்மையே வெளிப்படுத்துகிறார் என்று படிப்பவர்களுக்கு எடுத்துக் கூறுகிறார் ஆசிரியர். ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோருடன் தமக்குள்ள உறவை இறைவன் மோசேக்கு வெளிப்படுத்துகிறார். அஃதோடு இக்குல முதியவர்களின் மரபினரை, அவர்கள் படும் கொடுமையிலிருந்து விடுவிக்கப்போகும் தம் உறுதியான முடிவையும் எடுத்துக் கூறுகிறார். தன்னை இறைவன் தேர்ந்தெடுத்ததைக் கண்ட மோசே கிலி பிடித்துத் திகைத்து நிற்க, ''நாம் உன்னோடு இருப்போம்'' என்று அவருக்கு இறைவன் உறுதிமொழி அளிக்கிறார். இந்த உறுதிமொழி வாய்பாடு முதலில் யாக்கோபுக்குத் அளிக்கப்படுகிறது *(ஆதி 28:15)*; அடுத்து இங்கு வருகிறது. இனி, பழைய ஏற்பாடு முழுவதும் அடிக்கடி இவ்வாய்பாடு காணப்படும். இக்கூற்று அப்போஸ்தலர்களைத் தூது அனுப்பிய போது (மத் 28:20) இயேசு அளிக்கும் உறுதியில் உச்சநிலை அடைகிறது. இக்கூற்று இயற்கை ஆற்றலுக்கு அப்பாற்பட்ட தூதுக்குக் கருவியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு வெற்றி உறுதியாக அளிக்கப்படும் என்பதற்கு உறுதிச்சான்று அளிக்கிறது.

இந்த இறை இடையீட்டில் தம்மையே வெளிப்படுத்தும் இறைவனைக் காண்கிறோம். இவ்விடையீடுகளின் வழியாக, காலமாகிய குறுகிய எல்லைகளைத் தகர்த்து, பழைய ஏற்பாடு முழுவதும் தொடர்ச்சியான, புதிய, சிறப்பான முறைகளில் தம்மையே வெளிப்படுத்துகிறார் இறைவன். இவர் மனிதர்களைத் தம் தூதுவர்களாகவும், தமக்குப் பதிலாகப் பேசுபவர்களாகவும் தேர்ந்தெடுக்கிறார். இறைவன் ஒருவரை அழைக்கும்போது, அவ்வழைப்புக்கு ஏற்றவாறு அவனுக்குத் துணைக்கருவியையும் அளிக்கிறார். இஸ்ராயேலின் இறைவாக்குரைஞரில் எல்லாம் மோசே மிகப்பெரியவராவார். இவர்தான் இஸ்ராயேலை யாவேயின் மக்களாகவும், யாவேயை இஸ்ராயேலின் இறைவனாகவும் செய்த நடுவர். இதற்கு இவ்வுலகியல் சார்ந்த விதத்தில் விளக்கம் அளிக்கவே முடியாது. இதை ஆராய்ந்து கொண்டே போனால், நாம் சந்திப்பது இறைவனின் அளவிட முடியாத மறைபொருளாகும். இவ்விறைவன் தம்மையே வெளிப்படுத்துகிறார்; தக்க நேரத்தில் தாமாகவே குறுக்கிட்டு வழிகாட்டுகிறார்; மனித வரலாற்றுப் போக்கையே நிர்ணயிக்கிறார்.

**4) இறைவனின் திருப்பெயர்:** ''நீர் யார், உமது பெயர் என்ன?'' என்று கேட்டு நின்ற மோசேக்கு இறைவன் அளிக்கும் பதில் மறைபொருள் பொதிந்ததாகும்; புகழ் பெற்றதாகும். ''இருக்கிறவர் நாமே'' என்று பொருள்படும் ''யாஹ்வே'' என்பது நமது பெயர் என வெளிப்படுத்துகிறார் இறைவன். இப்பெயருக்குப் பொருள் கூறுவதும் விளக்கம் அளிப்பதும் எளிதன்று. விளக்கவுரையாளர் சிலர் இப்பெயருக்கு ''நாம் யாராய் இருந்தால் உனக்கென்ன? சென்று, கூறியதைச் செய்'' என்று கூறி இறைவன் தட்டிக் கழித்துத் தம் பெயரைக் கூற மறுப்பதாக விளக்கம் கூறுவர். மேற்காசியாவைச் சேர்ந்த மக்களிடையே ஒருவருடைய பெயரை அறிதல், அறிந்தவர்க்கு அறியப்பட்டவர்மேல் ஒருவித ஆற்றல் அளித்தது என்று கருதப்பட்டது. ஆகையால், மோசே

கேட்டதுபோல், இறைவனின் பெயரை அறிதல் இறைவன் மேல் மோசே ஒருவித ஆற்றல் கொள்வதற்குச் சமமாகும். மோசேக்குத் தமது பெயரைக் கூற இறைவன் மறுப்பது, தாம் எவருக்கும் கட்டுப்பட்டவர் அல்லர், யாவற்றையும் கடந்தவர் என்று கூறுவதற்குச் சமமாகும் என்பர் சிலர். இதற்குமுன் மோசேயின் இறைவன் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபின் இறைவன் என்றழைக்கப்பட்டார். மூதாதையரின் இறைவன் என்றழைக்கப்பட்டார்; யாக்கோபோடு போராடிய தூதுவன், பெயர் கேட்கப்பட்டபோது, கூற மறுத்து விட்டார் *(ஆதி 32:30)*. பெயர் கேட்ட சிம்சோனின் தந்தைக்கு இறைவன் ''வியப்புக்குரிய என் பெயரை நீ ஏன் கேட்கிறாய்?'' என்று பதில் கேள்வி எழுப்புகிறார். இவற்றைக் கருத்தில் கொண்டால் இறைவன் மோசேயிடம் தம் பெயரைக் கூற மறுப்பதாகத் தெரிகிறது.

ஆயினும், யாத்திரை நூலின் சூழ்நிலையைக் கவனிக்குங்கால் இறைவன் தமது பெயரை வெளியிட விரும்புவதாகத் தெரிகிறது. ''என்றும் நமது பெயரும் இதுவே! தலைமுறை தலைமுறையாக நமது நினைவுச் சின்னமும் இதுவே!'' *(யாத் 3:15)*. மூல வடிவில், இப்பெயர் மீட்பு இடையீடு செய்வதற்காக எப்போதும் இருக்கும் இறைவன், குலமுதுவர்களோடு நெருங்கிய உறவு கொண்ட வரலாற்று இறைவன்தான் என்று உணர்த்தவல்லது என்று கூறலாம். திருவெளிப்பாட்டு நூலில் வரும் ''இருக்கிறவர், இருந்தவர், இனி வருபவர்'' (திருவெளி *1:4)* என்ற வாய்பாடு யாவே என்ற பெயரின் இயற்கையான விளக்கமாகும்.

எபிரேயத்தில் இறைவனின் திருப்பெயர் "YHVH" என்று எழுதப்பட்டது; ''யாஹ்வே'' என்று உச்சரிக்கப்பட்டது. இப்பெயருக்குப் பலவாறு விளக்கம் அளிப்பர் விளக்கவுரையாளர்கள். இப்பெயருக்கு உள்ளவற்றையெல்லாம் இருக்கச் செய்பவர் அதாவது, ''படைக்கும் இறைவன்'' எனப்பொருள் அளிப்பர் சிலர்; வேறு சிலர் ''நான் யாராய் இருப்பேனோ அவராய் இருப்பேன்'' (I shall be who I shall be); ''நாம் உன்னோடு இருப்போம்'' என்று மொழி பெயர்ப்பர். இது வருங்கால நிகழ்ச்சியையும் பொருளையும் சுட்டுகிறது. இதன்படி, ''நாம் யார் என்று நீ கண்டு கொள்வாய். நாம் நம்மையே வரலாற்றில் வெளிப்படுத்துவோம்'' என்று பொருள் கொள்ளலாம். இஃது இறைவனின் ஆற்றல்மிக்க திருமுன்னைக் குறிக்கவல்லது. மூன்றாவது குழுவினர், இப்பெயர் இறைவனின் எல்லாம் கடந்த தன்மையைக் குறிக்கிறது என்பர். ''இருக்கிறவர் நாமே'' (I am who am). இப்பெயர் இறைவனின் மீபௌதீகத் தன்மையை விளக்குகிறது. அவர் யாவற்றிற்கும் மேலானவர், தனித்தன்மையும் முதன்மையும் உடையவர் என்று மெய்யியல் அடிப்படையில் பொருள் அளிப்பர். நான்காவது குழுவினர், இப்பெயர் நம்மையும் நமது அறிவையும் கடந்த ஓர் ஆளைக் குறிக்கிறது; அவரை அறிதல் மனிதனால் கூடிய காரியமன்று; அணுக முடியாதவர் என்று பொருள் கூறுவர்.

மேற்கூறிய நான்கு விளக்கங்களும் ஒன்றை ஒன்று விலக்குவனவல்ல. நான்கையும் மனதில் கொண்டு இறைவன் திருப்பெயருக்கு விளக்கம் அளிக்க வேண்டும். இப்பெயரில், இறைவன் தம் முழுத்தன்மையை வெளியிடுகிறார். அதேபோது இப்பெயர் இறைவனின் யாவும் கடந்த தன்மையையும், மனித அறிவால் அறிய முடியாத மறைபொருளையும், அவர் வரலாற்றில் தம்மையே வெளிப்படுத்துகிறார் என்பதையும் உணர்த்துகிறது. இறைவன் மறைந்து வாழ்பவர்; ஆனால், தம்மையே வெளிப்படுத்துபவர்; தெளிவாக, படிப்படியாக வரலாற்றில் தம்மை வெளிப்படுத்துபவர். வரலாற்றில் அவரது செயல் ஒருபோதும் ஓயாது. இவற்றில் அவர் யாவற்றையும் கடந்தவர்; ஆனால், மனிதரிடையே வாழும் இறைவனாவார். அவரை யாரும் கட்டாயப்படுத்த முடியாது. யாரும் அவரை ஊடுருவி அறியமுடியாது. ஆனால், அவர் ''தாமேயாய் இருப்பவர்'' ஆவார்; எப்போதும் பிரதாசன்னமாய் இருப்பவர். இப்பிரசன்னம்

வெல்ல முடியாத, விடுதலை அளிக்கும் பிரசன்னமாகும். இப்பிரசன்னம் படைப்பு முழுவதையும் அதன் தொடக்கமுதல் இறுதிவரை தம்முள் கொண்டுள்ளது. முக் காலங்களையும் தம்மில் ஒன்றிக்கிறது.

''தொடக்கத்திலிருந்து தலைமுறைகளை அழைத்தவர் அன்றோ? முதலும் முடிவு மாயிருக்கிற ஆண்டவராகிய நாம்...'' *(எசா 41:4)*. மக்களின் நன்மைக்காக எங் கெல்லாம் இறையிடையீடு தேவையோ அங்கெல்லாம் இருப்பார். எப்போதும் இருப்பவர்; எங்கும் இருப்பவர். அவரது பிரசன்னம் ஆற்றலோடு செயல்படும். அவ ரது செயல்கள் வியப்புக்குரியவை, மறை பொருள் மிக்கவை. அவரது திருப்பெயரின் தோன்றுதலுக்குப் பின்வரும் அருஞ்செயல் கள் அவரது திருப்பெயரின் முத்திரையா கும்.

தமது பெயரை வெளிப்படுத்தி, மோசேக் குத் தம்மையே இறைவன் வெளிப்படுத்துகி றார். அதேபோழ்து, தம்மை முழுவதும் வெளிப்படுத்த மறுத்துவிடுகிறார் எனலாம். யாத்திரை நிகழ்ச்சிகளிலும் பின்வரும் நிகழ்ச்சிகளிலுந்தான் மோசேயும் இஸ்ராயே லரும் யாவேயைச் சிறிது சிறிதாக அறி கின்றனர். இவ்விறை வெளிப்பாடு தொடர்ந்து நடந்தது; கிறிஸ்துவில் நிறைவு பெறுகிறது. நான்காம் நற்செய்தி, இறை மகன் மனிதனான உண்மையை விவரிக்கும் போது இதேசெயல் ஆற்றல்மிக்க பிரசன்னக் கருத்தைப் பயன்படுத்துகிறது. ''(பிரசன்ன மாய்) நானே இருக்கிறேன்'' *(யோவா 4:26; 8:24. 28; 13:19)* என்று இயேசு கூறும்போது இறைவெளிப்பாட்டின் நிறைவை இயேசு வில் காண்கிறோம். பாடுகளும் மகிமைப் படுதலுமாகிய இறுதி நேரம் வந்த போது, தம்மைக் கைது செய்யத் தேடி வந்தவர்களி டம் ''நான்தான் என்று'' இயேசு பதில் கூறினார். இறைவன் இப்போது ஒரு பெயரால் வெளிப்படுத்துவதில்லை. எல் லாப் பெயர்களுக்கும் மேலான ஒருவரால் தம்மை வெளிப்படுத்துகிறார் *(பிலி 2:9)*.

இயேசுவே ''இருக்கிறவர்''. அவரது பிரசன்னம் மனிதரை மாற்றாது விடாது. அவரை எதிர் கொள்ளுதல் மீட்பையோ, தீர்வையோ அளிக்கும் இறைவனது பிரசன் னம். அவரது இரக்கம், நீதி ஆகியவற்றின் வெளிப்பாடு, எரியும் புதரில் தொடங்கி யது; கிறிஸ்துவில் நிறைவுபெறும். அவரில் புதிய யாத்திரை நிறைவுபெறும்.

இறைவன் தமது பெயராக மோசேக்கு வெளிப்படுத்தியது ''யாவே'' என்ற பெய ராகும். அவருடைய யாவும் கடந்த தன்மை யையும், அவரை அணுக முடியாத தன்மையையும், மறைபொருள் மிக்க தன் மையையும், அழுத்திக் கூற விரும்பிய விவிலிய ஆசிரியர்கள் இறைவனுடைய பெயரை உச்சரிக்க அஞ்சி, அவரைப் ''பெயர்'' என்ற பொதுப் பெயரால் அழைத்தனர். பிற்கால விவிலிய நூல்களில் ''பெயர்'' யாவேயைக் குறிக்கும். பிற்கால யூத ராபிகளின் நூல்களும் இறைவனை இப்படியே குறிக்கின்றன. இறைவன்பால் கொண்ட அச்சமிக்க மரியாதையை முன் னிட்டு யாவே என்ற சொல்லுக்குப் பதி லாக, ''இறைவன்'' என்று பொருள்படும் ''எலோகிம்'' என்ற பொதுப்பெயரும், ''ஆண்டவர்'' என்று பொருள்படும் ''அதோனாயி'' என்ற சொல்லும் பயன் படுத்தப்பட்டன. புதிய ஏற்பாடும் ''ஆண்ட வர்'' என்ற சொல்லையே இறைவனைக் குறிக்கப் பயன்படுத்துகிறது.

யாவே பாரம்பரியப்படி பெருவெள்ளத் திற்கு முன்பே இறைவன் யாவே என்ற பெயரில் வணங்கப்படுகிறார் *(ஆதி 4:26)*. ஆனால் குருக்கள், எலோகிம் பாரம்பரியங் கள்படி குலமுதுவர்களுக்கு இறைவன் ''எல்லாம் வல்ல இறைவன்'' என்ற பொருள்படும் ''ஏல்ஷடாய்'' என்ற பெய ரில் தம்மை வெளிப்படுத்துகிறார். *யாத் 3:11-15* என்ற பகுதி எலோகிம் பாரம்பரி யத்தைச் சேர்ந்ததாகும். இதன்படி வாசகத் தில் வரும் சிறப்பான சூழ்நிலையில் யாவே என்னும் தமது சொந்தப் பெயரை மோசேக்கு வெளிப்படுத்துகிறார் இறை வன். இரண்டு பாரம்பரியங்களுக்குமுள்ள

முரண்பாடு கண்டு வாசகர்கள் மலைக்கலாம். எது சரி? இரண்டுமே சரி எனலாம். யாவே என்ற பெயரைத் தொடக்கத்திலிருந்து பயன்படுத்துகிறார்; மீட்பு வரலாற்றுத் தொடர் ஓவியத்தை வரைய முயல்கிறார். இஸ்ராயேலின் இறைவனாகிய யாவே, வரலாற்றின் படைப்பின் உண்மையான ஆண்டவர். ஆகவே, யாவே பாரம்பரிய ஆசிரியர் இறையியல் நோக்கோடு யாவே வழிபாட்டைக் காலத்தொடக்கத்திற்கே பின்னோக்கிக் கொண்டு செல்கிறார். குலமுதுவர்களுக்கு அளிக்கப்பட்ட வெளிப்பாடு குறையுள்ளதெனினும் தொடக்கத்திலிருந்து யாவேதான் குலமுதுவர்களை வழி நடத்திச் செல்கிறார். இறைவனைப் பல்வேறு பெயர்களைக் கொண்டு வழிபட்டாலும், யாவேயைத்தான் அவர்கள் உண்மையிலேயே வழிபட்டனர். ஆகவே, யாவே பாரம்பரியம், யாவே என்ற பெயரைக் கால மயக்கமாக விவிலியத் தொடக்கத்திலிருந்து பயன்படுத்துவதை அதன் இறையியல் நோக்கோடு புரிந்து கொள்ள வேண்டும். மாறாக குருக்கள், எலோகிம் பாரம்பரியங்கள், உண்மை நிகழ்ச்சிகளுக்கேற்ப, யாவே என்ற பெயர் இறைவனைக் குறிக்க மோசே காலத்தில்தான் பயன்படுத்தப்பட்டது என்று கூற விழைகின்றன. குழந்தைகளுக்கு யாவே என்ற பெயரோடு தொடர்புடைய பெயர்கள் கொடுக்கப்படுதல் மோசே காலத்திலிருந்துதான் இஸ்ராயேலில் பழக்கத்தில் காணப்படுகிறது. இது யாத்திரைக் காலத்தில்தான் யாவே என்ற பெயர் இறைவனைக் குறிக்கத் தொடங்கியது என்று காட்டுகிறது. குருக்கள், எலோகிம் பாரம்பரியங்கள் மோசே வழியாக அளிக்கப்பட்ட வெளிப்பாட்டின் சிறப்பை அழுத்திக் கூறுகின்றன.

காயீனின் மரபினரான கினேவரிடமிருந்து, யாவே என்ற பெயரை மோசே அறிந்திருந்தார் என்று சிலர் கூறுவர். இப்போது இக்கருத்துக்கு அவ்வளவு மதிப்பு இல்லை. மேலும், இது தவறானது என்று ப்ராக்ஷ் என்ற அறிஞர் ஆராய்ச்சி மூலம் காட்டியுள்ளார். சீனாய் மலை உடன்படிக்கைச் சூழ்நிலையில் புதிய பொருளோடு யாவே என்ற பெயர் வெளிப்படுத்தப்படுகிறது; மோசேக்குப் புதியதோர் இறைவன் வெளிப்படுத்தப்படவில்லை; ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோரின் கடவுளே யாவே என்று தம்மை வெளிப்படுத்துகிறார் என யாத்திரை நூலின் இறுதிப் பதிப்பாசிரியர் காட்ட விழைகிறார் எனலாம்.

தமது சொந்தப் பெயரை வெளிப்படுத்திய பின், யாவே ஆகிய இறைவன் தாம் புதிதாகத் தேர்ந்தெடுத்துள்ள கருவியாகிய மோசேக்குத் தாம் அளிக்கவிருக்கும் தூதுப் பணியை விரிவாக எடுத்துரைக்கிறார். மோசே தன் உடன் எபிரேயரை எகிப்திலிருந்து புறப்படத் தூண்ட வேண்டும். அவர்களும் அவருக்குச் செவிமடுப்பர். ஆனால், பார்வோன் இதை வரவேற்க மாட்டான். தனக்குப் பெரிதும் பயன்படும் இந்த எபிரேய அடிமைகளை இழப்பதை வெறுத்து, அவர்கள் எகிப்திலிருந்து புறப்படுவதை எதிர்த்து எழுவான். ஆன்ால், வரலாற்றையும் கட்டுப்படுத்தி ஆண்டு நடத்தும் யாவேயின் வல்லமைமிக்க வலக்கரம் இம்மக்களைத் தன்னுரிமையோடு போகவிட அவனைத் தூண்டும்.

**5) வாதைகளும் வியத்தகு இயற்கையும்:** மோசே தன் உடன் பிறந்தான் ஆரோனைத் தனது பேச்சாளனாகப் பயன்படுத்த அனுமதி பெறுகிறார் *(யாத் 4:17)*. இதற்குப்பின், யாவேக்கும் பார்வோனுக்கும் இடையே நடக்கும் கடும்போட்டியாக நிகழ்ச்சிகளை விவரிக்கிறார் விவிலிய ஆசிரியர் *(5:1-12:51)*. ஒரு புறம் தமது மக்களாகிய இஸ்ராயேலை அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்க உறுதி பூண்டிருக்கும் யாவே ஆகிய இறைவன் மறுபுறம் அடிமைகளான எபிரேயரைத் தன்னிடமே வைத்துக் கட்டுப்படுத்தப் பிடிவாதம் பிடிக்கும் பார்வோன். இருவருக்குமிடையே ஒரு மாபெரும் போராட்டம். அதில் சிறப்பான பகுதி வாதைகளாகும். இவை இயற்கைப் பேரழிவுகளாகும். இவை போன்றவை எகிப்திய வரலாற்றில் அடிக்கடி நடந்திருக்

கின்றன. இவ்வழிவுகள் இயற்கை நிகழ்ச்சி களாக இருந்தால், இவற்றின் மேல் வியத் தகு பண்பைச் சாற்றி விவிலிய ஆசிரியர் கூறுவது வினோதமாக இருக்கலாம். நவீன அறிவியல்வாதி இயற்கை அழிவுகளை இறைவனது தீர்ப்பாக விளக்க விரும்பான். ஆனால், பழங்கால மக்கள் அப்படிக் கருதியதாகவும், அதற்குப் பரிகாரம் செய்ய வேண்டும் என்று எண்ணிச் செயல்பட்ட தாகவும் அறிகிறோம்.

இவ்விடத்தில் இயற்கையைப் பற்றி நாம் ஒரு சிறிது கூற வேண்டும். நவீன மனிதன் இயற்கையின் அறிவியலை நன்கு அறி வான். அவனுக்கு இயற்கை, நிலையான சட்ட ஒழுங்குகளால் ஆட்சி செய்யப்படும் ஒரு திட்டமாகும். இத்திட்டத்தின் சட்டங் கள் செயற்படுவதில் தலையிட்டு அவை மாறாக அல்லது வேறு விதமாகச் செயல் படச் செய்தால் அஃது அருஞ்செயலாகக் கருதப்படும். இத்தகைய கருத்து பழங் காலச் செமித்தியர்கள் அறியாத ஒன்றாகும். அவர்களுக்கு இயற்கை ஆட்தன்மையுடை யது. பல சமயங்களில் இயற்கைக்கு இறை ஆட்தன்மையும் அளிக்கப்படுவதுண்டு. இஸ்ராயேலை அடுத்து இருந்த புறமதத்தி னர் இப்படிப்பட்ட பல இயற்கைத் தெய் வங்களைக் கொண்டிருந்தனர். தங்களுக்குப் பயன்பட்டால் இத்தெய்வங்களை நட்பு டைத் தெய்வங்களாகவும், தீமை செய்தால் பகைவர்களாகவும் கருதினர். ஆனால், இறைவெளிப்பாட்டின் பயனாக, எல்லாம் வல்ல யாவே இவ்வாற்றல்களைக் கட்டுப் படுத்துகிறார். அவற்றைத் தமது திட்டத்திற் கேற்பப் பயன்படுத்துகிறார் என்று எபிரே யர் தம் பட்டறிவால் உணர்ந்தனர். இயற் கையின் ஆற்றல்களை யாவேயினுடைய ஆற்றலின் தோற்றங்களாகக் கருதினர். ஆகையால், இயற்கை நிகழ்ச்சிகளை யாவே யின் வியத்தகு அடையாளங்களாகக் கண்ட னர் எபிரேயர். அப்படிக் கருதுவதற்கு, இறைவன் தலையிட்டு இயற்கைச் சட்டங் களை மாற்றியமைக்கவோ, நிறுத்தி வைக்கவோ தேவையில்லை.

யாத்திரை நூலில் வரும், எகிப்தில் நடந்த வாதைகள் உண்மையிலேயே யாவே இறை வனால் நிகழ்கின்றன என்பதை மோசே தன் இறைவாக்கால் விளக்குகிறார். அவர் பயன்படுத்தும் கோல் மாயவித்தைக்காரரின் கோல் அன்று. அது மோசேயின் இறைவாக் குரைக்கும் செயலின் அடையாளமாகும். மோசே ஒரு மாயவித்தைக்காரரும் அல்லர். மோசே, ஒழுக்க, சமயக் குறிக்கோளுக்காக வும், தன் அடிமைப்பட்ட மக்களின் விடு தலைக்காகவும், தன் மூதாதையரின் இறை வன் பெயரால் போராடுகிறார். அதற் கேற்ப, அவர் பயன்படுத்தும் கோலுக்குத் தன்னிலேயே எந்த அருஞ்செயல் ஆற்றலும் இல்லை. இறைவனுடைய அருஞ்செயல் புரியும் ஆற்றலே செயல்படுகின்றது என்ப தற்கு அடையாளமாகவே அக்கோல் பயன் படுகிறது.

யாத்திரை நூலில் வரும் இந்த வாதை களைப் புரிந்து கொள்ள சிறிது விசுவாச அடிப்படை தேவை. இந்த வாதைகளை இவ்வுலகியல் வரலாற்றுக் கண்ணோக் கோடு விவரிக்கலாம். ஆனால், மோசேயி னுடைய இறைவாக்கு மட்டுந்தான் இறை வனுடைய தீர்ப்பளிக்கும் கரம் செயல்படு கிறது என்று காட்டுகிறது. கிறிஸ்துவை விசுவாசத்தால்தான் அறிந்து கொள்ளக் கூடும். மீட்பு வரலாற்றின் தொடக்கமும் அப்படியே:

பத்து வாதைகள்: *1)* நீர் குருதியாக மாறுதல், *2)* தவளைகள், *3)* கொசுக்கள், *4)* ஈக்கள், *5)* விலங்குகளுக்குக் கொள்ளை நோய், *6)* கொப்புளங்கள், *7)* கல் மழை, *8)* வெட்டுக்கிளிகள், *9)* இருள், *10)* தலைப் பேறுகளின் சாவு.

இந்த வாதைகள் எகிப்து முழுவதையும் பாதிக்கவில்லை. யாவே தமது அருஞ் செயல்களையும் அடையாளங்களையும் ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஆற்றுகிறார். மேற்குக் காற்று வெட்டுக்கிளிகளை அடித்துக் கொண்டு போய்ச் செங்கடலில் சேர்த்தது என்று கூறப்படுகிறது. தென் எகிப்தில் நடந்திருந்தால் வெட்டுக்கிளிகள்

பாலைவனத்தைத்தான் சேர்ந்திருந்திருக்கும். நைல் நதி சிவப்பாதல் அதன் வெள்ளப்பெருக்கோடு சாற்றிக் கூறப்படுகிறது. ஈக்கள் இலையுதிர் காலத்தில் காணப்படுகின்றன. ஈ எகிப்தின் அடையாளமாகும் (எசா 7:18; 18:1). மீன்கள் சாதல், விலங்குகள் கொள்ளை நோயால் துன்புறுதல், கொப்புளங்கள், கல்மழை போன்ற வாதைகள் எகிப்தில் அடிக்கடி நடப்பனவாகும். பெரும் இருளை மணற்புயலைக்கொண்டு விளக்கலாம். இறுதியில், எகிப்து பல கொடிய நோய்களுக்குப் பெயர் போனது. பத்தாவது வாதையில் சிறப்பானது முதல்பேறு இறத்தலாகும். ஒவ்வொரு வாதைக்கும் இயற்கையான விளக்கம் அளிக்கலாம். ஆனால், இவை யாவும் இறைத்தீர்ப்பாக யாவே அனுப்பியவையாகும் என்று விவிலியம் தெளிவாகக் கூறுகிறது. நூலைக் கவனமாய்ப் படித்தால், இந்த முடிவைத் தவிர்க்க முடியாது. எபிரேயர்களை விடுவித்தலில் இவ்வாதைகள் இறைவனின் அருள்பாலிப்பை அழுத்திக் காட்டுகின்றன.

எல்லா வாதைகளும் சேர்ந்து ஒரே பட்டியலில் தரப்படவில்லை. யாவே பாரம்பரியம் எட்டு வாதைகளை மட்டும் தருகிறது (1, 2, 4, 5, 7, 8, 9, 10). எலோகிம் பாரம்பரியம் ஐந்தையும் (1, 7, 8, 9, 10) குருக்களின் பாரம்பரியம் ஐந்தையும் (1, 2, 3, 6, 10) தருகின்றன (எண்ணிக்கை முதலில் தரப்பட்ட வாதைகளின் பட்டியல் எண்ணைக் குறிக்கிறது). எல்லாப் பாரம்பரியங்களிலும் முதலாவதும் கடைசியானதும் ஒத்துப்போகின்றன. ஆனால் வழக்கம்போல், அவற்றை நோக்கும் விதம் பாரம்பரியங்களுக்கேற்ப வேறுபடுகின்றன. யாவே பாரம்பரியப்படி, மோசே சொல்லுக்காக இறைவன் நேரடியாகத் தலையிட்டுச் செயலாற்றுகிறார். எலோகிம் ஆசிரியர், மோசே தடியை நீட்ட, செயலாற்றும் இறைவனைக் காண்கிறார். குருக்கள் பாரம்பரியத்தில் ஆரோன் தடியைக் கையாள இறைவன் செயலாற்றுகிறார். இவ்வாசிரியர் எகிப்தியரின் மாயவித்தைக்காரர்களை உட்புகுத்துகிறார். அவர்களின் தேவர்களுக்கும் யாவேக்கும் இடையே ஒரு போட்டியை ஏற்படுத்துகிறார்.

யாத்திரை நூலைத் தொகுத்த பதிப்பாசிரியர் இம்மூன்று பாரம்பரியங்களையும் சேர்த்துப் பெரும் ஆற்றலுடன் பின்னி நாடகப் பாணியை உயர்த்திக் காட்ட முயல்கிறார். மேலும், யாவேக்கும் புறமதத் தேவர்களுக்கும் நடக்கும் போட்டியாக நிகழ்ச்சிகளை நோக்குகிறார். இந்தப் போட்டி யாவேயின் எல்லாம் வல்ல தன்மையைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. முதல் நான்கு வாதைகளிலும் ஓரளவு துன்பந்தான் செய்யப்படுகின்றது. சிலவற்றை எகிப்திய மாயவித்தைக்காரர்களும் செய்கின்றனர். அடுத்த நான்கும் முனைப்பாக உள்ளன. மனிதர்களுக்கும் உடைமைகளுக்கும் இடர்மிக்க அழிவு ஏற்படுகின்றது. ஒன்பதாவது வாதை பெருங்கிலியை எழுப்புகிறது. பத்தாவது வாதை எகிப்தியர்களுக்குத் திகைப்பு மிக்க கிலியையும் அச்சத்தையும் ஏற்படுத்துகிறது. அதன் விளைவாக இஸ்ராயேல் மக்களைப் போக விட, பார்வோன் உறுதியான முடிவு எடுக்கிறான். இவை யாவும் வீரகாவியப் பாணியில் விவரிக்கப்படுகின்றன. இப்பாணியை யாத்திரை நிகழ்ச்சியுரைகளில் மட்டுமன்று, சங்கீத நூலிலும் (சங் 77; 104), ஞானாகம நூல்களிலும் காணலாம் (ஞான 11:14-20; 16:1-18).

**6) பாஸ்கா அல்லது கடந்தேகும் விழா:** வாதைகளின் விவரிப்பின் முடிவில், விவிலியம் கடந்தேகும் விழாவையும், அதன் ஒழுங்குகளையும், இஸ்ராயேல் மக்கள் கடைப்பிடிக்க வேண்டியவற்றையும் பறைசாற்றுகின்றது (யாத் 12:1-51). இறுதி வாதையான தலைப்பேறுகளின் இறப்பு பார்வோனின் பிடிவாதத்தைத் தகர்த்தெறிகிறது. இஸ்ராயேலின் தலைப்பேறுகள் காக்கப்பெறும் பொருட்டு, மோசே ஒரு கட்டளையிட்டிருந்தார். ஒவ்வொரு குடும்பத்தினரும் ஓர் ஆட்டுக் குட்டியைக் கொன்று, அதன் குருதியை வீட்டு நிலை

களில் தெளித்திட வேண்டும். இப்படிச் சடங்குகள் முறையே நடைபெற்ற வீடு களைப் பத்தாவது வாதையின்போது இறை வனின் தூதர் கடந்து சென்றார். இப்படிக் கடந்துசென்றதைக் குறிக்கிறது ''பாஸ்கா'' என்ற எபிரேயச் சொல்லாகும். இது விவிலி யம் கூறும் பொது விளக்கம். சிலர் இச்சொல்லுக்குச் சமாதானப்படுத்தல், பரி காரம் செய்தல் என்று பொருள் கொடுப்பர். ஆனால், இஸ்ராயேலின் கடத்தல் விழா வில் பரிகாரப் பொருளே இருந்ததில்லை. ஆதலால், இப்பொருள் ஒவ்வாததாகும். மற்றும் சிலர் எகிப்திய மொழியில் இப் பெயருக்குப் பொருள் காண விழைந்தனர். ஆனால், செமித்திக்குத் தோற்ற வரலாறு டைய ஒரு விழாவுக்கு எகிப்தியப் பெயரை எபிரேயர்கள் கொடுத்தனர் என்பது நினைத் துக்கூடப் பார்க்க முடியாததாகும். இந்த முயற்சிகள் எல்லாம், இச்சொல்லுக்குப் பத்தாவது வாதையில் பொருள் காண முயல்கின்றன. ஆனால், இந்த வாதையின் நினைவு இவ்விழாவுக்குப் பிந்தியதாகும்.

சொல் விளக்கம் எப்படியிருப்பினும், தோற்றத்தில் இவ்விழா மிகமிகப் பழமை யானதாகும் என்பது தெரிய வருகிறது. எகிப்திலிருந்து இஸ்ராயேலர் வெளிப் போந்த நிகழ்ச்சிக்கு மிக முந்தியதாகும். தொடக்க காலத்தில் இது நாடோடி மக்க ளுடைய இளவேனிற்காலச் சடங்காக இருந் திருக்கலாம். இச்சடங்கில் குருக்களோ, பீடங்களோ சிறப்புப் பெறவில்லை. இதில் குருதி சிறப்பாகப் பயன்பட்டது. ஆடுகள் பெருகுவதற்காக இச்சடங்கு நடைபெற்றி ருக்கலாம். மேலும், கூடார நிலைகளில் தெளிக்கப்பட்ட குருதி, பகையான அல்லது தீய சக்திகளிலிருந்து காப்பாற்றுவதாகக் கருதப்பட்டது.

இந்தப் பொதுச்சடங்கை இஸ்ராயேலர் வரலாற்றின் தலையாய கட்டத்தில் மோசே பயன்படுத்துகிறார்; இவ்விழாவுக்குப் புதிய ஆழ்ந்த பொருள் அளிக்கிறார். இதிலிருந்து இச்சடங்கு நாடோடிகளின் விழாவின் தன்மையை இழந்து, இறைவனின் சொந்த மக்களின் விடுதலையையும் மீட்பையும் குறிக்கும் மாபெரும் விழாவாக மாறுகிறது. பாஸ்கா விழாவின் ஆண்டுவிழாக் கொண் டாட்டத்தின் வழியாக ஒரு காலத்தில் இஸ்ராயேலர்களுக்கு மீட்பளிக்கும் பொருட்டு யாவே செய்த வரலாற்றுச் செயலால் எல்லாத் தலைமுறைகளும் உயர்வு பெறுகின்றன. அதில் ஒவ்வொரு இஸ்ராயேலனும் பங்கு பெறுகிறான். தனிக் குடும்பங்களில் பாஸ்கா உணவு உண்ணப் பட்டபோது அஃது ஒரு பலியாகவும் நினைவாக்க விருந்தாகவும் நடந்தது. பாஸ் காவுக்கு முந்திய இரவில், கிறிஸ்து தமது சொந்த நினைவாக்க விருந்தை ஏற்படுத்திய போது, அவர் பழைய ஏற்பாட்டின் நினை வாக்கத்தைக் கடந்து செல்கிறார்; அதை நிறைவு செய்கிறார்.

***7) புளியாத அப்பவிழா:*** இதுவும் மிகப் பழைய விழாவாகும். இஃது உழவுத் தொழிலைப் பின்னிலையாகக் கொண்டது; வாற்கோதுமை அறுவடையின் தொடக்கத் தில் கொண்டாடப்பட்டது. இது கானானி யர்களிடமிருந்து வந்ததாகத் தெரிகிறது. இவ்விழாவில் ஏழு நாட்களுக்குப் புளியாத அப்பத்தை இஸ்ராயேலர் உண்டனர். ஒப் புக்கொடுக்கப்பட வேண்டிய காணிக்கை அறுவடையின் முதல் பலனாகும்.

பாஸ்கா விழாவும், புளியாத அப்ப விழாவும் மிகப்பழையனவாகும். இவை நாடோடித்தன்மையை எடுத்துக் காட்டுகின் றன; உழவுத்தொழிலைப் பின்னிலையாகக் கொண்டன. இவையிரண்டும் இறைக் கட்டளையால் ஒன்று சேர்க்கப்பட்டு, மாற் றியமைக்கப்பட்டு, எகிப்திலிருந்து இறை மக்கள் விடுதலையடைந்த மாபெரும் நிகழ்ச்சியை உணர்த்தப் பயன்படுகின்றன. இவ்விரட்டைவிழாவுக்குப் புதிய மீட்புப் பொருள் அளிக்கப்படுகிறது. புதிய ஏற் பாட்டுக் காலத்தில் பாஸ்கா அல்லது கடத்தல் விழா, கிறிஸ்துவுக்கு எடுத்துக்காட் டாக இருக்கும் பொருளையும் பெறுகிறது *(1 கொரி 5:7; யோவா 1:29; 19:36; 1 பேதுரு 1:19).*

யாத் 12-ஆம் அதிகாரத்தின் முதல் 14 வசனங்கள் குருக்கள் பாரம்பரியத்தைச் சேர்ந்தனவாகும். பின்வரும் ஆறு வசனங்கள் அதே பாரம்பரியத்தைச் சேர்ந்ததாயினும் பிற்காலச் சேர்க்கையாகக் கருதப்படுகிறது. காரணம், இதில் யாத்திரை ஏற்கெனவே நிகழ்ந்துவிட்டதாகக் கருதப் படுகிறது.

**8) தலைப்பேறுகளின் இறப்பு:** மோசே கட்டளைக்குப் பணிந்து இஸ்ராயேலர் முதல் பாஸ்காச் சடங்கை நிறைவேற்றினர். பின், எகிப்தியரிடையே நிகழ்ந்த அழிவை ஆசிரியர் விவரிக்கிறார். எகிப்தியரின் தலைப்பேறுகள் கொல்லப்படுதல் இறைவனுடைய நேரடிச் செயலால் நடந்தது என்பர் பலர். வேறு சிலர் எகிப்தியரிடையே அடிக்கடி வரும் கொடிய கொள்ளை நோயின் விளைவு என்பர். இவர்களின் கருத்துப்படி தலைப்பேறுகள் என்று குறிக்கப்படுதல் இந்நூலில் காணப்படும் வீர காவிய அணிக்கு ஒரு சான்றாகும். எஃது எப்படியிருந்தாலும், எகிப்தியரின் தலைப்பேறுகள் மரித்த அவ்விரவே பார்வோன் மோசேயை அழைத்து, ''நீங்களும் இஸ்ராயேல் மக்களும் எழுந்து என் மக்களை விட்டுப் புறப்பட்டுப் போய், நீங்கள் சொன்னபடியே ஆண்டவருக்குப் பலியிடுங்கள்'' (யாத் 12:3) என்று கூறுகிறான். பிடிவாதம் பிடித்த பார்வோன், எபிரேயர்கள் தங்களின் மனைவியர் குழந்தைகளோடு புறப்படுவதற்கு விரைவில் இசைவு அளிக்கிறான். புறப்படும் அடிமைகளுக்கு எகிப்தியர் தங்கம், வெள்ளி, உடைகள் முதலியவைகளை அளிக்க இணங்கினர் என்பது நமக்கு வியப்பை அளிக்கலாம். ஆனால், இச்செயல் எகிப்தியரின் சமயப் போக்கிற்கு ஒத்ததே. இஸ்ராயேலின் இறைவனாகிய யாவே தமது வல்லமையைக் காட்டிவிட்டார். அவருடைய மக்களை வெறுமையாகப் போக விடுவது அவ்விறைவனுக்குச் செய்யும் அவமானமாகும். பழங்கால மேற்காசிய மக்களின் இந்த மனப்போக்கைப் பிற்காலத்தில் பெலிஸ்தியர்களின் செயலிலும் பார்க்கலாம் (1 சாமு 6:3-5). விவிலியக் கருத்துப்படி இஸ்ராயேல் எகிப்திலிருந்து வெளிப்போந்தது தற்செயலாக நடந்தது அன்று, சமயப் போக்கும் பொருளும் உடையதாகும்.

**9) எகிப்திலிருந்து புறப்படுதல்:** எகிப்தில் யாவேக்கும் பார்வோனுக்கும் நடந்த போராட்டம் யாவேக்கு வெற்றியுடன் முடிந்தது. பின், விவிலிய ஆசிரியர் அடிமைத்தன நாட்டிலிருந்து உறுதி அளிக்கப் பட்ட நாட்டிற்குச் செல்ல இஸ்ராயேல் பின்பற்றிய பாதையையும் பயணத்தையும் விவரிக்க முனைகிறார் (12:37).

**10) இஸ்ராயேலின் எண்ணிக்கை:** எழுதுகிற போக்கில், பிள்ளைகளைத் தவிர்த்து, 600,000 பேர் புறப்பட்டதாகக் கூறுகிறார் ஆசிரியர். இதை உண்மையென்று எடுத்துக் கொண்டால் ஏறத்தாழ 30 லட்சம் பேர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டிருக்க வேண்டும். இவர்களை நடத்திச் செல்வது அவ்வளவு எளிதான செயலும் அன்று. இவ்வெண்ணிக்கை பற்றிப் பலரும் பலவாறு விளக்கம் அளிக்க முயன்றுள்ளனர்.

இதில், செமித்தியர்கள் மிகைப்படுத்திக் கூறுதலுக்கு ஒரு சான்றைக் காண்கின்றனர் சிலர். மற்றவர்கள் இவ்வெண்ணிக்கை தாவீது காலத்தில் எடுக்கப்பட்ட கணக்கெடுப்பின் விளைவாகும், அது காலமயக்கமாக யாத்திரைக் காலத்தில் புகுத்தப்படுகின்றது என்பர். மூன்றாவது குழுவினர், ஆயிரம் என்ற எண்ணிக்கையைக் குறிப்பதாகக் கருதப்படும் ''ஏலெபு'' என்ற சொல்லுக்குக் குடும்பம் என்னும் பொருளும் கொடுக்கலாம் என்பர். இதன்படி, மோசேயுடன் எகிப்திலிருந்து 600 இஸ்ராயேலர் குடும்பங்கள் புறப்பட்டன. அப்படியானால் ஏறத்தாழ 10,000 மக்கள் புறப்பட்டிருக்க வேண்டும். இந்த விளக்கத்தை இப்போது பலர் ஏற்றுக்கொள்வர். எண்ணிக்கை பற்றிப் பல கருத்துக்கள் இருந்தாலும், பெரும்பான்மையான ஆராய்ச்சியாளர்கள் எகிப்திலிருந்து புறப்பட்ட எபிரேயர்களின் எண்ணிக்கை பல ஆயிரம் என்று ஒப்புக்கொள்வர்.

***11) எகிப்து நாட்டில் இஸ்ராயேலர் பயணம் சென்ற வழி:*** எகிப்திலிருந்து கானானுக்குச் செல்ல, பல வழிகள் இருந்தன. அவற்றில் முதலாவது பெலிஸ்தியர் நாட்டின் வழியாகச் செல்லும் பாதையாகும். இப்பாதை மற்றவற்றை விட மிக எளிதானது. இரண்டாவது பாதை, சூர் பாலைவனம் வழியாகச் செல்லுவது. மூன்றாவது, சூயெஸ் வளைகுடா வடமுனையிலிருந்து எட்சியோன்-கெபேருக்கு நேரே கிழக்கு நோக்கிச் செல்லும் எகிப்து-அரேபியா வணிகப் பாதையாகும். இவ்வழிகள் பயணத்துக்குப் பெரிதும் பயன்பட்டன; அரசு வீரர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டன. ஆகையால் இவற்றை ஒதுக்கிவிட்டு, எகிப்தியர் படைப்பயம் இல்லாத தெற்கு வழியாகச் சென்று, சுற்றான வழியில் இஸ்ராயேல் மக்களைக் கானானுக்கு இட்டுச் செல்கிறார் மோசே. ஆனால், இவ்வழி எது என்பது பற்றி நவீன ஆராய்ச்சியாளர்களிடையே ஒற்றுமையேயில்லை. இஸ்ராயேலர் சென்ற வழியில் குறிப்பிடப்படும் இடங்களில் சுக்கோத்தைத் தவிர மற்ற இடங்களைப் பற்றி ஊகமாகக் கூறலாமே தவிர, உறுதியாக ஒன்றும் கூறமுடியாது. சுக்கோத்து இப்போது தெல்-ஏல் மோசாகுத்தா என்றழைக்கப்படும் இடமாகும். இது நைல்நதிக் கழிமுகத்திலுள்ள (இப்போது சான்-ஏல் ஹாகன் என்றழைக்கப்படும்) இரமசேசுக்குத் தென் கிழக்கில் *32* கல் தொலைவில் உள்ளது. ஒரு காலத்தில் இவ்விடம் பித்தோம் எனத் தவறாகக் கருதப்பட்டது. ஆனால் இப்பித்தோம் சுக்கோத்துக்கு மேற்கே $3\frac{1}{2}$ கல் தொலைவில் உள்ள தெல்-ஏர்ரட்டபா ஆகும்.

எகிப்திய மொழியில் ஏத்தாம் என்றால் அரண், கோட்டை எனப் பொருள்படும். இவ்விடம் பாலைவனத்தின் எல்லையை ஒட்டிய கசப்பு ஏரிகளின் வடமுனையில் இருந்திருக்க வேண்டும். பிககிரோத்து இப்போதைய க்வான் டீர் என்ற இடத்திற்கு அருகில் இருந்திருக்க வேண்டும். இஃது இரமசேசுக்கு நேர் தெற்கில் உள்ளது. ''கோபுரம்'' அல்லது ''அரண்'' எனப் பொருள்படும் ''மக்தலம்'' என்னும் எபிரேயப் பெயர் பல இடங்களுக்குப் பெயராக இருந்திருக்கிறது. அவற்றில் ஒன்று இக்காலத்திய தெல்-ஏல் ஹெயில் என்ற இடமாகும். இவ்விடம்தான் விவிலியத்தில் குறிக்கப்படும் மக்தலம் எனப் பெரும்பாலும் கருதப்படுகிறது. இதுதான் எரே *44:1*; எசே *29:10*; *30:6*-இல் குறிக்கப்படும் மிக்தோல் என்று அறிஞர் கருதுவர். மற்றொரு மக்தலம் கசப்பு ஏரிகளின் தென்பகுதியில் உள்ளது. பெல் சாபோன் என்ற இடம் பிற்கால விவிலிய இலக்கியத்தில் தெகபனகேசு என்றழைக்கப்பட்டது (எசே *30:18*). இதைக் கிரேக்கர் தாப்னே என்றழைத்தனர்; இன்று கோட்டாப்பானா என்றழைக்கப்படுகிறது. சூயெஸ் வளைகுடாவையும் மத்திய தரைக்கடலைச் சேர்ந்த மன்சாலா ஏரியையும் இணைக்கும் சூயெஸ் கால்வாய் பல மாற்றங்களைச் செய்துள்ளது. சான்றாக, பாலாக்கு ஏரி மறைந்து விட்டது. விவிலிய காலத்தில் கசப்பு ஏரிகள் சூயெஸ் வளைகுடாவோடு இணக்கப்பட்டிருந்திருக்கலாம்.

***12) நாணல் கடலைக் கடத்தல்:*** யாத்திரை நூலின் சூழ்நிலையில் செங்கடலைப் பற்றிக் கூறுதல் தவறானதாகும். இஃது எழுபது நூல் ஆசிரியர் செய்த தவறாகும். யாத்திரையின் நிகழ்ச்சியுரைக்கும் செங்கடலுக்கும் பொருத்தமின்மை எந்த நிலப்படத்தையும் பார்த்தால் தெரியும். விவிலியத்தில் வரும் எபிரேயச் சொல் ''நாணல் கடல்'' என்று பொருள்படும். இரமசேசுக்கு அருகே இரு நீர்நிலைகள் இருந்ததாகப் பழங்குறிப்புகளிலிருந்து அறிகிறோம். ஒன்று 'ஹோரஸ்' நீர்நிலை என்றழைக்கப்பட்டது. மற்றது ''நாணல் கடல்'' அல்லது ''நாணல் சதுப்பு நிலம்'' என்றழைக்கப்பட்டது.

இந்த நாணல் கடல் எங்கு இருந்தது என்பது பற்றி அறுதியிட்டுக் கூறவியலாது. இது கசப்பு ஏரிகளுக்கு வடக்கில் இருந்திருக்க வேண்டும். ஆகையால், இந்த ஏரிகளுக்கு வடக்கே கடத்தல் நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டும் என்பர் சிலர். மற்றும் சிலர் வடக்கு தெற்குக் கசப்பு ஏரிகளுக்குத்

தெற்கில் நாணல் கடலைக் கடத்தல் நடந்திருக்க வேண்டும் என்பர். வேறு சிலர், கசப்பு ஏரிகளுக்குத் தெற்கில் நாணல் கடலைக் கடந்திருக்க வேண்டும் என்பர்.

விவிலிய நிகழ்ச்சியுரையில் இஸ்ராயேலர் கசப்பு ஏரிப்பகுதிகளை அடைந்தபின், தங்களை எகிப்தியர் துரத்தி வருவதைத் திடீரென்று திகிலோடு அறிகின்றனர். அச்சத்தோடு ஆண்டவரை நோக்கி மன்றாடுகின்றனர்; மோசேயிடம் முறையிடுகின்றனர். இப்படி முறையிடுதல் யாத்திரை நூலிலும் எண்ணாகமத்திலும் அடிக்கடி நடைபெறும். நாணல் கடலைக் கடந்த நிகழ்ச்சியுரையில் வீரகாவியப்பாணி தெளிவாகத் தெரிகிறது.

இஸ்ராயேலின் விடுதலை இஸ்ராயேலின் வரலாற்று நிகழ்ச்சியாகும். இஃது அவர்களின் பிற்கால விசுவாசத்திற்கு அடிப்படைக் கொள்கையாக விளங்கியது. இந்த அடிப்படை நிகழ்ச்சி பற்றிய பல மூலங்களும் ஒத்துப் போகின்றன; அதற்கு அணியும் செய்கின்றன. சான்றாக, நாணல் கடலைக் கடந்த நிகழ்ச்சியுரையில் வீரகாவியப்பாணி தெளிவாகத் தெரிகிறது. நாணல் கடலைக்கடந்து, ஓடிப்போகும் இஸ்ராயேலர்களுக்கு இடப்புறமும் வலப்புறமும் தண்ணீர் சுவராக நின்றது என்பது குறிக்கத் தக்கது. யாத்திரை நூலின் பதிப்பாசிரியர் தனது மூலங்களைப் பின்னுகிற முறையும் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வருஞ் செயலில் எலோகிம் பாரம்பரியம் இறைவனின் தூதரையும் *(14:19)*, குருக்கள் பாரம்பரியம் மோசேயின் தடியையும் *(14:16)*, யாவே பாரம்பரியம் இறைவனின் இடையீட்டையும் பயன்படுத்துகின்றன.

இந்நிகழ்ச்சியில் இயற்கை நிகழ்ச்சிகளை இறைவனது அருள்பாலிப்பு பயன்படுத்தியுள்ளது என்று நவீன ஆசிரியர்கள் பொதுவாக ஏற்றுக் கொள்வர். வரலாற்றில் இஃது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியன்று. பழைய இலத்தீன் இலக்கிய மூலங்களிலிருந்து, காற்று உப்பங்கழி நீரைப் பின்புறம் அடித்துப் போகச் செய்தது என்றும், இது புதிய கார்த்தேசைக் கைப்பற்ற சிப்பியோவுக்கு உதவியது என்றும் அறிகிறோம்.

நாணல் கடலைக் கடந்த நிகழ்ச்சியில் காற்றின் பாகத்தை விவிலிய வாசகமே எடுத்துக்கூறுகிறது *(14:21)*. வாதைகளைப் பற்றி முன்கூறியது போல், இறைவனது மகிமையை எடுத்துக்காட்டவும், அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களான இஸ்ராயேலின் தனிச்சிறப்பை எடுத்துக்காட்டவும் இயற்கை நிகழ்ச்சிகளை இவ்வாறு வீரகாவியப் பாணியில் விவிலிய ஆசிரியர் விவரிக்கிறார் எனலாம்.

பாஸ்கா விழா, இஸ்ராயேல் அடைந்த வரலாற்று விடுதலையை நினைவு கூர்ந்தது. இவ்விழாவின் வழிபாட்டுச் சடங்கின் போது யாத்திரை விவரிப்பு வாசிக்கப்பட்டது. ஆகவே, பாஸ்கா விழா நிகழ்ச்சியுரை முதலாவது ஒரு வழிபாட்டுச் சடங்கு நிகழ்ச்சியுரையாகும் என்று பலரும் இப்போது ஏற்றுக் கொள்வர். இத்தகைய வழிபாட்டு விழாக்களின் நோக்கம் இறைவனை மகிமைப்படுத்துதலாகும். எனவே, மேற்காசிய மக்களது மனப்போக்குடைய ஆசிரியர் வரலாற்று நிகழ்ச்சிகளை மட்டும் கூறவில்லை, அவற்றை வீரகாவியப் பாணியில் அணிசெய்து கூறுகிறார். இதைக் கண்டு நாம் வியப்படைய வேண்டியதில்லை. கிறிஸ்தவப் பாரம்பரியத்தில் புனித பவுல் இந்நிகழ்ச்சியைத் திருமுழுக்கின் முன் எடுத்துக் காட்டாகக் காண்கிறார். திருமுழுக்கில் கிறிஸ்தவன் சாத்தானின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை அடைகிறான்.

***13) எகிப்தியர் இஸ்ராயேலரைத் துரத்துதல்:*** எபிரேயர் தங்களுடைய இறைவனுக்குப் பலியிடப் பாலைவனம் வரை மட்டும் போகவில்லை; எகிப்தை விட்டு முழுவதும் ஓடி விடப் போகிறார்கள் என்று திடீரென்று உணர்ந்த எகிப்தியர்கள் இஸ்ராயேலரைத் துரத்துகின்றனர். தங்களுக்குப் பெரிதும் பயன்பட்ட அடிமை ஆற்றலை எப்படி இழப்பது? இதைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது ஆகையால், இஸ்

ராயேலரைத் துரத்திப் போகும்படி இரண்டாம் இரமசேசு தனது வீரர்களை ஏவுகின்றான். இறைநோக்கோடு பார்க்கும்போது இந்நிகழ்ச்சிக்கு வேறொரு பொருள் அளிக்கலாம். இறைவனின் அருள்பாலிப்பில், இறைவன் தம் மக்கள் மேல் கொண்டுள்ள அக்கறையை அவர்களுக்கு உறுதியாக உணர்த்தவும், அவர்களுடைய எதிரிகளுக்கு இறைவனது ஆற்றலை எண்பிக்கவும் இந்நிகழ்ச்சி பயன்படுகிறது *(14:4)*. இரவின் இருட்டில் எகிப்தியர்கள் நாணல் கடலுக்குள் பாய்ந்து சென்று இஸ்ராயேலரைத் துரத்தினர். இது மூன்றாம் இராக்காவல் நேரத்தில், அதாவது, காலை *2* முதல் *6* மணிவரையுள்ள காலத்தில் நடந்திருக்கலாம். மீளவும் எகிப்தியரை அழிக்க இறை அருள்பாலிப்பு இயற்கை நிகழ்ச்சிகளைப் பயன்படுத்துகிறது என்று கூறலாம். தண்ணீரை அடித்துச் சென்ற காற்று அடங்கியவுடன் நாணல் கடலில் நீர் மீண்டும் நிரம்பி எகிப்தியர்களுடைய தேர்களைச் சேற்றில் புதைத்தது எனலாம். ''ஒருவரும் தப்பவில்லை'' *(14:28)* என்ற சொற்றொடர் எபிரேய வீரகாவிய அணிச்சுவையைக் கொண்டுள்ளது எனலாம். சங் *136:15*-இல் இது சுட்டிக்காட்டப்பட்டாலும், இதில் பார்வோன் மடிந்தான் என்று எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஏனெனில், விவிலியத்துக்குப் புறம்பான மூலங்களிலிருந்து இரண்டாம் இரமசேசு கி.மு. *1224* வரை ஆட்சி செய்தான் எனத் தெரிகிறது. இக்காலத்திற்குள் உறுதி அளிக்கப்பட்ட நாட்டில் இஸ்ராயேலர் நன்றாக நிலை பெற்றுவிட்டனர் என்று கருத இடம் இருக்கிறது.

இஸ்ராயேலர் சார்பாக தாம் தனிப்பட்ட விதத்தில் இடையீடு செய்து காத்து வருவதை அம்மக்கள் உணரச் செய்ய இறைவன் விரும்பினார் என்பது இந்நிகழ்ச்சியின் சிறப்பாகும். இதற்குப் பல பழைய ஏற்பாட்டு வாசகங்கள் சான்று பகர்கின்றன. அவற்றில் சில: *உப 26:5-8; 1 அர 8:16. 21.51.53; எரே 2:6; ஓசே 2:15; 11:1; ஆமோ 2:10; 3:1; மீக் 6:4; சங் 78:11-14; 136:10-15;* இப்பெரும் நிகழ்ச்சியைப் பற்றிய பழங்கால இலக்கிய நினைவுச் சின்னம் மோசேயின் பாடலாகும் அல்லது சில சமயம் கூறப்படுவதுபோல் மிரியாமின் பாடலாகும். இந்த வெற்றிப் பாடலில் காணப்படும் கவிநயமும், உற்சாகக் கொந்தளிப்பும், மனவெழுச்சியும், இப்பாடல் நினைவுகூரும் நிகழ்ச்சியின் சிறப்புக்குப் பொருந்தியதே. ''ஆண்டவருக்குப் பாட்டுப் பாடுவோம். ஏனெனில், அவர் பெரும் புகழோடு வெற்றியில் சிறந்தார். குதிரையையும் அதன்மேல் ஏறியிருந்த வீரனையும் கடலிலே வீழ்த்தினார்'' *(யாத் 15:1)*. தாம் அருஞ்செயல் புரிந்து தம் மக்களைக் காப்பாற்றும் இறைவன் என்பதை யாவே மெய்ப்பித்து விட்டார். தம் மக்களை அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தார். இம்மக்களை ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட இனமாக மாற்றியமைக்க இவர்களைச் சீனாய் மலைக்கு இட்டுச் செல்லவிருக்கிறார். இச்சூழ்நிலையில் இஸ்ராயேலர் சீனாய்த் தீபகற்பத்திற்குள் நுழைகின்றனர். இப்பகுதி முக்கோண வடிவமானது. தெற்கு வடக்கில் *420* கி.மீ. நீளமும் வட பகுதியில் *240* கி.மீ. அகலமும் உடையது. துரத்துவார் யாருமின்றி இஸ்ராயேலர் பாலைவனப் பயணத்தைத் தொடர்ந்தனர்.

***14) சீனாய்மலை நோக்கி:*** நாணல் கடலை வியத்தகு முறையில் கடந்தபின், எகிப்திலிருந்து விடுதலை அடைந்த இம்மக்களைத் திருவெளிப்பாடுகளின் மலையாகிய இறைவன் மலைக்கு இட்டுச் செல்வது மோசேயின் பெரும் கடமையாக இருந்தது. இப்பயணத்தின் சிறப்புப்பெற்ற இடங்கள் யாத் *15:22*-க்குப்பின் தரப்படுகின்றன. ஆனால், இவ்விடங்களைத் தெளிவாக வரையறுத்துச் சுட்டிக் காட்டுவது கடினம். மோசே தன் மக்களைச் செங்கடலை ஒட்டிய வணிக வழியில் தெற்கு நோக்கி நடத்திச் சென்றார். சூர் என்ற ஆள் நடமாட்டமில்லாத பாலைவன வழியாக மூன்று நாள் பயணம் செய்தபின், மாரா என்ற பெயருடைய நீரூற்றுக்கு வந்தடைந்தனர். மாரா என்பது எபிரேயத்தில் கசப்பு என்று பொருள்படும். இந்த இடம் இருந்தி

ருக்கக்கூடியதாக இரு இடங்களை இப்போது சுட்டிக்காட்டுவர். ஓர் இடம் மோசேயின் கிணறு எனப்படும் அயின்மூசாவாகும். இது நாணல் கடலைக் கடந்த இடத்திலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ளது. இந்த இடத்தில் இன்றும் நீர் கசப்பாய் உள்ளது. மற்றொரு இடம் அயின் ஹவாரா என்பர். இது நாணல் கடலைக் கடந்த இடத்திலிருந்து 64 கி.மீ. தொலைவில் உள்ளது; வரிசையான கிணறுகளைக் கொண்டது. மாரா என்ற இடத்தில் யாவேயின் கட்டளைப்படி ஒரு மரத்தைக் கிணற்றில் போட்டு கசப்பு நீரைக் குடிநீராக மாற்றினார் மோசே.

மாராவிலிருந்து புறப்பட்டு எலிம் என்ற பாலைவனச்சோலைக்கு வந்தனர் இஸ்ராயேலர். இங்குப் பன்னிரண்டு நீரூற்றுகளும் எழுபது ஈச்சமரங்களும் இருந்ததாகத் தெரிகிறது. இவ்விடம் காரான்டெல் ஓடையோடு ஒத்துப்போகிறது. எலிமிலிருந்து புறப்பட்டு, சின் என்னும் பாலைவனம் வழியாகச் சென்று, எலிமிலிருந்து 75 கல் தொலைவிலுள்ள இரபிதிம் என்ற இடத்தை அடைந்தனர். அங்கே அமலேக்கியர் எபிரேயர்களை எதிர்த்துப் போராடினர். ஆனால், மோசேயின் செப ஆற்றலால் எபிரேயர் பெரிதும் வெற்றி பெற்றனர் (யாத் 17:1தொ). இங்கு மோசே மாமன் இத்திரோவைச் சந்திக்கிறார். இத்திரோவின் அறிவுரைப்படி எபிரேயர்களிடையே நடுவர்கள் நியமிக்கப்படுகின்றனர் (18:1தொ). நாம் இவ்விடங்களைப் பாலைவனம் என்று கூறும்போது அங்கு ஒன்றுமே முளைக்கவில்லை என்று கருதக்கூடாது. இவை பெரும்பாலும் புல் வெளிகளாகும். மழைக் காலத்தில் ஆடுமாடுகளுக்குப் போதிய புல் இங்குக் கிடைத்தது. ஆடு மாடுகளிலிருந்து பாலும், வெண்ணெயும், இறைச்சியும் கிடைத்தாலும் வறட்சியான காலத்தில் இவை போதிய அளவு கிடைக்காது. இவ்விடங்களில் தாகமும் பசியும் இயற்கையான பகைவர்களாகும். இப்படிப்பட்ட நிலையில் எபிரேயர்கள் உணவுப் பொருள்கள் மிகுதியாகக் கிடைத்த அடிமை வாழ்வுக் காலத்தை எண்ணி ஏங்கியதிலும், மோசேக்கும் யாவேக்கும் எதிராக முணுமுணுப்பதிலும் வியப்பில்லை. அருஞ்செயல் புரிந்து இவர்களுக்கு விடுதலை அளித்த யாவே, மீண்டும் அருஞ்செயல் புரிந்து, குடிக்கப் பாறையிலிருந்து நீர் அளிக்கிறார் (யாத் 17:6). காடைக் கூட்டங்களை அனுப்பி ஊன் அளிக்கிறார் (யாத் 16:3). மன்னாவை அன்றாட உணவாக அளிக்கிறார் (16:14). இந்நூலில் முன்வந்த அருஞ்செயல்களுக்கு விளக்கம் அளித்தது போல் இவ்வருஞ்செயல்களுக்கும் விளக்கம் அளிக்கலாம். இயற்கை நிகழ்ச்சிகளைப் பயன்படுத்தி யாவே எபிரேயர்களுக்கு உணவு அளிக்கிறார். அவை நிகழும் காலமும் சூழ்நிலையும் இறைவனின் ஆற்றலையும் மகிமையையும் எபிரேயர்களுக்கு எடுத்துக்காட்டுகின்றன.

***15) சீனாய் மலை:*** எகிப்திலிருந்து புறப்பட்ட மூன்றாவது திங்களில், இஸ்ராயேலர்கள் இறைவனின் மலையை அடைந்தனர் (யாத் 19:1-2). இஸ்ராயேல் சமயக் கருத்துப்படி யாவேக்கு உரிய புனிதமலைகள் இரண்டு உண்டு. ஒன்று அவர் தம் பெயரை வெளிப்படுத்திய சீனாய் மலை. மற்றது அவர் குடி கொள்ளும் சீயோன் மலையாகும். இது பழைய ஏற்பாடு முழுவதும் உறுதி கூறும் உண்மையாகும். சீனாய் மலை எங்குள்ளது? இஃது இன்றும் ஒரு பெரும் சிக்கலாகும். ஒரு சிலர், இவ்விடம் சீனாய்த் தீபகற்பத்தின் கிழக்குப் பகுதியில் அக்காபா வளைகுடா அருகில் இருந்திருக்கலாம் என்பர். யாத் 19:16-19-இல் வரும் எரிமலைக் கொதிப்பைச் சுட்டிக்காட்டி, தீபகற்பத்தில் எரிமலைக் கொந்தளிப்பு இருந்ததற்கு அடையாளம் இல்லையாதலால், இவ்விடம் கிழக்குப் பகுதியில் இருந்திருக்க வேண்டும் என்பர். ஆனால், எரிமலைக் கொந்தளிப்புப் பற்றிய குறிப்பு எரிமலையைச் சுட்ட வேண்டியதில்லை. இஃது ஒரு பெரிய மலைப்புயலை விவரிக்கும் செமித்திய மரபு என எடுத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய இலக்கிய மரபுக்குச் சங் 29; 18:8-15-ஐப் பார்க்கலாம்.

வேறு சிலர் காதேசு பாலைவனச் சோலைக்கு அருகிலுள்ளது இந்த இறைவன் மலை என்பர். மேலும் இவர்கள், பாலைவனப் பயணம் ஒரு கவியின் கற்பனை என்றும் கூறுவர். இவர்களின் கூற்றும் காரணங்களும் விவிலியக் கூற்றுக்கு நேர்முரணானதாக இருக்கிறது. இக்கால ஆராய்ச்சிகள், விவிலியக் கூற்றுக்கள் உண்மையானவை, நம்பத்தக்கவை என்று மேலும் மேலும் காட்டுகின்றன.

பெரும்பாலோர் இப்போது மோசேயின் மலை என்ற பொருளோடு அழைக்கப்படும் எபல் மூசா என்பதே இறைவனது மலையாகும் என்பர். இது சீனாய்த் தீபகற்பத்தின் தென் முனையில் உள்ளது. அங்குப் பல சிகரங்கள் உண்டு. விவிலிய வாசகம் உப *1:2* இவ்விடத்தைச் சுட்டுகிறது. இச்சிகரங்களில் ஒன்று வெளிப்பாடுகளின் மலையாக இருக்க வேண்டும். எபல் மூசாவை அடுத்துள்ள எர்ரஹா என்ற சமவெளி இந்த ஊகத்தை உறுதிப்படுத்துகிறது. இஃது இறைவனது மலையடிவாரத்தில் இஸ்ராயேலர் கூடாரம் அடித்துத் தங்கிய பகுதியோடு *(யாத் 19:2)* ஒத்துப் போகிறது. ஆகவே, சீனாய்த் தீபகற்பத்தின் தென்முனையிலுள்ள மலைதான் சீனாய்மலை என்ற இறைவனது மலையாகும் என்று ஏற்றுக்கொள்ளலாம். சீனாய், ஓரேபு என்ற பெயர்கள் ஒரே மலையைக் குறிக்கின்றன. ஒன்றுக்குப் பதிலாக மற்றொன்றைப் பயன்படுத்தலாம் *(யாத் 3:1; 6:1; 19:11; உப 1:2)*. இப்பகுதியில் இஸ்ராயேலர் நெடுநாள் தங்கி ஓய்வெடுத்தனர். இங்கு வேண்டிய நீரூற்றுக்களும் புல்வெளிகளும் இருந்தன. மலையை ஒட்டி அரைவட்ட வடிவமாகச் சமவெளி அமைந்திருந்தது. சமவெளியிலிருந்து திடீரென்று 600 மீட்டர் உயரமுள்ள மலை எழுகிறது. இவ்வியற்கை அமைப்பே நடக்கவிருக்கும் திருவெளிப்பாட்டுக்கு ஆடம்பர மேடை அமைப்பதாய் இருக்கிறது. இங்குதான் இஸ்ராயேலருடன் யாவே உடன்படிக்கை செய்து கொள்கிறார். அதன்படி அவர் அவர்களுடைய இறைவனாகவும், அவர்கள் அவருடைய மக்களாகவும் இருப்பர். இங்குதான் மோசேக்குப் பத்துக் கற்பனைகள் வழங்கப்படுகின்றன.

***16) இரத்தத்தில் உடன்படிக்கை:*** சீனாய் மலையில் நடந்ததாக யாத்திரை நூல் கூறுவனவற்றில் மனிதச் செயல் சிறப்புப் பெறுவதில்லை; இறைவனது செயல் ஒன்றே சிறப்புப் பெறுகிறது. யூத சமயம் எந்த மனித முயற்சியின் விளைவுமன்று; அஃது இறைவனது சொந்த, தன்னுரிமையான, கைம்மாறு கருதாத, இலவசமான செயலின் விளைவாகும்.

இறைவன் செயலே முதன்மை பெறுவதால், மனிதச் செயலர் அகத்தூய்மையால் இறைவனைச் சந்திக்கத் தகுதியுள்ளவராகச் செய்யப்பட வேண்டும். இவ்விதம் மக்களைத் தூய்மைப்படுத்த வேண்டிய சடங்குகளை மோசே அறிக்கையிடுகிறார். மக்கள் தங்களையே புனிதப்படுத்த வேண்டும். தங்களுடைய ஆடைகளைக் கழுவித் தூய்மை செய்ய வேண்டும். மனைவியரோடு கூடாதிருக்க வேண்டும் *(யாத் 19:10-15)*. மலையைச் சுற்றி எல்லை குறித்து வைக்கப்பட்டது. அதை மீறிக் கடந்து மலையை அணுகுபவர்கள் சாவுத்தண்டனை பெறுவர். இந்தப் புறத்தூய்மையையும் தயாரிப்பையும் விட, இறைவன் வெளியிட இருக்கும் பெரும் திட்டத்திற்குத் தங்களது உள்ளார்ந்த இசைவைத் தெரிவிக்க வேண்டும்; அறிக்கையிட வேண்டும். ஏனெனில், இறைவன் தமது சித்தப்படி நடக்க வேண்டும் என்று எம்மனிதனையும் கட்டாயப்படுத்துவதில்லை. இறைவன் விடுக்கும் தன்னுரிமையான அழைப்புக்கு இசைந்து பதில் அளிக்க மறுக்கும் மனிதனை, எல்லாம் வல்ல இறைவனே கட்டாயப்படுத்த முடியாது. இறைவனது திட்டம் தெளிவானது; இஸ்ராயேல் மக்களை ''அரச, குருகுலக் கூட்டமாகவும், பரிசுத்த இனமாகவும்'' ஆக்க இறைவன் விரும்புகிறார். ஆனால், மக்களிடமிருந்து முழுமையான இசைவைக் கோருகிறார். மோசே, மக்களின் தலைவர்களையும், மூப்பர்களையும் அழைத்து, அவர்களுக்கு இறைத்திட்டத்தை விளக்குகிறார். இப்புதிய அமைப்பை நிறு

வுவதில், மக்களையும், அரசையும் சார்ந்த யாவும் பரிசுத்த அமைப்பிற்கு உயர்த்தப் படும். சீனாய் மலையில் ஒரு புதிய மக்களினம் மட்டுமன்று, புதியதோர் சமய மக்களினமும் உருவெடுக்கிறது. இந்த இறைத் திட்டத்திற்கு மக்கள் தங்கள் இசைவை விரைந்து தெரிவிக்கின்றனர். ''ஆண்டவர் சொன்னதையெல்லாம் செய் வோம் என்றனர்'' *(யாத் 19:8).*

இப்படி மக்களது இசைவைப் பெற்ற பின், மூன்றாம் நாள், இறைவன் தமது மகிமை நிறைவோடு மலைமேல் வந்து இறங்கினார் *(19:16தொ).* புறத்தோற்றத் திற்கு இந்த இறையாற்றல் வெளிப்பாடு, இடி மின்னலுடன் கூடிய மகிமையோடு அச்சமிக்க, ஆற்றல்மிக்க புயலாகத் தோன்று கிறது. சீனாய்ப் பாலைவனத்தில் வடக்கு நோக்கி அடிக்கும் ஆற்றல்மிக்க புயல் வடிவத்தில் யாவே பல பாடல்களின் தொடக்கத்தில் விவரிக்கப்படுகிறார் *(உப 33:2தொ; நீதி 5:4தொ; அப 3:8; சங் 28).* இறைவனது தோற்றம் இடியுடன் கூடிய புயல் காற்றுக்குப் பலவிதத்தில் ஒத்திருந்தா லும், இவை யாவும் அவரது திருமுன்னின் புறத்தோற்றங்களேயாகும். இப்புறத் தோற் றங்கள் இறைவனது ஆற்றல்மிக்க மகி மையை மறைத்து நிற்கின்றன. ஆகையால் உலக வரலாற்றில் இறைவனின் மற்ற இடையீடுகளைப் போல, சீனாய் நிகழ்ச்சி முழுவதும் அறிவியல் சார்ந்த விளக்கத்திற் குக் கட்டுப்பட்டதன்று, அதற்கு அப்பாற் பட்டதும் ஆகும். அச்சமூட்டும் புறத்தோற் றங்கள் இறைவெளிப்பாட்டின் அச்சமூட் டும் மறைபொருளை மக்கள் உணர்வதற் கும், இறைவனது திருமுன்னுக்கும் செய லுக்கும் உறுதிப்பாடாகவும் அளிக்கப்பட் டன. மலையில் வெளிப்பட்ட இயற்கை ஆற்றல்கள், இயற்கையின் மேலும் படைப் பின் மேலும் யாவே கொண்டிருந்த எல் லாம் வல்ல ஆற்றலைப் பறைசாற்றுகின் றன. அவரை யாரும், எதுவும் எதிர்க்க முடியாது. யாவும் அவரது பாதுகாப்பில் செயல்படுகின்றன. இத்தகைய வல்லமை மிக்க யாவே இஸ்ராயேலரோடு செய்த உடன்படிக்கையின் பங்காளியாவார். இச் சூழ்நிலையில் தம்முடைய கட்டளை களுக்கு அவரிடமிருந்து விதி விலக்கற்ற முழுமையான கீழ்ப்படிதலைக் கோரு கிறார்.

இவ்வுடன்படிக்கையில் யாவேக்கும் அவ ருடைய மக்களுக்கும் இடையிலுள்ள நடு வர் மோசே ஆவார். மோசே இறைவனின் தூதுவர். அவரது குரல் வழியாக இறை வனே பேசுகிறார். திடீரென்று இறைவனது குரல் மலையிலிருந்து கேட்டது என்று கற்பனை செய்ய வேண்டியதில்லை. மக்கள் அச்சத்தோடு கேட்ட இறைவனது குரல் இடியும் மின்னலும்தான். மற்றப்படி செய்தி கள் யாவும் மோசே வழியாகவே கொடுக் கப்பட்டன. இடி மின்னல் வழியாக இறைவன் தங்களோடு பேச வேண்டாம், மோசே வழியாகப் பேசினால் போதும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கின்றனர் மக்கள்.

இறைவன் அழைப்புக்கு இணங்கி மோசே மேகத்துக்குள் சென்று சட்டத்தைப் பெறுகிறார். கற்பலகையில் எழுதப்பட் டவை மக்களுக்குப் பறைசாற்றப்படுகிறது. மக்கள் அனைவரும் ''ஆண்டவர் திருவுளம் பற்றின எல்லா வாக்கியங்களின்படியும் நடப்போம் என்று ஒரே குரலாய் மறு மொழி சொன்னார்கள்'' *(24:3).* பின் உடன்படிக்கை நிறைவேறுகிறது. யூதரின் பன்னிரண்டு குலப் பிரிவுகளையும் நினைவுகூரும் விதத்தில் மலையடிவாரத் தில் பன்னிரண்டு நினைவுத் தூண்களை எழுப்பி, அவற்றிடையே பீடத்தைக் கட்டி னார் மோசே. அதன் மேல் சமாதானப் பலிகளையும் தகனப் பலிகளையும் செலுத் துகிறார். பலிப்பொருளின் இரத்தத்தில் ஒரு பாதியைப் பலிபீடத்தின் மேல் ஊற்று கிறார். பின், உடன்படிக்கையின் நூலை எடுத்து மக்கள் கேட்க வாசிக்கிறார். அவர் களும் ஆண்டவர் சொன்னபடியெல்லாம் செய்வோம் என்று தங்களது விருப்பத்தைப் பறை சாற்றுகின்றனர். பின், மோசே மீதி இருந்த பாதி இரத்தத்தை மக்களின் மேல் தெளித்து ''இந்த எல்லா வார்த்தைகளின்

படியும் ஆண்டவர் உங்களுடன் செய்தருளிய உடன்படிக்கையின் இரத்தம் இதுவே என்று கூறினார்'' *(24:8)*. பின் மோசே மூப்பர்களுடன் மலைக்குச் சென்றார். அங்கே யாவேயின் மகிமையை அனைவரும் கண்டனர். பின், யாவேயின் திருமுன் பலியுணவு உண்டனர். இஃதோடு உடன்படிக்கை முடிகிறது. இச்சடங்கில், ஏற்கெனவேயிருந்த வழக்கை மோசே பயன்படுத்துகிறார். இதற்குச் சான்றாக லாபான் யாக்கோபு உடன்படிக்கையை வாசித்தறியலாம் *(ஆதி 31:43 தொ)*. எந்த உடன்படிக்கையின் பிரமாணிக்கத்திற்கும் இறைவனே உத்தரவாதம். ஆகையால், உடன்படிக்கையைப் பலியுணவால் முடிப்பது அக்கால மரபாகும்.

**17) மோசே சட்டம்:** இச்சட்டத்திற்கும் மோசேக்கும் ஒரு தொடர்பும் இல்லை என்று சிலர் சாதித்துள்ளனர். இந்நிலை இப்போது ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. மோசேயே இத்தொகுப்புக்கு மூல காரணம் என்பதை யாரும் இப்போது மறுக்கமாட்டார்கள். அவரது சட்டம் யாவற்றையும் உள்ளடக்கும் தன்மை கொண்டுள்ளது. இறைவனின் நேரடி ஏவுதலின் விளைவாக இச்சட்டத்தின் கீழ்ப் புதியதோர் உலக அமைப்பை நிறுவுகிறார் மோசே. இச்சட்டத்தின் ஊழியத்திற்குத் தமது ஆற்றல் அனைத்தையும் செலவிடுகிறார். அதன் விளைவாக, தம் மக்களின் சமய, சமூக, அரசியல் வாழ்வில் இறைவனது சித்தத்தைப் பறைசாற்றும் தூதுவனாகிறார். எந்த அரசியல் ஆற்றலுமின்றி பெரும் சமய சமூக அமைப்பாளராகிறார். படைபலமின்றி பொதுமக்கள் தலைவராகிறார். குருத்துவப் பட்டமின்றி இறை சேவையை நிறுவுகிறார். இறைவனது பிரசன்னத்தைப் பறைசாற்றுகிறார். அருஞ்செயல்கள் புரிகிறார்; ஆனால், மாயவித்தைக்காரர் அல்லர், அவர்களுக்கு அப்பாற்பட்டவர். இவை யாவும் இஸ்ராயேலின் சமயம், கவனமாய்ப் பாதுகாக்கப்பட்ட எந்தப் பாரம்பரியத்தின் விளைவும் அன்று என்று காட்டுகின்றன; தாம் விரும்பியபடி செயல்படும் இறை ஆவியின் படைப்பாகும். இந்த இறை ஆவி அருஞ்செயல் புரியும் ஆற்றல் பெற்ற பலரைப் பயன்படுத்துகிறது. ஏறுமாறானவற்றை, முரணானவற்றை ஆற்றலுள்ள உயிருள்ள வேலைப்பாடாக இணைக்கிறது. இத்தகைய ஆட்களில் தலைசிறந்தவர் மோசே ஆவார். இவர் இஸ்ராயேலின் சமயத் தொடக்கத்தில் இறைவனது கொடை பெற்றவராகத் திகழ்கிறார். அச்சமயத்தின் அடிப்படை அவரே. அவரின்றி இச்சமயத்தை நினைத்துப் பார்க்க முடியாது.

யூத இனம் இருத்தல் இறைவனது விருப்பத்தை மட்டும் பொருத்ததாகும். ஆகவே, அதன் நாடும் அரசியலும் இறையாட்சித் தன்மையுடையதாகும். இது மோசே சட்டத்தின் தனித்தன்மையை விளக்குகிறது. ஐந்நூலில் வரும் சட்டங்களை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று தெளிவாக நிறுவப்பட்ட நேரடிச்சட்டம். மற்றது ஐயவாதமுடையது, நிபந்தனையுடையது. பத்துக் கற்பனைகள் முதல் வகையைச் சாந்தனவாகும். இதில் இறைவனது உறுதியான கட்டளைத் தன்மை காணப்படுகிறது. இதில் நிபந்தனைகளுக்கு இடமேயில்லை. பழைய மேற்காசியாவில் இம்மட்டும் தெளிவாக அறுதியிட்டுக் கூறப்படும் சட்டத்தை வேறெங்கும் காணமுடியாது. இறை வெளிப்பாட்டின் பண்புகள் இக்கற்பனைகளில் மிகத் தெளிவாக உள்ளன. இவை மோசே காலத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும் என்று ஏற்றுக்கொண்டால் மட்டும்தான் இவ்வுறுதியையும் இறைத்தன்மையையும் விளக்கமுடியும்.

இதற்கு மாறாக, ஐயவாதமுடைய, நிபந்தனைகளையுடைய சட்டங்களைப் பழைய மேற்காசிய நாடுகளில் காணலாம். சில மாற்றங்களோடு இப்பண்புகளை இஸ்ராயேலின் உடன்படிக்கை நூலில் காணலாம் *(யாத் 20:22-23:23)*. ஏற்கெனவே இருந்த செமித்திக்குச் சட்டங்களை மோசே புதிய முறையில் எடுத்துக்கூறுகிறார் எனலாம். இச்சட்டங்களுக்கு முன்னே இஸ்ராயேலில் ஒரு சட்டமுறை இருந்தது *(யாத் 18:13தொ)*

என்று கூற இடமிருக்கிறது. சீனாய் மலையில் இறைவெளிப்பாட்டின் அடிப்படையில் இச்சட்டங்களைப் புதிய முறையில் மோசே எடுத்துக் கூறுகிறார்.

**18) பத்துக் கற்பனைகள்:** இவை பற்றி இரு வாசகங்கள் உள்ளன (*யாத் 20:1-17; உப 5:6-21*). இக்கற்பனைகளை இரு பிரிவாகப் பிரிப்பர். பிலோ ஐந்து கற்பனைகள் அடங்கிய இரு பகுதியாகப் பிரித்தார். சிலர் முதற் கற்பனையை இரு பிரிவாகப் பிரித்து, பெற்றோருக்கு வணக்கம் செய்தலை ஐந்தாம் கற்பனை ஆக்கினர்; பிறர் பொருளைக் கவர்தல் பற்றிய இரு கட்டளைகளையும் ஒன்றாக்கினர். இத்தகைய பிரிவை ஆதித்திருச்சபையும், ஓரிசன் போன்றவர்களும், கிரேக்கத் திருச்சபையும், சில பிரிவினைச் சபைகளும் பின்பற்றின. இலத்தீன் திருச்சபையும், லூத்தரன் சபையும் இறைவனைப் பற்றிய மூன்று கற்பனைகளை ஒரு பிரிவாகவும், அயலாரைப் பற்றிய மற்ற ஏழு கற்பனைகளை ஒரு பிரிவாகவும் பிரித்தனர். இப்பிரிவு புனித அகுஸ்தினார் காலத்திலிருந்து வழக்கிலுள்ளது.

முதல் மூன்று கற்பனைகளும் உடன்படிக்கையின் இறைவனைப் பற்றியதாகும். இதில் சமயத்தின் முதன்மை அழுத்திக் கூறப்படுகிறது. இறைவனை மட்டுமே வழிபட வேண்டும். இஃது எகிப்திலிருந்து விடுதலை அடைந்ததற்கும் உடன்படிக்கையெனும் கொடையைப் பெற்றதற்கும் இஸ்ராயேலர் அளிக்கும் நன்றியறிதலாகும். ஒரே இறைவனை வழிபடும் கட்டளைக்கு, சிலை ஆராதனையைத் தடுக்கும் கட்டளை பாதுகாப்பு அளிக்கிறது. உடன்படிக்கை மக்களின் கதி அவர்களுடைய இறைவழிபாட்டின் தூய்மையைப் பொருத்ததாகும். இறைவன் பெயருக்கு வணக்கம் செலுத்துதல், ஓய்வு நாளைக் கடைப்பிடித்தல் ஆகியன உடன்படிக்கை இறைவனுக்குக் காட்டும் அன்புமிக்க மரியாதையும் ஆராதனையும் ஆகும்; அவருக்குக் காட்டும் பிரமாணிக்கமாகும்.

இரண்டாம் பகுதி பெற்றோருக்கு மரியாதை காட்ட வேண்டும். ஒவ்வொருவருக்கும் குடும்ப உணர்வு இருக்க வேண்டும். கொலை, விபசாரம், களவு, பொய்ச்சாட்சி, பிறர்பொருளைக் கவர்தல் போன்றவை தெளிவாகத் தடைசெய்யப்படுகின்றன.

எதிர்மறையான வாக்கிய அமைப்பு நேர்முறையான பொருளை அழுத்திக் கூறவே பயன்படுகிறது. உடன்படிக்கையின் கீழ் நன்றியோடு வாழ்ந்து, அக்கொடைக்கேற்ப வாழ்க்கையை அமைத்தலும் இந்த நேர்முறையான பொருள். இவை வெறுமனே புறச்சட்டங்களை மட்டும் தரவில்லை. அகத்தூய்மையில் அக்கறை கொள்கிறது. இவை ஒரு மனித ஒழுக்க அமைப்பைத் தருகின்றன. பத்துக் கற்பனைகள் இறைமக்கள் எல்லாருக்கும் எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும் உரியதாகும். யாவே, ஓர் இனத்தாருடைய கடவுள் மட்டும் அல்லர். அதுபோல் அவரது சட்டமும் எல்லா இன எல்லைகளையும் கடந்தது. முழு உலக ஒழுக்க அமைப்பிலும் நிறைந்து நிற்கிறது. உலக இலக்கிய முழுவதிலும் இதற்கு ஒத்த ஒழுக்கச் சட்டத்தைப் பார்ப்பது அரிது.

**19) உடன்படிக்கை நூல்** (*யாத் 20:22-23:23*): இப்பகுதி, இன்னும் முழுவதும் ஒழுங்கு முறை செய்யப்படாத மக்களிடையே, பெரும்பாலும் ஆயர் வாழ்க்கையும் மனப்போக்குமுடைய மக்களிடையே நிலவ வேண்டிய சமூக உறவைத் திட்டம் செய்கிறது. இத்தகைய சட்டங்கள் மற்ற செமித்திக்கு இனத்தாரிடையேயுமுண்டு. இவை நிபந்தனைகளோடு கூடியவை. இப்படி நடந்தால், இந்தத் தீர்ப்பிட வேண்டும் என்ற வாய்பாட்டோடு இச்சட்டங்கள் தொடங்குகின்றன. இச்சட்டங்களில் ஒரு மென்மையான மனிதத்தன்மை உண்டு. ஏழைகளும் துன்பப்படுவோரும், அன்னியரும் சிறப்பான விதத்தில் பாதுகாப்பும் உதவியும் பெறுகின்றனர். அயலாருக்குத் தனிச் சலுகை காட்டப்படுகிறது. அடிமைகள் மீது சிறப்பான அக்கறை காட்டப்படுகிறது.

***20) வழிபாட்டுச் சட்டம்:*** மோசே இஸ்ரா யேலின் சமூகத்தை அமைத்தவர் மட்டுமல் லர், அவர்களுடைய யாவே வழிபாட்டை யும் ஏற்படுத்தியவர் என்றால் மிகையா காது. ஏற்கெனவே இருந்திருக்கக்கூடிய வழிபாட்டு மரபுகளைத் தூய்மைப்படுத்தி, சீர்படுத்தி, மாற்றியமைத்து யாவே வழி பாட்டுக்குப் புதியதோர், மேலானதோர் வடிவம் அளிக்கிறார். விலங்குகளைப் பலி யிடுவதும், உணவுக்காணிக்கைகளை அளிப் பதும் எல்லாச் செமித்தியர்களுக்கும் பொது வானதாகும். இவற்றை எடுத்து, யாவேயின் மேல் கொண்டுள்ள விசுவாசம் எனும் உயிர் அளித்து, அவற்றிற்குத் தனிப்பட்ட வடிவ மும் பொருளும் அளிக்கிறார் மோசே. இச்செயல் அவரை இறையூக்கம் பெற்ற இறைவாக்குரைஞராக ஆக்குகிறது.

சீனாய் மலையில், மோசே வாக்குறுதிப் பெட்டகமும் ஆசாரக் கூடாரமும் அமைக் கக் கட்டளை பெறுகிறார். இவை பற்றிய நுணுக்கமான கட்டளைகளை யாத்திரைநூல் 25-27-ஆம் அதிகாரங்களில் வாசித்தறிய லாம். ஆரோனைத் தலைமையாகக் கொண்ட குருத்துவ அமைப்பு, குருக்களின் திருநிலைப்படுத்தும் சடங்கு, அவர்களு டைய சடங்கு உடைகள் முதலியவை பற்றிய விரிவான கட்டளைகள் யாத் 28-29-ஆம் அதிகாரங்களில் தரப்படுகின்றன. இவை பற்றி லேவியர் ஆகமத்தில் கூறப் படும்.

யாத்திரை நூலில் முதன்மை பெறும் உடன்படிக்கைச் சட்டம் பற்றிய தர்க்கம் இன்றும் உண்டு. பலர் இது சீனாய் மலையில் கொடுக்கப்பட்டது என்பர். வேறு சிலர் கானான் நாட்டுக்குள் நுழையு முன் அளிக்கப்பட்டது என்பர். பின்னவர் கள் இச்சட்டம் மோசேயின் வேலைப்பாடு அன்று, ஆனால் அவரது மனப்போக்குப் படி அமைக்கப்பட்டது என்பர். ஆனால், பிற்கால இஸ்ராயேலின் விசுவாச வரலாற் றில் சீனாயில் உடன்படிக்கை செய்த இந்தக் காலம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். பிற்காலச் சமயச்சடங்குத் தலைவர்கள், தங்கள் வழிபாட்டின் தொடக்கத்தையும், சட்டத்தொகுப்பையும், விசுவாச அடிப் படையையும், இந்த உடன்படிக்கைக் காலத்திற்கே சுட்டிக் காட்டப் பெரிதும் விரும்பினர்; அப்படியே செய்தனர்.

***21) மக்களின் பதிதம்:*** சீனாய்மலை உடன்படிக்கை ஒரு மாபெரும் திருமறைச் செயலாகும். இத்தகைய திட்டம் மோசே போன்ற ஓர் ஆற்றல் மிக்க தலைவன் இல்லையென்றால் வெற்றியடைந்திருக்க முடியாது. ஆனால், மோசேயின் கருத்துக் களை மக்கள் ஏற்றுத் தங்களுடையதாக்கிக் கொள்ளப் பலகாலம் எடுக்கும். அதற் கிடையே மக்கள் இக்கருத்துக்களை ஏற்க மறுப்பர், எதிர்த்தெழுவர். உடன்படிக்கை நாட்களில் இறைவன் இயற்கையில் காட் டிய வியத்தகு செயல்களால் அச்சம் கொண்ட எதிர்ப்பாளர்கள் மௌனமாய் இருந்திருக்கக்கூடும். அம்மாபெரும் நாட் களுக்குப் பின், மோசே மலைக்குச் சென்று 40 நாட்கள் (அதாவது நீண்ட காலத்திற்கு) தங்கியபோது எதிர்ப்புக்கள் வெளித்தோன் றத் தொடங்கின. ஆரோனைத் தூண்டி, தங்கக்கன்றுக்குட்டி செய்து, அதை வழி படத் தொடங்கினர் (யாத் 32:1தொ).

இக்கிளர்ச்சியின் பின் நின்ற தீயசக்திகள் யாவை? இச்சடங்கு உண்மையிலேயே யாவேயிடமிருந்து பிரிந்து செல்லும் பதி தமா? வாசகத்திலிருந்து அப்படித் தெரிய வில்லை. மாறாக, யாவேயின் பெயரால் விழாக்கொண்டாடுவதாக ஆரோன் அறிக் கையிடுகிறார் (32:5). பின், ஏன் இச்செயல் மோசேயைச் சினம் கொள்ளச் செய்தது? தான் மலையிலிருந்து கொண்டு வந்த சட்டப்பலகையை உடைத்து இந்தப் புதிய வழிபாட்டுச் சடங்கைத் தீயாலும், இரத்தக் களரியாலும் அழிக்க முற்பட்டதே மோசே யின் சினத்தின் உச்சநிலையைக் காட்டு கிறது.

எகிப்திலும் பிற செமித்திக்கு மக்களிடை யிலும் எருது அல்லது காளைக்கன்று, தெய்வத்தின் வலிமை, ஆற்றல் மற்றும் பாலினச் செழிப்பையும் குறிக்கும் அடை யாளமாகத் தொழப்பட்டது. ஆனால், இஸ்

ராயேலில் இறைவனை அடையாளப் பொருட்களால் தொழுவதில்லை. ஏன், உடன்படிக்கைப் பெட்டக இருக்கை வெறுமையாகவே இருக்கும். வெறுமையான இருக்கையே யாவேயின் திருமுன்னைக் குறித்தது. யாவே அடையாளப் பொருட்களின்றி வழிபடப் பெற்றார்.

அடையாளப் பொருட்கள், தங்களது இயல்பான தன்மைப் பொருளை இறைவனுக்கு அளிக்க வல்லன என்பதால், மோசே அடையாளப் பொருட்களை யாவே வழிபாட்டில் அனுமதிக்கவில்லை, அறவே அகற்றுகிறார். ஆகவே, இவ்வழிபாட்டில் விலங்குகள் சார்ந்த, இயற்கை சார்ந்த எந்த அடையாளப் பொருளையும் நீக்கி, வழிபாட்டைத் தூய்மைப்படுத்துகிறார்; ஓரளவு கொடூரத்துடன் செயல்படவும் செய்கிறார். மக்களிடையே புகுந்து, இறைவனைச் சேர விரும்புகிறவர்கள் தன்னிடம் வருமாறு அழைத்து, தன் இனத்தவராகிய லேவியருடைய துணைகொண்டு, கன்றைத் தொழப் பிடிவாதம் பிடித்த அனைவரையும் கொன்று குவித்தார். இப்படி இரத்தம் சிந்தி மக்களைத் தூய்மைப்படுத்தியதால், அன்றிலிருந்து லேவியர், தலைமுறை தலைமுறையாக வரும் குருத்துவத்தைப் பெறுகின்றனர். இனி, அவர்கள் மோசேயினுடைய மெய்க் காப்பாளர்களாகத் திகழ்வர். யாவேயின் சட்டத்தை மக்களுக்குப் போதிப்பதில் மோசேக்கு ஆற்றல்மிக்க துணையாளர்களாக விளங்குவர்.

கன்றுக்குட்டி வழிபாட்டில் யாவே வழிபாட்டை ஏற்கப் போதிய மனவளர்ச்சியடையாத மக்களையும், அவர்களது எதிர்ப்பையும் காண்கிறோம். மோசே இதைக் கொடூரமான செயல்களால் அடக்குகிறார். யாவே இறைத்தன்மையின் புனிதத்தையும் தூய்மையையும் காக்கின்றார். மோசேயை எரியும் புதரிலிருந்து அழைத்த இறைவன், எந்த உருவத்துள்ளும் அடங்குபவரல்லர்; எந்த உருவமாகவும் ஆக்கப்படக் கூடியவர் அல்லர். அவருக்கு அளிக்கப்பட்ட இந்தக் கன்றுக்குட்டி உருவம் அவரைப் பிற தேவதைகளில் ஒருவராக ஆக்கியிருக்கும். அவரோ தனித்தன்மையானவர், தாமானவர், எந்த உலகப்பொருட்களோடும் ஒப்புமை உடையவர் அல்லர்; அவற்றிலிருந்து முற்றிலும் வேறானவர். அவரது மேன்மையை, மகிமையை எந்த மனித உருவத்தாலும் அறிய முடியாது, புரிய முடியாது, உணரமுடியாது. இப்படிப்பட்ட இறைவனை மோசே மௌனமிக்க வணக்கத்தோடு வழிபடுகிறார்; மக்களையும் வழிபடச் செய்கிறார்.

இந்நிகழ்ச்சியில் மோசேக்கும் ஆரோனுக்கும் இடையேயுள்ள எதிர்முரண், உண்மைத் தலைமைக்கும் போலித் தலைமைக்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக் காட்டுகிறது. ஆரோன் தானாக எதுவும் செய்யாமல் மக்களுடைய உணர்ச்சிகளைப் பின்பற்றுகிறார். உருவம் செய்வதில் ஒத்துழைக்கிறார். மோசேயின் செயலோ முற்றிலும் வேறுபட்டது. தன் சக மக்கள்பாலுள்ள அன்பால் உந்தப்பட்டு, சாவை ஏற்கவும் தயாராகி, மேன்மை, நீதி, உண்மை ஆகியவை சிக்கலுக்குரியவையாகும்போது, தம் மக்களையே எதிர்க்கிறார். இறைவன் விருப்பத்திற்கு மட்டுமே பணிகிறார். இவ்விதம் போராடுவதால்தான் தம் மாபெரும் கடவுளாகிய யாவேயின் தகுதிமிக்க கருவியாகிறார். இவ்வழியில்தான் அவர் உண்மையான தலைவர் ஆகிறார். இந்தக் கன்றுக்குட்டி வழிபாட்டால், புதிதாகப் பிறந்து, வளர்ந்து வந்த ஒரே இறைவன் கோட்பாடும் வழிபாடும், பிறக்கும்போதே அழிந்திருக்கும். வெளிப்போதல் என்ற அருஞ்செயல் வழியாக இறைவனே ஏற்படுத்திய புதிய மாபெரும் அடிப்படையும் ஒன்றுமில்லாது போயிருக்கும். ஆனால் ஆபத்துக்கள் யாதாயினும், சீனாயில் தொடங்கிய செயல் எக்காலத்துக்கும் நிலையாக நீடித்திருக்கும் செயலாகவும் மாறியது என்பதும், சீனாயில் தொடங்கிய இந்த ஒரே இறைவன்கோட்பாடு உலகமனைத்தையும் வெல்ல முன்னேறுகிறது என்பதும் முதலில் இறைவனது அருஞ்செயலாகும்; அடுத்து மோசேயின் தலைமை, முன்னோக்கு ஆகியவற்றின் விளைவாகும். இதில் உண்மையி

லேயே மோசே ஒரு சமயத்தைத் தொடங்கும் பெரும் தலைவராகத் திகழ்கிறார்.

*22) உடன்படிக்கை செயல்படுதல்:* கன்றுக்குட்டி வழிபாடு கடுமையாக அடக்கப்பட்ட பின், மோசே புதிய வழிபாட்டு முறையை அமைக்க முயல்கிறார். பெட்டகம் கட்டப்படுகிறது. அதற்குரிய அணிகள் எல்லாம் செய்யப்படுகின்றன. குருக்களின் சடங்கு ஆடைகள் தயாரிக்கப்படுகின்றன (யாக் 35-40). பலிகள், மற்ற வழிபாட்டு முறைகள் பற்றி லேவியர் ஆகமத்தில் தொடர்ந்து காண்க. இஸ்ராயேலர் பற்றிய வரலாற்று நிகழ்ச்சிகள் எண்ணாகமத்தில் தொடர்ந்து கூறப்படும்.

**6. இறையியல்:** தேர்ந்தெடுத்தல், விடுதலை, உடன்படிக்கைகள் அடங்கிய ஒரு தொகுப்பாகும் யாத்திரை. இது பழைய ஏற்பாட்டுச் சமயத்தின் சிறப்பான, முதன்மையான சத்தியமாகும். இந்த யாத்திரை நிகழ்ச்சியின்றி, இஸ்ராயேலின் சமயத்தையும்,பிற்காலச் சமய, அரசியல், சமூக அமைப்பையும், புரிந்து கொள்ள முடியாது. புதிய ஏற்பாட்டுக்கு இறைமகன் மனு உருவெடுத்தது எப்படியோ, அப்படிப் பட்டது பழைய ஏற்பாட்டுக்கு இந்த யாத்திரை நிகழ்ச்சி. இஸ்ராயேலர் தனிச் சிறப்புடன் தேர்ந்தெடுக்கப்படுதல், எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து விடுதலை அடைதல், யாவேயுடன் செய்து கொண்ட தனிச்சிறப்பான உடன்படிக்கை ஆகிய அடிப்படை வரலாற்று உண்மைகளுக்கு வலுவான சான்றுகள் கூறப்படுகின்றன. ஏன், உண்மையிலேயே, பழைய இஸ்ராயேலர் ஒரு சமயச் சமூகக் குழுவாயிருப்பதற்கும் இஃது அடிப்படையாகும். இவ்வுண்மைகளை எடுத்துக்கூற விவிலிய ஆசிரியர் பயன்படுத்தும் இலக்கிய வடிவம் வரலாறு பற்றிய பல விளக்கவுரையாகும். அதில் வீர காவியப்பாணி தெளிவாகக் காணப்படுகிறது. ஆகையால், காட்சிகளையும் உருவங்களையும் நேரடிச்சாட்சிகள் எடுத்துக் கூறுவதாகப் பொருள் கொள்ளக்கூடாது. இப்படி வீர காவியப் பாணியில் அழகு செய்து, நிகழ்ச்சிகள் விவரிக்கப்படுவதற்கு இரு நோக்கங்கள் உண்டு. ஒன்று இஸ்ராயேலின் இறைவனாகிய யாவேயையும் அவரின் வல்லமையையும் மேன்மையையும் உயர்த்திக் கூறுவது. மற்றது இறைவன் தம் மக்களாகத் தேர்ந்தெடுத்த இஸ்ராயேலின் அழைப்பின் மேன்மையை உயர்த்திக் கூறுவதாகும்.

யாத்திரை நிகழ்ச்சியின் சிறப்பை நாம் மிகைப்படுத்திக் கூறமுடியாது. யாவே இஸ்ராயேலரைத் தேர்ந்தெடுத்தது ஒரு தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். ''உலகிலுள்ள எல்லா மக்களினங்களுக்குள்ளும் உங்களைத்தான் நாம் அறிந்து கொண்டோம்'' (ஆமோ 3:2). இத்தேர்வின் விளைவாக இஸ்ராயேலர் பல நன்மைகளைப் பெற்றனர். அவற்றில் எகிப்திலிருந்து விடுதலை அடைந்தது முதலாவதாகும். இதை இறைவாக்குரைஞரும், சங்கீத ஆசிரியரும் மீதூர்ந்த பற்றுடன் நினைவு கூர்கின்றனர் (ஆமோ 2:10; சங் 8:10). உடன்படிக்கை மற்ற நன்மைகளைவிடத் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். அதன் விளைவாக யாவேக்கும் இஸ்ராயேலர்களுக்கும் இடையே நெருங்கிய உறவு ஏற்படுகிறது. இஸ்ராயேலர் சிறப்பு வாய்ந்த உரிமை பெறுகின்றனர்; இறைவனின் தனி உடைமையாகின்றனர்; அரசத் திருக்கூட்டமாகின்றனர்; பரிசுத்த குலமாகின்றனர்.

இந்நூலில் காணப்படும் சட்டப் பொருள்கள், சிறப்பாகப் பத்துக்கற்பனைகள், உடன்படிக்கைச் சட்டம் ஆகியவை, பெரிய இறையியல் சிறப்பும் முக்கியத்துவமும் வாய்ந்தவை. பத்துக் கற்பனைகளில் நான்கிலிருந்து பத்து வரை உள்ள கற்பனைகள் இயற்கைச் சட்டத்திலிருந்தே எழுகின்றன. இவை முற்காலத்துச் செமித்திக்குச் சட்டங்களில் காணப்படுகின்றன. ஆயினும், யாத்திரை நூல் இவற்றைப் புதிய முறையில் அணுகுகிறது. பழைய சட்டங்களில் இக்கட்டளைகளை மீறுவது அயலானுக்கு மாறாகச் செய்யப்பட்ட குற்றமாகக் கருதப்பட்டது; ஆனால், யாத்திரை நூலில் இறைவனுக்கு மாறாகச் செய்யப்பட்டதாகக் கருதப்படுகிறது. மேலும், பத்துக்கற்பனை

ஒரே இறைவன் பற்றிய மறை உண்மையையும், அவரை மட்டுமே வணங்கும் கடமையையும் அழுத்திக் கூறுகிறது. இந்நூலில் வரும் வழிபாட்டுச் சடங்குச் சட்டங்கள், இஸ்ராயேலின் பிற்காலத்தில் வழிபாட்டு வளர்ச்சிக்கு அடிகோலுகின்றன.

**7. யாத்திரை நூல் புதிய ஏற்பாடு ஒப்பியல்:** யாத்திரை நூல் ஒப்பியல் அல்லது எடுத்துக்காட்டியல் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு மற்றும் திருச்சபை இலக்கியம் முழுவதும் பரவிக் கிடக்கிறது. இதற்குப் பல சான்றுகளைக் காட்டலாம். ஒரு சிலவற்றை மட்டுமே இங்குச் சுட்டிக் காட்டுவோம்.

கிறிஸ்து காலத்திய யூத இலக்கியங்கள் இறைவாக்குரைஞர் மரபைப் பின்பற்றி, மீட்பின் காலத்தை யாத்திரை நூலின் மொழியில் விவரிக்கின்றன. மோசே மெசியாவை அடையாளமாகக் குறிக்கிறார். யாத்திரைக் காலத்தில் மன்னாவாலும், உயிரூற்றாலும் மக்கள் உணவளிக்கப்பட்டது போல், மெசியாவின் காலத்திலும் இஸ்ராயேலர் உண்பிக்கப் பெறுவர். பாஸ்காவைப் போல் மீட்பும் இளவேனிற் காலத்தில் நிகழும்.

யாத்திரையில் அடையாளமாகக் குறிக்கப்பட்டவையெல்லாம் கிறிஸ்துவின் வாழ்வில் நிறைவேறுவதாகக் காட்டுகிறது புதிய ஏற்பாடு. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு மத்தேயு எழுதிய இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியாகும். மத்தேயுவுக்கு இயேசு கிறிஸ்துவே உண்மையான, புதிய இஸ்ராயேல். அவரே புதிய மோசே. ஓசே, முதல் யாத்திரையைச் சுட்டிக்காட்டுவது (ஓசே *11:1*) மத்தேயுவில் கிறிஸ்து எகிப்திலிருந்து திரும்பிவந்ததற்குப் பொருந்த எடுத்துக் கூறப்படுகிறது (*மத் 2:15*). ''எகிப்திலிருந்து என் மகனை அழைத்தேன்''. முதல் இஸ்ராயேல் நாணல் கடலில் திருமுழுக்குப் பெற்றது (*யாத் 14*); புதிய இஸ்ராயேலாகிய கிறிஸ்து யோர்தான் ஆற்றுநீரில் திருமுழுக்குப் பெறுகிறார் (*மத் 3:13-17*). யாத்திரைக் காலத்தில் இஸ்ராயேலர் பாலைவனத்தில் 40 ஆண்டுகளுக்குத் தேர்வுக்கு உள்ளாயினர் (*யாத்திரை நூல் எண்ணாகமம்*). சீனாய் மலையில் 40 நாட்களுக்கு மோசே தங்கினார் (*யாத் 24:18*). இவற்றை நினைவுகூரும் விதமாகக் கிறிஸ்து 40 நாட்களுக்குப் பாலைவனத்தில் தங்கினார், சோதிக்கப்பட்டார் (*மத் 4:1-11*). யாத்திரைக் காலத்தில் முதல் மோசே இஸ்ராயேலின் சட்டம் அளிக்கும் பெரும் தலைவராவார். சீனாய் மலையில் பறைசாற்றப்பட்ட சட்டத்தை இஸ்ராயேல் மக்களுக்கு அளித்தார் (*யாத் 24:3-8*). புதிய மோசேயாகிய கிறிஸ்து மலைப்பொழிவில் தமது சட்டத்தைப் புதிய இஸ்ராயேலுக்கு அளிக்கிறார் (*மத் 5-7*). நற்செய்தியாளருள் மத்தேயு மட்டும் தான் இந்நிகழ்ச்சியில் மலையின் உருவகத்தை அழுத்திக் கூறுகிறார். பத்துக் கற்பனைகளுக்கும் புதிய சட்டத்திற்குமுள்ள இணைத்தன்மை எடுத்துக் காட்டப்படுகிறது (*யாத் 23:13-மத் 5:21; யாத் 20:14-மத் 5:27*). மோசே கடலுக்குக் கட்டளையிடுகிறார்; கடலைக் கடந்து செல்கிறார். கிறிஸ்து காற்றுக்கும் அலைகளுக்கும் கட்டளையிட்டு, கடலின்மேல் நடக்கிறார் (*மத் 8:23-27*). பாலைவனத்தில் மோசே மன்னாவை அளித்ததுபோல், இயேசு மக்களுக்கு அப்பம் அளிக்கிறார் (*மத் 14:13-21*). அப்போஸ்தலர்களின் எண்ணிக்கை பன்னிரண்டு. இஃது இயேசு அமைத்த புதிய குழுவை உண்மையான இஸ்ராயேல் என்று காட்டுகிறது. ஒளியுருவாதல் நிகழ்ச்சியிலும் (*மத் 17:1-8*) மோசேக்கும் கிறிஸ்துவுக்கும் உள்ள இணைத்தன்மை காட்டப்படுகிறது. மோசேயே கிறிஸ்துவோடு உரையாடுகிறார். முதல் மோசேயை அக்காலத்தில் சூழ்ந்த ஒளிரும் மேகம் (*யாத் 24:15-18*) இப்போது புதிய மோசேயான கிறிஸ்துவின் மேல் இறங்குகிறது (*மத் 17:5*). மத்தேயு கிறிஸ்துவை மோசேயோடு ஒப்பிடும் போது, கிறிஸ்துவின் திருப்பணியைக் கவனத்தில் கொள்கிறார். மோசே மக்களை அடிமைத்தனத்திலிருந்து விடுவித்துச் சட்டத்தை அளித்த செயல்களோடு கிறிஸ்துவின் பணியை ஒப்பிடுகிறார்.

ஆனால் யோவான் நோக்கும் விதம் வேறு. இவர் அருட்சாதன நோக்கோடு பார்க்கிறார். இவருக்கு யாத்திரை, கிறிஸ்து என்னும் மறை பொருளின் ஓர் எடுத்துக் காட்டாகும்; நற்செய்தி அதன் நிறைவேறுத லாகும்; அருட்சாதனங்கள் அதன் தொடர்ச் சியாகும். கிறிஸ்துவையும் அவரது வாழ்க் கையையும் யாத்திரைப் பின்னணியில் விவ ரிக்கிறார். அதன் நிறைவேறுதலாகக் காட்டு கிறார். யோவான் நற்செய்தியின் முன்னுரை யில் வரும் வார்த்தையானவரே, பாலை வனத்தில் மக்களிடையே வதிந்த யாவே யின் மகிமையின் உறைவிடமாகிய ''ஷெக் கினா''வாவார் (*யாத் 40:36*). கிறிஸ்துவே, மக்கள் குணமடைவதற்காக பாலைவனத் தில் உயர்த்தப்பட்ட பாம்பாவார் (யோவா *3:14*). அவரே இறைமக்களுக்கு உணவா வார்; அவர்களைக் குணமாக்கவும் வந்த மன்னா (*6:31. 34*). அவரே கூடாரங்களில் வாழ்ந்த மக்களுக்குப் பாறையிலிருந்து வழிந்தோடிய நீரூற்றாவார் (*7:37-38*). அவரே மக்களைப் பின்பற்றிய தீத்தூண் (*8:12*). அவரே உலகின் பாவம் போக்க இரத்தம் சிந்திய பாஸ்காச் செம்மறியாவார் (*1:29; 19:36*).

அப்போஸ்தலர் பணி, புதிய கிறிஸ்தவச் சமூகத்தைப் பாலைவனத்தில் வாழ்ந்த இஸ் ராயேல் சமூகத்தின் நிறைவாக விவரிக் கிறது. ஸ்தேவானது பேருரை மோசே வரலாறு பற்றிய விளக்கமாகும். மோசேக்கு எதிராக யூதர்கள் எதிர்த்தெழுந்தது, கிறிஸ்து வுக்கு எதிராக யூதர்கள் எதிர்த்தெழுதலை முன்னறிவிக்கிறது. கொரிந்தியருக்கு எழு தப்பட்ட முதல் திருமுகம், செங்கடலைக் கடந்ததைத் திருமுழுக்குக்கு ஓர் எடுத்துக் காட்டாகக் காட்டுகிறது. பாறையிலிருந்து வடியும் நீர் நற்கருணைக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். இவை நமக்கு முன் அடை யாளமாக நிகழ்ந்தன (*1 கொரி 10:11*). கொரிந்தியருக்கு எழுதப்பட்ட இரண்டாம் திருமுகம் திருச்சபையில் இறைவன் உள் ளுறைதலை, மோசேக்கு உறுதியளிக்கப் பட்ட இறை உள்ளுறைதலின் நிறைவேறுத லாகக் காட்டுகிறது. பேதுருவின் முதல் திருமுகம், திருமுழுக்கை எகிப்திலிருந்து புதிய வெளிப்போதலாக விவரிக்கிறது (*1 பேதுரு 1:13-20; 2:1-10*). இப்பகுதியில் ஆழ்ந்த பொருளும் கருத்துச் செறிவும் உள்ளன. இதில் யாத்திரை நிகழ்ச்சிக் கருத்துக்கள் யாவும் இடம் பெறுகின்றன. இவற்றில் சில: ''இடுப்பில் கச்சை கட்டி ஆயத்தமாயிருத்தல்'' (*யாத் 12:11*), ''எகிப் தின் இறைச்சி நிறைந்த பாத்திரங்களை நிராகரித்தல்'' (*16:13*), பிற மதத்தினரி டையே கூடாரங்களில் தூங்குதல், அடி மைத்தனத்திலிருந்து விடுதலை (*15:13*), மாசுமறுவற்ற செம்மறியின் இரத்தம் (*15:5*), உயிர் தரும் நீரைக் கொண்ட பாறை, தேர்ந்தெடுக்கப்பட்ட இனம், அரச குருத் துவத் திருக்கூட்டம், பரிசுத்த குலம், இறைவனுக்குச் சொந்தமான இறை மக்கள் (*19:5-6*) போன்றவையாகும். ''வஞ்சகம் அனைத்தையும் அகற்றுங்கள்'' என்ற கூற்று *1 கொரி 5:7-8*-இன்படி புளியாத அப் பத்தைக் குறிக்கலாம்.

திருவெளிப்பாட்டு நூலில், கிறிஸ்தவர் களின் வரலாறு செம்மறியின் பலியைத் தழுவி நிற்கிறது (திருவெளி *5:12*). பன்னி ரண்டு கோத்திரத்தாரும் திருச்சபையின் முழுமையைக் குறிக்கின்றனர் (*7:4-8*). விடு தலை, செங்கடலைக் கடத்தலோடு தெளி வாக ஒப்பிடப்படுகிறது (*15:3*). இறைவ னது வெளிப்பாடானது இடிமுழக்கம், பேரி ரைச்சல், மின்னல், நில நடுக்கம், எக்காளத் தொனி ஆகிய சீனாய் நிகழ்ச்சிகளால் முன்னறிவிக்கப்படுகிறது (*8:5-7*). இறைவ னுடைய எதிரிகளுக்கு அளிக்கப்படும் தண் டனைகள் எகிப்தில் நிகழ்ந்த வாதைகளே (*8:7-8.12; 9:3; 16:2-10*). வெளிப்போதல் கிறிஸ்துவில் நிறைவெய்துகிறது என்று அழுத்திக் கூறப்படுகிறது.

எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத் தில், கிறிஸ்து மோசேயோடு ஒப்பிடப் பட்டு (எபி *3:3-5*) அவரைவிட மேலானவ ராகக் காட்டப்படுகிறார். சீனாயில் தரப் பட்ட இறை வழிபாடு, ''வானக இறைப் பணியின் வெறும் சாயலும் நிழலுமாகக்'' காட்டப்படுகின்றது (*8:5*). எரேமியாவால்

முன்னறிவிக்கப்பட்ட புதிய உடன்படிக்கை கிறிஸ்துவால் நிறுவப்பட்ட உடன்படிக்கையில் நிறைவேறுகிறது *(8:7.13)*. இளங் காளைகளின் இரத்தம் ஓர் அடையாளமே; கிறிஸ்துவின் இரத்தமே உண்மையான உடன்படிக்கையின் இரத்தமாகும் *(9:12-14)*. இத்திருமுகம், அணுகக்கூடாத சீனாய் மலையையும் எக்காளத் தொனியையும் சீயோன் மலையோடும் உயிருள்ள கடவுளின் நகரோடும், வானக எருசலேமோடும் எண்ணற்ற தூதரோடும் ஒப்பிட்டு வேறுபடுத்துகிறது *(12:19-24)*.

இவ்வாறு யாத்திரை நிகழ்ச்சிக்கும் புதிய ஏற்பாட்டிற்குமுள்ள ஒப்பியலைக் கூறிக் கொண்டே போகலாம். மேல்தரப்பட்ட வாசக ஒப்புமையைக் கவனத்தோடு பார்க்கும்போது நமது உள்ளத்தில் ஒரு கருத்து ஆழமாகப் பதிகிறது. அது, கிறிஸ்து என்னும் மறைபொருள், மோசே காலத்திய இஸ்ராயேலின் வரலாற்றின் தொடர்ச்சியும், மேம்பாட்டில் அதைவிடச் சிறந்ததும், அதைக் கடந்ததுமாகும் என்று காட்டப் புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள் பெரிதும் விரைகின்றனர் என்பதாகும். தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் மீட்பில் இறைவன் தமது ஆற்றலை வெளிப்படுத்தினார். ஆனால் மனுகுலம், மற்றொரு ஆன்மீகத் தன்மையுடைய அடிமைத்தனத்தில் மூழ்கியிருந்தது. இறைவன் புதிய மீட்பில் தமது ஆற்றலைக் காட்டுவார். இது பெருமளவில் இருக்கும். இது புதியதோர் உடன்படிக்கையைத் தொடங்கிவைக்கும் என்று இறைவாக்குரைஞர்கள் முன்னுரைத்தனர். இவை யாவும் இயேசு கிறிஸ்துவில் நிறைவேறுகின்றன என்று காட்டுவதே புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களின் பெரும் பணியாகும், அருஞ்சாதனையாகும். இவர்கள் கருத்துப்படி புதிய ஏற்பாட்டு நிகழ்ச்சிகள் தற்செயலாக நடந்தவையல்ல; காலவரையறைக்கு உட்பட்டவை அல்ல; இறைவனுடைய நித்திய நோக்கோடு முழுவதும் இணைந்தவையாகும். இறைவன் வெறும் முனைப்பற்ற பணிவைக் கோரவில்லை. மாறாக, விரும்பித் தயாராக, தன்னுரிமையாக அளிக்கும் கீழ்ப்படிதலைக் கோருகிறார். இவ்வாறு இறைத்திட்டம் நிறைவேறுதலின் வரலாற்றினுள்ளே இணைத்தன்மையையும் உள்ளார்ந்த இசைவுத் தன்மையையும் காண்கிறோம். இது நம்மை மலைக்கச் செய்யலாம். ஆனால், அசைக்க முடியாத பாறை என இதில்தான் மனித விசுவாசம் தங்கி நிற்கிறது.

**8. முடிவுரை:** யாத்திரை நிகழ்ச்சிகள் யூத விசுவாசத்தின் அடிப்படையாகும்; கிறிஸ்தவ விசுவாசத்திலும் சிறப்பிடம் பெறுகின்றன. கி.பி. 20-ஆம் நூற்றாண்டில் வாழும் நமக்கு யாத்திரை நிகழ்ச்சிகளின் உள்ளார்ந்த பொருளை உணர்வது அவ்வளவு எளிதான செயலன்று. இதற்குக் காலம் முதல் தடையாக அமைகிறது. மிகப் பழைய இஸ்ராயேலின் பழக்க வழக்கங்கள், வழிபாட்டு முறைகள், சமூக அமைப்புக்கள் முதலியவை பற்றி நமக்கு அவ்வளவாகத் தெரியாது. யாத்திரை நிகழ்ச்சிகள் கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் நடந்திருக்க வேண்டும். மனத்தளவாயினும் நாம் பழங்கால இஸ்ராயேலின் உலகத்திற்குள் புக வேண்டும்; அவர்கள் செவிகளோடு இந்நிகழ்ச்சிகள் பற்றிய உரைகளைக் கேட்க வேண்டும்; அவர்களின் வழிபாட்டில் புகுந்து அவர்களுடைய சமய அனுபவத்தில் பங்கெடுக்க வேண்டும். இப்படிச் செய்வது எளிதன்று. ஆனால் அறிஞர்கள், தொல்பொருளாய்வாளர்கள், ஒத்தமை சமய வரலாற்று ஆசிரியர்கள், விளக்கவுரையாளர்கள் ஆகியோரின் அயரா உழைப்பால் ஓரளவு, காலத்தில் பின்னோக்கிச் செல்ல நம்மால் இயலும்.

யாத்திரை நிகழ்ச்சிகளை உள்ளிருந்து புரிந்துகொள்ள மற்றொரு சிக்கலான தடையுள்ளது. இதை ஆராய்ச்சிகள் மட்டும் நீக்க முடியாது. யாத்திரை நிகழ்ச்சிகளைக் கிறிஸ்தவன் தன் வாழ்வில் இக்காலத்தில், இன்று, இப்போது நடைபெறும் நிகழ்ச்சிகளாகப் பார்க்க வேண்டும். இஃது ஒரு சிக்கலாகவே இருக்கக்கூடாது. கிறிஸ்தவ வாழ்வு முழுவதுமே ஒரு பாஸ்கா அல்லது கடந்தேகுதல் மறைபொருளாகும். அஃது

இயேசுவில் நிறைவேறும் புதிய பாஸ்கா நிகழ்ச்சியாகும். தந்தையின் மகிமையில் இருக்கும். ஏற்கெனவே உண்மையான, உறுதியளிக்கப்பட்ட நாட்டில் இயேசு நுழைந்து விட்டார். ஆனால், திருப்பயணி கள் அடங்கிய திருச்சபை தனது யாத்தி ரையை இன்றும் தொடர்ந்து செய்கிறது. பழைய இஸ்ராயேலின் வழிபாடானது பாஸ்கா, உடன்படிக்கை முதலிய யாத்திரை நிகழ்ச்சிகளை நினைவாக்கமாகக் கொண் டாடுவதில் அடங்கியிருந்தது. கிறிஸ்தவ வழிபாடு இம் மறைபொருள்களை நினை வாக்கமாகவே கொண்டாடுகிறது. ஏனெ னில் ஒவ்வொரு நற்கருணை வழிபாடும் புதிய பாஸ்கா நினைவாக்கமாகும்; புதிய உடன்படிக்கையின் புதுப்பித்தலாகும். இதில் நாம், கிறிஸ்து தம் தந்தையிடம் கடந்து செல்லும் நிகழ்ச்சியில், கிறிஸ்து வோடு ஒன்றிக்கிறோம். இதில் சிக்கல் இருக்கக்கூடாது; ஆனால், இருக்கிறது. ஏற்கெனவே உறுதியளிக்கப்பட்ட நாட்டை வந்தடைந்து விட்ட தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாக நம்மையே கருதிக் கொள்ளலாம். இந்தத் திருப்தியும், தன்னிறைவுணர்வும், இறுமாப்பும் உடையவர்களுக்கு யாத்திரை நூல் ஒரு மூடிய நூலாகவே இருக்கும். இஸ்ராயேலர் முணு முணுப்பவர்கள், முறையிடுபவர்கள், பிரமாணிக்கம் தவறு பவர்கள், தங்களுடைய மீட்புக்கு மாறா கவே செயல்படுபவர்கள். இவர்களுக்கு மாறாகச் செயல்பட்டு இறைவன் இவர் களை மீட்க வேண்டியிருந்தது. இவர்கள் விடுதலைக்கு அழைக்கப்பட்டனர். ஆனால், அவ்விடுதலை கொண்டு வரும் பொறுப்பை உணர்ந்தாரில்லை. நாமே இம்மக்கள் என்று நாம் பார்க்க வேண்டும். எவ்விதத்தில் இவர்களின் வாழ்விலிருந்து நமது வாழ்வு வேறுபட்டிருக்கிறது? நாமும் முணுமுணுக்கிறோம். பிரமாணிக்கம் தவறு கிறோம். நமக்கு மாறாகவே செயல்பட்டு, இறைவன் நம்மை மீட்க வேண்டியிருக்கி றது. இன்றும் நமது வாழ்வில் யாத்திரை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. பழைய இஸ்ராயேலர்களோடு ஒன்றித்து இந்த யாத் திரை மறைபொருளைக் காணவேண்டும், அனுபவிக்க வேண்டும். அப்போது யாத் திரை நூலின் உண்மைப்பொருளை நாம் உணர முடியும். இல்லையெனில், இந்நூல் கடந்த காலம் பற்றி நல்லதோர் கதை போல் இருக்கும். யாத்திரை மறைபொரு ளையும், மீட்பு வரலாற்றின் தொடர்ச்சியை யும் உய்த்துணர நமது வழிபாடு உதவ வல்லது. விவிலிய நிகழ்ச்சியுரைகளுக்கும் நமது இன்றைய வழிபாட்டுக்கும் இடையே நெருங்கிய தொடர்புண்டு. அவற் றின் நினைவாக்கமாகும் நமது வழிபாடு.

**விண்ணக அரசி** (QUEEN OF HEAVEN)

எரேமியாவின் காலத்தில் யூதாவின் பெண்கள் வழிபட்டது இவ்விண்ணக அரசி யைத்தான். அவர்கள் மாவில் தெய்வங் களின் வடிவங்களைச் செய்து விண்ணர சிக்குப் பானப்படையலோடு அளித்தனர் (எரே *7:18; 44:17-19.25*). எருசலேமின் வீழ்ச்சிக்குப் பின் எகிப்தில் அகதிகளாய் இருந்த யூதர்கள் விண்ணரசிக்குத் தூபமும், காணிக்கைகளும் செலுத்தியதை எரேமியா கண்டனம் செய்கிறார். இரண்டாவது குறிப் பின்படி, இவ்வழிபாடு பொருட்செல்வம் பெறும் நோக்கோடு செய்யப்பட்டதாகத் தோன்றுகிறது. இந்த விண்ணரசி காதல், பிள்ளைப்பேறு ஆகியவற்றின் தெய்வமான எகிப்திய இஸ்தாரைக் குறிக்கலாம். இஃது அமர்னா ஏடுகளில், வீனஸ் விடிவெள்ளி யாக அடையாளம் காட்டப்படுகிறது; ''விண்ணகத்தலைவி'' என்று குறிக்கப்படு கிறது. ஆனால், பாலஸ்தீனத்தில் வீனஸ் விடிவெள்ளி ஓர் ஆண் தெய்வம் ஆகும். இஃது ஒரு பிரச்சனையை எழுப்பலாம். கானானிய இனப்பெருக்கத் தேவதையான அஸ்தார்தே அல்லது அஸ்தோரேத்து பெண் தெய்வமாக இருக்கலாம்.

இந்த வழிபாடு மனாசேயால் யூதாவில் அறிமுகம் செய்யப்பட்டது (காண்க. 2 அர *21:3.5*). இவ்வழிபாட்டில் பெண்களே அதி கம் ஈடுபட்டதாகத் தெரிகிறது. இது வீடு களில் நடந்தது. யோசியாவின் சீர்திருத்தத் தால் விண்ணக அரசி வழிபாடு உட்பட்ட அன்னிய வழிபாடுகள் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டன (2 அர *22-23*). எரேமியா காலத்து யூதாவின் மக்கள்,

யூதாவுக்கு ஏற்பட்ட துன்பங்களுக்கு இந்த வழிபாடே காரணம் என்று கருதினர் (எரே *44:17-19*).

**விண்ணேற்றம்** *(ASCENSION)*

I. உயிர்த்த கிறிஸ்து மாட்சிமையுடன் வானுலகில் வீற்றிருக்கிறார் என்பதை விசுவாசத்தின் மூலம் நாம் அறிகிறோம். இங்குப் புலன் அனுபவத்திற்கு அப்பாற்பட்ட மறையுண்மை அடங்கியுள்ளது. இதை ஒலிவ மலையில் அப்போஸ்தலர்கள் தங்கள் தலைவர் தங்களை விட்டு இறைவனிடம் திரும்பிச் சென்றதைக் கண்டது போன்ற ஒரு நிகழ்ச்சிக்குள் வரையறை செய்ய முடியாது. உயிர்த்த கிறிஸ்து எதற்காக, எவ்விதமாக, எப்போது விண்ணேற்றம் அடைந்தார் என்பதைப் பற்றி மறைநூலில் பல குறிப்புகள் பரந்து கிடக்கின்றன. இவை போதகச் செறிவுடையவை. இக்குறிப்புகளிலிருந்து இம்மறை உண்மையின் செம்பொருளை ஒருவாறு அறிந்து கொள்ள முயற்சி செய்வோம்.

II. **விண்ணிற்கும் மண்ணிற்கும் இடையேயுள்ள வழி:** மக்களின் இயல்பான ஒருமுக நம்பிக்கையின்படி விண்ணகம் தெய்வீகத்தின் இருப்பிடம்; கடவுளையே குறிப்பிடும் ஓர் உருவகம். இதை விவிலியமும் ஏற்றுக் கொள்கிறது. இறைவனின் கால்மனையாகிய பூமி (எசா *66:1*) மனிதன் வாழும் இடமாகும் (சங் *115:16*; திருவுரை *5:1*). மனிதனைச் சந்திப்பதற்கு இறைவன் வானின்று இறங்கி (ஆதி *11:5*; யாத் *19:11*தொ; மீக் *1:3*; சங் *144:5*), மீண்டும் வானுலகு ஏகுகிறார் (ஆதி *17:22*). மேகம் அவரது வாகனம் (எண் *11:25*; சங் *18:10*; எசா *19:1*). அவர் அனுப்பும் ஆவியும் இவ்வுலகை அடைய இறங்கி வரவேண்டும் (எசா *32:15*; மத் *3:16*; *1* பேதுரு *1:12*). அதேபோல் அவரது வார்த்தை இவ்வுலகிற்கு வந்து தன் செயல்களை முடித்தபின் மீண்டும் வானுலகை அடைகிறார் (எசா *55:10*தொ; ஞான *18:15*). விண்ணுலகில் இறைவனோடு வதியும் வானதூதர்கள் (*1* அர *22:19*; யோபு *1:6*; தோபி *12:15*; மத் *18:10*) தங்கள் பணிகளை நிறைவேற்றக் கீழிறங்குகின்றனர் (தானி *4:10*; மத் *28:2*; லூக் *22:43*); பின் விண்ணகம் திரும்புகின்றனர் (நீதி *13:20*; தோபி *12:20*). இவ்வாறு மேலிருந்து இறங்குவதும் மீண்டும் ஏறிச் செல்வதும் விண்ணிற்கும் மண்ணிற்கும் இடையேயுள்ள தொடர்பை நிலை நாட்டுகிறது (ஆதி *28:12*; யோவா *1:51*).

மனிதன் விண்ணுலகிற்குச் செல்வது தன்னிலையில் முடியாத செயல். விண்ணகம் ஏறுவது பற்றிப் பேசுவது அடைய முடியாத பொருளைத் தேடுவதாகும் (உப *30:12*; சங் *139:8*; பழ *30:4*; பாரூ *3:29*). அது மனிதனின் வரம்பு மீறிய அகங்காரமாகும் (ஆதி *11:4*; எசா *14:14*; எரே *51:53*; யோபு *20:6*; மத் *11:23*). நமது மன்றாட்டுகள் இறைவனை அடைவதும் (தோபி *12:12*; சீரா *35:16*தொ; அ.ப.*10:4*), சீனாய் மலைமேல் (யாத் *19:20*) அல்லது சீயோன் மலைமேல் (எசா *2:3*; *4:5*) இறங்கிய இறைவனுடன் அதன்மேல் ஏறிய மனிதன் உரையாடுவதும் பெரும் செயல்களாகும். இவ்விதிகளுக்கு மாறாக ஏனோக்கு (ஆதி *5:24*; சீரா *44:16*; *49:14*), எலியா (*2* அர *2:11*; சீரா *48:9-12*; *1* மக் *2:58*) போன்ற தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மட்டுமே தெய்வ வல்லமையால் விண்ணுலகிற்கு நேரடியாக எடுத்துச் செல்லப்படும் சலுகை பெறுகிறார்கள். தானியேல் கண்ட காட்சியில் வானத்தின் மேகங்கள் மீது தொன்மை வாய்ந்தவர் அருகில் மனுமகன் வந்தார் என எழுதப்பட்டுள்ளது (தானி *7:13*). இது மீண்டும் அவர் விண்ணேற்படைவார் என்பதை மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறது. எங்கிருந்து வந்தார் என்பது மறைபொருளாக இல்லை; இங்குக் கூறப்பட்ட மேகங்களோ வாகனமல்ல; ஒருவேளை இறைவன் உறைவிடத்தின் அணிகலனாக இருக்கலாம்.

III. **கிறிஸ்துவின் விண்ணேற்றம்:**

*1.* விவிலிய அண்டவியல்படி, கிறிஸ்து உயிர்ப்பின் வழியாக இறைவனின் வலப் பக்கத்தில் அமர மகிமைப்படுத்தப்பட்டார் (அ.ப.*2:34*; உரோ *8:34*; எபே *1:20*தொ;

*1* பேதுரு *3:22*; காண்க. *12:35*தொ. இணை; *14:62* இணை). அரசராக அங்கே அரியணையில் அமர (திருவெளி *1:5; 3:21; 5:6; 7:17*), விண்ணகம் ஏற வேண்டியிருந்தது. கிறிஸ்துவின் வானக மாட்சியை (காண்க. அ.ப. *2:34*; மாற் *16:19*; *1* பேதுரு *3:22*) வெளிப்படுத்துவதே விண்ணேற்றத்தை மறை உண்மையாகப் பறைசாற்றுவதின் முதற்காரணமாகும். இறைவெளிப்பாட்டின் முன்னேற்றத்தாலும் விசுவாசத்தின் வளர்ச்சியாலும் விண்ணேற்றம் ஒரு சரித்திர நிகழ்ச்சியாகவும், இறையியல் கொள்கையாகவும் தனித்தன்மையுடையதாக உருவெடுத்தது.

**2. வருகையும் ஏற்றமும்:** கிறிஸ்து ஆதிமுதல் இருக்கின்றார் என்ற உண்மை ஆதிக் கிறிஸ்தவர்களின் விசுவாசத் தொடக்கத்தில் உள்ளடங்கியதாக இருந்தது. ஆனால், விசுவாசம் வளர வளர நாளடைவில் இவ்வுண்மை வெள்ளிடை மலையென வெளிப்படலாயிற்று. மறைநூலில் காணப்படும் இவ்வுண்மை கிறிஸ்துவின் தொடக்கமின்மையை எண்பிக்கிறது. மண்ணுலகிற்கு வருவதற்கு முன்னால் இயேசு கடவுளுடைய மகனாகவும், வார்த்தையாகவும், ஞானமாகவும் இருந்தார். ஆகையால், அவரது வானக மாட்சிமையானது ஒரு மனிதன் தெய்வீகமானான் எனத் தொடக்க காலக் கிறிஸ்து இயல் குறிப்பது போலன்றி (அ.ப. *2:22-36; 10:36-42*), விண்ணிலிருந்த வந்த அவர் மீண்டும் தம் இடத்திற்குத் திரும்பிச் செல்வதைச் சுட்டிக்காட்டுவது ஆகும். அவர் வானகத்திலிருந்து வந்தவர் (யோவா *6:33.38.41*தொ.*50*தொ.*58*) என்பதையும், மீண்டும் வானுலகை அடைந்தவர் (*3:13; 6:62*) என்பதையும் யோவான் மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறார். பவுல் உரோமையருக்கு எழுதிய திருமுகத்தின் பகுதியை (உரோ *10:6*தொ) மேற்கூறிய கருத்தை வலியுறுத்த மேற்கோளாகக் காட்ட முடியாது. ஏனெனில், இயேசு இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தார் என்று இப்பகுதி எடுத்துரைக்கிறதேயன்றி விண்ணேற்றத்தைக் குறிப்பிடவில்லை. அதற்கு மாறாக, எபேசியர் திருமுகம் (*4:9*) இயேசு மண்ணுலகின் கீழ்ப்பகுதிக்கு (அல்லது மண்ணுலகிற்கு) இறங்கி, மீண்டும் ஏழு உலகங்களுக்கும் மேலாக ஏறிச் சென்றவர் எனக் கூறுகிறது. பிலிப்பியர் திருமுகத்தில் காணப்படும் புகழ்ப்பாடலும் (பிலி *2:6-11*) இயேசுவின் விண்ணேற்றத்தைக் குறிக்கிறது.

**3. அனைத்து அதிகாரங்களின் மேல் வெற்றி:** கிறிஸ்துவின் மகிமையை வெளிப்படுத்துவதற்கு அவரது விண்ணேற்றத்தை உயிர்ப்பினின்றும், விண்ணக அரியணை ஏறுதலினின்றும் தனியாகப் பிரித்துக் காட்டுவதின் மற்றொரு நோக்கம் அவர் அனைத்து அதிகாரங்களின் மேல் கொண்ட வெற்றியை எடுத்துக் காட்டுவதாகும். கிறிஸ்துவை வானதூதர்களைக் காட்டிலும் குறைவாக மதிப்பிட்ட கொலோசியர்களின் தப்பறைக் கொள்கையைக் கண்டித்து, பவுல் தாம் முன்பே அறிவித்திருந்த உண்மையான இயேசு அனைத்து அதிகாரங்களின் மேல் கொண்டுள்ள வெற்றியை (*1* கொரி *15:24*) மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறார் (கொலோ *2:15*). மேலும், இவ்வுலகில் மட்டுமன்று, மறுவுலகிலும் வேறு எப்பெயர் கொண்டவர்க்கும் மேலாகவும் ''கிறிஸ்து இப்போது ஆள்கிறார்'' (எபே *1:21*தொ) என்கிறார். சங் *68:19*-ஐ மேற்கோள் காட்டி அவருடைய விண்ணேற்றம் அகிலமனைத்தையும் சொந்தமாக்கி நிறைவு பெறச் செய்வதற்கும் (எபே *4:10*), தலைவர் என்ற பட்டத்தோடு அனைத்தையும் ஒன்று சேர்க்கவும் (எபே *1:10*)ஆகும் எனவும் அவர் கூறுகிறார். திமொத்தேயுவுக்கு எழுதிய முதல் திருமுகத்தில் வரும் துதிப்பாடல் (*3:16*) கிறிஸ்து வானதூதர்க்கும், உலகிற்கும் தம்மை வெளிப்படுத்தியபின் மாட்சிமையில் விண்ணேற்பு அடைந்தார் என இயம்புகிறது. மனிதர்கள் விரும்பும் மீட்பு மறுவுலகில் உள்ளது என்பதைக் கருத்தில் கொண்டு கிறிஸ்துவின் விண்ணேற்றத்தை எடுத்துரைக்கிறது எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம். திரைச்சீலையைக் கடந்து சென்று (எபி *6:19*தொ) நமக்காக இறைவனிடம் பரிந்து பேசும்படி கடவுளின் திருமுன் நிற்பதற்கு (*9:24*), வானங்களையெல்லாம் கடந்து சென்று நமது தலைமைக் குரு (*4:14*) வானதூதர்

களுக்கும் மேலாக (*1:4-13; 2:7*தொ) இறைவனின் வலப்பக்கத்தில் வீற்றிருக்கிறார் (*1:3; 8:1; 10:12*தொ; *12:2*).

**4. விண்ணேற்பு அடைந்த நேரம்:** பலரும் காண கிறிஸ்து விண்ணகம் சென்றதால் இந்த விண்ணேற்றம் உயிர்ப்பிலிருந்து வேறாகத் தோன்றுகிறது. மேலும், காலத்திற்கு அப்பாற்பட்ட அந்த நிகழ்ச்சியைக் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியாக மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டியிருப்பதாலும், காட்சிகள் அளிக்க சிறிது காலம் தேவைப்படுவதாலும் இந்த விண்ணேற்றம் உயிர்ப்பிலிருந்து மாறுபட்டதாகக் காட்டப்படுகிறது. இயேசு உயிர்த்ததுமே தம் மகிமையில் நுழைந்து விட்டார்; அங்கிருந்த தம் சீடர்களுக்குத் தம்மையே காண்பிக்க உலகிற்கு வந்தார் என்று கூற எவ்விதத் தடையுமில்லை. அவ்வாறு கூறுவதே முறையுமாகும். இல்லாவிடில் காட்சிகளுக்கிடையே அவர் எங்கிருந்தார் என்ற பிரச்சனை எழும். மேலும், ஏற்கெனவே மாட்சி அடைந்த நிலையில்தான் அவர்களுக்குத் தம்மைக் காட்டுகிறார். இப்படித்தான் மத்தேயு உணர்ந்திருப்பதாகத் தெரிகிறது. அதனால் தான் கிறிஸ்துவின் விண்ணேற்ற நிகழ்ச்சியைப் பற்றி, தாம் எழுதிய நற்செய்தியில் ஒன்றும் குறிப்பிடவில்லை. மாறாக, ''விண்ணிலும் மண்ணிலும் எல்லா அதிகாரமும் எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது'' (மத் *28:18*) என்ற இந்த வசனத்தால் அதை மறைமுகமாகக் குறிப்பிடுகிறார். இதிலிருந்து கலிலேயாவின் மலையில் காட்சி அளிக்கும் முன்பே அவர் வானுலகின் அரசராக மாட்சி பெற்றுவிட்டார் என்பது தெளிவாகிறது. யோவான் இவ்வுண்மையை வேறுவிதமாக வெளியிடுகிறார். என் தந்தையிடம் நான் ஏறிச் செல்கிறேன் (யோவா *20:17*) என்று தம் சீடர்களிடம் தெரிவிக்கும்படி மகதலா மரியாளிடம் கூறுகிறார். இதிலிருந்து மீண்டும் அன்று தம் சீடர்களுக்குக் காட்சி கொடுத்தபோது (*20:19*) அவர் வானுலகிற்குச் சென்று திரும்பியிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. பழைய தொடர்புகள் (*20:7; 11:2; 12:3*) ஆன்மீகமாக்கப்பட்ட (*6:58. 62*) ஒரு புதிய நிலையை இயேசு அடைந்து விட்டார் என்பதை மகதலா மரியா புரிந்து கொள்ளும்படி செய்வதற்காக உயிர்ப்பிற்கும் விண்ணேற்றத்திற்கும் ஒரு சில மணி நேர இடைவேளை கொடுக்கப்பட்டுள்ளது.

மற்ற வாசகங்கள் அவர் விண்ணேற்றமடைந்த நேரம் அவரது உயிர்த்த நேரத்திலிருந்து வேறுபட்டிருப்பதைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. லூக் *24:13.33.36.44* எனும் வசனங்களுக்குப் பின் வரும் *24:50*தொ-இலிருந்து இயேசு உயிர்த்த ஞாயிறு அன்று முதலில் தம் சீடர்களுக்குத் தோன்றி, பல உண்மைகளைப் போதித்த பின்பே மாலையில் வானுலகிற்கு எழுந்தருளினார் என்பது தெளிவாகிறது. மாற்கு நற்செய்தியில் *16:19*-க்குப் பின் வரும் பகுதி லூக்கா நற்செய்தியை ஒட்டி உள்ளது. இஃது உயிர்த்த இயேசு பலமுறை தம் சீடர்களுக்குக் காட்சி கொடுத்த பின் விண்ணேற்படைந்தார் எனக் கூறுகிறது. இக்காட்சிகள் ஒரு நாளில் நடைபெற்றனவா, பல நாட்களில் நடைபெற்றனவா என்பதை அறுதியிட்டுக் கூறுவது கடினம். கடைசியாக, அப்போஸ்தலர் பணி நூல் (*1:3-11*) அவர் உயிர்த்த நாற்பதாம் நாள் விண்ணேற்படைந்தார் எனக் கூறுகிறது. இம்மூன்று பகுதிகளும் இயேசு காட்சி கொடுத்த நாட்கள் விண்ணேற்போடு முடிவடைந்தன என்பதை வெளிப்படையாக எடுத்துரைக்கின்றன.

இம்மூன்று பகுதிகளிலும் விவரிக்கப்படும் விண்ணேற்றம், காட்சிகளின் காலம் முடிவுறுவதைத் தெளிவுபடுத்துகின்றன. வெவ்வேறு விதமாக விவரிக்கப்படுகின்ற தாமதத்திற்குப் பிறகு கிறிஸ்து எவ்வாறு தமது மகிமையில் முதல் முறை நுழைந்தார் என்பது பற்றி விவரிப்பது இதன் நோக்கம் அன்று; மாறாக, அவரது காட்சிகளுக்கு முடிவு காட்டும் இறுதிப் பிரிவை விவரிப்பதே இதன் நோக்கமாகும். இதனால்தான் ஐம்பதாம் நாள் வரவிருக்கும் பெந்தக்கோஸ்தேவை முன்னிட்டு இயேசு நாற்ப

தாம் நாள் விண்ணேற்படைந்தார் என அப்போஸ்தலர் பணியில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஏனெனில், இயேசு இவ்வுலகை விட்டு நிரந்தரமாகச் செல்வது தமக்குப் பதிலாக, தூய ஆவியைத் தம் சீடர்களிடம் அனுப்புவதற்கே.

மறைநூல் போதகம் இயேசுவின் விண்ணேற்பை ஒன்றோடொன்று தொடர்புள்ள, எனினும் வேறுபட்ட இரு கோணங்களில் எடுத்துரைக்கின்றது. ஒன்று இயேசு உயிர்த்த வினாடியே மாட்சிமை பெற்றுவிட்டார் என்பது; மற்றொன்று, இவ்வுலகில் இயேசு சில காலம் காட்சியளித்தபின் விண்ணேற்படைந்தார் என்பது. இவ்விதம் இறைவனிடம் திரும்புவதைத்தான் அப்போஸ்தலர்கள் ஒலிவ மலையில் நேரில் கண்டார்கள். இதையே திருவழிபாட்டு ஆண்டில் விண்ணேற்ற விழாவாக நாம் நினைவு கூர்கிறோம்.

**5. விண்ணேற்படைந்த** *முறை:* அப்போஸ்தலர் பணி *1:9* மட்டும்தான் இயேசு எம்முறையில் விண்ணேற்படைந்தார் எனச் சிறிதளவு எடுத்துரைக்கின்றது; இயேசு மாட்சிமையுள் முதல்முறை நுழைந்த வரலாற்றை விவரிக்க வேண்டும் என்பதற்கன்று. புறவினத்தார் ரோமுலு, மித்திரா போன்ற வீரர்களைத் தேவர்களாக மாற்றியது போலவோ, விவிலியத்தில் எலியாவைப் பற்றிய வர்ணனையைப் போலவோ அன்றி, கிறிஸ்துவின் விண்ணேற்றம் அடக்கமாக எடுத்துரைக்கப்படுகிறது. போலிக் கற்பனைகளோ, மிகைபடு வர்ணனைகளோ இல்லாமல் திருக்காட்சிகளின் வர்ணனைகளில் சாதாரணமாக உபயோகப்படுத்தப்படும் மேகம், வானதூதரின் பேச்சு போன்றவற்றின் வழியாக விண்ணேற்பின் அடிப்படைக் கருத்து வெளிப்படுத்தப்படுகிறது. இதனால் ஒலிவ மலையில் நடைபெற்ற விண்ணேற்றம் சரித்திர நிகழ்ச்சியில்லையென்றோ, தாம் கடவுளிடம் திரும்பிச் சென்றதைத் தம் சீடர்கள் ஐம்புலன்களால் அறிந்து கொள்ளும்படி செய்ய இயேசுவால் முடியாது என்றோ பொருள் கொள்வதற்கில்லை. உயிர்ப்பிலேயே அவர் அடைந்த வெற்றியை வர்ணிப்பதன்று, சிறிது காலம் இயேசு தம் சீடர்களுக்குக் காட்சி கொடுத்துத் தோழமை அளித்தபின், மீண்டும் உலக முடிவில் திரும்பி வரும்வரை நம் ஊனக் கண்களால் பார்க்க முடியாதபடி தம்மை மறைத்துக்கொண்டார் என்ற கருத்தை வெளிப்படுத்துவதுதான் இந்நிகழ்ச்சியை எடுத்துரைப்பதின் நோக்கமாகும்.

IV. **விண்ணேற்றம் இரண்டாம் வருகையின் முன்னோடி:** ''உங்கள் நடுவிலிருந்து வானகத்திற்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற இந்த இயேசு எவ்வாறு வானகம் செல்லக் கண்டீர்களோ அவ்வாறே மீண்டும் வருவார்'' *(அ.ப. 1:11)* என்ற வானதூதர்களின் இச்சொற்கள் இயேசு எதற்காக விண்ணேற்றம் அடைந்தார் என்பதைத் தெளிவுபடுத்துவதோடு மட்டுமன்றி விண்ணேற்றத்திற்கும் அவரது இரண்டாம் வருகைக்குமுள்ள தொடர்பையும் வெளிப்படுத்துகிறது. இறைவனின் மீட்புத்திட்டத்தில் இரண்டாம் வருகையை எதிர்பார்த்திருக்கும் நேரம்வரை இயேசு விண்ணில் இருக்கிறார். இஃது ஒரு தற்காலிகமான ஏற்பாடு. இயேசுவில் அனைத்தும் புதுப்பிக்கப்படும் நேரத்தில் *(அ.ப. 3:21; 1 தெச 1:10)* அவரது இறுதி வெளிப்பாடு வரை *(கொலோ 3:1-4)* அவர் மனிதர்களின் கண்களுக்கு மறைவாக விண்ணுலகில் இருப்பார். பின், எம்முறையில் விண்ணேற்படைந்தாரோ *(அ.ப. 1:11)* அதேபோல், மேகங்களின் வழியாக *(திருவெளி 1:7; ஈாண்க. 14:14தொ)* வானின்று இறங்கி வருவார். அதே நேரத்தில் அவரால் தேர்ந்து கொள்ளப்பட்டவர்கள் மேகங்களின் மீது தூக்கிச் செல்லப்பட்டு, வான் வெளியில் ஆண்டவரைச் சந்திப்பார்கள் *(1 தெச 4:17)*. இந்த வர்ணனையும் மனிதனுக்கு இயல்பாக எழக்கூடிய கற்பனையே. ஆயினும், இக்கற்பனை மிகக்குறுகிய அளவிலேயே உள்ளது.

மேற்கூறியவற்றிலிருந்து பின்வரும் ஆழ்ந்த கருத்துகள் வெளிப்படுகின்றன. இயேசு கிறிஸ்து சாவின்மேல் வெற்றி கொண்டார்; இறைவனோடு கொண்ட ஒரு புதிய முறையான வாழ்க்கையைத் தொடங்

கியுள்ளார்; அவர் தாம் தேர்ந்து கொண்டவர்களுக்கு இடம் ஏற்பாடு செய்ய விண்ணகம் சென்றுள்ளார்; பின், அவர்கள் அவரோடு நிரந்தரமாய்த் தங்கும்படி அவர் மீண்டும் வந்து அவர்களை அங்கு அழைத்துச் செல்வார் *(யோவா 14:2தொ).*

V. **விண்ணேற்றமும் கிறிஸ்தவ ஆன்மீகவியலும்:** இரண்டாம் வருகையான இறுதி வெளிப்பாட்டை எதிர்பார்த்திருக்கும் கிறிஸ்தவர்கள் உயிர்த்த நமதாண்டவரோடு விசுவாசத்தினாலும், திருவருட்சாதனங்களினாலும் ஒன்றித்திருக்க வேண்டும். இவ்வுலகிலேயே கிறிஸ்து இயேசுவுக்குள் நாம் அவரோடு உயிர்த்தெழவும், விண்ணுலகில் அவரோடு அமரவும் வேண்டும் *(எபே 2:6).* நீங்கள் மேலுலகில் உள்ளவற்றின் மீது மனத்தைச் செலுத்துங்கள். ஏனெனில், உங்கள் உயிர் கிறிஸ்துவோடு கடவுளுக்குள் மறைந்துள்ளது *(கொலோ 3:1தொ),* நமக்கோ வானகமே தாய்நாடு *(பிலி 3:20).* விண்ணிலிருந்து வரும் நம் உறைவிடத்தை மேலணிந்து கொள்ள வேண்டும் என்ற ஏக்கம் *(2 கொரி 5:1தொ),* விண்ணைச் சார்ந்த *(1 கொரி 15:45-49)* நம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் மாட்சிமைக்குரிய உடலின் சாயலாக உருமாறுவதாகும் *(பிலி 3:21).* இதிலிருந்து புறப்படுவதுதான் நம்பிக்கை என்ற புண்ணியத்தின் அடிப்படையான விண்ணேற்றத்தைப் பற்றிய முழு ஆன்மீகவியலாகும். ஏனெனில், கிறிஸ்து ஆட்சி செய்யும் இப்புதிய உலகத்தை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது கிறிஸ்தவ வாழ்க்கை. ஆயினும், இறைவன் அவனை இவ்வுலகிலிருந்து எடுத்துக் கொள்ளவில்லை; மாறாக, ஒரு புதிய முறையில் அவனுக்குப் பணியையும் சக்தியையும் கொடுத்திருக்கிறார். இச்சக்தியைக் கொண்டு இவ்வையகத்தை இறைவனின் திட்டப்படி ஒரு புதிய வானம் புதிய பூமியாக மாற்ற வேண்டிய கடமை மனிதனுடையதே.

### விண்ணைச் சார்ந்த உடல்கள் (CELESTIAL BODIES)

பவுல் 1 கொரி 15:40-இல் விண்ணைச் சார்ந்த உடல்களையும் மண்ணைச் சார்ந்த உடல்களையும் ஒப்பிட்டு வேறுபடுத்துகிறார். மண்ணைச் சார்ந்த உடல்கள், இவ்வுலகில் மண்ணில் உள்ளவையாகும். விண்ணைச் சார்ந்த உடல்கள் விண்ணில் உள்ளவையாகும். தன் காலத்துக் கிரேக்கர்களைப் போல், பவுல் இத்தொடரால் சூரியன், சந்திரன், விண் மீன்களைக் குறிப்பிடுகிறார். இவை சுடரால் ஆன உடலைக் கொண்டவை; மண்ணைச் சார்ந்த உடல்களின் பொருள்களிலிருந்து வேறுபட்டவை. பல வகையான உடல்கள் இருக்கின்றன என்றும், உயிர்ப்பிக்கப்பட்ட உடல் தனித்தன்மையுடையது என்றும் கூற பவுல் விழைகிறார்.

### விண்மீன்கள் (STARS)

*1. புறவினச் சமயங்களில் விண்மீன்கள்:* பழங்கால மேற்காசிய மக்கள் நம்மைவிட விண்மீன்கள் பற்றி அதிக அக்கறை காட்டினர். சூரியன், சந்திரன், விண்மீன்கள், மற்றக் கோள்களில் நமது காலத்து உலகிலிருந்து முழுதும் வேறுபட்ட மறைபொருள் மிக்க உலகைக் கண்டனர் பழங்கால மக்கள். விண்ணக உலகத்தை ஓர் அரைக்கோளமாகவும், விண்மீன்கள் அதில் பதிக்கப்பட்டு அதனதன் வீதிகளில் செல்வதாகவும் கருதினர். இவற்றின் முறையான சுழற்சிக் காலங்களை அளவிடவும் மனிதன் தனது நாட்காட்டியை அமைத்துக் கொள்ளவும் விண்மீன்களும் கோள்களும் உதவின. அதில் சிறப்பாக விண்மீன்களின் இயக்கம் உலகம் நித்திய சட்டங்களால் ஆளப்படுவதையும், மனித வரலாற்றின் இயல்பான நிலையைக் கடந்த ஒரு சில விளைவுகளை ஏற்படுத்துகிறது என்பதையும் சுட்டியது. எனவே, இந்த ஒளிமிக்க கோள்கள் மனித வாழ்வைக் கட்டுப்படுத்தி அவற்றின் முடிவுகளை நிர்ணயிக்கிற இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளின் வெளிப்பாடாகும் என நம்பினர். எனவே, இயல்பாகவே அவற்றை வழிபட ஆரம்பித்தனர். இதன் மூலம் அவற்றின் சலுகைகள் தங்களுக்குக் கிடைக்கும் என எண்ணினர். சூரியன், சந்திரன், விடிவெள்ளி போன்றவை பல தேவதைகளாகவும் கடவுள்களாகவும் அவ

னுக்குக் காட்சியளித்தன. விண்மீன் குழுக்கள் புதிரான வடிவங்களில் வானத்தில் தோன்றின. அவற்றிற்கு மனிதன் இதிகாசப் பெயர்களைக் கொடுத்தான். இவ்வாறு விண்மீன்கள் பற்றிய அக்கறை முறையான ஆராய்ச்சிக்கு இட்டுச்சென்றது. இது வான இயல் எனும் ஒரு தனி அறிவியலாக, படிப்படியாக வளர்ச்சி பெற்றது. இதில் மெசபொத்தாமியாவைச் சேர்ந்தவர்களும், எகிப்தியர்களும் தலைசிறந்து விளங்கினர். ஆனால், இந்தத் தொடக்ககால வானவியல் குறிசொல்லுதல், சிலை வழிபாடு போன்ற பழக்கங்களோடு தொடர்புடையதாகவே இருந்தது. இவ்வாறு பண்டைய மனிதர்கள் வெல்ல முடியாத சக்திகளுக்கு அடிமையாயினர். இச்சக்திகள் அவர்களுடைய ஊழைக் கட்டுப்படுத்தின; உண்மையான இறைவனை அவர்களிடமிருந்து மறைத்தன.

***2. கடவுளின் பணியாளர்களான விண்மீன்கள்:*** விவிலியத்தைப் புரட்டிப்பார்த்தால் முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலை அங்குக் காணக் கிடக்கிறது. விண்மீன்கள் இறைவனின் அவையில் இருப்பதாகக் கூறப்படும் வானதூதர்களிடமிருந்து தெளிவாக வேறுபடுத்தப்படவில்லை (யோபு *38:7*; சங் *148:2*தொ). இவை உலகில் உள்ள மற்ற எல்லாப் படைப்புகளையும் போலவே ஒரு படைப்பாக இருந்தாலும் (ஆமோ *5:8*; ஆதி *1:14*தொ; சங் *33:6*; *136:7*தொ), இவை இறைவனின் விண்ணகச் சேனையெனவும் கருதப்படுகின்றன. யாவேயின் அழைப்பைக் கேட்டு அவை ஒளிர்கின்றன (பாரூ *3:3*). இறைவனது கட்டளையைக் கேட்டு அவரது மக்களைப் போரில் உறுதிப்படுத்த உதவியாக இடையீடு செய்கின்றன (யோசு *10:12*தொ; நீதி *5:20*). அவை படைத்திரளின் ஆண்டவராகிய யாவேயின் பணியாளர்கள் தானே ஒழிய, கடவுள்கள் அல்ல. அவை பருவக்காலங்களை நெறிப்படுத்துகின்றன வென்றால், இரவுக்கும் பகலுக்கும் தலைமை தாங்கி வழி நடத்துகிறதென்றால் அதற்குக் காரணம் அவ்வாறு செய்யுமாறு இறைவன் அவைகளை ஆணையிட்டுள்ளார் (ஆதி *1:15*தொ). சூரியனின் பேரொளியைக் கண்டு வியக்கலாம் (சங் *19:5*தொ). சந்திரனின் பேரழகைக் கண்டு மகிழலாம் (உ.ச.*6:10*). அனைத்துக் கோள்களும் மிகச் சரியாக இயங்கும் அற்புதத்தைக் கண்டு வியக்கலாம் (ஞான *7:18*தொ). ஆனால், இவை அனைத்தும் ஒரே கடவுளின் மகிமையை (சங் *19:2*), விண்ணகக் கோள்களின் இயக்கத்தை ஒழுங்குபடுத்தும் சட்டத்தை உருவாக்கியவரின் புகழைப் பாடுகின்றன (யோபு *38:31*தொ). இவ்வாறு, விண்மீன்கள் தங்களைப் படைத்தவரை மறைப்பதில்லை; மாறாக, அவரை வெளிப்படுத்துகின்றன (ஞான *13:5*). அவை முன்னர் தந்த சிலைவழிபாட்டுப் பொருளை இப்பொழுது தருவதில்லை; மாறாக, தூய்மைப் படுத்தப்பட்டு இறைவனின் பரிபாலிப்பை வெளிப்படுத்துகின்ற உலக உண்மைகளின் அடையாளங்களாகின்றன; ஆபிரகாமின் பிள்ளைகள் அளவற்ற விதத்தில் பெருகுதல் (ஆதி *15:5*), தாவீதின் வழியில் வரும் அரசன் (எண் *24:17*), எதிர்கால மீட்பின் ஒளி (எசா *60:1*தொ; மலா *3:20*), அருளின் வழியாக மீண்டும் பிறப்பவர்களின் முடிவில்லா மகிமை (தானி *12:3*) ஆகிய உண்மைகளின் அடையாளங்களாகின்றன.

**3. புற இன சமயப் பாதிப்பு:** விவிலிய வெளிப்பாடு திட்டவட்டமாக விளக்கிய பின்னும் இஸ்ராயேலர் விண்மீன்கள் கொண்ட பிறசமயத்தால் ஈர்க்கப்படாமல் இல்லை. சமய வாழ்வில் பின்னோக்கிச் சென்றபோதெல்லாம் சூரியன், சந்திரன், விண்ணகத்திலுள்ள அமைப்புகள் அனைத்தையும் வழிபடும் பக்தர்கள் இருந்தனர் (2 அர *17:16*; *21:3.5*; எசே *8:16*). இத்தகைய அண்ட சக்திகள் மீது மனிதனுக்கு இயல்பாக உள்ள பயத்தினால் அவற்றைச் சாந்தப் படுத்த விரும்புகிறான். இஸ்தார் அல்லது விடிவெள்ளியாகிய ''விண்ணரசிக்கு''க் காணிக்கைகள் செலுத்தப்பட்டன (எரே *7:18*; *44:17*தொ). அடையளங்களை மிகக் கவனமாகப் பார்த்தனர் (எரே *10:2*). ஏனெனில், அதன் வழியாக தங்கள் வாழ்வின் முடிவை அறிந்துகொள்ளலாம் என நினைத்தனர் (எசா *47:13*). ஆனால், இறைவாக்

கினர்கள் இதனை வன்மையாகக் கண்டிக் கின்றனர். உபாகமம் இதனை இழிவு படுத்திப் பேசுகிறது (உப 4:19; 17:3). இத்தகைய பழக்கத்தை முற்றிலும் அழிப்ப தற்கு அரசன் யோசியா மிக வன்மையாகத் தலையிடுகிறார் (2 அர 23:4தொ.11). விண் மீன்களை வழிபடுபவர்களுக்கு மிகக் கடு மையான தண்டனை காத்திருக்கிறது என எரேமியா எச்சரிக்கிறார் (எரே 8:1). ஆனால், இந்தச் சிலைவழிபாட்டுப் பழக் கத்திலிருந்து (காண்க. யோபு 31:26தொ), இஸ்ராயேல் முழுவதுமாக விடுதலைபெற நாடுகடத்தப்படுதலும், சிதறிப்போதலும் மிகவும் அவசியமாகின்றன. இப்பழக்கத் தின் பயனற்ற தன்மையை ஞானநூல் உரக்கப் பறைசாற்றும் (ஞான 13:1-5).

**4. விண்மீன்களிலிருந்து தீய வானதூதர் களுக்கு:** இத்தகைய விண்மீன் வழிபாடுகள் விசுவாச வாழ்வில் பல பாதிப்புகளை ஏற்படுத்தின. இந்த விண்மீன்கள் ஒரு வனைக் கடவுளிடமிருந்து தூரக் கொண்டு போகும் சோதனையாக அமைந்ததென் றால், இஃது இறைவனுக்கு எதிரான தீயசக்திகளோடு இவை தொடர்பு கொண் டுள்ளன என்று சுட்டவில்லையா? விண்ண கத்தில் உள்ள இறைத்தூதுவர்களில் ஒரு சிலர், இறைவனுக்குக் கீழ்ப்படியாமல் தவறிய தூதர்கள், தமது கூட்டத்திற்கு மனிதர்களை இழுத்துத் தங்களை வணங்கச் செய்யவில்லையா? கடவுள்களுக்குள் ளேயே போர்கள் பற்றிய பழங்கால இதி காசக் கருத்துகள், இறைவனுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த விண்ணகச் சக்திகளின் வீழ்ச்சியைக் காவிய முறையில் எடுத்துக் கூற உதவும் பல பொருள்களைக் கொடுக் கின்றன (எசா 14:12-15). புதிய ஏற்பாட்டில் வரும் சாத்தான் இந்த அடையாளக் கூறு களால் செறிவு ஊட்டப்பெறும் (திருவெளி 8:10; 9:1; 12:3தொ.7தொ). இதன் விளை வாக, ஆண்டவரின் நாளில விண்ணகப் படைகளும், மண்ணகத்தில் அவற்றை வழி பட்டவர்களும் தீர்ப்பிடப்படுவதைக் கண்டு நாம் வியப்புற வேண்டியதில்லை (எசா 24:21தொ). இங்குத் தீய வானதூதரின் இடத்திலும் நிலையிலும் விண்மீன்கள் தோன்றுகின்றன.

**5. கிறிஸ்துவால் மீட்கப்பட்ட உலகில்:** விண்மீன்கள், இறைப் பாதுகாப்புப் பணியை மீண்டும் மேற்கொள்கின்றன. கொலோசியர்களை அச்சுறுத்திய அண்ட வேதனையிலிருந்து கிறிஸ்துவின் சிலுவை விடுவித்து விட்டது. ''சிலுவையில் கிடைத்த வெற்றியால், எல்லாரும் அவர் களைக் காண, இழுத்துக்கொண்டு பவனி செல்லும் பொருட்டு'', கிறிஸ்து ''தலைமை ஏற்போர், அதிகாரம் தாங்கு வோர் முதலிய தூதருடைய படைக்கலங் களைப் பறித்துக் கொண்டதால் கிறிஸ்தவர் கள் இனி உலகப் பூதங்களுக்கு அடிமைப் பட்டவர்கள் அல்லர்'' (கொலோ 2:8.15-18; கலா 4:3). இனி விண்மீன்களைக் கொண்டு எதுவும் முன்குறித்து வைக்கப்படுவ தில்லை. ஊழ் இனி வானில் எழுதப்படுவ தில்லை. இவை போன்ற பிறமத மூட நம்பிக்கைகளுக்குக் கிறிஸ்து முடிவு கட்டி விட்டார். அவரது பிறப்பை ஒரு விண்மீன் வெளிப்படுத்துகிறது (மத் 2:2). இது, நமது இதயங்களில் தோன்ற நாம் காத்திருக்கும் (2 பேதுரு 1:19) ஒப்புமையற்ற விடிவெள்ளி யாக (திருவெளி 2:28; 22:16) அவரைக் குறிக்கிறது. அவரே புதுப்பிக்கப்பட்ட உலகை ஒளிர்விக்கும் உண்மையான சூரி யன் (லூக் 1:78தொ). சூரியன் இருண்டு பூமியெங்கும் இருள் சூழ்ந்து அவருடைய இறப்பைக் குறித்ததுபோல் (மத் 27:45 இணை), விண்மீன்கள் இருளடைவது அவ ருடைய மகிமைமிக்க வருகையின் அடை யாளமாக அமையும் என்பது உறுதியென் றால் (மத் 24:29 இணை; எசா 13:9தொ; யோவே 4:15), இதற்குக் காரணம் வருங் கால உலகில் இந்தப் படைக்கப்பட்ட ஒளிகள் மறைந்து போய்விடும். இறைவ னுடைய மாட்சிமை புதிய எருசலேமுக்கு ஒளிவீசும். செம்மறியே அதன் விளக்காகும் (திருவெளி 21:23).

## விதவை, கைம்பெண் (WIDOW)

விதவை தனிமையாய் நிற்கும்போது (பாரூ 4:12-16) அதிர்ஷ்டமற்றவரின் மாதிரி யாக நிற்கிறாள் (எசா 47:9). அவளது உடை

துயருற்றுப் புலம்புவோரின் அடையாள மாக இருக்கிறது (ஆதி 38:14; யூதி 10:2). மீண்டும் திருமணம் செய்தாலொழிய பிள்ளைப்பேறு பெறும் வாய்ப்பை இழந்து விட்டவள். அவள் பாதுகாப்பற்றவள்.

*1.* **விதவைகட்கு உதவி:** அனாதைகளை யும், அன்னியர்களையும் போல விதவை களும் சட்டத்தின் உதவியால் சிறப்பான பாதுகாப்புப் பெறுபவர்கள் ஆகின்றனர் (யாத் 22:20-23; உப 14:28.29.24: 17-22). கடவுளும் (உப 10:17தொ) விதவைகளின் முறையீடுகளைக் கேட்கிறார் (சீரா 35:14). அவளைப் பாதுகாப்பவராகவும் பழிவாங்கு பவராகவும் இருக்கிறார் (சங் 94:6-10). விதவையின் கையறு நிலையைத் தங்க ளுக்குச் சாதகமாகப் பயன்படுத்த நினைப்ப வர்களுக்கு ஐயோ, கேடு! (எசா 10:2; மாற் 12:40இணை). எலியாவைப் போலவே இயேசுவும் ஒரு விதவையின் ஒரே மகனை உயிர்ப்பித்துக் கொடுக்கிறார் (லூக் 7:11-15; 1 அர 17:17-24). தன் தாய் மரியாளைத் தனது அன்புக்குரிய சீடராகிய யோவானி டம் ஒப்படைக்கிறார் (யோவா 19:26). தொடக்கத் திருச்சபையில் அன்றாடப் பணி யில் விதவைகளை ஆதரிப்பதும் அவர்க ளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதும் முக்கிய பகுதியாக இருந்தது (அ.ப. 7:1). விதவைகட்கு உறவினர் யாரும் இல்லை யென்றால் (1 திமொ 5:16; காண்க. அ.ப. 9:36-39), அவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு அந்தச் சமூகத்திற்கு உண்டு (யாக் 1:26; காண்க. உப 26:12தொ; யோபு 31:16). இஃது இறைவன் முன் புனிதமும் மாசற்றதுமான தொண்டுகளில் ஒன்றாகும்.

*2.* **விதவைத் தன்மையின் மதிப்பு:** ஏற்கெனவே பழைய ஏற்பாட்டின் முடிவில் விதவை நிலையின் மதிப்பு உணரப்பட் டது. யூதித்தின் விதவை நிலைக்குத் தனி மதிப்பும், மரியாதையும் கொடுக்கப்பட்டது (யூதி 8:4-8; 16:2). அன்னா என்ற பெண் விதவையாயினும் தன் வாழ்வைச் செபத்தி லும், நோன்பிலும் செலவழித்தாள் (லூக் 2:36). இயற்கையின் பலவீனத்திற்கும் கடவு ளிடமிருந்து பெறும் சக்திக்குமிடையே உள்ள வேறுபாடு யூதித்தின் வாழ்வில் மிகத் தெளிவாக வெளிப்படுத்தப்படுகிறது.

பவுல் விதவை மறுமணத்தைப் பொறுத் துக் கொண்டாலும் (1 கொரி 7:9.39), இளம் விதவைகள் தவறாக நடந்து கொள்வதைத் தடுக்க அவர்கள் மறுமணம் செய்து கொள் வதை உற்சாகப்படுத்தினாலும் (1 திமொ 5:13-15) அவர் விதவையாக இருப்பதையே மேலானதாகக் கருதுகிறார் (1 கொரி 7:8). ஏனெனில், திருமணத்தை விட்டுக்கொடுப் பது இறைவன் தரும் கொடையின் அடை யாளமாகப் பார்ப்பதால் அவ்வாறு கூறுகி றார் (1 கொரி 7:17-24). கன்னிமையைப் போலவே விதவை நிலையும் ஒருவரைக் கடவுளது பணிக்கென விடுவித்து முழுமை யாக அர்ப்பணிக்க உதவும் ஒரு நிலை யாகும் (1 கொரி 7:34).

**3. கைம்பெண்கள் நிறுவனம்:** திருச்சபை யில் எல்லாக் கைம்பெண்களுமே எவ்விதப் பழிச்சொல்லுக்கும் ஆளாகாமல் இருக்க வேண்டும் (1 திமொ 5:7.14) என்கிறார். எவ்விதக் குடும்பக் கடமையும் இல்லாத கைம்பெண்கள் எல்லா நாட்டங்களையும் விட்டு விட்டு முழுமையாகத் தம்மையே செபத்தில் ஈடுபடுத்திக் கொள்ளலாம் (5:5தொ). மேலும், விதவை நிலையில் நிலையாக இருக்க அதிகாரபூர்வமான பொறுப்பேற்று இருக்கின்றனர் (5:12). ஒரு முறையே திருமணம் செய்த விதவைகளில் 60 வயதை எட்டிய விதவைகளே இந்த விதவைகளின் சபையில் ஏற்றுக் கொள்ளப் பட்டனர் (5:9). இந்தச் சபையில் உள்ள பெண்கள் அன்புப் பணியாற்றுவதற்கெனத் தங்களைக் கையளித்தனர் (5:10). ஏனெ னில், கடந்த காலத்தில் இப்படிப்பட்ட சேவைகளைச் செய்தவர்களாக இருக்க வேண்டும் (5:10).

இவ்வாறு, வாழ்வின் இறுதிக்கட்டத்தில் விதவைகளின் முன் வைக்கப்பட்ட இலட்சி யத்தைச் செபம், கற்பு மற்றும் அன்பு என்று சுருக்கமாகக் கூறலாம்.

## விதி (FATE)

இது பொதுவாக ஒருவனின் அதிர்ஷ்டத் தையோ, துரதிர்ஷ்டத்தையோ குறிக்கும்.

விவிலியத்தில் இது தவிர்க்க முடியாத முடிவாகிய சாவையே குறிக்கும். நல்லோருக்கும், தீயோருக்கும், ஞானிக்கும், அறிவிலிக்கும், எல்லாருக்கும் சாவு வருவது உறுதி *(சங் 49:13; திருவுரை 2:14; 3:19; 9:2-3)*. இதை எதிர்நோக்கி மனிதன் வாழ வேண்டும் *(திருவுரை 2:24; 3:12-13)*.

விவிலிய ஆசிரியருக்கு விதி என்பது இறைவனது திருவுளத்தோடு நேரடித் தொடர்புடையது. இறைவன் உலகைத் தாமே நேரடியாக ஆள்கிறார்; எல்லாவற்றின் முடிவையும் நிர்ணயிக்கிறார் *(எசா 45:1-8; ஆமோ 3:6; மத் 10:29-30; லூக் 12:24-28)*. மனிதனின் வாழ்க்கை இறைவனின் கையில் உள்ளது. பிற்கால ராபிகள் கருத்துப்படி ஒவ்வோர் ஆண்டும், ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையும், விதியும் விண்ணக அவையில் நிர்ணயிக்கப்படுகின்றன. கடவுள் மனிதனுக்கு என்ன நேரும் என்பதையே நிச்சயிக்கிறார். அவன் நல்லவனாகவோ, கெட்டவனாகவோ வாழ்வது அவனவன் செயல், அவனவன் சுதந்தரம் என்ற கருத்து பரவியது.

இறையாட்சி பற்றிய மறையுண்மை எப்போதுமே யாவருக்கும் இருந்திருக்கிறது. நல்லவர்களுக்கு ஆசீர்வாதமும், தீயவர்களுக்குத் தண்டனையும்தான் கிடைக்கும் எனக் கருதப்பட்டது. ஆனால், இது நடைமுறைக்கு ஒத்ததாய் இருக்கவில்லை. யோபு நூல், திருவுரை நூல் ஆகியவற்றில் இக் கருத்து எதிர்த்துக் கூறப்படுவதாய்த் தோன்றுகிறது. வெளிப்பாட்டு நூல்கள், நல்லவர்கள் இறுதிநாளில் பரிசளிக்கப்படுவர் எனக் கூறின. ஆனால், விவிலிய ஆசிரியர் விசுவாசத்தால் இப்பிரச்சனையைத் தீர்க்கிறார். வாழ்க்கையைத் தண்டனை, ஆசீர்வாதம் எனப் பிரிக்க முடியாது. எல்லாத் தேவைக்கும் இறைவன் ஒருவரே போதுமானவர் *(யோபு 19:25-27; சங் 73:23-26; உரோ 8:35-39; 2 கொரி 9:8-10)*. ஆவியின் சன்மானம் எந்த உலகத் தீமையையும் விட அளவிடமுடியாத விதத்தில் மேன்மையானது *(2 கொரி 4:7-11)*. பேரிடர் மனத்துக்கத்திற்கு அழைப்பாகும் *(லூக் 13:1-5)*. சாவு வாழ்வுக்கு வாயிலாகும் *(1 கொரி 15:51-57; பிலி 1:21-23)*.

## விதைத்தல் *(SOWING)*

I. இயற்கையின் வளர்ச்சி, மனித இனப் பெருக்க வரலாறு, படைப்பு மற்றும் மீட்புச்செயல் அனைத்துமே அதே சுழற்சிக்கு ஏற்ப நடைபெறுகின்றன. இவை விதையாக இருக்கும் காலம், வளர்ச்சிப் பருவம், பலன் அளித்தல், இறுதியில் அறுவடை ஆகியவை. விதைத்தல் என்பதன் சாதாரணப் பொருளுக்கும், விதைத்தல் என்பதன் உருவகப் பொருளுக்கும் முழுமையான தொடர்பிருக்கிறது.

II. ***மண்ணில் விதைக்கப்படுபவை:***

***1. இறைவனின் செயல்:*** இறைவன் உலகைப் படைத்த நாளில் இந்த மண்ணில் வளர்ந்து பலனளித்து மீண்டும் தம்மை உற்பத்தி செய்து கொள்ளக்கூடிய விதை தரும் தாவர இனங்களைப் படைத்தார் *(ஆதி 1:11.29)*. தவறாமல் ''விதைப்பவனுக்கு விதையும், உண்பதற்கு உணவும் உதவுகின்றவர் விதைப்பதற்கு வேண்டியதை உங்களுக்கும் கொடுத்து அதைப் பெருகச் செய்வார்'' *(2 கொரி 9:10)*. விதைக்கின்ற, அறுக்கின்ற காலத்தை ஆள்கின்ற இறைவன் *(ஆதி 8:22)* நீதிமான் விதைத்தது நூறுமடங்கு பலனளிக்கும்படி ஆசீர்வதிக்கிறார் *(26:12)*. ஆனால், தீயவனின் எதிர்பார்ப்பு தோல்வியுறும்படி செய்கிறார் *(எசா 5:10; மீக் 6:15)*. அவர்கள் கோதுமையை விதைத்தாலும் முட்செடியையே அறுப்பார்கள் *(எரே 12:13; காண்க. ஆதி 3:18)*. ஆனால், மனம் மாறி வருபவனுக்கு அவன் ''நிலத்தில் விதைத்துள்ள விதைமீது ஆண்டவர் மழை பொழிவார்'' *(எசா 30:23)*. அவனது நிலமும் விதையைப் பெறும் நிலமாக மாறும் *(எசே 36:9)*. விவிலியத்தில், விதைப்பதின் வெற்றியில் செயல்படும் இறை ஆசீர் உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கமாய் இருப்பதோடு எப்போதும் தொடர்புபடுத்திப் பேசப்படுகிறது.

**2. மனிதனின் பங்கு:** விதைத்தலைக் கடவுள் ஆசீர்வதித்தாலும் அதனை உண்மையிலேயே விதைத்து விளையச் செய்ய வேண்டியது மனிதனுடைய உழைப்புத்தான்.

***அ) மனிதனின் பொறுப்பு:*** ஒவ்வொரு விதையையும் பாதுகாக்கவும், வெள்ளப் பெருக்கின் அழிவிலிருந்து காக்கவும் வேண்டிய பொறுப்பை மனிதனிடம் ஒப்படைத்தார் இறைவன் (ஆதி 7:3). பஞ்சம் வரும்போது அவைகளைத் தேடி (ஆதி 47:19), பிற தூய்மையற்ற தொடர்பிலிருந்து பாதுகாக்க வேண்டும் (லேவி 11:37தொ). ''காலையில் விதையைத் தெளி. மாலையிலும் அப்படியே செய்'' (திருவுரை 11:6). மனிதனுடைய பங்கு கடின உழைப்பாகும்.

பாலஸ்தீனப் பழக்க வழக்கப்படி விதை விதைத்த பின்தான் இந்த உழைப்பு நிகழ்கிறது. ஞானமும் அப்படித்தானே வளர்க்கப்பட வேண்டும்! ''ஞானத்துக்காக உழைப்போர் சிறிதளவே களைப்படைவர். விரைவிலேயே அதன் கனிகளை உண்பர்'' (சீரா 6:19).

உருவகப்பொருளில் மனிதனின் இந்தப் பொறுப்பு விதையைத் தேர்ந்தெடுத்தல், நிலத்தைத் தேர்ந்தெடுத்தலையும் உள்ளடக்குகிறது. ஏனெனில், மனிதன் எதை விதைத்தானோ அதையே அறுப்பான் (கலா 6:7). வித்தியாசமான விதைகளை விதைப்பது (சிலை வழிபாடு) மிகவிரைவாகப் பூத்துக் குலுங்கும். ஆனால், எதையும் அறுவடை செய்யமுடியாது (எசா 17:10தொ). அநீதியை அல்லது கொடுமையை விதைப்பவன் ஏழு மடங்கு துயரங்களை அறுப்பான் (பழ 22:8; யோபு 4:8; சீரா 7:3); காற்றை விதைப்பவன் கடும் புயலை அறுவடை செய்கிறான் (ஓசே 8:7). வாழ்க்கை அனுபவம் நமக்கு ஒன்றைத் தெளிவுபடுத்துகிறது. சிறுக விதைப்பவன் சிறுக அறுப்பான். பெருக விதைப்பவன் பெருக அறுப்பான் (2 கொரி 9:6). ஊனியல்பில் விதைப்பதற்குப் பதிலாக ஆவியானவரைப் பெற்ற இயல்பில் விதைக்க வேண்டும் (கலா 6:8). முள் நடுவில் விதைப்பதற்குப் பதிலாக (எரே 4:3) அமைதியிலும் (யாக் 3:18), நீதியிலும் (ஓசே 10:12; பழ 11:18) விதைக்க வேண்டும்.

***ஆ) நம்பிக்கையின் செயல்:*** வேலையாள் கூலிக்கு உரிமையுடையவன் என்பதும் (1 கொரி 9:10), தான் உழைத்து உற்பத்தியாக்குவதில் அவனுக்கும் பங்கு உண்டு என்பதும், ஒருவன் விதைத்ததை அவனே அறுவடை செய்வது இலட்சியமானது என்பதும் உண்மையென்றாலும், ''உழைப்பவர் ஒருவர்; அறுவடை செய்பவர் வேறு ஒருவர்'' (யோவா 4:37) என்ற பழமொழியும் உண்மையே. ஆகவே, விதைப்பவர் வானம் மழை தரும், பூமி பலன் தரும் என்ற நம்பிக்கையோடு இருக்க வேண்டும். அதில் உலகப் பூதங்களுக்கு அடிமையாகக் கூடாது. விதைக்கும்போதே காற்று என்ன செய்யுமோ (திருவுரை 11:4) என்று கவலைப்பட்டால் அவனால் எதையும் சாதிக்க முடியாது. மிகச் சிறிய விதையும் மிகப் பெரிய மரமாக வளர முடியும் (மாற் 4:31). வளமான நிலத்தில் விதைக்கப்படும் விதை 100 மடங்கு பலன் தருகிறது. விதைப்பதில் மனிதனது பங்கு முக்கியமானாலும் மண்ணில் விழுந்தபின் விதை தானாக முளைத்து வளர்கிறது (மாற் 4:27) என்பதை மனிதன் மறக்கக்கூடாது. ஆண்டவரின் அருள்தரும் ஆண்டான ஏழாவது ஆண்டிலே ஒருவனும் விதைக்கக் கூடாது (லேவி 25:4). அதற்கு முந்திய ஆண்டிலே இரண்டு மடங்கு விளைச்சலை ஆண்டவர் தந்துவிட்டார் என்பதில் உறுதி கொள்ள வேண்டும். விண்ணகத் தந்தை மேல் வைக்க வேண்டிய மாறாத நம்பிக்கையைக் குறிப்பிடுவதற்கு இயேசு கூறுகிறார்: வானத்துப் பறவைகளைப் பாருங்கள்! அவை விதைப்பதும் இல்லை! அறுப்பதும் இல்லை! ஆயினும், உங்கள் வானகத் தந்தை அவற்றிற்கும் உணவளிக்கிறார் (மத் 6:26இணை).

இத்தகைய நம்பிக்கைதான், மனிதன் விதையை மண்ணிலே புதைத்து அது பலன் தரும்படியாகவிட - அழிந்து போகவிட

மனிதனுக்கு உற்சாகம் அளிக்கிறது (யோவா 12:24). கண்ணீரோடு விதை விதைப்பவர்கள் களிப்பாரவாரத்தோடு அறுவடை செய்வார்கள் (சங் 126:5). இந்த உருவகம் புனிதர்களின் நலனுக்காகச் செய்யும் பணியையும் (கலா 6:7-10; 2 கொரி 9::6-13), அப்போஸ்தலிக்க அலுவலையும் (யோவா 4:38; 1 கொரி 3:8; 2 கொரி 9:10 தொ) எடுத்துக்காட்டுகிறது. இறுதியாக, புத்துயிர் பெறும் பொருட்டு விதை மடிய வேண்டும் என்றால் (1 கொரி 15:36), அழிந்துபோகும் மனிதனுக்கும் இது பொருந்தும். அவனும் மீண்டு எழ வேண்டும். ''விதைக்கப்படுவது அழிவுக்குரியது; உயிர்த்தெழுவது அழியாதது;... விதைக்கப்படுவது மனித உயிர் கொண்ட உடல்; உயிர்த்தெழுவது தேவ ஆவிக்குரிய உயிர் கொண்டது'' (15:42.44). மண்ணுக்கு நம் உடலைக் கையளிக்கும்போது நாம் கிறிஸ்துவில் மகிமைக்கு உயிர்த்தெழுவோம்.

III. **இறைவன் விதைக்கிறார்:**

1. படைப்பவரையும் விதைப்பவரோடு ஒப்பிடலாம். ஆனால், அஃது ஓர் இறுதிக் காலச் சூழ்நிலையில் சித்திரிக்கப்படுகிறது. கடவுளின் மகனை இறைவார்த்தையாகவும் இறைவிதையாகவும் அறியும் கிறிஸ்தவன், இறைவனை மனிதர் இதயத்தில் தம் வார்த்தையை விதைப்பவராகவும், ஒவ்வொரு மனிதனிலும் தம் உண்மையான வழிமரபான தம் விதையை விதைப்பவராகவும் காணமுடிகிறது.

**2. இறைவனின் வித்து:** ஆதாமைக் கடவுள் பலன்தரக் கூடியவனாக ஆசீர்வதிக்கிறார். வித்து என்ற வார்த்தை தலைமுறை, வழித்தோன்றல்கள், இனம் என்பதையும் குறிக்கவல்லது. தொடக்கத்திலிருந்தே பாம்பின் மேல் வெற்றிகொள்ளும் வழிமரபோடு, தலைமுறை தலைமுறையாக வரும் மனித வித்து ஒன்றுபடுத்தி வேறுபடுத்தப்படுகிறது. இந்த வெற்றி இறைவனின் மகன், ஆதாம், ஆபிரகாம் மற்றும் தாவீதின் மகன் ஆகிய இரு மரபுகளின் கலவையால் பிறக்கும் இயேசுவில் நிறைவேறும்.

நோவா (ஆதி 9:9), ஆபிரகாம் (12:7), ஈசாக்கு (26:4), யாக்கோபு (32:13) ஆகியோரின் சந்ததிகளுக்கு இறைவனின் ஆசீர் உறுதியளிக்கப்படுகிறது. அவர்கள் பூவுலகின் மண்ணைப் போலவும் (13:15தொ), கடற்கரை மணலைப் போலவும் (22:17), விண்மீன்களைப் போலவும் (15:15; 26:4) பலுகிப் பெருகுவர். அதுமட்டுமன்று, தாவீதின் அரசகுலத்திற்கும் இதே வாக்குறுதி தரப்பட்டது (2 சாமு 7:12; 22:51). ஏனெனில், உடன்படிக்கை குலமுதுவரோடு மட்டுமன்றி, அவரது வித்தோடும் நிறைவேற்றப்பட்டது.

ஆனால், அஃது ஆபிரகாமின் வித்தாயினும் சரி, தாவீதின் வித்தாயினும் சரி, மக்களின் பிரமாணிக்கமின்மையும், அரசர்களின் பிரமாணிக்கமின்மையும் கடவுள் தனது ஆசீரைத் திரும்ப எடுத்துவிடுமாறு செய்தன. ஈசாயின் மரம் வெட்டப்பட வேண்டும். ஆனால், அதன் அடிமரத்திலிருந்து தூயவித்து தோன்றும் (எசா 6:13). மீண்டும் கடவுள் விதைப்பவராகிறார் (ஓசே 2:25; எரே 31:27). தீய மக்கள் தண்டனையால் அழிக்கப்படுவர் (எசா 1:4). இறைவன் யூதாவை மக்களால் நிரப்புவார். மிகத் துல்லியமாக, இந்த வித்து ஒரு தளிரில் மையம் கொள்ளும். இந்தத் தளிர் மெசியாவின் பெயர்களில் ஒன்றாக வரும். ''இதோ 'தளிர்' என்னும் பெயர் கொண்ட மனிதர் தம் இடத்திலிருந்து தளிர்ப்பார்; ஆண்டவரின் கோயிலைக் கட்டியெழுப்புவார்'' (செக் 6:12).

**3. இறை வார்த்தை:** உருவக நடையில் பார்க்கும்போது விதை இறை வார்த்தையாகும். இஸ்ராயேலுக்கு ஆறுதல் தருபவர் இறைவார்த்தையின் ஆற்றல் மிக்க செயலை, விதையைப் பலனளிக்கச் செய்யும் மழைக்கு ஒப்பிடுகிறார் (எசா 55:10). விதைப்பவன் உவமையைக் கூறுவதன் வழியாக, பலனளிக்கும் கடமையை அறுவடையோடு அன்றி, மாறாக, விதைப்பதோடு தொடர்புபடுத்துகிறார் இயேசு. தாம் பேசிக்கொண்டிருக்கும்போதே நிகழ்ந்து கொண்டிருக்கும் இறுதிக்காலத்தின் தொடக்

கத்தை நோக்குகிறார் (காண்க. ஓசே 2:25). இவ்வாறுதான் இறுதிக்காலத்தில் இறை வார்த்தையாக இறைவித்தும் இறைமக்க ளும் சந்திக்கின்றனர் என்பது வெளிப்படு கிறது. ஏனெனில், விதைத்தது இயேசுவான தால் இந்தச் சந்திப்பு நிகழ்கிறது. இதில் கிடைக்கும் பலன் மகத்தானது. ஆயினும், மனுமகன் நல்ல விதை விதைக்கும்போது சாத்தான் களையை விதைத்து விடுகிறான் (மத் 13:24-30. 36-43).

இந்த வார்த்தை கிறிஸ்துவே. அவரே மண்ணில் மடிவதால் மிகுந்த பலனளிக்க வேண்டும் என்று விரும்பினார் (யோவா 12:24.32). இயேசுவின் உவமைகளில் தனது வரலாறு அடங்கியிருப்பதைத் திருச்சபை உணர்ந்துகொண்டது. அவள் தனது விசுவா சத்தை இறையரசின் எளிய தொடக்கங் களின் வழியாக இறுதி மகிமையின் முன் னுணர்வால், உவமைகளின் அடிப்படை யில் உறுதிப்படுத்திக் கொண்டாள். ஏனெ னில் இறையரசு கடுகு விதையைப் போல சிறிதாகத் தொடங்கினாலும் மிகப் பெரிய மரமாக வளர்வதைப் போல (மத் 13:31தொ; காண்க. எசே 17:23; தானி 4:7-19), தானும் வளர்ந்து மிகப் பெரிய திருச்சபையாவோம் என்ற விசுவாசம் அத னில் ஆழமாக இருந்தது. இறுதியாக, இயேசுவின் வித்தாகிய திருச்சபை (திரு வெளி 12:17)தீயவனாகிய மாபெரும் பறவை நாகத்தோடு போராடி, இயேசு தன்னில் இருப்பதால் (1 யோவா 3:9) அதை வெற்றி கொள்கிறது.

**விதைப்பவன் உவமை** (SOWER, PARABLE OF)

ஒத்தமை நற்செய்திகளில் காணப்படும் இந்த உவமையின் விளக்கத்தையும் இயேசு தருகிறார் (மத் 13:18-23; மாற் 4:13-20; லூக் 8:11-15). தனது போதனைக் காலத்திலே இயேசு பெருந்திரளான மக்கட் கூட்டத் தைக் கவர்ந்தார். அவர்களில் பெரும்பாலா னோர் அவர்தம் புதுமைகளைக் காணவே வருகிறார்கள். உண்மையான இறையன்பி னால் அன்று என்பதையும் உணர்ந்தார். மேலும், அதிகாரிகள் இவரைக் கிளர்ச்சியா ளர் என எண்ணலாம் என்பதையும் அறிந்தி ருந்தார். எனவே, அவர் உவமைகளின் மூலம் மக்களுக்குப் போதிக்கிறார். இதனைச் சிலரே புரிந்து கொள்வார்கள். விசுவாசம், அர்ப்பணிப்பு போன்ற பண்பு கள் இந்தச் சிலருக்குத் தேவை.

இந்த உவமையின் விளக்கம் அன்றைய ஆதித் திருச்சபையின் நிலையை விளக்கு கிறது. விதை, வார்த்தையாகிய இயேசு (யோவா 1:14). பறவைகள், மனித மீட் பைக் கெடுக்கும் சாத்தான். பாறை நிலம், வேதனை, துன்பம் ஆகிய இடறலைக் குறிக்கும். முட்செடிகள் மனிதனின் இறை யார்வத்தைக் கெடுக்கும் உலக ஆசைகள். நல்ல நிலம் வார்த்தையைக் கேட்டு உணர்ந்து அதன்படி வாழ்தலைக் குறிக்கும்.

**விபசாரம்** (ADULTORY)

முன்பு பத்துக் கட்டளைகளும், பின்பு இறைவாக்கினரும் விபசாரத்தை அறவே கண்டனம் செய்த போதிலும், கணவனுக் கும் மனைவிக்குமிடையே இருக்க வேண் டிய பற்றுறுதியைக் கிறிஸ்துதான் முழுமை யாக வெளிப்படுத்துபவர் ஆவார். கணவன் மனைவியிடமிருந்து எதிர்பார்க்கும் பிர மாணிக்கம், இறைவன் மக்களிடமிருந்து எதிர்பார்க்கும் பிரமாணிக்கத்திற்கு ஒப்பி டப்படுகிறது. ஆகையால், இறைவனுடன் செய்து கொண்ட உடன்படிக்கையை மக் கள் மீறும்போது ஆன்மீக விபசாரம் நடை பெறுகிறது என இறைவாக்கினர்கள் கண்டிக்கிறார்கள்.

***1. திருமணமும் விபசாரமும்:*** விபசாரம் தடுக்கப்பட்ட போதிலும் (யாத் 20:14; உப 5:18; எரே 7:9; மலா 3:5), அதுபற்றிய சட்டத்தின் விளக்கம் வரைக்குட்பட்டதா கும். விபசாரம் என்பது கணவன் தன் மனைவியின்பால் கொண்டிருக்கும் உடைமை, உரிமையைப் பறிப்பதாகும் (லேவி 20:10; உப 22.22தொ). ஆண், பெண்ணைத் தன் உரிமைப் பொருளாகக் கருதினானே தவிர (யாத் 20:17), அவளைத் தன்னோடு அன்பில் இணைந்து ஒன்றாக

வாழும் ஓர் ஆளாகக் கருதவில்லை (ஆதி 2:23தொ). பெண்ணின் இந்த இழிவிற்குக் காரணம் அன்று வழக்கிலிருந்த பலதார மணமாகும். பொதுவாக, காயினின் மரபிலிருந்து வந்தவர்கள் சிலரிடையே இப்பலதார மண வழக்கம் மிகுதியாகக் காணப்பட்டது (ஆதி 4:19-24). இப்பலதார மணம் வழக்கிலே பல ஆண்டுகள் இருந்தது (உப 21:15; காண்க. 17:17; லேவி 18:18). ஆயினும், ஞானிகள் விபசாரத்தின் கொடுமையைக் கடுமையாக எதிர்த்தனர் (பழ 6:24-29; சீரா 23:22-28); இளம் வயதில் மணந்து கொண்ட மனைவியை நேசிக்கும்படி மக்களை ஊக்குவித்தனர் (பழ 5:15-19; மலா 2:14); மேலும், விலைமாதர்களுடன் கொள்ளும் உறவைக் கண்டனம் செய்கின்றனர். ஆயினும், விலை மாதரின் தொடர்பை விபசாரமாகக் கருதவில்லை (பழ 23:27; சீரா 9:3.6).

புதிய ஏற்பாட்டில் இயேசு விபசாரத்தில் பிடிபட்ட பெண்ணைத் தம் கருணையால் காப்பாற்றினாலும், அவள் செய்த பாவத்தைக் கண்டிக்கிறார் (யோவா 8:1-11); அதே சமயத்தில் கணவன் மனைவியருக்கிடையே இருக்க வேண்டிய அன்புப் பிணைப்பின் முழுமையை வெளிப்படுத்துகிறார் (மத் 5:27தொ.31தொ; 19:9இணை). இப்பிணைப்பு கணவன் மனைவி இருவரையும் கட்டுப்படுத்துகிறது (மத் 10:11). இது பிரிக்க முடியாததொன்று (19:6); உள்ளார்ந்தது (5:28). விவாக முறிவிற்குப்பின் ஒருவன் அல்லது ஒருத்தி மீண்டும் மணந்து கொண்டால் அது விபசாரமாகும். ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்குபவன் எவனும், ஏற்கெனவே தன்னுள்ளத்தில் விபசாரம் செய்கிறான் (மத் 5:28). விபசாரம் புரிபவனுக்கு இறைவனின் அரசு உரிமையாகாது (1 கொரி 6:9). எனவே, இப்பாவத்தைச் செய்யாதிருக்க அன்பின் வழியைப் பின்பற்றி (உரே 13:9தொ), பற்றுறுதி கொண்டு வாழ வேண்டும் என்று பவுல் எச்சரிக்கின்றார். இவ்வழியைப் பின்பற்றினால் திருமணத்தின் புனிதத்துவத்தை நாம் காக்கக் கூடும் (எபி 13:4).

*2. உடன்படிக்கையும் விபசாரமும்:* இறைவனையும் மனிதனையும் நிரந்தர அன்பினால் பிணைக்கும் உடன்படிக்கையைப் பிரிக்க முடியாத திருமணத்திற்கு இறைவாக்கினர்கள் ஒப்பிடுகின்றனர் (ஓசே 2:21தொ; எசா 54:5தொ). ஆகவே, மக்களின் பிரமாணிக்கமின்மை விபசாரமாகக் கருதப்பட்டது (ஓசே 2:4). ஏனெனில், பணத்திற்காக உடலை விற்கும் விபசாரிகளைப் போல் பிற தெய்வங்களின் வழிபாட்டில் இவர்கள் தங்களை அர்ப்பணிக்கின்றனர் (ஓசே 2:7; 4:10; எரே 5:7; 13:27; எசா 57:3; எசே 23:43தொ).

இயேசு அவிசுவாசத்தைக் கண்டிக்கும் பொருட்டு இவ்வுருவகத்தைப் பயன்படுத்துகிறார். அவரில் விசுவாசங்கொள்ளத் தயங்குபவர்களையும், அருங்குறி கேட்பவர்களையும், அவரைப் பற்றியும் அவரது வார்த்தையைப் பற்றியும் வெட்கப்படுகிறவர்களையும் 'கெட்டுப்போன விபசாரத் தலைமுறை' என அழைக்கிறார் (மத் 12:39; 16:4; மாற் 8:38). இத்தகைய கண்டனங்கள் மனிதன் இறைவனுக்கு முற்றிலும் பிரமாணிக்கமாயிருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன. இப்பிரமாணிக்கம் அன்பின் நிபந்தனையும் விளைவுமாகும். காண்க. வாழ்க்கைத்துணை.

### வியர்வை *(SWEAT)*

இயேசு கெத்சமனித் தோட்டத்தில் செபித்த போது வானதூதர் தோன்றி ஆறுதல் கூறினார் என்றும், ''அவருடைய வியர்வை பெரும் இரத்தத் துளிகளாக நிலத்தில் விழுந்தது'' என்றும் லூக் 22:43-44 கூறுகின்றது. ஆனால், இந்தப் பகுதி மற்ற நற்செய்தியில் காணப்படவில்லை. இன்னும் பல கையெழுத்துப் படிவங்களில் காணப்படாததால் இப்பகுதி ஏற்றுக்கொள்ளப்படாத பகுதியாகக் கருதப்படுகிறது.

''இரத்தத்துளிகளைப் போல'' என்பது தெளிவாக இல்லை. இந்தச் சொற்கள், அவருடைய வியர்வை இரத்தம் உறைவதைப் போல, பெரிய துளிகளாக வெளிவந்தன என்றும், இரத்தமே வியர்வையாகக் கசிந்து வெளிவந்தது என்றும் பொருள்

படும். இரத்தமே வியர்வையாகக் கசிந்து வெளிவரும் நிகழ்ச்சிக்கு ஏட்டுச் சான்றுகள் உள்ளன. இயேசுவின் வேதனையின் கடுமையைக் குறித்துக் காட்ட ஆசிரியர் இந்தச் சொற்களை ஒருவேளை உருவகமாகப் பயன்படுத்தி இருக்கலாம். ஏனெனில், கடும் வேதனையில் வியர்ப்பது என்பது இயல்பாகும்.

**விரற்கடை** (HAND BREADTH)

இஃது ஒரு நீட்டல் அளவையாகும். கையில் விரல்கள் உள்ள பகுதியின் அகலத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது. ஏறக்குறை மூன்று அங்குலம் அல்லது 7.5 செ.மீ. அகலமாகும் *(எ.கா. 1 அர 7:26; 2 நாள் 4:5)*. பொதுவாக, ஆறு விரற்கடைகள் அகலம் ஒரு முழமாகும். ஆனால், எசேக்கியேலின் முழம் ஒரு விரற்கடையை அதிகமாகக் கொண்டிருந்தது *(எசே 40:5)*. இவ்வாறு அளப்பது எகிப்தில் நிர்ணயிக்கப்பட்ட பொது அளவையாகும்.

**விரியன் பாம்பு** (VIPER)

மிகவும் நஞ்சுள்ள ஒரு பாம்புக் குடும்பத்தைச் சேர்ந்தது. விவிலிய நாட்டில், பாலஸ்தீன வகையைச் சார்ந்த விரியன்கள் காணப்படுகின்றன. அ.ப. 28-இல் கூறப்படுவது, மத்திய தரைக்கடல் நாடுகளில் காணப்படும் விரியன் பாம்பு வகையாகும். ''விரியன் பாம்புக்குட்டிகளே'' என்பது *(மத் 3:7; 12:34; 23:38; காண்க. லூக் 3:7)* ஒரு வசைமொழியாகும். திருமுழுக்கு யோவானும் இயேசுவும் தங்கள் எதிரிகளைச் சரியாக விவரிக்க இச்சொற்றொடரைப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது.

விரியன்பாம்பு தீமையையும், தீயவர்களையும் அடையாளமாகக் குறிக்கின்றது *(சங் 140:3; எசா 30:6; 59:5)*. விரியன் பாம்பின் நாக்கு நஞ்சுடையது என்ற பழங்காலத் தவறான கருத்தை யோபு 20:16 எடுத்துக் கூறுகிறது.

**விருத்தசேதனம்** (CIRCUMCISION)

I. **விருத்தசேதனம்** என்றால் சுன்னத்துச் செய்வது; அதாவது, ஆண் குறியின் நுனித் தோலைச் செதுக்கல். ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஆஸ்திரேலியாக் கண்டங்களில் வாழும் ஆதிக் குடியினரிடையே இப்பழக்கம் பரவி நிலவியிருந்தது. எகிப்தியர் வழியாக இஸ்ராயேலரிடையே இப்பழக்கம் புகுந்திருக்க வேண்டும். இஃது எவ்வளவு தொன்மை மிக்கது என்றால், இச்சடங்கை நிறைவேற்றக் கத்திக்குப் பதிலாகத் தீக்கல் அல்லது சக்கிமுக்கிக் கல்லைப் பயன்படுத்தினர் *(யாத் 4:25; யோசு 5:2)*. மக்களிள் சிலரிடையே ஆண்களுக்கும், பெண்களுக்கும் இச்சடங்கு செய்யப்பட்டதாகத் தெரிகிறது. ஒருவேளை இசடங்கு குறிப்பிட்ட ஒரு சமயச் சமூகத்துள் சேர்க்கும் ஒரு சடங்காக இருந்திருக்கலாம். சிலவேளைகளில் கருதப்பட்டது போல், இச்சடங்கு மருத்துவ நோக்கத்தோடோ, உடல்நலத்திற்காகவோ செய்யப்படவில்லை. புற இனத்தவரிடையே இது பருவமடையும் காலத்தில் செய்யும் சடங்காகும். குழந்தைப் பருவத்திலிருந்து இளமைப் பருவத்திற்குப் புகுத்தும் ஒரு சடங்காகும். திருமணத்திற்குத் தயாரிப்பாகவும் இது கருதப்பட்டிருக்கலாம். ஆகையால், இச்சடங்கு இரு பாலருக்கும் பருவமடையும் காலத்தில் செய்யப்பட்டது.

இப்பழக்கம் இஸ்ராயேலரிடையே எப்படிப் புகுந்தது என்று கூற முடியாது. யூதர்களிடையே இச்சடங்கு ஆண்களுக்கு மட்டும் செய்யப்பட்டது. அதுவும் குழந்தை பிறந்த எட்டாம் நாளே செய்யப்பட்டது *(லேவி 12:3; ஆதி 17:12)*. ஆகையால், இஃது ஒரு பருவகாலச் சடங்கன்று. தொடக்கத்திலிருந்தே இறைவன் ஆபிரகாமோடு செய்த உடன்படிக்கையின் நியமனமாகக் கருதப்பட்டது *(ஆதி 17:6-14; அ.ப. 7:8)*. ஆபிரகாமின் வழியில் வந்த யாவரும், வீட்டுப் பிள்ளைகளோ, அடிமைகளோ யாவரும், இச்சடங்கிற்கு உட்படவேண்டும்.

II. ***பழைய ஏற்பாடு:***

***1. விருத்தசேதனம் ஒரு சமூகத்தின் உறுப்பினனாவதன் அடையாளம்:*** ஒருவன் வயது வந்தவர்களின் சமூகத்தில் ஒருவனாகிறான்,

திருமணம் செய்யத் தயாராகி விட்டான் என்பதைக் குறிக்கும் ஒரு பழக்கமாகவே விருத்தசேதனம் இருந்து வந்திருக்கிறது. இஸ்ராயேல் இதை ஒரு மிகத் தொன்மை யான பழக்கமாகப் பெற்றிருக்க வேண்டும். ஏனெனில், கல்லால் ஆன கத்தி பற்றிப் பேசப்படுகிறது (யாத் 4:24தொ; யோசு 5:2-9). விருத்தசேதனம் ஓர் ஏற்றுக்கொள் ளப்பட்ட உண்மையாக இருந்தது. எனவே, அதைப் பற்றி விவாதிப்பதோ, நியாயப் படுத்துவதோ இல்லை. ஆனால், பின்னர் விருத்தசேதனம் செய்து கொள்ளாதது அவ மானத்துக்குரியதாகக் கருதப்பட்டது (யோசு 5:9; ஆதி 34:14). இஸ்ராயேலர்கள் விருத்த சேனம் செய்யப்படாதவர்களைப் பார்க் கவே சம்மதிக்கவில்லை, வெறுத்தொதுக்கி னர் (1 சாமு 17:26.36; நீதி 14:3; 1 நாள் 10:4; அ.ப. 2:16; எசே 14:7தொ). ஏனெ னில், விருத்தசேதனம் செய்யப்படாதவன் மனிதனே அல்லன். இவ்வாறு விருத்தசேத னம் என்பது ஒருவன் ஒரு சமூகத்தின் உறுப்பினனாவதைக் குறிக்கும் அடையாள மாக இருந்தது.

**2. விருத்தசேதனம் உடன்படிக்கையின் அடையாளம்:** இந்தச் சடங்கிற்குச் சமயப் பொருள் கொடுக்க வேண்டியிருந்தது. ஏனெனில், இது கடவுளால் (யோசு 5:2), இதனை நிறைவேற்றாவிடின் கடவுளின் கோபத்துக்கு ஆளாக நேரிடும் என்ற எச்சரிக்கையோடு இடப்பட்ட கட்டளை ஆகும் (யாத் 4:24). குருக்களின் பாரம்பரி யத்தில் ஒவ்வொரு இஸ்ராயேலனும் உடன் படிக்கையின் அடையாளமாக தன் உட லில், பிறந்த எட்டாவது நாளில் இருந்து சுமக்க வேண்டிய அடையாளம் என இது வலியுறுத்தப்படுகிறது. விருத்தசேதனத்தில் சிந்தப்படும் இரத்தம் (காண்க. யாத் 4:26) பிந்தைய யூதமதத்தில் உடன்படிக்கையின் இரத்தம் என அழைக்கப்படுகிறது.

விருத்தசேதனம் அனைத்து மக்களின் தந்தையாகிய ஆபிரகாமுடன் தொடர்பு கொண்டது (ஆதி 17:9.14; 21:4). இது சட்டத்தாலும் கட்டளையிடப்பட்டது (லேவி 12:3). ஓர் இஸ்ராயேலன் பாஸ்கா விழாவில் பங்கு பெறும் உரிமையை இதன் மூலம் மட்டுமே பெறமுடியும். ஏனெனில், இதில் இஸ்ராயேல் யாவே கடவுளால் மீட்டு விடுதலை பெற்றது உறுதிப்படுத்தப் படுகிறது (யாத் 12:44.48). இதைத் தடுத்துப் புறவினத்தார் துன்புறுத்தியபோது (1 மக் 1:48), யூதர்கள் தாமே முடிவு செய்து கொள்ளும்படி இது விடப்பட்டது. ஒரு சிலர் விருத்தசேதனத்தை மறைக்க முயன்ற னர் (1:15); வேறு சிலர் தங்கள் உயிரையும் பணயம் வைத்துத் தங்கள் குழந்தைகட்கு விருத்தசேதனம் செய்தனர் (1:60; 2 மக் 6:10); மேலும், தயங்குபவர்களைக் கட்டா யப்படுத்தி விருத்தசேதனம் செய்து வைத்த னர் (1 மக் 2:46).

**3. இதயத்தின் விருத்தசேதனம்:** உடன் படிக்கையில் வாக்களிக்கப்பட்ட நலன் களைப் பெற்றுக்கொள்ள விருத்தசேதனம் ஒன்றே போதுமென இஸ்ராயேல் நினைக்க லாம். உடலில் நிகழும் விருத்தசேதனம் மக்கள் பலரால் செய்யப்படுகிறது. எனவே, அதற்கு எம்மதிப்பும் இல்லை என்று மிகத் தெளிவாகக் கூறியவர்களில் எரேமியா முத லானவராவார் (எரே 9:24). அதிகம் பயன் படுத்தப்பட்ட உருவகத்தின்படி (எரே 6:10; லேவி 19:23), இதயத்தின் நுனித்தோல் அகற்றப்படுவதே முக்கியம் என்கிறார் (எரே 4:4). உபாகம ஆசிரியரும் இதயத்தின் விருத்தசேதனத்தை வலியுறுத்தி அது யாவே மேல் மட்டுமே கொள்ளும் மாறாத அன்பி லும், சகோதர அன்பிலும் வெளிப்பட வேண்டுமென்கிறார் (உப 10:12-22). இந்த அழைப்பைக் குருக்கள் பாரம்பரியம் குருத் துவ மரபில் பிரதிபலிக்கின்றது (லேவி 26:41; எசே 44:7). இத்தகைய இதயத்தின் விருத்தசேதனத்தை இஸ்ராயேல் தானே விரும்பி அடைய முடியாது. அதனை மீட்பின் நாளில் இறைவனே அவர்களுக்குக் கொடுப்பார். ''ஆண்டவர் உன் உள்ளத்தைப் பண்படுத்துவார். அதனால், உன் கடவுளாகிய ஆண்டவர் மீது நீ... அன்பு கூர்வாய். அப்போது நீயும் வாழ்வு பெறுவாய்'' (உப 30:6). இதே அருளுரை யில் (30:12) பவுலும் அருளாலும் விசுவாசத்

தாலும் வரும் மீட்பைப் பற்றிய அறி விப்பைச் சரியாகக் கண்டுகொள்கிறார் (உரோ 10:6தொ).

III. **புதிய ஏற்பாடு:**

***1. விருத்தசேதனப் பழக்கம்:*** திருமுழுக்கு யோவானைப் போல இயேசுவுக்கும் விருத்தசேதனம் செய்யப்பட்டது (லூக் 1:59; 2:21). அவருடைய சீடர்களைப் போலவே விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் பணிக்குத் தன்னைத் தந்தவர்களில் அவரே முதல்வர் (உரோ 15:8; மாற் 7:27). ஆனால், அவருடைய நற்செய்தி பல நாடுகளிலும் அறிவிக்கப்பட வேண்டும் (உரோ 15:9-12). அப்படியென்றால் ஆபிரகாமின் வழித் தோன்றல்களுக்கான விருத்தசேதனச் சடங்கை எல்லோரும் செய்து கொள்ள வேண்டுமா என்ற கேள்வி எழுகிறது. அடிக்கடி நிகழ்வது போன்று கொள்கையள விலான பதிலுக்குள், செயல் முறையான பதில் கிடைக்கிறது. சில இடங்களில் மனம் மாறிய புறவினத்தார்கள் விருத்தசேதனம் பெற வேண்டிய கட்டாயம் இல்லாம லேயே திருமுழுக்குப் பெற்றனர் (அ.ப. 10-11). யூதக் கிறிஸ்தவர்களின் வற்புறுத்த லையும் கண்டு கொள்ளாமல் எருசலேம் சங்கம் விருத்தசேதனமின்றி திருமுழுக்குப் பெறலாம் என்ற சட்டத்தை உருவாக்கியது. இது பேதுருவின் காட்சியை அடிப்படையா கக் கொண்டு ஏற்படுத்தப்பட்டது (அ.ப.10:45); ஏற்கெனவே வழக்கில் இருந் திருக்கிறது (அ.ப.15).

இந்த முடிவு ஒரு நடைமுறை சார்ந்த முடிவாக இருந்திருக்கலாம். ஏனெனில், புறவினத்தார் இதனை ஓர் உடல் சிதை வாகக் கருதி அதை வெறுத்திருக்கலாம். ஆனால், இந்த முடிவு ஒரு கோட்பாட்டு முக்கியத்துவம் கொண்டது. இத்தகைய இடுக்கண் நிலையைப் பவுல் கலாத்தியா வில் எதிர்கொண்டார். அவரது விளக்கத் தின்படி, விருத்தசேதனம் செய்யப்படாத புறவினத்தவர் கடவுளை விட்டு வெகு தொலைவில் இருந்தனர் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டது (காண்க. கொலோ 2:13). ஆனால், அவனுக்கு விருத்தசேதனம் செய் யப்பட்டால் சட்டத்தின் முழுச்சுமையும் அவன் தாங்கியாக வேண்டும். அது யாருக் குமே சாத்தியப்படாது (கலா 3:2; 5:10; 6:13). எனவே, இரண்டு வகையிலும் அவன் அழிவை நோக்கியே போகிறான். மேலும், மீட்பைப் பெறுவதற்கு விருத்த சேதனம் ஒரு நிபந்தனையென்றால் விருத்த சேதனம் பெறுவதற்கு முன்னரே கடவுள் தாமாக ஆபிரகாமுக்கு அளித்த மீட்பின் வாக்குறுதி பயனற்றதாகிறது. ஏற்கெனவே கடவுளின் வாக்குறுதியும், ஆபிரகாமின் விசுவாசமும் தந்த நீதியின் முத்திரையாக பிற்காலத்தில் விருத்தசேதனம் அமைந்தது; அதன் ஊற்றாக அன்று (கலா 3:6 29; உரோ 4:9-12). விருத்தசேதனம் அவசியமென்றால் கடவுளின் வாக்குறுதியை நிறைவேற்றி மீட்கும் கிறிஸ்துவின் சிலுவையும் மதிப் பற்றதாகிறது (கலா 5:11தொ).

***2. ஆன்மீக விருத்தசேதனம்:*** எனவேதான் இறைவாக்கினர்கள், இனப்பிரிவை உரு வாக்கும் விருத்தசேதனத்தை விட்டு விட்டு அனைவரையும் ஒன்றிணைக்கும் இதயத் தின் விருத்தசேதனத்துக்கு, புறச்சடங்கின் உள்ளார்ந்த உறுதிசெய்தலுக்கு அழைப்பு விடுக்கின்றனர். ''விருத்தசேதனமும் பய னற்றது, விருத்தசேதனமின்மையும் பய னற்றது. ஒன்றும் செய்ய இயலாது. தேவைப்படுவது அன்பின் வழியாய்ச் செய லாற்றும் விசுவாசமே'' என்றும் பவுல் கூறுகிறார் (கலா 5:6). ''புதிய படைப் பாவதே'' முக்கியம் (கலா 6:15). இதை ஆண்டவருடைய கட்டளைகளைக் கடைப் பிடிப்பதால் ஒருவன் அடையலாம் (1 கொரி 7:19). ஒருவன் அழைக்கப்படுவதற்கு முன்னால் உள்ள நிலை எந்த மாற்றத்தை யும் விளைவிப்பதில்லை. ஏனெனில், அவன் எத்தகையவனாயினும் விசுவாசம் அவனை ஏற்புடையவனாக்குகிறது. ஏனெ னில், கடவுள் அனைவருக்கும் கடவுள் ஆவார் (உரோ 3:29). கிறிஸ்துவே அனை வரிலும் அனைத்துமாவார் (கொலோ 3:11).

விருத்தசேதனச் சடங்கு நீக்கப்பட்டா லும், அந்தச் சொல் பொருள் தரக்கூடிய ஒன்றாக இருக்கிறது. ''நாமே உண்மை

யான விருத்தசேதனம் பெற்றுக் கொண்டவர்கள். நாமே கடவுளின் ஆவிக்கேற்ப உண்மை வழிபாடு செலுத்துகிறோம்'' (பிலி 3:3). இவ்வாறு இறைவாக்குகள் எல்லாம் உண்மையாயின. விருத்தசேதனம் என்பது உள்ளார்ந்ததும், ஆன்மீகம் சார்ந்ததும், மறைவாக உள்ளதுமாய் இருக்க வேண்டுமென்பது நிறைவேறிவிட்டது (உரோ 2:28தொ). இது மனிதக்கரங்களால் செய்யப்படுவதன்று (கொலோ 2:11). விருத்தசேதனம் திருமுழுக்கை ஒத்தது. ஏனெனில், ''பாவத்திற்கான உடலைக் களைந்துவிட்டு'' (கொலோ 2:11), ''கிறிஸ்துவில் உண்டான விருத்தசேதனத்துக்கு'' விசுவாசியைத் திருமுழுக்கு ஒன்றிணைக்கிறது. இது கிறிஸ்துவோடு என்றும் இணைந்து வாழ அழைத்துச் செல்கிறது.

### விருந்தாளி *(GUEST)*

விருந்துக்கு அல்லது அதற்கு நிகரான ஒன்றுக்கு அழைக்கப்பட்ட ஒருவர் (I அர 1:41.49; பழ 9:18; செப் 1:7; மத் 22:10-11) அல்லது தங்க இடமளிக்கப்பட்ட ஒருவர் (லூக் 19:7). மாற் 14:14; லூக் 22:11-இல் குறிக்கப்படும் விருந்து உண்பதற்கான அறையையும், லூக் 2:7-இல் குறிக்கப்படும் விடுதியையும் குறிக்க ஒரே கிரேக்கச் சொல் பயன்பட்டுள்ளது.

### விருந்து *(BANQUET)*

விவிலிய வரலாற்றுக் காலத்தில் திராட்சை ரசமும் மற்ற விலையுயர்ந்த வளமான உணவுகளும் உண்பதுதான் விருந்தின் சிறப்பான கூறாகும். ஆமோஸ் நல்ல ஒரு விருந்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார். விருந்தினர்கள் தந்தத்தாலான கட்டிலில் பஞ்சணைமீது சாய்ந்திருப்பர். கிடையிலிருந்து ஆட்டுக்குட்டிகளையும், மந்தையிலிருந்து கொழுத்த கன்றுகளையும் சாப்பிடுவர்; வீணையொலி எழுப்பி அலறித் தீர்க்கிறார்கள்; கோப்பைகளில் திராட்சை ரசம் குடிக்கிறார்கள்; உயர்ந்த நறுமண எண்ணெய் தடவிக் கொள்கிறார்கள் (ஆமோ 6:4-6). விருந்து பல்வேறு சூழ்நிலைகளில் நடைபெற்றது.

1) விருந்தினர் வரும்பொழுது (ஆதி 19:3), 2) பிறந்த நாள் விழாவின்போது (ஆதி 40:20; மத் 14:6), 3) குழந்தை பால்குடி நிறுத்தும் நாள் (ஆதி 21:8), 4) ஆடுகளுக்கு மயிர்கத்தரித்த பிறகு (1 சாமு 25:11; 2 சாமு 13:23), 5) திராட்சைப் பழ அறுவடையின்போது (நீதி 9:24), 6) பொதுக் கட்டடத்தின் வேலை முடியும்பொழுது (2 நாள் 7:8), 7) ஓர் ஒப்பந்தம் உறுதி செய்யப்படும்பொழுது (ஆதி 26:30; 31:54), 8) திருமணத்தின்போது (நீதி 14:16) என்றிவ்வாறு பல நிலையில் விருந்து நடைபெற்றது. எஸ்தர் நூலில் ஐந்து தனி விருந்துகள் விவரிக்கப்படுகின்றன.

### விருந்து உண்பதற்கான அறை *(GUEST ROOM)*

இஃது இயேசுவும் அவருடைய சீடர்களும் கடைசி இரவுணவை உண்ட இடத்தைக் குறிக்கும் (மாற் 14:14; லூக் 2:11). இதைக் குறிக்கும் அதே கிரேக்கச் சொல்லைச் சத்திரம் அல்லது விடுதியைக் குறிக்க லூக் 2:7 பயன்படுத்துகிறது.

இது பெரிய அறையாக இருக்கலாம். இங்கே பயணியர் தூங்கலாம். இங்குக் குறிப்பிடப்படுவது போல், இது பாஸ்கா விழாத் திருப்பயணியர், பாஸ்கா உணவை உட்கொள்வதற்காக கடன் வாங்கிய அல்லது வாடகைக்கு எடுத்த இடமாகும். ஆகவே, இது தற்காலிகமாகத் தங்கும் இடமாகும்.

### விருந்தோம்பல் *(HOSPITALITY)*

**1. விருந்தோம்பல், ஓர் இரக்கத்தின் பணி:** தேவையான உறைவிடத்தைக் கேட்கின்ற கடந்து செல்லும் வழிப்போக்கர் (பழ 27:8; சீரா 29:21-22), அடிமைப்படுத்தப்பட்ட அன்னியராக இருந்த முந்தைய நிலையை இஸ்ராயேலுக்கு நினைவுபடுத்துகிறார் (லேவி 19:33தொ; காண்க. அ.ப. 7:6). உலகப்பயணியைப் போன்ற அதனுடைய நிகழ்கால நிலையினையும் அது நினைவுபடுத்துகிறது (சங் 39:13; காண்க. எபி 11:13; 13:14). அவரை அன்பு செய்கின்ற இறைவனின பெயரால் இந்த விருந்தாளி

வரவேற்கப்பட்டு அன்புடன் நடத்தப்பட வேண்டும் (உப 10:18-19). அவனது பாது காப்புப் பற்றிய சூழலில் எவ்வளவு உயரிய தியாகமும் மறுக்கப்பட மாட்டா (ஆதி 19:8; நீதி 19:23). அல்லது எதிர்பாராத விருந்தாளியின் தேவைகளைத் திருப்திப் படுத்த தனது நண்பர்களுக்கு இடையூறு ஏற்படுத்தவும் ஒருவன் தயங்குவதில்லை (லூக் 11:5-6). ஆபிரகாமை மாதிரியாகக் கொண்டதும் (ஆதி 18:2-8), யோபு பெருமை கொள்வதும் (யோபு 31:31-32), கிறிஸ்துவால் அங்கீகரிக்கப்பட்டதுமான (லூக் 7:44-46) இந்த ஆர்வமிக்க சமய வரவேற்பானது, மற்றவர்களுக்கான தனது கடமையைப் பற்றி கிறிஸ்தவனை அறியச் செய்கிற சகோதர அன்பின் ஒரு கூறாகும் (உரோ 12:13; 13:8).

**2. விருந்தோம்பல், விசுவாசத்திற்கான சாட்சியம்:** இறுதித் தீர்ப்பின்போது, அன்பின் ஒரு வடிவமாகிய இந்த விருந்தோம்பலின் மறைபொருளை இயேசு ஒவ்வொருவருக்கும் வெளிப்படுத்துவார். தனக்குரியவர்களிடம் கிறிஸ்து வந்ததைப் போன்று விருந்தினரிலும் விருந்தினர் மூலமாகவும் கிறிஸ்து வரவேற்கப்படுகிறார் அல்லது விரட்டப்படுகிறார்; அறிந்து கொள்ளப்படுகிறார் அல்லது அறிந்து கொள்ளப்படுவதில்லை (மத் 25:35.43). அவரது பிறப்பின் போது மட்டும் சத்திரத்தில் அவருக்கு இடம் இருக்கவில்லை (லூக் 2:7). அவரது வாழ்வின் இறுதிவரை உலகம் அவரை அறிந்து கொள்ளவில்லை; அவருக்குரியவர்கள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை (யோவா 1:9-11). அவரில் விசுவாசங்கொள்வோர் ''அவரது பெயரால்'' அவரது பிரதிநிதிகளையும் (13:20), மிகத்தாழ்மையானோர் உட்பட அனைத்து மனிதரையும் வரவேற்கின்றனர் (லூக் 9:48). ஒவ்வொரு விருந்தாளியிலும் ஆண்டவரது பிரதிநிதியையோ, ''வான தூதரையோ'' (ஆதி 19:1-3) மட்டும் பார்க்காமல், ஆண்டவரையே காண்கின்றனர் (மத் 10:40; மாற் 9:37).

எனவே, விருந்தாளியைக் கடனாளியாகவோ (சீரா 29:24-28), வரவேற்கப்படக்கூடாதவராகவோ, நம்பக்கூடாதவராகவோ (1 பேதுரு 4:9) நடத்தாமல், அளிக்கப்பட்ட உதவிகளுக்குப் பிரதிபலன் அளிக்க இயலாதவர்களைப் பேரின்பத்துடன் வரவேற்க வேண்டும் (லூக் 14:13). ஒவ்வொரு கிறிஸ்தவனும் (1 திமொ 5:10) சிறப்பாக மறை ஆயரும் (1 திமொ 3:2; தீத் 1:8) தனது வாயில் கதவைத் தட்டுபவருக்குத் (காண்க. திருவெளி 3:20) தன்னுடைய உறைவிடத்தை அளித்துத் தனது தந்தையுடன் வந்துள்ள இறைமகனைக் காண வேண்டும் (யோவா 14:23). இதற்குப் பிரதிபலனாக இந்த இறைவிருந்தாளிகள் அவனைத் தங்களுடைய இல்லத்திற்குள் விருந்தாளியாக இல்லாமல் வீட்டின் குழந்தையாக அறிமுகப்படுத்துவர் (யோவா 14:2-3; எபே 2:19). தனது மறு வருகையின் போது கதவைத் தட்டுகின்ற தலைவனுக்கு வாயிலைத் திறக்கின்ற விழிப்பான ஊழியர்கள் பேறுபெற்றோர். அவர் நிலைகளை மாற்றி, மேசையில் பரிமாறுவதன் மூலமாகவும் (லூக் 12:37), தனது உணவைப் பங்கிடுவதன் மூலமும் (திருவெளி 3:20) விருந்தோம்பலின் மறைபொருளை வெளிப்படுத்துவார்.

### விரைவு அஞ்சலர் *(COURIER)*

நிலம் வழியாகவும், கடல் வழியாகவும் பயணம் செய்த ஓர் அரச தூதுவன் (2 நாள் 30:6.10; எஸ்த 3:13). பழங்காலப் பாரசீகர்கள், உரோமையர்கள், மற்றும் எல்லா நாகரிகமடைந்த மக்களும் அரசனிடமிருந்து அல்லது பேரரசனிடமிருந்து மற்ற இடங்களுக்குச் செய்திகளை விரைவில் கொண்டு செல்ல நன்றாக அமைக்கப்பட்ட செய்தித்துறையை வைத்திருந்தனர்.

### விலக்கி வைத்தல், ஒதுக்கி வைத்தல் *(BAN, EXCOMMUNICATION)*

1. இது குழு அல்லது சமூகத்தின் தோழமையிலிருந்து ஒருவரை விலக்கி வைத்தல் அல்லது புறம்பாக்குதல் ஆகும். இது கோட்பாட்டுத் தவறு அல்லது ஒழுக்கத்

தவறுக்காக தற்காலிகமாகவோ, நிலையா கவோ ஒருவருக்குத் திருச்சபை அளிக்கும் தண்டனையாகும். இஃது அருட்சாதனங்களி லிருந்தும் திருச்சபையிலிருந்தும் ஒருவரை விலக்கி வைப்பதாகும். இது புதிய ஏற் பாட்டுத் திருச்சபை நடைமுறையிலிருந்து, பிற்காலத் திருச்சபையில் வளர்ச்சியடைந்த ஒரு மரபு.

II. ***பழைய ஏற்பாடு:*** வழிபாட்டு விதி களை மீறியதற்காக, தற்காலிகமாக வழி பாட்டுச் சடங்கிலிருந்து நீக்கப்படுவது, இஸ்ராயேலின் வழிபாட்டுச் சட்டத்தில் காணப்படுகிறது. பாஸ்காவின் காலத்தில் புளித்த உணவை உட்கொள்ளுதல் (*யாத் 12:15.19*), கொல்லப்பட்ட விலங்குகளைச் சந்திப்புக் கூடாரத்தின் வாயிலுக்குக் கொண்டு வரத்தவறுவது (*லேவி 17:4.9*), சடங்குத் தூய்மையின்மையிலிருந்து தன் னையே தூய்மைப்படுத்தத் தவறுவது (*எண் 19:20*) போன்ற பெரிய சடங்குக் குற்றங்க ளுக்குத் தண்டனை இஸ்ராயேல் சமூகத்திலி ருந்து முழுவதும் நீக்கப்படுவதாகும்.

விலக்கி வைத்தல் என்ற அச்சுறுத்தல், முதன் முதல் எஸ்ரா காலத்தில் தோன்றுகி றது. எஸ்ரா கலப்பு மணத்திற்கு எதிராகப் போராடினார். கலப்புத் திருமணம் செய்த வர்கள் எருசலேமுக்கு வந்து விளக்கம் தர அழைக்கப்பட்டனர். அதற்கு வர மறுத்தவர் களுடைய உடைமைகள் பறிமுதல் செய்யப் படும்; மக்களிடமிருந்து விலக்கி வைக்கப் படுவர் (*எஸ் 10:8*). இது முற்றிலும் பிரித்து வைக்கப்படும் முற்கால வழக்கிலிருந்து சிறிது மட்டுப்படுத்தப்பட்டதாகும். முற் கால வழக்கு தவறு செய்தவரின் மரணத்தை யும், அவருடைய உடைமைகள் அழிக்கப் படுதலையும் உள்ளடக்கும் (*லேவி 27:28-29*).

III. ***புதிய ஏற்பாட்டுக்காலம்:***

***அ) யூதர்களிடையே:*** புதிய ஏற்பாட்டுக் காலத்தில், சாதாரணமாகப் பெரிய சமய அல்லது ஒழுக்கக் குற்றங்களுக்காக செபக் கூடத்திலிருந்து விலக்கிவைத்தல் யூதர்களி டையே வழக்கில் இருந்தது. கடுமை குறைந்த அளவில், ஒருவர் தண்டனையாக, முப்பது நாட்களுக்குப் பிறரோடு பேசுவதி லிருந்து தடுக்கப்படலாம். வரையறையற்ற காலத்திற்குச் சமயச் சலுகைகளிலிருந்து விலக்கி வைப்பதற்குப் பத்துப் பேராவது தீர்மானிக்க வேண்டும். இது கடுமையான வடிவமாகும். மூன்றாவது வடிவமான முழுவதும் விலக்கி வைப்பது பற்றி அறி ஞர்களிடையே கருத்தொற்றுமையில்லை.

லூக் 6:22-இல் பயன்படுத்தப்பட்டிருக் கும் மூன்று வேறுபட்ட சொற்கள் யூதரி டையே நிலவிய மூன்று வகையான விலக்கி வைத்தல்களைப் பிரதிபலிப்பதாகத் தெரிகிறது. கும்ரான் சமூகத்தில், வெவ் வேறு குற்றங்களுக்கு, வேறுபட்ட காலங்க ளுக்கு உறுப்பினர்கள் தண்டிக்கப்படுவார் கள். இந்தத் தண்டனைகள் எப்போதும், குறிப்பிடப்பட்டே இருப்பதில்லை. புனித உணவிலிருந்தும் (தூய்மை), சமூகத்தோ டான முழு ஒன்றிப்பிலிருந்தும் சில காலங் களுக்கு விலக்கப்படுவது ஒரு வகையான தண்டனையாகும். தலைவர்களுக்கு எதி ராகச் சபிப்பது அல்லது அவதூறு பேசுவது போன்ற குற்றத்திற்கு விலக்கப்படுவ துண்டு. அஃதோடு மீண்டும் சேர்த்துக் கொள்வதும் கிடையாது. விலக்கப்பட்ட ஒருவர் மீண்டும் சேர்த்துக் கொள்ளப்பட, இரண்டு வருடங்களாவது வேண்டும். பத்து வருடமாகப் பிரிந்து இருக்கின்றவனோடு, புனித உணவைப் பகிர்ந்து கொண்டவனும், நிரந்தரமாக ஒதுக்கி வைக்கப்படுவான். புதிய ஏற்பாட்டுக் குறிப்புகளின்படி, இயேசு வைக் கிறிஸ்துவாக ஏற்று அறிவிப்பவர் கள், செபக்கூடத்துக்குப் புறம்பாக்கப்பட்ட னர் (*யோவா 9:22; 12:42; 16:2*). இது யூதர்களிடையே இருந்த பழக்கத்தைச் சுட்டிக்காட்டுகிறது. இந்தப் புறம்பாக்குத லால் எல்லாச் சமூக, சமய ஒன்றிப்பிலிருந் தும் வெளியேற்றப்பட்டனர்.

***ஆ) கிறிஸ்தவச் சமூகத்தில்:*** ''பாதிக்கப் பட்ட சகோதரன், முதலில் நேரடியாகச் சென்று, கண்டித்துப் பார்க்க வேண்டும். அவன் செவிசாய்க்காவிடில், இரண்டு அல் லது மூன்று சாட்சிகள் மூலம் போக வேண்டும். அதுவும் முடியவில்லை என்

றால் திருச்சபையாரிடம் சொல்ல வேண்டும்: அப்படியும் இல்லையென்றால் புற இனத்தான் போல ஆகட்டும்'' என்று உள்ளது (மத் 18:15-17). இது யூத நடைமுறைக்கு ஒத்து உள்ளது. மேலும், கும்ரான் பிரிவின் விதிகளுக்கு அப்படியே பொருந்தியிருக்கிறது. இது மத்தேயு நற்செய்தி எழுதும்போது இருந்த யூதக் கிறிஸ்தவப் பழக்கத்தை நன்கு பிரதிபலிக்கிறது.

கிறிஸ்தவ விலக்கி வைத்தலின் தோற்றத்தை மத் 16:19; 18:18 (காண்க. யோவா 20:23) போன்ற பகுதிகளிலிருந்து காணலாம். இந்தக் கூற்று திருச்சபை கட்டுவதும், அவிழ்ப்பதும் ஆகிய அதன் ஆன்மீக அதிகாரத்தைக் குறித்துக் காட்டுகிறது.

பவுல், திருச்சபைகளின் ஒழுக்கப் பிரச்சனைகளை எதிர்கொள்ளும்போது, திருச்சபையில் அமைதியை நிலைநாட்ட அல்லது மீண்டும் அமைக்க, சில சமயங்களில், விலக்கிவைத்தலைக் கையாள வேண்டியிருந்தது. உழைக்க மறுத்த தெசலோனிக்கேயருக்கு உழைக்க மனமில்லாதவன் உண்ணலாகாது என்று கட்டளை கொடுத்துள்ளார் (2 தெச 3:10). இம்மாதிரி தண்டனைகள் கும்ரான் சமூகத்தில் நடைமுறைப்படுத்தப் பட்டிருந்தது. பவுல், தன் கடிதத்தில் சொல்லியவற்றுக்கு யாராவது கீழ்ப்படியாவிட்டால், ''அவனுக்கு வெட்கமுண்டாகும்படி, சபையில் அவன் பெயரைக் குறிப்பிட்டு அவனோடு உறவு வைத்துக்கொள்ளாதீர்கள்'' என்று தெசலோனிக்கேயருக்கு எழுதியுள்ளார் (2 தெச 3:14-15). ஆனால், முக்கியமான பெரிய குற்றங்களுக்காக, ''தீயவனை உங்களிடையேயிருந்து களைந்தெறியுங்கள்'' (1 கொரி 5:13) என்றும் கூறியுள்ளார். மேலும், ''ஒருவன் தன் தந்தையின் மனைவியை வைத்திருக்கிறானாம். இச்செயல் செய்தவனை உங்களிடையேயிருந்து அகற்றி விட்டிருக்க வேண்டும். அத்தகையவனைச் சாத்தானுக்குக் கையளிக்க வேண்டும்'' என்று எழுதியுள்ளார் (1 கொரி 5:1-5). மேலும், இப்பகுதியில் ''அவனது உடல் அழிவுற்றாலும், அவனது ஆன்மா ஆண்டவரின் நாளில் மீட்படையும்படி இவ்வாறு செய்வோம்'' என்று எழுதப்பட்டிருப்பது, தெளிவற்ற நிலையில் உள்ளது. பிறகு, பவுல் தனது இரண்டாவது கடிதத்தில் ''அவனை மன்னித்து அவனுக்கு ஊக்கம் அளிப்பது நல்லது'' என்று கூறுவது (2 கொரி 2:6-11) மேற்கண்ட குற்றத்தைச் செய்தவனைப் பற்றித்தானா என்பது தெளிவாக இல்லை. பலரால் தண்டனை அளிக்கப்பட்டது. இது பவுலின் கருத்துப்படி மனந்திரும்பவும், சமூகத்தில் சேர்த்துக் கொள்ளப்படவும் கொடுக்கப்படுகிறது. திருச்சபையில் பலர், இன்னும் அவன் புறம்பாக்கப்பட வேண்டும் என்று கருதினர். அதற்குப் பவுல் தண்டனையின் குறிக்கோள் மனமாற்றமே என்று தெளிவுறுத்தினார்.

கொரிந்து, தெசலோனிக்கேய நகர்களுக்கு எழுதிய கடிதங்கள், அவ்வளவு கண்டிப்பான விதிகள் கொண்ட நிறுவன முறையைக் காட்டவில்லை. மேய்ப்புப் பணித் திருமுகங்களும், ஒழுக்க முறையைப் பற்றி, குறிப்பாக கோட்பாடுகளைப் பொருத்தமட்டும், அவ்வளவு நீக்குப்போக்குக் காட்டவில்லை. கோட்பாட்டு அளவில் பிரிவுகளை உண்டாக்கி விலகிச் செல்பவர், ஒழுக்க நெறியில் குற்றம் புரிபவனைத் தண்டிப்பதுபோல, தண்டிக்கப்பட வேண்டும்; அதன்பிறகு விலக்கப்பட வேண்டும் (தீத் 3:10). போலிக் கோட்பாடுகளைக் கூறியவன், சமூக உறவுகளிலிருந்து விலக்கப்படலாம் (1 திமொ 1:20; 6:3; 2 யோவா 10). வெளியேற்றுவது, ஒழுக்க முறையின் ஒரு பகுதியோ, சாத்தானுக்குக் கையளிப்பதோ இல்லை. இதன் முக்கியமான நோக்கம், நோயுற்ற அங்கத்தினரை வெட்டி, திருச்சபையை அழிவிலிருந்து காப்பதுவே ஆகும். ராபிகளின் மரபுப்படி, இயேசு சமூகத்திலிருந்து விலக்கப்பட்டவர் ஆவார். அவர் எதையும் செய்யக்கூடாது என்று கட்டளையிடப்பட்டிருந்தார். பவுல் (1 கொரி 12:3) ''கடவுளுடைய ஆவியின் ஏவுதலால் பேசும்போது, 'இயேசுவுக்குச் சாபம்' என்று யாரும் சொல்லுவதில்லை'' என்று கூறும்போது, இயேசு விலக்கப்பட்ட

வர் என்ற குற்றச்சாட்டுக்குப் பதில் அளிக்கிறார். பவுல் ''இரத்த உறவினரான என் சகோதரர்களுக்காக நான் கிறிஸ்துவைப் பிரிந்து சாபத்துக்கு உள்ளாகவும் தயங்கேன்'' என்று கூறியுள்ளார் (உரோ 9:3). பவுல் தனது நற்செய்திக்கு எதிராகப் போதிப்பவர்களையும் (கலா 1:8), ஆண்டவரின்பால் அன்பு இல்லாதவர்களையும் (1 கொரி 16:22) விலக்கி வைக்க வேண்டும் என்று விருப்பம் தெரிவித்திருக்கிறார். அதிகாரத்தைப் பற்றியும் யார் யாரை விலக்கி வைப்பது என்பது பற்றியும் பதிதம் மற்றும் பிளவுச் சூழ்நிலையில் கேள்வி எழுகிறது. இது தியோத்திரபு காரியத்தில் தெளிவாகிறது. (3 யோவா 9-10).

பிற்காலத்தில் விரிவான முறையாக வளர விருந்ததின் தொடக்கத்தைப் புதிய ஏற்பாடு பிரதிபலிக்கிறது. அது, பரந்த மற்றும் சக்தியுள்ள நிறுவனமாகப் படிப்படியாக உருமாறியது; சிக்கலான சட்டமுறைக்கு இட்டுச்சென்றது.

**விலங்குகளும், விலங்கும்** (BEASTS & BEAST)

***1. அடையாளம் தோன்றிய விதம்:***

மத்தியகாலத்தில் மேலைநாடுகளில் எழுதப்பட்ட விலங்கியல் விளக்க ஏடு போல விவிலியம் விலங்குகளைப் பற்றி எந்த அடையாள விளக்கமும் தரவில்லை. அதிகம் போனால், குறைவான அடையாளவியலை ஒருசில விலங்குகளைப் பற்றித் தருகிறது விவிலியம். இந்த விலங்குகள் மனிதனின் எதிரிகளாகச் சித்திரிக்கப்படுகின்றன; சமயச் சிந்தனையில் இடம் பெறுகின்றன. ஆதியாகமத்திலிருந்து திருவெளிப்பாடு வரை பல இடங்களில் விலங்குகளின் ஓவிய விவரிப்புகள் காணப்படுகின்றன. விலங்குகளின் கூட்டத்தைப் பற்றிய மறைபொருள் சிந்தனை எதுவும் இல்லை. ஆனால், மிகுந்த வெறுப்புக்குரிய விலங்கிலிருந்து கற்பனை விலங்குவரை அனைத்தும் உள்ளன. கொடிய விலங்குகள், சிங்கங்கள், ஓநாய்கள், சிறுத்தைகள் (ஓசே 5:14; அப 1:8), கழுதைப்புலி, நரிகள் (எசா 13:22), சிதைவுகளில் உலவும் வேட்டையாடும் விலங்குகளும் பறவைகளும் (எசா 13:21; 34:11தொ; செப் 2:14), பாம்புகளிலிருந்து முதலைவரை (சங் 91:13; எசே 29), வெட்டுக்கிளி, சுவர்க்கோழி போன்ற அழிவைக் கொண்டுவரும் பூச்சிகள் (நாகூ 3:15.தொ) ஆகிய அனைத்தும் விவிலியத்தில் காணப்படுகின்றன. பேய்களோடு தொடர்புடைய முழுவதும் தீய உயிரினங்கள் மனிதனை நேருக்கு நேர் எதிர் கொள்கின்றன. பறவை நாகம், பறக்கும் பாம்பு, ராகபு, லிவியத்தான் போன்ற விலங்குகளின் (எசா 27:1; யோபு 7:12; எசா 51:9) மிகச்சிறந்த முன்மாதிரியாகக் கடலின் பெருநாகம் (ஆதி 1:21) அமைகிறது. லிவியத்தான் மேற்காசிய இதிகாசங்களின் அடையாளவியலில் கடலைக் குறிக்கிறது. இது யாவேயின் மீட்புத்திட்டத்தின் எதிரியாக அவரையே நேருக்கு நேர் எதிர்கொள்கிறது.

***2. தொடக்கங்கள்:*** புராணத்தன்மை நீக்கப்பட்ட ஒரு சில உருவகங்களைக் கையாளும் விவிலியப் பகுதிகள் கடவுளின் படைப்புச் செயலை இவ்வாறு விளக்குகின்றன; லிவியத்தான் அல்லது ராகபு எனும் குழப்பமே உருவானவனாகிய மாபெரும் பூதத்துடன் போராடி அவனை வென்று கடவுள் வெற்றியை நிலைநாட்டினார், அதனால்தான் உலகம் படைக்கப்பட்டது என்கின்றன (சங் 74:13; 89:10தொ; யோபு 9:13. 25:12; எசா 51:9). இந்தப் போர், வரலாற்றில் நடக்கும் எல்லாப் போர்களுக்கும் பொருள் தரக்கூடியதாக வரலாற்றுச் சூழலுக்குப் புறம்பே நடைபெறுகிறது. இன்பவனம் பற்றிய நாடகமும் இது போன்றதுதான் (ஆதி 3). ஆதியாகமத்தில் கடவுள் மற்றும் மனிதர்களின் தந்திரமுள்ள எதிரி அவனது உண்மையான பெயரால் அழைக்கப்படவில்லை. மாறாக, மண்ணகப் பாம்பிற்குப்பின், பாம்பின் மூல மாதிரியான பேய் மற்றும் சாத்தானுமான நாகம் செயல்படுகிறது (ஞான 2:24; திருவெளி 12:9; 20:2). இவ்வாறு விலங்குகளில் எல்லாம் சபிக்கப்பட்ட விலங்கு சாபத்தின் பெரிய பிரதிநிதியாகும். இந்த விலங்கு தான்

ஓரளவு ஆதிக்கம் பெற்றுள்ள பெண்ணின் சந்ததிக்கு எதிராகத் தன் சக்தியைச் சோதித்தறியும் (ஆதி 3:14தொ) களங்களின் பட்டியலே வரலாறு ஆகும்.

**3. மனிதனுக்கெதிரான விலங்கின் போராட்டம்:**

**அ. விலங்குகள் மனிதனைத் தண்டிக்க கடவுளின் கருவிகளாதல்:** இந்தப் போர் தொடக்கத்தில் இம்மைக்கால மட்டத்தில் நிகழ்கிறது. பாவமுள்ள மனிதகுலத்தின் மீது பழியைப் போடுகிறது தீமையின் வடிவான விலங்குகள். ஆனால், அவை முழுச்சுதந்தரத்துடன் செயல்பட கடவுள் விடுவதில்லை. அவைகளின் செயலின் முடிவைத் தமது விருப்பத்திற்கு ஏற்ப கடவுள் மாற்றி அமைக்கிறார். எகிப்திற்கு எதிரான கடவுளின் தீர்ப்பை நிறைவேற்றும் கைவினைஞர்களாகச் செயல்படுகின்றன இந்த விலங்குகள் (யாத் 7:26-8:28; 10:1-20; ஞான 16:1-12). விசுவாசமற்றவர்களுக்கு எதிரான கடவுளின் சாபத்தை அவை நிறைவேற்றுகின்றன (உப 28:26.42; லேவி 26:22; காண்க. எரே 15:3). விலங்குகளின் கைகளில் விடப்பட்ட நகரங்களின் நிலையைப் பற்றிப் பேசும்பொழுது அது மனித சமூகத்தின்மீது விழும் தண்டனையாகக் கருதப்படுகிறது (எசா 34:11தொ; எரே 9:10; 10:23; 49:33; 50:39; 51:37; செப் 2:14தொ). பாலைவனத்தில் கொள்ளிவாய்ப் பாம்புகள் கடவுளுக்கு எதிராக முணுமுணுத்தவர்களைக் கடிக்கிறது (எண் 21:5-7). பாவமுள்ள மனிதனைக் கருதி இறுதிநாளில் தண்டிக்க வரும் வெட்டுக்கிளிகளாக உருவக முறையில் பேசப்படும் குதிரைவீரர்கள் வருவார்கள் எனத் திருவெளி 9:3-10 கூறுகிறது (காண்க. நாகூ 3:15தொ; எரே 51:27). அவர்களுக்குப் பாதாளத்தின் தூதன் தலைமை தாங்குகிறான் (திருவெளி 9:11). மீட்புக்காகக் குறிக்கப்பட்டவர்களைத் தவிர ஒருவரும் தப்ப முடியாது (9:4; காண்க. 7:3).

**ஆ. விலங்கின் வெற்றி:** அதே நேரத்தில் சாத்தான் மற்ற வெற்றியையும் அடைகிறது. மனிதர்கள் அது மாறுவேடத்தில் இருக்கும் போது அதனை வழிபடுகின்றனர். மனிதர்கள் கண்மூடித்தனமாக எல்லா ஊர்வனவற்றின் சிலைகளையும் வழிபடுகின்றனர் (எசே 8:10). இஃது இஸ்ராயேலில் சட்டத்தால் விலக்கப்பட்ட ஒன்று (உப 4:16 தொ). ஆனால், இத்தகைய சிலைவழிபாடு புறவினத்தாரின் மத்தியில் மிகப் பிரபலமாக இருந்தது (ஞான 11:15; 12:24; 13:10.14; உரோ 1:23). எனவே, அது கடவுளின் கோபத்தை அவர்கள் மேல் கொண்டு வந்தது (ஞான 16:1-9; உரோ 1:24தொ). ஒருசில புறவின அரசுகளில் இத்தகைய விலங்குகள் மனுவுரு எடுத்து உலகில் பல நாடுகளோடு போர் புரிகின்றன; சிறப்பாக, கடவுளின் மக்களுக்கெதிராகப் போரிட்டுத் தெய்வ நிந்தனைக்குரிய மமதையைக் கொண்டிருக்கின்றன (தானி 7:2-8). இவ்வாறு ஆதியிலே தொடங்கிய போராட்டம், உலகில் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கிறது (திருவெளி 13:4). அரசனுக்கு முன்னால் இவன் தன்னையே எதிர்க் கிறிஸ்துவாக அறிவித்துத் தெய்வ நிந்தனை செய்து, புனிதர்களைத் துன்புறுத்தி அவர்கள் அவனை வணங்குமாறு செய்வான் (திருவெளி 13:1-9). அவனது எண்ணைக் கொண்டிராத யாரும் இங்கு வாழ்வதற்குரிய உரிமை பெற்றவர்கள் அல்லர் என்கிறான் (13:16). இவ்வாறு அனைத்தும் தனக்குக் கீழ்ப்பட்டதே என்று உரிமை பாராட்டியது அந்தியோக்கு எப்பிபான் அல்லது உரோமைப் பேரரசு மட்டுமல்ல. வரலாற்றில் இத்தகைய நிகழ்வுகள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

**இ. விலங்கின் தோல்வி:** விலங்கு பெற்ற வெற்றி போலித்தோற்றமும், தற்காலிக மானதுமாகும். ஏனெனில், பழைய ஏற்பாட்டுக் காலத்திலிருந்தே விசுவாசிகளின் வெற்றிதான் மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்தப்படுகிறது. மோசே வெண்கலத்தால் செய்த பாம்பைப் பாலைவனத்தில் உயர்த்தியபோது அதை நோக்கிய இஸ்ராயேலர் இறக்காமல் உயிர் பிழைத்தனர் (ஞான 16:6). புறவினத்தார் விலங்குகளை வழிபட்டபோது உயிருள்ள கடவுளின் மேல்

தான் கொண்ட விசுவாசத்தை இஸ்ராயேலர் காத்துக் கொள்ள முடிந்தது (தானி *14:23-42*). சிங்கங்களால் வந்த ஆபத்தைக் கூட, துணிவோடு சந்திக்க முடிந்தது; கடவுள் அதனை மீட்கிறார் (தானி 6). ஏனெனில், கடவுள்மீது யார்யார் நம்பிக்கை வைக்கிறார்களோ அவர்களை ஆண்டவர் தமது தூதர்களைக் கொண்டு காக்கிறார். அவனும் தன் காலால் அந்த விலங்கை நசுக்குவான் (சங் *91:11-13*). இந்த முன் நிகழ்ந்த வெற்றிகள் எல்லாம் இயேசு பெறும் வெற்றியின் முன்னடையாளங் களாய் இருக்கின்றன. இயேசு சாத்தானை வென்றபோது (மத் *4:1-11*), அவர் காட்டு விலங்குகளோடு பாலைவனத்தில் இருந் தார். வானதூதர்கள் அவருக்குப் பணிவிடை செய்தனர் (மாற் *1:13*). அவரது சீடர்களுக் கும் அவர் பாம்பையும் தேளையும் எதிரி யின் சக்தி அனைத்தையும் நசுக்க ஆற்றல் அளிக்கிறார். ஏனெனில், சாத்தான் விண்ணி லிருந்து வீழ்ந்து விட்டது. தீய ஆவிகள் எல்லாம் இயேசுவின் பிரதிநிதிகளுக்குக் கீழ்ப்பட்டவையாகின்றன (லூக் *10:17*தொ; காண்க. மாற் *16:17*தொ). விலங்கின் தோல்வி இன்னும் வெளிப்படுத்தப்படவில் லையெனினும், அது நிகழ்ந்துவிட்ட தொன்றாகும்.

**4. விலங்கின் சாவு:** வரலாற்றுக்கு முற்றுப்புள்ளி அளிக்கும் இறுதியான தீர்ப்பு இந்தத் தோல்வியைச் செயல்படுத்தும். இந்த விலங்கு வெட்டிச் சாய்க்கப்பட்டு நெருப்பிலே போடப்படும் (தானி *7:11-27*). இவ்வாறு பேயும் சாத்தானுமாகிய ஆதிப் பாம்பின் தோல்வி நிகழும் (திருவெளி *12:9*). இதுவே கிறிஸ்து மேற்கொள்ளும் இறுதிப் போராகும் (*19:11-16*). இதில் தனது புனித நகரத்தைப் பிற தீயநாடுகளிடமிருந்து பாதுகாப்பார் (*20:8*தொ). அப்பொழுது சாத்தான், சாவு, நரகம், போலி இறைவாக் கினர்கள், விலங்கினை வழிபட்டவர்கள், எதிர்க்கிறிஸ்துவைப் பின்பற்றுபவர்கள் ஆகிய அனைவரும் நெருப்பு ஏரிக்குள் எறியப்பட்டு, கொல்லப்படுவர். இதுவே இ ண்டாம் சாவு (*19:19*தொ; *20:10.14*). இறுதியில், ஆதியிலே தொடங்கிய நாடகம் முடிவு பெறும்.

**விலங்குகள்** *(*ANIMALS*)*

I. **விவிலியத்தில் விலங்குகள் பட்டியல்:**

காண்க. விவிலியத்தில் உயிரினங்கள்.

II. மனிதனுக்கு மிக நெருங்கிய கட்புல னாகிற படைப்பின் ஒரு பகுதியாக விலங்கு உலகம் அமைந்துள்ளது. இந்த நெருக் கத்தை நம்மைவிட, எபிரேயர்கள் அதிகம் உணர்ந்திருந்தனர். ஏனெனில், நம்மைவிட அவர்கள் விலங்குகளோடு நிலையான தொடர்பு கொண்டிருந்தனர். அதனால்தான், சில மனித மனநிலைகளை விவரிக்க விவிலியம் விலங்குப் பண்புகளைப் பயன் படுத்துகிறது. இவ்வாறு எதிரி நாய் என் றழைக்கப்படுகிறான் (சங் *22:17*); படை யெடுத்துவரும் படை வெட்டுக்கிளிகளின் மேகமாகிறது (எசா *33:4*). சில சமயம் இறைவனும், சில சமயம் எதிரியும் சிங்க மாக விவரிக்கப்படுகின்றனர். சில அடை யாளங்களின் இருமுகப் போக்கில், விலங் குகள் மிகச்சிறப்பானவற்றையும் இழிவான வற்றையும் செய்யக்கூடிய தன்மை பின்ன ணியாக உள்ளது என்பதைக் காண்பது அவசியமாகும். அடிக்கடி மக்கள் மந் தைக்கு ஒப்பிடப்படுகின்றனர் (2 சாமு *12:1-4*; எரே *23:1-8*; எசே *34*; யோவா *10:1-16*). கிறிஸ்துவை எடுத்துக்காட்ட செம் மறியும் (யோவா *1:29*; திருவெளி *5:6*), தூய ஆவியை எடுத்துக்காட்ட புறாவும் (மத் *3:16* இணை) பயன்பட்டுள்ளன.

இந்தத் தற்செயலான குறிப்புகளோடு, விலங்குச் சக்தியை எதிர்கொண்டு, அதன் மேல் தங்கள் மேலாண்மையைச் செயல் படுத்திய, விவிலிய நிகழ்ச்சிகளில் வரும் ஆட்களின் முயற்சிகளையும் நாம் கவனிக்க வேண்டும்.

இதற்குமேல், விலங்கு உலகில் தாங்கள் பங்குகொண்டு, அதில் தங்களது நிலையை ஓரளவு விரும்பிப் புகுத்தி, விலங்கு உலகைப் பற்றிப் பேசும்போது புனித எழுத்தாளர்கள் மனுகுலம் மற்றும்

படைப்பு ஆகிய எல்லாவற்றின் நாடகத்தை, மீட்புக்கான ஏக்கத்தை இறுதியில் வெளிப்படுத்துகின்றனர்.

III. **படைப்பில் விலங்குகளும் மனிதனும்:**

***1. விலங்குகள் மனிதனுக்கு மேலானவையா?:*** விலங்கு வழிபாடு, எகிப்தியருடையதைப் போன்ற முதிராப் பண்புடைய சமயங்கள் இந்த மனிதனல்லாத உயிர்களுக்கு எவ்வளவு புனித மரியாதை செலுத்தின என்பதைக் காட்டுகின்றது. விலங்குகளை இறைத்தன்மையுடையதாக்குவது அல்லது அவற்றின் உருவங்களை வணங்குதல் ஆகிய சோதனைக்குச் சில சமயங்களில் இஸ்ராயேலர் பணிந்தனர் (யாத் 32; 1 அர 12:18-31). ஆயினும், மோசேயின் சட்டமும் இறைவாக்கினர்களின் எச்சரிக்கைகளும் ஞானிகளின் ஆலோசனையும் இந்த இழிவாக்கும் பாதையிலிருந்து எபிரேயர்களைத் திரும்பச் செய்தன (ஞான 15:18தொ; காண்க. உரோ 1:23). சிலை வழிபாட்டைக் கொண்டிருந்த எதிரிகளைப் பொருத்த மட்டும், அவர்கள் வணங்கிய விலங்குகளால் பாதுகாப்புப் பெறுவதற்குப் பதிலாக, அவற்றால் தண்டிக்கப்பட்டனர் (ஞான 15-16; யாத் 39:4.17-30; திருவெளி 19:17தொ.21).

***2. விலங்குகளுக்கும் மனிதருக்குமிடையிலான பிணைப்பு:*** மனிதனுக்கும் விலங்குகளுக்குமிடையேயுள்ள ஒற்றுமை, குறிப்பாக இருவரும் மண்ணிலிருந்து பொதுவாகத் தோன்றுவதிலும், புதை குழியிலே முடிவதிலும் உள்ள ஒற்றுமை, சில சமயம் கொடுமையாக எடுத்துக் கூறப்படுகிறது (திருவுரை 3:19தொ; சங் 49:13). அடிக்கடி, பெரும்பாலும் முனைப்பற்ற முறையில், இரு படைப்புகளும் ''வாழும் உயிரினங்கள்'' என்று அழைக்கப்படுகின்றன. இரண்டிற்குமிடையே ஒரு சகோதரப் பிணைப்பு இருப்பது போல் தோன்றுகிறது. சிலசமயம் மனிதன் விலங்குகளுக்கு உதவுகிறான். நோவா வாழும் உயிரினங்களின் ஓரிணையை நீரிலிருந்து காப்பாற்றுகிறார். மற்றச் சமயங்களில் விலங்குகள் மனிதனுக்கு உதவுகின்றன. புலனாகாதவற்றைக் காணும் திறனுடைய பெண் கழுதை பிலயாமைக் காப்பாற்றுகிறது (எண் 22:22-35). காகங்கள் எலியாவுக்கு உணவளிக்கின்றன (1 அர 17:6). ஒரு பெரிய மீன் பிடிவாதமுடைய யோனாவைக் காப்பாற்றி, சரியான பாதையில் நடக்கச் செய்கிறது (யோனா 2). தங்களது நிறைவுடைமையால் விலங்குகள், யோபுவைப் படைப்பவரின் எல்லாம் வல்ல தன்மையைக் கண்டுணரச் செய்கின்றன (யோபு 38:39-39:30; 40:15-41:26); இறுதியாக, வாழும் எல்லா உயிர்களுக்கும் இறைவன் தமது நலன்களை அளிக்கத் தவறுவதில்லை என்று மனிதர்களுக்கு நினைவூட்டுகின்றன (சங் 104:27; 147:9; மத் 6:26).

விலங்குகள் இறைவனுக்கும் நோவாவுக்கும் இடையிலான உடன்படிக்கையில் பங்கெடுக்கும் அளவுக்கு மனிதனோடு நெருக்கமுள்ளவையாய் உள்ளன. அவை மோசேச் சட்டத்தின் பொருளாகவும் ஆகின்றன. ஓய்வு நாள் சட்டம் விலங்குகளுக்கும் அடிமைகளுக்கும் பொருந்தும் (யாத் 23:12; உப 5:14). அவற்றின் பால் மனித நேயப் பண்பு காட்ட வேண்டும் என்று கட்டளையிடப்படுகிறது (யாத் 23:5; உப 22:6தொ; 25:4; காண்க. 1 கொரி 9:9; 1 திமொ 5:18). பிறரைத் துன்புறுத்தும் விலங்குகள் தண்டிக்கப்படும் (ஆதி 9:5; லேவி 20:15தொ). சில சமயங்களில் அவை கல்லால் எறியப்படும் (யாத் 21:28-32). இறுதியாக, மனிதனது மனத்துக்கத்தோடும் (யோன 3:7), அவனது தண்டனையோடும் (யாத் 11:5) அவை தொடர்புபடுத்தப்படுகின்றன.

***3. விலங்குகளின் மேல் மனிதனுக்குள்ள மேம்பாடு:*** ஆயினும், படைப்பு வரலாறு விலங்குகள் மேல் மனிதன் கொண்டுள்ள உயர்வு பற்றிய கூரிய உணர்வைச் சுட்டிக் காட்டுகிறது. தனது ஆதிக்கத்தை உறுதிப்படுத்தும் முறையில் ஆதாம் விலங்குகளுக்குப் பெயரிடுகிறார் (ஆதி 2:20). இந்த விலங்குகளில் ''தனக்குத் தகுந்த துணையை மனிதன் காணவில்லை'' (2;18-23). விலங்குடன் புணர்ச்சி கொள்வது கடினமாகத்

தண்டிக்கப்படுகிறது (*யாத் 22:19; உப 27:21; லேவி 18:23*). மனிதன் விலங்கைக் கொன்று உணவாகக் கொள்ளலாம் (*ஆதி 9:2தொ*). மனிதனின் உயர்வு வெற்றி வடிவில் எடுத்துக் கூறப்படுகிறது (*1:26-30*). இதற்கு மாறாக, நேர்மையற்ற நெபுகத்னேசருக்குத் தண்டனையாக, ''விலங்கின் மனம் கொடுக்கப்பட்டது'' (*தானி 4:13*). ஆவிக்கும், இறுதியில் இறைவனுக்கும் எதிரான கிளர்ச்சியை மனித விலங்கு நடத்தை அடையாளப்படுத்துகிறது.

ஆயினும், விலங்குகளின் மேம்பாடு பற்றிய நம்பிக்கைகளின் சில எஞ்சிய கூறுகள் புனித ஆசிரியர்களின் ஏடுகளில் காணப்படுகின்றன. அவர்கள் நம்பத்தகாத, வியத்தக்க விலங்குகளைப் பற்றிப் பேசத் தயங்கவில்லை. இவற்றின் தோற்றம் எதுவானாலும், இவை இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒன்றைச் சுட்டுகின்றன. இது பேயோடு நெருங்கிய (*திருவெளி 12:13; 16:13தொ; 20:1தொ*), மனித சக்திக்கு அப்பாற்பட்டதாக இருக்கலாம் (*தானி 7; திருவெளி 9:3-11*) அல்லது இறையுலகைச் சேர்ந்ததாக இருக்கலாம் (*எசே 1:4-24; திருவெளி 4:6தொ*).

IV. **மீட்பில் விலங்குகளும் மனிதனும்:**

**1.விலங்குகளின் கிளர்ச்சியும் பணிவும்:** காட்டு விலங்குகள் இருப்பது, மனிதனுக்கு எதிராக இயற்கை செய்யும் கிளர்ச்சியையும் உலகில் புகுத்தப்பட்ட சீர்குலைவையும் எடுத்துக்காட்டுகின்றது; அவற்றை அடையாளப்படுத்துகின்றது. இந்நிலை மனிதனது பாவத்தின் விளைவாகும். ஆதாமின் கீழ்ப்படியாமைக்குமுன், வீட்டு மற்றும் காட்டு விலங்குகள் அனைத்தும் தங்களுக்குப் பெயரிட்டவனுக்குப் பணிந்திருப்பதாய்த் தோன்றுகின்றன. ஆனால் பாவத்தின் விளைவாக, விலங்கு உலகம் உட்பட்ட படைப்பு அனைத்தும் அழிவிற்கு அடிமையாகிவிட்டது (*காண்க. உரோ 7:19-22*). ஆனால், முன்னறிவினால் அல்லது மெசியா அருளினால், சில வேளைகளில் வெல்லப்பட்ட விலங்குகள் இன்பவனத்தை நினைவுபடுத்தும் முறையில், பணிவுள்ளவைகளாக மாறுகின்றன (*தானி 6:17-25; 14:31-42; சங் 91:13; மாற் 1:13; 16:18; அ.ப. 28:3-6*). உலகம் தன் பாவத்திலிருந்து முழுவதும் தூய்மையாக்கப்படும் இறுதிக் காலத்தில், கொடுமையான விலங்குகள் மறைந்துபோகும் (*லேவி 26:6; எசே 34:25*) அல்லது நன்கு பழக்கப்பட்டவையாகும் (*ஓசே 2:20; எசா 11:5தொ; 65:25*). மீண்டும் ஒன்றிணைக்கப்பட்ட உலகில் இயற்கை கிளர்ச்சி செய்ய அறியாது. மனிதரில் காணப்படும் விலங்குத் தன்மையும் (*காண்க. யாக் 3:2-8*) முழுவதும் வெற்றி கொள்ளப்படும்; மாற்றி அமைக்கப்படும் (*1 கொரி 15:44தொ*).

**2. தூய்மையானவை தூய்மையற்றவை என்ற பிரிவுகளுக்கு அப்பால்:** விலங்குகள் தூய்மையானவை, தூய்மையற்றவை என்று பிரிக்கப்படுவது நீண்ட காலம் இருந்திருக்கிறது; மறை பொருள் மிக்கதாகத் தோன்றுகிறது (*காண்க. லேவி 11; உப 14*). இப்பிரிவு, மனுகுலத்தைத் தூய இஸ்ராயேலர் தூய்மையற்ற புறவினத்தார் என்று பிரித்து, இக்கருத்தை யூதத்துவத்துக்குள் புகுத்தி, பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இஃது இரு பிரிவினருக்கும் இடையில் ஒன்றாக உண்பது, நெருங்கிப் பழகுதல் போன்றவற்றை இயலாததாக்கிற்று. தூய்மையற்ற விலங்குகளை உண்பது பற்றிய ஒழுங்குகள் இதைத் தோற்றுவிக்காவிட்டாலும், இதை வலியுறுத்துகின்றன. இதைக் கருத்தில் கொண்டால், யோப்பாவில் பேதுரு கண்ட காட்சியின் பொருளைப் புரிந்து கொள்ளலாம் (*அ.ப. 10*). இந்தக் காட்சியில் ''தூய்மையற்ற விலங்குகள்'' என்ற கருத்து நீக்கப்படுவது இத்தகைய பிரிவு மனிதர்களிடம் இனி இல்லையென்று உணர்த்துகிறது. இந்த விலங்கு அடையாளத்தின் பின் மனிதர்களின் ஒன்றிப்பும் திருச்சபையின் பொதுமைப்பண்பும் வலியுறுத்தப்படுகின்றன.

**3. விலங்கு வழிபாடும் இறைவழிபாடும்:** அகில உலகோடு (*சங் 147:7.10*) அல்லது இஸ்ராயேலோடு (*எசா 43:20*) தொடர்புடைய விலங்குகள் அனைத்தும் படைப்ப

வரையும் மீட்பரையும் போற்றிப் புகழ்கின்றன. மோசே சட்டத்தின் பொருளாகவும் மனிதரின் மனத்துக்கத்தில் பங்கெடுப்பவைகளாகவும் மாறுகின்றன. இவை மட்டுமன்று, இவற்றிற்கு மேலாக, பலிப்பொருளாகப் பொதுவாகக் கருதப்பட்டு, புதிய உடன்படிக்கையின் இறைப்பலிப் பொருளை முன்னுணர்த்தும் உருவமாகின்றன (ஆதி 22:13; யாத் 13:12தொ). மேலும், இந்தப் பலிவிலங்குகளான அடையாளம் வழியாக, இஸ்ராயேலர் தங்களை முழு ஆற்றலோடு அர்ப்பணித்து, வரவிருக்கும் உண்மையின் நிறைவுக்கு ஏங்க வேண்டும் (சங் 40:7தொ; 51:18தொ; எபி 10:1-18). அடிப்பதற்கு இழுத்துச் செல்லப்படும் செம்மறி போல் (எசா 53:7), ஊழியனாகிய இயேசுவின் பலிமட்டும்தான் முடிவில்லா மீட்பை வெல்ல முடியும் (எபி 9:12).

இவ்வாறு மீட்பின் முழு வரலாறும், சில வேளைகளில் விவிலிய விலங்குகளுக்காகவும் அவற்றின் வழியாகவும் சித்திரிக்கப்படுகிறது. இந்த வரலாற்றில் கிளர்ச்சி, சிலைவழிபாடு, தூய்மையானவை தூய்மையற்றவை என்ற பிரிவு, மோசே சட்டத்திற்குக் கீழ்ப்படிதல், மனத்துக்கம், காணிக்கைகள் மற்றும் பலிகள், நோவா பெட்டகப் பலியில் பங்கெடுத்தல், இறுதிக்காலப் பணிவு ஆகியவை அடங்கும். பேய்த் தன்மையுடைய பாம்பால் உருக்குலைக்கப்பட்டு, சாத்தான் தன்மையுடைய நாகத்தால் அச்சுறுத்தப்பட்டு, படைப்பு மீட்கப்படுகிறது. இறுதியில் இறைவனின் செம்மறியானவரின் பலியால் உருமாற்றியமைக்கப் படும்.

## விலங்கோடு புணர்தல் (BESTIALITY)

ஆணோ, பெண்ணோ விலங்குடன் உடலுறவு கொள்வது. இந்தச் சட்ட விரோதமான செய்கைக்குப் பழைய ஏற்பாட்டுச் சட்டங்கள் மரணதண்டனை அளித்தன (யாத் 22:19;லேவி 20:15-16; காண்க.லேவி 18:23; உப 27:21). இந்தப் பழக்கம் புறவின வழிபாட்டுச் சடங்குகளுடன் தொடர்புடையதாக இருந்திருக்கலாம். பாபிலோனிய இதிகாசத்தில், இஸ்தார் தேவதையின் ஏவலாளால் கவர்ச்சிக்கப்படும் வரை எபானி (அல்லது என்கிடு) என்பவர் ஒரு காட்டு விலங்குடன் உறவு கொண்டதாகக் கூறப்படுகிறது.

## விலை கூறித் திரிபவர் (PEDDLER)

2 கொரி 2:17-இல் பவுல், தான் கடவுளின் வார்த்தையை விற்பனை செய்யும் வியாபாரி அல்லர் என்கிறார். அவர் திருச்சபைகளிடமிருந்து பணம் எதுவும் பெறவில்லையென இஃது உணர்த்துகிறது. அல்லது, வேறு பொருளையும் இது குறிக்கலாம். ''வேலையாள் தன் உணவிற்கு உரிமையுடையவன்'' எனும் இயேசுவின் வார்த்தையை அவர் அறிந்திருந்தார் (மத் 10:10; லூக் 10:7-5; 1 கொரி 9:14; 1 திமொ 5:18). எதையும் பெற்றுக் கொள்ளாமலே அளியுங்கள் எனும் இயேசுவின் வார்த்தையையும் அவர் அறிந்திருக்கலாம் (மத் 10:8-9). கொரிந்து நகரில், சம்பளத்திற்குத் தனக்கு இருக்கும் உரிமையை அவர் பயன்படுத்திக் கொள்ளவில்லை (1 கொரி 9:12.15). எனவே, உரிய சம்பளத்தை வாங்காதிருத்தலையே 2 கொரி 2:17-இல் பவுல் குறிப்பிட்டிருக்கலாம். அவர் தனது போதகப்பணியில் தந்திரங்களைப் புகுத்தி நற்செய்தியைப் பொய்யாக்கவில்லை என்பதே முதன்மையான கருத்து. வியாபாரத்தில் சிறுமையான, நேர்மையற்ற செயல்களோடு கூடிய வியாபாரத்திற்கும், கடவுளால் மன்னிக்கப்பட்டோம் (2 கொரி 4:2) என்ற எண்ணத்துடனும், நேர்மையான குறிக்கோளுடனும் செய்யும் போதகத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடு வலியுறுத்தப்படுகிறது.

## வில்லாளர், வில்வீரர், அம்பு எய்பவர் (ARCHER)

போரில் பிறரைத் தாக்கிப் போர்புரிய வில் அம்புகளுடன் நிறுத்தப்பட்டிருக்கும் வீரனுக்குப் பெயர் வில்வீரன்.

ஆதி 21:20 குறிப்பிடுவதிலிருந்து இதன் பொருளை முழுமையாகத் தெளிவாகக் கூற முடியவில்லை. ஆனால் யோபு 16:13; எரே 50:29-இல் கலைச்சொல்லாகப் பயன் பட்டுள்ளது.

அசீரியப் படையில் இருந்தது போல எபிரேயப் படையிலும் கைதேர்ந்த வில் வீரர்களடங்கிய ஒரு பிரிவு இருந்ததா என்பது தெரியவில்லை. கில்போவா மலையில் சவுல் பெலிஸ்திய வில்வீரர்களால் காயப்படுத்தப்பட்டார் (1 சாமு 31:3; 1 நாள் 10:3). அம்மோனிய வில்வீரர்கள் இத்தியரான ஊரியாவைக் கொன்றனர் (2 சாமு 11:24). 2 நாள் 35:23-இன்படி, யோசியா அரசன் எகிப்திய வில்வீரர்களால் கொல்லப்பட்டதாகக் கூறப்படுகிறது. எரேமியா பாபிலோனிய வில்வீரர்களைப் பற்றியும், அவர்களது பகைவர்களைப் பற்றியும் கூறுகிறார் (எரே 50:29;51:3). ''கேதார் மக்களின் வலிமை வாய்ந்த வில் வீரர்களுள் எஞ்சினோர் மிகச் சிலராகவே இருப்பர்'' என்பது (எசா 21:17) அவர்களின் மகிமைக் குறைவைக் குறிக்கிறது. யோசேப்பின் குலம் வில்வீரர்களால் தாக்கப்பட்டு வெல்ல முடியாத குலமாக விவரிக்கப்படுகிறது (ஆதி 39:23). யோபு தன்னை ஆண்டவர் அவரது வில்வீரர்களைக் கொண்டு தாக்குவதாகக் குறிப்பிடுகிறார் (யோபு 16:13).

### வில்லும் அம்பும் (BOW AND ARROW)

குலமுதியவர்கள் காலமுதல் வில்லும் அம்பும் நாடோடிகளின் ஆயுதமாகும் (ஆதி 21:20). இவை வேட்டையாடுவதற்கும் (27:3; எசா 7:24), போரிலும் (யோசு 24:12; 1 அர 22:34; எசே 39:9) பயன்பட்டன. இஸ்ராயேலர்களிடையே பென்யமின் இனத்தவரும், யோர்தானுக்குக் கிழக்கில் குடியேறியவர்களும் அம்பு எய்வதில் வீரர்களாகத் திகழ்ந்தனர் (1 நாள் 5:18; 12:2; 2 நாள் 14:8). அண்டை நாட்டினரான அசீரியர், பாபிலோனியர், எகிப்தியர், பெலிஸ்தியர் ஆகியோர் வில்வீரர் படைப் பகுதிகளைக் கொண்டிருந்தனர்.

வில் கடினமான, வளைந்து விரியும் தன்மையுடைய மரத்தால் செய்யப்பட்டுக் கயிற்றால் சுற்றப்பட்டு வலுப்படுத்தப்பட்டிருக்கும். சிலசமயம், வில் கொம்பால் அல்லது எலும்பால் செய்யப்பட்டு, வெண்கலத்தால் வலுப்படுத்தப்படும் (யோபு 20:24; சங் 18:34). சாதாரணமாய், வில் இரு வளைவு கொண்டிருக்கும். சீரியர்கள் பயன்படுத்திய வில் விரிகோணத்தில் அமைந்திருந்தது.

வில்நாண் நூல் சுற்றப்பட்ட கயிற்றாலோ, நூலாலோ, எருது அல்லது ஒட்டகத்தின் குடலாலோ செய்யப்பட்டிருக்கும். சிறிய வில் கையால் வளைக்கப்படும் (காண்க. 2 அர 13:16). போரில் பெரிய வில் ஒரு முனை காலால் மிதிக்கப்பட்டும் மறுமுனை கையால் அம்பு எய்வதற்கு ஏற்றவாறு வளைக்கப்பட்டும் நாணேற்றப்படும் (சங் 7:12; எசா 5:28).

அம்பு நாணலாலோ, மெல்லிய மரத்தாலோ செய்யப்பட்டு, முனையில் உலோகமோ, கல்லோ, எலும்போ பொருத்தப்பட்டிருக்கும் (யோபு 20:24). இந்த முனைகள், சில சமயங்கள் வளைந்து கொக்கி வடிவத்தில் அமைந்திருந்தன. அதனால் அதை எளிதில் உடலிலிருந்து நீக்க முடியாது. ''அனல் பறக்கும் அம்பு'' (சங் 7:13; காண்க. எபே 6:16) என்பது முனையில் சணல்நார் சுற்றப்பட்டு, எண்ணெய் அல்லது நிலக்கீலில் அமுக்கப்பட்டு, தீ மூட்டப்பட்டு எய்யப்படும் அம்பாகும். நஞ்சு பூசப்பட்ட அம்புகளும் பயன்படுத்தப்பட்டன (யோபு 6:4). வில்லாளர்கள் சிறிய அம்புகள் அடங்கிய அம்புக்கூட்டை முதுகில் அல்லது வலப் பக்கத்தில் சுமந்து சென்றனர்; பெரிய அம்புகளைத் தோளில் சுமந்தனர்.

மெசபொத்தாமியாவில் - இஸ்ராயேலில் கூட - குறிசொல்லுதலிலும் அம்பு பயன்பட்டது (காண்க. 4:12). இப்பழக்கத்தின் விவரங்கள் தெளிவாக இல்லை. ஒரு வேளை இதில் குறிசொல்பவர் அம்பை ஆட்டியிருக்கலாம் (எசே 21:21) அல்லது வானில் எய்திருக்க வேண்டும் (2 அர 13:14-19).

வன்முறை அல்லது இறைத்தீர்ப்பை உருவகமாகச் சுட்ட அம்பு பயன்பட்டுள்ளது (சங் 38:2; 64:7; அப 3:9). வில் (அல்லது வானவில்) இறை உடன்படிக்கையின் அடையாளமாகப் பயன்படுவது (ஆதி 9:12-13), போரிலிருந்து வெற்றியோடு

திரும்பும் மெசபொத்தாமியாவின் பொது வான உருவகத்திலிருந்து வந்திருக்கலாம். அரசனின் நாணேற்றப்படாத வில், புதி தாகப் பெற்ற அமைதியை நிலைப்படுத்தும் அவனது பற்றுறுதியை அடையாளமாகக் காட்டுகிறது; மனிதனது வன்முறையையும் குழப்பத்தையும் இறைவன் தம் வன்முறை யாலும் குழப்பத்தாலும் தண்டிக்க மாட்டார் என்ற இறைவனது உறுதியைச் சுட்டிக் காட்டுகிறது. ஒரு சிலர் இதில் பிலின உருவகத்தைக் காண்கின்றனர். வில்லும் அம்பும் ஆண் அடையாளமாகவும், அம்புக் கூடு பெண் அடையாளமாகவும் காணப்படு கிறது (*ஆதி 49:24; சங் 127:4-5; சீரா 26:12*).

சவுல் மற்றும் யோனத்தான் மேல் தாவீது பாடிய இரங்கற்பாடல் (*2 சாமு 1:17-27*) ''வில்லின் பாடல்'' என்று சில மொழி பெயர்ப்புகளில் அழைக்கப்படுகிறது.

## விவிலியத் திருமுறைப்பட்டியல் - பழைய ஏற்பாடு (BIBLICAL CANON - O.T.)

I. விவிலியத்தில் அடங்கியிருக்கும் நூல் களின் அதிகாரபூர்வமான பட்டியலே திரு முறைப்பட்டியலாகும். ஒரு நூல் இறை ஏவுதல் பெற்றிருப்பதால் அது திருமுறை யைச் சேர்ந்ததாகும். ஆனால், இறை ஏவுதல் பெற்றிருப்பதும் திருமுறையைச் சேர்ந்திருப்பதும் ஒரே பொருளை உணர்த்து வதில்லை.இறைவன், ஒரு மனித ஆசிரி யரைக் கருவியாகப் பயன்படுத்தி, எழுதும் நூல் இறை ஏவுதல் பெற்றதாகும். திருச் சபை ஒரு நூலை இறை ஏவுதல் பெற்றதாக ஏற்று, இறைவனது வார்த்தைகளைக் கொண்டிருப்பதாகவும் வெளிப்பாட்டின் மூலமாய் இருப்பதாகவும் விசுவாசிகளுக்கு அறிவிக்கும்போது அந்நூல் திருமுறைப்பட் டியலைச் சேர்ந்ததாகிறது. கத்தோலிக்கத் திருச்சபையின் விசுவாசத்தின்படி, விவிலி யத் திருமுறைப்பட்டியல் திருச்சபையின் பாரம்பரியத்தின்படியே முழுவதும் நிர்ண யிக்கப்படுகிறது. இறைவெளிப்பாட்டின் காப்பாளர் என்ற அளவில், புனித நூல் களை நிர்ணயிப்பதில் திருச்சபைக்கு மட் டுமே அதிகாரம் உண்டு. கத்தோலிக்க விசுவாசம் பிரிவினைச் சகோதரர்களின் விசுவாசத்திலிருந்து வேறுபடுகிறது. பின்ன தின்படி, ஒருநூல், சமய அனுபவத்தைக் கொடுக்கக்கூடிய அதன் ஆற்றலாலோ, யூதப்பாரம்பரியம் மற்றும் அப்போஸ்தலர் களை ஆசிரியராகக் கொண்டிருப்பதாலோ அந்நூலின் திருமுறைத்தன்மை தீர்மானிக் கப்படுகிறது. திருமுறைப்பட்டியல் பற்றிய, கத்தோலிக்கப் பாரம்பரியத்தைத் தடம் காண்பது அவ்வளவு எளிதன்று. பொது வாக, அஃது அப்போஸ்தலர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பழைய ஏற்பாட்டைக் கொண்டுள்ளது என்று கூறலாம்.

II. **தோற்றமும் வளர்ச்சியும்:**

1. கிறிஸ்தவக் காலத்திற்குமுன் யூதத் திருமுறைப்பட்டியல் ஏற்கெனவே இருந் தது என்பது சரியான கருத்தன்று. கிறிஸ்த வர்களோடு கொண்ட போராட்டமே இந்தத் திருமுறைப்பட்டியலை நிர்ணயிக்க வாய்ப் பாயிற்று. ஆனால், யூதர்கள் தங்களுடைய புனித நூல்களைக் கொண்டிருந்தனர் என் பது உண்மை.

இந்தப் புனித நூல்களின் தொகுப்பின் தொடக்கத்தை இஸ்ராயேலுக்குச் சட்டம் அளித்த மோசேக்குச் சாற்றிக் கூறுகிறது பாரம்பரியம் (உப 3:9). இதுவே சட்டத்தின் உட்கருவாகும். இஃதோடு இஸ்ராயேல் இனங்களைப் பற்றி இங்குமங்குமாக எழு தப்பட்ட செய்திகள் மோசேயால் சேர்க்கப் பட்டன. இத்தொகுப்பு பிற்காலத் தலை முறைகளுக்காகச் சேகரிக்கப்பட்டுக் கை யளிக்கப்பட்டன. ஆனால், பரந்த அளவில் இலக்கியங்களைத் தொகுத்த முதல் முயற்சி ஒருவேளை சாலமோன் காலத்தில் செய்யப் பட்டிருக்கலாம். அக்காலத்திற்குள், பல வகையான ஏடுகள், தலைமுறைப்பட்டியல் கள், இடப்பட்டியல்கள், குறிப்பிட்ட சட் டத்தொகுப்புகள், தொடக்க காலச் சங்கீ தங்கள் முதலியவை வழக்கில் இருந்திருக்க வேண்டும். ஆனால் இவை வரலாற்றோடு தொடர்புபடுத்தப்படவில்லை. வரலாற் றோடு தொடர்புபடுத்தும் செயல் ஐந்நூல் தோற்றம் பற்றிய இக்காலக்கருத்துப்படி, சாலமோன் காலத்தில் தொடங்கப்பட்டது; பின்வந்த தலைமுறைகளால் தொடரப்பட்

டது. பின்வந்த காலத்தில், முந்தைய தொகுப்புகளை உள்ளடக்கிய ஒன்றுக்கு மேற்பட்ட தொகுப்புகள் தோன்றின. இவ் வாறு யாவே, ஏலோகிம் பாரம்பரியங்கள் இணைக்கப்பட்டன. எசேக்கியா சீர்திருத்த காலத்திற்குள் (2 நாள் 29), 8-ஆம் நூற்றாண் டில், கூடுதலான சங்கீதங்களும், (சாலமோ னுக்குப் பெரும்பாலும் சாற்றிக்கூறப்பட்ட, பழ 25:1), ஞான வாக்குகளும், பழமொழி களும், அரசவை ஏடுகளும் சேர்க்கப்பட் டன. இவற்றோடு இறைவாக்கினர் நூல்கள் அல்லது அக்காலத்தில் பெரும் பணியாற் றிய ஓசேயா, மீக்கா, எசாயா போன்ற இறைவாக்கினர்களைப் பற்றி எழுதப்பட்ட ஏடுகள் சேர்க்கப்பட்டன. எருசலேம் ஆல யம் இந்த ஏடுகள் அல்லது பெரும்பகுதி களைச் சேர்த்து வைக்கும் இடமாக இருந் திருக்கலாம். 2 நாள் 34:14-இல் யோசியா காலத்தில் ''சட்ட நூல்'' ஆலயத்தில் கண் டெடுக்கப்பட்டதை நாம் குறிக்கலாம். இந்தச் சட்ட நூல்தான் உபாகம நூல் அல்லது முக்கிய பகுதிகளாக இருக்கலாம். இது முந்தைய நூற்றாண்டில் எசேக்கியா சீர்திருத்த காலத்திலோ, அதற்குச் சிறிது பின்போ எழுதப்பட்டிருக்கலாம். இது முந் தைய பொருட்களையும் உள்ளடக்கியிருந்தி ருக்க வேண்டும்; தீய அரசன் மனாசேயின் ஆட்சிக்காலத்தில் தொலைந்து போயிருக்க வேண்டும். இச்சட்ட நூல் இஸ்ராயேல் வரலாற்றில் ஆழமான பாதிப்பை ஏற்படுத் தியுள்ளது. அரசர்கள் நூல்கள் உபாகமப் போக்கால் ஊடுருவப்பட்டுள்ளது என் பதைக் கவனிக்க வேண்டும்.

***2. சட்டம், இறைவாக்கினர்கள், மற்றும் நூல்கள்:***

***அ) சட்டம்:*** நாடு கடத்தப்பட்ட போதி லும், அதற்குப் பின் வந்தகாலத்தில்தான் முழுமூச்சான பதிப்பு வேலை நடந்தது எனலாம். இக்காலத்தில்தான் நமக்கு அறி முகமான வடிவில் பழைய ஏற்பாடு உரு வெடுக்கத் தொடங்கியது எனலாம். சடங் குச் சட்டங்களாயும் அவற்றின் பிற் சேர்க் கைகளாயும் சேர்ந்த தொகுப்புக்குக் ''குருக் கள் பதிப்பாசிரியர்கள்'' என்றழைக்கப்பட் டவர்கள் பொறுப்பானவர்களாவர். மேலும், இவர்கள் ஆலய வழிபாட்டில் மிகவும் அக்கறை செலுத்தினர். இக்கருத்து, ஐந்நூலில் ஏற்றுக்கொள்ளப்பட்ட இவர்க ளுடைய நிகழ்ச்சியுரைகளில் பெரிதும் ஆதிக்கம் செலுத்துகிறது. ஏறக்குறைய கி.மு. 450-இல் எஸ்ராவின் காலத்திலேயே ஐந்நூல் முழுமை பெற்றுவிட்டது எனலாம். அதன் இறுதித் தொகுப்பில் அவருடைய ஈடுபாடும் இருந்திருக்கலாம். யோசியா சட்டநூலை அறிவித்தது போன்ற ஒரு சடங்கில் (2 அர 22-23), எஸ்ரா ''காலை முதல் நண்பகல் வரை'' மோசேயின் சட்டநூலை வாசித்தார் (நெகே 8:3). இக்கா லத்தில் ஐந்நூல் மட்டும்தான் திருமுறையாக அதிகாரபூர்வமாகக் கருதப்பட்டதாகத் தெரி கிறது. ஏனெனில், இக்காலத்திற்குச் சிறிது பின்பு தனிச்சமய அமைப்பாகத் தோன்றிய சமாரியர்கள் ஐந்நூலை மட்டும்தான் திரு முறையாக ஏற்றுக்கொண்டனர். பிற்காலத் தில் இஸ்ராயேலின் திருமுறைப்பட்டிய லில் பிற நூல்கள் சேர்க்கப்பட்டபோது கூட, ஐந்நூல் தனித் தொகுப்பாகவே கருதப்பட்டது. நாடு கடத்தலுக்கு முன் மக்கள் இறைவாக்கினர்கள் வழியாக அளிக் கப்பட்ட இறைவாக்கையே நம்பியிருந்த னர். இதற்கு மாறாக, நாடு கடத்தலுக்குப் பின், மக்களுக்குப் போதகம் அளிக்க செபக்கூடம் என்ற அமைப்பு எங்கும் தோன்றியது. அங்கு ஒவ்வோர் ஓய்வுநாளும் மக்களுக்குச் சட்டம் விளக்கிக் கூறப்பட்டது.

***ஆ) இறைவாக்கினர்கள்:*** அடுத்து இரு நூற்றாண்டுகளில் இரண்டாம் வகையான நூல்கள் படிப்படியாக உருவெடுத்தன. ஐந் நூலில் சட்டமும் வரலாறும் கலந்து காணப் படுகின்றன. இஃது இறைவன் தமது மக்களின் வரலாற்றின் வழியாக எவ்வாறு செயலாற்றுகிறார் என்றும், எவ்வாறு சட் டம் அனுபவத்திலிருந்து தோன்றுகிறது என்றும் காட்டுகிறது. பின்வரும் வரலாற்று நூல்களில் (யோசுவா, நீதிபதி, சாமுவேல், அரசர்கள்) ஆசிரியர் வரலாற்றுக்காக வர

லாற்றில் அக்கறை கொள்வதாகத் தெரிய வில்லை; இதைவிட, வரலாற்று நிகழ்ச்சி களைப் பயன்படுத்தி, சில சமயக்கருத்து களை எடுத்துக் கூறுவதிலும், இறைவனது செயல்களை எடுத்துக் காட்டுவதிலும் அதி கம் அக்கறை செலுத்துகிறார் எனலாம். இதனால்தான் யூதர்கள் இந்த நூல்களை **முந்தைய இறைவாக்கினர்கள்** என்றழைத்த னர். பிற்காலத்தில் எழுதப்பட்ட நூல்களும் உள்ளன. இவை நாளாகமம், எஸ்ரா, நெகேமிய ஆகியவையாகும். இவை கி.மு. 3-ஆம் நூற்றாண்டு முடிவிற்குள் எழுதப்பட் டவை. இவை இரண்டாம் வகை நூல்க ளோடு சேர்க்கப்படவில்லை. ஏனெனில் இரண்டாம் வகை நூல்கள் ஏற்கெனவே ஒரு தனிச்சிறப்பு நிலையைப் பெற்றுவிட் டன என்பதே காரணமாகும். மேலும், அந்நிலையைப் பின்வந்த நூல்கள் பெற வில்லை என்பதும் காரணமாகலாம். அதன் விளைவாக இவை வெறுமனே ''நூல்கள்'' என்றழைக்கப்பட்டு மூன்றாம் வகை நூல் கள் தோன்றின. ''முந்தைய இறைவாக்கினர் கள்'' என்றழைக்கப்பட்ட வரலாற்று நூல்க ளில் பிற்காலப் பதிப்பு வேலைகள் காணப் படுகின்றன. ஐந்நூல் முழுவதிலும் குருக் கள் பாரம்பரியப் பாதிப்பு காணப்படுவது போல், வரலாற்று நூல்கள் முழுவதிலும் உபாகமப் பாரம்பரியத்தின் முத்திரை காணப்படுகிறது. இந்தப் பதிப்பு வேலை நாடுகடத்தலுக்கு முன் நடந்திருக்கலாம் என்பது ஐயத்திற்கு உரியதாகும். மேலும், அரசர்கள் வரலாறு நாடு கடத்தலுக்குப்பின் னும் செல்கிறது. இந்தப் பதிப்பு வேலை நாடு கடத்தலின்போதுதான் நடந்திருக்க லாம் என்பது உண்மைக்கு நெருங்கியதா கும். ஆயினும், இந்நூல்களில் காணப்படும் வரலாற்றுப் பொருள்கள் பல நூற்றாண்டுக ளுக்கு முன்பே நடந்தவை என்பதும் கூறாமலே விளங்கும்.

முந்தை வரலாற்று நூல்களான ''முந்தைய இறைவாக்கினர்'' நூல்களுடன் **''பிந்தைய இறைவாக்கினர்''** என்ற நூல்கள் சேர்க்கப் பட்டன. இவை 8-ஆம் நூற்றாண்டிலிருந்து எழுதப்பட்ட இறைவாக்குகளின் தொகுப் பாகும். கி.பி. 400-க்குப்பின் இறைவாக்குக் குரலொலி மறைந்து விட்டதாகத் தெரிகி றது. ஆகவே, யூதர்கள் தங்களால் முடிந்த மட்டும் தங்கள் இறைவாக்கினர்களின் எழு தப்பட்ட ஏடுகளை ஒன்றாகத் தொகுத்து, காலப்போக்கில், அவற்றைச் சட்டத்திற்கு அடுத்து வைத்தனர். இறைவாக்கினர் சிலர் எதையும் எழுத்து வடிவில் விட்டுச் செல்ல வில்லை. மேலும், ஏட்டுவடிவில் நாம் கொண்டிருப்பவையெல்லாம் இறைவாக்கி னர்களாலேயே எழுதப்பட்டன என்று கருத வேண்டியதில்லை. சில சமயம் அவர்கள் நேரடியாக எழுதினர் என்பதே உண்மை. இவ்வாறு எரேமியா சில வாக்குகளைப் பாரூக்கிடம் சொல்லி எழுத வைத்தார் (எரே 45). இறைவாக்குகளோடு இந்நூல்கள் வாழ்க்கைக் குறிப்புகளையும் கொண்டுள் ளன. இவற்றையெல்லாம் இறைவாக்குக ளோடு ஒன்றிணைத்து இந்நூல்கள் அமைக் கப்பட்டன. பிந்தைய இறைவாக்கினர்கள் என்ற தொகுப்பில் எசாயா, எரேமியா, எசேக்கியேல் மற்றும் 12 சிறிய இறைவாக்கி னர்கள் ஆகியவை அடங்கும். இவை பதிப்பிக்கப் பெற்றது 5-ஆம் நூற்றாண்டின் முடிவில் குறுகிய காலத்தில் நடந்திருக்க லாம். ஆயினும், சட்டத்தொகுப்பின் மேல் தான் அதிக அக்கறை காட்டப்பட்டது. இதிலேதான் எஸ்ரா கவனம் செலுத்தினார். இறைவாக்கு நூல்கள் சட்டத்துக்குச் சம மான நிலைபெற இன்னும் ஒரு நூற்றாண்டு செல்ல வேண்டியிருந்தது. சீராக்கு நூலின் முன்னுரை ஆசிரியரின் பேரனால் கி.மு. 130-ஐ ஒட்டி எழுதப்பட்டது. அதில், சட்டம், இறைவாக்கினர்கள் என்று தெளி வாக வேறுபடுத்தப்பட்ட இரு தொகுப்பு கள் இருந்தன என்று அறிகிறோம். முந்தைய, பிந்தைய இறைவாக்கினர்களை உள்ளடக்கிய இந்தத் தொகுப்பு ஒருவேளை கி.பி. 200-ஐ ஒட்டி முற்றுப்பெற்றிருக்க வேண்டும்.

இ) இதே காலத்தில் மற்றப் புனித நூல்களின் தொகுப்பு பெருகி வளர்ந்தது. இவற்றில் சில வெகுகாலத்திற்கு முன்பே தோன்றி இருக்க வேண்டும். எடுத்துக்காட்

டாக சங்கீதங்கள், பழமொழி, சில பிற்கால வரலாற்று நூல்களைக் கூறலாம். ஐந்நூலின் தனிச்சிறப்பு நிலையைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் ''இறைவாக்கினர்கள்'' என்ற தொகுப்பு, எந்த அடிப்படையில் முன்னதிலிருந்து வேறுபட்டதாகக் கருதப் பட்டது என்று அவ்வளவு எளிதில் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை, இறைவாக்கினர்கள் தொகுப்பைப் பிற நூல் களிலிருந்து வேறுபடுத்திக் கருதுவது நடை முறைக்கு வசதியானதாக இருக்கலாம். எஞ்சிய நூல்கள் பொதுவாக ''நூல்கள்'' என்று அல்லது வெறுமனே ''மற்ற நூல் கள்'' என்றழைக்கப்பட்டன. இத்தொகுப் பில் பல்வகையான நூல்கள் காணப்படுகின் றன. இதில் பிற்காலத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டவையும் சமீபத்தில் எழுதப்பட்டவை யும் சேர்க்கப்பட்டன. இதில் முக்கியமா னது சங்கீதங்களாகும். சங்கீதங்கள் என்ற தலைப்பில் இந்த மூன்றாம் வகைத் தொகுப்பு முழுவதையும் கிறிஸ்து குறிப்ப தாகத் தெரிகிறது. அவர் ''மோசேயின் சட்டம், இறைவாக்கினர், சங்கீதங்களைப்'' பற்றிப் பேசுகிறார் (லூக் 22:44). கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் புனித நூல்களைத் தொகுத்தல் தொடர்ந்து நடந்ததாகத் தெரிகி றது. 2 மக் 2:13-இல் நெகேமியா ஒரு நூல் நிலையம் அமைத்து, அங்கு அரசர்கள், இறைவாக்கினர்கள் பற்றிய நூல்களைச் சேகரித்தார் என்று வாசிக்கிறோம். அவ் விதமே போரினால் தொலைந்து போன நூல்களை யூதா மக்கபேயுவும் சேகரித்தார். இவ்வாறு தோன்றி வளர்ச்சியடைந்த தொகுப்பு, பிற்காலத்தில் பின்வருமாறு பகுக்கப்பட்டது.

**எபிரேய விவிலியம்:**

***1) சட்டம்:*** ஆதியாகமம், யாத்திரை, லேவியர், எண், உபஆகமங்கள்.

***2) இறை வாக்கினர்கள்:***
முந்தைய இறைவாக்கினர்கள்: யோசுவா, நீதிபதி, 1-2 சாமுவேல், 1-2 அரசர்கள். பிந்தைய இறைவாக்கினர்கள்: எசாயா, எரே மியா, எசேக்கியேல், 12 சிறிய இறைவாக்கி னர்கள் (ஓசேயா, யோவேல், ஆமோஸ், ஒபதியா, மீக்கா, யோனா, நாகூம், அபக் கூக்கு, செப்பனியா, ஆகாய், செக்கரியா, மலாக்கி).

***3) நூல்கள்:*** 1-2 நாளாகமம், எஸ்ரா -நெகேமியா, எஸ்தர், ரூத்து, சங்கீதங்கள், பழமொழிகள், யோபு, புலம்பல், திரு வுரை, உன்னத சங்கீதம், தானியேல்.

இவ்வாறு எபிரேயத் திருமுறைப்பட்டிய லில் 24 நூல்கள் குறிக்கப்பட்டன. கி.பி. 93-இல் வரலாற்று ஆசிரியர் யோசிப்பசின் கூற்றுப்படி திருமுறைப்பட்டியலைச் சேர்ந்த இறை ஏவுதல் பெற்ற நூல்கள் இருபத்து இரண்டு மட்டுமே. இதற்காக, புலம்பலை எரேமியாவுடனும், ரூத்தை நீதிபதிகளுடனும் சேர்த்து எண்ணினர். இதன் விளைவாக, எபிரேய நெடுங்கணக் கில் உள்ள 22 எழுத்துகளுக்கு இணையாக எபிரேய விவிலியத்தில் 22 நூல்கள் இருந் தன என்று கருதப்பட்டது. யோசிப்பசு, திருமுறைப்பட்டியலை நிர்ணயிப்பதை எஸ்ரா முடிவுக்குக் கொண்டு வந்தார் என்ற ஒரு ராபிகளின் பாரம்பரியத்தையும் கூறுகி றார். ஆனால், இதற்கு எந்த ஆதாரமும் இருப்பதாகத் தெரியவில்லை.

**3. எழுபது நூல்:** நாடு கடத்தலின்போது யூதர்கள் பாலஸ்தீனத்திற்கு வெளியே சிதறிப்போயினர். இவர்களிடையே எபி ரேய மொழி சிறிது சிறிதாக மறைந்து, கிரேக்க மொழி அன்றாடம் பேசும் மொழி யாகியது. இவர்களுக்குக் கிரேக்க மொழி யில் விவிலியம் அவசியமாயிற்று. இந்தக் கிரேக்க மொழிபெயர்ப்பு அலக்சாந்திரியா வில் செய்யப்பட்டது. இதை எபிரேய விவிலியத்திற்குப் போட்டியாகச் செய்ய வில்லை, எருசலேமிலுள்ள யூதத் தலைவர் களின் அனுமதி பெற்றே செய்தனர் என்று காட்ட அலக்சாந்திரிய யூதர்கள் ஒரு கற்ப னைக் கதையை அமைத்துக் கூறினர் (காண்க. எழுபதுநூல்). இந்தக் கிரேக்க மொழிபெயர்ப்பு **எழுபது நூல்** தொகுப்பு என்று அழைக்கப்பட்டது. இதில் எபிரேய விவிலியத்தில் உள்ள நூல்களோடு, சில கூடுதலான நூல்களும் காணப்பட்டன. அவை 1-2 மக்கபேயர், தோபி, யூதித்து,

சீராக்கு, சாலமோனின் ஞானம், பாரூக்கு, தானியேல் மற்றும் எஸ்தரைச் சேர்ந்த சில கூடுதல் பகுதிகள் ஆகும். எபிரேய விவிலியத்தில் வரும் நூல்கள் **மூலத் திருமுறைப் பட்டியல்** என்றும், எழுபது நூலில் வரும் கூடுதல் நூல்கள் **துணைத் திருமுறைப்பட்டியல்** என்றும் அழைக்கப்பட்டன. இந்தக் கலைச்சொற்களை முதன் முதலில் கி.பி. 1566-இல் சியன்னாவைச் சேர்ந்த சிஸ்து பயன்படுத்தினார். அவ்வளவு பொருத்தமின்மை இல்லை என்றாலும், இச்சொற்கள் இப்போதும் பயன்படுத்தப்படுகின்றன. இவை நூல்களின் தரத்தைச் சுட்டவில்லை, தோன்றிய காலத்தையே சுட்டுகின்றன எனலாம்; மூலத் திருமுறைப்பட்டியல் துணைத் திருமுறைப்பட்டியலை விட, காலத்தால் முந்தியது என்பதையே காட்டுகின்றன.

எபிரேயப் பட்டியலும், அலக்சாந்திரியப் பட்டியலும் யூதர்களிடையேதான் தோன்றின. ஆனால் இவற்றிடையே உள்ள உறவு என்ன என்பது தெளிவாகக் கூற முடியாததாகும். இரண்டும் திட்டமிட்டு வளர்ந்தவையன்று, படிப்படியாக வளர்ந்தவையாகும். சட்டம், இறைவாக்கினர்கள், நூல்கள் என்ற பிரிவு புனிதநூல்கள் தொகுக்கப்பட்ட மூன்று கட்டங்களைச் சுட்டலாம். கி.மு. 180-ஐ ஒட்டிச் சீராக்கு நூல் எழுதப்பட்ட போது நூல்கள் என்ற தொகுப்பு இன்னும் நிறைவு அடையவில்லை என்று காட்டுகிறது. இரண்டு பட்டியல்களிலும், நூல்களின் வரிசையும் பொருளடக்கமும் இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை எனத்தெரிகிறது. எருசலேமைச் சேர்ந்த பாலஸ்தீன விவிலியப்பட்டியல் இருந்திருந்தால், எருசலேம் ராபிகளின் தலைமையைப் பின்பற்றி அலக்சாந்திரிய யூதர்கள் எவ்வாறு வேறுபட்ட விவிலியப்பட்டியலை அமைத்துக் கொண்டனர் என்று புரிந்து கொள்வது கடினம். கி.மு. 400-ஐ ஒட்டி, யூதர்களிடமிருந்து பிரிந்து சென்ற சமாரியர்கள், சட்ட நூல்களை மட்டுமே புனித நூலாக ஏற்றுக் கொண்டனர்.

**4. கி.பி. 70-க்குமுன்:** தொடக்க காலக் கிறிஸ்தவர்கள் பெரும்பாலோர் யூதர்கள். இவர்கள் எபிரேய அல்லது அரமேயிக்கு மொழி பேசியவர்கள். இவர்கள் யூதர்களுக்கு எதிராக எழுபதுநூல் பட்டியலை ஏற்றுக்கொண்டிருப்பார்கள் என்பது நடக்கக் கூடிய செயல் அன்று. ஆனால், கிரேக்க மொழி பேசிய கிறிஸ்தவர்கள் பெருகினர். எழுபதுநூல் பட்டியல் தொடக்க காலக் கிறிஸ்தவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகத் தெரிகிறது.

புதிய ஏற்பாட்டில், இயேசுவும் அப்போஸ்தலர்களும் புனித நூல்களின் தொகுப்பையும், எபிரேயப் பட்டியலில் காணப்படும் மூன்று பிரிவுகளையும் ஏற்றுக்கொள்கின்றனர். ஆனால், புதிய ஏற்பாட்டிலிருந்து இப்பிரிவுகளின் பொருளடக்கத்தை நிர்ணயிக்க முடியாது. எஸ்ரா, நெகேமியா, எஸ்தர், ரூத்து, திருவுரை, உன்னத சங்கீதம், ஒபதியா, நாகூம் ஆகிய நூல்களைத் தவிர, எபிரேயப் பட்டியலைச் சார்ந்த மற்ற நூல்களிலிருந்து நேரடி மேற்கோள்கள் கூறப்படுகின்றன. புதிய ஏற்பாட்டில் வரும் பழைய ஏற்பாட்டைச் சேர்ந்த 350 மேற்கோள்களில் 300 எழுபது நூலிலிருந்து தரப்படுகின்றன. இந்த மேற்கோள்களின் முதன்மையான மூலம் எழுபது நூலாகத் தெரிகிறது. துணைத் திருமுறைப்பட்டியல் நூல்களிலிருந்து நேரடி மேற்கோள்கள் புதிய ஏற்பாட்டில் இல்லை. ஆனால் மக்கபேயர், சீராக்கு, சாலமோனின் ஞானம் ஆகிய நூல்களிலிருந்து எதிரொலிகளும், சுட்டிக்காட்டுதல்களும் காணப்படுகின்றன. பவுலின் காலத்திலிருந்து துணைத் திருமுறை நூல்களைக் கொண்ட எழுபது நூலே திருச்சபையின் பழைய ஏற்பாடாகும் என்பதில் ஐயமில்லை. இதற்குக் காரணம் மத்தியதரைக் கடலைச் சுற்றியுள்ள நாடுகளில் கிரேக்க மொழி பேசப்பட்டதாக இருக்கலாம்.

**5. கி.பி. 70-க்குப்பின்:** இதுவரை திருமுறைப்பட்டியல் பற்றிய தெளிவான கருத்துகள் இல்லை என்றாலும், இந்தத் தொகுப்பில் ஒரு நூலைச் சேர்ப்பது அல்லது நீக்குவது பற்றிச் சில பொதுவான கருத்துகள் இருந்திருக்க வேண்டும். இவற்றின்

தரம் பற்றிய கருத்துகள் இருந்திருப்பதாகத் தெரிகிறது. தெளிவான சான்றுகள் இல்லையென்றாலும், சில நூல்கள் காலப்போக்கில் பிறவற்றிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு, திருமுறைப்பட்டியலில் சேர்த்தவையாகக் கருதப்பட்டிருக்கலாம். இக்காரணத்திற்காகத்தான், கிறிஸ்தவத் திருச்சபையால் எழுபது நூலிலிருந்து கையெழுத்துப் பிரதிகள் எடுக்கப்பட்டன. கி.பி. 70-க்குப்பின் கிறிஸ்தவர்களுக்கும் யூதர்களுக்குமிடையே போராட்டங்களும் தர்க்கங்களும் எழுந்தன. அவற்றில் இரு குழுவினரும் திருநூலைப் பயன்படுத்தினர். அவர்களது எதிரிகளான யூதர்கள், எழுபதுநூலைப் பயன்படுத்தியிருக்கக்கூடுமானாலும், மூல எபிரேய வாசகத்தையே சிறப்பாகப் பயன்படுத்தினர். பல இடங்களில் கிரேக்க வாசகம் எபிரேய வாசகத்திலிருந்து வேறுபட்டது. யூதர்கள், கிரேக்க வாசகம் எபிரேய வாசகத்தை விட மேம்பாடு உடையது என்று ஏற்றுக்கொள்ள மறுத்தனர். ஆகவே எழுபதுநூல், குறிப்பாக மெசியா அளிக்கும் பகுதிகள், தவறானவை என்று தீர்மானித்தனர். இவர்கள் எபிரேய வாசகத்தையே மேலும் மேலும் விரும்பிப் பயன்படுத்தினர். கி.பி. *90*-ஐ ஒட்டி, யாம்னியாவில், *22 (24)* எபிரேய நூல்கள் அடங்கிய தொகுப்பே உண்மையான திருநூல் என்று தீர்மானித்தனர். கி.பி. *130*-ஐ ஒட்டி, எழுபதுநூல் முழுவதையும் கண்டனம் செய்தனர். அது பாரம்பரிய யூதர்களுக்குச் சபிக்கப்பட்டதாக மாறியது.

எழுபது நூல் நிராகரிக்கப்படுவதற்கு முன்பே, திருமுறைப்பட்டியலில் சேர்க்கப்பட வேண்டிய நூல்களைப் பற்றிய கருத்துகள் குறுகிய தன்மையுடையவை ஆயின. வெளிப்பாட்டு இலக்கியங்கள் ஏன் தங்கள் மதிப்பை இழந்தன என்பது புரிந்து கொள்ளக்கூடியதே. ஏனெனில், கி.பி. 70-க்குப்பின் அவை பொருளற்றவை ஆயின. ஏனெனில், இக்காலம்வரை இந்நூல்கள் மெசியா திடீரென்று மகிமையோடு தோன்றி எதிரிகளைக் குழப்பமடையச் செய்து அவர்களைத் தோற்கடிப்பார் என்று அறிவித்தன. இவற்றின் புரட்சி தோன்றச் செய்யும் கருத்துகளால் தூண்டப்பெற்று கி.பி. 66-இல் பெரும் கிளர்ச்சி தொடங்கியது. கி.பி. 70-இல் இது பேரழிவிலும், நம்பிக்கை அழிவிலும் முடிந்தது. ஆகவே, வெளிப்பாட்டு நூல்கள் நிராகரிக்கப்பட்டன. எஞ்சிய நூல்களைப் பொருத்தமட்டும் சட்டத்தை வலியுறுத்தலும், இவற்றின் விட்டுக்கொடுக்கும் ஒழுக்கப்போக்கை ஏற்க மறுத்தலும், இவை நீக்கப்படுவதற்குக் காரணங்களாயின. இவற்றில் சில மெசியாவைப் பற்றிய கிறிஸ்தவ விளக்கத்திற்கு ஆதரவாயிருந்தன. ஆகவே, இவற்றை யூதர்கள் விரும்பவில்லை. மேலும் பெருகிக் கொண்டிருக்கும் திருமுகங்கள், நற்செய்திகள், அப்போஸ்தலர் பணிநூல்கள் ஆகிய கிறிஸ்தவ இலக்கியங்களை விலக்குவது அவசியமாயிற்று. ஏனெனில், இவை யூதர்களுக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்டன.

மேலும், யோசிப்பசின் கூற்றுப்படி, இறைவாக்குரைத்தல் மோசேயிலிருந்து அர்த்தக்சஸ்தா என்ற பாரசீக அரசன் (கி.மு. *465-424*) ஆட்சிவரைதான் நீடித்தது என்று கருதப்பட்டது. அதற்குப் பின்னும் யூத வரலாறு எழுதப்பட்டாலும், அவை அதே அதிகாரத்தைக் கொண்டிருக்கவில்லை. ஏனெனில், இக்காலத்திற்குப்பின் இறைவாக்கினர் தலைமுறை இருக்கவில்லை என்று கருதப்பட்டது. அர்த்தசஸ்தா அல்லது எஸ்ராவுக்குப்பின் எழுதப்பட்ட எந்த நூலும் இறை ஏவுதல் பெற்றதும் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததும் அன்று என்ற தேர்வுமுறை, யூதர்களிடையே பெரும் பாதிப்பை ஏற்படுத்தியிருந்த வெளிப்பாட்டு இலக்கியப் பெருந்தொகுப்பையும், அவர்களுக்குப் பிரியமில்லாத நூல்களையும் ஒரே அடியில் நீக்குவதற்குப் பயன்பட்டது. தானியேலும், யோபுவும், இறைவாக்குத்தன்மையுடையவை என்று கருதப்பட்டதால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. மேற்கூறப்பட்ட தேர்வுமுறையால் சீராக்கும் மக்கபேயரும் நீக்கப்பட்டன. சாலமோனின் ஞானமும், சாலமோனின் சங்கீதங்களும் கிரேக்க மொழியில் மட்டும் இருந்ததால் நீக்கப்பட்டன. எபிரேய மொழியில் இருந்த எஸ்தர், அதன் பொருளடக்கத்தைப் பற்றிய

நீண்ட கால ஐயத்திற்குப்பின் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இஃது எஸ்ராவின் இறப்புக்கு முன் எழுதப்பட்டது என்ற கருத்தும் இதற்கு ஒரு காரணமாகலாம். புலம்பல் எரேமியாவுடன் சேர்ந்தது என்று கருதப்பட்டதால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பாரூக்கு எபிரேய மொழியில் எழுதப்படாததால் நீக்கப்பட்டது. திருமுறைப்பட்டியலைத் தேர்வு செய்யும் இந்த முறை, கி.பி. 70 நிகழ்ச்சிக்குப்பின் அமைக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. கி.பி. 70-க்கு முன் இந்தத் தேர்வு முறை இருந்திருக்க முடியாது. பாரம்பரியமாகக் கருதப்பட்ட இறைவாக்கினர்கள் இருக்கவில்லை என்பது உண்மையானாலும், வெளிப்பாட்டு இலக்கிய ஆசிரியர்களும், பொதுவாக எஸ்ராவுக்குப்பின் எழுதிய ஆசிரியர்களும், தாங்களே இறைவாக்கினரின் வாரிசுகள் என்று கருதினர். அப்படியே மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகத் தெரிகிறது. எஸ்ராவிற்குப்பின் எழுதப்பட்டது என்று உறுதியாகக் கருதப்படும் சீராக்குநூல், யூதத்திருமுறையில் ஏற்றுக் கொள்ளப்படும் அளவுக்கு மக்களிடையே செல்வாக்குப் பெற்றது. இஃது ''எஸ்ராவிற்கு முன் எழுதப்படுதல்'' என்ற தேர்வு முறை யூதர்களிடையே நீண்ட காலமாய் இருந்திருக்க முடியாது என்று காட்டுகிறது. மேலும், சீராக்கு நூலின் முன்னுரையில் குறிக்கப்படும் ''பிற நூல்கள்'' என்பது திருமுறைப்பட்டியல் தேர்வு செய்வது முடிந்துவிட்டது என்று காட்டவில்லை. மேலும் 2 மக் 15:9-இல் மூன்றாவது பிரிவான நூல்களைக் குறிப்பிடாமல், ''சட்டம் மற்றும் இறைவாக்கினர்களிலிருந்து'' எடுத்துக்கூறி, தன் படையினரை யூதா மக்கபேயு உற்சாகப்படுத்துகிறார்.

கி.பி. 90-இல் யாம்னியாவில் (யாப்னேயில்) யூத ராபிகள் துணைத் திருமுறை நூல்கள் உட்பட்ட இந்த நூல்கள் அனைத்தையும் நிராகரித்தனர். ஆனால், இஃதோடு எல்லாம் முடிந்து விடவில்லை. கும்ரானில் எந்தத் தடயமும் காணப்படாத எஸ்தர் நூலின் திருமுறைத்தன்மை நெடுங்காலமாக யூதர்களாலும் கிறிஸ்தவர்களாலும் ஐயுறப்பட்டது. பழமொழி, உன்னத சங்கீதம், ரூத்து, திருவுரை, எசேக்கியேல் ஆகிய நூல்கள் பற்றியும், இவை எல்லா இடங்களிலும் ஏற்றுக்கொள்ளப்படும் வரை, இத்தகைய ஐயப்பாடு இருந்தது. மறுபுறம் நிராகரிக்கப்பட்ட நூல்களும் ஒரு காலத்திற்குப் பயன்படுத்தப்பட்டன. சான்றாக, சீராக்கு நூல் செபக்கூட வழிபாட்டிலிருந்து நீக்கப்பட்டிருந்தாலும், திருநூலைப் போல் எடுத்துக் கூறப்பட்டது. பல நூற்றாண்டுகளுக்கு இது வாசிக்கப்பட்டது. யூத ராபிகள் இவற்றை நிராகரித்ததே, இவற்றின் எபிரேய அல்லது அரமேயிக்கு வாசகம் காலப்போக்கில் மறைந்து போனதற்குக் காரணமாக இருக்கலாம்.

கி.பி. 70-இல் நடந்த பேரழிவுக்குப்பின், யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்குமிடையில் கசப்பான போராட்டங்கள் எழுந்தன. அதன் விளைவு யூதர்கள் எழுபது நூலையும் மற்றும் சில நூல்களையும் நிராகரித்தனர். இக்காலத்திற்குள் பெரும்பாலான கிறிஸ்தவர்கள் கிரேக்க மொழி பேசுபவர்களாக இருந்தனர். இவர்களின் விவிலியம் எழுபது நூல்தான். யூதர்களால் எடுக்கப்பட்ட எந்தத் தீர்மானமும், குறிப்பாகக் கிறிஸ்தவர்கள் பால் கொண்ட பகையால் எடுக்கப்பட்ட தீர்மானம், கிறிஸ்தவர்களைப் பாதித்தது என்று எதிர்பார்க்க முடியாது. கி.பி. 70-க்கு முன் யூதர்கள் போலவே கிறிஸ்தவர்களும் திருமுறைப்பட்டியலைப் பற்றித் தெளிவில்லாத கருத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தனர். பட்டியலில் சேர்க்கப்பட வேண்டிய நூல்களில் பெரும்பாலானவற்றைப் பற்றி கருத்தொற்றுமை கொண்டிருந்தனர். ஆனால் அதன் வரையறைபற்றி உறுதியான கருத்துக் கொண்டிருக்கவில்லை. நமக்குக் கிடைத்திருக்கும் எழுபது நூலின் முழுப் பட்டியலும் அடங்கிய பிரதி நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். முதல் மூன்று நூற்றாண்டுகளைச் சேர்ந்த பிரதிகளில், துணைத்திருமுறை நூல்கள் ஒரே விதமாகக் காணப்படவில்லை என்பது கவனிக்கத்தக்கது. மேலும், இந்நூல்கள் ஒரே இடத்தில் தொகுக்கப்பட்டுக் காணப்படவில்லை; மாறாக, பழைய ஏற்பாடு முழுவதும் பரவிக்கிடக்கின்றன. இவற்றில் சில நூல்கள் இறை ஏவுதல் பெற்று, திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததாகக் கருதப்பட்டு, பின்பு

நிராகரிக்கப்பட்டாலும், இவை யாவும் சமமாகக் கருதப்பட்டன. 4-ஆம் நூற்றாண்டில் இருந்த நிலை இதுதான் என்றால், இவற்றைப் பற்றிய கருத்து, முதல் நூற்றாண்டில் இருந்தது போலவே, 4-ஆம் நூற்றாண்டிலும் தெளிவில்லாமல் இருந்தது. இது பற்றி நாம் தெளிவாக இருக்க வேண்டும். முதல் கிறிஸ்தவர்கள்,கி.பி. 90-இல் யாம்னியாவின் யூதத் தலைவர்களிடமிருந்து தங்கள் திருமுறைப்பட்டியலைப் பெறவில்லை. கி.பி. 70-க்கு முன்பே, பிற்காலத்தில் திருமுறைப்பட்டியலில் சேர்க்க வேண்டிய நூல்களைப் பெற்று விட்டனர். குறிப்பிட்ட நூல்களிலிருந்து அவர்கள் எடுத்தாளும் மேற்கோள்கள் மற்றும் குறிப்புகளிலிருந்து இந்நூல்களை நாம் யூகிக்கலாம். புதிய ஏற்பாட்டில், துணைத் திருமுறை நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட வெளிப்படையான மேற்கோள்கள் இல்லை; ஆனால், சுவடுகள் உள்ளன. இவற்றில் சில: *மத் 6:14=சீரா 28:2; மத் 27:39-40=ஞானம் 2:12-15; உரோ 1:20தொ= ஞானம் 13-14; எபி 11:35-39=2மக் 6:18-7:42; யாக் 1:19=சீரா 5:11-13; 1 பேதுரு 1:6=ஞானம் 3:3*தொ. **அப்போஸ்தலத் தந்தையர்கள்** மற்றும் தொடக்கத் திருச்சபை ஆசிரியர்கள் காலத்திற்கு வரும்போது, துணைத் திருமுறை நூல்களிலிருந்து மேற்கோள்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவையும் மூலத்திருமுறை நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோளைப் போலவே, பயன்பட்டுள்ளன.

**6. திருச்சபைத் தந்தையர்கள்:** எழுபது நூலில் அடங்கிய புனித நூல்களை, முதல் மூன்று நூற்றாண்டைச் சேர்ந்த திருச்சபை ஆசிரியர்கள் பயன்படுத்துகின்றனர். இதற்கு விதிவிலக்கு சர்தையைச் சேர்ந்த மெலித்தோ (கி.பி. *193)* ஆவார். இவர் எபிரேய வாசகத்தை எடுத்துக்கூறுகிறார். யூதர்களால் ஏற்றுக்கொள்ளப்படா விட்டாலும், துணைத்திருமுறை நூல்களைப் பயன்படுத்தற்குரிய கிறிஸ்தவர்களின் உரிமையை வலியுறுத்துகிறார் ஓரிசன் *(254)*. அதே பட்டியல் செல்தன்காம் பட்டியல் *(350)*, இப்போ சங்கப் பட்டியல் *(393)*, கார்த்தேசு சங்கப் பட்டியல் *(397)*, முதலாம் இன்னோசந்தின் பட்டியல் ஆகியவற்றில் காணப்படுகிறது. இதற்கு விதிவிலக்கு இலவோதிக்கேய சங்கப் பட்டியலாகும் *(360)*.

இவ்வாறு இருக்க அத்தனாசியு *(373)*, எருசலேம் சிரில் *(386)*, பொய்தியரின் கில்லரி *(366)*, எரோனிமு *(420)*, ரூபைனுசு *(410)*, கிரகோரி நாசியான்சன் *(390)* போன்ற நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த திருச்சபைத் தந்தையர்கள், துணைத்திருமுறை நூல்களை நிராகரித்து, எபிரேயத் திருமுறைப் பட்டியலைப் பயன்படுத்தியதை விளக்குவது கடினமாகும். இக்கருத்திற்கு அடிப்படை, எரோனிமு யூதர்களோடு சேர்ந்து செய்த விவிலிய ஆய்வுகளாகும். இந்த யூதப் பாதிப்பு மற்றவர்களுக்கும் பொருந்தும். இக்கருத்து முதலில் கிழக்குத் திருச்சபையிலும், கிழக்கில் நெடுங்காலமாக வாழ்ந்த இலத்தீன் தந்தையர்களின் நூல்களிலும் காணப்படுவது கவனிக்கத்தக்கதாகும். இந்தத் தந்தையர்களின் ஆதிக்கம் எவ்வளவு மிகுந்திருந்ததென்றால், இவர்களின் கருத்து, சில அறிஞர் குழுக்களிடையே 16-ஆம் நூற்றாண்டுவரை நிலவியது. ஆயினும், பிளாரன்ஸ் சங்கம் எழுபது நூல் பட்டியலையே எடுத்துக் கூறியது.

திருமுறைப்பட்டியலைப் பற்றிய, கருத்தொற்றுமை மேற்குத் திருச்சபையில் 5-ஆம் நூற்றாண்டிலேயே பெருமளவிற்கு ஏற்பட்டதென்று கூறலாம். கிழக்குத் திருச்சபையில் இது 7-ஆம் நூற்றாண்டில்தான் எட்டப்பட்டது. இலத்தீன் மொழி விவிலியம் நீண்ட பட்டியலையே கொண்டிருந்தது. சில பதிப்புகள், 3-4 எஸ்திராஸ், மனாசேயின் மன்றாட்டு போன்ற நூல்களைக் கூடுதலாக முடிவில் கொண்டிருந்தன. ஆனால், இங்குமங்குமாகக் கருத்து வேறுபாடுகள் இல்லாமல் இல்லை. இந்நிலை சீர்திருத்தக் காலம் வரை நீடித்தது எனலாம்.

பொதுவாகக் கூறுமிடத்து, கத்தோலிக்கத் திருச்சபையால் இறுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நூல்கள் திருச்சபைத் தந்தையர்களாலும் ஆசிரியர்களாலும் திருநூல் என்று அடிக்கடி எடுத்துக்கூறப்பட்டவையும், திருநூல் என்ற அளவில் திருச்சபையில் வாசிக்கப்பட்டவையும், கிரேக்க விவிலியப் பிரதி

களிலும் அதன் விளைவாக இலத்தீன் விவிலியத்திலும் தொடர்ச்சியாக இடம் பெற்றவையுமாகும். எழுபதுநூல் பிரதிகளில் சிலசமயம் காணப்பட்ட *3-4* எஸ்திராஸ், மனாசேயின் மன்றாட்டு, *3-4* மக்கபேயர், சங்கீதம் 151, சாலமோனின் சங்கீதங்கள் போன்றவை காலப்போக்கில் நீக்கப்பட்டன. இதற்குரிய புறக்காரணங்கள், இவை திருச்சபைத் தந்தையர்களாலும் ஆசிரியர்களாலும் அரிதாகவே எடுத்துக் கூறப்படுதல்; ஏற்கெனவே இருந்து நூல்களில் இரட்டிப்பு வாசகமாயிருத்தல் (எ.கா. 3 எஸ்திராஸ்); இவற்றின் பொருளடக்கம் தகுதியுடையதாக இல்லாதிருத்தல்; பிற்காலத்தைச் சேர்ந்ததாக இருத்தல் (எ.கா. 4 எஸ்திராஸ்) ஆகியவையாகும். இறுதி முடிவாக, இறைவனது ஆவி தமது திருச்சபையின் வழியாகச் செயலாற்றியதையே கண்டுணரலாம்.

***7. சீர்திருத்தகாலம்:*** சீர்திருத்தவாதிகள் என்று தங்களையே அழைத்துக்கொண்டவர்கள் உரோமைத் திருச்சபையிலிருந்து முறித்துக் கொண்டபோது பழைய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலைப் பற்றிய பிரச்சனைக்குத் தீர்வு காண வேண்டியிருந்தது. பல செயல்களை நாம் மனதில் கொள்ள வேண்டும். சான்றாக, துணைத்திருமுறை நூல்களில் ஒன்றான 2-ஆம் மக்கபேயர் நூல் புனிதர்களின் பரிந்துரைக்கும் மன்றாட்டு *(2 மக் 15:14)*, இறந்தோருக்காக மன்றாடுதலும் அதன் பின் வளர்ச்சியான உத்தரிக்கிற நிலையும் பற்றிக் *(12:43-45)* கூறுவது குழப்பம் உண்டாக்கக்கூடிய உண்மையாகும். மேலும், இந்த நூல்கள் எபிரேய வாசகங்களில் காணப்படவில்லை. மூலத்திலிருந்து விவிலியத்தைப் பெறுவதை மிகவும் வலியுறுத்திய சீர்திருத்தவாதிகள் இந்நூல்களை நிராகரித்ததையோ இவற்றைத் தாழ்ந்த நிலையில் வைத்ததையோ கண்டு வியப்படைய வேண்டியதில்லை. அவர்களிடையேயும் கருத்து வேறுபாடுகள் இருந்தன. லூத்தரும், இங்கிலாந்து திருச்சபையும் இவற்றைத் திருமுறைப்பட்டியலில் சேர்த்துக்கொள்ளவில்லை; ஆனால், வளர்ச்சிக்குரியவையாகவும், திருச்சபையில் வாசிக்கக் கூடாதவையாகவும் கருதினர். துணைத் திருமுறை நூல்களை நிராகரித்த இந்தச் சீர்திருத்தவாதிகள், இந்நூல்களுக்குப் போலிநூல்கள் (Apocrypha) என்று பெயர் கொடுத்தனர். இந்தப் பெயரின் கீழ் இலத்தீன் விவிலியத்தில் காணப்பட்ட கூடுதலான நூல்களையும் சேர்த்தனர். இங்கிலாந்து திருச்சபை இந்நூல்களைப் பழைய ஏற்பாட்டின் முடிவில் பதிப்பித்தது. இவையில்லாமல் விவிலியத்தைப் பதிப்பிப்பதற்கு ஓராண்டு சிறைத்தண்டனையும், கி.பி. *1615*-இல் அளிக்கப்பட்டது. ஆயினும் பிற்காலத்தில் வந்த விவிலியப் பதிப்புகளில் இவை சேர்க்கப்படவில்லை. 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எடின்பர்க் விவிலியக் கழகம், இந்நூல்களை மூடப்பக்தியுடையவை என்றும் பொருளற்றவை என்றும் கண்டனம் செய்தது. அதற்குப்பின் இவற்றைப் பதிப்பிக்கப்போவதில்லை என்று எல்லா விவிலியக் கழகங்களும் தீர்மானித்தன. ஆயினும், இப்போது பிரிவினைச் சகோதரர்கள் இந்நூல்களைப் பயன்படுத்துவது பொதுவாக வளர்ந்து கொண்டிருக்கிறது.

***8. கிழக்கத்திய திருச்சபை:*** தனது வரலாற்றின் பெரும் பகுதியில் இந்தத் திருச்சபை நீண்ட திருமுறைப்பட்டியலையே கொண்டிருந்தது; ஆனால், உரோமை கொண்டிருந்த வரிசையில் கொண்டிருக்கவில்லை. சீர்திருத்த காலத்தில் கான்ஸ்டான்டினோப்பிலின் பேராயரான சிரில் லூக்காரியா என்பவர், பாப்புவின் அதிகாரத்திற்கு எதிராகப் போராடினார்; இதில் பிரிவினைச் சகோதரர்களின் போக்கைப் பின்பற்றினார். இவர் கி.பி. 1629-இல் கிரேக்க மொழியில் ஒரு விவிலியத்தைப் பதிப்பித்தார். இதில் மூலத் திருமுறைப் பட்டியலில் உள்ளடங்கிய நூல்களை மட்டும் பதிப்பித்தார். துணைத் திருமுறை நூல்களைச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆனால், இவரது இந்த முயற்சி மக்களின் ஆதரவைப் பெறவில்லை. இவரது எதிரிகளின் தூண்டுதலால், காலப்போக்கில், சுல்தான் இவரைக் கொன்றான். இவரது இறப்புக்குப் பின்வந்த ஆண்டுகளில், கிழக்கத்திய திருச்சபை, பல சங்கங்களைக் கூட்டி, நீண்ட திருமுறைப் பட்டியலை ஆதரிக்கும் தனது விசுவாசத்தை

விட்டுக் கொடாத முறையில் எடுத்துக்கூறியது; சிரில் லூக்காரியாவைக் கண்டனம் செய்தது. இவரது விவிலியத்தை நிராகரித்தது. எனினும், இங்குமங்கும் கருத்து வேறுபாடு இல்லை என்று கூற முடியாது. ஆனால், பெருமளவுக்குக் கிழக்கத்திய திருச்சபை நீண்ட திருமுறைப்பட்டியலையே ஆதரித்து வந்துள்ளது.

**9. திரிதெந்தீன் பொதுசசங்கம்:** சீர்திருத்தவாதிகளின் போக்கை எதிர்கொண்ட கத்தோலிக்கத் திருச்சபை ஒரு நிலையைத் தீர்மானிக்க வேண்டியிருந்தது. திரிதெந்தீன் பொதுச்சங்கத்தில் தந்தையர் சிலர், எரோனிமுவின் பட்டியலை ஏற்று அறிக்கையிட கருத்துத் தெரிவித்தனர். இச்சங்கம், கி.பி. **1546**-இல், பழைய மற்றும் புதிய ஏற்பாட்டு நூல்கள் அனைத்தையும் சம பக்தியோடும் வணக்கத்தோடும் தாம் ஏற்றுக்கொள்வதாக அறிவித்தது. அதற்குப்பின், ஆப்பிரிக்கச் சங்கங்கள் ஏற்றுக்கொண்ட நீண்ட பட்டியலைக் கொடுக்கிறது. திரிதெந்தீன் சங்கக் காலத்திலிருந்து, கத்தோலிக்கத் திருச்சபை மூலத் திருமுறை நூல்களையும், துணைத் திருமுறை நூல்களையும் சமநிலையிலும் சமஇறை ஏவுதல் பெற்றதாகவும் ஏற்று அறிக்கையிட்டது. இஃதோடு இப்பிரச்சனை முடிவு கட்டப்பட்டது. அதே விசுவாச அறிக்கை முதல் வத்திக்கான் சங்கத்திலும், இரண்டாம் வத்திக்கான் சங்கத்திலும் வலியுறுத்தப்பட்டது.

*சீர்திருத்தவாதிகள் (பிரிவினைச் சகோதரர்கள்)* எபிரேயத் திருமுறைப்பட்டியலில் *(மூலத் திருமுறைப்பட்டியலில்)* காணப்படும் நூல்களை மட்டும் இறைஏவுதல் பெற்றதாகவும், திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததாகவும் ஏற்றுக்கொள்வர். கத்தோலிக்கர்கள் மூலத்திருமுறைப்பட்டியலிலும், துணைத்திருமுறைப்பட்டியலிலும் காணப்படும் நூல்கள் அனைத்தையும் இறை ஏவுதல் பெற்றதாகவும் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததாகவும் சம பக்தியோடும் வணக்கத்தோடும் ஏற்றுக்கொள்வர்; அவற்றைப் பின்வருமாறு பிரித்துக்காட்டுவர்.

ஐந்நூல் *(சட்டம்):-*ஆதி, யாத்திரை, லேவியர், எண், உப ஆகமங்கள்.

வரலாற்று நூல்கள்:-யோசுவா, நீதிபதி, *1-2* சாமுவேல் *(1-2 அரசர்கள்)*, *1-2* அரசர்கள் *(3-4-அரசர்கள்)*, *1-2* நாள், எஸ்ரா, நெகேமியா, தோபி, யூதித்து, *(10:4-16:24 உள்ளிட்ட)* எஸ்தர்.

ஞானநூல்கள்:-யோபு, சங்கீதங்கள், பழமொழி, திருவுரை, உன்னத சங்கீதம், ஞானம், சீராக்கு.

பெரிய இறைவாக்கினர்கள்:-எசாயா, *(புலம்பல், பாரூக்கு சேர்ந்த)* எரேமியா, எசேக்கியேல், *(3:24-90;13-14 உள்ளிட்ட)* தானியேல்.

சிறிய இறைவாக்கினர்கள்:-ஓசேயா, யோவேல், ஆமோஸ், ஒபதியா, யோனா, மீக்கா, நாகூம், அபக்கூக்கு, செப்பனியா, ஆகாய், செக்கரியா, மலாக்கி.

வரலாற்றுப் பிற்சேர்க்கை: 1-2 மக்கபேயர்.

## விவிலியத் திருமுறைப்பட்டியல் - புதிய ஏற்பாடு (BIBLICAL CANON - N.T.))

**I. உருவாதல்:** பழைய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலைப்போல் புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலும் படிப்படியாக வளர்ந்ததாகும். தொடக்கத்தில் இத்தொகுப்பின் நூல்கள், தனித்தனியாக, ஒன்றையொன்று சாராது, வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு சூழ்நிலைகளில், வெவ்வேறு தேவைகளுக்கு ஏற்பத் தோன்றின. பின்வரும் தலைமுறைகளுக்குச் சொத்தாக விட்டுச்செல்ல ஒரு தொகுப்பைப் படைக்க ஒத்துழைக்க வேண்டும் என்ற கருத்து அப்போஸ்தலர்களிடமோ, அவர்களது சீடர்களிடமோ இருந்ததில்லை. இயேசுவும் அவரது அப்போஸ்தலர்களும் போதகர்களே ஒழிய, எழுத்தாளர்கள் அல்லர். அவர்கள் படிப்பித்தனர், போதித்தனர். ஏனெனில், பவுலின் சொற்களில், ''அறிவிப்பதைக் கேட்பதால்தான் விசுவாசம் உண்டாகிறது'' *(உரோ 10:17)*. வாய்மொழி நற்செய்

தியைப் பலப்படுத்தவே, எழுதப்பட்ட நற்செய்தி பயன்பட்டது (காண்க. லூக் 1:4). புதிய ஏற்பாட்டின் ஒவ்வொரு நூலும் தனித்தனியாகத் தோன்றியது. அதற்கே உரிய வரலாற்றைக் கொண்டுள்ளது. சான்றாக, பவுல், செயல்முறையான தேவைகளைச் சந்திக்கவும், போதகம் அளிக்கவும், உற்சாகப்படுத்தவும், உடனடியான ஆபத்துகளைப் பற்றி எச்சரிக்கவும் ஒரு விசுவாச சமூகத்திற்குத் தமது மடல்களை எழுதினார். உரோமைப் பேரரசு முழுவதும் அமைந்திருந்த தலத்திருச்சபைகளுக்கு எழுதப்பட்ட இத்தகைய மடல்கள் மற்றத் திருச்சபைகளோடும் பகிர்ந்து கொள்ளப்பட்டன. இப்படிச் செய்யுமாறு, பவுலே கேட்டுக்கொள்கிறார் (கொலோ 4:16). இத்தகைய மடல்கள் எண்ணிக்கையில் பெருகின. ஒவ்வொரு திருச்சபையும் இம்மடல்களின் தொகுப்பைச் சேர்த்துக்கொள்ள விரும்பியது. எப்படித் திருமுறைப்பட்டியலின் கருமூல வடிவம் தோன்றியது என ஏற்கெனவே இங்குக் காணலாம். இச்சிறுதொகுப்பு அப்போஸ்தலர்களிடமிருந்து தோன்றியதன் தெளிவான முத்திரை அல்லது உத்தரவாதம் கொண்ட நூல்கள் மேலும் மேலும் சேர்க்கப்பட்டபோது பெருகியது. பழைய ஏற்பாட்டுக்கு இணைந்த முறையில், புதிய ஏற்பாட்டிலும் இத்தகைய தொகுப்பு உருவாவதைப் பற்றிய அடையாளங்கள் புதிய ஏற்பாட்டிலேயே உள்ளன. ''நமது அன்புக்குரிய பவுலும், தமக்கு அளிக்கப்பட்ட ஞானத்தின்படி இவ்வாறே உங்களுக்கு எழுதியுள்ளார். தம் கடிதங்களில் இதைப் பற்றிப் பேசும்போதெல்லாம் அதையே அவர் சொல்கிறார். புரிந்து கொள்வதற்குக் கடினமானவை சில அவருடைய கடிதங்களில் உள்ளன. அறியாதவர்களுக்கும் உறுதியற்றவர்களுக்கும் மறைநூலின் மற்றப் பகுதிகளுக்குப் பொருள் திரித்துக் கூறுவது போல், இவற்றிற்கும் கூறுகின்றனர்'' (2 பேதுரு 3:15-16).

உயிருள்ள சாட்சிகள் குறைந்து கொண்டே போயின. அதே சமயம், விசுவசிக்கும் சமூகங்களின் எண்ணிக்கை பெருகியது. இச்சூழ்நிலையில், ஆண்டவரது போதகம், வாழ்வு, மரணம் மற்றும் உயிர்ப்புப் பற்றிய எழுதப்பட்ட ஏடுகள் இருந்தால் வருங்காலத் தலைமுறைகளுக்குப் போதகம் அளிக்கப் பயனுள்ளதாக இருக்கும் என்ற உணர்வு மேலும் மேலும் வளர்ந்தது. இந்நிலையில் முதலில் முழுவதும் வாய்மொழிப் பாரம்பரியமும் முதலாவது எழுதப்பட்ட ஏடுகளும் கலந்த நிலையைக் காண்கிறோம். இவற்றைத் திட்டம் செய்ய எடுக்கப்பட்ட பல முயற்சிகளையும் தான் அறிந்திருப்பதாகவும் அவற்றைத் தான் பயன்படுத்தியதாகவும் லூக்கா கூறுகிறார் (லூக் 1:1). திருமுறை நற்செய்திகளில் வாழ்க்கை நிகழ்ச்சிகள் நிலைப்படுத்தப்பட்ட இறுதிக் கட்டத்திற்கு முன், இவை பற்றிய முன் வரலாறு இருந்திருக்க வேண்டும். இதில் முழுவதும் வாய்மொழிப் பாரம்பரியம் மட்டும் அடங்கியிருக்கவில்லை எனலாம். நற்செய்தி ஒரு முறை எழுதப்பட்டபின், திருமுகங்களைப்போல், ஒரு திருச்சபையிலிருந்து மற்றத் திருச்சபைகளோடு பரிமாறிக்கொள்ளப்படும். ஒவ்வொரு திருச்சபையும் தன்னிடமுள்ள ஏட்டுத்தொகுப்போடு புதிதாகக் கிடைத்த நூல்களையும் சேர்த்துக் கொள்ளும். யோவான் நூல் இவ்வாறு பரிமாறிக் கொள்ளப்பட்டதற்குச் சான்று 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எகிப்திய புல்தாள் ஏடுகளில் காணப்படுகின்றது. ஆனால், இத்தொகுப்புகள் விரைவாகச் செய்யப்படவில்லை. ஏனெனில், தொலைத்தொடர்புகள் மெதுவாகவும் கடினமாகவும் இருந்ததாலும், நூல்களைப் பிரதி எடுக்க வேண்டிய சாதனங்கள் குறைவாக இருந்ததாலும், நூல்களைத் தொகுப்பது மெதுவாகவே நடந்தது. வேறு தடங்கல்களும் இருந்தன. எடுத்துக்காட்டாக, சிறிய கடிதங்கள் தனிநபர்களுக்கு எழுதப்பட்டவை; கோட்பாட்டளவில் முக்கியமில்லாதவை; இவை அப்போஸ்தலிக்க மூலங்களிலிருந்துதான் தோன்றினவா என்று கூறுவது கடினம். மேலும் போலியான, தனிக்குறிக்கோள் நோக்குடைய நூல்கள் மக்களிடையே உலவின. இவையும் அப்போஸ்தல மூலம்

கொண்டிருந்ததாக உரிமை கொண்டாடின. ஆகவே, அப்போஸ்தல அதிகாரம் பெற்றதாக உறுதி செய்யப்படாத, ஐயமுள்ள எதையும் ஏற்றுக்கொள்ள மக்கள் எச்சரிக்கையாக இருந்தனர். இச்சூழ்நிலையில், உண்மையானதும், இறை ஏவுதல் பெற்றதும் நிறை திருமுறை நிலை பெற்றதுமான சில நூல்கள் நீண்ட காலத்திற்கு எல்லா இடங்களிலும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்றால் வியப்படைய வேண்டியதில்லை. இவை புதிய ஏற்பாட்டுத் துணைத் திருமுறை நூல்கள் என்றழைக்கப்பட்டன. இவை எபிரேயர், யாக்கோபு, 2 பேதுரு, 2-3 யோவான், திருவெளிப்பாடு ஆகிய நூல்களாகும். ஆனால், புதிய ஏற்பாட்டைப் பொருத்தமட்டும் கத்தோலிக்கர்களுக்கும் பிரிவினைச் சகோதரர்களுக்குமிடையில் வேறுபாடு இல்லை. புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்த நூல்கள் நான்கு நற்செய்திகள், அப்போஸ்தலர் பணி நூல், பவுலின் பதினான்கு திருமுகங்கள், ஏழு பொதுத்திருமுகங்கள் (யாக்கோபு, 1-2பேதுரு, 1-2-3 யோவான், யூதா), திருவெளிப்பாடு ஆகியவையாகும்.

II. **வரலாறு:**

***1) தொடக்க காலத்திலேயே:*** உரோமை, அந்தியோக்கியா, கொரிந்து, அலக்சாந்திரியா போன்ற முக்கிய திருச்சபைகளும் மற்றத் திருச்சபைகளும் தாங்கள் அதிகாரபூர்வமானவை என்று கருதிய அப்போஸ்தல நூல்களைக் கொண்டிருந்திருக்க வேண்டும். ஆனால் அவற்றின் எண்ணிக்கை வேறுபட்டிருக்கலாம். திருநூலாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பவுலின் நூல்கள் அடங்கிய தொகுப்பு இருந்ததற்குப் புதிய ஏற்பாட்டிலேயே சான்று இருப்பதை ஏற்கெனவே பார்த்துள்ளோம். மேலும், நற்செய்திகளும் அப்போஸ்தலர்களின் நூல்களும் தனிச்சிறப்பான இடத்தைக் கொண்டிருந்தன என்று அப்போஸ்தலிக்கத் தந்தையர்கள் எடுத்துக் கூறுகின்றனர். இவர்கள் இந்நூல்களைத் தங்கள் நூல்களிலிருந்து கவனமாய்ப் பிரித்துக்காட்டுவது கவனிக்கத்தக்கது. உரோமைக் கிளமந்து (கி.பி. 96), அந்தியோக்கு - இஞ்ஞாசியார் *(107-110)*, சிமிர்னா போலிக்கார்ப்பு *(70-156)* ஆகியோரின் நூல்கள் இதற்குச் சான்று பகர்கின்றன.

வெளிப்படையான குறிப்புகளைத் தவிர, தற்செயலான குறிப்புகளும் சிந்தனை மற்றும் மொழி இணைவுத்தன்மையும் பல காணப்படுகின்றன. இவை பவுலின் நூல்களை நன்கு அறிந்திருப்பதாகத் தெரிகிறது. அப்போஸ்தோலிக்கத் தந்தையர்களின் நூல்களில் புதிய ஏற்பாட்டு நூல்கள் பலவற்றின் தெளிவான சுவடுகள் காணப்படுகின்றன. இஃது எவ்வளவு பரந்த அளவில் காணப்படுகின்றன என்றால், இந்நூல்களின் தொகுப்பு பொதுவாக அறியப்பட்டிருந்தது, பரவலாகப் பயன்பட்டது என்பது பற்றி ஐயமேயில்லை எனலாம்.

நமது ஆண்டவரின் வாழ்வும் போதனையும் இன்னும் வாய்மொழியால் அறியப்பட்டு வந்தாலும், எழுதப்பட்ட நற்செய்திகளைச் சுட்டிக்காட்டல்களும் காணப்படுகின்றன. தொடக்க கால ஆசிரியர்களின் தீர்ப்பு தெளிவாக உள்ளது. ஏனெனில், அவர்கள் இந்நூல்களை அதிகாரபூர்வமானவையாகப் பயன்படுத்துகின்றனர்; இவை அப்போஸ்தலர்களிடமிருந்து வருவதாக ஏற்றுக்கொள்கின்றனர்; இறை ஏவுதல் பெற்றவையாக எடுத்துக்கூறுகின்றனர்.

***2) காப்புரையாளர்கள்:*** திருச்சபை வாழ்வில் பின்வந்த காலத்தில், உரோமைப் பேரரசின் கொடுமைகளையும், பதிதப் போலிச் சகோதரர்களின் தாக்குதல்களையும் எதிர்கொண்டபோது, திருச்சபைக்கு உதவ காப்புரையாளர்கள் தோன்றினர். அவர்களின் நூல்களில் திருமுறை நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் மிகுந்து காணப்படுகின்றன. அவை அப்போஸ்தல அதிகாரத்தின் மேல் அமைந்திருப்பதாக விவரிக்கிறார் மறைசாட்சியான யுஸ்தீன். கிறிஸ்தவர்கள் ஞாயிறன்று வழிபாட்டுக்குக் கூடியபோது, இந்நிகழ்ச்சியுரைகள் இறைவாக்கினர்களோடு சேர்த்து வாசிக்கப்பட்டன. இது, பழைய ஏற்பாட்டோடு சேர்ந்து கிறிஸ்தவர்களின் தொகுப்பும் இடம் வகிப்பதைச்

சுட்டுகிறது. இன்று நாம் கொண்டிருக்கும் நான்கு நற்செய்திகளைப் பற்றி யுஸ்தீன் பேசுகிறார். இதை அவருடைய சீடர் தேசியனின் நூலும் உறுதிப்படுத்துகிறது. இந்த நற்செய்திகளிலிருந்துதான் தேசியன் தனது நற்செய்திகளின் ஒருங்கமைவு நூலைத் தயாரித்தார். திருவெளிப்பாட்டு நூலைப் புனித யோவான் எழுதியதாக யுஸ்தீன் கூறுகிறார். கொரிந்தைச் சேர்ந்த தெனிசு என்பவர் *(176)*, ஒரு முக்கிய பகுதியில், பதிதர்கள் தன்நூலைப் பழுது படுத்துவதாக முறையிடுகின்றார். ஆனால், ஆண்டவரது திருநூலுக்குங்கூட இப்படித் தான் நடந்தது என்ற நினைவால் ஆறுதல் அடைகிறார். பதிதரான மார்சியோன் *(150)* புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியல் இருந்ததற்கு நேரடிச்சான்று கொடுக்கிறது. இவரது கூற்றுகளே திருச்சபை தனது புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலை வரையறை செய்வதற்குத் தூண்டியது எனலாம். மார்சியோன் பழைய ஏற்பாடு முழுவதையும் நிராகரித்தார்; புதிய ஏற்பாட்டில், குறுகிய வடிவத்தில் லூக்கா நற்செய்தி மற்றும்பவுலின் பத்துத் திருமுகங்களைத் தவிர, மற்றவற்றை நிராகரித்தார். இவரது நிலைக்கு எதிர்ப்பாக, இனி வரும் விவிலியங்களோடு ''மார்சியோனுக்கு எதிராக'' என்ற முன்னுரையும் சேர்த்துப் பதிப்பிக்கப் பட்டது.

2-ஆம் நூற்றாண்டு முடிவுகள் புதிய ஏற்பாட்டு நூல்கள் அனைத்தாலும் பொதுவாக அறியப்பட்டிருந்தன; . அவற்றில் பெரும்பாலானவற்றின் இறைப்பண்பு எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதற்குச் சிறிய ஆசியா, பிரான்ஸ், உரோமை போன்ற இடங்களில் நிலவிய பாரம்பரியங்களை நன்கு அறிந்தவரும், தனது ஆசிரியர்கள் வழியாக அப்போஸ்தல முடிவோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவருமான இரனேயு, வட ஆப்பிரிக்காவைச் சேர்ந்த தெர்துல்லியன், அலக்சாந்திரிய கிளமந்து போன்ற தந்தையர்களின் நூல்களில் சான்றுகளைக் காணலாம். இவர்கள் அளிக்கும் பட்டியலில் சில நூல்கள் விடப்பட்டிருக்கலாம். ஆனால் திருச்சபைத் தந்தையர் யாவரும், மார்சியோனின் நிலையை நிராகரித்து, இந்நூல்களின் உண்மைத் தன்மையையும் அதிகாரத்தையும் வலியுறுத்துகின்றனர்.

நமக்கு ஏட்டுவடிவில் கிடைத்திருக்கும் காலத்தால் முந்திய பட்டியல் ''மூராத்தோரியின் துணுக்குகளாகும்'' *(200)*. இவற்றை மிலானிலுள்ள அம்ரோசியார் நூல் நிலையத்தில், 1740-இல் மூராத்தோரி என்பவர் கண்டுபிடித்தார். அவரது பெயரால் இத் துணுக்குகள் அழைக்கப்படுகின்றன. இவற்றில் 2-ஆம் நூற்றாண்டின் முடிவில் உரோமையில் அதிகாரபூர்வமாக ஏற்றுக்கொள்ளப் பட்ட நூல்களின் பட்டியல் அடங்கியுள்ளது. இந்நூல்கள் நான்கு நற்செய்திகள், அப்போஸ்தலர் பணி, (எபிரேயரைத் தவிர்த்த) பவுலின் திருமுகங்கள், யாக்கோபு, 1-2 பேதுரு, யோவானின் ஒரு திருமுகம் ஆகும். 3-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தைச் சேர்ந்த செஸ்டர் பீட்டி ஏடுகள் மூன்று ஏட்டுத் தொகுப்புகளைக் கொண்டுள்ளன. இவற்றை ஒன்று சேர்க்கும் போது, அது மேய்ப்புப்பணித் திருமுகங்கள் மற்றும் பொதுத்திருமுகங்கள் தவிர்த்த, புதிய ஏற்பாட்டு நூல்கள் அனைத்தையும் கொண்டுள்ளது.

சான்றுகளிலிருந்து, 3-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து, புதிய ஏற்பாடு, நாம் திருமுறைப்பட்டியலில் கொண்டிருக்கும் நூல்களைப் பெருமளவிற்குக் கொண்டிருந்தது என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப் படும். இப்படிக் கூறுவதால் சில நூல்களைப் பற்றித் தயக்கமோ, தர்க்கமோ, மறுபரிசோதனையோ இருந்திருக்கவில்லை என்று கூறவில்லை.

III. **துணைத் திருமுறை நூல்கள்:** எபிரேயர், யாக்கோபு, 1-2 பேதுரு, 1-2-3 யோவான், யூதா, திருவெளிப்பாடு ஆகிய நூல்கள் புதிய ஏற்பாட்டுத் துணைத் திருமுறை நூல்கள் என்று சிலரால் அழைக்கப் படும். இவற்றின் உண்மைத்தன்மை பற்றி ஐயப்பாடுகள் எழுந்ததால், 3-ஆம் நூற்

றாண்டு திருச்சபைத் தந்தையர்கள் இவற்றில் சிலவற்றை ஏற்கத் தயங்கியுள்ளனர். சில குறுகியவையாகவும் நன்கு அறியப்படாமலும் இருந்தன. இவை திருமுறைத் தன்மைக்கு உரிமை கோரியபோது, அஃது உடனடியாக அளிக்கப்படவில்லை. இது புரிந்து கொள்ளக்கூடியதே.

திருவெளிப்பாட்டு நூல் தொடக்கத்திலிருந்தே எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால், 3-ஆம் நூற்றாண்டில் இந்நூல் ஆயிரமாண்டு நற்காலப் பதிதக்கொள்கைக்கு ஆதரவு அளிப்பதாகப் பயன்பட்டது. ஆகவே, இந்நூல் அப்போஸ்தலரால் எழுதப்பட்டதுதானா என்று மறு பரிசீலனை செய்ய அலக்சாந்திரியாவைச் சேர்ந்த தெனிசு என்பவரைத் தூண்டியது. இந்நூலின் இறை ஏவுதல் தன்மை மற்றும் திருமுறைத் தன்மை பற்றிய பாரம்பரியம் நெடுங்காலமாக இருந்ததால், இவற்றை அவர் மறுக்கவில்லை. ஆனால் நடை, சிந்தனை மற்றும் மொழியில் உள்ள வேறுபாட்டால், நான்காம் நற்செய்தியை எழுதிய ஆசிரியரே திருவெளிப்பாட்டு நூலை எழுதினார் என்பதைத் தெனிசு மறுத்தார். இந்நூலின் ஆசிரியர் பற்றிய ஐயப்பாடு அதன் திருமுறைத்தன்மையையும் ஐயத்திற்குள்ளாக்கியது. ஆகவே, அதன் அதிகாரத்தன்மையை ஏற்றுக்கொள்வதில் தயக்கம் உண்டாகியது. 4-ஆம் நூற்றாண்டில், யூசேபியு இதே தயக்கத்தை எடுத்துக்காட்டுகிறார். ஏனெனில், இந்நூலை ஏற்றுக்கொள்ளப்பட்ட நூல் தொகுப்பிலும் போலிநூல் தொகுப்பிலும் சேர்த்துக் கூறுகிறார். கிழக்கத்திய திருச்சபையில் எருசலேம் சிரில், இலவோதிக்கேயா சங்கம், கிரகோரி நாசியான்சன், அம்பிலியோக்கியு மற்றும் பிறரும் இந்நூலைத் திருமுறைப்பட்டியலில் ஏற்றுக்கொள்ளவில்லை. மேற்கத்திய திருச்சபையில் எரோனிமு, அகுஸ்தீனார், மற்றப் பெரிய இலத்தீன் தந்தையர்கள் இந்நூலின் அதிகாரத்தை ஏற்று வலியுறுத்தினர். இறுதியில் இரண்டு திருச்சபைகளாலும் இந்நூல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அத்தனாசியு இதைப் புதிய ஏற்பாட்டு நூல்களில் ஏற்றுக் கொள்கிறார்.

எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தைப் பொருத்தமட்டும், மேற்கத்திய திருச்சபைதான் ஐயப்பாடும் தயக்கமும் காட்டியது. இந்நூலைப் பவுல் எழுதவில்லை என்று கருதியது. ஆகவே நூலின் திருமுறைத்தன்மை கேள்விக்குரியதாயிற்று. கிழக்கத்திய திருச்சபையால், இந்நூல் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ பவுலைச் சேர்ந்தது என்று ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஓரிசன் போன்றவர்கள், நூலின் சிந்தனை பவுலினுடையது, நடையும் மொழியமைப்பும் அவருடைய சீடரைச் சேர்ந்தவை, இச்சீடர் தனது குருவின் போதகத்தைப் பிரமாணிக்கமாக எடுத்துரைத்தார் என்று கூறினர். இந்நூலின் உடனடியான ஆசிரியர் பற்றி உறுதியாக எதுவும் கூற முடியாவிட்டாலும், இந்நூல், புதிய ஏற்பாட்டு நூல்களில் அதன் பாரம்பரிய இடத்தைப் பெற்றிருந்தது. அத்தனாசியு, இதையும் சேர்த்துப் பவுல் 14 திருமுகங்களை எழுதியதாகக் கூறுகிறார். இந்நூலின் ஆசிரியர் பற்றி ஐயப்பாடு இருந்தாலும் 4-ஆம் நூற்றாண்டிலிருந்து கிழக்கிலும் மேற்கிலும் இந்நூல் அதிகாரமுடையதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இஃது ஆப்பிரிக்கச் சங்கங்களின் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளது.

நான்காம் நூற்றாண்டின் முடிவிற்குள், புதிய ஏற்பாட்டு நூல்கள் சிலவற்றைப் பற்றிய ஐயங்கள் மறைந்தன. இவை ஏற்றுக்கொள்ளப்பட்ட நூல்கள் என்பதற்கு மாறான தடங்கல்கள் எழவில்லை. இந்நிலை 16-ஆவது நூற்றாண்டு வரை நீடித்தது. திரிதெந்தீன் சங்கம் அறிக்கையிட்ட புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியல் இந்த ஏற்றுக்கொள்ளப்பட்ட நூல்களின் பட்டியல்தான். இன்று இதுதான் எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருமுறைப்பட்டியல். எராஸ்முஸ், கயேத்தான் போன்றவர்கள் போலிப்புலமையால் தவறாக வழிநடத்தப்பட்டு, பழைய ஐயங்களை மீண்டும் எழுப்பினர். லூத்தரும், செர்மென் சீர்திருத்தவாதிகள் சிலரும் யூதா, எபிரேயர், யாக்கோபு, திருவெளிப்பாடு ஆகிய நூல்களை நிராகரித்தனர். ''விசுவாசம் செயலோடு

கூடியதாய் இராவிட்டால், அது தன்னிலே உயிரற்றது'' என்ற யாக்கோபின் போதகத்தை லூத்தர் எதிர்த்துப் பேராடியது யாவரும் அறிந்த ஒன்றாகும். மற்றச் சீர் திருத்தசபைகள் புதிய ஏற்பாட்டுத் திருமுறைப் பட்டியலைப் பற்றித் தர்க்கிக்கவில்லை. லூத்தர் சபையினரும் 17-ஆம் நூற்றாண்டில் பாரம்பரியத் திருமுறைப்பட்டியலை ஏற்றுக்கொண்டனர். சில எதிர்ப்புகளின் பின்னணியில்தான் 1546-இல் திரிதெந்தீன் பொதுச்சங்கம் புதிய ஏற்பாட்டுத் திருமுறைப்பட்டியலில் பின்வரும் நூல்கள் அடங்கியுள்ளன என்று அறிக்கையிட்டது. அதையே முதலாம், இரண்டாம் வத்திகான் சங்கங்கள் வலியுறுத்தின.

1. நான்கு நற்செய்திகள்: மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான்.
2. லூக்கா எழுதிய அப்போஸ்தலர் பணி நூல்.
3. பவுல் எழுதிய 14 திருமுகங்கள்: உரோமையர், 1-2 கொரிந்தியர், கலாத்தியர், எபேசியர், பிலிப்பியர், கொலோசியர், 1-2 தெசலோனிக்கேயர், 1-2 திமொத்தேயு, தீத்து, பிலமோன், எபிரேயர்.
4. பொதுத் திருமுகங்கள்: யாக்கோபு, 1-2 பேதுரு, 1-2-3 யோவான், யூதா.
5. திருவெளிப்பாட்டு நூல்.

IV. **திருமுறையின் ஒப்பளவுகள்:** எந்த ஒரு தனிநூலின் இறை ஏவுதல் அல்லது இறை ஆசிரியத் தன்மையையும் இறை ஆசிரியர் மட்டுமே வெளிப்படுத்தக் கூடுமாகையால், அந்நூலின் இறை ஏவுதல் அல்லது திருமுறைத்தன்மையைப் பற்றி முடிவு செய்யப் பயன்படும் எந்த அளவுகோலும் அல்லது கோட்பாடும் இறைசாட்சியத்தைக் கொண்டிருக்க வேண்டும். இத்தகைய இறைசாட்சியத்தைக் கிறிஸ்து மற்றும் அவரது அப்போஸ்தலர்களிடமிருந்து ஏதாவது ஒரு வடிவில் வரும் பாரம்பரியத்தில் மட்டுமே காணலாம். இது திருச்சபையில் பாதுகாக்கப்பட்டிருக்க வேண்டும்; அதிகாரபூர்வமான கூற்றுகளால் அறிவிக்கப்பட்டிருக்க வேண்டும்; விசுவாச ஒழுங்கோடு ஒத்துப் போகக் கூடியதாக இருக்க வேண்டும். ஆனால், ஒரு கேள்வி எழலாம். புதிய ஏற்பாட்டு நூல்களை நிர்ணயிப்பதில், அப்போஸ்தலப் பாரம்பரியம் எந்தப் பொருளில் திருச்சபைக்கு வழிகாட்டியது?

முன்பு கூறியதுபோல், முதல் கிறிஸ்தவர்கள் தங்கள் மறைநூலைப் படிப்படியாகத் தொகுத்தனர். இவை தனிச்சிறப்பான புனிதமும் அதிகாரமும் உடையன என்று கருதினர். ஏனெனில், இவை அப்போஸ்தலர்களிடமிருந்து தோன்றின என்பதற்குத் தவறுக்கு இடமில்லாத முத்திரை அல்லது உத்தரவாதம் கொண்டிருந்தன எனக் கருதினர். அதே சமயம் நிரூபிக்கப்பட்ட, ஐயமற்ற அப்போஸ்தலிக்க அதிகாரம் பெறா எந்த நூலையும் இத்தொகுப்போடு சேர்த்துக் கொள்வதைத் தவிர்க்க மிக எச்சரிக்கையாக இருந்தனர். இதன்படி ஒருநூல் திருமுறைத் தன்மை கொண்டிருப்பதற்கு, அஃது அப்போஸ்தலர்களிடமிருந்து, ஏதாவது ஒரு வழியில் தோன்றியிருக்க வேண்டும் என்பதே தொடக்கத்திலிருந்த அளவுகோலாகும் என்று கருதினர். அப்போஸ்தலர்கள் கிறிஸ்துவின் பெயரால் போதிக்க அவரது தூதுவர்களாக அனுப்பப்பட்டவர்கள் என்பதால், அவர்கள் போதித்தவையெல்லாம் கிறிஸ்துவின் வார்த்தையாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் (உரோ 2:16; 16:25; 2 கொரி4:3). ஆனால், அவர்கள் போதனையைப் பேசப்பட்ட வார்த்தைக்கு மட்டும் ஏன் வரையறை செய்ய வேண்டும்? அவர்கள் பேசியபோது இருந்ததுபோல், எழுதிய போதும் கிறிஸ்துவின் தூதுவர்களாக இருக்கவில்லையா? இந்நோக்கில் அப்போஸ்தலர்கள் எழுதியவையும் இறை ஏவுதல் பெற்றவையேயாகும். இப்பொருளில் தான் அவை விசுவாசிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. மாற்கு, லூக்காவின் நூல்கள் முறையே பேதுரு, பவுலிடமிருந்து தோன்றியதாகக் கருதப்பட்டதால் அவை ஏற்றுக் கொள்ளப்பட்டன. ஆனால், ஒரு கேள்வி எழலாம். இறை ஏவுதல் என்ற தற்செயலான அருங்கொடை அல்லது ஆற்றலை அப்போஸ்தலர் என்ற நிலையான பதவியுடன் சமகாலத்திற்கு நீண்டதாக ஆக்குவது

*சரிதானா? மாற்கையும் லூக்காவையும் அப் போஸ்தலர் பதவிக்கு உயர்த்துவது சரி தானா? உண்மையில், அப்போஸ்தலரின் போதகத்தைப் பிரமாணிக்கமாய் எழுதிவைத் தாலும், அஃது இறை ஏவுதல் என்ற சொல்லின் உண்மைப்பொருளில், இறை ஏவுதல் பெறாததாக இருக்கக் கூடுமல் லவா? அப்போஸ்தலர்களும் அவர்களுக் குப்பின் வந்தவர்களும் சில நூல்களை ஒதுக்கிவைத்து, அவற்றைப் பழைய ஏற் பாட்டு நூல்களுக்குச் சமமாக அமைத்து, பொது வழிபாட்டில் அவற்றைப் பயன் படுத்தியும், வெளிப்படையாகவோ மறை முகமாகவோ சுட்டிக்காட்டியுமிருக்க வேண் டும். தாங்கள் போதித்து வந்த பல பகுதிகளிலும் அப்போஸ்தலர்கள் தங்கள் விசுவாசிகளுக்கு இப்படித் தேர்வு செய்வ தில் வழிகாட்டி, இந்த அப்போஸ்தலிக்க மரபு அல்லது பாரம்பரியத்தைப் பின்வந்த தலைமுறைகளுக்குக் கையளித்திருக்க வேண்டும். இந்தப் பாரம்பரியம் எல்லா இடங்களிலும் ஒரே சீராக இருந்திருக்க வேண்டியதில்லை. சில நூல்கள் திருச்சபை யின் சுய எடுத்துக் கூறலாக திருச்சபையில் எழுத்து வடிவில் தோன்றி ஏற்றுக்கொள்ளப் பட்டன என்பதே, அந்நூல்களின் இறை ஏவுதல் தன்மை அல்லது இறை ஆசிரியத் தன்மை அப்போஸ்தலிக்கத் திருச்சபைக்கு வெளிப்படுத்தப்பட்டது என்றும் சுட்டவல் லது. தவறுகள் தோன்றியபோது எதிர்ப்பு கள் போராட்டங்களுக்கிடையில் திருச்சபை தனது போதிக்கும் அதிகாரத்தை அல்லது ஆசிரியத் தன்மையைப் பயன்படுத்தி, திரு முறைப்பட்டியலை வரையறை செய்தது.*

இது பற்றி இரண்டாம் வத்திகான் சங்கம் பின்வருமாறு கூறுகிறது. ''திருமரபும் திரு மறைநூலும் திருச்சபையிடம் ஒப்புவிக்கப் பட்டுள்ள இறைவார்த்தையின் ஒரே திருக் களஞ்சியமாகும்... எழுதப்பட்ட அல்லது மரபு வழிவந்த இறைவார்த்தைக்கு அதிகார பூர்வமான பொருள் விளக்கம் செய்யும் பொறுப்பு இயேசு கிறிஸ்துவின் பெயரால் அதிகாரம் செலுத்தும் திருச்சபையின் உயி ருள்ள ஆசிரியத்திடமே ஒப்படைக்கப்பட் டுள்ளது. எனினும், இவ்வாசிரியம் இறைவ னின் வார்த்தைக்கு மேற்பட்டதன்று. மாறாக, மரபு வழியில் வழங்கப்பட்டதை மட்டும் போதிக்கும் திருச்சபையின் ஆசிரி யம் இறைவனின் கட்டளையாலும், தூய ஆவியின் துணையாலும் அதனைப் பக்தி யோடு கேட்டு, தூய்மையாகக் காத்து, பற்றுறுதியுடன் விளக்குவதன் வழியாக இறைவார்த்தைக்குப் பணிபுரிகின்றது; அஃ தோடு இறைவனால் வெளிப்படுத்தப்பட் டவை என விசுவசிக்கும்படி அஃது எடுத் துரைக்கும் எல்லாவற்றையும் விசுவாசத்தின் ஒரே திருக்களஞ்சியத்திலிருந்தே பெறுகி றது. எனவே, திருமரபு, திருமறைநூல், திருச்சபையின் ஆசிரியம் ஆகியவை இறை வனின் ஞானமிகு திட்டத்தின்படி ஒன்றோ டொன்று எவ்வளவு ஒன்றுபட்டு இருக்கின் றனவென்றால், ஒன்றில்லாமல் மற்றொன்று இருக்க முடியாது என்பது தெளிவு. இவை யாவும் சேர்ந்து, ஒவ்வொன்றும் தத்தம் முறைப்படி, ஒரே தூய ஆவியினால், ஆன்மாக்களின் மீட்பிற்குப் பயனுறு வகை யில் உதவுகின்றது என்பதும் தெளிவாகிறது'' *(2-ஆம் வத்திகான்: இறைவெளிப்பாடு-10).*

V. **முடிவுரை:** *16-ஆம்* நூற்றாண்டில் வரை யறை செய்யப்பட்ட திருமுறைப்பட்டியலி லிருந்து தொடக்க காலத் தந்தையர்களின் நூல்களுக்கு நம் கண்களைத் திருப்பினால், எடுத்துக்காட்டுகள் மற்றும் மறைமுகமான குறிப்புகளுக்கும் இக்காலத் திருமுறை வரையறைகளுக்கும் இடையில் பரந்த நிகழ்வுப் பொருத்தத்தைக் காண்கிறோம். இதற்குக் காரணம் தேட வெகுதூரம் செல்ல வேண்டியதில்லை. திருமறையின் திரு முறைப்பட்டியல் ஒரு விசுவாச சத்தியமா கும்; வெளிப்படுத்தப்பட்ட உண்மையா கும். அந்த அளவில் அதற்கு வரலாறும் வளர்ச்சியும் உண்டு; ஆனால் கூடுதல் அல்லது பெருகுதல் என்ற பொருளில் அன்று. ஏனெனில், அப்போஸ்தலர் காலத் துக்குப்பின், இது நிகழக்கூடிய காரிய மன்று; ஆனால், மேலும் நிறைவாக, மேலும் வெளிப்படையாகப் புரிந்துகொள்

ளுதல் என்ற பொருளில்தான். வெளிப்படுத்தப்பட்ட உண்மை படிப்படியாகத்தான் மலர்கிறது. அஃது அதன் எல்லாக் கோணங்களிலும் உடனடியாகப் புரிந்து கொள்ளப்படுவதோ, அதன் ஆழம் முழுவதும் ஊடுருவப்படுவதோ, அதன் எல்லா நிறைவிலும் அழகிலும் பாராட்டப்படுவதோ, அதன் எல்லா உட்கருத்துகளும் முன்னோக்கப்படுவதோ இல்லை. இவை யாவும் படிப்படியாகக் கண்டுணரப்படுகின்றன. ஆண்டவராலும், அப்போஸ்தலர்களாலும் வெளிப்படுத்தப்பட்ட உண்மை, திருச்சபையால் ஏற்றுக்கொள்ளப்பட்டது; 2-ஆம் நூற்றாண்டில் பொதுவாக அறியப்பட்டது; கருத்து வேறுபாடுகளாலும், வாத, எதிர்வாதங்களால் 3-ஆம் 4-ஆம் நூற்றாண்டுகளில் தெளிவாக்கப்பட்டது; சூழ்நிலைகள் கோரிய போது வெளிப்படையாக்கப்பட்டது; இறுதியில் அறிக்கையாக அறிவிக்கப்பட்டது. முற்காலம் உள்ளடக்கமாக, மறைமுகமாக ஏற்றுக்கொண்டதைப் பிற்காலம் வெளிப்படையாகக் கொண்டிருக்கிறது; இப்பொருளில் மேலும் நிறைவாகக் கொண்டிருக்கிறது; ஆனால், வேறான கோட்பாட்டையோ, புதிய வெளிப்பாட்டையோ கொண்டிருக்கவில்லை.

**விவிலியத்தில் உயிரினங்கள்** (FAUNA IN THE BIBLE)

பாலஸ்தீனம் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் பல்வகைப்பட்ட உயிரினங்கள் காணப்பட்டன. புவியியல் வேறுபாடுகளுக்கேற்ப இவை வேறுபடுகின்றன. இவற்றை அடையாளம் காட்டுவதும் விவரிப்பதும் கடினமாகும். மொழிவேறுபாடும் இந்த உயிரினங்களை விவரிப்பதிலும் பாகுபடுத்துவதிலும் பயன்படும் பழங்கால முறைக்கும் இக்கால முறைக்கும் இடையே யுள்ள வேறுபாடும் இதற்குக் காரணங்களாகும். இக்கால முறை உயிரியல் பண்புகளை அடிப்படையாகக் கொண்டு உயிரினங்களைப் பாகுபடுத்துகிறது. விவிலியம் உயிரினங்களின் நடத்தை, தங்கும் இடங்களை அடிப்படையாகக் கொண்டு இவற்றைப் பாகுபடுத்துகிறது.

இக்கட்டுரையில் இந்த உயிரினங்களின் பெயர்களை மட்டும் தொகுத்துத் தருகிறோம். இந்த உயிரினங்கள் பற்றி அந்தந்தப் பெயருடைய தலைப்புகளின் கீழ்க் காண்க.

***1. வீட்டு விலங்குகள்:*** ஆடு, எருது (காளை), ஒட்டகம், கழுதை, குதிரை, கோவேறு கழுதை, செம்மறி, நாய், பசு, பன்றி, பூனை, வெள்ளாடு முதலிய கால்நடைகள்.

***2. காட்டு விலங்குகள்:*** இளமான், எலி, ஓநாய், கரடி, கலைமான், கழுதைப்புலி, கவரிமான், காட்டாடு, காட்டுக்கழுதை, காட்டுப்பன்றி, காட்டுமான், காட்டு வெள்ளாடு, காட்டெருது, குழிமுயல், சிங்கம், சிறுத்தைப்புலி, சுண்டெலி, நரி (குள்ளநரி) பறவை நாகம், பெகமோத்து, மான், முயல், முள்ளம்பன்றி, லிவியத்தான் வெளவால் முதலியன.

***3. பறவைகள்:*** அடைக்கலான் குருவி, ஆந்தை, கடலூராஞ்சி, கவுதாரி, கழுகு, காக்கை, காடை, காட்டுப்புறா, குருவி, கூழக்கடா, கொக்கு, கோட்டான், கோழி வகைகள், சிட்டுக்குருவி, தீக்கோழி, நாரை, பருந்து, பல்வண்ணப்பறவை, பிணந்தின்னிக்கழுகு, புறா, பெலிக்கான், மீன் கொத்தி, வாத்து முதலியன.

***4. ஊர்வன:*** ஓணான், தவளை, பாம்பு வகைகள், புழுக்கள் முதலியன.

***5. மீன்வகைகள்.***

***6. பூச்சிகள்:*** அட்டை, அந்துப்பூச்சி, ஈ, எறும்பு, உன்னி, கடலுயிர்கள் கம்பளிப் பூச்சி, குளவிகள், சிலந்தி, தத்துக்கிளி, தெள்ளுப்பூச்சி, தேள், தேனீ, நத்தை, வெட்டுக்கிளி முதலியன.

**விவிலியத் திறனாய்வு** (BIBLICAL CRITICISM)

1. விவிலியத்தின் மூலச்சொற்களைத் துல்லியமாக நிர்ணயிப்பதில் ஆய்வாளர்கள் ஈடுபட்டிருந்திருக்கின்றனர். விவிலிய வாசகத்தை முதலில் கேட்டவர்கள் புரிந்து

கொண்ட பொருளையும், இன்று அதை வாசிப்பவர்களுக்கு அஃது அளிக்கும் செய்தியையும், அதைத்தேடி எடுத்துக் கூறுவதிலும் அவர்கள் கவனம் செலுத்தினர். இவற்றை அடைய அவர்கள் பல உத்திகளையும் ஒழுங்குமுறைகளையும் பயன்படுத்துகின்றனர். இத்தகைய அணுகுமுறையைத் திறனாய்வு முறை என்று அழைக்கிறோம். இத்திறனாய்வுமுறை நூல்களின் தோற்றம், ஆசிரியர், அவை கையளிக்கப்பட்ட முறை, சாற்றிக் கூறப்படும் முறை ஆகியவற்றை ஆய்வு செய்கிறது. அடிப்படைவாதிகள் இந்த அணுகுமுறையை இறைவார்த்தையின் அதிகாரத்திற்கு அளிக்கும் அச்சுறுத்தலாகக் கருதுவர். ஆனால் கிறிஸ்தவச் சபைகளில் பெரும்பாலானவை விவிலிய ஆய்வில் இத்தகைய அணுகுமுறையின் முக்கியத்துவத்தை ஏற்றுக் கொள்கின்றன.

இத்திறனாய்வு கடந்த இரு நூற்றாண்டுகளாகச் சிறப்பான முறையில் நடைபெற்று வந்துள்ளது. இஃது ஐந்நூல் பற்றிய ஆய்வாகத் தொடங்கி விவிலியத்தின் பிறநூல்களுக்கும் விரிவாக்கப்பட்டது.

*2.* **வாசகத்திறனாய்வு:** இதன் நோக்கம், கையெழுத்து நூல்கள் எழுதப்பட்டபோதும் மறுபடி பிரதிகள் எடுக்கப்பட்டபோதும் தற்செயலாகவோ, வேண்டுமென்றோ எங்கெல்லாம் மாற்றங்கள் புகுத்தப்பட்டுள்ளதாகக் கருதப்படுகிறதோ அங்கெல்லாம் விவிலிய நூலின் மூலச் சொல்லமைப்பைக் கண்டுபிடித்து நிறுவுவதாகும். கையெழுத்துப் பிரதிகள், மொழிபெயர்ப்புகள், எடுத்துக் காட்டாகக் கையாளப்பட்ட பகுதிகள் ஆகியவற்றுள் ஒன்றோடொன்றை ஒப்பிட்டு விடை காண்பது இந்த அணுகுமுறையின் முக்கிய பகுதியாகும். வாசக ஆய்வாளர்கள் எழுத்தர்களின் பிழைகளைக் கண்டுபிடித்துத் திருத்தவும், கையெழுத்துப் பிரதிகளிடையே காணப்படும் வேறுபாடுகளைச் சமூக, வரலாறு மற்றும் இறையியல் பின்னணியில் விளக்கிக்காட்டவும் முயல்கின்றனர். நம்பத்தகுந்த வாசகத்தை நிறுவுவது, மேற்கொள்ள வேண்டிய ஆய்வுக்கும் விளக்கங்களுக்கும் மிகவும் முக்கியமானதாகும்.

*3.* **இலக்கிய மற்றும் வரலாற்றுத் திறனாய்வு:** நூல்களின் ஆசிரியர், நூலமைப்பு மற்றும் காலம் ஆகியவை பற்றியவைகளில் இந்த ஆய்வு முறை முதன்மையாக அக்கறை செலுத்தியது. வாசகத்தில் காணப்படும் வரலாற்றுக் குறிப்புகள், சிறப்பான வாய்பாடுகள் (எ.கா. ஓசே *1:1;* செப் *1:1*), காலம் குறிக்கக்கூடியவற்றோடு ஒப்பிடக் கூடிய மொழி அல்லது நடைச்சிறப்புகள் அல்லது மற்ற நூல்களில் காணப்படும் எடுத்துக்காட்டுகள் ஆகியவற்றைக் கொண்டு நூலின் காலத்தை ஓரளவு நிர்ணயிக்கலாம். நூலின் ஆசிரியர், அதன் அமைப்பு ஆகியவை பற்றிய பிரச்சனை சிக்கலானதாகும். இவை மூலங்கள், பதிப்பு அல்லது கையளிக்கப்படுதல் ஆகிய பிரச்சனைகளோடு தொடர்புடையன. விவிலிய ஆசிரியர்கள் எடுத்துப்பயன்படுத்தியுள்ள ஏடுகள் அல்லது மூலங்களை விவிலியமே குறிப்பிடுகிறது (*காண்க. எண் 21:14;* யோசு *10:13; 1* அர *14:19*). அரிதாக, சில எடுத்துக்காட்டுகளில் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய ஏட்டு மூலமும், அதை எடுத்துக் கையாண்டுள்ள பிற்கால நூலும் கிடைத்துள்ளன (எ.கா. *1-2* நாளாகமங்கள், அவற்றின் மூலங்களான *1-2* சாமுவேல் மற்றும் *1-2* அரசர்கள் நூல்கள்).

ஐந்நூல் பற்றிய ஆய்விலிருந்து நவீன இலக்கியத்திறனாய்வு தொடக்கமும் அதிக ஊக்கமும் தூண்டுதலும் பெற்றது எனலாம். கி.பி. *1682*-இல் ரிச்சர்டு சீமோன் என்ற கத்தோலிக்கக் குரு பழைய ஏற்பாடு பற்றி ஒரு திறனாய்வு நூலை வெளியிட்டார். கத்தோலிக்கர்களும் பிரிவினைச் சகோதரர்களும் அந்நூலைக் கண்டனம் செய்து வாசிக்கப்படக் கூடாத நூலாக்கினர். ஆயினும், இவர் செய்த தொடக்க முயற்சிக்காக, அவர் விவிலியத் திறனாய்வின் தந்தையென அழைக்கப்படுகிறார். அவர் படைப்பு மற்றும் பெருவெள்ளம் பற்றிய விவரிப்புகளில் இரட்டை நிகழ்ச்சியுரைகள் உள்ளதையும், நடையில் வேறுபாடுகள் இருப்பதையும்

எடுத்துக்காட்டி, ஐந்நூல் தோன்றுவதற்கு ஆசிரியர்கள் பலர் ஈடுபாடு காட்டியிருக்க லாம் என்ற கருத்தை வெளியிட்டார். இந்த இரட் டை நிகழ்ச்சியுரைகளில் வேறுபட்ட பெயர்கள் இறைவனுக்குக் கொடுக்கப்பட் டுள்ளதை 'விட்டர்' என்பவர் *(1711)* எடுத் துக்காட்டினர். இதைப் பயன்படுத்தி, பிரான்சு நாட்டைச் சேர்ந்த கத்தோலிக்கரும் மருத்துவருமான ஜான் ஆஸ்ட்ருக்கு என்ப வர் ஆதியாகமம் பற்றிய ஓர் இலக்கியப் பகுப்பாராய்ச்சி நூலை 1753-இல் வெளியிட் டார். ஆதியாகமத்திற்கு இருமூலங்கள் இருந்திருக்க வேண்டும் என்று இவர் கருதினார். இறைவனுக்கு யாவே என்ற பெயரைப் பயன்படுத்தும் பகுதிகளைப் பிரித்து யாவே பாரம்பரியம் அல்லது மூலம் என்றார். இறைவனுக்கு ஏலோகீம் என்ற பெயரைச் சாற்றிக் கூறும் பகுதிகளை ஏலோகீம் பாரம்பரியம் அல்லது மூலம் என்றார். இவை மோசேக்கு முந்தி ஏற்கெ னவே இருந்தவை; இவற்றை ஒன்று சேர்த்து மோசே ஆதியாகமத்தை எழுதினார் என்றார். இதுவே ஏடுகளை அடிப்படை யாகக் கொண்ட கருதுகோளின் தொடக்கமா கும். இந்நூலைக் கத்தோலிக்கர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை, ஆதரிக்கவில்லை. இந்தக் கருதுகோளை ஏய்க்கானும் *(1780)*, இல் கென்னும் *(1798)* மேலும் விரிவாக்கினர். இவர்கள் ஏலோகீம் மூல ஏடுகளில் கவனம் செலுத்தினர். இதில் மூன்று மூலங்கள் இருப்பதாகக் கண்டனர். இதில் ஒன்று பிற்காலத்தில் குருக்கள் பாரம்பரியம் என் றழைக்கப்பட்டது.

விவிலியத் திறனாய்வைத் தொடர்ந்து நடத்திய கெடெஸ் *(1792)*, வாட்டர் *(1802)* ஆகியோர் நிகழ்ச்சியுரைகளில் காணப்படும் ஏறுமாறான தன்மையால் ஈர்க்கப்பட்டனர். இவர்கள் ஏடுகளை அடிப்படையாகக் கொண்ட கருதுகோளை நிராகரித்துவிட்டு துணுக்கு ஏடு கருதுகோளை மேலானதாகக் கருதினர். இதன்படி ஐந்நூலுக்குப் பெரும் எண்ணிக்கையில் சிறு மூலங்கள் இருந்தி ருக்க வேண்டும். பல தொடர்பற்ற துணுக்கு கள் வெறுமனே ஒன்று சேர்க்கப்பட்டு ஒரு நூலாக ஐந்நூல் வெளியிடப்பட்டது என்ற னர். டேவெட்டா என்பவர் *(1866)* இக் கருத்தை மற்றொரு கருதுகோளாக விரிவாக் கினார். இதன்படி, ஐந்நூல் ஏலோகீம் மூலத்தை முதன்மையாகக் கொண்ட நூலா கும். அதை யாவே மூல ஏட்டுத்துணுக்குகள் நிறைவு செய்தன. இக்கருதுகோளோடு இவால்டு *(1843)*, பிலிக்கு மற்றும் துக்கு ஆகியோரும் தொடர்புடையவர்களாவர்.

கெப்பெல் *(1857)* என்பவர் ஏடுகள் கருதுகோளைப் புதுப்பித்தார். ஆதியாகமத் தில் இரு ஏலோகீம் மூலங்களும், ஒரு யாவே மூலமும் இருப்பதாக அவருக்கு முந்திய ஆய்வாளர்களைவிடத் தெளிவாகக் காட்ட முயன்றார். ஏலோகீம் பாரம்பரியங் களில் ஒன்றான குருக்கள் மூலத்தை மிகப் பழமையானதாகவும் அடிப்படையானதாக வும் கருதினார். அவருக்குப்பின் ரீம் என்ப வர் *(1854)* உபாகமப் பாரம்பரியத்தைப் பிரித்துக் காட்டினார். இந்த முயற்சிகள் ஐந்நூலில் முதலாம் ஏலோகீம் மூலம் (E), இரண்டாம் ஏலோகீம் மூலம் [இது பிற்கா லத்தில் குருக்கள் மூலம் (P) என்று விளக்கப்பட்டது] யாவே மூலம் (Y or J), உபாகம மூலம் (D) ஆகிய நான்கு மூலங்கள் இருப்பதாகக் காட்ட முயன்றன; நான்கு பாரம்பரியக் கருதுகோளுக்கு உறுதி யாக அடிகோலின. இக்கருதுகோளை உறுதி செய்வதும் விவரங்களைத் திருத்தி அமைப் பதும் ஆகிய வேலைகள் தொடர்ந்து நடைபெற்றன.

ரேயுஸ் *(1833)*, வட்கே *(1835)*, கிராபு *(1866)*, கோஸ்டாஸ் *(1868)* மற்றும் குயெனென் *(1870)* ஆகியோர் வரலாற்றுத் திறனாய்வில் ஈடுபட்டிருந்தனர். பரிணாமம் பற்றிய இவர்களின் கருதுகோள் இஸ்ராயே லின் சமயப் பரிணாமத்தின் பல கட்டங் களையும் சட்டம் மற்றும் நிறுவனங்க ளோடு தொடர்புபடுத்தியது. இந்த வர லாற்றுத் திறனாய்வைப் பயன்படுத்தி வெல் காசன் என்பவர் *(1878)*, நான்கு மூலங்கள் பற்றிய கருதுகோளை இஸ்ராயேலரின் சமயப் பரிணாமத்தோடு தொடர்புபடுத்தி னார். இதன்படி ஐந்நூல் நான்கு மூலங்

களின் கலவையாகும். இந்த ஏடுகள் வெவ்வேறு இடங்களிலும் வெவ்வேறு காலங்களிலும் தோன்றியவை. இந்த ஏடுகள் தோன்றிய காலத்தைத் தோராயமாக வரையறுப்பது இக்கருதுகோளுக்கு வேண்டிய பணித்திட்டத்தை அளித்தது. இக்கருதுகோளின்படி முதலில் யாவே மூலம், ஏலோகீம் மூலம் என இரு பாரம்பரியங்கள் இருந்தன. யாவே பாரம்பரியம் கி.மு. 9-ஆம் நூற்றாண்டில் யூதாவில் எழுத்து வடிவம் எடுத்தது எனலாம். சிறிது காலத்திற்குப்பின் வட அரசாகிய இஸ்ராயேலில் ஏலோகீம் பாரம்பரியம் எழுதப்பட்டிருக்கலாம். வட அரசாகிய இஸ்ராயேலின் வீழ்ச்சிக்குப்பின் இந்த இரு பாரம்பரிய ஏடுகளும் ஒன்றாக இணைக்கப்பட்டன. அரசன் யோசியா காலத்துக்குப்பின் உபாகமப் பாரம்பரிய ஏடு சேர்க்கப்பட்டது. உபாகம ஏடு, யோசியா காலத்தில் ஆலயத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நூல்தான் என்று இந்த ஆய்வாளர்களால் அடையாளம் கண்டு கொள்ளப்பட்டது. இதனோடு ஒத்துப்பார்த்து மற்ற ஏடுகள் காலவரையறை செய்யப்பட்டன. யாவே, ஏலோகீம் ஏடுகள் பல வழிபாட்டு இடங்களை ஏற்றுக்கொள்கின்றன. இதற்கு எதிராக உபாகமம் போராடுகிறது. ஆகவே யாவே, ஏலோகீம் ஏடுகள் உபாகம ஏட்டிற்கு முந்தியனவாக இருக்க வேண்டும். யூதர்கள் வெல்லப்பட்டு அடிமையாக்கப்பட்டு நாடு கடத்தப்பட்ட பின், ஏற்கெனவே இருந்த தொகுப்போடு குருக்கள் பாரம்பரிய ஏடு சேர்க்கப்பட்டது. இப்பாரம்பரியம் ஒரே ஒரு புனிதத்தலத்தை ஏற்றுக்கொள்கிறது. ஆகவே, இஃது உபாகம ஏடுகளுக்கு மிகப் பிந்தியதாகும். இதில் நிகழ்ச்சியுரைப் பகுதிகள் சிலவே. பெரும் பகுதி சடங்கு விவரிப்புகளையே கொண்டுள்ளது. இஃது ஏற்கெனவே இருந்த தொகுப்புகளைக் கட்டிப்பிணைக்க உதவுகிறது.

இந்த ஒப்புமை சார்ந்த காலவரையறை மற்ற ஒப்புமைச் சான்றுகளால் உறுதி செய்யப்பட்டது. இவை இப்பாரம்பரியங்கள் எழுத்து வடிவம் எடுத்த காலத்தை ஓர் அளவு உறுதியாக வரையறை செய்ய உதவின. இலக்கியத் திறனாய்வு இயலைப் பெருமளவிற்குப் பயன்படுத்தி இந்த ஏடுகள் கருதுகோளைப் பரப்ப வெல்காசன் பெரிதும் பாடுபட்டார். ஆனால் வரலாறு, மெய்யியல் பற்றிய அவரது முன்கருத்துக்கள், அவரது கருதுகோளை ஓர் அளவு பழுதாக்கின. இஸ்ராயேலின் அரசர்கள் காலத்திற்கு முன்னிருந்த வரலாற்றைத் திரும்பத் திருத்தி அமைக்க முடியுமா என்பது பற்றி ஐயம் தெரிவித்தார். யாத்திரை, பாலையில் அலைந்து திரிதல், வெற்றி ஆகியவை பற்றிச் சில விவரங்கள் தெரியலாம். இவற்றை வைத்துக்கொண்டு, இஸ்ராயேலின் வரலாற்றை ஒன்றித்த, தொடர்ந்த வரலாறாகத் திருத்தி அமைத்தல் முடியாததாகும் என்றார். யாத்திரைக்கு முந்தியவை யாவும் வெறும் கட்டுக்கதையும் கற்பனையுமாகும் என்றார். ஆகவே, இஸ்ராயேலரின் வரலாற்றைச் சரியான சூழ்நிலையில் அமைக்க இவர்களுக்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லையாதலால், சமய வளர்ச்சிப் பிரிவினைக்கொள்கையைப் பயன்படுத்தி பழைய ஏற்பாட்டு இலக்கியத்தை ஆராயத் தலைப்பட்டனர். இந்த முறையில் இறைவனது இடையீட்டுக்கு இடமேயில்லை. ஆகவே, மற்ற மக்களிடமிருந்து வேறுபட்ட விதத்தில் இஸ்ராயேலரிடையே சமயம் வளர்ந்திருக்கக்கூடும் என்பதற்கே வழியில்லை. வெல்காசனுடைய இந்த ஒருதலைச்சார்பான போக்கால், அவருடைய கொள்கை ஆழ்ந்த உட்கருத்துகளைக் கொண்டிருந்தாலும் பிறர் இக்கருதுகோளை ஐயத்தோடு நோக்க இடமளித்தது. இதைப் பலர் எதிர்க்கவும் செய்தனர். ஆயினும், அவரது நான்கு பாரம்பரியக் கருதுகோளைச் சில மாற்றங்களுடன் அறிஞர்கள் பலர் ஏற்றுக்கொண்டனர். அவரது மற்ற முடிவுகள் அவ்வளவாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இந்த ஏடுகள் பற்றிய கருதுகோள் அவரது பெயரால் அழைக்கப்படுவதும் உண்டு. இந்த ஏடுகள் கருதுகோள் ஆய்வில் எயிஸ்பெல்டு (1922), பெயிபெர் (1930), வோன்ராடு (1934), கென்னத்து (1920), ஒஸ்டெயிக்கள் (1923),

வெல்ச் (1924), ராபாட்சன் (1950) ஆகியோரும் தங்கள் பங்கை விட்டுச் சென்றனர்.

ஐந்நூலுக்கு மோசேயே முதன்மை ஆசிரியர் ஆவார் என்ற நிலையைக் கொண்டவர்கள் வெல்காசனின் கருதுகோளை முழுவதும் நிராகரித்தனர். திறனாய்வு அடிப்படையிலும் வெல்காசனின் நிலை கைவிடப்பட்டது. இஸ்ராயேலின் வரலாற்றை வெல்காசன் திருத்தி அமைத்ததைத் தொல்பொருள் ஆய்வுகள் தவறெனக் காட்டின. மேலும், இவை இலக்கிய ஆய்வை முதன்மையாகக் கொண்ட நிலைக்குச் சவால் விட்டன. இலக்கியப் பிரச்சனை வரலாற்றுப் பிரச்சனையாக மாறிற்று. இந்நூல் எப்போது இறுதி வடிவம் எடுத்தது என்பதைவிட எந்த வாய்மொழிப் பாரம்பரியம் அல்லது எழுத்துமூலம் நூலின் பகுதிக்குப் பின்னணியாக உள்ளது என்பது சிறப்புப் பெற்றது; உடனடிப் பிரச்சனையாக மாறியது. இப்பிரச்சனையை அணுகும் புதுமுறை முழுவதும் இலக்கியம் சார்ந்ததாகவும் இல்லை; செயற்கையானதாகவும் இல்லை; உண்மை நிகழ்ச்சிகளுக்கும் வாழ்க்கைச் சூழ்நிலைக்கும் நெருங்கியதாக மாறியது. ஆய்வாளர்களுக்கு மூலங்கள் மிகப் பழையனவாகத் தோன்றத் தொடங்கியுள்ளன. தொல்பொருள் ஆய்வுகளும் புதைபொருள் ஆய்வுகளும் இந்நூல் தோன்றியதாக இதுவரை கூறப்பட்ட காலத்திற்கு முன்பே இந்நூல் இருந்திருக்க வேண்டும் என்று காட்டின; வெல்காசன் போன்றவர்களின் ஐயப்பாட்டுக்கு இடமே யில்லை என்றும் காட்டின. அவை ஐந்நூலின் பல நிகழ்ச்சியுரைப் பகுதிகள் எழுதப்பட்டது எனக் கூறப்படும் சூழ்நிலைக்கு வேறுபட்டதும் காலத்தால் முந்தியதுமான சூழ்நிலையில் நடந்திருக்கக்கூடும் என்றும் காட்டுகின்றன. இதற்கு ஆதரவாக அகண்ட மேற்காசிய மற்றும் கலாச்சாரச் சூழ்நிலையின் பின்னணியில் விவிலிய நிகழ்ச்சியுரைகளை நோக்குவதன் அவசியத்தைச் சுட்டிக்காட்டின. இதில் ஆல்பிரைட்டும் அவரது சீடர்களான பிரைட்டு, ரைட்டு, பிரிடுமன், கிராஸ் ஆகியோரும் பெரும் பாதிப்பை ஏற்படுத்தினர். சமீப காலத்தில் மென்கால், கோட்வால்டு (1979) ஆகியோர் சமூகப் பகுப்பாய்வை வலியுறுத்தியுள்ளனர். சமூக மற்றும் இலக்கிய அமைப்புகளுக்கிடையிலான தொடர்பை லீக்கு, லாக்கு, போல்சின், ரிக்கூர் போன்றவர்கள் தங்கள் அமைப்புப் பகுப்பாய்வில் எடுத்துக் காட்டினர். வடிவத்திறனாய்வு விவரிப்புகளில் அடிப்படை மாதிரிகளின் சமூக மற்றும் இலக்கியப் பங்கை ஆய்வு செய்கின்றனர். இது குன்கால் என்பவரால் (1964) முதலில் சங்கீதங்களையும், பின் ''இதிகாச'' விவரிப்புகளை ஆய்வு செய்யவும் பயன்பட்டது. இது பிறகு, சட்டத்தொகுப்புகளை ஆய்வு செய்யவும் ஆட்டு என்பவரால் (1934) பயன்படுத்தப்பட்டது. ஸ்காண்டிநேவியன் அறிஞர்கள் பாரம்பரியம் - வரலாற்றுத் திறனாய்வு முறையை வளர்த்துள்ளனர். இம்முறை வாய்மொழிப் பாரம்பரியம் தொடர்ந்து பாதிப்பு ஏற்படுத்துகிறது என்று ஏற்றுக்கொள்கிறது. சைல்டு என்பவரின் (1979) திருமுறைப்பட்டியல் திறனாய்வு விசுவசிக்கும் சமூகத்தினுள் விவிலிய ஆசிரியர்களின் பங்கையும் முழுப்பட்டியலின் பின்னணியையும் வலியுறுத்துகிறது.

ஐந்நூல் மற்றும் பொதுவாக விவிலியம் பற்றிய திறனாய்வு காலப்போக்கில் மூன்று திசைகளில் வளர்ந்தது. முதலாவது, ஆழ்ந்த இலக்கியப் பகுப்பாராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. ஐந்நூல், வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஓர் ஆசிரியரால் ஒன்றுமின்மையிலிருந்து எழுதப்பட்டது அன்று. ஒவ்வொரு பாரம்பரிய ஏடும் ஒரு கலப்பு இலக்கியமாகும். அவற்றின் அடிப்படையான மூலங்களைப் பிரித்தெடுக்க முயற்சிகள் செய்யப்படுகின்றன. பிரச்சனைகள் தெளிவாக்கப்படுகின்றன. அதே போழ்து இப்பிரச்சனைகளைப் பற்றி மற்றக் கோணங்களிலிருந்தும் ஆராய வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

இரண்டாவது திசை வடிவத் திறனாய்வு முறையை அடிப்படையாகக் கொண்டது. இஃது ஐந்நூலை ஒரு முழு நூலாகக் கருத்தில் கொண்டு ஆராயவில்லை; மாறாக, அதில் காணப்படும் கதைகள்,

பாடங்கள் போன்ற தனிப்பட்ட சிறு பகுதிகளை ஆராய்ந்து, இப்பகுதிகள் தோன்றவும், இலக்கிய வடிவம் எடுக்கவும் அடிப்படையான பழங்கால இஸ்ராயேலின் வாழ்க்கை நிலையை வரையறை செய்ய முயல்கிறது. இம்முறை, ஐந்நூலின் பெரும் பகுதிகள் மிகப்பழமையானவை என்று காட்டியது. இஸ்ராயேலின் இறையியல் பற்றிய பல விளக்கங்களை அளித்துள்ளது. ஐந்நூல் பற்றிய எந்தக் கருதுகோளையும் ஏற்றுக்கொள்ளுமுன் இன்னும் ஆழ்ந்த ஆய்வு இன்றியமையாதது என்று காட்டியது. இக்காலத்தில் இந்த வடிவத் திறனாய்வு முறையை ஏறக்குறைய விவிலிய அறிஞர் எல்லாரும் ஓர் அளவு பயன்படுத்துகின்றனர். இவ்விதம் ஐந்நூலை ஆராய்தல், ஏடுகள் கருதுகோளுக்கு மாறானது அன்று என்றாலும் இதன் முடிவுகள் ஏடுகள் கருதுகோளை ஓர் அளவு பாதித்தன எனலாம்.

ஐந்நூல் பற்றிய ஆராய்ச்சியின் மூன்றாவது திசை, ஏடுகள் கருதுகோளை அடியோடு மாற்றியமைத்தது எனலாம். ஏன், நிராகரித்தது என்று கூடச் சொல்லலாம். இம்முறை ஸ்வீடனைச் சேர்ந்த உப்சாலா குழுவினரால் அறிமுகப்படுத்தப்பட்டது. இக்குழுவினரும், சிறப்பாக இவர்களுள் என்னெல் என்பவரும், யூதர்கள் நாடு கடத்தப்பட்டுத் திரும்பி வரும்வரை இஸ்ராயேலில் பரந்த அளவில் எழுத்து இலக்கியம் அமைக்கும் தொழில் இருந்தது என்பதை மறுத்தனர். நாடு கடத்தப்படுமுன் இஸ்ராயேலில் ஐந்நூலின் பொருள்கள் வாய்மொழிப் பாரம்பரியமாக வழிவழியாக ஒப்படைக்கப்பட்டன. வாய்மொழிப் பாரம்பரியத்தையும் அதன் உண்மைத்தன்மையையும் இக்குழு வலியுறுத்தியது. ஐந்நூல் எழுத்து வடிவம் எடுத்த பின்னும் வாய்மொழிப் பாரம்பரியம் தொடர்ந்து அதைப் பாதித்தது. இந்நூலில் காணப்படும் பொருள்களில் பெரும்பகுதி பழமை மிக்கதாகும். இப்பழமைக்கு உயர்மதிப்பு கொடுத்தது வரவேற்கப்பட வேண்டிய ஒரு திருப்பமாகும். வெல்காசின் குழு, தனது முதிராத முடிவுகளால், இந்நூலில் பெரும் பகுதிகள் தோன்றிய காலத்தை மிகவும் பின் தள்ளிப்போட்டது. இதற்கு ஒரு திருத்தம் வேண்டியிருந்தது. உப்சாலாக் குழு, வாய்மொழிப் பாரம்பரியத்தையும் அதன் உண்மைத்தன்மையையும் வலியுறுத்தியதோடு, பழமைக்குரிய மரியாதையையும் மதிப்பையும் அளித்தது.

பழைய ஏற்பாடு பற்றிய திறனாய்வில் பயன்பட்டுள்ள உத்திகளே புதிய ஏற்பாடு பற்றிய திறனாய்வுக்கும் பெரும்பாலும் பயன்பட்டுள்ளன. ஒத்தமை நற்செய்திகளைப் புரிந்து கொள்வதில் லக்மன் *(1835)* என்பவரின் நூல்கள் பெரிதும் உதவியுள்ளன. மாற்கு நற்செய்திதான் காலத்தால் முந்தியது என்றும், மத்தேயு மற்றும் லூக்காவில் வரும் பொருள்களின் மூலம் ஆகும் என்றும் இவர் எடுத்துக் காட்டினார். மத்தேயுவுக்கும் லூக்காவுக்கும் பொதுவானதும், ஆனால் மாற்கில் காணப்படாததுமான பொருள்கள் இயேசுவின் கூற்றுக்கள் என்ற தொகுப்பாகக் கருதப்பட்டன. இதை ராபின்சன் Q-தொகுப்பு என்றழைத்தார். துபின்சன் குழு பவுலின் மடல்களைத் திருச்சபையின் தொடக்க வரலாற்றோடு ஒருமுகப்படுத்த முயன்றுள்ளது.

புதிய ஏற்பாடு பற்றிய ஆய்வில் வடிவத் திறனாய்வு முறை பெரும் பங்கு வகிக்கிறது. இந்த அணுகுமுறையை முதலில் திபேலியுசும் *(1919)*, பின்பு புல்ட்மன்னும் *(1921)* பயன்படுத்தினர். நிகழ்ச்சியுரைகளுக்கும் கூற்றுகளுக்கும் இடையிலான வேறுபாட்டில் முதன்மைக் கவனம் செலுத்தப்பட்டது. மறுபதிப்பு அல்லது படிதிருத்தத் திறனாய்வு, ஆசிரியர்கள் அல்லது பதிப்பாசிரியர்கள் பல்வகை மூலங்களையும் பாரம்பரியங்களையும் மீண்டும் அமைத்து அல்லது திருத்தி அமைத்து அவற்றை எடுத்துக் கூறிய முறைகளில் இந்த அணுகுமுறை கவனம் செலுத்தியது. அண்மைக் காலத்து ஆய்வுகள் தொடக்கக் கிறிஸ்துவத்தின் சமூக அமைப்பு, புதிய ஏற்பாட்டு விவரிப்புகளை உண்டாக்கிய பல்வேறு முன்னோக்குகள் ஆகியவற்றில் கவனம் செலுத்துகிறது.

**விவிலியப் பொருள்கோள்** (BIBLICAL HERMENEUTICS)

*1.* விவிலிய வாசகங்களைப் படிக்கும் பலரும் தத்தமக்கே உரிய பாணியில் இவற்றின் பொருளைப் புரிந்து கொண்டு விளக்கம் அளித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். உணர்ச்சிபூர்வமான எழுச்சிக் கூட்டங்களில் பங்கேற்கும் ஒருவரும், அறிவுபூர்வமான கருத்தரங்குகளில் பங்கேற்கும் மற்றொருவரும் ஒரே வாசகத்திற்குக் கூறும் விளக்கங்கள் வேறுபட்டவையாகவும் சில சமயம் மாறுபட்டவையாகவும் தெரிகின்றன. வரலாற்றைத் தொடாத ஆன்மீக மயமான விளக்கங்களுக்கும், உள்ளார்ந்த ஆன்மீகச் செறிவற்ற நடைமுறை விளக்கங்களுக்கும் உள்ள வேறுபாடுகளை மறையுரைகளிலும், மறைவிளக்கக் கட்டுரைகளிலும் காண்கிறோம். இவ்வனைத்துக் கூறுகளையும் நுணுகிப் பகுத்து ஆராய்ந்து இறைச்சமுதாயத்திற்குத் தன்னையே விரும்பி வெளிப்படுத்தும் அன்பு நிறை இறைவன் இன்று குறிப்பிட்ட சூழலில் அறிவிக்கும் செய்தி யாது எனத் தெளிவாக அறிவதே நமது ஏக்கமும் நோக்கமுமாகும்.

விவிலியம் உருவான காலந்தொட்டே விவிலியப் பொருள்கோளுக்கான பல்வேறு அணுகுமுறைகள் மாறிமாறிக் கையாளப்பட்டு வந்துள்ளன. கிரேக்க மொழியின் 'ஹர்மேனெயா' (hermeneia) என்னும் சொல் வாய்மொழி விளக்கத்தையும், தெய்வ சித்தத்தை வெளிப்படுத்தும் அருள் வாக்கையும், புரியாததைப் புரியவைக்கும் மொழியாக்கத்தையும் குறித்தது; படிப்படியாக, பண்டைக்கால நூல்களுக்கான தற்கால விளக்கத்தையும், விளக்க நூல்களையும் குறித்தது. இச்சொல்லிலிருந்து உருவான hermeneutic (s) என்கிற சொல் எந்தவொரு (பண்டைய) இலக்கியம், நூல், நிகழ்வு, செயல், அடையாளம் ஆகியவற்றையும் புரிந்து கொண்டு விளக்கிக் கூறுவதில் நாம் சந்திக்கும் எல்லாக் கூறுகளையும், சவால்களையும், அம்சங்களையும் உள்ளடக்குவதாக நாம் இன்று கொள்ளலாம். விவிலியத்தைப் படித்துப் பொருள் கண்டு விளக்கம் கூறுவதற்குப் பின்னணியில் நிகழும் பல்வேறு அம்சங்களையும் உள்ளடக்கிய நம் சிந்தனைத் தேடலை விவிலியப் பொருள்கோள் (Biblical Hermeneutics) என்கிறோம்.

***2. விவிலியப்பொருள்கோளில் நாம் எதிர் கொள்ளும் சில சிக்கல்கள்:*** விவிலியப் பொருளைத் தீர்மானிக்கும்போது இதன் நூல்களின் பல்வேறு ஆசிரியர்கள் கொண்ட பொருளை நிர்ணயிப்பது எளிதன்று. காலப் போக்கில் ஆசிரியர் நினைத்த பொருளுக்கும் அப்பாற்பட்டுப் புதுப்புது பொருள்களும் ஏற்றிக் கூறப்பட்டதெனினும் ஆசிரியர் கொண்ட முதல் பொருளை நாம் தள்ளி வைத்துவிட இயலாது.

ஆசிரியர்களின் காலம், பண்பாடு, மொழி, இலக்கிய நடை, இவற்றைக் கையாண்டவிதம் ஆகியவற்றிலிருந்து நாம் எவ்வளவோ வேறுபட்டவர்கள். மேலும், பல விவிலிய நூல்கள் கால ஓட்டங்களின் போது பல்வேறு மரபுகளினாலும், மூலங்களினாலும் பின்னப்பட்டு, குறிப்பிட்ட ஆசிரியரின் பெயரைத் தாங்கி வருகிறது. எடுத்துக்காட்டாக, பழைய ஏற்பாடு கி.மு. *1200-100* வரை தொகுக்கப்பட்டும், புதிய ஏற்பாடு கி.பி. *49-125* வரை தொகுக்கப்பட்டும் அமைந்திருக்கின்றன. எசாயா நூல் சுமார் *200* ஆண்டளவாக எசாயா இறைவாக்கினரின் வாழ்நாட்களுக்கும் பிறகு தொகுக்கப்பட்ட தொகுப்பு. ஆமோஸ் நூலின் கடினமாக இடித்துரைத்து, ஓரளவு நம்பிக்கையற்ற நிலையைச் சுட்டிக்காட்டும் வாசகங்களின் இறுதிப்பகுதியில் இறுதி வசனமாக நம்பிக்கையை ஏற்றும் வாக்கியம் பிற்காலத் தொகுப்பாசிரியர்களால் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வாறு பிற்காலத் தொகுப்பாளர்களாலும், பிரதி எடுப்போராலும் தேவையை முன்னிட்டும் தெரியாமலும் சேர்க்கப்பட்ட, நீக்கப்பட்ட பகுதிகளைக் கொண்டிருக்கும் நூல்களின் மூலப்பொருளை, அதாவது ஆசிரியர் கற்பித்த பொருளை, அடையாளம் காண்பது மிகமிகக் கடினமாகும், அரிதாகும். ஆசிரியர் எனும்போது தெய்வீக ஆசிரியரின் கரம் எவ்வாறு இயங்கியிருக்கிறது என்னும்

பிரச்சனையையும் விவிலியத்தைப் பொருத்த அளவில் உணர்வுக்குக் கொணர வேண்டும்.

**3. நேர்ப்பொருள் - உடனடிப்பொருள் -மூலப்பொருள்** (Literal Sense):விவிலியச் சொற்கள் உடனடியாகவும், நேரடியாகவும் குறிக்கின்ற பொருளே நேர்ப்பொருள் எனப் படும். மனித ஆசிரியர் இதனை நினைத்தி ருக்கலாம், நினைக்காமலும் இருந்திருக்க லாம். இயன்றவரை, மானிட ஆசிரியர் அன்றைக்கு யாருக்கு எழுதினாரோ அந்த மக்களுக்கு அவர் கூற விரும்பிய பொருளை முதன்முதல் தெளிதல் வேண் டும். காலப்போக்கில் வளர்ந்து வரும் மொழியின் தன்மைக்கேற்ப சொற்கள் சுட்டிக்காட்டும் பொருளைத் தேட வேண் டும். வெவ்வேறு விவிலிய நிகழ்வுகளின் போது அம்மக்கள் பெற்ற இறைவாக்கு, பிற்கால ஆசிரியர் - தொகுப்பாளர் வழியாக புதிய வடிவம் பெற்று, அடுத்தடுத்து வந்த மக்களின் சூழலுக்கேற்ப வழங்கப்பட்டது. இன்றையச் சூழலில் வாழும் இன்றையத் திருச்சபைக்கும் தூய ஆவியின் ஆற்றலால் விவிலிய நிகழ்வுகள் தொடங்கி, விவிலிய ஆசிரியர் தொகுப்பாளர் வழியாக நமக் கேற்ற பாணியில் இறைவாக்கின் செய்தி அருளப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, இயேசு நிகழ்வினைத் தத்தமக்கேற்ற வகை யிலும் சூழலிலும் புரிந்து பொருள் கொண்டு வழங்கினர் நான்கு வடிவ நற் செய்தியாளர். இந்நற்செய்திகளும் நமக் கேற்ற வகையில் நமது சூழலுக்கேற்ப இயேசு நிகழ்வின் தாக்கத்தை நம்மில் ஏற்படுத்துகிறது.

விவிலியக் கவிதைகளையும், உவமை களையும் கையாளும்போது மிகக்குறிப்பாக அக்கால மொழிப் போக்குகளைக் கவனிக்க வேண்டும். கிறிஸ்துவை, யூதாவின் சிங்கக் குட்டி என்கிறபோது அவர் ஒரு விலங்கு என நேர்ப்பொருள் கொள்ளுதல் தவறு.

**4. நேர்ப்பொருளை நிர்ணயிப்பதில் கருத்தில் கொள்ள வேண்டியவை:** தன் சமகாலத்த வருக்குரிய மொழி, பண்பாடு, கண்ணோட் டம் ஆகியவற்றுடன் அன்றைய மாந்தருக் கென்று எழுதிய மானிட ஆசிரியரின் சில சொற்களும், சிந்தனைக்கோவைகளும் இன் றையக் காலத்தவருக்குப் புரியாதிருப்பது இயல்பே. எடுத்துக்காட்டாக, வெளிப் பாட்டு இலக்கியத்தில் பயன்படுத்தப்படும் அடையாளங்கள், படைப்பு பற்றிய சிந்த னைகள், நோய்-பேய் பற்றிய எண்ணங்கள், தன் மகனையே பலியிடத் துணியும் பண் பாட்டுப் பின்னணி, உடன்படிக்கை அருங் குறி போன்ற அடிப்படைக் கருத்துக்களின் வேரோட்டமான அம்சங்களை ஆழமாகப் புரிந்து கொள்ள நமக்கு மற்ற மூலங்களும் தரவுகளும் தேவை. விவிலிய மொழிகளின் இலக்கண இலக்கியப் பின்னணிகளும், விவிலிய உலகின் புவியியல் வரலாற்றுச் செய்திகளும் இன்னும் தேவை.

விவிலியத்தின் ஒரு சில பகுதிகளை மட்டுமே கணக்கில் கொண்டு வகுப்பறை விவாதம், செபக்கூட்டம், மறையுரை, பிரச் சனைக்கான தீர்வு, கருத்தரங்கம் ஆகிய தேவைகளுக்கேற்றபடி ஒரு கொள்கையை நியாயப்படுத்தவோ, நிரூபிக்கவோ விவிலி யத்தைப் பயன்படுத்தலாகாது. மாறாக, விவிலிய ஊற்றிலிருந்து இயல்பாகச் சுரக் கும் வாழ்வின் வார்த்தைகளை நாம் பருக வேண்டும். ஒட்டு மொத்தமான விவிலிய விசுவாசத்தைப் பின்புலமாகக் கொண்டு தான் ஒவ்வொரு பகுதியையும் புரிந்து கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, இயேசுவின் மலைப்பொழிவுதான் விவிலி யத்தின் அடித்தளம் என்போர் (காந்தி), விவிலியக்கடவுள் வரலாற்றில் இயங்கிய விதத்தை அடியோடு மறந்து விடுகின்றனர்.

கி.பி. 3-5-ஆம் நூற்றாண்டுகளில் ஓரிசன், அகுஸ்தீனார் ஆகியோரின் ஆன்மீக முறை யில் புரிந்து கொள்ளுதல், எரோனிமுவின் சமய வாசகத்தின் பகுப்பாய்வு, கி.பி. 13-ஆம் நூற்றாண்டு அக்குவின் தோமையா ரின் தத்துவப்பின்னணிப் பகுப்பாய்வு ஆகிய அனைத்துப் பொருள்கோள்களும் விவிலியத்தின் நேர்ப்பொருளின் அடித்தளத் தின் மேல் எழுப்பப்பட்ட ''கோபுரங்கள் தாம்.'' 1943-இல் வெளியான 12-ஆம்

பத்திநாதரின் Divino Afflante Spiritu என்னும் பாப்பரசரின் அறிக்கையில், வரலாற்றுப் பகுப்பாய்வு வழியினைப் பின்பற்றி (historico-critical exegesis) விவிலியத்தின் நேர்ப் பொருளைக் கொள்ளும்படி கத்தோலிக்கருக்கு ஆர்வமூட்டப்பட்டது.

*1994*-ஆம் ஆண்டு பாப்பரசரின் விவிலியக்குழு வெளியிட்ட அறிக்கையும் விவிலியப் பொருள்கோள் முயற்சியில் பல்வேறு பகுப்பாய்வுக் கருவிகளை நாம் பயன்படுத்தினாலும் விவிலிய உலகுக்குள் பயன்படுத்தப்படும் பொருள்கோள் முறையின் தொடர்ச்சியாக நமது பொருள்கோள் அமைய வேண்டும் என எடுத்துக் கூறுகிறது.

**5. இலக்கிய வடிவங்களை நிர்ணயித்தல்:** பண்டைய இஸ்ராயேலரின், ஆதித்திருச்சபையின் வரலாற்று ஓட்டத்தில் முழங்கப்பட்ட விசுவாச அறிக்கைகள் பற்றிய தொகுப்பு நூலகமே பழைய ஏற்பாடு -புதிய ஏற்பாடு அடங்கிய விவிலியம் எனலாம். இதன் வெவ்வேறு பகுதிகளில் காணப்படும் பல்வேறு இலக்கிய வடிவங்களான - சட்டம், வரலாற்று ஆவணம், புனைவுக்கதை, வீர வரலாறு, பழமொழி, உவமை, பொன்மொழி, சடங்கு மற்றும் தூய்மைபற்றிய விவரம், விசுவாச அறிக்கை, தனிப்பட்ட மற்றும் கூட்டுச் செபம், மறையுரை, அறவுரை, கடிதம், கனவு, திருவெளிப்பாட்டு அடையாளம், பல்வேறு உணர்வுகள் சிதறும் கவிதை -ஆகியவற்றை இனம் காண வேண்டும். இம்முயற்சியிலேயே அந்தந்த விவிலியப் பகுதி உருவான வாழ்க்கைச்சூழல் (Sitz-im-Leben) நமக்குத் தெரிய வரும். எடுத்துக்காட்டாக யோசுவா நூலின் வீரகாவியக் கவிதைச் சூழலையும், சங்கீதங்களின் வழிபாட்டுச் சூழலையும், உன்னத சங்கீதத்தின் காதல் இரசங்களையும், பழமொழி, யோபு நூல்களின் அறவுரைச் சூழலையும் வெவ்வேறு கண்ணோட்டங்களில் நோக்கிப் பொருள் கொண்டால்தான் வாசகச் சூழலுக்கேற்ப விவிலியம் நம்மோடு உரையாடும். இதே போல் யோனா நூலையும் சிம்சோனின் கதையையும் சிறுகதைகளாகச் சரியாகப் புரிந்து கொண்டால் தேவையில்லாமல் வரலாற்று நிகழ்வுகளோடு குழப்பிக் கொள்ள மாட்டோம்.

புதிய ஏற்பாட்டு நற்செய்திகளும் நிரல்பட விவரிக்கப்பட்ட வரலாற்று ஆவணங்கள் அல்ல. அவை இயேசு நிகழ்வினை விசுவாசக் கண்களோடு நோக்கிய இளந் திருச்சபையின் முழக்கமும் போதனைகளுமாகும். இவ்வாறான விவிலியப்பகுதிகளின் இலக்கிய வடிவு ஆய்வின் மூலம் தான் (Form Criticism) விவிலியக் காலமாந்தரின் மற்றும் ஆசிரியர் - தொகுப்பாசிரியர் வாழ்ந்த விசுவாசக் குழுமத்தின் சூழல்களை நாம் புரிந்து கொண்டு குறிப்பிட்ட பகுதியின் அன்றையப் பொருளை அறிந்து கொள்ள இயலும்.

விவிலியத்தின் பல்வேறு பகுதிகளும், மரபுகளும் எவ்வாறு இணைக்கப்பட்டு இறுதியான முழு வடிவம் பெற்றுள்ளன, ஏன் இவ்வாறு தொகுக்கப்பட்டன என ஆராய்ந்து பார்க்கும்போது இறுதித் தொகுப்பாசிரியரின் இறையியல் தேவைகளை அறியலாம். தனிப்பட்ட ஒவ்வொரு பகுதி மட்டுமன்று ஒரு குறிப்பிட்ட நூலின் முழுமை வடிவம் அமைந்துள்ள விதமே இறுதித் தொகுப்பாசிரியரின் இறையியல் சிந்தனை ஓட்டத்தைக் காட்டுகிறது. இதனைப் பகுத்து உணர்வதே தொகுப்பு ஆசிரியரின் இறையியல் சிந்தனைப் பகுப்பாய்வு (Redaction Criticism). எடுத்துக்காட்டாக, ஒத்தமை நற்செய்திகளின் இறுதிப்பகுதியில் காணப்படும் எருசலேம் ஆலயத்தில் இயேசு வியாபாரிகளை விரட்டும் பகுதி யோவான் நற்செய்தியின் தொடக்கத்தில் அமைக்கப்படக் காரணமான இறையியல் சிந்தனை ஓட்டத்தை அறியலாம். காய்க்காத அத்திமரம் பற்றிய பாரம்பரியத்தை லூக்கா மத்தியப்பகுதியிலும் *(லூக் 13)*, மத்தேயு இறுதிப்பகுதியிலும் *(மத் 21)*, மாற்கு இறுதிப்பகுதியில் இரண்டு பாகங்களாகவும் *(மாற்கு 11:12-14.20-25)* அமைத்திருப்பதன் பின்னணியை ஆராய்ந்தால் நற்செய்தியாளர்களின் சிந்தனைப் போக்கினைத் தெளிவாக உணரலாம்.

**6. நேர்ப்பொருளுக்கும் அப்பாற்பட்டு** (Beyond Literal Sense): இறையூக்கம் பெற்ற விவிலியத்தின் வழியாக இறைவன் பேசும் மொழியினை ஒரு குறிப்பிட்ட சூழலுக்கு மட்டுமே என நினைத்து அதனைக் கட்டுப் படுத்தி விட முடியாது. மேலும், எழுத்து வடிவம் பெற்ற எந்த ஓர் இலக்கியப் பகுதியையும், ஆசிரியரின் சிந்தனையோட் டத்திற்குள் மட்டும் அடக்கி வைத்து விட முடியாது. கால ஓட்டத்தின் ஏற்றத் தாழ்வு களுக்கு ஏற்ப, தொடர்ந்து மானிடரோடு உறவு கொள்ளும் கடவுள் ஆவியின் தூண்டு கோலுக்கேற்ப, வாசகர்களின் உலகநோக்கு மற்றும் முன் அனுமானங்களுக்கு (Pre-understanding) ஏற்ப எழுதப்பட்ட வாசகம் உயிர்த்துடிப்புள்ள புதுப்பொருளை வழங் கிக் கொண்டிருக்கும். எடுத்துக்காட்டாக யாத்திரை நூலின் விடுதலைப் பயணத்தைப் பின்னணியாகக் கொண்டு இரண்டாம் எசா யாவும் (எசா 40-55), ஞானநூல் ஆசிரியரும் (ஞான 11-19) தத்தம் சூழலின் விடுதலைத் தாகத்தையும், அனுபவத்தையும் சித்திரிக் கின்றனர். விடுதலை ஏக்கத்துடன் துடிக்கும் இன்றைய ஏழை, ஆதிவாசிகள், தலித்மக் கள், கறுப்பர் இனத்தவர், பெண்கள் ஆகி யோரும் அன்றைய விடுதலைப் பயணத் தின் தொடர்ச்சியாக தமது விடுதலைப் பயணங்களிலும் இறைவன் பேசுவதாகக் காண்கின்றனர். பிரமாணிக்கமுள்ள விவி லிய இறைவன் நேற்றும், இன்றும், நாளை யும் தனது மீட்பின் அருஞ்செயல்களை ஆற்றி வருகின்றார் என்பதே இதன் பின் னணி. கி.மு. 6-ஆம் நூற்றாண்டுத் தானி யேல் நூல் காட்சிகள் கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் நடைமுறைக்கு வருவதாகக் காண்கின்றனர். எசா 7:14-இன் இம்மானு வேல் கூற்று கிட்டத்தட்ட 700 ஆண்டுகளுக் குப் பிறகு இயேசுவின் பிறப்பில் (மத் 1:23) புதிய பொருளைப் பெறுகின்றது. இரண்டாம் எசாயா காட்டும் பாடுகளின் ஊழியன் பாத்திரம் (எசா 42:1-9; 49:1-6; 50:4-9; 52:13-12) இயேசுவில் நிறைவேறுவ தாக நோக்கப்படுகின்றது (லூக் 24:26). இவ்வாறு இயேசு நிகழ்வின் கண்ணாடி கொண்டு பழைய ஏற்பாட்டினைப் படிக் கும்போது புதிய பொருள் மலர்வது, இளந்திருச்சபையின் இயல்பான ஒரு கட்ட மாகும்.

**7. திருத்தந்தையரின் காலம்:** கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் அலக்சாந்திரியா நகரை மையம் கொண்டு, விவிலியத்தைப் படிக் கும் முறையில் வல்லுநர்களாகத் திகழ்ந்த வர்கள் பிலோ, கிளமந்து, ஓரிசன் போன் றோர். பிலோ போன்ற யூத அறிஞரின் வழியைப் பின்பற்றியவர்கள் வாசகத்தில் காணப்படும் ஒவ்வோர் அம்சத்திற்கும் ஓர் உவமையைக் கண்டு ஆன்மீகப் பொருள் காணும் முறை இது (Allegory, typology). பழைய ஏற்பாட்டைக் கிறிஸ்தியல் கண் ணோட்டத்தில் காணும் பாணி இது. அந்தி யோக்கு நகரை மையம் கொண்ட விவிலிய அணுகு முறையை லூசியன், தியோடோ ரஸ், தியோடோர், கிறிசோஸ்தம், ஜூலியன் போன்றோர் கையாண்டனர். இம்முறையி லான விவிலியப் பொருள்கோள் ஆசிரியர் நினைத்த நேர்ப்பொருளை வலியுறுத்திக் கூறியது.

கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் அகுஸ்தினார் ''புதிய ஏற்பாடு பழைய ஏற்பாட்டில் மறைந்துள்ளது. பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாட்டில் விளக்கம் பெறுகிறது'' எனக் கூறி அலக்சாந்திரிய முறையைக் கையாண் டார். எரோனிமு, விவிலிய மூல மொழி களைப் படித்து அந்தியோக்குப் பாணியை மேற்கொண்டார். இதன் பிறகு அலக்சாந்தி ரிய முறையே பரவலாகப் பிரபலமானது.

**8. மத்திய காலங்களில்** (Middle ages): மத் திய காலங்களில் எழுந்த விவிலியப் பகுப் பாய்வு கீழ்க்கண்ட 4 பொருளை வெளிச்சம் போட்டுக்காட்டியது.

1. வரலாற்றுப் பொருள் அல்லது நேர்ப் பொருள் (Historical or Literal sense).
2. தொடர் உருவகப் பொருள் (அ) கிறிஸ் தியல் பொருள் (Allegorical or Christo-logical).

3. (அ) வாழ்வியல் பொருள் (ஆ) அறநெறிப் பொருள் (இ) மானிட வாழ்வுப்பொருள் (Topological or moral or anthropological).

4. வாழ்வைக்கடந்த பொருள் (அ) இறுதி களைப் பற்றிய பொருள் (anagogical or eschatolosical).

எருசலேம் என்கிற சொல்லை இப் பின்னணியில் புரிந்து கொண்டால்,

1. எருசலேம் — யூதர்களின் சமய அரசியல் தலைநகரம்;
2. எருசலேம் — கிறிஸ்துவின் திருச்சபை / இறைச்சமூகம்;
3. எருசலேம் — மானிட ஆன்மா;
4. எருசலேம் — வானகத்திருநகர் எனப் பொருள்படும்.

ஆக,

1. நேர்ப்பொருள் வரலாற்றுச்சூழல் பற்றிய அறிவையும்,
2. தொடர் உருவகப்பொருள் விசுவாசத்தை யும்,
3. வாழ்வியல் பொருள் அன்பையும்,
4. வாழ்வுக்கப்பாற்பட்ட பொருள் நம்பிக் கையையும் வளர்ப்பதாகக் கருதப் பட்டன.

அக்குவின் தோமையாரின் அணுகு முறைப்படி ஆன்மீகப்படுத்தப்பட்ட பொரு ளின் மேல் விசுவாசக் கொள்கையைக் கட்டி எழுப்பக்கூடாது. அரிஸ்டாடில் தத்துவங் களின் மேல் எழுந்த நுணுகிப்பகுத்தாயும் (Scholarticism) முறையிலே விசுவாசக் கோட் பாடுகள் விளக்கப்பட்டன. இறையியல் சிந்தனைகளில் விவிலியம் முதன்மை பெற வில்லை.

***9. சீர்திருத்த, மறுமலர்ச்சிக் காலம்:*** *16-17-* ஆம் நூற்றாண்டுகளில் லூத்தர், கால்வின் போன்றோரின் 'விவிலியம் மட்டுமே' (Sola Scriptura) என்னும் அணுகு முறையில், தான்தோன்றித்தனமான தொடர் உருவகப் பொருள் (Allegory) கொள்ளும் தன்மை ஒதுக்கித் தள்ளப்பட்டது. நேர்ப்பொருளே (literal sense) முக்கியம் எனக் கருதினாலும் கிறிஸ்தியல் நோக்கில்தான் அவர்களும் பழைய ஏற்பாட்டை அணுகினர்.

***10. மறுமலர்ச்சிக் காலமும் அதன் பின் னும்:*** அறிவு மையச் சிந்தனைகள் எழுந்த *18*-ஆம் நூற்றாண்டு மறுமலர்ச்சிக் காலம் எனப்படும். வரலாறு, சமயம் போன்ற அனைத்தையும் அறிவியல் கண்கொண்டு ஆய்வு செய்யும் அணுகுமுறை எங்கும் பரவியது. இக்காலத்தில் கருவாகி *19-20* நூற்றாண்டுகளில் உருவானதுதான் விவிலிய வரலாற்றுப் பகுப்பாய்வு (Historical Criticism). ஆதாம், ஆபிரகாம் முதல் இயேசு, பவுல் போன்றோர் வரை அவர்தம் வாழ்க்கைச் சம்பவங்களையும், அவர்தம் வார்த்தைகளின் வரலாற்று உண்மைகளை யும் பற்றிய அடிப்படைக் கேள்விகள் எழுப்பப்பட்டன. பல்வேறு மூல ஏடுகள், எழுத்துப் பிரதிகளை ஆய்வு செய்ததன் வழியாக மூல விவிலிய வாசகங்களின் ஆய்வுகள் (Textual Criticism) நடந்தேறின. விவிலியத் திருமுறைத் தொகுப்பு, தவ றின்மை, இறையூக்கம், அதிகாரம் போன்ற அடிப்படைக் கருத்துக்கள் அறிவியல் கேள் விகளுக்கு உள்ளாக்கப்பட்டன. பண்டைக் காலக் கலாச்சாரங்களும், மொழிகளும் ஆய்வுக்குள்ளாகி விவிலிய இலக்கிய வடிவ ஆய்வு (Form Criticism) மெருகேற்றம் பெற்றது. வரலாற்றுப் போக்கில் உருவான பல்வேறு விவிலிய மரபுகளைப் பற்றிய வரலாற்று ஆய்வுகளும் (Tradition history) எழுச்சி பெற்றன. விவிலிய நூல்கள் உரு வாகி திருமுறைத் தொகுப்பு ஆக்கப்பட்ட சூழலை ஆராயும் தன்மையும் வளர்ந்தது (Canonical Criticism).

***11. இருபதாம் நூற்றாண்டின் போக்குகள்:*** மேற்கண்ட பல்முனை அணுகுமுறை ஒன் றுக்கொன்று உதவி விவிலியம் என்னும் "இறைக்கொடை"யை அணுகி வந்தாலும் இறைவாக்கின் பொருளைப் புரிந்து கொள் ளுதலில் இன்னும் திருப்தி ஏற்படவில்லை. வரலாறு, அறிவியல் என்று அறிஞர்கள் முழுமூச்சாக இறங்கினாலும் வாழ்வு தரும் வார்த்தைகளின் பொருளை இன்றைய மனித இனம் தேடுவதற்கான ஒரு பொருள் கோள் முறையை வரலாற்றுப் பகுப்பாய்வு (Historical Criticism) திருப்தியாக வழங்க

வில்லை என்றே கூறலாம். அது வெறும் பண்டைக்காலத்தைப் பற்றிய ஓர் அகழ் வாராய்ச்சியாகவும், அறிஞர் சமுதாயம் மட்டுமே தமக்குள் புரிந்து கொள்ளும் ஒரு சங்கேத மொழியாகவும் மட்டும் உள்ளது.

எனவே, விவிலியத்தை ஒரு ஜன்னலாக நோக்கிப் பின்புறம் நிகழ்ந்த நிகழ்வுகளை எட்டி மட்டும் பார்ப்பதே விவிலியப் பொருள்கோள் முறை என்னும் நிலையில் இருந்து மாற்றங்கள் நிகழ்கின்றன.

*1970*-க்குப்பிறகு, அண்மைக் காலங்களின் சமூகவியல் கொள்கைகளின் பின்னணியில் பண்டைக்கால சமய, விவிலிய இலக்கியங் கள் சித்திரிக்கும் சமூகக் கட்டமைப்புகளை ஆய்வு செய்து (Sociological Reading) பொருள் கொள்ளும் முறையும் பயன்படு கின்றது. இதேபோல் பண்பாட்டு மானிட வியல் (Cultural Anthropological approach), உளவியல் ((Psychological Approach) கொள் கைகளோடு விவிலிய உலகினை ஆராயும் பாங்கும் வளர்ந்து வருகின்றது. ஆயினும், இன்றைய மானிட சமுதாயத்திற்கு விவிலி யம் கூறும் மீட்பின் நற்செய்தியினை விளக்க இவை மட்டும் போதுமானவை யாக இல்லை.

மேலும், சமீப காலத்தில் எழுந்துள்ள மொழியியல் (Linguistics), இலக்கிய ஆய்வு (Literary Analysis) போன்ற அறிவியல் பூர்வ மான தேடல்களும் விவிலியத்திற்குப் பயன் படுத்தப்படுகின்றன. அன்று நிகழ்ந்த வர லாற்று நிகழ்ச்சிகள் எவ்வாறு நிகழ்ந்திருந் தாலும், சித்திரிக்கப்பட்டிருந்தாலும் நமக் குக் கிடைத்துள்ள ஒரே மூலம் தற்போதைய வடிவில் கிட்டியுள்ள விவிலிய வாசகங்க ளும் நூலுமேயாகும். எனவே, விவிலிய வாசகங்களுக்குள் அகழ்ந்து ஆராய்ந்து அவற்றின் பொருளைக் கொள்ளுவதே சரி என்பதே இந்தப் பொருள்கோள்முறை. வாசகத்தின் உள்ளடக்கங்கள் எவ்வாறு இசைவாகப் பொருந்தி, சிறு சிறு அம்சங் கள் கூடி வாசிப்போரின் சிந்தனைகளை எப்படி வசப்படுத்தி ஈர்க்கின்றன, அன் றைய வாசகரோடு உறவுத்தொடர்பு கொண்டு செய்திகளைப் பரிமாறிக் கொள் கின்றன என்னும் ஆய்வுகளும் மேற்கொள் ளப்படுகின்றன (Rhetorical Analysis, Narrati-ve Analysis). வாழ்வியலின் அடித்தள அமைப்புக்களே, மொழியின் அமைப்புக்க ளாகப் பரிணமிக்கின்றன. எனவே, வாசகத் தின் அமைப்பை ஆழ்ந்து நோக்கினால் வாழ்வின் அடித்தளத்து அமைப்புக்களை யும் நுணுகிப்பகுத்து ஆராயலாம் என அமைப்பியல் ஆய்வு (Structural Analysis) எடுத்துச் சொல்கின்றது.

இவ்வாறு விவிலிய வாசகங்களின் பின்ன ணியை அகழ்ந்து நோக்குவதும், வாசகக் கட்டமைப்பிற்குள் அகழ்ந்து ஆராய்வதும் இன்றைய வாசகருக்குத் தரும் இறைச் செய்திதான் யாது?

***12. இன்றைய வாசகரை மையப்படுத்தும் பொருள்கோள் முறை*** (Reader-Response Criticism): வாசக ஆசிரியரோ, தொகுப்பாசி ரியரோ இன்று வாழவில்லை. ஆயினும் வாசகத்தின் உயிர்த்துடிப்புள்ள போக்கு களுக்கு ஏற்ப ஆசிரியத் தன்மைகளைச் சித்திரிக்கலாம் (Implied Author). இதேபோல் உயிருள்ள இன்றைய வாசகரிடமிருந்து குறிப்பிட்ட வாசகம் எதிர்பார்க்கும் வாசக ரின் தன்மையை (Implied Reader) நாம் குறிப்பாக உணரலாம். ஆக, இங்குக் கூறிய ஆசிரியத்தன்மையையும் வாசகத்தன்மை யையும், வாசகத்தின்பால் வசப்படுத்துபவர் வாசக ஓட்டத்தின் இயக்கங்களை நெறிப் படுத்தும் இடைநிலை வருணிப்பாளர் ஆவார் (Narrator). இவ்வாறு ஆசிரியத்தன் மையும், வாசகர் தன்மையும் ஒருமுகப் பட்டு வாசக உலகில் சஞ்சரிக்கும்போது ஏற்படும் அதிர்வுகளும், சிந்தனை அலைக ளும் வாசகரின் உள்ளாழத்தைப் பாதிக்கின் றன. இந்நிகழ்வினை அன்றைய விவிலிய உலகின் தொடுவானமும், இன்றைய வாச கர் உலகின் தொடுவானமும் உரசி ஒன்றிப் பது (Fusion of Horizons) என்றும் கூறலாம். ஆகவே வாசகரைப் பாதிக்கும் உள்ளுயிர்ச் சக்தியைச் சரியாக அடையாளம் காணுதல் மூலம் விவிலியப்பொருளை உணரலாம்.

இன்றைய வாசகரைக் கணக்கில் எடுத்துக் கொண்டால் அவர்தம் உள்ளக்கிடக்கையில் ஊறிப்போயிருக்கும் வேரோட்டமான கலாச்சார அமைப்பு, உலக நோக்கு, உறவு கொள்ளும் பாங்கு ஆகிய உள்ளடக்கங் களையும் (Pre-Understanding) தீர ஆய்வு செய்ய வேண்டும். ஏனென்றால், இறை வாக்கினைத் தான்தோன்றித்தனமாக தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என நினைத்து விவிலி யத்தை அணுகுதல் விவிலிய இறைவனுக்கு எதிரான செயலாகும். சில எழுச்சிக் கூட் டங்களிலும், கருத்தரங்குகளிலும், அறிஞர் களின் ஆலோசனைக் கூட்டங்களிலும், மறையுரைகளிலும் விவிலியத்தைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளும் பண்பு அவ்வப்போது தலைதூக்குகிறது.

***13. சூழமைவுகளுக்கான பொருள் கோள் முறை*** (Contextual Approaches): ஓரங்கட்டப் பட்ட மாந்தரிடையே இறைவன் செயல்படு வதனால் அவர்தம் விடுதலை ஏக்கத்தை வரலாற்றில் எடுத்துச் சொல்லிப் போராடும் போது சில அடிப்படைக் கேள்விகள் எழுகின்றன. இத்தகைய கேள்விகளை விவி லிய உலகோடு விசுவாசக்கண் கொண்டு உரசிப் பார்க்கும்போது ஏற்படும் ஊக்க மும், ஆக்கமும் அத்தகையோரின் வாழ்வை வளப்படுத்துகின்றன. இதனையே சூழமை வுக்கான பொருள்கோள்முறை (Contextual Approach) எனக் கூறுகிறோம். விசுவாசம் பற்றிய விவாதங்களை ஆகாயக் கோட்டை யில் நடத்துவதல்ல; மாறாக, விசுவாசச் சிந்தனைகளால் வளம் பெற்ற வரலாற்றுச் செயல்பாடுகளின் (Praxis) தாக்கங்களோடு விவிலியத்தில் நுழைவதும், விவிலியத்திலி ருந்து இவ்வாறான அர்ப்பணச் செயல்பாடு களில் ஈடுபடுவதும் இந்த அணுகுமுறை யின் சிறப்பு அம்சமாகும்.

அராஜகத்தினால் ஏழ்மை சுமத்தப்பட்ட வர்கள் விடுதலை அணுகுமுறையினாலும், மானிட மாண்பு மறுக்கப்பட்டவர் கறுப்பர் இறையியல் அணுகுமுறையாலும், தலித் அணுகுமுறையாலும், ஆதிவாசி அணுகு முறையாலும், பெண்மை மிதிக்கப்படுவ தால் பாதிக்கப்படுவோர் பெண்ணியல் அணுகுமுறையாலும் விவிலியத்தை ஆழ மாகப் படித்துச் செபித்து வாழத் துடிப்பது இன்றைய திருச்சபையில் நாம் காணும் பல்வேறு முகங்கள். இவ் வாறு பல்வேறு கோணங்களிலிருந்து நமக்கு அருளப்படும் இறைவாக்கின் செய்திகள் திருச்சபையின் வாழ்வை இன்னும் வளப்படுத்தும்.

***14. 21-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பொறுப்புள்ள விவிலியப் பொருள்கோள்:*** விவிலிய உலகோடு உரசிப் பார்த்த அனுப வர்களில் ஒருசில அம்சங்களை மட்டும் வலியுறுத்த மற்ற அடிப்படை அம்சங்களைக் காற்றோடு பறக்கச் செய்வதால் அடிப்படை வாதப்பொருள்கோள் முறைதான் விளை யும். மற்ற விசுவாசிகளுடன் உரையாடல் நடத்த விடாத இத்தகைய போக்குகள் மறைந்தொழிய வேண்டும். படைப்புலகின் வாழ்வினை, நிறைவை நோக்கிப் பயணிக் கச் செய்கின்ற இறைவன் அன்று விவிலிய நிகழ்வுகளின் வழியாகப் பேசினார்; இன் றும் நமது வரலாற்று ஓட்டங்களின் வழி யாகவும் பேசுகிறார் என்பதனை மறந்து விடலாகாது. விவிலிய இறைவனின் வாழ்வு தரும் வார்த்தைகளை ஒரு குறிப் பிட்ட கருத்தியலுக்குள், இறுகிப்போன கொள்கைக்குள் அடக்கிவிட முடியாது. மாந்திரீகத்தனமான எதிர்பார்ப்பையும் விவி லியத்திடமிருந்து நாம் எதிர் பார்க்கக்கூடாது.

21-ஆம் நூற்றாண்டின் வாயிற்படியில் நிற்கின்ற நாம் பொறுப்புள்ள விதத்தில் விவிலியப் பொருள்கோள் முறையை உரு வாக்கிட வேண்டும். இதற்கு உதவியாகக் கீழ்க்கண்ட குறிப்புக்களைக் கருத்திற் கொள்ள வேண்டும்.

விவிலியம் ஒரு வரலாற்றுப் பாட நூலோ, தத்துவச் சிந்தனைத் தொகுப்போ, சடங்கு சம்பிரதாயம் பற்றிய நூலோ அன்று.

ஐம்புலனடக்கிக் குவித்த புண்ணியத்திற் கான ஞான போதனையாகவோ, வெறும் ஆகாயத்தில் உலவும் ஆன்மீகத்தனமான

சிந்தனைக் கோவையாகவோ, தனிப்பட்ட ஆன்ம ஈடேற்றத்திற்கான தரும சாஸ்திர மாகவோ விவிலியத்தைப் புரிந்து கொள்ளக்கூடாது. மாறாக, இது வரலாற்றில் இயங்கிய, இயங்குகின்ற, இயங்கப் போகும் இறைவன் படைப்புலகில் நடமாடும் மானிடரோடு கொள்கின்ற உறவு பற்றிய ஒரு தொடர்கதை; இவ்வனுபவம் பெற்ற இஸ்ராயேலரின், இளந்திருச்சபையின் விசுவாசப் பிரமாணம் (*உப 6:20-24; 26:5-9; அ.ப. 2:22-24; 1 கொரி 15:3-11*); புழுதியில் தோய்ந்து நம்மோடு குடிவந்த இறைவன் (*யோவான் 1:14*) தானே விரும்பி வேண்டித் தேடி வந்ததற்கான விசுவாசப் பதிலுரை (*மத் 5-7*); எவ்விதப் பலனும் கருதாமல் நம்மை ஏற்புடையவராக மாற்றிய இறையருள் (*உரோ 1:17*); தனிமனித, குழும, அண்ட சராசர அளவில் அன்னியமாக்கப்பட்ட நம்மை ஒப்புரவாக்கும் (*எபே 1:20*) அன்பின் காவியம்; வானத்தையும் பூமியையும் படைத்த இறைவன் (*ஆதி 1:1*). புதிய வானகத்தையும் புதிய வையகத்தையும் உருவாக்கத் துடிக்கும் (*திருவெளி 21:1*) நம் மீட்பின் கதை; நம் மீட்பரின் கதை.

மானிட மைய உறவுச் செறிவும் (*ஆதி 1:26; யோவா 1:14; கொலோ 1:15-20*), இவ்வுலக வரலாற்றில் தோய்ந்த இயக்கமும் (*யாத் 6:6-7; ஆமோ 5:21-24*), இறைச்சமுதாயத்தின் கூட்டு நலனும் (*உப 15:1-18; லேவி 19:9-18; மத் 22:24-40; 1 கொரி 13;யாக் 2:7*) விவிலியத்தில் அழுத்தம் பெறுகின்றன. சமூக பொருளாதார அளவில் வஞ்சிக்கப்பட்டு, சக்தியை இழந்து, திக்கற்று, தெய்வமே கதி எனக் கதறி அலையும் நாதியற்றவர்கள்பால் (Anawim) இறைவனின் தாயுள்ளம் சிறப்பு ஈடுபாடு கொள்கிறது என்பது வலியுறுத்தப்படுகிறது (*யாத் 22:21-24; உப 24:17-21; எசா 3:13-15; ஆமோ 8:4-6; மத் 11:5; லூக் 6:20*).

மேற்கண்ட பொதுக்குறிப்புக்களோடு பண்டைய விவிலிய உலகின் எதார்த்தங்களைத் திறந்த மனதுடன் வரலாறு, புவியியல், மொழியியல், சமூகவியல், மானிடவியல் தெளிவுகளுடன் அணுகிப் பார்க்க வேண்டும். இன்றைய உலகின் உண்மை நிகழ்வுகளை விசுவாசப் பின்னணியில் கூர்ந்து அலசிப்பார்த்து இறைச்சமூகக் குழுமமாக விவிலிய இறைவன் காட்டிய நெறியில் நடக்க வேண்டும்.

இன்றைய வரலாற்றின் விசுவாசம் தூண்டும் அர்ப்பணச் செயல்களில் ஈடுபட்ட அனுபவத்தோடும், அறிவியல் பார்வையில் வாழ்வின் உண்மை நிகழ்வுகளை நோக்கும் ஆய்வோடும் விவிலியத்தினுள் நுழைய வேண்டும். இந்த உரசலில் இறையூக்கம் பெற்ற விவிலியம் நமக்கு விடுக்கும் சவால்களினால் மனந்திரும்பும் ஆற்றலையும், புதிய உலகு சமைக்கும் சக்தியையும் மீட்பின் சக்தியாக இறைவன் நமக்கு வழங்குவார். முழு உள்ளத்தோடும் முழு வலிமையோடும் இதில் ஈடுபடும்போது விவிலியத்தின் பொருள்கோள் முறை இறைப்பிரசன்னமாய் நம்மோடு வளர்ந்து கொண்டே வரும்.

**விவிலியம்** ( BIBLE, THE )

I. 'பிப்லோஸ்' என்ற கிரேக்கச்சொல் முதலில் எழுதப் பயன்படும் புல்தாளைக் குறிக்கும்; பின், புல்தாள்களில் எழுதப்பட்ட நூலைக் குறிக்கும். பெரும்பாலும் இச்சொல் அதன் பன்மை வடிவில் பிப்லியா என்று பயன்பட்டுள்ளது. பிப்லோஸ் என்ற சொல் எந்தச் சிறப்பு அடைமொழியும் இல்லாமல் பயன்படும்போது, யூத-கிறிஸ்தவ மறைநூலைக் குறிக்கும். பிப்லோசிலிருந்து விவிலியம் என்ற தமிழ்ச் சொல் வருகிறது. அதன் பொருள் 'நூல்' என்பதாகும். நூல்களில் எல்லாம் சிறந்த நூலாகிய விவிலியம் எந்தச் சிறப்பு அடைமொழியுமில்லாது வெறுமனே நூல் அல்லது விவிலியம் என்றழைக்கப்பட்டது. ஆனால், விவிலியம் ஒரே ஒரு நூலை மட்டும் கொண்டிருக்கவில்லை. மாறாக, அது நூல்களின் தொகுப்பாகும்; ஒரு நூல் நிலையம் என்று கூறலாம்.

இந்நூல்கள் இறை ஏவுதல் பெற்றவை என்று கிறிஸ்தவர்கள் கருதுவதால் இவை புனிதமானவை என்றும், விசுவாச

ஒழுங்கை அளிக்கும் அதிகாரபூர்வமான நூல் பட்டியலைக் கொண்டிருப்பதால் திரு முறை என்றும் அழைக்கப்பட்டன. விவிலி யத்திற்கு உடன்படிக்கை, ஏற்பாடு, திரு மறை என்ற பெயர்களும் உண்டு.

II. **பிரிவுகள்:**

1. விவிலியம் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என்று இரு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இப்பிரிவு மீட்பின் மைய நிகழ்ச்சிகளான சீனாய் உடன்படிக் கையையும், இயேசுவின் புதிய உடன்படிக் கையையும் சுட்டுகிறது. தானி 9:2-இல் ''நூல்கள்'' என்ற சொல் இறைவாக்கு நூல்களைக் குறிக்கிறது. கிறிஸ்தவர்கள் தங்கள் திருமறைநூலை விவிலியம் என்ற ழைக்கும் மரபு முதன்முதல் உரோமைக் கிளமந்தின் இரண்டாம் மடலில் காணப்படு கிறது. அங்கே இச்சொல் பழைய ஏற்பாட் டைக் குறிக்கிறது. 2 கொரி 3:14-இல் பவுல் பழைய உடன்படிக்கையைப் பழைய ஏற் பாடு என்று குறிப்பிடுகிறார். எபிரேயர்க ளின் பழைய ஏற்பாட்டிலிருந்து தன் மறை நூல்களை வேறுபடுத்திக் காட்ட ஆதித்திருச் சபை தன் நூல்களின் தொகுப்பைப் புதிய ஏற்பாடு என்றழைத்தது.

**2. பழைய ஏற்பாடு:** எபிரேயர் தங்கள் விவிலியத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்த னர்: 1) சட்டம் (தோரா அல்லது ஐந்நூல் அல்லது மோசேயின் நூல்கள்): ஆதி, யாத்திரை, லேவியர், எண், உப ஆகமங் கள். 2) இறைவாக்கினர் நூல்கள்: இவை யும் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட் டன. 2.அ) முந்தைய இறைவாக்கினர் நூல் கள் (யோசுவா, நீதிபதிகள், 1-2 சாமுவேல், 1-2 அரசராகமங்கள்); 2. ஆ) நூல் பெற்ற இவைாக்கினர்கள் (எசாயா, எரேமியா, எசேக்கியேல், 12 சிறிய இறைவாக்கினர் கள்). 3) நூல்கள்: ரூத்து, சங்கீதங்கள், யோபு, பழமொழி, திருவுரை, உன்னத சங்கீதம், புலம்பல், தானியேல், எஸ்தர், எஸ்ரா, நெகேமியா, 1-2 நாளாகமங்கள். இந்த வரிசை தால்மூதில் காணப்படுகிறது. எபிரேய மோசரேட்டிக் வாசகம் நூல்கள் என்ற தொகுப்பை அ) பாடல் நூல்கள் (சங்கீதங்கள், யோபு, பழமொழி), ஆ) சுருள்கள் (உன்னத சங்கீதம், ரூத்து, புலம்பல், திருவுரை, எஸ்தர்), இ) எஞ்சிய நூல்கள் (தானியேல், எஸ்ரா, நெகேமியா, 1-2 நாளாகமங்கள்) என்று மூன்று பகுதி களாகப் பிரித்தது.

கிரேக்க எழுபதுநூல் தொகுப்பு, பழைய ஏற்பாட்டை அ) வரலாற்று நூல்கள் [ஆதி, யாத்திரை, லேவியர், எண், உப ஆகமங் கள், யோசுவா, நீதிபதிகள், 1-4அரசராகமங்கள் (1-2 சாமுவேல், 1-2 அரசர்கள்)] ஆ) பாடல் நூல்கள் (யோபு, சங்கீதங்கள், பழமொழி, திருவுரை, உன்னத சங்கீதம்), இ) இறைவாக்கு நூல்கள் [எசாயா, எரேமியா, எசேக்கியேல், தானி யேல், 12 சிறிய இறைவாக்கினர்கள் (ஓசேயா, யோவேல், ஆமோஸ், ஒபதியா, யோனா, மீக்கா, நாகூம், அபக்கூக்கு, செப்பனியா, ஆகாய், செக்கரியா, மலாக்கி)] என்று மூன்று தொகுப்புகளாகப் பிரித்தது. இவற்றோடு எழுபது நூல் தொகுப்பு 1-2 மக்கபேயர், தோபி, யூதித்து, சீராக்கு, சாலமோன் ஞானம், பாரூக்கு மற்றும் பிற நூல்களையும் கொண்டிருந்தது.

கத்தோலிக்கத் திருச்சபை, தனது பழைய ஏற்பாட்டுத் தொகுப்பில், எழுபது நூல் தொகுப்பிலுள்ள 46 நூல்களை ஏற்றுக்கொள் கிறது. இதைத் திருமுறைப்பட்டியல், துணைத் திருமுறைப்பட்டியல் (1-2 மக்கபே யர், தோபி, யூதித்து,சீராக்கு, சாலமோன் ஞானம், பாரூக்கு) என்று வகைப்படுத்துகி றது. பிரிவினைச் சகோதர சபைகள் எபிரேய விவிலியத் தொகுப்பை ஏற்று, பழைய ஏற்பாட்டில் 39 நூல்களை மட்டும் கொண்டி ருக்கின்றனர். இவர்கள் துணைத் திருமுறை நூல்களை ஏற்றுக்கொள்வதில்லை.

பழைய ஏற்பாட்டைப் பற்றிய பொதுப் பாணிப் பிரிவுகளையே கிறிஸ்து பயன் படுத்தினார். முழு பழைய ஏற்பாட்டைத் ''திருச்சட்டம் மற்றும் இறைவாக்குகள்'' என்றும் (மத் 5:17; 7:12; 22:40; லூக் 16:16 இணை; மத் 11:13), ''சட்டம்'' என்றும் (மத் 5:18 இணை; லூக் 16:7; மத் 12:5;

22:36; 23:23; யோவா 7:49; 12:34), ''சட்டம், இறைவாக்கினர், சங்கீதங்கள்'' என்றும் (லூக் 24:44) இயேசு குறிப்பிடுகிறார். ஆபேலின் இரத்தத்தையும் (ஆதி 4:8; மத் 23:35 இணை) செக்கரியாவையும் (2 நாள் 24:20-21; லூக் 11:511) பற்றிய இயேசுவின் கூற்றுகள் ஆதியாகமம் முதல் நாளாகமம் வரையுள்ள முழுமையையும் பழைய ஏற்பாட்டு முழுமையையும் உள்ளடக்குகின்றன.

**3. புதிய ஏற்பாடு:** புதிய ஏற்பாட்டைப் பொருத்தமட்டும் கத்தேலிக்கத் திருச்சபையும், பிரிவினைச் சபைகளும் இருபத்து ஏழு நூல்கள் கொண்ட தொகுப்பை ஏற்றுக் கொள்கின்றன. இத்தொகுப்பை மூன்று சிறு தொகுப்புகளாகப் பிரிக்கலாம்: அ) வரலாற்று நூல்கள் (மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய நற்செய்திகள், மற்றும் அப்போஸ்தலர் பணிநூல்), ஆ) இறைவாக்கு நூல்கள் (திருமுகங்கள்), இ) வெளிப்பாட்டு நூல் (திருவெளிப்பாடு). திருமுகங்கள், பெரிய திருமுகங்கள் என்றும் (உரோமையர், 1-2 கொரிந்தியர், கலாத்தியர், 1-2 தெசலோனிக்கேயர்), சிறைக்கூட மடல்கள் என்றும் (எபேசியர், பிலிப்பியர், கொலோசேயர், பிலமோன்), மேய்ப்புப்பணி மடல்கள் என்றும் (1-2 திமொத்தேயு, தீத்து), எபிரேயர் மற்றும் பொதுமடல்கள் என்றும் (யாக்கோபு, 1-2 பேதுரு, 1-2-3 யோவான், யூதா) பிரிக்கப் படலாம்.

III. **மொழியும் அமைப்பும்:** புதிய ஏற்பாடு முழுவதும் கோயினே கிரேக்க மொழியில் எழுதப்பட்டிருக்கின்றது. பழைய ஏற்பாட்டில் பெரும்பகுதிகள் எபிரேய மொழியில் எழுதப்பட்டவையாகும். இதற்கு விதிவிலக்காக 2 மக்கபேயர், சாலமோன் ஞானம், தானி 13-14 ஆகியவை கிரேக்க மொழியில் எழுதப்பட்டவையாகும். யூதித்து, பாரூக்கு,சீராக்கு, 1 மக்கபேயர் ஆகிய நூல்கள் எபிரேய மொழியில் எழுதப்பட்டவையாயினும் நமக்குக் கிடைத்திருக்கும் பிரதிகள் கிரேக்க மொழியில் உள்ளன. இவற்றில் சிலவற்றின் எபிரேயத் துணுக்குகள் சமீபத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. கும்ரான் ஏடுகள் தோபி என்ற நூல் அரமேயிக்கு மொழியில் எழுதப்பட்டிருக்கலாம் என்று சுட்டுகின்றன. பல நூல்களில், இங்கும் அங்கும், அரமேயிக்கு, பாரசீக, கிரேக்க, இலத்தீன் மொழிகளின் பாதிப்பையும் சொற்களையும் காணலாம்.

இஸ்ராயேல் மக்களிடையே வாசிக்கப் படுவதற்கே பழைய ஏற்பாடு எழுத்து வடிவம் எடுத்தது (யாத் 24:7; யோசு 8:34-35; நெகே 8:4-5.8). இதற்கு வசதியாக நூல்கள் பகுதிகளாகவும் வசனங்களாகவும் பிரிக்கப் பட்டிருந்தன. அதிகாரங்களாகப் பிரிக்கப் பட்டு எண்கள் அளிக்கும் நவீனமுறையை ஸ்தேவான் லாக்டன் (கி.பி. 1228) என்பவர் தொடங்கி வைத்ததாகப் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும். இவர் ஒருவேளை ஏற்கெனவே இருந்த பிரிவு முறைகளைப் பயன் படுத்தியிருக்கலாம். பழைய ஏற்பாட்டின் வசனங்களை எண்ணும் நவீன முறையைச் சாஸ்தே பக்னினி என்பவர் கி.பி. 1528-இல் தாம் பதிப்பித்த இலத்தீன் மொழி விவிலியத்தில் பயன்படுத்துகிறார். பாரீசைச் சேர்ந்த ராபர்ட் எத்தியென் என்ற பதிப்பாளர் பழைய ஏற்பாட்டைப் பொருத்த மட்டும் பக்னினியின் முறையைப் பயன் படுத்துகிறார்; கி.பி. 1555-இல் தாம் பதிப்பித்த புதிய ஏற்பாட்டுப் பகுதிக்கு வசன எண்ணிக்கை முறையைத் தானே அளிக்கிறார். குடென்பர்க்கு என்பவர் (1450) முதல் விவிலியத்தை அச்சடித்தார். 1500-க்குள் 100-க்குமேற்பட்ட பதிப்புகள் தோன்றின.

IV. **விவிலியத்தின் அதிகாரம்:** விவிலியம் இறை ஏவுதலால் எழுதப்பட்டது ஆகவே, இறைவனது வார்த்தையைக் கொண்டுள்ளது என்ற விசுவாசத்திலிருந்துதான் விவிலியம் தன் அதிகாரத்தைப் பெறுகிறது. ஆகவே, அதில் அடங்கியுள்ள போதனை விசுவாசத்திற்கும் செயலுக்கும் அதிகாரபூர்வமானது. கிறிஸ்தவச் சபைகளில் சில இந்த அதிகாரத்தை விவிலியத்துக்கு மட்டும் உரியதென்று வரையறை செய்யும்போது மற்றச் சபைகள் விசுவாசிகளின் குழு அளிக்கும் விளக்கத்திற்கும் (பாரம்பரியம்) சம முக்கி

யத்துவம் அளிக்கின்றன. ஏனெனில், இதிலும் பரிசுத்த ஆவி தொடர்ந்து செயலாற்றுகிறார்.

கத்தோலிக்கத் திருச்சபை விவிலியத்தை இறைவனது வார்த்தையாகக் கொள்கிறது. ஆகவே, விவிலியம் வெளிப்படுத்தப்பட்ட மறையுண்மைகளின் ஊற்றாகவும் விசுவாச ஒழுங்குமுறையாகவும் உள்ளது. திருச்சபை தனது விசுவாசத்தை விவிலியத்திலிருந்தும் உயிருள்ள பாரம்பரியத்திலிருந்தும் பெறுகிறது. இப்பாரம்பரியம் இயேசுவால் திருச்சபை நிறுவப்பட்டதிலிருந்து திருச்சபையில் இருந்து வந்துள்ள அதன் உயிருள்ள போதிக்கும் அதிகாரமாகும். திருச்சபைதான் விவிலியத்தை இறைவார்த்தை என்று ஏற்று விளக்குகிறது. அதனுள் அடங்கியுள்ள நூல்களின் பட்டியலையும் நிர்ணயிக்கிறது. ஆகவே, விவிலியம் விசுவாசத்தின் சேய்மை ஒழுங்கென்றால், பாரம்பரியம் விசுவாசத்தின் அணிமை ஒழுங்காகும் என்று இறையியல் வல்லுநர்கள் கூறுவர்.

## விழாக்கள் ( FEASTS )

I. எல்லா மதங்களிலும் விழா வழிபாட்டின் ஒரு முக்கிய அங்கமாக இருக்கிறது. வழிபாட்டுச் சமூகம் மகிழ்ச்சி பொங்க, மனிதவாழ்வின் ஏதாவதொரு அம்சத்திற்காக இறைவனுக்குச் சில சடங்குகள் வழியாக வணக்கத்தைச் செலுத்துகிறது. நன்றி கூறி, இறைனின் துணையை வேண்டுகிறார்கள். விவிலிய விழாக்களின் தனித்தன்மை என்னவென்றால் அவை புனித வரலாற்றுடன் தொடர்புடையதாகவும், தான் தேர்ந்து கொண்ட மக்கள் சார்பாக இடைவிடாது செயல்படும் கடவுளோடு தொடர்பை ஏற்படுத்துவதாகவும் இருக்கின்றன; அதே நேரத்தில் இந்த விழாக்கள் எல்லாம் பொது மனிதத் தன்மையினை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

II. **பழைய ஏற்பாடு:**

**1. யூதத் திருவிழாக்களின் தோற்றம்:** இஸ்ராயேலில் மாதத்தை நிர்ணயித்தது சந்திரனின் சுழற்சிதான். அது மீண்டும் மீண்டும் வருவதால், அது பல விழாக்களுக்கு வழிவகுத்தது; சில சமயம் பௌர்ணமியும் (*சங் 81:4*), பொதுவாக அமாவாசையும் (*1 சாமு 20:5; 2 அர 4:28; ஆமோ 8:5*) இறுதியாக ஒரு வாரத்தின் இலயத்தை அமைத்த. ஓய்வுநாளும் (*யாத் 20:8-11*) விழாக்கள் கொண்டாட வாய்ப்பாயின. சூரியனின் சுழற்சி புதுவருட விழாவைக் கொண்டு வந்தது. இஃது எல்லாக் கலாச்சாரத்துக்கும் பொதுவானது. இத்திருவிழா முதலில் இலையுதிர் காலத்தில் வரும் அறுவடைத் திருவிழாவுடனும், பின்னர் வசந்த காலத்தில் வரும் பாஸ்காத் திருவிழாவுடனும் இணைத்துக் கொண்டாடப்பட்டது (*யாத் 23:16; 12:2*). இந்த வழிபாடுகளிலிருந்து பாவப்பரிகார நாளுக்கான சில சடங்குகள் எடுத்துக் கொள்ளப்பட்டன (*காண்க. லேவி 16*).

விண்மீன்களின் சுழற்சியை மையமாகக் கொண்டு கொண்டாடப்பட்ட இவ்விழாக்களோடு, இஸ்ராயேலரின் அன்றாட வாழ்க்கையோடு தொடர்புடைய மேய்ச்சல், விவசாய வாழ்வுச் சூழல்களும் விழாக்களை நிர்ணயித்தன. ஆனால், இவை மேலே கூறிய விழாக்களோடு குழப்பும் போக்கைக் கொண்டிருந்தன. பாஸ்கா விழாவின்போது, மேய்ச்சலின் விழாவான வசந்தகால விழாவும், ஆடுகளில் முதற்கனியை ஒப்புக்கொடுக்கும் விழாவும் கொண்டாடப்பட்டன. நிலத்தின் செயல்பாட்டையொட்டி மூன்று பெரும் விழாக்கள் தோன்றின. அவை வசந்த காலத்தில் கொண்டாடப்பட்ட புளியாத அப்பத்திருவிழா, கோடைகாலத்தில் கொண்டாடப்பட்ட அறுவடையின் விழா, இலையுதிர் காலத்தில் கொண்டாடப்பட்ட முந்திரி அறுவடை விழா (*யாத் 23:14-17; 34:18-22*). உபாகமம் புளியாத அப்பத்திருவிழாவைப் பாஸ்காவுடன் இணைத்தது; திராட்சை அறுவடைக்குக் கூடாரத் திருவிழா என்ற பெயரைக் கொடுத்தது (*உப 16:1-17*). இக்காலத் திருவிழாக்களில் உள்ள சடங்குகளின் பொருளைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் அவற்றின் விவசாய, மேய்ச்சல் தொடர்புகளைப் பார்க்க வேண்டும். நாடு கடத்துதலுக்குப்

பிறகு 'பூரிம்' (*எஸ்த 9:26; காண்க. 2 மக் 15:36தொ*), அர்ப்பண விழா, நிக்கானோர் நாள் (*1 மக் 4:52-59; 7:49; 2 மக் 10:5தொ; 15:36தொ*) போன்ற இரண்டாந்தர விழாக்கள் தோன்றின.

**2. யூத விழாக்களின் உண்மைப்பொருள்:** பல்வேறுபட்ட திருவிழாக்கள் அவை உணர்த்தும் கடந்தகால நினைவுகளாலும், எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையை அறிக்கையிடுவதாலும், நிகழ்காலத்தின் தேவைகளை வெளிப்படுத்துவதாலும் புதிய பொருளைப் பெறுகின்றன.

***அ) யாவேயின் மாபெரும் செயல்களை நினைவூட்டும் விழாக்கள்:*** இஸ்ராயேல் தனது கடவுளைப் பல்வேறுபட்ட அடைமொழிகளால் புகழ்கிறது. படைத்தவர் ஒவ்வொரு ஓய்வுநாளிலும் நினைவு கூரப்படுகிறார் (*யாத் 20:11*); எகிப்திலிருந்து இஸ்ராயேலர்களை விடுவித்தவர் ஓய்வுநாளில் மட்டுமன்று, பாஸ்காவிழா கொண்டாடப்படும் பொழுதும் பிரசன்னமாய்த் தங்கியிருக்கிறார் (*உப 5:12-15; 16:11*); கூடாரத் திருவிழா இஸ்ராயேலர்கள் பாலைவனத்தில் யாவே இறைவன் துணையுடன் பயணம் செய்ததையும், அவர்கள் இருவருக்குமிடையே ஏற்பட்ட உறவின் ஒப்பந்தத்தையும் நினைவூட்டியது (*லேவி 23:42தொ*); இறுதியாக, பிந்தைய யூத சமயம் சீனாய் மலையில் சட்டம் கொடுக்கப்பட்டதை வாரங்களின் விழாவோடு அதாவது பெந்தக்கோஸ்தே விழாவோடு இணைத்துக் கொண்டாடியது. இவ்வாறு விவசாயத் திருவிழாக்கள் நினைவுகூரும் கொண்டாட்டமாக மாறுகின்றன. தங்களது முதற்கனிகளை ஒப்புக்கொடுத்த இஸ்ராயேலர்கள் தங்கள் செபத்தில் மண்ணின் கொடைகளுக்காகவும், கடந்த காலத்தில் இறைவன் செய்த நன்மைகளுக்காகவும் நன்றி செலுத்தினர் (*உப 26:5-10*).

***ஆ) எதிர்காலத்தை முன்னெதிர்பார்ப்புடன் கொண்டாடுதல்:*** இந்த விழாக்கள் எதிர்காலத்தில் பெறப்போகும் மீட்பின் இறுதிக் குறிக்கோளுக்கு உண்மையான நம்பிக்கையூட்டுவதாக அமைகின்றன; இறைவனின் கடந்த காலச் செயல்கள் மக்களுக்கு எதிர்கால நம்பிக்கையை உறுதிப்படுத்துவதாக அமைகின்றன. விடுதலைப் பயணத்தைக் கொண்டாடுதல் ஒரு நாள் இஸ்ராயேலர்கள் இறுதியாகவும், முழுமையாகவும் விடுதலை பெறுவர் என்றும் (*எசா 43:15-21; 52:1-12; 55:12தொ*), எருசலேமை நோக்கி கூடாரத் திருவிழாவுக்காகத் திருயாத்திரை செல்லும் அனைத்து நாடுகளுக்கும் யாவே இறைவனின் அரசாட்சி பரவும் (*செக் 14:16-19*) என்றும் முன்னுரைக்கிறது; உத்தரவாதம் அளிக்கிறது. அவர்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறார்கள் (*சங் 118; 122; 126*)! ஏனெனில், அவர்கள் இறைப்பிரசன்னத்தில் அல்லவா இருக்கிறார்கள் (*உப 16:11-15; லேவி 28:40*)?

***இ) இன்றைய தேவைகள்:*** மனம் வருந்தி மனம் மாறிய தூய்மையான உள்ளத்தில் தான் இந்த மகிழ்ச்சி உண்மையான மகிழ்ச்சியாக இருக்கும். மகிழ்ச்சியின் சங்கீதங்கள் கூட இதன் தேவையை வலியுறுத்துகின்றன. ''என்னுடைய மக்களே எனக்குச் செவி கொடுப்பீர்களாக!'' என்ற சங்கீதம் கூடாரத் திருவிழாவின்போது பாடப்பட்டது (*சங் 81:8*). பாவப்பரிகாரத் திருவிழா கூட்டறிக்கையால் ஆழ்ந்த மனமாற்றத்திற்கான ஆவலை எடுத்துக்கூறுகிறது (*சங் 106; நெகே 9:5-37; தானி 9:4-19*). விசுவாசமற்ற இதயங்கள் செலுத்தும் பலியினாலும், வழிபாட்டினாலும் கிடைக்கும் பாதுகாப்புணர்வும், மகிழ்ச்சியும் நிலையற்றது எனத் தொடர்ந்து இறைவாக்கினர்கள் எச்சரிக்கின்றனர். இத்தகைய வழிபாட்டை ''நாம் வெறுக்கிறோம்; அருவருக்கிறோம்'' (*ஆமோ 5:21; காண்க. ஓசே 2:18; எசா 1:13தொ*). இத்தகைய அழிவைக் கூறும் இறைவாக்குகளால் விழாக்களை முழுவதும் நிறுத்திவிடச் சொல்லவில்லை. மாறாக, அதன் முழுப்பொருளையும் உணர்ந்து அவற்றை உயிருள்ள இறைவனைச் சந்திக்கும் வாய்ப்பாகப் பயன்படுத்த வேண்டும் என்றுதான் கூறுகிறார்கள் (*யாத் 19:17*).

III. **புதிய ஏற்பாடு:**

*1.* **யூதத் திருவிழாக்களிலிருந்து முடிவில்லா விழாவுக்கு:** இயேசு தான் வாழ்ந்த காலத்தில் கொண்டாடப்பட்ட யூதத் திருவிழாக்கள் அனைத்திலும் பங்கு பெற்றார். ஆனால், அது கூடாரத் திருவிழாவாக இருந்தாலும் சரி *(யோவா 7:37தொ; 8:12; காண்க. மத் 21:1-10)*, ஆலய அர்ப்பண விழாவாக இருந்தாலும் சரி *(யோவா 10:22-38)* அது தன்னிலேதான், அதாவது தனது செயல்பாட்டில்தான் முழுப் பொருளைப் பெற முடியும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றார். இயேசு தனது புதிய உடன்படிக்கையின் தனது பலி பாஸ்காப் பின்னணியில் நிறைவேறுமாறு பார்த்துக் கொள்கிறார் *(மத் 26:2.17தொ. 28இணை; யோவா 13:1; 19:36; 1 கொரி 5:7தொ)*. இந்தப் புதிய இறுதிப் பாஸ்காவினால் இயேசு பாவப்பரிகார விழாவையும் நிறைவேற்றுகிறார். ஏனெனில், அவரது இரத்தம் தூயகத்துக்குள் நுழைவதற்கான உரிமையைப் பெற்றுத் தருகிறது *(எபி 10:19)*; மேலும், விண்ணகத்தில் கூடும் எருசலேம் சபையில் நுழையவும் உரிமை பெற்றுத் தருகிறது *(எபி 12:22)*. இந்த நாளிலிருந்து உண்மையான திருவிழா விண்ணகத்தில் கொண்டாடப்படுகிறது. கூடார விழாவில் நடப்பதுபோல் *(திருவெளி 7:9)* சங்கீதங்களைப் பயன்படுத்தி, உண்மையான பாஸ்காச் செம்மறியால் மீட்கப்பட்டு தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் கூட்டம் *(5:8-14; 7:10-14)*, செம்மறியையும் அவரது தந்தையையும் போற்றி, இடைவிடாமல் புதிய கீதம் பாடுகின்றனர் *(14:3)*. எனவே, பாஸ்காவிழா முடிவுறாத விண்ணக விழாவாக மாறுகிறது.

*2.* **கிறிஸ்தவ விழாக்கள்:** விண்ணகப் பாஸ்கா விழா, யூத விழாக்கள் அனைத்தையும் ஒன்றாக்கி இறுதிக்கால நிறைவுக்குக் கொண்டு வந்தது போல மண்ணுலகில் திருச்சபையின் பல திருவிழாக்களுக்கும் இது புதுப்பொருள் கொடுக்கிறது. யூத திருவிழாக்களைப்போல் அல்லாது திருச்சபைத் திருவிழாக்கள் ஒரே போது நிறைவேற்றப்பட்டதும் முடிவில்லா மதிப்புடையதுமான ஒரு நிகழ்வை மீண்டும் மீண்டும் நினைவு கூர்கின்றன, கொண்டாடுகின்றன. ஆனால், யூத விழாக்களைப்போல், இந்த விழாக்கள் எல்லாம் பருவகாலங்களை ஒட்டி, இயேசுவின் வாழ்வு நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு கொண்டாடப்பட்டாலும் இவை அனைத்துமே உண்மையான விண்ணக விழாவின் பிரதிபலிப்புகள்தான் *(காண்க. கொலோ 2:16)*. எனவே, திருச்சபை இவ்விழாக்களைப் பெரிதுபடுத்தத் தேவையில்லை *(காண்க. கலா 4:10)*. விழாக்களின் எண்ணிக்கையைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

திருச்சபை பாஸ்கா மறைபொருளை மையமாகக் கொண்ட நற்கருணைக் கொண்டாட்டத்தில் முக்கிய கவனம் செலுத்துகிறது. ஏனெனில், இக்கொண்டாட்டம்தான் ஒவ்வொரு ஞாயிறும் இறைமக்கள் சமூகத்தை ஒரே குடும்பமாக இணைக்கிறது. இந்த நாள் ஆண்டவர் உயிர்த்தெழுந்ததால் இன்னும் அதிக சிறப்புப் பெறுகிறது *(அ.ப. 20:7; 1 கொரி 16:2; திருவெளி 1:10)*.

இஃது ஓய்வு நாளோடு முடிந்த வாரத்தின் முதல் நாளாகும். இது கிறிஸ்தவ விழாவின் அடிப்படைப் புதுமையைச் சுட்டிக்காட்டுகிறது. இந்தத் தனித்தன்மை மிக்க விழாவின் பிரகாசம் ஆண்டு முழுவதையும் ஒளிர்விக்கிறது. இதன் செழுமை, பாஸ்காவை மையமாகக் கொண்ட விழாச் சூழலில் விரிவாக்கப்படுகிறது.

இஃதோடு, யூத வழிமரபுச் செல்வத்தைப் பயன்படுத்தி, திருச்சபை இயற்கைச் சூழலை மீண்டும் காணமுடிகிறது. கிறிஸ்துவின் வாழ்வின் வழியாக அதை மீண்டும் செயலாக்கம் செய்வதாலும், முடிவில்லா விண்ணக விழாக்களை நோக்கித் திசை முகப்படுத்துவதாலும் இதைச் செயல்படுத்துகிறது.

## விழிப்பாயிரு (WATCH)

I. விழிப்பாயிருத்தல் என்பது அதன் சரியான பொருளில் ஓர் இரவு தூங்காதிருத்தல் ஆகும். இஃது அதிக வேலை செய்வதற்காக இருக்கலாம் (ஞான 6:15); அல்லது நாம் கவனமாயில்லாதபோது எதிரி நம்மைத் தாக்குவதைத் தடுப்பதற்காக இருக்கலாம் (சங் 127:1தொ). எனவே, விழிப்பாய் இருத்தல் என்பது உருவகமாகக் கூறப்படுகிறது. அதன்படி பார்த்தால் எச்சரிக்கையாயிருத்தல், கவனமின்மையை எதிர்த்துப் போராடுதல் என்பன விழிப்பாய் இருத்தலாகும். இதன் வழியாக எண்ணிய இலட்சியத்தை அடைவது ஒருவரது நோக்கமாகிறது (பழ 8:34). விசவசிப்பவனின் குறிக்கோள் என்னவென்றால் அந்த நாள் வரும்பொழுது ஆண்டவரை வரவேற்க விழிப்பாய்க் காத்திருக்க வேண்டும் என்பதே (எசா 21:11-12; 52:8). விசுவாசி விழிப்பாயிருப்பதால் அவன் இருளில் இருந்தாலும், இரவில் இருந்தாலும் அவன் இருளாகவோ, இருளின் ஒரு பகுதியாகவோ மாறாமல் இருக்கிறான்.

II. **ஆண்டவரின் வருகைக்காக விழிப்பாயிருத்தல்:**

***1. ஒத்தமை நற்செய்திகள்:*** இறைமகன் மீண்டும் வரும்போது அவர்கள் ஒவ்வொருவரும் விழிப்பாயிருக்க வேண்டும் என்பதுதான் இயேசு தரும் அறவுரையில் முக்கியமானதாக இருக்கிறது (மாற் 13:33-37). ''விழிப்பாயிருங்கள்; ஏனெனில், உங்கள் ஆண்டவர் எந்த நாளில் வருவார் என உங்களுக்குத் தெரியாது'' (மத் 24:42). தமது வருகை முன்னறியப்பட முடியாதது என்பதை உணர்த்த இயேசு பல வகையான ஒப்புமைகளையும் உவமைகளையும் பயன்படுத்துகிறார். இவை விழிப்பாய் இருத்தல் தூங்காதிருத்தல் என்ற தற்காலப் பொருளைச் சுட்டுகின்றன. திருடன் இரவில் வருவதுபோல மனுமகன் வருவார் (மத் 24:32 தொ). தனது பணியாளர்களுக்கு முன்னெச்சரிக்கை தராமல் இரவில் திரும்பி வரும் வீட்டுத் தலைவனைப்போல வருவார் (மாற் 13:35தொ). விவேகமுள்ள வீட்டுத் தலைவனைப்போல அல்லது நல்ல ஊழியனைப்போல ஒரு கிறிஸ்தவனும் தூக்கம் தன்னை மேற்கொள்ள விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அவன் விழித்திருந்து ஆண்டவரை வரவேற்கக் காத்திருக்க வேண்டும். எனவே, விழித்திருத்தல் என்பது இயேசுவின் வருகையை நம்பிக்கையோடு எதிர்பார்க்கும் அவரது சீடரின் தனித்தன்மையாக இருக்கிறது. இந்த எச்சரிக்கை உணர்வு எப்பொழுதும் கவனமாயிருக்க வேண்டிய ஒரு நிலையாதலால் இது மண்ணக இன்பங்களிலிருந்தும், பொருட்களிலிருந்தும் ஒரு ஈடுபாடற்ற நிலையில் இருக்க வேண்டிய அவசியத்தைக் கோருகிறது (லூக் 21:34தொ). ஏனெனில் இரண்டாம் வருகையின் நேரத்தை யாரும் முன் குறித்துச் சொல்ல முடியாதாதலால் அஃது எந்த நேரத்தில் வந்தாலும் எதிர்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். இதைத்தான் பத்துக் கன்னியர் உவமை எடுத்துக்கூறுகிறது (மத் 25:1-13).

***2. பவுலின் முதல் திருமடல்கள்:*** பவுலின் முதல் மடல்கள் இரண்டாம் வருகையை அதிகம் வலியுறுத்தி எச்சரிக்கையாயிருங்கள், விழிப்பாயிருங்கள் என அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதைப் பார்க்கிறோம். சிறப்பாக 1 தெச 5:1-7-இல் ''நாம் இரவுக்கோ, இருளுக்கோ உரியவரல்லர். எனவே, மற்றவர்போல் நாமும் தூங்கலாகாது, விழித்திருக்க வேண்டும். மட்டுமிதத்தோடு இருத்தல் வேண்டும்'' (1 தெச 5:5தொ). ஒரு கிறிஸ்தவன் கடவுளை நோக்கித் திரும்பிவிட்டதால் அவன் ஒளியின் மகனாக இருக்கிறான். எனவே, அவன் தீமையின் அடையாளமான இருளைத் தொடர்ந்து ஆற்றலோடு எதிர்க்க வேண்டும். அப்பொழுதுதான் இயேசுவின் வருகை அவனுக்கு எதிர்பாராத வியப்பாக அமையாது. விழிப்பாயிருத்தல் ஓரளவு மட்டுமிதத்தைக் கோருகிறது. அதாவது, இருளோடு தொடர்புடைய மிகைப்பாடுகளைக் கைவிட வேண்டும். ஆண்டவருடைய வருகையிலிருந்து திசை திருப்பும் எதையும் கைவிட வேண்டும். மேலும்,

விழிப்பாயிருக்க விரும்பும் ஒருவன் ஆன் மீகப் படைக்கலங்களாகிய விசுவாசம், அன்பு முதலியவற்றை அணிந்து கொள்ள வேண்டும் *(1 தெச 5:8)*. சற்றுப் பிந்திய மடலில் கிறிஸ்தவர்கள் தங்கள் உற்சாகம் குன்றிப் போகக்கூடாது என்ற எண்ணத்தில் தங்களையே சிறிது தூண்டிவிட்டுத் தூக்கத் திலிருந்து விழித்தெழுந்து அவர்களை நெருங்கும் மீட்புக்குத் தயாராக இருக்கு மாறு பவுல் தூண்டுகிறார் *(உரோ 13:11-14)*.

**3. திருவெளிப்பாடு:** சர்தைத் திருச் சபைக்கு இறுதிநாளில் நீதிபதி அளிக்கும் செய்தி விழிப்பாயிருப்பது பற்றி அறிவுரை கூறப்படுவதுதான் (திருவெளி 3:1தொ). ஏனெனில், அந்தத் திருச்சபை கிறிஸ்து திரும்பி வருகிறார் என்பதையே மறந்து விட்டது. அது விழித்தெழாவிட்டால் அதனைத் திருடனைப்போல் அவர் திடீ ரெனச் சந்திப்பார். ஆனால், தனது உடை யெல்லாம் உடுத்தி எவன் தயாராக இருக்கி றானோ அவன் பேறுபெற்றவன் *(16:15)*. இவ்வாறு, ஆண்டவரின் வெற்றி ஊர்வலத் தில் அவன் கலந்துகொள்ளக் கூடியவனா வான்.

III **ஒவ்வொரு நாளும் சோதனைக்குட் படாதபடி விழிப்பாயிருத்தல்:** இயேசுவின் வருகைக்காகக் காத்திருக்கும் இந்த விழித் திருத்தலில் கிறிஸ்தவர்கள் தளராது நிலைத்து இருப்பதில் அன்றாடச் சோதனை களுக்கு எதிராகப் போராட வேண்டியிருக்கி றது. இந்தச் சோதனைகளே பெரிய இறுதிக் காலப் போராட்டத்தின் முன்னனுபவமாக இருக்கிறது.

1. கடவுளின் மீட்புத் திட்டத்தை நிறை வேற்றும் இறுதி நேரத்தில் கூட கெத் சமனித் தோட்டத்தில் இயேசு துன்பம் மிக்க விதத்தில் போராட வேண்டியிருந்தது. அது கால இறுதியில் வரும் போராட்டத்தின் முன்னுரை போல் அமைந்தது. சோதனை கட்கு எதிராக விழித்திருக்கும் ஒரு மாதிரி யாக இயேசுவை ஒத்தமை நற்செய்திகள் காட்டுகின்றன. இயேசு சிறப்பு மிக்க மாதிரியாவார். ஏனெனில், அவ்வளவு எச்ச ரிக்கைக்குப் பிறகும் சீடர்கள் தவறிவிட்ட னர். ''சோதனைக்கு உட்படாதிருக்க விழித் திருந்து இறைவனிடம் வேண்டுங்கள்'' *(மத் 26:41)*. இது கெத்சமனியையும் கடந்து செல்லும் கிறிஸ்தவ அறவுரையாகும். ஆண்டவர்கள் கற்பித்த செபத்தின் இறுதி மன்றாட்டு முன்னதற்கு நெருங்கியதாகும்; ஏனெனில்,, இறுதிக்கால வேளையில் மட் டுமன்று. ஒவ்வொரு நாளும் சோதனையில் விழாமல் இருக்க இறைவனுடைய உதவி யைத் தேடுகிறது.

2. விழிப்பாய் இருக்க வேண்டுமென்ற கட்டளை, இன்றைய வாழ்வின் ஆபத்துக் கள் உள்ளார்ந்த விதத்தில் அதிகமாக இருப் பதால் அடிக்கடி பவுலின் திருமடல்களில் வருகிறது *(1 கொரி 16:13; கொலோ 4:2; எபே 6:10-20)*. இந்த அறிவுரை மிகச்சிறப் பாக இரவுச்செபத்தின் ஒரு பகுதியாக உயிரோட்டத்துடன் அமைக்கப்பட்டிருப் பதைப் பார்க்கிறோம். ''தெளிந்த மனத் தோடு விழிப்பாயிருங்கள். ஏனெனில், உங்கள் எதிரியான அலகை கர்ச்சிக்கும் சிங்கம் போல் யாரை விழுங்கலாம் எனத் தேடித் திரிகிறது'' *(1பேதுரு 5:8)*. இங்கும் எபே 6:10-ஐப் போலவே எதிரி யார் என்பது தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. மாற்றமுடியாத வெறுப்புடன் சாத்தானும் அவனது உதவியாளர்களும் எந்தக் கிறிஸ்த வன் கிறிஸ்துவை மறுப்பான் என ஆவ லோடு காத்திருக்கின்றனர். எனவே, ஒவ் வொரு கிறிஸ்தவனும் தனது செபத்தாலும், தன் மறுப்பாலும் எதிரியின் வலையில் சிக்காதிருக்க எச்சரிக்கையாக இருப்பானாக! சிறப்பாக, சமூகங்களின் தலைவர்களா யிருப்பவர்கள் இத்தகைய கொடிய ஓநாய் களிடமிருந்து மந்தையைப் பாதுகாக்க இத் தகைய விழிப்புணர்வு கொண்டிருக்க வேண்டும் என அறிவுரை கூறப்படுகிறது *(அ.ப. 20:28-31)*.

IV. **விழித்திருத்தல்:** இரவை விழித்தி ருந்து செபத்தில் கழித்தல். இரவு முழுவ தும் விழித்திருந்து செபிக்கும் தொடக்கத் திருச்சபையின் பழக்கத்தை எபே *6:18;* கொலோ *4:2*-இல் பவுல் சுட்டிக்காட்டுகி

றார் எனலாம். ஏனெனில், விழித்திருந்து செபித்தல் என்பது இயேசுவின் செயலை நாம் பின்பற்றுதலாகும் (லூக் 6:12; மாற் 14:38).

விழிப்பாயிருத்தல், இயேசு ஆண்டவரின் மகிமையான வரவை நம்பிக்கையோடு எதிர்பார்த்திருக்கும் கிறிஸ்தவனின் சிறப்புப் பண்புகளில் ஒன்றாகும். இது வரப்போகிறவரை வரவேற்கக் காத்திருப்பதையும் (திருவெளி 22:17.20), இறுதிக்கால விசுவாச மறுதலிப்புகளை எதிர்த்துப் போராடுவதையும் உள்ளடக்கும். இந்த வாழ்வின் சோதனைகள் இறுதிக்காலச் சோதனைகளின் முன்னனுபவமாக அமைவதால், ஒரு கிறிஸ்தவன் விழிப்பாக இருந்து தீயவனுக்கு எதிரான ஒவ்வொரு நாள் போராட்டத்திலும் அவனை வெல்ல வேண்டும். இதற்கு இடைவிடாத செபமும் மட்டுமிதமான நிலையும் ஒரு சீடனுக்கு அவசியமாகும்.

**விழிப்பாயிருக்கும் வாயில் காவலர் - உவமை** (WATCHING DOORKEEPER OR SERVANT - PARABLE)

(மாற் 13:32-27; லூக் 12:35-40).

இந்த உவமை இறைமகனின் இரண்டாம் வருகைக்காக விழிப்பாயிருந்து காத்திருக்க வேண்டுமெனக் கூறுகிறது. ஏனெனில், இஃது எந்த நேரத்தில் நிகழும் எனத் தெரியாது. வீட்டை விட்டுத் தொலைநாடு செல்லும் தலைவன் இறைமகன் இயேசு. அவர் விட்டுச்செல்லும் வீடு இவ்வுலகம். ஊழியர்கள் அவரது வார்த்தையைப் பின்பற்றி வாழும் சீடர்கள். ஒவ்வொரு ஊழியரும் விழிப்பாயிருக்க வேண்டும். ஏனெனில், இயேசு வரும்போது தயாராயில்லாத ஊழியரை, குறிப்பாக வாயிற்காவலாளியைப் புறக்கணிப்பார். எனவே, எல்லா மனிதர்களும் இறைவனை ஏற்கத் தயாராக இருக்க வேண்டும்.

**விளக்கு** (LAMP)

I. பழைய ஏற்பாட்டில் விளக்குகள் பற்றி பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. உடன் படிக்கைப் பேழையிலும், கோவிலிலும், அடையாளப் பொருளிலும் இவை பயன்படுத்தப்பட்டுள்ளன. விளக்குகள் ஒவ்வொரு நாளும் பயன்பட்ட ஒன்று என்பதனைத் தெளிவாகக் காண்கிறோம் (பழ 31:18; எரே 25:10).

பழைய ஏற்பாட்டில் விளக்குகள் களிமண்ணால் செய்யப்பட்டவையே. தட்டுப் போல் அமைந்த ஒன்றின் நுனியில் திரியமைத்து அதில் ஒலிவ எண்ணெய் ஊற்றி விளக்குகளாகப் பயன்படுத்தினர் (யாத் 27:20). அந்தத் தட்டின் நான்கு மூலைகளும் இதழ்போலக் குவித்து வைக்கப்பட்டு, திரியை வைப்பதற்கு ஏதுவாக அமைக்கப்பட்டிருந்தன. மத்திய வெண்கலக் காலத்தில் ஓர் இதழுள்ள விளக்குகள் இருந்தன. பிறகு ஏழு இதழ்களுள்ள விளக்குகள் தோன்றின (செக் 4:2).

தொடக்கத்தில் மேலே கூறப்பட்டது போல் விளக்குகள் இருந்தாலும் (1 சாமு 3:3) பின்னர் ஒரே தண்டில் பல விளக்குகள் இணைக்கப்பட்டு, ஏழு கிளைகள் உள்ள விளக்குகள் கூடத் தோன்றின. கிரேக்கப் பண்பாட்டின்படி வந்த விளக்குகள் மூடியுடன் வந்தன. இவை கி.மு. 5 மற்றும் 4-ஆம் நூற்றாண்டுகளில் உருண்டை வடிவத்தில் அமைந்த விளக்குகள் தனிமூடியோடும், பின்னர் உரோமையர்கள் கி.மு. 100-இல் அறிமுகப்படுத்திய விளக்குகள் மூடியும் விளக்குகளும் சேர்ந்தும் அமைந்தன. முட்டை வடிவத்திலும், முக்கோண வடிவத்திலும் விளக்குகள் பின்னர் வந்தன. விவிலியக் காலத்திற்குப் பிறகே மெழுகு வத்தி விளக்குகள் அறிமுகப்படுத்தப்பட்டன. அதற்குமுன் சாதாரண எண்ணெய் விளக்குகளே பயன்பட்டன.

II. **உருவகப்பொருள்:** விளக்கும், அதனைக் கொண்டிருக்கும் விளக்குத்தண்டும் அடையாளப் பொருட்களைக் கொண்டிருந்தன எனலாம். ஒளியும், அதைக் கொண்டிருந்த விளக்கும் இறைப்பிரசன்னத்தைக் குறிப்பதாயின (திருவெளி 21:23; 22:5; காண்க. யோவா 8:12; 1யோவா 1:5). இறைவாக்கினரின் வார்த்தையும் ஒளிவிடும் விளக்காக எண்ணப்பட்டது (யோவா 5:35;

பேதுரு 1:19; மாற் 4:21-22; லூக் 8:16-17; இது மத்தேயு 5:15-16-இல் கொடுக்கப்பட்டிருக்கும் ஒழுக்கம் பற்றிய விளக்கத்திலிருந்து மாறுபட்டதாகும்). அது நம்மைக் காத்து, வாழ்வு மற்றும் ஒளியான விளக்குச் சட்டத்தையும் குறித்துக் காட்டுகிறது (சங் 119:105; பழ 6:23); நீதியுடைமையின் செயல்களையும் சுட்டிக்காட்டுகிறது (மத் 5:15). மற்றொரு கோணத்தில், தனது நாணயத்தைத் தொலைத்து விட்ட பெண் விளக்கை ஏற்றி அதனைத் தேடுவது போல (லூக் 15:8), விளக்கு இறைவனுடைய கண்களை அடையாளமாகச் சுட்டலாம் (செக் 4:1-14). ஒருவரின் கண்ணே அவரது உடலுக்கு விளக்கு என்றும் கூறலாம். என்றுமே அழியாத தாவீதின் வம்சத்தின் அடையாளமாக விளக்கைக் கொள்கின்றனர் (1 அர 11:36; 15:4; 2 அர 8:19; 2 நாள் 21:7). கடவுளே இருளை ஒளியாக்கிக் கொண்டிருக்கும் விளக்கு (2 சாமு 22:29). இவ்வாறு விளக்கு அடையாளப் பொருளாகப் பலவற்றைச் சுட்டலாம். இவை ஒளி-உயிர் என்னும் அடிப்படைக் கருத்திலிருந்து உருவாக்கப்பட்டவையாகும்.

III. **இறையியில் சிந்தனை:** விளக்கு, தன்னகத்தே பிரகாசிக்கும் ஒளியைத் தாங்கி நிற்பதால் இறைவனுடையவும் மனிதனுடையவும் உயிருள்ள பிரசன்னத்தை அடையாளமாக உணர்த்துகிறது.

**1. விளக்கு இறைப்பிரசன்னத்தின் அடையாளம்:** ''ஆண்டவராகிய நீரே என் ஒளி விளக்கு'' (2 சாமு 22:29). இவ்வாறே சங்கீத ஆசிரியரும், இறைவன் ஒருவரே ஒளியும், வாழ்வும் தரவல்லவர் என்று பறைசாற்றுகிறார். ''ஆண்டவர் மனிதனுக்குத் தந்துள்ள ஆவி ஒரு விளக்கு'' (பழ 20:27). இறைவனுடைய கட்டளைகளுக்கும் (பழ 6:23; சங் 105; 119), இறைவாக்கிற்கும் விசுவாசிகள் பணிந்து, இந்த விளக்கின் ஒளியில் நல்வழி நடக்க, இறைவனின் திரு ஆவி அவ்விளக்காக இருந்து பெரிதும் உதவுகிறார். மேலும், இறைவாக்கினர்களின் நூல்கள் ''இறைவாக்கை நீங்கள் இருண்ட இடத்தில் ஒளிரும் விளக்கென மதித்துக் கவனித்தல் நலம். பொழுது புலர்ந்து விடிவெள்ளி உங்கள் இதயங்களில் தோன்றும்வரை அவ் விளக்கு ஒளிர்கிறது'' (2 பேதுரு 1:19) என்று சான்று பகர்கின்றன. ஆண்டவராகிய கடவுளும் செம்மறியுமான இறைமகன் உலகத்தின் முடிவில் மீண்டும் வரும் இறுதி நாளில், ''இரவே இராது. விளக்கின் ஒளியோ, கதிரவனின் ஒளியோ அவர்களுக்குத் (விசுவாசிகளுக்குத்) தேவைப்படாது'' (திருவெளி 22:5). ஏனெனில், 'கடவுளின் மாட்சிமையே' அவர்களுக்கு ஒளியாகவும், 'செம்மறியே' விளக்காகவும் திகழும். அதன் ஒளியில் எல்லா நாட்டு மக்களும் நடந்து செல்வர் (திருவெளி 21:23.24).

**2. விளக்கு, மனிதப்பிரசன்னத்தின் அடையாளம்:** மனிதப் பிரசன்னத்தை அடையாளப்படுத்தவும் விளக்கு பயன்படுத்தப் பட்டுள்ளது. தாவீது அரசனிடம் அவரது புதல்வர்கள் மேலும் தொடர்ந்து பெருகிப் பலுகுவார்கள் என்ற பொருள்பட 'ஒரு விளக்கைக் கொடுப்பதாக' இறைவன் வாக்களிக்கிறார் (2 அர 8:19; 1 அர 11:36; 15:4). அம்மக்கள், இறைவனது வாக்கிற்குக் கீழ்ப்படியாமல் மாறாக அவர்கள் மனம் போல் நடக்க நேரும்போழ்து இறைவன் எரிந்துகொண்டிருக்கின்ற 'விளக்குகளின் ஒளியை' அணைத்து விடுவதாக அச்சுறுத்துகிறார் (எரே 25:10). அப்போது தீயவன் மிகவும் விரும்பத்தக்கது தனது விளக்கு விரைவில் அணைக்கப்பட வேண்டும் என்பதே (பழ 13:9; யோபு 18:தொ). இஸ்ராயேல் மக்கள் இறைவன்பால் கொண்டுள்ள பிரமாணிக்கத்திற்கு எடுத்துக்காட்டாகவும், இறைவன் திருமுன் செபத்தில் ஒன்றித்து வாழ்கின்றனர் என்பதற்குச் சான்றாகவும் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும்படி விளக்கைப் பலிபீடத்தில் வைத்துக் காத்தனர் (யாத் 27:20 தொ; 1 சாமு 3:3). விளக்கு அணைந்து போக விட்டால் அஃது அவர்கள் இறைவனைக் கைவிட்டு விட்டனர் என்பதற்கு அடையாளமாகும் (2 நாள் 29:7). ஆனால் விவேகிகளாகிய 5 கன்னியர்களைப் போன்றும் (மத் 25:1-8), உண்மை ஊழியக்காரனைப்போன்றும் (லூக் 12:35)

தங்களிடம் இருக்கும் விளக்குகள் என்றும் அணையாத வண்ணம் எரியும் விளக்குக ளோடு ஆண்டவரின் வருகைக்காகக் காத் திருப்போர் பேறு பெற்றோர்.

ஆனால், இறைவன் இன்னும் அதிகமாக எதிர்பார்க்கிறார். அவ்விளக்குகள் என்றும் எரியும்வண்ணம் காத்திருப்பவர்கள் ''விளக் கைக் கொளுத்தி மரக்காலின் கீழ் வைக்க மாட்டார்கள்; மாறாக, வீட்டிலுள்ள அனை வருக்கும் ஒளி தரும்பொருட்டு, விளக்குத் தண்டின் மேல் வைப்பார்கள்'' (மத் 5:15தொ. இணை). அப்பொழுது ஆண்டவ ரின் அன்புக்குரிய உண்மை ஊழியக்காரர் கள், இறைவாக்கினர் எலியா ''பந்தம்போல் அவருடைய வார்த்தை பற்றி'' (சீரா 48:1) எரியச் செய்ததுபோல், தங்கள் ஒளிகளை யும் தீய உலகின் நடுவில் ஒளிரச் செய்வார் கள் (பிலி 2:15). திருமுழுக்கு யோவானைப் போன்று அவர்கள் 'எரிந்து சுடர்விடும் விளக்கு'கள் (யோவா 5:35). யோவான் எவ்வாறு ''அனைவரும் தம் வழியாக விசுவசிக்கும்படி ஒளியைக் குறித்துச் சாட்சி யம் அளிப்பதற்கு அவர் சாட்சியாக'' வந் தாரோ (1:7தொ), அதே போன்று இவர் களும் அவ்வொளிக்குத் தங்கள் வாழ்வி லும், ''நெறிகெட்ட, சீரழிந்த தலை முறை யினரிடையே.... வாழ்வைப்பற்றிய வார்த் தைகளை ஏந்தி நின்று, உலகில் சுடர்விடும் விண்மீன்''களாய்த் (பிலி 2:15தொ) திகழ் வார்கள். 'மக்கள் உங்கள் ஒளிகளைக் கண்டு வானகத்தில் உள்ள தந்தையை மகிமைப் படுத்தும்படி உங்கள் ஒளி மனிதர் முன் ஒளிரவேண்டும்' (மத் 5:16) என்பதையே இறைவன் மேலும் விரும்புகின்றார். பேதுரு, பவுல் இருவரும் ''மண்ணுலகை ஆளும் ஆண்டவர் முன் நிற்கும் இரண்டு ஒலிவ மரங்களும், இரண்டு விளக்குத் தண்டுகளுமாவர்'' (திருவெளி 11:4). இவ் விருவர் தலைமையில் அமைக்கப்பட்ட திருச்சபையும், உலகம் முடியும் வரை பொன் குத்துவிளக்குகளின் ஒளி நடுவே பிரகாசமாய் மாட்சிமையோடு வீற் றிருக்கும் மனுமகனின் மகிமையை (திரு வெளி 1:12-20) உலகிற்கு ஒளியாகத் திகழ்ந்து பறைசாற்றிக் கொண்டே இருக்கும்.

**விளக்கு உவமை** (LAMP, PARABLE OF)

*(மத் 5:14-16; மாற் 4:21-22; லூக் 8:16-17; 11:33-36).*

இயேசுவின் சீடர்கள் நற்செயல்களைச் செய்து வாழ வேண்டும். இயேசுவின் போதனைக்கேற்ப நாம் வாழ்க்கை நடத்தி னால் நாம் வானகத் தந்தையின் புகழைப் பரப்பலாம். இதைப் பார்ப்பவர்கள் வான கத் தந்தையைப் போற்றுவார்கள். ஆனால், நற்செய்தியின்படி தன்னுடைய வாழ்க் கையை நடத்தாதவன் புறக்கணிக்கப்படு வான். ஏனெனில், மரக்காலின் கீழ் உள்ள விளக்கு ஒளிதர முடியாது. எசாயா இறை வாக்கினர் எருசலேமை ஆண்டவரின் கட்ட ளைகளைக் கற்க நாடுகள் ஓடிவரும் விளக் காகக் கருதினார் (எசா 60:3-5). ஆனால், தற்பொழுது மற்றவருக்கு நல்வழி காட்டும் பணி இயேசுவின் சீடர்கள் மேல் சுமத்தப் பட்டுள்ளது.

**விளக்குத்தண்டு** (LAMPSTAND)

விளக்கை ஏற்றி வைப்பதற்குப் பயன் படுத்தப்படும் தண்டு அல்லது சிறிய கம்பம். இதன் பயனாக விளக்கின் ஒளியா னது அதிகப்பரப்பை ஒளியூட்டும். சிறப் பாக, கோவிலிலும், திரு உறைவிடத்திலும் பயன்படுத்தப்படும் ஏழு கிளைகள் கொண்ட விளக்குத் தண்டினையே இச் சொல் குறிப்பிடுகின்றது.

***1. புதைபொருள் ஆராய்ச்சிக் குறிப்புகள்:*** விளக்கின் ஒளியைத் தெளிவாகப் பெறு வதற்காக விளக்கு சுவரின் மீதோ, நிலை யடுக்குத் தட்டின் மீதோ, தூணின் மீதோ வைக்கப்படும் அல்லது கூரைப்பகுதியிலி ருந்து கயிற்றினால் கட்டித் தொங்கவிடப் படும். தண்டின்மீது விளக்கு வைக்கப்படு வதால் தெளிவான ஒளியை நாம் பெற இயலும் (மத் 5:15). பாலஸ்தீன நகரங்க ளின் புதைபொருள் ஆராய்ச்சியில் பலதரப் பட்ட விளக்குத் தண்டுகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. சாதாரணமாக இவை மண் ணால் செய்யப்பட்டு, ஏறக்குறைய உருளை

வடிவமைப்பைக் கொண்டுள்ளன; பக்க வாட்டில் சிறு ஓட்டைகளையும், வெளிப் புறத்தில் வண்ண வடிவமைப்புக்களையும் கொண்டுள்ளன. எளிமையான அமைப்புக்க ளைக் கொண்ட இந்தத் தண்டுகள் பொது வாக, தூபப் பாத்திரங்களைத் தாங்கவும் பயன்படுத்தப்பட்டன.

மெகிதோ, பெத்சான் என்ற இரு இடங்க ளிலும் கண்டுபிடிக்கப்பட்ட உலோகத்தா லான பல தண்டுகள், சாலமோன் ஆலய விளக்குத் தண்டுகளை ஒத்ததாக உள்ளன. உயரமான தளம் கொண்ட அமைப்பு இரும்புக்காலப் பாலஸ்தீனத்தில் இருந்தது. தெல்தானாக்கு என்ற இடத்தில் காணப் பட்ட ஏழு கிளை விளக்கு ஒன்று, சுனாமியப் பெண் ஒருத்தி எலியாவிற்கு அளித்த விளக்குத்தண்டிற்கு ஆதாரமாக உள்ளது *(2 அர 4:10)*. செக்கரியாவின் காட்சியில் வரும் விளக்குத் தண்டும் இதற்குச் சிறந்த உதாரணம் *(செக் 4:2.11)*.

**2. மெனோரா** (Menorah): கோவிலிலும் திரு உறைவிடத்திலும் பயன்படுத்தப்படும் விளக்குத் தண்டுகளையே இது குறிப்பிடு கின்றது. தனி வீடுகளிலும் அரச மாளிகை களிலும் பயன்படுத்தப்பட்ட விளக்குத் தண்டுகளைப் பற்றிய விவிலியக் குறிப்பு கள் மிகக் குறைவு *(2 அர 4:10; லூக் 8:16)*. **'மெனோரா'** என்ற எபிரேயச் சொல் ஏழுகிளை விளக்கைக் குறிப்பிடப் பயன் படுத்தப்பட்டது. இன்றும், யூத செபக் கூடங்களிலும், வீடுகளிலும் சிறந்த அடை யாளங்களாக இத்தண்டுகள் பயன்படுத்தப் படுகின்றன *(யாத் 26:35; 25:31-40; 37:17-24)*. இத்தண்டுகள் தளப்பகுதி, நிலைக்கோல், கிளைகள் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளன. திறமைமிக்க கலைஞர் களால் இவை செய்யப்பட்டன. பிரசன்ன அப்பமேசை முன் இருந்த மெனோரா யாத் *25:31-40; 37:17-24*-இல் விவரிக்கப்படுகிறது.

சாலமோன் ஆலயத்தின் கருவறை முன் னால் வடக்கு, தெற்குப் பக்கங்களில் முறையே ஐந்தும், மேலும் பல அறைகளில் தங்க, வெள்ளித் தண்டுகளும் இருந்தன *(1 அர 7:49; 1 நாள் 28:15)*. இரண்டாவது ஆலயத்தில் ஒரே ஒரு தண்டு பயன்படுத்தப் பட்டது *(1 மக் 1:21; 4:49)*.

**3. மெனோராவின் அடையாளப் பொருள்:** ஏழு கிளை விளக்கின் அடை யாளத் தன்மையின் ஆரம்பம் பற்றிய விளக்கம் தெளிவாக இல்லை. எனினும் இன்றைய அறிவின்படி, விளக்கின் கிளை கள் வாழ்வுதரும் மரக்கிளைகளைக் குறிப் பிடுகின்றன என்றும், வட்டவடிவ அடிப் பகுதியானது உலக மலைகளையும் அவற்றி லிருந்து வளரும் மரங்களையும் வெளிப் படுத்துகின்றன என்றும் விளக்கம் கொடுக் கப்படுகின்றது. ஒளியும், உயிரும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டவைகளாகப் பயன்படுத்தப்பட்டன. ஏழு என்ற எண் எங்கும் புனிதமானதாகக் கருதப்படுகின் றது. செக் *4:10*-இல் ஏழு விளக்கானது ஆண்டவரின் ஏழு கண்களாக விரித்துரைக் கப்படுகின்றது. எபி *9:2*-இல் திரு உறை விடத்து விளக்கும், மாற் *4:21*-இல் வீட்டு விளக்குத்தண்டும் குறிக்கப்படுகின்றன. மற் றப்படி புதிய ஏற்பாட்டில் திருவெளிப் பாட்டு நூலில் *(1:12-20; 2:5)* மட்டும்தான் விளக்குத்தண்டு குறிக்கப்படுகிறது. ஏழு விளக்குத்தண்டுகள் சிறிய ஆசியாவின் ஏழு திருச்சபைகளுக்கு அடையாளமாகப் பயன் படுத்தப்பட்டுள்ளன. எபேசியத் திருச்சபை மனந்திரும்பத் தவறினால் அதன் விளக்குத் தண்டு அகற்றப்படும் என்று அச்சுறுத்தப் படுகிறது.

**4. மெனோராவின் வரலாறு:** யாத்திரை நூலின் குறிப்புகளிலிருந்து, மெனோரா வைப் பற்றிய விளக்கங்கள் ஐந்தாம் நூற் றாண்டு அல்லது அதற்கும் பிற்பட்ட காலத்தைச் சார்ந்தன என்று தெரிகின்றது. எனவே, புதைபொருள் ஆராய்ச்சிக் குறிப்பு களின் உதவி அதிகம் தேவைப்படுகின்றது. இந்த விளக்குத் தண்டுகள் அடிப்பகுதி, நிலைக்கோல், பெரிய பாத்திரம், கிளை விளக்குகள் போன்ற பகுதிகளைக் கொண் டுள்ளன *(செக் 4:2.11)*. இரண்டாவது ஆலயத்தில் ஏழுகிளை முறை பயன்படுத் தப்பட்டது. அந்திகோனு மத்தத்தியா

(கி.மு. 40-37) தனது நாணயத்தில் அடையாளமாக இதைப் பயன்படுத்தினார். கோவிலின் அழிவுவரை இஃது ஒரு பொது அடையாளமாக இல்லாவிட்டாலும் அதற்குப் பின்னர் யூதர்களின் மிக முக்கிய அடையாளமாக இது மாறியது; கட்டடங்களிலும், கல்லறைகளிலும், கைக்காப்பு போன்ற சிறிய பொருட்களிலும், விளக்குகளிலும் பொறிக்கப்பட்டது. மெழுகுவத்தி அறிமுகப்படுத்தப்பட்ட பின்னர் இந்த விளக்குத்தண்டுகள் மெழுகுவத்தித் தாங்கிகளாக மாறின.

**விளாமரம்** *(MASTIC)*

இஃது ஒருவகைப் பிசின் கசிவுள்ள சிறுமரமாகும். இதன் பிசின், மேற்காசிய நாடுகளில் மருந்தாகப் பயன்படுத்தப்பட்டது. தானி *13:54*-இல் இவ்வகை மரம் குறிப்பிடப்படுகின்றது. இவை மத்திய தரைக் கடல் பகுதிகளில் இருந்தாலும், கீயு தீவில் உயர்ந்த வகையினவாய்க் கிடைக்கின்றன.

**விளிம்பு, தொங்கல்கள், குஞ்சங்கள்** *(FRINGES)*

விளிம்பைக் குறிக்கும் மூல எபிரேயச் சொல் பழைய ஏற்பாட்டு வாசகங்களில் குஞ்சம் அல்லது தொங்கல் என்று மொழி பெயர்க்கப்படுகிறது. வெளியில் போர்த்தக் கூடிய போர்வையின் நுனியில் அமைந்துள்ள நூல் வரிசை. உப *22:12*- ''நீ உன்னை மூடிக்கொள்ளும் மேற்போர்வையின் நான்கு மூலைகளிலும் தொங்கல்களை அமைத்துக்கொள்'' என்று கூறுகிறது. இந்தப் பகுதிதான் இதைப் பற்றிய காலத்தால் முந்திய குறிப்பாகும். இந்த மேற்போர்வை இரவில் போர்த்திக்கொள்வதற்கும் பயன்படும். எண்ணிக்கை நூல் குறித்தபடி ஆடைகளின் நுனியிலே நீல நாடாவைத் தைத்துக் குஞ்சம் கட்டித் தொங்கவிட்டிருப்பர் *(எண் 15:38-39)*. பின்பு வெள்ளை நிறத்தில் தைக்க ஆரம்பித்தனர். ஏனென்றால், நீலத்தின் விலை மிகவும் அதிகமாக இருந்தது.

எண்ணிக்கை நூலும், உபாகமமும் மேற்போர்வையோடு குஞ்சம் வைத்துத் தைக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றன. அதனால் பகட்டாகத் தெரியும். தனது நோக்கத்தை நிறைவேற்ற நன்கு பயன்பட்டது. ஆனால், யூதர்கள் அவர்கள் நாட்டை விட்டு வெளியேறக் கட்டாயப்படுத்தப்பட்டபோது இந்தப் பழக்கத்தை மாற்றிக்கொண்டார்கள். ஏனெனில், இவை அவர்களைக் கொடுமைப்படுத்தியவர்களின் கவனத்தை ஈர்த்தன. ஆகவே, குஞ்சங்கள் புற ஆடைக்குள் மறைத்து அணியப்பட்டன. இதிலிருந்து செபம் செய்யும்போது தலையைச் சுற்றிச் செப சால்வை அணியும் வழக்கம் தோன்றிது.

ஒவ்வொரு யூதனுக்கும், தான் யூதன் என்பதைக் காட்ட மூன்று வகையான அடையாளங்கள் கட்டளையிடப்பட்டிருந்தன. அவற்றில் முதலில் வருவது குஞ்சங்களாகும். இரண்டாவது, வாசகச் சுருளைக் கொண்ட உருளை வீட்டின் கதவு நிலைகளிலும் நுழைவாயில்களிலும் வைத்திருக்க வேண்டும் *(உப 6:9; 11:20)*. மூன்றாவது மறைநூல் வாசகம் கொண்ட பட்டைகள் கைகளிலும் கண்களுக்கிடையிலும் அணிய வேண்டும் *(யாத் 13:9. 16; உப 11:18)*. இந்தக் குஞ்சத்தை அல்லது தொங்கல்களைத் தைத்துப் போர்வையைத் தொங்கவிடுவதன் நோக்கம், ''நீங்கள் ஒழுக்கம் கெட்டு நடப்பதற்கு ஏதுவாய் உங்கள் இதயங்களும் கண்களும் விரும்புவதைப் பின்பற்றாமல், நீங்கள் அவற்றைப் (குஞ்சங்கள்) பார்த்து ஆண்டவர் கட்டளைகள் அனைத்தையும் நீங்கள் நினைவு கூர்ந்து அவற்றைச் செய்திடவே'' *(எண் 15:34)*. சந்தேகமில்லாமல் இந்தப் பழக்கம் தோன்றியபோது ஒரு மந்திரக்கருவியாகவோ தடை அடையாளமாகவோ இருந்திருக்கலாம். ஆனால், யூத சமூகத்தில் ஓர் உயர்ந்த நோக்கத்திற்காக மாற்றப்பட்டு விட்டது.

புதிய ஏற்பாட்டில், பெரும்பாடு என்னும் நோயால் வருந்திய பெண் ஒருத்தி இயேசுவின் போர்வை விளிம்பைத் தொட்டுக் குணம் பெறுவதாக மத்தேயுவில் காண்கி

றோம் (மத் 9:20=லூக் 8:44). அஃதோடு கெனசரேத்தில் உள்ள மக்கள் எல்லாரும் வந்து, ''அவரது மேலங்கியின் விளிம்பை யாவது அவர்கள் தொட அனுமதிக்குமாறு அவரை வேண்டினர். தொட்டவர் யாவரும் நலமடைந்தனர்'' (மத் 14:36=மாற்கு 6:56).

பரிசேயர்கள் தங்கள் மறைநூல் வாசகப் பட்டைகளை அகலமாக்கி, குஞ்சங்களைப் பெரிதாக்கினார்கள். மக்கள் பார்க்க வேண்டுமென்றே அவர்கள் இப்படி செய்ததால் இயேசு அவர்களைக் கடுமையாகக் கண்டிக்கிறார் (மத் 23:5). ஏனென்றால் மேலே கூறப்பட்டது போல மேற்போர்வையும் குஞ்சமும் அணிவது வேறு நோக்கத்திற்காக.

**விளையாட்டுகள்** *(GAMES)*

விவிலியம் பலவகையான விளையாட்டுச் செயல்களைக் குறிப்பிடுகின்றது. ஆனால், அவற்றின் விவரங்களை அதிகம் கொடுப்பதில்லை. அவற்றில் நகைச்சுவையும், பாடல்களும், நடனங்களும், போட்டிகளும் இடம் பெற்றதாகத் தெரிகிறது.

*1. பழைய ஏற்பாடு:* குழந்தைகள் குதித்தாடுவதை யோபு 21:11 குறிப்பிடுகிறது. ஆதி 21:9-இல் குறிக்கப்படும் இசுமயேல் யாக்கோபோடு விளையாடுதல் வெறும் கேலியாகவோ, குற்றமற்றதாகவோ இருந்திருக்க முடியாது. விடுகதைப்போட்டி நீதி 14:12-இல் குறிக்கப்படுகிறது. 2 சாமு 2:12-17-இல் மற்போர் போட்டி குறிக்கப்படுகிறது. இது சில சமயம் இரத்தக்களரியாக மாறுவதும் உண்டு. யாபோக்கு ஆற்றங் கரையில் யாக்கோபுடன் ஆண்டவரின் மனிதர் இத்தகைய மற்போரில் ஈடுபட்டிருக்கலாம். அந்த மனிதர் யாக்கோபின் தொடைச் சந்தைத் தொட்டதால், யாக்கோபு போட்டியில் தோல்வியுற்றார் (ஆதி 32:25-26). ஓட்டப்பந்தயம் ஓடுதல் ஒரு விளையாட்டாகும் (சங் 19:5). இத்தகைய விளையாட்டுகளில் எபிரேயர் ஈடுபட்டிருந்ததால், நான்காம் அந்தியோக்கு எப்பிபான் கிரேக்க முறை விளையாட்டுகளைப் புகுத்தியதற்கு வெறுப்புக் காட்டினர் (1 மக் 1:10-14). இந்த முறையைப் பெரிய குரு யாசோன் ஊக்குவித்தார். ஆலயத்துக்கருகில் ஒரு விளையாட்டு அரங்கத்தையும் கட்டுவித்தார். கிரேக்க முறை விளையாட்டுகளில் மற்போர், தட்டு எறிதல், தேர் ஓட்டம், பந்தய ஓட்டம், விலங்குகளோடு போரிடுதல் ஆகியவை இடம் பெற்றிருந்தன. தொல்பொருள் ஆய்வுகள் பல்வகையான விளையாட்டுப் படத்தட்டுகளையும், பொருட்களையும் வெளிக்கொணர்ந்துள்ளன. மெசபொத்தாமியாவிலிருந்தும், எகிப்திலிருந்தும் பலவகை விளையாட்டுகள் பாலஸ்தீனத்தில் புகுத்தப்பட்டிருப்பதற்கான சான்றுகள் கிடைத்திருக்கின்றன.

*2. புதிய ஏற்பாடு:* ஓர் அறவுரையில் குழந்தைகள் விளையாடும் திருமணம், சவ அடக்கம் போன்ற விளையாட்டுகளை இயேசு குறிப்பிடுகிறார் (மத் 11:16-17; லூக் 7:32). தமது பாடுகளின்போது, இயேசுவே ஒரு கேலி விளையாட்டின் மையமாகினார். அப்போது சிலர் அவர் முகத்தை மூடி, அவரைக் குத்தி ''இறைவாக்கினனே, யார் என்று சொல்'' என்று கேட்டுக் கேலிசெய்தனர் (மாற் 14:65; லூக் 22:64; காண்க. 26:68). உரோமை வீரர்கள் சீட்டுப்போட்டு இயேசுவின் ஆடைகளைப் பகிர்ந்து கொண்டனர் (மத் 27:35).

யூதர்கள் கிரேக்க, உரோமை விளையாட்டு முறைகளை அறிந்திருந்தனர். புதிய ஏற்பாட்டுக் காலத்தில், ஒலிம்பியாவிலும், தெல்பியிலும், இஸ்துமசிலும் நிகழ்ந்த விளையாட்டுகள் புகழ்பெற்றவை. பவுல் ஒருவேளை இஸ்துமியன் விளையாட்டுகளைப் பார்த்திருக்க வேண்டும். அந்தப் போட்டிகளை எடுத்துக்கூறி, விசுவாசிகளுக்கு ஆன்மீகப் பாடம் கற்பிக்கிறார் பவுல் (1 கொரி 9:24-25). கிறிஸ்தவ வாழ்வை அவர் ஓர் ஓட்டப்பந்தயத்திற்கு ஒப்பிடுகிறார். பந்தயத்தில் பலர் ஓடுகின்றனர். ஆனால், பரிசு பெறுபவன் ஒருவன் தான். பந்தயத்தில் போட்டியிடுகிறவர்கள் தங்களை எல்லா வகையிலும் ஒடுக்குகிறார்கள். அப்படியே அழியா வெற்றிவாகை அடைவதற்காகக் கொரிந்தியக் கிறிஸ்தவர்

கள் தங்களையே ஒடுக்க வேண்டும். ஒரு குறிக்கோளோடு ஓட வேண்டும்; மற்போர் புரிய வேண்டும் (*9:26-27*). மற்றத் திருமுகங்களில் விசுவாச ஓட்டத்தை வீணாகச் செய்யாமலிருக்கும்படி பவுல் எச்சரிக்கிறார் (*கலா 2:2; பிலி 2:16*). *பிலி 3:13-14*-இல் கிறிஸ்தவ வாழ்வை ஓர் ஓட்டப்பந்தயத்திற்குப் பவுல் ஒப்பிடுகிறார். ''கடந்ததை மறந்து விட்டு, முன்னிருப்பதைக் கண்முன் கொண்டு, பரிசு பெற வேண்டி இலக்கை நோக்கி முனைந்து ஓடுகிறார்'' பவுல். தனது வாழ்வின் முடிவில் *2 திமொ 4:7-8*-இல், ஓட்டப்பந்தய ஒழுங்கின்படி பந்தயத்தை முடித்து விட்டதாகவும், சோதனை மற்றும் துன்பகாலத்தில் விசுவாசத்தைப் பாதுகாத்து விட்டதாகவும், நல்வாழ்வின் பரிசான வெற்றி வாகையைப் பெறத் தயாராக இருப்பதாகவும், வெற்றிப் பெருமிதத்தோடு அறிவிக்கிறார் (*காண்க. 2:5; எபி 12:1-2*).

# வீ

**வீச்சு வாள்** (SEYTHE)

இது தேர்ப்படைப் போருக்கு உதவும் ஒரு வளைந்த கருக்குள்ள வாள். 5-ஆம் அந்தியோக்கு யுப்பாத்தோரும், லீசியாவும் பெத்சூரில் யூதா மக்கபேயுவுக்கு எதிராகப் போரிட்டபோது இவ்வாள்களையுடைய போர்த்தேர்கள் பயன்பட்டன (2 மக் 13:2). ஆனால் 1 மக் 6:30-இல் இப்படைப் பிரிவு குறிக்கப்படவில்லை. இந்த வீச்சு வாள்கள் நிறைந்த தேர்கள் எகிப்தியர்கள், பாரசீகர்கள் மத்தியில் மிகவும் புகழ் வாய்ந்தனவாக இருந்தன. ஆனால், கிரேக்கர்களாலும், உரோமையர்களாலும் பயன்படுத்தப்பட வில்லை. கி.மு. 190-இல் நடந்த மக்னேசி யாச் சண்டையில், செலூக்கிய அரசர்கள் இவ்வகை வாளைப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. ஆனால் 'பெவான்' என்பவரால், இஃது அதன் பிறகு பயன்படுத்தப்பட்டதா என்பதில் சந்தேகம் எழுப்பப்படுகிறது. யூதேயா போன்ற நாடுகளில் பயன்படுத்தப் பட்டது என்பது பொருத்தமற்றுத் தெரிகிறது.

**வீடு** (HOUSE )

I. **பொது விவரங்கள்:** இது தங்கியிருக் கும் அல்லது குடியிருக்கும் இடத்தைக் குறிக்கிறது. இது (குகை, கூடாரம் உட் பட்ட) எளிய குடியானவனின் தங்குமிடத்தி லிருந்து மேல்குலத்தோரின் மாளிகை வரை குறிக்கும்.

வெண்கலக் காலத் தொடக்க முதல் (கி.மு. 3200-2100), பாலஸ்தீன வீடுகளில் பெரும்பாலானவை, பாதுகாக்கப்பட்ட நகர் களிலும் அவற்றைச் சார்ந்து இருந்த கிராமங் களிலும் அமைந்திருந்தன. இவ்வாறு அமைந்திருப்பது, பாதுகாப்பையும் நகர வசதிகளையும் அளித்தது. இதுவரை நாட் டுப்புற வீடுகள் பற்றிய விவரங்கள் மிகக் குறைவாகவே கிடைத்துள்ளன. இவை விவசாயிகள் உணவு கொள்வதற்கும் இரவைக் கழிப்பதற்கும் பயன்பட்ட குடி சைகளாக இருந்திருக்கலாம். நகரங்களில் வீடுகள் அடுத்தடுத்து அமைந்திருந்திருக்க வேண்டும். இவற்றைச் சுற்றித் தெருக்கள் அமைந்திருந்தன. சில இடங்களில் வீடுகள் நகரப்பாதுகாப்புச் சுவர்க்கருகிலும், சுவரை ஒட்டியும் (யோசு 2:15) அமைந்திருந்தன.

வீடுகள் பாறையால் ஆன அடித் தளத்தைக் கொண்டிருந்தன (காண்க. மத் 7:24-27). கிடைத்தபோது, தோண்டி எடுக் கப்பட்ட கற்களாலும், மண்ணால் செய்யப் பட்ட கற்களாலும் கட்டப்பட்டு, வீடுகள் களி மண் சாந்தால் பூசப்பட்டன. வீட்டுத் தரை, நன்கு மிதிக்கப்பட்ட களிமண்ணால் ஆனது. கூரை, மரவிட்டத்தால் அமைக்கப் பட்டு, அதன்மீது இலைகளை விரித்துக் களிமண்ணால் பூசப்பட்டிருந்தது (உ.ச. 1:17; காண்க. சங் 129:6; எசா 37:27). வாயிலின் நிலைகள் மரத்தால் செய்யப்பட்டிருந்தன. சுவரில் காணப்பட்ட சில சன்னல்கள் சுவரில் அமைந்த சிறிய திறப்புகளாகும் (காண்க. யோசு 2:15).

இஸ்ராயேலரின் வீடுகளின் அடிப்படை வரைபடம் செவ்வக வடிவமுடையது. ஏழைகளின் வீடுகள் ஓர் அறையே கொண்டி ருந்திருக்கலாம். ஒரு வளாகத்தைச் சுற்றி அமைந்த பல அறைகள் கொண்ட வீடு களுக்குப் போதிய சான்றுகள் கிடைத்துள் ளன. குடும்பம் தங்குவதற்குரிய பகுதி களைத் தவிர, கால்நடைகளுக்கும், சமைப் பதற்கும், சேமித்து வைப்பதற்கும் அறை கள் இருந்தன. தச்சு வேலைக்கும், வண் ணம்பூசுதலுக்கும், நெய்தலுக்கும் பயன் பட்ட அறைகளும் இருந்தன. தட்டையான கூரையைச் சுற்றிக் கைப்பிடிச் சுவர்களும் (உப 22:8), அங்குச் செல்வதற்கு ஏணிகளும் படிக்கட்டுகளும் இருந்தன. இவ்விதம் அமைந்த கூரை, உறங்குவதற்குக் கூடுதல் இடம் அளித்தது (1 சாமு 9:25; 2 சாமு 11:2; 2 அர 4:10). இது விளைபொருள் களைக் காயவைப்பதற்கும் வழிபாடு செய் வதற்கும் பயன்பட்டது (அ.ப. 10:9; காண்க. 2 அர 23:12).

மேல்குலத்தோரின் வீடுகளும் மாளிகைகளும் விரிவாக அமைந்திருந்தன. முளையில் சுழலும் கதவுகளும், பின்னால் சட்டம் பொருத்தப்பட்ட சன்னல்களும் அமைந்திருந்தன. வீடுகள், மரச்சிற்பங்களாலும், ஓவியங்களாலும், பல்வண்ண அமைப்புகளாலும், தந்தம் பதிக்கப்பட்டும் அழகு செய்யப்பட்டிருந்தன (காண்க. ஆமோ 3:15; 6:4). இத்தகைய அமைப்புகள், வடவரசின் தலைநகரான திர்சாவிலும், இலாக்கீசில் காணப்பட்ட பாரசீகக் காலத்தைச் சேர்ந்த சிதைவுகளிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. புதிய ஏற்பாட்டுக் காலத்தில் கிரேக்கர், உரோமையரின் பாதிப்பு தெளிவாகக் காணப்படுகிறது. மக்கள் அணுகக்கூடிய வீடுகளில் சுற்றி அமைந்த பெரிய புறமுற்றமும், குடும்பத்திற்குரிய தனி உள் முற்றமும் அமைந்திருந்தன. அரச மாளிகையைச் சேர்ந்த அறைகளும், மன்றங்களும், இணைந்த கட்டடங்களும் கூட வீடு என்று அழைக்கப்பட்டன. ''லெபனோனின் வனம்'' சாலமோனின் அரண்மனையின் ஒரு பகுதியாகும். இது கேதுரு மரங்களாலும் பிற பொருட்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது (1 அர 7:2-5; 10:17.21; காண்க. 22:8). அரசனது குளிர்கால வீடு, மூலத்தில் அரச அரண்மனையில் இத்தகைய ஒரு பகுதியாக இருந்திருக்கலாம் (காண்க. எரே 36:22). பிற இடங்களில், ஏரோதின் எரிகோவில் அமைந்த சொகுசுக் கட்டடங்களைப் போன்ற தனி இடமாக இஃது இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது (காண்க. ஆமோ 3:15).

திரு உறைவிடமும் ஆலயமும் (யாத் 23:19; 1 அர 8:11; நெகே 6:10; தானி 1:2; எபி 10:21), பிற மக்களின் கோவில்களும் (1 சாமு 5:2. 5; காண்க. 3:10), சிலந்திவலையும் (யோபு 8:14; காண்க. 27:18), மனித உடலும் (4:9), சேமிப்பு இடங்களும் (உப 6:11; காண்க. எசா 3:20) வீடு என்று குறிக்கப்படுகின்றன. செயோலைப் போன்ற இடத்தையும் (யோபு 17:13; காண்க. 30:23; திருவுரை 12:5), அடிமைத்தனத்தைப் போன்ற நிலையையும் (யாத் 13:3; உப 5:6) உருவகமாகக் குறிக்க வீடு என்ற சொல் பயன்பட்டுள்ளது.

அரச மரபையும், குடும்பம், இனம் போன்ற சமூக அமைப்புகளையும் வீடு என்ற சொல் குறிக்கவல்லது.

II. **இறையியல் கருத்து:**

1. மனிதன் வாழ்வதற்குத் தக்கதொரு சூழ்நிலையும் பாதுகாப்பான இடமும் தேவை; ஒரு குடும்பமும் ஓர் இல்லமும் தேவை. இந்த இடத்தையும் இல்லத்தையும் 'பெய்த்' என்னும் ஒரே எபிரேயச் சொல் உணர்த்துகிறது (கூட்டுச் சொற்களில் பெத் என்று வரும். எ.கா.பெத்-எல்: கடவுளின் வீடு). ஆனால், கடவுள் ம்னிதனுக்கு இயல்பான ஒரு குடும்பத்தையும் சடப் பொருள் சார்ந்த உறைவிடத்தையும் கொடுத்து மனநிறைவு கொள்ளவில்லை; அவனைத் தம் சொந்த வீட்டுக்குள் அழைத்து வர விரும்புகிறார்; அதுவும், ஊழியனாக மட்டுமன்று, மகனென்ற பட்டப் பெயருடன் அழைத்து வர விரும்புகிறார். எனவே, இஸ்ராயேலர் நடுவில், அவர்கள் ஆலயத்தில் குடி இருந்த கடவுள் தம் ஒரே மகனை அனுப்பி ஓர் ஆன்மீக இல்லத்தை அமைக்கலானார். இஃது உயிருள்ள கற்களால் ஆனதும், மக்கள் அனைவருக்கும் திறந்திருப்பதுமான ஓர் ஆன்மீக வீடாகும்.

**2. மனுமக்களின் வீடு:**

***அ) குடும்பம் வாழும் வீடு:*** மனிதன் தன் 'சொந்த வீடெனச் சொல்ல ஓரிடம் தேடுகிறான்; பழமொழி நூல் (27:8) கூறுவது போல, ஒரு கூடு கட்ட விரும்புகிறான். தன் தனிவாழ்வுக்குப் பாதுகாப்பாக ஒரு குடிசையாவது தேடுகிறான் (சீரா 27:8). இத்தகைய குடிசையைத் தன் சொந்த நாட்டிலேயே, அதாவது தன் தந்தை வாழ்ந்த இடத்திலேயே அமைக்கத் தேடுகிறான் (ஆதி 30:25). இக்குடிசைதான் அவனுக்கு மரபுரிமைச் சொத்து. இதை எவரும் பறிக்கலாகாது (மீக் 2:2). அவ்வாறு செய்ய இச்சிக்கவிடக் கூடாது (யாத் 20:17). அவன் வீட்டில் அவன் மனைவி தன் நற்குணத்தால்

எழில் பரப்பி அதற்கு அரணாக விளங்கு கின்றாள் (*சீரா 27:16*). ஆனால், அவன் மனைவி கெட்ட குணமுள்ளவளாயின், வீட்டையே குட்டிச்சுவராக்குகிறாள் (*25:16*). ஒருவன் தன் இல்லத்தில் தன் மக்களோடு வாழ்கிறான். அவர்கள் அவனோடு என்றும் இருப்பார்கள். அவனுடைய ஊழியர்க ளுக்கோ அங்கு நிலையான இடமில்லை (*யோவா 8:35*). ஒருவன் தன் இல்லத்தினுள் விருந்தினரை வரவேற்க விரும்புகிறான்; தேவைப்படின் வற்புறுத்தி அவ்வாறு அழைக்கவும் செய்கின்றான் (*ஆதி 19:2தொ; அ.ப. 16:15*). எனவே இஸ்ராயேலரிடையே மனிதாபிமானமிக்க சட்டம் ஒன்று இருந் தது. அதன்படி, போர் அடுத்திருந்தாலும், அது புனிதப் போராயினும் புதுவீட்டுக் காரன் மகிழ்ந்திருக்க விதிவிலக்கு அளிக்கப் பெற்றான் (*உப 20:5; 1 மக் 3:56*).

**ஆ) கட்டி எழுப்புதலும் இடித்துத் தகர்த்த லும்:** ஒரு வீட்டை அமைப்பதென்றால் அதன் சுவர்களைக் கட்டி எழுப்புவது மட்டுமன்று. அதனுள் ஒரு குடும்பத்தை நிறுவி, பிள்ளைகளைப் பெற்றெடுத்து, அவர்களுக்கு மறைபோதனையும், நற் பண்பு நிறை வாழ்வுக்கு மாதிரியும் அளிப்ப தாகும். இவை யாவும் ஞானத்தின் வேலைப்பாடும் (*பழ 14:1*), பெரும் பொறுப்புமாகும். இதிலெல்லாம் நற்பண் புள்ள மனைவிக்கு வேறு யாராலும் ஈடு செய்ய முடியாத பெரும் பங்குண்டு (*31:10-31*). மேலும் சொல்ல வேண்டுமா யின், இதெல்லாம் ஒரு தெய்வீகப் பணியா கும். எனவே, இப்பணியை மனிதன் தன் ஆற்றலால் மட்டும் நிறைவுறச் செய்ய முடியாது (*சங் 127:1*). ஆனால், மனிதன் தன் கெடுமதியால் தன் வீட்டின்மீது அழி வையும் கொண்டு வரக்கூடும் (*பழ 17:13*); மதிகெட்ட மனைவியும் தன் வீட்டையே இடித்துத் தகர்க்கிறாள் (*14:1*). பாவம், வீட்டை அழிக்கும் முன்னரே, வேறொரு அழிவிற்குக் காரணமாகிறது; அதாவது, மனிதனை அழிவுறச் செய்கிறது. ஏனெ னில், களிமண் குடிசையான மனிதன் (*யோபு 4:19*) கடவுளின் மூச்சால்தானே உயிர் வாழ்கிறான் (*ஆதி 2:7*). பாவியான மனிதன் முடிவில்லா வீடான கல்லறையில் தன் முன்னோர்களுடன் சேருமுன் (*ஆதி 25:8; சங் 12:20; திருவுரை 12:தொ*), இறந்து தன் ஆவியை இறைவனிடம் கையளிக்க வேண்டும். இத்தகைய மனிதனே தன் வழித்தோன்றல்களில் நிலைத்து வாழ் கிறான். இவர்களே இறைவன் தம் அன்பர் களுக்கு அமைத்துத்தரும் வீடாவர் (*சங் 127*). இதனால்தான் வீட்டைக்கட்டி அதில் குடியிராமல் போவது, இறைவன் தரும் தண்டனைக்கு ஓர் அடையாளம். பிர மாணிக்கமின்மைக்குக் கிடைக்கும் பரிசு இத்தண்டனையே (*உப 28:30*). ஆனால், தேர்ந்துகொள்ளப்பட்டோர் வருங்கால மகிழ்ச்சியில் தங்கள் வீடுகளில் என்றென் றும் வாழ்ந்திடுவர் (*எசா 65:21 தொ*).

**3. கடவுள் எழுப்பும் அடையாள வீடு:**

**அ) இஸ்ரயேலரின் வீடும் தாவீதின் வீடும்:** பாவம் இறைவனிடமிருந்து மக்களைப் பிரித்தது. இத்தகைய மனிதரி டையே இறைவன் திரும்பவும் வாழ்ந்திட விழைகின்றார்; இதற்கான தமது திட் டத்தை, தமக்கு ஊழியம்புரிய ஆபிரகாமை அழைக்கும்பொழுது, தொடங்குகிறார்; மற்றத் தெய்வங்களை வழிபட்ட மக்கள் நடுவிலிருந்து அவரைத் தம்பால் ஈர்த்துக் கொள்கிறார் (*யோசு 24:2*). ஆகவேதான், ஆபிரகாம் தம் நாட்டையும் தம் தந்தையின் வீட்டையும் விட்டுப் புறப்பட வேண்டும் (*ஆதி 12:1*). அவரும் அவருடைய மக்களும் பயணிகள் போல் கூடாரங்களில் வாழ்கிறார் கள் (*எபி 11:9.13*). இவ்வாறு, யாக்கோபும் அவர் மக்களும் எகிப்தில் குடியேறும்வரை வாழ்வர். ஆனால், விரைவில் இஸ்ரயேலர், எகிப்தில் கிடைத்த 'அடிமை வீட்டிலிருந்து' வெளியேற விழைவர். கடவுளும், அவர் களை விடுவித்து, அவர்களோடு உடன் படிக்கை செய்து அவர்கள் நடுவில், தாமே ஏற்பாடு செய்த கூடாரத்தில் வாழ்ந்திடு வார். அக்கூடாரத்தின் மீது மேகம் தங்கும். அஃது இறைவனின் மாட்சிக்குத் திரை யிட்டு, அவர்தம் பிரசன்னத்தை இஸ்ரயேல் வீட்டார் அனைவருக்கும் வெளிப்படுத்தும்

(யாத் 40:34-38). இஸ்ரயேல் வீட்டார் என்னும் இப்பெயர், யாக்கோபின் வழித் தோன்றல்களுக்கும் உரித்தாகும். இவர்கள் விண்மீன்களையும்விட எண்ணிக்கையில் மிகுந்திருப்பார்கள் (உப 10:22).

இம்மக்கள் தம் கடவுளின் கூடாரத்தைச் சுற்றிக் கூடுகிறார்கள். அதனால்தான் அந்த இடம் கடவுளும் மக்களும் சந்திக்கும் கூடாரம் எனப்படுகிறது (யாத் 33:7). இங்குதான் தம்மை அடிக்கடி தேடிவரும் தம் ஊழியர் மோசேயோடு இறைவன் உரையாடுகிறார் (33:9 தொ; எண் 12:7). அதன்படி மோசேயும் மக்களை வாக்களிக் கப்பட்ட நாடுவரை வழிநடத்துகிறார். இவ் வாக்களிக்கப்பட்ட நாடு முழுவதும் 'ஆண் டவரின் வீடாகும்' (ஓசே 8:1; 9:15; எரே 12:7; செக் 9:8). இந்நாட்டில்தான் தம் மக்கள் நிரந்தரமாகக் குடியிருக்க யாவே விரும்புகிறார் (2 சாமு 7:10). தாவீதோ தாம் குடியிருக்கும் அரண்மனையை ஒத்த ஒரு வீட்டைக்(7:2) கடவுளுக்கென்று அமைக்க விரும்புகிறார். ஆனால், கடவுள் இத்திட்டத்தைத் தள்ளிவிட்டு, தமக்குக் கூடாரம் போதுமென்கிறார் (7:5தொ). எனி னும், தம்மால் திருநிலைப்படுத்தப் பெற்ற தாவீதை ஆசீர்வதிக்கிறார். கல்லால் அமைந்த ஒரு வீட்டில் குடியிருக்க விரும் பாத கடவுள், தாவீதுக்கு ஒரு வீட்டைக் கட்டவும், அவர்தம் அரியணைமீது அவர் வழித்தோன்றல்களை என்றும் நிலைநாட்ட வும் விரும்புகிறார் (7:11-16). கடவுளுக் கென்று ஒரு வீடு கட்டும் பெருமை தாவீதின் மகனுக்குரியது. அந்த மகன் கடவுளைத் தந்தையாகக் கொண்டிருப்பார் (7:13தொ).

**ஆ) கல்லால் அமைந்த இல்லத்திலிருந்து விண்ணகக் கோயிலுக்கு:** கடவுள் வாழ் கின்ற வானாதி வானங்களும் அவரை உள்ளடக்க இயலாது என (1 அர 8:27) அறிக்கையிடும் சாலமோன், யாவேயின் திருப்பெயருக்கென்று ஒரு வீடு கட்டுவார். அங்கு மக்கள் அத்திருப்பெயரைக் கூவி யழைப்பார்கள். இறைவனுடைய பிரசன் னத்தின் அடையாளமான பேழையும் அவ் வீட்டில் இடம் பெறும் (8:19தொ. 29). ஆனால், கடவுள் எந்த ஓர் இடத்திலும் வீட்டிலும் கட்டுண்டு இருப்பவர் அல்லர். இக்கருத்தை இறைவன் தமது திருப் பெயரைத் தாங்கிய வீட்டிலேயே எரேமியா வழியாக அறிவிக்கிறார் (எரே 7:2-14); இன்னும் இரு காட்சிகளில் எசேக்கியே லுக்கு இதை எண்பித்துக் காட்டுகிறார். ஒரு காட்சியில் இறைவனின் மகிமை தீட்டுப் பட்ட வீட்டிலிருந்து வெளியேறுகிறது (எசே 10:18; 11:23); மற்றொரு காட்சியில் இஸ்ரயேலர் வீட்டார் நாடுகடத்தப் பெற்ற வர்களாய்ப் புறவினத்தார் நடுவில் வாழ்ந்த போது ஆண்டவரின் மகிமை இறைவாக்கி னருக்குத் தோன்றுகிறது (எசே 1). ஆனால், இறைவனின் திருப்பெயரைப் பங்கப்படுத் திய இஸ்ரயேலர் வீட்டார்க்கு அவர் கூறுகி றார்: நாம் உங்களைத் தூய்மையாக்கு வோம், ஒன்றுகூட்டுவோம், ஒற்றுமைப் படுத்துவோம், உங்கள் நடுவில் மீண்டும் நம் உறைவிடத்தை நிறுவுவோம் (36:22-28; 37:15தொ. 26தொ). இவையெல்லாம் இஸ்ர யேலர் வீட்டார்மீது இறைவன் தம் ஆவியைப் பொழிவதின் விளைவாகும் (39:29). பொருள் செறிந்த இவ்விறைவாக்கு இறைவனின் உண்மையான வீடு என்றால் என்ன என்பதை ஒருவாறு கண்டுகொள்ளச் செய்கின்றது. அந்த உண்மையான வீடு இறைவாக்கினரால் நுணுக்கமாக வருணிக் கப்பெறும் சடப்பொருள் சார்ந்த, அடை யாளமான கோயிலன்று (40-43); மாறாக, இஸ்ரயேலர் வீட்டாரே தம் இறைவனின் ஆன்மீக உறைவிடமாவர்.

**இ) தாழ்நிலையோரின் கடவுள் உறையு மிடம்:** தாயகம் திரும்பிவந்த இஸ்ரயேல ருக்கு இறைவன் இரு போதனைகளைப் புகட்டி, அவர்களைத் 'தங்கள் நாடு, தங்கள் இனம்' என்ற குறுகிய மனப்பான்மையி னின்றும், உள்ளன்பற்ற போலிச் சடங்கு முறையினின்றும் விடுவிப்பார். ஒருபுறம் இறைவன் தமதுவீட்டை மக்கள் இனங்க ளுக்கெல்லாம் திறந்து விடுகிறார் (எசா 56:5தொ; காண்க. மாற் 11:17); மறுபுறம் தம் வீடு அனைத்தையும் கடந்ததும் நிலைத்

திருப்பதுமான வீடு என்றும், அவ்வீட்டில் தாழ்மையான மனத்தவரும் நொறுங்கிய உள்ளத்தினருமே நுழைவர் என்றும் அறிவிக்கிறார் (எசா 57:15; 66:1தொ; காண்க. சங் 15). ஆனால், இந்த விண்ணக உறைவிடத்திற்குள் மனிதனை அழைத்துச் செல்ல வல்லவர் யார்? இறைவனின் ஞானமே மனுமக்கள் நடுவில் தோன்றித் தன் வீட்டைக் கட்டி, அதனுள் ந்நுழைய அனைவர்க்கும் அழைப்பு விடுக்கும் (பழ 8:31; 9:1-6).

**4. தந்தைக்கும் அவர் மக்களுக்கும் உரிய ஆன்மீக வீடு:**

அ) உண்மையில் இயேசு கிறிஸ்துவே கடவுளின் ஞானமாவார் (1 கொரி 1:24). அவரே இறைவனின் வார்த்தை. அவ்வார்த்தை மனுவுருவாகி நம்மிடையே குடிகொண்டார் (யோவா 1:14). தாவீதின் வீட்டைச் சேர்ந்த அவர், யாக்கோபின் வீட்டின்மீது ஆட்சி செய்ய வருகின்றார் (லூக் 1:27.33). அவர் பிறக்கின்ற தாவீதின் நகராகிய பெத்லகேமில் அவரை வரவேற்க வீடில்லை (2:4.7). நாசரேத்தில் தம் பெற்றோரின் வீட்டில் வாழ்கின்றார். எனினும், பன்னிரண்டு வயதினரான இயேசு தாம் தந்தையின் இல்லத்தில் இருக்க வேண்டுமென்று எடுத்துரைக்கிறார் (2:49). எருசலேமில் உள்ள ஆலயம் தந்தையின் வீடென்கிறார் (யோவா 2:16). இயேசு தமக்குரிய இவ்வீட்டில் மகனுக்குரிய அதிகாரத்தோடு தலையிடுகிறார் (மாற் 11:17இணை). எனினும் இவ்வீடு அழிவுக்குள்ளாகப் போகிறதென்றும் அறிவார் (13:1இணை). இன்னொரு வீட்டை அதாவது, தமது திருச்சபையைக் கட்டி எழுப்ப வந்துள்ளார் (மத் 16:18; காண்க. 1 திமொ 3:15).

ஆ) இந்தப் பணியை ஆற்றுகின்றபோது, இயேசு தமக்கென ஒரு வீடோ (லூக் 9:58) ஒரு குடும்பமோ வைத்திருக்கவில்லை (8:21). பாவிகளும் ஆயக்காரர்களும் தம் வீட்டுக்கு அவரை அழைப்பர். அவரும் தாமாகவே அவர்கள் வீடு தேடிப் போவார் (5:29-32; 19:5-10). தம்மை அழைத்தவர்கள் இல்லங்களில் இயேசு சிலவேளைகளில் முகம் மலர்ந்த வரவேற்பும், சில வேளைகளில் முகம் திரிந்த வரவேற்பும் கண்டார் (7:36-50; 10:38தொ). மனந்திரும்புதலுக்கு அழைப்பு, மன்னிப்புப் பெறுவதற்கு அருள், மீட்படைவதற்கு இன்றியமையாத நற்செய்தி ஆகியவற்றை இவ்வில்லங்களுக்கும் இயேசு எப்பொழுதும் எடுத்துச் செல்கிறார். அவருடைய அழைப்பை ஏற்கும் சீடர்கள் தங்கள் வீட்டை விட்டு மற்ற அனைத்தையும் துறந்து அவரைப் பின் செல்வர் (மாற் 10:29தொ). இயேசு அவர்களைத் தம் அதிகாரத்தோடு மக்களிடம் அனுப்புகிறார். அவர்களும் தம்மை வரவேற்கின்ற வீடுகளுக்குச் சமாதானத்தைக் கொண்டு செல்வர் (லூக் 10:5தொ). அதே பொழுது இயேசுவைப் பின்பற்றும்படி அழைப்பு விடுப்பர். ஏனெனில், கிறிஸ்துவே தந்தையின் வீட்டுக்கு அழைத்துச் செல்லும் வழியாவார். அவ்வீட்டிற்குத்தான் நம்மை அழைத்துச் செல்ல உறுதி கூறுகிறார் இயேசு (யோவா 14:2-6).

இறைவனே இவ்வீட்டை அமைப்பவர். மகன் என்ற அளவில் கிறிஸ்துவே இவ்வீட்டிற்குத் தலையாவார் (எபி 3:3-6). நம் தலைமைக் குரு கிறிஸ்து தம் பலியின் பயனாக முன்னோடியாக நமக்கு முன் கடந்து சென்று (6:10தொ; 10:19தொ) இவ்வீட்டை நமக்குத் திறந்து வைத்துள்ளார். தந்தைக்குரிய இவ்வீடு விண்ணகத் தூயகமாகும். இந்த வீடு கற்பனையன்று, ஓர் ஆன்மீக உண்மையாகும். இவ்வீடு நமக்குப் புறம்பானதன்று. ஏனெனில், நம்பிக்கையில் ஊன்றி நிற்கும்வரை ''நாம்தாம் அந்த வீடு'' (3:6).

இ) உண்மையில், இறைவன் எழுப்பும் இவ்வுறைவிடத்தை நம்மில் ஒவ்வொருவரும் மண்ணக உறைவிடத்தை விடுத்து, விண்ணகத்திலிருந்து வரும் நிலையான உறைவிடத்தை, அதாவது மாட்சிமைக்கும் சாகாமைக்கும் உரிய உடலை அணிந்து கொள்ளுமட்டும், நாம் அடையமாட்டோம் (2 கொரி 5:1தொ; காண்க. 1 கொரி 15:53). ஆனால், இப்பொழுதே இறைவன் இந்த வீட்டைக் கட்டுவதில் தம்மோடு ஒத்து

ஸீழக்க நம்மை அழைக்கிறார். இயேசு கிறிஸ்துவே அவ்வீட்டின் அடித்தளம் (1 கொரி 3:9தொ), உயிருள்ள மூலைக்கல். விசுவாசிகளான உயிருள்ள கற்களால் அவ் வீடு அமைக்கப்படுகிறது (1 பேதுரு 2:4). தந்தையை அணுகும் பேற்றினைக் கிறிஸ்து நமக்களிக்கிறார். எவ்வாறெனின் வீட்டிற்கு விருந்தினர்களாக மட்டுமல்ல, அவ்வீட் டிற்கு உரியவர்களாகவும் கிறிஸ்து நம்மை ஆக்கி (எபே 2:18தொ), அக்கட்டடத்தின் அமைப்பிலும் வளர்ச்சியிலும் நம்மை ஒன்றுபடுத்துகிறார். ஏனெனில், தேவ ஆவி யால் ஆண்டவருக்குள் தம் சகோதரர்க ளோடு ஒன்றித்திருக்கும் ஒவ்வொருவரும் இறைவனின் உறைவிடமாவார் (2:21தொ). இதனால்தான் திருவெளிப்பாட்டு நூலில் காண்பது போல விண்ணக எருசலேமுள் ஆலயம் இல்லை (திருவெளி 21:22). அது முழுமையும் இறைவனின் உறைவிடமா கும். அவருடைய மக்களாகி (21:3.7), கிறிஸ்துவோடு தந்தையின் அன்பில் நிலைத்திருப்பவரும் (யோவா 15:10) அவ ரோடு இணைந்திருப்பர்.

## வீடுபேறு, மீட்பு, உய்வு (SALVATION)

I. வீடுபேறு, முக்தி, உய்வு எனப் பல சொற்களால் குறிப்பிடப்படும் இஃது ஒரு அடிப்படையான அனுபவத்தை மையமா கக் கொண்டது. அதாவது, ஓர் ஆபத்தான சூழ்நிலையில் தன்னையே இழந்து விடு வோமோ என்ற தருணத்திலிருந்து காக்கப் படுதல். ஆபத்தின் தன்மைக்கேற்பக் காத்தல், பாதுகாப்பாக, விடுதலையாக, பிணைய மீட்புத் தருவதாக, குணமாக்குவதாக, வெற்றி தருவதாக, வாழ்வு அமைதி தருவ தாக அமைகிறது. மனித அனுபவங் களையே தொடக்கமாக வைத்து, மனித மொழியையே பயன்படுத்தி, கடவுளது செயல்பாட்டின் மிக முக்கியமான பண்பு களை மிக அழகாக வெளிப்பாடு விளக்கு கிறது. கடவுள் மனிதனை மீட்கிறார். கிறிஸ்துவே நமது மீட்பர் (லூக் 2:11). நற்செய்தி விசுவசிக்கும் ஒவ்வொருவருக் கும் மீட்பைக் கொணர்கிறது (உரோ 1:16). இதில் விவிலிய மொழியில் ஒரு முக்கிய சொல்லைக் கொண்டுள்ளோம். இது மெது வாக வளர்ச்சியடைந்து, அதன் இறுதிப் பொருளைப் பெறுகிறது என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

II. **பழைய ஏற்பாடு:**

**1. வரலாற்றிலும் இறுதிக்கால இயலிலும் இறைவனது மீட்பு:** தமது பிரமாணிக்க முள்ள மக்களைக் கடவுள் காக்கிறார் என்பது எல்லா மறைகளுக்கும் பொதுவானது தான். ஆனால், பழைய ஏற்பாட்டில் இது மிகச் சிறப்பான, மையமான, மீண்டும் மீண்டும் வரும், வணக்கத்துக்குரிய ஒரு கருத்தாகும். அதனால்தான், பல பெயர்கள் 'காத்தல்' என்ற பொருளுடைய அடிச்சொல் லிலிருந்து வருகின்றன: யோசுவா, எசாயா, எலிசா, ஓசேயா, என்பன. யாசா (Yasa) என்ற அடிச்சொல் இவை அனைத்திலும் வருகின்றது. கடவுளின் மக்கள் வரலாற்றில் பெற்ற அனுபவம் இதற்குச் சிறப்பான வண்ணம் அளிக்கிறது. இஃது இறைவாக்கு இறுதிக்கால இயலில் இச்சொல் பயன் படும் விதத்தை விளக்குகிறது.

**அ) வரலாற்று அனுபவம்:** இஸ்ராயேல் மிக இக்கட்டான சூழலில் மாட்டிக் கொண்டு தவித்தபோது அதனைக் கடவுள் அந்தச் சூழலிலிருந்து மீட்கிறார். இஃது ஒரு தெய்வீகமயமான பாதுகாப்புச் செயலா னாலும் சூழ்நிலையால் விளைந்த ஒன்றாக இருக்கலாம்; அதே நேரத்தில் ஓர் அற்புதம் என்று கூறக்கூடிய வகையில் மகத்தானதாக வும் இருக்கலாம்; அல்லது மனிதத்தலைவர் ஒருவரை அனுப்பி வெற்றியைக் கொணர்ந் ததாக இருக்கலாம். இவற்றில் எல்லாம் அவர்கள் கடவுளின் பாதுகாப்பை உணர்ந்து அனுபவித்தனர். இத்தகைய வெற்றி அனுப வங்களில் கடவுள் பாதுகாக்கிறார் என்பதை வரலாற்றில் பல இடங்களில் ஆழமாக அனுபவித்துள்ளனர். இத்தகைய நிலைக்குச் சனகெரிபு எருசலேமை முற்றுகையிட்டது மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகும். யாவே இஸ்ராயேலை மீட்க முடியுமா என்று அசீரிய அரசன் சவால் விடுகிறான் (2 அர 18:30-35). எசாயா மீட்பை உறுதியளிக்கிறார் (19:34; 20:6). இறைவனும் தம் மக்களை

மீட்கிறார். புனித வரலாற்று ஆசிரியர்கள் கடந்தகாலத்திய இத்தகைய பல அனுபவங் களை எடுத்துக்கூறுகின்றனர். கடவுள் தாவீதைப் பாதுகாக்கிறார்; அவர் போகுமிட மெல்லாம் வெற்றி ஈட்டித்தருகிறார் (2 சாமு 8:6.14; 23:10.12). அவரை இடைநிலையாள ராகப் பயன்படுத்தி அவர் தனது மக்களை எதிரிகளிடமிருந்து காக்கிறார் (2 சாமு 3:18). இதே முறையில்தான் இதற்குமுன் சவுல் (1 சாமு 3:18), சாமுவேல் (7:8), சிம்சோன் (நீதி 13:5), அனைத்து நீதிபதிகள் வழியாக வும் (நீதி 2:16; 18) கடவுள் தன் மக்களைக் காத்துள்ளார். முக்கிய விடுதலைப் பயணத் தின்போது மிகச்சிறப்பாக அவர்களைக் காத்துள்ளார் (யாத் 14:13; காண்க. எசா 63:8தொ; சங் 106:8.10.21). மிக முக்கியமான இந்த மைய அனுபவத்திற்கு முன்னமே யாக்கோபின் புதல்வர்களை யோசேப்பின் வழியாகவும் (ஆதி 45:5), லோத்தின் உயிரையும் (ஞான 10:4), நோவாவை வெள்ளத்தினின்றும் (காண்க. ஆதி 7:23) கடவுள் காப்பதைப் பார்க்கிறோம். அத னால்தான் இக்கட்டான சூழல் எழுந்தபோ தெல்லாம் காப்பாற்றப்படுவதற்காக (எரே 4:14) உடனே இஸ்ராயேல் தன் கடவுளை நோக்கித் திரும்புவதையும், எதிர்பார்த்த மீட்பு கிடைக்காதபோது முறையிடுவதை யும் (8:20) காண்கிறோம்; அவரைத் தவிர தங்களைக் காக்க வேறு யாருமில்லை என்பதைத் தெளிவாக உணர்ந்திருந்தது (எசா 43:11; காண்க. 47:15; ஓசே 13:4). கடந்தகால மீட்பு நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து, மீட்பர் என்ற பெயரில் அவரை அழைக்க விரும்புகிறது (காண்க. எசா 63:8; 1 மக் 4:30). இந்த வரலாற்றிலும் இறைபரி பாலிப்புச் சட்டத்தைப் பல தடவை காண லாம். அதன் விளைவுகள் இறுதிக்காட்சி யின் சூழ்நிலையில் தெளிவாகின்றன. மனி தப்பாவத்தால் விளைந்த ஆபத்துக்களிலி ருந்து, பெருவெள்ளக் காலத்தில் நோவா வைப் போன்று ''எஞ்சியோரே'' மீட்கப் பெறுவர். மீட்பு இறைத்தீர்ப்பு இல்லாமல் நிகழ்வதில்லை. அதில் நீதிமான்கள் பாவி களிடமிருந்து பிரிக்கப்படுவர்.

**ஆ. இறுதிக்கால இயல் வாக்குறுதிகள்:** நாட்டின் மிகப்பெரிய இக்கட்டுகளில்தான் இஸ்ராயேலர் மிகுந்த நம்பிக்கையோடு கடவுளை நோக்குகின்றனர் (மீக் 7:7). இறுதிக்கால இயல் இறைவாக்குகளின் மையக்கருத்தாக மீட்பர் என்ற தலைப்பு வருகிறது (செப் 3:17; எசா 33:32; 43:3; 45:15.21; 60:16; பாரூ 4:22). இறுதி நாட்களைப் பற்றிய இறைவாக்குகளில் இஸ்ராயேலின் இறுதியான மீட்புப் பற்றிய பல கூறுகளும் பேசப்படுகின்றன. யாவே தன் மக்களை அவர்களது நாட்டுக்கு மீண் டும் அழைத்து வருவதாலும் (எரே 31:7), மெசியா அவர்களிடம் அரசரை அனுப்புவ தாலும் (23:6) அவர்களை மீட்பார் என்று எரேமியா கூறுகிறார். எசேக்கியேலின் கூற் றுப்படி யாவே தனது ஆடுகளை மீண்டும் நல்ல புல்வெளிக்குக் கொண்டு வருவதால் அவற்றைக் காப்பார் (எசே 34:22). அவர் தனது மக்களை அனைத்து அசுத்தங்களிலி ருந்தும் தூய்மையாக்கிக் காப்பார். அதற்குத் துணையாக, தனது ஆவியைத் தருவார் (எசே 36:29). ஆறுதல் செய்தியும் வெளிப் பாட்டு இலக்கியமும் தன் மக்களை மட்டு மல்ல (எசா 35:4) இந்த உலகம் முழுவதை யுமே (45:22) காக்க இறைவன் வருவார் என்ற செய்தியை மீண்டும் மீண்டும் கூறு கின்றன. மீட்பு தருவதே அவரது நீதியின் வெற்றியாகும் (காண்க. 63:1). அதற்குத் தனது ஊழியனை அனுப்புவார் (49:6.8). இறைவனது இறுதிக் காலச்செயல் பாட்டைக் குறிப்பதாக **நீதி, மீட்பு** என்ற இரு சொற்களும் இணைந்தே வருகின்றன (46:13; 52:7-10; 56:1; 59:17; 61:10; 62:1). இஸ்ராயேலின் வரலாற்றில் மீட்புப் பெறும் அனுபவம் எஞ்சியோருக்குரியதாகிறது (ஆமோ 3:12; 5:15; 9:8; எசா 10:20தொ; 28:5). அது வருமுன் இறைவனது தீர்ப்பு மண்ணகத்தில் நிகழ வேண்டும்.

நாடு கடத்தலுக்குப் பிறகு யாவேயின் நாளைப்பற்றி வரும் விளக்கம் மீட்பின் மகிழ்ச்சியைப் பாடுகிறது (எசா 12:2; 25:9). அவரது நூலில் எழுதப்பட்ட அனைவருக் கும் (தானி 12:1), அவரை நம்பிக்கையோடு

அழைப்பவர்கட்கும் (யோவே 3:5) மீட்பு காத்திருக்கிறது. இறுதியாக ஞானநூல் இறுதி நாளில் நீதிமான்களின் மீட்புப்பற்றி விவரிக்கிறது (ஞான 5:2). இறையரசோடு தொடர்புபடுத்தப்பட்டு, மீட்பு, அமைதி மற்றும் மகிழ்ச்சியோடும் (எசா 52:7), தூய்மைப்படுத்தலோடும் (எசே 36:20), விடுதலையோடும் (எரே 31:7) ஒரு பொருள் பல சொல்லாகிறது. அதன் மனிதக் கைவினைஞரான இறுதிக்கால அரசர் மீட்பர் என்றழைக்கப்படுகிறார் (செப் 9:9; சங் 72:4:3). இத்தகைய இறைவாக்குகள் அனைத்தும் புதிய ஏற்பாட்டுக்கு ஒரு சரியான தயாரிப்பாக அமைந்தது.

**2. இஸ்ராயேலின் செபத்தில் கடவுளின் வீடுபேறு:** இத்தகைய மாபெரும் வரலாற்று அனுபவம் மற்றும் இறைவாக்குப் பின்னணியில் இஸ்ராயேலின் செபம் வீடுபேற்றுக்கு மிக முக்கியத்துவம் கொடுப்பதைக் காண்கிறோம்.

**அ) விசுவாசத்தின் உறுதிப்பாடுகள்:** வீடுபேறு கடவுள் தரும் ஒரு கொடை. இந்த அடிப்படை உறுதிப்பாட்டுக்கு ஆதரவாக நாட்டை வெற்றி கொண்ட அனுபவத்தை நாம் எண்ணிப்பார்க்கலாம் (சங் 44:4.7தொ). மனிதச் சக்தியின் மீது எல்லா நம்பிக்கையும் வைத்துவிட்டு வீடுபேறு கிடைத்துவிடும் என நினைப்பது தவறு (33:16-19). நீதிமான்களுக்கு வீடுபேறு இறைவனிடமிருந்தே வரும் (37:39தொ). யாவேயே அவர்களது வீடுபேறு ஆகிறார் (சங் 27:1; 35:3; 62:7). இந்தக் கோட்பாடு பல அனுபவங்களால் உறுதிப்படுத்தப்படுகிறது. ஆபத்திலிருந்த எத்தனையோ பேர், யாவேயைக் கூவி அழைத்தபோது அவர்கள் காப்பாற்றப்பட்டனர் (சங் 107:13.19.28; காண்க. 22:6). பல நன்றிச் செபக்கீதங்கள் இந்த அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ளன (சங் 118:14): ஆபத்திலிருந்து காக்கப்பட்டவர்கள் செபம் (18:20); சோதனைகளிலிருந்தும் (சீரா 51:11), சாவின் பிடியிலிருந்தும் பாதுகாக்கப் பெற்றவர்கள் செபம் (சங் 116:6). பிற்கால நூல்கள் இத்தகைய கதைகளை எடுத்துக் கூறுகின்றன. நெருப்பிலிருந்து மூன்று இளைஞர்களும் (தானி 3:28-95), சிங்கக் குகையிலிருந்து தானியேலும் (6:28) காப்பாற்றப்படுகின்றனர். இறைவன் தம்மை நம்புபவர்களைக் காப்பாற்றுகிறார் (18:60). தமது மக்களுக்கும் (சங் 69:36), தமது அபிடேகம் பெற்றவர்க்கும் (20:7) வாக்குறுதி அளித்ததுபோல் தமது ஊழியர்களுக்கு இப்பாதுகாப்பை வாக்குறுதி அளிக்கிறார் (91:14தொ). சங்கீதங்கள் பல கடவுளின் பிள்ளைகள் அவரை அழைத்தபோதெல்லாம் உடனே அவர்கட்கு அவர் செவிமடுத்து உதவ வருவது யார் யாருக்கு என்று ஓர் அட்டவணை தருகிறது: நீதிமான் (சங் 34:16.19), ஏழைகள் (34:7; 109:31), சாந்தமுள்ளோர் (18:28; 76:10; 149:4), சிறியோர் (116:6), நேர்மையுடையோர் (7:11), நம்பிக்கையிழந்தோர் (34:19), துன்புறுத்தப்படுவோர் (55:17), பொதுவாகக் கூறவேண்டுமென்றால் அவருக்கு அஞ்சி நடப்போர் (சங் 145:9) என்போராவர். இங்கு இவை நம்பிக்கையைத் தூண்டுவதாகவும் ஒருவரைச் செபிக்கத் தூண்டுவதாகவும் அமைவதைப் பார்க்கிறோம்.

**ஆ) காக்கும் கடவுளை நோக்கி வேண்டுதல்:** அவரை நோக்கி வேண்டுபவர்கள் மேய்ப்பர் (சீரா 51:1) எனவும், நம்பிக்கையிழந்தோரின் கடவுள் (யூதி 9:11) அல்லது வீடுபேற்றின் கடவுள் (சங் 51:16; 79:9) எனவும் அவரை அழைத்துச் செபித்தனர். இச்செபங்களின் சுருக்கம் என்னவென்றால் ''எம்மைக் காத்தருளும் யாவே இறைவனே'' (118:25), ''நீர் என்னைக் காத்தருளும். நான் காக்கப்படுவேன்'' (எரே 17:14) என்பது தான். பொதுவாக, இத்தகைய கூக்குரல்கள் ஒருவன் வாழ்வில் துயரப்படும் சாதாரணச் சூழ்நிலைகளிலிருந்துதான் எழுகின்றன. எடுத்துக்காட்டாக, சோதனைகள் மற்றும் துன்பங்கள் (சங் 86:2), உடனடியான சரிவுக்குரிய ஆபத்து (69:2.15) போன்றவைகளின் போதும் ஒருவன் எதிரியால் துன்புறுத்தப்படும்போதும் (22:22; 31:12.16; 43:1; 59:2), மிகவும் ஆபத்தான சூழலிலிருக்கும் போதும் வேண்டுகிறான். இத்தகைய வேண்டுதல்களுக்கு யாவே இறைவாக்குகளின்

வாயிலாகப் பதில் கொடுப்பதைப் பார்க்கிறோம் (சங் 12:26). இறைவன் தரும் ஆறுதலின் விளைவு எவ்வளவு தீவிரமாக இருந்ததென்றால், அது வீடுபேறு பாதுகாப்புக் கிடைக்குமுன்னே அது கிடைத்தது போல நம்பிக்கையோடு பாடும் சங்கீதங்களைக் கூடக் காண்கிறோம் (96:2; 98:1தொ). சில சங்கீதங்கள் மீட்பில் கிடைக்கும் மகிழ்ச்சியை முன்னரே பாடுகின்றன (சங் 51:14). மேலே குறிப்பிட்ட விவிலியப்பகுதிகளில் எல்லாம் எவ்வாறு இஸ்ராயேலின் ஆன்மா கிறிஸ்துவின் வழியாகப் பெறப் போகும் வீடுபேற்றுக்குத் தயாராக அதனைப் பெற்றுக்கொள்ளக் காத்திருந்தது என்பது தெரிகிறது.

III. **புதிய ஏற்பாடு:**

**1. வீடுபேற்றின் வெளிப்பாடு:**

**அ) இயேசு, மனிதரின் மீட்பர்:** 1) இயேசு தன்னை மீட்பர் என மிகவும் பொருள் பொதிந்த செயல்களினால் முதன்மையாக வெளிப்படுத்துகிறார்; நோயாளிகளைக் குணமாக்குவதன் வழியாகக் காக்கிறார் (மத் 8:21 இணை; மாற் 3:4; 5:23; 6:56); நீரில் நடக்கும் பேதுருவையும் புயலில் அகப்பட்ட சீடர்களையும் காக்கிறார் (மத் 8:25; 14:30). ஆனால் அடிப்படையான தேவை என்னவெனில், அவர்மீது அசைக்க முடியா விசுவாசம் கொள்ள வேண்டும். அவர்மீது கொண்ட விசுவாசம்தான் நோயாளிகளைக் குணப்படுத்துகிறது (லூக் 8:48; 17:19; 18:42). அவரது அப்போஸ்தலர்கள் விசுவாசமின்மைக்காகக் கண்டிக்கப்படுகின்றனர் (மத் 8:26; 14:31). இந்த உண்மைகள் மீட்பின் திட்டத்தை ஏற்கெனவே நமக்குப் புரியவைக்கின்றன. ஆனால் மீட்பு என்பது இது மட்டுமன்று, இதைக் கடந்து செல்கிறது. பாவியான பெண், இயேசு அவளுடைய பாவங்களை மன்னிப்பதால் மீட்புப் பெற்றாள் (லூக் 7:48தொ). மனம் மாறி மன்னிப்புப் பெற்ற சக்கேயுவின் வீட்டில் மீட்பு நுழைந்தது (லூக் 19:9). எனவே, மீட்புப் பெற வேண்டுமென்றால் ஒருவர் இறையரசின் நற்செய்தியை விசுவாசத்தோடு ஏற்றுக்கொள்ள வேண்டும் (காண்க. லூக் 8:12). இயேசுவைப் பொருத்தமட்டில் மீட்பே அவரது வாழ்வின் குறிக்கோள். ''இழந்து போனதைத் தேடி மீட்கவே மானிடமகன் வந்திருக்கிறார்'' (லூக் 19:10). உலகைக் காக்க வேண்டுமென்பதே அவரது நோக்கம் அதைத் தீர்ப்பிட்டு அழிப்பதன்று (யோவா 3:17; 12:47). அவர் பேசுவது மனிதர்களைக் காப்பதற்குத்தான் (5:34). அவரே வழி! அவரே வாயில்! அதன் வழியாக நுழைபவன் எவனும் காக்கப்படுவான் (10:9).

2) மேலே கூறப்பட்டவைகளிலிருந்து நமக்கு ஒன்று தெளிவாகிறது. அதாவது மீட்புதான் அடிப்படைப் பிரச்சனை. பாவம் அவர்களை அழிவின் ஆபத்தில் நிலைக்க வைக்கிறது. சாத்தானோ அவர்கள் மீட்புப் பெறாதபடி முயற்சிக்கிறது (லூக் 8:12). அவர்கள் காணாமற்போன ஆடுகள் (15:4.7). அவர்களுக்காகவே இயேசு அனுப்பப்பட்டார் (மத் 15:24). அவரது மந்தையைச் சேர்ந்தால் அவர்கள் ஒருபோதும் காணாமற் போகமாட்டார்கள் (யோவா 10:28; காண்க. 6:39; 17:12; 18:9). அதே நேரத்தில் ஒருவருக்கு அளிக்கப்படும் வாய்ப்பைத் தவற விடாமல், நேரம் இருக்கும்போதே தபசுகள் செய்து தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும் (லூக் 13:3.5). இல்லையாயின் அழிவு உடனடியானதும் சீர்செய்ய முடியாததுமாக இருக்கும். ஒருவர் மீட்புப்பெற விரும்பினால் குறுகிய வாயில் வழியாக நுழையவேண்டும் (லூக் 13:23தொ). இறுதிவரை மனம் தளராது செல்ல வேண்டும் (மத் 24:13). பொருள்களின் மீது பற்றில்லாமை மிகவும் முக்கியமாகும். இது மிகக்கடினம் என்பதை உணர்ந்த சீடர்கள், ''பிறகு யாருக்கு இது சாத்தியம்''? என்று கேட்கின்றனர். கடவுளால்தான் இது முடியும் (மத் 19:25இணை). இறுதியாக இயேசு அளிக்கும் ஒரு முரண்பாடாகத் தோன்றுகிறது. அதாவது, தன்னைக் காத்துக்கொள்ள விரும்புகிறவன் தன்னை இழந்து விடுவான்; தன்னை இழப்பவன் தன்னையே காத்துக் கொள்வான் (மத் 10:39; லூக் 9:24; யோவா 12:25).

இந்தச் சட்டத்தைத் தனது வாழ்விலேயே இயேசு உண்மையாக்கிக் காட்டுகிறார். அதாவது, பிறரை மீட்கும் அவர் சிலுவையில் தொங்கும்போது காத்துக்கொள்ளவில்லை (*மாற் 15:30*). தந்தை அவரைச் சாவினின்று காத்திருக்கலாம் (*எபி 5:7*). ஆனால், அந்த நேரத்திற்காகத்தானே அவர் அனுப்பப்பட்டார் (*யோவா 12:27*). விசுவாசம் கொண்டு அவர் வழியாக மீட்புத் தேடும் எவரும் அவரையே இந்த நிலைவரை பின்பற்ற வேண்டும்.

***ஆ) மீட்பின் நற்செய்தி:***

1. உயிர்ப்பு மற்றும் பெந்தக்கோஸ்தேக்குப்பின் அப்போஸ்தல சமூகம் தங்கள் நற்செய்தியின் மையக்கருத்தாக விவிலியத்தில் கூறியபடி மீட்பு இயேசுவில் நிறைவேறிற்று என்பதையே கொண்டிருந்தனர். உயிர்ப்பினால் இயேசு ''தலைவராகவும் மீட்பராகவும்'' உயர்த்தப்பட்டார் (*அ.ப. 5:31; காண்க. 13:23*). அப்போஸ்தலர்களால் நிகழ்ந்த அருஞ்செயல்கள் இந்தச் செய்தியை உறுதிப்படுத்துகின்றன. இயேசுவின் பெயரால் நோயாளிகள் குணப்படுத்தப்பட்டார்கள் என்றால் வேறு எந்தப் பெயராலும் அவர்கள் காக்கப்பட முடியாது (*அ.ப. 4:9.12; காண்க. 14:3*). நற்செய்தியே மீட்பின் செய்தி என்றே விளக்கப்படுகிறது (*அ.ப. 12:26; காண்க. 11:14*). இச்செய்தி முதலில் யூதர்கட்கும் (*13:26*), பிறகு மற்ற நாடுகளுக்கும் அறிவிக்கப்பட்டது (*13:47; 22:28*). மனிதர்கள் நற்செய்தியைக் கேட்டு விசுவசிப்பதின் வழியாக இந்த விபசாரத் தலைமுறையிடமிருந்து தங்களையே காத்துக் கொள்வார்களாக (*2:40*). மீட்புப் பெறுவதற்குரிய ஒரே நிபந்தனை இயேசுவின் மேல் விசுவாசம் கொள்வதும் (*அ.ப. 16:3தொ; காண்க. மாற்கு 16:16*), அவரது பெயரைச் சொல்லி மன்றாடுவதும் (*அ.ப. 2:21; காண்க. யோவே 3:5*) ஆகும். இதைப் பொருத்தமட்டும் யூதர்களும், புறவினத்தாரும் ஒரே நிலையில்தான் இருக்கிறார்கள். இருவருமே தங்களைத் தாங்களே மீட்டுக் கொள்வதில்லை; மாறாக, இயேசு ஆண்டவரின் அருள்தான் அவர்களை மீட்கிறது (*அ.ப. 15:11*). அப்போஸ்தலர்கள் மக்களுக்கு மீட்பின் ஒரே வழியைக் காட்டுகிறார்கள் (*16:17*). புதிதாகத் திருமுழுக்குப் பெற்றவர்கள் தங்களை எஞ்சியவர்களாக, மீட்பைப் பெற வேண்டியவர்களாகக் கருதுகிறார்கள் (*2:47*).

2. தொடக்க போதகத்தில் மீட்புச் செய்தியின் உயர்ந்த முக்கியத்துவத்தால்தான் நற்செய்தியாளர்கள் மத்தேயுவும், லூக்காவும் இயேசுவைப் பிறப்பிலிருந்தே மீட்பராகக் காட்டுவதில் மிகுந்த அக்கறை கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இயேசுவின் மீட்புப் பணியை மத்தேயு அவருடைய பெயருடனே இணைத்துக் காட்டுகிறார். இயேசு என்றால் ''யாவே மீட்கிறார்'' என்பது பொருள் (*மத் 1:21*). லூக்கா அவருக்கு 'மீட்பர்' என்பதைப் பட்டமாகத் தருகிறார் (*லூக் 2:11*). இறைவாக்கினர் முன்னறிவித்த மீட்பின் விடிவு காலத்தைச் செக்கரியாவும் (*லூக் 1:69.71.77*), அகிலமே அவரால் மீட்கப்படுவதைக் காட்சியாகக் காண்பதைச் சிமியோனும் கூறுகின்றனர் (*லூக் 2:30*). இறுதியாக, மறைநூலைப் பின்பற்றி, திருமுழுக்கு யோவான் ''மனிதர் அனைவரும் கடவுள் அருளும் மீட்பைக்'' காணும் பொருட்டு ஆண்டவருக்கு வழியை ஆயத்தம் செய்கிறார் (*லூக் 3:2-6; காண்க. எசா 40:3தொ; 52:10*). நற்செய்தியிலேயே மீட்பு சிலுவையில் உச்சக்கட்டத்தை எட்டிப்பிடிப்பதைப் பேசுகிறது.

**3. வீடுபேறு பற்றிய கிறிஸ்தவ இறையியல்:** இயேசுவின் மீட்புச் செய்தியை அப்போஸ்தலப் போதனை பலவகைகளில் விளக்கினாலும் மீட்புப் பற்றிய கிறிஸ்தவக் கோட்பாட்டை இங்கு 'வீடுபேற்றை' மையமாக வைத்து ஒன்றிணைக்கிறது.

***அ) கிறிஸ்துவினுடைய வாழ்வின் பொருள்:*** கடவுள் அனைவரும் மீட்புப் பெறவேண்டுமென்று விரும்புகிறார் (*1 திமொ 2:4; காண்க. 4:10*). இதனை நிறைவேற்ற தனது மகனையே உலகின் மீட்பராக அனுப்புகிறார் (*1 யோவா 4:14*). நமது கடவுளும் மீட்பருமாகியவர் (தீத்

2:13) பாவிகளை மீட்க (1 திமொ 1:15) இம்மண்ணில் வந்தபோது நமது கடவுளின் அருளும், அன்பும் வெளிப்படுத்தப்பட்டன (தீத் 2:11; 3:4). ஏனெனில், கிறிஸ்து தனது இறப்பு உயிர்ப்பினால் முடிவில்லா மீட்பின் காரணரானார் (எபி 5:9); திருச்சபை என்னும் உடலின் மீட்பரும் ஆனார் (எபே 5:23). இவ்வாறு, மீட்பர் என்ற அடைமொழி தந்தை இறைவனுக்கும் (1 திமொ 1:1; 2:3; 4:10; தீத் 1:3; 2:10), இயேசுவுக்கும் (தீத் 1:4; 2:13; 3:6; 2 பேதுரு 1:11; 2:20; 3:2.18) சமமாகப் பொருந்துவதைப் பார்க்கிறோம். எனவேதான் இந்த உண்மைகளை எடுத்துக் கூறும் நற்செய்தி ஒவ்வொரு விசுவாசியும் மீட்புப்பெற கடவுளின் சக்தியாக உள்ளது எனக்குறிப்பிடுகிறது (உரோ 1:16). இதனைப் போதிக்கும் அப்போஸ்தலரும் மனித மீட்பைத் தவிர வேறு எதையும் மனதில் கொண்டிருக்க முடியாது எனத் (1 கொரி 9:22; 10:33; 1 திமொ 1:15) தெளிவாக்கப்படுகிறது. இஸ்ராயேல் அனைவரும் இறுதியாக மீட்கப்படுவதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது (உரோ 11:26) எஞ்சியோராவது - அவர்கள் புறமதத்தினரோ (11:11) யூதர்களோ - மீட்கப்பட்டு விட்டனர்.

**ஆ) கிறிஸ்தவ வாழ்வின் பொருள்:** அப்போஸ்தலர்களால் நற்செய்தி போதிக்கப்பட்ட பின் அதைக் கேட்பவர்கட்கு இரண்டே இரண்டு வாய்ப்புகள்தான் தரப்படுகின்றன. மீட்பு அல்லது அழிவு (2 தெச 2:10; 2 கொரி2:15); வாழ்வு அல்லது இறப்பு. விசுவசித்து அவரில் தங்கள் விசுவாசத்தை அறிவிப்பவர்கள் மீட்புப் பெறுகின்றனர் (உரோ 10:9தொ. 13). கடவுள் அவர்களது செயல்களை முன்னிட்டல்ல, மாறாக அவர்களைத் தனது அருளால் மட்டுமே காக்கிறார் (2 திமொ 1:9; தீத் 3:5). அருளாலும் (எபே 2:5-8), பரிசுத்த ஆவியைக் கொடுப்பதாலும் (2 தெச 2:13; எபே 1:13; தீத்து 3:5தொ) அவர்களை மீட்கிறார். அந்த நேரத்திலிருந்து தன்னிடம் கொடுக்கப்பட்ட இறை வார்த்தையை மிகக் கவனமுடன் ஒருவன் காக்க வேண்டும் (யாக் 1:21). இறை வார்த்தையோடு கொள்ளும் நெருங்கிய உறவால் ஒருவன் தன் விசுவாசத்தை வளப்படுத்துவானாக (2 திமொ 3:15). அதனைத் தனது நற்செயல்களில் பயனளிக்கச் செய்ய வேண்டும் (யாக் 2:14). ஒருவன் அச்ச நடுக்கத்தோடு செயல்பட்டு மீட்பை நிறைவுபெறச் செய்ய வேண்டும் (பிலி 2:12). இதில் கவனமின்மை இருக்கக்கூடாது. ஏனெனில், மீட்பு வாழ்வின் ஒவ்வொரு நிமிடத்திலும், நமக்கு அளிக்கப்படுகின்றது (எபி 2:3). இதுவே மீட்பின் நாள் என்ற மனநிலையோடு வாழ வேண்டும் (2 கொரி 6:2).

**இ) இறுதி மீட்பின் எதிர்பார்ப்பு:** நாம் மீட்பின் வாரிசுகள் என்றால் (எபி 1:14), அதற்கு நிறைவாக ஏற்புடையவர்கள் என்றால் (உரோ 5:1), நாம் மீட்புப்பெறுவோம் என்ற நம்பிக்கைதான் உள்ளதேயொழிய (உரோ 8:24) முற்றிலும் மீட்புப் பெற்றுவிட்டோம் என்றன்று. நம்மை மீட்புக்கென கடவுள் ஒதுக்கி வைத்தாலும் (1 தெச 5:9), அது முழுமையாக வெளிப்படுவது இறுதி நாளில்தான் (1 பேதுரு 1:5). எனவே மீட்பு என்பது ஆண்டவரின் நாளாகிய இறுதி நாளுக்குரியது என்றுதான் கொள்ள வேண்டும் (1 கொரி 3:1தொ; 5:5). நாம் ஏற்கெனவே அவரது மகனின் இறப்பால் கடவுளோடு ஒப்புரவாக்கப்பட்டு, அவருடைய இரத்தத்தால் ஏற்புடையவர்களும் ஆக்கப்பட்டு அதனால் அவரது கோபத்தினின்று காக்கப்படுவோம் (உரோ 5:9தொ). கிறிஸ்து நமக்கு மீட்பைத் தர வருவார் (எபி 9:28). நாமும் மீட்பரின் முழுமையான வெளிப்பாட்டிற்காகக் காத்திருக்கிறோம். அவர் நமது உடலை உருமாற்றும் கடமையை நிறைவேற்றுவார் (பிலி 3:20). அந்த அடிப்படையில்தான் நமது மீட்பு ஒரு நம்பிக்கையின் பொருளாக இருக்கிறது (உரோ 8:23தொ). அப்போது சங்கீத ஆசிரியர் தன்னை விடுவித்துக் காக்குமாறு மன்றாடும் நோய்கள், துன்பங்கள், சாவு போன்ற தீமைகளிலிருந்தெல்லாம் முற்றிலும் விடுவிக்கப்படுவோம். ஏனெனில், கிறிஸ்து இவ்வுலகில் வாழ்ந்த காலத்தில்

தமது அருஞ்செயல்களால் இத்தீமைகளை யெல்லாம் வென்று வெற்றி கொண்டார். அத்தகைய ஒரு செயல்தான் கடவுளுக்கும் கிறிஸ்துவுக்கும் மாபெரும் வெற்றியாகும். இதைத்தான் திருவெளிப்பாட்டு நூலின் வழிபாட்டுப் புகழ்ப்பாடல் ''எங்கள் கடவுளுக்கும் செம்மறிக்குமே மீட்பு உரியது'' என்று பறை சாற்றுகிறது (திருவெளி 7:10; 12:10; 19:1).

**வீட்டுத்தலைவன்** *(HOUSE HOLDER)*

இதன் கிரேக்கச்சொல் ஒத்தமை நற்செய்திகளில் மட்டும் 13 முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. புதிய ஏற்பாட்டில் வேறெங்கிலும் இச்சொல் கையாளப்படவில்லை. மத் 20:1-16-இல் உள்ள உவமையில், ஒரு வீட்டின் தலைவன் அவனுடைய பணியாட்களுக்குச் செய்வது போலவே கடவுளும் மனிதருக்குச் செய்வார் என்ற உண்மை விளக்கப்பட்டுள்ளது.

**வீண்** *(VANITY)*

விவிலியச் சொல்வழக்கில் இச்சொல் ஒன்றுமின்மை, பயனின்மை, வெறுமை, அல்லது குழப்பம் ஆகியவற்றை உணர்த்தும். சில சமயம் இச்சொல் சிலை வழிபாட்டோடு தொடர்புபடுத்தப்பட்டும் பயன்படுகிறது.

இதைக் குறிக்கும் எபிரேயச்சொல் காற்றையும் (பழ 21:6), மூச்சையும் (எசா 57:13) உணர்த்தும். இச்சொல் வாழ்வின் நிலையற்ற தன்மையையும், தற்காலிகமான தன்மையையும் உணர்த்தவல்லது (திருவெளி 1:14; 2:11.17; 4:16; 6:9: காற்றைப் பிடிக்க முயல்வது போன்றதாகும்; காண்க. சங் 39:5; 144:4); திருப்தியளிக்க முடியாதது (சங் 62:4; காண்க. யோபு 15:31).

வீண் என்பது இறைவனுடைய அல்லது மற்றவர்களுடைய செயல்களை விட, தன்னையும் தன்னுடைய செயல்களையும் மேலானதாகக் கருதுவதாகும். அதன் விளைவு மதிப்பற்ற காற்றைப்போல் மறைந்து போகும். ஏனெனில், ஒருவனுடைய குறிக்கோள் இறைவனுடைய முடிவில்லாக் குறிக்கோளோடு ஒத்துப்போகவில்லையென்றால், அவனுடைய முயற்சிகள் எல்லாம் ஒன்றுமின்மையாகும். இறைச் சட்டத்திற்கு அல்லது இறைவனுடைய வழிகாட்டல் மற்றும் காக்கும் ஆற்றலுக்கு மதிப்பளிக்காது வாழ்பவனது ஏமாற்றத்தை இச்சொல் உணர்த்துகிறது (சங் 2:1; 4:2; காண்க. 94:11; அப 2:13). இப்பொருளில், இச்சொல் புறவினத்தாரைப் பற்றிக் கூறப் படுகிறது (எசா 30:28; காண்க. எபே 4:17). ஏமாற்றுதல் அல்லது வஞ்சகத்தால் ஒருவன் உண்டாக்கும் போலி அமைப்பு இத்தகையதாகும் (யோபு 31:5; சங் 12:2; 24:4; காண்க. பழ 30:3; எசே 13:6.8-9).

இச்சொல் சிலை வழிபாட்டிற்கும் (எரே 16:19), சிலைகளுக்கும், புறவினக் கடவுள்களுக்கும் (உப 32:21; 1 அர 16:13.26; சங் 31:6; எசா 40:17.23; 57:13; எரே 2:5; 8:19; 10:8; 14:22; 1:18; யோனா 2:8) குறிப்பாகப் பொருந்தும். எரே 51:17-18-இல் வரும் சொல்லாடலில், சிலைகள் மூச்சில்லாதவைகள், உயிர் இல்லாதவைகள் என்று விவரிக்கப்படுகின்றன. அ.ப. 14:15-இல் சிலைகள் பயனற்றவை என்று குறிக்க இச்சொல் பயன்பட்டுள்ளது.

வெறுமையையும் அழிவையும் (அ.ப.2:13), பொதுவாக, இறைவனுக்குப் புறம்பான வாழ்வின் பயனின்மையையும் (சங் 2:1; 4:2) குறிக்க இச்சொல் வருகிறது. பாசாங்கு செய்வதால் (சங் 12:2; 41:6), ஏமாற்றுதலால் (யோபு 31:5; சங் 24:4), பொய் சொல்வதால் (சங் 144:4), மனிதன் அமைக்கும் மாயையான, பொய்யைக் (பழ 30:8; எசே 13:6.8-9.23; 21:29; 22:28) குறிக்க இச்சொல் பயன்படுகிறது. இப்படிப் பல பொருளைச் சுட்ட இச்சொல் விவிலியத்தில் பயன்படுகிறது.

**வீழ்ச்சி** *(FALL, THE)*

I. விவிலியத்தில் மனிதர்கள் பாவத்தில் வீழ்ந்தது பற்றிய பல குறிப்புகள் காணப் படுகின்றன (1 கொரி 10:12; 1 திமொ 3:6-7; 6:9; எபி 4:11; யாக் 5:12). அதில் தீய வானதூதர்களின் வீழ்ச்சியைப் பற்றியும் (2 பேதுரு 2:4; யூதா 6), வானதூதர்

மனிதப்புதல்வியரை மணந்த கதையையும் (ஆதி *6:2.4*) வாசிக்கிறோம். ஆனால் கிறிஸ்தவ இறையியலில் வீழ்ச்சி, ஆதி 3-இல் விவரிக்கப்படும் ஆதாம் - ஏவாளின் கீழ்ப்படியாமையை, பாவத்தைக் குறிக்கிறது. இன்பவனக் கதை பழைய ஏற்பாட்டுச் சிந்தனையில் அதிக விளைவுகளை உண் டாக்கவில்லை. ஆனால், இக்கருத்து மூலப் பாவம் பற்றிய புதிய ஏற்பாட்டுக் கோட் பாட்டில் ஆதிக்கம் செலுத்துகிறது (காண்க. உரோ *5:12-19*). ஆகவே, வீழ்ச்சி பற்றிய எந்த ஆய்வும் இன்பவன விவரிப்பில் கவனம் செலுத்த வேண்டும். அதைப் பல கோணங்களிலிருந்து நோக்க வேண்டும்.

II. **விவிலிய விவரிப்பு:** படைப்புப் பற் றிய இரண்டாம் விவிலிய விவரிப்புக்குள் (ஆதி *2:4-3:24*) வீழ்ச்சி பற்றிய நிகழ்ச்சி யுரை கொடுக்கப்படுகிறது. மனிதனும் *(2:7)* பெண்ணும் *(2:22)* படைக்கப்பட்டதை விவ ரித்தபின், மேன்மையான மூலநிலை தகர்த் தெறியப்பட்ட சூழ்நிலையை விவரிக்கிறது. பாம்பு ஏவாளை அணுகி, நன்மை தீமை அறிவதற்கு ஏதுவான மரத்தின் பழத்தை விரும்பச் செய்கிறது *(3:1-3)*; அதைத் தடுத்ததில் இறைவனின் நோக்கத்தை ஏவாள் ஐயுறச் செய்கிறது *(3:4-5*; காண்க. *2:16-17*). அப்பழத்தை உண்பதால் இறைவ னுடையதுக்கு ஒப்பான அறிவை அடையக் கூடும் என்று நினைத்து, ஏவாள் அதை உண்டாள்; தன் துணைவனுக்கும் உண்ணக் கொடுத்தாள் *(3:6)*. அவர்கள் செயலின் விளைவை இருவரும் உடனடியாக அனுப விக்கின்றனர். ஆகவே, இறைவனிடமிருந்து தங்களை மறைத்துக்கொள்ள முயல்கின்ற னர். இறைவன் அவர்களைத் தேடி வருவது மனிதப்பண்பு முறையில் விவரிக்கப்படுகி றது. இறைவன் அவர்களிடமிருந்து குற்ற அறிவிப்பைப் பெற்று, அதில் ஈடுபட்டவர் களைத் தண்டிக்கிறார். பாம்புகள் ஏன் ஊர்கின்றன? மனிதனுக்கும் பாம்புகளுக்கு மிடையேயுள்ள இயற்கையான பகைமை *(3:14-15)*, பிள்ளைப்பேற்றின் துன்பத்துக் கும் பலின ஆசைக்கும் இடையேயுள்ள முரண்தொடை *(3:16)*, மனுகுலத்திற்கும் இயற்கைக்கும் இடையில் நிலவும் இழுவை நிலையை எடுத்துக்காட்டும் முரண்பாடு, மற்றும் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து உண்ண வேண்டிய மனிதனின் அவல நிலை *(3:17-19)* ஆகிய வற்றை எடுத்துக்கூறும் காரணகாரிய விளக் கமாக சாபங்கள் அமைந்துள்ளன. இவற்றை யெல்லாம் விட முக்கியமாக, ஆதாம்-ஏவாள் உலக இன்பவனத்திலிருந்து வெளியே அனுப்பப்பட்டனர்.

ஆதியாகம விவரிப்புக்குப்பின் அமைந் துள்ள இலக்கிய வளர்ச்சித் தொகுப்பு, அடையாளவியலில் செறிந்த விவரிப்பைக் கொண்டுள்ளது; பல இதிகாசக் கருத்து களைச் சுட்டிக்காட்டுகிறது. விவிலிய விவ ரிப்புக்கும் பழங்கால மேற்காசிய இதிகாசங் களுக்கும் இடையிலுள்ள ஒப்புமை பல வற்றை ஆய்வாளர்கள் கண்டு எடுத்துக் கூறியுள்ளனர். எடுத்துக்காட்டாக, பாபிலோ னிய அதப்பா இதிகாசமாகும். இதில் அனு என்ற தலைமைக் கடவுள் ஞானியான அதப்பாவுக்கு வாழ்வின் அப்பத்தையும் நீரையும் அளிக்கிறார். பொறாமை கொண்ட ஏயா என்ற கடவுளின் விவேகமற்ற ஆலோ சனைக்கு இணங்கி அதப்பா அனுவின் கொடையை ஏற்க மறுக்கிறார். இதன் விளைவாக, தனக்கும் மனுகுலத்திற்கும் அழியாமையை இழந்துவிடுகிறார். சுமேரிய கில்காமிஷ் வீரகாவியத்தில், கதைத்தலை வன் அழியாமையைத் தேடித் திரிகிறான். இந்தப் பயணத்தில் கில்காமிசின் தோழ னான என்கிடு என்பவன் ஒரு வேசியால் சோதனைக்குட்படுத்தப்பட்டு, பலின உணர்வு அனுபவத்தையும் ஞானத்தையும் பெறுகிறான். முடிவில் இளமையின் செடி யைக் கில்காமிசிடமிருந்து ஒரு பாம்பு திருடிவிடுகிறது. இதனால் அழியாமை தேடும் முயற்சியில் கில்காமிஷ் தோல்வி யுறுகிறான். ஆயினும், இந்தக் கதைகளில் காணப்படுவதற்கு மாறாக, விவிலிய விவ ரிப்பு மனிதத்தோல்விக்கும் துன்பத்துக்கும் காரணம், மனிதன் இறைவனது கட்ட ளைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த கீழ்ப்படி யாமையே ஒழிய, அவனது பலவீனமோ,

விதியோ, பொறாமை மிக்க கடவுள்களின் தந்திரமோ அல்ல என்று தெளிவாக எடுத்துக்கூறுகிறது.

III. **விளக்கம்:** விவிலிய காலந்தொட்டு இந்த வீழ்ச்சி, உலகத்திலும் பாவத்தைப் புகுத்தியது என்றும், அஃதோடு மனிதனைச் சாவுக்கு அடிமைப்படுத்தியது என்றும் விளக்கப்பயன்பட்டுள்ளது *(உரோ 5:12; காண்க. ஆதி 3:19)*. பழங்கால மேற்காசிய இதிகாசங்களில் காணப்படும் இத்தகைய அழியாமையின் இழப்பை உள்ளடக்கிய கதைகளோடு ஒப்பிடும்போது, விவிலியத்தில் ஆணும் பெண்ணும் தங்களுடைய செயல்களுக்குத் தாங்களே பொறுப்பாளிகளாகவும், தீர்மானிக்கும் சுதந்தரத்தைப் பயன்படுத்தக்கூடியவர்களாகவும் காட்சி அளிக்கின்றனர். அவர்கள் முன்குறித்து வைக்கப்பட்ட ஒரு திட்டத்திற்கோ, தீய சக்திகளின் தந்திரங்களுக்கோ கட்டுப்பட்டவர்கள் அல்லர்.

ஆதியாகம விவரிப்பு மூலப்பாவத்தைப் பற்றிய கோட்பாட்டை அறிவிக்காவிடினும், மேற்கத்திய (இலத்தீன்) திருச்சபைத் தந்தையர்களில் பலர், ஆதாம் - ஏவாளை மனுகுலம் முழுவதற்கும் முன்னோராகவும் அவர்களின் பாவம் பின்வரும் எல்லாத் தலைமுறைகளுக்கும் உரிமைச் சொத்தாகக் கையளிக்கப்பட்டது எனவும் காண்கின்றனர், போதிக்கின்றனர். பெலேசியு போன்ற பதிதர்கள் வீழ்ச்சியினால் வந்த எந்தத் தீய விளைவையும் மறுத்தனர். கிழக்கத்திய (கிரேக்கத்) திருச்சபைத் தந்தையர்கள், மனித பாவத்தின் உலகளாவிய தன்மையையும், அதன் விளைவாக வீழ்ச்சியில் ஒவ்வொருவருடைய பங்கையும் வலியுறுத்தினர். வீழ்ச்சியின் விவரிப்பு வரலாறாகவோ, அடையாளவியலாகவோ விளக்கப்பட்டாலும், இந்த நிகழ்ச்சி கிறிஸ்துவினால் உலகம் மீட்கப்படுவது பற்றிய கிறிஸ்தவக் கோட்பாட்டின் அடிப்படையாக அமைந்துள்ளது *(காண்க. ஆதி 3:15; உரோ 5:12-19; 1 கொரி 15:22)*.

வீழ்ச்சி விவரிப்போடு தொடர்புடைய பாரம்பரியங்கள் பாம்பில் சாத்தான் அல்லது பேயை அடையாளம் காண்கின்றன *(ஞான 2:24; திருவெளி 12:9; 20:2)*. மற்றொரு பாரம்பரியம் வீழ்ச்சிக்கும் பாவத்திற்கும் முதன்மையான பொறுப்பாளி ஏவாள் ஆவாள் என்று கூறுகிறது *(சீரா 25:24)*. காண்க. பாவம் - II. மூலப்பாவம்.

# வெ

## வெகுமானம், கைம்மாறு, பரிசு (REWARD)

ஒவ்வொரு செயலும் அதற்குரிய வெகுமானம் பெறுவதால், மனிதனும் வெகுமானம் பெறுவதை ஒரு நீதிப் பிரச்சனையாகக் கருதுகிறான். இது சமய முறையில் மாறாகக் கொள்வதுபோல் தோன்றுகிறது. பரிசு பற்றியே கருதாத தன்னலமற்ற தன்மை வேண்டியிருக்கிறது. கிறிஸ்து இந்த முறையில் வெற்றுக் கொள்கையை எதிர்பார்க்காமல், தனது சீடர்கள் தூய மனத்தோடு செயலாற்ற வேண்டும் என்றே கேட்டுக்கொண்டார்.

**1. வெகுமானமும் ஊதியமும்:** சமய வாழ்க்கையில் வெகுமானம் என்பது முன் கருத்தாகக் கொள்ளப்படுகிறது. இதனுடைய சரியான பொருளை உணர மனச்சாட்சியில் அதன் தோற்றத்தை விவரிக்க வேண்டும். ஏனைய கருத்துக்கள்போல் இதுவும் மனித அனுபவத்திலிருந்து எழுகிறது. இது தலைவனுக்கும் ஊழியனுக்கும் உள்ள உறவுமுறையிலிருந்து எழுகிறது என்று சொல்லலாம். இந்த எண்ணமோ எந்த எண்ணத்தையும் கடந்து நிற்கிறது. காரணம் கடவுள், தானே உறவு முறை ஏற்படுத்துவதே. சந்தேகமில்லாத முறையில் ''ஊதியம்'' என்னும் கருத்து இதில் மேலோங்கி நிற்பதையும் காண்கிறோம். ஆனால், உண்மையில் ஒரு வேலைக்குத் தகுந்த ஊதியம் என்று நாம் இன்று கொள்ளும் கருத்தாக மாற்ற முடியாது. எப்படி என்றால் ஒப்பந்த முடிவில் ஊதியம் கிடைக்கிறது; மாறாக, தன் ஊழியனது செயலைத் தம் தீர்ப்பால் சரியென்று ஏற்றுக் கொள்ளும் இறைவனுடைய சந்திப்பால், சமயச் சூழலில் வெகுமானம் அளிக்கப்படுகிறது.

தொடக்கத்திலிருந்தே கடவுளுக்காக வேலை செய்கிறோம் என்றும், இதற்கு ஊதியம் கிடைக்கும் என்றுமே மனிதன் எண்ணி வந்துள்ளான் (ஆதி *2:15;* காண்க. *14:6;* மத் *20:1-15;* யோபு *7:1*தொ). கடவுள் நீதியுள்ளவர்; கொடுக்கப்பட்ட வேலையை ஒவ்வொருவரும் செய்யும்போது அவர்க்குச் சேர வேண்டியதைக் கொடுப்பார். மனிதனோ தன்னிலே நிறைவு இல்லாதவன்; எனவே, தானாக வலிந்து கைம்மாறு கருதாது கடவுளுக்குத் தன்னலமற்ற உதவி செய்ய முடியாதவன். மனிதன் யார்? கடவுள் முன் ஓர் ஏழை, பிச்சைக்காரன், ஊழியன், அடிமையுங்கூட. அன்றாடம் தலைவன் கொடுப்பதைவிட அவனிடம் வேறொன்றுமில்லை. ஆகவே, வெகுமானம் என்பது சமயவாழ்வின் எல்லைக் கூறன்று; மாறாக, இறைவனுக்குச் செய்யும் பணியின் சாதாரண நன்மையாகும்.

இதனால்தான், மீட்பு வரலாற்றின் தொடக்கத்தில், கடவுள் ஆபிரகாமுக்குப் பரிசொன்றை உறுதி கூறுகிறார் (ஆதி *15:1*). விவிலிய இறுதிச் சொற்களும் ''அவனவன் செயலுக்கேற்ப அவனவனுக்கு அளிக்கும் கைம்மாறு'' (திருவெளி *22:12*) என்று வெளிப்படுத்துகின்றன. இவ்விரண்டு மேற்கோளுக்கிடையில் கடவுள் மனிதனின் வேலைக்கேற்றாற்போல் பரிசளிக்கிறார் (பழ *12:14;* எரே *31:16;* சங் *28:4;* 2 நாள் *15:7;* யோபு *34:11;* எசா *59:18;* சீரா *51:30;* லூக் *10:7;* யோவா *4:36;* உரோ *2:6;* 2 திமொ *4:14*) என்றும், இந்த ஊதியம் கடவுளுக்கு மட்டுமே உரியது என்றும் மறைநூல் சாற்றுகிறது (உப *32:35;* பழ *30:22;* காண். உரோ *12:17-20*). இம்மறையுண்மை மிக முக்கியமானது. கைம்மாறு உண்டு என்பதை மறுப்பது இறைப்பற்றற்றோரின் போக்கு என்று கருதப்படுகிறது (ஞான *2:22*). ''தம்மைத் தேடுபவர்களுக்குத் தக்க கைம்மாறு அளிக்கிறார்'' (எபி *11:6*) என்பதும் கடவுள்மேல் கொள்ளும் விசுவாசத்தின் முக்கியமான கூறு ஆகும்.

வேலைகளைச் சரிவரச் செய்கின்றவன் வெகுமதி எதிர்பார்க்கலாம் என்றாலும், ஊழியம் புரிய மறுக்கின்றவன் இதே வெகுமதியை இழக்க நேரிடுவதையும், ஏன், கடவுள் முன்னால் வாழவும் இயலா

தென்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். மேலும், ஒருவருடைய செயல்களுக்கேற்ப வெகுமானம் பெறுவது, இறைவனது தீர்ப்புக்கு உட்படுவதாகும். அது தான் செய்தவற்றிற்குத் தகுந்தாற்போல் நன்மையோ தண்டனையோ பெறுவதாகும். இவ்வாறு தேர்ந்தெடுக்க வேண்டி உள்ளது ஒன்று: வாழ்க்கை அல்லது சாவு. கடவுளின் நீதித் தீர்ப்பு மனித இயல்பைக் கடந்து நிற்பது. ஏனென்றால், கடவுள் மட்டுமே மனிதனை அளந்து பார்க்க முடிந்தவர். கடவுளின் பேருண்மையை மனிதன் உய்த்துணர முடியாது. அவரே இரக்கம், சினம், விசுவாசம், நீதி, அன்பு அனைத்துமாவார்.

*2.* **வெகுமதி பற்றி வெளிப்பாட்டுப் படி நிலைகள்:** கைம்மாறு பற்றிய உண்மை அடிப்படையான உறுதியானால் அதனுடைய இயல்பு மறைபொருளானது. அதையும் கடவுள் மட்டுமே படிப்படியாக வெளிப்படுத்த வேண்டும்.

**அ) கூட்டொருமையும் பொறுப்புணர்வும்:** தொடக்க காலத்திலிருந்தே மனிதனின் ஒவ்வொரு செயலும் அவனுடைய பொறுப்புணர்வில் தோன்றுவதாகத் தெரிகிறது; ஆயினும், குழுவிற்கு முக்கியமானதாகவும் உள்ளது. ஒரு குடும்பத்திலிருந்து, இனத்திலிருந்து, நாட்டிலிருந்து ஒருவன் பிரிந்திருக்க இயலாது. கடவுளின் பராமரிப்பும் தீர்ப்பும் முன்காலத்திய ஆவணங்களிலிருந்தே மிகப்பரந்த அளவில் ''மனிதன்'' மேல் விழுகிறது (*ஆதி 6:5தொ*). யாவேயின் உடன்படிக்கையும் அதிலிருந்து புறப்படும் அவரின் பற்றுறுதியும் முதன் முதலில் ஒரு மக்களினத்தைத் தழுவி நிற்கிறது. குழுப்பண்பு மேலோங்கினாலும், தனிப்பட்டவன் பொறுப்புணர்வு வெளியாவதையும் இது தண்டனைச் சட்டங்களில் மெய்யாவதையும் காண்கிறோம். பழங்காலப் பழக்கத்தில் உள்ள சோதனை முறை ''கடவுளின் தீர்ப்பு'' (*காண்க. எண் 5:11-30*), கடவுள் இன்பவனத்தில் நடத்திய ''ஆய்வு'' ஆகியவையெல்லாம் உண்மையைக் காணவும் பொறுப்பானவரைத் தண்டிக்கவும் நோக்காகக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆக்கான் வரலாறு தனிப்பட்டவரின் பொறுப்பையும் குழுக்குற்றத்தையும் ஒதுக்கி விடாமல் இருப்பதில் கருத்தாய் இருப்பதை எடுத்துக்காட்டுகிறது. கடவுளின் அறிக்கையால் குற்றமானவன் கண்டுபிடிக்கப்பட்டு, அவனது பிரசன்னம் குழு முழுவதையும் பாதிக்கிறது என்பது காட்டப்படுகிறது (*யோசு 7:5-12*). தனிப்பட்ட முறையில் அவன் அடையும் தண்டனை அவனுடைய குடும்பத்திற்கும் சொத்துக்கும் பரவுவதை அறிகிறோம் (*7:24; காண்க. ஆதி 3:16-19*). இதேபோல் நீதிமானுக்குக் கிடைக்கும் வெகுமதி உறவினரையும் தழுவிச் செல்வதை அறிகிறோம். இதேபோல்தான் நோவாவிற்கும் (*ஆதி 6:18; 7:1*), லோத்திற்கும் (*19,12*) ஓபேது ஏதோமுக்கும் (*2 சாமு 6:12*) நிகழ்கிறது.

தண்டனையும் மன்னிப்பும் இடங்கடந்து உலக முழுவதையும் (ஒருவரது செயல் அன்னவரையும் பற்றுகிறது), காலத்தையும் (ஒருவருடைய முன்னோர்களால் தலைமுறைகள் அனைத்தும் பாதிக்கப்படுவது) பாதிக்கின்றது. ஆயினும், இரக்கம் நோக்கியே தராசு சாய்கிறது. இந்த இரக்கம் முடிவில்லாக் காலத்திற்கும் நீடிக்கிறது (*யாத் 20:5தொ; 34:7*). இவ்வாறு நோக்கினால் சமய நிகழ்ச்சிகளின் விளக்கவுரை எளிதாகிறது. நீதியுள்ள கடவுள் உலகை ஆள்கிறார். ஒருவன் மகிழ்ச்சியற்றும் இன்னல் மிகுந்தும் இருந்தால், காரணம் அவனுடைய குற்றம் அல்லது மற்றவரோடு தொடர்புள்ள குற்ற விளைவு ஆகும் (*காண்க. யோவா 9:2*). இதற்குத் தலைகீழான முறையில், என்னதான் கொடுங் குற்றங்கள் செய்து அதனால் விளைவுகள் ஏற்பட்ட போதிலும், ஒருவனுடைய ஈடேற்றம் ஒரு நீதிமானுடன் கொண்டுள்ள தொடர்பால் கைகூடும். சோதோமில் பத்து நல்லவர்கள் இருந்திருந்தால் மக்கள் தங்கள் பாவங்களுக்காக அழிந்திருக்க மாட்டார்கள் (*ஆதி 18:16-33; காண்க. 19:20தொ*). ஒவ்வொரு சூழ்நிலைக்கும் விளக்கமான திட்டம் ஒன்று இவ்வரலாற்றுக் கட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கலாம். அதே

நேரத்தில் முடிவில்லாமல் இது செல்லக் கூடியதன்று.

**ஆ) தனது கதிக்கு மனிதனே பொறுப்பு:** நாடு கடத்தப்பட்டபொழுது நிகழ்ந்த அவலங்களை அனுபவித்ததிலிருந்து வளையாத மரபு மொழி ஒன்றை மக்கள் உண்டாக்கினார்கள்; ''தந்தையர் புளித்த திராட்சைப் பழங்களைத் தின்ன, பிள்ளைகளுக்குப் பல் கூசிற்றாம்'' (எரே *31:28*தொ). கடவுளின் நீதியைப் பற்றிக் கேள்வி எழுப்பும் கேவலமான கூற்று! இந்தப் பழமொழியை மேலும் ஒருபோதும் சொல்லக்கூடாது என்று எரேமியா முழங்கினார்; எசக்கியேலுக்கோ இதில் இன்னும் பொருள் இல்லை (எசே *18:2-3*). வெகுமானம் பெறுவதில் கூட்டொருமை மற்றும் பாவங்களுக்குச் சொந்த வினைப்பயன் கோட்பாட்டை வலியுறுத்தும் உப *7:9*தொ- மரபின் வழியில், மனமாற்றக் கோட்பாட்டை வலியுறுத்தி, நீதிமான்கள் தங்களை மட்டுமே மீட்க முடியும் என்று எசேக்கியேல் அறிவிக்கிறார். முன்னாளில் நோவா தன் மக்களைக் காப்பாற்றினார் (ஆதி *7:7*). ஆனால், இறைவனின் திட்டம் புதிய கட்டத்தை அடைந்து விட்டதால் இப்போது அவ்வாறு செய்ய அவரால் இயலாது (எசே *14:12-20*). இதனால்தான் இயன்ற எல்லாச் சூழ்நிலைகளையும் எசேக்கியேல் அலசுகிறார் (*18*). ஒவ்வொரு நிமிடமும், ஒவ்வொரு மனிதனும் அவனது கதிக்கு அவனே பொறுப்பாளி. அவன் அதை விட்டுக்கொடுக்கவோ, மீண்டும் அக்கதியைப் பெறவோ எப்போதும் இயலும். எனினும் இதில், கடவுள் எதிரியாகவோ சார்பற்றவராகவோ ஒருபோதும் இல்லை. ''எவனுடைய சாவிலும் எனக்கு விருப்பமே இல்லை... மனம் மாறி வாழ்வு பெறுங்கள்'' (எசே *18:32*).

**இ) கடவுளின் நீதி பற்றிய மறை பொருள்:** மனிதனே தனது கதிக்குப் பொறுப்பாளி என்றால் வாழ்வில் தேற்றம் உண்டாகிறது. ஆனால், மற்றொரு பிரச்சனை எழுகிறது. உயிர்த்த வாழ்வின் வெளிப்பாட்டில்தான் இதற்குரிய நிறைவான விடை கிடைக்கும். இங்கேயே வெகுமதிக்கென ஓரிடம் இருந்தால், ஏன் அது நிலையாக இருப்பதில்லை? வழிவழி வந்துள்ளதுபோல் நீதிமான் எப்போதும் மகிழ்ச்சியாய் இருக்கிறான் (சங் *37; 91; 92; 112*) என்ற பாரம்பரியக் கருத்து அனுபவ முறையில் முரண்படுகிறது.

இந்த மனச்சாட்சிப் போராட்டத்தை எடுத்துக்காட்டுவதில், உண்மையான விசுவாசத்தையும் சொந்த அனுபவத்தையும் இணைந்து போகச் செய்ய முயன்றவர்களின் இதய எழுச்சிகளையும் விவிலியம் வெளிப்படுத்துகிறது. எரேமியா அலைமோதும் நிலையிலே இருந்தபோது அவருக்குக் கிடைத்த பதில், ''தைரியமாக அதே பாதையில் செல்க'' என்ற உற்சாகமூட்டும் சொற்கள்தாம் (எரே *12:1-5*). ஆனால் யோபு, திருவுரையாளர், சங்கீத ஆசிரியர்கள் ஆகியோர் பிரச்சனையை நேரடியாக மோதித் தீர்வுகாண முயன்றனர்.

*1*) நீண்ட காலமாக பழைய மரபு முறையையே மெய்யியலார் சிலர் விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டிருந்தனர். வினைப்பயன் காலந்தாழ்த்திக் கிடைத்தாலும், சாவு நேரத்தில் மொத்தமாக, இந்த வாழ்விலே கிடைக்கும் என்றனர். அசாதாரண மகிழ்ச்சி அல்லது வேதனையால் சாவு தனிச்சிறப்புப் பெற்றிருக்கும் (சங் *49:17*தொ; சீரா *1:13; 7:26; 11:18-28*). இந்த அடிப்படையற்ற அமைப்பையே சங்கீத ஆசிரியர் சாடுகிறார்; ''அவர்களுக்குச் சாவின் வேதனை என்பதே இல்லை'' (சங் *73:4*தொ).

*2*) மரபு வழியைப் பாதித்த நிலையில்லாமையைத் (திருவுரை *8:12*தொ) தவிர வேறொன்றையும் காணாது ''ஞானத்தையும் காரண காரியத்தையும்'' (*7:25*) தேடிய திருவுரையாளர் அன்றாட வாழ்வில் மிக மேலானதைக் கொணரத் தேடும் மட்டுடைய செயல்களைப் பரிந்து போதிக்கிறார். அமைதியாக இருந்தும், ஆனால் பிரச்சனைக்குத் தீர்வு காணப் பின்வாங்கும் கடவுள் மேல் உள்ள நம்பிக்கைச் சூழலில் தான் இவை யாவும் நிறைவேறுகின்றன.

3) விசுவாசத்திற்காக இன்னல் அனுபவித்தும் கடவுள்மேல் நிபந்தனையற்ற பற்றுள்ளவர்களுக்கு ஓர் ஒளி கிடைக்கிறது. எல்லாச் சோதனைகளிலும் கடவுள்தான் அவர்களின் ''பங்கு, ஒளி மற்றும் பாறை'' ஆவார் (சங் 16:5தொ; 18:1தொ; 27:1தொ; 73:26; 142:6; புல 3:24). இவர்கள் கடவுளின் திருவுளப்படி செய்வதைவிட வேறு நோக்கம் கொண்டிருக்கவும் இல்லை; வேறு கைம்மாறு விரும்பவும் இல்லை (சங் 119:57; சீரா 2:18; 51: 20தொ). யோபு வாழ்ந்து காட்டிய அதே ஆழமான விசுவாசச் சூழலை இது மனத்திற் கொள்கிறது. அவர் கடவுளைப் ''பார்த்து விட்டார்.'' இறைவனது புனிதத்தோடு கொண்ட இந்த மறைத் தொடர்புதான் யோபுவைத் தாழ்ச்சியுள்ளவராகவும், கடவுளை வணங்குகின்றவராகவும், தன் பாவ நிலையை உணர்ந்தவராகவும், புதிய முறையில் கடவுளைப் புரிந்து வலிமை பெற்றவராகவும் மாற்றியது (யோபு 42:5தொ).

4) நீதிமான்களின் வேதனை பற்றி விளக்க முனையும்போது வெகுமதி என்ற கோணத்தில் பார்க்காமல் மீட்பு என்ற கோணத்தில் காணவேண்டும் என்று மற்றவர்கள் முன்னுணர்வு கொண்டனர். ஊழியர் கவிதைகளின் கடைசிப்பகுதி இத்தகைய பொருள் பொதிந்ததே (எசா 53:10; காண்க. சங் 22). ஆனால், உலர்ந்த எலும்புகள் உயிர்பெற்ற காட்சியில் உள்ளதுபோல் நாடு கடத்தப்பெற்றுத் தூய்மை பெற்ற குழுவை மட்டுமே வெகுமதி ஈடுபடுத்துவதாகத் தோன்றுகிறது.

**ஈ) தனிப்பட்டவருக்கு வெகுமதி:** முடிவாக, உலக முடிவில் தனி மனிதனின் உயிர்ப்பிலுள்ள விசுவாசமே எழுப்பப்பட்ட பிரச்சனைகளைத் தீர்க்க முடியும். நீதிக்காக ஏங்குவோரை நிறைவு செய்வது கடவுளின் தன்மை என்பது சில கடினமான விவிலிய வசனங்களின் பொருளாகும். சிறிது காலத்திற்கு எனக் கீழுலகிலிருந்து நீதிமான் விடுதலை பெற்ற போதிலும் அவனைக் கைம்மாறுக்கெனத் தண்டிப்பது கடவுளுக்கு இயலாத ஒன்றாகும் (யோபு 19:25தொ). எனவே மனிதன் கடவுளோடு ஒன்றிக்க எழுப்பும் குரலை, அவர் புறக்கணிக்க முடியாது (காண்க. சங் 16:9தொ). அவர் எலியாவையோ, ஏனோக்கையோ தன்னிடம் எடுத்துக்கொண்டால், நீதிமானும் ஏன் இறைவனுக்கருகில் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை?

அந்தியோக்கு எப்பிபான் காலத்தில் நடந்த துன்புறுத்தலும் உயிரிழப்பும் உயிர்ப்பின்மேல் விசுவாசங்கொள்ளவும், அப்போது கைம்மாறு கிடைக்கும் என்றும் விசுவாசிகளுக்கு நினைவூட்டியது (2 மக் 7; காண்க. தானி 12:1தொ). சாகாமை என்பதின் மூலம் உயிர்ப்பின் மேலுள்ள விசுவாசம் ஞானாகமத்தில் மறைந்திருக்கிறது (ஞான 3:1; 4:1). இறுதி நாளில் கடவுளோடு கொள்ளும் சந்திப்புக்குப்பின் நீதிமான்கள் கடவுளோடு தோழமை கொண்டு வாழ்வார்கள். இதுதான் அவர்களுக்குரிய வெகுமானம் (காண்க. ஞான 2:22; 5:15). இந்த வெகுமதி ஓர் அருட்கொடை (காண்க. 3:9.14; 4:15). மனித முயற்சிகளுக்கு அளவில்லாமல் மேற்பட்டு விளங்கும் ஒன்றாகும்.

**3. கிறிஸ்துவும் தகுதியும்:** கிறிஸ்துவின் வருகையினால் தகுதியானது முழுமை பெறுகிறது.

**1. தனிப்பட்டவரின் தகுதி உறுதிபெறுதல்:** நீதிமானின் வெகுமதியாக உயிர்ப்பு, முடிவில்லா வாழ்வு, நீடிக்கும் அரசு ஆகியவை பற்றி இஸ்ராயேல் மக்களில் பலரும் (மத் 22:22; அ.ப. 23:8), ஏன் கிறிஸ்துவின் சீடர்களுள் (1 கொரி 15:12) சிலரும் இன்னும் ஐயம் கொண்டனர். ஆனால் இஸ்ராயேலின் உண்மையான மரபை இயேசுவும் அவரின் அப்போஸ்தலர்களும் விடாமல் காப்பாற்றினர் (மத் 22:31தொ; 25:31-46; 1 கொரி 15:13-19; அ.ப. 24:14 தொ). இயேசுவின் கடவுள் அவரை உயிர்ப்பித்து நீதிமானாகக் காட்டுகிறார் (அ.ப. 3:14 தொ; கொலோ 2:12தொ). இவ்வாறு ஒரு விசுவாசி தன் செயல்களுக்குத் தகுந்தாற்போல் வெகுமதி உண்டு

என்று அறிகிறார் (*காண்க. மத் 16:27; மாற் 9:41; 2 திமொ 4:14; 2 யோவா 8; 2 பேதுரு 2:13; திருவெளி 18:6*). மேலும் தீர்ப்பின்போது 'அரசர்' மனிதர்களை அவர்களின் செயலுக்கு ஏற்றாற்போல் வாழ்விற்கோ, தண்டனைக்கோ (*மத் 25:46*), வானகத்திற்கோ, நரகத்திற்கோ அனுப்புவார். இப்போதிருந்தே நற்பரிசு பெற விறுவிறுப்புடன் போரிட வேண்டியதுதான் (*1 கொரி 9:24-27;கலா 5:7; 2 திமொ 4:7*).

***2. உண்மையான வெகுமானம்:*** தனிப்பட்டவரின் தகுதி உண்மை என்றால், பரிசேயரின் தத்துவம் உயிர்பெறும் ஆபத்து இருக்கிறது; அதாவது, மனிதக் கடைப்பிடிப்பால் விண்ணகப் பரிசு கிடைக்கும். ஆனால் ஒரு விசுவாசி, தகுதி பற்றிய கொள்கையை உருக்கெடுக்கும் இப்போக்கு மட்டில், விழிப்பாய் இருக்க வேண்டியது அவசியம்.

முதன் முதலாக, ஒருவன் உலகியல்பான மகிமை, பெருமை, அறிமுகம், பற்று ஆகியவற்றைத் தேடி அலையக்கூடாது. ஏனெனில், இதற்காக நன்மை செய்கிறவன் ''ஏற்கெனவே கைம்மாறு பெற்று விட்டான்'' (*மத் 6:1-16; லூக் 14:12தொ; காண்க. 1 கொரி 9:17தொ*). ஆனால் யாவற்றிற்கும் மேலாக ஒரு கிறிஸ்தவன் கிறிஸ்துவையே எல்லாவற்றிற்கும் மையமாகக் கொண்டவன். இதுவே அவனுடைய நோக்கம் கூட. இதில் தனது நலத்தை - உள்ளார்ந்த அல்லது தன் மறுப்பு மூலம் - அவன் நாடுவதில்லை. கிறிஸ்தவனின் முக்கிய குறிக்கோளைக் கிறிஸ்துவே ஆட்கொள்கிறார் (*பிலி 1:21-26*). அவர் அளிக்கும் கைம்மாறு தெய்வீக உரிமையாகும் (*கொலோ 3:24*). இதன் மூலம் அவன் கிறிஸ்துவின் உடன் உரிமையாளனாகவும், சகோதரனாகவும் ஆகின்றான் (*உரோ 8:17*). அன்போடு எதிர்நோக்கும் கிறிஸ்துவின் வருகையினால் அப்போஸ்தலர் நல்வாழ்வின் வெற்றிவாகை பெறுவார் (*2 திமொ 4:8*). சுருக்கமாகச் சொன்னால், கிறிஸ்துவோடு என்றும் இருக்கவே அவர் விரும்புகிறார் (*1 தெச 4:17; காண்க. பிலி 1:23; லூக் 23:43; திருவெளி 21:3தொ*). திருமுழுக்கிற்கு விசுவாசமாய் இருப்பது அன்றாட வாழ்வின் முயற்சியாக மாறுகிறது. இவ்வாறு கிறிஸ்துவின் சாவோடு இணைந்தவர் உயிர்ப்பிற்கும் தன்னையே தயார் செய்கிறார் (*உரோ 6:5-8; கொலோ 3:1-4*). கிறிஸ்துவில் வெளிப்படும் கடவுளின் அன்புதான் (*உரோ 8:38தொ*) ஏற்புடையோர் காத்திருக்கும் ஈடேற்றமாகும் (*5:9தொ*). யோவான் இதே கருத்தை வேறு விதத்தில் விவரிக்கிறார். மனிதனின் பசிக்கும் தாகத்திற்கும், சாவை மேற்கொள்ளும் அவியாத விருப்பத்திற்கும் தன்னையே அளித்து இயேசு பதில் தருகிறார். அவர்தான் உயிருள்ள நீரின் ஊற்று, அப்பம், ஒளி மற்றும் வாழ்வு (*யோவா 7:37தொ; 6:26-35; 8:12; 11:23தொ*). வெகுமதி பற்றி முன்பு எழுந்த முரண்பாடுள்ளவைகள் எல்லாம் கிறிஸ்து இயேசுவில் தீர்ப்புப் பெறுகின்றன. கடவுள் கொடுப்பது அவரே மனம் உவந்து விரும்பிக் கைம்மாறு கருதாது கொடுப்பதாகும். தகுதியையும் மனித ஏக்கத்தையும் கடந்தது அவரது கொடை. மகிழ்ச்சியோடும் நம்பிக்கையோடும் எதிர்பார்க்கப்படும். அஃது ஏற்புடைமையால் ஏற்கெனவே உடைமையாகக் கொள்ளப்படுகிறது. இந்தக் கோட்பாடு அமைதியான உறுதி கொண்டதாயினும் விசுவாசத்தின் இருள் நிலையிலும், இக்கட்டான சூழ்நிலையிலும் பெறப்படும் இறைவனது சாட்சியத்தை மட்டுமே அடித்தளமாய்ப் பெற்று விளங்குகிறது. ஒவ்வொரு தனி மனிதனையும் இஃது ஆழமான முறையில் தழுவுகிறது. மேலும், கிறிஸ்துவின் உடலோடு உயிருள்ள இணைப்பொன்றையும் ஏற்படுத்துகிறது. ''வெகுமதி அறநெறிக்கும்'' ''அன்பு அறநெறிக்கும்,'' இடையே எவ்வித எதிர்ப்பும் இல்லை. ஏனென்றால், அன்பும் கைம்மாறு தேடுகிறது.

## வெங்காயம் *(ONION)*

இது காய்கறி இனத்தைச் சார்ந்தது. இஸ்ராயேல் மக்கள் பாலைவனத்திலிருந்த போது இதற்காக ஏங்கினர் (*எண் 11:5*). கி.மு. 3-ஆம் ஆயிரமாண்டிலிருந்து எகிப்து

மக்கள் இதை விரும்பி உண்டனர். பழங் கால ஆசிரியர்கள் எகிப்திய வெங்காய வகைகளைப் போற்றி எழுதியுள்ளனர்.

### வெஸ்பாசியன் (VESPASIAN)

பிளாவியன் வம்சத்தைத் தோற்றுவித்த உரோமைப் பேரரசன் (கி.பி. 69-79). இவரது முழுப்பெயர் தீத்து பிளாவியு வெஸ்பாஸியானு. இவர் கி.பி. 9-இல் பணம் வட்டிக்கு விடும் ஒரு பணக்கார இத்தாலியக் குடும்பத்தில் பிறந்தார். இவர் கலிகுலாவின் ஆட்சியில் கிளாதியுதின் தலைமையில் படையில் உயர்ந்த பதவியில் இருந்தார். இவர் 66-இல் நீரோவுடன் சேர்ந்து கிரீசுக்குச் சென்றார்.

யூதாவின் கலகத்தை அடக்குவதற்காக இவர் மூன்று படைப்பிரிவுகளைப் பெற்று, பாலஸ்தீனத்திற்குச் சென்றார். இவர் இந்த வேலையை மெதுவாக, திட்டத்துடன் செய்தார். நீரோ இறந்த பின்பு இவர் பேரரசன் ஆனார். எகிப்தின் ஆளுநனான திபேரியு யூலியு அலக்சாந்தர் 66-இல் தன்னுடைய ஒத்துழைப்பைப் பற்றி வெஸ்பாசியனுக்கு உறுதிமொழி கொடுத்தான். 70-ஆம் ஆண்டு இவர் மக்களின் ஆரவாரத்தோடு உரோமையில் நுழைந்தார். எருசலேமைக் கைப்பற்றிய அவரது மகன் தீத்துவை 71-இல் வெஸ்பாசியன் தன் அரசில் கூட்டாளியாக்கினார். தன்னுடைய இன்னொரு மகனான தொமிசியனுக்கு எந்த வித அதிகாரத்தையும் தரவில்லை.

இவர் ஒரு சிறந்த செயலாட்சியாளர் உரோமையின் பொருளாதாரச் சீர்திருத்தத்தின் தேவையையுணர்ந்த இவர், வரிகளை உயர்த்தினார். இவர் எளிய வாழ்க்கை வாழ்ந்தார்; கடவுளாக்கப்படுவதை எள்ளி நகைத்தார். இவர் 79-இல் இறந்தார். இவரது மகன் தீத்து அரசனானார். முதியோர் மன்றம் வெஸ்பாசியனை ஒரு கடவுளாக அறிவித்தது.

இவருடைய ஆட்சியில், நமக்குத் தெரிந்த அளவிற்கு, இவர் யூதர்களையோ, கிறிஸ்தவர்களையோ துன்புறுத்தியது இல்லை. இவர் தாவீதின் குடும்பத்தினரைக் கொல்லத் தேடினதாக கிறிஸ்தவப் பாரம்பரியத்தில்தான் கேட்கிறோம்.

இவர் பாலஸ்தீனத்தைத் தன் நேரடி ஆட்சிக்குள் வைத்துக்கொண்டார். எருசலேம் கோவிலுக்குச் செலுத்தப்பட்ட தலைவரியை யூப்பித்தர், காப்பித்தோலினு கோவிலுக்கு மாற்றிவிட்டார்.

பேரரசு அழிந்து கொண்டிருந்தபொழுது அதைக் காப்பாற்றியதுதான் இவருடைய முக்கியமான தொண்டு ஆகும்.

### வெட்கம் (SHAME)

I. **வெட்கம் அனுபவிக்கப்படும் சூழ்நிலைகள்:** நாம் வெட்கம் என்பது பற்றிப் புரிந்து கொள்ளும் விதம் விவிலியத்தில் காணப்படும் பொருளிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. வெட்கம் என்பது ஏமாற்றம், நிலைகுலைந்து போதல் என்பதற்கு இணையாகப் பொருள் புரிந்து கொள்ளப்படுகிறது. தரையில் விழுதல், நிர்வாணமாக இருத்தல், பின்வாங்குதல், பயனற்றிருத்தல் ஆகிய இவைதான் எல்லாருக்கும் வெட்கத்துக்குரிய செயல்களாகக் கருதப்படும். ஆனால், விவிலியத்தில் இந்த உணர்வு எல்லாவகையான துயரங்களையும் உள்ளடக்குகிறது. பஞ்சத்தினால் வரும் துயரம் கூட (எசே 36:30) இழிவுக்குரியதாகக் கருதப்படுகிறது. ஏனெனில், விவிலியத்தைப் பொருத்தவரை எல்லாத் துன்பங்களும் பிறர்முன் அனுபவிக்கப்பட்டு, பிறரால் தீர்ப்பிடப்படுகிறது. அதனால் வெட்கம் ஏற்படுகிறது. அதனால்தான் தீர்ப்பிடுதலும், வெட்கமும் இணைத்துப் பேசப்படுகின்றன. தீர்ப்புதான் வாழ்க்கையிலும் அதன் முடிவிலும் ஒருவனுடைய நம்பிக்கையின் மடமை அல்லது உறுதியை இறையொளியில் எல்லார் முன்னும் வெளிப்படுத்துகிறது.

*1.* **வெட்கமும் தோல்வியும்:** நாம் ஒரு செயலைச் செய்து முடிக்க வெளியிலிருந்து வரும் உதவியைச் சார்ந்திருக்கிறோம். நமது திட்டம் தோல்வியடைகிறபோது அல்லது அது பயனற்றதாகும்போது நாம் பிறர் முகத்தில் விழிக்க முடியாமல் போகிறது; அல்லது பிறரின் சிரிப்புக்கு ஆளாகிறோம். எனவே உதவி, நம்பிக்கை, விசுவாசத்தோடு வெட்கம் பொருந்தி வருவதைப் பார்க்கி

றோம் (சங் 22:4). நீதிமான் ஆண்டவரைச் சார்ந்திருக்கிறான். அது பயனற்றதாகும் போது அவனுக்கு அது வெட்கமாகிறது, இழிவாகிறது. எனவேதான் எதிரிகள்முன் என்னை நாணமுறச் செய்ய வேண்டாம் என்பது அடிக்கடி பல சங்கீதங்களில் வருகிறது (சங் 25:2; 22:6; காண்க. எசா 49:23). அதே நேரத்தில் தவறான ஆதரவு களாகிய பார்வோன், சிலைகள் போன் றவை தங்களின் ஒன்றுமில்லாமையை நிரூ பிப்பதுபோல் தோல்வியடையும்போது அறிவற்றவன் அதை நினைத்து ஏமாற்ற மடைகிறான் (எசா 1:29). அவர்கள் நாணத் தால் கூனிக்குறுகிப் போவர் (எசா 42:17; சங் 6:11; 70:4). யாரை இழிவுபடுத்த வேண்டும் என அவர்கள் நினைத்தார்களோ அவர்களின் வெற்றிதான் இத்தகையோர்கள் இழிவுபடுத்தப்படுவதால் நிகழ்கிறது (ஞான 2:20; 5:1தொ; சங் 35:26).

**2. வெட்கமும் நிர்வாணமும்:** ஆடை யின்றி நிர்வாணமாக இருப்பதால் ஏற்படும் நாணம் முதல் பாவத்தோடு தொடர்புடைய தாக இருக்கிறது. ஒழுங்கற்ற நிலையில் தனிமையாய் ஏற்பட்ட நிலையை மனச் சான்று சுட்டிக்காட்டுவதால் ஏற்படும் நாணமே இது. இஸ்ராயேலில் பெண்களின் ஆடைகளைக் களைந்தெறிவது அவர்க்குப் பெரும் தண்டனையாகும் (எசே 23:29; எசா 47:1தொ).

**3. வெட்கமும் பிள்ளைப் பேறற்ற நிலை யும்:** ஒருவன் தன் வாழ்வால் யாருக்காவது எவ்வகையிலேனும் பலன் கொடுக்காமல் இருந்தால் அவன் அழிவுக்குரிய சூழ்நிலை யில் இருக்கிறான் என்றுதான் கூற வேண் டும். இதைவிட மோசமானது பிள்ளைப் பேறற்றிருக்கும் பெண்ணின் நிலையும் (லூக் 1:25; ஆதி 30:23), கணவனின்றி வாழும் பெண்ணின் நிலையும் (எசா 4:1) ஆகும்.

**4. வெட்கமும் சிலைவழிபாடும்:** சிலைக் குரிய சரியான பெயர் வெட்கம் என்றுதான் சொல்ல வேண்டும் (2 சாமு 2:8). சிலை நிலையற்றதும், மாயையானதும், பொய் யானதும், பலன் தர முடியாததுமாயிருக் கிறது (ஞான 4:11; எசா 41:23தொ; 44:19). அதே நேரத்தில் யாவேயின் முகத்தை நோக்குபவர்களை அவர் வெட்கமுறாமல் காக்கிறார் (சங் 34:6).

**II. நீதிமான் வெட்கமுறாமல் காக்கப்படு கிறார்:**

**1. கடவுளாலும், கிறிஸ்துவாலும்:** நீதிமான் வெட்கமுறுகிறான். மக்கள் அவனைப் பாராது தங்கள் முகத்தைத் திருப்பிக் கொள் கின்றனர் (எசா 53:3; ஞான 5:4; சங் 69:8). வெட்கமென்றால் அவன்தான் என்கின்றனர் (சங் 22:7; 109:25). ஆனால், நீதிமான் வெட்கமுறத் தேவையில்லை; தன் முகத் தைக் கற்பாறை ஆக்கிக் கொள்கிறார் (எசா 50:7). அதை நினைத்துப் பயந்து செயல் படாமல் இருக்கத் தேவையில்லை. விசு வசிப்பவர் இழிவுபடுத்தப்படுவார் (மத் 5:11). ஆனால் இயேசுவுக்காகவோ, அவரது வார்த்தையின் பொருட்டோ ஒருவர் வெட்க முறத் தேவையில்லை (லூக் 9:26). புனித பவுல் நற்செய்தியின் பொருட்டு நாணமுற வேயில்லை (உரோ 1:16; காண்க. 2 திமொ 1:8). அவர் நீதியின் நாளுக்காக நம்பிக்கை யோடு காத்திருக்கிறார். தான் நிச்சயமாக இறுதியில் வெட்கமுற நேரிடாது என்ற உறுதிப்பாடு கொண்டிருக்கிறார். எனவே, ஒருவர் தன் விசுவாசத்தால் வெட்கத்திலி ருந்து முழுமையாக விடுதலை பெறுகிறார். எனவே, இயேசு கிறிஸ்துவின் மேலுள்ள விசுவாசத்தால் வெட்கம் தூர எறியப் பட்டது. ''என்ன நேரிடினும் நான் நிலை குலைய மாட்டேன்; துணிவை இழக்கமாட் டேன்..... என்னால் கிறிஸ்துவின் புகழ் விளங்கும். இதுவே என் பேராவல். இதுவே என் நம்பிக்கை'' (பிலி 1:20). உண்மையில் இயேசுவே முதன்முதலில் வெட்கத்தைப் பொருட்படுத்தவில்லை (எபி 12:2).

**2. சகோதர அன்பினால் வெல்லலாம்:** பவுல் பல சமூக எதிர்ப்புகளுக்கும், துயரங்க ளுக்கும், இழிவுபடுத்துதல்களுக்கும் ஆளா கியிருந்தாலும் அவர் பலரது சகோதர அன்பின் ஆதரவினால் நாணமுறவில்லை;

எனவே, சிலரால் ஒதுக்கப்பட்டாலும், பலரால் ஏற்றுக்கொள்ளப்பட்டார் (கலா 4:14). திருச்சபை என்னும் உடலில் எந்த ஓர் உறுப்பும் மற்றொரு உறுப்பை நினைத்து வெட்கமுறக்கூடாது (1 கொரி 12:23). கிறிஸ்து நம்மைச் சகோதரர்களாக ஏற்றுக் கொள்வதை வெட்கத்துக்குரியதொன்றாகக் கருதவில்லை (எபி 2:11). இதுதான் அன்பின் உண்மையான அடிப்படைப்பொருள். அன்பினால் அனைவரையும் ஒரே மன நிலையில் ஏற்றுக்கொள்ளும்போது வெட்கத்திற்கு இடமில்லை.

## வெட்டுக்கிளி (LOCUST)

இஃது இறக்கையுள்ள பூச்சிவகைகளுள் ஒன்று. இது தத்திச் செல்லும். இதுவும் தத்துக்கிளியும் ஒன்றுக்குப் பதிலாக மற்றது பயன்படும். இறக்கையுள்ள பூச்சிவகைகளில் தத்திச் செல்லும் பூச்சிகள் மட்டுமே சுத்த உணவாக மோசேயின் சட்டம் அனுமதிக்கிறது (லேவி 11:20-23). திருமுழுக்கு யோவான் ''வெட்டுக்கிளியையும் காட்டுத் தேனையும்'' உண்டு வந்தார் (மத் 3:4; மாற் 1:6). இரண்டும் யூதேயாப் பாலைவனத்தில் எளிதாகக் கிடைத்தன. வெட்டுக்கிளிக் கூட்டத்தின் படையெடுப்பு யோவே 1:2-2:11-இல் விரிவாகச் சித்திரிக்கப்படுகிறது. இப்பூச்சியின் வளரும் பல கட்டங்கள் 1:4-இல் விவரிக்கப்படுகின்றன (2:25). மற்றப் பகுதிகளில் வருவது போல் (உப 28:38.42; 2 நாள் 7:13; ஆமோ 4:9; 7:1), வெட்டுக்கிளிகளால் விவசாயம் அழிக்கப்படுவது இறைவனது தீர்ப்பாகக் கருதப்படுகிறது. எகிப்தில், எட்டாவது வாதையாக, வெட்டுக்கிளிகள் வயல்களையும் திராட்சைத் தோட்டங்களையும் அழித்தன (யாத் 10:1-20; சங் 78:46; 105:34).

உருவகமாக, பெரும் எண்ணிக்கையைக் குறிக்கவும் (நீதி 6:5; 7:12; எரே 46:23; 51:14), பேராவலையும் பாய்ந்து தாக்குவதைக் குறிக்கவும் (எசா 33:4), ஒழுங்கு முறைப்படி செயல்படுவதைக் குறிக்கவும் (பழ 30:27) வெட்டுக்கிளிகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. தாவும் குதிரை வெட்டுக்கிளிக்கு ஒப்பிடப்படுகிறது (யோபு 39:20). நாகூ 3:15-17-இல், அழிவிற்கும் பெருகுதலுக்கும் (3:15), இன்னல் வரும்போது தப்பி மறைந்துபோகும் தலைவர்களுக்கும் (3:16-17) வெட்டுக்கிளி ஒப்புமையாக்கப்படுகிறது. திருவெளி 8:6-9:21-இல் இறுதிக்காலப் பேரழிவுகளில் ஒன்று வெட்டுக்கிளிகளாகும். இவை தாவரங்களைத் தாக்குவதில்லை; மனிதர்களைத் தாக்குகின்றன (9:3-11). இவை மனிதப் படையை உருவகமாக எடுத்துக் காட்டலாம்.

## வெண்கலக்கடல் (BRONZE SEA)

காண்க. வார்ப்புக்கடல்.

## வெண்கல நீர்த்தொட்டி (BRONZE LAVER)

இது சந்திப்புக் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் இடையில் அமைக்கப்பட்டிருந்த தண்ணீர்த் தொட்டியாகும் (யாத் 40:30). பீடத்தில் பலியிடும் முன், குருக்களும் பெரிய குருவும் தங்கள் கைகளையும் கால்களையும் இத்தொட்டியில் கழுவ வேண்டும் (30:17-21). இது சந்திப்புக்கூடார நுழைவாயிலில் பணியாற்றும் பெண்கள் கொண்டு வந்த வெண்கலத்தால் செய்யப்பட்டது (38:8). சாலமோன் ஆலயத்தில், இந்த நீர்த்தொட்டிக்குப் பதிலாக வார்ப்புக் கடல் தகனப்பலி பீடத்துக்கு அருகில் அமைக்கப்பட்டது (1 அர 7:23-26. 39; 2 நாள் 4:2-5.10). செருபாபேல் கட்டிய ஆலயத்தில் இத்தொட்டி அமைக்கப்பட்டது (1 மக் 4:49).

## வெண்கலப்பாம்பு (BRONZE SERPENT)

பாலைவனத்தில் தமக்கும் மோசேக்கும் எதிராக முணுமுணுத்த மக்களை இறைவன் பாம்புகளை அனுப்பித் தண்டித்தார். அவர்கள் துயருற்று மனம் மாறி அழுதபோது இறைவன் மோசேயிடம் கூறியவாறு அவரால் செய்யப்பட்டதே இவ்வெண்கலப் பாம்பு.

பாம்பைக் கண்டு ஏற்படும் பயம் பிறரால் அறிவுறுத்தப்பட்ட பிறகுதான் ஏற்பட வேண்டுமென்பதில்லை. அதனை முன்பின் பார்த்திராத அல்லது கேள்விப்பட்டிராதவர்

கள் கூட முதன்முதலில் அதனைப் பார்க்கும் பொழுது பயப்படுவார்கள். இதனால்தான் பழங்கால மக்கள் இதனைத் தெய்வமாக வழிபட்டனர். எபிரேய மக்களும் இதற்கு விதிவிலக்கல்லர். அவ்வாறு பாம்பு வழி பாடு தோன்றியதற்குப் பாலைவன நிகழ்ச்சி யில் அவர்கள் பயன்படுத்திய கதையாகவும் இருக்கலாம். பிற்காலத்தில் ஒபயிட்டு என்ற கிறிஸ்தவப் பிரிவினர் பாம்புகளை வழிபட்டனர். இக்கதை மேற்காசியப் புராணங்களி லிருந்து தோன்றியிருக்கலாம். ஏனெனில், அப்பகுதிகளில் மந்திர தந்திரங்களும், அதன் விளைவான திடீர்ச் சுகங்களும் பரவியிருந்தன. ஆனால், விவிலியத் தொகுப்பாசிரியர் இதனை இறைவனில் கொண்டுள்ள விசுவாசத்தின் முக்கியத்து வத்தை வலியுறுத்தவே கூறுகிறார். வல் லமை பாம்பிடமிருந்து அன்று கடவுளிடமி ருந்துதான் வந்தது என்பதை வலியுறுத்தவே விரும்புகிறார். இயேசுவும் தனது வரவிருக் கும் அனுபவத்தை இதனோடு இணைத்துக் கூறுகிறார் (*யோவா 3:14*). எபிரேயர்கள் எசேக்கியாவின் காலம் வரை பாம்பு வழிபாட்டைக் கைக்கொண்டனர் (*2 அர 18:4*) என்பதன் மூலம் தற்காலிகமாக ஒரு நேரத்தில் மட்டும் ஏற்பட்ட சுகத்திற்காக வழிபட்டதாகக் கூறமுடியாது.

பொதுவாக, தீமைக்கும் அழிவுக்கும் அடையாளமாக பாம்பு கூறப்பட்டாலும் அது சுகத்திற்கும், மறுபிறப்பிற்கும் அடை யாளமாகவும் இருக்கிறது. இன்று கூட, பல மருத்துவக் கருவிகளில் பாம்பு அடையாளம் இருப்பதைக் காணலாம். பாம்பு உருவம் மெர்க்குரியின் (கிரேக்கக்கடவுள்) தூதர் கையில் உள்ள கோலைச்சுற்றி அமைந் துள்ளது.

### வெண்கலம் (BRONZE)

இது செம்பும் வெள்ளீயமும் (தகரம்) சேர்ந்த உலோகக் கலப்பாகும். இச்சொல் செம்பும் ஈயமும் சேர்ந்த உலோகக் கலவை யையும், நீலங்கலந்த வெண்மை நிற உலோகத்தையும், மற்ற உலோகங்களையும் குறிக்கப் பயன்பட்டுள்ளது. இது பித்தளை என்றும் குறிப்பிடப்படுகிறது.

வெண்கலம், மெசபொத்தாமியாவில் கி.மு. 4-ஆம் ஆயிரம் ஆண்டுக் காலத்திலி ருந்தே பயன்படுத்தப்பட்டுள்ளது. வெண் கலக்காலம் பாலஸ்தீனத்தில் கி.மு. 3200-ஐ ஒட்டித் தொடங்கியது. இந்தத் தொல் பொருள் காலம், தொடக்க வெண்கலக் காலம் (*3200-2100*), மத்திய வெண்கலக் காலம் (*2100-1550*), பிந்தைய வெண்கலக் காலம் (*1550-1220*) என்று மூன்று அடிப் படைக் காலப்பிரிவாகப் பிரிக்கப்படுகிறது. இக்காலங்களில் கல் அல்லது இரும்பை விட வெண்கலம் அதிகமாகப் பயன்பட் டுள்ளது. ஆபிரகாம் பாலஸ்தீனத்திற்கு வந்த தும் குல மூதாதையர்களின் செயல்கள் மத்திய வெண்கலக் காலத்தைச் சேர்ந்ததாக வும், பாலஸ்தீனத்தைக் கைப்பற்றியது பிந் தைய வெண்கலக்காலத்தைச் சேர்ந்ததாக வும் கருதப்படுகிறது. பாலஸ்தீனத்தில், பிந்தைய வெண்கலக்காலம் வரை வெண் கலம் பொதுவான உலோகமாகப் பயன் படுத்தப்படவில்லை.

சாலமோன் ஆலயத்தில், அலங்காரப் பொருட்கள் செய்ய வெண்கலம் தாராள மாகப் பயன்பட்டுள்ளது (*1 அர 7:13-47; 2 நாள் 4:1-18*). புதைபொருள் ஆய்வுகள் பல்வகைப்பட்ட கருவிகள், ஆயுதங்கள், விளக்குகள், ஆணிகள், ஆபரணப் பொருள் களைக் கண்டெடுத்துள்ளன. போரில் கொள்ளையடிக்கப்பட்ட பொருள்களில் வெண்கலமும் செம்பும் பொதுவான பொருட்களாகும் (*2 அர 25:13-17; எரே 52:17-23; காண்க. 2 சாமு 8:8*).

### வெண்ணீலக்கல் (PORPHYRY)

இஃது ஓர் வெண்ணீலப் பாறை வகையைச் சேர்ந்த கல். இது மெருகேற்றப் பெற்று மண்டபங்களிலும் பயன்படுத்தப் பட்டது (*எஸ் 1:6*). இது பல்வண்ண ஒட்டுத்தளத்தின் அமைப்பின் கூறுகளில் ஒன்றாகும். பாரசீகத் தலைநகரான சூசாவில் அமைந்த அரண்மனையின் முற்றத்தில் இத் தகைய விலையுயர்ந்த அழகிய கற்கள் பதிக்கப்பட்டிருந்தன (*எஸ் 1:6*).

**வெண்மை** (WHITE)

*1.* விவிலிய உலகத்திலே வெள்ளை நிறம் மனிதனின் மகிழ்ச்சியையும், விழாக்களையும் குறிப்பதாக வருகிறது. இது கபடற்ற தன்மை, மகிழ்ச்சி, தூய்மை, போன்ற குணங்களைப் பிரதிபலிப்பதாகவும், வியப்பைத் தூண்டுவதாகவும் அமைகிறது. ஒளியின் நிறமாகவும் வாழ்வின் நிறமாகவும் விளங்கும் வெள்ளை இருள், துயரம் இவற்றின் நிறமான கறுப்பு நிறத்திற்கு எதிரானதாக இருக்கிறது. விவிலியம் இந்தப் பல்வேறு பொருள்களில் வெண்மையைப் பயன்படுத்துவதோடு (திருவுரை *9:8*; சீரா *43:18*) ஒரு புதிய பரிணாமத்தையும் வெள்ளை நிறத்திற்குக் கொடுக்கிறது. அஃது இறுதிக்காலத் தன்மையாகும். வெள்ளைநிறம் ஆண்டவரின் மகிமையில் பங்கு பெறுபவர்களோடு தொடர்புடையதாகக் காட்டுகிறது.

***2.* விண்ணகத்தைச் சேர்ந்தவர்கள்:** திருவெளிப்பாட்டு நூல் விண்ணக உலகத்தில் உள்ளவற்றைப் பற்றிப் பேசும்போது அடிக்கடி வெண்மை நிறத்தைப் பற்றிப் பேசி அதன் இறுதிக்காலப் பண்பை வெளிக்கொணர்கிறது. கூழாங்கல் (திருவெளி *2:17*), மேகம் (*14:14*), குதிரை (*19:11*), அரியணை (*20:11*) ஆகியவை வெண்மை நிறமுடையனவாக விவரிக்கப்படுகின்றன. வெண்ணாடை உடுத்திய மனிதனாயினும் சரி (எசே *9:2*), கண்ணைப் பறிக்கும் ஒளிவீசும் உடையணிந்த கடவுளின் தூதர்களாகியவான தூதர்களாயினும் சரி (லூக் *24:4*; அ.ப. *10:30*), விண்ணக அவையிலுள்ள 24 மூப்பர்கள் ஆயினும் (திருவெளி *4:4*) மனுமகனாயினும் சரி (*1:13*தொ), ''வெண்பனிபோல ஆடை அணிந்தவரும் தூய பஞ்சுபோல தலைமயிர் உடையவரும்'' (தானி *7:9*) தொன்மை வாய்ந்தவருமானவரால் அறிவிக்கப்பட்ட கிறிஸ்துவாயினும் சரி இந்த விண்ணக உயிர்கள் அனைவருடைய வெண்மை விவிலியம் முழுவதிலும் சிறப்பித்துக் கூறப்படுகிறது.

***3.* உருமாற்றம் பெற்றவர்கள்:** கிறிஸ்துவின் விண்ணக நிறமான வெண்மைநிறம், அவரது மண்ணக வாழ்வில் அவர் உருமாற்றம் அடைந்த நேரத்தைத்தவிர, மற்றநேரங்களில் தோன்றவில்லை. உருமாற்றத்தின் போது, ''அவரது ஆடைகள் இவ்வுலகில் எந்தச் சலவைக்காரரும் வெளுக்க முடியாத அளவுக்கு வெண்மையாயின'' (மாற் *9:3*). இதே போல், தங்கள் பாவங்களிலிருந்து தூய்மைப்படுத்தப்பட்டு (எசா *1:18*; சங் *51:9*), தங்களுடைய உடையைச் செம்மறியின் இரத்தத்தில் தோய்த்துத் தூய்மைப்படுத்திக் கொண்டவர்களுடையவும் (திருவெளி *7:14*), இறைவனின் மகிமையில் பங்கு கொள்பவர்களாக (*7:9-13*) உருமாற்றம் பெற்றவர்களுடையவும் புனிதர்களுடைய நிறமும் வெண்மைதான். இவர்கள் அனைவரும் வெற்றி பெற்றவரைப் புடைசூழ்ந்து, மகிழ்ச்சியோடு வெற்றிக்கீதம் பாடுவர் (*3:4*தொ). செம்மறியின் மணமகள் ''பகட்டான வெண்மை ஆடை'' உடுத்தியிருந்தாள் (*19:1-14*).

வழிபாட்டில் பொதுவாக வெண்ணிற ஆடையே குருக்கள் அணியும் ஆடையின் நிறமாக இருந்திருக்கிறது (லேவி *6:3*). புதிதாகத் திருமுழுக்குப் பெற்றவரின் மேல் விண்ணக மகிமையைப் பிரதிபலிக்கும் வெண்ணிற ஆடை போர்த்தப்படுகிறது.

**வெப்பக்காற்று** (BLIGHT)

அரேபியப் பாலைவனத்தில் இருந்து வீசும் வெப்பக்காற்று, பாலஸ்தீனத்திற்கு அழிவுதரும் இயற்கைச் சக்திகளில் ஒன்றாகும். இக்காற்று ஒரே நாளில் பூக்களையும், பழங்களையும் உதிர்த்துவிடுவதோடு பயிர்களையும் அழித்துவிடும். *1* அர *8:37*; *2* நாள் *6:28*-இல் கூறப்படும் இயற்கையான சீற்றங்களிலும் இக்காற்று பற்றிக் கூறப்படுகிறது. மேலும் கடவுள் மக்களுக்குக் கொடுத்த தண்டனைகளைப் பற்றிக் கூறும் போதும் (உப *28:22*; ஆமோ *4:9*; ஆகா *2:17*) இது பற்றிச் சொல்லப்படுகிறது.

**வெளிப்பாட்டு இலக்கியம்** (APOCALYPTIC LITERATURE)

I. ***முன்னுரை:***

பொதுவாக வெளிப்பாட்டு இலக்கியம் உலக வரலாற்றுப்போக்கை உருவகமாக விளக்கும் ஒரு யுக்தியாகும். இஃது உலக

A

முடிவை வெளிப்படுத்தும். இது குறிப்பாக, வளர்ச்சியடைந்த இறுதிக்கால இயலைக் கொண்டிருக்கும். அதாவது மரணம், தீர்ப்பு, தண்டனை, சன்மானம், மரணத்துக்குப் பின் வாழ்வு ஆகியவை பற்றிய இறையியலைக் கொண்டிருக்கும் சமயங்களில் காணப்படுகிறது. இந்தியச் சமயங்களில் காணப்படும் இத்தகைய யூகங்கள், ஈரானிய சமயச்சிந்தனைகள் வழியாக இஸ்ராயேலைப் பாதித்திருப்பதாகத் தெரிகிறது. அதன் விளைவுகளைப் பழைய ஏற்பாட்டில் காணலாம். எசேக்கியேல் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட நிலையில் அவரது நூல் எழுதப்பட்டது. எசாயாவின் சில பகுதிகள் இஸ்ராயேல் நாடு கடத்தப்பட்டபோதும் அதற்குப் பின்னும் தோன்றின என்பதை நினைவில் கொண்டிருப்பது நன்று. இந்தக் கட்டுரையில் விவிலியத்தில் காணப்படும் வெளிப்பாட்டு இலக்கியங்களுக்குப் பொது அறிமுகம் வழங்குகிறோம்.

விவிலிய இலக்கிய வரலாற்றில், இறைவாக்குரைத்தல் காலப்போக்கில் மங்கிப்போய், பல புதிய இலக்கிய வடிவங்களுக்கு இடம் அளித்தது. ஒரு புறம், மக்களுக்கு வழிகாட்டுபவர்கள் என்ற அளவில் ஞான இலக்கிய ஆசிரியர்கள் இறைவாக்கினரது பாகத்தை எடுத்துக்கொண்டனர். மறுபுறம், இறைவாக்குகளால் வரும் இறுதிக்காலம் பற்றிய வாக்குகள் பெயர் தெரியாத ஆசிரியர்களிடையே, மரபு அடிப்படைச் சொற்றொடர்களும் தெளிவில்லாத் தன்மையும் கொண்ட நடையில் தன்னிச்சையாக வளர்ந்தன. இந்த வளர்ச்சியும் இரு வடிவம் எடுக்கிறது. ஒன்று மிட்ராஷ் இலக்கியமாகும். மற்றது, இறுதிக்காலம் பற்றிய முந்தைய இறைவாக்கினர்களின் கூற்றுகளும் இறைவாக்குக் காட்சிகளும் இணைந்து, காலப்போக்கில் புதிய இலக்கிய வடிவாகத் தோன்றுகிறது. இது கனவுகளிலும் அடையாளக் காட்சிகளிலும் இறை இரகசியங்களை எடுத்துக்கூறும் வெளிப்பாட்டு இலக்கியமாகும். ஏமாற்றுத் தன்மையுடைய நிகழ்காலத்தின் பொருளை அறியவும், இறைவனது திட்டம் வருங்காலத்தில் எப்படி நிறைவேறும் என்பது பற்றித் தெளிவடையவும் விரும்பிய பக்தியுள்ள யூதர்களின் கடுந்துயர்கள் இந்த இலக்கிய வடிவம் வழியாக வெளிப்படுகின்றன. இந்த இலக்கியம் பழைய ஏற்பாட்டின் இறுதிக் காலத்திலும், புதிய ஏற்பாட்டின் தொடக்க காலத்திலும் வளர்ச்சியுற்றுச் செழித்தோங்கியது.

இறைவாக்கு இலக்கியத்திலிருந்து தோன்றிய மிட்ராசும் வெளிப்பாட்டு இலக்கியங்களும் பழங்கால இலக்கியச் சொற்களைப் பயன்படுத்துதல், அடையாள மொழியியல், கதைகள், நிறைவேற்றுதல் பற்றிய கருத்துக்கள் ஆகியவற்றில் ஒத்திருந்தாலும், மிட்ராஷ் இலக்கியத்தில் காணப்படாத சில பண்புகள் வெளிப்பாட்டு இலக்கியத்தில் வருகின்றன. அவை உலகம் முழுவதையும் உட்படுத்தும் மிகப்பெரும் இறுதிப் போராட்டம், உலகின் இறுதிக்காலம், இறையரசு, புனைபெயர், புராணக் கூறுகள் ஆகியவையாகும்.

இந்தக் கட்டுரையில் சமய, அரசியல் பின்னணியில் வெளிப்பாட்டு இலக்கிய வளர்ச்சி, அதன் பண்புகள் ஆகியவற்றைப் பார்ப்போம்.

II. **பெயர்:** வெளிப்பாட்டு இலக்கியம் என்ற சொல் ''அப்போகலிப்சோஸ் (apocalypsos) என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து வருகிறது. ''அப்போகலுப்டெயின்'' (apokaluptein) என்ற கிரேக்கச் சொல்லுக்குத் ''திரை விலக்குதல்'' அல்லது ''வெளிப்படுத்துதல்'' என்று பொருள் கூறலாம். பழைய ஏற்பாட்டில் இந்தக் கிரேக்கச்சொல் ''காலா'' (gala) என்ற எபிரேயச் சொல்லை மொழி பெயர்க்கிறது. சாதாரணமாய் இவ்வகை இலக்கியத்தில் ஆசிரியரின் கண்களுக்குக் காட்சிகள் வெளிப்படுத்தப்படுகின்றன என்று கொள்ளப்படுவதால், இக்கருத்தை எடுத்துக்கூறும் பொருத்தமான எபிரேயச்சொல் காட்சி என்று பொருள்படும் ''ஹாசியோன்'' (Hazion) என்பதாகும்.தமிழில் இவ்வகை இலக்கியத்தைக் குறிக்க வெளிப்பாட்டு இலக்கியம் அல்லது

காட்சி இலக்கியம் என்ற சொற்றொடர்களைப் பயன்படுத்தலாம். இக்கட்டுரையில் வெளிப்பாட்டு இலக்கியம் என்ற சொற்றொடரையே பயன்படுத்துவோம்.

III. **சமய, அரசியல் பின்னணியில் வெளிப்பாட்டு இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்:** எந்த ஓர் இலக்கிய வடிவின் வளர்ச்சியையும் ஆய்வு செய்ய, அது தோன்றி வளர்ச்சியடைந்த காலத்தைச் சேர்ந்த, அக்காலத்தின் தன்மையை எடுத்துக் காட்டும் தகுந்த, போதிய நூல்களையோ, இலக்கியத் துணுக்குகளையோ கொண்டிருப்பது அவசியமாகும். அண்மைக் காலத்து இலக்கிய வடிவங்களுக்கு இவை எளிதில் கிடைக்கும். ஆனால், பழங்கால இலக்கியங்களுக்கு இவை போதிய அளவு கிடைப்பது அரிது. வெளிப்பாட்டு இலக்கிய வடிவத்தைப் பொருத்த மட்டும் போதிய அளவு நூல்களோ இலக்கியத் துணுக்குகளோ அதிகம் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இஃது ஒரு குறையே. இந்நிலை, இந்த விவிலிய வடிவின் தோற்றம், வளர்ச்சி ஆகியவை பற்றித் தெளிவாகவும் துல்லியமாகவும் எடுத்துரைப்பதைக் கடினமாக்குகிறது. ஆயினும், ஓர் இலக்கிய வடிவின் வளர்ச்சியில் ஏதாவது ஒரு கட்டத்தில் அஃது எப்படியிருந்தது, அதன் பண்புகள் என்ன என்பவை பற்றி ஒரளவு அறியக்கூடுமானால், அது பூவாக வளர்ச்சியுற்றதற்குரிய வித்தை அடையாளம் காட்டலாம். விவிலியத்தின் சில பழங்கால இலக்கிய வடிவங்களைப் பொருத்தமட்டும் அதிகம் போனால் இந்த அளவுதான் செய்ய முடியும். ஆனால் இதுவே போதுமானது.

பின்வரும் பகுதியில், விவிலியத்திலிருந்து வெவ்வேறு காலத்தைச் சேர்ந்த வெளிப்பாட்டு இலக்கியப் பகுதிகளையும் சமய, அரசியல் பின்னணிகளையும் எடுத்துக்கூறுகிறோம். இதிலிருந்து வெளிப்பாட்டு இலக்கியத்தின் முக்கிய கருத்துக்களின் தோற்றம், அதன் பண்புகள் ஆகியவை பற்றி ஓரளவு புரிந்து கொள்ளலாம். இவற்றிலிருந்து இவ்வடிவம் முதிர்ச்சியடைந்த வடிவில் வரும் தானியேல், திருவெளிப்பாடு போன்ற நூல்களை நன்கு புரிந்து கொள்ளலாம். இத்தகைய ஆய்வின் தொகுப்பு விரிவான எடுத்துக்காட்டுகள் இன்மையை ஈடுசெய்ய உதவும் என நம்புகிறோம். இந்த ஆய்வு, இறைவாக்கு இலக்கியத்திலிருந்து வெளிப்பாட்டு இலக்கியம் எப்படித் தோன்றி வளர்ச்சியுற்றது என்றும் காட்டும்.

**1. தொடக்க காலம்:** இக்காலத்திய இலக்கியத்துணுக்குகள் நேரடியாக வெளிப்பாட்டுப் பண்புகளைக் காட்டவில்லை. ஆனால், அவற்றில் காணப்படும் கூறுகள் பிற்காலத்தில் வெளிப்பாட்டு இலக்கியங்களில் எடுத்துக் கையாளப்படும்.

***யாத் 7-12:*** ஒரு பெரும் நெருக்கடியான காலத்தில், புறவின எகிப்தியர்களின் அடக்குமுறை அட்டூழியங்களிலிருந்து இஸ்ராயேலை விடுவிக்க, பெருந்துன்பங்களை எகிப்தியர் மேல் அனுப்பி இறைவன் உறுதியாக இடையீடு செய்தார் என்ற உண்மை, அவரது மக்களின் மீட்புக்குத் தேவையானால் உரிய காலத்தில் அவ்வாறே இறைவன் செய்யக் கூடும் என்ற அனுபவ உணர்வுக்கு இட்டுச் சென்றது. தங்கள் பகைவர்களுக்கு எதிராக இறைவன் தலையிடுவார் என்ற நம்பிக்கை மிக்க எதிர்பார்ப்பை எடுத்துக் கூறமட்டுமன்று, இறைவன் தமக்கு மாறான சக்திகளுக்கு எதிராகச் செய்யும் இடையீட்டை விவரிக்கவும், வெளிப்பாட்டு இலக்கிய ஆசிரியர்கள் இப்பெருந்துன்பங்களை அடிக்கடி பயன்படுத்துகின்றனர் *(உப 28:58-61; எசே 38:21-22; செக் 14:12-15; யோவே 2:2-9; திருவெளி 9:18).*

***யாத் 19:16-19:*** சீனாய் மலையில் நிகழ்ந்த இறையாற்றல் தோற்றத்தோடு நிகழ்ந்த இடி, மின்னல், புயல் மேகங்கள், புகைமண்டலம், எக்காள முழக்கங்கள் போன்றவை, இறைவன் நடுவராக வருவதை விவரிக்க ஒரே தன்மையுடைய ஏதுக்களாகப் பயன்படுகின்றன. இவ்வாறு கவிஞர்களும் *(சங் 18; 50; 76,)* இறைவாக்கி

வர்களும் (*எசா 6; எசே 1; மீக் 1:3-4; செப் 1:14-16; அப 3:3-6*) மட்டுமல்லர், வெளிப்பாட்டு இலக்கிய ஆசிரியர்களும் (*எசே 38:18-23; தானி 7:9-10; திருவெளி 4:4-5*) இவற்றைப் பயன்படுத்துவதைக் காண்கிறோம்.

***உப 28:*** இங்குக் கூறப்படும் ஆசீர்களும் சாபங்களும் வருங்கால இறைவாக்கினர்களுக்கும், வெளிப்பாட்டு ஆசிரியர்களுக்கும் இலக்கியச் சுரங்கங்களாகின்றன. இது போன்ற பகுதிகளிலிருந்து தீயவர்களை, குறிப்பாக இறைவன் தமக்கு எதிரான சக்திகளை, தண்டிப்பார் என்ற உறுதிக்கு வருங்கால ஆசிரியர்கள் வருவதோடல்லாமல், தீயவர்களைத் தண்டிக்க இறைவனது தவிர்க்க முடியாத இடையீட்டின் விளைவுகளை விவரிக்க வேண்டிய மிகவும் உயிர்ச் சித்திரமான மொழியையும் பெறுகின்றனர்.

***2. இறைவாக்கினர் காலம்:*** ஆமோ 5:18-இல் வரும் ''ஆண்டவரின் நாள்'', கி.மு. 712-இல் நடந்த சாமாரியாவின் அழிவை முதன்மையாக உணர்த்தினாலும், யாத்திரைக் காலத்தில் செய்ததுபோல் இக்காலத்திலும் இறைவன் வரலாற்றில் தலையிட்டு அதன் போக்கை மாற்றி அமைப்பார் என்ற உட்பொருளைக் கொண்டுள்ளது. அந்நாளை ''ஒளிமிக்க நாளன்று, இருள் சூழ்ந்த நாளாகத்தான் இருக்கும்'' என்று ஆமோஸ் விவரிக்கிறார். அந்நாளின் பயங்கரத்துக்கு முன் ''கற்குகைகளில் நுழைந்து கொள்ளுங்கள், மண்ணில் பதுங்கி மறைந்து கொள்ளுங்கள்'' என்று எசாயா மக்களை எச்சரிக்கிறார் (*எசா 2:10*). வரலாற்றில் நடக்கும் எந்த ஒரு மாபெரும் இறைவனது இடையீட்டையும், குறிப்பாக இறைவனுக்கு எதிரான தீய சக்திகளின் அழிவையும் இறையரசு நிறுவப்படுதலையும் எடுத்துக் கூற ''ஆண்டவரின் நாள்'' என்ற சொற்றொடர் பிற்காலத்தில் பயன்படுகிறது. அந்நாள் தீயவர்களுக்குப் பெருந்தண்டனையையும் நல்லவர்களுக்கு ஆசீர்களையும் கொண்டு வரும் என்ற பொருளில் பிற்கால வெளிப்பாட்டு ஆசிரியர்கள் இச்சொற்றொடரைப் பயன்படுத்துகின்றனர். இவ்வாறு, இறைவனுக்கு எதிரான சக்திகளின் மிகுந்த ஆற்றலிலிருந்து இறைவன் தமது மக்களை மீட்க அவரது நேரடி இடையீட்டால் மட்டுந்தான் முடியும் என்று தோன்றும் போதெல்லாம் ''ஆண்டவரின் நாளை'' நம்பிக்கையோடு எதிர்பார்ப்பதும், அதன் வருகையை உற்சாகத்தோடு விவரிப்பதும் இறைவாக்கினர்களிலும் (*எசா 2:12-22; 4:2-6; 11:10-16; எரே 4:9-18; 50:27-29; செப் 1:4-18; எசே 30:1-3*), வெளிப்பாட்டு ஆசிரியர்களிலும் (*எசே 38:18-23; 39:11-16; எசா 13:6-22; 24:21-23; 25:9-12; செக் 12:3-9; 13:1-4; 14:1-21; யோவே 1:15; 2:1-2; தானி 7-12;* திருவெளிப்பாட்டு நூலில் ஆண்டவரின் நாள் என்ற கருத்து உள்ளடங்கியுள்ளது) நிலையான இலக்கிய மரபு ஆகிறது என்பதிலிருந்து அறியலாம்.

***எசா 11:*** இது விவிலியத்தில் புகழ்பெற்ற அதிகாரமாகும். ஒருவேளை *11:1-9* முதல் எசாயாவையும், *11:10-16* இரண்டாம் எசாயாவையும் சேர்ந்ததாக இருக்கலாம். இதில் மெசியாவின் வருகையும் ஆதி 2-3-இல் வரும் இன்பவனக் காலம் மீண்டும் வருதலும் ஆண்டவரின் நாள் என்ற கருத்தோடு இணைக்கப்படுகின்றன. இது வருங்காலத்தில் இறைவாக்கு, வெளிப்பாட்டு இலக்கியங்களில் இக்கருத்துக்கள் அடிக்கடி ஒருங்கு சேர்த்து கூறப்படுதலுக்கு வழிவகுக்கிறது (*ஆமோ 9:11-15; எசா 65:17-25; செக் 14:6-11; யோவே 4:17-21; தானி 2:44-45; 7:13-14; 9:24-27; திருவெளி 22*).

***எசா 13:*** இது முதலில் அசீரியர்களுக்கு எதிராகக் கூறப்பட்டதாகும். பிற்காலத்தில் பாபிலோனியர்களுக்கு எதிரான கூற்றாக மாற்றம் அடைந்தது. இதன் தற்போதைய வடிவில் இஸ்ராயேலரைக் கொடுமைப் படுத்தியவர்களுக்கு ''ஆண்டவரின் நாள்'' வருவதை விவரிக்கிறது. அந்நாளின் பயங்கரத் துயரையும் இருளையும் மிகைப்படுத்த, தனது கற்பனையை உண்மையான வெளிப்பாட்டுப் பாணியில் செயல்பட ஆசிரியர் விட்டுவிடுகிறார். ''வானத்து மீன்களும் விண்மீன் கூட்டங்களும் தம் ஒளியை வீசமாட்டா; தோன்றும்போதே கதிரவன்

இருண்டு போவான்; வெண்ணிலவும் தண்ணொளியைப் பரப்பிடாது'' (*எசா 13:10*) என்றும், ''வானத்தை நடுங்கச் செய்வோம், பூமியும் தன்னிலையில் ஆட்டம் கொடுக்கும்'' (*எசா 13:13*) என்றும் இறைவன் கூறுகிறார். இத்தகைய அண்டக் குமுறல்கள் பற்றிய குறிப்புக்கள், சீனாய் மலையின் இறையாற்றல் தோற்றம் பற்றிய உருவகத்தைப் போல், வெளிப்பாட்டு நூல்களில் ஆண்டவரின் பெருநாள் பற்றிய விவரிப்புக்குக் கூடுதல் மேடை ஏதுக்களாகின்றன (*எசா 24:17-23;* யோவே *3:3*தொ; *4:15;* மத் *24:29-31;* திருவெளி *6:12-17*).

**3. நாடு கடத்தப்படுதலுக்கு முந்திய காலம்:** இஃது இஸ்ராயேலின் அரசாட்சியின் இறுதிக்காலமாகும். இப்போது தாவீது அரசனின் ஆற்றல் மிக்க தாக்கமும், சாலமோனின் பொற்கால நம்பிக்கையும் அழிந்து போயின. இக்காலம் இரு பொருள் பொதிந்த நிகழ்ச்சிகளுக்கும் முக்கியமானதாகும்.

**3. அ) எரேமியாவால் உந்தப்பட்டு இறைவாக்குரைத்தல் மீண்டும் உயிர் பெறுதல்:** இதுவரை எசேக்கியாவைத் தவிர மற்ற அரசர்கள் காலத்தில் யாவேக்கு எதிராக யூதாவில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த போக்கை யோசியா அரசன் மாற்றி அமைத்தார். இதற்கு வேண்டிய பக்தியும் துணிவும் கொண்டிருந்தார். மேலும், அவரது ஆட்சியின் ஏழாவது ஆண்டில் பலமிக்க அசீரியப் பேரரசு வீழ்ச்சியுற்று அழிந்தது. மற்றொரு பேரரசு பாபிலோனியாவில் தோன்றியது. இதைத் தக்க சமயமாகக் கருதி, யோசியா அசீரியச் சிலைகளை அகற்றி எருசலேமைச் சுத்தி செய்தார். இச்செயல் அசீரியர்களுக்கு எதிரான சுதந்தர அறிக்கைக்குச் சமமாகும். இஃதோடு, இதுவரை அடக்கி ஒடுக்கப்பட்டிருந்த சுதந்தரக் குரல் பேரரசின் எப்பக்கத்திலும் எழுந்தது.

இப்பேரரசுகளின் வீழ்ச்சியையும், எழுச்சியையும் எரேமியா, செப்பனியா, நாகூம் போன்ற இறைவாக்கினர்களின் போதனைகள் அழுத்தமாக எதிரொலிக்கின்றன. ஆமோஸ் விவரித்த ''ஆண்டவரின் நாள்'' இறைவனது படைப்பு அனைத்தின்மேலும் வரும் அழிவுமிக்க பயங்கரத் தீர்ப்பாக வெளிப்படுகிறது (*செப் 1:2-3*). நன்னம்பிக்கையுடைய நாகூம், இந்நாள் யூதாவுக்கு அமைதியை அறிவிக்கும் நற்செய்தியைக் கொண்டு வருவதாகவும், யூதாவின் எதிரிகளுக்கு முழு அழிவைக் கொண்டு வருவதாகவும் காண்கிறார் (*நாகூ 1:15; 2*). ஆகவே நாடு கடத்தப்படுவதற்கு முன்பே, இறைவன் தமது மக்களிடையிலோ, உலக முழுவதிலுமோ தமது நம்பிக்கைக்கும் வாக்குறுதிகளுக்கும் மாறாக, எழும் எதிர்பார்ப்புகளை முழுவதும் அழிப்பார் என்று இறைவாக்கினர் தெளிவாக அறிவித்தனர். வெளிப்பாட்டு ஆசிரியர்கள் இந்த ''ஆண்டவரின் நாள்'' என்ற கருத்தைப் பயன்படுத்தி அதை இன்றும் கடுமையாகவும் உறுதியோடும் விவரிப்பர்.

இறைவாக்கு இலக்கியத்திலிருந்து வெளிப்பாட்டு இலக்கியத்திற்கு வரும் வரலாற்றில் எரேமியா முக்கியமானவர். அவருடைய போதகம் யூதாவின் பாவங்களின் அண்ட விளைவுகளை அழுத்திக் கூறும் வெளிப்பாட்டு இலக்கியத்திற்குத் தயாரித்தது. ''வானங்களே இதைக் கண்டு வியப்படையுங்கள்; மிகவும் அஞ்சித் திடுக்கிடுங்கள்'' (எரே *2:12*). எரேமியாவில் அண்டத்தையும், இஸ்ராயேலையும் நெருக்கமாக இணைக்கும் மற்ற வாசகங்கள்: எரே *4:23-26; 5:2-23; 9:9; 10:10-13; 27:5-6* என்பன. எரேமியாவின் தனிநபர் பொறுப்புடைமைப் போதகத்தில் புற இனத்தவரும் உள்ளடங்குவர். அவர்களும் இறைவனுக்கு ஏற்புடைய விதத்தில் நடக்கக்கூடும், நடக்க வேண்டும். யாவரையும் உள்ளடக்கும் இந்தப் பொதுமைக் கோட்பாட்டை வெளிப்பாட்டு ஆசிரியர்கள் வேறு கோணத்தில் அணுகுவர். உலகம் முழுவதும் புதிய படைப்பாகிய இறையரசில் ஈடுபட்டிருக்கிறது என்று அழுத்திக் கூறுவர். எரேமியா தனிநபர் பற்றிய தமது போதகத்தை அழுத்திக் கூறும் அதே அதிகாரத்தில் (*31:29-30*) புதிய படைப்பையும் (*31:22*) புதிய உடன்

படிக்கையையும் அறிவிக்கிறார் *(31:32-34)*. தனிநபர் பொறுப்புடைமை, பொதுமைக் கோட்பாடு ஆகிய இரு கருத்துக்களும் எசேக்கியேலிலும் சேர்ந்து காணப்படுகின்றன *(எசே 18:2; 36:26; 37:26)*. நிறைவு பெறாத வாக்குறுதிகளின் தாக்கமும் வெளிப்பாட்டு இலக்கியங்களைப் பாதித்தன. நிறைவுறும் காலம் தள்ளிப் போடப்பட்டபோது வெளிப்பாட்டு ஆசிரியர்கள் இறை இரகசியங்களை ஆழ்ந்து நோக்கி ஆராய்ந்து எடுத்துரைக்க முனைந்தனர்.

**3. ஆ) யோசியாவின் உபாகமச் சீர்திருத்தம்:** இந்த இயக்கம் வெளிப்பாட்டு இலக்கியத்தைப் பெரிதும் பாதித்தது. இதன் பண்புகளாகிய வரலாறு பற்றிய இறையியல், கடந்த காலத்தை நிகழ்கால மெய்ம்மையாகத் தோன்றும்படி விவரித்தல், எருசலேமைச் சார்ந்த சாதோக்கின் குருக்களுக்கு எதிர்ப்பு ஆகிய மூன்றும் வெளிப்பாட்டு இலக்கியங்களில் காணப்படுகின்றன. பாவம் - தண்டனை - மனத்துக்கம் -மீட்பு ஆகியவை அடங்கிய உபாகம வரலாற்று இயல் *(நீதி 2:6-3:6)* வெளிப்பாட்டு நூல்களில் மீண்டும் வருகிறது. பாவமிக்க உலகு அச்சமிக்க இறுதிப் போரில் வெடிக்கிறது. இந்த இறுதிக்காலத் துன்பங்களிலிருந்து திடீரென்று புதிய சகாப்தம் தோன்றுகிறது. ஆசீர்களும் சாபங்களும் அடங்கிய வெளிப்பாட்டு நடை இயேசுவின் இறுதிக்கால உரையிலும் காணப்படுகிறது *(மத் 23-25)*.

கடந்த காலத்தின் மெய்ம்மைத் தோற்றமாக நிகழ்காலத்தை நோக்குவது உபாகமப் பாரம்பரியத்திற்கு விருப்பமானதொன்றாகும். உபாகமம் ஒவ்வொரு தலைமுறையிலும் ஒரேபு மலையின் மோசே உடன்படிக்கையை மீண்டும் நடப்பதாக, மீட்பின் மறைபொருள் மிக்க செயலை விளக்குகிறது *(உப 5:1-5)*. உபாகமம் கடந்த காலத்தை வளைந்து கொடாத சட்டங்களைக் கொண்டதாகவும், ஆனால், பாதுகாப்புக்கும், மகிழ்ச்சிக்கும் நிலையான உதவிகளைக் கொண்டிருப்பதாகவும் நோக்குகிறது *(உப 1:21-31; 4:1-8; 8:1-5)*. இறைவன் அச்சமிக்கவர், அணுக முடியாதவர், அறிய முடியாதவர் *(உப 4:32-36; 5:22-24; 10:14-21)*. ஆனால், அவரது அன்பு, நன்மைத்தன்மை ஆகியவற்றைப் போல் அவரைப் பற்றிய வேறு எதுவும் அவ்வளவு மறைபொருள் மிக்கதன்று *(உப 4:31. 37; 6:4-12; 7:6-9; 10:15)*. வெளிப்பாட்டு நூல்கள் உபாகமத்தில் காணப்படும் மென்மையைக் கொண்டிராமல் இருக்கலாம்; ஆனால், முந்தைய காலத்திய பெரும் மீட்புச் செயல்களைப் புதுப்பிக்கும் இறைவனது வியப்பும் அச்சமும் மிக்க பிரசன்னத்தை அழுத்திக் கூறுகின்றன. அவை தங்கள் விவரிப்பை முழுவதும் பழங்காலப் பெயர்களிலேயே தருகின்றன.

உபாகமச் சீர்திருத்தம் குருக்களின் ஆதிக்கத்திலிருந்து சுதந்தரமானது; அவர்களுக்கு எதிராகவும் உள்ளது. குருக்கள் பழமை விரும்பிகள்; குறுகிய நோக்கமும் உள்ளவர்கள். உபாகமச் சீர்த்திருத்தம் குருத்துவத்தை எல்லா லேவியர்களுக்கும் திறந்துவிட முயன்றது *(உப 18:1-8)*; ஆனால், வெற்றியடையவில்லை *(எசே 4:10 தொ)*. பிற்காலத்தில் வந்த வெளிப்பாட்டு இயக்கம் குருக்களில் தன் தலைமையைக் காணவில்லை. பரிசேயர்கள், கும்ரான் குழுவினர் போன்றவர்கள் சதுசேயக் குருத்துவத்திற்கு எதிராகச் செயல்பட்டனர். இவர்கள் வான தூதர், அண்டம் சார்ந்த போராட்டம், உலகம் மாற்றியமைக்கப்படுதல், உயிர்ப்பு, மரணத்துக்குப் பின் வாழ்வு ஆகியவற்றில் கொண்ட வெளிப்பாட்டு விசுவாசத்தைத் தொடர்ந்தனர்.

நாடு கடத்தப்படுதலுக்கு முந்திய இக்காலம் நெபுகத்னேசரின் படைகள் எருசலேமை அழிப்பதோடு முடிகிறது. இந்தத் துன்பமிக்க நிகழ்ச்சி விவிலியத்தில் வரும் இஸ்ராயேலின் வரலாற்றை இரு பெரும் பிரிவாகப் பிரிப்பனவற்றில் ஒன்றாகும். இதற்கு முன்னும் பின்னும் நடந்தவற்றையெல்லாம் பிரித்து, அவற்றைப் பெரிதும் பாதித்தது.

**4. நாடு கடத்தப்பட்ட காலம்:** நாடு கடத்தப்பட்ட மக்களுக்குத் தோராவும் இறைவாக்கி

னர்களின் அச்சுறுத்தல்களுமே எஞ்சியிருந்தன. அவற்றை நெடுங்காலமாகத் தியானித்தனர். அஃது இயல்பானதும், உண்மைத் தன்மையுடையதாயும், துணிவுடைய எழுச்சியுடையதாயும் இருந்தது. அதை எசேக்கியேலிலும் உப எசாயாவிலும் காணலாம்.

**4. அ) எசேக்கியேல்:** இவரது நூலில் வெளிப்பாட்டு இலக்கியத்தின் தொடக்கக் கூறுகள் ஒருங்கிணைந்து காணப்படுகின்றன. இந்நூல் பின்வரும் காலங்களுக்கு ஒரு மாதிரியாக அமைந்துள்ளது. அவருடைய நடையின் பண்புகள் நம்மை மலைக்கச் செய்யக்கூடியன. அவை அவரது அணுகு முறையின் புதிர்மிக்க தெளிவின்மை, ஒன்றன்மேல் ஒன்றாகக் குவிக்கப்படும் விசித்திரமான புதிர்மிக்க அடையாள உருவகங்கள், விசித்திரமான காட்சிகள், அவற்றை விளக்குவதற்கு வானதூதர்கள் இடையீட்டின் தேவை, முழு அழிவிலிருந்து முழுப்புதுப்பித்தலுக்கு மாறும் பெரும் மாற்றம் ஆகியவையாகும். இவற்றில் வெளிப்பாட்டு நடையின் முக்கிய பண்புகளை நாம் அடையாளம் காணலாம். இறைவாக்கு நூல் வெளிப்பாட்டு நூலாக மாறியதற்கு எசேக்கியேல் நூல் மிகச் சிறந்த மாதிரியாகும்.

எசேக்கியேல் இறைவாக்குகளைப் பேச மட்டும் செய்யவில்லை. அவற்றை அடையாளமாகவும் புதிராகவும் செய்து காட்டினார். அவரது செயல்களில் அவர் ''இஸ்ராயேல் மக்களுக்கு ஓர் அடையாளமாவார்'' (எசே *12:6.11; 4:3; 4:24.27*). அவர் மௌனமாய்ச் செய்கைகளைச் செய்து ''இதுதான் எருசலேம்'' என்று விளக்குவது பயங்கரமாகத் தோன்றவல்லது (எசே *5:5*).

எசேக்கியேலின் வெளிப்பாட்டு நடை அவர் ''அடையாள மனிதன்'' என்பதில் மட்டுமன்று, அவர் ''நூலின் மனிதன்'' என்பதிலும் தெரிகிறது. மிகப் பழங்கால, பரிசுத்தப் பாரம்பரியங்களிலிருந்து எடுக்கப்பட்ட உருவகங்களில் தமது கருத்தை ஒருவிதப் பிடிவாதத்துடன் எடுத்துக் கூறுகிறார். இதற்குச் சான்றுகள்: கெருபீம் (எசே *1:1*; ஆதி *3:24*; யாத் *37:7*), நோவா, தானியேல், யோபு (எசே *14:14; 28:3*; ஆதி *6:9*தொ; எசே *21:32*; ஆதி *49:10*-ஐச் சார்ந்திருப்பது), எசே *27:11-19*-இல் வரும் படைப்புக் கதை (ஆதி *2:4-3:4*), கோகு மாகோகு ஆகியோருக்கு எதிரான இறைவாக்கு (எசே *38-39*; ஆதி *10:2*; எண் *24:7*; ஆமோ *7:1*). இவ்வாறு கடந்த காலத்திலிருந்து எடுக்கப்பட்ட மேடை ஏதுக்களால் நிகழ்காலத்தை விளக்குவது பிற்கால வெளிப்பாட்டு நூல்களில் குறிப்பாக, தானியேல் நூலில் தெளிவாகக் காணப்படும்.

குரு என்ற அளவில் எசேக்கியேல் வருங்கால யூதத்துவத்தில் நிலையான ஆதிக்கம் செலுத்துவார். பழங்கால, பிற்கால வழிபாட்டிலும், வெளிப்பாட்டு இலக்கியங்களிலும் பொதுவாகக் காணப்படும் ஒரு பண்பு யாவேக்கும் அவருடைய உலகளாவிய எதிர்ச் சக்திகளுக்கும் நடக்கும் பெரும் போராகும். இதற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டு எசே *38-89* ஆகும். இப்பகுதியில் நாடு கடத்தப்பட்டோரில் அவநம்பிக்கை கொண்டவர்களுக்கு எசேக்கியேல் இறைவனுக்குச் சார்பான சக்திகளுக்கும் எதிரான சக்திகளுக்கும் இடையே நடக்கும் போரை விவரிக்கிறார். இறைவன் தமது மக்களை அவர்களுடைய பாவங்களுக்காகத் தண்டிப்பதில் பிற இனத்தவரைப் பயன்படுத்துவார் என்று இறை வாக்கினர்கள் (எசாயா, எரேமியா, செப்பனியா, அபக்கூக்கு) முன் அறிவித்திருந்தனர். புற இனத்தவர் இறைவனது பழிதீர்க்கும் கருவி என்ற நிலையைக் கடந்து சென்று, அவரது மக்களை முழுக்க அழிக்க முயலும்போது அவர்கள் செயலளவில் இறைவனது எதிரிகளாகின்றனர். அப்படியாகும்போது அவரது சீற்றத்தின் நாளில் அவர்கள் முழுவதும் அழிக்கப்படுவர் என்று எசேக்கியேல் சுட்டிக்காட்டுகிறார். இதைப் பின்பற்றி, பிற்கால வெளிப்பாட்டு ஆசிரியர்கள், இறுதிக்காலத்தில் இறைவன் தமக்கு எதிரான சக்திகளை அழித்து அவரது அரசை இஸ்ராயேலின் மேல் மட்டுமன்று, எல்லா மனிதர்கள் நடுவிலும் நிறுவுவார் என்று இறைமக்களுக்கு உறுதி அளிக்கின்ற

னர் (எசா 13:4-9; செக் 2:1-4; 12-14; யோவே 4:9-21; தானி 7-12; திருவெளி 13-20).

வழிபாட்டுப் பாடல்களிலும் சடங்குகளி லும் குருக்களால் நடத்தப்பட்டு, யாவே மற்ற நாடுகள் மீதும் அவர்கள் கடவுள்கள் மீதும் இறுதியில் வெற்றி கொள்கிறார் (சங் 7:7-9; 9:5-9; 19; 83; 96). வெளிப்பாட்டு இலக்கியம் நன்மைக்கும் தீமைக்கும் நடக் கும் இறுதிக்காலப் போரை ஒரு வழி பாட்டுச் சடங்கைப்போல் விவரிக்கிறது. இறுதி வெற்றி எருசலேமை மையமாகக் கொண்டுள்ளது (செக் 2:5-27; 4:1-3; 11-14; யோவேல்; யூதித்து). இப்போராட்டத்தில் பிற மக்களின் கடவுள்கள் ஈடுபட்டிருக் கின்றனர். வெளிப்பாட்டு இலக்கியங்கள் இப்போராட்டத்தைப் புராண காவியச் சொற் களில் விவரிக்கின்றன. இந்தப் புராணக் குறிப்புக்களை ஏற்கெனவே சுட்டிக்காட்டி யுள்ளோம். கெரூபீம்கள் (எசே 1-3); இன்பவனக் கருத்து (எசே 28:11-19); தொடக்ககால அசுரர்கள் (எசே 38-39). இறைவாக்கினரும் குருவுமாகிய எசேக்கி யேல் போன்றவர்களின் செல்வாக்கால் தான் நாடுகடத்தலுக்குப்பின் வந்த குறுகிய மனப்பான்மையும் மட்டு மீறிய தன் னாட்டுப் பற்றும் மிகுந்த யூதர்களிடமிருந்து பிறமதக் கதைகளும் குறிப்புகளும் தப்பின (ஆகா 2:10-14; எஸ் 4:1-5; 9-10; யோவே 4).

தோராவில் குருக்கள் பாரம்பரிய வளர்ச்சி யில் எசேக்கியேல் முக்கிய இடம் வகிக்கி றார். இவர் பரிசுத்த சட்டத்தின் (லேவி 17-25) போக்கையும் சொற்றொகுதியையும் ஏற்றுப் பயன்படுத்துவதோடு, அதில் தனது முத்திரையையும் விட்டுச் சென்றுள்ளார் (லேவி 26). இது முக்கியமானதொரு கூறாகும். ஏனெனில், வெளிப்பாட்டு ஆசிரி யர்கள் தோராவை அதிகம் பயன்படுத்தியுள் ளனர். படைப்பு, பெருவெள்ளம் மற்றும் அதையொட்டிய குலமுதியவர்களின் மறை பொருள் மிக்க பெயர்கள், ஏனோக்கு மறைந்து போதல், நாடுகளின் பட்டியல் ஆகியவை அவர்களுக்குப் பிரியமான கதை களாகும். குருக்கள் பாரம்பரியத்தில் காணப் படும் மனுகுலம் முழுவதுடன் இறைவன் செய்யும் உடன்படிக்கை (ஆதி 1:26; 9:1-17) வெளிப்பாட்டு ஆசிரியர்களைப் பெரிதும் பாதித்துள்ளது. அவ்வுடன்படிக்கை இஸ்ரா யேல் வழியாகச் செயல்படுத்தப்படும் (ஆதி 12:1-3).

**எசே 40:3-4:** எசேக்கியேலில் வானதூதர் கள் இறைவனுக்கும் உலகுக்குமிடையில் இடைப்பேச்சாளராகப் பயன்படுகின்றனர். வானதூதுவர்கள் வெளிப்பாட்டு இலக்கியத் தின் மற்றொரு நிலையான மேடை ஏது வாக ஆகிறார்கள் (செக் 1:8 தொ; 2:2; தானி 8:16; 9:21; 10:5; திருவெளி 21:15 தொ).

எசேக்கியேல், இறைவாக்கினர் என்ற அளவில் வெளிப்பாட்டு இலக்கியத்தில் தலை சிறந்த இடம் வகித்தார். ஆனால், குரு என்ற அளவில் அவர் எபிரேய இலக்கியத்தை வேறொரு திக்கில் திசை திருப்பினார். ஒழுக்க வாழ்வு பற்றிய இறைவாக்கினரின் போதகத்தைக் குறைத்து, வழிபாட்டைப் புதுப்பித்தலை அழுத்திக் கூறினார். இறைவன் மேன்மேலும் மகத்து வம் மிக்கவராகவும், யாவற்றையும், கடந்த வராகவும் தோன்றினார். அடையாள முறை, வானதூதர், முடிவுகாலம் நிறை வேறுதல் ஆகியவற்றால் இறைவனது வழி பாடு சூழப்பட்டிருந்தது. இந்த வழி பாட்டுப் பண்புகள் இறைவாக்கு இலக்கி யத்தில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கின; அதை வெளிப்பாட்டு இலக்கியமாக மாற்றி அமைக்க உதவின.

**4. ஆ) எசாயா:** இவர் வெளிப்பாட்டு இலக்கிய வளர்ச்சியில் அதிகம் பங்கு கொள்ளவில்லை என்றாலும், சில வெளிப் பாட்டுப் பண்புகள் இவரது நூலில் காணப் படுகின்றன. உப எசாயாவின்படி, முடிவு காலம் பற்றிய இரகசியங்கள், யாவேயும் அவரது தூதர்களும் அடங்கிய இறை அவையில் முதலில் பேசப்படுகின்றன. பின் அதன் எதிரொலியை இறைவாக்கினர் பூமியில் கேட்கிறார். யாவே தமது மகிமை யில் உன்னதமானவராகவும் ஞானத்தில்

தேடி அடைய முடியாதவராகவும் தோன்றுகிறார் (*எசா 40:12-24; 41:13-14. 29; 42:8*). அவர் வாழ்வை முழுமையாகக் கொண்டு உலகின் எல்லா நிகழ்ச்சிகளின் இரகசியத்தையும் அறிந்திருப்பது மட்டுமன்று, நாடு கடத்தலின் குழப்பத்திற்கும் புதிய படைப்பின் மகிமைக்கும் அவரே பொறுப்பாவார் (*41:4-5.21தொ; 42:9; 43:9-13; 51:9-11*). இறைவாக்கினர், யாவேக்கும் தீய கடவுள்களுக்குமிடையே நடக்கும் போராட்டமாகப் புதுப் படைப்பைப் புராண காவிய மொழியில் விவரிக்கிறார். ஆனால், அவருக்கு இந்தப் போராட்டம் முடிந்து விட்டதொன்றாகும். இக்கடவுள்கள் உதவியற்ற நிலைக்குள்ளாகின்றனர் (*44:9-20; 46:1-2*). இந்தக் கடவுள்களின் தோல்வியின் விளைவுதான், யாவேயின் படைப்பாற்றலை மீண்டும் மீண்டும் வலியுறுத்த ஆசிரியரைக் கட்டாயப்படுத்துகிறது (*40:28; 41:20; 42:5; 45:4-7*).

நாடு கடத்தப்பட்ட காலத்திய வெளிப்பாட்டு இலக்கியத்தின் கூறுகளைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம். பயங்கரமும் நம்பிக்கையும் மிக்கது ஆண்டவரின் நாள். அந்நாள் யூதர்களையும் புற இனத்தவரையும் உள்ளடக்கும். மோசேயின் உடன்படிக்கையை நிறைவு செய்து அதைக் கடந்து செல்லும் புதிய உடன்படிக்கையைப் பற்றிய சாட்சி; உபாகமப் பாரம்பரியத்தில் காணப்படும் வரலாற்றை நிகழ்கால மெய்மையாக்கும் கருத்து; எருசலேம் குருக்கள், அவர்களுடைய தோராவுக்கும் தனியுரிமைக் கோரிக்கைகளுக்கும் எதிரான உபாகமக் கிளர்ச்சி; இரகசிய விண்ணக அவையிலிருந்து பூமிக்கு வந்த எல்லாம் வல்ல வார்த்தையால் செயல்படுத்தப்படும் புதிய படைப்பில் உன்னதராகக்கொண்டு, கடவுள்களுக்கிடையே நடக்கும் போர் பற்றிய காட்சி; இறுதியாக குருவும் இறைவாக்கினருமான எசேக்கியேலின் பெரும் செல்வாக்கு. அடையாளங்களின் மனிதர் என்ற அளவில், எசேக்கியேல் காட்சிகள், அடையாளங்கள் வடிவில் தமது சொற்களை மரபு ஒழுங்கு செய்தார். ''நூலின் மனிதர்'' என்ற அளவில் அவர் யூதத்துவத்தில் ஆதிக்கம் செலுத்திய வழிபாட்டுப் போக்குக்கும் குருக்களின் பாரம்பரியத்திற்கும், ஆர்வமிக்க பிரமாணிக்கத்திற்கும் பொறுப்பானார். இப்பண்புகள் ஏதாவது ஒரு வடிவில் முந்திய இறைவாக்கினர்களின் நூல்களில் காணப்படுகின்றன. இவை யாவும் சேர்ந்து ஓரளவு வெளிப்பாட்டு இலக்கியத்தை விளக்கவல்லன. இவை தனித்தனியாக அன்று, இவையனைத்தின் தனிச்சிறப்பான ஒருங்கிணைப்பு, நாடு கடத்தலால் பாதிக்கப்பட்டுப் புதியதொன்றைப் படைத்தது. விசித்திர அடையாளங்கள், அண்டக் குழப்பங்கள், பழையன புதுப்பிக்கப்படுதல், விரைவில் வரவிருக்கும் இறுதிக்காலம் ஆகியவற்றில் சிறப்பாகக் கவனம் செலுத்தி, நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூதர் சிந்தனைப்போக்கு இக்கூறுகளின் ஒருங்கிணைப்பை மேலும் வலுப்படுத்தியது.

**5. நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின்:** கி.மு. 539-இல் பாபிலோனியப் பேரரசு வீழ்ந்தது; பெர்சியப் பேரரசு தோன்றியது. அதனோடு இஸ்ராயேல் வரலாற்றில் ஒரு புதிய, ஆனால், தெளிவில்லாத அதிகாரம் தொடங்குகிறது. தன்னையே புரிந்து கொள்ளும் முயற்சியில் தன் கடந்த காலத்தை நோக்கும் புதியதோர் சமுதாயம் உண்டாகிறது. ஆனால், அது வருங்காலத்தையும் முன்னோக்குகிறது. இக்காலத்தைப் பாரசீகர் காலம், கிரேக்கர் காலம் என இரு வகையாகப் பிரிக்கலாம்.

இக்காலத்தைச் சேர்ந்த வெளிப்பாட்டு இலக்கியங்களின் சான்றுகளாகப் பின்வரும் சில பகுதிகளைத் தருகிறோம். செக் 1-8:-செக்கரியா, வெளிப்பாட்டு இலக்கியத்தின் அடையாள மொழியைத் தொகுத்துக் குவிக்கிறார். அவற்றில் சில: கொம்புகள் (*செக் 2:1-4*); பழைய ஏற்பாட்டுப் பொது உருவகத்திலிருந்து எடுக்கப்பட்டு (*உப 33:17; 1 அர 22:11*), ஆற்றல், வலிமை, சக்தி ஆகியவற்றை உணர்த்துகின்றன. இது தானியேலிலும் (*7:8; 8:3-8*), யோவானது திருவெளிப்பாட்டிலும் (*12:3; 13:1*) பரவ

லாகப் பயன்படுத்தப்படுகிறது. ஏழு கண்கள் (*செக் 3:9; 4:10*): இது எசேக்கியேலிலிருந்து எடுக்கப்பட்டு (*1:18*) இறைவனது யாவும் அறியும் பண்பை அடையாளமாக உணர்த்துகிறது; மீளவும் தானியேலிலும் (*7:20*), திருவெளிப்பாட்டிலும் (*5:6*) காணப்படுகிறது. குதிரைகளும் வீரர்களும் (*எசே 1:8-17; 6:1-8*): இது வரலாற்றை வழி நடத்துதலில் இறைவனது பராமரிப்பு அக்கறையை அடையாளமாகக் குறிக்கிறது; மீண்டும் திருவெளிப்பாட்டில் (*6:2தொ*) வருகிறது. மரக்காலுக்குள் பெண் (*எசே 5:5-11*): பாபிலோனில் நடப்பட்ட தீமையைக் குறிக்கிறது. அங்குத் தீமைக்கு ஒரு கோவில் கட்டப்பட்டிருந்தது. மீண்டும் திருவெளிப்பாட்டில் பெரிய வேசியாகத் தோன்றுகிறது (*17:5-6*). இறுதியாக இலக்கியக்காட்சியைச் செக்கரியா பயன்படுத்தும் விதம் கவனிக்கற்பாலது (*1:7; 2:1; 2:5*). இஃது ஒருவேளை ஆமோ 7-9-ஐ அடிப்படையாகக் கொண்டதாக இருக்கலாம். அவரது செய்திக்கு நாடகப்பாணியை அளிக்கப் பயன்படுகிறது. இம்முறை தானியேலிலும் (*2:19; 4:7; 7:1; 9:21; 10:7*) திருவெளிப்பாட்டிலும் (*9:17*) பரவலாகப் பயன்பட்டுள்ளது.

**யோபு 1-2:** யோபு நூல் ஒரு வெளிப்பாட்டு நூல் அன்று; ஆனாலும், புனைபெயர் நூலுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். எசேக்கியேலிலிருந்து (*14:14*) தெளிவாவது போல், யோபு இஸ்ரயேலைச் சேராத, புகழ்பெற்ற பழங்கால அறிவர்களுள் ஒருவராவார். ஆசிரியர் யோபுவின் புகழைப் பயன்படுத்தி அவரைத் தமது பேச்சாளராகப் பயன்படுத்துகிறார். புனைபெயர் ஆசிரியரைப் பயன்படுத்துதல் ஞான நூல்களின் மரபு என்று பார்த்துள்ளோம். இந்தப் பழக்கம் வெளிப்பாட்டு ஆசிரியர்களின் உண்மையான பண்பாகிறது. இதற்கு எஸ்ராவின் வெளிப்பாடு, பாரூக்கின் வெளிப்பாடு, மோசே விண்ணேற்பு போன்ற நூல்கள் சான்றாகும். தானியேல் நூலில் வரும் தானியேலும் ஒரு புனைபெயரே என்பது உறுதியாகும்.

**யோவே 3-4:** இந்நூல் தானியேல் நூலுக்கு முன் வாசிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். ஏனெனில், இது பழைய நடை இறைவாக்கு இலக்கியத்திற்கும், புதிய நடை இறைவாக்கு - வெளிப்பாட்டு இலக்கியத்திற்கும் இடைப்பட்டதொன்றாகும். யோவேல் என்ற பெயர் உண்மையானதே, புனைபெயரன்று. அதி 3-4-இல் வெளிப்பாட்டு ஆசிரியர்களின் இலக்கிய, வாழ்க்கைச் சூழ்நிலைகளில் யோவே உலவுகிறார். இப்பகுதியில் ஆசிரியர் வருங்காலத்தை மட்டுமே நோக்குகிறார். மெசியாக் காலத்தில் ஆவியானவர் பொழியப்படும் பழங்கால இறைவாக்குப் போதகத்தை (*எசா 11:12; எரே 24:7; 31:33; 32:40; எசே 36:25-27; 37:14; 39:29; எசா 43:1; 44:3; 54:13; 59:21*) ஆண்டவரின் பெருநாள் சூழ்நிலையில் யோவேல் மீண்டும் எடுத்துக் கூறுகிறார். அண்ட அதிர்வுகளோடு நிகழும் மெசியாத் தன்மையுடைய ''ஆண்டவரின் நாளை'' விவரிக்கிறார் (*யோவே 3:3-4*). அது யோசபாத்துப் பள்ளத்தாக்கில் நாடுகள் தீர்ப்பிடப்பட்டு அழிவதில் உச்சநிலையை அடைகிறது (*4:1-3. 9-16; எசே 38-39; செக் 9:14தொ; 14:1-5*). அதன் விளைவாக இறைமக்கள் உயர்த்தப் பெறுகின்றனர் (*4:17*). மெசியாக் காலம் வருவது இன்பவனக் கதையின் மொழியில் விவரிக்கப்படுகிறது (*1:18-21; ஆமோ 9:11-15; எசா 65:17-25; செக் 14:6-11*). யோவே 3-4 முழுவதும் வெளிப்பாட்டு இலக்கியத்திற்குச் சிறந்த சான்றாகும். அதில் ஆண்டவரின் நாளின் வருகை (*3:1-5*), இறைவனுடையவும் இஸ்ராயேலினுடையவும் எதிரிகள் அழிக்கப்படுதல் (*4:1-16*), இறையரசின் வருகை (*4:17-21*) ஆகியவை விவரிக்கப்படுகின்றன.

தமது காலத்தில் நடந்த ஒரு குறிப்பிட்ட ''ஆண்டவரின் நாளிலிருந்து'' (வெட்டுக்கிளிக் கொள்ளை நோய்) (அதி. 1-2) வெகு சேய்மையில் வரவிருக்கும் மெசியாத் தன்மையுடைய வருங்கால ஆண்டவரது நாளுக்கு ஆசிரியர் கடந்து செல்லுகிறார். அதி. 3-4-க்கு நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் தொடர்ச்சியாக வந்த துன்பங்கள்

காரணமாய் இருக்கலாம். துன்பமும் அவ நம்பிக்கையும் நிறைந்த காலத்தில், மெசி யாத்தன்மையுடைய பழங்கால இறை வாக்குகள், குறிப்பாக இறை ஆவி பொழி யப்படுவது (எசா *11:1-2;* எசே *36:20-29;* யோவே *3:1-2*), இறைவன் தமது அரசுக்கு எதிரான பகைவர்களை வெல்லுதல் (எசே *38-39;* யோவே *4:1-16*), ஆலயத்திலிருந்து புறப்படும் ஆசீர்கள், அருவி (எசே *47:1-2;* யோவே *4:18*) ஆகியவற்றைப் பற்றிய இறைவாக்குகள் நிறைவேறும் காலத்தை எதிர்நோக்க மக்களை உற்சாகப்படுத்துவது ஆசிரியரது நோக்கமாகும். இதில் யோவேல் புதிதாக ஒன்றையும் கூறிவிட வில்லை. ஏற்கெனவே நன்கு நிறுவப்பட்ட இறைவாக்குகளையே மீண்டும் கூறுகிறார். ஆனால், அவற்றைத் துன்பமும் ஐயப்பா டும் மிகுந்த காலத்தில் அவநம்பிக்கைப்பட் டோரை உற்சாகப்படுத்தவும் வலுப்படுத்த வும் மீண்டும் வலியுறுத்துதல் வெளிப் பாட்டு இலக்கியத்தின் பண்பாகும். அதே செய்தியை மிகவும் இயற்கை கடந்த கற்பனை முறையில் தானியேல் நூல் எடுத்துக் கூறும்.

நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின்வந்த இஸ்ராயேலர் வரலாற்றைப் பாரசீகர் காலம், கிரேக்கர் காலம் எனப்பிரிக்கலாம் என்று கூறினோம்.

**5. அ) பாரசீகர் காலம்:** இக்காலத்தின் வெளிப்பாட்டு இலக்கியம் மூன்று கூறு களைக் கொண்டுள்ளது.

**5. அ.1) புறவின எதிர்ப்பு:** நாடு கடத்தப் பட்டுத் திரும்பிய யூத சமூகம் பிற இனத்தவரிடமிருந்து பிரிந்து ஒதுங்கி வாழும் போக்கைக் கொண்டிருந்தது (எஸ் *4:10;* நெகே *13*). இது சிறிது சிறிதாக வளர்ந்து சகிப்புத்தன்மையற்றதாயும் வெறுப்பாகவும் மாறியது. இப்போக்குக்கு மாறாகப் பொதுமைப்பண்பும் பரந்த மனப் பான்மையுமுள்ள யூதர்களும் இருந்தனர். இதற்கு ரூத்து, யோனா போன்ற நூல்கள் சான்றாக உள்ளன. ஆனால், இத்தகை யோரை விட, பிற இனத்தவரை வெறுத்த யூதர்களே அதிகமாய் இருந்தனர். இவர் களின் ஒரு குழுவினர் வெளிப்பாட்டு ஆசிரியர்களாவர்.

இந்தப் போக்குக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் சில: யூதாவில் நிலவிய குறுகிய வரைக்குட்பட்ட வாழ்க்கைமுறை; பிற சமய மரபுகள் இஸ்ராயேலில் புகுந்து விடும் என்ற அச்சம்; கடந்தகாலத் தவறுகள் மீண்டும் நிகழ்ந்து விடக்கூடாதே என்ற எச்சரிக்கைப்போக்கு; புறவினத் தீட்டிலி ருந்து தங்களைத் தூய்மையாகக் காத்துக் கொள்ளும் விருப்பம் (ஆகா *2:10-14;* செக் *5:5-11*).

பாரசீகர்கள் பொதுவாக யூதர்களைத் தய வோடு நடத்தினாலும், சில சமயங்களில் அவர்களுடைய அதிகாரிகள் யூதர்களைக் கொடுமைப்படுத்தினர். இந்த ஆட்சிக்கு எதிராக வன்மைமிக்க கிளர்ச்சிகள் பொங்கி எழுந்தன. இவையே எசே *38-39;* எசா *24-27; 63:1-6;* ஒபதியா; செக் *9-12;* யோவேல் ஆகிய பகுதிகளுக்குப் பின்னணியாயின. வெளிப்பாட்டு ஆசிரியர்களில் கிளர்ச்சி களை ஆதரிக்கும் போக்கு சிறிது சிறிதாக வளர்ச்சியுற்றது. இவர்கள் கிளர்ச்சிகளுக்கு ஆதரவு காட்டியதைவிட, சமயத்திற்காகக் கொடுமைப்படுத்தப்பட்ட காலத்தில் மக் கள் மன உறுதியைக் கடைப்பிடிக்க வேண் டும் என்று போதித்தனர்.

**5. அ. 2) இறைவாக்குரைத்தலின் மறைவு:** இறைவாக்குரைத்தல் மங்கிப்போய் முழுவ தும் மறைந்துபோய் விட்டதாகத் தோன்றி யது. இறைவாக்கு இயக்கம் ஞான இலக் கிய இயக்கம், மிட்ராஷ் இலக்கியம் வெளிப்பாட்டு இலக்கியம் என்ற மூன்று வழிகளில் மாற்று உரு எடுத்தது. முன்னைய இரண்டைப் பற்றி அவை பற்றிய தலைப் பின் கீழ்க் காண்க. இப்போது வெளிப் பாட்டு இலக்கிய இயக்கம் பற்றிச் சுருக்க மாகப் பார்ப்போம்.

இறைவாக்கு இயக்கத்திற்கு ஏற்பட்ட மாற்றத்தை யோவேல் நூல் எடுத்துக் காட்டுகிறது. இந்நூலின் ஆசிரியர் அடிக்கடி முந்திய இறைவாக்கு நூல்களிலிருந்து எடுத்

துக் கூறுகிறார். இவர் சமூக நீதி, திருமணப் பற்றுறுதி, எளிய வாழ்க்கை ஆகியவை பற்றி அதிகம் கூறவில்லை. மாறாக நோன்பு, சாக்குடை தரித்தல், பலிசெலுத்து தல், மன்றாட்டுகள் ஆகியவற்றில் அக்கறை காட்டுகிறார். ஆலயச் சூழ்நிலையில் போதிக்கிறார். இறைவாக்கினர்களுக்குப் பதிலாகக் குருக்களும், மூப்பர்களும் மக்க ளின் தலைவர்களாகத் திகழ்கின்றனர் *(யோவே 1:2-3)*. ஆண்டவரின் அச்சம் தரும் பெருநாளைச் சுற்றி தமது போதகத்தை அமைக்கிறார். அப்போது, ''நிலம் நடுங்கு கிறது; வானம் வெடவெடத்துப் போகிறது'' *(2:10)*. ''மக்கள் ஒருபோதும் அவமானத்திற் குள்ளாக்கப்பட மாட்டார்கள்'' *(2:27)*. ''எல் லார் மேலும் நம் ஆவியைப் பொழிந்திடு வோம்'' *(3:1)*. பரந்த வண்ணக் காட்சியாக இறைவெற்றி நாளை யோவேல் விவரிக்கி றார். அப்போது புவியியல், சமூக, நாட்டுத் தடைகள் எல்லாம் அகற்றப்படும். யோவே லின் ஆலய வழிபாடும் அண்ட இறுதிக் கால இயலும் சீர்திருத்தம், மனத்துக்கம் ஆகியவற்றை மேற்கொள்கின்றன எனலாம்.

இறைவாக்கு இயக்கத்திற்கு ஏற்பட்ட மாற்றத்தை எடுத்துக்காட்டும் மற்றொரு சான்று நாளாகமங்களாகும். இத்தொகுப்பு ஆலயத்திலும் தாவீது அரச மரபிலும் அக்கறை காட்டுகிறது. ஆனால், இஃது ஆர்வம் காட்டும் தாவீது, வரலாற்றில் மடிந்துபோன தாவீது அரசர் அல்லர்; மாறாக, ஆண்டவரின் பெருநாளில் தோன்ற விருக்கும் புதிய தாவீது ஆவார் *(1 நாள் 17:11)*. இத்தொகுப்பு மிட்ராஷ் வெளிப் பாட்டுப் போக்கும், இறைவாக்குத் தன்மை யும் கொண்ட வரலாறு ஆகும்.

**5. அ. 3) இறுதிக்காலம் பற்றிய சங்கீதங் கள்:** *சங் 95-98; 96-98* போன்ற சங்கீதங்கள் யாவேயின் வெற்றியில் வியப்போடும் ஆற்றலோடும் வடிவெடுத்துத் தோன்றும் இறுதிக்காலத்தைப் பாடுகின்றன. தாவீது அரச மரபுக்கு அவ்வளவு முக்கியத்துவம் அளிக்கவில்லை. வெளிப்பாட்டு இலக்கி யம் குருக்களின் செல்வாக்கில் செயல்படு கிறது.

பாரசீகர் காலத்தில் வெளிப்பாட்டு ஆசிரி யர்கள் எசேக்கியேல் காட்டிய மாதிரியைக் கடந்து செல்லவில்லை. ஆனால், இறை வாக்கு இலக்கியம் வெளிப்பாட்டு இலக்கி யமாக மாறியது நிலையானதாகிறது. இறை வாக்குரைத்தல் மரித்து விட்டதென்றே கூற லாம். இந்த உண்மையை உள்ளத்தை அறுக்கும் விதத்தில் முதலாம் மக்கபேயர் நூல் ஏற்றுக்கொள்கிறது *(1 மக் 4:46; 9:27; 14:41; எசே 7:26; புல2:9)*. இப்போது விருத்தசேதனம், ஓய்வு நாள் கடைப் பிடிப்பு, உணவு பற்றிய ஒழுங்குகள், நோன்பு ஆகியவற்றால் யூதர்கள் அடையா ளம் கண்டு கொள்ளப்படுகின்றனர் *(லேவி 17-26; எசா 56:2; 58:1-7; செக் 7:1-6; 8:18-23; எஸ் 10)*. நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூதத்துவத்தின் குறுகிய எல்லைகளை உடைத்து யாவே எருசலேமை உலகத் தலைநகரமாக்குவார் என்றும், தமது ஆவி யைப் பொழிந்து பூமியை ஆட்டம் கொள் ளச்செய்து, கதிரவனை இருளச்செய்து, பழங்கால வாக்குறுதிகளை நிறைவேற்று வார் என்றும் நம்பினர். மிகைப்படுத்தப் பட்ட அடையாளமுறை சாதாரணமாய், குறிப்பாக 1-6-இல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

**5. ஆ) கிரேக்கர் காலம்:** அலக்சாந்தரின் மாபெரும் வெற்றிகள், மலைப்பகுதியில் அமைந்திருந்த சிறிய நாடாகிய யூதாவின் நம்பிக்கைகளையும் மரபுகளையும் அதிகம் பாதிக்கவில்லை. ஆனால், யூதர்கள் தங்க ளுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் நம்பாத, பொறாமைமிக்க, பகைமை பாராட்டும் சதுசேயர், பரிசேயர் என இரு குழுவாகப் பிரிந்தனர். சதுசேயர் எருசலேமைச் சேர்ந்த குருக்கள் குழுவினர். பரிசேயர்கள் பக்தி யுள்ள பொது நிலையினராவர். செக்கரியா *(11:4-17)* குருகுலத் தலைமையைக் கண்ட னம் செய்தார். நமக்கு அவரது மொழி அடையாளத் தன்மையுடையதாயும் அத னால் தெளிவில்லாமலும் இருக்கலாம். ஆனால், அது முதலில் கூறப்பட்டபோது கேட்டவர்களுக்கு, மூடி மழுப்பாது தெளி வோடு இருந்திருக்க வேண்டும். குருக்கள்

பழமை விரும்பிகள்; சட்டத்தை அதன் சொற்பொருளில் ஏற்றுக்கொண்டனர். இவர்கள் எந்தப் புதிய பழக்கத்தையோ, மரபுகளையோ ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கவில்லை. பரிசேயர் ''வாய்மொழித் தோராவுக்கும்'' அதைப் புதிய முறையில் விளக்கிக் காட்டுவதற்கும் கவனமும் மரியாதையும் கொடுத்தனர். குருக்களின் எச்சரிக்கையான போக்கைச் சீராக்கு நூலில் காணலாம். இந்நூல், இறந்தபின் வரும் வினைப்பயன் கோட்பாடு பற்றிய கருத்துக்களைத் தவிர்த்தது; குருத்துவத்தையும் சட்டத்தையும் ஒரே சீராகப் போற்றுகிறது *(சீரா 7:17)*.

மரணத்திற்குப்பின் உடல் உயிர்ப்பு, வினைப்பயன் கோட்பாடு போன்ற புதிய கருத்துக்கள் வெளிப்பாட்டு மிட்ராஷ் இலக்கியங்களில் தோன்றத்தொடங்கின *(2 மக் 7; தானி 12:1-3)*. இக்காலத்தில் யூதர்கள் அன்னியர்பால் அமைதியான, தாராளமிக்க மனப்போக்கைக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது *(செக் 23:38)*. பெலிஸ்தியரையும் ''இறைவனுக்குரிய எஞ்சியோரில்'' ஏற்றுக்கொண்டனர் *(செக் 7)*. அலக்சாந்தரின் மின்னல் தோற்றத்தன்மையுடைய வெற்றிகள், விரைவில் வரும் யாவேயின் இறுதிக் கால நிறைவேறுதலைப் பற்றிச் சிந்திக்க ஆசிரியரை உற்சாகப்படுத்தின. ஒரு வேளை பிற்காலத்தில்தான் புற இனத்தார் பால் பகைமையும் வெறுப்பும் செக்கரியா நூலில் இடம் பெற்றிருக்க வேண்டும் *(செக் 9:3; 11:1-3; 14:12)*. எசேக்கியேலுக்கு ஒரு நூற்றாண்டுக்குப்பின், அவர் ஏற்படுத்திய மாதிரியின் வரையறைகளை உடைத்து, வெளிப்பாட்டு இலக்கியம் யாவும் கடந்த தன்மையுடைய மிகைப்படுத்தப்பட்ட அடையாளமுறையைத் தனது சிறப்புப் பண்பாக்கிக் கொண்டது. தானி 7-12-இல் காணப்படுவது போன்ற உருவக முறையின் வலுவான தாக்கத்தை வன்மைமிக்க சூழ்நிலையில்தான் விளக்க முடியும்.

வெளிப்பாட்டு இலக்கியத்தின் போக்கையும் பண்புகளையும் தானியேல் நூல் செறிவான முறையில் முனைப்பாக வெளிப்படுத்துகிறது. அவை: உலக வாழ்வின் வரம்புகளை உடைத்தெறியும் உருவகம்; வானதூதர் வழியாக விண்ணக உண்மைகளுக்கு விளக்கம் அளித்தல்; மனிதனுக்கு அப்பாற்பட்ட சக்திகளுக்கிடையே நடக்கும் நன்மை தீமைப் போராட்டம்; திடீரென்று வரும் மகிமைமிக்க விடுவிப்பை எதிர்பார்த்தல்; இறையரசின் தோற்றம்; எஸ்ரா காலத்திற்கு முன் வாழ்ந்த ஒருவர் நூலை எழுதியதாகக் கூறும் புனைபெயர் முறை ஆகியவையாகும். இப்புனைபெயர் முறை பற்றி நாம் சிறிது கவனம் செலுத்த வேண்டும். பகைமை பாராட்டும் அதிகாரிகளுக்கு எதிரான எதிர்ப்புப் பிரச்சாரத்தை நூல் கொண்டிருந்தால், ஆசிரியர் புனைபெயரைப் பயன்படுத்துகிறார். இம்முறையைப் பிற்கால ஆசிரியர்களும் பயன்படுத்துவர். இம்முறைக்கு மற்றொரு காரணமும் உண்டு. எஸ்ரா திருத்தி அமைத்த தோராவை மட்டும் எருசலேம் குருக்கள் ஏற்றுக்கொண்டனர். ஆகவே, தோராவில் காணப்படும் பெருந்தலைவர்கள் இந்நூல்களை எழுதியதாகக் காட்டினால், மக்கள் அவற்றை ஏற்றுக்கொள்வர் என்று உண்மையான ஆசிரியர்கள் எண்ணினர்.

மேலும், இறைவாக்குகள் நிறைவேறுவதால் அவை எண்பிக்கப்படும் என்று நாடு கடத்தப்பட்டுத் திரும்பி வந்த யூதர்கள் உறுதியாக நம்பினர். இது பிற்கால யூதத்துவத்தைச் சேர்ந்த உப 18:19-22-இல் தெளிவாகிறது. வெளிப்பாட்டு ஆசிரியர்கள் நிகழ்காலத்தைப் பற்றித்தான் எழுதினர்; ஆனால், இறைவாக்குகள் அல்லது காட்சிகள் வடிவில் எழுதினர். நிகழ்காலத்தைப் பரிசுத்த வரலாற்றுக் கண்ணாடி வழியாக நோக்கி, நிகழ்கால நிகழ்ச்சிகளின் மீட்புப் பொருளைப் புரிந்து கொள்ள முயன்றனர். இஃது உபாகம அணுகுமுறைக்கு ஒத்ததாகும். இம்முறைக்காகவும் புனைபெயர்களை வெளிப்பாட்டு ஆசிரியர்கள் பயன்படுத்தினர்.

தானியேல் நூலின் ஆசிரியர் வெளிப்பாட்டு இலக்கியத்திற்குக் குருக்கள் ஆதிக்கத்திலிருந்து விடுதலை அளித்தார். ஆலயமும் அதன் வழிபாடும் மக்களின் கவனத்

தைத் தொடர்ந்து கவர்ந்தன; அவர்களின் நம்பிக்கையின் மையமாகத் தொடர்ந்து விளங்கின. இக்காலத்திற்குள் எருசலேம் குருக்கள் தீவிரப்பழமை விரும்பிகளாயினர். இக்காலத்தில் தோன்றிய புதிய கருத்துக்களில் பலவற்றை நிராகரித்தனர். தானியேல் காலத்திற்குப்பின் வெளிப்பாட்டு இலக்கியம் குருக்கள் அல்லாதோரிடையே வளர்ந்தோங்கியது. அடையாளமுறை மேன்மேலும் வளமிக்கதாகவும் விசித்திரக் கற்பனை மிக்கதாகவும் மிளிர்ந்தது. பழங் காலத்திலிருந்து எடுக்கப்பட்ட புனைபெயர்கள் பயன்படுத்தப்பட்டன. இம்முறை இறைவாக்குகளுக்கு நிறைவேறுதல் பொருள் அளிக்கவும், அரசியல் அல்லது குருக்களைச் சார்ந்த எதிரிகளிடமிருந்து பதில் தாக்குதலைத் தவிர்க்கவும் பயன் பட்டது.

**6. கிறிஸ்தவத் தொடக்கம்:** இறுதியாக, கி.பி. முதலாம் நூற்றாண்டில் அப்போது தான் தோன்றியிருந்த கிறிஸ்தவத்திலும் வெளிப்பாட்டு இலக்கியம் இடம் பெற்றது. தீவிர யூதவெளிப்பாட்டு ஆசிரியர்கள் கி.பி. *66-70*-இலும், *135*-இலும் நடந்த பெருங் கிளர்ச்சிக்கு வழி வகுத்தனர். இவை பயங்கரத் தோல்விகளுக்கும் அவநம்பிக்கையின் எல்லைக்கும் இட்டுச் சென்றன. இவற்றிற்குப் பிறகு யூதர்கள் யாவேயின் உலகளாவிய அரசு உடனடியாகத் தோன்றும் என்ற நம்பிக்கையையே இழந்தனர், கைவிட்டனர்; சட்டத்தை நுணுக்கமாய்க் கடைப்பிடிப்பதை அடிப்படையாகக் கொண்டு தங்கள் சமயத்தை வளர்த்தனர். கிறிஸ்தவம், தன்னையே கிறிஸ்துவின் இறுதிக்கால வெற்றியாகவும், உலகை ஆவியின் புதிய அரசாக மாற்றியமைப்பதாகவும் கருதியது. புதிய ஏற்பாடு, திருவெளிப்பாட்டு நூலோடு முடிகிறது. இறுதிச் சொற்கள் ''மாரனாத்தா ஆண்டவராகிய இயேசுவே வாரும்'' என்ற நித்திய வெற்றியின் அறைகூவலாகும்.

புதிய ஏற்பாட்டில் காணப்படும் மற்ற வெளிப்பாட்டு இலக்கியப் பகுதிகள் மாற் *13;1* தெச *4:13-5:6;* 2 தெச *1:4-10; 2:1-12;* 2 கொரி *12:1-9;1* பேதுரு *3:19*தொ; 2 பேதுரு *3:10-13;* அ.ப. *10:9-16* ஆகியவையாகும். விவிலிய வெளிப்பாட்டு நூல்களில் வரும் காட்சிகள் இலக்கியக் கட்டுக்கதைகளாக இருக்கலாம். அதனால் அவற்றின் தவறின்மை பாதிக்கப்படவில்லை. இறைவன் அளித்த வெளிப்பாட்டை அதை எடுத்துக் கூறும் முறையிலிருந்து வேறு படுத்திப் புரிந்துகொள்ள வேண்டும். வெளிப்பாட்டுச் செய்தியில் அடங்கியுள்ள உண்மை இரண்டாந்தரச் சூழ்நிலைகளைச் சார்ந்ததன்று.

IV. **இறைவாக்கு, வெளிப்பாட்டு இலக்கியங்களில் வேறுபாடுகள்:** இறைவாக்கு இலக்கியத்திலிருந்து வெளிப்பாட்டு இலக்கியம் வளர்ந்தது என்றால், அதைப் புரிந்து கொள்ள, அஃது இறைவாக்குரைத்தலின் எந்தப் பண்புகளை அழுத்திக்கூறியது அல்லது இன்னும் வளர்த்தது என்றும், எதைக் குறைத்துக்கூறியது அல்லது மங்கிப்போக விட்டுவிட்டது என்றும், தனக்கே உரிய அடையாளத்தைப் பெற எத்தகைய கலப்பு அமைப்பு வடிவம் எடுத்தது என்றும் நிர்ணயிப்பது அவசியமாகும். முதலில் இரண்டிற்குமிடையேயுள்ள மாறுபாடுகளைக் காண்போம்.

இறைவாக்கினர்கள் செயல் வீரர்கள் ஆவர்; தங்கள் காலத்தேவைகளுக்கு ஏற்ற சுயேச்சையான ஆற்றல்மிக்க போதகத்தை அறிவித்தனர். இதற்கு மாறாக, வெளிப்பாட்டு ஆசிரியர்கள் எழுதப்பட்ட சொற்களின் மனிதர்கள் ஆவர்; தங்கள் செய்தியை வேண்டுமென்று செயற்கை முறை விளைவுகளோடு எடுத்துக்கூறினர்.

இறைவாக்கு நூல்கள் வாய்மொழிக் கூற்றுக்களை முதன்மையாகவும், அதிகமாகவும் நிகழ்ச்சியுரைப் பகுதிகளைச் சிறிதளவாகவுமே கொண்டிருந்தன. வெளிப்பாட்டு நூல்கள் பொதுவாக முழுவதுமே நிகழ்ச்சியுரை வடிவில் உள்ளன. இறைவாக்கினர் போதித்தனர் என்றால் வெளிப்பாட்டு ஆசிரியர்கள் படிப்பித்தனர் அல்லது கற்பித்தனர் என்று கூறலாம். இப்பண்பு, வெளிப்பாட்டு

ஆசிரியர்கள் இறைவாக்கினர்களின் வாரிசு ஆனாலும், நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின் வளர்ச்சியுற்றிருந்த உலகச்செயல்களி லும் சட்டத்திலும் புலமை பெற்றிருந்த ஞானநூல் ஆசிரியர்களோடும், அறிவர்க ளோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந் தனர் என்று காட்டுகிறது.

இறைவாக்கினர்கள் பாலஸ்தீன அரசிய லில் தாமே ஈடுபட்டனர். இதற்கு மாறாக, வெளிப்பாட்டு ஆசிரியர்கள் அண்டத்தை நோக்கினர். இறைவாக்கினர்கள் தனிப்பட்ட நிகழ்ச்சிகள் மீது தீர்ப்பாகத் தங்கள் செய் தியை அறிவித்தனர். வெளிப்பாட்டு ஆசிரி யர்களோ, குறிப்பாக தானியேல், உலக வரலாறு முழுமைக்கும் சமய விளக்கம் அளிக்க முயன்றார். இறைவாக்கினர்கள் பொதுவாக யாவே மக்கள் மேல் கொள் ளும் இறையாட்சிக்காகப் போராடினர். தாவீது அரச குடும்பத்திற்கு ஆதரவு அளித் துச் செயலாற்றினார். வெளிப்பாட்டு ஆசிரி யர்களோ யாவேயின் உலகளாவிய ஆட் சியை எதிர்நோக்கினர். தாவீது, மெசியா ஆகியவர்களைப் பற்றிய கவனத்தைக் குறைத்துக் கொண்டே போய், இறுதியில் முழுவதும் கைவிட்டு விட்டனர். இறைவ னது நேரடிச் செயலால்தான் உலகைப் புதிய படைப்பாக மாற்றி அமைக்க முடியும் என்று உறுதியாக நம்பினர். இது வரலாறு பற்றிய வெளிப்பாட்டு நோக்குக்கு இன்றிய மையாததாகும்.

வருங்காலத்தையும் இறுதிக்காலத்தையும் பற்றிப் பேசுவது இறைவாக்கினர்களின் பல கூறுகளில் ஒன்றாகும். ஆனால், இதுவே வெளிப்பாட்டு இலக்கியத்தின் முதன்மை யான பண்பாகும்.

இறைவாக்கினர் சமய, சமூகத் தவறு களைப் பற்றி மழுப்பல் இல்லாமல் பேசி னர்; அரிதாகத்தான் மக்களால் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டனர். வெளிப்பாட்டு ஆசிரியர்களோ காட்சிகளை அடையாள மொழியில் எழுதினர். அவற்றை அவர்களே முழுமையாகப் புரிந்து கொள்ளவில்லை. அவர்களது வாசகர்களை அவை இன்னும் அதிகமாகப் புதிரால் திணறடித்தன. அடை யாளக் காட்சிகளைச் சாதாரணமாய் வான தூதர்கள் விளக்க வேண்டியிருந்தது.

V. **உளவியல் - வரலாற்றுப் பின்னணி:** திருமுறைப் பட்டியலைச் சேர்ந்தவையும் சேராதவையுமான பெரும்பாலான வெளிப் பாட்டு நூல்கள் கி.மு.2 - கி.பி.2-ஆம் நூற்றாண்டுகளுக்கிடையில் எழுதப்பட்ட வையாகும். இவை தோன்ற உளவியல் உந்துகாரணமாயிருந்தவை சமயத்தின் பொருட்டு யூதர்கள் அனுபவித்த கொடுமை களும், கடந்த காலத்தில் இறைவன் அளித்த வாக்குறுதிகள் நம்பத் தகுந்தவை அவை காலப்போக்கில் நிச்சயமாக நிறைவேறும் என்ற உறுதியுமாகும். இவற்றில் ஒன்று அல்லது இரண்டுமே உந்து காரணமாயின.

ஏறக்குறைய எல்லா வெளிப்பாட்டு நூல் களும், அவற்றின் தொடக்க வடிவத்திலும் கூட, பிற இனத்தவர் சமயத்தின் பொருட்டோ அரசியலுக்காகவோ இழைத்த கொடுமைகள் ஏற்படுத்திய விசு வாச நெருக்கடியின் விளைவாகத் தோன்றி யவையாகும். சான்றாக, ஆமோஸ், எசாயா நூல்களில் காணப்படும் தொடக்ககால வெளிப்பாட்டுப் பகுதிகள் அசீரியர்களால் ஏற்பட்ட நெருக்கடிக் காலத்தைச் சேர்ந்த வையாகும். எசேக்கியேல், உப எசாயா ஆகியவை பாபிலோனியாவுக்கு இஸ்ராயே லர் நாடு கடத்தப்பட்ட இருண்ட காலத் தைச் சேர்ந்தவையாகும். செக்கரியா, யோவேல் ஆகியவை நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின் ஏற்பட்ட மயக்க நீக்க காலத்தில் தோன்றியவையாகும். தானி யேல் நூல் நான்காம் அந்தியோக்கு எப்பி பான் ஆட்சியின் கீழ் பிறமதக் கோட்பாடு கள் யூதாவில் பரவிக்கொண்டிருந்த காலத் தைச் சேர்ந்ததாகும். இக்காலத்தில் வேத நூல்களை வைத்திருப்பதுகூட குற்றமாகக் கருதப்பட்டது. உயிருக்கே போராடிக் கொண்டிருந்த யூதத்துவத்தை உலோகாயுத கிரேக்கப் பண்பாடு முழுவதும் அழித்து விட அச்சுறுத்தியது. புதிய ஏற்பாட்டில் திருவெளிப்பாட்டு நூலும் கூட நெருக்கடிக் காலத்தில் தோன்றியதே. அப்போது, நீரோ

வால் தொடங்கப்பட்ட சமயத்தின் பொருட்டு அவனுக்குப் பின்வந்த உரோமைப் பேரரசர்கள் காலத்திலும் கொடுமை தொடர்ந்தது.

வெளிப்பாட்டு இலக்கியங்கள் தோன்றிய காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களி டையே நிலவிய அவல, இழிநிலையும் அவை தோன்றக் காரணமாயிற்று. அவர்கள் அன்னிய ஆதிக்கத்தின் கடுமையான கொடு மைமிக்க அடிமைத்தனத்திற்கு உட்பட்டிருந் தனர். அவர்களது நிகழ்கால நிலைக்கும் அவர்களுடையதாக எதிர்பார்க்கப்பட்ட நற் காலத்திற்குமிடையேயுள்ள வேறுபாட்டை மிகக்கடுமையாக உணர்ந்தனர். எரேமியா தனது முன்னறிவிப்பு நிறைவேறாமை தமது செய்தியின் நம்புதல் தகுதியைப் பாதித்தது என்று புலம்பினார் (எரே 20:7தொ). காலப் போக்கில் இந்த அவல நிலை மக்களின் மனத்தைக் கடினப்படுத்தியது; பலருக்கு இடறலாக அமைந்தது. பாபிலோனியா வுக்கு நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் வந்த இருண்ட காலம் கடந்து போயிற்று. நாடு கடத்தப்பட்டுத் திரும்பி வருதலின் உச்ச நம்பிக்கைகள் நிறைவேறாது கடந்து போயின. ஒன்றும் உண்மையில் மாறிவிட வில்லை. உறுதியளிக்கப்பட்ட மீட்பு நிறை வேறவில்லை. இதைவிட மோசமான நிலை, யூதா மீளவும் அடிமைத்தனத்திற்கு உள்ளாகியதாகும் (2 மக் 3-7). இவை யாவும் பலரது விசுவாசத்தைச் சோதித்தன; அதைத் தகர்த்தெறியும் சூழ்நிலையை உண்டாக்கின.

இந்நிலையில் வழிகாட்ட, உற்சாகமூட்ட, ஆறுதல் அளிக்க இறைவாக்குக் குரல் எழவில்லை. இந்நிலையில் புனைபெயர் நூல் ஆசிரியர்கள் மக்களின் கவனத்தை வருங்காலத்திற்கு, அதுவும் தூர வருங் காலத்திற்குத் திசை திருப்ப முயன்றனர். அப்போது இஸ்ராயேல்தான் தேர்ந்தெடுக் கப்பட்ட இனம் என்ற கதியை அடையும் என்று நம்பினர், படிப்பித்தனர். ஆகவே, மெசியாவின் வெற்றி மிக்க அரசை உயிர்ச் சித்திரமாக வரைவதில் பெருமை கொண்ட னர். அந்த ஆட்சி விரைவில் வரும், திடீ ரென்று வரும். அதில் இறைவனது வாக் குறுதிகள் யாவும் நிறைவேறும். நீதிமான் களின் வெற்றி எல்லாருக்கும் வெளிப் படும். இவை இந்நூல்களின் முக்கிய உந்து காரணமும் நம்பிக்கையும் ஆயின. இந்நூல் கள், தங்களின் தவிர்க்க முடியாத மகிமை மிக்க கதியில் ஆழ்ந்த விசுவாசம் கொள்ள யூதர்களைப் பல வழிகளிலும் தூண்டி எழுப்பின; அவர்களது துன்பங்களில் ஆறு தல் அளித்தன; இறைவாக்குகளின் கோரிக் கையை நிறைவு செய்தன; நீதிமான்களின் துன்பம் என்ற எக்காலமும் தோன்றும் பிரச்சனை, கடந்தகால இறைவாக்குகள் நிறைவேறுமோ என்ற அவநம்பிக்கைப் பிரச்சனை போன்றவற்றை விடுவித்தன; அதே சமயத்தில் தீயோரின் செழிப்பு, தீர்ப்பு, செயல்வினைப்பயன், இறந்தவரின் உயிர்ப்பு ஆகிய இறையியல் பிரச்சனைக ளுக்குத் தெளிவும் அளித்தன.

வெளிப்பாட்டு நூல்களைக் கவனமாய்ப் படித்தால் மேற்கூறப்பட்ட உளவியல் பண் புகளைக் கண்டுணரலாம்.

VI. **வெளிப்பாட்டு இலக்கியப் பண்புகள்:**

***1. அண்டப் போராட்டம், இறுதிக்கால வெற்றி பற்றிய இரகசியம்:*** வெளிப்பாட்டு நூல்களில் பெரும்பாலானவை ''ஆண்டவ ரின் நாள்'' வரும்போது நிகழும் அண்டக் குமுறல்களைக் கற்பனை வளத்துடன் விவ ரிக்கின்றன. உலக வரலாற்றின் இறுதிக்கால மும், உலகப் பேரழிவுகள் பற்றிய விவரிப் புகளும் இருமைத் தன்மையுடையன. அப் போது நன்மை, தீமை ஆகிய இரு பெரும் ஆட்தன்மைப்படுத்தப்பட்ட சக்திகளுக்குள் பெரும் போராட்டம் நிகழும். தீயசக்திகள் எல்லாம் வல்ல இறைவனுடைய சக்திக ளுக்கு எதிராகப் போராடும். இப்போராட் டத்தில் அண்டம் முழுவதும், கீழுலகம், விண்ணுலகம் மற்றும் படைப்புகள் யாவும் பங்கெடுக்கின்றன. ஆகவே, இதை அண் டத்துவைதம் என்று கூறலாம். இந்தப் போராட்டத்தில் இறைவன் முழுக்கட்டுப் பாட்டையும் கொண்டிருக்கிறார். இந்தப் பயங்கர இரத்தக்களரிப் போராட்டத்தில் தீய சக்திகள் இறுதியாகத் தோற்கடிக்கப்படு

கின்றன. இரு சக்திகளும் உருவகமாக விவரிக்கப்படுகின்றன. இவை நிகழ்கால வரலாற்றில் உலகச் சக்திகளாகும். ஆனால், வெளிப்பாட்டு இலக்கியத்தில் உலக முடிவுக்கு முந்திய உலக வரலாற்றின் இறுதிச் சக்திகளாகும். இறுதியில் இறைவன் திடீரென்று தலையிட, நல்ல சக்திகள் வெற்றி பெறுகின்றன. இறையரசு நிறுவப்படுகிறது. இப்போராட்டத்தில் யூதா மெசியாத் தலைவரோடு விவரிக்கப்படுகிறது. அவரோடு உலகை வெற்றி கொள்கிறது.

இந்தப் போராட்டத்தில் இறுதிக்காலக் கூறுகள் இடம் பெறுகின்றன. இதில் இவ்வுலக வரலாற்றைச் சேர்ந்த யுகமும், காலம் கடந்த யுகமும் இடம் பெறுகின்றன. இவ்வுலக வரலாறு இறைவனுடைய கட்டுப்பாட்டில் இருந்தாலும், இறைவனது திட்டம் உறுதியாக நிறைவேறும் என்றாலும், இவ்வுலகில் தீய சக்திகள் கட்டுக் கடங்காமல் ஆதிக்கம் செலுத்துவதாகத் தோன்றும். ஆகவே, உலகம் தீயதும், சீரழிந்து தூய்மை கெட்டதுமாகும். உலக மக்களில் அனேகர் தீயசக்திகளைப் பின்பற்றுவர்; இறைவனுடைய நீதிமான்களைத் துன்புறுத்துவர், கொடுமைப்படுத்துவர், கொல்லவும் செய்வர். நீதிமான்களுக்கு இந்த யுகத்தில் நம்பிக்கையே இருக்காது. ஏனெனில், இந்த யுகம் தீயதுமட்டுமன்று, திருத்தியமைக்கப்படக் கூடாத அளவு தீயதுமாகும். போகப்போக சூழ்நிலை மேலும் சீரழியும். நீதிமான்களுக்கு உதவியேயில்லை என்று தோன்றும்.

மனித வரலாற்றின் இந்த யுகம் தீமையும் சீரழிவும் மிகுந்ததாயும், முன்னேற்றமடையக் கூடாததாயும் மீட்கப் படக்கூடாததாயும் தோன்றினாலும் நீதிமான்களுக்கு ஒரே ஒரு நம்பிக்கையுண்டு. அஃது, இறைவன் தமது பெருநாளில் வலிமையோடும் ஆற்றலோடும் திடீரென்று தலையிட்டு, உலகம் முழுவதும் ஈடுபடும் அண்டப்போராட்டத்தில் தீய சக்திகளின் தலைவனான சாத்தானோடு பொருது, வென்று புதிய, காலம் கடந்த யுகத்தைத் தொடங்கி வைப்பார் என்பதாகும். அதைத் தமது உடனடிக் கட்டுப்பாட்டில் கொண்டிருப்பார். அவரது மெசியாவின் வருகையோடு இறையரசு உறுதியாக நிறுவப்படும். இறைவன் உலகைச் சாத்தானிடம் ஒப்படைத்து விடவில்லை. மனிதன் இறைவனது திருவுளத்தை அறிந்து நடந்தால் இவ்வுலகை முன்னேற்ற முடியும், முன்னேற்ற வேண்டும். இறைவன் மனித வரலாற்றில் அக்கறையற்றவர் அல்லர். அவரே வரலாற்றின் ஆண்டவர். அதன் பொருளற்றதாகத் தோன்றும் நெளிவு சுழிவுகள் வழியாக ஆற்றலோடு ஆட்சி செய்கிறார். இறைவன் நிறுவும் இறுதி அரசு கடந்து போகாதது; ஆனால், முழுவதும் இயற்கை கடந்தது; இவ்வுலகத்தைச் சேராதது *(யோவா 18:36)*. அது மனிதரால் படைக்கப்பட்டதன்று *(தனி 2:45)*, இவ்வுலகைச் சேராதது என்றாலும் அதில் செயல்படுகிறது. நீதிமான்கள் இறைவனுக்குக் காட்டிய பிரமாணிக்கத்தின் சன்மானமாக இறையரசில் மகிழ்ச்சியோடும் பெரும் பேற்றோடும் வாழ்வர்.

இவ்வாறு வெளிப்பாட்டு நூல்களின் நம்பிக்கை இவ்வுலகைச் சேராததாயும் மறு உலகைச் சேர்ந்ததுமாயும் இருக்கிறது. உலக வரலாற்றைச் சேர்ந்த யுகத்தைப் பொருத்த மட்டும் நன்னம்பிக்கையற்றதாகவும் எதிர் கால யுகத்தைப் பொருத்தமட்டும் நன்னம்பிக்கை மிக்கதாயும் இருக்கிறது. வெளிப்பாட்டு ஆசிரியர்களின் உண்மையான கால வரை அவர்களது காலத்தாலும் சிந்தனைப் போக்காலும் பாதிக்கப்பட்டிருக்கலாம். ஆனால், அவர்களுடைய செய்தி இறைவாக்கினர்களுடையதைப் போன்றதே; இயேசுவின் இறையரசு போன்றதே. அதாவது, இவ்வுலகில் ஒளியின் சக்திகளுக்கும் இருளின் சக்திகளுக்கும் போராட்டம் நடந்து கொண்டிருக்கின்றது. அதிலிருந்து இறையரசு வெற்றியொளியோடு வெளிவரும்.

இறைவாக்கினர்கள், தீயவர்களை சூழ் கடிக்கும் இருளாகவும், தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் வெற்றியாகவும் கண்ட ஆண்டவரின் நாளை, வெளிப்பாட்டு ஆசிரியர்கள் இன்னும் அதிக இருள்மிக்கதாகவும், அதன் ஒளி இன்னும் அதிகமாய்க் கண்களைப்

A

பறித்துக் குருடாக்குவதாகவும் கண்டனர். நன்மைக்கும் தீமைக்கும் இறுதிவரை நடக்கும் போராட்டத்தை இறைவாக்கினர்கள் இஸ்ராயேலர்களுக்குள்ளேயே நன்மைக்கும் தீமைக்கும் நடக்கும் போராட்டமாகக் கண்டனர். இப்போராட்டம் வெளிப்பாட்டு ஆசிரியர்களுக்கு அண்டக் குமுறல்களாக மாறியது. துன்பமிக்க நிகழ்காலம் வெற்றி மிக்க வருங்காலத்திற்கு இட்டுச் செல்வதாக இறைவாக்கினர் விவரித்தனர். வெளிப்பாட்டு ஆசிரியர்கள் வானம் திறக்கக் கண்டனர். அவர்களுக்கு எதிர்காலம் நிகழ்காலத்திற்குள் இடிமுழக்கம் செய்கிறது. இறைவாக்கினர் நிகழ்காலத்தில் கவனம் செலுத்தியபோது வெளிப்பாட்டு ஆசிரியர்கள் வருங்காலத்தில் இறைவனது திருவுளம் நிறைவேறுதலையும் அவரது அரசு நிறுவப்படுதலையும் முன்னோக்கினர். ஆனால், அவர்கள் வருங்காலத்தைப் பற்றி மட்டும் பேசவில்லை; வருங்காலத்தை நிகழ்காலத்துக்குரிய திறவுகோலாகவும் எல்லாவற்றிற்கும் விடையாகவும் விவரித்தனர். ஆகவே, வருங்காலத்தை உலக வரலாற்றுச் சூழ்நிலையில் எடுத்துக் கூறினர். இவ்வாறு வெளிப்பாட்டு நூல்கள் இந்த யுகத்தில் தெளிவாகக் காணப்படும் தீமையை விளக்கின; நீதிமான்களின் துன்பம் என்ற பிரச்சனைக்கு ஒரு விடையையும் அளித்தன. ஏனெனில், தீய சக்திகளின் தலைவனான சாத்தான் எப்படியோ இந்த யுகத்தில் ஆதிக்கம் கொண்டுள்ளான். அவனே இந்த யுகத்தின் தீமைக்கும் சீரழிவுக்கும் நீதிமான்கள் அனுபவிக்கும் கொடுமைகளுக்கும் பொறுப்பாவான். ஆயினும், இறைவன் சாத்தானை வெல்வார்; இந்த யுகம் முடிவுக்கு வரும்; எல்லாத் தீமையும் அழிந்து போகும்; புதிய யுகம் தோன்றும்! அதில் இறைவனே ஆட்சி செய்வார். அதில் நீதியும் நன்மையும் நிறைந்திருக்கும்!

இறைவனுக்கு எதிராகத் தீயசக்திகளின் உச்சநிலைப் போராட்டம், அண்டப் பேரழிவுகள், நிகழ்கால வரலாறு பற்றிய உருவகம் ஆகியவை பற்றிய விவரிப்புகளை எசா *13; 24-27;* எசே *38-39;* செப் *1:14-18*-இல் காணலாம். நன்மை-தீமை சக்திகளுக்கிடையே போராட்டம், இறுதிக்காலம், இறையரசு முதலியவை பற்றிய இரகசியங்களை எடுத்துக்கூற வெளிப்பாட்டு ஆசிரியர்கள் காட்சிகள், அடையாளமொழி, வானதூதர், புனைபெயர் ஆகிய யுக்திகளைப் பயன்படுத்துகின்றனர்.

***2. காட்சிகள்:*** வெளிப்பாட்டு நூல்கள் பொதுவாகக் காட்சிகளைக் கொண்டிருப்பதாகக் கருதப்படும். இக்கருத்து எல்லா வெளிப்பாட்டு நூல்களுக்கும் பொருந்தாது. காட்சிகளாய் இல்லாத வெளிப்பாட்டு இலக்கியப் பகுதிகளும் உண்டு (எசா *24-27; 1* கொரி *15:20-29*). வெளிப்பாட்டு நூல்களில் வரும் காட்சிகள் சிக்கல் மிக்க அடையாள மொழிவழி வருங்காலத்தை வெளிப்படுத்தின. காட்சிகள் எப்போதும் விளக்கப்படுவதில்லை. ஆனால், நிகழ்கால வரலாறு போதியமட்டும் தெரிந்தால் அக்காட்சிகளை ஓரளவு விளக்கலாம். காட்சி விவரிப்பில் ஒருவிதத் தெளிவின்மை காணப்படும். அவற்றில் ''...போன்ற ஒருவரை...'', ''...போன்ற உருவம் ஒன்று...'' போன்ற, சொற்றொடர்களைக் காணலாம். சிலசமயம் இக்காட்சிகள் மிக விசித்திரமாகவும், அடையாளத் தன்மையுடையனவாகவும், புதிர் மிக்கனவாயும் இருப்பதுண்டு. ஆகவே, இவற்றை விளக்க வானதூதர்களின் இடையீடு தேவைப்படுவதுண்டு.

இக்காட்சிகள் எந்த அளவுக்கு வெறுமனே இலக்கிய யுக்திகள் என்றும், எந்த அளவுக்கு உண்மையான ஆன்மீக அனுபவத்தை எடுத்துக் கூறுகின்றன என்றும் கூறுவது கடினம். ஆனால், இவை அவநம்பிக்கையால் குழம்பிய மனதின் சீர்கெட்ட கற்பனையின் வெறும் மயக்கத்தோற்றங்களே என்று நாம் கருதினால், நிச்சயமாக நாம் தவறு செய்கிறோம்.

***3. அடையாள மொழி:*** வெளிப்பாட்டு இலக்கியத்தின் முக்கிய பண்புகளில் ஒன்று அடையாள உருவக முறையாகும். ஏறக்குறைய இப்பூமியிலுள்ளதெல்லாம் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. மனித

உடலின் ஒவ்வொரு பாகத்திற்கும் குறியீட்டுப் பொருள் அளிக்கப்படுகிறது. இவ்வாறு கண்கள் அறிவையும், கைகள் ஆற்றலையும், கால்கள் உறுதியையும், நரைமுடி தொல்பழமையையும் - மகத்துவத்தையும், வாய் இறைவாக்கையும் அடையாளமாய் உணர்த்தின. விலங்குகளும் பறவைகளும் அடையாள உருவகமாகப் பயன்பட்டுள்ளன. சிங்கம் அரசத்தன்மையையும், எருமை பலத்தையும், கழுகு விரைவையும், பறவை நாகம் அல்லது கடல் வேதாளம் தீமையையும், செம்மறி பலியையும், கொம்பு வலிமையையும், பறவைகளின் இறக்கை வேகத்தையும் உணர்த்தின. ஆடைகள் புதிய பொருள் பெற்றன. நீண்ட ஆடை குருத்துவத்தையும், முடியோ, மோதிரமோ அரச நிலையையும் உணர்த்தின. வண்ணங்களுக்குப் புதிய பொருள் அளிக்கப்பட்டது. வெள்ளை மகிழ்ச்சியையும் - வெற்றியையும், இரத்தச் சிவப்பு மறைசாட்சித் தன்மையையும், கருஞ்சிவப்பு சொகுசையும் வளமையையும் உணர்த்தின. எண்கள் அவற்றின் சாதாரண மதிப்பைக் கடந்த பொருளில் பயன்பட்டன. இவ்வாறு எண் நான்கு படைக்கப்பட்ட உலகின் மூலைகளையும், ஏழு அல்லது நாற்பது நிறைவையும், பன்னிரண்டு இறைவனின் மக்களையும் அல்லது புதிய இஸ்ராயேலையும், ஆயிரம் ஒரு கூட்டத்தையும் உணர்த்தப் பயன்பட்டன.

இத்தகைய அடையாளமுறை, சமயத்திற்காகக் கொடுமைப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் பகைமைமிக்க அதிகாரிகளின் கவனத்தைத் தவிர்க்க விவேகமிக்க முறையாகும். இஃதோடு அறியாத வருங்காலத்தைப் பற்றிப் பேசும்போது உருவக அடையாள முறை தவிர்க்க முடியாததாகும். மேலும், மறைபொருள் மிக்க இறை உண்மைகளை வெளிப்படுத்த இம்முறை பொருத்தமுடையதாகும்.

**4. வான தூதர்கள்:** வெளிப்பாட்டு நூல்களில் வானதூதர்கள் முக்கியத்துவம் பெறுகின்றனர். பாரசீகத்திலிருந்து வானதூதர் இயல் எபிரேய இலக்கியத்தில் இடம் பெறுவதாகத் தெரிகிறது. விவிலிய வெளிப்பாட்டு நூல்களில் வானதூதர்கள் யாவேயின் தூதர்களும் பணியாளர்களும் ஆவர். யாவேயின் இறை அவையில் வானதூதர்கள் இடம் பெறுகின்றனர்; மனிதர்க்கு இறைவனது செய்தியை அறிவிக்கின்றனர்; மனிதரின் மன்றாட்டுக்களை இறைவன்முன் சமர்ப்பிக்கின்றனர்; மனிதர்க்காகப் பரிந்து பேசுகின்றனர்; இயற்கையின் மேல் ஆதிக்கம் கொண்டுள்ளனர்; நாடுகளைப் பாதுகாக்கின்றனர். வெளிப்பாட்டு நூல்களில் வானதூதர்கள் விண்ணக மறைபொருள்களை வெளிப்படுத்தவும், அவற்றையும் அவை பற்றிய காட்சிகளை விளக்கவும் செயல்படுகின்றனர். வானதூதர்கள் இந்நூல்களில் தோன்றும் வெறும் இலக்கிய யுக்தியா அல்லது இயற்கை கடந்த உயிரினங்களா என்று உறுதியாகக் கூற முடியாது.

**5. புனைபெயர் ஆசிரியர்கள்:** வெளிப்பாட்டு நூல்களில் காணப்படும் மற்றொரு முக்கிய பண்பு நூலில் ஆசிரியருக்குப் புனைபெயர் கொடுப்பதாகும். இந்த மரபு ஞான இலக்கியங்களில் காணப்படுகிறது. இந்த மரபுப்படி, வெளிப்பாட்டு நூல் ஆசிரியர் தன்னை மிகப்பழங்காலத்தைச் சேர்ந்த குலமுதியவராகவோ, இறைவாக்கினராகவோ பாவனை செய்து கொள்வார். ஆசிரியராகக் கருதப்படுபவர் நூலில் இறைவாக்கு உரைக்கப்பட்ட நிகழ்ச்சிக்கு முந்திய வராக, குறிப்பாக எஸ்ரா காலத்திற்கு முந்தியவராக, இருக்க வேண்டும். இப்படிப் புனைபெயரால் குறிக்கப்படுபவர் இஸ்ராயேல் வரலாற்றின் தொடக்கத்திலிருந்து எழுதுவார். இவர் தம் வரலாற்று நோக்கில் இறைவாக்குரைத்து, அவரது காலத்து வரலாற்றை முன்னறிவிப்பாக வெளிப்படுத்தி, அதற்கு மறு விளக்கம் அளித்து, உண்மையான ஆசிரியரது காலத்துக்குப் பொருந்தியதாகக் காட்டுவார்; வருங்காலத்தை விவரிக்க முனைவார்; அது கொண்டிருப்பதாகக் கருதப்படும் இரகசியங்களை வெளிப்படுத்துவார். இத்தகைய முறையால் கடந்தகால இறைவாக்கினர்கள் முன்னறிவித்ததெல்லாம் மெசியாவின் அரசு

நிறுவப்படுதலிலும், தீயசக்திகளின் அழிவிலும் நிறைவேறும் என்று காட்டுவார்.

இந்தப் புனைபெயர் முறை முதலில், மக்களிடையே இந்நூல்கள் மதிப்புடையனவாகவும், அதிகாரமுடையனவாகவும் ஏற்றுக் கொள்ளப்படுவதற்குப் பயன்பட்டது; இரண்டாவது, மறை உண்மைகளை வெளிப்படுத்தும் கருவியாகவும் பயன்பட்டது; மூன்றாவது, காட்சிகளும், புனைபெயர் முறையும் சமயத்திற்காகக் கொடுமைப்படுத்தியவர்களின் கவனத்திலிருந்து தப்பிக்கப் பெரிதும் உதவின. குறிப்பாக, நான்காம் அந்தியோக்கு எப்பிபான் காலத்தில் வெளிப்பாட்டு இலக்கியம் மிகவும் பயனுள்ளதாக இருந்தது. அப்போது யூத சமயநூல்கள் தேடிக் கண்டு பிடிக்கப்பட்டு எரிக்கப்பட்டன (*1மக் 1:56* தொ). அரசனது மேற்பார்வையாளர்கள் யூத சமயத்துக்கு எதிரான சட்டத்தைக் கடுமையாக நிறைவேற்றினர் (*1 மக் 1:51*). காட்சிகள் வடிவிலும் புனைபெயரோடும் எடுத்துக் கூறப்பட்ட இறைசெய்திகளை அவர்களால் எளிதாய்க் கண்டுபிடிக்க முடியவில்லை. நேரடிப் போதகமாகவோ, வரலாற்று நடையிலோ இச்செய்திகள் கூறப்பட்டிருந்தால் அவை ஆசிரியர்களுக்கு மேலும் பல துன்பங்களைக் கொண்டு வந்திருக்கும்.

VII. **குறிக்கோள்:** வெளிப்பாட்டு இலக்கியங்கள் இஸ்ராயேல் வரலாற்றின் இடுக்கண் மிக்க காலங்களில் தோன்றின. அப்போது இறைவாக்குரைத்தல் மங்கிப்போய் மறைந்து போயிற்று. ஆழ்ந்த சமய உணர்வுடைய யூதர்கள் இறைவனது வாக்குறுதிகள் இன்னும் நிறைவேறவில்லை என்பதை உணர்ந்தனர். இறைவனிடமிருந்து அதிகார பூர்வமான செய்தி எதுவும் கிடைப்பதாகத் தெரியவில்லை (*1 மக் 4:46; 9:27; 14:41*). தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பல நூற்றாண்டுகளாக பாபிலோனியர், பாரசீகர், கிரேக்கர், எகிப்தியர், சீரியர்கள், உரோமையர் போன்றவர்களின் ஆட்சியில் அவதியுற்றனர். இந்நிலையில் வெளிப்பாட்டு நூல்கள் தோன்றி மக்களின் கவனத்தை மெசியாவின் மகிழ்ச்சி மிக்க வருங்காலத்தின்பால் செலுத்தின. இறைவன் தமது வாக்குறுதிகளுக்குப் பிரமாணிக்கமாயிருக்கிறார், இருக்க வேண்டும் என்ற ஆழ்ந்த விசுவாசத்தை எடுத்துக் கூறின. இறைவனது உலகளாவிய பராமரிப்பில் அசைக்கமுடியாத விசுவாசம், இந்நூல்களுக்கு உந்துதலாயின. வெளிப்பாட்டு ஆசிரியர்கள் தங்கள் நூல்கள் வழியாக இந்த விசுவாசத்தையும் நம்பிக்கையையும் எடுத்துக் கூறினர்; தங்கள் காலத்து மக்களின் விசுவாசத்தைத் தூண்டியெழுப்பினர்; அவர்களை எச்சரித்தனர்; உற்சாகப்படுத்தினர்; சமய இடுக்கண் மிக்க காலத்திலும் மக்கள் மன உறுதியோடு யாவேக்குப் பிரமாணிக்கமாய் இருக்க வேண்டும் என்று போதித்தனர்.

இந்த அகப் பிரமாணிக்கத்தோடு, வெளிப்பாட்டு நூல்கள் அரசியல் புரட்சிகளையும் கிளர்ச்சிகளையும் தோற்றுவித்தன என்றால் மிகையாகாது. கிரேனியு யூதேயாவில் மக்கட்தொகைக் கணக்கெடுத்த காலத்திலிருந்து யூத மக்களிடையே உரோமை அரசுக்கு எதிரான கிளர்ச்சி தோன்றி வளர்ச்சியடைந்து கி.பி. 66-70-இல் நடந்த போராட்டத்திற்கும் அழிவிற்கும் சில வெளிப்பாட்டு நூல்கள் இட்டுச் சென்றன என்பது உறுதியாகும்.

VIII. **பிற்காலத்தில்:** யூதத்துவத்தின் பிற்காலத்திலும், கிறிஸ்துவத்தின் தொடக்க காலத்திலும், மிகவும் கொடுமைப்படுத்தப்பட்ட திகைப்பு மிக்க கடினமான காலத்திலும் வெளிப்பாட்டு நூல்கள் அதிகம் ஆதிக்கம் செலுத்தின. பொதுவாக ஏழைகளும், வறியவர்களும், கொடுமைப்படுத்தப்பட்டோரும், ஒடுக்கப்பட்டோரும், குறிப்பாகச் சமயத்துக்காகக் கொடுமைப்படுத்தப்பட்டோரும், இந்நூல்களை ஆர்வத்தோடு ஏற்றுக் கொண்டனர். இந்நூல்கள் இத்தகைய சூழ்நிலையில் தோன்றியவைதானே! காலந்தோறும் இந்நூல்கள் மக்களின் கவனத்தைக் கவர்ந்ததற்குக் காரணம், தீமை என்னும் பிரச்சனைக்கு இவை அளிக்கும் சிக்கலில்லாத விளக்கமும் நாடகப்பாணி விடையும் ஆகும். மேலும் நல்ல - தீய சக்திகளுக்கிடையே நடக்கும்

அண்டப் போராட்டத்தில், வாசகர் வெறும் காட்சி காண்பவராக மட்டுமின்றி தாமே ஈடுபட்டிருக்கிறார் என்ற உணர்வு கொள்ள வும் தீமையின் மேல் நன்மை கொள்ளும் வெற்றியில் தாமே பங்கெடுப்பதாக உணரச் செய்யவும் வல்லன. இந்நூல்கள் சமயத்திற் காகக் கொடுமைப்படுத்தப் படுபவர்களின் விசுவாசத்தைப் பலப்படுத்தவல்லன. இறு தியில் இறைவன் தலையிட்டு தமது அரசை உறுதியாக நிறுவுவார். அதில் நீதிமான்கள் இறைவனது மகிழ்ச்சியில் நிறைவெய்துவர் என்ற நம்பிக்கையைத் தூண்டவல்லன.

மேலும், இறைவனது உதவியின்றி மனி தன் தன் மீட்பை அமைத்துக் கொள்ளக் கூடும் என்றும், உலகின் தீமைகளைத் திருத்தி விடக்கூடும் என்றும் எண்ணும் மனித அகந்தைக்கு இந்நூல்கள் ஒரு திருத்த மாக அமைந்துள்ளன. மேலும், மரணத்துக் குப்பின் வாழ்வு, உயிர்ப்பு, தீர்ப்பு, தண் டனை, சன்மானம் முதலியவை பற்றிய கிறிஸ்தவக் கருத்துக்களில் வளர்ச்சியுண் டாக்க இந்த நூல்கள் உதவியுள்ளன. நமது காலத்திய இறையியல் கருத்துக்களை நேர டியாகவோ, மறைமுகமாகவோ இந்நூல்கள் பாதித்துள்ளன. ஆகவே, இந்நூல்களின் அடிப்படைத் தன்மையைப் புரிந்திருப்பது அவசியமாகும்.

## வெளிவேடக்காரன் (HYPOCRITE)

உள்ளொன்று வைத்துப் புறமொன்று கூறும் நெறிகெட்ட மனிதரை வெறுக்கின்ற னர் இறைவாக்கினர் *(எசா 29, 13)*. வெளிவேடம் புனைந்து கபட நாடகமாடும் பொல்லாத மனிதரைக் கயவர் எனக் கடிந்துரைக்கின்றனர் ஞானிகள் *(சீரா 1:28தொ; 32:15; 36:22)*. அவர்தம் வழிவந்த கிறிஸ்துவும் தம்முடைய சமுதாயத்திலே புரையோடிக் கிடக்கும் போலி வாழ்வை அம்பலப்படுத்துகிறார்; குறிப்பாக, அறிஞர் என்று பெயர் எடுத்து, சட்டத்தின் காவலர் எனக் கூறிக்கொண்டு, பயிரை மேயும் வேலியாய் அமைந்த பரிசேயர்களின் முக மூடியைக் கிழித்தெறிகின்றார்; ''வெளி வேடக்கார மறைநூல் அறிஞரே,'' ''குருட் டுப் பரிசேயரே'' என அவர்களைக் கண்டு சீறி எழுகின்றார் *(மத் 23:25-26)*. இந்த இரு பட்டங்களும் அவர்களுக்குச் சரியாகப் பொருந்துகின்றன. வெளிவேடக்காரன் மற் றவரை ஏமாற்ற முயற்சி செய்கிறான்; அந்த முயற்சியில் தன்னையே ஏமாற்றிக் கொள் ளுகிறான். தன்னை ஏமாற்றிக் கொள்ளும் போது உண்மையை உணர இயலாத, ஒளியைக் காண இயலாத குருடனாகிறான்.

***1. வெளி வேடக்காரரின் ஆசாரங்கள்:*** சமய வெளிவேடம் புனைகின்றவர் வெறும் பொய்யர் மட்டுமல்லர்; பெரும் ஏமாற்றுப் பேர்வழிகள். இவர்கள் நற்செயல்களை எளிய உள்ளத்துடன் செய்யாமல், மற்றவ ரின் நன்மதிப்பைப் பெறுவதற்கென்றே செய்கின்றனர். இறைவனுக்குத் திருத் தொண்டு புரிவதாக எடுத்துரைக்கின்றனர்; ஆனால், பிறர் பார்க்க, பிறர் போற்ற தம் பெயர் விளங்கச் செய்கின்றனர். பிச்சை இடுதல், செபம், நோன்பு ஆகிய நற்செயல் கள் பிறர் கவனத்தைக் கவரும் நோக்கில் செய்யப்படும்போது, வெறும் ஏமாற்று வித்தைகளாய் மாறிவிடுகின்றன *(மத் 6:2.5.16; 23:5)*. உள்ளத்திற்கும் உதட்டிற்கும் உள்ள இடைவெளி விரிவடையும்போது, தங்கள் கயமையை மறைக்கத் தந்திரமாகச் செயல்படுகின்றனர். கண்ணி வைத்து இயேசு வைப் பிடிக்க நினைக்கின்றனர்; சட்டம் பற்றிக் கேள்விக்கணை தொடுத்து அவரை வீழ்த்தப் பார்க்கின்றனர் *(மத் 22:18;* காண்க. எரே *18:18)*. தங்களுக்கு நேரிடும் அவமா னத்திலிருந்து தப்பித்துக்கொள்ள சட்டத் தைத் தங்களுக்குச் சாதகமாகத் திரித்துக் கூறுகின்றனர். தங்களுக்குப் பெருமையளிக் கும் சட்டத்தையே வலியுறுத்துகின்றனர். குருட்டு வழி காட்டிகள் அவர்கள்; கொசுவை வடிகட்டி, ஒட்டகத்தை விழுங்கு கின்றனர் *(மத் 23:24)*. கிண்ணத்தின் வெளிப் புறத்தைத் தூய்மையாக்குகின்றனர்; ஆனால், துர்நாற்றமெடுக்கும் உட்புறத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை *(23:25)*. ''வெளிவேடக்காரரே, உங்களைப் பற்றிப் பொருத்தமாகவே எசாயா இறைவாக்கு உரைத்திருக்கிறார். அவர், இம்மக்கள் உதட்டினால் என்னைப் போற்றுகின்றனர்.

இவர்கள் உள்ளமோ என்னை விட்டு வெகு தொலைவில் இருக்கின்றது'' (மத் 15:7) என்கிறார்.

**2. தம்மையே ஏமாற்றும் குருடர்:** வெறும் ஆசாரங்களை மட்டும் நாடுகின்றவர்களை மாற்றிவிடலாம்; ஆனால், அந்த ஆசாரங்களுக்கு அடிமையாகி, அவற்றைத் தங்களுடைய குற்றங்களை மூடி மறைக்கும் போர்வைகளாகப் பயன்படுத்தும் வெளிவேடக்காரருடைய இதயம் நாளடைவில் இறுகிக் கல்லாகி விடுகின்றது; அவர்களை மாற்றுவது கடினம். அவர்கள் மற்றவர்களை ஏமாற்றுவதற்காக நடிக்கின்றனர்; நாளடைவில் அந்த நடிப்பே உண்மை என்று நம்புகின்றனர். இவர்கள் வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள்; தாங்கள் நீதி வழுவாதவர் என எண்ணி இறுமாந்திருக்கின்றனர் (*காண்க. லூக் 18:9*); எனவே, மனந்திரும்புமாறு இறைவன் விடுக்கும் அழைப்பிற்குச் செவிமடுக்க மறுக்கின்றனர். மேடையிலே வேடம் புனைந்து நடிக்கின்றனர் நடிகர்; ஆனால், இந்த வெளிவேடக்காரரோ வாழ்க்கையை மேடையாக்கித் தொடர்ந்து நடிக்கின்றனர். இவர்கள் உயர்ந்த பதவி வகித்து மக்களும் அவர்களுடைய வாக்கிற்குக் கட்டுப்பட்டு நடக்கும் நிலையில், இவர்களின் வெளிவேடம் இன்னும் அதிகமாகிறது (*மத் 23:2தொ*). குற்றம் கண்டவிடத்து இடித்துரைத்தல் சகோதரனின் கடமைதான்; ஆனால், தன் அயலானின் கண்ணில் காணப்படும் சிறு துரும்பைப் பற்றி எப்பொழுதும் கவலைப்படும் ஒருவன், எவ்வாறு தன் கண்ணின் பார்வையைக் கெடுக்கும் விட்டத்தை அகற்ற முடியும் (*மத் 7:4தொ; 23:3தொ*)? ஆன்மீக வழிகாட்டிகள் நமக்குத் தேவைதான்; ஆனால், அவர்கள் இறைவனின் சட்டங்களுக்குப் பதில் மனிதனின் மரபுகளைப் புகுத்தும்போது அவர்கள் இறைவனின் இடத்தையே பறித்துக்கொள்ளவில்லையா? இவர்கள் மற்றவர்களைத் தாம் வழிநடத்துவதாகக் கற்பனை செய்து கொள்ளும் குருடர்கள் (*மத் 15:3-14*). இவர்களுடைய கொள்கைகள் கெட்டுப்போன புளிப்பு மாவிற்கு ஒப்பானவை (*லூக் 12:1*). இந்தக் குருடர்கள் காலத்தின் குறிகளை அறியும் ஆற்றல் அற்றவர்கள்; அதாவது, இயேசு இறைவனின் தூதுவர் என்பதை உணர இயலாதவர்கள். இவர்கள் வானிலிருந்து அருங்குறி ஒன்றைக் காட்டும்படி கேட்கின்றனர் (*லூக் 12:56; மத் 16:1தொ*). தங்களுடைய கயமைக் கண்களை மறைக்க, இவர்கள் இயேசுவிடம் ஏந்த நன்மையையும் காண மறுக்கின்றனர். ஓய்வுநாள் சட்டங்களின் துணைகொண்டு, அவர் நல்லவை எதுவும் செய்யாதபடி தடுக்கப் பார்க்கின்றனர் (*லூக் 13:15*). உண்மை உரைக்க இயலாக் கறைபடிந்த உள்ளமுடைய அவர்கள், பேய்களின் தலைவனாகிய பெயல்செபூலைக் கொண்டு, இயேசு பேய்களை ஓட்டுகிறார் எனப் பிதற்றும் துணிவு பெற்றிருக்கின்றனர் (*மத் 12:24.34*). இயேசு அவர்களுடைய இதயக் கதவை உடைத்துத் திறக்கிறார்; மற்றவர்கள் முன்னே அவர்கள் வெட்கித் தலைகுனியும்படி செய்கிறார் (*23:1தொ*). அவர்களுடைய பாவ வாழ்க்கையையும், நாற்றமெடுத்த உள்ளத்தையும் அம்பலப் படுத்துகிறார் (*23:27தொ*). தீயவர்களின் கதிக்கு அவர்களைவிட்டுவிடக் கூடாது என்னும் நோக்கிலேயே இவ்வாறு அவர்களைச் சாடுகிறார் (*மத் 24:51; லூக் 12:46*). பழைய ஏற்பாட்டில் காணப்படும் நெறிகெட்டவர், தீயோர் ஆகிய சொற்களையே இங்குக் கிறிஸ்து வெளிவேடக்காரரைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்துகின்றார். உண்மைதான், அவர்கள் கயவர்களின் பாதையிலே அடியெடுத்து வைத்திருக்கின்றனர்! அவர்களைத்தான் யோவானுடைய நற்செய்தி குருடர் எனக் குறிப்பிடுகின்றது. குருடராய் இருந்து கொண்டு, எங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற அகங்காரமே யூதர்களின் பெரும் பாவமாகும் (*யோவா 9:40*).

**3. என்றும் எச்சரிக்கை வேண்டும்:** வெளிவேடம் என்பது பரிசேயரை மட்டும் பீடித்த நோய் என எண்ணிக் கவனக்குறைவாய் இருந்துவிடக் கூடாது. படித்தவர்களை மட்டுமன்றி, பாமரக் கூட்டத்தையும் அந் நோய் பீடிக்கும் என ஒத்தமை நற்செய்தியா

ளர் காட்டுகின்றனர் (லூக் 12:56; 13:15). அதுபோல எல்லாக் கிறிஸ்தவர்களும், குறிப்பாகத் தலைமைப் பொறுப்பில் உள்ள வர்களும் வெளிவேடக்காரராக மாறும் ஆபத்தில் இருக்கின்றனர். ஏன், பேதுரு கூட இந்த ஆபத்திலிருந்து தப்பவில்லை. அந்தியோக்கியாவில் நடந்த நிகழ்ச்சியில் பேதுருவின் வெளிவேடத்தைச் சுட்டிக் காட்டுகிறார் பவுல் (கலா 2:13). வெளி வேடன் என்னும் வஞ்சக வலையில் வீழ்ந்துவிடாமல், புதிதாய்ப் பிறந்த குழந் தைகளைப் போல் வளரவேண்டும் எனப் பேதுரு அறிவுறுத்துகிறார் (1 பேதுரு 2:1தொ). இந்த வெளிவேடம் இறுதியில் நம்முடைய விசுவாசத்தையே மறுக்கச் செய் யும் (1 திமொ 4:2). எனவே, வெளிவேடம் நம்மை அணுகாதபடி எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

### வெள்ளம் (FLOOD)

1. **தொன்மையான வெள்ளம்:** மாபெரும் அழிவைக் கொண்டு வந்த வெள்ளத்தைப் பற்றிப் பாபிலோன், சுமேரியப் புராணங் கள் பேசுகின்றன. விவிலிய மரபு இதனை எடுத்து ஒரே கடவுள் வழிபாட்டுப் பின்ன ணியில் அதற்கு ஓர் ஒழுக்க, சமய முக்கியத் துவம் கொடுத்து இந்த வெள்ளப் பெருக் கைப் புதிய முறையில் விளக்குகிறது. பொறாமை மிக்க கடவுளர்களின் ஏறுமா றான செயல்களாக வருணிக்கப்பட்ட இஃது ஒரே கடவுளின் நேரிய செயலாக மாற்றிக் கூறப்பட்டது. அழிவிற்குப் பதிலாக மீட்பை அடைவதற்கான தூய்மைப்படுத் தும் ஒரு நிகழ்வாக இது மாற்றியமைக்கப் படுகிறது. அதன் அடையாளமாக வெள்ளத் தினின்று பாதுகாக்கும் பெட்டகம் அமைகி றது. பொறுப்பற்ற சக்திகளைக் கடந்து, இறைவனின் தீர்ப்பு வந்து பாவியை அழித்துவிட்டு நீதிமான் ஒருவரைப் புதிய மனித இனத்தின் ஊற்றாக, விதையாக நிலைப்படுத்துவதாக அமைகிறது. இவ் வாறு நோவாவின் வீரச்செயல் ஒரு தற்செய லான நிகழ்ச்சியாக மட்டுமன்று; மாறாக, இஸ்ராயேலின் வரலாற்றின் மற்றும் மனு குல வரலாற்றின் சுருக்கமாகவும், அடை யாளமாகவும் அமைகிறது.

நோவா மட்டுமே நீதிமான் என அழைக் கப்படுகிறார் (ஆதி 7:1). ஆனால் ஆதா மைப் போலவே அவரும் அவர் குடும்பம் முழுவதையும் குறிக்கின்றார். எனவே தன் னையும் தனது குடும்பம் முழுவதையும் காக்கிறார் (ஆதி 7:1.7.13). இந்தச் சுதந்தரத் தேர்வினால் ஒரு புதிய இனம் தோன்றுவ தற்கான எஞ்சியோரை இறைவன் தனக் கென வைத்துக்கொண்டார். இவர்களும் பாவத்தை நோக்கித் திரும்பினால் கடவுள் பொறுமையைக் காப்பார். அப்படியே அவர் தண்டித்தாலும் அது மனமாற்றத்தைக் கொண்டு வரும் தண்டனையாக இருக்குமே யொழிய அழிவின் தண்டனையாக இருக் காது. ஏனெனில், அவரது இரக்கம் இதற்கு மாறானது (ஆதி 9:15-22). எனவே நீரினால் வரும் அழிவு புதிய உடன்படிக்கையினால் இனிமேல் மனித குலத்தின்மீது வரவே வராது என்பதையும் தான் தனது உடன்படிக் கைக்கு என்றும் பிரமாணிக்கமாய் இருப்ப தையும் கடவுள் உறுதியாகத் தெளிவுபடுத்து கிறார் (ஆதி 9:1-17).

2. **எதிர்காலத்தின் மாதிரி:** வெள்ளப் பெருக்கை, இறைவாக்கு இறையியல் செங் கடலைக் கடந்த நிகழ்ச்சியைப்போல் இறை வனின் மீட்புத்தீர்ப்பின் முன் மாதிரியாகப் பார்க்கின்றது. நாடு கடத்தப்பட்டதிலிருந்து திரும்பிய எஞ்சினோர் ஒரு புதிய இனத்தின் வித்தாக, புதிய விடுதலைப் பயணத்தை மட்டுமன்று, நோவா பெட்டகத்தை விட்டு வெளியேறிய பின் செய்த அதே பணியைத் தொடர்கின்றனர். ''என்றுமுள பேரன்பால் உனக்கு இரக்கம் காட்டுவேன். எனக்கு இது நோவாவின் நாள்களில் நடந்தது போல் உள்ளது. நோவாவின் காலத்துப் பெரு வெள்ளம் இனிமேல் மண்ணுலகின்மேல் பாய்ந்து வராது என்று நான் ஆணையிட் டேன்'' (எசா 54:8-9) என்ற இந்த மீட்புத் தீர்ப்பை ஞானிகள் எடுத்துக்கூறுகிறார்கள்.

''நோவா நிறைவுள்ளவராகவும் நீதிமா னாகவும் காணப்பட்டார். சினத்தின் காலத் தில் பரிகாரம் செய்தார். வெள்ளப்பெருக்கு ஏற்பட்டபோது, அவர் பொருட்டுச் சிலர் உலகில் விடப்பட்டார்கள். எவ்வுயிரும்

வெள்ளப்பெருக்கால் இனி அழிக்கப்படக் கூடாது என்பதற்கு என்றுமுள உடன்படிக் கைகள் அவருடன் செய்யப்பட்டன (சீரா *44:17-18*; காண்க. ஞான *10:4*தொ; *14:6*). குணமாக்குபவர் மற்றும் எஞ்சியோரின் மெசியா உருவங்கள் ஏற்கெனவே நோவாவை, ஒரு காலத்தில் புதிய படைப் பின் தொடக்கமான இயேசு கிறிஸ்துவின் மாதிரியாக்குகின்றன.

***3. புதிய சகாப்தத்தின் வெள்ளப்பெருக்கு:*** இறுதிக்காலத் தீர்ப்பைப் பற்றிக் கூற வரும்போது இயேசு வெள்ளப் பெருக்கை நினைவுகூர்கிறார் (மத் *24:37*தொ). இயேசு, நோவாவைப்போல், சாவு என்ற வெள்ளப் பெருக்கில் மூழ்கி வெற்றி வீரராய் எழுந்த போது இங்கு அந்த இறுதித் தீர்ப்பு ஏற்கெனவே நிகழ்த்தப்படுகிறது. திரு முழுக்கு நீரில் மூழ்கி எழுவோர் உயிர்த்த கிறிஸ்துவோடு இணைக்கப்பெற்றுக் காக் கப்பெறுவர் (1 பேதுரு *3:18-21*). இவ்வாறு வெள்ளப்பெருக்கு திருமுழுக்கை முன்னு ணர்த்தினால், வெள்ளப்பெருக்கிலிருந்து காத்த பெட்டகம், இந்தப் பாவ உலக மெனும் வெள்ளத்தின் மேல் மிதக்கும் திருச்சபைக்கு மாதிரியாகவும், திருச்சபை ''நெறிகெட்ட இத்தலைமுறையிலிருந்து நீங்கி மீட்பு அடைய'' விரும்புபவர்களை ஏற்றுக்கொள்கிறது என்றும் (அ.ப. *2:40*) திருச்சபைத் தந்தையர் காண்கின்றனர்.

தீயவர்களை அச்சுறுத்தும் இறுதித் தீர்ப்பு இன்னும் வரவில்லை. வெள்ளப்பெருக்கின் நாள்களைப் போலவே இறுதித் தீர்ப்பை யும் ஆண்டவர் தள்ளிப்போட்டுக் கொண்டே போகிறார். இஃது அவரது அளவற்ற பொறுமையையும் இரக்கத்தை யும் காட்டுகின்றது. அது மட்டுமன்று, மெசியாவின் சமூகம் நிறைவை அடையும் வரை இறுதித் தீர்ப்பைத் தள்ளிப் போடுகி றார் (காண்க. 2 பேதுரு *2:5.9*; *3:8*தொ). அவரது கால வெளிப்பாட்டு உருவகங்க ளில் பேதுருவின் இரண்டாம் திருமுகம் ஆசிரியர் மீட்பின் வரலாற்றில் மூன்று நிலைகளைப் பிரித்துக் காட்டுகிறார். அ) வெள்ளப்பெருக்கால் தீர்ப்பிடப்பட்ட பழைய உலகம்; ஆ) நெருப்பினால் அழி யப்போகும் இன்றைய உலகு; இ) எதிர் காலத்தில் தோன்ற இருக்கும் புதிய வானம் (2 பேதுரு *3:5*தொ.*11*தொ). இவ்வாறு நோவாவுடன் மேற்கொள்ளப்பட்ட பழைய உடன்படிக்கை, தூய்மையான மக்கள் தூய் மையான அகிலத்தில் இணைந்து வாழும் நிலையில் நிறைவுக்குக் கொண்டு வரப் படும்.

## வெள்ளரிக்காய் (CUCUMBER)

இஸ்ராயேல் மக்கள் வனாந்தரத்திலே சுற்றித் திரிந்தபோது, மன்னாவை உண்டு சலித்த அம்மக்கள், ''நாம் எகிப்திலே செலவில்லாமல் உண்ட மீன்கள், வெள்ள ரிக்காய், கொம்மட்டிக்காய்,கீரை, வெங்கா யம், வெள்ளைப்பூண்டு ஆகியவற்றின் நினைவு வருகிறது'' (எண் *11:5*) என்று முறையிட்டனர். இஃது எகிப்தில் நிலை யான உணவுப்பொருளாகும். இதற்காக பாலைவனத்தில் இஸ்ராயேலர் ஏங்கினர்.

எசாயா இறைவாக்கினர் எருசலேமின் அழிவுக்காட்சியிலே, அழிவுற்ற எருசலேம் வெள்ளரித் தோட்டத்தின் குடிசை போல் உள்ளது எனக் கூறுகிறார் (எசா *1:8*).

மனிதர் வணங்கும் சிலைகள் வெள்ளரித் தோட்டத்துப் பொம்மை போன்றவை என்று அவற்றின் பயனற்ற தன்மையை எரேமியா சித்திரிக்கிறார் (எரே *10:5*).

## வெள்ளாடு (GOAT)

இது பாலஸ்தீனத்தில் பொதுவாகக் காணப்படும் ஒரு வீட்டு விலங்கு. விவிலி யத்தில் இஃது அடிக்கடி குறிப்பிடப்படு கிறது.

***1. பொது உபயோகத்தில்:*** இஸ்ராயேலில் பால் வழங்கிய விலங்குகளில் வெள்ளாடு முதன்மையானதாகும். அதன் பால் உயர் வாக மதிக்கப்பட்டது (உப *32:14*; பழ *27:27*). அதன் இறைச்சி உணவாகப் பயன் பட்டது (லேவி *7:23*; உப *14:4*). அதன் மயிர் துணி நெய்வதற்கு மூலப்பொருளா கும். இத்துணி கூடாரங்கள் அமைப்பதற் கும், வீட்டில் பயன்படுத்துவதற்கும் பயன்

பட்டது (யாத் 25:4; 26:7; 36:14; 1 சாமு 19:13.16). அதன் பதனிட்ட தோல் மூடு திரையாகப் பயன்பட்டது (எண் 4:6). முழுத்தோலும் தண்ணீர் அடைத்து வைக்கும் துருத்தியாகப் பயன்பட்டது (காண்க. ஆதி 21:14; யோசு 9:4; 1 சாமு 1:24; மத் 9:17). பெரிய ஆட்டு மந்தைகளைக் கொண்டிருப்பது ஒருவருடைய செல்வத்தின் மற்றும் சமூக உயர்வின் அடையாளமாகும் (காண்க. ஆதி 30:32.43; 1 சாமு 25:2). மற்ற வீட்டு விலங்குகளைப்போல், வெள்ளாட்டின் முதல் ஈற்று ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்கப்பட வேண்டும் (எண் 18:15-17). ஆண் வெள்ளாடு மந்தைக்குத் தலைமை தாங்கியது (எரே 50:8; பழ 30:31). ஆகவே, அரசியல் தலைவர்களும் வலிமை வாய்ந்த அரசர்களும் வெள்ளாடுகள் என்று உருவகமாக அழைக்கப்படுகின்றனர் (எசே 34:17; 39:18; தானி 8:5; செக் 10:3). தீர் நகரின் வியாபாரப் பொருள்களில் முக்கியமானவை செம்மறி ஆடுகளும், வெள்ளாடுகளுமாகும் (எசே 27:21).

**2. பலிவிலங்கு:** யாவேக்குப் பலியிடப்படுவதற்கு, ஒரு வெள்ளாடு எட்டு நாள் வயதுடையதாகவாவது இருக்க வேண்டும் (லேவி 22:7). பாஸ்கா உணவிற்குப் பயன்பட்ட வெள்ளாடு ஒரு வயதுக் கிடாயாக இருக்க வேண்டும் (யாத் 12:5). பலியில் வெள்ளாடுகள் பொதுவாகப் பயன்பட்டாலும் (சங் 50:9.13; 66:15; எசா 1:11), பெரும்பாலான குறிப்புகள் குறிப்பிட்ட வகைப்பலியிலோ, குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலோ பயன்பட்ட வெள்ளாடுகளைக் குறிக்கின்றன. இந்த வெள்ளாடு கிடாயாக இருக்க வேண்டும் (லேவி 1:10; 22:19). சமாதானக் காணிக்கை (லேவி 3:6.12; 17:3; எண் 7:17), குற்றத்திற்கான காணிக்கை (லேவி 5:18), பாவத்திற்கான காணிக்கை (லேவி 4:23; எண் 7:16; 2 நாள் 29:21; எசே 43:22.25; 45:23) ஆகியவற்றில் ஆண் வெள்ளாடு பயன்பட்டது. லேவி 4:28; 5:6-இல் பெண் வெள்ளாடும் குறிக்கப்படுகிறது. பரிகார நாளில் பழி ஆடு பற்றிய விவரிப்பு லேவி 16-இல் காணக்கிடக்கிறது. இந்தச் சடங்கு பற்றிய கிறிஸ்தவ நோக்கு எபி 9:12-13.19; 10:4-இல் கூறப்படுகிறது.

**3. உருவகமாக:** வெள்ளாட்டு மந்தை ஒரு பெண்ணின் தலைமுடியையும் (உ.ச. 4:1; 6:5), இஸ்ராயேலரின் படைச்சிறுமையையும் (1 அர 20:27) உவமையாகக் குறிக்கிறது. மனிதத் தலைவர்கள், ஆண் வெள்ளாடாக உருவகமாக விவரிக்கப்படுகின்றனர் (எசா 14:9; எசே 34:17; தானி 8:5-8; செக் 10:3). இறுதித் தீர்ப்பு உவமையில் (மத் 25:31-46) இன்றும் பாலஸ்தீனத்தில் காணப்படும் ஒரு காட்சியை இயேசு பயன்படுத்துகிறார். செம்மறி ஆடுகளும், வெள்ளாடுகளும் ஒரே மேய்ச்சல் நிலத்தில் மேய்கின்றன. ஆனால், சந்தைக்குக் கொண்டு போகப்படும்போது இரண்டும் பிரிக்கப்பட்டுத் தனித்தனிப் பட்டிகளில் அடைத்து வைக்கப்பட்டன. உவமை பிரிவை மட்டுந்தான் சுட்டிக்காட்டுகிறது. வெள்ளாடு தீமையைக் குறிக்கிறது என்ற எந்த அடையாளவியலும் இல்லை.

## வெள்ளி (SILVER)

**1. பண்டைக் காலத்தில்:** கிழக்கத்திய நாடுகளில் தங்கம், செம்பு போன்றே வெள்ளியும் தொடக்க காலத்திலிருந்தே பழக்கத்தில் இருந்தது. பாரசீகர் காலம் வரை (கி.மு. 500) வெள்ளிதான் அதிக விலையுள்ள பொருளாக இருந்து வந்தது. ஆனால், சந்தையில் ஏராளமான வெள்ளி புழக்கத்திற்கு வந்தவுடனே தங்கம் அதனுடைய இடத்தைப் பிடித்துக்கொண்டது. வெள்ளி நகைகளுக்காகப் பயன்படுத்தப்பட்டது; வியாபார பேரங்களில் பயன்படுத்தப்பட்டது. இப்பொருளில் முதன் முதலாக இந்தச் சொல் ஆதி 23:15-16-இல் காணப்படுகின்றது. எகிப்திற்கு உள்நாட்டிலிருந்து போதுமான வெள்ளிக் கனிமங்கள் கிடைக்கவில்லை. கி.மு. 1580-1350-இல் ஆசியாவின் மீது படையெடுத்தபோது தூய்மை செய்யப்பட்ட வெள்ளி கிடைத்தது (ஆதி 44:2). வெள்ளியால் செய்யப்பட்ட எகிப்திய நகைகள் மிகவும் விலையுயர்ந்தவையாக இருந்தன (ஆதி 11:2; 12:35). ஏறக்குறைய ஆபிரகாமின் காலத்திலிருந்து சிறிய ஆசியா

வில், இத்தியர்களும் அவர்களுக்குப்பின் வந்தவர்களும் உலக வெள்ளிச் சந்தையின் மீது முழு ஆதிக்கம் உடையவர்களாக இருந்தனர். கப்பதோக்கியக் குறிப்பின்படி மெசபொரத்தாமியாவைச் சார்ந்த வணிகர்கள் வெள்ளி வியாபாரத்தில் ஈடுபட்டுச் சிறிய ஆசியாவில் முன்னணியில் நின்றனர்.

பாலஸ்தீனத்தில் நடந்த புதைபொருள் ஆய்வில் வெள்ளிப்பொருட்கள் சிலவே கிடைத்துள்ளன. இது கி.மு. 1400-இலிருந்து வெள்ளி அரிதாகவே கிடைத்தது என்று சுட்டுகிறது. இதற்கு விதிவிலக்கு சால மோன் ஆட்சிக்காலமாகும். அப்போது, எருசலேமில் ''வெள்ளி கற்களைப்போல்'' காணப்பட்டது *(1 அர 10:27; 2 நாள் 9:27; சீரா 47:18)*. பழைய ஏற்பாட்டிலே தங் கத்தை விட வெள்ளிக்குத்தான் முதலிடம் கொடுக்கப்பட்டது. நாளாகமங்களிலும், தானியேல் நூலிலும் புதிய ஏற்பாட்டில் உள்ளது போல் தங்கத்திற்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. பெனிசியாவும் *(2 நாள் 9:21; எசே 27:12)*, அரேபியாவும் *(2 சாமு 8:10-12; 2 நாள் 9:14)* இஸ்ராயேலுக்கு வெள்ளியை விநியோகிக்கும் மாநிலங்க ளாக இருந்தன *(எரே 10:9; 1 அர 10:22)*.

***2. பழைய ஏற்பாடு:*** ஏராளமான பழைய ஏற்பாட்டுக் குறிப்புகள் வெள்ளியின் பயனைப் பற்றி வெளிப்படுத்துகின்றன. பொதுவாக, வெள்ளி ஒருவனுடைய செல்வ நிலையைக் குறிப்பதற்கும் *(ஆதி 13:2; 24:35; யாத் 25:3; எண் 22:18; உப 7:25; செப் 1:18; ஆகா 2:9; செக் 6:11)*, எடுத்துக்கொண்ட கொள்ளைப்பொருளைக் குறிப்பதற்கும் *(யோசு 6:19; 7:21)*, கப்ப மாகக் கொடுக்கப்பட்டதைக் குறிக்கவும் *(1 அர 15:19; உ.ச. 8:9)* பயன்படுத்தப்பட்டது.

கட்டாயமாகச் செலுத்தப்பட வேண்டிய சம்பளத்திற்கு வெள்ளி உலோக அளவாகப் பயன்படுத்தப்பட்டது; பணமாகச் செலுத் தப்பட்டது *(ஆதி 20:16; 23:15-16; 37:28; 45:22; யாத் 21:32; லேவி 27:16; யோசு 24:32; நீதி 17:10; 2 சாமு 24:24; நெகே 7:72; யோபு 28:15; எசா 7:23; 46:6; ஆமோ 2:6; 8:6)*. அரசர்களின் இரசம் பருகும் கோப்பையாகவும் *(ஆதி44:2)*, அரசனுடைய தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப் பட்ட மணிமுடியிலும் *(செக் 6:11)* வெள்ளி பயன்பட்டது; நகைகளாகவும் *(ஆதி 24:53; யாத் 3:22; 11:2; 12:35; உ.ச. 1:11)*, சிலைகள் செய்வதற்கும் *(யாத் 20:23; உப 29:17; நீதி 17:4: சங் 115:4; 135:15; எசா 2:20; 39:22; 31:17; 40:19; எரே 10:4; தானி 2:32-33; 5:2-3; 11:8-9; ஓசே 13:2)* பயன்பட்டது. இஃது எக்காளம் செய்வதற்கும் *(எண் 10:2)*, உருவ மேடைகள் அமைப்பதற்கும் *(யாத் 26:19)*, கொக்கிகள், தலைமடிப்பு, தூண் முகடு *(ஆதி 27:10.17; 36:24.26)* ஆகியவை செய்வதற்கும், சாப்பிடும் தட்டுகளும், கோப்பைகளும் செய்வதற்கும் *(எண் 7:13-14)* பயன்படுத்தப்பட்டது. இஃது எருச லேம் ஆலயத் தொடர்பிலும் *(1 அர 7:51; 1 நாள் 28: 15-16; 2 நாள் 2:7; எஸ் 8:26.28; நெகே 7:71)*, கச்சாப் பொருளாகவும் பயன்படுத்தப்பட்டது *(யாத் 31:4; 35:24.32; 1 அர 15:15)*.

பழைய ஏற்பாடு வெள்ளிக் கனிம உற்பத்தி இடங்களையும் *(யோபு 28:1)*, அதைத் தூய்மைப்படுத்தக்கூடிய முறையை யும் *(செக் 13:9; மலா 3:3; எசே 22:20-22)*, பல்வேறு வகையில் புடமிடுவதைப் பற்றி யும் *(பழ 17:3; 27:21)*, தூய்மைப்படுத்தப் பட்ட வெள்ளியை எடுக்கும் முறையையும் *(பழ 10:20; 1 நாள் 29:4; சங் 12:6)* அறிந்திருக்கிறது. உருவகமாக நீதிமானின் இதயம் தூய்மைப்படுத்தப்பட்ட வெள்ளி யாகக் காட்டப்பட்டுள்ளது *(சங் 66:10; எசா 48:10)*. எருசலேமின் மோசமான நிலைக்கு வெள்ளியின் களிம்பேறிய நிலை ஒப்பிடப் பட்டுள்ளது *(எசா 1:22; எரே 6:30)*. வெள்ளி பிரகாசமான நிறத்திற்குப் பயன்படுத்தப்பட் டது *(சங் 68:13)*. கடவுளுடைய வார்த்தை யின் தூய்மையையும் *(சங் 12:6)*, செல்வ நிறைவையும் *(யோபு 3:5; 22:25; 27:16; எசா 60:17; செக் 9:3)*, ஞானத்தைவிடக் குறைவான மதிப்புடையது என்பதை *(யோபு 28:15; பழ 3:14; 8:19; 10:20; 16:16; 22:1; 25:11)* குறிக்கவும் உருவகமாக வெள்ளி பயன்பட்டுள்ளது.

**3. புதிய ஏற்பாடு:** புதிய ஏற்பாட்டில் சில இடங்களில் வெள்ளியைப் பற்றி இகழ்ச்சியான குறிப்புகள் உள்ளன (மத் 10:9; யாக் 5:3; 1 பேதுரு 1:18). பொதுவாக வெள்ளி சொத்தாகவும் (அ.ப. 20:33; 1 கொரி 3:12 திருவெளி 18:12), நாணயமாகவும் (மத் 22:19; 26:15; 27:3-9; லூக் 15:8-10), வரி கொடுப்பதற்குத் தேவைப்படுவதாகவும் (மத் 17:24-27), சிலைகள் செய்வதற்கும் (அப் 17:29; 19:24; திருவெளி 9:20) பயன்பட்டதாகத் தெரிகின்றது.

## வெள்ளித் தட்டான் (SILVER SMITH)

இவர் வெள்ளிக் குகையிலிருந்து எடுக்கப்பட்ட வெள்ளியைத் தூய்மைப்படுத்துவதிலும், ஆபரணங்களாகச் செய்வதிலும் ஈடுபட்டுள்ள தட்டான் ஆவார். கி.மு. மூன்றாம் ஆயிரம் ஆண்டுக்காலத்திற்கு முன்பே சிறிய ஆசியாவில், இவ்வகைத் தட்டான்கள் இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. தட்டான்தான் முதலில் உலோகக் கனிகளை உருக்கி அதை வார்ப்பு அச்சில் ஊற்றிப் பல்வேறு வடிவங்களில் அமைக்கின்றார். ஆகவே அவரை இதனுடைய அமைப்பாளர் என்று சொல்லலாம் (நீதி 17:4). வெள்ளித்தட்டான், வெள்ளித்தகடுகளைச் செய்வான் (எரே 10:9); இசைக்கருவிகளைச் செய்வான் (எண் 10:2); செம்மையான அலங்கரிப்புக்கள் (யாத் 26:19), ஆலயத்திற்கும் ஆண்டவருடைய பேழைக்கும் (எண் 7:13; 2 சாமு 8:11) சிலைகளுக்கும் (யாத் 20:23; அ.ப. 19:24) வேண்டிய பொருள்களையும் செய்வான். புதிய ஏற்பாட்டில் ஒரே ஒரு பகுதியில், பவுலின் போதனையில் உருவ வழிபாட்டிற்கு எதிரான பயமுறுத்தல் இருந்ததால் வெள்ளித்தட்டான்களின் தலைவனுடன் பவுலுக்குச் சச்சரவு இருந்ததாகத் தெரிகின்றது. தெமேத்திரியு அப்போது தட்டான்களின் சங்கத்தலைவனாக இருந்திருக்கலாம்.

## வெள்ளீயம், தகரம் (TIN)

பழைய ஏற்பாட்டின் இறுதிப் பகுதியில் தான் வெள்ளீயம் பற்றிய செய்தி காணப்படுகிறது (எசே 22:18.20; 27:12). பெனீசியர்கள் இதை வெளிநாடுகளிலிருந்து பழங்கால மேற்காசியாவினுள் இறக்குமதி செய்து தங்களது அண்டைநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர் (27:12). மிதியான் நாட்டு வியாபாரிகள், இஸ்ராயேலருக்கு வெள்ளீயம் கொணர்ந்ததாகக் கருதப்படுகின்றது (எண் 31:22). இது சில சமயங்களில் ஈயத்தோடு குழப்பப்படுகிறது (காண்க. செக் 4:10). இது செம்போடு சேர்த்து வெண்கலம் என்ற கலப்பு உலோகம் செய்யப்பயன்பட்டது. இது வெள்ளிக் கனிமத்தோடு சேர்ந்து காணப்பட்டது. வெள்ளிக்கனிமம் உருக்கி, வெள்ளீயம் நீக்கப்பட்டுச் சுத்தி செய்தல் எசா 1:25; எசே 22:18-20-இல் உருவகமாகக் கூறப்படுகிறது.

## வெள்ளைப்பூண்டு (GARLIC)

எபிரேயர்கள், பாலைவனத்தில் தபேரா என்ற இடத்துக்கருகில் தாங்கள் எகிப்தில் உண்ட உணவுக்காக ஏங்கினர். இந்த உணவில் ஒன்று வெள்ளைப்பூண்டு ஆகும் (எண் 11:5). இது வெங்காய வகையைச் சேர்ந்த தாவரப் பொருளாகும்; உணவுக்குச் சுவையூட்டப் பயன்பட்டது. எகிப்தில் இஸ்ராயேலர் அடிமை வேலையில் ஈடுபட்டிருந்த போது வெள்ளைப்பூண்டு போன்ற காரமான நறுமணப் பொருள்களுக்கு அறிமுகப் படுத்தப்பட்டிருக்கலாம் (11:5).

## வெள்ளைப்போளம் (MYRRH)

வெள்ளைப்போளம் என்ற நறுமணப் பொருள் பல மரங்களின் கசிவுச் சாற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

பெரும்பான்மையான ஆராய்ச்சியாளர்கள் ஆதி 37:25; 43:11-இல் குறிக்கப்பட்டுள்ள நறுமணப்பொருளை மஞ்சள் அல்லது இளஞ்சிவப்புநிற மலர்களையுடைய புதர்ச் செடியிலிருந்து தயாரிக்கப்பட்ட பிசின் வகையைச் சேர்ந்தது என்று கணிக்கின்றார்கள். இதுதான் பழங்கால இசுமாயேலர்கள் கிலயாத்திலிருந்து எகிப்துக்கு எடுத்துச் சென்ற முக்கிய வியாபாரப் பொருளாக இருந்தது (ஆதி 37:25). இஸ்ராயேல் (யாக்கோபு) தன் புதல்வர்களை எகிப்தின் அமைச்சன் யோசேப்புக்குத் தன் நாட்டில் கிடைக்கும் விலை உயர்ந்த

பொருளாகிய வெள்ளைப்போளம் கொண்டு போய்க் கொடுக்கும்படி கூறுகின் றார் (*ஆதி 43:11*).

வெள்ளைப்போளம் பெரும்பாலும் தென் அரேபியாவில் திரவ வடிவிலோ (*யாத் 30:23; உ.ச. 5:5.13*), எண்ணெய் வடிவிலோ (*எஸ்த 2:12*), திடப்பொரு ளாகவோ கிடைக்கின்றது. வெள்ளைப் போளம் புனிதத் தைலமாகவும் (*யாத் 30:23*), அழகூட்டும் பொருளாகவும் (*எஸ்த 2:12; உ.ச. 5:5*), துணிகளில் நறுமணம் சேர்க்கும் பொருளாகவும் (*சங் 45:8; பழ 7:17; உ.ச. 1:13; 3:6*) பயன்பட்டது; கவிதை அடையாளமாகவும் (*உ.ச. 4:6.14; 5:1.13; சீரா 24:15*) பயன்படுத்தப்பட்டது.

குழந்தை இயேசுவுக்கு மூன்று ஞானிகள் அளித்த காணிக்கைகளில் இதுவும் ஒன்று (*மத் 2:11*). இயேசு சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்தபோது அவருக்கு வெள்ளைப் போளம் கலந்த இரசத்தைக் கொடுத்தனர் (*மாற் 15:23*). முன்னொரு நாள் இயேசுவை இரவில் பார்க்க வந்த நிக்கதேமு வெள்ளைப்போளமும், அகில்தூளும் கலந்து இவைகளுடன் இயேசுவின் சடலத் தைக் கட்டி அடக்கம் செய்தார் (*யோவா 19:39; காண்க. மாற் 16:1; லூக் 24:1*).

## வெள்ளைப்போளம், யூதஅத்தர் (STACTE)

இது திருப்பொருளாம் புனித நறுமணக் கட்டி செய்யப் பயன்படுத்தப்படும் நான்கு வகை வாசனைப் பொருட்களுள் ஒன்று (*யாத் 30:34*); சில செடிகளில் மற்றும் மரங்களிலிருந்து வடியும் பிசினாக இருக்க லாம். ஞானம் பற்றிய ஒரு பாடலில் இது குறிப்பிடப்படுகிறது (*சீரா 24:15*).

## வெறுங்கால் (BAREFOOT)

விவிலிய காலத்தில் பயணம் செய்யும் போது காலில் செருப்பு அணிந்திருத்தல் வழக்கம். சில சமயங்களில் வெறுங்கா லாய்ச் சென்றனர். வெறுங்காலாய் இருத்தல் வணக்கத்தையும் (*யாத் 3:5; யோசு 5:15*), தபசையும் (*2 சாமு 15:30*), துக்கத்தையும் (*2 சாமு 15:30; எசே 24:17.23*) எடுத்துக்காட் டியது. மேலும், அடிமைத்தனத்தையும் (*எசா 20:2-4*), வெட்கத்தையும் (*உப. 25:9-10; 2ரூத் 4:7*) அடையாளமாக உணர்த் திற்று.

புதிய ஏற்பாட்டில் பன்னிருவரை இயேசு தூது அனுப்பியபோது (*மத் 10:5*தொ; *மாற்கு 6:7*தொ; *லூக் 9:1*தொ) மிதியடி போட்டுக்கொள்ள அனுமதிக்கிறார். ஆனால், எழுபத்திரண்டு பேரைத் தமக்கு முன் அனுப்பும்போது (*லூக் 10:1-12*) அவர்கள் மிதியடி அணிவதை இயேசு அனுமதிக்கவில்லை. இது முரண்பாடாகத் தோன்றுகிறது. இதைப் பலரும் பலவாறு விளக்க முயன்றுள்ளனர். ஆனால், எதுவும் நிறைவு தரவில்லை.

## வெறுத்தல், வெறுப்பு (HATE, HATRED)

I. வெறுப்பு அன்பிற்கு முரணானது. அதே நேரத்தில் அன்போடு நெருங்கிய தொடர்பு கொண்டது. தாமாரின் மீது அம்மோன் கொண்டிருந்த அன்பு திடீரென வெறுப்பாக மாறியதற்குக் காரணம் அம் மோன் அவள்மீது காமவெறி கொண்டவ னாக மாறியதுதான் (*2 சாமு 13:5*). விவிலியத்தின் பல பகுதிகள் 'அன்பு-வெறுப்பு' என்ற இந்த இரட்டை நிகழ்வு களை எதிர்கொள்ளச் செய்கின்றன (*ஆதி 29:18.31; மத் 5:43; 6:24*). ஏனெனில், அன்பு எதை மிக மதிப்புள்ளதாக நினைக்கிறதோ அதையே வெறுப்பது இயல்பானது என்று இப்பகுதிகள் கருதுவதாகத் தெரிகிறது. நிராகரிக்கும் கணவனின் உள்ள நிலை எப்படி இருக்கும் என்பதை உபாகமம் இதை வைத்தே விளக்குகிறது (*உப 22:13.16*). செமித்திய மொழிமரபில் இத் தகைய வன்முறையான எதிர்ச்செயல் இருப் பதைப் பார்க்கிறோம். ஆனால், இடை நிலையான பொருள் எதையும் இது கொடுப்பதில்லை. ஆனால், எதார்த்தத்துக் கும், மொழி கொடுக்கும் ஆழமான பொரு ளுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. பல மனைவிகள் உள்ள ஒரு குடும்பத்தில் ஒரு மனைவி குறைவாக அன்பு செய்யப் பட்டால், அவள் வெறுக்கப்பட்டதாகக் கூறலாம் (*உப 21:15; காண்க. ஆதி 29:31*தொ). இத்தகைய குறிப்புகள் நற்செய் தியில் உள்ள ஒரு சில சொற்றொடர்களைப்

புரிந்துகொள்ளத் துணை செய்கின்றன (லூக் *14:26;* காண். மத் *10:37*). வெறுப்பு உருவாக்கும் ஒருசில சமயப்பிரச்சனைகள் இங்குச் சந்திக்கப்படவில்லை. ஏன், எவ்வாறு வெறுப்பு மனிதகுலத்தில் நுழைந்தது? கடவுளைப் பற்றிப் பேசும்போது விவிலியம் எந்த ஒரு கண்ணோட்டத்தோடு வெறுப்பைப் பற்றிப் பேசுகிறது? வெறுப்பை எந்த ஒரு மனநிலையோடு இயேசு அணுகினார்?

II. **மனிதர்களிடையே வெறுப்பு:**

**1. வெறுப்பிலே அமிழ்ந்திருக்கும் உலகம்:** மனிதர்களிடையே வெறுப்பு உள்ளது என்பது உண்மை. மனிதனின் முதல் தலைமுறையிலிருந்தே இஃது இருப்பதை ஆதியாகமம் சுட்டிக்காட்டுகிறது (ஆதி *4:2-8*). ஞானிகள் இதனை எப்படிப் பார்ப்பதென்று தெளிவாக இருக்கின்றனர் (பழ *10:12; 14:20; 19:7; 26:24*தொ; சீரா *20:8*). ஆனால், விவிலியம் இதன் மீது மதிப்பீட்டுத் தீர்ப்பை வழங்குகிறது. வெறுப்பு பாவத்தின் விளைவும் தீமையும் ஆகும். ஏனெனில், கடவுள் மனிதர்களைச் சகோதரர்களாக அன்பில் இணைந்து வாழ அழைத்தார். காயீனின் கதை வெறுப்பின் வளர்ச்சியை எடுத்துக்காட்டுகிறது. தன் சகோதரனின் மீது கொண்ட பொறாமை வெறுப்பாக மாறி முடிவில் அது கொலையில் முடிந்தது. இஃது ஒன்றே வெறுப்பு சாத்தானிடமிருந்து வருகிறது என்று கண்டனம் செய்யப்படப் போதுமானது. இதை ஞானிகள் தெளிவாகக் கூறுகின்றனர். மனிதன் மகிழ்ச்சியாய் இருப்பதைக் கண்டு பொறாமையுற்ற சாத்தான் வெறுப்பைக் கொண்டு வந்து, அதன் வழியாகச் சாவையும் கொண்டு வந்தது (ஞான *2:24*). அன்றிலிருந்து இன்று வரை உலகம் வெறுப்பின் கையில் சிக்கிக்கொண்டது (தீத் *3:3*).

**2. நீதிமானே வெறுப்பிற்கு உள்ளாகிறார்:** தொடக்கத்திலிருந்தே பொறாமை -வெறுப்பு - கொலை மூன்றுமே ஒரே நிலையில் பயன்படுத்தப்பட்டுள்ளன. கடவுள் பற்றற்ற மனிதனே நீதிமானை வெறுத்து அவரைத் தனது எதிரியாக நினைக்கிறான். காயீன் ஆபேலிடம் கொண்டிருந்ததும், ஏசா யாக்கோபிடம் கொண்டிருந்ததும், யாக்கோபின் புதல்வர்கள் யோசேப்பிடம் கொண்டிருந்ததும், எகிப்தியர்கள் இஸ்ராயேலரிடம் கொண்டிருந்ததும் (சங் *105:25*), கடவுள் பற்றற்ற அரசர்கள் இறைவாக்கினரிடம் கொண்டிருந்ததும் (1 அர *22:8*), சங்கீதங்களில் தீயோர் நீதிமான்களிடம் கொண்டிருந்ததும், யாவேயால் அபிடேகம் செய்யப்பட்டவர்கள் மீதும் (1 சங் *129*) எருசலேம் மீதும் (எசா *60:15*) அன்னியர்கள் கொண்டிருந்ததும் இத்தகைய வெறுப்புதான். எனவே இறைவனை அன்பு செய்பவரும், கடவுளால் அன்பு செய்யப்படுபவரும் எப்பொழுதுமே வெறுப்புக்கு ஆளாவார் என்பது ஒரு மாறாத நிலைத்த நியதியாகிவிட்டது. ஏனெனில், அவர் தனித்திருப்பது பொறாமையை எழுப்புகிறது. அவரது வாழ்வு பாவிகளைக் கண்டனம் செய்கிறது (ஞான *2:10-20*). எது எப்படியிருந்தாலும் கடவுளால் தேர்ந்து கொள்ளப்பட்டவர்களில் கடவுளே காணப்பட்டு வெறுக்கப்படுகிறார் (1 சாமு *8:7*; எரே *17:14*தொ).

**3. நீதிமானால் வெறுக்க முடியுமா?:** நீதிமான் தன்னை வெறுப்பவர்களை வெறுக்கலாமா? கடவுளின் மனிதர்கள் தங்கள் அயலாரை அன்பு செய்ய வேண்டுமென்ற சட்டம் இருக்கிறது (லேவி *19:17*தொ). வெறுப்பால் ஒருவனைக் கொலை செய்தவன் சாக வேண்டுமென்று ஒரு சட்டமும் உள்ளது (உப *19:11*தொ). அதே நேரத்தில் இரத்தப்பழி வாங்குதலின் கடுமையைக் குறைப்பதற்கு அடைக்கலம் தரும் நகரங்களாகச் சிலவற்றையும் ஏற்படுத்தியுள்ளது சட்டம் (உப *19:1-10*).

நீதிமான்களை வெறுக்கும் தீயவர்கள் மக்களின் எதிரிகளாவது மட்டுமல்லாது கடவுளின் எதிரிகளாகவும் செயல்படுகிறார்கள் (எண் *10:35*;சங் *83:3*). ஆனால், ஆண்டவரின் அன்பு இடும் கட்டளை மாறுபட்டு நிற்கிறது. அது நமக்கு வியப்பை அளிக்கலாம். இஸ்ராயேல் இறைவனுடைய எதிரிகளை வெறுக்கும். இதன்

நோக்கம் அவர்களுடைய நடத்தையைப் பின்பற்றாமல் இருப்பதுவே. இதுவே அர்ப் பணப்போரின் பொருளாகும் (காண்க. உப 7:1-6). தீயவர்கள்மேல் பொறாமை கொண்டு அவர்களைப் பின்பற்றச் சோதிக் கப்படும் துன்புறும் நீதிமான் (பழ 3:31; சங் 37:73), தன்னைப் பாவத்திலிருந்து காத்துக்கொள்ள, பாவிகளின் குழுவை வெறுப்பார் (சங் 26:4தொ; 101:3தொ).

யாவேயை வெறுப்பவர்களை அன்பு செய்ய வேண்டும் (2 நாள் 19:2) என்று நினைப்பவர்கள் விசுவாசமற்றவர்கள் கூட் டத்தில் சேர்ந்து பிரமாணிக்கமற்றவர்களா வார்கள் (சங் 50:18-21). கடவுளின் ஆர்வ மிகுந்த அன்புக்குப் பதிலிறுப்பது என்பது அதைப் போலவே நாமும் எல்லாவற்றிலும் குறையாத அன்பு கொள்ளுதலேயாகும் (சங் 119:113; 97:10). அவரது விருப்பம் எல்லா வற்றிலும் நிறைவேற்றப்பட வேண்டும். அவர் அன்பு செய்வதை அன்பு செய்ய வேண்டும். அவர் வெறுப்பதை வெறுக்க வேண்டும் (ஆமோ 5:15; பழ 8:13; சங் 45:8). அப்படியென்றால் எப்படிக் கட வுளை வெறுப்பவர்களை ஒருவன் வெறுக் காமல் இருக்க முடியும் (சங் 139:21தொ)?

ஆனால், இந்த மனப்போக்கில் ஐயப்பா டும் ஆபத்தும் இல்லாமல் இல்லை. ஏனெனில், தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்ற போர்வையில் எல்லாச் சொந்த எதிரிகளையும், தேசிய எதிரிகளையும் கட வுளின் எதிரிகளாக நினைத்துவிட்டால் என்ன செய்வது? இஃது ஒரு கற்பனையான பிரச்சனை அன்று. ஏனெனில், பேலியா லுக்கு விரோதமாக ''முடிவில்லா வெறுப்பை'' வாக்குறுதி எடுத்தபோது, கும்ரான் பிரிவினர் செயலளவில் இறைவ னுடைய செயல்களையும் தங்கள் குறுகிய குழுவின் செயல்களையும் ஒன்றாக்கினர். ''உன்னை அடுத்தவர் மீது அன்புகூர்வா யாக; பகைவர் மீது காழ்ப்புக் கொள்வா யாக'' (மத் 5:43). இது பழைய சட்டத்தின் படி உள்ளதன்று. மாறாக, பலர் இதைத் தவறாக விளக்கிப் பொருள் கொண்டு, ஒரு குறுகிய வட்டத்திற்குள் தங்களை வைத்துக் கொண்டனர்.

III. **கடவுளிடம் வெறுப்பு உள்ளதா?:** அன்பே வடிவான கடவுளிடம் வெறுப்பு இருக்க முடியுமா? உண்மையிலே கடவுள் தான் படைத்த யாரையும் வெறுக்கமுடி யாது (ஞான 11:24). அப்படி இருப்பார் எனச் சொல்வது அவர் தனது மக்களை வெறுப்பவர் என்று கூறி அவருக்குத் தீங்கு செய்வதும் குற்றம் சாட்டுவதுமாகும் (உப 1:27; 9:28). ஆனால், அன்பே வடிவான அதே கடவுள் தூய்மையும், பொறாமையும் மிக்கவர். அவரது அன்பு பாவத்தைக் கடுமையாக நிராகரிக்கிறது. சிலைவழிபாடு இஸ்ராயேலரிடம் காணப்பட்டாலும் சரி, கானானியர்களிடம் காணப்பட்டாலும் சரி அதை வெறுக்கிறார் (எரே 44:4). வழிபாட் டில் இரட்டை வேடத்தையும் (ஆமோ 5:21), கொள்ளையையும், குற்றத்தையும் (எசா 61:8), பொய்யாணையையும் (செக் 8:17), மனமுறிவையும் (மலா 2:16), பொது வாக, பழ 6:16-19-இல் வரிசைப்படுத்தப் பட்டுள்ள எல்லாப் பாவங்களையுமே அவர் வெறுக்கிறார். ஒரு விதத்தில் பாவி பாவத் தோடு ஒன்றித்து விடுவதால் அவன் வேறு, பாவம் வேறு என்ற நிலை மாறி ஒன்றாகி விடுகின்றான்; எனவே, இறைவனின் எதிரி யாகிறான் (அதாவது இறைவனை வெறுப்ப வனாகிறான். யாத் 20:5; உப 7:10; சங் 139:21; உரோ 1:30). தனது தவறுகளால் ஒரு பாவி எந்த விதத்திலும் கடவுளோடு ஒத்துப்போக முடியாமை விவிலியத்தில் வெறுப்பு என்று விவரிக்கப்படுகிறது. வன் முறை செய்பவர்கள் (சங் 11:5), சிலையை வழிபடுவோர் (31:7), வெளிவேடக்காரர் (சீரா 27:24), பொதுவாகத் தீமை செய்பவர் கள் அனைவரையுமே இறைவன் வெறுக்கி றார் (சங் 5:6தொ). குற்றம் செய்த கானானி யர்களைக் கடவுள் வெறுப்பது போல (ஞான 12:3), பிரமாணிக்கமற்ற இஸ்ராயே லர்களையும் கடவுள் வெறுக்கிறார் (ஓசே 9:15; எரே 12:8). கடவுள், ''நான் யாக் கோபை அன்பு செய்கிறேன்; ஏசாவை வெறுக்கிறேன்'' என்று கூறும்போது சற்றுக் குழப்பம் ஏற்படுகிறது (மலா 1:2; உரோ

*9:13)*. இங்கு யாக்கோபு இஸ்ராயேலரை யும், ஏசா ஏதோமியரையும் குறிக்கின்றனர் *(மலா 1:2; காண்க. ஆதி 25:30; 32:28)*. இவ்வாறு ஏதோமியர் இஸ்ராயேலுக்கு இழைத்த கொடுமைகளை இறைவன் கண் டனம் செய்கிறார் *(காண்க. சங் 137:7; எசே 25:12; ஒப 10-14)*. தேர்ந்தெடுத்தல் என்பது ஒருவனுக்குச் சிறப்பான முன்னுரிமையைத் தருகிறது. அதாவது, ஒருவன் தன் மனைவி களில் ஒருத்தியை அன்பு செய்து மற்ற வளை வெறுப்பது போலத்தான் இதுவும் என்பதை இக்கூற்றால் அவர் சுட்டிக்காட்டு கிறார் *(காண்க. ஆதி 29:31தொ; உரோ 9:11தொ)*.

ஆனால், தீமை நிறைந்த இந்த உலகில் கடவுள் கொண்டிருக்கும் வெறுப்பு என்ற சொல் சரியாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும். தமது அனைத்து வலிமையுட னும் இறைவன் அறிவிக்கின்ற இந்த முன்னுரிமையும், வெறுத்து ஒதுக்குத லும் நேர்நிலை உண்மைகளாயினும், இவற்றை வெறுப்பு என்று நாம் அழைக்க முடியாது. அப்படி இவற்றை வெறுப்பு என்று குறிக்க வேண்டும் என்றால், பாவம் நிறைந்த நம் உலகில் அது குறிக்கும் கடும்வெறுப்பு, மனக்காழ்ப்பு, துன்புறுதி, அழிக்கவிரும்புதல் போன்ற எல்லாவற்றிலி ருந்தும் அச்சொல் தூய்மைப்படுத்தப்பட வேண்டும். பாவி சாக வேண்டுமென்ப தன்று, அவன் மனம் மாறி வாழ வேண்டு மென்பதே நமது விருப்பம் *(எசே 18:23)* என்று சொல்லும் கடவுள் பாவத்தை வெறுத்தால், பாவியை வெறுக்கிறார் என்று சொல்ல முடியுமா? தாமே தேர்ந்து கொள்வ தினாலும், தண்டிப்பதாலும், கடவுள் எல்லா மனிதர்க்கும் ஒரு தனிப்பட்ட அன்பின் திட்டத்தைச் செயலாற்றுகிறார். அவரது அன்பே இறுதிச் சொல்லைக் கொண்டிருக்கும். இத்திட்டம் இயேசுவில் முழுமையாக வெளிப்படுகிறது. புதிய ஏற் பாடு கடவுளிடம் வெறுப்பு இருப்பதாகப் பேசுவதே இல்லை.

IV. **இயேசு வெறுப்பை எதிர்கொள்ளல்:**

***1. உலகம் இயேசுவை வெறுத்தது:*** வெறுப்பு எனும் தீமையை நெருப்புப் போல வளர்க்கும் உலகில் தன்னை நோக்கி வரும் பல்வேறு வகையான வெறுப்பு களைப் பார்க்கிறார் இயேசு. கடவுளால் தேர்ந்து கொள்ளப்பெற்றவர் பொறாமைக் குட்பட்டு வெறுக்கப்படுவதை அவர் பார்க் கிறார் *(லூக் 19:4; மத் 27:18; யோவா 5:18)*. அவரது பிரசன்னமே கண்டனமாக இருக்கும்; நீதிமான் வெறுக்கப்படுகிறார் *(யோவா 7:7; 15:24)*; இஸ்ராயேலின் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்படுதலைத் தங் களுக்கு மட்டுமே உரிமையாக வைத்துக் கொள்ள விரும்பியதால் இயேசுவை வெறுக்கின்றனர் *(காண்க. யோவா 11:50)*. அவர்களுக்குப் பின்னால், தீமை நிறைந்த உலகம் முழுவதும் நிற்கிறது *(யோவா 15:18)*. மேலும், அவரிடம் உள்ள ஒளியை யும் வெறுக்கின்றனர். ஏனெனில், அவர்க ளது செயல்கள் அனைத்தும் தீமையும் இருளைச் சார்ந்ததுமாக இருக்கின்றன *(3:20)*. குருட்டுத்தனமான, காரணமில்லாத வெறுப்புப் பற்றி மறைநூல் அறிவிக்கும் மறைபொருள் இவ்வாறு நிறைவேறுகிறது *(15:25)*. இந்த வெறுப்பு இயேசுவைக் கடந்து தந்தைவரை செல்கிறது *(15:23தொ)*. இயேசு வெறுப்பிற்குப் பலியாகி இறக்கி றார். ஆனால், அவர் தனது இறப்பினால் வெறுப்பைக் கொல்கிறார் *(எபே 2:14. 16)*. ஏனெனில், இந்த இறப்பு அன்புச் செயலா கும். அது மீண்டும் அன்பை உலகினுள் அறிமுகப்படுத்தி, என்றென்றும் மாறாது நிலைத்திருக்கும் வண்ணம் நிலைநாட்டி விட்டது.

***2. உலகம் கிறிஸ்தவர்களை வெறுக்கி றது:*** இயேசுவைப் பின்பற்றும் எவரும் அதே அனுபவத்தைப் பெறுவர். அவரது பெயருக்காக அவரது சீடர்கள் வெறுக்கப் படுவர் *(மத் 10:22; 24:9)*. அதைக் கண்டு அவர்கள் அச்சம் கொள்ளத் தேவையில்லை *(1 யோவா 3:13)*. அதற்காக உண்மையிலே அவர்கள் மகிழ வேண்டும் *(லூக் 6:22)*.

ஏனெனில், அவர்களது தலைவருக்குக் கிடைத்த அதே முடிவு அவர்களுக்கும் கிடைக்கும். உலகம் அவர்களை வெறுக்கிற தென்றால் அதற்குக் காரணம் அவர்கள் உலகத்தைச் சார்ந்தவர்களாய் இராததுதான் *(யோவா 15:19; 17:14)*. இவ்வாறு தொடக்க முதல் ஆற்றலுடன் செயல்படும் பகைவன் யார் என்பது வெளிப்படுத்தப்படுகிறது *(8:44)*. ஆனால், இயேசு அவர்கள் அனைவருக்காகவும், அவர்களை உலகிலிருந்து நீக்கிவிட வேண்டும் என்றல்லாமல், தீயோனிடமிருந்து அவர்களைக் காத்தருள வேண்டும் என்று செபித்துள்ளார் *(17:15)*.

**3. தீமையை வெறுக்க வேண்டும் மனிதர்களையல்ல:** எவ்வாறு இயேசுவின் மேலும் *(யோவா 14:30; 8:16)*, தூய தந்தையாம் கடவுளின் மேலும் *(17:11)* இவ்வுலகின் தலைவனுக்கு எவ்வித அதிகாரமும் இல்லையோ அதுபோல இயேசுவின் சீடர்களும் தீமையை வெறுப்பர். கடவுளுக்கும் உலகிற்கும் *(1 யோவா 2:15; யாக் 4:4)*, கடவுளுக்கும் ஊனுக்கும் *(உரோ 8:7)*, கடவுளுக்கும் பணத்திற்கும் *(மத் 6:24)* இடையில் அடிப்படையிலே பெரும் முரண்பாடு உள்ளது. இவை எதுவும் கடவுளோடு ஒத்துப்போகாது என்பதை அவர்கள் அறிவர். தீமையோடு ஒத்துப்போவதற்குப் பதிலாக அவர்கள் அனைத்தையும் துறந்து, ஏன் தங்களையே வெறுப்பதற்கும் முன் வருவர் *(லூக் 14:26; யோவா 12:25)*. ஆனால், மற்ற மனிதர்களைப் பொருத்தமட்டில் அவர்கள் யார்மீதும் வெறுப்பு வைப்பதில்லை. ஏனெனில், தன் சகோதரனை வெறுக்கும் எவனும் இருளில் இருக்கிறான் *(1 யோவா 2:9.11; 3:15)*. அன்பு ஒன்றே பகைவரிடம் கொண்டுள்ள உறவிலும் கூட நிலவும் சட்டமாகும் *(லூக் 6:27)*.

வெறுப்புப் பற்றிய வரலாற்றின் முடிவில் எல்லாக் கிறிஸ்துவர்கட்கும் ஒன்று தெளிவாகிறது; செயலாற்ற வேண்டிய நேரடியான செயல்முறையும் தெளிவாகிறது. அதாவது, ஒருவன் எல்லோரையும் அன்பு செய்தல் வேண்டும்; தன்னையே வெறுக்க நேர்ந்தாலும் பரவாயில்லை. ஒருவன் தன்னையே நிலைநாட்டிக்கொள்ள வெறுப்பு ஒன்றுதான் வழி எனக் கிறிஸ்து இல்லாத போது நினைக்கலாம் *(எபே 2:11; தீத் 3:3)*. ஆனால், காயீனின் காலம் கடந்து போய்விட்டது. ஒவ்வொரு கிறிஸ்தவனும் தெளிவாக்கிக் கொள்ள வேண்டியது ஒன்று உள்ளது. அன்பு மட்டுமே வாழ்வு தருவது. அது மட்டுமே ஒருவனைக் கடவுளைப் போல் மாற்றுகிறது *(1 யோவா 3:11-24)*.

## வெறுமையாக்குதல் *(EMPTIED, KENOSIS)*

புதிய ஏற்பாட்டில், கிறிஸ்து இயல்பகுதி இச்சொல்லைப் பிலி *2:7*-இல் கொண்டிருக்கிறது. ''கடவுள் தன்மையில் விளங்கிய அவர்... தம்மையே வெறுமையாக்கி அடிமையின் தன்மை பூண்டார்....'' என்று பவுல் கூறுகிறார். இந்த வெறுமையாக்குதலுக்கு மூன்று வகையான விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

அ) கிறிஸ்து, கடவுள் தன்மையில் வெளி அடையாளங்களை வெறுமையாக்கி, மனிதத் தன்மையில் வெளியடையாளத்தை எடுத்துக்கொண்டார் என்று பவுல் கூறியதாக ஒரு கருத்து உள்ளது. இதன்படி பார்த்தால் இயேசு முழு மனிதனாக இவ்வுலகில் இல்லை; மாறுவேடம் பூண்டு உலகில் தோன்றினார். இக்கருத்தைத் திருச்சபை நிராகரித்தது.

ஆ) மற்றொரு கருத்து கிறிஸ்து தன் தெய்வீகத் தன்மையிலிருந்து (எல்லாம் அறிதல், எல்லாம் வல்லமை போன்ற) மாட்சிமையின் அடையாளங்களைத் துறந்தார் என்றும், அவரிடமிருந்தது மனிதன் என்ற தன்மை ஒன்றே என்பதும் ஆகும். இதன்படி எல்லாத் தெய்வீக சக்தியும் போய்விட்டதாகக் கூறப்படவில்லை. ஏனெனில் இறைவனின் அன்பு இன்னும் அவரில் காணப்படுகிறது. அவர் கடவுள் தன்மையில் இருக்கும்போது கொண்டிருந்த சில குணங்களை மட்டும் கைவிட்டார்;

எல்லாப் பண்புகளையும் கைவிட்டு விட வில்லை. இதுவும் ஏற்றுக்கொள்ளப்படத் தக்கதன்று.

இ) மூன்றாவது விளக்கம் ஒன்று உண்டு. அதாவது, 'இயேசு கிறிஸ்து, எதிலிருந்தும் தன்னையே வெறுமையாக்கிக் கொள்ள வில்லை; ஆனால், தன்னையே வெறுமை யாக்கினார்' என்று பவுல் கூறுகிறார். இவ்வாறு இயேசு கடவுளுக்கு இணையாயி ருக்கும் நிலையை விடாமல் பிடித்துக் கொண்டிராமல், தன் வாழ்க்கையையே வெறுமையாக்கினார் என்றும், அதன் சில பண்புகளை மட்டுமோ, புறவடிவை மட்டுமோ அன்றி முழுவதையும் வெறுமை யாக்கினார் என்றும் பவுல் கூறுகிறார். வெறுமையாக்குதல் என்ற சொல்லைக் ''கொட்டுதல், சிந்துதல்'' என்றும் மொழி பெயர்க்கலாம். கிறிஸ்து ''சாவை ஏற்கும் அளவுக்குத்'' தம்மைக் கொட்டினார், சிந்தி னார் (பிலி 2:8). இதற்குப் பின்னால் ''அவர் தன்னையே சாவுக்குக் கையளித்தார்'' (கொட்டினார்) என்று எசா 53:3.8.12-இல் வரும் காட்சி அமைந்திருக்கிறது.

கி.பி. மூன்றாம் அல்லது நான்காம் நூற்றாண்டிலிருந்து இச்சொல் கிறிஸ்தவ இறையியலில் பிலி 2:7-இல் வரும் கருத்தை விவரிக்கப் பயன்பட்டுள்ளது. இதன்படி காலத்துக்கு முன் வாழ்ந்து கொண்டிருக்கும் கிறிஸ்து, மனிதன் ஆவதற் காகத் தன்னையே வெறுமையாக்கினார் அல்லது கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையைத் துறந்தார். இந்தத் துணிகரமான கூற்றினால் எதை உணர்த்த பவுல் விரும்பி னார் என்று கூறுவது கடினம். மனிதனான தில், கிறிஸ்து தமது தெய்வீகத்தையோ, தந்தையோடு கொண்ட சிறப்பு உறவையோ இழந்து விட்டார் என்று பவுல் பொருள் கொண்டார் என்று கூற முடியாது. அப்படி யிருந்தால் அவரது மனு உருவான வாழ்வு ஓர் இறைவாக்கினருடைய அல்லது போதக ருடைய வாழ்வை விட அதிகப் பொரு ளுடையதன்று. கிறிஸ்து விரும்பிச் சுயமாக, இறை அடையாளங்களையும் தனிச் சிறப்பு ரிமைகளையும் துறந்தார் என்பதே இங்குச் சிறப்பாகக் குறிக்கப்பட வேண்டும். பவு லின் சிந்தனையில் இயேசு இறைவன், மனிதன் என்ற பொய்த்தோற்றத்தில் சுற்றித் திரியவில்லை. இஃது, ''அவர் தம்மைத் தாழ்த்திச் சாவை ஏற்கும் அளவுக்கு, அது வும் சிலுவைச் சாவை ஏற்கும் அளவுக்குக் கீழ்ப்படியலானார்'' என்ற பிலி 2:8-ஆல் மட்டுமன்றி, 2 கொரி 13:4-இல் ''வலுவின் மையால் அவர் சிலுவையில் அறையுண் டார்'' என்பதாலும், சிலுவை இடறலாக வும் மடமையாகவும் இருப்பது பற்றிய (1 கொரி 1:18-30) வலிமையான மொழியா லும் காட்டப்படுகிறது. பிலி 2:5-11 என்ற பகுதி தொடக்க காலக் கிறிஸ்தவப் பாடலி லிருந்தோ, நற்செய்தி அறிக்கையிலிருந்தோ தோன்றியிருக்க வேண்டும் என்றும், இது பவுலின் திருமுகங்களுக்கு முந்தியது என் றும் கருதக் காரணம் இருக்கிறது.

திருச்சபைத் தந்தையரின் இலக்கியங்க ளில், ''வெறுமையாக்குதல்'' என்ற சொல், இறைமகனுடைய அருள்பாலிப்புத் தாழ்ச் சியை எடுத்துக்கூறும் மனு உருவாவதைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகும் (காண்க. 2 கொரி 8:9). நவீன இறையியலில் பரந்த கோட்பாட்டை விவரிக்க இச்சொல் பயன் படுகிறது. அதாவது, இயேசு இறைப்பண்பு கள் சிலவற்றையோ முழுவதையுமோ துறந்து, வரையுள்ள அறிவுக்குட்பட்ட மனித வாழ்வின் எல்லா நிலைகளுக்கும் சுதந்தரமாகவும் சுயமாகவும் உட்பட்டார். புதிய ஏற்பாட்டின் பல பகுதிகள் இந்தக் கோட்பாட்டை ஆதரிக்கும்போது, யோவா னின் நற்செய்தி வேறுபட்ட நிலையைக் கொண்டிருக்கிறது. அஃது, இயேசு அருஞ் செயல் செய்யும் வல்லமையையும் அறிவை யும் கொண்டிருப்பதாகவும், தந்தையோடு இடைவிடாத உறவையும் நிறை இணைத் தன்மையையும் கொண்டிருப்பதை உறுதிப் படுத்துவதாகவும் சித்திரிக்கிறது (யோவா 1:14.48; 5:19-24; 10:30; 11:41-42; 13:1-3).

**வெற்றி, வாகை சூடல்** (VICTORY, TRIUMPH)

I. வெற்றி என்பது சண்டையிடுதலையும், தோல்வியுறும் வாய்ப்பையும் உள்ளடக்கு கிறது. உண்மையிலே மனித சமுதாயத்தின் வரலாற்றுத் தொடக்கத்திலே மனிதன் சாத்தான், பாவம், இறப்பு ஆகியவற்றால் தோற்கடிக்கப்படுவதை விவிலியம் கூறு கிறது. ஆனால், அந்தத் தோல்வியிலே தீமையின்மீது வெற்றிபெறப் போவதற்கான ஒரு வாக்குறுதியும் கொடுக்கப்படுவதைப் பார்க்கிறோம் (*ஆதி 3:15*). மீட்பின் வரலாறு என்பது இந்த உறுதியான வெற்றியை நோக்கிய முன்னேற்றம்தான்.

II. ***பழைய ஏற்பாடு:*** கடவுளின் மக்கள் தங்கள் உலகம் சார்ந்த வரலாற்றிலே முதன் முதலில் இவ்வாறு வெற்றியையும், தோல்வியையும் சந்திக்கின்றனர். ஆனால், இந்த அனுபவம் மற்றொரு மட்டத்தில் பெற விருக்கும் மற்றொரு வெற்றியை எதிர்பார்ப்பதற்கு அதன் விசுவாசத்தை இட்டுச் செல்கிறது.

***1. கடவுளின் மக்கள் பெற்ற வெற்றிகள்:*** தொடக்க கால இஸ்ராயேல் மக்கள் தங்கள் கடவுளின் வலிமையை அவர்கள் தாம் பெற்ற போர் வெற்றிகளின் அடிப்படையில் கணக்கிட்டனர். தங்கள் எதிரிகளைத் தாங்கள் வெற்றி கொள்வதோடு கடவுள் தீமை மேல் கொள்ளும் வெற்றியைக் குழப்புகின் றனர். போரில் அவர்கள் யாவேயின் சேனை யல்லவா? (*யாத் 12:41; நீதி 5:13; 1 சாமு 17:26*). எனவே, யாவே அவர்கள் சார்பாய்ப் போரிட்டு அவர்களுக்கு வெற்றியை உறுதிப்படுத்துகிறார். இது மோசே (*யாத் 14:14; 15:1-21; 17:8-16*), யோசுவா (*யோசு 6:16; 10:10*), நீதிபதிகள் (*நீதி 7:15*), அரசர்கள் (*1 சாமு 14:6; 2 நாள் 14:10தொ; 20:15.29*) ஆகியோரின் தலைமையில் நடக்கிறது. போர் அவசியமானதாக இருந்தது. ஆனால், அதே நேரத்தில், வெற்றியைக் கடவுளிடமிருந்து வரும் அருளாகவும், கொடையாகவும் உணர்ந்து கொள்வதும் அவசியமாக இருந்தது (*சங் 18:32-49; 20:7-10; 118:10-27*). அதனால், மக்கபேயர்கள் தங்கள் வெற்றியைக் கடவுளின் சேனை களுக்குரியதாகக் கூறத் தயங்கியதில்லை (*1 மக் 3:19; 2 மக் 10:38; 13:15; 15:8-24*).

இவ்வாறு கடவுள் வெற்றிகொள்ளப்பட முடியாத துணையாளராகத் தோன்றுகிறார் (*யூதி 16:3; உப 32:22-43; எசா 30:27-33; நாகூ 1:2-8; அப 3; நாள் 29:11*). தொடக்கத்தில் குழப்பத்தின் சக்திகளாம் மாபெரும் விலங்குப் பூதங்களை வெற்றி கொண்டது போல் கடவுள் வரலாற்றில் அவரது மீட்புத் திட்டத்தின் எதிரிகளும், குழப்பத்தின் சக்தி களுமான புறவினத்தாரை வென்று தனது சக்தியையும் திட்டத்தையும் நிலைநாட்டுகிறார். இந்த ஒரு காரணத்திற்காகவே இஸ்ராயேலர் தங்கள் எதிரிகளை வென்று ஆள லாம். இந்த அனுபவம் சமயப்பொருளுடையது என்பதை மறுக்க முடியாது; ஆனால், ஐயப்பாடு உடையதுமாகும். ஆனால், இத்தகைய வெற்றியை அதனால் கிடைத்த உலக அதிகாரத்துடன் சமமாக்கிப் பார்க்கும் சோத னைக்கு உட்படுத்த மாட்டார்களா? சரிசம எதிராற்றல் இந்தத் தவற்றிலிருந்து பாதுகாக் கும்.

***2. கடவுளின் மக்கள் பெற்ற தோல்விகள்:*** அவர்கள் வெற்றி பெற்றபோது கூட இறைவன் அளித்த வெற்றி அவர்களின் நன்னடத்தைக்குரிய வெகுமானமாக இருக்க வேண்டியதில்லை என்று (*உப 9:4தொ*) இறைவாக்கினர்கள் இஸ்ராயேலருக்கு நினைவுபடுத்துகின்றனர். அவர்கள் ஆன்மீக வாழ்வின் மோசமான நிலையைக் காட்ட தோல்விகளும் அவசியமாக இருந்தன. விடுதலைப் பயணத்தின்போது ஏற்பட்ட சோதனைகள் (*எண் 14:42; உப 8:19தொ*), கானானை வெற்றி கொள்வதில் ஏற்பட்ட தாமதம் (*யோசு 7:1-12; நீதி 2:10-23*), அரசாட்சியின் கீழ் ஏற்பட்ட தோல்விகள் (*2 நாள் 21:14; 24:20; 25:8-20*), சிறப்பாக, பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட பேரழிவு (*எரே 15:1-9; 27:6; எஸ் 22*) ஆகியவை அனைத்தும் இஸ்ராயேலர்கள் கடவுளை ஏமாற்றும்போது அவரும் அவர்களுக்கு எதிராகப் போராடத் தயங்கவில்லை என்று காட்டுகின்றன. இந்தத் தோல்விகள்

எல்லாம் அவர்களின் பிரமாணிக்கமற்ற தன்மைக்குத் தண்டனைகள் என்றே கூற வேண்டும் (சங் 78; 106). இந்தத் தோல்வி கள் எல்லாம் பேரரசுகளின் தலைவரான கடவுளின் தோல்விகளாகக் கருதப்படாமல், கடவுளின் வெற்றி இவ்வுலக வெற்றிகளி னின்று, மாறுபட்டதென்பதைக் காட்டுகின் றன. எனவே, அவப்பேறுகளைப் புரிந்து கொள்வதற்கும் ஓர் உண்மையான வெற்றிக் கும் இஸ்ராயேலரை இட்டுச்சென்றன.

**3. மற்றொரு வெற்றியை நோக்கி:** இறுதி நாட்களில் நிகழும் வெற்றி இதுவரை பெற்ற வெற்றிகள் அனைத்தையும் விட எல்லாவித்திலும் மகத்தானதாக இருக்கும் என இறைவாக்குகள் எல்லாம் கூறுகின்றன. ஆன்மீக வெற்றி ஆயுதங்களின் விளைவு அன்று என்று ஞானிகள் தெளிவாக்கினர்.

**அ) இறுதிநாளின் வெற்றி:** நாடு கடத்துத லுக்குப்பிறகு எழுந்த இறைவாக்கினர்கள் வரலாற்றின் இறுதிக்கட்டத்தை மாபெரும் போராகவும் அதில் கடவுள் தனது எதிரிகள் அனைவரையும் ஒட்டுமொத்தமாக எதிர் கொள்வார் என்று சித்திரிக்கவும் விரும்பு கின்றனர். நிச்சயமாக, கடவுள் அவர் களனைவரையும் அழித்தொழிப்பார் (காண்க. எசா 63:1-6). இஃது அவரது முடிவான ஆட்சிக்கு முன்னுரையாக அமை யும் (செக் 14; காண்க. எசே 38-39). மற்றப் பகுதிகள் யார் வழியாக இந்த வெற்றி அமையும் என்பதை அறிமுகப்படுத்துகின் றன. சில சமயம் இவர் அரச மெசியாவாக வும் (சங் 2:1-9; 110:5தொ), யாவற்றை யும் கடந்த மனுமகனாகவும், அவர்முன் விலங்குகளைக் கடவுள் ஒன்றுமற்றதாக மாற்றுவதாகவும் (தானி 7) தோன்றுகிறார். ஆனால், யாவேயின் ஊழியன் பெறும் வெற்றி முரண்பட்டதாக இருக்கிறது. ஏனெ னில், அவர் பெறும் வெற்றி தன்னையே தியாகம் செய்து பெறும் வெற்றியாகும் (எசா 52:13தொ; 53:11தொ). இவ்வாறு அவர் கடவுளின் திட்டத்தை நிறைவுக்குக் கொண்டு வருகிறார். மனுமகனுடைய வெற்றி வரலாற்றைக் கடந்து செல்வதால் அஃது உலகப் பருமன்களுக்கு அதிக மானது; ஊழியனது வெற்றி ஆன்மீகத் தனத்தைக் கொண்டுள்ளது. இஃது ஒன்றே இறுதி முக்கியத்துவம் உடையது.

**ஆ) நீதிமான்களின் வெற்றி:** எல்லா ஞானபோதனைகளிலும் மேலே கூறப்பட்ட வெற்றி, பாவத்தை வெல்லும் நீதிமான்க ளால் ஏற்கெனவே பெறப்பட்டுவிட்டது என்று கூறப்படுகிறது. இது புதிய ஏற் பாட்டு இறுதியில் சாலமோனின் ஞான நூலில் மிகத் தெளிவாகிறது. போரில் வெற்றி பெற்று அதில் கறை படாததால் நீதிமான் கள் வெற்றிவாகை சூடிக் காலமெல்லாம் பீடு நடைபோடுவர் (ஞான 4:2). ஆண்டவர் தீமைக்கு எதிராகக் கடைசிப் போராட் டத்தைத் தொடங்கும்போதே நீதிமான்களுக் குரிய வெகுமானத்தை அவர்களுக்கு அளிப் பார் (ஞான 5:15-23). இத்தகைய வெற்றி யைத்தான் கிறிஸ்து பெறுவார்; எல்லாக் கிறிஸ்தவர்களும் பெறுவர்.

**III. புதிய ஏற்பாடு:**

**1. கிறிஸ்துவின் வெற்றி:** கிறிஸ்து இந்த மண்ணகப் போர்களை மட்டும் கொண்ட மனப்போக்கை உறுதியாகக் கடந்து செல்கி றார்; ஏனெனில், மற்றொரு தரமுடைய போராட்டத்தை அறிமுகப்படுத்துகிறார். அவரது பொதுவாழ்வின் தொடக்கத்திலி ருந்தே, தான் வலியவனை வெல்லும் அதிக வலிமையுடையவர் என்று உறுதியாகக் கூறுகிறார் (லூக் 11:14-22). இந்த வலியவன் உலகின் அரசனான சாத்தான் ஆவான். அவர் சாவதற்கு முன், சீடர்களை வெறுப் பால் துன்புறுத்தும் தீய உலகைக் கண்டு அஞ்சவேண்டாம் என்று அவர்களை எச்சரிக் கிறார். ஏனெனில், ''நான் உலகின்மீது வெற்றி கொண்டு விட்டேன். துணிவுடன் இருங்கள்'' (யோவா 16:33). இந்த வெற்றி, யாவேயின் ஊழியன் பெறும் வெற்றியில் காணப்படும் முரண்பாட்டுத் தன்மைகளை ஏற்று, அவற்றின் சொற்பொருளில் நிறை வேறுகிறது. ஆனால், உயிர்ப்பில்தான், இந்த வெற்றி செயல்முறையானதும் உறுதி யான உண்மையும் ஆகிறது. ஏனெனில், இங்குப் பாவம் மற்றும் சாவின்மேல் கிறிஸ்து வெற்றி கொள்கிறார். வெல்லப்

பட்ட சக்திகளைத் தன் வெற்றித் தேருக்குப் பின் இழுத்துச் செல்கிறார் (கொலோ 2:15). யூதாவின் இந்தச் சிங்கம் (திருவெளி 5:5) பழைய இஸ்ராயேல் அரசர்களின் வெற்றி களையெல்லாம் விஞ்சுகிறார். ஏனெனில், பலியிடப்பட்ட செம்மறி (5:12) மனித வரலாற்றின் தலைவராக ஆகிவிட்டார். அவரது வெற்றி இறுதியானதும் உறுதியான துமாக ஒளிரும். அஃது எப்பொழுதென் றால் அவரை எதிர்க்கும் சக்திகளைச் (17:14; 19:11-21) சிறப்பாக, சாவை என்றுமாக வெற்றி கொள்ளும்போது (1 கொரி 15:24தொ) நடைபெறும். தோற்றத்திற்குத் தோல்வியானாலும், சிலுவை தூயவர்கள் பாவத்தை வெற்றி கொள்வதற்கும், வாழ் வோர் இறந்தோரை வெல்வதற்கும் உத்தர வாதம் தருகிறது.

**2. புதிய மக்களின் வெற்றி:** இத்தகை யதே கிறிஸ்துவின் வெற்றியும் அவரைப் பின்பற்றும் அவரது புதிய மக்களின் வெற் றியுமாகும். இந்த வெற்றி, தோற்றத் தோல் விகள் நிகழும் உலகில் இனி நடப்ப தில்லை. இவ்வாறு மறைசாட்சிகள் விலங் கால் நசுக்கப்படுகின்றனர் (திருவெளி 11:7; 13:7; காண்க. 6:2). ஆயினும் செம்மறியின் இரத்தத்தினால் (12:10தொ; 15:2), அவர்கள் ஏற்கெனவே அதை வென்று விட்டனர். இவ்வாறே கிறிஸ்துவின் வெற்றியில் பங்கு பெறும் அப்போஸ்தலர்களும் (2 கொரி 2:14) வெற்றி அடைகின்றனர். ஆயினும், அவர்கள் அப்போஸ்தலப் பணியின் தேவை களால் நசுக்கப்படலாம் (4:10). இதுவே எல்லாக் கிறிஸ்தவர்களுக்கும் பொருந்தும். அவர்களின் தந்தையை ஏற்றுக்கொள்வதா லும், அவரது வார்த்தையால் ஊட்டம் பெறுவதாலும், அவர்கள் தீயவனை வெற்றி கொண்டு விட்டனர் (1 யோவா 2:13தொ). கடவுளிடமிருந்து பிறந்தவர்களாய் அவர்கள் அடைந்த வெற்றி இறைமகனில் அவர்கள் கொண்டிருக்கும் விசுவாசமே (5:5). அவ ரில், எதிர்க்கிறிஸ்துவால் தூண்டப்படும் மனிதர்களை அவர்கள் வெற்றி கொள்கின்ற னர் (4:4). கிறிஸ்தவன், தீமையை வெல்ல போராட்டத்தால் இந்த வெற்றியை வலுப்படுத்த வேண்டும். இனி மேலிருந்து ஆவியால் எல்லா இடர்களை யும் வெல்ல முடியும் என்று கிறிஸ்தவனுக் குத் தெரியும். கிறிஸ்துவின் அன்பிலிருந்து எதுவும் ஒருபோதும் அவரைப் பிரிக்காது (8:35தொ).

கிறிஸ்தவன் தன் தலைவரின் வெற்றியில் மட்டுமன்று, அவருடைய மகிமையிலும் பங்கு பெறுவான். வெற்றி பெற்றவர்களின் வெகுமானத்தை விவரிக்கப் புதிய ஏற்பாடு உருவகங்களைப் பயன்படுத்துகிறது. அது மேலிருந்து தயாரிக்கப்பட்ட மணிமுடியா கும்; வாழ்வின் வெற்றிவாகையாகும் (யாக் 1:12; திருவெளி 2:10); மகிமையின் வாடாத வெற்றிவாகையாகும் (1 பேதுரு 5:4); நீதியின் வெற்றிவாகையாகும் (2 திமொ 4:8); உலகவெற்றி வாகையைப்போல் அல் லாமல், அஃது அழியாத வெற்றிவாகையா கும் (1 கொரி 9:25). ஏனெனில், அப்போஸ் தலர்களால் விசுவாசத்திற்குக் கொண்டு வரப்பட்ட மனிதர்களால் ஆன உயிருள்ள வெற்றிவாகையாகும் (பிலி 4:1; 1 தெச 2:19). திருவெளிப்பாட்டு நூல், விலங்குக்கு எதிராகப் போரில் ஈடுபட்டிருக்கும் கிறிஸ்த வர்களை அழுத்திக்கூறி, வெற்றி பெறுபவர் களுக்குக் கிடைக்கும் பரிசைச் சிறப்பாக விவரிக்கிறது. அவர்கள் இறைவனின் புதல் வர்களாய் இருப்பர்; அவரோடு சேர்ந்து புறவினத்தார் மீது அதிகாரம் செலுத்துவர் (2:26); ஒரு புதிய பெயரைப் பெறுவர் (2:17); வாழ்வு தரும் மரத்தின் கனியை உண்பர் (2:7); அவர்களது கடவுளின் ஆலயத்தில் ஒரு தூணாக ஏற்படுத்தப்படு வர் (3:12). முடிவில்லா வாழ்வில் ஒரு முறை நுழைந்தபின் இரண்டாவது சாவைப் பற்றி ஒருபோதும் அச்சப்பட வேண்டிய தில்லை (2:11). இந்நிலை, தோற்கடிக்கப் பட்டவர்கள், கோழைகள் மற்றும் நெறி கெட்ட கயவர்களுடைய நிலையிலிருந்து பெரிதும் வேறுபட்டதாகும் (21:8).

புதிய ஏற்பாடு கண்களைக் கூசச் செய்யும் வெற்றி பற்றிய இக்குறிப்போடு முடிகிறது. ஆதியாகமத்தில் வரும் மூல வாக்குறுதி இவ்வாறு எதிர்பார்ப்புகளையெல்லாம்

கடந்த உண்மையாகிறது. ஏனெனில், சாத்தானால், பாவத்தால், சாவால் ஒருமுறை வெல்லப்பட்ட மனிதன், இயேசு கிறிஸ்து வழியாக அவற்றையெல்லாம் வென்று விட்டான்.

**வெற்றி நுழைவு** (TRIUMPHAL ENTRY)

இஃது இயேசுவின் இறுதிக்காலத்திலே அவர் கழுதைக்குட்டியின் மீது மக்கள் புடைசூழ எருசலேமில் நுழைந்த நிகழ்ச்சியைக் குறிக்கிறது. இது மெசியாவின் பணியில் ஒரு பகுதியைச் சுட்டிக்காட்டுகிறது (மத் *21:1-11;* மாற் *11:1-11;* லூக் *19:28-44;* யோவா *12:12-19*). மாற்கு மெசியாவின் மகிமையைக் குறைவாகவே கூறுகிறார். ஆனால், மத்தேயு தாவீதின் மகன் வருகையைக் கண்டு நகரமே கலங்கியதாகக் கூறுகிறார். லூக்கா நற்செய்தியிலே சீடர்கள் இயேசு அரசர் எனப் பறைசாற்றினர். இதை யோவானும் அழுத்திக் கூறுகிறார். ஆனா சீடர்கள் இந்த நிகழ்ச்சியை முதலில் புரிந்து கொள்ளவில்லை. மேலும், யோவான் மட டும் குருத்தோலைகளைப் பற்றிக் கூறுகி றார் (*12:13*). இதனிலிருந்துதான் 'குருத்து ஞாயிறு' வழிபாடு தொடங்கியது. இந்த நுழைவைப் பற்றிய விளக்கங்கள் பல உள.

அ. மெசியா பற்றிய இறைவாக்குகளை உணர்ந்தவராக, இயேசு தான் எருசலேமில் இவ்வாறு நுழைந்ததன் மூலம் அவற்றை அடையாளச் செயல்களால் நிறைவேற்றினார்.

ஆ. இது மூலத்தில், சீடர்கள் தங்கள் தலைவர் நகருக்கு வருவதைக் குறித்து மகிழ்ந்து உற்சாகமாக வரவேற்றனர். பின்னர், இந்நிகழ்ச்சிக்கு மெசியாப் பொருள் கொடுக்கப்பட்டது.

# வே

## வேதனை, கடுந்துன்பம் (TRIBULATION)

இஃது இறுதிக்காலத்தில் வரும் பெரும் துன்பங்களைக் குறிக்கும் இவற்றிலிருந்து தானி 12:1-இல் முன்னுரைக்கப்பட்டது போல் தேர்ந்தெடுக்கப்பட்டோர் மீட்கப்படுவர் (காண்க. மாற் 13:19; திருவெளி 7:14). புதிய ஏற்பாட்டில், இது நற்செய்தியை விசுவசித்து, இயேசுவைப் பின்பற்றுவோரின் எதிர்பார்க்கப்பட்ட அனுபவமாகும் (மத் 13:21இணை; 24:9; யோவா 16:20-22.33; அ.ப. 14:22; திருவெளி 1:9; காண்க. 1 தெச 3:3).

இறுதிக்காலம் பற்றிய வாசகங்களில், வேதனை ஒருமுனைப்பான கருத்தாகும். தீமை செய்யும் எவனும் எதிர்பார்க்க வேண்டிய முடிவாகும் (உரோ 2:9; திருவெளி 2:22; காண்க. 2 தெச 1:6-7). பழைய ஏற்பாட்டில் இறைமக்களின் பாவங்களுக்குத் தண்டனையாக எதிர்பார்க்கப்பட்ட துன்பமே (காண்க. உப 4:70) இக்கருத்துக்குப் பின்னணியாக அமைந்துள்ளது. பாவங்களுக்குத் தண்டனையாக நிகழவிருக்கும் உலகின் இறுதிக்கால அழிவிலிருந்து நீதிமான்கள் மீட்கப்படுவர் (திருவெளி 7:14; காண்க. தானி 12:1; 1 பேதுரு 4:7.12-18). இயேசுவும் வேதனையை இறுதிக்கால நிகழ்ச்சிகளின் ஒரு பகுதியாக் அல்லாமல், அவற்றின் முன்னுரையாக இருக்குமென்று கூறுகிறார். கி.பி. 66-79-இல் நடந்த போர், ஆலய அழிவு (மத் 24:15-22 இணை) ஆகியவை இறுதிக்கால நிகழ்வுகளுக்கு முன் வரும் (24:29-31) வேதனைகளாக (24:21 இணை) அடையாளம் காட்டப்படுகின்றன. ''பெரும் வேதனை'' என்பதை இறைவனின் இறுதிக்கால மீட்பிற்கும் கிறிஸ்துவின் இறுதி வருகைக்கும் முன்னால் உடனடியாக நிகழவிருக்கும் இதுவரை நிகழ்ந்திராத துன்பங்கள், பேரழிவுகள், துன்புறுத்தப்படுதல் ஆகியவை அடங்கிய தனிப்பட்ட காலமாகக் கருதுகின்றனர் விளக்கவுரையாளர் சிலர்.

இயேசு கெத்சமனித் தோட்டத்தில் அனுபவித்த கடுந்துயரைக் குறிக்கவும் இச்சொல் பயன்பட்டுள்ளது (லூக் 22:44).

## வேசிப்பிள்ளை (BASTARD)

விபசாரத்திலோ, தகாத நெருங்கிய உடலுறவிலோ பிறந்த குழந்தை இவ்வாறு குறிக்கப்படுகிறது (உப 23:2). திருமணத்துக்குப் பிரமாணிக்கமின்மை எவ்வளவு கொடுமையான குற்றமாகக் கருதப்பட்டது என்றால் அத்தகையோரும் அவர்கள் பிள்ளைகளும் பத்துத் தலைமுறை வரையிலும், அதாவது எக்காலத்திற்கும், முதலில் ஆலயத்திலும் பிற்காலத்தில் செபக்கூடங்களிலும் நடக்கும் ஆண்டவர் சபையில் அனுமதி மறுக்கப்பட்டனர் (உப 23:2). செக் 9:6-இல் இவர்கள் கலப்பின மக்கள் என்றழைக்கப்படுகின்றனர். இவர்கள் குடும்பத்தின் கூட்டொருமையிலும் அதன் உரிமைகள் மற்றும் பொறுப்புக்களிலும் பங்கு பெற முடியாததால், எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தின் ஆசிரியர், இறைவனால் கண்டித்துத் திருத்தப்படாதவர்களை வேசிப்பிள்ளைகள் என்றழைக்கிறார் (எபி 12:8).

## வேடன் (FOWLER)

கண்ணி, வலை, வலைப்பொறி, பறவை கள்பொறி, வீழ்த்து குழி என்று இன்னும் பலவகையான வழிகளால் பறவைகளை உணவிற்காகவோ வீர விளையாட்டிற்காகவோ வேட்டையாடுபவர்களே வேடர் ஆவர். விவிலியத்தில் இஃது உருவகமாகப் பயன்பட்டுள்ளது. கொடுமையும், தீமையும், சிலைவழிபாடும் பொறி, கண்ணி என்று குறிப்பிடப்படுகின்றன (சங் 91:3; 124: 7; 141:9; எரே 5:26-27).

போலி இறைவாக்கினர்கள் இந்த வேடர்களைப் போன்றவர்கள் (ஒசே 9:8). ஆதலால், கடவுள் தீயவர்களை அவர்களுடைய தீச்செயல்களுக்காக வானத்துப் பறவைகளைப் போலக் கீழே வீழ்த்தித் தண்டிக்கிறார் (யோபு 18:9-10; ஓசே 7:12). இயேசு

வும் இந்தக் கண்ணி உருவகத்தைப் பயன் படுத்துகிறார் (லூக் 21:35). வியாபாரம் ஒரு கண்ணி போன்றதாகும் (பழ 6:5). பல்வேறு வகையான வலைகள்தவிர, வேடர்கள் குச்சிகளையும் (அம்பு), கற்களையும் (கவண்) பயன்படுத்துகிறார்கள் (நீதி 20:16).

### வேட்டைப்பொருள் (GAME)

விவிலியகாலத்தில் கலைமான்கள், சிறு மான்கள், வரையாடுகள், கொழுத்த கோழி கள் முதலியவை முக்கியமான வேட்டைப் பொருள்களாகும் (1 அர 5:3). ஏசா வேட்டையாடித் தந்த உணவின் பொருட்டு ஈசாக்கு அவன் மேல் அன்பு கொண்டிருந் தார் (ஆதி 25:28). யாக்கோபு, தன் தமைய னான ஏசாவைப்போல் மாறுவேடம் பூண்டு, தன் தந்தை ஈசாக்குக்கு விருப்ப மான, சுவையுள்ள வேட்டைப் பொருள் களை உண்ணக்கொடுத்து ஏமாற்றி, தலை மகனுக்குரிய ஆசீரைப் பெற்றுக்கொண்டார் (ஆதி 27).

### வேட்டையாடுதல் (HUNTING)

பழங்கால மேற்காசியாவில் வேட்டை யாடுதல் மிகவும் வளர்ச்சியடைந்த கலை யாகும். விவசாயம் பரவியதும், நகரங் களின் எழுச்சியும் உணவு அளிப்பதில் வேட்டையாடுதலை இரண்டாந்தர முக்கி யம் வாய்ந்ததாக மாற்றினாலும், விவிலிய மும் மற்ற இலக்கியங்களும் வேட்டையாடு தலில் பயன்பட்ட கருவிகள் மற்றும் உபாயங்கள் பற்றிப் பல கருத்துக்களைக் கொடுக்கின்றன. வேட்டை உருவகம் விவி லியம் முழுவதும் காணப்படுகிறது.

பழைய ஏற்பாட்டில் நிம்ரோதும் (ஆதி 10:9), ஏசாவும் (25:27) மட்டுமே வேடர்கள் என்று கூறப்படுகின்றனர். வேட்டையாடு தல் அவ்வப்போது பழக்கத்திலிருந்திருக்கி றது; அதுவும் விவசாயத்திலோ, வீட்டு விலங்கு வளர்ப்பதிலோ ஈடுபட்ட பெயர் தெரியாதவர்களிடையே இருந்திருக்கிறது. வேட்டை நாய்கள் மற்றும் வேட்டைப்பருந் துகளைப் பயன்படுத்தி இன்பத்திற்காக வேட்டையாடுதல் எகிப்திய, பெனீசிய, அசீரிய நினைவுச் சின்னங்களில் சித்திரிக்கப் பட்டுள்ளன; ஆனால், விவிலியத்தில் காணப்படவில்லை.

வேட்டையாடுதலில் வில், அம்பு (ஆதி 27:3), கவண்கள் (1 சாமு 17:40.49-50), சுருக்குக் கண்ணி, ஈட்டிகள், பொறிகள், வலைகள், முட்டுப்பொறி ஆகிய கருவிகள் பயன்பட்டன. கொடிய விலங்குகளிடமி ருந்து மனிதர்களையும் வீட்டு விலங்கு களையும் பாதுகாக்க வாள்கள், ஈட்டிகள், கவண்கள், தடிகள் போன்றவை பயன்பட் டன. விலங்குகளை வேட்டையாடுவதை விட பறவைகளை வேட்டையாடுதல் சாதா ரணமானதாகும். பெரும்பாலும் அவற்றைக் களைத்துப்போகும் வரை விரட்டி, கல்லால் அடித்துக் கொல்வர்.

வேட்டைக்காரனுடைய பொறுமையும், கொல்லும் நோக்கமும் பழைய ஏற்பாட்டி லும் புதிய ஏற்பாட்டிலும் உருவகமாகப் பயன்படுகின்றன. மனிதன் மனிதனை வேட்டையாடுதல் (மீக் 7:2; காண்க. 1 சாமு 24:11), யாவேயின் கடுமை தணியாத தீர்ப்பு (யோபு 10:16; எரே 16:16; காண்க. எசா 24:17-18; எரே 48:43-44), இயேசு வையோ, விசுவாசிகளையோ அவர்க ளுடைய பேச்சில் சிக்க வைக்கும் முயற்சி (காண்க. மாற் 12;13; லூக் 11:54; 1 திமொ 3:7; 2 திமொ 2:26) முதலியவை முக்கிய உருவகக் கருத்துகளாகும்.

### வேய்தல் (OVERLAY)

யாத்திரையின் திருஉறைவிடம் மற்றும் எருசலேம் ஆலயம் ஆகியவற்றின் சில பகுதிகள் தங்கம், வெள்ளி, வெண்கலம் ஆகியவற்றால் வேயப்பட்டதாகக் குறிப்பு கள் உள்ளன. இதில் பயன்பட்ட உலோகம் இலையை விடத் தடிமனானதாய் இருக் கும். இத்தகடுகள் பொருட்களின் மேல் அடித்துப் பதிக்கப்பட்டது.

தாவீது கோயிற்சுவர்களை வேய்வதற்காக மூவாயிரம் தாலந்து பொன்னும், ஏழாயிரம் தாலந்து வெள்ளியும் அளித்தார் (1 நாள் 29:4). சனகெரிபு முந்நூறு தாலந்து வெள்ளி யும், முப்பது தாலந்து பொன்னும் கப்பம் கோரியபோது, எசேக்கியா அரண்மனைக்

கருவூலத்திலிருந்து எல்லா வெள்ளியையும் கொடுத்தார்; ஆண்டவர் இல்லக்கதவுகளிலும், கதவு நிலைகளிலும் பதித்திருந்த பொன் தகடுகளைக் கழற்றி அசீரிய மன்னனுக்குக் கொடுத்தார் *(2 அர 18:15-16)*.

திரு உறைவிடத்தில் பேழையையும் அதன் தண்டுகளையும், அப்ப மேசையையும் அதன் தண்டுகளையும் மற்ற மரப் பொருள்களையும் வேய்வதற்குப் பொன் பயன்பட்டது. பீடத்தையும் அதன் தண்டுகளையும் வேய்வதற்கு வெள்ளியும் பயன் பட்டது *(யாத் 25:11-38:28)*. ஆலயத்தில் திருத்தூயகத்தையும், அதைச் சார்ந்த பொருள்களையும், தந்த அரியணையையும், முன்முக மண்டபத்தையும் வேய்வதற்குப் பொன்னும் *(1 அர 6:30-32; 10:18; 2 நாள் 3:4.10; 9:17)*, குருக்கள் முற்றத்தின் கதவுகளை வேய்வதற்கு வெண்கலமும் *(2 நாள் 4:9)* பயன்பட்டன. சிலைகள் வேயப்படுதல் எசா *40:9;* அப *2:19*-இல் குறிக்கப் பட்டுள்ளது.

## வேர் *(ROOT)*

இச்சொல் பெரும்பாலும் உருவகமாகவே பயன்பட்டுள்ளது எ.கா. ஒரு காரணகாரியம் அல்லது மூலம் *(யோபு 19:28; 28:9; 36:30; 1 திமொ 6:10)*.

ஒரு மனிதனின் வேர் மூலவளமும் பாதுகாப்பும் ஆகும் *(எரே 12:2; 17:7-8; கொலோ 2:7)*. இதுபோல ஒரு குடும்பத்தின் *(உப 29:18; எபி 12:15)*, ஓர் அரச மரபின் *(எசா 14:29)* மற்றும் ஒரு நாட்டின் *(எசே 31:7)* வேர்கள், கடந்த காலத்தில் கொண்டிருக்கும் ஆதாரம், அதன் தற்போதைய பாதுகாப்பு, அதன் செழிப்பின் தன்மையையும் பரப்பையும் விவரிக்கும் கனிகள் ஆகியவற்றைக் குறிக்கும். ''வேரோடு பிடுங்குதல்'' என்பது தீர்ப்பையும் அழிவையும் குறிக்கும் *(1 அர 14:15; சங் 9:6; 52:5; எரே 24:6; மத் 15:13)*.

இஸ்ராயேல், யாவேயின் தேர்ந்தெடுத்தல் *(சங் 80:15; உரோ 11:16-18)*, தீர்ப்பு *(எசா 5:24; மத் 3:10)*, மீண்டும் அமைக்கப்பெறுதல் *(எசா 27:6; ஓசே 14:5-6; ஆமோ 9:15)* ஆகிய கூறுகளின் கீழ் ஒரு செடியென விவரிக்கப்படுகிறது.

தாவீது அரச மரபிலிருந்து ஒரு பெரிய அரசன் வருவார் என்ற எதிர்பார்ப்பால் ''ஈசாயின் வேர்'' *(எசா 11:1-10; உரோ 15:12)*, ''தாவீதின் வேர்'' *(திருவெளி 5:5; 22:16)* போன்ற உருவகங்கள் தோன்றின. அதாவது, அரசமரபின் வழித்தோன்றலில் அரச மரபு நிறைவுபெறும் என்று இவை உணர்த்தின.

## வேலி *(FENCE, HEDGE)*

இது முட்புதராலோ, கற்சுவராலோ ஆன பாதுகாப்பாகும் *(சங் 80:12-13; எசா 5:5; மத் 21:33; மாற் 12:1)*. உருவகமாக, வேலி இறைவனுடைய பாதுகாப்பையும் *(யோபு 1:10)*, அவர் ஒருவனை அடைத்துத் தடை செய்வதையும் *(யோபு 3:23; புல 3:7; ஓசே 2:8)* குறிக்கிறது. பகைவர்களால் சூழப்பட்ட மனிதன் இடிந்த மதிலுக்கும் சிதைந்த வேலிக்கும் ஒப்பாவான் *(சங் 62:3)*.

## வேலை *(WORK)*

I. மனிதன் உழைப்பில் ஈடுபட்டுள்ள செய்தி விவிலியம் முழுவதும் காணப்படுகிறது. ஆனால், கலைஞன் அல்லது சிறு விவசாயியின் வேலை நுணுக்கமாக ஒழுங்குபடுத்தப்பட்ட நாம் காணும் இன்றைய வேலையிலிருந்து வேறுபட்டிருப்பதால் வேதநூல் வேலையைப் பற்றி தெளிவுபடுத்தவில்லை அல்லது தவறாக அறிவித்துள்ளது என்று கருத நம்மை இட்டுச் செல்கிறது. இன்னும் வேதநூல் உழைப்பின் பொருளையும், மதிப்பையும் பற்றிய அடிப்படைக் கொள்கைகளை அவ்வளவாக எடுத்துரைக்காததால், பரவலாகக் காணப்படும் ஒருசில கூற்றுக்களை அவைகளுடைய சூழ்நிலையிலிருந்து பிரித்து நம்முடைய முன்கூட்டிய கருத்துக்களைப் புகுத்தக்கூடிய சோதனைக்கு நாம் ஈர்க்கப் படுகிறோம். விவிலியம் நம்முடைய வினாக்கள் அனைத்திற்கும் விடைபகர்வதில்லை. இருந்தபோதிலும் இதை முழுமையாக நோக்கும்போது உழைப்பின் உண்மையும், மதிப்பும், துன்பமும், மீட்பும் நமக்குத் தெளிவாகத் தெரிகின்றன.

II. **உழைப்பின் உயர்வு:**

*1.* **படைப்பவரின் ஆணை:** இன்றைய கருத்து உத்தேசமாக இருந்தபோதிலும் வேலை பாவத்தினால் வருவதன்று. வீழ்ச் சிக்கு முன்னே ''ஏதேன் தோட்டத்தைப் பண்படுத்தவும் பாதுகாக்கவும் ஆண்டவரா கிய கடவுள் மனிதனை அங்குக் கொண்டு வந்து குடியிருக்கச் செய்தார்'' (ஆதி 2:15). பத்துக்கற்பனை ஓய்வைக் கட்டளையிடுகிற தென்றால் அஃது ஆறுநாள் உழைப்பின் இறுதியில்தான் (யாத் 20:8). வாரத்தின் உழைப்பு இறைவன் இவ்வுலகை உரு வாக்க ஆறுநாட்கள் ஆனதை நினைவுக்குக் கொணர்கிறது. இஃது இறைவனுடைய செயலைப் பிரதிபலிக்கிறது. முதலில் இறைவன் மனிதனைத் தம் சாயலில் உருவாக்கி (ஆதி 1:27) அவனைத் தமது திட்டத்தின் பங்காளியாக்க விழைந்தார். பிறகு உலகை அதற்குரிய இடத்தில் அமைத்து, மனிதன் மண்ணுலகை ஆண்டு நிரப்பும் வல்லமையை இறைவன் அவனுக் களித்து, அவன் கையில் இவ்வுலகை ஒப்படைத்தார் (ஆதி 1:28). உழைப்பவர் எல்லாரும் ''நற்பயிற்சியையோ, தீர்ப் பையோ விளக்கிக் கூற முடியாது''. ஆனால், ஒவ்வொரு தனிமனிதனும் தன் னுடைய செயலுக்கேற்ப ''படைப்பின் அமைப்பைப் பேணிக்காப்பாற்றுகிறார்கள்'' (சீரா 38:34). ஆதலால் படைத்தவரின் செயல்கள் உழைப்பாளியின் செயல்களால் வர்ணிக்கப்படுவதில் சிறிதும் வியப்பு இல்லை. மனிதனை உருவாக்கி (ஆதி 2:7), விண்ணைப்படைத்து, விண்மீன்களை அவைகளுக்குரிய இடத்தில் அமைத்தார் (சங் 8:3). பதிலாக, காலையில் ''மானிடர் வேலைக்குப் புறப்பட்டுச் செல்கின்றனர். அவர்கள் மாலைவரை உழைக்கின்றனர்'' (சங் 104:23; காண்க. சீரா 7:15) என்னும் படைப்பவராகிய இறைவனின் பெரிய சங்கீதம் மனிதனைச் சித்திரிக்கிறது. மனித னின் இவ்வேலை இறைவன் படைப்பின் மலர்ச்சி; அவருடைய திருவுள்ளத்தின் நிறைவு.

*2.* **உழைப்பின் இயற்கையான மதிப்பு:** உடன்படிக்கையின் கட்டளைகளிலோ, பத்துக் கற்பனைகளிலோ, நற்செய்தியிலோ இறைவனின் அதிகாரபூர்வமான திருவுளம் ஓரளவுகூடக் குறிப்பிடப்படவில்லை; இதில் வியப்பு ஒன்றுமில்லை. இது தவிர்க் கப்பட்டது சாதாரணமே; ஏனெனில், இறை வனின் மீட்புக்கு அவன் அழைக்கப்பட்டுள் ளான் என்பதை அவன் அறிவதற்கு முன்பே வேலை ஒவ்வொரு மனிதன் மீதும் சுமத்தப் பட்ட மனிதத்தன்மையின் சட்டமாகும் (காண்க. உப 5:13). விவிலியத்தில் வேலைக்கு மாறான அனேக எதிர்ச்செயல் கள் நன்கு தெளிந்த மனச்சாட்சியின் தீர்ப்பு களே ஆகும். இந்த எதிர்ச்செயல்கள் ஞானி களின் நூல்களில் தோன்றுவது இயல்பு. இவர்கள் சாதாரண ஒழுக்க அனுபவத்திலி ருந்து இஸ்ராயேலின் மறை மிகுந்த பயன் அடையச் செய்ததில், மிகவும் கவனமாய் இருந்தனர்.

இவ்விதமாக உழைக்காதவன் உண்ண ஒன்றுமில்லாது (பழ 13:4) பசியினால் இறப்பிற்குள்ளாகிறான் (21:25) என்னும் தெளிவான காரணத்திற்காக விவிலியம் சோம்பேறித் தனத்தின்மீது மிகக் கடுமை யாகவுள்ளது. பசி சோம்பேறியை உழைக் கத் தூண்டுவதில்லை (16:26). உழைக்க மறுத்து நேர்வழியிலிருந்து ஒதுங்குவோ ருக்கு இவ்வாதத்தை எடுத்துக்காட்ட, பவுல் தயங்குவதில்லை. ''உழைக்க உளமில்லாத வன் உண்ணலாகாது'' (2 தெச 3:10). மேலும், சோம்பேறித்தனம் அழிவின் ஒரு வகை. எப்பொழுதும் சுறுசுறுப்பாக விழித் திருக்கும் பெண்ணை நாம் போற்றுகி றோம். அவள் ''சோம்பலினால் தன் அப்பத் தையும் உண்ணாள்'' (பழ 31:27); ''கீல் பட்டையில் கதவு ஆடிக்கொண்டிருப்பது போல், சோம்பேறி தன் படுக்கையில் புரண்டு கொண்டிருப்பான்'' (26:14) என்று நகைச்சுவையோடு சோம்பேறி விவரிக்கப் படுகிறான். அவன் மனிதனல்லன்; ''மாசு படிந்த கல்''; ''குப்பை மேட்டுக்கு ஒப்பா வான். அதைத் தொடும் அனைவரும் கையை உதறித் தட்டிவிடுவர்'' (சீரா 22:1-2).

சிறப்பாகவும் திறமையோடும் ஆற்றும் கலைவேலையையும், முழுமூச்சாக உழைக்கும் உழவனையும், கொல்லனையும், குயவனையும் விவிலியம் அதிகமாகப் போற்றுகிறது (சீரா 38:26.28.30). கலையின் வெற்றிப் படைப்புகளை விவிலியம் முழுமையாகப் போற்றுகிறது; குறிப்பாக எந்த நாட்டிலும் ஒப்புமையில்லாத (1 அர 10:20) சாலமோனின் அரண்மனை (7:1-12) மற்றும் அரியணை இதையெல்லாம் விட யாவேயின் ஆலயமும் சிறந்த அதனுடைய நுட்பமான வேலைப்பாடும் (6:7; 13-50) போற்றப்படுகின்றன. பொய்த் தேவதைகளின் சிலை வடிக்கும் மூடனுக்கு எதிராகக் கண்டனம் செய்தாலும், இவ்வளவு திறமையை ''ஒன்றுமில்லாமைக்குச்'' செலவிடுவதை வெறுத்தாலும் (எசா 40:19தொ; 41:6தொ) விவிலியம் அவனுடைய திறமையை மதிக்கிறது.

**3. வேலையின் சமுதாய மதிப்பு:** கலையின் வெற்றியைப் போற்றுவதிலிருந்து மட்டும் வேலையின் மதிப்பு எழுவதில்லை. சமூக வாழ்விலும் பொருளாதாரத் துறையிலும் வேலை பெற்றுள்ள ஊடுருவக்கூடிய தனித்தன்மையிலிருந்து இது தோன்றுகிறது. உழவுத் தொழிலாளரும் கலைஞருமின்றி ஒரு நகரும் கட்டப்பட முடியாது (சீரா 38:32). ''செல்வம் சேர்க்கும் ஆவல் மீது ஆசை, கைவினை ஞானம், இறைப் பராமரிப்பின் உறுதுணை'' ஆகிய மூன்றும் கடற்பயணத்தின் தொடக்கமாக உள்ளன (ஞான 14:2-3). இம்மூன்றின் முக்கியத்துவம் எல்லாத்திட்டத்திலும், வேலையின் வெற்றியைப் போற்றுவதிலும் விளங்குகிறது. எடுத்துக்காட்டாக, கடற்பயணம் செய்வோன் எவ்வாறு ''மிகச்சிறிய மரக்கட்டையிடம் தன் உயிரையே ஒப்படைக்கிறான்'', எவ்வாறு ''இறை ஞானத்தின் வேலை பயனின்றியிருத்தலை'' அவன் தடுத்து இறைவனின் படைப்பை நிறைவு பெறச் செய்கிறான் என்பது விளக்கப்படுகிறது (ஞான 14:5).

III. **வேலையின் வாதை:** வேலை மனித உயிர்வாழ்வின் ஓர் அடிப்படை உண்மை. ஆதலால், இது பாவத்தால் நேர்முகமாகவும், ஆழமாகவும் பாதிக்கப்பட்டுள்ளது. ''நெற்றிவியர்வை நிலத்தில் விழ உழைத்து உன் உணவை உண்பாய்'' (ஆதி 3:19). இறைச்சாபம் குழந்தைகளைப் பெற்றெடுப்பதை வேதனை மிக்கதாக்குவது போல் வேலையையும் வேதனை மிக்கதாக்குகிறது. எவ்வாறு குழந்தை பெற்றெடுத்தல் உயிர்ச் சாவின்மேல் கொள்ளும் வேதனை மிக்க வெற்றியோ அவ்வாறே வேலையில் ஆழ்ந்து ஈடுபடும் மனிதனின் அன்றாட வேதனை இறைவன் தனக்குப் படைப்பின் மீது அளித்த அதிகாரத்தைச் செயல்படுத்துவதைச் சுட்டிக்காட்டுகிறது. வல்லமை தொடர்ந்து இருக்கிறது; ஆனால், சபிக்கப்பட்ட மண்ணோ எதிர்த்துப் போராடுகிறது; அதை அடக்கி ஆள வேண்டும் (3:17). இந்தப் போராட்டத்தில் ஏற்படும் மிகக்கடினமான துன்பம் அடிக்கடி மிகச் சிறந்த வெற்றியில் முடிகிறது. எடுத்துக்காட்டாக, சாலமோனின் பெரிய சாதனைகள். சாவு இப்போராட்டத்தைப் பயனற்றதாக்குகிறது. ''உழைப்புக்கு மனிதனுக்குக் கிடைக்கும் பயன் என்ன? வாழ்நாளெல்லாம் அவனுக்குத் துன்பம்; வேலையில் தொந்தரவு; இரவிலும் அவன் மனதிற்கு அமைதியில்லை. எல்லாமே வீண்'' (திருவுரை 2:22-23).

பாவத்தின் பெரிய, வலுவான உட்பாதைகள் மனித முயற்சியை ஊடுருவிச் செல்கின்றன. அடிக்கடியான பயனற்ற துயரமிக்க வேலை இம்மனித முயற்சியின் ஒரு பாகம் ஆகும். அடிக்கடி ஏற்படும் மனமாற்றம், கொடுமை, அநீதி, பேராசை ஆகியவை வேலையைத்தாங்க முடியாச் சுமையாகச் செய்வதோடு மட்டுமின்றி, வெறுப்பு பிளவுகளின் மூலகாரணமாகவும் மாற்றுகின்றன. உழைப்பாளிகள் தங்கள் ஊதியத்தை இழந்தனர் (எரே 22:13; யாக் 5,4); விவசாயிகள் வரிச்சுமையால் அழிகின்றனர் (ஆமோ 5:11); மக்கள் அனைவரும் அன்னிய அரசாலும் (2 சாமு 12:31), அவர்களுடைய சொந்த அரசனாலும் அடிமைவேலைக்கு ஆளாகின்றனர் (1 சாமு 8:10-18; 1 அர

*5:27; 12: 1-14)*; அடிமைகள் உழைப்புக்கும் உதைக்கும் உள்ளாகின்றனர் (*சீரா 33:25-29*). தீமையைத் தூண்டும் இப்படத்தில் எப்போதுமே சொந்தக் குற்றம் இருப்பதில்லை. ஆதாமின் மக்களாகிய நாம் வழக்கமான உலக உழைப்பையே கொண்டுள்ளோம். இஸ்ராயேலர் இவ்வுலகை அறிந்திருந்தனர்; இதனை எகிப்தில் மிக உணர்ச்சியில்லா உருவில் அறிந்திருந்தனர். தளர்ச்சி தரும் கட்டாய வேலையை இரக்கமற்ற அதிகாரிகளின் அடியிலும் எதிரிகளினடியிலும், எதிரி நாடு நலம் பெற உழைத்தனர்; இந்தத் திட்டமிட்ட வேலை மனிதத்தன்மையை ஒன்றுமில்லாமையாக்கியது; அவர்களை எதிர்த்துநிற்க முடியாதவர்களாக்கியது (*யாத் 1:8-14; 2:11-15; 5:6-18*). இஃது ஏற்கெனவே அடிமைவேலையின் இருப்பிடமாகவும், கட்டாய உழைப்புக் குடியேற்றமாகவும் திகழ்கிறது.

IV. **வேலையின் மீட்பு:** பாவத்தின் விளைவாகிய இந்த மனிதத்தன்மையற்ற வேலையின் உலகிலிருந்து யாவே தம்முடைய மக்களை விடுவித்துள்ளார். வேலையை இன்னல் தரும் ஒவ்வொரு கூறிலிருந்தும் மீட்காவிட்டாலும், மனிதனுடைய கெட்ட எண்ணத்தால் உண்டான பயங்கரமான வடிவங்களிலிருந்தாவது மீட்க மேற்கொண்ட தொடர்ச்சியான விதிக்கூறுகள் அவர் இஸ்ராயேலரோடு செய்துள்ள உடன்படிக்கையில் அடங்கியுள்ளன. தளர்ச்சிப்படுத்தும் தொடர்ச்சியான வேலை நாட்களிலிருந்து சிறிது விடுவிக்கவும் (*யாத் 20:9*தொ), மனிதனுக்கும் விலங்கிற்கும் உறுதியாக ஓய்வு கொடுக்கவுமே ஓய்வுநாள் உண்டாக்கப்பட்டது (*யாத் 23:12; உப 5:14*). இறைவன் உழைக்கிறார், ஓய்வெடுக்கிறார், அடிமை வேலையிலிருந்து விடுவிக்கிறார் என்பதை அவரே வெளிப்படுத்தியுள்ளார். அவரைப் பின்பற்றியே இவ்வோய்வு அமைந்துள்ளது (*உப 5:15*). அடிமை அல்லது கூலியாளைக் காப்பதாகச் சட்டத்தின் பல பிரிவுகள் அமைக்கப்பட்டுள்ளன. கூலியாளுக்கு அன்றே கூலியை வழங்க வேண்டும். கூலியாளைத் தன் சுயநலத்திற்காகக் கொடுமைப்படுத்தலாகாது (*உப 24:14*).

இக்கோரிக்கைகளை இறைவாக்கினர் மீண்டும் நினைவுபடுத்துகின்றனர் (*எரே 22:13*). உடன்படிக்கையின் மீதுள்ள பிரமாணிக்கம் இஸ்ராயேலரை வேலையிலிருந்து நீக்காது; மாறாக, அவ்வேலையைப் பலனுள்ளதாக்கும். ஏனென்றால் ''இறைவன் அவருடைய செயல்களை ஆசீர்வதிப்பார்'' (*உப 14:29; 16:15; 28:12; சங் 128:2*). முயற்சி அதனுடைய சாதாரணப் பலனை விளைவிக்கும். திராட்சைக் கொடி நடுபவர் அதனுடைய கனியைச் சுவைப்பர். கட்டியவர் தாம் கட்டிய வீட்டில் வாழ்வர் (*ஆமோ 9:14; எசா 62:8; காண்க. உப 28:30*).

V. **கிறிஸ்துவும் வேலையும்:**

1. இயேசு கிறிஸ்துவின் வருகை முரண்பாடுகளைப் போக்குகிறது; நற்செய்தி தெளிவுபடுத்துதலைக் காட்டுகிறது. புதிய ஏற்பாட்டின் வேலை சில சந்தர்ப்பங்களில் போற்றப்படுகிறது; சில சமயங்களில் ஒன்றும் கூறாததுபோல் தோன்றுகிறது; அல்லது மிக முக்கியமில்லாததுபோல் தொட்டும் தொடாமல் பேசப்படுகிறது. இயேசுவே ஒரு தொழிலாளி (*மாற் 6:3*), ஒரு தொழிலாளியின் மகன் (*மத் 13:55*) என்பதாலும், பவுல் தம் சொந்தக்கரங்களால் உழைத்து (*அ.ப. 18:3*), அதில் பெருமையும் கொண்டார் (*அ.ப. 20:34; 1 கொரி 4:12*) என்பதாலும் உழைப்பின் உயர்வு போற்றப்படுகிறது. இருந்தாலும், நற்செய்திகள் வேலையைப் பற்றி வியக்குமளவுக்கு மௌனம் காக்கிறது. இவை இவ்வார்த்தையோடு கொண்டுள்ள தொடர்பு இறைவனுடைய வேலைகளாகிய கட்டாயக் கடமைகளை மட்டும் சார்ந்ததாகக் காணப்படுகின்றன. அல்லது எடுத்துக்காட்டுகளிலும் காணப்படுகின்றன; பறவைகள் ''விதைப்பதுமில்லை; அறுப்பதுமில்லை'' (*மத் 6:26*); வயல்வெளி லீலி மலர்கள் ''உழைப்பதுமில்லை, நூற்பதுமில்லை'' (*6:28*). வேலையைப் பற்றிக் குறைந்த அளவே கூறியிருப்பதும், வேலைக்கு முக்கியத்துவம் அளிப்பதும் முரணானவையல்ல; மாறாக, அடிப்படை

யான கிறிஸ்தவக் கொள்கைகளில் இரு துருவங்கள் இவை.

**2. அழியும் வேலை:** ''அழிந்து போகும் உணவுக்காக உழைக்க வேண்டாம்; நிலை வாழ்வு தரும் அழியாத உணவுக்காகவே உழையுங்கள்'' (யோவா *6:27*). இறை யரசைக் கொணர்வதற்காக இயேசு கிறிஸ்து வருகிறார். வேறெதுவும் அவரது பணி யன்று; வேறெதனைப் பற்றியும் அவர் பேசுவதில்லை. ஏனென்றால், இவ்வரசு மற்றெல்லாவற்றையும் கடந்து செல்கிறது (மத் *6:33*). உண்பது, குடிப்பது, உடுப்பது போன்ற மற்றெல்லாம் அவ்வளவு முக்கிய மானவை அல்ல. ஆனால், இறையரசை இழக்குமளவுக்கு அவைகளைப் பற்றியே அதிகம் கவனம் செலுத்தி உலகையே அடைந்தாலும், இஃதொரு முழுமையான பேரிழப்பாகும் (லூக் *9:25*). இறைவனைப் பெற்றிருப்பதாகிய தனிமுதலுக்கு முன் னால் மற்றெல்லாம் மறைந்துபோகின்றன. இவ்வுலகின் ''இன்றைய உலக அமைப்பு கடந்து செல்கிறது'' (1 கொரி *7:31*); ''ஆண்டவரிடம் முழுப்பற்றுக் கொண்டி ருப்பது'' மட்டுமே மிக முக்கியமானதாகும் (*7:35*).

**3. வேலையின் பயனுள்ள மதிப்பு:** வேலையை இறைவனிடமிருந்து வேறு படுத்தி அதற்குரிய இடத்தில் வைத்துக் காட்டுவதால் அதன் மதிப்பு எவ்விதத்திலும் குறைவதில்லை; மாறாக, படைப்புத் திட் டத்தில் அதனுடைய உண்மையான உயர்ந்த மதிப்பு மீண்டும் நிலை நிறுத்தப்படுகிறது. பழைய ஏற்பாட்டில் யாவேயைப்போல் இயேசு உழைப்பைக் கொண்டிலங்கும் உலகிடமிருந்து உவமைகளையும், தலைப் புக்களையும் பெறுகிறார்; ஆயன், திராட் சைக்கொடியைப் பயிரிடுவோன், மருத்து வர், விதைப்போர் (யோவா *10:1*தொ; *15:1*; மாற் *2:17*; *4:3*). ஆனால் இவற்றில் உடல் உழைப்பிற்கு அறிஞருடைய தயாள நிழல் கூடயில்லாமல் அதனுடையும் தேவையும் அளவும் தெரிகிறது (சீரா *38:32*). கிறிஸ்து அப்போஸ்தலத்துவத்தை ஒரு வேலையாகக் காட்டுகிறார்; அறுவடை வேலையாக (மத் *9:27*; வா *4:38*) அல்லது மீன் பிடிப்பதாகக் காட்டுகிறார் (மத் *4:18*). அவர் தேர்ந்தெடுக் கிறவர்களின் பணியை அறிந்திருக்கிறார் (மத் *4:15*). ஆனால், இவை எல்லாவற்றை யும் விட அவருடைய முழு நடைமுறையும் உலக உழைப்பில் இயங்குவதை முன் கொண்டிருக்கிறது. விவசாயி அவனுடைய வயலிலும் (லூக் *9:62*), இல்லாள் இல் லத்தைத் தூய்மைப்படுத்துவதிலும் உழைப் பதைச் சித்திரிக்கிறார் (*15:8*). திறமை பலனளிக்காது மறைந்திருப்பதை இயற் கைக்கு மாறானதாகக் கருதுகிறார் (மத் *25:14-30*). நம்முடைய அடுப்புகளில் சுடப் பட்ட அப்பமாக அப்பத்தைப் பலுகச் செய்யும்போதும் இது வழக்கத்திற்கு ஒரு விதிவிலக்கு என்பதைச் சுட்டிக்காட்டத் துடிக்கிறார். மனிதனே தம்முடைய அப் பத்தைச் செய்யும்படி விட்டுவிடுகிறார். இறுதி வருகை அருகில் உள்ளது என்று ''சோம்பித்திரியும் எந்தச் சகோதரனிடமிருந் தும் விலகி நில்லுங்கள்'' என்று மனித நிலைமைக்கு அடிபணிந்துள்ள உணர் வோடு நமக்குப் பவுல் கூறுவார் (2 தெச *3:6*).

**4. வேலையில் கிறிஸ்தவ மதிப்பு:** மனு குலம் இவ்வுலகை ஆண்டு, உரிய வேலை யைச் செய்ய புது ஆதாமாகிய கிறிஸ்து அனுமதிக்கிறார் (எபி *2:5*தொ; எபே *1:9*). ஏனெனில், கிறிஸ்து மனிதனை மீட்பதன் மூலமாக வேலைக்கு முழு மதிப்பளிக்கி றார். உழைக்க வேண்டியதன் தேவை மிக இன்றியமையாததாக உள்ளது. ஏனெனில், அஃது இயற்கை கடந்த அன்பின் செயல் முறையான கோரிக்கைகளை அடிப்படை யாகக் கொண்டது. மனிதன் இறைமக்க ளாகத் திகழ்வதற்குப் பெற்றுள்ள அழைப்பை வெளிப்படுத்துவதன் வாயி லாக மனிதனின் உயர்வையும், உழைப்பின் உயர்வையும் தெள்ளத்தெளிவாக்குகிறார். வேலையில் மனிதனுடைய தீர்ப்புக்கும், நடத்தைக்கும் மதிப்பீட்டுப்படி மரபை நிறுவுகிறார். அஃதோடு கிறிஸ்து உழைப் பில் பிறர் நட்பையும் உறுதிப்படுத்துகிறார்; உழைப்பை அதனுடைய எல்லாப் பொரு

ளோடும் கிறிஸ்துவில் சகோதரத்துவம் என்னும் புதிய கொள்கையில் அமைக்கிறார் (பிலமோன்). ஏனென்றால், அவருடைய அன்பின் ஆணைப்படி (யோவா 13:34), சுயநலத்திற்கு எதிராக நாம் செயல்படவும், மனித வேலையின் வாதையைக் குறைக்கவும் கடமைப்பட்டுள்ளோம். மேலும், கிறிஸ்தவனை இயேசுவினுடைய துன்பம் மற்றும் இறப்பின் மறைபொருளுக்கு உட்படுத்தித் தவிர்க்க முடியாத வாதைக்கே ஒரு புதிய மதிப்புக் கொடுக்கிறார்.

**5. உழைப்பும் புதிய உலகமும்:** முடிவில் ஆண்டவருடைய இறுதி வருகையில், அவர் தேர்ந்தெடுத்தவர்களை அவருடைய உயிர்ப்பின் மகிமை உடுத்தும். அப்பொழுது அவர் வழியாக, அவரில் பாவம், சாவு, துன்பம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு மனிதன் உலகம் முழுவதையும் அடக்கி ஆளும் நிலை ஏற்படும். இறுதி நாளுக்கு முன்புகூட கிறிஸ்துவில் எவ்வளவுக்கு வேலை செய்யப்படுகிறதோ, அவ்வளவுக்கு அது படைப்பு இறைவனை நோக்கிச் செல்வதில் பங்கு பெறுகிறது. அடிமை தன் நிலைமையைக் கிறிஸ்துவில் தாங்கிக் கொள்ளும்போது ''ஆண்டவரில் விடுதலை பெற்ற மனிதனாகத்'' திகழ்கிறான் (1 கொரி 7:23); ''படைப்பனைத்துமே அழிவுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலைமையிலிருந்து விடுபட்டு, கடவுளின் பிள்ளைக்குரிய மகிமையும் விடுதலையும் பெற்றுக்கொள்ளும்படி'' அவர் தயார் செய்கிறார் (உரோ 8:21). இதற்குமேல் உழைப்பு நிறைவு பெற்று நிலைத்து நிற்குமா? மறைநூல் இம்மை சார்ந்த மெசியாக் கோட்பாட்டை ஆதரிப்பதில்லை; ஏனெனில், அஃது ''இவ்வுலகத்தின் அமைப்பைக் கடந்து செல்கிறது'' (1 கொரி 7:31). உலகின் இன்றைய மற்றும் வருங்கால நிலைகளுக்குள் உள்ள இடைவெளி, வருங்கால உலகிற்கு எளிய மற்றும் நேரடியான முறையில் கடந்து செல்லுதற்கு இடந்தராது. ஆயினும், தெளிவாகக் குறிப்பிடாவிடினும் மனித வேலைக்கு ஒருவித நிரந்தரமான தன்மை உண்டு. இஃது உலகம் கிறிஸ்துவினால் மேற்கொள்ளப்பட்டு ஒன்று கூட்டப்பட்டுள்ளது என்னும் பவுலின் கூற்றுக்குப் பொருத்தமாக உள்ளது (உரோ 8:19தொ; எபே 1:10; கொலோ 1:16. 20). மீட்புப் பெற்று விடுபட்ட படைப்பு முடிவில்லாக் காலத்திற்கும் கிறிஸ்துவில் கூட்டிச் சேர்க்கப்பட்ட இறைமக்களின் உலகாகத் திகழும் நம்பிக்கையை மறைநூல் முழுவதும் நமக்கு வரவழைக்கிறது.

## வேலைக்காரர் (SERVANT)

1. இவர் ஒரு தலைவனுக்குக் கீழ்ப்படியக் கடமைப்பட்ட ஆணோ, பெண்ணோ ஆவர். இவர் அடிமையாகவோ, சுதந்தரமுடைய கூலியாளாகவோ (யாத் 12:45; யோபு 7:1; மலா 3:5) இருக்கலாம். இச்சொல்லுக்குப் பதிலாக அடிமை, ஊழியன், கூலியாள், பணியாளன் என்ற சொற்களும் பயன்பட்டுள்ளன. இவற்றின் பொதுப்பொருள் ஒருவருக்குக் கீழ்ப் படிந்து, உடனிருந்து ஊழியம் செய்வது என்பதாகும் (யாத் 24:13; 1 அர 10:5).

2. விவிலிய காலங்களில் வழக்கமாக வேலைக்காரர்கள் அடிமைகளே ஆவர்; அதாவது, மற்றொருவருடைய சொத்தாவார். அவர்கள் அந்த மற்றொருவரால் விருப்பம் போல் நடத்தப்படலாம். பழங்கால இஸ்ராயேலில் அடிமைகளைக் குறிப்பாக, இஸ்ராயேல் அடிமைகளை, மனிதத் தன்மையுடன் நடத்தக் கோரும் சட்டங்கள் இருந்தன. இச்சட்டங்களுக்கு அடித்தளமாக உள்ளது அவர்கள் எகிப்தில் அனுபவித்த அடிமைத்தனமாகும் (உப 15:15). சுதந்தர மானவர்கள்போல் அடிமைக்கு ஓய்வுநாள் உண்டு (யாத் 20:10). ஒருவன் தன் அடிமையை அடித்துத் தீங்கு விளைவித்தால் அந்த அடிமைக்கு விடுதலை அளித்து அனுப்பிவிட வேண்டும் (21:26-27). வறுமையின் பொருட்டு அடிமையான இஸ்ராயேல் (லேவி 25:39) அன்னிய அடிமைகளிலிருந்து வேறுபடுத்தப்பட்டனர். அன்னிய அடிமைகள் விலைக்கு வாங்கப்பட்டவர்களாகவோ (25:44-45), போரில் பிடிபட்டவர்களாகவோ (1 அர 9:20-21) இருக்கலாம். இந்த அடிமை வேலைக்காரர் பற்றி மற்றச் செய்திகளை **அடிமை** என்ற தலைப்பின் கீழ்க்காண்க.

***3. சமய மரபு:*** *ஒரு குறிப்பிட்ட கடவுளிடம் பக்தியுள்ளவர்கள் அக்கடவுளின் ஊழியர்கள் என்றும் பணியாளர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். பழைய ஏற்பாட்டில் இறைமக்களின் முதன்மையான தலைவர் அல்லது இறைவனுக்கும், அவரது மக்களுக்கும் இடையில் செயலாற்றிய மோசே, தாவீது போன்ற தலைவர்கள் இறைவனது ''ஊழியன்'' என்றழைக்கப்பட்டனர் (யாத் 14:31; 2 சாமு 3:18; காண்க. சங் 19:11). எசாயா நூலில் வரும் ஊழியனைப் பற்றிய பாடல்களோடு இணைத்துச் சுட்டிக்காட்டப்படும் இடங்களில் இயேசு ''இறைவனது ஊழியர்'' என்றழைக்கப்படுகிறார் (மத் 12:18; அ.ப. 3:13.26; 4:27.30). பிலி 2:7-இல் இயேசு அடிமையின் தன்மை பூண்டார் என்று கூறப்பட்டுள்ளது.*

*கிறிஸ்தவர்கள் ''கடவுளின் ஊழியர்கள்'' என்றும், ''கிறிஸ்துவின் ஊழியர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர் (அ.ப. 16:17; தீத் 1:1; யாக் 1:1; 1 பேதுரு 2:16; காண்க. அ.ப. 2:18). பாவத்திற்கு அடிமையான வாழ்விலிருந்து கிறிஸ்துவால் மீட்கப்பட்டு, கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவின் உடைமையாகவும் (அடிமை), அவருக்கு ஏற்புடையவர்களாயும் ஆகிவிட்டனர் (உரோ 6:6-7. 17-18; 1 கொரி 6:19-20; 7:22-23; கலா 4:3.8-9). அவர்கள் மகனுரிமையுள்ளவர்கள், அடிமைகள் அல்லர் (யோவா 8:31-36; உரோ 8:15; கலா 4:4). திருச்சபையில் ''தியாக்கோன்'' (பிலி 1:1; 1 திமொ 3:8-13) பதவியிலும் மற்றப் பகுதிகளில் உள்ளோரும் (2 கொரி 6:4; கொலோ 1:7) பணியாளர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.*

## வேலைவாங்கும் அதிகாரிகள் (TASK MASTER)

*வேலை கொடுப்பதும், அதைச் சரிவரச் செய்யக் கட்டாயப்படுத்துவதும் இவருடைய பணியாகும். இவர் மேற்பார்வையாளர் ஆவார் (யாத் 1:11). எகிப்தில் இவர்கள் வேலைவாங்க தடிகளைப் பயன்படுத்தினர். இவர்களது கொடுமைகள் யாவரும் அறிந்த ஒன்றாகும் (யாத் 3:7; 5:6-14; யோபு 3:18). தாவீதும் சாலமோனும் தங்களுக்குக் கட்டாய வேலை செய்த இஸ்ராயேலரை மேற்பார்வையிட இத்தகைய அதிகாரிகளைக் கொண்டிருந்தது (2 சாமு 20:24) அவர்களது அரசாட்சி பிளவுபட ஏதுவாக இருந்தது. சாலமோன் ஆலயத்தைக் கட்ட, இதைப் போன்ற மேற்பார்வையாளர்கள் பலரை ஏற்படுத்தினார் (1 அர 5:16). எந்த வெளிநாட்டு மன்னனும் இறைவாக்கினர்களால் வேலைவாங்குவோனாக அல்லது கொடுமைப்படுத்துபவனாகக் கருதப்பட்டான் (எசா 3:2; செக் 10:4). விலங்குகளை ஓட்டுபவன் அவைகளிடம் வேலை வாங்குவோன் ஆவான் (யோபு 39:7).*

## வேளாண்மை, விவசாயம் (AGRICULTURE)

*1. தொடக்க காலத்திலிருந்தே, பாலஸ்தீனத்தில் வாழ்ந்தவர்கள் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருந்திருக்கின்றனர். தொல்பொருள் மற்றும் ஒப்புமை ஆய்வுகள், வேளாண்மை பற்றி விவிலியம் தரும் செய்திகளை நிறைவு செய்கின்றன. கர்மேல் மலைத்தொடரின் மேற்கு ஓரத்தில் உள்ள வாடி ஏல்-முகாராவில் நடந்த அகழ்வாய்வுகள் இப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் இடைக்கற்காலத்திலேயே (கி.மு. 8000-7000) உழவர்களாக இருந்திருந்தனர் என்று காட்டுகின்றன. எரிகோவில் நடந்த அகழ்வாய்வுகள் கி.மு. 7500-ஐஒட்டிய காலத்திலேயே இங்கு வாற்கோதுமை, மற்றொருவகைக் கோதுமை, பயறு வகைகள் ஆகியன நீர் பாய்ச்சிப் பயிர் செய்யப்பட்டன என்று காட்டுகின்றன. எபிரேய குலமூதாதையர்கள் காலத்திலேயே (கி.மு. 3000) தானியங்கள் பயிரிடுவதும், திராட்சை, அத்தி, பேரீச்சை, ஒலிவத் தோட்டங்களும் யோர்தான் பள்ளத்தாக்கிலும், மலையடிவாரங்களிலும் நன்கு நிலைபெற்று விட்டிருந்தன (காண்க. ஆதி 13:10). பாதி வறண்ட சமவெளிகளிலும் பீடபூமிப் பகுதிகளிலும் மேய்ப்புத்தொழில் நிலவியிருந்தது (ஆதி 13:2; 26:14; 37:12; 47:1-12).*

*2. பாலஸ்தீன உழவர்கள் நல்ல விளைச்சலுக்குப் பெரிதும் மழைநீரை நம்பியிருந்தனர். ஆண்டில் ஐந்து மாதங்கள் வறட்சியான*

காலமாகும் (மே மத்தியிலிருந்து அக்டோபர் மத்திவரை). நிலம் காய்ந்து வறண்டிருக்கும். முதல் பருவமழை வரை (அக்டோபர் பின்பகுதி நவம்பர்; சங் 84; எரே 5:4) பயிர் செய்ய முடியாது. இந்த முதல் பருவ மழைக்குப்பின் நிலம் பண்படுத்தப்படும். குளிர்காலத்தின் கனமான மழை பெரும் பகுதியான நீரை அளித்தது. ஆனால் விளைச்சலை அறுவடைக்குக் கொண்டு வருவதற்கு, பின் மாரி (மார்ச்-ஏப்ரல், எரே 5:24) அவசியமாகும். தானியங்கள் பயிர் செய்வதற்கு மிகவும் ஏற்ற பகுதி வெப்ப மிக்க, எளிதில் நீர் பாய்ச்சக்கூடிய யோர் தான் பள்ளத்தாக்காகும். ஆனால் அரசாட்சிக் காலம் வரை இப்பகுதியைக் கானானியர் மற்றும் பெலிஸ்தியர்களிடமிருந்து இஸ்ராயேலரால் கைப்பற்ற முடியவில்லை. ஆகவே, மலைப்பகுதிகளில் படிமேடைகள் அமைத்துத் தானியங்களைப் பயிர் செய்தனர். ஆனால், அதற்காகப் பெரும் காட்டுப் பகுதிகளை அழிக்க வேண்டியிருந்தது (காண்க. யோசு 17:18). இம்முறை மலையில் ஏற்கெனவே சிறிதளவாய் இருந்த மண்ணை அரித்துப்போகச் செய்தது. இரும்புக் காலத்திற்குப் பிறகு, படிமேடைகள் அமைத்தும், பருவகாலத்தில் நீரோடும் சிற்றோடைகளின் படுகையில் அணைகள் அமைத்தும் இஸ்ராயேல் வறண்ட பகுதிகளிலும் விவசாயம் செய்தனர். சில பகுதிகளில் இரண்டாம் முறையும் தானியம் பயிர் செய்தனர் (காண்க. ஆமோ 7:1).

3. கோதுமை, வாற்கோதுமை, மாக் கோதுமை, சாமை, கம்பு போன்ற தானியங்களும், திராட்சை, அத்தி, ஒலிவப்பழ மர வகைகளும், பேரீச்சை, பஞ்சு போன்றவைகளும், மொச்சை போன்ற பயறு வகைகளும், புதினா போன்ற கீரை வகைகளும், வெங்காய வகைகளும் பயிர் செய்யப்பட்டன.

கலப்பை, மண்வெட்டி, கல்லரிவாள், முக்கூர்க்கருவி, விதைக்கும் கருவி, போரடிக்கும் கருவி, தூற்றும் கருவி, சல்லடைகள் முதலியவை வேளாண்மை செய்வதில் பயன்படுத்தப்பட்டன.

4. விவசாயம் செய்ய நிலம் நன்கு பண்படுத்தப்படும். குறிப்பாக, மலைப் பகுதிகளில் பெரும் கற்கள் அகற்றப்படும் (எசா 5:2). எருதுகளால் இழுக்கப்பட்ட கலப்பையை வலக்கையால் பிடித்து (லூக் 9:62), இடக்கையில் தாற்றுக்கோல் பிடித்து (நீதி 3:31; 1 சாமு 13:21; காண்க. அ.ப. 26:14) நிலத்தை உழுதனர். தொடக்கத்தில் கலப்பைக்கொழு செம்புப் பற்களைக் கொண்டிருந்தது. கி.மு. 10-ஆம் நூற்றாண்டளவில் இரும்புப் பல்லுடைய கொழுக்கள் பயன்படுத்தப்பட்டன. விதைகளைப் பையிலோ, சாடியிலோ வைத்துக் கையால் அள்ளி வீசிச் சிதறி, விதைகளை விதைத்தனர்; அல்லது கலப்பையோடு இணைக்கப்பட்ட குழாய் வழியாக விதை விழுமாறு செய்தனர். இது விதை நேர்ப்பாத்திகளில் விழுவதற்கு ஏதுவாக இருந்தது (எசா 28:25; யோவா 12:24). புதிதாக விதைக்கப்பட்ட விதைகளைப் பறவைகளிடமிருந்து பாதுகாக்க, அவற்றைப் பரம்பாலோ, மண்வெட்டியாலோ மண்பரப்பி மூடி விடுவர் (யோபு 39:10; எசா 7:25; 28:24; ஓசே 10:1). களைகள் ஒரு பிரச்சனையாக இருந்தாலும், இவை சில சமயம் அகற்றப்பட்டன; சில சமயம், களையுடன் பயிரும் அகற்றப்படுவதைத் தவிர்ப்பதற்காக பயிரோடு சேர்ந்து களை வளர விடப்பட்டது (காண்க. மத் 13:27-29).

5. ஏப்ரல் - மே மாதங்களில் வாற்கோதுமை அறுவடை செய்யப்பட்டது. ஒரு மாதம் கழித்துக் கோதுமை அறுவடை செய்யப்பட்டது. அறுவடை செய்வதில் குடும்பம் முழுவதும், கூலியாட்களும் ஈடுபட்டனர். கதிர்கள் தாளோடு தரையை ஒட்டி வெட்டப்பட்டன; வளைந்த கருக்குள்ள கற்களாலும், இரும்பு அரிவாளாலும் வெட்டப்பட்டு அரி அரியாகத் தரையில் விடப்பட்டன. இவற்றைக் குழந்தைகள் ஒன்று சேர்ப்பர். பின் இவை போரடிக்கும் களத்திற்குக் கொண்டு செல்லப்பட்டன (காண்க. நீதி 15:5). கதிர்களைத் தரையில் பரப்பியபின் தடியால் அடித்தோ, எருதுகளால் மிதிக்கச்செய்தோ (உப 25:4), வண்டியையோ (எசா 28:27) போரடிக்கும்

கருவியையோ (2 சாமு 24:22; எசா 41:15) இழுத்துச் செல்லும் எருதுகளைக் கதிர்கள் மேல் சுற்றிவரச் செய்தோ தானிய மணி களைப் பிரிப்பர். பின், பொலி வீசப்பட்டு, தூற்றப்பட்டு, தானியமணிகள் பதரிலிருந்து பிரிக்கப்படும் (எரே 15:7; எசா 20:24). இச்செயல் வழக்கமாகக் காற்று அதிகம் வீசும் மாலையில் செய்யப்படும் (காண்க. ரூத் 3:2). கழிவுப்பொருட்கள், கற்கள் போன்றவற்றை நீக்குவதற்குத் தானியமணி கள் சல்லடையால் சலிக்கப்படும்; பின், வீட்டு உபயோகத்திற்காகச் சாடிகளிலோ, களஞ்சியங்களிலோ சேர்த்து வைக்கப்படும் (ஆகா 2:19; மத் 3:12; 6:26; லூக் 12:18).

6. பல வகையான திராட்சைகள் பயிர் செய்யப்பட்டன. இவற்றின் பழங்கள் முத லில் இரசம் செய்வதற்காகவும், பின் காயவைத்து அடை செய்வதற்காகவும் பயன்பட்டன. சாதாரணமாக, திராட்சை மலைகளில் பயிர் செய்யப்பட்டது (எசா 5:1; எரே 31:5); ஆனால், இதை வீட்டுக்கரு கிலும் பயிர் செய்யலாம் (காண்க. 1 அர 21:1). திராட்சைத் தோட்டங்கள் மதில் சுவராலோ, வேலியாலோ பாதுகாக்கப்பட் டன. அவற்றில் ஒரு காவல் கோபுரமும் இருக்கும் (எசா 5:2). வரிசையாக மூன்று மீட்டருக்கு ஒன்றாக நடப்பட்டு, திராட்சை வளரும்போது வசந்த காலத்தில் கவாத்து செய்வதைத் தவிர (எசா 18:5) அதை அதிகம் கவனிக்க வேண்டியதில்லை.

இதற்கு மாறாக, ஒலிவமரச்செடி வளரும் போது அதிகக் கவனம் வேண்டும். அது வளர்ந்து முதிர்ச்சியடைந்தபின், நூறாண்டு களுக்குக்கூட அது பழங்களைத் தந்து கொண்டே இருக்கும். பழைய மரத்தின் வேரிலிருந்து புதுக்கன்றுகள் தளிர்க்கும் (காண்க. உரோ 11:17-24). செப்டம்பர் மாதத்தில், பழங்கள் பறிப்பதற்குத் தயாராக இருக்கும். மெதுவாகப் பழுத்தால், சில சமயம் பழம் பறிப்பது திசம்பர் மாதம்வரை கூடச் செல்லலாம். கிளைகளை அசைத்தோ, கம்பால் கிளைகளை அடித்தோ பழங்களைக் கீழே உதிரச்செய்து சேகரித்தனர் (உப 24:20). ஒலிவப்பழம் நேரடியாக உண்ணப்பட்டது. பழங்களை ஆலையில் இயந்திரக்கல்லால் நசுக்கியோ, காலால் மிதித்தோ (உப 33:24; மீக் 6:15) தயாரிக்கப்பட்ட எண்ணெய் சமையலுக்குப் பயன்பட்டது.

7. ஆட்டு மந்தைகள் பாலுக்காகவும், மற்றப் பால் தொடர்பான பொருட்களுக் காகவும், கம்பளத்துக்காகவும் வளர்க்கப்பட் டன. வெகு அரிதாகத்தான் அவற்றின் இறைச்சி உணவாக உண்ணப்பட்டது. உண்ணுவதற்கான இறைச்சி வேட்டைப் பொருள்களிலிருந்து பெறப்பட்டது.

8. **வேலையாட்கள்:** வருடத்தின் 12 மாதங் களிலும் இஸ்ராயேலர்கள் வயலிலே வேலை செய்கிறார்கள். விவசாயியின் குடும்பத்தைச் சார்ந்த எல்லாரும் வேலை செய்தார்கள். உரிமையாளர்களும், அடிமை களும், இளைஞர்களும், இளம் பெண் களும் அவரவர்க்குரிய வேலையைச் செய் தார்கள் (ரூத் 2; 2 அர 4:18; எசா 61:5). தன் நிலத்தை உழுபவன் எவனும் நிறைவு காண்பான் எனப் பழ 12:11 கூறுகிறது. பகல் வேளைகளில் அனைவரும் வேலைக் குச் சென்று விடுவதால் கிராமமே வெறிச் சோடிக் கிடக்கும். இரவிலும் பலர் பயிரைப் பாதுகாப்பதற்காக வயல்வெளி யிலே தங்கி விடுவார்கள். வயலில் விடப் பட்ட அரிக்கட்டையையும், திராட்சைக் குவியல்களையும் பலர் பொறுக்கிக்கொண் டனர். இவ்வாறு பொறுக்குவது விதவை, கைவிடப்பட்டவர்கள் ஆகியவர்கள் பிழைப்பதற்கு உரிய சட்டமாக இருந்தது (உப 24:19-21). ஒரு வேலை நாளின் முடிவிலே மனிதர்கள் மன நிறைவு அடைந் தனர் (ரூத் 3:7). அறுவடைக்காலம் உண் மையிலேயே மகிழ்ச்சி மிக்கதாக இருந்தது (நீதி 9:27; 21:19-23).

9. **விவசாயமும் விவிலிய மதமும்:** விவ சாயம் செய்வது மனிதர்களின் வாழ்வில் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருந்ததென் றால், படைப்பின் தொடக்கத்தில் இருந்தே விவசாயம் புரிவது கடவுளால் கொடுக்கப் பட்ட மேன்மைக்குரிய தொழில் என்று

மக்கள் கருதினார்கள் (ஆதி 3-4; குறிப்பாக 3:23). நிலம் என்பது யாவே கொடுத்த கொடையாகும். அஃது அவரின் பாதுகாப்பில்தான் இருந்தது (உப 11:12). கடவுள் தான் சிறப்பான பயிர் சாகுபடி முறையை மனிதனுக்குச் சொல்லிக் கொடுத்ததாகப் பலர் நம்பினார்கள் (எசா 28:26). மனிதனின் உழைப்புக்கு ஏற்ற பலனைத் தர, இயற்கைச் சக்திகளைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் யாவேயிடம் மட்டுமே உள்ளது என்று நம்பினார்கள். இறைவாக்கினருக்குச் செவி கொடுக்காமல் பாவம் செய்யும் போது, அவர்களின் சாபம் பயிர்கள் மீது விழுந்து மக்களுக்குப் பேரழிவு ஏற்படுத்தியது (எசா 5:8-10; ஆமோ 4:1-8; ஆகா 1:4-11). ஐந்நூலின் பெரும்பகுதிகள், விவசாயிகளின் வாழ்க்கையோடு மிகவும் தொடர்புடையது. உபாகம ஆசிரியரின் கூற்றுப்படி, இஸ்ராயேலர்கள் கொண்டாடிய மிக முக்கியமான திருவிழாக்கள் மூன்றும் விவசாயத்தோடு தொடர்புடையவை. நல்ல விளைச்சலைக் கொடுத்தார் யாவே. எனவே, அவருக்கு நன்றிக்கடன் செலுத்தும் விதத்தில் இந்தத் திருவிழாக்கள் அமைந்தன. பாஸ்கா விழாவும் புளியாத அப்ப விழாவும் வசந்த காலத்தில் தானிய அறுவடையின் தொடக்கத்திலும் (யாத் 12:1-13: 16; 34:18-20; லேவி 23:4-14), ஐம்பதாம் நாள் விழா அல்லது வாரங்களின் விழா தானிய அறுவடையின் முடிவிலும் (யாத் 23:16; லேவி 23:15-21), கூடார விழா பழ அறுவடை முடிவிலும் (யாத் 23:16; உப 16:13-16) கொண்டாடப்பட்டன. ஓய்வுநாள் கூட விவசாயம் சார்ந்த வாழ்வில் இருந்து தான் ஆரம்பித்திருக்கக்கூடும் என்று சடங்குப் பத்துக்கற்பனையால் சுட்டப்படுகிறது (யாத் 22:29-30; 23:12-19); அப்படி இல்லாவிட்டாலும், பிற்காலத்தில் வேளாண்மைத் தொனி பெற்றது.

ஓய்வு ஆண்டு, நிலங்களும் தோட்டங்களும் தங்கள் வளமையைத் திரும்பப் பெறும் பொருட்டுத் தரிசாக விடப்படும் வழக்கிலிருந்து வந்திருக்க வேண்டும் (யாத் 23:10-11; லேவி 25:3-5). ஐந்நூலின் சட்டங்களில் பெரும்பாலானவை நிலத்தையும் அதன் உற்பத்திகளையும் பொறுப்போடு கவனித்துக் கொள்வதில் அக்கறை காட்டுகின்றன (உப 14:22-29; 22:1-3.9-10; 24:25). இச்சட்டங்கள், நற்பேறற்றவர்களுக்கு உதவுவதையும் (24:19-21; 26:12), நன்றியாக ஒரு பகுதியை அளிப்பதையும் (15:19-16:17) உள்ளடக்குகின்றன. உபாகமத்தின் 35 பிரிவுகளில் 8 பிரிவுகள், விவசாய வாழ்க்கையோடு மிகத் தொடர்புடையன (உப 14:22தொ; 15:19-16: 17; 19:14; 22:1-3. 9-10; 23:24-25; 25:4; 26:1-11). விளைச்சலில் பத்தில் ஒரு பங்கும், மந்தையின் தலையீற்றும் கடவுளுக்குக் கொடுக்கப்பட வேண்டும், நில எல்லைக் கற்களை நகர்த்தக் கூடாது என்பன உழவர்களுடைய வாழ்வோடு தொடர்புடையன (உப 27:17). கொடிமுந்திரித் தோட்டத்தில் தானியங்களை விதைக்கக்கூடாது, மாட்டையும் கழுதையையும் இணைத்து உழக்கூடாது போன்ற சட்டங்களும் (உப 22:9-10) காணப்படுகின்றன. பிறருடைய கொடிமுந்திரித் தோட்டத்தில் நுழைந்து தேவைக்கேற்ப உண்ணலாம். ஆனால், எதையும் தன்னோடு எடுத்துச்செல்லலாகாது (உப 23:24-25). இவ்வாறு கூறப்படும் பல மதச்சட்டங்கள், இஸ்ராயேலரின் விவசாயத்தோடு தொடர்புடையதாக இருப்பதால், விவசாயத்திற்கும், மதத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததாகத் தெளிவாகத் தெரிகிறது.

*10.* **விவசாயமும் விவிலிய இலக்கியமும்:** விவசாயத்தோடு தொடர்புடைய பல உவமைகள், உருவகங்கள் விவிலியத்தில் ஏராளம் காணப்படுகின்றன. இஸ்ராயேலரின் மகிமை மிக்க வருங்கால மறுமலர்ச்சி, உழவுத்தொழிலோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளிலே விளக்கப்படுகிறது. திராட்சைத் தோட்டங்களும், மற்றத் தோட்டங்களும் திரும்பி நடப்படும். அவையும் செழித்து வளரும் (ஆமோ 9:4; செக் 8:12). எந்த ஒரு மகிழ்வான நிகழ்ச்சியும், மிகுந்த அறுவடையோடு ஒப்பிடப்பட்டது. எந்த ஒரு துயர நிகழ்ச்சியும், குறைந்த விளைச்சலோடு ஒப்பிடப்பட்டது (எசா 16:10).

ஞானிகளும், கவிஞர்களும் தங்கள் பொருளை விளக்க விவசாயத்தோடு தொடர்புடைய சொற்களையே பயன்படுத்தினார்கள் (*பழ 10:5; 20.26; 24:30-34;* யோபு *5:26; 24:2.6.10-11.18-19. 24;* சங் *65:9-13; 80:8-13; 128*).

இயேசு தனது மக்களுக்கு உண்மையை எடுத்துக் கூறக்கூடிய விவசாய உருவகங்களைப் பயன்படுத்துகிறார். விதை விதைப்பவன் உவமை (*மாற் 4:1-20*); திராட்சைத் தோட்டத்து ஊழியர்கள் உவமை (*மத் 20:1-16*); ''அத்தி மரத்திடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள்'' (*மத் 24:32*); நல்ல கனி தரும் கெட்ட மரமும் இல்லை; கெட்ட கனி தரும் நல்ல மரமும் இல்லை (லூக் *6:43-44*); கடவுளின் உண்மையைப் பற்றியும் மனிதரோடு அவர் கொண்ட உறவைப் பற்றியும் கூறும்போது திராட்சை, மரம், பழம் போன்ற விவசாய வாழ்வோடு தொடர்புடைய சொற்கள் கையாளப் பட்டன.

# வை..வெள

**வைகறை இமைகள்** (EYELIDS OF THE MORNING)

இந்த ஆங்கிலச் சொற்றொடர் வைகறை இமைகள் (யோபு 41:10) என்றும், வைகறை யின் கண் விழிப்பு (3:9) என்றும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. உதிக்கும் கதிரவனின் வருகையை அறிவிக்கும் விடி காலை ஒளிக்கதிர்களை இது குறிக்கும். பழைய ஏற்பாட்டில், கடல் விலங்கான லெவியத்தானைப் பற்றிக்கூறும்போது இச் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. லெவியத்தானை யாராலும் பிடிக்க முடியா தென்றும், அதனுடைய சக்தியும், பற்களும், கண்களும் மனிதர்களைப் பயமுறுத்துகின் றன என்றும் கருதப்பட்டது (யோபு 41:1தொ; சங் 74:14).

லெவியத்தான் என்பது மூலக்குழப்பம் பற்றிய அடையாளங்களில் ஒன்றாகும் (யோபு 26:12; சங் 74:13-14; காண்க. சங் 104: 26). முற்கால மரபுகளின் படி, இந்தப் பெரும் விலங்கு அல்லது பறவைநாகம் சூரியனையும், நிலவையும் விழுங்கிக் கிர கணங்களை ஏற்படுத்தும் சக்தி வாய்ந்ததா கும். இது பகலையும் இரவையும் கட்டுப் படுத்தியது. பண்டைய எகிப்தியர்கள் சுக் கோஸ் எனப்படும் முதலை உதிக்கும் சூரியனின் முதுகில் பயணம் செய்வதாகக் கருதினார்கள். அது சூரியனையே வெற்றி கொண்டதாகப் பிற்காலத்தில் நம்பினார்கள். எகிப்திய சித்திர எழுத்து ஏடுகளில் முதலை யின் கண் விடியற்காலத்தைக் குறிக்கிறது.

பழைய ஏற்பாட்டு ஆசிரியர்கள், இத் தகைய விலங்குகள் மேல் நம்பிக்கை கொள்ளாமல் இறைவனின் அளவு கடந்த வல்லமையைக் காட்டுவதற்காக அவற்றை உருவகங்களாகப் பயன்படுத்தினர்.

**வைரம், வைரக்கல்** (ADAMANT, DIAMOND)

பெரிய குருவின் மார்புப்பட்டையில் இரண்டாவது வரிசையில் மூன்றாவதாகப் பதிக்கப்பட்டிருந்த விலையுயர்ந்த கல் (யாத் 28:18; 39:11; எசே 28:13). இஃது ஒருவேளை கடல் வண்ணக்கல் அல்லது மணிக் கல்லைக் குறிக்கலாம்.

இது துளைக்க முடியாத கடினமான கல்லாகக் கருதப்பட்டது; கடினத் தன்மை யைக் கூறும் சொல்லாகக் கவிதைகளில் பயன்பட்டுள்ளது. ஆண்டவர் எசேக்கியே லின் நெற்றியைத் தீக்கல்லைவிட உறுதி பெற்ற வைரக்கல்லாய் ஆக்கியுள்ளார் (எசே 3:9). இஸ்ராயேலர் திருச்சட்டத்தையும் வாக்குகளையும் கேட்டுவிடாதபடி பாறை யைப்போல் (வைரம்போல்) தங்கள் இத யங்களைக் கடினப்படுத்திக் கொண்டார்கள் (செக் 7:12). யூதாவின் பாவம் வைரமுனை யுடைய இரும்பு எழுத்தாணியால் எழுதப் பட்டுள்ளது (எரே 17:11). யூதாவினுடைய இதயத்தின் கடினத்தைத் துளைக்க வைரம் போன்ற கடினத் தன்மையுடைய எழுத் தாணி வேண்டியிருந்தது.

**வைடூரியம், சிவப்புக்கல்** (AGATE)

இது நீலச்சாயலுடைய வெண்ணிற மாணிக்கக்கல் வகையைச் சேர்ந்தது; பல நிறங்களில் காணப்படுவது; ஆனால், அதிக மாகப் பழுப்பு வண்ணத்தில் பொது மைய வட்ட வளையங்களோடு காணப்படும். பழங்கால மேற்காசியா மக்களிடையே இது பெரிதும் மதிக்கப்பட்டது.

யாத் 28:19; 39:12-இல், பெரிய குருவின் மார்புப்பட்டையில் மூன்றாவது வரிசையில் இரண்டாவது கல்லாகப் பதிக்கப்பட்டிருந் தது. எசா 54:12-இல் எருசலேமின் காவற் கோபுரங்களைக் கட்டுவதற்குப் பயன்பட்ட பொருளாகும். இப்பகுதி தமிழில் சிவப்புக் கல் என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. எசே 27:16-இன்படி இஃது ஏதோமுக்கும் தீருக்கும் இடையிலான வர்த்தகப் பொருட் களுள் ஒன்று. திருவெளி 21:19-இல், இது புதிய எருசலேமின் மதில்களின் அடிக்கற்க ளில் மூன்றாவதாகும். இங்கு மாணிக்கம் என்று தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

**வைப்பாட்டி** (CONCUBINE)

எபிரேயர் குடும்பத்தைச் சேர்ந்த, குழந்தைகளைப் பெற்ற ஒரு அடிமைப்பெண். இவள் குடும்பத்தில் ஒருத்தியாக ஏற்றுக் கொள்ளப்பட்டாள் *(2 சாமு 19:5; 1 அர 11:3; தானி 5:2-3)*. ஏழை எபிரேயக் குடும்பங்களிலிருந்து விலைக்கு வாங்குவதன் மூலமோ, போரில் பிடிபடுவதின் மூலமோ, கடனுக்குப்பதிலாக எடுத்துக் கொள்வதன் மூலமோ இப்பெண்களை அடையலாம். இவ்வகையைச் சேர்ந்த பெண்கள் ஆண்பிள்ளைகளைப் பெற்றால் ஒரு தனிப்பட்ட அந்தஸ்தை அடைந்தனர் *(ஆதி 21:10; 22:24; 30:3; 31:33; யாத் 23:12; 21:7.10)*. அவள் மகன் உடன் வாரிசாகலாம். அவளுடைய மகனால் அவளுடைய பெயர் நினைவு கூரப்படும். ஒரு மலடி மனைவி இவள் வழியாக பிள்ளைகளைப் பெறலாம். அவள் சொந்தமான வீட்டை எடுத்துக் கொள்ளலாம். ஓய்வுநாளை அனுபவிக்க அவளுக்கு உரிமையுண்டு; உணவுக்கும், உடைக்கும், உடல் உறவிற்கும் அவளுக்கு உரிமையுண்டு. அவளுடைய ''கணவனின்'' அன்பை அனுபவிக்க உரிமையுடையவள் *(நீதி 19:1-3)*. அண்ணகர்கள் இவர்களுக்குப் பொறுப்பாக வைக்கப்பட்டனர் *(எஸ்த 2:15)*. இவர்கள் பாடகர்களோடு, ''மகிழ்வூட்டும் மங்கையர்'' என்று அழைக்கப்பட்டார்கள் (திருவுரை 2:8). ஓர் அரசன் வைப்பாட்டிகள் பலரைக் கொண்டிருக்கலாம் *(1 அர 11:3)*. இவர்களுக்குப் பெருமளவு பொறுப்பு அளிக்கப்பட்டது *(2 சாமு 15:6; 20:3)*. ஒரு வைப்பாட்டியின் மகளின் பிரமாணிக்கத்தால் சவுலுக்கும், யோனத்தானுக்கும் நல்லடக்கம் கொடுக்க தாவீது தூண்டப்பட்டார் *(2 சாமு 21:10-14)*.

**வைக்கோல், தாள்** (STRAW)

இது சூட்டடிப்பின்போது $1^1/_2$-2 அங்குலமாக வெட்டப்பட்ட கோதுமை அல்லது பார்லித் தாளைக் குறிக்கும். வைக்கோல் பல வழிகளில் பயன்பட்டது; வீட்டு விலங்குகளுக்கு உணவாகப் பயன்பட்டது *(ஆதி 24:25; நீதி 19:19; 1 அர 5:8)*. விவிலியத்தின் சில பகுதிகள், வைக்கோல் விலங்குகளுக்குப் படுக்கையாகப் பயன்பட்டதாகக் கூறுகின்றன. ஆனால், வைக்கோல் தனியாகவோ *(எசா 11:7)*, தானியங்களுடன் கலந்தோ உணவாகவும் பயன்படுத்தப்பட்டது. அகழ்வாய்களிலிருந்தும் இலக்கியங்களிலிருந்தும் *(யாத் 5:7-12)*, வைக்கோல் செங்கல் செய்வதில் பிணைப்பாகப் பயன்பட்டது என்று அறிகிறோம்.

**வோப்சி, ஓப்சி** (VOPSHI - ஆதாயம்)

இவர் நப்தலி கோத்திரத்திலிருந்து கானானை உளவு கண்டு வர அனுப்பப்பட்ட நகுபியின் தந்தை ஆவார் *(எண் 13:14)*.

**வௌவால்** (BAT)

பழங்களையும், சிறு பூச்சிகளையும் உண்டு வாழும், பறக்கும், பாலூட்டி இனத்தைச் சேர்ந்த, இரவில் உலவும் பறவையாகும். இதில் 400 வகைகள் இருப்பதாகக் கூறப்படுகிறது.

பழைய ஏற்பாட்டில் வௌவால் அசுத்தமான பறவைகளைப் பற்றிய பட்டியலில் வருகிறது *(லேவி 11:19; உப 14:18)*. எசா 2:20-இல் இருண்ட குகைகளில் வாழும் உயிரினமாகக் காட்டப்பட்டுள்ளது. எரேமியாவின் கடிதத்தில் சிலைகளின் தலையிலும், உடலிலும் வௌவால் வந்து தங்குவதாகவும், ஆகவே அச்சிலைகள் உயிரற்றவை என்றும் குறிப்பிடப்படுகிறது.

# ன, னகரம்

இந்தத் தமிழ் எழுத்து, கிரேக்க நெடுங் கணக்கின் கடைசி எழுத்தான ஒமேகாவுக்கு இணையானது. யூத மரபுப்படி, ஓர் ஆசிரி யர் எபிரேய நெடுங்கணக்கிலுள்ள முதல் எழுத்து ஆலேபிலிருந்து கடைசி எழுத்தான ''தௌ''வரை எல்லாவற்றையும் கூறிவிட் டால், ஒரு தலைப்பைப் பற்றிச் சொல்லக் கூடிய எல்லாம் முழுமையாகச் சொல்லி விட்டதாகக் கருதப்படும் *(லேவி 26:3-13)*. **ஆல்பாவும் ஒமேகாவும்** என்ற தலைப்பைக் காண்க. இந்த மரபைப் பின்பற்றி, விவி லியக் களஞ்சியம் என்ற இந்தத் தொகுப் பைத் தமிழ் நெடுங்கணக்கிலுள்ள முதல் எழுத்தான அகரத்தோடு தொடங்கினோம். இப்போது, இத்தொகுப்பின் கடைசித் தலைப்பாக ''னகரம்'' பற்றி எழுதுகிறோம்.

தமிழ் விவிலியத்தில், ''னகரம்'' என்ற சொல் ''அகரமும் னகரமும் நானே -தொடக்கமும் முடிவும் நானே'' என்ற கூற்றில் *(திருவெளி 21:6)* வருகிறது. புதிய ஏற்பாட்டில் இஃது இறைவனை *(1:8)* அல்லது கிறிஸ்துவைக் *(22:13)* குறிக்கப் பயன்பட்டுள்ளது. இதே கருத்து வேறுவடி வில் திருவெளி *1:8;* உரோ *11:36*-இல் காணக்கிடக்கிறது. இக்கருத்தின் அடிப் படை வாய்பாடு எசா *44:6; 48:12*-இல் வருகிறது. படைப்பவரும் மீட்பவருமான ஒரே இறைவனின் தனித்தன்மையை இது வலியுறுத்துகிறது.

இருப்பவற்றிற்கெல்லாம் இறைவனே தொடக்கமும் முடிவுமாக, அகரமும் னகர முமாக இருக்கிறார். அவர் அகரமாக (தொடக்கமாக) இருப்பதால் விண்ணின் மேலும் மண்ணின் மேலும் நிறைவான மேலதிகாரத்தைக் கொண்டுள்ளார். அவர் ஒருவரே எல்லாவற்றையும் புதியதாகப் படைக்கவல்லவர். அவர் னகரமாக (முடி வாக) இருப்பதால், அவர் ஒருவரே ''இனி நடக்கவிருப்பன பற்றியும் நிகழப்போவன பற்றியும் முன்னுரைக்க'' வல்லவர் (எசா *44:7*). அவரே உயிர்; வாழ்வின் ஊற்று (திருவெளி *21:6*). அவர் சாவையும் பாதாளத்தையும் அழிக்கக்கூடும். அவரது வெகுமானமே இறுதியானது. இச்சொற் றொடர்கள் இயேசுவுக்குச் சாற்றிக் கூறப்படு வதால் அவரது தனித்தன்மை வாய்ந்த தலைமை உரிமையை இவை தெளிவாகக் காட்டுகின்றன. இது வெளிப்படையானா லும் முக்கியமானதும் ஆகும் *(21:6)*. ''அரி யணையில் வீற்றிருப்பவருக்கும் செம்மறி யானவர்க்கும் போற்றியும் மாட்சியும் மகி மையும் வல்லமையும் என்றென்றும் உரி யனவாகுக. ஆமென்'' *(5:13-14)!*

வரைபடம் 1


முதுபெரும் தந்தையர் காலத்து
விவிலிய உலகு
(கி. மு. 2000 – 1600)
ஆபிரகாமின் அழைப்பும் பயணமும்
காஸ்பியன் கடல்
மத்தியதரைக்கடல்
செங்கடல்
பாரசீக வளைகுடா
இத்தியார்
கோமேர்
அராரத்து
மதாய்
ஏலாம்
அக்காது
லிபியா
அரேபியா
பாலைவனம்
சீனாய்
மிதியான்
தேதான்
தோகருமா
கார்க்கமிசு
ஆரான்
நினிவே
அசிரியா
காலாகு
அசூர்
மெசபொத்தாமியா
யூப்பிரத்தீசு நதி
திகிரிசு நதி
மாரி
பாபிலோன்
பாபிலோனியா
ஊர்
அலெப்போ
உகரித்து
அமாது
பிபுலோசு
சீரியா
ததிமோர்
சிதோன்
தமஸ்கு
ஆசோர்
கானான்
மெகிதோ
செக்கேம்
அம்மோன்
சோவான்
பெத்தேல்
ஆயி
சாலேம்
கெரார்
கெபிரோன்
மம்ரே
லோத்து
பெயேர்-செபா
ஏதோம்
பிரமிடுகள்
கெலியோப்பொலி
எ
கி
ப்
து
0 100 200 300 400 500
கி. மீ.


கானான் நாடு
(இஸ்ராயேலின் 12 கோத்திரங்கள்
வாழ்ந்த நிலப்பகுதிகள்)
0 5 10 20 40
சீதோன்
சீரியா
தமஸ்கு
சீதோனியர்
லெபனோன் மலை
எர்மோன் மலை
தீர்
தாண்
காதேசு
காசோர்
ஆக்சோ
மேரோம் ஏரி
யோர்தான் நதி
பாசான்
கின்னரோத் ஏரி
கோலான்
கர்மேல் மலை
தாபோர் மலை
அபேக்கு
தோர்
தானாக்கு
பேத்துசான்
கிலயாது
தோத்தான்
பெருங்கடல்
ஏபால் மலை
கெரிசிம் மலை
செக்கேம்
இராமோத்து
பெனுவேல்
சுக்கோத்து
எமோரியர்
யோப்பா
சீலோ
ஓப்பிரா
யாசேர்
இரபா
பெலிஸ்தியர்
எக்கரோன்
பெத்தேல்
ஆயி
எரிகோ
கில்கால்
இராமா
எருசலேம்
எசிபோன்
நெபோ மலை
அசோத்து
பெத்லகேம்
அசுக்கலோன்
அரேபியர்
காசா
கெபிரோன்
சீப்பு
பெசேர்
சாக்கடல்
தெபீர்
பெயேர் செபா
அரோயர்
இத்தியர்
மோவாபியர்
இரகொபோத்து
தாமார்
ஏதோம்
1. ரூபன்
2. சிமியோன்
3. மனாசே
4. யூதா
5. தாண்
6. நப்தலி
7. காது
8. ஆசேர்
9. இசக்கார்
10. செபுலோன்
11. எப்பிராயிம்
12. பென்யாமின்



தாவீது-சலமோனின் பேரரசு
(கி.மு. 1000-930)
சைப்ரஸ்
பெருங்கடல்
பெனிக்கியா
லெபனோன் மலை
சோபா
எர்மோன் மலை
இஸ்ராயேல்
அம்மோன்
பெலிஸ்தியா
யூதா
மோவாபு
ஏதோம்
சாக்கடல்
யோர்தான் ஆறு
எகிப்திய நதி
அரேபிய பாலைவனம்
கார்மேல் மலை
தீர்
சீதோன்
ஆக்கோ
தோர்
யோப்பா
எருசலேம்
எபிரோன்
செக்கேம்
தமஸ்கு
ஆமாத்து
ராபா
எசியோன்-கெபேர்
காதேசு-பார்னேயா
பெயேர்-செபா
மெகிதோ
பெத்சான்
தான்

வரைபடம் V



பாலஸ்தீன் நாடு
(இயேசுவின் காலத்தில்)
Scale: 1 1,700,000
0 5 10 15 20
வ
மத்தியதரைக்கடல்
சீதோன்
லெபனோன் மலை
சரெப்தா
தீர்
பெனிக்கியா
இத்துரேயா
அபிலேன்
தமஸ்கு
எர்மோன் மலை
சீரியா
பிலிப்புச் செசரியா
தாண்
திரக்கோனித்து
கொராசின்
பெத்து சயிதா
கப்பர்நகூம்
கானாவூர்
மகதலா
தொலமாய்
கர்மேல் மலை
கலிலேயா
கலிலேயாக் கடல்
திபேரியா
நாசரேத்து
தாபோர் மலை
காதாரா
நயீன்
தெக்காப்பொலி
செசரியா
சமாரியா
சாலேம்
ஐனோன்
நதி
சமாரியா
ஏபால் மலை
கெரிசிம் மலை
சிக்கார்
செக்கேம்
யோர்தான்
அப்பொல்லோனியா
யாக்கோபின் கிணறு
கெராசா
அந்திப்பத்திரி
அரிமத்தியா
யோப்பா
பேத்து பாரா
பெத்தேல்
எப்பிராயிம்
இலிதா
பிலதெல்பியா
எரிகோ
எம்மாவு
ஒலிவு மலை
பெரயா
எருசலேம்
கும்ரான்
அயின் கெரேம்
பெத்து பாகே
பெத்தானியா
எசிபோன்
அசோத்து
யூதேயா
பெத்திலகேம்
அசுக்கலோன்
யூதேயாவின் பாலைநிலம்
சாக்கடல்
காசா
கெபிரோன்
பெயேர்-செபா
இதுமேயா


புனித பவுலின்
தூதுரைப் பயணங்கள்
முதல் பயணம் கி.பி. 46—48 (அப். பணி 13—14)
உரோமைப் பயணம் கி.பி. 59—62 (அப். பணி 27-28:16)
கருங்கடல்
தாகியா
மோசியா
தல்மாத்தியா
அதிரியாக் கடல்
இத்தாலியா
உரோமை
மூன்று விடுதி
ஆப்பியு சந்தை
புத்தயோலி
இரேகியும்
சிசிலி
சிரக்கூசா
மால்த்தா
திராக்கே
மக்கதோனியா
தெசலோனிக்கா
பிலிப்பி
கொரிந்து
அக்காயா
அதிராமித்தியம்
ஆசியா
கலாத்தியா
எபேசு
கொலோசை
பிசிதியா
அந்தியோக்கியா
(பிசிதியா)
இக்கோனியா
இலிசித்திரா
தெருபை
கப்பதோக்கியா
சிலிசியா
அத்தாலியா
பெருகை
பம்பிலியா
மீரா
இனிது
பதுமோ
கிரேத்து
பேனிக்சு
கவுதா
சல்மோனே
செந்துறை
இலசயா
அந்தியோக்கியா
செலூக்கியா
சாலமி
பாப்போ
சைப்ரஸ்
சீரியா
அர்மேனியா
மத்தியதரைக்கடல்
சீரேன்
லிபியா
சீதோன்
தமஸ்கு
செசரியா
அந்திப்பத்திரி
எருசலேம்
அலெக்சாந்திரியா
எகிப்து
0 100 200 300
கி.மீ.



புனித பவுலின்
தூதுரைப் பயணங்கள்
இரண்டாம் பயணம்
கி.பி. 49—52 (அப். பணி 15:39—18:22)
மூன்றும் பயணம்
கி.பி. 53—57 (அப். பணி 18:22—21:16)
மக்கதோனியா
அம்பிப்பொலிஸ்
பிலிப்பி
தெசலோனிக்கா
பெரோயா
நெயாப்பொலி
சமொத்திராக்கு
அப்பொல்லோனியா
துரோவா
பித்தினியா
மீசியா
போந்து
கருங்கடல்
ஆசோ
மித்திலேன்
பெருக மோன்
ஆசியா
கீயு
தியத்திரா
சர்தை
சிமிருனா
எபேசு
சாமு
கொரிந்து
கெங்கிரேயா
ஏதன்சு
அக்காயா
பிரிகியா
அந்தியோக்கியா (பிசிதியா)
கலாத்தியா
இக்கோனியா
இலிசித்திரா
தெர்பை
பிசிதியா
மிலேத்து
கோசு
உரோது
பாத்தரா
பம்பிலியா
சிலிசியா
தார்சு
அந்தியோக்கியா
செலூக்கியா
சீரியா
கிரேத்து
செசரியாவுக்கு
எருசலேமுக்கு
சைப்ரஸ்
மத்தியதரைக்கடல்
பெனிக்கியா
தீர்
தொலமாய்
செசரியா
எருசலேம்
அலக்சாந்திரியா
எகிப்து
0
100
200
300
கி. மீ.

# ஆசிரியரது பிற நூல்கள்

**விவிலிய அறிமுக நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | "தோரா" அல்லது "ஐந்நூல்" | (ஆதி, யாத்திரை, லேவியர், எண், உப ஆகமங்கள்) |
| 2. | வரலாற்று நாயகன் | (யோசுவா, நீதிபதிகள், 1,2 சாமுவேல், 1,2, அரசர்கள், 1,2 நாள், எஸ்ரா, நெகேமியா, 1,2, மக்கபேயர்கள்) |
| 3. | இஸ்ராயேலின் காவலர்கள் – I | (பொது முன்னுரை, ஆமோஸ் ஒசேயா, மீக்கா) |
| 4. | இஸ்ராயேலின் காவலர்கள் – II | (எசாயா, செப்பனியா, நாகூப், அபக்கூக்கு, எரேமியா, எசேக்கியேல், ஆகாய், செக்கரியா, ஒதியா, மாலக்கி, யோவேல்) |
| 5. | ஞான நூல்கள் | (யோபு, பழமொழி, சங்கீதங்கள், திருவுரை, உன்னத சங்கீதம், ஞானநூல், சீராக்கு) |
| 6. | சில கதைகளும் காட்சிகளும் | (யோனா, ரூத்து, தோபியா, எஸ்தர், புலம்பல், பாரூக்கு, தானியேல், யூதித்து) |
| 7. | நான்கு வடிவ நற்செய்திகள் | (மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் நற்செய்திகள்) |
| 8. | புனித பவுலின் திருமுகங்கள் – I | (பவுலின் வாழ்க்கை வரலாறு, மற்றும் 1 தெசலோனிக்கர், கலாத்தியர், பிலிப்பியர், 1 & 2 கொரிந்தியர், உரோமையர், பிலமோன் ஆகிய திருமுகங்களுக்கு அறிமுகங்கள்) |
| 9. | புனித பவுலின் திருமுகங்கள் – II | (2–ஆம் தெசலோனிக்கர், கொலோசையர், எபேசியர், தீத்து, 1–ஆம், 2–ஆம் திமொத்தேயு ஆகிய திருமுகங்களுக்கு அறிமுகங்களும், பவுலின் இறையியலும்) |

**விளக்கவுரை நூல்**

| | | |
|---|---|---|
| 10. | லூக்காவின் நற்செய்தி | (அருள்வாக்கு மன்றப்பதிப்பு) |
| 11. | விவிலியச் சித்திரக் கதைகள் | **பழைய ஏற்பாடு:** (காயின் ஆபேல், ஆபிரகாம், யாக்கோபு, யோசேப்பு, மோசே, யோசுவா, சிம்சோன் ரூத்து, சாமுவேல், சவுல், தாவீது, அரசன் தாவீது) |
| 12. | விவிலியக் களஞ்சியம் – I | **புதிய ஏற்பாடு:** |
| 13. | விவிலியக் களஞ்சியம் – II | |
| 14. | விவிலியக் களஞ்சியம் – III | |
| 15. | விவிலியக் களஞ்சியம் – IV | |
| 16. | விவிலியக் களஞ்சியம் – V | |

**தயாரிப்பில் உள்ளவை :**

1. விவிலியச் சித்திரக் கதைகள் (பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு)

*கிடைக்குமிடம்*

**தியான ஆசிரமம்**

13, மாதா கோவில் தெரு, சென்னை – 600 028.

**மற்றும் மறைமாவட்ட மேய்ப்புப் பணி நிலையங்கள்.**